رِيَاضُ الصَّالِحِيْنَ

# ரியாளுஸ்ஸாலிஹீன்

## (நபிகளாரின் பொன்மொழிகள்)

- மூலமும் தமிழாக்கமும் -

மூல நூல் ஆசிரியர் :

இமாம் அபூ ஜக்கரிய்யா யஹ்யா பின் ஷரஃப் அந்-நவவீ

(ரஹ்மத்துல்லாஹி அலைஹி)

சாஜிதா புக் சென்டர்

248, தம்புச் செட்டித் தெரு, முதல்மாடி, சென்னை - 600 001

போன் - 2522 4821

# புத்தக விபரத் தொகுப்பு


நூலின் பெயர்

☞ ரியாளுஸ்ஸாலிஹீன் - நபிகளாரின் பொன்மொழிகள்
(மூலமும் - தமிழாக்கமும்)

மூலநூல் ஆசிரியர்

☞ இமாம் அபூ ஜக்கரிய்யா யஹ்யா பின் ஷரஃப் அந்-நவவீ (ரஹ்மத்துல்லாஹி அலைஹி)

தமிழாக்கம்

☞ மவ்லவி K.M. முகம்மது மைதீன் உலவீ

முதல் பதிப்பு

☞ மார்ச் - 2009

ஐந்தாம் பதிப்பு

☞ நவம்பர் - 2011





நூலின் அளவு

☞ 1/4 கிரவுன்

பிரதிகள்

☞ 1500

பக்கங்கள்

☞ 768

அச்சிட்டோர்

☞ கிராஃபிக் பார்க், சென்னை - 5. போன் : 2844 4445

வெளியீடு

☞ சாஜிதா புக் சென்டர்
248, தம்புச் செட்டி தெரு, சென்னை - 1.
போன் : 2522 4821 / 98409 77758 / 99411 75303
Email : shajithabookcentre@yahoo.com

விலை

☞ ரூ. 320.00

ஆலோசனைக் குழு

மவ்லவி முஹம்மது அப்துல்லாஹ் மன்பஈ

மவ்லவி முஹம்மது யூசுப் S.P. – காரைக்கால்

சகோதரர் M.A. அப்துல் ஹமீது – பாமணி (கேம்ப் கத்தார்)

சகோதரர் A.J. நஸீர் அஹமது – சென்னை

# பதிப்புரை

*எல்லாப் புகழும், எல்லாம் வல்ல அல்லாஹ் ஒருவனுக்கே! சாந்தியும் சமாதானமும் அல்லாஹ்வின் இறுதித்தூதர் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீதும், அவர்களைப் பின் தொடர்ந்து நல் அமல்கள் செய்யும் அனைவரின் மீதும் உண்டாவதாக!*

*மனித சமுதாயம் நேர்வழிபெற்று அதன் மூலம் இவ்வுலக - மறு உலக வாழ்வில் வெற்றி பெறுவதற்கு அடிப்படை ஆதாரமாக விளங்குவது இறைவேதமாகிய அருள்மறை குர்ஆனும், அதன் விளக்கமாக வாழ்ந்த இறைத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் போதனைகளுமாகும்.*

**இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுக்கிறாரோ, அதைப் பெற்றுக் கொள்ளுங்கள். அவர் எதனைவிட்டும் உங்களைத் தடுக்கிறாரோ, அதனை விட்டும் விலகி இருங்கள். மேலும், அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். திண்ணமாக, அல்லாஹ் கடுந்தண்டனை அளிப்பவனாக இருக்கின்றான்.**

**(அல்குர்ஆன்59:7)**

*என்ற திருமறையின் கட்டளைக்கேற்ப இறைத்தூதர் காட்டிய வழியில் தமது வாழ்க்கையினை அமைத்துக் கொள்வது ஒவ்வொரு இறை நம்பிக்கையாளரின் கட்டாயக் கடமையாகும்.*

*அகிலத்தின் அருட்கொடையாய் வந்துதித்த அண்ணலாரின் வாழ்வும் வாக்கும், மனிதர்களை நேர்வழிபடுத்திடும் கலங்கரை விளக்கமாகும். மனித சமுதாயத்திற்காக அவர்கள் அருளிய வாழ்வியல் செய்திகள் பல்லாயிரக் கணக்கானவை. அவற்றில் ஆதாரப்பூர்வ நபிமொழி என ஹதீஸ்கலை அறிஞர்களால் கணிக்கப்பட்டு, 'குதுபுஸ் ஸித்தா' எனும் பெயரில் ஆறு கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவை:*

1. *ஸஹீஹுல் புகாரி*
2. *ஸஹீஹ் முஸ்லிம்*
3. *ஸுனன் அபூதாவூத்*
4. *ஜாமிவுத் திர்மிதீ*
5. *ஸுனன் அந்-நஸயீ*
6. *ஸுனன் இப்னுமாஜா*

*இந்த ஆறு நூல்களில் இருந்தும் 1896 நபிமொழிகளை எடுத்து, அவற்றை 372 தலைப்புகளில் தொகுத்து* **'ரியாளுஸ் ஸாலிஹீன்'** *என்ற பெயரில்* **இமாம் அபூ ஜக்கரிய்யா யஹ்யா பின் ஷரஃப் அந்-நவவீ (ரஹ்)** *அவர்கள் உலக மக்களுக்கு*

வழங்கியுள்ளார்கள். இந்த சிறப்பு மிகு நபிமொழிக் களஞ்சியத்தை தமிழ் கூறும் நல்லுலகம் படித்து பயன் பெற வேண்டும் என்ற நல்ல நோக்கத்தில், சமுதாயம் பயன் பெறும் வகையில் நல்ல புத்தகங்கள் பல வெளியிட்டு வரும் சாஜிதா புக் சென்டர் வெளியிடுகிறது என்பதை மிக்க மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இதைப் போன்ற பயன் தரும் புத்தகங்கள் தொடர்ந்து வெளியிடவும், எமக்காக வல்ல அல்லாஹ்விடம் வாசகர்கள் துஆச் செய்ய கோருகிறோம்.

இந்நூலை தமிழாக்கம் செய்த சகோதரர் **K.M.முகம்மது மைதீன் உலவி** அவர்களுக்கும், மதிப்புரை வழங்கி நல்ல ஆலோசனைகளையும் கூறிய ஜமாஅத் அன்சாரிஸ் சுன்னத்தில் முஹம்மதிய்யா இலங்கை - பொதுத் தலைவர் **அஷ்ஷெய்க் முஹம்மது அபூபக்கர் ஸித்தீக் மதனி** அவர்களுக்கும், இலங்கை முஸ்லிம் வாலிபர் ஒன்றியத்தின் (ஜம்இய்யதுஷ்ஷபாப்) பணிப்பாளர் **அஷ்ஷெய்க் எம்.எஸ்.எம்.ரஷீத் மவ்லவி** அவர்களுக்கும், 'ஜம்மியத்து அஹ்லில் குர்ஆன் வல் ஹதீஸ்' மாநிலத் தலைவர் மவ்லவி **S.கமாலுதீன் மதனி** அவர்களுக்கும், பிழைத்திருத்தம் செய்து தமிழ்நடையினை செம்மைப்படுத்தித் தந்த பன்னூல் ஆசிரியர் **மவ்லவி முஹம்மது அப்துல்லாஹ் மன்பஈ** அவர்களுக்கும், **ஜனாப். பாஞ்சுபீர்** அவர்களுக்கும் நன்றி! ஏற்கனவே இந்நூலின் தமிழாக்கத்தை மட்டும் வெளியிட்டுள்ளோம். அரபி மூலமும் சேர்த்து வெளியிட்டால் மக்கள் பயனடைவார்கள் என பலரும் தெரிவித்தார்கள். அதற்கான முயற்சியில் ஈடுபட்டபோது இந்த பணியில் எமக்காக **மவ்லவி ஹாஃபிள் எம்.என்.முஹம்மது புகாரி** அவர்களும் சவூதியில் பணியாற்றும் நண்பர் **K.S.அப்பாஸ் அலிகான்** அவர்களும் பணி முழுமையடைய பல உதவிகளை செய்து தந்தனர். அவர்களுக்கும் நன்றி.

எமக்கு ஒத்துழைப்பு நல்கும் வாசகர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இவண்

**M.A. முஹம்மது ஜக்கரிய்யா**

சென்னை.

## இமாம் நவவீ (ரஹ்) அவர்களின் முன்னுரை

*அளவிலாக் கருணையும், நிகரிலாக் கிருபையும் உடைய அல்லாஹ்வின் திருப்பெயரால்... (ஆரம்பம் செய்கிறேன்)*

*எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன் தனித்தவன். அனைத்தையும் அடக்கியாளுபவன். யாவரையும் மிகைத்தவன். பெரும் மன்னிப்பாளன். பகலின் மீது இரவைச் சுற்றி வரச் செய்பவன். இவ்வாறு செய்வதன் நோக்கம், இதயமும் அகப்பார்வையும் உடையோர்க்கு ஓர் நினைவூட்டல் - அறிவும் சிந்தனையும் உடையோர்க்கு ஓர் அறிவுரையாகவும், படிப்பினையாகவும் அது திகழ வேண்டும் என்பதுதான்.*

*அல்லாஹ்வை நான் புகழ்கிறேன். பொருளாழமிக்க, தூய புகழாக, ஒருங்கிணைந்த, வளமிக்க புகழாக (புகழ்கிறேன்)*

*மேலும் திண்ணமாக வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்று சாட்சி சொல்கிறேன். அவன் கண்ணியமிக்கவன், பரிவுமிக்கவன், கருணையாளன். மேலும் திண்ணமாக முஹம்மத் நபியவர்கள் அல்லாஹ்வின் அடியார். தூதர் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் அல்லாஹ்வின் அன்புக்குரியவராகவும், அவனுடைய நேசராகவும், நேரான வழியின் பக்கம் வழிகாட்டக் கூடியவராகவும், செம்மையான மார்க்கத்தின்பால் அழைக்கக் கூடியவராகவும் திகழ்கிறார்கள்.*

*அல்லாஹ்வின் நல்வாழ்த்துக்களும், ஈடேற்றமும், அவர்கள் மீதும் அனைத்து நபிமார்கள் மீதும் அவர்கள் அனைவரின் குடும்பத்தினர் மீதும் நல்லோர்கள் அனைவர் மீதும் பொழியட்டுமாக!*

*இறைப் புகழுக்கும் நபி ஸலவாத்துக்கும் பிறகு, சொல்லவருவது என்னவெனில் -*

**அல்லாஹ் கூறுகிறான் : "ஜின்களையும், மனிதர்களையும் நான் படைத்தது, அவர்கள் என்னை வணங்கி வழிபட வேண்டும் என்பதற்காகத்தான். நான் அவர்களிடமிருந்து எந்த வாழ்வாதாரத்தையும் நாடவில்லை. அவர்கள் எனக்கு உணவளிக்க வேண்டும் என்றும் நான் நாடவில்லை. (அல்குர்ஆன் – 51: 56–57)**

*திண்ணமாக மனிதர்கள் படைக்கப்பட்டதன் நோக்கத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பதும், உலகின் வசதி வாய்ப்புகளைப் புறக்கணித்துப் பற்றற்ற நிலையை மேற்கொள்வதும், அவர்களுக்குக் கடமையாகிவிட்டது.*

*ஏனெனில், இது அழியும் உலகமே தவிர நிலைத்திருக்கும் வீடல்ல. கடந்து செல்லும் வாகனமே தவிர இன்பம் துய்க்கும் இல்லமல்ல.*

இதனால்தான் உலகில் வாழும் மக்களில் விழிப்புணர்வு அடைந்தவர்கள், இறைவனை வணங்கி வழிபடுவோராய் உள்ளனர். அறிவிற்சிறந்த மக்கள் உலகப் பற்றில்லாதவர்களாய் இருக்கின்றனர்.

அல்லாஹ் கூறுகின்றான் : (எந்த உலக வாழ்வின் போதையில் மயங்கி, நம் சான்றுகள் குறித்து நீங்கள் அலட்சியமாக இருக்கிறீர்களோ, அந்த) உலக வாழ்க்கையின் உதாரணம் இதைப் போன்றதாகும். வானத்திலிருந்து மழையை இறக்கினோம். பின்னர் அதன் மூலம் - மனிதர்களும் கால்நடைகளும் உண்ணக்கூடிய விளை பொருள்கள் நன்கு அடர்த்தியாய் வளர்ந்தன. இவ்வாறாக, பூமி அழகாகவும், செழுமையாகவும் காட்சியளிக்கத் தொடங்கியபோது, அதன் பலனை அடைந்திடத் தங்களுக்கு ஆற்றலுள்ளதென அதன் உரிமையாளர்களும் எண்ணியபொழுது, திடீரென இரவிலோ, பகலிலோ நம் கட்டளை அங்கு வந்தது. நேற்றைய தினம் எதுவும் விளைந்திருக்காதது போன்று, அதனை நாம் முற்றாக அழித்துவிட்டோம். சிந்தித்துணரும் மக்களுக்குச் சான்றுகளை இவ்வாறு தெளிவாக விளக்குகிறோம் (10 : 24) இந்தக் கருத்தில் இறை வசனங்கள் ஏராளமாய் உள்ளன.

இந்த விஷயத்தில் மிகவும் சரியான வழி - இலட்சியத்தின்பால் கொண்டு சேர்க்கும் மிகவும் சீரான பாதை எதுவெனில், நம்முடைய நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் அருளியதாக, ஆதாரப்பூர்வமாகப் பதிவாகியுள்ள ஹதீஸ்களை எடுத்து நடப்பதுவே ஆகும். அவர்கள் முன்னோர், பின்னோர்களின் தலைவர், முற்கால, பிற்கால மக்கள் அனைவரினும் கண்ணியமிக்கவர்களே. அல்லாஹ்வின் ஸலவாத்து (வாழ்த்துரை)களும் ஸலா(ம் ஈடேற்ற)மும் அவர்கள் மீதும், அனைத்து நபிமார்கள் மீதும் பொழியட்டுமாக!

**அல்லாஹ் கூறுகிறான் : "நன்மையான காரியத்திலும், இறையச்சத்திலும் ஒருவருக்கொருவர் உதவி செய்யுங்கள்." (அல்குர்ஆன் – 5:2)**

♦ "ஒரு மனிதன் தன் சகோதரனுக்கு உதவி செய்வதில் ஈடுபட்டிருக்கும் காலமெல்லாம், அல்லாஹ் அவனுக்கு உதவி செய்து கொண்டிருக்கிறான்" என்று நபிகள் நாயகம் கூறினார்கள்.

♦ எவர் நற்காரியத்திற்கு வழிகாட்டினாரோ அவருக்கு, அதனைச் செய்தவர் பெறுவது போன்ற கூலி உண்டு.

♦ எவர் நேர்வழியின்பால் அழைக்கிறாரோ அவருக்கு, அவரைப் பின்பற்றியவர்கள் பெறும் நற்கூலிகளைப் போல் கிடைக்கிறது. அவர்களின் கூலிகளில் எதையும் அது குறைத்துவிடாது.

♦ அலீ (ரழி) அவர்களை நோக்கி நபியவர்கள் கூறினார்கள். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம்மின் மூலம் அல்லாஹ் ஒரு மனிதனுக்கு நேர் வழிகாட்டுவது செந்நிற ஒட்டகங்களை விடவும் சிறந்ததாகும்."

(இந்தக் குர்ஆன் வசனம் மற்றும் ஹதீஸ்களின் ஒளியில்) எனது சிந்தனை சென்றது. அதாவது, ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களின் சுருக்கமான தொகுப்பு ஒன்றை நாம் உருவாக்க வேண்டும். படிப்போருக்கு மறுமைக்கான பாதையாக அமையும் கருத்துக்களை உள்ளடக்கியதாகவும் அது திகழ வேண்டும். மேலும் ஆர்வமூட்டுதல், அச்சுறுத்தல் மற்றும் சான்றோர்களின் நெறிமுறைகள் அனைத்தையும் ஒருங்கிணைத்ததாகவும் அது திகழ்ந்திட வேண்டும். உலகப் பற்றின்மை தொடர்பான நபிமொழிகளுடன் - மனப்பயிற்சி, குணவொழுக்கம், உள்ளங்களைத் தூய்மைப்படுத்துதல், அவற்றின் நிவாரணம், உறுப்பு(களின் செயல்பாடு)களைப் பாதுகாத்தல், அவற்றின் கோணலை நேராக்குதல் மற்றும் இறைவனைப் பற்றி நன்கறிந்த மேலோர்களின் இலட்சியங்கள் ஆகிய அனைத்தையும் அந்த ஹதீஸ் திரட்டு உள்ளடக்கியிருக்க வேண்டும். (என்று நாடினேன்)

இந்நூலில் ஒரு நியதியை நான் கடைப்பிடிக்கிறேன். அதாவது, தெளிவான, ஆதாரப்பூர்வமான நபிமொழியை மட்டும்தான் நான் சொல்வேன். அதுவும் ஆதாரப்பூர்வமான நூல்களென்று பிரபலமான நபிமொழித் தொகுப்பு ஒன்றுடன், அது இணைத்துச் சொல்லப்படும். பாடங்களின் தொடக்கத்தில், சங்கைமிகு குர்ஆனின் திருவசனங்களைக் கூறுவேன். உச்சரிப்புத் தேவை எனும் இடத்தில் - உள்ளடக்கிய அர்த்தத்துக்கு விளக்கம் தேவை எனும் இடத்தில் நுணுக்கமான, எச்சரிக்கையான விளக்கத்தை அணிவிக்கிறேன்.

இந்நூல் நிறைவடைந்தால், கவனத்துடன் படிப்போருக்கு நன்மைகளின் பக்கம் வழிநடத்திச் செல்லக் கூடியதாகத் திகழும் என்றும், எல்லா வகையான தீமைகள் - நாசகார பாவங்களை விட்டும் அவர்களைத் தடுக்கும் என்றும் நான் ஆதரவு வைக்கிறேன்.

இந்நூலிலிருந்து பயன்பெறும் வாசகர்களிடம் நான் கேட்டுக் கொள்வது என்னவெனில், அவர்கள் எனக்காக துஆ (பிரார்த்தனை) செய்ய வேண்டும். மேலும் என் பெற்றோர்கள், ஆசிரியர்கள், அன்பர்கள் அனைவருக்காகவும், அனைத்து முஸ்லிம்களுக்காகவும் அவர்கள் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்பதுதான்.

நான் நம்பியிருப்பது கண்ணியத்திற்குரிய அல்லாஹ்வைத்தான். என் பணிகளை ஒப்படைத்திருப்பதும் அவனிடமே! நான் முழுவதும் சார்ந்திருப்பதும் அவனையே! அல்லாஹ் எனக்குப் போதுமானவன்; அவனே சிறந்த முறையில் பொறுப்பேற்பவன். நன்மைகள் மீது சக்தி பெறுவதும், தீமைகளிலிருந்து விலகுவதும் அல்லாஹ்வின் உதவி கொண்டே தவிர வேறில்லை. அவன் யாவரையும் மிகைத்தவன். நுண்ணறிவாளன்.

●

## இமாம் அபூ ஜக்கரிய்யா யஹ்யா பின் ஷரஃப் நவவீ ரஹ்)

இமாம் அபூ ஜக்கரிய்யா யஹ்யா பின் ஷரஃப் நவவீ (ரஹ்) அவர்கள், ஷாம் தேசத்தில் நவா என்னும் ஊரில் பிறந்ததால் நவவீ (நவாவைச் சேர்ந்தவர்) என்று அனைவராலும் அன்போடு அழைக்கப்பட்டார்கள். அவர்களின் இயற்பெயர் யஹ்யா. முஹ்யித்தீன் என்பது பட்டப் பெயர். 'அபூ ஜக்கரிய்யா' என்பது குறிப்புப் பெயராகும்.

இமாம் நவவீ அவர்கள் ஹிஜ்ரி 631-ஆம் ஆண்டு, முஹர்ரம் மாதம் பிறந் தார்கள். சிறு வயதிலேயே குர்ஆனை முழுமையாகக் கற்று, மனப்பாடம் செய்த பிறகு, தங்கள் ஊரிலேயே கல்வியில் சிறந்த ஆசிரியர்களிடம் அரபி இலக்கணம், இலக்கியம், நபிமொழிகள், அறிவிப்பாளர்கள் வரலாறு மற்றும் ஃபிக்ஹுச் சட்ட விளக்கம் போன்ற பல்வேறு கலைகளைக் கற்றார்கள். சிறுவயதிலேயே மார்க்கக் கல்வி கற்பதில் ஆர்வமாக இருந்த இமாம் அவர்கள், தாருல் ஹதீஸ் மத்ரஸாவில் சேர்ந்து கல்வி கற்பதற்காக ஹிஜ்ரி 649-ஆம் ஆண்டு தமது தந்தையுடன் திமிஷ்க் மாநகரம் வந்து அங்கு கிழக்குத் திசையில் உமையா மஸ்ஜிதுடன் இணைந்த கட்டிடமான மத்ரஸா ரவாஹிய்யாவில் தங்கி இருந்து கல்வி கற்றார்கள்.

**பேணுதலான - தூய வாழ்வு**

இமாம் நவவீ (ரஹ்) அவர்கள், ஹிஜ்ரி 665-ஆம் ஆண்டு, திமிஷ்கில் பிரபல கல்விக்கூடமாகிய தாருல் ஹதீஸ் மத்ரஸாவில், தலைமை ஆசிரியராகப் பொறுப்பேற்றார்கள்.

கல்விப் பணியில் முழு ஈடுபாடு கொண்டிருந்ததுடன், பொது மக்களுக்கு வழிகாட்டுவதிலும், நன்மையைக் கடைப்பிடிக்குமாறு ஏவுதல் - தீமையைத் தடுத்தல் போன்ற பெரும் பணிகளிலும், நல்லார்வமும் ஈடுபாடும் கொண்டிருந்தார்கள். அதே போல் ஆட்சியாளர்களின் தவறான போக்கைத் தக்க முறையில் கண்டிப்பதற்கும் அவர்கள் தயங்கியதில்லை.

அவர்களைத் தேடி வந்த இன்ப வாழ்வையும், வசதி வாய்ப்புகளையும் - கல்விப் பணிக்காகவே தியாகம் செய்துவிட்டுச் சாதாரணமான - எளிய வாழ்க்கையிலேயே மனநிறைவு கண்டார்கள்.

**எழுத்துப் பணி**

இமாம் அவர்கள் எழுதிய முக்கியமான நூல்களில் சில. ஸஹீஹ் முஸ்லிமின் விரிவுரை, அல் மஜ்மூஃ (அல் முஹத்தஃப் விரிவுரை) ரியாளுஸ் ஸாலிஹீன், அல் அத்கார், அல் அர்பஈனுந் நவவிய்யா, தஹ்தீபுல் அஸ்மா வல் லுகாத், அல் மின்ஹாஜ் இவை தவிர இன்னும் ஏராளமான நூல்களை அவர்கள் இயற்றியுள்ளார்கள்.

**மரணம்**

இரண்டு முறை ஹஜ் செய்த இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் - நவா திரும்பி, அங்கே பிணியுற்ற நிலையில், ஹிஜ்ரி 676-ஆம் ஆண்டு, ரஜப் பிறை 24-ல் மரணம் அடைந்தார்கள்.

بسم الله الرحمن الرحيم

ASSOCIATION OF MUSLIM
YOUTH OF SAILAN
HEAD OFFICE - COLOMBO
REG: MRCA/13/6/COL31

جمعية شباب مسلمي سيلان
المكتب الرئيسي - كولومبو
رقم الحساب: CU ٠٠٢٠٦٠٢٠٨٢١ هتان ناشنال بنك
رقم التسجيل في وزارة الشؤون الدينية والثقافة: ٣١/ CO/ ٦١

1997 ١٤١٧هـ

*இலங்கை முஸ்லிம் வாலிபர் ஒன்றியத்தின் (ஜம்இய்யதுஷ்ஷபாப்) பணிப்பாளர்*
**அஷ்ஷெய்க் எம்.எஸ்.எம்.ரஷீத் (ரியாதி)** *அவர்களின்*

## மதிப்புரை

*எல்லாப்புகழும் ஏக அல்லாஹ் ஒருவனுக்கே. ஸலவாத்தும் ஸலாமும் இறுதித்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்களைப் பின்பற்றி வாழ்ந்த ஸஹாபாக்கள் மற்றும் நல்லடியார் அனைவரின் மீதும் உண்டாவதாக!*

**"எவர்கள் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் உறுதியாக நம்புகிறார்களோ, அவர்கள் பின்பற்றி நடக்க வேண்டிய அழகான உதாரணம் நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடமே இருக்கின்றது. அவர்கள் (அவரைப் பின்பற்றி நடந்து) அல்லாஹ்வை அதிகம் நினைவு செய்து கொண்டிருப்பார்கள்." (அல்அஹ்ஸாப் : 21)**

**"நபியே! மேலும் நீர் கூறும் : நீங்கள் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் வழிப்படுங்கள்." (ஆல இம்ரான் : 32)**

**"எவர் அல்லாஹ்வுடைய தூதருக்கு கீழ்ப்படிகின்றாரோ, அவர் நிச்சயமாக அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிபவராவார்." (அந்நிஸா : 80)**

*"நான் உங்களிடம் இரண்டை விட்டுச் செல்கிறேன். அந்த இரண்டையும் நீங்கள் பின்பற்றி வாழும் வரை வழி தவறமாட்டீர்கள். அவை அல்லாஹ்வின் வேதமும் - எனது வழிமுறையுமாகும்."* **(நபிமொழி)**

*அருள்மறைக் குர்ஆனுக்கு விளக்கவுரையாக, நபிகளாரின் பொன்மொழிகள் இருக்கின்றன. ஒன்றைப் பற்றிப்பிடித்து, மற்றையதை நிராகரிப்பவன் முஸ்லிம் என்ற வட்டத்திற்குள் அடங்கமாட்டான்.*

رقم: ١٤٩ مالجاكاند رود - ماردانا - كولومبو - ١٠ - سريلانكا، هاتف: ٠٠٩٤١١٥٣٥١١٨٤ - فاكس: ٠٠٩٤١١٥٣٥١٢٠٧
No. 149, Maligakanda Road, Maradana, Colombo-10, Sri Lanka. Tel: 0094-11-5351184, Fax: 0094-11-5351207, E-mail: amys@slt.lk

மனித குலத்தின் வாழ்வியல் நுட்பங்களை நபிகளார் (ஸல்) அவர்கள் வாழ்ந்து காட்டி, அதனையே உலகிற்கும் பின்பற்றத்தக்க பொக்கிஷமாகப் பிரகடனப்படுத்தி விட்டார்கள்.

புனித அருள்மறைக் குர்ஆனும், நபிகளாரின் சுன்னாவும், ஒரு முஸ்லிமின் இரு கண்களைப் போன்றவை. இவ்விரு பொக்கிஷங்களும் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு, மக்களின் அறிவுத் தாகத்திற்கும், ஆன்மீக ஈடேற்றத்திற்கும் கலங்கரை விளக்கமாக திகழ்கின்றன. இந்த வரிசையில் **ரியாளுஸ்ஸாலிஹீன்** என்ற நபிகளாரின் பொன்மொழித் தொகுப்பை ஒரு சேரப் படிக்கும்போது, மனம் நிறைவடைகிறது. அல்ஹம்துலில்லாஹ்.

மனித குலம் உன்னத ஒழுக்க விழுமியங்களைக் கண்டடையவும், இறை சிந்தனை, இறையச்சம் போன்ற மாண்புகளை வளர்த்துக் கொள்ளவும் இது போன்ற முயற்சிகள் பெரிதும் பயனளிக்கும்.

**ரியாளுஸ்ஸாலிஹீன்** மக்கள் மத்தியில் ஆர்வத்துடன் படிக்கப்படும் நபி மொழித்தொகுப்பு. நல்கருமங்களைச் செய்வதில் முனைப்புடன் ஈடுபடும் **ஸாஜிதா புத்தக நிலையத்தார்** இதனை வெளியிடுவதன் மூலம், நபிகளாரின் சுன்னாவை உயிர்ப்பிக்கும் பணியையும் செய்திருக்கிறார்கள்.

காலத்தின் தேவையறிந்து, வினைத்திறனுடன் ஆற்றப்படும் இத்தகைய முயற்சிகளுக்கு 'அல்லாஹ்' நிறைந்த நற்பேறுகளைத் தர வேண்டும் எனப் பிரார்த்திக்கின்றேன்.

**அஷ்ஷெய்க் எம்.எஸ்.எம்.ரஷீத் (ரியாதி)**
பணிப்பாளர்
ஜம்இய்யதுஷ்ஷபாப் - சிறீலங்கா

**ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா - இலங்கை**

**பொதுத் தலைவரும் - மார்க்க அறிஞருமான மவ்லவி**

## அஷ்ஷெய்க் முஹம்மது அபூபக்கர் ஸித்தீக் மதனி

**அவர்கள் மனமுவந்து தந்த**

## மதிப்புரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும். ஸலவாத்தும், ஸலாமும் நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் தோழர்கள், தொடர்ந்தோர்கள் மீதும் உண்டாவதாக!

மனித வாழ்வின் சகல வழிகாட்டுதல்களும் பொதிந்த அல்குர்ஆனும், அதையொட்டி வாழ்ந்து காட்டிய நபி (ஸல்) அவர்களது வாழ்க்கை அடங்கிய நபி மொழிகளும், எமது வாழ்வின் வழிகாட்டிகளாகும்.

இவையிரண்டையும் பற்றிப்பிடித்து, படித்துணர்ந்து, செயல்படுகின்றபோது தான் வாழ்வில் வெற்றியையும், சுபிட்சத்தையும் அடைய முடியும்.

அல்குர்ஆன் அல்லாஹ்வினால் பாதுகாக்கப்பட்ட புனிதமான ஒரு நூலாகும். அதே போன்று நபி (ஸல்) அவர்களது சொல், செயல், அங்கீகாரம் அடங்கிய நபிமொழிகள் யாவும் நூல் வடிவில் தொகுக்கப்பட்டு, மனித வாழ்வின் வழிகாட்டுதல்களுக்கு உட்பட்டதாக அமைந்து நிற்கிறது.

'அல்குர்ஆன்' - பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டிருப்பது போலவே, நபி மொழித்தொகுப்புக்களும் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்த வரிசையில் அபூ-ஜக்கரிய்யா யஹ்யா பின் ஷரஃப் நவவீ - இமாம் நவவீ (ரஹ்) அவர்களால் தொகுக்கப்பட்ட **ரியாளுஸ்ஸாலிஹீன்** - நபி மொழித் தொகுப்பு மொழி பெயர்க்கப்பட்டிருப்பது வரவேற்கத்தக்கதொரு விடயமாகும்.

இதில் அல்குர்ஆன் வசனங்களை முதன்மைப்படுத்தி, நபி (ஸல்) அவர்களது பொன் மொழிகளான - ஹதீஸ்களை ஆதாரமாகக் காட்டி, வாழ்வில் ஒவ்வொரு விடயமும் மிக அழகாக முன்வைக்கப்பட்டிருக்கின்றன. எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட, படிக்கின்ற, படிப்பிக்கப்படுகின்ற ஒரு நூலாக **ரியாளுஸ்ஸாலிஹீன்** காணப்படுகின்றது. வாழ்வின் எல்லா விடயங்களையும், குறிப்பாக இஸ்லாமிய ஒழுக்க மாண்புகள், நல்ல பழக்கவழக்கங்களை உள்ளடக்கிய நல்லோர்களின் அறிவுப் பூங்காவாக இது மிளிர்கின்றது.

*இந்த நூல் வெளியிடப்படுவது தமிழ் பேசும் முஸ்லிம்களுக்கு ஒரு வரப்பிரசாதமாகும். இப்பணியினை முன்னெடுத்துச் செல்கின்ற ஸாஜிதா புத்தக நிலையத்தாரின் முயற்சிகள் பாராட்டத் தக்கனவாகும்.*

**ரியாளுஸ்ஸாலிஹீன்** - *நபி மொழி(ப் பூங்காவை) தொகுப்பைச் சகலரும் படித்துணர்ந்து, ஸாலிஹீன்களாக - நல்லோர்களாக வாழ்ந்து ஈருலகிலும் பாக்கியம் பெற்றிட எல்லாம் வல்ல அல்லாஹுத்தஆலா அருள் புரிய வேண்டும் எனப் பிரார்த்திக்கின்றேன்.*

**அஷ்ஷெய்க் முஹம்மது அபூபக்கர் ஸித்தீக் மதனி,**

பொதுத் தலைவர்,

ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா,

தலைமையகம்,

பறகஹதெனிய,

இலங்கை.

### ஜம்மியத்து அஹ்லில் குர்ஆன் வல் ஹதீஸ் மாநிலத் தலைவர்

## மவ்லவி S.கமாலுதீன் மதனீ அவர்கள்

### மனமுவந்து தந்த மதிப்புரை

அகிலத்தின் அருட்கொடை உத்தம நபி முஹம்மது (ஸல்) அவர்கள் வாழ்ந்து காட்டிய வாழ்க்கை நெறி பற்றிய விளக்கங்களைத்தான் ஹதீஸ் என்று கூறுகின்றோம். அவர்களுடைய ஒவ்வொரு சொல், செயல், அங்கீகாரமும் அவர்களுடைய தோழர்களாலும், அவர்களுடைய மனைவிமார்களாலும் மிக நுணுக்கமாகக் கண்காணிக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுள்ளன. அவை கனெல்லாம் நபித்தொகுப்புகளாக இன்று வரை மூல மொழிகளில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இஸ்லாமிய அறிஞர்களால் ஆய்வு செய்யப் படுகின்றது. கல்லூரிகளிலும், மத்ரஸாக்களிலும் போதிக்கப்படுகிறது. இதற்கெல்லாம் மேலாக அண்ணலாரின் வாழ்க்கைநெறி இஸ்லாமியர்களால் பின்பற்றப்பட்டும் வருகிறது.

சொல், செயல்களில் நடை உடை பாவனைகளில் 1427 ஆண்டுகளாகப் பின்பற்றப்படுகின்ற ஒரு தலைவர் இருப்பாரேயானால், அது முஹம்மது நபி(ஸல்) அவர்கள் மட்டுமே இருக்க முடியும். உலகில் வேறு எந்தத் தலைவருடைய வாழ்க்கை நெறியையும் பின்பற்றுகின்ற சமூகங்களை எங்கும் நம்மால் பார்க்க முடியவில்லை. அப்படியே சில தலைவர்களின் வாழ்க்கைக் குறிப்புகள் இருந்தாலும், அது ஏட்டளவில் நூல் நிலையங்களை அலங்கரித்துக் கொண்டிருக்குமே தவிர, அதைப் பின்பற்றிச் செயல்படுகின்ற எவரையும் காணமுடியாது.

ஒவ்வொரு முஸ்லிமும் அன்றாடம் தன்னுடைய வாழ்க்கையின் செயல்பாடுகள் ஒவ்வொன்றிலும், நபிகளார் அவர்களின் வழிகாட்டுதலைக் கடைப்பிடிப்பது அவசியமாக இருக்கிறது. இதன் காரணத்தினால் முஸ்லிம்கள் நபிவழியைத் தெரிய வேண்டிய கட்டாயத்தில் உள்ளனர்.

எனவே, நபிகளார் காலம் முதல், அவர்களுடைய வாழ்க்கை நெறி முறைகளை நபித்தோழர்கள் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடிப்பதன் மூலம் பாதுகாத்தார்கள். அதுமட்டுமல்லாமல், பிற மக்களுக்கு அதைப் போதிக்கவும் செய்தார்கள்.

அப்படிப் பாதுகாக்கப்பட்ட நபி வழித்தொகுப்புகள் நிறைய உள்ளன. இதில் ‘குதுபுஸ் ஸித்தா’ என்று அறிஞர் களிடையில் அறிமுகமாகியிருக்கின்ற ஆறு பெரும் ஹதீஸ் தொகுப்புகளிலிருந்து மக்கள் எளிமையாக மார்க்க விஷயங்களை நபிவழியின் அடிப்படையில் புரிய வேண்டும் என்ற நன்நோக்குடன், ஹதீஸ் கலையிலும் மற்ற இஸ்லாமியத் துறைகளிலும் தேர்ச்சிப் பெற்ற இமாம் நவவி

அவர்கள் ஒரு தொகுப்பை உருவாக்கினார்கள். அதற்கு **"ரியாளுஸ்ஸாலிஹீன்"** என்று பெயரிட்டார்கள்.

இமாம் நவவி அவர்கள், ஹிஜ்ரி ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தார்கள். சுமார் எழுநூறு வருடங்களுக்கு முன்னால் தொகுக்கப்பட்டதுதான் 'ரியாளுஸ் ஸாலிஹீன்' என்ற நபிவழித் தொகுப்பு. இந்தத் தொகுப்பில் நன்மையின்பால் ஆர்வமூட்டுகின்ற விஷயங்களும், தீமைகளைவிட்டும் எச்சரிக்கின்ற விஷயங் களும் நிறைய இடம் பெறுகின்றன. தனி நபர் வாழ்க்கையிலும், கூட்டு வாழ்க்கையிலும் ஒரு முஸ்லிம் சந்திக்கின்ற எல்லா பிரச்சனைகள் பற்றிய விஷயங்களும் கூறப்பட்டுள்ளன. பாமரர்கள் முதல் அறிஞர்கள் வரை எல்லோரும் படித்துத் தெரிய வேண்டிய ஏராளமான செய்திகள் இந்தத் தொகுப்பில் உள்ளன.

'ரியாளுஸ்ஸாலிஹீன்' என்ற இந்த நபிவழித்தொகுப்பை உலகின் எல்லாப் பகுதியிலுமுள்ள முஸ்லிம்கள் விரும்பிப் படிக்கின்றனர். பல மொழிகளில் இத்தொகுப்பு மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. பெரிய ஹதீஸ் தொகுப்புகளிலுள்ள, நீங்கள் அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய விஷயங்களை, தமிழ் மக்கள் எளிமையாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற உயர்வான நோக்கத்தில் உங்கள் கரங்களில் நீங்கள் அறிந்த தமிழ் மொழியில் தரப்பட்டுள்ளது.

இஸ்லாமிய மார்க்கம் பற்றிய விஷயங்களை அரியப் பல தலைப்புகளில்- நிறையப் புத்தகங்களை வெளியிட்டு, சேவை புரிந்து வரும் சென்னை **'ஸாஜிதா புக் சென்டர்'** இந்தத் தொகுப்பை வெளியிட்டுள்ளது. அதனுடைய இம்முயற்சி பாராட்டிற்குரியது.

மூலத்தொகுப்பின் ஆசிரியரான இமாம் நவவி அவர்களுக்கு, வல்ல அல்லாஹ் நல்லருள் புரிவானாக! அதைத் தமிழில் மொழி பெயர்த்த சகோதரர் **K.M. முஹம்மது மைதீன் உலவி,** நூலை வெளியிடும் 'ஸாஜிதா புக் சென்டர்' உரிமையாளர் **M.A. முஹம்மது ஜக்கரியா** மற்றும் இந்தப் புத்தகத்தைப் படித்துப் பயன் பெறுகின்ற எல்லா சகோதர, சகோதரிகளுக்கும் வல்ல அல்லாஹ் கிருபை செய்வானாக!

**(எஸ். கமாலுதீன் மதனி)**

| பாடம் எண் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|

**ஸஹீஹ் புகாரி : புகாரி ஹதீஸ்களின் எண்கள் யாவும் ரஹ்மத் டிரஸ்ட் வெளியீட்டில் உள்ள எண்களாகும்.**

**ஸஹீஹ் முஸ்லிம்: முஸ்லிம் ஹதீஸ்களின் எண்கள் யாவும் முஹம்மது F. அப்துல் பாஹியில் உள்ள எண்களாகும்.**

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

**அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்...**

## ١ - بَابُ الإِخْلاَص وَإِحْضَارِ النِّيَّةِ فِيْ جَمِيْعِ الأَعْمَالِ وَالأَقْوَالِ الْبَارِزَةِ

## பாடம் : 1 - சொல், செயல் மற்றும் வெளிப்படையான - மறைவான நிலைகள் அனைத்திலும் எண்ணத்தைத் தூய்மையாக - கலப்பற்றதாக வைத்திருத்தல்.

قَالَ اللَّهُ تَعَالَى: وَمَا أُمِرُوا إِلاَّ لِيَعْبُدُوا اللَّهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَاءَ وَيُقِيمُوا الصَّلاَةَ وَيُؤْتُوا الزَّكَاةَ وَذَلِكَ دِينُ الْقَيِّمَةِ وَقَالَ تَعَالَى: لَنْ يَنَالَ اللَّهَ لُحُومُهَا وَلاَ دِمَاؤُهَا وَلَكِنْ يَنَالُهُ التَّقْوَى مِنْكُمْ وَقَالَ تَعَالَى: قُلْ إِنْ تُخْفُوا مَا فِي صُدُورِكُمْ أَوْ تُبْدُوهُ يَعْلَمْهُ اللَّهُ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ்வை (மட்டும்) தூய்மையானவர்களாக அவர்கள் வணங்க வேண்டும். அவனுக்கே மார்க்கத்தில் நேர்மையானவர்களாக இருக்க வேண்டும். தொழுகையை அவர்கள் பேண வேண்டும். பொருள் வரியை (ஜகாத்தை) அவர்கள் கொடுக்க வேண்டும் என்பதை தவிர, அவர்கள் கட்டளையிடப்படவில்லை. இதுதான் நேரான மார்க்கமாகும். (98 : 5)*

*"அதன் (குர்பானியின்) இறைச்சியும், அதன் இரத்தமும் அல்லாஹ்வை அடையாது. எனினும், உங்களிடமுள்ள இறையச்சமே அவனை அடையும்" (22 : 37)*

*(நபியே) நீர் கூறுவீராக! உங்கள் உள்ளத்தில் உள்ளதை நீங்கள் மறைத்தாலும் அல்லது வெளிப்படுத்தினாலும் அல்லாஹ் அறிவான். (3 : 29)*

١ - وَعَنْ أَمِيرِ الْمُؤْمِنِينَ أَبِي حَفْصٍ عُمَرَ بْنِ الْخَطَّابِ بْنِ نُفَيْلِ بْنِ عَبْدِ الْعُزَّى بْنِ رِيَاحِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ قُرْطِ بْنِ رُزَاحِ بْنِ عَدِيِّ بْنِ كَعْبِ بْنِ لُؤَيِّ بْنِ غَالِبٍ الْقُرَشِيِّ الْعَدَوِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: "إِنَّمَا الأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى. فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى اللَّهِ وَرَسُولِهِ فَهِجْرَتُهُ إِلَى اللَّهِ وَرَسُولِهِ وَمَنْ كَانَتْ هِجْرَتُهُ لِدُنْيَا يُصِيبُهَا أَوْ امْرَأَةٍ يَنْكِحُهَا فَهِجْرَتُهُ إِلَى مَا هَاجَرَ إِلَيْهِ" مُتَّفَقٌ عَلَى صِحَّتِهِ. رَوَاهُ إِمَامَا الْمُحَدِّثِينَ: أَبُو عَبْدِ اللَّهِ مُحَمَّدُ بْنُ إِسْمَاعِيلَ بْنِ إِبْرَاهِيمَ بْنِ الْمُغِيرَةِ بْنِ بَرْدِزْبَهْ الْجُعْفِيُّ الْبُخَارِيُّ وَأَبُو الْحُسَيْنِ مُسْلِمُ بْنُ الْحَجَّاجِ بْنِ مُسْلِمٍ الْقُشَيْرِيُّ النَّيْسَابُورِيُّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا فِي كِتَابَيْهِمَا اللَّذَيْنِ هُمَا أَصَحُّ الْكُتُبِ الْمُصَنَّفَةِ.

**1** உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாகச் செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்ததே! ஒவ்வொரு மனிதருக்கும், அவர் எண்ணியது உண்டு. அல்லாஹ்விடமும், அவனது தூதரிடமும் ஒருவனின் ஹிஜ்ரத் (நாடு துறத்தல்) ஆகிவிட்டால், அவனது ஹிஜ்ரத் அல்லாஹ்விற்காகவும், அவனது தூதருக்காகவுமே ஆகிவிடும். ஒருவனின் ஹிஜ்ரத் உலகத்தை அடைவதற்காக அல்லது ஒரு பெண்ணைத் திருமணம் செய்வதற்காக என்று ஆகி விட்டால், அவர் ஹிஜ்ரத் எதற்காக செய்தாரோ அதற்காகவே அமையும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன். **(புகாரி:1,54. முஸ்லிம்:1907)**

٢ - وَعَنْ أُمِّ الْمُؤْمِنِينَ أُمِّ عَبْدِ اللَّهِ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "يَغْزُو جَيْشٌ الْكَعْبَةَ فَإِذَا كَانُوا بِبَيْدَاءَ مِنَ الأَرْضِ يُخْسَفُ بِأَوَّلِهِمْ وَآخِرِهِمْ. ) قَالَتْ ( قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ كَيْفَ يُخْسَفُ بِأَوَّلِهِمْ وَآخِرِهِمْ وَفِيهِمْ أَسْوَاقُهُمْ وَمَنْ لَيْسَ مِنْهُمْ؟ قَالَ: يُخْسَفُ بِأَوَّلِهِمْ وَآخِرِهِمْ ثُمَّ يُبْعَثُونَ عَلَى نِيَّاتِهِمْ" مُتَّفَقٌ عَلَيْهِ. هَذَا لَفْظُ الْبُخَارِيِّ.

**2** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(இறுதிக் காலத்தில்) கஅபாவில் ஒரு படையினர் போர் புரிவார்கள். பூமியில் ‘பைதா’ என்ற (மக்கா, மதீனாவிற்கு இடையே உள்ள) இடத்தில் அவர்கள் இருக்கும்போது, அவர்களில் முதன்மை யானவரும், அவர்களில் இறுதியானவரும் (என அனைவரும் பூமிக்குள்) இழுக்கப்படுவார்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! அவர்களில் முதன்மையானவரும், அவர்களில் இறுதியானவரும் எப்படி (பூமிக்குள்) இழுக்கப்படுவார்கள்? அவர்களில்-அவர்களது கடைத் தெருக்களில் உள்ளவரும், (போர் செய்த) அவர்களில் ஒருவராக இல்லாதவரும் இருந்திருப்பார்களே'' என்று கேட்டேன். “அவர்களில் முதன்மையானவரும், அவர்களில் இறுதியானவரும் (என அனைவருமே பூமிக்குள்) இழுக்கப்படுவார்கள். பின்பு அவர்களின் எண்ணங்களின்படியே அவர்கள் எழுப்பப்படுவார்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2118, முஸ்லிம்:2884)**

٣ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ: قَالَ النَّبِيُّ ﷺ: "لاَ هِجْرَةَ بَعْدَ الْفَتْحِ وَلَكِنْ جِهَادٌ وَنِيَّةٌ وَإِذَا اُسْتُنْفِرْتُمْ فَانْفِرُوا" مُتَّفَقٌ عَلَيْهِ.

وَمَعْنَاهُ: لاَ هِجْرَةَ مِنْ مَكَّةَ لأَنَّهَا صَارَتْ دَارَ إِسْلاَمٍ.

**3** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(மக்கா) வெற்றிக்குப்பின் ஹிஜ்ரத் என்பது கிடையாது. எனினும், (இறைவழிப்) போரும், (தூய) எண்ணமும் உள்ளது. நீங்கள் (போருக்கு) அழைக்கப்பட்டால், (போருக்குச்) செல்லுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:4312, முஸ்லிம்:1864)**

இதன் கருத்து, (மக்கா) இஸ்லாமிய நாடாக ஆகிவிட்டதால், மக்காவிலிருந்து ஹிஜ்ரத் இல்லை என்பதாகும்.

٤ – وَعَنْ أَبِي عَبْدِ اللّٰهِ جَابِرِ بْنِ عَبْدِ اللّٰهِ الأَنْصَارِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ مَا قَالَ: كُنَّا مَعَ النَّبِيِّ ﷺ فِي غَزَاةٍ فَقَالَ:" إِنَّ بِالْمَدِينَةِ لَرِجَالاً مَا سِرْتُمْ مَسِيرًا وَلاَ قَطَعْتُمْ وَادِيًا إِلاَّ كَانُوا مَعَكُمْ حَبَسَهُمُ الْمَرَضُ" وَفِي رِوَايَةٍ:" إِلاَّ شَرِكُوكُمْ فِي الأَجْرِ" رَوَاهُ مُسْلِمٌ.

وَرَوَاهُ الْبُخَارِيُّ عَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: رَجَعْنَا مِنْ غَزْوَةِ تَبُوكَ مَعَ النَّبِيِّ ﷺ فَقَالَ:" إِنَّ أَقْوَامًا خَلْفَنَا بِالْمَدِينَةِ مَا سَلَكْنَا شِعْبًا وَلاَ وَادِيًا إِلاَّ وَهُمْ مَعَنَا حَبَسَهُمُ الْعُذْرُ".

**4** ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு போரில் இருந்தோம். அப்போது, “(போருக்கு வராமல்) மதீனாவில் சில ஆண்கள் உள்ளனர். நீங்கள் நடக்கும் பாதையில், நீங்கள் கடந்து செல்லும் ஓடையில் உங்களோடு அவர்களும் இல்லாமல் (நீங்கள் செல்வது) இல்லை. அவர்களை நோய்தான் (போருக்கு வராமல்) தடுத்துவிட்டது'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் “நன்மை பெறும் விஷயத்தில் உங்களிடம் அவர்கள் கூட்டணிகளாக இருப்பார்களே தவிர (உங்களுடன் போரில் இல்லை)'' என்ற வாசகம் உள்ளது. **(முஸ்லிம்:1911)**

புகாரியில் அனஸ் (ரழி) அறிவிப்பதாக (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

நபி(ஸல்) அவர்களுடன் தபூக் போரை முடித்துக் கொண்டு திரும்பினோம். அப்போது, “சிலரை மதீனாவில் நாம் விட்டு வந்தோம். ஒரு கணவாய் மற்றும் ஓடையை - நம்மோடு அவர்கள் இருந்தே தவிர நாம் கடக்கவில்லை. அவர்களை நோய்தான் (போருக்கு வராமல்) தடுத்துவிட்டது'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2839)**

٥ - وَعَنْ أَبِي يَزِيدَ مَعْنِ بْنِ يَزِيدَ بْنِ الأَخْنَسِ رَضِيَ اللَّهُ عَنْهُمْ - وَهُوَ وَأَبُوهُ وَجَدُّهُ صَحَابِيُّونَ - قَالَ: كَانَ أَبِي يَزِيدُ أَخْرَجَ دَنَانِيرَ يَتَصَدَّقُ بِهَا فَوَضَعَهَا عِنْدَ رَجُلٍ فِي الْمَسْجِدِ فَجِئْتُ فَأَخَذْتُهَا فَأَتَيْتُهُ بِهَا. فَقَالَ: وَاللَّهِ مَا إِيَّاكَ أَرَدْتُ فَخَاصَمْتُهُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ:" لَكَ مَا نَوَيْتَ يَا يَزِيدُ وَلَكَ مَا أَخَذْتَ يَا مَعْنُ" رَوَاهُ الْبُخَارِيُّ

**5** (மஹ்ன் என்ற இவரும், யஸீத் எனும் இவரது தந்தையும், அக்னஸ் என்ற இவரது பாட்டனாரும் நபித்தோழர்களாவர்) அபூ யஸீத் மஹ்ன் இப்னு யஸீத் இப்னுல் அக்னஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்.

என் தந்தை யஸீத் அவர்கள், சில தீனார் (பொற்காசு)களைத் தர்மம் செய்வதற்காகக் கொண்டு வந்தார்கள். அதைப் பள்ளியில் இருந்த ஒருவரிடம் (தர்மம் செய்ய) ஒப்படைத்தார்கள். அப்போது நான் (அங்கு) வந்தேன். அதை நான் வாங்கிக் கொண்டு, என் தந்தையிடம் அதைக் கொண்டு வந்தேன். “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உனக்குத் தர நான் நாடவில்லை” என்று என் தந்தை கூறினார். உடனே நான் நபி (ஸல்) அவர்களிடம் இதுபற்றி முறையிட்டேன். “யஸீதே! நீர் எண்ணியது (நன்மை) உனக்கு உண்டு. மஹ்னே! நீ எடுத்தது உமக்கு உண்டு” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1422)**

٦ - وَعَنْ أَبِي إِسْحَاقَ سَعْدِ ابْنِ أَبِي وَقَّاصٍ مَالِكِ بْنِ أُهَيْبِ بْنِ عَبْدِ مَنَافِ بْنِ زُهْرَةَ بْنِ كِلاَبِ بْنِ مُرَّةَ بْنِ كَعْبِ بْنِ لُؤَيٍّ الْقُرَشِيِّ الزُّهْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَحَدِ الْعَشَرَةِ الْمَشْهُودِ لَهُمْ بِالْجَنَّةِ رَضِيَ اللَّهُ عَنْهُمْ قَالَ: جَاءَنِي رَسُولُ اللَّهِ ﷺ يَعُودُنِي عَامَ حَجَّةِ الْوَدَاعِ مِنْ وَجَعٍ اشْتَدَّ بِي فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ إِنِّي قَدْ بَلَغَ بِي مِنَ الْوَجَعِ مَا تَرَى وَأَنَا ذُو مَالٍ وَلاَ يَرِثُنِي إِلاَّ ابْنَةٌ لِي أَفَأَتَصَدَّقُ بِثُلُثَيْ مَالِي؟ قَالَ: لاَ قُلْتُ: فَالشَّطْرُ يَا رَسُولَ اللَّهِ؟ فَقَالَ: لاَ قُلْتُ: فَالثُّلُثُ يَا رَسُولَ اللَّهِ؟ قَالَ:" الثُّلُثُ وَالثُّلُثُ كَثِيرٌ - أَوْ كَبِيرٌ - إِنَّكَ أَنْ تَذَرَ وَرَثَتَكَ أَغْنِيَاءَ خَيْرٌ مِنْ أَنْ تَذَرَهُمْ عَالَةً يَتَكَفَّفُونَ النَّاسَ وَإِنَّكَ لَنْ تُنْفِقَ نَفَقَةً تَبْتَغِي بِهَا وَجْهَ اللَّهِ إِلاَّ أُجِرْتَ عَلَيْهَا حَتَّى مَا تَجْعَلُ فِي فِيِّ امْرَأَتِكَ". ) قَالَ ( فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أُخَلَّفُ بَعْدَ أَصْحَابِي؟ قَالَ:" إِنَّكَ لَنْ تُخَلَّفَ فَتَعْمَلَ عَمَلاً تَبْتَغِي بِهِ وَجْهَ اللَّهِ إِلاَّ ازْدَدْتَ بِهِ دَرَجَةً وَرِفْعَةً وَلَعَلَّكَ أَنْ تُخَلَّفَ حَتَّى يَنْتَفِعَ بِكَ أَقْوَامٌ وَيُضَرَّ بِكَ آخَرُونَ. اللَّهُمَّ أَمْضِ لأَصْحَابِي هِجْرَتَهُمْ وَلاَ تَرُدَّهُمْ عَلَى أَعْقَابِهِمْ لَكِنِ الْبَائِسُ سَعْدُ بْنُ خَوْلَةَ". يَرْثِي لَهُ رَسُولُ اللَّهِ ﷺ أَنْ مَاتَ بِمَكَّةَ: مُتَّفَقٌ عَلَيْهِ

**6** ‘(சொர்க்கத்திற்குரியவர்கள்’ என அறிவிக்கப்பட்ட பத்து நபர்களில் ஒருவரான) ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

‘இறுதி ஹஜ்’ வருடம் எனக்குக் கடுமையான வலி இருந்த போது, நோய் விசாரிக்க என்னிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். “இறைத்தூதர் அவர்களே! நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிற வலி எனக்கு ஏற்பட்ட நிலையில் உள்ளேன். நான் பணக்காரன். ஒரு மகளைத் தவிர வேறு வாரிசு எனக்கில்லை. நான் என் சொத்தில் மூன்றில் இரண்டு பங்கை தர்மம் செய்யலாமா? என்று கேட்டேன். “கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “பாதி கொடுக்கலாமா? இறைத்தூதர் அவர்களே!” என்று நான் கேட்டேன். “கூடாது” என்று கூறினார்கள் “மூன்றில் ஒரு பங்கு (கொடுக்கலாமா?) இறைத்தூதர் அவர்களே!” என்று கேட்டேன். “மூன்றில் ஒரு பங்கு கொடுக்கலாம். மூன்றில் ஒரு பங்கே அதிகம்தான். நிச்சயமாக! நீ உன் வாரிசுகளைப் பணக்காரர்களாக விட்டுச்செல்வது, மக்களிடம் யாசகம் கேட்கும் ஏழைகளாக, அவர்களை நீ விட்டுச் செல்வதை விடச் சிறந்ததாகும்.

“இறைத்தூதர் அவர்களே! என் தோழர்கள் (எல்லாம்) தங்களுடன் மதீனா திரும்பும் பொழுது (எனது நோயின் காரணமாக) நான் (மட்டும்) மக்காவில் தங்கி விடுவேனோ?” என்று கேட்டேன். நிச்சயமாக நீர் தங்கி விடமாட்டீர். அல்லாஹ்வின் திருப்தியை நீர் நாடிச் செய்வது மூலம் உன் தகுதியையும், கண்ணியத்தையும் அதிகமாக்கிக் கொள்வீர். உம்மிடம் சிலர் பயன் பெற்றும், மற்ற சிலர்

உம்மிடம் துன்பம் அடைவர் என்ற அளவுக்கு நீர் நீண்ட காலம் வாழக் கூடும்'' (என்று கூறிவிட்டு), இறைவா! என் தோழர்களிடம் அவர்களின் ஹிஜ்ரத்தை ஏற்பாயாக! அவர்களின் குதிகால்கள் மீது, அவர்களை திருப்பி விடாதே! (என்று பிரார்த்தனை செய்தார்கள்).

எனினும், '(ஹிஜ்ரத் செய்யாமல் இறந்துவிட்ட) ஸஅது இப்னு கவ்லாதான் அனுதாபத்திற் குரியவர்' என்று கூறிய நபி (ஸல்) அவர்கள் மக்காவில் இறந்த அவருக்காக இரங்கல் தெரிவித்தார்கள்.

**(புகாரி:1295, முஸ்லிம்:1628)**

٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ عَبْدِ الرَّحْمَنِ بْنِ صَخْرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" إِنَّ اللّٰهَ تَعَالَى لاَ يَنْظُرُ إِلَى أَجْسَامِكُمْ وَلاَ إِلَى صُوَرِكُمْ وَلَكِنْ يَنْظُرُ إِلَى قُلُوبِكُمْ وَأَعْمَالِكُمْ" رَوَاهُ مُسْلِمٌ

**7** (அபூ ஹுரைரா என்ற) அப்துர் ரஹ்மான் இப்னு ஸக்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''நிச்சயமாக அல்லாஹ், உங்களின் உடல்களையோ, உங்களின் தோற்றங்களையோ பார்க்க மாட்டான். எனினும், உங்களின் இதயங்களையும், உங்களின் செயல்களையும் பார்ப்பான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2564)**

٨ - وَعَنْ أَبِي مُوسَى عَبْدِ اللّٰهِ بْنِ قَيْسٍ الأَشْعَرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: سُئِلَ رَسُولُ اللّٰهِ ﷺ عَنِ الرَّجُلِ يُقَاتِلُ شَجَاعَةً وَيُقَاتِلُ حَمِيَّةً وَيُقَاتِلُ رِيَاءً أَيُّ ذَلِكَ فِي سَبِيلِ اللّٰهِ؟ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" مَنْ قَاتَلَ لِتَكُونَ كَلِمَةُ اللّٰهِ هِيَ الْعُلْيَا فَهُوَ فِي سَبِيلِ اللّٰهِ" مُتَّفَقٌ عَلَيْهِ

**8** (அபூமூஸா) அப்துல்லாஹ் இப்னு கய்ஸ் அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ''ஒருவர் வீரத்திற்காகப் போரிடுகிறார். ஒருவர் ரோசத்திற்காகப் போரிடுகிறார். ஒருவர் பிறர் போற்றிடப் போரிடுகிறார். இதில் எவர் இறைவழியில் உள்ளவர்?'' என்று கேட்கப்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள், ''அல்லாஹ்வின் வார்த்தை உயர்ந்திட வேண்டி ஒருவர் போர் செய்தால், அவரே இறைவழியில் உள்ளவர்'' என்று பதில் கூறினார்கள்.

**(புகாரி:7458, முஸ்லிம்:1904)**

٩ - وَعَنْ أَبِي بَكْرَةَ نُفَيْعِ بْنِ الْحَارِثِ الثَّقَفِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" إِذَا الْتَقَى الْمُسْلِمَانِ بِسَيْفَيْهِمَا فَالْقَاتِلُ وَالْمَقْتُولُ فِي النَّارِ". قُلْتُ: يَا رَسُولَ اللّٰهِ هَذَا الْقَاتِلُ فَمَا بَالُ الْمَقْتُولِ؟ قَالَ:" إِنَّهُ كَانَ حَرِيصًا عَلَى قَتْلِ صَاحِبِهِ" مُتَّفَقٌ عَلَيْهِ

**9** அபூபக்ரா என்ற நுஃபய்உ இப்னு அல்ஹாரிஸ் அஸ்ஸகஃபீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''இரண்டு முஸ்லிம்கள் தங்களின் வாள்கள் மூலம் (சண்டையில்) சந்தித்தால், கொலை செய்தவரும், கொலை செய்யப்பட்டவரும் நரகில் இருப்பார்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கு, ''இறைத்தூதர் அவர்களே! கொலை செய்தவர் விஷயத்தில் இது சரி. ஆனால் கொலை செய்யப்பட்டவர் (நரகில் நுழைய) காரணம் என்ன?'' என்று நான் கேட்டேன். ''நிச்சயமாக! அவரும் தன் தோழரைக் கொல்வதில் ஆர்வமுள்ளவராகவே இருந்தார்!'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:31, முஸ்லிம்:2888)**

١٠ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" صَلاَةُ الرَّجُلِ جَمَاعَةً تَزِيدُ عَلَى صَلاَتِهِ فِي سُوقِهِ وَبَيْتِهِ بِضْعًا وَعِشْرِينَ دَرَجَةً وَذَلِكَ أَنَّ أَحَدَهُمْ إِذَا تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ ثُمَّ أَتَى الْمَسْجِدَ لاَ يُرِيدُ إِلاَّ الصَّلاَةَ لاَ يَنْهَزُهُ إِلاَّ الصَّلاَةُ لَمْ يَخْطُ خُطْوَةً إِلاَّ رُفِعَ لَهُ بِهَا دَرَجَةٌ وَحُطَّ عَنْهُ بِهَا خَطِيئَةٌ حَتَّى يَدْخُلَ الْمَسْجِدَ فَإِذَا دَخَلَ الْمَسْجِدَ كَانَ فِي الصَّلاَةِ مَا كَانَتْ

الصَّلاَةُ هِيَ تَحْبِسُهُ! وَالْمَلاَئِكَةُ يُصَلُّونَ عَلَى أَحَدِكُمْ مَا دَامَ فِي مَجْلِسِهِ الَّذِي صَلَّى فِيهِ يَقُولُونَ: اللَّهُمَّ ارْحَمْهُ اللَّهُمَّ اغْفِرْ لَهُ اللَّهُمَّ تُبْ عَلَيْهِ مَا لَمْ يُؤْذِ فِيهِ مَا لَمْ يُحْدِثْ فِيهِ" مُتَّفَقٌ عَلَيْهِ: وَهَذَا لَفْظُ مُسْلِمٍ. وَقَوْلُهُ ﷺ: " يَنْهَزُهُ" هُوَ بِفَتْحِ الْيَاءِ وَالْهَاءِ وَبِالزَّايِ: أَيْ يُخْرِجُهُ وَيُنْهِضُهُ.

**10** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஜமாஅத்துடன் (கூட்டாக) ஒருவர் தொழுவது, அவர் தன் கடையில், தன் வீட்டில் தொழுவதைவிட, தகுதியால் இருபது மடங்கு அதிகமாகும். இது, அவர்களில் ஒருவர் உளுச் செய்து, அந்த உளுவை அழகுறச்செய்து, பின்னர் தொழுகையைத் தவிர வேறு நோக்கமின்றி, தொழுகைக்காகவே வீட்டை விட்டு பள்ளிவாசலுக்கு வந்தால், அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடிக்கும், அதன் மூலம் அவரது பதவி உயர்த்தப்படும். இதனால் அவர் பள்ளியில் நுழையும் வரை (அவர் செய்த) ஒரு தவறு அவரை விட்டும் நீக்கப்படும்.

பள்ளியில் நுழைந்து விட்டால், தொழுகையானது அவரைப் பள்ளியில் இருக்க செய்ததால், தொழுகையிலேயே அவர் இருக்கிறார். உங்களில் ஒருவர் தொழுவதற்காக வந்து பள்ளியில் இருக்கும் காலமெல்லாம், வானவர்கள் அவருக்காகத் துஆ செய்கிறார்கள். "இறைவா! இவருக்கு அருள் புரிவாயாக! இறைவா! இவரை மன்னிப்பாயாக! இறைவா! இவரது பாவ மன்னிப்பை ஏற்பாயாக!" என்று அவர்கள் கூறுவார்கள். அவர் பிறருக்கு நோவினை தராதவரை, அவரது உளு முறியாத வரை (இது நீடிக்கும்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:647, முஸ்லிம்:649/272. இது முஸ்லிமின் வாசகமாகும்)**

١١ - وَعَنْ أَبِي الْعَبَّاسِ عَبْدِ اللَّهِ بْنِ عَبَّاسِ بْنِ عَبْدِ الْمُطَّلِبِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ رَسُولِ اللَّهِ ﷺ فِيمَا يَرْوِي عَنْ رَبِّهِ تَبَارَكَ وَتَعَالَى قَالَ:" إِنَّ اللَّهَ كَتَبَ الْحَسَنَاتِ وَالسَّيِّئَاتِ ثُمَّ بَيَّنَ ذَلِكَ: فَمَنْ هَمَّ بِحَسَنَةٍ فَلَمْ يَعْمَلْهَا كَتَبَهَا اللَّهُ تَبَارَكَ وَتَعَالَى عِنْدَهُ حَسَنَةً كَامِلَةً. وَإِنْ هَمَّ بِهَا فَعَمِلَهَا كَتَبَهَا اللَّهُ عَشْرَ حَسَنَاتٍ إِلَى سَبْعِ مِائَةِ ضِعْفٍ إِلَى أَضْعَافٍ كَثِيرَةٍ وَإِنْ هَمَّ بِسَيِّئَةٍ فَلَمْ يَعْمَلْهَا كَتَبَهَا اللَّهُ تَعَالَى عِنْدَهُ حَسَنَةً كَامِلَةً. وَإِنْ هَمَّ بِهَا فَعَمِلَهَا كَتَبَهَا اللَّهُ سَيِّئَةً وَاحِدَةً". مُتَّفَقٌ عَلَيْهِ

**11** (அபுல் அப்பாஸ் என்ற) அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக, அல்லாஹ் நல்லவைகளையும், தீமைகளையும் பதிவு செய்கிறான்" என்று கூறிய நபி (ஸல்)அவர்கள், பின்பு அவற்றைப் (பின்வருமாறு) தெளிவாக்கினார்கள். "நன்மை செய்ய ஒருவன் எண்ணி, அதை அவன் செய்யவில்லையானால், இதை அல்லாஹ் தன்னிடம் ஒரு முழு நன்மையாக எழுதுவான். மேலும் நன்மையை எண்ணி, அதை செய்தும் விட்டால், அதை அல்லாஹ் பத்து நன்மைகள் முதல் எழுநூறு மற்றும் அதிக மடங்கு வரை எழுதுவான்.

ஒருவன் தீமை செய்ய எண்ணி, அதை அவன் செய்யாவிட்டால், அல்லாஹ் அதைத் தன்னிடம் ஒரு முழுமையான நன்மையாக எழுதி விடுகிறான். அதை ஒருவன் எண்ணி, அதைச் செய்துவிட்டால், அதை அல்லாஹ் ஒரு தீமையாகவே எழுதுகிறான்." **(புகாரி:6491, முஸ்லிம்:131)**

١٢ - وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" انْطَلَقَ ثَلاَثَةُ نَفَرٍ مِمَّنْ كَانَ قَبْلَكُمْ حَتَّى آوَاهُمُ الْمَبِيتُ إِلَى غَارٍ فَدَخَلُوهُ فَانْحَدَرَتْ صَخْرَةٌ مِنَ الْجَبَلِ فَسَدَّتْ عَلَيْهِمُ الْغَارَ. فَقَالُوا: إِنَّهُ لاَ يُنْجِيكُمْ مِنْ هَذِهِ الصَّخْرَةِ إِلاَّ أَنْ تَدْعُوا اللَّهَ تَعَالَى بِصَالِحِ أَعْمَالِكُمْ. قَالَ رَجُلٌ مِنْهُمْ: اللَّهُمَّ كَانَ لِي أَبَوَانِ شَيْخَانِ كَبِيرَانِ وَكُنْتُ لاَ أَغْبِقُ قَبْلَهُمَا أَهْلاً وَلاَ مَالاً فَنَأَى بِي طَلَبُ الشَّجَرِ يَوْمًا فَلَمْ أُرِحْ عَلَيْهِمَا حَتَّى نَامَا فَحَلَبْتُ لَهُمَا غَبُوقَهُمَا فَوَجَدْتُهُمَا نَائِمَيْنِ فَكَرِهْتُ أَنْ أُوقِظَهُمَا وَأَنْ أَغْبِقَ قَبْلَهُمَا أَهْلاً أَوْ مَالاً فَلَبِثْتُ - وَالْقَدَحُ عَلَى يَدَيَّ - أَنْتَظِرُ اسْتِيقَاظَهُمَا

حَتَّى بَرِقَ الْفَجْرُ وَالصِّبْيَةُ يَتَضَاغَوْنَ عِنْدَ قَدَمِي فَاسْتَيْقَظَا فَشَرِبَا غَبُوقَهُمَا. اللَّهُمَّ إِنْ كُنْتُ فَعَلْتُ ذَلِكَ ابْتِغَاءَ وَجْهِكَ فَفَرِّجْ عَنَّا مَا نَحْنُ فِيهِ مِنْ هَذِهِ الصَّخْرَةِ فَانْفَرَجَتْ شَيْئًا لاَ يَسْتَطِيعُونَ الْخُرُوجَ مِنْهُ. قَالَ الآخَرُ: "اللَّهُمَّ كَانَتْ لِي ابْنَةُ عَمٍّ كَانَتْ أَحَبَّ النَّاسِ إِلَيَّ" وَفِي رِوَايَةٍ: "كُنْتُ أُحِبُّهَا كَأَشَدِّ مَا يُحِبُّ الرِّجَالُ النِّسَاءَ فَأَرَدْتُهَا عَلَى نَفْسِهَا فَامْتَنَعَتْ مِنِّي حَتَّى أَلَمَّتْ بِهَا سَنَةٌ مِنَ السِّنِينَ فَجَاءَتْنِي فَأَعْطَيْتُهَا عِشْرِينَ وَمِائَةَ دِينَارٍ عَلَى أَنْ تُخَلِّيَ بَيْنِي وَبَيْنَ نَفْسِهَا فَفَعَلَتْ حَتَّى إِذَا قَدَرْتُ عَلَيْهَا وَفِي رِوَايَةٍ: "فَلَمَّا قَعَدْتُ بَيْنَ رِجْلَيْهَا قَالَتْ: اتَّقِ اللَّهَ وَلاَ تَفُضَّ الْخَاتَمَ إِلاَّ بِحَقِّهِ فَانْصَرَفْتُ عَنْهَا وَهِيَ أَحَبُّ النَّاسِ إِلَيَّ وَتَرَكْتُ الذَّهَبَ الَّذِي أَعْطَيْتُهَا اللَّهُمَّ إِنْ كُنْتُ فَعَلْتُ ذَلِكَ ابْتِغَاءَ وَجْهِكَ فَافْرُجْ عَنَّا مَا نَحْنُ فِيهِ فَانْفَرَجَتِ الصَّخْرَةُ غَيْرَ أَنَّهُمْ لاَ يَسْتَطِيعُونَ الْخُرُوجَ مِنْهَا. وَقَالَ الثَّالِثُ: اللَّهُمَّ إِنِّي اسْتَأْجَرْتُ أُجَرَاءَ وَأَعْطَيْتُهُمْ أَجْرَهُمْ غَيْرَ رَجُلٍ وَاحِدٍ تَرَكَ الَّذِي لَهُ وَذَهَبَ فَثَمَّرْتُ أَجْرَهُ حَتَّى كَثُرَتْ مِنْهُ الأَمْوَالُ فَجَاءَنِي بَعْدَ حِينٍ فَقَالَ: يَا عَبْدَ اللَّهِ أَدِّ إِلَيَّ أَجْرِي فَقُلْتُ: كُلُّ مَا تَرَى مِنْ أَجْرِكَ: مِنَ الإِبِلِ وَالْبَقَرِ وَالْغَنَمِ وَالرَّقِيقِ. فَقَالَ: يَا عَبْدَ اللَّهِ لاَ تَسْتَهْزِئْ بِي! فَقُلْتُ: لاَ أَسْتَهْزِئُ بِكَ فَأَخَذَهُ كُلَّهُ فَاسْتَاقَهُ فَلَمْ يَتْرُكْ مِنْهُ شَيْئًا: اللَّهُمَّ إِنْ كُنْتُ فَعَلْتُ ذَلِكَ ابْتِغَاءَ وَجْهِكَ فَافْرُجْ عَنَّا مَا نَحْنُ فِيهِ! فَانْفَرَجَتِ الصَّخْرَةُ فَخَرَجُوا يَمْشُونَ"

مُتَّفَقٌ عَلَيْهِ

**12** (அபூ அப்துர்ரஹ்மான் என்ற) அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களுக்கு முன் வாழ்ந்தோரில் மூன்று நபர்கள் (வெளியூர்) சென்றார்கள். செல்லும் வழியில் ஒரு குகையில் இரவு தங்கும்படியான (சூழல்) ஏற்பட்டு, அதில் அவர்கள் நுழைந்தார்கள். (அப்போது) மலையிலிருந்து ஒரு பாறை உருண்டு வந்து, அவர்கள் இருந்த குகையின் வாசலை அடைத்து விட்டது. அப்பொழுது அவர்கள், “நாம் செய்த செயல்களில் நல்லதைக்கூறி அல்லாஹ்விடம் நாம் பிரார்த்தனை செய்தாலே தவிர, இந்தப் பாறையிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ள இயலாது” என்று (தங்களுக்குள்) பேசிக் கொண்டார்கள்.

“இறைவா! எனக்கு வயதான பெற்றோர் உண்டு. அவ்விருவரும் உண்ணும் முன் குடும்பத்தாருக்கோ, ஊழியர்களுக்கோ நான் பால் தரமாட்டேன். ஒருநாள் விறகு தேடி வெகுதூரம் சென்றுவிட்டேன். இரவு கடந்துவிட்டது. என் பெற்றோருக்காக நான் பாலைக்கறந்து எடுத்து வந்தேன். இருவரும் தூங்கிக் கொண்டிருந்தனர். எழுப்ப மனமில்லாமல் அவர்கள் விழிக்கும் வரை காத்திருந்தேன். அதற்கு முன் என் குடும்பத்தினருக்கு அதனைக் கொடுக்க விருப்பமில்லை.

இறுதியில் காலை நேரமும் வந்துவிட்டது. குழந்தைகள் என் காலடியில் பசியுடன் தூங்கிவிட்டார்கள். என் பெற்றோர் விழித்தனர். இருவரும் பாலை அருந்தினார்கள். இறைவா! உன் திருப்தியை நாடி இதை நான் செய்திருந்தால் இந்தப் பாறை மூலம் எங்களுக்கு ஏற்பட்டிருக்கும் தடையை நீக்குவாயாக!” என்று அவர்களில் ஒருவர் பிரார்த்தித்தார். உடனே அதிலிருந்து வெளியே வர இயலாத அளவுக்கு பாறை சிறிது விலகியது.

“இறைவா! எனக்குச் சிறிய தந்தை மகள் இருந்தாள். அவள் எனக்கு மிகப் பிரியமானவளாக இருந்தாள். (மற்றொரு அறிவிப்பில், ஆண்கள் பெண்களை விரும்புவதில் கூடுதல் நிலை இருப்பது போலவே,) அவளை அடைய நான் விரும்பினேன். (என் ஆசைக்கு இணங்க மறுத்தவளாக) என்னிடமிருந்து விலகி விட்டாள். பிறகு பஞ்சம் ஏற்பட்ட ஆண்டுகளில் ஒரு ஆண்டின் போது, அவள் என்னிடம் உதவி கேட்டு வந்தாள். “அவளும் நானும் தனியே இருப்பது” என்ற நிபந்தனையின் பேரில் அவளிடம் நூற்றி இருபது தீனார்களைக் கொடுத்தேன். அவளும் சம்மதித்தாள். அவளை நான் நெருங்கினேன். (மற்றொரு அறிவிப்பில், அவளின் இரண்டு கால்களுக்கிடையே உட்கார்ந்தேன்). அப்போது அவள், “அல்லாஹ்வை அஞ்சுவீராக! உரிமையின்றி முத்திரையை நீக்கிவிடாதீர்” என்று கூறினாள். அவள் எனக்கு, மற்றவர்களை விட மிகப் பிரியமானவளாக இருந்தும், நான் அவளை விட்டும் நீங்கிவிட்டேன். அவளுக்கு நான் கொடுத்த

தங்கக் காசுகளையும் திரும்பப் பெற்றுக் கொள்ளவில்லை. இறைவா! உன் திருப்தியை நாடி இதை நான் செய்திருந்தால், இந்தச் சிரமத்தை எங்களை விட்டும் நீக்குவாயாக!'' என்று மற்றொருவர் பிரார்த்தித்தார். இருப்பினும் அவர்களால் வெளியே வர இயலாத அளவுக்கே பாறை சற்று விலகியது.

"இறைவா! பல கூலியாட்களை வைத்து வேலை வாங்கிக் கொண்டிருந்தேன். அவர்களின் கூலியை, ஒருவரைத் தவிர அனைவருக்கும் கொடுத்து விட்டேன். தனக்குரியதை விட்டுவிட்டு அவர் சென்றுவிட்டார். அவரது கூலியை, தொழிலில் பயன்படுத்தினேன். அதிலிருந்து லாபம் பெருகியது. சில காலம் கழிந்தது. என்னிடம் அவர் வந்தார். "அல்லாஹ்வின் அடியாரே! என் கூலியை எனக்குத் தந்திடுவீராக!'' என்று கூறினார். "நீ பார்க்கும் இந்தச் (சொத்து) அனைத்தும் உன்னுடையதுதான். ஒட்டகம், மாடு, ஆடு, அடிமை அனைத்தும் உமக்கே!'' என்று நான் கூறினேன். "அல்லாஹ்வின் அடியாரே! என்னைக் கேலி செய்யாதீர்!'' என்று கூறினார். "உன்னை நான் கேலி செய்ய வில்லை''என்று விஷயத்தைக் கூறினேன். உடனே அவர் அனைத்தையும் எடுத்துக் கொண்டார். அதிலிருந்து எதையும் அவர் விட்டுச் செல்லவில்லை. இறைவா! உன் திருப்தியை நாடி இதை நான் செய்திருந்தால், நாங்கள் இப்பொழுது உள்ள இந்த நிலைமையை எங்களை விட்டும் நீக்குவாயாக!'' என்று மூன்றாவது நபர் பிரார்த்தித்தார். உடனே பாறை விலகியது. மூவரும் குகையை விட்டு வெளியேறினார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2215,2272. முஸ்லிம்:2743)**

## ٢ – باب التوبة

## பாடம் : 2 - பாவ மன்னிப்பு (தவ்பா)

قَالَ الْعُلَمَاءُ: التَّوْبَةُ وَاجِبَةٌ مِنْ كُلِّ ذَنْبٍ فَإِنْ كَانَتْ الْمَعْصِيَةُ بَيْنَ الْعَبْدِ وَبَيْنَ اللَّهِ تَعَالَى لاَ تَتَعَلَّقُ بِحَقِّ آدَمِيٍّ فَلَهَا ثَلاَثَةُ شُرُوطٍ: أَحَدُهَا أَنْ يُقْلِعَ عَنِ الْمَعْصِيَةِ

وَالثَّانِي أَنْ يَنْدَمَ عَلَى فِعْلِهَا

وَالثَّالِثُ أَنْ يَعْزِمَ أَلاَّ يَعُودَ إِلَيْهَا أَبَدًا. فَإِنْ فُقِدَ أَحَدُ الثَّلاَثَةِ لَمْ تَصِحَّ تَوْبَتُهُ.

وَإِنْ كَانَتْ الْمَعْصِيَةُ تَتَعَلَّقُ بِآدَمِيٍّ فَشُرُوطُهَا أَرْبَعَةٌ: هَذِهِ الثَّلاَثَةُ وَأَنْ يَبْرَأَ مِنْ حَقِّ صَاحِبِهَا فَإِنْ كَانَتْ مَالاً أَوْ نَحْوَهُ رَدَّهُ إِلَيْهِ وَإِنْ كَانَتْ حَدَّ قَذْفٍ وَنَحْوَهُ مَكَّنَهُ مِنْهُ أَوْ طَلَبَ عَفْوَهُ وَإِنْ كَانَتْ غِيبَةً اسْتَحَلَّهُ مِنْهَا. وَيَجِبُ أَنْ يَتُوبَ مِنْ جَمِيعِ الذُّنُوبِ فَإِنْ تَابَ مِنْ بَعْضِهَا صَحَّتْ تَوْبَتُهُ عِنْدَ أَهْلِ الْحَقِّ مِنْ ذَلِكَ الذَّنْبِ وَبَقِيَ عَلَيْهِ الْبَاقِي. وَقَدْ تَظَاهَرَتْ دَلاَئِلُ الْكِتَابِ وَالسُّنَّةِ وَإِجْمَاعُ الأُمَّةِ عَلَى وُجُوبِ التَّوْبَةِ:

قَالَ اللَّهُ تَعَالَى: وَتُوبُوا إِلَى اللَّهِ جَمِيعًا أَيُّهَا الْمُؤْمِنُونَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ. وَقَالَ تَعَالَى: اسْتَغْفِرُوا رَبَّكُمْ ثُمَّ تُوبُوا إِلَيْهِ. وَقَالَ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا تُوبُوا إِلَى اللَّهِ تَوْبَةً نَصُوحًا.

**அறிஞர்கள் கூறுகிறார்கள்:** *பாவமன்னிப்பு என்பது, ஓர் அடியானுக்கும் அல்லாஹ்வுக்குமிடையே மனித உரிமை சம்பந்தப்படாத பாவம் ஒன்று இருக்குமானால், அந்த பாவங்கள் அனைத்தையும் விட்டும் மீள்வது கடமையாகும். இதற்கு மூன்று நிபந்தனைகள் உண்டு.*

*1) பாவத்தை விட்டு முற்றிலும் நீங்குவது.*

*2) அவற்றைச் செய்தது குறித்து கவலைப்படுவது.*

*3) எக்காலமும் இனி பாவம் செய்யாமல் இருப்பது என உறுதி கொள்வது.*

இந்த மூன்றில் ஒன்று இல்லாது போனாலும் பாவமன்னிப்பு என்பது கிடையாது.

மனித உரிமை சம்பந்தப்பட்ட பாவம் இருக்குமானால், பாவ மன்னிப்புக்கு நான்கு நிபந்தனைகள் உண்டு. இந்த மூன்று நிபந்தனைகள் போக, "மனித உரிமைகளை அவரவர்களிடம் சேர்த்துவிட வேண்டும்" என்பது நான்காவதாகும். பிறரின் பொருளை அபகரித்திருந்தால், அதை உரியவரிடம் ஒப்படைப்பார். அவதூறு கூறி இருந்தால், தண்டனை பெற்றுக் கொள்வார். அல்லது அதற்கான மன்னிப்பை தேடிப் பெறுவார். பிறரைப் புறம் பேசி இருந்தால், அதற்காக அவரிடம் மன்னிப்புக் கோருவார்.

அனைத்துப் பாவங்களிலிருந்தும், பாவமன்னிப்புப் பெறுவதுக் கட்டாயமாகும். சில பாவங்களி லிருந்து மட்டும் பாவமன்னிப்புச் செய்தால், அந்தப் பாவங்களிலிருந்து பாவமன்னிப்பு ஏற்பட்டு விடும் என்பது அறிஞர்களின் கருத்தாகும். மீதமுள்ள பாவங்களுக்கு பாவமன்னிப்பு தேடுவது அவசியமாகும். பாவமன்னிப்பு கட்டாயம் என்பதற்கு குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்கள் தெளிவாக உள்ளன.

**அல்லாஹ் கூறுகிறான்:** *"இறைவிசுவாசிகளே! அனைத்துப் பாவங்களுக்கும் அல்லாஹ்விடமே பாவமன்னிப்புத் தேடுங்கள். இதனால் நீங்கள் வெற்றி பெறுவீர்கள்." (24 : 31)*

*"இறைவிசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்விடமே கலப்பற்ற முறையில் தவ்பாச் செய்துப் பாவமன்னிப்பு பெறுங்கள்." (66 : 8)*

١٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ:" وَاللّٰهِ إِنِّي لأَسْتَغْفِرُ اللّٰهَ وَأَتُوبُ إِلَيْهِ فِي الْيَوْمِ أَكْثَرَ مِنْ سَبْعِينَ مَرَّةً" رَوَاهُ الْبُخَارِيُّ

**13** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் ஒரு நாளில், எழுபது தடவைக்கும் மிக அதிகமாக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறேன்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6307)**

١٤ - وَعَنْ الأَغَرِّ بْنِ يَسَارٍ الْمُزَنِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ:" قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ يَا أَيُّهَا النَّاسُ تُوبُوا إِلَى اللّٰهِ فَإِنِّي أَتُوبُ فِي الْيَوْمِ إِلَيْهِ مِائَةَ مَرَّةٍ" رَوَاهُ مُسْلِمٌ

**14** அல்அஹர்ரு இப்னு யஸார் அல் முஸனிய்யி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதர்களே! அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுங்கள். அவனிடம் பிழை பொறுத்திட வேண்டுங்கள். நிச்சயமாக நான் ஒரு நாளைக்கு நூறு முறை பாவமன்னிப்பு(தவ்பா)ச் செய்கிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2702)**

١٥ - وَعَنْ أَبِي حَمْزَةَ أَنَسِ بْنِ مَالِكٍ الأَنْصَارِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ خَادِمِ رَسُولِ اللّٰهِ ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" لَلّٰهُ أَفْرَحُ بِتَوْبَةِ عَبْدِهِ مِنْ أَحَدِكُمْ سَقَطَ عَلَى بَعِيرِهِ وَقَدْ أَضَلَّهُ فِي أَرْضِ فَلاَةٍ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ " لَلّٰهُ أَشَدُّ فَرَحًا بِتَوْبَةِ عَبْدِهِ حِينَ يَتُوبُ إِلَيْهِ مِنْ أَحَدِكُمْ كَانَ عَلَى رَاحِلَتِهِ بِأَرْضِ فَلاَةٍ فَانْفَلَتَتْ مِنْهُ وَعَلَيْهَا طَعَامُهُ وَشَرَابُهُ فَأَيِسَ مِنْهَا فَأَتَى شَجَرَةً فَاضْطَجَعَ فِي ظِلِّهَا وَقَدْ أَيِسَ مِنْ رَاحِلَتِهِ. فَبَيْنَمَا هُوَ كَذَلِكَ إِذْ هُوَ بِهَا قَائِمَةً عِنْدَهُ فَأَخَذَ بِخِطَامِهَا ثُمَّ قَالَ مِنْ شِدَّةِ الْفَرَحِ: اللّٰهُمَّ أَنْتَ عَبْدِي وَأَنَا رَبُّكَ أَخْطَأَ مِنْ شِدَّةِ الْفَرَحِ"

**15** அபூ ஹம்ஸா என்ற அனஸ் இப்னு மாலிக் அல்அன்சாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்.

"பாலைவனத்தில் காணாமல் போன தன் ஒட்டகத்தை மீண்டும் பெற்றுவிட்டதால், அவருக்கு ஏற்படும் மகிழ்ச்சியை விட, தன் அடியான் தன்னிடம் பாவமன்னிப்புக் கேட்கும்போது, அல்லாஹ் அதிகம் மகிழ்ச்சியடைகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6309, முஸ்லிம்:2747)**

“பாலைவனத்தில் பயணம் செய்யும்போது, ஒருவரின் வாகனம் தொலைந்து விடுகிறது. அதில்தான் உணவும் தண்ணீரும் இருந்தது. இதனால் மிகவும் கவலையுற்றார். (பயணத்தை தொடர முடியாத நிலையில்) ஒரு மரத்திற்கு அருகில் வந்து, அதன் நிழலில் நின்று விட்டார். அப்போது, எதிர்பாராத விதமாக அவர் வாகனம் நிற்கிறது. உடனே அதன் கடிவாளத்தைப் பிடித்து மிக மகிழ்ச்சி யுடன், “இறைவா! நீ என் அடிமை. நான் உன் இறைவன்” என்று சந்தோச மிகுதியால் தவறாக கூறிவிடுகிறார். இவரின் சந்தோசத்தை விட, அல்லாஹ்வுக்கு தன் அடியான் தன்னிடம் தவ்பா செய்யும் போது மிக அதிகமாக மகிழ்ச்சியடைகிறான்” என்று முஸ்லிமில் உள்ள மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

١٦ - وَعَنْ أَبِي مُوسَى عَبْدِ اللَّهِ بْنِ قَيْسٍ الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" إِنَّ اللَّهَ تَعَالَى يَبْسُطُ يَدَهُ بِاللَّيْلِ لِيَتُوبَ مُسِيءُ النَّهَارِ وَيَبْسُطُ يَدَهُ بِالنَّهَارِ لِيَتُوبَ مُسِيءُ اللَّيْلِ حَتَّى تَطْلُعَ الشَّمْسُ مِنْ مَغْرِبِهَا" رَوَاهُ مُسْلِمٌ

**16** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக, அல்லாஹ் பகலில் குற்றமிழைத்தவர் தவ்பாச் செய்வதற்காக இரவில் தன் கையை விரிக்கிறான். சூரியன் மறைந்து உதயமாகும் வரை இரவில் குற்றமிழைத்தவர் தவ்பாச் செய்வதற்காக பகலில் தன் கையை விரிக்கிறான்” (அதாவது பாவமன்னிப்பை ஏற்றுக் கொள்கிறான்.) என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2759)**

١٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَنْ تَابَ قَبْلَ أَنْ تَطْلُعَ الشَّمْسُ مِنْ مَغْرِبِهَا تَابَ اللَّهُ عَلَيْهِ". رَوَاهُ مُسْلِمٌ

**17** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சூரியன் மறைந்ததிலிருந்து அது உதயமாகும் முன் ஒருவன் பாவமன்னிப்புக் கோரினால், அதை அல்லாஹ் ஏற்கிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2703)**

١٨ - وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمنِ عَبْدِ اللهِ بنِ عُمَرَ بنِ الخَطَّابِ رضي الله عنهما عن النَّبِيِّ ﷺ قال : ((إنَّ اللهَ عَزَّ وَجَلَّ يَقْبَلُ تَوْبَةَ العَبْدِ مَا لَمْ يُغَرْغِرْ رواه الترمذي وقال : حديثٌ حسنٌ.

**18** (அபூ அப்துர்ரஹ்மான் என்ற) அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(மரண வேளையில்) ஓர் அடியானின் தொண்டைக்குழிக்குள் உயிர் வந்து சேரும் வரை, நிச்சயமாக அல்லாஹ், பாவமன்னிப்புக் கோருவதை ஏற்றுக் கொள்கிறான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:3537. இது ‘ஹஸன்’ ஹதீஸ் என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٩ - وَعَنْ زِرِّ بْنِ حُبَيْشٍ قَالَ: أَتَيْت صَفْوَانَ بْنَ عَسَّالٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَسْأَلُهُ عَنْ الْمَسْحِ عَلَى الْخُفَّيْنِ فَقَالَ: مَا جَاءَ بِكَ يَا زِرُّ؟ فَقُلْت: ابْتِغَاءَ الْعِلْمِ. فَقَالَ:" إِنَّ الْمَلاَئِكَةَ تَضَعُ أَجْنِحَتَهَا لِطَالِبِ الْعِلْمِ رِضًى بِمَا يَطْلُبُ. فَقُلْت: إِنَّهُ قَدْ حَكَّ فِي صَدْرِي الْمَسْحُ عَلَى الْخُفَّيْنِ بَعْدَ الْغَائِطِ وَالْبَوْلِ وَكُنْت امْرَأً مِنْ أَصْحَابِ النَّبِيِّ ﷺ فَجِئْتُ أَسْأَلُك هَلْ سَمِعْته يَذْكُرُ فِي ذَلِكَ شَيْئًا؟ قَالَ: نَعَمْ كَانَ يَأْمُرُنَا إِذَا كُنَّا سَفَرًا - أَوْ مُسَافِرِينَ - أَلاَّ نَنْزِعَ خِفَافَنَا ثَلاَثَةَ أَيَّامٍ وَلَيَالِيهِنَّ إِلاَّ مِنْ جَنَابَةٍ لَكِنْ مِنْ غَائِطٍ وَبَوْلٍ وَنَوْمٍ. فَقُلْت: هَلْ سَمِعْته يَذْكُرُ فِي الْهَوَى شَيْئًا؟ قَالَ: نَعَمْ كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي سَفَرٍ فَبَيْنَا نَحْنُ عِنْدَهُ إِذْ نَادَاهُ أَعْرَابِيٌّ بِصَوْتٍ لَهُ جَهْوَرِيٍّ: يَا مُحَمَّدُ! فَأَجَابَهُ رَسُولُ اللَّهِ ﷺ نَحْوًا مِنْ صَوْتِهِ هَاؤُمُ فَقُلْت لَهُ: وَيْحَك اغْضُضْ مِنْ صَوْتِك فَإِنَّك عِنْدَ النَّبِيِّ ﷺ وَقَدْ نُهِيت عَنْ هَذَا! فَقَالَ: وَاللَّهِ لاَ أَغْضُضُ. قَالَ الأَعْرَابِيُّ: الْمَرْءُ يُحِبُّ الْقَوْمَ وَلَمَّا يَلْحَقْ بِهِمْ؟ قَالَ النَّبِيُّ ﷺ:

الْمَرْءُ مَعَ مَنْ أَحَبَّ يَوْمَ الْقِيَامَةِ. فَمَا زَالَ يُحَدِّثُنَا حَتَّى ذَكَرَ بَابًا مِنَ الْمَغْرِبِ مَسِيرَةُ عَرْضِهِ أَوْ يَسِيرُ الرَّاكِبُ فِي عَرْضِهِ أَرْبَعِينَ أَوْ سَبْعِينَ عَامًا. قَالَ سُفْيَانُ أَحَدُ الرُّوَاةِ: قِبَلَ الشَّامِ خَلَقَهُ اللَّهُ تَعَالَى يَوْمَ خَلَقَ السَّمَاوَاتِ وَالأَرْضَ مَفْتُوحًا لِلتَّوْبَةِ لاَ يُغْلَقُ حَتَّى تَطْلُعَ الشَّمْسُ مِنْهُ" رَوَاهُ التِّرْمِذِيُّ وَغَيْرُهُ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**19** ஸிர்ரி இப்னு ஹுபய்ஷ் என்பார் அறிவிக்கின்றார்:

நான் ஸஃப்வான் இப்னு அஸ்ஸாஸ் (ரழி) அவர்களிடம் (உளூவின் போது) காலுறைகள் மீது மஸஹ் செய்வது பற்றிக் கேட்பதற்காக வந்தேன். 'ஸிர்ரே! நீ வரக்காரணம் என்ன?' என்று கேட்டார், 'கல்வியைக் தேடித்தான்' என்று கூறினேன். உடனே அவர், 'கல்வியைத் தேடுபவர், தான் தேடிய கல்வியைக் கொண்டு திருப்தியடைந்ததற்காக, வானவர்கள் தங்களின் இறக்கைகளை விரித்து வைக்கிறார்கள்' என்று கூறினார்.

"மல ஜலம் கழித்தபின் காலுறைகள் மீது மஸஹ் செய்வது குறித்து என் மனதில் ஊசலாட்டம் இருந்தது. நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவராக நீங்கள் இருக்கிறீர்கள். இது குறித்து ஏதேனும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறி; அதை நீங்கள் கேட்டதுண்டா? என்று உங்களிடம் நான் கேட்பதற்காக வந்தேன்" என்று நான் கூறினேன்.

"ஆம்! நாங்கள் பயணத்தில் இருந்தபோது, மூன்று தினங்களுக்கு எங்கள் காலுறைகளை நாங்கள் கழற்ற வேண்டியதில்லை. ஆனால், கடமையான குளிப்பிற்காக மட்டும் கழற்ற வேண்டும். எனினும், மலஜலம், தூக்கம் காரணமாகவும் கழற்றத் தேவையில்லை. (காலுறை மீது மஸஹ் செய்தாலே போதுமானது.)

பின்னர் அன்பை பற்றி ஏதேனும் நபி (ஸல்) அவர்கள் கூற, "அதை நீங்கள் கேட்டுள்ளீர்களா?" என்று நான் கேட்டேன். "ஆம்! ஒரு பயணத்தில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது, பெரும் சப்தத்துடன் ஒரு கிராமவாசி 'முஹம்மது' என இறைத்தூதரை அழைத்தார். நபி (ஸல்) அவர்களும் (அதேபோல்) தன் சப்தத்தை உயர்த்தி, 'சொல்லுங்கள்' என்றார்கள்.

"உனக்குக் கேடு உண்டாகட்டும்! உன் சப்தத்தைக் குறைப்பீராக. நிச்சயமாக, நீர் நபி (ஸல்) அவர்கள் முன் இருக்கின்றீர்! இந்தச் (செயலை) விட்டும் தடுக்கப்பட்டுள்ளீர்!" என்று அவரிடம் கூறினேன். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் குரலைத் தாழ்த்தமாட்டேன்" என்று கிராமவாசி கூறினார். பின்னர் அவர் இறைத்தூதரிடம், "ஒருவர் ஒரு கூட்டத்தாரைச் சேர்ந்தவர் அல்ல. ஆனால், அந்தக் கூட்டத்தாரை அவர் நேசிக்கிறார். அந்த மனிதனின் நிலை என்ன?" என அந்தக் கிராமவாசி கேட்டார். "ஒரு மனிதர் மறுமையில், தான் நேசித்தவர்களுடன் இருப்பார்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள்.

எங்களுடன் பேசிக் கொண்டிருந்த அவர்கள், மேற்குத் திசையில் நெடுந்தொலைவில் உள்ள வாசல் பற்றியும், ஒருவர் அந்தத் தொலைவை 40 அல்லது 70 வருடம் பயணித்தால்தான் அடைவார் என்றும் கூறினார்கள், என ஸஃப்வான் (ரழி) கூறினார்கள்:

சிரியா (ஷாம்) நாட்டின் திசையில் (அந்த வாசல்) உள்ளது. வானங்கள், பூமியைப் படைத்த நாளிலேயே அதையும் அல்லாஹ் படைத்தான். பாவமன்னிப்புக் கோருவதற்காக அந்த வாசல் திறந்தே இருக்கும். மேற்கே சூரியன் உதயமாகும் (கியாம நாள் அடையாளம் ஏற்படும்) வரை, அந்த வாசல் அடைக்கப்படமாட்டாது என்று நபி (ஸல்) கூறியதாக, இதன் அறிவிப்பாளர் வரிசையில் இடம்பெறும் சுப்யான் என்பார் கூறுகிறார்.

**(திர்மிதீ:3535. அஹ்மத், இப்னு ஹிப்பான். இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகின்றார்)**

٢٠ - وَعَنْ أَبِي سَعِيد سَعْد بْنِ مَالك بْنِ سنَان الْخُدْرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰه ﷺ قَالَ:" كَانَ فيمَنْ كَانَ قَبْلَكُمْ رَجُلٌ قَتَلَ تسْعَةً وَتسْعينَ نَفْسًا فَسَأَلَ عَنْ أَعْلَمِ أَهْلِ الأَرْضِ ; فَدُلَّ عَلَى رَاهب. فَأَتَاهُ فَقَالَ: إِنَّهُ قَتَلَ تسْعَةً وَتسْعينَ نَفْسًا فَهَلْ لَهُ منْ تَوْبَة؟ فَقَالَ: لاَ. فَقَتَلَهُ فَكَمَّلَ به مائَةً ثُمَّ سَأَلَ عَنْ أَعْلَمِ أَهْلِ الأَرْضِ فَدُلَّ عَلَى رَجُلٍ عَالمٍ فَقَالَ: إِنَّهُ قَتَلَ مائَةَ نَفْسٍ فَهَلْ لَهُ منْ تَوْبَة؟ فَقَالَ: نَعَمْ وَمَنْ يَحُولُ بَيْنَهُ وَبَيْنَ التَّوْبَة؟! انْطَلقْ إِلَى أَرْضِ كَذَا وَكَذَا فَإِنَّ بهَا أُنَاسًا يَعْبُدُونَ اللّٰهَ تَعَالَى فَاعْبُدْ اللّٰهَ مَعَهُمْ وَلاَ تَرْجعْ إِلَى أَرْضكَ فَإِنَّهَا أَرْضُ سُوءٍ ; فَانْطَلَقَ حَتَّى إِذَا نَصَفَ الطَّرِيقَ أَتَاهُ الْمَوْتُ فَاخْتَصَمَتْ فيه مَلاَئكَةُ الرَّحْمَة وَمَلاَئكَةُ الْعَذَاب. فَقَالَتْ مَلاَئكَةُ الرَّحْمَة: جَاءَ تَائبًا مُقْبلاً بقَلْبه إِلَى اللّٰه تَعَالَى! وَقَالَتْ مَلاَئكَةُ الْعَذَاب: إِنَّهُ لَمْ يَعْمَلْ خَيْرًا قَطُّ: فَأَتَاهُمْ مَلَكٌ في صُورَة آدَميٍّ فَجَعَلُوهُ بَيْنَهُمْ - أَيْ حَكَمًا - فَقَالَ: قيسُوا مَا بَيْنَ الأَرْضَينَ فَإِلَى أَيَّتهمَا كَانَ أَدْنَى فَهُوَ لَهُ فَقَاسُوا فَوَجَدُوهُ أَدْنَى إِلَى الأَرْضِ الَّتي أَرَادَ فَقَبَضَتْهُ مَلاَئكَةُ الرَّحْمَة" مُتَّفَقٌ عَلَيْه. وَفي روَايَة في الصَّحيح" فَكَانَ إِلَى الْقَرْيَة الصَّالحَة أَقْرَبَ بشبْرٍ فَجُعلَ منْ أَهْلهَا" وَفي روَايَة في الصَّحيح:" فَأَوْحَى اللّٰهُ تَعَالَى إِلَى هَذه أَنْ تَبَاعَدي وَإِلَى هَذه أَنْ تَقَرَّبي". وَقَالَ:" قيسُوا مَا بَيْنَهُمَا فَوَجَدُوهُ إِلَى هَذه أَقْرَبَ بشبْرٍ فَغَفَرَ لَهُ". وَفي روَايَة: فَنَأَى بصَدْره نَحْوَهَا

**20** (அபூ ஸயீத் என்ற) ஸஅது இப்னு மாலிக் இப்னு ஸினான் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களுக்கு முன் வாழ்ந்த மக்களில் ஒருவன் இருந்தான். அவன் 99 பேர்களைக் கொலை செய்திருந்தான். (தவறை உணர்ந்த அவன்) இவ்வூரில் சிறந்த அறிஞர் யார்? என்று விசாரித்தான். பனீ இஸ்ராயீல் கூட்டத்தில் ஓர் அறிஞர் இருக்கிறார் என்று அவனிடம் கூறப்பட்டது. அவன் அவரிடம் வந்து, “தான் 99 பேர்களை கொலை செய்ததாகவும், தனக்கு தவ்பா உண்டா?” என்றும் கேட்டான். “இல்லை!” என்று அந்த அறிஞர் பதில் கூறினார். உடனே அவரையும் கொன்றான். இதுவரை நூறு பேர்களை கொன்று விட்டான்.

பின்னர், அந்த ஊரில் சிறந்த அறிஞர் யார் என்று விசாரித்தான். அறிஞர் ஒருவர் பற்றி அவரிடம் கூறப்பட்டது. அவரிடம் வந்தான். “தான் 100 நபர்களைக் கொலை செய்ததாகவும், தனக்கு ‘தவ்பா’ (பாவமன்னிப்பு) உண்டா?” என்றும் கேட்டான். ‘உண்டு. உனக்கும், தவ்பாவுக்குமிடையே தடையாக இருப்பவர் யார்? நீ பூமியில் இன்ன இன்ன இடங்களுக்குச் செல். அங்கே சில மனிதர்கள் இருப்பார்கள். அல்லாஹ்வை வணங்குவார்கள். அவர்களுடன் சேர்ந்து அல்லாஹ்வை நீ வணங்குவாயாக! உன் ஊர் பக்கம் திரும்பிச் செல்லாதே! அது கெட்ட பூமியாகும்” என்று கூறினார்.

அவன் நடக்க ஆரம்பித்தான். இறுதியாக பாதி தூரத்தை அவன் கடந்திருப்பான். அதற்குள் அவனுக்கு மரணம் வந்துவிட்டது. அவன் விஷயமாக அருள் தரும் வானவர்களும், வேதனை தரும் வானவர்களும் (உயிரைக் கைப்பற்றுவதில்) போட்டியிட்டனர். அருள் தரும் வானவர்கள், “தவ்பாச் செய்தவனாகத் தன் தூய உள்ளத்துடன் அல்லாஹ்வின் பக்கம் முன்னோக்கி வந்தான்” என்று கூறினார்கள். வேதனை தரும் வானவர்களோ, “அவன் நன்மையை அறவே செய்ததில்லை” என்று கூறினார்கள். அப்போது அவர்களிடம் மனிதத் தோற்றத்தில் ஒரு வானவர் வந்தார். அவரைத் தீர்ப்புக் கூறுபவராக தங்களிடையே ஏற்படுத்தினார்கள்

அவர் கூறினார்: “அவன் (வந்த, செல்கின்ற) ஊரின் இரண்டு பகுதிகளையும் அளந்து, அவ்விரண்டில், எந்த ஊர் அவனுக்கு நெருக்கமாக உள்ளது என்று பாருங்கள்!” என்று கூறினார். அவர்கள் அளந்தார்கள். அவன் சென்று கொண்டிருந்த ஊரின் பாதை அவனுக்கு நெருக்கமாக இருந்ததைக் கண்டார்கள். ஆகவே அருள் தரும் வானவர்கள், அவன் உயிரைக் கைப்பற்றினார்கள்.” இதை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3470. முஸ்லிம்:2766)**

மற்றொரு அறிவிப்பில், அவன் நல்ல ஊர் பக்கம் ஓர் அடி கூடுதலாக வைத்து இருந்தான். எனவே, நல்லவன் என ஆக்கப்பட்டார் என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில் “(பூமியின்) இந்த பகுதிக்கு

'நீ தூரமாகு' என்றும், இந்தப் பகுதிக்கு 'நீ நெருங்கி போ!' என்றும் அல்லாஹ் உத்தரவிட்டான். (நடுவராக வந்த வானவர்), 'இவ்விரு பகுதிக்கும் இடையே அளந்து பாருங்கள்' என்று கூறினார். அப்போது ஒரு அடி மிக நெருக்கமாக இருந்ததைக் கண்டார்கள். அதனால் அவன் மன்னிக்கப் பட்டான் என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில் "தன் நெஞ்சால் அப்பகுதிக்கு தவழ்ந்தார்" என்றும் உள்ளது.

٢١ - وَعَنْ عَبْد اللّه بْنِ كَعْب بْنِ مَالك وَكَانَ قَائدَ كَعْب رَضيَ اللّهُ عَنْهُ منْ بَنيه حينَ عَميَ قَالَ: سَمعْت كَعْبَ بْنَ مَالك رَضيَ اللّهُ عَنْهُ يُحدِّثُ بحَديثه حينَ تَخلّفَ عَنْ رَسُول اللّه ﷺ في غَزْوَة تَبُوكَ. قَالَ كَعْبٌ: لَمْ أَتَخلّفْ عَنْ رَسُول اللّه ﷺ في غَزْوَة غَزَاهَا قَطُّ إلاّ في غَزْوَة تَبُوكَ غَيْرَ أَنّي قَدْ تَخلّفْت في غَزْوَة بَدْر وَلَمْ يُعَاتَبْ أَحَدٌ تَخلّفَ عَنْهُ ؛ إنَّمَا خَرَجَ رَسُولُ اللّه ﷺ وَالْمُسْلمُونَ يُريدُونَ عيرَ قُرَيْش حَتّى جَمَعَ اللّهُ تَعَالَى بَيْنَهُمْ وَبَيْنَ عَدُوّهمْ عَلَى غَيْر ميعَاد. وَلَقَدْ شَهدْت مَعَ رَسُول اللّهَ ﷺ لَيْلَةَ الْعَقَبَة حينَ تَوَاثَقْنَا عَلَى الأسْلاَم وَمَا أُحبُّ أَنّ لي بهَا مَشْهَدَ بَدْر وَإنْ كَانَت بَدْرٌ أَذْكَرَ في النّاس منْهَا. وَكَانَ منْ خَبَري حينَ تَخَلّفْت عَنْ رَسُول اللّه ﷺ في غَزْوَة تَبُوكَ أَنّي لَمْ أَكُنْ قَطّ أَقْوَى وَلاَ أَيْسَرَ منّي حينَ تَخلّفْت عَنْهُ في تلْكَ الْغَزْوَة وَاللّه مَا جَمَعْت قَبْلَهَا رَاحلَتَيْن قَطُّ حَتّى جَمَعْتُهُمَا في تلْكَ الْغَزْوَة وَلَمْ يَكُنْ رَسُولُ اللّه ﷺ يُريدُ غَزْوَةً إلاّ وَرَى بغَيْرهَا حَتّى كَانَتْ تلْكَ الْغَزْوَةُ فَغَزَاهَا رَسُولُ اللّه ﷺ في حَرّ شَديد ؛ وَاسْتَقْبَلَ سَفَرًا بَعيدًا وَمَفَازًا وَاسْتَقْبَلَ عَدَدًا كَثيرًا ؛ فَجَلّى للْمُسْلمينَ أَمْرَهُمْ ليَتَأَهّبُوا أُهْبَةَ غَزْوهمْ فَأَخْبَرَهُمْ بوَجْههمْ الّذي يُريدُ ؛ وَالْمُسْلمُونَ مَعَ رَسُول اللّه كَثيرٌ وَلاَ يَجْمَعُهُمْ كتَابٌ حَافظٌ" يُريدُ بذَلكَ الدّيوَانَ" قَالَ كَعْبٌ: فَقَلّ رَجُلٌ يُريدُ أَنْ يَتَغَيّبَ إلاّ ظَنّ أَنّ ذَلكَ سَيَخْفَى به مَا لَمْ يَنْزلْ فيه وَحْيٌ منْ اللّه وَغَزَا رَسُولُ اللّه ﷺ تلْكَ الْغَزْوَةَ حينَ طَابَتْ الثّمَارُ وَالظّلاَلُ فَأَنَا إلَيْهَا أَصْعَرُ فَتَجَهّزَ رَسُولُ اللّه ﷺ وَالْمُسْلمُونَ مَعَهُ وَطَفقْتَ أَغْدُو لكَيْ أَتَجَهّزَ مَعَهُ فَأَرْجعُ وَلَمْ أَقْض شَيْئًا وَأَقُولُ في نَفْسي: أَنَا قَادرٌ عَلَى ذَلكَ إذَا أَرَدْت فَلَمْ يَزَلْ ذَلكَ يَتَمَادَى بي حَتّى اسْتَمَرّ بالنّاس الْجدُّ فَأَصْبَحَ رَسُولُ اللّه ﷺ غَاديًا وَالْمُسْلمُونَ مَعَهُ وَلَمْ أَقْض منْ جهَازي شَيْئًا ثُمّ غَدَوْت فَرَجَعْت وَلَمْ أَقْض شَيْئًا فَلَمْ يَزَلْ ذَلكَ يَتَمَادَى بي حَتّى أَسْرَعُوا وَتَفَارَطَ الْغَزْوُ فَهَمَمْت أَنْ أَرْتَحلَ فَأُدْركَهُمْ فَيَا لَيْتَني فَعَلْت! ثُمّ لَمْ يُقَدّرْ ذَلكَ لي فَطَفقْت إذَا خَرَجْت في النّاس بَعْدَ خُرُوج رَسُول اللّه ﷺ يُحْزنُني أَنّي لاَ أَرَى لي أُسْوَةً إلاّ رَجُلاً مَغْمُوصًا عَلَيْه في النّفَاق أَوْ رَجُلاً ممّنْ عَذَرَ اللّهَ تَعَالَى منْ الضّعَفَاء وَلَمْ يَذْكُرْني رَسُولُ اللّه ﷺ حَتّى بَلَغَ تَبُوكَ وَهُوَ جَالسٌ في الْقَوْم بتَبُوكَ:" مَا فَعَلَ كَعْبُ بْنُ مَالك؟" فَقَالَ رَجُلٌ منْ بَني سَلَمَةَ: يَا رَسُولَ اللّه حَبَسَهُ بُرْدَاهُ وَالنّظَرُ في عطْفَيْه. فَقَالَ لَهُ مُعَاذُ بْنُ جَبَل رَضيَ اللّهُ عَنْهُ: بئْسَ مَا قُلْت! وَاللّه يَا رَسُولَ اللّه مَا عَلمْنَا عَلَيْه إلاّ خَيْرًا فَسَكَتَ رَسُولُ اللّه ﷺ. فَبَيْنَا هُوَ عَلَى ذَلكَ رَأَى رَجُلاً مُبَيّضًا يَزُولُ به السّرَابُ فَقَالَ رَسُولُ اللّه ﷺ: كُنْ أَبَا خَيْثَمَةَ فَإذَا هُوَ أَبُو خَيْثَمَةَ الأنْصَاريُّ وَهُوَ الّذي تَصَدّقَ بصَاع التّمْر حينَ لَمَزَهُ الْمُنَافقُونَ. قَالَ كَعْبٌ: فَلَمّا بَلَغَني أَنّ رَسُولَ اللّه ﷺ قَدْ تَوَجّهَ قَافلاً منْ تَبُوكَ حَضَرَني بَثّي فَطَفقْت أَتَذَكّرُ الْكَذبَ وَأَقُولُ: بمَ أَخْرُجُ منْ سُخْطه غَدًا؟ وَأَسْتَعينُ عَلَى ذَلكَ بكُلّ ذي رَأْي منْ أَهْلي فَلَمّا قيلَ: إنّ رَسُولَ اللّه ﷺ قَدْ أَظَلّ قَادمًا زَاحَ عَنّي الْبَاطلُ حَتّى عَرَفْت أَنّي لَمْ أَنْجُ منْهُ بشَيْء أَبَدًا فَأَجْمَعْت صدْقَهُ وَأَصْبَحَ رَسُولُ اللّه ﷺ قَادمًا وَكَانَ إذَا قَدمَ منْ سَفَر بَدَأَ بالْمَسْجد فَرَكَعَ فيه رَكْعَتَيْن ثُمّ جَلَسَ للنّاس فَلَمّا فَعَلَ ذَلكَ جَاءَهُ الْمُخَلّفُونَ يَعْتَذرُونَ إلَيْه وَيَحْلفُونَ لَهُ وَكَانُوا بضْعًا وَثَمَانينَ رَجُلاً فَقَبلَ منْهُمْ عَلاَنيَتَهُمْ وَبَايَعَهُمْ وَاسْتَغْفَرَ لَهُمْ وَوَكَلَ سَرَائرَهُمْ إلَى اللّه تَعَالَى حَتّى جئْت. فَلَمّا سَلّمْت تَبَسّمَ تَبَسُّمَ الْمُغْضَب ثُمّ قَالَ: تَعَالَ: فَجئْت أَمْشي حَتّى جَلَسْت بَيْنَ يَدَيْه فَقَالَ لي:" مَا خَلّفَكَ؟ أَلَمْ تَكُنْ قَدْ ابْتَعْت ظَهْرَكَ" ) قَالَ (: يَا رَسُولَ اللّه إنّي وَاللّه لَوْ جَلَسْت عنْدَ غَيْرك منْ أَهْل الدّنْيَا لَرَأَيْت أَنّي سَأَخْرُجُ منْ سُخْطه بعُذْر لَقَدْ أُعْطيت جَدَلاً وَلَكنّي وَاللّه لَقَدْ عَلمْت لَئنْ حَدّثْتُك الْيَوْمَ حَديثَ كَذب تَرْضَى به عَنّي لَيُوشكَنّ اللّهُ يُسْخطَكَ عَلَيّ وَإنْ حَدّثْتُك حَديثَ صدْق تَجدُ عَلَيّ فيه إنّي لأَرْجُو فيه عُقْبَى اللّه عَزّ وَجَلّ. وَاللّه مَا كَانَ لي منْ عُذْر وَاللّه مَا كُنْت قَطّ أَقْوَى وَلاَ أَيْسَرَ منّي حينَ تَخَلّفْت عَنْك. ) قَالَ ( فَقَالَ رَسُولُ اللّه ﷺ:" أَمّا هَذَا فَقَدْ صَدَقَ فَقُمْ حَتّى يَقْضيَ اللّهُ فيكَ". وَثَارَ رجَالٌ منْ بَني سَلَمَةَ فَاتّبَعُوني فَقَالُوا لي: وَاللّه مَا عَلمْنَاكَ أَذْنَبْت ذَنْبًا قَبْلَ هَذَا. لَقَدْ عَجَزْت في أَلاّ تَكُونَ

اعْتَذَرْت إلَى رَسُول اللَّه ﷺ بِمَا اعْتَذَرَ بِه الْمُخَلَّفُونَ فَقَدْ كَانَ كَافِيكَ ذَنْبَك اسْتِغْفَارُ رَسُول اللَّه ﷺ لَك. ) قَالَ ( فَوَاللَّه مَا زَالُوا يُؤَنِّبُونَنِي حَتَّى أَرَدْت أَنْ أَرْجِعَ إلَى رَسُول اللَّه ﷺ فَأُكَذِّبَ نَفْسِي ثُمَّ قُلْت لَهُمْ: هَلْ لَقِيَ هَذَا مَعِي مَنْ أَحَد؟ قَالُوا: نَعَمْ لَقِيَهُ مَعَك رَجُلَان قَالاَ مِثْلَ مَا قُلْت وَقِيل لَهُمَا مِثْلُ مَا قِيلَ لَك. ) قَالَ (: قُلْت: مَنْ هُمَا؟ قَالُوا: مَرَارَةُ بْنُ الرَّبِيعِ الْعُمْرِيُّ وَهِلاَلُ بْنُ أُمَيَّةَ الْوَاقِفِيُّ ) قَالَ (: فَذَكَرُوا لِي رَجُلَيْنِ صَالِحَيْنِ قَدْ شَهِدَا بَدْرًا فِيهِمَا أُسْوَةٌ. ) قَالَ ( فَمَضَيْت حِينَ ذَكَرُوهُمَا لِي. وَنَهَى رَسُولُ اللَّه ﷺ عَنْ كَلاَمِنَا أَيُّهَا الثَّلاَثَةُ مِنْ بَيْنِ مَنْ تَخَلَّفَ عَنْهُ. ) قَالَ ( فَاجْتَنَبَنَا النَّاسُ - أَوْ قَالَ تَغَيَّرُوا لَنَا - حَتَّى تَنَكَّرَتْ لِي فِي نَفْسِي الأَرْضُ فَمَا هِيَ بِالأَرْضِ الَّتِي أَعْرِفُ فَلَبِثْنَا عَلَى ذَلِكَ خَمْسِينَ لَيْلَةً. فَأَمَّا صَاحِبَايَ فَاسْتَكَانَا وَقَعَدَا فِي بُيُوتِهِمَا يَبْكِيَان. وَأَمَّا أَنَا فَكُنْت أَشَبَّ الْقَوْمِ وَأَجْلَدَهُمْ فَكُنْت أَخْرُجُ فَأَشْهَدُ الصَّلاَةَ مَعَ الْمُسْلِمِينَ وَأَطُوفُ فِي الأَسْوَاق وَلا يُكَلِّمُنِي أَحَدٌ وَآتِي رَسُولَ اللَّه ﷺ فَأُسَلِّمُ عَلَيْهِ وَهُوَ فِي مَجْلِسِه بَعْدَ الصَّلاَةِ فَأَقُولُ فِي نَفْسِي: هَلْ حَرَّكَ شَفَتَيْه بِرَدِّ السَّلاَمِ أَمْ لاَ؟ ثُمَّ أُصَلِّي قَرِيبًا مِنْهُ وَأُسَارِقُهُ النَّظَرَ فَإِذَا أَقْبَلْت عَلَى صَلاَتِي نَظَرَ إلَيَّ وَإِذَا الْتَفَتُّ نَحْوَهُ أَعْرَضَ عَنِّي حَتَّى إذَا طَالَ ذَلِكَ عَلَيَّ مِنْ جَفْوَةِ الْمُسْلِمِينَ مَشَيْت حَتَّى تَسَوَّرْت جِدَارَ حَائِط أَبِي قَتَادَةَ - وَهُوَ ابْنُ عَمِّي وَأَحَبُّ النَّاسِ إلَيَّ - فَسَلَّمْت عَلَيْه فَوَاللَّه مَا رَدَّ عَلَيَّ السَّلاَمَ فَقُلْت لَهُ: يَا أَبَا قَتَادَةَ أَنْشُدُك بِاللَّه هَلْ تَعْلَمُنِي أُحِبُّ اللَّهَ وَرَسُولَهُ ﷺ؟ فَسَكَتَ فَعُدْت فَنَاشَدْته فَسَكَتَ فَعُدْت فَنَاشَدْته. فَقَالَ: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ. فَفَاضَتْ عَيْنَايَ وَتَوَلَّيْت حَتَّى تَسَوَّرْت الْجِدَارَ فَبَيْنَا أَنَا أَمْشِي فِي سُوق الْمَدِينَة إذَا نَبَطِيٌّ مِنْ نَبَط أَهْلِ الشَّامِ مِمَّنْ قَدِمَ بِالطَّعَامِ يَبِيعُهُ بِالْمَدِينَة يَقُولُ: مَنْ يَدُلُّ عَلَى كَعْب بْنِ مَالِك؟ فَطَفِقَ النَّاسُ يُشِيرُونَ لَهُ إلَيَّ حَتَّى جَاءَنِي فَدَفَعَ إلَيَّ كِتَابًا مِنْ مَلِك غَسَّانَ وَكُنْت كَاتِبًا فَقَرَأْته فَإِذَا فِيه: أَمَّا بَعْدُ فَإِنَّهُ قَدْ بَلَغَنَا أَنَّ صَاحِبَك قَدْ جَفَاك وَلَمْ يَجْعَلْك اللَّهُ بِدَار هَوَان وَلاَ مَضْيَعَةٍ فَالْحَقْ بِنَا نُوَاسِك. فَقُلْت حِينَ قَرَأْتهَا: وَهَذِه أَيْضًا مِنْ الْبَلاَءِ! فَتَيَمَّمْتُ بِهَا التَّنُّورَ فَسَجَرْتهَا حَتَّى إذَا مَضَتْ أَرْبَعُونَ مِنْ الْخَمْسِينَ وَاسْتَلْبَثَ الْوَحْيُ إذَا رَسُولُ رَسُولَ اللَّه ﷺ يَأْتِينِي فَقَالَ: إنَّ رَسُولَ اللَّه ﷺ يَأْمُرُك أَنْ تَعْتَزِلَ امْرَأَتَك فَقُلْت: أُطَلِّقُهَا أَمْ مَاذَا أَفْعَلُ؟ فَقَالَ: لاَ بَلْ اعْتَزِلْهَا فَلاَ تَقْرَبَنَّهَا. وَأَرْسَلَ إلَى صَاحِبَيَّ بِمِثْلِ ذَلِكَ. فَقُلْت لِامْرَأَتِي: الْحَقِي بِأَهْلِك فَكُونِي عِنْدَهُمْ حَتَّى يَقْضِيَ اللَّهُ فِي هَذَا الأَمْر. فَجَاءَتْ امْرَأَةُ هِلاَل بْن أُمَيَّةَ رَسُولَ اللَّه ﷺ فَقَالَتْ لَهُ: يَا رَسُولَ اللَّه إنَّ هِلاَلَ بْنَ أُمَيَّةَ شَيْخٌ ضَائِعٌ لَيْسَ لَهُ خَادِمٌ فَهَلْ تَكْرَهُ أَنْ أَخْدُمَهُ؟ قَالَ: لاَ وَلَكِنْ لاَ يَقْرَبَنَّكِ. فَقَالَتْ: إنَّهُ وَاَللَّه مَا بِه مِنْ حَرَكَة إلَى شَيْء. وَ وَاَللَّه مَا زَالَ يَبْكِي مُنْذُ كَانَ مِنْ أَمْرِه مَا كَانَ إلَى يَوْمِه هَذَا. فَقَالَ لِي بَعْضُ أَهْلِي: لَوْ اسْتَأْذَنْت رَسُولَ اللَّه ﷺ فِي امْرَأَتِك فَقَدْ أَذِنَ لِامْرَأَة هِلاَل بْنِ أُمَيَّةَ أَنْ تَخْدُمَهُ. فَقُلْت: لاَ أَسْتَأْذِنُ فِيهَا رَسُولَ اللَّه ﷺ وَمَا يُدْرِينِي مَاذَا يَقُولُ رَسُولُ اللَّه ﷺ إذَا اسْتَأْذَنْته فِيهَا وَأَنَا رَجُلٌ شَابٌّ فَلَبِثْت بِذَلِكَ عَشْرَ لَيَال فَكَمُلَ لَنَا خَمْسُونَ لَيْلَةً مِنْ حِين نَهَى عَنْ كَلاَمِنَا ثُمَّ صَلَّيْت صَلاَةَ الْفَجْرِ صَبَاحَ خَمْسِينَ لَيْلَةً عَلَى ظَهْر بَيْت مِنْ بُيُوتِنَا فَبَيْنَا أَنَا جَالِسٌ عَلَى الْحَال الَّتِي ذَكَرَ اللَّهُ تَعَالَى مِنَّا قَدْ ضَاقَتْ عَلَيَّ نَفْسِي وَضَاقَتْ عَلَيَّ الأَرْضُ بِمَا رَحُبَتْ سَمِعْت صَوْتَ صَارِخٍ أَوْفَى عَلَى سَلْعٍ يَقُولُ بِأَعْلَى صَوْتِه: يَا كَعْبُ بْنُ مَالِك أَبْشِرْ فَخَرَرْت سَاجِدًا وَعَرَفْت أَنَّهُ قَدْ جَاءَ فَرَجٌ. فَآذَنَ رَسُولُ اللَّه ﷺ النَّاسَ بِتَوْبَة اللَّه عَزَّ وَجَلَّ عَلَيْنَا حِينَ صَلَّى صَلاَةَ الْفَجْرِ فَذَهَبَ النَّاسُ يُبَشِّرُونَنَا. فَذَهَبَ قِبَلَ صَاحِبَيَّ مُبَشِّرُونَ وَرَكَضَ إلَيَّ رَجُلٌ فَرَسًا وَسَعَى سَاعٍ مِنْ أَسْلَمَ قِبَلِي وَأَوْفَى عَلَى الْجَبَل. فَكَانَ الصَّوْتُ أَسْرَعَ مِنْ الْفَرَسِ فَلَمَّا جَاءَنِي الَّذِي سَمِعْت صَوْتَهُ يُبَشِّرُنِي نَزَعْت لَهُ ثَوْبَيَّ فَكَسَوْتُهُمَا إيَّاهُ بِبُشْرَاهُ وَاَللَّه مَا أَمْلِكُ غَيْرَهُمَا يَوْمَئِذ وَاسْتَعَرْت ثَوْبَيْنِ فَلَبِسْتهمَا وَانْطَلَقْت أَتَأَمَّمُ رَسُولَ اللَّه ﷺ يَتَلَقَّانِي النَّاسُ فَوْجًا فَوْجًا يُهَنِّئُونَنِي بِالتَّوْبَة وَيَقُولُونَ لِي: لِتَهْنِكَ تَوْبَةُ اللَّه عَلَيْك ; حَتَّى دَخَلْت الْمَسْجِدَ فَإِذَا رَسُولُ اللَّه ﷺ جَالِسٌ حَوْلَهُ النَّاسُ فَقَامَ طَلْحَةُ بْنُ عُبَيْد اللَّه رَضِيَ اللَّهُ عَنْهُ يُهَرْوِلُ حَتَّى صَافَحَنِي وَهَنَّأَنِي. وَاَللَّه مَا قَامَ رَجُلٌ مِنْ الْمُهَاجِرِينَ غَيْرُهُ فَكَانَ كَعْبُ لاَ يَنْسَاهَا لِطَلْحَةَ. قَالَ كَعْبٌ: فَلَمَّا سَلَّمْت عَلَى رَسُول اللَّه ﷺ قَالَ وَهُوَ يَبْرُقُ وَجْهُهُ مِنْ السُّرُور: " أَبْشِرْ بِخَيْرِ يَوْم مَرَّ عَلَيْك مُذْ وَلَدَتْك أُمُّك". فَقُلْت: أَمِنْ عِنْدَك يَا رَسُولَ اللَّه أَمْ مِنْ عِنْد اللَّه؟ قَالَ:" لاَ بَلْ مِنْ عِنْد اللَّه عَزَّ وَجَلَّ" وَكَانَ رَسُولُ اللَّه ﷺ إذَا سُرَّ اسْتَنَارَ وَجْهُهُ حَتَّى كَأَنَّ وَجْهَهُ قِطْعَةُ قَمَر وَكُنَّا نَعْرِفُ ذَلِكَ مِنْهُ فَلَمَّا جَلَسْت بَيْنَ يَدَيْه قُلْت يَا رَسُولَ اللَّه إنَّ مِنْ تَوْبَتِي أَنْ أَنْخَلِعَ مِنْ مَالِي صَدَقَةً إلَى اللَّه وَإِلَى رَسُولِه. فَقَالَ رَسُولُ اللَّه ﷺ:"

أَمْسِكْ عَلَيْكَ بَعْضَ مَالِكَ فَهُوَ خَيْرٌ لَكَ". فَقُلْتُ: إِنِّي أُمْسِكُ سَهْمِي الَّذِي بِخَيْبَرَ وَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ إِنَّ اللَّهَ تَعَالَى إِنَّمَا أَنْجَانِي بِالصِّدْقِ وَإِنَّ مِنْ تَوْبَتِي أَلاَّ أُحَدِّثَ إِلاَّ صِدْقًا مَا بَقِيتَ فَوَاللَّهِ مَا عَلِمْتُ أَحَدًا مِنَ الْمُسْلِمِينَ أَبْلاَهُ اللَّهُ تَعَالَى فِي صِدْقِ الْحَدِيثِ مُنْذُ ذَكَرْتُ ذَلِكَ لِرَسُولِ اللَّهِ ﷺ أَحْسَنَ مِمَّا أَبْلاَنِي اللَّهُ تَعَالَى. وَاللَّهِ مَا تَعَمَّدْتُ كِذْبَةً مُنْذُ قُلْتُ ذَلِكَ لِرَسُولِ اللَّهِ ﷺ إِلَى يَوْمِي هَذَا. وَإِنِّي لأَرْجُو أَنْ يَحْفَظَنِي اللَّهُ تَعَالَى فِيمَا بَقِيَ قَالَ: فَأَنْزَلَ اللَّهُ تَعَالَى: لَقَدْ تَابَ اللَّهُ عَلَى النَّبِيِّ وَالْمُهَاجِرِينَ وَالأَنْصَارِ الَّذِينَ اتَّبَعُوهُ فِي سَاعَةِ الْعُسْرَةِ حَتَّى بَلَغَ: إِنَّهُ بِهِمْ رَءُوفٌ رَحِيمٌ وَعَلَى الثَّلاَثَةِ الَّذِينَ خُلِّفُوا حَتَّى إِذَا ضَاقَتْ عَلَيْهِمُ الأَرْضُ بِمَا رَحُبَتْ حَتَّى بَلَغَ: اتَّقُوا اللَّهَ وَكُونُوا مَعَ الصَّادِقِينَ قَالَ كَعْبٌ: وَاللَّهِ مَا أَنْعَمَ اللَّهُ عَلَيَّ مِنْ نِعْمَةٍ قَطُّ بَعْدَ إِذْ هَدَانِي اللَّهُ لِلإِسْلاَمِ أَعْظَمَ فِي نَفْسِي مِنْ صِدْقِي رَسُولَ اللَّهِ ﷺ أَلاَّ أَكُونَ كَذَبْتُهُ فَأَهْلِكَ كَمَا هَلَكَ الَّذِينَ كَذَبُوا: فَإِنَّ اللَّهَ تَعَالَى قَالَ لِلَّذِينَ كَذَبُوا حِينَ أَنْزَلَ الْوَحْيَ شَرَّ مَا قَالَ لأَحَدٍ فَقَالَ اللَّهُ تَعَالَى: سَيَحْلِفُونَ بِاللَّهِ لَكُمْ إِذَا انْقَلَبْتُمْ إِلَيْهِمْ لِتُعْرِضُوا عَنْهُمْ فَأَعْرِضُوا عَنْهُمْ إِنَّهُمْ رِجْسٌ وَمَأْوَاهُمْ جَهَنَّمُ جَزَاءً بِمَا كَانُوا يَكْسِبُونَ

يَحْلِفُونَ لَكُمْ لِتَرْضَوْا عَنْهُمْ فَإِنْ تَرْضَوْا عَنْهُمْ فَإِنَّ اللَّهَ لاَ يَرْضَى عَنِ الْقَوْمِ الْفَاسِقِينَ قَالَ كَعْبٌ: كُنَّا خُلِّفْنَا – أَيُّهَا الثَّلاَثَةُ – عَنْ أَمْرِ أُولَئِكَ الَّذِينَ قَبِلَ مِنْهُمْ رَسُولُ اللَّهِ ﷺ حِينَ حَلَفُوا لَهُ فَبَايَعَهُمْ وَاسْتَغْفَرَ لَهُمْ وَأَرْجَأَ رَسُولُ اللَّهِ ﷺ أَمْرَنَا حَتَّى قَضَى اللَّهُ تَعَالَى فِيهِ بِذَلِكَ. قَالَ اللَّهُ تَعَالَى وَعَلَى الثَّلاَثَةِ الَّذِينَ خُلِّفُوا وَلَيْسَ الَّذِي ذُكِرَ مِمَّا خُلِّفْنَا تَخَلُّفَنَا عَنِ الْغَزْوِ وَإِنَّمَا هُوَ تَخْلِيفُهُ إِيَّانَا وَإِرْجَاؤُهُ أَمْرَنَا عَمَّنْ حَلَفَ لَهُ وَاعْتَذَرَ إِلَيْهِ فَقَبِلَ مِنْهُ مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: " أَنَّ النَّبِيَّ ﷺ خَرَجَ فِي غَزْوَةِ تَبُوكَ يَوْمَ الْخَمِيسِ وَكَانَ يُحِبُّ أَنْ يَخْرُجَ يَوْمَ الْخَمِيسِ" وَفِي رِوَايَةٍ" وَكَانَ لاَ يَقْدَمُ مِنْ سَفَرٍ إِلاَّ نَهَارًا فِي الضُّحَى فَإِذَا قَدِمَ بَدَأَ بِالْمَسْجِدِ فَصَلَّى فِيهِ رَكْعَتَيْنِ ثُمَّ جَلَسَ فِيهِ".

**21** (இறுதிக் காலத்தில், குருடராக இருந்த கஅபு இப்னு மாலிக் அவர்களின் மகனும், அவருக்கு வழிகாட்டுபவராகவும் இருந்த) அப்துல்லாஹ் அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

தபூக் போரில் நபி (ஸல்) அவர்களை விட்டும் பின்தங்கி இருந்து விட்ட என் தந்தை இப்னுமாலிக் (ரழி) அவர்கள் (பின் வருமாறு) கூறியதை நான் கேட்டுள்ளேன்.

தபூக் போரைத் தவிர, மற்ற எல்லாப் போர்களிலும் நபி (ஸல்) அவர்களுடன் கலந்து கொள்ளாமல் இருந்ததில்லை. எனினும், பத்ருப் போரிலும் நான் பின் தங்கி விட்டேன். அதை விட்டும் பின் தங்கிவிட்ட எவரும் குறையாக கருதப்படவில்லை. நபி (ஸல்) அவர்களும், முஸ்லிம்களும் குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை நாடியவர்களாக வெளியேறினார்கள். இறுதியில் அவர்களுக்கும், அவர்களின் எதிரிகளுக்குமிடையே முன் எதிர்பார்ப்பு இன்றி அல்லாஹ் ஒன்று சேர்த்து விட்டான். 'இஸ்லாம்' குறித்து நாங்கள் உடன்படிக்கை செய்த 'அகபா' இரவில் நபி (ஸல்) அவர்களுடன்தான் நான் இருந்தேன். அகபாவை விட, பத்ரு மக்களிடையே நினைவு கூர்வதில் அதிகமாக இருந்தாலும், பத்ருப் போரில் நான் கலந்து கொள்வது எனக்கு விருப்பமானதாக இருந்ததில்லை. (அந்த அளவுக்கு அகபாவில் இருந்ததை நேசித்தேன்.)

தபூக் போரில் நபி (ஸல்) அவர்களை விட்டும் நான் பின் தங்கியபோது, மேலும் சில செய்திகள் உள்ளன. அவை:

இந்தப் போரில் அவர்களை விட்டும் நான் பின்தங்கிய போது, என்னிடமிருந்த வசதியான, சக்தியான நிலையை இதற்கும் முன்பு நான் கண்டதில்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக, இதற்கு முன் இரண்டு வாகனங்களை நான் பெற்றதில்லை. ஆனால் சூழல் இந்தப் போரில் இரண்டைப் பெற்றிருந்தேன். இந்தப் போர் ஏற்பட்டிருந்தும், இது அல்லாத போரைப் பற்றி எண்ணியவர்கள் போலவே நபி (ஸல்) அவர்கள் நடந்து கொள்வார்கள். இந்தப் போரைப்பற்றிக் கருத்தில் கொள்ள மாட்டார்கள்.

கோடைகாலத்தில் நபி (ஸல்) அவர்கள், இந்தப் போரில் ஈடுபட்டார்கள். தண்ணீர் குறைவான தாகவும் நீண்ட பயணமாகவும் உள்ள பயணத்தை மேற்கொண்டார்கள். அதிக அளவிலான எதிரி களை எதிர் கொண்டார்கள். தங்கள் போர்ப் பயணத்திற்கு அவர்கள் தயாராகிட வேண்டி, அவர்களுக் குரிய காரியத்தை முஸ்லிம்களிடம் நபி (ஸல்) விளக்கினார்கள். (போருக்கு) நாடிச் செல்லும் (அவர்கள்) திசைபற்றியும் அவர்களிடம் தெரிவித்தார்கள். முஸ்லிம்கள், நபி (ஸல்) அவர்களுடன் அதிகம் பேர் இருந்தனர். (பெயர்களை எழுதிட) பாதுகாப்பான பதிவு ஏடு எதுவும் அவர்களிடம் இருந்ததில்லை.

அல்லாஹ்விடமிருந்து இறைச் செய்தி இது விஷயமாக இறங்காதவரை, தன்னை மறைத்துக் கொள்ளலாம் என்று (செழுமையாக) போருக்கு வராமல் இருந்த மனிதர்கள் கருதினர். பேரீத்தம் (மரமும்) பழமும், அதன் நிழல்களும் நன்றாக இருந்த சமயத்தில், நபி (ஸல்) அவர்கள் இந்தப் போரை நிகழ்த்தினார்கள். நான் (பேரீத்தத் தோட்டத்தின்) கவர்ச்சியில் இருந்துவிட்டேன். நபி (ஸல்) அவர்களும், அவர்களுடன் முஸ்லிம்களும் தயாராகிக் கொண்டிருந்தனர். நான் காலையில் அவர் களுடன் புறப்படத் தயாராக வேண்டும் என எண்ணிச் செல்வேன். (மாலையில்) மீண்டும் வருவேன். (ஆனால்) எதையும் நிறைவேற்றமாட்டேன். நான் விரும்பினால் (உடனே) இதற்குப் புறப்பட நான் சக்தி பெற்றவன் தான் என எனக்குள் கூறிக் கொள்வேன். எனக்குப் புறப்படத் தாமதமாகிவிட்டது. இறுதியாக மக்கள் தயாராகிவிட்டார்கள். நபி (ஸல்) அவர்களும், அவர்களுடன் முஸ்லிம்களும் காலையில் புறப்பட்டுச் சென்றார்கள். என் தயாரிப்புக்கு எதையும் நான் செய்யவில்லை.

பின்பு காலையில் எழுந்து போவேன். (மாலையில்) திரும்புவேன். எதையும் தயார் செய்திட மாட்டேன். எனக்குத் தாமதமான நிலை ஏற்பட்டது. மக்களும் விரைந்து சென்றுவிட்டனர். எனது போர்ப் பயணம் ரத்தாகிவிட்டது. நான் கிளம்பி, அவர்களை அடைந்து கொள்ளலாம் என எண்ணினேன். நான் புறப்பட்டிருக்க வேண்டும். ஆனால் எனக்கு அது விதிக்கப்படவில்லை.

நபி (ஸல்) அவர்கள் (போருக்கு) சென்ற பின் மக்களிடையே நான் சென்றபோது என்னை கவலைக்குள்ளாக்கும் நிலையை உணர்ந்தேன். நயவஞ்சகர் என அடையாளம் காணப்பட்டவர் அல்லது பலவீனர்கள் என அல்லாஹ் ஒதுக்கியவர்களில் உள்ளவர் ஆகியோரைத் தவிர என்னைப் போன்ற எவரையும் நான் கண்டதில்லை. தபூக்கைச் சென்றடையும் வரை நபி (ஸல்) அவர்கள் என்னைப் பற்றிப் பேசவில்லை. தபூக்கில் மக்களிடையே உட்கார்ந்திருந்தபோது, "கஅபு இப்னு மாலிக் என்ன செய்கிறார்?" என்று கேட்டார்கள், அப்போது பனூ ஸலமா கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! பணத்திமிர் அவரைத் தடுத்துவிட்டது" என்று கூறினார். அப்போது முஆத் இப்னு ஜபல் (ரழி) அவர்கள் "நீ கூறுவது சரிஅல்ல. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இறைத்தூதர் அவர்களே! அவரிடம் நல்லதைத் தவிர நாம் அறிந்ததில்லை" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் மௌனமாக இருந்தார்கள். அப்போது, கானல் நீர் போன்ற வெள்ளை ஆடை அணிந்த நபர் ஒருவர் (தூரத்தில்) தெரிந்தார். 'அது அபூகய்ஸமாவாக இருக்கும்' என்று நபி (ஸல்) கூறினார்கள். அவர் அபூகய்ஸமாதான். இவரை நயவஞ்சகர்கள் குறை கூறிய சமயத்திலும், ஒரு 'ஸாஉ' அளவுக்கு பேரீத்தம் பழத்தை தர்மம் செய்தவராவார். நபி (ஸல்) அவர்கள் தபூக்கிலிருந்து திரும்பி வரத் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி எனக்குக் கிடைத்த போது, எனக்குக் கவலை ஏற்பட்டது. பொய் கற்பனை செய்து நான் கூறிடவும், நாளை அவர்களின் கோபத்திலிருந்து எப்படி வெளியேறுவது எனவும் இதிலிருந்து என்னை எப்படிக் காப்பாற்றிக் கொள்வேன் எனவும் எண்ணி, என் குடும்பத்தில் உள்ள நன்கு சிந்திக்கின்றவர்களைத் தேடி (பேசி)னேன்.

நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டுவிட்டார்கள் என்று கூறப்பட்ட போது, என்னிடமிருந்து தவறான காரணம் கூறுதல் என்பது நீங்கிவிட்டது. காரணம், தவறானதிலிருந்து எதையும் கூறி, எக்காலமும் நான் தப்பிக்க இயலாது என அறிந்தேன். அவர்களிடம் உண்மையைக் கூறுவது என முடிவு செய்தேன்.

நபி (ஸல்) அவர்கள் வந்துவிட்டார்கள். அவர்கள் பயணத்திலிருந்து வந்தால் பள்ளிக்குத்தான் முதலில் செல்வார்கள். இரண்டு ரக்அத் தொழுதுவிட்டு, மக்களோடு உட்கார்ந்திருப்பார்கள். இதை அவர்கள் செய்ததும் போருக்கு வராமல் (பின் தங்கிப்) போனவர்கள் அவர்களிடம் வந்து, காரணம் கூறி, சத்தியம் செய்தார்கள். இவ்வாறு சுமார் 80-க்கும் மேற்பட்டோர் இருந்தனர். அவர்களிடமிருந்து, அவர்களின் வெளிப்படையான காரணங்களை ஏற்று, அவர்களையும் ஏற்று, அவர்களுக்கு (அல்லாஹ்விடம்) மன்னிப்புக் கோரினார்கள். மேலும், அவர்களின் மறைமுக நிலைகளை அல்லாஹ்விடமே பொறுப்பாக்கினார்கள்.

இறுதியில் நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். நான் ஸலாம் கூறியபோது, கோபமாக சிரிப்பது போல் சிரித்தார்கள். பின்பு 'வா' என்று கூறினார்கள். நான் நடந்து சென்று அவர்களின் முன்னே உட்கார்ந்தேன். "உன்னைப் போருக்கு வராமலிருக்கச் செய்தது எது? உன்னை முதுகில் சுமந்து செல்லும் வாகனம் இல்லையா?" என்று கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் மீது ஆணையாக! உலகத்தாரில் உங்களைத் தவிர்த்து வேறு எவர் முன் நான் உட்கார்ந்திருந்தால் அவரின் கோபத்திலிருந்து வெளியேற ஏதேனும் காரணம் கூற நான் அறிந்துள்ளேன். வாதத் திறமையும் கொடுக்கப்பட்டுள்ளேன். எனினும், அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் இன்று உங்களிடம் பொய் கூறினால், என்னைப் பற்றி திருப்திப்படுவீர்கள் என்பதை அறிந்துள்ளேன். ஆனால், அல்லாஹ் என் மீது கோபிப்பான். நான் உங்களிடம் உண்மையைக் கூறினால், என்மீது கோபம் கொள்வீர்கள். இது விஷயமாக நான் அல்லாஹ்வின் முடிவையே எதிர்பார்க்கிறேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனக்கு எவ்வித சங்கடமும் இல்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களை விட்டும் நான் பின் தங்கிய இந்த (கால) நேரத்தில், என்னிடம் இருந்தது போல் வசதியும், பலமும் முன்பு நான் பெற்றதுமில்லை" என்று கூறினேன்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் 'இவர் உண்மையே கூறுகிறார்' என்று கூறிவிட்டு, 'எழுந்து செல்வீராக! உம் விஷயமாக அல்லாஹ் முடிவு கூறுவான்' என்று கூறினார்கள். பனூஸலமா கூட்டத்தைச் சேர்ந்த சிலர் என்னைப் பின் தொடர்ந்து வந்து, 'இதற்கு முன் எந்தத் தவறும் நீ செய்ததாக உம்மை நாங்கள் அறியவில்லை. போருக்கு வராமல் போனவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் கூறிய காரணங்களில் ஒரு காரணத்தை நீர் அவர்களிடம் கூற முடியாமல் போய்விட்டீரே! உமது குற்றத்திற்கு நபி (ஸல்) அவர்கள் உமக்காக அல்லாஹ்விடம் மன்னிப்புக்கோருவதே போதுமாகி இருக்குமே' என்று கூறினார்கள். "நான் நபி (ஸல்) அவர்களிடம் (மீண்டும்) திரும்பச் சென்று, என் விஷயமாகப் பொய்யை நான் கூறி இருக்கலாம்" என்று நான் எண்ணும் அளவுக்கு, என்னிடம் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். பின்பு அவர்களிடம் "இதே நிலையை அடைந்தவர் என்னைப்போல் எவரும் உள்ளனரா?" என்று கேட்டேன். "ஆம். இதே நிலையை அடைந்த உம்மைப் போன்று இருவர் உள்ளனர். நீ கூறியது போலவே, அந்த இருவரும் கூறி உள்ளனர். உம்மிடம் கூறப்பட்டது போலவே அவ்விருவரிடமும் கூறப்பட்டுள்ளது" என்று கூறினார்கள்.

"அந்த இருவரும் யார்?" என்று கேட்டேன். "முராரா இப்னு ரபீஉ அல் உமரீ, ஹிலால் இப்னு உமய்யா அல் வாகிஃபீ" என்று கூறினார்கள். அவ்விருவரும் நல்லவர்கள். பத்ருப்போரில் கலந்து கொண்டவர்கள். அவ்விருவர் விஷயத்திலும் முன்மாதிரி உண்டு என்று என்னிடம் அவர்கள் கூறினார்கள். பிறகு நான் சென்று விட்டேன். "அவர்களுடன் போருக்கு வராமல் போன எங்கள் மூவருடன் எவரும் பேசக்கூடாது" என நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். மக்கள் எங்களை ஒதுக்கினார்கள். எனக்கு ஊரே வெறுப்புக்குள்ளாகியது. நான் இதுவரை அறிந்த ஊராக இது இல்லை. 50 இரவுகள் இவ்வாறே நாங்கள் இருந்தோம்.

என்(னைப் போன்ற மற்ற) இரு தோழர்களும் மனம் சோர்ந்து, தங்கள் வீடுகளில் அழுதவர்களாக

இருந்துவிட்டனர். நான் வாலிபனாகவும், தைரியசாலியாகவும் இருந்தேன். எனவே, வெளியே சென்று முஸ்லிம்களுடன் (பள்ளியில்) தொழுகையில் கலந்து கொள்வேன். கடைவீதிகளுக்கு வருவேன். எவரும் என்னிடம் பேசமாட்டார்கள். நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அவர்களுக்கு ஸலாம் கூறுவேன். தொழுத பின் அவர்கள் அருகிலே அமர்ந்து இருப்பேன். (நான் ஸலாம் கூறியதற்கு) பதில் ஸலாம் கூற நபி (ஸல்) அவர்களின் உதடு அசைகிறதா? இல்லையா? என என்னுள் கூறிக்கொள்வேன். பின்பு அவர்கள் அருகில் தொழுவேன். அவர்களைப் பார்க்கும் நிலையில் நெருங்கி இருப்பேன். தொழுகையில் நான் ஈடுபட்டிருக்கும் போது, என்னைப் பார்ப்பார்கள். அவர்களை நோக்கி நான் திரும்பினால், என்னை விட்டும் முகத்தைத் திருப்பிக் கொள்வார்கள்.

முஸ்லிம்களின் புறக்கணிப்பு என்னிடம் நீடித்துக் கொண்டிருந்தபோது, நான் அபூகதாதா அவர்களின் தோட்டத்திற்கு வந்தேன். அவர் என் சிறிய தந்தையின் மகனாவார். மக்களில் எனக்கு மிகவும் விருப்பமானவராவார். அவருக்கு ஸலாம் கூறினேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் எனக்கு பதில் ஸலாம் கூறவில்லை. ‘அபூகதாதா அவர்களே! அல்லாஹ்வின் பெயரால் உன்னிடம் கேட்கிறேன். அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நான் மிகவும் நேசிப்பவன் என்பதை நீ அறிவாய்தானே?’ என்று கேட்டேன். அவர் அமைதியாக இருந்தார். நான் மீண்டும் அவரிடம் கேட்டேன். அமைதியாக இருந்தார். நான் மீண்டும் கேட்டேன். “அல்லாஹ்வும், அவனது தூதரும் மிக அறிந்தவர்கள்” என்று அவர் கூறினார். என் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. தோட்டத்திலிருந்து நான் திரும்பி விட்டேன்.

மதீனாவின் கடை வீதியில் நடந்து வந்து கொண்டிருந்தேன். மதீனாவில் தன் உணவுப் பொருட்களை விற்பதற்காக வந்திருந்த ‘சிரியா’ நாட்டு வியாபாரிகளில் ஒருவர், “கஅபு இப்னு மாலிக் பற்றி எனக்குக் கூறுபவர் யார்?” என்று கேட்டுக் கொண்டிருந்தார். அப்போது மக்கள் என் பக்கம் சுட்டிக் காட்டினார்கள். என்னிடம் அவர் வந்து, ‘அஸ்ஸான்’ மன்னர் எழுதிய கடிதத்தை என்னிடம் தந்தார். நான் எழுதப்படிக்க தெரிந்தவன் என்பதால் அதை வாங்கிப் படித்தேன். அதில், உனது தோழர் (முஹம்மது) உன்னை வெறுத்து விட்டார் என்ற செய்தி கிடைத்தது. அல்லாஹ் இழிவான கேவலமான பூமியில் வாழ உம்மை ஆக்கவில்லை. எங்களிடம் வந்துவிடு. உம்மைச் சேர்த்துக் கொள்கிறோம்’ என இருந்தது. அதை படித்ததும், “இது எனக்கு ஏற்பட்ட சோதனையே” என்று கூறிக் கொண்டு, அதை அடுப்பில் போட்டு எரித்தேன்.

50 நாட்களில் 40 நாட்கள் கடந்துவிட்டன. இறைச்செய்தி வரவும் தாமதமானது. அப்போது நபி (ஸல்) அவர்களின் தூதர் என்னிடம் வந்தார். “உன் மனைவியை விட்டும் நீ ஒதுங்கி இருக்க வேண்டும் என, நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள்” என்று கூறினார். “அவளை விவாகரத்துச் செய்யவேண்டுமா? அல்லது நான் எப்படி நடந்து கொள்வது?” என்று கேட்டேன். “இல்லை அவளை விட்டும் நீ ஒதுங்கிவிடு. அவளை நெருங்காதே” என்று கூறினார். இது போலவே, என் இரு நண்பர்களிடமும் தூதர் சென்றார். நான் என் மனைவியிடம், “உனது குடும்பத்தாரிடம் சேர்ந்து கொள். இது விஷயமாக அல்லாஹ்வின் தீர்ப்பு வரும் வரை அவர்களிடமே நீ இரு” என்று கூறினேன்.

மூவரில் ஒருவரான, ஹிலால் இப்னு உமய்யா (ரழி) அவர்களின் மனைவி, நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். “இறைத்தூதர் அவர்களே! ஹிலால் இப்னு உமய்யா வயதானவர், பலவீனமானவர். பணிவிடை செய்பவரும் அவருக்கு இல்லை. எனவே அவருக்குப் பணிவிடை செய்வதை நீங்கள் வெறுக்கிறீர்களா?” என்று கேட்டார். “இல்லை. ஆனாலும், உம்மிடம் அவரை நெருங்கவிடக்கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “அல்லாஹ்வின் மீது ஆணையாக! எதையும் விரும்புபவராக அவர் இல்லை. மேலும் இந்த நிகழ்வு ஏற்பட்டதில் இருந்து இன்று வரை அவர் அழுது கொண்டேதான் இருக்கிறார்” என்று (அவரது மனைவி) கூறினார். இதன் பிறகு என் குடும்பத்தினரில் சிலர், “உன்

மனைவி விஷயமாக நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி பெறலாம்தானே! ஹிலால் இப்னு உமய்யாவின் மனைவிக்கு அவருக்கு பணிவிடை செய்ய அனுமதி தந்துள்ளார்கள்'' என்று என்னிடம் கூறினர். அதற்கு, ''இது விஷயமாக நான் நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்க மாட்டேன். நான் வாலிபன். இதற்கு அனுமதி கேட்டால் நபி (ஸல்) அவர்கள் என்ன கூறுவார்கள்? என்பதையும் நான் அறிய மாட்டேன்'' என்று கூறிவிட்டேன். இதே நிலையில் பத்து இரவுகள் கடந்தது. எங்களிடம் பேசுவதற்குத் தடை செய்யப்பட்டதிலிருந்து ஐம்பது இரவுகள் முழுமையாகிவிட்டன.

ஐம்பதாம் நாள் இரவின் காலை சுப்ஹுத் தொழுகையை எங்கள் வீடுகளில் ஒரு வீட்டின் மாடியில் தொழுது கொண்டிருந்தேன். பூமி விசாலமாக இருந்தும், என் மீது அது நெருக்கடியாகிவிட்ட நிலையில் (கவலையுடன்) அமர்ந்திருந்தேன். எனக்கு என் மீதே வெறுப்பு ஏற்பட்டது. (மதீனாவில் உள்ள) 'ஸல்உ' என்ற மலைக்குன்றில் ஒருவர் ஏறி, தன் குரலை உயர்த்தி ''கஅபு இப்னு மாலிக்கே! சுபச்செய்தி அறிவீராக!'' என்று அறிவித்தார். நான் ஸஜ்தாவில் விழுந்தேன். மகிழ்ச்சியான செய்தி எனக்குக் கிடைத்துவிட்டதாக அறிந்தேன். பஜ்ருத் தொழுகை தொழுததும், எங்களின் தவ்பாவை அல்லாஹ் ஏற்றுக் கொண்டதை மக்களிடம் நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள். மக்கள் எங்களுக்கு வாழ்த்துச் சொல்லிச் சென்றார்கள். என் மற்ற இரு நண்பர்களிடமும் வாழ்த்துச் சொல்லியோர், வாழ்த்துச் சொல்ல சென்றனர்.

குதிரையில் என்னிடம் ஒருவர் வந்தார். எனக்கு முன்னர் அஸ்லம் கூட்டத்தைச் சார்ந்த ஒருவர் விரைந்து சென்று மலையின் மீது ஏறினார். அவரது குரல், குதிரையை விடவும் வேகமாக இருந்தது. எனக்கு வாழ்த்துக் கூறியவர் என்னிடம் வந்த போது, அவரிடம் என் இரு ஆடைகளையும் கொடுத்து, அவர் வாழ்த்துக் கூறியதற்காக அந்த இரண்டையும் அணியச் செய்தேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அன்றைய நாளில் அவ்விரண்டு ஆடைகளை தவிர வேறு ஆடை எனக்குச் சொந்தமாக இல்லை. (பிறகு) இரண்டு ஆடைகளை நான் (விலைக்கு) வாங்கி, அதை அணிந்து கொண்டேன். நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க நான் புறப்பட்டேன். மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து, மன்னிப்பு பெற்றது காரணமாக எனக்கு வாழ்த்துக் கூறியவர்களாக என்னிடம், ''அல்லாஹ்வின் மன்னிப்பு உனக்குக் கிடைத்து விட்டது'' என்று கூறினார்கள்.

நான் பள்ளிக்கு வந்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைச் சுற்றி மக்கள் இருந்தனர். அப்போது தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் எழுந்து விரைந்து வந்து, எனக்குக் கை கொடுத்து, வாழ்த்துத் தெரிவித்தார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹாஜிர் (மக்காவாசி)களில் அவரைத் தவிர எவரும் எழவில்லை. தல்ஹாவை நான் எப்போதும் மறக்க மாட்டேன். நபி (ஸல்) அவர்களின் முகம் மகிழ்ச்சியால் பிரகாசமாக இருந்த நிலையில், அவர்களுக்கு நான் ஸலாம் கூறினேன். ''உன் தாய் உன்னைப் பெற்றெடுத்த நாளிலிருந்து சென்றுவிட்ட நாட்களில், இன்று சிறந்த வாழ்த்தைப் பெறுவீராக!'' என்று கூறினார்கள். ''இறைத்தூதர் அவர்களே! அந்த வாழ்த்து உங்களிடமிருந்தா? அல்லது அல்லாஹ்விடமிருந்தா?'' என்று கேட்டேன் ''இது அல்லாஹ்விட மிருந்துதான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மகிழ்ச்சியாக இருந்தால் அவர்களின் முகம் நிலவின் ஒரு பகுதி போன்று பிரகாசமாக இருக்கும். இதை நாங்கள் அறிவோம். அவர்கள் முன்னே நான் உட்கார்ந்து, ''இறைத்தூதர் அவர்களே! எனக்குப் பாவமன்னிப்பு கிடைத்தது காரணமாக, என் சொத்து முழுவதையும் அல்லாஹ்வுக்காகவும், அவனது தூதருக்காகவும் தர்மமாக வழங்கிவிட்டு, அதிலிருந்து நீங்கிட விரும்பு கிறேன்.'' என்று கூறினேன். 'உன் சொத்தில் சிலவற்றை உனக்காக வைத்துக் கொள். அதுவே உனக்குச் சிறந்தது' என்று நபி (ஸல்) கூறினார்கள். ''கைபரில் உள்ள எனது தோட்டத்தை, நான் வைத்துக் கொள்கிறேன் (மற்றதை தர்மம் செய்கிறேன்)'' என்று கூறினேன்.

மேலும், "இறைத்தூதர் அவர்களே! உண்மை (பேசிய) காரணமாக அல்லாஹ் என்னைக் காப்பாற்றி விட்டான். இனி வரும் காலத்தில் உண்மையைத் தவிர வேறு எதுவும் பேசமாட்டேன் என்பதும் என் தவ்பாவில் உள்ளதாகும்" என்று கூறினேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவ்வாறு நான் நபி (ஸல்) அவர்களிடம் கூறிய காலத்திலிருந்து உண்மை பேசியதின் காரணமாக, அல்லாஹ் எனக்கு வழங்கிய அருளைவிட மிக அழகிய ஒன்றை முஸ்லிம்களில் எவருக்கும் அல்லாஹ் வழங்கியதாக நான் அறியவில்லை. அல்லாஹ்வின்மீது சத்தியமாக, நபி (ஸல்) அவர்களிடம் இதைக் கூறிய நாளிலிருந்து இந்த நாள் வரை, நான் பொய்கூற முயற்சித்தது இல்லை. எஞ்சி இருக்கும் நாளிலும், அல்லாஹ் என்னைப் பாதுகாக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். எங்கள் விஷயமாக கீழ்க்காணும் வசனங்களை அல்லாஹ் இறக்கினான்.

*"(போருக்கு வராது) பின் தங்கிவிட்ட மூவரையும் (அல்லாஹ் மன்னித்துவிட்டான்). பூமி விசாலமாக இருந்தும் அவர்களுக்கு பூமி நெருக்கடியாக இருந்தது. அவர்களுக்குத் தங்கள் மீதே வெறுப்பு ஏற்பட்டது. அல்லாஹ்விடமிருந்து தப்பிக்குமிடம், அவனையன்றி எவரிடமும் இல்லை என்பதை உணர்ந்தார்கள். பின்பு அவர்கள் பாவமன்னிப்புக் கோரியதால், அவர்களை மன்னித்து விட்டான். நிச்சயமாக அல்லாஹ் பாவமன்னிப்பை ஏற்பவன், நிகரில்லா அருளாளன் ஆவான். (9:118)*

*இறை விசுவாசிகளே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். மேலும் உண்மையாளர்களுடன் இருந்து கொள்ளுங்கள். (9 :119)*

அல்லாஹ் மீது சத்தியமாக, இஸ்லாத்தின்பால் எனக்கு அல்லாஹ் வழிகாட்டிய பின், அவன் எனக்கு அளித்த அருட்கொடைகளில், எனக்குப் பெரும் அருட்கொடையாக இருந்தது. நபி (ஸல்) அவர்களிடம் பொய் கூறாமல் உண்மை பேசியதுதான். (பொய் பேசி இருந்தால்) பொய் பேசியவர்கள் அழிந்தது போல நானும் அழிந்து இருப்பேன். இறைச்செய்தி (வஹீ) இறங்கிய காலத்தில் பொய் கூறியவர்களை அல்லாஹ், எவரையும் கண்டிக்காத அளவுக்குக் கண்டித்தான்.

**அல்லாஹ் கூறுகிறான்:** *(போரிலிருந்து) அவர்களிடம் நீங்கள் திரும்பி வந்துவிட்டால், அவர்களை (மன்னித்து) விட்டுவிட வேண்டும் என்பதற்காக, உங்களிடம் அவர்கள் அல்லாஹ்வின் பெயரால் சத்தியம் செய்வார்கள். எனவே, அவர்களை விட்டுவிடுங்கள். நிச்சயமாக அவர்கள் அசுத்த மானவர்கள். அவர்களின் ஒதுங்குமிடம் நரகம்தான். (அதுவே), அவர்கள் சம்பாதித்தவைக்குக் கூலியாக உள்ளது. (9:96)*

(போருக்கு வராமல் இருந்து) நபி (ஸல்) அவர்களிடம் சத்தியம் செய்து, உடன்படிக்கை செய்து, மன்னிப்பும் கேட்ட அவர்களை ஏற்றுக் கொண்டவர்களின் காரியத்தைவிட, நாங்கள் மூவரும் பிற்படுத்தப்பட்டே இருந்தோம். எங்கள் விஷயத்தில் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ் தீர்ப்புக் கூறுவான் என எதிர்பார்த்திருந்தார்கள்.

"பிந்திவிட்ட மூவர்" என்று அல்லாஹ் கூறுகிறான். போருக்கு வராமல் பிந்திவிட்ட காரணத்தால், 'பிந்தி விட்டவர்கள்' என்று அவன் கூறவில்லை. (போருக்கு வராமல் இருந்து) சத்தியம் செய்து காரணம் கூறி, அதை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக்கொண்ட நபர்களைவிட, எங்களை நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் செய்தியை எதிர்பார்த்து, எங்களைப் பிற்படுத்தியதால்தான் 'பிந்திவிட்ட மூவர்' என்று கூறுகிறான். **(புகாரி:4418. முஸ்லிம்:2769)**

மற்றொரு அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் 'தபூக்' போருக்கு வியாழக்கிழமை புறப்பட்டுச் சென்றார்கள். வியாழக்கிழமை பயணம் செய்வதை அவர்கள் விரும்புவார்கள்" என்று உள்ளது.

மற்றொரு அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் 'லுஹா' எனும் முற்பகல் நேரத்திலேயே தவிர, பயணத்திலிருந்து வரமாட்டார்கள். வந்ததும் பள்ளிக்கு முதலில் செல்வார்கள். அதிலே இரண்டு ரக்அத் தொழுவார்கள். பின்பு அங்கே உட்காருவார்கள்" என்று உள்ளது.

٢٢ - وَعَنْ أَبِي نُجَيْد - بِضَمِّ النُّونِ وَفَتْحِ الْجِيمِ - عِمْرَانَ بْنِ الْحُصَيْنِ الْخُزَاعِيِّ" أَنَّ امْرَأَةً مِنْ جُهَيْنَةَ أَتَتْ رَسُولَ اللَّهِ ﷺ وَهِيَ حُبْلَى مِنَ الزِّنَا فَقَالَتْ: يَا رَسُولَ اللَّهِ أَصَبْتُ حَدًّا فَأَقِمْهُ عَلَيَّ فَدَعَا نَبِيُّ اللَّهِ ﷺ وَلِيَّهَا فَقَالَ: أَحْسِنْ إِلَيْهَا فَإِذَا وَضَعَتْ فَأْتِنِي فَفَعَلَ فَأَمَرَ بِهَا نَبِيُّ اللَّهِ ﷺ فَشُدَّتْ عَلَيْهَا ثِيَابُهَا ثُمَّ أَمَرَ بِهَا فَرُجِمَتْ ثُمَّ صَلَّى عَلَيْهَا. فَقَالَ لَهُ عُمَرُ: تُصَلِّي عَلَيْهَا يَا رَسُولَ اللَّهِ وَقَدْ زَنَتْ؟ قَالَ: لَقَدْ تَابَتْ تَوْبَةً لَوْ قُسِمَتْ بَيْنَ سَبْعِينَ مِنْ أَهْلِ الْمَدِينَةِ لَوَسِعَتْهُمْ. وَهَلْ وَجَدْتَ أَفْضَلَ مِنْ أَنْ جَادَتْ بِنَفْسِهَا لِلَّهِ عَزَّ وَجَلَّ" رَوَاهُ مُسْلِمٌ.

**22** (அபூ நுஜைத்) என்ற இம்ரான் இப்னு ஹுஸைன் அல்குஸாஈ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'ஜுஹைனா' கூட்டத்தைச் சேர்ந்த ஒரு பெண், நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அப்பெண் விபச்சாரம் மூலம் கர்ப்பிணியாக இருந்தார். "இறைத்தூதர் அவர்களே! தண்டனைக்குரியச் செயலை செய்து விட்டேன். அதை என்மீது நிறைவேற்றுங்கள்" என்று கூறினாள். நபி (ஸல்) அவர்கள், அவளின் பொறுப்புதாரியை அழைத்து "இவளை நல்லவிதமாக வைத்துக்கொள். இவள் குழந்தை பெற்று விட்டால், என்னிடம் அழைத்துவா!" என்று கூறினார்கள். அவர் அவ்வாறே செய்தார். (அப்பெண் வந்ததும்) அவள் விஷயமாக (தண்டனை தர) நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். அவள் மீது அவளின் ஆடைகள் சுற்றப்பட்டது. பின்பு அவளைக் கல்லால் எறிந்து கொல்லக் கட்டளையிட்டார்கள். பின்பு அவளுக்கு (ஜனாஸா) தொழவைத்தார்கள். அப்போது உமர் (ரழி) அவர்கள் "இறைத்தூதர் அவர்களே! விபச்சாரம் செய்துவிட்ட இவளுக்கு, தொழவைக்கப் போகிறீர்களா?" என்று கேட்டார்கள். "மதீனாவாசிகளில் எழுபது நபர்களுக்குப் பங்கிட்டு, அவர்களுக்கு சமமாகத் தரும் அளவுக்குரிய 'தவ்பா'வை அவள் செய்து விட்டாள். அல்லாஹ்வுக்காகத் தன்னை அர்ப்பணித்துவிட்டதை விட சிறந்த ஒன்றை நீர் காணப் போகிறீரா?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். **(முஸ்லிம்:1696)**

٢٣ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ وَأَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُمْ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " لَوْ أَنَّ لِابْنِ آدَمَ وَادِيًا مِنْ ذَهَبٍ أَحَبَّ أَنْ يَكُونَ لَهُ وَادِيَانِ وَلَنْ يَمْلأَ فَاهُ إِلاَّ التُّرَابُ وَيَتُوبُ اللَّهُ عَلَى مَنْ تَابَ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**23** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதமின் மகனுக்கு தங்கத்திலான ஓர் ஓடை இருந்தாலும், தனக்கு (இன்னும்) இரண்டு ஓடைகள் வேண்டும் என்றே அவன் விரும்புவான். அவனது வாயை மண்ணே தவிர வேறு எதுவும் நிரப்பி விடாது. 'தவ்பா' செய்வோரின் தவ்பாவை அல்லாஹ் ஏற்கிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:6437, 6439. முஸ்லிம்:1048, 1049)**

٢٤ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " يَضْحَكُ اللَّهُ سُبْحَانَهُ وَتَعَالَى إِلَى رَجُلَيْنِ يَقْتُلُ أَحَدُهُمَا الآخَرَ يَدْخُلاَنِ الْجَنَّةَ يُقَاتِلُ هَذَا فِي سَبِيلِ اللَّهِ فَيُقْتَلُ ثُمَّ يَتُوبُ اللَّهُ عَلَى الْقَاتِلِ فَيُسْلِمُ فَيُسْتَشْهَدُ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**24** அபூ ஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு நபர்களில் ஒருவர், மற்றொருவரைக் கொன்று விடுகிறார். இருவரும் சொர்க்கத்தில் நுழைகின்றனர். அந்த இருவர் பற்றி அல்லாஹ் சிரிக்கிறான். ஒருவர் அல்லாஹ்வின் பாதையில்

போரிட்டுக் கொல்லப்படுகிறார். பின்பு அவரைக் கொன்றவரோ, அல்லாஹ்விடம் 'தவ்பா' செய்து, இஸ்லாத்தை ஏற்று, மற்றொரு போரில் கொல்லப்படுகிறார். (இருவருமே சொர்க்கம் சென்று விடுகின்றனர்)" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2826, முஸ்லிம்:1890)**

## ٣ - باب الصبر

### பாடம் : 3 - பொறுமை

قَالَ اللّٰهُ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اصْبِرُوا وَصَابِرُوا وَرَابِطُوا وَقَالَ: وَلَنَبْلُوَنَّكُمْ بِشَيْءٍ مِنَ الْخَوْفِ وَالْجُوعِ وَنَقْصٍ مِنَ الْأَمْوَالِ وَالْأَنْفُسِ وَالثَّمَرَاتِ وَبَشِّرِ الصَّابِرِينَ وَقَالَ تَعَالَى: إِنَّمَا يُوَفَّى الصَّابِرُونَ أَجْرَهُمْ بِغَيْرِ حِسَابٍ وَقَالَ تَعَالَى: وَلَمَنْ صَبَرَ وَغَفَرَ إِنَّ ذَلِكَ لَمِنْ عَزْمِ الْأُمُورِ وَقَالَ تَعَالَى: اسْتَعِينُوا بِالصَّبْرِ وَالصَّلَاةِ إِنَّ اللّٰهَ مَعَ الصَّابِرِينَ وَقَالَ تَعَالَى: وَلَنَبْلُوَنَّكُمْ حَتَّى نَعْلَمَ الْمُجَاهِدِينَ مِنْكُمْ وَالصَّابِرِينَ وَالْآيَاتُ فِي الْأَمْرِ بِالصَّبْرِ وَبَيَانِ فَضْلِهِ كَثِيرَةٌ مَعْرُوفَةٌ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளே! பொறுமையாக இருங்கள். (இன்னலை) சகித்துக் கொள்ளுங்கள்... (3 : 200)*

*உங்களை நாம் பயம், பசி ஆகியவற்றின் மூலமும், சொத்து, உயிர், விளைச்சல் ஆகியவற்றைக் குறைப்பது மூலமும் சோதிப்போம். பொறுமையாளர்களுக்கு சுபச்செய்தி கூறுவீராக! (2 : 155)*

*"பொறுமையாளர்கள், அவர்களின் கூலியை கணக்கின்றி கொடுக்கப்படுவார்கள்." (39:10)*

*ஒருவர் பொறுமையாக இருந்து, மன்னித்துவிட்டால், நிச்சயமாக அது உறுதியான செயல்களில் உள்ளதாகும். (42 : 43)*

*(இறைவிசுவாசிகளே!) நீங்கள் பொறுமை மற்றும் தொழுகை மூலம் உதவி தேடுங்கள். நிச்சயமாக அல்லாஹ், பொறுமையாளர்களுடன் உள்ளான். (2 : 153)*

*உங்களில் போர் புரிபவர்கள் மற்றும் பொறுமையாளர்களை நாம் அறிந்து, உங்கள் செய்திகளை (மற்றவருக்கு) அறிவிக்கும் வரை, உங்களை நாம் சோதிப்போம். (47 : 31)*

பொறுமையை பற்றியும் அதன் சிறப்பு பற்றியும் உள்ள வசனங்கள், அறிமுகமானவைகளாகவும் அதிகமாகவும் உள்ளன.

٢٥ - وَعَنْ أَبِي مَالِكٍ الْحَارِثِ بْنِ عَاصِمٍ الْأَشْعَرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: "الطُّهُورُ شَطْرُ الْإِيمَانِ وَالْحَمْدُ لِلّٰهِ تَمْلَأُ الْمِيزَانَ وَسُبْحَانَ اللّٰهِ وَالْحَمْدُ لِلّٰهِ تَمْلَآنِ - أَوْ تَمْلَأُ - مَا بَيْنَ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَالصَّلَاةُ نُورٌ وَالصَّدَقَةُ بُرْهَانٌ وَالصَّبْرُ ضِيَاءٌ وَالْقُرْآنُ حُجَّةٌ لَكَ أَوْ عَلَيْكَ. كُلُّ النَّاسِ يَغْدُو فَبَائِعٌ نَفْسَهُ فَمُعْتِقُهَا أَوْ مُوبِقُهَا" رَوَاهُ مُسْلِمٌ.

**25** (அபூமாலிக் என்ற) ஹாரிஸ் இப்னு ஆஸிம் அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சுத்தம் ஈமானில் பாதியாகும். 'அல்ஹம்துலில்லாஹ்' என்பது (மீஜான்) தராசை நிரப்பிவிடும். 'சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ்' என்பது வானங்கள், பூமிக்கிடையே உள்ளவற்றை நிரப்பிவிடும். தொழுகை ஒளியாகும், தர்மம் ஆதாரமாகும். பொறுமை ஒளியாகும். குர்ஆன் உனக்குச் சாதகமான அல்லது உனக்குப் பாதகமான ஆதாரமாகும். ஒவ்வொரு மனிதரும் முயற்சிக்கின்றனர். தன்னை ஈடுபடுத்திக் கொண்டனர். அதில் சிலர் (அழிவிலிருந்து) விடுவித்துக் கொள்கின்றனர். சிலர் அதில் அழிந்து விடுகின்றனர் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:223)**

٢٦ – وَعَنْ أَبِي سَعِيد سَعْد بْنِ سِنَانِ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَنَّ نَاسًا مِنَ الأَنْصَارِ سَأَلُوا رَسُولَ اللَّهِ ﷺ فَأَعْطَاهُمْ ثُمَّ سَأَلُوهُ فَأَعْطَاهُمْ حَتَّى نَفِدَ مَا عِنْدَهُ فَقَالَ لَهُمْ حِينَ أَنْفَقَ كُلَّ شَيْءٍ بِيَدِهِ:" مَا يَكُنْ مِنْ خَيْرٍ فَلَنْ أَدَّخِرَهُ عَنْكُمْ وَمَنْ يَسْتَعْفِفْ يُعِفَّهُ اللَّهُ وَمَنْ يَسْتَغْنِ يُغْنِهِ اللَّهُ وَمَنْ يَتَصَبَّرْ يُصَبِّرْهُ اللَّهُ. وَمَا أُعْطِيَ أَحَدٌ عَطَاءً خَيْرًا وَأَوْسَعَ مِنَ الصَّبْرِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**26** (அபூ ஸயீத் என்ற) ஸஅத் இப்னு மாலிக் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மதீனாவாசிகளில் சிலர், நபி (ஸல்) அவர்களிடம் (உதவி) கேட்டார்கள். அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் கொடுத்தார்கள். மீண்டும் கேட்டார்கள். அவர்களுக்கு மீண்டும் கொடுத்தார்கள். அவர்களிடம் இருந்தவை காலியாகின. தன் கையில் இருந்த அனைத்தையும் செலவு செய்த நபி (ஸல்) அவர்கள், அவர்களிடம் "என்னிடமுள்ள நல்லவை எதையும் உங்களை விட்டும் நான் மறைக்க மாட்டேன். ஒருவர் பேணுதலாக நடந்தால், அல்லாஹ் அவரை பேணுதலாக்கி வைப்பான். ஒருவர் தேவையற்றவராக இருக்க விரும்பினால், அவரை (பிறரிடம்) தேவையற்றவராக ஆக்கி வைப்பான். ஒருவர் பொறுமையை மேற்கொண்டால், அவரைப் பொறுமையாளராக அல்லாஹ் ஆக்கி வைப்பான். பொறுமையைவிடவும் சிறந்ததை அல்லது விசாலமானதை எவருக்கும் நன்கொடையாகக் கொடுக்கப்படுவதில்லை" என்று கூறினார்கள். **(புகாரி:1469. முஸ்லிம்:1053)**

٢٧ – وَعَنْ أَبِي يَحْيَى صُهَيْبِ بْنِ سِنَانٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" عَجَبًا لأَمْرِ الْمُؤْمِنِ! إِنَّ أَمْرَهُ كُلَّهُ لَهُ خَيْرٌ – وَلَيْسَ ذَلِكَ لأَحَدٍ إِلاَّ لِلْمُؤْمِنِ – إِنْ أَصَابَتْهُ سَرَّاءُ شَكَرَ فَكَانَ خَيْرًا لَهُ وَإِنْ أَصَابَتْهُ ضَرَّاءُ صَبَرَ فَكَانَ خَيْرًا لَهُ". رَوَاهُ مُسْلِمٌ.

**27** (அபூயஹ்யா என்ற) ஸுஹைப் இப்னு ஸினான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு முஃமினின் காரியம் ஆச்சரியமானதே! அவனது காரியம் அனைத்தும் அவனுக்கு நல்லதாக அமைகிறது. ஒரு முஃமினைத் தவிர வேறு எவருக்கும் இது நிகழ்வதில்லை. அவனுக்கு மகிழ்ச்சியான நிலை ஏற்பட்டால் நன்றி கூறுகிறான். அது அவனுக்கு நல்லதாகி விடுகிறது. அவனுக்கு தீயவை ஏற்பட்டு விட்டால், பொறுமையாக இருக்கிறான். அது அவனுக்கு நல்லதாகி விடுகின்றது என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2999)**

٢٨ – وَعَنْ أَبِي يَحْيَى صُهَيْبِ بْنِ سِنَانٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" عَجَبًا لأَمْرِ الْمُؤْمِنِ! إِنَّ أَمْرَهُ كُلَّهُ لَهُ خَيْرٌ – وَلَيْسَ ذَلِكَ لأَحَدٍ إِلاَّ لِلْمُؤْمِنِ – إِنْ أَصَابَتْهُ سَرَّاءُ شَكَرَ فَكَانَ خَيْرًا لَهُ وَإِنْ أَصَابَتْهُ ضَرَّاءُ صَبَرَ فَكَانَ خَيْرًا لَهُ". رَوَاهُ مُسْلِمٌ.

**28** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுக்கு நோய் ஏற்பட்டபோது, மரண வேதனை அவர்களுக்கு ஏற்பட்டது. அப்போது ஃபாத்திமா (ரழி) அவர்கள் "என் தந்தைக்கு ஏற்பட்ட கஷ்டமே" என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இன்றைக்குப்பின் உன் தந்தைக்குக் கஷ்டம் என்பதில்லை." என்றார்கள். அவர்கள் இறந்த போது, "தந்தையே! தன்னை அழைத்த இறைவனுக்கு பதில் அளித்து விட்டீர்கள். தந்தையே! தங்களின் ஒதுங்குமிடம், ஜன்னதுல் ஃபிர்தவ்ஸ் எனும் சொர்க்கம் தான். தந்தையே! ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் இதை எப்படித் தெரிவிப்போம்? "என்று ஃபாத்திமா (ரழி) கூறினார்கள். அடக்கம் செய்து விட்டு வந்த போது, "நபி (ஸல்) அவர்கள் மீது மண்ணைப் போட, உங்களை உங்கள் மனம் தூண்டிவிட்டதா?" என்றும் கேட்டார்கள். **(புகாரி:4462)**

٢٩ – وَعَنْ أَبِي زَيْدٍ أُسَامَةَ بْنِ زَيْدِ بْنِ حَارِثَةَ مَوْلَى رَسُولِ اللَّهِ ﷺ وَحِبِّهِ وَابْنِ حِبِّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: أَرْسَلَتْ بِنْتُ النَّبِيِّ ﷺ إِنَّ ابْنِي قَدِ احْتُضِرَ فَاشْهَدْنَا. فَأَرْسَلَ يَقْرَأُ السَّلاَمَ وَيَقُولُ:" إِنَّ لِلَّهِ مَا أَخَذَ وَلَهُ مَا أَعْطَى وَكُلُّ شَيْءٍ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى

فَلْتَصْبِرْ وَلْتَحْتَسِبْ". فَأَرْسَلَتْ إِلَيْهِ تُقْسِمُ عَلَيْهِ لَيَأْتِيَنَّهَا. فَقَامَ وَمَعَهُ سَعْدُ بْنُ عُبَادَةَ وَمُعَاذُ بْنُ جَبَلٍ وَأُبَيُّ بْنُ كَعْبٍ وَزَيْدُ بْنُ ثَابِتٍ وَرِجَالٌ رَضِيَ اللَّهُ عَنْهُمْ فَرُفِعَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ الصَّبِيُّ فَأُقْعِدَ فِي حَجْرِهِ وَنَفْسُهُ تُقَعْقِعُ فَفَاضَتْ عَيْنَاهُ. فَقَالَ سَعْدٌ: يَا رَسُولَ اللَّهِ مَا هَذَا؟ فَقَالَ:" هَذِهِ رَحْمَةٌ جَعَلَهَا اللَّهُ تَعَالَى فِي قُلُوبِ عِبَادِهِ" وَفِي رِوَايَةٍ" قُلُوبِ مَنْ شَاءَ مِنْ عِبَادِهِ وَإِنَّمَا يَرْحَمُ اللَّهُ مِنْ عِبَادِهِ الرُّحَمَاءَ" مُتَّفَقٌ عَلَيْهِ وَمَعْنَى" تُقَعْقِعُ": تَتَحَرَّكُ وَتَضْطَرِبُ.

**29** (நபி (ஸல்) அவர்களின் அடிமையும், அவர்களுக்குப் பிரியமானவரும், அவர்களுக்கு பிரியமானவரின் மகனுமான அபூஸைத் என்ற) உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் மகளார் (ஜைனப் (ரழி), "என் மகன் உயிர் ஊசலாடுகிறது. எங்களிடம் நீங்கள் வர வேண்டும்" என நபி (ஸல்) அவர்களிடம் ஆள் அனுப்பினார்கள். ஸலாம் கூறியவராக அவர் வந்தார். அவரிடம், "நிச்சயமாக அல்லாஹ்வுக்கு, அவன் எடுத்துக் கொண்டது உண்டு. மேலும் அவனுக்கே அவன் கொடுத்ததும் உண்டு. அவனிடத்தில் ஒவ்வொரு பொருளும் குறிப்பிட்ட தவணையில்தான் உண்டு. எனவே (என் மகள்) பொறுமையாக இருக்கட்டும். நல்லதை எதிர்பார்த்திருக்கட்டும்!" என்று கூறி அனுப்பினார்கள்.

தன்னிடம் கண்டிப்பாக அவர்கள் வரவேண்டும் என சத்தியமிட்டுக் கூறி, மகளார் மீண்டும் ஒருவரை அனுப்பினார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் எழுந்தார்கள். அவர்களுடன் ஸஅது இப்னு உபாதா, முஆத் இப்னு ஜபல், உபை இப்னு கஅபு, ஸைத் இப்னு ஸாபித் ஆகியோரும் மற்றும் சில நபித்தோழர்களும் சென்றனர். அப்போது, நபி (ஸல்) அவர்களிடம் சிறுவர் (பேரன்) தரப்பட்டார். அவரை தன் மடியில் நபி (ஸல்) வைத்தார்கள். அப்போது, அவர்களின் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. உடனே ஸஅது (ரழி) அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! என்ன? நீங்களுமா அழுகிறீர்கள்?" என்று கேட்டார். "இதுதான் இரக்கமாகும். தன் அடியார்களின் இதயங்களில், இதை அல்லாஹ் ஏற்படுத்தி உள்ளான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில், "தன் அடியார்களில் நாடியவர்களின் உள்ளத்திலே (அதை ஆக்கி உள்ளான்). தன் அடியார்களில் இரக்கமுடையோரிடம் தான் அல்லாஹ்வும் இரக்கம் கொள்கிறான்" என்று உள்ளது. **(புகாரி:1284. முஸ்லிம்:923)**

٣٠ - وَعَنْ صُهَيْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" كَانَ مَلِكٌ فِيمَنْ كَانَ قَبْلَكُمْ وَكَانَ لَهُ سَاحِرٌ فَلَمَّا كَبِرَ قَالَ لِلْمَلِكِ: إِنِّي قَدْ كَبِرْتُ فَابْعَثْ إِلَيَّ غُلَامًا أُعَلِّمْهُ السِّحْرَ ; فَبَعَثَ إِلَيْهِ غُلَامًا يُعَلِّمُهُ وَكَانَ فِي طَرِيقِهِ - إِذَا سَلَكَ - رَاهِبٌ فَقَعَدَ إِلَيْهِ وَسَمِعَ كَلَامَهُ فَأَعْجَبَهُ وَكَانَ إِذَا أَتَى السَّاحِرَ مَرَّ بِالرَّاهِبِ وَقَعَدَ إِلَيْهِ فَإِذَا أَتَى السَّاحِرَ ضَرَبَهُ فَشَكَا ذَلِكَ إِلَى الرَّاهِبِ فَقَالَ: إِذَا خَشِيتَ السَّاحِرَ فَقُلْ: حَبَسَنِي أَهْلِي وَإِذَا خَشِيتَ أَهْلَكَ فَقُلْ: حَبَسَنِي السَّاحِرُ. فَبَيْنَمَا هُوَ عَلَى ذَلِكَ إِذْ أَتَى عَلَى دَابَّةٍ عَظِيمَةٍ قَدْ حَبَسَتْ النَّاسَ فَقَالَ: الْيَوْمَ أَعْلَمُ: السَّاحِرُ أَفْضَلُ أَمِ الرَّاهِبُ أَفْضَلُ؟ فَأَخَذَ حَجَرًا فَقَالَ: اللَّهُمَّ إِنْ كَانَ أَمْرُ الرَّاهِبِ أَحَبَّ إِلَيْكَ مِنْ أَمْرِ السَّاحِرِ فَاقْتُلْ هَذِهِ الدَّابَّةَ حَتَّى يَمْضِيَ النَّاسُ فَرَمَاهَا فَقَتَلَهَا وَمَضَى النَّاسُ. فَأَتَى الرَّاهِبَ فَأَخْبَرَهُ. فَقَالَ لَهُ الرَّاهِبُ: أَيْ بُنَيَّ أَنْتَ الْيَوْمَ أَفْضَلُ مِنِّي قَدْ بَلَغَ مِنْ أَمْرِكَ مَا أَرَى. وَإِنَّكَ سَتُبْتَلَى فَإِنْ ابْتُلِيتَ فَلَا تَدُلَّ عَلَيَّ. وَكَانَ الْغُلَامُ يُبْرِئُ الْأَكْمَهَ وَالْأَبْرَصَ وَيُدَاوِي النَّاسَ مِنْ سَائِرِ الْأَدْوَاءِ. فَسَمِعَ جَلِيسٌ لِلْمَلِكِ كَانَ قَدْ عَمِيَ فَأَتَاهُ بِهَدَايَا كَثِيرَةٍ فَقَالَ: مَا هَاهُنَا لَكَ أَجْمَعُ إِنْ أَنْتَ شَفَيْتَنِي فَقَالَ: إِنِّي لَا أَشْفِي أَحَدًا إِنَّمَا يَشْفِي اللَّهُ تَعَالَى فَإِنْ آمَنْتَ بِاللَّهِ تَعَالَى دَعَوْتُ اللَّهَ فَشَفَاكَ فَآمَنَ بِاللَّهِ تَعَالَى فَشَفَاهُ اللَّهُ تَعَالَى فَأَتَى الْمَلِكَ فَجَلَسَ إِلَيْهِ كَمَا كَانَ يَجْلِسُ. فَقَالَ لَهُ الْمَلِكُ: مَنْ رَدَّ عَلَيْكَ بَصَرَكَ؟ قَالَ: رَبِّي. قَالَ: أَوَلَكَ رَبٌّ غَيْرِي؟ قَالَ: رَبِّي وَرَبُّكَ اللَّهُ. فَأَخَذَهُ فَلَمْ يَزَلْ يُعَذِّبُهُ حَتَّى دَلَّ عَلَى الْغُلَامِ فَجِيءَ بِالْغُلَامِ فَقَالَ لَهُ الْمَلِكُ: أَيْ بُنَيَّ قَدْ بَلَغَ مِنْ سِحْرِكَ مَا تُبْرِئُ الْأَكْمَهَ وَالْأَبْرَصَ وَتَفْعَلُ وَتَفْعَلُ! فَقَالَ: إِنِّي لَا أَشْفِي أَحَدًا إِنَّمَا يَشْفِي اللَّهُ تَعَالَى. فَأَخَذَهُ فَلَمْ يَزَلْ يُعَذِّبُهُ حَتَّى دَلَّ عَلَى الرَّاهِبِ ; فَجِيءَ بِالرَّاهِبِ فَقِيلَ لَهُ: ارْجِعْ عَنْ دِينِكَ فَأَبَى فَدَعَا بِالْمِنْشَارِ فَوَضَعَ الْمِنْشَارَ

فِي مَفْرِق رَأْسه فَشَقَّهُ حَتَّى وَقَعَ شِقَّاهُ ثُمَّ جِيءَ بِجَلِيسِ الْمَلِك فَقِيلَ لَهُ: ارْجِعْ عَنْ دِينك فَأَبَى فَوَضَعَ الْمِنْشَارَ فِي مَفْرِق رَأْسه فَشَقَّهُ بِهِ حَتَّى وَقَعَ شِقَّاهُ ثُمَّ جِيءَ بِالْغُلَامِ فَقِيلَ لَهُ: ارْجِعْ عَنْ دِينك فَأَبَى فَدَفَعَهُ إِلَى نَفَر مِنْ أَصْحَابه فَقَالَ: اذْهَبُوا بِهِ إِلَى جَبَلِ كَذَا وَكَذَا فَاصْعَدُوا بِهِ الْجَبَلَ فَإِذَا بَلَغْتُمْ ذِرْوَتَهُ فَإِنْ رَجَعَ عَنْ دِينه وَإِلَّا فَاطْرَحُوهُ. فَذَهَبُوا بِهِ فَصَعِدُوا بِهِ الْجَبَلَ فَقَالَ: اللَّهُمَّ اكْفِنِيهِمْ بِمَا شِئْت فَرَجَفَ بِهِمْ الْجَبَلُ فَسَقَطُوا وَجَاءَ يَمْشِي إِلَى الْمَلِك فَقَالَ لَهُ الْمَلِكُ: مَا فَعَلَ أَصْحَابُكَ؟ فَقَالَ: كَفَانِيهِمْ اللَّهُ تَعَالَى. فَدَفَعَهُ إِلَى نَفَر مِنْ أَصْحَابه فَقَالَ: اذْهَبُوا بِهِ فَاحْمِلُوهُ فِي قُرْقُور وَتَوَسَّطُوا بِهِ الْبَحْرَ فَإِنْ رَجَعَ عَنْ دِينه وَإِلَّا فَاقْذِفُوهُ. فَذَهَبُوا بِهِ فَقَالَ: اللَّهُمَّ اكْفِنِيهِمْ بِمَا شِئْت فَانْكَفَأَتْ بِهِمْ السَّفِينَةُ فَغَرِقُوا وَجَاءَ يَمْشِي إِلَى الْمَلِك. فَقَالَ لَهُ الْمَلِكُ: مَا فَعَلَ أَصْحَابُكَ؟ فَقَالَ: كَفَانِيهِمْ اللَّهُ تَعَالَى. فَقَالَ لِلْمَلِكِ: إِنَّكَ لَسْتَ بِقَاتِلِي حَتَّى تَفْعَلَ مَا آمُرُكَ بِهِ. قَالَ: مَا هُوَ؟ قَالَ: تَجْمَعُ النَّاسَ فِي صَعِيد وَاحِد وَتَصْلُبُنِي عَلَى جِذْع ثُمَّ خُذْ سَهْمًا مِنْ كِنَانَتِي ثُمَّ ضَعْ السَّهْمَ فِي كَبِدِ الْقَوْسِ ثُمَّ قُلْ: بِسْمِ اللَّه رَبِّ الْغُلَامِ ثُمَّ ارْمِنِي فَإِنَّكَ إِذَا فَعَلْت ذَلِكَ قَتَلْتَنِي. فَجَمَعَ النَّاسَ فِي صَعِيد وَاحِد وَصَلَبَهُ عَلَى جِذْع ثُمَّ أَخَذَ سَهْمًا مِنْ كِنَانَته ثُمَّ وَضَعَ السَّهْمَ فِي كَبِدِ الْقَوْسِ ثُمَّ قَالَ: بِسْمِ اللَّه رَبِّ الْغُلَامِ. ثُمَّ رَمَاهُ فَوَقَعَ السَّهْمُ فِي صُدْغِهِ فَوَضَعَ يَدَهُ فِي صُدْغِهِ فَمَاتَ. فَقَالَ النَّاسُ: آمَنَّا بِرَبِّ الْغُلَامِ. فَأُتِيَ الْمَلِكُ فَقِيلَ لَهُ: أَرَأَيْت مَا كُنْت تَحْذَرُ قَدْ وَاللَّهِ نَزَلَ بِك حَذَرُك. قَدْ آمَنَ النَّاسُ فَأَمَرَ بِالأُخْدُود فِي أَفْوَاه السِّكَك فَخُدَّتْ وَأُضْرِمَ النِّيرَانُ وَقَالَ: مَنْ لَمْ يَرْجِعْ عَنْ دِينه فَأَقْحِمُوهُ فِيهَا أَوْ قِيلَ لَهُ اقْتَحِمْ فَفَعَلُوا حَتَّى جَاءَتْ امْرَأَةٌ وَمَعَهَا صَبِيٌّ لَهَا فَتَقَاعَسَتْ أَنْ تَقَعَ فِيهَا فَقَالَ لَهَا الْغُلَامُ: يَا أُمَّهْ اصْبِرِي فَإِنَّكِ عَلَى الْحَقِّ" رَوَاهُ مُسْلِمٌ." ذِرْوَةُ الْجَبَلِ" أَعْلَاهُ وَهِيَ" بِكَسْرِ الذَّالِ الْمُعْجَمَةِ وَضَمِّهَا" وَ" الْقُرْقُورُ". بِضَمِّ الْقَافَيْنِ نَوْعٌ مِنَ السُّفُنِ. وَ" الصَّعِيدُ" هُنَا: الْأَرْضُ الْبَارِزَةُ. وَ" الأُخْدُودُ" الشُّقُوقُ فِي الأَرْضِ كَالنَّهْرِ الصَّغِيرِ. وَ" أُضْرِمَ" أُوقِدَ" وَانْكَفَأَتْ" أَيْ: انْقَلَبَتْ. وَ" تَقَاعَسَتْ": تَوَقَّفَتْ وَجَبُنَتْ.

**30** ஸுஹைப் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

உங்களுக்கு முன் இருந்தோரில் அரசன் ஒருவன் இருந்தான். அவனிடம் சூனியக்காரன் ஒருவன் இருந்தான். சூனியக்காரனுக்கு வயதான போது, அரசனிடம் “நான் வயோதிகனாக ஆகிவிட்டேன். எனவே என்னிடம் ஒரு சிறுவனை அனுப்புங்கள். அவருக்கு சூனியம் கற்றுத் தருகிறேன்” என்று சூனியக்காரன் கூறினான். அவனிடம் கற்றுக் கொள்வதற்காக சிறுவனை மன்னன் அனுப்பினான். நடந்து போகும் பாதையில் (கிருத்துவ) துறவி ஒருவரை சிறுவர் கண்டார். அவரருகில் அமர்ந்து, அவர் கூறுவதைக் கேட்டார். சிறுவருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. சூனியக்காரனிடம் போகும் போது, துறவியைக் கடந்து செல்வதால், அவரிடம் உட்கார்ந்து செல்பவராக இருந்தார். இதனால் சூனியக்காரனிடம் (தாமதமாக) வந்ததால் அவரை அவன் அடித்தான். இது குறித்து துறவியிடம் சிறுவர் முறையிட்டார். “நீ சூனியக்காரன் அடிப்பதைப் பயந்தால், என் குடும்பம் என்னை (வேலை தந்து) தாமதமாக்கிவிட்டது” என்று கூறு. உனது குடும்பத்தை நீ பயந்தால், சூனியக்காரன் (கற்றுத் தந்ததால்) தாமதமாகிவிட்டது, என்று கூறு எனத் துறவி கூறினார்.

இதே நிலை நீடித்துக் கொண்டிருந்தபோது, ஒருமுறை ஒரு பெரிய மிருகம் வந்து மக்களை விரட்டித் தடுத்துக் கொண்டிருந்தது. அப்போது சிறுவர், “இன்று நான் சூனியக்காரன் சிறந்தவனா? துறவி சிறந்தவரா? என அறிந்து கொள்வேன்” என்று கூறி, கல்லை எடுத்து “இறைவா! சூனியக்காரனின் செயலை விட, துறவியின் செயல் உனக்கு விருப்பமானதாக இருந்தால், மக்கள் (நிம்மதியுடன்) செல்வதற்காக இந்த மிருகத்தைக் கொன்றுவிடு” என்று கூறி, கல்லை எறிந்தார். மிருகம் இறந்துவிட்டது. மக்கள் (நிம்மதியாக) சென்றனர். உடனே துறவியிடம் வந்தார். நடந்ததை சிறுவர் கூறினார். அவரிடம் துறவி “மகனே! இன்று முதல் என்னை விட நீ மிகச் சிறந்தவன். உன் காரியத்தில் நான் கண்ட இது பெரியதே” என்று கூறி, “நீ விரைவில் சோதனைக்குள்ளாவாய். சோதிக்கப்பட்டால் என்னைப் பற்றி (எவரிடமும்) கூறாதே” என்று சிறுவரிடம் துறவி கூறினார்.

இந்நிலையில் சிறுவர் பிறவிக் குருடையும், வெண்குஷ்டத்தையும் நீக்குபவராக இருந்தார். சில நோய்களுக்கும் மருத்துவம் செய்பவராகவும் இருந்தார். அரசனின் அவையில் இருந்த ஒரு குருடர் இது பற்றிக் கேள்விப்பட்டார். அதிக அன்பளிப்புகளுடன் சிறுவரிடம் வந்தார். "எனக்கு நீ குணமளித்தால் நம்மிடம் உள்ள அனைத்தையும் தருவேன்" என்றார். " நான் எவருக்கும் சுகமளிப்பவன் அல்லன். சுகம் தருபவன் அல்லாஹ்தான். அல்லாஹ்வை நீ ஏற்றுக் கொண்டால், அல்லாஹ்விடம் துஆச் செய்வேன். உனக்கு அவன் சுகமளிப்பான்"என்று சிறுவர் கூறினார். உடனே அவர் அல்லாஹ்வை நம்பி ஏற்றார். அல்லாஹ்வும் அவருக்குக் குணமளித்தான்.

அவர் அரசனிடம் வந்தார். வழமையாக உட்காருவதுபோல் சபையில் உட்கார்ந்தார். அவரிடம் அரசன், "உனக்கு உன் பார்வையைத் திருப்பித் தந்தது யார்?" என்று கேட்டான். "என் இறைவன்" என்றார். "நான் அல்லாத இறைவன் உனக்கு உண்டா?" என்று கூறினார். அவரைப் பிடித்து அவருக்குத் தொடர்ந்து வேதனை தந்தார். இறுதியில் சிறுவரைப் பற்றிக் கூறிவிட்டார்.

சிறுவர் கொண்டு வரப்பட்டார். அவரிடம் அரசன், "மகனே! உனது சூன்யத்தை விட, நீ பிறவிக்குருடையும், வெண்குஷ்டத்தையும் நீக்குவது பெரிதாகிவிட்டதே! இன்னது, இன்னது செய்கிறாயாமே? என்று கேட்டான். "நான் எவருக்கும் சுகமளிப்பவன் அல்லன். சுகமளிப்பவன் அல்லாஹ் தான்" என்று சிறுவர் கூறினார். உடனே அவரைப் பிடித்து, தொடர்ந்து வேதனைப்படுத்தினான். இறுதியில் துறவி பற்றி அவர் கூறிவிட்டார். உடனே துறவி கொண்டு வரப் பட்டார். "உன் மார்க்கத்தை விட்டும் வெளியேறு" என்று அவரிடம் கூறப்பட்டது. அவர் மறுத்தார். ரம்பம் கொண்டு வரச் செய்தான். அவரின் தலையின் நடுவில் ரம்பம் வைக்கப்பட்டது. அவர் இரு துண்டாகப் போகும் அளவுக்கு அவர் பிளக்கப்பட்டார். பின்பு அரசவையில் இருப்பவர் கொண்டு வரப்பட்டார். "உன் மார்க்கத்தை விட்டும் வெளியேறு" என்று கூறப்பட்டது. அவர் மறுத்தார். அவரின் தலையில் நடுவில் ரம்பம் வைக்கப்பட்டது. அவர் இரு கூராகப் போகும் அளவுக்கு அவரை அறுத்தனர்.

பின்பு சிறுவர் கொண்டு வரப்பட்டார். "உன் மார்க்கத்தை விட்டும் வெளியேறு" என அவரிடம் கூறப்பட்டது. அவர் மறுத்தார். உடனே அரசன் அவரை தன் தோழர்கள் சிலரிடம் ஒப்படைத்து, "இவரை இன்ன மலைக்கு அழைத்துச் செல்லுங்கள். இவருடன் மலையில் ஏறுங்கள். அதன் உச்சியை நீங்கள் அடைந்ததும், அவர் தன் மார்க்கத்தை விட்டுவிட்டால் (விட்டு விடுங்கள்). இல்லாவிட்டால் அவரைத் தூக்கி எறியுங்கள்" என்று அரசன் கூறினான். அவர்கள் அவரை அழைத்துக் கொண்டு, மலையில் ஏறினார்கள். "இறைவா! நீ நாடினால் அவர்களை என்னை விட்டும் நீக்குவாயாக!" என்று சிறுவர் துஆச் செய்தார். உடனே மலை அவர்களுக்கு வழுக்கியது. அவர்கள் கீழே விழுந்து விட்டார்கள். சிறுவர் அரசனிடம் நடந்து வந்தார். "உன்னுடன் வந்தவர்கள் என்ன ஆனார்கள்?" என்று அரசன் கேட்டான். "அல்லாஹ் அவர்களை விட்டும் என்னைக் காப்பாற்றிவிட்டான்" என்று கூறினார்.

உடனே தன் தோழர்களில் மற்றொரு படையிடம் அவரை ஒப்படைத்தான். "இவரை அழைத்துச் செல்லுங்கள், கப்பலில் ஏற்றி, கடலின் நடுப்பகுதிக்குச் செல்லுங்கள். இவர் அவரது மார்க்கத்தை விட்டுத் திரும்பிவிட்டால் விட்டு விடுங்கள். இல்லையென்றால் அவரைத் தூக்கிப் போடுங்கள்" என்று கூறினார். சிறுவரை அழைத்துச் சென்றனர். "இறைவா! நீ நாடியபடி இவர்களை விட்டும் என்னைக் காப்பாற்றுவாயாக!" என்று சிறுவர் துஆச் செய்தார். அவர்களை கப்பல் கவிழ்த்தது. அவர்கள் மூழ்கி விட்டார்கள். அரசனிடம் மீண்டும் சிறுவர் வந்தார். அவரிடம் "உன்னுடன் வந்தவர்கள் என்ன செய்யப்பட்டனர்?" என்று அரசன் கேட்டான். "அல்லாஹ் அவர்களை விட்டும் என்னைக் காப்பாற்றினான்" என்று சிறுவர் கூறினார்.

"நான் கூறியபடி நீ செய்யும் வரை என்னை நீ கொல்ல முடியாது" என்று அரசனிடம் சிறுவர் கூறினார். "அது என்ன?" என்று அரசன் கேட்டான். "ஒரு திடலில் மக்களை ஒன்று திரட்டுவீராக! மரத்தில் என்னைக் கட்டிப்போடும். பின்பு என் அம்பு பையிலிருந்து ஒரு அம்பை எடுத்து, வில்லின் நடுவில் வைத்து, 'இந்த சிறுவனின் இறைவனான அல்லாஹ்வின் பெயரால்...' என்று நீ கூறு. பின்பு என்னை நோக்கி எறி. இவ்வாறு நீ செய்தால் என்னைக் கொல்லலாம்" என்று சிறுவர் கூறினார். உடனே அரசன் மக்களை ஒரு திடலில் ஒன்று திரட்டினான். சிறுவரை ஒரு மரத்தில் கட்டினான். பின்பு அவரின் அம்புப் பையிலிருந்து அம்பை எடுத்து, வில்லின் நடுவில் வைத்தான். பின்பு, "சிறுவனின் இறைவனான அல்லாஹ்வின் பெயரால்!" என்று கூறி, அதை எறிந்தான். அவரின் நடுப்பொட்டில் அம்பு பாய்ந்தது. அவர் தன் கையை தன் நெற்றியில் வைத்தார். உடனே இறந்துவிட்டார். மக்கள் அனைவரும், "சிறுவனின் இறைவனை நாங்கள் நம்பிக்கைக் கொள்கிறோம்" என்று கூறினார்கள். அப்போது அரசனிடம் வந்தனர். "நீ பயந்தது நடந்துவிட்டது. உன் பயம் உன்னிடமே வந்துவிட்டது. மக்கள் அல்லாஹ்வை நம்பிவிட்டனர்" என்று அரசனிடம் கூறப்பட்டது. உடனே அவன், அரண்மனையின் வாசல்களில் குழி தோண்ட உத்தரவிட்டான். குழி தோண்டப்பட்டது. அதிலே நெருப்பும் மூட்டப்பட்டது. "தன் மார்க்கத்தை விட்டும் ஒருவன் வெளியேறவில்லையானால், இதிலே அவரைப் போடுங்கள்" என்று அரசன் கூறினான். (அல்லது) மார்க்கத்தை விடாத நபரிடம் 'இதில் விழுங்கள்' என்று கூறப்பட்டது. மக்களும் அவ்வாறே விழுந்தனர். இறுதியாக ஒரு பெண் தன்னுடன் தன் மகனைச் சுமந்தவளாக வந்தாள். அதிலே விழ தடுமாற்றம் அடைந்தாள். அவளிடம் அவளது மகன், "தாயே! பொறுமையைக் கடைபிடியுங்கள். நிச்சயமாக நீங்கள் சத்தியத்தில் உள்ளீர்கள்" என்று கூறினான். இச்சம்பவத்தை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:3005)**

٣١ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" مَرَّ النَّبِيُّ ﷺ عَلَى امْرَأَةٍ تَبْكِي عِنْدَ قَبْرٍ فَقَالَ: اتَّقِي اللَّهَ وَاصْبِرِي فَقَالَتْ: إِلَيْكَ عَنِّي ; فَإِنَّكَ لَمْ تُصَبْ بِمُصِيبَتِي وَلَمْ تَعْرِفْهُ فَقِيلَ لَهَا: إِنَّهُ النَّبِيُّ ﷺ فَأَتَتْ بَابَ النَّبِيِّ ﷺ فَلَمْ تَجِدْ عِنْدَهُ بَوَّابِينَ فَقَالَتْ: لَمْ أَعْرِفْكَ. فَقَالَ: إِنَّمَا الصَّبْرُ عِنْدَ الصَّدْمَةِ الأُولَى" وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ:" تَبْكِي عَلَى صَبِيٍّ لَهَا".

**31** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மண்ணறை (கப்ரு) அருகே அழுது கொண்டிருந்த ஒரு பெண்ணைத் தாண்டிச் சென்ற நபி (ஸல்) அவர்கள், "(பெண்ணே!) அல்லாஹ்வைப் பயப்படு! நீ பொறுமையாக இரு!" என்று கூறினார்கள். "என்னை விட்டும் நீர் செல்வீராக! எனது சோதனை போல் நீ சோதிக்கப்படவில்லை. அதை நீர் அறியமாட்டீர்" என்று அப்பெண் கூறினாள். 'இவர்கள் நபி (ஸல்) அவர்கள்' என்று அப்பெண்ணிடம் கூறப்பட்டது. உடனே அப்பெண் நபி (ஸல்) அவர்களின் (வீட்டு) வாசலுக்கு வந்தாள். அந்த இடத்தில் காவலாளி எவரும் இல்லை. "நான் உங்களை அறிந்தவளல்ல" என்று கூறினாள். "பொறுமை என்பது, கஷ்டத்தின் ஆரம்பத்திலேயே இருக்கவேண்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் (அப்பெண்ணிடம்) கூறினார்கள். **(புகாரி:1252, முஸ்லிம்:926)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், 'அவள் தன் மகனுக்காக அழுதாள்' என்று உள்ளது.

٣٢ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" يَقُولُ اللَّهُ تَعَالَى: مَا لِعَبْدِي الْمُؤْمِنِ عِنْدِي جَزَاءٌ إِذَا قَبَضْتُ صَفِيَّهُ مِنْ أَهْلِ الدُّنْيَا ثُمَّ احْتَسَبَهُ إِلاَّ الْجَنَّةُ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**32** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'முஃமினான எனது அடியானுக்கு உலக மக்களில் விருப்பமானவரை நான் கைப்பற்றி, பின்பு அவன் (பொறுமையாக இருந்து) நல்லதை எதிர்பார்த்திருந்தால், அவனுக்கு என்னிடம் கூலி, சொர்க்கத்தை தவிர வேறு இல்லை' என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6424)**

٣٣ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا" أَنَّهَا سَأَلَتْ رَسُولَ اللَّهِ ﷺ عَنْ الطَّاعُونِ فَأَخْبَرَهَا أَنَّهُ كَانَ عَذَابًا يَبْعَثُهُ اللَّهُ تَعَالَى عَلَى مَنْ يَشَاءُ فَجَعَلَهُ اللَّهُ تَعَالَى رَحْمَةً لِلْمُؤْمِنِينَ فَلَيْسَ مِنْ عَبْدٍ يَقَعُ فِي الطَّاعُونِ فَيَمْكُثُ فِي بَلَدِهِ صَابِرًا مُحْتَسِبًا يَعْلَمُ أَنَّهُ لاَ يُصِيبُهُ إِلاَّ مَا كَتَبَ اللَّهُ لَهُ إِلاَّ كَانَ لَهُ مِثْلُ أَجْرِ الشَّهِيدِ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**33** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'பிளேக்' நோய் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் நான் கேட்டேன். "தான் நாடியோர் மீது அல்லாஹ் ஏற்படுத்தும் வேதனைதான் அது. மேலும், இறை விசுவாசிகளுக்கு அருளாக அதை அல்லாஹ் ஏற்படுத்தி உள்ளான். 'பிளேக்' நோய் ஏற்பட்டு, அந்த ஊரிலேயே தனக்கு அல்லாஹ் விதித்திருந்தாலே தவிர, தனக்குத் தீங்கு ஏற்படாது என்பதை அறிந்து பொறுமையாளனாக - நல்லதை எதிர்பார்த்தவனாக இருக்கும் ஒரு அடியானுக்கு, ஷஹீது (போரில் உயிரை விட்டவர்)குரிய கூலி அவருக்கு உண்டு" என்று என்னிடம் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5734)**

٣٤ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" إِنَّ اللَّهَ عَزَّ وَجَلَّ قَالَ: إِذَا ابْتَلَيْتُ عَبْدِي بِحَبِيبَتَيْهِ فَصَبَرَ عَوَّضْتُهُ مِنْهُمَا الْجَنَّةَ" يُرِيدُ عَيْنَيْهِ رَوَاهُ الْبُخَارِيُّ.

**34** அனஸ் (ரழி) அறிவிக்கிறார்கள்:

"என் அடியானை, அவனது இரு விருப்பமான (கண்)களை (பார்வையைப் பிடுங்கி) நான் சோதித்து, அவன் பொறுமையாக இருந்தால், அவ்விரண்டுக்கும் ஈடாக சொர்க்கத்தை நான் தருவேன்" என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5653)**

٣٥ - وَعَنْ عَطَاءِ بْنِ أَبِي رَبَاحٍ قَالَ: قَالَ لِي ابْنُ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَلاَ أُرِيكَ امْرَأَةً مِنْ أَهْلِ الْجَنَّةِ؟ فَقُلْتُ: بَلَى. قَالَ: هَذِهِ الْمَرْأَةُ السَّوْدَاءُ أَتَتْ النَّبِيَّ ﷺ فَقَالَتْ: إِنِّي أُصْرَعُ وَإِنِّي أَتَكَشَّفُ فَادْعُ اللَّهَ تَعَالَى لِي قَالَ:" إِنْ شِئْتِ صَبَرْتِ وَلَكِ الْجَنَّةُ وَإِنْ شِئْتِ دَعَوْتُ اللَّهَ تَعَالَى أَنْ يُعَافِيَكِ. فَقَالَتْ: أَصْبِرُ. فَقَالَتْ: إِنِّي أَتَكَشَّفُ فَادْعُ اللَّهَ أَلاَّ أَتَكَشَّفَ فَدَعَا لَهَا" مُتَّفَقٌ عَلَيْهِ.

**35** அதாஉ இப்னு அபீ ரபாஹ் என்பார் அறிவிக்கின்றார்:

"சொர்க்கவாசியான ஒரு பெண்ணை உமக்கு நான் கூறட்டுமா?" என்று இப்னு அப்பாஸ் (ரழி) என்னிடம் கேட்டார்கள். "சரி" என்று நான் கூறினேன். "இதோ இந்த கருப்பு நிறப்பெண்தான்" என்று இப்னு அப்பாஸ் (ரழி) கூறினார்கள். இப்பெண், ஒரு நாள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். "நான் வலிப்பு நோயாளி. இதனால் ஆடை திறந்து விடும் நிலை ஏற்படுபவளாக உள்ளேன். எனக்காக அல்லாஹ்விடம் துஆச் செய்யுங்கள்" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீ விரும்பினால் பொறுமையாக இரு. உனக்கு சொர்க்கம் உண்டு. நீ நாடினால் உனக்கு சுகம் தர அல்லாஹ்விடம் துஆச் செய்கிறேன்" என்று கூறினார்கள். "நான் பொறுமையாக இருப்பேன்" என்று கூறிய அப்பெண், "நான் ஆடை திறக்கப்பட்டு விடும் நிலை உள்ளவளாக இருக்கிறேன். எனவே எனது ஆடை திறக்காமல் இருக்க அல்லாஹ்விடம் துஆச் செய்யுங்கள்" என்று கேட்டார். அப்பெண்ணுக்காக நபி (ஸல்) அவர்கள் துஆச் செய்தார்கள் என்றும் இப்னு அப்பாஸ் (ரழி) கூறினார்கள். **(புகாரி:5652. முஸ்லிம்:2576)**

٣٦ - وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" كَأَنِّي أَنْظُرُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ يَحْكِي نَبِيًّا مِنْ الأَنْبِيَاءِ صَلَوَاتُ اللَّهِ وَسَلاَمُهُ عَلَيْهِمْ ضَرَبَهُ قَوْمُهُ فَأَدْمَوْهُ وَهُوَ يَمْسَحُ الدَّمَ عَنْ وَجْهِهِ وَهُوَ يَقُولُ اللَّهُمَّ اغْفِرْ لِقَوْمِي فَإِنَّهُمْ لاَ يَعْلَمُونَ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**36** (அபூ அப்துர் ரஹ்மான் என்ற) அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வின் அருளும், அவனது சாந்தியும், அந்த நபிமார்கள் மீது உண்டாகட்டுமாக! அந்த நபியை அவரது சமூகத்தினர் அடித்தார்கள். அவரை ரத்தம் சிந்த வைத்தார்கள். அவர் தன் முகத்தில் ரத்தத்தை துடைத்தவராக, "இறைவா! எனது இந்தக் கூட்டத்தாரை மன்னிப்பாயாக! நிச்சயமாக, அவர்கள் அறியாதவர்களாக உள்ளனர்" என்று கூறினார் என, நபிமார்களில் ஒருவரைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறிய ஒரு சம்பவம், நான் (இன்று நேரில்) பார்ப்பது போல் உள்ளது.

**(புகாரி:3477. முஸ்லிம்:1792)**

٣٧ – وَعَنْ أَبِي سَعِيد وَأَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" مَا يُصِيبُ الْمُسْلِمَ مِنْ نَصَبٍ وَلاَ وَصَبٍ وَلاَ هَمٍّ وَلاَ حَزَنٍ وَلاَ أَذًى وَلاَ غَمٍّ حَتَّى الشَّوْكَةُ يُشَاكُهَا إِلاَّ كَفَّرَ اللّٰهُ بِهَا مِنْ خَطَايَاهُ" مُتَّفَقٌ عَلَيْهِ. و" الْوَصَبُ": الْمَرَضُ.

**37** அபூஸயீத் (ரழி), அபூஹுரைரா (ரழி) ஆகியோர் அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமுக்குச் சிரமம், நோய், கவலை, துக்கம், நோவினை, மயக்கம் மற்றும் அவனின் காலில் குத்திவிடும் முள்ளின் வேதனை உட்பட அனைத்திற்காகவும் அல்லாஹ் அவனது குற்றங்களை மன்னிக்கிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5641. முஸ்லிம்:2573)**

٣٨ – وَعَنِ ابْنِ مَسْعُود رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: دَخَلْتُ عَلَى النَّبِيِّ ﷺ وَهُوَ يُوعَكُ فَقُلْتُ: يَا رَسُولَ اللّٰهِ إِنَّكَ تُوعَكُ وَعْكًا شَدِيدًا. قَالَ" أَجَلْ إِنِّي أُوعَكُ كَمَا يُوعَكُ رَجُلاَنِ مِنْكُمْ" قُلْتُ: ذَلِكَ أَنَّ لَكَ أَجْرَيْنِ؟ قَالَ:" أَجَلْ ذَلِكَ كَذَلِكَ. مَا مِنْ مُسْلِمٍ يُصِيبُهُ أَذًى – شَوْكَةٌ فَمَا فَوْقَهَا – إِلاَّ كَفَّرَ اللّٰهُ بِهَا سَيِّئَاتِهِ وَحُطَّتْ عَنْهُ ذُنُوبُهُ كَمَا تَحُطُّ الشَّجَرَةُ وَرَقَهَا" مُتَّفَقٌ عَلَيْهِ. و" الْوَعْكُ": مَغْثُ الْحُمَّى وَقِيلَ: الْحُمَّى.

**38** அப்துல்லாஹ் இப்னுமஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் காய்ச்சலாக இருந்த சமயம் அவர்களிடம் சென்றேன். "இறைத்தூதர் அவர்களே! நீங்களும் கடும் காய்ச்சலால் அவதிப்படுகிறீர்களே" என்று கேட்டேன். "ஆம்! உங்களில் இருவரின் காய்ச்சல் ஏற்படுவது போல் நான் காய்ச்சலுக்கு ஆளாகிறேன்" என்று கூறினார்கள். "இதற்கு உங்களுக்கு இரண்டு கூலி உண்டா?" என்று கேட்டேன். "ஆம்! அவ்வாறே! ஒரு முஸ்லிமுக்கு முள் குத்துவது, மேலும் அதற்கும் மேலாக எந்த நோவினை ஏற்பட்டாலும், அவற்றால் அவனது குற்றங்களை அல்லாஹ் மன்னிக்கிறான். மரம் தன் இலைகளை உதிர்ப்பது போலவே, அவனது பாவங்கள் அவனை விட்டும் நீக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5647. முஸ்லிம்:2571)**

٣٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ" مَنْ يُرِدِ اللّٰهُ بِهِ خَيْرًا يُصِبْ مِنْهُ" ; رَوَاهُ الْبُخَارِيُّ. وَضَبَطُوا" يُصِبْ": بِفَتْحِ الصَّادِ وَكَسْرِهَا.

**39** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவனுக்கு நல்லது செய்ய அல்லாஹ் நாடிவிட்டால், அவனைச் சோதிப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5645)**

٤٠ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" لاَ يَتَمَنَّيَنَّ أَحَدُكُمُ الْمَوْتَ لِضُرٍّ أَصَابَهُ فَإِنْ كَانَ لاَ بُدَّ فَاعِلاً فَلْيَقُلْ: اللّٰهُمَّ أَحْيِنِي مَا كَانَتِ الْحَيَاةُ خَيْرًا لِي وَتَوَفَّنِي إِذَا كَانَتِ الْوَفَاةُ خَيْرًا لِي" مُتَّفَقٌ عَلَيْهِ.

**40** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் தனக்கு ஏற்பட்ட தீமைக்காக மரணத்தை எதிர்பார்க்க வேண்டாம். அப்படியே அவசியம் விரும்புபவர் இருந்தால், “இறைவா! உயிருடன் இருப்பது எனக்கு சிறப்பாக இருந்தால், என்னை வாழச் செய்வாயாக! மரணிப்பது எனக்கு சிறந்ததாக இருந்தால், என்னை மரணிக்கச் செய்வாயாக! என்று கூறட்டும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5671, முஸ்லிம்:2680)**

٤١ - وَعَنْ أَبِي عَبْدِ اللَّهِ خَبَّابِ بْنِ الأَرَتِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: شَكَوْنَا إِلَى رَسُولِ اللَّهِ ﷺ وَهُوَ مُتَوَسِّدٌ بُرْدَةً فِي ظِلِّ الْكَعْبَةِ فَقُلْنَا: أَلاَ تَسْتَنْصِرُ لَنَا أَلاَ تَدْعُوا لَنَا؟ فَقَالَ: " قَدْ كَانَ مَنْ قَبْلَكُمْ يُؤْخَذُ الرَّجُلُ فَيُحْفَرُ لَهُ فِي الأَرْضِ فَيُجْعَلُ فِيهَا ثُمَّ يُؤْتَى بِالْمِنْشَارِ فَيُوضَعُ عَلَى رَأْسِهِ فَيُجْعَلُ نِصْفَيْنِ وَيُمْشَطُ بِأَمْشَاطِ الْحَدِيدِ - مَا دُونَ لَحْمِهِ وَعَظْمِهِ - مَا يَصُدُّهُ ذَلِكَ عَنْ دِينِهِ وَاللَّهِ لَيُتِمَّنَّ اللَّهُ هَذَا الأَمْرَ حَتَّى يَسِيرَ الرَّاكِبُ مِنْ صَنْعَاءَ إِلَى حَضْرَمَوْتَ لاَ يَخَافُ إِلاَّ اللَّهَ وَالذِّئْبَ عَلَى غَنَمِهِ وَلَكِنَّكُمْ تَسْتَعْجِلُونَ" رَوَاهُ الْبُخَارِيُّ. وَفِي رِوَايَةٍ: " وَهُوَ مُتَوَسِّدٌ بُرْدَةً وَقَدْ لَقِينَا مِنَ الْمُشْرِكِينَ شِدَّةً".

**41** (அபூ அப்துல்லாஹ் என்ற) இப்னுல் அரத்து (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கஅபாவின் நிழலில் தனக்குரிய மேலாடையை தலையணையாக வைத்த நிலையில் படுத்திருந்த நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள், “எங்களுக்கு நீங்கள் உதவி செய்யக் கூடாதா? எங்களுக்கு துஆச் செய்யக்கூடாதா?” என்று கூறியவர்களாக முறையிட்டோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “உங்களுக்கு முன் வாழ்ந்த ஒருவர் பிடிக்கப்பட்டு, அவருக்காக பூமியில் குழி தோண்டப்பட்டு, அதிலே போடப்பட்டார். பின்பு ரம்பம் கொண்டு வரப்பட்டு, அவரது தலையில் வைக்கப்(பட்டு அறுக்கப்)பட்டது. இரு பாதியாக அறுக்கப்பட்டார். எஞ்சிய அவரது இறைச்சியும், எலும்பும் இரும்புச் சீப்புகளால் சீவப்பட்டது. இது அவரை, அவரது மார்க்கத்தை விட்டும் மாற்றவில்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக! இந்த மார்க்கத்தை அல்லாஹ் முழுமைப்படுத்துவான். ‘ஸன்ஆ’ என்ற ஊரிலிருந்து, ‘ஹழ்ர மவ்த்’ என்ற ஊர் வரை, ஒரு பயணி அல்லாஹ்வைத் தவிர எவரையும் அஞ்ச மாட்டார். தன் ஆட்டுக்காக ஓநாயைக் கண்டும் பயப்பட மாட்டார் இந்த அளவுக்கு மாற்றம் ஏற்படும். எனினும், நீங்களோ அவசரப்படுகிறீர்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3612)**

மற்றொரு அறிவிப்பில், நபி (ஸல்) அவர்கள் தன் மேலாடையைத் தலையணையாக வைத்திருந்தார்கள். “இணைவைப்பவர்களிடமிருந்து கடும் சோதனையை நாங்கள் சந்தித்து விட்டோம் என்று கூறினோம்” என்று உள்ளது. **(புகாரி:3852)**

٤٢ - وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: " لَمَّا كَانَ يَوْمُ حُنَيْنٍ آثَرَ رَسُولُ اللَّهِ ﷺ نَاسًا فِي الْقِسْمَةِ فَأَعْطَى الأَقْرَعَ بْنَ حَابِسٍ مِائَةً مِنَ الأبِلِ وَأَعْطَى عُيَيْنَةَ بْنَ حِصْنٍ مِثْلَ ذَلِكَ وَأَعْطَى نَاسًا مِنْ أَشْرَافِ الْعَرَبِ وَآثَرَهُمْ يَوْمَئِذٍ فِي الْقِسْمَةِ. فَقَالَ رَجُلٌ: وَاللَّهِ إِنَّ هَذِهِ قِسْمَةٌ مَا عُدِلَ فِيهَا وَمَا أُرِيدَ فِيهَا وَجْهُ اللَّهِ. فَقُلْتُ: وَاللَّهِ لأُخْبِرَنَّ رَسُولَ اللَّهِ ﷺ فَأَتَيْتُهُ فَأَخْبَرْتُهُ بِمَا قَالَ فَتَغَيَّرَ وَجْهُهُ حَتَّى كَانَ كَالصِّرْفِ. ثُمَّ قَالَ: فَمَنْ يَعْدِلُ إِذَا لَمْ يَعْدِلِ اللَّهُ وَرَسُولُهُ؟ ثُمَّ قَالَ: يَرْحَمُ اللَّهُ مُوسَى قَدْ أُوذِيَ بِأَكْثَرَ مِنْ هَذَا فَصَبَرَ. فَقُلْتُ: لاَ جَرَمَ لاَ أَرْفَعُ إِلَيْهِ بَعْدَهَا حَدِيثًا" مُتَّفَقٌ عَلَيْهِ. وَقَوْلُهُ" كَالصِّرْفِ" هُوَ بِكَسْرِ الصَّادِ الْمُهْمَلَةِ: وَهُوَ صِبْغٌ أَحْمَرُ.

**42** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள் :

ஹுனைன் போரின் போது (வெற்றிப் பொருட்களை) நபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு பங்கீடு செய்வதில் (ஈடுபட்டு) இருந்தார்கள். அப்போது அக்ரஉ இப்னு ஹாபிஸ் அவர்களுக்கு 100 ஒட்டகங்களைக் கொடுத்தார்கள். உயய்னா இப்னு ஹஸ்ன் அவர்களுக்கும் இதே போல்

கொடுத்தார்கள். அரபு மக்களில் முக்கியமான மக்களுக்கும் கொடுத்தார்கள். அந்நாளில் அவர்களுக்குப் பங்கீடு செய்வதில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். (அப்போது) "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நிச்சயமாக இந்தப் பங்கீடு செய்வதில் நீதி கடைபிடிக்கப்படவில்லை. அல்லாஹ்வின் திருப்தியையும் இதில் நாடப்படவில்லை" என்று ஒரு மனிதர் கூறினார். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதை நான் நபி (ஸல்) அவர்களிடம் கூறுவேன்" என்று கூறினேன். உடனே நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அவர் கூறியதைக் கூறினேன். அப்போது சிவப்பு சாயம் போல் அவர்களின் முகம் மாறியது. பின்பு, "அல்லாஹ்வும் அவனது தூதரும் நீதமாக நடக்கவில்லையென்றால், நீதமாக வேறு யார் நடப்பர்?" என்று நபி (ஸல்) கூறிவிட்டு, "அல்லாஹ் மூஸா (அலை) அவர்களுக்கு அருள் புரிவானாக! இதைவிட மிக அதிகமாக அவர் நோவினை செய்யப்பட்டார். அப்போது அவர் பொறுமையாக இருந்தார்" என்று கூறினார்கள். இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் ஒரு செய்தியை அவர் களிடம் நான் கூறாமல் இருப்பது குற்றமல்ல என நான் கூறிக்கொண்டேன். **(புகாரி:3150. முஸ்லிம்:1062)**

٤٣ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " إِذَا أَرَادَ اللَّهُ بِعَبْدِهِ الْخَيْرَ عَجَّلَ لَهُ الْعُقُوبَةَ فِي الدُّنْيَا وَإِذَا أَرَادَ اللَّهُ بِعَبْدِهِ الشَّرَّ أَمْسَكَ عَنْهُ بِذَنْبِهِ حَتَّى يُوَافِيَ بِهِ يَوْمَ الْقِيَامَةِ". وَقَالَ النَّبِيُّ ﷺ: " إِنَّ عِظَمَ الْجَزَاءِ مَعَ عِظَمِ الْبَلَاءِ وَإِنَّ اللَّهَ تَعَالَى إِذَا أَحَبَّ قَوْمًا ابْتَلَاهُمْ فَمَنْ رَضِيَ فَلَهُ الرِّضَى وَمَنْ سَخِطَ فَلَهُ السُّخْطُ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**43** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ், தன் அடியானுக்கு நல்லதை நாடிவிட்டால், அவனுக்கு உலகத்திலேயே தண்டனையைத் தீவிரமாக்குவான். அல்லாஹ் தன் அடியானுக்கு தீமை செய்ய நாடிவிட்டால், அவனது குற்றம் காரணமாக, அவனை விட்டும் (சோதனையைத்) தடுப்பான், இறுதியில் மறுமை நாளில் அவனுக்கு அதை நிறைவேற்றுவான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"கூலியில் மகத்தானது, கடும் சோதனையுடன் உள்ளதாகும். நிச்சயமாக அல்லாஹ், ஒரு கூட்டத்தை நேசித்தால், அவர்களை சோதிப்பான். ஒருவன் அதில் திருப்தி அடைந்தால், அவனுக்கு (அல்லாஹ்வின்) திருப்தி உண்டு. மேலும் ஒருவன் கோபம் அடைந்தால், அவனுக்கு (அல்லாஹ்வின்) கோபம் உண்டு" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2396)**

٤٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: كَانَ ابْنٌ لِأَبِي طَلْحَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ يَشْتَكِي فَخَرَجَ أَبُو طَلْحَةَ فَقُبِضَ الصَّبِيُّ: فَلَمَّا رَجَعَ أَبُو طَلْحَةَ قَالَ: مَا فَعَلَ ابْنِي؟ قَالَتْ أُمُّ سُلَيْمٍ وَهِيَ أُمُّ الصَّبِيِّ: هُوَ أَسْكَنُ مَا كَانَ فَقَرَّبَتْ لَهُ الْعَشَاءَ فَتَعَشَّى ثُمَّ أَصَابَ مِنْهَا فَلَمَّا فَرَغَ قَالَتْ: وَارُوا الصَّبِيَّ فَلَمَّا أَصْبَحَ أَبُو طَلْحَةَ أَتَى رَسُولَ اللَّهِ ﷺ فَأَخْبَرَهُ. فَقَالَ: " أَعَرَّسْتُمُ اللَّيْلَةَ؟" قَالَ نَعَمْ. قَالَ اللَّهُمَّ بَارِكْ لَهُمَا فَوَلَدَتْ غُلَامًا. فَقَالَ لِي أَبُو طَلْحَةَ: احْمِلْهُ حَتَّى تَأْتِيَ بِهِ النَّبِيَّ ﷺ وَبَعَثَ مَعَهُ بِتَمَرَاتٍ. فَقَالَ: " أَمَعَهُ شَيْءٌ؟" قَالَ: نَعَمْ تَمَرَاتٌ فَأَخَذَهَا النَّبِيُّ ﷺ فَمَضَغَهَا ثُمَّ أَخَذَهَا مِنْ فِيهِ فَجَعَلَهَا فِي فِي الصَّبِيِّ ثُمَّ حَنَّكَهُ وَسَمَّاهُ عَبْدَ اللَّهِ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِلْبُخَارِيِّ: قَالَ ابْنُ عُيَيْنَةَ: فَقَالَ رَجُلٌ مِنَ الْأَنْصَارِ: فَرَأَيْتُ تِسْعَةَ أَوْلَادٍ كُلُّهُمْ قَدْ قَرَءُوا الْقُرْآنَ يَعْنِي مِنْ أَوْلَادِ عَبْدِ اللَّهِ الْمَوْلُودِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ: مَاتَ ابْنٌ لِأَبِي طَلْحَةَ مِنْ أُمِّ سُلَيْمٍ فَقَالَتْ لِأَهْلِهَا: لَا تُحَدِّثُوا أَبَا طَلْحَةَ بِابْنِهِ حَتَّى أَكُونَ أَنَا أُحَدِّثُهُ فَجَاءَ فَقَرَّبَتْ إِلَيْهِ عَشَاءً فَأَكَلَ وَشَرِبَ ثُمَّ تَصَنَّعَتْ لَهُ أَحْسَنَ مَا كَانَتْ تَصْنَعُ قَبْلَ ذَلِكَ فَوَقَعَ بِهَا فَلَمَّا أَنْ رَأَتْ أَنَّهُ قَدْ شَبِعَ وَأَصَابَ مِنْهَا قَالَتْ: يَا أَبَا طَلْحَةَ أَرَأَيْتَ لَوْ أَنَّ قَوْمًا أَعَارُوا عَارِيَتَهُمْ أَهْلَ بَيْتٍ فَطَلَبُوا عَارِيَتَهُمْ أَلَهُمْ أَنْ يَمْنَعُوهُمْ؟ قَالَ: لَا فَقَالَتْ: فَاحْتَسِبْ ابْنَكَ قَالَ فَغَضِبَ ثُمَّ قَالَ: تَرَكْتِنِي حَتَّى إِذَا تَلَطَّخْتُ ثُمَّ أَخْبَرْتِنِي بِابْنِي فَانْطَلَقَ حَتَّى أَتَى رَسُولَ اللَّهِ ﷺ فَأَخْبَرَهُ بِمَا كَانَ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ " بَارَكَ اللَّهُ لَكُمَا فِي لَيْلَتِكُمَا" قَالَ: فَحَمَلَتْ ) قَالَ (: وَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ فِي سَفَرٍ وَهِيَ مَعَهُ وَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا أَتَى الْمَدِينَةَ مِنْ سَفَرٍ لَا يَطْرُقُهَا طُرُوقًا فَدَنَوْا مِنَ الْمَدِينَةِ فَضَرَبَهَا الْمَخَاضُ فَاحْتَبَسَ عَلَيْهَا

أَبُو طَلْحَةُ وَانْطَلَقَ رَسُولُ اللَّهِ ﷺ ) قَالَ ( يَقُولُ أَبُو طَلْحَةَ: إِنَّكَ لَتَعْلَمُ يَا رَبِّ أَنَّهُ يُعْجِبُنِي أَنْ أَخْرُجَ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ إِذَا خَرَجَ وَأَدْخُلُ مَعَهُ إِذَا دَخَلَ وَقَدْ احْتَبَسْتُ بِمَا تَرَى! تَقُولُ أُمُّ سُلَيْمٍ: يَا أَبَا طَلْحَةَ مَا أَجِدُ الَّذِي كُنْتُ أَجِدُ انْطَلِقْ. فَانْطَلَقْنَا وَضَرَبَهَا الْمَخَاضُ حِينَ قَدِمَا فَوَلَدَتْ غُلاَمًا. فَقَالَتْ لِي أُمِّي: يَا أَنَسُ لاَ يُرْضِعْهُ أَحَدٌ حَتَّى تَغْدُوَ بِهِ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ ; فَلَمَّا أَصْبَحَ احْتَمَلْتُهُ فَانْطَلَقْتُ بِهِ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ. وَذَكَرَ تَمَامَ الْحَدِيثِ.

**44** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூதல்ஹா (ரழி) அவர்களுக்கு சுகமில்லாத மகன் இருந்தார். அபூதல்ஹா (ரழி) வெளியே போயிருந்த சமயம், சிறுவனின் உயிர் கைப்பற்றப்பட்டது. அபூதல்ஹா (ரழி) திரும்பி வந்தபோது, "என் மகனுக்கு என்ன ஆனது?" என்று கேட்டார். சிறுவனின் தாயான உம்மு சுலைம் (ரழி), "அவன் நிம்மதியாக உள்ளான்" என்று கூறினார். அவரிடம் இரவு உணவு வைக்கப்பட்டது. இரவு உணவு சாப்பிட்டார். பின்பு தன் மனைவியிடம் இல்லற உறவு கொண்டார்.

அவர் உறவிலிருந்து பிரிந்தபோது, "மகனை மறந்து விடுங்கள்" என்று மனைவி கூறினார். அபூதல்ஹா (ரழி) காலையில் எழுந்து, நபி (ஸல்) அவர்களிடம் வந்து நடந்ததைக் கூறினார். "இரவில் உடலுறவு கொண்டீர்களா?" என நபி (ஸல்) அவர்கள் கேட்கவும், "ஆம்!" என்றார். "இறைவா! இவ்விருவருக்கும் 'பரக்கத்' செய்வாயாக!" என்று நபி (ஸல்) துஆச் செய்தார்கள். அவரது மனைவி ஆண் குழந்தை பெற்றெடுத்தார். என்னிடம் அபூதல்ஹா (ரழி) அவர்கள், "குழந்தையை எடுத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் செல்" என்று கூறினார். அக்குழந்தையுடன் பேரித்தப் பழத்தையும் அனுப்பினார். "அவருடன் எதுவும் உள்ளதா?" என நபி (ஸல்) அவர்கள் கேட்க, "ஆம்! பேரித்தம் பழம் உள்ளது" என்று அபூதல்ஹா கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் அதை எடுத்து மென்று, பின்பு அதில் சிறிது எடுத்து, அதைக் குழந்தையின் வாயில் ஊட்டினார்கள். பின்னர் குழந்தையை அசைத்தார்கள். அக்குழந்தைக்கு 'அப்துல்லாஹ்' என்று பெயரிட்டார்கள். **(புகாரி:5470. முஸ்லிம்:2144/23)**

புகாரியின் மற்றொரு அறிவிப்பில், "குழந்தையாக இருந்த இந்த அப்துல்லாஹ்விற்கு ஒன்பது குழந்தைகள் இருந்ததைக் கண்டேன். அவர்கள் அனைவரும் குர்ஆனை ஓதுபவர்களாக இருந்தனர்"என்று அன்ஸாரிகளில் ஒரு நபித்தோழர் கூறியதாக, இப்னு உயய்னா என்பவர் அறிவிக்கிறார். **(புகாரி:1301)**

முஸ்லிமில் உள்ள மற்றொரு அறிவிப்பில் பின்வருமாறு உள்ளது:

அபூதல்ஹாவிற்கு உம்முசுலைம் அவர்கள் மூலமாக இருந்த ஒரு மகன் இறந்துவிட்டார். உம்முசுலைம் தன் குடும்பத்தாரிடம், "அபூதல்ஹாவிடம் அவரது மகன் பற்றிக் கூறாதீர்கள். நானே அவரிடம் பேசிக் கொள்கிறேன்" என்று கூறினார். அப்போது அபூதல்ஹா வந்தார். அவரிடம் இரவு உணவை முன் வைத்தார். அவர் சாப்பிட்டு தண்ணீர் குடித்தார். பின்பு அவரது மனைவி தன்னை இதற்கு முன் செய்து கொண்டது போல் மிக அழகாக்கிக் கொண்டார். அவர் தன் மனைவியிடம் உடலுறவு கொண்டார்.

அவர் வயிறு நிரம்பி, தன்னிடம் உறவு கொண்டதைக் கண்ட அவரது மனைவி, "அபூதல்ஹா அவர்களே! ஒரு கூட்டத்தினர், ஒரு குடும்பத்தாருக்கு தங்களின் பொருளை இரவலாகக் கொடுத்திருந்தார்கள். (பிறகு வந்து) தங்களின் இரவல் பொருளைக் கேட்கிறார்கள். அவர்களுக்கு அவர்கள் கொடுக்காமல் இருக்கலாமா?" என்று கேட்டார். "கூடாது" என்று அபூதல்ஹா் கூறினார். "உங்கள் மகன் விஷயமாக நல்லதை எதிர்பார்ப்பீராக!" என்று கூறினார். கோபம் அடைந்த அபூதல்ஹா "நான் உடலுறவில் ஈடுபடும் வரை என்னிடம் கூறாமல் விட்டுவிட்டு, என் மகன் பற்றி என்னிடம் இப்போது கூறுகிறாயே!" என்று கூறினார்.

உடனே அபூதல்ஹா, நபி (ஸல்) அவர்களிடம் வந்து நடந்ததைக் கூறினார். நபி (ஸல்) அவர்கள், "உங்கள் இருவரின் இந்த இரவு (உறவு) மூலம் அல்லாஹ் பரக்கத் செய்வானாக!" என்று கூறினார்கள். அபூதல்ஹாவின் மனைவி கர்ப்பிணியானார். நபி (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அதில் அபூதல்ஹாவுடன் அவரது மனைவியும் இருந்தார். நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு பயணத்திலிருந்து வந்தால், இரவில் வரமாட்டார்கள். எனவே மதீனாவிற்கு அருகில் தங்கினார்கள். அபூதல்ஹாவின் மனைவிக்கு பிரசவ வலி ஏற்பட்டது. அவருக்குத் துணையாக அபூதல்ஹா இருந்தார். (இதற்கிடையே) நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டு விட்டார்கள்.

"இறைவா! நபி (ஸல்) அவர்கள் பயணத்திற்குப் புறப்பட்டால், அவர்களுடன் நானும் புறப்படுவேன். அவர்கள் திரும்பி வந்தால், அவர்களுடன் நானும் திரும்பிவருவேன் என்பதே எனக்கு விருப்பமானது என்பதை நீ அறிவாய். நீ பார்க்கின்ற இந்த நிலை காரணமாக நான் (போகாமல்) பின் தங்கிவிட்டேன்" என்று அபூதல்ஹா கூறினார். "அபூதல்ஹா அவர்களே! முன்பு (ஏற்பட்ட பிரசவ வலியை) நான் உணர்ந்தது போல் இப்போது இல்லை. வாருங்கள் போகலாம்" என்று உம்மு சுலைம் கூறினார். நாங்கள் கிளம்பினோம். மதீனா வந்ததும், அவர்களுக்கு பிரசவ வலி ஏற்பட்டது. ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார். என்னிடம் என் தாயார், "அனஸே! குழந்தையை நீ நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு போகும்வரை எவரும் இதற்கு பால் புகட்டிட வேண்டாம்" என்று கூறினார். காலை நேரம் வந்ததும், குழந்தையை எடுத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன்.

**(முஸ்லிம்:2144/107)**

தொடர்ந்து (புகாரியில் உள்ளது போல் குழந்தைக்குப் பேரித்தம் பழத்தை மென்று, ஊட்டியதை) அனஸ் (ரழி) கூறுகிறார்கள்.

٤٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" لَيْسَ الشَّدِيدُ بِالصُّرَعَةِ إِنَّمَا الشَّدِيدُ الَّذِي يَمْلِكُ نَفْسَهُ عِنْدَ الْغَضَبِ" مُتَّفَقٌ عَلَيْهِ." وَالصُّرَعَةُ" بِضَمِّ الصَّادِ وَفَتْحِ الرَّاءِ وَأَصْلُهُ عِنْدَ الْعَرَبِ مَنْ يَصْرَعُ النَّاسَ كَثِيرًا.

**45** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மல்யுத்தம் புரிவதால், 'வீரன்' என்பதில்லை. கோபம் ஏற்படும் சமயம், தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவனே வீரன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6114. முஸ்லிம்:2609)**

٤٦ – وَعَنْ سُلَيْمَانَ بْنِ صُرَدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" كُنْتُ جَالِسًا مَعَ النَّبِيِّ ﷺ وَرَجُلَانِ يَسْتَبَّانِ وَأَحَدُهُمَا قَدْ احْمَرَّ وَجْهُهُ وَانْتَفَخَتْ أَوْدَاجُهُ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: إِنِّي لَأَعْلَمُ كَلِمَةً لَوْ قَالَهَا لَذَهَبَ عَنْهُ مَا يَجِدُ لَوْ قَالَ: أَعُوذُ بِاللَّهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ ذَهَبَ عَنْهُ مَا يَجِدُ. فَقَالُوا لَهُ: إِنَّ النَّبِيَّ ﷺ قَالَ: تَعَوَّذْ بِاللَّهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**46** சுலைமான் இப்னு சுரத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் நான் உட்கார்ந்திருந்தேன். இரு மனிதர்கள் ஒருவரை ஒருவர் திட்டிக்கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவரின் முகம் சிவந்திருந்தது. அவரது கழுத்து நரம்புகள் புடைத்திருந்தன. அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஒரு சொல்லை நான் அறிவேன். அதை அவன் கூறினால், அவனிடம் ஏற்பட்டுள்ள (கோபம்) அவனை விட்டும் போய்விடும். (அதாவது) "அஊதுபில்லாஹி மினஷ்ஷைத்தானிர் ரஜீம்" (வெறுக்கப்பட்ட ஷைத்தானின் தீங்கைவிட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்) என்று கூறினால், அவன் அடைந்தது (கோபம்) போய் விடும்" என்று கூறினார்கள். உடனே நபித்தோழர், கோபப்பட்டவரிடம் சென்று, "ஷைத்தானை விட்டும் பாதுகாப்பை அல்லாஹ்விடம் நீ தேடவேண்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:3282. முஸ்லிம்:2610)**

٤٧ – وَعَنْ مُعَاذ بْنِ أَنَسٍ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" مَنْ كَظَمَ غَيْظًا وَهُوَ قَادِرٌ عَلَى أَنْ يُنْفِذَهُ دَعَاهُ اللّهُ سُبْحَانَهُ وَتَعَالَى عَلَى رُءُوسِ الْخَلاَئِقِ يَوْمَ الْقِيَامَةِ حَتَّى يُخَيِّرَهُ مِنْ الْحُورِ الْعِينِ مَا شَاءَ" رَوَاهُ أَبُو دَاوُودَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**47** முஆத் இப்னு ஜபல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் கோபத்தை வெளிப்படுத்த சக்தி இருந்தும் அவர் அதை அடக்கினால், மறுமை நாளில் படைப்புகளில் தலைமையானவர்களுடன் அவரை அல்லாஹ் அழைப்பான். இறுதியாக, அவர் விரும்பிய ‘ஹூருல் அய்ன்’ பெண்களைத் தேர்ந்தெடுக்கச் சலுகை தருவான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4777. திர்மிதீ:2021. இந்த ஹதீஸ் ‘ஹஸன்’ ஹதீஸ் என இமாம் திர்மிதீ கூறுகிறார்கள்)**

٤٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ لِلنَّبِيِّ ﷺ أَوْصِنِي. قَالَ" لاَ تَغْضَبْ" فَرَدَّدَ مِرَارًا قَالَ:" لاَ تَغْضَبْ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**48** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர், “எனக்கு உபதேசம் செய்யுங்கள்” என்று கேட்டார். “கோபம் கொள்ளாதீர்” என்று நபி (ஸல்) கூறினார்கள். அவர் மீண்டும் மீண்டும் கேட்டார். “கோபம் கொள்ளாதீர்” என்றே நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6116)**

٤٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّهِ ﷺ:" مَا يَزَالُ الْبَلاَءُ بِالْمُؤْمِنِ وَالْمُؤْمِنَةِ فِي نَفْسِهِ وَوَلَدِهِ وَمَالِهِ حَتَّى يَلْقَى اللّهَ تَعَالَى وَمَا عَلَيْهِ خَطِيئَةٌ" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**49** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஓர் இறைவிசுவாசியான ஆண் மற்றும் பெண்ணிற்கு, அவரது உயிர் மற்றும் அவரது குழந்தை, அவரது சொத்து என அனைத்திலும் சோதனை இருந்து கொண்டே இருக்கும். இறுதியாக அவர் (சோதனை மூலம் மன்னிப்பு ஏற்பட்டதால்) குற்றம் ஏதுமின்றி அல்லாஹ்வை சந்திப்பார்” என நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2399. இந்த ஹதீஸ் ‘ஹஸன் ஸஹீஹ்’ என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٠ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللّهُ عَنْهُمَا قَالَ:" قَدِمَ عُيَيْنَةُ بْنُ حِصْنٍ فَنَزَلَ عَلَى ابْنِ أَخِيهِ الْحُرِّ بْنِ قَيْسٍ وَكَانَ مِنْ النَّفَرِ الَّذِينَ يُدْنِيهِمْ عُمَرُ رَضِيَ اللّهُ عَنْهُ وَكَانَ الْقُرَّاءُ أَصْحَابُ مَجْلِسِ عُمَرَ رَضِيَ اللّهُ عَنْهُ وَمُشَاوَرَتِهِ – كُهُولاً كَانُوا أَوْ شُبَّانًا – فَقَالَ عُيَيْنَةُ لِابْنِ أَخِيهِ: يَا ابْنَ أَخِي لَكَ وَجْهٌ عِنْدَ هَذَا الأَمِيرِ فَاسْتَأْذِنْ لِي عَلَيْهِ فَاسْتَأْذَنَ فَأَذِنَ لَهُ عُمَرُ. فَلَمَّا دَخَلَ قَالَ: هِيَ يَا ابْنَ الْخَطَّابِ فَوَاللّهِ مَا تُعْطِينَا الْجَزْلَ وَلاَ تَحْكُمُ فِينَا بِالْعَدْلِ! فَغَضِبَ عُمَرُ رَضِيَ اللّهُ عَنْهُ حَتَّى هَمَّ أَنْ يُوقِعَ بِهِ. فَقَالَ لَهُ الْحُرُّ: يَا أَمِيرَ الْمُؤْمِنِينَ إِنَّ اللّهَ تَعَالَى قَالَ لِنَبِيِّهِ ﷺ: خُذِ الْعَفْوَ وَأْمُرْ بِالْعُرْفِ وَأَعْرِضْ عَنْ الْجَاهِلِينَ وَإِنَّ هَذَا مِنَ الْجَاهِلِينَ وَاللّهِ مَا جَاوَزَهَا عُمَرُ حِينَ تَلاَهَا وَكَانَ وَقَّافًا عِنْدَ كِتَابِ اللّهِ تَعَالَى" رَوَاهُ الْبُخَارِيُّ.

**50** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உயய்னா இப்னு ஹிஸ்ன் என்பவர் மதினா வந்து தன் சகோதரர் ஹிர் இப்னு கய்ஸ் என்பவரிடம் தங்கினார். இவர், உமர் (ரழி) அவர்கள் ஆலோசனை பெறும் நபர்களில் ஒருவர். உமர் (ரழி) அவர்களின் அவையிலும், அவர்களது ஆலோசனைக்குழுவிலும், இளைஞர்களாக இருந்தாலும், முதியவர்களாக இருந்தாலும் குர்ஆனை அறிந்தவர்களே இருந்தார்கள்.

உயய்னா தன் சகோதரர் மகனிடம், "சகோதரன் மகனே! இந்தத் தலைவர் (உமர்) இடம் உனக்கு அறிமுகம் உள்ளது, (அவரை சந்திக்க) அவரிடம் அனுமதி வாங்கித் தா" என்று கேட்டார். உடனே இவர் அனுமதி கேட்டார். உமர் (ரழி) அவர்களும் அனுமதி தந்தார்கள். உயய்னா நுழைந்ததுமே, "ஹீ (இது ஒரு எச்சரிக்கைச் சொல்) கத்தாபின் மகனே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எங்களுக்கு நீ அதிகமாக (எதுவும்) தரவில்லை. எங்களிடம் நீதமாக தீர்ப்பளிக்கவும் இல்லை" என்று கூறினார். அவரை அடித்திட எண்ணும் அளவுக்கு உமர் (ரழி) கடும் கோபம் அடைந்தார்கள். அப்போது ஹிர் இப்னு கய்ஸ் அவர்கள் "முஃமின்களின் தலைவரே! நிச்சயமாக அல்லாஹ் தன் நபிக்கு (பின் வருமாறு) கூறியுள்ளான்.

*(நபியே!) நீர் மன்னிப்பதைக் கடைபிடிப்பீராக! நல்லதை ஏவுவீராக! அறிவிலிகளை புறக்கணிப்பீராக! (7:199)*

(என்ற வசனத்தை ஓதி) உயய்னாவும் அவர்களில் ஒருவராவர் என்று கூறினார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்த வசனத்தைக் கேட்டவுடன் உமர் (ரழி) அவர்கள், அதை மீறவில்லை. உமர் (ரழி)அவர்கள், அல்லாஹ்வின் வேதம் முன் கட்டுப்பட்டவராக இருந்தார்கள். **(புகாரி:4642)**

٥١ – وَعَنِ ابْنِ مَسْعُود رَضِيَ اللّهُ عَنْهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّه ﷺ قَالَ" إِنَّهَا سَتَكُونُ بَعْدِي أَثَرَةٌ وَأُمُورٌ تُنْكِرُونَهَا! قَالُوا: يَا رَسُولَ اللّه فَمَا تَأْمُرُنَا؟ قَالَ: تُؤَدُّونَ الْحَقَّ الَّذِي عَلَيْكُمْ وَتَسْأَلُونَ اللّهَ الَّذِي لَكُمْ" مُتَّفَقٌ عَلَيْهِ." وَالأَثَرَةُ": الإِنْفِرَادُ بِالشَّيْءِ عَمَّنْ لَهُ فِيهِ حَقٌّ.

**51** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள் :

"எனக்குப்பின் உரிமை பறித்தலும், நீங்கள் வெறுக்கும் காரியங்களும் உருவாகும்" என நபி(ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு (இது விஷயமாக) நீங்கள் இடும் கட்டளை என்ன?"என்று நபித்தோழர்கள் கேட்டனர். "உங்கள் மீதுள்ள கடமைகளை நிறைவேற்றுங்கள்! உங்களுக்குத் தேவையானதை அல்லாஹ்விடம் கேளுங்கள்"என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7052. முஸ்லிம்:1843)**

٥٢ – وَعَنْ أَبِي يَحْيَى أُسَيْد بْنِ حُضَيْر رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَجُلاً مِنَ الأَنْصَارِ قَالَ: يَا رَسُولَ اللّه أَلاَ تَسْتَعْمِلُني كَمَا اسْتَعْمَلْت فُلاَنًا؟ فَقَالَ: " إِنَّكُمْ سَتَلْقَوْنَ بَعْدِي أَثَرَةً فَاصْبِرُوا حَتَّى تَلْقَوْنِي عَلَى الْحَوْضِ" مُتَّفَقٌ عَلَيْهِ" وَأُسَيْدٌ" بِضَمِّ الْهَمْزَة." وَحُضَيْرٌ" بِحَاء مُهْمَلَة مَضْمُومَة وَضَاد مُعْجَمَة مَفْتُوحَة وَاللّهُ أَعْلَمُ.

**52** (அபூயஹ்யா என்ற) உஸைத் இப்னு ஹுழைர் (ரழி) அறிவிக்கின்றார்கள் :

மதீனாவாசிகளில் உள்ள ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! இன்னாரை நீங்கள் பதவியில் அமர்த்தியது போல், என்னை நீங்கள் அமர்த்த வேண்டாமா?" என்று கேட்டார். அப்போது, "நீங்கள் எனக்குப் பின் உரிமை மீறலைச் சந்திப்பீர்கள். (மறுமையில்) ஹவ்ளு தடாகம் அருகே என்னை நீங்கள் சந்திக்கும் வரை, பொறுமையாக இருங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7057. முஸ்லிம்:1845)**

٥٣ – وَعَنْ أَبِي إِبْرَاهِيمَ عَبْد اللّه بْنِ أَبِي أَوْفَى رَضِيَ اللّهُ عَنْهُمَا" أَنَّ رَسُولَ اللّه ﷺ فِي بَعْضِ أَيَّامه الَّتِي لَقِيَ فِيهَا الْعَدُوَّ انْتَظَرَ حَتَّى إِذَا مَالَتِ الشَّمْسُ قَامَ فِيهِمْ فَقَالَ: يَا أَيُّهَا النَّاسُ لاَ تَتَمَنَّوْا لِقَاءَ الْعَدُوِّ وَاسْأَلُوا اللّهَ الْعَافِيَةَ فَإِذَا لَقِيتُمُوهُمْ فَاصْبِرُوا وَاعْلَمُوا أَنَّ الْجَنَّةَ تَحْتَ ظِلاَلِ السُّيُوفِ ثُمَّ قَالَ النَّبِيُّ ﷺ اللّهُمَّ مُنْزِلَ الْكِتَابِ وَمُجْرِيَ السَّحَابِ وَهَازِمَ الأَحْزَابِ اهْزِمْهُمْ وَانْصُرْنَا عَلَيْهِمْ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَبِاللّه التَّوْفِيقُ.

**53** (அபூஇப்ராஹீம் என்ற) அப்துல்லாஹ் இப்னு அபி அவ்ஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

நபி (ஸல்) அவர்கள் எதிரிகளைச் சந்தித்த போர்க்களங்களில் ஒரு போரின் போது, சூரியன் உச்சியிலிருந்து சாயும் வரை காத்திருந்து விட்டு, அதன் பின், "மக்களே எதிரிகளைச் சந்திக்க விரும்பாதீர்கள். அல்லாஹ்விடம் உடல் ஆரோக்கியத்தைக் கேளுங்கள். எதிரிகளை நீங்கள் சந்தித்துவிட்டால், பொறுமையாக இருங்கள். 'நிச்சயமாக சொர்க்கம் வாள்களின் நிழல்களுக்குக் கீழ் உள்ளது' என்பதை அறிந்து கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு, "இறைவனே! வேதத்தை இறக்கியவனே! மேகத்தை ஓட்டிச் செல்பவனே! (எதிரிப்படைகளை) தோற்கடிப்பவனே! (எதிரிகளான) அவர்களைத் தோற்கடிப்பாயாக! அவர்களுக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்வாயாக" என்று துஆச் செய்தார்கள்.

**(புகாரி:2818. முஸ்லிம்:1742)**

## ٤ – باب الصدق

### பாடம் : 4 - உண்மை பேசுதல்

قَالَ اللَّهُ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَكُونُوا مَعَ الصَّادِقِينَ وَقَالَ تَعَالَى: وَالصَّادِقِينَ وَالصَّادِقَات وَقَالَ تَعَالَى: فَلَوْ صَدَقُوا اللَّهَ لَكَانَ خَيْرًا لَهُمْ. الرَّاجِحُ عِنْدَ الْعُلَمَاءِ أَنَّ الصِّدْقَ: مُطَابَقَةُ الْخَبَرِ لِلْوَاقِعِ وَالْكَذِبَ عَكْسُهُ وَقَالَ بَعْضُ الْعُلَمَاءِ: الصِّدْقُ اسْتِوَاءُ الظَّاهِرِ وَالْبَاطِنِ وَالسِّرِّ وَالْعَلَانِيَةِ وَيُمْكِنُ أَنْ نَقُولَ: إِنَّ الصِّدْقَ هُوَ مُوَافَقَةُ الْعَمَلِ لِمُقْتَضَى أَوَامِرِ الشَّرْعِ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளே! அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள், உண்மையாளர்களுடன் நீங்கள் இருங்கள். (9:119)*

*"உண்மையைப் பேசும் ஆண்களும், உண்மையைப் பேசும் பெண்களும், நிச்சயமாக முஸ்லிமாகிய ஆண்களும், பெண்களும், நம்பிக்கையாளரான ஆண்களும் பெண்களும், (இறைவனுக்கு) வழிபடும் ஆண்களும் பெண்களும், பொறுமையுள்ள ஆண்களும் பெண்களும், (அல்லாஹ்வுக்குப்) பயந்து நடக்கும் ஆண்களும் பெண்களும், தானம் செய்யும் ஆண்களும், பெண்களும், நோன்பு நோற்கும் ஆண்களும் பெண்களும், கற்புள்ள ஆண்களும் பெண்களும், அல்லாஹ்வுடைய திருப்பெயரை அதிகமாக நினைவுகூரும் ஆண்களும் பெண்களும் ஆகிய இவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும், மகத்தான கூலியையும் தயார்படுத்தி வைத்திருக்கிறான். (33:35)*

*"(நபியே உங்களுக்கு) வழிபட்டு நடப்பதும், (உங்களிடம் எதைக் கூறிய போதிலும்) உண்மையைச் சொல்வதும்தான் (நன்று). குடிப்பவர்களுக்குப் பேரின்பமளிக்கக் கூடிய தெளிவான தேனாறுகளும் இருக்கின்றன. அன்றி அதில் அவர்களுக்கு எல்லாவிதமான கனிவர்க்கங்கள் இருப்பதுடன், இறைவனின் மன்னிப்பும் அவர்களுக்கு உண்டு. (இத்தகைய இன்பங்களை அனுபவிப்பவனுக்கு) நரகத்தில் என்றென்றுமே தங்கியிருந்து கொதிக்கும் நீர் புகட்டப்பட்டு குடல்களெல்லாம் துண்டு துண்டாகிவிடக்கூடிய நரகவாசி ஒப்பாக முடியுமா? அவர்கள் உண்மையாக இருந்து கொண்டால், அதுவே அவர்களுக்குச் சிறந்ததாகும். (47:21)*

٥٤ – وَأَمَّا الأَحَادِيثُ – فَالأَوَّلُ عَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ: " إِنَّ الصِّدْقَ يَهْدِي إِلَى الْبِرِّ وَإِنَّ الْبِرَّ يَهْدِي إِلَى الْجَنَّةِ وَإِنَّ الرَّجُلَ لَيَصْدُقُ حَتَّى يُكْتَبَ عِنْدَ اللَّهِ صِدِّيقًا وَإِنَّ الْكَذِبَ يَهْدِي إِلَى الْفُجُورِ وَإِنَّ الْفُجُورَ يَهْدِي إِلَى النَّارِ وَإِنَّ الرَّجُلَ لَيَكْذِبُ حَتَّى يُكْتَبَ عِنْدَ اللَّهِ كَذَّابًا" مُتَّفَقٌ عَلَيْهِ.

**54** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக உண்மையைப் பேசுதல், நல்லது செய்வதை ஏற்படுத்தும். நல்லது செய்வது சொர்க்கத்தைப் பெற்றுத்தரும். நிச்சயமாக! உண்மையை பேசுபவர், இதில் உண்மையாளர் என அல்லாஹ்விடம் பதிவு செய்யப்படுவார். நிச்சயமாக! பொய் பேசுதல், தவறுகள் செய்வதை ஏற்படுத்தும். தவறுகள் நரகைப் பெற்றுத் தரும். நிச்சயமாக, ஒருவர் பொய் பேசினால், அல்லாஹ் விடம் பொய்யர் என பதிவு செய்யப்படுவார்” என்று (நபி ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6094. முஸ்லிம்:2607)**

٥٥ – الثَّانِي عَنْ أَبِي مُحَمَّد الْحَسَنِ بْنِ عَلِيٍّ ابْنِ أَبِي طَالِب رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: حَفِظْتُ مِنْ رَسُولِ اللَّه ﷺ:" دَعْ مَا يَرِيبُكَ إِلَى مَا لاَ يَرِيبُكَ ؛ فَإِنَّ الصِّدْقَ طُمَأْنِينَةٌ وَالْكَذِبَ رِيبَةٌ" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ صَحِيحٌ. قَوْلُهُ:" يَرِيبُكَ" هُوَ بِفَتْحِ الْيَاءِ وَضَمِّهَا: وَمَعْنَاهُ مَا تَشُكُّ فِي حِلِّهِ وَاعْدِلْ إِلَى مَا لاَ تَشُكُّ فِيهِ.

**55** அபூமுஹம்மத் ஹஸன் இப்னு அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள் :

“உமக்கு சந்தேகம் ஏற்படுத்துவதை விட்டுவிடுவீராக! உமக்கு சந்தேகம் ஏற்படாதவை பக்கம் செல்வீராக! நிச்சயமாக, உண்மை அமைதி (அளிக்கும்). பொய், சந்தேக(த்தை வளர்க்கு)ம்” என்று நபி (ஸல்) கூறியதை நான் மனனம் செய்துள்ளேன்.

**(திர்மிதீ:2518. இந்த ஹதீஸ் ‘ஸஹீஹ்’ என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٦ – الثَّالِثُ عَنْ أَبِي سُفْيَانَ صَخْرِ بْنِ حَرْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثِهِ الطَّوِيلِ فِي قِصَّةِ هِرَقْلَ" قَالَ هِرَقْلُ: فَمَاذَا يَأْمُرُكُمْ – يَعْنِي النَّبِيَّ ﷺ – قَالَ أَبُو سُفْيَانَ: قُلْتُ يَقُولُ: اعْبُدُوا اللَّهَ وَحْدَهُ لاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَاتْرُكُوا مَا يَقُولُ آبَاؤُكُمْ. وَيَأْمُرُكُمْ بِالصَّلاَةِ وَالصِّدْقِ وَالْعَفَافِ وَالصِّلَةِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**56** அபூசுப்ஃயான் என்ற ஸக்ர் இப்னு ஹர்ப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களுக்கு அவர் (நபி (ஸல்)) கட்டளையிட்டது என்ன?” என்று மன்னர் ஹிர்கல் கேட்டார். “அல்லாஹ்வை மட்டும் வணங்குங்கள். எதையும் அவனுக்கு இணை வைக்காதீர்கள். உங்கள் முன்னோர் கூறுவதை (மூடநம்பிக்கைகளை) விட்டுவிடுங்கள் என்று கூறும் நபி (ஸல்), எங்களுக்குத் தொழுகையை, உண்மை பேசுவதை, பத்தினித்தனத்தை, உறவினருடன் சேர்ந்து வாழ்வதைக் கட்டளையிட்டார்கள்” என்று கூறினேன்.

**(புகாரி:7. முஸ்லிம்:1773. மன்னர் ஹிர்கலுடன் உரையாடிய நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும்.)**

٥٧ – الرَّابِعُ عَنْ أَبِي ثَابِت وَقِيلَ أَبِي سَعِيد وَقِيلَ أَبِي الْوَلِيد سَهْلِ بْنِ حُنَيْف وَهُوَ بَدْرِيٌّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" مَنْ سَأَلَ اللَّهَ تَعَالَى الشَّهَادَةَ بِصِدْقٍ بَلَّغَهُ اللَّهُ مَنَازِلَ الشُّهَدَاءِ وَإِنْ مَاتَ عَلَى فِرَاشِهِ" رَوَاهُ مُسْلِمٌ.

**57** (அபூஸாபித், அபூஸயீத், அபூவலீத் என்று கூறப்படுகின்ற, பத்ரு போர் வீரரான) ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தான் போரில் மரணிப்பதை உண்மையாக அல்லாஹ்விடம் ஒருவர் கேட்டால், அவர் தன் படுக்கையில் (சாதாரணமாக) மரணித்தாலும், உயிரைத் தியாகம் செய்தோரின் அந்தஸ்தை அவருக்கு அல்லாஹ் வழங்குவான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1909)**

٥٨ – الْخَامِسُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" غَزَا نَبِيٌّ مِنَ الأَنْبِيَاءِ صَلَوَاتُ اللَّهِ وَسَلاَمُهُ عَلَيْهِمْ فَقَالَ لِقَوْمِهِ: لاَ يَتْبَعْنِي رَجُلٌ مَلَكَ بُضْعَ امْرَأَةٍ وَهُوَ يُرِيدُ أَنْ يَبْنِيَ بِهَا وَلَمَّا يَبْنِ بِهَا وَلاَ أَحَدٌ بَنَى بُيُوتًا لَمْ يَرْفَعْ سُقُوفَهَا وَلاَ

أَحَدٌ اشْتَرَى غَنَمًا أَوْ خَلِفَاتٍ وَهُوَ يَنْتَظِرُ أَوْلاَدَهَا. فَغَزَا فَدَنَا مِنَ الْقَرْيَةِ صَلاَةَ الْعَصْرِ أَوْ قَرِيبًا مِنْ ذَلِكَ فَقَالَ لِلشَّمْسِ: إِنَّكِ مَأْمُورَةٌ وَأَنَا مَأْمُورٌ اللَّهُمَّ احْبِسْهَا عَلَيْنَا فَحُبِسَتْ حَتَّى فَتَحَ اللَّهُ عَلَيْهِ فَجَمَعَ الْغَنَائِمَ فَجَاءَتْ - يَعْنِي النَّارُ - لِتَأْكُلَهَا فَلَمْ تَطْعَمْهَا فَقَالَ: إِنَّ فِيكُمْ غُلُولاً فَلْيُبَايِعْنِي مِنْ كُلِّ قَبِيلَةٍ رَجُلٌ فَلَزِمَتْ يَدُ رَجُلٍ بِيَدِهِ فَقَالَ: فِيكُمُ الْغُلُولُ. فَلْتُبَايِعْنِي قَبِيلَتُكَ فَلَزِمَتْ يَدُ رَجُلَيْنِ أَوْ ثَلاَثَةٍ بِيَدِهِ فَقَالَ: فِيكُمُ الْغُلُولُ. فَجَاءُوا بِرَأْسٍ مِثْلِ رَأْسِ بَقَرَةٍ مِنَ الذَّهَبِ فَوَضَعَهَا فَجَاءَتِ النَّارُ فَأَكَلَتْهَا. فَلَمْ تَحِلَّ الْغَنَائِمُ لأَحَدٍ قَبْلَنَا ثُمَّ أَحَلَّ اللَّهُ لَنَا الْغَنَائِمَ لَمَّا رَأَى ضَعْفَنَا وَعَجْزَنَا فَأَحَلَّهَا لَنَا" مُتَّفَقٌ عَلَيْهِ." الْخَلِفَاتُ" بِفَتْحِ الْخَاءِ الْمُعْجَمَةِ وَكَسْرِ اللاَّمِ: جَمْعُ خَلِفَةٍ وَهِيَ النَّاقَةُ الْحَامِلُ.

**58** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபிமார்களில் ஒரு நபி, போர் செய்தார். அவர் தன் கூட்டத்தாரிடம், "பெண்ணைத் திருமணம் செய்து, அவரிடம் உறவு கொள்ள விரும்பியும், உறவு கொள்ளாமல் இருக்கும் நபரும், தனது வீடுகளைக் கட்டி, அதன் (மாடி) முகட்டைப் போடாமல் இருக்கும் நபரும், ஆடு அல்லது சினையாக உள்ள ஒட்டகத்தை வாங்கி, அதன் குட்டிகளை எதிர்பார்த்திருக்கும் நபரும், என்னைப் பின்பற்றி (போருக்கு) வரவேண்டாம்" என்று கூறினார்.

போருக்குக் கிளம்பி, அஸர்நேரம் அல்லது சற்று முன்பாக அந்த ஊரை நெருங்கினார். அப்போது சூரியனிடம் அவர், "நீ இறைவனுக்குக் கட்டுப்பட்டுள்ளாய். நானும் கட்டுப்பட்டவன்" என்று கூறிவிட்டு, "இறைவா! எங்களுக்கு இந்தச் சூரியனை (மறைவதை விட்டும்) நிறுத்தி வைப்பாயாக" என்று துஆச் செய்தார். உடனே நிறுத்தப்பட்டது. இறுதியாக அவருக்கு அந்தப் போரில் அல்லாஹ் வெற்றி அளித்தான். போரில் கிடைத்த பொருட்களைத் திரட்டினார். அதைக் கரித்து அழித்திட நெருப்பு வந்தது. எனினும், அதைக் கரிக்கவில்லை. "நிச்சயமாக உங்களில் மோசடி உள்ளது. ஒவ்வொரு பிரிவினரில் உள்ளவரும் என்னிடம் உடன்படிக்கை செய்யட்டும்" என்று நபி கூறினார்.

அப்போது ஒருவரின் கை, நபியின் கையோடு ஒட்டிவிட்டது. "உங்களில் தான் மோசடி உள்ளது. உன் பிரிவினர் என்னிடம் உடன்படிக்கை செய்யட்டும்" என நபி கூறினார். அப்போது இரண்டு அல்லது மூன்று நபர்களின் கைகள், நபியின் கையோடு ஒட்டிக் கொண்டன. "உங்களிடம் தான் மோசடி உள்ளது" என நபி கூறினார். உடனே பசுமாட்டின் தலைபோன்ற தங்கத் தலையை கொண்டு வந்து வைத்தனர். அப்போது நெருப்பு வந்து அதை கரித்துவிட்டது. "நமக்கு முன் இருந்த எவருக்கும், போரில் கிடைத்த பொருள் அனுமதி இல்லை. பின்பு அல்லாஹ் போரில் கிடைத்த பொருட்களை, நம் பலவீனத்தை, இயலாமையைக் கண்டபோது நமக்கு அனுமதித்தான்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:3124. முஸ்லிம்:1747)**

٥٩ - السَّادِسُ عَنْ أَبِي خَالِدٍ حَكِيمِ بْنِ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "الْبَيِّعَانِ بِالْخِيَارِ مَا لَمْ يَتَفَرَّقَا فَإِنْ صَدَقَا وَبَيَّنَا بُورِكَ لَهُمَا فِي بَيْعِهِمَا وَإِنْ كَتَمَا وَكَذَبَا مُحِقَتْ بَرَكَةُ بَيْعِهِمَا" مُتَّفَقٌ عَلَيْهِ.

**59** (அபூகாலித் என்ற) ஹகீம் இப்னு ஹிஸாம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு வியாபாரிகள். அவர்கள் பிரியும் வரை - (விற்க, வாங்க, மறுக்கவும்) இஷ்டம் அளிக்கப்பட்டவர்களாவர். அவ்விருவரும் உண்மை பேசி, தெளிவாகப் பேசிக் கொண்டால், அவ்விருவரின் வியாபாரத்தில் 'பரக்கத்' அளிக்கப்படும். அவ்விருவரும் மறைத்துப் பொய் பேசினால், அவ்விருவரின் வியாபாரத்தில் 'பரக்கத்' நீக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2079. முஸ்லிம்:1532)**

## ٥ - باب المراقبة

## பாடம் : 5 - இறைவனின் கண்காணிப்பு

قَالَ اللّٰهُ تَعَالَى: الَّذِي يَرَاكَ حِينَ تَقُومُ وَتَقَلُّبَكَ فِي السَّاجِدِينَ. وَقَالَ تَعَالَى: وَهُوَ مَعَكُمْ أَيْنَ مَا كُنْتُمْ. وَقَالَ تَعَالَى:" إِنَّ اللّٰهَ لاَ يَخْفَى عَلَيْهِ شَيْءٌ فِي الأَرْضِ وَلاَ فِي السَّمَاءِ. وَقَالَ تَعَالَى:" إِنَّ رَبَّكَ لَبِالْمِرْصَادِ وَقَالَ تَعَالَى: يَعْلَمُ خَائِنَةَ الأَعْيُنِ وَمَا تُخْفِي الصُّدُورُ وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *நீர் (தனித்து வணங்கிட) நிற்பவராக, அவன் உம்மைப் பார்க்கிறான். மேலும் ஸஜ்தா செய்வோரில் நீர் இணைந்திருப்பதையும் (பார்க்கிறான்). (26:218,219)*

*'... நீங்கள் எங்கிருந்தாலும் உங்களுடன்தான் அவன் உள்ளான்...' (57:4)*

*நிச்சயமாக! அல்லாஹ்விடம் பூமியில் உள்ளவையோ, வானத்தில் உள்ளவையோ மறைந்துவிட முடியாது. (3:5)*

*நிச்சயமாக உம் இறைவன் கண்காணித்தவனாக இருக்கிறான். (89:14)*

*கண்களின் மோசடித்தனத்தையும், உள்ளங்கள் மறைப்பவற்றையும் அவன் அறிவான். (40:19)*

٦٠ - وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ:" بَيْنَمَا نَحْنُ عِنْدَ رَسُولِ اللّٰهِ ﷺ ذَاتَ يَوْمٍ إِذْ طَلَعَ عَلَيْنَا رَجُلٌ شَدِيدُ بَيَاضِ الثِّيَابِ شَدِيدُ سَوَادِ الشَّعْرِ لاَ يُرَى عَلَيْهِ أَثَرُ السَّفَرِ وَلاَ يَعْرِفُهُ مِنَّا أَحَدٌ حَتَّى جَلَسَ إِلَى النَّبِيِّ ﷺ فَأَسْنَدَ رُكْبَتَيْهِ إِلَى رُكْبَتَيْهِ وَوَضَعَ كَفَّيْهِ عَلَى فَخِذَيْهِ وَقَالَ: يَا مُحَمَّدُ أَخْبِرْنِي عَنِ الأِسْلاَمِ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ الأِسْلاَمُ أَنْ تَشْهَدَ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللّٰهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللّٰهِ وَتُقِيمَ الصَّلاَةَ وَتُؤْتِيَ الزَّكَاةَ وَتَصُومَ رَمَضَانَ وَتَحُجَّ الْبَيْتَ إِنِ اسْتَطَعْتَ إِلَيْهِ سَبِيلاً. قَالَ: صَدَقْتَ. قَالَ فَعَجِبْنَا لَهُ يَسْأَلُهُ وَيُصَدِّقُهُ قَالَ: فَأَخْبِرْنِي عَنِ الأِيمَانِ. قَالَ: أَنْ تُؤْمِنَ بِاللّٰهِ وَمَلاَئِكَتِهِ وَكُتُبِهِ. وَرُسُلِهِ وَالْيَوْمِ الأخِرِ وَتُؤْمِنَ بِالْقَدَرِ خَيْرِهِ وَشَرِّهِ. قَالَ: صَدَقْتَ. قَالَ: فَأَخْبِرْنِي عَنِ الأِحْسَانِ. قَالَ: أَنْ تَعْبُدَ اللّٰهَ كَأَنَّكَ تَرَاهُ فَإِنْ لَمْ تَكُنْ تَرَاهُ فَإِنَّهُ يَرَاكَ: قَالَ: فَأَخْبِرْنِي عَنِ السَّاعَةِ. قَالَ: مَا الْمَسْئُولُ عَنْهَا بِأَعْلَمَ مِنَ السَّائِلِ. قَالَ: فَأَخْبِرْنِي عَنْ أَمَارَتِهَا. قَالَ: أَنْ تَلِدَ الأَمَةُ رَبَّتَهَا وَأَنْ تَرَى الْحُفَاةَ الْعُرَاةَ الْعَالَةَ رِعَاءَ الشَّاءِ يَتَطَاوَلُونَ فِي الْبُنْيَانِ. ثُمَّ انْطَلَقَ فَلَبِثْتُ مَلِيًّا ثُمَّ قَالَ لِي: يَا عُمَرُ أَتَدْرِي مَنِ السَّائِلُ؟ قُلْتُ: اللّٰهُ وَرَسُولُهُ أَعْلَمُ. قَالَ: فَإِنَّهُ جِبْرِيلُ أَتَاكُمْ يُعَلِّمُكُمْ دِينَكُمْ" رَوَاهُ مُسْلِمٌ. وَمَعْنَى" تَلِدُ الأَمَةُ رَبَّتَهَا": أَيْ سَيِّدَتَهَا: وَمَعْنَاهُ أَنْ تَكْثُرَ السَّرَارِي حَتَّى تَلِدَ الأَمَةُ السُّرِّيَّةُ بِنْتًا لِسَيِّدِهَا وَبِنْتُ السَّيِّدِ فِي مَعْنَى السَّيِّدِ وَقِيلَ غَيْرُ ذَلِكَ. و" الْعَالَةُ" الْفُقَرَاءُ. وَقَوْلُهُ" مَلِيًّا" أَيْ زَمَانًا طَوِيلاً وَكَانَ ذَلِكَ ثَلاَثًا.

**60** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். எங்களிடம் நல்ல வெண்மை உடை அணிந்த, நல்ல கருப்பு நிற முடி நிறைந்த ஒருவர் வந்தார். பயணத்தின் சுவடு கூட அவர் மீது காணப்படவில்லை. எங்களில் எவரும் (இதற்குமுன்பு) அவரைக் கண்டதில்லை. வந்தவர், நபி (ஸல்) அவர்களின் அருகில் அமர்ந்தார். தன் இரு முட்டுக்கால்களையும், அவர்களின் இரு முட்டுக்கால் களையும் இணைத்தார். தன் இரு உள்ளங்கைகளைத் தன் இரு தொடைகள் மீதும் வைத்தார்.

நபி (ஸல்) அவர்களிடம், "முஹம்மதே! இஸ்லாம் பற்றி எனக்குக் கூறுங்கள்" என்றார். "இஸ்லாம் என்பது, அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. நிச்சயமாக முஹம்மத், அல்லாஹ்வின் தூதராவார் என நீ சாட்சி கூறுவதும், தொழுகையை நீ பேணுவதும், பொருள் வரியை (ஜகாத்தை) நீ கொடுப்பதும், ரமளானில் நீ நோன்பு வைப்பதும், பயணம் செல்ல நீ சக்தி பெற்றால் கஅபாவை ஹஜ்

செய்வதும் ஆகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். ''நீர் உண்மை கூறினீர்'' என்று வந்தவர் கூறினார். கேள்வி கேட்டவரே, அதை உண்மைப்படுத்தியது கண்டு நாங்கள் ஆச்சரியப்பட்டோம்.

''ஈமான் பற்றி எனக்குக் கூறுங்கள்'' என வந்தவர் கேட்டார். ''அல்லாஹ்வை, அவனது வானவர்களை, அவனது வேதங்களை, அவனது தூதர்களை மற்றும் மறுமை நாளை நீ நம்ப வேண்டும். நன்மை, தீமை (இறைவனிடமிருந்தே ஏற்படுகிறது) என விதியை நம்ப வேண்டும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். ''நீர் உண்மை கூறினீர்!'' என்று வந்தவர் கூறினார். ''இஹ்ஸான்-பற்றி எனக்குக் கூறுங்கள்'' என்று வந்தவர் கேட்டார். ''அல்லாஹ்வை நீ பார்ப்பது போல (வணங்க வேண்டும்), நீ பார்க்கவில்லையென்றால் உன்னை அவன் பார்க்கிறான் என்பது போல், நீ அவனை வணங்க வேண்டும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

''மறுமை நாள் பற்றி எனக்குக் கூறுங்கள்'' என வந்தவர் கேட்டார். ''இது பற்றிக் கேட்கப்பட்டவர், கேட்பவரை விட மிக அறிந்தவரல்ல'' என்று நபி (ஸல்) கூறினார்கள். ''அதன் அடையாளங்கள் பற்றி எனக்குக் கூறுங்கள்'' என வந்தவர் கேட்டார். ''அடிமைப்பெண் தன் எஜமானியைப் பெற்றெடுப்பாள். காலில் செருப்பு அணியாதவன், அரைகுறை ஆடை அணிந்தவன், ஏழை, ஆடு மேய்ப்பவன் என, இவர்கள் (பெரிய) கட்டிடம் கட்டுவதில் உயர்வார்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். வந்தவர் பின்பு சென்று விட்டார். சிறிது நேரம் அங்கேயே இருந்தேன். பின்பு, ''உமரே! இப்போது வந்து கேள்வி கேட்டவரை நீர் அறிவீரா?'' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். ''அல்லாஹ்வும், அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்'' என்று நான் கூறினேன். ''இவர்தான் ஜிப்ரீல் (அலை). உங்கள் மார்க்கச் செயல்களை உங்களுக்குக் கற்றுத் தர, உங்களிடம் வந்தார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:8)**

٦١ – الثَّانِي عَنْ أَبِي ذَرٍّ جُنْدُب بْنِ جُنَادَةَ وَأَبِي عَبْد الرَّحْمَنِ مُعَاذ بْنِ جَبَلٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ رَسُول اللَّه ﷺ قَالَ:" اتَّقِ اللَّهَ حَيْثُمَا كُنْت وَأَتْبِعْ السَّيِّئَةَ الْحَسَنَةَ تَمْحُهَا: وَخَالِقْ النَّاسَ بِخُلُقٍ حَسَنٍ" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**61** அபூதர் என்ற ஜுன்துப் இப்னு ஜுனாதா (ரழி), (அபூஅப்துர் ரஹ்மான் என்ற) முஆத் இப்னு ஜபல் (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

''நீர் எங்கிருந்தாலும், அல்லாஹ்வை அஞ்சுவீராக! தீமையை(ச் செய்தால்) தொடர்ந்து நன்மையைச் செய்வாயாக! அது தீமையை அழித்துவிடும். அழகிய குணத்துடன் மக்களுடன் பழகுவாயாக!'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1987. இது 'ஹஸன்' என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٦٢ – الثَّالِثُ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ:" كُنْت خَلْفَ النَّبِيِّ ﷺ يَوْمًا فَقَالَ: يَا غُلَامُ إنِّي أُعَلِّمُك كَلِمَاتٍ: احْفَظْ اللَّهَ يَحْفَظْك احْفَظْ اللَّهَ تَجِدْهُ تُجَاهَك. إذَا سَأَلْت فَاسْأَلْ اللَّهَ وَإِذَا اسْتَعَنْت فَاسْتَعِنْ بِاَللَّهِ. وَاعْلَمْ أَنَّ الْأُمَّةَ لَوْ اجْتَمَعَتْ عَلَى أَنْ يَنْفَعُوك بِشَيْءٍ لَمْ يَنْفَعُوك إلَّا بِشَيْءٍ قَدْ كَتَبَهُ اللَّهُ لَك وَإِنْ اجْتَمَعُوا عَلَى أَنْ يَضُرُّوك بِشَيْءٍ لَمْ يَضُرُّوك إلَّا بِشَيْءٍ قَدْ كَتَبَهُ اللَّهُ عَلَيْك رُفِعَتْ الْأَقْلَامُ وَجَفَّتْ الصُّحُفُ!" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ. وَفِي رِوَايَةِ غَيْرِ التِّرْمِذِيِّ" احْفَظْ اللَّهَ تَجِدْهُ أَمَامَك تَعَرَّفْ إلَى اللَّهِ فِي الرَّخَاءِ يَعْرِفْك فِي الشِّدَّةِ وَاعْلَمْ أَنَّ مَا أَخْطَأَك لَمْ يَكُنْ لِيُصِيبَك وَمَا أَصَابَك لَمْ يَكُنْ لِيُخْطِئَك: وَاعْلَمْ أَنَّ النَّصْرَ مَعَ الصَّبْرِ وَأَنَّ الْفَرَجَ مَعَ الْكَرْبِ وَأَنَّ مَعَ الْعُسْرِ يُسْرًا".

**62** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களின் பின்னே (குதிரையில்) அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள், ''சிறுவரே! நிச்சயமாக நான் உமக்கு சில விஷயங்களைக் கற்றுத் தருகிறேன். அல்லாஹ்வின் கட்டளைகளை நீர் பேணுவீராக! உம்மை அவன் பாதுகாப்பான். அல்லாஹ்வை நீர் நினைவுகூர்ந்து

வருவீராக! உமக்கு முன்னே அவனை நீர் அறிவீர். நீர் கேட்டால் அல்லாஹ்விடம் கேட்பீராக! நீர் உதவி தேடினால் அல்லாஹ்விடமே உதவிதேடுவீராக! இந்த சமுதாயம், ஏதேனும் உமக்கு நன்மை செய்ய ஒன்று சேர்ந்தாலும், உமக்கு அல்லாஹ் எழுதி வைத்ததைத் தவிர எதையும் அவர்களால் கொடுக்க முடியாது. மேலும், ஏதேனும் உமக்கு தீமை செய்ய அவர்கள் ஒன்று சேர்ந்தாலும், உமக்கு அல்லாஹ் எழுதி வைத்திருந்தாலே தவிர, அவர்களால் உமக்கு தீங்கிழைக்க முடியாது. எழுதுகோல்கள் உயர்த்தப்பட்டு விட்டது. பதிவு ஏடுகள் சுருட்டப்பட்டு விட்டது என்பதை நீர் அறிந்து கொள்வீராக!'' என நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2516. இந்த ஹதீஸ் 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் குறிப்பிடுகிறார்கள்)**

திர்மிதீ அல்லாத மற்ற அறிவிப்பில் பின்வருமாறு உள்ளது:

"அல்லாஹ்வின் கட்டளைகளை நீ பேணு! உனக்கு முன்னே அவனைக் காண்பாய். செழிப்பான காலத்தில் அல்லாஹ்வை நீ நினைவு கொள். கஷ்டமான காலத்தில் உம்மை அவன் அறிவான். உமக்கு எது தவறிவிடுகிறதோ, இது உன்னைச் சேர்ந்தது அல்ல! உனக்கு எது கிடைத்ததோ, அது உன்னை விட்டும் தவறிவிடக் கூடியதுமல்ல. நிச்சயமாக உதவி தேடுவது பொறுமையுடன் உள்ளது. நிச்சயமாக சந்தோசம், கஷ்டத்துடன் உள்ளது. நிச்சயமாக துன்பத்துடன் இன்பம் உள்ளது என்பதை நீர் அறிவீராக!''

٦٣ – الرَّابِعُ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" إِنَّكُمْ لَتَعْمَلُونَ أَعْمَالاً هِيَ أَدَقُّ فِي أَعْيُنِكُمْ مِنَ الشَّعْرِ كُنَّا نَعُدُّهَا عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ مِنَ الْمُوبِقَاتِ" رَوَاهُ الْبُخَارِيُّ وَقَالَ:" الْمُوبِقَاتُ": الْمُهْلِكَاتُ.

**63** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் சில செயல்களைச் செய்கிறீர்கள். உங்களின் கண்களிலே அது முடியை விட சாதாரணமானதாக உள்ளது. (ஆனால்) இவை (மனிதர்களை) அழித்துவிடக் கூடியது'' என நபி (ஸல்) அவர்கள் காலத்தில் நாங்கள் கருதக்கூடியவர்களாக இருந்தோம். **(புகாரி:6492)**

٦٤ – الْخَامِسُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" إِنَّ اللَّهَ تَعَالَى يَغَارُ وَغَيْرَةُ اللَّهِ تَعَالَى أَنْ يَأْتِيَ الْمَرْءُ مَا حَرَّمَ اللَّهُ عَلَيْهِ" مُتَّفَقٌ عَلَيْهِ." وَالْغَيْرَةُ" بِفَتْحِ الْغَيْنِ: وَأَصْلُهَا الأَنَفَةُ.

**64** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக, அல்லாஹ் ரோஷம் கொள்கிறான். அல்லாஹ் தடுத்துள்ளவற்றை மனிதன் செய்யும் போதுதான், அல்லாஹ்வுக்கு ரோஷம் ஏற்படுகிறது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:5223. முஸ்லிம்:2761)**

٦٥ – السَّادِسُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ يَقُولُ:" إِنَّ ثَلاَثَةً مِنْ بَنِي إِسْرَائِيلَ أَبْرَصَ وَأَقْرَعَ وَأَعْمَى أَرَادَ اللَّهُ أَنْ يَبْتَلِيَهُمْ فَبَعَثَ إِلَيْهِمْ مَلَكًا فَأَتَى الأَبْرَصَ فَقَالَ: أَيُّ شَيْءٍ أَحَبُّ إِلَيْكَ؟ قَالَ: لَوْنٌ حَسَنٌ وَجِلْدٌ حَسَنٌ وَيَذْهَبُ عَنِّي الَّذِي قَدْ قَذَّرَنِي النَّاسُ ; فَمَسَحَهُ فَذَهَبَ عَنْهُ قَذَرُهُ وَأُعْطِيَ لَوْنًا حَسَنًا. فَقَالَ: فَأَيُّ الْمَالِ أَحَبُّ إِلَيْكَ؟ قَالَ: الأبِلُ – أَوْ قَالَ الْبَقَرُ – شَكَّ الرَّاوِي فَأُعْطِيَ نَاقَةً عُشَرَاءَ فَقَالَ: بَارَكَ اللَّهُ لَكَ فِيهَا: فَأَتَى الأَقْرَعَ فَقَالَ: أَيُّ شَيْءٍ أَحَبُّ إِلَيْكَ؟ قَالَ: شَعْرٌ حَسَنٌ وَيَذْهَبُ عَنِّي هَذَا الَّذِي قَذَّرَنِي النَّاسُ فَمَسَحَهُ فَذَهَبَ عَنْهُ وَأُعْطِيَ شَعْرًا حَسَنًا. قَالَ: فَأَيُّ الْمَالِ أَحَبُّ إِلَيْكَ؟ قَالَ: الْبَقَرُ فَأُعْطِيَ بَقَرَةً حَامِلاً وَقَالَ: بَارَكَ اللَّهُ لَكَ فِيهَا. فَأَتَى الأَعْمَى فَقَالَ: أَيُّ شَيْءٍ أَحَبُّ إِلَيْكَ؟ قَالَ: أَنْ يَرُدَّ اللَّهُ إِلَيَّ بَصَرِي فَأُبْصِرَ النَّاسَ فَمَسَحَهُ فَرَدَّ اللَّهُ إِلَيْهِ بَصَرَهُ. قَالَ: فَأَيُّ الْمَالِ أَحَبُّ إِلَيْكَ؟ قَالَ: الْغَنَمُ فَأُعْطِيَ شَاةً وَالِدًا فَأُنْتِجَ هَذَانِ وَوَلَّدَ هَذَا

فَكَانَ لِهَذَا وَادٍ مِنَ الأبِلِ وَلِهَذَا وَادٍ مِنَ الْبَقَرِ وَلِهَذَا وَادٍ مِنَ الْغَنَمِ! ثُمَّ إِنَّهُ أَتَى الأَبْرَصَ فِي صُورَتِهِ وَهَيْئَتِهِ فَقَالَ: رَجُلٌ مِسْكِينٌ قَدْ انْقَطَعَتْ بِيَ الْحِبَالُ فِي سَفَرِي فَلاَ بَلاَغَ لِي الْيَوْمَ إِلاَّ بِاللَّهِ ثُمَّ بِكَ أَسْأَلُكَ بِالَّذِي أَعْطَاكَ اللَّوْنَ الْحَسَنَ وَالْجِلْدَ الْحَسَنَ وَالْمَالَ بَعِيرًا أَتَبَلَّغُ بِهِ فِي سَفَرِي فَقَالَ: الْحُقُوقُ كَثِيرَةٌ. فَقَالَ: كَأَنِّي أَعْرِفُكَ أَلَمْ تَكُنْ أَبْرَصَ يَقْذُرُكَ النَّاسُ فَقِيرًا فَأَعْطَاكَ اللَّهُ!؟ فَقَالَ: إِنَّمَا وَرِثْتُ هَذَا الْمَالَ كَابِرًا عَنْ كَابِرٍ. فَقَالَ: إِنْ كُنْتَ كَاذِبًا فَصَيَّرَكَ اللَّهُ إِلَى مَا كُنْتَ. وَأَتَى الأَقْرَعَ فِي صُورَتِهِ وَهَيْئَتِهِ فَقَالَ لَهُ مِثْلَ مَا قَالَ لِهَذَا وَرَدَّ عَلَيْهِ مِثْلَ مَا رَدَّ هَذَا. فَقَالَ: إِنْ كُنْتَ كَاذِبًا فَصَيَّرَكَ اللَّهُ إِلَى مَا كُنْتَ. وَأَتَى الأَعْمَى فِي صُورَتِهِ وَهَيْئَتِهِ فَقَالَ: رَجُلٌ مِسْكِينٌ وَابْنُ سَبِيلٍ انْقَطَعَتْ بِي الْحِبَالُ فِي سَفَرِي فَلاَ بَلاَغَ لِي الْيَوْمَ إِلاَّ بِاللَّهِ ثُمَّ بِكَ أَسْأَلُكَ بِالَّذِي رَدَّ عَلَيْكَ بَصَرَكَ شَاةً أَتَبَلَّغُ بِهَا فِي سَفَرِي؟ فَقَالَ: قَدْ كُنْتُ أَعْمَى فَرَدَّ اللَّهُ إِلَيَّ بَصَرِي فَخُذْ مَا شِئْتَ وَدَعْ مَا شِئْتَ فَوَاللَّهِ لاَ أُجْهِدُكَ الْيَوْمَ بِشَيْءٍ أَخَذْتَهُ لِلَّهِ عَزَّ وَجَلَّ. فَقَالَ: أَمْسِكْ مَالَكَ فَإِنَّمَا ابْتُلِيتُمْ فَقَدْ رَضِيَ اللَّهُ عَنْكَ وَسَخِطَ عَلَى صَاحِبَيْكَ" مُتَّفَقٌ عَلَيْهِ." وَالنَّاقَةُ الْعُشَرَاءُ" بِضَمِّ الْعَيْنِ وَفَتْحِ الشِّينِ وَبِالْمَدِّ: هِيَ الْحَامِلُ: قَوْلُهُ:" أَنْتَجَ" وَفِي رِوَايَةٍ" فَنَتَجَ" مَعْنَاهُ: تَوَلَّى نِتَاجَهَا وَالنَّاتِجُ لِلنَّاقَةِ كَالْقَابِلَةِ لِلْمَرْأَةِ. وَقَوْلُهُ" وَلَّدَ هَذَا" هُوَ بِتَشْدِيدِ اللاَّمِ: أَيْ تَوَلَّى وِلاَدَتَهَا وَهُوَ بِمَعْنَى أَنْتَجَ فِي النَّاقَةِ فَالْمُوَلِّدُ وَالنَّاتِجُ وَالْقَابِلَةُ بِمَعْنًى: لَكِنْ هَذَا لِلْحَيَوَانِ وَذَاكَ لِغَيْرِهِ. وَقَوْلُهُ" انْقَطَعَتْ بِي الْحِبَالُ" هُوَ بِالْحَاءِ الْمُهْمَلَةِ وَالْبَاءِ الْمُوَحَّدَةِ: أَيْ الأَسْبَابُ. وَقَوْلُهُ:" لاَ أُجْهِدُكَ" مَعْنَاهُ لاَ أَشُقُّ عَلَيْكَ فِي رَدِّ شَيْءٍ تَأْخُذُهُ أَوْ تَطْلُبُهُ مِنْ مَالِي. وَفِي رِوَايَةِ الْبُخَارِيِّ:" لاَ أَحْمَدُكَ" بِالْحَاءِ الْمُهْمَلَةِ وَالْمِيمِ وَمَعْنَاهُ: لاَ أَحْمَدُكَ بِتَرْكِ شَيْءٍ تَحْتَاجُ إِلَيْهِ كَمَا قَالُوا: لَيْسَ عَلَى طُولِ الْحَيَاةِ نَدَمٌ: أَيْ عَلَى فَوَاتِ طُولِهَا.

**65** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பனீ இஸ்ரவேலர்களில் வெண்தோல் நோயுடையவர், மொட்டைத் தலையன், குருடன் என மூவர் இருந்தனர். அவர்களைச் சோதிக்க, அல்லாஹ் நாடினான். அவர்களிடம் ஒரு வானவரை அனுப்பினான். அவர் வெண்தோல் நோயுடையவரிடம் வந்தார். “உனக்கு மிக விருப்பமானது எது?” என்று கேட்டார். “நல்ல நிறம், நல்ல தோல் வேண்டும். மக்கள் என்னை வெறுக்கக் கூடியவை என்னை விட்டும் போக வேண்டும்” என்று கூறினார். உடனே அவரை வானவர் தடவினார். அவரின் வெறுப்பான நிறம், அவரை விட்டும் நீங்கியது. அழகிய நிறமும் கொடுக்கப்பட்டது. “உனக்கு மிக விருப்பமான சொத்து என்ன (வேண்டும்)?” என்று வானவர் கேட்டார். “ஒட்டகம் (அல்லது ஆடு)” என்று கூறினார். அவருக்கு ஒரு சினை ஒட்டகம் வழங்கப்பட்டது. “அல்லாஹ் உனக்குப் ‘பரக்கத்’ செய்வானாக” என்று வானவர் (வாழ்த்துக்) கூறினார்.

மொட்டைத் தலையனிடம் வானவர் வந்தார். “உனக்கு மிக விருப்பமானது என்ன?” என்று வானவர் கேட்டார். “அழகியமுடி வேண்டும். மக்கள் என்னை வெறுக்கும் இந்த நிலை என்னை விட்டும் போக வேண்டும்” என்று கூறினார். அவரை வானவர் தடவினார். அவரை விட்டும் அது நீங்கியது. அழகிய முடியாக (அவருக்கு)க் கொடுக்கப்பட்டது. “உனக்கு மிக விருப்பமான சொத்து எது?” என்று கேட்டார். “பசுமாடு” என்று கூறினார். சினையான பசுமாடு (அவருக்குக்) கொடுக்கப்பட்டது. “இதிலே உனக்கு அல்லாஹ் பரக்கத் செய்வானாக” என்று வானவர் கூறினார்.

குருடரிடம் வானவர் வந்தார். “உமக்கு மிக விருப்பமானது என்ன?” என்று கேட்டார். “எனக்கு என் பார்வையை அல்லாஹ் திருப்பித்தர வேண்டும். மக்களை நான் பார்க்கவேண்டும்” என்று அவர் கூறினார். அவரை வானவர் தடவினார். அவரின் பார்வையை அவருக்கு அல்லாஹ் திருப்பித் தந்துவிட்டான். “உனக்கு மிக விருப்பமான சொத்து எது?” என்று வானவர் கேட்டார். “ஆடு” என்று கூறினார். சினை ஆடு அவருக்குக் கொடுக்கப்பட்டது. அவைகள் கன்று போட்டன. ஒருவருக்கு ஒட்டக மந்தையும், மற்றொருவருக்கு மாட்டுப் பண்ணையும், மூன்றாமவருக்குஆட்டு மந்தையும் ஏற்பட்டன.

பின்பு வானவர், வெண்தோல் நோய் இருந்தவரிடம், அவரது (முந்தைய வெண்தோல் நோய்) தோற்றத்தில் வந்தார். “நான் ஏழை, என் பயணத்தின் போது, பொருட்கள் என்னிடமிருந்து தொலைந்து விட்டன. இன்று அல்லாஹ்வையும் உன்னையும் தவிர எனக்கு உதவுபவர் இல்லை. அழகிய நிறத்தையும், அழகிய தோலையும், சொத்தையும் உனக்குக் கொடுத்தவன் பெயரால் உன்னிடம் ஒட்டகை ஒன்றைக் கேட்கிறேன். (தந்தால்) என் பயணத்தில் அதை வைத்துக் கொள்வேன்” என்று வானவர் கேட்டார். அதற்கு, “(எனக்கு) பல கடமைகள் உள்ளன. (போ! போ!)” என்று கூறினார். “நான் உம்மை அறிவேன். மக்கள் உன்னை வெறுக்கும் வெண்தோல் நோயுடையவராக, ஏழையாக இருந்த உனக்கு அல்லாஹ் கொடுக்கவில்லையா?” என்று வானவர் கூறினார். “பரம்பரை பரம்பரையாக இந்தச் சொத்துக்கு நான் வாரிசு” என்று அவர் கூறினார். “நீ பொய்யனாக இருப்பதால், நீ (முன்பு) இருந்தபடியே அல்லாஹ் உன்னை ஆக்குவானாக!” என்று வானவர் கூறினார்.

பின்பு மொட்டைத் தலையனிடம் (அவரது முந்தைய மொட்டை) உருவிலே வந்தார். முன்னவரிடம் கூறியது போலவே இவரிடமும் வானவர் கேட்டார். அவர் கூறிய பதிலைப் போலவே, இவரும் கூறினார். “நீ பொய்யனாக இருப்பதால் அல்லாஹ், நீ முன்பிருந்தபடியே உம்மை ஆக்குவானாக!” என்று வானவர் கூறினார்.

குருடராக இருந்தவரிடம், அவரது முந்தைய தோற்றத்திலே வானவர் வந்தார். “நான் ஏழை, வழிப்போக்கன், என் பயணத்திலே என் பொருட்கள் என்னை விட்டும் தவறிவிட்டது. இன்று அல்லாஹ்வையும் பின்பு உம்மையும் தவிர எனக்கு உதவுபவர் இல்லை. உம் பார்வையை உமக்குத் திருப்பி அளித்தவன் பெயரால் ஆடு ஒன்றை உம்மிடம் கேட்கிறேன். அதன் மூலம் என் பயணத்திற்கு பயன்படுத்துவேன்” என்று கூறினார். “நான் குருடனாக இருந்தேன். எனக்கு என் பார்வையை அல்லாஹ் திருப்பித் தந்தான். நீ விரும்பியதை எடு. நீ விரும்பியதை விட்டுப் போ! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இன்று நீ எடுத்துக் கொண்ட எதையும், அல்லாஹ்வுக்காக உமக்கு நான் அளிக்கத் தயங்க மாட்டேன்” என்று அவர் கூறினார். “உமக்கு உள்ளதை நீயே வைத்துக் கொள்வீராக! நீங்கள் சோதிக்கப்பட்டீர்கள். உம்மால் அல்லாஹ் திருப்தியுற்றான். உம்முடைய இரு தோழர்கள் மீதும் கோபமுற்றான்!” என்று வானவர் கூறினார். இதை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:3464. முஸ்லிம்:2964)**

٦٦ – السَّابِعُ عَنْ أَبِي يَعْلَى شَدَّادِ بْنِ أَوْسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" الْكَيِّسُ مَنْ دَانَ نَفْسَهُ وَعَمِلَ لِمَا بَعْدَ الْمَوْتِ وَالْعَاجِزُ مَنْ أَتْبَعَ نَفْسَهُ هَوَاهَا وَتَمَنَّى عَلَى اللَّهِ الأَمَانِيَّ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ. قَالَ التِّرْمِذِيُّ وَغَيْرُهُ مِنَ الْعُلَمَاءِ: مَعْنَى " دَانَ نَفْسَهُ": حَاسَبَهَا.

**66** (அபூயஃலா என்ற) ஷத்தாத் இப்னு அவ்ஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அறிவாளி என்பவன், தன்னைப் பரிசோதனை செய்து, மரணத்திற்குப் பின் உள்ள வாழ்வுக்காக செயல்படுபவனேயாவான். இயலாதவன் என்பவன், தன் மனோஇச்சைகளைத் தானே பின்பற்றி, அல்லாஹ்விடம் (உதவிக்கு) ஆதரவு வைத்தவன் ஆவான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2459. இந்த ஹதீஸ் ‘ஹஸன்’ என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். அபூபக்ர் இப்னு அப்துல்லாஹ் இப்னு அபீமர்யம் அல் அஸ்ஸானீ என்ற பலவீனமானவர் அறிவிப்பாளர் வரிசையில் இடம் பெறுகிறார்)**

٦٧ – الثَّامِنُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مِنْ حُسْنِ إِسْلاَمِ الْمَرْءِ تَرْكُهُ مَا لاَ يَعْنِيه" حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ التِّرْمِذِيُّ وَغَيْرُهُ.

**67** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு மனிதனின் அழகிய இஸ்லாமிய பண்புகளில், அவன் தனக்கு அவசியம் இல்லாததை விட்டு விடுவதும் ஒன்றாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2317. இந்த ஹதீஸ் 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٦٨ – التَّاسِعُ عَنْ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ: " لاَ يُسْأَلُ الرَّجُلُ فِيمَ ضَرَبَ امْرَأَتَهُ" رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ.

**68** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தன் மனைவியை அடித்தது குறித்து, அவர் கேள்வி கேட்கப்படமாட்டார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:2147. இதில் தாவூத் இப்னு யஸீத் அல் அவ்தீ என்ற பலவீனமானவர் இடம் பெறுகிறார்)**

## ٦ – باب فى التقوى

## பாடம் : 6 - இறையச்சம் பற்றி . . .

قَالَ اللَّهُ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ حَقَّ تُقَاتِهِ وَقَالَ تَعَالَى: فَاتَّقُوا اللَّهَ مَا اسْتَطَعْتُمْ. وَهَذِهِ الآيَةُ مُبَيِّنَةٌ لِلْمُرَادِ مِنْ الأُولَى. وَقَالَ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَقُولُوا قَوْلاً سَدِيدًا. وَالآيَاتُ فِي الأَمْرِ بِالتَّقْوَى كَثِيرَةٌ مَعْلُومَةٌ وَقَالَ تَعَالَى: وَمَنْ يَتَّقِ اللَّهَ يَجْعَلْ لَهُ مَخْرَجًا وَيَرْزُقْهُ مِنْ حَيْثُ لاَ يَحْتَسِبُ وَقَالَ تَعَالَى: إِنْ تَتَّقُوا اللَّهَ يَجْعَلْ لَكُمْ فُرْقَانًا وَيُكَفِّرْ عَنْكُمْ سَيِّئَاتِكُمْ وَيَغْفِرْ لَكُمْ وَاللَّهُ ذُو الْفَضْلِ الْعَظِيمِ وَالآيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ. أَفَادَتْ الآيَاتُ: وُجُوبُ الْتِزَامِ تَقْوَى اللَّهِ عَزَّ وَجَلَّ بِالْقَوْلِ وَالْفِعْلِ وَأَنَّ تَقْوَى اللَّهِ عَزَّ وَجَلَّ سَبَبُ النَّجَاةِ مِنْ الشَّدَائِدِ وَجَلْبِ الرِّزْقِ الْحَلاَلِ وَأَنَّ مَنْ الْتَزَمَ تَقْوَى اللَّهِ تَعَالَى جَعَلَ اللَّهُ فِي قَلْبِهِ وَعَقْلِهِ نُورًا يَعْرِفُ بِهِ الْحَقَّ فَيَتَّبِعَهُ وَيُمَيِّزُ الْبَاطِلَ فَيَجْتَنِبَهُ فَيَسْتَمْطِرُ بِذَلِكَ عَفْوَ اللَّهِ وَمَغْفِرَتَهُ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *'இறைவிசுவாசிகளே! அஞ்சும் முறைப்படி அல்லாஹ்வை அஞ்சுங்கள்...' (3:102)*

*நீங்கள் இயன்ற வரை அல்லாஹ்வை அஞ்சுங்கள்... (64:16)*

(இந்த வசனம் முந்திய வசனத்தை விளக்குகிறது)

*இறை விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வை அஞ்சுங்கள். நேர்மையான சொல்லாகச் சொல்லுங்கள். (33:70)*

*'...ஒருவன் அல்லாஹ்வை அஞ்சினால், அவனுக்கு (இலகுவான) வழியை ஏற்படுத்துவான். மேலும் அவன் நினைத்திராத வகையில் உணவளிப்பான்... (65:2,3)*

*இறை விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வை அஞ்சினால், உங்களுக்கு அவன் நேர்வழியைக் காட்டுவான். உங்களை விட்டும் உங்கள் தீமைகளை அழிப்பான். உங்களை மன்னிப்பான். அல்லாஹ் மகத்தான கருணையுடையவன் ஆவான். (8:29)*

(இந்தப் பாடத்தின் கீழ் உள்ள வசனங்கள் அதிகம் உள்ளன)

٦٩ – وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قِيلَ يَا رَسُولَ اللَّهِ مَنْ أَكْرَمُ النَّاسِ؟ قَالَ:" أَتْقَاهُمْ". فَقَالُوا: لَيْسَ عَنْ هَذَا نَسْأَلُكَ قَالَ: فَيُوسُفُ نَبِيُّ اللَّهِ بْنُ نَبِيِّ اللَّهِ بْنِ نَبِيِّ اللَّهِ بْنِ خَلِيلِ اللَّهِ". قَالُوا: لَيْسَ عَنْ هَذَا نَسْأَلُكَ قَالَ: فَعَنْ مَعَادِنِ الْعَرَبِ تَسْأَلُونِي؟ خِيَارُهُمْ فِي الْجَاهِلِيَّةِ خِيَارُهُمْ فِي الأَسْلاَمِ إِذَا فَقُهُوا" مُتَّفَقٌ عَلَيْهِ. وَ" فَقُهُوا" بِضَمِّ الْقَافِ عَلَى الْمَشْهُورِ وَحُكِيَ كَسْرُهَا: أَيْ عَلِمُوا أَحْكَامَ الشَّرْعِ.

**69** அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

இறைத்தூதர் அவர்களிடம், "மனிதர்களில் மிக சிறந்தவர் யார்?" என்று கேட்கப்பட்டது. "அவர்களில் அதிக இறையச்சமுடையவர் தான்" என நபி (ஸல்) கூறினார்கள். "நாங்கள் இதைப் பற்றி உங்களிடம் கேட்கவில்லை" என நபித்தோழர்கள் கூறினர். "வம்சச் சிறப்பில் யூசுப் ஆவார். அவரும் நபி. அவரது தந்தை யஃகூபும் நபி. அவரது தந்தை இஸ்ஹாக்கும் நபி. அவரது தந்தை இப்ராஹீமும் நபி. (எனவே யூசுபே சிறந்தவர்)" என்று கூறினார்கள். "இது பற்றி உங்களிடம் நாங்கள் கேட்கவில்லை" என்று நபித்தோழர்கள் கூறினர். அதற்கு, "அரபு கோத்திரத்தாரில் எவர் என்று நீங்கள் கேட்கிறீர்களா? அறியாமைக் காலத்தில் அவர்களில் சிறந்தவர், மார்க்கத்தை விளங்கி இருந்தால் இஸ்லாத்திலும் அவரே சிறந்தவராவார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3353. முஸ்லிம்:2526)**

٧٠ – الثَّانِي عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" إِنَّ الدُّنْيَا حُلْوَةٌ خَضِرَةٌ وَإِنَّ اللَّهَ مُسْتَخْلِفُكُمْ فِيهَا فَيَنْظُرَ كَيْفَ تَعْمَلُونَ فَاتَّقُوا الدُّنْيَا وَاتَّقُوا النِّسَاءَ ; فَإِنَّ أَوَّلَ فِتْنَةِ بَنِي إِسْرَائِيلَ كَانَتْ فِي النِّسَاءِ" رَوَاهُ مُسْلِمٌ.

**70** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! உலகம் இனிமையானதாகவும், செழுமையானதாகவும் உள்ளது. நிச்சயமாக, அல்லாஹ் இதில் உங்களை பிரதிநிதியாக ஆக்கி உள்ளான். நீங்கள் என்ன செய்கிறீர்கள் எனப் பார்ப்பான். எனவே உலகைப் பயந்து கொள்ளுங்கள். மேலும் பெண்களைப் பயந்து கொள்ளுங்கள். பனீ இஸ்ரவேலர்களிடம் ஏற்பட்ட குழப்பத்தில் முதன்மையானது, பெண்கள் விஷயத்தில் தான் ஏற்பட்டது" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2742)**

٧١ – الثَّالِثُ عَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَقُولُ:" اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْهُدَى وَالتُّقَى وَالْعَفَافَ وَالْغِنَى" رَوَاهُ مُسْلِمٌ.

**71** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைவா! உன்னிடம் நேர்வழியை, இறையச்சத்தை, பத்தினித்தனத்தையும் மற்றும் செல்வத்தையும் கேட்கின்றேன்" என்று நபி (ஸல்) கூறக் கூடியவர்களாக இருந்தார்கள்.

**(முஸ்லிம்:2721)**

٧٢ – الرَّابِعُ عَنْ أَبِي طَرِيفٍ عَدِيِّ بْنِ حَاتِمٍ الطَّائِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" مَنْ حَلَفَ عَلَى يَمِينٍ ثُمَّ رَأَى أَتْقَى لِلَّهِ مِنْهَا فَلْيَأْتِ التَّقْوَى" رَوَاهُ مُسْلِمٌ.

**72** (அபூதரீஃப் என்ற) இப்னு ஹாதிம் தாயீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவன் சத்தியம் செய்து, அதையும் விட அல்லாஹ்வை அஞ்ச வேண்டிய ஒன்றை அவன் கண்டால், இறைவனை அஞ்சுவதைச் செய்யட்டும்" என்று நபி(ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். **(முஸ்லிம்:1651)**

٧٣ – الْخَامِسُ عَنْ أَبِي أُمَامَةَ صُدَيِّ بْنِ عَجْلَانَ الْبَاهِلِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَخْطُبُ فِي حَجَّةِ الْوَدَاعِ فَقَالَ: اتَّقُوا اللَّهَ وَصَلُّوا خَمْسَكُمْ وَصُومُوا شَهْرَكُمْ وَأَدُّوا زَكَاةَ أَمْوَالِكُمْ وَأَطِيعُوا أُمَرَاءَكُمْ تَدْخُلُوا جَنَّةَ رَبِّكُمْ" رَوَاهُ التِّرْمِذِيُّ فِي آخِرِ كِتَابِ الصَّلَاةِ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**73** (அபூஉமாமா என்ற) சுதய் இப்னு அஜ்லான் அல்பாஹிலி (ரழி) அறிவிக்கிறார்கள்:

இறுதி ஹஜ்ஜின் போது நபி (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்திட நான் கேட்டேன். அப்போது, “அல்லாஹ்வை அஞ்சுங்கள். ஐந்து நேரமும் தொழுங்கள். உங்கள் (ரமளான்) மாதத்தில் நோன்பு வையுங்கள். உங்களின் பொருள் வரியை (ஜகாத்தை) நிறைவேற்றுங்கள். உங்களின் தலைவர்களுக்குக் கட்டுப்படுங்கள். (இதனால்) உங்கள் இறைவனின் சொர்க்கத்தில் நுழைவீர்கள்” என நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:616. இந்த ஹதீஸ் 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٧ – باب في اليقين والتوكل

### பாடம் : 7 - மன உறுதி மற்றும் பொறுப்பாக்குதல்

قَالَ اللَّهُ تَعَالَى: وَلَمَّا رَأَى الْمُؤْمِنُونَ الأَحْزَابَ قَالُوا هَذَا مَا وَعَدَنَا اللَّهُ وَرَسُولُهُ وَصَدَقَ اللَّهُ وَرَسُولُهُ وَمَا زَادَهُمْ إِلاَّ إِيمَانًا وَتَسْلِيمًا وَقَالَ تَعَالَى: الَّذِينَ قَالَ لَهُمُ النَّاسُ إِنَّ النَّاسَ قَدْ جَمَعُوا لَكُمْ فَاخْشَوْهُمْ فَزَادَهُمْ إِيمَانًا وَقَالُوا حَسْبُنَا اللَّهُ وَنِعْمَ الْوَكِيلُ فَانْقَلَبُوا بِنِعْمَةٍ مِنَ اللَّهِ وَفَضْلٍ لَمْ يَمْسَسْهُمْ سُوءٌ وَاتَّبَعُوا رِضْوَانَ اللَّهِ وَاللَّهُ ذُو فَضْلٍ عَظِيمٍ. وَقَالَ تَعَالَى: وَتَوَكَّلْ عَلَى الْحَيِّ الَّذِي لاَ يَمُوتُ. وَقَالَ تَعَالَى: وَعَلَى اللَّهِ فَلْيَتَوَكَّلِ الْمُؤْمِنُونَ. وَقَالَ تَعَالَى: فَإِذَا عَزَمْتَ فَتَوَكَّلْ عَلَى اللَّهِ. وَالأَيَاتُ فِي الأَمْرِ بِالتَّوَكُّلِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ. وَقَالَ تَعَالَى: وَمَنْ يَتَوَكَّلْ عَلَى اللَّهِ فَهُوَ حَسْبُهُ: أَيْ كَافِيهِ: وَقَالَ تَعَالَى: إِنَّمَا الْمُؤْمِنُونَ الَّذِينَ إِذَا ذُكِرَ اللَّهُ وَجِلَتْ قُلُوبُهُمْ وَإِذَا تُلِيَتْ عَلَيهِم آيَاتُهُ زَادَتْهُمْ إِيمَانًا وَعَلَى رَبِّهِمْ يَتَوَكَّلُونَ. وَالأَيَاتُ فِي فَضْلِ التَّوَكُّلِ كَثِيرَةٌ مَعْرُوفَةٌ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *மேலும் இறைவிசுவாசிகள் எதிரிப்படைகளைக் கண்டபோது, 'இதுதான் அல்லாஹ்வும் அவனது தூதரும் எங்களுக்கு வாக்களித்தவையாகும். அல்லாஹ்வும், அவனது தூதரும் உண்மையே கூறினர் என்று கூறினார்கள். அவர்களுக்கு இறை நம்பிக்கையையும், வழிபடுவதையுமே தவிர வேறொன்றையும் அதிகப்படுத்தவில்லை. (33:22)*

*மக்களில் சிலர், அவர்களிடம் 'நிச்சயமாக மக்கள் உங்களுக்கு எதிராக ஒன்று திரண்டு விட்டார்கள். அவர்களைப் பயப்படுங்கள்' என்று கூறி (மிரட்டி)னர். இது அவர்களுக்கு இறை நம்பிக்கையையே அதிகப்படுத்தியது. மேலும் அவர்கள் 'எங்களுக்கு அல்லாஹ் போதுமானவன். அவனே சிறந்த பாதுகாவலன்' என்று கூறினார்கள்.*

*இதனால் அல்லாஹ்விடமிருந்துள்ள அருட்கொடையையும், சிறப்பையும் அவர்கள் பெற்றுத் திரும்பினார்கள். அவர்களைத் தீமை எதுவும் தொடவில்லை. அல்லாஹ்வின் திருப்தியைப் பின்பற்றினார்கள். அல்லாஹ் மகத்தான சிறப்புடையவன். (3:173, 174)*

*மேலும் (நபியே!) என்றென்றும் உயிருடன் இருப்பவனும் ஒருபோதும் மரணிக்காதவனுமான இறைவனை முழுவதும் சார்ந்திருப்பீராக! (25:58)*

*'...அல்லாஹ்வையே விசுவாசிகள் பொறுப்பாக்கிக் கொள்ளட்டும்! (14:11)*

*'...நீர் முடிவு செய்துவிட்டால், அல்லாஹ்வையே பொறுப்பாக்குவீராக!... (3:159)*

*'...அல்லாஹ்வை ஒருவன் பொறுப்பாக்கி வைத்தால், அவனே அவனுக்குப் போதுமானவன்... (65:3)*

*நிச்சயமாக! இறைவிசுவாசிகளிடம் 'அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டால், அவர்களின் இதயங்கள் நடுங்கிவிடும். அவர்களிடம் அவனது வசனங்கள் ஓதப்பட்டால், அது அவர்களுக்கு இறை நம்பிக்கையை அதிகப்படுத்தும். அவர்களின் இறைவனையே பொறுப்பாக்குவார்கள். (8:2)*

(பொறுப்பாக்குதலின் சிறப்புப் பற்றி அறியத்தக்க அதிக வசனங்கள் உள்ளன.)

٧٤ – وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" عُرِضَتْ عَلَيَّ الأُمَمُ فَرَأَيْت النَّبِيَّ وَمَعَهُ الرُّهَيْطُ وَالنَّبِيَّ وَمَعَهُ الرَّجُلُ وَالرَّجُلاَنِ وَالنَّبِيَّ لَيْسَ مَعَهُ أَحَدٌ إِذْ رُفِعَ لِي سَوَادٌ عَظِيمٌ فَظَنَنْت أَنَّهُمْ أُمَّتِي. فَقِيلَ لِي: هَذَا مُوسَى وَقَوْمُهُ وَلَكِنْ اُنْظُرْ إِلَى الأُفُقِ الأخرِ فَإِذَا سَوَادٌ عَظِيمٌ فَقِيلَ لِي: هَذِهِ أُمَّتُك وَمَعَهُمْ سَبْعُونَ أَلْفًا يَدْخُلُونَ الْجَنَّةَ بِغَيْرِ حِسَابٍ وَلاَ عَذَابٍ". ثُمَّ نَهَضَ فَدَخَلَ مَنْزِلَهُ فَخَاضَ النَّاسُ فِي أُولَئِكَ الَّذِينَ يَدْخُلُونَ الْجَنَّةَ بِلاَ حِسَابٍ وَلاَ عَذَابٍ فَقَالَ بَعْضُهُمْ: فَلَعَلَّهُمْ الَّذِينَ صَحِبُوا رَسُولَ اللَّه ﷺ. وَقَالَ بَعْضُهُمْ: فَلَعَلَّهُمْ الَّذِينَ وُلِدُوا فِي الأِسْلاَمِ فَلَمْ يُشْرِكُوا بِاَللَّه – وَذَكَرُوا أَشْيَاءَ – فَخَرَجَ عَلَيْهِمْ رَسُولُ اللَّه ﷺ فَقَالَ:" مَا الَّذِي تَخُوضُونَ فِيهِ؟" فَأَخْبَرُوهُ فَقَالَ:" هُمُ الَّذِينَ لاَ يَرْقُونَ وَلاَ يَسْتَرْقُونَ وَلاَ يَتَطَيَّرُونَ وَعَلَى رَبِّهِمْ يَتَوَكَّلُونَ". فَقَامَ عُكَّاشَةُ بْنُ مِحْصَنٍ فَقَالَ: اُدْعُ اللَّهَ أَنْ يَجْعَلَنِي مِنْهُمْ فَقَالَ:" أَنْتَ مِنْهُمْ" ثُمَّ قَامَ رَجُلٌ آخَرُ فَقَالَ: اُدْعُ اللَّهَ أَنْ يَجْعَلَنِي مِنْهُمْ فَقَالَ:" سَبَقَك بِهَا عُكَّاشَةُ" مُتَّفَقٌ عَلَيْه." الرُّهَيْطُ" بِضَمِّ الرَّاءِ تَصْغِيرُ رَهْطٍ وَهُمْ دُونَ عَشَرَةِ أَنْفُسٍ:" وَالأُفُقُ" النَّاحِيَةُ وَالْجَانِبُ." وَعُكَّاشَةُ" بِضَمِّ الْعَيْنِ وَتَشْدِيدِ الْكَافِ وَبِتَخْفِيفِهَا وَالتَّشْدِيدُ أَفْصَحُ.

**74** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என்னிடம் பல சமுதாயங்கள் எடுத்துக் காண்பிக்கப்பட்டன. ஒரு நபியையும் அவருடன் சிறு கூட்டமும் இருக்கக் கண்டேன். ஒரு நபியை அவருடன் ஒருவர் அல்லது இருவர் எனவும்; ஒரு நபியை அவருடன், எவரும் இல்லாத நிலையிலும் கண்டேன். அப்போது பெரும் கூட்டம் எனக்குக் காட்டப்பட்டது. இவர்கள் தான் என் சமுதாயம் என்று எண்ணினேன். "இது மூஸாவும், அவரது கூட்டத்தினரும் ஆவர். எனினும், அங்கே பாருங்கள்" என்று என்னிடம் கூறப்பட்டது. அங்கே பெரும் கூட்டம் உள்ளதைப் பார்த்தேன். "மற்றொரு திசையில் பார்ப்பீராக!" என்று என்னிடம் கூறப்பட்டது. அப்போது அங்கே ஒரு பெரும் கூட்டம் இருந்தது. "இதுதான் உமது சமுதாயம். இவர்களில் 70 ஆயிரம் பேர் சொர்க்கத்தில் கேள்வி கணக்கின்றி, வேதனையின்றி நுழைவார்கள்" என்று என்னிடம் கூறப்பட்டது என்று கூறிய நபி (ஸல்) அவர்கள் எழுந்து, தன் வீட்டுக்குள் நுழைந்தார்கள். கேள்வி கணக்கின்றி, வேதனையின்றி நுழைபவர்கள் யார்? என மக்கள் விவாதிக்கச் செய்தனர். "நபி (ஸல்) அவர்களைச் சந்தித்த தோழர்கள் தான் அவர்கள்" என அவர்களில் சிலர் கூறினர். "முஸ்லிமாகவே பிறந்து, அல்லாஹ்வுக்கே எதையும் இணை வைக்காத நபர்கள் அவர்கள்" என்று அவர்களில் சிலர் கூறினர். அவர்கள், இவர்கள் என பலவாறாக மக்கள் பேசிக் கொண்டனர்.

அவர்களிடையே நபி (ஸல்) அவர்கள் மீண்டும் வந்தார்கள். "எது விஷயமாக நீங்கள் விவாதம் செய்கிறீர்கள்?" என்று கேட்டார்கள். அவர்களிடம் நபித்தோழர்கள் அவ்விஷயத்தை கூறினர். "அவர்கள் ஓதிப் பார்க்காதவர்கள், பிறரிடம் ஓதிப் பார்க்கும்படி வேண்டாதவர்கள், பறவை சகுனம் பார்க்காதவர்கள். மேலும், தங்களின் இறைவனையே பொறுப்பாக்கியவர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். உடனே உக்காஷா இப்னு முஹ்ஸின் (ரழி) என்பவர் எழுந்து, "அவர்களில் என்னையும் ஆக்கிட அல்லாஹ்விடம் துஆச் செய்யுங்கள்!" என்று கேட்டார். "அவர்களில் நீயும் ஒருவர்தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். பின்பு மற்றொரு மனிதர் எழுந்து நின்று, "அவர்களில் என்னையும் ஆக்கிட அல்லாஹ்விடம் துஆச் செய்யுங்கள்" என்று கேட்டார். "இதில் உக்காஷா உம்மை முந்திவிட்டார்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5705. முஸ்லிம்:220)**

٧٥ – الثَّاني عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَيْضًا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَقُولُ:" اللَّهُمَّ لَكَ أَسْلَمْتُ وَبِكَ آمَنْتُ وَعَلَيْكَ تَوَكَّلْتُ وَإِلَيْكَ أَنَبْتُ وَبِكَ خَاصَمْتُ اللَّهُمَّ أَعُوذُ بِعِزَّتِكَ ; لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَنْ تُضِلَّنِي أَنْتَ الْحَيُّ الْقَيُّومُ الَّذِي لاَ يَمُوتُ وَالْجِنُّ وَالأَنْسُ يَمُوتُونَ" مُتَّفَقٌ عَلَيْهِ وَهَذَا لَفْظُ مُسْلِمٍ وَاخْتَصَرَهُ الْبُخَارِيُّ.

**75** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹும்ம லக அஸ்லம்து வபிக ஆமன்து, வ அலய்க தவக்கல்து, வஇலய்க அனப்து, வபிக காஸம்து, அல்லாஹும்ம அஊது பி இஸ்ஸதிக்க லாயிலாஹ இல்லா அன்த அன்துளில்லனீ, அன்தல் ஹய்யுல்லஃதி லா யமூது வல்ஜின்னு, வல் இன்சு யமூதூன்” என்று நபி (ஸல்) கூறக்கூடியவர்களாக இருந்தனர். **(முஸ்லிம்:2717. புகாரி(7383)யில் சுருக்கமாக இடம் பெற்றுள்ளது)**

**துஆவின் பொருள் : இறைவனே! உனக்கே வழிப்பட்டேன். உன்னையே நம்பினேன். உன்னையே பொறுப்பாக்கினேன். உனக்காகவே (எதிரிகளிடம்) வாதிட்டேன். இறைவனே! உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீ என்னை வழிதவறச் செய்வதை விட்டும் உன் கண்ணியத்தின் மூலம் பாதுகாவல் தேடுகிறேன். நீயே இறந்திடாத உயிருள்ளவன்.ஜின்களும், மனிதர்களும் இறந்து விடுவார்கள்.**

٧٦ – الثَّالِثُ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَيْضًا قَالَ:" حَسْبُنَا اللَّهُ وَنِعْمَ الْوَكِيلُ قَالَهَا إِبْرَاهِيمُ عليه السلام حِينَ أُلْقِيَ فِي النَّارِ وَقَالَهَا مُحَمَّدٌ ﷺ حِينَ قَالُوا: إِنَّ النَّاسَ قَدْ جَمَعُوا لَكُمْ فَاخْشَوْهُمْ فَزَادَهُمْ إِيمَانًا وَقَالُوا: حَسْبُنَا اللَّهُ وَنِعْمَ الْوَكِيلُ" رَوَاهُ الْبُخَارِيُّ وَفِي رِوَايَةٍ لَهُ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: كَانَ آخِرُ قَوْلِ إِبْرَاهِيمَ عليه السلام حِينَ أُلْقِيَ فِي النَّارِ: حَسْبِيَ اللَّهُ وَنِعْمَ الْوَكِيلُ.

**76** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

‘ஹஸ்புனல்லாஹ் வ நிஃமல் வகீல், (அல்லாஹ்வே நமக்கு போதுமானவன். அவனே சிறந்த பாதுகாவலன்)’ என்று நெருப்புக் குண்டத்தில், தான் போடப்பட்டபோது, இப்ராஹீம் (அலை) கூறினார்கள். இதையே நபி (ஸல்) அவர்களும் கூறினார்கள். மேலும் “நிச்சயமாக, மனிதர்கள் உங்களோடு (சண்டை செய்ய) ஒன்று சேர்ந்து விட்டனர். அவர்களைப் பயந்து கொள்ளுங்கள் எனச் சில மனிதர்கள் கூறிய போது, அது அவர்களுக்கு இறை நம்பிக்கையை அதிகப்படுத்தியது. மேலும், ‘நமக்கு அல்லாஹ் போதுமானவன். அவனே சிறந்த பாதுகாவலன்’ என்று கூறினார்கள். **(3:173)**

**(புகாரி:4563. இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவித்த புகாரியின் (4564) மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது)**

நெருப்பில் போடப்பட்டபோது இப்ராஹீம் (அலை) அவர்களின் வார்த்தையில் கடைசியாக, “ஹஸ்பியல்லாஹு வ நிஃமல் வகீல்” என்று தான் இருந்தது.

٧٧ – الرَّابِعُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" يَدْخُلُ الْجَنَّةَ أَقْوَامٌ أَفْئِدَتُهُمْ مِثْلُ أَفْئِدَةِ الطَّيْرِ" رَوَاهُ مُسْلِمٌ. قِيلَ: مَعْنَاهُ مُتَوَكِّلُونَ وَقِيلَ: قُلُوبُهُمْ رَقِيقَةٌ.

**77** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சில கூட்டத்தினர் சொர்க்கத்தில் நுழைவார்கள். அவர்களின் இதயங்கள், பறவையின் இதயங்கள் போல் இருக்கும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2840)**

٧٨ – الْخَامِسُ عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ غَزَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ قِبَلَ نَجْدٍ فَلَمَّا قَفَلَ رَسُولُ اللَّهِ ﷺ قَفَلَ مَعَهُمْ فَأَدْرَكَتْهُمُ الْقَائِلَةُ فِي وَادٍ كَثِيرِ الْعِضَاهِ فَنَزَلَ رَسُولُ اللَّهِ ﷺ وَتَفَرَّقَ النَّاسُ يَسْتَظِلُّونَ بِالشَّجَرِ وَنَزَلَ رَسُولُ اللَّهِ ﷺ تَحْتَ سَمُرَةٍ فَعَلَّقَ بِهَا سَيْفَهُ وَنِمْنَا نَوْمَةً فَإِذَا رَسُولُ اللَّهِ ﷺ يَدْعُونَا وَإِذَا عِنْدَهُ أَعْرَابِيٌّ فَقَالَ: "إِنَّ هَذَا اخْتَرَطَ عَلَيَّ سَيْفِي وَأَنَا نَائِمٌ فَاسْتَيْقَظْتُ وَهُوَ فِي يَدِهِ صَلْتًا قَالَ: مَنْ يَمْنَعُكَ مِنِّي؟ قُلْتُ اللَّهُ – ثَلاَثًا – وَلَمْ يُعَاقِبْهُ وَجَلَسَ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ قَالَ جَابِرٌ: "كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ بِذَاتِ الرِّقَاعِ فَإِذَا أَتَيْنَا عَلَى شَجَرَةٍ ظَلِيلَةٍ تَرَكْنَاهَا لِرَسُولِ اللَّهِ ﷺ فَجَاءَ رَجُلٌ مِنَ الْمُشْرِكِينَ وَسَيْفُ رَسُولِ اللَّهِ ﷺ مُعَلَّقٌ بِالشَّجَرَةِ فَاخْتَرَطَهُ فَقَالَ: تَخَافُنِي؟ قَالَ: لاَ فَقَالَ: فَمَنْ يَمْنَعُكَ مِنِّي؟ قَالَ: اللَّهُ". وَفِي رِوَايَةِ أَبِي بَكْرٍ الأَسْمَاعِيلِيِّ فِي صَحِيحِهِ" فَقَالَ: مَنْ يَمْنَعُكَ مِنِّي؟ قَالَ: اللَّهُ. فَسَقَطَ السَّيْفُ مِنْ يَدِهِ فَأَخَذَ رَسُولُ اللَّهِ ﷺ السَّيْفَ فَقَالَ: مَنْ يَمْنَعُكَ مِنِّي؟ فَقَالَ: كُنْ خَيْرَ آخِذٍ. فَقَالَ: تَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنِّي رَسُولُ اللَّهِ؟ قَالَ: لاَ وَلَكِنِّي أُعَاهِدُكَ أَلاَّ أُقَاتِلَكَ وَلاَ أَكُونَ مَعَ قَوْمٍ يُقَاتِلُونَكَ. فَخَلَّى سَبِيلَهُ فَأَتَى أَصْحَابَهُ فَقَالَ: جِئْتُكُمْ مِنْ عِنْدِ خَيْرِ النَّاسِ" قَوْلُهُ" قَفَلَ" أَيْ رَجَعَ. وَ" الْعِضَاهُ" الشَّجَرُ الَّذِي لَهُ شَوْكٌ: وَ" السَّمُرَةُ" بِفَتْحِ السِّينِ وَضَمِّ الْمِيمِ: الشَّجَرَةُ مِنَ الطَّلْحِ وَهِيَ الْعِظَامُ مِنْ شَجَرِ الْعِضَاهِ." وَاخْتَرَطَ السَّيْفَ" أَيْ سَلَّهُ وَهُوَ فِي يَدِهِ." صَلْتًا" أَيْ مَسْلُولاً وَهُوَ بِفَتْحِ الصَّادِ وَضَمِّهَا.

**78** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நஜ்து நாட்டின் அருகே, நபி (ஸல்) அவர்களுடன் நான் போரில் கலந்து கொண்டேன். நபி (ஸல்) அவர்கள் திரும்பியபோது, அவர்களுடன் நானும் திரும்பினேன். முள் நிறைந்த ஓடையை அவர்கள் அடைந்தார்கள். அங்கு நபி (ஸல்) அவர்கள் இறங்கினார்கள். மரத்தின் நிழல்களைத் தேடியவர்களாக மக்கள் பிரிந்தனர். நபி (ஸல்) அவர்கள் கருவேல மரத்தின் கீழ் இறங்கினார்கள். அதில் தன் வாளை தொங்கவிட்டார்கள். நாங்கள் தூங்கிவிட்டோம். அப்போது திடீரென நபி (ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். உடனே நாங்கள் அங்கு சென்று பார்த்தபோது, அவர்கள் அருகே ஒரு கிராமக் காட்டரபி நின்று கொண்டிருந்தான். "இவன் என் வாளை எனக்கு எதிராக எடுத்தான். நான் தூங்கிக் கொண்டிருந்தேன். அவனது கையிலே உருவிய வாள் உள்ள நிலையில் நான் விழித்தேன். என்னிடமிருந்து உன்னைக் காப்பாற்றுவது யார்?" என்று கேட்டான். "அல்லாஹ்தான்!" என மூன்று தடவை கூறினேன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவனை அவர்கள் தண்டிக்கவில்லை. உட்கார்ந்து விட்டார்கள். **(புகாரி:3910. முஸ்லிம்:843)**

மற்றொரு அறிவிப்பில் ஜாபிர் (ரழி) அறிவிப்பதாக (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

'தாதுர் ரிகாஃ' என்ற இடத்தில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நிழல் தரும் மரத்தின் கீழ் நாங்கள் வந்தோம், நபி (ஸல்) அவர்களுக்காக அந்த மரத்தை விட்டு விட்டோம், (வேறு இடம் சென்றோம்). அப்போது இணைவைப்போரில் ஒருவன் வந்தான். நபி (ஸல்) அவர்களின் வாள் மரத்தில், தொங்கவிடப்பட்டு இருந்தது. அதை அவன் எடுத்துக் கொண்டான். "என்னை நீ பயப்படுகிறாயா?" என்று அவன் கேட்க, "இல்லை!" என நபி (ஸல்) கூறினார்கள். "என்னிடமிருந்து உன்னைக் காப்பாற்றுவது யார்?" என்று அவன் கேட்க, "அல்லாஹ்!" என நபி (ஸல்) கூறினார்கள்.

அபூபக்ர் அல் இஸ்மாயீல் என்பவரின் அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது:

"என்னிடமிருந்து உன்னைக் காப்பாற்றுவது யார்?" என அவன் கேட்க, "அல்லாஹ்" என நபி (ஸல்) கூறினார்கள். உடனே அவன் கையிலிருந்த வாள் நழுவி விழுந்து விட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள் அந்த வாளை எடுத்தார்கள். "என்னிடமிருந்து உன்னைக் காப்பாற்றுவது யார்?" என நபி (ஸல்) கேட்க, "கையில் (வாளை) எடுத்தவரில் சிறந்தவராக இரும்" என்று கூறினான். "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. நான் இறைத்தூதர் என்று சாட்சி கூறு" என்றார்கள்.

“முடியாது. எனினும் உன்னிடம் போர் புரிய மாட்டேன். உன்னிடம் போர் புரிவோர்களுடன் சேர மாட்டேன் என உறுதி கூறுகிறேன்” என அவன் கூறினான். அவன் வழியில் செல்ல அவனை அனுமதித்தார்கள். அவன் தன் தோழர்களிடம் வந்து, “மனிதர்களில் சிறந்தவரிடமிருந்து உங்களிடம் வந்துள்ளேன்” என்றான்.

٧٩ – السَّادسُ عَنْ عُمَرَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" لَوْ أَنَّكُمْ تَتَوَكَّلُونَ عَلَى اللَّه حَقَّ تَوَكُّله لَرَزَقَكُمْ كَمَا يَرْزُقُ الطَّيْرَ تَغْدُو خِمَاصًا وَتَرُوحُ بِطَانًا" رَوَاهُ التِّرْمذيُّ. وَقَالَ: حَديثٌ حَسَنٌ مَعْنَاهُ تَذْهَبُ أَوَّلَ النَّهَارِ خِمَاصًا: أَيْ ضَامرَةَ الْبُطُونِ منَ الْجُوعِ وَتَرْجِعُ آخرَ النَّهَارِ بِطَانًا: أَيْ مُمْتَلئَةَ الْبُطُونِ.

**79** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் அல்லாஹ்வை முழுப் பொறுப்புடன் பொறுப்பாக்கினீர்களானால், காலையில் வயிறு காலியாகச் சென்று, மாலையில் வயிறு நிரம்பித் திரும்பும் பறவைக்கு அவன் உணவு தருவது போல் உங்களுக்கும் உணவு தருவான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2344. இந்த ஹதீஸ் ‘ஹஸன்’ என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٠ – السَّابعُ عَنْ أَبي عمَارَةَ الْبَرَاء بْنِ عَازِب رَضيَ اللهُ عَنْهُمَا قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ" يَا فُلاَنُ إذَا أَوَيْت إلَى فرَاشك فَقُلْ: اللَّهُمَّ أَسْلَمْت نَفْسي إلَيْك وَوَجَّهْت وَجْهي إلَيْك وَفَوَّضْت أَمْري إلَيْك. وَأَلْجَأْت ظَهْري إلَيْك رَغْبَةً وَرَهْبَةً إلَيْك لاَ مَلْجَأَ وَلاَ مَنْجَا منْك إلاَّ إلَيْك. آمَنْت بكتَابك الَّذي أَنْزَلْت وَبنَبيِّك الَّذي أَرْسَلْت. فَإنَّك إنْ مُتَّ منْ لَيْلَتك مُتَّ عَلَى الْفطْرَة وَإنْ أَصْبَحْت أَصَبْت خَيْرًا" مُتَّفَقٌ عَلَيْه. وَفي روَايَة في الصَّحيحَيْنِ عَنْ الْبَرَاء قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" إذَا أَتَيْت مَضْجَعَك فَتَوَضَّأْ وُضُوءَك للصَّلاَة ثُمَّ اضْطَجعْ عَلَى شقِّك الأَيْمَنِ وَقُلْ" وَذَكَرَ نَحْوَهُ ثُمَّ قَالَ:" وَاجْعَلْهُنَّ آخرَ مَا تَقُولُ".

**80** (அபூ இமாரா என்ற) பராஉ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இன்ன மனிதரே! உன் படுக்கைக்கு உறங்க நீ வந்தால், ‘அல்லாஹும்ம அஸ்லம்து நஃப்ஸீ இலய்க, வவஜ்ஜஹ்து வஜ்ஹீ இலய்க, வஃபழ்ழல்து அம்ரீ இலய்க, வ அல்ஜஃது ளஹ்ரீ இலய்க, ரக்பதன் வரஹ்பதன் இலய்க, லா மல்ஜஅ வலா மன்ஜ மின்க இல்லா இலய்க, ஆமன்து பிகிதாபிகல்லதீ அன்ஸல்த வநபிய்யிகல்லதீ அர்ஸல்த’ என்று கூறி, “நீ இரவில் இறந்துவிட்டால், மார்க்கத்தில் இருந்த நிலையில் மரணிப்பாய். காலையில் எழுந்தால் சிறந்த காலையாக நீ அடைவாய்!” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6313. முஸ்லிம்:2710/57–58)**

புகாரி, முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது :

“நீர் உன் படுக்கைக்கு வந்தால், தொழுகைக்காக உளுச் செய்வது போல் உளுச்செய்வீராக! பின்பு உமது வலதுபுறமாக திரும்பிப் படுப்பீராக! பின்பு அல்லாஹும்ம...(முன்பு கூறப்பட்ட துஆ) கூறுவீராக! இதையே நீர் கூறுவதில் இறுதியானதாகவும் ஆக்குவீராக!” என்று எனக்கு நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6311. முஸ்லிம்:2710/56)**

**துஆவின் பொருள்: “இறைவா! என்னை உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். என் முகத்தை உன்னிடமே திருப்பி விட்டேன். என் காரியம் அனைத்தையும் உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். என் முதுகை உன் பக்கமே சாய்த்து விட்டேன். உன்னை பயந்தும், உன்னிடம் ஆதரவு வைத்தும் (இவ்வாறு செய்தேன்) ஒதுங்குமிடமும், உன்னை விட்டும் காக்குமிடமும் உன்னிடமே தவிர இல்லை. நீ இறக்கி வைத்த உன் வேதத்தை நம்பிக்கை கொண்டேன். நீ அனுப்பிய உன் தூதரையும் நம்பினேன்.”**

٨١ - الثَّامِنُ عَنْ أَبِي بَكْرٍ الصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُ عَبْدِ اللَّهِ بْنِ عُثْمَانَ بْنِ عَامِرِ بْنِ عُمَرَ بْنِ كَعْبِ بْنِ سَعْدِ بْنِ تَيْمِ بْنِ مُرَّةَ بْنِ كَعْبِ بْنِ لُؤَيِّ بْنِ غَالِبٍ الْقُرَشِيِّ التَّيْمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ - وَهُوَ وَأَبُوهُ وَأُمُّهُ صَحَابَةٌ - رَضِيَ اللَّهُ عَنْهُمْ - قَالَ : نَظَرْتُ إِلَى أَقْدَامِ الْمُشْرِكِينَ وَنَحْنُ فِي الْغَارِ وَهُمْ عَلَى رُءُوسِنَا فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ لَوْ أَنَّ أَحَدَهُمْ نَظَرَ تَحْتَ قَدَمَيْهِ لَأَبْصَرَنَا . فَقَالَ : " مَا ظَنُّكَ يَا أَبَا بَكْرٍ بِاثْنَيْنِ اللَّهُ ثَالِثُهُمَا " مُتَّفَقٌ عَلَيْهِ .

**81** தந்தையும், தாயும் நபித் தோழர்களாக இருக்க, தானும் நபித் தோழராக இருந்த அபூபக்ர் சித்தீக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நானும், நபி (ஸல்) அவர்களும் குகையில் இருந்தபோது, இணை வைப்போரின் கால்களை நான் பார்த்தேன். அவர்கள் எங்களின் மேல்புறத்திலே இருந்தார்கள். 'இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருவர், தன் காலுக்குக் கீழே (குனிந்து) பார்த்தால் நம்மைப் பார்த்து விடுவார்கள்" என்று நான் கூறினேன். "அபூபக்ரே! (நாம்) இருவர்தான் என உங்கள் எண்ணமா? அல்லாஹ் நம் இருவருடன் மூன்றாவது நபராக இருக்கிறான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:4664. முஸ்லிம்:2381)**

٨٢ - التَّاسِعُ عَنْ أُمِّ الْمُؤْمِنِينَ أُمِّ سَلَمَةَ - وَاسْمُهَا هِنْدُ بِنْتُ أَبِي أُمَيَّةَ حُذَيْفَةَ الْمَخْزُومِيَّةُ رَضِيَ اللَّهُ عَنْهَا - أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا خَرَجَ مِنْ بَيْتِهِ قَالَ:" بِسْمِ اللَّهِ تَوَكَّلْتُ عَلَى اللَّهِ اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ أَنْ أَضِلَّ أَوْ أُضَلَّ أَوْ أَزِلَّ أَوْ أُزَلَّ أَوْ أَظْلِمَ أَوْ أُظْلَمَ أَوْ أَجْهَلَ أَوْ يُجْهَلَ عَلَيَّ". حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَغَيْرُهُمَا بِأَسَانِيدَ صَحِيحَةٍ. قَالَ: التِّرْمِذِيُّ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ وَهَذَا لَفْظُ أَبِي دَاوُدَ.

**82** ஹிந்த்பின்த் அபீஉமய்யா ஹுதைபா அல்மக்ஸூமிய்யா என்ற பெயர் கொண்டவரும், நபி (ஸல்) அவர்களின் மனைவியும், நம் அன்னையுமான உம்முஸலமா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் வீட்டை விட்டுப் புறப்பட்டால், 'பிஸ்மில்லாஹ், தவக்கல்து அலல்லாஹ், அல்லாஹும்ம இன்னீ அஊது பிக, அன் அழில்ல, அவ் உழல்ல, அவ் அஸில்ல, அவ் உஸல்ல, அவ் அள்லிம, அவ் உள்லம, அவ் அஜ்ஹல, அவ் யுஜ்ஹல அலய்ய' என்று கூறுவார்கள்.

**(திர்மிதீ:3427. அபூதாவூது (5094) மற்றும் நஸயீ, அஹ்மத், இப்னுமாஜா. இந்த ஹதீஸ் 'ஹஸன் ஸஹீஹ்' என இமாம் திர்மிதீ கூறுகிறார்கள். இதன் வாசகம் அபூதாவூது நூலில் உள்ள வாசகமாகும்)**

**துஆவின் பொருள் : அல்லாஹ்வின் பெயரால் (புறப்படுகிறேன்). அல்லாஹ்விடமே பொறுப் பாக்குகிறேன். இறைவா! நான் வழி தவறுவதை விட்டும், வழி தவறச் செய்யப்படுவதை விட்டும், நான் சருகி விடுவதை விட்டும், பிறரால் சருக்கலுக்கு உள்ளாவதை விட்டும், நான் அநீதம் செய்வதை விட்டும், பிறரால் அநீதம் செய்யப்படுவதை விட்டும், நான் அறிவிலியாக ஆவதை விட்டும், நான் அறிவிலியாக ஆக்கப்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.**

٨٣ - الْعَاشِرُ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَنْ قَالَ - يَعْنِي إِذَا خَرَجَ مِنْ بَيْتِهِ: - بِسْمِ اللَّهِ تَوَكَّلْتُ عَلَى اللَّهِ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللَّهِ يُقَالُ لَهُ: هُدِيتَ وَكُفِيتَ وَوُقِيتَ وَتَنَحَّى عَنْهُ الشَّيْطَانُ". رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَالنَّسَائِيُّ وَغَيْرُهُمْ. وَقَالَ التِّرْمِذِيُّ: حَدِيثٌ حَسَنٌ زَادَ أَبُو دَاوُدَ: فَيَقُولُ: يَعْنِي الشَّيْطَانُ - لِشَيْطَانٍ آخَرَ: كَيْفَ لَكَ بِرَجُلٍ قَدْ هُدِيَ وَكُفِيَ وَوُقِيَ؟.

**83** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தன் வீட்டிலிருந்து வெளியேறும் போது, 'பிஸ்மில்லாஹ் தவக்கல்து அலல்லாஹ், வலா ஹவ்ல வலாகுவ்வத்த இல்லா பில்லாஹ்' என்று கூறினால், 'நீர் நேர்வழி கொடுக்கப்பட்டீர். நீர்

போதுமாக்கப்பட்டீர். நீர் பாதுகாக்கப்பட்டீர்' என அவரிடம் கூறப்படும். ஷைத்தான் அவரைவிட்டும் தூரப் போய் விடுவான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:5095. திர்மிதீ:3426. நஸயீ மற்றும் இப்னு ஹிப்பான். இந்த ஹதீஸ் 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

"ஒரு ஷைத்தான் மற்றொரு ஷைத்தானிடம், 'நேர்வழி காட்டப்பட்ட, போதுமாக்கப்பட்ட, பாதுகாக்கப்பட்ட ஒருவனிடம் உனக்கு என்ன வேலை?' என்று கேட்பான்'' என்ற வாசகம் அபூதாவூதில் கூடுதலாக உள்ளது.

**துஆவின் பொருள் : அல்லாஹ்வின் பெயரால் (புறப்படுகிறேன்) அல்லாஹ்வையே பொறுப் பாக்குகிறேன். எந்த ஒரு திரும்புதலும், ஆற்றலும் அல்லாஹ்விடமே தவிர இல்லை.**

٨٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كَانَ أَخَوَانِ عَلَى عَهْدِ النَّبِيِّ ﷺ وَكَانَ أَحَدُهُمَا يَأْتِي النَّبِيَّ ﷺ وَالأخرُ يَحْتَرِفُ فَشَكَا الْمُحْتَرِفُ أَخَاهُ لِلنَّبِيِّ ﷺ فَقَالَ:" لَعَلَّكَ تُرْزَقُ بِهِ" رَوَاهُ التِّرْمِذِيُّ بِإِسْنَادٍ صَحِيحٍ عَلَى شَرْطِ مُسْلِمٍ." يَحْتَرِفُ": يَكْتَسِبُ وَيَتَسَبَّبُ.

**84** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் காலத்தில், இரண்டு சகோதரர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து விடுவார். மற்றொருவர் தொழில் புரிவார். தொழில் புரியக் கூடியவர், தன் சகோதரர் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் வந்து (வேலை செய்வதில்லை என) தனது சகோதரர் பற்றிக் குறை கூறினார். "அவருக்காகவும் நீர் உணவளிக்கப்படுகிறீர்'' என்று கூறினார்கள். **(திர்மிதீ:2345)**

## ٨ – باب الاستقامة

## பாடம் : 8 - உறுதியாக இருத்தல்

**قَالَ اللَّهُ تَعَالَى: فَاسْتَقِمْ كَمَا أُمِرْتَ وَقَالَ تَعَالَى: إِنَّ الَّذِينَ قَالُوا رَبُّنَا اللَّهُ ثُمَّ اسْتَقَامُوا تَتَنَزَّلُ عَلَيْهِمُ الْمَلَائِكَةُ أَلاَّ تَخَافُوا وَلاَ تَحْزَنُوا وَأَبْشِرُوا بِالْجَنَّةِ الَّتِي كُنْتُمْ تُوعَدُونَ نَحْنُ أَوْلِيَاؤُكُمْ فِي الْحَيَاةِ الدُّنْيَا وَفِي الأخرَةِ وَلَكُمْ فِيهَا مَا تَشْتَهِي أَنْفُسُكُمْ وَلَكُمْ فِيهَا مَا تَدَّعُونَ نُزُلاً مِنْ غَفُورٍ رَحِيمٍ. وَقَالَ تَعَالَى: إِنَّ الَّذِينَ قَالُوا رَبُّنَا اللَّهُ ثُمَّ اسْتَقَامُوا فَلاَ خَوْفٌ عَلَيْهِمْ وَلاَ هُمْ يَحْزَنُونَ أُولَئِكَ أَصْحَابُ الْجَنَّةِ خَالِدِينَ فِيهَا جَزَاءً بِمَا كَانُوا يَعْمَلُونَ.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *"நீ கட்டளையிடப்பட்டது போலவே உறுதியுடன் இருப்பீராக!..." (11:112)*

*எங்கள் இறைவன் அல்லாஹ்தான் என்று கூறி, பின்பு (அதில்) உறுதியாக இருக்கக்கூடிய அவர்களிடம் வானவர்கள் வந்து, "நீங்கள் பயப்பட வேண்டாம். கவலைப்படவேண்டாம். நீங்கள் வாக்களிக்கப்பட்ட சொர்க்கத்தின் மூலம் மகிழ்ச்சி அடையுங்கள்'' (எனக் கூறியவர்களாக) இறங்குவார்கள். "நாங்கள் இவ்வுலகிலும், மறுமையிலும் உங்களின் நேசர்கள். உங்களுக்கு, அதிலே நீங்கள் ஆசை கொள்பவைகள் உண்டு. உங்களுக்கு அதில் நீங்கள் கேட்பவை உண்டு'' (என்றும் கூறுவார்கள்). "எங்களின் வருகை, மன்னிப்பவன் - நிகரில்லா அருளாளனிட மிருந்து இறங்கி வருதலாகும்'' (என்றும் கூறுவார்கள்) (41:30, 31, 32)*

*"எங்கள் இறைவன் அல்லாஹ்தான்'' என்று அவர்கள் கூறி, பின்பு (அதில்) உறுதியாக உள்ளவர்களுக்கு பயமும் இல்லை; அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். இவர்கள் தாம்*

*சுவர்க்கவாசிகள். அதிலே நிரந்தரமாக இருப்பார்கள். அவர்கள் செய்து கொண்டிருந்ததற்கு இது கூலியாகவும் உள்ளது." (46:13, 14)*

٨٥ – وَعَنْ أَبِي عَمْرٍو – وَقِيلَ أَبِي عَمْرَةَ – سُفْيَانَ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قُلْت: يَا رَسُولَ اللَّهِ قُلْ لِي فِي الأسْلاَمِ قَوْلاً لاَ أَسْأَلُ عَنْهُ أَحَدًا غَيْرَكَ. قَالَ:" قُلْ آمَنْت بِاللَّهِ ثُمَّ اسْتَقِمْ" رَوَاهُ مُسْلِمٌ.

**85** (அபூஅம்ர் அல்லது அபூஅம்ரா என்ற) சுப்ஃயான் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கிறார்கள்:

இறைத்தூதர் அவர்களிடம், "நீங்கள் அல்லாத எவரிடமும் நான் கேட்காத சொல்லாக, இஸ்லாம் பற்றி எனக்குக் கூறுவீர்களாக!" என்று நான் கேட்டேன். "அல்லாஹ்வை நான் நம்புகிறேன் என்று கூறு. பின்பு (அதில்) உறுதியாக இரு" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:38)**

٨٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ" قَارِبُوا وَسَدِّدُوا وَاعْلَمُوا أَنَّهُ لَنْ يَنْجُوَ أَحَدٌ مِنْكُمْ بِعَمَلِه" قَالُوا: وَلاَ أَنْتَ يَا رَسُولَ اللَّه؟ قَالَ:" وَلاَ أَنَا إِلاَّ أَنْ يَتَغَمَّدَنِي اللَّهُ بِرَحْمَةٍ مِنْهُ وَفَضْلٍ" رَوَاهُ مُسْلِمٌ. وَالْمُقَارَبَةُ: الْقَصْدُ الَّذِي لاَ غُلُوَّ فِيهِ وَلاَ تَقْصِيرَ. وَالسَّدَادُ: الإسْتِقَامَةُ وَالأصَابَةُ. وَيَتَغَمَّدَنِي يُلْبِسُنِي وَيَسْتُرُنِي. قَالَ الْعُلَمَاءُ: مَعْنَى الإسْتِقَامَةِ لُزُومُ طَاعَةِ اللَّهِ تَعَالَى ; قَالُوا: وَهِيَ مِنْ جَوَامِعِ الْكَلِمِ وَهِيَ نِظَامُ الأمُورِ: وَبِاللَّهِ التَّوْفِيقُ.

**86** அபூஹுரைரா(ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் எங்களிடம், "நீங்கள் நடுநிலையாக இருங்கள். நீங்கள் உறுதியாக இருங்கள். உங்களில் ஒருவர் தன் செயலால் தப்பித்துவிட முடியாது என அறிந்து கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! நீங்களும் (தப்பிக்க) முடியாதா?" என்று நபித்தோழர்கள் கேட்டனர். "அல்லாஹ் தன் அருளால், கருணையால் என்னை அரவணைத்துக் கொண்டாலே தவிர, நானும் (தப்பிக்க) முடியாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2816)**

## ٩ – باب فى التفكر فى عظيم مخلوقات الله تعالى وفناء الدنيا وأهوال الآخرة أمورهما وتقصير النفس وتهذيبها وحملها على الاستقامة

## பாடம் : 9 - அல்லாஹ்வின் படைப்புகளில் பெரியவைகளைச் சிந்தித்தல், உலகம் அழிதல், மறுமை நாளின் நிகழ்வுகள், இம்மை-மறுமையின் இதர விஷயங்கள், உள்ளத்துக் குறைபாடு, அதை சீர்செய்தல், அதை உறுதியாக இருக்கத் தூண்டுதல்.

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّمَا أَعِظُكُمْ بِوَاحِدَةٍ أَنْ تَقُومُوا لِلَّهِ مَثْنَى وَفُرَادَى ثُمَّ تَتَفَكَّرُوا وَقَالَ تَعَالَى : إِنَّ فِي خَلْقِ السَّمَاوَاتِ وَالأَرْضِ وَاخْتِلاَفِ اللَّيْلِ وَالنَّهَارِ لَآيَاتٍ لِأُولِي الأَلْبَابِ الَّذِينَ يَذْكُرُونَ اللَّهَ قِيَامًا وَقُعُودًا وَعَلَى جُنُوبِهِمْ وَيَتَفَكَّرُونَ فِي خَلْقِ السَّمَاوَاتِ وَالأَرْضِ رَبَّنَا مَا خَلَقْتَ هَذَا بَاطِلًا سُبْحَانَكَ الأيَات . وَقَالَ : أَفَلَا يَنْظُرُونَ إِلَى الأَبِلِ كَيْفَ خُلِقَتْ وَإِلَى السَّمَاءِ كَيْفَ رُفِعَتْ وَإِلَى الْجِبَالِ كَيْفَ نُصِبَتْ وَإِلَى الأَرْضِ كَيْفَ سُطِحَتْ فَذَكِّرْ إِنَّمَا أَنْتَ مُذَكِّرٌ . وَقَالَ تَعَالَى : أَفَلَمْ يَسِيرُوا فِي الأَرْضِ فَيَنْظُرُوا الأيَةَ . وَالأيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ .

وَمِنْ الأَحَادِيثِ الْحَدِيثُ السَّابِقُ " الْكَيِّسُ مَنْ دَانَ نَفْسَهُ ".

**அல்லாஹ் கூறுகிறான்:** *நான் உங்களுக்கு ஒரு விஷயத்தைப் பற்றி உபதேசிக்கிறேன். நீங்கள் அல்லாஹ்வுக்காக இரண்டிரண்டு பேராக, மற்றும் தனித்தனியாக நின்று, பின்பு சிந்தியுங்கள்... என்று நபியே நீர் கூறுவீராக! (34:46)*

*நிச்சயமாக வானங்கள், பூமியைப் படைத்தலிலும் இரவு-பகல் மாறி மாறி வருவதிலும் அறிவுடையோருக்கு அத்தாட்சி உண்டு.*

*அவர்கள் நின்றவாறும், உட்கார்ந்தவாறும், தங்களின் படுக்கையிலும் அல்லாஹ்வை நினைவு கூர்வார்கள். வானங்கள், பூமியைப் படைத்தல் விஷயத்தில் சிந்திப்பார்கள். "எங்கள் இறைவா! இதை வீணாக நீ படைக்கவில்லை. நீ தூய்மையானவன். எங்களை நரக வேதனையிலிருந்து காப்பாற்றுவாயாக!" (என்று கூறுவார்கள்). (3:190,191)*

*ஒட்டகம் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளது என அவர்கள் சிந்திக்க வேண்டாமா? மேலும் வானம் எப்படி உயர்த்தப்பட்டுள்ளது? மேலும் மலைகள் எப்படி நிறுத்தப்பட்டுள்ளது. மேலும் பூமி எப்படி விரிக்கப்பட்டுள்ளது? (என அவர்கள் சிந்திக்க வேண்டாமா?) (நபியே) நீ உபதேசம் செய்வீராக! நிச்சயமாக நீர் உபதேசம் செய்பவர்தாம். (88:17-21)*

*'அவர்கள் பூமியில் பயணம் செய்து, அவர்கள் அதிலுள்ளவைகளைச் சிந்திக்கவில்லையா?...' (47:10)*

இந்த பாடத்தின் கீழ் பொருத்தமான வசனங்கள் நிறைய உள்ளன. முன்பு இடம்பெற்ற 66-வது ஹதீஸும் பொருந்தும்.

## ١٠ - باب فى المبادرة إلى الخيرات وحث من توجه لخير على الإقبال عليه بالجد من غير تردد

## பாடம் : 10 - நல்லது செய்ய வேகப்படுத்துதல், நல்லது செய்யத் தூண்டுதல்.

قَالَ اللَّهُ تَعَالَى: فَاسْتَبِقُوا الْخَيْرَاتِ وَقَالَ تَعَالَى: وَسَارِعُوا إِلَى مَغْفِرَةٍ مِنْ رَبِّكُمْ وَجَنَّةٍ عَرْضُهَا السَّمَاوَاتُ وَالأَرْضُ أُعِدَّتْ لِلْمُتَّقِينَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *'.... நல்லது செய்ய நீங்கள் முந்துங்கள் .......' (2:148)*

*'நீங்கள் உங்கள் இறைவனிடம் மன்னிப்புக் கேட்கவும், சொர்க்கத்தின் பக்கமும் விரையுங்கள். அதன் விசாலம், வானங்கள்- பூமி அளவுக்காகும். இறையச்சமுடையோருக்கு அது தயார் செய்து வைக்கப்பட்டுள்ளது. (3:133)*

٨٧ - وَأَمَّا الأَحَادِيثُ ) فَالأَوَّلُ ( عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" بَادِرُوا بِـــالأَعْمَالِ الصَّالِحَةِ فَسَتَكُونُ فِتَنٌ كَقِطَعِ اللَّيْلِ الْمُظْلِمِ يُصْبِحُ الرَّجُلُ مُؤْمِنًا وَيُمْسِي كَافِرًا وَيُمْسِي مُؤْمِنًا وَيُصْبِحُ كَافِرًا يَبِيعُ دِينَهُ بِعَرَضٍ مِنَ الدُّنْيَا" رَوَاهُ مُسْلِمٌ.

**87** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இருள் நிறைந்த இரவு போல் (தொடரும்) குழப்பத்தை அஞ்சி, நீங்கள் நற்செயல் புரிய விரையுங்கள். ஒருவன் காலையில் முஃமினாக இருப்பான். மாலையில் காஃபிராக இருப்பான். அல்லது மாலையில் முஃமினாக இருப்பான். காலையில் காஃபிராக எழுவான். உலக நோக்கங்களுக்காக தன் மார்க்கத்தையே விற்றுவிடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:118)**

٨٨ – الثَّانِي عَنْ أَبِي سِرْوَعَةَ – بِكَسْرِ السِّينِ وَفَتْحِهَا – عُقْبَةُ بْنُ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: صَلَّيْتُ وَرَاءَ النَّبِيِّ بِالْمَدِينَةِ الْعَصْرَ فَسَلَّمَ ثُمَّ قَامَ مُسْرِعًا فَتَخَطَّى رِقَابَ النَّاسِ إِلَى بَعْضِ حُجَرِ نِسَائِهِ فَفَزِعَ النَّاسُ مِنْ سُرْعَتِهِ فَخَرَجَ عَلَيْهِمْ فَرَأَى أَنَّهُمْ قَدْ عَجِبُوا مِنْ سُرْعَتِهِ. قَالَ:" ذَكَرْتُ شَيْئًا مِنْ تِبْرٍ عِنْدَنَا فَكَرِهْتُ أَنْ يَحْبِسَنِي فَأَمَرْتُ بِقِسْمَتِهِ" رَوَاهُ الْبُخَارِيُّ. وَفِي رِوَايَةٍ لَهُ:" كُنْتُ خَلَّفْتُ فِي الْبَيْتِ تِبْرًا مِنَ الصَّدَقَةِ فَكَرِهْتُ أَنْ أُبَيِّتَهُ". التِّبْرُ قِطَعُ ذَهَبٍ أَوْ فِضَّةٍ.

**88** (அபூஸிர்வஆ என்ற) உக்பா இப்னு ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் மதீனாவில் அஸர் தொழுகையைத் தொழுதேன். தொழுகையை நிறைவு செய்து, ஸலாம் கொடுத்தார்கள். பின்பு விரைந்து (எழுந்து) நின்றார்கள். மக்களின் பிடரிகளைத் தாண்டி (வரிசைகளைக் கடந்து) தன் மனைவியின் வீட்டில் நுழைந்தார்கள். அவர்கள் வேகம் கண்டு மக்கள் கவலை அடைந்தார்கள். பின்னர் வெளியே வந்தார்கள். தன் வேகம் கண்டு ஆச்சரியப்பட்டிருந்த மக்களைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "என்னிடம் ஒரு பொது நிதிச் சொத்து இருந்ததை நினைவுகூர்ந்தேன். என்னிடம் அது இருப்பதை வெறுத்தேன் அதனைப் பங்கீடு செய்யுமாறு கட்டளையிட்டேன்" என்று கூறினார்கள். **(புகாரி:851)**

மற்றொரு அறிவிப்பில் (புகாரி:1430), "வீட்டில் தர்மப் பொருளில் ஒரு பொருளை விட்டு வந்தேன். அதை வீட்டில் விட்டு வைக்க வெறுத்தேன்" என்று உள்ளது.

٨٩ – الثَّالِثُ عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَجُلٌ لِلنَّبِيِّ ﷺ يَوْمَ أُحُدٍ: أَرَأَيْتَ إِنْ قُتِلْتُ فَأَيْنَ أَنَا قَالَ:" فِي الْجَنَّةِ". فَأَلْقَى تَمَرَاتٍ كُنَّ فِي يَدِهِ ثُمَّ قَاتَلَ حَتَّى قُتِلَ. مُتَّفَقٌ عَلَيْهِ.

**89** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உஹதுப்போரில் நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, "நான் கொல்லப்பட்டால் எங்கே இருப்பேன்?" என்று கேட்டார். "சொர்க்கத்தில்" என நபி (ஸல்) கூறினார்கள். உடனே தன் கையில் உண்ணுவதற்காக வைத்திருந்த பேரீத்தம் பழங்களை அவர் தூக்கி வீசினார். பின்பு போரிட்டார். இறுதியில் கொல்லப்பட்டார். **(புகாரி:4046, முஸ்லிம்:1899)**

٩٠ – الرَّابِعُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ أَيُّ الصَّدَقَةِ أَعْظَمُ أَجْرًا؟ قَالَ:" أَنْ تَصَدَّقَ وَأَنْتَ صَحِيحٌ شَحِيحٌ تَخْشَى الْفَقْرَ وَتَأْمُلُ الْغِنَى وَلَا تُمْهِلْ حَتَّى إِذَا بَلَغَتِ الْحُلْقُومَ قُلْتَ لِفُلَانٍ كَذَا وَلِفُلَانٍ كَذَا وَقَدْ كَانَ لِفُلَانٍ" مُتَّفَقٌ عَلَيْهِ." الْحُلْقُومُ" مَجْرَى النَّفَسِ. و" الْمَرِيءُ" مَجْرَى الطَّعَامِ وَالشَّرَابِ.

**90** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! கூலியை அதிகம் பெற்றுத்தரும் தர்மம் எது?' என்று கேட்டார். 'நீ ஆரோக்கியமாகவும், ஏழ்மையைப் பயந்து, செல்வத்தை எதிர் பார்த்திருக்கும் ஏழையாகவும் இருக்கும் நிலையில், நீ தர்மம் செய்வதுதான். உயிர் தொண்டைக் குழியை அடைந்து, இன்னாருக்கு இவ்வளவு, இன்னாருக்கு இவ்வளவு இன்னாருக்கு இவ்வளவு என நீ கூறும் நேரம் வரை, (தர்மம் செய்ய) தாமதிக்காதே' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1419, முஸ்லிம்:1032)**

٩١ – الْخَامِسُ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَخَذَ سَيْفًا يَوْمَ أُحُدٍ فَقَالَ:" مَنْ يَأْخُذُ مِنِّي هَذَا؟ فَبَسَطُوا أَيْدِيَهُمْ كُلُّ إِنْسَانٍ مِنْهُمْ يَقُولُ: أَنَا أَنَا. قَالَ: فَمَنْ يَأْخُذُهُ بِحَقِّهِ؟ فَأَحْجَمَ الْقَوْمُ فَقَالَ أَبُو دُجَانَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَا آخُذُهُ بِحَقِّهِ فَأَخَذَهُ

فَفَلَقَ به هَامَ الْمُشْرِكِينَ" رَوَاهُ مُسْلِمٌ. اسْمُ أَبِي دُجَانَةَ سِمَاكُ بْنُ خَرَشَةَ – قَوْلُهُ" أَحْجَمَ الْقَوْمُ": أَيْ تَوَقَّفُوا. وَ" فَلَقَ به" أَيْ شَقَّ" هَامَ الْمُشْرِكِينَ" أَيْ رُءُوسَهُمْ.

**91** அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் உஹதுப் போரின் போது, வாளை எடுத்தார்கள். "இதை என்னிடமிருந்து பெறுபவர் யார்?" என்று கேட்டார்கள். அங்கிருந்தோரில் ஒவ்வொருவரும் "நான்! நான்!" எனக் கூறி தங்களின் கைகளை நீட்டினார்கள். அப்போது, "இதன் உரிமையுடன் இதை எடுப்பவர் யார்?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். மக்கள் தயங்கினார்கள். அபூதுஜானா (ரழி) என்பவர், "நான் அதன் உரிமையுடன் அதை எடுத்துக் கொள்கிறேன்" என்று கூறி, எடுத்தார். இணை வைப்போரின் தலைகளை அதன் மூலம் வெட்டிப் பிளந்தார். **(முஸ்லிம்:2470)**

٩٢ – السَّادِسُ عَنْ الزُّبَيْرِ بْنِ عَدِيٍّ قَالَ: أَتَيْنَا أَنَسَ بْنَ مَالِك رَضِيَ اللَّهُ عَنْهُ فَشَكَوْنَا إِلَيْهِ مَا نَلْقَى مِنْ الْحجَاجِ. فَقَالَ: اصْبِرُوا فَإِنَّهُ لاَ يَأْتِي زَمَانٌ إِلاَّ وَالَّذِي بَعْدَهُ شَرٌّ مِنْهُ حَتَّى تَلْقَوْا رَبَّكُمْ سَمِعْته مِنْ نَبِيِّكُمْ ﷺ رَوَاهُ الْبُخَارِيُّ.

**92** ஸுபைர் இப்னு அதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அனஸ் இப்னு மாலிக் (ரழி) அவர்களிடம் நாங்கள் வந்து, (இராக் ஆளுநர்) ஹஜ்ஜாஜ் என்பவரால், நாங்கள் அடையும் துன்பம் பற்றி அவரிடம் முறையிட்டோம். "நீங்கள் பொறுமையாக இருங்கள். அடுத்து வரும் காலம், இதைவிடவும் தீமையாக இருக்கும். (ஒவ்வொரு ஆண்டும் மற்ற ஆண்டைவிட, தீமை மிக்கதாகவே இருக்கும்.) உங்கள் இறைவனை சந்திக்கும் வரை (பொறுமை அவசியம்). இதை நான் நபியிடம் கேட்டுள்ளேன்' என்று அனஸ் (ரழி) கூறினார்கள். **(புகாரி:7068)**

٩٣ – السَّابِعُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ:" بَادرُوا بالأَعْمَال سَبْعًا: هَلْ تَنْتَظِرُونَ إِلاَّ فَقْرًا مُنْسيًا أَوْ غنًى مُطْغيًا أَوْ مَرَضًا مُفْسدًا أَوْ هَرَمًا مُفْنِدًا أَوْ مَوْتًا مُجْهِزًا أَوْ الدَّجَّالَ فَشَرٌّ غَائِبٌ يَنْتَظِرُ أَوْ السَّاعَةَ فَالسَّاعَةُ أَدْهَى وَأَمَرُّ" رَوَاهُ التِّرْمذيُّ وَقَالَ: حَديثٌ حَسَنٌ.

**93** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஏழு விஷயங்கள் ஏற்படும் முன், நற்செயல்களை விரைவாகச் செய்யுங்கள். 1. மறதியை ஏற்படுத்தும் வறுமை, 2.அநீதம் செய்யத் தூண்டும் செல்வம், 3. மோசமான நோய், 4.பேச்சில் தடுமாற்றம் ஏற்படும் முதுமை, 5. திடீர் மரணம், 6. எதிர்பார்க்கப்படும் தஜ்ஜால், (மறைவானவற்றில் மிகப்பெரும் தீமை (இவனே) (7) மறுமை தீர்ப்பு நாள் ஆகிய இந்த ஏழைத் தவிர, வேறொன்றையும் எதிர்பார்த்திருக்காதீர்கள். (விரைந்து) நற்செயல் செய்யுங்கள்" என நபி(ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2306. இந்த ஹதீஸ் 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையில் முஹர்ரிர் இப்னு ஹாரூன் என்ற ஹதீஸ் துறையினரால் கைவிடப்பட்டவர் இடம் பெறுகிறார்)**

٩٤ – الثَّامنُ عَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ يَوْمَ خَيْبَرَ:" لأُعْطيَنَّ هَذه الرَّايَةَ رَجُلاً يُحبُّ اللَّهَ وَرَسُولَهُ يَفْتَحُ اللَّهُ عَلَى يَدَيْه" قَالَ عُمَرُ بْنُ الْخَطَّاب رَضيَ اللَّهُ عَنْهُ: مَا أَحْبَبْت الأَمَارَةَ إِلاَّ يَوْمَئذ فَتَسَاوَرْت لَهَا رَجَاءَ أَنْ أُدْعَى لَهَا قَالَ:" امْشِ وَلاَ تَلْتَفتْ حَتَّى يَفْتَحَ اللَّهُ عَلَيْكَ" قَالَ: فَسَارَ عَليٌّ شَيْئًا ثُمَّ وَقَفَ وَلَمْ يَلْتَفتْ فَصَرَخَ: يَا رَسُولَ اللَّه عَلَى مَاذَا أُقَاتلُ النَّاسَ؟ قَالَ" قَاتلْهُمْ حَتَّى يَشْهَدُوا أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّه. فَإِذَا فَعَلُوا ذَلكَ فَقَدْ مَنَعُوا منْكَ دمَاءَهُمْ وَأَمْوَالَهُمْ إِلاَّ بحَقِّهَا. وَحسَابُهُمْ عَلَى اللَّه" رَوَاهُ مُسْلمٌ." فَتَسَاوَرْت" هُوَ بالسِّين الْمُهْمَلَة: أَيْ وَثَبْتُ مُتَطَلِّعًا.

**94** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், கைபர் போரின் போது, "அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நேசிக்கின்றவரிடம் இந்தக் கொடியைக் கொடுப்பேன். அவரின் கைகளில் அல்லாஹ் வெற்றியைத் தருவான்" என்று கூறினார்கள். இதுபற்றி உமர் (ரழி) கூறும்போது, "அந்த நாளைத் தவிர, எப்போதும் நான் தலைமைப் பதவியை விரும்பியதே இல்லை. இதற்காக நான் அழைக்கப்படலாம் என எதிர்பார்த்து மகிழ்ச்சியில் இருந்து கொண்டிருந்தேன்" எனக் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள், அலீ (ரழி) அவர்களை அழைத்து, அவர்களிடம் அதைக் கொடுத்தார்கள். "நீ செல், உனக்கு அல்லாஹ் வெற்றியைத் தரும் வரை நீ எதன் பக்கமும் திரும்பாதே" என்று கூறினார்கள். உடனே அலீ (ரழி) விரைந்தார். பின்பு திரும்பிப் பார்க்காமலேயே நின்று, "இறைத்தூதர் அவர்களே! மக்களிடம் நான் போர் செய்ய எது காரணம்?" என்று சப்தமிட்டுக் கேட்டார். "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதர், என்று அவர்கள் சாட்சி கூறும் வரை அவர்களிடம் நீ போர் செய்! அவர்கள் இதை செய்துவிட்டால், உம்மிடம் அவர்கள் தங்களையும், தங்களின் சொத்துக்களையும் காப்பாற்றிக் கொண்டார்கள். ஆனால் நியாயமான காரணங்களுக்காகவே தவிர, அவர்களின் உயிர் பறிக்கப்படமாட்டாது அவர்களின் கேள்வி கணக்கு அல்லாஹ்விடம் உள்ளது" என நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:2405)**

## ١١ – باب فى المجاهدة

## பாடம் : 11 - நற்செயல் புரிய அதிகம் முயற்சித்தல்

قَالَ اللَّهُ تَعَالَى: وَالَّذِينَ جَاهَدُوا فِينَا لَنَهْدِيَنَّهُمْ سُبُلَنَا وَإِنَّ اللَّهَ لَمَعَ الْمُحْسِنِينَ.

وَقَالَ تَعَالَى: " وَاعْبُدْ رَبَّكَ حَتَّى يَأْتِيَكَ الْيَقِينُ.

وَقَالَ تَعَالَى: " وَاذْكُرِ اسْمَ رَبِّكَ وَتَبَتَّلْ إِلَيْهِ تَبْتِيلاً: أَيْ انْقَطِعْ إِلَيْهِ.

وَقَالَ سُبْحَانَهُ وَتَعَالَى: فَمَنْ يَعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا يَرَهُ

وَقَالَ تَعَالَى: وَمَا تُقَدِّمُوا لأَنْفُسِكُمْ مِنْ خَيْرٍ تَجِدُوهُ عِنْدَ اللَّهِ هُوَ خَيْرًا وَأَعْظَمَ أَجْرًا

وَقَالَ تَعَالَى: وَمَا تُنْفِقُوا مِنْ خَيْرٍ فَإِنَّ اللَّهَ بِهِ عَلِيمٌ وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *எவர் நம் விஷயமாக முயற்சிக்கின்றார்களோ, அவர்களுக்கு நாம் நேர்வழிகளைக் காட்டுவோம். நிச்சயமாக அல்லாஹ் நன்மை செய்வோருடன் உள்ளான். (29:69)*

*உமக்கு மரணம் ஏற்படும் (காலம்) வரை உமது இறைவனை வணங்குவீராக! (15:99)*

*உமது இறைவனின் பெயரை நினைவுகூர்வீராக! அவன் பக்கமே முற்றிலும் சார்ந்திருப்பீராக! (73:8)*

*ஒருவர் அணுவளவேனும் நன்மை செய்தால், அதைக் காண்பார்... (99:7)*

*'...உங்களுக்காக நல்லதில் எதை நீங்கள் முற்படுத்தி வைத்தீர்களோ, அவற்றை அல்லாஹ்விடம் கூலியால் சிறந்ததாகவும், மிக்க மகத்தானதாகவும் காண்பீர்கள்... (73:20)*

*...நல்லதில் இருந்தும் நீங்கள் செய்யும் செலவுகளை நிச்சயமாக, அல்லாஹ் அறிந்தவனாக உள்ளான். (2:273)*

இந்த பாடத்தில் பிரபல்யமான வசனங்கள் நிறைய உள்ளன.

٩٥ - وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" إِنَّ اللَّهَ تَعَالَى قَالَ: مَنْ عَادَى لِي وَلِيًّا فَقَدْ آذَنْتُه بِالْحَرْبِ وَمَا تَقَرَّبَ إِلَيَّ عَبْدِي بِشَيْءٍ أَحَبَّ إِلَيَّ مِمَّا افْتَرَضْتُ عَلَيْهِ: وَمَا يَزَالُ عَبْدِي يَتَقَرَّبُ إِلَيَّ بِالنَّوَافِلِ حَتَّى أُحِبَّهُ فَإِذَا أَحْبَبْتُه كُنْتُ سَمْعَهُ الَّذِي يَسْمَعُ بِه وَبَصَرَهُ الَّذِي يُبْصِرُ بِه وَيَدَهُ الَّتِي يَبْطِشُ بِهَا وَرِجْلَهُ الَّتِي يَمْشِي بِهَا وَلَئِنْ سَأَلَنِي لَأُعْطِيَنَّهُ وَلَئِنْ اسْتَعَاذَنِي لَأُعِيذَنَّهُ" رَوَاهُ الْبُخَارِيُّ" آذَنْتُه": أَعْلَمْتُه بِأَنِّي مُحَارِبٌ لَهُ" اسْتَعَاذَنِي" رُوِيَ بِالنُّونِ وَبِالْبَاءِ.

**95** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் நேசரை ஒருவன் பகைத்தால், நான் அவனிடம் போர் தொடுப்பேன். என் அடியான், அவனுக்கு நான் கடமையாக்கியிருப்பதை (செய்வதை) விட, எனக்குப் பிரியமானதாக வேறொரு பொருள் மூலம் என்னிடம் நெருங்க முடியாது. மேலும், என் அடியான் அவனை நான் அன்பு கொள்வதற்காக, உபரியான வணக்கம் மூலம் என்னிடம் நெருங்கிட முயற்சிக்கின்றான். அவனை நான் பார்வையாகவும், அவன் பிடிக்கும் அவனது கையாகவும் அவன் நடக்கும் அவனது காலாகவும் ஆகிவிடுவேன். என்னிடம் அவன் கேட்டால் நான் கொடுப்பேன். என்னிடம் பாதுகாப்புக் கோரினால் அவனை நான் காப்பாற்றுவேன்" என அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6502)**

٩٦ - الثَّانِي عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ فِيمَا يَرْوِيه عَنْ رَبِّه عَزَّ وَجَلَّ قَالَ:" إِذَا تَقَرَّبَ الْعَبْدُ إِلَيَّ شِبْرًا تَقَرَّبْت إِلَيْه ذِرَاعًا وَإِذَا تَقَرَّبَ إِلَيَّ ذِرَاعًا تَقَرَّبْت مِنْهُ بَاعًا وَإِذَا أَتَانِي يَمْشِي أَتَيْته هَرْوَلَةً" رَوَاهُ الْبُخَارِيُّ.

**96** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'என் அடியான் என்னிடம் ஒரு சாண் நெருங்கினால், நான் அவனிடம் ஒரு முழம் நெருங்குவேன். என்னிடம் ஒரு முழம் நெருங்கினால், அவனிடம் நான் இரண்டு முழம் நெருங்குவேன். என்னிடம் அவன் நடந்து வந்தால், நான் அவனிடம் விரைந்து வருவேன்' என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7536)**

٩٧ - الثَّالِثُ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ. قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" نِعْمَتَانِ مَغْبُونٌ فِيهِمَا كَثِيرٌ مِنْ النَّاسِ: الصِّحَّةُ وَالْفَرَاغُ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**97** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு அருட்கொடைகள். இந்த இரண்டு விஷயத்திலும், மக்களில் அதிகமானோர் நஷ்டடப் பட்டு விடுகின்றனர். அவை (1) ஆரோக்கியம், (2) ஓய்வு" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6412)**

٩٨ - الرَّابِعُ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَقُومُ مِنْ اللَّيْلِ حَتَّى تَتَفَطَّرَ قَدَمَاهُ. فَقُلْت لَهُ: لِمَ تَصْنَعُ هَذَا يَا رَسُولَ اللَّهِ وَقَدْ غَفَرَ اللَّهُ لَكَ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِك وَمَا تَأَخَّرَ؟ قَالَ:" أَفَلَا أُحِبُّ أَنْ أَكُونَ عَبْدًا شَكُورًا" مُتَّفَقٌ عَلَيْه. هَذَا لَفْظُ الْبُخَارِيِّ. وَنَحْوُهُ فِي الصَّحِيحَيْنِ مِنْ رِوَايَةِ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ

**98** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவில் நின்று வணங்குவார்கள். அவர்களின் இரு பாதங்களிலும் வெடிப்பு ஏற்பட்டு விடும். அப்போது நான், "இறைத்தூதர் அவர்களே! இவ்வாறு ஏன் செய்கிறீர்கள்? அல்லாஹ் உங்கள் முன்-பின் பாவங்களை மன்னித்துவிட்டானே?" என்று கேட்டேன். "நான் நன்றியுள்ள அடியான் ஆக வேண்டும் என நான் விரும்ப வேண்டாமா?" என்று நபி (ஸல்) கேட்டார்கள்.

**(புகாரி:4837. முஸ்லிம்:2820. இது புகாரி நூலில் உள்ள வாசகமாகும். முகீரா இப்னு ஷுஅபா (ரழி) வழியாகவும் இதே ஹதீஸ் புகாரி:1130. முஸ்லிம்:2819 ஆகிய இரண்டு நூல்களிலும் உள்ளது)**

٩٩ – الْخَامِسُ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا قَالَتْ:" كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا دَخَلَ الْعَشْرُ أَحْيَا اللَّيْلَ وَأَيْقَظَ أَهْلَهُ وَجَدَّ وَشَدَّ الْمِئْزَرَ" مُتَّفَقٌ عَلَيْهِ وَالْمُرَادُ: الْعَشْرُ الأَوَاخِرُ مِنْ شَهْرِ رَمَضَانَ." وَالْمِئْزَرُ" الأَزَارُ وَهُوَ كِنَايَةٌ عَنْ اعْتِزَالِ النِّسَاءِ. وَقِيلَ: الْمُرَادُ تَشْمِيرُهُ لِلْعِبَادَةِ. يُقَالُ: شَدَدْتُ لِهَذَا الأَمْرِ مِئْزَرِي: أَيْ تَشَمَّرْتُ وَتَفَرَّغْتُ لَهُ

**99** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (ரமளானில்) கடைசி 10 நாட்கள் வந்துவிட்டால், இரவில் விழித்திருப்பார்கள். தன் குடும்பத்தாரை விழித்திருக்கச் செய்வார்கள். வணக்கத்தில் அதிகம் ஈடுபடுவார்கள். (தன் வேட்டியை) இறுக்கமாகக் கட்டிக் கொள்வார்கள். **(புகாரி:2024. முஸ்லிம்:1174)**

١٠٠ – السَّادِسُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" الْمُؤْمِنُ الْقَوِيُّ خَيْرٌ وَأَحَبُّ إِلَى اللَّهِ مِنَ الْمُؤْمِنِ الضَّعِيفِ. وَفِي كُلٍّ خَيْرٌ. احْرِصْ عَلَى مَا يَنْفَعُكَ وَاسْتَعِنْ بِاللَّهِ وَلاَ تَعْجِزْ. وَإِنْ أَصَابَكَ شَيْءٌ فَلاَ تَقُلْ: لَوْ أَنِّي فَعَلْتُ كَذَا كَانَ كَذَا وَلَكِنْ قُلْ: قَدَّرَ اللَّهُ وَمَا شَاءَ فَعَلَ فَإِنَّ لَوْ تَفْتَحُ عَمَلَ الشَّيْطَانِ" رَوَاهُ مُسْلِمٌ.

**100** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பலமுள்ள ஒரு முஃமின், பலவீனமான முஃமினை விடச் சிறந்தவனும், அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானவனும் ஆவான். ஒவ்வொன்றிலும் சிறப்புண்டு. உமக்கு பயனளிப்பவற்றில் ஆசை கொள்வீராக! அல்லாஹ்விடம் உதவி தேடுவீராக! பலவீனம் அடையாதீர்! உமக்கு ஒரு தீங்கு ஏற்பட்டால் ‘நான் இப்படிச் செய்திருந்தால் இப்படி, இப்படி ஆகி இருக்குமே’ என்று கூறாதீர்! எனினும், ‘அல்லாஹ்வின் விதி. அவன் நாடியபடி நடந்தது’ என்று கூறும்! நீர் இதைச் செய்யவில்லை என்றால், இது ஷைத்தானின் செயலாகும்’’ என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2664)**

١٠١ – السَّابِعُ عَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" حُجِبَتْ النَّارُ بِالشَّهَوَاتِ وَحُجِبَتْ الْجَنَّةُ بِالْمَكَارِهِ" مُتَّفَقٌ عَلَيْهِ وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ:" حُفَّتْ" بَدَلَ" حُجِبَتْ" وَهُوَ بِمَعْنَاهُ. أَيْ بَيْنَهُ وَبَيْنَهَا هَذَا الْحِجَابُ فَإِذَا فَعَلَهُ دَخَلَهَا

**101** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நரகம், மனோ இச்சைகளால் திரையிடப்பட்டுள்ளது. சொர்க்கம், கஷ்டங்களால் திரையிடப் பட்டுள்ளது’’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6487. முஸ்லிம்:2822)**

١٠٢ – الثَّامِنُ عَنْ أَبِي عَبْدِ اللَّهِ حُذَيْفَةَ بْنِ الْيَمَانِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ:" صَلَّيْتُ مَعَ النَّبِيِّ ﷺ ذَاتَ لَيْلَةٍ فَافْتَتَحَ الْبَقَرَةَ فَقُلْتُ: يَرْكَعُ عِنْدَ الْمِائَةِ ثُمَّ مَضَى. فَقُلْتُ: يُصَلِّي بِهَا فِي رَكْعَةٍ فَمَضَى فَقُلْتُ: يَرْكَعُ بِهَا. ثُمَّ افْتَتَحَ النِّسَاءَ فَقَرَأَهَا ثُمَّ افْتَتَحَ آلَ عِمْرَانَ فَقَرَأَهَا يَقْرَأُ مُتَرَسِّلاً إِذَا مَرَّ بِآيَةٍ فِيهَا تَسْبِيحٌ سَبَّحَ وَإِذَا مَرَّ بِسُؤَالٍ سَأَلَ وَإِذَا مَرَّ بِتَعَوُّذٍ تَعَوَّذَ. ثُمَّ رَكَعَ فَجَعَلَ يَقُولُ: سُبْحَانَ رَبِّيَ الْعَظِيمِ فَكَانَ رُكُوعُهُ نَحْوًا مِنْ قِيَامِهِ ثُمَّ قَالَ: سَمِعَ اللَّهُ لِمَنْ حَمِدَهُ رَبَّنَا لَكَ الْحَمْدُ: ثُمَّ قَامَ قِيَامًا طَوِيلاً قَرِيبًا مِمَّا رَكَعَ ثُمَّ سَجَدَ فَقَالَ: سُبْحَانَ رَبِّيَ الأَعْلَى فَكَانَ سُجُودُهُ قَرِيبًا مِنْ قِيَامِهِ" رَوَاهُ مُسْلِمٌ.

**102** அபூஅப்துல்லாஹ் என்ற ஹுதைஃபா இப்னு யமான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் இரவு நபி (ஸல்) அவர்களுடன் நான் தொழுதேன். முதல் ரக்அத்தில் ‘பகரா’ அத்தியாயத்தை ஓதினார்கள். 100 வசனங்கள் ஓதியதும் ‘ருகூஉ’ செய்வார்கள் என நினைத்தேன். ஆனால், தொடர்ந்தார்கள். இந்த அத்தியாயத்தின் மூலம் ஒரு ரக்அத் தொழுவார்கள் என நினைத்தேன். மேலும் தொடர்ந்தார்கள். இப்போதும் ருகூஉ செய்வார்கள் என எண்ணினேன். பின்பு

'அந்நிஸா' அத்தியாயத்தை ஓதினார்கள். தொடர்ந்து 'ஆலஇம்ரான்' அத்தியாயத்தைத் துவக்கி ஓதினார்கள். ஒவ்வொரு வசனமாக நிறுத்தி ஓதினார்கள். அதிலே 'தஸ்பீஹ்' சம்பந்தமான வசனம் ஓதும் போது, தஸ்பீஹ் செய்தார்கள். பிரார்த்தனை சம்பந்தமான வசனத்தை ஓதிய போது, பிரார்த்தனை செய்தார்கள். பாதுகாப்புத்தேடல் சம்பந்தமான வசனத்தை ஓதிய போது, பாதுகாவல் தேடினார்கள். பின்பு ருகூஉ செய்தார்கள். 'சுப்ஹான ரப்பியல் அளீம்' எனக் கூறுபவர்களாக இருந்தார்கள். அவர்களின் 'ருகூஉ' அவர்கள் நின்று (ஓதிய நேரம்) போல் இருந்தது. பின்பு 'ஸமிஅல்லாஹுலிமன் ஹமிதா, ரப்பனா லகல்ஹம்து' என்று கூறினார்கள். பின்பு ருகூவிலிருந்து எழுந்து நீண்ட நேரம் நின்றார்கள். மீண்டும் ஸஜ்தாச் செய்தார்கள். 'சுப்ஹான ரப்பியல் அஃலா' என்று (அதில்) கூறினார்கள். அவர்களின் ஸஜ்தா அவர்கள் நின்று (ஓதியநேரம்) போல் இருந்தது. **(முஸ்லிம்:772)**

١٠٣ - التَّاسِعُ عَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" صَلَّيْت مَعَ النَّبِيِّ ﷺ لَيْلَةً فَأَطَالَ الْقِيَامَ حَتَّى هَمَمْت بِأَمْرِ سُوءٍ ; قِيلَ: وَمَا هَمَمْت بِهِ؟ قَالَ هَمَمْت أَنْ أَجْلِسَ وَأَدَعَهُ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**103** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கிறார்கள்.

ஒருநாள் இரவு நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன். அப்போது, நான் தவறான எண்ணம் கொள்ளும் அளவுக்கு, நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் நிற்பதை நீட்டினார்கள்.

"என்ன தவறான எண்ணம் கொண்டீர்?" என்று கேட்கப்பட்டது. "நான் உட்கார்ந்து விடவும், தொழுகையை விட்டு விடவும் நாடினேன்" என்று இப்னு மஸ்ஊத் (ரழி) கூறினார்கள்.

**(புகாரி:1135. முஸ்லிம்:773)**

١٠٤ - الْعَاشِرُ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ:" يَتْبَعُ الْمَيِّتَ ثَلَاثَةٌ: أَهْلُهُ وَمَالُهُ وَعَمَلُهُ فَيَرْجِعُ اثْنَانِ وَيَبْقَى وَاحِدٌ: يَرْجِعُ أَهْلُهُ وَمَالُهُ وَيَبْقَى عَمَلُهُ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**104** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மரணித்த நபரை மூன்று விஷயங்கள் பின் தொடர்கின்றன. அவை, அவரது குடும்பம், அவனது சொத்து, அவரது செயல் ஆகும். அதில் இரண்டு திரும்பி விடுகின்றன. ஒன்று தங்கி விடுகிறது. (அதாவது) அவரது குடும்பமும் அவரது சொத்தும் திரும்பி விடுகிறது. அவரது செயல்கள் (அவருடன்) தங்கி விடுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6514. முஸ்லிம்:2960)**

١٠٥ - الْحَادِي عَشَرَ عَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ النَّبِيُّ ﷺ" الْجَنَّةُ أَقْرَبُ إِلَى أَحَدِكُمْ مِنْ شِرَاكِ نَعْلِهِ وَالنَّارُ مِثْلُ ذَلِكَ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**105** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள் :

சொர்க்கம் என்பது, உங்களில் ஒருவருக்கு அவரது செருப்பு வாரையும்விட மிக நெருக்கமாக உள்ளது. நரகமும் அதுபோன்றுதான் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6488)**

١٠٦ - الثَّانِي عَشَرَ عَنْ أَبِي فِرَاسٍ رَبِيعَةَ بْنِ كَعْبٍ الأَسْلَمِيِّ خَادِمِ رَسُولِ اللَّهِ ﷺ وَمِنْ أَهْلِ الصُّفَّةِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" كُنْت أَبِيتُ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فَآتِيهِ بِوُضُوئِهِ وَحَاجَتِهِ فَقَالَ: سَلْنِي. فَقُلْت أَسْأَلُكَ مُرَافَقَتَكَ فِي الْجَنَّةِ. فَقَالَ: أَوْ غَيْرَ ذَلِكَ؟ قُلْت: هُوَ ذَاكَ. قَالَ: فَأَعِنِّي عَلَى نَفْسِكَ بِكَثْرَةِ السُّجُودِ" رَوَاهُ مُسْلِمٌ

**106** (திண்ணைத் தோழர்களில் ஒருவரும், நபி (ஸல்) அவர்களின் ஊழியருமான அபூஃபிராஸ் என்ற) ரபீஆஇப்னு கஅபு அல் அஸ்லமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களுடன் இரவில் தங்கியிருந்தேன். அவர்களுக்கு உளுச் செய்யும் தண்ணீர், மற்றும் அதற்கான (தொழுகை விரிப்பு போன்ற) தேவைகளையும் செய்து வந்தேன். அப்போது, "என்னிடம் விரும்பியதைக் கேட்பீராக!" என்று கூறினார்கள். "சொர்க்கத்தில் உங்களின் நட்பையே உங்களிடம் கேட்கிறேன்" என்று நான் கூறினேன். "வேறு ஏதும் உள்ளதா?" என்று கேட்டார்கள். நான் "அது மட்டும்தான்" என்றேன். "நீ அதிகமாக ஸஜ்தா செய்வதன் மூலம், உமக்காக (நான் அல்லாஹ்விடம் சொர்க்கம் கேட்டுப்பெற) எனக்கு உதவுவீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:489)**

١٠٧ - الثَّالِثَ عَشَرَ عَنْ أَبِي عَبْدِ اللَّه - وَيُقَالُ: أَبُو عَبْدِ الرَّحْمَنِ - ثَوْبَانُ مَوْلَى رَسُولِ اللَّه ﷺ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ: "عَلَيْكَ بِكَثْرَةِ السُّجُودِ: فَإِنَّكَ لَنْ تَسْجُدَ لِلَّه سَجْدَةً إِلاَّ رَفَعَكَ اللَّهُ بِهَا دَرَجَةً وَحَطَّ عَنْكَ بِهَا خَطِيئَةً" رَوَاهُ مُسْلِمٌ.

**107** (நபி (ஸல்) அவர்களின் அடிமையும், அபூஅப்துல்லாஹ் அல்லது அபூஅப்துர் ரஹ்மான் என்ற ஸவ்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அதிகம் ஸஜ்தா செய்வதை நீர் கடைபிடிப்பீராக! நிச்சயமாக நீர் அல்லாஹ்வுக்காக ஒரு ஸஜ்தா செய்வது என்பது, அதன் மூலம் அல்லாஹ் உமக்கு அந்தஸ்த்தை உயர்த்தாமலும், அதன் மூலம் உம்மை விட்டும் ஒரு தவறை அழிக்காமலும் இருப்பதில்லை' என்று நபி (ஸல்) அவர்கள் கூற, நான் கேட்டுள்ளேன்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:488)**

١٠٨ - الرَّابِعَ عَشَرَ عَنْ أَبِي صَفْوَانَ عَبْدِ اللَّه بْنِ بُسْرٍ الأَسْلَمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ: "خَيْرُ النَّاسِ مَنْ طَالَ عُمُرُهُ وَحَسُنَ عَمَلُهُ" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ "بُسْرٌ": بِضَمِّ الْبَاءِ وَبِالسِّينِ الْمُهْمَلَةِ.

**108** அபூ ஸஃப்வான் என்ற அப்துல்லாஹ் இப்னு புஸ்ர் அல்அஸ்லமீ (ரழி) அறிவிக்கிறார்கள்:

"மனிதர்களில் சிறந்தவர், எவர் ஒருவரின் ஆயுள் நீடித்தும், அவரது செயல் அழகாகவும் இருக்கிறதோ அவரே ஆவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2329. திர்மிதீ இமாம் இதை 'ஹஸன்' என்று கூறுகிறார்கள்)**

١٠٩ - الْخَامِسَ عَشَرَ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: غَابَ عَمِّي أَنَسُ بْنُ النَّضْرِ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ قِتَالِ بَدْرٍ فَقَالَ: يَا رَسُولَ اللَّه غِبْتُ عَنْ أَوَّلِ قِتَالٍ قَاتَلْتَ الْمُشْرِكِينَ. لَئِنْ اللَّهُ أَشْهَدَنِي قِتَالَ الْمُشْرِكِينَ لَيَرَيَنَّ اللَّهُ مَا أَصْنَعُ. فَلَمَّا كَانَ يَوْمُ أُحُدٍ انْكَشَفَ الْمُسْلِمُونَ فَقَالَ: اللَّهُمَّ أَعْتَذِرُ إِلَيْكَ مِمَّا صَنَعَ هَؤُلاَءِ - يَعْنِي أَصْحَابَهُ - وَأَبْرَأُ إِلَيْكَ مِمَّا صَنَعَ هَؤُلاَءِ - يَعْنِي الْمُشْرِكِينَ - ثُمَّ تَقَدَّمَ فَاسْتَقْبَلَهُ سَعْدُ بْنُ مُعَاذٍ فَقَالَ: يَا سَعْدُ بْنُ مُعَاذٍ الْجَنَّةُ وَرَبِّ الْكَعْبَةِ إِنِّي أَجِدُ رِيحَهَا مِنْ دُونِ أُحُدٍ! قَالَ سَعْدٌ: فَمَا اسْتَطَعْتُ يَا رَسُولَ اللَّه مَا صَنَعَ! قَالَ أَنَسٌ: فَوَجَدْنَا بِهِ بِضْعًا وَثَمَانِينَ ضَرْبَةً بِالسَّيْفِ أَوْ طَعْنَةً بِرُمْحٍ أَوْ رَمْيَةً بِسَهْمٍ وَوَجَدْنَاهُ قَدْ قُتِلَ وَمَثَّلَ بِهِ الْمُشْرِكُونَ فَمَا عَرَفَهُ أَحَدٌ إِلاَّ أُخْتُهُ بِبَنَانِهِ. قَالَ أَنَسٌ: كُنَّا نَرَى - أَوْ نَظُنُّ - أَنَّ هَذِهِ الآيَةَ نَزَلَتْ فِيهِ وَفِي أَشْبَاهِهِ: مِنَ الْمُؤْمِنِينَ رِجَالٌ صَدَقُوا مَا عَاهَدُوا اللَّهَ عَلَيْهِ إِلَى آخِرِهَا مُتَّفَقٌ عَلَيْهِ. قَوْلُهُ: "لَيُرِيَنَّ اللَّهُ" رُوِيَ بِضَمِّ الْيَاءِ وَكَسْرِ الرَّاءِ: أَيْ لَيُظْهِرَنَّ اللَّهُ ذَلِكَ لِلنَّاسِ وَرُوِيَ بِفَتْحِهِمَا وَمَعْنَاهُ ظَاهِرٌ وَاللَّهُ أَعْلَمُ.

**109** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என் சிறிய தந்தை அனஸ் இப்னு நள்ரு (ரழி) அவர்கள், பத்ருப் போரில் கலந்து கொள்ளாமல் இருந்துவிட்டார். இதுபற்றி நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! இணை வைப்போருடன் நீங்கள் போரிட்ட முதல் போரில் நான் கலந்து கொள்ளவில்லை. அந்தச் சண்டையில் என்னை அல்லாஹ் கலந்து கொள்ளச் செய்திருந்தால், நான் என்ன செய்வேன் என்பதை அல்லாஹ் காட்டியிருப்பானே" என்று கூறினார். பின்னர், உஹதுப் போரில் (குழப்ப நிலை) ஏற்பட்ட போது, முஸ்லிம்கள் சிலர் (போரிலிருந்து) நீங்கினர். "இறைவா! இவர்கள் (முஸ்லிம்கள்) செய்தவற்றிற்காக உன்னிடம் நான் மன்னிப்புக் கோருகிறேன். அவர்கள் (இணை வைப்போர்) செய்தவற்றிலிருந்து நான் நீங்கி விட்டேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். பின்பு (அனஸ் இப்னு நள்ரு (ரழி)) முன்னேறிச் சென்றார்.

ஸஅது இப்னு முஆத் (ரழி) அவர்கள், அவர்களை முன்னோக்கி வந்தார். அப்போது அனஸ் இப்னு நள்ரு (ரழி) அவரை நோக்கி, "ஸஅது இப்னு முஆத் (ரழி) அவர்களே! சொர்க்கம் (இதோ அருகில் உள்ளது) கஅபாவின் இறைவன் மீது ஆணையாக! உஹது மலையின் மற்றொரு திசையிலிருந்து சொர்க்கத்தின் வாடையைப் பெறுகிறேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவர் (அனஸ் இப்னு நள்ரு) செய்தது போல் எனக்கு இயலவில்லை" என ஸஅது (ரழி) கூறினார்கள். வாள்வெட்டுக்கள் அல்லது அம்பின் குடைச்சல் அல்லது ஈட்டியின் பாய்ச்சல் என எண்பதுக்கும் மேற்பட்ட காயங்களுடன், கொல்லப்பட்ட நிலையில் தான் அவரைக் கண்டோம். இணைவைப்போர் அவரைக் குதறி இருந்தனர். அவரை அவரது விரல் நுனிகள் மூலம், அவரது சகோதரியைத் தவிர எவரும் அறிய முடியவில்லை. கீழ்க்காணும் 33:23 வசனம் கூட அவர் மற்றும் அவர் போன்றோர் விஷயமாகவே இறங்கியதாக நாங்கள் எண்ணினோம்.

இறைவிசுவாசிகளில், அல்லாஹ்விடம் தாங்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தை (நிறைவேற்றி) உண்மைப்படுத்தும் ஆண்கள் உள்ளனர். அவர்களில் (உயிரைத் தியாகம் செய்தல் என்ற) தன் லட்சியத்தை அடைந்தவர்களும் உள்ளனர். அவர்களில், (அதை) எதிர்பார்த்திருப்போர் உள்ளனர். அவர்கள் (ஒப்பந்தத்தை) சிறிதும் மாற்றுபவர்களாக இல்லை. **(33:23)**

**(புகாரி:2805. முஸ்லிம்:1903)**

١١٠ – السّادسَ عَشَرَ عَنْ أَبِي مَسْعُود عُقْبَةَ بْنِ عَمْرو الأنْصَارِيِّ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ: لَمّا نَزَلَتْ آيَةُ الصَّدَقَة كُنّا نُحَاملُ عَلَى ظُهُورنَا فَجَاءَ رَجُلٌ فَتَصَدّقَ بشَيْء كَثير فَقَالُوا: مُرَاء. وَجَاءَ رَجُلٌ آخَرُ فَتَصَدّقَ بصَاع فَقَالُوا: إنّ اللّهَ لَغَنيٌّ عَنْ صَاع هَذَا! فَنَزَلَتْ الّذينَ يَلْمزُونَ الْمُطّوّعينَ منْ الْمُؤْمنينَ في الصّدَقَات وَالّذينَ لاَ يَجدُونَ إلاّ جُهْدَهُمْ الأيَةَ. مُتّفَقٌ عَلَيْه." وَنُحَاملُ" بضَمّ النّونَ وَبالْحَاء الْمُهْمَلَة: أَيْ يَحْملُ أَحَدُنَا عَلَى ظَهْره بالأجرَة وَيَتَصَدّقُ بهَا

**110** (அபூமஸ்ஊத் என்ற) உக்பா இப்னு அம்ரு அல்அன்சாரி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தர்மம் செய்தல் பற்றிய வசனம் இறங்கிய போது, நாங்கள் எங்கள் முதுகில் மூட்டைகளைச் சுமப்பவர்களாக இருந்தோம். ஒருவர் வந்து, அதிகப் பொருட்களைத் தர்மம் செய்தார். "இவர் பிறர் மெச்சச் செய்கிறார்" என்று சிலர் கூறினார்கள். மற்றொருவர் வந்து, ஒரு "ஸாஉ" அளவுக்குத் தர்மம் செய்தார். "இவரது ஒரு 'ஸாஉ' அளவை விட்டும் அல்லாஹ் தேவையற்றவன்" என்றும் பேசினார்கள். அப்போது 9:79 வசனம் இறங்கியது.

(இந்த நயவஞ்சகர்கள்), இறை விசுவாசிகளில் தர்மத்தில் அதிக ஈடுபாடு கொள்பவர்களையும், மேலும் தங்களின் உழைப்பைத் தவிர வேறொன்றைத் தராதவர்களையும் குறை கூறுகிறார்கள்.

அவர்களைக் கேலியும் செய்கிறார்கள். அவர்களைத்தான் அல்லாஹ் கேலி செய்கிறான். அவர்களுக்கு நோவினையான வேதனையும் உண்டு. **(9:79)**

**(புகாரி:1415. முஸ்லிம்:1018)**

١١١ - السَّابِعَ عَشَرَ عَنْ سَعِيد بْنِ عَبْد الْعَزِيز عَنْ رَبِيعَةَ بْنِ يَزِيدَ عَنْ أَبِي إِدْرِيسَ الْخَوْلاَنِيِّ عَنْ أَبِي ذَرٍّ جُنْدُب بْنِ جُنَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ فِيمَا يَرْوِي عَنْ اللَّه تَبَارَكَ وَتَعَالَى أَنَّهُ قَالَ:" يَا عِبَادِي إِنِّي حَرَّمْت الظُّلْمَ عَلَى نَفْسِي وَجَعَلْته بَيْنَكُمْ مُحَرَّمًا فَلاَ تَظَالَمُوا. يَا عِبَادِي كُلُّكُمْ ضَالٌّ إلاَّ مَنْ هَدَيْته فَاسْتَهْدُونِي أَهْدكُمْ. يَا عِبَادِي كُلُّكُمْ جَائِعٌ إلاَّ مَنْ أَطْعَمْته فَاسْتَطْعِمُونِي أُطْعِمْكُمْ. يَا عِبَادِي كُلُّكُمْ عَارٍ إلاَّ مَنْ كَسَوْته فَاسْتَكْسُونِي أَكْسُكُمْ يَا عِبَادِي إنَّكُمْ تُخْطِئُونَ بِاللَّيْلِ وَالنَّهَارِ وَأَنَا أَغْفِرُ الذُّنُوبَ جَمِيعًا فَاسْتَغْفِرُونِي أَغْفِرْ لَكُمْ. يَا عِبَادِي إنَّكُمْ لَنْ تَبْلُغُوا ضُرِّي فَتَضُرُّونِي وَلَنْ تَبْلُغُوا نَفْعِي فَتَنْفَعُونِي. يَا عِبَادِي لَوْ أَنَّ أَوَّلَكُمْ وَآخِرَكُمْ وَإِنْسَكُمْ وَجِنَّكُمْ كَانُوا عَلَى أَتْقَى قَلْبِ رَجُلٍ وَاحِدٍ مِنْكُمْ مَا زَادَ ذَلِكَ فِي مُلْكِي شَيْئًا. يَا عِبَادِي لَوْ أَنَّ أَوَّلَكُمْ وَآخِرَكُمْ وَإِنْسَكُمْ وَجِنَّكُمْ كَانُوا عَلَى أَفْجَرِ قَلْبِ رَجُلٍ وَاحِدٍ مِنْكُمْ مَا نَقَصَ ذَلِكَ مِنْ مُلْكِي شَيْئًا. يَا عِبَادِي لَوْ أَنَّ أَوَّلَكُمْ وَآخِرَكُمْ وَإِنْسَكُمْ وَجِنَّكُمْ قَامُوا فِي صَعِيدٍ وَاحِدٍ فَسَأَلُونِي فَأَعْطَيْت كُلَّ إنْسَانٍ مَسْأَلَتَهُ مَا نَقَصَ ذَلِكَ مِمَّا عِنْدِي إلاَّ كَمَا يَنْقُصُ الْمِخْيَطُ إذَا أُدْخِلَ الْبَحْرَ! يَا عِبَادِي إنَّمَا هِيَ أَعْمَالُكُمْ أُحْصِيهَا لَكُمْ ثُمَّ أُوَفِّيكُمْ إيَّاهَا. فَمَنْ وَجَدَ خَيْرًا فَلْيَحْمَدْ اللَّهَ وَمَنْ وَجَدَ غَيْرَ ذَلِكَ فَلاَ يَلُومَن إلاَّ نَفْسَهُ". قَالَ سَعِيدٌ: كَانَ أَبُو إِدْرِيسَ إِذَا حَدَّثَ بِهَذَا الْحَدِيث جَثَا عَلَى رُكْبَتَيْهِ ; رَوَاهُ مُسْلِمٌ. وَرُوِّينَا عَنْ الإِمَام أَحْمَدَ بْنِ حَنْبَلٍ رَحِمَهُ اللَّهُ قَالَ: لَيْسَ لِأَهْلِ الشَّامِ حَدِيثٌ أَشْرَفُ مِنْ هَذَا الْحَدِيثِ.

**111** (அபூதர் என்ற) ஜுன்துப் இப்னு ஜுனாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என் அடியார்களே! நான் நேர்வழி காட்டியவரைத் தவிர நீங்கள் அனைவரும் வழி கேடர்களே! எனவே என்னிடம் நேர் வழியைக் கேளுங்கள். நான் நேர்வழி தருகிறேன்.

என் அடியார்களே! நான் உணவளித்தவரைத் தவிர, நீங்கள் அனைவரும் பசியால் வாடுபவர்களே! எனவே, என்னிடம் உணவு கேளுங்கள். உங்களுக்கு நான் உணவளிக்கிறேன்.

என் அடியார்களே! நான் ஆடை அளித்தவரைத் தவிர, நீங்கள் அனைவரும் நிர்வாணிகளே! எனவே என்னிடம் ஆடை கேளுங்கள். நான் உங்களுக்கு ஆடை தருகிறேன்.

என் அடியார்களே! இரவிலும், பகலிலும் நீங்கள் தவறு செய்கிறீர்கள். நானே பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பேன். என்னிடம் மன்னிப்புக் கேளுங்கள். நான் உங்களை மன்னிக்கிறேன்.

என் அடியார்களே! நீங்கள் எனக்குத் தீங்கை செய்துவிட முடியாது. நீங்கள் எனக்கு நன்மை செய்துவிடவும் முடியாது. என் அடியார்களே! உங்களில் முதன்மையானவர், உங்களின் இறுதி யானவர், உங்களில் மனிதர்கள், உங்களின் ஜின்கள் ஆகிய உங்களில் ஒரே ஒருவரின் இதயத்தில் இறையச்சம் இருந்தாலும், அது என் நிர்வாகத்தில் எதையும் அதிகப்படுத்தி விடாது.

என் அடியார்களே! உங்களில் முதன்மையானவரும், உங்களில் இறுதியானவரும், உங்களில் மனிதரும், உங்களில் ஜின்களும் ஆகிய உங்களில் ஒரே ஒருவரின் இதயம், அதிகக் குற்றம் நிறைந்ததாக இருந்தாலும், அது என் நிர்வாகத்தில் எதையும் குறைத்து விடாது.

என் அடியார்களே! உங்களின் முதன்மையானவரும், உங்களின் இறுதியானவரும், உங்களில் மனிதரும், உங்களில் ஜின்களும் என அனைவரும் ஒரே மைதானத்தில் நின்று, என்னிடம் அவர்கள் கேட்டால், ஒவ்வொரு மனிதருக்கும், அவர் கேட்டதைக் கொடுப்பேன். கடலில் நுழைக்கப்பட்ட ஊசி, தண்ணீரை குறைப்பது போன்றே தவிர, என்னிடம் உள்ளதை இது குறைத்துவிடாது.

என் அடியார்களே! இவைதான் உங்களது செயல்கள். அவற்றை நான் முழுமையாக அறிந்து வைத்துள்ளேன். பின்பு அவற்றை (அவற்றின் நற்கூலிகளை) உங்களுக்கு நிறைவேற்றுவேன். சிறந்ததை ஒருவன் பெற்றுக் கொண்டால், அல்லாஹ்வை புகழட்டும். இது அல்லாததைப் பெற்றுக் கொண்டால், அவர் தன்னையே தவிர (வேறு எவரையும்) பழித்திட வேண்டாம் என்று அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2577)**

'இந்த ஹதீஸை அறிவிக்கும் போது, இதன் அறிவிப்பாளரான அபூஇத்ரீஸ் முழங்காலிட்டு (முட்டுபோட்டு) உட்கார்ந்தவாறே கூறுவார்' என, இதன் மற்றொரு அறிவிப்பாளரான ஸயீத் கூறுகிறார்.

"மேலும் சிரியா (ஷாம்) வாசிகள் இந்த ஹதீஸைவிட மிகச் சிறந்த ஹதீஸை அறிவித்ததில்லை" என்று இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) கூறுகின்றார்கள்.

## ١٢ - باب الحث على الازدياد من الخير فى أواخر العمر

## பாடம் : 12 - வயதான காலத்தில் நன்மைகளை அதிகம் செய்திட ஆர்வமூட்டுதல்:

قَالَ تَعَالَى: أَوَلَمْ نُعَمِّرْكُمْ مَا يَتَذَكَّرُ فِيهِ مَنْ تَذَكَّرَ وَجَاءَكُمُ النَّذِيرُ

قَالَ ابْنُ عَبَّاسٍ وَالْمُحَقِّقُونَ مَعْنَاهُ: أَوَلَمْ نُعَمِّرْكُمْ سِتِّينَ سَنَةً؟ وَيُؤَيِّدُهُ الْحَدِيثُ الَّذِي سَنَذْكُرُهُ إِنْ شَاءَ اللَّهُ تَعَالَى. وَقِيلَ: مَعْنَاهُ ثَمَانِي عَشْرَةَ سَنَةً. وَقِيلَ: أَرْبَعِينَ سَنَةً. قَالَهُ الْحَسَنُ وَالْكَلْبِيُّ وَمَسْرُوقٌ وَنُقِلَ عَنِ ابْنِ عَبَّاسٍ أَيْضًا - وَنَقَلُوا أَنَّ أَهْلَ الْمَدِينَةِ كَانُوا إِذَا بَلَغَ أَحَدُهُمْ أَرْبَعِينَ سَنَةً تَفَرَّغَ لِلْعِبَادَةِ وَقِيلَ: هُوَ الْبُلُوغُ. وَقَوْلُهُ تَعَالَى: وَجَاءَكُمُ النَّذِيرُ قَالَ ابْنُ عَبَّاسٍ وَالْجُمْهُورُ: هُوَ النَّبِيُّ ﷺ. وَقِيلَ: الشَّيْبُ قَالَهُ عِكْرِمَةُ وَابْنُ عُيَيْنَةَ وَغَيْرُهُمَا. وَاللَّهُ أَعْلَمُ.

**அல்லாஹ் கூறுகிறான்:** '.... *சிந்திப்பவன், அதிலே சிந்திக்க வசதியாக உங்கள் வயதை நாம் தரவில்லையா? உங்களிடம் எச்சரிப்பவரும் வரவில்லையா?' (35:37)*

இந்த வசனத்திற்கு விளக்கம் கூறும்போது, இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களும், மற்றும் அறிஞர்களும், "உங்களுக்கு 60 வருட வயதை நாம் தரவில்லையா?" (என்று அல்லாஹ் கூறுவதாக) குறிப்பிடுகிறார்கள். அல்லாஹ் நாடினால் நாம் கூற உள்ள ஹதீஸ்களும் இதை உறுதிப்படுத்துகிறது. அதன் பொருள் 18 வயது என்றும், 40 வயது என்றும் கூறப்படுகின்றது. இதையே ஹஸன், கல்பீ, மஸ்ரூக் ஆகியோர் கூறுகின்றனர். இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களின் கருத்தாகவும் இது கூறப்பட்டுள்ளது. "மதீனாவாசிகளில் ஒருவர் 40 வயதை அடைந்துவிட்டால் வணக்கத்தில் அவர்கள் ஈடுபடுவார்கள்" என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். இதன் பொருள், பருவ வயதை அடைவது தான் என்றும் கூறப்படுகின்றது.

'உங்களில் எச்சரிப்பவர் வரவில்லையா?' என்று அல்லாஹ் கேட்பது, நபி (ஸல்) அவர்களைத்தான் என இப்னு அப்பாஸ் (ரழி) மற்றும் பிரபல அறிஞர்கள் கூறுகிறார்கள். 'எச்சரிப்பவர்' என்பதை 'நரை' என்றும் கூறப்படுகிறது. இதை இக்ரிமா, இப்னு உயய்னா மற்றும் சிலர் கூறுகிறார்கள். அல்லாஹ்வே மிக அறிந்தவன்.

١١٢ – وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "أَعْذَرَ اللَّهُ إِلَى امْرِئٍ أَخَّرَ أَجَلَهُ حَتَّى بَلَغَ سِتِّينَ سَنَةً" رَوَاهُ الْبُخَارِيُّ. قَالَ الْعُلَمَاءُ: مَعْنَاهُ: لَمْ يَتْرُكْ لَهُ عُذْرًا إِذْ أَمْهَلَهُ هَذِهِ الْمُدَّةَ. يُقَالُ: أَعْذَرَ الرَّجُلُ إِذَا بَلَغَ الْغَايَةَ فِي الْعُذْرِ.

**112** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

"ஒருவனின் காலத்தவணையை அவன் 60 வயததை அடையும் அளவுக்கு பிற்படுத்தி இருந்தும், (அவன் நற்செயல் செய்யாவிட்டால்) அல்லாஹ் அவனைத் தண்டிப்பான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6419)**

இந்த 60 வயது வரையில் நற்செயல் செய்வதை தாமதித்தவனைத் தப்பிக்க அல்லாஹ் விடமாட்டான். மேலும், காரணம் கூறும் வயதின் எல்லையை அடையும் ஒருவனைத் தண்டிப்பான் என்பதே இதன் கருத்து என உலமாக்கள் கூறுகிறார்கள்.

١١٣ – الثَّاني عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: كَانَ عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ يُدْخِلُنِي مَعَ أَشْيَاخِ بَدْرٍ فَكَأَنَّ بَعْضَهُمْ وَجَدَ فِي نَفْسِهِ فَقَالَ: لِمَ يَدْخُلُ هَذَا مَعَنَا وَلَنَا أَبْنَاءٌ مِثْلُهُ؟ فَقَالَ عُمَرُ: إِنَّهُ مِنْ حَيْثُ عَلِمْتُمْ. فَدَعَانِي ذَاتَ يَوْمٍ فَأَدْخَلَنِي مَعَهُمْ فَمَا رَأَيْتُ أَنَّهُ دَعَانِي يَوْمَئِذٍ إِلاَّ لِيُرِيَهُمْ. قَالَ: مَا تَقُولُونَ فِي قَوْلِ اللَّهِ إِذَا جَاءَ نَصْرُ اللَّهِ وَالْفَتْحُ؟ فَقَالَ بَعْضُهُمْ: أُمِرْنَا نَحْمَدُ اللَّهَ وَنَسْتَغْفِرُهُ إِذَا نَصَرَنَا وَفَتَحَ عَلَيْنَا. وَسَكَتَ بَعْضُهُمْ فَلَمْ يَقُلْ شَيْئًا. فَقَالَ لِي: أَكَذَلِكَ تَقُولُ يَا ابْنَ عَبَّاسٍ؟ فَقُلْتُ: لاَ. قَالَ: فَمَا تَقُولُ؟ قُلْتُ: هُوَ أَجَلُ رَسُولِ اللَّهِ ﷺ أَعْلَمَهُ لَهُ. قَالَ: إِذَا جَاءَ نَصْرُ اللَّهِ وَالْفَتْحُ وَذَلِكَ عَلاَمَةُ أَجَلِكَ فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ وَاسْتَغْفِرْهُ إِنَّهُ كَانَ تَوَّابًا فَقَالَ عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ: مَا أَعْلَمُ مِنْهَا إِلاَّ مَا تَقُولُ رَوَاهُ الْبُخَارِيُّ

**113** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உமர் (ரழி) அவர்கள், பத்ருப்போரில் கலந்துகொண்ட முதியவர்களுடன் என்னையும் (ஒரு குழுவில்) இணைத்திருந்தார்கள். இதனால் அவர்களில் சிலரின் உள்ளத்தில் இதுபற்றிய குறை இருந்தது போலும். "இளம் வயதுடைய இவரை நம்முடன் (உமர் (ரழி)) இணைத்திருக்கிறாரே! இவரைப் போன்ற (வயதுடைய) மகன்கள் நமக்கு உள்ளனர்" என்று கூறினர். (இதை அறிந்த) உமர் (ரழி), "இவரைப்பற்றி நீங்கள் அறிந்தது இவ்வளவுதான்" என்று அவர்களிடம் கூறினார்கள்.

ஒருநாள் என்னை அழைத்து, அந்த முதியவர்களுடன் உமர் (ரழி) உட்கார வைத்தார்கள். அவர்களிடம் என்னைப்பற்றி (என் திறமை பற்றி)க் காண்பிக்கவே என்னை அழைத்தார்கள் என்பதை நான் அறியவில்லை. **'இதா ஜாஅ நஸ்ருல்லாஹி வல்ஃபத்ஹு (110:1)'** என்ற அல்லாஹ்வின் வாசகம் குறித்து என்ன கருதுகிறீர்கள்? என உமர் (ரழி) கேட்டார்கள். அந்த முதியவர்களில் சிலர், 'அல்லாஹ் நமக்கு உதவியும் செய்து, நமக்கு வெற்றியும் தந்தால், அவனைப் புகழவும், அவனிடம் மன்னிப்புக் கேட்கவும் நாம் கட்டளையிடப்பட்டுள்ளோம்' என்று கூறினார்கள். அவர்களில் சிலர் அமைதியாக இருந்தார்கள். எதையும் அவர்கள் கூறவில்லை.

"இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களே! இவ்வாறே நீங்களும் கூறுகிறீர்களா?" என என்னிடம் உமர் (ரழி) கேட்டார்கள். "இல்லை" என நான் கூறினேன். (பிறகு) "என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். "அது நபி (ஸல்) அவர்களின் (மரணத்) தவணை பற்றியதாகும். இதனையே 'இதாஜாஅ நஸ்ருல்லாஹ்' என்று கூறி அவர்களுக்கும் அல்லாஹ் கற்றுத்தந்தான். இது உன் தவணையின் (மரணத்தின்) அடையாளமாகும். எனவே உன் இறைவனைப் புகழ்ந்து தஸ்பீஹ் செய்வீராக! அவனிடம் மன்னிப்புக் கோருவீராக! அவன் பாவ மன்னிப்பு வழங்குபவனாக உள்ளான்" (என்று கூறினான்) என்பதாக நான் கூறினேன். 'நீர் கூறியதைத்தவிர, இதற்கு விளக்கம் நான் அறியவில்லை' என்று உமர் (ரழி) கூறினார்கள். **(புகாரி:4970)**

١١٤ – الثَّالِثُ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: مَا صَلَّى رَسُولُ اللَّهِ ﷺ صَلاَةً بَعْدَ أَنْ نَزَلَتْ عَلَيْهِ إِذَا جَاءَ نَصْرُ اللَّهِ وَالْفَتْحُ إِلاَّ يَقُولُ فِيهَا "سُبْحَانَكَ رَبَّنَا وَبِحَمْدِكَ اللَّهُمَّ اغْفِرْ لِي" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ فِي الصَّحِيحَيْنِ عَنْهَا: كَانَ رَسُولُ اللَّهِ ﷺ

يَكْثُرُ أَنْ يَقُولَ فِي رُكُوعِهِ وَسُجُودِهِ: سُبْحَانَكَ اللَّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اللَّهُمَّ اغْفِرْ لِي يَتَأَوَّلُ الْقُرْآنَ مَعْنَى: يَتَأَوَّلُ الْقُرْآنَ أَيْ يَعْمَلُ مَا أُمِرَ بِهِ فِي الْقُرْآنِ فِي قَوْلِهِ تَعَالَى: فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ وَاسْتَغْفِرْهُ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ: كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُكْثِرُ أَنْ يَقُولَ قَبْلَ أَنْ يَمُوتَ: "سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ". قَالَتْ عَائِشَةُ: قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ مَا هَذِهِ الْكَلِمَاتُ الَّتِي أَرَاكَ أَحْدَثْتَهَا تَقُولُهَا؟ قَالَ: جُعِلَتْ لِي عَلَامَةٌ فِي أُمَّتِي إِذَا رَأَيْتُهَا قُلْتُهَا إِذَا جَاءَ نَصْرُ اللَّهِ وَالْفَتْحُ إِلَى آخِرِ السُّورَةِ. وَفِي رِوَايَةٍ لَهُ: كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُكْثِرُ مِنْ قَوْلِ:" سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ أَسْتَغْفِرُ اللَّهَ وَأَتُوبُ إِلَيْكَ". قَالَتْ: قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَرَاكَ تُكْثِرُ مِنْ قَوْلِ سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ أَسْتَغْفِرُ اللَّهَ وَأَتُوبُ إِلَيْهِ؟ فَقَالَ: أَخْبَرَنِي رَبِّي أَنِّي سَأَرَى عَلَامَةً فِي أُمَّتِي فَإِذَا رَأَيْتُهَا أَكْثَرْتُ مِنْ قَوْلِ: سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ أَسْتَغْفِرُ اللَّهَ وَأَتُوبُ إِلَيْهِ فَقَدْ رَأَيْتُهَا: إِذَا جَاءَ نَصْرُ اللَّهِ وَالْفَتْحُ فَتْحُ مَكَّةَ وَرَأَيْتَ النَّاسَ يَدْخُلُونَ فِي دِينِ اللَّهِ أَفْوَاجًا فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ وَاسْتَغْفِرْهُ إِنَّهُ كَانَ تَوَّابًا.

**114** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

110-வது அத்தியாயம் தன்மீது இறங்கிய பின் நபி (ஸல்) அவர்கள் தொழுகையின் போது, 'சுப்ஹானக்க ரப்பனா வபிஹம்திக அல்லாஹும்மக்ஃபிர்லீ' என்று கூறாமல் தொழமாட்டார்கள்.

**(புகாரி:4967. முஸ்லிம்:484/219)**

ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ் இந்த இரண்டு நூல்களிலும் (பின்வருமாறு) உள்ளது:

"நபி (ஸல்) அவர்கள் தன் ருகூவிலும், தன் ஸஜ்தாவிலும், 'சுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக, அல்லாஹும்ம க்ஃபிர்லீ என்று அதிகம் கூறுபவர்களாக இருந்தார்கள். குர்ஆன் (110:1) கூறியபடியே இதைச் செய்தார்கள்"

**துஆவின் பொருள்: இறைவனே! உன்னை தூய்மைப்படுத்துகிறேன். உன்னைப் புகழ்கிறேன். இறைவனே! என்னை நீ மன்னிப்பாயாக!**

முஸ்லிம் நூலில் மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

நபி (ஸல்) அவர்கள், தனது இறப்புக்கு முன்னால், 'சுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக, அஸ்தக்ஃபிருக, வஅதூபு இலய்க' என்று அதிகம் கூறுபவர்களாக இருந்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! இதற்கு முன் நீங்கள் கூறி நான் ஆயிஷா (ரழி) கேட்காத இந்த வார்த்தைகளை எதற்குக் கூறுகிறீர்கள்?" என்று கேட்டேன். "என் சமுதாயத்தில், எனக்குச் சில அடையாளம் காட்டப்பட்டது. அதை நான் பார்த்ததால் இதைக் கூறினேன்" என்று கூறிவிட்டு, 110-வது அத்தியாயத்தை ஓதினார்கள்.

**(முஸ்லிம்:484/218)**

முஸ்லிம் நூலின் மற்றொரு அறிவிப்பில் (484/220) கீழ்க்கண்டவாறு உள்ளது:

"சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி அஸ்தக்ஃபிருல்லாஹ் வஅதூபு இலய்ஹி" என்று நபி (ஸல்) அவர்கள் அதிகமாக கூறிக் கொண்டிருந்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! 'சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி அஸ்தக்ஃபிருல்லாஹ் வஅதூப இலய்ஹி' என்று நீங்கள் அதிகம் கூறுவதைப் பார்க்கிறேனே!" என்றேன். "என் சமுதாயத்தில் சில அடையாளங்களை நான் காண்பேன். அதைக் கண்டால், 'சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி அஸ்தக்ஃபிருல்லாஹ் வஅதூபு இலய்ஹி' என்று நான் அதிகம் கூற வேண்டும் என என்னிடம் அல்லாஹ் கூறினான். அவற்றை இப்போது பார்த்து விட்டேன்" என்று கூறிவிட்டு, 110-வது அத்தியாயத்தை ஓதினார்கள்.

**வாசகத்தின் பொருள்: அல்லாஹ்வை தூய்மைப்படுத்துகிறேன். அவனைப் புகழ்கிறேன். அல்லாஹ்விடம் மன்னிப்பு கோருகிறேன். அவனிடமே பாவ மீட்சி கோருகிறேன்.**

**110 - வது அத்தியாயத்தின் பொருள்:**

*அல்லாஹ்வின் உதவியும், வெற்றியும் (மக்காவின் வெற்றியும்) வரும்போதும், அல்லாஹ்வின் மார்க்கத்தில் கூட்டம் கூட்டமாக நுழைபவர்களாக மக்களை நீர் காணும் போதும், நீர் உமது இறைவனைப் புகழ்ந்து தஸ்பீஹ் செய்வீராக. அவனிடம் மன்னிப்புக் கோருவீராக! நிச்சயமாக அவன் பாவமன்னிப்பு வழங்குபவனாக உள்ளான். (அத்தியாயம் 110)*

١١٥ – الرَّابِعُ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: إِنَّ اللَّهَ عَزَّ وَجَلَّ تَابَعَ الْوَحْيَ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ قَبْلَ وَفَاتِهِ حَتَّى تُوُفِّيَ أَكْثَرُ مَا كَانَ الْوَحْيُ عَلَيْهِ مُتَّفَقٌ عَلَيْهِ.

**115** அனஸ் (ரழி)அறிவிக்கின்றார்கள்:

நபி(ஸல்) அவர்களின் மரணத்திற்கு முன், இறைச்செய்தியை அல்லாஹ் அதிகம் இறக்கிக் கொண்டே இருந்தான். இறைச்செய்தி அதிகமாக இறங்கியபோது தான் அவர்கள் மரணம் அடைந் தார்கள். **(புகாரி:4982. முஸ்லிம்:3016)**

١١٦ – الْخَامِسُ عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ النَّبِيُّ ﷺ: "يُبْعَثُ كُلُّ عَبْدٍ عَلَى مَا مَاتَ عَلَيْهِ" رَوَاهُ مُسْلِمٌ.

**116** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒவ்வொரு அடியாரும் எந்த நிலையில் மரணித்தாரோ, அதே நிலையிலேயே எழுப்பப்படுவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2878)**

## ١٣ – باب فى بيان كثرة طرق الخير

## பாடம் : 13 - நன்மைக்கான வழிகள் அதிகம்

**قَالَ اللَّهُ تَعَالَى: وَمَا تَفْعَلُوا مِنْ خَيْرٍ فَإِنَّ اللَّهَ بِهِ عَلِيمٌ وَقَالَ تَعَالَى: وَمَا تَفْعَلُوا مِنْ خَيْرٍ يَعْلَمْهُ اللَّهُ وَقَالَ تَعَالَى: فَمَنْ يَعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا يَرَهُ وَقَالَ تَعَالَى: مَنْ عَمِلَ صَالِحًا فَلِنَفْسِهِ وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ.**

وَأَمَّا الأَحَادِيثُ فَكَثِيرَةٌ جِدًّا وَهِيَ غَيْرُ مُنْحَصِرَةٍ فَنَذْكُرُ طَرَفًا مِنْهَا.

**அல்லாஹ் கூறுகிறான்:** *'...நன்மையானவற்றில் நீங்கள் செய்யக்கூடியதை அல்லாஹ் அறிபவனாக உள்ளான்' (2:215)*

*'...நல்லவற்றில் நீங்கள் செய்யக்கூடியதை அல்லாஹ் அறிவான்' (2:197)*

*எனவே, ஒருவர் அணுவளவேனும் நன்மை செய்தால், அதை (மறுமையில்) காண்பார். (99:7)*

*நற்செயலை ஒருவர் செய்தால், அவர் தனக்கே (நல்லது) செய்து கொண்டவராவார். (45:15)*

இந்த பாடத்திற்குத் தகுந்த வசனங்கள் அதிகம் உள்ளன. மேலும் ஹதீஸ்களும் கணக்கிலடங்காமல் உள்ளன. அவற்றில் சிலவற்றைக் காண்போம்.

١١٧ – الأَوَّلُ عَنْ أَبِي ذَرٍّ جُنْدُبِ بْنِ جُنَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَيُّ الأَعْمَالِ أَفْضَلُ؟ قَالَ: "الإِيمَانُ بِاللَّهِ وَالْجِهَادُ فِي سَبِيلِهِ" قُلْتُ: أَيُّ الرِّقَابِ أَفْضَلُ؟ قَالَ: "أَنْفَسُهَا عِنْدَ أَهْلِهَا وَأَكْثَرُهَا ثَمَنًا" قُلْتُ: فَإِنْ لَمْ أَفْعَلْ؟ قَالَ: "تُعِينُ صَانِعًا أَوْ تَصْنَعُ لِأَخْرَقَ". قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَرَأَيْتَ إِنْ ضَعُفْتُ عَنْ بَعْضِ الْعَمَلِ؟ قَالَ: "تَكُفُّ شَرَّكَ عَنِ النَّاسِ فَإِنَّهَا صَدَقَةٌ مِنْكَ

عَلَى نَفْسك". مُتَّفَقٌ عَلَيْه." الصَّانعُ" بالصَّاد الْمُهْمَلَة: هَذَا هُوَ الْمَشْهُورُ. وَرُوِيَ" ضَائِعًا" بِالْمُعْجَمَة: أَيْ ذَا ضَيَاعٍ مِنْ فَقْرٍ أَوْ عِيَالٍ وَنَحْوَ ذَلكَ." وَالأَخْرَقُ" الَّذِي لاَ يُتْقِنُ مَا يُحَاوِلُ فِعْلَهُ.

**117** (அபூதர் என்ற) ஜுன்துப் இப்னு ஜுனாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இறைத்தூதர் அவர்களிடம், “செயல்களில் மிகச் சிறந்தது எது?” என்று நான் கேட்டேன். “அல்லாஹ்வை நம்பிக்கை கொள்வது-இறைவழியில் போர் புரிவது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “அடிமையை உரிமை விடுவதில் மிக சிறந்தது எது?” என்று கேட்டேன். “தன் எஜமானனிடம் மதிப்புள்ளவராகவும், விலை மிக அதிகம் உள்ளவரை (விடுதலை செய்வதுதான்)” என்று கூறினார்கள். “இதை நான் செய்யாவிட்டால்...?” என்று கேட்டேன். “வேலை செய்வோருக்கு உதவுவீராக! அல்லது சரிவர வேலை தெரியாதவர்களுக்கு வேலை செய்து கொடுப்பீராக!” என்று கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! சில செயல்களை நான் செய்ய இயலாது போய் விட்டால்... என்ன கூறுகிறீர்கள்?” என்று கேட்டேன். “மக்களுக்கு நீர் தீங்கு செய்வதை தடுத்துக்கொள்வீராக. அதுதான் உமக்கு நீர் செய்யும் தர்மம் ஆகும்” என்று கூறினார்கள். **(புகாரி:2518. முஸ்லிம்:84)**

١١٨ – الثَّاني عَنْ أَبِي ذَرٍّ أَيْضًا رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ:" يُصْبِحُ عَلَى كُلِّ سُلاَمَى منْ أَحَدكُمْ صَدَقَةٌ فَكُلُّ تَسْبِيحَة صَدَقَةٌ وَكُلُّ تَحْمِيدَة صَدَقَةٌ وَكُلُّ تَهْليلَة صَدَقَةٌ وَكُلُّ تَكْبِيرَة صَدَقَةٌ وَأَمْرٌ بِالْمَعْرُوف صَدَقَةٌ وَنَهْيٌ عَنْ الْمُنْكَر صَدَقَةٌ. وَيُجْزِئُ مِنْ ذَلِكَ رَكْعَتَانِ يَرْكَعُهُمَا مِنْ الضُّحَى" رَوَاهُ مُسْلِمٌ." السُّلاَمَى" بِضَمِّ السِّينِ الْمُهْمَلَة وَتَخْفِيفِ اللاَّمِ وَفَتْحِ الْمِيمِ: الْمَفْصَلُ.

**118** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் மீது, தன் ஒவ்வொரு உடல் மூட்டுகளுக்காகவும், காலையில் தர்மம் செய்வது அவசியமாகும். (சுப்ஹானல்லாஹ் என்ற) ஒவ்வொரு தஸ்பீஹும் தர்மமாகும். (அல்ஹம்துலில்லாஹ் என்ற) ஒவ்வொரு தஹ்மீதும் தர்மமாகும். (லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற) ஒவ்வொரு தஹ்லீலும் தர்மமாகும். (அல்லாஹு அக்பர் என்ற) ஒவ்வொரு தக்பீரும் தர்மமாகும். நல்லதை ஏவுவதும் தர்மமே. தீமையைத் தடுப்பதும் தர்மமே ஆகும். ளுஹா (பகல்) நேரத்தில் இரண்டு ரக்அத் தொழுவது, இதற்கு பகரமாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:720)**

١١٩ – الثَّالثُ عَنْهُ ) أَبِي ذَرٍّ ( قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " عُرِضَتْ عَلَيَّ أَعْمَالُ أُمَّتِي حَسَنُهَا وَسَيِّئُهَا . فَوَجَدْت فِي مَحَاسِنِ أَعْمَالِهَا الأَذَى يُمَاطُ عَنْ الطَّرِيقِ وَوَجَدْت فِي مَسَاوِئِ أَعْمَالِهَا النُّخَاعَةَ تَكُونُ فِي الْمَسْجِدِ لَا تُدْفَنُ " رَوَاهُ مُسْلِمٌ .

**119** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் சமுதாயத்தின் செயல்கள் அதன் நன்மை, அதன் தீமை அனைத்தும் என்னிடம் எடுத்துக் காண்பிக்கப்பட்டது. அதன் நற்செயல்களில் ஒன்றாக, பாதையில் இடையூறு தரக்கூடியதை அதிலிருந்து நீக்குவதை அறிந்து கொண்டேன். சமுதாயச் செயல்களில், தீமையானவற்றில் ஒன்றாக, பள்ளிவாசலில் துப்பி, மூடப்படாத காரல் எச்சிலையும் அறிந்து கொண்டேன்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:553)**

١٢٠ – الرَّابِعُ عَنْهُ ) أَبِي ذَرٍّ ( أَنَّ نَاسًا قَالُوا: يَا رَسُولَ اللَّه: ذَهَبَ أَهْلُ الدُّثُور بالأُجُور يُصَلُّونَ كَمَا نُصَلِّي وَيَصُومُونَ كَمَا نَصُومُ وَيَتَصَدَّقُونَ بِفُضُول أَمْوَالِهِمْ. قَالَ:" أَوَلَيْسَ قَدْ جَعَلَ اللَّهُ لَكُمْ مَا تَصَّدَّقُونَ به: إِنَّ بكُلِّ تَسْبِيحَة صَدَقَةٌ وَكُلِّ تَكْبِيرَة صَدَقَةٌ وَكُلِّ تَحْمِيدَة صَدَقَةٌ وَكُلِّ تَهْليلَة صَدَقَةٌ وَأَمْرٌ بِالْمَعْرُوف صَدَقَةٌ وَنَهْيٌ عَنْ الْمُنْكَر صَدَقَةٌ وَفِي بُضْعِ أَحَدِكُمْ صَدَقَةٌ".

قَالُوا: يَا رَسُولَ اللَّهِ أَيَأْتِي أَحَدُنَا شَهْوَتَهُ وَيَكُونُ لَهُ فِيهَا أَجْرٌ؟ قَالَ:" أَرَأَيْتُمْ لَوْ وَضَعَهَا فِي حَرَامٍ أَكَانَ عَلَيْهِ وِزْرٌ؟ فَكَذَلِكَ إِذَا وَضَعَهَا فِي الْحَلَالِ كَانَ لَهُ أَجْرٌ". رَوَاهُ مُسْلِمٌ." الدُّثُورُ" بِالثَّاءِ الْمُثَلَّثَةِ: الأَمْوَالُ وَاحِدُهَا دَثْرٌ.

**120** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைத்தூதர் அவர்களே! வசதியானவர்கள் (ஏழைகளான) நாங்கள் தொழுதது போலவே தொழுகிறார்கள். நாங்கள் நோன்பு நோற்பது போலவே நோற்கிறார்கள். தங்களின் சொத்துக்களில் மிஞ்சியவற்றை தர்மமும் செய்கிறார்கள். (எங்களுக்கு அந்த வாய்ப்பு இல்லையே?)” என்று சில நபித்தோழர்கள் கேட்டார்கள். அதற்கு, “நீங்கள் தர்மம் வழங்கக் கூடியதை அல்லாஹ் உங்களுக்கு ஏற்படுத்த வில்லையா? நிச்சயமாக தஸ்பீஹ் (சுப்ஹானல்லாஹ் எனக்) கூறுவதும் தர்மம் ஆகும். ஒவ்வொரு தஹ்லீலும் (லாயிலாஹ இல்லல்லாஹ் எனக் கூறுவதும்) தர்மம் ஆகும். நல்லதை ஏவுவதும் தர்மமே. தீயதை விட்டுத் தடுப்பதும் தர்மமே. உங்களில் ஒருவர் (மனைவியிடம்) உறவு கொள்வதும் தர்மம் ஆகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். பின்னும், “இறைத்தூதர் அவர்களே! எங்களில் ஒருவர் தன் (மனைவியிடம்) இச்சையைத் தீர்க்க வருகிறார். அவருக்கு இதில் என்ன கூலி உண்டு? என்று கேட்டார்கள். “தவறான பாதையில் அவர் நிறைவேற்றிக் கொண்டால், அவர் மீது குற்றம் ஏற்படும் என்பதை நீங்கள் அறிவீர்கள் தானே! அவ்வாறே அனுமதிக்கப்பட்ட வழியில் அவர், தன் ஆசையை நிறைவேற்றிக் கொண்டால், அவருக்கு (தர்மம்) கூலியாக அமைந்து விடுகிறது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1006)**

١٢١ – الْخَامِسُ عَنْهُ ) أَبِي ذَرٍّ ( قَالَ: قَالَ لِي النَّبِيُّ ﷺ:" لاَ تَحْقِرَنَّ مِنَ الْمَعْرُوفِ شَيْئًا وَلَوْ أَنْ تَلْقَى أَخَاكَ بِوَجْهٍ طَلِيقٍ" رَوَاهُ مُسْلِمٌ.

**121** அபூதர் (ரழி)அறிவிக்கின்றார்கள்:

“நல்லவற்றில் எதையும் நீங்கள் மதிப்புக் குறைவாகக் கருதி விட வேண்டாம். உம் சகோதரனை மலர்ந்த முகத்துடன் நீர் சந்திப்பதாயினும் சரியே” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2626)**

١٢٢ – السَّادِسُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" كُلُّ سُلاَمَى مِنَ النَّاسِ عَلَيْهِ صَدَقَةٌ كُلَّ يَوْمٍ تَطْلُعُ فِيهِ الشَّمْسُ: تَعْدِلُ بَيْنَ الإِثْنَيْنِ صَدَقَةٌ وَتُعِينُ الرَّجُلَ فِي دَابَّتِهِ فَتَحْمِلُهُ عَلَيْهَا أَوْ تَرْفَعُ لَهُ عَلَيْهَا مَتَاعَهُ صَدَقَةٌ وَالْكَلِمَةُ الطَّيِّبَةُ صَدَقَةٌ وَبِكُلِّ خُطْوَةٍ تَمْشِيهَا إِلَى الصَّلاَةِ صَدَقَةٌ وَتُمِيطُ الأَذَى عَنِ الطَّرِيقِ صَدَقَةٌ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَرَوَاهُ مُسْلِمٌ أَيْضًا مِنْ رِوَايَةِ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" إِنَّهُ خُلِقَ كُلُّ إِنْسَانٍ مِنْ بَنِي آدَمَ عَلَى سِتِّينَ وَثَلاَثِمِائَةِ مَفْصِلٍ فَمَنْ كَبَّرَ اللَّهَ وَحَمِدَ اللَّهَ وَهَلَّلَ اللَّهَ وَسَبَّحَ اللَّهَ وَاسْتَغْفَرَ اللَّهَ وَعَزَلَ حَجَرًا عَنْ طَرِيقِ النَّاسِ أَوْ شَوْكَةً أَوْ عَظْمًا عَنْ طَرِيقِ النَّاسِ أَوْ أَمَرَ بِمَعْرُوفٍ أَوْ نَهَى عَنْ مُنْكَرٍ عَدَدَ السِّتِّينَ وَالثَّلاَثِمِائَةِ فَإِنَّهُ يُمْسِي يَوْمَئِذٍ وَقَدْ زَحْزَحَ نَفْسَهُ عَنِ النَّارِ".

**122** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மனிதர்களின் ஒவ்வொரு மூட்டுகளுக்கும், சூரியன் உதயமாகும் ஒவ்வொரு நாளும் அதற்குத் தர்மம் செய்தல் வேண்டும். இரண்டு பேர்களுக்கிடையே நீதமாக நடப்பது தர்மம் ஆகும். ஒருவருக்கு ஒரு வாகனத்தை வாங்கித் தந்து, அதில் அவரை ஏற்றி அனுப்புவதும் தர்மம் ஆகும். அல்லது அவருக்கு, அவரது பொருட்களை ஏற்றி விடுவதும் தர்மம் ஆகும். நல்ல வார்த்தை (பேசுவதும்) தர்மம் ஆகும். தொழுகைக்காக அவர் நடந்து செல்ல எடுத்து வைக்கும் ஒவ்வொரு எட்டும் தர்மம் ஆகும். பாதையில் இடையூறாக இருப்பதை அகற்றுவதும் தர்மம் ஆகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2989, முஸ்லிம்:1009)**

அன்னை ஆயிஷா (ரழி) அறிவித்து, முஸ்லிம் நூலில் உள்ள மற்றொரு அறிவிப்பில் (1007) கீழ்கண்டவாறு உள்ளது:

'ஆதமின் மக்கள் ஒவ்வொருவரும் 360 மூட்டுகளின் மீது படைக்கப்பட்டுள்ளனர். ஒருவர் 'அல்லாஹு அக்பர்' எனவும், 'அல்ஹம்துலில்லாஹ்' எனவும், 'லாயிலாஹ இல்லல்லாஹ்' எனவும், 'சுப்ஹானல்லாஹ்' எனவும், 'அஸ்தக்ஃபிருல்லாஹ்' எனவும் கூறினாலும், மனிதர்கள் (நடக்கும்) பாதையில் உள்ள கல்லையும் அல்லது மனிதர்கள் (நடக்கும்) பாதையிலிருந்து முள்ளையும், எலும்பையும் எடுத்துப் போட்டாலும் அல்லது நல்லதை ஏவி, தீயதைத் தடுத்தாலும் இப்படியாக, 360 நன்மைகளைச் செய்தால் - அன்று அவர் நரகை விட்டு தன்னை நீக்கிக் கொண்டவராக நடப்பவராகிறார்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

١٢٣ – السَّابِعُ عَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ غَدَا إِلَى الْمَسْجِدِ أَوْ رَاحَ أَعَدَّ اللَّهُ لَهُ فِي الْجَنَّةِ نُزُلًا كُلَّمَا غَدَا أَوْ رَاحَ " مُتَّفَقٌ عَلَيْهِ . " النُّزُلُ " الْقُوتُ وَالرِّزْقُ وَمَا يُهَيَّأُ لِلضَّيْفِ .

**123** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பள்ளிவாசலுக்கு ஒருவர் காலையிலும் அல்லது மாலையிலும் சென்றால், ஒவ்வொரு காலையிலும் அல்லது மாலையிலும் அவருக்காக, சொர்க்கத்தில் விருந்துணவை அல்லாஹ் தயார் செய்கின்றான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:662. முஸ்லிம்:669)**

١٢٤ – الثَّامِنُ عَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" يَا نِسَاءَ الْمُسْلِمَاتِ لاَ تَحْقِرَنَّ جَارَةٌ لِجَارَتِهَا وَلَوْ فِرْسِنَ شَاةٍ" مُتَّفَقٌ عَلَيْهِ. قَالَ الْجَوْهَرِيُّ: الْفِرْسِنُ مِنَ الْبَعِيرِ كَالْحَافِرِ مِنَ الدَّابَّةِ. قَالَ: وَرُبَّمَا اُسْتُعِيرَ فِي الشَّاةِ.

**124** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஸ்லிம் பெண்களே! ஆட்டுக்கால் குழம்பாயினும் தன் பக்கத்து வீட்டுப் பெண்ணுக்குக் கொடுப்பதை, மற்றொரு பெண் இழிவாகக் கருத வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2566. முஸ்லிம்:1030)**

١٢٥ – التَّاسِعُ عَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" الأَيمَانُ بِضْعٌ وَسَبْعُونَ أَوْ بِضْعٌ وَسِتُّونَ شُعْبَةً: فَأَفْضَلُهَا قَوْلُ" لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ" وَأَدْنَاهَا إِمَاطَةُ الأَذَى عَنِ الطَّرِيقِ وَالْحَيَاءُ شُعْبَةٌ مِنَ الأَيمَانِ" مُتَّفَقٌ عَلَيْهِ." الْبِضْعُ" مِنْ ثَلاَثٍ إِلَى تِسْعَةٍ بِكَسْرِ الْبَاءِ وَقَدْ تُفْتَحُ. وَ" الشُّعْبَةُ" الْقِطْعَةُ.

**125** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறை நம்பிக்கை, எழுபது அல்லது அறுபது கிளைகளாகும். அதில் மிகச் சிறந்தது, 'லாயிலாஹ இல்லல்லாஹு' என்று கூறுவதாகும். அவற்றில் மிகச் சாதாரணமானது, பாதையில் இடையூறு தருபவற்றை நீக்குவதாகும். வெட்கப்படுதல், இறை நம்பிக்கையின் கிளையாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:9. முஸ்லிம்:35)**

١٢٦ – الْعَاشِرُ عَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" بَيْنَمَا رَجُلٌ يَمْشِي بِطَرِيقٍ اشْتَدَّ عَلَيْهِ الْعَطَشُ فَوَجَدَ بِئْرًا فَنَزَلَ فِيهَا فَشَرِبَ ثُمَّ خَرَجَ فَإِذَا كَلْبٌ يَلْهَثُ يَأْكُلُ الثَّرَى مِنَ الْعَطَشِ فَقَالَ الرَّجُلُ: لَقَدْ بَلَغَ هَذَا الْكَلْبُ مِنَ الْعَطَشِ مِثْلَ الَّذِي كَانَ قَدْ بَلَغَ مِنِّي فَنَزَلَ الْبِئْرَ فَمَلأَ خُفَّهُ مَاءً ثُمَّ أَمْسَكَهُ بِفِيهِ حَتَّى رَقِيَ فَسَقَى الْكَلْبَ فَشَكَرَ اللَّهُ لَهُ فَغَفَرَ لَهُ" قَالُوا: يَا رَسُولَ اللَّهِ إِنَّ لَنَا فِي الْبَهَائِمِ أَجْرًا؟ فَقَالَ:" فِي كُلِّ كَبِدٍ رَطْبَةٍ أَجْرٌ": مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِلْبُخَارِيِّ:" فَشَكَرَ اللَّهُ لَهُ فَغَفَرَ لَهُ فَأَدْخَلَهُ

الْجَنَّةَ" وَفي رِوَايَةٍ لَهُمَا: " بَيْنَمَا كَلْبٌ يُطِيفُ بِرَكِيَّةٍ قَدْ كَادَ يَقْتُلُهُ الْعَطَشُ إِذْ رَأَتْهُ بَغِيٌّ مِنْ بَغَايَا بَنِي إِسْرَائِيلَ فَنَزَعَتْ مُوقَهَا فَاسْتَقَتْ لَهُ بِهِ فَسَقَتْهُ فَغُفِرَ لَهَا بِهِ". "الْمُوقُ" الْخُفُّ." وَ"يُطِيفُ" يَدُورُ حَوْلَ" رَكِيَّةٍ" وَهِيَ الْبِئْرُ.

**126** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(முன்னொரு காலத்தில்) வழியில் நடந்து கொண்டிருந்த ஒருவருக்கு தாகம் ஏற்பட்டது. ஒரு கிணற்றைக் கண்டதும் அதில் இறங்கித் தண்ணீர் குடித்தார். பின்பு (மேலே ஏறி) வந்தபோது, தாகத்தால் ஈர மண்ணை நக்கிக் கொண்டிருந்த நாய் ஒன்றைக் கண்டார். 'எனக்கு ஏற்பட்டது போலவே தாகத்தால் இந்த நாய் உள்ளது' என்று (தனக்குள்) கூறியவராக, கிணற்றில் இறங்கினார். தன் காலுறையில் தண்ணீரை நிரப்பி, அதைத் தன் வாயில் கவ்வியபடி, மேலே வந்தார். நாய்க்குக் குடிக்கக் கொடுத்தார். அவரை அல்லாஹ் நன்றி பாராட்டினான். அவருடைய பிழைகளை மன்னித்தான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு மிருகங்கள் விஷயமாகவும், (இரக்கத்துடன் நடந்தால்) கூலி உண்டா?" என நபித்தோழர்கள் கேட்டார்கள். "ஈரமான ஈரல் உடைய ஒவ்வொரு (உயிரினம்) விஷயத்திலும் கூலி உண்டு" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2363. முஸ்லிம்:2244)**

புகாரியின் (173) மற்றொரு அறிவிப்பில், "அல்லாஹ் அவருக்கு நன்றி பாராட்டினான். அவரை மன்னித்தான். இதற்காக அவரை சொர்க்கத்தில் நுழைய வைத்தான்" என உள்ளது.

புகாரி (3467), முஸ்லிமின் (2245) மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) கூறப்பட்டு உள்ளது:

"(முன்னொரு காலத்தில்) நாய் ஒன்று, கிணற்றைச் சுற்றி வந்தது. தாகம் அதை உயிர் போகும் அளவுக்கு வாட்டியது. பனூ இஸ்ரவேலர்களது விபச்சாரிகளில் ஒரு விபச்சாரி அதைப் பார்த்தாள். தனது காலுறையைக் கழற்றி, அதன் மூலம் தண்ணீர் எடுத்து, அந்த நாய்க்கு புகட்டினாள். இதன் காரணமாக, அவள் மன்னிக்கப்பட்டாள்.

١٢٧ - الْحَادِي عَشَرَ عَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " لَقَدْ رَأَيْت رَجُلاً يَتَقَلَّبُ فِي الْجَنَّةِ فِي شَجَرَةٍ قَطَعَهَا مِنْ ظَهْرِ الطَّرِيقِ كَانَتْ تُؤْذِي الْمُسْلِمِينَ". رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَةٍ: " مَرَّ رَجُلٌ بِغُصْنِ شَجَرَةٍ عَلَى ظَهْرِ طَرِيقٍ فَقَالَ: وَاللَّهِ لَأُنَحِّيَنَّ هَذَا عَنِ الْمُسْلِمِينَ لَا يُؤْذِيهِمْ. فَأُدْخِلَ الْجَنَّةَ" وَفِي رِوَايَةٍ لَهُمَا: " بَيْنَمَا رَجُلٌ يَمْشِي بِطَرِيقٍ وَجَدَ غُصْنَ شَوْكٍ عَلَى الطَّرِيقِ فَأَخَّرَهُ فَشَكَرَ اللَّهُ لَهُ فَغَفَرَ لَهُ".

**127** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாதையின் நடுவில் முஸ்லிம்களுக்கு இடையூறு செய்து கொண்டிருந்த மர கிளையொன்றை வெட்டி, அப்புறப்படுத்திய ஒருவர் சொர்க்கத்தில் உலாவுவதை நான் பார்த்தேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1914/129)**

முஸ்லிமின் (1914/128) மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு)உள்ளது :

பாதையின் நடுவில் கிடந்த ஒரு மரத்தின் அருகே ஒருவர் நடந்து சென்றார். முஸ்லிம்களுக்கு இடையூறு தராதவாறு இதை அகற்றுவேன் என்று கூறி அதைச் செய்தார். எனவே, (இறந்த பின்) சொர்க் கத்தில் நுழைய அனுமதிக்கப்பட்டார்.

புகாரி (2472), முஸ்லிம் (1914/127) இரண்டிலும் (கீழ்க்கண்டவாறு) மற்றொரு அறிவிப்பில் உள்ளது:

பாதையில் ஒருவர் நடந்து சென்று கொண்டிருக்கும் போது, பாதையின் நடுவே மரம் ஒன்று கிடப்பதைக் கண்டு, அதை ஓரமாகப் போட்டார். அவருக்கு அல்லாஹ் நன்றி பாராட்டி, அவரை மன்னித்தான்.

١٢٨ - الثَّاني عَشَرَ عَنْهُ ) أَبي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" مَنْ تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ ثُمَّ أَتَى الْجُمُعَةَ فَاسْتَمَعَ وَأَنْصَتَ غُفِرَ لَهُ مَا بَيْنَهُ وَبَيْنَ الْجُمُعَةِ وَزِيَادَةُ ثَلاَثَةِ أَيَّامٍ وَمَنْ مَسَّ الْحَصَى فَقَدْ لَغَا" رَوَاهُ مُسْلِمٌ.

**128** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் அழகிய முறையில் உளூச் செய்து, பின்பு ஜும்ஆவிற்கு வந்து, (ஜும்ஆ குத்பா உரையைக்) கேட்டு, அமைதியுடன் இருந்தால், அவருக்கு இந்த ஜும்ஆவிற்கும் அடுத்த ஜும்ஆவிற்கும் இடைப்பட்ட மற்றும் கூடுதலாக மூன்று நாட்கள் (ஆக 10 நாட்கள்) வரை உள்ள அவர் பாவங்கள் மன்னிக்கப்படும். (உரையின் போது தரையில் கிடக்கும்) கற்களைத் தொட்டு(விளையாடி)க் கொண்டிருந்தால், அவர் (ஜும்ஆவின் நன்மையை) இழந்துவிட்டார் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:857)**

١٢٩ - الثَّالثَ عَشَرَ عَنْهُ ) أَبي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ:" إِذَا تَوَضَّأَ الْعَبْدُ الْمُسْلمُ - أَوْ الْمُؤْمنُ - فَغَسَلَ وَجْهَهُ خَرَجَ منْ وَجْهه كُلُّ خَطيئَة نَظَر إِلَيْهَا بعَيْنَيْه مَعَ الْمَاء أَوْ مَعَ آخر قَطْر الْمَاء فَإِذَا غَسَلَ يَدَيْه خَرَجَ منْ يَدَيْه كُلُّ خَطيئَة كَانَ بَطَشَتْهَا يَدَاهُ مَعَ الْمَاء - أَوْ مَعَ آخر قَطْر الْمَاء - فَإِذَا غَسَلَ رِجْلَيْه خَرَجَتْ كُلُّ خَطيئَةٍ مَشَتْهَا رِجْلاَهُ مَعَ الْمَاء أَوْ مَعَ آخر قَطْر الْمَاء حَتَّى يَخْرُجَ نَقيًّا منْ الذُّنُوب" رَوَاهُ مُسْلمٌ.

**129** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமான அடியான் உளூச் செய்யும் போது தன் முகத்தைக் கழுவினால், அவனின் முகத்திலிருந்து அவன் பார்த்த ஒவ்வொரு தவறுகளும், அவனது கண் வழியே தண்ணீருடன் அல்லது தண்ணீரின் கடைசிச் சொட்டுடன் வெளியேறிவிடும். தன் கைகளை அவன் கழுவினால், அவன் கைகள் செய்த தவறுகள் அனைத்தும், அவனது கைகள் வழியாகத் தண்ணீருடன், அல்லது தண்ணீரின் கடைசிச் சொட்டுடன் வெளியேறிவிடும். அவன் கால்களைக் கழுவினால், அவனது கால்கள் நடந்து செய்த தவறுகள் அனைத்தும் (அவனது கால்கள் வழியாக) தண்ணீருடன் அல்லது தண்ணீரின் கடைசிச் சொட்டுடன் வெளியேறிவிடும். இறுதியாக (உளூ செய்ததன் மூலம்) பாவங்களை விட்டும் பரிசுத்தமானவனாக வெளியேறுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:244)**

١٣٠ - الرَّابعَ عَشَرَ عَنْهُ ) أَبي هُرَيْرَةَ ( عَنْ رَسُول اللَّه ﷺ قَالَ:" الصَّلَوَاتُ الْخَمْسُ وَالْجُمُعَةُ إِلَى الْجُمُعَة وَرَمَضَانُ إِلَى رَمَضَانَ مُكَفِّرَاتٌ لمَا بَيْنَهُنَّ إِذَا اجْتُنبَتْ الْكَبَائرُ" رَوَاهُ مُسْلمٌ.

**130** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஐந்து நேரத் தொழுகைகள் மற்றும் ஒரு ஜும்ஆ முதல் மறு ஜும்ஆ வரை, ஒரு ரமளான் முதல் மறு ரமளான் வரை, பெரும் பாவங்கள் தவிர்க்கப்பட்டிருந்தால், அவைகளுக்கிடையே உள்ள சிறு பாவங்களை, அவை அழித்து விடும்" என நபி(ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:233)**

١٣١ - الْخَامسَ عَشَرَ عَنْهُ ) أَبي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" أَلاَ أَدُلُّكُمْ عَلَى مَا يَمْحُو اللَّهُ به الْخَطَايَا وَيَرْفَعُ به الدَّرَجَات؟ قَالُوا: بَلَى يَا رَسُولَ اللَّه. قَالَ: إِسْبَاغُ الْوُضُوء عَلَى الْمَكَاره وَكَثْرَةُ الْخُطَى إِلَى الْمَسَاجد وَانْتظَارُ الصَّلاَة بَعْدَ الصَّلاَة: فَذَلكُمْ الرِّبَاطُ" رَوَاهُ مُسْلمٌ.

**131** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்விடம் தவறுகளை அழிக்கவும், பதவிகளை உயர்த்தவும் காரணமாக உள்ள செயலை, உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "அறிவியுங்கள்

இறைத்தூதர் அவர்களே!" என்று நபித்தோழர்கள் கூறினர். "சிரமமான நேரங்களிலும் உளூவை முழுமையாகச் செய்வது, பள்ளிவாசல்களுக்கு (நடப்பது மூலம்) அதிகமான காலடிகள் வைத்து நடப்பது, ஒரு தொழுகை முடிந்து மறு தொழுகைக்காகக் காத்திருப்பது (ஆகியவையாகும்). இதுதான் இறைவனின் பாதையில் (வழிபாடுகளில்) உள்ளவையாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:251)**

١٣٢ - السَّادسَ عَشَرَ عَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَنْ صَلَّى الْبَرْدَيْنِ دَخَلَ الْجَنَّةَ" مُتَّفَقٌ عَلَيْهِ." الْبَرْدَانِ": الصُّبْحُ وَالْعَصْرُ.

**132** அபூமூஸா அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'குளிர்ந்த இரு நேரங்களில் (பஜ்ர், அஸரை) ஒருவர் தொழுதால், அவர் சொர்க்கத்தில் நுழைவார்' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:574. முஸ்லிம்:635)**

١٣٣ - السَّابِعَ عَشَرَ عَنْهُ ) أَبِي مُوسَى الأَشْعَرِيِّ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" إِذَا مَرِضَ الْعَبْدُ أَوْ سَافَرَ كُتِبَ لَهُ مِثْلُ مَا كَانَ يَعْمَلُ مُقِيمًا صَحِيحًا" رَوَاهُ الْبُخَارِيُّ.

**133** அபூமூஸா அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு அடியான் நோயாளியாகவோ அல்லது பயணத்திலோ இருந்தால் அவருக்கு, அவர் உடல் ஆரோக்கியத்துடன் ஊரில் இருந்த சமயம் செய்தது போலவே (கூலி) எழுதப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2996)**

١٣٤ - الثَّامِنَ عَشَرَ عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ ;" كُلُّ مَعْرُوفٍ صَدَقَةٌ" رَوَاهُ الْبُخَارِيُّ وَرَوَاهُ مُسْلِمٌ مِنْ رِوَايَةِ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ.

**134** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒவ்வொரு நற்செயலும் தர்மம்தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6021. ஹுதைபா (ரழி) அறிவித்து முஸ்லிமில் (1005) உள்ளது)**

١٣٥ - التَّاسِعَ عَشَرَ عَنْهُ ) جَابِرٍ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَا مِنْ مُسْلِمٍ يَغْرِسُ غَرْسًا إِلاَّ كَانَ مَا أُكِلَ مِنْهُ لَهُ صَدَقَةٌ وَمَا سُرِقَ مِنْهُ لَهُ صَدَقَةٌ وَلاَ يَرْزَؤُهُ أَحَدٌ إِلاَّ كَانَ لَهُ صَدَقَةٌ" رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَةٍ لَهُ:" فَلاَ يَغْرِسُ الْمُسْلِمُ غَرْسًا فَيَأْكُلَ مِنْهُ إِنْسَانٌ وَلاَ دَابَّةٌ وَلاَ طَيْرٌ إِلاَّ كَانَ لَهُ صَدَقَةً إِلَى يَوْمِ الْقِيَامَةِ". وَفِي رِوَايَةٍ لَهُ:" لاَ يَغْرِسُ الْمُسْلِمُ غَرْسًا وَلاَ يَزْرَعُ زَرْعًا فَيَأْكُلَ مِنْهُ إِنْسَانٌ وَلاَ دَابَّةٌ وَلاَ شَيْءٌ إِلاَّ كَانَتْ لَهُ صَدَقَةً" وَرَوَيَاهُ جَمِيعًا مِنْ رِوَايَةِ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ. قَوْلُهُ" يَرْزَؤُهُ": أَيْ يَنْقُصُهُ.

**135** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு முஸ்லிம் ஒரு மரத்தை நட்டு வைத்து, (அது வளர்ந்து) பிறர் அந்த மரத்திலிருந்து காய்க்கும் கனிகள் ஏதேனும் சாப்பிட்டால், அது அவருக்கு தர்மமாகப் பதிவு செய்யப்படும். அதிலிருந்து பிறரால் திருடப்பட்டு எடுப்பவையும், அவருக்குத் தர்மம் (செய்த கூலி) உண்டு. ஒருவர் அதன் கனிகளை பிறர் பறித்துக் குறைத்தாலும், அது அவருக்குத் தர்மம் (செய்த கூலியாகவே) தவிர, இருப்பதில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1552)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது.

“ஒரு முஸ்லிம் மரம் ஒன்றை நட்டு, அதிலிருந்து ஒரு மனிதனோ, மிருகமோ, பறவையோஅதன் கனிகளைச் சாப்பிட்டால், மறுமையில் அவனுக்கு அது தர்மம் (செய்த கூலி) ஆகும்”.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது:

“ஒரு முஸ்லிம் மரம் ஒன்றை நட்டு, விவசாயம் செய்து அதிலிருந்து ஒரு மனிதன், மிருகம் மற்றும் ஏதேனும் ஒன்று சாப்பிட்டால் அவனுக்கு அது தர்மமாகவே அமையும்.”

இவை அனைத்தும் அனஸ் (ரழி) அவர்களால் அறிவிக்கப்பட்டவையாகும். மேலும், இமாம் புகாரி (ரஹ்), இமாம் முஸ்லிம் (ரஹ்) இருவருமே பதிவு செய்துள்ளனர். **(புகாரி:2320, முஸ்லிம்:1553)**

١٣٦ – الْعِشْرُونَ عَنْهُ ) جَابِر ( قَالَ:" أَرَادَ بَنُو سَلَمَةَ أَنْ يَنْتَقِلُوا قُرْبَ الْمَسْجِد فَبَلَغَ ذَلِكَ رَسُولَ اللّٰه ﷺفَقَالَ لَهُمْ: إِنَّهُ قَدْ بَلَغَنِي أَنَّكُمْ تُرِيدُونَ أَنْ تَنْتَقِلُوا قُرْبَ الْمَسْجِد؟ فَقَالُوا: نَعَمْ يَا رَسُولَ اللّٰه قَدْ أَرَدْنَا ذَلِكَ. فَقَالَ: بَنِي سَلِمَةَ: دِيَارَكُمْ تُكْتَبْ آثَارُكُمْ دِيَارَكُمْ تُكْتَبْ آثَارُكُمْ" رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَة:" إِنَّ بِكُلِّ خُطْوَة دَرَجَةً" رَوَاهُ الْبُخَارِيُّ أَيْضًا بِمَعْنَاهُ مِنْ رِوَايَةِ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ. وَ" بَنُو سَلِمَةَ" بِكَسْرِ اللاَّمِ قَبِيلَةٌ مَعْرُوفَةٌ مِنَ الأَنْصَارِ رَضِيَ اللّٰهُ عَنْهُمْ وَ" آثَارُهُمْ" خُطَاهُمْ.

**136** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மதீனாவில் வாழ்ந்த பனூஸலமா கூட்டத்தினர், மஸ்ஜிது நபவீ பள்ளிவாசலுக்கு அருகே குடியேற விரும்பினார்கள். இது நபி (ஸல்) அவர்களுக்கு தெரிய வந்தது. அவர்களை அழைத்து நபி (ஸல்) அவர்கள், “பள்ளிவாசலுக்கு அருகே நீங்கள் குடியேற விரும்புகிறீர்கள் என்று எனக்குச் செய்தி கிடைத்ததே!” என்றார்கள். “இறைத்தூதர் அவர்களே! ஆம். இதையே விரும்புகிறோம்” என்று கூறினார்கள். “பனூஸலமா கூட்டத்தாரே! உங்கள் வீடுகள் அங்கேயே இருக்கட்டும். தொழுவதற்காக நடந்து வரும் உங்களின் காலடிகள் (நன்மைகளாக) எழுதப்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:665)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், ‘ஒவ்வொரு எட்டுக்கும் அந்தஸ்து உண்டு’ என்று உள்ளது. இதே கருத்தை அனஸ் (ரழி) அவர்களும் அறிவித்து புகாரியிலும் உள்ளது. **(புகாரி:656. முஸ்லிம்:664)**

١٣٧ – الْحَادِي وَالْعِشْرُونَ عَنْ أَبِي الْمُنْذِر أُبَيِّ بْن كَعْب رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: كَانَ رَجُلٌ لاَ أَعْلَمُ رَجُلاً أَبْعَدَ مِنَ الْمَسْجِد مِنْهُ لاَ تُخْطِئُهُ صَلاَةٌ. فَقِيلَ لَهُ – أَوْ فَقُلْتُ لَهُ -: لَوْ اشْتَرَيْتَ حِمَارًا تَرْكَبُهُ فِي الظَّلْمَاءِ؟ وَفِي الرَّمْضَاءِ؟ فَقَالَ: مَا يَسُرُّنِي أَنَّ مَنْزِلِي إِلَى جَنْبِ الْمَسْجِد. إِنِّي أُرِيدُ أَنْ يُكْتَبَ لِي مَمْشَايَ إِلَى الْمَسْجِد وَرُجُوعِي إِذَا رَجَعْتُ إِلَى أَهْلِي. فَقَالَ رَسُولُ اللّٰه ﷺ:" قَدْ جَمَعَ اللّٰهُ لَكَ ذَلِكَ كُلَّهُ" رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَة" إِنَّ لَكَ مَا احْتَسَبْتَ". ) الرَّمْضَاءُ (. الأَرْضُ الَّتِي أَصَابَهَا الْحَرُّ الشَّدِيدُ.

**137** (அபூமுன்திர் என்ற) உபை இப்னு கஅபு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மதீனாவில் ஒருவர் இருந்தார். அவரை விட பள்ளிக்கு வெகு தூரமாக குடியிருந்த நபரை நான் கண்டதில்லை. (அதே சமயம்) அவருக்கு ஒரு தொழுகை கூடவும் தவறியதுமில்லை. அவரிடம், ‘கடும் இருளிலும், கொதிக்கும் வெயிலிலும் ஏறி பள்ளிக்கு வருவதற்காக ஒரு கழுதையை நீர் வாங்கலாம்தானே’ என்று கூறப்பட்டது. அதற்கு அவர், “பள்ளிவாசலுக்கு அருகிலேயே என் வீடு அமைவது எனக்கு விருப்பமாக இல்லை. (காரணம்) பள்ளிவாசலுக்கு நான் நடந்து வருவதிலும், நான் என் குடும்பத்தாரிடம் திரும்பிச் செல்வதிலும் (உள்ள காலடி எட்டுக்கள்) எனக்கு (நன்மைகளாக) எழுதப்படுவதையே நான் விரும்புகிறேன்” என்றார். ஏனெனில், “உனக்கு அவையனைத்தையும் அல்லாஹ் சேர்த்து வழங்குவானாக” என்று நபி (ஸல்) கூறினார்கள் என்றும் கூறினார். **(முஸ்லிம்:663)**

மற்றொரு அறிவிப்பில் ‘நீர் எந்த நன்மையை நாடினீரோ, அது உமக்கு உண்டு’ என்று உள்ளது.

١٣٨ - الثَّانِيَ وَالْعِشْرُونَ عَنْ أَبِي مُحَمَّد عَبْد اللهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللهُ عَنْهُمَا قَالَ. قَالَ رَسُولُ اللهِ ﷺ." أَرْبَعُونَ خَصْلَةً أَعْلاَهَا مَنِيحَةُ الْعَنْزِ مَا مِنْ عَامِلٍ يَعْمَلُ بِخَصْلَةٍ مِنْهَا رَجَاءَ ثَوَابِهَا وَتَصْدِيقَ مَوْعُودِهَا إِلاَّ أَدْخَلَهُ اللهُ بِهَا الْجَنَّةَ" رَوَاهُ الْبُخَارِيُّ." الْمَنِيحَةُ" أَنْ يُعْطِيَهُ إِيَّاهَا لِيَأْكُلَ لَبَنَهَا ثُمَّ يَرُدَّهَا إِلَيْهِ.

**138** (அபூமுஹம்மத் என்ற) அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாற்பது நற்குணங்கள் உள்ளன. அவற்றில் மிக மேலானது, பால் தரும் ஆட்டை (பிறருக்கும் பால் குடிக்க) வழங்குவதாகும். நன்மையை ஆதரவு வைத்தவராக, அதற்கு தான் வாக்களிக்கப் பட்டதை உண்மைபடுத்துபவராக ஒரு நற்செயலைச் செய்தால், இதற்காக அல்லாஹ் அவரை சொர்க்கத்தில் நுழைக்காமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2631)**

١٣٩ - الثَّالِثُ وَالْعِشْرُونَ عَنْ عَدِيِّ بْنِ حَاتِمٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ:" اتَّقُوا النَّارَ وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لَهُمَا عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللهِ ﷺ:" مَا مِنْكُمْ مِنْ أَحَدٍ إِلاَّ سَيُكَلِّمُهُ رَبُّهُ لَيْسَ بَيْنَهُ وَبَيْنَهُ تُرْجُمَانٌ. فَيَنْظُرُ أَيْمَنَ مِنْهُ فَلاَ يَرَى إِلاَّ مَا قَدَّمَ وَيَنْظُرُ أَشْأَمَ مِنْهُ فَلاَ يَرَى إِلاَّ مَا قَدَّمَ وَيَنْظُرُ بَيْنَ يَدَيْهِ فَلاَ يَرَى إِلاَّ النَّارَ تِلْقَاءَ وَجْهِهِ. فَاتَّقُوا النَّارَ وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ فَمَنْ لَمْ يَجِدْ فَبِكَلِمَةٍ طَيِّبَةٍ"

**139** அதீஇப்னு ஹாதிம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'பேரீத்தம் பழத்(தின் பாதியைத் தர்மம் செய்)தேனும், நரக நெருப்பை அஞ்சிக் கொள்ளுங்கள்' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6023, முஸ்லிம்:1016/68)**

புகாரி (7512), முஸ்லிம் (1016/67) நூல்களின் மற்றொரு அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் அறிவித்ததாக அதீ பின் ஹாதிம் (ரழி) அறிவிக்கிறார்கள்:

"உங்களில் எவரும் தன் இறைவனிடம் (மறுமையில்) பேசாமல் இருக்கமாட்டார். அவனுக்கும், அவருக்குமிடையே மொழிபெயர்ப்பாளர் இருக்கமாட்டார். தனது வலது புறம் பார்ப்பான். அங்கே தான் முன்பு அனுப்பி வைத்த (செயல்களை)த் தவிர வேறொன்றை பார்க்க மாட்டான். பின்பு இடது புறம் பார்ப்பான். தான் முன்பு செய்திட்டவற்றைத் தவிர (வேறொன்றையும்) பார்க்க மாட்டான். தனக்கு முன்னே பார்ப்பான். அங்கே முகத்துக்கு நேராக நரகத்தைத் தவிர (மற்றதைப்) பார்க்க மாட்டான். எனவே பேரீத்தம் பழத்(தின் பாதியை தர்மம் செய்)தேனும் நரக நெருப்பை அஞ்சிக் கொள்ளுங்கள். அது கிடைக்கவில்லையானால், நல்ல வார்த்தைகளைப் பேசி (தர்மம் செய்யு)ங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

١٤٠ - الرَّابِعُ وَالْعِشْرُونَ عَنْ أَنَسٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللهِ ﷺ:" إِنَّ اللهَ لَيَرْضَى عَنِ الْعَبْدِ أَنْ يَأْكُلَ الأَكْلَةَ فَيَحْمَدَهُ عَلَيْهَا أَوْ يَشْرَبَ الشَّرْبَةَ فَيَحْمَدَهُ عَلَيْهَا" رَوَاهُ مُسْلِمٌ. وَ" الأَكْلَةُ" بِفَتْحِ الْهَمْزَةِ: وَهِيَ الْغَدْوَةُ أَوِ الْعَشْوَةُ.

**140** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு வேளை உணவை சாப்பிட்டு, அதற்காக அல்லாஹ்வைப் புகழ்ந்தும் அல்லது தண்ணீர் குடித்துவிட்டு, அதற்காக அல்லாஹ்வைப் புகழ்(ந்தும் வாழ்)கின்ற ஒரு அடியானைக் கண்டு அல்லாஹ் திருப்தியடைகிறான். **(முஸ்லிம்:2734)**

١٤١ - الْخَامِسُ وَالْعِشْرُونَ عَنْ أَبِي مُوسَى رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" عَلَى كُلِّ مُسْلِمٍ صَدَقَةٌ" قَالَ: أَرَأَيْت إِنْ لَمْ يَجِدْ؟ قَالَ:" يَعْمَلُ بِيَدَيْهِ فَيَنْفَعُ نَفْسَهُ وَيَتَصَدَّقُ". قَالَ: أَرَأَيْت إِنْ لَمْ يَسْتَطِعْ؟ قَالَ:" يُعِينُ ذَا الْحَاجَةِ الْمَلْهُوفَ". قَالَ أَرَأَيْت إِنْ لَمْ يَسْتَطِعْ؟ قَالَ:" يَأْمُرُ بِالْمَعْرُوفِ أَوِ الْخَيْرِ" قَالَ: أَرَأَيْت إِنْ لَمْ يَفْعَلْ؟ قَالَ:" يُمْسِكُ عَنِ الشَّرِّ فَإِنَّهَا صَدَقَةٌ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**141** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒவ்வொரு முஸ்லிமின் மீதும், தர்மம் செய்வது கடமையாகும்" என நபி(ஸல்) கூறினார்கள். "தர்மம் செய்ய பொருள் - வசதி எதையும் அவர் பெற்றுக் கொள்ளவில்லையானால், என்ன செய்வது?" என்று கேட்டேன். "அவர் தன் கைகளால் உழைத்து, தானும் பயன்பெற்று, பிறருக்கும் தர்மம் செய்வார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இதற்கும் இயலாதவர் குறித்து என்ன கூறுகிறீர்கள்" என்று கேட்டேன். "கவலையுடன் உள்ளவரின் தேவைக்கு உதவுவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இதையும் அவர் செய்யாவிட்டால் என்ன செய்வது?" என்று கேட்டேன். "தீமையை விட்டும் தன்னைத் தடுத்துக் கொள்வார். இதுவும் தர்மம் (போல்) தான்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1445. முஸ்லிம்:1008)**

## ١٤ – باب فى الاقتصاد فى العبادة

## பாடம் : 14 - வழிபாட்டில் நடுநிலைப் பேணல்

قَالَ اللّٰهُ تَعَالَى: طه مَا أَنْزَلْنَا عَلَيْكَ الْقُرْآنَ لِتَشْقَى

وَقَالَ تَعَالَى: يُرِيدُ اللّٰهُ بِكُمُ الْيُسْرَ وَلاَ يُرِيدُ بِكُمُ الْعُسْرَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) நீர் சிரமம் அடைவதற்காக குர்ஆனை உம்மீது நாம் இறக்கி வைக்கவில்லை. (20 : 2)*

*"...அல்லாஹ் உங்களுக்கு இலகுவையே நாடுகிறான். கஷ்டத்தை உங்களுக்கு அவன் நாடவில்லை. (2:185)*

١٤٢ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ دَخَلَ عَلَيْهَا وَعِنْدَهَا امْرَأَةٌ. قَالَ: مَنْ هَذِه؟ قَالَتْ: هَذِه فُلاَنَةُ تَذْكُرُ مِنْ صَلاَتِهَا. قَالَ:" مَهْ. عَلَيْكُمْ بِمَا تُطِيقُونَ فَوَاللّٰه لاَ يَمَلُّ اللّٰهُ حَتّٰى تَمَلُّوا. وَكَانَ أَحَبَّ الدِّينِ إِلَيْه مَا دَاوَمَ صَاحِبُهُ عَلَيْه" مُتَّفَقٌ عَلَيْه." وَمَهْ" كَلِمَةُ نَهْيٍ وَزَجْرٍ. وَمَعْنَى" لاَ يَمَلُّ اللّٰهُ" لاَ يَقْطَعُ ثَوَابَهُ عَنْكُمْ وَجَزَاءَ أَعْمَالِكُمْ وَيُعَامِلُكُمْ مُعَامَلَةَ الْمَالِّ حَتّٰى تَمَلُّوا فَتَتْرُكُوا فَيَنْبَغِي أَنْ تَأْخُذُوا مَا تُطِيقُونَ الدَّوَامَ عَلَيْه لِيَدُومَ ثَوَابُهُ لَكُمْ وَفَضْلُهُ عَلَيْكُمْ.

**142** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என்னிடம் ஒரு பெண் உரையாடிக் கொண்டு இருந்தபோது நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். "யார் இந்தப் பெண்?" என்று கேட்டார்கள். "இந்தப் பெண் இன்னார். இவள் (அதிகமாக தொழும்) தொழுகை பற்றிப் பிறர் பேசுகின்றனர்" என்று நான் கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "தடுத்துக் கொள்வீர்களாக! நீங்கள் இயன்ற அளவுக்கு (வணக்க வழிபாட்டை) கடைபிடியுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் சடைந்து போகும் அளவுக்கு அல்லாஹ் சடைவடைவதில்லை. ஒரு செயலை (தீனின் அமலை) நிரந்தரமாகச் செய்பவரே அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானவர்" என்று கூறினார்கள்.

**(புகாரி:1151. முஸ்லிம்:785)**

١٤٣ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ:" جَاءَ ثَلاَثَةُ رَهْطٍ إِلَى بُيُوتِ أَزْوَاجِ النَّبِيِّ ﷺ يَسْأَلُونَ عَنْ عِبَادَةِ النَّبِيِّ ﷺ. فَلَمَّا أُخْبِرُوا كَأَنَّهُمْ تَقَالُّوهَا. وَقَالُوا: أَيْنَ نَحْنُ مِنَ النَّبِيِّ ﷺ وَقَدْ غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِه وَمَا تَأَخَّرَ! قَالَ أَحَدُهُمْ: أَمَّا أَنَا فَأُصَلِّي اللَّيْلَ أَبَدًا وَقَالَ الآخَرُ: وَأَنَا أَصُومُ الدَّهْرَ أَبَدًا وَلاَ أُفْطِرُ وَقَالَ الآخَرُ: وَأَنَا أَعْتَزِلُ النِّسَاءَ فَلاَ أَتَزَوَّجُ أَبَدًا فَجَاءَ رَسُولُ اللّٰه ﷺ إِلَيْهِمْ فَقَالَ: أَنْتُمُ الَّذِينَ قُلْتُمْ كَذَا وَكَذَا؟ أَمَا وَاللّٰه إِنِّي لأَخْشَاكُمْ لِلّٰه وَأَتْقَاكُمْ لَهُ لَكِنِّي أَصُومُ وَأُفْطِرُ وَأُصَلِّي وَأَرْقُدُ وَأَتَزَوَّجُ النِّسَاءَ فَمَنْ رَغِبَ عَنْ سُنَّتِي فَلَيْسَ مِنِّي" مُتَّفَقٌ عَلَيْه.

**143** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் மனைவியர் வீடுகளுக்கு மூன்று பேர்கள் வந்து, நபி (ஸல்) அவர்களின் வணக்க வழிமுறைகளைப் பற்றி கேட்டார்கள். அவர்களிடம் அதுபற்றி கூறப்பட்டபோது, தாங்கள் மூவரும் குறைவாக நற்செயல் செய்வது போல் உணர்ந்தார்கள். "முன் பின் குற்றங்கள் மன்னிக்கப்பட்ட நபி (ஸல்) அவர்களிலிருந்து நாம் எங்கே?" என்று கூறினார்கள். அவர்களில் ஒருவர் "நான் எப்போதுமே தொழுது கொண்டே இருப்பேன்" என்று கூறினார். மற்றொருவரோ, "நான் விடாது நோன்பு நோற்றவாறே இருப்பேன்" என்றார். இன்னொருவரோ, "நான் பெண்களிலிருந்து ஒதுங்கி விடுவேன். எப்போதும் திருமணம் செய்துக் கொள்ள மாட்டேன்" என்று கூறினார். இந்த செய்தியைக் கேட்டு, அப்போது அங்கு வந்த நபி (ஸல்) அவர்கள் அவர்களிடம், "நீங்கள் இப்படி இப்படிக் கூறி இருக்கிறீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வை உங்களைவிட நான் மிகவும் பயப்படுகிறேன். அவனை உங்களைவிட மிகவும் அஞ்சுகிறேன். எனினும் (ஒருநாள்) நோன்பு வைக்கிறேன். (மறுநாள்) விட்டு விடுகிறேன். தொழுகிறேன். தூங்குகிறேன். பெண்களை திருமணமும் செய்துள்ளேன். என் வழிமுறையை ஒருவன் வெறுத்தால், அவன் என்னைச் சேர்ந்தவனல்லன்' என்று கூறினார்கள். **(புகாரி:5063. முஸ்லிம்:1401)**

١٤٤ – وَعَنِ ابْنِ مَسْعُود رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" هَلَكَ الْمُتَنَطِّعُونَ" قَالَهَا ثَلاَثًا رَوَاهُ مُسْلِمٌ." الْمُتَنَطِّعُونَ": الْمُتَعَمِّقُونَ الْمُشَدِّدُونَ فِي غَيْرِ مَوْضِعِ التَّشْدِيد.

**144** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தேவையில்லாமல் கூடுதல் சிரத்தை எடுப்பவர்கள் நாசமடைவார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் மூன்று தடவை கூறினார்கள். **(முஸ்லிம்:2670)**

١٤٥ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" إِنَّ الدِّينَ يُسْرٌ وَلَنْ يُشَادَّ الدِّينَ إِلاَّ غَلَبَهُ. فَسَدِّدُوا وَقَارِبُوا وَأَبْشِرُوا وَاسْتَعِينُوا بِالْغَدْوَةِ وَالرَّوْحَةِ وَشَيْءٍ مِنْ الدُّلْجَةِ" رَوَاهُ الْبُخَارِيُّ. وَفِي رِوَايَةٍ لَهُ:" سَدِّدُوا وَقَارِبُوا وَاغْدُوا وَرُوحُوا وَشَيْءٌ مِنَ الدُّلْجَةِ الْقَصْدَ الْقَصْدَ تَبْلُغُوا". قَوْلُهُ" الدِّينُ" هُوَ مَرْفُوعٌ عَلَى مَا لَمْ يُسَمَّ فَاعِلُهُ. وَرُوِيَ مَنْصُوبًا. وَرُوِيَ:" لَنْ يُشَادَّ الدِّينَ أَحَدٌ". وَقَوْلُهُ ﷺ:" إِلاَّ غَلَبَهُ": أَيْ غَلَبَهُ الدِّينُ وَعَجَزَ ذَلِكَ الْمُشَادُّ عَنْ مُقَاوَمَةِ الدِّينِ لِكَثْرَةِ طُرُقِه." وَالْغَدْوَةُ": سَيْرُ أَوَّلِ النَّهَارِ." وَالرَّوْحَةُ" آخِرُ النَّهَارِ. و" الدُّلْجَةُ" آخِرُ اللَّيْلِ. وَهَذَا اسْتِعَارَةٌ وَتَمْثِيلٌ وَمَعْنَاهُ: اسْتَعِينُوا عَلَى طَاعَةِ اللّهِ عَزَّ وَجَلَّ بِالأَعْمَالِ فِي وَقْتِ نَشَاطِكُمْ وَفَرَاغِ قُلُوبِكُمْ بِحَيْثُ تَسْتَلِذُّونَ الْعِبَادَةَ وَلاَ تَسْأَمُونَ وَتُبْلُغُونَ مَقْصُودَكُمْ كَمَا أَنَّ الْمُسَافِرَ الْحَاذِقَ يَسِيرُ فِي هَذِهِ الأَوْقَاتِ وَيَسْتَرِيحُ هُوَ وَدَابَّتُهُ فِي غَيْرِهَا فَيَصِلُ الْمَقْصُودَ بِغَيْرِ تَعَبٍ وَاللّهُ أَعْلَمُ.

**145** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக மார்க்கம், எளிமையானதாகும். மார்க்கத்தை மறைத்து வைக்க எவர் முயற்சித்தாலும் அவரை, அது வெற்றி காணும். நேர்மையாக நடந்து கொள்ளுங்கள். நடுநிலையைக் கடைப்பிடியுங்கள். ஒருவருக்கொருவர் வாழ்த்துக்கள் கூறிக் கொள்ளுங்கள். காலையிலும், மாலையிலும், இரவில் சிறிது நேரமும் (வணங்குவதற்கு) பயன்படுத்திக் கொள்ளுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:39)**

புகாரியின் (6463) மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

"நேர்மையாக நடந்து கொள்ளுங்கள். நடுநிலையுடன் இருந்து கொள்ளுங்கள். (வணங்குவதற்காக) காலை வேளையைப் பேணுங்கள். மாலை வேளையைப் பேணுங்கள். இரவில் ஒரு நேரம் ஒதுங்குங்கள். இதன் மூலம் (நடுநிலை எனும்) நோக்கத்தை – குறிக்கோளை அடைவீர்கள்"

١٤٦ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: دَخَلَ النَّبِيُّ ﷺ الْمَسْجِدَ فَإِذَا حَبْلٌ مَمْدُودٌ بَيْنَ السَّارِيَتَيْنِ فَقَالَ:" مَا هَذَا الْحَبْلُ؟" قَالُوا: هَذَا حَبْلٌ لِزَيْنَبَ فَإِذَا فَتَرَتْ تَعَلَّقَتْ بِهِ. فَقَالَ النَّبِيُّ ﷺ:" حُلُّوهُ. لِيُصَلِّ أَحَدُكُمْ نَشَاطَهُ فَإِذَا فَتَرَ فَلْيَرْقُدْ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**146** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலுக்குள் வந்தார்கள். அங்கே இரண்டு தூண்களுக்கிடையே கட்டப்பட்ட கயிறு இருந்தது. "இந்தக் கயிறு என்ன?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். "இது ஜைனப் என்ற பெண்ணுக்கு உரியது. தொழுகையில் சடைந்தால், இதில் தன்னை அவர் கட்டிக் கொள்வார்" என்று கூறினார்கள். "இதை அவிழ்த்துப் போடுங்கள். உங்களில் ஒருவர் சுறுசுறுப்பான நேரத்தில் (உபரி தொழுகைகளை) தொழட்டும்! அவர் சடைவடைந்தால் தூங்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1150. முஸ்லிம்:784)**

١٤٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" إِذَا نَعَسَ أَحَدُكُمْ وَهُوَ يُصَلِّي فَلْيَرْقُدْ حَتَّى يَذْهَبَ عَنْهُ النَّوْمُ فَإِنَّهُ إِذَا صَلَّى وَهُوَ نَاعِسٌ لاَ يَدْرِي لَعَلَّهُ يَذْهَبُ يَسْتَغْفِرُ فَيَسُبُّ نَفْسَهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**147** அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர், தொழும் நிலையில் தூங்கினால், தன்னை விட்டும் தூக்கம் நீங்கும் வரை அவர் தூங்கட்டும்! ஏனெனில், உங்களில் ஒருவர் தூங்கிய நிலையில் தொழுதால், அவர் மன்னிக்க வேண்டுகிறாரா? அல்லது தன்னைத் தானே திட்டிக் கொள்கிறாரா? என்பதை அறிய மாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:212. முஸ்லிம்:786)**

١٤٨ – وَعَنْ أَبِي عَبْدِ اللَّهِ جَابِرِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ:" كُنْتُ أُصَلِّي مَعَ النَّبِيِّ ﷺ الصَّلَوَاتِ فَكَانَتْ صَلاَتُهُ قَصْدًا وَخُطْبَتُهُ قَصْدًا" رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ: قَصْدًا: أَيْ بَيْنَ الطُّولِ وَالْقِصَرِ.

**148** (அபூஅப்துல்லாஹ் என்ற) ஜாபிர் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான் நபி (ஸல்) அவர்களுடன் ஐந்து நேரமும் தொழுதிருக்கிறேன். அவர்களின் தொழுகை நடுநிலையானதாகவே இருந்தது. அவர்களின் குத்பா நடுநிலையானதாகவே இருந்தது." **(முஸ்லிம்:866)**

١٤٩ – وَعَنْ أَبِي جُحَيْفَةَ وَهْبِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: آخَى النَّبِيُّ ﷺ بَيْنَ سَلْمَانَ وَأَبِي الدَّرْدَاءِ فَزَارَ سَلْمَانُ أَبَا الدَّرْدَاءِ فَرَأَى أُمَّ الدَّرْدَاءِ مُتَبَذِّلَةً. فَقَالَ: مَا شَأْنُكِ؟ قَالَتْ أَخُوكَ أَبُو الدَّرْدَاءِ لَيْسَ لَهُ حَاجَةٌ فِي الدُّنْيَا. فَجَاءَ أَبُو الدَّرْدَاءِ فَصَنَعَ لَهُ طَعَامًا فَقَالَ لَهُ: كُلْ فَإِنِّي صَائِمٌ. قَالَ: مَا أَنَا بِآكِلٍ حَتَّى تَأْكُلَ فَأَكَلَ فَلَمَّا كَانَ اللَّيْلُ ذَهَبَ أَبُو الدَّرْدَاءِ يَقُومُ. فَقَالَ لَهُ: نَمْ. فَنَامَ ثُمَّ ذَهَبَ يَقُومُ فَقَالَ لَهُ: نَمْ فَلَمَّا كَانَ آخِرُ اللَّيْلِ قَالَ سَلْمَانُ: قُمْ الآنَ. فَصَلَّيَا جَمِيعًا فَقَالَ لَهُ سَلْمَانُ: إِنَّ لِرَبِّكَ عَلَيْكَ حَقًّا وَإِنَّ لِنَفْسِكَ عَلَيْكَ حَقًّا وَلِأَهْلِكَ عَلَيْكَ حَقًّا فَأَعْطِ كُلَّ ذِي حَقٍّ حَقَّهُ فَأَتَى النَّبِيَّ ﷺ فَذَكَرَ ذَلِكَ لَهُ فَقَالَ النَّبِيُّ ﷺ:" صَدَقَ سَلْمَانُ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**149** (அபூஜுஹைஃபா என்ற) வஹ்பு இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸல்மான், அபூதர்தா இருவருக்கும் நபி (ஸல்) அவர்கள் சகோதரத் தோழமையை ஏற்படுத்தினார்கள். ஒருமுறை ஸல்மான் (ரழி), அபூதர்தா (ரழி)யை சந்தி(க்க வந்)தார்கள். அப்போது உம்முதர்தா (ரழி) அவர்களை அலங்காரம் செய்து கொள்ளாத நிலையில், பழைய ஆடையில் கண்டார். "உம்முடைய இந்த நிலைக்குக் காரணம் என்ன?" என்று கேட்டார். "உம் சகோதரர் அபூதர்தாவுக்கு உலகத்தேவை எதுவும் இல்லை" என்று கூறினார்.

அப்போது அபூதர்தா (ரழி) வந்தார். ஸல்மானுக்காக உணவுக்கு ஏற்பாடு செய்தார். "சாப்பிடும்! நான் நோன்பாளி" என்று அபூதர்தா (ரழி) கூறினார். "நீர் சாப்பிடாதவரை நான் சாப்பிடமாட்டேன்" என்று ஸல்மான் (ரழி) கூறினார். (நபிலான நோன்பை முறித்து) அபூதர்தா (ரழி) சாப்பிட்டார். இரவு வந்ததும் அபூதர்தா (ரழி) தொழுவதற்காகச் சென்றார். "தூங்கு" என அவரிடம் ஸல்மான் (ரழி) கூறினார். அவரும் தூங்கினார். பின்பு மீண்டும் தொழ எழுந்தார். அவரிடம், "தூங்கு" என ஸல்மான் (ரழி) கூறினார். இரவின் பாதி கடந்த போது, "இப்போது எழுந்திரு!" என்று ஸல்மான் (ரழி) கூறினார். இருவரும் சேர்ந்து தொழுதார்கள். அவரிடம் ஸல்மான் (ரழி), "உம் இறைவன் உம் மீது சில கடமைகளை விதித்துள்ளான். உமக்குள்ள கடமையை நீர் கடைப்பிடியும். உம் குடும்பத்தாருக்கான உரிமையைப் பேணும்! ஒவ்வொரு கடமைக்கும் அதற்கான உரிமையை வழங்கும்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அபூதர்தா (ரழி) நடந்ததைக் கூறினார். "ஸல்மான் உண்மையே கூறியுள்ளார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1968)**

١٥٠ – وَعَنْ أَبِي مُحَمَّد عَبْد اللَّه بْن عَمْرو بْن الْعَاص رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: أُخْبِرَ النَّبِيُّ ﷺ أَنِّي أَقُولُ: وَاللَّه لأَصُومَن النَّهَارَ وَلأَقُومَن اللَّيْلَ مَا عشْتُ. فَقَالَ رَسُولُ اللَّه ﷺ: " أَنْتَ الَّذي تَقُولُ ذَلكَ؟" فَقُلْتُ لَهُ: قَدْ قُلْتُهُ بأَبِي أَنْتَ وَأُمِّي يَا رَسُولَ اللَّه. قَالَ" فَإنَّكَ لاَ تَسْتَطِيعُ ذَلكَ. فَصُمْ وَأَفْطرْ وَنَمْ وَقُمْ وَصُمْ منَ الشَّهْر ثَلاَثَةَ أَيَّام: فَإنَّ الْحَسَنَةَ بعَشْر أَمْثَالهَا وَذَلكَ مثْلُ صيَام الدَّهْر!" قُلْت: فَإنِّي أُطيقُ أَفْضَلَ منْ ذَلكَ. قَالَ:" فَصُمْ يَوْمًا وَأَفْطرْ يَوْمَيْنِ". قُلْت: فَإنِّي أُطيقُ أَفْضَلَ منْ ذَلكَ. قَالَ" فَصُمْ يَوْمًا وَأَفْطرْ يَوْمًا فَذَلكَ صيَامُ دَاوُدَ ﷺ وَهُوَ أَعْدَلُ الصِّيَام".

وَفي روَايَة:" وَهُوَ أَفْضَلُ الصِّيَام". فَقُلْت: فَإنِّي أُطيقُ أَفْضَلَ منْ ذَلكَ. فَقَالَ رَسُولُ اللَّه ﷺ:" لاَ أَفْضَلَ منْ ذَلكَ" وَلأَنْ أَكُونَ قَبلْتُ الثَّلاَثَةَ الأَيَّامِ الَّتي قَالَ رَسُولُ اللَّه ﷺ أَحَبُّ إلَيَّ منْ أَهْلي وَمَالي!.

وَفي روَايَة:" أَلَمْ أُخْبَرْ أَنَّكَ تَصُومُ النَّهَارَ وَتَقُمْ اللَّيْلَ؟" قُلْت: بَلَى يَا رَسُول اللَّه. قَالَ:" فَلاَ تَفْعَلْ صُمْ وَأَفْطرْ وَنَمْ وَقُمْ فَإنَّ لجَسَدكَ عَلَيْك حَقًّا وَإنَّ لعَيْنك عَلَيْك حَقًّا وَإنَّ لزَوْجك عَلَيْك حَقًّا وَإنَّ لزَوْركَ عَلَيْك حَقًّا وَإنَّ بحَسْبك أَنْ تَصُومَ في كُلِّ شَهْر ثَلاَثَةَ أَيَّام فَإنَّ لَكَ بكُلِّ حَسَنَة عَشْرَ أَمْثَالهَا فَإنَّ ذَلكَ صيَامُ الدَّهْر". فَشَدَّدْت فَشُدِّدَ عَلَيَّ. قُلْت: يَا رَسُولَ اللَّه إنِّي أَجدُ قُوَّةً. قَالَ:" صُمْ صيَامَ نَبيِّ اللَّه دَاوُدَ وَلاَ تَزدْ عَلَيْه" فَقُلْت: وَمَا كَانَ صيَامُ دَاوُدَ؟ قَالَ:" نصْفُ الدَّهْر". فَكَانَ عَبْدُ اللَّه يَقُولُ بَعْدَمَا كَبرَ: يَا لَيْتَني قَبلْت رُخْصَةَ رَسُول اللَّه ﷺ.

وَفي روَايَة:" أَلَمْ أُخْبَرْ أَنَّكَ تَصُومُ الدَّهْرَ وَتَقْرَأُ الْقُرْآنَ كُلَّ لَيْلَة؟" فَقُلْت: بَلَى يَا رَسُولَ اللَّه وَلَمْ يُردْ بذَلكَ إلاَّ الْخَيْرَ. قَالَ:" فَصُمْ صَوْمَ نَبيِّ اللَّه دَاوُدَ فَإنَّهُ كَانَ أَعْبَدَ النَّاس وَاقْرَأْ الْقُرْآنَ في كُلِّ شَهْر" قُلْت. يَا نَبيَّ اللَّه إنِّي أُطيقُ أَفْضَلَ منْ ذَلكَ؟ قَالَ:" فَاقْرَأْهُ في كُلِّ عشْرينَ" قُلْت: يَا نَبيَّ اللَّه إنِّي أُطيقُ أَفْضَلَ منْ ذَلكَ؟ قَالَ:" فَاقْرَأْهُ في كُلِّ عَشْر" قُلْت: يَا نَبيَّ اللَّه إنِّي أُطيقُ أَفْضَلَ منْ ذَلكَ. قَالَ:" فَاقْرَأْهُ في كُلِّ سَبْع وَلاَ تَزدْ عَلَى ذَلكَ". فَشَدَّدْت فَشُدِّدَ عَلَيَّ وَقَالَ لي النَّبيُّ ﷺ:" إنَّكَ لاَ تَدْري لَعَلَّكَ يَطُولُ بكَ عُمُرٌ". قَالَ: فَصرْت إلَى الَّذي قَالَ لي النَّبيُّ ﷺ. فَلَمَّا كَبرْت وَددْت أَنِّي كُنْت قَبلْت رُخْصَةَ نَبيِّ اللَّه ﷺ.

وَفي روَايَة:" وَإنَّ لوَلَدكَ عَلَيْك حَقًّا". وَفي روَايَة:" لاَ صَامَ مَنْ صَامَ الأَبَدَ!" ثَلاَثًا.

وَفي روَايَة:" أَحَبُّ الصِّيَام إلَى اللَّه تَعَالَى صيَامُ دَاوُدَ. وَأَحَبُّ الصَّلاَة إلَى اللَّه تَعَالَى صَلاَةُ دَاوُدَ: كَانَ يَنَامُ نصْفَ اللَّيْل وَيَقُومُ ثُلُثَهُ وَيَنَامُ سُدُسَهُ وَكَانَ يَصُومُ يَوْمًا وَيُفْطرُ يَوْمًا وَلاَ يَفرُّ إذَا لاَقَى".

وَفي روَايَة قَالَ: أَنْكَحَني أَبي امْرَأَةً ذَاتَ حَسَب وَكَانَ يَتَعَاهَدُ كَنَّتَهُ" أَيْ امْرَأَةَ وَلَده" فَيَسْأَلُهَا عَنْ بَعْلهَا فَتَقُولُ لَهُ: نعْمَ الرَّجُلُ منْ رَجُل لَمْ يَطَأْ لَنَا فرَاشًا وَلَمْ يُفَتِّشْ لَنَا كَنَفًا مُنْذُ أَتَيْنَاهُ. فَلَمَّا طَالَ ذَلكَ عَلَيْه ذَكَرَ ذَلكَ للنَّبيِّ ﷺ. فَقَالَ:" الْقَني به" فَلَقيته بَعْدَ ذَلكَ فَقَالَ:" كَيْفَ تَصُومُ؟" قُلْت كُلَّ يَوْم. قَالَ:" وَكَيْفَ تَخْتمُ؟" قُلْت: كُلَّ لَيْلَة. وَذَكَرَ نَحْوَ مَا سَبَقَ وَكَانَ

يَقْرَأُ عَلَى بَعْضِ أَهْلِهِ السُّبُعَ الَّذِي يَقْرَؤُهُ يَعْرِضُهُ مِنَ النَّهَارِ لِيَكُونَ أَخَفَّ عَلَيْهِ بِاللَّيْلِ. وَإِذَا أَرَادَ أَنْ يَتَقَوَّى أَفْطَرَ أَيَّامًا وَأَحْصَى وَصَامَ مِثْلَهُنَّ كَرَاهِيَةَ أَنْ يَتْرُكَ شَيْئًا فَارَقَ عَلَيْهِ النَّبِيَّ ﷺ. كُلُّ هَذِهِ الرِّوَايَاتِ صَحِيحَةٌ مُعْظَمُهَا فِي الصَّحِيحَيْنِ وَقَلِيلٌ مِنْهَا فِي أَحَدِهِمَا.

**150** (அபூமுஹம்மத் என்ற) அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் வாழ்நாள் முழுவதும் பகலில் நோன்பு நோற்பேன். இரவில் வணங்குவேன்" என்று நான் கூறியதாக, நபி (ஸல்) அவர்களிடம் கூறப்பட்டது. "இதை நீர் தான் கூறினீரா?" என்று என்னிடம் நபி (ஸல்) கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! என் தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! நான்தான் கூறினேன்" என்றேன். "நீர் இதற்கு இயலமாட்டீர். நோன்பு வைப்பீராக! அடுத்து விட்டுவிடுவீராக! தூங்குவீராக! பிறகு எழுந்து தொழுவீராக! மாதத்தில் மூன்று நாட்கள் நோன்பு வைப்பீராக! நிச்சயமாக, நன்மைகள் செய்வது என்பது, அது போன்ற 10 மடங்கு நன்மையுடையதாகும். இது, காலமெல்லாம் நோன்பு வைப்பது போலாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "நான் இதையும் விட சக்தி பெறுவேன்" என்று கூறினேன். "ஒரு நாள் நோன்பு வைப்பீராக! இரண்டு நாட்கள் விட்டுவிடுவீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். "நான் அதையும் விட சக்தி பெறுவேன்" என்று கூறினேன். "ஒரு நாள் நோன்பு வைப்பீராக! ஒரு நாள் விட்டு விடுவீராக! இதுதான் தாவூத் நபியின் நோன்பாகும். இதுவே நோன்பில் மிகச் சரியான நிலையாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது :

இதுதான் நோன்பில் சிறந்ததாகும். "நான் இதையும் விட சக்தி பெறுவேன்" என்றேன். "இதை விடவும், மிகச் சிறந்தது இல்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். "(முதுமை ஏற்பட்டபின்) நபி (ஸல்) அவர்கள் கூறிய அந்த மூன்று நாட்களை நான் ஒப்புக் கொண்டிருந்தால், அதுவே எனக்கு என் குடும்பம், என் சொத்துக்களை விடவும் மிகப் பிரியமானதாக இருந்திருக்கும்."

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது :

"பகலில் நீ நோன்பு நோற்கிறாய், இரவில் வணங்குகிறாய் என நான் கேள்விப்பட்டது உண்மையா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டதும், "இறைத்தூதர் அவர்களே! உண்மைதான்" என்று கூறினேன். "இனி அப்படிச் செய்யாதே! நோன்பு வை. விட்டு விடு. தூங்கு! எழுந்து தொழு! உன் உடலுக்கு உன் மீது கடமை உண்டு. உன் இரண்டு கண்களுக்காக உன் மீது கடமை உண்டு. உன் மனைவிக்காக உன் மீது கடமை உண்டு. உன் விருந்தாளிக்காக உன் மீது கடமை உண்டு. ஒவ்வொரு மாதத்திலும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது உனக்குப் போதும். நிச்சயமாக, உனக்கு ஒவ்வொரு நன்மைக்கும் இது போன்று 10 மடங்கு நன்மை உண்டு. நிச்சயமாக, இது காலமெல்லாம் நோன்பு வைப்பது போலாகும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். நான் கடுமையாக்கிக் கொண்டேன். என் மீது (பின்பு அது) கடுமையாக்கப்பட்டுவிட்டது. 'இறைத்தூதர் அவர்களே! நான் சக்தி பெற்றுள்ளேன்" என்று கூறினேன். "நீ நோன்பு வை. இதுதான் தாவூத் நபியின் நோன்பாகும். இதையும் விட அதிகப்படுத்திவிடாதே" என்று நபி (ஸல்) கூறினார்கள். "தாவூத் நபியின் நோன்பு எப்படி இருந்தது?" என்று கேட்டேன். "(ஒரு நாள் நோன்பு வைத்து மறுநாள் விட்டு விடுவது என) வாழ்நாளின் பாதிநாட்களாகும்" என்று கூறினார்கள். (முதுமை ஏற்பட்டப்பின் அப்துல்லாஹ் (ரழி), "நபி (ஸல்) அவர்கள் அளித்த சலுகையை நான் ஒப்புக் கொண்டிருக்கலாமே" என்று கூறினார்கள்).

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது :

“காலம் முழுவதும் நீ நோன்பு நோற்கிறாய். இரவு முழுவதும், ஒரு குர்ஆன் ஓதித் தொழுகிறாய் என நான் அறிந்தேன். இது உண்மையா?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். “இறைத்தூதர் அவர்களே! உண்மைதான். நான் நல்லதையே தவிர வேறு நாடவில்லை” என்று கூறினேன் “நபி தாவூத் (அலை) அவர்களின் நோன்பு போல் நோன்பு வைப்பீராக! அவர் மக்களில் வணக்கசாலியாக இருந்தார். ஒவ்வொரு மாதமும் குர்ஆனை ஓது” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “நபி (ஸல்) அவர்களே! இதையும் விட அதிகமாக நான் சக்திபெறுவேன்” என்று கூறினேன். “20 நாட்களில் குர்ஆனை ஓது!” என்று கூறினார்கள். “நபி (ஸல்) அவர்களே! இதையும் விட மிக அதிகமாக ஓத நான் சக்திபெறுவேன்” என்றேன். “10 நாட்களில் ஒரு குர்ஆன் ஓது” என்று கூறினார்கள். “நபி (ஸல்) அவர்களே! இதையும் விட அதிகமாக நான் சக்தி பெறுவேன்” என்று கூறினேன். “வாரம் ஒரு முழுக் குர்ஆனை ஓது. இதையும் விட அதிகப்படுத்தாதே!” என்று கூறினார்கள். “என் மீது நான் கடுமையாக்கிக் கொண்டேன். எனவே நபி (ஸல்) அவர்களால் என் மீது கடுமையாக்கப்பட்டுவிட்டது. ‘உனக்கு வயது நீடிக்கப்படக் கூடும் என்பதை நீ அறியமாட்டாய்’ என்று என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறியது போலவே, நான் வயது அதிகமாகக் கொடுக்கப்பட்டேன். நான் முதுமை அடைந்து விட்டதால், நபி (ஸல்) அவர்களின் அனுமதியை நான் ஏற்று இருக்கலாமே, என விரும்பினேன்.”

மற்றொரு அறிவிப்பில் “உன் குழந்தைக்கு உன் மீது சில கடமைகள் உள்ளன” என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில், “காலமெல்லாம் நோன்பு நோற்றவர், சரியாக நோன்பு வைத்தவர் போல் ஆக மாட்டார்” என்று மூன்று முறை கூறியதாக உள்ளது.

மற்றொரு அறிவிப்பில், “நோன்புகளில் அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானது, தாவூத் நபியின் நோன்புதான். அல்லாஹ்விடம் தொழுகையில் விருப்பமானது தாவூத் நபியின் தொழுகைதான். அவர்கள் பாதி இரவு வரை தூங்குவார்கள். மூன்றில் ஒரு பங்கு நேரம் தொழுவார்கள். ஆறில் ஒரு பங்குக்கு தூங்குவார்கள். ஒருநாள் நோன்பு வைப்பார்கள். மறுநாள் விட்டு விடுவார்கள். போர் செய்தால் பின்வாங்க மாட்டார்கள்” என்று உள்ளது.

மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது :

என் தந்தை நல்ல குடும்பப் பெண்ணை எனக்குத் திருமணம் செய்து வைத்தார். அவர் தன் மருமகளைக் கவனித்துக் கொள்வார். பிறகு ஒருநாள் என்னைப் பற்றி அவளிடம் கேட்டார்கள். “அவர் நல்ல மனிதர்தான். நம்முடன் படுக்கையை பகிர்ந்து கொண்டதுமில்லை. நாம் வந்தது முதல் நம் திரையை அவர் திறந்ததும் இல்லை” என்று அவள் கூறினாள். இதேநிலை நீடித்த போது, இது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் என் தந்தை கூறினார். தன்னை வந்து சந்திக்கும்படி எனக்கு நபி (ஸல்) கூறினார்கள். இதன் பின் அவர்களை நான் சந்தித்தேன். “எப்படி நோன்பு வைக்கிறாய்?” என்று கேட்டார்கள். “ஒவ்வொரு நாளும்” என்று கூறினேன். “எப்படி குர்ஆனை முடிக்கிறீர்?” என்று கேட்டார்கள். “ஒவ்வொரு நாளும்” என்று கூறினேன். இதற்கு முந்திய அறிவிப்பு போலவே கூறினார்கள் - (முதுமை அடைந்தபின் இரவில் அவருக்கு இலகுவாக இருப்பதற்காக இரவில் அவர் ஓதும் குர்ஆனில் 7-ல் ஒரு பகுதியை பகலில் அவரது குடும்பத்தாரில் சிலரிடம் ஓதிக்காட்டுவார். பின்பு நோன்பை விட்ட நாட்களைக் கணக்கிட்டு, அந்த அளவுக்கு தொடர்ந்து நோன்பு நோற்று விடுவார். நபி (ஸல்) அவர்கள் மரணிக்கும் பொழுது, தான் செய்து வந்த செயலை இப்போது அதைக் குறைத்திட வெறுத்து (இவ்வாறு செய்வார்)

இவ்வறிவிப்புகள் அனைத்தும் ஸஹீஹானதாகும். இவ்வறிவிப்புகளில் மிக அதிகமானவை புகாரியிலும் (1975, 1976, 1977, 3418, 3420, 5052) முஸ்லிமிலும் (1159) உள்ளது. இவற்றில் சில மட்டும் இரண்டில் ஏதாவது ஒன்றில் உள்ளதாகும்.

١٥١ – وَعَنْ أَبِي رِبْعِيٍّ حَنْظَلَةَ بْنِ الرَّبِيعِ الأَسَيْدِيِّ الْكَاتِبِ – أَحَدِ كُتَّابِ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ: لَقِيَنِي أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَقَالَ: كَيْفَ أَنْتَ يَا حَنْظَلَةُ؟ قُلْتُ: نَافَقَ حَنْظَلَةُ! قَالَ: سُبْحَانَ اللَّهِ! مَا تَقُولُ؟! قُلْتُ نَكُونُ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ يُذَكِّرُنَا بِالْجَنَّةِ وَالنَّارِ كَأَنَّا رَأْيَ عَيْنٍ فَإِذَا خَرَجْنَا مِنْ عِنْدِ رَسُولِ اللَّهِ ﷺ عَافَسْنَا الأَزْوَاجَ وَالأَوْلاَدَ وَالضَّيْعَاتِ. نَسِينَا كَثِيرًا! قَالَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: فَوَاللَّهِ إِنَّا لَنَلْقَى مِثْلَ هَذَا فَانْطَلَقْتُ أَنَا وَأَبُو بَكْرٍ حَتَّى دَخَلْنَا عَلَى رَسُولِ اللَّهِ ﷺ. فَقُلْتُ: نَافَقَ حَنْظَلَةُ يَا رَسُولَ اللَّهِ! فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "وَمَا ذَاكَ؟" قُلْتُ يَا رَسُولَ اللَّهِ نَكُونُ عِنْدَكَ تُذَكِّرُنَا بِالنَّارِ وَالْجَنَّةِ كَأَنَّا رَأْيَ الْعَيْنِ فَإِذَا خَرَجْنَا مِنْ عِنْدِكَ عَافَسْنَا الأَزْوَاجَ وَالأَوْلاَدَ وَالضَّيْعَاتِ نَسِينَا كَثِيرًا! فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَوْ تَدُومُونَ عَلَى مَا تَكُونُونَ عِنْدِي وَفِي الذِّكْرِ لَصَافَحَتْكُمُ الْمَلاَئِكَةُ عَلَى فُرُشِكُمْ وَفِي طُرُقِكُمْ وَلَكِنْ يَا حَنْظَلَةُ سَاعَةً وَسَاعَةً" ثَلاَثَ مَرَّاتٍ رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ" رِبْعِيٌّ" بِكَسْرِ الرَّاءِ." وَالأَسَيْدِيُّ" بِضَمِّ الْهَمْزَةِ وَفَتْحِ السِّينِ وَبَعْدَهَا يَاءٌ مُشَدَّدَةٌ مَكْسُورَةٌ. وَقَوْلُهُ:" عَافَسْنَا" هُوَ بِالْعَيْنِ وَالسِّينِ الْمُهْمَلَتَيْنِ: أَيْ عَالَجْنَا وَلاَعَبْنَا." وَالضَّيْعَاتُ": الْمَعَايِشُ.

**151** (நபி (ஸல்) அவர்களின் எழுத்தாளர்களில் ஒருவரான அபூரிப்ஈ என்ற) ஹன்ளலா இப்னு ரபீஉ அல் உஸைதிய்யீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) என்னை அபூபக்கர் (ரழி) அவர்கள் சந்தித்து, "ஹன்ளலா! எப்படி இருக்கிறீர்?" என்று கேட்டார்கள். "ஹன்ளலா முனாபிக் ஆகிவிட்டான்" என்று கூறினேன். "சுப்ஹானல்லாஹ்! என்ன கூறுகிறீர்?" என்று கேட்டார்கள். "நபி(ஸல்) அவர்களிடம் நாம் இருக்கும் போது, சொர்க்கத்தையும், நரகத்தையும் நாம் நேரில் பார்ப்பது போலவே நினைவு கூர்கிறோம். நபி(ஸல்) அவர்களிடமிருந்து நாம் வெளியேறினால், மனைவியரை, குழந்தைகளை, வாழ்க்கையை கவனிப்பதில் மூழ்குகிறோம். அதிகமானதை மறந்து விடுகிறோம்" என்று கூறினேன். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக, நிச்சயமாக இது போன்றே நானும் உணர்கிறேன்" என்று அபூ பக்கர் (ரழி) கூறினார்கள். உடனே நானும், அபூபக்கர் அவர்களும், நபி (ஸல்) அவர்களிடம் வந்து சேர்ந்தோம். "இறைத்தூதர் அவர்களே! ஹன்ளலா நயவஞ்சகன் ஆகிவிட்டான்" என்று கூறினேன். "என்ன கூறுகிறீர்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! உங்களிடம் இருக்கும் போது கண்ணில் பார்ப்பது போல் சொர்க்கத்தையும், நரகையும் நினைவு கூர்கிறோம். உங்களை விட்டும் நாங்கள் வெளியேறிவிட்டால் மனைவியர், குழந்தைகள் வாழ்க்கைத் தேவை என மூழ்கி, அதிகமாக மறந்து விடுகிறோம்" என்று கூறினேன்.

"என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக, என்னிடம் நீங்கள் இருக்கும் நிலையிலேயே, இறைவனை நினைவுகூர்வதிலேயே தொடர்ந்து இருந்தால், உங்கள் படுக்கையிலும் உங்கள் வழிகளிலேயும் வானவர்கள் உங்களிடம் கை கொடுத்து மகிழ்வார்கள்" எனக் கூறிய நபி (ஸல்)அவர்கள், "எனினும் ஹன்ளலாவே! வணக்கத்திற்கு என ஒரு நேரம் உண்டு. வாழ்க்கைக்கு உழைப்பது என ஒரு நேரம் உண்டு" என்று மூன்று முறை கூறினார்கள். **(முஸ்லிம்:2750)**

١٥٢ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: بَيْنَمَا النَّبِيُّ ﷺ يَخْطُبُ إِذَا هُوَ بِرَجُلٍ قَائِمٍ فَسَأَلَ عَنْهُ فَقَالُوا: أَبُو إِسْرَائِيلَ نَذَرَ أَنْ يَقُومَ فِي الشَّمْسِ وَلاَ يَقْعُدَ وَلاَ يَسْتَظِلَّ وَلاَ يَتَكَلَّمَ وَيَصُومَ. فَقَالَ النَّبِيُّ ﷺ:" مُرُوهُ فَلْيَتَكَلَّمْ وَلْيَسْتَظِلَّ وَلْيَقْعُدْ وَلْيُتِمَّ صَوْمَهُ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**152** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது, ஒருவர் நின்று கொண்டே இருந்தார். அவர் பற்றி நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "அவர் அபூ இஸ்ராயீல், அவர் சூரியனின் வெயிலில் நிற்கவும், உட்காராமல் இருக்கவும், நிழலில் ஒதுங்கிடாமல் இருக்கவும், பேசாமல் இருக்கவும், நோன்பு

வைக்கவும் நேர்ச்சை செய்துள்ளார்'' என்று நபித்தோழர்கள் கூறினர். ''அவருக்குக் கட்டளையிடுங்கள். அவர் பேசட்டும். அவர் நிழலில் ஒதுங்கட்டும்! அவர் உட்காரட்டும். தன் நோன்பை நிறைவேற்றட்டும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6704)**

## ١٥ - باب في المحافظة على الأعمال

## பாடம் : 15 - நற்செயல்களில் பேணுதலாக இருத்தல்!

قَالَ اللَّهُ تَعَالَى: أَلَمْ يَأْنِ لِلَّذِينَ آمَنُوا أَنْ تَخْشَعَ قُلُوبُهُمْ لِذِكْرِ اللَّهِ وَمَا نَزَلَ مِنَ الْحَقِّ وَلاَ يَكُونُوا كَالَّذِينَ أُوتُوا الْكِتَابَ مِنْ قَبْلُ فَطَالَ عَلَيْهِمُ الأَمَدُ فَقَسَتْ قُلُوبُهُمْ. وَقَالَ تَعَالَى وَقَفَّيْنَا بِعِيسَى ابْنِ مَرْيَمَ وَآتَيْنَاهُ الأَنْجِيلَ وَجَعَلْنَا فِي قُلُوبِ الَّذِينَ اتَّبَعُوهُ رَأْفَةً وَرَحْمَةً وَرَهْبَانِيَّةً ابْتَدَعُوهَا مَا كَتَبْنَاهَا عَلَيْهِمْ إِلاَّ ابْتِغَاءَ رِضْوَانِ اللَّهِ فَمَا رَعَوْهَا حَقَّ رِعَايَتِهَا. وَقَالَ تَعَالَى: وَلاَ تَكُونُوا كَالَّتِي نَقَضَتْ غَزْلَهَا مِنْ بَعْدِ قُوَّةٍ أَنْكَاثًا وَقَالَ تَعَالَى: وَاعْبُدْ رَبَّكَ حَتَّى يَأْتِيَكَ الْيَقِينُ.

أَفَادَتْ الأَيَاتُ: التَّرْغِيبُ فِي الْمُحَافَظَةِ عَلَى الأَعْمَالِ الصَّالِحَةِ وَالْمُدَاوَمَةِ عَلَيْهَا وَرِعَايَةِ حُقُوقِ اللَّهِ تَعَالَى وَالْقِيَامِ بِعِبَادَتِهِ حَتَّى الْمَوْتِ.

وَأَمَّا الأَحَادِيثُ فَمِنْهَا: حَدِيثُ عَائِشَةَ" وَكَانَ أَحَبُّ الدِّينِ إِلَيْهِ مَا دَاوَمَ صَاحِبُهُ عَلَيْهِ". وَقَدْ سَبَقَ فِي الْبَابِ قَبْلَهُ.

**அல்லாஹ் கூறுகிறான் :** *இறை விசுவாசிகளுக்கு அவர்களின் இதயங்கள் அல்லாஹ்வை நினைத்தும், அவனது உண்மையானதாக இறங்கியுள்ள (வேதத்)தையும் நினைவுகூர்ந்திட அஞ்சிக் கொள்வதற்கு நேரம் வரவில்லையா? இதற்கு முன் வேதம் கொடுக்கப்பட்டவர்கள் போல் அவர்கள் ஆகிட வேண்டாம். அவர்கள் மீது நீண்டகாலம் சென்றுவிட்டது. அவர்களின் இதயங்கள் கடினமாகி விட்டன...' (57:16)*

*''பின்பு அவர்களின் அடிச்சுவட்டிலேயே நம் தூதர்களைப் பின் தொடரச் செய்தோம். மர்யமின் மகன் ஈஸாவையும் பின் தொடரச் செய்தோம். அவருக்கு இன்ஜிலையும் கொடுத்தோம். அவரை பின்பற்றியோர் இதயங்களில் இரக்கத்தையும், அன்பையும் ஏற்படுத்தினோம். அவர்களே உருவாக்கிக் கொண்ட துறவித்தனத்தை அவர்கள் மீது நாம் கடமையாக்கவில்லை. ஆனால், அல்லாஹ்வின் திருப்தியை வேண்டியே தவிர. ஆனால், அவர்கள் இதையும் கூட, அவர்கள் பேணுகிற முறைப்படிப் பேணவில்லை...'' (57:27)*

*''தானே நூலை நூற்று, அது நன்கு முறுக்கேறிய பின்னர், தானே அந்த நூலைத் துண்டு துண்டாக்கி விடுவதுபோல் நீங்கள் ஆகி விடாதீர்கள்...'' (16:92)*

*உமக்கு மரணம் வரும் வரை, உமது இறைவனை வணங்குவீராக! (15:99)*

இதற்குச் சான்றாக நிறைய ஹதீஸ்கள் உள்ளன. இதில் அன்னை ஆயிஷா (ரழி) அறிவித்து, 142-வது ஹதீஸாக இடம்பெறும் ஹதீஸும் இங்கு பொருந்தும்.

١٥٣ - وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَنْ نَامَ عَنْ حِزْبِهِ مِنَ اللَّيْلِ أَوْ عَنْ شَيْءٍ مِنْهُ فَقَرَأَهُ مَا بَيْنَ صَلاَةِ الْفَجْرِ وَصَلاَةِ الظُّهْرِ كُتِبَ لَهُ كَأَنَّمَا قَرَأَهُ مِنَ اللَّيْلِ" رَوَاهُ مُسْلِمٌ.

**153** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரவில் குர்ஆனின் ஒரு பாகத்தை அல்லது ஒரு சிறிய அளவிலானதை ஓதாமல் தூங்கி விட்டு, பஜ்ர் தொழுகைக்கும், லுஹர் தொழுகைக்கும் இடையே உள்ள நேரத்தில் ஓதிவிட்டால், அவனுக்கு இரவில் ஓதியது போன்ற (நன்மை) எழுதப்படும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:747)**

١٥٤ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ: " يَا عَبْدَ اللَّهِ لاَ تَكُنْ مِثْلَ فُلاَنٍ كَانَ يَقُومُ اللَّيْلَ فَتَرَكَ قِيَامَ اللَّيْلِ " مُتَّفَقٌ عَلَيْهِ.

**154** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அப்துல்லாஹ்வே! இரவில் (அதிகம்) வணங்கிவிட்டு, பிறகு இரவில் (அறவே) வணங்காது விட்டு விட்டாரே, அவர் போல் நீர் ஆகிவிட வேண்டாம்" என்று என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1152. முஸ்லிம்:1159/185)**

١٥٥ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا فَاتَتْهُ الصَّلاَةُ مِنَ اللَّيْلِ مِنْ وَجَعٍ أَوْ غَيْرِهِ صَلَّى مِنَ النَّهَارِ ثِنْتَيْ عَشْرَةَ رَكْعَةً رَوَاهُ مُسْلِمٌ.

**155** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உடல்வலி, அல்லது வேறு ஏதாவது ஒரு காரணமாக, இரவில் நபி (ஸல்) அவர்களுக்கு தொழுகை தவறிவிட்டால், பகலில் 12 ரக்அத்துகளைத் தொழுவார்கள். **(முஸ்லிம்:746)**

## ١٦ – باب في الامر بالمحافظة على السنة وآدابها

## பாடம் : 16 - ஒரு காரியத்தை நபிவழிப்படியும் அதன் முறைப்படியும் பேணுதல்:

قَالَ اللَّهُ تَعَالَى: وَمَا آتَاكُمُ الرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَاكُمْ عَنْهُ فَانْتَهُوا

وَقَالَ تَعَالَى: وَمَا يَنْطِقُ عَنِ الْهَوَى إِنْ هُوَ إِلاَّ وَحْيٌ يُوحَى.

وَقَالَ تَعَالَى: قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللَّهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللَّهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ.

وَقَالَ تَعَالَى: لَقَدْ كَانَ لَكُمْ فِي رَسُولِ اللَّهِ أُسْوَةٌ حَسَنَةٌ لِمَنْ كَانَ يَرْجُو اللَّهَ وَالْيَوْمَ الأَخِرَ.

وَقَالَ تَعَالَى: فَلاَ وَرَبِّكَ لاَ يُؤْمِنُونَ حَتَّى يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لاَ يَجِدُوا فِي أَنْفُسِهِمْ حَرَجًا مِمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا تَسْلِيمًا.

قَالَ تَعَالَى: فَإِنْ تَنَازَعْتُمْ فِي شَيْءٍ فَرُدُّوهُ إِلَى اللَّهِ وَالرَّسُولِ إِنْ كُنْتُمْ تُؤْمِنُونَ بِاللَّهِ وَالْيَوْمِ الأَخِرِ.

قَالَ الْعُلَمَاءُ: مَعْنَاهُ إِلَى الْكِتَابِ وَالسُّنَّةِ.

وَقَالَ تَعَالَى: " مَنْ يُطِعِ الرَّسُولَ فَقَدْ أَطَاعَ اللَّهَ".

وَقَالَ تَعَالَى: وَإِنَّكَ لَتَهْدِي إِلَى صِرَاطٍ مُسْتَقِيمٍ صِرَاطِ اللَّهِ.

وَقَالَ تَعَالَى: فَلْيَحْذَرِ الَّذِينَ يُخَالِفُونَ عَنْ أَمْرِهِ أَنْ تُصِيبَهُمْ فِتْنَةٌ أَوْ يُصِيبَهُمْ عَذَابٌ أَلِيمٌ.

وَقَالَ تَعَالَى وَاذْكُرْنَ مَا يُتْلَى فِي بُيُوتِكُنَّ مِنْ آيَاتِ اللَّهِ وَالْحِكْمَةِ.

وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *'...இறைத்தூதர் உங்களுக்குக் கொண்டு வந்ததை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். உங்களை அவர் தடுத்துள்ளவற்றிலிருந்து நீங்கள் பாதுகாத்துக் கொள்ளுங்கள். (59:7)*

*அவர் (நபி ஸல்) தன் மனோ இச்சைப்படி பேசமாட்டார். இறைச்செய்தி இறக்கப்பட்ட செய்தியே! தவிர (அவரது சொல்) வேறில்லை. (53:3,4)*

*நபியே! நீர் கூறுவீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசித்தால், என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான். உங்கள் பாவங்களை உங்களுக்கு மன்னிப்பான். (3:31)*

*நிச்சயமாக! அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன்மாதிரி உள்ளது. அல்லாஹ்வையும், மறுமையையும் ஆதரவு வைப்போருக்கும் (படிப்பினை உண்டு)....' (33:21)*

*உம் இறைவன் மீது சத்தியமாக, அவர்கள் தங்களிடையே ஏற்பட்ட பிரச்சனைகளில் உம்மை தீர்ப்புக் கூறுபவராக ஆக்கி, நீர் தீர்ப்பு அளித்தவற்றில் குறை எதையும் தங்களின் உள்ளங்களில் பெற்றுக் கொள்ளாது இருந்து, முற்றிலும் அவர்கள் கட்டுப்படும் வரை அவர்கள் விசுவாசிகளாக ஆக மாட்டார்கள். (4:65)*

*'...(இறை விசுவாசிகளே!) நீங்கள் ஒரு விஷயத்தில் ஒருவருக்கொருவர் கருத்து வேறுபாடு கொண்டால், அதனை அல்லாஹ்விடமும், அவனுடைய தூதரிடமும் திருப்பிவிடுங்கள். நீங்கள் அல்லாஹ்வின் மீதும், மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டோராக இருந்தால் இதுதான் சரியான வழிமுறையாகும்...' (4:59)*

இதன் பொருள் 'குர்ஆன், ஹதீஸ் பக்கம்' என்பதாகும் என உலமாக்கள் கூறுகிறார்கள்.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைத்தூதருக்குக் கட்டுப்பட்டவர், அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டவராவார். (4:80)*

*'...நிச்சயமாக நீர் நேரான பாதையை (மக்களுக்கு) வழிகாட்டுகிறீர். (42:52)*

*'...அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்யக் கூடியவர்கள், தங்களுக்கு சோதனை வந்தடையும் என்பதையும், அல்லது நோவினையான வேதனை தங்களை வந்தடையும் என்பதையும் அஞ்சிக் கொள்ளட்டும். (24:63)*

*அல்லாஹ்வின் வசனங்களிலிருந்தும், ஞானத்திலிருந்தும் உங்கள் வீடுகளிலே ஓதப்படுவதை நினைவு கூருங்கள்...' (33:34)*

இந்தப் பாடத்திற்குப் பொருத்தமான குர்ஆன் வசனங்கள் அதிகம் உள்ளன.

١٥٦ - وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " دَعُونِي مَا تَرَكْتُكُمْ: إِنَّمَا أَهْلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ كَثْرَةُ سُؤَالِهِمْ وَاخْتِلَافِهِمْ عَلَى أَنْبِيَائِهِمْ! فَإِذَا نَهَيْتُكُمْ عَنْ شَيْءٍ فَاجْتَنِبُوهُ وَإِذَا أَمَرْتُكُمْ بِأَمْرٍ فَأْتُوا مِنْهُ مَا اسْتَطَعْتُمْ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**156** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

உங்களிடம் நான் (கூறாமல்) விட்டுவிட்டதை, என்னிடம் (கேட்காமல்) விட்டு விடுங்கள். உங்களுக்கு முன் இருந்தோர் அழிந்து போனதற்குக் காரணம், தங்களின் நபிமார்களிடம் அவர்கள் அதிகம் கேள்வி கேட்டதும், அவர்களிடம் அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டதும்தான் அகும். எதையேனும் விட்டும் உங்களை நான் தடுத்தால், அதை தவிர்ந்து கொள்ளுங்கள். ஒரு காரியத்தை உங்களிடம் நான் ஏவினால், இயன்ற வரை அதை செயல்படுத்துங்கள் என நபி(ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7288. முஸ்லிம்:1337)**

١٥٧ - الثَّانِي عَنْ أَبِي نَجِيحٍ الْعِرْبَاضِ بْنِ سَارِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" وَعَظَنَا رَسُولُ اللَّهِ ﷺ مَوْعِظَةً بَلِيغَةً وَجِلَتْ مِنْهَا الْقُلُوبُ وَذَرَفَتْ مِنْهَا الْعُيُونُ. فَقُلْنَا: يَا رَسُولَ اللَّهِ كَأَنَّهَا مَوْعِظَةُ مُوَدِّعٍ فَأَوْصِنَا. قَالَ: أُوصِيكُمْ بِتَقْوَى اللَّهِ وَالسَّمْعِ وَالطَّاعَةِ وَإِنْ تَأَمَّرَ عَلَيْكُمْ عَبْدٌ حَبَشِيٌّ وَإِنَّهُ مَنْ يَعِشْ مِنْكُمْ فَسَيَرَى اخْتِلَافًا كَثِيرًا فَعَلَيْكُمْ بِسُنَّتِي وَسُنَّةِ الْخُلَفَاءِ الرَّاشِدِينَ الْمَهْدِيِّينَ عَضُّوا عَلَيْهَا بِالنَّوَاجِذِ. وَإِيَّاكُمْ وَمُحْدَثَاتِ الْأُمُورِ فَإِنَّ كُلَّ بِدْعَةٍ ضَلَالَةٌ" رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ." النَّوَاجِذُ" بِالذَّالِ الْمُعْجَمَةِ: الْأَنْيَابُ وَقِيلَ الْأَضْرَاسُ.

**157** (அபூநஜீஹ் என்ற) இர்பாழ் இப்னு ஸாரியா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தெளிவான உரை ஒன்றை நிகழ்த்தினார்கள். அதைக் கேட்டதும் இதயங்கள் நடுங்கின. அதனால் எங்கள் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. “இறைத்தூதர் அவர்களே! வழியனுப்வோரின் உபதேசம் போலல்லவா இது இருக்கிறது! எனவே உபதேசம் செய்யுங்கள்” என்றோம். “உங்களுக்கு அல்லாஹ்வை அஞ்சுவது பற்றி உபதேசிக்கிறேன். மேலும் உங்களுக்கு கருப்பு நிற அடிமை, தலைவராக இருந்தாலும் (அவரின் பேச்சை) கேட்பதற்கும், கட்டுப்படுவதற்கும் உபதேசம் செய்கிறேன்.”

“(எனக்குப்பின்) உங்களில் வாழ்பவர், அதிக குழப்பங்களைக் காண்பார். நீங்கள் என் வழிமுறையையும், நேர்வழி பெற்ற நேர்மையான கலீஃபாக்களின் வழிமுறையையும் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். கடைவாய்ப் பற்களால் அவற்றை கடித்துக் கொள்ளுங்கள். புதிய சட்டங்களைப் பற்றி உங்களை எச்சரிக்கிறேன். நிச்சயமாக! ஒவ்வொரு புதுமையும் வழிகேடாகும்” என்று நபி(ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4607. திர்மிதீ:2676. இது ‘ஹஸன் ஸஹீஹ்’ என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٥٨ - الثَّالِثُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" كُلُّ أُمَّتِي يَدْخُلُونَ الْجَنَّةَ إِلَّا مَنْ أَبَى". قِيلَ: وَمَنْ يَأْبَى يَا رَسُولَ اللَّهِ؟ قَالَ:" مَنْ أَطَاعَنِي دَخَلَ الْجَنَّةَ وَمَنْ عَصَانِي فَقَدْ أَبَى" رَوَاهُ الْبُخَارِيُّ.

**158** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

“என்னை மறுத்தவர் தவிர மற்ற என் சமுதாயத்தினர்கள் அனைவரும், சொர்க்கத்தில் நுழைவார்கள்!” “இறைத்தூதர் அவர்களே! மறுப்பவர்கள் யார்?” என்று கேட்கப்பட்டது. “எனக்குக் கட்டுப்பட்டவர், சொர்க்கத்தில் நுழைவார். எனக்கு மாறு செய்தவர், என்னை மறுத்தவராவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7280)**

١٥٩ - الرَّابِعُ عَنْ أَبِي مُسْلِمٍ - وَقِيلَ أَبِي إِيَاسٍ سَلَمَةُ بْنُ عَمْرِو بْنِ الْأَكْوَعِ - رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلًا أَكَلَ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ بِشِمَالِهِ فَقَالَ:" كُلْ بِيَمِينِكَ". قَالَ: لَا أَسْتَطِيعُ. قَالَ:" لَا اسْتَطَعْتَ" مَا مَنَعَهُ إِلَّا الْكِبْرُ فَمَا رَفَعَهَا إِلَى فِيهِ رَوَاهُ مُسْلِمٌ.

**159** (அபூமுஸ்லிம் அல்லது அபூஇயாஸ் என்ற) ஸலமா இப்னு அம்ரு இப்னு அக்வஇ (ரழி) அறிவிக்கின்றார்கள் :

ஒருவர், நபி (ஸல்) அவர்கள் முன்பாக, தன் இடது கையால் சாப்பிட்டார். “உமது வலது கையால் (சாப்பிடுவீராக!)” என்று நபி(ஸல்) கூறினார்கள். “அதற்கு என்னால் இயலாது” என்று அவர் கூறினார். “நீர் இயலாமல் போவீர்!” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். பெருமைதான் அவரை இவ்வாறு செய்யச் செய்தது. (பின்பு) தன் வாய்ப் பக்கம் கையை உயர்த்த முடியாதவராகி விட்டார். **(முஸ்லிம்:2021)**

١٦٠ - الْخَامِسُ عَنْ أَبِي عَبْدِ اللَّهِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" لَتُسَوُّنَّ صُفُوفَكُمْ أَوْ لَيُخَالِفَنَّ اللَّهُ بَيْنَ وُجُوهِكُمْ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ: كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُسَوِّي صُفُوفَنَا حَتَّى كَأَنَّمَا يُسَوِّي بِهَا

الْقِدَاحَ حَتَّى إِذَا رَأَى أَنَّا قَدْ عَقَلْنَا عَنْهُ. ثُمَّ خَرَجَ يَوْمًا فَقَامَ حَتَّى كَادَ أَنْ يُكَبِّرَ فَرَأَى رَجُلاً بَادِيًا صَدْرُهُ فَقَالَ:" عِبَادَ اللَّهِ لَتُسَوُّنَّ صُفُوفَكُمْ أَوْ لَيُخَالِفَنَّ اللَّهُ بَيْنَ وُجُوهِكُمْ".

**160** (அபூஅப்துல்லா என்கிற) நுஹ்மான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள் :

“உங்களின் (தொழுகை) அணிவகுப்பை சமப்படுத்துங்கள். (இல்லையெனில்) உங்கள் முகங்களுக்கிடையே அல்லாஹ் வேறுபாட்டை (பிரிவை) உண்டாக்கி விடுவான்” என்று நபி (ஸல்) கூற நான் கேட்டேன்.

**(புகாரி:717. முஸ்லிம்:436)**

(முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது)

நபி (ஸல்) அவர்கள் எங்கள் வரிசைகளை, அம்பைச் சரி செய்வது போலச் சமப்படுத்துவார்கள். இதுபற்றி நாங்கள் அறிந்து கொண்டோம் என நபி (ஸல்) அவர்கள் கருதும் வரை (இது தொடரும்). பின்பு ஒரு முறை வீட்டில் இருந்து வெளியேறி வந்த அவர்கள், தொழுகைக்கு நின்று, தக்பீர் கூற ஆயத்தமானார்கள். அப்போது ஒருவர் தன் நெஞ்சை (வரிசையை விட்டு) தூக்கியவராக நிற்பதைப் பார்த் தார்கள். உடனே, “அல்லாஹ்வின் அடியார்களே! உங்களின் வரிசைகளை சரிபடுத்திக் கொள்ளுங்கள். இல்லையெனில் அல்லாஹ் உங்கள் முகங்களுக்கு இடையே (பிரிவை) பிளவை ஏற்படுத்தி விடுவான்” என்று கூறினார்கள்.

١٦١ - السَّادِسُ عَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: احْتَرَقَ بَيْتٌ بِالْمَدِينَةِ عَلَى أَهْلِهِ مِنَ اللَّيْلِ فَلَمَّا حُدِّثَ رَسُولُ اللَّهِ ﷺ بِشَأْنِهِمْ قَالَ:" إِنَّ هَذِهِ النَّارَ عَدُوٌّ لَكُمْ فَإِذَا نِمْتُمْ فَأَطْفِئُوهَا عَنْكُمْ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**161** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

மதீனாவாசி ஒருவரின் வீடு, ஒருநாள் இரவு தீப்பிடித்தது. அவர்களின் நிலைபற்றி நபி (ஸல்) அவர்களிடம் கூறப்பட்ட போது, “நிச்சயமாக இந்த நெருப்பு உங்களுக்கு விரோதியாகும். நீங்கள் தூங்கினால், அதை (நெருப்பை) அணைத்து விட்டுத் தூங்கச் செல்லுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6294. முஸ்லிம்:2016)**

١٦٢ - السَّابِعُ عَنْهُ ) أَبِي مُوسَى ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" إِنَّ مَثَلَ مَا بَعَثَنِي اللَّهُ بِهِ مِنَ الْهُدَى وَالْعِلْمِ كَمَثَلِ غَيْثٍ أَصَابَ أَرْضًا فَكَانَتْ مِنْهَا طَائِفَةٌ طَيِّبَةٌ قَبِلَتِ الْمَاءَ فَأَنْبَتَتِ الْكَلأَ وَالْعُشْبَ الْكَثِيرَ وَكَانَ مِنْهَا أَجَادِبُ أَمْسَكَتِ الْمَاءَ فَنَفَعَ اللَّهُ بِهَا النَّاسَ فَشَرِبُوا مِنْهَا وَسَقَوْا وَزَرَعُوا وَأَصَابَ طَائِفَةً مِنْهَا أُخْرَى إِنَّمَا هِيَ قِيعَانٌ لاَ تُمْسِكُ مَاءً وَلاَ تُنْبِتُ كَلأً. فَذَلِكَ مَثَلُ مَنْ فَقُهَ فِي دِينِ اللَّهِ وَنَفَعَهُ مَا بَعَثَنِي اللَّهُ بِهِ فَعَلِمَ وَعَلَّمَ وَمَثَلُ مَنْ لَمْ يَرْفَعْ بِذَلِكَ رَأْسًا وَلَمْ يَقْبَلْ هُدَى اللَّهِ الَّذِي أُرْسِلْتُ بِهِ" مُتَّفَقٌ عَلَيْهِ." فَقُهَ" بِضَمِّ الْقَافِ عَلَى الْمَشْهُورِ وَقِيلَ بِكَسْرِهَا: أَيْ صَارَ فَقِيهًا.

**162** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

“நிச்சயமாக! அல்லாஹ் நேர்வழி மற்றும் கல்வி ஞானத்துடன் என்னை அனுப்பி வைத்ததற்கு உதாரணம்; பூமியில் பெய்த மழை போன்றதாகும். இதிலிருந்து ஒரு பகுதி, தண்ணீரைப் பெற்று புற்பூண்டுகள், அதிக விளைச்சலைத் தந்தது. (மற்றொன்று) அவற்றிலிருந்து தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொண்டது. அதன் மூலம் மக்களுக்கு அல்லாஹ் பயனளித்தான். அதிலிருந்து அவர்கள் குடித்தார்கள். கால்நடைகளுக்கும் புகட்டினார்கள். விவசாயமும் செய்தார்கள்.

அவற்றிலிருந்து மற்றொரு பகுதியை (மழை) அடைந்தது. அது கட்டாந்தரையாகும். அது தண்ணீரை தேக்கவும் இல்லை. புற்பூண்டுகளை முளைக்கச் செய்யவும் இல்லை. இதில் முதல்

இரண்டும், அல்லாஹ்வின் மார்க்கத்தை கற்றுக் கொண்டவனின் உதாரணமாகும். அல்லாஹ் என்னை எதன் மூலம் அனுப்பினானோ, அது அவனுக்குப் பயன் அளித்தது. அவனும் கற்று, பிறருக்கும் கற்றுக் கொடுத்தான். மேலும், (மூன்றாவதோ), இதன் பக்கம் தன் தலையை திருப்பாதவனுக்கு உதாரணம் ஆகும். நான் எந்த நேர்வழியைக் கொண்டு அனுப்பப்பட்டேனோ, அந்த நேர்வழியை அவன் ஏற்கமாட்டான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:79, முஸ்லிம்:2282)**

**١٦٣** – الثَّامِنُ عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَثَلِي وَمَثَلُكُمْ كَمَثَلِ رَجُلٍ أَوْقَدَ نَارًا فَجَعَلَ الْجَنَادِبُ وَالْفَرَاشُ يَقَعْنَ فِيهَا وَهُوَ يَذُبُّهُنَّ عَنْهَا وَأَنَا آخِذٌ بِحُجَزِكُمْ عَنِ النَّارِ وَأَنْتُمْ تَفَلَّتُونَ مِنْ يَدِي". رَوَاهُ مُسْلِمٌ." الْجَنَادِبُ" نَحْوَ الْجَرَادِ وَالْفَرَاشِ هَذَا هُوَ الْمَعْرُوفُ الَّذِي يَقَعُ فِي النَّارِ." وَالْحُجَزُ" جَمْعُ حُجْزَةٍ وَهِيَ مَعْقِدُ الأَزَارِ وَالسَّرَاوِيلِ.

**163** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள் :

"எனக்கும், உங்களுக்கும் உதாரணம் என்பது, நெருப்பை மூட்டுபவனைப் போன்றதாகும். அதில் ஈசல்களும், விட்டில்களும் விழுந்து கொண்டிருந்தன. அவர் அதை விட்டும் அவைகளைத் தடுத்துக் கொண்டிருந்தார். நான் நெருப்பை (நரகை) விட்டும் உங்களின் இடுப்பைப் பிடித்து இழுத்து (க்காப்பாற்றுகிறேன்). ஆனால், நீங்களோ என் கையை விட்டும் மீறிச் செல்கிறீர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2285)**

**١٦٤** – التَّاسِعُ عَنْهُ ) جَابِرٍ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَمَرَ بِلَعْقِ الأَصَابِعِ وَالصَّحْفَةِ وَقَالَ:" إِنَّكُمْ لاَ تَدْرُونَ فِي أَيِّهَا الْبَرَكَةُ" رَوَاهُ مُسْلِمٌ.

وَفِي رِوَايَةٍ لَهُ:" إِذَا وَقَعَتْ لُقْمَةُ أَحَدِكُمْ فَلْيَأْخُذْهَا فَلْيُمِطْ مَا كَانَ بِهَا مِنْ أَذًى وَلْيَأْكُلْهَا وَلاَ يَدَعْهَا لِلشَّيْطَانِ وَلاَ يَمْسَحْ يَدَهُ بِالْمِنْدِيلِ حَتَّى يَلْعَقَ أَصَابِعَهُ فَإِنَّهُ لاَ يَدْرِي فِي أَيِّ طَعَامِهِ الْبَرَكَةُ".

وَفِي رِوَايَةٍ لَهُ:" إِنَّ الشَّيْطَانَ يَحْضُرُ أَحَدَكُمْ عِنْدَ كُلِّ شَيْءٍ مِنْ شَأْنِهِ حَتَّى يَحْضُرَهُ عِنْدَ طَعَامِهِ فَإِذَا سَقَطَتْ مِنْ أَحَدِكُمْ اللُّقْمَةُ فَلْيُمِطْ مَا كَانَ بِهَا مِنْ أَذًى فَلْيَأْكُلْهَا وَلاَ يَدَعْهَا لِلشَّيْطَانِ".

**164** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(உணவை உண்டு முடித்ததும்) விரல்களையும், உணவுடன் தட்டையும் நன்கு வழித்துச் சாப்பிடக் கட்டளையிட்ட நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் அந்த உணவில் எதில் பரக்கத் உள்ளது என்பதை அறிய மாட்டீர்கள்'' என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2033)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது :

"உங்களில் ஒருவரின் ஒரு பருக்கை உணவு கீழே விழுந்து விட்டாலும், அதை அவர் எடுக்கட்டும்! அதில் உள்ள அசுத்தத்தை நீக்கட்டும். பின்பு அதை சாப்பிடட்டும்! ஷைத்தானுக்காக அதை விட்டு விட வேண்டாம். தன் விரலைச் சூப்பி, சுத்தம் செய்யும் முன் கையை துண்டில் துடைக்க வேண்டாம். நிச்சயமாக, அந்த உணவில் எதில் பரக்கத் (அபிவிருத்தி) உள்ளது என்பதை அவர் அறியமாட்டார்'' என நபி (ஸல்) கூறினார்கள்.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது :

"நிச்சயமாக, ஷைத்தான் உங்கள் ஒவ்வொரு செயலின் போதும் ஆஜராகிறான். அதுபோல் ஒருவர் சாப்பிடும் போதும் ஆஜராகிறான். உங்கள் ஒருவரிடமிருந்து ஒரு பருக்கை விழுந்துவிட்டால், அதில் உள்ள அசுத்தத்தை (தூசியை) நீக்கி விட்டு, சாப்பிடட்டும்! ஷைத்தானுக்கு அதை விட்டு விட வேண்டாம்'' என நபி (ஸல்) கூறினார்கள்.

١٦٥ – الْعَاشِرُ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَامَ فِينَا رَسُولُ اللَّهِ ﷺ بِمَوْعِظَةٍ فَقَالَ:" يَا أَيُّهَا النَّاسُ إِنَّكُمْ مَحْشُورُونَ إِلَى اللَّهِ تَعَالَى حُفَاةً عُرَاةً غُرْلاً: كَمَا بَدَأْنَا أَوَّلَ خَلْقٍ نُعِيدُهُ وَعْدًا عَلَيْنَا إِنَّا كُنَّا فَاعِلِينَ أَلاَ وَإِنَّ أَوَّلَ الْخَلاَئِقِ يُكْسَى يَوْمَ الْقِيَامَةِ إِبْرَاهِيمُ ﷺ. أَلاَ وَإِنَّهُ سَيُجَاءُ بِرِجَالٍ مِنْ أُمَّتِي فَيُؤْخَذُ بِهِمْ ذَاتَ الشِّمَالِ فَأَقُولُ:" يَا رَبِّ أَصْحَابِي. فَيُقَالُ: إِنَّكَ لاَ تَدْرِي مَا أَحْدَثُوا بَعْدَكَ! فَأَقُولُ كَمَا قَالَ الْعَبْدُ الصَّالِحُ: وَكُنْتُ عَلَيْهِمْ شَهِيدًا مَا دُمْتُ فِيهِمْ إِلَى قَوْلِهِ: الْعَزِيزُ الْحَكِيمُ. فَيُقَالُ لِي:" إِنَّهُمْ لَمْ يَزَالُوا مُرْتَدِّينَ عَلَى أَعْقَابِهِمْ مُنْذُ فَارَقْتَهُمْ". مُتَّفَقٌ عَلَيْهِ." غُرْلاً" أَيْ غَيْرَ مَخْتُونِينَ.

**165** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எங்களிடையே உரை நிகழ்த்த நின்றார்கள். அப்போது, "மனிதர்களே! நிச்சயமாக, நீங்கள் அல்லாஹ்விடம் செருப்பு அணியாதவர்களாகவும், நிர்வாணிகளாகவும், கத்னா செய்யப் படாதவர்களாகவும் மஹ்ஷர் மைதானத்தில் ஒன்று சேர்க்கப்படுவீர்கள்."

**அல்லாஹ் கூறுகிறான் :** '*...முதல் படைப்பை நாம் ஆரம்பித்தது போல், மீண்டும் படைப்போம். இது நம் மீதுள்ள வாக்குறுதியாக உள்ளது. நிச்சயமாக நாம் (சொல்வதை) செய்பவர்களாக உள்ளோம். (21:104)*

அறிந்து கொள்ளுங்கள்! மறுமையில் ஆடை அணிவிக்கப்படுகின்ற படைப்பினங்களில், முதல் நபர் இப்ராஹீம் நபிதான். அறிந்து கொள்ளுங்கள். என் சமுதாயத்தில் சில ஆண்கள் கொண்டு வரப்படுவர். அவர்களை (நரகத்தின்) இடது புறமாகக் கொண்டு செல்லப்படும். "இறைவா! அவர்கள் என் தோழர்கள்" என்பேன். "நிச்சயமாக, உமக்குப் பின்னால் புதிதாக உருவாக்கியது பற்றி நீர் அறியமாட்டீர்" என்று கூறப்படும். அப்போது நான் நல்ல அடியார் (ஈஸா (அலை)) கூறியது போல் கூறுவேன்:

*"நான் அவர்களுடன் இருந்தவரை அவர்களின் செயலை அறிவேன். நீ என்னைக் கைப்பற்றிய பின்னால், நீதான் அவர்களைக் கவனிப்பவனாக இருந்தாய். நீயே எல்லாப் பொருட்களின் மீதும் சாட்சியாளனாக இருக்கிறாய். மேலும் நீ அவர்களை மன்னித்துவிட்டாலோ, (அதனைத் தடுக்க இயலாது). நிச்சயமாக நீதான் மிகைத்தவன். நுண்ணறிவாளன் ஆவாய். (5:117,118)*

"நீர் இவர்களை விட்டும் பிரிந்ததிலிருந்து, இவர்கள் தங்களின் குதிங்கால்களின் மீது (வந்த வழியே) திரும்புபவர்களாகவே இருந்தனர் என்று அப்போது என்னிடம் கூறப்படும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3349. முஸ்லிம்:2859)**

١٦٦ – الْحَادِي عَشَرَ عَنْ أَبِي سَعِيدٍ عَبْدِ اللَّهِ بْنِ مُغَفَّلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: نَهَى رَسُولُ اللَّهِ ﷺ عَنْ الْخَذْفِ وَقَالَ:" إِنَّهُ لاَ يَقْتُلُ الصَّيْدَ وَلاَ يَنْكَأُ الْعَدُوَّ وَإِنَّهُ يَفْقَأُ الْعَيْنَ وَيَكْسِرُ السِّنَّ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: أَنَّ قَرِيبًا لِابْنِ مُغَفَّلٍ خَذَفَ فَنَهَاهُ وَقَالَ ; إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى عَنْ الْخَذْفِ وَقَالَ:" إِنَّهَا لاَ تَصِيدُ صَيْدًا" ثُمَّ عَادَ فَقَالَ: أُحَدِّثُكَ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى عَنْهُ ثُمَّ عُدْتَ تَخْذِفُ! لاَ أُكَلِّمُكَ أَبَدًا.

**166** (அபூஸயீத் என்ற) அப்துல்லா இப்னு முஹப்பல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், கையினால் கற்களைக் சுண்டுவதைத் தடை செய்தார்கள். "அது வேட்டைப் பிராணியைக் கொல்லாது. எதிரியையும் தாக்காது. மேலும் அது கண்ணைப் பிடுங்கும். பல்லை உடைக்கும்" என்றும் கூறினார்கள். **(புகாரி:6220. முஸ்லிம்:1954/55)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது

இப்னு முஹப்பல் (ரழி) அவர்களின் உறவினர் ஒருவர் கல்லைச் சுண்டிப் போட்டார். அதைத் தடுத்த இப்னு முஹப்பல் (ரழி), "கல்லைச் சுண்டி விளையாடுவதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். மேலும் இது வேட்டைக்கும் உதவாது என்று நபி (ஸல்) கூறினார்கள்" என்று கூறினார். அந்த (உறவினர்) மீண்டும் (கல்லைச் சுண்டிப்) போட்டார். "நபி (ஸல்) அவர்கள் இதை விட்டும் தடுத்துள்ளார்கள் என நான் நபிமொழியைக் கூறுகிறேன். பின்பும் நீ கற்களைச் சுண்டி விளையாடுகிறாயே! எந்த காலமும் உன்னிடம் நான் பேச மாட்டேன்" என்று இப்னு முஹப்பல் (ரழி) கூறினார்கள். **(புகாரி:5479. முஸ்லிம்:1954/56)**

١٦٧ – وَعَنْ عَابِسِ بْنِ رَبِيعَةَ: رَأَيْتُ عُمَرَ بْنَ الْخَطَّابِ ﷺ يُقَبِّلُ الْحَجَرَ يَعْنِي الأَسْوَدَ وَيَقُولُ: "أَعْلَمُ أَنَّكَ حَجَرٌ مَا تَنْفَعُ وَلاَ تَضُرُّ وَلَوْلاَ أَنِّي رَأَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ يُقَبِّلُكَ مَا قَبَّلْتُكَ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**167** ஆபிஸ் இப்னு ரபீஆ என்பார் அறிவிக்கின்றார்:

உமர் (ரழி) அவர்கள் ஹஜ்ருல் அஸ்வத் கல்லை முத்தமிடும் போது, "நிச்சயமாக நீ எந்தப் பயனும், இடையூறும் தராத கல்தான் என நான் அறிவேன். உன்னை நபி (ஸல்) அவர்கள் முத்தமிட நான் பார்த்திராவிட்டால், நானும் உன்னை முத்தமிட்டிருக்கமாட்டேன்" என்று கூறுவதை நான் கேட்டேன். **(புகாரி:1610. முஸ்லிம்:1270)**

## ١٧ – باب في وجوب الانقياد لحكم الله وما يقوله من دعي إلى ذلك ، وأمر بمعروف ونهي عن منكر

## பாடம் : 17 - அல்லாஹ்வின் கட்டளைக்குக் கட்டுப்படுதலின் அவசியம் பற்றியும்; ஒருவர் நன்மை செய்ய ஏவப்பட்டும், தீமையை விட்டு தடுக்கப்பட்டும் நல்லதின்பால் அழைக்கப்பட்டபோதும் கூற வேண்டியவை பற்றியும் . . .

قَالَ اللَّهُ تَعَالَى: فَلاَ وَرَبِّكَ لاَ يُؤْمِنُونَ حَتَّى يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لاَ يَجِدُوا فِي أَنْفُسِهِمْ حَرَجًا مِمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا تَسْلِيمًا.

وَقَالَ تَعَالَى: إِنَّمَا كَانَ قَوْلَ الْمُؤْمِنِينَ إِذَا دُعُوا إِلَى اللَّهِ وَرَسُولِهِ لِيَحْكُمَ بَيْنَهُمْ أَنْ يَقُولُوا سَمِعْنَا وَأَطَعْنَا وَأُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ.

**அல்லாஹ் கூறுகிறான் :** *உமது இறைவன் மீது சத்தியமாக! அவர்களுக்கிடையே ஏற்பட்ட பிரச்சனை விஷயமாக உம்மிடம் அவர்கள் தீர்ப்பு வேண்டி, பின் நீர் அளித்தத் தீர்ப்பைப் பற்றி குறை ஏதும் அவர்களின் உள்ளத்தில் ஏற்படாமல் இருந்து, அவர்கள் முற்றிலும் கட்டுப்படும் வரை இறை விசுவாசியாக மாட்டார்கள். (4:65)*

*அவர்களிடையே ஏற்படும் பிரச்சனைகளில் தீர்ப்புக் கூற அல்லாஹ்விடமும், அவனது தூதரிடமும் அவர்கள் அழைக்கப்பட்டால், இறை விசுவாசிகளான அவர்களின் சொல், 'நாங்கள் கேட்டோம். அதற்குக் கட்டுப்பட்டோம்' என்று கூறுவதுதான். இவர்கள் தான் வெற்றியாளர்கள். (24:51)*

இந்த பாடத்திற்கு உள்ள ஹதீஸ்களில், ஒன்றாக இதற்கு முன் முந்திய பாடத்தில் கூறப்பட்ட அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸும் மற்றும் சில ஹதீஸ்களும் அடங்கும்.

١٦٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: لَمَّا نَزَلَتْ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ: لِلَّهِ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ وَإِنْ تُبْدُوا مَا فِي أَنْفُسِكُمْ أَوْ تُخْفُوهُ يُحَاسِبْكُمْ بِهِ اللَّهُ الْآيَةَ اشْتَدَّ ذَلِكَ عَلَى أَصْحَابِ رَسُولِ اللَّهِ ﷺ فَأَتَوْا رَسُولَ اللَّهِ ﷺ ثُمَّ بَرَكُوا عَلَى الرُّكَبِ فَقَالُوا: أَيْ رَسُولَ اللَّهِ كُلِّفْنَا مِنَ الْأَعْمَالِ مَا نُطِيقُ: الصَّلَاةَ وَالْجِهَادَ وَالصِّيَامَ وَالصَّدَقَةَ وَقَدْ أُنْزِلَتْ عَلَيْكَ هَذِهِ الْآيَةُ وَلَا نُطِيقُهَا. قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "أَتُرِيدُونَ أَنْ تَقُولُوا كَمَا قَالَ أَهْلُ الْكِتَابَيْنِ مِنْ قَبْلِكُمْ: سَمِعْنَا وَعَصَيْنَا؟ بَلْ قُولُوا: سَمِعْنَا وَأَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ الْمَصِيرُ". فَلَمَّا اقْتَرَأَهَا الْقَوْمُ وَذَلَّتْ بِهَا أَلْسِنَتُهُمْ أَنْزَلَ اللَّهُ تَعَالَى فِي إِثْرِهَا: آمَنَ الرَّسُولُ بِمَا أُنْزِلَ إِلَيْهِ مِنْ رَبِّهِ وَالْمُؤْمِنُونَ كُلٌّ آمَنَ بِاللَّهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِنْ رُسُلِهِ وَقَالُوا سَمِعْنَا وَأَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ الْمَصِيرُ. فَلَمَّا فَعَلُوا ذَلِكَ نَسَخَهَا اللَّهُ تَعَالَى فَأَنْزَلَ اللَّهُ عَزَّ وَجَلَّ: لَا يُكَلِّفُ اللَّهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا لَهَا مَا كَسَبَتْ وَعَلَيْهَا مَا اكْتَسَبَتْ رَبَّنَا لَا تُؤَاخِذْنَا إِنْ نَسِينَا أَوْ أَخْطَأْنَا قَالَ: نَعَمْ رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَا إِصْرًا كَمَا حَمَلْتَهُ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِنَا قَالَ: نَعَمْ رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهِ قَالَ: نَعَمْ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا أَنْتَ مَوْلَانَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِينَ قَالَ: نَعَمْ رَوَاهُ مُسْلِمٌ.

**168** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வுக்கே வானங்கள், பூமியில் உள்ளவை சொந்தமாகும். உங்களின் உள்ளத்தில் உள்ளதை நீங்கள் வெளிப்படுத்தினாலும் அல்லது அதை நீங்கள் மறைத்தாலும், அல்லாஹ் இதற்கு உங்களிடம் விசாரிப்பான் (-2:284) என்ற வசனம் இறங்கியபோது, நபி (ஸல்) அவர்களின் தோழர்களுக்கு இது சுமையாக ஆகிவிட்டது. உடனே நபி (ஸல்) அவர்களிடம் வந்து, மண்டியிட்டு அமர்ந்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! தொழுகை, ஜிஹாது, நோன்பு, ஜகாத் போன்ற எங்களுக்கு இயன்ற செயல்களைச் செய்யப் பணிக்கப்பட்டோம். இப்பொழுது இந்த வசனம் உங்களுக்கு இறக்கப் பட்டிருக்கிறது. இதற்கு நாங்கள் சக்தி பெறமாட்டோம்" என்று கூறினார்கள்.

"உங்களுக்கு முன் வாழ்ந்த வேதக்காரர்களான இருவரும், 'கேட்டோம் மாறுசெய்தோம்' என கூறியது போல், நீங்கள் கூற விரும்புகிறீர்களா? எனினும், 'கேட்டோம், கட்டுப்பட்டோம். இறைவா! உன்னிடம் மன்னிப்புக் கோருகிறோம். உன்னிடமே மீளுதல் உள்ளது' என்று கூறுங்கள்" எனக் கூறினார்கள்.

மக்கள் இதைக் கூறி, அவர்களின் நாவுகள் இதற்குக் கட்டுப்பட்டதும் அல்லாஹ் பின்வரும் வசனத்தை இறக்கினான்.

*'தன் இறைவனிடமிருந்து தனக்கு இறக்கி வைக்கப்பட்டதைக் கொண்டும் இறைத்தூதர் நம்பிக்கை கொண்டார். மேலும் இறை விசுவாசிகளான ஒவ்வொருவரும், அல்லாஹ்வையும், அவனது வானவர்களையும், அவனது வேதங்களையும், அவனது தூதர்களையும் நம்பிக்கை கொண்டனர். அந்தத் தூதர்களில் எவருக்கிடையேயும் நாங்கள் பிரித்திடமாட்டோம் (என்று கூறி), 'நாங்கள் கேட்டோம், கட்டுப்பட்டோம். எங்கள் இறைவா! உன்னிடம் மன்னிப்புக் கோருகிறோம். உன்னிடமே மீளுதல் உள்ளது' என்று கூறுகிறார்கள். (2:285)*

இதை அவர்கள் கூறியபோது, அல்லாஹ் 2:284 வசனத்தை மாற்றி பின்வருமாறு இறக்கினான்.

*'அல்லாஹ் எந்தவொரு ஆத்மாவிற்கும், அதன் சக்திக்கு ஏற்பவே தவிர, கஷ்டப்படுத்தமாட்டான். அது சம்பாதித்தவை அதற்கு உண்டு. அது தனக்கு எதிராக சம்பாதித்தவையும் உண்டு. எங்கள் இறைவா! நாங்கள் மறந்துவிட்டாலோ, நாங்கள் தவறிழைத்தாலோ எங்களைப் பிடித்து விடாதே! எங்கள் இறைவா! எங்களுக்கு முன் இருந்தோர் மீது நீ சுமத்தியது போல், எங்கள் மீதும் சுமையை சுமத்திவிடாதே! எங்கள் இறைவா! எங்களுக்கு இயலாததை எங்களில் சுமத்திவிடாதே!*

*எங்களை விட்டும் பாவத்தைப் போக்குவாயாக! எங்களை மன்னிப்பாயாக! எங்களுக்கு அருள் புரிவாயாக! நீயே எங்கள் எஜமானன். இறை மறுப்பாளர்களான கூட்டத்திற்கு எதிராக எங்களுக்கு உதவுவாயாக!' (2:286)*

இந்த வசனம் இறங்கியதும் இதனை நபி (ஸல்) அவர்கள் ஓதியபோது, இதன் இடை இடையே அல்லாஹ் 'சரி' (ஏற்றுக் கொண்டேன்) என்று கூறினான். **(முஸ்லிம்:125)**

## ١٨ - باب فى النهي عن البدع ومحدثات الأمور

### பாடம் : 18 - புதிய செயல்கள், சட்டங்கள் உருவாக்கத் தடை

قَالَ اللَّهُ تَعَالَى: فَمَاذَا بَعْدَ الْحَقِّ إِلاَّ الضَّلاَلُ وَقَالَ تَعَالَى: مَا فَرَّطْنَا فِي الْكِتَابِ مِنْ شَيْءٍ وَقَالَ تَعَالَى: فَإِنْ تَنَازَعْتُمْ فِي شَيْءٍ فَرُدُّوهُ إِلَى اللَّهِ وَالرَّسُولِ: أَيْ الْكِتَابِ وَالسُّنَّةِ. وَقَالَ تَعَالَى: وَأَنَّ هَذَا صِرَاطِي مُسْتَقِيمًا فَاتَّبِعُوهُ وَلاَ تَتَّبِعُوا السُّبُلَ فَتَفَرَّقَ بِكُمْ عَنْ سَبِيلِهِ. وَقَالَ تَعَالَى: قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللَّهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللَّهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ. وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ.

وَأَمَّا الأَحَادِيثُ فَكَثِيرَةٌ جِدًّا وَهِيَ مَشْهُورَةٌ فَنَقْتَصِرُ عَلَى طَرَفٍ مِنْهَا:

**அல்லாஹ் கூறுகிறான்:***'...சத்தியத்திற்குப் பின்னே வழிகேட்டைத் தவிர வேறு என்ன உள்ளது? (10:32)*

*'... எதையும் பதிவேட்டில் நாம் பதிவு செய்யாமல் இருப்பதில்லை...' (6:38)*

*'.... ஒரு விஷயத்தில் நீங்கள் கருத்து வேறுபாடு கொண்டால், அதை அல்லாஹ்வின் (குர்ஆன்) பக்கமும், அவனது தூதரின் (ஹதீஸ்) பக்கமும் கொண்டு வாருங்கள்...' (4:59)*

*நிச்சயமாக! இது எனது நேரான பாதையாக உள்ளது. அதை நீங்கள் பின்பற்றுங்கள். மற்ற வழிகளைப் பின்பற்றாதீர்கள். (மீறினால்) உங்களை அவன் வழியை விட்டும் பிரித்து விடும். (6:153)*

*நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால், என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான். மேலும் உங்களின் குற்றங்களை உங்களுக்கு மன்னிப்பான் (என நபியே) நீர் கூறுவீராக... (3:31)*

இந்தப் பாடத்தில் இடம் பெறத்தக்க வசனங்கள் நிறைய உள்ளன. மேலும் பிரபல்யமான நிறைய ஹதீஸ்களும் இந்தப் பாடத்திட்டத்தில் உள்ளன. அவற்றில் ஒரு பகுதியை மட்டுமே நாம் கூறி உள்ளோம்.

١٦٩ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ مِنْهُ فَهُوَ رَدٌّ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ" مَنْ عَمِلَ عَمَلاً لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ".

**169** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நமது இந்த மார்க்கத்தில் இல்லாத ஒன்றை ஒருவன் புதிதாக உருவாக்கினால், அது நிராகரிக்கப்பட வேண்டியதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2697. முஸ்லிம்:1718)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "நம் கட்டளை இல்லாத ஒரு செயலை ஒருவன் செய்தால், அது நிராகரிக்கப்பட வேண்டும்" என்று உள்ளது.

١٧٠ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا خَطَبَ احْمَرَّتْ عَيْنَاهُ وَعَلاَ صَوْتُهُ وَاشْتَدَّ غَضَبُهُ حَتَّى كَأَنَّهُ مُنْذِرُ جَيْشٍ يَقُولُ: "صَبَّحَكُمْ وَمَسَّاكُمْ" وَيَقُولُ: "بُعِثْتُ أَنَا وَالسَّاعَةُ كَهَاتَيْنِ" وَيَقْرِنُ بَيْنَ أُصْبُعَيْهِ السَّبَّابَةِ وَالْوُسْطَى وَيَقُولُ: "أَمَّا بَعْدُ فَإِنَّ خَيْرَ الْحَدِيثِ كِتَابُ اللَّهِ وَخَيْرَ الْهَدْيِ هَدْيُ مُحَمَّدٍ ﷺ وَشَرَّ الأُمُورِ مُحْدَثَاتُهَا وَكُلَّ بِدْعَةٍ ضَلاَلَةٌ" ثُمَّ يَقُولُ: "أَنَا أَوْلَى بِكُلِّ مُؤْمِنٍ مِنْ نَفْسِهِ مَنْ تَرَكَ مَالاً فَلأَهْلِهِ وَمَنْ تَرَكَ دَيْنًا أَوْ ضَيَاعًا فَإِلَيَّ وَعَلَيَّ" رَوَاهُ مُسْلِمٌ. وَعَنْ الْعِرْبَاضِ بْنِ سَارِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ حَدِيثُهُ السَّابِقُ فِي بَابِ الْمُحَافَظَةِ عَلَى السُّنَّةِ.

**170** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தினால் அவர்களின் கண்கள் சிவந்து விடும். அவர்களின் சப்தம் உயரும். அவர்களின் கோபம் அதிகரிக்கும். "உங்களின் காலை நேரத்திலும், உங்களின் மாலை நேரத்திலும் (எதிரிகள் தாக்க வருவர்) என்று கூறும் படையின் எச்சரிக்கையாளர் (தளபதி) போல் அவர்கள் இருப்பார்கள். நானும், மறுமை நாளும் இந்த இரண்டு விரல்கள் போன்றதாகும்" என்று கூறி, தன் நடு விரல், ஆட்காட்டி விரல் இரண்டையும் இணைத்துக் காட்டினார்கள்.

மேலும், புகழ்ந்துரைக்குப்பின் - "நிச்சயமாக, வார்த்தையில் சிறந்தது, அல்லாஹ்வின் வேதமாகும். வழியில் சிறந்தது, நபி முஹம்மது (ஆகிய என்) வழியாகும். செயல்களில் தீமையானது, அவற்றில் புதிதாக உருவானவையாகும். ஒவ்வொரு புதுமையும் வழி கேடாகும்" என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், "நான், ஒவ்வொரு முஃமினுக்கும் அவனது உயிரை விட மேலானவன் ஆவேன். ஒருவர் சொத்துக்களை விட்டு இறந்தால், அது அவருடைய குடும்பத்தாருக்காக உள்ளது. அவர் கடனையோ, வறுமையையோ விட்டு இறந்தால், அது என் பொறுப்பைச் சேர்ந்தது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(முஸ்லிம்:867)**

இர்பாழ் இப்னு ஸாரியா (ரழி) அறிவித்து 157-வது ஹதீஸாக முன்பு இடம் பெற்ற ஹதீஸும் இங்கே பொருந்தும்.

## ١٩ - باب في من سنّ سنةً حسنةً أو سيئةً

## பாடம் : 19 - நல்வழியை அல்லது தீய வழியை உருவாக்கியவர் பற்றி . . .

قَالَ اللَّهُ تَعَالَى: وَالَّذِينَ يَقُولُونَ رَبَّنَا هَبْ لَنَا مِنْ أَزْوَاجِنَا وَذُرِّيَّاتِنَا قُرَّةَ أَعْيُنٍ وَاجْعَلْنَا لِلْمُتَّقِينَ إِمَامًا. وَقَالَ تَعَالَى: وَجَعَلْنَاهُمْ أَئِمَّةً يَهْدُونَ بِأَمْرِنَا.

**அல்லாஹ் கூறுகிறான் :** *எங்கள் இறைவா! எங்கள் மனைவியர், எங்கள் சந்ததியினர் ஆகியோரிலிருந்து எங்களுக்கு கண் குளிர்ச்சியை அன்பளிப்புச் செய்வாயாக! எங்களை இறையச்சம் உள்ளோருக்கு முன்னோடியாக ஆக்குவாயாக! (25:74)*

*'நாம் அவர்களை, நம் கட்டளைகள் மூலம் மக்களை வழிநடத்தும் தலைவர்களாக ஆக்கினோம்...' (21:73)*

١٧١ - وَعَنْ أَبِي عَمْرٍو جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كُنَّا فِي صَدْرِ النَّهَارِ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ فَجَاءَهُ قَوْمٌ عُرَاةٌ مُجْتَابِي النِّمَارِ - أَوْ الْعَبَاءِ - مُتَقَلِّدِي السُّيُوفِ عَامَّتُهُمْ مِنْ مُضَرَ بَلْ كُلُّهُمْ مِنْ مُضَرَ فَتَمَعَّرَ وَجْهُ رَسُولِ اللَّهِ ﷺ لَمَّا رَأَى بِهِمْ

مِنْ الْفَاقَةِ فَدَخَلَ ثُمَّ خَرَجَ فَأَمَرَ بِلاَلاً فَأَذَّنَ وَأَقَامَ ثُمَّ صَلَّى ثُمَّ خَطَبَ فَقَالَ: يَا أَيُّهَا النَّاسُ اتَّقُوا رَبَّكُمُ الَّذِي خَلَقَكُمْ مِنْ نَفْسٍ وَاحِدَةٍ إِلَى آخِرِ الأيَةِ: إِنَّ اللَّهَ كَانَ عَلَيْكُمْ رَقِيبًا وَالأيَةُ الأخْرَى الَّتِي فِي آخِرِ الْحَشْرِ: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَلْتَنْظُرْ نَفْسٌ مَا قَدَّمَتْ لِغَدٍ. تَصَدَّقَ رَجُلٌ مِنْ دِينَارِهِ مِنْ دِرْهَمِهِ مِنْ ثَوْبِهِ مِنْ صَاعِ بُرِّهِ مِنْ صَاعِ تَمْرِهِ حَتَّى قَالَ:" وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ"! فَجَاءَ رَجُلٌ مِنَ الأنْصَارِ بِصُرَّةٍ كَادَتْ كَفُّهُ تَعْجِزُ عَنْهَا بَلْ قَدْ عَجَزَتْ. ثُمَّ تَتَابَعَ النَّاسُ حَتَّى رَأَيْت كَوْمَيْنِ مِنْ طَعَامٍ وَثِيَابٍ حَتَّى رَأَيْت وَجْهَ رَسُولِ اللَّهِ ﷺ يَتَهَلَّلُ كَأَنَّهُ مُذْهَبَةٌ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَنْ سَنَّ فِي الأسْلاَمِ سُنَّةً حَسَنَةً فَلَهُ أَجْرُهَا وَأَجْرُ مَنْ عَمِلَ بِهَا بَعْدَهُ مِنْ غَيْرِ أَنْ يَنْقُصَ مِنْ أُجُورِهِمْ شَيْءٌ وَمَنْ سَنَّ فِي الأسْلاَمِ سُنَّةً سَيِّئَةً كَانَ عَلَيْهِ وِزْرُهَا وَوِزْرُ مَنْ عَمِلَ بِهَا مِنْ بَعْدِهِ مِنْ غَيْرِ أَنْ يَنْقُصَ مِنْ أَوْزَارِهِمْ شَيْءٌ" رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ" مُجْتَابِي النِّمَارِ" هُوَ بِالْجِيمِ وَبَعْدَ الألْفِ بَاءٌ مُوَحَّدَةٌ وَالنِّمَارُ جَمْعُ نَمِرَةٍ وَهِيَ كِسَاءٌ مِنْ صُوفٍ مُخَطَّطٍ. وَمَعْنَى" مُجْتَابِيهَا" لاَبِسِيهَا قَدْ خَرَقُوهَا فِي رُءُوسِهِمْ." وَالْجَوْبُ" الْقَطْعُ وَمِنْهُ قَوْلُهُ تَعَالَى: وَثَمُودَ الَّذِينَ جَابُوا الصَّخْرَ بِالْوَادِ: أَيْ نَحَتُوهُ وَقَطَعُوهُ. وَقَوْلُهُ" تَمَعَّرَ" هُوَ بِالْعَيْنِ الْمُهْمَلَةِ: أَيْ تَغَيَّرَ. وَقَوْلُهُ" رَأَيْت كَوْمَيْنِ" بِفَتْحِ الْكَافِ وَضَمِّهَا: أَيْ صُبْرَتَيْنِ. وَقَوْلُهُ:" كَأَنَّهُ مُذْهَبَةٌ" هُوَ بِالذَّالِ الْمُعْجَمَةِ وَفَتْحِ الْهَاءِ وَالْبَاءِ الْمُوَحَّدَةِ: قَالَهُ الْقَاضِي عِيَاضٌ وَغَيْرُهُ وَصَحَّفَهُ بَعْضُهُمْ فَقَالَ:" مُدْهُنَةٌ" بِدَالٍ مُهْمَلَةٍ وَضَمِّ الْهَاءِ وَبِالنُّونِ. وَكَذَا ضَبَطَهُ الْحُمَيْدِيُّ وَالصَّحِيحُ الْمَشْهُورُ هُوَ الأوَّلُ. وَالْمُرَادُ بِهِ عَلَى الْوَجْهَيْنِ: الصَّفَاءُ وَالإِسْتِنَارَةُ.

**171** (அபூஅம்ர் என்ற) ஜரீர் இப்னு அப்துல்லா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருநாள் நடுப்பகல் நேரத்தில் நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் இருந்தோம். அப்போது அவர்களிடம் அரைகுறை ஆடை அணிந்த, கோடு போட்ட கம்பளி அல்லது மேலங்கி (மட்டும்) அணிந்திருந்த, வாள்களைத் தொங்கப் போட்டிருந்த சிலர் வந்தனர். அவர்களில் பெரும் பான்மையினர் ‘முழர்’ கூட்டத்தாரைச் சேர்ந்தவர்கள் அல்லது எல்லோருமே ‘முழர்’ கூட்டத்தார்கள் தான். அவர்களின் வறுமையைக் கண்ட நபி (ஸல்) அவர்களின் முகம் மாறிவிட்டது. பின்பு வீட்டுக்குள் நுழைந்த அவர்கள் வெளியேறி, பிலால் அவர்களை பாங்கு கூறும்படி கட்டளையிட்டார்கள். அவர் பாங்கு கூறினார். இகாமத் கூறினார். தொழ வைத்தார்கள். பின்பு உரை நிகழ்த்தினார்கள்.

***மனிதர்களே! ஒரே ஆத்மாவிலிருந்து உங்களைப் படைத்து, அந்த ஆத்மாவிலிருந்து அதன் ஜோடியையும் படைத்து, பின்னர் அவ்விருவரில் இருந்தே அதிகமான ஆண்களையும், பெண்களையும் வெளிப்படுத்திப் பரவச் செய்த உங்கள் இறைவனை அஞ்சிக் கொள்ளுங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் எவன் மூலம் உதவி பெறுவீர்களோ, அந்த அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். மேலும் (இரத்த சம்பந்த) உறவினர்களை (ஆதரியுங்கள்). நிச்சயமாக அல்லாஹ் உங்களை கண்காணிப்பவனாக இருக்கிறான். (4:1)***

***இறை விசுவாசிகளே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். ஒவ்வொரு ஆத்மாவும் நாளை (மறுமை)க்காக எதனை முற்படுத்தி வைத்தது என்பதை கவனிக்கட்டும்... (59:18)***

நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவை நிறைவு செய்தபோது, “நபித்தோழர்கள் தீனார், திர்ஹம், ஆடை, கோதுமையில் ஒரு ‘ஸாஉ’, பேரீத்தம் பழத்தில் ஒரு ‘ஸாஉ’ என்ற அளவிலும் (தர்மம் செய்யட்டும்), ஏன்? பாதி பேரீத்தம் பழமாயினும் சரியே தர்மம் செய்யட்டும்” என்று கூறினார்கள்.

அப்போது, அன்சாரியான ஒருவர் தம் கை தாங்க இயலாத அளவுக்குரிய ஒரு பையை கொண்டு வந்தார். அவரைத் தொடர்ந்து மக்களும் இயன்றதை வழங்கினார்கள். உணவும், ஆடையும் என இரு குவியலாகக் குவிந்துவிட்டதைக் கண்டேன். நபி (ஸல்) அவர்களின் முகத்தைப் பார்த்தேன். அவர்களின் முகம் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “இஸ்லாத்தில் ஒருவர் நற்செயலைச் செய்தால், அவருக்கு அதற்கான கூலி உண்டு, அதன்பின் அதைச்

செய்பவர்களின் கூலிகளில் எதையும் குறைத்திடாமல், பின்னர் செய்பவரின் கூலியும் (இவருக்கு) உண்டு. இஸ்லாத்தில் தீய நடைமுறையை ஒருவன் உருவாக்கினால், அவன் மீது அதற்கான குற்றம் உண்டு. அதன்பின் அதைச் செய்பவனின் குற்றமும் (இவனுக்கு) உண்டு. எனினும் பின் செய்வோரின் குற்றத்தில் எதுவும் குறைக்கப்படமாட்டாது'' என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1017)**

١٧٢ – وَعَنِ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ: " لَيْسَ مِنْ نَفْسٍ تُقْتَلُ ظُلْمًا إِلاَّ كَانَ عَلَى ابْنِ آدَمَ الأَوَّلِ كِفْلٌ مِنْ دَمِهَا لأَنَّهُ كَانَ أَوَّلَ مَنْ سَنَّ الْقَتْلَ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**172** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அநியாயமாக கொல்லப்படும் ஆத்மாவின் இரத்தத்தில் ஒரு பங்கு, முதல் மனிதர் ஆதமின் மகன் மீதும் உண்டு. ஏன் எனில் அவர் தான் கொலையை முதன் முதலில் செய்தவர்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7321. முஸ்லிம்:1677)**

## ٢٠ – باب في الدلالة على خير والدعاء إلى هدىً أو ضلالة

## பாடம் : 20 - நல்லதைக் கூறுதல், நேர்வழி அல்லது வழிகேட்டின் பக்கம் அழைத்தல்

قَالَ تَعَالَى: وَادْعُ إِلَى رَبِّكَ وَقَالَ تَعَالَى: ادْعُ إِلَى سَبِيلِ رَبِّكَ بِالْحِكْمَةِ وَالْمَوْعِظَةِ الْحَسَنَةِ. وَقَالَ تَعَالَى: وَتَعَاوَنُوا عَلَى الْبِرِّ وَالتَّقْوَى وَقَالَ تَعَالَى: وَلْتَكُنْ مِنْكُمْ أُمَّةٌ يَدْعُونَ إِلَى الْخَيْرِ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *உம் இறைவனின் பக்கம் அழைப்பீராக! (28:87)*

*'...நல்ல உபதேசம் மற்றும் அறிவு ஞானம் கொண்டும் உன் இறைவனுடைய வழியின் பக்கம் (நபியே) நீர் அழைப்பீராக!...' (16:125)*

*நல்லது செய்வதிலும், இறையச்சத்திலும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுங்கள்! (5:2)*

*உங்களில் நன்மையின் பக்கம் அழைக்கின்ற ஒரு சமுதாயம் இருக்கட்டும்!... (3:104)*

١٧٣ – وَعَنْ أَبِي مَسْعُود عُقْبَةَ بْنِ عَمْرٍو الأَنْصَارِيِّ الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " مَنْ دَلَّ عَلَى خَيْرٍ فَلَهُ مِثْلُ أَجْرِ فَاعِلِهِ". رَوَاهُ مُسْلِمٌ.

**173** (அபூமஸ்ஊத் என்ற) உக்பா இப்னு அம்ரு அல்அன்சாரி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நல்லதை ஒருவர் பிறருக்கு அறிவித்துக் கொடுத்தால், அதைச் செய்தவனின் கூலி போன்றே அவருக்கும் கூலி உண்டு'' என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1893)**

١٧٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " مَنْ دَعَا إِلَى هُدًى كَانَ لَهُ مِنَ الأَجْرِ مِثْلُ أُجُورِ مَنْ تَبِعَهُ لاَ يَنْقُصُ ذَلِكَ مِنْ أُجُورِهِمْ شَيْئًا وَمَنْ دَعَا إِلَى ضَلاَلَةٍ كَانَ عَلَيْهِ مِنَ الإِثْمِ مِثْلُ آثَامِ مَنْ تَبِعَهُ لاَ يَنْقُصُ ذَلِكَ مِنْ آثَامِهِمْ شَيْئًا" رَوَاهُ مُسْلِمٌ.

**174** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவரை நேர்வழியின் பக்கம் ஒருவர் அழைத்தால், அதைப் பின்பற்றியவரின் கூலி போன்றதொரு கூலி இவருக்கும் உண்டு. இதனால் அவர்களின் கூலி எதையும் அது குறைத்து

விடாது. ஒருவர் வழிகேட்டின் பக்கம் அழைத்தால், அந்த வழியைப் பின்பற்றுவோரின் குற்றம் போன்ற குற்றம் இவருக்கும் உண்டு. இது அவர்களின் குற்றங்களில் எதையும் குறைத்துவிடாது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2674)**

١٧٥ - وَعَنْ أَبِي الْعَبَّاسِ سَهْلِ بْنِ سَعْدٍ السَّاعِدِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ يَوْمَ خَيْبَرَ: " لأُعْطِيَنَّ هَذِهِ الرَّايَةَ غَدًا رَجُلاً يَفْتَحُ اللَّهُ عَلَى يَدَيْهِ يُحِبُّ اللَّهَ وَرَسُولَهُ وَيُحِبُّهُ اللَّهُ وَرَسُولُهُ". فَبَاتَ النَّاسُ يَدُوكُونَ لَيْلَتَهُمْ أَيُّهُمْ يُعْطَاهَا. فَلَمَّا أَصْبَحَ النَّاسُ غَدَوْا عَلَى رَسُولِ اللَّهِ ﷺ كُلُّهُمْ يَرْجُو أَنْ يُعْطَاهَا فَقَالَ: " أَيْنَ عَلِيُّ ابْنُ أَبِي طَالِبٍ؟ فَقِيلَ: يَا رَسُولَ اللَّهِ هُوَ يَشْتَكِي عَيْنَيْهِ قَالَ فَأَرْسِلُوا إِلَيْهِ فَأُتِيَ بِهِ فَبَصَقَ رَسُولُ اللَّهِ ﷺ فِي عَيْنَيْهِ وَدَعَا لَهُ فَبَرَأَ حَتَّى كَأَنْ لَمْ يَكُنْ بِهِ وَجَعٌ فَأَعْطَاهُ الرَّايَةَ. قَالَ عَلِيٌّ رَضِيَ اللَّهُ عَنْهُ: يَا رَسُولَ اللَّهِ أُقَاتِلُهُمْ حَتَّى يَكُونُوا مِثْلَنَا؟ فَقَالَ: انْفُذْ عَلَى رِسْلِكَ حَتَّى تَنْزِلَ بِسَاحَتِهِمْ ثُمَّ ادْعُهُمْ إِلَى الأَسْلاَمِ وَأَخْبِرْهُمْ بِمَا يَجِبُ عَلَيْهِمْ مِنْ حَقِّ اللَّهِ تَعَالَى فِيهِ. فَوَاللَّهِ لأَنْ يَهْدِيَ اللَّهُ بِكَ رَجُلاً وَاحِدًا خَيْرٌ لَكَ مِنْ حُمْرِ النَّعَمِ". مُتَّفَقٌ عَلَيْهِ. قَوْلُهُ: " يَدُوكُونَ": أَيْ يَخُوضُونَ وَيَتَحَدَّثُونَ. قَوْلُهُ" رِسْلِكَ" بِكَسْرِ الرَّاءِ وَبِفَتْحِهَا لُغَتَانِ وَالْكَسْرُ أَفْصَحُ.

**175** (அபுல் அப்பாஸ் என்ற) ஸஹ்ல் இப்னு ஸஹ்த் ஸாஇதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'கைபர்' போர் சமயம், நபி (ஸல்) அவர்கள், "எவர் கையில் அல்லாஹ் வெற்றியைத் தருவானோ, அவரிடம் இந்தக் கொடியை நாளை நான் அவரிடம் கொடுப்பேன். அவர் அல்லாஹ்வையும், அவனதுத் தூதரையும் விரும்புவார். அல்லாஹ்வும், அவனது தூதரும் அவரை விரும்புவார்கள்'' என்று கூறினார்கள். அது தங்களில் யாரிடம் கொடுக்கப்படும் என எதிர்பார்த்தவர்களாக மக்கள் இரவைக் கழித்தனர். நபி (ஸல்) அவர்களிடம் மக்கள் காலையில் வந்தபோது, அவர்களில் ஒவ்வொருவரும் அது தங்களிடம் கொடுக்கப்படுவதை விரும்பினார்கள். "அலீ இப்னு அபீதாலிப் எங்கே?'' 'என்று நபி (ஸல்) கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவர் தன் கண்களில் வலி ஏற்பட்டு வேதனையில் உள்ளார்'' எனக் கூறப்பட்டது. "அவரை அழைத்து வாருங்கள்'' என நபி (ஸல்) கூறினார்கள். (அலீ(ரழி) அவர்கள் வந்ததும்), அவரின் இரு கண்களிலும் நபி (ஸல்) அவர்கள் தன் எச்சிலைத் தடவி அவருக்கு துஆச் செய்தார்கள். அவருடைய வலி, அவரைவிட்டு நீங்கிவிட்டது.

"இறைத்தூதர் அவர்களே! நம்மைப் போல் அவர்களும் முஸ்லிம்களாக ஆகும் வரை அவர் களிடம் நான் போர் புரியவா?'' என்று அலீ (ரழி) கேட்டார்கள். "அவர்களின் களத்தில் நீர் இறங்கும் வரை, உம் பயணத்தைத் தொடர்வீராக! பின்பு இஸ்லாத்தின் பக்கம் அவர்களை அழைப்பீராக! அவர்களிடம், அல்லாஹ் கடமையாக்கியவைகளை கூறுவீராக! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம் மூலம் ஒரே ஒருவனுக்கேனும் அல்லாஹ் நேர்வழி காட்டுவது என்பது, சிவந்த ஒட்டகைகள் உமக்கு கிடைப்பதைவிட சிறந்ததாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3701. முஸ்லிம்:2406)**

١٧٦ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ فَتًى مِنْ أَسْلَمَ قَالَ: يَا رَسُولَ اللَّهِ إِنِّي أُرِيدُ الْغَزْوَ وَلَيْسَ مَعِي مَا أَتَجَهَّزُ بِهِ. قَالَ: " ائْتِ فُلاَنًا قَدْ كَانَ تَجَهَّزَ فَمَرِضَ" فَأَتَاهُ فَقَالَ: إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ يُقْرِئُكَ السَّلاَمَ وَيَقُولُ: " أَعْطِنِي الَّذِي تَجَهَّزْتَ بِهِ". فَقَالَ: " يَا فُلاَنَةُ أَعْطِيهِ الَّذِي تَجَهَّزْتُ بِهِ وَلاَ تَحْبِسِي مِنْهُ شَيْئًا فَوَاللَّهِ لاَ تَحْبِسِينَ مِنْهُ شَيْئًا فَيُبَارَكَ لَنَا فِيهِ" رَوَاهُ مُسْلِمٌ.

**176** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! நான் போருக்கு வர விரும்புகிறேன். அதற்கு வேண்டியப் பொருட்கள் எதுவும் என்னிடம் இல்லை'' என அஸ்லம் கூட்டத்தைச் சேர்ந்த வாலிபர் ஒருவர் கூறினார். "நீ இன்னாரிடம் செல்! அவர் போருக்கு ஆயத்தமாகி விட்டார். ஆனால், அவர் நோயாளியாகிவிட்டார்'' என்று கூறினார்கள். அவரிடம் வாலிபர் வந்தார். "நபி (ஸல்) அவர்கள் உமக்கு ஸலாம் கூறினார்கள்''

என்று கூறி விட்டு, "நீங்கள் தயார் செய்திருந்தப் பொருட்களை (போருக்காக) எனக்குக் கொடுப்பீராக" என்று கூறினார். (அவர் தன் மனைவியை அழைத்து), "இன்னாளே! நான் தயார் செய்து வைத்திருந்தவற்றை இவரிடம் வழங்குவீராக! அதில் எதையும் நீ இங்கு வைத்து விடாதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக, அதில் எதையும் நீ தடுத்துக் கொண்டு விடாதே! இதில் உனக்கு (அல்லாஹ்வினால்) பரக்கத் செய்யப்படும்" என்று கூறினார். **(முஸ்லிம்:1894)**

## ٢١ - باب فى التعاون على البرّ والتقوى

## பாடம் : 21- நல்லது செய்து, இறையச்சத்தில் ஒருவருக்கொருவர் உதவுவது

قَالَ اللّٰهُ تَعَالَى: وَتَعَاوَنُوا عَلَى الْبِرِّ وَالتَّقْوَى.

وَقَالَ تَعَالَى: وَالْعَصْرِ إِنَّ الأَنْسَانَ لَفِي خُسْرٍ إِلاَّ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ وَتَوَاصَوْا بِالْحَقِّ وَتَوَاصَوْا بِالصَّبْرِ.

قَالَ الإِمَامُ الشَّافِعِيُّ رَحِمَهُ اللّٰهُ كَلاَمًا مَعْنَاهُ: أَنَّ النَّاسَ - أَوْ أَكْثَرَهُمْ - فِي غَفْلَةٍ عَنْ تَدَبُّرِ هَذِهِ السُّورَةِ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *'...நன்மை செய்வதிலும், இறையச்சத்திலும் ஒருவருக்கொருவர் நீங்கள் உதவி புரிந்து கொள்ளுங்கள்...' (5:2)*

*காலத்தின் மீது சத்தியமாக! நிச்சயமாக, மனிதன் கவலையில் உள்ளான். ஆனால், இறைநம்பிக்கை கொண்டு, நற்செயல் செய்து, சத்தியத்தின் மூலம் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்தும், பொறுமை மூலமும் ஒருவருக்கு ஒருவர் உபதேசம் செய்து கொள்கின்றவர்களைத் தவிர. (103:1-3)*

இமாம் ஷாபீ (ரஹ்) கூறுகிறார்கள் :

மனிதர்களில் மிக அதிகமானவர்கள், இந்த அத்தியாயம் பற்றி சிந்திப்பதில் கவனக் குறைவானவர்களாக உள்ளனர்.

١٧٧ - وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ زَيْدِ بْنِ خَالِدٍ الْجُهَنِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: " مَنْ جَهَّزَ غَازِيًا فِي سَبِيلِ اللّٰهِ فَقَدْ غَزَا وَمَنْ خَلَفَ غَازِيًا فِي أَهْلِهِ بِخَيْرٍ فَقَدْ غَزَا" مُتَّفَقٌ عَلَيْهِ.

**177** (அபூ அப்துர்ரஹ்மான் ஸைது என்ற) இப்னு காலித் அல்ஜுஹ்வரானீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் வழியில் போர் புரிபவருக்கு, ஒருவர் போர் சாதனம் வழங்கினால், அவரும் போர் புரிந்தவராவார். மேலும் போர் புரிபவருக்கு, அவரது குடும்பத்தார் விஷயத்தில் நல்லவற்றை ஒருவர் வழங்கினால், அவரும் போர் புரிந்தவராவார்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:2843. முஸ்லிம்:1895)**

١٧٨ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ بَعَثَ بَعْثًا إِلَى بَنِي لِحْيَانَ مِنْ هُذَيْلٍ فَقَالَ: " لِيَنْبَعِثْ مِنْ كُلِّ رَجُلَيْنِ أَحَدُهُمَا وَالأَجْرُ بَيْنَهُمَا" رَوَاهُ مُسْلِمٌ.

**178** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஹுதைல் பகுதியைச் சேர்ந்த பனூ லிஹயான் கூட்டத்தாரிடம் ஒரு படையை நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அப்போது, "இரண்டு பேர்களில் ஒருவர் மட்டும் போருக்குப் புறப்படட்டும். இருவருக்கும் கூலி உண்டு" என்றும் கூறினார்கள். **(முஸ்லிம்:1896)**

١٧٩ – عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ لَقِيَ رَكْبًا بِالرَّوْحَاءِ فَقَالَ: " مَنْ الْقَوْمُ؟" قَالُوا: الْمُسْلِمُونَ. فَقَالُوا: مَنْ أَنْتَ؟ قَالَ: " رَسُولُ اللَّهِ" ; فَرَفَعَتْ إِلَيْهِ امْرَأَةٌ صَبِيًّا فَقَالَتْ: أَلِهَذَا حَجٌّ؟ قَالَ: " نَعَمْ وَلَكِ أَجْرٌ" رَوَاهُ مُسْلِمٌ.

**179** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'ரவ்ஹா' என்ற இடத்தில் ஒரு பயணக் கூட்டத்தை நபி (ஸல்) அவர்கள் சந்தித்தார்கள். "இவர்கள் யார்?" என்று கேட்டார்கள். "நாங்கள் முஸ்லிம்கள்!" என்று அவர்கள் கூறி விட்டு, "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள். "நான் இறைத்தூதர்" என்றார்கள். அப்போது ஒரு பெண் ஒருவர், சிறுவரைத் தூக்கிக் காண்பித்து, "இவருக்கு ஹஜ் உண்டா?" என்று கேட்டார். "ஆம்! (ஆனால்) கூலி உனக்கு உண்டு" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1336)**

١٨٠ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ: " الْخَازِنُ الْمُسْلِمُ الأَمِينُ الَّذِي يُنَفِّذُ مَا أُمِرَ بِهِ فَيُعْطِيهِ كَامِلاً مُوَفَّرًا طَيِّبَةً بِهِ نَفْسُهُ فَيَدْفَعُهُ إِلَى الَّذِي أُمِرَ لَهُ بِهِ أَحَدُ الْمُتَصَدِّقَيْنِ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ" الَّذِي يُعْطِي مَا أُمِرَ بِهِ" وَضَبَطُوا" الْمُتَصَدِّقَيْنِ" بِفَتْحِ الْقَافِ مَعَ كَسْرِ النُّونِ عَلَى التَّثْنِيَةِ وَعَكْسُهُ عَلَى الْجَمْعِ وَكِلاهُمَا صَحِيحٌ.

**180** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நம்பிக்கையான ஒரு முஸ்லிமான பொருளாளர், எந்தப் பணிக்காக அவர் அமர்த்தப்பட்டாரோ, அதை அவர் (நல்ல முறையில்) செயல்படுத்துகிறார். அவர் யாருக்கு வழங்கும்படி கட்டளையிடப் படுகிறாரோ, அவருக்கு அதனை மன நிறைவாகவும், தூய்மையானதாகவும், முழுமையாகவும் வழங்குகிறார். (இந்தச் செயல் காரணமாக இவரும்) தர்மம் செய்தவர்களில் ஒருவராவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:438. முஸ்லிம்:1023)**

## ٢٢ – باب فى النصيحة

## பாடம் : 22 - உபதேசம் செய்தல் பற்றி . . .

قَالَ تَعَالَى: إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ.

وَقَالَ تَعَالَى إِخْبَارًا عَنْ نُوحٍ ﷺ: وَأَنْصَحُ لَكُمْ. وَعَنْ هُودٍ ﷺ: وَأَنَا لَكُمْ نَاصِحٌ أَمِينٌ.

**அல்லாஹ் கூறுகிறான் :** *நிச்சயமாக இறை நம்பிக்கையாளர்கள், சகோதரர்களாவர்...* (49:10)

*'உங்களுக்கு நான் உபதேசம் செய்கிறேன்' (என நூஹ் நபி கூறினார்) (7:62)*

*'நான் உங்களுக்கு நம்பிக்கையான உபதேசியாக உள்ளேன்' (என ஹூத் நபி கூறினார்) (7:68)*

١٨١ – وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ أَبِي رُقَيَّةَ تَمِيمِ بْنِ أَوْسٍ الدَّارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ: " الدِّينُ النَّصِيحَةُ" قُلْنَا لِمَنْ؟ قَالَ: " لِلَّهِ وَلِكِتَابِهِ وَلِرَسُولِهِ وَلِأَئِمَّةِ الْمُسْلِمِينَ وَعَامَّتِهِمْ" رَوَاهُ مُسْلِمٌ.

**181** அபூருகய்யா என்ற தமீம் இப்னு அவ்ஸ் தாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மார்க்கம் என்பது, நல்லுபதேசம் எனும் நன்மையை நாடுதல் ஆகும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "யாருக்கு?" என்று நாங்கள் கேட்டோம். "அல்லாஹ்வுக்கும், அவனது வேதத்திற்கும், அவனது தூதருக்கும், முஸ்லிம்களின் தலைவருக்கும் மற்றும் பொது மக்களுக்கும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:55)**

١٨٢ – الثَّانِي عَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ: قَالَ بَايَعْتُ رَسُولَ اللَّهِ ﷺ عَلَى إِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالنُّصْحِ لِكُلِّ مُسْلِمٍ. مُتَّفَقٌ عَلَيْهِ.

**182** ஜரீர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொழுகையைப் பேணவும், பொருள் வரியை (ஜகாத்தை) வழங்கிடவும், ஒவ்வொரு முஸ்லிமுக்கும் உபதேசம் செய்து நன்மையை வழங்கிடவும் என நபி (ஸல்) அவர்களிடம் நான் உடன் படிக்கை செய்து கொண்டேன். **(புகாரி:57. முஸ்லிம்:56)**

١٨٣ – الثَّالِثُ عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يُحِبَّ لِأَخِيهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**183** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தான் விரும்பியதை தன் சகோதரனுக்கும் விரும்பும் வரை உங்களில் ஒருவர் இறை விசுவாசியாக மாட்டார்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:13. முஸ்லிம்:45)**

## ٢٣ – باب في الأمر بالمعروف والنهي عن المنكر

## பாடம் : 23 - நல்லதை ஏவி, தீயதைத் தடுத்தல் பற்றி . . .

قَالَ اللَّهُ تَعَالَى: وَلْتَكُنْ مِنْكُمْ أُمَّةٌ يَدْعُونَ إِلَى الْخَيْرِ وَيَأْمُرُونَ بِالْمَعْرُوفِ وَيَنْهَوْنَ عَنِ الْمُنْكَرِ وَأُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ. وَقَالَ تَعَالَى: كُنْتُمْ خَيْرَ أُمَّةٍ أُخْرِجَتْ لِلنَّاسِ تَأْمُرُونَ بِالْمَعْرُوفِ وَتَنْهَوْنَ عَنِ الْمُنْكَرِ. وَقَالَ تَعَالَى: خُذِ الْعَفْوَ وَأْمُرْ بِالْعُرْفِ وَأَعْرِضْ عَنِ الْجَاهِلِينَ. وَقَالَ تَعَالَى: وَالْمُؤْمِنُونَ وَالْمُؤْمِنَاتُ بَعْضُهُمْ أَوْلِيَاءُ بَعْضٍ يَأْمُرُونَ بِالْمَعْرُوفِ وَيَنْهَوْنَ عَنِ الْمُنْكَرِ. وَقَالَ تَعَالَى: لُعِنَ الَّذِينَ كَفَرُوا مِنْ بَنِي إِسْرَائِيلَ عَلَى لِسَانِ دَاوُدَ وَعِيسَى ابْنِ مَرْيَمَ ذَلِكَ بِمَا عَصَوْا وَكَانُوا يَعْتَدُونَ كَانُوا لَا يَتَنَاهَوْنَ عَنْ مُنْكَرٍ فَعَلُوهُ لَبِئْسَ مَا كَانُوا يَفْعَلُونَ. وَقَالَ تَعَالَى: وَقُلِ الْحَقُّ مِنْ رَبِّكُمْ فَمَنْ شَاءَ فَلْيُؤْمِنْ وَمَنْ شَاءَ فَلْيَكْفُرْ. وَقَالَ تَعَالَى: فَاصْدَعْ بِمَا تُؤْمَرُ. وَقَالَ تَعَالَى: أَنْجَيْنَا الَّذِينَ يَنْهَوْنَ عَنِ السُّوءِ وَأَخَذْنَا الَّذِينَ ظَلَمُوا بِعَذَابٍ بَئِيسٍ بِمَا كَانُوا يَفْسُقُونَ وَالْأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ.

**அல்லாஹ் கூறுகிறான் :** *உங்களில் நல்லதின் பக்கம் அழைக்கின்ற, நல்லதை ஏவுகின்ற, தீயதை விட்டும் தடுக்கின்றவர்கள் இருக்கட்டும். இவர்கள் தான் வெற்றியாளர்கள். (3:104)*

*மக்களுக்கு என வெளிப்படுத்தப்பட்ட சிறந்த சமுதாயமாக இருக்கிறீர்கள். நல்லதை நீங்கள் கட்டளையிடுகிறீர்கள். தீயதை விட்டும் தடுக்கிறீர்கள். (3:110)*

*மன்னிப்பைக் கைக்கொள்வீராக! நன்மையை ஏவுவீராக! அறிவிலிகளை நீர் புறக்கணிப்பீராக! (7:199)*

*இறை விசுவாசியான ஆண்களும், இறை விசுவாசியான பெண்களும், அவர்களில் சிலர் சிலருக்கு நேசர்களாவர். அவர்கள் நல்லதை ஏவுகிறார்கள். தீயதைவிட்டும் தடுக்கிறார்கள். (9:71)*

*பனூ இஸ்ரவேலர்களில் இறைமறுப்பாளர்கள், தாவூத் நபி மற்றும் மர்யமின் மகன் ஈஸா நபியின் நாவால் சபிக்கப்பட்டனர். இது அவர்கள் மாறு செய்து, வரம்பு மீறியவர்களாக இருந்ததால் ஏற்பட்டது. தாங்கள் செய்து கொண்டிருந்த தீமையை விட்டும் அவர்கள் தடுக்காதவர்களாக இருந்தனர். அவர்கள் செய்து கொண்டிருந்தது கெட்டதாகி விட்டது. (5:78,79)*

*உங்கள் இறைவனிடமிருந்து உள்ள சத்திய(வேத)ம் இது. ஒருவர் விரும்பினால் அதை நம்பிக்கை கொள்ளட்டும். ஒருவர் விரும்பினால் அதை மறுக்கட்டும் என (நபியே!) நீர் கூறுவீராக! (18:29)*

*(நபியே!) உமக்குக் கட்டளையிடப்பட்டபடி நீர் கட்டளையிடுவீராக... (15:94)*

*தீமையை விலக்கிக் கொண்டிருந்தவர்களை நாம் காப்பாற்றினோம். பாவம் செய்து கொண் டிருந்த காரணத்தால் கடினமான வேதனையால் அநீதக்காரர்களை நாம் பிடித்தோம். (7:165)*

இந்தப் பாடத்தின் கீழ் பிரபல்யமான வசனங்கள் இன்னும் உள்ளன.

١٨٤ – وَأَمَّا الأَحَادِيثُ فَالأَوَّلُ عَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" مَنْ رَأَى مِنْكُمْ مُنْكَرًا فَلْيُغَيِّرْهُ بِيَده فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِلِسَانه فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِقَلْبِه وَذَلِكَ أَضْعَفُ الأِيمَانِ" رَوَاهُ مُسْلِمٌ.

**184** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் தீமையைக் கண்டால், தன் கையால் அதைத் தடுக்கட்டும். அதற்கு இயலாவிட்டால், தன் நாவால் தடுக்கட்டும். அதற்கும் இயலாவிட்டால், தன் இதயத்தால் (வெறுக்கட்டும்). இது, இறை நம்பிக்கையில் மிகப் பலவீனமானதாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:49)**

١٨٥ – الثَّانِي عَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ:" مَا مِنْ نَبِيٍّ بَعَثَهُ اللَّهُ فِي أُمَّة قَبْلِي إِلاَّ كَانَ لَهُ مِنْ أُمَّته حَوَارِيُّونَ وَأَصْحَابٌ يَأْخُذُونَ بِسُنَّته وَيَقْتَدُونَ بِأَمْرِه ثُمَّ إِنَّهَا تَخْلُفُ مِنْ بَعْدِهِمْ خُلُوفٌ يَقُولُونَ مَا لاَ يَفْعَلُونَ وَيَفْعَلُونَ مَا لاَ يُؤْمَرُونَ فَمَنْ جَاهَدَهُمْ بِيَده فَهُوَ مُؤْمِنٌ وَمَنْ جَاهَدَهُمْ بِقَلْبِه فَهُوَ مُؤْمِنٌ وَمَنْ جَاهَدَهُمْ بِلِسَانه فَهُوَ مُؤْمِنٌ وَلَيْس وَرَاءَ ذَلِكَ مِنْ الأِيمَانِ حَبَّةُ خَرْدَلٍ" رَوَاهُ مُسْلِمٌ.

**185** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“எனக்கு முன் இருந்த சமுதாயத்திற்கு, அல்லாஹ் அனுப்பிய எந்த நபிக்கும், அவருக்கு அவரது சமுதாயத்திலிருந்தே உதவியாளர்களும், அவரது நடைமுறையைச் செயல்படுத்துகின்ற தோழர்களும், அவரது கட்டளையை அப்படியே ஏற்று நடப்பவர்களும் இல்லாமல் இருந்தது இல்லை. பின்பு அவர்களுக்குப் பின்னர் சில மக்கள் வந்தனர். அவர்கள் செய்யாததை, அவர்கள் கூறுவார்கள். அவர்கள் கட்டளையிடப்படாததைச் செய்வார்கள். அவர்களிடம் தன் கையால் போரிட்டவர் இறை விசுவாசியாவார். அவர்களிடம் தன் இதயத்தால் போரிட்டவர் இறைவிசுவாசியாவார். அவர்களிடம் தன் நாவால் போரிட்டவர் இறை விசுவாசியாவார். இவைகளுக்குப் பின் இறை நம்பிக்கையில் கடுகு அளவும் கூட இல்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:50)**

١٨٦ – الثَّالِثُ عَنْ أَبِي الْوَلِيد عُبَادَةَ بْنِ الصَّامِت رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" بَايَعْنَا رَسُولَ اللَّه ﷺ عَلَى السَّمْعِ وَالطَّاعَة فِي الْعُسْرِ وَالْيُسْرِ وَالْمَنْشَط وَالْمَكْرَه وَعَلَى أَثَرَة عَلَيْنَا وَعَلَى أَلاَّ نُنَازِعَ الأَمْرَ أَهْلَهُ – إِلاَّ أَنْ تَرَوْا كُفْرًا بَوَاحًا عِنْدَكُمْ مِنْ اللَّه تَعَالَى فِيه بُرْهَانٌ – وَعَلَى أَنْ نَقُولَ بِالْحَقِّ أَيْنَمَا كُنَّا لاَ نَخَافُ فِي اللَّه لَوْمَةَ لاَئِمٍ" مُتَّفَقٌ عَلَيْه." الْمَنْشَطُ وَالْمَكْرَهُ" بِفَتْحِ مِيمَيْهِمَا: أَيْ فِي السَّهْلِ وَالصَّعْبِ." وَالأَثَرَةُ": الإِخْتِصَاصُ بِالْمُشْتَرَكِ وَقَدْ سَبَقَ بَيَانُهَا." بَوَاحًا" بِفَتْحِ الْبَاءِ الْمُوَحَّدَة وَبَعْدَهَا وَاوٌ ثُمَّ أَلِفٌ ثُمَّ حَاءٌ مُهْمَلَةٌ: أَيْ ظَاهِرًا لاَ يَحْتَمِلُ تَأْوِيلاً.

**186** (அபுல் வலீத் என்ற) உபாதா இப்னு ஸாமித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கஷ்டம், வசதி, வெறுப்பு மற்றும் மகிழ்ச்சி ஆகிய நிலைகளில் பேசவும், கட்டுப்படவும், எங்களையும் விடவும் அவற்றை தேர்ந்தெடுப்பதின் மீதும் நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சத்திய

பிரமாணம் செய்தோம். மேலும் உங்களிடம் அல்லாஹ்விடமிருந்து தெளிவான ஆதாரம் உள்ள நிலையில், பகிரங்கமான இறை மறுப்பை நீங்கள் காணும் வரை, அதிகாரத்தை அதிகாரம் உடைய வரிடமிருந்து நாங்கள் பறிக்காமல் இருக்கவும், பழிப்போரின், பழிப்பைக் கண்டு அல்லாஹ்வின் விஷயத்தில் நாங்கள் பயப்படாமல் இருந்து சத்தியத்தை நாங்கள் கூறிவிடவும் நபி (ஸல்) அவர்களிடம் சத்தியப்பிரமாணம் செய்தோம்). **(புகாரி:7056. முஸ்லிம்:1709)**

١٨٧ - الرَّابِعُ عَنْ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" مَثَلُ الْقَائِمِ فِي حُدُودِ اللَّهِ وَالْوَاقِعِ فِيهَا كَمَثَلِ قَوْمٍ اسْتَهَمُوا عَلَى سَفِينَةٍ فَصَارَ بَعْضُهُمْ أَعْلَاهَا وَبَعْضُهُمْ أَسْفَلَهَا. وَكَانَ الَّذِينَ فِي أَسْفَلِهَا إِذَا اسْتَقَوْا مِنْ الْمَاءِ مَرُّوا عَلَى مَنْ فَوْقَهُمْ فَقَالُوا: لَوْ أَنَّا خَرَقْنَا فِي نَصِيبِنَا خَرْقًا وَلَمْ نُؤْذِ مَنْ فَوْقَنَا! فَإِنْ تَرَكُوهُمْ وَمَا أَرَادُوا هَلَكُوا جَمِيعًا وَإِنْ أَخَذُوا عَلَى أَيْدِيهِمْ نَجَوْا وَنَجَوْا جَمِيعًا" رَوَاهُ الْبُخَارِيُّ." الْقَائِمُ فِي حُدُودِ اللَّهِ تَعَالَى" مَعْنَاهُ: الْمُنْكِرُ لَهَا الْقَائِمُ فِي دَفْعِهَا وَإِزَالَتِهَا وَالْمُرَادُ بِالْحُدُودِ مَا نَهَى اللَّهُ عَنْهُ." وَاسْتَهَمُوا" اقْتَرَعُوا.

**187** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் தண்டனைக்குரிய செயல்களை விட்டு விடுபவன், அச்செயலைச் செயல்படுத்துவன் ஆகியோருக்கு உதாரணம்: கப்பலில் பயணம் மேற்கொண்டு, சீட்டு போட்டுக் குலுக்கிய கூட்டத்தாரின் உதாரணம் போன்றதாகும். அவர்களில் சிலர் அதன் மேல்தளத்திலும், அவர்களில் சிலர் கீழ்தளத்திலும் இருந்தார்கள். அதன் கீழ்தளத்திலே இருந்தவர்கள், தண்ணீர் தேவைப்பட்டால் மேல்தளத்தில் உள்ளவர்களிடம் வந்து (எடுத்துச்) செல்வார்கள். 'நமக்கு மேலே உள்ளவர்களுக்கு நாம் சிரமம் தந்திடாமல், நம் பகுதியிலேயே துளை போட்டு விட்டால் என்ன?' என்று கூறினார்கள். அவர்களை மேலே உள்ளவர்கள் அவர்கள் விருப்பப்படி விட்டு விட்டால் அனைவரும் அழிந்து போவார்கள். மாறாக, தங்களின் கைகளினால் அவர்கள் தடுத்திட்டால் அவர்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்வர். அனைவரையும் காப்பாற்றி விடுவர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2493)**

١٨٨ - الْخَامِسُ عَنْ أُمِّ الْمُؤْمِنِينَ أُمِّ سَلَمَةَ هِنْدَ بِنْتِ أَبِي أُمَيَّةَ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا عَنْ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ:" إِنَّهُ يُسْتَعْمَلُ عَلَيْكُمْ أُمَرَاءُ فَتَعْرِفُونَ وَتُنْكِرُونَ فَمَنْ كَرِهَ فَقَدْ بَرِئَ وَمَنْ أَنْكَرَ فَقَدْ سَلِمَ وَلَكِنْ مَنْ رَضِيَ وَتَابَعَ". قَالُوا: يَا رَسُولَ اللَّهِ أَلاَ نُقَاتِلُهُمْ؟ قَالَ:" لاَ مَا أَقَامُوا فِيكُمْ الصَّلاَةَ" رَوَاهُ مُسْلِمٌ. مَعْنَاهُ: مَنْ كَرِهَ بِقَلْبِهِ وَلَمْ يَسْتَطِعْ إِنْكَارًا بِيَدٍ وَلاَ لِسَانٍ فَقَدْ بَرِئَ مِنْ الْإِثْمِ وَأَدَّى وَظِيفَتَهُ وَمَنْ أَنْكَرَ بِحَسَبِ طَاقَتِهِ فَقَدْ سَلِمَ مِنْ هَذِهِ الْمَعْصِيَةِ وَمَنْ رَضِيَ بِفِعْلِهِمْ وَتَابَعَهُمْ فَهُوَ الْعَاصِي.

**188** (அபூஉமய்யா ஹுதைபா அவர்களின் மகளும், நம் தாயாருமான உம்முஸலமா என்ற) ஹிந்த் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் சில தலைவர்கள் பொறுப்புக்கு வருவார்கள். (அவர்களிடம்) நல்லதைக் காண்பீர்கள். தீயதையும் காண்பீர்கள். அப்போது (அவர்களின் தீய செயலை) வெறுத்தவர் (அதை விட்டும்) நீங்கி விட்டார். அதை ஆட்சேபித்தவர், வெற்றி பெற்றார். ஆனால், அதை ஏற்று பின்பற்றுபவரைத் தவிர" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவர்களிடம், நாங்கள் போரிடலாமா?" என்று கேட்டனர். "அவர்கள் உங்களிடையே தொழுகையைப் பேணி வரும் வரை கூடாது" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1854)**

١٨٩ - السَّادِسُ عَنْ أُمِّ الْمُؤْمِنِينَ أُمِّ الْحَكَمِ زَيْنَبَ بِنْتِ جَحْشٍ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ دَخَلَ عَلَيْهَا فَزِعًا يَقُولُ:" لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ. وَيْلٌ لِلْعَرَبِ مِنْ شَرٍّ قَدْ اقْتَرَبَ فُتِحَ الْيَوْمَ مِنْ رَدْمِ يَأْجُوجَ وَمَأْجُوجَ مِثْلُ هَذِهِ". وَحَلَّقَ بِأُصْبُعَيْهِ الْأَبْهَامِ وَالَّتِي تَلِيهَا. فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَنَهْلِكُ وَفِينَا الصَّالِحُونَ؟ قَالَ:" نَعَمْ إِذَا كَثُرَ الْخَبَثُ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**189** (நம் தாயார் உம்முல் ஹிகம் என்ற) ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருநாள் என்னிடம் நபி (ஸல்) அவர்கள் பதற்றம் அடைந்தவர்களாக வந்தார்கள். அப்போது, "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. விரைவில் வர உள்ள தீமை காரணமாக அரபு மக்களுக்குக் கேடுதான். யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச்சுவர் இன்று இந்த அளவு திறக்கப்படுகிறது" என்று கூறி, தன் ஆட்காட்டி விரலாலும் அதை அடுத்த (பெரு) விரலாலும் வளையமிட்டுக் காண்பித்தார்கள். அப்போது நான், "இறைத்தூதர் அவர்களே! எங்களில் நல்லவர்கள் இருக்கும் நிலையில் நாங்களும் அழிந்துவிடுவோமா?" என்று கேட்டேன். "ஆம்! தீமை அதிகரித்துவிட்டால் (அழிவுதான்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7135 முஸ்லிம்:2880)**

١٩. – السَّابِعُ عَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" إِيَّاكُمْ وَالْجُلُوسَ فِي الطُّرُقَات" فَقَالُوا: يَا رَسُولَ اللَّه مَا لَنَا مِنْ مَجَالِسنَا بُدٌّ نَتَحَدَّثُ فِيهَا. فَقَالَ رَسُولُ اللَّه ﷺ:" فَإِذَا أَبَيْتُمْ إِلاَّ الْمَجْلسَ فَأَعْطُوا الطَّرِيقَ حَقَّهُ" قَالُوا: وَمَا حَقُّ الطَّرِيقِ يَا رَسُولَ اللَّه؟ قَالَ:" غَضُّ الْبَصَرِ وَكَفُّ الأَذَى وَرَدُّ السَّلاَمِ وَالأَمْرُ بِالْمَعْرُوفِ وَالنَّهْيُ عَنْ الْمُنْكَرِ" مُتَّفَقٌ عَلَيْه.

**190** அபூஸயீத் குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாதைகளில் உட்காருவதை உங்களுக்கு எச்சரிக்கிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அதற்கு நாங்கள், 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் பாதைகளில் சிறிது நேரம் பேசுவதற்காக உட்கார வேண்டியது ஏற்படுகிறது" என்று கூறினோம். "உட்காரும் நிர்பந்தம் ஏற்பட்டால், பாதையில் அதற்குரிய உரிமையை வழங்கிவிடுங்கள்" என்று நபி (ஸல்) கூறியதும், "இறைத்தூதர் அவர்களே! பாதையின் உரிமை என்றால் என்ன?" என்று கேட்டோம். "பார்வையைத் தாழ்த்துவது, இடையூறு தருவதை நீக்குவது, ஸலாமிற்கு பதில் கூறுவது, நல்லதை ஏவுவது, தீயதை விட்டும் தடுப்பது தான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2465. முஸ்லிம்:2121)**

١٩١ – الثَّامنُ عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّه ﷺ رَأَى خَاتَمًا منْ ذَهَبٍ فِي يَد رَجُلٍ فَنَزَعَهُ فَطَرَحَهُ وَقَالَ:" يَعْمدُ أَحَدُكُمْ إِلَى جَمْرَة منْ نَارٍ فَيَجْعَلُهَا فِي يَده!" فَقِيلَ للرَّجُلِ بَعْدَمَا ذَهَبَ رَسُولُ اللَّه ﷺ: خُذْ خَاتَمَكَ انْتَفعْ به. قَالَ: لاَ وَاللَّه لاَ آخُذُهُ أَبَدًا وَقَدْ طَرَحَهُ رَسُولُ اللَّه ﷺ. رَوَاهُ مُسْلِمٌ.

**191** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருதடவை, ஒரு மனிதனின் கையில் நபி (ஸல்) அவர்கள் ஒரு தங்க மோதிரத்தைக் கண்டதும், அதைக் கழற்றி எறிந்தார்கள். மேலும் "உங்களில் ஒருவர் (நரக) நெருப்பின் கங்குகளை அடைய விரும்பினால், இதைத் தன் கையில் அணிந்து கொள்ளட்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் சென்ற பிறகு அந்த மனிதரிடம், "உம் மோதிரத்தை எடும். (வேறு வகையில்) அதைப் பயன்படுத்தும்" என்று கூறப்பட்டது. "இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி (ஸல்) அவர்கள் வீசி எறிந்து விட்டதை மீண்டும் நான் தொட மாட்டேன்" என்று கூறினார். **(முஸ்லிம்:2090)**

١٩٢ – التَّاسعُ عَنْ أَبِي سَعِيد الْحَسَنِ الْبَصْرِيِّ أَنَّ عَائذَ بْنَ عَمْرٍو رَضِيَ اللَّهُ عَنْهُ دَخَلَ عَلَى عُبَيْد اللَّه بْنِ زِيَاد فَقَالَ: أَيْ بُنَيَّ إِنِّي سَمِعْتُ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" إِنَّ شَرَّ الرِّعَاءِ الْحُطَمَةُ" فَإِيَّاكَ أَنْ تَكُونَ مِنْهُمْ. فَقَالَ لَهُ: اجْلسْ فَإِنَّمَا أَنْتَ مِنْ نُخَالَة أَصْحَابِ مُحَمَّد ﷺ فَقَالَ: وَهَلْ كَانَتْ لَهُمْ نُخَالَةٌ؟ إِنَّمَا كَانَتْ النُّخَالَةُ بَعْدَهُمْ وَفِي غَيْرِهِمْ! رَوَاهُ مُسْلِمٌ.

**192** அபூஸயீத் என்ற ஹஸன் பஸரீ அறிவிக்கின்றார்கள்:

ஆயித் இப்னு அம்ரு (ரழி) அவர்கள், (இராக்கின் கவர்னர்) உபைதுல்லா இப்னு ஸியாத் என்பாரிடம் வந்து, "எனது மகனே! நபி (ஸல்) அவர்கள் 'நிச்சயமாக, அதிகாரம் உள்ளவர்களில்

கெட்டவர்கள், மிகக் கடுமையாக நடந்து கொள்பவர்கள் தான். அதுபோல அவர்களில் ஒருவராக நீரும் ஆவதை உம்மிடம் எச்சரிக்கிறேன்' என்று கூறினார்கள். "அப்போது ஆயித் (ரழி) அவர்களிடம் உபைதுல்லா, "நீர் உட்காருவீராக! நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் நீர் உமியாக (கசடாக) இருந்தீர். (கீழானவராக இருந்தீர்)" என்று கூறினார். "அவர்களில் கசடானவர்கள் இருந்தார்களா? (இல்லை) கசடானவர்கள் இருந்தது, அவர்களுக்குப் பின்னரும், அவர்களை அடுத்து வந்தவர்களிலுமே தான்" என்று ஆயித் (ரழி) கூறினார்கள். **(முஸ்லிம்:1830)**

١٩٣ – الْعَاشِرُ عَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَتَأْمُرُنَّ بِالْمَعْرُوفِ وَلَتَنْهَوُنَّ عَنِ الْمُنْكَرِ أَوْ لَيُوشِكَنَّ اللَّهُ أَنْ يَبْعَثَ عَلَيْكُمْ عِقَابًا مِنْهُ ثُمَّ تَدْعُونَهُ فَلاَ يُسْتَجَابُ لَكُمْ" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**193** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நீங்கள் நல்லதை ஏவுங்கள். தீயவற்றைத் தடுங்கள். இல்லையெனில், உங்கள் மீது தனது தண்டனையை அல்லாஹ் இறக்கி வைப்பான். பின் அவனை அழைத்தாலும், அவன் உங்களுக்குப் பதில் கூறமாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2169. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٩٤ – الْحَادِي عَشَرَ عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" أَفْضَلُ الْجِهَادِ كَلِمَةُ عَدْلٍ عِنْدَ سُلْطَانٍ جَائِرٍ" رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**194** அபூஸயீத் அல் குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"போரில் மிகச் சிறந்தது, அநீதக்கார அரசனிடம் நீதத்தை எடுத்துக் கூறுவதுதான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4344, திர்மிதீ:2174. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٩٥ – الثَّانِي عَشَرَ عَنْ أَبِي عَبْدِ اللَّهِ طَارِقِ بْنِ شِهَابٍ الْبَجَلِيِّ الأَحْمَسِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً سَأَلَ النَّبِيَّ ﷺ وَقَدْ وَضَعَ رِجْلَهُ فِي الْغَرْزِ: أَيُّ الْجِهَادِ أَفْضَلُ؟ قَالَ:" كَلِمَةُ حَقٍّ عِنْدَ سُلْطَانٍ جَائِرٍ" رَوَاهُ النَّسَائِيُّ بِإِسْنَادٍ صَحِيحٍ." الْغَرْزُ" بِغَيْنٍ مُعْجَمَةٍ مَفْتُوحَةٍ ثُمَّ رَاءٍ سَاكِنَةٍ ثُمَّ زَايٍ وَهُوَ رِكَابُ كَوْرِ الْجَمَلِ إِذَا كَانَ مِنْ جِلْدٍ أَوْ خَشَبٍ وَقِيلَ: لاَ يَخْتَصُّ بِجِلْدٍ وَخَشَبٍ.

**195** (அபூஅப்துல்லா என்ற) தாரிக் இப்னு ஷிஹாப் அல் பஜலில் அஹ்மஸி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒட்டகையின் (மீது ஏற) சேணத்தில் தன் காலை வைத்தபோது, ஒரு மனிதர், "போரில் மிகச் சிறந்தது எது?" என்று கேட்டார். அதற்கு, "அநீதக்கார அரசன் முன் சத்தியத்தை எடுத்துரைப்பதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(நஸயீ:7/161)**

١٩٦ – الثَّالِثَ عَشَرَ عَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ: رَسُولُ اللَّهِ ﷺ:" إِنَّ أَوَّلَ مَا دَخَلَ النَّقْصُ عَلَى بَنِي إِسْرَائِيلَ أَنَّهُ كَانَ الرَّجُلُ يَلْقَى الرَّجُلَ فَيَقُولُ: يَا هَذَا اتَّقِ اللَّهَ وَدَعْ مَا تَصْنَعُ فَإِنَّهُ لاَ يَحِلُّ لَكَ. ثُمَّ يَلْقَاهُ مِنَ الْغَدِ وَهُوَ عَلَى حَالِهِ فَلاَ يَمْنَعُهُ ذَلِكَ أَنْ يَكُونَ أَكِيلَهُ وَشَرِيبَهُ وَقَعِيدَهُ. فَلَمَّا فَعَلُوا ذَلِكَ ضَرَبَ اللَّهُ قُلُوبَ بَعْضِهِمْ بِبَعْضٍ" ثُمَّ قَالَ: لُعِنَ الَّذِينَ كَفَرُوا مِنْ بَنِي إِسْرَائِيلَ عَلَى لِسَانِ دَاوُدَ وَعِيسَى ابْنِ مَرْيَمَ ذَلِكَ بِمَا عَصَوْا وَكَانُوا يَعْتَدُونَ. كَانُوا لاَ يَتَنَاهَوْنَ عَنْ مُنْكَرٍ فَعَلُوهُ لَبِئْسَ مَا كَانُوا يَفْعَلُونَ تَرَى كَثِيرًا مِنْهُمْ يَتَوَلَّوْنَ الَّذِينَ كَفَرُوا لَبِئْسَ مَا قَدَّمَتْ لَهُمْ أَنْفُسُهُمْ إِلَى قَوْلِهِ: فَاسِقُونَ. ثُمَّ قَالَ:" كَلاَّ وَاللَّهِ لَتَأْمُرُنَّ بِالْمَعْرُوفِ وَلَتَنْهَوُنَّ عَنِ الْمُنْكَرِ وَلَتَأْخُذُنَّ عَلَى يَدِ الظَّالِمِ وَلَتَأْطُرُنَّهُ عَلَى الْحَقِّ أَطْرًا وَلَتَقْصُرُنَّهُ عَلَى الْحَقِّ قَصْرًا أَوْ لَيَضْرِبَنَّ اللَّهُ بِقُلُوبِ بَعْضِكُمْ عَلَى بَعْضٍ ثُمَّ لَيَلْعَنَنَّكُمْ كَمَا لَعَنَهُمْ!" رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ. هَذَا لَفْظُ أَبِي دَاوُدَ. وَلَفْظُ التِّرْمِذِيِّ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" لَمَّا وَقَعَتْ بَنُو إِسْرَائِيلَ فِي الْمَعَاصِي نَهَتْهُمْ عُلَمَاؤُهُمْ فَلَمْ يَنْتَهُوا

فَجَالَسُوهُمْ فِي مَجَالِسِهِمْ وَوَاكَلُوهُمْ وَشَارَبُوهُمْ فَضَرَبَ اللَّهُ قُلُوبَ بَعْضِهِمْ بِبَعْضٍ وَلَعَنَهُمْ عَلَى لِسَانِ دَاوُدَ وَعِيسَى ابْنِ مَرْيَمَ ذَلِكَ بِمَا عَصَوْا وَكَانُوا يَعْتَدُونَ". فَجَلَسَ رَسُولُ اللَّهِ ﷺ وَكَانَ مُتَّكِئًا فَقَالَ:" لاَ وَالَّذِي نَفْسِي بِيَدِهِ حَتَّى تَأْطُرُوهُمْ عَلَى الْحَقِّ أَطْرًا". قَوْلُهُ:" تَأْطُرُوهُمْ". أَيْ تَعْطِفُوهُمْ." وَلَتَقْصُرُنَّهُ" أَيْ لَتَحْبِسُنَّهُ.

**196** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பனூ இஸ்ரவேலர்களிடம் நுழைந்த குறைகளில் முதன்மையானது, (அவர்களில்) ஒருவர், இன்னொருவரிடம் செல்வார். "இன்னாரே! நீர் அல்லாஹ்வைப் பயப்படுவீராக! பாவம் செய்து வருவதை விட்டு விடுவீராக! (பாவம் செய்வது) உமக்குக் கூடாது என்று கூறுவார். மறுநாளும், அதே (பாவம் செய்த) நிலையில் அவரைச் சந்திப்பார். அவருடன் சாப்பிடுவார், பருகுவார், உட்கார்ந் திருப்பார் (அவரை விட்டு விலகியிருக்க மாட்டார்). இதை அவர்கள் செய்த போது, அவர்களின் சிலரைச் சிலருடன் உள்ளத்தால் அல்லாஹ் இணைத்துவிட்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு (பின்வரும்) வசனத்தை ஓதினார்கள்.

*'பனூ இஸ்ரவேலர்களில் இறை மறுப்பாளர்களில் உள்ள அவர்கள், தாவூது (அலை) மற்றும் மர்யமின் மகன் ஈஸா (அலை) ஆகியோரின் நாவால் சபிக்கப்பட்டனர். இது, அவர்கள் மாறு செய்து, வரம்பு மீறுபவர்களாக இருந்ததால் ஏற்பட்டதாகும். அவர்கள் செய்து கொண்டிருந்த தவறை விட்டும் ஒருவருக்கொருவர் தடுக்காதவர்களாக இருந்தனர். அவர்கள் செய்து கொண்டிருந்தது கெட்டதாகிவிட்டது. அவர்களில் அதிகமானவர்கள் இறை நிராகரிப்பாளர்களை நேசர்களாக ஆக்கிக் கொண்டனர். அவர்கள் தங்களுக்காக முற்படுத்தி வைத்தவை கெட்டதாகி விட்டது. அவர்கள் அல்லாஹ்வையும், இந்த நபியையும், அவர்களுக்கு இறக்கி வைக்கப்பட்ட இந்த வேதத்தையும் நம்பிக்கை கொண்டிருந்தால், நிராகரித்த அவர்களை நேசர்களாக ஒருபோதும் ஏற்றுக் கொண்டிருக்க மாட்டார்கள். அவர்களில் பெரும்பாலோர் பாவிகளே ஆவர். (5:78-81)*

பின்னர் நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறல்ல! அல்லாஹ்வின் மீது சத்தியமாக, நீங்கள் நல்லதை ஏவ வேண்டும். தீயதிலிருந்து தடுக்க வேண்டும். அநீதக்காரனின் கையை நீங்கள் பிடித்து, சத்தியத்தின் மீது இருக்கச் செய்து, அந்தச் சத்தியத்திலேயே அவனை நிலைத்திருக்கச் செய்யவும் வேண்டும். இல்லையெனில் உங்களில் சிலரை சிலரிடம், இதயங்கள் மூலம் இணைத்து விடுவான். பின்பு அவர்களைச் சபித்தது போல் உங்களையும் சபித்து விடுவான்" என்று கூறினார்கள்.

**(அபூதாவூது:4336. திர்மிதி:3047)**

இது அபூதாவூதின் வாசகமாகும். திர்மிதீயில் கீழ்கண்டவாறு உள்ளது:

"பனூ இஸ்ரவேலர்கள் பாவச் செயல்களில் ஈடுபட்டபோது, அவர்களில் உள்ள அறிஞர்கள் அவர்களைத் தடுத்தனர். அவர்கள் அந்த அறிஞர்களின் சொல்லை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனாலும், அவர்களோடு அறிஞர்களும் அவர்களின் சபைகளிலே அமர்ந்தார்கள். அவர்களுடன் சாப்பிட்டார்கள். அவர்களுடன் பருகினார்கள். (அவர்களைப் புறக்கணிக்கவில்லை). இதனால் அவர்களில் சிலரின் இதயங்களை சிலருடன் இணைத்துவிட்டான். மேலும், அவர்கள் தாவூது (அலை), மர்யமின் மகன் ஈஸா (அலை) நாவுகளால் சபிக்கப்பட்டனர். இது, அவர்கள் மாறு செய்து, வரம்பு மீறிக் கொண்டிருந்ததால் ஏற்பட்டதாகும்" என்று கூறிவிட்டுச் சாய்ந்தவர்களாக இருந்த நபி (ஸல்) அவர்கள் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். "கூடாது. என் உயிரை கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அவர்களைச் சத்தியத்தில் நிலைத்திருக்கச் செய்யும் வரை (நீங்கள் எடுத்துக் கூறுங்கள்)" என்றும் கூறினார்கள்.

١٩٧ - الرَّابعَ عشَرَ عَنْ أَبِي بَكْرٍ الصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: " يَا أَيُّهَا النَّاسُ إِنَّكُمْ تَقْرَءُونَ هَذه الأيَةَ: يَا أَيُّهَا الَّذينَ آمَنُوا عَلَيْكُمْ أَنْفُسَكُمْ لاَ يَضُرُّكُمْ مَنْ ضَلَّ إِذَا اهْتَدَيْتُمْ. وَإِنِّي سَمعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ: إِنَّ النَّاسَ إِذَا رَأَوْا الظَّالِمَ فَلَمْ يَأْخُذُوا عَلَى يَدَيْه أَوْشَكَ أَنْ يَعُمَّهُمُ اللَّهُ بعقَابٍ منْهُ" رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمذيُّ وَالنَّسَائِيُّ بأَسَانيدَ صَحيحَةٍ.

**197** அபூபக்ர் சித்தீக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மனிதர்களே! நீங்கள் (கீழ்காணும்) வசனத்தை ஓதுகிறீர்கள்:

*இறைவிசுவாசிகளே! உங்களை நீங்கள் பாதுகாத்துக் கொள்ளுங்கள். நீங்கள் நேர்வழி பெற்று விட்டால், வழி தவறியவர் உங்களுக்கு இடையூறு தந்துவிட வேண்டாம். (5:105)*

"நிச்சயமாக மக்கள் அநீதக்காரனை பார்த்தும், அவன் கரங்களை (தடுத்திட)ப் பிடித்துத் தடுக்க வில்லையானால், அவர்கள் அனைவருக்கும், தன் தண்டனையை (இவனால் பொதுவாக) அல்லாஹ் அளிக்கக் கூடும்" என்று நபி (ஸல்) கூற நான் கேட்டுள்ளேன். **(அபூதாவூது:4338. திர்மிதீ:3057)**

## ٢٤ - باب تغليظ عقوبة من أمر بمعروف أو نهي عن منكر وخالف قوله فعله

## பாடம் : 24 - நன்மையை ஏவி, தீமையைத் தடுத்து விட்டு, தன் சொல்லுக்கும், செயலுக்கும் மாற்றமாக நடப்பவருக்கு வழங்கப்படும் கடும் தண்டனை பற்றி . . .

**قَالَ اللَّهُ تَعَالَى: أَتَأْمُرُونَ النَّاسَ بِالْبِرِّ وَتَنْسَوْنَ أَنْفُسَكُمْ وَأَنْتُمْ تَتْلُونَ الْكِتَابَ أَفَلاَ تَعْقِلُونَ. وَقَالَ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لِمَ تَقُولُونَ مَا لاَ تَفْعَلُونَ كَبُرَ مَقْتًا عِنْدَ اللَّهِ أَنْ تَقُولُوا مَا لاَ تَفْعَلُونَ. وَقَالَ تَعَالَى إِخْبَارًا عَنْ شُعَيْبٍ ﷺ: وَمَا أُرِيدُ أَنْ أُخَالِفَكُمْ إِلَى مَا أَنْهَاكُمْ عَنْهُ.**

**அல்லாஹ் கூறுகிறான் :** *'பிற மனிதர்களை நன்மை செய்யும்படி நீங்கள் ஏவிவிட்டு, உங்களை நீங்கள் மறந்து விடுகின்றீர்களா? நீங்களோ வேதத்தை ஓதிக் கொண்டிருக்கின்றீர்கள். நீங்கள் சிறிதளவும் (இதைப் பற்றி) சிந்திப்பதில்லையா?' (2:44)*

*இறை விசுவாசிகளே! நீங்கள் செய்யாத ஒன்றை ஏன் கூறுகிறீர்கள்? நீங்கள் செய்யாத ஒன்றை நீங்கள் கூறுவதுதான், அல்லாஹ்விடம் பாவத்தில் பெரியதாக உள்ளது. (61:2,3)*

*'எதை விட்டும் உங்களை நான் தடுத்தேனோ, அதில் உங்களுக்கு நான் மாறு செய்திட நான் விரும்பவில்லை' (என ஷுஐபு நபி கூறினார்) (11:88)*

١٩٨ - وَعَنْ أَبِي زَيْد أُسَامَةَ بْنِ زَيْد بْنِ حَارِثَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" يُؤْتَى بِالرَّجُلِ يَوْمَ الْقيَامَة فَيُلْقَى فِي النَّارِ فَتَنْدَلِقُ أَقْتَابُ بَطْنه فَيَدُورُ بهَا كَمَا يَدُورُ الْحمَارُ في الرَّحَا فَيَجْتَمعُ إِلَيْه أَهْلُ النَّارِ فَيَقُولُونَ: يَا فُلاَنُ مَا لَكَ؟ أَلَمْ تَكُنْ تَأْمُرُ بالْمَعْرُوف وَتَنْهَى عَنْ الْمُنْكَرِ؟ فَيَقُولُ: بَلَى كُنْت آمُرُ بالْمَعْرُوف وَلاَ آتيه وَأَنْهَى عَنْ الْمُنْكَرِ وَآتيه" مُتَّفَقٌ عَلَيْه. قَوْلُهُ:" تَنْدَلِقُ" هُوَ بالدَّال الْمُهْمَلَة وَمَعْنَاهُ: تَخْرُجُ" وَالأَقْتَابُ": الأَمْعَاءُ وَاحدُهَا قتْبٌ.

**198** (அபூஸைத் என்ற) உஸாமா இப்னு ஸைத் பின் ஹாரிதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மறுமையில் ஒருவர் அழைத்து வரப்பட்டு, நரகிலும் போடப்படுவார். அப்போது அவரின் வயிற்றுக் குடல்கள் சரிந்து விடும். அவர் அந்த நிலையிலேயே கழுதைச் செக்கைச் சுற்றுவது போல், சுற்றுவார். அவரிடம் நரகவாசிகள் அனைவரும் வந்து, "இன்னாரே! உமக்கு என்ன நேர்ந்தது? நீர்

நல்லதை ஏவி, தீயதை விட்டும் தடுத்துக் கொண்டு இருந்தீர்தானே?'' என்று கூறுவார்கள். அதற்கு அவர், "ஆம். நான் நல்லதை ஏவிக் கொண்டிருந்தேன். அந்த நன்மையை நான் செய்யவில்லை. தீயதை விட்டும் தடுத்தேன். ஆனால், அந்தத் தீமைகளைவிட்டு நான் விலகவில்லை என்று கூறுவார்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3267. முஸ்லிம்:2989)**

## ٢٥ - باب الأمر بأداء الأمانة

## பாடம் : 25 - அமானிதத்தை நிறைவேற்றும்படி ஏவுதல்

قَالَ اللّٰهُ تَعَالَى: إِنَّ اللّٰهَ يَأْمُرُكُمْ أَنْ تُؤَدُّوا الأَمَانَاتِ إِلَى أَهْلِهَا وَقَالَ تَعَالَى: إِنَّا عَرَضْنَا الأَمَانَةَ عَلَى السَّمَاوَاتِ وَالأَرْضِ وَالْجِبَالِ فَأَبَيْنَ أَنْ يَحْمِلْنَهَا وَأَشْفَقْنَ مِنْهَا وَحَمَلَهَا الأِنْسَانُ إِنَّهُ كَانَ ظَلُومًا جَهُولاً.

**அல்லாஹ் கூறுகிறான் :** *அமானிதங்களை அதற்குரியவர்களிடம் நீங்கள் ஒப்படைத்திட அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான்... (4:58)*

*நிச்சயமாக! அமானிதத்தை வானங்கள் மீதும், பூமியின் மீதும், மலைகள் மீதும் எடுத்துக் காட்டினோம். அவை, அதைச் சுமக்க மறுத்துவிட்டன. அதைச் சுமக்க அவை பயந்தன. (எனினும்) மனிதன் அதைச் சுமந்து கொண்டான். அவன் அநீதக்காரனாகவும், அறிவிலியாகவும் உள்ளான். (33:72)*

١٩٩ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ:" آيَةُ الْمُنَافِقِ ثَلاثٌ: إِذَا حَدَّثَ كَذَبَ وَإِذَا وَعَدَ أَخْلَفَ وَإِذَا أُؤْتُمِنَ خَانَ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ:" وَإِنْ صَامَ وَصَلَّى وَزَعَمَ أَنَّهُ مُسْلِمٌ".

**199** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நயவஞ்சகனின் அடையாளம் மூன்றாகும். (1) பேசினால் பொய் பேசுவான். (2) வாக்குறுதி அளித்தால் மாறு செய்வான். (3) அவனை நம்பினால் மோசம் செய்வான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இது புகாரி, முஸ்லிமில் உள்ளது. மற்றொரு அறிவிப்பில், அவன் நோன்பு நோற்றாலும், தொழுதாலும், தன்னை முஸ்லிம் என எண்ணிக் கொண்டாலும் '(அவன் நயவஞ்சகனே)' என்று உள்ளது. **(புகாரி:33. முஸ்லிம்:59)**

٢٠٠ - وَعَنْ حُذَيْفَةَ بْنِ الْيَمَانِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: حَدَّثَنَا رَسُولُ اللّٰهِ ﷺ حَدِيثَيْنِ قَدْ رَأَيْتُ أَحَدَهُمَا وَأَنَا أَنْتَظِرُ الأخَرَ حَدَّثَنَا أَنَّ الأَمَانَةَ نَزَلَتْ فِي جَذْرِ قُلُوبِ الرِّجَالِ ثُمَّ نَزَلَ الْقُرْآنُ فَعَلِمُوا مِنْ الْقُرْآنِ وَعَلِمُوا مِنْ السُّنَّةِ. ثُمَّ حَدَّثَنَا عَنْ رَفْعِ الأَمَانَةِ فَقَالَ:" يَنَامُ الرَّجُلُ النَّوْمَةَ فَتُقْبَضُ الأَمَانَةُ مِنْ قَلْبِهِ فَيَظَلُّ أَثَرُهَا مِثْلَ الْوَكْتِ ثُمَّ يَنَامُ النَّوْمَةَ فَتُقْبَضُ الأَمَانَةُ مِنْ قَلْبِهِ فَيَظَلُّ أَثَرُهَا مِثْلَ أَثَرِ الْمَجْلِ كَجَمْرٍ دَحْرَجْتَهُ عَلَى رِجْلِكَ فَنَفِطَ فَتَرَاهُ مُنْتَبِرًا وَلَيْسَ فِيهِ شَيْءٌ. ثُمَّ أَخَذَ حَصَاةً فَدَحْرَجَهَا عَلَى رِجْلِهِ فَيُصْبِحُ النَّاسُ يَتَبَايَعُونَ فَلا يَكَادُ أَحَدٌ يُؤَدِّي الأَمَانَةَ حَتَّى يُقَالَ: إِنَّ فِي بَنِي فُلانٍ رَجُلاً أَمِينًا حَتَّى يُقَالَ لِلرَّجُلِ: مَا أَجْلَدَهُ مَا أَظْرَفَهُ مَا أَعْقَلَهُ! وَمَا فِي قَلْبِهِ مِثْقَالُ حَبَّةٍ مِنْ خَرْدَلٍ مِنْ إِيمَانٍ! وَلَقَدْ أَتَى عَلَيَّ زَمَانٌ وَمَا أُبَالِي أَيَّكُمْ بَايَعْتُ: لَئِنْ كَانَ مُسْلِمًا لَيَرُدَّنَّهُ عَلَيَّ دِينُهُ وَإِنْ كَانَ نَصْرَانِيًّا أَوْ يَهُودِيًّا لَيَرُدَّنَّهُ عَلَيَّ سَاعِيهِ. وَأَمَّا الْيَوْمَ فَمَا كُنْتُ أُبَايِعُ مِنْكُمْ إِلاَّ فُلانًا وَفُلانًا" مُتَّفَقٌ عَلَيْهِ. قَوْلُهُ" جَذْرٍ" بِفَتْحِ الْجِيمِ وَإِسْكَانِ الذَّالِ الْمُعْجَمَةِ: وَهُوَ أَصْلُ الشَّيْءِ. وَ" الْوَكْتُ" بِالتَّاءِ الْمُثَنَّاةِ مِنْ فَوْقُ: الأَثَرُ الْيَسِيرُ." وَالْمَجْلُ". بِفَتْحِ الْمِيمِ وَإِسْكَانِ الْجِيمِ وَهُوَ تَنَفُّطٌ فِي الْيَدِ وَنَحْوِهَا مِنْ أَثَرِ عَمَلٍ وَغَيْرِهِ. قَوْلُهُ" مُنْتَبِرًا": مُرْتَفِعًا. قَوْلُهُ" سَاعِيهِ": الْوَالِي عَلَيْهِ.

**200** ஹுதைபா இப்னு எமான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இரண்டு செய்திகளை நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள். இரண்டில் ஒன்றைப் பார்த்து விட்டேன். மற்றொன்றை எதிர்பார்த்திருக்கிறேன். எங்களிடம் (முதல் செய்தியாக) கீழ்கண்டவாறு கூறினார்கள்.

"நிச்சயமாக (அமானிதம்), சில மனிதர்களின் இதயங்களின் அடிப்பாகத்தில் இறங்கியது. பின்பு குர்ஆனை அவன் இறக்கினான். குர்ஆனிலிருந்தும் அவர்கள் அறிந்தார்கள். நபிவழியிலிருந்தும் அவர்கள் அறிந்தார்கள்."

பின்பு, (இரண்டாம் செய்தியாக) அமானிதம் உயர்த்தப்படுவது பற்றிக் கூறினார்கள். "ஒருமனிதர் தூங்குவார். அப்போது அவரின் இதயத்திலிருந்து அமானிதம் கைப்பற்றப்படும். அதன் அடையாளத்தை சிறுபுள்ளிபோல் காண்பார். மீண்டும் தூங்குவார். அவரின் இதயத்திலிருந்து அமானிதம் கைப்பற்றப்படும். அதன் அடையாளத்தை கொப்புளம்போல் காண்பார். உன் காலில் நெருப்புக் கங்கை நீ உருட்டி விட்டு, அது கொப்பளித்து, அதை வீங்கியதாகக் காண்பாய். ஆனால், அதில் ஒன்றுமிருக்காது. (அதுபோலவே அமானிதமும் ஆகிவிடும்)" பின்பு நபி (ஸல்) அவர்கள் ஒரு பொடிக் கல்லை எடுத்துத் தன் காலின் மீது உருட்டி விட்டார்கள்.

"மக்கள் ஒருவருக்கொருவர் சத்தியப் பிரமாணம் செய்து கொள்வார்கள். (அவர்களில்) எவரும் தன் அமானிதத்தை நிறைவேற்ற முன்வரமாட்டார். இறுதியில் இன்னாரின் கூட்டத்தாரில் ஒருவர் நம்பிக்கையாளராக உள்ளார் என்று கூறப்படும். மேலும் ஒரு மனிதரை அவர் பெரிய வீரர், பெரிய புத்திசாலி, பெரிய அறிவாளி என்று கூறப்படும். (ஆனால்) அவரின் உள்ளத்தில் கடுகளவும் ஈமான் (நம்பிக்கை) இருக்காது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

(இதைக் கூறிய ஹுதைபா பின் யமான் (ரழி) பின்வருமாறும் கூறினார்கள்). "எனக்கு ஒரு காலம் வரும். அந்தக் காலத்தில் உங்களில் எவரிடமும் நான் பிரமாணம் (ஒப்பந்தம்) செய்து கொள்வேன். அவர் முஸ்லிமாக இருந்தால், அவரது மார்க்கம் அவரை என்னிடம் திருப்பும். அவர் யூதராகவோ, கிருத்துவராகவோ இருந்தால், என்னிடம் அவரின் அதிகாரி திருப்புவார். இன்றோ, இன்னார், இன்னாரைத் தவிர, உங்களில் எவரிடமும் (அமானிதம் பாதுகாப்புத் தன்மை இல்லாது போனதால்) பிரமாணம் எடுத்துக் கொள்ளமாட்டேன். **(புகாரி:6497. முஸ்லிம்:143)**

٢٠١ – وَعَنْ حُذَيْفَةَ وَأَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالاَ: قَالَ رَسُولُ اللّٰه ﷺ:" يَجْمَعُ اللّٰهُ تَبَارَكَ وَتَعَالَى النَّاسَ فَيَقُومُ الْمُؤْمِنُونَ حَتَّى تُزْلَفَ لَهُمُ الْجَنَّةُ فَيَأْتُونَ آدَمَ فَيَقُولُونَ: يَا أَبَانَا اسْتَفْتِحْ لَنَا الْجَنَّةَ فَيَقُولُ: وَهَلْ أَخْرَجَكُمْ مِنَ الْجَنَّةِ إلاَّ خَطِيئَةُ أَبِيكُمْ؟ لَسْت بِصَاحِبِ ذَلِكَ اذْهَبُوا إِلَى ابْنِي إِبْرَاهِيمَ خَلِيلِ اللّٰه. قَالَ فَيَأْتُونَ إِبْرَاهِيمَ فَيَقُولُ إِبْرَاهِيمُ: لَسْت بِصَاحِبِ ذَلِكَ. إِنَّمَا كُنْت خَلِيلاً مِنْ وَرَاءَ وَرَاءَ. اعْمَدُوا إِلَى مُوسَى الَّذِي كَلَّمَهُ اللّٰهُ تَكْلِيمًا فَيَأْتُونَ مُوسَى فَيَقُولُ: لَسْت بِصَاحِبِ ذَلِكَ اذْهَبُوا إِلَى عِيسَى كَلِمَةِ اللّٰه وَرُوحِه فَيَقُولُ عِيسَى: لَسْت بِصَاحِبِ ذَلِكَ فَيَأْتُونَ مُحَمَّدًا ﷺ فَيَقُومُ فَيُؤْذَنُ لَهُ وَتُرْسَلُ الأَمَانَةُ وَالرَّحِمُ فَيَقُومَانِ جَنْبَتَيِ الصِّرَاطِ يَمِينًا وَشِمَالاً فَيَمُرُّ أَوَّلُكُمْ كَالْبَرْقِ. قُلْت: بِأَبِي وَأُمِّي أَيُّ شَيْءٍ كَمَرِّ الْبَرْقِ؟ قَالَ: أَلَمْ تَرَوْا كَيْفَ يَمُرُّ وَيَرْجِعُ فِي طَرْفَةِ عَيْنٍ ثُمَّ كَمَرِّ الرِّيحِ ثُمَّ كَمَرِّ الطَّيْرِ؟ وَأَشَدِّ الرِّجَالِ تَجْرِي بِهِمْ أَعْمَالُهُمْ وَنَبِيُّكُمْ قَائِمٌ عَلَى الصِّرَاطِ يَقُولُ: رَبِّ سَلِّمْ سَلِّمْ حَتَّى تَعْجِزَ أَعْمَالُ الْعِبَادِ حَتَّى يَجِيءَ الرَّجُلُ لاَ يَسْتَطِيعُ السَّيْرَ إِلاَّ زَحْفًا وَفِي حَافَّتَيِ الصِّرَاطِ كَلاَلِيبُ مُعَلَّقَةٌ مَأْمُورَةٌ بِأَخْذِ مَنْ أُمِرَتْ بِهِ: فَمَخْدُوشٌ نَاجٍ وَمُكَرْدَسٌ فِي النَّارِ. وَالَّذِي نَفْسُ أَبِي هُرَيْرَةَ بِيَدِهِ إِنَّ قَعْرَ جَهَنَّمَ لَسَبْعُونَ خَرِيفًا." رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ" وَرَاءَ وَرَاءَ" هُوَ بِالْفَتْحِ فِيهِمَا. وَقِيلَ بِالضَّمِّ بِلاَ تَنْوِينٍ وَمَعْنَاهُ: لَسْت بِتِلْكَ الدَّرَجَةِ الرَّفِيعَةِ وَهِيَ كَلِمَةٌ تُذْكَرُ عَلَى سَبِيلِ التَّوَاضُعِ. وَقَدْ بَسَطْت مَعْنَاهَا فِي شَرْحِ صَحِيحِ مُسْلِمٍ وَاللّٰهُ أَعْلَمُ.

**201** ஹுதைபா (ரழி), அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ் (மறுமையில்) மனிதர்களை ஒன்று சேர்ப்பான். இறை விசுவாசிகள் நின்று கொண்டிருப்பார்கள். அவர்களுக்குச் சொர்க்கம் அருகில் இருக்கும். அப்போது அவர்கள், நபி ஆதம் (அலை) அவர்களிடம் வருவார்கள். "எங்கள் தந்தையே! எங்களுக்குச் சொர்க்கத்தைத் திறந்து விடச் செய்யுங்கள்" என்று கூறுவார்கள். "உங்கள் தந்தையின் தவறுதான் சொர்க்கத்திலிருந்து உங்களை வெளியாக்கிவிட்டதே! அதற்குத் தகுதி வாய்ந்தவன் நானில்லை. நீங்கள் என் மகனும், அல்லாஹ்வின் நேசருமான இப்ராஹீமிடம் செல்லுங்கள்" என்று ஆதம் (அலை) கூறுவார்கள். அவர்கள் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் வருவார்கள். "இதற்குத் தகுதியானவன் நானில்லை. பல நிகழ்வுகளுக்குப் பின்னரே நான் (இறைவனுக்கு) நேசனாக ஆனேன். அல்லாஹ்விடம் பேசிய மூஸாவிடம் செல்லுங்கள்" என்று இப்ராஹீம் (அலை) கூறுவார்.

பின்னர் அவர்கள் மூஸாவிடம் வருவார்கள். "இதற்கு நான் தகுதி வாய்ந்தவன் இல்லை. அல்லாஹ்வின் சொல்லையும், அவனது உயிராகவும் உள்ள ஈஸாவிடம் செல்லுங்கள்" என்று மூஸா (அலை) கூறுவார். ஈஸாவோ, "இதற்கு நான் தகுதி வாய்ந்தவன் இல்லை" என்று கூறி விடுவார். பின்பு முஹம்மதாகிய என்னிடம் வருவார்கள். எழுந்து நிற்பேன். எனக்கு அனுமதி தரப்படும்.

"அமானிதமும், உறவும் அனுப்பப்படும். ஸிராத் எனும் பாலத்தின் வலது, இடது என இரு ஓரமும் அவ்விரண்டும் நிற்கும். அப்போது, உங்களில் ஒருவர் மின்னல் போல் அதைக் கடப்பார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "என் தாயும், தந்தையும் உங்களுக்கே அர்ப்பணம்! 'மின்னல்' கடந்து செல்லுவது போல் என்பது எப்படி?" என்று கேட்டேன். "மின்னல் எப்படி கண் இமைக்கும் நேரத்தில் ஏற்பட்டு, கடந்து, நகர்ந்து செல்வதை நீங்கள் பார்க்கவில்லையா?" என நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு பின்பு, "காற்றுப் போலவும், பறவை பறப்பது போன்றும், வேகமாக ஓடும் மனிதனைப் போன்றும் கடந்து செல்வர். அவர்களின் செயல்கள் அவரை அழைத்துச் செல்லும். உங்களின் நபி, பாலத்தில் நின்று கொண்டிருப்பார். 'இறைவா! காப்பாற்று, காப்பாற்று!' என்று கூறுவார்.

அடியார்களின் செயல்கள் இயலாமையை ஏற்படுத்தும். இறுதியில் ஒருவர் தவழ்ந்து கடக்க முயற்சித்தவராக வருவார். பாலத்தில் இரு ஓரங்களிலும் முட்கள் இருக்கும். அதற்குக் கட்டளை யிடப்பட்ட நபரைப் பிடிக்க வேண்டி அவை தொங்கவிடப்பட்டு இருக்கும். அதைப் பிடித்துக் கொள்பவர் தப்பிப்பார். கீழே தள்ளப்படுவர் நரகில் விழுவார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"அபூஹுரைராவின் உயிரைக் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நரகத்தின் ஆழம், எழுபது ஆண்டு கால தூரமாகும்" என, அபூஹுரைரா (ரழி) கூறுகிறார்கள். **(முஸ்லிம்:195)**

٢٠٢ – وَعَنْ أَبِي خُبَيْب" بضَمِّ الْخَاء الْمُعْجَمَة" عَبْد اللَّه بْنِ الزُّبَيْر رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: لَمَّا وَقَفَ الزُّبَيْرُ يَوْمَ الْجَمَلِ دَعَانِي فَقُمْتُ إِلَى جَنْبه فَقَالَ: يَا بُنَيَّ إِنَّهُ لاَ يُقْتَلُ الْيَوْمَ إِلاَّ ظَالِمٌ أَوْ مَظْلُومٌ وَإِنِّي لاَ أُرَانِي إِلاَّ سَأُقْتَلُ الْيَوْمَ مَظْلُومًا. وَإِنَّ مِنْ أَكْبَرِ هَمِّي لَدَيْنِي أَفَتَرَى دَيْنَنَا يُبْقِي مِنْ مَالِنَا شَيْئًا؟ ثُمَّ قَالَ: يَا بُنَيَّ بِعْ مَالَنَا وَاقْضِ دَيْنِي. وَأَوْصِي بِالثُّلُث وَثُلُثُهُ لِبَنِيه يَعْنِي: لِبَنِي عَبْد اللَّه بْنِ الزُّبَيْرِ ثُلُثُ الثُّلُث. قَالَ: فَإِنْ فَضَلَ مِنْ مَالِنَا بَعْدَ قَضَاءِ الدَّيْنِ شَيْءٌ فَثُلُثُهُ لِبَنِيكَ. قَالَ هِشَامٌ: وَكَانَ وَلَدُ عَبْد اللَّه قَدْ وَازَى بَعْضَ بَنِي الزُّبَيْرِ: خُبَيْب وَعَبَّاد وَلَهُ يَوْمَئِذ تِسْعَةُ بَنِينَ وَتِسْعُ بَنَات. قَالَ عَبْدُ اللَّه. فَجَعَلَ يُوصِينِي بِدَيْنِه وَيَقُولُ: يَا بُنَيَّ إِنْ عَجَزْتَ عَنْ شَيْءٍ مِنْهُ فَاسْتَعِنْ عَلَيْه بِمَوْلاَيَ. قَالَ: فَوَاللَّهِ مَا دَرَيْتُ مَا أَرَادَ حَتَّى قُلْتُ: يَا أَبَت مَنْ مَوْلاَكَ؟ قَالَ: اللَّهُ. ) قَالَ (: فَوَاللَّه مَا وَقَعْتُ فِي كُرْبَةٍ مِنْ دَيْنِه إِلاَّ قُلْتُ: يَا مَوْلَى الزُّبَيْرِ اقْضِ عَنْهُ دَيْنَهُ فَيَقْضِيهُ. ) قَالَ (: فَقُتِلَ الزُّبَيْرُ وَلَمْ يَدَعْ دِينَارًا وَلاَ دِرْهَمًا إِلاَّ أَرَضِينَ: مِنْهَا الْغَابَةُ وَإِحْدَى عَشْرَةَ دَارًا بِالْمَدِينَة وَدَارَيْنِ بِالْبَصْرَة وَدَارًا بِالْكُوفَة وَدَارًا بِمِصْرَ ) قَالَ (: وَإِنَّمَا

كَانَ دَيْنُهُ الَّذِي كَانَ عَلَيْهِ أَنَّ الرَّجُلَ كَانَ يَأْتِيه بِالْمَالِ فَيَسْتَوْدِعُهُ إِيَّاهُ فَيَقُولُ الزُّبَيْرُ: لاَ وَلَكِنْ هُوَ سَلَفٌ إِنِّي أَخْشَى عَلَيْهِ الضَّيْعَةَ وَمَا وَلِيَ إِمَارَةً قَطُّ وَلاَ جِبَايَةً وَلاَ شَيْئًا إِلاَّ أَنْ يَكُونَ فِي غَزْوٍ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ أَوْ مَعَ أَبِي بَكْرٍ وَعُمَرَ وَعُثْمَانَ رَضِيَ اللَّهُ عَنْهُمْ. قَالَ عَبْدُ اللَّهِ: فَحَسِبْتُ مَا كَانَ عَلَيْهِ مِنَ الدَّيْنِ فَوَجَدْتُه أَلْفَيْ أَلْفٍ وَمِائَتَيْ أَلْفٍ! فَلَقِيَ حَكِيمُ بْنُ حِزَامٍ عَبْدَ اللَّهِ بْنَ الزُّبَيْرِ فَقَالَ: يَا ابْنَ أَخِي كَمْ عَلَى أَخِي مِنَ الدَّيْنِ؟ فَكَتَمْته وَقُلْت: مِائَةُ أَلْفٍ. فَقَالَ حَكِيمٌ: وَاللَّهِ مَا أَرَى أَمْوَالَكُمْ تَسَعُ هَذِه. فَقَالَ عَبْدُ اللَّه: أَرَأَيْتَكَ إِنْ كَانَتْ أَلْفَيْ أَلْفٍ؟ وَمِائَتَيْ أَلْفٍ؟ قَالَ: مَا أَرَاكُمْ تُطِيقُونَ هَذَا ; فَإِنْ عَجَزْتُمْ عَنْ شَيْءٍ مِنْهُ فَاسْتَعِينُوا بِي. ) قَالَ (: وَكَانَ الزُّبَيْرُ قَدْ اشْتَرَى الْغَابَةَ بِسَبْعِينَ وَمِائَةِ أَلْفٍ فَبَاعَهَا عَبْدُ اللَّه بِأَلْفِ أَلْفٍ وَسِتِّ مِائَةِ أَلْفٍ ثُمَّ قَامَ فَقَالَ: مَنْ كَانَ لَهُ عَلَى الزُّبَيْرِ شَيْءٌ فَلْيُوافِنَا بِالْغَابَةِ فَأَتَاهُ عَبْدُ اللَّه بْنُ جَعْفَرٍ وَكَانَ لَهُ عَلَى الزُّبَيْرِ أَرْبَعُ مِائَةِ أَلْفٍ فَقَالَ لِعَبْدِ اللَّه: إِنْ شِئْتُمْ تَرَكْتُهَا لَكُمْ؟ قَالَ عَبْدُ اللَّه: لاَ قَالَ: فَإِنْ شِئْتُمْ جَعَلْتُمُوهَا فِيمَا تُؤَخِّرُونَ إِنْ أَخَّرْتُمْ فَقَالَ عَبْدُ اللَّه: لاَ قَالَ: فَاقْطَعُوا لِي قِطْعَةً قَالَ عَبْدُ اللَّه: لَكَ مِنْ هَاهُنَا إِلَى هَاهُنَا. فَبَاعَ عَبْدُ اللَّه مِنْهَا فَقَضَى عَنْهُ دَيْنَهُ وَأَوْفَاهُ وَبَقِيَ مِنْهَا أَرْبَعَةُ أَسْهُمٍ وَنِصْفٌ فَقَدِمَ عَلَى مُعَاوِيَةَ وَعِنْدَهُ عَمْرُو بْنُ عُثْمَانَ وَالْمُنْذِرُ بْنُ الزُّبَيْرِ وَابْنُ زَمْعَةَ فَقَالَ لَهُ مُعَاوِيَةُ: كَمْ قُوِّمَتِ الْغَابَةُ؟ قَالَ: كُلُّ سَهْمٍ بِمِائَةِ أَلْفٍ. قَالَ: كَمْ بَقِيَ مِنْهَا؟ قَالَ: أَرْبَعَةُ أَسْهُمٍ وَنِصْفٌ. فَقَالَ الْمُنْذِرُ بْنُ الزُّبَيْرِ: قَدْ أَخَذْتُ مِنْهَا سَهْمًا بِمِائَةِ أَلْفٍ وَقَالَ عَمْرُو بْنُ عُثْمَانَ: قَدْ أَخَذْتُ مِنْهَا سَهْمًا بِمِائَةِ أَلْفٍ. وَقَالَ ابْنُ زَمْعَةَ: قَدْ أَخَذْتُ سَهْمًا بِمِائَةِ أَلْفٍ. فَقَالَ مُعَاوِيَةُ: كَمْ بَقِيَ مِنْهَا؟ قَالَ: سَهْمٌ وَنِصْفُ سَهْمٍ. قَالَ: قَدْ أَخَذْتُه بِخَمْسِينَ وَمِائَةِ أَلْفٍ. قَالَ: وَبَاعَ عَبْدُ اللَّه بْنُ جَعْفَرٍ نَصِيبَهُ مِنْ مُعَاوِيَةَ بِسِتِّمِائَةِ أَلْفٍ. فَلَمَّا فَرَغَ ابْنُ الزُّبَيْرِ مِنْ قَضَاءِ دَيْنِه قَالَ بَنُو الزُّبَيْرِ: اقْسِمْ بَيْنَنَا مِيرَاثَنَا. قَالَ: وَاللَّه لاَ أُقْسِمُ بَيْنَكُمْ حَتَّى أُنَادِيَ بِالْمَوْسِمِ أَرْبَعَ سِنِينَ: أَلاَ مَنْ كَانَ لَهُ عَلَى الزُّبَيْرِ دَيْنٌ فَلْيَأْتِنَا فَلْنَقْضِه. فَجَعَلَ كُلَّ سَنَةٍ يُنَادِي فِي الْمَوْسِمِ فَلَمَّا مَضَى أَرْبَعُ سِنِينَ قَسَمَ بَيْنَهُمْ وَدَفَعَ الثُّلُثَ. وَكَانَ لِلزُّبَيْرِ أَرْبَعُ نِسْوَةٍ فَأَصَابَ كُلَّ امْرَأَةٍ أَلْفُ أَلْفٍ وَمِئَتَا أَلْفٍ فَجَمِيعُ مَالِه خَمْسُونَ أَلْفَ أَلْفٍ وَمِئَتَا أَلْفٍ رَوَاهُ الْبُخَارِيُّ.

**202** (அபூஹுபைப் என்ற) அப்துல்லாஹ் இப்னு சுபைர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜமல்(ஒட்டகைப்) போரில் கலந்து கொண்டிருந்த என் தந்தை சுபைர் என்னை அழைத்தார்கள். அவர்கள் அருகில் வந்து நின்றேன். "மகனே! இன்று அநீதக்காரனோ அல்லது அநீதம் இழைக்கப் பட்டவனோ ஒருவன் கொல்லப்படுவான். அநீதம் இழைக்கப்பட்டவனாகவே நான் கொல்லப்பட்டு விடுவேன் என்று கருதுகிறேன். என் கவலையில் மிகப் பெரியது, என் கடனைப் பற்றித்தான். என் கடன் தீர்ந்து, நம் சொத்தில் ஏதேனும் மிஞ்சுமா?" என்று கேட்ட அவர்கள், "மகனே! நமக்குரியதை விற்றுவிடும். எனது கடனை அடைத்துவிடும்!" என்று கூறினார்கள். மூன்றில் ஒரு பங்கை வஸிய்யத் செய்த சுபைர் (ரழி), "அந்த மூன்றில் ஒரு பங்கை மூன்றாக்கி, அதில் ஒரு பங்கை உன் குழந்தைகளுக்குக் கொடு" என்று கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் கூறுகிறார்:

அப்துல்லாஹ்வின் குழந்தைகளில் சிலர், சுபைர் அவர்களின் மகன்களான ஹுபைப், அப்பாத் ஆகியோரின் வயதை ஒத்தவர்களாக இருந்தனர். அன்றைய நாளில் அப்துல்லாஹ்வுக்கு 9 ஆண் குழந்தைகளும், 9 பெண்குழந்தைகளும் இருந்தனர்.

மேலும் அப்துல்லாஹ் இப்னு சுபைர் (ரழி) தொடர்கிறார்கள்:

"மகனே! இதிலிருந்து கடன் (அடைக்க) நீ எதையும் பெற்றுக் கொள்ளவில்லை என்றால், இது குறித்து என் எஜமானனிடம் நீ உதவி கேள்" என்று (என் தந்தை) கூறினார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! (எஜமான் பற்றி) அவர் கூறியதை நான் அறியவில்லை. எனவே அவர்களிடம், "உங்கள் எஜமானன் யார்?" என்று கேட்டேன். "அல்லாஹ்" என்று கூறினார்கள். அவரின் கடனை நான்

நிறைவேற்ற சிரமம் அடையும் போதெல்லாம் "சுபைரின் எஜமானனே! அவரது கடனை அவரை விட்டு நீக்கு" என்று பிரார்த்தனை செய்வேன். அவன் நிறைவேற்றுவான். (அந்தப் போரில்) சுபைர் கொல்லப்பட்டார். தீனாரோ, திர்ஹமோ அவர் விட்டுச் செல்லவில்லை. ஆனால் சில நிலங்கள் இருந்தன. ஒரு காடு, மதீனாவில் 11 வீடுகள், பஸராவில் 2 வீடுகள், கூபாவில் ஒரு வீடு, எகிப்தில் ஒரு வீடு ஆகியவை அந்த நிலங்களில் அடங்கும்.

அவருக்கு இவ்வளவு அதிகமான கடன் ஏற்பட்டதன் காரணம், ஒருவர் அவரிடம் வந்து, தன் பொருளை அமானிதமாக வைப்பார். ஆனால் அவரிடம் சுபைர் "இல்லை. இது என்னிடம் கடனாக இருக்கட்டும். அமானிதப் பொருட்கள் என்னிடம் வீணாகி விடுவதை நான் பயப்படுகிறேன்" என்று கூறுவார்கள். அவர்கள் அறவே தலைமைப் பதவியில் இருந்ததில்லை. வரி வசூல் செய்யும் பொறுப்பையோ, வேறு எதையுமோ ஏற்றதுமில்லை. ஆனால், நபி (ஸல்) அவர்களுடனும் மற்றும் அபூபக்ர், உமர், உதுமான் ஆகியோருடனும் சேர்ந்து போரில் கலந்து கொண்டுள்ளார்.

அவரிடம் உள்ள கடனைக் கணக்கிட்டேன். 22 லட்சம் எனக் கண்டேன். அப்போது என்னை, ஹகீம் இப்னு ஹிஷாம் சந்தித்தார். "என் சகோதரர் மகனே! என் சகோதரருக்கு எவ்வளவு கடன்?" என்று கேட்டார். நான் (22 லட்சம் என்பதை) மறைத்து விட்டு, "1 லட்சம்" என்றேன். "அல்லாஹ்வின் மீது ஆணையாக! உங்களின் சொத்துக்கள் இதற்கு ஈடாக அமையாது" என்று ஹகீம் கூறினார். "22 லட்சம் எனக் கடன் இருந்தால் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டேன். "இதற்கு நீங்கள் சக்திபெற்றவர்களில்லை. இதற்கு நீங்கள் இயலாத நிலை அடைந்தால், என்னிடம் உதவி கேட்டுக் கொள்ளுங்கள்" என்று ஹகீம் கூறினார்.

(என் தந்தை) சுபைர் (ரழி) அவர்கள் அந்தக் காட்டை 1 லட்சத்து 70 ஆயிரத்துக்கு வாங்கி இருந்தார். அதை நான் 16 லட்சத்துக்கு (16 பங்குகளாக பிரித்து, பங்கு 1 லட்சம் என) விற்றேன். நான் சென்று "சுபைர் மீது எவருக்கேனும் எதுவும் கடன் இருந்தால், காட்டைப் பகரமாக எங்களிடம் பெற்றுக் கொள்ளட்டும்" என்று அறிவித்தேன்.

அப்துல்லாஹ் இப்னு ஜஃபர் (ரழி) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அவருக்கு சுபைர் மீது 4 லட்சம் கடன் இருந்தது. "நீங்கள் விரும்பினால் உங்களுக்கு அதை விட்டு விடுகிறேன்" என்று அவர்கள் கூறினார்கள். நான், "வேண்டாம்" என்றேன். நீங்கள் தர (நினைக்க) கூடியவர்களில் "நீங்கள் விரும்பினால், இறுதியாக எனக்கு அதில் தாருங்கள்" என்று கூறினார். "வேண்டாம்! இப்போதே பெற்றுக் கொள்ளுங்கள்" என்றேன். "அப்படியானால் எனக்கு ஒரு பகுதி தாருங்கள்" என்று கூறினார். "இதிலிருந்து இதுவரை உங்களுக்கு" என நான் கூறினேன்.

அதிலிருந்து விற்று, அவரின் கடனை அடைத்து, அதை நிறைவேற்றி விட்டேன். மீதம் 4½ பங்கு இருந்தது. முஆவியா அவர்களின் அருகே சென்றேன். அவர்களிடம் அம்ரு இப்னு உஸ்மான், முன்திர் இப்னு சுபைர், இப்னு ஸம்ஆ ஆகியோர் இருந்தனர். "காட்டை எப்படி மதிப்பீடு செய்தீர்?" என்று முஆவியா என்னிடம் கேட்டார். "ஒவ்வொரு பங்கும் ஒரு லட்சம் என்றேன். எவ்வளவு பங்கு மீதமுள்ளது?" என முஆவியா கேட்டார். "4½ பங்கு" என்று கூறினேன்.

"1 லட்சம் தந்து ஒரு பங்கை நான் எடுத்துக் கொள்கிறேன்" என்று முன்திர் இப்னு சுபைர் கூறினார். "ஒரு லட்சம் தந்து ஒரு பங்கை நான் எடுத்துக் கொள்கிறேன்" என் அம்ரு இப்னு உஸ்மான் கூறினார். "ஒரு லட்சம் தந்து நானும் ஒரு பங்கை எடுத்துக் கொள்கிறேன்" என இப்னு ஸம்ஆ கூறினார். "மீதம் எவ்வளவு உள்ளது?" என முஆவியா கேட்டார். "1½ பங்கு" என்று கூறினேன். "அதை ஒன்றறை லட்சத்திற்கு நான் எடுத்துக் கொள்கிறேன்" என்று முஆவியா கூறினார். அப்துல்லா இப்னு ஜஃபர் அவர்களும், முஆவியா அவர்களிடம் தன் பங்கை 6 லட்சத்திற்கு விற்றார்.

இவ்வாறாக நான் கடனை நிறைவேற்றி முடித்தபோது,சுபைரின் மகன்கள் (என் சகோதரர்கள்) "எங்களுக்குரிய சொத்தை எங்களுக்குப் பங்கிடு" என்று கேட்டார்கள். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களிடையே இப்போது பங்கிடமாட்டேன். நான்கு வருடங்களுக்குக் கடனாளிக்கு அறிவிப்புச் செய்வேன் (அதன் பின் பிரிப்பேன்)" என்று கூறினேன். "சுபைரின் மீது எவரேனும் (கொடுக்கல், வாங்கல்) எதுவும் இருந்தால் எங்களிடம் வரட்டும், அதை நாங்கள் நிறைவேற்றுகிறோம்" என்று (அறிவிப்புக்) கூறினேன். ஒவ்வொரு வருடமும் கடனாளிகள் விஷயமாக அறிவித்தேன். நான்கு வருடம் முடிந்த போது, அவர்களிடையே பங்கு வைத்தேன். மூன்றில் ஒரு பங்கு வஸிய்யத்துக்கு ஒதுக்கினேன். சுபைர் அவர்களுக்கு நான்கு மனைவியர் இருந்தனர். ஒவ்வொரு மனைவியருக்கும் 12 லட்சம் கிடைத்தது. அவரின் சொத்து முழுதும், 5 கோடியே 2 லட்சம் மதிப்புக்கு இருந்தது. **(புகாரி:3129)**

## ٢٦ - باب تحريم الظلم والأمر برد المظالم

## பாடம் : 26 - அநீதம் புரிதல் கூடாது. அநீதமாக வந்த பொருட்களை திருப்பித் தருதல்.

قَالَ اللَّهُ تَعَالَى: مَا لِلظَّالِمِينَ مِنْ حَمِيمٍ وَلاَ شَفِيعٍ يُطَاعُ. وَقَالَ تَعَالَى: وَمَا لِلظَّالِمِينَ مِنْ نَصِيرٍ.

وَأَمَّا الأَحَادِيثُ فَمِنْهَا حَدِيثُ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ الْمُتَقَدِّمُ فِي آخِرِ بَابِ الْمُجَاهَدَةِ.

**அல்லாஹ் கூறுகிறான் :** *அநீதம் செய்வோருக்கு, பாதுகாவலரோ, ஏற்கப்படுகின்ற பரிந்துரை செய்பவரோ இல்லை... (40:18)*

*"... அநீதக்காரர்களுக்கு உதவியாளர் இல்லை." (22:71)*

٢٠٣ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: "اتَّقُوا الظُّلْمَ فَإِنَّ الظُّلْمَ ظُلُمَاتٌ يَوْمَ الْقِيَامَةِ وَاتَّقُوا الشُّحَّ فَإِنَّ الشُّحَّ أَهْلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ: حَمَلَهُمْ عَلَى أَنْ سَفَكُوا دِمَاءَهُمْ وَاسْتَحَلُّوا مَحَارِمَهُمْ" رَوَاهُ مُسْلِمٌ.

**203** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அநீதம் செய்வதை அஞ்சிக் கொள்ளுங்கள். அநீதம் என்பது, மறுமை நாளின் இருள்களில் உள்ளதாகும். கஞ்சத்தனத்தை அஞ்சிக் கொள்ளுங்கள். கஞ்சத்தனம் தான், உங்களுக்கு முன் இருந்தவர்களை அழித்தது. மேலும் அது (கொலை மூலம்) இரத்தங்களை ஓட்டிடவும், தடுக்கப்பட்டதை ஆகுமாக்கிக் கொள்ளவும் அவர்களை தூண்டியது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2578)**

٢٠٤ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ: قَالَ: "لَتُؤَدُّنَّ الْحُقُوقَ إِلَى أَهْلِهَا يَوْمَ الْقِيَامَةِ حَتَّى يُقَادَ لِلشَّاةِ الْجَلْحَاءِ مِنَ الشَّاةِ الْقَرْنَاءِ" رَوَاهُ مُسْلِمٌ.

**204** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உரிமைகளை அதற்குரியவர்களிடம் மறுமையில் நிறைவேற்றித் தரப்படும். எதுவரை எனில், இறுதியில் கொம்பில்லா ஆடு, கொம்புள்ள ஆட்டிடம் (அது முன்பு முட்டி இருந்தால்) பழி வாங்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2582)**

٢.٥ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: كُنَّا نَتَحَدَّثُ عَنْ حَجَّةِ الْوَدَاعِ وَالنَّبِيُّ ﷺ بَيْنَ أَظْهُرِنَا وَلاَ نَدْرِي مَا حَجَّةُ الْوَدَاعِ حَتَّى حَمِدَ اللَّهَ رَسُولُ اللَّهِ ﷺ وَأَثْنَى عَلَيْهِ ثُمَّ ذَكَرَ الْمَسِيحَ الدَّجَّالَ فَأَطْنَبَ فِي ذِكْرِهِ وَقَالَ:" مَا بَعَثَ اللَّهُ مِنْ نَبِيٍّ إِلاَّ أَنْذَرَهُ أُمَّتَهُ أَنْذَرَهُ نُوحٌ وَالنَّبِيُّونَ مِنْ بَعْدِهِ وَإِنَّهُ إِنْ يَخْرُجْ فِيكُمْ فَمَا خَفِيَ عَلَيْكُمْ مِنْ شَأْنِهِ فَلَيْسَ يَخْفَى عَلَيْكُمْ. إِنَّ رَبَّكُمْ لَيْسَ بِأَعْوَرَ وَإِنَّهُ أَعْوَرُ عَيْنِ الْيُمْنَى كَأَنَّ عَيْنَهُ عِنَبَةٌ طَافِيَةٌ! أَلاَ إِنَّ اللَّهَ حَرَّمَ عَلَيْكُمْ دِمَاءَكُمْ وَأَمْوَالَكُمْ كَحُرْمَةِ يَوْمِكُمْ هَذَا فِي شَهْرِكُمْ هَذَا أَلاَ هَلْ بَلَّغْتُ؟" قَالُوا: نَعَمْ. قَالَ:" اللَّهُمَّ اشْهَدْ" ثَلاَثًا." وَيْلَكُمْ أَوْ وَيْحَكُمْ أُنْظُرُوا: لاَ تَرْجِعُوا بَعْدِي كُفَّارًا يَضْرِبُ بَعْضُكُمْ رِقَابَ بَعْضٍ" رَوَاهُ الْبُخَارِيُّ وَرَوَى مُسْلِمٌ بَعْضَهُ.

**205** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இறுதி ஹஜ்ஜின் போது நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். அங்கு எங்களிடையே நபி (ஸல்) அவர்களும் இருந்தார்கள். அது இறுதி ஹஜ் என்று நாங்கள் அறியவில்லை. அது சமயம் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். பின்பு தஜ்ஜால் பற்றிக் கூறினார்கள். அவனைப் பற்றிக் கூறும் போது, நீண்ட நேரம் எடுத்துக் கொண்டார்கள். "அல்லாஹ் அனுப்பிய எந்த நபியும், தன் சமுதாயத்திடம் தஜ்ஜாலைப் பற்றி எச்சரிக்காமல் இருந்ததில்லை. நூஹ் நபியும், அவருக்குப் பின் வந்த நபிமார்களும் அவனைப் பற்றி எச்சரித்தார்கள். உங்களிடையே அவன் வெளியேறினால், உங்களிடம் அவன் தன்னிடமிருந்து எதை மறைத்தாலும், உங்களிடம் அது மறைந்துவிடாது. நிச்சயமாக உங்களின் இறைவன் குருடன் அல்லன். (ஆனால்) தஜ்ஜாலின் வலது கண் குருடாகும். அவனது கண் பெரிய திராட்சையைப் போல் இருக்கும்.

அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக, அல்லாஹ் உங்கள் மீது உங்களின் இரத்தத்தையும், உங்களின் சொத்துக்களையும் (உங்களில் சிலர் சிலரிடமிருந்து அவைகளைப் பறித்துக் கொள்வதை) இந்த நாளிலும், இந்த ஊரிலும், உங்களின் இந்த மாதத்திலும் தடை செய்தது போல் தடை செய்து விட்டான் அறிந்து கொள்ளுங்கள். நான் எடுத்துக் கூறிவிட்டேனா?" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "ஆம்" என்று நபித்தோழர்கள் கூறினர். "இறைவா! நீ சாட்சியாக இரு" என மூன்று முறை கூறி விட்டு, "உங்களுக்கு கேடு உண்டாகட்டும்! நீங்கள் எதிர்பார்த்திருங்கள். எனக்குப்பின், உங்களில் சிலர் சிலரின் பிடரிகளில் அடித்தவர்களாக, இறை மறுப்பாளர்களாகத் திரும்பி விடாதீர்கள்" என்றும் கூறினார்கள். (இதன் பின் தான் இது 'இறுதி ஹஜ்' என்று புரிந்தோம்)

**(புகாரி:4402. முஸ்லிமில் (169/100) சில வாசகம் மட்டும் உள்ளது)**

٢.٦ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" مَنْ ظَلَمَ قِيدَ شِبْرٍ مِنَ الأَرْضِ طَوَّقَهُ مِنْ سَبْعِ أَرَضِينَ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**206** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிலத்தில் ஒரு சாண் அளவுக்கு (ப்பிறரிடம் இருந்து பறித்து) ஒருவன் அநீதம் செய்தால், (அதுபோன்ற) ஏழு நிலங்களை (மாலையாக மறுமையில்) அவன் (கழுத்தில்) போடப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2452. முஸ்லிம்:1612)**

٢.٧ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" إِنَّ اللَّهَ لَيُمْلِي لِلظَّالِمِ فَإِذَا أَخَذَهُ لَمْ يُفْلِتْهُ" ثُمَّ قَرَأَ: وَكَذَلِكَ أَخْذُ رَبِّكَ إِذَا أَخَذَ الْقُرَى وَهِيَ ظَالِمَةٌ إِنَّ أَخْذَهُ أَلِيمٌ شَدِيدٌ مُتَّفَقٌ عَلَيْهِ.

**207** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக! அல்லாஹ் அநீதக்காரனுக்கு (தண்டனை தருவதில்) தாமதம் செய்வான். பிறகு அவனை, அவன் பிடித்தால் அவனை விடவும் மாட்டான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, பின்வரும் வசனத்தை ஓதினார்கள்.

***‘இவ்வாறே உம் இறைவனின் பிடி இருக்கும். அநீதம் செய்து கொண்டிருக்கக் கூடிய ஊர்களை அவன் பிடித்தால், அவனது பிடி நோவினையாகவும், கடுமையானதாகவும் இருக்கும்.’ (11:102)***

**(புகாரி:4686. முஸ்லிம்:2583)**

٢٠٨ - وَعَنْ مُعَاذ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: بَعَثَنِي رَسُولُ اللّٰه ﷺ فَقَالَ:" إنَّك تَأْتِي قَوْمًا منْ أَهْلِ الْكتَاب فَادْعُهُمْ إِلَى شَهَادَة أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللّٰهُ وَأَنِّي رَسُولُ اللّٰه فَإِنْ هُمْ أَطَاعُوا لذَلكَ فَأَعْلمْهُمْ أَنَّ اللّٰهَ قَدْ افْتَرَضَ عَلَيْهِمْ خَمْسَ صَلَوَات في كُلِّ يَوْم وَلَيْلَة فَإِنْ هُمْ أَطَاعُوا لذَلكَ فَأَعْلمْهُمْ أَنَّ اللّٰهَ قَدْ افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً تُؤْخَذُ منْ أَغْنيَائهمْ فَتُرَدُّ عَلَى فُقَرَائهمْ فَإِنْ هُمْ أَطَاعُوا لذَلكَ فَإِيَّاكَ وَكَرَائمَ أَمْوَالهمْ. وَاتَّقِ دَعْوَةَ الْمَظْلُومِ فَإِنَّهُ لَيْسَ بَيْنَهَا وَبَيْنَ اللّٰه حجَابٌ" مُتَّفَقٌ عَلَيْه.

**208** முஆத் பின் ஜபல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என்னை (யமன் நாட்டின் கவர்னராக) அனுப்பினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், “வேதக்காரர்களான கூட்டத்தாரிடம் நீர் செல்கிறீர். அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை எனவும், என்னை அல்லாஹ்வின் தூதர் எனவும் சாட்சி கூற அவர்களை நீ அழைத்திடும்! இதற்கு அவர்கள் கட்டுப்பட்டால், ‘நிச்சயமாக, அல்லாஹ் அவர்கள் மீது ஒவ்வொரு நாளும் இரவு - பகலிலும் ஐந்து நேரத் தொழுகைகளைக் கடமையாக்கி உள்ளான் என அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பீராக! இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டுவிட்டால், ‘நிச்சயமாக, அல்லாஹ் அவர்கள் மீது, அவர்களில் பணக்காரர்களிடமிருந்து எடுத்து, அவர்களில் ஏழைகளுக்குக் கொடுக்கப்பட ஜகாத்தைக் கடமையாக்கி உள்ளான்’ என்பதை அவர்களிடம் அறிவிப்பீராக! இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால், அவர்களின் பொருட்களில் நல்லவற்றை எடுத்துக் கொள்வதற்கு உம்மிடம் எச்சரிக்கிறேன். அநீதம் செய்யப்பட்டவனின் சாபத்திற்கு அஞ்சுவீராக! நிச்சயமாக அந்தச் சாபத்திற்கும், அல்லாஹ்வுக்கு மிடையே எத்தகைய திரையும் இல்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:1496. முஸ்லிம்:19)**

٢٠٩ - وَعَنْ أَبِي حُمَيْد عَبْد الرَّحْمَن بْن سَعْد السَّاعديِّ رَضيَ اللّٰهُ عَنْهُ قَالَ: اسْتَعْمَلَ النَّبيُّ ﷺ رَجُلاً منْ الأَزْد يُقَالُ لَهُ ابْنُ اللُّتْبيَّة عَلَى الصَّدَقَة فَلَمَّا قَدمَ قَالَ: هَذَا لَكُمْ وَهَذَا أُهْديَ إِلَيَّ فَقَامَ رَسُولُ اللّٰه ﷺ عَلَى الْمنْبَر فَحَمدَ اللّٰهَ وَأَثْنَى عَلَيْه ثُمَّ قَالَ:" أَمَّا بَعْدُ فَإِنِّي أَسْتَعْمَلُ الرَّجُلَ منْكُمْ عَلَى الْعَمَل ممَّا وَلاَني اللّٰهُ فَيَأْتي فَيَقُولُ: هَذَا لَكُمْ وَهَذَا هَديَّةٌ أُهْديَتْ إِلَيَّ! أَفَلاَ جَلَسَ في بَيْت أَبيه أَوْ أُمّه حَتَّى تَأْتيَهُ هَديَّتُهُ إِنْ كَانَ صَادقًا؟ وَاللّٰه لاَ يَأْخُذُ أَحَدٌ منْكُمْ شَيْئًا بغَيْر حَقّه إلاَّ لَقيَ اللّٰهَ تَعَالَى يَحْملُهُ يَوْمَ الْقيَامَة! فَلاَ أَعْرفَنَّ أَحَدًا منْكُمْ لَقيَ اللّٰهَ يَحْملُ بَعيرًا لَهُ رُغَاءٌ أَوْ بَقَرَةً لَهَا خُوَارٌ أَوْ شَاةً تَيْعَرُ". ثُمَّ رَفَعَ يَدَيْه حَتَّى رُئيَ بَيَاض إبطَيْه فَقَالَ:" اللَّهُمَّ هَلْ بَلَّغْت" ثَلاَثًا. مُتَّفَقٌ عَلَيْه.

**209** (அபூஹுமைத் என்ற) அப்துர்ரஹ்மான் இப்னு ஸஃது ஸாஇதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அஸ்தி கூட்டத்தைச் சார்ந்த ஒருவரை, ஜகாத் வசூல் செய்யும் அதிகாரியாக நபி (ஸல்) அவர்கள் நியமித்தார்கள். “இப்னு லுத்பிய்யா” என்பது அவர் பெயர். வசூல் முடித்துவிட்டுத் திரும்பிய அவர், நபி (ஸல்) அவர்களிடம், “இது (பொது சொத்துக்காக) உங்களுக்குரியது. இது எனக்கு அன்பளிப்பாகத் தரப்பட்டது” என்று கூறினார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் மேடையில் ஏறி அல்லாஹ்வைப்

புகழ்ந்தார்கள். பின், “அல்லாஹ்எனக்கு வழங்கிய பொறுப்புகளில் ஒரு காரியத்துக்கு உங்களில் ஒருவரை நான் அதிகாரியாக நியமித்து இருந்தேன். அவர் என்னிடம் வந்து, இது உங்களுக்கு, இது எனக்கு அன்பளிப்பாக தரப்பட்டது” என்று கூறினார். அவர் கூறுவது உண்மையாக இருந்தால் அவர் தன் தந்தை, தாய் வீட்டில் உட்கார்ந்திருந்தால், இந்த அன்பளிப்பு கிடைத்திருக்குமா? அல்லாஹ்வின் மீது சத்தியமாக, உங்களில் ஒருவர் தமக்கு உரிமையில்லாத எதையும் எடுக்க வேண்டாம். (அப்படி எடுத்தால்) மறுமை நாளில் அதைச் சுமந்தவராகவே அல்லாஹ்வைச் சந்திப்பார். உங்களில் எவரையும் அவர், மறுமையில் சப்தமிடும் ஒட்டகத்தையோ, சப்தமிடும் மாட்டையோ, சப்தமிடும் ஆட்டையோ சுமந்து வந்த நிலையில் அல்லாஹ்வை சந்தித்தீர்கள் என்பதை நான் அறிய வேண்டாம்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, பின்பு தன் கைகளை அவர்களின் அக்குள் (கமுக்கட்டு) வெண்மை தெரியும் அளவுக்கு உயர்த்திவிட்டு, “இறைவா! நான் எடுத்துக் கூறிவிட்டேன்” என்று மூன்று முறை கூறினார்கள். **(புகாரி:6979. முஸ்லிம்:1832)**

٢١٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " مَنْ كَانَتْ عِنْدَهُ مُظْلَمَةٌ لِأَخِيهِ مِنْ عِرْضِهِ أَوْ مِنْ شَيْءٍ فَلْيَتَحَلَّلْهُ مِنْهُ الْيَوْمَ قَبْلَ أَلاَّ يَكُونَ دِينَارٌ وَلاَ دِرْهَمٌ: إِنْ كَانَ لَهُ عَمَلٌ صَالِحٌ أُخِذَ مِنْهُ بِقَدْرِ مَظْلَمَتِهِ وَإِنْ لَمْ يَكُنْ لَهُ حَسَنَاتٌ أُخِذَ مِنْ سَيِّئَاتِ صَاحِبِهِ فَحُمِلَ عَلَيْهِ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**210** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவனிடம் தன் சகோதரனுக்குரிய கண்ணியத்திலோ அல்லது வேறு பொருளிலோ அநீதம் செய்து இருந்தால், இதற்காக இன்றே, தீனாரும், திர்ஹமும் இல்லாத (அந்த மறுமை) நாள் வருவதற்கு முன் தன்னைத் தூய்மையாக்கிக் கொள்ளட்டும்! அவனிடம் நற்செயல் இருந்தால், அவன் அநீதமிழைத்தலுக்கு ஏற்ப அவனிடம் எடுத்து, (அவனது சகோதரனிடம் கொடுக்கப்படும்). அவனிடம் நன்மைகள் இல்லை என்றால், அவனது சகோதரனிடம் தீமைகள் இருந்தால், அந்தத் தீமைகள் எடுக்கப்படும். இவனிடம் அது தரப்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2449)**

٢١١ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " الْمُسْلِمُ مَنْ سَلِمَ الْمُسْلِمُونَ مِنْ لِسَانِهِ وَيَدِهِ وَالْمُهَاجِرُ مَنْ هَجَرَ مَا نَهَى اللَّهُ عَنْهُ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**211** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவனின் நாவிலிருந்தும், அவனின் கையிலிருந்தும் முஸ்லிம்கள் அமைதி பெற்றுவிட்டால், அவனே (சிறந்த) முஸ்லிமாவான். அல்லாஹ் தடுத்துள்ளவைகளை விலக்கிக்கொள்பவனே ‘முஹாஜிர்’ ஆவான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:10. முஸ்லிம்:40)**

٢١٢ – وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كَانَ عَلَى ثَقْلِ النَّبِيِّ ﷺ رَجُلٌ يُقَالُ لَهُ كِرْكِرَةُ فَمَاتَ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " هُوَ فِي النَّارِ". فَذَهَبُوا يَنْظُرُونَ إِلَيْهِ فَوَجَدُوا عَبَاءَةً قَدْ غَلَّهَا: رَوَاهُ الْبُخَارِيُّ.

**212** அப்துல்லாஹ் இப்னு இப்னுல் அம்ரு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் சொத்துப் பாதுகாப்பாளராக ஒருவர் இருந்தார். அவர் பெயர் ‘கிர்கிரா’ என்று கூறப்படும். “அவர் இறந்து விட்டார். அவர் நரகத்தில் உள்ளார்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவரைப் பார்க்க மக்கள் சென்றார்கள். அப்போது அவரிடம், அவர் திருடி வைத்திருந்த ஒரு நீண்ட மேலங்கியைப் பெற்றுக் கொண்டார்கள். **(புகாரி:3074)**

٢١٣ - وَعَنْ أَبِي بَكْرَةَ نُفَيْعِ بْنِ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" إِنَّ الزَّمَانَ قَدْ اسْتَدَارَ كَهَيْئَتِهِ يَوْمَ خَلَقَ اللَّهُ السَّمَاوَاتِ وَالأَرْضَ: السَّنَةُ اثْنَا عَشَرَ شَهْرًا مِنْهَا أَرْبَعَةٌ حُرُمٌ: ثَلاَثٌ مُتَوَالِيَاتٌ ذُو الْقَعْدَةِ وَذُو الْحِجَّةِ وَالْمُحَرَّمُ وَرَجَبُ مُضَرَ الَّذِي بَيْنَ جُمَادَى وَشَعْبَانَ أَيُّ شَهْرٍ هَذَا؟" قُلْنَا: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ فَسَكَتَ حَتَّى ظَنَنَّا أَنَّهُ سَيُسَمِّيهِ بِغَيْرِ اسْمِهِ ; قَالَ:" أَلَيْسَ ذَا الْحِجَّةِ"؟ قُلْنَا: بَلَى. قَالَ:" فَأَيُّ بَلَدٍ هَذَا؟" قُلْنَا: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ فَسَكَتَ حَتَّى ظَنَنَّا أَنَّهُ سَيُسَمِّيهِ بِغَيْرِ اسْمِهِ. قَالَ:" أَلَيْسَ الْبَلْدَةَ"؟ قُلْنَا: بَلَى. قَالَ:" فَأَيُّ يَوْمٍ هَذَا؟" قُلْنَا: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ فَسَكَتَ حَتَّى ظَنَنَّا أَنَّهُ سَيُسَمِّيهِ بِغَيْرِ اسْمِهِ. فَقَالَ:" أَلَيْسَ يَوْمَ النَّحْرِ"؟ قُلْنَا: بَلَى. قَالَ:" فَإِنَّ دِمَاءَكُمْ وَأَمْوَالَكُمْ وَأَعْرَاضَكُمْ عَلَيْكُمْ حَرَامٌ كَحُرْمَةِ يَوْمِكُمْ هَذَا فِي بَلَدِكُمْ هَذَا فِي شَهْرِكُمْ هَذَا وَسَتَلْقَوْنَ رَبَّكُمْ فَيَسْأَلُكُمْ عَنْ أَعْمَالِكُمْ أَلاَ فَلاَ تَرْجِعُوا بَعْدِي كُفَّارًا يَضْرِبُ بَعْضُكُمْ رِقَابَ بَعْضٍ أَلاَ لِيُبَلِّغْ الشَّاهِدُ الْغَائِبَ فَلَعَلَّ بَعْضَ مَنْ يَبْلُغُهُ أَنْ يَكُونَ أَوْعَى لَهُ مِنْ بَعْضِ مَنْ سَمِعَهُ" ثُمَّ قَالَ:" أَلاَ هَلْ بَلَّغْتُ"؟ قُلْنَا: نَعَمْ. قَالَ:" اللَّهُمَّ اشْهَدْ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**213** (அபூபக்ரா என்ற) நுஃபய்உ இப்னு ஹாரிஸ்(ரழி) அறிவிக்கின்றார்கள்:

“வானங்கள், பூமியை அல்லாஹ் படைத்த நாளில் இருந்த தோற்றம் போன்றே, காலம் சூழன்று கொண்டிருக்கிறது. ஒரு ஆண்டு, பனிரெண்டு மாதங்களாகும். அவைகளில் நான்கு மாதம் சங்கை மிக்கதாகும். அவைகளில் மூன்று தொடர்ச்சியாக உள்ளதாகும். அவை துல்கஹ்தா, துல்ஹஜ், முஹர்ரம் மற்றும் ஜமாதில் ஆகிர், ஷஃபான் இடையே உள்ள முழர் கூட்டத்தினரால் போற்றப்படும் சிறப்பான ‘ரஜப்’ மாதம் ஆகும்” என்று கூறிய, நபி (ஸல்) அவர்கள், “இது எந்த மாதம்?” என்று கேட்டார்கள். “அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்” என்று நாங்கள் கூறினோம். அதற்கு வேறொரு பெயரை அவர்கள் சூட்டுவார்கள் என்று நாங்கள் எண்ணும் அளவுக்கு நபி (ஸல்) அவர்கள் அமைதியாக இருந்தார்கள்.

“இது துல்ஹஜ் மாதமில்லையா?” என்று கேட்டார்கள். நாங்கள் “ஆம்” என்றோம். இது எந்த ஊர்? என்று கேட்டார்கள். “அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்” என்று கூறினோம். (அப்போதும்) அதற்கு வேறு பெயரை சூட்டி விடுவார்களோ என நாங்கள் எண்ணும் அளவுக்கு அமைதியாக இருந்தார்கள். “இது மக்கா இல்லையா?” என்று கேட்டார்கள். “ஆம்” என்று கூறினோம். “இன்று என்ன நாள்?” என்று கேட்டார்கள். “அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்” என்று கூறினோம். இதற்கு வேறு பெயர் வைப்பார்கள் என நாங்கள் எண்ணும் அளவுக்கு அமைதியாக இருந்தார்கள். “இது நஹ்ரு (துல்ஹஜ் 10ஆம்) நாள் இல்லையா?” என்று கேட்டார்கள். “ஆம்” என்றோம்.

“நிச்சயமாக, உங்களின் இரத்தமும், உங்களின் சொத்துக்களும், உங்களின் கண்ணியமும், (உங்களில் சிலர் சிலரிடமிருந்து அவைகளைப் பறிப்பது), இம்மாதத்தில், உங்களது இவ்வூரில், இந்நாளில் (போர்கள்-சண்டைகளை விட்டும்) எவ்வாறு விலக்கப்பட்டுள்ளதோ, அவ்வாறு உங்கள் மீது விலக்கப்பட்டுள்ளது. பின்னர், நீங்கள் உங்கள் இறைவனைச் சந்திப்பீர்கள். எனக்குப் பின்னர் உங்களில் சிலர், சிலரின் பிடரியில் அடித்தவராக, இறைமறுப்பாளர்களாகி விடாதீர்கள். அறிந்து கொள்ளுங்கள். (இதை) இங்கு வந்தவர், வராதவருக்கு எடுத்துக் கூறட்டும். இதை (நேரில்) கேட்டவர்களில் சிலரை விடவும் இதை (ப்பிறர் மூலம்) அறிந்து கொண்டவர்கள் மிகப் பேணுதலாக இருக்கக்கூடும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, “அறிந்து கொள்ளுங்கள். நான் எடுத்துக் கூறிவிட்டேனா? எடுத்துக் கூறிவிட்டேனா?” என்று இரண்டு முறை கேட்டார்கள். “ஆம்” என்றோம். “இறைவா! நீ சாட்சியாக இரு” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3197. முஸ்லிம்:1679)**

٢١٤ - وَعَنْ أَبِي أُمَامَةَ إِيَاس بْنِ ثَعْلَبَةَ الْحَارِثِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" مَنْ اقْتَطَعَ حَقَّ امْرِئٍ مُسْلِمٍ بِيَمِينِهِ فَقَدْ أَوْجَبَ اللَّهُ لَهُ النَّارَ وَحَرَّمَ عَلَيْهِ الْجَنَّةَ". فَقَالَ رَجُلٌ: وَإِنْ كَانَ شَيْئًا يَسِيرًا يَا رَسُولَ اللَّهِ؟ فَقَالَ" وَإِنْ قَضِيبًا مِنْ أَرَاكٍ" رَوَاهُ مُسْلِمٌ.

**214** அபூஉமாமா என்ற இயாஸ் இப்னு ஸஃலபா அல்ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு முஸ்லிமின் உரிமையை தன் வலக்கரத்தால் ஒருவன் எடுத்தால், அவனுக்கு அல்லாஹ் நரகத்தைக் கட்டாயமாக்கி விட்டான். அவன் மீது சொர்க்கத்தைத் தடை செய்து விட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! அது சாதாரணமாக இருந்தாலுமா?” என்று ஒருவர் கேட்டார். “ஒரு ‘அராக்’ மரக்குச்சியாக இருந்தாலும் தான்” என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:137)**

٢١٥ - وَعَنْ عَدِيِّ بْنِ عَمِيرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" مَنْ اسْتَعْمَلْنَاهُ مِنْكُمْ عَلَى عَمَلٍ فَكَتَمَنَا مِخْيَطًا فَمَا فَوْقَهُ كَانَ غُلُولاً يَأْتِي بِهِ يَوْمَ الْقِيَامَةِ!" فَقَامَ إِلَيْهِ رَجُلٌ أَسْوَدُ مِنْ الأَنْصَارِ - كَأَنِّي أَنْظُرُ إِلَيْهِ - فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ اقْبَلْ عَنِّي عَمَلَكَ قَالَ:" وَمَا لَكَ"؟. قَالَ: سَمِعْتُكَ تَقُولُ كَذَا وَكَذَا. قَالَ:" وَأَنَا أَقُولُ الآنَ: مَنْ اسْتَعْمَلْنَاهُ عَلَى عَمَلٍ فَلْيَجِئْ بِقَلِيلِهِ وَكَثِيرِهِ فَمَا أُوتِيَ مِنْهُ أَخَذَ وَمَا نُهِيَ عَنْهُ انْتَهَى". رَوَاهُ مُسْلِمٌ.

**215** அதீஇப்னு உமய்ரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவரை (பொருட்களை பாதுகாக்கும்) ஒரு பொறுப்புக்குப் பணியாளராக நாம் நியமித்து, அவர் ஓர் ஊசியையோ, அதற்கும் மேல் உள்ளதையோ நம்மிடம் மறைத்துவிட்டால், இது மோசடியாகும். இதை மறுமை நாளில் அவர் கொண்டு வருவார்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது மதீனாவாசிகளில் ஒரு கறுப்பு நிறத்தவர் - (அவரை இப்போது நான் பார்ப்பது போல் உள்ளது - அறிவிப்பாளர்). அவர் எழுந்து, “இறைத்தூதர் அவர்களே! நீங்கள் எனக்கு தந்த பொறுப்பை என்னிடமிருந்து (திரும்ப) ஏற்றுக் கொள்ளுங்கள்” என்றார். “உனக்கு என்ன நேர்ந்தது?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “இவ்வாறு நீங்கள் கூறுவதை உங்களிடம் கேட்டேனே!” என்று கூறினார். “நான் இப்போதும் அதையே கூறுகிறேன். பொறுப்புக்குப் பணியாளராக ஒருவரை நாம் நியமித்தால், அவர் குறைவாக இருந்தாலும், அதிகமாக இருந்தாலும் கொண்டு வரட்டும். அதிலிருந்து கொடுக்கப்பட்டதை எடுத்துக் கொள்வார். அதில் தடுக்கப்பட்டதை விலக்கிக் கொள்வார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1833)**

٢١٦ - وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: لَمَّا كَانَ يَوْمُ خَيْبَرَ أَقْبَلَ نَفَرٌ مِنْ أَصْحَابِ النَّبِيِّ ﷺ فَقَالُوا: فُلاَنٌ شَهِيدٌ وَفُلاَنٌ شَهِيدٌ حَتَّى مَرُّوا عَلَى رَجُلٍ فَقَالُوا: فُلاَنٌ شَهِيدٌ. فَقَالَ النَّبِيُّ ﷺ:" كَلاَّ إِنِّي رَأَيْته فِي النَّارِ فِي بُرْدَةٍ غَلَّهَا - أَوْ عَبَاءَةٍ -" رَوَاهُ مُسْلِمٌ.

**216** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கைபர் போர் சமயம், நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒரு கூட்டத்தினர், நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். “இன்னார் (போரில்) கொல்லப்பட்டார். இன்னார் கொல்லப்பட்டார்” என்று கூறினார்கள். இறுதியாக அவர்கள் கடந்து செல்லும் போது, (ஒருவரைக் குறிப்பிட்டு) “இவரும் (போரில்) ஷஹீதாகி விட்டார்” என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், “அப்படியல்ல, அவர் திருடிய ஒரு போர்வை அல்லது மேலங்கி விஷயமாக நரகில் அவரைக் காண்கிறேன்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:114)**

٢١٧ - وَعَنْ أَبِي قَتَادَةَ الْحَارِثِ بْنِ رِبْعِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ أَنَّهُ قَامَ فِيهِمْ فَذَكَرَ لَهُمْ أَنَّ الْجِهَادَ فِي سَبِيلِ اللَّهِ وَالأِيمَانَ بِاللَّهِ أَفْضَلُ الأَعْمَالِ فَقَامَ رَجُلٌ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ أَرَأَيْتَ إِنْ قُتِلْتُ فِي سَبِيلِ اللَّهِ أَتُكَفَّرُ عَنِّي خَطَايَايَ؟ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ: " نَعَمْ إِنْ قُتِلْتَ فِي سَبِيلِ اللَّهِ وَأَنْتَ صَابِرٌ مُحْتَسِبٌ مُقْبِلٌ غَيْرُ مُدْبِرٍ" ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " كَيْفَ قُلْتَ"؟ قَالَ: أَرَأَيْتَ إِنْ قُتِلْتُ فِي سَبِيلِ اللَّهِ أَتُكَفَّرُ عَنِّي خَطَايَايَ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " نَعَمْ إِنْ قُتِلْتَ وَأَنْتَ صَابِرٌ مُحْتَسِبٌ مُقْبِلٌ غَيْرُ مُدْبِرٍ إِلاَّ الدَّيْنَ فَإِنَّ جِبْرِيلَ قَالَ لِي ذَلِكَ". رَوَاهُ مُسْلِمٌ.

**217** அபூகதாதா என்ற ஹாரிஸ் இப்னு ரிப்இய்யி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து, அவர்களிடம் "நிச்சயமாக, இறைவழியில் போர் புரிவதும், அல்லாஹ்வை நம்பிக்கை கொள்வதுமே செயல்களில் மிகவும் சிறந்ததாகும்" என்று கூறினார்கள். ஒரு மனிதர் எழுந்து, "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் பாதையில் நான் கொல்லப்பட்டுவிட்டால், என் குற்றங்கள் என்னை விட்டும் அழிக்கப்படுமா? எனக் கூறுங்கள்" என்று கேட்டார். "நீர் பொறுமைசாலியாக இருந்து, நன்மையை எதிர்பார்ப்பவராகவும் முன்னேறிச் செல்பவராகவும், பின்னோக்கி வராதவராகவும் இருக்கும் நிலையில், அல்லாஹ்வின் வழியில் கொல்லப்பட்டால் உம் பிழைகள் மன்னிக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறிவிட்டு பின்பு, "எப்படிக் கேட்டீர்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "அல்லாஹ்வின் பாதையில் நான் கொல்லப்பட்டு விட்டால், என் குற்றங்கள் என்னை விட்டும் அழிக்கப்படுமா? எனக் கூறுங்கள்" என்றார். "நீர் பொறுமையாக, நன்மையை எதிர்பார்த்து, புறமுதுகிட்டு விடாமல் முன்னேறிச் சென்றால், மன்னிக்கப்படும். கடனைத்தவிர. நிச்சயமாக, ஜிப்ரீல் (அலை) இதை எனக்கு (இப்போதுதான்) அறிவித்தார்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:1885)**

٢١٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " أَتَدْرُونَ مَنْ الْمُفْلِسُ؟" قَالُوا: الْمُفْلِسُ فِينَا مَنْ لاَ دِرْهَمَ لَهُ وَلاَ مَتَاعَ. فَقَالَ: " إِنَّ الْمُفْلِسَ مِنْ أُمَّتِي مَنْ يَأْتِي يَوْمَ الْقِيَامَةِ بِصَلاَةٍ وَصِيَامٍ وَزَكَاةٍ وَيَأْتِي وَقَدْ شَتَمَ هَذَا وَقَذَفَ هَذَا وَأَكَلَ مَالَ هَذَا وَسَفَكَ دَمَ هَذَا وَضَرَبَ هَذَا. فَيُعْطَى هَذَا مِنْ حَسَنَاتِهِ وَهَذَا مِنْ حَسَنَاتِهِ فَإِنْ فَنِيَتْ حَسَنَاتُهُ قَبْلَ أَنْ يُقْضَى مَا عَلَيْهِ أُخِذَ مِنْ خَطَايَاهُمْ فَطُرِحَتْ عَلَيْهِ ثُمَّ طُرِحَ فِي النَّارِ". رَوَاهُ مُسْلِمٌ.

**218** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஏழை யார்? என்பதை நீங்கள் அறிவீர்களா?" என எங்களிடம் நபி (ஸல்) கேட்டார்கள். "எவரிடம் வெள்ளிக் காசும்; பொருள்களும் இல்லையோ, அவரே எங்களில் ஏழை" என்று நபித்தோழர்கள் கூறினார்கள். "என் சமுதாயத்தில் ஏழை என்பவன், மறுமை நாளில் தொழுகை, நோன்பு, ஜகாத் ஆகிய நன்மைகளுடன் வருவான். ஆனாலும், அவன் இவனை ஏசினான், இவனை இட்டுக் கட்டினான். இவர் பொருளைச் சாப்பிட்டான். (கொலை செய்து) அவனது இரத்தத்தை ஓட்டினான். இவனை அடித்தான் என்ற குற்றச்சாட்டு நிலையிலும் வருவான். அப்போது இவனது நன்மைகளிலிருந்து (இவனால் பாதிக்கப்பட்ட)வர்களுக்குப் பிரித்து வழங்கப்படும். இவனது குற்றத்திற்குத் தீர்வு ஏற்படும் முன், இவனது நன்மைகள் அழிந்து விட்டால், பாதிக்கப்பட்டவர்களின் குற்றங்களிலிருந்து எடுக்கப்பட்டு இவனிடம் தரப்படும். பின்பு நரகில் வீசப்படுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2581)**

٢١٩ - وَعَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " إِنَّمَا أَنَا بَشَرٌ وَإِنَّكُمْ تَخْتَصِمُونَ إِلَيَّ وَلَعَلَّ بَعْضَكُمْ أَنْ يَكُونَ أَلْحَنَ بِحُجَّتِهِ مِنْ بَعْضٍ فَأَقْضِيَ لَهُ بِنَحْوِ مَا أَسْمَعُ فَمَنْ قَضَيْتُ لَهُ بِحَقِّ أَخِيهِ فَإِنَّمَا أَقْطَعُ لَهُ قِطْعَةً مِنَ النَّارِ" مُتَّفَقٌ عَلَيْهِ. "أَلْحَنَ" أَيْ أَعْلَمَ.

**219** உம்மு சலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான் ஒரு மனிதன் தான். என்னிடம் வழக்குகளைக் கொண்டு வருகிறீர்கள். உங்களில் ஒருவர் தன்னிடம் உள்ள ஆதாரம் மூலம் (வாதத் திறமையால்) மற்றொருவரை விட, மிக அழகாக எடுத்துக் கூறக்கூடும். நான் கேட்பது கொண்டு, சாதகமாக அவருக்கு தீர்ப்புக் கூறுவேன். ஒருவனுக்கு, மற்றொரு சகோதரனின் உரிமையை நான் சாதகமாகத் தீர்ப்புக் கூறிவிட்டால், அவருக்கு நான் பங்கீடு செய்து தந்தது, நரகத்தின் ஒரு பங்கைத்தான்' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7169. முஸ்லிம்:1713)**

٢٢٠ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " لَنْ يَزَالَ الْمُؤْمِنُ فِي فُسْحَةٍ مِنْ دِينِهِ مَا لَمْ يُصِبْ دَمًا حَرَامًا". رَوَاهُ الْبُخَارِيُّ.

**220** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஃமின், விலக்கப்பட்ட (கொலை செய்து) இரத்தத்தை தொடாத வரை, (அநியாயமாகக் கொலை செய்யாதவரை) அவர் தன் மார்க்கத்தின் ஆதரவில் இருப்பார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6862)**

٢٢١ – وَعَنْ خَوْلَةَ بِنْتِ عَامِرٍ الأَنْصَارِيَّةِ وَهِيَ امْرَأَةُ حَمْزَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَتْ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " إِنَّ رِجَالاً يَتَخَوَّضُونَ فِي مَالِ اللَّهِ بِغَيْرِ حَقٍّ فَلَهُمُ النَّارُ يَوْمَ الْقِيَامَةِ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**221** ஹம்ஸா (ரழி) அவர்களின் மனைவியான கவ்லா பின்த் ஆமிர் அன்சாரிய்யா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக சிலர், அல்லாஹ்விற்குரிய சொத்தில் (பைத்துல்மால்) உரிமையின்றிப் புழங்குகிறார்கள். அவர்களுக்கு மறுமை நாளில் நரகம் உண்டு என நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்" என்று கூறினார்கள். **(புகாரி:3118)**

## ٢٧ – باب تعظيم حرمات المسلمين وبيان حقوقهم والشفقة عليهم ورحمتهم

## பாடம் : 27 - முஸ்லிம்களைக் கண்ணியப்படுத்துதல், அவர்களின் உரிமைகளை வழங்குதல், அவர்கள் மீது கருணை, இரக்கம் காட்டுதல் பற்றி...

قَالَ اللَّهُ تَعَالَى: وَمَنْ يُعَظِّمْ حُرُمَاتِ اللَّهِ فَهُوَ خَيْرٌ لَهُ عِنْدَ رَبِّهِ. قَالَ تَعَالَى: وَمَنْ يُعَظِّمْ شَعَائِرَ اللَّهِ فَإِنَّهَا مِنْ تَقْوَى الْقُلُوبِ. وَقَالَ تَعَالَى: وَاخْفِضْ جَنَاحَكَ لِلْمُؤْمِنِينَ. وَقَالَ تَعَالَى: مَنْ قَتَلَ نَفْسًا بِغَيْرِ نَفْسٍ أَوْ فَسَادٍ فِي الأَرْضِ فَكَأَنَّمَا قَتَلَ النَّاسَ جَمِيعًا وَمَنْ أَحْيَاهَا فَكَأَنَّمَا أَحْيَا النَّاسَ جَمِيعًا.

**அல்லாஹ் கூறுகிறான் :** *"....அல்லாஹ்வின் கட்டளைகளை ஒருவன் கண்ணியமாக்கினால், அது அவனுக்கு, அவனது இறைவனிடம் சிறந்ததாகும்." (22:30)*

*"...அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களை ஒருவன் கண்ணியமாக்கினால், நிச்சயமாக அது இதயங்களின் இறையச்சத்தில் உள்ளாகும்." (22:32)*

*"இறை விசுவாசிகளுக்காக உமது (பணிவெனும்) இறக்கையைத் தாழ்த்துவீராக!" (15:88)*

*"ஓர் உயிருக்காக (பழிவாங்க) அல்லது பூமியில் உள்ள குழப்பத்திற்காக அன்றி (அதாவது நியாயமின்றி) ஓர் உயிரை ஒருவன் கொன்றால், அவன் மக்கள் அனைவரையும் கொலை*

*செய்தவன் போலாவான். ஒருவனை வாழச் செய்தால், அவன் மக்கள் அனைவரையும் வாழச் செய்தவன் போலாவான்." (5:32)*

٢٢٢ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "الْمُؤْمِنُ لِلْمُؤْمِنِ كَالْبُنْيَانِ يَشُدُّ بَعْضُهُ بَعْضًا" وَشَبَّكَ بَيْنَ أَصَابِعِهِ. مُتَّفَقٌ عَلَيْهِ.

**222** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஃமின், மற்றொரு முஃமினிடம், ஒன்றை ஒன்று உறுதியாக்கும் (செங்கல்) கட்டிடத்தைப் போன்றவராக இருப்பார்" என்று நபி (ஸல்) கூறிவிட்டு, தன் விரல்களை சேர்த்து (இணைத்து)க் காண்பித்தார்கள். **(புகாரி:6026. முஸ்லிம்:2585)**

٢٢٣ - وَعَنْهُ ) أَبِي مُوسَى ( قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "مَنْ مَرَّ فِي شَيْءٍ مِنْ مَسَاجِدِنَا أَوْ أَسْوَاقِنَا وَمَعَهُ نَبْلٌ فَلْيُمْسِكْ أَوْ لِيَقْبِضْ عَلَى نِصَالِهَا بِكَفِّهِ أَنْ يُصِيبَ أَحَدًا مِنَ الْمُسْلِمِينَ مِنْهَا بِشَيْءٍ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**223** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நம் பள்ளிவாசல்கள் அல்லது நம் கடைவீதிகளின் ஒன்றில், (கையில்) அம்புடன் ஒருவர் நடந்து சென்றால், அதனால் முஸ்லிம்கள் எவருக்கும் எதுவும் ஏற்பட்டு விடாமல் அதை தடுத்துக் கொள்ளட்டும் அல்லது அதன் முனை மீது தன் உள்ளங்கையை (மூடியவாறு) வைக்கட்டும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:452 முஸ்லிம்:2615)**

٢٢٤ - وَعَنِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "مَثَلُ الْمُؤْمِنِينَ فِي تَوَادِّهِمْ وَتَرَاحُمِهِمْ وَتَعَاطُفِهِمْ مَثَلُ الْجَسَدِ إِذَا اشْتَكَى مِنْهُ عُضْوٌ تَدَاعَى لَهُ سَائِرُ الْجَسَدِ بِالسَّهَرِ وَالْحُمَّى" مُتَّفَقٌ عَلَيْهِ.

**224** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறை விசுவாசிகள் தங்களிடையே அன்பு செலுத்துவதிலும், அவர்கள் அன்பு பாராட்டிக் கொள்வதிலும், அவர்கள் இணைந்து வாழ்வதிலும் உதாரணம் என்பது, ஒரு உடல் போன்றதாகும். அதன் ஓர் உறுப்புக்கு நோவினை ஏற்பட்டால், அது உடம்பின் மற்ற பாகங்கள் விழித்திருப்பது மூலமும் காய்ச்சல் மூலமும் வருத்திக் கொள்கின்றன" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6011. முஸ்லிம்:2586)**

٢٢٥ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَبَّلَ النَّبِيُّ ﷺ الْحَسَنَ بْنَ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا وَعِنْدَهُ الأَقْرَعُ بْنُ حَابِسٍ فَقَالَ الأَقْرَعُ: إِنَّ لِي عَشَرَةً مِنَ الْوَلَدِ مَا قَبَّلْتُ مِنْهُمْ أَحَدًا. فَنَظَرَ إِلَيْهِ رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ: "مَنْ لاَ يَرْحَمُ لاَ يُرْحَمُ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**225** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (தனது பேரர்) ஹஸன் இப்னு அலீ (ரழி) அவர்களை முத்தமிட்டார்கள். அவர்கள் அருகில் இருந்த அக்ரஉ இப்னு ஹாபிஸ் அவர்கள், "எனக்கு 10 மக்கள் உண்டு. அவர்களில் எவரையும் நான் முத்தமிட்டதில்லை" என்று கூறினார்கள். அவரை உற்று நோக்கிய நபி (ஸல்) அவர்கள், "இரக்கமில்லாதவன், (அல்லாஹ்வினால்) இரக்கம் காட்டப்படமாட்டான்" என்று கூறினார்கள். **(புகாரி:5997. முஸ்லிம்:2319)**

٢٢٦ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: قَدِمَ نَاسٌ مِنَ الأَعْرَابِ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالُوا: أَتُقَبِّلُونَ صِبْيَانَكُمْ؟ فَقَالَ: "نَعَمْ". قَالُوا: لَكِنَّا وَاللَّهِ مَا نُقَبِّلُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "أَوَأَمْلِكُ إِنْ كَانَ اللَّهُ نَزَعَ مِنْ قُلُوبِكُمُ الرَّحْمَةَ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**226** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் சில (கிராமத்து) காட்டரபிகள் வந்தார்கள். "உங்கள் வீட்டுச் சிறுவர்களை நீங்கள் முத்தமிடுவீர்களா?" என்று கேட்டார்கள். "ஆம்!" என நபி (ஸல்) கூறினார்கள். "எனினும் அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் முத்தமிடமாட்டோம்" என்று அவர்கள் கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உங்களின் இதயங்களிலிருந்து கருணையை அல்லாஹ் எடுத்து விட்டான் என்றால் அதற்கு நான் என்னச் செய்யமுடியும்?" என்று கேட்டார்கள்.

**(புகாரி:5998. முஸ்லிம்:2317)**

٢٢٧ - وَعَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَنْ لاَ يَرْحَمُ النَّاسَ لاَ يَرْحَمُهُ اللَّهُ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**227** ஜரீர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மக்களிடம் ஒருவன் இரக்கம் காட்டவில்லையானால், அவனுக்கு அல்லாஹ்வும் இரக்கம் காட்டமாட்டான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7376. முஸ்லிம்:2319)**

٢٢٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" إِذَا صَلَّى أَحَدُكُمْ لِلنَّاسِ فَلْيُخَفِّفْ فَإِنَّ فِيهِمُ الضَّعِيفَ وَالسَّقِيمَ وَالْكَبِيرَ وَإِذَا صَلَّى أَحَدُكُمْ لِنَفْسِهِ فَلْيُطَوِّلْ مَا شَاءَ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ:" وَذَا الْحَاجَةِ".

**228** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் மக்களுக்குத் தொழ வைத்தால், அவர் (தொழுகையை) எளிதாக்கட்டும்! ஏனெனில், அவர்களில் பலவீனர், நோயாளி, முதியவர்களும் உள்ளனர். உங்களில் ஒருவர் தனித்துத் தொழுதால், தான் விரும்பியபடி தொழுகையை நீட்டிக் கொள்ளட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:703. முஸ்லிம்:467)**

மற்றொரு அறிவிப்பில் "அவர்களில் மற்ற தேவையுடையவரும் இருப்பார்" என்று உள்ளது.

٢٢٩ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ:" إِنْ كَانَ رَسُولُ اللَّهِ ﷺ لَيَدَعُ الْعَمَلَ وَهُوَ يُحِبُّ أَنْ يَعْمَلَ بِهِ خَشْيَةَ أَنْ يَعْمَلَ بِهِ النَّاسُ فَيُفْرَضَ عَلَيْهِمْ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**229** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் ஒரு செயலை விரும்பியவர்களாக இருந்த போதும், அவைகளை விட்டுவிடுபவர்களாக இருந்தார்கள். ஏனெனில், மக்களும் அதைச் செய்து, தங்கள் மீது அதைக் கடமையாக்கிக் கொள்வார்களோ? என பயந்துதான்." **(புகாரி:1128. முஸ்லிம்:718)**

٢٣٠ - وَعَنْهَا ( عَائِشَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: نَهَاهُمُ النَّبِيُّ ﷺ عَنِ الْوِصَالِ رَحْمَةً لَهُمْ فَقَالُوا: إِنَّكَ تُوَاصِلُ؟ قَالَ:" إِنِّي لَسْتُ كَهَيْئَتِكُمْ إِنِّي أَبِيتُ يُطْعِمُنِي رَبِّي وَيَسْقِينِي" مُتَّفَقٌ عَلَيْهِ. مَعْنَاهُ: يَجْعَلُ فِيَّ قُوَّةَ مَنْ أَكَلَ وَشَرِبَ.

**230** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்கள் மீது இரக்கம் கொண்டு, தொடர்ந்து நோன்பு வைப்பதைத் தடுத்தார்கள். "நீங்கள் தொடர் நோன்பு வைக்கின்றீர்களே?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டபோது, "உங்கள் நிலை போன்று நான் இல்லை. என் இறைவன், எனக்கு உண்ணத் தருகிறான். பருகத் தருகிறான்" என்று கூறினார்கள். **(புகாரி:1966. முஸ்லிம்:1105)**

٢٣١ - وَعَنْ أَبِي قَتَادَةَ الْحَارِث بْنِ رِبْعِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " إِنِّي لأَقُومُ إِلَى الصَّلاَةِ وَأُرِيدُ أَنْ أُطَوِّلَ فِيهَا فَأَسْمَعُ بُكَاءَ الصَّبِيِّ فَأَتَجَوَّزُ فِي صَلاَتِي كَرَاهِيَةَ أَنْ أَشُقَّ عَلَى أُمِّهِ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**231** அபூகதாதா என்ற ஹாரிஸ் இப்னு ரிப்இ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான் தொழுகைக்கு நின்று, அதிலே நீண்ட நேரம் எடுத்துக் கொள்ள விரும்புகிறேன். ஆனால், குழந்தையின் அழும் குரலைக் கேட்கிறேன். அந்தக் குழந்தையின் தாயாருக்குக் கஷ்டம் கொடுப்பதை வெறுத்தவனாக என் தொழுகையை சுருக்கிக் கொள்கிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:707)**

٢٣٢ - وَعَنْ جُنْدُب بْنِ عَبْد اللَّه رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " مَنْ صَلَّى صَلاَةَ الصُّبْحِ فَهُوَ فِي ذِمَّةِ اللَّهِ فَلاَ يَطْلُبَنَّكُمُ اللَّهُ مِنْ ذِمَّتِهِ بِشَيْءٍ فَإِنَّهُ مَنْ يَطْلُبْهُ مِنْ ذِمَّتِهِ بِشَيْءٍ يُدْرِكْهُ ثُمَّ يَكُبُّهُ عَلَى وَجْهِهِ فِي نَارِ جَهَنَّمَ" رَوَاهُ مُسْلِمٌ.

**232** ஜுன்துப் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சுப்ஹுத் தொழுகையை ஒருவர் தொழுதுவிட்டால், அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளார். எனவே, அல்லாஹ் தன் பொறுப்பிலிருந்து எதையும் உங்களிடம் (குற்றம்) பிடித்து விட வேண்டாம். அவனது பொறுப்பிலிருந்து எதையேனும் ஒருவன் குற்றமிழைத்துவிட்டால், பின்பு அவன் அவனை அடைந்து, நரகில் முகம் குப்புற தள்ளுவான்' என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:657)**

٢٣٣ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ: لاَ يَظْلِمُهُ وَلاَ يُسْلِمُهُ. مَنْ كَانَ فِي حَاجَةِ أَخِيهِ كَانَ اللَّهُ فِي حَاجَتِهِ وَمَنْ فَرَّجَ عَنْ مُسْلِمٍ كُرْبَةً فَرَّجَ اللَّهُ عَنْهُ بِهَا كُرْبَةً مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ وَمَنْ سَتَرَ مُسْلِمًا سَتَرَهُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**233** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிம் மற்றொருமுஸ்லிமுக்குச் சகோதரன் ஆவான். அவர் மற்றவருக்கு அநீதி இழைக்க வேண்டாம். அவரை ஆதரவற்றவராக விட்டு விட வேண்டாம். தன் சகோதரனின் தேவையை நிறைவேற்றுபவனாக ஒருவன் இருந்தால், அவனது தேவையில் (உதவிட) அல்லாஹ் இருப்பான். ஒரு முஸ்லிமின் கஷ்டத்தை (இவ்வுலகில்) ஒருவன் நீக்கி வைத்தால், மறுமையில் பல கஷ்டங்களில், ஒரு கஷ்டத்தை அவனை விட்டும் அல்லாஹ் நீக்கி வைப்பான். ஒரு முஸ்லிமின் குறையை (இவ்வுலகில்) மறைத்தால், மறுமை நாளில்,அல்லாஹ் அவனது குறையை மறைப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2442. முஸ்லிம்:2580)**

٢٣٤ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ لاَ يَخُونُهُ وَلاَ يُكَذِّبُهُ وَلاَ يَخْذُلُهُ كُلُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ حَرَامٌ: عِرْضُهُ وَمَالُهُ وَدَمُهُ. التَّقْوَى هَاهُنَا بِحَسْبِ امْرِئٍ مِنَ الشَّرِّ أَنْ يَحْقِرَ أَخَاهُ الْمُسْلِمَ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**234** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிம், மற்றொரு முஸ்லிமின் சகோதரர் ஆவார். அவருக்கு இவர் மோசடி செய்ய மாட்டார். அவரிடம் இவர் பொய் கூறமாட்டார். அவருக்கு, இவர் உதவி செய்வதை விட்டு விட மாட்டார். ஒவ்வொரு முஸ்லிமுக்கும், இன்னொரு முஸ்லிமின் மீது அவரது கண்ணியமும், அவரது சொத்தும், அவரது ரத்தமும் விலக்கப்பட்டதாகும். இறையச்சம் என்பது இங்கே (இதயத்தில்) உள்ளது. ஒரு முஸ்லிமான சகோதரரை இழிவாக எண்ணுவதே, மனிதனுக்குத் தீமையால் போதுமானதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:1927. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்)**

٢٣٥ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" لاَ تَحَاسَدُوا وَلاَ تَنَاجَشُوا وَلاَ تَبَاغَضُوا وَلاَ تَدَابَرُوا وَلاَ يَبِعْ بَعْضُكُمْ عَلَى بَيْعِ بَعْضٍ وَكُونُوا عِبَادَ اللَّهِ إِخْوَانًا. الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ: لاَ يَظْلِمُهُ وَلاَ يَحْقِرُهُ وَلاَ يَخْذُلُهُ. التَّقْوَى هَاهُنَا – وَيُشِيرُ إِلَى صَدْرِهِ ثَلاَثَ مَرَّاتٍ – بِحَسْبِ امْرِئٍ مِنْ الشَّرِّ أَنْ يَحْقِرَ أَخَاهُ الْمُسْلِمَ. كُلُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ حَرَامٌ: دَمُهُ وَمَالُهُ وَعِرْضُهُ" رَوَاهُ مُسْلِمٌ." النَّجْشُ" أَنْ يَزِيدَ فِي ثَمَنِ سِلْعَةٍ يُنَادِي عَلَيْهَا فِي السُّوقِ وَنَحْوِهِ وَلاَ رَغْبَةَ لَهُ فِي شِرَائِهَا بَلْ يَقْصِدُ أَنْ يَغُرَّ غَيْرَهُ وَهَذَا حَرَامٌ." وَالتَّدَابُرُ" أَنْ يُعْرِضَ عَنْ الأِنْسَانِ وَيَهْجُرَهُ وَيَجْعَلَهُ كَالشَّيْءِ الَّذِي وَرَاءَ الظَّهْرِ وَالدُّبُرِ.

**235** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் பொறாமை கொள்ளாதீர்கள்! (பொருளை வாங்கும் எண்ணமில்லாமல்), பொருளின் விலையை ஏற்றி விடாதீர்கள். ஒருவர் மீது ஒருவர் கோபப்படாதீர்கள். புறக்கணிக்காதீர்கள். குறை பேசிக் கொள்ளாதீர்கள். உங்களில் ஒருவர், இன்னொருவர் வாங்கும் பொருளை விலை பேச வேண்டாம். நீங்கள் அல்லாஹ்வின் அடியார்களாக, சகோதரர்களாக ஆகி விடுங்கள். ஒரு முஸ்லிம், மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான். அவனுக்கு இவன் அநீதம் செய்யமாட்டான். அவனை இழிவுபடுத்திடமாட்டான். அவனுக்கு உதவி செய்வதை விட்டு விடவும் மாட்டான். இறையச்சம் இங்கே உள்ளது” என்று கூறி, தன் நெஞ்சை மூன்று முறை சுட்டிக் காட்டிய நபி (ஸல்) அவர்கள், “ஒருவனின்தீமையை கணக்கிடுவதில் முஸ்லிமான தன் சகோதரனை இழிவுபடுத்துவதும் சேருகிறது. ஒவ்வொரு முஸ்லிமுக்கும், இன்னொரு முஸ்லிம் மீது அவனது ரத்தம், அவனது சொத்து, அவனது கண்ணியம் விலக்கப்பட்டதாகும்” என்றும் நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2564)**

٢٣٦ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" لاَ يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يُحِبَّ لِأَخِيهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**236** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தனக்கு விரும்புவதைத் தன் சகோதரனுக்கும் விரும்பும் வரை, உங்களில் ஒருவர் இறைவிசுவாசியாக ஆக மாட்டார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:13. முஸ்லிம்:45)**

٢٣٧ – وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" اُنْصُرْ أَخَاكَ ظَالِمًا أَوْ مَظْلُومًا". فَقَالَ رَجُلٌ: يَا رَسُولَ اللَّهِ أَنْصُرُهُ إِذَا كَانَ مَظْلُومًا أَرَأَيْت إِنْ كَانَ ظَالِمًا كَيْفَ أَنْصُرُهُ؟ قَالَ:" تَحْجِزُهُ – أَوْ تَمْنَعُهُ – مِنْ الظُّلْمِ فَإِنَّ ذَلِكَ نَصْرُهُ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**237** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உன் சகோதரன் அநீதம் இழைப்பவனாக இருந்தாலும் அல்லது அநீதம் செய்யப்பட்டவனாக இருந்தாலும், அவனுக்கு நீ உதவி செய்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! அநீதம் செய்யப்பட்டவனாக இருந்தால், நான் உதவி செய்வேன். அநீதம் இழைப்பவனாக இருந்தால் அவனுக்கு எப்படி உதவுவேன்?” என்று ஒருவர் கேட்டார். “அநீதம் செய்வதிலிருந்து அவரைத் தடுப்பீராக! அதுவே அவருக்கு உதவி செய்வதாகும்” என்று நபி(ஸல்) கூறினார்கள். **(புகாரி:2443)**

٢٣٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" حَقُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ خَمْسٌ: رَدُّ السَّلاَمِ وَعِيَادَةُ الْمَرِيضِ وَاتِّبَاعُ الْجَنَائِزِ وَإِجَابَةُ الدَّعْوَةِ وَتَشْمِيتُ الْعَاطِسِ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ:" حَقُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ سِتٌّ: إِذَا لَقِيته فَسَلِّمْ عَلَيْهِ وَإِذَا دَعَاكَ فَأَجِبْهُ وَإِذَا اسْتَنْصَحَكَ فَانْصَحْ لَهُ وَإِذَا عَطَسَ فَحَمِدَ اللَّهَ فَشَمِّتْهُ وَإِذَا مَرِضَ فَعُدْهُ وَإِذَا مَاتَ فَاتْبَعْهُ".

**238** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமுக்கு மற்றொரு முஸ்லிமின் மீதுள்ள கடமை ஐந்தாகும்.

1) ஸலாமிற்குப் பதில் கூறுவது, 2) நோயாளியை நலம் விசாரிப்பது, 3)ஜனாஸா ஊர்வலத்தில் கலந்து கொள்வது, 4)விருந்தை ஏற்பது, 5)தும்மியவருக்குப் பதில் கூறுவது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1240. முஸ்லிம்:2162)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில்:

"ஒரு முஸ்லிமின் கடமை ஆறாகும். அவரை நீர் சந்தித்தால் அவருக்கு ஸலாம் கூறும்! உன்னை அவர் (விருந்துக்கு) அழைத்தால் அவருக்கு பதில் கூறும்!, உம்மிடம் உபதேசம் செய்ய வேண்டினால், அவருக்கு நீர் உபதேசம் செய்யும்! தும்மியப்பின் அல்லாஹ்வை புகழ்ந்தால் அவருக்கு நீர் பதில் கூறும்! அவர் நோயுற்றால் அவரை நலம் விசாரியும். அவர் இறந்தால், அவரின் ஜனாஸா ஊர்வலத்தைப் பின் தொடர்ந்து செல்லும்!" என்று உள்ளது.

٢٣٩ - وَعَنْ أَبِي عُمَارَةَ الْبَرَاء بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: أَمَرَنَا رَسُولُ اللَّهِ ﷺ بِسَبْعٍ وَنَهَانَا عَنْ سَبْعٍ: أَمَرَنَا بِعِيَادَةِ الْمَرِيضِ وَاتِّبَاعِ الْجَنَائِزِ وَتَشْمِيتِ الْعَاطِسِ وَإِبْرَارِ الْمُقْسِمِ وَنَصْرِ الْمَظْلُومِ وَإِجَابَةِ الدَّاعِي وَإِفْشَاءِ السَّلَامِ وَنَهَانَا عَنْ خَوَاتِيمَ أَوْ تَخَتُّمٍ بِالذَّهَبِ وَعَنْ شُرْبٍ بِالْفِضَّةِ وَعَنْ الْمَيَاثِرِ الْحُمْرِ وَعَنْ الْقَسِيِّ وَعَنْ لُبْسِ الْحَرِيرِ وَالأَسْتَبْرَقِ وَالدِّيبَاجِ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: وَإِنْشَادِ الضَّالَّةِ فِي السَّبْعِ الأَوَلِ. "الْمَيَاثِرُ" بِيَاءٍ مُثَنَّاةٍ مِنْ تَحْتُ قَبْلَ الأَلِفِ وَثَاءٍ مُثَلَّثَةٍ بَعْدَهَا وَهِيَ جَمْعُ مِيثَرَةٍ وَهِيَ شَيْءٌ يُتَّخَذُ مِنْ حَرِيرٍ وَيُحْشَى قُطْنًا أَوْ غَيْرَهُ وَيُجْعَلُ فِي السَّرْجِ وَكَوْرِ الْبَعِيرِ وَيَجْلِسُ عَلَيْهِ الرَّاكِبُ. "وَالْقَسِيُّ" بِفَتْحِ الْقَافِ وَكَسْرِ السِّينِ الْمُهْمَلَةِ الْمُشَدَّدَةِ وَهِيَ ثِيَابٌ تُنْسَجُ مِنْ حَرِيرٍ وَكَتَّانٍ مُخْتَلِطَيْنِ. "وَإِنْشَادُ الضَّالَّةِ" تَعْرِيفُهَا.

**239** அபூ உமாரா என்ற பராஉ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் ஏழு விஷயங்க்ளை எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். பிறகு ஏழு விஷயங்களை விட்டும் எங்களைத் தடுத்தார்கள். 'நோயாளியை நலம் விசாரித்தல், ஜனாஸாவில் கலந்து கொள்ளுதல், தும்மியவருக்குப் பதில் கூறுதல், சத்தியம் செய்தவரின் சத்தியத்தை நிறைவேற்றுதல், அநீதம் செய்யப்பட்டவருக்கு உதவுதல், (விருந்துக்கு) அழைத்தவருக்குப் பதில் கூறுதல், ஸலாமிற்குப் பதில் கூறுதல்' என, எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்."

தங்க மோதிரங்கள் அணிவது, வெள்ளி பாத்திரத்தில் பருகுவது, பட்டுக் கலந்த சிவப்பு நிறத் துணி, பட்டு மற்றும் கித்தான் நூலால் உள்ள துணி, பட்டு அணிதல், கெட்டியான பட்டு, குறுக்கிலும், நெடுகிலும் பட்டு நூலால் நெய்யப்பட்ட துணி ஆகியவற்றை விட்டும் எங்களைத் தடுத்தார்கள்.

**(புகாரி:1239. முஸ்லிம்:2066)**

மற்றொரு அறிவிப்பில், நபியவர்கள் ஏவிய ஏழு விஷயங்களில் ஒன்றாக "(பள்ளிவாசலில்) தவறிப் போனப் பொருளை அறிவிப்பது" என்றும் உள்ளது.

## ٢٨ - باب ستر عورات المسلمين والنهي عن إشاعتها لغير ضرورة

## பாடம் : 28 - முஸ்லிம்களின் குறைகளை மறைத்தல், தேவையின்றி அதை வெளிப்படுத்தத் தடை செய்தல்

قَالَ اللَّهُ تَعَالَى: إِنَّ الَّذِينَ يُحِبُّونَ أَنْ تَشِيعَ الْفَاحِشَةُ فِي الَّذِينَ آمَنُوا لَهُمْ عَذَابٌ أَلِيمٌ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக! இறை விசுவாசிகளுக்குகிடையே மானக்கேடான செயல் பரவுவதை விரும்புகின்றவர்களுக்கு, இம்மையிலும், மறுமையிலும் நோவினையான வேதனை உண்டு. (24:19)*

٢٤٠ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " لاَ يَسْتُرُ عَبْدٌ عَبْدًا فِي الدُّنْيَا إِلاَّ سَتَرَهُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ" رَوَاهُ مُسْلِمٌ.

**240** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உலகத்தில் ஓர் அடியானுடைய குறையை, மற்றொரு அடியான் மறைத்தால், மறுமை நாளில் அல்லாஹ் அவனை (அவனது குறையை) மறைப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2590)**

٢٤١ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ) قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " كُلُّ أُمَّتِي مُعَافًى إِلاَّ الْمُجَاهِرِينَ وَإِنَّ مِنْ الْمُجَاهَرَةِ أَنْ يَعْمَلَ الرَّجُلُ بِاللَّيْلِ عَمَلاً ثُمَّ يُصْبِحُ وَقَدْ سَتَرَهُ اللَّهُ عَلَيْهِ فَيَقُولُ: يَا فُلاَنُ عَمِلْتُ الْبَارِحَةَ كَذَا وَكَذَا وَقَدْ بَاتَ يَسْتُرُهُ رَبُّهُ وَيُصْبِحُ يَكْشِفُ سِتْرَ اللَّهِ عَلَيْهِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**241** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் சமுதாயத்தில் ஒவ்வொருவரும் வெற்றி பெறுவர். ஆனால், (பாவங்களை) பகிரங்கப் படுத்துவோரைத் தவிர. ஒருவன் இரவில் ஒரு செயலைச் செய்கிறான். அதை அல்லாஹ் மறைத் திருக்கும் நிலையில், காலையில் எழுகிறான். (பின் தன் நண்பனிடம்) "இன்னாரே! இன்ன, இன்ன குற்றங்களை இரவில் செய்தேன்" என்று கூறுகிறான் இதுதான் (பாவத்தை) பகிரங்கப்படுத்துவதாகும். அவனது பாவத்தை, அவனது இறைவன் மறைத்திருந்தான். அவனோ காலையில் அல்லாஹ் மறைத்திருந்த (பாவத்தை) பகிரங்கப்படுத்திவிட்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டேன். **(புகாரி:6069. முஸ்லிம்:2990)**

٢٤٢ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ) عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " إِذَا زَنَتْ الأَمَةُ فَتَبَيَّنَ زِنَاهَا فَلْيَجْلِدْهَا الْحَدَّ وَلاَ يُثَرِّبْ عَلَيْهَا ثُمَّ إِنْ زَنَتْ الثَّانِيَةَ فَلْيَجْلِدْهَا الْحَدَّ وَلاَ يُثَرِّبْ عَلَيْهَا ثُمَّ إِنْ زَنَتْ الثَّالِثَةَ فَلْيَبِعْهَا وَلَوْ بِحَبْلٍ مِنْ شَعَرٍ". مُتَّفَقٌ عَلَيْهِ. " التَّثْرِيبُ". التَّوْبِيخُ.

**242** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் அடிமைப் பெண் விபச்சாரம் செய்து, அவள் விபச்சாரம் செய்தது தெளிவாகி விடுமானால், அவளைச் சவுக்கால் அடிக்கட்டும். அவளை இழிவாகப் பழித்துப் பேச வேண்டாம். பின்பு, இரண்டாம் தடவையாக விபச்சாரம் செய்து விட்டால், அவளைச் சவுக்கால் அடிக்கட்டும். அவளை இழிவாகப் பேச வேண்டாம். பின்பு, மூன்றாம் தடவையாக விபச்சாரம் செய்தால், தலைமுடியினால் ஆன ஒரு கயிறுக்காவது அவளை விற்று விடட்டும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2555. முஸ்லிம்:1703)**

٢٤٣ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ) قَالَ: أُتِيَ النَّبِيُّ ﷺ بِرَجُلٍ قَدْ شَرِبَ خَمْرًا. قَالَ: " اضْرِبُوهُ". قَالَ أَبُو هُرَيْرَةَ: فَمِنَّا الضَّارِبُ بِيَدِهِ وَالضَّارِبُ بِنَعْلِهِ وَالضَّارِبُ بِثَوْبِهِ. فَلَمَّا انْصَرَفَ قَالَ بَعْضُ الْقَوْمِ: أَخْزَاكَ اللَّهُ. قَالَ: " لاَ تَقُولُوا هَكَذَا لاَ تُعِينُوا عَلَيْهِ الشَّيْطَانَ". رَوَاهُ الْبُخَارِيُّ.

**243** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மதுவைக் குடித்த ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டார். “அவரை அடியுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்படி எங்களில் தன் கையால் அடித்தவர், தன் செருப்பால் அடித்தவர், தன் ஆடையால் அடித்தவர் எனப் பலர் இருந்தனர். அவ்வாறு அடித்து முடித்தபோது, சிலர் மது அருந்தியவரை நோக்கி, “அல்லாஹ் உம்மை இழிவாக்குவானாக!” என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “இவ்வாறு நீங்கள் கூறாதீர்கள். இவர் விஷயத்தில் ஷைத்தானுக்கு உதவி செய்யாதீர்கள்” என்று கூறினார்கள். **(புகாரி:6781)**

## ٢٩ - باب قضاء حوائج المسلمين

## பாடம் : 29 - முஸ்லிம்களின் தேவைகளை நிறைவேற்றுதல் பற்றி

قَالَ اللَّهُ: تَعَالَى: وَافْعَلُوا الْخَيْرَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ.

**அல்லாஹ் கூறுகிறான்:**‘...*நீங்கள் வெற்றியாளர்களாக ஆவதற்காக, நன்மையைச் செய்யுங்கள்!*” *(22:77)*

٢٤٤ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ" الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ لاَ يَظْلِمُهُ وَلاَ يُسْلِمُهُ. مَنْ كَانَ فِي حَاجَةِ أَخِيهِ كَانَ اللَّهُ فِي حَاجَتِهِ وَمَنْ فَرَّجَ عَنْ مُسْلِمٍ كُرْبَةً فَرَّجَ اللَّهُ عَنْهُ بِهَا كُرْبَةً مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ وَمَنْ سَتَرَ مُسْلِمًا سَتَرَهُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**244** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு முஸ்லிம், மற்றொரு முஸ்லிமுக்குச் சகோதரன் ஆவான். அவர் மற்றவருக்கு அநீதி இழைக்க வேண்டாம். அவரை ஆதரவற்றவராக விட்டு விட வேண்டாம். தன் சகோதரனின் தேவையை நிறைவேற்றுபவனாக ஒருவன் இருந்தால், அவனது தேவையில் (உதவிட) அல்லாஹ் இருப்பான். ஒரு முஸ்லிமின் கஷ்டத்தை ஒருவன் நீக்கி வைத்தால், மறுமையில் பல கஷ்டங்களில் ஒரு கஷ்டத்தை அவனை விட்டும் அல்லாஹ் நீக்கி வைப்பான். ஒரு முஸ்லிமின் குறையை மறைத்தால், மறுமை நாளில்,அல்லாஹ் அவனது ஒரு குறையை மறைப்பான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2442. முஸ்லிம்:2580)**

٢٤٥ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" مَنْ نَفَّسَ عَنْ مُؤْمِنٍ كُرْبَةً مِنْ كُرَبِ الدُّنْيَا نَفَّسَ اللَّهُ عَنْهُ كُرْبَةً مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ وَمَنْ يَسَّرَ عَلَى مُعْسِرٍ يَسَّرَ اللَّهُ عَلَيْهِ فِي الدُّنْيَا وَالأَخِرَةِ وَمَنْ سَتَرَ مُسْلِمًا سَتَرَهُ اللَّهُ فِي الدُّنْيَا وَالأَخِرَةِ وَاللَّهُ فِي عَوْنِ الْعَبْدِ مَا كَانَ الْعَبْدُ فِي عَوْنِ أَخِيهِ. وَمَنْ سَلَكَ طَرِيقًا يَلْتَمِسُ فِيهِ عِلْمًا سَهَّلَ اللَّهُ لَهُ بِهِ طَرِيقًا إِلَى الْجَنَّةِ وَمَا اجْتَمَعَ قَوْمٌ فِي بَيْتٍ مِنْ بُيُوتِ اللَّهِ تَعَالَى يَتْلُونَ كِتَابَ اللَّهِ وَيَتَدَارَسُونَهُ بَيْنَهُمْ إِلاَّ نَزَلَتْ عَلَيْهِمُ السَّكِينَةُ وَغَشِيَتْهُمُ الرَّحْمَةُ وَحَفَّتْهُمُ الْمَلاَئِكَةُ وَذَكَرَهُمُ اللَّهُ فِيمَنْ عِنْدَهُ وَمَنْ بَطَّأَ بِهِ عَمَلُهُ لَمْ يُسْرِعْ بِهِ نَسَبُهُ" رَوَاهُ مُسْلِمٌ.

**245** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உலகத்தின் கஷ்டங்களில் ஒரு கஷ்டத்தை, ஒரு முஃமினை விட்டும் ஒருவன் நீக்கினால், மறுமைநாளின் கஷ்டங்களிலிருந்து ஒரு கஷ்டத்தை அவரை விட்டும் அல்லாஹ் நீக்குவான். கஷ்டப்படுபவனுக்கு (உதவி செய்து) இலகுவை ஏற்படுத்தினால், அவருக்கு இம்மையிலும்,

மறுமையிலும் அல்லாஹ் (உதவி செய்து) இலகுவாக்குவான். ஒரு முஸ்லிமின் குறையை ஒருவர் மறைத்தால், இம்மையிலும், மறுமையிலும் அல்லாஹ் அவரின் (குறையை) மறைப்பான். ஒரு அடியான் தன் சகோதரனுக்கு உதவி செய்பவனாக இருக்கும் வரை, அந்த அடியானுக்கு உதவி செய்பவனாக அல்லாஹ் இருப்பான். கல்வியைத் தேடியவனாக ஒரு வழியில் நடந்தால், அவருக்கு சொர்க்கத்திற்குச் செல்லும் வழியாக அதை அல்லாஹ் இலேசாக்குவான். அல்லாஹ்வின் வீடுகளில் ஒரு வீட்டில் (பள்ளிவாசலில்) மக்கள் ஒன்று கூடி, அல்லாஹ்வின் வேதத்தை ஓதுகிறார்கள். தங்களுக்கிடையே அதை, ஒருவருக்கொருவர் கற்றுக் கொடுக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் மீது அமைதி இறங்காமல் இருக்காது. அவர்களை அல்லாஹ்வின் கருணை மூடிக் கொள்ளும். வானவர்கள் அவர்களைச் சூழ்ந்து கொள்வர். அல்லாஹ் தன்னிடமுள்ளவர்களிடம், அவர்களை (புகழ்ந்து) கூறுவான். ஒருவரை, அவரது செயல் பிந்தச் செய்து விட்டால், அவரை அவரது பிறப்பு ஒன்றும் (சொர்க்கத்தின் பக்கம்) முன்னேறச் செய்து விடாது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
**(முஸ்லிம்:2699)**

## ٣٠ - باب الشفاعة

## பாடம் : 30 - பரிந்துரை செய்தல் பற்றி . . .

قَالَ تَعَالَى: مَنْ يَشْفَعْ شَفَاعَةً حَسَنَةً يَكُنْ لَهُ نَصِيبٌ مِنْهَا.

**அல்லாஹ் கூறுகிறான்:** *அழகிய பரிந்துரையை ஒருவர் செய்தால், அதிலிருந்து (நற்கூலியில்) அவருக்கும் ஒரு பங்கு உண்டு. (4:85)*

٢٤٦ - وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كَانَ النَّبِيُّ ﷺ إِذَا أَتَاهُ طَالِبُ حَاجَةٍ أَقْبَلَ عَلَى جُلَسَائِهِ فَقَالَ:" اشْفَعُوا تُؤْجَرُوا وَيَقْضِي اللَّهُ عَلَى لِسَانِ نَبِيِّهِ مَا أَحَبَّ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ:" مَا شَاءَ".

**246** அபூமூஸா அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் தம் தேவைக்கு வேண்டியவராக யாரேனும் ஒருவர் வந்தால், தன்னிடம் உட்கார்ந்து இருப்போரை முன்னோக்கி, "(தோழர்களே!) நீங்கள் பரிந்துரை செய்யுங்கள். நற்கூலி கொடுக்கப்படுவீர்கள். அல்லாஹ், தன் நபியின் நாவின் மூலம் தான் விரும்பியதை பூர்த்தி செய்கின்றான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறுவார்கள். **(புகாரி:1432,முஸ்லிம்:2627)**

மற்றொரு அறிவிப்பில் "தான் நாடியதை'' என்றுள்ளது.

٢٤٧ - وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا فِي قِصَّةِ بَرِيرَةَ وَزَوْجِهَا قَالَ: قَالَ لَهَا النَّبِيُّ ﷺ:" لَوْ رَاجَعْتِه؟" قَالَتْ: يَا رَسُولَ اللَّهِ تَأْمُرُنِي؟ قَالَ:" إِنَّمَا أَشْفَعُ" قَالَتْ: لاَ حَاجَةَ لِي فِيهِ. رَوَاهُ الْبُخَارِيُّ.

**247** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(பரீரா (ரழி), அவரது கணவர் சம்பந்தப்பட்ட சம்பவத்தின் போது) அப்பெண்ணிடம் நபி (ஸல்) அவர்கள், "அவரோடு நீங்கள் சேர்ந்து கொள்ளலாமே?'' என்று கூறினார்கள். அதற்கு, "இறைத்தூதர் அவர்களே! எனக்கு நீங்கள் ஏவுகிறீர்களா? என்று அப்பெண் (பரீரா) கேட்டார். "நான் சிபாரிசுதான் செய்கிறேன்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "எனக்கு அவர் விஷயத்தில் எந்தத் தேவையும் இல்லை. (சேர்ந்து கொள்ள விருப்பமுமில்லை)'' என்று அப்பெண் கூறி விட்டார். **(புகாரி:5283)**

## ٣١ - باب الإصلاح بين الناس

## பாடம் : 31 - மக்களிடையே இணக்கம் - ஒற்றுமை ஏற்படுத்துதல்

قَالَ اللَّهُ تَعَالَى: لاَ خَيْرَ فِي كَثِيرٍ مِنْ نَجْوَاهُمْ إِلاَّ مَنْ أَمَرَ بِصَدَقَةٍ أَوْ مَعْرُوفٍ أَوْ إِصْلاَحٍ بَيْنَ النَّاسِ. وَقَالَ تَعَالَى وَالصُّلْحُ خَيْرٌ. وَقَالَ تَعَالَى: فَاتَّقُوا اللَّهَ وَأَصْلِحُوا ذَاتَ بَيْنِكُمْ. وَقَالَ تَعَالَى: إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ فَأَصْلِحُوا بَيْنَ أَخَوَيْكُمْ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *மனிதர்களின் பெரும்பாலான இரகசியப் பேச்சுகளில் எவ்வித நன்மையும் இருப்பதில்லை. தான தர்மம் செய்யும்படியோ, நற்செயல் புரியும்படியோ, மனிதர்களுக்கிடையே சீர்திருத்தம் செய்யும்படியோ அறிவுரை கூறுபவர்களின் பேச்சுக்களைத் தவிர! (4:114)*

*.... இணக்கம் ஏற்படுவதே சிறந்ததாகும்... (4:128)*

*...எனவே, அல்லாஹ்வை அஞ்சுங்கள். உங்களிடையே இணக்கமாக நடந்து கொள்ளுங்கள்.... (8:1)*

*நிச்சயமாக! இறை விசுவாசிகள் சகோதரர்களாவர். உங்கள் சகோதரர்களுக்கிடையே தொடர்புகளைச் சீர்படுத்துங்கள்... (49:10)*

٢٤٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " كُلُّ سُلاَمَى مِنَ النَّاسِ عَلَيْهِ صَدَقَةٌ كُلَّ يَوْمٍ تَطْلُعُ فِيهِ الشَّمْسُ: تَعْدِلُ بَيْنَ الإِثْنَيْنِ صَدَقَةٌ وَتُعِينُ الرَّجُلَ فِي دَابَّتِهِ فَتَحْمِلُهُ عَلَيْهَا أَوْ تَرْفَعُ لَهُ عَلَيْهَا مَتَاعَهُ صَدَقَةٌ وَالْكَلِمَةُ الطَّيِّبَةُ صَدَقَةٌ وَبِكُلِّ خُطْوَةٍ تَمْشِيهَا إِلَى الصَّلاَةِ صَدَقَةٌ وَتُمِيطُ الأَذَى عَنِ الطَّرِيقِ صَدَقَةٌ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَمَعْنَى " تَعْدِلُ بَيْنَهُمَا": تُصْلِحُ بَيْنَهُمَا بِالْعَدْلِ.

**248** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதர்கள் தங்களின் ஒவ்வொரு மூட்டுக்களுக்கும், சூரியன் உதயமாகும் ஒவ்வொரு நாளிலும், தினமும் அதற்கு தர்மம் செய்திட வேண்டும். இரண்டு பேர்களுக்கிடையே நீதமாக நடப்பதும் தர்மம் ஆகும். ஒருவருக்கு ஒரு வாகனத்தை வாங்கித் தந்து, அதில் அவரை ஏற்றி அனுப்புவதும் தர்மம் ஆகும். அல்லது அவருக்கு, அவரது பொருட்களை ஏற்றி விடுவதும் தர்மம் ஆகும். நல்ல சொற்களை (பேசுவதும்) தர்மம் ஆகும். தொழுகைக்காக அவன் நடந்து செல்ல எடுத்து வைக்கும் ஒவ்வொரு எட்டும் தர்மம் ஆகும். பாதையில் இடையூறாக இருப்பதை அகற்றுவதும் தர்மம் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2989. முஸ்லிம்:1009)**

٢٤٩ - وَعَنْ أُمِّ كُلْثُومٍ بِنْتِ عُقْبَةَ بْنِ أَبِي مُعَيْطٍ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " لَيْسَ الْكَذَّابُ الَّذِي يُصْلِحُ بَيْنَ النَّاسِ فَيَنْمِي خَيْرًا أَوْ يَقُولُ خَيْرًا" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةِ مُسْلِمٍ زِيَادَةٌ قَالَتْ: وَلَمْ أَسْمَعْهُ يُرَخِّصُ فِي شَيْءٍ مِمَّا يَقُولُهُ النَّاسُ إِلاَّ فِي ثَلاَثٍ: تَعْنِي الْحَرْبَ وَالإِصْلاَحَ بَيْنَ النَّاسِ وَحَدِيثَ الرَّجُلِ امْرَأَتَهُ وَحَدِيثَ الْمَرْأَةِ زَوْجَهَا.

**249** உம்மு குல்தூம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதர்களிடையே சமாதானம் ஏற்படுத்தி வைக்க, நல்லதை எடுத்துச் சொல்லியோ அல்லது நல்லதைக் கூறி இருப்பவர் பொய்யர் அல்லர்" என்று நபி (ஸல்) கூறியதை நான் கேட்டுள்ளேன்.

**(புகாரி:2692. முஸ்லிம்:2605)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கூடுதலாக (பின்வருமாறு) உள்ளது:

மனிதர்கள் பேசக்கூடியவற்றில், (பொய் பேச) அனுமதி தரப்பட்டுள்ளது மூன்றில் மட்டும் தான். இதைத் தவிர அவர்களிடம் கேட்டதில்லை. (1) போர் களம் (2) மனிதர்களிடையே சமாதானம் ஏற்படுத்துதல் (3) ஒருவன் தன் மனைவியிடம் பேசுவது. ஒரு பெண் தன் கணவனிடம் பேசுவது. (இந்த மூன்றில் மட்டும் பொய் கூறலாம்).

٢٥٠ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ: سَمِعَ رَسُولُ اللّٰهِ ﷺ صَوْتَ خُصُومٍ بِالْبَابِ عَالِيَةً أَصْوَاتُهُمَا وَإِذَا أَحَدُهُمَا يَسْتَوْضِعُ الأخَرَ وَيَسْتَرْفِقُهُ فِي شَيْءٍ وَهُوَ يَقُولُ: وَاللّٰهِ لاَ أَفْعَلُ فَخَرَجَ عَلَيْهِمَا رَسُولُ اللّٰهِ ﷺ فَقَالَ:" أَيْنَ الْمُتَأَلِّي عَلَى اللّٰهِ لاَ يَفْعَلُ الْمَعْرُوفَ؟" فَقَالَ: أَنَا يَا رَسُولَ اللّٰهِ وَلَهُ أَيُّ ذَلِكَ أَحَبَّ. مُتَّفَقٌ عَلَيْهِ. مَعْنَى" يَسْتَوْضِعُ": يَسْأَلُهُ أَنْ يَضَعَ عَنْهُ بَعْضَ دَيْنِهِ." وَيَسْتَرْفِقُهُ": يَسْأَلُهُ الرِّفْقَ." وَالْمُتَأَلِّي": الْحَالِفُ.

**250** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் வீட்டு வாசலில் இருவர் சண்டையிடும் சப்தத்தைக் கேட்டார்கள். அவர்களில் ஒருவர், மற்றொருவரிடம் பணிவு காட்ட வேண்டினார். மேலும் தன் (கடன்) விஷயத்தில் தள்ளுபடி செய்யவும் வேண்டினார். அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக, நான் இதைச் செய்ய மாட்டேன்" என்று கூறினார். அவ்விருவர்களின் அருகில் நபி (ஸல்) அவர்கள் சென்றார்கள். "நல்லது செய்ய மாட்டேன் என, அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்தவர் எங்கே?" என்று கேட்டார்கள். அதற்கு அவ்விருவரில் ஒருவர், "நான் தான் இறைத்தூதர் அவர்களே! அவர் விரும்பியது அவருக்கு உண்டு. (அவரது கடனில் சிலதைத் தள்ளுபடி செய்கிறேன். அவரிடம் மென்மையாகவும் நடந்து கொள்கிறேன்)" என்று கூறினார். **(புகாரி:2705. முஸ்லிம்:1557)**

٢٥١ - وَعَنْ أَبِي الْعَبَّاسِ سَهْلِ بْنِ سَعْدٍ السَّاعِدِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ بَلَغَهُ أَنَّ بَنِي عَمْرِو بْنِ عَوْفٍ كَانَ بَيْنَهُمْ شَرٌّ فَخَرَجَ رَسُولُ اللّٰهِ ﷺ يُصْلِحُ بَيْنَهُمْ فِي أُنَاسٍ مَعَهُ فَحُبِسَ رَسُولُ اللّٰهِ ﷺ وَحَانَتِ الصَّلاَةُ فَجَاءَ بِلاَلٌ إِلَى أَبِي بَكْرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا فَقَالَ: يَا أَبَا بَكْرٍ إِنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَدْ حُبِسَ وَحَانَتِ الصَّلاَةُ فَهَلْ لَكَ أَنْ تَؤُمَّ النَّاسَ؟ قَالَ: نَعَمْ إِنْ شِئْتَ. فَأَقَامَ بِلاَلٌ الصَّلاَةَ وَتَقَدَّمَ أَبُو بَكْرٍ فَكَبَّرَ وَكَبَّرَ النَّاسُ وَجَاءَ رَسُولُ اللّٰهِ ﷺ يَمْشِي فِي الصُّفُوفِ حَتَّى قَامَ فِي الصَّفِّ فَأَخَذَ النَّاسُ فِي التَّصْفِيقِ وَكَانَ أَبُو بَكْرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ لاَ يَلْتَفِتُ فِي الصَّلاَةِ فَلَمَّا أَكْثَرَ النَّاسُ التَّصْفِيقَ الْتَفَتَ فَإِذَا رَسُولُ اللّٰهِ ﷺ فَأَشَارَ إِلَيْهِ رَسُولُ اللّٰهِ ﷺ فَرَفَعَ أَبُو بَكْرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ يَدَهُ فَحَمِدَ اللّٰهَ وَرَجَعَ الْقَهْقَرَى وَرَاءَهُ حَتَّى قَامَ فِي الصَّفِّ فَتَقَدَّمَ رَسُولُ اللّٰهِ ﷺ فَصَلَّى لِلنَّاسِ فَلَمَّا فَرَغَ أَقْبَلَ عَلَى النَّاسِ فَقَالَ:" أَيُّهَا النَّاسُ مَا لَكُمْ حِينَ نَابَكُمْ شَيْءٌ فِي الصَّلاَةِ أَخَذْتُمْ فِي التَّصْفِيقِ؟ إِنَّمَا التَّصْفِيقُ لِلنِّسَاءِ. مَنْ نَابَهُ شَيْءٌ فِي صَلاَتِهِ فَلْيَقُلْ: سُبْحَانَ اللّٰهِ فَإِنَّهُ لاَ يَسْمَعُهُ أَحَدٌ حِينَ يَقُولُ سُبْحَانَ اللّٰهِ إِلاَّ الْتَفَتَ. يَا أَبَا بَكْرٍ مَا مَنَعَكَ أَنْ تُصَلِّيَ بِالنَّاسِ حِينَ أَشَرْتُ إِلَيْكَ؟" فَقَالَ أَبُو بَكْرٍ: مَا كَانَ يَنْبَغِي لاِبْنِ أَبِي قُحَافَةَ أَنْ يُصَلِّيَ بِالنَّاسِ بَيْنَ يَدَيْ رَسُولِ اللّٰهِ ﷺ. مُتَّفَقٌ عَلَيْهِ. مَعْنَى" حُبِسَ": أَمْسَكُوهُ لِيُضَيِّفُوهُ.

**251** அபுல் அப்பாஸ் என்ற ஸஹ்ல் இப்னு ஸஹ்து ஸாஇதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'அம்ரு இப்னு அவ்ப் குடும்பத்தினர் தங்களிடையே சண்டையிட்டுக் கொள்கின்றனர்' என்ற செய்தி நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைத்தது. அவர்களிடையே சமாதானம் செய்து வைக்க நபி (ஸல்) அவர்கள் தம்முடன் சில நபித்தோழர்களையும் அழைத்துக் கொண்டு அங்கே சென்றார்கள். (அதிகமான நேரம் ஆகிவிட்டதால்) தொழுகைக்கு நேரம் நெருங்கியும் நபி (ஸல்) அவர்கள் (பள்ளிக்கு) வர இயலாது போய்விட்டது. உடனே பிலால் (ரழி) அவர்கள், அபூபக்ர் (ரழி) அவர்களிடம் வந்து, "அபூபக்ர் அவர்களே! நபி (ஸல்) அவர்கள் இன்னும் வரவில்லை. தொழுகை நேரம் வந்து விட்டது. மக்களுக்கு நீங்கள் இமாமத் செய்திட உங்களுக்கு இயலுமா?" என்று கேட்டார்கள். "நீர் விரும்பினால் சரி" என அபூபக்ர் (ரழி) கூறினார்கள். உடனே பிலால் (ரழி) இகாமத் கூறினார்கள். அபூபக்ர் (ரழி) முன்னே நின்றார்கள். தக்பீர் கூறினார்கள். மக்களும் தக்பீர் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (அப்போது வந்து) வரிசையில் நிற்பதற்காக நடந்து வந்தார்கள். உடனே மக்கள் கை தட்டினார்கள். அபூபக்ர் (ரழி) தன் தொழுகையில் நின்றால் எங்கும் திரும்பிப் பார்க்கவே மாட்டார்கள். மக்கள் கை தட்டலை அதிகமாக்கியதும், திரும்பினார்கள். அப்போது அங்கே நபி (ஸல்)

அவர்கள் இருந்தார்கள். (தொடர்ந்து தொழவைக்க) அவரிடம் நபி (ஸல்) அவர்கள் சமிக்ஞை செய்தார்கள். உடனே அபூபக்ர் (ரழி) தன் கைகளை உயர்த்தி அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். நேராக பின்புறம் பின்னோக்கி வந்து, வரிசையில் நின்று கொண்டார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் முன்னே சென்று மக்களுக்குத் தொழ வைத்தார்கள்.

தொழுகை முடிந்ததும் மக்களை முன்னோக்கி, "மனிதர்களே! தொழுகையில் ஏதேனும் உங்களிடம் குறுக்கிடும் போது, உங்களுக்கு என்ன நேர்ந்தது? கை ஏன் தட்டுகிறீர்கள்? கை தட்டுதல், பெண்களுக்குரியதாகும். தன் தொழுகையில் ஏதேனும் குறை ஏற்படுவதாகக் கருதுபவர், "சுப்ஹானல்லாஹ்" என்று கூறட்டும். "சுப்ஹானல்லாஹ்" என ஒருவர் கூறுவதைக் கேட்கும் எந்த இமாமும் திரும்புவார் என்று கூறி, (அபூபக்ர் (ரழி) அவர்களை நோக்கி), "அபூபக்ரே! உமக்கு நான் சமிக்ஞை செய்தும் மக்களுக்கு நீர் தொழ வைக்க உம்மைத் தடுத்தது எது?" என்று கேட்டார்கள். அப்போது அபூபக்ர் (ரழி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் முன்னிலையில் அபூகுஹாஃபாவின் மகனுக்குத் தொழுகை நடத்தும் தகுதியில்லை" என்று கூறினார்கள். **(புகாரி:1234. முஸ்லிம்:421)**

## ٣٢ - باب فضل ضعفة المسلمين والفقراء الخاملين

## பாடம் : 32 - பலவீனமான மற்றும் ஏழை, எளிய முஸ்லிம்களின் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى: وَاصْبِرْ نَفْسَكَ مَعَ الَّذِينَ يَدْعُونَ رَبَّهُمْ بِالْغَدَاةِ وَالْعَشِيِّ يُرِيدُونَ وَجْهَهُ وَلاَ تَعْدُ عَيْنَاكَ عَنْهُمْ.

**அல்லாஹ் கூறுகிறான் :** *(நபியே!) காலையிலும், மாலையிலும் தங்கள் இறைவனிடம் அவனது பொருத்தத்தை விரும்பியவர்களாக பிரார்த்தனை செய்து கொண்டிருப்பவர்களுடன் நீரும் பொறுமையுடன் இருப்பீராக! அவர்களை விட்டும் உம் இரு கண்களையும் திருப்பாமல் இருப்பீராக! (18:28)*

٢٥٢ - وَعَنْ حَارِثَةَ بْنِ وَهْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" أَلاَ أُخْبِرُكُمْ بِأَهْلِ الْجَنَّةِ ؟ كُلُّ ضَعِيفٍ مُتَضَعَّفٍ لَوْ أَقْسَمَ عَلَى اللَّهِ لأَبَرَّهُ. أَلاَ أُخْبِرُكُمْ بِأَهْلِ النَّارِ ؟ كُلُّ عُتُلٍّ جَوَّاظٍ مُسْتَكْبِرٍ". مُتَّفَقٌ عَلَيْهِ." الْعُتُلُّ": الْغَلِيظُ الْجَافِي." وَالْجَوَّاظُ" بِفَتْحِ الْجِيمِ وَتَشْدِيدِ الْوَاوِ وَبِالظَّاءِ الْمُعْجَمَةِ: وَهُوَ الْجَمُوعُ الْمَنُوعُ. وَقِيلَ: الضَّخْمُ الْمُخْتَالُ فِي مِشْيَتِهِ. وَقِيلَ: الْقَصِيرُ الْبَطِينُ.

**252** ஹாரிஸா இப்னு வஹ்பு (ரழி) அறிவிக்கிறார்கள்:

"சொர்க்கவாசிகளை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?" என்று கேட்ட நபி (ஸல்) அவர்கள், "ஒவ்வொரு பலவீனரும், பலவீனர் என்று கருதப்படுபவரும் ஆவர். அல்லாஹ்வின் மீது ஒருவன் சத்தியம் செய்து கூறினால், அவனுக்கு அவன் உதவி புரிவான். நரகவாசிகளை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? கடின குணமுள்ளவன், கஞ்சன், பெருமை அடிப்பவன் ஆகியோர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:4918. முஸ்லிம்:2853)**

٢٥٣ - وَعَنْ أَبِي الْعَبَّاسِ سَهْلِ بْنِ سَعْدٍ السَّاعِدِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: مَرَّ رَجُلٌ عَلَى النَّبِيِّ ﷺ فَقَالَ لِرَجُلٍ عِنْدَهُ جَالِسٍ:" مَا رَأْيُكَ فِي هَذَا ؟". فَقَالَ: رَجُلٌ مِنْ أَشْرَافِ النَّاسِ هَذَا وَاللَّهِ حَرِيٌّ إِنْ خَطَبَ أَنْ يُنْكَحَ وَإِنْ شَفَعَ أَنْ يُشَفَّعَ. فَسَكَتَ رَسُولُ اللَّهِ ﷺ ثُمَّ مَرَّ رَجُلٌ آخَرُ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ:" مَا رَأْيُكَ فِي هَذَا" ؟ فَقَالَ يَا رَسُولَ اللَّهِ هَذَا رَجُلٌ مِنْ فُقَرَاءِ الْمُسْلِمِينَ هَذَا حَرِيٌّ إِنْ خَطَبَ أَلاَّ يُنْكَحَ وَإِنْ شَفَعَ أَلاَّ يُشَفَّعَ وَإِنْ قَالَ أَلاَّ يُسْمَعَ لِقَوْلِهِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" هَذَا خَيْرٌ مِنْ مِلْءِ الأَرْضِ مِثْلَ هَذَا" مُتَّفَقٌ عَلَيْهِ." حَرِيٌّ" هُوَ بِفَتْحِ الْحَاءِ وَكَسْرِ الرَّاءِ وَتَشْدِيدِ الْيَاءِ: أَيْ حَقِيقٌ. وَقَوْلُهُ" شَفَعَ" بِفَتْحِ الْفَاءِ.

**253** அபுல் அப்பாஸ் என்ற ஸஹ்ல் இப்னு ஸஹ்து ஸாஇதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களைக் கடந்து ஒரு (பணக்கார) மனிதர் சென்றார். நபி (ஸல்) அவர்கள் தன் அருகில் இருந்தவர்களிடம், "இவர் விஷயமாக உங்கள் கருத்து என்ன?" என்று கேட்டார்கள். "இவர் மக்களில் பிரபல்யமானவர். இவர் பெண் கேட்டால் திருமணம் செய்து வைக்கப்படவும்; பரிந்துரை செய்தால், பரிந்துரை ஏற்கப்படவும் தகுதியானவர்" என்று அருகில் இருந்தவர்கள் கூறினர். பின்னர் நபி (ஸல்) அவர்கள் சிறிது நேரம் அமைதியாக இருந்தார்கள்.

பிறகு மற்றொரு (ஏழை) மனிதர் நபி (ஸல்) அவர்களை கடந்து சென்றார். "இவரைப் பற்றி உங்கள் கருத்து என்ன?" என்று நபி (ஸல்) அவர்கள் அருகில் இருந்தவர்களிடம் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! இவர் ஏழை முஸ்லிம்களில் ஒருவர். இவர் பெண் கேட்டால், திருமணம் செய்து வைக்கப்படாதிருக்கவும்; பரிந்துரை செய்தால் பரிந்துரை ஏற்கப்படாதிருக்கவும்; இவர் பேசினால், இவரது பேச்சைக் கேட்கப்படாதிருக்கவுமே தகுதியானவர்" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "முதல் நபர் போன்ற(வசதி படைத்த)வர்கள் இந்த பூமி நிரம்ப இருந்தாலும், அவர்கள் அனைவரையும்விட இந்த ஏழையே மேலானவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5091, முஸ்லிம்)**

٢٥٤ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " احْتَجَّتِ الْجَنَّةُ وَالنَّارُ فَقَالَتِ النَّارُ: فِيَّ الْجَبَّارُونَ وَالْمُتَكَبِّرُونَ. وَقَالَتِ الْجَنَّةُ: فِيَّ ضُعَفَاءُ النَّاسِ وَمَسَاكِينُهُمْ. فَقَضَى اللّٰهُ بَيْنَهُمَا: إِنَّكِ الْجَنَّةُ رَحْمَتِي أَرْحَمُ بِكِ مَنْ أَشَاءُ وَإِنَّكِ النَّارُ عَذَابِي أُعَذِّبُ بِكِ مَنْ أَشَاءُ وَلِكِلَيْكُمَا عَلَيَّ مِلْؤُهَا" رَوَاهُ مُسْلِمٌ.

**254** அபூஸயீத் அல்-குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருமுறை சொர்க்கமும், நரகமும் தர்க்கம் செய்து கொண்டன. "என்னிடத்தில் கர்வம் கொண்டவர்களும், பெருமைக்காரர்களும் இருக்கின்றனர்" என்று நரகம் கூறியது. "என்னிடம் மனிதர்களில் பலவீனர்களும், அவர்களில் ஏழைகளும் உள்ளனர்" என்று சொர்க்கம் கூறியது. அப்போது அல்லாஹ், "சொர்க்கமாகிய நீ, எனது அருட்கொடையாகும். நான் நாடியவருக்கு உன் மூலம் அருள்புரிவேன். நரகமாகிய நீ, எனது வேதனையாகும். நான் நாடியவரை உன் மூலம் வேதனை செய்வேன். உங்கள் இருவரையும் நிரப்புவது என் பொறுப்பாகும்" என்று அவ்விரண்டுக்கும் இடையே தீர்ப்புக் கூறினான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2847)**

٢٥٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنْ رَسُولِ اللّٰهِ ﷺ قَالَ: " إِنَّهُ لَيَأْتِي الرَّجُلُ الْعَظِيمُ السَّمِينُ يَوْمَ الْقِيَامَةِ لاَ يَزِنُ عِنْدَ اللّٰهِ جَنَاحَ بَعُوضَةٍ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**255** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் பெரும் கொழுத்த (குண்டான) ஒரு மனிதர் வருவார். (அவர் கெட்டவர் என்பதால்) அல்லாஹ்விடம் கொசு இறக்கை அளவுக்குக் கூட மதிப்பு இருக்காது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:4729, முஸ்லிம்:2785)**

٢٥٦ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ امْرَأَةً سَوْدَاءَ كَانَتْ تَقُمُّ الْمَسْجِدَ – أَوْ شَابًّا – فَفَقَدَهَا أَوْ فَقَدَهُ رَسُولُ اللّٰهِ ﷺ فَسَأَلَ عَنْهَا أَوْ عَنْهُ فَقَالُوا: مَاتَ. قَالَ: " أَفَلاَ كُنْتُمْ آذَنْتُمُونِي بِهِ". فَكَأَنَّهُمْ صَغَّرُوا أَمْرَهَا أَوْ أَمْرَهُ فَقَالَ: " دُلُّونِي عَلَى قَبْرِهِ" فَدَلُّوهُ فَصَلَّى عَلَيْهِ ثُمَّ قَالَ: " إِنَّ هَذِهِ الْقُبُورَ مَمْلُوءَةٌ ظُلْمَةً عَلَى أَهْلِهَا. وَإِنَّ اللّٰهَ تَعَالَى يُنَوِّرُهَا لَهُمْ بِصَلاَتِي عَلَيْهِمْ". مُتَّفَقٌ عَلَيْهِ. قَوْلُهُ " تَقُمُّ" هُوَ بِفَتْحِ التَّاءِ وَضَمِّ الْقَافِ: أَيْ تَكْنُسُ." وَالْقُمَامَةُ": الْكُنَاسَةُ." وَآذَنْتُمُونِي" بِمَدِّ الْهَمْزَةِ: أَيْ أَعْلَمْتُمُونِي.

**256** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு கருப்பு நிறப்பெண்(ணோ அல்லது ஆணோ இதில் யார் என்பது சந்தேகம் உள்ளது) பள்ளியைச் சுத்தம் செய்பவளாக இருந்தாள். ஒருநாள் அவளை காணாதிருந்த நபி (ஸல்) அவர்கள் அவளைப் பற்றிக் கேட்டார்கள். "அவள் இறந்துவிட்டாள்" என்று (நபித்தோழர்கள்) கூறினார்கள். "இதனை எனக்கு நீங்கள் கூறியிருக்க வேண்டாமா?" என்று கேட்டார்கள். அவளின் விஷயம் குறித்து நபித்தோழர்கள் குறைவாகக் கருதிவிட்டனர். உடனே நபி (ஸல்) அவர்கள் "அவள் மண்ணறையை (கப்ரு) எனக்குக் காட்டுங்கள்" எனக் கூறினார்கள். அவர்கள் காட்டியதும், அதன் அருகே தொழ வைத்தார்கள். பின்பு, "நிச்சயமாக, இந்த மண்ணறைகள் அதனுள்ளே இருப்பவர்களால் இருள் நிரம்பியதாக உள்ளன. நிச்சயமாக அல்லாஹ், இவர்களுக்கு தொழ வைக்கப்படும் தொழுகை மூலம் இவர்களுக்காக மண்ணறையை ஒளிமயமாக்குகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**( புகாரி:1337. முஸ்லிம்:956. இறந்தவர் 'ஒரு வாலிபர்' என்ற சந்தேகத்தை இதன் அறிவிப்பாளர் வெளியிட்டுள்ளார்)**

٢٥٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" رُبَّ أَشْعَثَ أَغْبَرَ مَدْفُوعٍ بِالأَبْوَابِ لَوْ أَقْسَمَ عَلَى اللَّهِ لأَبَرَّهُ" رَوَاهُ مُسْلِمٌ.

**257** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பரட்டைத் தலையுடன் புழுதிபடிந்து, வருகின்ற வாசல்கள் அடைக்கப்(பட்டு விரட்டப்)படுகின்ற எத்தனையோ நபர்கள், அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து ஒரு விஷயத்தைக் கூறியதும், அவருக்கு அல்லாஹ் நிறைவேற்றித் தருவான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2622)**

٢٥٨ – وَعَنْ أُسَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" قُمْتُ عَلَى بَابِ الْجَنَّةِ فَإِذَا عَامَّةُ مَنْ دَخَلَهَا الْمَسَاكِينُ وَأَصْحَابُ الْجَدِّ مَحْبُوسُونَ. غَيْرَ أَنَّ أَصْحَابَ النَّارِ قَدْ أُمِرَ بِهِمْ إِلَى النَّارِ وَقُمْتُ عَلَى بَابِ النَّارِ فَإِذَا عَامَّةُ مَنْ دَخَلَهَا النِّسَاءُ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَالْجَدُّ: بِفَتْحِ الجِيمِ. الْحَظُّ وَالْغِنَى. وَقَوْلُهُ" مَحْبُوسُونَ": أَيْ لَمْ يُؤْذَنْ لَهُمْ بَعْدُ فِي دُخُولِ الْجَنَّةِ.

**258** உஸாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான் சொர்க்கத்தின் வாசலில் நின்றிருந்தேன். அதில் நுழைந்தவர்களில் பெரும்பாலானவர்கள் ஏழைகளாவர். பணக்காரர்கள் (உள்ளே நுழைய) தடுக்கப்பட்டிருந்தனர். எனினும் நரகவாசிகள் நரகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். நான் நரகின் வாசலில் நின்றேன். அதில் நுழைந்தவர்களில் அதிகமானவர்கள் பெண்களாவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5196. முஸ்லிம்:2736)**

٢٥٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" لَمْ يَتَكَلَّمْ فِي الْمَهْدِ إِلاَّ ثَلاَثَةٌ: عِيسَى ابْنُ مَرْيَمَ وَصَاحِبُ جُرَيْجٍ وَكَانَ جُرَيْجٌ رَجُلاً عَابِدًا فَاتَّخَذَ صَوْمَعَةً فَكَانَ فِيهَا فَأَتَتْهُ أُمُّهُ وَهُوَ يُصَلِّي فَقَالَتْ: يَا جُرَيْجُ. فَقَالَ: يَا رَبِّ أُمِّي وَصَلاَتِي! فَأَقْبَلَ عَلَى صَلاَتِهِ فَانْصَرَفَتْ. فَلَمَّا كَانَ مِنَ الْغَدِ أَتَتْهُ وَهُوَ يُصَلِّي فَقَالَتْ: يَا جُرَيْجُ. فَقَالَ: أَيْ رَبِّ أُمِّي وَصَلاَتِي! فَأَقْبَلَ عَلَى صَلاَتِهِ فَلَمَّا كَانَ مِنَ الْغَدِ أَتَتْهُ وَهُوَ يُصَلِّي. فَقَالَتْ: يَا جُرَيْجُ فَقَالَ: أَيْ رَبِّ أُمِّي وَصَلاَتِي! فَأَقْبَلَ عَلَى صَلاَتِهِ فَقَالَتْ: اللَّهُمَّ لاَ تُمِتْهُ حَتَّى يَنْظُرَ إِلَى وُجُوهِ الْمُومِسَاتِ. فَتَذَاكَرَ بَنُو إِسْرَائِيلَ جُرَيْجًا وَعِبَادَتَهُ وَكَانَتْ امْرَأَةٌ بَغِيٌّ يُتَمَثَّلُ بِحُسْنِهَا فَقَالَتْ: إِنْ شِئْتُمْ لأَفْتِنَنَّهُ. فَعَرَضَتْ لَهُ فَلَمْ يَلْتَفِتْ إِلَيْهَا فَأَتَتْ رَاعِيًا كَانَ يَأْوِي إِلَى صَوْمَعَتِهِ فَأَمْكَنَتْهُ مِنْ نَفْسِهَا فَوَقَعَ عَلَيْهَا فَحَمَلَتْ فَلَمَّا وَلَدَتْ قَالَتْ: هُوَ مِنْ جُرَيْجٍ فَأَتَوْهُ فَاسْتَنْزَلُوهُ وَهَدَمُوا صَوْمَعَتَهُ وَجَعَلُوا يَضْرِبُونَهُ. فَقَالَ: مَا شَأْنُكُمْ ؟ قَالُوا: زَنَيْتَ بِهَذِهِ الْبَغِيِّ فَوَلَدَتْ مِنْكَ. قَالَ: أَيْنَ الصَّبِيُّ ؟ فَجَاءُوا بِهِ فَقَالَ: دَعُونِي حَتَّى أُصَلِّيَ. فَصَلَّى فَلَمَّا انْصَرَفَ أَتَى الصَّبِيَّ فَطَعَنَ فِي بَطْنِهِ وَقَالَ: يَا غُلاَمُ مَنْ أَبُوكَ ؟ قَالَ: فُلاَنٌ الرَّاعِي. فَأَقْبَلُوا عَلَى جُرَيْجٍ يُقَبِّلُونَهُ وَيَتَمَسَّحُونَ بِهِ وَقَالُوا نَبْنِي لَكَ صَوْمَعَتَكَ مِنْ

ذَهَب. قَالَ: لاَ أَعِيدُوهَا مِنْ طِين كَمَا كَانَتْ فَفَعَلُوا. وَبَيْنَا صَبِيٌّ يَرْضَعُ مِنْ أُمِّه فَمَرَّ رَجُلٌ رَاكِبٌ عَلَى دَابَّة فَارِهَة وَشَارَة حَسَنَةً فَقَالَتْ أُمُّهُ: اللَّهُمَّ اجْعَلْ ابْنِي مِثْلَ هَذَا فَتَرَكَ الثَّدْيَ وَأَقْبَلَ إلَيْه فَنَظَرَ إلَيْه فَقَالَ: اللَّهُمَّ لاَ تَجْعَلْنِي مِثْلَهُ. ثُمَّ أَقْبَلَ عَلَى ثَدْيِه فَجَعَلَ يَرْضَعُ فَكَأَنِّي أَنْظُرُ إلَى رَسُولِ اللّه ﷺ وَهُوَ يَحْكِي ارْتِضَاعَهُ بِأُصْبُعِه السَّبَّابَة فِي فِيه فَجَعَلَ يَمُصُّهَا ثُمَّ قَالَ: وَمَرُّوا بِجَارِيَة وَهُمْ يَضْرِبُونَهَا وَيَقُولُونَ: زَنَيْت سَرَقْت وَهِيَ تَقُولُ: حَسْبِي اللّهُ وَنِعْمَ الْوَكِيلُ فَقَالَتْ أُمُّهُ: اللَّهُمَّ لاَ تَجْعَلْ ابْنِي مِثْلَهَا فَتَرَكَ الرَّضَاعَ وَنَظَرَ إلَيْهَا فَقَالَ: اللَّهُمَّ اجْعَلْنِي مِثْلَهَا فَهُنَالِكَ تَرَاجَعَا الْحَدِيثَ. فَقَالَتْ: مَرَّ رَجُلٌ حَسَنُ الْهَيْئَة فَقُلْتَ: اللَّهُمَّ اجْعَلْ ابْنِي مِثْلَهُ فَقُلْت: اللَّهُمَّ لاَ تَجْعَلْنِي مِثْلَهُ وَمَرُّوا بِهَذِه الأَمَة وَهُمْ يَضْرِبُونَهَا وَيَقُولُونَ:" زَنَيْت سَرَقْت" فَقُلْت: اللَّهُمَّ لاَ تَجْعَلْ ابْنِي مِثْلَهَا فَقُلْت: اللَّهُمَّ اجْعَلْنِي مِثْلَهَا! قَالَ: إنَّ ذَلِكَ الرَّجُلَ جَبَّارٌ فَقُلْت: اللَّهُمَّ لاَ تَجْعَلْنِي مِثْلَهُ وَإنَّ هَذِه يَقُولُونَ زَنَيْت وَلَمْ تَزْن وَسَرَقْت وَلَمْ تَسْرِقْ فَقُلْت: اللَّهُمَّ اجْعَلْنِي مِثْلَهَا" مُتَّفَقٌ عَلَيْه:" الْمُومِسَات" بِضَمِّ الْمِيمِ الأُولَى وَإسْكَانِ الْوَاوِ وَكَسْرِ الْمِيمِ الثَّانِيَة وَبِالسِّينِ الْمُهْمَلَة وَهُنَّ الزَّوَانِي. وَالْمُومِسَةُ الزَّانِيَةُ. وَقَوْلُهُ:" دَابَّة فَارِهَة" بِالْفَاءِ: أَيْ حَاذِقَة نَفِيسَة." وَالشَّارَةُ" - بِالشِّينِ الْمُعْجَمَة وَتَخْفِيفِ الرَّاءِ - وَهِيَ الْجَمَالُ الظَّاهِرُ فِي الْهَيْئَةِ وَالْمَلْبَسِ. وَمَعْنَى" تَرَاجَعَا الْحَدِيثَ": أَيْ حَدَّثَتْ الصَّبِيَّ وَحَدَّثَهَا وَاللّهُ أَعْلَمُ.

**259** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மூன்று பேர் தவிர, எவரும் தொட்டிலில் (குழந்தையாக இருந்த போதே) பேசியதில்லை. (1) மர்யமின் மகன் ஈஸா நபி (2) ஜுரைஜ் என்பவருடன் இணைத்துப் பேசப்பட்ட குழந்தை (3) இனி இந்த ஹதீஸில் பின்னே கூறப்படுபவர்). ஜுரைஜ் என்பவர் வணக்கசாலியாக இருந்தார். தனக்கென ஒரு ஆசிரமம் ஏற்பாடு செய்து, அதிலேயே இருந்தார். அவர் தொழுது கொண்டிருக்கும் போது, அவரிடம் அவரது தாயார் வந்தார். "ஜுரைஜே!" என அழைத்தார். "இறைவா! என் தாயார் (அழைக்கிறார்) நான் தொழுகையில் (உள்ளேன்) என்ன செய்வது?" என்று (மனதிற்குள்) கூறிக் கொண்டார். தாயாரின் அழைப்பிற்கு பதில் கூறாமல், தன் தொழுகையில் அவர் ஈடுபட்டார். அவரது தாயார் திரும்பி விட்டார். மறுநாளும் தொழுது கொண்டிருக்கும்போது, அவரிடம் அவரது தாயார் வந்தார். "ஜுரைஜே!" என்று அழைத்தார். "இறைவா! என் தாயார் (அழைக்கிறார்) நான் தொழுகையில் (உள்ளேன்) என்ன செய்வது?" என (மனதிற்குள்) கூறிக் கொண்டு, தன் தொழுகையில் ஈடுபடலானார். மறுநாளும் தொழுது கொண்டிருக்கும் நேரத்தில், அவரது தாயார் வந்தார். "ஜுரைஜே!" என்று அழைத்தார். "இறைவா! என் தாய் (அழைக்கிறார்) நான் தொழுகையில் (உள்ளேன்) என்ன செய்வது?" என (மனதிற்குள்) கூறிக் கொண்டே தன் தொழுகையில் ஈடுபடலானார். அப்போது அவரது தாயார் "இறைவா! விபச்சாரிகளின் முகங்களை இவன் காணும் வரை இவனை நீ மரணிக்கச் செய்யாதே!" என்று பிரார்த்தித்தார்.

ஜுரைஜ் பற்றியும், அவரது வணக்கம் பற்றியும் பனூ இஸ்ரவேலர்கள் புகழ்ந்து பேசிக் கொண்டனர். அப்போது மிக அழகியான விபச்சாரம் செய்யும் பெண் ஒருத்தி, "நீங்கள் நாடினால் அவரை நான் குழப்பிவிடுவேன்" என்று கூறினாள். அவரை அவள் தன் பக்கம் ஈர்க்க முயற்சித்தாள். எனினும், ஜுரைஜ் அவளைத் திரும்பிப் பார்க்கவே இல்லை. பிறகு அவரின் ஆசிரமத்தில் தங்கிச் செல்லும் ஓர் ஆடு மேய்ப்பவனிடம் வந்து, அவனை அவள் தன் வலையில் விழச் செய்தாள். அவனும் அவளுடன் உடலுறவு கொண்டான். அவள் கர்ப்பிணியானாள். அவள் குழந்தையைப் பெற்றதும், "இந்தக் குழந்தை ஜுரைஜ் உடையது" என்றாள். உடனே பனூ இஸ்ரவேலர்கள் ஜுரைஜிடம் வந்து அவரை (ஆசிரமத்தை விட்டு) வெளியேற்றினார்கள். அவரது ஆசிரமத்தை இடித்தார்கள். அவரையும் அடிக்கத் துவங்கினார்கள். "ஏன் இப்படிச் செய்கிறீர்கள்?" என்று அவர் கேட்டார். "நீ இந்த விபச்சாரியுடன் விபச்சாரத்தில் ஈடுபட்டுள்ளாய். அவள் ஒரு குழந்தையும் பெற்றுவிட்டாள்" என்று கூறினார்கள். "அந்த குழந்தை எங்கே?" என்று கேட்டார். உடனே

குழந்தையை அவர்கள் கொண்டு வந்தார்கள். "நான் தொழ வேண்டும். என்னை விடுங்கள்" என்று கூறிவிட்டுத் தொழுதார். தொழுது முடித்ததும் குழந்தையிடம் வந்தவர் அதன் வயிற்றில் குத்தினார். "சிறுவனே! உன் தந்தை யார்?" என்று கேட்டார். "ஆடு மேய்ப்பவரான இன்னார்தான்" என்று சிறுவன் கூறினான். மக்கள் ஜுரைஜிடம் வந்து, அவரைக் கட்டித் தழுவி, முத்தமிட்டார்கள். "உன் ஆசிரமத்தை தங்கத்தால் நாங்கள் கட்டித் தருவோம்" என்று கூறினார்கள். "வேண்டாம் முன்பு இருந்தது போல் மண்ணால் அதை மீண்டும் கட்டித்தாருங்கள்" என்றார். அவ்வாறே அவர்கள் செய்தார்கள்.

"(மூன்றாவது குழந்தையான) ஒரு குழந்தை தன் தாயாரிடம் பால் குடித்துக் கொண்டிருந்தது. அப்போது அழகிய, விலை உயர்ந்த ஒரு வாகனத்தில் ஒருவர் போய்க் கொண்டிருந்தார். அக்குழந்தையின் தாயார், "இறைவா! இது போன்று என் மகனை ஆக்கு" என்று வேண்டினார். மார்பகத்தை விட்டு (வாயை) எடுத்த, அந்தக் குழந்தை அவரை உற்று நோக்கி, "இறைவா! இவர்போல் என்னை ஆக்கி விடாதே!" என்றது. பின்பு தன் (தாயாரின்) மார்பகத்தில் பால் குடித்தது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறி, தன் ஆட்காட்டி விரலை, தன் வாயில் வைத்துச் சுவைத்துக் காட்டி, அந்தக் குழந்தையின் பால் குடித்தலை விளக்கியது, இப்போது பார்ப்பது போல் உள்ளது.

(அந்த சம்பவத்தின் தொடர்ச்சியாவது:)

ஓர் அடிமைப் பெண்ணை அடித்துக் கொண்டே சிலர் சென்றனர். "நீ விபச்சாரம் செய்தாய். நீ திருடினாய்" என அவர்கள் கூறினார்கள். அப்பெண்ணோ "ஹஸ்பியல்லாஹ் வநிஹ்மல் வகீல்" (அல்லாஹ்வே போதுமானவன். அவனே பாதுகாப்பதில் வல்லவன்) என்று கூறினாள். அப்போது அக்குழந்தையின் தாயார், "இறைவா இவளைப் போல் என் மகனை ஆக்கிவிடாதே" என்று கூறினார். பால் குடித்ததை விட்ட அக்குழந்தை அவளின் பக்கம் பார்த்தது. "இறைவா! இவளைப் போல் என்னை ஆக்கு" என்று கூறியது. பின்னர் தாயும் மகனும் பேசினர். "(மகனே!) நல்ல தோற்றமுடைய ஒருவர் சென்றார். அப்போது நான், 'இறைவா! இவரைப் போல் என் மகனை ஆக்கு' என்றேன். நீயோ, 'இறைவா! இவரைப் போல் என்னை ஆக்காதே!' என்றாய். மேலும் இந்த அடிமைப் பெண்ணை, அவள் விபச்சாரி, திருடி எனக் கூறிக் கொண்டே சிலர் அடித்தவாறு சென்றார்கள். 'இறைவா! இவளைப் போல் நீ என் மகனை ஆக்காதே' என்று கூறினேன். நீயோ, 'இறைவா! அவளை போல் என்னை ஆக்கி விடு' என்று கூறினாயே?" என்று அக்குழந்தையின் தாயார் கேட்டார். "(அம்மா!) அந்த மனிதர் (மக்களை) அடக்கி ஆள்பவர். எனவேதான் நான் 'இறைவா! என்னை அவரைப் போல் ஆக்கிவிடாதே!' என்றேன். இந்தப் பெண்ணை அவர்கள், அவள் விபச்சாரம் செய்யாதிருந்தும், அவளை விபச்சாரி என்று கூறினர். அவள் திருடாமல் இருந்தும், திருடி என்றனர். எனவே தான் நான், 'இறைவா! அவளைப் போல் என்னை நீ ஆக்கு' என்று கூறினேன்" என்று குழந்தை கூறியது என, நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3436. முஸ்லிம்:2550)**

## ٣٣ - باب ملاحظة اليتيم والبنات وسائر الضعفة والمساكين والمنكسرين والإحسان إليهم والشفقة عليهم والتواضع معهم وخفض الجناح لهم:

### பாடம் : 33 - அனாதைகள், பெண்கள், பலவீனர், ஏழைகள் ஆகியோரிடம் நல்ல விதமாக நடந்து கொள்ளுதல். அவர்களுக்கு நன்மை செய்தல், இரக்கம் காட்டுதல்!

قَالَ اللّٰهُ تَعَالَى: وَاخْفِضْ جَنَاحَكَ لِلْمُؤْمِنِينَ. وَقَالَ تَعَالَى: وَاصْبِرْ نَفْسَكَ مَعَ الَّذِينَ يَدْعُونَ رَبَّهُمْ بِالْغَدَاةِ وَالْعَشِيِّ يُرِيدُونَ وَجْهَهُ وَلاَ تَعْدُ عَيْنَاكَ عَنْهُمْ تُرِيدُ زِينَةَ الْحَيَاةِ الدُّنْيَا. وَقَالَ تَعَالَى: فَأَمَّا الْيَتِيمَ فَلاَ تَقْهَرْ وَأَمَّا السَّائِلَ فَلاَ تَنْهَرْ. وَقَالَ تَعَالَى: أَرَأَيْتَ الَّذِي يُكَذِّبُ بِالدِّينِ فَذَلِكَ الَّذِي يَدُعُّ الْيَتِيمَ وَلاَ يَحُضُّ عَلَى طَعَامِ الْمِسْكِينِ.

அல்லாஹ் கூறுகிறான் : *இறை விசுவாசிகளுக்காக உன் இறக்கைகளை (பணிவுடன்) தாழ்த்துவீராக! (15:88)*

*காலையிலும், மாலையிலும் அவர்கள் தங்கள் இறைவனிடம் அவனது பொருத்தத்தை நாடியவர்களாகப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறவர்களிடம் உம்மை நீர் பொறுமையாக ஆக்கிக் கொள்வீராக! இவ்வுலக வாழ்க்கையை விரும்பியவராக அவர்களை விட்டும் உமது பார்வையை திருப்பிவிடாதீர்! (18:28)*

*"...எனவே அன்னாரை நீர் கடிந்து கொள்ளாதீர். மேலும் யாசிப்போரை விரட்டாதீர்..." (93:9,10)*

***(நபியே!) மறுமை நாளின் தீர்ப்பைப் பொய்யென்று கூறுபவனை நீர் பார்த்திருக்கிறீரா? அவன் தான் அனாதையை மிரட்டி விரட்டுகின்றான். மேலும், வறியவரின் உணவை அளிக்கும்படித் தூண்டுவதில்லை. (107:1,2,3)***

**٢٦.** – وَعَنْ سَعْد ابْنِ أَبِي وَقَّاص رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: كُنَّا مَعَ النَّبِيِّ ﷺ سِتَّةَ نَفَر فَقَالَ الْمُشْرِكُونَ لِلنَّبِيِّ ﷺ: أُطْرُدْ هَؤُلاَءِ لاَ يَجْتَرِئُونَ عَلَيْنَا وَكُنْتُ أَنَا وَابْنُ مَسْعُود وَرَجُلٌ مِنْ هُذَيْلٍ وَبِلاَلٌ وَرَجُلاَنِ لَسْتُ أُسَمِّيهِمَا فَوَقَعَ فِي نَفْسِ رَسُولِ اللّٰهِ ﷺ مَا شَاءَ اللّٰهُ أَنْ يَقَعَ فَحَدَّثَ نَفْسَهُ فَأَنْزَلَ اللّٰهُ تَعَالَى: وَلاَ تَطْرُدِ الَّذِينَ يَدْعُونَ رَبَّهُمْ بِالْغَدَاةِ وَالْعَشِيِّ يُرِيدُونَ وَجْهَهُ رَوَاهُ مُسْلِمٌ.

**260** ஸஃது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் ஆறுபேர் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். நபி (ஸல்) அவர்களிடம் மக்கத்துக் குறைஷிகளில் இணை வைக்கக்கூடியவர்கள் வந்து, "இவர்களை விரட்டி விடுவீராக! (அப்போதுதான்) எங்களுக்கு எதிராக, அவர்கள் தைரியம் ஏற்படாதிருப்பார்கள்" என்று கூறினார்கள். நானும், இப்னுமஸ்ஊத் மற்றும் ஹுதைல் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர், பிலால் ஆகிய நான்கு பேர்களுடன், நான் பெயர் கூறாத இருவரும் (ஆக 6 பேர்) இருந்தனர். தனக்குள் நபி (ஸல்) அவர்கள் சிந்தித்த வேளையில் எது நடக்க வேண்டும் என அல்லாஹ் நாடினானோ, அது நபி (ஸல்) அவர்களின் உள்ளத்தில் நிகழ்ந்தது. அப்போது அல்லாஹ் (கீழ்க்கண்ட) வசனத்தை இறக்கினான்.

***காலையிலும் மாலையிலும் தங்கள் இறைவனிடம் அவனது பொருத்தத்தை நாடியவர்களாக எவர்கள் அழைக்கிறார்களோ, அவர்களை நீர் விரட்டி விட வேண்டாம். (6:52)***

**(முஸ்லிம்:2413)**

**٢٦١** – وَعَنْ أَبِي هُبَيْرَةَ عَائِذ بْنِ عَمْرو الْمُزَنِيِّ – وَهُوَ مِنْ أَهْلِ بَيْعَةِ الرِّضْوَانِ رَضِيَ اللّٰهُ عَنْهُ – أَنَّ أَبَا سُفْيَانَ أَتَى عَلَى سَلْمَانَ وَصُهَيْبٍ وَبِلاَلٍ فِي نَفَرٍ فَقَالُوا: مَا أَخَذَتْ سُيُوفُ اللّٰهِ مِنْ عَدُوِّ اللّٰهِ مَأْخَذَهَا فَقَالَ أَبُو بَكْر رَضِيَ اللّٰهُ عَنْهُ: أَتَقُولُونَ هَذَا لِشَيْخِ قُرَيْشٍ وَسَيِّدِهِمْ ؟ فَأَتَى النَّبِيَّ ﷺ فَأَخْبَرَهُ فَقَالَ:" يَا أَبَا بَكْرٍ. لَعَلَّكَ أَغْضَبْتَهُمْ ؟ لَئِنْ كُنْتَ أَغْضَبْتَهُمْ لَقَدْ أَغْضَبْتَ رَبَّكَ!" فَأَتَاهُمْ فَقَالَ: يَا إِخْوَتَاه أَغْضَبْتُكُمْ ؟ قَالُوا: لاَ ؛ يَغْفِرُ اللّٰهُ لَكَ يَا أُخَي. رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ" مَأْخَذَهَا" أَيْ لَمْ يُسْتَوْفَ حَقُّهَا مِنْهُ. وَقَوْلُهُ" يَا أُخَي" رُوِيَ بِفَتْحِ الْهَمْزَةِ وَكَسْرِ الْخَاءِ وَتَخْفِيفِ الْيَاءِ وَرُوِيَ بِضَمِّ الْهَمْزَةِ وَفَتْحِ الْخَاءِ وَتَشْدِيدِ الْيَاءِ.

**261** "பைஅதுர் ரிழ்வான்" எனும் ஒப்பந்தத்தின் போது கலந்து கொண்ட அபூஹுபைரா என்ற ஆயித் இப்னு அம்ரு அல்முஸ்னி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) ஸல்மான் (ரழி) சுஹைப் (ரழி), பிலால் (ரழி) ஆகியோர் இருந்த இடத்திற்கு அபூசுஃப்யான் அவர்கள் வந்தார்கள். அப்போது இந்த மூவரும் "அல்லாஹ்வின் பகைவர்களை, அல்லாஹ்வின் வாள்கள் ஒன்றும் செய்யவில்லையே" என்று கூறினார்கள். (இதை அறிந்த) அபூபக்ர்

(ரழி) அவர்கள், "குரைஷி மக்களின் பெரியவரை, அவர்களின் தலைவரை, இப்படி நீங்கள் கூறினீர்களா?" என்று கேட்டார்கள். பின்பு இது குறித்து நபி (ஸல்) அவர்களிடமும் வந்து அபூபக்ர் (ரழி) கூறினார்கள். "அபூபக்கரே! அவர்களை நீர் கோபப்படுத்தி இருக்கக்கூடுமே! அவர்களை நீர் கோபப்படுத்தி இருந்தால் உம்முடைய இறைவனை நீர் கோபப்படுத்திவிட்டீர்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அபூபக்ர் (ரழி) அவர்கள் அவர்களிடம் வந்து, "சகோதரர்களே! உங்களை நான் கோபப்படுத்தி விட்டேனா?" என்று கேட்டார்கள். "இல்லை சகோதரரே! உம்மை அல்லாஹ் மன்னிப்பானாக" என்று மூவரும் கூறினார்கள். **(முஸ்லிம்:2504)**

٢٦٢ - وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " أَنَا وَكَافِلُ الْيَتِيمِ فِي الْجَنَّةِ هَكَذَا" وَأَشَارَ بِالسَّبَّابَةِ وَالْوُسْطَى وَفَرَّجَ بَيْنَهُمَا. رَوَاهُ الْبُخَارِيُّ. وَكَافِلُ الْيَتِيمِ: الْقَائِمُ بِأُمُورِهِ.

**262** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நானும், அனாதையை ஆதரித்துப் பொறுப்பேற்றவரும் சொர்க்கத்தில் இவ்வாறு இருப்போம்" என நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, தன் ஆட்காட்டி விரலாலும், நடு விரலாலும் சமிக்ஞை செய்து, அவ்விரண்டுக்குமிடையே இணைத்துக் காட்டினார்கள். **(புகாரி:5304)**

٢٦٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " كَافِلُ الْيَتِيمِ - لَهُ أَوْ لِغَيْرِهِ أَنَا وَهُوَ كَهَاتَيْنِ فِي الْجَنَّةِ" وَأَشَارَ الرَّاوِي - وَهُوَ مَالِكُ بْنُ أَنَسٍ - بِالسَّبَّابَةِ وَالْوُسْطَى وَرَوَاهُ مُسْلِمٌ. وَقَوْلُهُ ﷺ: " الْيَتِيمُ لَهُ أَوْ لِغَيْرِهِ" مَعْنَاهُ: قَرِيبُهُ أَوْ الأَجْنَبِيُّ مِنْهُ فَالْقَرِيبُ مِثْلُ أَنْ تَكْفُلَهُ أُمُّهُ أَوْ جَدُّهُ أَوْ أَخُوهُ أَوْ غَيْرُهُمْ مِنْ قَرَابَتِهِ وَاللَّهُ أَعْلَمُ.

**263** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தனக்குரிய அல்லது தனக்குத் தெரியாத ஒரு அனாதையைப் பொறுப்பேற்றவனும், நானும் சொர்க்கத்தில் இவ்வாறு இருப்போம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். மாலிக் இப்னு அனஸ் என்ற அறிவிப்பாளார், தன் ஆட்காட்டி விரலையும், நடு விரலையும் காட்டி சமிக்ஞை செய்தார்கள். **(முஸ்லிம்:2983)**

٢٦٤ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ) قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " لَيْسَ الْمِسْكِينُ الَّذِي تَرُدُّهُ التَّمْرَةُ وَالتَّمْرَتَانِ وَلاَ اللُّقْمَةُ وَاللُّقْمَتَانِ إِنَّمَا الْمِسْكِينُ الَّذِي يَتَعَفَّفُ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ فِي الصَّحِيحَيْنِ: " لَيْسَ الْمِسْكِينُ الَّذِي يَطُوفُ عَلَى النَّاسِ تَرُدُّهُ اللُّقْمَةُ وَاللُّقْمَتَانِ وَالتَّمْرَةُ وَالتَّمْرَتَانِ وَلَكِنَّ الْمِسْكِينَ الَّذِي لاَ يَجِدُ غِنًى يُغْنِيهِ وَلاَ يُفْطَنُ بِهِ فَيُتَصَدَّقُ عَلَيْهِ وَلاَ يَقُومُ فَيَسْأَلُ النَّاسَ".

**264** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு பேரீத்தம்பழம், இரண்டு பேரீத்தம்பழம், ஒரு கவள உணவு, இரு கவள உணவு ஆகியவற்றை வாங்கிச் செல்லும் நபர் ஏழை அல்ல. ஏழை என்பவர், யாசகம் கேட்காமல் இருப்பவர் தான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:1479,4539. முஸ்லிம்:1039)**

இரண்டு நூல்களின் மற்றொரு அறிவிப்பில் பின்வருமாறு வருகிறது :

"மக்களைச் சுற்றி வந்து, ஒரு கவளம், இரு கவளம், ஒரு பேரீத்தம் பழம், இரண்டு பேரீத்தம் பழம் ஆகியவற்றைப் பெற்றுச் செல்பவர் ஏழை அல்ல. எனினும், தனக்குப் போதுமான செல்வத்தைப் பெறாது இருந்து, அது பற்றிப் பிறர் அறியப்படாத அளவுக்கு (வெளிக்காட்டாமல்) உள்ளவரே, ஏழை ஆவார். (அவர் பற்றித் தெரிந்தால்) மக்கள் அவருக்குத் தர்மம் வழங்கி இருப்பர். அவரும் யாசகம் கேட்க மக்களிடம் நின்று இருக்க மாட்டார்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

٢٦٥ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" السَّاعِي عَلَى الأَرْمَلَةِ وَالْمِسْكِينِ كَالْمُجَاهِدِ فِي سَبِيلِ اللَّهِ ; وَأَحْسَبُهُ قَالَ: وَكَالْقَائِمِ الَّذِي لاَ يَفْتُرُ وَكَالصَّائِمِ الَّذِي لاَ يُفْطِرُ!" مُتَّفَقٌ عَلَيْهِ.

**265** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“விதவைக்கும், ஏழைக்கும் உழைப்பவர் - இறைவழியில் பாடுபடுபவர் போலாவார்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், “சடைவடையாது நின்று வணங்குபவர் போலாவார். நோன்பை முறிக்காது (தொடர்ந்து) நோன்பு வைத்தவர் போலாவார்” என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறியிருப்பார்கள் எனவும் எண்ணுகிறேன். **(புகாரி:5353. முஸ்லிம்:2982)**

٢٦٦ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" شَرُّ الطَّعَامِ طَعَامُ الْوَلِيمَةِ يُمْنَعُهَا مَنْ يَأْتِيهَا وَيُدْعَى إِلَيْهَا مَنْ يَأْبَاهَا وَمَنْ لَمْ يُجِبْ الدَّعْوَةَ فَقَدْ عَصَى اللَّهَ وَرَسُولَهُ" رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَةٍ فِي الصَّحِيحَيْنِ عَنْ أَبِي هُرَيْرَةَ مِنْ قَوْلِهِ:" بِئْسَ الطَّعَامُ طَعَامُ الْوَلِيمَةِ يُدْعَى إِلَيْهَا الأَغْنِيَاءُ وَيُتْرَكُ الْفُقَرَاءُ".

**266** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(உண்ண) வந்தவர்கள் (ஏழைகள்) தடுக்கப்பட்டும், (உண்ண வர) மறுப்பவர்கள் (வசதியுள்ளோர்) அழைக்கப்படும் திருமண விருந்து உணவு தான் உணவில் கெட்டதாகும். விருந்தை ஏற்க மறுப்பவர், அல்லாஹ்வுக்கும், அல்லாஹ்வின் தூதருக்கும் மாறு செய்தவராவார்” என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1432/110)**

புகாரி, முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் அபூஹுரைரா (ரழி) அறிவிப்பதாக (பின்வருமாறு) உள்ளது:

“பணக்காரர்கள் அழைக்கப்பட்டும், ஏழைகள் (அழைக்கப்படாமல்) விடப்பட்டு விடும் திருமணவிருந்து தான் உணவில் மிகவும் கெட்டதாகும்” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5177. முஸ்லிம்:1432/107)**

٢٦٧ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ:" مَنْ عَالَ جَارِيَتَيْنِ حَتَّى تَبْلُغَا جَاءَ يَوْمَ الْقِيَامَةِ أَنَا وَهُوَ كَهَاتَيْنِ" وَضَمَّ أَصَابِعَهُ. رَوَاهُ مُسْلِمٌ." جَارِيَتَيْنِ". أَيْ بِنْتَيْنِ.

**267** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தன் இரு பெண் மக்களை, அவர்கள் பருவவயதை அடையும் வரை நல்லவிதமாகப் பராமரித்தால், நானும் அவரும் மறுமையில் இவ்வாறு வருவோம்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது, தன் இரண்டு விரல்களை இணைத்துக் கூறினார்கள். **(முஸ்லிம்:2631)**

٢٦٨ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: دَخَلَتْ عَلَيَّ امْرَأَةٌ وَمَعَهَا ابْنَتَانِ لَهَا تَسْأَلُ فَلَمْ تَجِدْ عِنْدِي شَيْئًا غَيْرَ تَمْرَةٍ وَاحِدَةٍ فَأَعْطَيْتُهَا إِيَّاهَا فَقَسَمَتْهَا بَيْنَ ابْنَتَيْهَا وَلَمْ تَأْكُلْ مِنْهَا ثُمَّ قَامَتْ فَخَرَجَتْ فَدَخَلَ النَّبِيُّ ﷺ عَلَيْنَا فَأَخْبَرْتُهُ فَقَالَ:" مَنْ ابْتُلِيَ مِنْ هَذِهِ الْبَنَاتِ بِشَيْءٍ فَأَحْسَنَ إِلَيْهِنَّ كُنَّ لَهُ سِتْرًا مِنْ النَّارِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**268** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) என்னிடம் ஒரு பெண் வந்தாள். யாசகம் கேட்ட அந்தப் பெண்ணுடன் இரண்டு பெண் குழந்தைகள் இருந்தனர். ஒரே ஒரு பேரீத்தம் பழத்தைத் தவிர என்னிடம் வேறு இல்லை. அதையே அவளுக்குக் கொடுத்தேன். தன் இரண்டு பெண்களுக்கும் அதைப் பிரித்துக் கொடுத்தாள். அதை

அவள் சாப்பிடவில்லை. பின்பு எழுந்து போய்விட்டாள். எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்ததும், இதுபற்றிக் கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இந்தப் பெண் (மகள்)களிலிருந்து எதன் மூலமேனும் ஒருவர் சோதிக்கப்பட்டு, அவர்களிடம் நல்லவிதமாக நடந்து கொண்டால், அவருக்கு நரகத்திற்கு அவர்கள் தடையாக இருப்பர் (சொர்க்கம் செல்வர்)" என்று கூறினார்கள்.

**(புகாரி:1418. முஸ்லிம்:2629)**

٢٦٩ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: جَاءَتْنِي مِسْكِينَةٌ تَحْمِلُ ابْنَتَيْنِ لَهَا فَأَطْعَمْتُهَا ثَلَاثَ تَمَرَاتٍ فَأَعْطَتْ كُلَّ وَاحِدَةٍ مِنْهُمَا تَمْرَةً وَرَفَعَتْ إِلَى فِيهَا تَمْرَةً لِتَأْكُلَهَا فَاسْتَطْعَمَتْهَا ابْنَتَاهَا فَشَقَّتِ التَّمْرَةَ الَّتِي كَانَتْ تُرِيدُ أَنْ تَأْكُلَهَا بَيْنَهُمَا فَأَعْجَبَنِي شَأْنُهَا فَذَكَرْتُ الَّذِي صَنَعَتْ لِرَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ: "إِنَّ اللَّهَ قَدْ أَوْجَبَ لَهَا بِهَا الْجَنَّةَ أَوْ أَعْتَقَهَا بِهَا مِنَ النَّارِ" رَوَاهُ مُسْلِمٌ.

**269** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) இரண்டு பெண் குழந்தைகளைச் சுமந்து கொண்டு ஒரு ஏழைப் பெண் என்னிடம் வந்தாள். மூன்று பேரீத்தம் பழங்களை அவளுக்குக் கொடுத்தேன். அவ்விருவரில், ஒவ்வொரு வருக்கும் ஒரு பேரீத்தம் பழம் கொடுத்தாள். தனக்குரியதை சாப்பிடுவதற்காக தன் வாய் அருகில் அதைக் கொண்டு சென்றாள். அதையும் அவளின் இரு பெண் மக்களே உண்ணக் கேட்டனர். அவ்விருவருக்கும் தான் சாப்பிட நாடியிருந்த அந்தப் பேரீத்தம் பழத்தைப் பிளந்து கொடுத்தாள். அவளின் செயல் எனக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. நபி (ஸல்) அவர்களிடம் அவள் செய்தது பற்றிக் கூறினேன். அதற்கு அவர்கள், "நிச்சயமாக, அல்லாஹ் அவளின் இந்தச் செயலுக்காக அவளுக்கு சொர்க்கத்தைக் கட்டாயமாக்கிவிட்டான். அல்லது அவளை இதற்காக நரகத்திலிருந்து விடுதலை செய்துவிட்டான்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2630)**

٢٧٠ - وَعَنْ أَبِي شُرَيْحٍ خُوَيْلِدِ بْنِ عَمْرٍو الْخُزَاعِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ النَّبِيُّ ﷺ: "اللَّهُمَّ إِنِّي أُحَرِّجُ حَقَّ الضَّعِيفَيْنِ: الْيَتِيمِ وَالْمَرْأَةِ" حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ النَّسَائِيُّ بِإِسْنَادٍ جَيِّدٍ. وَمَعْنَى "أُحَرِّجُ" أُلْحِقُ الْحَرَجَ - وَهُوَ الْإِثْمُ - بِمَنْ ضَيَّعَ حَقَّهُمَا وَأُحَذِّرُ مِنْ ذَلِكَ تَحْذِيرًا بَلِيغًا وَأَزْجُرُ عَنْهُ زَجْرًا أَكِيدًا.

**270** அபூஷுரைஹ் என்ற குவய்லித் இப்னு அம்ரு அல் குஸாஈ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைவா! அனாதைகள், பெண்கள் ஆகிய இந்த இரண்டு பலவீனமானவர்களின் உரிமையில் (அநீதமாக நடப்போரை) நான் கடுமையாக எச்சரிக்கிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(நஸயீ)**

٢٧١ - وَعَنْ مُصْعَبِ بْنِ سَعْدِ ابْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: رَأَى سَعْدٌ أَنَّ لَهُ فَضْلًا عَلَى مَنْ دُونَهُ فَقَالَ النَّبِيُّ ﷺ: "هَلْ تُنْصَرُونَ وَتُرْزَقُونَ إِلَّا بِضُعَفَائِكُمْ" ؟ رَوَاهُ الْبُخَارِيُّ هَكَذَا مُرْسَلًا: فَإِنَّ مُصْعَبَ بْنَ سَعْدٍ تَابِعِيٌّ وَرَوَاهُ الْحَافِظُ أَبُو بَكْرٍ الْبَرْقَانِيُّ فِي صَحِيحِهِ مُتَّصِلًا عَنْ مُصْعَبٍ عَنْ أَبِيهِ رَضِيَ اللَّهُ عَنْهُ.

**271** முஸ்அப் இப்னு ஸஃது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் தந்தை ஸஹ்து (ரழி) அவர்கள், தன்னை மற்றவரை விடவும் சிறந்தவராகக் கருதிக் கொண்டிருந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உங்களில் பலவீனர்களாலே தவிர நீங்கள் உதவி செய்யப்படவில்லை. நீங்கள் (அவர்களால் தவிர) உணவளிக்கப்படவில்லை" என்று கூறினார்கள்.

**(புகாரி:2897)**

٢٧٢ - وَعَنْ أَبِي الدَّرْدَاءِ عُوَيْمِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: "ابْغُونِي فِي الضُّعَفَاءِ فَإِنَّمَا تُنْصَرُونَ وَتُرْزَقُونَ بِضُعَفَائِكُمْ". رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ.

**272** அபூதர்தா என்ற உவய்மீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"எனக்காக, பலவீனமானவர்களைத் தேடுங்கள். நீங்கள் உதவி செய்யப்படுவதும், நீங்கள் உணவளிக்கப்படுவதும், உங்களில் உள்ள பலவீனர்களால்தான்" என, நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன். **(அபூதாவூது:2594)**

## ٣٤ - باب الوصية بالنساء

## பாடம் : 34 - பெண்களின் நலம் நாடுதல்!

قَالَ اللَّهُ تَعَالَى: وَعَاشِرُوهُنَّ بِالْمَعْرُوفِ. وَقَالَ تَعَالَى: وَلَنْ تَسْتَطِيعُوا أَنْ تَعْدِلُوا بَيْنَ النِّسَاءِ وَلَوْ حَرَصْتُمْ فَلاَ تَمِيلُوا كُلَّ الْمَيْلِ فَتَذَرُوهَا كَالْمُعَلَّقَةِ وَإِنْ تُصْلِحُوا وَتَتَّقُوا فَإِنَّ اللَّهَ كَانَ غَفُورًا رَحِيمًا.

**அல்லாஹ் கூறுகிறான்:** *...அவர்களிடம் (பெண்களிடம்) நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள்... (4:19)*

*நீங்கள் (நீதமாக நடக்க) ஆசை கொண்டாலும், (உங்கள் மனைவியரிடையே) பெண்களிடையே நீங்கள் நீதமாக நடக்க சக்தி பெறமாட்டீர்கள். (ஒரு மனைவியின் பக்கமே) முற்றிலும் சாய்ந்து விடாதீர்கள். (அந்தரத்தில்) தொங்க விடப்பட்டவள் போல், அவளை நீங்கள் விட்டு விடாதீர்கள். நீங்கள் சமாதானமாக நடந்து, இறையச்சத்துடனும் நடந்து கொண்டால், (உங்களுக்கு நல்லதாகும்). நிச்சயமாக அல்லாஹ், மன்னிப்பவனாகவும், நிகரில்லா அன்பாளனாகவும் உள்ளான். (4:129)*

٢٧٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" اسْتَوْصُوا بِالنِّسَاءِ خَيْرًا فَإِنَّ الْمَرْأَةَ خُلِقَتْ مِنْ ضِلَعٍ وَإِنَّ أَعْوَجَ مَا فِي الضِّلَعِ أَعْلاَهُ فَإِنْ ذَهَبْتَ تُقِيمُهُ كَسَرْتَهُ وَإِنْ تَرَكْتَهُ لَمْ يَزَلْ أَعْوَجَ. فَاسْتَوْصُوا بِالنِّسَاءِ". مُتَّفَقٌ عَلَيْهِ.

وَفِي رِوَايَةٍ فِي الصَّحِيحَيْنِ:" الْمَرْأَةُ كَالضِّلَعِ إِنْ أَقَمْتَهَا كَسَرْتَهَا وَإِنِ اسْتَمْتَعْتَ بِهَا اسْتَمْتَعْتَ بِهَا وَفِيهَا عَوَجٌ".

وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ:" إِنَّ الْمَرْأَةَ خُلِقَتْ مِنْ ضِلَعٍ لَنْ تَسْتَقِيمَ لَكَ عَلَى طَرِيقَةٍ فَإِنِ اسْتَمْتَعْتَ بِهَا اسْتَمْتَعْتَ بِهَا وَفِيهَا عَوَجٌ وَإِنْ ذَهَبْتَ تُقِيمُهَا كَسَرْتَهَا. وَكَسْرُهَا طَلاَقُهَا". قَوْلُهُ:" عَوَجٌ" هُوَ بِفَتْحِ الْعَيْنِ وَالْوَاوِ.

**273** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெண்களிடம் நீங்கள் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக, பெண் விலா எலும்பிலிருந்தே படைக்கப்பட்டுள்ளாள். விலா எலும்பில் மிகவும் கோணலானது அதன் மேற்புறத்தில் உள்ளது தான். அதை நிமிர்த்த நாடினால், அதை உடைத்திடுவாய். அதை அப்படியே விட்டு விட்டால், கோணலாகவே இருக்கும். ஆகவே, பெண்களிடம் நீங்கள் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3331,5184. முஸ்லிம்:1468)**

புகாரி, முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "ஒரு பெண் விலா எலும்பைப் போன்றவள். அதை நீர் நிமிர்த்தினால், அதை உடைத்திடுவீர். அவளிடம் நீர் மகிழ்வுடன் இருக்க விரும்பினால், அவளின் கோணல் நிலையிலேயே மகிழ்வுறுவாய்" என்று உள்ளது.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது:

ஒரு பெண் விலா எலும்பினால் படைக்கப்பட்டிருக்கிறாள். ஒரே வழியில் உன்னுடன் நேராக நிற்க மாட்டாள். அவளிடம் நீ மகிழ்வுற விரும்பினால், அவளின் கோணலான நிலையிலேயே அவளிடம் மகிழ்வுறுவாயாக! அவளை நேராக்க நீ முயற்சித்தால், அவளை உடைத்து விடுவாய் அவளை உடைத்தல் என்பது, அவளை விவாகரத்து செய்வதாகும்.

٢٧٤ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ زَمْعَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ يَخْطُبُ – وَذَكَرَ النَّاقَةَ وَالَّذِي عَقَرَهَا – فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ إِذِ انْبَعَثَ أَشْقَاهَا: " انْبَعَثَ لَهَا رَجُلٌ عَزِيزٌ عَارِمٌ مَنِيعٌ فِي رَهْطِهِ" ثُمَّ ذَكَرَ النِّسَاءَ فَوَعَظَ فِيهِنَّ فَقَالَ: " يَعْمِدُ أَحَدُكُمْ فَيَجْلِدُ امْرَأَتَهُ جَلْدَ الْعَبْدِ فَلَعَلَّهُ يُضَاجِعُهَا مِنْ آخِرِ يَوْمِهِ! " ثُمَّ وَعَظَهُمْ فِي ضَحِكِهِمْ مِنَ الضَّرْطَةِ وَقَالَ: " لِمَ يَضْحَكُ أَحَدُكُمْ مِمَّا يَفْعَلُ ؟ " مُتَّفَقٌ عَلَيْهِ. " وَالْعَارِمُ " بِالْعَيْنِ الْمُهْمَلَةِ وَالرَّاءِ: هُوَ الشِّرِّيرُ الْمُفْسِدُ. وَقَوْلُهُ " انْبَعَثَ " أَيْ قَامَ بِسُرْعَةٍ.

**274** அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தியதைக் கேட்டேன். அதில் அவர்கள் (ஸமூத் நபியின்) ஒட்டகை பற்றியும், அதன் குதிங்கால் நரம்பை வெட்டியவன் பற்றியும் நினைவு கூர்ந்தார்கள். "அவர்களில் மிகவும் கேடு கெட்டவன் ஒருவன் எழுந்து வந்தபோது..." (-91:12) என்ற வசனத்தை விளக்கிய நபி (ஸல்) அவர்கள், "அவர்களின் கூட்டத்தில் பணக்காரனும், குழப்பம் ஏற்படுத்துபவனும், தீமை செய்பவனும், பலசாலியாகவும் உள்ள ஒருவன், ஒட்டகையின் பக்கம் (அதன் குதிங்கால் நரம்பைத் துண்டாடச்) சென்றான்" என்று கூறினார்கள்.

பின்னர், பெண்கள் பற்றி உபதேசம் செய்தார்கள். "உங்களில் ஒருவர் தன் மனைவியை, அடிமையை சவுக்கால் அடிப்பது போல் அடிக்கிறார். அன்றைய நாளின் இறுதியில் (இரவில்) அவளிடம் உடலுறவில் ஈடுபடக்கூடும் (எனவே அவளை அடிக்க வேண்டாம்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். பின்பு பின் துவாரத்தில் காற்று வெளிப்படு(வதற்கு அவர்கள் சிரிக்கு)ம் விஷயத்தில் அவர்களிடையே உபதேசம் செய்து, "தானும் செய்யக்கூடிய ஒன்றில் உங்களில் ஒருவர் ஏன் சிரிக்கிறார்?" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:4942, முஸ்லிம்:2855)**

٢٧٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ: رَسُولُ اللَّهِ ﷺ: " لاَ يَفْرَكْ مُؤْمِنٌ مُؤْمِنَةً إِنْ كَرِهَ مِنْهَا خُلُقًا رَضِيَ مِنْهَا آخَرَ" أَوْ قَالَ: " غَيْرَهُ" رَوَاهُ مُسْلِمٌ. وَقَوْلُهُ: " يَفْرَكْ" وَهُوَ بِفَتْحِ الْيَاءِ وَإِسْكَانِ الْفَاءِ وَفَتْحِ الرَّاءِ مَعْنَاهُ: " يُبْغِضُ" يُقَالُ: فَرِكَتِ الْمَرْأَةُ زَوْجَهَا وَفَرِكَهَا زَوْجُهَا بِكَسْرِ الرَّاءِ يَفْرَكُهَا بِفَتْحِهَا: أَيْ أَبْغَضَهَا وَاللَّهُ أَعْلَمُ.

**275** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஃமின், தன் முஃமினான மனைவியை வெறுக்க வேண்டாம். அவளிடம் ஒரு குணத்தை வெறுத்தால், மற்றொரு குணத்தின் மூலம் அவளிடம் அவன் திருப்தியுறுவான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1469)**

٢٧٦ – وَعَنْ عَمْرِو بْنِ الأَحْوَصِ الْجُشَمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ فِي حَجَّةِ الْوَدَاعِ يَقُولُ – بَعْدَ أَنْ حَمِدَ اللَّهَ تَعَالَى وَأَثْنَى عَلَيْهِ وَذَكَّرَ وَوَعَظَ – ثُمَّ قَالَ: " أَلاَ وَاسْتَوْصُوا بِالنِّسَاءِ خَيْرًا فَإِنَّمَا هُنَّ عَوَانٌ عِنْدَكُمْ لَيْسَ تَمْلِكُونَ مِنْهُنَّ شَيْئًا غَيْرَ ذَلِكَ إِلاَّ أَنْ يَأْتِينَ بِفَاحِشَةٍ مُبَيِّنَةٍ فَإِنْ فَعَلْنَ فَاهْجُرُوهُنَّ فِي الْمَضَاجِعِ وَاضْرِبُوهُنَّ ضَرْبًا غَيْرَ مُبَرِّحٍ فَإِنْ أَطَعْنَكُمْ فَلاَ تَبْغُوا عَلَيْهِنَّ سَبِيلاً ؛ أَلاَ إِنَّ لَكُمْ عَلَى نِسَائِكُمْ حَقًّا وَلِنِسَائِكُمْ عَلَيْكُمْ حَقًّا ؛ فَحَقُّكُمْ عَلَيْهِنَّ أَلاَّ يُوطِئْنَ فُرُشَكُمْ مَنْ تَكْرَهُونَ وَلاَ يَأْذَنَّ فِي بُيُوتِكُمْ لِمَنْ تَكْرَهُونَ. أَلاَ وَحَقُّهُنَّ عَلَيْكُمْ أَنْ تُحْسِنُوا إِلَيْهِنَّ فِي كِسْوَتِهِنَّ وَطَعَامِهِنَّ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ. قَوْلُهُ ﷺ " عَوَانٌ" أَيْ أَسِيرَاتٌ جَمْعُ عَانِيَةٍ بِالْعَيْنِ الْمُهْمَلَةِ وَهِيَ الأَسِيرَةُ وَالْعَانِي: الأَسِيرُ. شَبَّهَ رَسُولُ اللَّهِ ﷺ الْمَرْأَةَ فِي دُخُولِهَا تَحْتَ حُكْمِ الزَّوْجِ بِالأَسِيرِ. " وَالضَّرْبُ الْمُبَرِّحُ" هُوَ الشَّاقُّ الشَّدِيدُ وَقَوْلُهُ ﷺ: " فَلاَ تَبْغُوا عَلَيْهِنَّ سَبِيلاً": أَيْ لاَ تَطْلُبُوا طَرِيقًا تَحْتَجُّونَ بِهِ عَلَيْهِنَّ وَتُؤْذُونَهُنَّ بِهِ. وَاللَّهُ أَعْلَمُ.

**276** அம்ரு இப்னு அஹ்வஸ் அல் ஜுஷமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இறுதி ஹஜ்ஜின் போது, நான் நபி (ஸல்) அவர்களின் உரையைக் கேட்டேன். அல்லாஹ்வை அவர்கள் புகழ்ந்து போற்றி, உபதேசம் செய்தார்கள். அப்போது, "அறிந்து கொள்ளுங்கள். பெண்களிடம் சிறந்த முறையில் நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அவர்கள் உங்களிடம் கட்டுப்பட்டு உள்ளவர்களாவர். அது அல்லாத எதையும் நீங்கள் அவர்களிடமிருந்து சொந்தமாக்கிக் கொள்ளாதீர்கள். எனினும், அவர்கள் தவறான செயலைச் செய்தாலே தவிர (தவறு) எதையும் செய்து விடாதீர்கள். அவர்கள் பாவம் செய்து விட்டால், அவர்களைப் படுக்கையிலிருந்து ஒதுக்கி வையுங்கள். கடுமையாக இல்லாமல், லேசாக அடியுங்கள். உங்களுக்குக் கட்டுப்பட்டு விட்டால் அவர்களுக்கு எதிராக வேறு வழியைத் தேர்ந்தெடுக்காதீர்கள். அறிந்து கொள்ளுங்கள். உங்கள் மனைவியரிடம் உங்களுக்கு உரிமை உண்டு. அவர்களிடம் உங்கள் உரிமை என்பது.உங்கள் விரிப்பில் நீங்கள் விரும்பாதவர்களை உட்காராமலிருக்கச் செய்வதும், உங்கள் வீடுகளில் நீங்கள் விரும்பாதவர்களை அனுமதிக்காமல் இருப்பதும் ஆகும். அறிந்து கொள்ளுங்கள்! உங்களிடம் அவர்களுக்குரிய உரிமைகள் என்பது, அவர்களுக்கு உடுத்தவும், அவர்கள் உண்ணவும் தருவதில் அவர்களிடம் நீங்கள் நல்லமுறையில் நடந்து கொள்வதாகும்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1163. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٢٧٧ – وَعَنْ مُعَاوِيَةَ بْنِ حَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ يَا رَسُولَ اللَّه مَا حَقُّ زَوْجَة أَحَدِنَا عَلَيْه ؟ قَالَ:" أَنْ تُطْعِمَهَا إِذَا طَعِمْتَ وَتَكْسُوَهَا إِذَا اكْتَسَيْتَ. وَلاَ تَضْرِبْ الْوَجْهَ وَلاَ تُقَبِّحْ وَلاَ تَهْجُرْ إِلاَّ فِي الْبَيْتِ" حَدِيثٌ حَسَنٌ. رَوَاهُ أَبُو دَاوُدَ وَقَالَ: مَعْنَى" لاَ تُقَبِّحْ" لاَ تَقُلْ" قَبَّحَكِ اللَّهُ".

**277** முஆவியா இப்னு ஹய்தா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! எங்களில் ஒருவரிடம், அவரது மனைவியின் உரிமைகள் என்ன?" என்று கேட்டேன். "நீர் சாப்பிடும் போது அவளையும் நீர் சாப்பிடச் செய்ய வேண்டும். நீர் (புதிய ஆடை) உடுத்தும் போது, அவளுக்கும் நீர் உடுத்தக் கொடுக்க வேண்டும். முகத்தில் அடிக்காதீர்! இழிவாகப் பேசாதீர்! வீட்டிலேயே தவிர, வெளியில் அவளைக் கண்டிக்காதீர்!" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(அபூதாவூது:2142)**

٢٧٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" أَكْمَلُ الْمُؤْمِنِينَ إِيمَانًا أَحْسَنُهُمْ خُلُقًا وَخِيَارُكُمْ خِيَارُكُمْ لِنِسَائِهِمْ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**278** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறை விசுவாசிகளில் நம்பிக்கையால் முழுமை பெற்றவர், அவர்களில் அழகிய குணமிக்கவர்தான். உங்களில் சிறந்தவர், மனைவியரிடம் சிறந்தவராக நடந்தவர் தான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:1162. இது "ஹஸன் ஸஹீஹ்" என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٢٧٩ – وَعَنْ إِيَاسِ بْنِ عَبْد اللَّه ابْنِ أَبِي ذُبَاب رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" لاَ تَضْرِبُوا إِمَاءَ اللَّه". فَجَاءَ عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ إِلَى رَسُولِ اللَّه ﷺ فَقَالَ: ذَئِرْنَ النِّسَاءُ عَلَى أَزْوَاجِهِنَّ فَرَخَّصَ فِي ضَرْبِهِنَّ فَأَطَافَ بِآلِ رَسُولِ اللَّه ﷺ نِسَاءٌ كَثِيرٌ يَشْكُونَ أَزْوَاجَهُنَّ فَقَالَ رَسُولُ اللَّه ﷺ:" لَقَدْ أَطَافَ بِآلِ بَيْتِ مُحَمَّدٍ نِسَاءٌ كَثِيرٌ يَشْكُونَ أَزْوَاجَهُنَّ لَيْسَ أُولَئِكَ بِخِيَارِكُمْ". رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ. قَوْلُهُ" ذَئِرْنَ": هُوَ بِذَالٍ مُعْجَمَةٍ مَفْتُوحَةٍ ثُمَّ هَمْزَةٍ مَكْسُورَةٍ ثُمَّ رَاءٍ سَاكِنَةٍ ثُمَّ نُونٍ: أَيْ اجْتَرَأْنَ. قَوْلُهُ" أَطَافَ": أَيْ أَحَاطَ.

**279** இயாஸ் இப்னு அப்துல்லாஹ் இப்னு அபீதுபாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் அடிமைகளான பெண்களை அடிக்காதீர்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நபி (ஸல்) அவர்களிடம் உமர் (ரழி) அவர்கள் வந்து, "(பெண்கள் அடிக்கப்படாததால்) தங்களின் கணவர்களுக்கு எதிராகத் தைரியம் பெற்று விட்டார்கள்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் பெண்களை அடிப்பதற்கு அனுமதி வழங்கினார்கள். உடனே அதிகமான பெண்கள் தங்களின் கணவர்கள் பற்றி முறையிட்டவர்களாக நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தாரிடம் வரத் துவங்கினார்கள். அப்போது, "தங்கள் கணவர்களை குறை கூறியவர்களாகப் பெண்கள், இந்த முஹம்மதின் குடும்பத்தினரைச் சுற்றி வருகின்றனர். (குறை கூறும் அளவுக்கு நடக்கும் கணவர்களாகிய) அவர்கள் உங்களில் சிறந்தவர்களாக இல்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(அபூதாவூது:2146)**

٢٨٠ – وَعَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ: " الدُّنْيَا مَتَاعٌ وَخَيْرُ مَتَاعِهَا الْمَرْأَةُ الصَّالِحَةُ". رَوَاهُ مُسْلِمٌ.

**280** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உலகம் (சிறிது காலத்திற்கு) சுகமளிக்கும் ஒன்றாகும். பெறப்படும் இந்தச் சுகப்பொருட்களில் சிறந்தது, நல்ல மனைவியே ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1467)**

## ٣٥ – باب باب حق الزوج على المرأة

## பாடம் : 35 - மனைவியிடம் கணவனின் உரிமைகள்

**قَالَ اللّٰهُ تَعَالَى: الرِّجَالُ قَوَّامُونَ عَلَى النِّسَاءِ بِمَا فَضَّلَ اللّٰهُ بَعْضَهُمْ عَلَى بَعْضٍ وَبِمَا أَنْفَقُوا مِنْ أَمْوَالِهِمْ فَالصَّالِحَاتُ قَانِتَاتٌ حَافِظَاتٌ لِلْغَيْبِ بِمَا حَفِظَ اللّٰهُ.**

وَأَمَّا الأَحَادِيثُ فَمِنْهَا حَدِيثُ عَمْرِو بْنِ الأَحْوَصِ السَّابِقُ فِي الْبَابِ قَبْلَهُ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *ஆண்கள் பெண்களை நிர்வகிப்போர் ஆவர். இதற்குக் காரணம் அல்லாஹ் அவர்களில் சிலருக்குச் சிலரைவிட உயர்வை அளித்திருக்கிறான் என்பதும், ஆண்கள் தங்களுடைய செல்வத்திலிருந்து செலவு செய்கிறார்கள் என்பதுமாகும். எனவே, ஒழுக்கமான பெண்கள் பணிவாக நடப்பவர்களாவர். அல்லாஹ் பாதுகாத்ததன் மூலம் தங்களின் மறைவானதை (கற்பை) பாதுகாத்துக் கொள்பவர்களாவர். (4:34)*

இந்தப் பாடத்தின் கீழ் 276 - வது ஹதீஸும் பொருந்தும்.

٢٨١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: " إِذَا دَعَا الرَّجُلُ امْرَأَتَهُ إِلَى فِرَاشِهِ فَلَمْ تَأْتِه فَبَاتَ غَضْبَانَ عَلَيْهَا لَعَنَتْهَا الْمَلَائِكَةُ حَتَّى تُصْبِحَ". مُتَّفَقٌ عَلَيْهِ وَفِي رِوَايَةٍ لَهُمَا: " إِذَا بَاتَتِ الْمَرْأَةُ هَاجِرَةً فِرَاشَ زَوْجِهَا لَعَنَتْهَا الْمَلَائِكَةُ حَتَّى تُصْبِحَ" وَفِي رِوَايَةٍ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: " وَالَّذِي نَفْسِي بِيَدِهِ مَا مِنْ رَجُلٍ يَدْعُو امْرَأَتَهُ إِلَى فِرَاشِهِ فَتَأْبَى عَلَيْهِ إِلاَّ كَانَ الَّذِي فِي السَّمَاءِ سَاخِطًا عَلَيْهَا حَتَّى يَرْضَى عَنْهَا".

**281** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவன் தன் மனைவியைப் படுக்கைக்கு (உடலுறவுக்கு) அழைத்து, அவள் வரமறுத்து, அதனால் அவள் மீது அவன் கோபமாக இருந்தால், விடியும் வரை வானவர்கள் அந்தப் பெண்ணைச் சபிப்பார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3237, 5194. முஸ்லிம்:1436)**

புகாரி, முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது)

“தன் கணவனின் படுக்கையிலிருந்து ஒதுங்கியவளாக, ஒரு பெண் இரவைக் கழித்தால், விடியும் வரை அவளை வானவர்கள் சபிக்கின் றனர்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் கீழ்கண்டவாறு உள்ளது:

என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! ஒரு மனிதன் தன் மனைவியைப் படுக்கைக்கு (உடலுறவுக்கு) அழைத்து அவள் மறுத்துவிட்டால், அவளை அவன் திருப்தி கொள்ளும் வரை, அவள் மீது வானத்தில் உள்ளவன் கோபப்படாமல் இருப்பதில்லை” என, நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

٢٨٢ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " لاَ يَحِلُّ لِإِمْرَأَةٍ أَنْ تَصُومَ وَزَوْجُهَا شَاهِدٌ إِلاَّ بِإِذْنِهِ وَلاَ تَأْذَنَ فِي بَيْتِهِ إِلاَّ بِإِذْنِهِ". مُتَّفَقٌ عَلَيْهِ وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ.

**282** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு பெண், அவளின் கணவன் ஊரில் இருக்கும் சமயம், அவனின் அனுமதியின்றி (நபில்) நோன்பு வைத்தல் கூடாது. மேலும், அவனின் அனுமதியின்றி அவனது வீட்டினுள் (எவரையும்) அனுமதிக்கக் கூடாது” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:5195. முஸ்லிம்:1026. இது புகாரியின் வாசகமாகும்.)**

٢٨٣ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " كُلُّكُمْ رَاعٍ وَكُلُّكُمْ مَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ وَالأَمِيرُ رَاعٍ وَالرَّجُلُ رَاعٍ عَلَى أَهْلِ بَيْتِهِ وَالْمَرْأَةُ رَاعِيَةٌ عَلَى بَيْتِ زَوْجِهَا وَوَلَدِهِ فَكُلُّكُمْ رَاعٍ وَكُلُّكُمْ مَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**283** இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் அனைவரும் பொறுப்பாளர்களாவீர்கள். உங்களில் அனைவரும் அவரது பொறுப்புப்பற்றி கேள்வி கேட்கப்படுவீர்கள். தலைவரும் பொறுப்புதாரரே! அவர் தன் பொறுப்பு பற்றிக் கேட்கப்படுவார். ஒரு மனிதர், தன் குடும்பத்தாருக்குப் பொறுப்பாளியாவார். ஒரு பெண் தன் கணவனின் வீடு, மற்றும் குழந்தைகளுக்கு பொறுப்பாளியாவாள். நீங்கள் அனைவரும் பொறுப்பாளர்களாவீர். உங்களில் அனைவரும் தன் பொறுப்புப் பற்றி கேள்வி கேட்கப்படுவீர்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:893. முஸ்லிம்:1829)**

٢٨٤ - وَعَنْ أَبِي عَلِيٍّ طَلْقِ بْنِ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " إِذَا دَعَا الرَّجُلُ زَوْجَتَهُ لِحَاجَتِهِ فَلْتَأْتِهِ وَإِنْ كَانَتْ عَلَى التَّنُّورِ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَالنَّسَائِيُّ وَقَالَ التِّرْمِذِيُّ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**284** அபூ அலி என்ற தல்க் இப்னு அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு மனிதர் தன் தேவைக்காக தன் மனைவியை அழைத்தால், அவள் சமையலறையில் இருப்பினும் அவனிடம் வரட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதி:1160. நஸயீ. இது ‘ஹஸன் ஸஹீஹ்’ என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

٢٨٥ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "لَوْ كُنْتُ آمِرًا أَحَدًا أَنْ يَسْجُدَ لِأَحَدٍ لَأَمَرْتُ الْمَرْأَةَ أَنْ تَسْجُدَ لِزَوْجِهَا". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**285** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதரை, மற்றொரு மனிதருக்கு 'ஸஜ்தா' செய்ய நான் கட்டளையிடுவதாக இருந்தால், ஒரு பெண்ணை அவளின் கணவனுக்கு 'ஸஜ்தா' செய்யும்படி கட்டளையிட்டிருப்பேன்" என நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:1159. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٢٨٦ - وَعَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "أَيُّمَا امْرَأَةٍ مَاتَتْ وَزَوْجُهَا عَنْهَا رَاضٍ دَخَلَتْ الْجَنَّةَ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**286** உம்முஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு பெண்ணின் மீது, அவளின் கணவன் திருப்தியுடன் இருக்கும் நிலையில் அவள் இறந்துவிட்டால், அவள் சொர்க்கம் செல்வாள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:1161.இது ஹஸன்ஸஹீஹ் என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இது பலவீனமான ஹதீஸாகும்)**

٢٨٧ - وَعَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "لاَ تُؤْذِي امْرَأَةٌ زَوْجَهَا فِي الدُّنْيَا إِلاَّ قَالَتْ زَوْجَتُهُ مِنَ الْحُورِ الْعِينِ: لاَ تُؤْذِيهِ قَاتَلَكِ اللَّهُ! فَإِنَّمَا هُوَ عِنْدَكِ دَخِيلٌ يُوشِكُ أَنْ يُفَارِقَكِ إِلَيْنَا". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**287** முஆத் இப்னு ஜபல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு பெண் தன் கணவனை இவ்வுலகில் நோவினை செய்தால், (சொர்க்கத்தில் அவனுக்கு மனைவியாக வர உள்ள) 'ஹூருல்ஈன்'களில் உள்ள அவனின் மனைவி, 'பெண்ணே! அவரை நோவினை செய்யாதே! அல்லாஹ் உன்னை நாசமாக்குவானாக! அவர் உன்னைப் பொறுத்தவரை விருந்தாளியாவார். அவர் உன்னைப் பிரிந்து நம்மிடம் வருவார்' என்று கூறாமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(இது திர்மிதீயில் (1174) உள்ளது. இது" ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٢٨٨ - وَعَنْ أُسَامَةَ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "مَا تَرَكْتُ بَعْدِي فِتْنَةً هِيَ أَضَرُّ عَلَى الرِّجَالِ مِنَ النِّسَاءِ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**288** உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"எனக்குப் பின்னர், ஆண்களுக்கு அதிகம் இடையூறு தரும் சோதனையாகப் பெண்களைவிட (வேறெதனையும்) நான் விட்டுச் செல்லவில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5096. முஸ்லிம்:2740)**

## ٣٦ - باب النفقة على العيال

## பாடம் : 36 - தன்னுடைய குடும்பத்தாருக்காகச் செலவு செய்தல்!

قَالَ اللَّهُ تَعَالَى وَعَلَى الْمَوْلُود لَهُ رِزْقُهُنَّ وَكِسْوَتُهُنَّ بِالْمَعْرُوف. وَقَالَ تَعَالَى: لِيُنْفِقْ ذُو سَعَةٍ مِنْ سَعَتِه وَمَنْ قُدِرَ عَلَيْهِ رِزْقُهُ فَلْيُنْفِقْ مِمَّا آتَاهُ اللَّهُ لاَ يُكَلِّفُ اللَّهُ نَفْسًا إِلاَّ مَا آتَاهَا. وَقَالَ تَعَالَى: وَمَا أَنْفَقْتُمْ مِنْ شَيْءٍ فَهُوَ يُخْلِفُهُ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *(பாலூட்டும் தாய்மார்களாகிய) அவர்களுக்கு நல்ல முறையில் உணவளிப்பதும், உடை தருவதும் குழந்தையின் தந்தை மீதுள்ள கடமையாகும்... (2:223)*

*வசதியானவர், தன் வசதிக்கு ஏற்ப (தாராளமாகச்) செலவழிக்கட்டும். பொருளாதார நெருக்கடியானவர், அல்லாஹ் தனக்கு வழங்கியதிலிருந்து செலவு செய்யட்டும். எந்த ஆத்மாவையும் தான் வழங்கியுள்ள அளவுக்கே தவிர, அல்லாஹ் கஷ்டம் கொடுக்கமாட்டான்... (65:7)*

*...நீங்கள் செலவு செய்கின்றவற்றுக்குப் பகரமாக இன்னும் பலவற்றை அவனே உங்களுக்குத் தருகின்றான். (34:39)*

٢٨٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" دينَارٌ أَنْفَقْته في سَبِيلِ اللَّه وَدينَارٌ أَنْفَقْته في رَقَبَةٍ وَدينَارٌ تَصَدَّقْت بِهِ عَلَى مِسْكِينٍ وَدينَارٌ أَنْفَقْته عَلَى أَهْلك أَعْظَمُهَا أَجْرًا الَّذي أَنْفَقْته عَلَى أَهْلك". رَوَاهُ مُسْلمٌ.

**289** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் வழியில் நீ செலவு செய்த ஒரு தீனார், அடிமையை விடுதலை செய்ய நீ செலவு செய்த ஒரு தீனார், ஏழைகளுக்கு நீ தர்மம் செய்த ஒரு தீனார், உன் குடும்பத்தாருக்கு நீ செலவு செய்த ஒரு தீனார், ஆகிய (நான்கில்) கூலி பெறுவதில் மிக மேன்மையானது, உன் குடும்பத்தாருக்கு நீ செலவு செய்ததுதான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:995)**

٢٩٠ – وَعَنْ أَبِي عَبْد اللَّه ) وَيُقَالُ أَبُو عَبْد الرَّحْمَنِ ( ثَوْبَانَ بْن بُجْدُد مَوْلَى رَسُول اللَّه ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" أَفْضَلُ دينَارٍ يُنْفقُهُ الرَّجُلُ دينَارٌ يُنْفقُهُ عَلَى عِيَاله وَدينَارٌ يُنْفقُهُ عَلَى دَابَّته فِي سَبِيلِ اللَّه وَدينَارٌ يُنْفقُهُ عَلَى أَصْحَابه فِي سَبِيلِ اللَّه". رَوَاهُ مُسْلمٌ.

**290** அபூஅப்துல்லாஹ் (அல்லது) அபூ அப்துர் ரஹ்மான் என்ற, நபி (ஸல்) அவர்களின் அடிமையான ஸவ்பான் இப்னு புஜ்துத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதன் தான் செலவு செய்யும் தீனாரில் மிகச் சிறந்தது; அவர் தன் குடும்பத்தாருக்குச் செலவு செய்யும் தீனார், அல்லாஹ்வின் வழியில் தன் வாகனத்திற்காகச் செலவு செய்யும் தீனார், அல்லாஹ்வின் வழியில் தன் தோழர்களுக்குச் செலவு செய்யும் தீனார் ஆகியவைகளாகும் என்று நபி (ஸல்) கூறினார்கள்." **(முஸ்லிம்:994)**

٢٩١ – وَعَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: قُلْت يَا رَسُولَ اللَّه هَلْ لِي فِي بَنِي أَبِي سَلَمَةَ أَجْرٌ أَنْ أُنْفِقَ عَلَيْهِمْ ؟ وَلَسْت بِتَارِكَتِهِمْ هَكَذَا وَلاَ هَكَذَا إِنَّمَا هُمْ بَنِيَّ! فَقَالَ:" نَعَمْ لَك أَجْرُ مَا أَنْفَقْت عَلَيْهِمْ". مُتَّفَقٌ عَلَيْه.

**291** உம்முஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! (என் முன்னாள் கணவர்) அபூ சலமாவின் குழந்தைகளுக்கு நான் செலவழித்தால் அதற்கு எனக்கு நற்கூலி உண்டா? அவர்களை இப்படி, இப்படி (உணவுக்கு அலைய) விட்டுவிடக் கூடியவளாக நான் இல்லை. அவர்களும் என் பிள்ளைகள் தானே?" என்று கேட்டேன். "ஆம்! நீ அவர்களுக்கு செலவு செய்ததற்காக (அல்லாஹ்விடமிருந்து) உனக்கு கூலி உண்டு" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1467. முஸ்லிம்:1001)**

٢٩٢ – وَعَنْ سَعْد ابْنِ أَبِي وَقَّاص رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثه الطَّوِيلِ الَّذي قَدَّمْنَاهُ فِي أَوَّل الْكتَاب فِي بَاب النِّيَّة أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ لَهُ:" وَإِنَّك لَنْ تُنْفِقَ نَفَقَةً تَبْتَغِي بِهَا وَجْهَ اللَّه إِلاَّ أُجِرْت بِهَا حَتَّى مَا تَجْعَلُ فِي فِي امْرَأَتك" مُتَّفَقٌ عَلَيْه.

**292** ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீர் அல்லாஹ்வின் திருப்தியை நாடியவராக நீர் செய்யும் எந்தச் செலவும், அது உம் மனைவியின் வாயில் நீர் ஊட்டி விடும் உணவு உட்பட - அனைத்திற்கும் உமக்குக் கூலி கொடுக்கப்படாமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1295. முஸ்லிம்:1628)**

(இந்த ஹதீஸ் 6-வது ஹதீஸாக இடம் பெறும் நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும்)

٢٩٣ - وَعَنْ أَبِي مَسْعُودٍ الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" إِذَا أَنْفَقَ الرَّجُلُ عَلَى أَهْلِهِ نَفَقَةً يَحْتَسِبُهَا فَهِيَ لَهُ صَدَقَةٌ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**293** அபூமஸ்ஊத் அல்-பத்ரி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நற்கூலியை நாடியவராக ஒரு மனிதன் தன் குடும்பத்தாருக்கு செலவு செய்தால், அது அவனுக்கு தர்மம் (செய்த கூலி) ஆகும்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:55. முஸ்லிம்:1002)**

٢٩٤ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" كَفَى بِالْمَرْءِ إِثْمًا أَنْ يُضَيِّعَ مَنْ يَقُوتُ" حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ وَرَوَاهُ مُسْلِمٌ فِي صَحِيحِهِ بِمَعْنَاهُ. قَالَ:" كَفَى بِالْمَرْءِ إِثْمًا أَنْ يَحْبِسَ عَمَّنْ يَمْلِكُ قُوتَهُ".

**294** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தான் உணவளிக்க வேண்டியவருக்கு உணவளிக்காமல் இருப்பது ஒன்றே, மனிதனுக்குப் பாவம் (செய்தவன்) என்பதற்கு போதுமானதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:1692. முஸ்லிமில் (996) வாசக மாற்றத்துடன் இதே கருத்து இடம் பெற்றுள்ளது)**

٢٩٥ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" مَا مِنْ يَوْمٍ يُصْبِحُ الْعِبَادُ فِيهِ إِلاَّ مَلَكَانِ يَنْزِلاَنِ فَيَقُولُ أَحَدُهُمَا: اللَّهُمَّ أَعْطِ مُنْفِقًا خَلَفًا وَيَقُولُ الآخَرُ: اللَّهُمَّ أَعْطِ مُمْسِكًا تَلَفًا". مُتَّفَقٌ عَلَيْهِ.

**295** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அடியார்களுக்கு, விடிகின்ற ஒவ்வொரு நாள் காலையிலும் இரண்டு வானவர்கள் இறங்கி வராமல் இருப்பதில்லை. அவ்விருவரில் ஒருவர், "இறைவா! (நல்வழியில்) செலவு செய்பவருக்குப் பிரதிபலனை வழங்குவாயாக!" என்று கூறுவார். மற்றவர், "இறைவா! செலவழிக்காமல் இருப்பவனுக்கு அழிவைத் தருவாயாக!" என்று கூறுவார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1442. முஸ்லிம்:1010)**

٢٩٦ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" الْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنَ الْيَدِ السُّفْلَى وَابْدَأْ بِمَنْ تَعُولُ. وَخَيْرُ الصَّدَقَةِ مَا كَانَ عَنْ ظَهْرِ غِنًى وَمَنْ يَسْتَعْفِفْ يُعِفُّهُ اللَّهُ وَمَنْ يَسْتَغْنِ يُغْنِهِ اللَّهُ". رَوَاهُ الْبُخَارِيُّ.

**296** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தர்மத்தைக் கொடுக்கும்) மேலே உள்ள கை, (தர்மம் பெறும் கை) கீழே உள்ள கையைவிட சிறந்ததாகும். (தர்மத்தை) உன் குடும்பத்தாரிடமிருந்து ஆரம்பிப்பீராக! தர்மத்தில் சிறந்தது, தேவைக்குப் போக மீதி உள்ளவை தான். பேணுதலாக இருக்க ஒருவன் விரும்பினால், அல்லாஹ் அவனைப் பேணுதல் உடையவனாக்குவான். ஒருவன் (பிறர்) தேவையில்லாது வாழ விரும்பினால், (பிறர்) தேவையற்றவனாக அவனை அல்லாஹ் ஆக்குவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1427)**

## ٣٧ - باب الإنفاق مما يجب ومن الجيد

### பாடம் : 37 - தான் விரும்பிய தரமானப் பொருட்களை செலவு செய்தல்!

قَالَ اللَّهُ تَعَالَى: لَنْ تَنَالُوا الْبِرَّ حَتَّى تُنْفِقُوا مِمَّا تُحِبُّونَ. وَقَالَ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ وَمِمَّا أَخْرَجْنَا لَكُمْ مِنَ الأَرْضِ وَلاَ تَيَمَّمُوا الْخَبِيثَ مِنْهُ تُنْفِقُونَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *நீங்கள் விரும்பியவற்றிலிருந்து நீங்கள் செலவு செய்யும் வரை நன்மை செய்தவர்களாக ஆகிவிட முடியாது. (3:92)*

*இறை விசுவாசிகளே! நீங்கள் சம்பாதித்தவற்றிலிருந்தும், பூமியில் உங்களுக்கு நாம் தந்தவற்றிலிருந்தும் நல்லவற்றைச் செலவு செய்யுங்கள். அவற்றில் கெட்டதை நீங்கள் செலவு செய்ய விரும்பாதீர்கள். (2:267)*

٢٩٧ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كَانَ أَبُو طَلْحَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَكْثَرَ الأَنْصَارِ بِالْمَدِينَةِ مَالاً مِنْ نَخْلٍ وَكَانَ أَحَبُّ أَمْوَالِهِ إِلَيْهِ بَيْرُحَاءَ وَكَانَتْ مُسْتَقْبِلَةَ الْمَسْجِدِ وَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَدْخُلُهَا وَيَشْرَبُ مِنْ مَاءٍ فِيهَا طَيِّبٍ. قَالَ أَنَسٌ: فَلَمَّا نَزَلَتْ هَذِهِ الآيَةُ: لَنْ تَنَالُوا الْبِرَّ حَتَّى تُنْفِقُوا مِمَّا تُحِبُّونَ قَامَ أَبُو طَلْحَةَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ إِنَّ اللَّهَ تَعَالَى أَنْزَلَ عَلَيْكَ لَنْ تَنَالُوا الْبِرَّ حَتَّى تُنْفِقُوا مِمَّا تُحِبُّونَ وَإِنَّ أَحَبَّ مَالِي إِلَيَّ بَيْرُحَاءَ وَإِنَّهَا صَدَقَةٌ لِلَّهِ تَعَالَى أَرْجُو بِرَّهَا وَذُخْرَهَا عِنْدَ اللَّهِ تَعَالَى فَضَعْهَا يَا رَسُولَ اللَّهِ حَيْثُ أَرَاكَ اللَّهُ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" بَخٍ ذَلِكَ مَالٌ رَابِحٌ ذَلِكَ مَالٌ رَابِحٌ! وَقَدْ سَمِعْتُ مَا قُلْتَ وَإِنِّي أَرَى أَنْ تَجْعَلَهَا فِي الأَقْرَبِينَ". فَقَالَ أَبُو طَلْحَةَ: أَفْعَلُ يَا رَسُولَ اللَّهِ. فَقَسَمَهَا أَبُو طَلْحَةَ فِي أَقَارِبِهِ وَبَنِي عَمِّهِ مُتَّفَقٌ عَلَيْهِ. قَوْلُهُ ﷺ:" مَالٌ رَابِحٌ" رُوِيَ فِي الصَّحِيحِ" رَابِحٌ" وَ" رَايِحٌ" بِالْبَاءِ الْمُوَحَّدَةِ وَبِالْيَاءِ الْمُثَنَّاةِ: أَيْ رَايِحٌ عَلَيْكَ نَفْعُهُ. وَ" بَيْرُحَاءُ" حَدِيقَةُ نَخْلٍ وَرُوِيَ بِكَسْرِ الْبَاءِ وَفَتْحِهَا.

**297** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூதல்ஹா (ரழி) அவர்கள், மதீனாவிலேயே மதீனாவாசிகளில் பேரீத்தம் பழத் தோட்டங்கள் அதிகம் உடையவராக இருந்தார். அவரது சொத்துக்களில் அவருக்கு மிக விருப்பமானதாக 'பய்ருஹா' தோட்டம் இருந்தது. பள்ளிவாசலுக்கு அருகில் அது அமைந்திருந்தது. நபி (ஸல்) அவர்கள் அதன் உள்ளே போய், அதன் சுவையானத் தண்ணீரைக் குடிப்பார்கள். "உங்களுக்கு விருப்பமானவற்றை (இறைவழியில்) செலவழிக்காதவரை நீங்கள் நன்மையினை அடைந்திட முடியாது. மேலும், எதனை நீங்கள் செலவழித்தாலும் திண்ணமாக, அல்லாஹ் அதனை நன்கு அறிபவனாக இருக்கின்றான்." 3:92 வசனம் இறங்கியதும், நபி (ஸல்) அவர்களிடம் அபூதல்ஹா வந்தார். "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்கள் மீது 3:92 வசனத்தை இறக்கி உள்ளான். என் சொத்தில் எனக்கு மிகவும் விருப்பமானது 'பய்ருஹா' தான். அதை அல்லாஹ்வின் வழியில் (நான்) தர்மம் (செய்கிறேன்). அதன் நன்மையை, நற்கூலியை அல்லாஹ்விடமே ஆதரவு வைக்கிறேன். இறைத்தூதர் அவர்களே!அல்லாஹ்வின் நாட்டப்படி அதை நீங்கள் (செலவு) செய்து கொள்ளுங்கள்" என்று கூறினார்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "நல்லது. இது லாபம் தரும் சொத்தாகும். இது லாபம் தரும் சொத்தாகும்" என (இருமுறைக்) கூறிவிட்டு, "இது விஷயமாக நீர் கூறியதைக் கேட்டேன். உம் நெருங்கிய உறவினர்களுக்கு இதை பங்கீடு செய்வதை நான் விரும்புகிறேன்" என்றும் கூறினார்கள். உடனே அபூதல்ஹா அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! அப்படியே செய்கிறேன்" என்று கூறிவிட்டு, அந்த தோட்டத்தைத் தன் நெருங்கிய உறவினர்களுக்கும், தன் சிறிய தந்தையின் மக்களுக்கும் அபூதல்ஹா பங்கிட்டுக் கொடுத்தார்கள். **(புகாரி:1461. முஸ்லிம்:998)**

## ٣٨ - باب وجوب أمره أهله وأولاد المميزين وسائر من في رعيته بطاعة الله تعالى ونهيهم عن المخالفة وتأديبهم ومنعهم عن ارتكاب منهي عنه

## பாடம் : 38 - தன் மனைவி, மக்கள், தன் பொறுப்பின் கீழ் உள்ளவர்கள் ஆகியோரை இறைவனுக்குக்கட்டுப்பட ஏவுதலும், மாறு செய்வதைத் தடுத்தலும், ஒழுக்கம் பேண வைத்தலும், தீமைகளை விட்டும் தடுத்தலும்!

قَالَ اللَّهُ تَعَالَى: وَأْمُرْ أَهْلَكَ بِالصَّلَاةِ وَاصْطَبِرْ عَلَيْهَا. وَقَالَ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا قُوا أَنْفُسَكُمْ وَأَهْلِيكُمْ نَارًا.

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) உம் மனைவியைத் தொழும்படி ஏவுவீராக! (20:132)*

*இறை விசுவாசிகளே! உங்களையும், உங்கள் மனைவியரையும் நரகை விட்டும் பாதுகாத்துக் கொள்ளுங்கள். (66:6)*

٢٩٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: أَخَذَ الْحَسَنُ بْنُ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا تَمْرَةً مِنْ تَمْرِ الصَّدَقَةِ فَجَعَلَهَا فِي فِيهِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" كَخْ كَخْ ارْمِ بِهَا. أَمَا عَلِمْتَ أَنَّا لَا نَأْكُلُ الصَّدَقَةَ!". مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ:" أَنَّا لَا تَحِلُّ لَنَا الصَّدَقَةُ". وَقَوْلُهُ:" كَخْ كَخْ" يُقَالُ بِإِسْكَانِ الْخَاءِ وَيُقَالُ بِكَسْرِهَا مَعَ التَّنْوِينِ وَهِيَ كَلِمَةُ زَجْرٍ لِلصَّبِيِّ عَنِ الْمُسْتَقْذَرَاتِ وَكَانَ الْحَسَنُ رَضِيَ اللَّهُ عَنْهُ صَبِيًّا.

**298** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) ஹஸன் (ரழி) அவர்கள் தர்மப்பொருளாக இருந்த பேரீத்தம் பழத்தை எடுத்துத் தன் வாயில் வைத்தார்கள். (உடனே தமது அன்புப் பேரரிடம்), "துப்பு, துப்பு! அதை எறிந்து விடு, நாம் தர்மப் பொருளை உண்ணக் கூடாது என்பது நீ அறியாததா?" என்று நபி (ஸல்) கேட்டார்கள்.

**(புகாரி:3072. முஸ்லிம்:1069. மற்றொரு அறிவிப்பில் "தர்மப்பொருள் நமக்கு அனுமதிக்கப்பட்டதல்ல" என்று உள்ளது)**

٢٩٩ - وَعَنْ أَبِي حَفْصٍ عُمَرَ بْنِ أَبِي سَلَمَةَ عَبْدِ اللَّهِ بْنِ عَبْدِ الأَسَدِ رَبِيبِ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ:" كُنْتُ غُلَامًا فِي حِجْرِ رَسُولِ اللَّهِ ﷺ وَكَانَتْ يَدِي تَطِيشُ فِي الصَّحْفَةِ فَقَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ: يَا غُلَامُ سَمِّ اللَّهَ تَعَالَى وَكُلْ بِيَمِينِكَ وَكُلْ مِمَّا يَلِيكَ. فَمَا زَالَتْ تِلْكَ طِعْمَتِي بَعْدُ". مُتَّفَقٌ عَلَيْهِ." وَتَطِيشُ": تَدُورُ فِي نَوَاحِي الصَّحْفَةِ.

**299** நபி(ஸல்) அவர்களின் வீட்டில் வளர்ந்தவரான அபூஹஃப்ஸ் என்ற உமர் இப்னு அபூஸலமா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்கள் வீட்டில் சிறுவனாக இருந்தேன். உணவுத்தட்டில் என் கை அங்குமிங்கும் அலைந்தது. அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், "சிறுவரே! (சாப்பிடும் போது) 'பிஸ்மில்லாஹ்' கூறும்! உம் வலது கையால் சாப்பிடும்! உம் அருகில் உள்ள பகுதியிலிருந்து (எடுத்துச்) சாப்பிடும்" என்று கூறினார்கள். இதன்பின் இதுதான் என் உண்ணும் பழக்கமாக இருந்தது. **(புகாரி:5376. முஸ்லிம்:2022)**

٣٠٠ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" كُلُّكُمْ رَاعٍ وَكُلُّكُمْ مَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ: الإِمَامُ رَاعٍ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ وَالرَّجُلُ رَاعٍ فِي أَهْلِهِ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ وَالْمَرْأَةُ رَاعِيَةٌ فِي بَيْتِ زَوْجِهَا وَمَسْئُولَةٌ عَنْ رَعِيَّتِهَا وَالْخَادِمُ رَاعٍ فِي مَالِ سَيِّدِهِ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ فَكُلُّكُمْ رَاعٍ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**300** இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளர்களாவீர்கள். ஒவ்வொருவரும் தன் பொறுப்பு பற்றிக் கேட்கப்படுவார். தலைவரும் பொறுப்புதாரரே! அவர் தன் பொறுப்புப் பற்றிக் கேட்கப்படுவார். ஒரு மனிதர் அவரின் மனைவி குறித்துப் பொறுப்புதாரர் ஆவார். அவரின் பொறுப்புப் பற்றி, அவர் கேட்கப்படுவார். ஒரு பெண்ணும் தன் கணவனின் வீட்டிற்குப் பொறுப்புதாரர் ஆவாள். அவள் தன் பொறுப்புப் பற்றிக் கேள்வி கேட்கப்படுவாள். ஓர் ஊழியர், தன் எஜமானர் விஷயத்தில் பொறுப்புதாரர் ஆவார். ஒவ்வொருவரும் பொறுப்புதாரரே! அவரவர் தம் பொறுப்புப் பற்றிக் கேட்கப்படுவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:893. முஸ்லிம்:1829)**

٣٠١ - وَعَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ ) عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مُرُوا أَوْلاَدَكُمْ بِالصَّلاَةِ وَهُمْ أَبْنَاءُ سَبْعِ سِنِينَ وَاضْرِبُوهُمْ عَلَيْهَا وَهُمْ أَبْنَاءُ عَشْرٍ وَفَرِّقُوا بَيْنَهُمْ فِي الْمَضَاجِعِ". حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ.

**301** அம்ரு இப்னு ஷுஐப் (ரழி) அவர்கள் தன் பாட்டனார் கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

"உங்களின் குழந்தைகளை, அவர்கள் 7 வயது ஆகும் சமயம் தொழும்படி ஏவுங்கள். அவர்கள் 10 வயது ஆகும் போது, இதற்காக அவர்களை அடியுங்கள். மேலும், அவர்களுக்கிடையே படுக்கை களைப் பிரித்துப் போடுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:495)**

٣٠٢ - وَعَنْ أَبِي ثُرَيَّةَ سَبْرَةَ بْنِ مَعْبَدٍ الْجُهَنِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" عَلِّمُوا الصَّبِيَّ الصَّلاَةَ لِسَبْعِ سِنِينَ وَاضْرِبُوهُ عَلَيْهَا ابْنَ عَشْرِ سِنِينَ". حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ. وَلَفْظُ أَبِي دَاوُدَ:" مُرُوا الصَّبِيَّ بِالصَّلاَةِ إِذَا بَلَغَ سَبْعَ سِنِينَ".

**302** அபூஸரிய்யா என்ற ஸப்ரா இப்னு மஅபது ஜுஹ்னீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(உங்களின்) குழந்தைக்கு 7 வயதாகும் போது தொழுகையைக் கற்றுக் கொடுங்கள். 10 வயதாகும் போது தொழாவிட்டால் அதற்காக அவர்களை அடியுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:494. திர்மிதீ:407. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்) "(ஏழு வயதை அடைந்து விட்டால் தொழும்படி சிறுவருக்கு ஏவுங்கள்" என அபூதாவூதின் வாசகம் உள்ளது)**

## ٣٩ - باب الحق الجار والوصية به

## பாடம் : 39 - பக்கத்து வீட்டாரின் உரிமைகளும், அவர்களின் நலன் நாடுதலும்

**قَالَ اللَّهُ تَعَالَى: وَاعْبُدُوا اللَّهَ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَبِالْوَالِدَيْنِ إِحْسَانًا وَبِذِي الْقُرْبَى وَالْيَتَامَى وَالْمَسَاكِينِ وَالْجَارِ ذِي الْقُرْبَى وَالْجَارِ الْجُنُبِ وَالصَّاحِبِ بِالْجَنْبِ وَابْنِ السَّبِيلِ وَمَا مَلَكَتْ أَيْمَانُكُمْ.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ்வை வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணைவைக்காதீர்கள். பெற்றோருக்கும், நெருங்கிய உறவினருக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், நெருங்கிய உறவினரின் பக்கத்து வீட்டாருக்கும், உறவினரல்லாத பக்கத்து வீட்டாருக்கும், நெருங்கிய நண்பர்களுக்கும், வழிப்போக்கர்களுக்கும், உங்களின் வலக்கரங்கள் சொந்தமாக்கியவர்களுக்கும் நல்லுதவி செய்யுங்கள். (4:36)*

٣٠٣ - وَعَنِ ابْنِ عُمَرَ وَعَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالاَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" مَا زَالَ جِبْرِيلُ يُوصِينِي بِالْجَارِ حَتَّى ظَنَنْتُ أَنَّهُ سَيُوَرِّثُهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**303** இப்னு உமர் (ரழி), அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் இருவரும் அறிவிக்கின்றார்கள்:

"(பக்கத்து வீட்டார்) எனக்கு வாரிசாக ஆக்கப்பட்டு விடுவாரோ என நான் எண்ணும் அளவுக்குப் பக்கத்து வீட்டார்கள் பற்றி (அவர்களுக்கு நல்லது செய்ய) எனக்கு ஜிப்ரீல் (அலை), உபதேசம் செய்து கொண்டே இருந்தார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6014,6015. முஸ்லிம்:2624,2625)**

٣٠٤ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" يَا أَبَا ذَرٍّ إِذَا طَبَخْتَ مَرَقَةً فَأَكْثِرْ مَاءَهَا وَتَعَاهَدْ جِيرَانَكَ". رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَةٍ لَهُ عَنْ أَبِي ذَرٍّ قَالَ: إِنَّ خَلِيلِي ﷺ أَوْصَانِي" إِذَا طَبَخْتَ مَرَقَةً فَأَكْثِرْ مَاءَهَا ثُمَّ انْظُرْ أَهْلَ بَيْتٍ مِنْ جِيرَانِكَ فَأَصِبْهُمْ مِنْهَا بِمَعْرُوفٍ".

**304** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அபூதர் அவர்களே! நீர் குழம்பை (சால்னாவை)த் தயார் செய்தால், அதில் தண்ணீரை அதிகப்படுத்துவீராக! அதனைக் கொண்டு உம் பக்கத்து வீட்டாரையும் கவனித்துக் கொள்வீராக" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

"நீர் குழம்பைத் தயார் செய்தால், அதில் தண்ணீரை அதிகமாக்கி, பின்பு உம் பக்கத்து வீட்டாரையும் கவனித்து, அதில் நல்லதை அவர்களுக்கு ஊற்றிக் கொடுப்பீராக! என்று என் நேசர் நபி (ஸல்) எனக்கு உபதேசம் செய்தார்கள்" என அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்.

**(முஸ்லிம்:2625/142,143)**

٣٠٥ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" وَاللّٰهِ لاَ يُؤْمِنُ وَاللّٰهِ لاَ يُؤْمِنُ وَاللّٰهِ لاَ يُؤْمِنُ!" قِيلَ: مَنْ يَا رَسُولَ اللّٰهِ ؟ قَالَ:" الَّذِي لاَ يَأْمَنُ جَارُهُ بَوَائِقَهُ!" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ:" لاَ يَدْخُلُ الْجَنَّةَ مَنْ لاَ يَأْمَنُ جَارُهُ بَوَائِقَهُ". "الْبَوَائِقُ": الْغَوَائِلُ وَالشُّرُورُ.

**305** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக, அவர் முஃமின் அல்ல. அல்லாஹ்வின் மீது சத்தியமாக, அவர் முஃமின் அல்ல. அல்லாஹ்வின் மீது சத்தியமாக அவர் முஃமின் அல்ல" என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! எவர்?" என்று கேட்கப்பட்டது. "எவனது தீங்கைக் கண்டு பக்கத்து வீட்டார் பயப்படுகிறார்களோ அவன்தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6016. முஸ்லிம்:46 முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் "பக்கத்து வீட்டார் ஒருவனின் தீவினை கண்டு, அச்சம் தீராதிருக்கக் காரணமானவன் சொர்க்கம் நுழைய மாட்டான் என்று உள்ளது.)**

٣٠٦ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" يَا نِسَاءَ الْمُسْلِمَاتِ لاَ تَحْقِرَنَّ جَارَةٌ لِجَارَتِهَا وَلَوْ فِرْسِنَ شَاةٍ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**306** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஸ்லிம் பெண்களே! உங்கள் பக்கத்து வீட்டுப் பெண், மற்றொரு பக்கத்து வீட்டுப் பெண்ணை இழிவாக எண்ணிவிட வேண்டாம். ஒரு ஆட்டின் கால்குளம்பாயினும் சரியே! (அதையேனும் வழங்கலாம்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2566. முஸ்லிம்:1030)**

٣٠٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" لاَ يَمْنَعُ جَارٌ جَارَهُ أَنْ يَغْرِزَ خَشَبَةً فِي جِدَارِه". ثُمَّ يَقُولُ أَبُو هُرَيْرَةَ: مَالِي أَرَاكُمْ عَنْهَا مُعْرِضِينَ! وَاللَّه لأَرْمِيَن بِهَا بَيْنَ أَكْتَافِكُمْ! مُتَّفَقٌ عَلَيْه. رُوِيَ" خَشَبَهُ" بِالأَضَافَة وَالْجَمْعِ وَرُوِيَ" خَشَبَةً" بِالتَّنوِينِ عَلَى الأفْرَاد. وَقَوْلُهُ: مَالِي أَرَاكُمْ عَنْهَا مُعْرِضِينَ: يَعْنِي عَنْ هَذِه السُّنَّة.

**307** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு பக்கத்து வீட்டார், தன் வீட்டுச் சுவரில் குச்சியை நட்டு வைக்க, மற்றொரு பக்கத்து வீட்டார் அதை தடுத்திட வேண்டாம்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஆனால்) "இந்த நபிமொழியைப் புறக்கணித்தவர்களாகவே உங்களை நான் பார்க்கிறேனே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக, உங்களுக்கிடையே இதை நான் கூறிக் கொண்டேதான் இருப்பேன்" (என்று அபூஹுரைரா (ரழி) கூறுகிறார்.) **(புகாரி:2463. முஸ்லிம்:1609)**

٣٠٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّه وَالْيَوْمِ الأخرِ فَلاَ يُؤْذِ جَارَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّه وَالْيَوْمِ الأخرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّه وَالْيَوْمِ الأخرِ فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَسْكُتْ". مُتَّفَقٌ عَلَيْه.

**308** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர், தன் பக்கத்து வீட்டாரை நோவினை செய்ய வேண்டாம். மேலும் அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர், தன் விருந்தினரைக் கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிய ஒருவர், நல்லதைச் சொல்லட்டும். அல்லது மவுனமாக இருக்கட்டும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6018. முஸ்லிம்:47)**

٣٠٩ – وَعَنْ أَبِي شُرَيْحٍ الْخُزَاعِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّه وَالْيَوْمِ الأخرِ فَلْيُحْسِنْ إِلَى جَارِه وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّه وَالْيَوْمِ الأخرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّه وَالْيَوْمِ الأخرِ فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَسْكُتْ". رَوَاهُ مُسْلِمٌ بِهَذَا اللَّفْظِ وَرَوَى الْبُخَارِيُّ بَعْضَهُ.

**309** அபூஷுரைஹ் அல்-குஸாஈ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர், தன் பக்கத்து வீட்டாரிடம் நல்லவிதமாக நடந்து கொள்ளட்டும், அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர், தன் விருந்தினரை கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர், நல்லதைப் பேசட்டும் அல்லது மவுனமாக இருக்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:48. புகாரியில் (6019) சில பகுதி மட்டும் உள்ளது)**

٣١٠ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: قُلْت: يَا رَسُولَ اللَّه إِنَّ لِي جَارَيْنِ فَإِلَى أَيِّهِمَا أُهْدِي ؟ قَالَ:" إِلَى أَقْرَبِهِمَا مِنْك بَابًا". رَوَاهُ الْبُخَارِيُّ.

**310** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! எனக்கு இரண்டு பக்கத்து வீட்டார் உண்டு. அவ்விருவரில் எவருக்கு நான் அன்பளிப்பு வழங்குவது?" என்று கேட்டேன். "அவ்விருவரில் எவரின் வாசல் உமக்கு மிக நெருக்கமாக உள்ளதோ, அவருக்கு!" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(புகாரி:6020)**

٣١١ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "خَيْرُ الأَصْحَابِ عِنْدَ اللَّهِ تَعَالَى خَيْرُهُمْ لِصَاحِبِهِ وَخَيْرُ الْجِيرَانِ عِنْدَ اللَّهِ تَعَالَى خَيْرُهُمْ لِجَارِهِ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**311** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் தோழரிடம் சிறந்தவரே, அல்லாஹ்விடம் தோழமைக்குரியவர்களில் சிறந்தவர் ஆவார். தன் பக்கத்து வீட்டாரிடம் சிறந்தவரே, அல்லாஹ்விடம் சிறந்தவராவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:1944. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٤٠ – باب بر الوالدين وصلة الأرحام

## பாடம் : 40 - பெற்றோர் நலம் பேணல், உற்றார்களை ஆதரித்தல்!

قَالَ اللَّهُ تَعَالَى: وَاعْبُدُوا اللَّهَ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَبِالْوَالِدَيْنِ إِحْسَانًا وَبِذِي الْقُرْبَى وَالْيَتَامَى وَالْمَسَاكِينِ وَالْجَارِ ذِي الْقُرْبَى وَالْجَارِ الْجُنُبِ وَالصَّاحِبِ بِالْجَنْبِ وَابْنِ السَّبِيلِ وَمَا مَلَكَتْ أَيْمَانُكُمْ. وَقَالَ تَعَالَى: وَاتَّقُوا اللَّهَ الَّذِي تَسَاءَلُونَ بِهِ وَالأَرْحَامَ. وَقَالَ تَعَالَى: وَالَّذِينَ يَصِلُونَ مَا أَمَرَ اللَّهُ بِهِ أَنْ يُوصَلَ الأَيَةَ. وَقَالَ تَعَالَى: وَوَصَّيْنَا الأَنْسَانَ بِوَالِدَيْهِ حُسْنًا. وَقَالَ تَعَالَى: وَقَضَى رَبُّكَ أَلاَّ تَعْبُدُوا إِلاَّ إِيَّاهُ وَبِالْوَالِدَيْنِ إِحْسَانًا إِمَّا يَبْلُغَنَّ عِنْدَكَ الْكِبَرَ أَحَدُهُمَا أَوْ كِلاَهُمَا فَلاَ تَقُلْ لَهُمَا أُفٍّ وَلاَ تَنْهَرْهُمَا وَقُلْ لَهُمَا قَوْلاً كَرِيمًا وَاخْفِضْ لَهُمَا جَنَاحَ الذُّلِّ مِنَ الرَّحْمَةِ وَقُلْ رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِي صَغِيرًا. وَقَالَ تَعَالَى: وَوَصَّيْنَا الأَنْسَانَ بِوَالِدَيْهِ حَمَلَتْهُ أُمُّهُ وَهْنًا عَلَى وَهْنٍ وَفِصَالُهُ فِي عَامَيْنِ أَنِ اشْكُرْ لِي وَلِوَالِدَيْكَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ்வை வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணை வைக்காதீர்கள். பெற்றோர்களுக்கும், நெருங்கிய உறவினர்களுக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், உறவினரான பக்கத்து வீட்டாருக்கும், உறவினர் அல்லாத பக்கத்து வீட்டாருக்கும், நெருங்கிய நண்பருக்கும், வழிப்போக்கருக்கும், உங்களின் வலதுகை சொந்தமாக்கிக் கொண்டோருக்கும் நல்லது செய்யுங்கள். (4:36)*

*எந்த அல்லாஹ்வின் பெயரைக் கூறி நீங்கள் ஒருவர் மற்றவரிடம் (உரிமைகளைக்) கோருகின்றீர்களோ, அந்த அல்லாஹ்வுக்கே நீங்கள் அஞ்சுங்கள்! உற்றாரை (ஆதரியுங்கள்). (4:1)*

*இணைத்துக் கொள்ளப்பட வேண்டும் என அல்லாஹ் கட்டளையிட்டபடி அவர்கள் (உறவுகளை) இணைத்துக் கொள்கிறார்கள். (13:21)*

*பெற்றோருக்கு நன்மை செய்ய வேண்டும் என மனிதனுக்கு கட்டளையிட்டோம். (29:8)*

*தன்னைத் தவிரவேறு எவரையும் நீங்கள் வணங்கக் கூடாது என்றும் பெற்றோர்களிடம் நல்லவிதமாக நடந்து கொள்ள வேண்டும் என்றும் உமது இறைவன் கட்டளையிட்டான். அவ்விருவரில் ஒருவர் அல்லது இருவரும் உம்மிடம் முதுமையை அடைந்துவிட்டால், அவ்விருவரையும் 'சீ' என்றுகூட கூறிவிட வேண்டாம். மேலும் அவ்விருவரையும் விரட்டி*

*விடாதீர்கள். அவ்விரு வரிடமும் கண்ணியமான வார்த்தைகளைப் பேசுவீராக! அவ்விருவரிடமும் கருணை மூலம் பணிவு எனும் இறக்கையைத் தாழ்த்துவீராக! மேலும், இறைவா! நான் சிறுவனாக இருந்த போது என்னை அவ்விருவரும் வளர்த்தது போல், அவ்விருவருக்கும் நீ அருள் புரிவாயாக!" என்றும் (துஆச் செய்து) கூறுவீராக! (17:23,24)*

*தன் பெற்றோரிடம் (நல்லவிதமாக நடக்க) மனிதனுக்கு உபதேசித்தோம். அவனது தாய் அவனை சிரமத்திற்கும் மேல் சிரமத்துடன் சுமந்தாள். அவனது பால் குடித்தல் (முழுமையான) இரண்டு ஆண்டுகளாகும். எனக்கும் உன் பெற்றோருக்கும் நன்றி கூறு (என்றும் கட்டளையிட்டோம்) (31:14)*

٣١٢ - وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَأَلْتُ النَّبِيَّ ﷺ: أَيُّ الْعَمَلِ أَحَبُّ إِلَى اللَّهِ تَعَالَى ؟ قَالَ: " الصَّلاَةُ عَلَى وَقْتِهَا" قُلْتُ: ثُمَّ أَيٌّ ؟ قَالَ: " بِرُّ الْوَالِدَيْنِ" قُلْتُ: ثُمَّ أَيٌّ ؟ قَالَ: " الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**312** அபூ அப்துர் ரஹ்மான் என்ற அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான செயல் எது?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். "உரிய நேரத்தில் தொழுவது" என்று நபி (ஸல்) கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்டேன். "பெற்றோருக்கு நன்மை செய்தல்" என்று கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்டேன். "இறைவழியில் போர் புரிதல்" என்று கூறினார்கள். **(புகாரி:527. முஸ்லிம்:85)**

٣١٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " لاَ يَجْزِي وَلَدٌ وَالِدًا إِلاَّ أَنْ يَجِدَهُ مَمْلُوكًا فَيَشْتَرِيَهُ فَيُعْتِقَهُ". رَوَاهُ مُسْلِمٌ.

**313** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மகன் தன் தந்தைக்கு (எதையும்) ஈடுகட்ட முடியாது. எனினும், அவன் தன் தந்தையை அடிமையாகக் கண்டு, அவரை விலைக்கு வாங்கி, விடுதலை செய்தாலே தவிர!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1510)**

٣١٤ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَيْضًا رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيَصِلْ رَحِمَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَصْمُتْ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**314** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தன் விருந்தினரை கண்ணியப்படுத்தட்டும். மேலும் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர், தன் உறவினருடன் இணைந்து வாழட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் நல்லதைச் சொல்லட்டும். அல்லது மவுனமாக இருக்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6018. முஸ்லிம்:47)**

٣١٥ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " إِنَّ اللَّهَ تَعَالَى خَلَقَ الْخَلْقَ حَتَّى إِذَا فَرَغَ مِنْهُمْ قَامَتْ الرَّحِمُ فَقَالَتْ: هَذَا مَقَامُ الْعَائِذِ بِكَ مِنْ الْقَطِيعَةِ قَالَ: نَعَمْ أَمَا تَرْضَيْنَ أَنْ أَصِلَ مَنْ وَصَلَكِ وَأَقْطَعَ مَنْ قَطَعَكِ ؟ قَالَتْ: بَلَى قَالَ: فَذَلِكِ لَكِ ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " اقْرَءُوا إِنْ شِئْتُمْ: فَهَلْ عَسَيْتُمْ إِنْ تَوَلَّيْتُمْ أَنْ تُفْسِدُوا فِي الأَرْضِ وَتُقَطِّعُوا أَرْحَامَكُمْ. أُولَئِكَ الَّذِينَ لَعَنَهُمُ اللَّهُ فَأَصَمَّهُمْ وَأَعْمَى أَبْصَارَهُمْ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِلْبُخَارِيِّ: فَقَالَ اللَّهُ تَعَالَى: " مَنْ وَصَلَكِ وَصَلْتُه وَمَنْ قَطَعَكِ قَطَعْتُه".

**315** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நிச்சயமாகஅல்லாஹ், படைப்புகளைப் படைத்து, முடித்த போது, 'உறவு' எழுந்து நின்றது. "(என்னைத்) துண்டித்துக் கொள்வதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புக் கோரும் இடம் இது" என்று கூறியது. "ஆம்! உன்னை சேர்த்துக் கொள்பவனை நானும் சேர்த்துக் கொள்வேன். உன்னைத் துண்டிப்பவனை நானும் துண்டித்துவிடுவேன் என்பதை நீ திருப்தியுறவில்லையா?" என்று அல்லாஹ் கேட்டான். "திருப்திதான்" என உறவு கூறியதும், "உனக்கு அது உண்டு" என்று அல்லாஹ் கூறினான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, பின்பு "நீங்கள் விரும்பினால் (பின்வரும்) வசனத்தை ஓதுங்கள்" என்றும் கூறினார்கள்.

*"நீங்கள் பொறுப்பாளர்களாக வந்துவிட்டால் பூமியில் நீங்கள் குழப்பம் செய்வதையும், உங்களின் இரத்த தொடர்புடையவர்களை நீங்கள் துண்டித்துக் கொள்வதையும் விரும்புகிறீர்களா? (துண்டிக்கும்) அவர்களை அல்லாஹ் சபித்துவிட்டான். அவர்களை செவிடாக்கி விட்டான். அவர்களின் பார்வைகளை குருடாக்கிவிட்டான்". (47:22,23)*

**(இது புகாரி (5987), முஸ்லிமில் (2554) உள்ளது. புகாரியின் மற்றொரு அறிவிப்பில், "உன்னைச் சேர்த்தவரை நானும் அவரைச் சேர்த்துக் கொள்வேன். உன்னைப் பிரிந்தவரை நானும் அவரைப் பிரிந்து விடுவேன்" என்று நபி (ஸல்) கூறியதாக உள்ளது).**

٣١٦ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ مَنْ أَحَقُّ النَّاسِ بِحُسْنِ صَحَابَتِي ؟ قَالَ:" أُمُّكَ" قَالَ: ثُمَّ مَنْ ؟ قَالَ:" أُمُّكَ" قَالَ: ثُمَّ مَنْ ؟ قَالَ:" أُمُّكَ" قَالَ: ثُمَّ مَنْ ؟ قَالَ:" أَبُوكَ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: يَا رَسُولَ اللَّهِ مَنْ أَحَقُّ الصُّحْبَةِ ؟ قَالَ:" أُمُّكَ ثُمَّ أُمُّكَ ثُمَّ أُمُّكَ ثُمَّ أَبَاكَ ثُمَّ أَدْنَاكَ أَدْنَاكَ". " وَالصَّحَابَةُ" بِمَعْنَى الصُّحْبَةِ. وَقَوْلُهُ" ثُمَّ أَبَاكَ" هَكَذَا هُوَ مَنْصُوبٌ بِفِعْلٍ مَحْذُوفٍ أَيْ بِرَّ أَبَاكَ وَفِي رِوَايَةٍ" ثُمَّ أَبُوكَ" وَهَذَا وَاضِحٌ.

**316** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். "இறைத்தூதர் அவர்களே! என் அழகிய நட்புக்கு மனிதர்களில் அதிக தகுதி வாய்ந்தவர் யார்?" என்று கேட்டார். "உன் தாய்" என்று கூறினார்கள். "பின்பு யார்?" என்று கேட்டார். "உன் தாய்" என்றார்கள். "பிறகு யார்?" என்று கேட்டார் "உன் தாய்" என்றார்கள். "பிறகு யார்?" என்று கேட்டார். "உன் தந்தை" என்றார்கள்.

**(புகாரி:5971. முஸ்லிம்:2548)**

மற்றொரு அறிவிப்பில், "இறைத்தூதர் அவர்களே! நல்ல நட்புக்கு மிகத் தகுதி வாய்ந்தவர் யார்?" என்று கேட்டார். "உன் தாய். பின்பு உன் தாய். பின்பு உன் தாய். பின்பு உன் தந்தை. பின்பு அடுத்தவர், அடுத்தவர்"என்று கூறினார்கள் என உள்ளது.

٣١٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" رَغِمَ أَنْفُ ثُمَّ رَغِمَ أَنْفُ ثُمَّ رَغِمَ أَنْفُ مَنْ أَدْرَكَ أَبَوَيْهِ عِنْدَ الْكِبَرِ: أَحَدَهُمَا أَوْ كِلَيْهِمَا فَلَمْ يَدْخُلْ الْجَنَّةَ" رَوَاهُ مُسْلِمٌ.

**317** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முதிய வயதையுடைய பெற்றோர்களில் இருவரோ அல்லது ஒருவரோ இருந்தும், சொர்க்கம் நுழைய முடியாமல் போன மனிதரின் நாசமாகட்டுமாக! நாசமாகட்டுமாக! நாசமாகட்டுமாக!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2551)**

٣١٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ: يَا رَسُولَ اللَّهِ إِنَّ لِي قَرَابَةً أَصِلُهُمْ وَيَقْطَعُونَنِي وَأُحْسِنُ إِلَيْهِمْ وَيُسِيئُونَ إِلَيَّ وَأَحْلُمُ عَنْهُمْ وَيَجْهَلُونَ عَلَيَّ. فَقَالَ:" لَئِنْ كُنْت كَمَا قُلْت فَكَأَنَّمَا تُسِفُّهُمْ الْمَلَّ وَلاَ يَزَالُ مَعَك مِنَ اللَّهِ ظَهِيرٌ

عَلَيْهِمْ مَا دُمْت عَلَى ذَلِكَ" رَوَاهُ مُسْلِمٌ." وَتُسِفُّهُمْ" بِضَمِّ التَّاءِ وَكَسْرِ السِّينِ الْمُهْمَلَة وَتَشْدِيد الْفَاء." وَالْمَلُّ" بِفَتْحِ الْمِيم وَتَشْدِيد اللاَّمِ وَهُوَ الرَّمَادُ الْحَارُّ: أَيْ كَأَنَّمَا تُطْعِمُهُمُ الرَّمَادَ الْحَارَّ وَهُوَ تَشْبِيهٌ لِمَا يَلْحَقُهُمْ مِنَ الأَثْمِ بِمَا يَلْحَقُ آكِلَ الرَّمَادِ الْحَارِّ مِنْ الأَلَمِ وَلاَ شَيْءَ عَلَى هَذَا الْمُحْسِنِ إِلَيْهِمْ لَكِنْ يَنَالُهُمْ إِثْمٌ عَظِيمٌ بِتَقْصِيرِهِمْ فِي حَقِّهِ وَإِدْخَالِهِمْ الأَذَى عَلَيْهِ وَاللَّهُ أَعْلَمُ.

**318** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, "இறைத்தூதர் அவர்களே! எனக்குச் சில உறவினர் உண்டு. அவர்களை நான் இணைத்து வாழ்கிறேன். என்னை அவர்கள் பிரிக்கிறார்கள். அவர்களிடம் நல்ல விதமாக நடக்கிறேன். அவர்கள் என்னிடம் தீவினையுடன் நடந்து கொள்கிறார்கள். அவர்களிடம் நான் கனிவுடன் நடக்கிறேன். அவர்கள் என்னைக் கண்டு கொள்வதில்லை" என்று கூறினார். "நீர் கூறுவது போல் நீ இருந்தால், சுடு சாம்பலை நீர் அவர்களை உண்ணச் செய்தது போலாகும். நீர் இருக்கும் வரை, அவர்களுக்கு எதிரான பாதுகாவலர் (வானவர்) அல்லாஹ்விடமிருந்து உன்னுடன் இருந்து கொண்டேயிருப்பார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2558)**

٣١٩ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" مَنْ أَحَبَّ أَنْ يُبْسَطَ لَهُ فِي رِزْقِهِ وَيُنْسَأَ لَهُ فِي أَثَرِهِ فَلْيَصِلْ رَحِمَهُ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَمَعْنَى" يُنْسَأَ لَهُ فِي أَثَرِهِ": أَيْ يُؤَخَّرُ لَهُ فِي أَجَلِهِ وَعُمْرِهِ.

**319** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் உணவு (வாழ்வாதாரம்) தனக்கு அதிகரிக்கப்படவும், தன் ஆயுள் தனக்கு நீடிக்கப்படவும் ஒருவர் விரும்பினால், அவர் தன் உறவினரை இணைந்து வாழட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5986. முஸ்லிம்:2557)**

٣٢٠ – وَعَنْهُ ) أَنَس ( قَالَ: كَانَ أَبُو طَلْحَةَ أَكْثَرَ الأَنْصَارِ بِالْمَدِينَةِ مَالاً مِنْ نَخْلٍ وَكَانَ أَحَبُّ أَمْوَالِهِ إِلَيْهِ بَيْرُحَاءَ وَكَانَتْ مُسْتَقْبِلَةَ الْمَسْجِدِ وَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَدْخُلُهَا وَيَشْرَبُ مِنْ مَاءٍ فِيهَا طَيِّبٍ فَلَمَّا نَزَلَتْ هَذِهِ الآيَةُ: لَنْ تَنَالُوا الْبِرَّ حَتَّى تُنْفِقُوا مِمَّا تُحِبُّونَ قَامَ أَبُو طَلْحَةَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ إِنَّ اللَّهَ تَبَارَكَ وَتَعَالَى يَقُولُ: لَنْ تَنَالُوا الْبِرَّ حَتَّى تُنْفِقُوا مِمَّا تُحِبُّونَ. وَإِنَّ أَحَبَّ مَالِي إِلَيَّ بَيْرُحَاءَ وَإِنَّهَا صَدَقَةٌ لِلَّهِ أَرْجُو بِرَّهَا وَذُخْرَهَا عِنْدَ اللَّهِ تَعَالَى فَضَعْهَا يَا رَسُولَ اللَّهِ حَيْثُ أَرَاكَ اللَّهُ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" بَخٍ ذَلِكَ مَالٌ رَابِحٌ ذَلِكَ مَالٌ رَابِحٌ! وَقَدْ سَمِعْتُ مَا قُلْتَ وَإِنِّي أَرَى أَنْ تَجْعَلَهَا فِي الأَقْرَبِينَ". فَقَالَ أَبُو طَلْحَةَ: أَفْعَلُ يَا رَسُولَ اللَّهِ. فَقَسَّمَهَا أَبُو طَلْحَةَ فِي أَقَارِبِهِ وَبَنِي عَمِّهِ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَسَبَقَ بَيَانُ أَلْفَاظِهِ فِي بَابِ الأَنْفَاقِ مِمَّا يُحِبُّ.

**320** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூதல்ஹா (ரழி) அவர்கள், மதீனாவிலேயே மதீனாவாசிகளில் பேரீத்தம் பழத் தோட்டங்கள் அதிகம் உடையவராக இருந்தார். அவரது சொத்துக்களில் அவருக்கு மிக விருப்பமானதாக 'பய்ரூஹா' தோட்டம் இருந்தது. பள்ளிவாசலுக்கு அருகில் அது அமைந்திருந்தது. நபி (ஸல்) அவர்கள் அதன் உள்ளே போய், அதன் சுவையானத் தண்ணீரைக் குடிப்பார்கள். "உங்களுக்கு விருப்பமானவற்றை (இறைவழியில்) செலவழிக்காதவரை நீங்கள் நன்மையினை அடைந்திட முடியாது. மேலும், எதனை நீங்கள் செலவழித்தாலும் திண்ணமாக, அல்லாஹ் அதனை நன்கு அறிபவனாக இருக்கின்றான்." 3:92 வசனம் இறங்கியதும், நபி (ஸல்) அவர்களிடம் அபூதல்ஹா வந்தார். "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்கள் மீது 3:92 வசனத்தை இறக்கி உள்ளான். என் சொத்தில் எனக்கு மிகவும் விருப்பமானது 'பய்ரூஹா' தான். அதை அல்லாஹ்வின் வழியில் (நான்)

தர்மம் (செய்கிறேன்). அதன் நன்மையை, நற்கூலியை அல்லாஹ்விடமே ஆதரவு வைக்கிறேன். இறைத்தூதர் அவர்களே!அல்லாஹ்வின் நாட்டப்படி அதை நீங்கள் (செலவு) செய்து கொள்ளுங்கள்'' என்று கூறினார்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "நல்லது. இது லாபம் தரும் சொத்தாகும். இது லாபம் தரும் சொத்தாகும்'' என (இருமுறைக்) கூறிவிட்டு, "இது விஷயமாக நீர் கூறியதைக் கேட்டேன். உம் நெருங்கிய உறவினர்களுக்கு இதை பங்கீடு செய்வதை நான் விரும்புகிறேன்'' என்றும் கூறினார்கள். உடனே அபூதல்ஹா அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! அப்படியே செய்கிறேன்'' என்று கூறிவிட்டு, அந்தத் தோட்டத்தைத் தன் நெருங்கிய உறவினர்களுக்கும், தன் சிறிய தந்தையின் மக்களுக்கும் அபூதல்ஹா பங்கிட்டுக் கொடுத்தார்கள். **(புகாரி:1461. முஸ்லிம்:998)**

٣٢١ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: أَقْبَلَ رَجُلٌ إِلَى نَبِيِّ اللَّهِ ﷺ فَقَالَ: أُبَايِعُكَ عَلَى الْهِجْرَةِ وَالْجِهَادِ أَبْتَغِي الأَجْرَ مِنَ اللَّهِ تَعَالَى. فَقَالَ:" هَلْ لَكَ مِنْ وَالِدَيْكَ أَحَدٌ حَيٌّ ؟" قَالَ: نَعَمْ بَلْ كِلاَهُمَا. قَالَ:" فَتَبْتَغِي الأَجْرَ مِنَ اللَّهِ تَعَالَى ؟" قَالَ: نَعَمْ. قَالَ:" فَارْجِعْ إِلَى وَالِدَيْكَ فَأَحْسِنْ صُحْبَتَهُمَا" مُتَّفَقٌ عَلَيْهِ. وَهَذَا لَفْظُ مُسْلِمٍ. وَفِي رِوَايَةٍ لَهُمَا: جَاءَ رَجُلٌ فَاسْتَأْذَنَهُ فِي الْجِهَادِ. قَالَ:" أَحَيٌّ وَالِدَاكَ ؟" قَالَ. نَعَمْ: قَالَ" فَفِيهِمَا فَجَاهِدْ".

**321** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்விடமிருந்து நன்மையை எதிர்பார்த்தவனாக ஜிஹாத் செய்யவும், ஹிஜ்ரத் செய்யவும் உங்களிடம் நான் சத்தியப் பிரமாணம் செய்கிறேன்'' என்று கூறினார். "உன் பெற்றோரில் எவரும் உன்னுடன் வாழ்கின்றனரா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். "ஆம்! இருவரும் உள்ளனர்'' என்று கூறினார். "அல்லாஹ்விடமிருந்து கூலியை எதிர்பார்க்கிறீரா?'' என்று கேட்டார்கள். "ஆம்'' என்றார். "உன் பெற்றோரிடம் செல்லும் - அவ்விருவரிடமும் உன் நட்பை அழகாக்கும்'' என்று கூறினார்கள்.

**(புகாரி:3004. முஸ்லிம்:2549. இது முஸ்லிமின் வாசமாகும். இவ்விரண்டின் மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது)**

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, போர் புரிய அனுமதி கேட்டார். "உன் பெற்றோர் உயிருடன் உள்ளனரா?'' என்று நபி (ஸல்) கேட்டதும், "ஆம்'' என்றார். "அப்படியானால் அவ்விருவரிடமும் (பணி விடைசெய்து) ஜிஹாத் செய்யும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

٣٢٢ - وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" لَيْسَ الْوَاصِلُ بِالْمُكَافِئِ وَلَكِنَّ الْوَاصِلَ الَّذِي إِذَا قَطَعَتْ رَحِمُهُ وَصَلَهَا" رَوَاهُ الْبُخَارِيُّ. وَ" قَطَعَتْ" بِفَتْحِ الْقَافِ وَالطَّاءِ. وَ" رَحِمُهُ" مَرْفُوعٌ.

**322** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பிரதி உபகாரம் (உதவிக்கு உதவி) என வாழ்பவர், உறவை இணைத்து வாழ்பவர் அல்லர். எனினும், தன் உறவினர் தன்னை துண்டித்தாலும், அவர்களை இணைத்து வாழ்பவரே, இணைத்து வாழ்பவர் ஆவார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5991)**

٣٢٣ - وَعَنْ عَائِشَةَ قَالَتْ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" الرَّحِمُ مُعَلَّقَةٌ بِالْعَرْشِ تَقُولُ: مَنْ وَصَلَنِي وَصَلَهُ اللَّهُ وَمَنْ قَطَعَنِي قَطَعَهُ اللَّهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**323** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உறவு என்பது, அர்ஷை பிடித்துக் கொண்டு ‘என்னை இணைத்து வாழ்பவரை அல்லாஹ் இணைத்துக் கொள்வான். என்னைப் பிரித்து விடுபவரை அல்லாஹ்வும் பிரித்து விடுவான்’ என்று கூறும்” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5989. முஸ்லிம்:2555)**

٣٢٤ – وَعَنْ أُمِّ الْمُؤْمِنِينَ مَيْمُونَةَ بِنْتِ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا أَعْتَقَتْ وَلِيدَةً وَلَمْ تَسْتَأْذِنْ النَّبِيَّ ﷺ. فَلَمَّا كَانَ يَوْمُهَا الَّذِي يَدُورُ عَلَيْهَا فِيهِ قَالَتْ: أَشَعَرْتَ يَا رَسُولَ اللَّهِ أَنِّي أَعْتَقْتُ وَلِيدَتِي ؟ قَالَ:" أَوَفَعَلْتِ ؟" قَالَتْ: نَعَمْ. قَالَ:" أَمَا إِنَّكِ لَوْ أَعْطَيْتِهَا أَخْوَالَكِ كَانَ أَعْظَمَ لِأَجْرِكِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**324** மைமூனா பின்த் ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்காமல், நான் ஒரு அடிமைப் பெண்ணை விடுதலை செய்து விட்டேன். என்னுடன் தங்குகின்ற நாள் அவர்களுக்கு ஏற்பட்டபோது, “இறைத்தூதர் அவர்களே! என் அடிமையை நான் விடுதலை செய்து விட்டேன் என்பதை அறிவீர்களா?” என்று கேட்டேன். “அவ்வாறு செய்தாயா?” என்று கேட்டார்கள். “ஆம்” என்றேன். “நீ அவளை உன் மாமாமார்களுக்குக் கொடுத்து இருந்தால், உன் நற்கூலியை அதிகமாக்கி இருக்குமே!” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2594. முஸ்லிம்:999)**

٣٢٥ – وَعَنْ أَسْمَاءَ بِنْتِ أَبِي بَكْرٍ الصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَتْ: قَدِمَتْ عَلَيَّ أُمِّي وَهِيَ مُشْرِكَةٌ فِي عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ فَاسْتَفْتَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ قُلْتُ: قَدِمَتْ عَلَيَّ أُمِّي وَهِيَ رَاغِبَةٌ أَفَأَصِلُ أُمِّي ؟ قَالَ:" نَعَمْ صِلِي أُمَّكِ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَقَوْلُهَا:" رَاغِبَةٌ" أَيْ طَامِعَةٌ عِنْدِي تَسْأَلُنِي شَيْئًا ؟ قِيلَ: كَانَتْ أُمُّهَا مِنَ النَّسَبِ وَقِيلَ: مِنْ الرَّضَاعَةِ وَالصَّحِيحُ الأَوَّلُ.

**325** அஸ்மா பின்த் அபூபக்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் ஹுதைபிய்யா ஒப்பந்தக் காலத்தில் இணைவைப்பவராக இருந்த என் தாயார் என்னைப் பார்க்க மதீனா வந்தார். “என் தாய் என் மீதுள்ள ஆவலில் காண வந்துள்ளார். நான் அவரை சேர்த்துக் கொள்ளலாமா?” என்று நபி (ஸல்) அவர்களிடம் மார்க்கத் தீர்ப்பு கேட்டேன். “ஆம்! உம் தாயை நீர் சேர்த்துக் கொள்ளலாம்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:2620. முஸ்லிம்:1003)**

٣٢٦ – وَعَنْ زَيْنَبَ الثَّقَفِيَّةِ امْرَأَةِ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ وَعَنْهَا قَالَتْ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" تَصَدَّقْنَ يَا مَعْشَرَ النِّسَاءِ وَلَوْ مِنْ حُلِيِّكُنَّ". قَالَتْ: فَرَجَعْتُ إِلَى عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ فَقُلْتُ لَهُ: إِنَّكَ رَجُلٌ خَفِيفُ ذَاتِ الْيَدِ. وَإِنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَدْ أَمَرَنَا بِالصَّدَقَةِ فَأْتِهِ فَاسْأَلْهُ فَإِنْ كَانَ ذَلِكَ يُجْزِئُ عَنِّي وَإِلاَّ صَرَفْتُهَا إِلَى غَيْرِكُمْ. فَقَالَ عَبْدُ اللَّهِ: بَلْ ائْتِيهِ أَنْتِ فَانْطَلَقْتُ فَإِذَا امْرَأَةٌ مِنَ الأَنْصَارِ بِبَابِ رَسُولِ اللَّهِ ﷺ – حَاجَتِي حَاجَتُهَا – وَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ قَدْ أُلْقِيَتْ عَلَيْهِ الْمَهَابَةُ فَخَرَجَ عَلَيْنَا بِلاَلٌ فَقُلْنَا لَهُ: ائْتِ رَسُولَ اللَّهِ ﷺ فَأَخْبِرْهُ أَنَّ امْرَأَتَيْنِ بِالْبَابِ تَسْأَلاَنِكَ: أَتُجْزِئُ الصَّدَقَةُ عَنْهُمَا عَلَى أَزْوَاجِهِمَا وَعَلَى أَيْتَامٍ فِي حُجُورِهِمَا ؟ وَلاَ تُخْبِرْهُ مَنْ نَحْنُ. فَدَخَلَ بِلاَلٌ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ فَسَأَلَهُ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ:" مَنْ هُمَا ؟" قَالَ: امْرَأَةٌ مِنَ الأَنْصَارِ وَزَيْنَبُ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" أَيُّ الزَّيَانِبِ ؟" قَالَ: امْرَأَةُ عَبْدِ اللَّهِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" لَهُمَا أَجْرَانِ أَجْرُ الْقَرَابَةِ وَأَجْرُ الصَّدَقَةِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**326** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் அவர்களின் மனைவி ஜைனப் ஃதக்பீ (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

“பெண்களே! நீங்கள் தர்மம் செய்யுங்கள். உங்களின் நகைகளாக இருப்பினும் சரியே! தர்மம் செய்யுங்கள்” என நபி (ஸல்) கூறினார்கள். அதைக் கேட்ட நான் (என் கணவர்) அப்துல்லாஹ் இப்னு

மஸ்ஊத் அவர்களிடம் வந்தேன். "நீங்கள் வறுமையில் உள்ளீர்கள். நபி (ஸல்) அவர்கள் தர்மம் செய்யும்படி எங்களுக்கு ஏவினார்கள். எனவே அவர்களிடம் நீங்கள் சென்று (என் தர்மத்தை நீங்கள் பெறலாமா?" என அவர்களிடம் கேளுங்கள். "அது சரியாக இருந்தால், என்னிடமிருந்து அதைக் கொடுப்பது போதுமாகும். இல்லையெனில் மற்றவருக்கு நான் அதைக் கொடுப்பேன்" என்று கூறினார்கள். "நீ போய் கேட்டுவா" என்று அப்துல்லா (ரழி) கூறினார்கள். நான் மீண்டும் சென்றேன். அப்போது அங்கே மதீனாவாசி (அன்சாரீ)யான ஒரு பெண், நபி (ஸல்) அவர்களில் வாசலில் நின்று கொண்டிருந்தார். என் தேவையைப் போலவே அவரது தேவையும் இருந்தது.

நபி (ஸல்) அவர்கள், மதிப்பு கலந்த பயம் ஏற்படும் நிலையை உண்டாக்கும் தோற்றமுள்ளவராக இருந்தார்கள். அப்போது எங்களிடம் பிலால் (ரழி) வந்தார்கள். அவரிடம் நாங்கள், "நீங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, "இரு பெண்கள் வந்து தங்களிடம் உள்ள தர்மப் பொருளை தங்களின் கணவர்களுக்கோ, தங்களின் மடியில் வளரும் அனாதைகளுக்கோ (கொடுக்க) விரும்புவது கூடுமா? என்று உங்களிடம் கேட்பதற்காக வாசலில் நிற்கின்றனர் என்ற செய்தியைக் கூறுங்கள். நாங்கள் யார்? என்ற விபரத்தை அவர்களிடம் கூறாதீர்கள்" என்று கூறினோம். நபி (ஸல்) அவர்களிடம் பிலால் போய், இது பற்றிக் கேட்டார்கள். அப்போது அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "அவ்விருவரும் யார்?" என்று கேட்டார்கள். "அன்சாரிப் பெண், மற்றும் ஜைனப்" என்று பிலால் கூறினார்கள். "எந்த ஜைனப்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க, "அப்துல்லாஹ்வின் மனைவி" என பிலால் (ரழி) கூறினார்கள். "உறவினரை ஆதரித்தல், தர்மம் செய்தல் என இரண்டு வகைக் கூலி அந்த இரண்டு பெண்களுக்கும் உண்டு" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1466. முஸ்லிம்:1000)**

٣٢٧ - وَعَنْ أَبِي سُفْيَانَ صَخْرِ بْنِ حَرْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثِهِ الطَّوِيلِ فِي قِصَّةِ هِرَقْلَ أَنَّ هِرَقْلَ قَالَ لأَبِي سُفْيَانَ: فَمَاذَا يَأْمُرُكُمْ بِهِ ؟ يَعْنِي النَّبِيَّ ﷺ. ) قَالَ ( قُلْتُ: يَقُولُ: "اعْبُدُوا اللَّهَ وَحْدَهُ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَاتْرُكُوا مَا يَقُولُ آبَاؤُكُمْ وَيَأْمُرُنَا بِالصَّلاَةِ وَالصِّدْقِ وَالْعَفَافِ وَالصِّلَةِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**327** ஹிர்க்கல் மன்னர் பற்றிய செய்தியில் நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாக அபூசுஃப்யான் இப்னு ஹர்ப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மன்னர் ஹிர்க்கல், அபூசுஃப்யான் அவர்களிடம், "உங்களுக்கு அவர் (நபி (ஸல்)) எதைக் கூறுகிறார்?" என்று கேட்டார். "அல்லாஹ்வை மட்டும் வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணை வைக்காதீர்கள். உங்களின் பெற்றோர் கூறிய தவறானதை (மூடப் பழக்கங்களை) விட்டு விடுங்கள் என்று நபி கூறினார். மேலும் தொழும்படியும், உண்மை பேசும்படியும், பேணுதலாக இருக்கும் படியும், உறவினரை ஆதரித்து வாழும்படியும் எங்களுக்கு கட்டளையிடுகிறார்" என்று அபூசுஃபயான் கூறினார். **(புகாரி:7. முஸ்லிம்:1773)**

٣٢٨ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "إِنَّكُمْ سَتَفْتَحُونَ أَرْضًا يُذْكَرُ فِيهَا الْقِيرَاطُ". وَفِي رِوَايَةٍ: "سَتَفْتَحُونَ مِصْرَ وَهِيَ أَرْضٌ يُسَمَّى فِيهَا الْقِيرَاطُ فَاسْتَوْصُوا بِأَهْلِهَا خَيْرًا فَإِنَّ لَهُمْ ذِمَّةً وَرَحِمًا" وَفِي رِوَايَةٍ: "فَإِذَا افْتَتَحْتُمُوهَا فَأَحْسِنُوا إِلَى أَهْلِهَا فَإِنَّ لَهُمْ ذِمَّةً وَرَحِمًا" أَوْ قَالَ: "ذِمَّةً وَصِهْرًا" رَوَاهُ مُسْلِمٌ. قَالَ الْعُلَمَاءُ: "الرَّحِمُ" الَّتِي لَهُمْ كَوْنُ هَاجَرَ أُمِّ إِسْمَاعِيلَ ﷺ مِنْهُمْ." وَالصِّهْرُ" كَوْنُ مَارِيَةَ أُمِّ إِبْرَاهِيمَ ابْنِ رَسُولِ اللَّهِ ﷺ مِنْهُمْ.

**328** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தோழர்களே) 'கீராத்' என்ற வார்த்தையைப் பயன்படுத்தும் நாட்டை நீங்கள் விரைவில் வெற்றி பெறுவீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் . மிஸ்ரை நீங்கள் வெற்றி பெறுவீர்கள். 'கீராத்' என்று குறிப்பிடப்படும் வார்த்தை பேசும் நாடு அது. அவ்வூர் மக்களிடம் நீங்கள் சிறந்த முறையில் நடந்து கொள்ளுங்கள். ஏனெனில், அவர்களுக்கு (நம்மிடம்) பொறுப்பும், இரத்த உறவும் உள்ளது'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2543)**

மற்றொரு அறிவிப்பில் "அந்த நாட்டை நீங்கள் வெற்றி பெற்றால், அவ்வூர் மக்களிடம் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அவர்களுக்கு (நம்மிடம்) பொறுப்பும், இரத்த உறவும் உள்ளது'' என நபி (ஸல்) கூறினார்கள் என்று உள்ளது.

**அறிஞர்கள் கூறுகிறார்கள்:**

"இரத்த உறவு என்பது, மிஸ்ருவாசிகளில் ஒருவராக நம் இஸ்மாயீல் (அலை) அவர்களின் தாயார் 'ஹாஜர்' இருந்தார் என்பதாகும். பொறுப்பு என்பது, அவர்களில் இருந்துதான் நபி (ஸல்) அவர்களின் மகன் இப்ராஹிமின் தாயார் 'மாரியா (ரழி)' இருந்தார்கள் என்பதுமாகும்.''

٣٢٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: لَمَّا نَزَلَتْ هَذه الأيَةُ: وَأَنْذرْ عَشيرَتَك الأَقْرَبينَ دَعَا رَسُولُ اللَّه ﷺ قُرَيْشًا فَاجْتَمَعُوا فَعَمَّ وَخَصَّ وَقَالَ: "يَا بَني عَبْد شَمْس يَا بَني كَعْب بْن لُؤَيٍّ أَنْقذُوا أَنْفُسَكُمْ منَ النَّار يَا بَني مُرَّةَ بْنَ كَعْب أَنْقذُوا أَنْفُسَكُمْ منَ النَّار يَا بَني عَبْد مَنَاف أَنْقذُوا أَنْفُسَكُمْ منَ النَّار يَا بَني هَاشم أَنْقذُوا أَنْفُسَكُمْ منَ النَّار يَا بَني عَبْد الْمُطَّلب أَنْقذُوا أَنْفُسَكُمْ منَ النَّار يَا فَاطمَةُ أَنْقذي نَفْسَك منَ النَّار فَإِنِّي لاَ أَمْلكُ لَكُمْ منَ اللَّه شَيْئًا ؛ غَيْرَ أَنَّ لَكُمْ رَحمًا سَأَبُلُّهَا ببَلاَلهَا" رَوَاهُ مُسْلمٌ. قَوْلُهُ ﷺ "ببَلاَلهَا" هُوَ بفَتْح الْبَاء الثَّانيَة وَكَسْرهَا" وَالْبَلاَلُ": الْمَاءُ وَمَعْنَى الْحَديث: سَأَصلُهَا شَبَّهَ قَطيعَتَهَا بالْحَرَارَة تُطْفَأُ بالْمَاء وَهَذه تَبْرُدُ بالصِّلَة.

**329** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நெருங்கிய உறவினரை எச்சரிப்பீராக!'' என்ற (26:214) வசனம் இறங்கிய போது, நபி (ஸல்) அவர்கள் குறைஷி மக்களை அழைத்தார்கள். குறைஷிகள் ஒன்று கூடினார்கள். "பனூஅப்துஷ்ஷம்ஸ் கூட்டத்தார்களே! கஃபு இப்னு லுஅய் கூட்டத்தார்களே! உங்களை நரக நெருப்பில் இருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். முர்ரா இப்னு கஃபு கூட்டத்தார்களே! நரக நெருப்பில் இருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். அப்து முனாஃப் கூட்டத்தார்களே! நரக நெருப்பிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். ஹாஷிம்கூட்டத்தார்களே! நரக நெருப்பிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். அப்துல் முத்தலிப் கூட்டத்தார்களே! நரக நெருப்பிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். பாத்திமாவே! நரக நெருப்பிலிருந்து உன்னைக் காப்பாற்றிக் கொள்! நிச்சயமாக அல்லாஹ்விடமிருந்து எதையும் உங்களுக்காக பொறுப்பேற்க மாட்டேன். எனினும் உங்களிடம் (எனக்கு) இரத்த பந்தம் உள்ளது. அதன் உறவை சேர்த்துக் கொள்ளுதல் எனும் தண்ணீரால் அதை நனைத்துக் கொள்வேன்'' என்று தலைவர்கள் - பொதுமக்கள் என அனைவரிடமும் நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:204)**

٣٣٠ – وَعَنْ أَبِي عَبْد اللَّه عَمْرو بْنِ الْعَاص رَضيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمعْت رَسُولَ اللَّه ﷺ جهَارًا غَيْرَ مُسرٍّ يَقُولُ: "إنَّ آلَ بَني فُلاَنٍ لَيْسُوا بأَوْليَائي إنَّمَا وَليِّي اللَّهُ وَصَالحُ الْمُؤْمنينَ وَلَكنْ لَهُمْ رَحمٌ أَبُلُّهَا ببَلاَلهَا" مُتَّفَقٌ عَلَيْه. وَاللَّفْظُ للْبُخَاريِّ.

**330** அபூஅப்துல்லாஹ் என்ற அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இன்ன கூட்டத்தார் எனக்கு விருப்பமானவர்களல்லர்.நிச்சயமாக எனக்கு விருப்பமானவர்கள், அல்லாஹ்வும், அவனை நம்பிக்கை கொண்ட நல்ல அடியார்களும்தான். எனினும் அந்த

கூட்டத்தாரிடம் எனது இரத்த பந்தம் உள்ளது. அதை அதன் (சேர்த்துக் கொள்ளுதல் எனும்) நீரால் நனைத்துக் கொள்வேன்'' என ஒளிவு மறைவு இன்றி நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்.

**(புகாரி:5990. முஸ்லிம்:215 இது புகாரியின் வாசகமாகும்.)**

٣٣١ - وَعَنْ أَبِي أَيُّوب خَالِد بْن زَيْد الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ: يَا رَسُولَ اللَّه أَخْبِرْنِي بِعَمَلٍ يُدْخِلُنِي الْجَنَّةَ وَيُبَاعِدُنِي مِنَ النَّارِ. فَقَالَ النَّبِيُّ ﷺ: "تَعْبُدُ اللَّهَ وَلاَ تُشْرِكُ بِهِ شَيْئًا وَتُقِيمُ الصَّلاَةَ وَتُؤْتِي الزَّكَاةَ وَتَصِلُ الرَّحِمَ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**331** அபூ அய்யூப் என்ற காலித் இப்னு ஸைத் அல்-அன்சாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், ''இறைத்தூதர் அவர்களே! சொர்க்கத்தில் என்னை நுழையச் செய்கின்ற, நரகிலிருந்து என்னைத் தூரமாக்கி விடுகின்ற ஒரு செயலை என்னிடம் கூறுங்கள்'' என்று ஒருவர் கேட்டார். ''நீர் அல்லாஹ்வை வணங்குவீராக! எதையும் அவனுக்கு இணைவைக்காதீர்! தொழுகையைப் பேணுவீராக! ஜகாத் கொடுப்பீராக! உறவினரை இணைந்து வாழ்வீராக!'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1396. முஸ்லிம்:13)**

٣٣٢ - وَعَنْ سَلْمَانَ بْنِ عَامِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "إِذَا أَفْطَرَ أَحَدُكُمْ فَلْيُفْطِرْ عَلَى تَمْرٍ فَإِنَّهُ بَرَكَةٌ فَإِنْ لَمْ يَجِدْ تَمْرًا فَالْمَاءُ فَإِنَّهُ طَهُورٌ" وَقَالَ: "الصَّدَقَةُ عَلَى الْمِسْكِينِ صَدَقَةٌ وَعَلَى ذِي الرَّحِمِ ثِنْتَانِ: صَدَقَةٌ وَصِلَةٌ" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**332** ஸல்மான் இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''உங்களில் ஒருவர் நோன்பு திறந்தால், ஒரு பேரீத்தம் பழத்தால் நோன்பைத் திறக்கட்டும். அதுவே அபிவிருத்தி தரும். ஒரு பேரீத்தம் பழம் இல்லையென்றால், தண்ணீர் (மூலம் நோன்பு திறக்கட்டும்) அதுவே சுகாதாரமாகும்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, ''ஏழைக்குத் தர்மம் தருவது, ஒரு தர்மம் மட்டும்தான். நெருங்கிய உறவினருக்கு தர்மம் செய்வது இரண்டு (கூலி)களாகும். ஒன்று தர்மம், மற்றொன்று உறவை இணைத்து வாழ்தல்'' என்றும் கூறினார்கள்.

**(திர்மிதீ:658,695. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٣٣٣ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: كَانَتْ تَحْتِي امْرَأَةٌ وَكُنْتُ أُحِبُّهَا وَكَانَ عُمَرُ يَكْرَهُهَا فَقَالَ لِي: طَلِّقْهَا فَأَبَيْتُ فَأَتَى عُمَرُ رَضِيَ اللَّهُ تَعَالَى عَنْهُ النَّبِيَّ ﷺ فَذَكَرَ ذَلِكَ لَهُ فَقَالَ النَّبِيُّ ﷺ: "طَلِّقْهَا" رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**333** இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் என் மனைவியை மிகவும் நேசிப்பவனாக இருந்தேன். அவளை (என் தந்தை) உமர் (ரழி) அவர்கள் வெறுப்பவர்களாக இருந்தார்கள். எனவே ''அவளை நீ விவாகரத்துச் செய்துவிடு'' என்று என்னிடம் கூறினார்கள். நான் மறுத்தேன். உடனே உமர் (ரழி) அவர்கள், நபி(ஸல்) அவர்களிடம் வந்து, இது பற்றிக் கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்), ''அவளை நீர் விவாகரத்துச் செய்து விடுவீராக'' என்று கூறினார்கள்.

**(அபூதாவூது:5138. திர்மிதீ:1189. இது 'ஹஸன்' என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٣٣٤ - وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً أَتَاهُ فَقَالَ: إِنَّ لِي امْرَأَةً وَإِنَّ أُمِّي تَأْمُرُنِي بِطَلاَقِهَا. فَقَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: "الْوَالِدُ أَوْسَطُ أَبْوَابِ الْجَنَّةِ فَإِنْ شِئْتَ فَأَضِعْ ذَلِكَ الْبَابَ أَوِ احْفَظْهُ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**334** அபூதர்தா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் மனைவியை விவாகரத்துச் செய்யும்படி என்னிடம் என் தாயார் கட்டளையிட்டார்கள் (என்ன செய்வது)” என என்னிடம் வந்து ஒருவர் கேட்டார். “பெற்றவர் சொர்க்கவாசல்களின் ஒரு வாசலாகும். நீர் விரும்பினால் அந்த வாசலை இடித்து விடும். அல்லது அதைப் பாதுகாத்துக் கொள்ளும் என்று நபி (ஸல்) கூற நான் கேட்டுள்ளேன்” என்று அவரிடம் கூறினேன்.

**(திர்மிதீ:1899. இது ‘ஹஸன் ஸஹீஹ்’ என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٣٣٥ – وَعَنْ الْبَرَاء بْنِ عَازِب رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" الْخَالَةُ بِمَنْزِلَة الأمِّ" رَوَاهُ التِّرْمذيُّ وَقَالَ: حَديثٌ صَحيحٌ. وَفِي الْبَاب أَحَاديثُ كَثيرَةٌ في الصَّحيح مَشْهُورَةٌ: مِنْهَا حَديثُ أَصْحَابِ الْغَارِ وَحَديثُ جُرَيْجٍ وَقَدْ سَبَقَا وَأَحَاديثُ مَشْهُورَةٌ في الصَّحيح حَذَفْتهَا اخْتصَارًا. وَمِنْ أَهَمِّهَا حَديثُ عَمْرو بن عَبَسَةَ – رَضِيَ اللَّهُ عَنْهُ – الطَّويلُ الْمُشْتَملُ عَلَى جُمَلٍ كَثيرَةٍ منْ قَوَاعد الأسْلاَم وَآدَابه وَسَأَذْكُرُهُ بتَمَامه إنْ شَاءَ اللَّهُ تَعَالَى في بَاب الرَّجَاء قَالَ فيه: دَخَلْت عَلَى النَّبيِّ ﷺ بمَكَّةَ – يَعْني في أَوَّلَ النُّبوّة – فَقُلْتَ لَهُ: مَا أَنْتَ ؟ قَالَ:" نَبيٌّ ؟" فَقُلْت: وَمَا نَبيٌّ ؟ قَالَ:" أَرْسَلَني اللَّهُ تَعَالَى" فَقُلْت: بأَيِّ شَيْءٍ أَرْسَلَكَ ؟ قَالَ:" أَرْسَلَني بصلَة الأرْحَام وَكَسْر الأوْثَان وَأَنْ يُوَحِّدَ اللَّهُ لاَ يُشْرَكُ بِهِ شَيْءٌ". وَذَكَرَ تَمَامَ الْحَديث ; وَاللَّهُ أَعْلَمُ.

**335** பராவு இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தாயாரின் சகோதரி, தாயின் தகுதியைப் பெற்றவராவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1904. இது ‘ ஸஹீஹ்’ என, திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

இந்தப் பாடத்தின் கீழ் நிறைய ஹதீஸ்கள் உள்ளன. குகைவாசிகளின் ஹதீஸ், ஜுரைஜ்(ரழி) அவர்களின் ஹதீஸ் மற்றும் “ஆதரவு வைத்தல்” பாடத்தில் இடம் பெற உள்ள அம்ரு இப்னு அபஸா அவர்களின் நீண்ட ஹதீஸ் ஆகியவை பிரபல்யமான ஹதீஸ்களாகும்.

(438-வது ஹதீஸின் சில வாசகம் இங்கே இடம் பெறுகிறது. 438ஐ பார்வையிடுக)

## ٤١ – باب تحريم العقوق وقطيعة الرحم

## பாடம் : 41 - பெற்றோரை நோவினை செய்வதும், உறவினரை வெறுப்பதும் கூடாது!

قَالَ اللَّهُ تَعَالَى: فَهَلْ عَسَيْتُمْ إِنْ تَوَلَّيْتُمْ أَنْ تُفْسدُوا في الأَرْض وَتُقَطِّعُوا أَرْحَامَكُمْ أُولَئكَ الَّذينَ لَعَنَهُمُ اللَّهُ فَأَصَمَّهُمْ وَأَعْمَى أَبْصَارَهُمْ. وَقَالَ تَعَالَى: وَالَّذينَ يَنْقُضُونَ عَهْدَ اللَّه منْ بَعْد ميثَاقه وَيَقْطَعُونَ مَا أَمَرَ اللَّهُ به أَنْ يُوصَلَ وَيُفْسدُونَ في الأَرْض أُولَئكَ لَهُمُ اللَّعْنَةُ وَلَهُمْ سُوءُ الدَّار. وَقَالَ تَعَالَى: وَقَضَى رَبُّكَ أَلاَّ تَعْبُدُوا إلاَّ إيَّاهُ وَبالْوَالدَيْن إحْسَانًا إمَّا يَبْلُغَنَّ عنْدَكَ الْكبَرَ أَحَدُهُمَا أَوْ كلاَهُمَا فَلاَ تَقُلْ لَهُمَا أُفٍّ وَلاَ تَنْهَرْهُمَا وَقُلْ لَهُمَا قَوْلاً كَريمًا وَاخْفضْ لَهُمَا جَنَاحَ الذُّلِّ منَ الرَّحْمَة وَقُلْ رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَاني صَغيرًا.

**அல்லாஹ் கூறுகிறான்:** *எனவே (நயவஞ்சகர்களே) நீங்கள் புறக்கணித்துவிட்டால், பூமியில் நீங்கள் குழப்பம் செய்வதையும், உங்களுடைய உறவினர்களைத் துண்டித்துக் கொள்வதையும் எதிர்பார்க்கிறீர்களா? அவர்களை அல்லாஹ் சபித்துவிட்டான். மேலும் அவர்களை செவிடாக்கி விட்டான். அவர்களின் பார்வைகளைக் குருடாக்கிவிட்டான். (47:22,23)*

*அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதியை, அதை உறுதிபடுத்திய பின்னர் அவர்கள் முறித்து விட்டனர். (உறவுகளை) சேர்த்து வைக்க அல்லாஹ் கட்டளையிட்டதை புறக்கணித்தனர்.*

*பூமியில் குழப்பத்தை ஏற்படுத்துகின்றனர். இவர்களுக்கு சாபம் உண்டு. (நரகம் எனும்) கெட்ட வீடும் உண்டு. (13:25)*

*என்னைத் தவிர நீங்கள் வேறு யாரையும் வணங்கக் கூடாது என்றும், பெற்றோர்களிடம் நல்லவிதமாக நடக்க வேண்டும் என்றும் உமது இறைவன் உமக்குக் கட்டளையிட்டுள்ளான். அவ்விருவரில் ஒருவரோ அல்லது இருவருமோ உம்மிடம் முதுமையை அடைந்துவிட்டால், அவ்விருவரையும், 'சீ' என்று கூறிவிட வேண்டாம். அவ்விருவரையும் விரட்டி விடாதீர்! அவ்விருவரிடமும் நல்ல சொற்களைப் பேசுவீராக! அவ்விருவரிடமும் கருணையுடனும், பணிவு எனும் இறக்கையைத் தாழ்த்துவீராக! மேலும், "இறைவா! சிறுவராக இருந்தபோது என்னை இருவரும் வளர்த்தது போல் அவ்விருவருக்கும் நீ கருணை காட்டுவாயாக! என்று துஆக் கேட்பீராக! (17:23,24)*

٣٣٦ – وَعَنْ أَبِي بَكْرَةَ نُفَيْعِ بْنِ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" أَلاَ أُنَبِّئُكُمْ بِأَكْبَرِ الْكَبَائِرِ ؟" – ثَلاَثًا – قُلْنَا: بَلَى يَا رَسُولَ اللَّهِ. قَالَ:" الأَشْرَاكُ بِاللَّهِ وَعُقُوقُ الْوَالِدَيْنِ" وَكَانَ مُتَّكِئًا فَجَلَسَ فَقَالَ:" أَلاَ وَقَوْلُ الزُّورِ وَشَهَادَةُ الزُّورِ". فَمَا زَالَ يُكَرِّرُهَا حَتَّى قُلْنَا: لَيْتَهُ سَكَتَ! مُتَّفَقٌ عَلَيْهِ.

**336** அபூபக்ரா என்ற நுபய்உ இப்னு ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெரும் பாவங்களை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?" என நபி (ஸல்) அவர்கள் மூன்று முறை கேட்டார்கள். "அறிவியுங்கள் இறைத்தூதர் அவர்களே!" என்று கூறினோம். "அல்லாஹ்வுக்கு இணை வைத்தல், பெற்றோரை நோவினைப்படுத்துதல்" என்று கூறிவிட்டு, சாய்ந்து இருந்த அவர்கள், (நிமிர்ந்து) உட்கார்ந்து, "அறிந்து கொள்ளுங்கள். பொய் சொல்வதும், பொய் சாட்சி கூறுவதும்" என்று கூறிக் கொண்டே இருந்தார்கள். "அவர்கள் அமைதி அடைய மாட்டார்களா?" என்று நாங்கள் எண்ணும் அளவுக்கு நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். **(புகாரி:2654. முஸ்லிம்:87)**

٣٣٧ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" الْكَبَائِرُ: الأَشْرَاكُ بِاللَّهِ وَعُقُوقُ الْوَالِدَيْنِ وَقَتْلُ النَّفْسِ وَالْيَمِينُ الْغَمُوسُ" رَوَاهُ الْبُخَارِيُّ." وَالْيَمِينُ الْغَمُوسُ" الَّتِي يَحْلِفُهَا كَاذِبًا عَامِدًا سُمِّيَتْ" غَمُوسًا" لأَنَّهَا تَغْمِسُ الْحَالِفَ فِي الأَثْمِ.

**337** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வுக்கு இணைவைத்தல், பெற்றோரை நோவினைப்படுத்துதல், கொலை செய்தல், பொய்ச் சத்தியம் செய்தல் ஆகியவை பெரும் பாவங்களாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6675)**

٣٣٨ – وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" مِنْ الْكَبَائِرِ شَتْمُ الرَّجُلِ وَالدَيْهِ!" قَالُوا: يَا رَسُولَ اللَّهِ وَهَلْ يَشْتُمُ الرَّجُلُ وَالدَيْهِ ؟ قَالَ:" نَعَمْ يَسُبُّ أَبَا الرَّجُلِ فَيَسُبُّ أَبَاهُ وَيَسُبُّ أُمَّهُ فَيَسُبُّ أُمَّهُ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ:" إِنَّ مِنْ أَكْبَرِ الْكَبَائِرِ أَنْ يَلْعَنَ الرَّجُلُ وَالدَيْهِ!" قِيلَ: يَا رَسُولَ اللَّهِ كَيْفَ يَلْعَنُ الرَّجُلُ وَالدَيْهِ ؟" قَالَ: يَسُبُّ أَبَا الرَّجُلِ فَيَسُبُّ أَبَاهُ وَيَسُبُّ أُمَّهُ فَيَسُبُّ أُمَّهُ".

**338** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவன் தன் பெற்றோரைத் திட்டுவது பெரும் பாவமாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! ஒருவன் தன் பெற்றோரைத் திட்டவும் செய்வானா?" என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். "ஆம்! ஒருவன், இன்னொருவனின் தந்தையைத் திட்டுவான். அவன்,

இவனது தந்தையைத் திட்டுவான். இவன் அவனது தாயைத் திட்டுவான். அவன் இவனது தாயைத் திட்டுவான் (இது பெற்றோரைத் திட்டியதாக அமையும்)'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5973. முஸ்லிம்:90)**

மற்றொரு அறிவிப்பில், "ஒரு மனிதன் தன் பெற்றோரைச் சபிப்பது பெரும் பாவங்களில் உள்ளதாகும்'' என்று நபி (ஸல்) கூறியதும், "இறைத்தூதர் அவர்களே! ஒருவன் தன் பெற்றோரை எப்படித் திட்டுவான்?'' என்று கேட்கப்பட்டது. "இவன் இன்னொருவனின் தந்தையைத் திட்டுவான். அவன் இவனது தந்தையைத் திட்டுவான். அவனது தாயை இவன் திட்டுவான். இவனது தாயை அவன் திட்டுவான்'' என்று பதில் கூறியதாக உள்ளது.

٣٣٩ – وَعَنْ أَبِي مُحَمَّد جُبَيْرُ بْنُ مُطْعِمٍ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّهِ ﷺ قَالَ:" لاَ يَدْخُلُ الْجَنَّةَ قَاطِعٌ" قَالَ سُفْيَانُ فِي رِوَايَتِهِ: يَعْنِي قَاطِعَ رَحِمٍ. مُتَّفَقٌ عَلَيْهِ.

**339** அபூமுஹம்மத் என்ற ஜுபைர் இப்னு முத்இம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உறவைத் துண்டிப்பவன், சொர்க்கத்தில் நுழையமாட்டான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5984. முஸ்லிம்:2556)**

٣٤٠ – وَعَنْ أَبِي عِيسَى الْمُغِيرَة بْنِ شُعْبَةَ رَضِيَ اللّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: إِنَّ اللّهَ تَعَالَى حَرَّمَ عَلَيْكُمْ عُقُوقَ الأُمَّهَات وَمَنْعًا وَهَات وَوَأْدَ الْبَنَات وَكَرِهَ لَكُمْ قِيلَ وَقَالَ وَكَثْرَةَ السُّؤَال وَإِضَاعَةَ الْمَال:. مُتَّفَقٌ عَلَيْهِ. قَوْلُهُ" مَنْعًا" مَعْنَاهُ: مَنْعُ مَا وَجَبَ عَلَيْه. وَ" هَات": طَلَبُ مَا لَيْسَ لَهُ. وَ" وَأْدُ الْبَنَات" مَعْنَاهُ: دَفْنُهُنَّ فِي الْحَيَاة. وَ" قِيلَ وَقَالَ" مَعْنَاهُ: الْحَدِيث بِكُلِّ مَا يَسْمَعُهُ فَيَقُولُ: قِيلَ كَذَا وَقَالَ فُلاَنٌ كَذَا مِمَّا لاَ يَعْلَمُ صِحَّتَهُ وَلاَ يَظُنُّهَا. وَكَفَى بِالْمَرْءِ كَذِبًا أَنْ يُحَدِّثَ بِكُلِّ مَا سَمِعَ. وَ" إِضَاعَةُ الْمَال" تَبْذِيرُهُ وَصَرْفُهُ فِي غَيْرِ الْوُجُوه الْمَأْذُون فِيهَا مِنْ مَقَاصِد الأخِرَة وَالدُّنْيَا وَتَرْكُ حِفْظِه مَعَ إِمْكَان الْحِفْظ. وَ" كَثْرَةُ السُّؤَال": اَلأَلْحَاحُ فِيمَا لاَ حَاجَةَ إِلَيْه. وَفِي الْبَابِ أَحَادِيثُ سَبَقَتْ فِي الْبَاب قَبْلَهُ. كَحَدِيثِ" وَأَقْطَعُ مَنْ قَطَعَكَ" وَحَدِيث" مَنْ قَطَعَنِي قَطَعَهُ اللّهُ".

**340** அபூஈஸா என்ற முகீரா இப்னு ஷுஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தாய்மார்களை நோவினை செய்வதையும், தனது கடமைகளைச் செய்யாதிருப்பதையும், தனக்கு உரிமை இல்லாததைத் தேடுவதையும், பெண் குழந்தைகளை உயிரோடு புதைப்பதையும் அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ளான். மேலும், "இவர் இப்படி கூறினார். இவ்வாறு கூறப்பட்டது எனக் கூறுவதையும், அதிகக் கேள்வி கேட்பதையும், பொருளை வீணாக்குவதையும் அல்லாஹ் வெறுக்கிறான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6473. முஸ்லிம்:593)**

## ٤٢ – باب فضل بر أصدقاء الأب والأم والأرقاب والزوجة وسائر من يندب إكرامه

## பாடம் : 42 - தாய், தந்தை, உறவினர்களின் நண்பர்கள், மனைவியின் தோழியர், மற்ற மதிப்புக்குரியவர்களுக்கு நன்மை செய்தல்!

٣٤١ – عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" إِنَّ أَبَرَّ الْبِرِّ أَنْ يَصِلَ الرَّجُلُ وُدَّ أَبِيهِ". رَوَاهُ مُسْلِمٌ

**341** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதன், தன் தந்தையின் நண்பரை ஆதரிப்பது நன்மைகளில் மிகப் பெரிய நன்மையாகும்'' என, நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2552)**

٣٤٢ - وَعَنْ عَبْدِ اللّٰهِ بْنِ دِينَارٍ عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ رَجُلاً مِنَ الأَعْرَابِ لَقِيَهُ بِطَرِيقِ مَكَّةَ فَسَلَّمَ عَلَيْهِ عَبْدُ اللّٰهِ بْنُ عُمَرَ وَحَمَلَهُ عَلَى حِمَارٍ كَانَ يَرْكَبُهُ وَأَعْطَاهُ عِمَامَةً كَانَتْ عَلَى رَأْسِهِ. قَالَ ابْنُ دِينَارٍ: فَقُلْنَا لَهُ: أَصْلَحَكَ اللّٰهُ إِنَّهُمُ الأَعْرَابُ وَهُمْ يَرْضَوْنَ بِالْيَسِيرِ! فَقَالَ عَبْدُ اللّٰهِ بْنُ عُمَرَ: إِنَّ أَبَا هٰذَا كَانَ وُدًّا لِعُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللّٰهُ عَنْهُ وَإِنِّي سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ:" إِنَّ أَبَرَّ الْبِرِّ صِلَةُ الرَّجُلِ أَهْلَ وُدِّ أَبِيهِ". وَفِي رِوَايَةٍ عَنِ ابْنِ دِينَارٍ عَنِ ابْنِ عُمَرَ أَنَّهُ كَانَ إِذَا خَرَجَ إِلَى مَكَّةَ كَانَ لَهُ حِمَارٌ يَتَرَوَّحُ عَلَيْهِ إِذَا مَلَّ رُكُوبَ الرَّاحِلَةِ وَعِمَامَةٌ يَشُدُّ بِهَا رَأْسَهُ فَبَيْنَا هُوَ يَوْمًا عَلَى ذٰلِكَ الْحِمَارِ إِذْ مَرَّ بِهِ أَعْرَابِيٌّ فَقَالَ: أَلَسْتَ فُلاَنَ بْنَ فُلاَنٍ ؟ قَالَ: بَلَى. فَأَعْطَاهُ الْحِمَارَ فَقَالَ: ارْكَبْ هٰذَا وَأَعْطَاهُ الْعِمَامَةَ وَقَالَ اشْدُدْ بِهَا رَأْسَكَ. فَقَالَ لَهُ بَعْضُ أَصْحَابِهِ: غَفَرَ اللّٰهُ لَكَ! فَقَالَ: إِنِّي سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ:" إِنَّ مِنْ أَبَرِّ الْبِرِّ أَنْ يَصِلَ الرَّجُلُ أَهْلَ وُدِّ أَبِيهِ بَعْدَ أَنْ يُوَلِّيَ" ؛ وَإِنَّ أَبَاهُ كَانَ صَدِيقًا لِعُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُ. رَوَى هٰذِهِ الرِّوَايَاتِ كُلَّهَا مُسْلِمٌ.

**342** அப்துல்லாஹ் இப்னு தீனார் கூறுகின்றார்கள்:

(ஒருமுறை) மக்காவிற்குச் செல்லும் வழியில் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்களைக் காட்டரபிகளில் ஒருவர் சந்தித்தார். தான் பயணம் செய்த கழுதையின் மீது அவரை ஏற்றிக் கொண்டார்கள். தன் தலையில் இருந்த தலைப்பாகையை அவரிடம் கொடுத்தார்கள். "அல்லாஹ் உங்களுக்கு நன்மையைத் தருவானாக! நிச்சயமாக இவர்கள், காட்டரபிகள் ஆவர். இவர்கள் சாதாரணப் பொருளைக்கூட திருப்திபட்டுக் கொள்வார்கள்.(வாகனம் போன்ற) பெரிய அன்பளிப்புத் தேவைதானா?)" என்று நாங்கள் கேட்டோம். அப்போது அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள், "இவரின் தந்தை, (என் தந்தை) உமர் (ரழி) அவர்களுக்கு நண்பராக இருந்தார். 'நன்மையானவற்றில், மிகப் பெரிய நன்மையானது, ஒருவன் தன் தந்தையின் நண்பரை இணைத்து வாழ்வது தான்' என்று நபி (ஸல்) கூறக் கேட்டுள்ளேன்" என்று கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் அப்துல்லாஹ் இப்னு உமர் அறிவிப்பதாக (பின்வருமாறு) உள்ளது:

இப்னு உமர் (ரழி) அவர்கள், மக்காவிற்கு பயணம் மேற்கொள்வார்கள். பயணத்திற்காக ஒரு கழுதை வைத்திருந்தார்கள். சடைவுஏற்படும் போது அதில் ஏறிக் கொள்வார்கள். தன் தலைமீது தலைப்பாகையும் அணிந்து கொள்வார்கள். அந்த கழுதையின் மீது பயணம் செய்த ஒரு நாளில், அவரை ஒரு காட்டரபி கடந்து சென்றார். "நீ இன்னாரின் மகன்தானே!" என்று கேட்டார்கள். "ஆம்" என்றார் அந்தக் காட்டரபி. உடனே அவருக்கு கழுதையைக் கொடுத்தார்கள். "இதில் நீ ஏறிக்கொள்" என்று கூறினார்கள். தலைப்பாகையை அவரிடம் கொடுத்து, "இதை உன் தலையில் கட்டிக் கொள்" என்று கூறினார்கள். (அப்போது அருகில் இருந்த) அவர்களது தோழர்கள், "உங்களை அல்லாஹ் மன்னிப்பானாக! இந்தக் காட்டரபிக்கு, நீங்கள் பயணம் செய்ய வைத்திருந்த கழுதையையும், நீங்கள் தலையில் கட்டிக் கொள்ள வைத்திருந்த தலைப்பாகையையும் கொடுத்துவிட்டீர்களே?" என்று கேட்டார்கள். "நன்மையானவற்றில் மிக அதிக நன்மையானது ஒருவன் தன் தந்தை இறந்த பின், அவரின் நண்பரின் குடும்பத்தை இணைத்து வாழ்வதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். (என் தந்தை) உமர் (ரழி) அவர்களுக்கு, இவரின் தந்தை நண்பராக இருந்தார். (எனவே தான் கொடுத்தேன்)" என்று இப்னு உமர் (ரழி) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2552)**

٣٤٣ - وَعَنْ أَبِي أُسَيْدٍ - بِضَمِّ الْهَمْزَةِ وَفَتْحِ السِّينِ - مَالِكِ بْنِ رَبِيعَةَ السَّاعِدِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: بَيْنَا نَحْنُ جُلُوسٌ عِنْدَ رَسُولِ اللّٰهِ ﷺ إِذْ جَاءَهُ رَجُلٌ مِنْ بَنِي سَلَمَةَ فَقَالَ: يَا رَسُولَ اللّٰهِ هَلْ بَقِيَ مِنْ بِرِّ أَبَوَيَّ شَيْءٌ أَبَرُّهُمَا بِهِ بَعْدَ مَوْتِهِمَا ؟ فَقَالَ:" نَعَمْ الصَّلاَةُ عَلَيْهِمَا وَالإِسْتِغْفَارُ لَهُمَا وَإِنْفَاذُ عَهْدِهِمَا مِنْ بَعْدِهِمَا وَصِلَةُ الرَّحِمِ الَّتِي لاَ تُوصَلُ إِلاَّ بِهِمَا وَإِكْرَامُ صَدِيقِهِمَا" رَوَاهُ أَبُو دَاوُدَ.

**343** அபூஉஸைத் என்ற மாலிக் இப்னு ரபீஆ ஸாஇதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள் இருந்த போது, பனூ ஸலமாக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் வந்து, "இறைத்தூதர் அவர்களே! என் பெற்றோர் இறந்த பின், அவ்விருவருக்கும் நான் நன்மை செய்வதற்கு வேறு ஏதேனும் கடமைகள் உண்டா?" எனக் கேட்டார். "ஆம்! அவ்விருவருக்காகவும் நீர் பிரார்த்தனை செய்வது, அவ்விருவருக்காகவும் நீர் மன்னிப்புக் கோருவது, அவ்விருவரும் செய்திருந்த ஒப்பந்தத்தை, அவ்விருவரின் (மரணத்திற்கு) பின்னரும் நிறைவேற்றுவது. அவ்விருவரின் உறவினர்களை நீர் ஆதரிப்பது, மேலும் அவ்விருவரின் நண்பரை நீர் கண்ணியப் படுத்துவதும் ஆகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:5142. இதில் அலி இப்னு உபைத் ஸாஇதீ என்பவர் இடம் பெறுகிறார். இவர் பலவீனர்)**

٣٤٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَتْ: مَا غِرْت عَلَى أَحَد مِنْ نِسَاء النَّبِيِّ ﷺ مَا غِرْت عَلَى خَدِيجَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا وَمَا رَأَيْتهَا قَطُّ وَلَكِنْ كَانَ يُكْثِرُ ذِكْرَهَا وَرُبَّمَا ذَبَحَ الشَّاةَ ثُمَّ يُقَطِّعُهَا أَعْضَاءً ثُمَّ يَبْعَثُهَا فِي صَدَائِق خَدِيجَةَ فَرُبَّمَا قُلْت لَهُ: كَأَنْ لَمْ يَكُنْ فِي الدُّنْيَا امْرَأَةٌ إِلاَّ خَدِيجَةَ! فَيَقُولُ:" إِنَّهَا كَانَتْ وَكَانَتْ وَكَانَ لِي مِنْهَا وَلَدٌ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَة: وَإِنْ كَانَ لَيَذْبَحُ الشَّاةَ فَيُهْدِي فِي خَلاَئِلهَا مِنْهَا مَا يَسَعُهُنَّ: وَفِي رِوَايَة: كَانَ إِذَا ذَبَحَ الشَّاةَ يَقُولُ:" أَرْسِلُوا بِهَا إِلَى أَصْدِقَاء خَدِيجَةَ". وَفِي رِوَايَة قَالَتْ: اسْتَأْذَنَتْ هَالَةُ بِنْتُ خُوَيْلِد أُخْتُ خَدِيجَةَ عَلَى رَسُول اللَّه ﷺ فَعَرَفَ اسْتِئْذَانَ خَدِيجَةَ فَارْتَاحَ لِذَلِكَ فَقَالَ:" اللَّهُمَّ هَالَةُ بِنْتُ خُوَيْلِد". قَوْلُهَا" فَارْتَاحَ" هُوَ بِالْحَاءِ. وَفِي الْجَمْعِ بَيْنَ الصَّحِيحَيْنِ لِلْحُمَيْدِيِّ:" فَارْتَاعَ" بِالْعَيْنِ وَمَعْنَاهُ: اهْتَمَّ بِهِ.

**344** அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

கதீஜா (ரழி) அவர்கள் மீது நான் பொறாமை கொண்டது போல், நபி (ஸல்) அவர்களின் எந்த மனைவி மீதும் நான் பொறாமை கொண்டதில்லை. அவர்களை நான் பார்த்ததே இல்லை. எனினும் அவர்களைப் பற்றித்தான் நபி (ஸல்) அவர்கள் அதிகம் நினைவுகூர்வார்கள். ஆட்டை அறுக்கும் போதெல்லாம் அதைத் துண்டு துண்டாகப் பிரிப்பார்கள். பின்பு அதை கதீஜா (ரழி) அவர்களின் தோழிகளுக்காக அனுப்பி வைப்பார்கள். "கதீஜா (ரழி) அவர்களைத் தவிர, இந்த உலகில் வேறு எவரும் இல்லையா?" என நான் கேட்ட போதெல்லாம், "நிச்சயமாக கதீஜா இப்படி இருந்தார், அப்படி இருந்தார். அவர் மூலம் அல்லாஹ் எனக்கு குழந்தைகளைக் கொடுத்தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3818. முஸ்லிம்:2435)**

மற்றொரு அறிவிப்பில் "ஆட்டை அறுத்தால், கதீஜாவின் தோழியருக்குப் போதுமான அளவுக்கு அனுப்பி வைப்பார்கள்" என்று உள்ளது. **(புகாரி:3816)**

மற்றொரு அறிவிப்பில், "கதீஜாவின் தோழியர்களுக்கு அதை கொடுத்து அனுப்புங்கள்" என்று உள்ளது.

மற்றொரு அறிவிப்பில், "கதீஜாவின் சகோதரி ஹாலா பின்த் குவைலித் வீட்டிற்குள் வர அனுமதி கேட்டார். அதை கதீஜாவின் அனுமதி கேட்கும் குரல் போல நபி (ஸல்) அவர்கள் அறிந்தார்கள். "இறைவா! இது ஹாலாபின்த் குவய்லிதின் குரல் அல்லவா! என்று கூறினார்கள்" என்று உள்ளது.

**(புகாரி:3821. முஸ்லிம்:2437)**

٣٤٥ – وَعَنْ أَنَسِ بْنِ مَالِك رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: خَرَجْت مَعَ جَرِير بْن عَبْد اللَّه الْبَجَلِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي سَفَر فَكَانَ يَخْدُمُنِي فَقُلْت لَهُ: لاَ تَفْعَلْ فَقَالَ: إِنِّي قَدْ رَأَيْت الأَنْصَارَ تَصْنَعُ بِرَسُول اللَّه ﷺ شَيْئًا آلَيْت عَلَى نَفْسِي أَلاَّ أَصْحَبَ أَحَدًا مِنْهُمْ إِلاَّ خَدَمْته مُتَّفَقٌ عَلَيْهِ.

**345** அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் ஜரீர் இப்னு அப்துல்லாஹ் அல்பஜலீ (ரழி) அவர்களுடன் பயணத்தில் இருந்தேன். எனக்கு அவர்கள் பணிவிடை செய்தார்கள். என்னை விட மூத்தவரான அவரிடம், "இவ்வாறு செய்யாதீர்கள்" எனக் கூறினேன். "நிச்சயமாக நான், மதீனாவாசிகளான அன்சாரிகளை நபி (ஸல்) அவர்களுக்குப் பணிவிடை செய்பவர்களாகக் கண்டேன். அவர்களில் எவரையும் நான் சந்தித்தால் அவருக்கு நான் பணிவிடை செய்யாமல் இருப்பதில்லை எனச் சத்தியம் செய்துள்ளேன்" என்று கூறினார்கள்.

**(புகாரி:2888. முஸ்லிம்:2513)**

## ٤٣ - باب إكرام أهل بيت رسول الله صل وبيان فضلهم

## பாடம் : 43 - நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தாரைக் கண்ணியப்படுத்துவது மற்றும் அவர்களின் சிறப்புகள் பற்றி . . .

**قال الله تعالى: إنما يريد الله ليذهب عنكم الرجس أهل البيت ويطهركم تطهيرا. وقال تعالى: ومن يعظم شعائر الله فإنها من تقوى القلوب.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *நபியின் குடும்பததார்களே! உங்களை விட்டும் அசுத்தத்தை நீக்கி, உங்களை முற்றிலும் சுத்தப்படுத்துவதையே அல்லாஹ் விரும்புகிறான். (33:33)*

*அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களை (ஹஜ்ஜின் கிரியைகளை) ஒருவர் கண்ணியப் படுத்தினால் (அது சிறப்பாகும்), நிச்சயமாக அது இதயங்களின் பயபக்தியில் உள்ளதாகும். (22:32)*

٣٤٦ - وعن يزيد بن حيان قال: انطلقت أنا وحصين بن سبرة وعمرو بن مسلم إلى زيد بن أرقم رضي الله عنهم فلما جلسنا إليه قال له حصين: لقد لقيت يا زيد خيرا كثيرا رأيت رسول الله ﷺ وسمعت حديثه وغزوت معه وصليت خلفه: لقد لقيت يا زيد خيرا كثيرا! حدثنا يا زيد ما سمعت من رسول الله ﷺ. قال: يا ابن أخي والله لقد كبرت سني وقدم عهدي ونسيت بعض الذي كنت أعي من رسول الله ﷺ فما حدثتكم فاقبلوا وما لا فلا تكلفونيه. ثم قال: قام رسول الله ﷺ يوما فينا خطيبا بماء يدعى خما بين مكة والمدينة فحمد الله وأثنى عليه ووعظ وذكر ثم قال: " أما بعد ألا أيها الناس فإنما أنا بشر يوشك أن يأتي رسول ربي فأجيب وأنا تارك فيكم ثقلين: أولهما كتاب الله فيه الهدى والنور فخذوا بكتاب الله واستمسكوا به" فحث على كتاب الله ورغب فيه ثم قال: " وأهل بيتي أذكركم الله في أهل بيتي أذكركم الله في أهل بيتي". فقال له حصين: ومن أهل بيته يا زيد ؟ أليس نساؤه من أهل بيته ؟ قال: نساؤه من أهل بيته ولكن أهل بيته من حرم الصدقة بعده. قال: ومن هم ؟ قال: هم آل علي وآل عقيل وآل جعفر وآل عباس قال: كل هؤلاء حرم الصدقة ؟ قال: نعم. رواه مسلم. وفي رواية: " ألا وإني تارك فيكم ثقلين: أحدهما كتاب الله وهو حبل الله من اتبعه كان على الهدى ومن تركه كان على ضلالة".

**346** யஸீத் இப்னு ஹய்யான் கூறுகின்றார்கள்:

நானும், ஹுஸைன் இப்னு ஸப்ரா, அம்ரு இப்னு முஸ்லிம் ஆகிய மூவரும், ஸைத் இப்னு அர்கம் (ரழி) அவர்களிடம் சென்றோம். அவர்களிடம் சென்று நாங்கள் உட்கார்ந்ததும், ஹுஸைன் அவர்கள் ஸைத் அவர்களிடம், "ஸைத் அவர்களே! அதிக நன்மைகளை நீங்கள் பெற்றுள்ளீர்கள். நபி (ஸல்) அவர்களை நீங்கள் பார்த்துள்ளீர்கள். அவர்களிடம் ஹதீஸ் கேட்டுள்ளீர்கள். அவர்களுடன் சேர்ந்து

போர் புரிந்துள்ளீர்கள். அவர்கள் பின் நின்று தொழுதுள்ளீர்கள். இப்படி நிறைய நன்மைகளைப் பெற்றுள்ளீர்கள். நபி (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் கேட்டதை எங்களுக்கும் கூறுங்கள்" என்று கேட்டார். "என் சகோதரர் மகனே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக, என் வயது அதிகமாகிவிட்டது. என் காலமும் கழிந்துவிட்டது. நபி (ஸல்) அவர்களிடமிருந்து நான் மனனம் செய்திருந்தவற்றில் சிலவற்றை மறந்துள்ளேன். உங்களிடம் நான் கூறியதை ஏற்றுக் கொள்ளுங்கள். நான் எதை உங்களுக்குக் கூறவில்லையோ, அதை என்னிடம் கேட்டு எனக்குச் சிரமம் தந்து விடாதீர்கள்" என்று கூறிவிட்டு, (பின்வரும்) செய்தியைக் கூறினார்கள்.

மக்காவிற்கும், மதீனாவிற்கும் இடையே உள்ள "கும்மவு" என்கிற தண்ணீர் துறையில் ஒருநாள் எங்களிடையே நபி (ஸல்) எழுந்து உரை நிகழ்த்தினார்கள். அப்போது, அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். போற்றினார்கள். பல செய்திகளை நினைவூட்டினார்கள். "மனிதர்களே! அறிந்து கொள்ளுங்கள். நானும் ஒரு மனிதனே! என் இறைவனின் தூதர் (வானவர்) (என் உயிரைக் கைப்பற்ற) என்னிடம் வருவதற்கும், நான் பதில் கூறுவதற்கும் (காலம்) நெருங்கி விட்டது. உங்களிடம் இரண்டு முக்கியமானவற்றை விட்டுச் செல்கிறேன். அவ்விரண்டில் முதலாவது அல்லாஹ்வின் வேத மாகும். அதில் நேர்வழியும், பேரொளியும் உண்டு. அல்லாஹ்வின் வேதத்தை நீங்கள் பிடித்துக் கொள்ளுங்கள். அதில் உறுதியாக இருங்கள் என்று கூறி அல்லாஹ்வின் வேதத்தைப் புகழ்ந்து, அதில் ஆர்வப்படுத்தினார்கள். பின்பு, "அடுத்து என் குடும்பத்தாராகும். என் குடும்பத்தார் விஷயமாக அல்லாஹ்வை உங்களிடம் நினைவூட்டுகிறேன்" என்று கூறினார்கள் என, ஸைத் (ரழி) கூறினார்கள்.

அவர்களிடம் ஹுஸைன், "ஸைத் அவர்களே! அவர்களின் குடும்பத்தார்கள் யார்? அவர்களின் குடும்பத்தாரில் அவர்களின் மனைவியர் இல்லையா?" என்று கேட்டார். "அவர்களின் மனைவி யரும், அவர்களின் குடும்பத்தார்கள்தான். எனினும் அவர்களுக்குப் பின் தர்மப் பொருட்கள் (உண்ண) தடை செய்யப்பட்டவர்களும் அவர்களின் குடும்பத்தார் தான்" என்று ஸைத் (ரழி) கூறினார்கள். "அவர்கள் யார்?" என, ஹுஸைன் கேட்டார். "அவர்கள், அலி (ரழி)யின் குடும்பத்தார், மற்றும் அகீல் (ரழி) குடும்பத்தார். ஜஃபர் (ரழி) அவர்களின் குடும்பத்தார். அப்பாஸ் (ரழி) அவர்களின் குடும்பத்தார் ஆகியோராவார்கள்" என, ஸைத் (ரழி) கூறினார்கள். "இவர்கள் அனைவருமே தர்மப் பொருட்கள் வாங்க தடை செய்யப் பட்டவர்களா?" என்று ஹுஸைன் கேட்டார். "ஆம்" என்று ஸைத் (ரழி) கூறினார்கள். **(முஸ்லிம்:2408)**

அதன் மற்றொரு அறிவிப்பில், "அறிந்து கொள்ளுங்கள். நான் உங்களிடையே முக்கியமான இரண்டை விட்டுச் செல்கிறேன். அவ்விரண்டில் ஒன்று, அல்லாஹ்வின் வேதமாகும். அது அல்லாஹ்வின் கயிறாகும். அதை ஒருவர் பற்றிக் கொண்டால், அவர் நேர்வழியில் உள்ளார். ஒருவர் அதை விட்டு விட்டால், அவர் வழிகேட்டில் உள்ளார்" என்று உள்ளது.

٣٤٧ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ أَبِي بَكْرٍ الصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُ مَوْقُوفًا عَلَيْهِ أَنَّهُ قَالَ: ارْقُبُوا مُحَمَّدًا ﷺ فِي أَهْلِ بَيْتِهِ. رَوَاهُ الْبُخَارِيُّ. مَعْنَى "ارْقُبُوهُ": رَاعُوهُ وَاحْتَرِمُوهُ وَأَكْرِمُوهُ وَاللَّهُ أَعْلَمُ.

**347** இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் (ஸல்) அவர்களின் குடும்பத்தினரைக் கண்ணியப்படுத்துவதின் மூலமாக, இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களை கண்ணியப்படுத்துங்கள்!" என அபூபக்ர் சித்தீக் (ரழி) கூறினார்கள். **(புகாரி:3751)**

## ٤٤ - باب تفقير العلماء والكبار وأهل الفضل وتقديمهم على غيرهم ورفع مجالسهم وإظهار مرتبتهم

## பாடம் : 44 - அறிஞர்கள், பெரியவர்கள், மதிப்புமிக்கவர்களை கண்ணியப்படுத்துதல், மற்றவர்களை விட அவர்களை முன்னிலைப்படுத்துதல், அவர்களின் உயர்வை - தகுதியை எடுத்துக் கூறுதல்!

قَالَ اللّٰهُ تَعَالَى: قُلْ هَلْ يَسْتَوِي الَّذِينَ يَعْلَمُونَ وَالَّذِينَ لاَ يَعْلَمُونَ إِنَّمَا يَتَذَكَّرُ أُوْلُوا الأَلْبَابِ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *"அறிந்தவர்களும், அறியாதவர்களும் சமமாவார்களா?" என்று (நபியே) நீர் கேட்பீராக! அறிவுடையோர்தான் நல்லுபதேசம் பெறுபவர்கள். (39:9)*

٣٤٨ - وَعَنْ أَبِي مَسْعُود عُقْبَةَ بْنِ عَمْرٍو الْبَدْرِيِّ الأَنْصَارِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ:" يَؤُمُّ الْقَوْمَ أَقْرَؤُهُمْ لِكِتَابِ اللّٰهِ فَإِنْ كَانُوا فِي الْقِرَاءَةِ سَوَاءً فَأَعْلَمُهُمْ بِالسُّنَّةِ فَإِنْ كَانُوا فِي السُّنَّةِ سَوَاءً فَأَقْدَمُهُمْ هِجْرَةً فَإِنْ كَانُوا فِي الْهِجْرَةِ سَوَاءً فَأَقْدَمُهُمْ سِنًّا. وَلاَ يَؤُمَّنَّ الرَّجُلُ الرَّجُلَ فِي سُلْطَانِهِ وَلاَ يَقْعُدُ فِي بَيْتِهِ عَلَى تَكْرِمَتِهِ إِلاَّ بِإِذْنِهِ". رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَةٍ لَهُ:" فَأَقْدَمُهُمْ سِلْمًا" بَدَلَ" سِنًّا": أَيْ إِسْلاَمًا. وَفِي رِوَايَةٍ:" يَؤُمُّ الْقَوْمَ أَقْرَؤُهُمْ لِكِتَابِ اللّٰهِ وَأَقْدَمُهُمْ قِرَاءَةً ؛ فَإِنْ كَانَتْ قِرَاءَتُهُمْ سَوَاءً فَلْيَؤُمَّهُمْ أَقْدَمُهُمْ هِجْرَةً فَإِنْ كَانُوا فِي الْهِجْرَةِ سَوَاءً فَلْيَؤُمَّهُمْ أَكْبَرُهُمْ سِنًّا". وَالْمُرَادُ" بِسُلْطَانِهِ" مَحَلُّ وِلاَيَتِهِ أَوْ الْمَوْضِعُ الَّذِي يَخْتَصُّ بِهِ." وَتَكْرِمَتُهُ" بِفَتْحِ التَّاءِ وَكَسْرِ الرَّاءِ وَهِيَ مَا يَنْفَرِدُ بِهِ مِنْ فِرَاشٍ وَسَرِيرٍ وَنَحْوِهِمَا.

**348** அபூமஸ்ஊத் உக்பா இப்னு அம்ரு (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

"அவர்களில் அல்லாஹ்வின் வேதத்தை நன்கு ஓதத் தெரிந்தவர், மக்களுக்கு 'இமாமத்' செய்வார். ஓதுவதில் சமமானவர்களாக அவர்கள் இருந்தால், அவர்களில் நபி வழியை நன்கறிந்தவர் (இமாமத் செய்வார்). நபி வழி விஷயத்திலும் அவர்கள் சமமாக இருந்தால், ஹிஜ்ரத் செய்ததில் அவர்களில் முதலாமவர் (இமாமத் செய்வார்). ஹிஜ்ரத் செய்ததில் சமமாக அவர்கள் இருந்தால், அவர்களில் வயதில் மூத்தவர் (இமாமத் செய்வார்). ஒரு மனிதர், இன்னொரு மனிதரின் அதிகாரத்தில் தலையிட்டு இமாமத் செய்ய வேண்டாம். ஒருவரின் வீட்டில், அவரது இருப்பிடத்தில், அவரின் அனுமதியின்றி உட்கார வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்.

**(முஸ்லிம்:673. அவரது மற்றொரு அறிவிப்பில் "முஸ்லிமான அவர்களில் முதலாமவர் (இமாமத் செய்வார்)" என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது)**

"அல்லாஹ்வின் வேதத்தை நன்கு ஓதத் தெரிந்தவர், அவர்களிலும் ஓதுவதில் முதன்மையானவர் இமாமத் செய்வார். ஓதுவதில் சமமாக அவர்கள் இருந்தால், 'ஹிஜ்ரத்' செய்ததில் அவர்களில் முதன்மையானவர் அவர்களுக்கு இமாமத் செய்வார். ஹிஜ்ரத் செய்ததிலும் சமமாக அவர்கள் இருந்தால் அவர்களில் வயதில் மூத்தவர் அவர்களுக்கு இமாமத் செய்வார்"

٣٤٩ - وَعَنْهُ ) أَبِي مَسْعُود عُقْبَةَ بْنِ عَمْرٍو الْبَدْرِيِّ الأَنْصَارِيِّ ( قَالَ: كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يَمْسَحُ مَنَاكِبَنَا فِي الصَّلاَةِ وَيَقُولُ:" اسْتَوُوا وَلاَ تَخْتَلِفُوا فَتَخْتَلِفَ قُلُوبُكُمْ لِيَلِنِي مِنْكُمْ أُولُو الأَحْلاَمِ وَالنُّهَى ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ". رَوَاهُ مُسْلِمٌ. وَقَوْلُهُ ﷺ:" لِيَلِنِي": هُوَ بِتَخْفِيفِ النُّونِ وَلَيْسَ قَبْلَهَا يَاءٌ وَرُوِيَ بِتَشْدِيدِ النُّونِ مَعَ يَاءٍ قَبْلَهَا." وَالنُّهَى" الْعُقُولُ:" وَأُولُو الأَحْلاَمِ": هُمْ الْبَالِغُونَ وَقِيلَ: أَهْلُ الْحِلْمِ وَالْفَضْلِ.

**349** அபூமஸ்ஊத் என்ற உக்பா இப்னு அம்ரு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொழுகையின் போது எங்களின் தோள் புஜங்களைத் தடவிய நபி (ஸல்) அவர்கள், ''(வரிசையில்) நீங்கள் நேராக நில்லுங்கள். நீங்கள் மாறுபட்டு நிற்காதீர்கள். (அவ்வாறு நின்றால்) உங்களின் இதயங்கள் மாறுபட்டு விடும். உங்களில் வயதில் மூத்தோர், அறிவுடையோர் எனக்கு அடுத்து நிற்கட்டும். பின்பு அவர்களை அடுத்த (வயதுடைய)வர்கள் நிற்கட்டும்'' என்று கூறினார்கள்.

**(முஸ்லிம்:432)**

٣٥٠ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " لِيَلِنِي مِنْكُمْ أُولُو الأَحْلَامِ وَالنُّهَى ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ" - ثَلاثًا -" وَإِيَّاكُمْ وَهَيْشَاتِ الأَسْوَاقِ" رَوَاهُ مُسْلِمٌ.

**350** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''(தொழுகையின் வரிசையில்) வயதுக்கு வந்தவர்களும், அறிவுடையோர்களும் பின்பு, அவர்களை அடுத்த (வயதுடைய)வர்களும் என்னை அடுத்து நிற்கட்டும்'' என்று மூன்று முறை கூறிவிட்டு, ''கடை வீதிகளில் கூச்சல் (போன்று பள்ளியில் கூச்சல்) போடுவதை உங்களுக்கு எச்சரிக்கிறேன்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:432/123)**

٣٥١ - وَعَنْ أَبِي يَحْيَى - وَقِيلَ أَبِي مُحَمَّدٍ سَهْلِ بْنِ أَبِي حَثْمَةَ - بِفَتْحِ الْحَاءِ الْمُهْمَلَةِ وَإِسْكَانِ الثَّاءِ الْمُثَلَّثَةِ - الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: انْطَلَقَ عَبْدُ اللَّهِ بْنُ سَهْلٍ وَمُحَيِّصَةُ بْنُ مَسْعُودٍ إِلَى خَيْبَرَ - وَهِيَ يَوْمَئِذٍ صُلْحٌ - فَتَفَرَّقَا فَأَتَى مُحَيِّصَةُ إِلَى عَبْدِ اللَّهِ بْنِ سَهْلٍ وَهُوَ يَتَشَحَّطُ فِي دَمِهِ قَتِيلاً فَدَفَنَهُ ثُمَّ قَدِمَ الْمَدِينَةَ فَانْطَلَقَ عَبْدُ الرَّحْمَنِ بْنُ سَهْلٍ وَمُحَيِّصَةُ وَحُوَيِّصَةُ ابْنَا مَسْعُودٍ إِلَى النَّبِيِّ ﷺ فَذَهَبَ عَبْدُ الرَّحْمَنِ يَتَكَلَّمُ فَقَالَ:" كَبِّرْ كَبِّرْ" وَهُوَ أَحْدَثُ الْقَوْمِ فَسَكَتَ فَتَكَلَّمَا فَقَالَ:" أَتَحْلِفُونَ وَتَسْتَحِقُّونَ قَاتِلَكُمْ ؟" وَذَكَرَ تَمَامَ الْحَدِيثِ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَقَوْلُهُ ﷺ:" كَبِّرْ كَبِّرْ" مَعْنَاهُ: يَتَكَلَّمُ الأَكْبَرُ.

**351** அபூயஹ்யா (அல்லது) அபூமுஹம்மத் என்ற ஸஹ்ல் இப்னு அபூஹஸ்மா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல் அவர்களும், முஹய்யிஸா இப்னு மஸ்ஊத் அவர்களும் 'கைபர்' பகுதிக்கு வந்தார்கள். அன்றைய நாளில் (யூத - முஸ்லிம்களிடையே) ஒப்பந்தம் இருந்தது. இருவரும் அலுவல் காரணமாகப் பிரிந்து விட்டார்கள். பிறகு அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல் அவர்கள் வெட்டப்பட்டு, ரத்த வெள்ளத்தில்மிதந்தவராக இருக்கும் நிலையில் முஹய்யிஸா அவர்கள் அவரிடம் திரும்பி வந்தார். (அதே நிலையில் ஸஹ்ல் இறந்தும் விட்டார்.) அவரை முஹய்யிஸா அடக்கம் செய்தார். பின்பு மதீனாவிற்கு வந்தார். (கொல்லப்பட்டவரின் சகோதரரான) அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல், மற்றும் இப்னு மஸ்ஊத் அவர்களின் இரு மகன்களான முஹய்யிஸா (இவர் கைபர் சென்றவர்) ஹுவய்யிஸா என மூவரும் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்துர் ரஹ்மான் பேச ஆரம்பித்தார். ''பொறு! உங்களில் வயதில் பெரியவர் பேசட்டும்!'' என்று நபி (ஸல்) கூறினார்கள். அவர்களில் இவர் வயதில் இளையவராக இருந்தார். அவர் அமைதியானதும், இருவரும் பேச ஆரம்பித்தார்கள். ''நீங்கள் கொலை செய்தவனிடம் சத்தியம் செய்து, நஷ்டஈடு பெற்றுக் கொள்கிறீர்களா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். (நீண்ட ஹதீஸின் முழுமையை அறிவிப்பாளர் தொடர்கிறார்). **(புகாரி:6898, முஸ்லிம்:1669)**

٣٥٢ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَجْمَعُ بَيْنَ الرَّجُلَيْنِ مِنْ قَتْلَى أُحُدٍ - يَعْنِي فِي الْقَبْرِ - ثُمَّ يَقُولُ:" أَيُّهُمَا أَكْثَرُ أَخْذًا لِلْقُرْآنِ ؟" فَإِذَا أُشِيرَ لَهُ إِلَى أَحَدِهِمَا قَدَّمَهُ فِي اللَّحْدِ. رَوَاهُ الْبُخَارِيُّ.

**352** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உஹுத் போரில் கொல்லப்பட்ட இருவரை (ஒரே கப்ரில்) நபி (ஸல்) அவர்கள் ஒன்று சேர்த்து (அடக்கம்) செய்தார்கள். "இவ்விருவரில் குர்ஆனை அதிகம் தெரிந்தவர் யார்?" என்று கேட்டார்கள். அவ்விருவரில் ஒருவரைச் சுட்டிக்காட்டியதும், குழியில் அவரை முற்படுத்தி வைத்தார்கள்.

**(புகாரி:1343)**

٣٥٣ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ: " أَرَانِي فِي الْمَنَامِ أَتَسَوَّكُ بِسِوَاكٍ فَجَاءَنِي رَجُلَانِ أَحَدُهُمَا أَكْبَرُ مِنْ الأَخَرِ فَنَاوَلْت السِّوَاكَ الأَصْغَرَ فَقِيلَ لِي: كَبِّرْ فَدَفَعْته إِلَى الأَكْبَرِ مِنْهُمَا". رَوَاهُ مُسْلِمٌ مُسْنَدًا وَرَوَاهُ الْبُخَارِيُّ تَعْلِيقًا.

**353** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான் பல்குச்சியால் பல்துலக்குவதாக என்னைக் கனவில் கண்டேன். என்னிடம் இருவர் வந்தனர். அவர்களில் ஒருவர், மற்றவரை விட வயதில் மூத்தவர். நான் பல்குச்சியைச் சிறுவரிடம் கொடுத்தேன். 'பெரியவருக்குக் கொடு' என என்னிடம் கூறப்பட்டது. அவ்விருவரில் பெரியவரிடம் அதை நான் கொடுத்தேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:246. முஸ்லிம்:2271)**

٣٥٤ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " إِنَّ مِنْ إِجْلَالِ اللَّهِ تَعَالَى إِكْرَامَ ذِي الشَّيْبَةِ الْمُسْلِمِ وَحَامِلِ الْقُرْآنِ غَيْرِ الْغَالِي فِيهِ وَالْجَافِي عَنْهُ وَإِكْرَامَ ذِي السُّلْطَانِ الْمُقْسِطِ" حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ أَبُو دَاوُدَ.

**354** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முஸ்லிமான நரையுடையவர், குர்ஆனில் வரம்பு மீறாமலும் அதைப் புறக்கணிக்காமலும் (மனனம் செய்து) குர்ஆனைச் சுமந்தவர் ஆகியோரை கண்ணியப்படுத்துதல் மற்றும் நீதமான அரசனை கண்ணியப்படுத்துதல் ஆகியவை, அல்லாஹ்வின் கண்ணியங்களில் உள்ளதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:4843)**

٣٥٥ - وَعَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ وَعَنْ جَدِّهِ ( رَضِيَ اللَّهُ عَنْهُمْ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " لَيْسَ مِنَّا مَنْ لَمْ يَرْحَمْ صَغِيرَنَا وَيَعْرِفْ شَرَفَ كَبِيرِنَا". حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ التِّرْمِذِيُّ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ. وَفِي رِوَايَةِ أَبِي دَاوُدَ" حَقَّ كَبِيرِنَا".

**355** அம்ரு இப்னு ஷுஐபு (ரழி) அவர்கள், தன் பாட்டனார் கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

"சிறுவருக்கு இரக்கம் காட்டாதவரும், பெரியவரின் சிறப்பை அறியாதவரும் நம்மைச் சேர்ந்தவர் அல்லர்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4943. திர்மிதீ:1920. இது "ஹஸன் ஸஹீஹ்" என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். அபூதாவூதின் மற்றொரு அறிவிப்பில், "நம் பெரியவரின் உரிமையை..." என்று உள்ளது)**

٣٥٦ - وَعَنْ مَيْمُون ابْنِ أَبِي شَبِيب رَحِمَهُ اللَّهُ أَنَّ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا مَرَّ بِهَا سَائِلٌ فَأَعْطَتْهُ كِسْرَةً وَمَرَّ بِهَا رَجُلٌ عَلَيْهِ ثِيَابٌ وَهَيْئَةٌ فَأَقْعَدَتْهُ فَأَكَلَ فَقِيلَ لَهَا فِي ذَلِكَ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " أَنْزِلُوا النَّاسَ مَنَازِلَهُمْ". رَوَاهُ أَبُو دَاوُدَ. لَكِنْ قَالَ: مَيْمُونٌ لَمْ يُدْرِكْ عَائِشَةَ وَقَدْ ذَكَرَهُ مُسْلِمٌ فِي أَوَّلِ صَحِيحِه تَعْلِيقًا فَقَالَ: وَذُكِرَ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: أَمَرَنَا رَسُولُ اللَّهِ ﷺ أَنْ نُنْزِلَ النَّاسَ مَنَازِلَهُمْ. وَذَكَرَهُ الْحَاكِمُ أَبُو عَبْدِ اللَّهِ فِي كِتَابِهِ" مَعْرِفَةِ عُلُومِ الْحَدِيثِ" وَقَالَ: هُوَ حَدِيثٌ صَحِيحٌ.

**356** மைமூன் இப்னு அபூ ஷபீப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) ஆயிஷா (ரழி) அவர்களிடம் யாசகம் கேட்பவர் ஒருவர் வந்தார். அவருக்கு அவர்கள் ஒரு ரொட்டித் துண்டைத் தந்தார்கள். பின்னர் அவர்களிடம் நல்ல தரமான ஆடை அணிந்த ஒருவர் வந்தார். அவரை அவர்கள் உட்கார வைத்தார்கள். அவரும் சாப்பிட்டார். இது விஷயமாக அவர்களிடம் கேட்கப்பட்டது. “மனிதர்களை அவர்களுக்குரிய தகுதிகளுக்கு ஏற்ப கவனியுங்கள்” என்று நபி(ஸல்) கூறியதாக ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:4842. இதன் அறிவிப்பாளர் மைமூன் என்பவர் ஆயிஷா (ரழி) அவர்களை சந்தித்ததே இல்லை என்று அபூதாவூத் கூறுகிறார்கள். மேலும் இதில் ஹபீப் இப்னு அபூ ஸாபித் என்ற பலவீனமானவர் இடம் பெறுகிறார்)**

இமாம் முஸ்லிம், தன் முன்னுரையில், “தஃலீகாக” இதைக் கூறுகிறார்கள். ஆயிஷா (ரழி) அவர்களிடம் இது பற்றிக் கேட்கப்பட்டதற்கு, “மக்களை அவரவர் தகுதிக்கு ஏற்ப நடத்திட நபி (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்” என்று ஆயிஷா (ரழி) கூறினார்கள். இதையே இமாம் ஹாகிம் அவர்கள், “மஃரிஃபத் உலூமில் ஹதீஸ்” என்ற நூலில் அறிவிப்பாளர் வரிசை ஏதுமின்றி அறிவிக்கிறார்கள். இது ஸஹீஹான ஹதீஸ் என்றும் கூறுகிறார்கள்.

٣٥٧ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ: قَدِمَ عُيَيْنَةُ بْنُ حُصَيْنٍ فَنَزَلَ عَلَى ابْنِ أَخِيهِ الْحُرِّ بْنِ قَيْسٍ وَكَانَ مِنْ النَّفَرِ الَّذِينَ يُدْنِيهِمْ عُمَرُ رَضِيَ اللّٰهُ عَنْهُ وَكَانَ الْقُرَّاءُ أَصْحَابَ مَجْلِسِ عُمَرَ وَمُشَاوَرَتِهِ – كُهُولاً كَانُوا أَوْ شُبَّانًا – فَقَالَ عُيَيْنَةُ لِإبْنِ أَخِيهِ: يَا ابْنَ أَخِي لَكَ وَجْهٌ عِنْدَ هَذَا الأمِيرِ فَاسْتَأْذِنْ لِي عَلَيْهِ فَاسْتَأْذَنَ لَهُ فَأَذِنَ لَهُ عُمَرُ رَضِيَ اللّٰهُ عَنْهُ فَلَمَّا دَخَلَ: قَالَ هِيْ يَا ابْنَ الْخَطَّابِ فَوَاللّٰهِ مَا تُعْطِينَا الْجَزْلَ وَلَا تَحْكُمُ فِينَا بِالْعَدْلِ. فَغَضِبَ عُمَرُ رَضِيَ اللّٰهُ عَنْهُ حَتَّى هَمَّ أَنْ يُوقِعَ بِهِ فَقَالَ لَهُ الْحُرُّ: يَا أَمِيرَ الْمُؤْمِنِينَ إِنَّ اللّٰهَ تَعَالَى قَالَ لِنَبِيِّهِ ﷺ: خُذِ الْعَفْوَ وَأْمُرْ بِالْعُرْفِ وَأَعْرِضْ عَنِ الْجَاهِلِينَ. وَإِنَّ هَذَا مِنْ الْجَاهِلِينَ. وَاللّٰهِ مَا جَاوَزَهَا عُمَرُ حِينَ تَلاَهَا عَلَيْهِ وَكَانَ وَقَّافًا عِنْدَ كِتَابِ اللّٰهِ تَعَالَى. رَوَاهُ الْبُخَارِيُّ.

**357** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உயய்னா இப்னு ஹிஸ்ன் என்பவர் மதீனா வந்து தன் சகோதரரின் மகன் ஹுர்ரு இப்னு கய்ஸ் என்பவரிடம் தங்கினார். (ஹுர்ரு ஆகிய) இவர் உமர் (ரழி) அவர்கள் ஆலோசனை பெறும் நபர்களில் ஒருவர். உமர் (ரழி) அவர்களின் அவையிலும், அவர்களது ஆலோசனைக் குழுவிலும் உள்ளவர்கள் இளைஞர்களாக இருந்தாலும், முதியவர்களாக இருந்தாலும் குர்ஆனை அறிந்தவர்களே இருந்தார்கள்.

உயய்னா தன் சகோதரர் மகனிடம், “சகோதரரின் மகனே! இந்த தலைவர் (உமர் (ரழி)) இடம் உனக்கு அறிமுகம் உள்ளது. (அவரைச் சந்திக்க) அவரிடம் அனுமதி வாங்கித்தா” என்று கேட்டார். உடனே இவர் உமர் (ரழி)யிடம் அனுமதிக் கேட்டார். உமர் (ரழி) அவர்களும் அனுமதி தந்தார்கள். உயய்னா நுழைந்ததுமே ‘ஹீ’ (இது ஒரு எச்சரிக்கைச் சொல்) “கத்தாபின் மகனே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக எங்களுக்கு நீ அதிகமாக (எதுவும்) தரவில்லை. எங்களிடம் நீதமாக தீர்ப்பளிக்கவும் இல்லை” என்று கூறினார். அவரை அடித்திட எண்ணும் அளவுக்கு உமர் (ரழி) அவர்கள் கடும் கோபம் அடைந்தார்கள். அப்போது ஹுர்ரு அவர்கள், “முஃமின்களின் தலைவரே! நிச்சயமாக அல்லாஹ் தன் நபிக்கு (பின்வருமாறு) கூறியுள்ளான்.

*(நபியே!) நீ மன்னிப்பதை கடைபிடிப்பீராக! நல்லதை ஏவுவீராக! அறிவிலிகளைப் புறக்கணிப்பீராக! (7:199)*

இந்த உயய்னாவும்அறியாதவர்களில் ஒருவராவர்'' என்று கூறினார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்த வசனத்தை ஓதியதும், உமர் (ரழி) அவர்கள் அதை மீறவில்லை. உமர் (ரழி) அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தின் முன் கட்டுப்பட்டவராக இருந்தார்கள். **(புகாரி:4642)**

٣٥٨ – وَعَنْ أَبِي سَعِيد سَمُرَةَ بْنِ جُنْدُب رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: لَقَدْ كُنْت عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ غُلَامًا فَكُنْت أَحْفَظُ عَنْهُ فَمَا يَمْنَعُنِي مِنَ الْقَوْلِ إِلاَّ أَنَّ هَاهُنَا رِجَالاً هُمْ أَسَنُّ مِنِّي. مُتَّفَقٌ عَلَيْه.

**358** அபூஸயீத் என்ற ஸமுரா இப்னு ஜுன்துப் (ரழி) அறிவிக்கின்றார்கள்

நபி (ஸல்) அவர்களின் காலத்தில், நான் சிறுவனாக இருந்தேன். எனவே, அவர்களைப் பற்றிய செய்திகளை மனனம் செய்பவனாகவும் இருந்தேன். என்றாலும் என்னைவிட வயதில் மூத்தவர்கள் இருந்த காரணத்தினாலேயே தவிர, நபிமொழிகளைச் சொல்வதற்கு எனக்கு அவசியம் ஏற்படவில்லை. **(புகாரி:1331. முஸ்லிம்:964)**

٣٥٩ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَا أَكْرَمَ شَابٌّ شَيْخًا لِسِنِّه إِلاَّ قَيَّضَ اللَّهُ لَهُ مَنْ يُكْرِمُهُ عِنْدَ سِنِّه" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ غَرِيبٌ.

**359** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''(முதிய) வயது காரணமாக ஒரு முதியவரை, ஒரு வாலிபர் கண்ணியப்படுத்தினால், அவருக்கு (முதிய) வயது ஏற்படும் போது, அவரைக் கண்ணியப்படுத்தும் நபரை அல்லாஹ் ஏற்படுத்தாமல் இருப்பதில்லை'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2022. இது ''கரீப்'' என இமாம் திர்மிதீ கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையில் இடம் பெறும் யஸீத் இப்னு பயன் அல்உகைல் என்பவரும், அபுர்ரிஹால் அல்–அன்சாரி என்பவரும் பலவீனர்களாவர்)**

## ٤٥ – باب زيارة أهل الخير ومجالستهم وصحبتهم ومحبتهم وطلب زيارتهم والدعاء منهم وزيارة المواضع الفاضلة

## பாடம் : 45 - நல்லோர்களைச் சந்தித்தல், அவர்களுடன் இருத்தல், அவர்களுடன் பழகுதல், அவர்களைப் பிரியப்படுதல், அவர்களை சந்திக்க விரும்புதல், அவர்களிடம் பிரார்த்தனைச் செய்யக் கோருதல், சிறப்பு மிகும் இடங்களுக்குப் பயணம் மேற்கொள்ளுதல்!

**قَالَ اللَّهُ تَعَالَى: وَإِذْ قَالَ مُوسَى لِفَتَاهُ لاَ أَبْرَحُ حَتَّى أَبْلُغَ مَجْمَعَ الْبَحْرَيْنِ أَوْ أَمْضِيَ حُقُبًا. إِلَى قَوْله تَعَالَى: قَالَ لَهُ مُوسَى هَلْ أَتَّبِعُكَ عَلَى أَنْ تُعَلِّمَنِ مِمَّا عُلِّمْتَ رُشْدًا. وَقَالَ تَعَالَى: وَاصْبِرْ نَفْسَكَ مَعَ الَّذِينَ يَدْعُونَ رَبَّهُمْ بِالْغَدَاةِ وَالْعَشِيِّ يُرِيدُونَ وَجْهَهُ.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *''மூஸா நபி அவர்கள் தன் பணியாளரிடம், ''இருகடல்களும் சந்திக்கும் இடத்தை நான் அடையும் வரையிலும் தொடர்ந்து நடப்பேன். அல்லது வருடக் கணக்கில் நான் போய்க்கொண்டிருப்பேன்''*

*அவ்விரு கடல்களும் சந்திக்கும் இடத்தை, அவ்விருவரும் அடைந்த போது, இருவருக்குரிய மீனை இருவரும் மறந்து விட்டனர். அது கடலில் தன் வழியில் நீந்திச் சென்று விட்டது. அவ்விருவரும்*

*அந்த இடத்தைக் கடந்ததும், தன் பணியாளரிடம், "காலை உணவை நம்மிடம் கொண்டு வா. இந்தப் பயணத்தில் களைப்பை உணர்கிறோம்" என்றார்.*

*"அந்தக் கற்பாறையில் நாம் சந்தித்தபோது சிந்தித்தீர்களா? மீனை நான் மறந்து விட்டேன். ஷைத்தான் என்னைக் கவனக்குறைவில் ஆழ்த்தி விட்டான். மேலும், தன் வழியைக் கடலில் ஆச்சரியமாக அமைத்துக் கொண்டு விட்டது" என்றார்.*

*"அதற்கு மூஸா, அதுதான் நாம் தேடிவந்த இடம் என்று கூறி அவ்விருவரும் தங்களின் காலடிகளைப் பின்பற்றியே திரும்பிச் சென்றார்கள்.*

*நம் அடியார்களில் ஓர் அடியாரைக் கண்டார்கள். அவருக்கு நம்மிடமிருந்து அருளை அருளியிருந்தோம். மேலும் நம்மிடமிருந்து கல்வியை அவருக்குக் கற்றுத் தந்திருந்தோம்.*

*"உங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட நன்மையானதை எனக்கு நீங்கள் கற்றுக் கொடுக்க (நான் கற்றுக் கொள்ள) உங்களை நான் பின் தொடரட்டுமா?" என்று மூஸா அவரிடம் கேட்டார்.*

*(18:60-66)*

*(நபியே!) தங்கள் இறைவனிடம் காலையிலும், மாலையிலும் அவனது பொருத்தத்தை நாடியவர்களாக பிரார்த்தனை செய்து கொண்டிருப்பவர்களிடம் நீரும் பொறுமையாக இருப்பீராக!*

*(18:28)*

٣٦٠ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ أَبُو بَكْرٍ لِعُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا بَعْدَ وَفَاةِ رَسُولِ اللَّهِ: انْطَلِقْ بِنَا إِلَى أُمِّ أَيْمَنَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا نَزُورُهَا كَمَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَزُورُهَا.. فَلَمَّا انْتَهَيْنَا إِلَيْهَا بَكَتْ ; فَقَالاَ لَهَا: مَا يُبْكِيكِ ؟ أَمَا تَعْلَمِينَ أَنَّ مَا عِنْدَ اللَّهِ خَيْرٌ لِرَسُولِ اللَّهِ ﷺ فَقَالَتْ: إِنِّي لاَ أَبْكِي إِنِّي لأَعْلَمُ أَنَّ مَا عِنْدَ اللَّهِ تَعَالَى خَيْرٌ لِرَسُولِ اللَّهِ ﷺ وَلَكِنْ أَبْكِي أَنَّ الْوَحْيَ قَدِ انْقَطَعَ مِنَ السَّمَاءِ. فَهَيَّجَتْهُمَا عَلَى الْبُكَاءِ فَجَعَلاَ يَبْكِيَانِ مَعَهَا رَوَاهُ مُسْلِمٌ.

**360** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இறந்த பின், உமர் (ரழி) அவர்களிடம் அபூபக்ர் (ரழி) அவர்கள், "உம்மு அய்மன் (ரழி) அவர்களை, நபி (ஸல்) அவர்கள் சந்தித்தது போல் அவர்களை நாமும் சந்திக்கச் செல்வோம்" என்று கூறினார்கள். அவ்விருவரும் உம்மு அய்மன் (ரழி) அவர்களிடம் வந்தபோது, உம்மு அய்மன் (ரழி) அழுதார்கள். "அல்லாஹ்விடம் உள்ளவைகள் (சொர்க்கம்), நபி (ஸல்) அவர்களுக்குச் சிறந்தவைகளாகும் என்பதை நீங்கள் அறிவீர்கள் தானே! பிறகு உங்களை அழத் தூண்டியது எது?" என்று இருவரும் கேட்டனர். அதற்கு உம்மு அய்மன் (ரழி) அவர்கள், "நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்விடம் சிறந்தவை உண்டு என்பதை நான் அறியாமல் இருந்து, நான் அழவில்லை. எனினும், இறைச்செய்தி (வஹீ) வானத்திலிருந்து வருவது நின்றுவிட்டதே என்றுதான் அழுகிறேன்" என்று கூறினார்கள். அழும் நிலைக்கு அவ்விருவரும் ஆளாகி, அவர்களுடன் அந்த இருவரும் அழத் துவங்கினார்கள். **(முஸ்லிம்:2454)**

٣٦١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ:" أَنَّ رَجُلاً زَارَ أَخًا لَهُ فِي قَرْيَةٍ أُخْرَى فَأَرْصَدَ اللَّهُ تَعَالَى عَلَى مَدْرَجَتِهِ مَلَكًا فَلَمَّا أَتَى عَلَيْهِ قَالَ: أَيْنَ تُرِيدُ ؟ قَالَ: أُرِيدُ أَخًا لِي فِي هَذِهِ الْقَرْيَةِ. قَالَ: هَلْ لَكَ عَلَيْهِ مِنْ نِعْمَةٍ تَرُبُّهَا عَلَيْهِ ؟ قَالَ: لاَ غَيْرَ أَنِّي أَحْبَبْتُهُ فِي اللَّهِ تَعَالَى. قَالَ: فَإِنِّي رَسُولُ اللَّهِ إِلَيْكَ بِأَنَّ اللَّهَ قَدْ أَحَبَّكَ كَمَا أَحْبَبْتَهُ فِيهِ". رَوَاهُ مُسْلِمٌ. يُقَالُ" أَرْصَدَهُ" لِكَذَا إِذَا وَكَّلَهُ بِحِفْظِهِ. وَ" الْمَدْرَجَةُ" بِفَتْحِ الْمِيمِ وَالرَّاءِ: الطَّرِيقُ. وَمَعْنَى" تَرُبُّهَا": تَقُومُ بِهَا وَتَسْعَى فِي صَلاَحِهَا.

**361** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர், வேறு ஊரில் உள்ள தன் சகோதரரைச் சந்திக்கச் சென்றார். அவர் செல்லும் பாதையில் வானவர் ஒருவரை அல்லாஹ் நிறுத்தினான். அவரிடம் அவர் வந்த போது. "எங்கே செல்கிறீர்?" என வானவர் கேட்டார். "இந்த ஊரில் உள்ள என் சகோதரரைச் சந்திக்கச் செல்கிறேன்" என்றார். வானவர் அவரிடம், "நீர் பயன்படுத்தத்தக்க அருட்கொடை எதுவும் அவரிடம் உமக்காக உள்ளதா?" என்று கேட்டார். "இல்லை. அல்லாஹ்வின் விஷயத்தில் அவரை நான் நேசிக்கிறேன்" என்றார். அப்போது வானவர், "நான் உம்மிடம் வந்த அல்லாஹ்வின்தூதராவேன். நிச்சயமாக! அல்லாஹ், அவர் விஷயமாக சகோதரரை நீர் நேசிப்பது போல் உம்மை நேசிக்கிறான்" என்றார் என நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2567)**

٣٦٢ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " مَنْ عَادَ مَرِيضًا أَوْ زَارَ أَخًا لَهُ فِي اللَّهِ نَادَاهُ مُنَادٍ: بِأَنْ طِبْتَ وَطَابَ مَمْشَاكَ وَتَبَوَّأْتَ مِنَ الْجَنَّةِ مَنْزِلاً". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ وَفِي بَعْضِ النُّسَخِ" غَرِيبٌ".

**362** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் நோயாளியை நலம் விசாரித்தால் அல்லது அல்லாஹ்வின் விஷயத்தில் தன் சகோதரரைச் சந்தித்தால் அவரை வானவர் அழைத்து, 'நீர் மணம் பெற்றுவிட்டீர். உம் நடையும் மணம் பெற்றது. நீர் சொர்க்கத்தில் ஒரு இடத்தை தயார் செய்து கொண்டீர்' எனக் கூறுவார்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2008. இதை ஹஸன் என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். சில பதிப்புகளில் 'கரீப்' என்று உள்ளது.**

٣٦٣ - وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" إِنَّمَا مَثَلُ الْجَلِيسِ الصَّالِحِ وَجَلِيسِ السُّوءِ كَحَامِلِ الْمِسْكِ وَنَافِخِ الْكِيرِ. فَحَامِلُ الْمِسْكِ إِمَّا أَنْ يُحْذِيَكَ وَإِمَّا أَنْ تَبْتَاعَ مِنْهُ وَإِمَّا أَنْ تَجِدَ مِنْهُ رِيحًا طَيِّبَةً. وَنَافِخُ الْكِيرِ إِمَّا أَنْ يُحْرِقَ ثِيَابَكَ وَإِمَّا أَنْ تَجِدَ مِنْهُ رِيحًا مُنْتِنَةً". مُتَّفَقٌ عَلَيْهِ." يُحْذِيكَ": يُعْطِيكَ.

**363** அபூமூஸா அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நல்லவனுடன் உட்கார்ந்திருப்பவன், கெட்டவனுடன் உட்கார்ந்திருப்பவன் இந்த இருவருக்கும் உதாரணம் என்பது, கஸ்தூரி வைத்திருப்பவன் மற்றும் இரும்பு உலையில் ஊதுபவன் போன்றதாகும். கஸ்தூரியை வைத்திருப்பவன், உமக்கு அதைத் தருவான். அல்லது அவனிடம் நீ நல்ல மணத்தைப் பெற்றுக் கொள்ளலாம். இரும்பு உலையை ஊதுபவன், உன் ஆடையைக் கரித்து விடுவான் அல்லது அவனிடம் கெட்ட வாடையை நீ அடையலாம்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:5534. முஸ்லிம்:2628)**

٣٦٤ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" تُنْكَحُ الْمَرْأَةُ لأَرْبَعٍ: لِمَالِهَا وَلِحَسَبِهَا وَلِجَمَالِهَا وَلِدِينِهَا فَاظْفَرْ بِذَاتِ الدِّينِ تَرِبَتْ يَدَاكَ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَمَعْنَاهُ أَنَّ النَّاسَ يَقْصِدُونَ فِي الْعَادَةِ مِنَ الْمَرْأَةِ هَذِهِ الْخِصَالَ الأَرْبَعَ فَاحْرِصْ أَنْتَ عَلَى ذَاتِ الدِّينِ وَاظْفَرْ بِهَا وَاحْرِصْ عَلَى صُحْبَتِهَا.

**364** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பெண் நான்கு விஷயங்களுக்காகத் திருமணம் செய்யப்படுகிறாள். அவளின் சொத்துக்காக, அவளின் குடும்பத்திற்காக, அவளின் அழகுக்காக, அவளின் மார்க்கப்பற்றுக்காக (திருமணம் செய்யப்படுகிறாள்). நீ மார்க்கப்பற்றுள்ளவளை உன் கரம் கைப்பற்றுவதன் மூலம் வெற்றி பெறுவீராக!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:5090. முஸ்லிம்:1466)**

٣٦٥ - وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: قَالَ النَّبِيُّ ﷺ لِجِبْرِيلَ:" مَا يَمْنَعُكَ أَنْ تَزُورَنَا أَكْثَرَ مِمَّا تَزُورُنَا ؟" فَنَزَلَتْ: وَمَا نَتَنَزَّلُ إِلاَّ بِأَمْرِ رَبِّكَ لَهُ مَا بَيْنَ أَيْدِينَا وَمَا خَلْفَنَا وَمَا بَيْنَ ذَلِكَ. رَوَاهُ الْبُخَارِيُّ.

**365** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள், "எங்களை முன்பு போன்று நீங்கள் மிக அதிகமாகச் சந்திக்காமல் இருக்கக் காரணம் என்ன?" என்று கேட்டார்கள். அப்போது (கீழ்க்காணும்) வசனம் இறங்கியது.

***"(நபியே!) உம் இறைவனின் கட்டளை இருந்தாலே தவிர, நாம் இறங்க மாட்டோம். எங்களுக்கு முன் உள்ளவைகளும், எங்களுக்குப் பின் உள்ளவைகளும், அதற்கு இடையே உள்ளவைகளும் அவனுக்கு சொந்தமாகும்." (19:64)*** **(புகாரி:4731)**

٣٦٦ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" لاَ تُصَاحِبْ إِلاَّ مُؤْمِنًا وَلاَ يَأْكُلْ طَعَامَكَ إِلاَّ تَقِيٌّ". رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ بِإِسْنَادٍ لاَ بَأْسَ بِهِ.

**366** அபூஸயீத் அல்-குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஃமினைத் தவிர வேறு எவரையும் நீ தோழமை கொள்ள வேண்டாம். உனது உணவை இறையச்சம் உள்ளவரைத் தவிர எவரும் உண்ண வேண்டாம்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(அபூதாவூது:4832. திர்மிதீ:2395)**

٣٦٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" الرَّجُلُ عَلَى دِينِ خَلِيلِهِ فَلْيَنْظُرْ أَحَدُكُمْ مَنْ يُخَالِلُ". رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ بِإِسْنَادٍ صَحِيحٍ وَقَالَ التِّرْمِذِيُّ: حَدِيثٌ حَسَنٌ.

**367** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவன், அவனது நண்பனின் மார்க்கத்தில் உள்ளான். எனவே, நண்பராக யாரைத் தேர்ந்தெடுப்பது என்பதை உங்களில் ஒருவர் சிந்திக்கட்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
**(திர்மிதீ:2378. அபூதாவூது:4833. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٣٦٨ - وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" الْمَرْءُ مَعَ مَنْ أَحَبَّ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ قَالَ: قِيلَ لِلنَّبِيِّ ﷺ: الرَّجُلُ يُحِبُّ الْقَوْمَ وَلَمَّا يَلْحَقْ بِهِمْ ؟ قَالَ:" الْمَرْءُ مَعَ مَنْ أَحَبَّ!".

**368** அபூமூஸா அல்-அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதன் அவன் விரும்புகின்றவனுடன் தான் (மறுமையில்) இருப்பான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6170. முஸ்லிம்:2641)**

மற்றொரு அறிவிப்பில், "ஒருவன் ஒரு கூட்டத்தாரை, அவர்களைச் சந்திக்காமலேயே (நேரில் பார்க்காமலேயே) அவர்களை விரும்புகிறான்" என்று நபி (ஸல்) அவர்களிடம் கூறப்பட்டது. "அந்த மனிதன், தான் விரும்பியோருடன் தான் இருப்பான்" என நபி (ஸல்) கூறினார்கள்" என்று உள்ளது.

٣٦٩ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ أَعْرَابِيًّا قَالَ لِرَسُولِ اللَّهِ ﷺ: مَتَى السَّاعَةُ ؟ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَا أَعْدَدْتَ لَهَا ؟" قَالَ: حُبَّ اللَّهِ وَرَسُولِهِ. قَالَ:" أَنْتَ مَعَ مَنْ أَحْبَبْتَ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَهَذَا لَفْظُ مُسْلِمٍ. وَفِي رِوَايَةٍ لَهُمَا: مَا أَعْدَدْتُ لَهَا مِنْ كَثِيرِ صَوْمٍ وَلاَ صَلاَةٍ وَلاَ صَدَقَةٍ وَلَكِنِّي أُحِبُّ اللَّهَ وَرَسُولَهُ.

**369** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு கிராமக் காட்டரபி நபி (ஸல்) அவர்களிடம், "மறுமை நாள் எப்போது?" என்று கேட்டார். அதற்கு, "நீ என்ன தயார் செய்து வைத்துள்ளாய்?" என நபி (ஸல்) திருப்பிக் கேட்டார்கள். "அல்லாஹ்வை அவனது தூதரை விரும்பியது தான்" என்று கூறினார். "நீ விரும்பியவருடன் இருப்பாய்" என்று கூறினார்கள்.

**(புகாரி:6167, 6171. முஸ்லிம்:2639. இது முஸ்லிமின் வார்த்தையாகும். அவ்விரண்டின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது.**

"அதற்காக நான் அதிக அளவில் நோன்பையோ, தொழுகையையோ, தர்மப் பொருளையோ நான் தயார் செய்து வைக்கவில்லை"

٣٧٠ - وَعَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: جَاءَ رَجُلٌ إِلَى رَسُول اللَّه ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّه. كَيْفَ تَقُولُ فِي رَجُلٍ أَحَبَّ قَوْمًا وَلَمْ يَلْحَقْ بِهِمْ ؟ فَقَالَ رَسُولُ اللَّه ﷺ:" الْمَرْءُ مَعَ مَنْ أَحَبَّ" مُتَّفَقٌ عَلَيْه.

**370** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் வந்த ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! ஒருவர் ஒரு கூட்டத்தாரை அவர்களைச் சந்திக்காமலேயே விரும்புகிறார். அவர் பற்றி என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு, "அந்த மனிதர், அவர் விரும்பியவருடன் இருப்பார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6169. முஸ்லிம்:2640)**

٣٧١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" النَّاسُ مَعَادنُ كَمَعَادن الذَّهَب وَالْفضَّة خيَارُهُمْ في الْجَاهليَّة خيَارُهُمْ في الأسْلاَم إِذَا فَقُهُوا وَالأَرْوَاحُ جُنُودٌ مُجَنَّدَةٌ فَمَا تَعَارَفَ منْهَا ائْتَلَفَ وَمَا تَنَاكَرَ منْهَا اخْتَلَفَ". رَوَاهُ مُسْلمٌ. وَرَوَى الْبُخَارِيُّ قَوْلَهُ:" الأَرْوَاحُ" إلَخْ. منْ روَايَة عَائشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا.

**371** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கிறார்கள்:

"தங்கம், வெள்ளி சுரங்கம் போன்று, மக்களும் சுரங்கம் ஆவார்கள். அறியாமைக் காலத்தில் சிறந்தவர்களாக இருந்தவர்கள், பிறகு அறிவைப் பெற்றுவிட்டால் இஸ்லாத்திலும் சிறந்தவர்களாவார்கள். உயிர்கள் அனைத்தும் ஒன்று திரண்ட படைகளாகும். அவற்றில் தங்களுக்குள் புரிந்து கொண்டவை சேர்ந்து கொள்கின்றன. அவற்றில் புரிந்து கொள்ளாதவை மாறுபட்டு நிற்கின்றன" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2638. புகாரியின் (3336) அறிவிப்பில் "உயிர்கள்... என்று வார்த்தையிலிருந்து ஆயிஷா (ரழி) அறிவிப்பதாக உள்ளது).**

٣٧٢ - وَعَنْ أُسَيْر بْن عَمْرو - وَيُقَالُ ابْنُ جَابر وَهُوَ" بضَمِّ الْهَمْزَة وَفَتْح السِّين الْمُهْمَلَة" - قَالَ: كَانَ عُمَرُ بْنُ الْخَطَّاب رَضِيَ اللَّهُ عَنْهُ إذَا أَتَى عَلَيْه أَمْدَادُ أَهْلِ الْيَمَنِ سَأَلَهُمْ: أَفيكُمْ أُوَيْسُ بْنُ عَامرٍ ؟ حَتَّى أَتَى عَلَى أُوَيْسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَقَالَ لَهُ: أَنْتَ أُوَيْسُ بْنُ عَامرٍ ؟ قَالَ: نَعَمْ قَالَ: منْ مُرَاد ثُمَّ منْ قَرَن ؟ قَالَ: نَعَمْ قَالَ: فَكَانَ بكَ بَرَصٌ فَبَرَأْتَ منْهُ إلاَّ مَوْضعَ درْهَمٍ ؟ قَالَ: نَعَمْ قَالَ: لَكَ وَالدَةٌ ؟ قَالَ: نَعَمْ قَالَ: سَمعْتُ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" يَأْتي عَلَيْكُمْ أُوَيْسُ بْنُ عَامرٍ مَعَ أَمْدَاد أَهْل الْيَمَن منْ مُرَادٍ ثُمَّ منْ قَرَنٍ كَانَ به بَرَصٌ فَبَرَأَ منْهُ إلاَّ مَوْضعَ درْهَمٍ لَهُ وَالدَةٌ هُوَ بهَا بَرٌّ لَوْ أَقْسَمَ عَلَى اللَّه لأَبَرَّهُ فَإنْ اسْتَطَعْتَ أَنْ يَسْتَغْفرَ لَكَ فَافْعَلْ" فَاسْتَغْفرْ لي فَاسْتَغْفَرَ لَهُ فَقَالَ لَهُ عُمَرُ: أَيْنَ تُريدُ ؟ قَالَ: الْكُوفَةَ قَالَ: أَلاَ أَكْتُبُ لَكَ إلَى عَاملهَا ؟ قَالَ: أَكُونُ في غَبْرَاء النَّاس أَحَبُّ إلَيَّ. فَلَمَّا كَانَ منَ الْعَام الْمُقْبل حَجَّ رَجُلٌ منْ أَشْرَافهمْ فَوَافَقَ عُمَرَ فَسَأَلَهُ عَنْ أُوَيْسٍ فَقَالَ: تَرَكْتُه رَثَّ الْبَيْت قَليلَ الْمَتَاع قَالَ: سَمعْتُ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" يَأْتي عَلَيْكُمْ أُوَيْسُ بْنُ عَامرٍ مَعَ أَمْدَادٍ منْ أَهْل الْيَمَن منْ

مُرَاد ثُمَّ مِنْ قَرَن كَانَ بِهِ بَرَصٌ فَبَرَأَ مِنْهُ إِلاَّ مَوْضِعَ دِرْهَم لَهُ وَالِدَةٌ هُوَ بِهَا بَرٌّ لَوْ أَقْسَمَ عَلَى اللَّهِ لأَبَرَّهُ فَإِنْ اسْتَطَعْتَ أَنْ يَسْتَغْفِرَ لَكَ فَافْعَلْ فَأَتَى أُوَيْسًا فَقَالَ: اسْتَغْفِرْ لِي قَالَ: أَنْتَ أَحْدَثُ عَهْدًا بِسَفَرٍ صَالِحٍ فَاسْتَغْفِرْ لِي قَالَ لِي: لَقِيتَ عُمَرَ ؟ قَالَ: نَعَمْ فَاسْتَغْفَرَ لَهُ فَفَطِنَ لَهُ النَّاسُ فَانْطَلَقَ عَلَى وَجْهِهِ" رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ أَيْضًا عَنْ أُسَيْرِ بْنِ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ أَهْلَ الْكُوفَةِ وَفَدُوا عَلَى عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ وَفِيهِمْ رَجُلٌ مِمَّنْ كَانَ يَسْخَرُ بِأُوَيْسٍ فَقَالَ عُمَرُ: هَلْ هَا هُنَا أَحَدٌ مِنَ الْقَرَنِيِّينَ ؟ فَجَاءَ ذَلِكَ الرَّجُلُ فَقَالَ عُمَرُ: إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَدْ قَالَ:" إِنَّ رَجُلاً يَأْتِيكُمْ مِنَ الْيَمَنِ يُقَالُ لَهُ أُوَيْسٌ لاَ يَدَعُ بِالْيَمَنِ غَيْرَ أُمٍّ لَهُ قَدْ كَانَ بِهِ بَيَاضٌ فَدَعَا اللَّهَ تَعَالَى فَأَذْهَبَهُ إِلاَّ مَوْضِعَ الدِّينَارِ أَوْ الدِّرْهَمِ فَمَنْ لَقِيَهُ مِنْكُمْ فَلْيَسْتَغْفِرْ لَكُمْ". وَفِي رِوَايَةٍ لَهُ عَنْ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: إِنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" إِنَّ خَيْرَ التَّابِعِينَ رَجُلٌ يُقَالُ لَهُ أُوَيْسٌ وَلَهُ وَالِدَةٌ وَكَانَ بِهِ بَيَاضٌ فَمُرُوهُ فَلْيَسْتَغْفِرْ لَكُمْ". قَوْلُهُ" غَبْرَاءِ النَّاسِ" بِفَتْحِ الْغَيْنِ الْمُعْجَمَةِ وَإِسْكَانِ الْبَاءِ وَبِالْمَدِّ وَهُمْ فُقَرَاؤُهُمْ وَصَعَالِيكُهُمْ وَمَنْ لاَ يُعْرَفُ عَيْنُهُ مِنْ أَخْلاَطِهِمْ. وَ" الأَمْدَادُ" جَمْعُ مَدَدٍ وَهُمُ الأَعْوَانُ وَالنَّاصِرُونَ الَّذِينَ كَانُوا يَمُدُّونَ الْمُسْلِمِينَ فِي الْجِهَادِ.

**372** இப்னு ஜாபிர் என்ற உஸைர் இப்னு அம்ரு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உமர் (ரழி) அவர்கள், தன்னிடம் யமன் நாட்டுவாசிகள் யாரேனும் வந்தால் அவர்களிடம், "உங்களில் உவைஸ் இப்னு ஆமிர் என்பவர் உள்ளாரா?" என்று கேட்பார்கள். அவ்வாறே ஒருமுறை உவைஸ் வந்திருந்தார். "நீர் உவைஸ் இப்னு ஆமிர் தானே?" என, அவரிடம் உமர் (ரழி) கேட்டார்கள். அவர், "ஆம்" என்றார். "முராத் என்ற கூட்டத்தைச் சேர்ந்து பின்னர் 'கர்ன்' என்ற கூட்டத்தில் உள்ளவரா நீர்?" என்று உமர் (ரழி) அவர்கள் கேட்க, அவர், "ஆம்" என்றார். "உமக்குத் தொழுநோய் இருந்து, அதிலிருந்து ஒரு திர்ஹம் அளவு தவிர மீதம் நீ சுகம் பெற்றுவிட்டீரா?" என உமர் (ரழி) கேட்டார்கள். அவர், "ஆம்" என்றார். "உமக்குத் தாயார் உண்டா?" என்று கேட்க, அவர், "ஆம்" என்றார். அப்போது உமர் (ரழி) அவர்கள், "உங்களிடம் உவைஸ் இப்னு ஆமிர் என்பவர் யமன் நாட்டு வாசிகளுடன் வருவார். அவர் 'முராத்' என்ற கூட்டத்தாரைச் சேர்ந்து பின்னர் 'கர்ன்' என்ற கூட்டத்தைச் சேர்ந்தவராவார். அவருக்கு தொழு நோய் ஏற்பட்டது. ஒரு திர்ஹம் அளவிலேயே தவிர அதிலிருந்து குணமாகிவிட்டார். அவருக்குத் தாயார் உண்டு. தன் தாயாரிடம் அவர் நல்லவிதமாக நடந்து கொண்டார். அல்லாஹ்வின் மீது அவர் சத்தியம் செய்து ஒரு விஷயத்தைக் கூறினால், அவருக்கு அதை அவன் நிறைவேற்றித் தருவான். உமக்காக அவரை மன்னிப்புக் கேட்கச் செய்ய இயன்றால், அதைச் செய்யும் என்று நபி(ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்" என்று கூறிவிட்டு; "எனக்காக மன்னிப்புத் தேடுங்கள்" என உமர் (ரழி) கூறினார். அவரும் அவருக்காக மன்னிப்புக் கோரினார்.

"என்ன விரும்புகிறீர்கள்?" என அவரிடம் உமர் (ரழி) கேட்டார்கள். "கூபா செல்ல வேண்டும்" என்று அவர் கூறினார். "அதன் அதிகாரிக்கு உங்களுக்காக நான் (சிபாரிசு) கடிதம் எழுதித் தரவா?" என்று உமர் (ரழி) கேட்டார்கள். "மனிதர்களில் சாதாரணமானவர்களிடம் இருப்பதே எனக்கு மிக விருப்பமானது" என்று அவர் கூறினார். மறு ஆண்டு அவர்களில் முக்கியமானவர்களில் ஒருவர் ஹஜ் செய்ய வந்திருந்தார். உமர் (ரழி) அவர்களைச் சந்தித்தார். உவைஸ் பற்றி அவரிடம் கேட்டார்கள். "அவர் இடிந்த வீட்டிலும், பொருளா தாரக் கஷ்டத்திலும் இருக்கக் கண்டேன்" என்று அவர் கூறினார். அப்போது உமர் (ரழி) அவர்கள், "யமன் நாட்டிலிருந்து வரும் கூட்டத்தாரில் உவைஸ் இப்னு ஆமிர் என்பவர் உங்களிடம் வருவார். அவர் முராது கூட்டத்திலிருந்து, பின்னர் 'கர்ன்' கூட்டத்தாரில் உள்ளவராவார். அவருக்குத் தொழுநோய் ஏற்படும். ஒரு திர்ஹம் அளவே தவிர அதிலிருந்து அவர் சுகம் அடைவார். அவருக்குத் தாயார் உண்டு. தாயாரிடம் அவர் நல்லவிதமாக நடந்து கொண்டார். அவர் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து ஒன்றைக் கூறினால், அதை அவன் நிறைவேற்றுவான்.

எனவே அவரிடம் உனக்காக மன்னிப்புக்கோர இயலுமானால் அதைச் செய்யும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்'' என்று கூறினார்கள். அந்த முக்கிய நபர் உவைஸிடம் வந்து, ''எனக்காக மன்னிப்புக் கேளுங்கள்'' என்று கூறினார். ''நல்லதொரு பயணத்தில் இருந்து நீர் வந்து, காலத்தால் புதிய மனிதராக உள்ளீர். எனக்காக நீர் பாவ மன்னிப்புக் கோரும்'' என்று கூறிய உவைஸ், ''உமரைச் சந்தித்தீரா?'' எனக் கேட்டார். அவர், ''ஆம்'' என்றார். வந்தவருக்காக மன்னிப்புக் கோரினார். அவரைப் பற்றி மக்கள் உயர்வாக மதித்தனர். அவர் தன் வழியில் புறப்பட்டுச் சென்றார்.

**(முஸ்லிம்:2542. மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது)**

உஸைர் இப்னு ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்.

கூபா வாசிகள் உமர் (ரழி) அவர்களிடம் பயணிகளாக வந்தார்கள். அவர்களில் உவைஸ் என்பவர் பற்றிக் குறைவாகக் கருதியவரும் இருந்தார். ''முராத் மற்றும் கர்ன் என இரண்டு கூட்டத்தைச் சேர்ந்த எவரும் உங்களில் உள்ளனரா?'' என்று உமர் (ரழி) கேட்டார்கள். அந்த மனிதர் வந்தார். அப்போது உமர் (ரழி) அவர்கள், ''யமனிலிருந்து உங்களிடம் ஒருவர் வருவார். அவர் பெயர் உவைஸ். அவரின் தாயாருக்காகவே தவிர, எமனை விட்டும் வெளியேற மாட்டார். அவருக்குத் தொழுநோய் இருந்தது. அல்லாஹ்விடம் துஆச் செய்தார். ஒரு தீனார், அல்லது ஒரு திர்ஹம் அளவே தவிர மற்றதை அல்லாஹ் போக்கி விடுவான். அவரை உங்களில் எவரேனும் சந்தித்தால், உங்களுக்காக அவர் மன்னிப்புக் கேட்கட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள்'' எனக் கூறினார்கள்.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது.

தாபியீன்களில் சிறந்தவர், உவைஸ் என்ற பெயருள்ள ஒருவராவார். அவருக்குத் தாயார் உண்டு. அவருக்கு தொழுநோய் இருந்தது. அவரிடம் செல்லுங்கள். உங்களுக்கு அவர் மன்னிப்புக் கேட்கட்டும்'' என்று நபி (ஸல்) கூற, நான் கேட்டுள்ளேன் என உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்.

٣٧٣ - وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: اسْتَأْذَنْتُ النَّبِيَّ ﷺ فِي الْعُمْرَةِ فَأَذِنَ لِي وَقَالَ:" لاَ تَنْسَنَا يَا أُخَيَّ مِنْ دُعَائِكَ". فَقَالَ كَلِمَةً مَا يَسُرُّنِي أَنَّ لِي بِهَا الدُّنْيَا. وَفِي رِوَايَةٍ قَالَ:" أَشْرِكْنَا يَا أُخَيَّ فِي دُعَائِكَ" حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**373** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உம்ராச் செய்ய நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி தந்தார்கள். ''சகோதரரே! உமது 'துஆ'வில் எங்களை மறந்து விடாதீர்!'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ''இந்த ஒரு வார்த்தையால் இந்த உலகம் முழுவதும் எனக்கு கிடைத்தால் ஏற்படும் சந்தோசத்தை விட அதிகமான சந்தோசம் அடைந்தேன்'' என்று உமர் (ரழி) கூறினார்கள்.

**(அபூதாவூது:1498. திர்மிதி:3562. மற்றொரு அறிவிப்பில், ''சகோதரரே! உமது 'துஆ'வில் எங்களை இணைத்துக் கொள்வீராக!'' என்று உள்ளது. இது 'ஹஸன்ஸஹீஹ்' என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

٣٧٤ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: كَانَ النَّبِيُّ ﷺ يَزُورُ قُبَاءً رَاكِبًا وَمَاشِيًا فَيُصَلِّي فِيهِ رَكْعَتَيْنِ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: كَانَ النَّبِيُّ ﷺ يَأْتِي مَسْجِدَ قُبَاءٍ كُلَّ سَبْتٍ رَاكِبًا وَمَاشِيًا وَكَانَ ابْنُ عُمَرَ يَفْعَلُهُ.

**374** இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் 'குபா' பள்ளிக்கு தொழுவதற்காக-வாகனத்திலோ, நடந்தோ வருவார்கள். அங்கு இரண்டு ரக்அத் தொழுவார்கள்.

**(புகாரி:1191. முஸ்லிம்:1399. மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது)**

ஒவ்வொரு சனிக்கிழமையும் நபி (ஸல்) அவர்கள் வாகனத்திலோ, நடந்தோ 'குபா' பள்ளிக்கு வருவார்கள். இது போலவே உமர் (ரழி)யும் செய்வார்கள்.

(குபா என்பது மதீனாவிற்கு அருகிலுள்ள ஒரு சிற்றூராகும்)

## ٤٦ - باب فضل الحب في الله والحث عليه وإعلام الرجل من يحبه أنه يحبه ، وماذا يقول إذا أعلمه

## பாடம் : 46 - அல்லாஹ்வுக்காக நேசிப்பது, அதில் ஆர்வப்படுவதன் சிறப்பு மற்றும் தான் விரும்புவோருக்கு தான் விரும்புவதை எடுத்துக் கூறுவது, பதில் அளிப்பது

قَالَ اللَّهُ تَعَالَى: مُحَمَّدٌ رَسُولُ اللَّهِ وَالَّذِينَ مَعَهُ أَشِدَّاءُ عَلَى الْكُفَّارِ رُحَمَاءُ بَيْنَهُمْ إِلَى آخِرِ السُّورَةِ وَقَالَ تَعَالَى: وَالَّذِينَ تَبَوَّءُوا الدَّارَ وَالأَيمَانَ مِنْ قَبْلِهِمْ يُحِبُّونَ مَنْ هَاجَرَ إِلَيْهِمْ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *முஹம்மது நபி (ஸல்) அல்லாஹ்வின் தூதராக உள்ளார். அவருடன் இருப்பவர்கள் இறை மறுப்பாளர்களிடம் கண்டிப்பானவர்கள். தங்களுக்குகிடையே இரக்கம் உள்ளவர்களாவர். அவர்களை 'ருகூஉ' செய்பவர்களாகவும், ஸஜ்தா செய்பவர்களாகவும் காண்பீர். அல்லாஹ்விடமிருந்து அருளையும், திருப்தியையும் விரும்பி வேண்டுபவர்களாகவும் (நீர் காண்பீர்). அவர்களின் அடையாளம், அவர்களின் முகங்களில் ஸஜ்தாவின் அடையாளம் இருக்கும். இதுவே தவ்ராத்தில் காணப்படுகின்ற அவர்களின் தன்மையாகும். மேலும், இன்ஜீலில் அவர்களுக்குச் சொல்லப்பட்டுள்ள உவமை வருமாறு.(அந்த உதாரணமானது) ஒரு பயிர் போலாகும். அது தன் முளையைக் கிளப்பி, அதைப் பலப்படுத்துகிறது. அது பருத்துக் கனமாகி, விவசாயிகளை மகிழ்வடையச் செய்யும் விதத்தில், தன் அடித்தண்டின் மீது நிமிர்ந்து நிற்கிறது. இவற்றின் மூலம் இறை மறுப்பாளர்களை கோபமடையச் செய்கிறான். அவர்களில் இறை நம்பிக்கையாளர்களாக இருந்து, நற்செயல் செய்கின்றவர்களுக்கு மன்னிப்பையும், மகத்தான கூலியையும் அல்லாஹ் வாக்களித்திருக்கின்றான். (48:29)*

*அவர்களுக்கும் முன்பே இறை நம்பிக்கையையும், வீட்டையும் தேர்ந்தெடுந்துக் கொண்ட அவர்களுக்கும் (பங்கு உண்டு). அவர்கள், அவர்களிடம் 'ஹிஜ்ரத்' செய்து வந்தோரை விரும்புகிறார்கள். (59:9)*

٣٧٥ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " ثَلاَثٌ مَنْ كُنَّ فِيهِ وَجَدَ بِهِنَّ حَلاَوَةَ الأَيمَانِ: أَنْ يَكُونَ اللَّهُ وَرَسُولُهُ أَحَبَّ إِلَيْهِ مِمَّا سِوَاهُمَا وَأَنْ يُحِبَّ الْمَرْءَ لاَ يُحِبُّهُ إِلاَّ لِلَّهِ وَأَنْ يَكْرَهَ أَنْ يَعُودَ فِي الْكُفْرِ بَعْدَ أَنْ أَنْقَذَهُ اللَّهُ مِنْهُ كَمَا يَكْرَهُ أَنْ يُقْذَفَ فِي النَّارِ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**375** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மூன்று குணங்கள் எவரிடம் உள்ளதோ, அவர் அதன் மூலம் இறை நம்பிக்கையின் சுவையை ருசிப்பார். (1) அல்லாஹ்வும், அவனது தூதரும் மற்ற அனைத்தையும் விட ஒருவருக்கு மிக விருப்ப மானதாக இருப்பது. (2) ஒருவரை அல்லாஹ்வுக்காக மட்டுமே விரும்புவது (3) இறை மறுப்பை விட்டும் அல்லாஹ் காப்பாற்றிய பின் இறை மறுப்பின் பக்கம் மீண்டும் செல்வதை, நெருப்பில் போடப்படுவதைப் போல் ஒருவர் வெறுப்பது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:16. முஸ்லிம்:43)**

٣٧٦ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " سَبْعَةٌ يُظِلُّهُمُ اللَّهُ فِي ظِلِّهِ يَوْمَ لاَ ظِلَّ إِلاَّ ظِلُّهُ: إِمَامٌ عَادِلٌ وَشَابٌّ نَشَأَ فِي عِبَادَةِ اللَّهِ عَزَّ وَجَلَّ وَرَجُلٌ قَلْبُهُ مُعَلَّقٌ بِالْمَسَاجِدِ وَرَجُلاَنِ تَحَابَّا فِي اللَّهِ اجْتَمَعَا عَلَيْهِ وَتَفَرَّقَا عَلَيْهِ وَرَجُلٌ دَعَتْهُ امْرَأَةٌ ذَاتُ مَنْصِبٍ وَجَمَالٍ فَقَالَ: إِنِّي أَخَافُ اللَّهَ وَرَجُلٌ تَصَدَّقَ بِصَدَقَةٍ فَأَخْفَاهَا حَتَّى لاَ تَعْلَمَ شِمَالُهُ مَا تُنْفِقُ يَمِينُهُ وَرَجُلٌ ذَكَرَ اللَّهَ خَالِيًا فَفَاضَتْ عَيْنَاهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**376** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஏழு நபர்களுக்கு அல்லாஹ், தன் அர்ஷின் நிழலைத் தவிர வேறு நிழல் இல்லாத அந்த (மறுமை நாளில்) தனது அர்ஷின் நிழலைத் தருவான். (1) நீதமான அரசன் (2) அல்லாஹ்வை வணங்குவதில் ஈடுபடும் வாலிபர், (3) பள்ளிவாசல்களில் தன் உள்ளத்தைப் பறி கொடுத்த மனிதர் (4) அல்லாஹ்வுக்காகப் பிரியம் கொண்டு, அவனுக்காகவே ஒன்று சேர்ந்து, அவனுக்காகவே பிரிந்தும் நிற்கின்ற இருவர் (5)அழகும், குடும்பப் பெருமையும் நிறைந்தப் பெண் விபச்சாரத்திற்கு அழைத்தும், "நான் அல்லாஹ்வைப் பயப்படுகிறேன்" என்று கூறும் நபர் (6) தன் வலது கை செய்யும் செலவை இடது கைக்குத் தெரியாமல், அதை மறைத்துக் கொண்டு தர்மம் செய்கின்ற ஒருவர் (7)கலப்பற்ற நிலையில் அல்லாஹ்வை நினைவுகூர்ந்து, அதனால் கண்களில் கண்ணீரைச் சிந்தும் ஒருவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:660, முஸ்லிம்:1031)**

٣٧٧ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " إِنَّ اللَّهَ تَعَالَى يَقُولُ يَوْمَ الْقِيَامَةِ: أَيْنَ الْمُتَحَابُّونَ بِجَلاَلِي ؟ الْيَوْمَ أُظِلُّهُمْ فِي ظِلِّي يَوْمَ لاَ ظِلَّ إِلاَّ ظِلِّي". رَوَاهُ مُسْلِمٌ.

**377** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் கண்ணியத்திற்காக தங்களிடையே அன்பு கொண்டிருந்தவர்கள் எங்கே? இந்நாளில், என் அர்ஷின் நிழலைத்தவிர, வேறு நிழல் இல்லாத நாளில் நான் நிழல் தருவேன் என்று மறுமை நாளில் அல்லாஹ் கூறுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2566)**

٣٧٨ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لاَ تَدْخُلُوا الْجَنَّةَ حَتَّى تُؤْمِنُوا وَلاَ تُؤْمِنُوا حَتَّى تَحَابُّوا. أَوَلاَ أَدُلُّكُمْ عَلَى شَيْءٍ إِذَا فَعَلْتُمُوهُ تَحَابَبْتُمْ ؟ أَفْشُوا السَّلاَمَ بَيْنَكُمْ". رَوَاهُ مُسْلِمٌ.

**378** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நீங்கள் இறை நம்பிக்கை கொள்ளும் வரை, சொர்க்கத்தில் நுழைய மாட்டீர்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் அன்பு கொள்ளும் வரை, நீங்கள் இறை நம்பிக்கை கொண்டவராக மாட்டீர்கள். எதை நீங்கள் செய்தால், ஒருவருக்கொருவர் அன்பு கொள்வீர்களோ, அதை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? (அது) உங்களுக்கிடையே 'ஸலாம்' கூறிக்கொள்வதாகும். (இதனால் அன்பு கொள்வீர்கள்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:54)**

٣٧٩ - وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ: " أَنَّ رَجُلاً زَارَ أَخًا لَهُ فِي قَرْيَةٍ أُخْرَى فَأَرْصَدَ اللَّهُ لَهُ عَلَى مَدْرَجَتِهِ مَلَكًا" وَذَكَرَ الْحَدِيثَ إِلَى قَوْلِهِ: " إِنَّ اللَّهَ قَدْ أَحَبَّكَ كَمَا أَحْبَبْتَهُ فِيهِ". رَوَاهُ مُسْلِمٌ. وَقَدْ سَبَقَ بِالْبَابِ قَبْلَهُ.

**379** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர், வேறு ஊரில் உள்ள தன் சகோதரரைச் சந்திக்கச் சென்றார். அவர் செல்லும் பாதையில் வானவர் ஒருவரை அல்லாஹ் நிறுத்தினான். அவரிடம் அவர் வந்த போது, "எங்கே செல்கிறீர்?"

என வானவர் கேட்டார். "இந்த ஊரில் உள்ள என் சகோதரரைச் சந்திக்கச் செல்கிறேன்" என்றார். வானவர் அவரிடம், "நீர் பயன்படுத்தத்தக்க அருட்கொடை எதுவும் அவரிடம் உமக்காக உள்ளதா?" என்று கேட்டார். "இல்லை, அல்லாஹ்வின் விஷயத்தில் அவரை நான் நேசிக்கிறேன்" என்றார். அப்போது வானவர், "நான் உம்மிடம் வந்த அல்லாஹ்வின்தூதராவேன். நிச்சயமாக! அல்லாஹ், அவர் விஷயமாக சகோதரரை நீர் நேசிப்பது போல் உம்மை நேசிக்கிறான்" என்றார் என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2567)**

٣٨. – وَعَنْ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ فِي الأَنْصَارِ: " لاَ يُحِبُّهُمْ إِلاَّ مُؤْمِنٌ وَلاَ يُبْغِضُهُمْ إِلاَّ مُنَافِقٌ مَنْ أَحَبَّهُمْ أَحَبَّهُ اللَّهُ وَمَنْ أَبْغَضَهُمْ أَبْغَضَهُ اللَّهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**380** பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(அன்சாரித் தோழர்கள் விஷயத்தில்) "இறை நம்பிக்கையாளரைத் தவிர, அவர்களை (வேறு யாரும்) விரும்பமாட்டார்கள். நயவஞ்சகர் தவிர, அவர்களை யாரும் கோபப்படமாட்டார்கள். அவர்களை ஒருவன் விரும்பினால், அவனை அல்லாஹ் விரும்புவான். அவர்களை ஒருவன் கோபப்படச் செய்தால், அவன் மீது அல்லாஹ் கோபப்படுகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3783. முஸ்லிம்:75)**

٣٨١ – وَعَنْ مُعَاذٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" قَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ: الْمُتَحَابُّونَ فِي جَلاَلِي لَهُمْ مَنَابِرُ مِنْ نُورٍ يَغْبِطُهُمْ النَّبِيُّونَ وَالشُّهَدَاءُ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**381** முஆத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் கண்ணியத்திற்காக அன்பு கொண்டிருந்த அவர்களுக்கு ஒளியிலான மேடைகள் உண்டு. நபிமார்களும், உயிரைத் தியாகம் செய்தோரும் அவர்களைக் கண்டு (இவைகள் தமக்கும் கிடைக்க வேண்டுமென) ஆசை கொள்வார்கள்" என அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) கூற நான் கேட்டுள்ளேன். **(திர்மிதி:2390. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٣٨٢ – وَعَنْ أَبِي إِدْرِيسَ الْخَوْلاَنِيِّ رَحِمَهُ اللَّهُ قَالَ: دَخَلْت مَسْجِدَ دِمَشْقَ فَإِذَا فَتًى بَرَّاقُ الثَّنَايَا وَإِذَا النَّاسُ مَعَهُ فَإِذَا اخْتَلَفُوا فِي شَيْءٍ أَسْنَدُوهُ إِلَيْهِ وَصَدَرُوا عَنْ رَأْيِهِ فَسَأَلْت عَنْهُ فَقِيلَ: هَذَا مُعَاذُ بْنُ جَبَلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَلَمَّا كَانَ مِنْ الْغَدِ هَجَّرْت فَوَجَدْته قَدْ سَبَقَنِي بِالتَّهْجِيرِ وَوَجَدْته يُصَلِّي فَانْتَظَرْته حَتَّى قَضَى صَلاَتَهُ ثُمَّ جِئْته مِنْ قِبَلِ وَجْهِهِ فَسَلَّمْت عَلَيْهِ ثُمَّ قُلْت: وَاَللَّه إِنِّي لأُحِبُّك. فَقَالَ: آللَّه ؟ فَقُلْت: أَللَّه. فَقَالَ: آللَّه ؟ فَقُلْت: أَللَّه فَأَخَذَنِي بِحَبْوَةِ رِدَائِي فَجَبَذَنِي إِلَيْهِ فَقَالَ: أَبْشِرْ فَإِنِّي سَمِعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" قَالَ اللَّهُ تَعَالَى: وَجَبَت مَحَبَّتِي لِلْمُتَحَابِّينَ فِيَّ وَالْمُتَجَالِسِينَ فِيَّ وَالْمُتَزَاوِرِينَ فِيَّ وَالْمُتَبَاذِلِينَ فِيَّ" حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ مَالِكٌ فِي" الْمُوَطَّإِ" بِإِسْنَادِهِ الصَّحِيحِ. قَوْلُهُ" هَجَّرْت": أَيْ بَكَّرْت وَهُوَ بِتَشْدِيدِ الْجِيمِ. قَوْلُهُ:" آللَّه ؟" فَقُلْت: أَللَّه الأَوَّلُ بِهَمْزَةٍ مَمْدُودَةٍ لِلاِسْتِفْهَامِ وَالثَّانِي بِلاَ مَدٍّ.

**382** அபூஇத்ரீஸ் கவ்லானீ (ரஹ்) கூறுகிறார்கள்:

நான் திமிஷ்க் (டமாஸ்கஸ்) நகரில் உள்ள பள்ளிவாசலுக்குச் சென்றேன். அங்கே, பற்கள் பளிச்சென ஒரு வாலிபர் இருந்தார். அவரைச் சுற்றி மக்கள் இருந்தனர். ஒரு விஷயத்தில் அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டால், அவர்கள் அவரை அணுகுவார்கள். அவரது கருத்தை ஏற்பார்கள். அவர் பற்றி நான் கேட்டேன். "இவர்தான் முஆத் இப்னு ஜபல் (ரழி)" என்று கூறப்பட்டது. மறுநாள் மதிய வேளையில் முன்னதாகவே நான் அவரைச் சந்திக்க சென்றேன். அவரிடம் ஸலாம் கூறினேன். பின்பு "அல்லாஹ்வின் மீது சத்தியமாக, அல்லாஹ்வுக்காக உங்களை நேசிக்கிறேன்" என்று

கூறினேன். "அல்லாஹ்வுக்காகவா?" என்று கேட்டார்கள். "அல்லாஹ்வுக்காகத்தான்" என்று கூறினேன். "அல்லாஹ்வுக்காகவா?" என்று மீண்டும் கேட்டார்கள். "அல்லாஹ்வுக்காகத்தான்" என்று மீண்டும் கூறினேன். என் மேலாடையின் முந்தானையைப் பிடித்து என்னை இழுத்தார்கள். அவர் என்னை அணைத்தார். "வாழ்த்துக்கள்! என் விஷயத்தில் பிரியம் கொண்டவர்கள், என் விஷயத்தில் உட்கார்ந்திருப்பவர்கள், என் விஷயத்தில் சந்தித்துக் கொள்பவர்கள், என் விஷயத்தில் செலவழித்துக் கொள்பவர் என உள்ளவர்களுக்கு என் அன்பு கட்டாயம் உண்டு என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்" என்று முஆத் இப்னு ஜபல் (ரழி) கூறினார்கள்.

**(அல்முஅத்தா:1779)**

٣٨٣ – وَعَنْ أَبِي كَرِيمَةَ الْمِقْدَادِ بْنِ مَعْدِ يَكْرِبَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " إِذَا أَحَبَّ الرَّجُلُ أَخَاهُ فَلْيُخْبِرْهُ أَنَّهُ يُحِبُّهُ". رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ صَحِيحٌ.

**383** அபூகரீமா என்ற மிக்தாது இப்னு மஃதீயக்ரிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தன் சகோதரரை விரும்பினால், தான் அவரை விரும்புவதை அவரிடம் தெரிவிக்கட்டும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:5124. திர்மிதீ:2392. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٣٨٤ – وَعَنْ مُعَاذٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَخَذَ بِيَدِهِ وَقَالَ: " يَا مُعَاذُ وَاللَّهِ إِنِّي لَأُحِبُّكَ ثُمَّ أُوصِيكَ يَا مُعَاذُ: لاَ تَدَعَنَّ فِي دُبُرِ كُلِّ صَلاَةٍ تَقُولُ: اللَّهُمَّ أَعِنِّي عَلَى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ" حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالنَّسَائِيُّ بِإِسْنَادٍ صَحِيحٍ.

**384** முஆத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் என் கையைப் பிடித்து, "முஆதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம்மை நான் பிரியப்படுகிறேன். மேலும் உமக்கு உபதேசமும் செய்கிறேன். நீர் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் "**அல்லாஹும்ம அஇன்னீ அலா ஃதிக்ரிக வஷுக்ரிக, வஹுஸ்னி இபாததிக**" என்று கூறுவதை விட்டு விடாதீர்!" எனறு கூறினார்கள். **(அபூதாவூது:1522. நஸயீ:3/53)**

**துஆவின் பொருள்: "இறைவா! உன்னை நினைவுகூரவும், உனக்கு நன்றி கூறவும், உன்னை அழகிய முறையில் வணங்கவும் எனக்கு உதவி செய்வாயாக!"**

٣٨٥ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً كَانَ عِنْدَ النَّبِيِّ ﷺ فَمَرَّ رَجُلٌ بِهِ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ إِنِّي لَأُحِبُّ هَذَا. فَقَالَ لَهُ النَّبِيُّ ﷺ: " أَأَعْلَمْتَه ؟" قَالَ: لاَ قَالَ: " أَعْلِمْهُ" فَلَحِقَهُ فَقَالَ: إِنِّي أُحِبُّكَ فِي اللَّهِ. فَقَالَ: أَحَبَّكَ اللَّهُ الَّذِي أَحْبَبْتَنِي لَهُ. رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ.

**385** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) ஒருவர் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்து இருந்தார். அப்போது அவரைக் கடந்து இன்னொருவர் நடந்து சென்ற போது, "இறைத்தூதர் அவர்களே! இவரை நான் விரும்புகிறேன்" என்றார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள், "இதனை அவரிடம் நீ கூறிவிட்டாயா?" என்று கேட்டார்கள். "இல்லை!" என்றார். "அவரிடம் கூறிவிடு!" என நபி (ஸல்) அவர்கள் கூறியதும், அவரை சந்தித்து, "நான் அல்லாஹ்வின் விஷயத்தில் உன்னை நேசிக்கிறேன்" என்று கூறினார். அப்போது அவர், "யாருக்காக என்னை நீ நேசிக்கிறாயோ அந்த இறைவன் உன்னை நேசிப்பான்" என்று கூறினார்.

**(அபூதாவூது:5125)**

## ٤٧ – باب علامات حب الله تعالى العبد والحث على التخلق بها والسعي في تحصيلها

### பாடம் : 47 - அல்லாஹ், தன் அடியானை நேசிப்பதின் அடையாளங்கள், அதற்கான பண்புகளைப் பேணத் தூண்டுதல், அதை அடைய முயற்சித்தல்

قَالَ اللّٰهُ تَعَالَى: قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللّٰهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللّٰهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ وَاللّٰهُ غَفُورٌ رَحِيمٌ. وَقَالَ اللّٰهُ تَعَالَى: يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا مَنْ يَرْتَدَّ مِنْكُمْ عَنْ دِينِهِ فَسَوْفَ يَأْتِي اللّٰهُ بِقَوْمٍ يُحِبُّهُمْ وَيُحِبُّونَهُ أَذِلَّةٍ عَلَى الْمُؤْمِنِينَ أَعِزَّةٍ عَلَى الْكَافِرِينَ يُجَاهِدُونَ فِي سَبِيلِ اللّٰهِ وَلَا يَخَافُونَ لَوْمَةَ لَائِمٍ ذَلِكَ فَضْلُ اللّٰهِ يُؤْتِيهِ مَنْ يَشَاءُ وَاللّٰهُ وَاسِعٌ عَلِيمٌ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால், என்னைப் பின் பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். மேலும் உங்கள் பாவங்களையும் உங்களுக்காக மன்னிப்பான். அல்லாஹ் மிக மன்னிப்பவன். மிகுந்த இரக்கமுடையவன். (3:31)*

*இறை விசுவாசிகளே! உங்களில் ஒருவர் தன் மார்க்கத்தை விட்டு வெளியேறிவிட்டால், (இதனால் எந்த கஷ்டமும் அல்லாஹ்வுக்கு இல்லை) அல்லாஹ் வேறு மக்களைக் கொண்டு வருவான். அவர்களை அவன் நேசிப்பான். அவனை அவர்கள் நேசிப்பார்கள். இறை நம்பிக்கை யாளர்களிடம் பணிவானவர்களாகவும், இறைமறுப்பாளர்களிடம் கடுமையானவர்களாகவும் நடந்து கொள்வார்கள். அல்லாஹ்வின் வழியில் போரிடுவார்கள். பழிப்போரின் பழிச் சொல்லுக்கு அஞ்சமாட்டார்கள். இது அல்லாஹ்வின் அருளாகும். தான் நாடியோருக்கு அல்லாஹ் அதை வழங்குகிறான். அல்லாஹ் விசாலமானவன், அறிந்தவன். (5:54)*

٣٨٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: "إِنَّ اللّٰهَ تَعَالَى قَالَ: مَنْ عَادَى لِي وَلِيًّا فَقَدْ آذَنْتُهُ بِالْحَرْبِ! وَمَا تَقَرَّبَ إِلَيَّ عَبْدِي بِشَيْءٍ أَحَبَّ إِلَيَّ مِمَّا افْتَرَضْتُ عَلَيْهِ. وَمَا يَزَالُ عَبْدِي يَتَقَرَّبُ إِلَيَّ بِالنَّوَافِلِ حَتَّى أُحِبَّهُ فَإِذَا أَحْبَبْتُهُ كُنْتُ سَمْعَهُ الَّذِي يَسْمَعُ بِهِ وَبَصَرَهُ الَّذِي يُبْصِرُ بِهِ وَيَدَهُ الَّتِي يَبْطِشُ بِهَا وَرِجْلَهُ الَّتِي يَمْشِي بِهَا وَإِنْ سَأَلَنِي أَعْطَيْتُهُ وَلَئِنِ اسْتَعَاذَنِي لَأُعِيذَنَّهُ". رَوَاهُ الْبُخَارِيُّ. مَعْنَى "آذَنْتُهُ": أَعْلَمْتُهُ بِأَنِّي مُحَارِبٌ لَهُ. وَقَوْلُهُ "اسْتَعَاذَنِي" رُوِيَ بِالْبَاءِ وَرُوِيَ بِالنُّونِ.

**386** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் நேசரை ஒருவன் நோவினை செய்தால், அவனிடம் போர் புரிய விரும்பிவிட்டேன். என் அடியான் தன் மீது கடமையாக்கியவற்றை விடஎனக்குப் பிரியமானதைச் செய்து என்னை நெருங்கி விடுவதில்லை. மேலும் என் அடியான் உபரியான வணக்கங்கள் செய்வதன் மூலம், அவனை நான் நேசிக்கும் அளவுக்கு நெருங்கிக் கொண்டே இருப்பான். அவனை நான் நேசித்துவிட்டால், அவன் கேட்கும் செவிப்புலனாகவும், அவன் பார்க்கும் அவனது பார்வையாகவும், அவன் பிடிக்கும் அவனது கையாகவும், அவன் நடந்து செல்லும் காலாகவும் நான் ஆகி விடுவேன். என்னிடம் அவன் கேட்டால் அவனுக்குக் கொடுப்பேன். என்னிடம் பாதுகாப்புக் கோரினால் அவனை நான் பாதுகாப்பேன்" என்று அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6502)**

٣٨٧ – وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "إِذَا أَحَبَّ اللّٰهُ تَعَالَى الْعَبْدَ نَادَى جِبْرِيلَ: إِنَّ اللّٰهَ تَعَالَى يُحِبُّ فُلَانًا فَأَحْبِبْهُ فَيُحِبُّهُ جِبْرِيلُ فَيُنَادِي فِي أَهْلِ السَّمَاءِ: إِنَّ اللّٰهَ يُحِبُّ فُلَانًا فَأَحِبُّوهُ فَيُحِبُّهُ أَهْلُ السَّمَاءِ ثُمَّ يُوضَعُ لَهُ الْقَبُولُ فِي الْأَرْضِ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: "إِنَّ اللّٰهَ تَعَالَى إِذَا أَحَبَّ عَبْدًا دَعَا جِبْرِيلَ فَقَالَ: إِنِّي أُحِبُّ فُلَانًا فَأَحْبِبْهُ فَيُحِبُّهُ جِبْرِيلُ ثُمَّ يُنَادِي فِي السَّمَاءِ فَيَقُولُ: إِنَّ اللّٰهَ يُحِبُّ فُلَانًا فَأَحِبُّوهُ فَيُحِبُّهُ أَهْلُ السَّمَاءِ ثُمَّ يُوضَعُ لَهُ الْقَبُولُ فِي الْأَرْضِ. وَإِذَا أَبْغَضَ عَبْدًا دَعَا جِبْرِيلَ فَيَقُولُ: إِنِّي أُبْغِضُ فُلَانًا فَأَبْغِضْهُ فَيُبْغِضُهُ جِبْرِيلُ ثُمَّ يُنَادِي فِي أَهْلِ السَّمَاءِ: إِنَّ اللّٰهَ يُبْغِضُ فُلَانًا فَأَبْغِضُوهُ ثُمَّ تُوضَعُ لَهُ الْبَغْضَاءُ فِي الْأَرْضِ".

**387** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ், தன் அடியான் ஒருவனை நேசித்தால், ஜிப்ரீல் (அலை) அவர்களை (அழைத்து) "நிச்சயமாக! அல்லாஹ் இன்ன மனிதரை விரும்புகிறான். அவனை நீயும் விரும்பு!" என்று கூறுவான். ஜிப்ரீல் (அலை) அவனை விரும்புவார். அவர் வானத்தில் உள்ளோரிடம் "நிச்சயமாக அல்லாஹ், இன்னாரை விரும்புகிறான். எனவே அவரை நீங்களும் விரும்புங்கள்" என்று கூறுவார். வானில் உள்ள மலக்குகளும் அவனை விரும்புவார்கள். பின்பு பூமியில் அவரை (எல்லோரும் விரும்பிட) ஒப்புதல் ஏற்படுத்தப்படும்" (பூமியில் உள்ளவர்களும் நேசிப்பர்)" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3209. முஸ்லிம்:2637)**

முஸ்லிமில் உள்ள மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

நிச்சயமாக அல்லாஹ் ஓர் அடியானை நேசித்துவிட்டால், ஜிப்ரீலை அழைத்து, "நான் இன்ன மனிதனை நேசிக்கிறேன். அவனை நீரும் நேசியும்!" என்று கூறுகிறான். ஜிப்ரீலும் (அலை) அவனை விரும்பி, பின்பு வானத்தில் உள்ளோரை அழைத்து, "நிச்சயமாக அல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான். அவனை நீங்களும் நேசியுங்கள்" என்று கூறுவார். அவனை அவர்களும் நேசிப்பார்கள். பின்னர் அந்த அடியானுக்கு ஒப்புக் கொள்ளுதலை பூமியில் (உள்ளோரிடம்) ஆக்கப்படும். ஒரு அடியானை அல்லாஹ் கோபம் கொண்டால், ஜிப்ரீலை அழைத்து நான் இன்னாரைக் கோபிக்கிறேன் அவனை நீரும் கோபம் கொள்ளும்!" என்று கூறுவான். அவரும் அவனை கோபம் கொள்வார். பின்பு வானத்தில் உள்ளோரை அழைத்து, "நிச்சயமாக அல்லாஹ் இன்னாரைக் கோபம் கொள்கிறான். நீங்கள் அவனை கோபியுங்கள்" என்று கூறுவார். அவனை அவர்கள் கோபம் கொள்வார்கள். பின்பு பூமியிலும் அவனுக்காகக் கோபத்தை ஏற்படுத்தப்படும்.

٣٨٨ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ بَعَثَ رَجُلاً عَلَى سَرِيَّةٍ فَكَانَ يَقْرَأُ لِأَصْحَابِهِ فِي صَلَاتِهِمْ فَيَخْتِمُ بِ قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ فَلَمَّا رَجَعُوا ذَكَرُوا ذَلِكَ لِرَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ: " سَلُوهُ لِأَيِّ شَيْءٍ يَصْنَعُ ذَلِكَ ؟" فَسَأَلُوهُ فَقَالَ: لِأَنَّهَا صِفَةُ الرَّحْمَنِ فَأَنَا أُحِبُّ أَنْ أَقْرَأَ بِهَا فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " أَخْبِرُوهُ أَنَّ اللَّهَ تَعَالَى يُحِبُّهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**388** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், ஒரு மனிதரை போர் செய்ய படைக்கு அனுப்பி வைத்தார்கள். அவர் தோழர்களுக்கு தொழுகை நடத்தும் போது, "குல்ஹுவல்லாஹு அஹது " என்ற சூராவை ஓதி முடிப்பவராக இருந்தார். போரிலிருந்து அவர்கள் திரும்பியதும், நபி (ஸல்) அவர்களிடம் இந்த விபரத்தைக் கூறினார்கள். "எதற்காக அவர் இவ்வாறு செய்தார்? என அவரிடம் கேளுங்கள்" என்று நபி (ஸல்) கூறியதும், இதனை அவரிடம் கேட்டார்கள். "நிச்சயமாக இது ரஹ்மானின் தன்மைகளைக் கொண்டதாக உள்ளதாகும். ஆகவேதான் அதை ஓத விரும்பினேன்" என்று அவர் கூறினார். அதைக் கேட்டு, "நிச்சயமாக! அல்லாஹ் அவரை விரும்புகிறான் என அவரிடம் கூறுங்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:7375. முஸ்லிம்:813)**

## ٤٨ - باب التحذير من إيذاء الصالحين والضعفة والمساكين

## பாடம் : 48 - நல்லோர்களை, பலவீனர்கள், ஏழைகள் ஆகியோரைத் துன்புறுத்துவதை எச்சரித்தல்

قَالَ اللَّهُ تَعَالَى: وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا. وَقَالَ تَعَالَى: فَأَمَّا الْيَتِيمَ فَلَا تَقْهَرْ وَأَمَّا السَّائِلَ فَلَا تَنْهَرْ.

وَأَمَّا الأَحَادِيثُ فَكَثِيرَةٌ مِنْهَا حَدِيثُ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْـــــهُ فِي الْبَابِ قَبْلَ هَذَا" مَنْ عَادَى لِي وَلِيًّا فَقَدْ آذَنْتُهُ بِالْحَرْبِ".

وَمِنْهَا حَدِيثُ سَعْدِ ابْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ السَّابِقُ فِي بَابِ مُلَاطَفَةِ الْيَتِيمِ وَقَوْلُهُ ﷺ:" يَا أَبَا بَكْرٍ لَئِنْ كُنْتَ أَغْضَبْتَهُمْ لَقَدْ أَغْضَبْتَ رَبَّكَ".

**அல்லாஹ் கூறுகிறான்:** *நம்பிக்கை கொண்ட ஆண்கள் மற்றும் பெண்களுக்கு-அவர்கள் குற்றம் புரியாதிருக்கவே எவர்கள் துன்பம் அளிக்கின்றார்களோ, அவர்கள் ஒரு மாபெரும் அவதூறையும், வெளிப்படையான பாவத்தின் விளைவையும் தம்மீது சுமந்து கொள்கிறார்கள். (33:58)*

*எனவே, அனாதையை வெறுக்காதீர்! யாசிப்போரை விரட்டாதீர்! (93:9,10)*

இந்த தலைப்பின் கீழ் நிறைய ஹதீஸ்கள் உள்ளன. 386-வது ஹதீஸ் இந்த இடத்திற்கு பொருத்தமானதாகும். மேலும் 261-வது ஹதீஸும் பொருந்தும்.

٣٨٩ - وَعَنْ جُنْدَبِ بْنِ عَبْدِ اللهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللهِ ﷺ:" مَنْ صَلَّى صَلَاةَ الصُّبْحِ فَهُوَ فِي ذِمَّةِ اللهِ فَلَا يَطْلُبَنَّكُمُ اللَّهُ مِنْ ذِمَّتِهِ بِشَيْءٍ: فَإِنَّهُ مَنْ يَطْلُبْهُ مِنْ ذِمَّتِهِ بِشَيْءٍ يُدْرِكْهُ ثُمَّ يَكُبَّهُ عَلَى وَجْهِهِ فِي نَارِ جَهَنَّمَ". رَوَاهُ مُسْلِمٌ.

**389** ஜுன்துப் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சுப்ஹூத் தொழுகையை ஒருவர் தொழுதுவிட்டால், அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளார். எனவே, அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ள அவருக்கு உங்களில் எவரும் இடையூறு தரவேண்டாம். நிச்சயமாக அல்லாஹ் தன் பொறுப்பிலுள்ளவருக்காக உங்களில் எவரேனும் ஒருவரை (குற்றம்) பிடித்துவிட்டால், அவரை அடைந்து, அவரை நரகில் முகம் குப்புற வீழ்த்திவிடுவான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:657)**

## ٤٩ - باب إجزاء أحكام الناس على الظاهر وسرائرهم إلى الله تعالى

## பாடம் : 49 - வெளிநிலைகளை கவனித்து மக்களிடம் இறைச்சட்டங்களை நிலைநாட்டுதல். அவர்களின் ரகசிய நிலைகளை அல்லாஹ்விடம் ஒப்படைத்தல்

قَالَ اللَّهُ تَعَالَى: فَإِنْ تَابُوا وَأَقَامُوا الصَّلَاةَ وَآتَوُا الزَّكَاةَ فَخَلُّوا سَبِيلَهُمْ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *அவர்கள் பாவமன்னிப்பு கோரி, தொழுகையைப் பேணி, ஜகாத்தை கொடுத்து விட்டால், அவர்களின் வழியில் நீங்கள் (அவர்களை) விட்டு விடுங்கள். (9 : 5)*

٣٩٠ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ:" أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَشْهَدُوا أَنْ لَا إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ وَيُقِيمُوا الصَّلَاةَ وَيُؤْتُوا الزَّكَاةَ. فَإِذَا فَعَلُوا ذَلِكَ عَـــــصَمُوا مِنِّي دِمَاءَهُمْ وَأَمْوَالَهُمْ إِلاَّ بِحَقِّ الأِسْلَامِ. وَحِسَابُهُمْ عَلَى اللهِ تَعَالَى". مُتَّفَقٌ عَلَيْهِ.

**390** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹ், வஅன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹி" என அவர்கள் கூறும் வரையிலும் மற்றும் தொழுகையைப் பேணி, ஜகாத்தைக் கொடுக்கும் வரையிலும் மக்களிடம் நான் போரிடக் கட்டளையிடப்பட்டுள்ளேன். அதை அவர்கள் செய்து விட்டால், என்னிடமிருந்து

அவர்களின் இரத்தங்களையும் (உயிர்களையும்), அவர்களின் சொத்துக்களையும் இஸ்லாமிய சட்டத்திற்காக (தண்டனை பெறுதல்) தவிர மற்றவற்றில் அவர்களைப் பாதுகாத்துக் கொள்வார்கள். அவர்களின் கேள்வி கணக்கு, அல்லாஹ்விடம் உள்ளது'' என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:25. முஸ்லிம்:22)**

٣٩١ – وَعَنْ أَبِي عَبْدِ اللَّهِ طَارِقِ بْنِ أَشْيَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَكَفَرَ بِمَا يُعْبَدُ مِنْ دُونِ اللَّهِ حَرُمَ مَالُهُ وَدَمُهُ وَحِسَابُهُ عَلَى اللَّهِ تَعَالَى" رَوَاهُ مُسْلِمٌ.

**391** அபூஅப்துல்லாஹ் தாரிக் இப்னு உஷைம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று ஒருவர் கூறி; அல்லாஹ் அல்லாதவற்றை வணங்கப்படுவதை வெறுத்தால், அவனது சொத்தும், அவனது ரத்தமும் (உயிரும்) பாதுகாப்புப் பெறும். அவனது கேள்வி கணக்கு, அல்லாஹ்விடம் உள்ளது என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். **(முஸ்லிம்:23)**

٣٩٢ – وَعَنْ أَبِي مَعْبَدٍ الْمِقْدَادِ بْنِ الأَسْوَدِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قُلْتُ لِرَسُولِ اللَّهِ ﷺ: أَرَأَيْتَ إِنْ لَقِيتُ رَجُلاً مِنَ الْكُفَّارِ فَاقْتَتَلْنَا فَضَرَبَ إِحْدَى يَدَيَّ بِالسَّيْفِ فَقَطَعَهَا ثُمَّ لاَذَ مِنِّي بِشَجَرَةٍ فَقَالَ: أَسْلَمْتُ لِلَّهِ أَأَقْتُلُهُ يَا رَسُولَ اللَّهِ بَعْدَ أَنْ قَالَهَا ؟ فَقَالَ:" لاَ تَقْتُلْهُ". فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ قَطَعَ إِحْدَى يَدَيَّ ثُمَّ قَالَ ذَلِكَ بَعْدَمَا قَطَعَهَا ؟ فَقَالَ:" لاَ تَقْتُلْهُ فَإِنْ قَتَلْتَهُ فَإِنَّهُ بِمَنْزِلَتِكَ قَبْلَ أَنْ تَقْتُلَهُ وَإِنَّكَ بِمَنْزِلَتِهِ قَبْلَ أَنْ يَقُولَ كَلِمَتَهُ الَّتِي قَالَ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَمَعْنَى" إِنَّهُ بِمَنْزِلَتِكَ": أَيْ مَعْصُومُ الدَّمِ مَحْكُومٌ بِإِسْلاَمِهِ. وَمَعْنَى" إِنَّكَ بِمَنْزِلَتِهِ" أَيْ مُبَاحُ الدَّمِ بِالْقِصَاصِ لِوَرَثَتِهِ لاَ أَنَّهُ بِمَنْزِلَتِهِ فِي الْكُفْرِ ; وَاللَّهُ أَعْلَمُ.

**392** அபூமஃபத் மிக்தாத் இப்னு அஸ்வத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இறை மறுப்பாளர்களில் ஒருவரை (போரில்) சந்தித்தேன். நாங்கள் இருவரும் சண்டையிட்ட போது, அவர் வாளால் என் கைகளில் ஒன்றை வெட்டி, துண்டாக்கினார். பின்பு என்னிடம் மரத்தின் (பின்னே) இருந்து பாதுகாப்புக் கேட்டார். "அல்லாஹ்வுக்கு நான் கட்டுப்படுகிறேன்'' என்றும் கூறினார். "அவர் இவ்வாறு கூறியதற்குப் பின்னால் இறைத்தூதர் அவர்களே! அவரை நான் கொல்லலாமா?'' என்று கேட்டேன். "அவரை நீர் கொல்லக் கூடாது'' என்று கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! என் கைகளில் ஒன்றை அவர் துண்டாக்கினார். துண்டாக்கியப் பிறகே இவ்வாறு கூறினார்?'' என்று நான் கூறினேன். "அவரைக் கொல்லாதே! அவரை நீர் கொன்றுவிட்டால், அவரை நீர் கொல்வதற்கு முன் இருந்த, உன் (உயர்ந்த) தகுதிக்கு அவர் வந்து விடுவார். அவர் இந்த வார்த்தையைக் கூறும் முன் இருந்த அவரின் (தாழ்ந்த) தகுதிக்கு நீர் வந்து விடுவீர்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:4019. முஸ்லிம்:95)**

٣٩٣ – وَعَنْ أُسَامَةَ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: بَعَثَنَا رَسُولُ اللَّهِ ﷺ إِلَى الْحُرَقَةِ مِنْ جُهَيْنَةَ فَصَبَّحْنَا الْقَوْمَ عَلَى مِيَاهِهِمْ وَلَحِقْتُ أَنَا وَرَجُلٌ مِنَ الأَنْصَارِ رَجُلاً مِنْهُمْ فَلَمَّا غَشِينَاهُ قَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ فَكَفَّ عَنْهُ الأَنْصَارِيُّ وَطَعَنْتُهُ بِرُمْحِي حَتَّى قَتَلْتُهُ. فَلَمَّا قَدِمْنَا الْمَدِينَةَ بَلَغَ ذَلِكَ النَّبِيَّ ﷺ فَقَالَ لِي:" يَا أُسَامَةُ أَقَتَلْتَهُ بَعْدَمَا قَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ ؟" قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ إِنَّمَا كَانَ مُتَعَوِّذًا. فَقَالَ:" أَقَتَلْتَهُ بَعْدَمَا قَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ ؟!" فَمَا زَالَ يُكَرِّرُهَا عَلَيَّ حَتَّى تَمَنَّيْتُ أَنِّي لَمْ أَكُنْ أَسْلَمْتُ قَبْلَ ذَلِكَ الْيَوْمِ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" أَقَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَقَتَلْتَهُ ؟" قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ إِنَّمَا قَالَهَا خَوْفًا مِنَ السِّلاَحِ قَالَ:" أَفَلاَ شَقَقْتَ عَنْ قَلْبِهِ حَتَّى تَعْلَمَ أَقَالَهَا أَمْ لاَ ؟!" فَمَا زَالَ يُكَرِّرُهَا حَتَّى تَمَنَّيْتُ أَنِّي أَسْلَمْتُ يَوْمَئِذٍ." الْحُرَقَةُ" بِضَمِّ الْحَاءِ الْمُهْمَلَةِ وَفَتْحِ الرَّاءِ: بَطْنٌ مِنْ جُهَيْنَةَ الْقَبِيلَةِ الْمَعْرُوفَةِ. وَقَوْلُهُ" مُتَعَوِّذًا": أَيْ مُعْتَصِمًا بِهَا مِنَ الْقَتْلِ لاَ مُعْتَقِدًا لَهَا.

**393** உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜுஹைனா கூட்டத்தைச் சேர்ந்த ஒரு பிரிவினரிடம் எங்களை நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அவர்களின் குடிநீர் தடாகம் அருகே அவர்களைக் காலையில் நாங்கள் சந்தித்தோம். நானும், மதீனாவாசியான (அன்சாரீ) ஒருவரும் அவர்களில் ஒருவரைக் கண்டோம். அவரை நாங்கள் சூழ்ந்தபோது, 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று கூறினார். அன்சாரித் தோழர் அவரை விட்டும் ஒதுங்கிக் கொண்டார். நான் எனது ஈட்டியால் அவரைக் குத்திக் கொன்றேன். மதீனாவிற்கு நாங்கள் வந்தபோது, இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. என்னிடம் அவர்கள், "உஸாமாவே! லாயிலாஹ இல்லல்லாஹ் என்று அவர் கூறியபின் அவரைக் கொன்றீரா?" எனக் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! (அவ்வாறு அவர் கூறியது) பாதுகாப்புத் தேடித்தான்" என்று நான் கூறினேன். "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று அவர் கூறியபின், அவரை நீர் கொன்று விட்டீரா?" என்று மீண்டும் நபி (ஸல்) கேட்டார்கள். மேலும் அதனையே திரும்பத் திரும்ப வினவினார்கள். எதுவரையெனில் அந்த நாளிற்கு முன் நான் முஸ்லிமாகாமல் இருந்திருக்க வேண்டுமே! (அப்பொழுது தான் புதிதாக இஸ்லாத்தில் இணைபவனாக இருந்திருக்கக் கூடாதா! அப்படியிருந்தால் இப்பாவம் உட்பட அனைத்து முன்பாவங்களும் இஸ்லாமின் பொருட்டால் எனக்கு மன்னிக்கப்பட்டிருக்குமே!) என நான் எண்ணும் அளவுக்கு.

**(புகாரி:4269. முஸ்லிம்:96 மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது)**

மற்றொரு அறிவிப்பில், "லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவரை நீ கொன்று விட்டாயா?" என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! ஆயுதம் கண்டு பயந்தே அவர் இவ்வாறு கூறினார்" என்று கூறினேன். "அதற்காகத்தான் சொன்னாரா? இல்லையா? என நீர் அறிவதற்காக அவரின் உள்ளத்தை நீர் பிளந்திருக்கலாமே?" என்று கூறினார்கள். "அன்றைய நாளில் நான் முஸ்லிமாகி இருக்கலாமே" என நான் எண்ணும் அளவுக்கு அதைத் திரும்ப திரும்பக் கூறிக் கொண்டிருந்தார்கள்.

٣٩٤ - وَعَنْ جُنْدُبِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ بَعَثَ بَعْثًا مِنَ الْمُسْلِمِينَ إِلَى قَوْمٍ مِنَ الْمُشْرِكِينَ وَأَنَّهُمُ الْتَقَوْا فَكَانَ رَجُلٌ مِنَ الْمُشْرِكِينَ إِذَا شَاءَ أَنْ يَقْصِدَ إِلَى رَجُلٍ مِنَ الْمُسْلِمِينَ قَصَدَ لَهُ فَقَتَلَهُ وَأَنَّ رَجُلاً مِنَ الْمُسْلِمِينَ قَصَدَ غَفْلَتَهُ - وَكُنَّا نَتَحَدَّثُ أَنَّهُ أُسَامَةُ بْنُ زَيْدٍ - فَلَمَّا رَفَعَ عَلَيْهِ السَّيْفَ قَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ فَقَتَلَهُ فَجَاءَ الْبَشِيرُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَسَأَلَهُ وَأَخْبَرَهُ حَتَّى أَخْبَرَهُ خَبَرَ الرَّجُلِ كَيْفَ صَنَعَ فَدَعَاهُ فَسَأَلَهُ فَقَالَ:" لِمَ قَتَلْتَهُ ؟" فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ أَوْجَعَ فِي الْمُسْلِمِينَ وَقَتَلَ فُلاَنًا وَفُلاَنًا - وَسَمَّى لَهُ نَفَرًا - وَإِنِّي حَمَلْتُ عَلَيْهِ فَلَمَّا رَأَى السَّيْفَ قَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ. قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" أَقَتَلْتَهُ ؟" قَالَ: نَعَمْ. قَالَ:" فَكَيْفَ تَصْنَعُ بِلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ إِذَا جَاءَتْ يَوْمَ الْقِيَامَةِ ؟" قَالَ: يَا رَسُولَ اللَّهِ اسْتَغْفِرْ لِي. قَالَ:" وَكَيْفَ تَصْنَعُ بِلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ إِذَا جَاءَتْ يَوْمَ الْقِيَامَةِ ؟" فَجَعَلَ لاَ يَزِيدُ عَلَى أَنْ يَقُولَ:" كَيْفَ تَصْنَعُ بِلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ إِذَا جَاءَتْ يَوْمَ الْقِيَامَةِ ؟" رَوَاهُ مُسْلِمٌ.

**394** ஜுன்துப் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முஸ்லிம்களின் ஒரு படையினரை இணை வைப்போரில் ஒரு கூட்டத்தாரிடம் நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். அவர்களும் அவர்களைப் (போரில்) சந்தித்தார்கள். இணைவைப்பவரில் ஒருவர், தான் நாடியபோதெல்லாம் முஸ்லிம்களில் ஒருவரிடம் ஓடிவந்து, அவரைக் கொன்று விட்டுச் செல்வார். இந்நிலையில் முஸ்லிம்களில் ஒருவர், அவர் கவனக்குறைவுடன் இருப்பதைக் கண்டார். அந்த மனிதர் உஸாமா இப்னு ஸைத் அவர்கள் தான் என நாங்கள் பேசிக் கொண்டோம். அவர் (அவனிடம் சென்று) வாளை உயர்த்திய போது, அவன் "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று கூறினார்.

எனினும் அவர், அவனைக் கொன்றுவிட்டார். பின்னர் (போரின்) செய்திகளைக் கூறுபவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அந்த மனிதரிடம் இவர் எப்படி நடந்து கொண்டார் என்ற செய்தியை முழுமையாக எடுத்துக் கூறினார். இவரை அழைத்து, "ஏன் அவரைக் கொன்றீர்?" என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! முஸ்லிம்களுக்கு அவன் தொல்லை கொடுத்தான். இன்னார் - இன்னாரைக் கொன்றான்" என பெயர் கூறி தெரிவித்த அவர், "நான் அவன் மீது பாய்ந்தேன். வாளைக் கண்ட அவர், லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறினார்" என (உஸாமா) கூறினார். "அவரை நீர் கொன்று விட்டீரா?" என்று நபி (ஸல்) கூறினார்கள். "ஆம்" என்றார். "லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற வார்த்தை மறுமையில் உம்மிடம் வந்தால் என்ன செய்வீர்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! எனக்காக (அல்லாஹ்விடம்) பிழை பொறுப்பு இறைஞ்சுங்கள்" என்று கூறினார். "மறுமை நாளில் உன்னிடம் லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற வார்த்தை வந்து விட்டால் எப்படி நடந்து கொள்வாய்?" என (மீண்டும்) நபி (ஸல்) கேட்டார்கள். "மறுமை நாளில் லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற வார்த்தை உம்மிடம் வந்தால் எப்படி நடந்து கொள்வாய்?" என்று கூறுவதை அதிகப்படுத்திக் கொண்டே இருந்தார்கள். **(முஸ்லிம்:97)**

٣٩٥ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُتْبَةَ بْنِ مَسْعُودٍ قَالَ: سَمِعْتُ عُمَرَ بْنَ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ يَقُولُ:" إِنَّ نَاسًا كَانُوا يُؤْخَذُونَ بِالْوَحْيِ فِي عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ إِنَّ الْوَحْيَ قَدْ انْقَطَعَ وَإِنَّمَا نَأْخُذُكُمْ الآنَ بِمَا ظَهَرَ لَنَا مِنْ أَعْمَالِكُمْ. فَمَنْ أَظْهَرَ لَنَا خَيْرًا أَمَّنَّاهُ وَقَرَّبْنَاهُ وَلَيْسَ لَنَا مِنْ سَرِيرَتِهِ شَيْءٌ. اللَّهُ يُحَاسِبُهُ فِي سَرِيرَتِهِ. وَمَنْ أَظْهَرَ لَنَا سُوءًا لَمْ نَأْمَنْهُ وَلَمْ نُصَدِّقْهُ وَإِنْ قَالَ إِنَّ سَرِيرَتَهُ حَسَنَةٌ". رَوَاهُ الْبُخَارِيُّ.

**395** அப்துல்லாஹ் இப்னு உத்பா இப்னு மஸ்ஊத் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் 'வஹீ' மூலம் மக்கள் குற்றம் பிடிக்கப்படுபவர்களாக இருந்தார்கள். 'வஹீ' இப்போது முடிந்து விட்டது. உங்களை நாம் குற்றம் பிடிப்பது என்பது, இப்போது உங்களின் செயல்களில் எங்களிடம் வெளிப்படையாக உள்ளவை மூலமாகத்தான். எங்களிடம் சிறந்ததை வெளிப்படையாகச் செய்தால், அவருக்குப் பாதுகாப்பளிப்போம். அவரை நெருக்கமாக்கி கொள்வோம். அவரின் மறைவானவற்றில் எதுவும் நமக்குப் பொறுப்பில்லை. அல்லாஹ் அவரின் மறைவானவற்றில் கேள்வி கேட்பான். எங்களிடம் தீயதை வெளிப்படுத்தினால், அவருக்கு நாம் அபயம் அளிக்க மாட்டோம். தன் மறைவானவையும் நல்லதே என்று கூறினாலும், அவரை உண்மைப்படுத்திடவும் மாட்டோம் என உமர் (ரழி) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். **(புகாரி:2641)**

## ٥٠ - باب الخوف

## பாடம் : 50 - அல்லாஹ்வைப் பயப்படுதல்

قَالَ اللَّهُ تَعَالَى: وَإِيَّايَ فَارْهَبُونِ. وَقَالَ تَعَالَى: إِنَّ بَطْشَ رَبِّكَ لَشَدِيدٌ وَقَالَ تَعَالَى: وَكَذَلِكَ أَخْذُ رَبِّكَ إِذَا أَخَذَ الْقُرَى وَهِيَ ظَالِمَةٌ إِنَّ أَخْذَهُ أَلِيمٌ شَدِيدٌ إِنَّ فِي ذَلِكَ لَآيَةً لِمَنْ خَافَ عَذَابَ الْآخِرَةِ ذَلِكَ يَوْمٌ مَجْمُوعٌ لَهُ النَّاسُ وَذَلِكَ يَوْمٌ مَشْهُودٌ وَمَا نُؤَخِّرُهُ إِلَّا لِأَجَلٍ مَعْدُودٍ يَوْمَ يَأْتِ لَا تَكَلَّمُ نَفْسٌ إِلَّا بِإِذْنِهِ فَمِنْهُمْ شَقِيٌّ وَسَعِيدٌ فَأَمَّا الَّذِينَ شَقُوا فَفِي النَّارِ لَهُمْ فِيهَا زَفِيرٌ وَشَهِيقٌ. وَقَالَ تَعَالَى: وَيُحَذِّرُكُمُ اللَّهُ نَفْسَهُ. وَقَالَ تَعَالَى: يَوْمَ يَفِرُّ الْمَرْءُ مِنْ أَخِيهِ وَأُمِّهِ وَأَبِيهِ وَصَاحِبَتِهِ وَبَنِيهِ لِكُلِّ امْرِئٍ مِنْهُمْ يَوْمَئِذٍ شَأْنٌ يُغْنِيهِ. وَقَالَ تَعَالَى: يَا أَيُّهَا النَّاسُ اتَّقُوا رَبَّكُمْ إِنَّ زَلْزَلَةَ السَّاعَةِ شَيْءٌ عَظِيمٌ يَوْمَ تَرَوْنَهَا تَذْهَلُ كُلُّ مُرْضِعَةٍ عَمَّا أَرْضَعَتْ وَتَضَعُ كُلُّ ذَاتِ حَمْلٍ حَمْلَهَا وَتَرَى النَّاسَ سُكَارَى وَمَا هُمْ بِسُكَارَى وَلَكِنَّ عَذَابَ

اللَّه شَدِيدٌ. وَقَالَ تَعَالَى: وَلِمَنْ خَافَ مَقَامَ رَبِّه جَنَّتَان الأيَات. وَقَالَ تَعَالَى: وَأَقْبَلَ بَعْضُهُمْ عَلَى بَعْض يَتَسَاءَلُونَ قَالُوا إِنَّا كُنَّا قَبْلُ فِي أَهْلِنَا مُشْفِقِينَ فَمَنَّ اللَّهُ عَلَيْنَا وَوَقَانَا عَذَابَ السَّمُوم إِنَّا كُنَّا مِنْ قَبْلُ نَدْعُوهُ إِنَّهُ هُوَ الْبَرُّ الرَّحِيمُ. وَالأيَاتُ فِي الْبَاب كَثيرَةٌ جِدًّا مَعْلُومَاتٌ وَالْغَرَضُ الأشَارَةُ إِلَى بَعْضِهَا وَقَدْ حَصَلَ.

وَأَمَّا الأحَادِيثُ فَكَثِيرَةٌ جِدًّا فَنَذْكُرُ مِنْهَا طَرَفًا وَبِاللَّه التَّوْفِيقُ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *"என்னைப் பயந்து கொள்ளுங்கள்" (2:40)*

*நிச்சயமாக உம் இறைவனின் பிடி மிகக் கடுமையானதாகும். (85:12)*

*இவ்வாறே, உம் இறைவனின் பிடி இருக்கும். அநீதக்காரர்களான அவ்வூர்வாசிகளை அவன் பிடித்துவிட்டால், அவனது பிடி கடும் நோவினை தரக் கூடியதாகும்.*

*மறுமையின் வேதனையைப் பயப்படும் நபருக்கு, இதில் படிப்பினை உள்ளது. அது, மனிதர்கள் அனைவரும் ஒன்று சேர்க்கப்படும் நாளாகும். அது, இறைவன் முன் நிறுத்தப்படும் நாளாகும்.*

*சொற்ப நாள் தவணைக்காகவே தவிர, அதை நாம் பிற்படுத்தவில்லை. அந்நாளில் அவனின்அனுமதியின்றி எவரும் பேச இயலாது. அவர்களின் கெட்டவரும், நல்லவரும் உள்ளனர். கெட்டவர்களாக இருப்பவர்கள் நரகத்தில் இருப்பார்கள். வேதனையை தாங்க முடியாமல் அதில் அவர்கள் பெரும் கூச்சலிட்டுக் கதறுவார்கள். (11:102-106)*

*அல்லாஹ் தன்னைப்பற்றி உங்களிடம் எச்சரிக்கிறான். (3:30)*

*அந்நாளில் ஒருவன் தன் சகோதரனை விட்டும் தன் தாயை விட்டும், தன் தந்தையை விட்டும், தன் மனைவியை விட்டும், தன் மக்களை விட்டும் மிரண்டு ஓடுவான். அந்நாளில் அவர்களில் ஒவ்வொருவருக்கும் மற்றவரை கவனிக்க இயலாத நிலை ஏற்படும். (80:34–37)*

*மனிதர்களே! உங்கள் இறைவனை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக கியாமத் நாளின் நிகழ்வுகள், பெரும் விஷயமாகும். அந்நாளில் பாலூட்டும் ஒவ்வொரு தாயும், தான் பாலூட்டுவதை மறந்து விடுவதையும், கர்ப்பிணிப் பெண் அனைவரும் தன் சுமையை (கீழே) வைத்து விடுவதையும் நீர் பார்ப்பீர். போதையில் உள்ளவர் போல் (அவர்களை) நீர் காண்பீர். அவர்கள் போதையில் உள்ளவர்களல்லர். எனினும் அல்லாஹ்வின் வேதனை கடுமையானதாகும். (22:1-2)*

*யார் தம் இறைவனின் சமுகத்தை பயப்படுகிறாரோ அவருக்கு இரண்டு சொர்க்கங்கள் உண்டு. (55:46)*

*அவர்களில் சிலர் சிலரிடம் கேள்வி கேட்டுக் கொள்பவர்களாக இருப்பார்கள். எங்களின் குடும்பத்தினர் விஷயத்தில் முன்பு பயப்படுபவர்களாக இருந்தோம். அல்லாஹ் எங்களுக்கு அருள் புரிந்துவிட்டான். எங்களை கொடிய வேதனையிலிருந்து காப்பாற்றிக் கொண்டோம். நிச்சயமாக நாங்கள் முன்பு அவனிடம் 'துஆ' செய்து கொண்டிருந்தோம். நிச்சயமாக அவன், நன்மை செய்பவன். நிகரில்லா அன்பாளன் ஆவான். (52:25-28)*

இந்த பாடத்தில் பிரபல்யமான அதிக வசனங்கள் உண்டு. இதுபோல் நிறைய ஹதீஸ்களும் உண்டு. அவற்றில் சிலவற்றை நினைவுகூர்வோம்.

٣٩٦ – عَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: حَدَّثَنَا رَسُولُ اللَّه ﷺ وَهُوَ الصَّادقُ الْمَصْدُوقُ: " إِنَّ أَحَدَكُمْ يُجْمَعُ خَلْقُهُ فِي بَطْنِ أُمِّه أَرْبَعِينَ يَوْمًا نُطْفَةً ثُمَّ يَكُونُ عَلَقَةً مِثْلَ ذَلِكَ ثُمَّ يَكُونُ مُضْغَةً مِثْلَ ذَلِكَ ثُمَّ يُرْسَلُ الْمَلَكُ فَيَنْفُخُ فِيه الرُّوحَ وَيُؤْمَرُ

بأَرْبَع كَلِمَات: رزْقه وَأَجله وَعَمَله وَشَقيٌّ أَوْ سَعيد فَوَالَّذي لاَ إِلَهَ غَيْرُهُ إِنَّ أَحَدَكُمْ لَيَعْمَلُ بعَمَلِ أَهْلِ الْجَنَّة حَتَّى مَا يَكُونُ بَيْنَهُ وَبَيْنَهَا إِلاَّ ذرَاعٌ فَيَسْبِقُ عَلَيْه الْكتَابُ فَيَعْمَلُ بعَمَلِ أَهْلِ النَّار فَيَدْخُلُهَا وَإِنَّ أَحَدَكُمْ لَيَعْمَلُ بعَمَلِ أَهْلِ النَّارِ حَتَّى مَا يَكُونُ بَيْنَهُ وَبَيْنَهَا إِلاَّ ذرَاعٌ فَيَسْبِقُ عَلَيْه الْكتَابُ فَيَعْمَلُ بعَمَلِ أَهْلِ الْجَنَّة فَيَدْخُلُهَا". مُتَّفَقٌ عَلَيْه.

**396** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உங்களில் ஒருவரின் படைப்பு அவனது தாயின் வயிற்றில் நாற்பது நாளைக்கு விந்தாகவும், பின்பு அதே போல் நாற்பது நாட்கள் 'அலக்'காகவும், பின்பு அதேபோல் சதைக் கட்டியாகவும் ஒன்று சேர்க்கப்படும். பின்பு ஒரு வானவர் அனுப்பப்படுவார். அவர் அதில் உயிரை ஊதுவார். அவரின் உணவு, அவரின் கால அளவு, அவரின் செயல், நல்லவர் அல்லது கெட்டவர் என ஆகிய நான்கு விஷயங்களை எழுதிட வானவருக்கு கட்டளையிடப்படும். அவனைத் தவிர வேறு கடவுள் இல்லாத அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களில் ஒருவர் சொர்க்கவாசிகளின் செயல்களாகச் செய்வார். இறுதியாக அவருக்கும், சொர்க்கத்திற்கும் இடையே ஒரு முழமே இருக்கும். அப்போது அவர் பதிவு ஏடு முந்தி விடும். எனவே அவர் நரகவாசிகளின் செயல்களைச் செய்து, நரகில் நுழைவார். உங்களில் ஒருவர் நரகவாசிகளின் செயலைச் செய்வார். இறுதியில் அவருக்கும் நரகத்திற்கும் இடையே ஒரு முழம் மட்டுமே இருக்கும். அப்போது அவரின் பதிவேடு முந்திவிடும். உடனே அவர் சொர்க்க வாசிகளின் செயலைச் செய்வான். பிறகு அவர் சொர்க்கத்தில் நுழைவார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3208. முஸ்லிம்:2643)**

٣٩٧ - وَعَنْهُ (ابْنُ مَسْعُود) قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ "يُؤْتَى بِجَهَنَّمَ يَوْمَئِذٍ لَهَا سَبْعُونَ أَلْفَ زِمَامٍ مَعَ كُلِّ زِمَامٍ سَبْعُونَ أَلْفَ مَلَكٍ يَجُرُّونَهَا". رَوَاهُ مُسْلِمٌ.

**397** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அந்நாளில் (மறுமையில்) 'ஜஹன்னம்' என்ற நரகம் கொண்டு வரப்படும். அதற்கு 70 ஆயிரம் கடிவாளங்கள் இருக்கும். ஒவ்வொரு கடிவாளத்திற்கும் 70 ஆயிரம் மலக்குகள் இருப்பார்கள். அவர்கள் அதை (ஜஹன்னம் என்ற நரகத்தை) இழுத்து வருவார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2842)**

٣٩٨ - وَعَنْ النُّعْمَان بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ: "إِنَّ أَهْوَنَ أَهْلِ النَّار عَذَابًا يَوْمَ الْقيَامَة لَرَجُلٌ يُوضَعُ فِي أَخْمَصِ قَدَمَيْه جَمْرَتَان يَغْلِي مِنْهُمَا دِمَاغُهُ مَا يَرَى أَنَّ أَحَدًا أَشَدُّ مِنْهُ عَذَابًا وَإِنَّهُ لأَهْوَنُهُمْ عَذَابًا!" مُتَّفَقٌ عَلَيْه.

**398** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நிச்சயமாக, மறுமை நாளில் நரகவாசிகளில் வேதனையால் மிக இலகுவான ஒரு மனிதர் இருப்பார். அவரின் இரு பாதங்களின் கீழ் இரண்டு நெருப்புக் கட்டிகள் வைக்கப்படும். அதன் காரணமாக, அவரது மூளை கொதித்துவிடும். தன்னைவிட வேதனையால் மிகக் கடுமையானவர் என எவரையும் எண்ண மாட்டார். ஆனால், அவர் தான் வேதனையில் இலகுவானவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6561. முஸ்லிம்:213)**

٣٩٩ - وَعَنْ سَمُرَةَ بْنِ جُنْدُب رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ نَبِيَّ اللَّه ﷺ قَالَ: "منْهُمْ مَنْ تَأْخُذُهُ النَّارُ إِلَى كَعْبَيْه وَمنْهُمْ مَنْ تَأْخُذُهُ إِلَى رُكْبَتَيْه وَمنْهُمْ مَنْ تَأْخُذُهُ إِلَى حُجْزَته وَمنْهُمْ مَنْ تَأْخُذُهُ إِلَى تَرْقُوَته" رَوَاهُ مُسْلمٌ. الْحُجْزَةُ: مَعْقدُ الأَزَار تَحْتَ السُّرَّة. وَالتَّرْقُوَةُ: بفَتْح التَّاء وَضَمِّ الْقَاف: هيَ الْعَظْمُ الَّذي عنْدَ ثُغْرَة النَّحْرِ وَللإِنْسَان تَرْقُوَتَان في جَانبَيْ النَّحْر.

**399** ஸமுரா இப்னு ஜுன்துப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(நரகவாசிகளான) அவர்களில் சிலரை அவர்களின் கரண்டை வரை நரகம் பிடித்துக் கொள்ளும். மேலும் சிலரின் இரண்டு முட்டுக்கால்கள் வரை பிடித்துக் கொள்ளும். அவர்களில் சிலரின் இடுப்பு வரை பிடித்துக் கொள்ளும். அவர்களில் சிலரின் தொண்டைக்குழி வரை பிடித்துக் கொள்ளும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2845)**

٤٠٠ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:" يَقُومُ النَّاسُ لِرَبِّ الْعَالَمِينَ حَتَّى يَغِيبَ أَحَدُهُمْ فِي رَشْحِهِ إِلَى أَنْصَافِ أُذُنَيْهِ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَ" الرَّشْحُ" الْعَرَقُ.

**400** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமையில் உலக மக்கள் இறைவனின் முன் மனிதர்கள் எழுந்து நிற்பார்கள். அப்பொழுது அவர்களில் சிலர் (பயம் காரணமாக) தங்களின் பாதி காதுகள் வரை வியர்வையால் மூழ்கி நிற்பார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6531. முஸ்லிம்:2862)**

٤٠١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: خَطَبَنَا رَسُولُ اللَّهِ ﷺ خُطْبَةً مَا سَمِعْت مِثْلَهَا قَطُّ فَقَالَ:" لَوْ تَعْلَمُونَ مَا أَعْلَمُ لَضَحِكْتُمْ قَلِيلاً وَلَبَكَيْتُمْ كَثِيرًا" فَغَطَّى أَصْحَابُ رَسُولِ اللَّهِ ﷺ وُجُوهَهُمْ وَلَهُمْ خَنِينٌ. مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: بَلَغَ رَسُولَ اللَّهِ ﷺ عَنْ أَصْحَابِهِ شَيْءٌ فَخَطَبَ فَقَالَ:" عُرِضَتْ عَلَيَّ الْجَنَّةُ وَالنَّارُ فَلَمْ أَرَ كَالْيَوْمِ فِي الْخَيْرِ وَالشَّرِّ وَلَوْ تَعْلَمُونَ مَا أَعْلَمُ لَضَحِكْتُمْ قَلِيلاً وَلَبَكَيْتُمْ كَثِيرًا" فَمَا أَتَى عَلَى أَصْحَابِ رَسُولِ اللَّهِ ﷺ يَوْمٌ أَشَدُّ مِنْهُ غَطَّوْا رُءُوسَهُمْ وَلَهُمْ خَنِينٌ." الْخَنِينُ" بِالْخَاءِ الْمُعْجَمَةِ: هُوَ الْبُكَاءُ مَعَ غُنَّةٍ وَانْتِشَاقِ الصَّوْتِ مِنْ الأَنْفِ.

**401** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருநாள்) இது போன்று (எப்போதும்) அறவே நான் கேட்டிராத சொற்பொழிவை நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு நிகழ்த்தினார்கள். அப்போது அவர்கள், "நான் அறிந்ததை நீங்கள் அறிந்திருந்தால், குறைவாகச் சிரிப்பீர்கள். அதிகமாக அழுவீர்கள்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் தோழர்கள் தங்களின் முகங்களை மூடிக் கொண்டார்கள். அவர்களிடமிருந்து (அழுகை) முனகல் குரல் ஏற்பட்டது. **(புகாரி:4621. முஸ்லிம்:2359)**

மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது:

நபி (ஸல்) அவர்கள் தன் தோழர்கள் பற்றி ஒரு செய்தி கேள்விப்பட்டு, சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அப்போது அவர்கள், "என் முன் சொர்க்கம், நரகம் எடுத்துக் காட்டப்பட்டது. இன்று போல் (இவ்வளவு) நன்மையையும், தீமையையும் நான் என்றும் கண்டதில்லை. நான் அறிந்ததை நீங்கள் அறிந்திருந்தால், குறைவாக சிரிப்பீர்கள். அதிகமாக அழுவீர்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் தோழர்களுக்கு இதை விட கடுமையான நாள் வந்ததில்லை. அவர்கள் தங்களின் முகத்தை மூடிக் கொண்டார்கள். (அழுகையின்) முனகல் அவர்களிடம் ஏற்பட்டது.

٤٠٢ – وَعَنْ الْمِقْدَادِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" تُدْنَى الشَّمْسُ يَوْمَ الْقِيَامَةِ مِنَ الْخَلْقِ حَتَّى تَكُونَ مِنْهُمْ كَمِقْدَارِ مِيلٍ". قَالَ سُلَيْمُ بْنُ عَامِرٍ الرَّاوِي عَنْ الْمِقْدَادِ: فَوَاللَّهِ مَا أَدْرِي مَا يَعْنِي بِالْمِيلِ: أَمَسَافَةَ الأَرْضِ أَمْ الْمِيلَ الَّذِي تُكْتَحَلُ بِهِ الْعَيْنُ –" فَيَكُونُ النَّاسُ عَلَى قَدْرِ أَعْمَالِهِمْ فِي الْعَرَقِ فَمِنْهُمْ مَنْ يَكُونُ إِلَى كَعْبَيْهِ وَمِنْهُمْ مَنْ يَكُونُ إِلَى رُكْبَتَيْهِ وَمِنْهُمْ مَنْ يَكُونُ إِلَى حِقْوَيْهِ وَمِنْهُمْ مَنْ يُلْجِمُهُ الْعَرَقُ إِلْجَامًا" وَأَشَارَ رَسُولُ اللَّهِ ﷺ بِيَدِهِ إِلَى فِيهِ. رَوَاهُ مُسْلِمٌ.

**402** மிக்தாத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“கியாமத் நாளில் சூரியன் மற்ற படைப்புகளுக்கு நெருக்கமாக - ஒரு மைல் தூர அளவுக்கு மனிதர்களுக்கு அருகில் இருக்கும். மேலும் மக்கள் அவர்களது செயல்களின் அளவுக்கு ஏற்ப வியர்வையில் (மூழ்கி) இருப்பர். அவர்களில் சிலர் தங்களின் இரு கரண்டை வரை (வியர்வையில்) இருப்பர். மேலும் அவர்களில் சிலர் தங்களின் இரண்டு முட்டுக்கால்கள் வரை (வியர்வையில்) இருப்பர். மேலும் அவர்களில் சிலர் தங்களின் இடுப்புகள் வரை (வியர்வையில்) இருப்பர். மேலும் அவர்களில் சிலர் தங்கள் வாய் வரை (வியர்வையில்) இருப்பர்” என்று கூறிய நபி (ஸல்) அவர்கள் தன் கையை ‘வாய்’ வரை சுட்டிக்காட்டினார்கள். **(முஸ்லிம்:2864)**

மிக்தாத் (ரழி) கூறுகிறார்கள்:

(மைல் என்ற வார்த்தைக்கு இருபொருள் உள்ளதால்) ஒரு மைல் என்பதை பூமியின் தூரத்தைக் கணக்கிட்டு கூறினார்களா? அல்லது கண்ணிற்கு ‘சுர்மா’ போட பயன்படும் குச்சியைக் கூறினார்களா? என்பதை நாம் அறியவில்லை.

٤٠٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " يَعْرَقُ النَّاسُ يَوْمَ الْقِيَامَةِ حَتَّى يَذْهَبَ عَرَقُهُمْ فِي الأَرْضِ سَبْعِينَ ذِرَاعًا وَيُلْجِمُهُمْ حَتَّى يَبْلُغَ آذَانَهُمْ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَمَعْنَى " يَذْهَبُ فِي الأَرْضِ": يَنْزِلُ وَيَغُوصُ.

**403** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மறுமை நாளில் மக்கள் வியர்வையில் (மூழ்கி) இருப்பார்கள். பூமியில் 70 முழம் வரை அவர்களின் வியர்வை செல்லும். அவர்களின் காதுகளை தொடும் அளவுக்கு அவர்களை வியர்வை சூழ்ந்து கொள்ளும்” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6532. முஸ்லிம்:2863)**

٤٠٤ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( قَالَ: كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ إِذْ سَمِعَ وَجْبَةً فَقَالَ: " هَلْ تَدْرُونَ مَا هَذَا ؟ قُلْنَا: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ. قَالَ: هَذَا حَجَرٌ رُمِيَ بِهِ فِي النَّارِ مُنْذُ سَبْعِينَ خَرِيفًا فَهُوَ يَهْوِي فِي النَّارِ الأنَ حَتَّى انْتَهَى إِلَى قَعْرِهَا فَسَمِعْتُمْ وَجْبَتَهَا". رَوَاهُ مُسْلِمٌ.

**404** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடைய சமூகத்தில் நாங்கள் இருந்தோம். அப்போது பெரும் சப்தத்தைக் கேட்டார்கள். “இது என்ன சப்தம் என்பதை நீங்கள் அறிவீர்களா?” என்று கேட்டார்கள். “அல்லாஹ்வும் அவனது தூதரும் மிக அறிந்தவர்கள்” என்று நாங்கள் கூறினோம். “70 வருடங்களுக்கு முன் நரகத்தில் எறியப்பட்ட கல் இது. அது இப்போதுதான் நரகத்தின் அடிப்பாகத்தை போய் சேர்ந்திருக்கிறது. அந்த சப்தத்தைத்தான் இப்பொழுது நீங்கள் கேட்டீர்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2844)**

٤٠٥ – وَعَنْ عَدِيِّ بْنِ حَاتِمٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " مَا مِنْكُمْ مِنْ أَحَدٍ إِلاَّ سَيُكَلِّمُهُ رَبُّهُ لَيْسَ بَيْنَهُ وَبَيْنَهُ تَرْجُمَانٌ فَيَنْظُرُ أَيْمَنَ مِنْهُ فَلاَ يَرَى إِلاَّ مَا قَدَّمَ وَيَنْظُرُ أَشْأَمَ مِنْهُ فَلاَ يَرَى إِلاَّ مَا قَدَّمَ وَيَنْظُرُ بَيْنَ يَدَيْهِ فَلاَ يَرَى إِلاَّ النَّارَ تِلْقَاءَ وَجْهِهِ فَاتَّقُوا النَّارَ وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**405** அதீ இப்னு ஹாதம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் எவரிடமும் தன் இறைவன் (மறுமையில்) பேசாமல் இருக்கமாட்டான். அவனுக்கும் அவருக்குமிடையே மொழி பெயர்ப்பாளர் இருக்கமாட்டார். அப்பொழுது அவர் தனது வலது புறம்

பார்ப்பான். அங்கே தான் முன்பு அனுப்பி வைத்த (செயல்களை)த் தவிர வேறொன்றையும் பார்க்க மாட்டார். பின்பு இடது புறம் பார்ப்பார். தான் முன்பு செய்திட்டவற்றைத் தவிர (வேறொன்றையும்) பார்க்க மாட்டார். தனக்கு முன்னே பார்ப்பார். அங்கே முகத்துக்கு நேராக நரகத்தைத் தவிர (மற்றதைப்) பார்க்க மாட்டார். எனவே பேரீத்தம் பழத்(தின் பாதியை தர்மம் செய்)தேனும் நரக நெருப்பை அஞ்சிக் கொள்ளுங்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6023. முஸ்லிம்:1016)**

٤٠٦ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ: رَسُولُ اللَّهِ ﷺ "إِنِّي أَرَى مَا لاَ تَرَوْنَ: أَطَّتِ السَّمَاءُ وَحُقَّ لَهَا أَنْ تَئِطَّ مَا فِيهَا مَوْضِعُ أَرْبَعِ أَصَابِعَ إِلاَّ وَمَلَكٌ وَاضِعٌ جَبْهَتَهُ سَاجِدًا لِلَّهِ تَعَالَى. وَاللَّهِ لَوْ تَعْلَمُونَ مَا أَعْلَمُ لَضَحِكْتُمْ قَلِيلاً وَلَبَكَيْتُمْ كَثِيرًا وَمَا تَلَذَّذْتُمْ بِالنِّسَاءِ عَلَى الْفُرُشِ وَلَخَرَجْتُمْ إِلَى الصُّعُدَاتِ تَجْأَرُونَ إِلَى اللَّهِ تَعَالَى". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ: وَ" أَطَّتْ" بِفَتْحِ الْهَمْزَةِ وَتَشْدِيدِ الطَّاءِ وَ" تَئِطُّ" بِفَتْحِ التَّاءِ وَبَعْدَهَا هَمْزَةٌ مَكْسُورَةٌ وَالأَطِيطُ: صَوْتُ الرَّحْلِ وَالْقَتَبِ وَشِبْهِهِمَا. وَمَعْنَاهُ أَنَّ كَثْرَةَ مَنْ فِي السَّمَاءِ مِنَ الْمَلاَئِكَةِ الْعَابِدِينَ قَدْ أَثْقَلَتْهَا حَتَّى أَطَّتْ. وَ" الصُّعُدَاتُ" بِضَمِّ الصَّادِ وَالْعَيْنِ: الطُّرُقَاتُ وَمَعْنَى تَجْأَرُونَ: تَسْتَغِيثُونَ.

**406** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் பார்த்திராத ஒன்றை நான் பார்க்கிறேன். நீங்கள் கேட்காத ஒன்றை நான் கேட்கிறேன். வானம் இரைகின்றது. அது இரைந்திட அதற்கு உரிமை உண்டு. நான்கு விரல்கள் அளவுக்கு இடம் இருந்து. அதில் தன் நெற்றியை வைத்து அல்லாஹ்வுக்காக 'ஸஜ்தா' செய்யாமல் ஒரு மலக்கும் இருப்பதில்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக, நான் அறிந்ததை நீங்கள் அறிந்தால் குறைவாகச் சிரிப்பீர்கள். அதிகமாக அழுவீர்கள். படுக்கையில் மனைவியிடம் நீங்கள் இன்பம் பெறமாட்டீர்கள். வீதிகளிலும் அல்லாஹ்விடம் அபயம் தேடியவர்களாகவே வெளியேறுவீர்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:2312. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٠٧ - وَعَنْ أَبِي بَرْزَةَ - بِرَاءٍ ثُمَّ زَايٍ - نَضْلَةَ بْنِ عُبَيْدٍ الأَسْلَمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" لاَ تَزُولُ قَدَمَا عَبْدٍ يَوْمَ الْقِيَامَةِ حَتَّى يُسْأَلَ عَنْ عُمُرِهِ فِيمَ أَفْنَاهُ وَعَنْ عَمَلِهِ فِيمَ فَعَلَ وَعَنْ مَالِهِ مِنْ أَيْنَ اكْتَسَبَهُ وَفِيمَ أَنْفَقَهُ وَعَنْ جِسْمِهِ فِيمَ أَبْلاَهُ ؟". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**407** அபூபர்ஸா என்ற நழ்லா இப்னு உபைத் அஸ்லமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஓர் அடியான் தன் ஆயுளை எப்படிக் கழித்தான்? என்றும், தன் கல்வியை எதற்குப் பயன்படுத்தினான்? என்றும், தன் சொத்தை எப்படி சம்பாதித்து, எதில் செலவழித்தான்? என்றும், தன் உடலை எதில் பயன்படுத்தினான்? என்றும் அவனிடம் கேள்வி கேட்கப்படும் வரை, அந்த அடியானின் இரு கால்களும் (மறுமையில் அவன் நிற்கும் இடத்தைவிட்டு சிறிதளவும்) நகராது'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2417. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٠٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَرَأَ رَسُولُ اللَّهِ ﷺ: ) يَوْمَئِذٍ تُحَدِّثُ أَخْبَارَهَا ( ثُمَّ قَالَ:" أَتَدْرُونَ مَا أَخْبَارُهَا ؟" قَالُوا: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ. قَالَ:" فَإِنَّ أَخْبَارَهَا أَنْ تَشْهَدَ عَلَى كُلِّ عَبْدٍ أَوْ أَمَةٍ بِمَا عَمِلَ عَلَى ظَهْرِهَا تَقُولُ: عَمِلْتَ كَذَا وَكَذَا فِي يَوْمِ كَذَا وَكَذَا فَهَذِهِ أَخْبَارُهَا". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**408** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அன்றைய நாளில் (கியாமத் நாளில்) பூமி அதன் செய்திகளை அறிவிக்கும் என்ற (ஜில்ஜால் அத்தியாயத்தின்) வசனத்தை நபி (ஸல்) அவர்கள் ஓதி விட்டு, பின்பு, “அதன் செய்திகள் என்ன

என்பதை நீங்கள் அறிவீர்களா?'' என்று கேட்டார்கள். ''அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்'' என்று நபித்தோழர்கள் கூறினர். பூமியின் செய்திகள் என்பது, ஒவ்வொரு அடியாரான ஆணும், பெண்ணும் பூமியின் மேற்பரப்பில் செய்ததைப் பற்றி சாட்சி கூறுவதாகும். ''நீ இந்த இந்த நாளில் இந்த இந்த செயல்களைச் செய்தாய்'' என்று பூமி கூறும். இதுவே, அதன் செய்திகளாகும்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:3353. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையில் ''யஹ்யா இப்னு அபூ சுலைமான் அல்மதனீ என்ற பலவீனர்'' இடம் பெறுகிறார்)**

٤٠٩ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ" كَيْفَ أَنْعَمُ وَصَاحِبُ الْقَرْنِ قَدْ الْتَقَمَ الْقَرْنَ وَاسْتَمَعَ الأذُنَ! مَتَى يُؤْمَرُ بِالنَّفْخِ. فَيَنْفُخُ ؟" فَكَأَنَّ ذَلِكَ ثَقُلَ عَلَى أَصْحَابِ رَسُولِ اللَّه ﷺ فَقَالَ لَهُمْ: قُولُوا:" حَسْبُنَا اللَّهُ وَنِعْمَ الْوَكِيلُ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ." الْقَرْنُ" هُوَ الصُّورُ الَّذِي قَالَ اللَّهُ تَعَالَى: وَنُفِخَ فِي الصُّورِ كَذَا فَسَّرَهُ رَسُولُ اللَّه ﷺ.

**409** அபூஸயீத் அல்-குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(சூர் எனும் ஊதும்) குழலை ஊதுபவர், அந்தக் குழலை (வாயில்) வைத்து விட்டார். எப்போது அது ஊதப்பட வேண்டும் என்று அவருக்கு கட்டளையிடப்படுகிறதோ, அப்போது அதை ஊதுவார். (கியாமத் நாள் இவ்வளவு நெருக்கத்தில் இருக்கும்பொழுது உலக இன்பங்களில் நாம் எவ்வாறு ஈடுபட முடியும்!) நபி (ஸல்) இவ்வாறு கூறியது, நபித்தோழர்களுக்கு கடினமாக இருந்தது. (அச்சத்தையும், கவலையையும் அளித்தது) அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், ''ஹஸ்புனல்லாஹ், வநிஃமல் வகீல்'' (அல்லாஹ் எங்களுக்கு போதுமானவன். அவனே சிறந்த பொறுப்பாளியாக உள்ளான்) என்று கூறுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2431. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். அறிவிப்பாளர் வரிசையில் அதிய்யா அவ்ஃபீ என்ற பலவீனர் இடம் பெறுகிறார்)**

٤١٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّه ﷺ:" مَنْ خَافَ أَدْلَجَ وَمَنْ أَدْلَجَ بَلَغَ الْمَنْزِلَ. أَلاَ إِنَّ سِلْعَةَ اللَّه غَالِيَةٌ أَلاَ إِنَّ سِلْعَةَ اللَّه الْجَنَّةُ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ. وَ" أَدْلَجَ" بِإِسْكَانِ الدَّالِ وَمَعْنَاهُ سَارَ مِنْ أَوَّلِ اللَّيْلِ. وَالْمُرَادُ التَّشْمِيرُ فِي الطَّاعَةِ وَاللَّهُ أَعْلَمُ.

**410** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''ஒருவர் (அல்லாஹ்வைப்) பயந்தால், முன் இரவே (வணக்கம் புரிய) நடக்க ஆரம்பிப்பார். முன் இரவே ஒருவர் நடந்தால், அவர் தன் தங்குமிடத்தை (விரைவில்) அடைவார். அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் வெகுமதி, மதிப்பு மிக்கதாகும். அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் வெகுமதி என்பது சொர்க்கமாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(இது திர்மிதீயில் (2450) உள்ளது. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். அறிவிப்பாளர் வரிசையில் யஸீத் இப்னு ஸினான் ரஹாவீ என்ற பலவீனர் இடம் பெறுகிறார்).**

٤١١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: سَمِعْتُ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ:" يُحْشَرُ النَّاسُ يَوْمَ الْقِيَامَةِ حُفَاةً عُرَاةً غُرْلاً". قُلْتُ: يَا رَسُولَ اللَّه الرِّجَالُ وَالنِّسَاءُ يَنْظُرُ بَعْضُهُمْ إِلَى بَعْضٍ ؟ قَالَ" يَا عَائِشَةُ الأمْرُ أَشَدُّ مِنْ أَنْ يُهِمَّهُمْ ذَلِكَ" وَفِي رِوَايَةٍ:" الأمْرُ أَهَمُّ مِنْ أَنْ يَنْظُرَ بَعْضُهُمْ إِلَى بَعْضٍ!" مُتَّفَقٌ عَلَيْهِ" غُرْلاً" بِضَمِّ الْغَيْنِ الْمُعْجَمَةِ: أَيْ غَيْرَ مَخْتُونِينَ.

**411** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மறுமை நாளில் மனிதர்கள் காலில் செருப்பு அணியாதவர்களாக, ஆடை இல்லாதவர்களாக, ‘கத்னா’ செய்யப்படாதவர்களாக (மஹ்ஷர் மைதானத்தில்) ஒன்று சேர்க்கப்படுவார்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்பொழுது நான், “இறைத்தூதர் அவர்களே! (நிர்வாணமாகவா?) ஆண்கள், பெண்கள் அனைவரும் அவர்களில் சிலர் சிலரைப் பார்ப்பார்களே!” என்று நான் கேட்டேன். “ஆயிஷாவே! அன்றைய நாளின் விஷயம், அவர்களை (இதுமாதிரி) செய்ய நாடுகின்ற ஒன்றை விட மிகக் கடுமையானது” என்று கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில், “அன்றைய நாளின் விஷயம், அவர்களில் ஒருவர் மற்றொருவரைப் பார்ப்பதை விட மிகவும் கடினமானதாகும்” என்று உள்ளது. **(புகாரி:6527. முஸ்லிம்:2859)**

## ٥١ – باب الرجاء

## பாடம் : 51 - அல்லாஹ்வின் மீது ஆதரவு வைத்தல்

**قَالَ اللّٰهُ تَعَالَى: قُلْ يَا عِبَادِيَ الَّذِينَ أَسْرَفُوا عَلَى أَنْفُسِهِمْ لاَ تَقْنَطُوا مِنْ رَحْمَةِ اللّٰهِ إِنَّ اللّٰهَ يَغْفِرُ الذُّنُوبَ جَمِيعًا إِنَّهُ هُوَ الْغَفُورُ الرَّحِيمُ. وَقَالَ تَعَالَى: وَهَلْ نُجَازِي إِلاَّ الْكَفُورَ. وَقَالَ تَعَالَى: إِنَّا قَدْ أُوحِيَ إِلَيْنَا أَنَّ الْعَذَابَ عَلَى مَنْ كَذَّبَ وَتَوَلَّى. وَقَالَ تَعَالَى: وَرَحْمَتِي وَسِعَتْ كُلَّ شَيْءٍ.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே) நீர் கூறுவீராக! தங்கள் விஷயத்தில் வரம்பு மீறி நடந்து கொண்ட என் அடியார்களே! அல்லாஹ்வின் கருணையில் நீங்கள் நம்பிக்கை இழந்து விட வேண்டாம். நிச்சயமாக அல்லாஹ், அனைத்து குற்றங்களையும் மன்னிப்பான். நிச்சயமாக அவன் மன்னிப்பவனாகவும், நிகரில்லா அன்பாளனாகவும் இருக்கின்றான். (39:53)*

*இறைமறுப்பாளர்களுக்காக அன்றி (மற்றவர்களுக்கு இந்த) கூலியை நாம் கொடுப்போமா? (34:17)*

*அல்லாஹ் அளிக்கும் வேதனை நிச்சயமாக இருக்கின்றது-பொய்யென்று தூற்றுபவர்க்கும், புறக்கணிப்பவர்க்கும் என்று எங்களுக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது. (20:48)*

*என் அருட்கொடை, ஒவ்வொன்றிலும் விசாலமாகிவிட்டது. (7:156)*

٤١٢ – وَعَنْ عُبَادَةَ بْنِ الصَّامِتِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: "مَنْ شَهِدَ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللّٰهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ وَأَنَّ عِيسَى عَبْدُ اللّٰهِ وَرَسُولُهُ وَكَلِمَتُهُ أَلْقَاهَا إِلَى مَرْيَمَ وَرُوحٌ مِنْهُ وَأَنَّ الْجَنَّةَ حَقٌّ وَالنَّارَ حَقٌّ أَدْخَلَهُ اللّٰهُ الْجَنَّةَ عَلَى مَا كَانَ مِنَ الْعَمَلِ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ: "مَنْ شَهِدَ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللّٰهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللّٰهِ حَرَّمَ اللّٰهُ عَلَيْهِ النَّارَ".

**412** உபாதா இப்னு ஸாமித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை. அவன் தனித்தவன், அவனுக்கு இணை எவரும் இல்லை என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனது அடியாராகவும், தூதராகவும் உள்ளார் என்றும், ஈஸா (அலை) அவர்கள் அல்லாஹ்வின் அடியாராகவும், தூதராகவும் உள்ளார் என்றும், மர்யமிடம் அல்லாஹ் போட்ட அவனது வார்த்தையாகவும், அவனிடம் உள்ள உயிராகவும் உள்ளார் என்றும், சொர்க்கமும், நரகமும் உண்மை என்றும் ஒருவர் சாட்சி கூறினால், அவரது செயல்களுக்கு ஏற்றபடி சொர்க்கத்தில் அல்லாஹ் அவரை நுழையச் செய்வான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:3435. முஸ்லிம்:28)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில்,

"லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" என்று சாட்சி கூறினால், அவர்மீது நரகத்தை அல்லாஹ் தடை செய்து விட்டான்" என்று உள்ளது.

٤١٣ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ النَّبِيُّ ﷺ: " يَقُولُ اللَّهُ عَزَّ وَجَلَّ: مَنْ جَاءَ بِالْحَسَنَةِ فَلَهُ عَشْرُ أَمْثَالِهَا أَوْ أَزِيدُ وَمَنْ جَاءَ بِالسَّيِّئَةِ فَجَزَاؤُهُ سَيِّئَةٌ مِثْلُهَا أَوْ أَغْفِرُ وَمَنْ تَقَرَّبَ مِنِّي شِبْرًا تَقَرَّبْتُ مِنْهُ ذِرَاعًا وَمَنْ تَقَرَّبَ مِنِّي ذِرَاعًا تَقَرَّبْتُ مِنْهُ بَاعًا وَمَنْ أَتَانِي يَمْشِي أَتَيْتُهُ هَرْوَلَةً وَمَنْ لَقِيَنِي بِقُرَابِ الأَرْضِ خَطِيئَةً لاَ يُشْرِكُ بِي شَيْئًا لَقِيتُهُ بِمِثْلِهَا مَغْفِرَةً". رَوَاهُ مُسْلِمٌ. مَعْنَى الْحَدِيثِ:" وَمَنْ تَقَرَّبَ" إِلَيَّ بِطَاعَتِي" تَقَرَّبْتُ" إِلَيْهِ بِرَحْمَتِي وَإِنْ زَادَ زِدْتُ" فَإِنْ أَتَانِي يَمْشِي" وَأَسْرَعَ فِي طَاعَتِي" أَتَيْتُهُ هَرْوَلَةً" أَيْ صَبَبْتُ عَلَيْهِ الرَّحْمَةَ وَسَبَقْتُهُ بِهَا وَلَمْ أُحْوِجْهُ إِلَى الْمَشْيِ الْكَثِيرِ فِي الْوُصُولِ إِلَى الْمَقْصُودِ." وَقُرَابُ الأَرْضِ" بِضَمِّ الْقَافِ – وَيُقَالُ بِكَسْرِهَا وَالضَّمُّ أَصَحُّ وَأَشْهَرُ – وَمَعْنَاهُ: مَا يُقَارِبُ مِلأَهَا وَاللَّهُ أَعْلَمُ.

**413** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் ஒரு நன்மை(யைச் செய்து) வந்தால், அவருக்கு அது போன்ற பத்து நன்மைகள் உண்டு. அல்லது அதை விடவும் கூடுதலாகத் தருவேன். ஒருவன் தீமையைச் செய்தால், தீமையின் கூலியும் அது போன்றதே. அல்லது அதனை மன்னித்தும் விடுவேன். என்னிடம் ஒரு அடி நெருங்கினால் அவரிடம் நான் ஒரு முழம் நெருங்குவேன். என்னிடம் ஒரு முழம் நெருங்கினால், அவரிடம் நான் இரண்டு முழம் நெருங்குவேன். என்னிடம் அவர் நடந்து வந்தால், அவரிடம் நான் விரைந்தோடி வருவேன். எனக்கு எதையும் இணை வைக்காதவராக, பூமி நிரம்ப தவறு செய்தவராக என்னிடம் ஒருவர் வந்தால், அது போன்ற அளவுக்கு மன்னிப்புடன் அவனை நான் சந்திப்பேன் என்று அல்லாஹ் கூறுகிறான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2687)**

**ஹதீஸின் கருத்து:** என் பக்கம் நெருங்குவது என்பது, வணக்கத்தின் மூலமாகும். அவனிடம் நான் நெருங்குவது அருள் புரிவது ஆகும். அவன் (வணக்கத்தை) அதிகமாக்கினால் நானும் (அருள்புரிவதை) அதிகமாக்குவேன். என்னிடம் நடந்து வந்தால் என்பது, என் வழிபாட்டில் தீவிரம் காட்டுவதாகும். நான் விரைந்து வருவேன் என்பது, அவன் மீது அருளைச் சொரிவேன் என்பதாகும். இதன் மூலம் அவனை முந்துவேன். அதை அடைந்திட அதிகம் நடக்க அவனை விட மாட்டேன். பூமியின் நிரப்பம் என்பது, அதை நிரம்பச் செய்ய முயற்சிப்பதாகும். (அல்லாஹ் மிக அறிந்தவன்)

٤١٤ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: جَاءَ أَعْرَابِيٌّ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ مَا الْمُوجِبَتَانِ ؟ قَالَ:" مَنْ مَاتَ لاَ يُشْرِكُ بِاللَّهِ شَيْئًا دَخَلَ الْجَنَّةَ وَمَنْ مَاتَ يُشْرِكُ بِهِ شَيْئًا دَخَلَ النَّارَ". رَوَاهُ مُسْلِمٌ.

**414** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு கிராமப்புற அரபி வந்து, "இறைத்தூதர் அவர்களே! சொர்க்கம் - நரகத்தை அவசியமாக்கிடும் இரண்டு விஷயங்கள் என்ன?" என்று கேட்டார். அதற்கு, "ஒருவர் அல்லாஹ்வுக்கு எதையும் இணை வைக்காமல் இறந்து விட்டால், அவர் சொர்க்கத்தில் நுழைவார். அவனுக்கு எதையேனும் இணை வைத்தவராக இறந்துவிட்டால், அவர் நரகில் நுழைவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:93)**

٤١٥ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ – وَمُعَاذٌ رَدِيفُهُ عَلَى الرَّحْلِ – قَالَ:" يَا مُعَاذُ" قَالَ: لَبَّيْكَ يَا رَسُولَ اللَّهِ وَسَعْدَيْكَ قَالَ:" يَا مُعَاذُ" قَالَ: لَبَّيْكَ يَا رَسُولَ اللَّهِ وَسَعْدَيْكَ. قَالَ:" يَا مُعَاذُ" قَالَ: لَبَّيْكَ يَا رَسُولَ اللَّهِ وَسَعْدَيْكَ – ثَلاَثًا

– قَالَ:" مَا مِنْ عَبْدٍ يَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ صِدْقًا مِنْ قَلْبِهِ إِلاَّ حَرَّمَهُ اللَّهُ عَلَى النَّارِ"! قَالَ: يَا رَسُولَ اللَّهِ أَفَلاَ أُخْبِرُ بِهَا النَّاسَ فَيَسْتَبْشِرُوا ؟ قَالَ:" إِذَنْ يَتَّكِلُوا" فَأَخْبَرَ بِهَا مُعَاذٌ عِنْدَ مَوْتِهِ تَأَثُّمًا مُتَّفَقٌ عَلَيْهِ. وَقَوْلُهُ" تَأَثُّمًا" أَيْ خَوْفًا مِنَ الأَثْمِ فِي كَتْمِ هَذَا الْعِلْمِ.

**415** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், ஒட்டகத்தின் அம்பாரி முதுகுத் (தொட்டி)யில் தனக்கு பின்னே அமர்ந்திருந்த முஆத் (ரழி) அவர்களிடம், "முஆதே!" என்று அழைத்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! இதோ உள்ளேன்" என்றார். "முஆதே!" என்று அழைத்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! இதோ உள்ளேன்" என்றார். "முஆதே!" என்று அழைத்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! இதோ உள்ளேன்" என்றார். மூன்று தடவை இப்படி அழைக்க, அவரும் பதில் கூறினார். "அல்லாஹ்வைத் தவிர வேறு கடவுள் இல்லை எனவும், முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாராகவும், அவனது திருத்தூதராகவும் உள்ளார் என்றும் தன் உள்ளத்தில் உண்மையாக ஒரு அடியார் கூறினால், அவருக்கு நரகை அல்லாஹ் தடை செய்யாமல் இருப்பதில்லை" என்று கூறினார்கள். அப்போது முஆத் (ரழி) அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! இதை மக்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? இதனால் மக்கள் மகிழ்ச்சி அடைவார்களே!" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறு கூறினால், அவர்கள் (பொடு போக்காகி) அதையே நம்பிக் கொண்டு (நற்செயல் புரியாமல் இருந்து) விடுவார்கள்" என்று கூறினார்கள். முஆத் (ரழி) அவர்கள் தன் மரணத்தின் போது, தாம் முன்னர் அறிந்ததைக் கூறாமல் இருப்பதை பயந்தவர்களாக இதை அறிவித்தார்கள். **(புகாரி:128. முஸ்லிம்:32)**

٤١٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ أَوْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا شَكَّ الرَّاوِي وَلاَ يَضُرُّ الشَّكُّ فِي عَيْنِ الصَّحَابِيِّ لأَنَّهُمْ كُلَّهُمْ عُدُولٌ قَالَ: لَمَّا كَانَ يَوْمُ غَزْوَةِ تَبُوكَ أَصَابَ النَّاسَ مَجَاعَةٌ فَقَالُوا: يَا رَسُولَ اللَّهِ لَوْ أَذِنْتَ لَنَا فَنَحَرْنَا نَوَاضِحَنَا فَأَكَلْنَا وَادَّهَنَّا. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" افْعَلُوا". فَجَاءَ عُمَرُ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ إِنْ فَعَلْتَ قَلَّ الظَّهْرُ وَلَكِنْ ادْعُهُمْ بِفَضْلِ أَزْوَادِهِمْ ثُمَّ ادْعُ اللَّهَ لَهُمْ عَلَيْهَا بِالْبَرَكَةِ لَعَلَّ اللَّهَ أَنْ يَجْعَلَ لَهُمْ فِي ذَلِكَ الْبَرَكَةَ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ" نَعَمْ" فَدَعَا بِنَطْعٍ فَبَسَطَهُ ثُمَّ دَعَا بِفَضْلِ أَزْوَادِهِمْ فَجَعَلَ الرَّجُلُ يَجِيءُ بِكَفِّ ذُرَةٍ وَيَجِيءُ الآخَرُ بِكَفِّ تَمْرٍ وَيَجِيءُ الآخَرُ بِكِسْرَةٍ حَتَّى اجْتَمَعَ عَلَى النَّطْعِ مِنْ ذَلِكَ شَيْءٌ يَسِيرٌ فَدَعَا رَسُولُ اللَّهِ ﷺ بِالْبَرَكَةِ ثُمَّ قَالَ:" خُذُوا فِي أَوْعِيَتِكُمْ" فَأَخَذُوا فِي أَوْعِيَتِهِمْ حَتَّى مَا تَرَكُوا فِي الْعَسْكَرِ وِعَاءً إِلاَّ مَلَؤُوهُ وَأَكَلُوا حَتَّى شَبِعُوا وَفَضَلَ فَضْلَةٌ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنِّي رَسُولُ اللَّهِ لاَ يَلْقَى اللَّهَ بِهِمَا عَبْدٌ غَيْرَ شَاكٍّ فَيُحْجَبَ عَنِ الْجَنَّةِ" رَوَاهُ مُسْلِمٌ.

**416** அபூஹுரைரா (ரழி) அவர்கள் அல்லது அபூஸயீத் அல்-குத்ரீ (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

தபூக் போரின் போது, மக்களுக்குப் பசி ஏற்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு நீங்கள் அனுமதித்தால், எங்களின் பயண ஒட்டகைகளை நாங்கள் அறுத்து உண்போம். மேலும் அதன் (கொழுப்பை) எண்ணையாக்கி பயன்படுத்திக் கொள்வோம்" என்று மக்கள் கூறினார்கள். அதற்கு, "அவ்வாறே செய்யுங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். அப்போது உமர் (ரழி) வந்தார்கள். "இறைத்தூதர் அவர்களே!நீங்கள் இதைச் செய்தால், வாகனங்கள் குறைந்து விடும். ஆகவே, அவர்களின் பயண உணவுகளில் மீதியானவற்றை அவர்களைக் கொண்டு வரச் செய்யுங்கள். பின்பு அதில் அவர்களுக்கு 'அபிவிருத்தி' ஏற்பட துஆச் செய்யுங்கள். இதனால் அல்லாஹ், அதில் அபிவிருத்தியை ஏற்படுத்தக்கூடும்" என்று உமர் (ரழி) கூறினார்கள். அதற்கு, "சரி" என நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, ஒரு தோல் விரிப்பைக் கொண்டு வரச்செய்து, அதை விரித்தார்கள். பின்பு, அவர்களின் பயண உணவுகளின் மிச்சத்தைக் கொண்டு

வரச் செய்தார்கள். ஒருவர் தன் கைப்பிடி அளவுக்குச் சோளம் கொண்டு வந்தார். மற்றொருவர் தன் கைப்பிடி அளவுக்குப் பேரீத்தம் பழம் கொண்டு வந்தார். மற்றொருவர் ரொட்டித் துண்டைக் கொண்டு வந்தார். முடிவாக, இதன் மூலம் அந்தத் தோல் விரிப்பில் சிறிதளவு சேர்ந்தது. நபி (ஸல்) அவர்கள் அபிவிருத்தி ஏற்பட துஆச் செய்தார்கள். பின்பு, "உங்களின் பைகளில் எடுத்து நிரப்பிக் கொள்ளுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்களும் தங்களின் பைகளில் எடுத்துக் கொண்டார்கள். பை எதையும் அவர்கள் நிரப்பாமல் காலியாக விட்டு வைக்கவில்லை. வயிறு நிரம்பச் சாப்பிட்டார்கள். மேலும், மேலும் அது மிச்சமாகவே இருந்தது. "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை எனவும், நான் அல்லாஹ்வின் தூதர் எனவும் நான் சாட்சி கூறுகிறேன். சந்தேகம் இல்லாதிருக்கும் ஒரு அடியான் இவ்விரண்டுடன் அல்லாஹ்வைச் சந்திக்கும்போது, அவர் சொர்க்கத்தை விட்டும் தடுக்கப்பட மாட்டார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:27)**

٤١٧ – وَعَنْ عِتْبَانَ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ – وَهُوَ مِمَّنْ شَهِدَ بَدْرًا – قَالَ: كُنْتُ أُصَلِّي لِقَوْمِي بَنِي سَالِمٍ وَكَانَ يَحُولُ بَيْنِي وَبَيْنَهُمْ وَادٍ إِذَا جَاءَتْ الأَمْطَارُ فَيَشُقُّ عَلَيَّ اجْتِيَازُهُ قَبَلَ مَسْجِدِهِمْ فَجِئْتُ رَسُولَ اللَّهِ ﷺ: فَقُلْتُ لَهُ: إِنِّي أَنْكَرْتُ بَصَرِي وَإِنَّ الْوَادِيَ الَّذِي بَيْنِي وَبَيْنَ قَوْمِي يَسِيلُ إِذَا جَاءَتْ الأَمْطَارُ فَيَشُقُّ عَلَيَّ اجْتِيَازُهُ فَوَدِدْتُ أَنَّكَ تَأْتِي فَتُصَلِّي فِي بَيْتِي مَكَانًا أَتَّخِذُهُ مُصَلًّى. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " سَأَفْعَلُ". فَغَدَا رَسُولُ اللَّهِ وَأَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ بَعْدَ مَا اشْتَدَّ النَّهَارُ وَاسْتَأْذَنَ رَسُولُ اللَّهِ ﷺ فَأَذِنْتُ لَهُ فَلَمْ يَجْلِسْ حَتَّى قَالَ: " أَيْنَ تُحِبُّ أَنْ أُصَلِّيَ مِنْ بَيْتِكَ ؟" فَأَشَرْتُ لَهُ إِلَى الْمَكَانِ الَّذِي أُحِبُّ أَنْ يُصَلِّيَ فِيهِ فَقَامَ رَسُولُ اللَّهِ ﷺ فَكَبَّرَ وَصَفَفْنَا وَرَاءَهُ فَصَلَّى رَكْعَتَيْنِ ثُمَّ سَلَّمَ وَسَلَّمْنَا حِينَ سَلَّمَ فَحَبَسْتُهُ عَلَى خَزِيرَةٍ تُصْنَعُ لَهُ فَسَمِعَ أَهْلُ الدَّارِ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ فِي بَيْتِي فَثَابَ رِجَالٌ مِنْهُمْ حَتَّى كَثُرَ الرِّجَالُ فِي الْبَيْتِ فَقَالَ رَجُلٌ: مَا فَعَلَ مَالِكٌ ؟ لاَ أَرَاهُ! فَقَالَ رَجُلٌ: ذَلِكَ مُنَافِقٌ لاَ يُحِبُّ اللَّهَ وَرَسُولَهُ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " لاَ تَقُلْ ذَلِكَ أَلاَ تَرَاهُ قَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ يَبْتَغِي بِذَلِكَ وَجْهَ اللَّهِ تَعَالَى ؟". فَقَالَ: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ. أَمَّا نَحْنُ فَوَاللَّهِ مَا نَرَى وُدَّهُ وَلاَ حَدِيثَهُ إِلاَّ إِلَى الْمُنَافِقِينَ! فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " فَإِنَّ اللَّهَ قَدْ حَرَّمَ عَلَى النَّارِ مَنْ قَالَ: لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ يَبْتَغِي بِذَلِكَ وَجْهَ اللَّهِ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَ" عِتْبَانُ" بِكَسْرِ الْعَيْنِ الْمُهْمَلَةِ وَإِسْكَانِ التَّاءِ الْمُثَنَّاةِ فَوْقُ وَبَعْدَهَا بَاءٌ مُوَحَّدَةٌ. وَ" الْخَزِيرَةُ" بِالْخَاءِ الْمُعْجَمَةِ وَالزَّايِ: هِيَ دَقِيقٌ يُطْبَخُ بِشَحْمٍ. وَقَوْلُهُ:" ثَابَ رِجَالٌ" بِالثَّاءِ الْمُثَلَّثَةِ: أَيْ جَاءُوا وَاجْتَمَعُوا.

**417** பத்ருப் போரில் கலந்து கொண்டவரான, இத்பான் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான், பனூ சலீம் என்ற எனது கூட்டத்தாருக்குத் தொழ வைத்துக் கொண்டிருந்தேன். எனக்கும் அந்த மக்களுக்குமிடையே ஓர் ஓடை இருந்தது. மழை வந்துவிட்டால், அதைக் கடந்து அவர்களின் பள்ளி வாசலுக்கு வருவதற்கு எனக்குக் கஷ்டமாக இருந்தது. ஆகவே, நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் பார்வை குறைந்தவராக உள்ளேன். எனக்கும், அந்த மக்களுக்கும் இடையே உள்ள ஓடை, மழை வந்து விட்டால் தண்ணீர் பெருக்கெடுத்து ஓடுகிறது. இதனால் அதைத் தாண்டுவது எனக்கு கஷ்டமாக உள்ளது. ஆகவே, நீங்கள் என் வீட்டிற்கு வரவேண்டும். என் வீட்டில் ஒரு இடத்தில் நீங்கள் தொழ வைக்க வேண்டும். அதை என் தொழுமிடமாக ஆக்கிக் கொள்ள விரும்புகிறேன்" என்று கூறினேன். "விரைவில் செய்கிறேன்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மறுநாள் என்னிடம் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரழி) அவர்களும் நண்பகல் நேரத்தில் வந்தார்கள். என்னிடம் (வீட்டிற்குள் வர) அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கு நான் அனுமதி தந்தேன். அவர்கள் உட்காராமல், "உம் வீட்டில் நான் தொழ வைக்க எந்த இடத்தை விரும்புகிறீர்?" என்று கேட்டார்கள். அவர்கள் தொழ வைக்க நான் விரும்பிய இடத்தைக் காண்பித்தேன். நபி (ஸல்) அவர்கள் அந்த இடத்தில் வந்து நின்றார்கள். தக்பீர் கூறினார்கள். அவர்களுக்குப் பின் நாங்கள் அணிவகுத்து நின்றோம். இரண்டு ரக்அத் தொழ வைத்தார்கள். பின்பு ஸலாம் கூறினார்கள். அப்போது நாங்களும் ஸலாம் கூறினோம்.

அவர்களுக்காக தயார் செய்யப்பட்ட 'கஸீரா'வை (வறுத்த கோதுமை மாவும், நெய்யும் கலந்த உணவு) அவர்கள் முன் வைத்தேன். நபி (ஸல்) அவர்கள் என் வீட்டில் இருப்பதைச் சுற்றிலும் வாழும் மக்கள் கேள்விப்பட்டு, அவர்களில் உள்ள ஆண்கள் திரண்டனர். இதனால் வீட்டில் ஆண்கள் கூட்டம் அதிகமாகியது. அப்போது ஒருவர், "மாலிக் என்ன செய்தார்? அவரை நான் இங்ப பார்க்கவில்லையே!" என்றார். அதற்கு மற்றொருவர், "அவர் நயவஞ்சகர். அல்லாஹ்வையும் அவனது தூதரையும் அவர் விரும்பிட மாட்டார்" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "அவ்வாறு கூறாதீர்கள்! அல்லாஹ்வின் திருப்தியை நாடி "லாயிலாஹ இல்லல்லாஹ்"என்று அவர் கூறியதை நீர் பார்க்கவில்லையா? என்று கேட்டார்கள். "அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் அவரின் பிரியமும், பேச்சும் நயவஞ்சகர்களிடையே தவிர இருந்ததில்லை" என்று ஒருவர் கூறினார். "அல்லாஹ்வின் திருப்தியை நாடியவர்களாக, 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று கூறுபவருக்கு அல்லாஹ் நரகைத் தடை செய்து விட்டான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:425. முஸ்லிம்:33/263)**

٤١٨ - وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَدِمَ رَسُولُ اللَّهِ ﷺ بِسَبْيٍ فَإِذَا امْرَأَةٌ مِنَ السَّبْيِ تَسْعَى إِذْ وَجَدَتْ صَبِيًّا فِي السَّبْيِ أَخَذَتْهُ فَأَلْزَقَتْهُ بِبَطْنِهَا فَأَرْضَعَتْهُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " أَتَرَوْنَ هَذِهِ الْمَرْأَةَ طَارِحَةً وَلَدَهَا فِي النَّارِ ؟" قُلْنَا: لاَ وَاللَّهِ. فَقَالَ: " لَلَّهُ أَرْحَمُ بِعِبَادِهِ مِنْ هَذِهِ بِوَلَدِهَا" مُتَّفَقٌ عَلَيْهِ.

**418** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் கைதிகளை நோக்கி வந்தார்கள். அப்போது கைதிகளில் இருந்த ஒரு பெண்மணி தீவிரமாகத் தன் குழந்தையைத் தேடிக் கொண்டிருந்தாள். அப்போது கைதிகளிடையே (தன்) குழந்தையைக் கண்டு, அதைத் தூக்கி, தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள். அதற்கு பாலூட்டினாள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இந்தப் பெண், தன் குழந்தையை நெருப்பில் வீசுபவளாக நீங்கள் காண்பீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக, இல்லை" என்றோம். உடனே அவர்கள், "இந்த பெண் தன் குழந்தையின் மீது வைத்திருப்பதை விட, அல்லாஹ் தன் அடியார்களின் மீது பன்மடங்கு இரக்கம் காட்டுபவனாக இருக்கின்றான்" என்று கூறினார்கள். **(புகாரி:5999. முஸ்லிம்:2754)**

٤١٩ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " لَمَّا خَلَقَ اللَّهُ الْخَلْقَ كَتَبَ فِي كِتَابٍ فَهُوَ عِنْدَهُ فَوْقَ الْعَرْشِ: إِنَّ رَحْمَتِي تَغْلِبُ غَضَبِي" وَفِي رِوَايَةٍ: " غَلَبَتْ غَضَبِي". وَفِي رِوَايَةٍ: " سَبَقَتْ غَضَبِي". مُتَّفَقٌ عَلَيْهِ.

**419** அபூஹுரைரா(ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ், படைப்புகளைப் படைத்தபோது, அர்ஷுக்கு மேலே தன்னிடம் உள்ள (லவ்ஹுல் மஹ்பூல்) எனும் பதிவேட்டில், 'என் கிருபை, என் கோபத்தை வென்றுவிட்டது' என்று எழுதினான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7404. முஸ்லிம்:2751. மற்றொரு அறிவிப்பில் "என் கோபத்தை முந்தி விட்டது" என்ற வாசகம் உள்ளது)**

٤٢٠ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " جَعَلَ اللَّهُ الرَّحْمَةَ مِائَةَ جُزْءٍ أَمْسَكَ عِنْدَهُ تِسْعَةً وَتِسْعِينَ وَأَنْزَلَ فِي الأَرْضِ جُزْءًا وَاحِدًا فَمِنْ ذَلِكَ الْجُزْءِ يَتَرَاحَمُ الْخَلاَئِقُ حَتَّى تَرْفَعَ الدَّابَّةُ حَافِرَهَا عَنْ وَلَدِهَا خَشْيَةَ أَنْ تُصِيبَهُ". وَفِي رِوَايَةٍ: " إِنَّ لِلَّهِ تَعَالَى مِائَةَ رَحْمَةٍ أَنْزَلَ مِنْهَا رَحْمَةً وَاحِدَةً بَيْنَ الْجِنِّ وَالإِنْسِ وَالْبَهَائِمِ وَالْهَوَامِّ فَبِهَا يَتَعَاطَفُونَ وَبِهَا يَتَرَاحَمُونَ

وَبِهَا تَعْطِفُ الْوَحْشُ عَلَى وَلَدِهَا! وَأَخَّرَ اللّهُ تَعَالَى تِسْعًا وَتِسْعِينَ رَحْمَةً يَرْحَمُ بِهَا عِبَادَهُ يَوْمَ الْقِيَامَةِ". مُتَّفَقٌ عَلَيْهِ. رَوَاهُ مُسْلِمٌ أَيْضًا مِنْ رِوَايَةِ سَلْمَانَ الْفَارِسِيِّ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللّهِ ﷺ:" إِنَّ لِلّهِ تَعَالَى مِائَةَ رَحْمَةٍ فَمِنْهَا رَحْمَةٌ يَتَرَاحَمُ بِهَا الْخَلْقُ بَيْنَهُمْ وَتِسْعٌ وَتِسْعُونَ لِيَوْمِ الْقِيَامَةِ". وَفِي رِوَايَةٍ:" إِنَّ اللّهَ تَعَالَى خَلَقَ - يَوْمَ خَلَقَ السَّمَاوَاتِ وَالأَرْضَ - مِائَةَ رَحْمَةٍ كُلُّ رَحْمَةٍ طِبَاقَ مَا بَيْنَ السَّمَاءِ وَالأَرْضِ فَجَعَلَ مِنْهَا فِي الأَرْضِ رَحْمَةً فَبِهَا تَعْطِفُ الْوَالِدَةُ عَلَى وَلَدِهَا وَالْوَحْشُ وَالطَّيْرُ بَعْضُهَا عَلَى بَعْضٍ فَإِذَا كَانَ يَوْمُ الْقِيَامَةِ أَكْمَلَهَا بِهَذِهِ الرَّحْمَةِ"!

**420** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ், தன் ரஹ்மத்தை (கருணையை) 100 பகுதிகளாக ஆக்கி, தன்னிடம் 99ஐ வைத்துக் கொண்டான். ஒரு பகுதியை மட்டும் பூமியில் இறக்கினான். இந்த ஒரு பகுதி (கருணை) மூலம்தான், படைப்பினங்கள் தங்களுக்குள் கிருபை காட்டிக் கொள்கின்றன. உதாரணமாக, ஒரு மிருகம் தனது கால் குளம்பு தன் குட்டியின் மீது படுவதைப் பயந்ததாக உயர்த்திக் கொள்கிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில்(கீழ்க்கண்டவாறு) உள்ளது:

நிச்சயமாக அல்லாஹ்வுக்கு 100 ரஹ்மத்துகள் (கருணை) உண்டு. அதில் ஒன்றை மட்டும், ஜின், மனிதன், மிருகங்கள், புழு பூச்சிகள் மத்தியில் இறக்கினான். அதன் மூலமே அவர்கள் கருணை காட்டிக் கொள்கின்றனர். அதன் மூலமே மிருகங்கள் தன் குட்டிகள் மீது கருணை காட்டுகின்றன. மீதியுள்ள 99 ரஹ்மத்தை (கருணையை) மறுமையில் தன் அடியார்களுக்கு அருள்புரிந்திட அல்லாஹ் தன்னிடம் வைத்து உள்ளான். **(புகாரி:6000. முஸ்லிம்:2752)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் ஸல்மான் பார்ஸி (ரழி) அறிவிப்பதாக (கீழ்க்கண்டவாறு) உள்ளது)

"நிச்சயமாக அல்லாஹ்வுக்கு 100 ரஹ்மத்துகள் (கருணை) உண்டு. அதில் ஒன்றின் மூலமே படைப்பினங்கள் தங்களிடையே கிருபை காட்டிக் கொள்கின்றன. மறுமை நாளுக்காக அல்லாஹ்விடம் மீதம் 99 உள்ளன" என நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (பின்வருமாறு) உள்ளது:

நிச்சயமாக அல்லாஹ் வானங்களையும், பூமியையும் படைத்த நாளில் 100 கிருபையை (கருணையை)ப் படைத்தான். ஒவ்வொரு கருணையும், வானத்திற்கும், பூமிக்குமிடையே நிரம்பி உள்ளது. அதிலிருந்து ஒரு கருணையை பூமியில் ஆக்கினான். அதன் மூலமாகத்தான் தாய் தன் குழந்தை மீது அன்பைப் பொழிகிறாள். மிருகமும், பறவையும் ஒன்று மற்றொன்றின் மீது அன்பு செலுத்துகின்றன. மறுமை நாள் வந்துவிட்டால், இந்த கருணையின் மூலமே அதை (100 ஆக) முழுமையாக்குகிறான்.

٤٢١ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ فِيمَا يَحْكِي عَنْ رَبِّهِ تَبَارَكَ وَتَعَالَى قَالَ:" أَذْنَبَ عَبْدٌ ذَنْبًا فَقَالَ: اللَّهُمَّ اغْفِرْ لِي ذَنْبِي. فَقَالَ اللّهُ تَبَارَكَ وَتَعَالَى: أَذْنَبَ عَبْدِي ذَنْبًا فَعَلِمَ أَنَّ لَهُ رَبًّا يَغْفِرُ الذَّنْبَ وَيَأْخُذُ بِالذَّنْبِ ثُمَّ عَادَ فَأَذْنَبَ فَقَالَ: أَيْ رَبِّ اغْفِرْ لِي ذَنْبِي. فَقَالَ تَبَارَكَ وَتَعَالَى: أَذْنَبَ عَبْدِي ذَنْبًا فَعَلِمَ أَنَّ لَهُ رَبًّا يَغْفِرُ الذَّنْبَ وَيَأْخُذُ بِالذَّنْبِ. ثُمَّ عَادَ فَأَذْنَبَ فَقَالَ: أَيْ رَبِّ اغْفِرْ لِي ذَنْبِي فَقَالَ تَبَارَكَ وَتَعَالَى: أَذْنَبَ عَبْدِي ذَنْبًا فَعَلِمَ أَنَّ لَهُ رَبًّا يَغْفِرُ الذَّنْبَ وَيَأْخُذُ بِالذَّنْبِ قَدْ غَفَرْتُ لِعَبْدِي فَلْيَفْعَلْ مَا شَاءَ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَقَوْلُهُ تَعَالَى:" فَلْيَفْعَلْ مَا شَاءَ" أَيْ مَا دَامَ يَفْعَلُ هَكَذَا يُذْنِبُ وَيَتُوبُ أَغْفِرُ لَهُ فَإِنَّ التَّوْبَةَ تَهْدِمُ مَا قَبْلَهَا.

**421** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஓர் அடியான் பாவத்தைச் செய்து விடுகிறான். பிறகு, "இறைவா! என் பாவத்தை மன்னிப்பாயாக!" என்று கூறுகிறான். அப்போது அல்லாஹ், "என் அடியான் ஒரு பாவத்தைச் செய்து விட்டான். நிச்சயமாக பாவத்தை மன்னிக்கின்றவனாகவும், பாவத்திற்காகப் பிடிக்கின்றவனாகவும் இறைவன் தனக்கு உண்டு என்று அறிந்து கொண்டான்" என்று கூறுகிறான். பின்பு மீண்டும் பாவம் செய்வான். "இறைவா! என்னை மன்னித்து விடு" என்று கூறுகிறான். அப்போதும் அல்லாஹ், "என் அடியான் பாவம் செய்துவிட்டான். பாவத்தை மன்னிக்கின்றவனாகவும், பாவத்தால் (குற்றம்) பிடிக்கின்றவனாகவும் இறைவன் தனக்கு உண்டு என அறிந்து கொண்டான்" என அல்லாஹ் கூறுகிறான். மீண்டும் ஒரு பாவத்தை அடியான் செய்து விடுகிறான். பிறகு, "இறைவா! என்னை மன்னித்து விடு" என்று கூறுகிறான். அப்போது "என் அடியான் பாவம் செய்து விட்டான். பாவத்தை மன்னிக்கின்றவனாகவும், பாவத்தால் (குற்றம்) பிடிக்கின்றவனாகவும் இறைவன் தனக்கு உண்டு என்று புரிந்து கொண்டான். என் அடியானை மன்னித்து விட்டேன். அவன் நாடியதை செய்து கொள்ளட்டும்" என்று அல்லாஹ் கூறுவான் என அல்லாஹ் பற்றிக் கூறியபோது நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7507, முஸ்லிம்:2758)**

"அவன் நாடியதை செய்து கொள்ளட்டும்" என்று அல்லாஹ் கூறுவது, "அவன் தொடர்ந்து பாவம் செய்து, மன்னிப்புக் கேட்டாலும் மன்னிப்பேன். ஏனெனில் பாவமன்னிப்பு என்பது, இதற்கு முன் உள்ளதை அழித்துவிடும்" என்பதாகும்.

٤٢٢ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَوْ لَمْ تُذْنِبُوا لَذَهَبَ اللَّهُ بِكُمْ وَجَاءَ بِقَوْمٍ يُذْنِبُونَ فَيَسْتَغْفِرُونَ اللَّهَ تَعَالَى. فَيَغْفِرُ لَهُمْ" رَوَاهُ مُسْلِمٌ.

**422** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நீங்கள் பாவம் செய்யவில்லையானால், உங்களை அல்லாஹ் போக்கிவிட்டு, பாவம் செய்கின்ற கூட்டத்தாரைக் கொண்டு வருவான். அவர்களும் அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்பார்கள். அவர்களையும் அவன் மன்னிப்பான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2749)**

٤٢٣ - وَعَنْ أَبِي أَيُّوبَ الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " لَوْلاَ أَنَّكُمْ تُذْنِبُونَ لَخَلَقَ اللَّهُ خَلْقًا يُذْنِبُونَ فَيَسْتَغْفِرُونَ فَيَغْفِرُ لَهُمْ" رَوَاهُ مُسْلِمٌ.

**423** அபூஅய்யூப் என்ற காலித் இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் பாவம் செய்பவர்களாக இல்லையென்றால், வேறு படைப்பை அல்லாஹ் படைப்பான். அவர்கள் பாவம் செய்வார்கள். மன்னிப்பும் கோருவார்கள். அவர்களை அல்லாஹ் மன்னிப்பான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2748)**

٤٢٤ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كُنَّا قُعُودًا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ مَعَنَا أَبُو بَكْرٍ وَعُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُمَا فِي نَفَرٍ فَقَامَ رَسُولُ اللَّهِ ﷺ مِنْ بَيْنِ أَظْهُرِنَا فَأَبْطَأَ عَلَيْنَا فَخَشِينَا أَنْ يُقْتَطَعَ دُونَنَا فَفَزِعْنَا فَقُمْنَا فَكُنْتُ أَوَّلَ مَنْ فَزِعَ فَخَرَجْتُ أَبْتَغِي رَسُولَ اللَّهِ ﷺ حَتَّى أَتَيْتُ حَائِطًا لِلأَنْصَارِ ; وَذَكَرَ الْحَدِيثَ بِطُولِهِ إِلَى قَوْلِهِ: فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " اذْهَبْ فَمَنْ لَقِيتَ وَرَاءَ هَذَا الْحَائِطِ يَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ مُسْتَيْقِنًا بِهَا قَلْبُهُ فَبَشِّرْهُ بِالْجَنَّةِ" رَوَاهُ مُسْلِمٌ.

**424** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் உட்கார்ந்திருந்தோம். எங்களுடன் அபூபக்ர் (ரழி), உமர் (ரழி) ஆகியோரும் மற்றும் சிலரும் இருந்தனர். எங்களிடமிருந்து எழுந்த நபி (ஸல்) அவர்கள், எங்களை விட்டுப் புறப்பட்டுச் சென்று நீண்ட (நேரமாகியும் வரத்) தாமதமானார்கள். எங்களை விட்டும் கடத்தப்பட்டு விட்டார்களோ, எனப் பயந்து நாங்கள் திடுக்குற்று, எழுந்தோம். திடுக்கிட்டவர்களில் முதல் நபராக நான் இருந்தேன். நபி (ஸல்) அவர்களைத் தேடிப் புறப்பட்டேன். முடிவில், அன்சாரீத் தோழர் ஒருவரின் தோட்டத்திற்கு வந்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீர் செல்வீராக! தன் உள்ள உறுதியுடன், "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று சாட்சியம் கூறுபவரை இந்தத் தோட்டத்திற்கு வெளியே நீர் சந்தித்தால் 'சொர்க்கம் அவருக்குண்டு' என நல்வாழ்த்துக் கூறுவீராக" என்று கூறினார்கள். **(நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியான இது முஸ்லிமில் (31) உள்ளது)**

٤٢٥ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ تَلاَ قَوْلَ اللَّهِ عَزَّ وَجَلَّ فِي إِبْرَاهِيمَ ﷺ ) رَبِّ إِنَّهُنَّ أَضْلَلْنَ كَثِيرًا مِنَ النَّاسِ فَمَنْ تَبِعَنِي فَإِنَّهُ مِنِّي ( الآيَةَ وَقَوْلَ عِيسَى ﷺ:) إِنْ تُعَذِّبْهُمْ فَإِنَّهُمْ عِبَادُكَ وَإِنْ تَغْفِرْ لَهُمْ فَإِنَّكَ أَنْتَ الْعَزِيزُ الْحَكِيمُ (. فَرَفَعَ يَدَيْهِ وَقَالَ: " اللَّهُمَّ أُمَّتِي أُمَّتِي " وَبَكَى فَقَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ: " يَا جِبْرِيلُ اذْهَبْ إِلَى مُحَمَّدٍ – وَرَبُّكَ أَعْلَمُ – فَسَلْهُ مَا يُبْكِيكَ ؟" فَأَتَاهُ جِبْرِيلُ فَأَخْبَرَهُ رَسُولُ اللَّهِ ﷺ بِمَا قَالَ هُوَ أَعْلَمُ – فَقَالَ اللَّهُ تَعَالَى: " يَا جِبْرِيلُ اذْهَبْ إِلَى مُحَمَّدٍ فَقُلْ: إِنَّا سَنُرْضِيكَ فِي أُمَّتِكَ وَلاَ نَسُوءُكَ " رَوَاهُ مُسْلِمٌ.

**425** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருமுறை நபி (ஸல்) அவர்கள், "இறைவா! நிச்சயமாக அவை மக்களில் அதிகமானோரை வழி கெடுத்துவிட்டன. யார் என்னைப் பின்பற்றுகிறாரோ, அவரே என்னைச் சேர்ந்தவர்" (14:36) என்று இப்றாஹிம் நபி கூறியதாக, அல்லாஹ் கூறும் வசனத்தையும், "நீ அவர்களை வேதனை செய்தால் நிச்சயமாக அவர்கள் உன் அடியார்களாவர். அவர்களை நீ மன்னித்தால், நிச்சயமாக நீ கண்ணியம் வாய்ந்தவனாகவும், ஞானமிக்கவனுமாய் இருக்கின்றாய்" (5:118) என்று ஈஸா நபி கூறியதாக வரும் வசனத்தையும் ஓதினார்கள். பின்னர் தன் கைகளை உயர்த்தி, "அல்லாஹும்ம உம்மத்தி உம்மத்தீ (இறைவா! என் சமுதாயத்தின் நிலை! என் சமுதாயத்தின் நிலை)" என்று கூறி, அழுதார்கள். அப்போது அல்லாஹ், "ஜிப்ரீலே! முஹம்மதிடம் செல்வீராக! உம் இறைவன் மிக அறிந்தவன். அவரை அழச் செய்தது எது? எனக் கேட்பீராக!" என்று கூறினான். அதன்படி நபி(ஸல்) அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்ததும், நபி (ஸல்) அவர்கள் தான் அவ்வாறு கூறியதற்கான காரணத்தை ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் கூறினார்கள். அவன் மிக அறிந்தவனாவன். "ஜிப்ரீலே! முஹம்மதிடம் செல். உமது சமுதாயத்தினர் விஷயமாக உம்மை விரைவில் திருப்தியுறச் செய்வோம். மேலும் உமக்குத் தீங்கிழைக்க மாட்டோம் என்று கூறுவீராக" என்று அல்லாஹ் கூறியதாக ஜிப்ரீல் (அலை) கூறினார்கள்.

**(முஸ்லிம்:202)**

٤٢٦ – وَعَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كُنْتُ رِدْفَ النَّبِيِّ ﷺ عَلَى حِمَارٍ فَقَالَ: " يَا مُعَاذُ هَلْ تَدْرِي مَا حَقُّ اللَّهِ عَلَى عِبَادِهِ وَمَا حَقُّ الْعِبَادِ عَلَى اللَّهِ ؟" قُلْتُ: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ. قَالَ: " فَإِنَّ حَقَّ اللَّهِ عَلَى الْعِبَادِ أَنْ يَعْبُدُوهُ وَلاَ يُشْرِكُوا بِهِ شَيْئًا وَحَقَّ الْعِبَادِ عَلَى اللَّهِ أَلاَّ يُعَذِّبَ مَنْ لاَ يُشْرِكُ بِهِ شَيْئًا ". فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَفَلاَ أُبَشِّرُ النَّاسَ ؟ قَالَ: " لاَ تُبَشِّرْهُمْ فَيَتَّكِلُوا " مُتَّفَقٌ عَلَيْهِ.

**426** முஆத் இப்னு ஜபல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருநாள் கழுதையின் மீது நபி (ஸல்) அவர்களின் பின்னே நான் அமர்ந்திருந்தேன். அப்போது, "முஆதே! தன் அடியார்களிடம் அல்லாஹ்வின் உரிமை என்ன என்பதையும், அல்லாஹ்விடம்

அடியார்களின் உரிமை என்ன என்பதையும் நீர் அறிவீரா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். ''அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்'' என்று நான் கூறினேன். ''அடியார்களிடம் இறைவனின் உரிமை என்பது, அவனை அவர்கள் வணங்க வேண்டும். எதையும் அவனுக்கு இணை வைக்காதிருக்க வேண்டும். அல்லாஹ்விடம் அடியார்களின் உரிமை என்பது, தனக்கு எதையும் இணை வைக்காதவனை, அவன் வேதனை செய்யாமல் இருப்பதாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். ''இறைத்தூதர் அவர்களே! மக்களுக்கு இந்த நற்செய்தியைக் கூறிலாமா?'' என்று கேட்டேன். ''அவர்களிடம் இச்செய்தியைக் கூறிட வேண்டாம்! உடனே அவர்கள் (நற்செயல் புரியாமல்) அதன் மீதே நம்பிக்கை வைத்து விடுவார்கள்'' என்று கூறினார்கள். **(புகாரி:7373. முஸ்லிம்:30)**

٤٢٧ – وَعَنْ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" الْمُسْلِمُ إِذَا سُئِلَ فِي الْقَبْرِ يَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ فَذَلِكَ قَوْلُهُ تَعَالَى: ) يُثَبِّتُ اللَّهُ الَّذِينَ آمَنُوا بِالْقَوْلِ الثَّابِتِ فِي الْحَيَاةِ الدُّنْيَا وَفِي الأخِرَةِ (" مُتَّفَقٌ عَلَيْهِ.

**427** பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவித்தார்கள்:

ஒரு முஸ்லிமிடம், கப்ரிலே கேள்வி கேட்கப்பட்டால், அவன் ''லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ்'' என்று சாட்சி கூறுவான். ''இறைநம்பிக்கையாளர்களை இம்மையிலும், மறுமையிலும் உறுதியான சொல்லைக் கொண்டு அல்லாஹ் வலுப்படுத்துவான்'' **(14:27)**

என்ற இறைவசனத்தின் கருத்தும் இதுதான் என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:4699. முஸ்லிம்:2871)**

٤٢٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ:" إِنَّ الْكَافِرَ إِذَا عَمِلَ حَسَنَةً أُطْعِمَ بِهَا طُعْمَةً مِنْ الدُّنْيَا وَأَمَّا الْمُؤْمِنُ فَإِنَّ اللَّهَ تَعَالَى يَدَّخِرُ لَهُ حَسَنَاتِه فِي الأخِرَةِ وَيُعْقِبُهُ رِزْقًا فِي الدُّنْيَا عَلَى طَاعَته". وَفِي رِوَايَة:" إِنَّ اللَّهَ لاَ يَظْلِمُ مُؤْمِنًا حَسَنَةً يُعْطَى بِهَا فِي الدُّنْيَا وَيُجْزَى بِهَا فِي الأخِرَةِ وَأَمَّا الْكَافِرُ فَيُطْعَمُ بِحَسَنَاتِ مَا عَمِلَ بِهَا لِلَّهِ تَعَالَى فِي الدُّنْيَا حَتَّى إِذَا أَفْضَى إِلَى الأخِرَةِ لَمْ يَكُنْ لَهُ حَسَنَةٌ يُجْزَى بِهَا". رَوَاهُ مُسْلِمٌ.

**428** அனஸ்(ரழி) அறிவிக்கின்றார்கள்:

நிச்சயமாக இறை மறுப்பாளர் ஒருவர், ஒரு நன்மையைச் செய்தால், அதன் மூலம் இவ்வுலகில் அவருக்கு உணவாக (கூலி) கொடுக்கப் படும். இறை நம்பிக்கையாளர் நன்மை செய்தால், நிச்சயமாக அல்லாஹ் அவருக்காக அவரது நன்மைகளை மறுமைக்காக சேகரிக்கிறான். மேலும் இவ்வுலகிலேயே அவரது வழிபாட்டிற்கான உணவை அவருக்கு வழங்குகிறான் என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

''நிச்சயமாக அல்லாஹ், இறை நம்பிக்கையாளருக்கு எந்த ஒரு நன்மையிலும் அநீதம் செய்ய மாட்டான். அதற்காக இவ்வுலகில் கூலி கொடுக்கப்படும். மேலும் அதற்காக மறுமையிலும் கூலி கொடுக்கப் படுவான். இறை மறுப்பாளர் அல்லாஹ்வுக்குரிய செயல்களைச் செய்தால், நன்மைகளை இவ்வுலகிலேயே கொடுக்கப்படுவார். மறுமையை அவன் அடைகிறபோது, அவருக்கு கூலிக் கொடுக்கப்படத்தக்க நன்மை எதுவும் இருக்காது'' **(முஸ்லிம்:2808)**

٤٢٩ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَثَلُ الصَّلَوَاتِ الْخَمْسِ كَمَثَلِ نَهْرٍ جَارٍ غَمْرٍ عَلَى بَابِ أَحَدِكُمْ يَغْتَسِلُ مِنْهُ كُلَّ يَوْمٍ خَمْسَ مَرَّاتٍ" رَوَاهُ مُسْلِمٌ." الْغَمْرُ": الْكَثِيرُ.

**429** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஐந்து நேரத் தொழுகைகளின் உதாரணம், உங்கள் ஒருவரின் வாசலில் நிரம்பி வழிந்தோடும் ஆற்றில், ஒவ்வொரு நாளும் ஐந்து தடவை குளிப்பது போலாகும்” என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:668)**

٤٣٠ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " مَا مِنْ رَجُلٍ مُسْلِمٍ يَمُوتُ فَيَقُومُ عَلَى جَنَازَتِهِ أَرْبَعُونَ رَجُلاً لاَ يُشْرِكُونَ بِاللَّهِ شَيْئًا إِلاَّ شَفَّعَهُمُ اللَّهُ فِيهِ". رَوَاهُ مُسْلِمٌ.

**430** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு முஸ்லிம் இறந்து, அவரின் ஜனாஸாவில், அல்லாஹ்வுக்கு எதையும் இணை வைக்காத நாற்பது நபர்கள் கலந்து கொண்டால், அவர் விஷயமாக அவர்கள் செய்யும் சிபாரிசை, அல்லாஹ் ஏற்காமல் இருப்பதில்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:948)**

٤٣١ - وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي قُبَّةٍ نَحْوًا مِنْ أَرْبَعِينَ فَقَالَ: " أَتَرْضَوْنَ أَنْ تَكُونُوا رُبُعَ أَهْلِ الْجَنَّةِ ؟". قُلْنَا: نَعَمْ. قَالَ: " أَتَرْضَوْنَ أَنْ تَكُونُوا ثُلُثَ أَهْلِ الْجَنَّةِ ؟" قُلْنَا: نَعَمْ. قَالَ: " وَالَّذِي نَفْسُ مُحَمَّدٍ بِيَدِهِ إِنِّي لأَرْجُو أَنْ تَكُونُوا نِصْفَ أَهْلِ الْجَنَّةِ وَذَلِكَ أَنَّ الْجَنَّةَ لاَ يَدْخُلُهَا إِلاَّ نَفْسٌ مُسْلِمَةٌ وَمَا أَنْتُمْ فِي أَهْلِ الشِّرْكِ إِلاَّ كَالشَّعْرَةِ الْبَيْضَاءِ فِي جِلْدِ الثَّوْرِ الأَسْوَدِ أَوْ كَالشَّعْرَةِ السَّوْدَاءِ فِي جِلْدِ الثَّوْرِ الأَحْمَرِ" مُتَّفَقٌ عَلَيْهِ

**431** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நாற்பது நபர்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு கூடாரத்தில் தங்கி இருந்தோம். “சொர்க்கவாசிகளில் நான்கில் ஒரு பங்காக நீங்கள் இருந்திட விரும்புகிறீர்களா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். நாங்கள், “ஆம்” என்றோம். “சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பங்கினராக நீங்கள் இருந்திட விரும்புகிறீர்களா?” என நபி (ஸல்) கேட்டார்கள். “ஆம்” என்றோம். “இந்த முஹம்மதின் உயிரைக் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! சொர்க்கவாசிகளில் பாதியாக நீங்கள் ஆகி விடுவதை நான் ஆதரவு வைக்கிறேன். ஏனெனில், சொர்க்கத்தில் முஸ்லிமான ஆன்மாவை தவிர வேறெதுவும் நுழைந்திட முடியாது. இணை வைப்போரிடையே நீங்கள், கறுப்பு மாட்டின் தோலில் உள்ள வெள்ளை முடியைப் போன்று உள்ளீர்கள். அல்லது சிவப்பு மாட்டின் தோலிலுள்ள கருப்பு முடி போன்று உள்ளீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5628. முஸ்லிம்:221)**

٤٣٢ - وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " إِذَا كَانَ يَوْمُ الْقِيَامَةِ دَفَعَ اللَّهُ إِلَى كُلِّ مُسْلِمٍ يَهُودِيًّا أَوْ نَصْرَانِيًّا فَيَقُولُ: هَذَا فِكَاكُكَ مِنَ النَّارِ" . وَفِي رِوَايَةٍ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " يَجِيءُ يَوْمَ الْقِيَامَةِ نَاسٌ مِنَ الْمُسْلِمِينَ بِذُنُوبٍ أَمْثَالِ الْجِبَالِ يَغْفِرُهَا اللَّهُ لَهُمْ". رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ: " دَفَعَ اللَّهُ إِلَى كُلِّ مُسْلِمٍ يَهُودِيًّا أَوْ نَصْرَانِيًّا فَيَقُولُ: هَذَا فِكَاكُكَ مِنَ النَّارِ": مَعْنَاهُ مَا جَاءَ فِي حَدِيثِ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: " لِكُلِّ أَحَدٍ مَنْزِلٌ فِي الْجَنَّةِ وَمَنْزِلٌ فِي النَّارِ فَالْمُؤْمِنُ إِذَا دَخَلَ الْجَنَّةَ خَلَفَهُ الْكَافِرُ فِي النَّارِ لأَنَّهُ مُسْتَحِقٌّ لِذَلِكَ بِكُفْرِهِ" وَمَعْنَى " فِكَاكُكَ" أَنَّكَ كُنْتَ مُعَرَّضًا لِدُخُولِ النَّارِ وَهَذَا فِكَاكُكَ لأَنَّ اللَّهَ تَعَالَى قَدَّرَ لِلنَّارِ عَدَدًا يَمْلَؤُهَا فَإِذَا دَخَلَهَا الْكُفَّارُ بِذُنُوبِهِمْ وَكُفْرِهِمْ صَارُوا فِي مَعْنَى الْفِكَاكِ لِلْمُسْلِمِينَ وَاللَّهُ أَعْلَمُ.

**432** அபூ மூஸா அல்-அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“கியாமத் நாள் ஏற்பட்டுவிட்டால், அல்லாஹ் ஒவ்வொரு முஸ்லிமிடமும் ஒரு யூதனை அல்லது ஒரு கிறிஸ்தவனை ஏற்படுத்துவான். ‘இவர் (ஒரு வகையில்) நீர் நரகத்தை விட்டு நீங்கிட காரணமாக இருக்கிறார்’ என்று கூறுவான்” என நபி (ஸல்) கூறினார்கள்.

முஸ்லிமின் (2767) மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

“மலைகள் போன்ற பாவங்களுடன் முஸ்லிம்களில் சிலர் மறுமை நாளில் வருவார்கள். அல்லாஹ் அவர்களுக்கு அதை (அப்பாவங்களை) மன்னிப்பான்”

٤٣٣ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" يُدْنَى الْمُؤْمِنُ يَوْمَ الْقِيَامَةِ مِنْ رَبِّهِ حَتَّى يَضَعَ كَنَفَهُ عَلَيْهِ فَيُقَرِّرُهُ بِذُنُوبِهِ فَيَقُولُ: أَتَعْرِفُ ذَنْبَ كَذَا ; أَتَعْرِفُ ذَنْبَ كَذَا ؟ فَيَقُولُ: رَبِّ أَعْرِفُ. قَالَ: فَإِنِّي قَدْ سَتَرْتُهَا عَلَيْكَ فِي الدُّنْيَا وَأَنَا أَغْفِرُهَا لَكَ الْيَوْمَ. فَيُعْطَى صَحِيفَةَ حَسَنَاتِهِ." مُتَّفَقٌ عَلَيْهِ." كَنَفُهُ": سِتْرُهُ وَرَحْمَتُهُ.

**433** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மறுமைநாளில் ஓர் இறை நம்பிக்கையாளன் இறைவனிடம் நெருக்கமாக்கி வைக்கப்படுவான். அவனது பாவத்தை அவன் முன் வைத்து, “இந்தப் பாவத்தை நீ அறிவாயா? இந்தப் பாவத்தை நீ அறிவாயா?” என்று கேட்டு, அவனது பாவங்களை அவனிடம் இறைவன் உறுதிபடுத்திக் கொள்வான். “இறைவா! நான் அறிவேன்” என்பான். அதற்கு, “நிச்சயமாக நான் உலகில் உன் மீது அதை மறைத்து வைத்திருந்தேன். இன்று நான் அதை மன்னித்து விட்டேன்” என்று அல்லாஹ் கூறுவான். உடனே அவனது நன்மைகளின் (பதிவு) ஏடு அவனுக்குக் கொடுக்கப்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:4685. முஸ்லிம்:2768)**

٤٣٤ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً أَصَابَ مِنْ امْرَأَةٍ قُبْلَةً فَأَتَى النَّبِيَّ ﷺ فَأَخْبَرَهُ فَأَنْزَلَ اللَّهُ تَعَالَى: ) وَأَقِمْ الصَّلاَةَ طَرَفَيْ النَّهَارِ وَزُلَفًا مِنْ اللَّيْلِ إِنَّ الْحَسَنَاتِ يُذْهِبْنَ السَّيِّئَاتِ (. فَقَالَ الرَّجُلُ: أَلِي هَذَا يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ:" لِجَمِيعِ أُمَّتِي كُلِّهِمْ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**434** அபூமஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் ஒரு பெண்ணை முத்தமிட்டுவிட்டார். பின்னர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து நடந்த செய்தியைக் கூறினார். அப்போது அல்லாஹ், “பகலின் இரு ஓரங்களிலும், இரவு சிறிது கழிந்த நேரத்திலும் தொழுகையைப் பேணுவீராக! நிச்சயமாக நன்மைகள் செய்வது, தீமைகளை அழித்து விடுகின்றன” (11:114) என்ற வசனத்தை இறக்கினான். அப்போது அந்த மனிதர், “இறைத்தூதர் அவர்களே! இது (இந்தச் சட்டம்) எனக்கு மட்டும்தானா? என்று கேட்டார். “இது என் சமுதாயத்தில் உள்ள அனைவருக்கும் தான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:4687. முஸ்லிம்:2763)**

٤٣٥ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ أَصَبْت حَدًّا فَأَقِمْهُ عَلَيَّ وَحَضَرَتْ الصَّلاَةُ فَصَلَّى مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فَلَمَّا قَضَى الصَّلاَةَ قَالَ: يَا رَسُولَ اللَّهِ. إِنِّي أَصَبْت حَدًّا فَأَقِمْ فِيَّ كِتَابَ اللَّهِ. قَالَ:" هَلْ حَضَرْت مَعَنَا الصَّلاَةَ ؟" قَالَ: نَعَمْ. قَالَ:" قَدْ غُفِرَ لَكَ" مُتَّفَقٌ عَلَيْهِ. وَقَوْلُهُ:" أَصَبْت حَدًّا" مَعْنَاهُ" مَعْصِيَةً" تُوجِبُ التَّعْزِيرَ وَلَيْسَ الْمُرَادُ الْحَدَّ الشَّرْعِيَّ الْحَقِيقِيَّ كَحَدِّ الزِّنَى وَالْخَمْرِ وَغَيْرِهِمَا فَإِنَّ هَذِهِ الْحُدُودَ لاَ تَسْقُطُ بِالصَّلاَةِ وَلاَ يَجُوزُ لِلْإِمَامِ تَرْكُهَا.

**435** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து “இறைத்தூதர் அவர்களே! தண்டனைக்குரிய செயலை நான் செய்து விட்டேன். என் மீது அதற்குரிய தண்டனையை நிறைவேற்றுங்கள்” என்று கூறினார். தொழுகை நேரம் வந்தது. நபி (ஸல்) அவர்களுடன் தொழுதார். தொழுகையை அவர் முடித்ததும், “இறைத்தூதர் அவர்களே! தண்டனைக்குரிய செயலை செய்து விட்டேன். அல்லாஹ்வின்

வேத(ச்சட்ட)ப்படி என் விஷயமாக அதை நிலைநிறுத்துங்கள்!'' என்று கூறினார். ''நம்முடன் தொழுகையில் நீ கலந்து கொண்டீரா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். ''ஆம்'' என்றார். ''(உன் குற்றம்) உமக்கு மன்னிக்கப்பட்டுவிட்டது'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6823. முஸ்லிம்:2764)**

٤٣٦ – وَعَنْهُ ) أَنَسٌ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" إِنَّ اللَّهَ لَيَرْضَى عَنْ الْعَبْدِ أَنْ يَأْكُلَ الأَكْلَةَ فَيَحْمَدُهُ عَلَيْهَا أَوْ يَشْرَبُ الشَّرْبَةَ فَيَحْمَدُهُ عَلَيْهَا". رَوَاهُ مُسْلِمٌ" الأَكْلَةُ" بِفَتْحِ الْهَمْزَةِ وَهِيَ الْمَرَّةُ الْوَاحِدَةُ مِنْ الأَكْلِ كَالْغَدْوَةِ وَالْعَشْوَةِ وَاللَّهُ أَعْلَمُ.

**436** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''ஓர் அடியான் உணவை உண்டு, அதற்காக அவனைப் புகழ்கிறான். அல்லது நீர் பருகுகிறான். அதற்காக அவனைப் புகழ்கிறான். இதற்காக அல்லாஹ் மகிழ்ச்சி அடைகிறான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2734)**

٤٣٧ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" إِنَّ اللَّهَ تَعَالَى يَبْسُطُ يَدَهُ بِاللَّيْلِ لِيَتُوبَ مُسِيءُ النَّهَارِ وَيَبْسُطُ يَدَهُ بِالنَّهَارِ لِيَتُوبَ مُسِيءُ اللَّيْلِ حَتَّى تَطْلُعَ الشَّمْسُ مِنْ مَغْرِبِهَا". رَوَاهُ مُسْلِمٌ.

**437** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''பகலில் பாவம் செய்தவன், பாவமன்னிப்புப் பெறுவதற்காக, இரவில் தன் கையை அல்லாஹ் விரித்து வைக்கிறான். இரவில் பாவம் செய்தவன், பாவ மன்னிப்புப் பெறுவதற்காக, பகலில் தன் கையை அல்லாஹ் விரித்து வைக்கிறான். இது சூரியன் மேற்கில் உதயமாகும் (கியாமத் நாளின் அடையாளம் ஏற்படும்) வரை நீடிக்கிறது'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2759)**

٤٣٨ – وَعَنْ أَبِي نَجِيحٍ عَمْرِو بْنِ عَبَسَةَ" بِفَتْحِ الْعَيْنِ وَالْبَاءِ" السُّلَمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كُنْتُ وَأَنَا فِي الْجَاهِلِيَّةِ أَظُنُّ أَنَّ النَّاسَ عَلَى ضَلَالَةٍ وَأَنَّهُمْ لَيْسُوا عَلَى شَيْءٍ وَهُمْ يَعْبُدُونَ الأَوْثَانَ فَسَمِعْتُ بِرَجُلٍ بِمَكَّةَ يُخْبِرُ أَخْبَارًا فَقَعَدْتُ عَلَى رَاحِلَتِي فَقَدِمْتُ عَلَيْهِ فَإِذَا رَسُولُ اللَّهِ ﷺ مُسْتَخْفِيًا جُرَآءُ عَلَيْهِ قَوْمُهُ فَتَلَطَّفْتُ حَتَّى دَخَلْتُ عَلَيْهِ بِمَكَّةَ فَقُلْتُ لَهُ: مَا أَنْتَ؟ قَالَ:" أَنَا نَبِيٌّ". قُلْتُ: وَمَا نَبِيٌّ؟ قَالَ:" أَرْسَلَنِي اللَّهُ" قُلْتُ: وَبِأَيِّ شَيْءٍ أَرْسَلَكَ؟ قَالَ:" أَرْسَلَنِي بِصِلَةِ الأَرْحَامِ وَكَسْرِ الأَوْثَانِ وَأَنْ يُوَحَّدَ اللَّهُ لاَ يُشْرَكُ بِهِ شَيْءٌ". قُلْتُ: فَمَنْ مَعَكَ عَلَى هَذَا؟ قَالَ:" حُرٌّ وَعَبْدٌ" – وَمَعَهُ يَوْمَئِذٍ أَبُو بَكْرٍ وَبِلَالٌ رَضِيَ اللَّهُ عَنْهُمَا – قُلْتُ: إِنِّي مُتَّبِعُكَ. قَالَ:" إِنَّكَ لَنْ تَسْتَطِيعَ ذَلِكَ يَوْمَكَ هَذَا أَلاَ تَرَى حَالِي وَحَالَ النَّاسِ؟ وَلَكِنْ ارْجِعْ إِلَى أَهْلِكَ فَإِذَا سَمِعْتَ بِي قَدْ ظَهَرْتُ فَأْتِنِي". قَالَ: فَذَهَبْتُ إِلَى أَهْلِي وَقَدِمَ رَسُولُ اللَّهِ ﷺ الْمَدِينَةَ وَكُنْتُ فِي أَهْلِي فَجَعَلْتُ أَتَخَبَّرُ الأَخْبَارَ وَأَسْأَلُ النَّاسَ حِينَ قَدِمَ الْمَدِينَةَ حَتَّى قَدِمَ نَفَرٌ مِنْ أَهْلِي الْمَدِينَةَ. فَقُلْتُ: مَا فَعَلَ هَذَا الرَّجُلُ الَّذِي قَدِمَ الْمَدِينَةَ؟ فَقَالُوا: النَّاسُ إِلَيْهِ سِرَاعٌ وَقَدْ أَرَادَ قَوْمُهُ قَتْلَهُ فَلَمْ يَسْتَطِيعُوا ذَلِكَ فَقَدِمْتُ الْمَدِينَةَ فَدَخَلْتُ عَلَيْهِ فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَتَعْرِفُنِي؟ قَالَ:" نَعَمْ أَنْتَ الَّذِي لَقِيتَنِي بِمَكَّةَ". قَالَ: فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَخْبِرْنِي عَمَّا عَلَّمَكَ اللَّهُ وَأَجْهَلُهُ. أَخْبِرْنِي عَنْ الصَّلَاةِ. قَالَ:" صَلِّ صَلَاةَ الصُّبْحِ ثُمَّ أَقْصِرْ عَنْ الصَّلَاةِ حَتَّى تَرْتَفِعَ الشَّمْسُ قِيدَ رُمْحٍ فَإِنَّهَا حِينَ تَطْلُعُ بَيْنَ قَرْنَيْ شَيْطَانٍ وَحِينَئِذٍ يَسْجُدُ لَهَا الْكُفَّارُ ثُمَّ صَلِّ فَإِنَّ الصَّلَاةَ مَشْهُودَةٌ مَحْضُورَةٌ حَتَّى يَسْتَقِلَّ الظِّلُّ بِالرُّمْحِ ثُمَّ أَقْصِرْ عَنْ الصَّلَاةِ فَإِنَّهُ حِينَئِذٍ تُسْجَرُ جَهَنَّمُ فَإِذَا أَقْبَلَ الْفَيْءُ فَصَلِّ. فَإِنَّ الصَّلَاةَ مَشْهُودَةٌ مَحْضُورَةٌ حَتَّى تُصَلِّيَ الْعَصْرَ ثُمَّ أَقْصِرْ عَنْ الصَّلَاةِ حَتَّى تَغْرُبَ الشَّمْسُ فَإِنَّهَا تَغْرُبُ بَيْنَ قَرْنَيْ شَيْطَانٍ وَحِينَئِذٍ يَسْجُدُ لَهَا الْكُفَّارُ". قَالَ: فَقُلْتُ: يَا نَبِيَّ اللَّهِ فَالْوُضُوءُ حَدِّثْنِي عَنْهُ. فَقَالَ:" مَا مِنْكُمْ رَجُلٌ يُقَرِّبُ وَضُوءَهُ فَيَتَمَضْمَضُ وَيَسْتَنْشِقُ فَيَسْتَنْثِرُ إِلاَّ خَرَّتْ خَطَايَا وَجْهِهِ وَفِيهِ وَخَيَاشِيمِهِ ثُمَّ إِذَا غَسَلَ وَجْهَهُ كَمَا أَمَرَهُ اللَّهُ إِلاَّ خَرَّتْ خَطَايَا وَجْهِهِ مِنْ أَطْرَافِ لِحْيَتِهِ مَعَ الْمَاءِ ثُمَّ يَغْسِلُ يَدَيْهِ إِلَى الْمِرْفَقَيْنِ إِلاَّ خَرَّتْ خَطَايَا يَدَيْهِ مِنْ أَنَامِلِهِ مَعَ الْمَاءِ ثُمَّ يَمْسَحُ رَأْسَهُ إِلاَّ خَرَّتْ خَطَايَا رَأْسِهِ مِنْ أَطْرَافِ شَعَرِهِ مَعَ الْمَاءِ ثُمَّ يَغْسِلُ قَدَمَيْهِ إِلَى الْكَعْبَيْنِ إِلاَّ خَرَّتْ خَطَايَا رِجْلَيْهِ مِنْ أَنَامِلِهِ مَعَ

الْمَاءِ فَإِنْ هُوَ قَامَ فَصَلَّى فَحَمِدَ اللَّهَ تَعَالَى وَأَثْنَى عَلَيْهِ وَمَجَّدَهُ بِالَّذِي هُوَ لَهُ أَهْلٌ وَفَرَّغَ قَلْبَهُ لِلَّهِ تَعَالَى إِلاَّ انْصَرَفَ مِنْ خَطِيئَتِهِ كَهَيْئَتِهِ يَوْمَ وَلَدَتْهُ أُمُّهُ". فَحَدَّثَ عَمْرُو بْنُ عَبَسَةَ بِهَذَا الْحَدِيثِ أَبَا أُمَامَةَ صَاحِبَ رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ لَهُ أَبُو أُمَامَةَ: يَا عَمْرَو بْنَ عَبَسَةَ انْظُرْ مَا تَقُولُ فِي مَقَامٍ وَاحِدٍ يُعْطَى هَذَا الرَّجُلُ؟ فَقَالَ عَمْرٌو: يَا أَبَا أُمَامَةَ لَقَدْ كَبِرَتْ سِنِّي وَرَقَّ عَظْمِي وَاقْتَرَبَ أَجَلِي وَمَا بِي حَاجَةٌ أَنْ أَكْذِبَ عَلَى اللَّهِ تَعَالَى وَلاَ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ. لَوْ لَمْ أَسْمَعْهُ مِنْ رَسُولِ اللَّهِ ﷺ إِلاَّ مَرَّةً أَوْ مَرَّتَيْنِ أَوْ ثَلاَثًا حَتَّى عَدَّ سَبْعَ مَرَّاتٍ" مَا حَدَّثْتُ أَبَدًا بِهِ وَلَكِنِّي سَمِعْتُهُ أَكْثَرَ مِنْ ذَلِكَ". رَوَاهُ مُسْلِم. قَوْلُهُ." جُرَآءُ عَلَيْهِ قَوْمُهُ" هُوَ بِجِيمٍ مَضْمُومَةٍ وَبِالْمَدِّ عَلَى وَزْنِ عُلَمَاءَ: أَيْ جَاسِرُونَ مُسْتَطِيلُونَ غَيْرُ هَائِبِينَ. هَذِهِ الرِّوَايَةُ الْمَشْهُورَةُ وَرَوَاهُ الْحُمَيْدِيُّ وَغَيْرُهُ:" حِرَاءٌ" بِكَسْرِ الْحَاءِ الْمُهْمَلَةِ وَقَالَ مَعْنَاهُ: غِضَابٌ ذَوُو غَمٍّ وَهَمٍّ قَدْ عِيلَ صَبْرُهُ بِهِ حَتَّى أَثَّرَ فِي أَجْسَامِهِمْ. مِنْ قَوْلِهِمْ: حَرَى جِسْمُهُ يَحْرِي إِذَا نَقَصَ مِنْ أَلَمٍ أَوْ غَمٍّ وَنَحْوِهِ. وَالصَّحِيحُ أَنَّهُ بِالْجِيمِ. قَوْلُهُ ﷺ:" بَيْنَ قَرْنَيْ شَيْطَانٍ" أَيْ نَاحِيَتَيْ رَأْسِهِ وَالْمُرَادُ التَّمْثِيلُ مَعْنَاهُ: أَنَّهُ حِينَئِذٍ يَتَحَرَّكُ الشَّيْطَانُ وَشِيعَتُهُ وَيَتَسَلَّطُونَ. وَقَوْلُهُ:" يُقَرِّبُ وَضُوءَهُ" مَعْنَاهُ يُحْضِرُ الْمَاءَ الَّذِي يَتَوَضَّأُ بِهِ. وَقَوْلُهُ:" إِلاَّ خَرَّتْ خَطَايَاهُ" هُوَ بِالْخَاءِ الْمُعْجَمَةِ: أَيْ سَقَطَتْ وَرَوَاهُ بَعْضُهُمْ:" جَرَتْ" بِالْجِيمِ وَالصَّحِيحُ بِالْخَاءِ وَهُوَ رِوَايَةُ الْجُمْهُورِ. وَقَوْلُهُ:" فَيَسْتَنْثِرُ" أَيْ يَسْتَخْرِجُ مَا فِي أَنْفِهِ مِنْ أَذًى. وَالنَّثْرَةُ: طَرَفُ الأَنْفِ.

**438** அபூநஜீஹ் அம்ரு இப்னு அபஸா அஸ்ஸுலமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அறியாமைக் காலத்தில், "மக்கள் வழிகேட்டில் உள்ளனர். நிச்சயமாக (நேர்வழி) எதிலும் அவர்கள் இல்லை. சிலைகளை அவர்கள் வணங்கி கொண்டிருக்கிறார்களே" என நான் (கவலையுடன்) எண்ணிக் கொண்டிருந்தேன். அப்போது மக்காவிர் ஒருவர் (வானின்) செய்திகளைக் கூறுகிறார் என நான் கேள்விப்பட்டேன். உடனே நான் என்னுடைய வாகனத்தில் ஏறி, அவரிடம் வந்தேன். அங்கே நபி (ஸல்) இருந்தார்கள். அப்போது அவர்கள் (மக்காவில்) மறைமுகமாக பிரச்சாரம் செய்பவர்களாக இருந்தார்கள். அவர்மீது அவரது கூட்டத்தார் கோபமாக இருந்தனர். நான் தந்திரமாக (மறைந்து) சென்று மக்காவில் அவரைச் சந்தித்தேன். "நீங்கள் யார்?" என்று அவரிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், "என்னை அல்லாஹ் தூதராக அனுப்பி உள்ளான்" என்று கூறினார்கள். அதற்கு, "எதற்காக உங்களை தூதராக அனுப்பினான்?" எனக் கேட்டேன். "உறவினரை ஆதரித்தல், சிலைகளை உடைத்தல் மற்றும் அல்லாஹ் ஒருவனை மட்டும் எதையும் அவனுக்கு இணை வைக்காமல் இறைவனாக ஏற்க வேண்டும் என்ற வகையில் என்னைத் தூதராக அனுப்பினான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இதை ஏற்று உங்களுடன் இருப்பவர் யார்?" எனக் கேட்டேன். "ஒரு சுதந்திர மனிதரும், ஒரு அடிமையும்!" என நபி (ஸல்) கூறினார்கள். அன்றைய நாளில் அவர்களுடன் அபூபக்ர் (ரழி), பிலால் (ரழி) இருவர் மட்டுமே (இஸ்லாத்தை ஏற்று அவர்களின் தோழர்களாக) இருந்தனர். அப்பொழுது, "நிச்சயமாக நான் உங்களைப் பின்பற்றுகிறேன்" என்று கூறினேன். "இன்றைய நாளில் இதற்கு நீர் சக்திபெற மாட்டீர்! என் நிலையையும், மக்களின் நிலையையும் நீர் அறியவில்லையா? எனினும், உம் குடும்பத்தாரிடம் நீர் திரும்பிச் செல்வீராக. நான் வெற்றி பெற்றேன் என என்னைப் பற்றி நீர் கேள்விப்பட்டால் என்னிடம் வருவீராக" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

நான் என் குடும்பத்தாரிடம் (ஹிஜ்ரத்) சென்றேன். நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு திரும்பச் சென்று விட்டார்கள். நான் என் குடும்பத்தாருடன் இருந்தேன். செய்திகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்குச் சென்றதிலிருந்து மக்களிடம் விசாரித்துக் கொண்டிருந்தேன். என் குடும்பத்தாரில் ஒரு கூட்டம் மதீனா சென்றனர். "மதீனா சென்றுவிட்ட அந்த மனிதர், (நபி (ஸல்)) என்ன செய்கிறார்?" என்று அவர்களிடம் கேட்டேன். "மக்கள் அவரிடம் தீவிரமாக இணைகிறார்கள். அவரது கூட்டத்தார் (மக்காவில்) அவரை கொல்ல முயற்சித்தனர். ஆனால் அதற்கு அவர்கள் சக்தி பெறவில்லை" எனக் கூறினார்கள். (இதனைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த நான், இறைத்தூதர் இப்பொழுது வெற்றிப் பெற்றுவிட்டார்கள். அவர்களின்

இஸ்லாமிய நெறி மேலோங்கிவிட்டது என உணர்ந்து) உடனே நான் மதீனாவிற்கு புறப்பட்டு அவரிடம் சென்றேன். "இறைத்தூதர் அவர்களே! என்னை நீங்கள் அறிகிறீர்களா?" என்று கேட்டேன். "அறிவேன்! நீர் மக்காவில் என்னை சந்தித்தீர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்களுக்குக் கற்றுக் கொடுத்ததை-நான் அறியாததை எனக்குக் கூறுங்கள். முதலில் தொழுகை பற்றி எனக்கு அறிவியுங்கள்" என்று கேட்டேன்.

"சுப்ஹுத் தொழுகையை நீர் தொழுவீராக! பின்பு ஒரு ஈட்டி அளவுக்கு சூரியன் உயரும் வரை தொழுகையை விட்டும் நீர் ஒதுங்கி இருப்பீராக. ஏனெனில், ஷைத்தானின் இரு கொம்பு களுக்கிடையே, சூரியன் உதயமாகிறது. அந்த நேரத்தில், அதற்கு இறை மறுப்பாளர்கள் பணிகிறார்கள். பின்பு (நீர் விரும்பும் நபிலான தொழுகைகளை) தொழுவீராக! நிச்சயமாக தொழுகை, சான்று பகரக் கூடியதாகவும், வானவர்கள் வருகை தரக் கூடியதாகவும் உள்ளது. சூரியனின் நிழல் ஈட்டிக்குச் சமமாகும் வரை (தொழுவீராக)! பின்பு (சூரியன் உச்சியிலிருக்கும் நேரத்தில்) தொழுகையை விட்டு ஒதுங்கி இருப்பீராக! ஏனெனில் அந்த நேரத்தில், 'ஜஹன்னம்' என்ற நரகம் எரிக்கப்படுகிறது. பின்னர் நிழல் ஏற்பட்டுவிட்டால் (லுஹர் மற்றும் நபிலான தொழுகைகளைத்) தொழுவீராக! நிச்சயமாக தொழுகை, சான்று கூறக்கூடியதாகவும், வானவர்கள் வருகை தரக்கூடியதாகவும் உள்ளது. அஸர் நேரம் வரை நீர் தொழுவீராக! பின்பு சூரியன் மறையும் வரை தொழுகையை விட்டு ஒதுங்கி இருப்பீராக! நிச்சயமாக சூரியன் ஷைத்தானின் இரு கொம்புகளுக்கிடையே மறைகிறது. அந்த நேரத்தில் இறை மறுப்பாளர்கள் அதற்குப் பணிகிறார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

"நபி அவர்களே! உளு பற்றி எனக்குக் கூறுங்கள்" என்று நான் கேட்டேன். உங்களில் ஒருவர் தன் உளுச் செய்யும் பாத்திரத்தை நெருங்கி, வாய் கொப்பளிக்கிறார். மூக்குக்கு நீர் செலுத்தி, அதைச் சுத்தம் செய்கிறார் எனில், அவரின் முகம், அவரின் வாய், அவரின் மூக்குத் தண்டு ஆகியவற்றின் பாவங்கள் கீழே விழாமல் இருப்பதில்லை. பின்பு அல்லாஹ் கட்டளையிட்டப்படி தன் முகத்தைக் கழுவினால், அவருடைய முகத்தின் குற்றங்கள், அவரது தாடியின் முடிகளில் இருந்து தண்ணீருடன் விழுந்து விடுகிறது. பின்பு, தன் இருகைகளை இரு முழங்கை வரை கழுவினால், அவரது கையின் குற்றங்கள், அவரது நகக்கண்களின் வழியாக தண்ணீருடன் விழுந்து விடுகிறது. பின்பு தன் தலைக்கு மஸஹு செய்தால், அவரது தலையின் குற்றங்கள் அவரது (தலை) முடிகளிலிருந்து தண்ணீருடன் விழுந்து விடுகிறது. பின்பு தன் பாதங்களைக் கரண்டை வரைக் கழுவினால், அவரது கால்களின் குற்றங்கள் அதன் நகக்கண்களின் வழியாக தண்ணீருடன் விழுந்து விடுகிறது. அவரது தகுதிக்கு ஏற்ப, அவரை கண்ணியப்படுத்தி, தன் உள்ளத்தை அல்லாஹ்வுக்காக அவர் ஒதுக்கிவிட்டால், அவர் தன் குற்றங்கள் விட்டும் நீங்கி, அன்று பிறந்த குழந்தை போல் ஆகி விடுகிறார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அம்ரு இப்னு அபஸா இந்த ஹதீஸை நபித்தோழர் அபூ உமாமாவிடம் கூறினார். அவரிடம் அபூஉமாமா (ரழி) அவர்கள், "அம்ரு இப்னு அபஸா அவர்களே! நீங்கள் கூறியதைச் சிந்தித்துப் பார்ப்பீராக! ஒரே இடத்தில்இந்த (முஸ்லிமான) மனிதருக்கு (இந்த நன்மைகள்) கொடுக்கப்படுகிறதா?" என்று கேட்டார். அதற்கு அம்ரு இப்னு அபஸா (ரழி) அவர்கள், "அபூ உமாமாவே! என் வயது முதிர்ந்துவிட்டது. என் எலும்புகள் பலவீனமாகிவிட்டன. என் தவணையும் (மரணமும்) நெருங்கி விட்டது. அல்லாஹ்வின் மீதோ, நபி (ஸல்) அவர்கள் மீதோ நான் பொய் கூற எனக்குத் தேவை இல்லை. நான் இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு முறை, இரண்டு முறை, மூன்று முறை ஏன் ஏழு முறை இந்த ஹதீஸைக் கேட்டிருக்காவிட்டால், நான் இதை (ஒருபோதும்) கூறி இருக்கமாட்டேன். ஆனால் நான் அதையும் விட அதிகமாகக் கேட்டுள்ளேன்" என்று அம்ரு (ரழி) கூறினார்கள்.

**(முஸ்லிம்:832)**

٤٣٩ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" إِذَا أَرَادَ اللَّهُ تَعَالَى رَحْمَةَ أُمَّةٍ قَبَضَ نَبِيَّهَا قَبْلَهَا فَجَعَلَهُ لَهَا فَرَطًا وَسَلَفًا بَيْنَ يَدَيْهَا. وَإِذَا أَرَادَ هَلَكَةَ أُمَّةٍ عَذَّبَهَا وَنَبِيُّهَا حَيٌّ فَأَهْلَكَهَا وَهُوَ حَيٌّ يَنْظُرُ فَأَقَرَّ عَيْنَهُ بِهَلاَكِهَا حِينَ كَذَّبُوهُ وَعَصَوْا أَمْرَهُ" رَوَاهُ مُسْلِمٌ.

**439** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ், ஒரு சமுதாயத்திற்கு நன்மை செய்ய நாடினால், அந்தச் சமுதாயத்தின் நபியை, அச்சமுதாயம் அழியும் முன்பே, அவரின் உயிரைக் கைப்பற்றுவான். (அவரைத் தன் பக்கம் அழைத்துக் கொள்வான்.) அந்த நபியை அந்தச் சமுதாயத்திற்கு முந்திச் செல்பவராக ஆக்கி விடுவான். (அந்த நபியை வேதனைப்படுத்தி அதனால் அவரின் தீய துஆவிற்கு ஆளாகி அழியும் நிலையை விட்டு அந்த சமுதாயம் தப்பித்துக் கொள்ளும்.) ஒரு சமுதாயத்தின் அழிவை அவன் நாடிவிட்டால், அந்த நபி உயிருடன் இருக்கும் பொழுது, அந்தச் சமுதாயத்தை வேதனை செய்வான். அவர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, அந்தச் சமுதாயத்தை அழிப்பான். அவரை அவர்கள் பொய்ப்படுத்தி, அவரின் கட்டளைக்கு மாறு செய்த காரணத்தால், அந்தச் சமுதாயத்தை அழிப்பதன் மூலம், அவரின் (நபியின்) கண்களைக் குளிரச் செய்வான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2288)**

## ٥٢ – باب فضل الرجاء

## பாடம் : 52 - அல்லாஹ்விடம் ஆதரவு வைப்பதின் சிறப்பு!

**قَالَ اللَّهُ تَعَالَى إِخْبَارًا عَنْ الْعَبْدِ الصَّالِحِ: وَأُفَوِّضُ أَمْرِي إِلَى اللَّهِ إِنَّ اللَّهَ بَصِيرٌ بِالْعِبَادِ. فَوَقَاهُ اللَّهُ سَيِّئَاتِ مَا مَكَرُوا.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ்விடமே என் காரியங்களை ஒப்படைக்கிறேன். நிச்சயமாக அல்லாஹ் (தன்) அடியார்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். (என அந்த நல்லடியார் கூறினார்) அவரை அல்லாஹ், அவர்களின் தீங்குகளி லிருந்து பாதுகாத்துக் கொண்டான். (40:44,45)*

٤٤٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ أَنَّهُ قَالَ:" قَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ: أَنَا عِنْدَ ظَنِّ عَبْدِي بِي وَأَنَا مَعَهُ حَيْثُ يَذْكُرُنِي وَاللَّهُ لَلَّهُ أَفْرَحُ بِتَوْبَةِ عَبْدِهِ مِنْ أَحَدِكُمْ يَجِدُ ضَالَّتَهُ بِالْفَلاَةِ وَمَنْ تَقَرَّبَ إِلَيَّ شِبْرًا تَقَرَّبْتُ إِلَيْهِ ذِرَاعًا وَمَنْ تَقَرَّبَ إِلَيَّ ذِرَاعًا تَقَرَّبْتُ إِلَيْهِ بَاعًا. وَإِذَا أَقْبَلَ إِلَيَّ يَمْشِي أَقْبَلْتُ إِلَيْهِ أُهَرْوِلُ" مُتَّفَقٌ عَلَيْهِ وَهَذَا لَفْظُ إِحْدَى رِوَايَاتِ مُسْلِمٍ وَتَقَدَّمَ شَرْحُهُ فِي الْبَابِ قَبْلَهُ. وَرُوِيَ فِي الصَّحِيحَيْنِ:" وَأَنَا مَعَهُ حِينَ يَذْكُرُنِي" بِالنُّونِ وَفِي هَذِهِ الرِّوَايَةِ" حَيْثُ" بِالثَّاءِ وَكِلاَهُمَا صَحِيحٌ.

**440** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் அடியான் என்னை எண்ணும் எண்ணத்திற்கேற்ப நான் உள்ளேன். என்னை நினைவு கூரும் சமயத்தில் அவனுடன் நான் உள்ளேன்'' என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களில் ஒருவர் வனாந்திரத்தில் காணாமல் போன தம் ஒட்டகம் கிடைக்கும்பொழுது அடைகின்ற மகிழ்ச்சியை விட, மிக அதிகமான மகிழ்ச்சி, தன் அடியான் தன்னிடம் பாவமன்னிப்பு கோரும் போது அல்லாஹ்வுக்கு ஏற்படுகிறது'' என்றும் நபி (ஸல்) கூறினார்கள்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ் கூறுவதாக (பின்வருமாறு) கூறினார்கள்:

"என்னிடம் அவர் ஒரு அடி நெருங்கினால், அவரிடம் நான் ஒரு முழம் நெருங்குவேன். என்னிடம் அவர் ஒரு முழம் நெருங்கினால், அவரிடம் நான் இரண்டு முழம் நெருங்குவேன். என் பக்கம் அவர் நடந்து வந்தால், நான் அவர் பக்கம் விரைந்தோடி வருவேன். **(புகாரி:7405. முஸ்லிம்:2675)**

٤٤١ – وَعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ قَبْلَ مَوْتِهِ بِثَلاَثَةِ أَيَّامٍ يَقُولُ: "لاَ يَمُوتَنَّ أَحَدُكُمْ إِلاَّ وَهُوَ يُحْسِنُ الظَّنَّ بِاللَّهِ عَزَّ وَجَلَّ" رَوَاهُ مُسْلِمٌ

**441** ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது நல்லெண்ணம் கொண்டே தவிர, உங்களில் ஒருவர் இறந்து விட வேண்டாம்" என்று நபி (ஸல்) அவர்கள், தான் இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு கூறினார்கள்.

**(முஸ்லிம்:2877)**

٤٤٢ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: "قَالَ اللَّهُ تَعَالَى: يَا ابْنَ آدَمَ إِنَّكَ مَا دَعَوْتَنِي وَرَجَوْتَنِي غَفَرْتُ لَكَ عَلَى مَا كَانَ مِنْكَ وَلاَ أُبَالِي. يَا ابْنَ آدَمَ لَوْ بَلَغَتْ ذُنُوبُكَ عَنَانَ السَّمَاءِ ثُمَّ اسْتَغْفَرْتَنِي غَفَرْتُ لَكَ يَا ابْنَ آدَمَ إِنَّكَ لَوْ أَتَيْتَنِي بِقُرَابِ الأَرْضِ خَطَايَا ثُمَّ لَقِيتَنِي لاَ تُشْرِكُ بِي شَيْئًا لأَتَيْتُكَ بِقُرَابِهَا مَغْفِرَةً!" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ. "عَنَانُ السَّمَاءِ" بِفَتْحِ الْعَيْنِ: قِيلَ هُوَ مَا عَنَّ لَكَ مِنْهَا أَيْ ظَهَرَ إِذَا رَفَعْتَ رَأْسَكَ. وَقِيلَ: هُوَ السَّحَابُ. وَ"قُرَابُ الأَرْضِ" بِضَمِّ الْقَافِ. وَقِيلَ بِكَسْرِهَا وَالضَّمُّ أَصَحُّ وَأَشْهَرُ وَهُوَ مَا يُقَارِبُ مِلْئَهَا وَاللَّهُ أَعْلَمُ.

**442** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதமின் மகனே! என்னிடம் நீ பிரார்த்தித்த போதெல்லாம், என்னிடம் ஆதரவு வைத்த போதெல்லாம் உன்னை நான் மன்னித்தேன். உன் நிலை எப்படி இருந்த போதிலும் நான் கவலையடையவில்லை. ஆதமின் மகனே! வானத்தின் முகட்டளவுக்கு உன் பாவங்கள் அடைந்து விட்டு, பின்னர் அதற்காக என்னிடம் நீ மன்னிப்புக் கோரினாலும், உன்னை நான் மன்னிப்பேன். ஆதமின் மகனே! நிச்சயமாக நீ பூமி நிரம்பப் பாவங்களைக் கொண்டு வந்து, பின்னர் எதையும் எனக்கு இணை வைக்காதவனாக என்னைச் சந்தித்தால், நான் உன்னிடம் அதே அளவுக்கு மன்னிப்புடன் வருவேன் என்று அல்லாஹ் கூறினான்" என்று நபி(ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3540. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٥٣ – باب الجمع بَيْنَ الخوف والرّجاء

## பாடம் : 53 - அச்சத்திற்கும் ஆதரவிற்கும் மத்தியில் ஒன்று சேர்த்தல்!

اعْلَمْ أَنَّ الْمُخْتَارَ لِلْعَبْدِ فِي حَالِ صِحَّتِهِ أَنْ يَكُونَ خَائِفًا رَاجِيًا وَيَكُونُ خَوْفُهُ وَرَجَاؤُهُ سَوَاءً وَفِي حَالِ الْمَرَضِ يَتَمَحَّضُ الرَّجَاءُ. وَقَوَاعِدُ الشَّرْعِ مِنْ نُصُوصِ الْكِتَابِ وَالسُّنَّةِ وَغَيْرِ ذَلِكَ مُتَظَاهِرَةٌ عَلَى ذَلِكَ.

அறிந்து கொள்! ஓர் அடியான் தான் சுகமான நிலையில் இருக்கும் போதே அல்லாஹ்வை அஞ்சுபவனாக, ஆதரவு வைத்தனாக இருக்க வேண்டும். அவனது அச்சமும், ஆதரவு வைத்தலும், சமமாக இருக்க வேண்டும். நோயாளியான நிலையில் ஆதரவு வைத்தலை அதிகமாக்குவான். குர்ஆன், ஹதீஸ் மற்றும் சிலவற்றிலிருந்து மார்க்கச் சட்டம் இதனையே தெளிவுபடுத்துகின்றன.

قَالَ اللّهُ تَعَالَى: فَلاَ يَأْمَنُ مَكْرَ اللّهِ إلاّ الْقَوْمُ الْخَاسِرُونَ وَقَالَ تَعَالَى: إنَّهُ لاَ يَيْأَسُ من رَوْحِ اللّه إلاّ الْقَوْمُ الْكَافِرُونَ. وَقَالَ تَعَالَى: يَوْمَ تَبْيَضُّ وُجُوهٌ وَتَسْوَدُّ وُجُوهٌ. وَقَالَ تَعَالَى: إنَّ رَبَّكَ لَسَرِيعُ الْعِقَاب وَإنَّهُ لَغَفُورٌ رَحِيمٌ وَقَالَ تَعَالَى: إنَّ الأَبْرَارَ لَفِي نَعِيم وَإنَّ الْفُجَّارَ لَفِي جَحِيم. وَقَالَ تَعَالَى: فَأَمَّا مَنْ ثَقُلَتْ مَوَازِينُهُ فَهُوَ فِي عِيشَة رَاضِيَة وَأَمَّا مَنْ خَفَّتْ مَوَازِينُهُ فَأُمُّهُ هَاوِيَةٌ وَالأيَاتُ فِي هَذَا الْمَعْنَى كَثِيرَةٌ. فَيَجْتَمِعُ الْخَوْفُ وَالرَّجَاءُ فِي آيَتَيْنِ مُقْتَرِنَتَيْنِ أَوْ آيَات أَوْ آيَة.

**அல்லாஹ் கூறுகிறான்:** *நஷ்டத்திற்குரிய கூட்டத்தாரைத் தவிர, வேறு எவரும் அல்லாஹ்வின் சூழ்ச்சியை அச்சமற்று இருக்க மாட்டார்கள். (7:99)*

*இறைமறுப்பாளர்களான கூட்டத்தாரைத் தவிர, வேறு எவரும் அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கை இழந்து விடமாட்டார்கள். (12:87)*

*சில முகங்கள் வெண்மையாகவும், சிலமுகங்கள் கருப்பாகவும் ஆகிவிடும் அந்த (கியாமத்) நாளில்... (3:106)*

*நிச்சயமாக உமது இறைவன் தண்டனை தருவதில் தீவிரமானவன். நிச்சயமாக அவன் மிகவும் மன்னிப்பவன். நிகரில்லா அன்பாளன்.(7:167)*

*நிச்சயமாக நல்லோர் 'நயீம்' எனும் சொர்க்கத்தில் இருப்பார்கள். குற்றவாளிகள் நரகத்திலிருப்பார்கள். (82:13,14)*

*ஒருவரின் எடை (நன்மைகள் கொண்டு) கனத்துவிட்டால் அவர் திருப்திகரமான வாழ்வில் இருப்பார். ஒருவரின் எடை இலேசாகிவிட்டால், அவர் தங்குமிடம் 'ஹாவியா' எனும் நரகம்தான். (101:6-9)*

இந்தக் கருத்தில் நிறைய வசனங்கள் உள்ளன. அல்லாஹ்வின் அச்சமும், அவன் மீதுள்ள ஆதரவும் அடுத்தடுத்து இரண்டு வசனங்களிலோ, அல்லது பல வசனங்களிலோ அல்லது ஒரே வசனத்திலோ இணைந்து வருகின்றது.

٤٤٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّه ﷺ قَالَ:" لَوْ يَعْلَمُ الْمُؤْمِنُ مَا عِنْدَ اللّه مِنْ الْعُقُوبَة مَا طَمِعَ بِجَنَّتِه أَحَدٌ وَلَوْ يَعْلَمُ الْكَافِرُ مَا عِنْدَ اللّه مِنَ الرَّحْمَة مَا قَنَطَ مِنْ جَنَّتِه أَحَدٌ". رَوَاهُ مُسْلِمٌ.

**443** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்விடமுள்ள தண்டனையை ஒரு முஃமின் அறிந்தால், அல்லாஹ்வின் சொர்க்கத்தை எவரும் ஆசைவைக்கமாட்டார்கள். அல்லாஹ்விடமுள்ள கருணையை ஓர் இறைமறுப்பாளன் அறிந்தால், அல்லாஹ்வின் சொர்க்கத்தை விட்டு எவரும் நிராசையுடன் இருக்கமாட்டார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2755)**

٤٤٤ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّه ﷺ قَالَ:" إذَا وُضِعَتْ الْجَنَازَةُ وَاحْتَمَلَهَا النَّاسُ – أَوْ الرِّجَالُ – عَلَى أَعْنَاقِهِمْ فَإِنْ كَانَتْ صَالِحَةً قَالَتْ: قَدِّمُونِي قَدِّمُونِي وَإِنْ كَانَتْ غَيْرَ صَالِحَةً قَالَتْ: يَا وَيْلَهَا! أَيْنَ تَذْهَبُونَ بِهَا ؟ يَسْمَعُ صَوْتَهَا كُلُّ شَيْءٍ إلاّ الأنْسَانَ وَلَوْ سَمِعَهُ لَصُعِقَ". رَوَاهُ الْبُخَارِيُّ.

**444** அபூஸயீத் அல்-குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறந்தவரின் உடல் (பெட்டியில்) வைக்கப்பட்டு, அதை மக்கள் தங்கள் தோள்பட்டைகளின் மீது சுமந்து சென்றால், இறந்தவன் நல்லவனாக இருந்தால், "என்னைச் சீக்கிரம் கொண்டு செல்லுங்கள். என்னைச் சீக்கிரம் கொண்டு செல்லுங்கள்" எனக் கூறுவான். நல்லவனாக இல்லை என்றால், "எனக்கு

வந்த கேடே, என்னை எங்கே கொண்டு செல்கிறீர்கள்?'' என்று கேட்பான். மனிதனைத் தவிர, மற்ற அனைத்தும் இந்தச் சப்தத்தைக் கேட்பார்கள். அதை மனிதன் கேட்டால், அவன் (மூர்ச்சையாகி) அடித்து கீழே விழுந்து விடுவான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1314)**

٤٤٥ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "الْجَنَّةُ أَقْرَبُ إِلَى أَحَدِكُمْ مِنْ شِرَاكِ نَعْلِهِ وَالنَّارُ مِثْلُ ذَلِكَ" رَوَاهُ الْبُخَارِيُّ.

**445** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கம் என்பது, உங்களில் ஒருவருக்கு அவரது செருப்பின் வாரைவிட மிக சமீபமாக இருக்கும். நரகமும் இதுபோலத்தான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6488)**

## ٥٤ – بابُ فضل البكاء من خشية الله تعالى وشوقًا إليه

## பாடம் : 54 - அல்லாஹ்வின் அச்சத்தால் அழுவதன் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى: وَيَخِرُّونَ لِلْأَذْقَانِ يَبْكُونَ وَيَزِيدُهُمْ خُشُوعًا. وَقَالَ تَعَالَى: أَفَمِنْ هَذَا الْحَدِيثِ تَعْجَبُونَ وَتَضْحَكُونَ وَلاَ تَبْكُونَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இன்னும் அவர்கள் அழுதவர்களாக முகம் குப்புற விழுவார்கள். அவர்களுக்கு அது இறையச்சத்தை அதிகமாக்கும். (17:109)*

*இனி என்ன, நீங்கள் இந்தச் செய்தியைப் பற்றியா ஆச்சரியம் அடைகின்றீர்கள்? சிரித்துக் கொண்டிருக்கிறீர்கள்; அழாமல் இருக்கிறீர்களே? (53:59,60)*

٤٤٦ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ لِي النَّبِيُّ ﷺ: "اقْرَأْ عَلَيَّ الْقُرْآنَ" قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أَقْرَأُ عَلَيْكَ وَعَلَيْكَ أُنْزِلَ ؟ قَالَ: " إِنِّي أُحِبُّ أَنْ أَسْمَعَهُ مِنْ غَيْرِي". فَقَرَأْتُ عَلَيْهِ سُورَةَ النِّسَاءِ حَتَّى جِئْتُ إِلَى هَذِهِ الآيَةِ: فَكَيْفَ إِذَا جِئْنَا مِنْ كُلِّ أُمَّةٍ بِشَهِيدٍ وَجِئْنَا بِكَ عَلَى هَؤُلاَءِ شَهِيدًا قَالَ: " حَسْبُكَ الآنَ" فَالْتَفَتُّ إِلَيْهِ فَإِذَا عَيْنَاهُ تَذْرِفَانِ مُتَّفَقٌ عَلَيْهِ.

**446** இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"எனக்கு முன்பாக, குர்ஆனை ஓதுவீராக!'' என என்னிடம் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! உங்கள் முன் குர்ஆனை நான் ஓதுவதா? உங்களுக்குத் தானே அது இறக்கப்பட்டுள்ளது?'' என்று கூறினேன். "மற்றவர் ஓதி, அதை நான் கேட்க மிகவும் விரும்புகிறேன்!'' என நபி (ஸல்) கூறினார்கள். 'அந்நிஸா' அத்தியாயத்தை அவர்கள் முன் ஓதினேன்.

(நபியே!) ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் சாட்சியாளரை நாம் கொண்டுவரும் போதும், அவர்களுக்கு உம்மைச் சாட்சியாகக் கொண்டு வரும் போதும், (நிலைமை) எப்படி இருக்கும்? (4:41) என்ற வசனத்தை நான் அடைந்ததும், "இப்போது அது போதும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். நான் அவர்களை நோக்கினேன். அவர்களின் கண்கள் கண்ணீரைப் பொழிந்து கொண்டிருந்தன. **(புகாரி:5050, முஸ்லிம்:800)**

٤٤٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: خَطَبَ رَسُولُ اللَّهِ ﷺ خُطْبَةً مَا سَمِعْتُ مِثْلَهَا قَطُّ فَقَالَ: "لَوْ تَعْلَمُونَ مَا أَعْلَمُ لَضَحِكْتُمْ قَلِيلاً وَلَبَكَيْتُمْ كَثِيرًا". قَالَ: فَغَطَّى أَصْحَابُ رَسُولِ اللَّهِ ﷺ وُجُوهَهُمْ وَلَهُمْ خَنِينٌ. مُتَّفَقٌ عَلَيْهِ وَسَبَقَ بَيَانُهُ فِي بَابِ الْخَوْفِ.

**447** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதுபோன்ற சொற்பொழிவை நான் ஒருபோதும் கேட்டதில்லை. அப்போது அவர்கள், "நான் அறிந்ததை நீங்கள் அறிந்திருந்தால், குறைவாக சிரிப்பீர்கள். அதிகமாக அழுவீர்கள்" என்று கூறினார்கள். நபித்தோழர்கள் தங்களின் முகத்தை மூடிக் கொண்டார்கள். அவர்களிடையே (அழுகையின்) முனகல் சப்தம் கேட்டது.

**(புகாரி:4621. முஸ்லிம்:2359)**

٤٤٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ ﷺ: "لاَ يَلِجُ النَّارَ رَجُلٌ بَكَى مِنْ خَشْيَةِ اللَّهِ حَتَّى يَعُودَ اللَّبَنُ فِي الضَّرْعِ وَلاَ يَجْتَمِعُ غُبَارٌ فِي سَبِيلِ اللَّهِ وَدُخَانُ جَهَنَّمَ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**448** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் அச்சம் காரணமாக அழுகின்ற மனிதர்; கறந்தபால் மடுவுக்குள் மீண்டும் நுழையும் வரை (ஒருபோதும்) நரகில் நுழைய மாட்டார். அல்லாஹ்வின் வழியில் படிந்த புழுதியும், நரகப் புகையும், இணைந்திடாது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1633. இது 'ஹஸன் ஸஹீஹ்' எனத் திர்மிதீ இமாம் கூறுகின்றார்)**

٤٤٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "سَبْعَةٌ يُظِلُّهُمْ اللَّهُ فِي ظِلِّهِ يَوْمَ لاَ ظِلَّ إِلاَّ ظِلُّهُ: إِمَامٌ عَادِلٌ وَشَابٌّ نَشَأَ فِي عِبَادَةِ اللَّهِ تَعَالَى وَرَجُلٌ قَلْبُهُ مُعَلَّقٌ بِالْمَسَاجِدِ وَرَجُلاَنِ تَحَابَّا فِي اللَّهِ اجْتَمَعَا عَلَيْهِ وَتَفَرَّقَا عَلَيْهِ وَرَجُلٌ دَعَتْهُ امْرَأَةٌ ذَاتُ مَنْصِبٍ وَجَمَالٍ فَقَالَ: إِنِّي أَخَافُ اللَّهَ وَرَجُلٌ تَصَدَّقَ بِصَدَقَةٍ فَأَخْفَاهَا حَتَّى لاَ تَعْلَمَ شِمَالُهُ مَا تُنْفِقُ يَمِينُهُ وَرَجُلٌ ذَكَرَ اللَّهَ خَالِيًا فَفَاضَتْ عَيْنَاهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**449** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஏழுபேருக்கு தன் நிழலைத்தவிர வேறு நிழல் இல்லாத அந்த (மறுமை நாளில்) தன் அர்ஷின் நிழலில் அல்லாஹ் நிழல் தருவான். (1) நீதமான அரசர் (2) அல்லாஹ்வை வணங்குவதில் ஈடுபடும் வாலிபர். (3) பள்ளிவாசல்களில் தன் உள்ளத்தைப் பறி கொடுத்த மனிதர் (4) அல்லாஹ்வுக்காக பிரியம் கொண்டு, அவனுக்காகவே ஒன்று சேர்ந்து, அவனுக்காகவே பிரிந்தும் நிற்கின்ற இருவர் (5) அழகும், குடும்பப் பெருமையும் நிறைந்தப் பெண் விபச்சாரத்திற்கு அழைத்தும், "நான் அல்லாஹ்வைப் பயப்படுகிறேன்" என்று கூறும் நபர் (6) தன் வலது கை செய்யும் செலவை இடது கைக்குத் தெரியாமல் அதை மறைத்துக் கொண்டு தர்மம் செய்கின்ற ஒருவர் (7) கலப்பற்ற நிலையில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து, இதனால் கண்களில் கண்ணீரைச் சிந்தும் ஒருவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:660. முஸ்லிம்:1031)**

٤٥٠ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ الشِّخِّيرِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: أَتَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ وَهُوَ يُصَلِّي وَلِجَوْفِهِ أَزِيزٌ كَأَزِيزِ الْمِرْجَلِ مِنْ الْبُكَاءِ. حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ فِي" الشَّمَائِلِ" بِإِسْنَادٍ صَحِيحٍ.

**450** அப்துல்லாஹ் இப்னு ஷகீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். அவர்கள் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் அழுததன் காரணமாக, அவர்களின் வயிற்றிலிருந்து உலை கொதிக்கும் ஒலி போல் சப்தம் வந்தது."

**(இது அபூதாவூது:904. திர்மிதீ:324)**

٤٥١ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ لِأُبَيِّ بْنِ كَعْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ:" إِنَّ اللَّهَ عَزَّ وَجَلَّ أَمَرَنِي أَنْ أَقْرَأَ عَلَيْكَ: لَمْ يَكُنِ الَّذِينَ كَفَرُوا" قَالَ: وَسَمَّانِي ؟ قَالَ:" نَعَمْ". فَبَكَى أُبَيٌّ. مُتَّفَقٌ عَلَيْهِ وَفِي رِوَايَةٍ: فَجَعَلَ أُبَيٌّ يَبْكِي.

**451** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“லம் யகுனில்லதீன கஃபரூ ...” என ஆரம்பிக்கும் அத்தியாயத்தை உம் முன்னால் ஓதிக்காட்ட அல்லாஹ் எனக்குக் கட்டளையிட்டுள்ளான்” என நபி (ஸல்) அவர்கள் உபை இப்னு கஃபு (ரழி) அவர்களிடம் கூறினார்கள். “என் பெயரை அல்லாஹ் கூறினானா?” என்று உபை இப்னு கஃபு (ரழி) கேட்டார். “ஆம்” என, நபி (ஸல்) கூறியதும், (சந்தோசத்தால்) உபை (ரழி) அழுதார்கள்.

**(புகாரி:3809. முஸ்லிம்:799)**

மற்றொரு அறிவிப்பில், “உபை (ரழி) அழுதவாறே இருந்தார்” என்று உள்ளது.

٤٥٢ - وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ: قَالَ أَبُو بَكْرٍ لِعُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا بَعْدَ وَفَاةِ رَسُولِ اللَّهِ ﷺ: "انْطَلِقْ بِنَا إِلَى أُمِّ أَيْمَنَ رَضِيَ اللَّهُ عَنْهَا نَزُورُهَا كَمَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَزُورُهَا فَلَمَّا انْتَهَيْنَا إِلَيْهَا بَكَتْ فَقَالاَ لَهَا: مَا يُبْكِيكِ ؟ أَمَا تَعْلَمِينَ أَنَّ مَا عِنْدَ اللَّهِ تَعَالَى خَيْرٌ لِرَسُولِ اللَّهِ ﷺ! قَالَتْ: إِنِّي لاَ أَبْكِي أَنِّي لاَ أَعْلَمُ أَنَّ مَا عِنْدَ اللَّهِ خَيْرٌ لِرَسُولِ اللَّهِ ﷺ وَلَكِنِّي أَبْكِي أَنَّ الْوَحْيَ قَدِ انْقَطَعَ مِنَ السَّمَاءِ ؟ فَهَيَّجَتْهُمَا عَلَى الْبُكَاءِ فَجَعَلاَ يَبْكِيَانِ مَعَهَا". رَوَاهُ مُسْلِمٌ وَقَدْ سَبَقَ فِي بَابِ زِيَارَةِ أَهْلِ الْخَيْرِ.

**452** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இறந்தபின் உமர் (ரழி) அவர்களிடம், அபூபக்ர் (ரழி) அவர்கள், “தன் வளர்ப்புத் தாயார் உம்மு அய்மன் (ரழி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் சந்தித்தது போல், அவர்களை நாமும் சந்திக்கச் செல்வோம்” என்று கூறினார்கள். அவ்விருவரும் அவர்களிடம் வந்தபோது, உம்மு அய்மன் (ரழி) (நபி(ஸல்) மரணித்ததை எண்ணி) அழுதார்கள். “அல்லாஹ்விடம் உள்ளவைகள், நபி (ஸல்) அவர்களுக்குச் சிறந்தவைகளாகும் என்பதை நீங்கள் அறிவீர்கள்தானே! பிறகு உங்களை அழத் தூண்டியது எது?” என்று இருவரும் கேட்டனர். அதற்கு உம்மு அய்மன் (ரழி) அவர்கள், “நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்விடம் சிறந்தவை உண்டு என்பதை நான் அறியாமல் அழவில்லை. எனினும், இறைச்செய்தி (வஹீ) வானத்திலிருந்து வருவது நின்றுவிட்டதே என்றுதான் அழுகிறேன்” என்று கூறினார்கள். இதனால் அழும் நிலைக்கு அவ்விருவரும் ஆளாகி, அவர்களுடன் இருவரும் சேர்ந்து அழுதார்கள். **(முஸ்லிம்:2454)**

٤٥٣ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: لَمَّا اشْتَدَّ بِرَسُولِ اللَّهِ ﷺ وَجَعُهُ قِيلَ لَهُ فِي الصَّلاَةِ. قَالَ:" مُرُوا أَبَا بَكْرٍ فَلْيُصَلِّ بِالنَّاسِ". فَقَالَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا: إِنَّ أَبَا بَكْرٍ رَجُلٌ رَقِيقٌ إِذَا قَرَأَ الْقُرْآنَ غَلَبَهُ الْبُكَاءُ. فَقَالَ:" مُرُوهُ فَلْيُصَلِّ". وَفِي رِوَايَةٍ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ:" قُلْتُ: إِنَّ أَبَا بَكْرٍ إِذَا قَامَ مَقَامَكَ لَمْ يُسْمِعِ النَّاسَ مِنَ الْبُكَاءِ" مُتَّفَقٌ عَلَيْهِ.

**453** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் மரணம் நெருங்கிய வேளை நோயின் வலி அதிகமான சமயம், தொழுகையைப் பற்றி அவர்களிடம் கூறப்பட்டது. “மக்களுக்குத் தொழ வைக்கும்படி, அபூபக்ர் அவர்களிடம் கூறுங்கள்” என்று கூறினார்கள். அப்போது ஆயிஷா (ரழி) அவர்கள், “அபூபக்ர், (ரழி) அவர்கள் மென்மையான மனிதர், அவர் குர்ஆன் ஓதினால், அழுகை அவரை மிகைக்கும்” என்று கூறினார்கள். “அபூபக்ர் அவர்களையே ஏவுங்கள். அவர் தொழ வைக்கட்டும்” என்று நபி (ஸல்) மீண்டும் கூறினார்கள்.

**(புகாரி:682)**

“அபூபக்ர் (ரழி) அவர்கள் உங்கள் இடத்தில் நின்றால், அவரின் அழுகைச் சப்தத்தைத்தான் மக்களை கேட்கச் செய்வார்” என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது. **(புகாரி:679.முஸ்லிம்:418/94)**

٤٥٤ – وَعَنْ إِبْرَاهِيمَ بْنِ عَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ أَنَّ عَبْدَ الرَّحْمَنِ بْنَ عَوْفٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أُتِيَ بِطَعَامٍ وَكَانَ صَائِمًا فَقَالَ: قُتِلَ مُصْعَبُ بْنُ عُمَيْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ وَهُوَ خَيْرٌ مِنِّي فَلَمْ يُوجَدْ لَهُ مَا يُكَفَّنُ فِيهِ إِلاَّ بُرْدَةً إِنْ غُطِّيَ بِهَا رَأْسُهُ بَدَتْ رِجْلاَهُ وَإِنْ غُطِّيَ بِهَا رِجْلاَهُ بَدَا رَأْسُهُ ثُمَّ بُسِطَ لَنَا مِنَ الدُّنْيَا مَا بُسِطَ – أَوْ قَالَ أُعْطِينَا مِنَ الدُّنْيَا مَا أُعْطِينَا – قَدْ خَشِينَا أَنْ تَكُونَ حَسَنَاتُنَا عُجِّلَتْ لَنَا. ثُمَّ جَعَلَ يَبْكِي حَتَّى تَرَكَ الطَّعَامَ. رَوَاهُ الْبُخَارِيُّ.

**454** இப்ராஹிம் இப்னு அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரஹ்) அறிவிக்கின்றார்கள்:

(என் தந்தை) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்பு (ரழி) அவர்களின் முன் உணவு வைக்கப்பட்டது. அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள். அப்போது அவர்கள் (பழைய நினைவுகளை நினைவு கூர்ந்தவர்களாக) “முஸ்அப் இப்னு உமைர் (ரழி) அவர்கள் கொல்லப்பட்டார்கள். அவர் என்னை விட சிறந்தவர். அவர் மீது கஃபனிடப்பட ஒரு போர்வையைத் தவிர வேறெதுவும் பெற்றுக் கொள்ளப்படவில்லை. சிறிய இந்தப் போர்வை மூலம் அவரது தலை மூடப்பட்டால், அவரது கால்கள் வெளியே தெரிந்தன. அதன் மூலம் அவரது கால்கள் மூடப்பட்டால், அவரின் தலை வெளியே தெரிந்தது. பின்னர் (பிற்காலத்தில்) உலகின் செல்வங்கள் எங்களுக்கு ஏராளமாக வழங்கப்பட்டு விட்டன. (எந்த அளவிற்கென்றால்) எங்களின் நன்மையான அமல்களின் நற்கூலிகள் எல்லாம் முன்கூட்டியே எங்களுக்கு வழங்கப்பட்டுவிட்டனவோ (மறுமையில் எங்களுக்கு எதுவும் மீதியிருக்காதோ) என நாங்கள் அஞ்சும் அளவுக்கு” என்று கூறிய அவர்கள், அழ ஆரம்பித்தார்கள். அவர்கள் முன் இருந்த உணவை (சாப்பிடாமல்) விட்டு விட்டார்கள். **(புகாரி:1274)**

٤٥٥ – وَعَنْ أَبِي أُمَامَةَ صُدَيِّ بْنِ عَجْلاَنَ الْبَاهِلِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "لَيْسَ شَيْءٌ أَحَبَّ إِلَى اللَّهِ تَعَالَى مِنْ قَطْرَتَيْنِ وَأَثَرَيْنِ: قَطْرَةُ دُمُوعٍ مِنْ خَشْيَةِ اللَّهِ وَقَطْرَةُ دَمٍ تُهْرَاقُ فِي سَبِيلِ اللَّهِ وَأَمَّا الأَثَرَانِ فَأَثَرٌ فِي سَبِيلِ اللَّهِ تَعَالَى وَأَثَرٌ فِي فَرِيضَةٍ مِنْ فَرَائِضِ اللَّهِ تَعَالَى". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**455** அபூ உமாமா சுதய் இப்னு அஜ்லான் அல்பாஹிலி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரண்டு துளிகள், இரண்டு அடையாளங்கள் ஆகியவற்றை விட, அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானதாக எதுவும் இல்லை. (அவை) அல்லாஹ்வைப் பயந்து வடிக்கும் கண்ணீர் துளிகள், அல்லாஹ்வின் வழியில் சிந்திய ரத்தத்துளி (என இரண்டு துளிகள்) மற்றும் அல்லாஹ்வின் வழியில் ஏற்பட்ட (காயத்தின்) அடையாளம். அல்லாஹ்வின் கடமைகளில் ஒன்றான (தொழுகை எனும்) கடமையில் ஏற்பட்ட அடையாளம்” (என இரண்டு அடையாளங்கள்) என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1669. இது 'ஹஸன்' என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٥٦ – وَفِي الْبَابِ أَحَادِيثُ كَثِيرَةٌ مِنْهَا حَدِيثُ الْعِرْبَاضِ بْنِ سَارِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: وَعَظَنَا رَسُولُ اللَّهِ ﷺ مَوْعِظَةً وَجِلَتْ مِنْهَا الْقُلُوبُ وَذَرَفَتْ مِنْهَا الْعُيُونُ.

**456** இர்பாழ் இப்னு ஸாரியா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உள்ளங்கள் நடுங்கிக் கண்கள் கண்ணீரைச் சிந்தும் அளவுக்கு, நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு உபதேசம் செய்தார்கள்.” **(அபூதாவூது, திர்மிதீ)**

## ٥٥ - باب فضل الزهد في الدنيا والحث على التقلل منها وفضل الفقر

## பாடம் : 55 - உலகப் பற்றின்மையின் சிறப்பு - உலக சுகங்களைக் குறைத்துக் கொள்ள ஆர்வமூட்டுதல், ஏழ்மையின் சிறப்பு

قَالَ تَعَالَى: إِنَّمَا مَثَلُ الْحَيَاةِ الدُّنْيَا كَمَاءٍ أَنْزَلْنَاهُ مِنَ السَّمَاءِ فَاخْتَلَطَ بِهِ نَبَاتُ الأَرْضِ مِمَّا يَأْكُلُ النَّاسُ وَالأَنْعَامُ حَتَّى إِذَا أَخَذَتِ الأَرْضُ زُخْرُفَهَا وَازَّيَّنَتْ وَظَنَّ أَهْلُهَا أَنَّهُمْ قَادِرُونَ عَلَيْهَا أَتَاهَا أَمْرُنَا لَيْلاً أَوْ نَهَارًا فَجَعَلْنَاهَا حَصِيدًا كَأَنْ لَمْ تَغْنَ بِالأَمْسِ كَذَلِكَ نُفَصِّلُ الأَيَاتِ لِقَوْمٍ يَتَفَكَّرُونَ. وَقَالَ تَعَالَى: وَاضْرِبْ لَهُمْ مَثَلَ الْحَيَاةِ الدُّنْيَا كَمَاءٍ أَنْزَلْنَاهُ مِنَ السَّمَاءِ فَاخْتَلَطَ بِهِ نَبَاتُ الأَرْضِ فَأَصْبَحَ هَشِيمًا تَذْرُوهُ الرِّيَاحُ وَكَانَ اللَّهُ عَلَى كُلِّ شَيْءٍ مُقْتَدِرًا الْمَالُ وَالْبَنُونَ زِينَةُ الْحَيَاةِ الدُّنْيَا وَالْبَاقِيَاتُ الصَّالِحَاتُ خَيْرٌ عِنْدَ رَبِّكَ ثَوَابًا وَخَيْرٌ أَمَلاً وَقَالَ تَعَالَى: اعْلَمُوا أَنَّمَا الْحَيَاةُ الدُّنْيَا لَعِبٌ وَلَهْوٌ وَزِينَةٌ وَتَفَاخُرٌ بَيْنَكُمْ وَتَكَاثُرٌ فِي الأَمْوَالِ وَالأَوْلَادِ كَمَثَلِ غَيْثٍ أَعْجَبَ الْكُفَّارَ نَبَاتُهُ ثُمَّ يَهِيجُ فَتَرَاهُ مُصْفَرًّا ثُمَّ يَكُونُ حُطَامًا وَفِي الأَخِرَةِ عَذَابٌ شَدِيدٌ وَمَغْفِرَةٌ مِنَ اللَّهِ وَرِضْوَانٌ وَمَا الْحَيَاةُ الدُّنْيَا إِلاَّ مَتَاعُ الْغُرُورِ. وَقَالَ تَعَالَى: زُيِّنَ لِلنَّاسِ حُبُّ الشَّهَوَاتِ مِنَ النِّسَاءِ وَالْبَنِينَ وَالْقَنَاطِيرِ الْمُقَنْطَرَةِ مِنَ الذَّهَبِ وَالْفِضَّةِ وَالْخَيْلِ الْمُسَوَّمَةِ وَالأَنْعَامِ وَالْحَرْثِ ذَلِكَ مَتَاعُ الْحَيَاةِ الدُّنْيَا وَاللَّهُ عِنْدَهُ حُسْنُ الْمَآبِ وَقَالَ تَعَالَى: يَا أَيُّهَا النَّاسُ إِنَّ وَعْدَ اللَّهِ حَقٌّ فَلاَ تَغُرَّنَّكُمُ الْحَيَاةُ الدُّنْيَا وَلاَ يَغُرَّنَّكُمْ بِاللَّهِ الْغَرُورُ. وَقَالَ تَعَالَى: أَلْهَاكُمُ التَّكَاثُرُ حَتَّى زُرْتُمُ الْمَقَابِرَ كَلاَّ سَوْفَ تَعْلَمُونَ ثُمَّ كَلاَّ سَوْفَ تَعْلَمُونَ كَلاَّ لَوْ تَعْلَمُونَ عِلْمَ الْيَقِينِ. وَقَالَ تَعَالَى: وَمَا هَذِهِ الْحَيَاةُ الدُّنْيَا إِلاَّ لَهْوٌ وَلَعِبٌ وَإِنَّ الدَّارَ الأَخِرَةَ لَهِيَ الْحَيَوَانُ لَوْ كَانُوا يَعْلَمُونَ. وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَشْهُورَةٌ.

وَأَمَّا الأَحَادِيثُ فَأَكْثَرُ مِنْ أَنْ تُحْصَرَ فَنُنَبِّهُ بِطَرَفٍ مِنْهَا عَلَى مَا سِوَاهُ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இவ்வுலக வாழ்க்கைக்கு உதாரணம், வானத்திலிருந்து இறங்கிய மழை போலாகும். மக்களும், கால்நடைகளும் சாப்பிடக்கூடிய பூமியின் பயிர்கள் அதன் மூலம் வளர்கிறது. இறுதியில் பூமி செழிப்பாகி, அது அழகாகி, அதன் உரிமையாளர் தாங்களே இதற்கு சொந்தக்காரர்கள் என எண்ணி இருக்கும் போது, இரவிலோ அல்லது பகலிலோ நம் (வேதனையின்) கட்டளை அங்கு வருகிறது. அப்போது, நேற்று அந்த இடத்தில் எதுவும் இல்லாதது போலக் காய்ந்ததாக நாம் ஆக்கி விடுகிறோம். இவ்வாறே சிந்திக்கும் மக்களுக்கு அத்தாட்சிகளை தெளிவாக்குகிறோம். (10:24)*

*இவ்வுலக வாழ்க்கைக்கு உதாரணம், வானத்திலிருந்து நாம் இறக்கி வைக்கும் தண்ணீர் போன்றதாகும் என அவர்களுக்கு(க் கூறி உதாரணத்தை) ஆக்குவீராக! அதில் பூமியின் பயிர்கள் கலந்தன (வளர்ந்தன). காற்று அதை அடித்துச் செல்லும் பதராக அது ஆனது. அல்லாஹ் அனைத்தின் மீதும் ஆற்றல் உள்ளவனாக உள்ளான்.*

*பொருளும், ஆண்மக்களும், இவ்வுலக வாழ்க்கையின் அலங்காரமாகும். நிலைத்து நிற்கும்படியான நற்செயல்கள், உமது இறைவனிடம் நன்மையால் ஆதரவு வைப்பதால் சிறந்ததாகும். (18:45,46)*

*அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக, இவ்வுலக வாழ்க்கை என்பது விளையாட்டும், வீணும், அலங்காரமும், உங்களுக்கிடையே பெருமை கொள்ளலும், சொத்துக்களையும், குழந்தைகளையும் அதிகமாக்கிக் கொள்வதும் என உள்ளது. (இதற்கு உதாரணம்), மழையின் உதாரணமாகும். இறை மறுப்பாளர்களுக்கு அதன் விளைச்சல் மகிழ்வைத் தருகிறது. பின்பு அது காய்ந்து மஞ்சளாக ஆகிறது. பின்பு சருகுகளாக அது ஆகிவிடுகிறது. மறுமையில் கடும் வேதனையும், அல்லாஹ் விடமிருந்து மன்னிப்பும், திருப்தியும் உண்டு. இவ்வுலக வாழ்க்கை, ஏமாற்றுகின்ற அற்ப சுகமே அன்றி வேறில்லை. (57:20)*

*பெண்கள், ஆண்குழந்தைகள், தங்கம், வெள்ளியினால் உருவாக்கப்பட்ட பொற்குவியல்கள், அடையாளமிடப்பட்ட குதிரைகள், கால்நடைகள், விவசாயம் ஆகியவற்றின் மீது ஆசை கொள்வது மனிதர்களுக்கு அழகாக்கப்பட்டுள்ளது. இது இவ்வுலக வாழ்க்கையில் சொற்ப சுகமாகும். (ஆனால்) அல்லாஹ்வாகிய அவனிடத்தில் அழகிய தங்குமிடம் உண்டு. (3:14)*

*மனிதர்களே! அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானதாகும். இவ்வுலக வாழ்க்கை உங்களை ஏமாற்றி விட வேண்டாம். ஏமாற்றுகின்றவனும் (ஷைத்தானும்) அல்லாஹ்வின் விஷயத்தில் உங்களை ஏமாற்றி விட வேண்டாம். (35:5)*

*நீங்கள் மண்ணறைகளை சந்திக்கும் வரையில், (சொத்தை) அதிகப்படுத்தும் ஆசை உங்களை பாராமுகமாக்கிவிட்டது. (உண்மை நிலை) அவ்வாறல்ல. நீங்கள் விரைவில் அறிந்து கொள்வீர்கள்! பின்னரும் (உண்மை நிலை) அவ்வாறல்ல. விரைவில் நீங்கள் அறிந்துக் கொள்வீர்கள்! (உண்மை நிலை) அவ்வாறல்ல. உறுதியான அறிவால் நீங்கள் அறிவீர்களானால் (இவ்வாறு பொடுபோக்காக இருக்க மாட்டீர்கள்.) (102:1-5)*

*இவ்வுலக வாழ்க்கை என்பது, வீணும், விளையாட்டுமே தவிர வேறில்லை. நிச்சயமாக மறுமையின் வீடு, அதுதான் அழியாததாகும். அவர்கள் இதை அறிபவர்களாக இருந்தால் (இதை உணர்வர்) (29:64)*

இந்த தலைப்பில் நிறைய ஹதீஸ்கள் உள்ளன. அவற்றில் சிலவற்றை மட்டும் அறிந்து கொள்வோம்.

٤٥٧ – عَنْ عَمْرِو بْنِ عَوْفٍ الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ بَعَثَ أَبَا عُبَيْدَةَ ابْنَ الْجَرَّاحِ رَضِيَ اللَّهُ عَنْهُ إِلَى الْبَحْرَيْنِ يَأْتِي بِجِزْيَتِهَا فَقَدِمَ بِمَالٍ مِنَ الْبَحْرَيْنِ فَسَمِعَتْ الأَنْصَارُ بِقُدُومِ أَبِي عُبَيْدَةَ ; فَوَافَوْا صَلاَةَ الْفَجْرِ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فَلَمَّا صَلَّى رَسُولُ اللَّهِ ﷺ انْصَرَفَ فَتَعَرَّضُوا لَهُ فَتَبَسَّمَ رَسُولُ اللَّهِ ﷺ حِينَ رَآهُمْ ثُمَّ قَالَ: "أَظُنُّكُمْ سَمِعْتُمْ أَنَّ أَبَا عُبَيْدَةَ قَدِمَ بِشَيْءٍ مِنَ الْبَحْرَيْنِ ؟" فَقَالُوا: أَجَلْ يَا رَسُولَ اللَّهِ. فَقَالَ: " أَبْشِرُوا وَأَمِّلُوا مَا يَسُرُّكُمْ فَوَاللَّهِ مَا الْفَقْرُ أَخْشَى عَلَيْكُمْ وَلَكِنِّي أَخْشَى أَنْ تُبْسَطَ الدُّنْيَا عَلَيْكُمْ كَمَا بُسِطَتْ عَلَى مَنْ كَانَ قَبْلَكُمْ فَتَنَافَسُوهَا كَمَا تَنَافَسُوهَا فَتُهْلِكَكُمْ كَمَا أَهْلَكَتْهُمْ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**457** அம்ரு இப்னு அவ்ஃபு அல் அன்சாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரழி) அவர்களை 'பஹ்ரைன்' நாட்டுக்கு 'ஜிஸ்யா' வரி வசூல் செய்ய நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அவர் பஹ்ரைனில் இருந்து சில பொருட்களுடன் திரும்பினார். அபூஉபைதா அவர்களின் வருகை பற்றி அன்சாரி நபித்தோழர்கள் கேள்விப்பட்டனர். நபி (ஸல்) அவர்களுடன் சுப்ஹுத் தொழுகையில் அன்சாரித் தோழர்கள் கலந்து கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும், அவர்களிடம் மதீனாவாசிகளான அன்சாரிகள் வந்தார்கள். அவர்களைக் கண்டதும் நபி (ஸல்) அவர்கள் சிரித்தார்கள். பின்பு, "பஹ்ரைனிலிருந்து அபூஉபைதா சில பொருட்களுடன் வந்துள்ளார் என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள் என எண்ணுகிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அதற்கு, "இறைத்தூதர் அவர்களே! ஆம்" என்று நபித்தோழர்கள் கூறினர். "நீங்கள் சுபச்செய்தி கேளுங்கள். உங்களை மகிழ்வுறச் செய்யும் செய்தியைப் பெறுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக, ஏழ்மை உங்களிடம் ஏற்படுவதை நான் பயப்படவில்லை. எனினும், உங்களுக்கு முன் இருந்தோருக்கு வசதியாக ஆக்கப்பட்டது போல் உங்களுக்கும் இந்த உலகம் வசதியாக்கப்படுவதையே நான் பயப்படுகிறேன். மேலும் அதில் அவர்கள் பெருமை கொண்டது

போல், நீங்களும் அதில் பெருமை கொண்டு இருப்பதையும், அவர்களை அது அழித்தது போல் உங்களை அது அழித்து விடும் என்பதையுமே (நான் பயப்படுகிறேன்)'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:3158. முஸ்லிம்:2961)**

٤٥٨ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: جَلَسَ رَسُولُ اللَّهِ ﷺ عَلَى الْمِنْبَرِ وَجَلَسْنَا حَوْلَهُ فَقَالَ: "إِنَّ مِمَّا أَخَافُ عَلَيْكُمْ مِنْ بَعْدِي مَا يُفْتَحُ عَلَيْكُمْ مِنْ زَهْرَةِ الدُّنْيَا وَزِينَتِهَا". مُتَّفَقٌ عَلَيْهِ.

**458** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மேடையில் (மிம்பரில்) அமர்ந்தார்கள். அவர்களைச் சுற்றி நாங்களும் அமர்ந்தோம். அப்போது அவர்கள், “எனக்குப் பின் உங்களிடையே உலக வசதி அதிகமாக்கப் படுவதைக் கண்டு நான் பயப்படுகிறேன்'' என்று கூறினார்கள். **(புகாரி:1465. முஸ்லிம்:1052)**

٤٥٩ – عَنْهُ ) أَبِي سَعِيد الْخُدْرِيِّ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: "إِنَّ الدُّنْيَا حُلْوَةٌ خَضِرَةٌ وَإِنَّ اللَّهَ تَعَالَى مُسْتَخْلِفُكُمْ فِيهَا فَيَنْظُرَ كَيْفَ تَعْمَلُونَ فَاتَّقُوا الدُّنْيَا وَاتَّقُوا النِّسَاءَ". رَوَاهُ مُسْلِمٌ.

**459** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக உலகம் இனிமையும், பசுமையும் மிக்கதாக இருக்கும். நிச்சயமாக அல்லாஹ் அதில் உங்களை பிரதிநிதிகளாக ஆக்கி உள்ளான். நீங்கள் எப்படிச் செயல்படுகிறீர்கள் எனப் பார்க்கிறான். எனவே இவ்வுலகைப் பயந்துக் கொள்ளுங்கள். பெண்களையும் பயந்துக் கொள்ளுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2742)**

٤٦٠ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ: "اللَّهُمَّ لاَ عَيْشَ إِلاَّ عَيْشُ الأخِرَةْ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**460** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைவா! மறுமையின் வாழ்க்கையைத் தவிர வேறு வாழ்க்கை (நிரந்தரம்) இல்லை'' என்று நபி (ஸல்) அவர்கள் ஒருமுறை (துஆச் செய்யும்போது) கூறினார்கள். **(புகாரி:6413. முஸ்லிம்:1805)**

٤٦١ – وَعَنْهُ ) أَنَسٍ ( عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ: "يَتْبَعُ الْمَيِّتَ ثَلاَثَةٌ: أَهْلُهُ وَمَالُهُ وَعَمَلُهُ فَيَرْجِعُ اثْنَانِ وَيَبْقَى وَاحِدٌ: يَرْجِعُ أَهْلُهُ وَمَالُهُ وَيَبْقَى عَمَلُهُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**461** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறந்தவரை மூன்று விஷயங்கள் பின் தொடர்கின்றன. அவை; 1. அவரது குடும்பம், 2.அவரது சொத்து, 3.அவரது செயல்கள் ஆகும். நல்லடக்கம் முடிந்ததும் இரண்டு திரும்பி விடும். ஒன்று மட்டும் (அவருடன்) தங்கி விடும். அவரது குடும்பமும், அவரது சொத்தும் திரும்பி விடுகின்றன. அவரது செயல் தங்கி விடுகிறது'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6514. முஸ்லிம்:2960)**

٤٦٢ – وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "يُؤْتَى بِأَنْعَمِ أَهْلِ الدُّنْيَا مِنْ أَهْلِ النَّارِ يَوْمَ الْقِيَامَةِ فَيُصْبَغُ فِي النَّارِ صَبْغَةً ثُمَّ يُقَالُ: يَا ابْنَ آدَمَ هَلْ رَأَيْتَ خَيْرًا قَطُّ ؟ هَلْ مَرَّ بِكَ نَعِيمٌ قَطُّ ؟ فَيَقُولُ: لاَ وَاللَّهِ يَا رَبِّ! وَيُؤْتَى بِأَشَدِّ النَّاسِ بُؤْسًا فِي الدُّنْيَا مِنْ أَهْلِ الْجَنَّةِ فَيُصْبَغُ صَبْغَةً فِي الْجَنَّةِ فَيُقَالُ لَهُ: يَا ابْنَ آدَمَ هَلْ رَأَيْتَ بُؤْسًا قَطُّ ؟ هَلْ مَرَّ بِكَ شِدَّةٌ قَطُّ ؟ فَيَقُولُ: لاَ وَاللَّهِ مَا مَرَّ بِي بُؤْسٌ قَطُّ. وَلاَ رَأَيْتُ شِدَّةً قَطُّ"! رَوَاهُ مُسْلِمٌ.

**462** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உலக வசதிகளை மிகவும் அனுபவித்த ஒருவர், மறுமையில் நரகவாசிகளில் ஒருவராக கொண்டு வரப்பட்டு, நரகில் ஒரே மூழ்காக முக்கி எடுக்கப்படுவார். "ஆதமின் மகனே! நீ நல்லதை எதையும் பார்த்ததுண்டா? உம்மிடம் சுகமான வாழ்வு வந்ததுண்டா?" என்று கேட்கப்படும். (அவர் உலகில் கிடைத்ததை வேதனை காரணமாக மறந்து) "இல்லை, இறைவா" என்பார். அடுத்து உலகில் மனிதர்களி லேயே மிகவும் கஷ்டங்களை அனுபவித்த ஒருவர் சொர்க்கவாசிகளில் ஒருவராக கொண்டு வரப்படுவார். அவரைச் சொர்க்கத்தினுள் அனுப்பி, (வெளியே) கொண்டு வரப்பட்டு, அவரிடம், "நீ சிரமத்தை கண்டதுண்டா? உன்னிடம் துன்பம் வந்ததுண்டா?" என்று கேட்கப்படும். (அவர் சொர்க் கத்தின் சுகம் அறிந்து தன்னை மறந்து) "அல்லாஹ் மீது சத்தியமாக, என்னிடம் சிரமம் வந்தது மில்லை. நான் துன்பத்தை கண்டதுமில்லை என்று கூறுவார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2807)**

٤٦٣ - وَعَنْ الْمُسْتَوْرِدِ بْنِ شَدَّادٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" مَا الدُّنْيَا فِي الأَخِرَةِ إِلاَّ مِثْلَ مَا يَجْعَلُ أَحَدُكُمْ إِصْبَعَهُ فِي الْيَمِّ فَلْيَنْظُرْ بِمَ يَرْجِعُ". رَوَاهُ مُسْلِمٌ.

**463** முஸ்தவ்ரிது இப்னு ஷத்தாது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை விஷயத்தில் இவ்வுலகம் என்பது, உங்களில் ஒருவர் தன் விரலைக் கடலில் விட்டு, அதில் எவ்வளவு தண்ணீர் உள்ளது என்பதைப் பார்க்கிறாரே அது போன்றுதான் (அந்த தண்ணீர் துளிகள் போன்ற அளவுதான் உலகம்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2858)**

٤٦٤ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ مَرَّ بِالسُّوقِ وَالنَّاسُ كَنَفَيْهِ فَمَرَّ بِجَدْيٍ أَسَكَّ مَيِّتٍ فَتَنَاوَلَهُ فَأَخَذَ بِأُذُنِهِ ثُمَّ قَالَ:" أَيُّكُمْ يُحِبُّ أَنْ يَكُونَ هَذَا لَهُ بِدِرْهَمٍ ؟" فَقَالُوا: مَا نُحِبُّ أَنَّهُ لَنَا بِشَيْءٍ وَمَا نَصْنَعُ بِهِ! ؟ ثُمَّ قَالَ:" أَتُحِبُّونَ أَنَّهُ لَكُمْ ؟". قَالُوا: وَاللَّهِ لَوْ كَانَ حَيًّا كَانَ عَيْبًا. أَنَّهُ أَسَكُّ فَكَيْفَ وَهُوَ مَيِّتٌ! فَقَالَ:" فَوَاللَّهِ لَلدُّنْيَا أَهْوَنُ عَلَى اللَّهِ مِنْ هَذَا عَلَيْكُمْ". رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ:" كَنَفَيْهِ": أَيْ عَنْ جَانِبَيْهِ. وَ" الأَسَكُّ": الصَّغِيرُ الأُذُنِ.

**464** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒருமுறை கடை வீதிக்குச் சென்றார்கள். அவர்களின் இருபுறமும் மக்கள் சென்றார்கள். அங்கே செத்த, சிறிய காதுடைய ஓர் ஆடு கிடந்தது. அதை நெருங்கி, அதன் காதைப் பிடித்துத் தூக்கி, "உங்களில் யார் இதைச் சில திர்ஹம்களுக்கு விலைக்குப் பெறுவதை விரும்புகிறீர்?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். "நாங்கள் விரும்ப மாட்டோம். எங்களுக்கு எந்தத் தேவையும் இதனால் இல்லை. இதை வாங்கி நாங்கள் என்ன செய்வது?" என்று நபித்தோழர்கள் கூறினர். "இந்த ஆடு உங்களுக்குப் பயன்படும் என விரும்புகிறீர்களா?" என்று மீண்டும் நபி (ஸல்) கேட்டார்கள். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக, உயிருடன் அது இருந்தாலும் குறையுள்ளதாகவே அது உள்ளது. அது இப்போது இறந்துவிட்ட நிலையில் எதற்குப் பயன்படும்?" என்று நபித்தோழர்கள் கூறினர். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக, இந்த ஆடு உங்களிடம் (மதிப்பற்றதாக) இருப்பதைப் போல் அல்லாஹ்விடம் மதிப்பற்றதாக இந்த உலகம் உள்ளது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2957)**

٤٦٥ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: كُنْتُ أَمْشِي مَعَ النَّبِيِّ ﷺ فِي حَرَّةٍ بِالْمَدِينَةِ فَاسْتَقْبَلَنَا أُحُدٌ فَقَالَ:" يَا أَبَا ذَرٍّ" قُلْتُ: لَبَّيْكَ يَا رَسُولَ اللَّهِ. فَقَالَ:" مَا يَسُرُّنِي أَنَّ عِنْدِي مِثْلَ أُحُدٍ هَذَا ذَهَبًا تَمْضِي عَلَيَّ ثَلاَثَةُ أَيَّامٍ وَعِنْدِي مِنْهُ دِينَارٌ إِلاَّ شَيْءٌ أَرْصُدُهُ لِدَيْنٍ إِلاَّ أَنْ أَقُولَ بِهِ فِي عِبَادِ اللَّهِ هَكَذَا وَهَكَذَا وَهَكَذَا" عَنْ يَمِينِهِ وَعَنْ شِمَالِهِ وَمِنْ خَلْفِهِ ثُمَّ سَارَ فَقَالَ:" إِنَّ الأَكْثَرِينَ هُمُ الأَقَلُّونَ يَوْمَ الْقِيَامَةِ إِلاَّ مَنْ قَالَ بِالْمَالِ هَكَذَا وَهَكَذَا وَهَكَذَا" عَنْ يَمِينِهِ وَعَنْ شِمَالِهِ وَمِنْ خَلْفِهِ" وَقَلِيلٌ مَا هُمْ!"

ثُمَّ قَالَ لِي:" مَكَانَكَ! لاَ تَبْرَحْ حَتَّى آتِيَكَ". ثُمَّ انْطَلَقَ فِي سَوَادِ اللَّيْلِ حَتَّى تَوَارَى فَسَمِعْتُ صَوْتًا قَدْ ارْتَفَعَ فَتَخَوَّفْتُ أَنْ يَكُونَ أَحَدٌ عَرَضَ لِلنَّبِيِّ ﷺ فَأَرَدْتُ أَنْ آتِيَهُ فَذَكَرْتُ قَوْلَهُ:" لاَ تَبْرَحْ حَتَّى آتِيَكَ" فَلَمْ أَبْرَحْ حَتَّى أَتَانِي فَقُلْتُ: لَقَدْ سَمِعْتُ صَوْتًا تَخَوَّفْتُ مِنْهُ فَذَكَرْتُ لَهُ فَقَالَ:" وَهَلْ سَمِعْتَهُ ؟" قُلْتُ: نَعَمْ قَالَ:" ذَاكَ جِبْرِيلُ أَتَانِي فَقَالَ: مَنْ مَاتَ مِنْ أُمَّتِكَ لاَ يُشْرِكُ بِاللَّهِ شَيْئًا دَخَلَ الْجَنَّةَ قُلْتُ: وَإِنْ زَنَى وَإِنْ سَرَقَ ؟ قَالَ: وَإِنْ زَنَى وَإِنْ سَرَقَ"! مُتَّفَقٌ عَلَيْهِ وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ.

**465** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மதீனாவில் கருப்புக் கற்கள் உள்ள பகுதியில் நபி (ஸல்) அவர்களுடன் சென்று கொண்டிருந்தேன். எங்களுக்கு அருகில் உஹுத் மலை இருந்தது. அப்போது, "அபூதர் அவர்களே!" என, நபி (ஸல்) அழைத்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! இதோ நான் உங்கள் அருகில் உள்ளேன்" என்று கூறினேன். அப்போது அவர்கள், "என்னிடம் உஹுது போன்ற அளவுக்கு தங்கம் இருந்து, என்னிடம் அது மூன்று நாட்கள் தொடர்ந்து இருந்து, என்னிடம் அதில் ஒரு தீனார் இருப்பது கூட எனக்கு மகிழ்ச்சி அளிக்காது. இருப்பினும், கடனுக்கு நான் ஒதுக்கி வைத்தது மற்றும் அல்லாஹ்வின் அடியார்களில் இன்னாருக்கு இவ்வளவு, இவ்வளவு இவ்வளவு எனக் கூறி ஒதுக்கி வைத்தது என உள்ளதைத் தவிர" என்று கூறினார்கள். (இதை நபி (ஸல்) அவர்கள் கூறும்போது, தன் வலது, தன் இடது, தனக்கு பின்னே என சமிக்ஞை செய்தார்கள்)

பின்னர் சிறிது தூரம் நடந்து சென்று, "நிச்சயமாக (உலகில்) அதிகமான செல்வம் உள்ளவர், மறுமை நாளில் குறைவான வசதிகளைப் பெற்றிருப்பார்கள். ஆனால், இவ்வாறு, இவ்வாறு, இவ்வாறு" எனக் கூறி; "செலவழித்தவர் தவிர" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது தன் இடது, தன் வலது, தனக்குப்பின்னே என சமிக்ஞை செய்தார்கள். "இது மாதிரியான நபர்கள், குறைவான நபர்களே!" என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, "இந்த இடத்தில் நீர் இருப்பீராக! நான் உம்மிடம் வரும்வரை நீர் நகர வேண்டாம்" என்று என்னிடம் கூறினார்கள். பின்பு இரவின் இருளில் நடந்து சென்று, மறைந்து விட்டார்கள். அப்போது நான் பெரும் சப்தம் ஒன்றைக் கேட்டேன். நபி (ஸல்) அவர்களை எவரேனும் தாக்கி விட்டார்களோ என்று பயந்தேன். உடனே அவர்களிடம் நான் போகலாம் என விரும்பினேன். எனினும், "நான் வரும் வரை அவ்விடத்தை விட்டும் நகராதீர்" எனக் கூறியதை நான் நினைத்தேன். எனவே, நான் நகரவில்லை. சிறிது நேரம் கழித்து என்னிடம் அவர்கள் வந்தார்கள். அப்போது அவர்களிடம், "பெரும் சப்தத்தைக் கேட்டேன். அதனால் பயந்தேன்" என்று கூறினேன்.

"நீர் அ(ந்த சப்தத்)தைக் கேட்டீரா?" என்று கேட்டார்கள். "ஆம்" என்றேன். "அந்த ஒலி என்னிடம் ஜிப்ரீல் (அலை) வந்ததால் உள்ளதாகும். "உன் சமுதாயத்தில் ஒருவர் அல்லாஹ்வுக்கு இணை வைக்காமல் இறந்துவிட்டால், சொர்க்கத்தில் நுழைவார் என்று ஜிப்ரீல் கூறினார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6443. முஸ்லிம்:94. இது புகாரியின் வார்த்தையாகும்)**

٤٦٦ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ:" لَوْ كَانَ لِي مِثْلُ أُحُدٍ ذَهَبًا لَسَرَّنِي أَلاَّ تَمُرَّ ثَلاَثُ لَيَالٍ وَعِنْدِي مِنْهُ شَيْءٌ إِلاَّ شَيْءٌ أَرْصُدُهُ لِدَيْنٍ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**466** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உஹுத் மலை போன்ற அளவுக்கு என்னிடம் தங்கம் இருந்தாலும், மூன்று நாட்களில் என்னிடம் அது இல்லாமல் போவதே என்னை மகிழ்வுபடுத்தும். கடனுக்கு நான் ஒதுக்கி வைத்தவற்றைத் தவிர!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6445. முஸ்லிம்:991)**

٤٦٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "أُنْظُرُوا إِلَى مَنْ هُوَ أَسْفَلَ مِنْكُمْ وَلاَ تَنْظُرُوا إِلَى مَنْ هُوَ فَوْقَكُمْ فَهُوَ أَجْدَرُ أَلاَّ تَزْدَرُوا نِعْمَةَ اللَّهِ عَلَيْكُمْ". مُتَّفَقٌ عَلَيْهِ. وَهَذَا لَفْظُ مُسْلِمٍ. وَفِي رِوَايَةِ الْبُخَارِيِّ:" إِذَا نَظَرَ أَحَدُكُمْ إِلَى مَنْ فُضِّلَ عَلَيْهِ فِي الْمَالِ وَالْخَلْقِ فَلْيَنْظُرْ إِلَى مَنْ هُوَ أَسْفَلَ مِنْهُ".

**467** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களுக்கு கீழே (வசதி வாய்ப்பில் குறைவாக) உள்ளவர்களைப் பாருங்கள். உங்களுக்கு மேலே உள்ளவர்களை நீங்கள் பார்க்காதீர்கள். உங்களுக்கு அல்லாஹ் அளித்த அருட்கொடைகளை நீங்கள் குறைவாக மதிக்காமல் இருக்க, இது மிகவும் பொருத்தமாக இருக்கும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6490. முஸ்லிம்:2963. இது முஸ்லிமின் வாசகமாகும்)**

புகாரியின் மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது:

“சொத்திலும், உடலிலும் உங்களைவிட மேலானவரை உங்களில் ஒருவர் பார்த்தால், உடனே அவர் தம்மை விட கீழானவரைப் பார்க்கட்டும்” என்று நபி (ஸல்) கூறியதாக உள்ளது.

٤٦٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ النَّبِيِّ ﷺ قَالَ:" تَعِسَ عَبْدُ الدِّينَارِ وَالدِّرْهَمِ وَالْقَطِيفَةِ وَالْخَمِيصَةِ إِنْ أُعْطِيَ رَضِيَ وَإِنْ لَمْ يُعْطَ لَمْ يَرْضَ". رَوَاهُ الْبُخَارِيُّ.

**468** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தீனார், திர்ஹம், பழங்கள், துணிமணிகள் ஆகியவற்றின் அடிமையாக இருப்பவன் (அவைகளை அனுபவிப்பதில் மூழ்கிவிட்டவன்) நாசமாகிவிட்டான். அவன் கொடுக்கப்பட்டால் திருப்தியடைகிறான். கொடுக்கப்படவில்லையானால் திருப்தியடையமாட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2886)**

٤٦٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:" لَقَدْ رَأَيْت سَبْعِينَ مِنْ أَهْلِ الصُّفَّةِ مَا مِنْهُمْ رَجُلٌ عَلَيْهِ رِدَاءٌ: إِمَّا إِزَارٌ وَإِمَّا كِسَاءٌ قَدْ رَبَطُوا فِي أَعْنَاقِهِمْ فَمِنْهَا مَا يَبْلُغُ نِصْفَ السَّاقَيْنِ وَمِنْهَا مَا يَبْلُغُ الْكَعْبَيْنِ فَيَجْمَعُهُ بِيَدِهِ كَرَاهِيَةَ أَنْ تُرَى عَوْرَتُهُ". رَوَاهُ الْبُخَارِيُّ.

**469** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

‘அஹ்லுஸ்ஸுஃப்பா’ எனப்படும் திண்ணைத் தோழர்கள் எழுபது பேரை நான் பார்த்தேன். அவர்களில் எவரும் தன்னிடம் மேலங்கி வைத்துக் கொண்டதில்லை. வேட்டியோ, போர்வையோதான் இருக்கும். அதை அவர்கள் தங்களின் கழுத்தில் கட்டிக் கொள்வார்கள். சிலருக்கு இரண்டு முட்டுக்கால்கள் வரை அவை இருக்கும். சிலருக்கு கரண்டைக்கால்கள் வரை இருக்கும். தனது மறைவுப் பகுதி பிறரால் பார்க்கப்படுவதை வெறுத்து (அது விலகிடாமல் இருக்க) தன் கையால் அதை பிடித்துக் கொள்வார்கள். **(புகாரி:442)**

٤٧٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: "الدُّنْيَا سِجْنُ الْمُؤْمِنِ وَجَنَّةُ الْكَافِرِ". رَوَاهُ مُسْلِمٌ.

**470** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உலகம், இறை விசுவாசிகளுக்குச் சிறைச்சாலையாகும். இறை மறுப்பாளர்களுக்குச் சொர்க்கம் ஆகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2956)**

٤٧١ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: أَخَذَ رَسُولُ اللَّهِ ﷺ بِمَنْكِبَيَّ فَقَالَ: "كُنْ فِي الدُّنْيَا كَأَنَّكَ غَرِيبٌ أَوْ عَابِرُ سَبِيلٍ". وَكَانَ ابْنُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ يَقُولُ: إِذَا أَمْسَيْتَ فَلاَ تَنْتَظِرْ الصَّبَاحَ. وَإِذَا أَصْبَحْتَ فَلاَ تَنْتَظِرْ الْمَسَاءَ وَخُذْ مِنْ صِحَّتِكَ لِمَرَضِكَ وَمِنْ حَيَاتِكَ لِمَوْتِكَ. رَوَاهُ الْبُخَارِيُّ. قَالُوا فِي شَرْحِ هَذَا الْحَدِيثِ: مَعْنَاهُ: لاَ تَرْكَنْ إِلَى الدُّنْيَا وَلاَ تَتَّخِذْهَا وَطَنًا وَلاَ تُحَدِّثْ نَفْسَكَ بِطُولِ الْبَقَاءِ فِيهَا وَلاَ بِالإِعْتِنَاءِ بِهَا وَلاَ تَتَعَلَّقْ مِنْهَا إِلاَّ بِمَا يَتَعَلَّقُ بِهِ الْغَرِيبُ فِي غَيْرِ وَطَنِهِ وَلاَ تَشْتَغِلْ فِيهَا بِمَا لاَ يَشْتَغِلُ بِهِ الْغَرِيبُ الَّذِي يُرِيدُ الذَّهَابَ إِلَى أَهْلِهِ. وَبِاللَّهِ التَّوْفِيقُ

**471** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என் தோள் பட்டையைப் பிடித்துக் கொண்டு, "ஒரு பயணியாகவோ அல்லது பாதையைக் கடந்து செல்பவராகவோ நீர் இந்த உலகில் இருந்து கொள்வீராக" என்று கூறினார்கள்.

"நீர் மாலை நேரத்தில் இருந்தால் காலை நேரத்தை எதிர்பார்க்காதீர்! நீர் காலை நேரத்தில் இருந்தால் மாலை நேரத்தை எதிர்பார்க்காதீர்! உம் நோய் (நிலையை கருத்தில்) கொண்டு, உம் உடல் நிலையையும், நீர் இறப்பதையும் (கருத்தில்) கொண்டு உம் உயிர் வாழும் காலத்தையும் பயன்படுத்திக் கொள்வீராக!" (என்று இப்னு உமர் (ரழி) அவர்கள் கூறுபவர்களாக இருந்தார்கள்.) **(புகாரி:6416)**

٤٧٢ – وَعَنْ أَبِي الْعَبَّاسِ سَهْلِ بْنِ سَعْدٍ السَّاعِدِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ دُلَّنِي عَلَى عَمَلٍ إِذَا عَمِلْتُهُ أَحَبَّنِي اللَّهُ وَأَحَبَّنِي النَّاسُ. فَقَالَ" ازْهَدْ فِي الدُّنْيَا يُحِبَّكَ اللَّهُ وَازْهَدْ فِيمَا عِنْدَ النَّاسِ يُحِبَّكَ النَّاسُ" حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ ابْنُ مَاجَهْ وَغَيْرُهُ بِأَسَانِيدَ حَسَنَةٍ.

**472** அபுல் அப்பாஸ் என்ற ஸஹ்ல் இப்னுஸஃதிஸ் ஸாயிதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர், நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "இறைத்தூதர் அவர்களே! ஒரு செயலைச் செய்தால் அல்லாஹ் என்னை விரும்புவான். மக்களும் என்னை விரும்புவார்கள் என்ற நிலையை ஏற்படுத்தித் தரும் ஒரு செயலை எனக்குக் கூறுங்கள்" என்று கேட்டார். அதற்கு, "நீர் உலகத்தில் பற்றற்று இருப்பீராக! அல்லாஹ் உம்மை விரும்புவான். மக்களிடம் உள்ளவற்றிலும் நீர் பற்றற்று இருப்பீராக! மக்கள் உம்மை விரும்புவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(இப்னுமாஜா:4102. இதன் அறிவிப்பாளர் வரிசையில் காலித் இப்னு அம்ரு கர்ஷீ என்பவர் இடம் பெறுகிறார். இவர் பொய்யர் என இப்னு முஃமீன் கூறுகிறார்கள்)**

٤٧٣ – وَعَنْ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: ذَكَرَ عُمَرُ بْنُ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ مَا أَصَابَ النَّاسَ مِنْ الدُّنْيَا فَقَالَ: لَقَدْ رَأَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَظَلُّ الْيَوْمَ يَلْتَوِي مَا يَجِدُ مِنْ الدَّقَلِ مَا يَمْلأُ بِهِ بَطْنَهُ. رَوَاهُ مُسْلِمٌ. " الدَّقَلُ" بِفَتْحِ الدَّالِ الْمُهْمَلَةِ وَالْقَافِ: رَدِيءُ التَّمْرِ.

**473** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உலகத்தின் பயனை மக்கள் பெற்றுக் கொண்டது குறித்து நினைவுகூர்ந்த உமர் (ரழி) அவர்கள், "அன்றைய நாளில் பசியின் காரணமாகச் சாய்ந்த நிலையில் நபி (ஸல்) அவர்களைக் கண்டுள்ளேன். அவர்கள் தன் வயிற்றை நிரப்பிக் கொள்ள மட்டமான பேரீத்தம் பழத்தைக் கூட பெற்றுக் கொள்ளவில்லை" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2978)**

٤٧٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: تُوُفِّيَ رَسُولُ اللَّهِ ﷺ وَمَا فِي بَيْتِي مِنْ شَيْءٍ يَأْكُلُهُ ذُو كَبِدٍ إِلاَّ شَطْرُ شَعِيرٍ فِي رَفٍّ لِي فَأَكَلْتُ مِنْهُ حَتَّى طَالَ عَلَيَّ فَكِلْتُهُ فَفَنِيَ. مُتَّفَقٌ عَلَيْهِ. قَوْلُهَا" شَطْرُ شَعِيرٍ": أَيْ شَيْءٌ مِنْ شَعِيرٍ كَذَا فَسَّرَهُ التِّرْمِذِيُّ.

**474** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்தார்கள். அப்போது என் (வீட்டு) அலமாரியில் இருந்த சிறிதளவு தொலிக் கோதுமையைத் தவிர, ஈரல் உடையவை (உயிரினம்) உண்ணும் பொருள் எதுவும் என் வீட்டில் இருந்ததில்லை. நான் நீண்ட காலம் வரை அதிலிருந்து தான் சாப்பிட்டேன். ஒருமுறை அதை அளந்து பார்த்தேன். அது தீர்ந்து போய்விட்டது.” **(புகாரி:3097. முஸ்லிம்:2973)**

٤٧٥ - وَعَنْ عَمْرِو بْنِ الْحَارِثِ - أَخِي جُوَيْرِيَّةَ بِنْتِ الْحَارِثِ أُمِّ الْمُؤْمِنِينَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: مَا تَرَكَ رَسُولُ اللَّهِ ﷺ عِنْدَ مَوْتِهِ دِينَارًا وَلاَ دِرْهَمًا وَلاَ عَبْدًا وَلاَ أَمَةً وَلاَ شَيْئًا إِلاَّ بَغْلَتَهُ الْبَيْضَاءَ الَّتِي كَانَ يَرْكَبُهَا وَسِلاَحَهُ وَأَرْضًا جَعَلَهَا لِابْنِ السَّبِيلِ صَدَقَةً. رَوَاهُ الْبُخَارِيُّ.

**475** நபி (ஸல்) அவர்களின் மனைவியும், நம் அன்னையுமான ஜுவைரிய்யா (ரழி) அவர்களின் சகோதரர் அம்ரு இப்னு ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்த பொழுது, எந்த ஒரு தீனாரையோ, திர்ஹமையோ, ஆண் அடிமையையோ, பெண் அடிமையையோ, வேறு எதையுமோ அவர்கள் விட்டுச் செல்லவில்லை. (ஆனால்) அவர்கள் சவாரிச் செய்யும் வெள்ளை நிற கோவேறுக் கழுதை, அவர்களின் போர் தளவாடங்கள், மேலும் வழிப்போக்கர்களுக்கு தர்மமாக (ஸதகாவாக) ஆக்கிச் சென்ற நிலம் ஆகியவற்றை மட்டுமே விட்டுச் சென்றார்கள். **(புகாரி:2739)**

٤٧٦ - وَعَنْ خَبَّابِ بْنِ الأَرَتِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: هَاجَرْنَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ نَلْتَمِسُ وَجْهَ اللَّهِ تَعَالَى فَوَقَعَ أَجْرُنَا عَلَى اللَّهِ فَمِنَّا مَنْ مَاتَ وَلَمْ يَأْكُلْ مِنْ أَجْرِهِ شَيْئًا - مِنْهُمْ مُصْعَبُ بْنُ عُمَيْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قُتِلَ يَوْمَ أُحُدٍ وَتَرَكَ نَمِرَةً. فَكُنَّا إِذَا غَطَّيْنَا بِهَا رَأْسَهُ بَدَتْ رِجْلاَهُ وَإِذَا غَطَّيْنَا بِهَا رِجْلَيْهِ بَدَا رَأْسُهُ ; فَأَمَرَنَا رَسُولُ اللَّهِ ﷺ أَنْ نُغَطِّيَ رَأْسَهُ وَنَجْعَلَ عَلَى رِجْلَيْهِ شَيْئًا مِنْ الأَذْخِرِ - وَمِنَّا مَنْ أَيْنَعَتْ لَهُ ثَمَرَتُهُ فَهُوَ يَهْدِبُهَا. مُتَّفَقٌ عَلَيْهِ." النَّمِرَةُ" كِسَاءٌ مُلَوَّنٌ مِنْ صُوفٍ. وَقَوْلُهُ" أَيْنَعَتْ": أَيْ نَضِجَتْ وَأَدْرَكَتْ. وَقَوْلُهُ:" يَهْدِبُهَا" هُوَ بِفَتْحِ الْيَاءِ وَضَمِّ الدَّالِ وَكَسْرِهَا لُغَتَانِ: أَيْ يَقْطِفُهَا وَيَجْتَنِيهَا وَهَذِهِ اسْتِعَارَةٌ لِمَا فَتَحَ اللَّهُ تَعَالَى عَلَيْهِمْ مِنَ الدُّنْيَا وَتَمَكَّنُوا فِيهَا.

**476** கப்பாப் இப்னு அரத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வின் திருப்தியை நாடியவர்களாக நபி (ஸல்) அவர்களுடன் மக்காவை விட்டும் மதீனாவிற்கு நாங்கள் ஹிஜ்ரத் செய்தோம். எங்களின் கூலி அல்லாஹ்விடம் உள்ளது. அதன் கூலியில் (இப்போது) அனுபவிக்காமல் இறந்து விட்டவர்கள் எங்களில் உள்ளனர். அவர்களில் முஸ்அப் இப்னு உமைர் (ரழி) அவர்களும் ஒருவர் ஆவார்கள். அவர்கள் உஹதுப் போரில் கொல்லப்பட்டார்கள். அவர்கள் ஒரு கலர் கம்பளிப் போர்வையை விட்டுச் சென்றார்கள். அதனை வைத்து அவரின் தலையை நாங்கள் மூடினால், அவரின் கால்கள் வெளியே தெரிந்தன. அதனை வைத்து அவரின் கால்களை மூடினால் அவரின் தலை வெளியே தெரிந்தது. அவரின் தலையை நாங்கள் மூடிடவும், அவரின் கால்களில் ‘இத்கர்’ எனும் வாசனைச் செடியைப் போடவும் எங்களுக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். (அதன் பயன் (கனி) கனிந்து, அதைப் பறித்து (பயன்படுத்தி) வருகின்றவர்கள் (இப்போது) எங்களில் உள்ளனர்.) **(புகாரி:1276. முஸ்லிம்:940)**

٤٧٧ - وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ السَّاعِدِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" لَوْ كَانَتْ تَعْدِلُ عِنْدَ اللَّهِ جَنَاحَ بَعُوضَةٍ مَا سَقَى كَافِرًا مِنْهَا شَرْبَةَ مَاءٍ"! رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**477** ஸஹ்ல் இப்னு ஸஃதிஸ் ஸாயிதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்விடம் இவ்வுலகம் ஒரு கொசுவின் இறக்கையளவு மதிப்பானதாக இருந்திருந்தால், அதில் ஒரு முடக்குத் தண்ணீரைக் கூட ஒரு இறைமறுப்பாளனுக்கு அவன் குடிக்கத் தந்திருக்க மாட்டான். (இவ்வுலகின் மதிப்பு அல்லாஹ்விடம் இதைவிடக் குறைவானதேயாகும்.)'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2320. இது பலவீனமான ஹதீஸாகும்)**

٤٧٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" أَلاَ إِنَّ الدُّنْيَا مَلْعُونَةٌ مَلْعُونٌ مَا فِيهَا إِلاَّ ذِكْرُ اللَّهِ تَعَالَى وَمَا وَالاَهُ وَعَالِمًا وَمُتَعَلِّمًا". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**478** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள் :

“அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக உலகம் சபிக்கப்பட்டதாகும். அதிலுள்ளவைகளும் சபிக்கப்பட்டவைகளாகும். அல்லாஹ்வின் திக்ரைத் தவிர. அது சம்பந்தப்பட்டவை தவிர. அறிஞர் மற்றும் கற்றுக் கொள்ளக்கூடியவர் தவிர'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ: 2322. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٧٩ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ:" لاَ تَتَّخِذُوا الضَّيْعَةَ فَتَرْغَبُوا فِي الدُّنْيَا". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ.

**479** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் சொத்துக்களை எடுத்துக் கொள்ளாதீர்கள். அவ்வாறு எடுத்துக் கொண்டால் (வாங்கிக் கொண்டால்) நீங்கள் இவ்வுலகில் பேராசை உள்ளவர்களாக ஆகி விடுவீர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2328. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨٠ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: مَرَّ عَلَيْنَا رَسُولُ اللَّهِ ﷺ وَنَحْنُ نُعَالِجُ خُصًّا لَنَا فَقَالَ:" مَا هَذَا ؟" فَقُلْنَا: قَدْ وَهِيَ فَنَحْنُ نُصْلِحُهُ. فَقَالَ:" مَا أَرَى الأَمْرَ إِلاَّ أَعْجَلَ مِنْ ذَلِكَ"! رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ بِإِسْنَادِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ. وَقَالَ التِّرْمِذِيُّ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**480** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எங்களருகே நடந்து சென்றார்கள். அப்பொழுது நாங்கள் மூங்கில்களால் ஆன எங்கள் வீட்டை செப்பனிட்டுக் கொண்டிருந்தோம். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், “இது என்ன?'' என்று கேட்டார்கள். நாங்கள், “இந்த வீடு வீணாகிவிட்டது. எனவே, நாங்கள் இதனை சரி செய்கிறோம்'' என்று கூறினோம். அதற்கு, “மரணம் இதையும் விட மிக விரைவானது என்றே நான் கருதுகிறேன்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி, முஸ்லிமின் அறிவிப்பாளர் வரிசைப்படி அபூதாவூத்(5236). திர்மிதீயில் (2335) உள்ளது. இது 'ஹஸன்' ஸஹீஹ் என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨١ - وَعَنْ كَعْبِ بْنِ عِيَاضٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ:" إِنَّ لِكُلِّ أُمَّةٍ فِتْنَةً وَفِتْنَةُ أُمَّتِي: الْمَالُ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**481** க.்.பு இப்னு இயாழ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒரு சோதனை உண்டு. என் சமுதாயத்திற்குச் சோதனை செல்வம் ஆகும். (என் சமுதாய மக்களுக்குச் செல்வம் பெருகி அதனால் அவர்கள் சோதிக்கப்படுவர்)” என்று நபி (ஸல்) கூற நான் கேட்டுள்ளேன்.

**(திர்மிதீ:2336. இது ‘ஹஸன் ஸஹீஹ்’ என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨٢ – وَعَنْ أَبِي عَمْرو – وَيُقَالُ أَبُو عَبْد اللَّه – وَيُقَالُ أَبُو لَيْلَى – عُثْمَانَ بْن عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ:" لَيْسَ لِابْنِ آدَمَ حَقٌّ فِي سِوَى هَذه الْخِصَال: بَيْتٌ يَسْكُنُهُ وَثَوْبٌ يُوَارِي عَوْرَتَهُ وَجِلْفُ الْخُبْزِ وَالْمَاءِ". رَوَاهُ التِّرْمذيُّ وَقَالَ: حَديثٌ صَحيحٌ. قَالَ التِّرْمذيُّ: سَمعْتُ أَبَا دَاوُدَ سُلَيْمَانَ بْنَ سَالم الْبَلْخيَّ يَقُولُ: سَمعْتُ النَّضْرَ بْنَ شُمَيْلٍ يَقُولُ: الْجِلْفُ: الْخُبْزُ لَيْسَ مَعَهُ إِدَامٌ. وَقَالَ غَيْرُهُ: هُوَ غَلِيظُ الْخُبْزِ. وَقَالَ الْهَرَوِيُّ: الْمُرَادُ بِه هُنَا وِعَاءُ الْخُبْزِ: كَالْجُوَالِقِ وَالْخُرْجِ. وَاللَّهُ أَعْلَمُ.

**482** அபூஅம்ரு, அபூஅப்துல்லாஹ் அபூலைலா என்றும் சொல்லப்படும் உஸ்மான் இப்னு அ.்.ப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இந்த (அவசியத்) தேவைகளைத் தவிர வேறு எதிலும் எந்த உரிமையும் ஆதமின் மகனுக்கு இல்லை. (அவை) அவன் குடி யிருக்கும் வீடு, தன் மறைவுப் பகுதிகளை மறைக்க பயன்படும் ஆடை, கெட்டியான ரொட்டி (உணவு) மற்றும் தண்ணீர் (இவைதான் உரிமையாகும்)” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2341. இது ‘ஸஹீஹ்’ என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨٣ – وَعَنْ عَبْد اللَّه بْن الشِّخِّير" بِكَسْرِ الشِّين وَالْخَاء الْمُشَدَّدَة الْمُعْجَمَتَيْنِ" رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ قَالَ: أَتَيْت النَّبِيَّ ﷺ وَهُوَ يَقْرَأُ: أَلْهَاكُمُ التَّكَاثُرُ قَالَ:" يَقُولُ ابْنُ آدَمَ: مَالِي مَالِي! وَهَلْ لَكَ يَا ابْنَ آدَمَ مِنْ مَالِكَ إِلاَّ مَا أَكَلْت فَأَفْنَيْت أَوْ لَبِسْت فَأَبْلَيْت أَوْ تَصَدَّقْت فَأَمْضَيْت! ؟" رَوَاهُ مُسْلِمٌ.

**483** அப்துல்லாஹ் இப்னு ஷிக்கீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

‘அல்ஹாகு முத்தகா.்.துரு....’ எனத் துவங்கும் சூராவை நபி (ஸல்) அவர்கள் ஓதிக் கொண்டிருக்கும் போது, அவர்களிடம் வந்தேன். அப்போது ஆதமின் மகன், “இது என்னுடையது. இது என்னுடையது” என்கிறான். “ஆதமின் மகனே! நீ சாப்பிட்டு அழித்தது, அல்லது நீ உடுத்திக் கிழித்தது, அல்லது நீ தர்மம் செய்து முடித்து விட்டதைத் தவிர வேறு எதுவும் உனக்கு (மீதமாக) உள்ளதா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். **(முஸ்லிம்:2958)**

٤٨٤ – وَعَنْ عَبْد اللَّه بْن مُغَفَّلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَجُلٌ لِلنَّبِيِّ ﷺ يَا رَسُولَ اللَّه وَاللَّه إِنِّي لَأُحِبُّكَ. فَقَالَ:" انْظُرْ مَاذَا تَقُولُ ؟" قَالَ: وَاللَّه إِنِّي لَأُحِبُّكَ ثَلاَثَ مَرَّات. فَقَالَ:" إِنْ كُنْتَ تُحِبُّنِي فَأَعِدَّ لِلْفَقْرِ تِجْفَافًا فَإِنَّ الْفَقْرَ أَسْرَعُ إِلَى مَنْ يُحِبُّنِي مِنَ السَّيْلِ إِلَى مُنْتَهَاهُ". رَوَاهُ التِّرْمذيُّ وَقَالَ: حَديثٌ حَسَنٌ." التِّجْفَافُ" بِكَسْرِ التَّاء الْمُثَنَّاة فَوْقُ وَإِسْكَان الْجِيم وَبِالْفَاء الْمُكَرَّرَة وَهُوَ شَيْءٌ يَلْبَسُهُ الْفَرَسُ لِيُتَّقَى بِه الأَذَى وَقَدْ يَلْبَسُهُ الإنْسَانُ.

**484** அப்துல்லாஹ் இப்னு முக.்.ப்பல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களை நான் நேசிக்கிறேன்” என்று ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் கூறினார். அதற்கு அவர்கள், “நீர் கூறுவதை நன்கு சிந்தித்துக் கூறும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களை நான் நேசிக்கிறேன்” என மூன்று முறை கூறினார். “என்னை நீர் விரும்புவதாக இருந்தால், வறுமையை சந்திக்க நீ தயாராகிக்

கொள்வாயாக! ஏனெனில் வெள்ளம், தான் இறுதியாகப் போய் சேரும் எல்லையை (பள்ளத்தை) நோக்கிப் பாய்வது போல், வறுமை என்னை நேசிப்பவர்களுக்கு விரைந்து வரும்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:2350. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨٥ – وَعَنْ كَعْبِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " مَا ذِئْبَانِ جَائِعَانِ أُرْسِلاَ فِي غَنَمٍ بِأَفْسَدَ لَهَا مِنْ حِرْصِ الْمَرْءِ عَلَى الْمَالِ وَالشَّرَفِ لِدِينِهِ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**485** கஃபு இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"செல்வத்திலும், பதவியிலும் ஒரு மனிதன் கொள்ளும் பேராசை அவனின் மார்க்க விஷயத்தில் ஏற்படுத்தும் நாசத்தை விட, பசியுள்ள இரண்டு ஓநாய்கள் ஓர் ஆட்டு மந்தைக்கு அனுப்பப்பட்டு, அம்மந்தைக்கு அவைகள் ஏற்படுத்தும் நாசம் ஒன்றும் பெரிதாக இல்லை'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:2376. இது 'ஹஸன் ஸஹீஹ்' என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨٦ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: نَامَ رَسُولُ اللَّهِ ﷺ عَلَى حَصِيرٍ فَقَامَ وَقَدْ أَثَّرَ فِي جَنْبِهِ قُلْنَا: يَا رَسُولَ اللَّهِ لَوِ اتَّخَذْنَا لَكَ وِطَاءً. فَقَالَ: " مَا لِي وَلِلدُّنْيَا ؟ مَا أَنَا فِي الدُّنْيَا إِلاَّ كَرَاكِبٍ اسْتَظَلَّ تَحْتَ شَجَرَةٍ ثُمَّ رَاحَ وَتَرَكَهَا". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**486** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி(ஸல்) அவர்கள் ஓர் ஓலைப்பாயின் மீது படுத்து உறங்கினார்கள். (அதன் குச்சிகள்) அவர்களின் விலாப்புறத்தில் அடையாளத்தை ஏற்படுத்திவிட்டது. "இறைத்தூதர் அவர்களே! உங்களுக்காக நாங்கள் ஒரு மெத்தையை ஏற்படுத்தித் தருகிறோம்?'' என்று கூறினோம். அதற்கு அவர்கள், "எனக்கு இந்த உலகத்தில் என்ன தேவை இருக்கிறது? ஒரு பயணி ஒரு மரத்தின் நிழலில் அமர்ந்து, பின்பு ஓய்வெடுத்து, அதை விட்டும் செல்வான் அல்லவா! அது போன்றே தவிர நான் இவ்வுலகில் இல்லை'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2377. இது "ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " يَدْخُلُ الْفُقَرَاءُ الْجَنَّةَ قَبْلَ الأَغْنِيَاءِ بِخَمْسِ مِائَةِ عَامٍ". رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ صَحِيحٌ.

**487** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பணக்காரர்களை விட ஐநூறு வருடங்களுக்கு முன்பாகவே ஏழைகள் சொர்க்கத்தில் நுழைவார்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:2353. இது 'ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٤٨٨ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ وَعِمْرَانَ بْنِ الْحُصَيْنِ رَضِيَ اللَّهُ عَنْهُمْ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: " اطَّلَعْتُ فِي الْجَنَّةِ فَرَأَيْتُ أَكْثَرَ أَهْلِهَا الْفُقَرَاءَ وَاطَّلَعْتُ فِي النَّارِ فَرَأَيْتُ أَكْثَرَ أَهْلِهَا النِّسَاءَ". مُتَّفَقٌ عَلَيْهِ مِنْ رِوَايَةِ ابْنِ عَبَّاسٍ. رَوَاهُ الْبُخَارِيُّ أَيْضًا مِنْ رِوَايَةِ عِمْرَانَ بْنِ الْحُصَيْنِ.

**488** இப்னு அப்பாஸ் (ரழி), இம்ரான் இப்னு ஹுஸைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சொர்க்கத்தில் உற்றுப் பார்த்தேன். அங்கு வசிப்பவர்களில் அதிகமானவர்களாக ஏழைகள் இருப்பதைப் பார்த்தேன். மேலும் நரகத்திற்குச் (சென்று) உற்றுப் பார்த்தேன். அங்கு வசிப்பவர்களில் மிக அதிகமானவர்களாக பெண்கள் இருப்பதைப் பார்த்தேன்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7449. முஸ்லிம்:2737)**

٤٨٩ – وَعَنْ أُسَامَةَ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ: "قُمْتُ عَلَى بَابِ الْجَنَّةِ فَكَانَ عَامَّةَ مَنْ دَخَلَهَا الْمَسَاكِينُ! وَأَصْحَابُ الْجَدِّ مَحْبُوسُونَ! غَيْرَ أَنَّ أَصْحَابَ النَّارِ قَدْ أُمِرَ بِهِمْ إِلَى النَّارِ". مُتَّفَقٌ عَلَيْهِ." وَالْجَدُّ": الْحَظُّ وَالْغِنَى. وَقَدْ سَبَقَ بَيَانُ هَذَا الْحَدِيثِ فِي بَابِ فَضْلِ الضَّعَفَةِ.

**489** உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கத்தின் வாசலில் நான் நின்றிருந்தேன். அதனுள் நுழைபவர்களில் பெரும்பாலோர் ஏழைகளாகவே இருந்தார்கள். வசதியானவர்கள் (வாசலிலேயே) தடுக்கப்பட்டிருந்தனர். எனினும், (அவர்களிலுள்ள) நரகவாசிகள் நரகத்திற்குக் கொண்டு செல்லப்பட கட்டளையிடப்பட்டனர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5196. முஸ்லிம்:2736)**

٤٩٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:" أَصْدَقُ كَلِمَةٍ قَالَهَا شَاعِرٌ كَلِمَةُ لَبِيدٍ: أَلاَ كُلُّ شَيْءٍ مَا خَلاَ اللَّهَ بَاطِلُ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**490** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வைத் தவிர அனைத்தும் அழியக்கூடியதாகும்" என்ற லுபைத் என்ற கவிஞனின் கவிதைதான், கவிஞர்களின் கவிதைகளிலேயே மிகச் சரியானதாகும் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3841. முஸ்லிம்:2256)**

## ٥٦ – باب فضل الجوع وخشونة العيش والاقتصار على القليل من المأكول والمشروب والملبوس وغيرها من حظوظ النفس وترف الشهوات

## பாடம் : 56 - பசி, எளிமையான வாழ்வு மற்றும் உணவு, பானம், ஆடை, மனதிற்கு பிடித்தமானவற்றில் குறைவானதை போதுமாக்கிக் கொள்ளுதல் மற்றும் மனோஇச்சைகளைத் தவிர்த்தல் ஆகியவற்றின் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى: فَخَلَفَ مِنْ بَعْدِهِمْ خَلْفٌ أَضَاعُوا الصَّلاَةَ وَاتَّبَعُوا الشَّهَوَاتِ فَسَوْفَ يَلْقَوْنَ غَيًّا إِلاَّ مَنْ تَابَ وَآمَنَ وَعَمِلَ صَالِحًا فَأُولَئِكَ يَدْخُلُونَ الْجَنَّةَ وَلاَ يُظْلَمُونَ شَيْئًا وَقَالَ تَعَالَى: فَخَرَجَ عَلَى قَوْمِهِ فِي زِينَتِهِ قَالَ الَّذِينَ يُرِيدُونَ الْحَيَاةَ الدُّنْيَا يَا لَيْتَ لَنَا مِثْلَ مَا أُوتِيَ قَارُونُ إِنَّهُ لَذُو حَظٍّ عَظِيمٍ وَقَالَ الَّذِينَ أُوتُوا الْعِلْمَ وَيْلَكُمْ ثَوَابُ اللَّهِ خَيْرٌ لِمَنْ آمَنَ وَعَمِلَ صَالِحًا. وَقَالَ تَعَالَى: ثُمَّ لَتُسْأَلُنَّ يَوْمَئِذٍ عَنِ النَّعِيمِ. وَقَالَ تَعَالَى: مَنْ كَانَ يُرِيدُ الْعَاجِلَةَ عَجَّلْنَا لَهُ فِيهَا مَا نَشَاءُ لِمَنْ نُرِيدُ ثُمَّ جَعَلْنَا لَهُ جَهَنَّمَ يَصْلاَهَا مَذْمُومًا مَدْحُورًا. وَالآيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *அவர்களுக்குப்பின் ஒரு கூட்டம் உருவானது. அவர்கள் தொழுகையை வீணாக்கினார்கள். மனோ இச்சைகளைப் பின்பற்றினார்கள். (இது போன்றவர்கள்) விரைவில் பெரும் கேட்டையே சந்திப்பார்கள். எனினும் இறை நம்பிக்கை கொண்டு, நற்செயல் புரிந்தோரை தவிர. இவர்கள்தான் சொர்க்கத்தில் நுழைவார்கள். எதிலும் அநீதம் செய்ய மாட்டார்கள்.*

*(19:59,60)*

*தன் அலங்காரத்துடன் தன் கூட்டத்தாரிடம் (காரூன்) வந்தான். உலக வாழ்க்கையை விரும்புகிறவர்கள், "காரூனுக்குக் கொடுக்கப்பட்டது போல் நமக்கும் செல்வம் இருந்திருக்கக் கூடாதா? நிச்சயமாக அவன் மகத்தான பாக்கியசாலி" என்று கூறினார்கள். அறிவுடையோர்கள்*

*"உங்களுக்கு வந்த கேடே! அல்லாஹ்வின் கூலியே இறை நம்பிக்கை கொண்டு, நற்செயல் புரிவோருக்கு சிறந்ததாகும்' என்று கூறினார்கள். (28:79,80)*

*பிறகு அந்நாளில் (உலகில் கொடுக்கப்பட்ட) அருட்கொடைகள் பற்றி நிச்சயமாக நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள். (102:8)*

*ஒருவர் (அழியும்) இவ்வுலகை விரும்பினால், விரும்புவோருக்கு அதிலே நாம் விரும்பியதைக் கொடுப்போம். பின்பு, அவருக்கு நரகத்தை ஏற்படுத்துவோம். அதிலே அவர் இழிவாக்கப் பட்டவராகவும், (இறையன்பை விட்டும்) தூரமாக்கப் பட்டவராகவும் அவர் நுழைவார். (17:18)*

٤٩١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ: مَا شَبِعَ آلُ مُحَمَّدٍ ﷺ مِنْ خُبْزِ شَعِيرٍ يَوْمَيْنِ مُتَتَابِعَيْنِ حَتَّى قُبِضَ! مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ: مَا شَبِعَ آلُ مُحَمَّدٍ ﷺ مُنْذُ قَدِمَ الْمَدِينَةَ مِنْ طَعَامِ الْبُرِّ ثَلَاثَ لَيَالٍ تِبَاعًا حَتَّى قُبِضَ!

**491** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மரணிக்கும் வரை, அவர்களின் குடும்பத்தினர் தொடர்ச்சியாக இரண்டு நாட்கள் தொலிக் கோதுமையின்ரொட்டியைக்கூட வயிறு நிரம்ப சாப்பிட்டதில்லை. (ஒரு நேரம் உண்டால் மறுநேரம் பட்டினியாக இருப்பர்.) **(புகாரி:5416. முஸ்லிம்:2970)**

மற்றொரு அறிவிப்பில்,

"நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்ததில் இருந்து, மரணிக்கும் வரை தொடர்ந்து மூன்று நாட்கள் (உயர்தர) மணிக்கோதுமை உணவு கூட அவர்களின் குடும்பத்தினர் வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை" என்று உள்ளது.

٤٩٢ – وَعَنْ عُرْوَةَ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا كَانَتْ تَقُولُ: وَاللَّهِ يَا ابْنَ أُخْتِي إِنْ كُنَّا لَنَنْظُرُ إِلَى الْهِلَالِ ثُمَّ الْهِلَالِ ثُمَّ الْهِلَالِ: ثَلَاثَةَ أَهِلَّةٍ فِي شَهْرَيْنِ وَمَا أُوقِدَ فِي أَبْيَاتِ رَسُولِ اللَّهِ ﷺ نَارٌ! قُلْتُ: يَا خَالَةُ فَمَا كَانَ يُعَيِّشُكُمْ ؟ قَالَتْ: الأَسْوَدَانِ: التَّمْرُ وَالْمَاءُ إِلاَّ أَنَّهُ قَدْ كَانَ لِرَسُولِ اللَّهِ ﷺ جِيرَانٌ مِنَ الأَنْصَارِ وَكَانَتْ لَهُمْ مَنَايِحُ وَكَانُوا يُرْسِلُونَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ مِنْ أَلْبَانِهَا فَيَسْقِينَا. مُتَّفَقٌ عَلَيْهِ.

**492** உர்வா அவர்கள் கூறுகின்றார்கள்:

"என் சகோதரியின் மகனே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் ஒரு பிறை, அடுத்து ஒரு பிறை, அடுத்து ஒரு பிறை என மூன்று பிறைகளை இரண்டு மாதங்களில் பார்ப்பவர்களாக இருந்தோம். எனினும், நபி (ஸல்) அவர்களின் வீடுகளில் அதுவரை அடுப்பு (நெருப்பு) மூட்டப்பட்டதில்லை (இரண்டு மாதங்களாக சமையல் செய்யப்பட்டிருக்காது) என்று ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள். அப்பொழுது நான், "சிறிய தாயாரே! பின்னர் உங்கள் வாழ்க்கை எப்படிக் கழிந்தது?" என்று கேட்டேன். "பேரீத்தம் பழம், தண்ணீர் என்ற இரண்டு கருப்புப் பொருட்களால் தான் (கழிந்தது). எனினும் நபி (ஸல்) அவர்களின் பக்கத்து வீட்டினராக சில அன்சாரிகள் இருந்தனர். அவர்களிடம் பால் தரும் ஆடுகள் இருந்தன. அதன் பாலை அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக கொடுத்தனுப்புவார்கள். அதை நாங்களும் குடித்துக் கொள்வோம்" என்று ஆயிஷா (ரழி) பதில் கூறினார்கள். **(புகாரி:2567. முஸ்லிம்:2972)**

٤٩٣ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْمَقْبُرِيِّ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ مَرَّ بِقَوْمٍ بَيْنَ أَيْدِيهِمْ شَاةٌ مَصْلِيَّةٌ فَدَعَوْهُ فَأَبَى أَنْ يَأْكُلَ وَقَالَ: خَرَجَ رَسُولُ اللَّهِ ﷺ مِنَ الدُّنْيَا وَلَمْ يَشْبَعْ مِنْ خُبْزِ الشَّعِيرِ. رَوَاهُ الْبُخَارِيُّ. "مَصْلِيَّةٌ" بِفَتْحِ الْمِيمِ: أَيْ مَشْوِيَّةٌ.

**493** அபூஸயீதில் மக்புரீ என்பார் அறிவிக்கின்றார்:

அபூஹுரைரா (ரழி) அவர்கள் ஒரு கூட்டத்தாரின் அருகே சென்றார்கள். அவர்களின் முன்னே பொறித்த ஆடு (இறைச்சி) இருந்தது. அவர்கள் அபூஹுரைரா அவர்களை அவ்விறைச்சியை உண்ண அழைத்தார்கள். (ஆனால்) சாப்பிடுவதற்கு மறுத்து விட்ட அபூஹுரைரா (ரழி) அவர்கள், "தொலிக் கோதுமையினால் கூட வயிறு நிரம்பாமல்தான் நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகை விட்டும் பிரிந்தார்கள். (அவ்வாறிருக்க நான் எவ்வாறு பொறித்த இறைச்சியை உண்பேன்!)" என அவர்கள் தங்கள் உள்ளத்தின் உணர்வுகளை எடுத்துரைத்தார்கள். (நபியவர்கள் மீது நபித்தோழர்கள் வைத்திருந்த தூய அன்பிற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.) **(புகாரி:5414)**

٤٩٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: لَمْ يَأْكُلْ النَّبِيُّ ﷺ عَلَى خِوَانٍ حَتَّى مَاتَ وَمَا أَكَلَ خُبْزًا مُرَقَّقًا حَتَّى مَاتَ. رَوَاهُ الْبُخَارِيُّ. وَفِي رِوَايَةٍ لَهُ: وَلَا رَأَى شَاةً سَمِيطًا بِعَيْنِهِ قَطُّ.

**494** அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், இறக்கும் வரை உயர்ந்த தட்டுகளில் சாப்பிட்டதே இல்லை. மேலும் அவர்கள் இறக்கும் வரை, மிருதுவான ரொட்டிகளையும் கூட சாப்பிட்டதில்லை. **(புகாரி:6450,6457)**

மற்றொரு அறிவிப்பில், நபி (ஸல்) அவர்கள் தன் கண்களால், முடி நீக்கப்பட்டு தோலுடன் தீயில் சுட்டு பொரிக்கப்பட்ட ஆட்டைப் பார்த்ததே இல்லை (என்று உள்ளது)

٤٩٥ – وَعَنْ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ: لَقَدْ رَأَيْت نَبِيَّكُمْ ﷺ وَمَا يَجِدُ مِنَ الدَّقَلِ مَا يَمْلأُ بِهِ بَطْنَهُ! رَوَاهُ مُسْلِمٌ:" الدَّقَلُ": تَمْرٌ رَدِيءٌ.

**495** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் வயிற்றை நிரப்பும் அளவுக்கு மட்டமான பேரீத்தம் பழத்தைக்கூட உங்கள் நபி (ஸல்) அவர்கள் பெற்றுக் கொள்ளாமல் இருந்ததை நான் பார்த்துள்ளேன்." **(முஸ்லிம்:2978)**

٤٩٦ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: مَا رَأَى رَسُولُ اللّٰهِ ﷺ النَّقِيَّ مِنْ حِينِ ابْتَعَثَهُ اللّٰهُ تَعَالَى حَتَّى قَبَضَهُ اللّٰهُ تَعَالَى. فَقِيلَ لَهُ: هَلْ كَانَ لَكُمْ فِي عَهْدِ رَسُولِ اللّٰهِ ﷺ مَنَاخِلُ ؟ قَالَ: مَا رَأَى رَسُولُ اللّٰهِ ﷺ مُنْخُلاً مِنْ حِينِ ابْتَعَثَهُ اللّٰهُ تَعَالَى حَتَّى قَبَضَهُ اللّٰهُ تَعَالَى. فَقِيلَ لَهُ: كَيْفَ كُنْتُمْ تَأْكُلُونَ الشَّعِيرَ غَيْرَ مَنْخُولٍ ؟ قَالَ: كُنَّا نَطْحَنُهُ وَنَنْفُخُهُ فَيَطِيرُ مَا طَارَ وَمَا بَقِيَ ثَرَّيْنَاهُ. رَوَاهُ الْبُخَارِيُّ. قَوْلُهُ:" النَّقِيُّ": هُوَ بِفَتْحِ النُّونِ وَكَسْرِ الْقَافِ وَتَشْدِيدِ الْيَاءِ: وَهُوَ الْخُبْزُ الْحُوَّارَى وَهُوَ الدَّرْمَكُ. قَوْلُهُ" ثَرَّيْنَاهُ": هُوَ بِثَاءٍ مُثَلَّثَةٍ ثُمَّ رَاءٍ مُشَدَّدَةٍ ثُمَّ يَاءٍ مُثَنَّاةٍ مِنْ تَحْتٍ ثُمَّ نُونٍ: أَيْ بَلَّلْنَاهُ وَعَجَنَّاهُ.

**496** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களை அல்லாஹ் தூதராக அனுப்பியதிலிருந்து அவர்களின் உயிரை அல்லாஹ் கைப்பற்றும் வரை மிருதுவான ரொட்டியை அவர்கள் பார்த்ததே இல்லை. "நபி (ஸல்) அவர்களின் காலத்தில் உங்களிடம் சல்லடைகள் இருந்தது இல்லையா?" என்று (ஸஹ்ல் (ரழி) அவர்களிடம்) கேட்கப்பட்டது. "நபி (ஸல்) அவர்களை அல்லாஹ் தூதராக அனுப்பியதிலிருந்து, அவர்களின் உயிரைக் கைப்பற்றும் வரை அவர்கள் சல்லடையைக் கண்டதே இல்லை" என்று (ஸஹ்ல்) கூறினார். "சல்லடை இல்லாமல் தொலிக் கோதுமையைநீங்கள் எப்படி சலிக்காமல் சாப்பிட்டீர்கள்?" என்று (ஸஹ்ல் (ரழி) அவர்களிடம்) கேட்கப்பட்டது. அதற்கவர், "நாங்கள் அதை ஊதுவோம். அப்பொழுது மாவிலுள்ள தொலிகள் (உமிகள்) பறந்துவிடும். பின்பு மீதமுள்ள மாவை குழைத்து உண்போம்" என்று (ஸஹ்ல்) கூறினார். **(புகாரி:5413)**

٤٩٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: خَرَجَ رَسُولُ اللَّهِ ﷺ ذَاتَ يَوْمٍ أَوْ لَيْلَةٍ. فَإِذَا هُوَ بِأَبِي بَكْرٍ وَعُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا فَقَالَ:" مَا أَخْرَجَكُمَا مِنْ بُيُوتِكُمَا هَذِهِ السَّاعَةَ ؟" قَالاَ: الْجُوعُ يَا رَسُولَ اللَّهِ. قَالَ:" وَأَنَا وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لأَخْرَجَنِي الَّذِي أَخْرَجَكُمَا! قُومَا". فَقَامَا مَعَهُ فَأَتَى رَجُلاً مِنَ الأَنْصَارِ فَإِذَا هُوَ لَيْسَ فِي بَيْتِهِ فَلَمَّا رَأَتْهُ الْمَرْأَةُ قَالَتْ: مَرْحَبًا وَأَهْلاً. فَقَالَ لَهَا رَسُولُ اللَّهِ ﷺ "أَيْنَ فُلاَنٌ ؟" قَالَتْ: ذَهَبَ يَسْتَعْذِبُ لَنَا الْمَاءَ. إِذْ جَاءَ الأَنْصَارِيُّ فَنَظَرَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ وَصَاحِبَيْهِ ثُمَّ قَالَ: الْحَمْدُ لِلَّهِ مَا أَحَدٌ الْيَوْمَ أَكْرَمَ أَضْيَافًا مِنِّي فَانْطَلَقَ فَجَاءَهُمْ بِعِذْقٍ فِيهِ بُسْرٌ وَتَمْرٌ وَرُطَبٌ فَقَالَ: كُلُوا. وَأَخَذَ الْمُدْيَةَ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ:" إِيَّاكَ وَالْحَلُوبَ". فَذَبَحَ لَهُمْ. فَأَكَلُوا مِنَ الشَّاةِ وَمِنْ ذَلِكَ الْعِذْقِ وَشَرِبُوا. فَلَمَّا أَنْ شَبِعُوا وَرَوَوْا قَالَ رَسُولُ اللَّهِ ﷺ لأَبِي بَكْرٍ وَعُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا:" وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَتُسْأَلُنَّ عَنْ هَذَا النَّعِيمِ يَوْمَ الْقِيَامَةِ! أَخْرَجَكُمْ مِنْ بُيُوتِكُمْ الْجُوعُ ثُمَّ لَمْ تَرْجِعُوا حَتَّى أَصَابَكُمْ هَذَا النَّعِيمُ". رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهَا:" يَسْتَعْذِبُ": أَيْ يَطْلُبُ الْمَاءَ الْعَذْبَ وَهُوَ الطَّيِّبُ. وَ" الْعِذْقُ" بِكَسْرِ الْعَيْنِ وَإِسْكَانِ الذَّالِ الْمُعْجَمَةِ وَهُوَ الْكِبَاسَةُ وَهِيَ الْغُصْنُ. وَ"الْمُدْيَةُ" بِضَمِّ الْمِيمِ وَكَسْرِهَا: هِيَ السِّكِّينُ. وَ "الْحَلُوبُ": ذَاتُ اللَّبَنِ. وَالسُّؤَالُ عَنْ هَذَا النَّعِيمِ سُؤَالُ تَعْدِيدِ النِّعَمِ لاَ سُؤَالُ تَوْبِيخٍ وَتَعْذِيبٍ. وَاللَّهُ أَعْلَمُ وَهَذَا الأَنْصَارِيُّ الَّذِي أَتَوْهُ هُوَ أَبُو الْهَيْثَمِ ابْنُ التَّيِّهَانِ كَذَا جَاءَ مُبَيَّنًا فِي رِوَايَةِ التِّرْمِذِيِّ وَغَيْرِهِ.

**497** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் பகலில் அல்லது இரவில் நபி (ஸல்) அவர்கள் வெளியே வந்தார்கள். அங்கே அபூபக்ர் (ரழி) அவர்களையும், உமர் (ரழி) அவர்களையும் கண்டார்கள். “இந்த நேரத்தில் நீங்கள் இருவரும் வீட்டிலிருந்து வெளிவரக் காரணம் என்ன?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். “இறைத்தூதர் அவர்களே! பசிதான்” என அவ்விருவரும் கூறினார்கள். “என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! உங்கள் இருவரையும் வெளியாக்கிய பசியே என்னையும் வெளியாக்கியது. இருவரும் எழுந்து வாருங்கள்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அந்த இருவரும் அவர்களுடன் எழுந்து நடந்தனர். அன்சாரி ஒருவரின் வீட்டிற்கு வந்தார்கள். அப்போது அவர் வீட்டில் இல்லை. அவரின் மனைவி அவர்களைக் கண்டபோது, “மர்ஹபன் வ அஹ்லன்” என (மகிழ்ச்சிப் பொங்க) வாழ்த்துக் கூறி வரவேற்றார். “இன்னார் (உன் கணவர்) எங்கே?” என்று அவரது மனைவியிடம் நபி (ஸல்) கேட்டார்கள். “அவர் எங்களுக்கு குடிதண்ணீர் கொண்டு வரச் சென்றுள்ளார்” என்று அவரது மனைவி கூறினார். அப்போது அந்த அன்சாரித் தோழர் வந்தார். நபி (ஸல்) அவர்களையும், அவரது இரு தோழர்களையும் அவர் கண்டதும், “அல்ஹம்துலில்லாஹ்” (எல்லாப்புகழும் இறைவனுக்கே!), இன்று மிகச் சிறப்புமிக்க விருந்தாளிகளைப் பெற்றவர் என்னை தவிர வேறு யாரும் இருக்கமுடியாது” என்று அவர் கூறினார். அவர் நடந்து சென்று, ஒரு பேரீத்தம் பழக்குலையை அவர்களிடம் கொண்டு வந்தார். அதில் காயும், பழமும், கனிந்த பழமும் இருந்தன. “சாப்பிடுங்கள்” என்று கூறினார். கத்தியை எடுத்து ஆட்டை அறுப்பதற்காகப் புறப்பட்டார். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், “பால் கொடுக்கும் ஆட்டை (வெட்டுவதை விட்டும்) எச்சரிக்கிறேன்” என அவரிடம் நபி (ஸல்) கூறினார்கள். பின்னர் அவர்களுக்காக (ஓர் ஆட்டை) அறுத்தார். (அதன் இறைச்சியை சமைத்து அவர்களின் முன் வைத்தார்.) அவர்கள் அந்த ஆட்டிலிருந்தும், பேரீத்தம் பழக்குலையில் இருந்தும் சாப்பிட்டு, தண்ணீர் குடித்தார்கள். அவர்கள் வயிறு நிரம்பியதும், அபூபக்ர் (ரழி), உமர் (ரழி) ஆகிய இருவரிடமும், “என் உயிரை கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! மறுமையில் இந்த அருட்கொடை பற்றி நீங்கள் கேள்வி கேட்கப்படுவீர்கள். உங்கள் வீடுகளிலிருந்து உங்களை பசிதான் வெளியேற்றியது. பின்பு இந்த அருட்கொடைகளைப் பெற்று நீங்கள் உங்கள் இல்லங்களுக்குத் திரும்புகிறீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2038)**

٤٩٨ - وَعَنْ خَالِد بْنِ عُمَرَ الْعَدَوِيِّ قَالَ: خَطَبَنَا عُتْبَةُ بْنُ غَزْوَانَ - وَكَانَ أَمِيرًا عَلَى الْبَصْرَة - فَحَمِدَ اللّٰهَ وَأَثْنَى عَلَيْه ثُمَّ قَالَ: أَمَّا بَعْدُ فَإِنَّ الدُّنْيَا قَدْ آذَنَتْ بِصُرْمٍ وَوَلَّتْ حَذَّاءَ وَلَمْ يَبْقَ مِنْهَا إِلاَّ صُبَابَةٌ كَصُبَابَة الأَنَاء يَتَصَابُّهَا صَاحِبُهَا! وَإِنَّكُمْ مُنْتَقِلُونَ مِنْهَا إِلَى دَارٍ لاَ زَوَالَ لَهَا فَانْتَقِلُوا بِخَيْرِ مَا بِحَضْرَتِكُمْ فَإِنَّهُ قَدْ ذُكِرَ لَنَا أَنَّ الْحَجَرَ يُلْقَى مِنْ شَفِيرِ جَهَنَّمَ فَيَهْوِي فِيهَا سَبْعِينَ عَامًا لاَ يُدْرِكُ لَهَا قَعْرًا! وَاللّٰهِ لَتُمْلأَنَّ! أَفَعَجِبْتُمْ ؟ وَلَقَدْ ذُكِرَ لَنَا أَنَّ مَا بَيْنَ مِصْرَاعَيْنِ مِنْ مَصَارِيعِ الْجَنَّة مَسِيرَةَ أَرْبَعِينَ عَامًا وَلَيَأْتِيَنَّ عَلَيْه يَوْمٌ وَهُوَ كَظِيظٌ مِنَ الزِّحَامِ. وَلَقَدْ رَأَيْتُنِي سَابِعَ سَبْعَةٍ مَعَ رَسُولِ اللّٰهِ ﷺ مَا لَنَا طَعَامٌ إِلاَّ وَرَقَ الشَّجَرِ حَتَّى قَرِحَتْ أَشْدَاقُنَا فَالْتَقَطْتُ بُرْدَةً فَشَقَقْتُهَا بَيْنِي وَبَيْنَ سَعْدِ بْنِ مَالِكٍ فَاتَّزَرْتُ بِنِصْفِهَا وَاتَّزَرَ سَعْدٌ بِنِصْفِهَا فَمَا أَصْبَحَ الْيَوْمَ مِنَّا أَحَدٌ إِلاَّ أَصْبَحَ أَمِيرًا عَلَى مِصْرٍ مِنَ الأَمْصَارِ. وَإِنِّي أَعُوذُ بِاللّٰهِ أَنْ أَكُونَ فِي نَفْسِي عَظِيمًا وَعِنْدَ اللّٰهِ صَغِيرًا. رَوَاهُ مُسْلِمٌ. قَوْلُهُ:" آذَنَتْ" هُوَ بِمَدِّ الأَلِفِ: أَيْ أَعْلَمَتْ. وَقَوْلُهُ:" بِصُرْمٍ" هُوَ بِضَمِّ الصَّاد: أَيْ بِانْقِطَاعِهَا وَفَنَائِهَا. وَقَوْلُهُ:" وَوَلَّتْ حَذَّاءَ" هُوَ بِحَاءٍ مُهْمَلَة مَفْتُوحَة ثُمَّ ذَالٍ مُعْجَمَة مُشَدَّدَة ثُمَّ أَلِفٍ مَمْدُودَة: أَيْ سَرِيعَةً. وَ" الصُّبَابَةُ" بِضَمِّ الصَّاد الْمُهْمَلَة - الْبَقِيَّةُ الْيَسِيرَةُ وَقَوْلُه:" يَتَصَابُّهَا" هُوَ بِتَشْدِيدِ الْبَاءِ قَبْلَ الْهَاءِ: أَيْ يَجْمَعُهَا. وَ" الْكَظِيظُ": الْكَثِيرُ الْمُمْتَلِئُ. وَقَوْلُهُ:" قَرِحَتْ" هُوَ بِفَتْحِ الْقَافِ وَكَسْرِ الرَّاء: أَيْ صَارَتْ فِيهَا قُرُوحٌ.

**498** காலித் இப்னு உமைர் அதவீ அறிவிக்கின்றார்கள்:

உத்பா இப்னு அஸ்வான் (ரழி) அவர்கள் பஸரா நகரின் தலைவராக இருந்த சமயம் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பின்பு, "அம்மா பஃது! இந்த உலகம், தான் அழிந்துவிடுவது பற்றி அறிவித்து உள்ளது. அது வேகமாக பிரிந்தும் சென்று கொண்டிருக்கிறது. பாத்திரம் வைத்துள்ள ஒருவன், பாத்திரத்தில் சேகரித்து வைக்கும் சிறிதளவுதான் உலகிற்கு மீதமிருக்கிறது. நீங்கள் இவ்வுலகை விட்டு நீங்காத இல்லமான (மறுமை நோக்கி) புறப்பட்டுச் சென்று கொண்டிருக்கிறீர்கள். உங்களிடமுள்ள நல்லவைகள் மூலம் நீங்கள் புறப்படுங்கள். நரகின் மேலிருந்து ஒரு கல் போடப்படும். அது கீழே நோக்கி எழுபது வருடங்கள் செல்லும். ஆனால் அதன் அடியில் அதுபோய் சேராது. (அவ்வளவு ஆழமானதாகும் நரகம்)" என்று எங்களிடம் கூறப்பட்டது. "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அதில் நீங்கள் நிரப்பப்படுவீர்கள். ஆச்சரியப்படுகிறீர்களா? மேலும் சொர்க்கத்தின் வாசல்களில் இரு வாசல்களுக்கிடையே நாற்பது ஆண்டுகள் நடந்து செல்லும் தூரம் இருக்கும். அன்றைய நாளில் அதில் நுழைபவர்களின் கூட்டம் நிரம்பி நிற்கும்."

நாங்கள் ஏழு பேர் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அவர்களில் ஏழாவது நபராக நான் இருந்தேன். மர இலைகளைத் தவிர வேறு உணவு எங்களுக்கு இல்லை. இதனால் எங்கள் தாடைகள் புண்ணாகிவிட்டன. அப்போது ஒரு போர்வையை நான் கண்டெடுத்தேன். அதை இரண்டாக கிழித்தேன். அதில் ஒரு துண்டை நான் வேட்டியாக அணிந்து கொண்டேன். மற்றொரு துண்டை (என்னுடன் இருந்த மற்றொரு நபித்தோழர்) ஸஃது இப்னு மாலிக் (ரழி) அவர்களுக்கு ஒன்று கொடுத்தேன். அதை அவர் வேட்டியாக அணிந்து கொண்டார். (ஆனால்) இன்று எங்களில் எந்த ஒரு தோழரும் நகரங்களில் ஏதாவதொரு நகரத்திற்கு தலைவராக (ஆளுநராக) இல்லாமல் இல்லை. நான் என் மனதில் பெரியவனாகவும், அல்லாஹ்விடம் சிறியவனாகவும் ஆகிவிடுவதை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்" என்று (தன் உரையில்) கூறினார்கள். **(முஸ்லிம்:2967)**

٤٩٩ - وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ: أَخْرَجَتْ لَنَا عَائِشَةُ رَضِيَ اللّٰهُ عَنْهَا كِسَاءً وَإِزَارًا غَلِيظًا. قَالَتْ: قُبِضَ رَسُولُ اللّٰهِ ﷺ فِي هَذَيْنِ. مُتَّفَقٌ عَلَيْه.

**499** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு போர்வை, ஒரு முரடான வேட்டியை எங்களிடம் காண்பித்த ஆயிஷா (ரழி) அவர்கள் எங்களிடம், "இந்த இரண்டில் இருந்த நிலையில்தான் நபி (ஸல்) அவர்களின் (உயிர்) கைப்பற்றப் பட்டது" என்று கூறினார்கள். **(புகாரி:3108, முஸ்லிம்:2080)**

٥٠٠ – وَعَنْ سَعْد ابْنِ أَبِي وَقَّاص رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: إِنِّي لأَوَّلُ الْعَرَب رَمَى بِسَهْمٍ فِي سَبِيلِ اللَّه. وَلَقَدْ كُنَّا نَغْزُو مَعَ رَسُولِ اللَّه ﷺ مَا لَنَا طَعَامٌ إِلاَّ وَرَقُ الْحُبْلَة وَهَذَا السَّمُرُ حَتَّى إِنْ كَانَ أَحَدُنَا لَيَضَعُ كَمَا تَضَعُ الشَّاةُ مَا لَهُ خِلْطٌ. مُتَّفَقٌ عَلَيْه." الْحُبْلَةُ" بِضَمِّ الْحَاءِ الْمُهْمَلَةِ وَإِسْكَانِ الْبَاءِ الْمُوَحَّدَة ; وَهِيَ وَالسَّمُرُ نَوْعَانِ مَعْرُوفَانِ مِنْ شَجَرِ الْبَادِيَة.

**500** ஸஃது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வின் வழியில் தங்களின் அம்பை பயன்படுத்தியோர்களில் நான் முதல்வனாவேன். நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் போரில் கலந்து கொண்டோம். எங்களுக்கு 'ஹுப்லா' என்னும் காட்டுமரம் மற்றும் கருவேல மரத்தின் இலைகளைத் தவிர வேறு உணவு இல்லை. (இதனால்) எங்களில் ஒருவர், ஆடு புழுக்கை போடுவது போலவேதான் மலம் கழிப்பார். **(புகாரி:3728, முஸ்லிம்:2966)**

٥٠١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " اللَّهُمَّ اجْعَلْ رِزْقَ آلِ مُحَمَّدٍ قُوتًا " . مُتَّفَقٌ عَلَيْه . قَالَ أَهْلُ اللُّغَةِ وَالْغَرِيبِ : مَعْنَى " قُوتًا " : أَيْ مَا يَسُدُّ الرَّمَقَ

**501** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைவா! முஹம்மதின் குடும்பத்தாருக்கு போதுமான அளவுக்கு உணவை வழங்குவாயாக!" என்று நபி (ஸல்) பிரார்த்தனை செய்தார்கள். **(புகாரி:6460, முஸ்லிம்:1055)**

٥٠٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : وَاللَّه الَّذِي لاَ إِلَهَ إِلاَّ هُوَ إِنْ كُنْت لأَعْتَمِدُ بِكَبِدِي عَلَى الأَرْضِ مِنْ الْجُوعِ وَإِنْ كُنْت لأَشُدُّ الْحَجَرَ عَلَى بَطْنِي مِنْ الْجُوعِ . وَلَقَدْ قَعَدْت يَوْمًا عَلَى طَرِيقِهِمْ الَّذِي يَخْرُجُونَ مِنْهُ فَمَرَّ بِي النَّبِيُّ ﷺ فَتَبَسَّمَ حِينَ رَآنِي وَعَرَفَ مَا فِي وَجْهِي وَمَا فِي نَفْسِي ثُمَّ قَالَ : " أَبَا هِرٍّ " . قُلْت : لَبَّيْكَ يَا رَسُولَ اللَّه قَالَ : " الْحَقْ " وَمَضَى فَاتَّبَعْتُهُ فَدَخَلَ فَاسْتَأْذَنَ فَأَذِنَ لِي فَدَخَلْت فَوَجَدَ لَبَنًا فِي قَدَحٍ فَقَالَ : " مِنْ أَيْنَ هَذَا اللَّبَنُ ؟ " قَالُوا : أَهْدَاهُ لَك فُلاَنٌ – أَوْ فُلاَنَةُ – قَالَ : " أَبَا هِرٍّ " قُلْت : لَبَّيْكَ يَا رَسُولَ اللَّه قَالَ : " الْحَقْ إِلَى أَهْلِ الصُّفَّة فَادْعُهُمْ لِي " ) قَالَ ( : وَأَهْلُ الصُّفَّة أَضْيَافُ الإِسْلاَمِ لاَ يَأْوُونَ عَلَى أَهْلٍ وَلاَ مَالٍ وَلاَ عَلَى أَحَدٍ وَكَانَ إِذَا أَتَتْهُ صَدَقَةٌ بَعَثَ بِهَا إِلَيْهِمْ وَلَمْ يَتَنَاوَلْ مِنْهَا شَيْئًا ; وَإِذَا أَتَتْهُ هَدِيَّةٌ أَرْسَلَ إِلَيْهِمْ وَأَصَابَ مِنْهَا وَأَشْرَكَهُمْ فِيهَا . فَسَاءَنِي ذَلِكَ فَقُلْت : وَمَا هَذَا اللَّبَنُ فِي أَهْلِ الصُّفَّة! كُنْت أَحَقُّ أَنْ أُصِيبَ مِنْ هَذَا اللَّبَنِ شَرْبَةً أَتَقَوَّى بِهَا فَإِذَا جَاءُوا أَمَرَنِي فَكُنْت أَنَا أُعْطِيهِمْ ; وَمَا عَسَى أَنْ يَبْلُغَنِي مِنْ هَذَا اللَّبَنِ ! وَلَمْ يَكُنْ مِنْ طَاعَةِ اللَّه وَطَاعَةِ رَسُولِ اللَّه ﷺ بُدٌّ فَأَتَيْتهمْ فَدَعَوْتهمْ فَأَقْبَلُوا وَاسْتَأْذَنُوا فَأَذِنَ لَهُمْ وَأَخَذُوا مَجَالِسَهُمْ مِنْ الْبَيْت . قَالَ : " يَا أَبَا هِرٍّ " قُلْت : لَبَّيْكَ يَا رَسُولَ اللَّه قَالَ : " خُذْ فَأَعْطِهِمْ " . ) قَالَ ( : فَأَخَذْت الْقَدَحَ فَجَعَلْت أُعْطِيه الرَّجُلَ فَيَشْرَبُ حَتَّى يَرْوَى ثُمَّ يَرُدُّ عَلَيَّ الْقَدَحَ فَأُعْطِيه الآخَرَ فَيَشْرَبُ حَتَّى يَرْوَى ثُمَّ يَرُدُّ عَلَيَّ الْقَدَحَ حَتَّى انْتَهَيْت إِلَى النَّبِيِّ ﷺ وَقَدْ رَوِيَ الْقَوْمُ كُلُّهُمْ فَأَخَذَ الْقَدَحَ فَوَضَعَهُ عَلَى يَدِه فَنَظَرَ إِلَيَّ فَتَبَسَّمَ فَقَالَ : " أَبَا هِرٍّ " قُلْت : لَبَّيْكَ يَا رَسُولَ اللَّه قَالَ : " بَقِيت أَنَا وَأَنْتَ " قُلْت : صَدَقْت يَا رَسُولَ اللَّه قَالَ : " اقْعُدْ فَاشْرَبْ " فَقَعَدْت فَشَرِبْت . فَقَالَ : " اشْرَبْ " فَشَرِبْت فَمَا زَالَ يَقُولُ : " اشْرَبْ " : حَتَّى قُلْت : لاَ وَالَّذِي بَعَثَك بِالْحَقِّ لاَ أَجِدُ لَهُ مَسْلَكًا قَالَ : " فَأَرِنِي " فَأَعْطَيْته الْقَدَحَ فَحَمِدَ اللَّهَ تَعَالَى وَسَمَّى وَشَرِبَ الْفَضْلَةَ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**502** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அவனைத் தவிர வேறு இறைவன் இல்லாத அந்த அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் பசி காரணமாக என் ஈரலை பூமியில் பட (குப்புறப்) படுத்திருந்தேன். சில வேளைகளில் பசியின் காரணமாக நான் என் வயிற்றில் கல்லைக் கட்டிக் கொள்வேன். ஒரு நாள் (பசியின் காரணமாக) மக்கள் நடந்து செல்லும் பாதையில் நான் அமர்ந்திருந்தேன். என் அருகில் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். என்னைப் பார்த்ததும் சிரித்தார்கள். என் அகத்திலும், புறத்திலும் உள்ளதை அறிந்து கொண்டார்கள். பின்பு, “அபூஹிர்ரே!” என்று என்னை அழைத்தார்கள். “இறைத்தூதர் அவர்களே! அருகில் உள்ளேன்” என்று கூறினேன். “என்னோடு சேர்ந்து வருவீராக!” என்று கூறினார்கள். அவர்கள் முன்னே செல்ல, நான் அவர்களை பின் தொடர்ந்தேன். அவர்கள் (வீட்டினுள்) நுழைந்தார்கள். (எனக்கு நுழைய) அனுமதி வேண்டினார்கள். எனக்கு அனுமதி கிடைத்தது. நான் உள்ளே நுழைந்தேன். அங்கு ஒரு குவளையில் பால் வைக்கப்பட்டிருந்தது. “இது எங்கிருந்து வந்தது?” என்று கேட்டார்கள். “இன்னார் அல்லது இன்ன பெண் உங்களுக்கு இதை அன்பளிப்பாகத் தந்தார்கள்” என்று கூறினார்கள். “அபூஹிர்ரே!” என்று அழைத்தார்கள். இறைத்தூதர் அவர்களே! இதோ உங்கள் அருகிலேயே உள்ளேன்” என்று கூறினேன். “நீங்கள் சென்று திண்ணைத் தோழர்களை அழைத்து வாருங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

திண்ணைத் தோழர்கள், இஸ்லாமிய விருந்தாளியாவார்கள். குடும்பத்தையோ, சொத்தையோ, வாரிசுகளையோ பெறாத ஆதர வற்றவர்கள். நபி (ஸல்) அவர்களிடம் ஒரு தர்மப் பொருள் வந்தால், அதை அந்த திண்ணைத் தோழர்களிடம் கொடுத்துவிடுவார்கள். அதிலிருந்து எதையும் நபி (ஸல்) எடுத்துக் கொள்ளமாட்டார்கள். ஏதேனும் அன்பளிப்பு வந்தாலும் அவர்களிடம் ஆள் அனுப்பி, அதிலிருந்து தானும் எடுத்து, அவர்களையும் அதில் கூட்டாக்கிக் கொள்வார்கள். (அவர்களை அழைத்து வரச் செய்தது) என்னைக் கவலைக்குள்ளாக்கியது. “திண்ணைத் தோழர்களுக்கு இந்த பால் எப்படிப் போதும்? இந்தப் பாலைக் குடிக்கவும், அதன் மூலம் சக்தி பெறவும் நானே தகுதி வாய்ந்தவன். அவர்கள் வந்து விட்டால், (அவர்களுக்கு தரும்படி) என்னிடம்தான் கட்டளை இடுவார்கள். அவர்களுக்கு நான் கொடுப்பேன். இந்த பாலிலிருந்து எனக்கு எதுவும் கிடைக்காமலும் போகும். அல்லாஹ்வுக்கு கட்டுப்படுதல், அவனது தூதருக்குக் கட்டுப்படுதல் என்பதை விட வேறு அவசியம் இல்லை” என்று நான் கூறிக் கொண்டே, திண்ணைத் தோழர்களிடம் வந்தேன். அவர்களை அழைத்தேன். அவர்கள் வந்தார்கள். (உள்ளே நுழைய) அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் அனுமதி வழங்கினார்கள். வீட்டில் வந்து அமர்ந்தார்கள்.

“அபூஹிர்ரே!” என்று நபி (ஸல்) அவர்கள் அழைத்தார்கள். “இறைத்தூதர் அவர்களே! இதோ அருகில் உள்ளேன்” என்று கூறினேன். “இதை எடுத்து அவர்களிடம் கொடுப்பீராக!” என்று நபி (ஸல்) கூறினார்கள். நான் குவளையை எடுத்து, அவர்களில் ஒரு மனிதரிடம் கொடுத்தேன். அவர் வயிறு நிறையக் குடித்தார். பின்பு என்னிடம் அவர் குவளையைத் திருப்பித் தந்தார். உடனே அதை மற்றொருவரிடம் கொடுத்தேன். அவரும் வயிறும் நிறையக் குடித்தார். பின்பு என்னிடம் அதைத் திரும்ப தந்தார். அவர்கள் அனைவரும் வயிறு நிரம்ப அருந்திவிட்டார்கள். இறுதியில் நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். நபி (ஸல்) அவர்கள் குவளையை எடுத்து, தன் கையில் வைத்துக் கொண்டு, என்னைப் பார்த்து சிரித்தார்கள். “அபூஹிர்ரே!” என அழைத்தார்கள். “இறைத்தூதர் அவர்களே! இதோ வந்துவிட்டேன்” என்று கூறினேன். “நீயும், நானும்தானே மிஞ்சியவர்கள்?” என்று கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! உண்மை சொன்னீர்கள்!” என்று கூறினேன். “உட்காருங்கள், பாலை அருந்துங்கள்” என்று கூறினார்கள். நான் உட்கார்ந்து, பருகினேன். “மீண்டும் பருகுங்கள்”

என்று கூறினார்கள். நான் பருகினேன். பின்னர் மீண்டும் மீண்டும் பருகும்படி என்னிடம் கூறினார்கள். இறுதியில் நான் கூறினேன். "உங்களை அனுப்பிய இறைவன் மீது சத்தியமாக! இனிமேலும் இதை அருந்த என்னிடம் இடம் இல்லை." அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், "அதனை என்னிடம் காண்பிப்பீராக!" என்றார்கள். நான் கோப்பையை அவர்களிடம் கொடுத்துவிட்டேன். அவர்கள் அல்லாஹ்வை போற்றிப் புகழ்ந்தார்கள். பின்னர் அல்லாஹ்வின் திருப்பெயர் கூறி மீதி இருந்த பாலை நபி(ஸல்) அவர்கள் பருகினார்கள். **(புகாரி:6452)**

٥٠٣ – وَعَنْ مُحَمَّد بْنِ سيرِينَ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : لَقَدْ رَأَيْتنِي وَإِنِّي لأَخِرُّ فِيمَا بَيْنَ مِنْبَرِ رَسُولِ اللّٰهِ ﷺ إِلَى حُجْرَةِ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا مَغْشِيًّا عَلَيَّ فَيَجِيءُ الْجَائِي فَيَضَعُ رِجْلَهُ عَلَى عُنُقِي وَيَرَى أَنِّي مَجْنُونٌ وَمَا بِي مِنْ جُنُونٍ مَا بِي إِلاَّ الْجُوعُ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**503** முஹம்மத் இப்னு ஷீரீன் அவர்கள் கூறுகின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்களின் மின்பருக்கும், ஆயிஷா (ரழி) அவர்களின் வீட்டிற்கும் இடைப்பட்ட இடத்தில் (ஒருநாள்) எனக்கு மயக்கம் ஏற்பட்டு விழுந்து கிடந்தேன். அவ்வழியே வருவோர், என் பிடரியில் தன் காலை வைத்து (மிதித்து)செல்வர். என்னை பைத்தியம் என அவர்கள் கருதினார்கள். (அக்காலத்தில் பைத்தியக்காரனின் கழுத்தில் காலை வைப்பது, பைத்தியக்காரனுக்கு சிகிச்சை அளிக்கும் முறைகளில் ஒன்றாக இருந்தது.) ஆனால் எனக்கு பைத்தியம் எதுவும் இல்லை. எனக்கு பசி மயக்கம்தான் இருந்தது" என்று அபூஹுரைரா (ரழி) கூறினார்கள். **(புகாரி:7324)**

٥٠٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ : تُوُفِّيَ رَسُولُ اللّٰهِ ﷺ وَدِرْعُهُ مَرْهُونَةٌ عِنْدَ يَهُودِيٍّ فِي ثَلاَثِينَ صَاعًا مِنْ شَعِيرٍ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**504** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முப்பது 'ஸாஉ' தொலிக் கோதுமைக்காகத் தன் உருக்குச் சட்டையை ஒரு யஹூதியிடம் அடமானம் வைக்கப்பட்ட நிலையில் நபி (ஸல்) அவர்கள் இறந்தார்கள். **(புகாரி:2916. முஸ்லிம்:1603)**

٥٠٥ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : رَهَنَ النَّبِيُّ ﷺ دِرْعَهُ بِشَعِيرٍ وَمَشَيْتُ إِلَى النَّبِيِّ ﷺ بِخُبْزِ شَعِيرٍ وَإِهَالَةٍ سَنِخَةٍ وَلَقَدْ سَمِعْتُهُ يَقُولُ : " مَا أَصْبَحَ لآلِ مُحَمَّدٍ صَاعٌ وَلاَ أَمْسَى " وَإِنَّهُمْ لَتِسْعَةُ أَبْيَاتٍ ! رَوَاهُ الْبُخَارِيُّ . " الإِهَالَةُ " بِكَسْرِ الْهَمْزَةِ : الشَّحْمُ الذَّائِبُ . وَ " السَّنِخَةُ " بِالنُّونِ وَالْخَاءِ الْمُعْجَمَةِ وَهِيَ الْمُتَغَيِّرَةُ .

**505** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தன் உருக்குச் சட்டையை தொலிக் கோதுமைக்காக நபி (ஸல்) அடமானம் வைத்தார்கள். நான் நபி (ஸல்) அவர்களுக்கு தொலிக் கோதுமை ரொட்டியையும், பழைய கொழுப்பையும் கொண்டு சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "முஹம்மதின் குடும்பத்தாரிடம் ஒரு "ஸாஉ" அளவுக்கு உணவு தானியம் காலையிலும் இருந்ததில்லை. மாலையிலும் இருந்ததில்லை" என்று கூறியதைக் கேட்டேன். அவர்களின் குடும்பத்தினர் ஒன்பது வீடுகளாக இருந்தனர். **(புகாரி:2069)**

٥٠٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : " لَقَدْ رَأَيْتُ سَبْعِينَ مِنْ أَهْلِ الصُّفَّةِ مَا مِنْهُمْ رَجُلٌ عَلَيْهِ رِدَاءٌ إِمَّا إِزَارٌ وَإِمَّا كِسَاءٌ قَدْ رَبَطُوا فِي أَعْنَاقِهِمْ مِنْهَا مَا يَبْلُغُ نِصْفَ السَّاقَيْنِ وَمِنْهَا مَا يَبْلُغُ الْكَعْبَيْنِ فَيَجْمَعُهُ بِيَدِهِ كَرَاهِيَةَ أَنْ تُرَى عَوْرَتُهُ " رَوَاهُ الْبُخَارِيُّ .

**506** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

திண்ணைத் தோழர்கள் எழுபது பேர்கள் இருந்தனர். அவர்களில் எவரிடமும் மேலாடை இருக்கவில்லை. வேட்டி, அல்லது போர்வை ஏதேனும் ஒன்றுதான் இருக்கும். அதனைத் தங்கள் பிடரிகளில் கட்டிக் கொள்வார்கள். அவைகளில் சில அவர்களில் சிலரின் பாதிக்கரண்டை கால்கள் வரை இருக்கும். அவைகளில் சில அவர்களின் கணுக்கால்கள் வரை இருக்கும். (அது விலகி) தன் மறைவுப்பகுதி வெளிப்படுவதை வெறுத்து, தன் கையால் அதை சேர்த்து பிடித்துக் கொள்வார்கள்.

**(புகாரி:442)**

٥٠٧ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : " كَانَ فِرَاشُ رَسُولِ اللَّهِ ﷺ مِنْ أَدَمٍ حَشْوُهُ لِيفٌ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**507** அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் படுக்கை தோலால் ஆகி இருந்தது. அதன் உள்பகுதி பேரீத்தம் பழ மர இலைகளால் நிரப்பப்பட்டிருந்தது. **(புகாரி:6456)**

٥٠٨ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كُنَّا جُلُوسًا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ إِذْ جَاءَ رَجُلٌ مِنَ الأَنْصَارِ فَسَلَّمَ عَلَيْهِ ثُمَّ أَدْبَرَ الأَنْصَارِيُّ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَا أَخَا الأَنْصَارِ كَيْفَ أَخِي سَعْدُ بْنُ عُبَادَةَ ؟ " فَقَالَ : صَالِحٌ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ يَعُودُهُ مِنْكُمْ ؟ " فَقَامَ وَقُمْنَا مَعَهُ نَحْنُ بِضْعَةَ عَشَرَ مَا عَلَيْنَا نِعَالٌ وَلاَ خِفَافٌ وَلاَ قَلاَنِسُ وَلاَ قُمُصٌ نَمْشِي فِي تِلْكَ السِّبَاخِ حَتَّى جِئْنَاهُ فَاسْتَأْخَرَ قَوْمُهُ مِنْ حَوْلِهِ حَتَّى دَنَا رَسُولُ اللَّهِ ﷺ وَأَصْحَابُهُ الَّذِينَ مَعَهُ . رَوَاهُ مُسْلِمٌ .

**508** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். "அன்சாரி"யான ஒரு நபித்தோழர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து ஸலாம் கூறி, புறப்பட்டுச் சென்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அன்சாரித் தோழரே! (உடல் நலம் பாதிக்கப்பட்ட) என் சகோதரர் ஸஃது இப்னு உபாதா (ரழி) எப்படி இருக்கிறார்?" என்று கேட்டார்கள். "அவர் நலமுடன் உள்ளார்" என அன்சாரி நபித்தோழர் கூறினார். "அவரை நலம் விசாரிக்க வருபவர் உங்களில் யார்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டு விட்டு புறப்பட்டார்கள். நாங்களும் அவர்களுடன் புறப்பட்டோம். நாங்கள் பத்துக்கும் மேற்பட்டோர் இருந்தோம். எங்களிடம் செருப்புகளோ, காலுறைகளோ, தொப்பிகளோ, சட்டைகளோ இல்லை. (இந்த வறுமையான நிலையில்) அந்த வழுக்குப் பாறையில் நடந்து, ஸஃதிடம் வந்தோம். (எங்களை கண்டதும்) அவர் அருகில் இருந்த அவரது கூட்டத்தார் பின்னால் வந்துவிட்டார்கள். நபி(ஸல்) அவர்களும், அவர்களுடன் இருந்த அவர்களின் தோழர்களும் அவர் அருகில் (நலம் விசாரிக்கச்) சென்றார்கள். (அவரின் உடல் நலம் விசாரித்தார்கள்.) **(முஸ்லிம்:925)**

٥٠٩ - وَعَنْ عِمْرَانَ بْنِ حُصَيْنٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ : " خَيْرُكُمْ قَرْنِي ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ " . قَالَ عِمْرَانُ : فَمَا أَدْرِي قَالَ النَّبِيُّ ﷺ مَرَّتَيْنِ أَوْ ثَلاَثًا ثُمَّ يَكُونُ بَعْدَهُمْ قَوْمٌ يَشْهَدُونَ وَلاَ يُسْتَشْهَدُونَ وَيَخُونُونَ وَلاَ يُؤْتَمَنُونَ وَيَنْذُرُونَ وَلاَ يُوفُونَ وَيَظْهَرُ فِيهِمُ السِّمَنُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**509** இம்ரான் இப்னு ஹுசைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் சிறந்தவர், என் கூட்டத்தினர் ஆவர். (இப்பொழுது என்னுடனுள்ள ஸஹாபாக்கள்). பின்பு அவர்களுக்கும் அடுத்தவர்களாவர். பின்பு அவர்களுக்கும் அடுத்தவர்களாவர். (இதை இரண்டு தடவை அல்லது மூன்று தடவை நபி (ஸல்) கூறினார்கள்). பின்பு அவர்களுக்குப் பின் ஒரு

கூட்டத்தினர் வருவர். அவர்கள் சாட்சி கூற அழைக்கப்படாமலேயே (பொய்) சாட்சி கூறுவார்கள். மோசடி செய்வார்கள். அவர்கள் நம்பிக்கைக்குரியவர்கள் அல்லர். நேர்ச்சை செய்வார்கள். ஆனால் அதை நிறைவேற்ற மாட்டார்கள். அவர்களிடையே கொழுப்புத்தன்மை (சுகமான வாழ்க்கையையும், சுவையான உணவுகளையும் விரும்புவார்கள். இதனால் அவர்கள் உடல்கள் பெருத்தவையாக இருக்கும்) ஏற்படும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2651. முஸ்லிம்:2535)**

٥١٠ – وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَا ابْنَ آدَمَ إِنَّكَ إِنْ تَبْذُلْ الْفَضْلَ خَيْرٌ لَكَ وَإِنْ تُمْسِكْهُ شَرٌّ لَكَ وَلاَ تُلاَمُ عَلَى كَفَافٍ وَابْدَأْ بِمَنْ تَعُولُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**510** அபூஉமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதமின் மகனே! உன் தேவை போக மீதமானவற்றை (நல்வழியில்) நீ செலவு செய்வது உனக்குச் சிறந்ததாகும். அதை நீ செலவு செய்யாமல் இருப்பது உனக்குத் தீங்காகும். தேவையானவற்றை வைத்துக் கொள்வதற்காக நீ பழித்துரைக்கப்பட மாட்டாய். உன் நிர்வாகத்தின் கீழ் இருப்போருக்கு (நீ உதவி செய்து) செலவைத் துவக்குவாயாக!'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2343. இது "ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥١١ – وَعَنْ عُبَيْدِ اللَّهِ بْنِ مِحْصَنٍ الأَنْصَارِيِّ الْخَطْمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ أَصْبَحَ مِنْكُمْ آمِنًا فِي سِرْبِهِ مُعَافًى فِي جَسَدِهِ عِنْدَهُ قُوتُ يَوْمِهِ فَكَأَنَّمَا حِيزَتْ لَهُ الدُّنْيَا بِحَذَافِيرِهَا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " سِرْبِهِ " . بِكَسْرِ السِّينِ الْمُهْمَلَةِ : أَيْ نَفْسُهُ وَقِيلَ : قَوْمُهُ .

**511** உபைதுல்லாஹ் இப்னு முஹ்ஸின் அல் அன்சாரி, அல்குதமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் தன் (எதிரிகளால்) உயிருக்கு அச்சமற்று இருப்பவராகவும், உடலுக்கு ஆரோக்கியமாகவும், அன்றைய தேவைக்கு உணவு உள்ளவராகவும் இருந்தால், அவர் உலக இன்பங்கள் அனைத்தும் கொடுக்கப்பட்டவர் போலாவார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2346. இது "ஹஸன்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥١٢ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " قَدْ أَفْلَحَ مَنْ أَسْلَمَ وَكَانَ رِزْقُهُ كَفَافًا وَقَنَّعَهُ اللَّهُ بِمَا آتَاهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**512** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் முஸ்லிமாகி, அவரின் உணவுத்தேவை போதுமான அளவு இருந்து, அவருக்கு அல்லாஹ் வழங்கியதை போதுமாக்கிக் கொண்டால், அவர் மாபெரும் வெற்றி பெற்றுவிட்டார்'' என்று நபி(ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1054)**

٥١٣ – وَعَنْ أَبِي مُحَمَّدٍ فَضَالَةَ بْنِ عُبَيْدٍ الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " طُوبَى لِمَنْ هُدِيَ لِلإِسْلاَمِ وَكَانَ عَيْشُهُ كَفَافًا وَقَنَعَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**513** அபூமுஹம்மத் ஃபழாலா இப்னு உபைதுல் அன்சாரி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இஸ்லாத்தின் பக்கம் நேர்வழி காட்டப்பட்டு, அவரின் வாழ்க்கைக்கு போதுமான அளவிற்கு உணவு இருப்பதை (அல்லாஹ் அவருக்கு வழங்கியதைக் கொண்டு) அவர் போதுமாக்கிக் கொள்பவராக இருந்தால், அவருக்கு நல்வாழ்த்துக்கள் உண்டாவதாக!'' என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டேன். **(திர்மிதீ:2349. இது "ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥١٤ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَبِيتُ اللَّيَالِيَ الْمُتَتَابِعَةَ طَاوِيًا وَأَهْلُهُ لاَ يَجِدُونَ عَشَاءً وَكَانَ أَكْثَرُ خُبْزِهِمْ خُبْزَ الشَّعِيرِ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**514** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்கள் தொடர்ச்சியாக பல இரவுகள் பசியுடனேயே கழித்துள்ளார்கள். அவரின் குடும்பத்தார் இரவு நேர உணவைகூடப் பெற்றுக் கொண்டதில்லை. அவர்களிடம் இருந்த ரொட்டிகளில் தொலிக் கோதுமை ரொட்டி தான் அதிக அளவில் இருந்தது.”

**(திர்மிதீ:2360. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மீதி இமாம் கூறுகிறார்கள்)**

٥١٥ – وَعَنْ فَضَالَةَ بْنِ عُبَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا صَلَّى بِالنَّاسِ يَخِرُّ رِجَالٌ مِنْ قَامَتِهِمْ فِي الصَّلاَةِ مِنْ الْخَصَاصَةِ – وَهُمْ أَصْحَابُ الصُّفَّةِ – حَتَّى يَقُولَ الأَعْرَابُ : هَؤُلاَءِ مَجَانِينُ ! فَإِذَا صَلَّى رَسُولُ اللَّهِ ﷺ انْصَرَفَ إِلَيْهِمْ فَقَالَ : " لَوْ تَعْلَمُونَ مَا لَكُمْ عِنْدَ اللَّهِ تَعَالَى لأَحْبَبْتُمْ أَنْ تَزْدَادُوا فَاقَةً وَحَاجَةً " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ صَحِيحٌ . " الْخَصَاصَةُ " : الْفَاقَةُ وَالْجُوعُ الشَّدِيدُ .

**515** ஃபழாலா இப்னு உபைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு தொழ வைத்தால், கடும் பசியின் காரணமாக சில ஆண்கள் தொழுகையில் நின்று கொண்டிருக்கும் போதே மயங்கி விழுந்து விடுவார்கள். அவர்கள் திண்ணைத் தோழர்களாவர். சில காட்டரபிகள், “இவர்கள் பைத்தியக்காரர்கள்” என்று கூறுவார்கள். நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்து விட்டால் அவர்களை நோக்கித் திரும்பி, “அல்லாஹ்விடம் உங்களுக்காக உள்ளதை (அல்லாஹ்விடமுள்ள உயர்ந்த அந்தஸ்துகளை) நீங்கள் அறிந்து கொண்டால், பசியும், தேவையும் உங்களுக்கு அதிகமாக வேண்டுமென விரும்புவீர்கள்” என்று அவர்களுக்கு கூறுவார்கள். **(திர்மிதீ:2368. இது “ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥١٦ – وَعَنْ أَبِي كَرِيمَةَ الْمِقْدَامِ بْنِ مَعْدِي كَرِبَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مَلأَ آدَمِيٌّ وِعَاءً شَرًّا مِنْ بَطْنِهِ . بِحَسْبِ ابْنِ آدَمَ أُكُلاَتٌ يُقِمْنَ صُلْبَهُ فَإِنْ كَانَ لاَ مَحَالَةَ فَثُلُثٌ لِطَعَامِهِ وَثُلُثٌ لِشَرَابِهِ وَثُلُثٌ لِنَفْسِهِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " أُكُلاَتٌ " : أَيْ لُقَمٌ .

**516** அபூகரீமா என்ற மிக்தாத் இப்னு மஃதீ கரிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மனிதன், வயிற்றை விட வேறொரு கெட்ட பையையும் நிரப்பிக் கொள்வதில்லை. முதுகு எலும்பு நேராக இருந்திட ஆதமின் மகனுக்கு சில கவள உணவு போதும். அவனுக்கு அவசியம் ஏற்படு மானால், (வயிற்றில்) மூன்றில் ஒரு பங்கு அவனது உணவுக்காகவும், மூன்றில் ஒரு பங்கு அவன் தண்ணீர் குடிக்கவும், மூன்றில் ஒரு பங்கு அவன் மூச்சு விடவும் போதும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2380. இது “ஹஸன்” என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥١٧ – وَعَنْ أَبِي أُمَامَةَ إِيَاسِ بْنِ ثَعْلَبَةَ الأَنْصَارِيِّ الْحَارِثِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : ذَكَرَ أَصْحَابُ رَسُولِ اللَّهِ ﷺ يَوْمًا عِنْدَهُ الدُّنْيَا فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَلاَ تَسْمَعُونَ ؟ أَلاَ تَسْمَعُونَ ؟ إِنَّ الْبَذَاذَةَ مِنْ الأَيمَانِ إِنَّ الْبَذَاذَةَ مِنْ الأَيمَانِ " . يَعْنِي : التَّقَحُّلَ . رَوَاهُ أَبُو دَاوُدَ . " الْبَذَاذَةُ " : بِالْبَاءِ الْمُوَحَّدَةِ وَالذَّالَيْنِ الْمُعْجَمَتَيْنِ وَهِيَ رَثَاثَةُ الْهَيْئَةِ وَتَرْكُ فَاخِرِ اللِّبَاسِ . وَأَمَّا " التَّقَحُّلُ " فَبِالْقَافِ وَالْحَاءِ ; قَالَ أَهْلُ اللُّغَةِ : الْمُتَقَحِّلُ هُوَ الرَّجُلُ الْيَابِسُ الْجِلْدِ مِنْ خُشُونَةِ الْعَيْشِ وَتَرْكِ التَّرَفُّهِ .

**517** அபூஉமாமா என்ற இயாஸ் இப்னு தஃலபா அன்சாரி அல்ஹாரிஸீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபித் தோழர்கள் ஒருமுறை நபி (ஸல்) அவர்களிடம் உலகைப் பற்றி நினைவு கூர்ந்தார்கள். அப்போது, “நீங்கள் கேட்க மாட்டீர்களா? நீங்கள் கேட்க மாட்டீர்களா? நிச்சயமாக எளிமையான தோற்றம், இறை நம்பிக்கையில் உள்ளதாகும். நிச்சயமாக எளிமையான தோற்றம், இறை நம்பிக்கையில் உள்ளதாகும்” என்று (இருமுறை) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(அபூதாவூது:4161)**

٥١٨ – وَعَنْ أَبِي عَبْد اللَّه جَابِر بْنِ عَبْد اللَّه رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : بَعَثَنَا رَسُولُ اللَّه ﷺ وَأَمَّرَ عَلَيْنَا أَبَا عُبَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ نَتَلَقَّى عِيرًا لِقُرَيْشٍ وَزَوَّدَنَا جِرَابًا مِنْ تَمْرٍ لَمْ يَجِدْ لَنَا غَيْرَهُ . فَكَانَ أَبُو عُبَيْدَةَ يُعْطِينَا تَمْرَةً تَمْرَةً . فَقِيلَ : كَيْفَ كُنْتُمْ تَصْنَعُونَ بِهَا ؟ قَالَ : نَمَصُّهَا كَمَا يَمَصُّ الصَّبِيُّ ثُمَّ نَشْرَبُ عَلَيْهَا مِنَ الْمَاءِ فَتَكْفِينَا يَوْمَنَا إِلَى اللَّيْلِ . كُنَّا نَضْرِبُ بِعِصِيِّنَا الْخَبَطَ ثُمَّ نَبُلُّهُ بِالْمَاءِ فَنَأْكُلُهُ . قَالَ : وَانْطَلَقْنَا عَلَى سَاحِلِ الْبَحْرِ فَرُفِعَ لَنَا عَلَى السَّاحِلِ الْبَحْرِ كَهَيْئَةِ الْكَثِيبِ الضَّخْمِ فَأَتَيْنَاهُ فَإِذَا هِيَ دَابَّةٌ تُدْعَى الْعَنْبَرُ فَقَالَ أَبُو عُبَيْدَةَ : مَيْتَةٌ : ثُمَّ قَالَ : لاَ بَلْ نَحْنُ رُسُلُ رَسُولِ اللَّهِ ﷺ وَفِي سَبِيلِ اللَّهِ وَقَدْ اضْطُرِرْتُمْ فَكُلُوا فَأَقَمْنَا عَلَيْهِ شَهْرًا وَنَحْنُ ثَلاَثُ مِائَةٍ حَتَّى سَمِنَّا . وَلَقَدْ رَأَيْتُنَا نَغْتَرِفُ مِنْ وَقْبِ عَيْنِهِ بِالْقِلاَلِ الدُّهْنَ وَنَقْتَطِعُ مِنْهُ الْفِدَرَ كَالثَّوْرِ أَوْ كَقَدْرِ الثَّوْرِ وَلَقَدْ أَخَذَ مِنَّا أَبُو عُبَيْدَةَ ثَلاَثَةَ عَشَرَ رَجُلاً فَأَقْعَدَهُمْ فِي وَقْبِ عَيْنِهِ وَأَخَذَ ضِلْعًا مِنْ أَضْلاَعِهِ فَأَقَامَهَا ثُمَّ رَحَلَ أَعْظَمَ بَعِيرٍ مَعَنَا فَمَرَّ مِنْ تَحْتِهَا وَتَزَوَّدْنَا مِنْ لَحْمِهِ وَشَائِقَ فَلَمَّا قَدِمْنَا الْمَدِينَةَ أَتَيْنَا رَسُولَ اللَّهِ ﷺ فَذَكَرْنَا ذَلِكَ لَهُ فَقَالَ : " هُوَ رِزْقٌ أَخْرَجَهُ اللَّهُ لَكُمْ فَهَلْ مَعَكُمْ مِنْ لَحْمِهِ شَيْءٌ فَتُطْعِمُونَا ؟ " فَأَرْسَلْنَا إِلَى رَسُولِ اللَّهِ ﷺ مِنْهُ فَأَكَلَهُ . رَوَاهُ مُسْلِمٌ .
" الْجِرَابُ " : وِعَاءٌ مِنْ جِلْدٍ مَعْرُوفٍ وَهُوَ بِكَسْرِ الْجِيمِ وَفَتْحِهَا وَالْكَسْرُ أَفْصَحُ . قَوْلُهُ . " نَمَصُّهَا " . بِفَتْحِ الْمِيمِ . " وَالْخَبَطُ " وَرَقُ شَجَرٍ مَعْرُوفٍ تَأْكُلُهُ الأبِلُ . " وَالْكَثِيبُ " : التَّلُّ مِنَ الرَّمْلِ . " وَالْوَقْبُ " بِفَتْحِ الْوَاوِ وَإِسْكَانِ الْقَافِ وَبَعْدَهَا بَاءٌ مُوَحَّدَةٌ وَهُوَ نُقْرَةُ الْعَيْنِ . " وَالْقِلاَلُ " : الْجِرَارُ . " وَالْفِدَرُ " بِكَسْرِ الْفَاءِ وَفَتْحِ الدَّالِ : الْقِطَعُ . " رَحَلَ الْبَعِيرَ " بِتَخْفِيفِ الْحَاءِ : أَيْ جَعَلَ عَلَيْهِ الرَّحْلَ : " الْوَشَائِقُ " بِالشِّينِ الْمُعْجَمَةِ وَالْقَافِ : اللَّحْمُ الَّذِي اُقْتُطِعَ لِيُقَدَّدَ مِنْهُ وَاللَّهُ أَعْلَمُ.

**518** அபூஅப்துல்லாஹ் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எங்களை (ஒரு போருக்கு) அனுப்பினார்கள். எங்களுக்கு அபூஉபைதா (ரழி) அவர்களை தலைவராக நியமித்தார்கள். குறைஷிகளின் படையை நாங்கள் சந்தித்தோம். பேரீத்தம் பழம் இருந்த ஒரு தோல் பையை எங்களுக்கு நபி (ஸல்) வழங்கினார்கள். அது தவிர வேறு எதுவும் எங்களிடம் இல்லை. அபூஉபைதா (ரழி) அவர்கள் ஒவ்வொரு பேரீத்தம் பழமாக எங்களுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். “அதைக் கொண்டு நீங்கள் எப்படி (பசி போக்கிட) செய்வீர்கள்?” என்று கேட்கப்பட்ட போது, சிறுவர்கள் சாப்பிடுவது போல் அதை நாங்கள் சப்பிக் கொள்வோம். பின்பு அதைத் தொடர்ந்து தண்ணீரைக் குடித்துக் கொள்வோம். எங்களின் ஒருநாள் இரவு வரை எங்களுக்கு அது போதுமானதாகும். எங்களின் கம்புகளால் நாங்கள் மரக்கிளையில் அடிப்போம். பின்பு உதிர்ந்த அதன் இலைகளைத் தண்ணீரில் ஊற வைத்து, அதை உண்போம். பின்னர் ஒருநாள் நாங்கள் கடற்கரையில் நடந்து கொண்டிருந்தோம். பெரிய மணல் மேடு போன்ற ஒரு பொருள் கடற்கரையில் எங்களுக்குத் தெரிந்தது. அந்த இடம் வந்தோம். அப்போது அது அன்பர் எனும் திமிங்கலம் போன்றதொரு கடல் உயிர் பிராணியாகும். “இது இறந்துவிட்டதே!” என்று கூறிய அபூஉபைதா (ரழி) அவர்கள், “பரவாயில்லை, நாம் நபி (ஸல்) அவர்களின் தூதர்களாக இறைவழியில் உள்ளோம். தோழர்களே! நீங்கள் நிர்ப்பந்தமான நிலையில் உள்ளீர்கள். எனவே நீங்கள் சாப்பிடுங்கள்” என்று அபூஉபைதா (ரழி) கூறினார்கள். அந்த இடத்தில் நாங்கள் ஒரு மாதம் தங்கி இருந்தோம். நாங்கள் முன்னூறு பேர் இருந்தோம். இருப்பினும் (அதைச் சாப்பிட்டு) நாங்கள் குண்டாகி விட்டோம்.

நாங்கள் அதன் கண்ணை நோண்டி, அதன் குழியில் உள்ள கொழுப்பைச் சேகரித்தோம். அதிலிருந்து காளைமாட்டைப் போல் அல்லது அதன் இறைச்சி(யை வெட்டுவது) போல் வெட்டி

எடுப்போம். அபூஉபைதா (ரழி) அவர்கள், எங்களில் பதிமூன்று நபர்களை தேர்ந்தெடுத்து, அதன் கண் குழியில் அவர்களை உட்கார வைத்தார்கள். அதன் விலா எலும்புகளில் ஒரு எலும்பை எடுத்து, அதை நட்டு வைத்து, பின்பு எங்களுடன் இருந்த பெரும் ஒட்டகையை, அதற்கு கீழே நடக்கச் செய்தார்கள். மீன் இறைச்சியிலிருந்து உப்புக் கண்டங்களையும் சேகரித்துக் கொண்டோம். மதீனாவிற்கு நாங்கள் திரும்பிய போது, நபி (ஸல்) அவர்களிடம் வந்தோம். அவர்களிடம் நடந்ததைக் கூறினோம். அப்போது அவர்கள், "இது அல்லாஹ், உங்களுக்கு அனுப்பிய (சிறப்பான) உணவாகும். அதன் இறைச்சி உங்களிடம் இருந்தால், எனக்கும் சிறிதளவு கொடுங்கள்!" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களுக்கும் நாங்கள் கொடுத்தோம். அதை அவர்கள் சாப்பிட்டார்கள். **(முஸ்லிம்:1935)**

٥١٩ – وَعَنْ أَسْمَاءَ بِنْتِ يَزِيدَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ كُمُّ قَمِيصِ رَسُولِ اللَّهِ ﷺ إِلَى الرُّصْغِ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ " الرُّصْغُ " بِالصَّادِ وَالرُّسْغُ بِالسِّينِ أَيْضًا : هُوَ الْمَفْصِلُ بَيْنَ الْكَفِّ وَالسَّاعِدِ .

**519** அஸ்மா பின்த் யஜீது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்களின் சட்டையின் கை, அவர்களின் மணிக்கட்டு வரை இருந்தது."

**(அபூதாவூது:4027. திர்மிதீ:1766. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٢٠ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : إِنَّا كُنَّا يَوْمَ الْخَنْدَقِ نَحْفِرُ فَعَرَضَتْ كُدْيَةٌ شَدِيدَةٌ فَجَاءُوا إِلَى النَّبِيِّ ﷺ فَقَالُوا هَذِهِ كُدْيَةٌ عَرَضَتْ فِي الْخَنْدَقِ . فَقَالَ : " أَنَا نَازِلٌ " ثُمَّ قَامَ وَبَطْنُهُ مَعْصُوبٌ بِحَجَرٍ . وَلَبِثْنَا ثَلاَثَةَ أَيَّامٍ لاَ نَذُوقُ ذَوَاقًا فَأَخَذَ النَّبِيُّ ﷺ الْمِعْوَلَ فَضَرَبَ فَعَادَ كَثِيبًا أَهْيَلَ أَوْ أَهْيَمَ فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ ائْذَنْ لِي إِلَى الْبَيْتِ . فَقُلْتُ لاِمْرَأَتِي : رَأَيْتُ بِالنَّبِيِّ ﷺ شَيْئًا مَا فِي ذَلِكَ صَبْرٌ فَعِنْدَكِ شَيْءٌ ؟ فَقَالَتْ : عِنْدِي شَعِيرٌ وَعَنَاقٌ فَذَبَحْتُ الْعَنَاقَ وَطَحَنَتْ الشَّعِيرَ حَتَّى جَعَلْنَا اللَّحْمَ فِي الْبُرْمَةِ ثُمَّ جِئْتُ النَّبِيَّ ﷺ وَالْعَجِينُ قَدْ انْكَسَرَ وَالْبُرْمَةُ بَيْنَ الأَثَافِي قَدْ كَادَتْ تَنْضَجُ فَقُلْتُ : طُعَيِّمٌ لِي فَقُمْ أَنْتَ يَا رَسُولَ اللَّهِ وَرَجُلٌ أَوْ رَجُلاَنِ . قَالَ : " كَمْ هُوَ ؟ " فَذَكَرْتُ لَهُ فَقَالَ : " كَثِيرٌ طَيِّبٌ قُلْ لَهَا لاَ تَنْزِعْ الْبُرْمَةَ وَلاَ الْخُبْزَ مِنَ التَّنُّورِ حَتَّى آتِيَ " . فَقَالَ : " قُومُوا " فَقَامَ الْمُهَاجِرُونَ وَالأَنْصَارُ . فَدَخَلْتُ عَلَيْهَا فَقُلْتُ : وَيْحَكِ قَدْ جَاءَ النَّبِيُّ ﷺ وَالْمُهَاجِرُونَ وَالأَنْصَارُ وَمَنْ مَعَهُمْ . قَالَتْ : هَلْ سَأَلَكَ ؟ قُلْتُ : نَعَمْ . قَالَ : " ادْخُلُوا وَلاَ تَضَاغَطُوا " . فَجَعَلَ يُكَسِّرُ الْخُبْزَ وَيَجْعَلُ عَلَيْهِ اللَّحْمَ وَيُخَمِّرُ الْبُرْمَةَ وَالتَّنُّورَ إِذَا أَخَذَ مِنْهُ وَيُقَرِّبُ إِلَى أَصْحَابِهِ ثُمَّ يَنْزِعُ فَلَمْ يَزَلْ يُكَسِّرُ وَيَغْرِفُ حَتَّى شَبِعُوا وَبَقِيَ مِنْهُ فَقَالَ : " كُلِي هَذَا وَأَهْدِي فَإِنَّ النَّاسَ أَصَابَتْهُمْ مَجَاعَةٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ قَالَ جَابِرٌ : لَمَّا حُفِرَ الْخَنْدَقُ رَأَيْتُ بِالنَّبِيِّ ﷺ خَمَصًا فَانْكَفَأْتُ إِلَى امْرَأَتِي فَقُلْتُ : هَلْ عِنْدَكِ شَيْءٌ ؟ فَإِنِّي رَأَيْتُ بِرَسُولِ اللَّهِ ﷺ خَمَصًا شَدِيدًا فَأَخْرَجَتْ إِلَيَّ جِرَابًا فِيهِ صَاعٌ مِنْ شَعِيرٍ وَلَنَا بُهَيْمَةٌ دَاجِنٌ فَذَبَحْتُهَا وَطَحَنَتْ الشَّعِيرَ فَفَرَغَتْ إِلَى فَرَاغِي وَقَطَّعْتُهَا فِي بُرْمَتِهَا ثُمَّ وَلَّيْتُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَتْ : لاَ تَفْضَحْنِي بِرَسُولِ اللَّهِ ﷺ وَمَنْ مَعَهُ فَجِئْتُ فَسَارَرْتُهُ فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ ذَبَحْنَا بُهَيْمَةً لَنَا وَطَحَنْتُ صَاعًا مِنْ شَعِيرٍ فَتَعَالَ أَنْتَ وَنَفَرٌ مَعَكَ . فَصَاحَ رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ : " يَا أَهْلَ الْخَنْدَقِ إِنَّ جَابِرًا قَدْ صَنَعَ سُوْرًا فَحَيَّهَلاً بِكُمْ " فَقَالَ النَّبِيُّ ﷺ " لاَ تُنْزِلُنَّ بُرْمَتَكُمْ وَلاَ تَخْبِزُنَّ عَجِينَكُمْ حَتَّى أَجِيءَ " . فَجِئْتُ وَجَاءَ النَّبِيُّ ﷺ يَقْدُمُ النَّاسَ حَتَّى جِئْتُ امْرَأَتِي فَقَالَتْ : بِكَ وَبِكَ ! فَقُلْتُ : قَدْ فَعَلْتُ الَّذِي قُلْتِ فَأَخْرَجَتْ عَجِينًا فَبَسَقَ فِيهِ وَبَارَكَ ثُمَّ عَمَدَ إِلَى بُرْمَتِنَا فَبَصَقَ وَبَارَكَ ثُمَّ قَالَ : " ادْعِي خَابِزَةً فَلْتَخْبِزْ مَعَكِ وَاقْدَحِي مِنْ بُرْمَتِكُمْ وَلاَ تُنْزِلُوهَا " وَهُمْ أَلْفٌ فَأُقْسِمُ بِاللَّهِ لأَكَلُوا حَتَّى تَرَكُوهُ وَانْحَرَفُوا وَإِنَّ بُرْمَتَنَا لَتَغِطُّ كَمَا هِيَ وَإِنَّ عَجِينَنَا لَيُخْبَزُ كَمَا هُوَ . قَوْلُهُ : " عَرَضَتْ كُدْيَةٌ " بِضَمِّ الْكَافِ وَإِسْكَانِ الدَّالِ وَبِالْيَاءِ الْمُثَنَّاةِ تَحْتُ : وَهِيَ قِطْعَةٌ غَلِيظَةٌ صُلْبَةٌ مِنَ الأَرْضِ لاَ يَعْمَلُ فِيهَا الْفَأْسُ . " وَالْكَثِيبُ " : أَصْلُهُ تَلُّ الرَّمْلِ وَالْمُرَادُ هُنَا صَارَتْ تُرَابًا نَاعِمًا وَهُوَ مَعْنَى " أَهْيَلَ " . وَ " الأَثَافِيُّ " : الأَحْجَارُ الَّتِي تَكُونُ عَلَيْهَا الْقِدْرُ . وَ " تَضَاغَطُوا " تَزَاحَمُوا

وَ " الْمَجَاعَةُ " : الْجُوعُ وَهُوَ بِفَتْحِ الْمِيمِ . وَ " الْخَمَصُ " بِفَتْحِ الْخَاءِ الْمُعْجَمَةِ وَالْمِيمِ : الْجُوعُ . وَ " انْكَفَأْتُ " . انْقَلَبْتُ وَرَجَعْتُ . وَ " الْبُهَيْمَةُ " بِضَمِّ الْبَاءِ تَصْغِيرُ بَهْمَةٍ – وَهِيَ الْعَنَاقُ – بِفَتْحِ الْعَيْنِ . وَ " الدَّاجِنُ " هِيَ الَّتِي أَلِفَتِ الْبَيْتَ . وَ " السُّؤْرُ " : الطَّعَامُ الَّذِي يُدْعَى النَّاسُ إِلَيْهِ ; وَهُوَ بِالْفَارِسِيَّةِ . وَ " حَيَّهَلاً " أَيْ تَعَالَوْا . وَقَوْلُهَا : " بِكَ وَبِكَ " أَيْ خَاصَمَتْهُ وَسَبَّتْهُ لِأَنَّهَا اعْتَقَدَتْ أَنَّ الَّذِي عِنْدَهَا لاَ يَكْفِيهِمْ فَاسْتَحْيَتْ وَخَفِيَ عَلَيْهَا مَا أَكْرَمَ اللَّهُ سُبْحَانَهُ وَتَعَالَى بِهِ نَبِيَّهُ ﷺ مِنْ هَذِهِ الْمُعْجِزَةِ الظَّاهِرَةِ وَالْآيَةِ الْبَاهِرَةِ . " بَسَقَ " : أَيْ بَصَقَ ; وَيُقَالُ أَيْضًا : بَزَقَ – ثَلاَثُ لُغَاتٍ – . " وَعَمَدَ " بِفَتْحِ الْمِيمِ : أَيْ قَصَدَ . وَ " اقْدَحِي " : أَيِ اغْرِفِي ; وَالْمِقْدَحَةُ : الْمِغْرَفَةُ . وَ " تَغِطُّ " أَيْ لِغَلَيَانِهَا صَوْتٌ وَاللَّهُ أَعْلَمُ .

**520** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் அகழ்ப்போரின் போது, அகழ் தோண்டிக் கொண்டிருந்தோம். அப்போது பெரும் பாறை ஒன்று தென்பட்டது. உடனே நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, “இது பெரும் பாறையாகும். அகழ் குழிக்குள் தென்படுகிறது” என்று கூறினார்கள். “நான் (குழிக்குள்) இறங்குகிறேன்” எனக் கூறி நபி (ஸல்) அவர்கள், எழுந்து நின்றார்கள். அவர்களின் வயிறோ கல்லால் கட்டப்பட்டிருந்தது. மூன்று நாட்களாக எந்த உணவையும் நாங்கள் சுவைக்கவே இல்லை. நபி (ஸல்) அவர்கள் கோடாரியை எடுத்து, அப்பாறையின் மீது அடித்தார்கள். (அந்தப்பாறை) தூள்தூளாக ஆகிவிட்டது. அப்போது, “இறைத்தூதர் அவர்களே! என் வீட்டிற்குச் செல்ல எனக்கு அனுமதி தாருங்கள்” என்று கேட்டேன். (வீட்டிற்கு வந்து) என் மனைவியிடம், “நபி (ஸல்) அவர்களை நான் பொறுத்துக் கொள்ள இயலாத நிலையில் (அவர்கள் பசியால் வயிற்றில் கல்லைக் கட்டி இருப்பதைக்) கண்டேன். உன்னிடம் (உண்ண) ஏதேனும் உண்டா?” என்று கேட்டேன். “என்னிடம் தொலிக் கோதுமையும், ஒரு ஆட்டுக் குட்டியும் உள்ளது” என்று என் மனைவி கூறினார்.

நான் ஆட்டை அறுத்தேன். தொலிக் கோதுமையை மாவாக அரைத்தேன். இறைச்சியை ஒரு சட்டியில் போட்டோம். பின்பு நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது மாவும் ஊறி இருந்தது. சட்டியும் அடுப்பில் இருந்தது. இறைச்சி வெந்த நிலையில் இருந்தது. “என்னிடம் சிறிதளவு உணவு இருக்கிறது. இறைத்தூதர் அவர்களே! நீங்களும் மற்றும் ஓரிருவரும் வாருங்கள்”என்று கூறினேன். “அந்த உணவு எவ்வளவு உள்ளது?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர்களிடம் விபரத்தைக் கூறினேன். “தூய்மையான அதிகமான உணவு அது. நீ உன் மனைவியிடம் நான் வரும்வரை இறைச்சிச் சட்டியை அடுப்பிலிருந்து இறக்கி விட வேண்டாம் என்று கூறுவீராக!” என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், “வாருங்கள்” என்று (மக்களை நோக்கிக்) கூறினார்கள். உடனே முஹாஜிர்களும், அன்சாரிகளும் எழுந்தார்கள்.

நான் என் மனைவியிடம் வந்தேன். “உனக்கு நாசம் உண்டாகட்டும்! (இது அரபுகள் அன்பால் கூறும் வார்த்தையாகும்) நபி (ஸல்) அவர்களும், முஹாஜிர்களும், அன்சாரிகளும் மேலும் அவர்களுடன் உள்ள அனைவரும் வந்து விட்டனர்” என்று கூறினேன். “உங்களிடம் நபி (ஸல்) அவர்கள் விபரம் கேட்டார்களா?” என மனைவி கேட்டாள். “ஆம்” என்றேன். அதற்குள் இறைத்தூதருடன் அனைவரும் வந்துவிட்டார்கள். அவர்களை, “உள்ளே வாருங்கள்! நெருக்கிக் கொள்ள வேண்டாம்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவர்கள் ரொட்டியைப் பிய்த்து எடுத்து, அதில் இறைச்சியை வைத்தார்கள். அடுப்பையும் சட்டியையும் அதில் எடுத்ததும் மூடி வைத்தார்கள். தன் தோழர்களுக்குக் கொடுத்தார்கள். ரொட்டியையும் எடுத்துக் கொண்டே இருந்தார்கள். இறைச்சியையும் எடுத்து வைத்துக் கொண்டே இருந்தார்கள். நபித்தோழர்கள் வயிறு நிறையச் சாப்பிட்டார்கள். அதில் மீதமும் இருந்தது. நபித்தோழர் மனைவியிடம், “இதை நீங்களும் சாப்பிடுங்கள். பிறருக்கும் அன்பளிப்புச் செய்யுங்கள். மக்களை பசிப்பிணி பிடித்துள்ளது” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:4101,4102. முஸ்லிம்:2039)**

மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது,

ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அகழ் குழி தோண்டப்பட்ட போது, நபி (ஸல்) அவர்கள் பசியால் இருப்பதைக் கண்டேன். என் மனைவியிடம் நான் வந்து, "உன்னிடம் ஏதும், உள்ளதா? நபி (ஸல்) அவர்களை கடும் பசி உள்ளவர்களாகக் கண்டேன்" என்று கூறினேன். என்னிடம் ஒரு தோல்பையை அவள் தந்தாள். அதில் ஒரு "ஸாஉ" அளவுக்குரிய தொலிக் கோதுமை இருந்தது. எங்கள் வளர்ப்பு ஆடு ஒன்று இருந்தது. அதை அறுத்தேன். என் மனைவி தொலிக் கோதுமையை அரைத்தாள். என் கவனத்தை அதில் ஈடுபடுத்தினேன். அதன் இறைச்சியைத் துண்டாக்கிச் சட்டியில் போட்டேன். பின்பு நபி (ஸல்) அவர்களிடம் புறப்பட்டேன். "நபி (ஸல்) அவர்களிடமும், அவர்களிடம் இருந்தவர்களிடம் என்னை கேலிக்குள்ளாக்கி விட வேண்டாம். (சிறிதளவே உணவு உள்ளது)" என்று என் மனைவி கூறினாள். நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இரகசியமாகவே, "இறைத்தூதர் அவர்களே! எங்களிடம் இருந்த சிறு ஆட்டுக் குட்டியை அறுத்தோம். தொலிக் கோதுமையில் ஒரு "ஸாஉ" அளவுக்கு என் மனைவி அரைத்து வைத்துள்ளாள். நீங்களும், உங்களோடு ஒரு சிலரும் வாருங்கள்" என்று கூறினேன். உடனே நபி (ஸல்) அவர்கள், "அகழ்போர்வாசிகளே! இதோ ஜாபிர் உங்களுக்கு விருந்து தயார் செய்து வைத்துள்ளார். வாருங்கள்" என சப்தமிட்டுக் கூறினார்கள். பின்பு என்னிடம், "நான் வரும் வரை அடுப்பில் இருந்து சட்டியை இறக்கி விட வேண்டாம். மாவை குழைத்து ரொட்டி சுட்டு விட வேண்டாம்" என்று கூறினார்கள். நான் வீட்டிற்கு வந்தேன்.

மக்களுக்கு முன்னிலை வகித்தவர்களாக நபி (ஸல்) அவர்களும் வந்தார்கள். நான் என் மனைவியிடம் வந்து சேர்ந்ததும் அவள், "உங்களுக்கு இது சரியா? உங்களுக்குச் சரியா?" என சண்டை போட ஆரம்பித்தாள். அதற்கு, "நீ கூறியபடிதான் நான் நடந்து கொண்டேன். (உணவு எவ்வளவு உள்ளது என்ற விபரத்தை நான் அவர்களிடம் கூறிவிட்டேன்)" என்று கூறினேன். அவள் மாவை நபி (ஸல்) அவர்களிடம் கொடுத்தாள். அதில் அவர்கள் தங்கள் (முபாரக்கான) எச்சிலைத் துப்பினார்கள். பரக்கத்திற்காக துஆச் செய்தார்கள். பின்பு, "ரொட்டி சுடுகின்ற பெண்ணை அழைத்து வா! உன்னோடு சேர்ந்து அவளும் ரொட்டி சுடட்டும். சட்டியிலிருந்து இறைச்சியை எடுங்கள். அடுப்பிலிருந்து சட்டியை இறக்கி விடாதீர்கள்" என்று கூறினார்கள். அவர்கள் ஆயிரம் பேர் இருந்தனர். அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டுக் கூறுகிறேன். அனைவரும் சாப்பிட்டார்கள். இறுதியில் மீதமும் ஆகிவிட்டது. அவர்கள் சென்று விட்டார்கள். எங்களின் சட்டி முன்பு இருந்தது போலவே மூடியபடி கொதித்துக் கொண்டே இருந்தது. எங்களின் மாவோ, முன்பு போலவே ரொட்டி சுடப்பட்டுக் கொண்டிருந்தது.

٥٢١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ أَبُو طَلْحَةَ لِأُمِّ سُلَيْمٍ : قَدْ سَمِعْتُ صَوْتَ رَسُولِ اللّٰهِ ﷺ ضَعِيفًا أَعْرِفُ فِيهِ الْجُوعَ فَهَلْ عِنْدَكِ مِنْ شَيْءٍ ؟ فَقَالَتْ : نَعَمْ فَأَخْرَجَتْ أَقْرَاصًا مِنْ شَعِيرٍ ثُمَّ أَخَذَتْ خِمَارًا لَهَا فَلَفَّتْ الْخُبْزَ بِبَعْضِهِ ثُمَّ دَسَّتْهُ تَحْتَ ثَوْبِي وَرَدَّتْنِي بِبَعْضِهِ ثُمَّ أَرْسَلَتْنِي إِلَى رَسُولِ اللّٰهِ ﷺ فَذَهَبْتُ بِهِ فَوَجَدْتُ رَسُولَ اللّٰهِ ﷺ جَالِسًا فِي الْمَسْجِدِ وَمَعَهُ النَّاسُ فَقُمْتُ عَلَيْهِمْ فَقَالَ لِي رَسُولُ اللّٰهِ ﷺ : " أَرْسَلَكَ أَبُو طَلْحَةَ ؟ " فَقُلْتُ : نَعَمْ فَقَالَ : " الطَّعَامُ ؟ " فَقُلْتُ : نَعَمْ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " قُومُوا " فَانْطَلَقُوا وَانْطَلَقْتُ بَيْنَ أَيْدِيهِمْ حَتَّى جِئْتُ أَبَا طَلْحَةَ فَأَخْبَرْتُهُ فَقَالَ أَبُو طَلْحَةَ : يَا أُمَّ سُلَيْمٍ : قَدْ جَاءَ رَسُولُ اللّٰهِ ﷺ بِالنَّاسِ وَلَيْسَ عِنْدَنَا مَا نُطْعِمُهُمْ ؟ فَقَالَتْ : اَللّٰهُ وَرَسُولُهُ أَعْلَمُ . فَانْطَلَقَ أَبُو طَلْحَةَ حَتَّى لَقِيَ رَسُولَ اللّٰهِ ﷺ فَأَقْبَلَ رَسُولُ اللّٰهِ ﷺ مَعَهُ حَتَّى دَخَلَا فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " هَلُمِّي مَا عِنْدَكِ يَا أُمَّ سُلَيْمٍ " . فَأَتَتْ بِذَلِكَ الْخُبْزِ فَأَمَرَ بِهِ رَسُولُ اللّٰهِ ﷺ فَفُتَّ وَعَصَرَتْ عَلَيْهِ أُمُّ سُلَيْمٍ عُكَّةً فَآدَمَتْهُ ثُمَّ قَالَ فِيهِ رَسُولُ اللّٰهِ ﷺ مَا شَاءَ اللّٰهُ أَنْ يَقُولَ ثُمَّ قَالَ : " ائْذَنْ

لعشَرَةَ " فَأَذنَ لَهُمْ فَأَكَلُوا حَتَّى شَبعُوا ثُمَّ خَرَجُوا ثُمَّ قَالَ : " ائْذَنْ لعشَرَةَ " فَأَذنَ لَهُمْ فَأَكَلُوا ثُمَّ خَرَجُوا . ثُمَّ قَالَ : " ائْذَنْ لَعَشَرَةً " حَتَّى أَكَلَ الْقَوْمُ كُلُّهُمْ وَشَبعُوا وَالْقَوْمُ سَبْعُونَ رَجُلاً أَوْ ثَمَانُونَ . مُتَّفَقٌ عَلَيْه . وَفي روَايَة : فَمَا زَالَ يَدْخُلُ عَشَرَةٌ وَيَخْرُجُ عَشَرَةٌ حَتَّى لَمْ يَبْقَ منْهُمْ أَحَدٌ إلاَّ دَخَلَ فَأَكَلَ حَتَّى شَبعَ ثُمَّ هَيَّأَهَا فَإذَا هيَ مثْلُهَا حينَ أَكَلُوا منْهَا . وَفي روَايَة : فَأَكَلُوا عَشَرَةً عَشَرَةً حَتَّى فَعَلَ ذَلكَ بثَمَانينَ رَجُلاً ثُمَّ أَكَلَ النَّبيُّ ﷺ بَعْدَ ذَلكَ وَأَهْلُ الْبَيْت وَتَرَكُوا سُؤْرًا وَفي روَايَة : ثُمَّ أَفْضَلُوا مَا بَلَغُوا جيرَانَهُمْ . وَفي روَايَة عَنْ أَنَس قَالَ : جئْت رَسُولَ اللَّه ﷺ يَوْمًا فَوَجَدْته جَالسًا مَعَ أَصْحَابه وَقَدْ عَصَبَ بَطْنَهُ بعصَابَة فَقُلْت لبَعْض أَصْحَابه : لمَ عَصَبَ رَسُولُ اللَّه ﷺ بَطْنَهُ ؟ فَقَالُوا : منْ الْجُوع فَذَهَبْت إلَى أَبي طَلْحَةَ – وَهُوَ زَوْجُ أُمِّ سُلَيْم ) بنْتُ ملْحَانَ ( – فَقُلْتَ : يَا أَبَتَاهُ قَدْ رَأَيت رَسُولَ اللَّه ﷺ عَصَبَ بَطْنَهُ بعصَابَة فَسَأَلْت بَعْضَ أَصْحَابه فَقَالُوا : منْ الْجُوع فَدَخَلَ أَبُو طَلْحَةَ عَلَى أُمِّي فَقَالَ : هَلْ منْ شَيْء ؟ قَالَتْ نَعَمْ عنْدي كسَرٌ منْ خُبْز وَتَمَرَاتٌ فَإنْ جَاءَنَا رَسُولُ اللَّه ﷺ وَحْدَهُ أَشْبَعْنَاهُ وَإنْ جَاءَ آخَرُ مَعَهُ قَلَّ عَنْهُمْ وَذَكَرَ تَمَامَ الْحَديث .

**521** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூதல்ஹா (ரழி) அவர்கள் (தன் மனைவி) உம்முசுலைம் (ரழி) அவர்களிடம், "நபி (ஸல்) அவர்களின் குரலைப் பலவீனமாகக் கேட்டேன். அவர்கள் பசியுடன் இருந்ததாக அறிகிறேன். உன்னிடம் (உண்ண) ஏதேனும் உள்ளதா?" என்று கேட்டார்கள். "ஆம்" என்று கூறிய உம்முசுலைம் (ரழி) அவர்கள், தொலிக் கோதுமையினால் ஆன ரொட்டிகளை எடுத்து, தனக்குரிய "முக்காடு" துணியின் ஒரு பகுதியில் ரொட்டியைச் சுற்றினார். பின்பு அதை என் ஆடைக்கு உள்ளே மறைத்து, அதன் மற்றொரு பகுதியை என்னிடம் தந்தார். பின்பு நபி (ஸல்) அவர்களிடம் என்னை அனுப்பினார்கள். நபி (ஸல்) அவர்களிடம் நான் சென்றேன். அவர்கள் பள்ளியில் உட்கார்ந்தி ருந்ததைக் கண்டேன். அவர்களுடன் சில நபித் தோழர்கள் இருந்தனர். அவர்கள் முன் நின்றேன். உடனே நபி (ஸல்) அவர்கள், "அபூதல்ஹா உன்னை அனுப்பினாரா?" என்று கேட்டார்கள். நான் "ஆம்" என்றேன். "எழுங்கள்!" என நபி (ஸல்) அவர்கள் கூறியதும், நபித்தோழர்கள் எழுந்தார்கள். அவர்களின் முன்னே நான் நடந்து, அபூதல்ஹா (ரழி) அவர்களிடம் வந்தேன். அவர்களிடம் நடந்ததைக் கூறினேன்.

உடனே அபூதல்ஹா (ரழி) அவர்கள், "உம்முசுலைமே! தம் தோழர்களுடன் நபி (ஸல்) அவர்கள் வருகிறார்கள். அவர்களுக்கு நாம் உணவு வழங்கிட நம்மிடம் எதுவும் இல்லையே! என்று கூறினார்கள். "அல்லாஹ்வும், அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்" என்று உம்முசுலைம் (ரழி) கூறினார்கள். அபூதல்ஹா (ரழி) அவர்கள் நடந்து சென்று, நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். நபி (ஸல்) அவர்களுடன் அவரை முன்னோக்கி வந்து, இருவரும் (வீட்டினுள்) நுழைந்தார்கள். "உம்முசுலைமே! உம்மிடம் உள்ளதை என்னிடம் கொண்டு வாருங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். அந்த ரொட்டியை அவர்கள் கொண்டு வந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் ஆணைக்கிணங்க அந்த ரொட்டித் துண்டு துண்டாக்கப்பட்டது. உம்முசுலைம் (ரழி) அவர்கள் நெய் உள்ள தோல் பாத்திரத்தைப் பிழிந்து, அதை நபி (ஸல்) அவர்களிடம் கொடுத்தார்கள் அதில் (பரக்கத் கிடைத்திட) அல்லாஹ் நாடியபடி நபி (ஸல்) அவர்கள் துஆச் செய்தார்கள். பின்பு, "பத்து நபர்களை உள்ளே அனுமதியுங்கள்" என்றும் கூறினார்கள். அவர்களுக்கு அபூதல்ஹா (ரழி) அனுமதி வழங்கியதும், அவர்கள் வயிறு நிரம்பச் சாப்பிட்டுவிட்டு வெளியேறினார்கள். பின்பு, "பத்து நபர்களை அனுமதியுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதும், அவர்களுக்கும் அனுமதி வழங்கினார்கள். இப்படி மக்கள் அனைவரும் வயிறு நிரம்ப சாப்பிட்டார்கள். மக்கள் எழுபது அல்லது எண்பது பேர் இருந்தனர்.

**(புகாரி:3578. முஸ்லிம்:2040)**

மற்றொரு அறிவிப்பில், “பத்து பேர் உள்ளே நுழைய, பத்து பேர் வெளியேறிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் உள்ளே நுழைந்து, எவரும் வயிறு நிரம்பச் சாப்பிடாமல் இருக்கவில்லை. பின்பு அதிலிருந்து மக்கள் சாப்பிட்ட போதும், அது முன்பு இருந்தது போலவே தோற்றமளித்தது” என்று உள்ளது.

மற்றொரு அறிவிப்பில், “பத்து, பத்து நபர்களாக சாப்பிட்டார்கள். இவ்வாறு எண்பது பேர் வரை சாப்பிட்டார்கள். அதன் படி நபி (ஸல்) அவர்களும், அவர்களின் குடும்பத்தாரும் சாப்பிட்டார்கள். மிச்சமாக உள்ள நிலையில் விட்டுச் சென்றார்கள்” என்று உள்ளது.

மற்றொரு அறிவிப்பில் “அவர்களின் பக்கத்து வீட்டாருக்கும், அவர்கள் வழங்கும் அளவுக்கு மேல் மிச்சமாக இருந்தது” என்று உள்ளது.

மற்றொரு அறிவிப்பில் அனஸ் (ரழி) அறிவிப்பதாக கீழ்க்கண்டவாறு உள்ளது:

ஒரு நாள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். அவர்கள் தம் தோழர்களோடு உட்கார்ந்திருந்ததைக் கண்டேன். அவர்கள் தன் வயிற்றில் துணியால் சுற்றி இருந்தார்கள். நபித்தோழர்களில் ஒருவரிடம் நான், “ஏன் நபி (ஸல்) அவர்கள் தன் வயிற்றில் துணியைச் சுற்றி உள்ளார்கள்?” என்று கேட்டேன். “பசிதான்” என்று அவர்கள் கூறினார்கள். நான் அபூதல்ஹா (ரழி) அவர்களிடம் சென்றேன். அவர்கள், உம்முசுலைம் பின்த் மில்ஹான் அவர்களின் கணவர் ஆவார். “தந்தையே! நபி (ஸல்) அவர்கள் தன் வயிற்றில் துணியைச் சுற்றி இருந்ததைக் கண்டேன். இது பற்றி அவர்களின் தோழர்களில் ஒருவரிடம் கேட்டேன். பசியினால்தான்” என அவர்கள் கூறினார்கள். உடனே அபூதல்ஹா (ரழி) அவர்கள் என் தாயாரிடம் (உம்முசுலைம்), “ஏதேனும் உள்ளதா?” என்று கேட்டார்கள். “ஆம்! என்னிடம் ரொட்டித்துண்டும், பேரீத்தம் பழங்களும் உள்ளது” என்று கூறினார்கள். மேலும், நம்மிடம் நபி (ஸல்) அவர்கள் மட்டும் தனியே வந்தால் அவர்களின் வயிறை நாம் நிரப்பலாம். அவர்களுடன் மற்றவர்களும் வந்துவிட்டால், அவர்களுக்கு குறைவு ஏற்படுமே!” என்றும் கூறினார்கள். பிறகு அனஸ் (ரலி) அவர்கள் ஹதீஸின் மீதிப் பகுதிகளையும் கூறினார்கள்.

## ٥٧ - باب القناعة والعَفاف والاقتصاد في المعيشة والإنفاق وذم السؤال من غير ضرورة

## பாடம் : 57 - போதுமாக்குதல், பேணுதலுடன் இருத்தல், வாழ்க்கையிலும் செலவு செய்வதிலும் நடுநிலையைக் கடைப்பிடித்தல், நிர்பந்தம் ஏதுமின்றி யாசகம் கேட்பதன் இழிவு.

قَالَ اللّهُ تَعَالَى : وَمَا مِنْ دَابَّةٍ فِي الأَرْضِ إِلاَّ عَلَى اللَّهِ رِزْقُهَا . وَقَالَ تَعَالَى : لِلْفُقَرَاءِ الَّذِينَ أُحْصِرُوا فِي سَبِيلِ اللَّهِ لاَ يَسْتَطِيعُونَ ضَرْبًا فِي الأَرْضِ يَحْسَبُهُمُ الْجَاهِلُ أَغْنِيَاءَ مِنَ التَّعَفُّفِ تَعْرِفُهُمْ بِسِيمَاهُمْ لاَ يَسْأَلُونَ النَّاسَ إِلْحَافًا وَقَالَ تَعَالَى : وَالَّذِينَ إِذَا أَنْفَقُوا لَمْ يُسْرِفُوا وَلَمْ يَقْتُرُوا وَكَانَ بَيْنَ ذَلِكَ قَوَامًا . وَقَالَ تَعَالَى : وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالأَنْسَ إِلاَّ لِيَعْبُدُونِ مَا أُرِيدُ مِنْهُمْ مِنْ رِزْقٍ وَمَا أُرِيدُ أَنْ يُطْعِمُونِ .

وَأَمَّا الأَحَادِيثُ فَتَقَدَّمَ مُعْظَمُهَا فِي الْبَابَيْنِ السَّابِقَيْنِ .

وَمِمَّا لَمْ يَتَقَدَّمْ :

**அல்லாஹ் கூறுகிறான்:** *பூமியில் உள்ள உயிரினம் அனைத்திற்கும் அல்லாஹ்விடம், அதற்குரிய உணவு இல்லாமல் இல்லை... (11:6)*

*(தர்மம் என்பது), அல்லாஹ்வின் வழியில் தங்களை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்ட ஏழைகளுக்காக ஆகும். இவர்கள் உங்கள் தர்மங்களுக்கு மிகவும் உரித்தானவர்கள் ஆவர். (அவர்களைப் பற்றி) அறியாதவர், அவர்கள் யாசகம் கேட்காதவர்களாக உள்ளதால் அவர்களைப் பணக்காரர்கள் என எண்ணுகிறான். அவர்களின் முகங்களைப் பார்த்தே அவர்களின் உண்மை நிலையை (வறுமையை) நீர் அறியலாம். ஆனால் அவர்களோ மக்களிடம் வற்புறுத்தி கேட்க மாட்டார்கள். (2:273)*

*மேலும் அவர்கள் செலவு செய்தால், வீணாக்கிவிட மாட்டார்கள். கஞ்சத்தனம் செய்யவும் மாட்டார்கள். இதற்கிடையே நடுநிலையாக அது இருக்கும். (25:67)*

*ஜின்களையும், மனிதர்களையும் என்னை வணங்கிட வேண்டியே தவிர, அவர்களை நான் படைக்கவில்லை. அவர்களிடம் உணவு எதையும் நான் விரும்பவில்லை. எனக்கு அவர்கள் உணவு வழங்கிட வேண்டும் எனவும் நான் விரும்பவில்லை...(51:56,57)*

இந்தத் தலைப்புச் சம்பந்தப்பட்ட அதிகமான ஹதீஸ்கள் முந்தைய இரண்டு பாடங்களில் இடம் பெற்றுள்ளன. அவற்றில் இடம் பெறாதவை இங்கே இடம் பெறுகின்றன.

٥٢٢ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لَيْسَ الْغِنَى عَنْ كَثْرَةِ الْعَرَضِ وَلَكِنَّ الْغِنَى غِنَى النَّفْسِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْعَرَضُ " : بِفَتْحِ الْعَيْنِ وَالرَّاءِ : هُوَ الْمَالُ .

**522** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அதிகமான சொத்து இருப்பதால், செல்வம் என்பதில்லை. எனினும், (இருப்பதைப் போதுமாக்கும்) மனதளவில் உள்ள செல்வம்தான் செல்வமாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6446. முஸ்லிம்:1051)**

٥٢٣ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " قَدْ أَفْلَحَ مَنْ أَسْلَمَ وَرُزِقَ كَفَافًا وَقَنَّعَهُ اللَّهُ بِمَا آتَاهُ " رَوَاهُ مُسْلِمٌ .

**523** அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் இஸ்லாத்தில் இணைந்து, அவருக்குப் போதுமான அளவுக்குச் செல்வம் வழங்கப்பட்டு, அவருக்குத் தான் தந்துள்ளதை போதுமாக்கிக் கொள்ளும் குணத்தையும் அல்லாஹ் வழங்கி விட்டால், அவர் வெற்றி அடைந்து விட்டார்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1054)**

٥٢٤ – وَعَنْ حَكِيمِ بْنِ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَأَلْت رَسُولَ اللَّهِ ﷺ فَأَعْطَانِي ثُمَّ سَأَلْته فَأَعْطَانِي ثُمَّ سَأَلْته فَأَعْطَانِي ثُمَّ قَالَ : " يَا حَكِيمُ إِنَّ هَذَا الْمَالَ خَضِرٌ حُلْوٌ : فَمَنْ أَخَذَهُ بِسَخَاوَةِ نَفْسٍ بُورِكَ لَهُ فِيهِ وَمَنْ أَخَذَهُ بِإِشْرَافِ نَفْسٍ لَمْ يُبَارَكْ لَهُ فِيهِ وَكَانَ كَالَّذِي يَأْكُلُ وَلاَ يَشْبَعُ وَالْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنَ الْيَدِ السُّفْلَى " . قَالَ حَكِيمٌ : فَقُلْت : يَا رَسُولَ اللَّهِ وَالَّذِي بَعَثَكَ بِالْحَقِّ لاَ أَرْزَأُ أَحَدًا بَعْدَكَ شَيْئًا حَتَّى أُفَارِقَ الدُّنْيَا . فَكَانَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ يَدْعُو حَكِيمًا لِيُعْطِيَهُ الْعَطَاءَ فَيَأْبَى أَنْ يَقْبَلَ مِنْهُ شَيْئًا ; ثُمَّ إِنَّ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ دَعَاهُ لِيُعْطِيَهُ فَأَبَى أَنْ يَقْبَلَهُ فَقَالَ : يَا مَعْشَرَ الْمُسْلِمِينَ أُشْهِدُكُمْ عَلَى حَكِيمٍ أَنِّي أَعْرِضُ عَلَيْهِ حَقَّهُ الَّذِي قَسَمَهُ اللَّهُ لَهُ فِي هَذَا الْفَيْءِ فَيَأْبَى أَنْ يَأْخُذَهُ . فَلَمْ يَرْزَأْ حَكِيمٌ أَحَدًا مِنَ النَّاسِ بَعْدَ النَّبِيِّ ﷺ حَتَّى تُوُفِّيَ . مُتَّفَقٌ عَلَيْهِ . " يَرْزَأْ " بِرَاءٍ ثُمَّ زَايٍ ثُمَّ هَمْزَةٍ : أَيْ لَمْ يَأْخُذْ مِنْ أَحَدٍ شَيْئًا وَأَصْلُ الرُّزْءِ : النُّقْصَانُ : أَيْ لَمْ يُنْقِصْ أَحَدًا شَيْئًا بِالأَخْذِ مِنْهُ . وَ " إِشْرَافُ النَّفْسِ " تَطَلُّعُهَا وَطَمَعُهَا بِالشَّيْءِ . وَ " سَخَاوَةُ النَّفْسِ " هِيَ عَدَمُ الأَشْرَافِ إِلَى الشَّيْءِ وَالطَّمَعِ فِيهِ وَالْمُبَالاَةِ بِهِ وَالشَّرَهِ .

**524** ஹகீம் இப்னு ஹிஷாம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் பொருள் ஒன்றை நான் கேட்டேன். எனக்குக் கொடுத்தார்கள். மீண்டும் அவர்களிடம் கேட்டேன். எனக்குக் கொடுத்தார்கள். மீண்டும் அவர்களிடம் கேட்டேன். எனக்குக் கொடுத்தார்கள். பின்பு, "ஹகீமே! நிச்சயம் செல்வம் என்பது பசுமையானதாக, இனிமையானதாக இருக்கும். தாராள மனதுடன் அதை ஒருவன் எடுத்துக் கொண்டால், அதிலே அவனுக்கு அபிவிருத்தி ஏற்படுத்தப்படும். மனப்பேராசையுடன் அதை ஒருவன் எடுத்தால், அதிலே அவனுக்கு அபிவிருத்தி செய்யப்பட மாட்டாது. அவன் சாப்பிட்டும் வயிறு நிரம்பாதவன் போலாவான். உயர்ந்திருக்கும் கை, (வாங்கிட) தாழ்ந்திருக்கும் கையை விடச் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அதற்கு, "இறைத்தூதர் அவர்களே! சத்தியத்தின் மூலம் உங்களை அனுப்பி வைத்தவன் மீது சத்தியமாக! உங்களுக்குப்பின் நான் இந்த உலகைப் பிரியும் வரை எதையும் எவரிடமும் கேட்க மாட்டேன்" என்று கூறினேன்.

(இதன் அறிவிப்பாளர் ஒருவர் கூறுகிறார்):

ஒன்றைக் கொடுப்பதற்காக ஹகீம் (ரழி) அவர்களை, அபூபக்ர் (ரழி) அவர்கள் அழைத்தார்கள். அவரிடம் எதையும் பெற ஹகீம் (ரழி) மறுத்து விட்டார்கள். பின்பு உமர் (ரழி) அவர்கள் ஏதேனும் கொடுக்க அவரை அழைத்தார்கள். அதையும் ஏற்க ஹகீம் (ரழி) மறுத்து விட்டார்கள். அப்போது உமர் (ரழி) அவர்கள், "முஸ்லிம் கூட்டத்தாரே! ஹகீம் அவர்களுக்கு எதிராக உங்களைச் சாட்சியாக்குகிறேன். அவருக்குப் போரில் கிடைத்த பொருட்களை, அல்லாஹ் பங்கீடு செய்தபடி அவருக்குரியதை அவரிடம் நான் தந்தேன். அதை எடுத்துக் கொள்ள அவர் மறுத்து விட்டார்" என்று கூறினார்கள். ஹகீம் (ரழி) அவர்கள், நபி (ஸல்) அவர்களுக்குப்பின் தான் மரணிக்கும் வரை எவரிடமும் எதையும் கேட்காமலேயே இருந்தார். **(புகாரி:1472. முஸ்லிம்:1035)**

٥٢٥ – وَعَنْ أَبِي بُرْدَةَ عَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : خَرَجْنَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي غَزَاةٍ وَنَحْنُ سِتَّةُ نَفَرٍ بَيْنَنَا بَعِيرٌ نَعْتَقِبُهُ فَنَقِبَتْ أَقْدَامُنَا وَنَقِبَتْ قَدَمِي وَسَقَطَتْ أَظْفَارِي فَكُنَّا نَلُفُّ عَلَى أَرْجُلِنَا الْخِرَقَ فَسُمِّيَتْ غَزْوَةُ ذَاتِ الرِّقَاعِ لِمَا كُنَّا نَعْصِبُ عَلَى أَرْجُلِنَا مِنَ الْخِرَقِ . قَالَ أَبُو بُرْدَةَ : فَحَدَّثَ أَبُو مُوسَى بِهَذَا الْحَدِيثِ ثُمَّ كَرِهَ ذَلِكَ وَقَالَ : مَا كُنْتُ أَصْنَعُ بِأَنْ أَذْكُرَهُ ! ) قَالَ ( كَأَنَّهُ كَرِهَ أَنْ يَكُونَ شَيْئًا مِنْ عَمَلِهِ أَفْشَاهُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**525** அபூ புர்தா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்களுடன் ஒரு போருக்குச் சென்றோம். நாங்கள் ஆறுபேர் இருந்தோம். எங்களிடையே ஒரு ஒட்டகை மட்டுமே இருந்தது. அதை நாங்கள் முறை வைத்துப் பயன்படுத்தினோம். (நடந்ததால்) எங்களின் பாதங்களில் கொப்பளம் ஏற்பட்டு வெடிப்பு ஏற்பட்டது. என் பாதத்திலும் வெடிப்பு ஏற்பட்டது. என் நகங்கள் விழுந்து விட்டன. எங்கள் கால்களில் சிறிய துணிகளை நாங்கள் சுற்றிக் கொண்டோம். எங்கள் கால்களில் துணிகளை நாங்கள் சுற்றிக் கொண்டதால் தான் இந்தப் போருக்கு 'தாதுல்ரிகாவு' (ஒட்டுத் துணிப் போர்) என்று பெயரிடப்பட்டது" என அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) கூறினார்கள்.

இந்த ஹதீஸைக் கூறிய அபூமூஸா (ரழி) அவர்கள், பின்பு இந்த ஹதீஸைக் கூறுவதை வெறுத்தார்கள். "என்னைப் பற்றி நானே கூறுவது சரியல்ல" என்று அபூமூஸா (ரழி) கூறினார். மேலும் தன் செயலில் எதுவும் தன்னாலேயே பரப்பப்படுவதை அவர் வெறுத்தார்கள்.

**(புகாரி:4128. முஸ்லிம்:1816)**

٥٢٦ – وَعَنْ عَمْرِو بْنِ تَغْلِبَ – بِفَتْحِ التَّاءِ الْمُثَنَّاةِ فَوْقُ وَإِسْكَانِ الْغَيْنِ الْمُعْجَمَةِ وَكَسْرِ اللاَّمِ – رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أُتِيَ بِمَالٍ أَوْ سَبْيٍ فَقَسَمَهُ فَأَعْطَى رِجَالاً وَتَرَكَ رِجَالاً فَبَلَغَهُ أَنَّ الَّذِينَ تَرَكَ عَتَبُوا ; فَحَمِدَ اللَّهَ ثُمَّ أَثْنَى عَلَيْهِ ثُمَّ قَالَ : " أَمَّا بَعْدُ فَوَاللَّهِ إِنِّي لَأُعْطِي الرَّجُلَ وَأَدَعُ الرَّجُلَ وَالَّذِي أَدَعُ أَحَبُّ إِلَيَّ مِنَ الَّذِي أُعْطِي وَلَكِنِّي إِنَّمَا أُعْطِي أَقْوَامًا لِمَا أَرَى فِي قُلُوبِهِمْ مِنَ الْجَزَعِ وَالْهَلَعِ وَأَكِلُ أَقْوَامًا إِلَى مَا جَعَلَ اللَّهُ فِي قُلُوبِهِمْ مِنَ الْغِنَى وَالْخَيْرِ مِنْهُمْ عَمْرُو بْنُ تَغْلِبَ " . قَالَ عَمْرُو بْنُ تَغْلِبَ : فَوَاللَّهِ مَا أُحِبُّ أَنَّ لِي بِكَلِمَةِ رَسُولِ اللَّهِ ﷺ حُمْرَ النَّعَمِ ! رَوَاهُ الْبُخَارِيُّ . " الْهَلَعُ " هُوَ أَشَدُّ الْجَزَعِ وَقِيلَ : الضَّجَرُ .

**526** அம்ருப்னு தக்லிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருசமயம் கொண்டு வரப்பட்ட பொருள் அல்லது கைதிகளை அவர்கள் பங்கீடு செய்தார்கள். சிலருக்கு அவர்கள் கொடுத்தார்கள். சிலருக்கு (க்கொடுக்காமல்) விட்டு விட்டார்கள். கொடுக்காமல் விடப்பட்டவர்கள் குறைபட்டுக் கொண்டனர் என்ற தகவல் அவர்களுக்குக் கிடைத்தது. உடனே நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து, அவனைப் போற்றினார்கள். பின்பு, “அம்மாபஹ்து! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஒருவருக்கு நான் கொடுத்தேன். ஒருவருக்கு கொடுக்காமல் விட்டு விட்டேன். நான் கொடுக்காமல் விட்டவர், நான் கொடுத்தவரை விட எனக்கு மிகவும் விருப்பமானவராவார். எனினும், நான் சிலருக்குக் கொடுத்ததெல்லாம், அவர்களின் உள்ளங்களில் பயமும், குழப்பமும் உள்ளதை நான் பார்த்ததால் தான். சிலரை அவர்களின் உள்ளங்களில் அல்லாஹ் ஏற்படுத்திய செல்வம், மற்றும் நல்லதை கவனித்தும் தான் நான் விட்டுவிட்டேன். அவர்களில் இந்த அம்ரு இப்னு தஹ்லிபும் ஒருவர்” என்று கூறினார்கள்.

“அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி (ஸல்) அவர்களின் இந்த வார்த்தை எனக்கு, சிவப்பு நிற ஒட்டகைகளை விட விருப்பமானவையாக இருந்தது” என்று அம்ரு இப்னு தஹ்லிபு கூறினார்கள்.

**(புகாரி:923)**

٥٢٧ – وَعَنْ حَكِيمِ بْنِ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " الْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنَ الْيَدِ السُّفْلَى وَابْدَأْ بِمَنْ تَعُولُ وَخَيْرُ الصَّدَقَةِ مَا كَانَ عَنْ ظَهْرِ غِنًى وَمَنْ يَسْتَعْفِفْ يُعِفَّهُ اللَّهُ وَمَنْ يَسْتَغْنِ يُغْنِهِ اللَّهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ وَلَفْظُ مُسْلِمٍ أَخْصَرُ .

**527** ஹகீம் இப்னு ஹிஷாம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(கொடுக்கும்) உயர்ந்த கை, (வாங்கும்) தாழ்ந்த கையை விடவும் சிறந்ததாகும். உங்கள் பொறுப்பில் உள்ளவர்களிடம் (உங்கள் உதவியை) ஆரம்பிப்பீராக! தர்மத்தில் சிறந்தது, தேவைக்குப் போக உள்ளதில் ஆகும். ஒருவர் பேணுதலாக நடக்க விரும்பினால், அல்லாஹ் அவரை பேணுதலாக்கி வைப்பான். யார் தேவையற்று இருக்க விரும்புகிறாரோ, அல்லாஹ் அவரை தேவையற்று ஆக்கி வைப்பான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1427, முஸ்லிம்:1034)**

٥٢٨ – وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ مُعَاوِيَةَ ابْنِ أَبِي سُفْيَانَ صَخْرِ بْنِ حَرْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تُلْحِفُوا فِي الْمَسْأَلَةِ فَوَاللَّهِ لاَ يَسْأَلُنِي أَحَدٌ مِنْكُمْ شَيْئًا فَتُخْرِجُ لَهُ مَسْأَلَتُهُ مِنِّي شَيْئًا وَأَنَا لَهُ كَارِهٌ فَيُبَارَكُ لَهُ فِيمَا أَعْطَيْتُهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**528** அபூசுஃப்யான் ஸஹ்று இப்னு ஹார்ப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஏதேனும் ஒரு பொருளை (என்னிடம்) வற்புறுத்திக் கேட்காதீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களில் ஒருவர் எதையேனும் என்னிடம் கேட்டு, நான் வெறுத்த நிலையில் என்னிடமிருந்து எதையேனும் அவருக்கு அவர் கேட்டது கொடுக்கப்படுமானால், அவருக்கு நான் கொடுத்ததில் பரக்கத் (அபிவிருத்தி) செய்யப்பட மாட்டாது'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1038)**

٥٢٩ - وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ عَوْفِ بْنِ مَالِكٍ الأَشْجَعِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ تِسْعَةً أَوْ ثَمَانِيَةً أَوْ سَبْعَةً فَقَالَ : " أَلاَ تُبَايِعُونَ رَسُولَ اللَّهِ ﷺ ؟ " وَكُنَّا حَدِيثِي عَهْدٍ بِبَيْعَةٍ فَقُلْنَا : قَدْ بَايَعْنَاكَ يَا رَسُولَ اللَّهِ . ثُمَّ قَالَ : أَلاَ تُبَايِعُونَ رَسُولَ اللَّهِ ؟ فَبَسَطْنَا أَيْدِيَنَا وَقُلْنَا قَدْ بَايَعْنَاكَ يَا رَسُولَ اللَّهِ فَعَلاَمَ نُبَايِعُكَ ؟ قَالَ : " أَنْ تَعْبُدُوا اللَّهَ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَالصَّلَوَاتِ الْخَمْسِ وَتُطِيعُوا اللَّهَ " . وَأَسَرَّ كَلِمَةً خَفِيفَةً : " وَلاَ تَسْأَلُوا النَّاسَ شَيْئًا " . فَلَقَدْ رَأَيْتُ بَعْضَ أُولَئِكَ النَّفَرِ يَسْقُطُ سَوْطُ أَحَدِهِمْ فَمَا يَسْأَلُ أَحَدًا يُنَاوِلُهُ إِيَّاهُ . رَوَاهُ مُسْلِمٌ .

**529** அபூஅப்துர்ரஹ்மான் அவ்ஃபு இப்னு மாலிக் அல் அஷ்ஜஈ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள் ஒன்பது அல்லது எட்டு அல்லது ஏழு பேர் இருந்தோம். “நீங்கள் இறைத்தூதரிடம் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டாமா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். புதிதாக (சமீபத்தில்) சத்தியப் பிரமாணம் செய்தவர்களாக நாங்கள் இருந்தோம். “இறைத்தூதர் அவர்களே! நாங்கள் உங்களிடம் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டோம்'' என்று கூறினோம். “இறைத்தூதரிடம் நீங்கள் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டாமா? என்று மீண்டும் நபி (ஸல்) கேட்டார்கள். நாங்கள் எங்கள் கைகளை நீட்டினோம். “இறைத்தூதர் அவர்களே! உங்களிடம் முன்பே சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டு விட்டோம். தற்போது உங்களிடம் எதை பிரமாணமாக எடுப்பது?'' என்று கேட்டோம். “நீங்கள் அல்லாஹ்வை வணங்க வேண்டும். அவனுக்கு எதையும் நீங்கள் இணை வைக்கக்கூடாது. ஐந்து நேரமும் தொழுது வர வேண்டும். (அவனுக்கு) கட்டுப்படுங்கள்'' என்று கூறிய நபி (ஸல்) அவர்கள் மெதுவாக, “மக்களிடம் நீங்கள் எதையும் கேட்காதீர்கள் என்ற வகையில் பிரமாணம் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். நபி (ஸல்) அவர்களிடம் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்ட சில தோழர்களை நான் பார்த்துள்ளேன். அவர்களில் ஒருவரின் சாட்டை கீழே விழுந்து விடும். அதை தன்னிடம் எடுத்துத் தரும்படி கூட அவர் எவரிடமும் கேட்கமாட்டார். (தானே எடுத்துக் கொள்வார்) **(முஸ்லிம்:1043)**

٥٣٠ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " لاَ تَزَالُ الْمَسْأَلَةُ بِأَحَدِكُمْ حَتَّى يَلْقَى اللَّهَ تَعَالَى وَلَيْسَ فِي وَجْهِهِ مُزْعَةُ لَحْمٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْمُزْعَةُ " بِضَمِّ الْمِيمِ وَإِسْكَانِ الزَّايِ وَبِالْعَيْنِ الْمُهْمَلَةِ : الْقِطْعَةُ .

**530** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் அடுத்தவரிடம் யாசகம் கேட்பது என்பது, அல்லாஹ் அவரைச் சந்திக்கும் போது, அவரின் கன்னத்தில் சதை எதுவும் இல்லாதவராக வரும் நிலையை ஏற்படுத்தும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1474. முஸ்லிம்:1040)**

٥٣١ - وَعَنْهُ ) ابْنِ عُمَرَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ - وَهُوَ عَلَى الْمِنْبَرِ وَذَكَرَ الصَّدَقَةَ وَالتَّعَفُّفَ عَنِ الْمَسْأَلَةِ - : " الْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنَ الْيَدِ السُّفْلَى وَالْيَدُ الْعُلْيَا هِيَ الْمُنْفِقَةُ وَالسُّفْلَى هِيَ السَّائِلَةُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**531** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருசமயம், நபி (ஸல்) அவர்கள் மிம்பரில் இருந்த நிலையில் தர்மம் செய்தல் பற்றியும், யாசகம் கேட்பதை விட்டும் பேணுதலாக இருப்பது பற்றியும் நினைவூட்டியவர்களாக, "மேலே உள்ள கை, கீழே உள்ள கையை விடச் சிறந்ததாகும். மேலே உள்ள கை, கொடுக்கும் கையாகும். கீழே உள்ள கை, யாசகம் பெறும் கையாகும்" என்று கூறினார்கள். **(புகாரி:1429. முஸ்லிம்:1033)**

٥٣٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ سَأَلَ تَكَثُّرًا فَإِنَّمَا يَسْأَلُ جَمْرًا فَلْيَسْتَقِلَّ أَوْ لِيَسْتَكْثِرْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**532** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(சொத்தை) அதிகப்படுத்துவதற்காக மக்களிடம் ஒருவர் யாசகம் கேட்டால், அவர் (நரக) நெருப்புக் கங்குகளையே கேட்கிறார். (அவர் விரும்பினால்) அதை குறைத்துக் கொள்ளட்டும். அல்லது அதிகமாக்கிக் கொள்ளட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1041)**

٥٣٣ – وَعَنْ سَمُرَةَ بْنِ جُنْدُبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ: " إِنَّ الْمَسْأَلَةَ كَدٌّ يَكُدُّ بِهَا الرَّجُلُ وَجْهَهُ إِلاَّ أَنْ يَسْأَلَ الرَّجُلُ سُلْطَانًا أَوْ فِي أَمْرٍ لاَ بُدَّ مِنْهُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . " الْكَدُّ " : الْخَدْشُ وَنَحْوُهُ .

**533** ஸமுரா இப்னு ஜுன்துப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக, யாசகம் கேட்கும் ஒருவன், தன் முகத்தையே கோரப்படுத்திக் கொள்கிறான். எனினும் ஒருவன் நாட்டின் அரசனிடமும், அல்லது அவனுக்கு அவசியம் ஏற்படும் தேவையில் பிறரிடம் கேட்பது கூடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:681. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٣٤ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ أَصَابَتْهُ فَاقَةٌ فَأَنْزَلَهَا بِالنَّاسِ لَمْ تُسَدَّ فَاقَتُهُ وَمَنْ أَنْزَلَهَا بِاللَّهِ فَيُوشِكُ اللَّهُ لَهُ بِرِزْقٍ عَاجِلٍ أَوْ آجِلٍ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " يُوشِكُ " بِكَسْرِ الشِّينِ : أَيْ يُسْرِعُ .

**534** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவருக்கு வறுமை ஏற்பட்டு, அதை அவர் மக்களிடம் கூறினால், அவரது வறுமை அகற்றப்பட மாட்டாது. அவர் அதை அல்லாஹ்விடம் கூறினால், உடனடியாகவோ அல்லது தாமத மாகவோ உணவு தருவது மூலம் அவருக்குள்ள வறுமையை அல்லாஹ் நீக்குவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:1645. திர்மிதீ:2326. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٣٥ – وَعَنْ ثَوْبَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ تَكَفَّلَ لِي أَلاَّ يَسْأَلَ النَّاسَ شَيْئًا وَأَتَكَفَّلُ لَهُ بِالْجَنَّةِ ؟ " فَقُلْتُ : أَنَا فَكَانَ لاَ يَسْأَلُ أَحَدًا شَيْئًا . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**535** தவ்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மக்களிடம் எதையும் கேட்காமல் இருக்கும் ஒருவருக்கு, நான் சொர்க்கம் கிடைக்க வாக்குறுதி தருகிறேன். எனவே, பிறரிடம் எதையும் கேட்கமாட்டேன் என என்னிடம் வாக்குறுதி கூறுபவர் யார்?" என நபி (ஸல்) அவர்கள் கேட்ட போது, "நான் தங்களிடம் உறுதிமொழி கூறுகிறேன்" என்று கூறினேன்.

(இதை அறிவிக்கும் ஒரு அறிவிப்பாளர் கூறுகிறார்)

தவ்பான் (ரழி) அவர்கள் உறுதிமொழி அளித்தது போன்றே அவர், யாரிடமும் எதையும் கேட்காமலேயே இருந்தார். **(அபூதாவூது:1643)**

٥٣٦ - وَعَنْ أَبِي بِشْرٍ قَبِيصَةَ بْنِ الْمُخَارِقِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : تَحَمَّلْتُ حَمَالَةً فَأَتَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ أَسْأَلُهُ فِيهَا فَقَالَ : " أَقِمْ حَتَّى تَأْتِيَنَا الصَّدَقَةُ فَنَأْمُرَ لَكَ بِهَا " . ثُمَّ قَالَ : " يَا قَبِيصَةُ إِنَّ الْمَسْأَلَةَ لاَ تَحِلُّ إِلاَّ لأَحَدِ ثَلاَثَةٍ : رَجُلٍ تَحَمَّلَ حَمَالَةً فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَهَا ثُمَّ يُمْسِكُ وَرَجُلٍ أَصَابَتْهُ جَائِحَةٌ اجْتَاحَتْ مَالَهُ فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَ قِوَامًا مِنْ عَيْشٍ أَوْ قَالَ : سِدَادًا مِنْ عَيْشٍ - وَرَجُلٍ أَصَابَتْهُ فَاقَةٌ حَتَّى يَقُولَ ثَلاَثَةٌ مِنْ ذَوِي الْحِجَى مِنْ قَوْمِهِ : لَقَدْ أَصَابَتْ فُلاَنًا فَاقَةٌ فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَ قِوَامًا مِنْ عَيْشٍ - أَوْ قَالَ : سِدَادًا مِنْ عَيْشٍ - فَمَا سِوَاهُنَّ مِنَ الْمَسْأَلَةِ يَا قَبِيصَةُ سُحْتٌ يَأْكُلُهَا صَاحِبُهَا سُحْتًا " . رَوَاهُ مُسْلِمٌ . " الْحَمَالَةُ " بِفَتْحِ الْحَاءِ : أَنْ يَقَعَ قِتَالٌ وَنَحْوُهُ بَيْنَ فَرِيقَيْنِ فَيُصْلِحُ إِنْسَانٌ بَيْنَهُمْ عَلَى مَالٍ يَتَحَمَّلُهُ وَيَلْتَزِمُهُ عَلَى نَفْسِهِ . وَ " الْجَائِحَةُ " : الآفَةُ تُصِيبُ مَالَ الإِنْسَانِ . وَ " الْقِوَامُ " بِكَسْرِ الْقَافِ وَفَتْحِهَا : هُوَ مَا يَقُومُ بِهِ أَمْرُ الإِنْسَانِ مِنْ مَالٍ وَنَحْوِهِ . وَ " السِّدَادُ " بِكَسْرِ السِّينِ : مَا يَسُدُّ حَاجَةَ الْمُعْوِزِ وَيَكْفِيهِ . وَ " الْفَاقَةُ " الْفَقْرُ . وَ " الْحِجَى " الْعَقْلُ .

**536** அபூபிஷ்ர் கபீஸா இப்னு அல்முஹாரிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பொறுப்பை நான் ஏற்றிருந்தேன். (அதை நிறைவேற்றிட பொருள் வேண்டி) நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இது குறித்துக் கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நம்மிடம் தர்மப் பொருட்கள் வரும் வரை நீர் பொறுத்திரும்! உமக்கு அதைத் தந்திட நாம் உத்திரவு போடுவோம்" என்று கூறி விட்டு, "கபீஸே! யாசகம் கேட்பது என்பது, மூவரில் ஒருவருக்கே தவிர மற்றவர்களுக்கு அனுமதி இல்லை. (1) பொறுப்பைச் சுமந்து கொண்ட ஒருவர், அதற்காக கேட்டுப் பெறுவது கூடும். அவர் அதை முடித்ததும், கேட்பதை விட்டு விட வேண்டும். (2) திடீர் விபத்து ஏற்பட்டு, தன் சொத்தை இழந்து விட்ட ஒருவருக்கு வாழ்க்கைக்குத் தேவையானதை அவர் பெற்றுக் கொள்ளும்வரை கேட்டுப் பெறுவது கூடும். (3) வறுமை ஏற்பட்டுள்ள ஒருவர், இவரது கூட்டத்தாரில் உள்ள நேர்மையான மூவர், "இவருக்கு வறுமை ஏற்பட்டுள்ளது" என்று கூறினால், அவரும் தன் வாழ்க்கையை நிலை நிறுத்திக் கொள்ளும் வரை கேட்டுப் பெறுவது கூடும். இவர்கள் அல்லாதவர்கள் கேட்டுப் பெறுவதற்கு, கபீஸே! தடை செய்யப்பட்டுள்ளது. (ஒன்றைக் கேட்டுப் பெற்றுச் சாப்பிடுபவர்) தடை செய்யப்பட்டதையே சாப்பிடுகிறார்" என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1044)**

٥٣٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لَيْسَ الْمِسْكِينُ الَّذِي يَطُوفُ عَلَى النَّاسِ تَرُدُّهُ اللُّقْمَةُ وَاللُّقْمَتَانِ وَالتَّمْرَةُ وَالتَّمْرَتَانِ وَلَكِنَّ الْمِسْكِينَ الَّذِي لاَ يَجِدُ غِنًى يُغْنِيهِ وَلاَ يُفْطَنُ لَهُ فَيُتَصَدَّقُ عَلَيْهِ وَلاَ يَقُومُ فَيَسْأَلَ النَّاسَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**537** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒன்று, இரண்டு கவள உணவுக்காகவும், ஒன்றிரண்டு பேரீத்தம் பழத்திற்காகவும் மக்களைச் சுற்றி (யாசகம் கேட்டு) வருபவர் ஏழை அல்ல! என்றாலும் ஏழை என்பவர், அவரின் தேவையைப் பெற்றுக் கொள்ளாதவராக இருப்பார். அவருக்கு தர்மம் செய்யப்பட (தேவையில்லை எனும் அளவுக்கு) அவர் ஏழ்மை அறியப்படாதவராக இருப்பார். மேலும் அவர் மக்களிடம் யாசகம் கேட்டும் நிற்க மாட்டார் (இவரே ஏழையாகும்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:1479, முஸ்லிம்:1039)**

## ٥٨ - بابُ جَواز الأخذ من غير مسألة ولا تطلّع إليه

## பாடம் : 58 - கேட்காமலும், எதிர்பாராமலும் கிடைத்ததை எடுத்துக் கொள்ள அனுமதி உண்டு

٥٣٨ - عَنْ سَالِم بْنِ عَبْدِ اللّٰهِ بْنِ عُمَرَ عَنْ أَبِيه عَبْدِ اللّٰهِ بْنِ عُمَرَ عَنْ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُمْ قَالَ : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يُعْطِيني الْعَطَاءَ فَأَقُولُ : أَعْطِه مَنْ هُوَ أَفْقَرُ إِلَيْهِ مِنِّي فَقَالَ : " خُذْهُ إِذَا جَاءَكَ مِنْ هَذَا الْمَالِ شَيْءٌ وَأَنْتَ غَيْرُ مُشْرِفٍ وَلاَ سَائِلٍ فَخُذْهُ فَتَمَوَّلْهُ فَإِنْ شِئْتَ كُلْهُ وَإِنْ شِئْتَ تَصَدَّقْ بِه وَمَا لاَ فَلاَ تُتْبِعْهُ نَفْسَكَ " . قَالَ سَالِمٌ : فَكَانَ عَبْدُ اللّٰهِ لاَ يَسْأَلُ أَحَدًا شَيْئًا وَلاَ يَرُدُّ شَيْئًا أُعْطِيَهُ . مُتَّفَقٌ عَلَيْهِ . " مُشْرِفٌ " بِالشِّينِ الْمُعْجَمَةِ : أَيْ مُتَطَلِّعٍ إِلَيْهِ .

**538** ஸாலிம் இப்னு அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எனக்கு ஒரு பொருளைக் கொடுத்தார்கள். "என்னை விட மிகவும் தேவை உள்ளவருக்கு நீங்கள் கொடுங்கள்" என்று நான் கூறினேன். "இதை எடுத்துக் கொள்வீராக! நீர் எதிர் பார்க்காமலும், கேட்காமலும் இருந்த நிலையில், ஏதேனும் ஒரு பொருள் உம்மிடம் வந்தால், அதை நீர் பெற்றுக் கொள்ளும். அதை நீர் அதிகப்படுத்திக் கொள்வீராக! நீர் விரும்பினால் அதைச் சாப்பிடு வீராக! விரும்பினால் அதை தர்மம் செய்வீராக! அப்படி இல்லாத ஒன்றை நீர் ஆசைப்பட வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

தன் தந்தை அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) கூறியதாக கூறும் ஸாலிம் இப்னு அப்துல்லா அவர்கள், "(என் தந்தை) அப்துல்லா (ரழி) அவர்கள், எவரிடமும் எதையும் கேட்கமாட்டார்கள். தனக்கு கொடுக்கப்படும் எதையும் மறுக்கவும் மாட்டார்கள்" என்றும் கூறினார்கள். **(புகாரி:1473. முஸ்லிம்:1045)**

## ٥٩ - باب الحَثّ عَلَى الأكل من عمل والتعفف به عن السؤال، والتعرض للإعطاء

## பாடம் : 59 - உழைத்து உண்ணுதல், யாசகம் கேட்காதிருத்தல்

قَالَ اللّٰهُ تَعَالَى : فَإِذَا قُضِيَتِ الصَّلَاةُ فَانْتَشِرُوا فِي الأَرْضِ وَابْتَغُوا مِنْ فَضْلِ اللّٰهِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *தொழுகை நிறைவேற்றப்பட்டுவிட்டால், பூமியில் பரவிச் செல்லுங்கள். அல்லாஹ்வின் அருளை (ரிஜ்கை)த் தேடுங்கள். (62:10)*

٥٣٩ - وَعَنْ أَبِي عَبْدِ اللّٰهِ الزُّبَيْرِ بْنِ الْعَوَّامِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ " لأَنْ يَأْخُذَ أَحَدُكُمْ أَحْبُلَهُ ثُمَّ يَأْتِيَ الْجَبَلَ فَيَأْتِيَ بِحُزْمَةٍ مِنْ حَطَبٍ عَلَى ظَهْرِه فَيَبِيعَهَا فَيَكُفَّ اللّٰهُ بِهَا وَجْهَهُ خَيْرٌ لَهُ مِنْ أَنْ يَسْأَلَ النَّاسَ أَعْطَوْهُ أَوْ مَنَعُوهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**539** அபூ அப்துல்லாஹ் சுபைர் இப்னு அவாம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் தன் கயிற்றை எடுத்துக் கொண்டு, மலைக்குச் சென்று, தன் முதுகில் ஒரு கட்டு விறகைச் சுமந்து, அதை விற்று, அதன் மூலம் தன் கண்ணியத்தைக் காப்பாற்றிக் கொள்வது என்பது, அவர் மக்களிடம் யாசகம் கேட்டு, அதை அவர்கள் தருவது அல்லது மறுத்து விடுவது என்பதை விடவும் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1471)**

٥٤٠ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ " لأَنْ يَحْتَطِبَ أَحَدُكُمْ حُزْمَةً عَلَى ظَهْرِه خَيْرٌ لَهُ مِنْ أَنْ يَسْأَلَ أَحَدًا فَيُعْطِيَهُ أَوْ يَمْنَعَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**540** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் முதுகில் ஒரு கட்டு விறகை உங்களில் ஒருவர் சுமப்பது, ஒருவரிடம் யாசகம் கேட்டும் அவர் கொடுத்தோ அல்லது மறுத்தோ விடுவதை விடவும் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1470. முஸ்லிம்:1042)**

٥٤١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " كَانَ دَاوُدُ عَلَيْهِ السَّلاَمُ لاَ يَأْكُلُ إلاَّ مِنْ عَمَلِ يَدِهِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**541** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி தாவூத் (அலை) அவர்கள், தன் கைகளின் உழைப்பின் மூலமே தவிர சாப்பிடமாட்டார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2073)**

٥٤٢ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " كَانَ زَكَرِيَّا عَلَيْهِ السَّلاَمُ نَجَّارًا " . رَوَاهُ مُسْلِمٌ .

**542** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி ஜக்கரியா (அலை) அவர்கள் மரவேலை செய்யும் தச்சராக இருந்தார்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2379)**

٥٤٣ – وَعَنْ الْمِقْدَادِ بْنِ مَعْدِ يكَرِبَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " مَا أَكَلَ أَحَدٌ طَعَامًا قَطُّ خَيْرًا مِنْ أَنْ يَأْكُلَ مِنْ عَمَلِ يَدِهِ وَإِنَّ نَبِيَّ اللَّهِ دَاوُدَ ﷺ كَانَ يَأْكُلُ مِنْ عَمَلِ يَدِهِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**543** மிக்தாத் இப்னு மஃதீ கர்ப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் கையால் உழைத்து ஒருவர் உண்பதை விட, வேறு சிறந்த உணவை எவரும் சாப்பிடமாட்டார். நிச்சயமாக அல்லாஹ்வின் நபி தாவூத் (அலை) அவர்கள் தன் கையால் உழைத்து உண்பவர்களாக இருந்தார்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2072)**

## ٦٠ – باب الكرم والجود والإنفاق في وجوه الخير ثقةً باللّه تعالَى

## பாடம் : 60 – கொடையளித்தல், அல்லாஹ்வைப் பயந்து நல்ல வழிகளில் செலவு செய்தல்

**قَالَ اللَّهُ تَعَالَى : وَمَا أَنْفَقْتُمْ مِنْ شَيْءٍ فَهُوَ يُخْلِفُهُ . وَقَالَ تَعَالَى : وَمَا تُنْفِقُوا مِنْ خَيْرٍ فَلأَنْفُسِكُمْ وَمَا تُنْفِقُونَ إلاَّ ابْتِغَاءَ وَجْهِ اللَّهِ وَمَا تُنْفِقُوا مِنْ خَيْرٍ يُوَفَّ إِلَيْكُمْ وَأَنْتُمْ لاَ تُظْلَمُونَ . وَقَالَ تَعَالَى : وَمَا تُنْفِقُوا مِنْ خَيْرٍ فَإِنَّ اللَّهَ بِهِ عَلِيمٌ .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *எதை நீங்கள் (நல்வழியில்) செலவு செய்தாலும், இன்னும் பலவற்றை அதற்கு பகரமாக (அல்லாஹ்) வழங்குவான். (34:39)*

*நல்லதிலிருந்து நீங்கள் செய்யும் செலவு, உங்களுக்கு (பயனாக) இருக்கும். அல்லாஹ்வின் திருப்தியை நாடியே தவிர நீங்கள் செலவு செய்யவில்லை. நல்லதிலிருந்து நீங்கள் செலவு செய்தவை உங்களுக்கு(க் கூலியாக) வழங்கப்படும். மேலும் நீங்கள் அநீதம் செய்யப்பட மாட்டீர்கள். (2:272)*

*'நல்லதிலிருந்து நீங்கள் செலவு செய்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் அறியக் கூடியவனாவான்' (2:273)*

٥٤٤ – وَعَنِ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ حَسَدَ إلاَّ فِي اثْنَيْنِ : رَجُلٍ آتَاهُ اللَّهُ مَالاً فَسَلَّطَهُ عَلَى هَلَكَته فِي الْحَقِّ وَرَجُلٍ آتَاهُ اللَّهُ حِكْمَةً فَهُوَ يَقْضِي بِهَا وَيُعَلِّمُهَا " . مُتَّفَقٌ عَلَيْه . وَمَعْنَاهُ : يَنْبَغِي أَلاَّ يُغْبَطَ أَحَدٌ إلاَّ عَلَى إحْدَى هَاتَيْنِ الْخَصْلَتَيْنِ .

**544** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு பேர்கள் விஷயத்தில் தவிர பொறாமை என்பது கூடாது. (1) அல்லாஹ் அவருக்கு வழங்கிய செல்வத்தை உண்மையான வழியில் செலவழிக்கும் மனிதர். (2) அல்லாஹ் அவருக்கு அருளிய அறிவு ஞானத்தைக் கொண்டு (நீதமாகத்) தீர்ப்பளிக்கவும், (பிறருக்கு) கற்றுத்தரவும் செய்யும் மனிதர். (இந்த இருவர் மீதும் பொறாமை கொள்ளக் கூடாது)" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:73. முஸ்லிம்:816)**

٥٤٥ – وَعَنْهُ ) ابْنِ مَسْعُود ( قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " أَيُّكُمْ مَالُ وَارِثه أَحَبُّ إلَيْه منْ مَاله ؟ " قَالُوا : يَا رَسُولَ اللَّه مَا منَّا أَحَدٌ إلاَّ مَالُهُ أَحَبُّ إلَيْه . قَالَ " .فإنَّ مَالَهُ مَا قَدَّمَ وَمَالُ وَارِثه مَا أَخَّرَ " . رَوَاهُ الْبُخَارِيُّ.

**545** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் எவருக்குத் தம் பொருளைவிட தம் வாரிசின் பொருள் மிக விருப்பமானதாக இருக்கும்?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! தம் பொருளைத் தவிர (வேறு எதையும்) எங்களில் எவரும் தனக்கு விருப்பமானதாக ஆக்கிக் கொள்வதில்லை" என நபித் தோழர்கள் கூறினார்கள். அப்போது, "ஒருவனின் பொருள் என்பது, அவர் முன்பு செய்திட்டவை (நன்மையான வழியில் அவர் செலவு செய்தவை) ஆகும். வாரிசின் பொருள் என்பது, அவர் தம் (வாரிசுகளுக்கு) விட்டுச் செல்லும் பொருளாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6442)**

٥٤٦ – وَعَنْ عَديِّ بْنِ حَاتمٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ : " اتَّقُوا النَّارَ وَلَوْ بشقِّ تَمْرَة " . مُتَّفَقٌ عَلَيْه .

**546** அதீ இப்னு ஹாதிம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாதி பேரீத்தம் பழத்தைத் தர்மம் செய்தேனும் நரக நெருப்பை அஞ்சிக் கொள்ளுங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6023. முஸ்லிம்:1016)**

٥٤٧ – وَعَنْ جَابرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : مَا سُئلَ رَسُولُ اللَّه ﷺ شَيْئًا قَطُّ فَقَالَ : لاَ . مُتَّفَقٌ عَلَيْه .

**547** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் எதைக் கேட்டாலும், அவர்கள் எப்பொழுதும் "இல்லை" என்று கூறியதில்லை. **(புகாரி:6034. முஸ்லிம்:2311)**

٥٤٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " مَا منْ يَوْمٍ يُصْبِحُ الْعبَادُ فيه إلاَّ مَلَكَان يَنْزِلاَن فَيَقُولُ أَحَدُهُمَا : اللَّهُمَّ أَعْطِ مُنْفقًا خَلَفًا وَيَقُولُ الآخَرُ : اللَّهُمَّ أَعْطِ مُمْسكًا تَلَفًا " مُتَّفَقٌ عَلَيْه .

**548** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அடியார்கள் ஒவ்வொரு நாள் காலையில் எழுந்ததும் இரண்டு வானவர்கள் இறங்காமல் இருப்பதில்லை. அவ்விருவரில் ஒருவர், "இறைவா! (உன் வழியில்) செலவு செய்யும் ஒருவருக்குப் பொருளை வழங்குவாயாக!" என்று கூறுவார். மற்றொருவர், "இறைவா! செலவழிக்காமல் இருக்கும் நபருக்கு நீ அழிவைக் கொடுப்பாயாக! என்று கூறுவார்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1442. முஸ்லிம்:1010)**

٥٤٩ -وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " قَالَ اللَّهُ تَعَالَى : أَنْفِقْ يَا ابْنَ آدَمَ يُنْفَقْ عَلَيْكَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**549** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதமின் மகனே! நீ (நல்வழியில்) செலவு செய்வாயாக! அப்போது, உனக்கு (என் மூலம்) நற்கூலி வழங்கப்படும்" என, அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5352. முஸ்லிம்:993)**

٥٥٠ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَجُلاً سَأَلَ رَسُولَ اللَّهِ ﷺ أَيُّ الأَسْلاَمِ خَيْرٌ ؟ قَالَ : " تُطْعِمُ الطَّعَامَ وَتَقْرَأُ السَّلاَمَ عَلَى مَنْ عَرَفْتَ وَمَنْ لَمْ تَعْرِفْ " مُتَّفَقٌ عَلَيْهِ .

**550** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இஸ்லாத்தின் அமல்களில் சிறந்தது எது?" என ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். "(பசித்தோருக்கு) நீ உணவளிப்பதும், நீ அறிந்த அறிந்திராத அனைவருக்கும் ஸலாம் கூறுவதுமாகும்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(புகாரி:12. முஸ்லிம்:39)**

٥٥١-وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَرْبَعُونَ خَصْلَةً أَعْلاَهَا مَنِيحَةُ الْعَنْزِ . مَا مِنْ عَامِلٍ يَعْمَلُ بِخَصْلَةٍ مِنْهَا رَجَاءَ ثَوَابِهَا وَتَصْدِيقَ مَوْعُودِهَا إِلاَّ أَدْخَلَهُ اللَّهُ تَعَالَى بِهَا الْجَنَّةَ " . رَوَاهُ الْبُخَارِيُّ . وَقَدْ سَبَقَ بَيَانُ هَذَا الْحَدِيثِ فِي بَابِ بَيَانِ كَثْرَةِ طُرُقِ الْخَيْرِ .

**551** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாற்பது நற்செயல்கள் உள்ளன. அவ்வற்றில் உயர்வானது, பால் தரும் ஆட்டை (இரவலாக) வழங்குவதாகும். அந்த நாற்பது குணங்களில் ஒன்றை, அதற்கான கூலியை ஆதரவு வைத்தவராகவும், அதன் பலனை உண்மைப்படுத்துபவராகவும் ஒருவர் செய்தால், அவற்றின் காரணமாக சொர்க்கத்தில் அவரை அல்லாஹ் நுழைக்காமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2631)**

٥٥٢ - وَعَنْ أَبِي أُمَامَةَ صُدَيِّ بْنِ عَجْلاَنَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَا ابْنَ آدَمَ إِنَّكَ إِنْ تَبْذُلِ الْفَضْلَ خَيْرٌ لَكَ وَإِنْ تُمْسِكْهُ شَرٌّ لَكَ وَلاَ تُلاَمُ عَلَى كَفَافٍ وَابْدَأْ بِمَنْ تَعُولُ . وَالْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنَ الْيَدِ السُّفْلَى " رَوَاهُ مُسْلِمٌ .

**552** அபூஉமாமா என்ற சுதய் இப்னு அஜ்லான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதமின் மகனே! நிச்சயமாக, மிச்சமானவற்றை செலவு செய்வதுதான், உமக்குச் சிறந்ததாகும். செலவு செய்யாமலிருப்பது, உமக்குக் கெடுதல் ஆகும். போதுமானவற்றை வைத்துக் கொள்வது மீது நீர் குறை காணப்படமாட்டீர். உம் பொறுப்பில் உள்ளவர்(களுக்கு செலவு செய்வது) மூலம் நீர் ஆரம்பிப்பீராக! (கொடுக்கிற) மேலே உள்ள கை, (வாங்குகிற) கீழுள்ள கையை விடச் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1036)**

٥٥٣ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : مَا سُئِلَ رَسُولُ اللَّهِ ﷺ عَلَى الأِسْلاَمِ شَيْئًا إِلاَّ أَعْطَاهُ وَلَقَدْ جَاءَهُ رَجُلٌ فَأَعْطَاهُ غَنَمًا بَيْنَ جَبَلَيْنِ فَرَجَعَ إِلَى قَوْمِهِ فَقَالَ : يَا قَوْمِ أَسْلِمُوا فَإِنَّ مُحَمَّدًا يُعْطِي عَطَاءَ مَنْ لاَ يَخْشَى الْفَقْرَ وَإِنْ كَانَ الرَّجُلُ لَيُسْلِمُ مَا يُرِيدُ إِلاَّ الدُّنْيَا فَمَا يَلْبَثُ إِلاَّ يَسِيرًا حَتَّى يَكُونَ الأِسْلاَمُ أَحَبَّ إِلَيْهِ مِنَ الدُّنْيَا وَمَا عَلَيْهَا . رَوَاهُ مُسْلِمٌ .

**553** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இஸ்லாமிற்காக நபி (ஸல்) அவர்களிடம் எதைக் கேட்கப்பட்டாலும், அதை அவர்கள் கொடுக்காமல் இருந்ததில்லை. நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்தார். இரண்டு மலைகளுக்கு

இடையே உள்ள ஆடு ஒன்றை அவருக்கு நபி (ஸல்) அவர்கள் வழங்கினார்கள். அவர் தன் மக்களிடம் திரும்பி வந்து, "மக்களே! நீங்கள் முஸ்லிமாகி விடுங்கள். நிச்சயமாக! முஹம்மது (ஸல்) அவர்கள் வறுமையைப் பயப்படாமல் கொடையளிக்கிறார்" என்று கூறினார்.

இதை அறிவிக்கும் அனஸ் (ரழி) பின்வருமாறும் கூறினார்கள்:

சிலர் உலகின் பலனை நாடி மட்டுமே இஸ்லாம் ஆகின்றனர். பின்னர் விரைவில் இஸ்லாம், அவர்களுக்கு உலகம் மற்றும் அதிலுள்ளவை அனைத்தையும் விட மிகப் பிரியமானதாக ஆகிவிடுகிறது. **(முஸ்லிம்:2312)**

٥٥٤ – وَعَنْ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَسَمَ رَسُولُ اللّٰهِ ﷺ قَسْمًا فَقُلْت : يَا رَسُولَ اللّٰهِ لَغَيْرُ هَؤُلاَءِ كَانُوا أَحَقَّ بِهِ مِنْهُمْ ؟ فَقَالَ : " إِنَّهُمْ خَيَّرُونِي أَنْ يَسْأَلُونِي بِالْفُحْشِ فَأُعْطِيَهُمْ أَوْ يُبَخِّلُونِي وَلَسْت بِبَاخِلٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**554** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் (போர் பொருட்களைப்) பங்கீடு செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது நான், "இறைத்தூதர் அவர்களே! (இந்தப் பொருளைப் பெறும்) இவர்கள் அல்லாத மற்றவர்கள், இவர்களை விட மிக அதிக உரிமை பெற்றவர்களாக உள்ளனரே!' என்று கூறினேன். அதற்கு அவர்கள், "இவர்கள் என்னிடம் வற்புறுத்திக் கேட்கின்றார்கள். நான் கொடுக்கவில்லை யென்றால், என்னை 'கஞ்சன்' என்பார்கள். நான் 'கஞ்சன்' அல்ல" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1056)**

٥٥٥ – وَعَنْ جُبَيْرِ بْنِ مُطْعِمٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّهُ قَالَ : بَيْنَمَا هُوَ يَسِيرُ مَعَ النَّبِيِّ ﷺ مَقْفَلَهُ مِنْ حُنَيْنٍ فَعَلَّقَهُ الأَعْرَابُ يَسْأَلُونَهُ حَتَّى اضْطَرُّوهُ إِلَى سَمُرَةٍ فَخَطَفَتْ رِدَاءَهُ فَوَقَفَ النَّبِيُّ ﷺ فَقَالَ : " أَعْطُونِي رِدَائِي . فَلَوْ كَانَ لِي عَدَدُ هَذِهِ الْعِضَاهِ نَعَمًا لَقَسَمْته بَيْنَكُمْ ثُمَّ لاَ تَجِدُونِي بَخِيلاً وَلاَ كَذَّابًا وَلاَ جَبَانًا " . رَوَاهُ الْبُخَارِيُّ . " مَقْفَلَهُ " : أَيْ حَالَ رُجُوعِهِ . وَ " السَّمُرَةُ " : شَجَرَةٌ . وَ " الْعِضَاهُ " : شَجَرٌ لَهُ شَوْكٌ .

**555** ஜுபைர் இப்னு முத்இம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஹுனைன் போரிலிருந்த நபி (ஸல்) அவர்கள் (மக்காவிற்கு) திரும்பி வரும்போது, அவர்களுடன் நானும் இருந்தேன். அப்போது சில (கிராமக்) காட்டரபிகள் அவர்களைச் சூழ்ந்து கொண்டு, ஏதேனும் (தாருங்கள் என்று) கேட்டு நிர்பந்தப்படுத்தினார்கள். (நிர்பந்தம் காரணமாக) கருவேல மரத்தின் பக்கம் ஒதுங்கினார்கள். (அக்காட்டரபிகளின் நெரிசலில்) அண்ணலாரின் போர்வை சிக்கிக் கொண்டது. நபி (ஸல்) அவர்கள் நின்று கொண்டு, "என் போர்வையை எனக்குக் கொடுங்கள். இந்த காட்டின் மரங்கள் அளவுக்கு கால்நடைகள் என்னிடம் இருந்தாலும் அதை உங்களுக்கே நான் பங்கீடு செய்வேன். பின்பு கஞ்சனாகவோ, பொய்யானாகவோ, கோழையாகவோ என்னைக் காணமாட்டீர்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:3148)**

٥٥٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " مَا نَقَصَتْ صَدَقَةٌ مِنْ مَالٍ وَمَا زَادَ اللّٰهُ عَبْدًا بِعَفْوٍ إِلاَّ عِزًّا وَمَا تَوَاضَعَ أَحَدٌ لِلّٰهِ إِلاَّ رَفَعَهُ اللّٰهُ عَزَّ وَجَلَّ " . رَوَاهُ مُسْلِمٌ .

**556** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தர்மம் செய்வது, உங்கள் பொருட்களில் எதையும் குறைத்து விடாது. அடியான் பிறரின் தவறை மன்னிப்பானேயானால், அல்லாஹ் அவன் கண்ணியத்தை அதிகப்படுத்துவான். மேலும் யார் அல்லாஹ்வுக்காக பணிவை மேற்கொள்கிறாரோ, அவரின் அஸ்தஸ்தை அல்லாஹ் உயர்த்துவான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2588)**

٥٥٧ – وَعَنْ أَبِي كَبْشَةَ عَمْرِو بْنِ سَعْدٍ الأَنْمَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " ثَلاَثَةٌ أُقْسِمُ عَلَيْهِنَّ وَأُحَدِّثُكُمْ حَدِيثًا فَاحْفَظُوهُ : مَا نَقَصَ مَالُ عَبْدٍ مِنْ صَدَقَةٍ وَلاَ ظُلِمَ عَبْدٌ مَظْلَمَةً صَبَرَ عَلَيْهَا إِلاَّ زَادَهُ اللَّهُ عِزًّا وَلاَ فَتَحَ عَبْدٌ بَابَ مَسْأَلَةٍ إِلاَّ فَتَحَ اللَّهُ عَلَيْهِ بَابَ فَقْرٍ – أَوْ كَلِمَةً نَحْوَهَا – وَأُحَدِّثُكُمْ حَدِيثًا فَاحْفَظُوهُ . ) قَالَ ( : إِنَّمَا الدُّنْيَا لأَرْبَعَةِ نَفَرٍ : عَبْدٍ رَزَقَهُ اللَّهُ مَالاً وَعِلْمًا فَهُوَ يَتَّقِي فِيهِ رَبَّهُ وَيَصِلُ فِيهِ رَحِمَهُ وَيَعْلَمُ لِلَّهِ فِيهِ حَقًّا : فَهَذَا بِأَفْضَلِ الْمَنَازِلِ ; وَعَبْدٍ رَزَقَهُ اللَّهُ عِلْمًا وَلَمْ يَرْزُقْهُ مَالاً فَهُوَ صَادِقُ النِّيَّةِ يَقُولُ لَوْ أَنَّ لِي مَالاً لَعَمِلْتُ بِعَمَلِ فُلاَنٍ فَهُوَ بِنِيَّتِهِ فَأَجْرُهُمَا سَوَاءٌ ; وَعَبْدٍ رَزَقَهُ اللَّهُ مَالاً وَلَمْ يَرْزُقْهُ عِلْمًا فَهُوَ يَخْبِطُ فِي مَالِهِ بِغَيْرِ عِلْمٍ لاَ يَتَّقِي فِيهِ رَبَّهُ وَلاَ يَصِلُ فِيهِ رَحِمَهُ وَلاَ يَعْلَمُ لِلَّهِ فِيهِ حَقًّا . فَهَذَا بِأَخْبَثِ الْمَنَازِلِ وَعَبْدٍ لَمْ يَرْزُقْهُ اللَّهُ مَالاً وَلاَ عِلْمًا فَهُوَ يَقُولُ : لَوْ أَنَّ لِي مَالاً لَعَمِلْتُ فِيهِ بِعَمَلِ فُلاَنٍ فَهُوَ بِنِيَّتِهِ فَوِزْرُهُمَا سَوَاءٌ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**557** அபூகபஷா உமர் இப்னு ஸஃதுல் அன்மாரி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மூன்று விஷயங்களை உங்களிடம் நான் சத்தியம் செய்து அறிவிக்கிறேன். அதை நீங்கள் பேணிக் கொள்ளுங்கள். (1) தர்மம் செய்வது, ஒரு மனிதனின் சொத்தை குறைத்து விடாது. (2) அநீதம் செய்யப் பட்ட ஒருவன் அது விஷயமாக அவன் பொறுமையாக இருந்தால், அவனுக்கு அல்லாஹ் கண்ணியத்தை அதிகப்படுத்தாமல் இருப்பதில்லை. (3) யாசகத்தின் வாசலை ஒருவன் திறந்து கொண்டால், இழிவின் வாசலை அல்லாஹ் திறக்காமல் இருப்பதில்லை.

இன்னும் உங்களுக்குச் சில செய்திகளைக் கூறுகிறேன். அதை நீங்கள் பேணிக் கொள்ளுங்கள். நிச்சயமாக உலகம், நான்கு பேர்களுக்கு மட்டும்தான்.

(1) ஒருவனுக்கு அல்லாஹ் செல்வத்தையும், அறிவையும் வழங்குகிறான். அவன் இது விஷயமாக தன் இறைவனைப் பயப்படுகிறான். தன்னுடன் அவனின் உறவினர்களைச் சேர்க்கிறான். மேலும் அல்லாஹ்விற்குரிய உரிமைகளை அறிகிறான் (செயல்படுத்துகிறான்). இவன், உயர்ந்த பதவிகளில் உள்ளான்.

(2) ஒருவனுக்கு அல்லாஹ் அறிவை வழங்கி உள்ளான். செல்வத்தை அவனுக்கு வழங்கவில்லை. அவன் உண்மையான எண்ணமுடையவன், "எனக்குச் சொத்து இருந்தால், நானும் இவரை போன்று செயல்படுவேன்" என்று கூறுகிறான். இதுவே இவனது எண்ணமுமாக உள்ளது. எனவே இருவரின் நற்கூலியும் சமமாகும்.

(3) ஒருவனுக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கியிருந்தான். ஆனால் அறிவை அவனுக்கு வழங்க வில்லை. அறிவின்றி அவனது சொத்தில் அவன் மூழ்கிக் கிடந்தான். அவன் தன் இறைவனுக்குப் பயப்படவில்லை. தன் உறவினரையும் அவன் சேர்த்துக் கொள்ளவில்லை. அல்லாஹ்விற்குரிய உரிமைகளையும் அவன் அறிந்திடவில்லை. இவன் மிகக் கீழான தகுதியில் உள்ளான்.

(4) ஒருவனுக்கு அல்லாஹ் செல்வத்தையும், அறிவையும் வழங்கவில்லை. "எனக்கு சொத்து இருந்தால், இவனைப் போன்று (தீய) செயல்களை நானும் செய்வேன்" என்று கூறுகிறான். அவன் தன் எண்ணப்படி உள்ளான். இவ்விருவரின் (மூன்றாவது மற்றும் நான்காவது நபர்களின்) தண்டனையும் சமமானதாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:2325. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٥٨ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهُمْ ذَبَحُوا شَاةً فَقَالَ النَّبِيُّ ﷺ : " مَا بَقِيَ مِنْهَا ؟ " . قَالَتْ : مَا بَقِيَ مِنْهَا إِلاَّ كَتِفُهَا . قَالَ : " بَقِيَ كُلُّهَا غَيْرَ كَتِفِهَا ! " رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . وَمَعْنَاهُ : تَصَدَّقُوا بِهَا إِلاَّ كَتِفَهَا فَقَالَ : بَقِيَتْ لَنَا فِي الآخِرَةِ إِلاَّ كَتِفَهَا .

**558** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபித்தோழர்கள் ஓர் ஆட்டை அறுத்தார்கள். (தர்மம் செய்தார்கள்). “இந்த ஆட்டில் எதுவும் மீதமுள்ளதா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “அதன் தோள்பட்டையைத் தவிர, வேறு எதுவும் மீதமில்லை. (அனைத்தும் தர்மம் செய்யப்பட்டுவிட்டது)” என்று நான் கூறினேன். அதற்கு, “அதன் தோள்பட்டையைத் தவிர அனைத்தும் மீதமாகிவிட்டது” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2470. இது “ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٥٩ – وَعَنْ أَسْمَاءَ بِنْت أَبِي بَكْرٍ الصِّدِّيق رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَتْ : قَالَ لِي رَسُولُ اللَّه ﷺ : " لاَ تُوكِي فَيُوكِي اللَّهُ عَلَيْك". وَفِي رِوَايَة " أَنْفقي أَوْ انْفَحِي أَوْ انْضَحِي وَلاَ تُحْصِي فَيُحْصِيَ اللَّهُ عَلَيْكِ وَلاَ تُوعِي فَيُوعِيَ اللَّهُ عَلَيْكِ " مُتَّفَقٌ عَلَيْه . وَ " انْفَحِي " بِالْحَاءِ الْمُهْمَلَة وَهُوَ بِمَعْنَى " أَنْفِقي " وَكَذَلِكَ " انْضَحِي " .

**559** அஸ்மா பின்த் அபூபக்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(அல்லாஹ்வின் பாதையில் செலவழிக்காமல் செல்வத்தை) நீ முடிச்சுப் போட்டு வைக்க வேண்டாம். அவ்வாறு (செய்தால்) உனக்கு எதிராக (அல்லாஹ்வினால்) உனக்கு முடிச்சுப் போடப்படும்” என்று என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில், “நீ செலவு செய்! நீ எண்ணிச் (செலவு) செய்யாதே! அவ்வாறு செய்தால் அல்லாஹ்வும் உனக்கு எண்ணிக் கொடுப்பான். நீ (செலவு செய்யாமல்) தடுத்து வைத்துக் கொள்ள வேண்டாம். அல்லாஹ்வும் உனக்கு தடுத்துக் கொள்வான்” என்று நபி (ஸல்) கூறியதாக உள்ளது.

**(புகாரி:1433, 2591. முஸ்லிம்:1029)**

٥٦٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ : " مَثَلُ الْبَخِيلِ وَالْمُنْفِق كَمَثَلِ رَجُلَيْنِ عَلَيْهِمَا جُنَّتَان مِنْ حَدِيد مِنْ ثُدِيِّهِمَا إِلَى تَرَاقِيهِمَا . فَأَمَّا الْمُنْفِقُ فَلاَ يُنْفِقُ إِلاَّ سَبَغَتْ – أَوْ وَفَرَتْ – عَلَى جِلْده حَتَّى تُخْفِيَ بَنَانَهُ وَتَعْفُو أَثَرَهُ . وَأَمَّا الْبَخِيلُ فَلاَ يُرِيدُ أَنْ يُنْفِقَ شَيْئًا إِلاَّ لَزِقَتْ كُلُّ حَلْقَةٍ مَكَانَهَا فَهُوَ يُوَسِّعُهَا فَلاَ تَتَّسِعُ ! " مُتَّفَقٌ عَلَيْه . وَ " الْجُنَّةُ " : الدِّرْعُ . وَمَعْنَاهُ أَنَّ الْمُنْفِقَ كُلَّمَا أَنْفَقَ سَبَغَتْ وَطَالَتْ حَتَّى تَجُرَّ وَرَاءَهُ وَتُخْفِيَ رِجْلَيْهِ وَأَثَرَ مَشْيِهِ أَنَّ الْمُنْفِقَ كُلَّمَا أَنْفَقَ سَبَغَتْ وَطَالَتْ حَتَّى تَجُرَّ وَرَاءَهُ وَتُخْفِيَ رِجْلَيْهِ وَأَثَرَ مَشْيِهِ وَخُطُوَاته .

**560** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“கஞ்சனுக்கும், செலவு செய்பவனுக்கும் உதாரணமானது, உருக்குச் சட்டையைத் தங்களின் நெஞ்சிலிருந்து, தொண்டைக்குழி வரை அணிந்துள்ள இருவரின் உதாரணம் போலாகும். செலவு செய்பவன், செலவு செய்யும் போது அந்த உருக்குச் சட்டை அவனது (கால்) விரல்களை மறைத்து, அவனது பாதத்தின் அடிச்சுவட்டையும் மறைத்து மூடி விடுகிறது. கஞ்சன், எதைச் செலவு செய்தாலும், அவனது உருக்குச் சட்டையின் ஒவ்வொரு வளையமும் அந்தந்த இடத்தை ஒட்டிக் கொள்கிறது. அவனோ, அதை விரிவாக்க விரும்புகிறான். அதுவோ விரிவாவதில்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:1443. முஸ்லிம்:1021)**

٥٦١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " مَنْ تَصَدَّقَ بِعَدْلِ تَمْرَةٍ مِنْ كَسْبٍ طَيِّبٍ – وَلاَ يَقْبَلُ اللَّهُ إِلاَّ الطَّيِّبَ – فَإِنَّ اللَّهَ يَقْبَلُهَا بِيَمِينه ثُمَّ يُرَبِّيهَا لِصَاحِبِهَا كَمَا يُرَبِّي أَحَدُكُمْ فَلُوَّهُ حَتَّى تَكُونَ مِثْلَ الْجَبَلِ ! " . مُتَّفَقٌ عَلَيْه . " الْفَلُوُّ " بِفَتْحِ الْفَاءِ وَضَمِّ اللاَّمِ وَتَشْدِيدِ الْوَاوِ وَيُقَالُ أَيْضًا بِكَسْرِ الْفَاءِ وَإِسْكَانِ اللاَّمِ وَتَخْفِيفِ الْوَاوِ : وَهُوَ الْمُهْرُ .

**561** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தூய்மையான பொருளின் தர்மத்தைத் தவிர மற்றெதனையும் அல்லாஹ் ஏற்றுக் கொள்ள மாட்டான் என்பதால் தூய்மையான உழைப்பின் மூலம் உள்ள ஒரு பேரீத்தம் பழத்தின் பணத்தை ஒருவன் தர்மம் செய்தால், நிச்சயமாக அல்லாஹ் அதைத் தன் வலது கையால் ஏற்றுக் கொள்கிறான். பின்பு உங்களில் ஒருவர் தன் குதிரைக் குட்டியை உயரமாக ஆகும் அளவுக்கு வளர்ப்பது போல், தர்மம் செய்தவருக்காக அந்த தர்மத்தை (மலை அளவு நன்மையை) வளர்க்கிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1410. முஸ்லிம்:1014)**

٥٦٢ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " بَيْنَمَا رَجُلٌ يَمْشِي بِفَلاَةٍ مِنَ الأَرْضِ فَسَمِعَ صَوْتًا فِي سَحَابَةٍ : اسْقِ حَدِيقَةَ فُلاَنٍ فَتَنَحَّى ذَلِكَ السَّحَابُ فَأَفْرَغَ مَاءَهُ فِي حَرَّةٍ فَإِذَا شَرْجَةٌ مِنْ تِلْكَ الشِّرَاجِ قَدِ اسْتَوْعَبَتْ ذَلِكَ الْمَاءَ كُلَّهُ فَتَتَبَّعَ الْمَاءَ فَإِذَا رَجُلٌ قَائِمٌ فِي حَدِيقَتِهِ يُحَوِّلُ الْمَاءَ بِمِسْحَاتِهِ فَقَالَ لَهُ : يَا عَبْدَ اللَّهِ مَا اسْمُكَ ؟ قَالَ : فُلاَنٌ لِلاسْمِ الَّذِي سَمِعَ فِي السَّحَابَةِ فَقَالَ لَهُ : يَا عَبْدَ اللَّهِ لِمَ تَسْأَلُنِي عَنِ اسْمِي ؟ فَقَالَ : إِنِّي سَمِعْتُ صَوْتًا فِي السَّحَابِ الَّذِي هَذَا مَاؤُهُ يَقُولُ : اسْقِ حَدِيقَةَ فُلاَنٍ لاسْمِكَ فَمَا تَصْنَعُ فِيهَا ؟ فَقَالَ : أَمَّا إِذْ قُلْتَ هَذَا فَإِنِّي أَنْظُرُ إِلَى مَا يَخْرُجُ مِنْهَا فَأَتَصَدَّقُ بِثُلُثِهِ وَآكُلُ أَنَا وَعِيَالِي ثُلُثًا وَأَرُدُّ فِيهَا ثُلُثَهُ " . رَوَاهُ مُسْلِمٌ . " الْحَرَّةُ " : الأَرْضُ الْمُلْبَسَةُ حِجَارَةً سُودًا . و " الشَّرْجَةُ " بِفَتْحِ الشِّينِ الْمُعْجَمَةِ وَإِسْكَانِ الرَّاءِ وَبِالْجِيمِ : هِيَ مَسِيلُ الْمَاءِ .

**562** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

வனாந்திர பூமியில் ஒருவர் நடந்து சென்று கொண்டிருந்தபோது, ஒரு மேகத்திலிருந்து, "இன்னாரின் தோட்டத்திற்கு நீர் வழங்குவாயாக!" என்ற சப்தத்தை அம்மனிதர் கேட்டார். உடனே அந்த மேகம் நகர்ந்து சென்று, கறுப்புக் கற்கள் நிறைந்தபூமியில் மழையைக் கொட்டியது. உடனே அங்கிருந்து வாய்க்கால்களில் ஒன்று அத்தண்ணீரை நிரப்பிக் கொண்டு ஓட ஆரம்பித்தது. உடனே அந்த மனிதர் தண்ணீரை பின்தொடர்ந்து ஓடினார். அப்போது தண்ணீர் சென்றடையும் தோப்பில் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவர் தன் மண்வெட்டியால் தண்ணீரை தனது தோப்பின் பக்கமாக திருப்பிக் கொண்டிருந்தார். அம்மனிதர் தண்ணீரை திருப்பிக் கொண்டிருந்தவரிடம், "அல்லாஹ்வின் அடியாரே! உமது பெயர் என்ன?" என்று கேட்டார். அதற்கவர், 'இன்னார்' என தன் பெயரை அவர் கூறினார். அந்த பெயர், மேகத்தில் கேட்ட பெயர் போலவே இருந்தது. பின்னர் அவர் "அல்லாஹ்வின் அடியாரே! என் பெயர் பற்றி ஏன் கேட்கிறீர்?" என்று கேட்டார். அதற்கு அம்மனிதர், "இந்த தண்ணீரைத் தந்த மேகத்தில் இன்னாரின் தோட்டத்திற்கு தண்ணீர் வழங்கு! என்ற ஓர் சப்தத்தைக் கேட்டேன். அது உங்கள் பெயராக இருந்தது. இத்தோட்டத்தில் நீர் என்ன (நற்செயல்) செய்கிறீர்?" என்று கேட்டார். "நீர் கேட்டு விட்டதால் அதை நான் வெளியே கூறும் நிலையில் உள்ளேன். இதிலிருந்து (கிடைக்கும் விளைச்சலை மூன்று பங்காக்கி), அதில் ஒரு பாகத்தை தர்மம் வழங்குவேன். மற்றொன்றை நானும், என் குடும்பத்தாரும் சாப்பிடுவோம். மூன்றாவது பாகத்தை இதிலேயே (மறு விளைச்சலுக்குப்) போடுவேன்" என்று கூறினார். இதை நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2984)**

## ٦١ – بَابُ النَّهْيِ عَنِ البخل والشح

### பாடம் : 61 - கஞ்சத்தனம் கூடாது

**قَالَ اللَّهُ تَعَالَى : وَأَمَّا مَنْ بَخِلَ وَاسْتَغْنَى وَكَذَّبَ بِالْحُسْنَى فَسَنُيَسِّرُهُ لِلْعُسْرَى وَمَا يُغْنِي عَنْهُ مَالُهُ إِذَا تَرَدَّى . وَقَالَ تَعَالَى : وَمَنْ يُوقَ شُحَّ نَفْسِهِ فَأُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ .**

وَأَمَّا الأَحَادِيثُ فَتَقَدَّمَتْ جُمْلَةٌ مِنْهَا فِي الْبَابِ السَّابِقِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *எவர் கஞ்சத்தனம் செய்கின்றாரோ, மேலும் (தன் இறைவனைப்) பொருட்படுத்தாமல் நடந்தாரோ, இன்னும் நன்மையைப் பொய்யென நிராகரித்தாரோ அவருக்கு கடினமான வழியில் செல்வதற்கு நாம் வகை செய்வோம். அவனுடைய செல்வம் அவன் அழிந்து விடும்போது அவனுக்கு என்ன பயன் அளிக்கப்போகின்றது? (92:8-11)*

*... கஞ்சத்தனத்தை விட்டும் யார் தன்னைக் காப்பாற்றிக் கொள்கிறார்களோ, அவர்களே வெற்றி பெறக்கூடியவர்கள். (64:16)*

٥٦٣ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " اتَّقُوا الظُّلْمَ فَإِنَّ الظُّلْمَ ظُلُمَاتٌ يَوْمَ الْقِيَامَةِ وَاتَّقُوا الشُّحَّ فَإِنَّ الشُّحَّ أَهْلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ : حَمَلَهُمْ عَلَى أَنْ سَفَكُوا دِمَاءَهُمْ وَاسْتَحَلُّوا مَحَارِمَهُمْ " رَوَاهُ مُسْلِمٌ .

**563** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அநீதம் (அநியாயம்) செய்வதை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அநீதம் செய்வது, மறுமை நாளின் இருள்களாகும். கஞ்சத்தனத்தை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக கஞ்சத்தனம், உங்களுக்கு முன் வாழ்ந்தோரை அழித்துவிட்டது. அவர்கள் (கொலை மூலம்) தங்களின் ரத்தத்தை ஓட்டிக் கொள்ளவும், தங்களுக்குத் தடை செய்யப்பட்டதை ஆகுமாக்கிக் கொள்ளவும், அவர்களை அது தூண்டி விட்டது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2578)**

## ٦٢ – بَابُ الإِيثَار والمواسَاة

## பாடம் : 62 - அர்ப்பணம் செய்தல், துயர் போக்குதல்

قَالَ اللَّهُ تَعَالَى : وَيُؤْثِرُونَ عَلَى أَنْفُسِهِمْ وَلَوْ كَانَ بِهِمْ خَصَاصَةٌ . وَقَالَ تَعَالَى : وَيُطْعِمُونَ الطَّعَامَ عَلَى حُبِّهِ مِسْكِينًا وَيَتِيمًا وَأَسِيرًا إِلَى آخِرِ الأَيَاتِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *தங்களுக்குத் தேவை இருந்தாலும்கூட, தங்களை விடப் பிறருக்கே அவர்கள் முன்னுரிமை வழங்குகின்றார்கள். (59:9)*

*அவன் மீதுள்ள அன்பின் காரணமாக ஏழைக்கும், அநாதைக்கும், கைதிக்கும் அவர்கள் உணவளிக்கின்றார்கள். (76:8)*

٥٦٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : إِنِّي مَجْهُودٌ . فَأَرْسَلَ إِلَى بَعْضِ نِسَائِهِ فَقَالَتْ : وَالَّذِي بَعَثَكَ بِالْحَقِّ مَا عِنْدِي إِلاَّ مَاءٌ ثُمَّ أَرْسَلَ إِلَى أُخْرَى فَقَالَتْ مِثْلَ ذَلِكَ حَتَّى قُلْنَ كُلُّهُنَّ مِثْلَ ذَلِكَ : لاَ وَالَّذِي بَعَثَكَ بِالْحَقِّ مَا عِنْدِي إِلاَّ مَاءٌ . فَقَالَ النَّبِيُّ ﷺ : " مَنْ يُضِيفُ هَذَا اللَّيْلَةَ ؟ " فَقَالَ رَجُلٌ مِنَ الأَنْصَارِ : أَنَا يَا رَسُولَ اللَّهِ . فَانْطَلَقَ بِهِ إِلَى رَحْلِهِ فَقَالَ لاِمْرَأَتِهِ : أَكْرِمِي ضَيْفَ رَسُولِ اللَّهِ ﷺ . وَفِي رِوَايَةٍ قَالَ لاِمْرَأَتِهِ : هَلْ عِنْدَكِ شَيْءٌ ؟ فَقَالَتْ : لاَ إِلاَّ قُوتُ صِبْيَانِي . قَالَ : فَعَلِّلِيهِمْ بِشَيْءٍ وَإِذَا أَرَادُوا الْعَشَاءَ فَنَوِّمِيهِمْ وَإِذَا دَخَلَ ضَيْفُنَا فَأَطْفِئِي السِّرَاجَ وَأَرِيهِ أَنَّا نَأْكُلُ . فَقَعَدُوا وَأَكَلَ الضَّيْفُ وَبَاتَا طَاوِيَيْنِ فَلَمَّا أَصْبَحَ غَدَا عَلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : " لَقَدْ عَجِبَ اللَّهُ مِنْ صَنِيعِكُمَا بِضَيْفِكُمَا اللَّيْلَةَ " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**564** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, "நான் பசியாக உள்ளேன்" என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் தன் மனைவியரில் ஒருவரிடம் ஆள் அனுப்பினார்கள். "உங்களை உண்மையைக்

கொண்டு தன் தூதராக அனுப்பிய அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்னிடம் தண்ணீர் தவிர வேறு இல்லை" என்று அவர்களின் மனைவி கூறினார். பின்பு மற்றொரு மனைவியிடம் அனுப்பினார்கள். அதுபோலவே அவர்களும் கூறினார்கள். "உங்களை உண்மையைக் கொண்டு தன் தூதராக அனுப்பிய அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்னிடம் தண்ணீர் தவிர வேறு இல்லை" என்றே (அவர்கள் மனைவியர்) அனைவரும் கூறினர். பின்னர், "இன்றைய இரவு (இவரை) விருந்தாளியாக ஆக்கிக் கொள்பவர் யார்?" என்று தன் தோழர்களைப் பார்த்து நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அன்சாரிகளில் ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! நான் (ஏற்கிறேன்)" என்று கூறிவிட்டு, தன் வீட்டிற்குச் சென்றார். தன் மனைவியிடம், "நபி (ஸல்) அவர்களின் விருந்தாளியை நீ கண்ணியப் படுத்துவாயாக!" என்று கூறினார்.

மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது:

அவர் தன் மனைவியிடம், "உன்னிடம் எதுவும் உள்ளதா?" என்று கேட்டார். "என் குழந்தைகளுக்குரிய உணவைத்தவிர வேறு இல்லை" என்று அவர் மனைவி கூறினார். அதற்கு அவர், "ஏதேனும் அவர்களுக்குத் தந்திரம் செய்து, அவர்கள் இரவு உணவைக் கேட்டால், அவர்களைத் தூங்கச் செய்வாயாக! நம் விருந்தாளி வந்ததும், விளக்கை நீ அணைத்து விடு! நாம் சாப்பிடுவது போல் அவரிடம் காட்டிக் கொள்வோம்" என்று கூறினார். (அவர் வந்ததும்) அவர்கள் உட்கார்ந்தார்கள். விருந்தாளி சாப்பிட்டார். இருவரும் பசியாகவே இரவைக் கழித்தார்கள். காலை நேரம் வந்ததும், நபி (ஸல்) அவர்களிடம் சென்றார். அவரிடம், "நேற்று இரவு நீங்கள் இருவரும் உங்கள் விருந்தாளியிடம் நடந்து கொண்ட முறையால் அல்லாஹ் மிக மகிழ்ச்சி அடைந்துவிட்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் (வாழ்த்து)க் கூறினார்கள். **(புகாரி:3798. முஸ்லிம்:2054)**

٥٦٥ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " طَعَامُ الاثْنَيْنِ كَافِي الثَّلاَثَةِ . وَطَعَامُ الثَّلاَثَةِ كَافِي الأَرْبَعَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " طَعَامُ الْوَاحِدِ يَكْفِي الاثْنَيْنِ وَطَعَامُ الاثْنَيْنِ يَكْفِي الأَرْبَعَةِ وَطَعَامُ الأَرْبَعَةِ يَكْفِي الثَّمَانِيَةَ " .

**565** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இருவரின் உணவு, மூன்று பேருக்குப் போதுமானதாகும். மூன்றுபேர் உணவு, நான்கு பேருக்குப் போதுமானதாகும்" என்று நபி (ஸல்) கூறின்ார்கள். **(புகாரி:5392. முஸ்லிம்:2058)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது,

ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவரின் உணவு, இரண்டு பேருக்கு போதுமானதாகும். இரண்டு பேர் உணவு, நான்கு பேருக்குப் போதுமானதாகும். நான்கு பேர் உணவு எட்டுப் பேருக்கு போதுமானதாகும்" (பிஸ்மில்லாஹ் கூறி அனைவரும் சேர்ந்து சாப்பிடும் பொழுது அல்லாஹ் இவ்வாறு உணவில் பரக்கத்தை அருள்கிறான்) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2059)**

٥٦٦ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَيْنَمَا نَحْنُ فِي سَفَرٍ مَعَ النَّبِيِّ ﷺ إِذْ جَاءَ رَجُلٌ عَلَى رَاحِلَةٍ لَهُ فَجَعَلَ يَصْرِفُ بَصَرَهُ يَمِينًا وَشِمَالاً فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ كَانَ مَعَهُ فَضْلُ ظَهْرٍ فَلْيَعُدْ بِهِ عَلَى مَنْ لاَ ظَهْرَ لَهُ وَمَنْ كَانَ لَهُ فَضْلٌ مِنْ زَادٍ فَلْيَعُدْ بِهِ عَلَى مَنْ لاَ زَادَ لَهُ " . فَذَكَرَ مِنْ أَصْنَافِ الْمَالِ مَا ذَكَرَ حَتَّى رَأَيْنَا أَنَّهُ لاَ حَقَّ لأَحَدٍ مِنَّا فِي فَضْلٍ ! رَوَاهُ مُسْلِمٌ .

**566** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்த போது, தனக்குரிய வாகனத்தில் ஒருவர் வந்தார். அவர் தன் பார்வையை வலப்புறமும், இடப்புறமும் திருப்பிக் கொண்டிருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஒருவரிடம் வாகனத்தின் முதுகில் மேல் மிச்சமாக இடம் இருந்தால், வாகனமில்லாத ஒருவனுக்கு அதை அவர் கொடுக்கட்டும்! (அவரைத் தம் வாகனத்தில் ஏற்றிக் கொள்ளட்டும்). பயண உணவில் யாரிடம் அதிகமான உணவு உள்ளதோ, அவர் இல்லாதவருக்கு அதைக் கொடுக்கட்டும்!" என்று கூறினார்கள். இவ்வாறு பல பொருட்களையும் வகையிட்டுக் கூறினார்கள். எந்த அளவுக்கெனில், எங்களிடமுள்ள அதிகப்படியான பொருள்களில் எங்களில் எந்த ஒரவருக்கும் எந்த உரிமையும் இல்லை என்று நாங்கள் எண்ணும் அளவுக்குக் கூறினார்கள்."

**(முஸ்லிம்:1738)**

٥٦٧ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْد رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ امْرَأَةً جَاءَتْ إِلَى رَسُول اللَّه ﷺ بِبُرْدَة مَنْسُوجَة فَقَالَتْ : نَسَجْتهَا بِيَدِي لأَكْسُوكَهَا فَأَخَذَهَا النَّبِيُّ ﷺ مُحْتَاجًا إِلَيْهَا فَخَرَجَ إِلَيْنَا وَإِنَّهَا إِزَارُهُ فَقَالَ فُلاَنٌ : اُكْسُنِيهَا مَا أَحْسَنَهَا ! فَقَالَ : " نَعَمْ " . فَجَلَسَ النَّبِيُّ ﷺ فِي الْمَجْلِس ثُمَّ رَجَعَ فَطَوَاهَا ثُمَّ أَرْسَلَ بِهَا إِلَيْه ; فَقَالَ لَهُ الْقَوْمُ : مَا أَحْسَنْت ! لَبِسَهَا النَّبِيُّ ﷺ مُحْتَاجًا إِلَيْهَا ثُمَّ سَأَلْته وَعَلِمْت أَنَّهُ لاَ يَرُدُّ سَائِلاً فَقَالَ : إِنِّي وَاللَّهِ مَا سَأَلْته لأَلْبَسَهَا إِنَّمَا سَأَلْته لِتَكُونَ كَفَنِيَ . قَالَ سَهْلٌ : فَكَانَتْ كَفَنَهُ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**567** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நெய்யப்பட்ட ஒரு போர்வையை நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண் கொண்டு வந்து, "இதை நீங்கள் உடுத்திட வேண்டியே என் கையால் நெய்தேன்" என்று கூறினார். அப்பொழுது அந்த ஆடை நபி (ஸல்) அவர்களுக்கு தேவையுடையதாக இருந்தது. அவர்களும் அதைப் பெற்றுக் கொண்டார்கள். அந்த போர்வையை வேட்டியாக அணிந்து கொண்டு எங்களிடம் வந்தார்கள். அப்பொழுது ஒருவர், நபி (ஸல்) அவர்களிடம், "அதை எனக்கு உடுத்தத் தாருங்கள். அது மிகவும் அழகாக உள்ளது" என்று அந்த போர்வையைக் கேட்டார். நபி (ஸல்) அவர்களும், "சரி!" என்று கூறினார்கள். சபையில் (சிறிது நேரம்) நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். பின்பு எழுந்து தன் வீட்டிற்கு சென்றார்கள். அந்த ஆடையைக் (கழற்றிச்) சுருட்டி, அதை அவருக்கு கொடுத்தனுப்பினார்கள். பின்பு அங்குள்ள (நபித்தோழர்களின்) கூட்டத்தினர் அவரிடம், "நீர் நல்ல விதமாக நடந்து கொள்ளவில்லை. நபி (ஸல்) அவர்கள் அந்த ஆடையை தனக்கு வேண்டி(விரும்பி)யவராகவே அதை அணிந்திருந்தார்கள். அதை நீர் கேட்டுவிட்டீரே! அவர்கள் கேட்பவருக்கு மறுக்கமாட்டார்கள் என்பதை நீர் அறிவீர்கள்தானே?" என்று கூறினார்கள். அதற்கு அவர், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அதை அணிவதற்காக நான் கேட்கவில்லை. என் கஃபன் துணியாக அதை ஆக்கிக் கொள்ளவே நான் கேட்டேன்" என்று கூறினார். (அவர் விருப்பப்படி அவரது மரணத்தின்பொழுது) அந்த ஆடையே அவரது கஃபனாக அணிவிக்கப்பட்டது. **(புகாரி:1277)**

٥٦٨ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " إِنَّ الأَشْعَرِيِّينَ إِذَا أَرْمَلُوا فِي الْغَزْوِ أَوْ قَلَّ طَعَامُ عِيَالِهِمْ بِالْمَدِينَة جَمَعُوا مَا كَانَ عِنْدَهُمْ فِي ثَوْب وَاحِد ثُمَّ اقْتَسَمُوهُ بَيْنَهُمْ فِي إِنَاءٍ وَاحِدٍ بِالسَّوِيَّةِ فَهُمْ مِنِّي وَأَنَا مِنْهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " أَرْمَلُوا " : فَرَغَ زَادُهُمْ أَوْ قَارَبَ الْفَرَاغَ .

**568** அபூ மூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! 'அஷ்அர்' கூட்டத்தினர், போரில் தங்கள் உணவு தீர்ந்துவிட்டால் அல்லது அவர்களின் குடும்பத்தாரின் உணவு மதீனாவில் குறைந்து விட்டால், தங்களிடமுள்ள உணவு பொருட்கள்

அனைத்தையும் ஒரு துணியில் ஒன்று சேர்ப்பார்கள். பின்பு அதனை அவர்கள் தங்களுக்கு மத்தியில் ஒரு பாத்திரத்தில் சமமாகப் பங்கிட்டுக் கொள்வார்கள். அவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள். நான் அவர்களை சேர்ந்தவன்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2486. முஸ்லிம்:2500)**

## ٦٣ – بَاب اتنا فس في أمور الآخرة والاستكثار مما يُتبرك به

## பாடம் : 63 - மறுமைக்குரிய செயல்களில் ஆசை கொள்ளுதல். பரக்கத்தான பொருளை அதிகம் பெறுதல்.

قَالَ اللَّهُ تَعَالَى : وَفِي ذَٰلِكَ فَلْيَتَنَافَسِ الْمُتَنَافِسُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இது விஷயத்தில் (சுவனத்தின் விஷயத்தில்) ஆசை கொள்வோர், ஆசை கொள்ளட்டும்! (83:26)*

٥٦٩ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أُتِيَ بِشَرَابٍ فَشَرِبَ مِنْهُ وَعَنْ يَمِينِهِ غُلَامٌ وَعَنْ يَسَارِهِ الأَشْيَاخُ . فَقَالَ لِلْغُلَامِ : " أَتَأْذَنُ لِي أَنْ أُعْطِيَ هَؤُلَاءِ ؟ " فَقَالَ الْغُلَامُ : لَا وَاللَّهِ يَا رَسُولَ اللَّهِ لَا أُوثِرُ بِنَصِيبِي مِنْكَ أَحَدًا . فَتَلَّهُ رَسُولُ اللَّهِ ﷺ فِي يَدِهِ . مُتَّفَقٌ عَلَيْهِ . " تَلَّهُ " بِالتَّاءِ الْمُثَنَّاةِ فَوْقُ : أَيْ وَضَعَهُ وَهَذَا الْغُلَامُ هُوَ ابْنُ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ .

**569** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பானம் கொண்டு வரப்பட்டது. அவர்களும் அதை பருகினார்கள். (அவர்கள் பருகி முடித்தப்பின் மீதி பானம் இருந்தது.) அவர்களின் வலதுபுறத்தில் ஒரு சிறுவரும், இடது புறத்தில் வயதில் பெரியவர்களும் அமர்ந்திருந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் சிறுவரிடம் "இவர்களுக்கு நான் இதைக் கொடுக்க எனக்கு அனுமதிக்கிறாயா?'' என்று கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! மாட்டேன். உங்களிடமிருந்து எனக்கு உரிய பங்கை எவருக்கும் தரமாட்டேன்'' என்று அந்த சிறுவர் கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் அவரின் கையில் அந்த பானத்தை ஒப்படைத்தார்கள். **(புகாரி:2451. முஸ்லிம்:2030)**

٥٧٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ : " بَيْنَا أَيُّوبُ يَغْتَسِلُ عُرْيَانًا فَخَرَّ عَلَيْهِ جَرَادٌ مِنْ ذَهَبٍ فَجَعَلَ أَيُّوبُ يَحْثِي فِي ثَوْبِهِ فَنَادَاهُ رَبُّهُ عَزَّ وَجَلَّ : يَا أَيُّوبُ أَلَمْ أَكُنْ أَغْنَيْتُكَ عَمَّا تَرَى ؟ قَالَ : بَلَى وَعِزَّتِكَ وَلَكِنْ لَا غِنَى بِي عَنْ بَرَكَتِكَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**570** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருமுறை நபி அய்யூப் (அலை) அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் மீது தங்க வெட்டுக் கிளிகள் வந்து விழுந்தன. உடனே அய்யூப் நபி, அவைகளை தன் ஆடையில் நிரப்பிக் கொள்ள ஆரம்பித்தார்கள். அப்பொழுது அல்லாஹ் அவர்களை அழைத்து, "அய்யூபே! நீர் பார்க்கும் (இவ்வெட்டுக்கிளிகளை விட்டுத் தேவையற்ற) பெரும் செல்வச் சீமானாக உம்மை நான் ஆக்கவில்லையா?'' என்று கேட்டான். அதற்கு அவர்கள், "ஆம்! உன் கண்ணியத்தின் மீது சத்தியமாக! (என்னை நீ பெரும் செல்வந்தனாக ஆக்கி இருக்கிறாய்.) எனினும் உன் பரக்கத்தை (அபிவிருத்தியை) விட்டு தேவையற்றவனாக நான் இல்லை. (ஆகவே உன் அருட்கொடைகளான தங்க வெட்டுக்கிளிகளை நான் அள்ளிக் கொண்டேன்)'' என்று அய்யூப் நபி கூறினார்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3391)**

## ٦٤ – بابُ فضل الغَنيّ الشاكر، وَهُوَ مَنْ أخذ الْمَال منْ وجهه وصرفه في وجوهه المأمور بها

## பாடம் : 64 - நேர்மையான வழியில் சம்பாதித்து, கட்டளையிடப்பட்ட சரியான வழியில் செலவு செய்கின்ற நன்றியுள்ள பணக்காரரின் சிறப்பு.

قَالَ اللَّهُ تَعَالَى : فَأَمَّا مَنْ أَعْطَى وَاتَّقَى وَصَدَّقَ بِالْحُسْنَى فَسَنُيَسِّرُهُ لِلْيُسْرَى . وَقَالَ تَعَالَى : وَسَيُجَنَّبُهَا الأَتْقَى الَّذِي يُؤْتِي مَالَهُ يَتَزَكَّى وَمَا لأَحَد عِنْدَهُ مِنْ نِعْمَة تُجْزَى إِلاَّ ابْتِغَاءَ وَجْه رَبِّه الأَعْلَى وَلَسَوْفَ يَرْضَى . وَقَالَ تَعَالَى : إِنْ تُبْدُوا الصَّدَقَات فَنِعِمَّا هِيَ وَإِنْ تُخْفُوهَا وَتُؤْتُوهَا الْفُقَرَاءَ فَهُوَ خَيْرٌ لَكُمْ وَيُكَفِّرُ عَنْكُمْ مِنْ سَيِّئَاتِكُمْ وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ . وَقَالَ تَعَالَى : لَنْ تَنَالُوا الْبِرَّ حَتَّى تُنْفِقُوا مِمَّا تُحِبُّونَ وَمَا تُنْفِقُوا مِنْ شَيْءٍ فَإِنَّ اللَّهَ بِهِ عَلِيمٌ . وَالأَيَاتُ فِي فَضْلِ الأَنْفَاقِ فِي الطَّاعَات كَثِيرَةٌ مَعْلُومَةٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *ஒருவர் தர்மம் செய்து, அல்லாஹ்வைப் பயந்து, நல்ல செயலை உண்மைபடுத்தினால், அவருக்கு இலகுவான வழியில் செல்வதற்கு (சொர்க்கம் செல்லும் வழியை) நாம் வகை செய்வோம். (92:5-7)*

*இறையச்சமுடையவன் (நரகிலிருந்து) தன்னைக் காப்பாற்றிக் கொள்வான். அவன் தன் பொருளைத் தன்னை தூய்மையாக்கிட வழங்குவான். உயர்வான தன் இறைவனின் திருப்தியை விரும்பியே தவிர, நன்றி கூறப்படத்தக்க அருள் எதுவும் அவனிடம் எவருக்கும் இல்லை. மேலும் அவன் திருப்தி அடைவான். (92:17-21)*

*தர்மங்களை நீங்கள் வெளிப்படுத்தினால், அது நல்லதாகிவிட்டது. நீங்கள் அதை மறைத்து, ஏழைகளுக்கு அதை வழங்கினாலும், அதுவும் உங்களுக்குச் சிறந்ததே. மேலும், அது உங்களை விட்டும் உங்கள் தீமைகளில் சிலவற்றை அழித்துவிடும். அல்லாஹ் நீங்கள் செய்யக்கூடியதை நன்கு அறிபவன். (2:271)*

*நீங்கள் விரும்பியதிலிருந்து நீங்கள் செலவு செய்யும் வரை நீங்கள் நன்மை செய்தவர்களாகிவிட மாட்டீர்கள். நீங்கள் எதை செலவு செய்தாலும், நிச்சயமாக அல்லாஹ் அதை நன்கு அறிவான். (3:92)*

٥٧١ – وَعَنْ عَبْد اللَّه بْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " لاَ حَسَدَ إِلاَّ فِي اثْنَتَيْنِ : رَجُلٌ آتَاهُ اللَّهُ مَالاً فَسَلَّطَهُ عَلَى هَلَكَته فِي الْحَقِّ وَرَجُلٌ آتَاهُ اللَّهُ حِكْمَةً فَهُوَ يَقْضِي بِهَا وَيُعَلِّمُهَا " . مُتَّفَقٌ عَلَيْه . وَتَقَدَّمَ شَرْحُهُ قَرِيبًا .

**571** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இருவரின் விஷயத்தில் பொறாமை என்பது கிடையாது. (1) யாருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கி, அவர் அதனை உண்மையின் வழியில் செலவழித்துக் கொண்டிருக்கிறாரோ அம்மனிதர். (2) யாருக்கு அல்லாஹ் அறிவு ஞானத்தை வழங்கி, அவர் அதனைக் கொண்டு (மக்களுக்கு நீதமாகத்) தீர்ப்பு செய்யவும், கற்றுக் கொடுக்கவும் செய்கிறாரோ அம்மனிதர். (இவ்விருவர் போன்று ஆக மற்றவர் ஆசைப்படலாம். அது பொறாமையாகாது.)'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:73. முஸ்லிம்:816)**

٥٧٢ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ حَسَدَ إِلاَّ فِي اثْنَتَيْنِ : رَجُلٌ آتَاهُ اللَّهُ الْقُرْآنَ فَهُوَ يَقُومُ بِهِ آنَاءَ اللَّيْلِ وَآنَاءَ النَّهَارِ ; وَرَجُلٌ آتَاهُ اللَّهُ مَالاً فَهُوَ يُنْفِقُهُ آنَاءَ اللَّيْلِ وَآنَاءَ النَّهَارِ " . مُتَّفَقٌ عَلَيْه . " الأَنَاءُ " : السَّاعَاتُ .

**572** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இருவரின் விஷயத்தில் பொறாமை இல்லை. (1) ஒருவருக்கு அல்லாஹ் குர்ஆனை(ப்பற்றிய அறிவை) தந்துள்ளான். அவர் அதை இரவிலும் பகலிலும் ஓதுகிறார். பிறருக்கும் கற்றுத்தந்து அதனை நிலைநாட்டுகிறார். (2) ஒருவருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கி உள்ளான். அவர் அதை இரவிலும், பகலிலும் (அல்லாஹ்வின் பாதையில்) செலவு செய்கிறார். (இவ்விருவர் போன்று ஆக மற்றவர் ஆசைப்படலாம். அது பொறாமையாகாது.)'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5025. முஸ்லிம்:815)**

٥٧٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ فُقَرَاءَ الْمُهَاجِرِينَ أَتَوْا رَسُولَ اللَّهِ ﷺ فَقَالُوا : ذَهَبَ أَهْلُ الدُّثُورِ بِالدَّرَجَاتِ الْعُلَى وَالنَّعِيمِ الْمُقِيمِ فَقَالَ : " وَمَا ذَاكَ " ؟ فَقَالُوا : يُصَلُّونَ كَمَا نُصَلِّي وَيَصُومُونَ كَمَا نَصُومُ وَيَتَصَدَّقُونَ وَلاَ نَتَصَدَّقُ وَيُعْتِقُونَ وَلاَ نُعْتِقُ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَفَلاَ أُعَلِّمُكُمْ شَيْئًا تُدْرِكُونَ بِهِ مَنْ سَبَقَكُمْ وَتَسْبِقُونَ بِهِ مَنْ بَعْدَكُمْ وَلاَ يَكُونُ أَحَدٌ أَفْضَلَ مِنْكُمْ إِلاَّ مَنْ صَنَعَ مِثْلَ مَا صَنَعْتُمْ ؟ " . قَالُوا : بَلَى يَا رَسُولَ اللَّهِ قَالَ : " تُسَبِّحُونَ وَتُكَبِّرُونَ وَتَحْمَدُونَ دُبُرَ كُلِّ صَلاَةٍ ثَلاَثًا وَثَلاَثِينَ مَرَّةً " . فَرَجَعَ فُقَرَاءُ الْمُهَاجِرِينَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالُوا : سَمِعَ إِخْوَانُنَا أَهْلُ الأَمْوَالِ بِمَا فَعَلْنَا فَفَعَلُوا مِثْلَهُ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ :"ذَلِكَ فَضْلُ اللَّهِ يُؤْتِيهِ مَنْ يَشَاءُ".مُتَّفَقٌ عَلَيْهِ. وَهَذَا لَفْظُ رِوَايَةِ مُسْلِمٍ." الدُّثُورُ " : الأَمْوَالُ الْكَثِيرَةُ وَاللَّهُ أَعْلَمُ.

**573** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முஹாஜிர்களில் உள்ள ஏழைகள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "(எங்களில்) பணக்காரர்கள், உயர்ந்த தகுதிகளையும், நிலையான சொர்க்கத்தையும் பெற்றுக் கொண்டார்கள்'' என்று கூறினார்கள். "அது என்ன?'' என்று நபி (ஸல்) விபரம் கேட்டார்கள். அதற்கு அத்தோழர்கள், "நாங்கள் தொழுவது போலவே (செல்வந்தர்களான) அவர்களும் தொழுகிறார்கள். நாங்கள் நோன்பு வைப்பது போலவே அவர்களும் நோன்பு வைக்கிறார்கள். அவர்கள் தர்மம் செய்கிறார்கள். ஆனால் நாங்கள் (ஏழைகளாக இருப்பதால்) தர்மம் வழங்குவதில்லை. அவர்கள் அடிமைகளை விடுதலை செய்கிறார்கள். நாங்கள் விடுதலை செய்வதில்லை. (ஆகவே அவர்கள் எங்களை விட நன்மைகளில் உயர்ந்து நிற்கிறார்கள்)'' என்று கூறினார்கள். உடனே, நபி (ஸல்) அவர்கள், "உங்களுக்கு முந்திவிட்டவர்களை நீங்கள் அடைந்து கொள்ளவும், உங்களுக்குப்பின் வருவோரை நீங்கள் முந்திக் கொள்ளவும் ஓர் விஷயத்தை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? நீங்கள் செய்வது போல் ஒருவர் செய்தாலே தவிர எவரும் உங்களைவிடச் சிறந்தவராக ஆக முடியாது'' என்று கூறினார்கள். உடனே அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! சரி'' என்றார்கள். "நீங்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் 33 தடவை சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், அல்லாஹு அக்பர் கூறுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். முஹாஜிர்களில் உள்ள ஏழைகள், நபி (ஸல்) அவர்களிடம் மீண்டும் வந்து, "எங்களின் (பணக்கார) சகோதரர்கள் எங்களின் செயல்களை கேள்விப்பட்டு, அது போன்றே அவர்களும் செய்கிறார்கள்'' என்று கூறினார்கள். "அது அல்லாஹ் தான் விரும்பியோருக்குத் தருகின்ற அருட் கொடையாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:843. முஸ்லிம்:595. இது முஸ்லிமில் உள்ள அறிவிப்பின் வாசகமாகும்)**

## ٦٥ – بابُ ذكر الموت وقصر الأمل

## பாடம் : 65 - மரணத்தை நினைவுகூரல், மேலெண்ணங்களை குறைத்தல்.

قَالَ اللَّهُ تَعَالَى : كُلُّ نَفْسٍ ذَائِقَةُ الْمَوْتِ وَإِنَّمَا تُوَفَّوْنَ أُجُورَكُمْ يَوْمَ الْقِيَامَةِ فَمَنْ زُحْزِحَ عَنِ النَّارِ وَأُدْخِلَ الْجَنَّةَ فَقَدْ فَازَ وَمَا الْحَيَاةُ الدُّنْيَا إِلاَّ مَتَاعُ الْغُرُورِ . وَقَالَ تَعَالَى : وَمَا تَدْرِي نَفْسٌ مَاذَا تَكْسِبُ غَدًا وَمَا تَدْرِي نَفْسٌ بِأَيِّ أَرْضٍ تَمُوتُ . وَقَالَ تَعَالَى : فَإِذَا جَاءَ أَجَلُهُمْ لاَ يَسْتَأْخِرُونَ سَاعَةً وَلاَ يَسْتَقْدِمُونَ . وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لاَ تُلْهِكُمْ

أَمْوَالُكُمْ وَلاَ أَوْلاَدُكُمْ عَنْ ذِكْرِ اللَّه وَمَنْ يَفْعَلْ ذَلِكَ فَأُولَئِكَ هُمُ الْخَاسِرُونَ وَأَنْفِقُوا مِنْ مَا رَزَقْنَاكُمْ مِنْ قَبْلِ أَنْ يَأْتِيَ أَحَدَكُمُ الْمَوْتُ فَيَقُولَ رَبِّ لَوْلاَ أَخَّرْتَنِي إِلَى أَجَلٍ قَرِيبٍ فَأَصَّدَّقَ وَأَكُنْ مِنَ الصَّالِحِينَ وَلَنْ يُؤَخِّرَ اللَّهُ نَفْسًا إِذَا جَاءَ أَجَلُهَا وَاللَّهُ خَبِيرٌ بِمَا تَعْمَلُونَ . وَقَالَ تَعَالَى : حَتَّى إِذَا جَاءَ أَحَدَهُمُ الْمَوْتُ قَالَ رَبِّ ارْجِعُونِ لَعَلِّي أَعْمَلُ صَالِحًا فِيمَا تَرَكْتُ كَلاَّ إِنَّهَا كَلِمَةٌ هُوَ قَائِلُهَا وَمِنْ وَرَائِهِمْ بَرْزَخٌ إِلَى يَوْمِ يُبْعَثُونَ فَإِذَا نُفِخَ فِي الصُّورِ فَلاَ أَنْسَابَ بَيْنَهُمْ يَوْمَئِذٍ وَلاَ يَتَسَاءَلُونَ فَمَنْ ثَقُلَتْ مَوَازِينُهُ فَأُولَئِكَ هُمُ الْمُفْلِحُونَ وَمَنْ خَفَّتْ مَوَازِينُهُ فَأُولَئِكَ الَّذِينَ خَسِرُوا أَنْفُسَهُمْ فِي جَهَنَّمَ خَالِدُونَ تَلْفَحُ وُجُوهَهُمُ النَّارُ وَهُمْ فِيهَا كَالِحُونَ أَلَمْ تَكُنْ آيَاتِي تُتْلَى عَلَيْكُمْ فَكُنْتُمْ بِهَا تُكَذِّبُونَ إِلَى قَوْلِهِ تَعَالَى : كَمْ لَبِثْتُمْ فِي الأَرْضِ عَدَدَ سِنِينَ

قَالُوا لَبِثْنَا يَوْمًا أَوْ بَعْضَ يَوْمٍ فَاسْأَلِ الْعَادِّينَ قَالَ إِنْ لَبِثْتُمْ إِلاَّ قَلِيلاً لَوْ أَنَّكُمْ كُنْتُمْ تَعْلَمُونَ أَفَحَسِبْتُمْ أَنَّمَا خَلَقْنَاكُمْ عَبَثًا وَأَنَّكُمْ إِلَيْنَا لاَ تُرْجَعُونَ . وَقَالَ تَعَالَى : أَلَمْ يَأْنِ لِلَّذِينَ آمَنُوا أَنْ تَخْشَعَ قُلُوبُهُمْ لِذِكْرِ اللَّه وَمَا نَزَلَ مِنَ الْحَقِّ وَلاَ يَكُونُوا كَالَّذِينَ أُوتُوا الْكِتَابَ مِنْ قَبْلُ فَطَالَ عَلَيْهِمُ الأَمَدُ فَقَسَتْ قُلُوبُهُمْ وَكَثِيرٌ مِنْهُمْ فَاسِقُونَ . وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** ஒவ்வொரு மனிதனும் மரணத்தைச் சுவைக்க வேண்டியவனாகவே இருக்கின்றான். நீங்கள் அனைவரும் உங்களுடைய கூலியை மறுமை நாளன்றுதான் முழுமையாகப் பெறுவீர்கள். (அங்கு) எவன் நரக நெருப்பிலிருந்து காப்பாற்றப்பட்டு சுவனத்தில் நுழைவிக்கப்படுகின்றானோ, அவனே உண்மையில் வெற்றி பெற்றவன் ஆவான்! இவ்வுலக வாழ்வென்பது ஏமாற்றக்கூடிய அற்ப இன்பமேயன்றி வேறில்லை! (3:185)

(இறுதித் தீர்ப்புக்குரிய) அந்த வேளையைப் பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே உள்ளது. அவனே மழையைப் பொழிவிக்கின்றான். அன்னையரின் கருவறைகளில் வளர்ந்து கொண்டிருப்பவை என்ன என்பதையும் அவனே அறிவான். எந்த மனிதனும், அவன் நாளை என்ன சம்பாதிக்கப் போகின்றான் என்பதை அறிவதில்லை. தான் எந்தப் பூமியில் மரணடைவோம் என்பதும் எந்த மனிதனுக்கும் தெரியாது. திண்ணமாக, அல்லாஹ் யாவற்றையும் நன்கு அறிபவனாகவும் தெரிந்தவனாகவும் இருக்கின்றான். (31:34)

மனிதர்கள் இழைக்கும் அக்கிரமங்களுக்காக அல்லாஹ் அவர்களை (உடனுக்குடன்) பிடிப்பதா யிருந்தால், பூமியில் எந்த உயிரினத்தையும் அவன் விட்டு வைத்திருக்க மாட்டான். ஆயினும், ஒரு குறிப்பிட்ட தவணை வரை அவர்களுக்கு அவன் அவகாசம் அளிக்கின்றான். அந்த நேரம் வந்துவிடுமாயின், ஒரு வினாடிகூட அவர்களால் பிந்தவும் முடியாது, முந்தவும் முடியாது. (16:61)

இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்கள் செல்வங்களும், உங்கள் பிள்ளைகளும் அல்லாஹ்வை நினைவுகூர்வதைவிட்டும் உங்களை அலட்சியத்தில் ஆழ்த்திவிட வேண்டாம். எவர்கள் அவ்வாறு செய்கிறார்களோ, அவர்கள்தாம் நட்டமடைந்தவர்கள்.

நாம் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து நீங்கள் செலவு செய்யுங்கள். உங்களில் எவருக்கேனும் மரண நேரம் வருவதற்கு முன்பாக! மேலும், அந்த நேரத்தில் அவர் கூறுவார், "என் அதிபதியே! நீ எனக்கு இன்னும் சிறிது காலம் அவகாசம் அளிக்கக்கூடாதா! நான் தானதர்மம் செய்வேனே! நல்லோர்களில் ஒருவனாகி விடுவேனே!" என்று அவன் கூறுவான்.

ஆனால், ஒருவருக்கு அவர் செயல்படுவதற்கான அவகாசம் முடிவடையும் நேரம் வந்து விட்டாலோ எந்த ஒரு மனிதனுக்கும் மேலும் கால அவகாசத்தை அல்லாஹ் நிச்சயமாக அளிப்பதில்லை. மேலும், நீங்கள் என்னென்ன செய்து கொண்டிருக்கின்றீர்களோ, அவற்றை அல்லாஹ் நன்கறிபவனாக இருக்கின்றான். (63:9-11)

(இம்மக்கள் தம் செயல்களைவிட்டு விலகிக் கொள்ளவே மாட்டார்கள்) இறுதியில் அவர்களில் எவருக்கேனும் மரணம் வந்துவிடுமானால், "என் இறைவனே! நான் விட்டு வந்துள்ள உலகுக்கு என்னைத் திரும்ப அனுப்புவாயாக! அங்கு நான் நற்செயல் புரிவேனே!" என்று கூறத் தொடங்குவான். அவ்வாறு ஒருபோதும் நடக்காது. இது அவன் பிதற்றிக் கொண்டிருக்கின்ற வெறும் வார்த்தைகள்தாம்! (இறந்து போகும்) இவர்கள் அனைவருக்கும் பின்னால், "பர்ஸக்"- திரையாக இருக்கின்றது; இவர்கள் மீண்டும் உயிர்த்தெழுப்பப்படும் நாள் வரையில்! பிறகு, சூர் (எக்காளம்) ஊதப்பட்டதும், அவர்களிடையே எந்த உறவுகளும் அந்த நாளில் இருக்காது. ஒருவருக்கொருவர் விசாரித்துக் கொள்ளவும் மாட்டார்கள்.

(அவ்வேளை) எவர்களுடைய (நன்மையின்) எடைத் தட்டுகள் கனத்திருக்குமோ, அவர்களே வெற்றி பெறுவார்கள். எவர்களுடைய எடைத்தட்டுகள் இலேசாக இருக்குமோ, அவர்கள் தங்களைத் தாங்களே இழப்புக்கு ஆளாக்கிக் கொண்டவர்களாவர். அவர்கள் நரகத்தில் நிரந்தரமாக இருப்பார்கள். நெருப்பு அவர்களுடைய முகங்களின் தோலைப் பொசுக்கித் தின்றுவிடும். மேலும், அங்கே அவர்களின் தாடைகள் வெளிப்பட்டுவிடும்.

"என்னுடைய வசனங்கள் உங்களுக்கு ஓதிக் காண்பிக்கப்பட்டபோது, அவற்றைப் பொய்யென்று கூறிய மக்கள் நீங்கள் அல்லவா?" அதற்கு அவர்கள் கூறுவர், "எங்கள் இறைவனே! எங்களின் துர்ப்பாக்கியம் எங்களை அமுக்கிவிட்டிருந்தது. உண்மையிலேயே நாங்கள் வழி தவறிய மக்களாகவே இருந்தோம்."

"எங்கள் இறைவனே! (இப்பொழுது) எங்களை இதிலிருந்து வெளியேற்றி விடு. நாங்கள் மீண்டும் (இவ்வாறு) தவறு செய்தால் நிச்சயம் நாங்கள் அநீதிக்காரர்களாவோம்." அல்லாஹ் பதிலளிப்பான், "விலகிச் செல்லுங்கள் என் எதிரிலிருந்து! அதிலேயே வீழ்ந்துகிடங்கள்! என்னிடம் பேசாதீர்கள்." என் அடியார்களில் சிலர், "எங்கள் இறைவனே! நாங்கள் நம்பிக்கை கொண்டோம். எனவே, எங்களை நீ மன்னித்து எங்களுக்கு கருணை புரிவாயாக! கருணை புரிவோரிலெல்லாம் நீயே சிறந்த கருணையாளன்" என்று இறைஞ்சிக் கொண்டிருந்தார்கள். அப்போது நீங்கள் அவர்களை ஏளனம் செய்து கொண்டிருந்தீர்கள். எதுவரையெனில், அவர்கள் மீது நீங்கள் கொண்டிருக்கும் பகைமை, நான் ஒருவன் இருக்கின்றேன் என்பதையே உங்களை மறக்கச் செய்து விட்டது. மேலும், நீங்கள் அவர்களைக் குறித்து சிரித்துக் கொண்டி ருந்தீர்கள். அவர்கள் சகித்துக் கொண்டதற்காக இன்று நான் இந்தக் கூலியை அளிக்கின்றேன். அதாவது, அவர்களே வெற்றி பெற்றவர்கள். பிறகு, அல்லாஹ் (அவர்களிடம்), "நீங்கள் பூமியில் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தீர்கள்?" என்று கேட்பான்.

அதற்கவர்கள், "ஒரு நாள் அல்லது ஒரு நாளின் கொஞ்சநேரம் அங்கு நாங்கள் தங்கியிருந்தோம். கணக்கிடுவோரிடம் கேட்பாயாக!" என்று கூறுவார்கள். அல்லாஹ் கூறுவான், "நீங்கள் சிறிது காலமே தங்கியிருந்தீர்கள்! (இதனை அப்போது) நீங்கள் அறிந்திருந்தால் எத்தனை நன்றாய் இருந்திருக்கும்!"

"நாம் உங்களை வீணாகவே படைத்துள்ளோம் என்றும் நம்மிடம் நீங்கள் திரும்பிக் கொண்டு வரப்படவேமாட்டீர்கள் என்றும் எண்ணிக் கொண்டிருந்தீர்களா, என்ன?" (23:99-115)

நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உள்ளங்கள் அல்லாஹ்வின் நினைவினால் உருகுவதற்கும், அவன் இறக்கி வைத்த சத்தியத்தின் முன் பணிவதற்கும் நேரம் இன்னும் வரவில்லையா? மேலும், முன்னர் வேதம் வழங்கப்பட்டவர்களைப் போன்று அவர்கள் ஆகிவிட வேண்டாம். (பிறகு)

*நீண்டகாலம் அவர்கள் மீது உருண்டு ஓடிவிட்ட பொழுது, அவர்களின் இதயங்கள் இறுகிப்போய் விட்டிருக்கின்றனர். (57:16)*

٥٧٤ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : أَخَذَ رَسُولُ اللَّهِ ﷺ بِمَنْكِبَيَّ فَقَالَ : " كُنْ فِي الدُّنْيَا كَأَنَّكَ غَرِيبٌ أَوْ عَابِرُ سَبِيلٍ " . وَكَانَ ابْنُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا يَقُولُ : " إِذَا أَمْسَيْتَ فَلاَ تَنْتَظِرِ الصَّبَاحَ وَإِذَا أَصْبَحْتَ فَلاَ تَنْتَظِرِ الْمَسَاءَ وَخُذْ مِنْ صِحَّتِكَ لِمَرَضِكَ وَمِنْ حَيَاتِكَ لِمَوْتِكَ " . رَوَاهُ الْبُخَارِيُّ . قَالُوا فِي شَرْحِ هَذَا الْحَدِيثِ : مَعْنَاهُ : لاَ تَرْكَنْ إِلَى الدُّنْيَا وَلاَ تَتَّخِذْهَا وَطَنًا وَلاَ تُحَدِّثْ نَفْسَكَ بِطُولِ الْبَقَاءِ فِيهَا وَلاَ بِالاعْتِنَاءِ بِهَا وَلاَ تَتَعَلَّقْ مِنْهَا إِلاَّ بِمَا يَتَعَلَّقُ بِهِ الْغَرِيبُ فِي غَيْرِ وَطَنِهِ وَلاَ تَشْتَغِلْ فِيهَا بِمَا لاَ يَشْتَغِلُ بِهِ الْغَرِيبُ الَّذِي يُرِيدُ الذَّهَابَ إِلَى أَهْلِهِ . وَبِاللَّهِ التَّوْفِيقُ .

**574** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என் தோள் பட்டையைப் பிடித்துக் கொண்டு, "ஒரு பயணியாகவோ அல்லது பாதையைக் கடந்து செல்பவராகவோ நீர் இந்த உலகில் இருந்து கொள்வீராக" என்று கூறினார்கள்.

"நீர் மாலை நேரத்தில் இருந்தால் காலை நேரத்தை எதிர்பார்க்காதீர்! நீர் காலை நேரத்தில் இருந்தால் மாலை நேரத்தை எதிர்பார்க்காதீர்! உம் நோய் (நிலையை கருத்தில்) கொண்டு, உம் உடல் நிலையையும், நீர் இறப்பதையும் (கருத்தில்) கொண்டு உம் உயிர் வாழும் காலத்தையும் பயன்படுத்திக் கொள்வீராக!" (என்று இப்னு உமர் (ரழி) அவர்கள் கூறுபவர்களாக இருந்தார்கள்.) **(புகாரி:6416)**

٥٧٥ – وَعَنْهُ ( ابْنِ عُمَرَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَا حَقُّ امْرِئٍ مُسْلِمٍ لَهُ شَيْءٌ يُوصِي فِيهِ يَبِيتُ لَيْلَتَيْنِ إِلاَّ وَوَصِيَّتُهُ مَكْتُوبَةٌ عِنْدَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . هَذَا لَفْظُ الْبُخَارِيِّ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : " يَبِيتُ ثَلاَثَ لَيَالٍ " . قَالَ ابْنُ عُمَرَ : مَا مَرَّتْ عَلَيَّ لَيْلَةٌ مُنْذُ سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ ذَلِكَ إِلاَّ وَعِنْدِي وَصِيَّتِي .

**575** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமிடம் அவன் 'வஸிய்யத்' (மரண சாசனம்) செய்ய வேண்டிய பொருள் (சொத்து, அமானிதம், கடன், கொடுக்கல் வாங்கல் போன்றவை) ஏதேனும் இருந்து அதில் தன்னுடைய 'வஸிய்யத்'தை தன்னிடம் எழுதிவைக்கப்படாமல், இரண்டு இரவுகளைக் கழிப்பது அவனுக்கு பொருத்தமானதன்று" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2738)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் "மூன்று இரவுகள் வரை" என உள்ளது.

"நான் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்டதிலிருந்து ஒரு இரவு கழியும் முன்பாகவே, என் வஸிய்யத்தை (எழுதி) என்னிடம் வைத்துக் கொண்டேன்" என்றும் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள். **(முஸ்லிம்:1627)**

٥٧٦ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : خَطَّ النَّبِيُّ ﷺ خُطُوطًا فَقَالَ : " هَذَا الأَنْسَانُ وَهَذَا أَجَلُهُ . فَبَيْنَمَا هُوَ كَذَلِكَ إِذْ جَاءَ الْخَطُّ الأَقْرَبُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**576** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் சில கோடுகளைப் போட்டார்கள். பிறகு, "இது மனிதன். இது அவனுடைய (காலத்) தவணை. அவன் இவ்வாறு இருக்கும் போது (அவன் தன் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கும்போது) அவனுக்கு நெருக்கமான (மரணக்) கோடு (அவனிடம்) வந்துவிடுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6418)**

٥٧٧ - وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : " خَطَّ النَّبِيُّ ﷺ خَطًّا مُرَبَّعًا وَخَطَّ خَطًّا فِي الْوَسَطِ خَارِجًا مِنْهُ وَخَطَّ خُطُطًا صِغَارًا إِلَى هَذَا الَّذِي فِي الْوَسَطِ مِنْ جَانِبِهِ الَّذِي فِي الْوَسَطِ فَقَالَ : هَذَا الأِنْسَانُ وَهَذَا أَجَلُهُ مُحِيطًا بِهِ - أَوْ قَدْ أَحَاطَ بِهِ - وَهَذَا الَّذِي هُوَ خَارِجٌ أَمَلُهُ وَهَذِهِ الْخُطُطُ الصِّغَارُ الأَعْرَاضُ : فَإِنْ أَخْطَأَهُ هَذَا نَهَشَهُ هَذَا وَإِنْ أَخْطَأَهُ هَذَا نَهَشَهُ هَذَا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**577** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை ஒரு சதுரமான கட்டம் போட்டார்கள். அதன் நடுவில் அதைத் தாண்டிச் செல்லும் ஒரு கோட்டைப் போட்டார்கள். நடுவில் உள்ள கோட்டின் ஓரத்திலிருந்து நடுக்கோட்டை நோக்கி சிறுசிறு கோடுகளைப் போட்டார்கள். பின்னர், “இது (கோட்டின் உட்புறம்) மனிதன். இது (நாற்புறமும் சூழ்ந்திருக்கும் கோடுகள்) அவனுடைய தவணையாகும். இச்சதுர வட்டத்தை விட்டு வெளியேறியுள்ள இந்தக் கோடு அவனுடைய மேலெண்ணகள் (ஆசைகள்) ஆகும். இந்த சிறிய கோடுகள் அவனுக்கு ஏற்படும் சோதனைகளாகும். இது (ஒரு சோதனை) அவனை விட்டுவிட்டாலும் இது (அடுத்தது) அவனைப் பிடித்துக் கொள்ளும். இது (மற்றொரு சோதனை) அவனை விட்டு விட்டாலும், இது (அதற்கடுத்த சோதனை) அவனைப் பிடித்துக் கொள்ளும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6417)**

இதுதான் அந்த கட்டத்தின் தோற்றமாகும் :




٥٧٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " بَادِرُوا بِالأَعْمَالِ سَبْعًا : هَلْ تَنْتَظِرُونَ إِلاَّ فَقْرًا مُنْسِيًا أَوْ غِنًى مُطْغِيًا أَوْ مَرَضًا مُفْسِدًا أَوْ هَرَمًا مُفْنِدًا أَوْ مَوْتًا مُجْهِزًا أَوْ الدَّجَّالَ فَشَرٌّ غَائِبٌ يُنْتَظَرُ أَوْ السَّاعَةَ فَالسَّاعَةُ أَدْهَى وَأَمَرُّ ؟ ! " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**578** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஏழு காரியங்களுக்கு முன் நற்செயல்களை தீவிரப்படுத்துங்கள்.

“(1) மறதியை ஏற்படுத்தும் வறுமை (2) தவறு செய்யத் தூண்டும் செல்வம் (3) உடலில் கெடுதலை உண்டாக்கும் நோய் (4) பேச்சை குழறச் செய்யும் முதுமை (5) விரைந்து வரும் மரணம் (6) எதிர்பார்க்கப்படும் மறைவானவற்றில் மிக(ப் பெரும்) தீமையான தஜ்ஜால் (7) மிகவும் கடினமானதும், மிகக் கசப்பானதுமான மறுமை நாள் ஆகிய இந்த ஏழு வகையானவை” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2306. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٧٩ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " أَكْثِرُوا مِنْ ذِكْرِ هَاذِمِ اللَّذَّاتِ " يَعْنِي الْمَوْتَ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**579** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இன்பங்களைத் தகர்த்து எறியக் கூடியதை (அதாவது மரணத்தை) நினைவுகூர்வதை அதிகமாக்கிக் கொள்ளுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2307. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٥٨٠ – وَعَنْ أُبَيِّ بْنِ كَعْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا ذَهَبَ ثُلُثُ اللَّيْلِ قَامَ فَقَالَ : " يَا أَيُّهَا النَّاسُ اذْكُرُوا اللَّهَ جَاءَتِ الرَّاجِفَةُ تَتْبَعُهَا الرَّادِفَةُ جَاءَ الْمَوْتُ بِمَا فِيهِ جَاءَ الْمَوْتُ بِمَا فِيهِ ! " قُلْت : يَا رَسُولَ اللَّهِ إِنِّي أُكْثِرُ الصَّلَاةَ عَلَيْك فَكَمْ أَجْعَلُ لَك مِنْ صَلَاتِي ؟ فَقَالَ : " مَا شِئْت " . قُلْت : الرُّبُعَ ؟ قَالَ : " مَا شِئْت فَإِنْ زِدْت فَهُوَ خَيْرٌ لَك " . قُلْت : فَالنِّصْفُ ؟ قَالَ : " مَا شِئْت فَإِنْ زِدْت فَهُوَ خَيْرٌ لَك " . قُلْت : فَالثُّلُثَيْنِ ؟ قَالَ : " مَا شِئْت فَإِنْ زِدْت فَهُوَ خَيْرٌ لَك " . قُلْت : أَجْعَلُ لَك صَلَاتِي كُلَّهَا ؟ قَالَ : " إِذَنْ تُكْفَى هَمَّك وَيُغْفَرَ لَك ذَنْبُك " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**580** உபை இப்னு கஃபு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவின் மூன்றில் ஒரு பகுதி சென்றுவிட்டால், எழுந்து நின்று (மக்களுக்குக்) கூறுவார்கள் : “மனிதர்களே! அல்லாஹ்வை நினைவு கூருங்கள். பூகம்பம் அடுத்து பூகம்பம் என அதிர்ச்சி வந்து விட்டது. மரணம், தான் சார்ந்துள்ள (ஆபத்துகளு)டன் வந்து விட்டது” என்று கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! உங்களுக்காக என் துஆவை அதிகப்படுத்துகிறேன். உங்களுக்கு என் துஆவை எந்த அளவுக்கு நான் ஆக்க வேண்டும்?” என்று கேட்டேன். “நீர் விரும்பும் அளவுக்கு” என்று நபி (ஸல்) கூறினார்கள். “நான்கில் ஒரு பங்கு?” என்று கேட்டேன். “நீர் விரும்பும் அளவுக்கு அதிகமாக்கினால் உமக்கு அது சிறந்தது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “பாதி அளவுக்கு?” என்று கேட்டேன். “நீர் விரும்பும் அளவுக்கு அதிகமாக்கினால் அது உமக்கு நல்லது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “மூன்றில் இரண்டு பகுதி?” என்று கேட்டேன். “நீர் விரும்பும் அளவுக்கு அதிகமாக்கினால் அது உமக்கு நல்லது” என்று கூறினார்கள். “எனது துஆ முழுவதையும் உங்களுக்கே நான் ஆக்கட்டுமா?” என்று கேட்டேன். “அப்போது உம் கவலைப் போக்கப்படும். உம் பாவம் உமக்கு மன்னிக்கப்படும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ: 2457. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٦٦ – بَابُ استحباب زيارة القُبُور للرِّجال وما يقوله الزائر

## பாடம் : 66 - மண்ணறைகளை ஜியாரத் செய்வது ஆண்களுக்கு விரும்பத்தக்கதாகும். ஜியாரத் செய்பவர் கூறவேண்டியவை

٥٨١ – عَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " كُنْت نَهَيْتُكُمْ عَنْ زِيَارَةِ الْقُبُورِ فَزُورُوهَا " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ : " فَمَنْ أَرَادَ أَنْ يَزُورَ الْقُبُورَ فَلْيَزُرْ فَإِنَّهَا تُذَكِّرُنَا الْآخِرَةَ " .

**581** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நான் (ஆரம்பத்தில்) மண்ணறைகளை ‘ஜியாரத்’ செய்வதை உங்களுக்குத் தடுத்திருந்தேன். (இப்பொழுது அத்தடை இல்லை) ஆகவே, நீங்கள் மண்ணறைகளை ‘ஜியாரத்’ செய்யுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:977)**

٥٨٢ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ كُلَّمَا كَانَ لَيْلَتُهَا مِنْ رَسُولِ اللَّهِ ﷺ يَخْرُجُ مِنْ آخِرِ اللَّيْلِ إِلَى الْبَقِيعِ فَيَقُولُ : " السَّلَامُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُؤْمِنِينَ وَأَتَاكُمْ مَا تُوعَدُونَ غَدًا مُؤَجَّلُونَ وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لَاحِقُونَ ! اللَّهُمَّ اغْفِرْ لِأَهْلِ بَقِيعِ الْغَرْقَدِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**582** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவின் எனக்குரிய நாளின்போது இறுதிப் பகுதியில் "பகீஉ" என்ற இடத்திற்குச் சென்றார்கள். (அங்கு இருந்த மண்ணறைகள் முன்), "அஸ்ஸலாமு அலைக்கும் தார கவ்மின் முஃமினீன வஅதாகும் மாதூஃதூன ஙதன் முஅஜ்ஜலூன் வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன், அல்லாஹும்ம ஃபிர்லி அஹ்லி பகீஇல் ஙர்கத்" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:974)**

**துஆவின் பொருள்: "முஃமினான மண்ணறைவாசிகளே! உங்கள் மீது இறையருள் உண்டாகட்டும்! உங்களுக்கு வாக்களிக்கப்பட்டது உங்களிடம் வந்துவிட்டது. நாளை (மறுமை)க்காக குறிப்பிடப்பட்டுள்ளீர்கள். நிச்சயமாக! அல்லாஹ் நாடினால் நாங்களும் உங்களிடம் வந்து சேரக்கூடியவர்களாக உள்ளோம். இறைவனே! 'பகீஉல் ஙர்கத்' எனும் இம்மண்ணறைப் பகுதியில் வசிப்பவர்களுக்கு நீ மன்னிப்பை அருள்வாயாக!"**

٥٨٣ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ يُعَلِّمُهُمْ إِذَا خَرَجُوا إِلَى الْمَقَابِرِ أَنْ يَقُولَ قَائِلُهُمْ : " السَّلَامُ عَلَيْكُمْ أَهْلَ الدِّيَارِ مِنَ الْمُؤْمِنِينَ وَالْمُسْلِمِينَ وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لَلَاحِقُونَ أَسْأَلُ اللَّهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**583** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மண்ணறைகளுக்கு நபித்தோழர்கள் சென்றால், அவர்கள் (பின்வரும் துஆவை)கூறும்படி நபி (ஸல்) அவர்கள் கற்றுக் கொடுத்தார்கள்.

அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத் தியாரி மினல் முஃமினீன வல்முஸ்லிமீன், வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன், அஸ்அலுல்லாஹ லனா வலகுமுல் ஆஃபியா. **(முஸ்லிம்:975)**

**துஆவின் பொருள்: "முஃமினான, முஸ்லிமான மண்ணறைவாசிகளே! அல்லாஹ்வின் சாந்தி உங்கள் மீது உண்டாகட்டும்! நிச்சயமாக! அல்லாஹ் நாடினால் நாங்களும் உங்களிடம் வந்து சேரக் கூடியவர்களாக உள்ளோம். அல்லாஹ்விடம் எங்களுக்கும் உங்களுக்கும் ஈடேற்றத்தைக் கேட்கிறேன்."**

٥٨٤ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : مَرَّ رَسُولُ اللَّهِ ﷺ بِقُبُورٍ بِالْمَدِينَةِ فَأَقْبَلَ عَلَيْهِمْ بِوَجْهِهِ فَقَالَ : " السَّلَامُ عَلَيْكُمْ يَا أَهْلَ الْقُبُورِ يَغْفِرُ اللَّهُ لَنَا وَلَكُمْ أَنْتُمْ سَلَفُنَا وَنَحْنُ بِالأَثَرِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**584** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், மதீனாவில் உள்ள மண்ணறைகளைக் கடந்து சென்றார்கள். அவற்றைத் தன் முகத்தால் முன்னோக்கி, "அஸ்ஸலாமு அலைக்கும் யா அஹ்லல் குபூர். யஃபிருல்லாஹு லனா வலகும் அன்தும் ஸலஃபுனா வநஹ்னு பில்அஸர்" என்று கூறினார்கள்.

**(திர்மிதீ:1053. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்: "மண்ணறைவாசிகளே! உங்கள் மீது இறைவனின் சாந்தி உண்டாகட்டுமாக! எங்களையும், உங்களையும் அல்லாஹ் மன்னிப்பானாக! நீங்கள், எங்களை முந்தி சென்றவர்கள். நாங்கள் உங்களைப் பின் தொடர்பவர்களாக உள்ளோம்."**

## ٦٧ - بَابُ كراهة تمنّي الْمَوْت بسبب ضُرّ نزل به، ولا بأس به لخوف الفتنة في الدين

## பாடம் : 67 - துன்பத்தின் காரணமாக மரணத்தை விரும்புவது கூடாது. மார்க்கத்தில் குழப்பம் ஏற்படுவதை அஞ்சினால் விரும்புவது குற்றமில்லை!

٥٨٥ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَتَمَنَّيَنَّ أَحَدُكُمْ الْمَوْتَ إِمَّا مُحْسِنًا فَلَعَلَّهُ يَزْدَادُ وَإِمَّا مُسِيئًا فَلَعَلَّهُ يَسْتَعْتِبُ " . مُتَّفَقٌ عَلَيْهِ وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِم عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَتَمَنَّيَنَّ أَحَدُكُمُ الْمَوْتَ وَلاَ يَدْعُ بِهِ مِنْ قَبْلِ أَنْ يَأْتِيَهُ ؛ إِنَّهُ إِذَا مَاتَ انْقَطَعَ عَمَلُهُ وَإِنَّهُ لاَ يَزِيدُ الْمُؤْمِنَ عُمُرُهُ إِلاَّ خَيْرًا "

**585** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் மரணத்தை விரும்ப வேண்டாம். அவர் நல்லவராக இருந்தால், (நற்செயலை) அவர் அதிகமாக்கிக் கொள்ளக்கூடும். தீயவராக அவர் இருந்தால் (தவறுக்காக) பிழை பொறுப்புத் தேடக் கூடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7235. முஸ்லிம்:2682. இது புகாரியின் வாசகமாகும்)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது.

அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் மரணத்தை விரும்ப வேண்டாம். மரணம் வேண்டி அதைக் கேட்டு பிரார்த்திக்க வேண்டாம். அவர் மரணித்துவிட்டால், அவரின் செயல் அறுந்துவிடும். நிச்சயமாக முஃமினுக்கு அவரது வயது நல்லதையே அதிகப்படுத்தும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

٥٨٦ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَتَمَنَّيَنَّ أَحَدُكُمُ الْمَوْتَ لِضُرٍّ أَصَابَهُ فَإِنْ كَانَ لاَ بُدَّ فَاعِلاً فَلْيَقُلْ : اللَّهُمَّ أَحْيِنِي مَا كَانَتِ الْحَيَاةُ خَيْرًا لِي وَتَوَفَّنِي إِذَا كَانَتِ الْوَفَاةُ خَيْرًا لِي " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**586** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர், தனக்கு ஏற்பட்ட துன்பம் காரணமாக மரணத்தை விரும்ப வேண்டாம் அவருக்கு (மரணத்தை விரும்பும்) அவசியம் ஏற்பட்டால், 'இறைவா! உயிர் வாழ்வது, எனக்குச் சிறப்பாக இருந்தால், என்னை உயிர் வாழச் செய்வாயாக! மரணம் எனக்குச் சிறந்ததாக இருந்தால், என்னை மரணிக்கச் செய்வாயாக!' என்று கூறட்டும்!" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி: 5671. முஸ்லிம்:2680)**

٥٨٧ - وَعَنْ قَيْسِ بْنِ أَبِي حَازِمٍ قَالَ : دَخَلْنَا عَلَى خَبَّابِ بْنِ الأَرَتِّ رَضِيَ اللَّهُ عَنْهُ نَعُودُهُ وَقَد اكْتَوَى سَبْعَ كَيَّاتٍ فَقَالَ : إِنَّ أَصْحَابَنَا الَّذِينَ سَلَفُوا مَضَوْا وَلَمْ تَنْقُصْهُمُ الدُّنْيَا وَإِنَّا أَصَبْنَا مَا لاَ نَجِدُ لَهُ مَوْضِعًا إِلاَّ التُّرَابَ وَلَوْلاَ أَنَّ النَّبِيَّ ﷺ نَهَانَا أَنْ نَدْعُوَ بِالْمَوْتِ لَدَعَوْتُ بِهِ . ثُمَّ أَتَيْنَاهُ مَرَّةً أُخْرَى وَهُوَ يَبْنِي حَائِطًا لَهُ . فَقَالَ : " إِنَّ الْمُسْلِمَ لَيُؤْجَرُ فِي كُلِّ شَيْءٍ يُنْفِقُهُ إِلاَّ فِي شَيْءٍ يَجْعَلُهُ فِي هَذَا التُّرَابِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ رِوَايَةِ الْبُخَارِيِّ .

**587** கய்ஸ் இப்னு அபீ ஹாஸிம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கப்பாப் இப்னுல் அரத் (ரழி) அவர்களின் உடல் நலத்தை விசாரிக்கச் சென்றோம். அவர் தம் உடலில் (சிகிச்சை முறையில்) ஏழு இடங்களில் சூடு போட்டிருந்தார். அப்போது அவர்கள், "எங்களுக்கு முன் இருந்த எங்களின் தோழர்கள் சென்றுவிட்டார்கள். உலகம் அவர்களுக்கு (அவர்களின் அந்தஸ்துகள்) எதையும் குறைத்துவிடவில்லை. மண்ணைத் தவிர எதனையும் நாங்கள்

பெற்றுக் கொள்ளாத நிலையில் நாங்கள் இருந்தோம். நபி (ஸல்) அவர்கள், மரணத்தை வேண்டி நாங்கள் பிரார்த்திக்க எங்களுக்கு தடை செய்திருக்கவில்லையென்றால், அதை வேண்டி நான் துஆச் செய்திருப்பேன்'' என்று கூறினார்கள். பின்பு மற்றொரு தடவை அவர்களிடம் வந்தோம். அவர் தம் வீட்டின் சுவரைக் கட்டிக் கொண்டிருந்தார். அப்போது அவர்கள், ''இந்த மண்ணிலே செலவழிக்கும் செலவைத் தவிர, மற்ற எல்லா செலவழிப்புகளிலும் நிச்சயமாக முஸ்லிம் நற்கூலி கொடுக்கப் படுகிறார்'' என்று கூறினார்.

**(புகாரி:5672. முஸ்லிம்:2681. இது புகாரியில் உள்ள அறிவிப்பின் வார்த்தையாகும்)**

## ٦٨ – بَابُ الوَرَع وترك الشبهات

## பாடம் : 68 - பேணுதலாக இருத்தல், சந்தேகங்களைக் கைவிடுதல்

قَالَ اللّٰهُ تَعَالَى : وَتَحْسَبُونَهُ هَيِّنًا وَهُوَ عِنْدَ اللّٰهِ عَظِيمٌ . وَقَالَ تَعَالَى : إِنَّ رَبَّكَ لَبِالْمِرْصَادِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *''அதை நீங்கள் இலேசாக எண்ணுகிறீர்கள். அதுவோ அல்லாஹ்விடம் பெரியதாகும்'' (24:15)*

*''நிச்சயமாக உமது இறைவன், கண்காணிப்பவனாக இருக்கிறான்'' (89:14)*

٥٨٨ – وَعَنِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ : " إِنَّ الْحَلَالَ بَيِّنٌ وَإِنَّ الْحَرَامَ بَيِّنٌ وَبَيْنَهُمَا مُشْتَبِهَاتٌ لاَ يَعْلَمُهُنَّ كَثِيرٌ مِنَ النَّاسِ فَمَنِ اتَّقَى الشُّبُهَاتِ اسْتَبْرَأَ لِدِينِهِ وَعِرْضِهِ وَمَنْ وَقَعَ فِي الشُّبُهَاتِ وَقَعَ فِي الْحَرَامِ كَالرَّاعِي يَرْعَى حَوْلَ الْحِمَى يُوشِكُ أَنْ يَرْتَعَ فِيهِ أَلاَ وَإِنَّ لِكُلِّ مَلِكٍ حِمًى أَلاَ وَإِنَّ حِمَى اللّٰهِ مَحَارِمُهُ أَلاَ وَإِنَّ فِي الْجَسَدِ مُضْغَةً إِذَا صَلَحَتْ صَلَحَ الْجَسَدُ كُلُّهُ وَإِذَا فَسَدَتْ فَسَدَ الْجَسَدُ كُلُّهُ : أَلاَ وَهِيَ الْقَلْبُ " . مُتَّفَقٌ عَلَيْهِ ; وَرَوَيَاهُ مِنْ طُرُقٍ بِأَلْفَاظٍ مُتَقَارِبَةٍ .

**588** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''நிச்சயமாக அனுமதிக்கப்பட்டது தெளிவாக உள்ளது. நிச்சயமாக தடுக்கப்பட்டவையும் தெளிவாக உள்ளது. இவ்விரண்டுக்குமிடையே சந்தேகமானவைகளும் (சில) உள்ளன. அவற்றை மக்களில் அதிகமானோர் அறியமாட்டார்கள். சந்தேகமானவற்றை விட்டு ஒருவன் தவிர்ந்து கொண்டால், அவன் தன் மார்க்கத்தையும், கண்ணியத்தையும் காப்பாற்றிக் கொண்டவராவார். சந்தேகமானவற்றில் ஒருவன் மூழ்கிவிட்டால், அவன் தடுக்கப்பட்டவற்றிலும் மூழ்கி விடுவான். அவன் வேலியைச் சுற்றி (ஆடுகளை) மேய்க்கும் மேய்ப்பாளன் போலாவான். (சில வேளை) அந்த வேலியையே அவை மேய்ந்து விடவும் கூடும். அறிந்துகொள்ளுங்கள்! ஒவ்வொரு அரசனுக்கும் ஒரு வேலி (ஒரு தடுப்பு எல்லை) உண்டு. அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் வேலி என்பது, அவனால் தடை செய்யப் பட்டவைகளாகும். அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக உடலில் ஒரு சதைத் துண்டு உள்ளது. அது சரியாகிவிட்டால், உடல் முழுதும் சரியாகி விடும். அது கெட்டுவிட்டால், உடல் முழுதும் கெட்டுவிடும். அறிந்து கொள்ளுங்கள்! அதுதான் இதயம்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:52. முஸ்லிம்:1599)**

٥٨٩ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ وَجَدَ تَمْرَةً فِي الطَّرِيقِ فَقَالَ : " لَوْلاَ أَنِّي أَخَافُ أَنْ تَكُونَ مِنَ الصَّدَقَةِ لأَكَلْتُهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**589** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) பாதை ஒன்றில் ஒரு பேரீத்தம் பழத்தை நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள். "இது தர்மப் பொருளாக இருக்கும் என நான் பயப்படாமல் இருந்திருந்தால், அதை நான் சாப்பிட்டிருப்பேன்" என்று கூறினார்கள். **(புகாரி:2055. முஸ்லிம்:1071)**

٥٩٠ - وَعَنِ النَّوَّاسِ بْنِ سَمْعَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " الْبِرُّ حُسْنُ الْخُلُقِ وَالأَثْمُ مَا حَاكَ فِي نَفْسِكَ وَكَرِهْتَ أَنْ يَطَّلِعَ عَلَيْهِ النَّاسُ ". رَوَاهُ مُسْلِمٌ . " حَاكَ " بِالْحَاءِ الْمُهْمَلَةِ وَالْكَافِ : أَيْ تَرَدَّدَ فِيهِ .

**590** நவாஸ் இப்னு ஸம்ஆன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நற்செயல் புரிவது, நற்குணமாகும். குற்றமிழைப்பது, உன் உள்ளத்தில் உறுத்தலை ஏற்படுத்தக் கூடியதாகும். மேலும் மக்கள் அதைப் பார்த்து விடுவதை நீ வெறுக்கக்கூடியதுமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2553)**

٥٩١ - وَعَنْ وَابِصَةَ بْنِ مَعْبَدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ فَقَالَ : " جِئْتَ تَسْأَلُ عَنِ الْبِرِّ ؟ " قُلْتُ : نَعَمْ فَقَالَ : " اسْتَفْتِ قَلْبَكَ الْبِرُّ مَا اطْمَأَنَّتْ إِلَيْهِ النَّفْسُ وَاطْمَأَنَّ إِلَيْهِ الْقَلْبُ وَالأَثْمُ مَا حَاكَ فِي النَّفْسِ وَتَرَدَّدَ فِي الصَّدْرِ وَإِنْ أَفْتَاكَ النَّاسُ وَأَفْتَوْكَ ". حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ أَحْمَدُ وَالدَّارِمِيُّ فِي مُسْنَدَيْهِمَا .

**591** வாபிஸா இப்னு மஃபித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். "நற்செயல் பற்றி கேட்கத்தானே நீர் வந்தீர்?" என்று அவர்களே கேட்டார்கள். "ஆம்" என்றேன். "நீர் உமது இதயத்திடமே தீர்ப்புக் கேள்! நற்செயல் என்பது, உம் மனமும், உம் இதயமும் எதன் மூலம் அமைதி பெறுமோ அதுவாகும். பாவச் செயல் என்பது, உம் மனதில் உறுத்துகின்றதும், உம் இதயத்தில் குழப்பம் ஏற்படுத்துவதும் ஆகும். உம்மிடம் மக்கள் (இது சரியென) தீர்ப்பு வேண்டினாலும், உமக்கு அவர்கள் தீர்ப்புக் கூறினாலும் சரியே!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அஹ்மது:4/228. தாரமீ:2533. இதில் அய்யூப் இப்னு அப்துல்லாஹ் இப்னு மிக்ரஸ் என்ற பலவீனர் இடம் பெறுகிறார்)**

٥٩٢ - وَعَنْ أَبِي سِرْوَعَةَ - بِكَسْرِ السِّينِ الْمُهْمَلَةِ وَفَتْحِهَا - عُقْبَةَ بْنِ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ تَزَوَّجَ ابْنَةً لأَبِي إِهَابِ بْنِ عَزِيزٍ فَأَتَتْهُ امْرَأَةٌ فَقَالَتْ : إِنِّي قَدْ أَرْضَعْتُ عُقْبَةَ وَالَّتِي قَدْ تَزَوَّجَ بِهَا فَقَالَ لَهَا عُقْبَةُ : مَا أَعْلَمُ أَنَّكِ أَرْضَعْتِنِي وَلاَ أَخْبَرْتِنِي فَرَكِبَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ بِالْمَدِينَةِ فَسَأَلَهُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " كَيْفَ وَقَدْ قِيلَ ؟ " فَفَارَقَهَا عُقْبَةُ وَنَكَحَتْ زَوْجًا غَيْرَهُ . رَوَاهُ الْبُخَارِيُّ . " إِهَابٌ " : بِكَسْرِ الْهَمْزَةِ . " عَزِيزٌ " : بِفَتْحِ الْعَيْنِ وَبِزَايٍ مُكَرَّرَةٍ .

**592** அபூஸிர்வஆ உக்பா இப்னு ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூஇஹாப் இப்னு அஜீஸ் என்பவரின் மகளை நான் திருமணம் செய்திருந்தேன். அப்போது ஒரு பெண்மணி என்னிடம் வந்து, "உனக்கும் உன் மனைவிக்கும் நான் பால் கொடுத்துள்ளேன் (இருவரும் பால்குடி சகோதர சகோதரி) ஆகவே உங்கள் திருமணம் செல்லாது" என்று கூறினார். அப்பெண்ணிடம் நான், "நீங்கள் எனக்கு பால் கொடுத்துள்ளீர்கள் என நான் அறியவுமில்லை. என்னிடம் நீங்கள் செய்தியைக் கூறவுமில்லை" என்று கூறினேன். பிறகு நான் நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க மதீனா வந்தேன். இது பற்றிக் கேட்டேன். உடனே நபி (ஸல்) அவர்கள், "இப்படி கேள்விப்பட்டப் பிறகும் எப்படி? (நீங்கள் தம்பதிகளாக உள்ளீர்கள்?)" என்று கேட்டார்கள். உடனே நான் என் மனைவியைப் பிரிந்தேன். வேறொரு பெண்ணை மணமுடித்துக் கொண்டேன். **(புகாரி:88)**

٥٩٣ – وَعَنِ الْحَسَنِ بْنِ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : حَفِظْتُ مِنْ رَسُولِ اللَّهِ ﷺ : " دَعْ مَا يَرِيبُكَ إِلَى مَا لاَ يَرِيبُكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . مَعْنَاهُ : اُتْرُكْ مَا تَشُكُّ فِيهِ وَخُذْ مَا لاَ تَشُكُّ فِيهِ .

**593** ஹஸன் இப்னு அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடமிருந்து, "உமக்கு சந்தேகமளிப்பதை விட்டு விடுவீராக! உமக்கு சந்தேகம் ஏற்படுத்தாத செயலின் பக்கம் (விரைவீராக!)" என்ற வார்த்தையை மனனம் செய்து கொண்டேன்.

**(திர்மிதி:2518. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

٥٩٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ لأَبِي بَكْرٍ الصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُ غُلاَمٌ يُخْرِجُ لَهُ الْخَرَاجَ وَكَانَ أَبُو بَكْرٍ يَأْكُلُ مِنْ خَرَاجِهِ فَجَاءَ يَوْمًا بِشَيْءٍ فَأَكَلَ مِنْهُ أَبُو بَكْرٍ فَقَالَ لَهُ الْغُلاَمُ : تَدْرِي مَا هَذَا ؟ فَقَالَ أَبُو بَكْرٍ : وَمَا هُوَ ؟ فَقَالَ : كُنْتُ تَكَهَّنْتُ لإِنْسَانٍ فِي الْجَاهِلِيَّةِ وَمَا أُحْسِنُ الْكِهَانَةَ إِلاَّ أَنِّي خَدَعْتُهُ فَلَقِيَنِي فَأَعْطَانِي – لِذَلِكَ – هَذَا الَّذِي أَكَلْتَ مِنْهُ . فَأَدْخَلَ أَبُو بَكْرٍ يَدَهُ فَقَاءَ كُلَّ شَيْءٍ فِي بَطْنِهِ . رَوَاهُ الْبُخَارِيُّ . " الْخَرَاجُ " : شَيْءٌ يَجْعَلُهُ السَّيِّدُ عَلَى عَبْدِهِ يُؤَدِّيهِ كُلَّ يَوْمٍ وَبَاقِي كَسْبِهِ يَكُونُ لِلْعَبْدِ .

**594** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூபக்ர் (ரழி) அவர்களுக்கு ஓர் அடிமைச் சிறுவர் இருந்தார். அவர் தன் உழைப்புப் பொருளைக் கொண்டு வந்து அபூபக்ர் (ரழி) அவர்களுக்குக் கொடுப்பார். அதனை அவர்களும் சாப்பிடுவார்கள். ஒரு நாள் ஒரு பொருளைக் கொண்டு வந்தார். அதை அபூபக்ர் (ரழி) சாப்பிட்டார்கள். அவரிடம் அந்த சிறுவர், "இது என்ன என்பதை அறிவீர்களா?" என்று கேட்டார். "இது ஏது?" என்று அபூபக்ர் (ரழி) கேட்டார்கள். "அறியாமைக் காலத்தில் (இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்) ஒருவருக்கு நான் ஆரூடம் கணித்துக் கூறினேன். அந்த ஆரூடத்தை நான் அழகாகக் கூறாமல் அவரை நான் ஏமாற்றிவிட்டேன். இப்பொழுது அந்த மனிதர் என்னை சந்தித்தார். நீங்கள் இப்போது சாப்பிட்ட பொருளை அதற்காக எனக்குக் கொடுத்தார்" என்று அந்த சிறுவர் கூறினார். உடனே அபூபக்ர் (ரழி) அவர்கள் தன் கையை (வாயில்) உள்ளே விட்டு, தன் வயிற்றில் உள்ள அனைத்தையும் வாந்தி எடுத்தார்கள். **(புகாரி:3842)**

٥٩٥ – وَعَنْ نَافِعٍ أَنَّ عُمَرَ بْنَ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ كَانَ فَرَضَ لِلْمُهَاجِرِينَ الأَوَّلِينَ أَرْبَعَةَ آلاَفٍ وَفَرَضَ لاِبْنِهِ ثَلاَثَةَ آلاَفٍ وَخَمْسَ مِائَةٍ فَقِيلَ لَهُ : هُوَ مِنَ الْمُهَاجِرِينَ فَلِمَ نَقَصْتَهُ ؟ فَقَالَ : إِنَّمَا هَاجَرَ بِهِ أَبَوَاهُ ! يَقُولُ : لَيْسَ هُوَ كَمَنْ هَاجَرَ بِنَفْسِهِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**595** நாஃபிஉ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உமர் (ரழி) அவர்கள், முதன் முதலில் ஹிஜ்ரத் செய்த முஹாஜிர்களுக்கு 4000 திர்ஹம் (உதவித் தொகை வழங்கிட) உத்தரவிட்டார்கள். தன் மகன் (அப்துல்லா)வுக்கு 3500 திர்ஹம் மட்டுமே வழங்கிட உத்தரவிட்டார்கள். "அவரும் முஹாஜிர்களில் ஒருவராவார். ஏன் அவருக்கு (மட்டும்) குறைத்து விட்டீர்?" என்று உமர் (ரழி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு, "அவர் அவரது தந்தையுடன் ஹிஜ்ரத் செய்துள்ளார். ஆகவே அவர் தானாகவே ஹிஜ்ரத் செய்தவர் போல் ஆகமாட்டார்" என்று உமர் (ரழி) கூறினார்கள். **(புகாரி:3912)**

٥٩٦ – وَعَنْ عَطِيَّةَ بْنِ عُرْوَةَ السَّعْدِيِّ الصَّحَابِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَبْلُغُ الْعَبْدُ أَنْ يَكُونَ مِنَ الْمُتَّقِينَ حَتَّى يَدَعَ مَا لاَ بَأْسَ بِهِ حَذَرًا لِمَا بِهِ بَأْسٌ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**596** அதிய்யா இப்னு உர்வா ஸஃதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இதனால் குற்றம் ஏற்படும்" என்பதற்காக பயந்து, "இதனால் பரவாயில்லை" என்பதைக் கூடச் செய்யாமல் விடும் வரை, ஒரு அடியான் "இறையச்சமுடையோர்" பட்டியலில் சேர மாட்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:2451. இதில் "அப்துல்லா இப்னு யஸீத் திமிஷ்கீ" என்ற பலவீனர் இடம் பெறுகிறார்)**

## ٦٩ - باب استحباب العزلة عند فَسَاد النّاس والزّمان، أو الخوف من فتنة في الدّين، ووقوع في حرام وشبهات ونحوها

### பாடம் : 69 - குழப்பமான காலத்தில் தனித்திருப்பது

قَالَ اللَّهُ تَعَالَى : فَفِرُّوا إِلَى اللَّهِ إِنِّي لَكُمْ مِنْهُ نَذِيرٌ مُبِينٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ்விடம் (அருள்பெற) நீங்கள் விரையுங்கள். நிச்சயமாக நான் உங்களுக்கு அவனிடமிருந்து வந்த பகிரங்கமான எச்சரிக்கையாளன் ஆவேன். (51:50)*

٥٩٧ - وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ اللَّهَ يُحِبُّ الْعَبْدَ التَّقِيَّ الْغَنِيَّ الْخَفِيَّ " . رَوَاهُ مُسْلِمٌ . الْمُرَادُ بِ " الْغَنِيِّ " غَنِيُّ النَّفْسِ كَمَا سَبَقَ فِي الْحَدِيثِ الصَّحِيحِ .

**597** ஸஃது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! அல்லாஹ் இறையச்சமுடைய, நிறைவான மனமுள்ள, (மக்களை விட்டுப் பிரிந்து தனியே) மறைந்து வாழும் அடியானை நேசிக்கிறான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2965)**

٥٩٨ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَجُلٌ : أَيُّ النَّاسِ أَفْضَلُ يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " مُؤْمِنٌ مُجَاهِدٌ بِنَفْسِهِ وَمَالِهِ فِي سَبِيلِ اللَّهِ " . قَالَ : ثُمَّ مَنْ ؟ قَالَ : " ثُمَّ رَجُلٌ مُعْتَزِلٌ فِي شِعْبٍ مِنَ الشِّعَابِ يَعْبُدُ رَبَّهُ " . وَفِي رِوَايَةٍ : " يَتَّقِي اللَّهَ وَيَدَعُ النَّاسَ مِنْ شَرِّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**598** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! மனிதர்களில் மிகச்சிறந்தவர் யார்?" என்று ஒருவர் கேட்டார். "அல்லாஹ்வின் வழியில் தன் செல்வத்தையும், தன் உயிரையும் தியாகம் செய்கின்ற முஃமின் ஆவார்"என்று நபி (ஸல்) கூறினார்கள். "பின்பு யார்?" என்று கேட்டார்கள். "தன் இறைவனை வணங்கிட, ஓடைப்பகுதியில் ஒதுங்கியவர் ஆவார்" என்று கூறினார்கள்.

(மற்றொரு அறிவிப்பில், "தன் தீமையிலிருந்து மக்களைக் காப்பாற்றி, அல்லாஹ்வை அஞ்சியவராவார்" என்று நபி (ஸல்) கூறியதாக உள்ளது) **(புகாரி:2786. முஸ்லிம்:1888)**

٥٩٩ - وَعَنْهُ ) أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يُوشِكُ أَنْ يَكُونَ خَيْرَ مَالِ الْمُسْلِمِ غَنَمٌ يَتْبَعُ بِهَا شَعَفَ الْجِبَالِ وَمَوَاقِعَ الْقَطْرِ يَفِرُّ بِدِينِهِ مِنَ الْفِتَنِ " . رَوَاهُ الْبُخَارِيُّ . وَ " شَعَفُ الْجِبَالِ " : أَعْلاَهَا .

**599** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மலைகளின் உச்சிக்கும், மழை பொழியும் இடங்களுக்கும் ஓட்டிச் செல்லும் ஆட்டு மந்தை ஒரு முஸ்லிமின் சிறந்த சொத்தாக ஆகிவிடும் காலம் ஏற்படும். அப்போது அவன், தன் மார்க்கத்தைப் பேண வேண்டி குழப்பநிலைகளை விட்டும் ஓடி விடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:19)**

٦٠٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَا بَعَثَ اللَّهُ نَبِيًّا إِلاَّ رَعَى الْغَنَمَ " . فَقَالَ أَصْحَابُهُ : وَأَنْتَ ؟ قَالَ : " نَعَمْ كُنْت أَرْعَاهَا عَلَى قَرَارِيطَ لأَهْلِ مَكَّةَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**600** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ் அனுப்பிய எந்த நபியும் ஆடு மேய்க்காமல் இருந்ததில்லை" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அவர்களின் தோழர்கள், "நீங்களுமா?" என்று கேட்டார்கள். "ஆம்! மக்காவாசிகளுக்காக (ஆடுகளை) சில வெள்ளிக் காசுகளுக்கு கூலியாக நான் மேய்த்துள்ளேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2262)**

٦٠١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ رَسُولِ اللَّهِ ﷺ أَنَّهُ قَالَ : " مِنْ خَيْرِ مَعَاشِ النَّاسِ لَهُمْ رَجُلٌ مُمْسِكٌ عِنَانَ فَرَسِهِ فِي سَبِيلِ اللَّهِ يَطِيرُ عَلَى مَتْنِهِ كُلَّمَا سَمِعَ هَيْعَةً – أَوْ فَزْعَةً – طَارَ عَلَيْهِ يَبْتَغِي الْقَتْلَ أَوِ الْمَوْتَ مَظَانَّهُ ; أَوْ رَجُلٌ فِي غُنَيْمَةٍ فِي رَأْسِ شَعَفَةٍ مِنْ هَذِهِ الشَّعَفِ أَوْ بَطْنِ وَادٍ مِنْ هَذِهِ الأَوْدِيَةِ يُقِيمُ الصَّلاَةَ وَيُؤْتِي الزَّكَاةَ وَيَعْبُدُ رَبَّهُ حَتَّى يَأْتِيَهُ الْيَقِينُ لَيْسَ مِنَ النَّاسِ إِلاَّ فِي خَيْرٍ " . رَوَاهُ مُسْلِمٌ . " وَيَطِيرُ " : أَيْ يُسْرِعُ . وَ " مَتْنُهُ " : ظَهْرُهُ . وَ " الْهَيْعَةُ " : الصَّوْتُ لِلْحَرْبِ . وَ " الْفَزْعَةُ " : نَحْوُهُ . وَ " مَظَانُّ " الشَّيْءِ الْمَوَاضِعُ الَّتِي يُظَنُّ وُجُودُهُ فِيهَا . وَ " الْغُنَيْمَةُ " – بِضَمِّ الْغَيْنِ – تَصْغِيرُ الْغَنَمِ . وَ " الشَّعَفَةُ " بِفَتْحِ الشِّينِ وَالْعَيْنِ : هِيَ أَعْلَى الْجَبَلِ .

**601** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதனின் வாழ்க்கையில் சிறந்தவற்றில் அவர்களுக்கு (நன்மை) உண்டு. ஒரு மனிதர் அல்லாஹ்வின் வழியில் தன் குதிரையைத் தடுத்து வைத்(து காத்)திருக்கிறார். அப்போது அவர் போரின் அழைப்பையோ, வேறு திடுக்கிடும் சப்தத்தையோ கேட்டபோது, தான் கொல்லப் படுவதையோ அல்லது மரணம் அடைவதற்கோ வாய்ப்பிருந்தும் அதைப் பொருட்படுத்தாமல் அந்த இடத்தை நோக்கிப் பறக்கிறார். அவரும், ஒரு மனிதர் இந்த மலைகளின் உச்சியில் அல்லது இந்த ஓடைகளில் ஒன்றில் ஆடுகளை மேய்த்து, தொழுகையைப் பேணி, ஜகாத்தையும் கொடுத்து, மரணம் ஏற்படும் வரை தன் இறைவனை வணங்குகிறார். (இவர்களின் வாழ்க்கையே சிறந்ததாகும்). மக்களில் இதை விடச் சிறந்தது வேறில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1889)**

٧٠ – بابُ فضل الاختلاط بالناس وَحُضُور جُمَعهم وَجماعاتهم، ومشاهد الخير، ومجا لس الذكر معهم، وعيادة مريضهم، وحضور جنائزهم، ومواساة محتاجهم، وإرْشَاد جاهلهم، وغير ذلك من مصالحهم، لمن قدر على الأمر بالمعروف والنهي عن المنكر، وقمع نفسه عن الإيذاء وصبر على الأذى

**பாடம் : 70 - மக்களுடன் கலந்திருப்பது - அவர்களின் கூட்டமைப்பில் இணைந்திருப்பது - நல்லதைச் செய்வதில், இறைவனை நினைவு கூறுமிடங்களில் அவர்களுடன் சேர்ந்திருப்பது - நோயாளிகளை நலம் விசாரிப்பது, அவர்களில் மரணமடைந்தோர் ஜனாஸாவில் கலந்து கொள்வது - தேவை உள்ளவர்களுக்கு உதவுவது - தெரியாதவருக்கு எடுத்துக் கூறுவது மற்றும் பல நற்பணிகளைச் செய்வது - தீமைகளை விட்டும் தடுப்பது - நோவினை தருவதை விட்டும் ஒதுங்கி இருப்பது - பிறர் தரும் தொல்லையில் பொறுமையாக இருப்பது ஆகியவற்றின் சிறப்பு**

“அறிந்து கொள்க! மேற்கூறியவற்றில் மக்களுடன் இணைந்திருத்தல் என்பது தான், நபி (ஸல்) அவர்களின் மற்றும் இதர நபிமார்களின் வழிமுறையாக உள்ளது. இவ்வாறுதான் நேர்வழி பெற்ற கலீபாக்கள், அவர்களை அடுத்து நபித்தோழர்கள், அவர் களை அடுத்து வந்தவர்கள், அவர்களையும் அடுத்து வந்த முஸ்லிமான அறிஞர்கள் அவர்களில் சிறந்தோர் ஆகியோரின் வழிமுறையாகவும் உள்ளது. இதுதான், நபித்தோழர்களுக்கு அடுத்து வாழ்ந்தோர் மற்றும் அவர்களுக்கு பின் வாழ்ந்தோரின் கருத்தாகும். இவ்வாறே இமாம் ஷாபிஈ, இமாம் அஹ்மது மற்றும் பல மார்க்க அறிஞர்கள் கூறியுள்ளனர்.

**அல்லாஹ் கூறுகிறான்:** *“நன்மை, இறையச்சம் ஆகியவை மீது ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுங்கள்.” (5:2)*

இக்கருத்தை வலியுறுத்தும் வசனங்கள் நிறைய உள்ளன.

٧١ – بَاب التو اضع وخفض الجناح للمؤمنين

**பாடம் : 71 - பணிவாக இருப்பது, இறைவிசுவாசிகளிடம் கனிவாக இருப்பது**

قَالَ اللَّهُ تَعَالَى : وَاخْفِضْ جَنَاحَكَ لِمَنِ اتَّبَعَكَ مِنَ الْمُؤْمِنِينَ . وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا مَنْ يَرْتَدَّ مِنْكُمْ عَنْ دِينِهِ فَسَوْفَ يَأْتِي اللَّهُ بِقَوْمٍ يُحِبُّهُمْ وَيُحِبُّونَهُ أَذِلَّةٍ عَلَى الْمُؤْمِنِينَ أَعِزَّةٍ عَلَى الْكَافِرِينَ . وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا النَّاسُ إِنَّا خَلَقْنَاكُمْ مِنْ ذَكَرٍ وَأُنْثَى وَجَعَلْنَاكُمْ شُعُوبًا وَقَبَائِلَ لِتَعَارَفُوا إِنَّ أَكْرَمَكُمْ عِنْدَ اللَّهِ أَتْقَاكُمْ . وَقَالَ تَعَالَى : فَلَا تُزَكُّوا أَنْفُسَكُمْ هُوَ أَعْلَمُ بِمَنِ اتَّقَى . وَقَالَ تَعَالَى : وَنَادَى أَصْحَابُ الْأَعْرَافِ رِجَالًا يَعْرِفُونَهُمْ بِسِيمَاهُمْ قَالُوا مَا أَغْنَى عَنْكُمْ جَمْعُكُمْ وَمَا كُنْتُمْ تَسْتَكْبِرُونَ أَهَؤُلَاءِ الَّذِينَ أَقْسَمْتُمْ لَا يَنَالُهُمُ اللَّهُ بِرَحْمَةٍ ادْخُلُوا الْجَنَّةَ لَا خَوْفٌ عَلَيْكُمْ وَلَا أَنْتُمْ تَحْزَنُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) நம்பிக்கையாளர்களில் யார் உம்மைப் பின்பற்றிக் கொண்டிருக்கிறார்களோ, அவர்களிடம் பணிவாக நடந்து கொள்வீராக! (26:215)*

*இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்களில் எவரேனும் தனது தீனை (நெறியை) விட்டுத் திரும்பி விடுவாராயின் (திரும்பிப் போகட்டும்.) அல்லாஹ் வேறொரு சமுதாயத்தைத் தோற்றுவிப்பான். (அவர்கள் எத்தகையவர்களாய் இருப்பார்களெனில்) அல்லாஹ் அவர்களை*

*நேசிப்பான். அவர்களும் அல்லாஹ்வை நேசிப்பார்கள். அவர்கள் இறை நம்பிக்கையாளர்களிடம் மென்மையாகவும், நிராகரிப்போரிடம் கடுமையாகவும் இருப்பார்கள். அல்லாஹ்வின் பாதையில் கடும் முயற்சிகளை மேற்கொள்வார்கள். நிந்திப்பவர்களின் எந்த நிபந்தனைக்கும் அவர்கள் அஞ்சமாட்டார்கள். இது அல்லாஹ்வின் அருளாகும். தான் நாடுகின்றவர்களுக்கு இதனை அவன் அருளுகின்றான். மேலும், அல்லாஹ் பரந்தவளங்களின் உரிமையாளனாகவும் அனைத்தையும் அறிந்த வனாகவும் இருக்கின்றான். (5:54)*

*இறைநம்பிக்கை கொண்டவர்களே! அதிகமாக சந்தேகம் கொள்வதைத் தவிர்த்துவிடுங்கள். ஏனெனில், சில சந்தேகங்கள் பாவமாக இருக்கின்றன. மேலும் துப்பறிவதில் ஈடுபடாதீர்கள். இன்னும் உங்களில் ஒருவர் மற்றவரைப் பற்றி புறம் பேச வேண்டாம். உங்களில் எவரேனும் இறந்துவிட்ட தன் சகோதரரின் இறைச்சியை உண்ண விரும்புவாரா, என்ன? பாருங்கள்! நீங்களே அதனை அருவருப்பாய்க் கருதுகின்றீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; திண்ணமாக, அல்லாஹ் பாவமன்னிப்புக் கோரிக்கையைப் பெரிதும் ஏற்றுக் கொள்பவனாகவும், பெரும் கிருபையாளனாகவும் இருக்கின்றான். (49:12)*

*அவர்கள் பெரும் பெரும் பாவங்களையும் மானக்கேடான செயல்களையும் தவிர்த்துக் கொள்வார்கள். ஏதோ ஒரு சில பிழைகளைத் தவிர! சந்தேகமின்றி உம் இறைவனின் மன்னிப்பு மிகவும் விசாலமானதாகும். அவன் உங்களை எப்போது மண்ணிலிருந்து படைத்தானோ - மேலும், எப்போது நீங்கள் உங்கள் அன்னையரின் வயிற்றில் கருவாக இருந்தீர்களோ - அப்போதிருந்தே உங்களை அவன் நன்கு அறிந்திருக்கின்றான். எனவே, நீங்கள் உங்களைத் தூயவர்களென முடிவு கட்டிக் கொள்ளாதீர்கள். உண்மையில் யார் இறையச்சமுடையவர் என்பதை அவனே நன்கறிகின்றான். (53:32)*

*பிறகு, உச்சிகளில் இருக்கும் இவர்கள் (நரகில் வீழ்ந்து கிடக்கும்) பெரும் மனிதர்கள் சிலரை அவர்களுடைய முகக்கூறுகள் மூலம் அறிந்து அவர்களை அழைத்துக் கூறுவார்கள், "(பார்த்தீர்களா?) உங்களுடைய கூட்டத்தினரும் நீங்கள் பெரிதாகக் கருதி வந்த சாதனங்களும் (இன்று) உங்களுக்கு எப்பலனையும் அளிக்கவில்லை.*

*மேலும், அல்லாஹ் இவர்களுக்கு எந்த அருளையும் வழங்கிட மாட்டான் என்று யாரைப் பற்றி நீங்கள் சத்தியம் செய்து கூறினீர்களோ, அவர்கள் தானே இந்த சொர்க்கவாதிகள்! (இன்று அவர்களை நோக்கியே கூறப்படும்) "நுழைந்துவிடுங்கள் சொர்க்கத்தில்! உங்க ளுக்கு யாதொரு அச்சமுமில்லை, நீங்கள் துயரப்படவும் மாட்டீர்கள்" (7:48,49)*

٦٠٢ – وَعَنْ عِيَاضِ بْنِ حِمَارٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ اللَّهَ أَوْحَى إِلَيَّ أَنْ تَوَاضَعُوا حَتَّى لاَ يَفْخَرَ أَحَدٌ عَلَى أَحَدٍ وَلاَ يَبْغِي أَحَدٌ عَلَى أَحَدٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**602** இயாழ் இப்னு ஹிமார் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் பணிவாக இருங்கள். ஒருவர் மற்றவரைவிட பெருமை கொள்ள வேண்டாம். ஒருவர் மற்றவருக்கு அநியாயம் செய்ய வேண்டாம் என அல்லாஹ் என்னிடம் இறைச்செய்தி அறிவித்தான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2865)**

٦٠٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَا نَقَصَتْ صَدَقَةٌ مِنْ مَالٍ وَمَا زَادَ اللَّهُ عَبْدًا بِعَفْوٍ إِلاَّ عِزًّا وَمَا تَوَاضَعَ أَحَدٌ لِلَّهِ إِلاَّ رَفَعَهُ اللَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**603** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தர்மம் செய்வது சொத்தில் எதையும் குறைத்து விடாது. மேலும் ஓர் அடியான் பிறரை மன்னிப்பதன் மூலம், அல்லாஹ் அவரது கண்ணியத்தை உயர்த்தாமல் இருப்பதில்லை. மேலும் அல்லாஹ்வுக்கு ஒரு அடியான் பணிந்தால் அவருக்குரிய தகுதியை அல்லாஹ் உயர்த்தாமல் இருப்பதில்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2588)**

٦٠٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ مَرَّ عَلَى صِبْيَانٍ فَسَلَّمَ عَلَيْهِمْ وَقَالَ: كَانَ النَّبِيُّ ﷺ يَفْعَلُهُ . مُتَّفَقٌ عَلَيْهِ.

**604** அனஸ் (ரழி) அவர்கள் சிறுவர்களை கடந்து செல்லும் போது, சிறுவர்களுக்கு ஸலாம் கூறுவார்கள். “இவ்வாறுதான் (சிறுவர்களுக்கும்) நபி (ஸல்) அவர்கள் ஸலாம் கூறுபவர்களாக இருந்தார்கள்” என்றும் கூறுவார்கள். **(புகாரி:6247. முஸ்லிம்:2168)**

٦٠٥ – وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ : إِنْ كَانَتْ الأَمَةُ مِنْ إِمَاءِ الْمَدِينَةِ لَتَأْخُذُ بِيَدِ النَّبِيِّ ﷺ فَتَنْطَلِقُ بِهِ حَيْثُ شَاءَتْ ! رَوَاهُ الْبُخَارِيُّ.

**605** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மதீனாவின் அடிமைப் பெண்களில் ஒரு பெண் நபி (ஸல்) அவர்களின் கையைப் பிடித்து, (தன் பிரச்சனைகளை தீர்த்திட)தான் விரும்பிய இடத்திற்கு அழைத்துச் செல்லலாம் (என்ற அளவுக்கு நபி (ஸல்) அவர்களின் எளிய நிலை இருந்தது) **(புகாரி:6072)**

٦٠٦ – وَعَنِ الأَسْوَدِ بْنِ يَزِيدَ قَالَ : سُئِلَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا : مَا كَانَ النَّبِيُّ ﷺ يَصْنَعُ فِي بَيْتِهِ ؟ قَالَتْ : كَانَ يَكُونُ فِي مِهْنَةِ أَهْلِهِ " يَعْنِي خِدْمَةَ أَهْلِهِ " فَإِذَا حَضَرَتِ الصَّلاَةُ خَرَجَ إِلَى الصَّلاَةِ . رَوَاهُ الْبُخَارِيُّ.

**606** அஸ்வத் இப்னு யஸீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்கள் தங்களின் வீட்டில் எப்படி நடந்து கொள்வார்கள்?” என ஆயிஷா (ரழி) அவர்களிடம் கேட்கப்பட்டது. “தன் குடும்பத்தாருக்கு உதவி புரிவதில் நபி (ஸல்) அவர்கள் இருப்பார்கள். தொழுகை நேரம் வந்து விட்டால் தொழுகைக்கு புறப்பட்டுச் செல்வார்கள்” என்று ஆயிஷா (ரழி) பதில் கூறினார்கள். **(புகாரி:676)**

٦٠٧ – وَعَنْ أَبِي رِفَاعَةَ تَمِيمِ بْنِ أُسَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : انْتَهَيْتُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ وَهُوَ يَخْطُبُ فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ رَجُلٌ غَرِيبٌ جَاءَ يَسْأَلُ عَنْ دِينِهِ لاَ يَدْرِي مَا دِينُهُ ؟ فَأَقْبَلَ عَلَيَّ رَسُولُ اللَّهِ ﷺ وَتَرَكَ خُطْبَتَهُ حَتَّى انْتَهَى إِلَيَّ فَأُتِيَ بِكُرْسِيٍّ فَقَعَدَ عَلَيْهِ وَجَعَلَ يُعَلِّمُنِي مِمَّا عَلَّمَهُ اللَّهُ ثُمَّ أَتَى خُطْبَتَهُ فَأَتَمَّ آخِرَهَا . رَوَاهُ مُسْلِمٌ .

**607** அபூரிஃபாஆ தமீம் இப்னு உஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் நான் வந்தேன். அப்போது அவர்கள் உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். “இறைத்தூதர் அவர்களே! மார்க்கத்தை அறியாததால் மார்க்கம் பற்றிக் கேட்க ஒரு வெளியூர்வாசி வந்துள்ளார்” என்று நான் கூறினேன். அப்போது ஒரு நாற்காலி கொண்டு வரப்பட்டது. அதில் உட்கார்ந்தார்கள். அல்லாஹ் அவர்களுக்கு அறிவித்துத் தந்தவற்றிலிருந்து எனக்கு கற்றுத் தந்தார்கள். பின்பு (உரை நிகழ்த்திட திரும்பி) உரையைத் தொடர்ந்து, பேசி முழுமைப்படுத்தினார்கள். **(முஸ்லிம்:876)**

٦٠٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا أَكَلَ طَعَامًا لَعِقَ أَصَابِعَهُ الثَّلاَثَ . ) قَالَ ( : وَقَالَ " إِذْ سَقَطَتْ لُقْمَةُ أَحَدِكُمْ فَلْيُمِطْ عَنْهَا الأَذَى وَلْيَأْكُلْهَا وَلاَ يَدَعْهَا لِلشَّيْطَانِ " . وَأَمَرَ أَنْ تُسْلَتَ الْقَصْعَةُ قَالَ : " فَإِنَّكُمْ لاَ تَدْرُونَ فِي أَيِّ طَعَامِكُمُ الْبَرَكَةُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**608** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் உணவு சாப்பிட்டதும், மூன்று தடவை தன் கை விரல்களைச் சூப்புவார்கள். "உங்களின் உணவில் ஒரு சிறு பகுதி கீழே விழுந்து விட்டால்கூட, அதில் உள்ள அசுத்தத்தை நீக்கி, அதை சாப்பிடட்டும். ஷைத்தானுக்கு அதை விட்டு விட வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். மேலும் உணவுத்தட்டு வழித்து உண்ணப்பட வேண்டும் என்றும் கட்டளையிட்டார்கள். "உங்கள் உணவில் எதில் "பரக்கத்" உள்ளது என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள்" என்றும் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2034)**

٦٠٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَا بَعَثَ اللَّهُ نَبِيًّا إِلاَّ رَعَى الْغَنَمَ " . قَالَ أَصْحَابُهُ : وَأَنْتَ ؟ فَقَالَ : " نَعَمْ كُنْتُ أَرْعَاهَا عَلَى قَرَارِيطَ لأَهْلِ مَكَّةَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**609** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ் அனுப்பிய எந்த நபியும் ஆடு மேய்க்காமல் இருந்ததில்லை" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அவர்களின் தோழர்கள், "நீங்களுமா?" என்று கேட்டார்கள். "ஆம், மக்காவாசிகளுக்காக (ஆடுகளை) சில வெள்ளிக் காசுகளுக்கு கூலியாக நான் மேய்த்துள்ளேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2262)**

٦١٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لَوْ دُعِيتُ إِلَى كُرَاعٍ أَوْ ذِرَاعٍ لأَجَبْتُ وَلَوْ أُهْدِيَ إِلَيَّ ذِرَاعٌ أَوْ كُرَاعٌ لَقَبِلْتُ " . رَوَاهُ الْبُخَارِيّ .

**610** அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

"ஓர் ஆட்டின் காலின் கீழ் பகுதி, அல்லது தொடைப் பகுதி ஆகியவற்றை சமைத்து விருந்துக்கு என்னை அழைக்கப்பட்டாலும் நான் அதை ஏற்பேன். எனக்கு ஆட்டின் காலின் கீழ் பகுதியையோ, அல்லது தொடைப் பகுதியையோ அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டாலும் அதையும் ஏற்றுக் கொள்வேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2568)**

٦١١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَتْ نَاقَةُ رَسُولِ اللَّهِ ﷺ الْعَضْبَاءُ لاَ تُسْبَقُ أَوْ لاَ تَكَادُ تُسْبَقُ فَجَاءَ أَعْرَابِيٌّ عَلَى قَعُودٍ لَهُ فَسَبَقَهَا فَشَقَّ ذَلِكَ عَلَى الْمُسْلِمِينَ حَتَّى عَرَفَهُ فَقَالَ : " حَقٌّ عَلَى اللَّهِ أَلاَّ يَرْتَفِعَ شَيْءٌ مِنَ الدُّنْيَا إِلاَّ وَضَعَهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**611** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் "அல்அள்பாஉ" என்ற ஒட்டகை இருந்தது. அதை எந்த ஒட்டகையாலும் முந்த முடியாது அல்லது முந்த முயற்சித்தது கூட கிடையாது. ஒரு காட்டரபி தன் பெண் ஒட்டகை மீது ஏறி வந்து, அதை முந்திவிட்டார். இது முஸ்லிம்களுக்குத் துயரத்தை ஏற்படுத்திவிட்டது. இதைக் கேள்விப்பட்ட நபி (ஸல்) அவர்கள், "உலகில் எந்தப் பொருள் உயர்ந்தாலும், அதை (ஒரு நேரத்தில்) தாழ்த்துவது என்ற கடமை அல்லாஹ்வின் மீது உள்ளது" என்று கூறினார்கள். **(புகாரி:2872)**

## ٧٢ – باب تحريم الكِبْر والإعجاب

## பாடம் : 72 - பெருமை கொள்வது கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : تِلْكَ الدَّارُ الأخِرَةُ نَجْعَلُهَا لِلَّذِينَ لاَ يُرِيدُونَ عُلُوًّا فِي الأَرْضِ وَلاَ فَسَادًا وَالْعَاقِبَةُ لِلْمُتَّقِينَ . وَقَالَ تَعَالَى : وَلاَ تَمْشِ فِي الأَرْضِ مَرَحًا . وَقَالَ تَعَالَى : وَلاَ تُصَعِّرْ خَدَّكَ لِلنَّاسِ وَلاَ تَمْشِ فِي الأَرْضِ مَرَحًا إِنَّ اللَّهَ لاَ يُحِبُّ كُلَّ مُخْتَالٍ فَخُورٍ . وَمَعْنَى " تُصَعِّرُ خَدَّكَ لِلنَّاسِ " : أَيْ تُمِيلُهُ وَتُعْرِضُ بِهِ عَنِ النَّاسِ تَكَبُّرًا عَلَيْهِمْ . " وَالْمَرَحُ " : التَّبَخْتُرُ . وَقَالَ تَعَالَى : إِنَّ قَارُونَ كَانَ مِنْ قَوْمِ مُوسَى فَبَغَى عَلَيْهِمْ وَآتَيْنَاهُ مِنَ الْكُنُوزِ مَا إِنَّ مَفَاتِحَهُ لَتَنُوءُ بِالْعُصْبَةِ أُولِي الْقُوَّةِ إِذْ قَالَ لَهُ قَوْمُهُ لاَ تَفْرَحْ إِنَّ اللَّهَ لاَ يُحِبُّ الْفَرِحِينَ إِلَى قَوْلِهِ تَعَالَى : فَخَسَفْنَا بِهِ وَبِدَارِهِ الأَرْضَ الأَيَات .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அந்த மறுமை வீட்டை – எவர்கள் உலகில் பெருமையடிக்கவும், அராஜகம் விளைவிக்கவும் விரும்பமாட்டார்களோ அவர்களுக்கே உரித்தாக்கி வைத்துள்ளோம். மேலும், இறுதியில் நல்ல முடிவு இறையச்ச முள்ளவர்களுக்கே இருக்கிறது. (28:83)*

*மேலும், பூமியில் செருக்காக நடக்காதீர்கள். ஏனெனில், உங்களால் பூமியைப் பிளந்து விடவும் முடியாது, மலையளவுக்கு உயர்ந்துவிடவும் முடியாது! (17:37)*

*மேலும், மக்களைவிட்டு முகத்தைத் திருப்பியவாறு பேசாதீர்! பூமியில் செருக்காய் நடக்காதீர்! அகந்தையும் ஆணவமும் கொண்ட எவனையும் அல்லாஹ் நேசிப்பதில்லை. (31:18)*

*உண்மை யாதெனில், காரூன் – மூஸாவின் சமுதாயத்தைச் சேர்ந்தவன். அவன் தன் சமூகத்திற்கு எதிராக வரம்பு மீறி நடந்தான். மேலும், நாம் அவனுக்கு எந்த அளவுக்கு செல்வக் கருவூலங்களை வழங்கியிருந்தோமெனில், அவற்றின் சாவிகளை பலசாலிகளின் ஒரு குழுவால் கூட சிரமப்பட்டுத்தான் தூக்க முடியும். ஒரு தடவை அவனுடைய சமூகத்தார் அவனிடம் கூறினார்கள். "நீ பெருமையடிக்காதே! ஏனெனில், பெருமையடிப்பவர்களை அல்லாஹ் நேசிப்பதில்லை."*

*அல்லாஹ் உனக்கு வழங்கியுள்ள செல்வத்தின் மூலம் மறுமையின் வீட்டைப்பெற அக்கறை கொள்! மேலும் இம்மையிலும் உனது பங்கை மறந்துவிடாதே! மேலும், அல்லாஹ் உனக்கு உதவி செய்திருப்பது போல் நீயும் உதவி செய். மேலும், பூமியில் அராஜகம் விளைவிக்க முயற்சி செய்யாதே! அராஜகம் விளைவிப்பவர்களைத் திண்ணமாக அல்லாஹ் நேசிப்பதில்லை.*

*அதற்கு அவன், "இவையனைத்தும் என்னிடமுள்ள அறிவினால்தான் எனக்குக் கிடைத்திருக் கின்றன" என்றான். அவனுக்கு முன்னால் அவனைவிட அதிக வலிமையையும். ஆள் பலத்தையும் பெற்றிருந்த சமூகங்களை அல்லாஹ் அழித்திருக்கின்றான் என்பது இவனுக்குத் தெரியாதா? மேலும், குற்றவாளிகளின் பாவங்கள் பற்றி (உடனுக்குடன்) கேட்கப்பட மாட்டார்கள்.*

*(ஒருநாள்) அவன் தன்னுடைய முழு அலங்காரமிடுக்குடன் தன் சமூகத்தார் முன்னிலையில் வந்தான். எவர்கள் உலக வாழ்க்கையை விரும்புவோராக இருந்தனரோ அவர்கள் (அவனைப் பார்த்து) கூறலானார்கள். "ஆஹா! காரூனுக்கு வழங்கப்பட்டிருப்பதைப் போன்று நமக்கும் கிடைத்திட வேண்டுமே! அவன் மகத்தான பாக்கியசாலிதான்!"*

*ஆயினும் ஞானம் வழங்கப்பட்டவர்கள் கூறலானார்கள்: "உங்கள் நிலை குறித்து வருந்து கின்றோம். நம்பிக்கை கொண்டு நற்செயல் புரிந்தோருக்கு அல்லாஹ்வின் நற்கூலி சிறந்ததாகும். மேலும், பொறுமையை மேற்கொள்கின்றவர்களுக்குத்தான் இந்த நற்பாக்கியம் கிடைக்கும்"*

*இறுதியில், நாம் அவனையும் அவனுடைய வீட்டையும் பூமியில் புதைத்து விட்டோம். அல்லாஹ்வுக்கு எதிராக அவனுக்கு உதவி செய்யும் கூட்டத்தார் எவரும் அவனுக்கு இருக்கவில்லை. தனக்குத் தானே உதவி செய்து கொள்ளக் கூடியவனாகவும் அவன் இல்லை.*

*நேற்று அவன் பெற்ற தகுதியை அடைய ஏக்கம் கொண்டிருந்த அதே ஆட்கள் இப்போது கூற ஆரம்பித்தார்கள். "ஐயகோ! நாம் மறந்து விட்டிருந்தோம். அல்லாஹ் தன்னுடைய அடியார்களில் தான் நாடுவோருக்கு வாழ்வாதாரத்தைத் தாராளமாக வழங்குகின்றான். மேலும், தான் நாடுவோருக்கு அளவோடு கொடுக்கின்றான் என்பதை. அல்லாஹ் எங்களுக்கு உதவி செய்திராவிட்டால், எங்களையும் பூமியில் புதைத்திருப்பான். ஐயகோ! நிராகரிப்பாளர்கள் வெற்றியடைவதில்லை என்பது எங்களுக்கு நினைவில்லாமல் போய்விட்டதே!" என்று கூறினார்கள். (28:76-82)*

٦١٢ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ يَدْخُلُ الْجَنَّةَ مَنْ كَانَ فِي قَلْبِهِ مِثْقَالُ ذَرَّةٍ مِنْ كِبْرٍ " . فَقَالَ رَجُلٌ : إِنَّ الرَّجُلَ يُحِبُّ أَنْ يَكُونَ ثَوْبُهُ حَسَنًا وَنَعْلُهُ حَسَنَةً ! قَالَ : " إِنَّ اللَّهَ جَمِيلٌ يُحِبُّ الْجَمَالَ الْكِبْرُ بَطَرُ الْحَقِّ وَغَمْطُ النَّاسِ " . رَوَاهُ مُسْلِمٌ . " بَطَرُ الْحَقِّ " : دَفْعُهُ وَرَدُّهُ عَلَى قَائِلِهِ . وَ " غَمْطُ النَّاسِ " : احْتِقَارُهُمْ .

**612** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி)அறிவிக்கின்றார்கள்:

"சிறிது அளவேனும் தன் உள்ளத்தில் பெருமை கொண்ட ஒருவர் சொர்க்கத்தில் நுழையமாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்போது ஒருவர், "ஒரு மனிதர் தன் ஆடை அழகாகவும், தன் செருப்பு அழகாகவும் இருந்திட விரும்புகிறார். இது (பெருமையாகுமா?)" என்று கேட்டார். "நிச்சயமாக அல்லாஹ் அழகானவன், அழகை விரும்புகிறான். பெருமை கொள்வது, சத்தியத்தை நிராகரிப்பதும், பிற மக்களைக் கேவலமாக எண்ணுவதுமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:91)**

٦١٣ – وَعَنْ سَلَمَةَ بْنِ الأَكْوَعِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً أَكَلَ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ بِشِمَالِهِ فَقَالَ : " كُلْ بِيَمِينِكَ " . قَالَ : لاَ أَسْتَطِيعُ . قَالَ : " لاَ اسْتَطَعْتَ مَا مَنَعَهُ إِلاَّ الْكِبْرُ ! " قَالَ : فَمَا رَفَعَهَا إِلَى فِيهِ . رَوَاهُ مُسْلِمٌ .

**613** ஸலமா இப்னு அக்வஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்கள் முன்பு தனது இடது கையால் சாப்பிட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உன் வலது கையால் சாப்பிடு" என்று கூறினார்கள். "அது என்னால் இயலாது" என்று அவர் கூறினார். "உன்னால் இயலாதா? பெருமையே தவிர உன்னைத் தடுக்கவில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அதன் பின்பு) அவரால் தன் (வலது) கையை தன் வாய் பக்கம் உயர்த்தவே இயலவில்லை. **(முஸ்லிம்:2021)**

٦١٤ – وَعَنْ حَارِثَةَ بْنِ وَهْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " أَلاَ أُخْبِرُكُمْ بِأَهْلِ النَّارِ ؟ كُلُّ عُتُلٍّ جَوَّاظٍ مُسْتَكْبِرٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْعُتُلُّ " : الْغَلِيظُ الْجَافِي . " وَالْجَوَّاظُ " بِفَتْحِ الْجِيمِ وَتَشْدِيدِ الْوَاوِ وَبِالظَّاءِ الْمُعْجَمَةِ : وَهُوَ الْجَمُوعُ الْمَنُوعُ . وَقِيلَ : الضَّخْمُ الْمُخْتَالُ فِي مِشْيَتِهِ . وَقِيلَ : الْقَصِيرُ الْبَطِينُ .

**614** ஹாரிஸா இப்னு வஹ்பு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நரக வாசிகள் பற்றி உங்களுக்குக் கூறட்டுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டுவிட்டு, "கடின இதயமுடையவரும், கஞ்சத்தனம் செய்பவரும், பெருமை கொள்வோரும் ஆகிய அனைவருமாவர்" என்றும் கூறினார்கள். **(புகாரி:4918, முஸ்லிம்:2853)**

٦١٥ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " احْتَجَّتِ الْجَنَّةُ وَالنَّارُ فَقَالَتِ النَّارُ : فِيَّ الْجَبَّارُونَ وَالْمُتَكَبِّرُونَ . وَقَالَتِ الْجَنَّةُ : فِيَّ ضُعَفَاءُ النَّاسِ وَمَسَاكِينُهُمْ . فَقَضَى اللَّهُ بَيْنَهُمَا : إِنَّكِ الْجَنَّةُ رَحْمَتِي أَرْحَمُ بِكِ مَنْ أَشَاءُ وَإِنَّكِ النَّارُ عَذَابِي أُعَذِّبُ بِكِ مَنْ أَشَاءُ وَلِكِلَيْكُمَا عَلَيَّ مِلْؤُهَا " . رَوَاهُ مُسْلِمٌ.

**615** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சொர்க்கமும், நரகமும் தர்க்கம் செய்து கொண்டன. "என்னுள் அட்டூழியம் செய்பவரும், பெருமை கொள்வோரும் உள்ளனர்" என நரகம் கூறியது. உடனே சொர்க்கம், "என்னுள் மக்களில் பலவீனரும், அவர்களில் ஏழைகளும் இருப்பர்" என்று கூறியது. அப்போது அல்லாஹ் அவ்விரண்டுக்குமிடையே, "சொர்க்கமாகிய நீ, என் அருளாகும். உன் மூலம் நான் நாடியோருக்கு அருள்புரிவேன். நரகமாகிய நீ, என் வேதனையாகும். உன் மூலம் நான் நாடியோரை வேதனை செய்வேன். உங்கள் இருவரையும் நிரப்புவது என் மீதுள்ள பொறுப்பாகும் என்று தீர்ப்புக் கூறினான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2847)**

٦١٦ -وعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ :"لاَ يَنْظُرُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ إِلَى مَنْ جَرَّ إِزَارَهُ بَطَرًا ".مُتَّفَقٌ عَلَيْهِ.

**616** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் வேட்டியை பெருமையாக, (கீழிறக்கிக்கட்டி) இழுத்துச் செல்பவனை மறுமை நாளில் அல்லாஹ் பார்க்க மாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5788. முஸ்லிம்:2087)**

٦١٧ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ثَلاَثَةٌ لاَ يُكَلِّمُهُمُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ يُزَكِّيهِمْ وَلاَ يَنْظُرُ إِلَيْهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ : شَيْخٌ زَانٍ وَمَلِكٌ كَذَّابٌ وَعَائِلٌ مُسْتَكْبِرٌ ". رَوَاهُ مُسْلِمٌ . " الْعَائِلُ " : الْفَقِيرُ.

**617** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மூன்று நபர்களுடன் மறுமை நாளில் அல்லாஹ் பேசமாட்டான், அவர்களைத் தூய்மைப் படுத்தவும் மாட்டான், அவர்களைப் பார்க்கவும் மாட்டான். அவர்களுக்குக் கடும் வேதனை உண்டு. (1) விபச்சாரம் செய்யும் வயோதிகன் (2) பொய் கூறும் அரசன் (3) பெருமை கொள்ளும் ஏழை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:107)**

٦١٨ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " قَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ : الْعِزُّ إِزَارِي وَالْكِبْرِيَاءُ رِدَائِي فَمَنْ يُنَازِعُنِي فِي وَاحِدٍ مِنْهُمَا فَقَدْ عَذَّبْته " . رَوَاهُ مُسْلِمٌ .

**618** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கண்ணியம் என் வேட்டியாகும். பெருமை என் மேலாடையாகும். இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றில் என்னிடம் ஒருவன் தர்க்கம் செய்தால் (போட்டி போட்டால்), அவனை நான் தண்டிப்பேன்" என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2620)**

٦١٩ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " بَيْنَمَا رَجُلٌ يَمْشِي فِي حُلَّةٍ تُعْجِبُهُ نَفْسُهُ مُرَجِّلٌ رَأْسَهُ يَخْتَالُ فِي مِشْيَتِهِ إِذْ خَسَفَ اللَّهُ بِهِ فَهُوَ يَتَجَلْجَلُ فِي الأَرْضِ إِلَى يَوْمِ الْقِيَامَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " مُرَجِّلٌ رَأْسَهُ " : أَيْ مُمَشِّطُهُ . " يَتَجَلْجَلُ " : بِالْجِيمَيْنِ : أَيْ يَغُوصُ وَيَنْزِلُ .

**619** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதன் கண்கவர் ஆடையை அணிந்து கொண்டு, தன் தலையை சீவி, பெருமையான நடையுடன் நடந்து சென்றான். அவனை அல்லாஹ் பூமிக்குள் இழுக்கும்படி செய்துவிட்டான். அவன் மறுமை நாள் வரை பூமிக்குள் அழுந்தி சென்று கொண்டே இருக்கிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5790. முஸ்லிம்:2088)**

٦٢٠ - وَعَنْ سَلَمَةَ بْنِ الأَكْوَعِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لاَ يَزَالُ الرَّجُلُ يَذْهَبُ بِنَفْسِهِ حَتَّى يُكْتَبَ فِي الْجَبَّارِينَ فَيُصِيبُهُ مَا أَصَابَهُمْ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " يَذْهَبُ بِنَفْسِهِ " : أَيْ يَرْتَفِعُ وَيَتَكَبَّرُ .

**620** ஸலமா இப்னு அல்அக்வஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தொடர்ந்து பெருமை கொள்ளும் ஒருவன், அட்டூழியம் செய்வோரில் எழுதப்படுவான். அவர்களுக்கு ஏற்படும் வேதனை, இவனுக்கும் ஏற்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதி:2000. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையில், “உமர் இப்னு ரஷீத் யமாமி” என்ற பலவீனர் இடம் பெறுகிறார்)**

## ٧٣ - بابُ حُسن الخلق

## பாடம் : 73 - நற்குணம்

قَالَ اللّٰهُ تَعَالَى : وَإِنَّكَ لَعَلى خُلُقٍ عَظِيمٍ . وَقَالَ تَعَالَى : وَالْكَاظِمِينَ الْغَيْظَ وَالْعَافِينَ عَنِ النَّاسِ وَاللّٰهُ يُحِبُّ الْمُحْسِنِينَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** “*(நபியே!) நிச்சயமாக நீர் நற்குணத்தில் உள்ளீர்*” (68:4)

*...அவர்கள் கோபத்தை மென்று விழுங்குவார்கள். மக்களை மன்னிப்பார்கள்...* (3:134)

٦٢١ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ أَحْسَنَ النَّاسِ خُلُقًا . مُتَّفَقٌ عَلَيْهِ .

**621** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், மக்களில் மிக அழகிய குணமுடையவர்களாக இருந்தார்கள்.

**(புகாரி:6203. முஸ்லிம்:2150)**

٦٢٢ - وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ : مَا مَسِسْتُ دِيبَاجًا وَلاَ حَرِيرًا أَلْيَنَ مِنْ كَفِّ رَسُولِ اللّٰهِ ﷺ وَلاَ شَمَمْتُ رَائِحَةً قَطُّ أَطْيَبَ مِنْ رَائِحَةِ رَسُولِ اللّٰهِ ﷺ وَلَقَدْ خَدَمْتُ رَسُولَ اللّٰهِ ﷺ عَشْرَ سِنِينَ فَمَا قَالَ لِي قَطُّ : " أُفٍّ " وَلاَ قَالَ لِشَيْءٍ فَعَلْتُهُ : " لِمَ فَعَلْتَهُ ؟ " وَلاَ لِشَيْءٍ لَمْ أَفْعَلْهُ : " أَلاَ فَعَلْتَ كَذَا ؟ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**622** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்களின் உள்ளங்கையை விட மென்மையான பட்டையோ, பட்டு ஆடையையோ, நான் தொட்டதில்லை. நபி (ஸல்) அவர்களின் வாடையை விட மிக நறுமணமான வாடையை அறவே நான் நுகர்ந்ததில்லை. நான் நபி (ஸல்) அவர்களுக்கு பத்து ஆண்டுகள் ஊழியம் செய்துள்ளேன். “சீ” என எப்போதும் அவர்கள் என்னிடம் கூறியதில்லை. நான் செய்த எதையும் ஏன் இப்படிச் செய்தாய்? என அவர்கள் கேட்டதும் இல்லை. நான் செய்யாத ஒன்றிற்காக “நீ இப்படி செய்திருக்கலாமே?” என்று அவர்கள் என்னிடம் கூறியதில்லை.” **(புகாரி:3561. முஸ்லிம்:2309,2330)**

٦٢٣ - وَعَنِ الصَّعْبِ بْنِ جَثَّامَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : أَهْدَيْتُ رَسُولَ اللّٰهِ ﷺ حِمَارًا وَحْشِيًّا فَرَدَّهُ عَلَيَّ فَلَمَّا رَأَى مَا فِي وَجْهِي قَالَ : " إِنَّا لَمْ نَرُدَّهُ عَلَيْكَ إِلاَّ أَنَّا حُرُمٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**623** ஸஃபு இப்னு ஜஸ்ஸாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்களுக்கு நான் காட்டுக் கழுதை ஒன்றை அன்பளிப்பாகக் கொடுத்தேன். என்னிடம் அதை திருப்பித் தந்து விட்டார்கள். என் முகத்தில் ஏற்பட்ட (வருத்தத்)தை

அவர்கள் கண்டதும், "இஹ்ராம் அணிந்துள்ளோம் என்பதாலேயே தவிர உம்மிடம் இதை நாம் திருப்பித் தரவில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1825. முஸ்லிம்:1193)**

٦٢٤ – وَعَنِ النَّوَّاسِ بْنِ سَمْعَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَأَلْت رَسُولَ اللَّهِ ﷺ عَنِ الْبِرِّ وَالأَثْمِ فَقَالَ : " الْبِرُّ حُسْنُ الْخُلُقِ وَالأَثْمُ مَا حَاكَ فِي صَدْرِك وَكَرِهْت أَنْ يَطَّلِعَ عَلَيْهِ النَّاسُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**624** நவாஸ் இப்னு ஸம்ஆன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நன்மை பற்றியும், தீமை பற்றியும் நபி (ஸல்) அவர்களிடம் நான் கேட்டேன். "நல்லது என்பது, நற்குணம்தான். தீமை என்பது உம் உள்ளத்தை உறுத்துவதும், மக்கள் அதைப் பார்த்து விடுவதை நீர் வெறுப்பதும் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2553)**

٦٢٥ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : لَمْ يَكُنْ رَسُولُ اللَّهِ ﷺ فَاحِشًا وَلاَ مُتَفَحِّشًا . وَكَانَ يَقُولُ : " إِنَّ مِنْ خِيَارِكُمْ أَحْسَنَكُمْ أَخْلاَقًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**625** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தீமையைச் செய்பவர்களாகவோ, தீமையைச் சொல்பவர்களாகவோ, தீமையை விரும்பக் கூடியவர்களாகவோ இருந்ததில்லை. மேலும், அவர்கள், "உங்களில் மிக சிறந்தவர்கள், உங்களில் அழகிய நற்குணங்கள் உள்ளவரே" என்று கூறுவார்கள்.

**(புகாரி:3559. முஸ்லிம்:2321)**

٦٢٦ – وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ : أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَا مِنْ شَيْءٍ أَثْقَلُ فِي مِيزَانِ الْعَبْدِ الْمُؤْمِنِ يَوْمَ الْقِيَامَةِ مِنْ حُسْنِ الْخُلُقِ وَإِنَّ اللَّهَ يُبْغِضُ الْفَاحِشَ الْبَذِيَّ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . " الْبَذِيُّ " هُوَ الَّذِي يَتَكَلَّمُ بِالْفُحْشِ وَرَدِيءِ الْكَلاَمِ .

**626** அபூதர்தாஉ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் ஒரு முஃமினின் தராசில் அதிக கனம் ஏற்படுத்துவது நற்குணம்தான். நிச்சயமாக அல்லாஹ், கெட்டப் பேச்சுக்களை பேசுபவனை, தீய செயல்கள் செய்பவனை (க் கண்டு) கோபப்படுகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2002. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٦٢٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سُئِلَ رَسُولُ اللَّهِ ﷺ عَنْ أَكْثَرِ مَا يُدْخِلُ النَّاسَ الْجَنَّةَ قَالَ : " تَقْوَى اللَّهِ وَحُسْنُ الْخُلُقِ " . وَسُئِلَ عَنْ أَكْثَرِ مَا يُدْخِلُ النَّاسَ النَّارَ فَقَالَ : " الْفَمُ وَالْفَرْجُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**627** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கத்தில் மக்களை நுழையச் செய்வதில் மிக அதிகமானவை எது?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. "இறையச்சமும், நற்குணமும்தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "நரகத்தில் மக்களை அதிக அளவில் நுழையச் செய்வது எது?" என்று கேட்கப்பட்டது. "வாயும், மறைவுறுப்பும்தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2004. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٦٢٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَكْمَلُ الْمُؤْمِنِينَ إِيمَانًا أَحْسَنُهُمْ خُلُقًا وَخِيَارُكُمْ خِيَارُكُمْ لِنِسَائِهِمْ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**628** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஃமின்களில் மிக அழகிய குணமுடையவரே, அவர்களில் ஈமானில் பரிபூரணமானவர் ஆவார். உங்களில் சிறந்தவர், உங்களின் மனைவியரிடம் சிறந்தவரே! (அவர்களிடம் நல்லவிதமாக நடந்து கொள்பவரே!)" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1162. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٦٢٩ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ الْمُؤْمِنَ لَيُدْرِكُ بِحُسْنِ خُلُقِهِ دَرَجَةَ الصَّائِمِ الْقَائِمِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**629** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக ஒரு முஃமின், தன் அழகிய குணத்தின் காரணமாக, (இரவில்) நின்று வணங்கக்கூடிய, (பகலில்) நோன்பு நோற்கக் கூடியவரின் தகுதியை அடைவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4798)**

٦٣٠ - وَعَنْ أَبِي أُمَامَةَ الْبَاهِلِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَنَا زَعِيمٌ بِبَيْتٍ فِي رَبَضِ الْجَنَّةِ لِمَنْ تَرَكَ الْمِرَاءَ وَإِنْ كَانَ مُحِقًّا وَبِبَيْتٍ فِي وَسَطِ الْجَنَّةِ لِمَنْ تَرَكَ الْكَذِبَ وَإِنْ كَانَ مَازِحًا وَبِبَيْتٍ فِي أَعْلَى الْجَنَّةِ لِمَنْ حَسَّنَ خُلُقَهُ " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ . " الزَّعِيمُ " : الضَّامِنُ .

**630** அபூஉமாமா அல்பாஹிலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உண்மை கூறுவதாக இருந்த போதிலும் தர்க்கம் செய்வதை விட்டு விடுபவருக்கு சொர்க்கத்தின் கீழ் தளத்தில் ஒரு வீடும், தமாஷாக இருந்தாலும் பொய்யை விட்டு விடுபவருக்கு சொர்க்கத்தின் நடுத்தளத்தில் ஒரு வீடும், அழகிய குணமுடையவருக்கு சொர்க்கத்தின் மேல்தளத்தில் ஒரு வீடும் கிடைக்க நான் பொறுப்பேற்றுக் கொள்கிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4800)**

٦٣١ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ مِنْ أَحَبِّكُمْ إِلَيَّ وَأَقْرَبِكُمْ مِنِّي مَجْلِسًا يَوْمَ الْقِيَامَةِ أَحَاسِنَكُمْ أَخْلَاقًا وَإِنَّ أَبْغَضَكُمْ إِلَيَّ وَأَبْعَدَكُمْ مِنِّي يَوْمَ الْقِيَامَةِ الثَّرْثَارُونَ وَالْمُتَشَدِّقُونَ وَالْمُتَفَيْهِقُونَ " . قَالُوا : يَا رَسُولَ اللَّهِ قَدْ عَلِمْنَا " الثَّرْثَارُونَ وَالْمُتَشَدِّقُونَ " فَمَا الْمُتَفَيْهِقُونَ ؟ قَالَ : " الْمُتَكَبِّرُونَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " الثَّرْثَارُ " : هُوَ كَثِيرُ الْكَلَامِ تَكَلُّفًا . " وَالْمُتَشَدِّقُ " : الْمُتَطَاوِلُ عَلَى النَّاسِ بِكَلَامِهِ وَيَتَكَلَّمُ بِمِلْءِ فِيهِ تَفَاصُحًا وَتَعْظِيمًا لِكَلَامِهِ . " وَالْمُتَفَيْهِقُ " أَصْلُهُ مِنَ الْفَهْقِ وَهُوَ الامْتِلَاءُ : وَهُوَ الَّذِي يَمْلَأُ فَمَهُ بِالْكَلَامِ وَيَتَوَسَّعُ فِيهِ وَيُغْرِبُ بِهِ تَكَبُّرًا وَارْتِفَاعًا وَإِظْهَارًا لِلْفَضِيلَةِ عَلَى غَيْرِهِ . وَرَوَى التِّرْمِذِيُّ عَنْ عَبْدِ اللَّهِ بْنِ الْمُبَارَكِ رَحِمَهُ اللَّهُ فِي تَفْسِيرِ حُسْنِ الْخُلُقِ قَالَ : هُوَ طَلَاقَةُ الْوَجْهِ وَبَذْلُ الْمَعْرُوفِ وَكَفُّ الأَذَى .

**631** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் அழகிய குணமுள்ளவர்கள், எனக்கு மிக விருப்பமானவர்களிலும், மறுமை நாளில் எனக்கு மிக நெருக்கமாக அமர்ந்திருப்போரிலும் அடங்குவர். (உங்களில்) அதிகமாக பேசுபவர்களும், தங்கள் பேச்சால் மக்களிடம் பெருமை அடிப்பவர்களும், முதபய்ஹிகூன்களும், உங்களில் எனக்கு மிக வெறுப்பானவர்களிலும் மறுமை நாளில் உங்களில் என்னை விட்டு மிகத் தூரத்தில் இருப்போர்களிலும் அடங்குவர். அப்பொழுது தோழர்கள், "இறைத்தூதர் அவர்களே! அதிகம்

பேசுபவர்கள் மற்றும் பேச்சைக் கொண்டு பெருமையடிப்பவர்கள் ஆகியோரை நாங்கள் அறிவோம். முதபய்ஹிகூன் என்றால் யார்?'' எனக் கேட்டார்கள். அதற்கு மறுமொழியாக, ''அவர்கள் பெருமைய டிப்பவர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2005. இது ''ஹஸன்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٧٤ – بابُ الحلم والأناة والرفق

## பாடம் : 74 - பொறுமையாக இருப்பது, அவசரப்படாமல் இருப்பது, மென்மையுடன் இருப்பது

قَالَ اللّٰهُ تَعَالَى : وَالْكَاظِمِينَ الْغَيْظَ وَالْعَافِينَ عَنِ النَّاسِ وَاللّٰهُ يُحِبُّ الْمُحْسِنِينَ . وَقَالَ تَعَالَى : خُذِ الْعَفْوَ وَأْمُرْ بِالْعُرْفِ وَأَعْرِضْ عَنِ الْجَاهِلِينَ . وَقَالَ تَعَالَى : وَلاَ تَسْتَوِي الْحَسَنَةُ وَلاَ السَّيِّئَةُ ادْفَعْ بِالَّتِي هِيَ أَحْسَنُ فَإِذَا الَّذِي بَيْنَكَ وَبَيْنَهُ عَدَاوَةٌ كَأَنَّهُ وَلِيٌّ حَمِيمٌ وَمَا يُلَقَّاهَا إِلاَّ الَّذِينَ صَبَرُوا وَمَا يُلَقَّاهَا إِلاَّ ذُو حَظٍّ عَظِيمٍ . وَقَالَ تَعَالَى : وَلَمَنْ صَبَرَ وَغَفَرَ إِنَّ ذَلِكَ لَمِنْ عَزْمِ الأُمُورِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அவர்கள் எத்தகையோர் எனில், வசதியுள்ள நிலையிலும், வசதியற்ற நிலையிலும் செலவழிப்பார்கள். மேலும் அவர்கள் சினத்தை அடக்கிக் கொள்வார்கள். மேலும் மக்(களின் தவறு)களை மன்னித்து விடுவார்கள். இத்தகைய உயர்ந்த பண்பினரை (முஹ்ஸின்களை) அல்லாஹ் நேசிக்கிறான். (3:134)*

*(நபியே!) மென்மையையும், மன்னிக்கும் நடத்தையையும் மேற்கொள்வீராக! மேலும், நன்மை புரியுமாறு ஏவுவீராக! இன்னும், அறிவீனர்களை விட்டு விலகியிருப்பீராக! (7:199)*

*(நபியே!) நன்மையும், தீமையும் சமமாக மாட்டாது. மிகச் சிறந்த நன்மையைக் கொண்டு நீர் தீமையைத் தடுப்பீராக! அப்போது உம்முடன் கடும் பகைமை கொண்டிருந்தவர் கூட உற்ற நண்பராக ஆகி விடுவதைக் காண்பீர். பொறுமை கொள்வோரைத் தவிர வேறெவருக்கும் இந்தக் குணம் வாய்க்கப் பெறுவதில்லை. பெரும் பேறு பெற்றவர்களைத் தவிர வேறெவருக்கும் இந்த உயர் தகுதி கிட்டுவதில்லை. (41:34,35)*

*ஆயினும், யார் பொறுமையை மேற்கொள்ளவும், மன்னித்துவிடவும் செய்கின்றார்களோ அவர்களின் இந்தச் செயல் திண்ணமாக உறுதி மிக்க (வீரச்) செயலைச் சேர்ந்ததாகும். (42:43)*

٦٣٢ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ لأَشَجِّ عَبْدِ الْقَيْسِ : " إِنَّ فِيكَ خَصْلَتَيْنِ يُحِبُّهُمَا اللّٰهُ : الْحِلْمُ وَالأَنَاةُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**632** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''பொறுமை, அவசரப்படாமை என உம்மிடம் இரண்டு நற்குணங்கள் உள்ளன. அவ்விரண்டையும் அல்லாஹ் விரும்புகிறான்'' என, அஷஜ்ஜு அப்தில் கைஸ் (ரழி) என்பவரிடம் நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:17)**

٦٣٣ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِنَّ اللّٰهَ رَفِيقٌ يُحِبُّ الرِّفْقَ فِي الأَمْرِ كُلِّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**633** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''நிச்சயமாக அல்லாஹ் மென்மையானவன் ஆவான். ஒவ்வொரு காரியங்களிலும் அவன் மென்மையையே விரும்புகிறான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6024. முஸ்லிம்:2165)**

٦٣٤ – وَعَنْهَا ) عَائِشَةَ ( أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِنَّ اللَّهَ رَفِيقٌ يُحِبُّ الرِّفْقَ وَيُعْطِي عَلَى الرِّفْقِ مَا لاَ يُعْطِي عَلَى الْعُنْفِ وَمَا لاَ يُعْطِي عَلَى مَا سِوَاهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**634** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக அல்லாஹ் மென்மையானவன், அவன் மென்மையையே விரும்புகிறான். மேலும் அவன், கடினமானதிற்கு கொடுக்காததையும், மற்றவைகளுக்கு கொடுக்காததையும் அவன் “மென்மை”க்கு கொடுக்கிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2593)**

٦٣٥ – وَعَنْهَا ) عَائِشَةَ ( أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِنَّ الرِّفْقَ لاَ يَكُونُ فِي شَيْءٍ إِلاَّ زَانَهُ وَلاَ يُنْزَعُ مِنْ شَيْءٍ إِلاَّ شَانَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**635** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மென்மை, எந்த விஷயத்தில் இடம்பெறுகின்றதோ, அவ்விஷயத்தை அது அழகாக்கி விடுகிறது. மேலும், மென்மை எவ்விஷயத்தை விட்டு நீக்கப்படுகிறதோ, அது அவ்விஷயத்தை சேதப்படுத்தி விடுகிறது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2594)**

٦٣٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَالَ أَعْرَابِيٌّ فِي الْمَسْجِدِ فَقَامَ النَّاسُ إِلَيْهِ لِيَقَعُوا فِيهِ فَقَالَ النَّبِيُّ ﷺ : " دَعُوهُ وَأَرِيقُوا عَلَى بَوْلِهِ سَجْلاً مِنْ مَاءٍ أَوْ ذَنُوبًا مِنْ مَاءٍ فَإِنَّمَا بُعِثْتُمْ مُيَسِّرِينَ وَلَمْ تُبْعَثُوا مُعَسِّرِينَ " ! رَوَاهُ الْبُخَارِيُّ . " السَّجْلُ " بِفَتْحِ السِّينِ الْمُهْمَلَةِ وَإِسْكَانِ الْجِيمِ : وَهِيَ الدَّلْوُ الْمُمْتَلِئَةُ مَاءً وَكَذَلِكَ الذَّنُوبُ .

**636** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பள்ளிவாசலில் ஒரு கிராமக் காட்டரபி சிறுநீர் கழித்து விட்டார். அவரை அடிக்க நபித்தோழர்கள் எழுந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், “அவரை விட்டு விடுங்கள். அவரின் சிறுநீரின் மீது ஒரு வாளித் தண்ணீரை ஊற்றுங்கள். நீங்கள் மென்மையாக நடந்து கொள்ளவே அனுப்பப்பட்டுள்ளீர்கள். கடினமானவர்களாக நடந்து கொள்ள நீங்கள் அனுப்பப்படவில்லை” என்று கூறினார்கள். **(புகாரி:220)**

٦٣٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " يَسِّرُوا وَلاَ تُعَسِّرُوا وَبَشِّرُوا وَلاَ تُنَفِّرُوا " مُتَّفَقٌ عَلَيْهِ.

**637** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் மென்மையாக நடந்து கொள்ளுங்கள். கடினமாக நடக்காதீர்கள். (மக்களை) வாழ்த்துங்கள். (அவர்களை) வெறுக்காதீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:69. முஸ்லிம்:1734)**

٦٣٨ – وَعَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ يُحْرَمِ الرِّفْقَ يُحْرَمِ الْخَيْرَ كُلَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**638** ஜரீர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மென்மையாக நடந்து கொள்ளத் தவறியவர், அனைத்து நன்மைகளையும் தவறவிட்டவராவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2592)**

٦٣٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ لِلنَّبِيِّ ﷺ : أَوْصِنِي . قَالَ : " لاَ تَغْضَبْ " فَرَدَّدَ مِرَارًا ; قَالَ : " لاَ تَغْضَبْ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**639** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர், நபி (ஸல்) அவர்களிடம் "எனக்கு உபதேசம் செய்யுங்கள்" என்று கூறினார். "நீர் கோபப்படாதீர்!" என்று கூறினார்கள். அவர் மீண்டும் மீண்டும் கேட்டார். "நீர் கோபப்படாதீர்" என்று பலமுறை நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6116)**

٦٤٠ - وَعَنْ أَبِي يَعْلَى شَدَّادِ بْنِ أَوْسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ اللَّهَ كَتَبَ الأِحْسَانَ عَلَى كُلِّ شَيْءٍ فَإِذَا قَتَلْتُمْ فَأَحْسِنُوا الْقِتْلَةَ وَإِذَا ذَبَحْتُمْ فَأَحْسِنُوا الذِّبْحَةَ وَلْيُحِدَّ أَحَدُكُمْ شَفْرَتَهُ وَلْيُرِحْ ذَبِيحَتَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**640** அபூயஃலா என்ற ஷத்தாத் இப்னு அவ்ஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக அல்லாஹ் அனைத்திலும் நல்லது செய்வதை கடமையாக்கி உள்ளான். ஆகவே நீங்கள் (தீங்கு தருபவற்றை) கொன்றால், அதைக் கொல்வதைக் கூட அழகாக்குங்கள். நீங்கள் (ஒரு பிராணியை) அறுத்தால், அறுப்பதை அழகாக்குங்கள். உங்களில் ஒருவர் தன் கத்தியை நன்றாக கூர்மையாக்கட்டும்! தான் (அறுக்கும்) பிராணிக்கு (விரைவாக அறுப்பதன் மூலம்) நிம்மதி தரட்டும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1955)**

٦٤١ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : مَا خُيِّرَ رَسُولُ اللَّهِ ﷺ بَيْنَ أَمْرَيْنِ قَطُّ إِلاَّ أَخَذَ أَيْسَرَهُمَا مَا لَمْ يَكُنْ إِثْمًا فَإِنْ كَانَ إِثْمًا كَانَ أَبْعَدَ النَّاسِ مِنْهُ . وَمَا انْتَقَمَ رَسُولُ اللَّهِ ﷺ لِنَفْسِهِ فِي شَيْءٍ قَطُّ إِلاَّ أَنْ تُنْتَهَكَ حُرْمَةُ اللَّهِ فَيَنْتَقِمُ لِلَّهِ تَعَالَى . مُتَّفَقٌ عَلَيْهِ .

**641** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்களுக்கு முன் இரண்டு விஷயங்களில் ஒன்றை தேர்ந்தெடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டால், அந்த இரண்டில் அவர்கள் இலகுவானதையே தேர்ந்தெடுப்பார்கள்; அது பாவமாக இல்லாமலிருப்பின். அது பாவமானதாக இருந்தால், அதனை விட்டு, மற்ற மக்களை விட வெகுதூரம் விலகி விடுவார்கள். நபி (ஸல்) அவர்கள் எந்த விஷயத்திலும் தனக்காக யாரையும், எப்பொழுதும் பழிவாங்கியதில்லை. எனினும், அல்லாஹ்வின் கண்ணியம் சேதப்படும் போது, அல்லாஹ்வுக்காக அவர்கள் பழிவாங்காமல் இருந்ததில்லை." **(புகாரி:3560. முஸ்லிம்:2327)**

٦٤٢ - وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَلاَ أُخْبِرُكُمْ بِمَنْ يَحْرُمُ عَلَى النَّارِ - أَوْ بِمَنْ تَحْرُمُ عَلَيْهِ النَّارُ ؟ - تَحْرُمُ عَلَى كُلِّ قَرِيبٍ هَيِّنٍ لَيِّنٍ سَهْلٍ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ.

**642** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நரகை விட்டும் விலகியவர், அல்லது நரகம் எவரை விட்டும் விலகியதோ அவரைப் பற்றி உங்களுக்குக் கூறட்டுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டு விட்டு, "(உறவினர்களிடம்) இலகுவாகவும், மென்மையாகவும் நடந்து கொள்ளும் ஒவ்வொரு உறவினர் மீதும் நரகம் விலக்கப்பட்டதாகும்" என்று கூறினார்கள்.

**(திர்மிதீ:2488. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையில் "அப்துல்லாஹ் இப்னு அம்ரு அல்அவ்தீ" என்ற பலவீனர் இடம் பெறுகிறார்)**

## ٧٥ – بَاب العفو والإعراض عن الجاهلين

### பாடம் : 75 - மன்னித்தல், அறிவிலிகளைப் புறக்கணித்தல்

قَالَ اللَّهُ تَعَالَى : خُذِ الْعَفْوَ وَأْمُرْ بِالْعُرْفِ وَأَعْرِضْ عَنِ الْجَاهِلِينَ . وَقَالَ تَعَالَى : فَاصْفَحِ الصَّفْحَ الْجَمِيلَ . وَقَالَ تَعَالَى : وَلْيَعْفُوا وَلْيَصْفَحُوا أَلاَ تُحِبُّونَ أَنْ يَغْفِرَ اللَّهُ لَكُمْ . وَقَالَ تَعَالَى : وَالْعَافِينَ عَنِ النَّاسِ وَاللَّهُ يُحِبُّ الْمُحْسِنِينَ . وَقَالَ تَعَالَى : وَلَمَنْ صَبَرَ وَغَفَرَ إِنَّ ذَلِكَ لَمِنْ عَزْمِ الأُمُورِ . وَالأيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) மென்மையையும், மன்னிக்கும் தன்மையையும் மேற்கொள்வீராக! நன்மையை ஏவுவீராக! அறிவீனர்களை அலட்சியம் செய்வீராக! (7:199)*

*வானங்களையும், பூமியையும், அவற்றுக்கு இடையே உள்ளவற்றையும் தக்க காரணத்துடனேயே படைத்துள்ளோம். அந்த நேரம் வந்தே தீரும். எனவே அழகிய முறையில் அவர்களை அலட்சியப் படுத்துவீராக! (15:85)*

*“உறவினர்களுக்கும், ஏழைகளுக்கும், அல்லாஹ்வின் பாதையில் ஹிஜ்ரத் செய்தோருக்கும் உதவமாட்டோம்” என்று செல்வமும், வசதியும் உடையோர் சத்தியம் செய்ய வேண்டாம். மன்னித்து அலட்சியம் செய்யட்டும். “அல்லாஹ் உங்களை மன்னிக்க வேண்டும்” என்று விரும்பமாட்டீர்களா? அல்லாஹ் மன்னிப்பவன், நிகரற்ற அன்புடையோன். (24:22)*

*அவர்கள் செழிப்பிலும், வறுமையிலும் (நல்வழியில்) செலவிடுவார்கள். கோபத்தை மென்று விழுங்குவார்கள். மக்களை மன்னிப்பார்கள். நன்மை செய்வோரை அல்லாஹ் நேசிக்கிறான். (3:134)*

*யார் பொறுமையை மேற்கொண்டு மன்னிக்கிறாரோ, அது உறுதி மிக்க காரியங்களில் ஒன்றாகும். (42:43)*

(இந்தப் பாடத்தில் அதிக அளவில் வசனங்கள் உள்ளன)

٦٤٣ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا قَالَتْ لِلنَّبِيِّ ﷺ : هَلْ أَتَى عَلَيْكَ يَوْمٌ كَانَ أَشَدَّ مِنْ يَوْمِ أُحُدٍ ؟ قَالَ : " لَقَدْ لَقِيتُ مِنْ قَوْمِكِ وَكَانَ أَشَدَّ مَا لَقِيتُ مِنْهُمْ يَوْمَ الْعَقَبَةِ إِذْ عَرَضْتُ نَفْسِي عَلَى ابْنِ عَبْدِ يَا لَيْلَ بْنِ عَبْدِ كُلاَلٍ فَلَمْ يُجِبْنِي إِلَى مَا أَرَدْتُ فَانْطَلَقْتُ وَأَنَا مَهْمُومٌ عَلَى وَجْهِي فَلَمْ أَسْتَفِقْ إِلاَّ وَأَنَا بِقَرْنِ الثَّعَالِبِ فَرَفَعْتُ رَأْسِي فَإِذَا أَنَا بِسَحَابَةٍ قَدْ أَظَلَّتْنِي فَنَظَرْتُ فَإِذَا فِيهَا جِبْرِيلُ عَلَيْهِ السَّلاَمُ فَنَادَانِي فَقَالَ : إِنَّ اللَّهَ تَعَالَى قَدْ سَمِعَ قَوْلَ قَوْمِكَ لَكَ وَمَا رَدُّوا عَلَيْكَ وَقَدْ بَعَثَ إِلَيْكَ مَلَكَ الْجِبَالِ لِتَأْمُرَهُ بِمَا شِئْتَ فِيهِمْ فَنَادَانِي مَلَكُ الْجِبَالِ فَسَلَّمَ عَلَيَّ ثُمَّ قَالَ : يَا مُحَمَّدُ إِنَّ اللَّهَ قَدْ سَمِعَ قَوْلَ قَوْمِكَ لَكَ وَأَنَا مَلَكُ الْجِبَالِ وَقَدْ بَعَثَنِي رَبِّي إِلَيْكَ لِتَأْمُرَنِي بِأَمْرِكَ فَمَا شِئْتَ ؟ إِنْ شِئْتَ أَطْبَقْتُ عَلَيْهِمُ الأَخْشَبَيْنِ . فَقَالَ النَّبِيُّ ﷺ : بَلْ أَرْجُو أَنْ يُخْرِجَ اللَّهُ مِنْ أَصْلاَبِهِمْ مَنْ يَعْبُدُ اللَّهَ وَحْدَهُ لاَ يُشْرِكُ بِهِ شَيْئًا " . مُتَّفَقٌ عَلَيْهِ . " الأَخْشَبَانِ " : الْجَبَلاَنِ الْمُحِيطَانِ بِمَكَّةَ . وَالأَخْشَبُ : هُوَ الْجَبَلُ الْغَلِيظُ .

**643** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உஹதுப் போரில் ஏற்பட்ட கடுமையான நிலை போன்று வேறு ஒரு நாளில் உங்களுக்கு ஏற்பட்டதுண்டா?” என்று நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். “(ஆம்) உம் கூட்டத்தாரிடமிருந்து (அதைவிட கடுமையான நிலையை) நான் சந்தித்துள்ளேன். நான் அவர்களிடம் சந்தித்த நாட்களில் மிகக் கடினமான நாள், மலைக்கணவாயின் (தாயிபின்) நாளாகும். அன்று (தாயிபின் தலைவனான) அலீ இப்னு அப்தி யாலைலு இப்னு அப்தி குலால் என்பவனிடம் (நபி என்னை நம்பு என) என்னைப்

பற்றி எடுத்துக் கூறினேன். அவன் என் விருப்பத்திற்கேற்ப பதில் கூறவில்லை. எனவே நான் என் முகத்தில் கவலை அடைந்தவனாக நடந்தேன். (மக்காவின் அருகில் உள்ள) ''கர்னுத் தஆலிப்'' என்ற இடத்தை அடையும் வரை முன்னோக்கிச் சென்றேன். என் தலையை உயர்த்தினேன். அப்போது எனக்கு மேல் மேகம் நிழலிட்டுக் கொண்டிருந்தது. உற்று நோக்கினேன். அங்கே அதில் ஜிப்ரீல் (அலை) இருந்தார்கள். என்னை அவர் அழைத்து, ''நிச்சயமாக அல்லாஹ் உம் கூட்டத்தாரின் சொல்லையும், அவர்கள் உமக்கு அளித்த பதிலையும் கேட்டுக் கொண்டான். உமக்கு அவர்கள் (முறையாக) பதில் கூறவில்லை. அவர்கள் விஷயமாக நீர் விரும்பியதைச் செய்திட மலைகளின் வானவரை உம்மிடம் அனுப்பி உள்ளான்'' என்று கூறினார்கள்.

பின்னர் மலைகளின் வானவர் என்னை அழைத்து, ''ஸலாம்'' கூறிவிட்டு, ''முஹம்மதே! உம்மிடம் உம் கூட்டத்தார் கூறியதை அல்லாஹ் கேட்டுக் கொண்டான். நான், மலைகளின் வானவர் ஆவேன். உங்கள் கட்டளைப்படி நான் நடந்து கொள்ள உம்மிடம் என் இறைவன் என்னை அனுப்பி உள்ளான். நீங்கள் விரும்புவது என்ன? நீங்கள் விரும்பினால் அவர்களை இரு மலைகளால் மூடி விடுகிறேன்'' என்று கூறினார். ''வேண்டாம், அல்லாஹ்வை மட்டுமே வணங்கி, அவனுக்கு இணை வைக்காதவர்களை அவர்களின் முதுகுந்தண்டுகளிலிருந்து (வாரிசுகளாக) அல்லாஹ் வெளிக் கொண்டு வருவான் என நான் நம்பிக்கை வைக்கிறேன்'' என்று கூறினேன்'' என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3231. முஸ்லிம்:1795)**

٦٤٤ – وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : مَا ضَرَبَ رَسُولُ اللَّهِ ﷺ شَيْئًا قَطُّ بِيَدِهِ وَلاَ امْرَأَةً وَلاَ خَادِمًا إِلاَّ أَنْ يُجَاهِدَ فِي سَبِيلِ اللَّهِ وَمَا نِيلَ مِنْهُ شَيْءٌ قَطُّ فَيَنْتَقِمُ مِنْ صَاحِبِهِ إِلاَّ أَنْ يُنْتَهَكَ شَيْءٌ مِنْ مَحَارِمِ اللَّهِ تَعَالَى فَيَنْتَقِمُ لِلَّهِ تَعَالَى . رَوَاهُ مُسْلِمٌ .

**644** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் கையால் மனைவியையோ, தன் ஊழியரையோ அடித்ததே இல்லை. ஆனால் அல்லாஹ்வின் வழியில் அவர்கள் போர் புரியும் போது மட்டுமே (எதிரிகளை அடித்துள்ளார்கள்). அல்லாஹ்விற்குரிய க்ண்ணியமான இடங்கள் சேதப்படுத்தப்பட்டாலே தவிர, அவர்கள் தனக்காக எவரையும் பழி வாங்கியதில்லை. அல்லாஹ்வுக்காக மட்டுமே பழிவாங்குவார்கள். **(முஸ்லிம்:2328)**

٦٤٥ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنْتُ أَمْشِي مَعَ رَسُولِ اللَّهِ ﷺ وَعَلَيْهِ بُرْدٌ نَجْرَانِيٌّ غَلِيظُ الْحَاشِيَةِ فَأَدْرَكَهُ أَعْرَابِيٌّ فَجَبَذَهُ بِرِدَائِهِ جَبْذَةً شَدِيدَةً فَنَظَرْتُ إِلَى صَفْحَةِ عَاتِقِ النَّبِيِّ ﷺ وَقَدْ أَثَّرَتْ بِهَا حَاشِيَةُ الْبُرْدِ مِنْ شِدَّةِ جَبْذَتِهِ ثُمَّ قَالَ : يَا مُحَمَّدُ مُرْ لِي مِنْ مَالِ اللَّهِ الَّذِي عِنْدَكَ . فَالْتَفَتَ إِلَيْهِ فَضَحِكَ ثُمَّ أَمَرَ لَهُ بِعَطَاءٍ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**645** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களோடு நடந்து சென்று கொண்டிருந்தேன். அவர்கள் (கழுத்தின்) மீது ஓரப்பகுதி தடிப்பமாக இருந்த ''நஜ்ரான்'' நாட்டுப் போர்வை போர்த்தியிருந்தார்கள். அப்போது ஒரு கிராமக் காட்டரபி வந்து, அவர்கள் மேல் இருந்த போர்வையை கடுமையாக இழுத்தார். அப்போது நபி (ஸல்) அவர்களின் தோள்பட்டையின் மேல் பகுதியைப் பார்த்தேன். அந்த காட்டரபி அந்தப் போர்வையை கடுமையாக பிடித்து இழுத்ததின் காரணத்தால், அது நபி (ஸல்) அவர்களின் தோள் பட்டையில் அடையாளத்தை ஏற்படுத்திவிட்டது. அந்த காட்டரபியோ, ''முஹம்மதே! உன்னிடம் உள்ள அல்லாஹ்விற்குரிய (பைத்துல்மால்) பொருளிலிருந்து எனக்குத் தரும்படி கட்டளையிடு வீராக!'' என்று கூறினார். அவரின் பக்கம் திரும்பிய நபி (ஸல்) அவர்கள் சிரித்துவிட்டு (பொது நிதியி லிருந்து) அவருக்கு நன்கொடை கொடுக்கும்படி கட்டளையிட்டார்கள். **(புகாரி:5809. முஸ்லிம்:1057)**

٦٤٦ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَأَنِّي أَنْظُرُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ يَحْكِي نَبِيًّا مِنَ الأَنْبِيَاءِ – صَلَوَاتُ اللَّهِ عَلَيْهِمْ – ضَرَبَهُ قَوْمُهُ فَأَدْمَوْهُ وَهُوَ يَمْسَحُ الدَّمَ عَنْ وَجْهِهِ وَيَقُولُ : " اللَّهُمَّ اغْفِرْ لِقَوْمِي فَإِنَّهُمْ لاَ يَعْلَمُونَ " ! مُتَّفَقٌ عَلَيْهِ .

**646** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நபியை அவரின் கூட்டத்தார் அடித்துக் காயப்படுத்தினார்கள். அவர் தன் முகத்திலிருந்த இரத்தத்தைத் துடைத்தார். மேலும் "இறைவா! என் கூட்டத்தாரை நீ மன்னிப்பாயாக! இவர்கள் அறியாத மக்களாக உள்ளனர்" என்று கூறினார் என, நபி (ஸல்) அவர்கள் நபிமார்களில் ஒரு நபி பற்றிக் கூறிக் கொண்டிருந்ததை நான் இன்றும் பார்ப்பது போல் உள்ளது. **(புகாரி:3477. முஸ்லிம்:1792)**

٦٤٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لَيْسَ الشَّدِيدُ بِالصُّرْعَةِ إِنَّمَا الشَّدِيدُ الَّذِي يَمْلِكُ نَفْسَهُ عِنْدَ الْغَضَبِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**647** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மல்யுத்தம் செய்பவர், உண்மையான வீரர் அல்லர். வீரர் என்பவர், கோபத்தின் போது தன்னை அடக்கிக் கொள்பவரே (உண்மையான) வீரர் ஆவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6114. முஸ்லிம்:2609)**

## ٧٦ – بَابُ احتمال الأذى

## பாடம் : 76 - வேதனையை சகித்துக் கொள்ளல்!

**قَالَ اللَّهُ تَعَالَى : وَالْكَاظِمِينَ الْغَيْظَ وَالْعَافِينَ عَنِ النَّاسِ وَاللَّهُ يُحِبُّ الْمُحْسِنِينَ . وَقَالَ تَعَالَى : وَلَمَنْ صَبَرَ وَغَفَرَ إِنَّ ذَلِكَ لَمِنْ عَزْمِ الأُمُورِ .**

**وَفِي الْبَابِ الأَحَادِيثُ السَّابِقَةُ فِي الْبَابِ قَبْلَهُ .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *அவர்கள் செழிப்பிலும், வறுமையிலும் (நல்வழியில்) செலவிடுவார்கள். கோபத்தை மென்று விழுங்குவார்கள். மக்களை மன்னிப்பார்கள். நன்மை செய்வோரை அல்லாஹ் நேசிக்கிறான். (3:134)*

*யார் பொறுமையை மேற்கொண்டு மன்னிக்கிறாரோ, அது உறுதி மிக்க காரியங்களில் ஒன்றாகும். (42:43)*

٦٤٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ لِي قَرَابَةً أَصِلُهُمْ وَيَقْطَعُونَنِي وَأُحْسِنُ إِلَيْهِمْ وَيُسِيئُونَ إِلَيَّ وَأَحْلُمُ عَنْهُمْ وَيَجْهَلُونَ عَلَيَّ . فَقَالَ : " لَئِنْ كُنْتَ كَمَا قُلْتَ فَكَأَنَّمَا تُسِفُّهُمُ الْمَلَّ وَلاَ يَزَالُ مَعَكَ مِنَ اللَّهِ ظَهِيرٌ عَلَيْهِمْ مَا دُمْتَ عَلَى ذَلِكَ " رَوَاهُ مُسْلِمٌ . وَقَدْ سَبَقَ شَرْحُهُ فِي " بَابِ صِلَةِ الأَرْحَامِ "

**648** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! எனக்கு சில உறவினர் உண்டு. அவர்களை நான் இணைத்து வாழ்கிறேன். ஆனால் அவர்கள் என்னை ஒதுக்குகிறார்கள். அவர்களுக்கு நான் நன்மை செய்கிறேன். ஆனால் அவர்கள் எனக்கு தீமை செய்கிறார்கள். அவர்களிடம் நான் கனிவுடன் நடக்கிறேன். ஆனால் அவர்கள் என்னை கண்டுகொள்வதில்லை"

என்று கூறினார். "நீர் கூறுவது போல் நீர் இருந்தால், அவர்களை நீர் சுடுசாம்பலை உண்ணச் செய்தது போலாகும். (அல்லாஹ்வின் தண்டனையை அவர்கள் அடைவர்). நீர் இதே நிலையில் இருக்கும் வரை அல்லாஹ்விடமிருந்து உதவியாளர் ஒருவர் (மலக்கு) உம்முடன் இருப்பார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2558)**

## ٧٧ – بَاب الغضب إِذَا انتهكت حر مات الشّرع والانتصار لِدِينِ اللّه تَعَالَى

## பாடம் : 77 - மார்க்கத்தின் கண்ணியம் தகர்க்கப்படும் போது, கோபம் கொள்ளுதல். அல்லாஹ்வின் மார்க்கத்திற்காக உதவி புரிதல்.

قَالَ اللَّهُ تَعَالَى : وَمَنْ يُعَظِّمْ حُرُمَاتِ اللَّهِ فَهُوَ خَيْرٌ لَهُ عِنْدَ رَبِّهِ . وَقَالَ تَعَالَى : إِنْ تَنْصُرُوا اللَّهَ يَنْصُرْكُمْ وَيُثَبِّتْ أَقْدَامَكُمْ. وَفِي الْبَابِ حَدِيثُ عَائِشَةَ السَّابِقُ فِي بَابِ الْعَفْوِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இதுவே (அல்லாஹ்வின் கட்டளை). அல்லாஹ் புனிதமாக்கியவற்றைக் கண்ணியப்படுத்துவோருக்கு அது இறைவனிடம் அவருக்குச் சிறந்தது. (22:30)*

*நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவினால் அவன் உங்களுக்கு உதவுவான். உங்கள் பாதங்களை அவன் உறுதிப்படுத்துவான். (47:7)*

٦٤٩ – وَعَنْ أَبِي مَسْعُودٍ عُقْبَةَ بْنِ عَمْرٍو الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : إِنِّي لأَتَأَخَّرُ عَنْ صَلاَةِ الصُّبْحِ مِنْ أَجْلِ فُلاَنٍ مِمَّا يُطِيلُ بِنَا ! فَمَا رَأَيْتُ النَّبِيَّ ﷺ غَضِبَ فِي مَوْعِظَةٍ قَطُّ أَشَدَّ مِمَّا غَضِبَ يَوْمَئِذٍ ؛ فَقَالَ : " يَا أَيُّهَا النَّاسُ إِنَّ مِنْكُمْ مُنَفِّرِينَ فَأَيُّكُمْ أَمَّ النَّاسَ فَلْيُوجِزْ فَإِنَّ مِنْ وَرَائِهِ الْكَبِيرَ وَالصَّغِيرَ وَذَا الْحَاجَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**649** அபூமஸ்ஊத் உக்பா இப்னு ஆமிர் பத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, "எங்களுக்கு (தொழவைக்கும்) இன்ன நபர் தொழுகையை மிக நீட்டி விடுகின்ற காரணத்தால், நான் காலை சுப்ஹுத் தொழுகையைப் பிந்தி விடுகிறேன்" என்று கூறினார். அன்று உரை நிகழ்த்தும் போது நபி (ஸல்) அவர்கள் கோபம் கொண்டது போல் அறவே (இதற்குமுன்) கோபம் கொண்டு நான் பார்த்ததில்லை. அப்போது அவர்கள் (தன் உரையில்), "மனிதர்களே! உங்களில் வெறுப்பை ஏற்படுத்துவோர் உள்ளனர். மக்களுக்கு தொழுகை நடத்துபவர் எவரேனும் உங்களில் இருந்தால், அவர் சுருக்(கித் தொழ வைக்)கட்டும்! ஏனெனில் அவருக்கு பின்னால் முதியவர், குழந்தை, பிற தேவைகள் உடையவர் (என பலரும்) உள்ளனர்" என்று கூறினார்கள். **(புகாரி:702. முஸ்லிம்:466)**

٦٥٠ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَدِمَ رَسُولُ اللَّهِ ﷺ مِنْ سَفَرٍ وَقَدْ سَتَرْتُ سَهْوَةً لِي بِقِرَامٍ فِيهِ تَمَاثِيلُ فَلَمَّا رَآهُ رَسُولُ اللَّهِ ﷺ هَتَكَهُ وَتَلَوَّنَ وَجْهُهُ وَقَالَ : " يَا عَائِشَةُ أَشَدُّ النَّاسِ عَذَابًا عِنْدَ اللَّهِ يَوْمَ الْقِيَامَةِ الَّذِينَ يُضَاهُونَ بِخَلْقِ اللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " السَّهْوَةُ " كَالصُّفَّةِ تَكُونُ بَيْنَ يَدَيِ الْبَيْتِ . وَ " الْقِرَامُ " بِكَسْرِ الْقَافِ : سِتْرٌ رَقِيقٌ . وَ " هَتَكَهُ " أَفْسَدَ الصُّورَةَ الَّتِي فِيهِ .

**650** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்து திரும்பி வந்தார்கள். எனக்குரியத் திண்ணையை திரையால் மூடி இருந்தேன். அதில் உருவப்படங்கள் இருந்தன. நபி (ஸல்) அவர்கள் அதைப் பார்த்ததும், அத்திரையிலுள்ள உருவப்படங்களைக் கிழித்தார்கள். அவர்களின் முகம் (கோபத்தால்)

நிறம் மாறியது. "ஆயிஷாவே! அல்லாஹ்விடம் மறுமை நாளில், மக்களில் மிகக் கடுமையான வேதனை பெறுபவர்கள், அல்லாஹ்வின் படைப்புகளைப் போன்று வரைந்து ஒப்பாக்குகிறவர்கள் தாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5954. முஸ்லிம்:2107)**

٦٥١ – وَعَنْهَا ) عَائِشَةَ ( أَنَّ قُرَيْشًا أَهَمَّهُمْ شَأْنُ الْمَرْأَةِ الْمَخْزُومِيَّةِ الَّتِي سَرَقَتْ فَقَالُوا : مَنْ يُكَلِّمُ فِيهَا رَسُولَ اللَّهِ ﷺ ؟ فَقَالُوا : مَنْ يَجْتَرِئُ عَلَيْهِ إِلاَّ أُسَامَةُ بْنُ زَيْدٍ حِبُّ رَسُولِ اللَّهِ ﷺ ؟ فَكَلَّمَهُ أُسَامَةُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَتَشْفَعُ فِي حَدٍّ مِنْ حُدُودِ اللَّهِ تَعَالَى ؟ " . ثُمَّ قَامَ فَاخْتَطَبَ ثُمَّ قَالَ : " إِنَّمَا أَهْلَكَ الَّذِينَ مِنْ قَبْلِكُمْ أَنَّهُمْ كَانُوا إِذَا سَرَقَ فِيهِمُ الشَّرِيفُ تَرَكُوهُ وَإِذَا سَرَقَ فِيهِمُ الضَّعِيفُ أَقَامُوا عَلَيْهِ الْحَدَّ ! وَأَيْمُ اللَّهِ لَوْ أَنَّ فَاطِمَةَ بِنْتَ مُحَمَّدٍ سَرَقَتْ لَقَطَعْتُ يَدَهَا " مُتَّفَقٌ عَلَيْهِ .

**651** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு சமயம், மக்ஸூமிய்யா குலத்தாரைச் சேர்ந்த ஒரு பெண் திருடி விட்டாள். இது குறைஷி மக்களுக்குக் கவலையை ஏற்படுத்தியது. (மக்ஸூமிய்யா கிளை குறைஷி கோத்திரத்தின் கிளைகளில் ஒன்றாகும்) ஆகவே அவர்கள் (ஒன்று கூடி), "இப்பெண் குறித்து நபி (ஸல்) அவர்களிடம் பரிந்து பேசுபவர் யார்?" என்று அவர்களுக்குள் பேசிக் கொண்டனர். "நபி (ஸல்) அவர்களுக்குப் பிரியமான வரான உஸாமா இப்னு ஸைத் (ரழி) அவர்களைத் தவிர, நபி (ஸல்) அவர்களிடம் பேச தைரியமானவர் யார் உள்ளார்?" என அவர்கள் கூறினர். எனவே உஸாமா (ரழி) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் பேசினார். உடனே நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் குற்றவியல் சட்டங்களிலே ஒன்றில் நீ பரிந்துரை செய்கிறாயா?" என்று கேட்டார்கள். அதன்பின் எழுந்து, உரை நிகழ்த்தினார்கள். "உங்களுக்கு முன் இருந்தோர் அழிந்து போனதன் காரணம்; அவர்களில் வசதியானவர் திருடினால், அவரை அவர்கள் விட்டு விடுவார்கள். அவர்களில் ஏழை ஒருவர் திருடினால், அவரைத் தண்டிக்க முயற்சிப்பார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹம்மதின் மகளான பாத்திமா திருடி இருந்தால் கூட, அவளின் கையையும் நான் துண்டிப்பேன்" என (தன் உரையில்) நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6788. முஸ்லிம்:1688)**

٦٥٢ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ رَأَى نُخَامَةً فِي الْقِبْلَةِ فَشَقَّ ذَلِكَ عَلَيْهِ حَتَّى رُئِيَ فِي وَجْهِهِ فَقَامَ فَحَكَّهُ بِيَدِهِ فَقَالَ : " إِنَّ أَحَدَكُمْ إِذَا قَامَ فِي صَلاَتِهِ فَإِنَّهُ يُنَاجِي رَبَّهُ وَإِنَّ رَبَّهُ بَيْنَهُ وَبَيْنَ الْقِبْلَةِ فَلاَ يَبْزُقَنَّ أَحَدُكُمْ قِبَلَ الْقِبْلَةِ وَلَكِنْ عَنْ يَسَارِهِ أَوْ تَحْتَ قَدَمِهِ " . ثُمَّ أَخَذَ طَرَفَ رِدَائِهِ فَبَصَقَ فِيهِ ثُمَّ رَدَّ بَعْضَهُ عَلَى بَعْضٍ فَقَالَ : " أَوْ يَفْعَلُ هَكَذَا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَالأَمْرُ بِالْبُصَاقِ عَنْ يَسَارِهِ أَوْ تَحْتَ قَدَمِهِ هُوَ فِيمَا إِذَا كَانَ فِي غَيْرِ الْمَسْجِدِ فَأَمَّا فِي الْمَسْجِدِ فَلاَ يَبْصُقُ إِلاَّ فِي ثَوْبِهِ .

**652** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தொழும் திசையில் (பள்ளியில்) சளியைக் கண்டார்கள். அது அவர்களுக்கு துயரத்தை ஏற்படுத்தியது. அது அவர்களின் முகத்தில் தெரிந்தது. அவர்கள் எழுந்து, தன் கையால் சுரண்டினார்கள். பின்பு அவர்கள், "உங்களில் ஒருவர் தன் தொழுகையில் நின்றால், தன் இறைவனிடம் அவர் பேசுபவர் போலாவார். அவருக்கும் கிப்லாவுக்குமிடையே அவரின் இறைவன் உள்ளான். எனவே, உங்களில் ஒருவர் கிப்லாவை முன்னோக்கி எச்சிலைத் துப்ப வேண்டாம். எனினும், தன் இடதுபுறமோ, தன் காலுக்குக் கீழோ துப்பட்டும்" என்று கூறினார்கள். பின்பு தன் மேலாடையின் ஒரு பகுதியைப் பிடித்து, அதில் எச்சிலைத் துப்பினார்கள். பின்பு அதை ஒன்றோடு ஒன்றாக இணைத்துக் கசக்கினார்கள். "அல்லது இவ்வாறு செய்து கொள்ளட்டும்" என்றும் கூறினார்கள்.

**(புகாரி:405. முஸ்லிம்:551)**

## ٧٨ – باب أمر وُلاة الأمور بالر فق برَعاتاهم وضيحتهم والشفقة عليهم، والنهي عن غشهم، والتشديد عليهم، وإهمَال مصالحهم، والغفلة عنهم وعن حوائجهم

**பாடம் : 78 - மக்களிடம் மென்மையாக நடப்பது, அவர்களுக்கு நன்மை செய்வது, அவர்களிடம் அன்பு காட்டுவது எனவும்; மக்களுக்கு மோசடி செய்வது, அவர்களிடம் கடுமையாக நடப்பது, அவர்களின் நல்லவைகளை வீணாக்குவது கூடாது எனவும், அவர்களையும்-அவர்களின் தேவைகளையும் விட்டும் புறக்கணித்தல் கூடாது எனவும் ஆட்சியாளர்களுக்கு அறிவுறுத்தல்.**

قَالَ اللّٰهُ تَعَالَى : وَاخْفِضْ جَنَاحَكَ لِمَنِ اتَّبَعَكَ مِنَ الْمُؤْمِنِينَ . وَقَالَ تَعَالَى : إِنَّ اللّٰهَ يَأْمُرُ بِالْعَدْلِ وَالأَحْسَانِ وَإِيتَاءِ ذِي الْقُرْبَى وَيَنْهَى عَنِ الْفَحْشَاءِ وَالْمُنْكَرِ وَالْبَغْيِ يَعِظُكُمْ لَعَلَّكُمْ تَذَكَّرُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) உம்மைப் பின்பற்றிய நம்பிக்கை கொண்டோருக்கு, உமது (இரக்கம் எனும்) சிறகைத் தாழ்த்துவீராக! (26:215)*

*நீதி, நன்மை மற்றும் உறவினருக்குக் கொடுப்பதை அல்லாஹ் கட்டளை இடுகிறான். வெட்கக் கேடானவை, தீமை மற்றும் வரம்பு மீறுவதை உங்களுக்குத் தடுக்கிறான். நீங்கள் நல்லுணர்வு பெறுவதற்காக உங்களுக்கு அறிவுரை கூறுகிறான். (16:90)*

٦٥٣ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ : " كُلُّكُمْ رَاعٍ وَكُلُّكُمْ مَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ : الإِمَامُ رَاعٍ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ وَالرَّجُلُ رَاعٍ فِي أَهْلِهِ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ وَالْمَرْأَةُ رَاعِيَةٌ فِي بَيْتِ زَوْجِهَا وَمَسْئُولَةٌ عَنْ رَعِيَّتِهَا وَالْخَادِمُ رَاعٍ فِي مَالِ سَيِّدِهِ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ وَكُلُّكُمْ رَاعٍ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**653** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளர்களாவீர்கள். ஒவ்வொரு வரும் தன் பொறுப்பு பற்றி விசாரிக்கப்படுவார். தலைவரும் பொறுப்பாளியே! அவரும் தன் பொறுப்புப் பற்றி விசாரிக்கப்படுவார். ஒரு மனிதர், அவர் மனைவி குறித்துப் பொறுப்புதாரியாவார். அவரின் பொறுப்பு பற்றி அவர் விசாரிக்கப்படுவார். ஒரு பெண் தன் கணவனின் வீட்டிற்கு பொறுப்புதாரியாவாள். அவள் தன் பொறுப்புப் பற்றி விசாரிக்கப்படுவாள். ஓர் ஊழியர் தன் எஜமானர் விஷயத்தில் பொறுப்புதாரியாவார். அவர் தன் பொறுப்புப் பற்றி கேட்கப்படுவார். ஒவ்வொருவரும் பொறுப்புதாரியே! அவரவர் தம் பொறுப்புப் பற்றி விசாரிக்கப்படுவார்கள்!” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:893. முஸ்லிம்:1829)**

٦٥٤ – وَعَنْ أَبِي يَعْلَى مَعْقِلِ بْنِ يَسَارٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ عَبْدٍ يَسْتَرْعِيهِ اللّٰهُ رَعِيَّةً يَمُوتُ يَوْمَ يَمُوتُ وَهُوَ غَاشٌّ لِرَعِيَّتِهِ إِلاَّ حَرَّمَ اللّٰهُ عَلَيْهِ الْجَنَّةَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " فَلَمْ يُحِطْهَا بِنُصْحِهِ لَمْ يَجِدْ رَائِحَةَ الْجَنَّةِ " . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : " مَا مِنْ أَمِيرٍ يَلِي أُمُورَ الْمُسْلِمِينَ ثُمَّ لاَ يَجْهَدُ لَهُمْ وَيَنْصَحُ لَهُمْ إِلاَّ لَمْ يَدْخُلْ مَعَهُمُ الْجَنَّةَ " .

**654** அபூயஃலா என்ற மஃகில் இப்னு யஸார் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ் ஒருவருக்கு பொறுப்பை வழங்கி, அவர் தன் பொறுப்பை விட்டும் பாராமுகமாக இருந்தவராக மரணித்து விட்டால், அவருக்கு சொர்க்கத்தை அல்லாஹ் தடை செய்துவிட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7150. முஸ்லிம்:142)**

"தன் நல்ல நடவடிக்கை மூலம் தன் பொறுப்பை நிறைவேற்றத் தவறியவர், சொர்க்கத்தின் வாடையைக் கூட நுகர மாட்டார்" என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

"முஸ்லிம்களின் காரியங்களுக்குப் பொறுப்பேற்றுக் கொண்ட ஒரு தலைவர், பின்பு அவர்களுக்கு பாடுபடாமல் அவர்களுக்கு நல்லது செய்யாமல் இருந்தால், அவர் அவர்களுடன் சொர்க்கத்தில் நுழைந்திடமாட்டார்" என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

٦٥٥ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ فِي بَيْتِي هَذَا : " اللَّهُمَّ مَنْ وَلِيَ مِنْ أَمْرِ أُمَّتِي شَيْئًا فَشَقَّ عَلَيْهِمْ فَاشْقُقْ عَلَيْهِ وَمَنْ وَلِيَ مِنْ أَمْرِ أُمَّتِي شَيْئًا فَرَفَقَ بِهِمْ فَارْفُقْ بِهِ " . رَوَاهُ مُسْلِمٌ.

**655** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் என்னுடைய இந்த வீட்டில் (இவ்வாறு) துஆச் செய்தார்கள். "இறைவா! என் சமுதாயத்தின் காரியத்தில் ஏதேனும் ஒன்றிற்கு ஒருவர் பொறுப்பேற்று, அவர்களிடம் அவர் கடுமையாக நடந்து கொண்டால், அவரிடம் நீயும் கடுமையாக நடந்து கொள்வாயாக! என் சமுதாயத்தின் காரியத்தில் ஏதேனும் ஒன்றிற்கு ஒருவர் பொறுப்பேற்று, அவர் அவர்களிடம் மென்மையாக நடந்து கொண்டால், நீயும் அவரிடம் மென்மையாக நடந்து கொள்வாயாக!" என்று (பிரார்த்திக்கும் போது) கூறினார்கள். **(முஸ்லிம்:1828)**

٦٥٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " كَانَتْ بَنُو إِسْرَائِيلَ تَسُوسُهُمُ الأَنْبِيَاءُ كُلَّمَا هَلَكَ نَبِيٌّ خَلَفَهُ نَبِيٌّ وَإِنَّهُ لاَ نَبِيَّ بَعْدِي وَسَيَكُونُ بَعْدِي خُلَفَاءُ فَيَكْثُرُونَ " . قَالُوا : يَا رَسُولَ اللَّهِ فَمَا تَأْمُرُنَا ؟ قَالَ : " أَوْفُوا بِبَيْعَةِ الأَوَّلِ فَالأَوَّلِ ثُمَّ أَعْطُوهُمْ حَقَّهُمْ وَاسْأَلُوا اللَّهَ الَّذِي لَكُمْ فَإِنَّ اللَّهَ سَائِلُهُمْ عَمَّا اسْتَرْعَاهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**656** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பனூ இஸ்ரவேலர்களை நபிமார்கள்தான் நிர்வாகம் செய்தனர். ஒரு நபி இறந்ததும், அவருக்குப்பின் மற்றொரு நபி பொறுப்பேற்பார். "நிச்சயமாக எனக்குப் பின் நபி கிடையாது. எனக்குப் பின் கலீபாக்கள் அதிக அளவில் வருவார்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள்?" என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். "உங்களிடம் முதலில் சத்தியப் பிரமாணம் செய்பவருக்கு அதனைப் பரிபூரணமாக நிறை வேற்றுங்கள். பின்பு அவர்களுக்குரிய உரிமையை அவர்களுக்கு வழங்குங்கள். உங்களுக்குரியதை அல்லாஹ்விடம் கேளுங்கள். நிச்சயமாக அல்லாஹ், அவர்களை நிர்வாகம் செய்தவர் பற்றி அவர்களிடம் கேட்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3455, முஸ்லிம்:1842)**

٦٥٧ – وَعَنْ عَائِذِ بْنِ عَمْرٍو رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ دَخَلَ عَلَى عُبَيْدِ اللَّهِ بْنِ زِيَادٍ فَقَالَ لَهُ : أَيْ بُنَيَّ إِنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ شَرَّ الرِّعَاءِ الْحُطَمَةُ فَإِيَّاكَ أَنْ تَكُونَ مِنْهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**657** ஆயிது இப்னு அம்ரு (ரழி) அவர்கள், (அப்பொழுது ஈராக் நாட்டின் கவர்னராக இருந்த) உபைதுல்லா இப்னு ஸியாத் அவர்களிடம் வந்து, "மகனே! 'ஆட்சியாளர்களில் கெட்டவர்கள், மக்களை அடக்கி ஆள்பவர்களே!' என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். எனவே நீ அவர்களில் ஒருவராக ஆகிவிடுவதை உனக்கு எச்சரிக்கிறேன்" என்று கூறினார்கள். **(புகாரி:1830)**

٦٥٨ – وَعَنْ أَبِي مَرْيَمَ الأَزْدِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ قَالَ لِمُعَاوِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ وَلاَّهُ اللَّهُ شَيْئًا مِنْ أُمُورِ الْمُسْلِمِينَ فَاحْتَجَبَ دُونَ حَاجَتِهِمْ وَخَلَّتِهِمْ وَفَقْرِهِمْ احْتَجَبَ اللَّهُ دُونَ حَاجَتِهِ وَخَلَّتِهِ وَفَقْرِهِ يَوْمَ الْقِيَامَةِ " . فَجَعَلَ مُعَاوِيَةُ رَجُلاً عَلَى حَوَائِجِ النَّاسِ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ .

**658** அபூ மர்யம் அல்அஸ்தி (ரழி) அவர்கள், முஆவியா (ரழி) அவர்களிடம் வந்து,

"முஸ்லிம்களின் காரியங்களில் ஒன்றுக்கு அல்லாஹ் ஒருவனுக்குப் பொறுப்பை வழங்கி, அவன் அவர்களின் தேவை, அவர்களின் சிரமம், அவர்களின் ஏழ்மை ஆகியவற்றை விட்டும் ஒதுங்கி விட்டால், மறுமை நாளில் அவனது தேவை, அவனது சிரமம், அவனது ஏழ்மை ஆகியவை விட்டும் அல்லாஹ் ஒதுங்கிவிடுவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்" என்று கூறினார்கள். உடனே முஆவியா (ரழி) அவர்கள் மக்களின் தேவைகளைக் கண்காணிக்க ஒரு அதிகாரியை நியமித்தார்கள்.

**(அபூதாவூது:2948. திர்மிதீ:1332)**

## ٧٩ – بَابُ الوالي العادل

## பாடம் : 79 - நீதமான அரசர்

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ اللَّهَ يَأْمُرُ بِالْعَدْلِ وَالأَحْسَانِ الأَيَةَ . وَقَالَ تَعَالَى : وَأَقْسِطُوا إِنَّ اللَّهَ يُحِبُّ الْمُقْسِطِينَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்தும்படியும், நல்லது செய்யும்படியும் கட்டளையிடுகின்றான். (16:90)*

*நீங்கள் நீதமாக நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீதமாக நடந்து கொள்வோரை நேசிக்கிறான். (49:9)*

٦٥٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " سَبْعَةٌ يُظِلُّهُمُ اللَّهُ فِي ظِلِّه يَوْمَ لاَ ظِلَّ إِلاَّ ظِلُّهُ : إِمَامٌ عَادِلٌ وَشَابٌّ نَشَأَ فِي عِبَادَةِ اللَّهِ تَعَالَى وَرَجُلٌ قَلْبُهُ مُعَلَّقٌ فِي الْمَسَاجِدِ وَرَجُلاَنِ تَحَابَّا فِي اللَّهِ اجْتَمَعَا عَلَيْهِ وَتَفَرَّقَا عَلَيْهِ وَرَجُلٌ دَعَتْهُ امْرَأَةٌ ذَاتُ مَنْصِبٍ وَجَمَالٍ فَقَالَ : إِنِّي أَخَافُ اللَّهَ , وَرَجُلٌ تَصَدَّقَ بِصَدَقَةٍ فَأَخْفَاهَا حَتَّى لاَ تَعْلَمَ شِمَالُهُ مَا تُنْفِقُ يَمِينُهُ وَرَجُلٌ ذَكَرَ اللَّهَ خَالِيًا فَفَاضَتْ عَيْنَاهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**659** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஏழுபேருக்கு அல்லாஹ், தன் நிழலைத்தவிர வேறு நிழல் இல்லாத அந்த (மறுமை நாளில்) தன் அர்ஷின் நிழலில் நிழல் தருவான். (1) நீதமான அரசன் (2) அல்லாஹ்வை வணங்குவதில் ஈடுபடும் வாலிபர். (3) பள்ளிவாசல்களில் தன் உள்ளத்தைப் பறி கொடுத்த மனிதர். (4) அல்லாஹ்வுக்காகப் பிரியம் கொண்டு, அவனுக்காகவே ஒன்று சேர்ந்து, அவனுக்காகவே பிரிந்தும் நிற்கின்ற இருவர். (5) அழகும், குடும்பப் பெருமையும் நிறைந்தப் பெண் விபச்சாரத்திற்கு அழைத்தும், "நான் அல்லாஹ்வைப் பயப்படுகிறேன்" என்று கூறும் மனிதர். (6) தன் வலது கை செய்வதை, இடது கைக்குத் தெரியாமல் (அதை மறைத்துக் கொண்டு) தர்மம் செய்கின்ற ஒருவர் (7) தனிமையான நிலையில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து, இதனால் கண்களில் கண்ணீரைச் சிந்தும் ஒருவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:660. முஸ்லிம்:1031)**

٦٦٠ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ الْمُقْسِطِينَ عِنْدَ اللَّهِ عَلَى مَنَابِرَ مِنْ نُورٍ : الَّذِينَ يَعْدِلُونَ فِي حُكْمِهِمْ وَأَهْلِيهِمْ وَمَا وُلُّوا " . رَوَاهُ مُسْلِمٌ .

**660** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தங்களின் அதிகாரம், தங்கள் குடும்பம், தாங்கள் வகிக்கும் பொறுப்புகளில் நீதமாக நடந்து கொண்டவர்கள், அல்லாஹ்விடம் ஒளியிலான மேடைகளில் இருப்பார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1827)**

٦٦١ – وَعَنْ عَوْفِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " خِيَارُ أَئِمَّتِكُمُ الَّذِينَ تُحِبُّونَهُمْ وَيُحِبُّونَكُمْ وَتُصَلُّونَ عَلَيْهِمْ وَيُصَلُّونَ عَلَيْكُمْ . وَشِرَارُ أَئِمَّتِكُمُ الَّذِينَ تُبْغِضُونَهُمْ وَيُبْغِضُونَكُمْ وَتَلْعَنُونَهُمْ وَيَلْعَنُونَكُمْ ! " ) قَالَ ( : قُلْنَا : يَا رَسُولَ اللَّهِ أَفَلاَ نُنَابِذُهُمْ ؟ قَالَ : " لاَ مَا أَقَامُوا فِيكُمُ الصَّلاَةَ لاَ مَا أَقَامُوا فِيكُمُ الصَّلاَةَ " . رَوَاهُ مُسْلِمٌ . قَوْلُهُ : " تُصَلُّونَ عَلَيْهِمْ " : تَدْعُونَ لَهُمْ .

**661** அவ்ஃப் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களின் தலைவர்களில் சிறந்தவர்கள், அவர்களை நீங்கள் அன்பு கொள்வீர்கள். அவர்கள் உங்களை அன்பு கொள்வார்கள். அவர்களுக்கு நீங்கள் துஆச் செய்வீர்கள். உங்களுக்கு அவர்கள் துஆச் செய்வார்கள் என்ற நிலையில் உள்ளவர்களே, உங்களின் சிறந்த தலைவர்களாவர். உங்கள் தலைவர்களில் கெட்டவர்கள், அவர்களை நீங்கள் கோபம் கொள்வீர்கள். அவர்கள் உங்களைக் கோபம் கொள்வார்கள். அவர்களை நீங்கள் சபிப்பீர்கள். அவர்கள் உங்களை சபிப்பார்கள் என்ற நிலையில் உள்ளவர்களே, உங்களின் கெட்ட தலைவர்களாவர்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! அவர்களிடம் நாங்கள் போரிடலாமா?” என்று கேட்டோம். “அவர்கள் உங்களுடன் தொழுகையைப் பேணும் வரை கூடாது. அவர்கள் உங்களுடன் தொழுகையைப் பேணும் வரை கூடாது” என்று (இருமுறை) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1855)**

٦٦٢ – وَعَنْ عِيَاضِ بْنِ حِمَارٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " أَهْلُ الْجَنَّةِ ثَلاَثَةٌ : ذُو سُلْطَانٍ مُقْسِطٌ مُوَفَّقٌ وَرَجُلٌ رَحِيمٌ رَقِيقُ الْقَلْبِ لِكُلِّ ذِي قُرْبَى وَمُسْلِمٍ وَعَفِيفٌ مُتَعَفِّفٌ ذُو عِيَالٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**662** இயாழ் இப்னு ஹிமார் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சொர்க்கவாசிகள் மூவர். அவர்கள்,

“(1) நல்லுதவி புரியும் நீதமான அரசர். (2) நெருங்கிய உறவினர் மற்றும் முஸ்லிம்கள் அனைவருக்கும் இரக்கம் காட்டும் இதயமுள்ள கருணைமிக்க மனிதர். (3) குழந்தைகள் உள்ள, பேணுதலை விரும்பும், பேணுதலான மனிதர்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2865)**

## ٨ – باب وجوب طاعة ولاة الأمر في غير مَعْصية وتحريم طاعتهم في المعصية

## பாடம் : 80 - பாவம் அல்லாத விஷயத்தில் ஆட்சியாளருக்குக் கட்டுப்படுவதும், பாவமான விஷயத்தில் ஆட்சியாளருக்குக் கட்டுப்படாமல் இருப்பதும்.

قَالَ اللَّهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَأُولِي الأَمْرِ مِنْكُمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறை விசுவாசிகளே! அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும், உங்களில் அதிகாரம் உள்ளவருக்கும் கட்டுப்படுங்கள்... (4:59)*

٦٦٣ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " عَلَى الْمَرْءِ الْمُسْلِمِ السَّمْعُ وَالطَّاعَةُ فِيمَا أَحَبَّ وَكَرِهَ إِلاَّ أَنْ يُؤْمَرَ بِمَعْصِيَةٍ فَإِذَا أُمِرَ بِمَعْصِيَةٍ فَلاَ سَمْعَ وَلاَ طَاعَةَ ! " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**663** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பாவம் செய்யக் கட்டளையிடாத வரை தான் விரும்பினாலும், வெறுத்தாலும் (ஆட்சியாளர்களின் பேச்சைக்) கேட்பதும், கட்டுப்படுவதும் முஸ்லிமின் மீது கடமையாக உள்ளது. பாவம் செய்ய ஏவப்பட்டால், அதைக் கேட்பதோ அதற்கு கட்டுப்படுவதோ கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7144. முஸ்லிம்:1839)**

٦٦٤ - وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ ( قَالَ : كُنَّا إِذَا بَايَعْنَا رَسُولَ اللَّهِ ﷺ عَلَى السَّمْعِ وَالطَّاعَةِ يَقُولُ لَنَا : " فِيمَا اسْتَطَعْتُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**664** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(சொல்வதை) கேட்கவும், (அதற்குக்) கட்டுப்படவும் செய்தல் எனவும் நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள் சத்தியப் பிரமாணம் செய்து கொண்டோம். "நீங்கள் சக்திபெற்ற விஷயங்களில் (அவ்வாறே நடந்து கொள்ளுங்கள்)" என்று எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:7202. முஸ்லிம்:1867)**

٦٦٥ - وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ ( قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ خَلَعَ يَدًا مِنْ طَاعَةٍ لَقِيَ اللَّهَ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ حُجَّةَ لَهُ وَمَنْ مَاتَ وَلَيْسَ فِي عُنُقِهِ بَيْعَةٌ مَاتَ مِيتَةً جَاهِلِيَّةً " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ : " وَمَنْ مَاتَ وَهُوَ مُفَارِقٌ لِلْجَمَاعَةِ فَإِنَّهُ يَمُوتُ مِيتَةً جَاهِلِيَّةً " . " الْمِيتَةُ " بِكَسْرِ الْمِيمِ .

**665** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தலைவருக்குக்) கட்டுப்படுவதை விட்டும் ஒதுங்கிக் கொண்டவர், மறுமை நாளில் எவ்வித ஆதாரமும் இன்றி, அல்லாஹ்வைச் சந்திப்பார். தன் கழுத்தில் சத்தியப்பிரமாணம் இல்லாத நிலையில் ஒருவர் இறந்து விட்டால், அறியாமைக் கால இறப்புப் போல் இறந்தவராவார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1851)**

"கூட்டமைப்பை விட்டும் பிரிந்த நிலையில் ஒருவர் இறந்துவிட்டால், அவர் அறியாமைக் கால இறப்புப் போல் இறந்தவராவார்" என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

٦٦٦ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " اسْمَعُوا وَأَطِيعُوا وَإِنِ اسْتُعْمِلَ عَلَيْكُمْ عَبْدٌ حَبَشِيٌّ كَأَنَّ رَأْسَهُ زَبِيبَةٌ ! " رَوَاهُ الْبُخَارِيُّ .

**666** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"காய்ந்த முந்திரி போன்ற தலையையுடைய கருப்பு நிற அடிமை ஒருவர், உங்களுக்கு நிர்வாகியாக நியமிக்கப்பட்டாலும் (அவர் சொல்வதைக்) கேளுங்கள். (அவருக்குக்) கட்டுப்படுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7142)**

٦٦٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " عَلَيْكَ السَّمْعَ وَالطَّاعَةَ فِي عُسْرِكَ وَيُسْرِكَ وَمَنْشَطِكَ وَمَكْرَهِكَ وَأَثَرَةٍ عَلَيْكَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**667** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உன் சிரமத்தின் போதும், உன் நல்ல நிலையின் போதும், உன் விருப்பத்திலும், உன் வெறுப்பிலும், உன்னை விடவும் சிறப்புப் பெறும் போதிலும் (தலைவரின்) பேச்சைக் கேட்பதும், கட்டுப்படுவதும் உன்மீது கடமையாக உள்ளது" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1836)**

٦٦٨ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي سَفَرٍ فَنَزَلْنَا مَنْزِلاً فَمِنَّا مَنْ يُصْلِحُ خِبَاءَهُ وَمِنَّا مَنْ يَنْتَضِلُ وَمِنَّا مَنْ هُوَ فِي جَشَرِهِ إِذْ نَادَى مُنَادِي رَسُولِ اللَّهِ ﷺ : الصَّلاَةَ جَامِعَةً . فَاجْتَمَعْنَا إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : " إِنَّهُ لَمْ يَكُنْ نَبِيٌّ قَبْلِي إِلاَّ كَانَ حَقًّا عَلَيْهِ أَنْ يَدُلَّ أُمَّتَهُ عَلَى خَيْرِ مَا يُعَلِّمُهُ لَهُمْ وَيُنْذِرَهُمْ شَرَّ مَا يُعَلِّمُهُ لَهُمْ . وَإِنَّ أُمَّتَكُمْ

هَذِه جُعِلَ عَافِيَتُهَا فِي أَوَّلِهَا وَسَيُصِيبُ آخِرَهَا بَلاَءٌ وَأُمُورٌ تُنْكِرُونَهَا وَتَجِيءُ فِتَنٌ يُرَقِّقُ بَعْضُهَا بَعْضًا وَتَجِيءُ الْفِتْنَةُ فَيَقُولُ الْمُؤْمِنُ : هَذِه مُهْلِكَتِي ثُمَّ تَنْكَشِفُ وَتَجِيءُ الْفِتْنَةُ فَيَقُولُ الْمُؤْمِنُ : هَذِه هَذِه ! فَمَنْ أَحَبَّ أَنْ يُزَحْزَحَ عَنِ النَّارِ وَيَدْخُلَ الْجَنَّةَ فَلْتَأْتِه مَنِيَّتُهُ وَهُوَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ وَلْيَأْتِ إِلَى النَّاسِ الَّذِي يُحِبُّ أَنْ يُؤْتَى إِلَيْهِ . وَمَنْ بَايَعَ إِمَامًا فَأَعْطَاهُ صَفْقَةَ يَدِه وَثَمَرَةَ قَلْبِه فَلْيُطِعْهُ إِنِ اسْتَطَاعَ فَإِنْ جَاءَ آخَرُ يُنَازِعُهُ فَاضْرِبُوا عُنُقَ الآخَرِ " . رَوَاهُ مُسْلِمٌ . قَوْلُهُ : " يَنْتَضِلُ " : أَيْ يُسَابِقُ بِالرَّمْيِ بِالنَّبْلِ وَالنُّشَّابِ . " وَالْجَشَرُ " بِفَتْحِ الْجِيمِ وَالشِّينِ الْمُعْجَمَةِ وَبِالرَّاءِ وَهِيَ الدَّوَابُّ الَّتِي تَرْعَى وَتَبِيتُ مَكَانَهَا وَقَوْلُهُ : " يُرَقِّقُ بَعْضُهَا بَعْضًا " : أَيْ يَصِيرُ بَعْضُهَا بَعْضًا رَقِيقًا : أَيْ خَفِيفًا لِعِظَمِ مَا بَعْدَهُ فَالثَّانِي يُرَقِّقُ الأَوَّلَ . وَقِيلَ : مَعْنَاهُ يُشَوِّقُ بَعْضُهَا إِلَى بَعْضٍ بِتَحْسِينِهَا وَتَسْوِيلِهَا وَقِيلَ : يُشْبِهُ بَعْضُهَا بَعْضًا .

**668** அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஒரு பயணத்தில் இருந்தோம். அப்பொழுது (ஓய்வு எடுக்க) ஓர் இடத்தில் இறங்கினோம். எங்களில் சிலர் தங்கள் கூடாரத்தைச் சரி செய்து கொண்டிருந்தனர். சிலர் அம்பு எய்தும் பயிற்சியை மேற்கொண்டிருந்தனர். சிலர் தங்கள் கால்நடைகளை மேய்த்துக் கொண்டு இருந்தார்கள். அப்போது, நபி (ஸல்) அவர்களின் அழைப்பாளர் ஒருவர் வந்து, "தொழுகை நேரம் வந்து விட்டது" என்று அழைப்புக் கொடுத்தார். நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள் அனைவரும் வந்தோம். அப்போது அவர்கள், "எனக்கு முன் இருந்த எந்த நபியும், தான் அறிந்த நல்லவற்றைத் தன் சமுதாயத்தினருக்கு அறிவிப்புச் செய்வதையும், தான் அறிந்த தீயதை தன் சமுதாயத்தினருக்கு எச்சரிக்கை செய்வதையும் தன் மீது கடமையாக்கிக் கொள்ளாமல் இருந்ததில்லை. உங்களின் சமுதாயத்தின் ஈடேற்றம், அதன் முன் (முன்னோர்களின்) நிலையில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இந்த சமுதாயத்தின் பிற்காலத்தில் வாழ்பவர்களுக்கு அதன் இறுதியில் சோதனையும், நீங்கள் அறியாத பல விஷயங்களும் வரும். ஒன்றை விட மற்றொன்று எளிதானது என எண்ணும் அளவுக்கு குழப்ப நிலைகள் ஏற்படும். ஒரு சோதனை வரும். அப்போது ஒரு முஃமின், "இதுதான் என் அழிவுக்குக் காரணம்" என்று கூறுவார். (அந்த அளவு சோதனைகள் வரும். அந்நேரத்தில் அவர் பொறுமையுடன் ஈமானின் மீது உறுதியாக இருக்க வேண்டும்) ஆகவே, அவர் நரகை விட்டும் தூரமாக்கப் படுவதையும், சொர்க்கத்தில் நுழைவிக்கப்படுவதையும் விரும்பினால், அவர் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டுள்ள நிலையிலேயே அவரின் மரணம் அவரிடம் வரட்டும்! தனக்கு மக்கள் செய்ய வேண்டும் என்று விரும்புவதையே, அவரும் மக்களுக்குச் செய்யட்டும்! ஒருவர் தன் தலைவருக்குச் சத்தியப்பிரமாண ஒப்பந்தம் செய்து, தன் கையின் ஒப்பந்தத்தையும், தன் இதயத்தின் பயனையும் கொடுத்தால், இயன்ற அளவுக்கு அவர் அந்த தலைவருக்குக் கட்டுப்படட்டும்! அந்தத் தலைவரிடம் சண்டை செய்ய ஒருவர் வந்தால், அவரின் கழுத்தில் அடியுங்கள்! (அவரை எதிர்த்து போராடுங்கள்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1844)**

٦٦٩ – وَعَنْ أَبِي هُنَيْدَةَ وَائِلِ بْنِ حُجْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَأَلَ سَلَمَةُ بْنُ يَزِيدَ الْجُعْفِيُّ رَسُولَ اللَّهِ ﷺ فَقَالَ : يَا نَبِيَّ اللَّهِ أَرَأَيْتَ إِنْ قَامَتْ عَلَيْنَا أُمَرَاءُ يَسْأَلُونَا حَقَّهُمْ وَيَمْنَعُونَا حَقَّنَا فَمَا تَأْمُرُنَا ؟ فَأَعْرَضَ عَنْهُ ثُمَّ سَأَلَهُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " اسْمَعُوا وَأَطِيعُوا فَإِنَّمَا عَلَيْهِمْ مَا حُمِّلُوا وَعَلَيْكُمْ مَا حُمِّلْتُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**669** அபூ ஹுனைதா வாயில் இப்னு ஹுஜ்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸலமா இப்னு யஸீத் அல் ஜுஃஹ்ஃபீ (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! எங்களின் தலைவர்கள் அவர்களின் உரிமைகளை எங்களிடம் கேட்கின்ற அதே வேளையில் எங்களின் உரிமைகளை மறுக்கின்ற தலைவர்கள் எங்களுக்கு ஏற்பட்டுவிட்டால், தாங்கள் எங்களுக்கு (இவர்கள் விஷயமாக) என்ன கட்டளையிடுகிறீர்கள்?" என்று கேட்டார். அவரை

நபி (ஸல்) அவர்கள் (பதில் கூறாமல்) புறக்கணித்தார்கள். மீண்டும் அவர் கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "(தலைவரின் பேச்சைக்) கேளுங்கள். அவருக்குக் கட்டுப்படுங்கள். அவர்கள் மீது அவர்களுக்கு சுமத்தப்பட்ட பொறுப்பு உண்டு. உங்கள் மீது சுமத்தப்பட்ட பொறுப்பு உங்களுக்கு உண்டு. (நீதி தவறாமல் நேர்மையாக நல்லாட்சி வழங்குவது அவர்களின் பொறுப்பாகும். அவர்களுக்குக் கட்டுப்பட்டு நடப்பது உங்கள் பொறுப்பாகும்)" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1846)**

٦٧٠ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّهَا سَتَكُونُ بَعْدِي أَثَرَةٌ وَأُمُورٌ تُنْكِرُونَهَا ! " قَالُوا : يَا رَسُولَ اللَّهِ كَيْفَ تَأْمُرُ مَنْ أَدْرَكَ مِنَّا ذَلِكَ ؟ قَالَ : " تُؤَدُّونَ الْحَقَّ الَّذِي عَلَيْكُمْ وَتَسْأَلُونَ اللَّهَ الَّذِي لَكُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**670** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"எனக்குப் பின் வசதியான நிலையும் நீங்கள் விரும்பாத பல செயல்களும் உண்டாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! எங்களில் அந்த காலத்தை அடைபவருக்கு தாங்கள் என்ன கட்டளையிடுகிறீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,"உங்கள் மீதுள்ள கடமைகளை நீங்கள் நிறைவேற்றுங்கள். உங்களுக்கு உரிய உரிமைகளை அல்லாஹ்விடம் கேளுங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7052. முஸ்லிம்:1843)**

٦٧١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ أَطَاعَنِي فَقَدْ أَطَاعَ اللَّهَ وَمَنْ عَصَانِي فَقَدْ عَصَى اللَّهَ وَمَنْ يُطِعِ الأَمِيرَ فَقَدْ أَطَاعَنِي وَمَنْ يَعْصِ الأَمِيرَ فَقَدْ عَصَانِي " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**671** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"எனக்குக் கட்டுப்பட்டவர், அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டவராவார். எனக்கு மாறு செய்தவர், அல்லாஹ்வுக்கு மாறு செய்தவராவார். தலைவருக்குக் கட்டுப்பட்டவர், எனக்குக் கட்டுப்பட்ட வராவார். தலைவருக்கு மாறு செய்தவர், எனக்கு மாறு செய்தவராவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்

**(புகாரி:7137. முஸ்லிம்:1835)**

٦٧٢ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ كَرِهَ مِنْ أَمِيرِهِ شَيْئًا فَلْيَصْبِرْ فَإِنَّهُ مَنْ خَرَجَ مِنَ السُّلْطَانِ شِبْرًا مَاتَ مِيتَةً جَاهِلِيَّةً " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**672** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவன் தன் தலைவரிடம் எதையேனும் வெறுத்தால் அவன் பொறுமையாக இருக்கட்டும் மேலும் (தன்னை) ஆள்பவரை விட்டு ஒரு சாண் அளவுக்கு ஒருவர் வெளியேறினால், அவர் அறியாமைக்கால இறப்பாக இறந்து விடுவார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7143. முஸ்லிம்:1849)**

٦٧٣ – وَعَنْ أَبِي بَكْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ أَهَانَ السُّلْطَانَ أَهَانَهُ اللَّهُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**673** அபூபக்ரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆட்சியாளரை ஒருவர் கேவலப்படுத்தினால், அவரை அல்லாஹ் கேவலப்படுத்துவான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:2224. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٨١ - باب النّهي عَنْ سؤال الإمَارة واختيار ترك الولايات إذَا لَمْ يتعين عليه أَو تَدْعُ حَاجة إِلَيه

## பாடம் : 81 - அதிகாரத்தைக் கேட்டுப் பெறுதல் கூடாது. அதிகாரத்தை விட்டுவிட விருப்பம் அளித்தல்

قَالَ اللّهُ تَعَالَى : تِلْكَ الدَّارُ الأخِرَةُ نَجْعَلُهَا لِلَّذِينَ لاَ يُرِيدُونَ عُلُوًّا فِي الأَرْضِ وَلاَ فَسَادًا وَالْعَاقِبَةُ لِلْمُتَّقِينَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *"அதுதான் மறுமை உலகமாகும். பூமியில் வரம்பு மீறுதலையும், குழப்ப நிலையையும் ஏற்படுத்தாதவர்களுக்கு நாம் அதை ஆக்கி உள்ளோம். இறுதியில் நல்ல முடிவு, இறையச்சமுடையோருக்கே! (28:83)*

٦٧٤ - وَعَنْ أَبِي سَعِيد عَبْدِ الرَّحْمَنِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " يَا عَبْدَ الرَّحْمَنِ بْنَ سَمُرَةَ لاَ تَسْأَلِ الأَمَارَةَ : فَإِنَّكِ إِنْ أُعْطِيتهَا عَنْ غَيْرِ مَسْأَلَة أُعِنْت عَلَيْهَا وَإِنْ أُعْطِيتهَا عَنْ مَسْأَلَة وُكِلْت إِلَيْهَا وَإِذَا حَلَفْت عَلَى يَمِين فَرَأَيْت غَيْرَهَا خَيْرًا مِنْهَا فَأْت الَّذِي هُوَ خَيْرٌ وَكَفِّرْ عَنْ يَمِينك " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**674** அபூஸயீது அப்துர் ரஹ்மான் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "அப்துர் ரஹ்மான் இப்னு ஸமுரா அவர்களே! அதிகாரத்தைக் கேட்டுப் பெறாதீர். நீர் கேட்காமலேயே அது உமக்கு கொடுக்கப்பட்டால், அதன் மீது உமக்கு உதவி செய்யப்படும். (அல்லாஹ் உமக்கு உதவி செய்வான்.) நீர் கேட்டு அதிகாரம் உமக்குக் கொடுக்கப்பட்டால், அதற்கு நீரே பொறுப்பாக்கப்படுவீர். (உமக்கு உதவி கிடைக்காது.) நீர் ஒரு விஷயத்தைச் சத்தியம் செய்து, அதை விடச் சிறந்ததைப் பார்த்தால், அந்தச் சிறந்ததைச் செய்வீராக! உமது சத்தியத்திற்குப் பரிகாரம் செய்து கொள்வீராக!" என்று கூறினார்கள். **(புகாரி:7146. முஸ்லிம்:1652)**

٦٧٥ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَا أَبَا ذَرٍّ إِنِّي أَرَاك ضَعِيفًا وَإِنِّي أُحِبُّ لَك مَا أُحِبُّ لِنَفْسِي. لاَ تَأَمَّرَن عَلَى اثْنَيْنِ وَلاَ تَوَلَّيَن مَالَ يَتِيمٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**675** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அபூதர்ரே! உம்மை பலவீனராக நான் காண்கிறேன். எனக்கு நான் விரும்புவதையே, உமக்கும் நான் விரும்புகிறேன். இரண்டு பேர்களுக்கு நீர் தலைவராக இருக்க வேண்டாம். அனாதையின் சொத்துக்குப் பொறுப்பாளராகவும் நீர் ஆகிவிட வேண்டாம்" என என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1826)**

٦٧٦ - وَعَنْهُ ) أَبِي ذَرٍّ ( قَالَ : قُلْت : يَا رَسُولَ اللَّه أَلاَ تَسْتَعْمِلُنِي ؟ فَضَرَبَ بِيَده عَلَى مَنْكِبِي ثُمَّ قَالَ : " يَا أَبَا ذَرٍّ إِنَّك ضَعِيفٌ وَإِنَّهَا أَمَانَةٌ وَإِنَّهَا يَوْمَ الْقِيَامَة خِزْيٌ وَنَدَامَةٌ إِلاَّ مَنْ أَخَذَهَا بِحَقِّهَا وَأَدَّى الَّذِي عَلَيْه فِيهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**676** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! எனக்கு நீங்கள் பொறுப்புத் தரக் கூடாதா?" என்று நான் கேட்டேன். உடனே அவர்கள் என் தோள்பட்டை மீது என் கையை வைத்து விட்டு, "அபூதர்ரே! பொறுப்பு என்பது, அமானிதம் (நம்பிக்கைக்குரிய பொறுப்பு) ஆகும். அதை ஒருவன் அதன் உரிமையுடன் எடுத்து, அதை முறைப்படி நிறைவேற்றினாலே தவிர, மற்றவருக்கு அது மறுமை நாளில் இழிவும், கைசேதமும் தரும்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1825)**

٦٧٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّكُمْ سَتَحْرِصُونَ عَلَى الأَمَارَةِ وَسَتَكُونُ نَدَامَةً يَوْمَ الْقِيَامَةِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**677** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தோழர்களே!) நீங்கள் தலைமைப் பொறுப்புக்கு ஆசை கொள்வீர்கள். மறுமை நாளில் பெரும் அது கவலையை ஏற்படுத்தும்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7148)**

## ٨٢ - باب حثّ السلطان والقاضي وغيرهما من ولاة الأمور على اتّخاذ وزير صالح وتحذيرهم من قرناء السوء والقبول منهم

## பாடம் : 82 - அரசர், நீதிபதி மற்றும் அதிகாரப் பொறுப்பில் உள்ளவர்கள், நல்ல அமைச்சரை (ஆலோசகரை) தேர்ந்தெடுத்துக் கொள்ள தூண்டுவது, தீயதோழர்கள் மற்றும் அவர்களின் ஆலோசனைகளைப் பற்றி எச்சரிப்பது

قَالَ اللَّهُ تَعَالَى : الأَخِلاَّءُ يَوْمَئِذٍ بَعْضُهُمْ لِبَعْضٍ عَدُوٌّ إِلاَّ الْمُتَّقِينَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அந்த நாளில் இறையச்சமுடையோரைத் தவிர, நெருங்கிய நண்பர்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாக ஆகிவிடுவர். (43:67)*

٦٧٨ - وَعَنْ أَبِي سَعِيد وَأَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَا بَعَثَ اللَّهُ مِنْ نَبِيٍّ وَلاَ اسْتَخْلَفَ مِنْ خَلِيفَةٍ إِلاَّ كَانَتْ لَهُ بِطَانَتَانِ : بِطَانَةٌ تَأْمُرُهُ بِالْمَعْرُوفِ وَتَحُضُّهُ عَلَيْهِ وَبِطَانَةٌ تَأْمُرُهُ بِالشَّرِّ وَتَحُضُّهُ عَلَيْهِ وَالْمَعْصُومُ مَنْ عَصَمَ اللَّهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**678** அபூஸயீத் (ரழி), அபூஹுரைரா (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு வகையான நண்பர்கள் கூட்டத்தைத் தவிர எந்த நபியையும், அல்லாஹ் அனுப்பியதில்லை. மேலும், எந்த கலீஃபாவையும் ஆக்கியதில்லை. அதில் ஒருவகையான நண்பர்கள் கூட்டம், அவருக்கு நன்மையை ஏவி, அதையே அவருக்குத் தூண்டிக் கொண்டு இருக்கும். மற்றொரு வகையான நண்பர்கள் கூட்டம், அவருக்கு தீயதை ஏவி, அதையே அவருக்குத் தூண்டிக் கொண்டே இருக்கும். அல்லாஹ் எவரைக் காப்பாற்றினானோ, அவர் காப்பாற்றப்பட்டவராவார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7198)**

٦٧٩ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ : رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا أَرَادَ اللَّهُ بِالأَمِيرِ خَيْرًا جَعَلَ لَهُ وَزِيرَ صِدْقٍ إِنْ نَسِيَ ذَكَّرَهُ وَإِنْ ذَكَرَ أَعَانَهُ وَإِذَا أَرَادَ بِهِ غَيْرَ ذَلِكَ جَعَلَ لَهُ وَزِيرَ سُوءٍ إِنْ نَسِيَ لَمْ يُذَكِّرْهُ وَإِنْ ذَكَرَ لَمْ يُعِنْهُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ عَلَى شَرْطِ مُسْلِمٍ .

**679** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு தலைவருக்கு அல்லாஹ் நன்மையை நாடிவிட்டால், அவருக்கு உண்மையான அமைச்சரை அல்லாஹ் ஏற்படுத்துவான். தலைவர் மறந்துவிட்டால், அவருக்கு அமைச்சர் நினைவூட்டுவார். அவர் (தலைவர்) கூறினால், அவருக்கு இவர் (அமைச்சர்) உதவி புரிவார். நன்மை அல்லாத ஒன்றை அல்லாஹ் நாடிவிட்டால் அவருக்குத் தீய மந்திரியை அல்லாஹ் ஏற்படுத்துவான். அவர் (தலைவர்) மறந்தால், அதை அவர் (அமைச்சர்) நினைவுபடுத்தமாட்டார். அவர் கூறினால், அவருக்கு அவர் உதவமாட்டார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(அபூதாவூது:2932)**

## ٨٣ - باب النّهي عن تولية الإمارة والقضاء وغيرهما من الولايات، لمن سألها، أوحرص عليها فعرّض بها

### பாடம் : 83 - தலைமைப்பதவி, நீதிபதி பதவி மற்றும் அதிகாரப் பதவிகளைக் கேட்போர், ஆசைப்படுவோரை நியமனம் செய்யாதிருத்தல்.

٦٨٠ - عَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : دَخَلْتُ عَلَى النَّبِيِّ ﷺ أَنَا وَرَجُلاَنِ مِنْ بَنِي عَمِّي فَقَالَ أَحَدُهُمَا : يَا رَسُولَ اللَّهِ أَمِّرْنَا عَلَى بَعْضِ مَا وَلاَّكَ اللَّهُ عَزَّ وَجَلَّ وَقَالَ الآخَرُ مِثْلَ ذَلِكَ . فَقَالَ : " إِنَّا وَاللَّهِ لاَ نُوَلِّي هَذَا الْعَمَلَ أَحَدًا سَأَلَهُ أَوْ أَحَدًا حَرَصَ عَلَيْهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**680** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நானும், என் சிறிய தந்தையின் இரண்டு மகன்களும் நபி (ஸல்) அவர்களிடம் வந்தோம். அவ்விருவரில் ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்களுக்கு அதிகாரம் வழங்கியுள்ள பகுதிகளில் எங்களை (அதிகாரிகளாக) நியமியுங்கள்" என்று கேட்டார். மற்றவரும் அதே போல் கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நிச்சயமாக, அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இப்பதவியை கேட்கின்ற எவருக்கும், இந்த பதவி மீது ஆசை கொள்கின்ற எவருக்கும் இந்த அதிகாரத்தை நாம் வழங்கமாட்டோம்" என்று கூறினார்கள். **(புகாரி:7149. முஸ்லிம்:1733/14)**

### ஒழுக்கங்களின் அத்தியாயம்

## ٨٤ - باب الْحياء وفضه والحثّ على التخلّق به

### பாடம் : 84 - வெட்கப்படுதலின் சிறப்பு, அதைக் கடைபிடிக்கத் தூண்டுதல்.

٦٨١ - عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ مَرَّ عَلَى رَجُلٍ مِنَ الأَنْصَارِ وَهُوَ يَعِظُ أَخَاهُ فِي الْحَيَاءِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " دَعْهُ فَإِنَّ الْحَيَاءَ مِنَ الأِيمَانِ " مُتَّفَقٌ عَلَيْهِ

**681** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் அன்சாரித் தோழர்களில் ஒருவரைக் கடந்து சென்றார்கள். அவர் தன் சகோதரருக்கு, "வெட்கப்படுதல்" பற்றி உபதேசம் செய்து கொண்டிருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவரை விட்டு விடு! வெட்கம் என்பது, இறை நம்பிக்கையில் ஒரு கிளையாகும்" என்று கூறினார்கள். **(புகாரி:24. முஸ்லிம்:36)**

٦٨٢ - وَعَنْ عِمْرَانَ بْنِ حُصَيْنٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الْحَيَاءُ خَيْرٌ كُلُّهُ " أَوْ قَالَ : " الْحَيَاءُ كُلُّهُ خَيْرٌ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**682** இம்ரான் இப்னு ஹுஸைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வெட்கம் என்பது, நல்லதைத்தவிர வேறெதனையும் கொண்டு வராது" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6177. முஸ்லிம்:37)**

"வெட்கம் அனைத்தும் நல்லதே" என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

٦٨٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الأيمَانُ بِضْعٌ وَسَبْعُونَ – أَوْ بِضْعٌ وَسِتُّونَ شُعْبَةً – فَأَفْضَلُهَا قَوْلُ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَدْنَاهَا إِمَاطَةُ الأذَى عَنِ الطَّرِيقِ . وَالْحَيَاءُ شُعْبَةٌ مِنَ الأيمَانِ " . مُتَّفَقٌ عَلَيْه . " الْبِضْعُ " بِكَسْرِ الْبَاءِ وَيَجُوزُ فَتْحُهَا وَهُوَ مِنَ الثَّلاَثَةِ إِلَى الْعَشَرَةِ . " وَالشُّعْبَةُ " : الْقِطْعَةُ وَالْخَصْلَةُ . " وَالأمَاطَةُ " : الأزَالَةُ . " وَالأذَى " : مَا يُؤْذِي كَحَجَرٍ وَشَوْكٍ وَطِينٍ وَرَمَادٍ وَقَذَرٍ وَنَحْوِ ذَلِكَ .

**683** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைநம்பிக்கை (ஈமான்), எழுபது அல்லது அறுபது சில்லரை கிளைகளாகும். அவற்றில் மிக மேலானது, "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவாகும். அவற்றில் மிகத் தாழ்வானது, பாதையில் உள்ள (கல், முள், கண்ணாடிகள் போன்ற) இடையூறு தரக்கூடியதை அகற்றுவதாகும். வெட்கம் என்பது, இறை நம்பிக்கையின் ஒரு கிளையாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:9. முஸ்லிம்:35)**

٦٨٤ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ أَشَدَّ حَيَاءً مِنَ الْعَذْرَاءِ فِي خِدْرِهَا فَإِذَا رَأَى شَيْئًا يَكْرَهُهُ عَرَفْنَاهُ فِي وَجْهِهِ . مُتَّفَقٌ عَلَيْه . قَالَ الْعُلَمَاءُ : حَقِيقَةُ الْحَيَاءِ خُلُقٌ يَبْعَثُ عَلَى تَرْكِ الْقَبِيحِ وَيَمْنَعُ مِنَ التَّقْصِيرِ فِي حَقِّ ذِي الْحَقِّ . وَرُوِينَا عَنْ أَبِي الْقَاسِمِ الْجُنَيْدِ رَحِمَهُ اللَّهُ قَالَ : الْحَيَاءُ رُؤْيَةُ الآلاَءِ – أَيِ النِّعَمِ – وَرُؤْيَةُ التَّقْصِيرِ فَيَتَوَلَّدُ بَيْنَهُمَا حَالَةٌ تُسَمَّى حَيَاءً . وَاللَّهُ أَعْلَمُ .

**684** அபூஸயீத் அல்-குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கன்னிப் பெண் தன் அறையில் வெட்கப்படும் வெட்கத்தைவிட மிக அதிகமாக நபி (ஸல்) அவர்கள் வெட்கம் கொள்பவர்களாக இருந்தார்கள். ஏதேனும் வெறுக்கக்கூடிய விஷயத்தை அவர்கள் பார்த்தால், அதை (அவர்களின் வெறுப்பை) அவர்களின் முகத்தில் நாங்கள் அறிந்து கொள்வோம். **(புகாரி:6102. முஸ்லிம்:2320)**

## ٨٥ – بَابُ حفظ السرّ

## பாடம் : 85 - இரகசியம் பேணல்

**قَالَ اللَّهُ تَعَالَى : وَأَوْفُوا بِالْعَهْدِ إِنَّ الْعَهْدَ كَانَ مَسْئُولاً .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *ஒப்பந்தத்தை நிறைவேற்றுங்கள். நிச்சயமாக ஒப்பந்தம் செய்வது (மறுமையில்) கேட்கப்படக்கூடியதாக உள்ளது. (17:34)*

٦٨٥ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ مِنْ أَشَرِّ النَّاسِ عِنْدَ اللَّهِ مَنْزِلَةً يَوْمَ الْقِيَامَةِ الرَّجُلَ يُفْضِي إِلَى الْمَرْأَةِ وَتُفْضِي إِلَيْهِ ثُمَّ يَنْشُرُ سِرَّهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**685** அபூஸயீத் அல்-குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் அல்லாஹ்விடம் மனிதர்களில் மிகக் கெட்டவன், தன் மனைவியிடம் உடல் உறவு கொண்டு, பின்பு அதன் ரகசியத்தை வெளியே கூறியவன்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1437)**

٦٨٦ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ حِينَ تَأَيَّمَتْ بِنْتُهُ حَفْصَةُ قَالَ : لَقِيتُ عُثْمَانَ بْنَ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ فَعَرَضْتُ عَلَيْهِ حَفْصَةَ فَقُلْتُ : إِنْ شِئْتَ أَنْكَحْتُكَ حَفْصَةَ بِنْتَ عُمَرَ ؟ قَالَ : سَأَنْظُرُ فِي أَمْرِي . فَلَبِثْتُ لَيَالِيَ ثُمَّ لَقِيَنِي فَقَالَ : قَدْ بَدَا لِي أَلاَّ أَتَزَوَّجَ يَوْمِي هَذَا فَلَقِيتُ أَبَا بَكْرٍ الصِّدِّيقَ رَضِيَ اللَّهُ عَنْهُ فَقُلْتُ : إِنْ شِئْتَ أَنْكَحْتُكَ حَفْصَةَ بِنْتَ عُمَرَ . فَصَمَتَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَلَمْ يَرْجِعْ إِلَيَّ شَيْئًا ! فَكُنْتُ عَلَيْهِ أَوْجَدَ مِنِّي عَلَى عُثْمَانَ فَلَبِثْتُ لَيَالِيَ ثُمَّ خَطَبَهَا النَّبِيُّ ﷺ فَأَنْكَحْتُهَا إِيَّاهُ . فَلَقِيَنِي أَبُو بَكْرٍ فَقَالَ : لَعَلَّكَ وَجَدْتَ عَلَيَّ حِينَ عَرَضْتَ عَلَيَّ حَفْصَةَ فَلَمْ أَرْجِعْ إِلَيْكَ شَيْئًا ؟ فَقُلْتُ : نَعَمْ قَالَ : فَإِنَّهُ لَمْ يَمْنَعْنِي أَنْ أَرْجِعَ إِلَيْكَ فِيمَا عَرَضْتَ عَلَيَّ إِلاَّ أَنِّي كُنْتُ عَلِمْتُ أَنَّ النَّبِيَّ ﷺ ذَكَرَهَا فَلَمْ أَكُنْ لأُفْشِيَ سِرَّ رَسُولِ اللَّهِ ﷺ . وَلَوْ تَرَكَهَا النَّبِيُّ ﷺ لَقَبِلْتُهَا . رَوَاهُ الْبُخَارِيُّ . " تَأَيَّمَتْ " : أَيْ صَارَتْ بِلاَ زَوْجٍ وَكَانَ زَوْجُهَا تُوُفِّيَ رَضِيَ اللَّهُ عَنْهُ . " وَجَدْتَ " : غَضِبْتَ .

**686** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தன் மகள் ஹப்ஸா (ரழி) அவர்கள் கணவனை இழந்து, விதவையாக இருந்த போது நடந்த சம்பவத்தை உமர் (ரழி) அவர்கள் (பின்வருமாறு) விளக்குகிறார்கள்:

நான் உஸ்மான் இப்னு அபான் (ரழி) அவர்களைச் சந்தித்து, அவர்களிடம் ஹப்ஸாவைப் பற்றி எடுத்துக் கூறினேன். "நீங்கள் விரும்பினால் ஹப்ஸாவை உங்களுக்குத் திருமணம் செய்து தருகிறேன்" என்று கூறினேன். "இது விஷயமாக நான் சிந்தித்துக் கூறுகிறேன்" என்று உஸ்மான் (ரழி) கூறினார். சில நாட்கள் நான் பொறுத்திருந்தேன். பின்பு உஸ்மான் (ரழி) அவர்கள் என்னை சந்தித்து, "தற்போது நான் திருமணம் செய்ய விரும்பவில்லை" என்று கூறினார். நான் அபூபக்ர் (ரழி) அவர்களைச் சந்தித்தேன். "நீங்கள் விரும்பினால், ஹப்ஸாவை உங்களுக்கு திருமணம் செய்து வைக்கிறேன்" என்று கூறினேன். ஆனால் அபூபக்ர் (ரழி) மவுனமாக இருந்து விட்டார்கள். என்னிடம் எதையும் அவர் கூறவே இல்லை. இதனால் உஸ்மான் (ரழி) அவர்கள் மீது ஏற்பட்ட வருத்தத்தை விட, அபூபக்ர் (ரழி) மீதே அதிக வருத்தம் என்னுள் ஏற்பட்டது. சிறிது நாள் பொறுத்திருந்தேன். பின்பு நபி (ஸல்) அவர்கள் ஹப்ஸாவைப் பெண் கேட்டார்கள். அவர்களுக்கு ஹப்ஸாவை நான் மணமுடித்து வைத்தேன். அப்போது அபூபக்ர் (ரழி) அவர்கள் என்னைச் சந்தித்து, "நீங்கள் என்னிடம் ஹப்ஸா பற்றிக் கூறியபோது, உங்களிடம் எதையும் நான் கூறாதிருந்ததால், என்மீது வருத்தம் கொண்டிருப்பீர்களே?" என்று கேட்டார்கள். "ஆம்" என்றேன். "ஹப்ஸாவை மணமுடிப்பது பற்றி நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறிக் கொண்டிருந்தார்கள். எனவே நபி (ஸல்) அவர்களின் இரகசியத்தை வெளியே கூற எனக்கு விருப்பம் இல்லை. நபி (ஸல்) அவர்கள் ஹப்ஸாவை (திருமணம் செய்யாமல்) விட்டிருந்தால், ஹப்ஸாவை நான் ஏற்றிருப்பேன்" என்று அபூபக்ர் (ரழி) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:4005)**

٦٨٧ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كُنَّ أَزْوَاجُ النَّبِيِّ ﷺ عِنْدَهُ فَأَقْبَلَتْ فَاطِمَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا تَمْشِي مَا تُخْطِئُ مِشْيَتُهَا مِنْ مِشْيَةِ رَسُولِ اللَّهِ ﷺ شَيْئًا فَلَمَّا رَآهَا رَحَّبَ بِهَا وَقَالَ : " مَرْحَبًا يَا بِنْتِي " ثُمَّ أَجْلَسَهَا عَنْ يَمِينِهِ أَوْ عَنْ شِمَالِهِ ثُمَّ سَارَّهَا فَبَكَتْ بُكَاءً شَدِيدًا فَلَمَّا رَأَى جَزَعَهَا سَارَّهَا الثَّانِيَةَ فَضَحِكَتْ فَقُلْتُ لَهَا : خَصَّكِ رَسُولُ اللَّهِ ﷺ مِنْ بَيْنِ نِسَائِهِ بِالسِّرَارِ ثُمَّ أَنْتِ تَبْكِينَ ؟ فَلَمَّا قَامَ رَسُولُ اللَّهِ ﷺ سَأَلْتُهَا : مَا قَالَ لَكِ رَسُولُ اللَّهِ ﷺ ؟ قَالَتْ : مَا كُنْتُ لأُفْشِيَ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ سِرَّهُ ! فَلَمَّا تُوُفِّيَ رَسُولُ اللَّهِ ﷺ قُلْتُ عَزَمْتُ عَلَيْكِ بِمَا لِي عَلَيْكِ مِنَ الْحَقِّ سَارَّنِي فِي الْمَرَّةِ الأُولَى فَأَخْبَرَنِي أَنَّ جِبْرِيلَ كَانَ يُعَارِضُهُ الْقُرْآنَ فِي كُلِّ سَنَةٍ مَرَّةً أَوْ مَرَّتَيْنِ وَأَنَّهُ عَارَضَهُ الآنَ مَرَّتَيْنِ " وَإِنِّي لاَ أَرَى الأَجَلَ إِلاَّ قَدِ اقْتَرَبَ فَاتَّقِي اللَّهَ وَاصْبِرِي فَإِنَّهُ نِعْمَ السَّلَفُ أَنَا لَكِ " . فَبَكَيْتُ بُكَائِي الَّذِي رَأَيْتِ . فَلَمَّا رَأَى جَزَعِي سَارَّنِي الثَّانِيَةَ فَقَالَ : " يَا فَاطِمَةُ أَمَا تَرْضَيْنَ أَنْ تَكُونِي سَيِّدَةَ الْمُؤْمِنِينَ أَوْ سَيِّدَةَ نِسَاءِ هَذِهِ الأُمَّةِ ؟ " فَضَحِكْتُ ضَحِكِي الَّذِي رَأَيْتِ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ مُسْلِمٍ .

**687** அன்னை ஆயிஷா (ரழி)அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்கள், நபி (ஸல்) அவர்களின் அருகில் இருந்தார்கள். அப்போது பாத்திமா (ரழி) அவர்கள் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் நடை போலவே பாத்திமா (ரழி)யின் நடையும் இருந்தது. பாத்திமாவைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "என் மகளின் வருகை நல்வரவாகுக!" என்று கூறி வரவேற்றார்கள். பின்பு தனது வலது புறமோ அல்லது இடதுபுறமோ அவர்களை உட்கார வைத்தார்கள். பின்பு பாத்திமாவிடம் இரகசியம் கூறினார்கள். உடனே ஃபாத்திமா (ரழி) அவர்கள் கடுமையாக அழுதார்கள். பாத்திமாவின் கவலையைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் இரண்டாவது முறையாக ஏதோ ஒரு விஷயத்தை (ரகசியமாக)க் கூறினார்கள். அதைக் கேட்டதும் பாத்திமா (ரழி) அவர்கள் சிரித்தார்கள். அப்போது நான் பாத்திமாவிடம், "தன் மனைவிமார்கள் இருக்க ரகசியமாக உன்னிடம் ஏதோ ஒரு விஷயத்தை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்பொழுது நீ அழுதுவிட்டாயே?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் எழுந்தபோது, (அந்த ரகசியம் பற்றி) "நபி(ஸல்) அவர்கள் உம்மிடம் கூறியது என்ன?" என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்களின் ரகசியத்தை வெளியே கூற நான் விரும்பவில்லை" என பாத்திமா (ரழி) கூறினார்.

நபி (ஸல்) அவர்கள் இறந்தபின், "உம் மீது (சிறிய தாயார் என்ற முறையில்) எனக்குள்ள உரிமையின் காரணமாக கேட்கிறேன். நபி (ஸல்) அவர்கள் உம்மிடம் (முன்பு ரகசியமாக) கூறியதை எனக்குக் கூறு" என்று நான் கேட்டேன். "சரி! அதை இப்போது கூறுகிறேன். முதல் தடவை என்னிடம் அவர்கள் ரகசியம் கூறியபோது, 'ஜிப்ரில் (அலை) ஒவ்வொரு வருடமும் ஒரு தடவை அல்லது இரண்டு தடவை குர்ஆனை எடுத்துக் கூறுபவராக இருப்பார். இப்போது (ஒரே நேரத்தில்) இரண்டு தடவை அதை எடுத்துக் கூறினார். அதை என் தவணை (மரணம்) நெருங்கி விட்டதாகவே தவிர நான் கருதவில்லை. அல்லாஹ்வை நீ அஞ்சிக் கொள்' என்று கூறினார்கள். அப்பொழுதுதான் நீங்கள் பார்த்த அந்த அழுகையை நான் அழுதேன். என் கவலையைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் இரண்டாவது தடவையாக ரகசியம் கூறினார்கள். 'பாத்திமாவே! முஃமினான பெண்களின் தலைவி யாக அல்லது இந்த சமுதாயப் பெண்களின் தலைவியாக நீ ஆவதை திருப்தியுறுகிறாய்தானே!' என்று கேட்டார்கள். அப்பொழுதுதான் நீங்கள் பார்த்த அந்தச் சிரிப்பை நான் சிரித்தேன் " என்று பாத்திமா (ரழி) கூறினார்.

**(புகாரி:2623. முஸ்லிம்:2450)**

٦٨٨ - وَعَنْ ثَابِت عَنْ أَنَس رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : أَتَى عَلَيَّ رَسُولُ اللّٰه ﷺ وَأَنَا أَلْعَبُ مَعَ الْغِلْمَان فَسَلَّمَ عَلَيْنَا فَبَعَثَنِي فِي حَاجَة فَأَبْطَأْت عَلَى أُمِّي . فَلَمَّا جِئْت قَالَتْ : مَا حَبَسَك ؟ فَقُلْت : بَعَثَنِي رَسُولُ اللّٰه ﷺ لِحَاجَة قَالَتْ : مَا حَاجَتُهُ ؟ قُلْت : إِنَّهَا سِرٌّ . قَالَتْ : لاَ تُخْبِرَن بِسِرِّ رَسُولِ اللّٰهِ ﷺ أَحَدًا . قَالَ أَنَسٌ : وَاللّٰهِ لَوْ حَدَّثْت بِهِ أَحَدًا لَحَدَّثْتُك بِهِ يَا ثَابِتُ . رَوَاهُ مُسْلِمٌ وَرَوَى الْبُخَارِيُّ بَعْضَهُ مُخْتَصَرًا .

**688** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(ஒருமுறை) நான் சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த போது என்னிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். எங்களுக்கு 'ஸலாம்' கூறினார்கள். பின்னர் ஒரு தேவைக்காக என்னை அனுப்பினார்கள். நான் சென்று அந்த வேலையை முடித்துவிட்டு, (என் வீட்டுக்கு) என் தாயாரிடம் தாமதமாகச் சென்றேன். நான் வந்ததும், என் தாயார் என்னிடம், "உன்னைத் தாமதமாக்கியது எது?" என்று கேட்டார்கள். "நபி (ஸல்) அவர்கள் ஒரு தேவைக்காக என்னை அனுப்பி வைத்தார்கள்"என்று கூறினேன். "அவர்களின் தேவை என்ன?" என்று என் தாயார் கேட்டார்கள். "அது ரகசியம்" என்று கூறினேன். "அப்படியானால், நபி (ஸல்) அவர்களின் ரகசியத்தை யாரிடமும் நீ கூறிவிடாதே!" என்று என் தாயார் கூறினார்கள்.

(இதை அறிவிக்கும் ஸாபித் என்பாரிடம் அனஸ் (ரழி)அவர்கள், ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அதை எவரிடமேனும் நான் கூறுவதாக இருந்தால், ஸாபித்தே! உம்மிடம் அதைக் கூறி இருப்பேன்'' என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2482. புகாரியில் (6289) இதன் சுருக்கம் இடம் பெற்றுள்ளது)**

## ٨٦ - باب الوفاء بالعهد وإنجاز الوعد

## பாடம் : 86 - ஒப்பந்தத்தையும், வாக்குறுதியையும் முழுமையாக நிறைவேற்றுதல்.

قَالَ اللّٰهُ تَعَالَى : وَأَوْفُوا بِالْعَهْدِ إِنَّ الْعَهْدَ كَانَ مَسْئُولاً . وَقَالَ تَعَالَى : وَأَوْفُوا بِعَهْدِ اللّٰهِ إِذَا عَاهَدْتُمْ . وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَوْفُوا بِالْعُقُودِ .

وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لِمَ تَقُولُونَ مَا لاَ تَفْعَلُونَ كَبُرَ مَقْتًا عِنْدَ اللّٰهِ أَنْ تَقُولُوا مَا لاَ تَفْعَلُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *ஒப்பந்தத்தை நிறைவேற்றுங்கள். நிச்சயமாக! ஒப்பந்தம் செய்வது (மறுமையில்) கேட்கப்படக் கூடியதாக உள்ளது. (17:34)*

*நீங்கள் ஒப்பந்தம் செய்தால், அல்லாஹ்வின் ஒப்பந்தத்தை நிறைவேற்றுங்கள். (16:91)*

*இறை விசுவாசிகளே! நீங்கள் உடன்படிக்கைகளை நிறைவேற்றுங்கள். (5:1)*

*இறை விசுவாசிகளே! நீங்கள் செய்யாததை ஏன் கூறுகிறீர்கள்? நீங்கள் செய்யாததை நீங்கள் கூறுவது அல்லாஹ்விடம் பெரும் குற்றமாக உள்ளது. (61:2,3)*

٦٨٩ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ :" آيَةُ الْمُنَافِقِ ثَلاَثٌ : إِذَا حَدَّثَ كَذَبَ وَإِذَا وَعَدَ أَخْلَفَ وَإِذَا اؤْتُمِنَ خَانَ " مُتَّفَقٌ عَلَيْهِ . زَادَ فِي رِوَايَةٍ لِمُسْلِمٍ :" وَإِنْ صَامَ وَصَلَّى وَزَعَمَ أَنَّهُ مُسْلِمٌ ".

**689** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நயவஞ்சகனின் அடையாளம் மூன்றாகும்.

(1) பேசினால் பொய் பேசுவான்.

(2) வாக்குறுதி தந்தால் மாறு செய்வான்.

(3) நம்பினால் மோசடி செய்வான்.

என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:33. முஸ்லிம்:59)**

''அவன் நோன்பு வைத்தாலும், தொழுதாலும், தன்னை முஸ்லிம் என எண்ணினாலும் சரியே...'' என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

٦٩٠ - وَعَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " أَرْبَعٌ مَنْ كُنَّ فِيهِ كَانَ مُنَافِقًا خَالِصًا وَمَنْ كَانَتْ فِيهِ خَصْلَةٌ مِنْهُنَّ كَانَتْ فِيهِ خَصْلَةٌ مِنَ النِّفَاقِ حَتَّى يَدَعَهَا : إِذَا اؤْتُمِنَ خَانَ وَإِذَا حَدَّثَ كَذَبَ وَإِذَا عَاهَدَ غَدَرَ وَإِذَا خَاصَمَ فَجَرَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**690** அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''நான்கு குணங்கள் ஒருவனிடம் இருந்தால், அவன் உண்மையான நயவஞ்சகன் ஆவான். அந்த குணங்களில் ஒன்று ஒருவனிடம் இருந்தால், அதை அவன் விடும்வரை நயவஞ்சகத்தின் குணம்

அவனிடம் ஏற்பட்டு விடும். (1) அவனை நம்பினால் அவன் மோசடி செய்வான் (2) பேசினால் பொய் பேசுவான் (3) ஒப்பந்தம் செய்தால் மீறுவான் (4) தர்க்கம் செய்தால் வரம்பு மீறுவான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:34. முஸ்லிம்:58)**

٦٩١ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " لَوْ قَدْ جَاءَ مَالُ الْبَحْرَيْنِ أَعْطَيْتُكَ هَكَذَا وَهَكَذَا " . فَلَمْ يَجِئْ مَالُ الْبَحْرَيْنِ حَتَّى قُبِضَ النَّبِيُّ ﷺ فَلَمَّا جَاءَ مَالُ الْبَحْرَيْنِ أَمَرَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَنَادَى : مَنْ كَانَ لَهُ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ عِدَةٌ أَوْ دَيْنٌ فَلْيَأْتِنَا فَأَتَيْتُه وَقُلْت لَهُ : إِنَّ النَّبِيَّ ﷺ قَالَ لِي كَذَا وَكَذَا . فَحَثَى لِي حَثْيَةً فَعَدَدْتُهَا فَإِذَا هِيَ خَمْسُمِائَةٍ فَقَالَ لِي : خُذْ مِثْلَيْهَا . مُتَّفَقٌ عَلَيْه .

**691** ஜாபிர் (ரழி)அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

“பஹ்ரைன் நாட்டிலிருந்து பொருள் வந்தால் ‘இவ்வாறு, இவ்வாறு, இவ்வாறு’ என உமக்குத் தருவேன்'' என்று நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் இறக்கும் வரை பஹ்ரைன் நாட்டுப் பொருள் வரவே இல்லை. பஹ்ரைன் நாட்டுப் பொருள் (நபி (ஸல்) அவர்களின் இறப்புக்குப் பின்) வந்தபோது, அபூபக்கர் (ரழி) அவர்கள் (அதைப் பங்கீடுச் செய்ய) கட்டளையிட்டார்கள். “நபி (ஸல்) அவர்களின் வாக்குறுதி அல்லது கடன் என்ற நிலையில் உள்ளவர், நம்மிடம் வரட்டும்'' என்று கூறினார்கள். அபூபக்கர் (ரழி) அவர்களிடம் நான் வந்தேன். அவர்களிடம் “எனக்கு நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு வாக்குறுதி கூறினார்கள்'' என்று கூறினேன். உடனே எனக்கு அவர்கள் இரண்டு கை நிறைய (வெள்ளிக் காசுகளை) அள்ளிப் போட்டார்கள். அதை நான் எண்ணிப் பார்த்தேன். அவை 500 திர்ஹம் இருந்தது. அப்போது அபூபக்கர் (ரழி) அவர்கள் என்னிடம், “இதுபோல் இன்னும் இரண்டு பங்கு நீர் எடுத்துக் கொள்வீராக!'' என்று கூறினார்கள்.

**(புகாரி:2683. முஸ்லிம்:2314)**

## ٨٧ – باب المحافظة عى مَا أعتاده من الخير

## பாடம் : 87 - வழமையாகச் செய்து வரும் நல்லவற்றைத் தொடர்ந்து செய்து வருதல்.

**قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ اللَّهَ لاَ يُغَيِّرُ مَا بِقَوْمٍ حَتَّى يُغَيِّرُوا مَا بِأَنْفُسِهِمْ . وَقَالَ تَعَالَى : وَلاَ تَكُونُوا كَالَّتِي نَقَضَتْ غَزْلَهَا مِنْ بَعْدِ قُوَّةٍ أَنْكَاثًا . " الأَنْكَاثُ " : جَمْعُ نَكْثٍ وَهُوَ الْغَزْلُ الْمَنْقُوضُ . وَقَالَ اللَّهُ تَعَالَى : وَلاَ يَكُونُوا كَالَّذِينَ أُوتُوا الْكِتَابَ مِنْ قَبْلُ فَطَالَ عَلَيْهِمُ الأَمَدُ فَقَسَتْ قُلُوبُهُمْ . وَقَالَ تَعَالَى : فَمَا رَعَوْهَا حَقَّ رِعَايَتِهَا .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *தங்களிடம் உள்ளதை அவர்கள் மாற்றிக் கொள்ளும் வரை ஒரு சமுதாயத்திடம் உள்ளவற்றை அல்லாஹ் மாற்றமாட்டான். (13:11)*

*கடுமையான உழைப்புக்குப்பின் உருவான, வலுவான தன் கயிற்றைத் துண்டு துண்டாக்கிய ஒரு பெண் போல் நீங்கள் ஆகிவிட வேண்டாம். (16:92)*

*முன்பு வேதங்கொடுக்கப்பட்டோர் போல் அவர்கள் ஆகிவிட வேண்டாம். அவர்களுக்கு (நபிமார் களின் வருகை) காலம் நீண்டதாகிவிட்டது. அவர்களின் இதயங்களும் இறுகிவிட்டது. (57:16)*

*அவர்கள் அதைப் பேணக் கூடிய விதத்தில் பேணவில்லை. (57:27)*

٦٩٢ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " يَا عَبْدَ اللَّهِ لاَ تَكُنْ مِثْلَ فُلاَنٍ كَانَ يَقُومُ اللَّيْلَ فَتَرَكَ قِيَامَ اللَّيْلِ ! " . مُتَّفَقٌ عَلَيْه .

**692** அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அப்துல்லாஹ்வே! இரவில் சில காலம் தொழுதுவிட்டு, (பிறகு) இரவில் நின்று வணங்குவதை விட்டு விடும் ஒருவரைப் போல் நீர் ஆகிவிட வேண்டாம்" என்று நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்.
**(புகாரி:1152. முஸ்லிம்:1159)**

## ٨٨ – باب استحباب طيب الكلام وطلاقة الوجه عند اللقاء

## பாடம் : 88 - சந்திக்கும் போது நல்லவிதமாகப் பேசுவதும், முகமலர்ச்சியுடன் இருப்பதும் விரும்பத்தக்கதாகும்

قَالَ اللَّهُ تَعَالَى : وَاخْفِضْ جَنَاحَكَ لِلْمُؤْمِنِينَ ﷺ وَقَالَ تَعَالَى : وَلَوْ كُنْتَ فَظًّا غَلِيظَ الْقَلْبِ لانْفَضُّوا مِنْ حَوْلِكَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *முஃமின்களுக்காக உம் இறக்கையைத் தாழ்த்துவீராக! (அவர்களிடம் பணிவுடன் இருப்பீராக!) (15:88)*

*(நபியே!) நீர் கடுகடுப்பானவராகவும், கடினமான இதயமுடையவராகவும் இருந்திருந்தால், உம்மை விட்டு அவர்கள் விரண்டோடி இருப்பார்கள். (3:159)*

٦٩٣ – وَعَنْ عَدِيِّ بْنِ حَاتِمٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " اتَّقُوا النَّارَ وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ فَمَنْ لَمْ يَجِدْ فَبِكَلِمَةٍ طَيِّبَةٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**693** அதீ இப்னு ஹாதிம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(முஃமின்களே!) நரக நெருப்பை பயந்து கொள்ளுங்கள்! ஒரு பேரீத்தம் பழத்துண்டை (தர்மம் செய்வது) கொண்டாகிலும் சரியே. அதுவும் இல்லையென்றால், மணமான (இனிமையான) நல்ல வார்த்தையைக் கூறுவது கொண்டாகிலும் (நரகை விட்டு பாதுகாப்பு தேடிக் கொள்ளுங்கள்)" என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:6023. முஸ்லிம்:1016)**

٦٩٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " كُلُّ سُلاَمَى مِنَ النَّاسِ عَلَيْهِ صَدَقَةٌ كُلَّ يَوْمٍ تَطْلُعُ فِيهِ الشَّمْسُ : تَعْدِلُ بَيْنَ الاثْنَيْنِ صَدَقَةٌ وَتُعِينُ الرَّجُلَ فِي دَابَّتِهِ فَتَحْمِلُهُ عَلَيْهَا أَوْ تَرْفَعُ لَهُ عَلَيْهَا مَتَاعَهُ صَدَقَةٌ وَالْكَلِمَةُ الطَّيِّبَةُ صَدَقَةٌ وَبِكُلِّ خُطْوَةٍ تَمْشِيهَا إِلَى الصَّلاَةِ صَدَقَةٌ وَتُمِيطُ الأَذَى عَنِ الطَّرِيقِ صَدَقَةٌ " مُتَّفَقٌ عَلَيْهِ . وَرَوَاهُ مُسْلِمٌ أَيْضًا مِنْ رِوَايَةِ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّهُ خُلِقَ كُلُّ إِنْسَانٍ مِنْ بَنِي آدَمَ عَلَى سِتِّينَ وَثَلاَثِ مِائَةِ مَفْصِلٍ فَمَنْ كَبَّرَ اللَّهَ وَحَمِدَ اللَّهَ وَهَلَّلَ اللَّهَ وَسَبَّحَ اللَّهَ وَاسْتَغْفَرَ اللَّهَ وَعَزَلَ حَجَرًا عَنْ طَرِيقِ النَّاسِ أَوْ شَوْكَةً أَوْ عَظْمًا عَنْ طَرِيقِ النَّاسِ أَوْ أَمَرَ بِمَعْرُوفٍ أَوْ نَهَى عَنْ مُنْكَرٍ عَدَدَ السِّتِّينَ وَالثَّلاَثِ مِائَةٍ فَإِنَّهُ يُمْسِي يَوْمَئِذٍ وَقَدْ زَحْزَحَ نَفْسَهُ عَنِ النَّارِ " .

**694** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நல்ல வார்த்தை பேசுவது, தர்மம் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2989. முஸ்லிம்:1009)**

٦٩٥ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَحْقِرَنَ مِنَ الْمَعْرُوفِ شَيْئًا وَلَوْ أَنْ تَلْقَى أَخَاكَ بِوَجْهٍ طَلْقٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**695** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நல்லவற்றில் எதையும் நீர் மதிப்புக் குறைவாகக் கருதிவிட வேண்டாம். உம் சகோதரனை மலர்ந்த முகத்துடன் நீர் சந்திப்பதாயினும் சரியே!” என்று நபி (ஸல்) அவர்கள் எனக்கு கூறினார்கள்.
**(முஸ்லிம்: 2626)**

## ٨٩ – باب استحباب بَيان الكلام وإيضاحه للمخاطب وتكريره؛ ليفهم إذا لم يفهم إلا بذلك

## பாடம் : 89 - பேசுவதை விளக்கமாகக் கூறுவதும், அதை விளக்குவதற்குத் திரும்பத் திரும்பக் கூறுவதும் விரும்பத்தக்கதாகும்.

٦٩٦ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ : أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا تَكَلَّمَ بِكَلِمَةٍ أَعَادَهَا ثَلاَثًا حَتَّى تُفْهَمَ عَنْهُ وَإِذَا أَتَى عَلَى قَوْمٍ فَسَلَّمَ عَلَيْهِمْ سَلَّمَ عَلَيْهِمْ ثَلاَثًا . رَوَاهُ الْبُخَارِيُّ .

**696** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்கள் எதையேனும் கூறினால், அது (மக்களால் நன்கு) விளங்கிக் கொள்ளப் படுவதற்காக மூன்று முறை அதை திரும்பத் திரும்பக் கூறுவார்கள். ஒரு கூட்டத்தாரிடம் அவர்கள் வந்தால், மூன்று தடவை அவர்களுக்கு ‘ஸலாம்’ கூறுவார்கள்.” **(புகாரி:95)**

٦٩٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ كَلاَمُ رَسُولِ اللَّهِ ﷺ كَلاَمًا فَصْلاً يَفْهَمُهُ كُلُّ مَنْ يَسْمَعُهُ . رَوَاهُ أَبُو دَاوُدَ.

**697** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்களின் பேச்சு, அதைக் கேட்கும் அனைவரும் விளங்கிடும் வகையில் தெளிவானதாகவும், விளக்கமானதாகவும் இருக்கும்.” **(அபூதாவூது:4839)**

## ٩٠ – باب إصغاء الجليس لحديث جَليسه الّذي لَيس بحرام، واستصات الْعَالِمِ والواعظ حاضِرِي مجلسه

## பாடம் : 90 - தன் அருகில் இருப்பவரிடம் நல்ல பேச்சைக் கேட்டல். அறிஞர், நல்லுபதேசம் செய்வோர், தம் அவையில் அமர்ந்திருப்போரை அமைதியாக இருக்கும்படி கூறுதல்.

٦٩٨ – وَعَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ فِي حِجَّةِ الْوَدَاعِ : " اسْتَنْصِتِ النَّاسَ " ثُمَّ قَالَ : " لاَ تَرْجِعُوا بَعْدِي كُفَّارًا يَضْرِبُ بَعْضُكُمْ رِقَابَ بَعْضٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**698** ஜரீர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஹஜ்ஜத்துல் விதாஉ” எனும் இறுதி ஹஜ்ஜின் போது, “மக்களை அமைதிப்படுத்துவீராக!” என நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள். பின்பு அவர்கள் (மக்களை நோக்கி), “எனக்குப்பின், உங்களில் சிலர், சிலரை அடித்துக் கொள்ளும் இறைமறுப்பாளர்களாக ஆகிவிடாதீர்கள்” என்று கூறினார்கள். **(புகாரி:121. முஸ்லிம்:65)**

## ٩١ - بابُ الوَعظ والاقتصاد فيه

## பாடம் : 91 - உபதேசம் செய்தல், அதில் நடுநிலையுடன் இருத்தல்

قَالَ اللَّهُ تَعَالَى : ادْعُ إِلَى سَبِيلِ رَبِّكَ بِالْحِكْمَةِ وَالْمَوْعِظَةِ الْحَسَنَةِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) விவேகத்துடனும், அழகிய அறிவுரைகள் மூலமாகவும் உம் இறைவனின் மார்க்கத்தின் பக்கம் அழைப்பீராக! மேலும், மிகச் சிறந்த முறையில் மக்களிடம் விவாதம் புரிவீராக! தன்னுடைய பாதையிலிருந்து வழி பிறழ்ந்தவர் யார் என்பதையும், நேர்வழியில் இருப்பவர்கள் யார் என்பதையும் உம் அதிபதி நன்கறிவான். (16:125)*

٦٩٩ - وَعَنْ أَبِي وَائِلٍ شَقِيقِ بْنِ سَلَمَةَ قَالَ : كَانَ ابْنُ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ يُذَكِّرُنَا فِي كُلِّ خَمِيسٍ مَرَّةً . فَقَالَ لَهُ رَجُلٌ : يَا أَبَا عَبْدِ الرَّحْمَنِ لَوَدِدْتُ أَنَّكَ ذَكَّرْتَنَا كُلَّ يَوْمٍ فَقَالَ : أَمَا إِنَّهُ يَمْنَعُنِي مِنْ ذَلِكَ أَنِّي أَكْرَهُ أَنْ أُمِلَّكُمْ وَإِنِّي أَتَخَوَّلُكُمْ بِالْمَوْعِظَةِ كَمَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَتَخَوَّلُنَا بِهَا مَخَافَةَ السَّآمَةِ عَلَيْنَا . مُتَّفَقٌ عَلَيْهِ . " يَتَخَوَّلُنَا " : يَتَعَهَّدُنَا .

**699** அபூவாயில் ஷகீக் இப்னு ஸலமா அறிவிக்கின்றார்கள்:

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் ஒவ்வொரு வியாழக்கிழமையின் போதும் எங்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருப்பார்கள். அவர்களிடம் ஒருவர், "அபு அப்துர் ரஹ்மான் (ரழி) அவர்களே! தினமும் நீங்கள் எங்களுக்கு உரை நிகழ்த்திட நான் விரும்புகிறேன்" என்று கூறினார். "உங்களுக்குச் சடைவு ஏற்படுத்துவதை நான் வெறுப்பதே என்னைத் தடுத்துவிட்டது. எங்களுக்கு சடைவு ஏற்படுவதைப் பயந்து, எங்களுக்கு இடைவெளிவிட்டு நபி (ஸல்) அவர்கள் உபதேசம் செய்தது போல், நானும் உங்களுக்கு இடைவெளிவிட்டு உபதேசம் செய்கிறேன்" என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:70, முஸ்லிம்:2821)**

٧٠٠ - وَعَنْ أَبِي الْيَقْظَانِ عَمَّارِ بْنِ يَاسِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ طُولَ صَلَاةِ الرَّجُلِ وَقِصَرَ خُطْبَتِهِ مَئِنَّةٌ مِنْ فِقْهِهِ فَأَطِيلُوا الصَّلَاةَ وَأَقْصِرُوا الْخُطْبَةَ " . رَوَاهُ مُسْلِمٌ . " مَئِنَّةٌ " بِمِيمٍ مَفْتُوحَةٍ ثُمَّ هَمْزَةٍ مَكْسُورَةٍ ثُمَّ نُونٍ مُشَدَّدَةٍ : أَيْ عَلَامَةٌ دَالَّةٌ عَلَى فِقْهِهِ .

**700** அபூ யக்ளான் என்ற அம்மார் இப்னு யாஸிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதரின் தொழுகை நீளமாக இருப்பதும், அவரது உரை குறைவாக இருப்பதும், அவரின் அறிவுக்கு அடையாளமாகும். எனவே தொழுகையை நீளமாக்குங்கள். உரையை குறையுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:869)**

٧٠١ - وَعَنْ مُعَاوِيَةَ بْنِ الْحَكَمِ السُّلَمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : " بَيْنَا أَنَا أُصَلِّي مَعَ رَسُولِ اللَّهِ ﷺ إِذْ عَطَسَ رَجُلٌ مِنَ الْقَوْمِ فَقُلْتُ : يَرْحَمُكَ اللَّهُ فَرَمَانِي الْقَوْمُ بِأَبْصَارِهِمْ ! فَقُلْتُ : وَاثُكْلَ أُمِّيَاهُ مَا شَأْنُكُمْ تَنْظُرُونَ إِلَيَّ ؟ فَجَعَلُوا يَضْرِبُونَ بِأَيْدِيهِمْ عَلَى أَفْخَاذِهِمْ فَلَمَّا رَأَيْتُهُمْ يُصَمِّتُونَنِي لَكِنِّي سَكَتُّ فَلَمَّا صَلَّى رَسُولُ اللَّهِ ﷺ - فَبِأَبِي هُوَ وَأُمِّي مَا رَأَيْتُ مُعَلِّمًا قَبْلَهُ وَلَا بَعْدَهُ أَحْسَنَ تَعْلِيمًا مِنْهُ فَوَاللَّهِ مَا كَهَرَنِي وَلَا ضَرَبَنِي وَلَا شَتَمَنِي - قَالَ : إِنَّ هَذِهِ الصَّلَاةَ لَا يَصْلُحُ فِيهَا شَيْءٌ مِنْ كَلَامِ النَّاسِ إِنَّمَا هِيَ التَّسْبِيحُ وَالتَّكْبِيرُ وَقِرَاءَةُ الْقُرْآنِ " أَوْ كَمَا قَالَ رَسُولُ اللَّهِ ﷺ . قُلْتُ : يَا رَسُولَ اللَّهِ إِنِّي حَدِيثُ عَهْدٍ بِجَاهِلِيَّةٍ وَقَدْ جَاءَ اللَّهُ بِالْإِسْلَامِ وَإِنَّ مِنَّا رِجَالًا يَأْتُونَ الْكُهَّانَ قَالَ : " فَلَا تَأْتِهِمْ " . قُلْتُ : وَمِنَّا رِجَالٌ يَتَطَيَّرُونَ . قَالَ : " ذَاكَ شَيْءٌ يَجِدُونَهُ فِي صُدُورِهِمْ فَلَا يَصُدَّنَّهُمْ " . رَوَاهُ مُسْلِمٌ . " الثُّكْلُ " بِضَمِّ الثَّاءِ الْمُثَلَّثَةِ : الْمُصِيبَةُ وَالْفَجِيعَةُ . " مَا كَهَرَنِي " : أَيْ مَا نَهَرَنِي .

**701** முஆவியா இப்னு ஹகம் சுலமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தேன். மக்களில் ஒருவர் (தொழுகையில்) தும்மியபோது, "யர்ஹமுகல்லாஹ்" என்று கூறினேன். மக்கள் என்னை (முறைத்து)ப் பார்த்தார்கள். "என் தாய்க்கு வந்த கேடே! உங்களுக்கு என்ன நேர்ந்தது? ஏன் என்னை இவ்வாறு பார்க்கிறீர்கள்?" என்று கேட்டேன். அப்பொழுது மக்கள் தங்களின் கைகளால் தங்கள் தொடைகளில் தட்ட ஆரம்பித்தார்கள். அவர்கள் எனக்கு இவ்வாறு சமிக்ஞை செய்வது கண்டு, நான் வாய் மூடி விட்டேன். நபி (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்து விட்டபோது, "என் தாயும், தந்தையும் அவர்களுக்கே அர்ப்பணம் ஆகட்டும்! இதற்கும் முன்போ பின்போ அவர்களை விட மிக அழகாகக் கற்றுத் தரும் நபர் ஒருவரை நான் கண்டதில்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக, அவர்கள் என்னை விரட்டவும் இல்லை, அடிக்கவும் இல்லை, திட்டவும் இல்லை.

"நிச்சயமாக இது தொழுகையாகும். இதில் மனிதர்களின் பேச்சு எதுவும்கூடாது. இதில் தஸ்பீஹ், தக்பீர் மற்றும் குர்ஆன் ஓதுதலும் (மட்டுமே) உண்டு" என்று நபி (ஸல்) அவர்கள் (எனக்கு)க் கூறினார்கள். அல்லது இது போன்று கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! நான் அறியாமைக் காலத்திற்கு அருகில் உள்ளவன் (புதிதாக இஸ்லாத்தை ஏற்றவன்). இப்பொழுது அல்லாஹ் இஸ்லாமை கொண்டு வந்துவிட்டான். நம்மில் சிலர், சோதிடர்களிடம் செல்கின்றனரே!" என்று கூறினேன். அதற்கு அவர்கள், "அவர்களிடம் செல்லாதீர்!" என்று கூறினார்கள். "எங்களில் சிலர் சகுனம் பார்க்கிறார்கள்" என்று கூறினேன். அதற்கு அவர்கள், "அது, அவர்களில் உள்ளங்களில் அவர்கள் அடையும் ஓர் உணர்வுதான். அவர்களுக்கு (விதி எதையும்) தடுத்துவிடாது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:537)**

٧٠٢ - وَعَنْ أَبِي نَجِيحٍ الْعِرْبَاضِ بْنِ سَارِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : وَعَظَنَا رَسُولُ اللَّهِ ﷺ مَوْعِظَةً بَلِيغَةً وَجِلَتْ مِنْهَا الْقُلُوبُ وَذَرَفَتْ مِنْهَا الْعُيُونُ . فَقُلْنَا : يَا رَسُولَ اللَّهِ كَأَنَّهَا مَوْعِظَةُ مُوَدِّعٍ فَأَوْصِنَا . قَالَ : " أُوصِيكُمْ بِتَقْوَى اللَّهِ وَالسَّمْعِ وَالطَّاعَةِ وَإِنْ تَأَمَّرَ عَلَيْكُمْ عَبْدٌ حَبَشِيٌّ وَإِنَّهُ مَنْ يَعِشْ مِنْكُمْ فَسَيَرَى اخْتِلَافًا كَثِيرًا فَعَلَيْكُمْ بِسُنَّتِي وَسُنَّةِ الْخُلَفَاءِ الرَّاشِدِينَ الْمَهْدِيِّينَ عَضُّوا عَلَيْهَا بِالنَّوَاجِذِ . وَإِيَّاكُمْ وَمُحْدَثَاتِ الأُمُورِ فَإِنَّ كُلَّ بِدْعَةٍ ضَلَالَةٌ " رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . " النَّوَاجِذُ " بِالذَّالِ الْمُعْجَمَةِ : الأَنْيَابُ وَقِيلَ الأَضْرَاسُ .

**702** இர்பாழ் இப்னு ஸாரியா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் ஒருமுறை எங்களுக்கு உபதேசம் செய்தார்கள். அதனை செவிமடுத்த பொழுது எங்கள் இதயங்கள் நடுநடுங்கின. எங்கள் கண்கள் கண்ணீரைப் பொழிந்துவிட்டன."

**(திர்மிதீ:2676. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٩٢ - بابُ الوقار والسّكينة

## பாடம் : 92 - கண்ணியம் பேணல், அமைதியாக இருத்தல்.

قَالَ اللَّهُ تَعَالَى : وَعِبَادُ الرَّحْمَنِ الَّذِينَ يَمْشُونَ عَلَى الأَرْضِ هَوْنًا وَإِذَا خَاطَبَهُمُ الْجَاهِلُونَ قَالُوا سَلَامًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ்வின் அடியார்களான அவர்கள், பூமியில் பணிவாக நடப்பார்கள். அவர்களை அறிவிலிகள் சந்தித்தால், "ஸலாம்" என்று இவர்கள் கூறி (ஒதுங்கி) விடுவார்கள்.* (25:63)

٧٠٣ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : مَا رَأَيْت رَسُولَ اللَّه ﷺ مُسْتَجْمِعًا قَطُّ ضَاحِكًا حَتَّى تُرَى مِنْهُ لَهَوَاتُهُ إِنَّمَا كَانَ يَتَبَسَّمُ مُتَّفَقٌ عَلَيْهِ . " اللَّهَوَاتُ " جَمْعُ لَهَاةٍ : وَهِيَ اللُّحْمَةُ الَّتِي فِي أَقْصَى سَقْفِ الْفَمِ .

**703** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கடவாய்ப் பற்கள் அனைத்தும் தெரியும் அளவுக்கு (வெடி சிரிப்பு)ச் சிரித்தவர்களாக நபி (ஸல்) அவர்களை நான் பார்த்ததில்லை. அவர்கள் புன் சிரிப்பாக மட்டுமே சிரிப்பார்கள்.

**(புகாரி:2428. முஸ்லிம்:899)**

## ٩٣ – بَابُ النَّدب إِلَى إتْيان الصَّلاَة والعِلْم ونح هما من العبادات بالسكينة والوقار

## பாடம் : 93 - தொழுதிட, கல்வி கற்றிட மற்றும் வணக்கம் புரிந்திட வருவோர் அமைதியாக, கண்ணியமாக வருதல்.

قَالَ اللَّهُ تَعَالَى : وَمَنْ يُعَظِّمْ شَعَائِرَ اللَّه فَإِنَّهَا مِنْ تَقْوَى الْقُلُوب .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இது (ஹஜ்ஜின் சட்டமாகும்). அல்லாஹ்வின் சட்டங்களை ஒருவர் கண்ணியப்படுத்தினால், அது இதயங்களில் ஏற்படும் 'தக்வா' எனும் இறையச்ச உணர்வாகும். (22:32)*

٧٠٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ : " إِذَا أُقِيمَت الصَّلاَةُ فَلاَ تَأْتُوهَا وَأَنْتُمْ تَسْعُونَ وَأْتُوهَا وَأَنْتُمْ تَمْشُونَ وَعَلَيْكُمُ السَّكِينَةُ فَمَا أَدْرَكْتُم فَصَلُّوا وَمَا فَاتَكُمْ فَأَتِمُّوا " . مُتَّفَقٌ عَلَيْهِ . زَادَ مُسْلِمٌ فِي رِوَايَةٍ لَهُ : " فَإِنَّ أَحَدَكُمْ إِذَا كَانَ يَعْمِدُ إِلَى الصَّلاَةِ فَهُوَ فِي صَلاَةٍ " .

**704** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தொழுகைக்கு "இகாமத்" கூறப்பட்டால், நீங்கள் விரைந்து ஓடி வராதீர்கள். நீங்கள் நடந்தவர்களாக மெதுவாகவே வாருங்கள். அமைதியை நீங்கள் கடைபிடியுங்கள். கிடைத்ததைத் தொழுங்கள். உங்களுக்குத் தவறியதை நீங்கள் (தொழுது) முழுமைப்படுத்துங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:908. முஸ்லிம்:602)**

("உங்களில் தொழுகையை நாடி வந்தவர், தொழுகையில் இருந்தவர் போலாவார்" என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கூடுதலாக உள்ளது)

٧٠٥ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ دَفَعَ مَعَ النَّبِيِّ ﷺ يَوْمَ عَرَفَةَ فَسَمِعَ النَّبِيُّ ﷺ وَرَاءَهُ زَجْرًا شَدِيدًا وَضَرْبًا وَصَوْتًا لِلإِبِلِ فَأَشَارَ بِصَوْتِه إِلَيْهِمْ وَقَالَ : " أَيُّهَا النَّاسُ عَلَيْكُمْ بِالسَّكِينَة فَإِنَّ الْبِرَّ لَيْسَ بِالأَيضَاعِ " . رَوَاهُ الْبُخَارِيُّ . وَرَوَى مُسْلِمٌ بَعْضَهُ . " الْبِرُّ " : الطَّاعَةُ . و " الأَيضَاعُ " بِضَادٍ مُعْجَمَةٍ قَبْلَهَا يَاءٌ وَهَمْزَةٌ مَكْسُورَةٌ وَهُوَ الأَسْرَاعُ .

**705** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள், (ஹஜ்ஜத்துல் விதாவு எனும் இறுதி ஹஜ்ஜில்) நபி (ஸல்) அவர்களுடன் 'அரஃபாத்' மைதானத்திற்கு சென்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், தனக்குப் பின்னால் கடுமையாக எச்சரிக்கும் குரலையும், (வேகமாகச் செல்வதற்கு ஒட்டகையை) அடிப்பதையும், (இதன்மூலம்) ஒட்டகையின் சப்தத்தையும் கேட்டார்கள். (நபி (ஸல்) அவர்களை

விரைந்து பின்தொடர வேண்டும் என்ற எண்ணத்தில் நபித்தோழர்கள் இவ்வாறு செய்தனர்) உடனே நபி (ஸல்) அவர்கள் தன் தோல்சாட்டையால் அவர்களுக்கு சமிக்ஞை செய்துவிட்டு, "மனிதர்களே! அமைதியைக் கடைபிடியுங்கள். நிச்சயமாக! நன்மை, அவசரப்படுவதால் இல்லை" என்று கூறினார்கள். **(புகாரி:1671)**

முஸ்லிமிலும் (1282) இந்த செய்தி வந்துள்ளது.

## ٩٤ – بابُ إكْرَامِ الضَّيفِ

### பாடம் : 94 - விருந்தினரை கண்ணியப்படுத்துதல்.

قَالَ اللَّهُ تَعَالَى : هَلْ أَتَاكَ حَدِيثُ ضَيْفِ إِبْرَاهِيمَ الْمُكْرَمِينَ إِذْ دَخَلُوا عَلَيْهِ فَقَالُوا سَلامًا قَالَ سَلامٌ قَوْمٌ مُنْكَرُونَ فَرَاغَ إِلَى أَهْلِهِ فَجَاءَ بِعِجْلٍ سَمِينٍ فَقَرَّبَهُ إِلَيْهِمْ قَالَ أَلاَ تَأْكُلُونَ . وَقَالَ تَعَالَى : وَجَاءَهُ قَوْمُهُ يُهْرَعُونَ إِلَيْهِ وَمِن قَبْلُ كَانُوا يَعْمَلُونَ السَّيِّئَاتِ قَالَ يَا قَوْمِ هَؤُلاَءِ بَنَاتِي هُنَّ أَطْهَرُ لَكُمْ فَاتَّقُوا اللَّهَ وَلاَ تُخْزُونِ فِي ضَيْفِي أَلَيْسَ مِنكُمْ رَجُلٌ رَشِيدٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இப்ராஹீமின் மரியாதைக்குரிய விருந்தினர்கள் பற்றிய செய்தி உமக்குக் கிடைத்ததா?*

*அவர்கள் அவரிடம் வந்து ஸலாம் கூறியபோது, அவரும் ஸலாம் கூறினார். அவர்கள் அறிமுகமில்லாத சமுதாயமாக இருந்தனர்.*

*தமது குடும்பத்தாரிடம் விரைந்து சென்று பொரித்த காளைக் கன்றின் இறைச்சியைக் கொண்டு வந்தார்.*

*அதை அவர்களின் அருகில் வைத்து, "சாப்பிடமாட்டீர்களா?" என்றார்.(51:24–27)*

*அவரது சமுதாயத்தினர் அவரிடம் விரைந்து வந்தனர். இதற்கு முன் அவர்கள் தீமைகளைச் செய்து வந்தனர். "என் சமுதாயமே! இதோ என் புதல்விகள் உள்ளனர். அவர்கள் உங்களுக்கு தூய்மையானோர். அல்லாஹ்வை அஞ்சுங்கள்! எனது விருந்தினர் விஷயத்தில் எனக்குக் கேவலத்தை ஏற்படுத்தி விடாதீர்கள்! உங்களில் நல்ல ஓர் ஆண் மகன் கூட இல்லையா?" என்று கேட்டார். (11:78)*

٧٠٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الأخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الأخِرِ فَلْيَصِلْ رَحِمَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الأخِرِ فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَصْمُتْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**706** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர், தன் விருந்தாளியை கண்ணியப்படுத்தட்டும்! அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர், தன் உறவினரோடு சேர்ந்து வாழட்டும்! அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர், நல்லதைக் கூறட்டும்! அல்லது மவுனமாக இருக்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6018. முஸ்லிம்:47)**

٧٠٧ – وَعَنْ أَبِي شُرَيْحٍ خُوَيْلِد بْنِ عَمْرٍو الْخُزَاعِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ جَائِزَتَهُ " . قَالُوا : وَمَا جَائِزَتُهُ يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " يَوْمُهُ وَلَيْلَتُهُ وَالضِّيَافَةُ ثَلاثَةُ أَيَّامٍ فَمَا كَانَ وَرَاءَ ذَلِكَ فَهُوَ صَدَقَةٌ عَلَيْهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : " لاَ يَحِلُّ لِمُسْلِمٍ أَنْ يُقِيمَ عِنْدَ أَخِيهِ حَتَّى يُؤْثِمَهُ " . قَالُوا : يَا رَسُولَ اللَّهِ كَيْفَ يُؤْثِمُهُ ؟ قَالَ : " يُقِيمُ عِنْدَهُ وَلاَ شَيْءَ لَهُ يَقْرِيهِ بِهِ " .

**707** அபூஷுரைஹ் குவைலித் இப்னு அம்ருல் குஸாஈ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டுள்ளவர், தன் விருந்தாளிக்கு தன் அன்பளிப்பு மூலம் கண்ணியம் அளிக்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவரின் அன்பளிப்பு என்றால் என்ன?" என்று நபித் தோழர்கள் கேட்டனர். "ஓர் இரவு, ஒரு பகல் தான் அது. (ஒருநாள் நல்ல உணவு வழங்குவதுதான் அன்பளிப்பு) விருந்து அளிப்பது என்பது மூன்று நாட்களாகும். அதன் பின்னர் என்பது, அவருக்கு (தொடர்ந்து உணவளிப்பது) தர்மம் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6135. முஸ்லிம்:48)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் பின்வருமாறு உள்ளது.

"தன் சகோதரனிடம் அவரை பாவியாக்கும் அளவுக்கு தங்குவது ஒரு முஸ்லிமுக்குக் கூடாது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவரைப் பாவியாக்குவது என்றால் என்ன?" என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். "அவரிடம் எதுவும் இல்லாத நிலையில் அவரிடம் தங்குவது. இதனால் அவர் (விருந்து கொடுக்க இயலாத நிலை ஏற்பட்டு) பாவியாக ஆவது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

## ٩٥ – باب استحباب التبشير والتهنئة

## பாடம் : 95 - வாழ்த்துக் கூறுவதும், நல்லது கூறுவதும் விரும்பத்தக்கது

**قَالَ اللَّهُ تَعَالَى : فَبَشِّرْ عِبَادِ الَّذِينَ يَسْتَمِعُونَ الْقَوْلَ فَيَتَّبِعُونَ أَحْسَنَهُ . وَقَالَ تَعَالَى : يُبَشِّرُهُمْ رَبُّهُمْ بِرَحْمَةٍ مِنْهُ وَرِضْوَانٍ وَجَنَّاتٍ لَهُمْ فِيهَا نَعِيمٌ مُقِيمٌ . وَقَالَ تَعَالَى : وَأَبْشِرُوا بِالْجَنَّةِ الَّتِي كُنْتُمْ تُوعَدُونَ . وَقَالَ تَعَالَى : فَبَشَّرْنَاهُ بِغُلامٍ حَلِيمٍ . وَقَالَ تَعَالَى : وَلَقَدْ جَاءَتْ رُسُلُنَا إِبْرَاهِيمَ بِالْبُشْرَى . وَقَالَ تَعَالَى : وَامْرَأَتُهُ قَائِمَةٌ فَضَحِكَتْ فَبَشَّرْنَاهَا بِإِسْحَاقَ وَمِنْ وَرَاءِ إِسْحَاقَ يَعْقُوبَ . وَقَالَ تَعَالَى : فَنَادَتْهُ الْمَلائِكَةُ وَهُوَ قَائِمٌ يُصَلِّي فِي الْمِحْرَابِ أَنَّ اللَّهَ يُبَشِّرُكَ بِيَحْيَى . وَقَالَ تَعَالَى : إِذْ قَالَتِ الْمَلائِكَةُ يَا مَرْيَمُ إِنَّ اللَّهَ يُبَشِّرُكِ بِكَلِمَةٍ مِنْهُ اسْمُهُ الْمَسِيحُ الأَيَةَ وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ .**

**وَأَمَّا الأَحَادِيثُ فَكَثِيرَةٌ جِدًّا وَهِيَ مَشْهُورَةٌ فِي الصَّحِيحِ مِنْهَا :**

**அல்லாஹ் கூறுகிறான்:** *அந்த அடியார்களுக்கு (நபியே!) நீர் நற்செய்தி அறிவித்து விடுவீராக!*

*அவர்கள் எத்தகையவர்கள் எனில், சொல்வதை ஆழ்ந்து கவனமாகக் கேட்டு, அவற்றில் சிறந்த அம்சத்தைப் பின்பற்றுகின்றவர்கள். இத்தகையவர் களுக்குத்தான் அல்லாஹ் நேர்வழி காட்டியிருக்கிறான். அவர்களே விவேகம் உடையவர்களாவர். (39:17,18)*

*தன்னுடைய அருளும், உவப்பும், சுவனங்களும் அவர்களுக்கு இருக்கின்றன என்று அவர்களின் இறைவன் நற்செய்தி அறிவிக்கின்றான். அங்கே அவர்களுக்கு நிலையான அருட்பேறுகள் இருக்கின்றன. (9:21)*

எவர்கள் 'எங்கள் இறைவன் அல்லாஹ்தான்' என்று கூறி அதில் உறுதியாக நிலைத்திருந் தார்களோ, நிச்சயமாக அவர்களிடம் மலக்குகள் வந்து (அவர்களை நோக்கி கூறுகிறார்கள் : "நீங்கள் (எதற்கும்) பயப்படாதீர்கள்; கவலைப்படாதீர்கள். உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட சுவனபதியைக் கொண்டு வாழ்த்துப் பெறுங்கள்" (41:30)

(இந்தப் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு) சாந்த குணம் கொண்ட ஒரு மகனைப் பற்றி நாம் அவருக்கு நற்செய்தி அறிவித்தோம். (37:101)

மேலும், (பாருங்கள்!) நம்முடைய வானவர்கள் இப்ராஹீமிடம் ஒரு நற்செய்தியைக் கொண்டு வந்தார்கள்."உங்கள் மீது சாந்தி நிலவட்டும்" என்றார்கள். அதற்கு, "உங்கள் மீதும் சாந்தி நிலவுக!" என்று இப்ராஹீம் பதிலளித்தார். பிறகு சிறிது நேரத்திற்குள் (அவர்களுக்கு விருந்தளிப்பதற்காக) வறுத்த கன்றின் மாமிசத்தைக் கொண்டு வந்தார். (11:69)

அப்போது இப்ராஹீமுடைய மனைவியும் நின்று கொண்டிருந்தார். அவர் (இதனைக் கேட்டதும்) சிரித்தார். நாம் அவருக்கு இஸ்ஹாக் (பிறக்கப் போவது) பற்றியும், இஸ்ஹாக்குக்குப் பின் யஃகூப் பற்றியும் நற்செய்தி அறிவித்தோம். (11:71)

அவர் மிஹ்ராபில் - மாடத்தினுள் நின்று தொழுது கொண்டிருக்கும்போது, வானவர்கள் குரல் கொடுத்தார்கள்: "நிச்சயமாக, அல்லாஹ் உமக்கு யஹ்யா (என்ற மக)வைக் கொண்டு நற்செய்தி சொல்கின்றான். அவர் அல்லாஹ்விட மிருந்து வரப்போகும் ஒரு வாக்கினை, மெய்ப்படுத்தக் கூடியவராக விளங்குவார். மேலும், அவரிடம் தலைமைத்துவம் மற்றும் மகத்துவத்தின் பண்புகள் காணப்படும். மனக்கட்டுப்பாடு கொண்டவராகவும் இருப்பார். நபித்துவம் அருளப்பட்டவராவும் இருப்பார். மேலும் ஒழுக்க சீலர்களில் ஒருவராகவும் திகழ்வார்." (3:39)

வானவர்கள் இவ்வாறுகூறியதை நினைவுகூருங்கள். "மர்யமே! திண்ணமாக அல்லாஹ் உமக்குத் தனது சொல்லைக் கொண்டு நற்செய்தி சொல்கின்றான். அவர் பெயர் மர்யமின் குமாரர் ஈஸா - "அல் மஸீஹ்" என்பதாகும். அவர் இம்மையிலும், மறுமையிலும் கண்ணியமிக்கவராகவும், அல்லாஹ்விடம் நெருங்கிய நல்லடியார்களில் ஒருவராகவும் திகழ்வார்." (3:45)

٧٠٨ – عَنْ أَبِي إِبْرَاهِيمَ – وَيُقَالُ أَبُو مُحَمَّد وَيُقَالُ أَبُو مُعَاوِيَةَ – عَبْدُ اللَّه بْنُ أَبِي أَوْفَى رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّه ﷺ بَشَّرَ خَدِيجَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا " بِبَيْت فِي الْجَنَّة منْ قَصَب لاَ صَخَبَ فيه وَلاَ نَصَبَ " . مُتَّفَقٌ عَلَيْه . " الْقَصَبُ " : هُنَا اللُّؤْلُؤُ الْمُجَوَّفُ . وَ " الصَّخَبُ " : الصِّيَاحُ وَاللَّغَطُ . وَ " النَّصَبُ" : التَّعَبُ.

**708** அபூமுஹம்மத், அபூமுஆவியா என்று அழைக்கப்படுகின்ற அபூ இப்ராஹீம் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கூச்சலும் சடைவும் இல்லாத, நடுவில் துளையிடப்பட்ட, முத்துக்களினால் உருவாக்கப்பட்ட சொர்க்கத்தின் வீடு (உமக்கு) உண்டு" என கதீஜா (ரழி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் வாழ்த்துக் கூறினார்கள்.

**(புகாரி:3819. முஸ்லிம்:2433)**

٧٠٩ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ تَوَضَّأَ فِي بَيْته ثُمَّ خَرَجَ فَقَالَ : لأَلْزَمَنَّ رَسُولَ اللَّه ﷺ وَلأَكُونَنَّ مَعَهُ يَوْمي هَذَا فَجَاءَ الْمَسْجدَ فَسَأَلَ عَنِ النَّبِيِّ ﷺ فَقَالُوا : وَجَّهَ هَاهُنَا قَالَ : فَخَرَجْتُ عَلَى أَثَرِه أَسْأَلُ عَنْهُ حَتَّى دَخَلَ بِئْرَ أَرِيس فَجَلَسْتُ عِنْدَ الْبَاب حَتَّى قَضَى رَسُولُ اللَّه ﷺ حَاجَتَهُ وَتَوَضَّأَ فَقُمْتُ إِلَيْه فَإِذَا هُوَ قَدْ جَلَسَ عَلَى بِئْر أَرِيس وَتَوَسَّطَ قُفَّهَا وَكَشَفَ عَنْ سَاقَيْه وَدَلاَّهُمَا فِي الْبِئْر فَسَلَّمْتُ عَلَيْه ثُمَّ انْصَرَفْتُ فَجَلَسْتُ عِنْدَ الْبَاب فَقُلْتُ : لأَكُونَنَّ بَوَّابَ رَسُولِ اللَّه ﷺ

الْيَوْمَ فَجَاءَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَدَفَعَ الْبَابَ فَقُلْت : مَنْ هَذَا ؟ فَقَالَ : أَبُو بَكْرٍ فَقُلْت : عَلَى رِسْلِك ! ثُمَّ ذَهَبْت فَقُلْت : يَا رَسُولَ اللَّهِ هَذَا أَبُو بَكْرٍ يَسْتَأْذِنُ فَقَالَ : " ائْذَنْ لَهُ وَبَشِّرْهُ بِالْجَنَّةِ " . فَأَقْبَلْت حَتَّى قُلْت لِأَبِي بَكْرٍ : اُدْخُلْ وَرَسُولُ اللَّهِ يُبَشِّرُك بِالْجَنَّةِ . فَدَخَلَ أَبُو بَكْرٍ حَتَّى جَلَسَ عَنْ يَمِينِ النَّبِيِّ ﷺ مَعَهُ فِي الْقُفِّ وَدَلَّى رِجْلَيْهِ فِي الْبِئْرِ كَمَا صَنَعَ رَسُولُ اللَّهِ ﷺ وَكَشَفَ عَنْ سَاقَيْهِ . ثُمَّ رَجَعْت وَجَلَسْت وَقَدْ تَرَكْت أَخِي يَتَوَضَّأُ وَيَلْحَقُنِي فَقُلْت : إِنْ يُرِدِ اللَّهُ بِفُلَانٍ – يُرِيدُ أَخَاهُ – خَيْرًا يَأْتِ بِهِ . فَإِذَا إِنْسَانٌ يُحَرِّكُ الْبَابَ فَقُلْت : مَنْ هَذَا ؟ فَقَالَ : عُمَرُ بْنُ الْخَطَّابِ . فَقُلْت : عَلَى رِسْلِك ! ثُمَّ جِئْت إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَسَلَّمْت عَلَيْهِ وَقُلْت : هَذَا عُمَرُ يَسْتَأْذِنُ . فَقَالَ : " ائْذَنْ لَهُ وَبَشِّرْهُ بِالْجَنَّةِ " . فَجِئْت عُمَرَ فَقُلْت : أَذِنَ وَيُبَشِّرُك رَسُولُ اللَّهِ ﷺ بِالْجَنَّةِ . فَدَخَلَ فَجَلَسَ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي الْقُفِّ عَنْ يَسَارِهِ وَدَلَّى رِجْلَيْهِ فِي الْبِئْرِ . ثُمَّ رَجَعْت فَجَلَسْت فَقُلْت : إِنْ يُرِدِ اللَّهُ بِفُلَانٍ خَيْرًا – يَعْنِي أَخَاهُ – يَأْتِ بِهِ فَجَاءَ إِنْسَانٌ فَحَرَّكَ الْبَابَ فَقُلْت : مَنْ هَذَا ؟ فَقَالَ : عُثْمَانُ بْنُ عَفَّانَ . فَقُلْت : عَلَى رِسْلِك ! وَجِئْت النَّبِيَّ ﷺ فَأَخْبَرْته . فَقَالَ : " ائْذَنْ لَهُ وَبَشِّرْهُ بِالْجَنَّةِ مَعَ بَلْوَى تُصِيبُهُ " . فَجِئْت فَقُلْت : اُدْخُلْ وَيُبَشِّرُك رَسُولُ اللَّهِ ﷺ بِالْجَنَّةِ مَعَ بَلْوَى تُصِيبُك ! فَدَخَلَ فَوَجَدَ الْقُفَّ قَدْ مُلِئَ فَجَلَسَ وِجَاهَهُمْ مِنَ الشِّقِّ الْآخَرِ . قَالَ سَعِيدُ بْنُ الْمُسَيِّبِ : فَأَوَّلْتهَا قُبُورَهُمْ ! مُتَّفَقٌ عَلَيْهِ . وَزَادَ فِي رِوَايَةٍ : وَأَمَرَنِي رَسُولُ اللَّهِ ﷺ بِحِفْظِ الْبَابِ . وَفِيهَا : أَنَّ عُثْمَانَ حِينَ بَشَّرَهُ حَمِدَ اللَّهَ تَعَالَى ثُمَّ قَالَ : اللَّهُ الْمُسْتَعَانُ . وَقَوْلُهُ : " وَجَّهَ " بِفَتْحِ الْوَاوِ وَتَشْدِيدِ الْجِيمِ : أَيْ تَوَجَّهَ . وَقَوْلُهُ : " بِئْرُ أَرِيسٍ " هُوَ بِفَتْحِ الْهَمْزَةِ وَكَسْرِ الرَّاءِ وَبَعْدَهَا يَاءٌ مُثَنَّاةٌ مِنْ تَحْتُ سَاكِنَةٌ ثُمَّ سِينٌ مُهْمَلَةٌ وَهُوَ مَصْرُوفٌ وَمِنْهُمْ مَنْ مَنَعَ صَرْفَهُ . " وَالْقُفُّ " بِضَمِّ الْقَافِ وَتَشْدِيدِ الْفَاءِ : وَهُوَ الْمَبْنِيُّ حَوْلَ الْبِئْرِ . قَوْلُهُ : " عَلَى رِسْلِك " بِكَسْرِ الرَّاءِ عَلَى الْمَشْهُورِ وَقِيلَ : بِفَتْحِهَا أَيْ أَرْفُقْ .

**709** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் என் வீட்டில் உளூச் செய்தேன். பின்பு வெளியேறினேன். "நபி (ஸல்) அவர்களைச் சந்திப்பேன். இன்று அவர்களுடனேயே இருப்பேன்" என்று கூறிக் கொண்டு, பள்ளிவாசல் வந்தேன். "நபி (ஸல்) அவர்கள் எங்கே?" என்று கேட்டேன். "இந்த வழியே சென்றார்கள்" என்று நபித்தோழர்கள் கூறினார்கள். நான் அவர்களை விசாரித்துக் கொண்டே அவர்களைத் தொடர்ந்து வந்தேன். அவர்கள் "பிஃரு அரீஸ்" என்ற கிணற்றின் அருகில் உள்ள தோட்டத்தில் நுழைந்தார்கள். நான் அதன் வாசலில் உட்கார்ந்து கொண்டேன். நபி (ஸல்) அவர்கள் தன் இயற்கைத் தேவைகளை நிறைவேற்றி விட்டு, உளூச் செய்தார்கள். நான் அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் "பிஃரு அரீஸ்" என்ற கிணற்றின் மீது உட்கார்ந்திருந்தார்கள். அதன் சுற்றுச்சுவரின் நடுவில் இருந்தார்கள். தன் இரண்டு கெண்டைக் கால்களையும் திறந்து, அந்த இரண்டையும் கிணற்றில் தொங்கவிட்டார்கள். நான் அவர்களுக்கு ஸலாம் கூறினேன். பின்னர் நான் திரும்பி வந்து வாசலில் உட்கார்ந்து கொண்டேன். "இன்று நபி (ஸல்) அவர்களின் வாயிற்காப்பாளனாக இருப்பேன்" என்று (எனக்குள்) கூறிக் கொண்டேன்.

அப்போது அபூபக்கர் (ரழி) அவர்கள் வந்து, (தோட்டக்) கதவைத் தட்டினார்கள். "யார் அது?" என்று கேட்டேன். "அபூபக்கர்" என கூறினார்கள். "அங்கேயே இருங்கள்" என்று கூறிவிட்டு, (நபி (ஸல்) அவர்களிடம்) நான் சென்று, "இறைத்தூதர் அவர்களே! அபூபக்கர் (ரழி) அனுமதி கேட்கிறார்" என்று கூறினேன். "அவருக்கு அனுமதி வழங்குவீராக! அவருக்கு சொர்க்கம் உண்டு எனச் சுபச் செய்தி கூறுவீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். நான் முன்னோக்கி வந்து அபூபக்கர் (ரழி) அவர்களிடம், "உள்ளே வாருங்கள். நபி (ஸல்) அவர்கள் உங்களுக்கு சொர்க்கம் உண்டு என சுபச்செய்தி கூறினார்கள்" என்று கூறினேன். அபூபக்கர் (ரழி) அவர்கள் உள்ளே நுழைந்து, (கிணற்றின்) சுற்றுச் சுவரில் நபி (ஸல்) அவர்களின் வலதுபுறத்தில் உட்கார்ந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் செய்தது போலவே கிணற்றில் தன் இரண்டு கால்களை தொங்க விட்டார்கள்.

பின்பு நான் திரும்பி வந்து, என் இடத்தில் உட்கார்ந்து கொண்டேன். நான் வீட்டிலிருந்து வரும்பொழுது என் சகோதரரை உளூச் செய்து விட்டு என்னுடன் வந்து (மஸ்ஜிதில்) சேர்ந்துக் கொள்ளுமாறு கூறியிருந்தேன். “அல்லாஹ் என் சகோரருக்கு நல்லதை நாடினால் அவரையும் இங்கு கொண்டு வருவான்” என்று நான் (எனக்குள்) கூறிக்கொண்டேன். அப்போது ஒருவர் (தோட்டக்) கதவை அசைத்தார். “யார் அது?” என்று கேட்டேன். “உமர் இப்னு கத்தாப்” என அவர் கூறினார். “அங்கேயே இருங்கள்!” என்று நான் கூறிவிட்டு, நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ஸலாம் கூறினேன். “உமர் (ரழி) உள்ளே வர அனுமதி கேட்கிறார்” என்று கூறினேன். “அவருக்கு அனுமதி வழங்குவீராக! சொர்க்கம் அவருக்கு உண்டு என வாழ்த்துக் கூறுவீராக!” என்று நபி (ஸல்) கூறினார்கள். நான் உமர் (ரழி) அவர்களிடம் வந்து, “நபி (ஸல்) அனுமதி வழங்கினார்கள். சொர்க்கம் உண்டு என உங்களுக்கு வாழ்த்துக் கூறினார்கள்” என்று கூறினேன். அவர் உள்ளே நுழைந்து, நபி (ஸல்) அவர்களுடன் அவர்களின் இடது ஓரத்தில் சுற்றுச் சுவரில் உட்கார்ந்தார்கள். கிணற்றில் தன் கால்களை தொங்க விட்டார்கள்.

பின்பு நான் திரும்பி வந்து என் இடத்தில் உட்கார்ந்தேன். “அல்லாஹ் என் சகோதரருக்கு நன்மையை நாடினால் அவரை இங்கு கொண்டு வந்து சேர்ப்பான்” என்று நான் (எனக்குள்) கூறிக் கொண்டேன். அப்போது ஒருவர் வாசலைத் தட்டினார். “யார் அது?” என்று கேட்டேன். “உஸ்மான் இப்னு அஃப்பான்”என்று அவர் கூறினார். “உங்கள் நிலையிலேயே இருங்கள்” என்று நான் கூறிவிட்டு, நபி (ஸல்) அவர்களிடம் வந்து, செய்தியைக் கூறினேன். “அவருக்கு அனுமதி வழங்குவீராக! அவரை அடையும் சில சோதனைகளுடன் சொர்க்கம் அவருக்கு உண்டு என, அவருக்கு வாழ்த்துக் கூறுவீராக!” என்று நபி (ஸல்) கூறினார்கள். நான் வந்து, “உள்ளே செல்லுங்கள்! உம்மை அடையும் சில சோதனைகளுடன் உங்களுக்கு சொர்க்கம் உங்களுக்கு உண்டு என நபி (ஸல்) அவர்கள் உங்களுக்கு வாழ்த்துக் கூறினார்கள்” என்றேன். உஸ்மான் (ரழி) நுழைந்தார். சுற்றுச்சுவர் நிரம்பி உள்ளதைக் கண்டார். எனவே, உஸ்மான் (ரழி) அவர்கள், அவர்களின் எதிரில் உட்கார்ந்தார்.

ஸயீத் இப்னு முஸய்யப் கூறுகிறார்கள்:

நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரழி) அவர்கள், உமர் (ரழி) அவர்கள் ஆகியோர் கிணற்றுச் சுவரின் ஒரு பக்கம் ஒன்றாக அமர்ந்திருந்ததும், உஸ்மான் (ரழி அவர்கள் கிணற்றுச் சுவரின் மறுபக்கம் அவர்களுக்கு எதிரில் தனியாக அமர்ந்திருந்ததுமான இதனை (இத்தோற்றத்தை) நான் அவர்களின் மண்ணறைகளின் நிலை இவ்வாறுதான் இருக்கும் என்பதை அதன் மூலம் உணர்ந்தேன்.

**(புகாரி:3674. முஸ்லிம்:2403)**

மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது.

நபி (ஸல்) அவர்கள், வாசலில் பாதுகாப்புக்கு என்னை நியமித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் வாழ்த்துக் கூறினார்கள் என்று கூறிய போது உஸ்மான் (ரழி) அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து, “அல்லாஹுல் முஸ்தஆன் - அல்லாஹ்வே உதவி தேடப்படுபவன்” என்று கூறினார்கள்.

٧١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا قُعُودًا حَوْلَ رَسُولِ اللَّهِ ﷺ وَمَعَنَا أَبُو بَكْرٍ وَعُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُمَا فِي نَفَرٍ فَقَامَ رَسُولُ اللَّهِ ﷺ مِنْ بَيْنِ أَظْهُرِنَا فَأَبْطَأَ عَلَيْنَا وَخَشِينَا أَنْ يُقْتَطَعَ دُونَنَا وَفَزِعْنَا فَقُمْنَا فَكُنْتُ أَوَّلَ مَنْ فَزِعَ فَخَرَجْتُ أَبْتَغِي رَسُولَ اللَّهِ ﷺ حَتَّى أَتَيْتُ حَائِطًا لِلْأَنْصَارِ لِبَنِي النَّجَّارِ فَدُرْتُ بِهِ : هَلْ أَجِدُ لَهُ بَابًا ؟ فَلَمْ أَجِدْ ! فَإِذَا رَبِيعٌ يَدْخُلُ فِي جَوْفِ حَائِطٍ مِنْ بِئْرٍ خَارِجَةٍ – وَالرَّبِيعُ : الْجَدْوَلُ الصَّغِيرُ – فَاحْتَفَزْتُ فَدَخَلْتُ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : " أَبُو هُرَيْرَةَ ؟ " فَقُلْتُ : نَعَمْ يَا رَسُولَ اللَّهِ . قَالَ : " مَا شَأْنُكَ ؟ " قُلْتُ : كُنْتَ بَيْنَ أَظْهُرِنَا فَقُمْتَ فَأَبْطَأْتَ عَلَيْنَا فَخَشِينَا أَنْ تُقْتَطَعَ دُونَنَا فَفَزِعْنَا

فَكُنْت أَوَّلَ مَنْ فَزِعَ فَأَتَيْت هَذَا الْحَائطَ فَاحْتَفَزْت كَمَا يَحْتَفِزُ الثَّعْلَبُ وَهَؤُلَاءِ النَّاسُ وَرَائِي . قَالَ : " يَا أَبَا هُرَيْرَةَ " – وَأَعْطَانِي نَعْلَيْهِ فَقَالَ : " اذْهَبْ بِنَعْلَيَّ هَاتَيْنِ فَمَنْ لَقِيت مِنْ وَرَاءِ هَذَا الْحَائطِ يَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلاَّ اللَّهُ مُسْتَيْقِنًا بِهَا قَلْبُهُ فَبَشِّرْهُ بِالْجَنَّةِ " . وَذَكَرَ الْحَدِيثَ بِطُولِهِ . رَوَاهُ مُسْلِمٌ . " الرَّبِيعُ " : النَّهْرُ الصَّغِيرُ وَهُوَ الْجَدْوَلُ – بِفَتْحِ الْجِيمِ – كَمَا فَسَّرَهُ فِي الْحَدِيثِ . وَقَوْلُهُ : " احْتَفَزْت " رُوِيَ بِالرَّاءِ وَبِالزَّايِ وَمَعْنَاهُ بِالزَّايِ : تَضَامَمْت وَتَصَاغَرْت حَتَّى أَمْكَنَنِي الدُّخُولُ .

**710** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களைச் சுற்றி நாங்கள் உட்கார்ந்திருந்தோம். அந்தக் கூட்டத்தில் எங்களுடன் அபூபக்கர் (ரழி), உமர் (ரழி) ஆகியோரும் இருந்தனர். நபி(ஸல்) அவர்கள் எங்களிடையே எழுந்து, வெளியே சென்றார்கள். எங்களிடம் வர தாமதம் ஆகியது. (இதனால்) எங்களிடமிருந்து அவர்கள் பிரிக்கப்பட்டு விட்டதாக நாங்கள் பயந்து, அதிர்ச்சியடைந்து எழுந்தோம். அதிர்ச்சியடைந்தவர்களில் முதல் ஆளாக நான் இருந்தேன். நபி (ஸல்) அவர்களை தேடியவனாக நான் வெளியேறினேன். அப்போது பனூ நஜ்ஜார் சமுகத்தைச் சேர்ந்த அன்சாரி நபித்தோழர் ஒருவரின் தோட்டத்திற்கு வந்தேன். அதற்கு (உள்ளே நுழைய) வாசல் உள்ளதா? எனத் தேடினேன். (வாசலைக்) காணவில்லை. அப்போது வெளியில் உள்ள கிணற்றிலிருந்து தோட்டத்தின் நடுவில் நுழையும் வாய்க்கால் இருந்தது. அதில் குனிந்து, நுழைந்து, நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். “அபூஹுரைராவா?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். “இறைத்தூதர் அவர்களே! ஆம்” என்றேன். “என்ன விஷயம்?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “எங்களிடையே இருந்த நீங்கள் வெளியேறிச் சென்று விட்டீர்கள். எங்களிடம் வர தாமதம் ஆகியது. எங்களை விட்டும் நீங்கள் பிரிக்கப்பட்டதாகப் பயந்தோம். அதிர்ச்சி அடைந்தோம். அதிர்ச்சி அடைந்தோரில் நான் முதல் ஆளாக இருந்தேன். உடனே இந்தத் தோட்டத்திற்கு வந்தேன். ஓநாய் குனிந்து நெளிந்து வருவது போல், நானும் குனிந்து வந்தேன். மக்கள் அனைவரும் எனக்குப் பின்னே வருகின்றனர்” என்று கூறினேன். “அபூஹுரைராவே!” என்று அழைத்த நபி (ஸல்) அவர்கள், என்னிடம் அவர்களின் இரண்டு செருப்புக்களையும் கொடுத்தார்கள். “இந்த இரண்டு செருப்புகளுடன் நீர் செல்வீராக! இந்த தோட்டத்திற்கு வெளியே நீர் சந்திப்பவருக்கு “லாயிலாஹ இல்லல்லாஹ்” என்று கூறி, அதில் உறுதியானவராக இருந்தால் அவருக்கு சொர்க்கம் உண்டு என வாழ்த்துக் கூறுவீராக!” என்று கூறினார்கள். **(இது நீண்ட ஹதீஸாகும். முஸ்லிம்:31)**

٧١١ – وَعَنِ ابْنِ شُمَاسَةَ قَالَ : حَضَرْنَا عَمْرَو بْنَ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُ – وَهُوَ فِي سِيَاقَةِ الْمَوْتِ فَبَكَى طَوِيلاً وَحَوَّلَ وَجْهَهُ إِلَى الْجِدَارِ فَجَعَلَ ابْنُهُ يَقُولُ : يَا أَبَتَاهُ أَمَا بَشَّرَكَ رَسُولُ اللَّهِ ﷺ بِكَذَا ؟ أَمَا بَشَّرَكَ رَسُولُ اللَّهِ ﷺ بِكَذَا ؟ فَأَقْبَلَ بِوَجْهِهِ فَقَالَ : إِنَّ أَفْضَلَ مَا نُعِدُّ شَهَادَةُ أَنْ لَا إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ . إِنِّي قَدْ كُنْت عَلَى أَطْبَاقٍ ثَلَاثَةٍ : لَقَدْ رَأَيْتنِي وَمَا أَحَدٌ أَشَدَّ بُغْضًا لِرَسُولِ اللَّهِ ﷺ مِنِّي وَلَا أَحَبَّ إِلَيَّ مِنْ أَنْ أَكُونَ قَدْ اسْتَمْكَنْت مِنْهُ فَقَتَلْته فَلَوْ مِتُّ عَلَى تِلْكَ الْحَالِ لَكُنْت مِنْ أَهْلِ النَّارِ فَلَمَّا جَعَلَ اللَّهُ الْإِسْلَامَ فِي قَلْبِي أَتَيْت النَّبِيَّ ﷺ فَقُلْت : ابْسُطْ يَمِينَك فَلْأُبَايِعْك فَبَسَطَ يَمِينَهُ فَقَبَضْت يَدِي فَقَالَ : " مَا لَك يَا عَمْرُو ؟ " . قُلْت : أَرَدْت أَنْ أَشْتَرِطَ . قَالَ : " تَشْتَرِطُ مَاذَا ؟ " قُلْت : أَنْ يُغْفَرَ لِي قَالَ : " أَمَا عَلِمْت أَنَّ الْإِسْلَامَ يَهْدِمُ مَا كَانَ قَبْلَهُ وَأَنَّ الْهِجْرَةَ تَهْدِمُ مَا كَانَ قَبْلَهَا وَأَنَّ الْحَجَّ يَهْدِمُ مَا كَانَ قَبْلَهُ ؟ " وَمَا كَانَ أَحَدٌ أَحَبَّ إِلَيَّ مِنْ رَسُولِ اللَّهِ ﷺ وَلَا أَجَلَّ فِي عَيْنِي مِنْهُ وَمَا كُنْت أُطِيقُ أَنْ أَمْلَأَ عَيْنِي مِنْهُ إِجْلَالاً لَهُ ; وَلَوْ سُئِلْت أَنْ أَصِفَهُ مَا أَطَقْت لِأَنِّي لَمْ أَكُنْ أَمْلَأُ عَيْنِي مِنْهُ وَلَوْ مِتُّ عَلَى تِلْكَ الْحَالِ لَرَجَوْت أَنْ أَكُونَ مِنْ أَهْلِ الْجَنَّةِ . ثُمَّ وُلِّينَا أَشْيَاءَ مَا أَدْرِي مَا حَالِي فِيهَا ؟ فَإِذَا أَنَا مِتُّ فَلَا تَصْحَبْنِي نَائِحَةٌ وَلَا نَارٌ فَإِذَا دَفَنْتُمُونِي فَشُنُّوا عَلَيَّ التُّرَابَ شَنًّا ثُمَّ أَقِيمُوا حَوْلَ قَبْرِي قَدْرَ مَا تُنْحَرُ جَزُورٌ وَيُقْسَمُ لَحْمُهَا حَتَّى أَسْتَأْنِسَ بِكُمْ وَأَنْظُرَ مَا أُرَاجِعُ بِهِ رُسُلَ رَبِّي ! رَوَاهُ مُسْلِمٌ . قَوْلُهُ " شُنُّوا " رُوِيَ بِالشِّينِ الْمُعْجَمَةِ وَالْمُهْمَلَةِ : أَيْ صُبُّوهُ قَلِيلاً قَلِيلاً وَاللَّهُ سُبْحَانَهُ أَعْلَمُ .

**711** இப்னு ஷுமாஸா அறிவிக்கின்றார்:

அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அவர்கள் மரண வேதனையில் இருந்த போது, அவர் அருகில் நாங்கள் இருந்தோம். அவர் நீண்ட நேரம் அழுதார். தன் முகத்தை சுவற்றின் பக்கமாக திருப்பிக் கொண்டார். அப்போது அவரின் மகன், "தந்தையே! நபி (ஸல்) அவர்கள் (சொர்க்கத்தை கொண்டு) இவ்வாறு உங்களுக்கு வாழ்த்துக் கூறினார்களே! நபி (ஸல்) அவர்கள் (சொர்க்கத்தைக் கொண்டு) இவ்வாறு உங்களுக்கு வாழ்த்துக் கூறினார்களே! என்று (இருமுறை) கூறினார். உடனே அம்ரு (ரழி) அவர்கள் தன் முகத்தைத் திருப்பினார். " நான் (மறுமைக்காக) தயார் செய்து வைத்திருப்பவைகளில் மிகச் சிறந்தது 'அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹு வஅன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்' என்ற திருக்கலிமாவாகும். நான் மூன்று கட்டங்களில் இருந்துள்ளேன். (முதலாவது) நபி (ஸல்) அவர்கள் மீது என்னைவிட மிகக் கடுமையான கோபம் கொண்டவர் எவரும் இருந்ததில்லை. வாய்ப்புக் கிடைத்தால் அவர்களை நான் கொன்று விடுவதைவிட, எனக்கு மிகப் பிரியமானது வேறொன்றும் இருக்கவில்லை. நான் அதே நிலையில் மரணித்திருந்தால், நரகவாசிகளில் ஒருவனாக நான் இருந்திருப்பேன். (இரண்டாவது), என் இதயத்தில் இஸ்லாமை அல்லாஹ் ஏற்படுத்தியபோது நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன். "உங்கள் வலது கையை விரியுங்கள். உங்களிடம் நான் சத்தியப் பிரமாணம் செய்ய வேண்டும்" என்று நபி (ஸல்) அவர்களிடம் கூறினேன். அவர்கள் தமது வலது கையை விரித்தார்கள். அப்போது என் கையை நான் மூடிக் கொண்டேன். "அம்ரே! உமக்கு என்ன நேர்ந்தது?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "நான் நிபந்தனை விதிக்க நாடுகிறேன்" என்றேன். "உமது நிபந்தனை என்ன?" என்று கேட்டார்கள். "எனக்கு மன்னிப்பு அளிக்கப்படுவதுதான்" என்று கூறினேன்.

"இஸ்லாம் அதற்கு முந்திய பாவங்களை அழித்துவிடும், ஹிஜ்ரத் அதற்கு முந்திய பாவங்களை அழித்துவிடும், ஹஜ் செய்வது அதற்கு முந்திய பாவங்களை அழித்து விடும் என்பதை நீர்அறியவில்லையா?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். நபி (ஸல்) அவர்களைவிட எனக்கு மிகப் பிரியமானவர் எவருமில்லை. அவர்களைவிட என் கண் முன் கண்ணியமானவர் எவருமில்லை. அவர்களின் மீதுள்ள கண்ணியம் காரணமாக அவர்களை என் கண்களால் முழுமையாக நான் பார்த்ததில்லை. அவர்களை (அங்க அடையாளம் பற்றி) நான் வர்ணிக்க வேண்டும் என கேட்கப்பட்டால், அவர்களை நான் என் கண்களால் முழுமையாகப் பார்க்காத காரணத்தால் அதைக் கூற இயல மாட்டேன். இந்த நிலையில் நான் மரணித்திருந்தால், நான் சொர்க்கவாசிகளில் ஒருவனாக இருந்திருப்பேன் என எண்ணுகிறேன். (மூன்றாவது), பின்னர் நாங்கள் பல பொறுப்புகளுக்கு (ஆட்சிப் பணிகளுக்கு) நியமிக்கப்பட்டோம். அதில் என் நிலை என்ன என்பதை நான் அறியமாட்டேன். நான் இறந்துவிட்டால் ஒப்பாரி வைக்கும் பெண்ணோ, நெருப்போ என்னைப் பின் தொடர வேண்டாம். என்னை நீங்கள் அடக்கம் செய்தால், என் மீது மண்ணைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தள்ளுங்கள். பின்பு ஒரு ஒட்டகையை அறுத்து, அதன் இறைச்சியைப் பிரிக்கப்படும் நேர அளவுக்கு என் மண்ணறையைச் சுற்றி நின்றுக் கொண்டு இருங்கள். இதனால் உங்களிடம் நான் பாசத்தை எதிர் பார்க்கிறேன். என் இறைவனின் தூதர்களுக்கு (முன்கர், நகீர் என்னும் மலக்குகளுக்கு) நான் என்ன பதில் சொல்வேன் என்று நான் சிந்தித்துப் பார்ப்பதற்காகவும் (சிறிதளவு நேரம் என்னைச் சுற்றி நில்லுங்கள். என்னைத் தனிமையில் விட்டுச் சென்று விடாதீர்கள்)" என்று அம்ரு இப்னு ஆஸ் (ரழி) கூறினார்கள்.

**(முஸ்லிம்:121)**

## ٩٦ – باب وَداع الصَّاحب ووَصيّته عند فراق السفر وغيره والدعاء له وطلب الدعاءمنه

## **பாடம் : 96 - பயணம் செல்பவரை வழி அனுப்புதல், அவருக்கு உபதேசம் செய்தல், அவருக்கு துஆச் செய்தல், அவரிடம் துஆச் செய்யக் கோருதல்**

قَالَ اللَّهُ تَعَالَى : وَوَصَّى بِهَا إِبْرَاهِيمُ بَنِيهِ وَيَعْقُوبُ يَا بَنِيَّ إِنَّ اللَّهَ اصْطَفَى لَكُمُ الدِّينَ فَلاَ تَمُوتُنَّ إِلاَّ وَأَنْتُمْ مُسْلِمُونَ أَمْ كُنْتُمْ شُهَدَاءَ إِذْ حَضَرَ يَعْقُوبَ الْمَوْتُ إِذْ قَالَ لِبَنِيهِ مَا تَعْبُدُونَ مِنْ بَعْدِي قَالُوا نَعْبُدُ إِلَهَكَ وَإِلَهَ آبَائِكَ إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ وَإِسْحَاقَ إِلَهًا وَاحِدًا وَنَحْنُ لَهُ مُسْلِمُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இதே வழிமுறைகளில் செல்லும்படி, தம் மக்களுக்கும் இப்ராஹீம் அறிவுறுத்தியிருந்தார். மேலும், இதனையே பின்பற்றி வாழும்படி, யஃகூபும் தம் மக்களுக்கு அறிவுறுத்திச் சென்றார். அவர் கூறினார்: "என்னுடைய மக்களே! அல்லாஹ் உங்களுக்காக இந்த தீனையே (நெறியையே) தேர்ந் தெடுத்துள்ளான். எனவே, நீங்கள் முஸ்லிம்களாக அன்றி இறந்து விடாதீர்கள்!*

*யஃகூபை மரணம் நெருங்கியபொழுது நீங்கள் அங்கிருந்தீர்களா என்ன? (அவர் மரணிக்கும் தருவாயில்) தம் மக்களிடம் வினவினார்: "மக்களே! எனக்குப் பின்னர் நீங்கள் எதை வணங்குவீர்கள்?" அதற்கு அவர்கள் அனைவரும் பதிலளித்தனர்: "உங்கள் இறைவனும் உங்கள் மூதாதையர் இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக் ஆகியோரின் இறைவனுமான ஒரே இறைவனையே நாங்கள் வணங்குவோம். அத்துடன் நாங்கள் அவனுக்கே (கீழ்படிந்த) முஸ்லிம்களாகத் திகழ்வோம்" (2:132,133)*

٧١٢ – وَأَمَّا الأَحَادِيثُ فَمِنْهَا حَدِيثُ زَيْدِ بْنِ أَرْقَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ – الَّذِي سَبَقَ فِي بَابِ إِكْرَامِ أَهْلِ بَيْتِ رَسُولِ اللَّهِ ﷺ – قَالَ : قَامَ رَسُولُ اللَّهِ ﷺ فِينَا خَطِيبًا فَحَمِدَ اللَّهَ وَأَثْنَى عَلَيْهِ وَوَعَظَ وَذَكَّرَ ثُمَّ قَالَ : أَمَّا بَعْدُ أَلاَ أَيُّهَا النَّاسُ إِنَّمَا أَنَا بَشَرٌ يُوشِكُ أَنْ يَأْتِيَ رَسُولُ رَبِّي فَأُجِيبَ وَأَنَا تَارِكٌ فِيكُمْ ثَقَلَيْنِ أَوَّلُهُمَا : كِتَابُ اللَّهِ فِيهِ الْهُدَى وَالنُّورُ . فَخُذُوا بِكِتَابِ اللَّهِ وَاسْتَمْسِكُوا بِهِ " فَحَثَّ عَلَى كِتَابِ اللَّهِ وَرَغَّبَ فِيهِ ثُمَّ قَالَ : " وَأَهْلُ بَيْتِي أُذَكِّرُكُمُ اللَّهَ فِي أَهْلِ بَيْتِي ! . رَوَاهُ مُسْلِمٌ . وَقَدْ سَبَقَ بِطُولِهِ . اُنْظُرْ الْحَدِيثَ فِي بَابِ إِكْرَامِ أَهْلِ بَيْتِ رَسُولِ اللَّهِ ﷺ رَقْم : 1 - 346 .

**712** ஸைத் இப்னு அர்கம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எங்களிடையே உரை நிகழ்த்த எழுந்தார்கள். அப்போது அல்லாஹ்வைப் புகழ்ந்து, போற்றினார்கள். உபதேசம் செய்தார்கள். பல செய்திகளைக் கூறினார்கள். பின்பு "அம்மாபஃது, அறிந்துகொள்க! மனிதர்களே! நான் ஒரு மனிதன்தான். என் இறைவனின் தூதர் (ஜிப்ராயீல் (அலை)) வரவும், அவருக்கு நான் பதில் கூறவும் வேண்டியதிருக்கும். நான் உங்களிடையே இரண்டு விஷயங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றில் முதலாவது, அல்லாஹ்வின் வேதமாகும். அதில் நேர்வழியும், பேரொளியும் உள்ளது. எனவே, அல்லாஹ்வின் வேதத்தைப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள் என்று கூறி, அல்லாஹ்வின் வேதத்தைப் பற்றி ஆர்வமூட்டினார்கள். பின்பு (இரண்டாவதாக) என் குடும்பத்தார்களாவர். என் குடும்பத்தார் விஷயத்தில் உங்களிடம் அல்லாஹ்வை நினைவூட்டுகிறேன். (அவர்களைக் கண்ணியப்படுத்துங்கள். அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்)" என்றும் நபி (ஸல்) கூறினார்கள். **(இது நீண்ட ஹதீஸாகும். முஸ்லிம்:2408)**

٧١٣ – وَعَنْ أَبِي سُلَيْمَانَ مَالِكِ بْنِ الْحُوَيْرِثِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَيْنَا رَسُولَ اللَّهِ ﷺ وَنَحْنُ شَبَبَةٌ مُتَقَارِبُونَ فَأَقَمْنَا عِنْدَهُ عِشْرِينَ لَيْلَةً وَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ رَحِيمًا رَفِيقًا فَظَنَّ أَنَّا قَدْ اشْتَقْنَا أَهْلَنَا فَسَأَلَنَا عَمَّنْ تَرَكْنَا مِنْ أَهْلِنَا فَأَخْبَرْنَاهُ فَقَالَ : "

ارْجِعُوا إِلَى أَهْلِيكُمْ فَأَقِيمُوا فِيهِمْ وَعَلِّمُوهُمْ وَمُرُوهُمْ وَصَلُّوا صَلَاةَ كَذَا فِي حِينِ كَذَا وَصَلُّوا كَذَا فِي حِينِ كَذَا فَإِذَا حَضَرَتْ الصَّلَاةُ فَلْيُؤَذِّنْ لَكُمْ أَحَدُكُمْ وَلْيَؤُمَّكُمْ أَكْبَرُكُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . زَادَ الْبُخَارِيُّ فِي رِوَايَةٍ لَهُ : " وَصَلُّوا كَمَا رَأَيْتُمُونِي أُصَلِّي " . قَوْلُهُ " رَحِيمًا رَفِيقًا " رُوِيَ بِفَاءٍ وَقَافٍ . وَرُوِيَ بِقَافَيْنِ .

**713** அபூ சுலைமான் மாலிக் இப்னு ஹுவைரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் நாங்கள் வந்தோம். நாங்கள் சம வயதுடையவர்களாக இருந்தோம். அவர்களிடம் நாங்கள் இருபது நாட்கள் தங்கி இருந்தோம். நபி (ஸல்) அவர்கள் இரக்கமுள்ளவராகவும், மென்மையானவராகவும் இருந்தார்கள். எங்களின் குடும்பத்தினரிடம் செல்ல நாங்கள் விரும்புகிறோம் என நபி (ஸல்) அவர்கள் எண்ணினார்கள். எங்கள் குடும்பத்தினர் பற்றி அவர்கள் எங்களிடம் கேட்டார்கள். அவர்களிடம் நாங்கள் கூறினோம். உடனே நபி (ஸல்) அவர்கள், "உங்கள் குடும்பத்தாரிடம் செல்லுங்கள். அவர்களிடையே தங்கி இருங்கள். இன்ன நேரத்தில் இன்னத் தொழுகையைத் தொழுங்கள். இன்ன நேரத்தில் இன்னத் தொழுகையைத் தொழுங்கள். தொழுகை நேரம் வந்து விட்டால், உங்களில் ஒருவர் உங்களுக்கு 'பாங்கு' கூறட்டும். உங்களில் பெரியவர் உங்களுக்கு 'இமாமத்' செய்யட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:631. முஸ்லிம்:374. 'நான் தொழுவதை நீங்கள் பார்த்தது போல் நீங்களும் தொழுங்கள்' என்று புகாரியின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது)**

٧١٤ – وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : اسْتَأْذَنْتُ النَّبِيَّ ﷺ فِي الْعُمْرَةِ فَأَذِنَ وَقَالَ : " لَا تَنْسَنَا يَا أُخَيَّ مِنْ دُعَائِكَ " . فَقَالَ كَلِمَةً مَا يَسُرُّنِي أَنَّ لِي بِهَا الدُّنْيَا . وَفِي رِوَايَةٍ قَالَ : " أَشْرِكْنَا يَا أُخَيَّ فِي دُعَائِكَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**714** உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உம்ரா செய்ய நபி (ஸல்) அவர்களிடம் நான் அனுமதி கேட்டேன். அவர்கள் எனக்கு அனுமதி தந்தார்கள். "சகோதரரே! உமது 'துஆ'வில் எங்களை மறந்து விடாதீர்!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (இதனால்) இந்த உலகம் முழுவதும் எனக்குக் கிடைத்தால் ஏற்படும் சந்தோசத்தை விட, நபி (ஸல்) அவர்களின் வார்த்தைகளால் நான் அதிக சந்தோஷம் அடைந்தேன்" என்று உமர் (ரழி) கூறினார்கள்.

**(அபூதாவூது:1498. திர்மிதீ:3562)**

மற்றொரு அறிவிப்பில், "சகோதரரே! உமது 'துஆ'வில் எங்களையும் இணைத்துக் கொள்வீராக!" என்று உள்ளது. **(இது 'ஹஸன்ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧١٥ – وَعَنْ سَالِمِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ أَنَّ عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا كَانَ يَقُولُ لِلرَّجُلِ إِذَا أَرَادَ سَفَرًا : أُدْنُ مِنِّي حَتَّى أُوَدِّعَكَ كَمَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُوَدِّعُنَا فَيَقُولُ : " أَسْتَوْدِعُ اللَّهَ دِينَكَ وَأَمَانَتَكَ وَخَوَاتِيمَ عَمَلِكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**715** ஸாலிம் இப்னு அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பயணம் செல்லும் ஒருவரிடம் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள், "என் அருகில் வருவீராக! நபி (ஸல்) அவர்கள் எங்களை வழி அனுப்பும் போது, 'அஸ்தவ்தி உல்லாஹ தீனக, வ அமானதக்க, வ கவாதிம அமலிக' என்று கூறி வாழ்த்தியது போல் உம்மையும் வாழ்த்தி அனுப்புகிறேன்" என்று கூறுவார்கள்.

**(திர்மிதீ:3443. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

அரபி வார்த்தையின் பொருள்: உம் மார்க்கத்திற்கும், உம் நம்பிக்கைக்கும், உம் செயலின் முடிவுகளுக்கும் அல்லாஹ்வை பாதுகாவலனாக ஆக்குகிறேன்.

٧١٦ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ يَزِيدَ الْخَطْمِيِّ الصَّحَابِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا أَرَادَ أَنْ يُوَدِّعَ الْجَيْشَ يَقُولُ : " أَسْتَوْدِعُ اللَّهَ دِينَكُمْ وَأَمَانَتَكُمْ وَخَوَاتِيمَ أَعْمَالِكُمْ " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**716** அப்துல்லாஹ் இப்னு யஸீத் அல்குத்மீ ஸஹாபீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு படையை (போருக்கு) அனுப்பிட நாடினால், "அஸ்தவ்திஉல்லாஹ தீனகும், வ அமானதகும், வகவாதிம அஃமாலிகும்" என்று கூறுவார்கள். **(அபூதாவூது:2601)**

**துஆவின் பொருள் : உங்கள் மார்க்கத்திற்கும், உங்கள் நம்பிக்கைக்கும், உங்கள் செயல்களின் முடிவுகளுக்கும் அல்லாஹ்வையே பாதுகாவலனாக ஆக்குகிறேன்.**

٧١٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ إِنِّي أُرِيدُ سَفَرًا فَزَوِّدْنِي فَقَالَ : " زَوَّدَكَ اللَّهُ التَّقْوَى " . قَالَ : زِدْنِي قَالَ : " وَغَفَرَ ذَنْبَكَ " قَالَ : زِدْنِي قَالَ : " وَيَسَّرَ لَكَ الْخَيْرَ حَيْثُمَا كُنْتَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**717** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, "இறைத்தூதர் அவர்களே! நான் பயணம் செல்ல விரும்புகிறேன். எனக்கு பயணச் செய்தி கூறுங்கள்" என்று கேட்டார். உடனே நபி (ஸல்) அவர்கள், "இறையச்ச உணர்வை அல்லாஹ் உமக்கு பயணச் சாதமாக ஆக்குவானாக!" என்று கூறினார்கள். "இன்னும் கூறுங்கள்!" என்று அவர் கேட்டார். "உம் பாவத்தை அல்லாஹ் மன்னிப்பானாக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இன்னும் கூறுங்கள்" என்று கேட்டார். "நீர் எங்கு இருந்தாலும் நன்மையை அடைய உமக்கு அல்லாஹ் இலகுவாக்குவானாக!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:3444. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٩٧ – بَابُ الاستخارة والمشاورة

## பாடம் : 97 - நன்மையைத் தேடல், ஆலோசனை செய்தல்

**قَالَ اللَّهُ تَعَالَى : وَشَاوِرْهُمْ فِي الأَمْرِ . وَقَالَ تَعَالَى : وَأَمْرُهُمْ شُورَى بَيْنَهُمْ : أَيْ يَتَشَاوَرُونَ بَيْنَهُمْ فِيهِ .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *...காரியங்களில் அவர்களிடம் ஆலோசனை செய்வீராக! (3:159)*

*அவர்களிடையே அவர்களின் காரியங்களில் ஆலோசனை செய்யப்பட்டிருக்கும். (42:38)*

٧١٨ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُعَلِّمُنَا الاسْتِخَارَةَ فِي الأُمُورِ كُلِّهَا كَالسُّورَةِ مِنَ الْقُرْآنِ يَقُولُ : " إِذَا هَمَّ أَحَدُكُمْ بِالأَمْرِ فَلْيَرْكَعْ رَكْعَتَيْنِ مِنْ غَيْرِ الْفَرِيضَةِ ثُمَّ لِيَقُلْ : اللَّهُمَّ إِنِّي أَسْتَخِيرُكَ بِعِلْمِكَ وَأَسْتَقْدِرُكَ بِقُدْرَتِكَ وَأَسْأَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيمِ فَإِنَّكَ تَقْدِرُ وَلاَ أَقْدِرُ وَتَعْلَمُ وَلاَ أَعْلَمُ وَأَنْتَ عَلاَّمُ الْغُيُوبِ . اللَّهُمَّ إِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هَذَا الأَمْرَ خَيْرٌ لِي فِي دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي – أَوْ قَالَ : عَاجِلِ أَمْرِي وَآجِلِهِ – فَاقْدُرْهُ لِي وَيَسِّرْهُ لِي ثُمَّ بَارِكْ لِي فِيهِ . وَإِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هَذَا الأَمْرَ شَرٌّ لِي فِي دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي – أَوْ قَالَ : عَاجِلِ أَمْرِي وَآجِلِهِ – فَاصْرِفْهُ عَنِّي وَاصْرِفْنِي عَنْهُ وَاقْدُرْ لِي الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ أَرْضِنِي بِهِ " . قَالَ : وَيُسَمِّي حَاجَتَهُ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**718** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

குர்ஆனின் அத்தியாயத்தைக் கற்றுத் தருவது போல, எல்லாக் காரியங்களிலும் நன்மை தேடுதலை எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தருபவர்களாக இருந்தார்கள். உங்களில் ஒருவர் ஒரு காரியத்திற்கு முயற்சித்தால், கடமை அல்லாத (நபிலான) இரண்டு ரக்அத்தை அவர் தொழட்டும். பின்பு அவர், "அல்லாஹும்ம இன்னீ அஸ்தகீருக்க பிஇல்மிக வஅஸ்தக்திருக்க பிகுத்ரதிக்க, வஅஸ்அலுக்க மின் ஃபழ்லிகல் அளீமி. ஃபஇன்னக்க தக்திரு வலா அக்திரு வதஹ்லமு. வலா அஹ்லமு, வஅன்த அல்லாமுல் குயூப், அல்லாஹும்ம இன்குன்த தஹ்லமு அன்ன ஹாதல்-அம்ர கய்ருல்லீ பீதினி வமஆஷீ, வஆகிபது அம்ரீ" (அல்லது, 'ஆஜிலி அம்ரி வஆஜிலிஹி ஃபக்துர்ஹுலீ, வயஸ்ஸிர்ஹுலீ, சும்ம பாரிக்லீ ஃபீஹி, வஇன்குன்த தஹ்லமு அன்ன ஹாதல் அம்ர ஷர்ருன்லீ ஃபீதீனி, வமஆஷி, வஆகிபதி அம்ரீ' (அல்லது 'ஆஜிலி அம்ரி வஆஜிலிஹி) ஃபஸ்ரிஃப்ஹு அன்னீ, வஸ்ரிஃப்னீ அன்ஹு, வக்துர்லீல் கய்ர ஹய்சு கான சும்ம அர்ழினீ பிஹி' என்று கூறட்டும்! பின்பு தன் தேவைகளைக் கூறட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1162)**

**துஆவின் பொருள்: இறைவனே! உன் அறிவின் மூலம் உன்னிடம் நன்மையைத் தேடுகிறேன். உன்னுடைய சக்தி மூலம் உன்னிடம் சக்தியைத் தேடுகிறேன். மகத்தான உன் அருட்கொடையை உன்னிடம் கேட்கின்றேன். நீயே சக்தி பெற்றுள்ளாய். நான் சக்தி பெற மாட்டேன். நீ அறிவாய். நான் அறியமாட்டேன். நீயே மறைவானவற்றை அறியக் கூடியவன். இறைவனே! இந்தக் காரியம் என் மார்க்கத்திலும், என் வாழ்க்கையிலும், என் காரியத்தின் முடிவிலும் (என் உலகின் விஷயத்திலும், மறுமை விஷயத்திலும்) நல்லதாக இருப்பதை நீ அறிந்தால், அதை எனக்கு ஏற்பாடு செய்வாயாக! எனக்கு அதை லேசாக்குவாயாக! அதிலே எனக்கு பரக்கத் செய்வாயாக! இந்தக் காரியம் எனக்கு என் மார்க்கத்திலும், என் வாழ்க்கையிலும், என் முடிவின் இறுதியிலும் (அல்லது இவ்வுலகம் மற்றும் மறுமை விஷயத்திலும்) கெட்டது என நீ அறிந்தால், என்னை விட்டும் இதை நீ நீக்குவாயாக! அதைவிட்டும் என்னை நீ நீக்குவாயாக! நன்மையை அது எங்கிருந்தாலும் எனக்கு வழங்குவாயாக! பின்பு அதையே என்னை திருப்தியுறச் செய்வாயாக!**

## ٩٨ – باب استحباب الذّهاب إلى العيد وَعيادة المريض والحج والغزو والجنازة ونحوها من طريق والرجوع من طريق آخر التّكثير مواضع العبادة

## பாடம் : 98 – பெருநாள் தொழச் செல்லுதல், நோயாளியை நலம் விசாரித்தல், ஹஜ், போர், ஜனாஸாத் தொழுகை ஆகியவற்றில் கலந்து கொள்ளுதல், இது போன்றவைகளின் போது ஒரு வழியாகச் சென்று மற்றொரு வழியாகத் திரும்புதல் விரும்பத்தக்கதாகும். இவை வணங்கும் இடங்களை அதிகமாக்குவதற்கேயாம்.

٧١٩ – عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ إِذَا كَانَ يَوْمُ عِيدٍ خَالَفَ الطَّرِيقَ . رَوَاهُ الْبُخَارِيُّ . قَوْلُهُ : " خَالَفَ الطَّرِيقَ " : يَعْنِي ذَهَبَ فِي طَرِيقٍ وَرَجَعَ فِي طَرِيقٍ آخَرَ .

**719** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பெருநாளில் (திடலுக்குச் செல்ல ஒருவழி, திரும்பி வர ஒரு வழி என) வழியை மாற்றிக் கொள்வார்கள். **(புகாரி:986)**

٧٢٠ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَخْرُجُ مِنْ طَرِيقِ الشَّجَرَةِ وَيَدْخُلُ مِنْ طَرِيقِ الْمُعَرَّسِ وَإِذَا دَخَلَ مَكَّةَ دَخَلَ مِنَ الثَّنِيَّةِ الْعُلْيَا وَيَخْرُجُ مِنَ الثَّنِيَّةِ السُّفْلَى . مُتَّفَقٌ عَلَيْهِ .

**720** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து வெளியூர் புறப்பட்டால், "ஷஜரா" எனும் பாதை வழியாக வெளியேறி, திரும்பி வரும் பொழுது, "முஅர்ரஸ்" என்ற பாதை வழியாக மதீனாவில் நுழைவார்கள். அவர்கள் மக்கா சென்றால் அதில் நுழையும் பொழுது "தனிய்யத்துல் உல்யா" வழியாக நுழைவார்கள். மக்காவிலிருந்து புறப்பட்டால் "தனிய்யத்துல் ஸுஃப்லா" வழியாக வெளியேறுவார்கள்.

**(புகாரி:1533. முஸ்லிம்:1257)**

## ٩٩ - بَاب استحباب تقديم اليمين في كلّ ما هوَ من باب التكريم

## பாடம் : 99 - மதிப்பான காரியத்தில் வலது புறத்திற்கே முன்னுரிமை

உளூச் செய்தல், குளித்தல், தயம்மும் செய்தல், ஆடை அணிதல், செருப்பு அணிதல், காலுறை அணிதல், பைஜாமா அணிதல், பள்ளியில் நுழைதல், பல் துலக்குதல், சுர்மா இடுதல், நகங்களைக் களைதல், மீசையைக் குறைத்தல், அக்குள் முடி எடுத்தல், தலையை சிரைத்தல், தொழுகையில் ஸலாம் கூறல், உண்ணுதல், பருகுதல், கைகுலுக்குதல், ஹஜருல் அஸ்வதை முத்தமிடல், கழிவறையிலிருந்து வெளியேறுதல், எதையும் எடுத்தல்-கொடுத்தல், மற்றும் இவை அல்லாத நல்ல காரியங்கள் அனைத்திலும் வலதுபுறத்தால் துவக்குவது விரும்பத்தக்கது. இதற்கு மாற்றமான சளி சிந்துதல், எச்சில் துப்புதல், கழிவறையில் நுழைதல், பள்ளியிலிருந்து வெளியேறுதல், காலுறை-செருப்பு-பைஜாமா-ஆடை ஆகியவற்றைக் களைதல், மல-ஜல சுத்தம் செய்தல், அருவருப்பான செயல்களைச் செய்தல் போன்றவற்றில் இடது புறத்தை முற்படுத்துவது விரும்பத்தக்கதாகும்.

كَالْوُضُوء وَالْغُسْل وَالتَّيَمُّم وَلُبْس الثَّوْب وَالنَّعْل وَالْخُفّ وَالسَّرَاوِيل وَدُخُول الْمَسْجد وَالسِّوَاك وَالاكْتحَال وَتَقْليم الأظَافر وَقَصّ الشَّارب وَنَتْف الأبَط وَحَلْق الرَّأس وَالسَّلَام منَ الصَّلَاة وَالأكْل وَالشُّرْب وَالْمُصَافَحَة وَاسْتلَام الْحَجَر الأسْوَد وَالْخُرُوج منَ الْخَلَاء وَالأخْذ وَالْعَطَاء وَغَيْر ذَلكَ ممَّا هُوَ في مَعْنَاهُ . وَيُسْتَحَبُّ تَقْديمُ الْيَسَار في ضدّ ذَلكَ : كَالامْتخَاط وَالْبُصَاق عَن الْيَسَار وَدُخُول الْخَلَاء وَالْخُرُوج منَ الْمَسْجد وَخَلْع الْخُفّ وَالنَّعْل وَالسَّرَاويل وَالثَّوْب وَالاسْتنْجَاء وَفعْل الْمُسْتَقْذَرَات وَأشْبَاه ذَلكَ . قَالَ اللّهُ تَعَالَى : فَأمَّا مَنْ أُوتيَ كتَابَهُ بيَمينه فَيَقُولُ هَاؤُمُ اقْرَءُوا كتَابيَهْ . الآيَات . وَقَالَ تَعَالَى : فَأصْحَابُ الْمَيْمَنَة مَا أصْحَابُ الْمَيْمَنَة وَأصْحَابُ الْمَشْأمَة مَا أصْحَابُ الْمَشْأمَة .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அன்று தன் வலக்கையில் யாருக்குச் செயலேடு தரப்படுகிறதோ அவர் கூறுவார்: "இதோ பாருங்கள்! படியுங்கள் என் வினைச் சுவடியை" (69:19)*

*வலது பக்கத்தார்! வலது பக்கத்தாருடைய (நற்பாக்கிய) நிலைமையை என்னவென்றுரைப்பது! மேலும் இடது பக்கத்தார்! இடது பக்கத்தாருடைய (துர்பாக்கிய) நிலைமையை என்னவென்றுரைப்பது! (56:8,9)*

٧٢١ - وَعَنْ عَائشَةَ رَضيَ اللّهُ عَنْهَا قَالَتْ : " كَانَ رَسُولُ اللّه صَلّى اللّهُ عَلَيْه وَسَلّمَ يُعْجبُهُ التَّيَمُّنُ في شَأْنه كُلّه : في طُهُوره وَتَرَجُّله وَتَنَعُّله " . مُتَّفَقٌ عَلَيْه .

**721** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சுத்தம் செய்தல் (உளூ செய்தல், குளித்தல்), தலை வாருதல், செருப்பு அணிதல் போன்ற அனைத்துக் காரியங்களிலும் வலது புறத்தில் துவக்குவதையே விரும்புபவர்களாக இருந்தார்கள்.

**(புகாரி:168. முஸ்லிம்:268)**

٧٢٢ - وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : كَانَتْ يَدُ رَسُولِ اللّٰهِ ﷺ الْيُمْنَى لِطُهُورِهِ وَطَعَامِهِ وَكَانَتْ يَدُهُ الْيُسْرَى لِخَلَائِهِ وَمَا كَانَ مِنْ أَذًى . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**722** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் வலது கை, சுத்தம் செய்து கொள்ளவும், சாப்பிடவும் இருந்தது. அவர்களின் இடது கை மல-ஜலம் மற்றும் அசுத்தப் பொருட்களை நீக்கிடவும் இருந்தது. **(அபூதாவூது:33)**

٧٢٣ - وَعَنْ أُمِّ عَطِيَّةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ لَهُنَّ فِي غُسْلِ ابْنَتِهِ زَيْنَبَ رَضِيَ اللّٰهُ عَنْهَا : " ابْدَأْنَ بِمَيَامِنِهَا وَمَوَاضِعِ الْوُضُوءِ مِنْهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**723** உம்முஅதிய்யா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(இறந்துவிட்ட) தனது மகள் ஜைனப் (ரழி) அவர்களைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்த பெண்களிடம், நபி (ஸல்) அவர்கள், “ஜைனபின் வலது பாகங்களைக் கொண்டும், உளூச் செய்யும் இடங்களைக் கொண்டும் ஆரம்பியுங்கள்” என்று கூறினார்கள். **(புகாரி:167. முஸ்லிம்:939)**

٧٢٤ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " إِذَا انْتَعَلَ أَحَدُكُمْ فَلْيَبْدَأْ بِالْيُمْنَى وَإِذَا نَزَعَ فَلْيَبْدَأْ بِالشِّمَالِ . لِتَكُنْ الْيُمْنَى أَوَّلَهُمَا تُنْعَلُ وَآخِرَهُمَا تُنْزَعُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**724** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் செருப்பை அணிந்தால், வலது பக்கத்தில் ஆரம்பிக்கட்டும். அதைக் கழற்றினால், இடது பக்கத்தில் ஆரம்பிக்கட்டும்! முதலில் வலது காலில் அணிவிக்கப்படவும், கடைசியில் கழற்றப்படவும் என்று அமையட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:5856. முஸ்லிம்:2097)**

٧٢٥ - وَعَنْ حَفْصَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ كَانَ يَجْعَلُ يَمِينَهُ لِطَعَامِهِ وَشَرَابِهِ وَثِيَابِهِ وَيَجْعَلُ يَسَارَهُ لِمَا سِوَى ذَلِكَ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ .

**725** ஹஃப்ஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தனது வலது கையை உண்ணவும், பருகவும் என்று வைத்திருந்தார்கள். இது அல்லாத காரியங்களுக்குத் தன் இடது கையைப் பயன்படுத்துவார்கள். **(அபூதாவூது:32. திர்மிதி)**

٧٢٦ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " إِذَا لَبِسْتُمْ وَإِذَا تَوَضَّأْتُمْ فَابْدَءُوا بِأَيَامِنِكُمْ " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**726** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் ஆடை அணிந்தால், உளூச் செய்தால் உங்களின் வலது பாகங்களைக் கொண்டு ஆரம்பியுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4141. திர்மிதி:1765)**

٧٢٧ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ أَتَى مِنًى فَأَتَى الْجَمْرَةَ فَرَمَاهَا ثُمَّ أَتَى مَنْزِلَهُ بِمِنًى وَنَحَرَ ثُمَّ قَالَ لِلْحَلَّاقِ : " خُذْ " وَأَشَارَ إِلَى جَانِبِهِ الأَيْمَنِ ثُمَّ الأَيْسَرِ ثُمَّ جَعَلَ يُعْطِيهِ النَّاسَ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : لَمَّا رَمَى الْجَمْرَةَ وَنَحَرَ نُسُكَهُ وَحَلَقَ نَاوَلَ الْحَلَّاقَ شِقَّهُ الأَيْمَنَ فَحَلَقَهُ ثُمَّ دَعَا أَبَا طَلْحَةَ الأَنْصَارِيَّ رَضِيَ اللّٰهُ عَنْهُ فَأَعْطَاهُ إِيَّاهُ ثُمَّ نَاوَلَهُ الشِّقَّ الأَيْسَرَ . فَقَالَ : " احْلِقْ " . فَحَلَقَهُ فَأَعْطَاهُ أَبَا طَلْحَةَ فَقَالَ : " اقْسِمْهُ بَيْنَ النَّاسِ " .

**727** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் "மினா"விற்கு வந்தார்கள். (அங்கே உள்ள) 'ஜம்ரா' என்ற இடத்திற்கு வந்து, அங்கே ஷைத்தானுக்குக் கல் எறிந்தார்கள். பின்பு மினாவில் உள்ள தன் இடத்திற்கு வந்தார்கள். குர்பானி கொடுத்தார்கள். பின்னர் முடி சிரைப்பவரை அழைத்து, "முடியை எடுப்பீராக!" என்று கூறி, தன் வலது புறத்தையும் பின்பு இடது புறத்தையும் சுட்டிக் காட்டினார்கள். பின் மக்களுக்கு அம்முடிகளைக் கொடுத்தார்கள். **(புகாரி:171. முஸ்லிம்:1305)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது:

'ஜம்ரா'வில் கல் எறிந்தபோது, தன் குர்பானியை அறுத்தார்கள். தலைமுடியை எடுத்தார்கள். முடி எடுப்பவரிடம் தன் வலது பகுதியைக் காண்பித்தார்கள். அவர் முடி எடுத்தார். பின்பு அபூதல்ஹா அல்அன்சாரி (ரழி) அவர்களை அழைத்தார்கள். அவர்களிடம் (முடியை) கொடுத்தார்கள். பின்பு தன் இடது பகுதியைக் காண்பித்து, "முடியை எடுப்பீராக!" என்று கூறினார்கள். அவர் முடியை எடுத்தார். அபூதல்ஹா (ரழி) அவர்களிடம் அதையும் கொடுத்து,"மக்களிடம் இதைப் பங்கீடு செய்வீராக!" என்றார்கள்.

## உண்ணும் முறை பற்றிய அத்தியாயம்

## ١٠٠ – بابُ التسميَةَ في أوّله والحمد في آخره

## பாடம் : 100 - உண்ணும் போது ஆரம்பத்தில் 'பிஸ்மில்லாஹ்' கூறுவது கடைசியில் 'அல்ஹம்துலில்லாஹ்' கூறுவது

٧٢٨ – عَنْ عُمَرَ بْنِ أَبِي سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " سَمِّ اللَّهَ وَكُلْ بِيَمِينِكَ وَكُلْ مِمَّا يَلِيكَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**728** உமர் இப்னு அபீ ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என்னிடம், "பிஸ்மில்லாஹ் கூறுவீராக! உமது வலது கையால் சாப்பிடுவீராக! (உணவு தட்டில்) உமக்கு அருகிலுள்ள பகுதியிலிருந்து சாப்பிடுவீராக!" என்று கூறினார்கள்.

**(புகாரி:5376. முஸ்லிம்:2022)**

٧٢٩ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا أَكَلَ أَحَدُكُمْ فَلْيَذْكُرْ اسْمَ اللَّهِ تَعَالَى فَإِنْ نَسِيَ أَنْ يَذْكُرَ اسْمَ اللَّهِ تَعَالَى فِي أَوَّلِهِ فَلْيَقُلْ : بِسْمِ اللَّهِ أَوَّلَهُ وَآخِرَهُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ ؟ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**729** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் சாப்பிட்டால், அல்லாஹ்வின் பெயரை (பிஸ்மில்லாஹ்) நினைவுகூரட்டும்! அதன் ஆரம்பித்திலேயே அல்லாஹ்வின் பெயரை நினைவுகூர மறந்துவிட்டால் அவர், 'பிஸ்மில்லாஹி அவ்வலஹு வஆகிரஹு'-ஆரம்பத்திலும், இறுதியிலும் அல்லாஹ்வின் பெயர் கொண்டு (உண்ணுகிறேன்) என்று கூறட்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:3767. திர்மிதீ:1858. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٣٠ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِذَا دَخَلَ الرَّجُلُ بَيْتَهُ فَذَكَرَ اللَّهَ تَعَالَى عِنْدَ دُخُولِهِ وَعِنْدَ طَعَامِهِ قَالَ الشَّيْطَانُ لأَصْحَابِهِ : لاَ مَبِيتَ لَكُمْ وَلاَ عَشَاءَ . وَإِذَا دَخَلَ فَلَمْ يَذْكُرِ اللَّهَ تَعَالَى عِنْدَ دُخُولِهِ قَالَ الشَّيْطَانُ : أَدْرَكْتُمُ الْمَبِيتَ ; وَإِذَا لَمْ يَذْكُرِ اللَّهَ تَعَالَى عِنْدَ طَعَامِهِ قَالَ : أَدْرَكْتُمُ الْمَبِيتَ وَالْعَشَاءَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**730** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு மனிதர் தன் வீட்டில் நுழையும் போதும், உணவு உண்ணும் போதும் அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால் (‘பிஸ்மில்லாஹ் எனக் கூறினால்), ஷைத்தான் தம் தோழர்களிடம், “உங்களுக்கு (இன்று) இரவு தங்குமிடமோ, இரவு உணவோ இல்லை” என்று கூறுவான். வீட்டில் நுழையும் போது அல்லாஹ்வை நினைவு கூராமல் நுழைந்துவிட்டால், “நீங்கள் இரவு தங்குமிடத்தை பெற்றுக் கொண்டு விட்டீர்கள்” என்று ஷைத்தான் கூறுவான். மேலும் உண்ணும் போது அல்லாஹ்வை நினைவு கூராவிட்டால் “நீங்கள் இரவு தங்குமிடத்தையும், இரவு உணவையும் பெற்றுக் கொண்டு விட்டீர்கள்” என்று ஷைத்தான் கூறுவான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2018)**

٧٣١ - وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا إِذَا حَضَرْنَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ طَعَامًا لَمْ نَضَعْ أَيْدِيَنَا حَتَّى يَبْدَأَ رَسُولُ اللَّهِ ﷺ فَيَضَعُ يَدَهُ . وَإِنَّا حَضَرْنَا مَعَهُ طَعَامًا فَجَاءَتْ جَارِيَةٌ كَأَنَّهَا تُدْفَعُ فَذَهَبَتْ لِتَضَعَ يَدَهَا فِي الطَّعَامِ فَأَخَذَ رَسُولُ اللَّهِ ﷺ بِيَدِهَا ثُمَّ جَاءَ أَعْرَابِيٌّ كَأَنَّمَا يُدْفَعُ فَأَخَذَ بِيَدِهِ ; فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ الشَّيْطَانَ يَسْتَحِلُّ الطَّعَامَ أَلاَّ يُذْكَرَ اسْمُ اللَّهِ تَعَالَى عَلَيْهِ وَإِنَّهُ جَاءَ بِهَذِهِ الْجَارِيَةِ لِيَسْتَحِلَّ بِهَا فَأَخَذْتُ بِيَدِهَا فَجَاءَ بِهَذَا الأَعْرَابِيِّ لِيَسْتَحِلَّ بِهِ فَأَخَذْتُ بِيَدِهِ . وَالَّذِي نَفْسِي بِيَدِهِ إِنَّ يَدَهُ فِي يَدِي مَعَ يَدَيْهِمَا " . ثُمَّ ذَكَرَ اسْمَ اللَّهِ تَعَالَى وَأَكَلَ . رَوَاهُ مُسْلِمٌ .

**731** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் உணவில் கலந்து கொண்டால், அவர்கள் தன் கையை (உணவில்) வைத்து, ஆரம்பிக்காதவரை நாங்கள் எங்கள் கைகளை உணவில் வைக்க மாட்டோம். ஒரு முறை அவர்களுடன் உணவு அருந்திக் கொண்டிருந்தோம். (யாராலோ) விரட்டப்படுவது போல் (ஓடி) ஒரு சிறுமி வந்தாள். உணவில் தன் கையை அவள் வைக்க முயன்றாள். நபி (ஸல் அவர்கள் அவளின் கையை பிடித்தார்கள். பின்பு (யாராலோ) விரட்டப்படுவது போல் ஒரு கிராம காட்டரபி ஓடி வந்தார். அவரின் கையையும் நபி (ஸல்) அவர்கள் பிடித்தார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ்வின் பெயர் கூறப்படாத உணவை ஷைத்தான் தனக்குரியதாக்குகிறான். இந்தச் சிறுமி மூலம் இதைத் தனக்குரியதாக்க அவன் வந்தான். அப்பெண்ணின் கையை நான் பிடித்து விட்டேன். இந்த கிராமக் காட்டரபி மூலம் இதைத் தனதாக்கிடவும் அவன் வந்தான். அவரின் கையையும் நான் பிடித்தேன். என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அந்த இருவரின் கைகளுடன் ஷைத்தானின் கையும் என்னுடைய கையில் இருக்கிறது” என்று கூறினார்கள். பின்பு “பிஸ்மில்லாஹ்” கூறி உணவைச் சாப்பிட்டார்கள். **(முஸ்லிம்:2017)**

٧٣٢ - وَعَنْ أُمَيَّةَ بْنِ مَخْشِيٍّ الصَّحَابِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ كَانَ رَسُولُ اللَّهِ ﷺ جَالِسًا وَرَجُلٌ يَأْكُلُ فَلَمْ يُسَمِّ اللَّهَ حَتَّى لَمْ يَبْقَ مِنْ طَعَامِهِ إِلاَّ لُقْمَةٌ فَلَمَّا رَفَعَهَا إِلَى فِيهِ قَالَ : بِسْمِ اللَّهِ أَوَّلَهُ وَآخِرَهُ . فَضَحِكَ النَّبِيُّ ﷺ ثُمَّ قَالَ : " مَا زَالَ الشَّيْطَانُ يَأْكُلُ مَعَهُ فَلَمَّا ذَكَرَ اسْمَ اللَّهِ اسْتَقَاءَ مَا فِي بَطْنِهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالنَّسَائِيُّ .

**732** உமய்யா இப்னு மக்ஷிய்யி ஸஹாபீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஒரு மனிதர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவர் “பிஸ்மில்லாஹ்” கூறவே இல்லை. அவரின் உணவில் ஒரு கவளம் மட்டுமே இருந்த சமயம்,

தன் வாய் அருகே அவர் அதை உயர்த்திய போது, "பிஸ்மில்லாஹி அவ்வலஹூ வஆகிரஹூ" என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் சிரித்தார்கள். பின்பு, "இதுவரை இவருடன் ஷைத்தான் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். இவர் "பிஸ்மில்லாஹ்" கூறியதும், (ஷைத்தான்) தன் வயிற்றில் உள்ளதை வாந்தி எடுத்து விட்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:3768. நஸயீ:282)**

٧٣٣ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَأْكُلُ طَعَامًا فِي سِتَّةٍ مِنْ أَصْحَابِهِ فَجَاءَ أَعْرَابِيٌّ فَأَكَلَهُ بِلُقْمَتَيْنِ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَمَا إِنَّهُ لَوْ سَمَّى لَكَفَاكُمْ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**733** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், தம் தோழர்கள் ஆறு பேருடன் உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு கிராமக் காட்டரபி வந்தார். அவர் (மீதமிருந்த) அந்த உணவு முழுவதையும் இரண்டு கவளத்தில் (வேகமாகச்) சாப்பிட்டுவிட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அறிந்துகொள்க! இவர் 'பிஸ்மில்லாஹ்' கூறி இருந்தால், இந்த உணவு உங்கள் அனைவருக்கும் போதுமானதாக இருந்திருக்கும். ('பிஸ்மில்லாஹ்' கூறாததால், உணவின் பரகத் நீங்கி உணவு சீக்கிரமாகத் தீர்ந்து விட்டது)" என்று கூறினார்கள். **(திர்மிதீ:1858. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٣٤ – وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا رَفَعَ مَائِدَتَهُ قَالَ : " الْحَمْدُ لِلَّهِ حَمْدًا كَثِيرًا طَيِّبًا مُبَارَكًا فِيهِ غَيْرَ مَكْفِيٍّ وَلاَ مُسْتَغْنًى عَنْهُ ! رَبَّنَا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**734** அபூஉமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (தான் சாப்பிட்டு முடித்து) தன் தட்டை உயர்த்துவார்களானால், "அல்ஹம்துலில்லாஹி ஹம்தன் கதீரன் தய்யிபன் முபாரகன் ஃபீஹா ஙைர மக்ஃபிய்யின் வலா முவத்தஇன் வலா முஸ்தஃனன், அன்ஹூ ரப்பனா" என்று கூறுவார்கள். **(புகாரி:5458)**

**துஆவின் பொருள்: அபிவிருத்தி மிக்க-தூய்மையான-அதிகமான புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே! அப்புகழ், போதுமாக்கப்பட மாட்டாது. அதை விட்டும் தேவையற்றதாக்கப்பட மாட்டாது. நீயே எங்களின் இறைவன்.**

٧٣٥ – وَعَنْ مُعَاذِ بْنِ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ أَكَلَ طَعَامًا فَقَالَ : الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَطْعَمَنِي هَذَا وَرَزَقَنِيهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلاَ قُوَّةٍ غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**735** முஆத் இப்னு அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

யார் ஒருவர் உணவைச் சாப்பிட்டு விட்டு, "அல்ஹம்து லில்லாஹில்லஃதீ அத்அமனீ ஹாஃதா, வ ரஸகனீஹி மின் ஃகைரி ஹவ்லின் மின்னீ வலா குவ்வத்தின்" என்று கூறுகிறாரோ, அவரின் முன் பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3454. திர்மிதீ. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்:எனது எவ்வித சக்தியும், ஆற்றலும் இன்றி எனக்கு இவ்வுணவை வழங்கி, என்னை உண்ணச் செய்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!**

## ١٠١ – باب لاَ يَعِيبُ الطَّعَام واستِحباب مَدْحه

## பாடம்: 101- உணவைக் குறை கூறக் கூடாது. அதைப் புகழ்வதே விரும்பத்தக்கதாகும்

٧٣٦ –وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:مَا عَابَ رَسُولُ اللهِ ﷺ طَعَامًا قَطُّ:إِن اشْتَهَاهُ أَكَلَهُ وَإِنْ كَرِهَهُ تَرَكَهُ.مُتَّفَقٌ عَلَيْه.

**736** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் அறவே உணவைக் குறை கூற மாட்டார்கள். அவர்கள் விரும்பினால் அந்த உணவைச் சாப்பிடுவார்கள். அந்த உணவை வெறுத்தால் சாப்பிடாமல் விட்டு விடுவார்கள்.

**(புகாரி:5409. முஸ்லிம்:2064)**

٧٣٧ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ سَأَلَ أَهْلَهُ الأَدْمَ فَقَالُوا : مَا عِنْدَنَا إِلاَّ خَلٌّ فَدَعَا بِهِ فَجَعَلَ يَأْكُلُ وَيَقُولُ : " نِعْمَ الأَدْمُ الْخَلُّ " ! رَوَاهُ مُسْلِمٌ .

**737** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் குடும்பத்தாரிடம் குழம்பைக் கேட்டார்கள். "எங்களிடம் "காடி" எனும் புளிப்பு பானம் தவிர வேறு இல்லை" என்று அவர்கள் கூறினார்கள். அதைக் கொண்டு வரச் சொல்லி நபி (ஸல்) அவர்கள் சாப்பிட்டார்கள். "குழம்பில் 'காடி' நல்லது. குழம்பில் 'காடி' நல்லது" என்று (இருமுறை) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2052)**

## ١٠٢ – بَاب ما يقو له مَن حَضر الطّعام هو صَائِم إِذَا لم يفطر

## பாடம் : 102 - விருந்துக்கு வந்த நோன்பாளி கூற வேண்டியவை

٧٣٨ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا دُعِيَ أَحَدُكُمْ فَلْيُجِبْ فَإِنْ كَانَ صَائِمًا فَلْيُصَلِّ وَإِنْ كَانَ مُفْطِرًا فَلْيَطْعَمْ " . رَوَاهُ مُسْلِمٌ . قَالَ الْعُلَمَاءُ : مَعْنَى " فَلْيُصَلِّ " : فَلْيَدْعُ . وَمَعْنَى " فَلْيَطْعَمْ " : فَلْيَأْكُلْ .

**738** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் விருந்துக்கு அழைக்கப்பட்டால், அவர் (கலந்து கொண்டு) பதில் கூறட்டும்! நோன்பாளியாக இருந்தால் (விருந்துக்கு அழைப்புக் கொடுத்தவருக்கு) அவர் "துஆச் செய்யட்டும்! அவர் நோன்பில்லாதவராக இருந்தால், (அந்த உணவை) அவர் சாப்பிடட்டும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1431)**

## ١٠٣ – بابُ ما يقوله من دُعي إلى طعام فتبعَه غيره

## பாடம் : 103 - விருந்துக்கு அழைக்கப்பட்டவருடன் வேறொருவர் (அழைப்பின்றி) பின் தொடர்ந்து வந்தால், விருந்து தருபவரிடம் கூற வேண்டியவை

٧٣٩ – عَنْ أَبِي مَسْعُودٍ الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : دَعَا رَجُلٌ النَّبِيَّ ﷺ لِطَعَامٍ صَنَعَهُ لَهُ خَامِسَ خَمْسَةٍ فَتَبِعَهُمْ رَجُلٌ فَلَمَّا بَلَغَ الْبَابَ قَالَ لَهُ النَّبِيُّ ﷺ : " إِنَّ هَذَا تَبِعَنَا فَإِنْ شِئْتَ أَنْ تَأْذَنَ لَهُ وَإِنْ شِئْتَ رَجَعَ " . قَالَ : بَلْ آذَنُ لَهُ يَا رَسُولَ اللَّهِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**739** அபூ மஸ்ஊத் அல்பத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் நபி (ஸல்) அவர்களையும், அவர்களுடன் நான்கு பேரையும் உணவு உண்ண அழைத்திருந்தார். அவர்கள் விருந்துண்ண புறப்பட்டுச் சென்ற பொழுது, அவர்களை ஒருவர் பின் தொடர்ந்து வந்தார். நபி (ஸல்) அவர்கள் (விருந்தளிப்பவரின்) வாசலை அடைந்தபோது, “இதோ இவர் எங்களைப் பின்தொடர்ந்து வந்து விட்டார். நீர் விரும்பினால் அவருக்கு அனுமதி தரலாம். இல்லையெனில் அவர் திரும்பி விடுவார்” என்று கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! அவருக்கும் அனுமதி வழங்கி விட்டேன்” என்று (விருந்துக்கு அழைத்தவர்) கூறினார். **(புகாரி:5434. முஸ்லிம்:2036)**

## ١٠٤ – باب الأكل ممّا يليه ووَعظه وتأديبه مَن يُسيء أَكله

## பாடம் : 104 - தன் அருகிலுள்ள பகுதியிலிருந்து சாப்பிடுதல் மற்றும் ஒழுங்கீனமாக சாப்பிடுபவருக்கு உபதேசம் செய்தல்

٧٤٠ – عَنْ عُمَرَ بْنِ أَبِي سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كُنْتُ غُلاَمًا فِي حِجْرِ رَسُولِ اللَّهِ ﷺ وَكَانَتْ يَدِي تَطِيشُ فِي الصَّحْفَةِ فَقَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " يَا غُلاَمُ سَمِّ اللَّهَ تَعَالَى وَكُلْ بِيَمِينِكَ وَكُلْ مِمَّا يَلِيكَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَوْلُهُ : " تَطِيشُ " بِكَسْرِ الطَّاءِ وَبَعْدَهَا يَاءٌ مُثَنَّاةٌ مِنْ تَحْتُ مَعْنَاهُ : تَتَحَرَّكُ وَتَمْتَدُّ إِلَى نَوَاحِي الصَّحْفَةِ .

**740** அம்ரு இப்னு அபீ ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களின் பொறுப்பில் வளர்ந்து வரும் சிறுவனாக இருந்தேன். (ஒரு தடவை) உணவுத் தட்டில் என் கை அங்கும் இங்கும் என அலைந்து கொண்டிருந்தது. அப்போது என்னிடம் நபி (ஸல்) அவர்கள், “சிறுவரே!” பிஸ்மில்லாஹ் கூறுவீராக! உமது வலது கையால் சாப்பிடுவீராக! (உணவுத் தட்டில்) உமக்கு அருகில் உள்ளவற்றிலிருந்து சாப்பிடுவீராக!” என்று கூறினார்கள்.

**(புகாரி:5376. முஸ்லிம்:2022)**

٧٤١ – وَعَنْ سَلَمَةَ بْنِ الأَكْوَعِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً أَكَلَ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ بِشِمَالِهِ فَقَالَ : " كُلْ بِيَمِينِكَ " . قَالَ : لاَ أَسْتَطِيعُ . قَالَ : " لاَ اسْتَطَعْتَ ! " مَا مَنَعَهُ إِلاَّ الْكِبْرُ ! فَمَا رَفَعَهَا إِلَى فِيهِ. رَوَاهُ مُسْلِمٌ.

**741** ஸலமா இப்னுல் அக்வஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களுக்கு முன் தனது இடது கையால் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். (அதைப் பார்த்த) நபி (ஸல்) அவர்கள், “உமது வலது கையால் சாப்பிடுவீராக!” என்று கூறினார்கள். அதற்கு அவர், “என்னால் முடியாது”என்று கூறினார். “(அப்படியானால்) நீர் முடியாமல் போய் விடுவீர்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவரின் பெருமையே தவிர வேறெதுவும் அவரைத் தடுக்கவில்லை. பிறகு அவரால் அந்த உணவை தன் வாய் வரை கூட உயர்த்த முடியாதவரானார். **(முஸ்லிம்:2021)**

## ١٠٥ – باب النّهي عن القِران بَيْن تمرتين ونحو هما إذَا أكل جماعة إلاّ بإذن رفقته

## பாடம் : 105 - கூட்டாக சாப்பிடும் போது பேரீத்தம் பழம் மற்றும் இதர உணவுகளை பிற தோழர்கள் அனுமதியின்றி இரண்டு இரண்டாக எடுத்துச் சாப்பிடுவது கூடாது.

٧٤٢ – عَنْ جَبَلَةَ بْنِ سُحَيْمٍ قَالَ : أَصَابَنَا عَامُ سَنَةٍ مَعَ ابْنِ الزُّبَيْرِ فَرُزِقْنَا تَمْرًا وَكَانَ عَبْدُ اللَّهِ بْنُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا يَمُرُّ بِنَا وَنَحْنُ نَأْكُلُ فَيَقُولُ : لاَ تُقَارِنُوا فَإِنَّ النَّبِيَّ ﷺ نَهَى عَنِ الْقِرَانِ ثُمَّ يَقُولُ : " إِلاَّ أَنْ يَسْتَأْذِنَ الرَّجُلُ أَخَاهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**742** ஜபலா இப்னு சுஹய்ம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அப்துல்லாஹ் இப்னு சுபைர் (ரழி) அவர்களின் ஆட்சி காலத்தில் பஞ்சமான ஓர் வருடம் எங்களிடம் தோன்றியது. அப்பொழுது (ஒருமுறை) எங்களுக்கு பேரீத்தம் பழங்கள் உணவாக தரப்பட்டது. நாங்கள் அதை சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, எங்களைக் கடந்து, அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள் சென்றார்கள். அப்பொழுது அவர்கள், "இரண்டு இரண்டு பழங்களாகச் சேர்த்து உண்ணாதீர்கள். (ஏனெனில்) நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு சேர்த்து உண்ண தடை செய்துள்ளார்கள்" என்று கூறிவிட்டு, "ஒருவர் தன் சகோதரருக்கு அனுமதி அளித்தாலே தவிர!" என்று இப்னு உமர் (ரழி) கூறினார்கள். **(புகாரி:2455. முஸ்லிம்:2045)**

## ١٠٦ – باب مَا يقوله ويفعَله مَن يأكل ولا يشبع

## பாடம் : 106 - சாப்பிட்டும் வயிறு நிரம்பாத நிலையில் உள்ளவர் கூறவேண்டியவை, செய்ய வேண்டியவை

٧٤٣ – عَنْ وَحْشِيِّ بْنِ حَرْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ أَصْحَابَ رَسُولِ اللَّهِ ﷺ قَالُوا : يَا رَسُولَ اللَّهِ إِنَّا نَأْكُلُ وَلاَ نَشْبَعُ . قَالَ : " فَلَعَلَّكُمْ تَفْتَرِقُونَ " قَالُوا : نَعَمْ . قَالَ " فَاجْتَمِعُوا عَلَى طَعَامِكُمْ وَاذْكُرُوا اسْمَ اللَّهِ يُبَارِكْ لَكُمْ فِيهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**743** வஹ்ஷீ இப்னு ஹர்ப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! நாங்கள் உணவை சாப்பிடுகிறோம். ஆனால் (எங்கள்) வயிறு நிறையவில்லை" என்று நபி (ஸல்) அவர்களின் தோழர்கள் கூறினர். "நீங்கள் பிரிந்து கொண்டு சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டார்கள். "ஆம்" என அவர்கள் கூறினர். "நீங்கள் (உண்ணும் போது) உங்களின் உணவில் ஒன்று சேர்ந்து கொள்ளுங்கள். 'பிஸ்மில்லாஹ்' கூறுங்கள். அதில் உங்களுக்கு அந்த உணவில் உங்களுக்கு 'பரக்கத்' செய்யப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3764)**

## ١٠٧ – بابُ الأمر بالأكل منْ جانبِ القصْعَةِ والنّهي عَن الأكل من وسطها

## பாடம் : 107 - தட்டின் ஓரப்பகுதியிலிருந்து உண்ணுதல், நடுவிலிருந்து உண்ணாமல் இருத்தல்.

فِيهِ قَوْلُهُ ﷺ " وَكُلْ مِمَّا يَلِيكَ " . مُتَّفَقٌ عَلَيْهِ كَمَا سَبَقَ . انْظُرْ الْبَابَ ) 104 رَقْم : 1 - 740 ( .

٧٤٤ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " الْبَرَكَةُ تَنْزِلُ وَسَطَ الطَّعَامِ ; فَكُلُوا مِنْ حَافَّتَيْهِ وَلاَ تَأْكُلُوا مِنْ وَسَطِهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**744** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உணவின் (தட்டின்) நடுவில் பரக்கத் இறங்குகிறது. (எனவே) உணவை அதன் ஓரத்திலிருந்து சாப்பிடுங்கள். அதன் நடுவிலிருந்து சாப்பிடாதீர்கள்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3772. திர்மிதீ:1805 இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٤٥ – وَعَنْ عَبْدِ اللّٰهِ بْنِ بُسْرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : كَانَ لِلنَّبِيِّ ﷺ قَصْعَةٌ يُقَالُ لَهَا الْغَرَّاءُ يَحْمِلُهَا أَرْبَعَةُ رِجَالٍ ; فَلَمَّا أَضْحَوْا وَسَجَدُوا الضُّحَى أُتِيَ بِتِلْكَ الْقَصْعَةِ – يَعْنِي وَقَدْ ثُرِدَ فِيهَا – فَالْتَفُّوا عَلَيْهَا فَلَمَّا كَثُرُوا جَثَا رَسُولُ اللّٰهِ ﷺ ; فَقَالَ أَعْرَابِيٌّ : مَا هَذِهِ الْجِلْسَةُ ؟ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِنَّ اللّٰهَ جَعَلَنِي عَبْدًا كَرِيمًا وَلَمْ يَجْعَلْنِي جَبَّارًا عَنِيدًا ! " ثُمَّ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " كُلُوا مِنْ حَوَالَيْهَا وَدَعُوا ذِرْوَتَهَا يُبَارَكْ فِيهَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ . " ذِرْوَتُهَا " أَعْلاَهَا بِكَسْرِ الذَّالِ وَضَمِّهَا.

**745** அப்துல்லாஹ் இப்னு புஸ்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் “அல்ஙர்ராஉ” என்று கூறப்படும் ஒரு (பெரிய) உணவு தட்டு இருந்தது. அதை நான்கு பேர் சுமப்பார்கள். நபி (ஸல்) அவர்களும், அவரது தோழர்கள் லுஹா நேரம் வந்து லுஹாவைத் தொழுதார்கள். அப்போது அந்தத் தட்டு கொண்டு வரப்பட்டது. அதிலே ‘தரீது’ எனும் (கறியும், கோதுமை மாவும் கலந்த) உணவு இருந்தது. அந்த உணவைச் சுற்றி அவர்கள் சூழ்ந்து அமர்வார்கள். அதிகமான எண்ணிக்கையில் நபித்தோழர்கள் இருந்ததால் கூட்டம் அதிகமாக ஆகிவிட்டது. அப்போது, நபி (ஸல்) அவர்கள் முழந்தாளிட்டு அமர்ந்தார்கள். “இது என்ன இருப்பு?” என ஒரு கிராமத்து அரபி கேட்டார். “என்னை அல்லாஹ் கண்ணியமான அடியாராக ஆக்கி உள்ளான். என்னை அடக்கமற்றவனாக, முரடனாக ஆக்கவில்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறி விட்டு, “தட்டின் ஓரப் பகுதியிலிருந்து சாப்பிடுங்கள். “பரக்கத்” நடுவில் இறக்கப்படுவதால் நடுப் பகுதியை விட்டு விடுங்கள். அதனைக் கடைசியாக சாப்பிடுங்கள்” என்று கூறினார்கள்.

**(அபூதாவூது:3773)**

## ١٠٨ – بَابُ كَرَاهِيَةِ الأَكْلِ مُتَّكِئًا

## பாடம் : 108 - சாய்ந்து கொண்டு சாப்பிடக் கூடாது

٧٤٦ – عَنْ أَبِي جُحَيْفَةَ وَهْبِ بْنِ عَبْدِ اللّٰهِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لاَ آكُلُ مُتَّكِئًا " . رَوَاهُ الْبُخَارِيُّ . قَالَ الْخَطَّابِيُّ : الْمُتَّكِئُ هَاهُنَا : هُوَ الْجَالِسُ مُعْتَمِدًا عَلَى وِطَاءٍ تَحْتَهُ قَالَ : وَأَرَادَ أَنَّهُ لاَ يَقْعُدُ عَلَى الْوِطَاءِ وَالْوَسَائِدِ كَفِعْلِ مَنْ يُرِيدُ الإِكْثَارَ مِنَ الطَّعَامِ بَلْ يَقْعُدُ مُسْتَوْفِزًا لاَ مُسْتَوْطِئًا وَيَأْكُلُ بُلْغَةً . هَذَا كَلاَمُ الْخَطَّابِيِّ . وَأَشَارَ غَيْرُهُ إِلَى أَنَّ الْمُتَّكِئَ هُوَ الْمَائِلُ عَلَى جَنْبِهِ وَاللّٰهُ أَعْلَمُ .

**746** அபூஜுஹைஃபா வஹ்பு இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நான் சாய்ந்த நிலையில் சாப்பிட மாட்டேன்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5398)**

٧٤٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : " رَأَيْتُ رَسُولَ اللّٰهِ ﷺ جَالِسًا مُقْعِيًا يَأْكُلُ تَمْرًا " . رَوَاهُ مُسْلِمٌ . " الْمُقْعِي " : هُوَ الَّذِي يُلْصِقُ أَلْيَتَيْهِ بِالأَرْضِ وَيَنْصِبُ سَاقَيْهِ .

**747** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்கள் தங்கள் பிட்டத்தை பூமியில் சேர்த்து வைத்து, இரண்டு கெண்டைக் கால்களை நட்டி வைத்து உட்கார்ந்தவர்களாக, பேரீத்தம் பழங்களை சாப்பிட்டதை நான் பார்த்துள்ளேன்.” **(முஸ்லிம்:2044)**

## ١٠٩ - بابُ استحْبَاب الأكل بثَلاث أَصَابع واستحباب لعق الأصابع، وكراهة مسحها قبل لعقها واستحباب لعق القصعة وأخذ اللقْمَة التي تسقط منه وأكلها ومسحها بعد اللعق بالساعد والقدم وغيرها

## பாடம் : 109 - மூன்று விரல்களில் சாப்பிடுவது, விரல்களைச் சூப்புவது ஆகுமானது. அதை சூப்பும் முன் துடைப்பது கூடாது. தட்டை வழித்து உண்பது ஆகுமானது. கீழே விழுந்த உணவை எடுத்து அதை சாப்பிடுவது. சூப்பிய பின் முழங்கை மற்றும் பாதம் போன்றவற்றில் விரலைத் துடைப்பது கூடும்

٧٤٨ - عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللهِ ﷺ : " إِذَا أَكَلَ أَحَدُكُمْ طَعَامًا فَلاَ يَمْسَحْ أَصَابِعَهُ حَتَّى يَلْعَقَهَا أَوْ يُلْعِقَهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**748** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் உணவைச் சாப்பிட்டால் தன் விரலைச் சூப்பும் வரை அல்லது அதை (மனைவி, மக்கள் போன்ற) பிறர் சூப்பும் வரை விரல்களைத் துடைக்க வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5456. முஸ்லிம்:2031)**

٧٤٩ - وَعَنْ كَعْبِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : " رَأَيْت رَسُولَ اللَّهِ ﷺ يَأْكُلُ بِثَلاَثِ أَصَابِعَ فَإِذَا فَرَغَ لَعِقَهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**749** கஅபு இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் மூன்று விரல்களால் சாப்பிட்டதையும், சாப்பிட்டு முடித்ததும் அதை அவர்கள் சூப்பியதையும் நான் பார்த்துள்ளேன்." **(முஸ்லிம்:2032)**

٧٥٠ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ أَمَرَ بِلَعْقِ الأَصَابِعِ وَالصَّحْفَةِ وَقَالَ : " إِنَّكُمْ لاَ تَدْرُونَ فِي أَيِّ طَعَامِكُمُ الْبَرَكَةُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**750** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

விரல்களையும், தட்டையும் வழித்து உண்ணுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டு விட்டு, "நிச்சயமாக! உங்கள் உணவில் எதில் பரக்கத் இருக்கிறது என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2033/133)**

٧٥١ - وَعَنْهُ ) جَابِرٍ ( أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ : " إِذَا وَقَعَتْ لُقْمَةُ أَحَدِكُمْ فَلْيَأْخُذْهَا فَلْيُمِطْ مَا كَانَ بِهَا مِنْ أَذًى وَلْيَأْكُلْهَا وَلاَ يَدَعْهَا لِلشَّيْطَانِ وَلاَ يَمْسَحْ يَدَهُ بِالْمِنْدِيلِ حَتَّى يَلْعَقَ أَصَابِعَهُ فَإِنَّهُ لاَ يَدْرِي فِي أَيِّ طَعَامِهِ الْبَرَكَةُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**751** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் ஒருவரின் உணவு (கீழே சிதறி) விழுந்து விட்டால், அதை அவர் எடுத்து, அதில் உள்ள அசுத்தத்தை நீக்கி, அதைச் சாப்பிடட்டும்! ஷைத்தானுக்கு அதை விட்டு விட வேண்டாம். தன் விரல் களை சூப்பும் வரை துண்டால் தன் கையைத் துடைக்க வேண்டாம். ஏனெனில் தன் உணவில் எதில் "பரக்கத்" இருக்கிறது என்பதை அவர் அறியமாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2033/134)**

٧٥٢ – وَعَنْهُ ) جابر ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ الشَّيْطَانَ يَحْضُرُ أَحَدَكُمْ عِنْدَ كُلِّ شَيْءٍ مِنْ شَأْنِهِ حَتَّى يَحْضُرَهُ عِنْدَ طَعَامِهِ فَإِذَا سَقَطَتْ لُقْمَةُ أَحَدِكُمْ فَلْيَأْخُذْهَا فَلْيُمِطْ مَا كَانَ بِهَا مِنْ أَذًى ثُمَّ لِيَأْكُلْهَا وَلاَ يَدَعْهَا لِلشَّيْطَانِ . فَإِذَا فَرَغَ فَلْيَلْعَقْ أَصَابِعَهُ فَإِنَّهُ لاَ يَدْرِي فِي أَيِّ طَعَامِهِ الْبَرَكَةُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**752** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஷைத்தான் உங்களின் ஒவ்வொரு காரியங்களிலும் வருகை தருகிறான். உணவு உண்ணும் போதுகூட அவன் வருகை தருகிறான். உங்களில் ஒருவரது உணவு கீழே விழுந்து விட்டால், அதை அவர் எடுத்து, அதன் தூசியை அகற்றி விட்டு, பின்பு அதைச் சாப்பிடட்டும்! ஷைத்தானுக்காக அதனை விட்டு விட வேண்டாம். சாப்பிட்டு முடித்து விட்டால் தன் விரல்களை சூப்பட்டும்! தன் உணவில் எதில் பரக்கத் உள்ளது என அவர் அறியமாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2033/135)**

٧٥٣ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا أَكَلَ طَعَامًا لَعِقَ أَصَابِعَهُ الثَّلاَثَ وَقَالَ : " إِذَا سَقَطَتْ لُقْمَةُ أَحَدِكُمْ فَلْيَأْخُذْهَا وَلْيُمِطْ عَنْهَا الأَذَى وَلْيَأْكُلْهَا وَلاَ يَدَعْهَا لِلشَّيْطَانِ " . وَأَمَرَنَا أَنْ نَسْلُتَ الْقَصْعَةَ وَقَالَ : " إِنَّكُمْ لاَ تَدْرُونَ فِي أَيِّ طَعَامِكُمْ الْبَرَكَةُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**753** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சாப்பிட்டால், தன் மூன்று விரல்களையும் சூப்புவார்கள். "உங்களில் ஒருவரது உணவு கீழே விழுந்து விட்டால், அதை எடுத்து அதிலுள்ள தூசியை அகற்றிவிட்டு, அதை அவர் சாப்பிடட்டும்! ஷைத்தானுக்கு அதை விட்டுவிட வேண்டாம்" என்று கூறினார்கள். மேலும் உணவுத்தட்டை வழித்து உண்ண எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். பின்னர், "உங்களின் எந்த உணவில் பரக்கத் உள்ளது என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்றும் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2034)**

٧٥٤ – وَعَنْ سَعِيدِ بْنِ الْحَارِثِ أَنَّهُ سَأَلَ جَابِرًا رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ الْوُضُوءِ مِمَّا مَسَّتْ النَّارُ فَقَالَ : لاَ قَدْ كُنَّا زَمَنَ النَّبِيِّ ﷺ لاَ نَجِدُ مِثْلَ ذَلِكَ الطَّعَامِ إِلاَّ قَلِيلاً فَإِذَا نَحْنُ وَجَدْنَاهُ لَمْ يَكُنْ لَنَا مَنَادِيلُ إِلاَّ أَكُفَّنَا وَسَوَاعِدَنَا وَأَقْدَامَنَا ثُمَّ نُصَلِّي وَلاَ نَتَوَضَّأُ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**754** ஸயீத் இப்னு ஹாரிஸ் அறிவிக்கின்றார்கள்:

"சமைத்த உணவு சாப்பிட்டால் உளூ செய்ய வேண்டுமா?" என்று ஜாபிர் (ரழி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், "இல்லை! நபி (ஸல்) அவர்களின் காலத்தில் அது போன்ற உணவை நாங்கள் மிகக் குறைவாகவே கிடைக்கப் பெற்றோம். அவ்வாறு நாங்கள் அதை பெற்றிருந்தாலும், எங்களின் முன் கைகளும், முழங்கைகளும், எங்களின் பாதங்களுமே தவிர விரல்களைத் துடைப்பதற்கு எங்களுக்கு வேறு துண்டுகள் இருக்கவில்லை. நாங்கள் (அந்த உணவை சாப்பிட்டு விட்டு விரல்களை துடைத்துவிட்டு) பின்னர் தொழுவோம். (அவ்வுணவைச் சாப்பிட்டதற்காக) உளூச் செய்ய மாட்டோம்" என்று பதில் கூறினார்கள். **(புகாரி:5457)**

## ١١٠ - بَابُ تكثير الأيْدِي عَلَى الطَعَامِ

## பாடம் : 110 - அதிகமானோர் உண்பது

٧٥٥ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " طَعَامُ الاثْنَيْنِ كَافِي الثَّلاثَةِ وَطَعَامُ الثَّلاثَةِ كَافِي الأَرْبَعَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**755** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இருவரின் உணவு, மூன்று நபர்களுக்குப் போதுமானது. மூன்று பேரின் உணவு நான்கு நபர்களுக்குப் போதுமானது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5392. முஸ்லிம்:2058)**

٧٥٦ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " طَعَامُ الْوَاحِدِ يَكْفِي الاثْنَيْنِ وَطَعَامُ الاثْنَيْنِ يَكْفِي الأَرْبَعَةَ وَطَعَامُ الأَرْبَعَةِ يَكْفِي الثَّمَانِيَةَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**756** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவரின் உணவு இரண்டு நபர்களுக்குப் போதுமானது. இரண்டு பேர் உணவு நான்கு நபர்களுக்குப் போதுமானது. நான்கு பேர் உணவு, எட்டு நபர்களுக்குப் போதுமானது" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2059)**

## ١١١ - بابُ أدب الشرب واستحباب التنفّس ثلاثًا خارج الإناء وكراهة التنفس في الإناء واستحباب إدارة الإناء على الأيمن فالأيمن بعد المبتدىء

## பாடம் : 111 - பருகுவதின் ஒழுங்கு. பருகுபவர் பாத்திரத்தின் வெளியே மூன்றுமுறை மூச்சுவிடலாம். பாத்திரத்தினுள் மூச்சு விடுவது கூடாது. பருகியவர், தனக்கு வலதுபுறத்தில் உள்ளவருக்கு முதலில் வழங்குதல்.

٧٥٧ - عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَتَنَفَّسُ فِي الشَّرَابِ ثَلاثًا . مُتَّفَقٌ عَلَيْهِ . يَعْنِي : يَتَنَفَّسُ خَارِجَ الأنَاءِ.

**757** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பருகும் போது (பாத்திரத்தின் வெளியே) மூன்று முறை மூச்சு விடுவார்கள். **(புகாரி:5631. முஸ்லிம்:2028)**

٧٥٨ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَشْرَبُوا وَاحِدًا كَشُرْبِ الْبَعِيرِ وَلَكِنْ اشْرَبُوا مَثْنَى وَثُلاَثَ وَسَمُّوا إِذَا أَنْتُمْ شَرِبْتُمْ وَاحْمَدُوا إِذَا أَنْتُمْ رَفَعْتُمْ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**758** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒட்டகை குடிப்பது போல் ஒரே மூச்சில் குடிக்காதீர்கள். எனினும் இரண்டு மூன்று தடவையாக குடியுங்கள். நீங்கள் குடிக்கும் போது "பிஸ்மில்லாஹ்" கூறுங்கள். குடித்து முடித்ததும் "அல்ஹம்துலில்லாஹ்" கூறுங்கள் என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1885. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையில், "யஸீத் இப்னு ஸினான் அபூஃபர்வா அரரஹாவி" என்ற பலவீனர் இடம் பெறுகிறார்)**

٧٥٩ - وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ نَهَى أَنْ يُتَنَفَّسَ فِي الأَنَاءِ . مُتَّفَقٌ عَلَيْهِ . يَعْنِي يُتَنَفَّسُ فِي نَفْسِ الأَنَاءِ .

**759** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பாத்திரத்தில் மூச்சு விடுவதற்குத் தடை விதித்தார்கள்.

**(புகாரி:5630. முஸ்லிம்:267)**

٧٦٠ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أُتِيَ بِلَبَنٍ قَدْ شِيبَ بِمَاءٍ وَعَنْ يَمِينِهِ أَعْرَابِيٌّ وَعَنْ يَسَارِهِ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَشَرِبَ ثُمَّ أَعْطَى الأَعْرَابِيَّ وَقَالَ : " الأَيْمَنَ فَالأَيْمَنَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَوْلُهُ " شِيبَ " : أَيْ خُلِطَ .

**760** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் தண்ணீர் கலந்த பால் கொண்டு வரப்பட்டது. அவர்களின் வலதுபுறம் ஒரு கிராமவாசி இருந்தார். அவர்களின் இடது புறம் அபூபக்கர் (ரழி) இருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் பாலைக் குடித்து விட்டு, அந்த கிராமவாசியிடம் (மிஞ்சிய பாலை) கொடுத்துவிட்டு, "வலதுபுறம் முதலில், வலதுபுறம் முதலில். (வலது புறம் உள்ளவர்களுக்கு முதலில் கொடுங்கள்" என்று கூறினார்கள்.

**(புகாரி:5619. முஸ்லிம்:2029)**

٧٦١ - وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أُتِيَ بِشَرَابٍ فَشَرِبَ مِنْهُ وَعَنْ يَمِينِهِ غُلاَمٌ وَعَنْ يَسَارِهِ أَشْيَاخٌ فَقَالَ لِلْغُلاَمِ . " أَتَأْذَنُ لِي أَنْ أُعْطِيَ هَؤُلاَءِ ؟ " . فَقَالَ الْغُلاَمُ : لاَ وَاللَّهِ لاَ أُوثِرُ بِنَصِيبِي مِنْكَ . أَحَدًا فَتَلَّهُ رَسُولُ اللَّهِ ﷺ فِي يَدِهِ . مُتَّفَقٌ عَلَيْهِ . قَوْلُهُ " تَلَّهُ " : أَيْ وَضَعَهُ . وَهَذَا الْغُلاَمُ هُوَ ابْنُ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا .

**761** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் குடிப்பதற்கு பானம் கொண்டு வரப்பட்டது. அதை அவர்கள் குடித்தார்கள். அவர்களின் வலதுபுறம் ஒரு சிறுவர் இருந்தார். இடதுபுறம் பெரியவர்கள் இருந்தனர். அந்த சிறுவரிடம், "இந்த பெரியவர்களுக்கு நான் கொடுக்க எனக்கு அனுமதி தருகிறீரா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்கள் மூலம் கிடைக்கும் எனது பங்கை எவருக்கும் நான் விட்டுத்தரமாட்டேன்" என்று அந்த சிறுவர் கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் அதை அந்த சிறுவரின் கையில் ஒப்படைத்தார்கள்.

**(புகாரி:5620. முஸ்லிம்:2030)**

## ١١٢ - بابُ كراهة الشرْب من فم القربة ونحوها وبيان أنه كراهة تنزيه لا تحريم

## பாடம் : 112 - பாத்திரத்தில் வாய் வைத்து அருந்துதல்

٧٦٢ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ عَنِ اخْتِنَاثِ الأَسْقِيَةِ . يَعْنِي أَنْ تُكْسَرَ أَفْوَاهُهَا وَيُشْرَبَ مِنْهَا . مُتَّفَقٌ عَلَيْهِ .

**762** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தண்ணீர் உள்ள பாத்திரத்தை (தோல்பையை)த் திறந்து, அதிலிருந்து (அப்படியே) தண்ணீர் குடிக்க நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள். (தண்ணீர் தோல்பையைத் திறந்து, அதிலிருந்து தண்ணீரை பாத்திரத்தில் ஊற்றி அருந்துவதையே அவர்கள் விரும்பியுள்ளார்கள்.

**(புகாரி:5625. முஸ்லிம்:2023)**

٧٦٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللّٰهِ ﷺ أَنْ يُشْرَبَ مِنْ فِي السِّقَاءِ أَوْ الْقِرْبَةِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**763** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தண்ணீர் உள்ள பாத்திரத்தில் அல்லது தோல்பையில் (வாய் வைத்து) குடிப்பதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள். **(புகாரி:5627. முஸ்லிம்)**

٧٦٤ – وَعَنْ أُمِّ ثَابِت كَبْشَةَ بِنْت ثَابِت أُخْت حَسَّان بْن ثَابِت رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَتْ : دَخَلَ عَلَيَّ رَسُولُ اللّٰه ﷺ فَشَرِبَ مِنْ فِي قِرْبَة مُعَلَّقَة قَائِمًا ; فَقُمْتُ إِلَى فِيهَا فَقَطَعْته . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . وَإِنَّمَا قَطَعْتهَا لِتَحْفَظَ مَوْضِعَ فَم رَسُول اللّٰه ﷺ وَتَتَبَرَّكَ بِه وَتَصُونَهُ عَنِ الابْتِذَال . وَهَذَا الْحَدِيثُ مَحْمُولٌ عَلَى بَيَان الْجَوَاز . وَالْحَدِيثَان السَّابِقَان لِبَيَانِ الأَفْضَلِ وَالأَكْمَلِ وَاللّٰهُ أَعْلَمُ .

**764** ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரழி) அவர்களின் சகோதரியான உம்மு தாபித் கப்ஷா பின்த் தாபித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என்னிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். தொங்க விடப்பட்டிருந்த தண்ணீர் பையிலிருந்து நின்றவாறே குடித்தார்கள். பின்னர் நான் அந்தத் தோல் பையின் வாய் அருகே சென்று (நபி (ஸல்) அவர்கள் வாய் வைத்தப் பகுதியை) வெட்டி எடுத்து வைத்துக் கொண்டேன்.

**(திர்மிதீ:1892. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١١٣ – باب كراهة النفخ في الشراب

## பாடம் : 113 - பானத்தில் ஊதுவது

٧٦٥ – عَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ نَهَى عَنِ النَّفْخِ فِي الشَّرَاب فَقَالَ رَجُلٌ : الْقَذَاةُ أَرَاهَا فِي الأَنَاء ؟ فَقَالَ : " أَهْرِقْهَا " . قَالَ : إِنِّي لاَ أَرْوَى مِنْ نَفَسٍ وَاحِدٍ ؟ قَالَ : " فَأَبِنِ الْقَدَحَ إِذًا عَنْ فِيك " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**765** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி)அறிவிக்கின்றார்கள்:

பானத்தில் ஊதுவதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். "பாத்திரத்தில் தூசி இருப்பதை நான் பார்க்கிறேன்" என்று ஒருவர் கூறினார். "அப்படியானால் அதனை(ச் சிறிதளவு) கீழே ஊற்றி விடுவீராக! (தூசிகள் நீங்கி விடும்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். மேலும் அம்மனிதர், "ஒரே மூச்சில் குடிப்பதால் நான் தாகம் தீர்க்கமுடிவதில்லை" என்று கூறினார். "உம் வாயிலிருந்து குவளையை எடுப்பீராக! (பின்னர் வெளியில் மூச்சு விட்டுவிட்டு, பிறகு தேவைப்பட்டால் குடிப்பீராக!)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:1887. இது "ஹஸன் ஸஹீஹ்" என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٦٦ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ نَهَى أَنْ يُتَنَفَّسَ فِي الأَنَاءِ أَوْ يُنْفَخَ فِيه . رَوَاهُ التِّرْمِذِيُّ . وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**766** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், பாத்திரத்தில் மூச்சு விடுவதையும், அதில் ஊதுவதையும் தடை செய்தார்கள்.

**(திர்மிதீ:1888. இது "ஹஸன் ஸஹீஹ்" என இமாம் திர்மிதீ கூறுகிறார்கள்)**

## ١١٤ - بابُ بَيان جَواز الشّرْب قائمًا وبيان أن الأكمل والأفضل الشرب قاعدًا

## பாடம் : 114 - நின்று அருந்துவது கூடும். ஆனால் உட்கார்ந்து அருந்துவதே சிறந்தது

فِيهِ حَدِيثُ كَبْشَةَ السَّابِقِ . رَقْمُ : 3 - 764 .

٧٦٧ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ :سَقَيْت النَّبِيَّ ﷺ مِنْ زَمْزَمَ فَشَرِبَ وَهُوَ قَائِمٌ . مُتَّفَقٌ عَلَيْه.

**767** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்களுக்கு "ஜம் ஜம்" தண்ணீரைக் குடிக்கக் கொடுத்தேன். அவர்கள் நின்ற நிலையிலேயே குடித்தார்கள்." **(புகாரி:5617. முஸ்லிம்:2027)**

٧٦٨ - وَعَنِ النَّزَّالِ بْنِ سَبْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَى عَلِيٌّ رَضِيَ اللَّهُ عَنْهُ بَابَ الرَّحْبَةِ فَشَرِبَ قَائِمًا وَقَالَ : إِنِّي رَأَيْت رَسُولَ اللَّهِ ﷺ فَعَلَ كَمَا رَأَيْتُمُونِي فَعَلْت . رَوَاهُ الْبُخَارِيُّ .

**768** நஸ்ஸால் இப்னு ஸப்ரா என்பார் அறிவிக்கின்றார்கள்:

(கூபாவின்) ஒரு முற்றத்தின் வாசலில் அலீ (ரழி) அவர்கள் நின்ற நிலையில் தண்ணீர் குடித்தார்கள். அப்போது அவர்கள், "நான் செய்யும் இந்த செயலை என்னிடம் நீங்கள் பார்ப்பது போலவே, நபி (ஸல்) அவர்களை இவ்வாறு செய்திட நான் பார்த்துள்ளேன்" என்று கூறினார்கள். **(புகாரி:5615)**

٧٦٩ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كُنَّا نَأْكُلُ عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ وَنَحْنُ نَمْشِي وَنَشْرَبُ وَنَحْنُ قِيَامٌ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**769** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் (சில நேரங்களில்) நடந்து கொண்டே சாப்பிடுவோம். நின்று கொண்டே பருகுவோம். **(திர்மிதீ:1881. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٧٠ - وَعَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ ) عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : رَأَيْت رَسُولَ اللَّهِ ﷺ يَشْرَبُ قَائِمًا وَقَاعِدًا . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**770** அம்ரு இப்னு ஷுஐபு அவர்கள் தன் பாட்டனார் வழியாக அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் நின்றவாறும், உட்கார்ந்தவாறும் அருந்துவார்கள்.

**(திர்மிதீ:1883. இது "ஹஸன் ஸஹீஹ்" என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٧١ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ أَنَّهُ نَهَى أَنْ يَشْرَبَ الرَّجُلُ قَائِمًا . قَالَ قَتَادَةُ : فَقُلْنَا لأَنَسٍ : فَالأَكْلُ ؟ قَالَ : ذَلِكَ أَشَرُّ أَوْ أَخْبَثُ . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ أَنَّ النَّبِيَّ ﷺ زَجَرَ عَنِ الشُّرْبِ قَائِمًا .

**771** கதாதா அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் நின்று கொண்டு பருகுவதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள். "நின்றுக் கொண்டு சாப்பிடலாமா?" என்று அனஸ் (ரழி) அவர்களிடம் கேட்டோம். "அது அதையும் விட கேடு அல்லது அதையும் விட மிக தவறானது" என்று அனஸ் (ரழி) கூறினார்கள். **(முஸ்லிம்:2024)**

(இதன் மற்றொரு அறிவிப்பில், நபி (ஸல்) அவர்கள் நின்று கொண்டு தண்ணீர் குடிப்பதற்கு தடை செய்துள்ளார்கள் என்று உள்ளது)

٧٧٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ " لاَ يَشْرَبَنَّ أَحَدٌ مِنْكُمْ قَائِمًا فَمَنْ نَسِيَ فَلْيَسْتَقِئْ " رَوَاهُ مُسْلِمٌ .

**772** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் எவரும் நின்றுகொண்டு தண்ணீர் குடிக்க வேண்டாம். மறந்து (குடித்து) விட்டால் அவர் வாந்தி எடுக்கட்டும்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2026)**

## ١١٥ – باب استحباب كون ساقي القوم آخرهم شربًا

## பாடம் : 115 - ஒரு கூட்டத்தாருக்கு தண்ணீர் கொடுப்பவர், கடைசியாக அருந்துவது விரும்பத்தக்கது

٧٧٣ – عَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " سَاقِي الْقَوْمِ آخِرُهُمْ " يَعْنِي " آخِرَهُمْ شُرْبًا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**773** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மக்களுக்கு தண்ணீர் தருபவர், அவர்களில் இறுதி நபராக அருந்துவார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:1894. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١١٦ – بابُ جَواز الشّرب كن جميع الأواني الطاهرة غير الذهب والفضة وَجَواز الكرْع – وهو الشرب بالضم من النهر وغيره – بغير إباء ولا يد وتحريم استعمال إناء الذهب والفضة في الشرب والأكل والطهارة وسائر وجوه الاستعمال

## பாடம் : 116 - தங்கம், வெள்ளி அல்லாத தூய்மையான பாத்திரங்களில் அருந்துவது கூடும். ஆறு மற்றும் தண்ணீர் குட்டைகளில் பாத்திரம், கை துணையின்றி வாயால் உறிஞ்சி அருந்துவது கூடும். உண்ண, குடிக்க, சுத்தம் செய்ய மற்றும் இதர செயல்களுக்கு தங்கம், வெள்ளிப் பாத்திரங்களை பயன்படுத்துவது கூடாது.

٧٧٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: حَضَرَتِ الصَّلاَةُ فَقَامَ مَنْ كَانَ قَرِيبَ الدَّارِ إِلَى أَهْلِهِ وَبَقِيَ قَوْمٌ فَأُتِيَ رَسُولُ اللَّهِ ﷺ بِمِخْضَبٍ مِنْ حِجَارَةٍ فَصَغُرَ الْمِخْضَبُ أَنْ يَبْسُطَ فِيهِ كَفَّهُ فَتَوَضَّأَ الْقَوْمُ كُلُّهُمْ. قَالُوا : كَمْ كُنْتُمْ ؟ قَالَ : ثَمَانِينَ وَزِيَادَةً . مُتَّفَقٌ عَلَيْهِ . هَذِهِ رِوَايَةُ الْبُخَارِيِّ وَفِي رِوَايَةٍ لَهُ وَلِمُسْلِمٍ أَنَّ النَّبِيَّ ﷺ دَعَا بِإِنَاءٍ مِنْ مَاءٍ فَأُتِيَ بِقَدَحٍ رَحْرَاحٍ فِيهِ شَيْءٌ مِنْ مَاءٍ فَوَضَعَ أَصَابِعَهُ فِيهِ . قَالَ أَنَسٌ : فَجَعَلْتُ أَنْظُرُ إِلَى الْمَاءِ يَنْبُعُ مِنْ بَيْنِ أَصَابِعِهِ فَحَزَرْتُ مَنْ تَوَضَّأَ مَا بَيْنَ السَّبْعِينَ إِلَى الثَّمَانِينَ.

**774** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருமுறை தொழுகை நேரம் வந்தது. (பள்ளிக்கு) அருகில் வீடு உள்ளவர்கள் தங்கள் வீட்டுக்கு (உளூச் செய்யச்) சென்றார்கள். மற்ற சிலர் பள்ளியில் இருந்தனர். எனவே அவர்களுக்காக நபி (ஸல்) அவர்களிடம் கல்லால் ஆன தண்ணீர் பாத்திரம் கொண்டு வரப்பட்டது. அதில் கையை நுழைக்க

முடியாத அளவுக்கு அந்த கல் பாத்திரம் சிறிதாக இருந்தது. அதிலிருந்து அந்த மக்கள் அனைவரும் உளூச் செய்தார்கள். “நீங்கள் எவ்வளவு பேர் இருந்தீர்கள்?” என அனஸ் (ரழி) அவர்களிடம் கேட்டதற்கு, “எண்பதுக்கும் மேற்பட்டவர்கள்” என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

**(புகாரி:195. முஸ்லிம்:2279. இது புகாரியின் வாசகமாகும்)**

முஸ்லிமில் (2279/4) கீழ்க்கண்டவாறு உள்ளது.

“தண்ணீர் உள்ள பாத்திரத்தை நபி (ஸல்) அவர்கள் கொண்டு வரச் செய்தார்கள். தண்ணீர் உள்ள விசாலமான ஒரு (பெரிய) செம்பு கொண்டு வரப்பட்டது. அதில் சிறிதளவு தண்ணீர் இருந்தது. நபி (ஸல்) அவர்கள் அதில் தன் விரல்களை வைத்தார்கள். அவர்களின் விரல்களிலிருந்து தண்ணீர் பீறிட்டு வருவதை நான் பார்த்தேன். உளூச் செய்தவர்களை எண்ணினேன். எழுபது முதல் எண்பது பேர் வரை இருந்தனர்.”

٧٧٥ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَانَا النَّبِيُّ ﷺ فَأَخْرَجْنَا لَهُ مَاءً فِي تَوْرٍ مِنْ صُفْرٍ فَتَوَضَّأَ . رَوَاهُ الْبُخَارِيُّ. " الصُّفْرُ " بِضَمِّ الصَّادِ وَيَجُوزُ كَسْرُهَا وَهُوَ النُّحَاسُ . وَ " التَّوْرُ " : كَالْقَدَحِ وَهُوَ بِالتَّاءِ الْمُثَنَّاةِ مِنْ فَوْقُ .

**775** அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். பித்தளைப் பாத்திரம் ஒன்றில் தண்ணீரை அவர்களிடம் கொடுத்தோம். அவர்கள் அதில் உளூச் செய்தார்கள். **(புகாரி:197)**

٧٧٦ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ دَخَلَ عَلَى رَجُلٍ مِنَ الأَنْصَارِ وَمَعَهُ صَاحِبٌ لَهُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنْ كَانَ عِنْدَكَ مَاءٌ بَاتَ هَذِهِ اللَّيْلَةَ فِي شَنَّةٍ وَإِلاَّ كَرَعْنَا " . رَوَاهُ الْبُخَارِيُّ . " الشَّنُّ " : الْقِرْبَةُ .

**776** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அன்சாரி தோழர் ஒருவரிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர்களுடன் மற்ற ஒரு தோழரும் இருந்தார். “உம்மிடம் தோல்பையில் இரவு வைத்திருந்த தண்ணீரைக் கொண்டு வாரும்! இல்லாவிட்டால் (இத்தோட்டத்தில் ஓடும் வாய்க்காலில்) நாம் தண்ணீரை உறிஞ்சிக் குடித்துக் கொள்கிறோம்” என்று அவர்களிடம் நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5613)**

٧٧٧ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : إِنَّ النَّبِيَّ ﷺ نَهَانَا عَنِ الْحَرِيرِ وَالدِّيبَاجِ وَالشُّرْبِ فِي آنِيَةِ الذَّهَبِ وَالْفِضَّةِ وَقَالَ : " هِيَ لَهُمْ فِي الدُّنْيَا وَهِيَ لَكُمْ فِي الآخِرَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**777** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பட்டு, பட்டாடைகளை (அணிவதை விட்டும்) மற்றும் தங்கம், வெள்ளி பாத்திரங்களில் பருகுவதை விட்டும் எங்களை நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்கள். பின்னர், “அவை உலகில் அவர்களுக்கும் (இறை மறுப்பாளர்களுக்கும்), மறுமையில் உங்களுக்கும் உள்ளன” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5632. முஸ்லிம்:2067)**

٧٧٨ – وَعَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الَّذِي يَشْرَبُ فِي آنِيَةِ الْفِضَّةِ إِنَّمَا يُجَرْجِرُ فِي بَطْنِهِ نَارَ جَهَنَّمَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : " إِنَّ الَّذِي يَأْكُلُ أَوْ يَشْرَبُ فِي آنِيَةِ الْفِضَّةِ وَالذَّهَبِ " . وَفِي رِوَايَةٍ لَهُ : " مَنْ شَرِبَ فِي إِنَاءٍ مِنْ ذَهَبٍ أَوْ فِضَّةٍ فَإِنَّمَا يُجَرْجِرُ فِي بَطْنِهِ نَارًا مِنْ جَهَنَّمَ " .

**778** உம்மு ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வெள்ளிப் பாத்திரத்தில் தண்ணீர் குடிப்பவர், தன் வயிற்றில் நரக நெருப்பைத்தான் ஊற்றிக் கொள்கிறார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5634. முஸ்லிம்:2065)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "தங்கம், வெள்ளிப் பாத்திரங்களில் சாப்பிடுபவன், பருகுபவன்...." என்று உள்ளது.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "தங்கம், வெள்ளியின் பாத்திரத்தில் பருகியவன், தன் வயிற்றில் நரக நெருப்பைத் தான் ஊற்றிக் கொள்கிறான்" என்று உள்ளது.

### ஆடைகள் பற்றிய அத்தியாயம்

## ١١٧ – باب استحباب الثوب الأبيض وجواز الأحمر والأخضر والأصفر والأسود وجوازه من قطن وكتان وشعر وصوف وغيرها إلا الحرير

## பாடம் : 117 - வெள்ளை ஆடை அணிவது விரும்பத்தக்கது. சிவப்பு, பச்சை, மஞ்சள் கருப்பு நிற ஆடைகள் கூடும். பருத்தி, கம்பளி போன்ற பட்டு அல்லாத ஆடைகள் அணிவது கூடும்.

قَالَ اللَّهُ تَعَالَى : يَا بَنِي آدَمَ قَدْ أَنْزَلْنَا عَلَيْكُمْ لِبَاسًا يُوَارِي سَوْآتِكُمْ وَرِيشًا وَلِبَاسُ التَّقْوَى ذَلِكَ خَيْرٌ . وَقَالَ تَعَالَى : وَجَعَلَ لَكُمْ سَرَابِيلَ تَقِيكُمُ الْحَرَّ وَسَرَابِيلَ تَقِيكُمْ بَأْسَكُمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *ஆதமின் மக்களே! உங்களின் மறைவுப் பகுதிகளை மறைக்கும் ஆடையையும், அலங்காரத்தையும் நாம் இறக்கி வைத்து உள்ளோம். இறையச்சம் எனும் ஆடைதான் சிறந்ததாகும். (7:26)*

*வெப்பத்தில் உங்களைப் பாதுகாக்கும் ஆடைகளையும், போரில் உங்களைப் பாதுகாக்கும் ஆடைகளையும் உங்களுக்கு அவன் ஏற்படுத்தினான். (16:81)*

٧٧٩ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الْبَسُوا مِنْ ثِيَابِكُمُ الْبَيَاضَ فَإِنَّهَا مِنْ خَيْرِ ثِيَابِكُمْ وَكَفِّنُوا فِيهَا مَوْتَاكُمْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**779** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் ஆடைகளில் வெள்ளை ஆடைகளை அணியுங்கள். உங்கள் ஆடைகளில் அதுதான் சிறந்ததாகும். உங்களில் இறந்தவர்களுக்கு அதிலேயே "கஃபன்" அணிவியுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:3878. திர்மிதீ:994. இது "ஹஸன் ஸஹீஹ்" எனதிர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٨٠ - وَعَنْ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الْبَسُوا الْبَيَاضَ فَإِنَّهَا أَطْهَرُ وَأَطْيَبُ وَكَفِّنُوا فِيهَا مَوْتَاكُمْ " . رَوَاهُ النَّسَائِيُّ وَالْحَاكِمُ وَقَالَ : حَدِيثٌ صَحِيحٌ .

**780** ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வெள்ளை ஆடை அணியுங்கள். ஏனெனில், அது மிகத் தூய்மையானதும், மிக நறுமணம் உள்ளதுமாகும். அதிலேயே உங்களில் இறந்தோரை கபனிடுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(நஸயீ:4/34. ஹாகிம்:4/185 இது "ஸஹீஹ்" என ஹாகிம் கூறுகிறார்கள்)**

٧٨١ – وَعَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ مَرْبُوعًا وَلَقَدْ رَأَيْتُه فِي حُلَّةٍ حَمْرَاءَ مَا رَأَيْتُ شَيْئًا قَطُّ أَحْسَنَ مِنْهُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**781** பராஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் நடுத்தர உயரமுடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் சிவப்பு நிற ஆடை அணிவதைப் பார்த்துள்ளேன். அவர்களை விட அழகான எப்பொருளையும், எப்போதும் நான் கண்டதில்லை. **(புகாரி:5848. முஸ்லிம்:2337)**

٧٨٢ – وَعَنْ أَبِي جُحَيْفَةَ وَهْبِ بْنِ عَبْدِ اللّٰهِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : رَأَيْتُ النَّبِيَّ ﷺ بِمَكَّةَ وَهُوَ بِالأَبْطَحِ فِي قُبَّةٍ لَهُ حَمْرَاءَ مِنْ أَدَمٍ فَخَرَجَ بِلاَلٌ بِوَضُوئِهِ فَمِنْ نَاضِحٍ وَمِنْ نَائِلٍ فَخَرَجَ النَّبِيُّ ﷺ وَعَلَيْهِ حُلَّةٌ حَمْرَاءُ كَأَنِّي أَنْظُرُ إِلَى بَيَاضِ سَاقَيْهِ فَتَوَضَّأَ وَأَذَّنَ بِلاَلٌ فَجَعَلْتُ أَتَتَبَّعُ فَاهُ هَاهُنَا وَهَاهُنَا يَقُولُ يَمِينًا وَشِمَالاً : حَيَّ عَلَى الصَّلاَةِ حَيَّ عَلَى الْفَلاَحِ . ثُمَّ رُكِزَتْ لَهُ عَنَزَةٌ فَتَقَدَّمَ فَصَلَّى يَمُرُّ بَيْنَ يَدَيْهِ الْكَلْبُ وَالْحِمَارُ لاَ يُمْنَعُ . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْعَنَزَةُ " بِفَتْحِ النُّونِ : نَحْوُ الْعُكَّازَةِ .

**782** அபூ ஜுஹைஃபா வஹ்பு இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களை மக்காவில் உள்ள மணல் மேட்டுப்பகுதி ஒன்றில் சிவப்பு நிறத் தோல் கூடாரத்தில் தங்கி இருந்ததைப் பார்த்தேன். நபி (ஸல்) அவர்கள் (உளூ செய்து எஞ்சிய) தண்ணீரை பிலால் (ரழி) கொண்டு வந்தார்கள். அதைத் தங்கள் மேனியில் சிலர் தெளித்துக் கொண்டார்கள். தங்கள் மேனியில் சிலர் தடவிக் கொண்டார்கள். சிவப்பு நிற ஆடை அணிந்தவர்களாக நபி (ஸல்) அவர்கள் வெளியே வந்தார்கள். அவர்களின் இரண்டு கெண்டைக் கால்களையும் இன்றும் நான் பார்ப்பது போல் உள்ளது. நபி (ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். பின்பு பிலால் (ரழி) பாங்கு கூறினார்கள். "ஹய்ய அலஸ் ஸலாஹ், ஹய்ய அலல் ஃபலாஹ்" என்ற வார்த்தைகளைக் கூறும் போது, அவர் தமது வலதுபுறமும் இடதுபுறமும் முகத்தைத் திருப்பியதை நான் கண்டேன். பின்பு நபி (ஸல்) அவர்களுக்கு முன் ஒரு ஈட்டி ஊன்றப்பட்டது. (அவர்களுக்கு முன்னால் பாதையை கடக்க விரும்புபவர்கள் ஈட்டிக்கு அப்பால் செல்வர். தொழுகையாளிக்கு முன் ஒரு தடுப்பாக ஈட்டி ஊன்றப்பட்டது.) பின்னர் நபி (ஸல்) அவர்கள் முன்னே வந்து, தொழ வைத்தார்கள். அவர்களின் முன்னே நாயும், கழுதையும் நடந்து சென்று கொண்டிருந்தது. அவை தடுக்கப்படவில்லை. **(புகாரி:376. முஸ்லிம்:503)**

٧٨٣ – وَعَنْ أَبِي رِمْثَةَ رِفَاعَةَ التَّيْمِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : رَأَيْتُ رَسُولَ اللّٰهِ ﷺ وَعَلَيْهِ ثَوْبَانِ أَخْضَرَانِ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**783** அபூரிம்ஸா ரிஃபாஅத்துத் தைமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களை பச்சை நிறத்தில், இரண்டு ஆடைகள் அணிந்தவர்களாகப் பார்த்தேன். **(அபூதாவூது:4065. திர்மிதீ:2812)**

٧٨٤ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ دَخَلَ يَوْمَ فَتْحِ مَكَّةَ وَعَلَيْهِ عِمَامَةٌ سَوْدَاءُ. رَوَاهُ مُسْلِمٌ.

**784** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்காவை வெற்றி கண்ட நாளில், அவர்கள் தலையில் கருப்பு நிறத் தலைப்பாகையை அணிந்திருந்தார்கள். **(முஸ்லிம்:1358)**

٧٨٥ – وَعَنْ أَبِي سَعِيدٍ عَمْرِو بْنِ حُرَيْثٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : كَأَنِّي أَنْظُرُ إِلَى رَسُولِ اللّٰهِ ﷺ وَعَلَيْهِ عِمَامَةٌ سَوْدَاءُ قَدْ أَرْخَى طَرَفَيْهَا بَيْنَ كَتِفَيْهِ . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ : أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ خَطَبَ النَّاسَ وَعَلَيْهِ عِمَامَةٌ سَوْدَاءُ .

**785** அபூஸயீத் அம்ரு இப்னு ஹுரைஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களை இன்றும் நான் பார்ப்பது போல் உள்ளது. அவர்கள் கருப்பு நிறத் தலைப்பாகையை அணிந்திருந்தார்கள். அதன் இரண்டு ஓரங்களையும் தன் இரண்டு தோள்பட்டை மீதும் தொங்க விட்டிருந்தார்கள். **(முஸ்லிம்:1359)**

இதன் மற்றொரு அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அவர்கள் (தலை) மீது கருப்புநிறத் தலைப்பாகை இருந்தது" என்று உள்ளது)

٧٨٦ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كُفِّنَ رَسُولُ اللَّهِ ﷺ فِي ثَلاَثَةِ أَثْوَابٍ بِيضٍ سَحُولِيَّةٍ مِنْ كُرْسُفٍ لَيْسَ فِيهَا قَمِيصٌ وَلاَ عِمَامَةٌ . مُتَّفَقٌ عَلَيْهِ . " السَّحُولِيَّةُ " بِفَتْحِ السِّينِ وَضَمِّهَا وَضَمِّ الْحَاءِ الْمُهْمَلَتَيْنِ : ثِيَابٌ تُنْسَبُ إِلَى سَحُولٍ : قَرْيَةٍ بِالْيَمَنِ . " وَالْكُرْسُفُ " : الْقُطْنُ .

**786** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் யமன் நாட்டில் உள்ள "ஸஹூல்" எனும் ஊரில் நெய்யப்பட்ட மூன்று பருத்தி ஆடைகளால் கஃபன் அணிவிக்கப்பட்டார்கள். அதில் சட்டையோ, தலைப்பாகையோ இருக்க வில்லை. **(புகாரி:1264. முஸ்லிம்:941)**

٧٨٧ – وَعَنْهَا ( عَائِشَةَ ) قَالَتْ : خَرَجَ رَسُولُ اللَّهِ ﷺ ذَاتَ غَدَاةٍ وَعَلَيْهِ مِرْطٌ مُرَحَّلٌ مِنْ شَعْرٍ أَسْوَدَ . رَوَاهُ مُسْلِمٌ . " الْمِرْطُ " بِكَسْرِ الْمِيمِ : وَهُوَ كِسَاءٌ . " وَالْمُرَحَّلُ " بِالْحَاءِ الْمُهْمَلَةِ : هُوَ الَّذِي فِيهِ صُورَةُ رِحَالِ الأَبِلِ : وَهِيَ الأَكْوَارُ .

**787** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் காலையில் (வீட்டை விட்டு) வெளியே சென்றார்கள். அப்பொழுது அவர்கள் கருப்பு நிற முடியால் ஆன ஒட்டகச் சேனத்தின் குச்சி வடிவம் போடப்பட்ட கம்பளியால் தயாரிக்கப் பட்ட ஆடையை அணிந்திருந்தார்கள். **(முஸ்லிம்:2081)**

٧٨٨ – وَعَنِ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنْتُ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ ذَاتَ لَيْلَةٍ فِي مَسِيرٍ فَقَالَ لِي : " أَمَعَكَ مَاءٌ ؟ " قُلْتُ : نَعَمْ فَنَزَلَ عَنْ رَاحِلَتِهِ فَمَشَى حَتَّى تَوَارَى فِي سَوَادِ اللَّيْلِ ثُمَّ جَاءَ فَأَفْرَغْتُ عَلَيْهِ مِنَ الأَدَاوَةِ فَغَسَلَ وَجْهَهُ وَعَلَيْهِ جُبَّةٌ مِنْ صُوفٍ فَلَمْ يَسْتَطِعْ أَنْ يُخْرِجَ ذِرَاعَيْهِ مِنْهَا حَتَّى أَخْرَجَهُمَا مِنْ أَسْفَلِ الْجُبَّةِ فَغَسَلَ ذِرَاعَيْهِ وَمَسَحَ بِرَأْسِهِ ثُمَّ أَهْوَيْتُ لأَنْزِعَ خُفَّيْهِ فَقَالَ : " دَعْهُمَا فَإِنِّي أَدْخَلْتُهُمَا طَاهِرَتَيْنِ " . وَمَسَحَ عَلَيْهِمَا . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " وَعَلَيْهِ جُبَّةٌ شَامِيَّةٌ ضَيِّقَةُ الْكُمَّيْنِ " . وَفِي رِوَايَةٍ : أَنَّ هَذِهِ الْقَضِيَّةَ كَانَتْ فِي غَزْوَةِ تَبُوكَ .

**788** முகீரா இப்னு ஷுஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பயணத்தில் இரவு நேரத்தில் நபி (ஸல்) அவர்களுடன் நான் இருந்தேன். "உம்மிடம் தண்ணீர் உள்ளதா?" என்று என்னிடம் நபி (ஸல்) கேட்டார்கள். "ஆம்" என்று கூறினேன். (தண்ணீரைப் பெற்று) அவர்கள் தன் வாகனத்திலிருந்து இறங்கி, நடந்து சென்று இரவின் இருட்டில் மறைந்தார்கள். (மலஜலம் கழித்து விட்டு) பின்பு திரும்பி வந்தார்கள். உடனே நான் தண்ணீர் பாத்திரத்திலிருந்து அவர்களுக்கு ஊற்றினேன். அவர்கள் தன் முகத்தைக் கழுவினார்கள். அப்பொழுது அவர்கள் ஒட்டக முடியிலான கம்பளி ஜுப்பாவை அணிந்திருந்தார்கள். (கைகளைக் கழுவ) அந்தக் கம்பளி ஜுப்பாவிலிருந்து கைகளை வெளியே எடுக்க முடியவில்லை. (அது மிகவும் இறுக்கமாக இருந்தது.) எனவே கம்பளி ஆடையின் கீழ்புறத்திலிருந்து கழற்றி முழங்கைகளை எடுத்து, அவற்றைக் கழுவினார்கள். பின்னர் தலைக்கு மஸஹு செய்தார்கள். நான் அவர்களின் இரு காலுறைகளையும் கழற்றிட முயற்சித்தேன்.

அப்போது அவர்கள், "அந்த இரண்டையும் விட்டு விடுவீராக! இரண்டு (கால்களையும் கழுவி) சுத்தமான பின்புதான் அந்த இரண்டையும் அணிந்தேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். தன் இரு காலுறைகள் மீது (அவற்றை கழுவுவதற்கு பதிலாக)"மஸஹ்" செய்தார்கள்.

**(புகாரி:4421,5798,5799. முஸ்லிம்:274)**

மற்றொரு அறிவிப்பில், "முன் கைகள் மிக இறுக்கமான, ஷாம் நாட்டில் தயாரான ஆடை அவர்கள் மீது இருந்தது" என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில் "இந்த சம்பவம், தபூக் போரின் போது நடந்தது" என்று உள்ளது.

## ١١٨ – بابُ استحباب القميص

## பாடம் : 118 - சட்டை அணிவது விரும்பத்தக்கது

٧٨٩ – عَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ أَحَبُّ الثِّيَابِ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ الْقَمِيصُ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**789** உம்மு ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுக்கு ஆடைகளில் மிகவும் விருப்பமானதாக, "கமீஸ்" எனும் முழு நீள (தலை முதல் கால் வரை உள்ள) சட்டையே விருப்பமானதாக இருந்தது.

**(அபூதாவூது:4025. திர்மிதீ:1762. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١١٩ – بابُ صفة طول القميص والكمّ والإزار وطرف العمامة وتحريم إسبال شيء من ذلك على سبيل الخيلاء وكراهته من غير خيلاء

## பாடம் : 119 - சட்டை, அதன்நீளம், முன்கை, வேட்டி, தலைப்பாகையின் ஓரம் ஆகியவற்றின் அளவு. பெருமைக்காக ஆடையை தொங்க விடுவதும் கூடாது. பெருமையின்றி தொங்க விடுவதும் வெறுக்கத்தக்கதாகும்.

٧٩٠ – وَعَنْ أَسْمَاءَ بِنْتِ يَزِيدَ الأَنْصَارِيَّةِ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ كُمُّ قَمِيصِ رَسُولِ اللَّهِ ﷺ إِلَى الرُّسْغِ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**790** அஸ்மா பின்த் யஸீத் அல் அன்சாரிய்யா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் சட்டையின் கை அளவு, அவர்களின் மணிக்கட்டுவரை இருந்தது.

**(அபூதாவூது:4027. திர்மிதீ:1766. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٧٩١ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ جَرَّ ثَوْبَهُ خُيَلاَءَ لَمْ يَنْظُرِ اللَّهُ إِلَيْهِ يَوْمَ الْقِيَامَةِ ! " فَقَالَ أَبُو بَكْرٍ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ إِزَارِي يَسْتَرْخِي إِلاَّ أَنْ أَتَعَاهَدَهُ . فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّكَ لَسْتَ مِمَّنْ يَفْعَلُهُ خُيَلاَءَ " . رَوَاهُ الْبُخَارِيُّ . وَرَوَى مُسْلِمٌ بَعْضَهُ .

**791** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"யார் பெருமைக்காக தன் ஆடையை பூமியில் தடை கூட்டும்படி அணிந்துக் கொண்டு செல்கிறாரோ, மறுமை நாளில் அவரை அல்லாஹ் பார்க்க மாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அவர்களிடம் ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! அவரிடம் உளூச் செய்ய ஏவுகிறீர்கள். பின்பு அவர் விஷயமாக மவுனமாக இருக்கிறீர்கள் என்ன காரணம்?" என்று கேட்டார். அதற்கு அவர், "அவர் தன் வேட்டியை தொங்க விட்டவராக தொழுது கொண்டிருந்தார். நிச்சயமாக, அல்லாஹ் (ஆடையை) தரையில் தொங்க விட்டுத் திரிபவரின் தொழுகையை ஏற்கமாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:638)**

٧٩٨ – وَعَنْ قَيْسِ بْنِ بِشْرٍ التَّغْلِبِيِّ قَالَ : أَخْبَرَنِي أَبِي – وَكَانَ جَلِيسًا لأَبِي الدَّرْدَاءِ – قَالَ : كَانَ بِدِمَشْقَ رَجُلٌ مِنْ أَصْحَابِ النَّبِيِّ ﷺ يُقَالُ لَهُ ابْنُ الْحَنْظَلِيَّةِ وَكَانَ رَجُلاً مُتَوَحِّدًا قَلَّمَا يُجَالِسُ النَّاسَ إِنَّمَا هُوَ صَلاَةٌ فَإِذَا فَرَغَ فَإِنَّمَا هُوَ تَسْبِيحٌ وَتَكْبِيرٌ حَتَّى يَأْتِيَ أَهْلَهُ ; فَمَرَّ بِنَا وَنَحْنُ عِنْدَ أَبِي الدَّرْدَاءِ فَقَالَ لَهُ أَبُو الدَّرْدَاءِ : كَلِمَةً تَنْفَعُنَا وَلاَ تَضُرُّكَ . قَالَ : بَعَثَ رَسُولُ اللَّهِ ﷺ سَرِيَّةً فَقَدِمَتْ فَجَاءَ رَجُلٌ مِنْهُمْ فَجَلَسَ فِي الْمَجْلِسِ الَّذِي يَجْلِسُ فِيهِ رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ لِرَجُلٍ إِلَى جَنْبِهِ : لَوْ رَأَيْتَنَا حِينَ الْتَقَيْنَا نَحْنُ وَالْعَدُوُّ فَحَمَلَ فُلاَنٌ فَطَعَنَ فَقَالَ : خُذْهَا مِنِّي وَأَنَا الْغُلاَمُ الْغِفَارِيُّ كَيْفَ تَرَى فِي قَوْلِهِ ؟ فَقَالَ : مَا أَرَاهُ إِلاَّ قَدْ بَطَلَ أَجْرُهُ . فَسَمِعَ بِذَلِكَ آخَرُ فَقَالَ : مَا أَرَى بِذَلِكَ بَأْسًا ; فَتَنَازَعَا حَتَّى سَمِعَ رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ : " سُبْحَانَ اللَّهِ ! لاَ بَأْسَ أَنْ يُؤْجَرَ وَيُحْمَدَ " . فَرَأَيْتُ أَبَا الدَّرْدَاءِ سُرَّ بِذَلِكَ وَجَعَلَ يَرْفَعُ رَأْسَهُ إِلَيْهِ وَيَقُولُ : أَأَنْتَ سَمِعْتَ ذَلِكَ مِنْ رَسُولِ اللَّهِ ﷺ ؟ فَيَقُولُ : نَعَمْ ; فَمَا زَالَ يُعِيدُ عَلَيْهِ حَتَّى إِنِّي لأَقُولُ : لَيَبْرُكَنَّ عَلَى رُكْبَتَيْهِ . قَالَ : فَمَرَّ بِنَا يَوْمًا آخَرَ فَقَالَ لَهُ أَبُو الدَّرْدَاءِ : كَلِمَةً تَنْفَعُنَا وَلاَ تَضُرُّكَ ! قَالَ : قَالَ لَنَا رَسُولُ اللَّهِ ﷺ : " الْمُنْفِقُ عَلَى الْخَيْلِ كَالْبَاسِطِ يَدَهُ بِالصَّدَقَةِ لاَ يَقْبِضُهَا " . ثُمَّ مَرَّ بِنَا يَوْمًا آخَرَ فَقَالَ لَهُ أَبُو الدَّرْدَاءِ : كَلِمَةً تَنْفَعُنَا وَلاَ تَضُرُّكَ ! قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " نِعْمَ الرَّجُلُ خُرَيْمٌ الأَسَدِيُّ ! لَوْلاَ طُولُ جُمَّتِهِ وَإِسْبَالُ إِزَارِهِ " فَبَلَغَ ذَلِكَ خُرَيْمًا فَعَجَّلَ فَأَخَذَ شَفْرَةً فَقَطَعَ بِهَا جُمَّتَهُ إِلَى أُذُنَيْهِ وَرَفَعَ إِزَارَهُ إِلَى أَنْصَافِ سَاقَيْهِ . ثُمَّ مَرَّ بِنَا يَوْمًا آخَرَ فَقَالَ لَهُ أَبُو الدَّرْدَاءِ : كَلِمَةً تَنْفَعُنَا وَلاَ تَضُرُّكَ ! قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّكُمْ قَادِمُونَ عَلَى إِخْوَانِكُمْ فَأَصْلِحُوا رِحَالَكُمْ وَأَصْلِحُوا لِبَاسَكُمْ حَتَّى تَكُونُوا كَأَنَّكُمْ شَامَةٌ فِي النَّاسِ ; فَإِنَّ اللَّهَ لاَ يُحِبُّ الْفُحْشَ وَلاَ التَّفَحُّشَ ! " رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ إِلاَّ قَيْسَ بْنَ بِشْرٍ فَاخْتَلَفُوا فِي تَوْثِيقِهِ وَتَضْعِيفِهِ وَقَدْ رَوَى لَهُ مُسْلِمٌ .

**798** கய்ஸ் இப்னு பிஷ்ர் அத்தஃலபீ என்பார் அறிவிக்கின்றார்:

அபூதர்தாஹ் (ரழி) அவர்களின் அவையில் இருந்த என் தந்தை பிஷ்ர் அவர்கள் கீழ்க்கண்ட செய்தியை என்னிடம் கூறினார்கள்:

நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் திமிஷ்க் (டமாஸ்கஸ்) நகரில் இருந்தார். அவர் பெயர் ஸஹ்ல் இப்னு அல்ஹன்ளலிய்யா (ரழி) என்பதாகும். அவர் தனிமையை விரும்பும் மனிதராக இருந்தார். மக்களிடம் அவர் சேர்ந்து உட்காருவது குறைவாக இருந்தது. அவர் தொழுவார். தொழுது முடிந்ததும் தஸ்பீஹ், தக்பீர் கூறுவார். உடனே தன் வீட்டுக்குச் சென்று விடுவார். (இதுவே அவரது அன்றாட பணியாக இருந்தது.) ஒரு முறை நாங்கள் அபூதர்தாஹ் (ரழி) அவர்களிடம் இருந்தபோது எங்களை கடந்து அவர் சென்றார். அவரிடம் அபூதர்தாஹ் (ரழி) அவர்கள், "எங்களுக்கு பயன் தருகின்ற விஷயத்தைக் கூறுங்கள்" என்று கேட்டார்கள். உடனே அவர், "நபி (ஸல்) அவர்கள் ஒரு படையை அனுப்பி இருந்தார்கள். அந்த படை (திரும்பி) வந்தது. அவர்களில் ஒருவர் வந்து, நபி (ஸல்) அவர்களின் அவையில் அமர்ந்தார். தன் அருகில் அமர்ந்திருந்தவரிடம் அவர், "நாங்கள் எதிரிகளைச் சந்தித்தபோது, இன்னார் ஈட்டியால் (எதிரியைக் குத்தி) "இதைப்பிடி நான்தான், 'கிஃபாரி' கூட்டத்தின் இளைஞன்" என்றார். இவர் விஷயமாக என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அவர், "தன் நற்கூலியை இழந்துவிட்டதாக நான் கருதுகிறேன்" என்றார். இதைக் கேட்ட மற்றொருவரோ, "இதனால் குற்றம் ஏற்படும் என நான் கருதவில்லை" என்றார். இருவரும் வழக்காடியதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், "சுப்ஹானல்லாஹ்! (மறுமையில்) கூலி கொடுக்கப்படுவதற்கும், (பூமியில்) புகழப்படுவதற்கும் சம்பந்தமில்லை" என்று கூறினார்கள் என (ஸஹ்ல் இப்னு ஹன்ளலிய்யா)

கூறினார். இதனால் மகிழ்ச்சி அடைந்தவர்களாக அபூதர்தாஹ் (ரழி) அவர்களைக் கண்டேன். அவரிடம் தன் தலையை உயர்த்திய அவர்கள், "நபி (ஸல்) அவர்களிடம் இதை நீர் கேட்டீரா?" என்று கேட்டார். "ஆம்" என அவர் கூறினார். அவரிடம் அபூதர்தாஹ் (ரழி) அவர்கள் கேட்டுக் கொண்டே இருந்தார். எந்த அளவிற்கெனில்) எங்கோ அவர்கள் (மாணவரைப் போன்று) அவரிடம் முட்டுக்கால்களால் மண்டியிட்டு அமர்ந்து விடுவாரோ என நான் எனக்குள் கூறும் அளவுக்கு.

மற்றொரு நாள் அவர் எங்களுக்கு அருகில் சென்றார். அப்போது அவரிடம் அபூதர்தாஹ் (ரழி) அவர்கள், "உங்களுக்குத் துன்பம் ஏற்படுத்தாத, எங்களுக்குப் பயன் தருகின்ற ஒரு வார்த்தையைக் கூறுங்கள்"என்று கேட்டார்கள். உடனே அவர், "(இறைவழியில் போரிட) குதிரைக்குச் செலவு செய்பவர், தர்மம் வழங்க தன் கையை மூடாமல் விரித்து வைத்திருப்பவர் போலாவார் என நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள்" எனக் கூறினார்.

பின்பு மற்றொரு நாள் அவர் எங்களுக்கு அருகில் சென்றார். அவரிடம் அபூதர்தாஹ் (ரழி) அவர்கள், "உங்களுக்குச் சிரமம் ஏற்படுத்தாத, எங்களுக்குப் பயன் தருகிற ஒரு செய்தியைக் கூறுங்கள்" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "ஒருமுறை நபி (ஸல்) அவர்கள், குரைம் அல்உஸைதீ என்பவரின் தலைமுடி நீளமானதாகவும், அவர் வேட்டி தொங்கியதாகவும் இல்லை என்றால் அவர்தான் நல்லவர் என்று கூறினார்கள். இச்செய்தி குரைம் (ரழி) அவர்களுக்கு எட்டியது. உடனே அவர் கத்திரியை எடுத்து, தன் நீளமான சடைமுடியை தன் காது அளவுக்கு வெட்டிக் கொண்டார். தன் வேட்டியை தன் கெண்டைக் கால்களின் பாதிவரை உயர்த்திக் கொண்டார்" என்று கூறினார்.

பின்பு, மற்றொரு நாள் எங்கள் அருகில் சென்றார். அவரிடம் அபூதர்தாஹ் (ரழி) அவர்கள், "உங்களுக்கு சிரமம் ஏற்படுத்தாத, எங்களுக்குப் பயன் தருகின்ற செய்தியைக் கூறுங்கள்" என்றார்கள். அதற்கு அவர் "ஒருமுறை நபி (ஸல்) அவர்கள், 'நீங்கள் உங்கள் சகோதரர்களிடம் செல்கிறீர்கள். ஆகவே உங்களின் வாகனங்களைச் சீராக்கிக் கொள்ளுங்கள். நீங்கள் (உடலில் உள்ள) மச்சம் போல் மனிதர்களில் நீங்கள் (தெளிவாக) தெரியும் அளவுக்கு உங்கள் ஆடைகளை அழகாக்கிக் கொள்ளுங்கள். நிச்சயமாக, அல்லாஹ், கெட்டதையும், கெட்டதை எண்ணுவதையும் விரும்ப மாட்டான்" என்று கூறினார்கள்" என்று அவர் கூறினார். **(அபூதாவூது:4089)**

(கய்ஸ் இப்னு பிஷ்ர் என்பவர் சரியானவரா? பலவீனரா? என்பதில் அறிஞர்கள் கருத்து வேறுபாடு கொண்டுள்ளனர். அவர் வழியாக முஸ்லிம் நூலில் இந்த ஹதீஸ் உள்ளது)

٧٩٩ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِزْرَةُ الْمُسْلِمِ إِلَى نِصْفِ السَّاقِ وَلاَ حَرَجَ – أَوْ لاَ جُنَاحَ – فِيمَا بَيْنَهُ وَبَيْنَ الْكَعْبَيْنِ . مَا كَانَ أَسْفَلَ مِنَ الْكَعْبَيْنِ فَهُوَ فِي النَّارِ وَمَنْ جَرَّ إِزَارَهُ بَطَرًا لَمْ يَنْظُرِ اللَّهُ إِلَيْهِ ! " رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**799** அபூஸயீத் அல் குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமின் வேட்டி, பாதி கெரண்டைக்கால் வரை இருக்கும். கணுக்கால் வரை இருந்தாலும் பரவாயில்லை. கணுக்காலையும் விட கீழிறங்கினால், அவர் நரகில்தான் இருப்பார். ஒருவன் தன் வேட்டியை பெருமைக்காக தரைக் கூட்ட இழுத்துச் சென்றால், மறுமை நாளில் அவரை அல்லாஹ் தன் அருட்பார்வையால் பார்க்கமாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4093)**

٨٠٠ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : مَرَرْتُ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ وَفِي إِزَارِي اسْتِرْخَاءٌ فَقَالَ : " يَا عَبْدَ اللَّهِ ارْفَعْ إِزَارَكَ " . فَرَفَعْتُه ثُمَّ قَالَ : " زِدْ " . فَزِدْتُ فَمَا زِلْتُ أَتَحَرَّاهَا بَعْدُ . فَقَالَ بَعْضُ الْقَوْمِ : إِلَى أَيْنَ ؟ ؟ فَقَالَ : إِلَى أَنْصَافِ السَّاقَيْنِ . رَوَاهُ مُسْلِمٌ .

**800** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

என் வேட்டி கீழிறங்கிய நிலையில் நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள், "அப்துல்லாஹ்வே! உம் வேட்டியை உயர்த்துவீராக!" என்று கூறினார்கள். அதை நான் உயர்த்தினேன். "இன்னும் உயர்த்துவீராக!" என்று கூறினார்கள். நான் மேலும் உயர்த்தினேன். அதன்பின் அதையே (அவ்விஷயத்தை) நான் கடைபிடித்து வந்தேன். பின்பு கூட்டத்திலிருந்த சிலர், "எதுவரை உயர்த்த வேண்டும்?" என்று கேட்டனர். "இரு கெண்டைக் கால்களின் பாதிவரை" என்று பதில் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2086)**

٨٠١ – وَعَنْهُ ) ابْنِ عُمَرَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ جَرَّ ثَوْبَهُ خُيَلاَءَ لَمْ يَنْظُرْ اللَّهُ إِلَيْهِ يَوْمَ الْقِيَامَةِ ! " فَقَالَتْ أُمُّ سَلَمَةَ : فَكَيْفَ تَصْنَعُ النِّسَاءُ بِذُيُولِهِنَّ ؟ قَالَ : " يُرْخِينَ شِبْرًا " . قَالَتْ : إِذًا تَنْكَشِفُ أَقْدَامُهُنَّ . قَالَ : " فَيُرْخِينَهُ ذِرَاعًا لاَ يَزِدْنَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**801** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெருமைக்காக தன் ஆடையை ஒருவர் தரையில் இழுத்துச் சென்றால், மறுமையில் அவரை அல்லாஹ் பார்க்க மாட்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது உம்மு ஸலமா (ரழி) அவர்கள், "பெண்கள் தங்களின் கீழாடைகள் விஷயமாக எப்படி நடந்து கொள்வது?" என்று கேட்டார்கள். "அவர்கள் ஒரு சாண் அளவுக்கு (கெண்டைக் கால்களுக்கு கீழாக) இறக்கிக் கட்டுவார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "அவர்களின் பாதங்கள் திறந்து தெரியுமே!" என்று உம்மு ஸலமா (ரழி) கேட்டார்கள். "அவர்கள் அதை ஒரு முழம் அளவுக்கு இறக்கிக் கட்டட்டும். அதற்கும் கீழே கட்ட வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4119. திர்மிதீ:1730. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٢٠ – بَابُ استحبابِ تَرك التَّر فعِ فِي اللِّبَاسِ تَوَاضُعًا قَدْ سَبَقَ فِي بَاب فضل الجُوع وَخُشُونَةِالْعَيْشِ جُمَلٌ تَتَعَلَّقُ بِهذَا الْبَاب

## பாடம் : 120 - பணிவு கருதி உயர்தர ஆடைகளை விட்டு விடுதல்

٨٠٢ – وَعَنْ مُعَاذِ بْنِ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ تَرَكَ اللِّبَاسَ تَوَاضُعًا لِلَّهِ وَهُوَ يَقْدِرُ عَلَيْهِ دَعَاهُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ عَلَى رُءُوسِ الْخَلاَئِقِ حَتَّى يُخَيِّرَهُ مِنْ أَيِّ حُلَلِ الأيمَانِ شَاءَ يَلْبَسُهَا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**802** முஆத் இப்னு அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தனக்கு வசதி இருந்தும் அல்லாஹ்வுக்குப் பணிந்தவராக (உயர்ரக) ஆடை அணிவதை ஒருவர் விட்டு விட்டால், மறுமை நாளில் அவரை அல்லாஹ் அனைத்துப் படைப்புகளின் முன் அழைத்து, ஈமானின் ஆடைகளில் (சுவனத்து ஆடைகளில்) அவர் விரும்புவதை அணிந்திட அவருக்கு வாய்ப்பளிப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2481. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٢١ – بابُ استحباب التو سُّط في اللّباس ولا يقتصر عَلَى مَا يَزْري به لغير حاجة ولا مقصود شرعي

### பாடம் : 121 - நடுத்தர ஆடைகளை அணிவது விரும்பத்தக்கது

٨٠٣ – عَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّه ) عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرٍو ( رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ " إِنَّ اللّٰهَ يُحِبُّ أَنْ يَرَى أَثَرَ نِعْمَتِهِ عَلَى عَبْدِهِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**803** அம்ரு இப்னு ஷுஐப் அவர்கள் தன் பாட்டனார் கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

"தன் அருட்கொடையின் அடையாளம், தன் அடியானிடம் காணப்படுவதை நிச்சயமாக அல்லாஹ் விரும்புகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2819. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٢٢ – بابُ تحريم لباسِ الحَرير على الرّجال وتحريم جلوسهم عليه واستنادهم إليه وجواز لبسه للنساء

### பாடம் : 122 - ஆண்கள் பட்டு ஆடை அணிவதும், அதில் அமர்வதும், சாய்ந்திருப்பதும் கூடாது. பெண்கள் அதை அணிவது கூடும்.

٨٠٤ – عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: " لاَ تَلْبَسُوا الْحَرِيرَ فَإِنَّ مَنْ لَبِسَهُ فِي الدُّنْيَا لَمْ يَلْبَسْهُ فِي الأخِرَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**804** உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பட்(டா)டை அணியாதீர்கள். இவ்வுலகில் அதை அணிந்தவன், மறுமையில் அதை அணியமாட்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5830. முஸ்லிம்:2069)**

٨٠٥ – وَعَنْهُ ) عُمَرَ بْنِ الْخَطَّابِ ( قَالَ : سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ : " إِنَّمَا يَلْبَسُ الْحَرِيرَ مَنْ لاَ خَلاَقَ لَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِلْبُخَارِيِّ : " مَنْ لاَ خَلاَقَ لَهُ فِي الأخِرَةِ " . قَوْلُهُ : " مَنْ لاَ خَلاَقَ لَهُ " : أَيْ لاَ نَصِيبَ لَهُ .

**805** உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நற்பாக்கியம் இல்லாத ஒருவர்தான், (இவ்வுலகில்) பட்(டா)டை அணிவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5835. முஸ்லிம்:2068)**

புகாரியின் மற்றொரு அறிவிப்பில், "மறுமையின் நற்பாக்கியம் இல்லாதவர்தான் பட்டை அணிவார்" என்று உள்ளது)

٨٠٦ –وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ : رَسُولُ اللّٰهِ ﷺ :"مَنْ لَبِسَ الْحَرِيرَ فِي الدُّنْيَا لَمْ يَلْبَسْهُ فِي الأخِرَةِ ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**806** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இவ்வுலகில் பட்(டா)டை அணிந்தவர், மறுமையில் அதை அணியமாட்டார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5832. முஸ்லிம்:2073)**

٨٠٧ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : رَأَيْت رَسُولَ اللَّهِ ﷺ أَخَذَ حَرِيرًا فَجَعَلَهُ فِي يَمِينِهِ وَذَهَبًا فَجَعَلَهُ فِي شِمَالِهِ . ثُمَّ قَالَ : " إِنَّ هَذَيْنِ حَرَامٌ عَلَى ذُكُورِ أُمَّتِي " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**807** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பட்டை எடுத்து, அதனை தமது வலது கையில் வைத்தார்கள். தங்கத்தை எடுத்து தமது இடது கையில் வைத்தார்கள். பின்பு, "நிச்சயமாக, இந்த இரண்டும் என் சமுதாயத்தின் ஆண்களுக்குத் தடை செய்யப்பட்டதாகும்" என்று கூறியதை நான் பார்த்தேன். **(அபூதாவூது:4057)**

٨٠٨ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " حُرِّمَ لِبَاسُ الْحَرِيرِ وَالذَّهَبِ عَلَى ذُكُورِ أُمَّتِي وَأُحِلَّ لِإِنَاثِهِمْ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**808** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் சமுதாயத்தில் உள்ள ஆண்களுக்குப் பட்டு ஆடையும், தங்கமும் தடை செய்யப்பட்டுள்ளது. அவர்களில் பெண்களுக்கு அவை அனுமதிக்கப்பட்டுள்ளது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:1720. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٠٩ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَانَا النَّبِيُّ ﷺ أَنْ نَشْرَبَ فِي آنِيَةِ الذَّهَبِ وَالْفِضَّةِ وَأَنْ نَأْكُلَ فِيهَا وَعَنْ لُبْسِ الْحَرِيرِ وَالدِّيبَاجِ وَأَنْ نَجْلِسَ عَلَيْهِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**809** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தங்கம், வெள்ளிப் பாத்திரங்களில் நாங்கள் பருகுவதற்கும், அதிலே நாங்கள் சாப்பிடுவதற்கும், மேலும் பட்டாடை அணிவதற்கும், அதன்மீது நாங்கள் உட்காருவதற்கும் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்." **(புகாரி:5837)**

## ١٢٣ – بابُ جواز لبس الحرير لمَنْ به حكّة

## பாடம் : 123 - சொறி பிடித்தவர் பட்டாடை அணிவது கூடும்

٨١٠ – عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : رَخَّصَ رَسُولُ اللَّهِ ﷺ لِلزُّبَيْرِ وَعَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا فِي لُبْسِ الْحَرِيرِ لِحِكَّةٍ كَانَتْ بِهِمَا . مُتَّفَقٌ عَلَيْهِ .

**810** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சுபைர் (ரழி) அவர்களுக்கும், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரழி) அவர்களுக்கும் சொறி இருந்ததன் காரணமாக அவ்விருவரும் பட்டு அணிந்து கொள்ள நபி (ஸல்) அவர்கள் அனுமதி வழங்கினார்கள். **(புகாரி:5839. முஸ்லிம்:2076)**

## ١٢٤ – باب النّهي عَنْ افتراشِ جُلود النمور والر كوب عليها

## பாடம் : 124 - புலித்தோலை விரிப்பதும், அதன்மீது உட்கார்ந்து பயணம் செய்வதும் கூடாது.

٨١١ – عَنْ مُعَاوِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَرْكَبُوا الْخزَّ وَلاَ النِّمَارَ " . حَديثٌ حَسَنٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ بِإِسْنَادٍ حَسَنٍ .

**811** முஆவியா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் பட்டு விரிப்பின் மீதும், (புலித்தோல் போன்று) கருப்பு-வெள்ளைக் கோடுகள் போடப்பட்ட விரிப்பின் மீதும் அமர்ந்து சவாரி செய்யாதீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4129. இது "ஹஸன்" என இமாம் அபூதாவூத் கூறுகிறார்கள்)**

٨١٢ – وَعَنْ أَبِي الْمَلِيحِ عَنْ أَبِيه ) أُسَامَةَ بْنِ عُمَيْرٍ ( رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى عَنْ جُلُودِ السِّبَاعِ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَالنَّسَائِيُّ بِأَسَانِيدَ صِحَاحٍ وَفِي رِوَايَةٍ لِلتِّرْمِذِيِّ : نَهَى عَنْ جُلُودِ السِّبَاعِ أَنْ تُفْتَرَشَ .

**812** அபுல் மலீஹ் அவர்கள் தன் தந்தை கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

மிருகங்களின் தோல்களை (விரிப்பாக பயன்படுத்த) நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

**(அபூதாவூது:4132. திர்மிதி:1771)**

இது "முர்ஸல்" வகை ஹதீஸாகும். (திர்மிதீயின் அறிவிப்பில், "மிருகங்களின் தோல்களை விரிப்பாக பயன்படுத்திடத் தடை செய்தார்கள்" என்றுள்ளது)

## ١٢٥ – بابُ ما يقُولُ إذَا لَبِسَ ثَوْبًا جَديدًا

## பாடம் : 125 - புதிய ஆடை, புதிய செருப்பு போன்றவற்றை அணிபவர் கூறவேண்டியது

٨١٣ – عَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا اسْتَجَدَّ ثَوْبًا سَمَّاهُ بِاسْمِه – عِمَامَةً أَوْ قَمِيصًا أَوْ رِدَاءً – يَقُولُ : " اللَّهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسَوْتَنِيه أَسْأَلُكَ خَيْرَهُ وَخَيْرَ مَا صُنِعَ لَهُ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّه وَشَرِّ مَا صُنِعَ لَهُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**813** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தலைப்பாகை, சட்டை, மேலாடை என குறிப்பிடத்தக்க ஆடையை புதிதாக நபி (ஸல்) அவர்கள் அணிந்தால், "அல்லாஹும்ம லகல் ஹம்து அன்த கஸவ் தனீஹி, அஸ்அலுக கய்ரஹு, வகய்ர மா ஸுனிஅலஹு, வஅஊது பிக மின் ஷர்ரிஹி வஷர்ர மாஸுனிஅ லஹு" என்று கூறுவார்கள்.

**(அபூதாவூது:4020. திர்மிதி:1767. இது "ஹஸன்" என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்: இறைவா! புகழ் அனைத்தும் உனக்கே! நீயே புதிய ஆடையை எனக்கு அணிவித்தாய்! இதன் நன்மையையும், இது செய்யப்பட்டதன் நன்மையையும் உன்னிடம் கேட்கிறேன். மேலும் அதன் தீமை மற்றும் அது செய்யப்பட்டதின் தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

## ١٢٦ – بَاب استحباب الابتداء باليَمين في اللّباس

## பாடம் : 126 - ஆடை அணியும் போது வலதுபக்கம் முதலில் அணிவது விரும்பத்தக்கதாகும்

இந்த பாடத்தின் நோக்கம் பற்றிய ஹதீஸ்கள் முந்திவிட்டன. அதிலே சரியான ஹதீஸ்களை நிறைய நாம் கூறியுள்ளோம்.

## ١٢٧ – باب ما يقوله عند النوم

## பாடம் : 127 - தூக்கத்தின் ஒழுங்குகள்

٨١٤ – عَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا أَوَى إِلَى فِرَاشِهِ نَامَ عَلَى شِقِّهِ الأَيْمَنِ ثُمَّ قَالَ : " اللَّهُمَّ أَسْلَمْتُ نَفْسِي إِلَيْكَ وَوَجَّهْتُ وَجْهِي إِلَيْكَ وَفَوَّضْتُ أَمْرِي إِلَيْكَ وَأَلْجَأْتُ ظَهْرِي إِلَيْكَ رَغْبَةً وَرَهْبَةً إِلَيْكَ لاَ مَلْجَأَ وَلاَ مَنْجَا مِنْكَ إِلاَّ إِلَيْكَ . آمَنْتُ بِكِتَابِكَ الَّذِي أَنْزَلْتَ وَنَبِيِّكَ الَّذِي أَرْسَلْتَ " . رَوَاهُ الْبُخَارِيُّ بِهَذَا اللَّفْظِ فِي كِتَابِ الأَدَبِ مِنْ صَحِيحِهِ .

**814** பராஃஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் படுக்கைக்கு வந்தால் வலது புறத்தில் (படுத்து) உறங்குவார்கள். பின்பு "அல்லாஹும்ம அஸ்லம்து நஃப்ஸீ இலய்க, வவஜ்ஜஹ்து வஜ்ஹீ இலய்க, வ ஃபவ்வழ்து அம்ரீ இலய்க, வஅல்ஜஹ்து ளஹ்ரீ இலய்க, ரஹ்ப தன் வரஹ்பதன் இலய்க, லா மல்ஜஅ வலா மன்ஜா இல்லா இலைக, ஆமன்து பிகிதாபிகல் லஃதீ அன்ஸல்த வநபிய்யிக ல்லஃதீ அர்ஸல்த" என்று கூறுவார்கள். **(புகாரி:6315)**

**துஆவின் பொருள்: என் இறைவனே! என்னை உன்னிடம் ஒப்படைக்கிறேன். என் முகத்தை உன் பக்கமே முன்னோக்குகிறேன். என் காரியத்தை உன்னிடமே ஒப்படைக்கிறேன். என் முதுகை உன் பக்கமே ஒதுங்கச் செய்கிறேன். உன்னை ஆதரவு வைத்தவனாக, அஞ்சியவனாகவே (இவ்வாறு செய்தேன்). உன்னிடமே தவிர எனக்கு எந்த ஒதுங்குமிடமோ, பாதுகாப்போ கிடையாது. நீ இறக்கியருளிய உன் வேதத்தையும், நீ அனுப்பிய உன் நபியையும் நான் ஈமான் கொண்டேன்.**

٨١٥ – وَعَنْهُ ) الْبَرَاءِ بْنِ عَازِبٍ ( قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا أَتَيْتَ مَضْجَعَكَ فَتَوَضَّأْ وُضُوءَكَ لِلصَّلاَةِ ثُمَّ اضْطَجِعْ عَلَى شِقِّكَ الأَيْمَنِ وَقُلْ " وَذَكَرَ نَحْوَهُ وَفِيهِ " وَاجْعَلْهُنَّ آخِرَ مَا تَقُولُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**815** பராஃஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உன் படுக்கைக்கு நீ வந்தால், தொழுகைக்கு நீ உளூச் செய்வது போல் உளூச் செய்துகொள். பின்பு உன் வலது புறமாகப் படு. பின்பு (மேற்கண்ட) துஆவைக் கூறு. அதையே நீ பேசுவதில் கடைசி யானதாக ஆக்கிக் கொள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6311. முஸ்லிம்:2710)**

٨١٦ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ يُصَلِّي مِنَ اللَّيْلِ إِحْدَى عَشْرَةَ رَكْعَةً فَإِذَا طَلَعَ الْفَجْرُ صَلَّى رَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ ثُمَّ اضْطَجَعَ عَلَى شِقِّهِ الأَيْمَنِ حَتَّى يَجِيءَ الْمُؤَذِّنُ فَيُؤْذِنُهُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**816** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவில் பதினொரு ரக்அத் தொழுபவர்களாக இருந்தார்கள். சுபுஹ் நேரம் வந்து விட்டால், சிறிய அளவில் இரண்டு ரக்அத் தொழுவார்கள். பின்பு பாங்கு கூறுபவர் வந்து, அவர்களிடம் அறிவிப்புச் செய்யும் வரை தன் வலது புறமாக ஒருக்கணித்துப் படுப்பார்கள். பின்னர் பாங்கு கூறுபவர் வந்து அவர்களுக்கு அறிவிப்புக் கொடுப்பார். **(புகாரி:6310 முஸ்லிம்:736)**

٨١٧ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ إِذَا أَخَذَ مَضْجَعَهُ مِنَ اللَّيْلِ وَضَعَ يَدَهُ تَحْتَ خَدِّهِ ثُمَّ يَقُولُ : " اللّٰهُمَّ بِاسْمِكَ أَمُوتُ وَأَحْيَا " . وَإِذَا اسْتَيْقَظَ قَالَ : " الْحَمْدُ لِلّٰهِ الَّذِي أَحْيَانَا مِنْ بَعْدِ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُورُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**817** ஹுதைபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவில் தன் படுக்கைக்கு வந்து, தன் கன்னத்தின் கீழ் கையை வைப்பார்கள். பின்பு, "அல்லாஹும்ம பிஸ்மிக்க அமூத்து வஅஹ்யா" என்று கூறுவார்கள். விழித்துவிட்டால், "அல்ஹம்து லில்லாஹில்லஃதீ அஹ்யானா பஹ்தமா அமாதனா வஇலய்ஹின் நுஷூர்" என்று கூறுவார்கள். **(புகாரி:6314)**

**தூங்கும் முன் துஆவின் பொருள்: இறைவனே! உன் திருப்பெயராலேயே தூங்குகிறேன். உன் திருப்பெயராலேயே விழிப்பேன்.**

**எழுந்தபின் துஆவின் பொருள்: எங்களை உறங்கச் செய்தபின் எங்களை விழிக்கச் செய்த, அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். அவனிடமே திரும்புதல் உள்ளது.**

٨١٨ – وَعَنْ يَعِيشَ بْنِ طِخْفَةَ الْغِفَارِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : قَالَ أَبِي : بَيْنَمَا أَنَا مُضْطَجِعٌ فِي الْمَسْجِدِ عَلَى بَطْنِي إِذَا رَجُلٌ يُحَرِّكُنِي بِرِجْلِهِ فَقَالَ : " إِنَّ هٰذِهِ ضِجْعَةٌ يَبْغَضُهَا اللّٰهُ " . قَالَ : فَنَظَرْتُ فَإِذَا رَسُولُ اللّٰهِ ﷺ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**818** யஈஸ் இப்னு திக்ஃபா அல் கிஃபாரீ அவர்கள் தன் தந்தை கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

நான் பள்ளிவாசலில் குப்புறப்படுத்திருந்தேன். அப்போது என்னை தம் காலால் ஒருவர் அசைத்து, "இவ்வாறு படுப்பதால் அல்லாஹ் கோபப்படுகிறான்" என்று கூறினார்கள். நான் விழித்து யார் என்று பார்த்தேன். அங்கு நபி (ஸல்) அவர்கள் இருந்தார்கள். **(அபூதாவூது:5040)**

٨١٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنْ رَسُولِ اللّٰهِ ﷺ قَالَ : " مَنْ قَعَدَ مَقْعَدًا لَمْ يَذْكُرِ اللّٰهَ تَعَالَى فِيهِ كَانَتْ عَلَيْهِ مِنَ اللّٰهِ تَعَالَى تِرَةٌ وَمَنِ اضْطَجَعَ مَضْجَعًا لاَ يَذْكُرُ اللّٰهَ تَعَالَى فِيهِ كَانَتْ عَلَيْهِ مِنَ اللّٰهِ تِرَةٌ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ . " التِّرَةُ " بِكَسْرِ التَّاءِ الْمُثَنَّاةِ مِنْ فَوْقُ وَهِيَ النَّقْصُ وَقِيلَ : التَّبِعَةُ .

**819** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் ஒரு இடத்தில் அமர்ந்து, அந்த இடத்தில் அல்லாஹ்வை நினைவுகூரவில்லையானால், அவருக்கு அல்லாஹ்விடமிருந்து இழப்பு ஏற்படும். மேலும் அல்லாஹ்வை நினைவுகூராமல் ஒருவர் படுத்தால் அவருக்கும் அல்லாஹ்விடமிருந்து இழப்பு ஏற்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4856)**

## ١٢٨ – بابُ جَواز الاستِلْقاء عَلَى القَفَا ووضع إِحْدَى الرِّجْلَيْنِ عَلَى الأُخْرَى إِذَا لَم يَخف انكشاف العورة وجواز القعود متربعًا ومحتبيًا

## பாடம் : 128 - மல்லாந்து படுப்பதும், மறைவுப்பகுதி வெளியாகாது என்றிருந்தால் கால்மேல் கால் போட்டுப்படுப்பதும் கூடும். சம்மணமிட்டு அமர்வதும், முழங்கால்களை கட்டிக் கொண்டு அமர்வதும் கூடும்

٨٢٠ – عَنْ عَبْدِ اللّهِ بْنِ يَزِيدَ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّهُ رَأَى رَسُولَ اللّهِ ﷺ مُسْتَلْقِيًا فِي الْمَسْجِدِ وَاضِعًا إِحْدَى رِجْلَيْهِ عَلَى الأُخْرَى . مُتَّفَقٌ عَلَيْهِ .

**820** அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (ஒருமுறை) பள்ளிவாசலில் தன் கால்மேல் காலைப் போட்டவர்களாக மல்லாந்து படுத்திருந்ததை நான் பார்த்தேன். **(புகாரி:6287. முஸ்லிம்:2100)**

٨٢١ – وَعَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ إِذَا صَلَّى الْفَجْرَ تَرَبَّعَ فِي مَجْلِسِهِ حَتَّى تَطْلُعَ الشَّمْسُ حَسْنَاءَ . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ بِأَسَانِيدَ صَحِيحَةٍ .

**821** ஜாபிர் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சுபுஹ் தொழுகையைத் தொழுதால், சூரியன் தெளிவாக உதயமாகும் வரை அந்த இடத்திலேயே சம்மணமிட்டு அமர்ந்திருப்பார்கள். **(அபூதாவூது:4850)**

٨٢٢ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللّهُ عَنْهُمَا قَالَ : رَأَيْتُ رَسُولَ اللّهِ ﷺ بِفِنَاءِ الْكَعْبَةِ مُحْتَبِيًا بِيَدَيْهِ هَكَذَا وَوَصَفَ بِيَدَيْهِ الاحْتِبَاءَ وَهُوَ الْقُرْفُصَاءُ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**822** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் கஃபாவின் முற்றத்தில் தங்கள் கைகளால் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்ததை நான் பார்த்தேன். (அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள் தங்களின் இரு கரங்களைக் கொண்டு 'இஹ்திபா' எனப்படும் அவ்விருப்பை செய்து காண்பித்தார்கள்) **(புகாரி:6272)**

٨٢٣ – وَعَنْ قَيْلَةَ بِنْتِ مَخْرَمَةَ رَضِيَ اللّهُ عَنْهَا قَالَتْ : رَأَيْتُ النَّبِيَّ ﷺ وَهُوَ قَاعِدٌ الْقُرْفُصَاءَ فَلَمَّا رَأَيْتُ رَسُولَ اللّهِ ﷺ الْمُتَخَشِّعَ فِي الْجِلْسَةِ أُرْعِدْتُ مِنَ الْفَرَقِ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ .

**823** கய்லா பின்த் மக்ரமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முழங்கால்களைக் கைகளால் கட்டிக் கொண்டு நபி (ஸல்) அவர்கள் அமர்ந்திருப்பதை நான் பார்த்தேன். பணிவாக உட்கார்ந்திருந்த நபி (ஸல்) அவர்களை நான் பார்த்தபோது, பயந்து நடுங்கி விட்டேன். **(அபூதாவூது:4847. திர்மிதி:2814. இதில் யார் என்றே தெரியாதவரும் இடம் பெறுகிறார்)**

٨٢٤ – وَعَنِ الشَّرِيدِ بْنِ سُوَيْدٍ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : مَرَّ بِي رَسُولُ اللّهِ ﷺ وَأَنَا جَالِسٌ هَكَذَا وَقَدْ وَضَعْتُ يَدِي الْيُسْرَى خَلْفَ ظَهْرِي وَاتَّكَأْتُ عَلَى أَلْيَةِ يَدِي فَقَالَ : " أَتَقْعُدُ قِعْدَةَ الْمَغْضُوبِ عَلَيْهِمْ ! " رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**824** ஷரீத் இப்னு சுவைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என் முதுகுப்பின்னே இடது கையை வைத்து, என் மற்றொரு கையின் மேல்பகுதியில் சாய்ந்து நான் உட்கார்ந்திருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் என் அருகில் நடந்து சென்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இறைவனின் கோபத்திற்கு ஆளானவர்களின் இருப்பாக நீ இருக்கிறாயா?" என்று (என்னிடம்) கேட்டார்கள். **(அபூதாவூது:4848)**

## ١٢٩ - بابُ آداب المجلس والجَليس

## பாடம் : 129 - சபை மற்றும் சபையில் இருப்போரின் ஒழுங்குகள்

٨٢٥ - عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يُقِيمَنَّ أَحَدُكُمْ رَجُلاً مِنْ مَجْلِسِهِ ثُمَّ يَجْلِسُ فِيهِ وَلَكِنْ تَوَسَّعُوا وَتَفَسَّحُوا " . وَكَانَ ابْنُ عُمَرَ إِذَا قَامَ لَهُ رَجُلٌ مِنْ مَجْلِسِهِ لَمْ يَجْلِسْ فِيهِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**825** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் சபையில் அமர்ந்திருப்பவரை எழுப்பி, அந்த இடத்தில் அவர் உட்கார வேண்டாம். எனினும் நீங்கள் விசாலமாக்குங்கள் (நெருக்கி அமர்ந்து, வந்தவருக்கு இடம் தாருங்கள்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள் தமக்காக யாராவது தமது இருப்பிடத்திலிருந்து எழுந்து அவருக்கு இடம் தந்தால், அந்த இடத்தில் அவர்கள் உட்கார மாட்டார்கள்) **(புகாரி:6270. முஸ்லிம்:2177)**

٨٢٦ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا قَامَ أَحَدُكُمْ مِنْ مَجْلِسٍ ثُمَّ رَجَعَ إِلَيْهِ فَهُوَ أَحَقُّ بِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**826** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் ஒரு சபையில் இருந்து எழுந்து, பின்பு (அதே இடத்தில் உட்கார) மீண்டும் வந்தால், அவரே அதற்கு மிகத் தகுதியானவர் ஆவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2179)**

٨٢٧ - وَعَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كُنَّا إِذَا أَتَيْنَا النَّبِيَّ ﷺ جَلَسَ أَحَدُنَا حَيْثُ يَنْتَهِي . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**827** ஜாபிர் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தால், எங்களில் ஒருவர் சபையின் கடைசியில் (காலியாக உள்ள இடத்தில்) உட்கார்ந்து கொள்வார். மக்களைத் தாண்டிக் கொண்டு சபையின் உட்பகுதிக்கு செல்ல மாட்டார். (இதுவே சபையின் ஒழுங்காகும்.)

**(அபூதாவூது:4825. திர்மிதீ:2725. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையில் ஷரீக் இப்னு அப்துல்லாஹ் என்ற ஞாபக சக்தி குறைந்தவர் இடம் பெறுகிறார்)**

٨٢٨ - وَعَنْ أَبِي عَبْدِ اللَّهِ سَلْمَانَ الْفَارِسِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ " لاَ يَغْتَسِلُ رَجُلٌ يَوْمَ الْجُمُعَةِ وَيَتَطَهَّرُ مَا اسْتَطَاعَ مِنْ طُهْرٍ وَيَدَّهِنُ مِنْ دُهْنِهِ أَوْ يَمَسُّ مِنْ طِيبِ بَيْتِهِ ثُمَّ يَخْرُجُ فَلاَ يُفَرِّقُ بَيْنَ اثْنَيْنِ ثُمَّ يُصَلِّي مَا كُتِبَ لَهُ ثُمَّ يُنْصِتُ إِذَا تَكَلَّمَ الإِمَامُ إِلاَّ غُفِرَ لَهُ مَا بَيْنَهُ وَبَيْنَ الْجُمُعَةِ الأُخْرَى " . رَوَاهُ الْبُخَارِيُّ.

**828** அபூ அப்துல்லாஹ் ஸல்மானுல் ஃபார்ஸீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் ஜும்ஆ நாளன்று (வெள்ளிக்கிழமை) குளித்து, இயன்ற அளவுக்கு தன்னை சுத்தமாக்கி, எண்ணெய் தேய்த்து, தன் வீட்டில் உள்ள நறுமணம் பூசி, பின்பு வீட்டை விட்டு வெளியேறி, (பள்ளியில் அமர்ந்துள்ள) இரு நபர்களுக்கிடையே இடைவெளி எதையும் ஏற்படுத்தாமல், பின்பு தன் மீது கடமையாக உள்ள தொழுகையைத் தொழுது, பின்பு இமாம் உரை நிகழ்த்தும் போது மவுனமாக இருந்து கேட்டால், அவரின் இந்த ஜும்ஆவிற்கும், அதை அடுத்து வரும் ஜும்ஆவிற்கும் இடையே உள்ள குற்றங்களை (அல்லாஹ்) மன்னிக்கிறான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
**(புகாரி:883)**

٨٢٩ – وَعَنْ عَمْرِو بْنِ شُعَيْب عَنْ أَبِيه عَنْ جَدِّه ) عَبْدِ اللّهِ بْنِ عَمْرو ( رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّهِ ﷺ قَالَ : " لاَ يَحِلُّ لِرَجُلٍ أَنْ يُفَرِّقَ بَيْنَ اثْنَيْنِ إلاَّ بِإِذْنِهِمَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . وَفِي رِوَايَةٍ لأَبِي دَاوُدَ : " لاَ يَجْلِسُ بَيْنَ رَجُلَيْنِ إلاَّ بِإِذْنِهِمَا " .

**829** அம்ரு இப்னு ஷுஐபு அவர்கள் தன் பாட்டனார் கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு பேருக்கு மத்தியில் அவர்களின் அனுமதியின்றி பிரிப்பது (இரண்டு பேரும் பேசிக் கொண்டிருக்கும் பொழுது அவர்களுடன் சென்று அமர்வது, நிற்பது போன்றவை) ஒரு மனிதருக்கு ஆகுமானதல்ல" என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(அபூதாவூது:4845. திர்மிதீ:2752. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٣٠ – وَعَنْ حُذَيْفَةَ بْنِ الْيَمَانِ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّهِ ﷺ لَعَنَ مَنْ جَلَسَ وَسَطَ الْحَلْقَةِ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ . وَرَوَى التِّرْمِذِيُّ عَنْ أَبِي مِجْلَزٍ أَنَّ رَجُلاً قَعَدَ وَسَطَ حَلْقَةٍ فَقَالَ حُذَيْفَةُ : مَلْعُونٌ عَلَى لِسَانِ مُحَمَّدٍ ﷺ – أَوْ لَعَنَ اللّهُ عَلَى لِسَانِ مُحَمَّدٍ ﷺ – مَنْ جَلَسَ وَسَطَ الْحَلْقَةِ . قَالَ التِّرْمِذِيُّ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**830** ஹுதைஃபா இப்னு யமான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(சபையின்) வட்டத்திற்கு நடுவில் சென்று உட்காருபவரை நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்.
**(அபூதாவூது:4826)**

அபூமிஜ்லஸ் என்பார் கூறுகிறார்கள்:

ஒரு வட்டமான (சபையின்) நடுவில் ஒருவர் உட்கார்ந்தார். அப்போது ஹுதைபா (ரழி) அவர்கள், "வட்டவடிவிலான சபை நடுவில் உட்காரும் ஒருவர், முஹம்மது (ஸல்) அவர்களின் நாவால் சபிக்கப்பட்டவராவார். அல்லது முஹம்மது (ஸல்) அவர்களின் நாவின் மூலம் அல்லாஹ்வினால் சபிக்கப்பட்டவராவார்" என்று கூறினார்கள்.
**(திர்மிதீ:2753. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசையின் தொடர் அறுபட்டு உள்ளது)**

٨٣١ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللّهِ ﷺ يَقُولُ : " خَيْرُ الْمَجَالِسِ أَوْسَعُهَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ .

**831** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சபைகளில் சிறந்தது, (நெருக்கி அமர்ந்து) விசாலமாக உள்ளது தான்" என்று நபி (ஸல்) கூற நான் கேட்டுள்ளேன்.
**(அபூதாவூது:4820)**

٨٣٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ جَلَسَ فِي مَجْلِسٍ فَكَثُرَ فِيهِ لَغَطُهُ فَقَالَ قَبْلَ أَنْ يَقُومَ مِنْ مَجْلِسِهِ ذَلِكَ : سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ إِلاَّ غُفِرَ لَهُ مَا كَانَ فِي مَجْلِسِهِ ذَلِكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**832** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

யார் ஒருவர் சபையில்அமர்ந்து, அதில் அவரின் கூச்சல்கள் அதிகம் ஏற்பட்டு, பின்னர் அந்தச் சபையிலிருந்து அவர் எழும்முன்பு, "சுப்ஹான கல்லாஹும்ம வபிஹம்திக, அஷ்ஹது அன் லாயிலாஹ இல்லா அன்த அஸ்தஃபிருக்கல்லாஹும்ம வஅதூபு இலய்க" என்று கூறினால், அந்த சபையில் ஏற்பட்ட (தவறான)வைகளை அல்லாஹ் அவருக்கு மன்னித்துவிடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:3433. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்: இறைவனே! உன்னை தூய்மையாக்குகிறேன். உனக்கே புகழ் அனைத்தும். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை என சாட்சி கூறுகிறேன். உன்னிடமே பாவமன்னிப்புக் கோருகிறேன். உன் பக்கமே மீளுகிறேன்.**

٨٣٣ – وَعَنْ أَبِي بَرْزَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَقُولُ بِأَخَرَةٍ إِذَا أَرَادَ أَنْ يَقُومَ مِنَ الْمَجْلِسِ : " سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ . أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ " . فَقَالَ رَجُلٌ : يَا رَسُولَ اللَّهِ إِنَّكَ لَتَقُولُ قَوْلاً مَا كُنْتَ تَقُولُهُ فِيمَا مَضَى . قَالَ : " ذَلِكَ كَفَّارَةٌ لِمَا يَكُونُ فِي الْمَجْلِسِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَرَوَاهُ الْحَاكِمُ أَبُو عَبْدِ اللَّهِ فِي " الْمُسْتَدْرَكِ " مِنْ رِوَايَةِ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا وَقَالَ :صَحِيحُ الأَسْنَادِ.

**833** அபூ பர்ஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சபையில் இருந்து எழுந்திட விரும்பினால் இறுதியாக, "சுப்ஹான கல்லாஹும்ம வபிஹம்திக அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லா அன்த அஸ்தஃபிருக்க வஅதூபு இலய்க" என்று கூறுவார்கள். அப்போது ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! முடிந்து விட்ட ஒரு காரியத்தில் இதுவரை நீங்கள் கூறாத ஒன்றைக் கூறுகிறீர்களே?" என்று கேட்டார். "சபையில் ஏற்பட்ட (தவறான)வைகளுக்கு இது பரிகாரமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4859)**

٨٣٤ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَلَّمَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَقُومُ مِنْ مَجْلِسٍ حَتَّى يَدْعُوَ بِهَؤُلاَءِ الدَّعَوَاتِ : " اللَّهُمَّ اقْسِمْ لَنَا مِنْ خَشْيَتِكَ مَا تَحُولُ بِهِ بَيْنَنَا وَبَيْنَ مَعْصِيَتِكَ وَمِنْ طَاعَتِكَ مَا تُبَلِّغُنَا بِهِ جَنَّتَكَ وَمِنَ الْيَقِينِ مَا تُهَوِّنُ بِهِ عَلَيْنَا مَصَائِبَ الدُّنْيَا اللَّهُمَّ مَتِّعْنَا بِأَسْمَاعِنَا وَأَبْصَارِنَا وَقُوَّتِنَا مَا أَحْيَيْتَنَا وَاجْعَلْهُ الْوَارِثَ مِنَّا وَاجْعَلْ ثَأْرَنَا عَلَى مَنْ ظَلَمَنَا وَانْصُرْنَا عَلَى مَنْ عَادَانَا وَلاَ تَجْعَلْ مُصِيبَتَنَا فِي دِينِنَا وَلاَ تَجْعَلِ الدُّنْيَا أَكْبَرَ هَمِّنَا وَلاَ مَبْلَغَ عِلْمِنَا وَلاَ تُسَلِّطْ عَلَيْنَا مَنْ لاَ يَرْحَمُنَا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**834** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சபையில் இருந்து எழுந்தால் (கீழ்கண்ட) துஆக்களை ஓதாமல் இருப்பது குறைவாக இருந்தது. "அல்லாஹும் மக்ஸிம் லனா மின் கஷ்யதிக மா தஹுலுபிஹி பய்னனா வபய் மஃஸியதிக, வமின் தாஅதிக மா துபல்லிஹுனா பிஹி ஜன்னதக்க, வமினல் யகீனி மாதுஹவ்வினு அலய்னா மஸா இபத்துன்யா, அல்லாஹும்ம மத்திஃனா பிஅஸ்மாஇனா, வஅப்ஸாரினா, வகுவ்வத்தினா மாஅஹ்யய்தனா வஜ்அல்ஹுல் வாரித மின்னா, வஜ்அல் ஸஃரனா அலாமன் ளலமனா, வன்சுர்னா அலா மன்ஆதானா வலாதஜ்அல் முஸீபதினா ஃபீதினினா வலா தஜ்அலித் துன்யா அக்பர ஹம்மினா வலா மப்லங இல்மினா, வலா துஸல்லித் அலய்னா மன்லா யர்ஹமுனா"

**(திர்மிதீ:3502. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள் : இறைவனே! எங்களுக்கும், உனக்கு குற்றமிழைப்பதற்கும் நடுவே தடுப்பாக இருந்திட உன் அச்சத்திலிருந்து எங்களுக்குப் பங்கீடு செய்து தருவாயாக! உன் சுவனத்தில் எங்களைக் கொண்டு சேர்த்திடும் வகையில் உன் வழிபாட்டிலும் எங்களுக்கு பங்கீடு வழங்குவாயாக. உலகின் சோதனைகளை எங்களுக்கு இலகுவாக ஆக்கிட மன உறுதியிலும் எங்களுக்கு பங்கீடு செய்து தருவாயாக! இறைவனே! எங்கள் கேள்விகளையும், எங்களின் பார்வைகளையும், எங்கள் சக்திகளையும், நாங்கள் உயிருடன் இருக்கும் கால மெல்லாம் எங்களுக்குப் பயனுள்ளதாக ஆக்குவாயாக! அவற்றை எங்களுக்கு (எங்கள் வாழ்வின் முடிவு வரை) நிலைத்தவையாக ஆக்கித் தருவாயாக! எங்களுக்கு அநீதம் செய்பவருக்குப் பகரத்தை ஏற்படுத்துவாயாக! எங்கள் விரோதிகளுக்கு எதிராக, எங்களுக்கு உதவி செய்வாயாக! எங்கள் மார்க்கத்தில் எங்களுக்குச் சோதனையை ஏற்படுத்தி விடாதே! இந்த உலகை எங்களுக்கு மிகப் பெரிய கவலையாகவோ, எங்கள் அறிவின் எல்லையாகவோ ஆக்கிவிடாதே! (உலக விஷயங்களுக்காகவே கவலைப்பட்டுக் கொண்டிருக்கக் கூடியவர்களாகவோ, இம்மையை மட்டுமே அறிந்து, மறுமையை அறியாமலிருக்கக் கூடியவர்களாகவோ எங்களை ஆக்கி விடாதே!) எங்கள் மீது இரக்கம் கொள்ளாதவர்களை எங்களை ஆள்பவர்களாக ஆக்கிவிடாதே!**

٨٣٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَا مِنْ قَوْمٍ يَقُومُونَ مِنْ مَجْلِسٍ لاَ يَذْكُرُونَ اللّٰهَ تَعَالَى فِيهِ إِلاَّ قَامُوا عَنْ مِثْلِ جِيفَةِ حِمَارٍ وَكَانَ لَهُمْ حَسْرَةً !" رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ.

**835** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வை நினைவுகூராதவர்களாக ஒரு கூட்டம் சபையை விட்டு எழுந்தால், அவர்கள் செத்த கழுதையின் அருகில் இருந்து கைசேதத்துடன் எழுந்தவர்களைப் போன்றவராவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4855)**

٨٣٦ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَا جَلَسَ قَوْمٌ مَجْلِسًا لَمْ يَذْكُرُوا اللّٰهَ تَعَالَى فِيهِ وَلَمْ يُصَلُّوا عَلَى نَبِيِّهِمْ فِيهِ إِلاَّ كَانَ عَلَيْهِمْ تِرَةٌ ; فَإِنْ شَاءَ عَذَّبَهُمْ وَإِنْ شَاءَ غَفَرَ لَهُمْ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**836** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு சபையில் அல்லாஹ்வை நினைவுகூராமலும், அவர்களின் நபியின் மீது "ஸலவாத்து" (அருள் வேண்டி துஆ) கூறாமலும் ஒரு கூட்டம் அமர்ந்திருந்தால், அவர்களுக்கு இழப்பு ஏற்படாமல் இருப்பதில்லை. அவன் நாடினால் அவர்களைத் தண்டிப்பான். அவன் நாடினால் அவர்களை மன்னிப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதி:3380. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். "தவ்மஆ" என்பவரின் அடிமை ஸாலிஹ் என்ற பலவீனர் இதில் இடம் பெறுகிறார்)**

٨٣٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ رَسُولِ اللّٰهِ ﷺ قَالَ : " مَنْ قَعَدَ مَقْعَدًا لَمْ يَذْكُرِ اللّٰهَ تَعَالَى فِيهِ كَانَتْ عَلَيْهِ مِنَ اللّٰهِ تِرَةٌ وَمَنِ اضْطَجَعَ مَضْجَعًا لاَ يَذْكُرُ اللّٰهَ تَعَالَى فِيهِ كَانَتْ عَلَيْهِ مِنَ اللّٰهِ تِرَةٌ " . رَوَاهُ أَبُو دَاوُدَ . وَقَدْ سَبَقَ قَرِيبًا وَشَرَحْنَا " التِّرَةَ " فِيهِ.

**837** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் ஒரு இடத்தில் அமர்ந்து, அந்த இடத்தில் அல்லாஹ்வை நினைவுகூரவில்லையானால், அவருக்கு அல்லாஹ்விடமிருந்து இழப்பு ஏற்படும். மேலும் அல்லாஹ்வை நினைவுகூராமல் ஒருவர் படுத்தால், அவருக்கும் அல்லாஹ்விடமிருந்து இழப்பு ஏற்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4856)**

## ١٣٠ - بابُ الرُّؤيَا ومَا يتعلّق بهَا

## பாடம் : 130 - கனவு சம்பந்தப்பட்டவை

قَالَ اللّهُ تَعَالَى : وَمِنْ آيَاتِهِ مَنَامُكُمْ بِاللَّيْلِ وَالنَّهَارِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இரவிலும், பகலிலும் (நீங்கள் காணும்) கனவுகள், அவனது அத்தாட்சிகளில் உள்ளதாகும். (30:23)*

٨٣٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللّهِ ﷺ يَقُولُ : " لَمْ يَبْقَ مِنَ النُّبُوَّةِ إلاَّ الْمُبَشِّرَاتُ " . قَالُوا : وَمَا الْمُبَشِّرَاتُ ؟ قَالَ : " الرُّؤْيَا الصَّالِحَةُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**838** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபித்துவத்தில் சுபச்செய்திக் கூறுபவற்றைத் தவிர வேறு மீதம் இல்லை" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "சுபச்செய்தி கூறுபவை என்றால் என்ன?" என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். "நல்ல கனவு" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6990)**

٨٣٩ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إذَا اقْتَرَبَ الزَّمَانُ لَمْ تَكَدْ رُؤْيَا الْمُؤْمِنِ تَكْذِبُ وَرُؤْيَا الْمُؤْمِنِ جُزْءٌ مِنْ سِتَّةٍ وَأَرْبَعِينَ جُزْءًا مِنَ النُّبُوَّةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " أَصْدَقُكُمْ رُؤْيَا أَصْدَقُكُمْ حَدِيثًا " .

**839** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(கியாமத் நாளின்) காலம் நெருங்கிவிட்டால் முஃமினின் கனவு பொய்யாக ஆகாது. முஃமினின் கனவு, நபித்து வத்தின் நாற்பத்தி ஆறு பங்குகளில் ஒரு பங்காகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7017. முஸ்லிம்:2263)**

"உங்களில் கனவு காண்பதில் உண்மையாக இருப்பவர், பேசுவதிலும் உங்களில் உண்மையாளராக இருப்பார்" என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

٨٤٠ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللّهِ ﷺ : " مَنْ رَآنِي فِي الْمَنَامِ فَسَيَرَانِي فِي الْيَقَظَةِ - أَوْ كَأَنَّمَا رَآنِي فِي الْيَقَظَةِ - لاَ يَتَمَثَّلُ الشَّيْطَانُ بِي " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**840** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் கனவில் என்னைக் கண்டால், நேரிலும் (மறுமையில்) என்னைப் பார்ப்பார். அல்லது என்னை நேரில் பார்த்தவர் போலாவார். ஷைத்தான் என்னை போன்ற தோற்றத்தில் வரமாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6993. முஸ்லிம்:2266)**

٨٤١ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ يَقُولُ : " إذَا رَأَى أَحَدُكُمْ رُؤْيَا يُحِبُّهَا فَإِنَّمَا هِيَ مِنَ اللّهِ تَعَالَى فَلْيَحْمَدِ اللّهَ عَلَيْهَا وَلْيُحَدِّثْ بِهَا " . وَفِي رِوَايَةٍ : " فَلاَ يُحَدِّثْ بِهَا إلاَّ مَنْ يُحِبُّ ; وَإِذَا رَأَى غَيْرَ ذَلِكَ مِمَّا يَكْرَهُ فَإِنَّمَا هِيَ مِنَ الشَّيْطَانِ فَلْيَسْتَعِذْ مِنْ شَرِّهَا وَلاَ يَذْكُرْهَا لأَحَدٍ فَإِنَّهَا لاَ تَضُرُّهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**841** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் தான் விரும்பும் (நல்ல) கனவைக் கண்டால், அது அல்லாஹ்விடமிருந்து வந்தவையாகும். இதற்காக அவர் அல்லாஹ்வைப் புகழட்டும்! அதை (மற்றவர்களிடம்) கூறட்டும்! (மற்றொரு அறிவிப்பில், தான் நேசிப்பவர்களிடம் மட்டும் சொல்லட்டும் என்றுள்ளது) தான் வெறுக்கக் கூடிய நல்லது அல்லாத (தீய) கனவைக் கண்டால், அது ஷைத்தானிடமிருந்து வந்துள்ளதாகும். எனவே அதன் தீமையை விட்டும் அல்லாஹ்விடம் அவர் பாதுகாப்புத் தேடட்டும். எவரிடமும் அதைக் கூற வேண்டாம். நிச்சயமாக அது அவருக்கு இடைஞ்சல் தந்துவிடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6985. முஸ்லிம்)**

٨٤٢ – وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " الرُّؤْيَا الصَّالِحَةُ " – وَفِي رِوَايَةٍ : " الرُّؤْيَا الْحَسَنَةُ " – مِنَ اللَّهِ – وَالْحُلْمُ مِنَ الشَّيْطَانِ فَمَنْ رَأَى شَيْئًا يَكْرَهُهُ فَلْيَنْفُثْ عَنْ شِمَالِهِ ثَلاَثًا وَلْيَتَعَوَّذْ مِنَ الشَّيْطَانِ فَإِنَّهَا لاَ تَضُرُّهُ . مُتَّفَقٌ عَلَيْهِ . " النَّفْثُ " : نَفْخٌ لَطِيفٌ لاَ رِيقَ مَعَهُ .

**842** அபூகதாதா (ரழி)அறிவிக்கின்றார்கள்:

“நல்ல கனவு (மற்றொரு அறிவிப்பில், அழகிய கனவு) அல்லாஹ்விடமிருந்து ஏற்படுவதாகும். தீய கனவுகள் ஷைத்தானிடமிருந்து வருபவையாகும். தான் வெறுக்கும் ஒன்றை கனவில் கண்டால், தன் இடதுபுறம் மூன்றுமுறை துப்பட்டும்! ஷைத்தானை விட்டு அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடட்டும். (‘அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்’ என்று கூறட்டும்) நிச்சயமாக அந்தக் கனவு அவருக்கு இடைஞ்சலைத் தராது” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6986 முஸ்லிம்:2261)**

٨٤٣ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا رَأَى أَحَدُكُمُ الرُّؤْيَا يَكْرَهُهَا فَلْيَبْصُقْ عَنْ يَسَارِهِ ثَلاَثًا وَلْيَسْتَعِذْ بِاللَّهِ مِنَ الشَّيْطَانِ ثَلاَثًا وَلْيَتَحَوَّلْ عَنْ جَنْبِهِ الَّذِي كَانَ عَلَيْهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**843** ஜாபிர் (ரழி)அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் தான் வெறுக்கும் கனவைக் கண்டால், தன் இடது புறம் மூன்று முறை துப்பட்டும்! ஷைத்தானை விட்டு மூன்று முறை அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடட்டும்! (அதாவது, ‘அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்’ என்று மூன்று முறை கூறட்டும்) தாம் படுத்திருக்கும் நிலையிலிருந்து மறு பக்கம் திரும்பிப் படுத்துக் கொள்ளட்டும்!” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2262)**

٨٤٤ – وَعَنْ أَبِي الأَسْقَعِ وَاثِلَةَ بْنِ الأَسْقَعِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ مِنْ أَعْظَمِ الْفِرَى أَنْ يَدَّعِيَ الرَّجُلُ إِلَى غَيْرِ أَبِيهِ أَوْ يُرِيَ عَيْنَهُ مَا لَمْ تَرَ أَوْ يَقُولَ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ مَا لَمْ يَقُلْ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**844** அபுல் அஸ்கஃ வாஸிலா இப்னு அஸ்கஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவன் தன் தந்தை அல்லாதவனை தன் தந்தை என வாதாடுவது அல்லது தான் பாத்திராத ஒன்றைப் பார்த்ததாகக் கூறுவது அல்லது நபி (ஸல்) அவர்கள் கூறாத ஒன்றை அவர்கள் கூறியதாகக் கூறுவது ஆகியவை மிகப்பெரும் இட்டுக் கட்டுபவைகளாகும். (இவற்றைத் தவிர்த்துக் கொள்வீர்களாக! இவை மாபெரும் பாவங்களாக உள்ளன)” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3509)**

## ஸலாம் கூறுதல் பற்றிய அத்தியாயம்

## ١٣١ - بَابُ فضل السّلام والأمر بإفْشَائه

### பாடம் : 131 - ஸலாம் கூறுவதன் சிறப்பும், அதை பரப்புவதன் அவசியமும்

قَالَ اللّٰهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لاَ تَدْخُلُوا بُيُوتًا غَيْرَ بُيُوتِكُمْ حَتَّى تَسْتَأْنِسُوا وَتُسَلِّمُوا عَلَى أَهْلِهَا . وَقَالَ تَعَالَى : فَإِذَا دَخَلْتُمْ بُيُوتًا فَسَلِّمُوا عَلَى أَنْفُسِكُمْ تَحِيَّةً مِنْ عِنْدِ اللّٰهِ مُبَارَكَةً طَيِّبَةً . وَقَالَ تَعَالَى : وَإِذَا حُيِّيتُمْ بِتَحِيَّةٍ فَحَيُّوا بِأَحْسَنَ مِنْهَا أَوْ رُدُّوهَا . وَقَالَ تَعَالَى : هَلْ أَتَاكَ حَدِيثُ ضَيْفِ إِبْرَاهِيمَ الْمُكْرَمِينَ

إِذْ دَخَلُوا عَلَيْهِ فَقَالُوا سَلاَمًا قَالَ سَلاَمٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளே! உங்களின் வீடுகள் அல்லாத (மற்றவர்) வீடுகளில், நீங்கள் உள்ளே நுழைய அனுமதி பெற்று, அவர்களுக்கு நீங்கள் ஸலாம் கூறும்வரை உள்ளே நுழையாதீர்கள். (24:27)*

*நீங்கள் வீடுகளில் நுழைந்தால், அல்லாஹ்விடமிருந்துள்ள வாழ்த்தாகவும், தூய்மையான அபிவிருத்தியாகவும் உள்ள ஸலாமை உங்களிடையே கூறிக் கொள்ளுங்கள். (24:61)*

*நீங்கள் (ஸலாம் எனும்) வாழ்த்துக்கள் கூறப்பட்டால், அதைவிட அழகானதாக நீங்கள் வாழ்த்துக் கூறுங்கள். அல்லது அதையே திருப்பிக் கூறுங்கள். (4:86)*

*இப்ராஹீம் நபியின் விருந்தினர்களான கண்ணியத்திற்குரிய (வான)வர்களின் செய்தி உங்களிடம் வந்ததா? அவரிடம் அவர்கள் வந்தபோது, ஸலாம் என்று கூறினார்கள். இவரும் (பதிலாக) ஸலாம் கூறினார். (51:24,25)*

٨٤٥ - وَعَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ رَجُلاً سَأَلَ رَسُولَ اللّٰهِ ﷺ : أَيُّ الأِسْلاَمِ خَيْرٌ ؟ قَالَ : " تُطْعِمُ الطَّعَامَ وَتَقْرَأُ السَّلاَمَ عَلَى مَنْ عَرَفْتَ وَمَنْ لَمْ تَعْرِفْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**845** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், "இஸ்லாத்தில் சிறந்தது எது?" என்று கேட்டார். "(பசித்தவனுக்கு) நீர் உணவளிப்பது, நீர் அறிந்தவர், அறியாதவர் என அனைவருக்கும் ஸலாம் கூறுவது" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(புகாரி:12. முஸ்லிம்:39)**

٨٤٦ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لَمَّا خَلَقَ اللّٰهُ آدَمَ ﷺ قَالَ : اذْهَبْ فَسَلِّمْ عَلَى أُولَئِكَ - نَفَرٌ مِنَ الْمَلاَئِكَةِ جُلُوسٌ - فَاسْتَمِعْ مَا يُحَيُّونَكَ فَإِنَّهَا تَحِيَّتُكَ وَتَحِيَّةُ ذُرِّيَّتِكَ . فَقَالَ : السَّلاَمُ عَلَيْكُمْ : فَقَالُوا : السَّلاَمُ عَلَيْكَ وَرَحْمَةُ اللّٰهِ فَزَادُوهُ : وَرَحْمَةُ اللّٰهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**846** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ், ஆதம் (அலை) அவர்களைப் படைத்தபோது, (அவரிடம்) "நீர் சென்று அங்கே உட்கார்ந்திருக்கின்ற வானவர்களுக்கு ஸலாம் கூறுவீராக! உமக்கு அவர்கள் கூறும் வாழ்த்துக்களை நீர் கேட்பீராக! நிச்சயமாக அது, உமக்குரிய வாழ்த்துக்களாகும். உம் வாரிசுகளுக்குரிய வாழ்த்துக் களாகும்" என்று அல்லாஹ் கூறினான். "அஸ்ஸலாமு அலைக்கும் (உங்கள் மீது அல்லாஹ்வின் சாந்தி உண்டாவதாக!)" என ஆதம் (அலை) (வானவர்களிடம்) கூறினார். உடனே அவர்கள், "அஸ்ஸலாமு

அலைக்க வரஹ்மதுல்லாஹி (உங்கள் மீதும் அல்லாஹ்வின் சாந்தியும், அவனின் கருணையும் உண்டாவதாக!)'' என்று கூறினார்கள். 'வரஹ்மதுல்லாஹி' என்ற சொல்லை ஸலாமின் மறுமொழியில் அவர்கள் அதிகப்படுத்தினார்கள். **(புகாரி:3326. முஸ்லிம்:2841)**

٨٤٧ – وَعَنْ أَبِي عُمَارَةَ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : أَمَرَنَا رَسُولُ اللَّهِ ﷺ بِسَبْعٍ ; بِعِيَادَةِ الْمَرِيضِ وَاتِّبَاعِ الْجَنَائِزِ وَتَشْمِيتِ الْعَاطِسِ وَنَصْرِ الضَّعِيفِ وَعَوْنِ الْمَظْلُومِ وَإِفْشَاءِ السَّلَامِ وَإِبْرَارِ الْمُقْسِمِ . مُتَّفَقٌ عَلَيْهِ . هَذَا لَفْظُ إِحْدَى رِوَايَاتِ الْبُخَارِيِّ .

**847** அபூ உமாரா பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு ஏழு விஷயங்களை கட்டளையிட்டார்கள். அவை, (1)நோயாளியை நலம் விசாரிப்பது (2) ஜனாஸாவைப் பின் தொடர்வது (3)தும்மியவருக்கு பதில் கூறுவது (4)பலவீனருக்கு உதவி செய்வது (5) அநீதி இழைக்கப்பட்டவருக்கு உதவுவது (6)ஸலாம் கூறுதலை பரப்புவது (7)(நல்ல விஷயத்தை) சத்தியம் செய்தவருக்கு அதனை நிறைவேற்ற உதவி செய்வது." **(புகாரி:6235.முஸ்லிம்:2066)**

٨٤٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَدْخُلُوا الْجَنَّةَ حَتَّى تُؤْمِنُوا وَلاَ تُؤْمِنُوا حَتَّى تَحَابُّوا . أَوَ لاَ أَدُلُّكُمْ عَلَى شَيْءٍ إِذَا فَعَلْتُمُوهُ تَحَابَبْتُمْ ؟ أَفْشُوا السَّلاَمَ بَيْنَكُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**848** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் இறை விசுவாசம் கொள்ளும் வரை சொர்க்கத்தில் நுழைய முடியாது. நீங்கள் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தும் வரை, நீங்கள் இறை விசுவாசிகளாக ஆக முடியாது. நீங்கள் எதைச் செய்தால் அன்பு செலுத்திக் கொள்வீர்களோ, அதை உங்களுக்கு அறிவிக்கட்டுமா? (அது) உங்களுக்கிடையே ஸலாம் கூறுவதைப் பரப்புங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:54)**

٨٤٩ –وَعَنْ أَبِي يُوسُفَ عَبْدِ اللَّهِ بْنِ سَلاَمٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " يَا أَيُّهَا النَّاسُ أَفْشُوا السَّلاَمَ وَأَطْعِمُوا الطَّعَامَ وَصِلُوا الأَرْحَامَ وَصَلُّوا وَالنَّاسُ نِيَامٌ تَدْخُلُوا الْجَنَّةَ بِسَلاَمٍ".رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**849** அபூயூசுஃப் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதர்களே! ஸலாம் கூறுவதைப் பரப்புங்கள். பசித்தவனுக்கு உணவளியுங்கள். உறவினர்களை ஆதரியுங்கள். மக்கள் தூங்கிக் கொண்டிருக்கும் போது நீங்கள் தொழுங்கள். "ஸலாம்" கூறுவது மூலம் சொர்க்கத்தில் நுழையுங்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்.

**(திர்மிதீ:2485. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٥٠ – وَعَنِ الطُّفَيْلِ بْنِ أُبَيِّ بْنِ كَعْبٍ أَنَّهُ كَانَ يَأْتِي عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ فَيَغْدُو مَعَهُ إِلَى السُّوقِ . قَالَ : فَإِذَا غَدَوْنَا إِلَى السُّوقِ لَمْ يَمُرَّ عَبْدُ اللَّهِ عَلَى سَقَّاطٍ وَلاَ صَاحِبِ بَيْعَةٍ وَلاَ مِسْكِينٍ وَلاَ أَحَدٍ إِلاَّ سَلَّمَ عَلَيْهِ . قَالَ الطُّفَيْلُ : فَجِئْتُ عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ يَوْمًا فَاسْتَتْبَعَنِي إِلَى السُّوقِ فَقُلْتُ لَهُ : مَا تَصْنَعُ بِالسُّوقِ وَأَنْتَ لاَ تَقِفُ عَلَى الْبَيْعِ وَلاَ تَسْأَلُ عَنِ السِّلَعِ وَلاَ تَسُومُ بِهَا وَلاَ تَجْلِسُ فِي مَجَالِسِ السُّوقِ ؟ وَأَقُولُ : اجْلِسْ بِنَا هَاهُنَا نَتَحَدَّثْ فَقَالَ : يَا أَبَا بَطْنٍ – وَكَانَ الطُّفَيْلُ ذَا بَطْنٍ – إِنَّمَا نَغْدُو مِنْ أَجْلِ السَّلاَمِ ! نُسَلِّمُ عَلَى مَنْ لَقِينَاهُ ! رَوَاهُ مَالِكٌ فِي الْمُوَطَّإِ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**850** துஃபைல் இப்னு உபை இப்னு கஅபு என்பார் கூறுகின்றார்:

நான் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்களிடம் வருவேன். அவருடன் கடை வீதிக்குச் செல்வேன். கடைவீதிக்கு நாங்கள் சென்றதும், அப்துல்லாஹ் (ரழி) அவர்கள் சிறு வியாபாரி, பெரிய

வியாபாரி, ஏழை, மற்றும் அங்கு உள்ளோர் என அனைவரிடமும் ஸலாம் கூறுவார்கள். (இதே போல்) ஒரு நாள் நான் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்களிடம் வந்தேன். கடைவீதிக்கு என்னை அழைத்தார்கள். நான் அவர்களிடம், "கடைவீதியில் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? நீங்கள் வியாபாரம் எதுவும் செய்வதும் இல்லை. பொருளுக்குரிய விலையைக் கேட்பதும் இல்லை. அதை பேரம் பேசப் போவதுமில்லை. மேலும் கடை வீதிகளில் உள்ள அவைகளில் உட்காரப் போவது மில்லை. எங்களுடன் இந்த இடத்திலேயே அமருங்கள். பேசிக் கொண்டிருப்போம்" என்று கூறினேன். "வயிறு பெருத்தவரே! (நான் தொந்தி உடையவன் என்பதால் இவ்வாறு அப்துல்லாஹ் (ரழி) அழைத்தார்) நாம் கடை வீதிக்குச் செல்வது, ஸலாம் கூறுவதற்காகத்தான். அங்கு சந்திப்பவர்களுக்கெல்லாம் நாம் ஸலாம் கூறுவோம்" என்று அப்துல்லாஹ் (ரழி) கூறினார்கள்.

**(இது மாலிக் இமாமின் "அல்முஅத்தா"வில் (1793) உள்ளது)**

## ١٣٢ – بَابُ كيفية السَّلام

## பாடம் : 132 - ஸலாம் கூறும் முறை

يُسْتَحَبُّ أَنْ يَقُولَ الْمُبْتَدِئُ بِالسَّلاَمِ : السَّلاَمُ عَلَيْكُمْ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ . فَيَأْتِي بِضَمِيرِ الْجَمْعِ وَإِنْ كَانَ الْمُسَلَّمُ عَلَيْهِ وَاحِدًا . وَيَقُولُ الْمُجِيبُ : وَعَلَيْكُمُ السَّلاَمُ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ فَيَأْتِي بِوَاوِ الْعَطْفِ فِي قَوْلِهِ : وَعَلَيْكُمْ .

முதலில் ஸலாம் கூறுபவர், "அஸ்ஸலாமு அலைக்கும்" வரஹ்மதுல்லாஹி, வபரகாதுஹு என்று கூறவேண்டும். ஸலாம் கூறப்படுபவர் ஒருவர்தான் எனினும், உங்கள் மீது என பன்மை வார்த்தையால் கூற வேண்டும். பதில் கூறுபவர், "வஅலைகுமுஸ் ஸலாம் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு" என்று கூற வேண்டும். இவர் தன் பதிலில் வஅலைக்கும் என்று வாவ் எனும் இணைப்புச் சொல்லை இணைத்தே கூற வேண்டும். இதுதான் விரும்பத்தக்க செயலாகும்.

٨٥١ – وَعَنْ عِمْرَانَ بْنِ الْحُصَيْنِ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : السَّلاَمُ عَلَيْكُمْ فَرَدَّ عَلَيْهِ ثُمَّ جَلَسَ فَقَالَ النَّبِيُّ ﷺ : " عَشْرٌ " . ثُمَّ جَاءَ آخَرُ فَقَالَ : السَّلاَمُ عَلَيْكُمْ وَرَحْمَةُ اللّٰهِ . فَرَدَّ عَلَيْهِ فَجَلَسَ فَقَالَ : " عِشْرُونَ " . ثُمَّ جَاءَ آخَرُ فَقَالَ : السَّلاَمُ عَلَيْكُمْ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ فَرَدَّ عَلَيْهِ فَجَلَسَ فَقَالَ : " ثَلاَثُونَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**851** இம்ரான் இப்னு ஹுஸைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, "அஸ்ஸலாமு அலைக்கும்" என்று கூறினார். அவருக்கு நபி (ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள். அவர் உட்கார்ந்தார். "(இவருக்கு)பத்து (நன்மைகள் உண்டு)" என்று நபி (ஸல்) கூறினார்கள். பின்பு இன்னொருவர் வந்து, "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ்" என்று கூறினார். அவருக்கு நபி (ஸல்) பதில் கூறினார்கள். அவர் உட்கார்ந்தார். "(இவருக்கு) இருபது (நன்மைகள் உண்டு)" என்று நபி (ஸல்) கூறினார்கள். பின்பு மற்றொருவர் வந்து, "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி, வபரகாதுஹு" என்று கூறினார். அவருக்கு நபி (ஸல்) பதில் கூறினார்கள். அவர் உட்கார்ந்தார். "(இவருக்கு) முப்பது (நன்மைகள் உண்டு)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:5195. திர்மிதீ:2689. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٥٢ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ : قَالَ لِي رَسُولُ اللّٰهِ ﷺ : " هَذَا جِبْرِيلُ يَقْرَأُ عَلَيْكِ السَّلاَمَ " قَالَتْ : قُلْتُ : وَعَلَيْهِ السَّلاَمُ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَكَذَا وَقَعَ فِي بَعْضِ رِوَايَاتِ الصَّحِيحَيْنِ : " وَبَرَكَاتُهُ " وَفِي بَعْضِهَا بِحَذْفِهَا . وَزِيَادَةُ الثِّقَةِ مَقْبُولَةٌ .

**852** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என்னிடம் நபி (ஸல்) அவர்கள், "இவர்தான் ஜிப்ரீல் (அலை). இவர் உனக்கு ஸலாம் கூறுகிறார்" என்று கூறினார்கள். நான், "வஅலைஹிஸ்ஸலாம் வரஹ்மதுல்லாஹி, வபரகாதுஹு (இறைவனின் அருளும், அவனின் அபிவிருத்திகளும் உண்டாவதாக!)" என்று கூறினேன்.

**(புகாரி:3768. முஸ்லிம்:2447)**

٨٥٣ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا تَكَلَّمَ بِكَلِمَةٍ أَعَادَهَا ثَلاثًا حَتَّى تُفْهَمَ عَنْهُ وَإِذَا أَتَى عَلَى قَوْمٍ فَسَلَّمَ عَلَيْهِمْ سَلَّمَ عَلَيْهِمْ ثَلاثًا . رَوَاهُ الْبُخَارِيُّ وَهَذَا مَحْمُولٌ عَلَى مَا إِذَا كَانَ الْجَمْعُ كَثِيرًا .

**853** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு வார்த்தையைப் பேசினால், அது நன்றாக விளங்கும் வரை மீண்டும் மீண்டும் மூன்று முறை கூறுவார்கள். மேலும், அவர்கள் ஒரு கூட்டத்தாரிடம் வந்தால், அவர்களுக்கு மூன்று முறை ஸலாம் கூறுவார்கள். **(புகாரி:94. கூட்டம் அதிகமாக உள்ள இடங்களுக்கே இது பொருந்தும்)**

٨٥٤ – وَعَنِ الْمِقْدَادِ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثِهِ الطَّوِيلِ قَالَ : كُنَّا نَرْفَعُ لِلنَّبِيِّ ﷺ نَصِيبَهُ مِنَ اللَّبَنِ فَيَجِيءُ مِنَ اللَّيْلِ فَيُسَلِّمُ تَسْلِيمًا لاَ يُوقِظُ نَائِمًا وَيُسْمِعُ الْيَقْظَانَ فَجَاءَ النَّبِيُّ ﷺ فَسَلَّمَ كَمَا كَانَ يُسَلِّمُ .رَوَاهُ مُسْلِمٌ.

**854** மிக்தாத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்களுக்காக எங்களுக்குக் கிடைத்த (ஆட்டின்) பாலில் அவர்களுக்குரிய பங்கை எடுத்து வைத்திருப்போம். இரவில் (எங்களிடம்) அவர்கள் வருவார்கள். தூங்குபவர் எழும்பாத வகையிலும், விழித்திருப்பவர் கேட்கும் அளவிலும் ஸலாம் கூறுவார்கள். ஒருநாள் வழக்கமாக ஸலாம் கூறுவது போலவே ஸலாம் கூறி, நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள்.

**(முஸ்லிம்:2055. இது நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும்)**

٨٥٥ – وَعَنْ أَسْمَاءَ بِنْتِ يَزِيدَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ مَرَّ فِي الْمَسْجِدِ يَوْمًا وَعُصْبَةٌ مِنَ النِّسَاءِ قُعُودٌ فَأَلْوَى بِيَدِهِ بِالتَّسْلِيمِ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . وَهَذَا مَحْمُولٌ عَلَى أَنَّهُ ﷺ جَمَعَ بَيْنَ اللَّفْظِ وَالأَشَارَةِ وَيُؤَيِّدُهُ أَنَّ فِي رِوَايَةِ أَبِي دَاوُدَ : " فَسَلَّمَ عَلَيْنَا " .

**855** அஸ்மா பின்த் யஸீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் பள்ளிவாசலைக் கடந்து செல்லும்போது, பெண்களின் ஒரு கூட்டம் அங்கே உட்கார்ந்திருந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள் தங்கள் கையால் சமிக்ஞை செய்து ஸலாம் கூறினார்கள். **(திர்மிதீ:2697. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٥٦ – وَعَنْ أَبِي جُرَيٍّ الْهُجَيْمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ فَقُلْتُ : عَلَيْكَ السَّلاَمُ يَا رَسُولَ اللَّهِ . فَقَالَ : " لاَ تَقُلْ عَلَيْكَ السَّلاَمُ فَإِنَّ عَلَيْكَ السَّلاَمُ تَحِيَّةُ الْمَوْتَى " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . وَقَدْ سَبَقَ لَفْظُهُ بِطُولِهِ .

**856** அபூஜுரய்யி அல்ஹுஜைமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் நான் வந்து, "இறைத்தூதர் அவர்களே! அலைக்கஸ்ஸலாம் என்று கூறினேன். அதற்கு அவர்கள், "அலைக்கஸ்ஸலாம் என்று கூறாதீர்! 'அலைக்கஸ்ஸலாம்' என்பது

இறந்தவர்களுக்கு (அறியாமை காலத்தில்) கூறப்படும் ஸலாமாகும். (எனவே 'அஸ்ஸலாமு அலைக்கும்' என்று கூறுவீராக!)'' என நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4084. திர்மிதி:2722. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٣٣ – بابُ آداب السّلام

## பாடம் : 133 - ஸலாம் கூறுவதன் ஒழுக்க முறைகள்

٨٥٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " يُسَلِّمُ الرَّاكِبُ عَلَى الْمَاشِي وَالْمَاشِي عَلَى الْقَاعِدِ وَالْقَلِيلُ عَلَى الْكَثِيرِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةِ الْبُخَارِيِّ : " وَالصَّغِيرُ عَلَى الْكَبِيرِ " .

**857** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வாகனத்தில் செல்பவர் - நடந்து செல்பவருக்கும், நடப்பவர் - உட்கார்ந்திருப்பவருக்கும், சிறு கூட்டம் - பெரும் கூட்டத்தினருக்கும் ஸலாம் கூறவேண்டும்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6232. முஸ்லிம்:2160)**

புகாரியின் மற்றொரு அறிவிப்பில் "சிறியவர், பெரியவருக்கு ஸலாம் கூறுவார்'' என்று உள்ளது.

٨٥٨ – وَعَنْ أَبِي أُمَامَةَ صُدَيِّ بْنِ عَجْلاَنَ الْبَاهِلِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ أَوْلَى النَّاسِ بِاللَّهِ مَنْ بَدَأَهُمْ بِالسَّلاَمِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ وَرَوَاهُ التِّرْمِذِيُّ عَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قِيلَ : يَا رَسُولَ اللَّهِ الرَّجُلاَنِ يَلْتَقِيَانِ أَيُّهُمَا يَبْدَأُ بِالسَّلاَمِ ؟ قَالَ : " أَوْلاَهُمَا بِاللَّهِ تَعَالَى " . قَالَ التِّرْمِذِيُّ : هَذَا حَدِيثٌ حَسَنٌ .

**858** அபூஉமாமா சுதய் இப்னு அஜ்லான் பாஹிலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஸலாம் கூறுவதை அவர்களில் முதலில் ஆரம்பித்தவர்தான், அல்லாஹ்விடம் மக்களில் மிக மேன்மையானவராகத் திகழ்வார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:5197)**

அபூ உமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! இரண்டு மனிதர்கள் சந்தித்தால் அவ்விருவரில் எவர் ஸலாம் கூறுவதை முதலில் ஆரம்பிப்பது?'' என்று கேட்கப்பட்டது. "அவ்விருவரில் அல்லாஹ்விடம் மிக நல்ல தகுதியானவரே! (ஸலாம் கூறுவதை ஆரம்பிப்பார்)'' என நபி (ஸல்) பதில் கூறினார்கள்.

**(திர்மிதி:2694. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٣٤ – بابُ استحباب إعادة السّلام على من تكرّر لقاؤه على قرب بأن دخل ثم خرج ثم دخل في الحال، أو حال بينهما شجرة ونحرها

## பாடம் : 134 - அடிக்கடி சந்திப்பவர் மற்றும் மரம் போன்றவை குறுக்கிட்டபின் மீண்டும் சந்திப்பவருக்கும் ஸலாம் கூறுவது ஆகுமானதாகும்.

٨٥٩ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثِ الْمُسِيءِ صَلاَتَهُ : أَنَّهُ جَاءَ فَصَلَّى ثُمَّ جَاءَ إِلَى النَّبِيِّ ﷺ فَسَلَّمَ عَلَيْهِ فَرَدَّ عَلَيْهِ السَّلاَمَ فَقَالَ : " ارْجِعْ فَصَلِّ فَإِنَّكَ لَمْ تُصَلِّ " . فَرَجَعَ فَصَلَّى ثُمَّ جَاءَ فَسَلَّمَ عَلَى النَّبِيِّ ﷺ حَتَّى فَعَلَ ذَلِكَ ثَلاَثَ مَرَّاتٍ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**859** தொழுகையில் தவறு செய்தவர் பற்றிய பின்வரும் ஹதீஸை அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் வந்து தொழுதார். பின்பு நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அவர்களுக்கு ஸலாம் கூறினார். அவருக்கு பதில் ஸலாம் கூறிய நபி (ஸல்) அவர்கள், "நீ சென்று, மீண்டும் தொழு! நிச்சயமாக நீ இப்போது தொழவில்லை. (நீர் தொழுதது சரியாக இல்லை)" என்று கூறினார்கள். உடனே அவர் மீண்டும் தொழுதார். பின்பு வந்து நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினார். இவ்வாறு மூன்று தடவை அவர் செய்யும் வரை இது நடந்தது. **(புகாரி:757. முஸ்லிம்:397)**

٨٦٠ – وَعَنْهُ ) أبي هُرَيْرَةَ ( عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا لَقِيَ أَحَدُكُمْ أَخَاهُ فَلْيُسَلِّمْ عَلَيْهِ فَإِنْ حَالَتْ بَيْنَهُمَا شَجَرَةٌ أَوْ جِدَارٌ أَوْ حَجَرٌ ثُمَّ لَقِيَهُ فَلْيُسَلِّمْ عَلَيْهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**860** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் தன் சகோதரரைச் சந்தித்தால், அவருக்கு ஸலாம் கூறட்டும். அவ்விருவருக்குமிடையே ஒரு மரம் அல்லது சுவர் இடையில் குறுக்கிட்டு, பின்பு அவரை மீண்டும் சந்திப்பாரேயானால், (அப்போதும்) அவருக்கு அவர் (மீண்டும்) ஸலாம் கூறட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:5200)**

## ١٣٥ – بَابُ اسْتِحْبَابِ السَّلَامِ إِذَا دَخَلَ بيته

## பாடம் : 135 - தன் வீட்டில் நுழைந்தாலும் ஸலாம் கூறுவது விரும்பத்தக்கதாகும்

قَالَ اللَّهُ تَعَالَى : فَإِذَا دَخَلْتُمْ بُيُوتًا فَسَلِّمُوا عَلَى أَنْفُسِكُمْ تَحِيَّةً مِنْ عِنْدِ اللَّهِ مُبَارَكَةً طَيِّبَةً .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நீங்கள் வீடுகளில் நுழைந்தால் உங்களுக்கே நீங்கள் ஸலாம் கூறிக் கொள்ளுங்கள். இது அல்லாஹ்விடமிருந்துள்ள வாழ்த்தாகவும், தூய்மையான அபிவிருத்தியாகவும் உள்ளது. (24:61)*

٨٦١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " يَا بُنَيَّ إِذَا دَخَلْتَ عَلَى أَهْلِكَ فَسَلِّمْ يَكُنْ بَرَكَةً عَلَيْكَ وَعَلَى أَهْلِ بَيْتِكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**861** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் அன்பு மகனே! உன் குடும்பத்தாரிடம் நீ சென்றால், ஸலாம் கூறு! அது உனக்கும், உன் வீட்டில் இருப்போருக்கும் அபிவிருத்தியாக இருக்கும்" என்று நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள். **(திர்மிதீ:2698. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٣٦ – بَابُ السَّلَامِ عَلَى الصِّبْيَانِ

## பாடம் : 136 - சிறுவர்களுக்கு ஸலாம் கூறுதல்!

٨٦٢ – عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ مَرَّ عَلَى صِبْيَانٍ فَسَلَّمَ عَلَيْهِمْ وَقَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَفْعَلُهُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**862** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சிறுவர்களை நான் கடந்து செல்லும் போது, அவர்களுக்கு ஸலாம் கூறுவேன். (ஏனெனில்) நபி (ஸல்) அவர்கள் இவ்வாறே செய்வார்கள். **(புகாரி:6247. முஸ்லிம்:2168)**

## ١٣٧ – باب سَلام الرَّجل على زوجته والمرأة من مَحارمه وَعَلَى أَجْنَبِيَّة وأجنبيات لا يخاف الفتنة بهن وسلامهن بهذا الشرط

## பாடம் : 137 - மனைவிக்கும், திருமணம் செய்யத் தடை செய்யப்பட்டுள்ள உறவுப் பெண்களுக்கும், குழப்ப நிலை ஏற்படும் என பயப்படாத நிலையில் அன்னியப் பெண்களுக்கும் ஓர் ஆண் ஸலாம் கூறுவது மற்றும் இதே நிபந்தனையுடன் அந்தப் பெண்களும் ஆண்களுக்கு ஸலாம் கூறுவது

٨٦٣ – عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَتْ فِينَا امْرَأَةٌ – وَفِي رِوَايَةٍ : كَانَتْ لَنَا عَجُوزٌ – تَأْخُذُ مِنْ أُصُولِ السِّلْقِ فَتَطْرَحُهُ فِي الْقِدْرِ وَتُكَرْكِرُ حَبَّاتٍ مِنْ شَعِيرٍ فَإِذَا صَلَّيْنَا الْجُمُعَةَ وَانْصَرَفْنَا نُسَلِّمُ عَلَيْهَا فَتُقَدِّمُهُ إِلَيْنَا رَوَاهُ الْبُخَارِيُّ . قَوْلُهُ " تُكَرْكِرُ " : أَيْ تَطْحَنُ .

**863** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மற்றொரு அறிவிப்பில், "எங்களில் ஒரு பெண் (கிழவி ) இருந்தார். அவர் தொலிக்கோதுமையை எடுத்து, சட்டியில் போட்டு, வேக வைத்து தொலிக்கோதுமையின் உணவைத் தயார் செய்வார். நாங்கள் ஜும்ஆத் தொழுகையில் கலந்து கொண்டு திரும்பியதும், அந்தப் பெண்ணிற்கு ஸலாம் கூறுவோம். அவர் அந்த உணவை எங்களுக்கு கொடுப்பார்." **(புகாரி:6248)**

٨٦٤ – وَعَنْ أُمِّ هَانِئٍ فَاخِتَةَ بِنْتِ أَبِي طَالِبٍ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : أَتَيْتُ النَّبِيَّ ﷺ يَوْمَ الْفَتْحِ وَهُوَ يَغْتَسِلُ وَفَاطِمَةُ تَسْتُرُهُ بِثَوْبٍ فَسَلَّمْتُ . وَذَكَرَتِ الْحَدِيثَ . رَوَاهُ مُسْلِمٌ .

**864** நீண்ட ஹதீஸின் சுருக்கத்தை உம்மு·ஹானீ பின்த் அபூ தாலிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களிடம் மக்கா வெற்றி பெற்ற அன்று வந்தேன். அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். பாத்திமா (ரழி) அவர்கள் ஒரு துணியைக் கொண்டு அவர்களை மறைத்து கொண்டிருந்தார்கள். நான் ஸலாம் கூறினேன். **(முஸ்லிம்:336)**

٨٦٥ – وَعَنْ أَسْمَاءَ بِنْتِ يَزِيدَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : مَرَّ عَلَيْنَا النَّبِيُّ ﷺ فِي نِسْوَةٍ فَسَلَّمَ عَلَيْنَا . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . وَهَذَا لَفْظُ أَبِي دَاوُدَ ; وَلَفْظُ التِّرْمِذِيِّ : أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ مَرَّ فِي الْمَسْجِدِ يَوْمًا وَعُصْبَةٌ مِنَ النِّسَاءِ قُعُودٌ فَأَلْوَى بِيَدِهِ بِالتَّسْلِيمِ .

**865** அஸ்மா பின்த் யஸீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெண்களான எங்களைக் கடந்து சென்ற நபி (ஸல்) அவர்கள், எங்களுக்கு ஸலாம் கூறினார்கள்"

**(அபூதாவூது:5204. "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

இது அபூதாவூதின் வாசகமாகும். திர்மிதீயின் வார்த்தைகள் இதோ:

"ஒருநாள் நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலுக்குச் சென்று கொண்டிருந்தார்கள். பெண்களில் ஒரு கூட்டம் அங்கே அமர்ந்திருந்தது. உடனே அவர்கள் தன் கையால் சைகை மூலம் ஸலாம் கூறினார்கள்" **(திர்மிதீ:2697)**

## ١٣٨ – باب تحريم ابتدائنا الكافر بالسّلام وكيفيه الردّ عليهم واستحباب السلام على أهل مجلسٍ فيهم مسلمون وكفار

## பாடம் : 138 - இறைமறுப்பாளனுக்கு ஸலாம் கூறுவது தடை செய்யப்பட்டுள்ளது. அவர்களுக்குப் பதில் கூறும் முறை. முஸ்லிம்களும், இறை மறுப்பாளர்களும் இணைந்து இருக்கும் சபையினருக்கு ஸலாம் கூறுவது விரும்பத்தக்கது

٨٦٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ تَبْدَءُوا الْيَهُودَ وَلاَ النَّصَارَى بِالسَّلاَمِ فَإِذَا لَقِيتُمْ أَحَدَهُمْ فِي طَرِيقٍ فَاضْطَرُّوهُ إِلَى أَضْيَقِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**866** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“யூதர்களுக்கும், கிருத்துவர்களுக்கும் முதலில் ஸலாம் கூறாதீர்கள். அவர்களில் ஒருவரை நீங்கள் வழியில் சந்தித்தால், நெருக்கமான பாதையின் ஓரத்திற்கு ஒதுங்கச் செய்து நீங்கள் செல்லுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2167)**

٨٦٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا سَلَّمَ عَلَيْكُمْ أَهْلُ الْكِتَابِ فَقُولُوا : وَعَلَيْكُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**867** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“வேதம் பெற்றோர் உங்களுக்கு ஸலாம் கூறினால், நீங்கள் ‘வஅலைகும் -(உங்கள் மீது)’ என்று மட்டும் கூறுங்கள்” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6258. முஸ்லிம்:2163)**

٨٦٨ – وَعَنْ أُسَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ مَرَّ عَلَى مَجْلِسٍ فِيهِ أَخْلاَطٌ مِنَ الْمُسْلِمِينَ وَالْمُشْرِكِينَ – عَبَدَةِ الأَوْثَانِ وَالْيَهُودِ – فَسَلَّمَ عَلَيْهِمُ النَّبِيُّ ﷺ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**868** உஸாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முஸ்லிம்களும், இணை வைப்போரும், சிலை வணங்கிகளும், யூதர்களும் கலந்து இருந்த ஒரு சபையைக் கடந்து சென்ற நபி (ஸல்) அவர்கள், அவர்களுக்கு ஸலாம் கூறினார்கள்.

**(புகாரி:6254. முஸ்லிம்:1798)**

## ١٣٩ – بابُ استحباب السّلام إذا قام منَ المجلس وفارق جلساءه أو جليسه

## பாடம் : 139 - சபையை விட்டு எழுந்து செல்லும்பொழுது ஸலாம் கூறிக் கொள்வது விரும்பத்தக்கதாகும்

٨٦٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا انْتَهَى أَحَدُكُمْ إِلَى الْمَجْلِسِ فَلْيُسَلِّمْ فَإِذَا أَرَادَ أَنْ يَقُومَ فَلْيُسَلِّمْ . فَلَيْسَتْ الأُولَى بِأَحَقَّ مِنَ الآخِرَةِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**869** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் சபைக்கு வருவாரானால், அவர் ஸலாம் கூறட்டும். (அங்கிருந்து) புறப்பட விரும்பினாலும் ஸலாம் கூறட்டும்! (புறப்படும் போது ஸலாம் கூறுவது எனும்) பிந்தியதை விட,

(வந்தபோது ஸலாம் கூறுவது எனும்) முந்தியது ஒன்றும் அதிக முக்கியத்துவம் பெற்றதில்லை. ஸலாம் கூறும் விஷயத்தில் இரண்டுமே சமமானதுதான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:5208. திர்மிதீ:2706. இது ''ஹஸன்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٤. - بابُ الاستئذانِ وآدابه

## பாடம் : 140 - வீட்டில் நுழைய அனுமதி கோருவதன் ஒழுங்குகள்

قَالَ اللَّهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذينَ آمَنُوا لاَ تَدْخُلُوا بُيُوتًا غَيْرَ بُيُوتكُمْ حَتَّى تَسْتَأْنسُوا وَتُسَلِّمُوا عَلَى أَهْلهَا. وَقَالَ تَعَالَى : وَإِذَا بَلَغَ الأَطْفَالُ منْكُمُ الْحُلُمَ فَلْيَسْتَأْذنُوا كَمَا اسْتَأْذَنَ الَّذينَ منْ قَبْلهمْ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறை விசுவாசிகளே! உங்கள் வீடுகள் அல்லாத (மற்றவர்) வீடுகளில் (நுழைவதாக இருந்தால்) அனுமதி பெற்று, அவ்வீட்டாருக்கு நீங்கள் ஸலாம் கூறும்வரை (உள்ளே) நுழையாதீர்கள்... (24:27)*

*உங்களின் சிறுவர்கள் பருவ வயதை அடைந்தால், அவர்களுக்கு முன் இருந்தோர் அனுமதி கோரியது போல் இவர்களும் (உள்ளே நுழைய) அனுமதி கோரட்டும். (24:59)*

٨٧. - وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " الاسْتِئْذَانُ ثَلاَثٌ فَإِنْ أُذِنَ لَكَ وَإِلاَّ فَارْجِعْ " . مُتَّفَقٌ عَلَيْه .

**870** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அனுமதி கோருதல் என்பது, மூன்று முறைதான். (இதில்) உங்களுக்கு அனுமதிக்கப்பட்டால் (நுழைவீராக). இல்லையெனில், திரும்பி விடுவீராக!'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6245. முஸ்லிம்:2153)**

٨٧١ - وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " إِنَّمَا جُعِلَ الاسْتِئْذَانُ مِنْ أَجْلِ الْبَصَرِ " مُتَّفَقٌ عَلَيْه.

**871** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அனுமதி கேட்பது ஏற்படுத்தப்பட்டது எதற்காகவெனில், (தவறான) பார்வையை (விட்டும் தடுக்கும்) காரணமாகத்தான். (ஆகவே பிறரின் இல்லத்திற்கு வருபவர் அனுமதி கோருவதுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும். தம் பார்வையை அவ்வீட்டினுள் செலுத்தக்கூடாது)'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6241. முஸ்லிம்:2156)**

٨٧٢ - وَعَنْ رِبْعِيِّ بْنِ حِرَاشٍ قَالَ : حَدَّثَنَا رَجُلٌ مِنْ بَنِي عَامِرٍ أَنَّهُ اسْتَأْذَنَ عَلَى النَّبِيِّ ﷺ وَهُوَ فِي بَيْتٍ فَقَالَ : أَأَلِجُ ؟ فَقَالَ رَسُولُ اللَّه ﷺ لِخَادِمِه : " اُخْرُجْ إِلَى هَذَا فَعَلِّمْهُ الاسْتِئْذَانَ فَقُلْ لَهُ : قُلْ : السَّلاَمُ عَلَيْكُمْ أَأَدْخُلُ ؟ " فَسَمِعَهُ الرَّجُلُ فَقَالَ : السَّلاَمُ عَلَيْكُمْ أَأَدْخُلُ ؟ فَأَذِنَ لَهُ النَّبِيُّ ﷺ فَدَخَلَ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**872** ரிப்ஈ இப்னு ஹிராஷ் என்பார் அறிவிக்கின்றார்கள்:

பனு ஆமிர் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் (கீழ்க்கண்ட) செய்தியை எங்களிடம் தெரிவித்தார்:

நான் நபி (ஸல்) அவர்களின் வீட்டில் நுழைவதற்காக, ''உள்ளே நுழையலாமா?'' என்று அனுமதி கேட்டேன். உடனே நபி (ஸல்) அவர்கள் தன் ஊழியரிடம், ''அவரிடம் நீர் சென்று, அனுமதி கோரும்

வழிமுறையை அவருக்குக் கற்றுக் கொடுப்பீராக" என்று கூறினார்கள். அவர் என்னிடம் வந்து, "அஸ்ஸலாமு அலைக்கும் உள்ளே வரலாமா? என்று கேட்பீராக!" என்று கூறினார். அதைக் கேட்ட நான், "அஸ்ஸலாமு அலைக்கும். நான் உள்ளே வரலாமா?" என்றேன். நபி(ஸல்) அவர்கள் எனக்கு அனுமதி வழங்கினார்கள். நான் வீட்டினுள் நுழைந்தேன். **(அபூதாவூது:5177)**

٨٧٣ – عَنْ كَلْدَةَ بْنِ الْحَنْبَلِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَيْتُ النَّبِيَّ ﷺ فَدَخَلْتُ عَلَيْهِ وَلَمْ أُسَلِّمْ فَقَالَ النَّبِيُّ ﷺ : " ارْجِعْ فَقُلْ : السَّلَامُ عَلَيْكُمْ أَأَدْخُلُ ؟ " رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**873** கில்தா இப்னு ஹன்பல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் இல்லத்திற்கு நான் சென்றேன். நான் ஸலாம் கூறவில்லை. (அனுமதி கோராமலும், ஸலாம் கூறாமலும் அவர்களின் வீட்டில் நான் நுழைந்துவிட்டேன்). அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், "நீர் திரும்பிச் செல்வீராக! அஸ்ஸலாமு அலைக்கும். நான் உள்ளே வரலாமா? என்று கேட்பீராக!" என நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்.

**(அபூதாவூது:5176. திர்மிதீ:2710. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٤١ – باب بَيان أنّ السُّنّة إذَا قيل للمتأذن مَنْ أنْتَ أن يقول: فلان فيسمي نفسه بما يُعرَف به من اسم أكُنية وكراهة قوله: ((أنَا)) ونحوها

## பாடம் : 141 - அனுமதி கோரும் மனிதரை 'நீ யார்?' எனக் கேட்கப்பட்டால், தன்னை இன்னார் என்று பெயர் விளங்கும்படி கூற வேண்டும். "நான்தான்" என்று கூறுவது கூடாது.

٨٧٤ – عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثِهِ الْمَشْهُورِ فِي الأَسْرَاءِ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ثُمَّ صَعِدَ بِي جِبْرِيلُ إِلَى السَّمَاءِ الدُّنْيَا فَاسْتَفْتَحَ فَقِيلَ : مَنْ هَذَا ؟ قَالَ : جِبْرِيلُ ; قِيلَ : وَمَنْ مَعَكَ ؟ قَالَ : مُحَمَّدٌ . ثُمَّ صَعِدَ إِلَى السَّمَاءِ الثَّانِيَةِ فَاسْتَفْتَحَ قِيلَ : مَنْ هَذَا ؟ قَالَ : جِبْرِيلُ قِيلَ : وَمَنْ مَعَكَ ؟ قَالَ : مُحَمَّدٌ وَإِلَى الثَّالِثَةِ وَالرَّابِعَةِ وَسَائِرِهِنَّ وَيُقَالُ فِي بَابِ كُلِّ سَمَاءٍ : مَنْ هَذَا ؟ فَيَقُولُ : جِبْرِيلُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**874** மிஃராஜ் சம்பந்தமான பிரபலமான ஹதீஸில் அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னை உலகத்தின் வானம் பக்கம் (அழைத்துக் கொண்டு) உயர்ந்தார். வானத்தின் கதவைத் திறக்க ஜிப்ரீல் கூறினார்கள். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. "ஜிப்ரீல்" என ஜிப்ரீல் (அலை) பதில் கூறினார்கள். "உங்களுடன் இருப்பவர் யார்?" என்று கேட்கப்பட்டது. "முஹம்மது" என்று கூறினார். பின்பு இரண்டாம் வானத்தின் பக்கம் உயர்ந்து, கதவைத் திறக்க கேட்டுக் கொண்டார். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. "ஜிப்ரீல்" என ஜிப்ரீல் (அலை) கூறினார். "உங்களுடன் இருப்பவர் யார்?"என்று கேட்கப்பட்டது. "முஹம்மது" என்று பதில் கூறினார். மேலும் மூன்றாம், நான்காம் மற்றும் அனைத்து வானத்தின் வாசலிலும், "யார் அது?" என்று கேட்கப்பட்டது. "ஜிப்ரீல்" என ஜிப்ரீல் (அலை) கூறினார்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:3887. முஸ்லிம்:162)**

٨٧٥ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : خَرَجْتُ لَيْلَةً مِنَ اللَّيَالِي فَإِذَا رَسُولُ اللَّهِ ﷺ يَمْشِي وَحْدَهُ فَجَعَلْتُ أَمْشِي فِي ظِلِّ الْقَمَرِ فَالْتَفَتَ فَرَآنِي فَقَالَ : " مَنْ هَذَا ؟ " . فَقُلْتُ : أَبُو ذَرٍّ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**875** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் இரவு நான் வீட்டை விட்டு வெளியேறிச் சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் தனியே நடந்து சென்று கொண்டிருந்தார்கள். நிலவின் ஒளியில் நானும் நடக்க ஆரம்பித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் திரும்பி, என்னைப் பார்த்தார்கள். "யார் அது?" என்று கேட்டார்கள். "அபூதர்" என்று கூறினேன். **(புகாரி:6443. முஸ்லிம்:94)**

٨٧٦ – وَعَنْ أُمِّ هَانِئٍ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : أَتَيْت النَّبِيَّ ﷺ وَهُوَ يَغْتَسِلُ وَفَاطِمَةُ تَسْتُرُهُ فَقَالَ : " مَنْ هَذِه ؟ " فَقُلْت : أَنَا أُمُّ هَانِئٍ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**876** உம்மு ஹானீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் நான் வந்தேன். அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். பாத்திமா (ரழி) அவர்கள், ஒரு துணியைப் பிடித்துக் கொண்டு அவர்களை மறைத்திருந்தார்கள். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், "யார் அவர்?" என்று கேட்டார்கள். உடனே நான், "உம்மு ஹானீ" என்று பதில் கூறினேன். **(புகாரி:280. முஸ்லிம்:336)**

٨٧٧ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَيْت النَّبِيَّ ﷺ فَدَقَقْت الْبَابَ فَقَالَ : " مَنْ هَذَا ؟ " فَقُلْت : أَنَا . فَقَالَ : " أَنَا أَنَا ؟ ! " كَأَنَّهُ كَرِهَهَا . مُتَّفَقٌ عَلَيْهِ .

**877** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களின் வீட்டுக்கு வந்தேன். வாசல் கதவைத் தட்டினேன். "யார் அது?" என்று கேட்டார்கள். "நான்தான்!" என்று கூறினேன். "நான், நான் என்றால் யார் அது?" என்று கேட்ட நபி (ஸல்) அவர்கள் என் பதில் கேட்டு வெறுத்தவர்கள் போல் காணப்பட்டார்கள்.

**(புகாரி:6250. முஸ்லிம்:2155)**

## ١٤٢ – باب استحباب تشميت العاطس إِذَا حَمد اللّه تَعَالَى وكراهة تشميته إِذَا لم يحمد اللّه تَعَالَى وبيان آداب التشميت والعطاس والتثاؤب

## பாடம் : 142 - தும்மியவர், "அல்ஹம்துலில்லாஹ்" கூறினால் அவருக்கு பதில் கூறுவது விரும்பத்தக்கதாகும். "அல்ஹம்துலில்லாஹ்" கூறவில்லையானால் பதில் கூறுவது கூடாது. தும்முதல், தும்மியவருக்கு பதில் கூறுதல், கொட்டாவி விடுதல் பற்றிய ஒழுங்குகள்.

٨٧٨ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِنَّ اللَّهَ يُحِبُّ الْعُطَاسَ وَيَكْرَهُ التَّثَاؤُبَ فَإِذَا عَطَسَ أَحَدُكُمْ وَحَمِدَ اللَّهَ تَعَالَى كَانَ حَقًّا عَلَى كُلِّ مُسْلِمٍ سَمِعَهُ أَنْ يَقُولَ لَهُ : يَرْحَمُكَ اللَّهُ . وَأَمَّا التَّثَاؤُبُ فَإِنَّمَا هُوَ مِنَ الشَّيْطَانِ فَإِذَا تَثَاءَبَ أَحَدُكُمْ فَلْيَرُدَّهُ مَا اسْتَطَاعَ فَإِنَّ أَحَدَكُمْ إِذَا تَثَاءَبَ ضَحِكَ مِنْهُ الشَّيْطَانُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**878** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! அல்லாஹ் தும்மலை விரும்புகிறான். கொட்டாவியை வெறுக்கிறான். உங்களில் ஒருவர் தும்மி, "அல்ஹம்துலில்லாஹ்" என்று கூறினால், அதைக் கேட்ட அனைத்து முஸ்லிமும் அவருக்காக "யர்ஹமுகல்லாஹ்" (அல்லாஹ் உமக்கு அருள் புரிவான்) என்று கூறுவது அவர்களுக்கு கடமையாக உள்ளது. கொட்டாவி விடுதல் என்பது, ஷைத்தானின் செயல்களில் உள்ளதாகும்.

உங்களில் ஒருவர் கொட்டாவி விட்டால், அதை முடிந்த அளவுக்கு தடுத்துக் கொள்ளட்டும். உங்களில் ஒருவர் கொட்டாவி விட்டால், அவரைக் கண்டு ஷைத்தான் சிரிக்கிறான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6223)**

٨٧٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا عَطَسَ أَحَدُكُمْ فَلْيَقُلْ : الْحَمْدُ لِلَّهِ وَلْيَقُلْ لَهُ أَخُوهُ أَوْ صَاحِبُهُ : يَرْحَمُكَ اللَّهُ . فَإِذَا قَالَ لَهُ : يَرْحَمُكَ اللَّهُ فَلْيَقُلْ : يَهْدِيكُمُ اللَّهُ وَيُصْلِحُ بَالَكُمْ " . رَوَاهُ الْبُخَارِيُّ.

**879** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''உங்களில் ஒருவர் தும்மினால் அவர், ''அல்ஹம்துலில்லாஹ்'' எனக் கூறட்டும்! அவரின் சகோதரர் அல்லது அவரது நண்பர் அவருக்கு ''யர்ஹமுகல்லாஹ்'' என்று கூறட்டும்! 'யர்ஹமுகல்லாஹ்' என அவருக்கு ஒருவர் கூறினால், தும்மியவர், ''யஹ்தீகுமுல்லாஹ் வயுஸ்லிஹு பாலகும்'' (அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டுவானாக! உங்கள் நிலையை சீராக்குவானாக) என்று கூறட்டும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6224)**

٨٨٠ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِذَا عَطَسَ أَحَدُكُمْ فَحَمِدَ اللَّهَ فَشَمِّتُوهُ فَإِنْ لَمْ يَحْمَدِ اللَّهَ فَلاَ تُشَمِّتُوهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**880** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''உங்களில் ஒருவர் தும்மி, 'அல்ஹம்துலில்லாஹ்' என்று கூறினால், அவருக்காக 'யர்ஹமுகல்லாஹ்' எனக் கூறுங்கள். அவர் 'அல்ஹம்துலில்லாஹ்' என்று கூறவில்லையானால், அவருக்காக 'யர்ஹமுகல்லாஹ்' கூறாதீர்கள்'' என நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். **(முஸ்லிம்:2992)**

٨٨١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : عَطَسَ رَجُلاَنِ عِنْدَ النَّبِيِّ ﷺ فَشَمَّتَ أَحَدَهُمَا وَلَمْ يُشَمِّتِ الأخَرَ فَقَالَ الَّذِي لَمْ يُشَمِّتْهُ : عَطَسَ فُلاَنٌ فَشَمَّتَّهُ وَعَطَسْت فَلَمْ تُشَمِّتْنِي ؟ فَقَالَ : " هَذَا حَمِدَ اللَّهَ وَإِنَّكَ لَمْ تَحْمَدِ اللَّهَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**881** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் முன்னிலையில் இரண்டு நபர்கள் தும்மினார்கள். அவர்களில் ஒருவருக்கு நபி (ஸல்) அவர்கள், ''யர்ஹமுகல்லாஹ்'' என்று கூறி துஆச் செய்தார்கள். மற்றொருவருக்கு துஆச் செய்யவில்லை. தனக்கு துஆச் செய்யாத நிலையில் உள்ளவர், ''இன்ன மனிதர் தும்மினார். அவருக்கு நீங்கள் ''யர்ஹமுகல்லாஹ்'' என்று கூறி துஆச் செய்தீர்கள். நான் தும்மினேன். எனக்கு துஆச் செய்யவில்லையே!'' என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். அதற்கு, ''இவர் ''அல்ஹம்து லில்லாஹ்'' எனக் கூறி அல்லாஹ்வைப் புகழ்ந்தார். நீர் அல்லாஹ்வை புகழவில்லை'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6225. முஸ்லிம்:2991)**

٨٨٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا عَطَسَ وَضَعَ يَدَهُ أَوْ ثَوْبَهُ عَلَى فِيهِ وَخَفَضَ – أَوْ غَضَّ – بِهَا صَوْتَهُ . شَكَّ الرَّاوِي . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**882** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தும்மினால், தன் கையையோ அல்லது தன் கையிலிருக்கும் துணியையோ தன் வாயில் வைத்துக் கொள்வார்கள். இதன் மூலம் தன் (தும்மல்) சப்தத்தை (மறைத்து) குறைத்துக் கொள்வார்கள். **(அபூதாவூது:5029. திர்மிதீ:2745. இது ''ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٨٣ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ الْيَهُودُ يَتَعَاطَسُونَ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ يَرْجُونَ أَنْ يَقُولَ لَهُمْ : " يَرْحَمُكُمُ اللَّهُ " فَيَقُولُ : " يَهْدِيكُمُ اللَّهُ وَيُصْلِحُ بَالَكُمْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**883** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

யூதர்கள், நபி (ஸல்) அவர்கள் முன் தும்மிவிட்டு, தங்களுக்காக நபி (ஸல்) அவர்கள் "யர்ஹமுல்லாஹ்" என்று கூறுவார்கள் என எதிர்பார்ப்பார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள், "யஹ்தீகுமுல்லாஹு வயுஸ்லிஹு பாலகும்" என்று கூறுவார்கள்.

பொருள் : அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டுவானாக. உங்கள் நிலையைச் சீராக்குவானாக!
**(அபூதாவூது:5038. திர்மிதீ:2739. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٨٤ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا تَثَاءَبَ أَحَدُكُمْ فَلْيُمْسِكْ بِيَدِهِ عَلَى فِيهِ فَإِنَّ الشَّيْطَانَ يَدْخُلُ فِيهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**884** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் கொட்டாவி விட்டால், தன் கையால் வாயை மூடட்டும். நிச்சயமாக ஷைத்தான் அதன் வழியாக நுழைந்து விடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2995)**

## ١٤٣ - باب استحباب المصافحة عند اللقاء وبشاشة الوجه وتقبيل يد الرجل الصالح وتقبيل ولده شفقة ومعانقة القادم من سفر وكراهية الانحناء

## பாடம் : 143 - சந்திக்கும் போது கை குலுக்குவது, சிரித்த முகத்துடன் வரவேற்பது, நல்லவரின் கையை முத்தமிடுவது, தன் குழந்தையை அன்பாக முத்தமிடுவது, பயணத்திலிருந்து வருபவரை கட்டி அணைப்பது விரும்பத்தக்கதாகும். தலை குனிந்து பணிவது கூடாது.

٨٨٥ - عَنْ أَبِي الْخَطَّابِ قَتَادَةَ قَالَ : قُلْت لِأَنَسٍ : أَكَانَتْ الْمُصَافَحَةُ فِي أَصْحَابِ رَسُولِ اللَّهِ ﷺ ؟ قَالَ : نَعَمْ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**885** அபுல்கத்தாப் கதாதா அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்களின் தோழர்களிடம் முஸாஃபஹா செய்யும் வழக்கம் (கை குலுக்கும் பழக்கம்) இருந்ததா?" என்று அனஸ் (ரழி) அவர்களிடம் நான் கேட்டேன். அவர்கள், "ஆம்!" என்று கூறினார்கள். **(புகாரீ:6263)**

٨٨٦ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَمَّا جَاءَ أَهْلُ الْيَمَنِ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " قَدْ جَاءَكُمْ أَهْلُ الْيَمَنِ وَهُمْ أَوَّلُ مَنْ جَاءَ بِالْمُصَافَحَةِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**886** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

'ஏமன்' வாசிகள் வந்தபோது நபி (ஸல்) அவர்கள், "(தோழர்களே!) ஏமன் வாசிகள் உங்களிடம் வந்துள்ளனர். இவர்கள்தான் முதன் முதலில் முஸாஃபஹா செய்யும் (கை குலுக்கும்) பழக்கத்தை கொண்டு வந்த நபர்கள்" என்று கூறினார்கள். **(அபூதாவூது:5213)**

٨٨٧ – وَعَنِ الْبَرَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ مُسْلِمَيْنِ يَلْتَقِيَانِ فَيَتَصَافَحَانِ إِلاَّ غُفِرَ لَهُمَا قَبْلَ أَنْ يَفْتَرِقَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**887** பராஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரண்டு முஸ்லிம்கள் சந்தித்து, அவ்விருவரும் (முஸாஃபஹா செய்து கொண்டால்) கை குலுக்கினால், அவ்விருவரும் பிரியும் முன் அவர்களின் குற்றம் மன்னிக்கப்படாமல் இருப்பதில்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:5212)**

٨٨٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَجُلٌ : يَا رَسُولَ اللَّهِ الرَّجُلُ مِنَّا يَلْقَى أَخَاهُ أَوْ صَدِيقَهُ أَيَنْحَنِي لَهُ ؟ قَالَ : " لاَ " . قَالَ : أَفَيَلْتَزِمُهُ وَيُقَبِّلُهُ قَالَ:"لاَ " . قَالَ : فَيَأْخُذُ بِيَدِهِ وَيُصَافِحُهُ ؟ قَالَ : " نَعَمْ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ.

**888** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைத்தூதர் அவர்களே! எங்களில் ஒருவர் தன் சகோதரனை அல்லது தன் நண்பனை சந்திக்கிறார். அவருக்கு அவர் தலை குனியலாமா?” என ஒருவர் கேட்டார். “கூடாது” என்று பதில் கூறினார்கள். “அவரைக் கட்டி அணைத்து அவரை முத்தமிடலாமா? என்று கேட்டார். “கூடாது” என நபி (ஸல்) கூறினார்கள். “அவரின் கையை பிடித்து முஸாஃபஹா செய்யலாமா?” என்று கேட்டார்கள். “செய்யலாம்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2728. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٨٩ –وَعَنْ صَفْوَانَ بْنِ عَسَّالٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:قَالَ يَهُودِيٌّ لِصَاحِبِهِ:اذْهَبْ بِنَا إِلَى هَذَا النَّبِيِّ فَأَتَيَا رَسُولَ اللَّهِ ﷺ فَسَأَلاَهُ عَنْ تِسْعِ آيَاتٍ بَيِّنَاتٍ فَذَكَرَ الْحَدِيثَ إِلَى قَوْلِهِ:فَقَبَّلاَ يَدَهُ وَرِجْلَهُ وَقَالاَ:نَشْهَدُ أَنَّكَ نَبِيٌّ.رَوَاهُ التِّرْمِذِيُّ وَغَيْرُهُ بِأَسَانِيدَ صَحِيحَةٍ.

**889** ஸஃப்வான் இப்னு அஸ்ஸால் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு யூதர் தன் தோழரிடம், “இந்த நபியிடம் என்னை அழைத்துச் செல்லுங்கள்!” என்று கூறினார். அவ்விருவரும் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, (மூஸா நபிக்கு ஏற்பட்ட) ஒன்பது தெளிவான அத்தாட்சிகளைப் பற்றி கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அதைக் கூறினார்கள். உடனே அவ்விருவரும் நபி (ஸல்) அவர்களின் கை, காலில் முத்தமிட்டார்கள். “நிச்சயமாக நீர் நபிதான் என நாங்கள் சாட்சி கூறுகிறோம்” என்று இருவரும் கூறினார்கள். **(திர்மிதீ:2733)**

٨٩٠ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قِصَّةٌ قَالَ فِيهَا : فَدَنَوْنَا مِنَ النَّبِيِّ ﷺ فَقَبَّلْنَا يَدَهُ . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**890** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

“நாங்கள் நபி (ஸல்) அவர்களை நெருங்கினோம். அவர்களின் கையில் முத்தமிட்டோம்”

**(அபூதாவூது:5223)**

٨٩١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَدِمَ زَيْدُ بْنُ حَارِثَةَ الْمَدِينَةَ وَرَسُولُ اللَّهِ ﷺ فِي بَيْتِي فَأَتَاهُ فَقَرَعَ الْبَابَ . فَقَامَ إِلَيْهِ النَّبِيُّ ﷺ يَجُرُّ ثَوْبَهُ فَاعْتَنَقَهُ وَقَبَّلَهُ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**891** ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸைத் இப்னு ஹாரிதா (ரழி) அவர்கள் மதீனாவிற்கு வந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் என் வீட்டில் இருந்தார்கள். அவர்களிடம் வந்த அவர், கதவைத் தட்டினார். உடனே நபி (ஸல்) அவர்கள் தன் ஆடையை இழுத்துக் கொண்டு விரைந்து சென்றார்கள். அவரைக் கட்டி அணைத்து, முத்தமிட்டார்கள். **(திர்மிதீ:2732. இது ‘ஹஸன்’ என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٨٩٢ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللّٰهِ ﷺ : " لاَ تَحْقِرَنَّ مِنَ الْمَعْرُوفِ شَيْئًا وَلَوْ أَنْ تَلْقَى أَخَاكَ بِوَجْهٍ طَلِيقٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**892** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நன்மையானவற்றில் எதையும் நீ குறைவாக எண்ணிவிடாதே! (அது) உன் சகோதரனைச் சிரித்த முகத்துடன் நீ சந்திப்பதாக இருப்பினும் சரியே!” என்று என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2626)**

٨٩٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَبَّلَ النَّبِيُّ ﷺ الْحَسَنَ بْنَ عَلِيٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا ; فَقَالَ الأَقْرَعُ بْنُ حَابِسٍ : إِنَّ لِي عَشَرَةً مِنَ الْوَلَدِ مَا قَبَّلْتُ مِنْهُمْ أَحَدًا . فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَنْ لاَ يَرْحَمْ لاَ يُرْحَمْ ! " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**893** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், (தனது பேரர்) ஹஸன் இப்னு அலீ (ரழி) அவர்களை முத்தமிட்டார்கள். (அப்போது அங்கிருந்த) அக்ரஉ இப்னு ஹாபிஸ் (ரழி) அவர்கள், “எனக்கு பத்து குழந்தைகள் உண்டு. அவர்களில் எவரையும் நான் முத்தமிடமாட்டேன்” என்று கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள், “யார் இரக்கம் காட்டவில்லையோ, அவர் (இறைவனால்) இரக்கம் காட்டப்படமாட்டார்” என்று கூறினார்கள். **(புகாரி:5997 முஸ்லிம்:2318)**

# அத்தியாயம் : 6

## நோயாளியை விசாரித்தல், இறந்தோரை அடக்கம் செய்தல், அவருக்காக தொழுதல், அவரை அடக்கம் செய்யக் கலந்து கொள்ளுதல், அடக்கம் செய்தபின் மண்ணறை அருகே சிறிது நேரம் தங்குதல்

### ١٤٤ – بابُ عِيَادَة المريض

### பாடம் : 144 - நோயாளியை நலம் விசாரித்தல்

٨٩٤ – عَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : أَمَرَنَا رَسُولُ اللّٰهِ ﷺ بِعِيَادَةِ الْمَرِيضِ وَاتِّبَاعِ الْجَنَازَةِ وَتَشْمِيتِ الْعَاطِسِ وَإِبْرَارِ الْمُقْسِمِ وَنَصْرِ الْمَظْلُومِ وَإِجَابَةِ الدَّاعِي وَإِفْشَاءِ السَّلاَمِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**894** பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நோயாளியை விசாரித்தல், ஜனாஸாவில் கலந்து கொள்ளுதல், தும்மியவனுக்கு பதில் கூறுதல், நீதியைப் பேணுதல், அநீதம் இழைக்கப்பட்டவனுக்கு உதவுதல், விருந்திற்கு அழைத்தால் செல்லுதல். ஸலாமைப் பரப்புதல் ஆகியவற்றை எங்களுக்கு நபி (ஸல்) கட்டளையிட்டார்கள்.

**(புகாரி:6235. முஸ்லிம்:2066)**

٨٩٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " حَقُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ خَمْسٌ : رَدُّ السَّلاَمِ وَعِيَادَةُ الْمَرِيضِ وَاتِّبَاعُ الْجَنَائِزِ وَإِجَابَةُ الدَّعْوَةِ وَتَشْمِيتُ الْعَاطِسِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**895** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு முஸ்லிம் மீது மற்றொரு முஸ்லிமுக்குரிய கடமைகள் ஐந்து.

"1. ஸலாமுக்கு பதில் கூறுதல், 2. நோயாளியை விசாரித்தல், 3. ஜனாஸாவில் கலந்து கொள்ளுதல், 4.விருந்தை ஏற்றுக் கொள்ளுதல் 5. தும்மியவருக்கு பதில் கூறுதல்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1240. முஸ்லிம்:2162)**

٨٩٦ – وَعَنْهُ ) أَبي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِنَّ اللّٰهَ عَزَّ وَجَلَّ يَقُولُ يَوْمَ الْقِيَامَة : يَا ابْنَ آدَمَ مَرِضْتُ فَلَمْ تَعُدْني ! قَالَ : يَا رَبِّ كَيْفَ أَعُودُكَ وَأَنْتَ رَبُّ الْعَالَمِينَ ؟ قَالَ : أَمَا عَلِمْتَ أَنَّ عَبْدي فُلاَنًا مَرِضَ فَلَمْ تَعُدْهُ ! أَمَا عَلِمْتَ أَنَّكَ لَوْ عُدْتَه لَوَجَدْتَني عِنْدَهُ ؟ يَا ابْنَ آدَمَ اسْتَطْعَمْتُكَ فَلَمْ تُطْعِمْني ! قَالَ : يَا رَبِّ كَيْفَ أُطْعِمُكَ وَأَنْتَ رَبُّ الْعَالَمِينَ ! قَالَ : أَمَا عَلِمْتَ أَنَّهُ اسْتَطْعَمَكَ عَبْدي فُلاَنٌ فَلَمْ تُطْعِمْهُ ! أَمَا عَلِمْتَ أَنَّكَ لَوْ أَطْعَمْتَهُ لَوَجَدْتَ ذَلِكَ عِنْدي ؟ يَا ابْنَ آدَمَ اسْتَسْقَيْتُكَ فَلَمْ تَسْقِني ! قَالَ : يَا رَبِّ كَيْفَ أَسْقِيكَ وَأَنْتَ رَبُّ الْعَالَمِينَ ؟ قَالَ : اسْتَسْقَاكَ عَبْدي فُلاَنٌ فَلَمْ تُسْقِه ! أَمَا عَلِمْتَ أَنَّكَ لَوْ سَقَيْتَهُ لَوَجَدْتَ ذَلِكَ عِنْدي ؟ " . رَوَاهُ مُسْلِمٌ .

**896** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நிச்சயமாக அல்லாஹ், மறுமை நாளில், "ஆதமின் மகனே! நான் நோயாளியாக இருந்தேன். என்னை நீ விசாரிக்கவில்லையே?" என்று கேட்பான். "இறைவா! நீயோ உலக மக்களின் இறைவன். நான் எப்படி உன்னை நோய் விசாரிப்பது?",என்று மனிதன் பதில் அளிப்பான். "என் அடியான் இந்தப் பெயருடையவன் நோயாளியாக இருந்தான். அவனை நீ விசாரிக்கவில்லை என்பதை அறியவில்லையா? நீ அவனின் நோய் பற்றி விசாரித்திருந்தால், அவனிடம் என்னைக் கண்டிருப்பாய் என்பதை நீ அறியவில்லையா?" என்று அல்லாஹ் கூறிவிட்டு, "ஆதமின் மகனே! உன்னிடம் நான் உணவு கேட்டு வந்தேன். எனக்கு நீ உணவு தரவில்லையே!" என்று கூறுவான். "இறைவா! நீயோ உலக மக்களின் இறைவன். உனக்கு எப்படி நான் உணவளிப்பேன்?" என்று மனிதன் கேட்பான்.

"என் அடியான் இன்ன நபர் உன்னிடம் உணவு கேட்டு வந்து, அவனுக்கு நீ உணவு தரவில்லை என்பதை அறியவில்லையா? நீ அவனுக்கு உணவு தந்திருந்தால், அங்கே என்னைக் கண்டிருப்பாய் என்பதை நீ அறியவில்லையா?" என்று இறைவன் கேட்டுவிட்டு, "ஆதமின் மகனே! உன்னிடம் நான் குடிக்கத் தண்ணீர் கேட்டேன். எனக்கு நீ குடிக்கத் தண்ணீர் தரவில்லை!" என்று கூறுவான். "இறைவா! நீயோ உலக மக்களின் இறைவன். உனக்கு நான் எப்படி குடிக்கத் தண்ணீர் தருவேன்" என்று மனிதன் கேட்பான். "என் இன்ன அடியான் உன்னிடம் குடிக்கத் தண்ணீர் கேட்டான். அவனுக்கு நீ குடிக்கத் தண்ணீர் தரவில்லை. நீ அவனுக்கு குடிக்கத் தண்ணீர் தந்திருந்தால், அதை என்னிடம் (இன்று) நீ பெற்றிருப்பாய் என்பதை அறியவில்லையா?" என்று அல்லாஹ் கூறுவான். இதை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2569)**

٨٩٧ – وَعَنْ أَبي مُوسَى رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ: " عُودُوا الْمَرِيضَ وَأَطْعِمُوا الْجَائِعَ وَفُكُّوا الْعَانِيَ " . رَوَاهُ الْبُخَارِيُّ . " الْعَاني " : الأَسِيرُ .

**897** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நோயாளியை நலன் விசாரியுங்கள். பசித்தவனுக்கு உணவளியுங்கள். அடிமையை விடுவியுங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5649)**

٨٩٨ – وَعَنْ ثَوْبَانَ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِنَّ الْمُسْلِمَ إِذَا عَادَ أَخَاهُ الْمُسْلِمَ لَمْ يَزَلْ فِي خُرْفَةِ الْجَنَّة حَتَّى يَرْجِعَ " . قِيلَ : يَا رَسُولَ اللّٰهِ وَمَا خُرْفَةُ الْجَنَّة ؟ قَالَ : " جَنَاهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**898** ஸவ்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிம், தன் முஸ்லிமான சகோதரனை நலன் விசாரித்தால், அவனிடமிருந்து அவன் பிரியும் வரை சொர்க்கத்தில் 'குர்ஃபத்துல் ஜன்னா'வில் ஆகி விடுவார்" என நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! சொர்க்கத்தில் "குர்ஃபத்துல் ஜன்னா" என்றால் என்ன?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அது சொர்க்கத்தில் பறிக்கப்பட்ட கனிகள் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2568)**

٨٩٩ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ مُسْلِمٍ يَعُودُ مُسْلِمًا غُدْوَةً إِلاَّ صَلَّى عَلَيْهِ سَبْعُونَ أَلْفَ مَلَكٍ حَتَّى يُمْسِيَ وَإِنْ عَادَهُ عَشِيَّةً إِلاَّ صَلَّى عَلَيْهِ سَبْعُونَ أَلْفَ مَلَكٍ حَتَّى يُصْبِحَ وَكَانَ لَهُ خَرِيفٌ فِي الْجَنَّةِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " الْخَرِيفُ " : الثَّمَرُ الْمَخْرُوفُ : أَيُّ الْمُجْتَنَى .

**899** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமைக் காலையில் உடல் நலம் விசாரித்தால், மாலை வரை 70 ஆயிரம் வானவர்கள் அவருக்கு அருள் வேண்டி துஆச் செய்வார்கள். மேலும் மாலையில் அவரை இவர் உடல் நலம் விசாரித்தால், மறுநாள் காலை வரை 70 ஆயிரம் வானவர்கள்அவருக்கு அருள் வேண்டி துஆச் செய்கிறார்கள். அவருக்காக சொர்க்கத்தில் பறிக்கப்பட்ட கனிவகைகள் உண்டு என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:969. இந்த ஹதீஸ் "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٩٠٠ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ غُلاَمٌ يَهُودِيٌّ يَخْدُمُ النَّبِيَّ ﷺ فَمَرِضَ فَأَتَاهُ النَّبِيُّ ﷺ يَعُودُهُ فَقَعَدَ عِنْدَ رَأْسِهِ فَقَالَ لَهُ : " أَسْلِمْ " . فَنَظَرَ إِلَى أَبِيهِ وَهُوَ عِنْدَهُ . فَقَالَ : أَطِعْ أَبَا الْقَاسِمِ فَأَسْلَمَ فَخَرَجَ النَّبِيُّ ﷺ وَهُوَ يَقُولُ : " الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَنْقَذَهُ مِنَ النَّارِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**900** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு யூதச் சிறுவர் ஊழியராக இருந்தார். (ஒருநாள்) அவர் நோயாளியானார். நபி (ஸல்) அவர்கள் அவரிடம் வந்து, அவரை நலம் விசாரித்தார்கள். அவரின் தலை அருகே அமர்ந்து, "நீ முஸ்லிமாகி விடு" என்று அவரிடம் கூறினார்கள். அருகே இருந்த தன் தந்தையை அவர் பார்த்தார். "அபுல்காஸிமுக்கு (முஹம்மதுக்கு) நீ கட்டுப்படுவாயாக!" என்று தந்தை கூறினார். உடனே அந்தச் சிறுவர் (கலிமா கூறி) முஸ்லிமாகிவிட்டார். நபி (ஸல்) அவர்கள் வெளியேறி வரும் போது, "நரகத்திலிருந்து அவரைக் காப்பாற்றிய அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்!" என்று கூறினார்கள். **(புகாரி:1356)**

## ١٤٥ – بابُ ما يدعى به للمريض

## பாடம் : 145 - நோயாளிக்காக பிரார்த்திக்க வேண்டியவை (துஆக்கள்)

٩٠١ – عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا اشْتَكَى الإِنْسَانُ الشَّيْءَ مِنْهُ – أَوْ كَانَتْ بِهِ قَرْحَةٌ أَوْ جُرْحٌ – قَالَ النَّبِيُّ ﷺ بِأُصْبُعِهِ هَكَذَا وَوَضَعَ سُفْيَانُ بْنُ عُيَيْنَةَ الرَّاوِي سَبَّابَتَهُ بِالأَرْضِ ثُمَّ رَفَعَهَا وَقَالَ : " بِسْمِ اللَّهِ تُرْبَةُ أَرْضِنَا بِرِيقَةِ بَعْضِنَا يُشْفَى بِهِ سَقِيمُنَا بِإِذْنِ رَبِّنَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**901** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

எவரேனும் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் தன் நோய் பற்றியோ அல்லது அவரின் புண் அல்லது காயம் பற்றியோ முறையிட்டால், உடனே நபி (ஸல்) அவர்கள் தன் விரலை பூமியில் அழுத்தி, பின்பு அதை உயர்த்தி "பிஸ்மில்லாஹ் துர்பது அர்ழினா, பிரீகதி பஃழினா, யுஷ்ஃபா பிஹி ஸகீமுனா பி இத்னி ரப்பினா" என்று கூறுவார்கள். **(புகாரி:5745. முஸ்லிம்:2194)**

(இதன் அறிவிப்பாளர் வரிசையில் உள்ள சுப்யான் என்பவர், தம் நடுவிரலை பூமியில் அழுத்தி, பின்னர் உயர்த்தினார்)

**துஆவின் பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயரால்...எங்கள் பூமியின் மண், எங்களில் சிலரின் எச்சிலோடு கலந்துள்ளது. இதன் மூலம் எங்கள் இறைவனின் அனுமதியுடன் எங்களின் நோயாளி குணமடைவார்.**

٩٠٢ - وَعَنْهَا ) عَائِشَةَ ( أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَعُودُ بَعْضَ أَهْلِهِ يَمْسَحُ بِيَدِهِ الْيُمْنَى وَيَقُولُ : " اللَّهُمَّ رَبَّ النَّاسِ مُذْهِبَ الْبَأْسِ اشْفِ أَنْتَ الشَّافِي لاَ شِفَاءَ إِلاَّ شِفَاؤُكَ شِفَاءً لاَ يُغَادِرُ سَقَمًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**902** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்)அவர்கள், தன் குடும்பத்தாரிடம் நலம் விசாரித்தால், தன் வலது கையால் நோயாளியை தடவியவர்களாக "அல்லாஹும்ம ரப்பன்னாஸ், அஃத்ஹிபில் பஃஸ, வஷ்ஃபி அன்தஷ் ஷாபீ லா ஷிஃபாஅ இல்லா ஷிபாஉக, ஷிஃபாஅன் லா யுஹாதிரு ஸகமன்" என்று கூறுவார்கள்.

**(புகாரி: 5743. முஸ்லிம்:2191)**

**துஆவின் பொருள்: இறைவனே! மக்களின் இரட்சகனே! துன்பத்தை நீக்குவாயாக! குணமளிப்பாயாக! நீயே குணமளிப்பவன். உன் குணமளித்தலைத் தவிர வேறு குணமளித்தல் கிடையாது. எந்த நோயையும் அது விட்டு வைக்காது.**

٩٠٣ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ قَالَ لِثَابِت رَحِمَهُ اللَّهُ : أَلاَ أَرْقِيكَ بِرُقْيَةِ رَسُولِ اللَّهِ ﷺ ؟ قَالَ : بَلَى : قَالَ : " اللَّهُمَّ رَبَّ النَّاسِ مُذْهِبَ الْبَأْسِ اشْفِ أَنْتَ الشَّافِي لاَ شَافِيَ إِلاَّ أَنْتَ شِفَاءً لاَ يُغَادِرُ سَقَمًا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**903** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் ஓதி பார்த்தது போல், உங்களுக்கு நான் ஓதிப் பார்க்கட்டுமா?" என தாபித் (ரழி) அவர்களிடம் கேட்டேன். "சரி" என்றார். உடனே நான், "அல்லாஹும்ம ரப்பன்னாஸ், முத்ஹிபல் பஹ்ஸி, இஷ்ஃபீ, அன்தஷ் ஷாபீ, லா ஷாஃபிய இல்லா அந்த ஷிஃபாஅன் லாயுஹாதிரு ஸகமன்" என்று கூறினேன். **(புகாரி:5742)**

**துஆவின் பொருள்: இறைவனே! மனிதர்களின் இரட்சகனே! துன்பத்தைப் போக்குபவனே! குணமளிப்பாயாக! நீயே குணமளிப்பவன். உன்னைத் தவிர குணமளிப்பவன் வேறு யாரும் இல்லை. அது (உன் குணமளித்தல்) எந்த நோயையும் விட்டு வைக்காது.**

٩٠٤ - وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : عَادَنِي رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ : " اللَّهُمَّ اشْفِ سَعْدًا ; اللَّهُمَّ اشْفِ سَعْدًا اللَّهُمَّ اشْفِ سَعْدًا " . رَوَاهُ مُسْلِمٌ .

**904** ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என்னை உடல் நலம் விசாரித்தார்கள். அப்போது, "அல்லாஹும்மஷ்ஃபீ ஸஃதன், அல்லாஹும்மஷ்ஃபீ ஸஃதன், அல்லாஹும்மஷ்ஃபீ ஸஃதன்" என்று மூன்று முறை நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1628)**

**துஆவின் பொருள்: இறைவா! ஸஃதுக்கு குணமளிப்பாயாக! ஸஃதுக்கு குணமளிப்பாயாக! ஸஹ்துக்கு குணமளிப்பாயாக!**

٩٠٥ – وَعَنْ أَبِي عَبْدِ اللَّهِ بْنِ أَبِي الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ شَكَا إِلَى رَسُولِ اللَّهِ ﷺ وَجَعًا يَجِدُهُ فِي جَسَدِهِ مُنْذُ أَسْلَمَ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ : " ضَعْ يَدَكَ عَلَى الَّذِي يَأْلَمُ مِنْ جَسَدِكَ وَقُلْ : بِسْمِ اللَّهِ – ثَلَاثًا – وَقُلْ سَبْعَ مَرَّاتٍ : أَعُوذُ بِاللَّهِ وَقُدْرَتِهِ مِنْ شَرِّ مَا أَجِدُ وَأُحَاذِرُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**905** அபூஅப்துல்லாஹ் உஸ்மான் இப்னு அபுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் என் உடலில் ஏற்பட்ட வலி குறித்து நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அப்போது என்னிடம், "உம் உடலில் வலி உள்ள இடத்தில் உம் கையை வைத்து, "பிஸ்மில்லாஹ்" என மூன்று முறை கூறு! பின்பு, "அஊது பி இஸ்ஸத்தில்லாஹி வகுத்ரதிஹி மின் ஷர்ரி மா அஜிது வ உஹாதிரு" என்று ஏழு முறை கூறு!" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2202)**

**துஆவின் பொருள்: அல்லாஹ்வின் கண்ணியத்தையும் அவனது சக்தியையும் கொண்டு, நான் அடைந்துள்ள வேதனை மற்றும் பயப்படுகின்ற தீமையை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்.**

٩٠٦ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : مَنْ عَادَ مَرِيضًا لَمْ يَحْضُرْهُ أَجَلُهُ فَقَالَ عِنْدَهُ سَبْعَ مَرَّاتٍ : " أَسْأَلُ اللَّهَ الْعَظِيمَ رَبَّ الْعَرْشِ الْعَظِيمِ أَنْ يَشْفِيَكَ إِلَّا عَافَاهُ اللَّهُ مِنْ ذَلِكَ الْمَرَضِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ وَقَالَ الْحَاكِمُ : حَدِيثٌ صَحِيحٌ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ .

**906** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மரணத்தின் அறிகுறிகள் ஏற்படாத நோயாளியை ஒருவர் நலம் விசாரித்தால் அவரிடம், "அஸ்அலுல்லாஹல் அளீம ரப்பல் அர்ஷில் அளீமி அன் யஷ்ஃபீயக" என ஏழு முறை கூறினால், அந்த நோயை விட்டும் அல்லாஹ் அவருக்கு குணமளிக்காமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3106. திர்மிதீ:2083. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். புகாரி இமாமின் நிபந்தனைப்படி இது "ஸஹீஹ்" என இமாம் ஹாகிம் கூறுகிறார்)**

**துஆவின் பொருள்: மிகப்பெரியவனான, மாபெரும் அர்ஷின் அதிபதியான அல்லாஹ்விடம் உம்மை குணப்படுத்தும்படி கேட்கிறேன்.**

٩٠٧ – وَعَنْهُ ) ابْنِ عَبَّاسٍ ( أَنَّ النَّبِيَّ ﷺ دَخَلَ عَلَى أَعْرَابِيٍّ يَعُودُهُ وَكَانَ إِذَا دَخَلَ عَلَى مَنْ يَعُودُهُ قَالَ : " لَا بَأْسَ ; طَهُورٌ إِنْ شَاءَ اللَّهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**907** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், ஒரு காட்டரபியை உடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். அவர்கள் எவரையேனும் உடல் நலம் விசாரிக்கச் சென்றால், "லா பஃஸ தஹூருன் இன்ஷா அல்லாஹ்" என்று கூறுவார்கள். **(புகாரி:5656)**

**துஆவின் பொருள்: "பரவாயில்லை! அல்லாஹ் நாடினால் குணமாகும்"**

٩٠٨ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ جِبْرِيلَ أَتَى النَّبِيَّ ﷺ فَقَالَ : يَا مُحَمَّدُ اشْتَكَيْت ؟ قَالَ : " نَعَمْ " قَالَ : " بِسْمِ اللَّهِ أَرْقِيكَ مِنْ كُلِّ شَيْءٍ يُؤْذِيكَ : مِنْ شَرِّ كُلِّ نَفْسٍ أَوْ عَيْنِ حَاسِدٍ ! اللَّهُ يَشْفِيكَ بِسْمِ اللَّهِ أَرْقِيكَ " . رَوَاهُ مُسْلِمٌ.

**908** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "முஹம்மதே! தங்களுக்கு ஏற்பட்ட நோய் பற்றி முறையிட்டீர்களா?" என்று கேட்டார்கள். "ஆம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். உடனே ஜிப்ரீல் (அலை) அவர்கள், "பிஸ்மில்லாஹி அர்கீக, மின்குல்லி ஷய்இன் யூதீக, மின்ஷர்ரி குல்லி நஃப்ஸின் அவ் அய்னி ஹாஸிதி அல்லாஹு யஷ்ஃபீக பிஸ்மில்லாஹி அர்கீக" என்று கூறினார்கள்.
**(முஸ்லிம்:2186)**

**துஆவின் பொருள்: உங்களுக்குத் தீங்கு தருகின்ற அனைத்தையும் விட்டும், அனைத்து மக்களின் தீங்கை விட்டும், பொறாமைக்காரனின் கண்ணேறு விட்டும் அல்லாஹ்வின் பெயரால் உங்களுக்கு ஓதிப் பார்க்கிறேன். அல்லாஹ் உங்களுக்கு குணமளிப்பான். அல்லாஹ்வின் பெயரால் உங்களுக்கு ஓதிப் பார்க்கிறேன்.**

٩٠٩ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ وَأَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُمَا شَهِدَا عَلَى رَسُول اللَّه ﷺ أَنَّهُ قَالَ : " مَنْ قَالَ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَاللَّهُ أَكْبَرُ صَدَّقَهُ رَبُّهُ فَقَالَ : لاَ إِلَهَ إِلاَّ أَنَا وَأَنَا أَكْبَرُ . وَإِذَا قَالَ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ قَالَ : يَقُولُ : لاَ إِلَهَ إِلاَّ أَنَا وَحْدِي لاَ شَرِيكَ لِي . وَإِذَا قَالَ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ قَالَ : لاَ إِلَهَ إِلاَّ أَنَا لِيَ الْحَمْدُ وَلِيَ الْمُلْكُ . وَإِذَا قَالَ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّه قَالَ : لاَ إِلَهَ إِلاَّ أَنَا وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِي " . وَكَانَ يَقُولُ : " مَنْ قَالَهَا فِي مَرَضِهِ ثُمَّ مَاتَ لَمْ تَطْعَمْهُ النَّارُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ حَدِيثٌ حَسَنٌ .

**909** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி), அபூஹுரைரா (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் இருவரும் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள், "ஒருவன், "**லாயிலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்**" (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அல்லாஹ்வே மிகப்பெரியவன்) என்று கூறினால், அவரது இறைவன், அவரை உண்மைப்படுத்தி, 'வணக்கத்திற்குரியவன் என்னைத் தவிர வேறு யாரும் இல்லை. நானே மிகப்பெரியவன்" என்று கூறுவான்.

ஒருவன், "**லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீ கலஹு**" (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை இல்லை) என்று கூறினால், "வணக்கத்திற்குரியவன் என்னைத் தவிர வேறு யாரும் இல்லை. நானே தனித்தவன். எனக்கு இணை இல்லை" என்று அல்லாஹ் கூறுவான்.

ஒருவன், "**லாயிலாஹ இல்லல்லாஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து**" (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவனுக்கே ஆட்சி உரியது. அவனுக்கேபுகழ் அனைத்தும்) என்று கூறினால், "வணக்கத்திற்குரியவன் என்னைத் தவிர வேறு யாரும் இல்லை. எனக்கே அரசாட்சி உண்டு. எனக்கே புகழ் அனைத்தும்" என்று அல்லாஹ் கூறுவான்.

ஒருவன், "**லாயிலாஹ இல்லல்லாஹு வலாஹவ்ல வலாகுவ்வத்த இல்லா பில்லாஹ்**" (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. எவ்வித திரும்புதலோ, ஆற்றலோ அல்லாஹ்விடமிருந்தே தவிர வேறு இல்லை) என்று கூறினால், "வணக்கத்திற்குரியவன் என்னைத் தவிர வேறு யாரும் இல்லை. என்னைக் கொண்டே தவிர திரும்புதலோ, சக்தியோ இல்லை" என்று அல்லாஹ் கூறுவான்."

இதை நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, “தன் நோயின் போது இதை ஒருவர் கூறி மரணமாகி விட்டால், அவரை நரகம் தீண்டாது” என்றும் கூறினார்கள்.

**(திர்மிதீ:3430. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٤٦ – باب استحباب سؤال أهل المريض عَنْ حَاله

## பாடம் : 146 - நோயாளியின் நிலை பற்றி நோயாளியின் குடும்பத்தாரிடம் கேட்பது விரும்பத்தக்கது.

٩١. – عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ عَلِيَّ بْنَ أَبِي طَالِب رَضِيَ اللَّهُ عَنْهُ خَرَجَ مِنْ عِنْدِ رَسُولِ اللَّهِ ﷺ فِي وَجَعِهِ الَّذِي تُوُفِّيَ فِيهِ فَقَالَ النَّاسُ : " يَا أَبَا الْحَسَنِ كَيْفَ أَصْبَحَ رَسُولُ اللَّهِ ﷺ ؟ قَالَ : أَصْبَحَ بِحَمْدِ اللَّهِ بَارِئًا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**910** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுக்கு மரணத்தை ஏற்படுத்திய நோயின் போது, நபி (ஸல்) அவர்களிடம் தங்கிவிட்டு, அலீ (ரழி) அவர்கள் வெளியே வந்தார்கள். “அபுல் ஹஸன் அவர்களே! நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு உள்ளார்கள்?” என்று மக்கள் கேட்டனர். “அல்லாஹ்வின் புகழால் நலமாக உள்ளார்கள்” என்று அலீ (ரழி) கூறினார்கள். **(புகாரி:6266)**

## ١٤٧ – بَابُ ما يقوله مَن أَيِسَ من حَيَاتِهِ

## பாடம் : 147 - தன் மரணம் நெருங்கி விட்டது என எண்ணுபவர் கூற வேண்டியது.

٩١١ – عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : سَمِعْتُ النَّبِيَّ ﷺ وَهُوَ مُسْتَنِدٌ إِلَيَّ يَقُولُ : " اللَّهُمَّ اغْفِرْ لِي وَارْحَمْنِي وَأَلْحِقْنِي بِالرَّفِيقِ الأَعْلَى " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**911** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (மரணத்தருவாயில்) என் மீது சாய்ந்தவர்களாக “இறைவா! என் பிழைகளை மன்னிப்பாயாக! எனக்கு அருள் புரிவாயாக! என்னை உயர்வான தோழன் பக்கம் (உன் பக்கம்) சேர்ப்பாயாக!” என்று கூறினார்கள். **(புகாரி:5674. முஸ்லிம்:2444)**

٩١٢ – وَعَنْهَا ( عَائِشَةَ ) قَالَتْ : رَأَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ وَهُوَ بِالْمَوْتِ وَعِنْدَهُ قَدَحٌ فِيهِ مَاءٌ وَهُوَ يُدْخِلُ يَدَهُ فِي الْقَدَحِ ثُمَّ يَمْسَحُ وَجْهَهُ بِالْمَاءِ ثُمَّ يَقُولُ : " اللَّهُمَّ أَعِنِّي عَلَى غَمَرَاتِ الْمَوْتِ وَسَكَرَاتِ الْمَوْتِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ .

**912** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களை அவர்களின் மரண வேளையின் போது பார்த்தேன். அவர்களுக்கு அருகில் தண்ணீர் செம்பு இருந்தது. அவர்கள் அந்த செம்பில் தன் கையை நுழைத்து, அந்த தண்ணீரை எடுத்து தன் முகத்தில் தடவிக் கொள்வார்கள். பின்பு, “அல்லாஹும்ம அஇன்னீ அலா ஙமராத்தில் மவ்தி, வஸகராதில் மவ்த்” என்று கூறினார்கள். **(திர்மிதீ:978)**

**துஆவின் பொருள்: இறைவனே! மரணத்தின் வேதனைகளின் போதும், மரணத்தின் மயக்கத்தின் போதும் எனக்கு நீ உதவி செய்வாயாக!**

## ١٤٨ – باب استحباب وَصيّة أَهل المريض وَمن يخدمه بالإحسان إِليه واحتماله والصبر على ما يشق من أمره وكذا الو صية بمن قرب سبب موته بحدّ أَو قصاص ونحو هما

## பாடம் : 148 - நோயாளிக்கு ஊழியம் செய்யவும், அவர்களால் ஏற்படும் சிரமத்திற்கு பொறுமை கொள்ளவும், நோயாளிக்கு நல்ல உபதேசம் செய்வதும் விரும்பத்தக்கது. குற்றச் செயல் தண்டனைப் பெற்று மரணத்தை நெருங்கியவர் சம்பந்தமாக நல்லுபதேசம் செய்வது விரும்பத்தக்கது.

٩١٣ – عَنْ عِمْرَانَ بْنِ حُصَيْنٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ امْرَأَةً مِنْ جُهَيْنَةَ أَتَتْ النَّبِيَّ ﷺ وَهِيَ حُبْلَى مِنَ الزِّنَى فَقَالَتْ : يَا رَسُولَ اللَّهِ أَصَبْت حَدًّا فَأَقِمْهُ عَلَيَّ فَدَعَا رَسُولُ اللَّهِ ﷺ وَلِيَّهَا فَقَالَ : " أَحْسِنْ إِلَيْهَا فَإِذَا وَضَعَتْ فَأْتِنِي بِهَا " . فَفَعَلَ فَأَمَرَ بِهَا النَّبِيُّ ﷺ فَشُدَّتْ عَلَيْهَا ثِيَابُهَا ثُمَّ أَمَرَ بِهَا فَرُجِمَتْ ثُمَّ صَلَّى عَلَيْهَا . رَوَاهُ مُسْلِمٌ.

**913** இம்ரான் இப்னு ஹுசைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜுஹைனா கிளையைச் சேர்ந்த ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். விபச்சாரம் மூலம் அந்த பெண் கர்ப்பிணியாக இருந்தார். "இறைத்தூதர் அவர்களே! தண்டனை பெறும் குற்றத்தைச் செய்து விட்டேன். என்மீது அதை நிறைவேற்றுங்கள்" என்று அந்தப் பெண் கூறினார். நபி (ஸல்) அவர்கள், அப்பெண்ணின் பொறுப்பாளரை அழைத்து, "இப்பெண்ணிடம் நல்லவிதமாக நடந்து கொள்வீராக! இவள் குழந்தையைப் பெற்றதும், என்னிடம் அழைத்து வருவீராக!" என்று கூறினார்கள். அவரும் அவ்வாறே செய்தார். அந்தப் பெண்ணிற்கு (தண்டனை தர) நபி (ஸல்) அவர்கள் கட்டளை யிட்டார்கள். அந்தப் பெண்ணின் ஆடை இறுக்கமாக சுற்றப்பட்டது. பின்னர் கல்லால் எறிந்திட கட்டளையிட்டார்கள். (அப்பெண் இறந்ததும்) அவருக்காக நபி (ஸல்) தொழ வைத்தார்கள்.

**(முஸ்லிம்:1696)**

## ١٤٩ – بَابُ جَوَازِ قَوْلِ المريض: أَنَا وَجِعٌ، أَوْ شَدِيدُ الْوَجَعِ أَو موعوك أو ((وارأساه)) ونحو ذلك وبيانَ أنه لا كراهةَ في ذلك إِذا لم يكن على سبيل التسخط وإظهار الجزع

## பாடம் : 149 - "எனக்கு வலிக்கிறது" "கடும் வேதனையாக உள்ளது" "என் தலைக்கு வந்த கேடே!" என்பன போன்ற வார்த்தைகளை ஒரு நோயாளி கூறுவது கூடும். கோபத்தை, கவலையை வெளிப்படுத்துவது என்றில்லாத வரை இது விஷயத்தில் குற்றம் இல்லை.

٩١٤ – عَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : دَخَلْت عَلَى النَّبِيِّ ﷺ وَهُوَ يُوعَكُ فَمَسِسْتُهُ فَقُلْت : إِنَّك لَتُوعَكُ وَعْكًا شَدِيدًا فَقَالَ : " أَجَلْ إِنِّي أُوعَكُ كَمَا يُوعَكُ رَجُلَانِ مِنْكُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**914** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுக்கு காய்ச்சலாக இருந்த நேரத்தில் நான் அவர்களிடம் சென்றேன். அவர்களைத் தொட்டுப் பார்த்தேன். "நீங்கள் கடும் காய்ச்சலால் கஷ்டப்படுகிறீர்கள்?" என்றேன். அப்போது அவர்கள், "ஆம்! உங்களில் இருவருக்கு ஏற்படும் காய்ச்சல், எனக்கு ஏற்படுகிறது" என்று கூறினார்கள்.

**(புகாரி:5660. முஸ்லிம்:2571)**

٩١٥ – وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَنِي رَسُولُ اللَّهِ ﷺ يَعُودُنِي مِنْ وَجَعٍ اشْتَدَّ بِي فَقُلْت : بَلَغَ بِي مَا تَرَى وَأَنَا ذُو مَالٍ وَلَا يَرِثُنِي إِلَّا ابْنَتِي – وَذَكَرَ الْحَدِيثَ – مُتَّفَقٌ عَلَيْهِ .

**915** ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

எனக்கு ஏற்பட்டிருந்த கடுமையான நோயினை விசாரிக்க என்னிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது நான் அவர்களிடம், "நீங்கள் பார்க்கும் இந்த கடினமான நிலை எனக்கு ஏற்பட்டுவிட்டது. நான் செல்வமுடையவன். எனக்கு ஒரு மகளே தவிர, வேறு வாரிசே இல்லை" என்று கூறினேன். **(இது நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும். புகாரி:5668. முஸ்லிம்:1628)**

٩١٦ – وَعَنِ الْقَاسِمِ بْنِ مُحَمَّد قَالَ : قَالَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا : وَارَأْسَاهُ ! فَقَالَ النَّبِيُّ ﷺ : " بَلْ أَنَا وَارَأْسَاهُ ! " – وَذَكَرَ الْحَدِيثَ – رَوَاهُ الْبُخَارِيُّ .

**916** காஸிம் இப்னு முஹம்மத் அறிவிக்கின்றார்கள்:

(தங்கள் நோயின் கடுமையால்) ஆயிஷா (ரழி) அவர்கள், "என் தலைக்கு வந்த கேடே!" எனக் கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களும், "என் தலைக்கும் வந்த கேடே!" எனக் கூறினார்கள். **(இது நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும். புகாரி:5666)**

## ١٥. – بابُ تلقين المحتضَر لآ إِلَه إِلاّ اللّه

## பாடம் : 150 - மரண வேளையில் "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவை சொல்லித் தருதல்.

٩١٧ – عَنْ مُعَاذ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ كَانَ آخِرَ كَلَامِهِ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ دَخَلَ الْجَنَّةَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالْحَاكِمُ وَقَالَ : صَحِيحُ الأَسْنَادِ .

**917** முஆத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவரின் இறுதிச் சொல்லாக, "லாயிலாஹ இல்லல்லாஹ்" ஆகிவிடுமானால், அவர் சொர்க்கத்தில் நுழைவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:3116. ஹாகிம்:1/351)**

٩١٨ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَقِّنُوا مَوْتَاكُمْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ.

**918** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் இறந்து விடும் நிலையில் உள்ளவர்களுக்கு, "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவைச் சொல்லிக் கொடுங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:916)**

## ١٥١ – بابُ مَا يَقُولُهُ بَعد تغميض الميت

## பாடம் : 151 - மரணம் அடைந்தவரின் கண்களை மூடிய பின் கூற வேண்டியவை.

٩١٩ – عَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : دَخَلَ رَسُولُ اللَّهِ ﷺ عَلَى أَبِي سَلَمَةَ وَقَدْ شَقَّ بَصَرُهُ فَأَغْمَضَهُ ثُمَّ قَالَ : " إِنَّ الرُّوحَ إِذَا قُبِضَ تَبِعَهُ الْبَصَرُ " . فَضَجَّ نَاسٌ مِنْ أَهْلِهِ فَقَالَ : " لاَ تَدْعُوا عَلَى أَنْفُسِكُمْ إِلاَّ بِخَيْرٍ فَإِنَّ الْمَلاَئِكَةَ يُؤَمِّنُونَ عَلَى مَا تَقُولُونَ " . ثُمَّ قَالَ : " اللَّهُمَّ اغْفِرْ لأَبِي سَلَمَةَ وَارْفَعْ دَرَجَتَهُ فِي الْمَهْدِيِّينَ وَاخْلُفْهُ فِي عَقِبِهِ فِي الْغَابِرِينَ وَاغْفِرْ لَنَا وَلَهُ يَا رَبَّ الْعَالَمِينَ وَافْسَحْ لَهُ فِي قَبْرِهِ وَنَوِّرْ لَهُ فِيهِ " . رَوَاهُ مُسْلِمٌ.

**919** உம்மு ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூஸலமா (ரழி)யிடம் (அவர் இறந்த போது) நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அபூஸலமா அவர்களின் கண்கள் திறந்திருந்தது. அதை மூடினார்கள். பின்பு, "உயிர் கைப்பற்றப்பட்டுவிட்டால், பார்வையும் (பறி) போய் விடுகிறது. (ஆகவே மரணமடைந்துவிட்டவரின் கண்களை மூடிவிடுங்கள்)" என்று கூறினார்கள். அப்போது அபூஸலமா அவர்களின் குடும்பத்தார் கதறி அழுதார்கள். "நன்மையைக் கொண்டே தவிர உங்களுக்காக துஆச் செய்து கொள்ளாதீர்கள். நிச்சயமாக! நீங்கள் சொல்லக் கூடியவற்றிற்கு வானவர்கள், "ஆமீன்" கூறுகிறார்கள்" என்று நபி (ஸல்) கூறிவிட்டு, "அல்லாஹும்மஃபிர்லி அபீஸலமா, வர்பஃ தரஜதஹு ஃபில்மஹ்தீய்யீன், வஃலுப்ஹு ஃபீ அகிபிஹீ ஃபில் காஃபிரீன் வஃபிர்லனா வலஹு யாரப்பல் ஆலமீன். வஃப்ஸஹ் லஹு பீ கப்ரிஹி, வநவ்விர் லஹு பீஹி" என்றும் கூறினார்கள். **(முஸ்லிம்:920)**

**துஆவின் பொருள்: இறைவா! அபூஸலமாவின் பிழைகளைப் பொறுப்பாயாக! நேர்வழி பெற்றவர்களில் அவரின் தகுதியையும் உயர்த்துவாயாக! அவரின் வாரிசுகளில் அவருக்குப் பகரமாக நீ இருப்பாயாக! உலக மக்களின் இறைவனே! எங்களுக்கும், அவருக்கும் பிழைப் பொறுப்பாயாக! அவரின் மண்ணறையை விசாலமாக்குவாயாக! அவரின் மண்ணறையை ஒளியாக்கி வைப்பாயாக!**

## ١٥٢ – باب ما يقال عند الميت وما يقوله مَن مَاتَ له ميت

## பாடம் : 152 - இறந்தவரிடம் கூற வேண்டியவை, இறந்தவரின் உறவினரிடம் கூற வேண்டியவை.

**٩٢٠** – عَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا حَضَرْتُمُ الْمَرِيضَ – أَوْ الْمَيِّتَ – فَقُولُوا خَيْرًا فَإِنَّ الْمَلاَئِكَةَ يُؤَمِّنُونَ عَلَى مَا تَقُولُونَ " . قَالَتْ : فَلَمَّا مَاتَ أَبُو سَلَمَةَ أَتَيْتُ النَّبِيَّ ﷺ فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ أَبَا سَلَمَةَ قَدْ مَاتَ . قَالَ : " قُولِي : اللَّهُمَّ اغْفِرْ لِي وَلَهُ وَأَعْقِبْنِي مِنْهُ عُقْبَى حَسَنَةً " . فَقُلْتُ فَأَعْقَبَنِي اللَّهُ مَنْ هُوَ خَيْرٌ لِي مِنْهُ : مُحَمَّدًا ﷺ . رَوَاهُ مُسْلِمٌ هَكَذَا : " إِذَا حَضَرْتُمُ الْمَرِيضَ أَوِ الْمَيِّتَ " عَلَى الشَّكِّ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ : " الْمَيِّتُ " بِلاَ شَكٍّ .

**920** உம்முஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நோயாளியிடமோ அல்லது இறந்தவரிடமோ நீங்கள் செல்ல நேரிட்டால், நல்லதைக் கூறுங்கள். நீங்கள் சொல்லக் கூடியவற்றிற்கு வானவர்கள் 'ஆமீன்' கூறுகிறார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (என் கணவர்) அபூஸலமா (ரழி) இறந்தபோது, நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "இறைத்தூதர் அவர்களே! அபூ ஸலமா இறந்துவிட்டார்கள்" என்று கூறினேன். "அல்லாஹும்ம ஃபிர்லீ, வ லஹு, வஅஃகிப்னீ மின்ஹு உக்பன் ஹஸனதன் (இறைவனே! என்னையும், அவரையும் மன்னிப்பாயாக! அவரை விட சிறந்த துணையை எனக்கு ஏற்படுத்துவாயாக!)" என்று நீ கூறு! என நபி (ஸல்) கூறினார்கள். அதை நான் கூறினேன். அவரை விட சிறந்தவரான முஹம்மத் (ஸல்) அவர்களை எனக்கு அல்லாஹ் துணையாக்கினான். **(முஸ்லிம்:919)**

**٩٢١** – وَعَنْهَا ) أُمِّ سَلَمَةَ ( قَالَتْ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ عَبْدٍ تُصِيبُهُ مُصِيبَةٌ فَيَقُولُ : إِنَّا لِلَّهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ اللَّهُمَّ أْجُرْنِي فِي مُصِيبَتِي وَاخْلُفْ لِي خَيْرًا مِنْهَا إِلاَّ أَجَرَهُ اللَّهُ تَعَالَى فِي مُصِيبَتِهِ وَأَخْلَفَ لَهُ خَيْرًا مِنْهَا " قَالَتْ : فَلَمَّا تُوُفِّيَ أَبُو سَلَمَةَ قُلْتُ كَمَا أَمَرَنِي رَسُولُ اللَّهِ ﷺ فَأَخْلَفَ اللَّهُ لِي خَيْرًا مِنْهُ " رَسُولَ اللَّهِ ﷺ " . رَوَاهُ مُسْلِمٌ .

**921** உம்முஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு மனிதனுக்கு சோதனை ஏற்பட்டதும், “இன்னாலில்லாஹி வஇன்னா இலய்ஹி ராஜிஊன். அல்லாஹும்ம அஜிர்னீ ஃபீமுஸீபத்தீ வஅஃலிஃப்லீ கய்ரன் மின்ஹா” (நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்குரியவர்கள். நாம் அவன் பக்கமே மீளுபவர்களாக உள்ளோம். இறைவனே! என் சோதனையில் எனக்கு நற்கூலியைத் தருவாயாக! அதைவிட சிறந்ததை எனக்குப் பகரமாக்குவாயாக) என்று கூறினால், அவருக்கு அல்லாஹ் அவரின் சோதனைக்கு நற்கூலியைத் தந்து, மேலும் அதைவிட சிறந்ததை அவருக்குப் பகரமாக்காமல் இருப்பதில்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். (என் கணவர்) அபூஸலமா (ரழி) இறந்தபோது, நபி (ஸல்) அவர்கள் எனக்கு கட்டளையிட்டபடியே கூறினேன். அல்லாஹ் அவரை விட சிறந்தவரான நபி (ஸல்) அவர்களையே எனக்குக் கணவராக ஆக்கினான்.

**(முஸ்லிம்:918)**

٩٢٢ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ : " إِذَا مَاتَ وَلَدُ الْعَبْد قَالَ اللَّهُ تَعَالَى لِمَلاَئكَته : قَبَضْتُمْ وَلَدَ عَبْدِي ؟ فَيَقُولُونَ : نَعَمْ فَيَقُولُ : قَبَضْتُمْ ثَمَرَةَ فُؤَاده ؟ فَيَقُولُونَ : نَعَمْ . فَيَقُولُ : فَمَاذَا قَالَ عَبْـــدي ؟ فَيَقُولُونَ حَمدَكَ وَاسْتَرْجَعَ . فَيَقُولُ اللَّهُ تَعَالَى : ابْنُوا لِعَبْدِي بَيْتًا فِي الْجَنَّة وَسَمُّوهُ بَيْتَ الْحَمْد " . رَوَاهُ التِّرْمذيُّ وَقَالَ : حَديثٌ حَسَنٌ .

**922** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஓர் அடியானின் குழந்தை இறந்துவிட்டால், வானவர்களிடம் அல்லாஹ், “என் அடியானின் குழந்தையை (உயிரை) கைப்பற்றினீர்களா?” என்று கேட்பான். “ஆம்” என அவர்கள் கூறுவார்கள். “என் அடியானின் இதயத்தைக் கைப்பற்றினீர்களா?” என்று அல்லாஹ் கேட்பான். “ஆம்” என அவர்கள் கூறுவார்கள். “என் அடியான் என்ன கூறினான்?” என்று கேட்பான். “உன்னைப் புகழ்ந்தான். “இன்னாலில்லாஹி வஇன்னா இலய்ஹி ராஜிஊன் எனக் கூறினான்” என்று வானவர்கள் கூறுவார்கள். “சொர்க்கத்தில் என் அடியானுக்கு வீடு கட்டுங்கள். அதற்கு “(பைதுல் ஹம்து) -புகழுக்குரிய வீடு” என்று பெயரிடுங்கள்!” என்று அல்லாஹ் கூறுவான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:1021. “ஹஸன்” என இதை திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٩٢٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ : يَقُولُ اللَّهُ تَعَالَى : " مَا لِعَبْدِي الْمُؤْمِنِ عِنْدِي جَزَاءٌ إِذَا قَبَضْتُ صَفِيَّهُ مِنْ أَهْلِ الدُّنْيَا ثُمَّ احْتَسَبَهُ إِلاَّ الْجَنَّةُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**923** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஓர் இறை நம்பிக்கை கொண்ட அடியானின் குழந்தையை இவ்வுலகில் நான் கைப்பற்றி, அவன் அதை பொறுமையாக சகித்துக் கொண்டால்; அவனுக்குக் கூலியாக சொர்க்கத்தைத் தவிர வேறில்லை” என்று அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6424)**

٩٢٤ – وَعَنْ أُسَامَةَ بْنِ زَيْد رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : أَرْسَلَتْ إِحْدَى بَنَات النَّبِيِّ ﷺ إِلَيْه تَدْعُوهُ وَتُخْبِرُهُ أَنَّ صَبِيًّا لَهَا – أَوْ ابْنًا – فِي الْمَوْت فَقَالَ لِلرَّسُول : " ارْجِعْ إِلَيْهَا فَأَخْبِرْهَا أَنَّ لِلَّه تَعَالَى مَا أَخَذَ وَلَهُ مَا أَعْطَى وَكُلُّ شَيْءٍ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى فَمُرْهَا فَلْتَصْبِرْ وَلْتَحْتَسِبْ " . – وَذَكَرَ تَمَامَ الْحَدِيث – مُتَّفَقٌ عَلَيْه .

**924** உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் பெண் மக்களில் ஒருவர் (ஜைனப் (ரழி)) தன் மகன் இறந்துவிட்டதாக நபி (ஸல்) அவர்களுக்குச் செய்தி அனுப்பினார். அப்போது வந்தவரிடம் நபி (ஸல்) அவர்கள், “என் மகளிடம் சென்று, நிச்சயமாக அல்லாஹ்வுக்கு எடுத்துக் கொள்ளவும், கொடுக்கவும் உரிமை உண்டு

என்று அவரிடம் கூறும்! அல்லாஹ்விடம் உள்ள ஒவ்வொன்றிற்கும் ஒரு குறிப்பிட்ட தவணை உண்டு. அவர் (என் மகள்) பொறுமையாக இருந்து, நன்மையை நாடும்படி அவருக்குக் கட்டளையிடு'' என்று கூறினார்கள். **(இது நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும். புகாரி:1284. முஸ்லிம்:923)**

## ١٥٣ – بابُ جواز البكاء علَى الْمَيت بغير ندب ولانياحة

## பாடம் : 153 - சப்தம், ஒப்பாரியின்றியும் இறந்தவருக்காக அழுவது கூடும்.

أَمَّا النِّيَاحَةُ فَحَرَامٌ وَسَيَأْتِي فِيهَا بَابٌ فِي كِتَابِ النَّهْيِ إِنْ شَاءَ اللَّهُ تَعَالَى . وَأَمَّا الْبُكَاءُ فَجَاءَتْ أَحَادِيثُ بِالنَّهْيِ عَنْهُ وَأَنَّ الْمَيِّتَ يُعَذَّبُ بِبُكَاءِ أَهْلِهِ وَهِيَ مُتَأَوَّلَةٌ مَحْمُولَةٌ عَلَى مَنْ أَوْصَى بِهِ وَالنَّهْيُ إِنَّمَا هُوَ عَنِ الْبُكَاءِ الَّذِي فِيهِ نَدْبٌ أَوْ نِيَاحَةٌ . وَالدَّلِيلُ عَلَى جَوَازِ الْبُكَاءِ بِغَيْرِ نَدْبٍ وَلاَ نِيَاحَةٍ أَحَادِيثُ كَثِيرَةٌ مِنْهَا :

ஒப்பாரி வைத்து அழுவது ஹராமாகும். (இந்நூலில் அமைந்துள்ள) "கிதாபுன் நஹ்யி'' பகுதியில் இன்ஷா அல்லாஹ் அது பற்றிய பாடம் வரும். அதிகமான ஹதீஸ்கள் ஒப்பாரி வைப்பதை விலக்கி வந்துள்ளன. "குடும்பத்தினரின் அழுகையின் காரணமாக மய்யித் வேதனை செய்யப்படுகிறது'' என்ற ஹதீஸின் கருத்து, அவ்வாறு தமக்காக அழும்படி முன்னதாக அவர் தம் குடும்பத்தினருக்கு வஸிய்யத் செய்திருந்து அதன்படி அக்குடும்பத்தினர் அழுதால் அதன் குற்றம் அந்த மய்யித்துக்கு ஏற்படும் என்பதாகும்.

சப்தமிட்டு அழுவதும், ஒப்பாரி வைத்து அழுவதும், மார்க்கத்தில் தடுக்கப்பட்டவையாகும். இவை இல்லாமல் அழுவது கூடும் என்பதற்கு ஏராளமான ஹதீஸ்கள் ஆதாரமாக உள்ளன. அவற்றில சில பின்வருமாறு :

٩٢٥ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ عَادَ سَعْدَ بْنَ عُبَادَةَ وَمَعَهُ عَبْدُ الرَّحْمَنِ بْنُ عَوْفٍ وَسَعْدُ بْنُ أَبِي وَقَّاصٍ وَعَبْدُ اللَّهِ بْنُ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُمْ فَبَكَى رَسُولُ اللَّهِ ﷺ فَلَمَّا رَأَى الْقَوْمُ بُكَاءَ رَسُولِ اللَّهِ ﷺ بَكَوْا . فَقَالَ : " أَلاَ تَسْمَعُونَ ؟ إِنَّ اللَّهَ لاَ يُعَذِّبُ بِدَمْعِ الْعَيْنِ وَلاَ بِحُزْنِ الْقَلْبِ وَلَكِنْ يُعَذِّبُ بِهَذَا أَوْ يَرْحَمُ ! " وَأَشَارَ إِلَى لِسَانِهِ . مُتَّفَقٌ عَلَيْهِ.

**925** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(நோயுற்ற) ஸஃது இப்னு உபாதா (ரழி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் நலம் விசாரித்தார்கள். அவர்களுடன் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரழி), ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரழி), அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) ஆகியோர் இருந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் அழுதார்கள். நபி (ஸல்) அவர்கள் அழுவதைக் கண்ட மக்களும் அழுதார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "கேட்டுக் கொள்ளுங்கள்! நிச்சயமாக, அல்லாஹ் கண்ணீராலோ, இதயத்தின் கவலையி னாலோ தண்டித்திட மாட்டான். எனினும் இதன் மூலமே தண்டிப்பான். அல்லது அருள்புரிவான்'' என்று கூறி தன் நாவைச் சுட்டிக் காட்டினார்கள். **(புகாரி:1304. முஸ்லிம்:924)**

٩٢٦ – وَعَنْ أُسَامَةَ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ رُفِعَ إِلَيْهِ ابْنُ ابْنَتِهِ وَهُوَ فِي الْمَوْتِ فَفَاضَتْ عَيْنَا رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ لَهُ سَعْدٌ : مَا هَذَا يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " هَذِهِ رَحْمَةٌ جَعَلَهَا اللَّهُ تَعَالَى فِي قُلُوبِ عِبَادِهِ وَإِنَّمَا يَرْحَمُ اللَّهُ مِنْ عِبَادِهِ الرُّحَمَاءَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**926** உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், அவர்களின் மகளின் மகன் (பேரன் கொண்டு வந்து) காண்பிக்கப்பட்டார். அவர் மரணத் தருவாயில் இருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்களின் கண்களில் கண்ணீர் மல்கியது.

உடனே ஸஃது (ரழி) அவர்கள், அவர்களிடம், “இறைத்தூதர் அவர்களே! தாங்களும் அழுகிறீர்களே!” என்று கேட்டார்கள். “இது தான் கருணை என்பது. இதை அல்லாஹ் தன் அடியார்களின் உள்ளத்தில் ஏற்படுத்தி உள்ளான். தன் அடியார்களில் (பிறரிடம்) கருணை காட்டுவோர் மீது தான் அல்லாஹ்வும் கருணை காட்டுவான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1284. முஸ்லிம்:923)**

٩٢٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ دَخَلَ عَلَى ابْنِهِ إِبْرَاهِيمَ رَضِيَ اللَّهُ عَنْهُ وَهُوَ يَجُودُ بِنَفْسِهِ فَجَعَلَتْ عَيْنَا رَسُولِ اللَّهِ ﷺ تَذْرِفَانِ فَقَالَ لَهُ عَبْدُ الرَّحْمَنِ بْنُ عَوْفٍ : وَأَنْتَ يَا رَسُولَ اللَّهِ ؟ فَقَالَ : " يَا ابْنَ عَوْفٍ إِنَّهَا رَحْمَةٌ " ثُمَّ أَتْبَعَهَا بِأُخْرَى فَقَالَ : " إِنَّ الْعَيْنَ تَدْمَعُ وَالْقَلْبَ يَحْزَنُ وَلاَ نَقُولُ إِلاَّ مَا يُرْضِي رَبَّنَا وَإِنَّا بِفِرَاقِكَ يَا إِبْرَاهِيمُ لَمَحْزُونُونَ " . رَوَاهُ الْبُخَارِيُّ وَرَوَى بَعْضَهُ مُسْلِمٌ . وَالأَحَادِيثُ فِي الْبَابِ كَثِيرَةٌ فِي الصَّحِيحِ مَشْهُورَةٌ وَاللَّهُ أَعْلَمُ .

**927** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், மரணத் தருவாயில் இருந்த தன் மகன் இப்ராஹிமிடம் வந்தார்கள். அப்போது அவர்களின் கண்கள் கண்ணீரைப் பொழிந்தன. அப்போது அவர்களிடம், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ப் (ரழி) அவர்கள், “இறைத்தூதர் அவர்களே! நீங்களுமா (அழுகிறீர்கள்!)” என்று கேட்டார்கள். “இப்னு அவ்ப் அவர்களே! இதுதான் இரக்கம்” என்று கூறினார்கள். மீண்டும் கண்கள் கண்ணீரைச் சிந்தியது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “கண்களோ, கண்ணீரைச் சிந்துகிறது. இதயம் கவலை கொள்கிறது. எங்கள் இறைவன் திருப்தி கொள்ளும் ஒன்றைத் தவிர வேறு எதையும் கூற மாட்டோம். இப்ராஹிமே! நிச்சயமாக நாம் உமது பிரிவின் காரணமாகக் கவலை அடைந்தவர்களாக உள்ளோம்” என்று கூறினார்கள். **(புகாரி:1303. முஸ்லிமில் (2315) சில வார்த்தைகள் மட்டும் உள்ளது)**

## ١٥٤ – باب الكفّ عَنْ مَا يرى منَ الْميت من مكروه

## பாடம் : 154 - இறந்தவரின் உடலில் காணும் குறையை மறைத்தல்

٩٢٨ – عَنْ أَبِي رَافِعٍ أَسْلَمَ مَوْلَى رَسُولِ اللَّهِ ﷺ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ غَسَّلَ مَيِّتًا فَكَتَمَ عَلَيْهِ غَفَرَ اللَّهُ لَهُ أَرْبَعِينَ مَرَّةً " . رَوَاهُ الْحَاكِمُ وَقَالَ : صَحِيحٌ عَلَى شَرْطِ مُسْلِمٍ .

**928** (அபூராஃபிஃ என்ற) நபி (ஸல்) அவர்களின் அடிமை அஸ்லம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர், “இறந்தவரைக் குளிப்பாட்டி, அவரிடம் இருந்த குறையை மறைத்தால், அல்லாஹ் அவரை நாற்பது தடவை மன்னிப்பான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(ஹாகிம்:1/354)**

## ١٥٥ – باب الصّلاة عَلَى الميت وتشييعه وَحضور دفنه وكراهة اتّباع النساء الجنائز

## பாடம் : 155 - மய்யித்திற்கு துஆச் செய்வது, அதைப் பின் தொடர்வது. அதன் நல்லடக்கத்தில் கலந்து கொள்வது பற்றியும் , ஜனாஸாவைப் பெண்கள் பின் தொடரக் கூடாது என்பது பற்றியும்...

٩٢٩ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : "مَنْ شَهِدَ الْجَنَازَةَ حَتَّى يُصَلَّى عَلَيْهَا فَلَهُ قِيرَاطٌ وَمَنْ شَهِدَهَا حَتَّى تُدْفَنَ فَلَهُ قِيرَاطَانِ " . قِيلَ : وَمَا الْقِيرَاطَانِ ؟ قَالَ : " مِثْلُ الْجَبَلَيْنِ الْعَظِيمَيْنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**929** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் ஜனாஸா தொழுகையில் கலந்து கொண்டால் அவருக்கு ஒரு "கீராத்" நன்மை உண்டு. அதை அடக்கம் செய்யும் வரை ஒருவர் கலந்து கொண்டால் அவருக்கு "இரண்டு கீராத்" நன்மைகள் உண்டு" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இரண்டு கீராத் என்றால் என்ன?" என்று கேட்கப்பட்டதற்கு, "பெரும் இரண்டு மலைகளைப் போன்றது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1325. முஸ்லிம்:945)**

٩٣٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنِ اتَّبَعَ جَنَازَةَ مُسْلِمٍ إِيمَانًا وَاحْتِسَابًا وَكَانَ مَعَهُ حَتَّى يُصَلَّى عَلَيْهَا وَيُفْرَغَ مِنْ دَفْنِهَا فَإِنَّهُ يَرْجِعُ مِنَ الأَجْرِ بِقِيرَاطَيْنِ كُلُّ قِيرَاطٍ مِثْلُ أُحُدٍ وَمَنْ صَلَّى عَلَيْهَا ثُمَّ رَجَعَ قَبْلَ أَنْ تُدْفَنَ فَإِنَّهُ يَرْجِعُ بِقِيرَاطٍ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**930** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறை நம்பிக்கையுடனும், நன்மையை நாடியும் ஒரு முஸ்லிமின் ஜனாஸாவில் கலந்து கொண்டு, அதற்காக தொழுது, அதை அடக்கம் செய்யப்படும் வரை ஒருவர் இருந்தால், அவர் இரண்டு "கீராத்" நன்மைகளைக் கூலியாகப் பெற்றுத் திரும்புகிறார். ஒரு கீராத் என்பது உஹது மலை போலாகும். ஒருவர் ஜனாஸாத் தொழுகையில் கலந்து கொண்டு, அடக்கம் செய்யப்படும் முன் திரும்பிவிட்டால், அவர் ஒரு "கீராத்" நன்மையுடன் மட்டுமே திரும்புகிறார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:47)**

٩٣١ – وَعَنْ أُمِّ عَطِيَّةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : " نُهِينَا عَنِ اتِّبَاعِ الْجَنَائِزِ وَلَمْ يُعْزَمْ عَلَيْنَا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَمَعْنَاهُ : وَلَمْ يُشَدَّدْ فِي النَّهْيِ كَمَا يُشَدَّدُ فِي الْمُحَرَّمَاتِ .

**931** உம்மு அதிய்யா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெண்களாகிய நாங்கள் ஜனாஸாவை பின்தொடர்(ந்து செல்)வதை விட்டும் தடுக்கப் பட்டிருந்தோம். (ஆனால்) எங்கள் மீது அது கடுமையாக்கப்படவில்லை." **(புகாரி:1278. முஸ்லிம்:938)**

## ١٥٦ – باب استِحْبَاب تكثير المصلّين عَلَى الْجَنَازة وجعل صفو فهم ثلاثةً فأكثر

## பாடம் : 156 - ஜனாஸா தொழுகையில் அதிகம் பேர் கலந்து கொள்வதும், தங்களின் தொழுகை வரிசையை மூன்றாக, அதை விட அதிகமாக்கிக் கொள்வதும் விரும்பத்தக்கது.

٩٣٢ – عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ مَيِّتٍ يُصَلِّي عَلَيْهِ أُمَّةٌ مِنَ الْمُسْلِمِينَ يَبْلُغُونَ مائَةً كُلُّهُمْ يَشْفَعُونَ لَهُ إِلاَّ شُفِّعُوا فِيهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**932** ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறந்த ஒருவருடைய ஜனாஸா தொழுகையில் முஸ்லிம்களில் நூறு பேர் கொண்ட ஒரு கூட்டம் தொழுகையில் கலந்து கொண்டு, அவருக்கு (துஆச் செய்து) பரிந்துரை செய்தால், அவர் விஷயமாக அவர்களின் பரிந்துரை ஏற்கப்படாமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:947)**

٩٣٣ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ رَجُلٍ مُسْلِمٍ يَمُوتُ فَيَقُومُ عَلَى جِنَازَتِهِ أَرْبَعُونَ رَجُلاً لاَ يُشْرِكُونَ بِاللَّهِ شَيْئًا إِلاَّ شَفَّعَهُمُ اللَّهُ فِيهِ " . رَوَاهُ مُسْلِمٌ

**933** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிம் மரணித்து, அவரின் ஜனாஸாத் தொழுகையில் அல்லாஹ்வுக்கு எதையும் இணை வைக்காத நாற்பது பேர்கள் கலந்து கொண்டால், அவரின் விஷயத்தில் அவர்கள் செய்யும் பரிந்துரையை அல்லாஹ் ஏற்காமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:948)**

٩٣٤ – وَعَنْ مَرْثَد بْنِ عَبْد اللّٰه الْيَزَنِيِّ قَالَ : كَانَ مَالكُ بْنُ هُبَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ إِذَا صَلَّى عَلَى الْجَنَازَة فَتَقَالَّ النَّاسَ عَلَيْهَا جَزَّأَهُمْ عَلَيْهَا ثَلاَثَةَ أَجْزَاء ثُمَّ قَالَ : قَالَ رَسُولُ اللّٰه ﷺ : " مَنْ صَلَّى عَلَيْه ثَلاَثَةُ صُفُوف فَقَدْ أَوْجَبَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمذيُّ وَقَالَ : حَديثٌ حَسَنٌ .

**934** மர்ஸத் இப்னு அப்துல்லாஹ் அல் யஜனீ அறிவிக்கின்றார்கள்:

மாலிக் இப்னு ஹுபைரா (ரழி) அவர்கள் ஜனாஸா தொழுகை நடத்தும் போது, மக்கள் குறைவாக இருப்பதைக் கண்டால், அவர்களை மூன்று வரிசைகளாகப் பிரிப்பார். பின்பு "எந்த மய்யித்துக்காக மூன்று வரிசைகள் நின்று ஜனாஸா தொழுகின்றதோ அந்த மய்யித்துக்கு பிழை பொறுப்பதை அல்லாஹ் அவசியமாக்கிவிட்டான் என்று நபி (ஸல்) கூறினார்கள்" என்று கூறுவார்கள்.

**(அபூதாவூது:3166. திர்மிதீ:1028. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٥٧ – بَابُ ما يُقْرأ في صَلاة الْجنَازَة

## பாடம் : 157 - ஜனாஸா தொழுகையில் ஓத வேண்டியவை

يُكَبِّرُ أَرْبَعَ تَكْبِيرَات : يَتَعَوَّذُ بَعْدَ الأُولَى ثُمَّ يَقْرَأُ فَاتحَةَ الْكتَاب ثُمَّ يُكَبِّرُ الثَّانِيَةَ ثُمَّ يُصَلِّي عَلَى النَّبِيِّ ﷺ فَيَقُولُ : اللّٰهُمَّ صَلِّ عَلَى مُحَمَّد وَعَلَى آل مُحَمَّد . وَالأَفْضَلُ أَنْ يُتَمِّمَهُ بِقَوْله : كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهيمَ – إِلَى قَوْله – حَميدٌ مَجيدٌ . وَلاَ يَقُولُ مَا يَفْعَلُهُ كَثيرٌ منَ الْعَوَامّ منْ قرَاءتهم : " إِنَّ اللّٰهَ وَمَلاَئكَتَهُ يُصَلُّونَ عَلَى النَّبيِّ " – الأيَةَ – فَإِنَّهُ لاَ تَصحُّ صَلاَتُهُ إِذَا اقْتَصَرَ عَلَيْه ثُمَّ يُكَبِّرُ الثَّالثَةَ وَيَدْعُو للْمَيِّت وَللْمُسْلمينَ بِمَا سَنَذْكُرُهُ منَ الأَحَاديث إِنْ شَاءَ اللّٰهُ تَعَالَى . ثُمَّ يُكَبِّرُ الرَّابِعَةَ وَيَدْعُو وَمنْ أَحْسَنه : اللّٰهُمَّ لاَ تَحْرِمْنَا أَجْرَهُ وَلاَ تَفْتنَّا بَعْدَهُ وَاغْفرْ لَنَا وَلَهُ وَالْمُخْتَارُ أَنَّهُ يُطَوِّلُ الدُّعَاءَ في الرَّابِعَة خلاَفَ مَا يَعْتَادُهُ أَكْثَرُ النَّاس لحَديث ابْنِ أَبِي أَوْفَى الَّذي سَنَذْكُرُهُ إِنْ شَاءَ اللّٰهُ تَعَالَى .

ஜனாஸா தொழுகையில் நான்கு தக்பீர் கூற வேண்டும். முதல் தக்பீருக்குப்பின் 'அஊது' ஓத வேண்டும். பின்பு சூரா ஃபாத்திஹா ஓத வேண்டும். அடுத்து இரண்டாம் தக்பீர் கூறி, நபி (ஸல்) அவர்கள் மீது, "அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலாஆலி முஹம்மதின் கமா ஸல்லய்த அலா இப்ராஹிம வஅலா ஆலிஇப்ராஹிம இன்னக்க ஹமீதும் மஜீத்" என்று ஸலவாத் கூற வேண்டும். தொடர்ந்து மூன்றாவது தக்பீர் கூறி, இன்ஷா அல்லாஹ் எடுத்துக் கூற உள்ள துஆக்களைக் கூற வேண்டும். பின்பு நான்காவது தக்பீர் கூறி அதில் இறந்தவருக்கான நன்மையானவற்றைக் கேட்க வேண்டும். அதில் "அல்லாஹும்ம லா தஹ்ரிம்னா அஜ்ரஹு, வலா தஃப்தின்னா பஹ்தஹு, வஹ்ஃபிர்லனா வலஹு" (இறைவா! அவர் மூலம் கிடைக்கும் நன்மையை இல்லாமல் ஆக்கிவிடாதே! அவருக்குப் பின் எங்களைக் குழப்பத்தில் ஆழ்த்திவிடாதே! அவருக்கும், எங்களுக்கும் மன்னிப்பை அருள்வாயாக!) என்றும் கூறலாம். நான்காவது தக்பீரில் இன்ஷா அல்லாஹ் பின்னர் வர உள்ள இப்னு அபீஅவ்பா (ரழி) அவர்களின் ஹதீஸ்படி நிறைய துஆக்கள் ஓதுவது தான் சரியானது.

٩٣٥ –وَأَمَّا الأَدْعِيَةُ الْمَأْثُورَةُ بَعْدَ التَّكْبِيرَةِ الثَّالِثَةِ فَمِنْهَا:عَنْ أَبِي عَبْدِ الرَّحْمنِ عَوْفِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:صَلَّى رَسُولُ اللَّهِ ﷺ عَلَى جَنَازَةٍ فَحَفِظْتُ مِنْ دُعَائِهِ وَهُوَ يَقُولُ:"اللَّهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَعَافِهِ وَاعْفُ عَنْهُ وَأَكْرِمْ نُزُلَهُ وَوَسِّعْ مُدْخَلَهُ وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ وَنَقِّهِ مِنَ الْخَطَايَا كَمَا نَقَّيْتَ الثَّوْبَ الأَبْيَضَ مِنَ الدَّنَسِ وَأَبْدِلْهُ دَارًا خَيْرًا مِنْ دَارِهِ وَأَهْلاً خَيْرًا مِنْ أَهْلِهِ وَزَوْجًا خَيْرًا مِنْ زَوْجِهِ وَأَدْخِلْهُ الْجَنَّةَ وَأَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ وَمِنْ عَذَابِ النَّارِ " حَتَّى تَمَنَّيْتُ أَنْ أَكُونَ أَنَا ذَلِكَ الْمَيِّتَ ! رَوَاهُ مُسْلِمٌ .

**935** அபூ அப்துர் ரஹ்மான் அவ்ஃப் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு ஜனாஸாவிற்கு நபி (ஸல்) அவர்கள் தொழ வைத்தார்கள். அப்போது அவர்கள் ஓதிய துஆவை நான் மனனம் செய்து கொண்டேன். "அல்லாஹும்மஃபிர்லஹு வர்ஹம்ஹு, வஆஃபிஹி, வஃபு அன்ஹு, வஅக்ரிம் நுஜுலஹு, வ வஸ்ஸிஹ் முத்கலஹு, வஃஸில்ஹு பில்மாஇ, வத்தல்ஜி, வல்பரதி, வநக்கிஹி மினல்கதாயா கமா நக்கய்தஸ்ஸவ்பல் அப்யழ மினத் தனஸி, வஅப்தில்ஹு தாரன் கய்ரன் மின்தாரிஹி, வஅஹ்லன் கய்ரன் மின் அஹ்லிஹி, வஜவ்ஜன் கய்ரன் மின் ஜவ்ஜிஹி, வஅத்கில்ஹுல் ஜன்னத்த, வஅஇத்ஹு மின் அதஃாபில் கப்ரி, வமின் அஃதாபின்னார்" என்று கூறுவார்கள். பின்பு, (துஆவின் அழகைக் கண்டு) "நான் அந்த மய்யித்தாக இருந்திருக்கக் கூடாதா? என ஆசைப்பட்டேன்" என அபூ அப்துர் ரஹ்மான் அவ்ஃப் இப்னு மாலிக் (ரழி) கூறினார்கள்.

**(முஸ்லிம்:963)**

**துஆவின் பொருள்: இறைவா! இவரின் பிழைகளைப் பொறுத்தருள்வாயாக! இவருக்கு அருள் புரிவாயாக! இவருக்கு ஆரோக்கியத்தை வழங்குவாயாக! இவரை மன்னிப்பாயாக! இவரின் தங்குமிடத்தைக் கண்ணியப்படுத்துவாயாக! இவர் நுழையுமிடத்தை விசாலமாக்கி வைப்பாயாக! வெள்ளை ஆடையை அழுக்கை விட்டு தூய்மையாக்குவது போல, இவரை தண்ணீரால், பனிக்கட்டியால், குளிர்ந்த நீரால் கழுவி, பாவங்களை விட்டும் இவரை தூய்மையாக்குவாயாக! இவர் (உலகில்) இருந்த வீட்டை விட சிறந்த வீட்டை இவருக்குத் தருவாயாக! இவரின் குடும்பத்தாரையும் விட சிறந்த குடும்பத்தாரையும் இவருக்கு ஏற்படுத்துவாயாக! இவருக்கிருந்த மனைவியை விட சிறந்த மனைவியையும் இவருக்குத் தருவாயாக! சொர்க்கத்தில் இவரை நுழையச் செய்வாயாக! கப்ர் வேதனையை விட்டும், நரக வேதனையை விட்டும் இவரைப் பாதுகாப்பாயாக!**

٩٣٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ وَأَبِي قَتَادَةَ وَأَبِي إِبْرَاهِيمَ الأَشْهَلِيِّ عَنْ أَبِيهِ – وَأَبُوهُ صَحَابِيٌّ – رَضِيَ اللَّهُ عَنْهُمْ عَنِ النَّبِيِّ ﷺ أَنَّهُ صَلَّى عَلَى جَنَازَةٍ فَقَالَ : " اللَّهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا وَصَغِيرِنَا وَكَبِيرِنَا وَذَكَرِنَا وَأُنْثَانَا وَشَاهِدِنَا وَغَائِبِنَا اللَّهُمَّ مَنْ أَحْيَيْتَهُ مِنَّا فَأَحْيِهِ عَلَى الأَسْلاَمِ وَمَنْ تَوَفَّيْتَهُ مِنَّا فَتَوَفَّهُ عَلَى الأَيْمَانِ اللَّهُمَّ لاَ تَحْرِمْنَا أَجْرَهُ وَلاَ تَفْتِنَّا بَعْدَهُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ مِنْ رِوَايَةِ أَبِي هُرَيْرَةَ وَالأَشْهَلِيِّ . وَرَوَاهُ أَبُو دَاوُدَ مِنْ رِوَايَةِ أَبِي هُرَيْرَةَ وَأَبِي قَتَادَةَ . قَالَ الْحَاكِمُ : حَدِيثُ أَبِي هُرَيْرَةَ صَحِيحٌ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ . قَالَ التِّرْمِذِيُّ : قَالَ الْبُخَارِيُّ : أَصَحُّ رِوَايَاتِ هَذَا الْحَدِيثِ رِوَايَةُ الأَشْهَلِيِّ . قَالَ الْبُخَارِيُّ : وَأَصَحُّ شَيْءٍ فِي الْبَابِ حَدِيثُ عَوْفِ بْنِ مَالِكٍ .

**936** அபூஹுரைரா (ரழி), அபூகதாதா (ரழி) ஆகியோரும், அபூஇப்ராஹிம் அஷ்ஹலீ என்பவர் தன் தந்தை வழியாகவும் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், ஒரு ஜனாஸாவிற்கு தொழ வைத்தார்கள். அப்போது அவர்கள், "அல்லாஹும்மஃபிர்லி ஹய்யினா, வமய்யிதினா, வஸஃகிரினா, வகபீரினா, வதகரினா, வஉன்ஸானா, வஷாஹிதினா, வஙாயிபினா, அல்லாஹும்ம மன் அஹ்யய்தஹு மின்னா ஃபஅஹ்யிஹி அலல் இஸ்லாம் வமன் தவஃப்பய்தஹு மின்னா வதவஃப்பஹு அலல் ஈமான். அல்லாஹும்ம லா தஹ்ரிம்னா அஜ்ரஹு, வலா தஃப்தின்னா பஃதஹு" என்று கூறினார்கள்.

**(திர்மிதீ:1024. அபூதாவூது:3201)**

**துஆவின் பொருள்: இறைவா! எங்களில் உயிருடன் இருப்பவர், எங்களில் இறந்தவர், எங்களில் சிறியவர், எங்களில் பெரியவர், எங்களில் ஆண்கள், எங்களில் பெண்கள், எங்களில் ஊரில் இருப்பவர்கள் எங்களில், வெளியூரில் இருப்பவர்கள் ஆகியோரின் குற்றங்களை மன்னிப்பாயாக! இறைவா! எங்களில் உயிருடன் நீ வாழ வைத்திருப்போரை இஸ்லாத்தின்படி வாழச் செய்வாயாக! எங்களில் இறந்தோரை இறை நம்பிக்கையின்படி இறக்கச் செய்வாயாக! இறைவா! அவர் மூலம் கிடைக்கும் நன்மையை இல்லாமல் ஆக்கிவிடாதே! அவருக்குப் பின் எங்களைக் குழப்பத்தில் ஆழ்த்தி விடாதே!**

٩٣٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُول : " إذَا صَلَّيْتُمْ عَلَى الْمَيِّتِ فَأَخْلِصُوا لَهُ الدُّعَاءَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**937** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறந்தவருக்காக நீங்கள் தொழுதால், அவருக்காகச் செய்யும் துஆவை நீங்கள் மனத் தூய்மையுடன் செய்யுங்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(அபூதாவூது:3199)**

٩٣٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ فِي الصَّلَاةِ عَلَى الْجَنَازَةِ : " اللَّهُمَّ أَنْتَ رَبُّهَا وَأَنْتَ خَلَقْتَهَا وَأَنْتَ هَدَيْتَهَا لِلإِسْلَامِ وَأَنْتَ قَبَضْتَ رُوحَهَا وَأَنْتَ أَعْلَمُ بِسِرِّهَا وَعَلَانِيَتِهَا جِئْنَاك شُفَعَاءَ لَهُ فَاغْفِرْ لَهُ " رَوَاهُ أَبُو دَاوُدَ .

**938** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜனாஸாத் தொழுகையில், "அல்லாஹும்ம அன்த ரப்புஹா, வஅன்த கலக்தஹா, வஅன்த ஹதய்தஹா லில்இஸ்லாம், வஅன்த கபழ்தரூஹஹா, வஅன்த அஃலமு பிஸிர்ரிஹா வஅலாநியதிஹா, ஜிஃனாக ஷுஃபஆ அலஹு பஃபிர்லஹு" என்று கூறுவார்கள்.

**(அபூதாவூது:3200)**

**துஆவின் பொருள்: இறைவனே! நீதான் இந்த உடலின் இறைவன். நீயே இதைப் படைத்தாய். நீயே இதற்கு இஸ்லாமை வழியாக்கினாய். நீயே இதன் உயிரைக் கைப்பற்றி உள்ளாய். நீயே இதன் ரகசியத்தையும், இதன் பகிரங்கத்தையும் அறிந்தவன். இவருக்குப் பரிந்துரை செய்பவர்களாக உம்மிடம் வந்துள்ளோம். நீ இவருக்கு பிழை பொறுப்பாயாக!**

٩٣٩ – وَعَنْ وَاثِلَةَ بْنِ الأَسْقَعِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : صَلَّى بِنَا رَسُولُ اللَّهِ ﷺ عَلَى رَجُلٍ مِنَ الْمُسْلِمِينَ فَسَمِعْته يَقُولُ : " اللَّهُمَّ إنَّ فُلَانَ بْنَ فُلَانٍ فِي ذِمَّتك وَحَبْلِ جِوَارِك فَقِه فِتْنَةَ الْقَبْرِ وَعَذَابَ النَّارِ وَأَنْتَ أَهْلُ الْوَفَاءِ وَالْحَمْدِ ; اللَّهُمَّ فَاغْفِرْ لَهُ وَارْحَمْهُ إنَّك أَنْتَ الْغَفُورُ الرَّحِيمُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**939** வாஸிலா இப்னுல் அஸ்கஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முஸ்லிம்களில் (இறந்த) ஒரு மனிதருக்காக, நபி (ஸல்) அவர்கள் எங்களுடன் தொழுதார்கள். அப்போது அவர்கள் (பின்வருமாறு) கூற நான் கேட்டேன். "அல்லாஹும்ம இன்ன ஃபுலான இப்ன ஃபுலானின் ஃபீதிம்மதிக்க வஹப்லி ஜிவாரிக, ஃபகிஹ் ஃபித்னதல் கப்ரி, வஅஃதாபன்னாரி, வஅன்த அஹ்லுல் வஃபாஇ, வல்ஹம்தி, அல்லாஹும்ம ஃபஃபிர் லஹு வர்ஹம்ஹு, இன்னக்க அன்தல் ஙஃபூரூர் ரஹீம்" **(அபூதாவூது:3202. இதில் "அலீ இப்னு ஷிமாக்" என்ற பலவீனர் இடம் பெறுகிறார்)**

**துஆவின் பொருள்: இறைவனே! இன்னாரின் மகன் இன்னார் உன் பொறுப்பில், உன் நெருக்கம் எனும் கயிற்றில் உள்ளார். மண்ணறைக்குழப்பம் மற்றும் நரக வேதனையில் இருந்தும் அவரைக் காப்பாற்று! நீயே வாக்குறுதியை நிறைவேற்றுபவன். புகழுக்குரியவன். அவரை நீ மன்னிப்பாயாக! அவருக்கு அருள் புரிவாயாக! நிச்சயமாக நீயே மன்னிப்பவன். அளவற்ற அருளாளன்.**

٩٤٠ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي أَوْفَى رَضِيَ اللَّهُ عَنْهُمَا : أَنَّهُ كَبَّرَ عَلَى جَنَازَةِ ابْنَةٍ لَهُ أَرْبَعَ تَكْبِيرَاتٍ فَقَامَ بَعْدَ الرَّابِعَةِ كَقَدْرِ مَا بَيْنَ التَّكْبِيرَتَيْنِ يَسْتَغْفِرُ لَهَا وَيَدْعُو ثُمَّ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَصْنَعُ هَكَذَا . وَفِي رِوَايَةٍ : كَبَّرَ أَرْبَعًا فَمَكَثَ سَاعَةً حَتَّى ظَنَنَّا أَنَّهُ سَيُكَبِّرُ خَمْسًا ثُمَّ سَلَّمَ عَنْ يَمِينِهِ وَعَنْ شِمَالِهِ . فَلَمَّا انْصَرَفَ قُلْنَا لَهُ : مَا هَذَا ؟ فَقَالَ : إِنِّي لاَ أَزِيدُكُمْ عَلَى مَا رَأَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَصْنَعُ - أَوْ هَكَذَا صَنَعَ رَسُولُ اللَّهِ ﷺ - رَوَاهُ الْحَاكِمُ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**940** அப்துல்லாஹ் இப்னு அபூ அவ்ஃபா (ரழி) அவர்கள் தன் மகளின் ஜனாஸா தொழுகையில் நான்கு தக்பீர்கள் கூறினார்கள். நான்காவது தக்பீருக்குப் பின் இரண்டு தக்பீர்களுக்கு இடையே உள்ள நேர அளவுக்கு நின்றார்கள். தன் மகளுக்காக பாவமன்னிப்புத் தேடி துஆச் செய்தார்கள். பின்பு "நபி (ஸல்) அவர்கள் இவ்வாறே செய்தார்கள்" என்று கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்க்கண்டவாறு) உள்ளது.

நான்காவது தக்பீர் கூறினார்கள். ஐந்தாவது முறையாக அவர்களால் தக்பீர் கூறக்கூடும் என்று நான் எண்ணும் அளவுக்கு சிறிது நேரம் நின்றார்கள். பின் தன் வலது புறமும், இடது புறமும் ஸலாம் கூறினார்கள். அவர் திரும்பியவுடன் அவர்களிடம், "இது என்ன?" என்று கேட்டோம். "நான் நபி (ஸல்) அவர்கள் செய்ததை, பார்த்ததைவிட உங்களிடம் அதிகப்படுத்தவில்லை." அல்லது "இவ்வாறே நபி (ஸல்) அவர்கள் செய்தார்கள்" என்று கூறினார்கள்.

**(ஹாகிம்:1/360. இது "ஹஸன் ஸஹீஹ்" என ஹாகிம் கூறுகிறார்கள்)**

ஆனால் இதில் மனன சக்தி குறைந்த "இப்ராஹிம் ஹிக்ரீ" இடம் பெறுகிறார்.

## ١٥٨ - بَابُ الإِسْرَاعِ بِالْجَنَازَةِ

## பாடம் : 158 - ஜனாஸாவை விரைவாக நல்லடக்கம் செய்தல்!

٩٤١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " أَسْرِعُوا بِالْجَنَازَةِ : فَإِنْ تَكُ صَالِحَةً فَخَيْرٌ تُقَدِّمُونَهَا إِلَيْهِ وَإِنْ تَكُ سِوَى ذَلِكَ فَشَرٌّ تَضَعُونَهُ عَنْ رِقَابِكُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : " فَخَيْرٌ تُقَدِّمُونَهَا عَلَيْهِ " .

**941** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஜனாஸாவை (அடக்கம் செய்ய) தீவிரமாக்குங்கள். அது நல்லதாக இருந்தால், அதை நன்மையின் பக்கம் முற்படுத்தி வைத்தவர்களாவீர்கள். அது தீமையானதாக இருந்தால் உங்களின் பிடரிகளை விட்டும் (உங்கள் பொறுப்பைவிட்டும்) அந்த தீமையை இறக்கி வைத்தவர்களாவீர்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1315. முஸ்லிம்:944)**

٩٤٢ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ يَقُولُ : " إِذَا وُضِعَتِ الْجَنَازَةُ فَاحْتَمَلَهَا الرِّجَالُ عَلَى أَعْنَاقِهِمْ فَإِنْ كَانَتْ صَالِحَةً قَالَتْ : قَدِّمُونِي وَإِنْ كَانَتْ غَيْرَ صَالِحَةٍ قَالَتْ لأَهْلِهَا : يَا وَيْلَهَا ! أَيْنَ تَذْهَبُونَ بِهَا ؟ يَسْمَعُ صَوْتَهَا كُلُّ شَيْءٍ إِلاَّ الإِنْسَانُ وَلَوْ سَمِعَ الإِنْسَانُ لَصَعِقَ ! " رَوَاهُ الْبُخَارِيُّ .

**942** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஜனாஸாவை (நல்லடக்கம் செய்திட) ஆண்கள் தங்களின் தோள்களின் மீது சுமந்து சென்றால், அந்த ஜனாஸா நல்லதாக இருந்தால், "என்னை சீக்கிரம் கொண்டு செல்லுங்கள்." என்று கூறும். அது நல்லதாக இல்லையென்றால் தன்னைச் சேர்ந்தோரிடம், "எனக்கு வந்த நாசமே! என்னை எங்கே கொண்டு செல்கிறீர்கள்?" என்று கேட்கும். அதன் சப்தத்தை மனிதர்கள் அல்லாத மற்ற அனைத்தும் கேட்கும். மனிதன் கேட்டால் அதிர்ச்சியாகி விடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1314)**

## ١٥٩ - باب تعجيل قضاء الدّين عَن الميت والمبادرة إِلَى تجهيزه إِلاَّ أَن يموت فَجْأَةً فيترك حتى يُتَيَقَّنَ موته

## பாடம் : 159 - இறந்தவரின் கடனை விரைவாக நிறைவேற்றல்.

٩٤٣ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " نَفْسُ الْمُؤْمِنِ مُعَلَّقَةٌ بِدَيْنِهِ حَتَّى يُقْضَى عَنْهُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**943** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(இறந்து விட்ட) ஒரு முஃமினின் உயிர், அவனது கடன் நிறைவேற்றப்படும் வரை, அது (அந்த உயிர்) கடனால் சூழப்பட்டிருக்கும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1079. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٩٤٤ - وَعَنْ حُصَيْنِ بْنِ وَحْوَحٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ طَلْحَةَ بْنَ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا مَرِضَ فَأَتَاهُ النَّبِيُّ ﷺ يَعُودُهُ فَقَالَ : إِنِّي لاَ أَرَى طَلْحَةَ إِلاَّ قَدْ حَدَثَ فِيهِ الْمَوْتُ فَآذِنُونِي بِهِ وَعَجِّلُوا بِهِ فَإِنَّهُ لاَ يَنْبَغِي لِجِيفَةِ مُسْلِمٍ أَنْ تُحْبَسَ بَيْنَ ظَهْرَانَيْ أَهْلِهِ . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**944** ஹுசைன் இப்னு வஹ்வஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தல்ஹா இப்னு பராஉ இப்னு ஆஸிப் (ரழி) அவர்கள் நோயாளியாக இருந்தார். அவரை நலம் விசாரிக்க நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். "தல்ஹாவை மரணம் நெருங்கி விட்டதாகவே நான் கருதுகிறேன். எனவே (அவர் இறந்தால்) எனக்குத் தெரிவியுங்கள். அவரை விரைந்து அடக்கம் செய்யுங்கள். ஏனெனில் ஒரு முஸ்லிமின் உடலை, அவர் குடும்பத்தாரிடம் தடுத்து வைத்திருப்பது (அதிகம் தாமதிப்பது) முறையல்ல" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3159. இதன் அறிவிப்பாளர் வரிசையில் யார் என்றே அறியப்படாத இருவர் உள்ளனர்)**

## ١٦٠ - بابُ الموعظة عِنْدَ القبر

## பாடம் : 160 - மண்ணறை அருகே உபதேசம் செய்தல்!

٩٤٥ - عَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا فِي جَنَازَةٍ فِي بَقِيعِ الْغَرْقَدِ فَأَتَانَا رَسُولُ اللَّهِ ﷺ فَقَعَدَ وَقَعَدْنَا حَوْلَهُ وَمَعَهُ مِخْصَرَةٌ فَنَكَّسَ وَجَعَلَ يَنْكُتُ بِمِخْصَرَتِهِ . ثُمَّ قَالَ : " مَا مِنْكُمْ مِنْ أَحَدٍ إِلاَّ وَقَدْ كُتِبَ مَقْعَدُهُ مِنَ النَّارِ وَمَقْعَدُهُ مِنَ الْجَنَّةِ " . فَقَالُوا : يَا رَسُولَ اللَّهِ أَفَلاَ نَتَّكِلُ عَلَى كِتَابِنَا ؟ فَقَالَ : " اعْمَلُوا فَكُلٌّ مُيَسَّرٌ لِمَا خُلِقَ لَهُ " . وَذَكَرَ تَمَامَ الْحَدِيثِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**945** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் (மதீனாவில்) பகீஉல் அர்கத் என்ற இடத்தில் ஒரு ஜனாஸாவின் நல்லடக்கத்தில் கலந்து கொண்டிருந்தோம். அப்போது எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்து உட்கார்ந்தார்கள். அவர்களைச் சுற்றி நாங்கள் உட்கார்ந்தோம். அவர்களுடன் ஒரு கைத்தடி இருந்தது. தன் தலையைக் குனிந்த அவர்கள், தன் கைத்தடியால் தரையைத் தோண்டினார்கள். பின்பு "ஒருவரின் தங்குமிடம் நரகம், தங்குமிடம் சொர்க்கம் என உங்களில் யாருக்கும் எழுதப்படாமல் இருப்பதில்லை" என்று கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! எங்களின் ஏட்டில் உள்ளபடி நடக்கிறது எனப் பொறுப்புச் சாட்டிவிட்டு நாங்கள் இருந்து விடலாமா?" என நபித்தோழர்கள் கேட்டார்கள். "நீங்கள் நற்செயல்கள் செய்யுங்கள். (சொர்க்கம் நரகம்) எதற்கு படைக்கப்பட்டதோ (அதை அடைய உள்ள வழிகள்) அனைத்தும் இலகுவாக அமைந்திருக்கும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1362. முஸ்லிம்:2647. இதுநீண்ட ஹதீஸாகும்.)**

## ١٦١ - باب الدّعاء للميت بَعْدَ دفنه والقعود عند قبره سَاعة للدعاء له والاستغفار والقراءة

## பாடம் : 161 - அடக்கம் செய்தபின் இறந்தவருக்காக துஆ செய்தல். துஆ செய்யவும், பாவமன்னிப்புக் கோரவும், குர்ஆன் ஓதவும் சிறிது நேரம் மண்ணறை அருகே அமர்ந்திருத்தல்

٩٤٦ - وَعَنْ أَبِي عَمْرٍو - وَقِيلَ : أَبُو عَبْدِ اللَّهِ وَقِيلَ : أَبُو لَيْلَى - عُثْمَانَ بْنِ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ إِذَا فَرَغَ مِنْ دَفْنِ الْمَيِّتِ وَقَفَ عَلَيْهِ وَقَالَ : " اسْتَغْفِرُوا لأَخِيكُمْ وَسَلُوا لَهُ التَّثْبِيتَ فَإِنَّهُ الآنَ يُسْأَلُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**946** அபூஅம்ரு, அபூஅப்தில்லாஹ், அபூலைலா என்று அழைக்கப்படுகின்ற உதுமான் இப்னு அஃப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இறந்தவரை அடக்கம் செய்த பின்னர், நபி (ஸல்) அவர்கள் கப்ரின் அருகே நிற்பார்கள். அப்போது அவர்கள், "உங்களின் சகோதரருக்குப் பாவ மன்னிப்புக் கோருங்கள். அவருக்கு உறுதிப்பாட்டைக் கேளுங்கள். இப்போது அவர் கேள்வி கேட்கப்படுகிறார்" என்று கூறுவார்கள். **(அபூதாவூது:3221)**

٩٤٧ - وَعَنْ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : إِذَا دَفَنْتُمُونِي فَأَقِيمُوا حَوْلَ قَبْرِي قَدْرَ مَا تُنْحَرُ جَزُورٌ وَيُقْسَمُ لَحْمُهَا حَتَّى أَسْتَأْنِسَ بِكُمْ وَأَعْلَمَ مَاذَا أُرَاجِعُ بِهِ رُسُلَ رَبِّي . رَوَاهُ مُسْلِمٌ . وَقَدْ سَبَقَ بِطُولِهِ . قَالَ الشَّافِعِيُّ رَحِمَهُ اللَّهُ : وَيُسْتَحَبُّ أَنْ يُقْرَأَ عِنْدَهُ شَيْءٌ مِنَ الْقُرْآنِ وَإِنْ خَتَمُوا الْقُرْآنَ كُلَّهُ كَانَ حَسَنًا .

**947** அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என்னை நீங்கள் அடக்கம் செய்து விட்டால், ஓர் ஒட்டகை அறுக்கப்பட்டு, அதன் இறைச்சியை பங்கீடு செய்யப்படும் கால அளவுக்கு என் மண்ணறையைச் சுற்றி நில்லுங்கள். இதன் மூலம் உங்கள் மூலம் நான் ஆறுதல் பெற்றுக் கொள்வேன். மேலும் என் இறைவனின் (முன்கர்-நகீர்) தூதர்களுக்கு என்ன பதில் கூறுவேன் என்பதை அறிந்து கொள்வேன்." **(முஸ்லிம்:121)**

(இது முன்பே இடம் பெற்றுள்ள நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும். இது முஸ்லிமில் உள்ளது)

"மண்ணறை அருகே குர்ஆன் ஓதப்படுவது விரும்பத்தக்கது. அந்த இடத்தில் குர்ஆன் முழுமையாக ஓதி முடிப்பது அழகாக உள்ளது" என இமாம் ஷாஃபிஈ (ரஹ்) கூறுகிறார்கள்.

**குறிப்பு:இது நபிவழி அல்ல! நபி வழியில் ஆதாரம் இல்லாத எதையும் நாம் செய்ய வேண்டியதில்லை.**

## ١٦٢ - بابُ الصَّدقة عن الميت والدّعاءله

## பாடம் : 162 - இறந்தவருக்காக தர்மம் செய்தல், துஆ செய்தல்.

قَالَ اللَّهُ تَعَالَى : وَالَّذِينَ جَاءُوا مِنْ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا اغْفِرْ لَنَا وَلإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالأَيمَانِ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *அவர்களுக்குப் பின் வந்தவர்கள், "எங்கள் இறைவா! எங்களையும், எங்களுக்கு முன் இறைநம்பிக்கை கொள்வதைக் கொண்டு முந்திவிட்ட எங்களின் சகோதரர்களையும் மன்னிப்பாயாக!" எனக் கூறுகிறார்கள்." (59:10)*

٩٤٨ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَجُلاً قَالَ لِلنَّبِيِّ ﷺ : إِنَّ أُمِّي افْتُلِتَتْ نَفْسُهَا وَأُرَاهَا لَوْ تَكَلَّمَتْ تَصَدَّقَتْ فَهَلْ لَهَا مِنْ أَجْرٍ إِنْ تَصَدَّقْتُ عَنْهَا ؟ قَالَ : " نَعَمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**948** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "என் தாயார் நோயினால் மயக்கமடைந்து விட்டார். அவர் பேசி இருந்தால், தர்மம் செய்திடக் கூறி இருப்பார். அவருக்காக நான் தர்மம் செய்தால் அவருக்கு நற்கூலி கிடைக்குமா?" என்று கேட்டார். "ஆம் (கிடைக்கும்)" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1388. முஸ்லிம்:1004)**

٩٤٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا مَاتَ الأِنْسَانُ انْقَطَعَ عَمَلُهُ إِلاَّ مِنْ ثَلاَثٍ : صَدَقَةٍ جَارِيَةٍ أَوْ عِلْمٍ يُنْتَفَعُ بِهِ أَوْ وَلَدٍ صَالِحٍ يَدْعُو لَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**949** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதன் இறந்து விட்டால், மூன்றைத் தவிர அவனது மற்ற செயல்கள் துண்டிக்கப்பட்டு விடும். (1) நிரந்தரமாக நன்மை பெற்றுத்தரும் தர்மம் (2) பயன் பெறப்படும் கல்வி (3) அவருக்காக துஆச் செய்யும் அவரின் நல்ல குழந்தை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1631)**

## ١٦٣ – بابُ ثناء النّاس عَلَى الميت

## பாடம் : 163 - இறந்தவரை மக்கள் புகழ்தல்

٩٥٠ – عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : مَرُّوا بِجَنَازَةٍ فَأَثْنَوْا عَلَيْهَا خَيْرًا فَقَالَ النَّبِيُّ ﷺ : " وَجَبَتْ " ثُمَّ مَرُّوا بِأُخْرَى فَأَثْنَوْا عَلَيْهَا شَرًّا فَقَالَ النَّبِيُّ ﷺ : " وَجَبَتْ " . فَقَالَ عُمَرُ بْنُ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ : مَا وَجَبَتْ ؟ فَقَالَ : " هَذَا أَثْنَيْتُمْ عَلَيْهِ خَيْرًا فَوَجَبَتْ لَهُ الْجَنَّةُ وَهَذَا أَثْنَيْتُمْ عَلَيْهِ شَرًّا فَوَجَبَتْ لَهُ النَّارُ أَنْتُمْ شُهَدَاءُ اللَّهِ فِي الأَرْضِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**950** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு ஜனாஸாவில் கலந்து கொண்ட நபித்தோழர்கள் இறந்தவரைப் பற்றி நல்ல விதமாகப் புகழ்ந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவசியமாகி விட்டது" என்று கூறினார்கள். பின்பு மற்றொரு ஜனாஸாவின் அருகில் நபித்தோழர்கள் சென்றார்கள். அதனை இழிவாகப் பேசினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அவசியமாகிவிட்டது" என்று கூறினார்கள். "என்ன அவசியமாகி விட்டது?" என உமர் (ரழி) கேட்டார்கள். "அந்த ஜனாஸாவை குறித்து புகழ்ந்து நல்லதைப் பேசினீர்கள்! அவருக்கு சொர்க்கம் அவசியமாகி விட்டது. இந்த ஜனாஸாவைப் பற்றி இகழ்ந்து பேசினீர்கள். இவருக்கு நரகம் அவசியமாகிவிட்டது. நீங்கள்தான் பூமியில் அல்லாஹ்விற்குரிய சாட்சிகளாக உள்ளீர்கள்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(புகாரி:1367. முஸ்லிம்:949)**

٩٥١ – وَعَنْ أَبِي الأَسْوَدِ قَالَ : قَدِمْتُ الْمَدِينَةَ فَجَلَسْتُ إِلَى عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ فَمَرَّتْ بِهِمْ جَنَازَةٌ فَأُثْنِيَ عَلَى صَاحِبِهَا خَيْرًا فَقَالَ عُمَرُ : وَجَبَتْ ثُمَّ مُرَّ بِأُخْرَى فَأُثْنِيَ عَلَى صَاحِبِهَا خَيْرًا فَقَالَ عُمَرُ : وَجَبَتْ ثُمَّ مُرَّ بِالثَّالِثَةِ فَأُثْنِيَ عَلَى صَاحِبِهَا شَرًّا فَقَالَ عُمَرُ : وَجَبَتْ : قَالَ أَبُو الأَسْوَدِ : فَقُلْتُ : وَمَا وَجَبَتْ يَا أَمِيرَ الْمُؤْمِنِينَ ؟ قَالَ : قُلْتُ كَمَا قَالَ النَّبِيُّ ﷺ : " أَيُّمَا مُسْلِمٍ شَهِدَ لَهُ أَرْبَعَةٌ بِخَيْرٍ أَدْخَلَهُ اللَّهُ الْجَنَّةَ " . فَقُلْنَا : وَثَلاَثَةٌ ؟ قَالَ : " وَثَلاَثَةٌ " . فَقُلْنَا وَاثْنَانِ ؟ قَالَ : " وَاثْنَانِ " ؛ ثُمَّ لَمْ نَسْأَلْهُ عَنِ الْوَاحِدِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**951** அபுல் அஸ்வத் கூறுகின்றார்கள்:

நான் மதீனா சென்று, உமர் (ரழி) அவர்களிடம் உட்கார்ந்திருந்தேன். அவர்கள் முன் ஒரு ஜனாஸா கொண்டு செல்லப்பட்டது. அந்த ஜனாஸா பற்றி நல்ல வார்த்தை பேசப்பட்டது. அப்போது உமர் (ரழி)

அவர்கள், "அவசியமாகிவிட்டது" என்று கூறினார்கள். பின்பு மற்றொரு ஜனாஸா கொண்டு செல்லப்பட்டது. அவர் பற்றி நல்லவிதமாகப் பேசப்பட்டது. அப்போது உமர் (ரழி) அவர்கள், "அவசியமாகி விட்டது" என்று கூறினார்கள். பின்பு மூன்றாவது ஜனாஸா கொண்டு செல்லப்பட்டது. அந்த நபர் பற்றி இகழ்ந்து பேசப்பட்டது. அப்போது உமர் (ரழி) அவர்கள், "அவசியமாகி விட்டது" என்று கூறினார்கள். "முஃமின்களின் தலைவர் அவர்களே! என்ன அவசியமாகி விட்டது?" என்று கேட்டேன். அப்போது அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் கூறியது போலவே நானும் கூறினேன். நல்லவிதமாக நான்கு பேர் சாட்சி கூறும் எந்த முஸ்லிமையும் அல்லாஹ் சொர்க்கத்தில் நுழையச் செய்வான் என நபி (ஸல்) கூறினார்கள்" என்று உமர் (ரழி) கூறினார்கள். "மூன்று பேர் கூறினால்...?" என்று நாங்கள் கேட்டோம். அதற்கவர்கள், "மூன்று பேர் கூறினாலும்தான் என நபி (ஸல்) கூறினார்கள்" என்று உமர் (ரழி) கூறினார்கள். "இரண்டு பேர் கூறினால்...?" என்று கேட்டோம் "இரண்டு பேர் கூறினாலும்தான் என நபி (ஸல்) கூறினார்கள்" என்று உமர் (ரழி) அவர்கள் கூறினார்கள். பின்பு, "ஒருவர் கூறினாலுமா?" என்று நாங்கள் கேட்கவில்லை. **(புகாரி:1368)**

## ١٦٤ – باب فضل مَنْ مَاتَ له أولاد صغار

## பாடம் : 164 - சிறு குழந்தைகளைப் பறி கொடுத்த நபரின் சிறப்பு!

٩٥٢ – عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ مُسْلِمٍ يَمُوتُ لَهُ ثَلَاثَةٌ لَمْ يَبْلُغُوا الْحِنْثَ إِلاَّ أَدْخَلَهُ اللَّهُ الْجَنَّةَ بِفَضْلِ رَحْمَتِهِ إِيَّاهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**952** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமுக்கு பருவ வயதை அடையாத மூன்று குழந்தைகள் மரணித்துவிட்டால், அவர் தன் பிள்ளைகள் மீது காட்டிய கருணையின் காரணமாக, அல்லாஹ் அவரை சொர்க்கத்தில் நுழையச் செய்யாமல் இருப்பதில்லை" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1248. முஸ்லிம்)**

٩٥٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَمُوتُ لأَحَدٍ مِنَ الْمُسْلِمِينَ ثَلاَثَةٌ مِنَ الْوَلَدِ لاَ تَمَسُّهُ النَّارُ إِلاَّ تَحِلَّةَ الْقَسَمِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " وَتَحِلَّةُ الْقَسَمِ " قَوْلُ اللَّهِ تَعَالَى : وَإِنْ مِنْكُمْ إِلاَّ وَارِدُهَا . وَالْوُرُودُ : هُوَ الْعُبُورُ عَلَى الصِّرَاطِ وَهُوَ جِسْرٌ مَنْصُوبٌ عَلَى ظَهْرِ جَهَنَّمَ عَافَانَا اللَّهُ مِنْهَا .

**953** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஸ்லிம்களில் ஒருவருக்கு மூன்று குழந்தைகள் இறந்திருந்தால், அவருக்கு ஸிராத் எனும் பாலத்தில் ஏற்படும் லேசான நரகத் தீண்டுதலைத் தவிர வேறு தீங்கு ஏற்படாது" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:1251. முஸ்லிம்:2632)**

கட்டாயத் தீண்டுதல் என்பது, உங்களில் எவரும் அதை கடக்காமல் இருக்க முடியாது (19:71) என்ற வசனத்தின் சொல்படியாகும். நரகத்தின் மீது அமைந்துள்ள பாலமான "ஸிராத்"தைக் கடக்க வேண்டும். அந்தப் பாலத்தை விட்டும் அல்லாஹ் நம்மைப் பாதுகாப்பானாக!

٩٥٤ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَتِ امْرَأَةٌ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَتْ : يَا رَسُولَ اللَّهِ ذَهَبَ الرِّجَالُ بِحَدِيثِكَ فَاجْعَلْ لَنَا مِنْ نَفْسِكَ يَوْمًا نَأْتِيكَ فِيهِ تُعَلِّمُنَا مِمَّا عَلَّمَكَ اللَّهُ قَالَ : اجْتَمِعْنَ يَوْمَ كَذَا وَكَذَا . فَاجْتَمَعْنَ فَأَتَاهُنَّ النَّبِيُّ ﷺ فَعَلَّمَهُنَّ مِمَّا عَلَّمَهُ اللَّهُ ثُمَّ قَالَ " مَا مِنْكُنَّ مِنِ امْرَأَةٍ تُقَدِّمُ ثَلاَثَةً مِنَ الْوَلَدِ إِلاَّ كَانُوا لَهَا حِجَابًا مِنَ النَّارِ " . فَقَالَتِ امْرَأَةٌ : وَاثْنَيْنِ ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " وَاثْنَيْنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**954** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண் வந்தார். "இறைத்தூதர் அவர்களே! உங்கள் பேச்சை ஆண்களே (வந்து கேட்டுச்) செல்கின்றனர். உங்களிடம் எங்களுக்கு என ஒரு நாளை ஒதுங்குங்கள். அன்று நாங்கள் உங்கள் சபைக்கு வருகிறோம். அல்லாஹ் உங்களுக்குக் கற்றுத் தந்தவற்றிலிருந்து எங்களுக்கும் கற்றுக் கொடுங்கள்" என்று கூறினார். "இன்ன, இன்ன நாளில் நீங்கள் ஒன்று கூடுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். உடனே பெண்கள் (அந்நாளில்) ஒன்று கூடினர். அவர்களிடம் வந்த நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் தம்மிடம் கூறியவற்றைக் கூறினார்கள். பின்பு, "உங்களில் ஒரு பெண், மூன்று குழந்தைகளை முற்படுத்தி வைத்திருந்தால் (மரணித்திருந்தால்) அவர்கள் அப்பெண்ணை நரகை விட்டுத் தடுக்கும் திரையாகத் திகழ்வர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்பொழுது ஒரு பெண், "இரண்டு குழந்தைகள் (இறந்திருந்தால்..?)" அதற்கு, "இரண்டு குழந்தைகள் (இறந்திருந்)தாலும் சரியே!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1249. முஸ்லிம்:2633)**

## ١٦٥ – باب البكاء والخوف عند المرور بقبور الظالمين وَمصارعهم وإِظْهار الافتقار إلى اللّه تَعَالَى والتحذير من الغفلة عن ذَلك

## பாடம் : 165 - அநியாயக்காரர்களின் மண்ணறையை கடக்கும் போது பயந்து அழுவது, அல்லாஹ்விடம் விரும்பியதைக் கேட்பது, அந்த இடத்தில் கவனக்குறைவாக இருப்பதை எச்சரிப்பது!

٩٥٥ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ لأَصْحَابِهِ – يَعْنِي لَمَّا وَصَلُوا الْحِجْرَ دِيَارَ ثَمُودَ – " لاَ تَدْخُلُوا عَلَى هَؤُلاَءِ الْمُعَذَّبِينَ إِلاَّ أَنْ تَكُونُوا بَاكِينَ فَإِنْ لَمْ تَكُونُوا بَاكِينَ فَلاَ تَدْخُلُوا عَلَيْهِمْ لاَ يُصِيبُكُمْ مَا أَصَابَهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ قَالَ : لَمَّا مَرَّ رَسُولُ اللَّهِ ﷺ بِالْحِجْرِ قَالَ : لاَ تَدْخُلُوا مَسَاكِنَ الَّذِينَ ظَلَمُوا أَنْفُسَهُمْ أَنْ يُصِيبَكُمْ مَا أَصَابَهُمْ إِلاَّ أَنْ تَكُونُوا بَاكِينَ ثُمَّ قَنَّعَ رَسُولُ اللَّهِ ﷺ رَأْسَهُ وَأَسْرَعَ السَّيْرَ حَتَّى أَجَازَ الْوَادِيَ .

**955** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸமூத் கூட்டத்தார் வாழ்ந்த வீடுகள் இருந்த "ஹிஜ்ர்" என்ற பகுதிக்கு நாங்கள் சென்ற போது, நபி (ஸல்) அவர்கள் எங்களிடம், "வேதனை செய்யப்பட்ட இந்த (ஸமூத்) மக்களிடம் நீங்கள் அழுதவர்களாகவே நுழையுங்கள். அழுபவர்களாக நீங்கள் இல்லை என்றால், அதில் நுழையாதீர்கள். அவர்களுக்கு ஏற்பட்ட நிலை, உங்களுக்கு ஏற்படாமல் இருக்கட்டுமாக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:433,3380. முஸ்லிம்:2933)**

மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது.

நபி (ஸல்)அவர்கள் "ஹிஜ்ர்" என்ற பகுதியை அடைந்த போது, "தங்களுக்குத் தாங்களே அநீதம் இழைத்துக் கொண்டவர்களுக்கு ஏற்பட்ட நிலை உங்களுக்கும் ஏற்படாமல் இருக்க, அவர்களின் குடியிருப்புப் பகுதிகளில் நீங்கள் அழுதவர்களாகவே தவிர நுழையாதீர்கள்! என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, துணியால் தங்கள் தலையை (முகத்தை) நபி (ஸல்) அவர்கள் மூடிக் கொண்டார்கள். அந்த (அழிவுப்) பகுதியை கடக்கும் வரை தங்கள் நடையை தீவிரப்படுத்தினார்கள்."

# அத்தியாயம் : 7

## பயண ஒழுங்குகள்

## ١٦٦ – باب استحباب الخروج يوم الخميس واستحبابه أول النّهار

## பாடம் : 166 - வியாழக்கிழமை பயணம் செல்வதும், முற்பகலில் புறப்படுவதும் விரும்பத்தக்கதாகும்

٩٥٦ – عَنْ كَعْبِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ خَرَجَ فِي غَزْوَةِ تَبُوكَ يَوْمَ الْخَمِيسِ وَكَانَ يُحِبُّ أَنْ يَخْرُجَ يَوْمَ الْخَمِيسِ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ فِي الصَّحِيحَيْنِ : لَقَلَّمَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَخْرُجُ إِلاَّ فِي يَوْمِ الْخَمِيسِ .

**956** கஅபு இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் வியாழக்கிழமை அன்று தபூக் போருக்கு புறப்பட்டுச் சென்றார்கள். வியாழக்கிழமை பயணம் செல்வதையே அவர்கள் பெரிதும் விரும்புபவர்களாக இருந்தார்கள்.

**(புகாரி:2949. முஸ்லிம்:2950)**

மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது.

“நபி (ஸல்) அவர்கள் வியாழக்கிழமை தவிர, மற்ற நாட்களில் பயணம் புறப்படுவது குறைவாகவே இருந்தது”

٩٥٧ – وَعَنْ صَخْرِ بْنِ وَدَاعَةَ الْغَامِدِيِّ الصَّحَابِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " اللَّهُمَّ بَارِكْ لِأُمَّتِي فِي بُكُورِهَا " . وَكَانَ إِذَا بَعَثَ سَرِيَّةً أَوْ جَيْشًا بَعَثَهُمْ مِنْ أَوَّلِ النَّهَارِ . وَكَانَ صَخْرٌ تَاجِرًا وَكَانَ يَبْعَثُ تِجَارَتَهُ أَوَّلَ النَّهَارِ فَأَثْرَى وَكَثُرَ مَالُهُ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**957** ஸஹ்ர் இப்னு வதாஆ அல்காமிதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹும்ம பாரிக்லி உம்மதீ பீ புகூரிஹா - (இறைவா! என் சமுதாயத்தினருக்கு காலை நேரங்களில் அபிவிருத்தி (பரக்கத்) செய்வாயாக)” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் ஒரு அணியையோ, ஒரு படையையோ போருக்கு அனுப்பினால் முற்பகலில் தான் அனுப்புவார்கள்.

இதை அறிவிக்கும் ஸஹ்ர் (ரழி) அவர்கள் வியாபாரியாக இருந்தார். அவர் தன் வியாபாரப் பொருட்களை முற்பகலில்தான் அனுப்புவார். இதனால் லாபம் கிடைத்து, அவரின் செல்வம் பெருகியது.

**(அபூதாவூது:2606. திர்மிதீ:1212)**

## ١٦٧ – باب استحْبَاب طلب الرفقة وتأميرهم على أنفسهم واحدًا يطيعونه

## பாடம் : 167 - பயணத் தோழர்களை தேடிக் கொள்வது, தங்களுக்குள் ஒருவரை தலைவராக்கி அவருக்குக் கட்டுப்படுவது விரும்பத்தக்கதாகும்

٩٥٨ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَوْ أَنَّ النَّاسَ يَعْلَمُونَ مِنَ الْوَحْدَةِ مَا أَعْلَمُ مَا سَارَ رَاكِبٌ بِلَيْلٍ وَحْدَهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**958** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தனிமையில் (தனியாக பயணம் செய்வதில்) ஏற்படும் தீங்குகளை நான் அறிந்த அளவுக்கு மக்கள் அறிந்து கொண்டால், இரவில் தனியே எந்த மனிதரும் பயணம் செய்யமாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2998)**

٩٥٩ -وَعَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ)عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ:قَالَ رَسُولُ اللَّهِ ﷺ :" الرَّاكِبُ شَيْطَانٌ وَالرَّاكِبَانِ شَيْطَانَانِ وَالثَّلاَثَةُ رَكْبٌ".رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَالنَّسَائِيُّ بِأَسَانِيدَ صَحِيحَةٍ وَقَالَ التِّرْمِذِيُّ:حَدِيثٌ حَسَنٌ.

**959** அம்ரு இப்னு ஷுஐப், தன் பாட்டனார் அம்ரு இப்னு ஆஸ் (ரழி) கூறியதாகக் கூறுகிறார்:

"(வாகனத்தில் தனியாக பயணம் செய்யும்) ஒரு வாகனப் பயணி ஷைத்தான் ஆவார். இரு வாகனப் பயணிகள் இரு ஷைத்தான்களாவர். மூன்று பயணிகளே பயணிகள் ஆவர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:2607. திர்மிதீ:1674. நஸயீ. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٩٦٠ - وَعَنْ أَبِي سَعِيدٍ وَأَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالاَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا خَرَجَ ثَلاَثَةٌ فِي سَفَرٍ فَلْيُؤَمِّرُوا أَحَدَهُمْ " . حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**960** அபூஸயீத் (ரழி), அபூஹுரைரா (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

"ஒரு பயணத்தில் மூன்று பேர் சென்றால், அவர்களில் ஒருவரை அவர்கள் தலைவராக்கிக் கொள்ளட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2608)**

٩٦١ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " خَيْرُ الصَّحَابَةِ أَرْبَعَةٌ وَخَيْرُ السَّرَايَا أَرْبَعُ مِائَةٍ وَخَيْرُ الْجُيُوشِ أَرْبَعَةُ آلاَفٍ وَلَنْ يُغْلَبَ اثْنَا عَشَرَ أَلْفًا مِنْ قِلَّةٍ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**961** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நண்பர்களில் சிறந்தது நான்கு பேர் நண்பர்களாக இருப்பதாகும். படை அணிகளில் சிறந்தது, நானூறு பேர் கொண்ட அணியாகும். படைகளில் சிறந்தது, நான்காயிரம் பேர் கொண்டதாகும். பன்னிரெண்டாயிரம் பேர் கொண்ட படை, எண்ணிக்கை குறைவு காரணமாக தோற்கடிக்கப் படமாட்டாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2611. திர்மிதீ:1555)**

## ١٦٨-بابُ آداب السَّير والنزول والمبيت والنوم في السفر واستحباب السَّرى والرفق بالدواب ومراعاة مصلحتها وجواز الإرداف على الدَّابة إِذَا كَانَتْ تطيق ذَلِك وأمْر من قص في حقّها بالقيام بحقّها

## பாடம் : 168 - பயணம் செய்தல், பயணத்தினிடையே தங்குதல், இரவு தங்குதல், பயணத்தில் உறங்குதல் ஆகியவற்றின் ஒழுங்குகள். இரவில் பயணம் செய்தல், வாகனத்திடம் மென்மையாக நடந்து கொள்ளுதல், வாகனத்தின் நலன் பேணுதல் ஆகியவை விரும்பத்தக்கதாகும். வாகனத்தில் இயன்றால் மற்றொருவரை ஏற்றிக் கொள்வது கூடும். வாகனத்தின் உரிமைகளில் குறைவு ஏற்படுத்துவோரிடம் உரிமையைப் பேண வலியுறுத்தல்!

٩٦٢ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا سَافَرْتُمْ فِي الْخِصْبِ فَأَعْطُوا الأبِلَ حَظَّهَا مِنَ الأَرْضِ وَإِذَا سَافَرْتُمْ فِي الْجَدْبِ فَأَسْرِعُوا عَلَيْهَا السَّيْرَ وَبَادِرُوا بِهَا نِقْيَهَا وَإِذَا عَرَّسْتُمْ فَاجْتَنِبُوا الطَّرِيقَ فَإِنَّهَا طُرُقُ الدَّوَابِّ وَمَأْوَى

الْهَوَامِّ بِاللَّيْلِ " . رَوَاهُ مُسْلِمٌ . مَعْنَى " أَعْطُوا الأبلَ حَظَّهَا مِنَ الأَرْضِ " أَيْ اُرْفُقُوا بِهَا فِي السَّيْرِ لِتَرْعَى فِي حَالِ سَيْرِهَا وَقَوْلُهُ " نِقْيَهَا " هُوَ بِكَسْرِ النُّونِ وَإِسْكَانِ الْقَافِ وَبِالْيَاءِ الْمُثَنَّاةِ مِنْ تَحْتُ وَهُوَ : الْمُخُّ مَعْنَاهُ أَسْرِعُوا بِهَا حَتَّى تَصِلُوا الْمَقْصِدَ قَبْلَ أَنْ يَذْهَبَ مُخُّهَا مِنْ ضَنْكِ السَّيْرِ . " وَالتَّعْرِيسُ " : النُّزُولُ فِي اللَّيْلِ .

**962** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் செழிப்பான பகுதியில் பயணம் செய்தால், பூமியில் ஒட்டகத்தின் பங்கைக் கொடுங்கள். (அதாவது மேயவிடுங்கள்). வறட்சியானப் பகுதிகளில் நீங்கள் பயணம் செய்தால் ஒட்டகைப் பயணத்தை விரைவுபடுத்துங்கள். அது போய் சேரும் இடத்திற்குச் செல்ல துரிதப்படுத்துங்கள். நீங்கள் இரவில் ஓய்வெடுத்தால், பாதைகளைத் தவிர்ந்து கொள்ளுங்கள். ஏனெனில், அது கால்நடைகளின் பாதைகளாகும். மேலும், அது இரவில் விஷ ஜந்துகளின் இருப்பிடமாகவும் உள்ளது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1926)**

٩٦٣ – وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا كَانَ فِي سَفَرٍ فَعَرَّسَ بِلَيْلٍ اضْطَجَعَ عَلَى يَمِينِهِ وَإِذَا عَرَّسَ قُبَيْلَ الصُّبْحِ نَصَبَ ذِرَاعَهُ وَوَضَعَ رَأْسَهُ عَلَى كَفِّهِ . رَوَاهُ مُسْلِمٌ . قَالَ الْعُلَمَاءُ : إِنَّمَا نَصَبَ ذِرَاعَهُ لِئَلاَّ يَسْتَغْرِقَ فِي النَّوْمِ فَتَفُوتُ صَلاَةُ الصُّبْحِ عَنْ وَقْتِهَا أَوْ عَنْ أَوَّلِ وَقْتِهَا .

**963** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணத்தின் போது இரவில் ஓர் இடத்தில் தங்கினால், தனது வலது புறமாக திரும்பிப் படுப்பார்கள். சுப்ஹு நேரத்திற்கும் முன் உள்ள நேரத்தில் தங்கினால் தன் முழங்கையை நட்டி வைத்து, தன் உள்ளங்கையில் தன் தலையை வைத்துத் தூங்குவார்கள். **(முஸ்லிம்:683)**

“நபி (ஸல்) அவர்கள் தன் முழங்கையை நட்டி வைத்து, தன் உள்ளகையின் மீது தலையை வைத்து தூங்கியது, தூக்கத்தில் அவர்கள் ஆழ்ந்துவிடாமல் இருப்பதற்காகத்தான். மேலும் சுப்ஹுத் தொழுகையை அதன் நேரத்தில் அல்லது அதன் ஆரம்ப நேரத்தில் தவற விட்டு விடக்கூடாது என்பதால்தான்” என அறிஞர்கள் கூறுகின்றனர்.

٩٦٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " عَلَيْكُمْ بِالدُّلْجَةِ فَإِنَّ الأَرْضَ تُطْوَى بِاللَّيْلِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ . " الدُّلْجَةُ " : السَّيْرُ فِي اللَّيْلِ .

**964** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரவில் பயணம் மேற்கொள்ளுங்கள். ஏனெனில் இரவு நேரத்தில்தான் பூமி சுருட்டப்படுகிறது. (சுருக்கப்படுகிறது)” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2571)**

٩٦٥ – وَعَنْ أَبِي ثَعْلَبَةَ الْخُشَنِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّاسُ إِذَا نَزَلُوا مَنْزِلاً تَفَرَّقُوا فِي الشِّعَابِ وَالأَوْدِيَةِ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ تَفَرُّقَكُمْ فِي هَذِهِ الشِّعَابِ وَالأَوْدِيَةِ إِنَّمَا ذَلِكُمْ مِنَ الشَّيْطَانِ ! " فَلَمْ يَنْزِلُوا بَعْدَ ذَلِكَ مَنْزِلاً إِلاَّ انْضَمَّ بَعْضُهُمْ إِلَى بَعْضٍ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**965** அபூ ஸஃலபா அல்குஷனிய்யீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பயணத்தின்பொழுது ஓய்வெடுக்க விரும்பினால் நபித்தோழர்கள் ஓடைகளிலும், மலைக் கணவாய்களிலும் பல பிரிவுகளாக பிரிந்து தங்குவார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், “நீங்கள் இந்த மலைக் கணவாய்களிலும், ஓடைகளிலும் பிரிந்து தங்கியிருப்பது ஷைத்தானின் தன்மைகளைச் சார்ந்ததாகும்” என்று கூறினார்கள். அதன்பின் நபித்தோழர்கள் எங்கு தங்கினாலும் அருகருகே ஒன்றாகவே தங்கிக் கொள்பவர்களாக இருந்தனர். **(அபூதாவூது:2628)**

٩٦٦ - وَعَنْ سَهْلِ بْنِ عَمْرٍو - وَقِيلَ سَهْلُ بْنُ الرَّبِيعِ بْنِ عَمْرٍو - الأنْصَارِيُّ الْمَعْرُوفُ بِابْنِ الْحَنْظَلِيَّةِ وَهُوَ مِنْ أَهْلِ بَيْعَةِ الرِّضْوَانِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : مَرَّ رَسُولُ اللَّهِ ﷺ بِبَعِيرٍ قَدْ لَحِقَ ظَهْرُهُ بِبَطْنِهِ فَقَالَ : " اتَّقُوا اللَّهَ فِي هَذِهِ الْبَهَائِمِ الْمُعْجَمَةِ فَارْكَبُوهَا صَالِحَةً وَكُلُوهَا صَالِحَةً " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**966** ஹுதைபிய்யாவில் "பைஅத்துர் ரிழ்வான்" என்ற உடன்படிக்கையின் போது உடன்படிக்கை செய்த "இப்னு ஹன்ளலிய்யா" என்று அழைக்கப்பட்ட ஸஹ்ல் இப்னு ரபீயி இப்னு அம்ரு அல் அன்சாரி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

வயிறுடன் முதுகு ஒட்டி விட்ட (மெலிந்த) ஒட்டகையின் அருகில் நபி (ஸல்) அவர்கள் சென்றார்கள். அப்போது அவர்கள், "வாய் பேச இயலாத இந்த மிருகங்கள் விஷயத்தில் அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள். உடல் ஆரோக்கியமாக உள்ளவற்றில் பயணம் செய்யுங்கள். உடல் ஆரோக்கியமாக உள்ளதையே (ஷரீஅத் முறையில் அறுத்து) உண்ணுங்கள்" என்று கூறினார்கள். **(அபூதாவூது:2548)**

٩٦٧ - وَعَنْ أَبِي جَعْفَرٍ عَبْدِ اللَّهِ بْنِ جَعْفَرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : أَرْدَفَنِي رَسُولُ اللَّهِ ﷺ ذَاتَ يَوْمٍ خَلْفَهُ وَأَسَرَّ إِلَيَّ حَدِيثًا لاَ أُحَدِّثُ بِهِ أَحَدًا مِنَ النَّاسِ وَكَانَ أَحَبَّ مَا اسْتَتَرَ بِهِ رَسُولُ اللَّهِ ﷺ لِحَاجَتِهِ هَدَفٌ أَوْ حَائِشُ نَخْلٍ - يَعْنِي حَائِطَ نَخْلٍ - رَوَاهُ مُسْلِمٌ هَكَذَا مُخْتَصَرًا : وَزَادَ فِيهِ الْبَرْقَانِيُّ بِإِسْنَادِ مُسْلِمٍ بَعْدَ قَوْلِهِ : حَائِشُ نَخْلٍ - فَدَخَلَ حَائِطًا لِرَجُلٍ مِنَ الأَنْصَارِ فَإِذَا فِيهِ جَمَلٌ فَلَمَّا رَأَى الْجَمَلُ النَّبِيَّ ﷺ جَرْجَرَ وَذَرَفَتْ عَيْنَاهُ فَأَتَاهُ النَّبِيُّ ﷺ فَمَسَحَ سَرَاتَهُ - أَيْ سَنَامَهُ - وَذِفْرَاهُ فَسَكَنَ ; فَقَالَ " مَنْ رَبُّ هَذَا الْجَمَلِ لِمَنْ هَذَا الْجَمَلُ ؟ " فَجَاءَ فَتًى مِنَ الأَنْصَارِ فَقَالَ : هَذَا لِي يَا رَسُولَ اللَّهِ . قَالَ : " أَفَلاَ تَتَّقِي اللَّهَ فِي هَذِهِ الْبَهِيمَةِ الَّتِي مَلَّكَكَ اللَّهُ إِيَّاهَا ؟ فَإِنَّهُ يَشْكُو إِلَيَّ أَنَّكَ تُجِيعُهُ وَتُدْئِبُهُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ كَرِوَايَةِ الْبَرْقَانِيِّ . قَوْلُهُ " ذِفْرَاهُ " هُوَ بِكَسْرِ الذَّالِ الْمُعْجَمَةِ وَإِسْكَانِ الْفَاءِ وَهُوَ لَفْظٌ مُفْرَدٌ مُؤَنَّثٌ . قَالَ أَهْلُ اللُّغَةِ : الذِّفْرَى : الْمَوْضِعُ الَّذِي يَعْرَقُ مِنَ الْبَعِيرِ خَلْفَ الأُذُنِ . وَقَوْلُهُ " تُدْئِبُهُ " : أَيْ تُتْعِبُهُ .

**967** அபூஜஅஃபர் என்ற அப்துல்லாஹ் இப்னு ஜஅஃபர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் தனக்குப் பின்னே என்னை (வாகனத்தில்) ஏற்றிக் கொண்டார்கள். என்னிடம் ஒரு செய்தியை ரகசியமாகக் கூறினார்கள். அதுபற்றி மக்களில் எவரிடமும் நான் கூற மாட்டேன். நபி (ஸல்) அவர்கள் தன் (மலஜலத்) தேவைக்கு செல்லும் போது, சுவர் அல்லது பேரீத்தம் பழத் தோட்டத்தின் வேலி ஆகியவைகளுக்கு அப்பால் மறைந்து கொள்வது அவர்களுக்கு மிக விருப்பமானதாக இருந்தது." **(முஸ்லிம்:342)**

பர்கானி என்பவர் முஸ்லிமில் இதை கீழ்கண்டவாறு இன்னும் அதிகரித்து கூறி உள்ளார்.

அன்சாரி (மதீனாவாசியான) நபித்தோழர் ஒருவரின் தோட்டத்திற்கு நபி (ஸல்) சென்றார்கள். அங்கே ஒரு ஒட்டகை நின்று கொண்டிருந்தது. நபி (ஸல்) அவர்களைக் கண்டதும் அது சப்தமிடத் துவங்கியது. அதன் இரு கண்களிலும் கண்ணீர் ஓடியது. அதன் அருகே வந்த நபி (ஸல்) அவர்கள் அதன் திமிலையும், அதன் காதுச் சோணையையும் தடவினார்கள். அப்போது அது அமைதியானது. "இந்த ஒட்டகையின் உரிமையாளர் யார்? இந்த ஒட்டகை யாருக்குச் சொந்தம்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அன்சாரியான ஒரு வாலிபர் வந்து, "இறைத்தூதர் அவர்களே! இது எனக்குரியது!" என்றார். "அல்லாஹ் உனக்குச் சொந்தமாக்கித் தந்த இந்த மிருகத்தின் விஷயத்தில் நீ அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளவில்லையா? நீ இதை பட்டினி போடுவதாகவும், கஷ்டப்படுத்து வதாகவும் என்னிடம் முறையிடுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(இந்த பர்கானி என்பாரின் அறிவிப்பு போல அபூதாவூதிலும் (2549) உள்ளது)**

٩٦٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا إِذَا نَزَلْنَا مَنْزِلاً لاَ نُسَبِّحُ حَتَّى نَحُلَّ الرِّحَالَ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ عَلَى شَرْطِ مُسْلِمٍ . وَقَوْلُهُ " لاَ نُسَبِّحُ " : أَيْ لاَ نُصَلِّي النَّافِلَةَ وَمَعْنَاهُ أَنَّا – مَعَ حِرْصِنَا عَلَى الصَّلاَةِ – لاَ نُقَدِّمُهَا عَلَى حَطِّ الرِّحَالِ وَإِرَاحَةِ الدَّوَابِّ .

**968** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் இடத்தில் நாங்கள் (ஓய்வெடுக்க) இறங்கினால், வாகனங்களுக்கு ஓய்வு அளிக்கும் வரை (ஒட்டகத்தின் மீது இருந்து சேணம், உணவுப் பொருட்களின் பை போன்ற பயணப் பொருட்களை இறக்கும் வரையில் நபிலான தொழுகைகளை போன்ற) தஸ்பீஹ் பணியில் ஈடுபட மாட்டோம்."

**(அபூதாவூது:2551)**

## ١٦٩ – باب إعانة الر فيق

## பாடம் : 169 - பயணத் தோழருக்கு உதவுதல்!

فِي الْبَابِ أَحَادِيثُ كَثِيرَةٌ تَقَدَّمَتْ كَحَدِيثِ : " وَاللَّهُ فِي عَوْنِ الْعَبْدِ مَا كَانَ الْعَبْدُ فِي عَوْنِ أَخِيهِ " 2 - 245 وَحَدِيثُ : " كُلُّ مَعْرُوفٍ صَدَقَةٌ " 18 - 134 وَأَشْبَاهِهِمَا .

٩٦٩ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَيْنَمَا نَحْنُ فِي سَفَرٍ إِذْ جَاءَ رَجُلٌ عَلَى رَاحِلَةٍ لَهُ فَجَعَلَ يَصْرِفُ بَصَرَهُ يَمِينًا وَشِمَالاً فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ كَانَ مَعَهُ فَضْلُ ظَهْرٍ فَلْيَعُدْ بِهِ عَلَى مَنْ لاَ ظَهْرَ لَهُ وَمَنْ كَانَ لَهُ فَضْلُ زَادٍ فَلْيَعُدْ بِهِ عَلَى مَنْ لاَ زَادَ لَهُ " ; فَذَكَرَ مِنْ أَصْنَافِ الْمَالِ مَا ذَكَرَهُ حَتَّى رَأَيْنَا أَنَّهُ لاَ حَقَّ لأَحَدٍ مِنَّا فِي فَضْلٍ ! رَوَاهُ مُسْلِمٌ .

**969** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் ஒரு பயணத்தில் இருந்த போது, தன் வாகனத்தில் இருந்த ஒருவர், வலதுபுறமாகவும் - இடதுபுறமாகவும் தன் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "(வாகனத்தின்) முதுகில் மேல் இடமுள்ளவராக ஒருவர் இருந்தால், வாகன வசதி இல்லாத ஒருவருக்கு அதை ஒதுக்கட்டும்! ஒருவரிடம் பயண உணவில் மீதம் இருந்தால், பயண உணவு இல்லாதவருக்கு என அதைக் கொடுக்கட்டும்!" என்று ஒவ்வொரு பொருட்களின் தனித்தனி வகைகளாகப் பிரித்து நபி (ஸல்) கூறினார்கள். மேல் மிச்சமாக உள்ள எதுவும் நமக்கு உரிமையானது அல்ல" என்று நாங்கள் எண்ணும் அளவுக்குக் கூறினார்கள்.

**(முஸ்லிம்:1728)**

٩٧٠ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ أَنَّهُ أَرَادَ أَنْ يَغْزُوَ فَقَالَ : " يَا مَعْشَرَ الْمُهَاجِرِينَ وَالأَنْصَارِ : إِنَّ مِنْ إِخْوَانِكُمْ قَوْمًا لَيْسَ لَهُمْ مَالٌ وَلاَ عَشِيرَةٌ فَلْيَضُمَّ أَحَدُكُمْ إِلَيْهِ الرَّجُلَيْنِ أَوِ الثَّلاَثَةَ فَمَا لأَحَدِنَا مِنْ ظَهْرٍ يَحْمِلُهُ إِلاَّ عُقْبَةٌ كَعُقْبَةِ يَعْنِي أَحَدِهِمْ – قَالَ : فَضَمَمْتُ إِلَيَّ اثْنَيْنِ أَوْ ثَلاَثَةً مَا لِي إِلاَّ عُقْبَةٌ كَعُقْبَةِ أَحَدِهِمْ مِنْ جَمَلِي " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**970** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் போருக்கு புறப்படும் முன், "முஹாஜிர், அன்சாரித் தோழர்களே! தங்களுக்கு சொத்தோ, குடும்பமோ இல்லாதவர்கள் உங்களில் சகோதரர்களாக உள்ளனர். உங்களில் ஒருவர் தன்னுடன் (அவர்களில்) இருவர் அல்லது மூவர் என (பயணத்தில்) சேர்த்துக் கொள்ளட்டும்" என்று கூறுவார்கள். (அதன் பிறகு) ஒருவர் மட்டும் பயணிக்கும் நிலையில் உள்ளவர் முறை வைத்தே பயணம் செல்வார். நான் என்னுடன் இருவர் அல்லது மூவரைச் சேர்த்துக் கொள்வேன். அவர்களில் ஒவ்வொருவராக முறை வைத்து ஏறிக் கொள்வோம்.

**(அபூதாவூது:2534)**

٩٧١ – وَعَنْهُ ) جَابِرٍ ( قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَتَخَلَّفُ فِي الْمَسِيرِ فَيُزْجِي الضَّعِيفَ وَيُرْدِفُ وَيَدْعُو لَهُ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**971** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணத்தில், பலவீனர்களை தனக்கு பின்னால் ஏற்றி உட்கார வைத்துக் கொண்டு, அவர்களுக்காக "துஆ" செய்வார்கள். **(அபூதாவூது:2639)**

## ١٧٠ – باب مَا يقول إذَا ركب الدابة للسّفر

## பாடம் : 170 - பயணம் செல்பவர் வாகனத்தில் ஏறியதும் கூற வேண்டியவை.

قَالَ اللَّهُ تَعَالَى : وَجَعَلَ لَكُمْ مِنَ الْفُلْكِ وَالأَنْعَامِ مَا تَرْكَبُونَ لِتَسْتَوُوا عَلَى ظُهُورِهِ ثُمَّ تَذْكُرُوا نِعْمَةَ رَبِّكُمْ إِذَا اسْتَوَيْتُمْ عَلَيْهِ وَتَقُولُوا سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *கப்பல்களையும், கால்நடைகளையும் அதன் மீது நீங்கள் சரியாக உட்கார்ந்து பயணம் செய்திட அல்லாஹ் உருவாக்கினான். அதில் நீங்கள் சரியாக உட்கார்ந்துவிட்டால், உங்கள் இறைவனின் அருட்கொடைகளை நினைவுகூர்ந்து "சுப்ஹானல்லதீ ஸஹ்ஹர லனா ஹாதா வமாகுன்னா லஹு முக்ரினீன் வ இன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன்" என்று கூறுங்கள். (43:12-14)*

**துஆவின் பொருள்: அல்லாஹ்வே தூய்மையானவன். அவன் தான் இதை எங்களுக்கு வசப்படுத்தித் தந்தான். (முன்பு) இதற்கு நாம் சக்தி பெற்றவர்களாக இல்லை. நிச்சயமாக நாங்கள் எங்கள் இறைவனிடம் திரும்புவர்களாக உள்ளோம்.**

٩٧٢ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا اسْتَوَى عَلَى بَعِيرِهِ خَارِجًا إِلَى سَفَرٍ كَبَّرَ ثَلاثًا ثُمَّ قَالَ : " سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُونَ . اللَّهُمَّ إِنَّا نَسْأَلُكَ فِي سَفَرِنَا هَذَا الْبِرَّ وَالتَّقْوَى وَمِنَ الْعَمَلِ مَا تَرْضَى . اللَّهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هَذَا وَاطْوِ عَنَّا بُعْدَهُ . اللَّهُمَّ أَنْتَ الصَّاحِبُ فِي السَّفَرِ وَالْخَلِيفَةُ فِي الأَهْلِ . اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ وَعْثَاءِ السَّفَرِ وَكَآبَةِ الْمَنْظَرِ وَسُوءِ الْمُنْقَلَبِ فِي الْمَالِ وَالأَهْلِ وَالْوَلَدِ " . وَإِذَا رَجَعَ قَالَهُنَّ وَزَادَ فِيهِنَّ : " آيِبُونَ تَائِبُونَ عَابِدُونَ لِرَبِّنَا حَامِدُونَ " . رَوَاهُ مُسْلِمٌ . مَعْنَى " مُقْرِنِينَ " : مُطِيقِينَ . " وَالْوَعْثَاءُ " – بِفَتْحِ الْوَاوِ وَإِسْكَانِ الْعَيْنِ الْمُهْمَلَةِ وَبِالثَّاءِ الْمُثَلَّثَةِ وَبِالْمَدِّ – وَهِيَ الشِّدَّةُ . وَ " الْكَآبَةُ " بِالْمَدِّ وَهِيَ : تَغَيُّرُ النَّفْسِ مِنْ حُزْنٍ وَنَحْوِهِ . " وَالْمُنْقَلَبُ " : الْمَرْجِعُ .

**972** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணத்திற்கு புறப்பட்டு, தன் ஒட்டகையில் ஏறி சரியாக உட்கார்ந்ததும், மூன்று முறை தக்பீர் (அல்லாஹு அக்பர்) கூறுவார்கள். பின்பு "சுப்ஹானல்லதீ ஸஹ்ஹரலனா ஹாதா வமாகுன்னா லஹு முக்ரினீன் வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன் அல்லாஹும்ம இன்னா நஸ்அலுக ஃபீ ஸஃபரினா ஹாதல் பிர்ர வத்தக்வா வமினல் அமலி மா தர்ழா அல்லாஹும்ம ஹவ்வின் அலைனா ஸஃபரனா ஹாதா வத்வி அன்னா புஃதஹு அல்லாஹும்ம அன்தஸ் ஸாஹிபு பிஸ்ஸஃபரி வல் கலீபத்து பில் அஹ்லி, அல்லாஹும்ம இன்னீ அஊஃது பிக மின் வஃதயிஸ் ஸஃபரி, வகாபத்தில் முன்ளரி, வஸுஇல் முன்கலபி பில்மாலி வல் அஹ்லி, வல் வலதீ" என்று கூறுவார்கள். பயணத்திலிருந்து திரும்பினால் இதையே அவர்கள் கூறி, "ஆயிபூன தாஇபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதுன்" என்று அதிகப்படுத்திக் கூறுவார்கள். **(முஸ்லிம்:1342)**

பயணம் புறப்படும் போது கூறும் துஆவின் பொருள்: இதை எங்களுக்கு வசப்படுத்தித் தந்த அல்லாஹ்வே தூய்மை யானவன். இதற்கு (முன்) நாங்கள் சக்தி பெற்றவர்களாக இருந்ததில்லை. நிச்சயமாக நாம், நம் இறைவனிடமே திரும்புவோம். இறைவா! இந்த பயணத்தில் நல்லதையும், இறையச்சத்தையும், நீ விரும்புகின்ற செயலையும் உன்னிடம் கேட்கின்றோம். இறைவா! இந்த எங்கள் பயணத்தை எங்களுக்கு இலகுவாக்குவாயாக! இதன் தூரத்தை எங்க ளுக்குச் சுருக்கித் தருவாயாக! இறைவா! நீதான் பயணத்தில் தோழன். குடும்பத்தின் பாதுகாவலன். இறைவா! பயணத்தின் சிரமங்கள், கவலைகள், சொத்து, மனைவி, மக்கள் விஷயத்தில் தீய திருப்பம் ஆகியவை ஏற்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

பயணத்தில் இருந்து திரும்பியதும் இதையே கூறிவிட்டு, அதிகமாக சேர்த்துக் கூறக் கூடியவற்றின் பொருள்: "நாங்கள் பயணத்திலிருந்து திரும்புபவர்களாகவும், பாவமன்னிப்புச் செய்பவர்களாகவும், எங்கள் இறைவனை வணங்குபவர்களாகவும், அவனையே புகழ்பவர்களாகவும் உள்ளோம்."

٩٧٣ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ سَرْجِسَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا سَافَرَ يَتَعَوَّذُ مِنْ وَعْثَاءِ السَّفَرِ وَكَآبَةِ الْمُنْقَلَبِ وَالْحَوْرِ بَعْدَ الْكَوْنِ وَدَعْوَةِ الْمَظْلُومِ وَسُوءِ الْمَنْظَرِ فِي الأَهْلِ وَالْمَالِ . رَوَاهُ مُسْلِمٌ . هَكَذَا هُوَ فِي صَحِيحِ مُسْلِمٍ : " الْحَوْرُ بَعْدَ الْكَوْنِ " بِالنُّونِ وَكَذَا رَوَاهُ التِّرْمِذِيُّ وَالنَّسَائِيُّ . قَالَ التِّرْمِذِيُّ : وَيُرْوَى " الْكَوْرِ " بِالرَّاءِ وَكِلاهُمَا لَهُ وَجْهٌ . قَالَ الْعُلَمَاءُ : وَمَعْنَاهُ بِالنُّونِ وَالرَّاءِ جَمِيعًا : الرُّجُوعُ مِنَ الاسْتِقَامَةِ أَوْ الزِّيَادَةِ إِلَى النَّقْصِ . قَالُوا : وَرِوَايَةُ الرَّاءِ مَأْخُوذَةٌ مِنْ تَكْوِيرِ الْعِمَامَةِ وَهُوَ لَفُّهَا وَجَمْعُهَا وَرِوَايَةُ النُّونِ مِنَ الْكَوْنِ مَصْدَرُ كَانَ يَكُونُ كَوْنًا : إِذَا وُجِدَ وَاسْتَقَرَّ .

**973** அப்துல்லாஹ் இப்னு ஸர்ஜிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணம் புறப்பட்டால், பயணச் சிரமங்கள், திடீர் ஆபத்துகள், இருப்பவை அழிதல், அநீதமிழைக்கப்பட்டவனின் பிரார்த்தனை, குடும்பம், சொத்தில் ஏற்படும் சிக்கல், சிரமம் ஆகியவற்றில் பாதுகாப்புத் தேடுவார்கள். **(முஸ்லிம்:1343)**

٩٧٤ - وَعَنْ عَلِيِّ بْنِ رَبِيعَةَ قَالَ : شَهِدْتُ عَلِيَّ بْنَ أَبِي طَالِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أُتِيَ بِدَابَّةٍ لِيَرْكَبَهَا فَلَمَّا وَضَعَ رِجْلَهُ فِي الرِّكَابِ قَالَ : " بِسْمِ اللَّهِ فَلَمَّا اسْتَوَى عَلَى ظَهْرِهَا قَالَ : الْحَمْدُ لِلَّهِ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُونَ ثُمَّ قَالَ : الْحَمْدُ لِلَّهِ ثَلاثَ مَرَّاتٍ ثُمَّ قَالَ : اللَّهُ أَكْبَرُ ثَلاثَ مَرَّاتٍ ثُمَّ قَالَ : سُبْحَانَكَ إِنِّي ظَلَمْتُ نَفْسِي فَاغْفِرْ لِي إِنَّهُ لاَ يَغْفِرُ الذُّنُوبَ إِلاَّ أَنْتَ " . ثُمَّ ضَحِكَ فَقِيلَ : يَا أَمِيرَ الْمُؤْمِنِينَ مِنْ أَيِّ شَيْءٍ ضَحِكْتَ ؟ قَالَ : رَأَيْتُ النَّبِيَّ ﷺ فَعَلَ كَمَا فَعَلْتُ ثُمَّ ضَحِكَ فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ مِنْ أَيِّ شَيْءٍ ضَحِكْتَ ؟ قَالَ : " إِنَّ رَبَّكَ سُبْحَانَهُ يَعْجَبُ مِنْ عَبْدِهِ إِذَا قَالَ : اغْفِرْ لِي ذُنُوبِي يَعْلَمُ أَنَّهُ لاَ يَغْفِرُ الذُّنُوبَ غَيْرِي ! " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ وَفِي بَعْضِ النُّسَخِ : حَسَنٌ صَحِيحٌ . وَهَذَا لَفْظُ أَبِي دَاوُدَ .

**974** அலீ இப்னு ரபீஆ என்பவர் கூறுகின்றார்:

(ஒருமுறை) நான் அலீ (ரழி) அவர்களிடம் இருந்தேன். அப்போது அவர்கள் பயணம் புறப்பட ஒரு வாகனம் கொண்டு வரப்பட்டது. அந்த வாகனத்தில் அவர்கள் தன் காலை வைத்த போது, "பிஸ்மில்லாஹ்" என்று கூறினார்கள். அதன் முதுகில் சரியாக அவர்கள் அமர்ந்ததும், "அல்ஹம்துலில்லாஹ்" என்று கூறினார்கள். பின்பு "சுப்ஹானல்லதீ ஸக்கர லனா ஹாதா வமாகுன்னா லஹு முக்ரினீன். வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன்" என்று கூறினார்கள். பின்பு மூன்று முறை "அல்ஹம்துலில்லாஹ்" கூறினார்கள். பின்பு, 'அல்லாஹு அக்பர்' என மூன்று முறை கூறினார்கள். பின்பு "சுப்ஹானக இன்னீ ளலம்து நஃப்ஸீ, ஃபஹ்ஃபிர்லீ இன்னஹு லா யஹ்ஃபிருஃதுனூப இல்லா அன்த" (நீயே தூய்மையானவன். நான் எனக்கே அநீதம் செய்து கொண்டேன். என்னை மன்னிப்பாயாக! உன்னைத் தவிர பாவங்களை எவரும் மன்னிக்க மாட்டார்கள்) என்று கூறினார்கள்.

பின்பு சிரித்தார்கள். "மு:.மின்களின் தலைவரே! எதற்காகச் சிரித்தீர்கள்?" எனக் கேட்டேன். அப்போது அவர்கள், "இதே போல் நபி (ஸல்) அவர்கள் செய்து விட்டு சிரித்ததை நான் பார்த்தேன். அப்போது இறைத்தூதர் அவர்களே! எதற்காகச் சிரித்தீர்கள்? என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், "தன் அடியான் ஒருவன், "இறைவா! என் குற்றங்களை நீ மன்னிப்பாயாக!" என்று கூறினால், தன்னைத் தவிர எவரும் அவனது பாவங்களை மன்னிக்க மாட்டார்கள் என்று அறிந்தே கூறுகிறான் என, இறைவன் மகிழ்ச்சி அடைகிறான் என்று கூறினார்கள்" என அலீ (ரழி) பதில் கூறினார்கள்.

**(அபூதாவூது:2602. திர்மிதீ:3446. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٧١ - باب تكبير المسافر إذَا صَعِدَ الثَّنَايا وشبهها وتسبيحه إذَا هبط الأودية ونحوها والنهي عن المبالغة برفع الصوت بالتكبير ونحوه

## பாடம் : 171 - பயணத்தின் போது மேடான பகுதிகளைக் கடந்தால் தக்பீர் கூறுவது, பள்ளத்தைக் கடந்தால் தஸ்பீஹ் கூறுவது, தக்பீர் கூறும் போது குரலை உயர்த்தாமல் இருப்பது!

٩٧٥ - عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا إِذَا صَعِدْنَا كَبَّرْنَا وَإِذَا نَزَلْنَا سَبَّحْنَا . رَوَاهُ الْبُخَارِيُّ .

**975** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் (பயணத்தில்) மேடான இடங்களில் ஏறினால் "தக்பீர்" (அல்லாஹு அக்பர்) கூறுபவர்களாகவும், பள்ளமான இடங்களில் இறங்கும் போது "தஸ்பீஹ்" (சுப்ஹானல்லாஹ்) கூறுபவர்களாகவும் இருந்தோம். **(புகாரி:2993)**

٩٧٦ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ وَجُيُوشُهُ إِذَا عَلَوْا الثَّنَايَا كَبَّرُوا وَإِذَا هَبَطُوا سَبَّحُوا . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**976** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களும், படையினரும் மேடுகளில் ஏறினால் "தக்பீர்" கூறுபவர்களாகவும், பள்ளங்களில் இறங்கினால் "தஸ்பீஹ்" கூறுபவர்களாகவும் இருந்தனர். **(அபூதாவூது:2599)**

٩٧٧ - وَعَنْهُ ) عَبْد اللَّه بْن عُمَرَ ( قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ إِذَا قَفَلَ مِنَ الْحَجِّ أَوْ الْعُمْرَة كُلَّمَا أَوْفَى عَلَى ثَنِيَّة أَوْ فَدْفَد كَبَّرَ ثَلاَثًا ثُمَّ قَالَ : " لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ . آيِبُونَ تَائِبُونَ عَابِدُونَ سَاجِدُونَ لِرَبِّنَا حَامِدُونَ . صَدَقَ اللَّهُ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الأَحْزَابَ وَحْدَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : إِذَا قَفَلَ مِنَ الْجُيُوشِ أَوْ السَّرَايَا أَوْ الْحَجِّ أَوْ الْعُمْرَة . قَوْلُهُ : " أَوْفَى " : أَيْ ارْتَفَعَ . وَقَوْلُهُ " فَدْفَدٍ " هُوَ بِفَتْحِ الْفَاءَيْنِ بَيْنَهُمَا دَالٌ مُهْمَلَةٌ سَاكِنَةٌ وَآخِرُهُ دَالٌ أُخْرَى وَهُوَ الْغَلِيظُ الْمُرْتَفِعُ مِنَ الأَرْضِ .

**977** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஹஜ் அல்லது உம்ராவிலிருந்து திரும்பினால், உயரமான அல்லது மேடான பகுதிகளில் அவர்கள் வரும் போது மூன்று முறை, "அல்லாஹு அக்பர்" என்று தக்பீர் கூறுவார்கள். பின்பு, "லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீகலஹு, லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலாகுல்லி ஷய்இன் கதீர். ஆயிபூன, தாஇபூன, ஆபிதூன, ஸாஜிதூன லிரப்பினா, ஹாமிதூன், சதகல்லாஹு வஃதஹு, வநஸர அப்தஹு, வஹஜமல் அஹ்ஸாப வஹ்தஹு" என்று கூறுவார்கள். **(புகாரி:6385. முஸ்லிம்:1344)**

முஸ்லிமில் மற்றொரு அறிவிப்பில், "படைகள், அணிகள், ஹஜ், உம்ரா ஆகியவற்றிலிருந்து திரும்பினால்..." என்று உள்ளது.

**துஆவின் பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையாளன் இல்லை. அவனுக்கே ஆட்சியும், அவனுக்கே புகழும் உரியதாகும். அவன் அனைத்தின் மீது பேராற்றல் உடையவன். பயணத்திலிருந்து நாங்கள் திரும்புபவர்களாகவும். பாவ மன்னிப்பு கோருபவர்களாகவும் இருக்கின்றோம். எங்கள் இறைவனை வணங்கி, ஸஜ்தா செய்கிறோம். புகழ்கிறோம். தன் வாக்குறுதியை அல்லாஹ் நிறைவேற்றி விட்டான். தன் அடியாருக்கு உதவி செய்து விட்டான். அவனே எதிரிகளை தோற்கடித்து விட்டான்.**

٩٧٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ : يَا رَسُولَ اللَّهِ إِنِّي أُرِيدُ أَنْ أُسَافِرَ فَأَوْصِنِي قَالَ : " عَلَيْكَ بِتَقْوَى اللَّهِ وَالتَّكْبِيرِ عَلَى كُلِّ شَرَفٍ " . فَلَمَّا وَلَّى الرَّجُلُ قَالَ : " اللَّهُمَّ اطْوِ لَهُ الْبُعْدَ وَهَوِّنْ عَلَيْهِ السَّفَرَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ

**978** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! நான் பயணம் செல்ல விரும்புகிறேன். எனக்கு உபதேசம் செய்யுங்கள்" என்று ஒரு மனிதர் கேட்டார். "இறையச்சத்தை நீர் பேணிக் கொள்வீராக! அனைத்து உயரமான பகுதிகளில் ஏறும் போதும் தக்பீர் கூறுவீராக!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவர் புறப்பட்டுச் சென்றதும், "இறைவா! அவருக்குப் பயணதூரத்தை சுருக்குவாயாக! அவரின் பயணத்தை எளிதாக்குவாயாக!" என்று நபி (ஸல்) துஆச் செய்தார்கள்.

**(திர்மிதீ:3445. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

٩٧٩ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا مَعَ النَّبِيِّ ﷺ فِي سَفَرٍ فَكُنَّا إِذَا أَشْرَفْنَا عَلَى وَادٍ هَلَّلْنَا وَكَبَّرْنَا وَارْتَفَعَتْ أَصْوَاتُنَا فَقَالَ النَّبِيُّ ﷺ : " يَا أَيُّهَا النَّاسُ ارْبَعُوا عَلَى أَنْفُسِكُمْ فَإِنَّكُمْ لاَ تَدْعُونَ أَصَمَّ وَلاَ غَائِبًا . إِنَّهُ مَعَكُمْ إِنَّهُ سَمِيعٌ قَرِيبٌ ". مُتَّفَقٌ عَلَيْهِ " ارْبَعُوا " بِفَتْحِ الْبَاءِ الْمُوَحَّدَةِ : أَيْ ارْفُقُوا بِأَنْفُسِكُمْ.

**979** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பயணத்தில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். ஓடைப் பகுதியின் மேடுகளில் நாங்கள் ஏறும் போது, "லாயிலாஹ இல்லல்லாஹு, அல்லாஹு அக்பர்" எனக் கூறுவோம். எங்களின் சப்தம் கூடியது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "மனிதர்களே! நீங்கள் அமைதியைக் கடைபிடியுங்கள்! நீங்கள் செவிடானவனையோ, உங்களை விட்டு மறைவானவனையோ அழைக்கவில்லை. நிச்சயமாக! அவன் (அல்லாஹ்) உங்களுடன் இருக்கிறான். நிச்சயமாக! அவன் கேட்பவனாகவும், நெருக்கமானவனாகவும் இருக்கிறான்" என்று கூறினார்கள். **(புகாரி:6384. முஸ்லிம்:2704)**

## ١٧٢ – بَابُ اسْتِحْبَابِ الدُّعَاءِ فِي السَّفَرِ

## பாடம் : 172 - பயணத்தின் போது துஆச் செய்வது விரும்பத்தக்கது.

٩٨٠ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ثَلاَثُ دَعَوَاتٍ مُسْتَجَابَاتٌ لاَ شَكَّ فِيهِنَّ : دَعْوَةُ الْمَظْلُومِ وَدَعْوَةُ الْمُسَافِرِ وَدَعْوَةُ الْوَالِدِ عَلَى وَلَدِهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . وَلَيْسَ فِي رِوَايَةِ أَبِي دَاوُدَ : " عَلَى وَلَدِهِ " .

**980** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மூன்று பேரின் துஆக்கள், ஒப்புக்கொள்ளப்படுபவைகளாகும். அவற்றில் சந்தேகமும் இல்லை.

1. அநீதம் இழைக்கப்பட்டவனின் துஆ 2. பயணியின் துஆ 3. தந்தை தன் மகனுக்காகச் செய்யும் துஆ என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1536. திர்மிதீ:3448. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٧٣ - بابُ ما يَدْعُو به إذَا خَافَ نَاسًا أَو غيرهم

## பாடம் : 173 - பயணத்தின் போது பிறரைக் கண்டு பயப்படுபவர் செய்யும் துஆ

٩٨١ - عَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا خَافَ قَوْمًا قَالَ : " اللَّهُمَّ إِنَّا نَجْعَلُكَ فِي نُحُورِهِمْ وَنَعُوذُ بِكَ مِنْ شُرُورِهِمْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالنَّسَائِيُّ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**981** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு கூட்டத்தாரின் தீமையைப் பற்றி பயந்தால், "அல்லாஹும்ம இன்னா நஜ்அலுக ஃபீ நுஹூரிஹிம், வநஊது பிக மின் ஷுரூரிஹிம்" என்று கூறுவார்கள்.

**(அபூதாவூது:1537. நஸயீ)**

**துஆவின் பொருள்: இறைவா! அவர்களுக்கு எதிராக உன் பாதுகாப்பையே நாங்கள் ஆக்குகிறோம். மேலும் அவர்களின் தீங்குகளை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறோம்.**

## ١٧٤ - بَابُ مَا يَقُولُ إِذَا نَزَلَ مَنْزِلاً

## பாடம் : 174 - பயணம் செய்பவர் இறங்கும் போது கூற வேண்டியவை

٩٨٢ - عَنْ خَوْلَةَ بِنْتِ حَكِيمٍ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ نَزَلَ مَنْزِلاً ثُمَّ قَالَ : أَعُوذُ بِكَلِمَاتِ اللَّهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ لَمْ يَضُرُّهُ شَيْءٌ حَتَّى يَرْتَحِلَ مِنْ مَنْزِلِهِ ذَلِكَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**982** ஹவ்லா பின்த் ஹகீம் (ரழி) என்ற சஹாபி பெண்மணி அறிவிக்கின்றார்கள்:

"(பயணம் செல்லும்) ஒருவர், ஒரு இடத்தில் இறங்கும் போது, "அஊது பிகலிமாதில்லாஹித் தாம்மாத்தி மின்ஷர்ரி மா கலக" என்று கூறினால், அவர் அந்த இடத்தை விட்டுப் புறப்படும் வரை எதுவும் அவருக்குத் தீங்கிழைக்காது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2708)**

**துஆவின் பொருள்: அல்லாஹ்வின் முழுமையான வார்த்தைகள் மூலம், அவன் படைத்தவற்றின் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்.**

٩٨٣ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا سَافَرَ فَأَقْبَلَ اللَّيْلُ قَالَ : " يَا أَرْضُ رَبِّي وَرَبُّكِ اللَّهُ أَعُوذُ بِاللَّهِ مِنْ شَرِّكِ وَشَرِّ مَا فِيكِ وَشَرِّ مَا خُلِقَ فِيكِ وَشَرِّ مَا يَدِبُّ عَلَيْكِ أَعُوذُ بِاللَّهِ مِنْ شَرِّ أَسَدٍ وَأَسْوَدَ وَمِنَ الْحَيَّةِ وَالْعَقْرَبِ وَمِنْ سَاكِنِ الْبَلَدِ وَمِنْ وَالِدٍ وَمَا وَلَدَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ . " وَالأَسْوَدُ " : الشَّخْصُ . قَالَ الْخَطَّابِيُّ : " وَسَاكِنُ الْبَلَدِ " : هُمُ الْجِنُّ الَّذِينَ هُمْ سُكَّانُ الأَرْضِ . قَالَ : وَالْبَلَدُ مِنَ الأَرْضِ مَا كَانَ مَأْوَى الْحَيَوَانِ وَإِنْ لَمْ يَكُنْ فِيهِ بِنَاءٌ وَمَنَازِلُ . قَالَ : وَيَحْتَمِلُ أَنَّ الْمُرَادَ " بِالْوَالِدِ " : إِبْلِيسُ " وَمَا وَلَدَ " : الشَّيَاطِينُ .

**983** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணம் சென்று, இரவில் திரும்பினால் "யாஅர்ளு ரப்பீ, வரப்புகில்லாஹு, அஊது பில்லாஹி மின் ஷர்ரிகி வஷர்ரிமா ஃபீக்கி, வ ஷர்ரீமா குலிக ஃபீஹி, வ ஷர்ரிமா யதிப்பு அலய்கி, அஊது பில்லாஹி மின் ஷர்ரி அஸதின் வஅஸ்வதின், வமினல் ஹய்யதி, வல்அக்ரபி வமின் ஸாகினில் பலதி, வமின் வாலிதின், வமா வலத்" என்று கூறுவார்கள்.

**(அபூதாவூது:2603. இதில் சுபைர் இப்னு வலீத் ஷாமீ என்ற பலவீனர் இடம் பெறுகிறார்.)**

**துஆவின் பொருள்: பூமியே! என் இறைவனும், உன் இறைவனும் அல்லாஹ்தான். உன் தீங்குகளை விட்டும், உன்னில் உள்ள தீங்குகளை விட்டும், உன்னில் படைக்கப்பட்டுள்ள தீங்குகளை விட்டும், உன் மீது ஊர்ந்து செல்பவற்றின் தீங்குகளை விட்டும் அல்லாஹ்விடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். சிங்கம், மனிதர்கள், பாம்பு, தேள், ஜின், இப்லீஸ் மற்றும் அவர்களது சந்ததியினரின் தீங்குகளை விட்டும் அல்லாஹ்விடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்**

## ١٧٥ – باب استحباب تعجيل المسافر الرّجوع إلى أهله إذا قضى حا جته

## பாடம் : 175 - பயணி ஒருவர், தன் தேவை முடிந்ததும், உடனே வீட்டுக்குத் திரும்புவது விரும்பத்தக்கது.

٩٨٤ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " السَّفَرُ قِطْعَةٌ مِنَ الْعَذَابِ : يَمْنَعُ أَحَدَكُمْ طَعَامَهُ وَشَرَابَهُ وَنَوْمَهُ فَإِذَا قَضَى أَحَدُكُمْ نَهْمَتَهُ مِنْ سَفَرِهِ فَلْيُعَجِّلْ إِلَى أَهْلِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " نَهْمَتُهُ " : مَقْصُودُهُ .

**984** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பயணம் என்பது வேதனையின் ஒரு பிரிவாகும். அது உங்களில் ஒருவரது உணவையும், பானத்தையும், தூக்கத்தையும் தடுத்து விடுகிறது. உங்களில் ஒருவர் பயணத்தில் தன் குறிக்கோளை நிறைவேற்றிக் கொண்டால், அவர் தன் குடும்பத்தாரிடம் விரைந்து திரும்பட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1804. முஸ்லிம்:1927)**

## ١٧٦ – باب استحباب القُدُوم عَلَى أهله نَهارًا وكراهته في الليل لغير حا جة

## பாடம் : 176 - பயணத்திலிருந்து பகலில் குடும்பத்தாரிடம் வருவதே விரும்பத்தக்கது. அவசியக் காரணமின்றி இரவில் திரும்புவது வெறுக்கத்தக்கது.

٩٨٥ – عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا أَطَالَ أَحَدُكُمُ الْغَيْبَةَ فَلاَ يَطْرُقَنَّ أَهْلَهُ لَيْلاً " . وَفِي رِوَايَةٍ : أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى أَنْ يَطْرُقَ الرَّجُلُ أَهْلَهُ لَيْلاً . مُتَّفَقٌ عَلَيْهِ .

**985** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் நீண்ட காலம் பயணத்தில் இருந்தால், அவர் இரவில் வந்து தன் குடும்பத்தாரின் கதவைத் தட்ட (எழுப்ப) வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் "பயணி தன் குடும்பத்தாரிடம் இரவில் வருவதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள்" என்று உள்ளது.

**(புகாரி:1801. முஸ்லிம்:715/181)**

٩٨٦ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ لاَ يَطْرُقُ أَهْلَهُ لَيْلاً وَكَانَ يَأْتِيهِمْ غَدْوَةً أَوْ عَشِيَّةً . مُتَّفَقٌ عَلَيْهِ . " الطُّرُوقُ " : الْمَجِيءُ فِي اللَّيْلِ .

**986** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பினால், தன் குடும்பத்தாரிடம் இரவில் வர மாட்டார்கள். காலையில் அல்லது மாலையில் அவர்களிடம் வருவார்கள். **(புகாரி:1800. முஸ்லிம்:1928)**

## ١٧٧ – باب مَا يَقُولُ إِذَا رَجعَ وَإِذَا رَأَى بلدته

## பாடம் : 177 - பயணி ஒருவர், தன் ஊரைக் கண்டதும் கூற வேண்டியவை

فِيهِ حَدِيثُ ابْنِ عُمَرَ السَّابِقُ فِي بَابِ تَكْبِيرِ الْمُسَافِرِ إِذَا صَعِدَ الثَّنَايَا 2 - 976 .

٩٨٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَقْبَلْنَا مَعَ النَّبِيِّ ﷺ حَتَّى إِذَا كُنَّا بِظَهْرِ الْمَدِينَةِ قَالَ : " آيِبُونَ تَائِبُونَ : عَابِدُونَ لِرَبِّنَا حَامِدُونَ " . فَلَمْ يَزَلْ يَقُولُ ذَلِكَ حَتَّى قَدِمْنَا الْمَدِينَةَ . رَوَاهُ مُسْلِمٌ .

**987** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்)அவர்களுடன் மதீனாவை (நெருங்கி அதன்) எல்லையை அடைந்ததும், "ஆயிபூன, தாஇபூன, லிரப்பினா ஹாமிதூன்" என்று கூறுவார்கள். மதினாவை நாங்கள் அடையும் வரை நபி (ஸல்) அவர்கள் இதைக் கூறிக் கொண்டே இருந்தார்கள். **(முஸ்லிம்:1345)**

**துஆவின் பொருள்: நாங்கள் பயணத்திலிருந்து திரும்புபவர்களாகவும், பாவமன்னிப்பு கோருபவர் களாகவும், எங்கள் இறைவனை வணங்குபவர்களாகவும், அவனையே புகழ்பவர்களாகவும் உள்ளோம்.**

## ١٧٨ – بابُ استحباب ابتداء القادم بالمسجد الذي في جراره وصلاته فيه ركعتين

## பாடம் : 178 - பயணி ஒருவர் ஊர் திரும்பியதும் பள்ளிக்குச் சென்று, இரண்டு ரக்அத் தொழுவது விரும்பத்தக்கது

٩٨٨ – عَنْ كَعْبِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا قَدِمَ مِنْ سَفَرٍ بَدَأَ بِالْمَسْجِدِ فَرَكَعَ فِيهِ رَكْعَتَيْنِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**988** கஅபு இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பினால், பள்ளிக்கு முதலில் சென்று, இரண்டு ரக்அத்துகள் நபில் தொழுவார்கள். **(புகாரி:3088. முஸ்லிம்:2769)**

## ١٧٩ – باب تحريم سَفَر المرأة وحْدَها

## பாடம் : 179 - தனியே ஒரு பெண் பயணம் செல்வது கூடாது

٩٨٩ – عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَحِلُّ لاِمْرَأَةٍ تُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الأخِرِ تُسَافِرُ مَسِيرَةَ يَوْمٍ وَلَيْلَةٍ إِلاَّ مَعَ ذِي مَحْرَمٍ عَلَيْهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**989** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட ஒரு பெண், தன்னுடன் (திருமணம் செய்ய) தடை செய்யப்பட்டவர் (தந்தை, சகோதரர்கள், மகன்கள், மாமுமார்கள்) துணை இல்லாமல் ஒரு பகல், ஒரு இரவு கால அளவுக்கு (தனியாக)ப் பயணம் செய்திட அனுமதி கிடையாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1088, முஸ்லிம்:1339)**

٩٩. – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ يَقُولُ : " لاَ يَخْلُوَنَّ رَجُلٌ بِامْرَأَةٍ إِلاَّ وَمَعَهَا ذُو مَحْرَمٍ وَلاَ تُسَافِرُ الْمَرْأَةُ إِلاَّ مَعَ ذِي مَحْرَمٍ " . فَقَالَ لَهُ رَجُلٌ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ امْرَأَتِي خَرَجَتْ حَاجَّةً إِنِّي اكْتُتِبْتُ فِي غَزْوَةِ كَذَا وَكَذَا ؟ قَالَ : " انْطَلِقْ فَحُجَّ مَعَ امْرَأَتِكَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**990** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் ஆண், ஓர் அந்நியப் பெண்ணுடன் அவளுக்கு திருமணம் செய்ய தடை செய்யப்பட்டவர்கள் அருகே இருந்தாலே தவிர, தனித்திருக்க வேண்டாம். மேலும் ஒரு பெண், தனக்குத் திருமணம் செய்ய தடை செய்யப்பட்டவன் அருகே இருந்தாலே தவிர, அவள் பயணம் செல்ல வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்போது ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! என் மனைவி ஒரு தேவைக்கு (ஹஜ் செய்ய)ப் புறப்பட்டு விட்டாள். (ஆனால்) நானோ இன்ன இன்ன போரில் கலந்து கொள்ள கடமையாக்கப்பட்டுள்ளேன்" என்று கூறினார். "நீர் சென்று உம் மனைவியுடன் சேர்ந்து ஹஜ் செய்வீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1862, முஸ்லிம்:1341)**

# அத்தியாயம் : 8

## சிறப்புகள்

## ١٨. – بابُ فضل قراءة القُرْآن

## பாடம் : 180 - குர்ஆனை ஓதுவதின் சிறப்பு

٩٩١ – عَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " اقْرَءُوا الْقُرْآنَ فَإِنَّهُ يَأْتِي يَوْمَ الْقِيَامَةِ شَفِيعًا لأَصْحَابِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**991** அபூஉமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் குர்ஆனை ஓதுங்கள். நிச்சயமாக! அது (குர்ஆன்) மறுமை நாளில், தன்(னை ஓதிய)வருக்கு சிபாரிசு செய்யக் கூடியதாக வரும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:804)**

٩٩٢ – وَعَنِ النَّوَّاسِ بْنِ سَمْعَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " يُؤْتَى يَوْمَ الْقِيَامَةِ بِالْقُرْآنِ وَأَهْلِهِ الَّذِينَ كَانُوا يَعْمَلُونَ بِهِ فِي الدُّنْيَا تَقْدُمُهُ سُورَةُ الْبَقَرَةِ وَآلِ عِمْرَانَ تُحَاجَّانِ عَنْ صَاحِبِهِمَا . " رَوَاهُ مُسْلِمٌ .

**992** நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"குர்ஆனையும், அதன்படி இவ்வுலகில் நடந்து கொண்டோரையும் மறுமை நாளில் கொண்டு வரப்படும். 'அல்பகரா' மற்றும் 'ஆலஇம்ரான்' ஆகிய இரு அத்தியாயங்களும், தன்(னை ஓதிய)வர்களுக்காக பரிந்துரைச் செய்யவதற்கு போட்டி போடும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். **(முஸ்லிம்:805)**

٩٩٣ – عَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " خَيْرُكُمْ مَنْ تَعَلَّمَ الْقُرْآنَ وَعَلَّمَهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ.

**993** உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"குர்ஆனைக் கற்று, அதை (பிறருக்கும்) கற்றுக் கொடுப்பவரே உங்களில் சிறந்தவர் ஆவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5027)**

٩٩٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الَّذِي يَقْرَأُ الْقُرْآنَ وَهُوَ مَاهِرٌ بِهِ مَعَ السَّفَرَةِ الْكِرَامِ الْبَرَرَةِ وَالَّذِي يَقْرَأُ الْقُرْآنَ وَيَتَتَعْتَعُ فِيهِ وَهُوَ عَلَيْهِ شَاقٌّ لَهُ أَجْرَانِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**994** ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"குர்ஆனை நல்லமுறையில் (திறமையுடன்) ஓதுபவர், நல்லவர்களும் கண்ணியமிக்கவர்களுமான வானவர்களுடன் சொர்க்கத்தில் இருப்பார். குர்ஆனை (இயலாமையால்) சிரமத்துடன் திக்கி திக்கி ஓதுபவருக்கு இரண்டு நற்கூலிகள் உண்டு" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:4937. முஸ்லிம்:798)**

٩٩٥ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَثَلُ الْمُؤْمِنِ الَّذِي يَقْرَأُ الْقُرْآنَ مَثَلُ الأُتْرُجَّةِ : رِيحُهَا طَيِّبٌ وَطَعْمُهَا طَيِّبٌ , وَمَثَلُ الْمُؤْمِنِ الَّذِي لاَ يَقْرَأُ الْقُرْآنَ كَمَثَلِ التَّمْرَةِ : لاَ رِيحَ لَهَا وَطَعْمُهَا حُلْوٌ , وَمَثَلُ الْمُنَافِقِ الَّذِي يَقْرَأُ الْقُرْآنَ كَمَثَلِ الرَّيْحَانَةِ : رِيحُهَا طَيِّبٌ وَطَعْمُهَا مُرٌّ , وَمَثَلُ الْمُنَافِقِ الَّذِي لاَ يَقْرَأُ الْقُرْآنَ كَمَثَلِ الْحَنْظَلَةِ : لَيْسَ لَهَا رِيحٌ وَطَعْمُهَا مُرٌّ ! " مُتَّفَقٌ عَلَيْهِ .

**995** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"குர்ஆனை ஓதுகின்ற ஒரு முஃமினின் உதாரணம், நார்த்தங்காய் பழத்தைப் போன்றதாகும் அதன் மணமும் நறுமணம் உடையது. அதன் சுவையும் நல்லது. குர்ஆனை ஓதாத ஒரு முஃமினின் உதாரணம், பேரீத்தம் பழத்தைப் போன்றதாகும். அதற்கு நறுமணம் கிடையாது. ஆனால் அதன் சுவை இனிப்பானதாகும். குர்ஆனை ஓதுகின்ற நயவஞ்சகனின் உதாரணம், ஒரு பூவைப் போன்றதாகும். அதற்கு நறுமணம் உண்டு. ஆனால் அதன் சுவை கசப்பானது. குர்ஆனை ஓதாத நயவஞ்சகனின் உதாரணம், குமட்டிக்காய் போன்றதாகும். அதற்கு நறுமணமும் கிடையாது. அதன் சுவையும் கசப்பானது" என்று நபி(ஸல்) கூறினார்கள். **(புகாரி:5059. முஸ்லிம்:797)**

٩٩٦ – وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِنَّ اللَّهَ يَرْفَعُ بِهَذَا الْكِتَابِ أَقْوَامًا وَيَضَعُ بِهِ آخَرِينَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**996** உமர் இப்னுல் கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! அல்லாஹ் இந்த குர்ஆன் மூலம் சில கூட்டத்தார்களின் அந்தஸ்துகளை உயர்த்துகிறான். மற்ற சிலரை அதன் மூலம் (குர்ஆனை உதாசீனப்படுத்துவதால்) தாழ்த்துகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:817)**

٩٩٧ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ حَسَدَ إِلاَّ فِي اثْنَتَيْنِ : رَجُلٌ آتَاهُ اللَّهُ الْقُرْآنَ فَهُوَ يَقُومُ بِهِ آنَاءَ اللَّيْلِ وَآنَاءَ النَّهَارِ وَرَجُلٌ آتَاهُ اللَّهُ مَالاً فَهُوَ يُنْفِقُهُ آنَاءَ اللَّيْلِ وَآنَاءَ النَّهَارِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " وَالآنَاءُ " : السَّاعَاتُ .

**997** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ் குர்ஆனைத் தந்து, அதன்படி இரவும், பகலும் வாழ்கின்ற ஒருவர் மற்றும் அல்லாஹ் செல்வம் தந்து, அதை இரவும் பகலும் (இறை வழியில்) செலவு செய்கின்ற ஒருவர் ஆகிய இருவரிடத்திலேயே தவிர வேறு யார் மீதும் பொறாமை கொள்வது கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:73. முஸ்லிம்:815)**

٩٩٨ – وَعَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَجُلٌ يَقْرَأُ سُورَةَ الْكَهْفِ وَعِنْدَهُ فَرَسٌ مَرْبُوطٌ بِشَطَنَيْنِ فَتَغَشَّتْهُ سَحَابَةٌ فَجَعَلَتْ تَدْنُو وَجَعَلَ فَرَسُهُ يَنْفِرُ مِنْهَا , فَلَمَّا أَصْبَحَ أَتَى النَّبِيَّ ﷺ فَذَكَرَ لَهُ ذَلِكَ فَقَالَ : " تِلْكَ السَّكِينَةُ تَنَزَّلَتْ لِلْقُرْآنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ. " الشَّطَنُ " بِفَتْحِ الشِّينِ الْمُعْجَمَةِ وَالطَّاءِ الْمُهْمَلَةِ : الْحَبْلُ.

**998** பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

‘கஹ்ஃப்’ எனும் அத்தியாயத்தை ஒருவர் (இரவில்) ஓதிக் கொண்டிருந்தார். அவர் அருகே இரண்டு கயிறுகளால் கட்டப்பட்ட ஒரு குதிரை இருந்தது. அப்போது மேகம் அவரைச் சூழ்ந்து, அவரை நெருங்கி வர ஆரம்பித்தது. அதைக் கண்டு அவரின் குதிரையோ மிரண்டது. காலை நேரம் வந்ததும், நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இதுபற்றிக் கூறினார். “இது குர்ஆனுக்காக இறங்கிய “ஸகீனத்” எனும் நிம்மதியும், அமைதியுமாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5011. முஸ்லிம்:795)**

٩٩٩ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ قَرَأَ حَرْفًا مِنْ كِتَابِ اللَّهِ فَلَهُ حَسَنَةٌ وَالْحَسَنَةُ بِعَشْرِ أَمْثَالِهَا . لاَ أَقُولُ الم حَرْفٌ وَلَكِنْ : أَلِفٌ حَرْفٌ وَلاَمٌ حَرْفٌ وَمِيمٌ حَرْفٌ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**999** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வின் அருள்மறையான அல்குர்ஆனிலிருந்து ஓர் எழுத்தை ஓதினால், அதற்கு ஒரு நன்மை உண்டு. ஒரு நன்மை என்பது, அது போன்ற பத்து மடங்காகும். “அலிஃப், லாம், மீம்” என்பதை ஒரு எழுத்து என்று கூறமாட்டேன். எனினும் ‘அலிஃப்’ என்பது ஒரு எழுத்து, ‘லாம்’ என்பது ஒரு எழுத்து. “மீம்” என்பது ஒரு எழுத்து ஆகும். (மூன்றும் மூன்று எழுத்துகளாகும். அம்மூன்றையும் ஒருவர் ஓதினால் ஒவ்வொன்றுக்கும் பத்து நன்மைகள் வீதம் முப்பது நன்மைகளைப் பெறுவார்)” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2910. இது “ஹஸன் ஸஹீஹ்” எனும் ஹதீஸ் என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٠٠٠ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ الَّذِي لَيْسَ فِي جَوْفِهِ شَيْءٌ مِنَ الْقُرْآنِ كَالْبَيْتِ الْخَرِبِ ! " رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1000** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“குர்ஆனில் சிறிதளவு கூட தன் உள்ளத்தில் பதிய வைக்காதிருப்பவன், பாழடைந்த வீடு போல் ஆவான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2913. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٠٠١ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " يُقَالُ لِصَاحِبِ الْقُرْآنِ : اقْرَأْ وَارْتَقِ وَرَتِّلْ كَمَا كُنْتَ تُرَتِّلُ فِي الدُّنْيَا فَإِنَّ مَنْزِلَتَكَ عِنْدَ آخِرِ آيَةٍ تَقْرَؤُهَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1001** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(மறுமையில்) குர்ஆனை அறிந்தவரிடம், 'குர்ஆனை ஓதுவீராக! பதவியை அதிகமாக்கிக் கொள்வீராக! உலகில் அழகிய முறையில் ஓதியது போல் இங்கும் நீர் ஓதுவீராக! அதனை நீர் ஓதும் கடைசி வசனம் உள்ள இடத்தில், உம் தகுதி உள்ளது. (அதாவது நீர் ஓதுகின்ற அளவுக்கு பதவி உயர்வு கிடைக்கும்)' என்று கூறப்படும்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1664. திர்மிதீ:2914. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٨١ – باب الأمر بتعهّد القرآن والتحذير من تعريضه للنّسيَان

## பாடம் : 181 - குர்ஆனை திரும்ப திரும்ப ஓதுதல் பற்றிய கட்டளை, அதை மறப்பது பற்றிய எச்சரிக்கை

١٠٠٢ – عَنْ أَبِي مُوسَى رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ . " تَعَاهَدُوا هَذَا الْقُرْآنَ فَوَالَّذِي نَفْسُ مُحَمَّدٍ بِيَدِهِ لَهُوَ أَشَدُّ تَفَلُّتًا مِنَ الأَبِلِ فِي عُقُلِهَا " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1002** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இந்தக் குர்ஆனை(அடிக்கடி ஓதி) பாதுகாத்துக் கொள்ளுங்கள். முஹம்மதின் உயிரை தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! (திரும்பத் திரும்ப ஓதி அந்தக் குர்ஆனைப் பாதுகாக்கவில்லையென்றால்) அந்தக் குர்ஆன், கயிற்றில் கட்டப்பட்டுள்ள ஒட்டகம் அந்த கட்டிலிருந்து விலகி விரண்டோடுவதைவிட மிக வேகமாக (உங்கள் உள்ளங்களிலிருந்து) ஓடிவிடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5033. முஸ்லிம்:791)**

١٠٠٣ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " إِنَّمَا مَثَلُ صَاحِبِ الْقُرْآنِ كَمَثَلِ الأبِلِ الْمُعَقَّلَةِ إِنْ عَاهَدَ عَلَيْهَا أَمْسَكَهَا وَإِنْ أَطْلَقَهَا ذَهَبَتْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1003** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"குர்ஆனை தெரிந்தவருக்கு உதாரணம், கயிற்றால் கட்டி வைக்கப்பட்டுள்ள ஒட்டகையின் உதாரணம் போலாகும். அவர் அந்த ஒட்டகத்தைப் பேணி பாதுகாத்துக் கொண்டால், அதை தன்னிடம் அவர் வைத்துக் கொள்ளலாம். அதை அவிழ்த்துவிட்டுவிட்டால், அது அவரை விட்டு போய் விடும். (அதுபோன்றே குர்ஆனை அடிக்கடி ஓதி வருவதன் மூலம் அதன் மனப்பாடத்தை பாதுகாக்க வேண்டும். இல்லையெனில், அது அவரது உள்ளத்தை விட்டுப் போய்விடும். குர்ஆனை மனனம் செய்து, பிறகு அதனை மறந்துவிட்ட குற்றத்திற்கு அவர் ஆளாக வேண்டி வரும்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5031. முஸ்லிம்:789)**

## ١٨٢ – باب استحباب تحسين الصّوت بالقُرآن وطلب القراءة من حسن الصّوت والاستماع لها

## பாடம் : 182 - குர்ஆனை இனிமையாக ஓதுவது, இனிய குரல் உடையவரை ஓதச் சொல்லிக் கேட்பது

١٠٠٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ : " مَا أَذِنَ اللّٰهُ لِشَيْءٍ مَا أَذِنَ لِنَبِيٍّ حَسَنِ الصَّوْتِ يَتَغَنَّى بِالْقُرْآنِ يَجْهَرُ بِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . مَعْنَى " أَذِنَ اللّٰهُ " : أَيْ اسْتَمَعَ وَهُوَ إِشَارَةٌ إِلَى الرِّضَى وَالْقَبُولِ .

**1004** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“குர்ஆனை இனிமையாகவும், சப்தமாகவும் நபி ஓதுவதை கேட்பதை விட வேறு எதையும் அல்லாஹ் கேட்க விரும்புவதில்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:5023. முஸ்லிம்:792)**

١٠٠٥ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ لَهُ : " لَقَدْ أُوتِيتَ مِزْمَارًا مِنْ مَزَامِيرِ آلِ دَاوُدَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ لَهُ : " لَوْ رَأَيْتَنِي وَأَنَا أَسْتَمِعُ لِقِرَاءَتِكَ الْبَارِحَةَ " .

**1005** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(அபூமூஸாவே!) நீர் நபி தாவூத் (அலை) அவர்களின் குடும்பத்தினரின் இசைக் கருவிகளில் ஒரு இசைக் கருவியைக் கொடுக்கப்பட்டுள்ளீர். (அதாவது இனிய குரல் கொடுக்கப்பட்டுள்ளீர்)” என்று என்னிடம் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5048. முஸ்லிம்:793)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில்,

“நேற்று இரவு நீர் ராகத்துடன் ஓதியதை நான் கேட்டதை நீர் பார்த்திருந்தால் (மகிழ்ச்சி அடைந்திருப்பீர்)” என்று அபூமூஸா (ரழி) அவர்களிடம் நபி (ஸல்) கூறியதாக உள்ளது.

١٠٠٦ – وَعَنْ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ النَّبِيَّ ﷺ قَرَأَ فِي الْعِشَاءِ " بِالتِّينِ وَالزَّيْتُونِ " فَمَا سَمِعْتُ أَحَدًا أَحْسَنَ صَوْتًا مِنْهُ ! مُتَّفَقٌ عَلَيْهِ .

**1006** பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இஷாத் தொழுகையில் “வத்தீனி, வஜ்ஜைத்தூனி” எனத் துவங்கும் - அத்தியாயத்தை நபி (ஸல்) அவர்கள் ஓதினார்கள். அவர்களை விட இனியக்குரலை எவரிடமும் நான் கேட்டதில்லை.”

**(புகாரி:769. முஸ்லிம்:464)**

١٠٠٧ – وَعَنْ أَبِي لُبَابَةَ بَشِيرِ بْنِ عَبْدِ الْمُنْذِرِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ لَمْ يَتَغَنَّ بِالْقُرْآنِ فَلَيْسَ مِنَّا " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ . مَعْنَى " يَتَغَنَّى " : يُحَسِّنُ صَوْتَهُ بِالْقُرْآنِ .

**1007** அபூ லுபாபா பஷீர் இப்னு அப்துல் முன்திர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“குர்ஆனை இனிமையாக, அழகாக ஓதாதவர், நம்மைச் சேர்ந்தவர் அல்லர்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:1471)**

١٠٠٨ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " اقْرَأْ عَلَيَّ الْقُرْآنَ " . فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ أَقْرَأُ عَلَيْكَ وَعَلَيْكَ أُنْزِلَ ؟ قَالَ : " إِنِّي أُحِبُّ أَنْ أَسْمَعَهُ مِنْ غَيْرِي " . فَقَرَأْتُ عَلَيْهِ سُورَةَ النِّسَاءِ حَتَّى جِئْتُ إِلَى هَذِهِ الآيَةِ : فَكَيْفَ إِذَا جِئْنَا مِنْ كُلِّ أُمَّةٍ بِشَهِيدٍ وَجِئْنَا بِكَ عَلَى هَؤُلَاءِ شَهِيدًا . قَالَ : " حَسْبُكَ الآنَ " . فَالْتَفَتُّ إِلَيْهِ فَإِذَا عَيْنَاهُ تَذْرِفَانِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1008** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“குர்ஆனை என் முன் ஓதுவீராக!” என்று என்னிடம் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! குர்ஆன் உங்களுக்கு இறக்கி வைக்கப்படும் நிலையில் நான் எவ்வாறு உங்கள் முன் ஓதுவது?” என்று கேட்டேன். “மற்றவர் ஓதி நான் கேட்பதை விரும்புகிறேன்” என்று

நபி (ஸல்) கூறினார்கள். அவர்களிடம் "அந்நிஸா" அத்தியாயத்தை ஓதினேன். "(கியாமத் நாளில்) ஒவ்வொரு சமுதாயத்திற்கும் சாட்சியாளரை நாம் கொண்டு வரும்போதும், உம்மை இவர்களுக்குச் சாட்சியாளராக நாம் கொண்டு வரும் போது எப்படி இருக்கும்?" என்ற (4:41) வசனத்தை ஓதி முடித்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இப்போதைக்கு இது போதும்" என்று கூறினார்கள். நான் அவர்களைப் பார்த்த போது, அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.
**(புகாரி:5050. முஸ்லிம்:800)**

## ١٨٣ – بابُ الْحثّ عَلَى سُوَر وآيات مخصوصَة

## பாடம் : 183 - குறிப்பிட்ட அத்தியாயங்களை, வசனங்களை ஓதுவதற்கு ஆர்வமூட்டுவது

١٠٠٩ – عَنْ أَبِي سَعِيد رَافِعِ بْنِ الْمُعَلَّى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّه ﷺ : " أَلاَ أُعَلِّمُكَ أَعْظَمَ سُورَة فِي الْقُرْآنِ قَبْلَ أَنْ تَخْرُجَ مِنَ الْمَسْجِد ؟ " فَأَخَذَ بِيَدِيَّ فَلَمَّا أَرَدْنَا أَنْ نَخْرُجَ قُلْت يَا رَسُولَ اللَّه إِنَّكَ قُلْت لَأُعَلِّمَنَّكَ أَعْظَمَ سُورَة فِي الْقُرْآنِ . قَالَ : " الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ هِيَ السَّبْعُ الْمَثَانِي وَالْقُرْآنُ الْعَظِيمُ الَّذِي أُوتِيتُهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1009** அபூஸஈத் ராஃபிஉ இப்னுஅல் முஅல்லா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என் கையைப் பிடித்தவர்களாக, "அறிந்து கொள்க! நீர் பள்ளிவாசலை விட்டு வெளியேறும் முன், குர்ஆனில் உள்ள மிகப்பெரும் அத்தியாயம் ஒன்றை உமக்குக் கற்றுத் தருகிறேன்" என்று என்னிடம் கூறினார்கள். நாங்கள் (பள்ளிவாசலிருந்து) வெளியேற எண்ணியபோது, "இறைத்தூதர் அவர்களே! குர்ஆனில் மாபெரும் அத்தியாயத்தை உமக்குக் கற்றுத் தருகிறேன் என (என்னிடம்) நீங்கள் கூறினீர்களே!" என்று கூறினேன். அப்போது அவர்கள், "அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்" எனத் துவங்கும் (முதல்) அத்தியாயம்தான் அது. அது திரும்ப திரும்ப வரும் ஏழு வசனங்களை உடையதாகும். எனக்குக் கொடுக்கப்பட்ட மகத்தான குர்ஆனின் வசனங்களாகும்" என்று கூறினார்கள். **(புகாரி:5006)**

١٠١٠ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ فِي قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ : " وَالَّذِي نَفْسِي بِيَده إِنَّهَا لَتَعْدِلُ ثُلُثَ الْقُرْآنِ " . وَفِي رِوَايَة : أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ لأَصْحَابِه : " أَيَعْجِزُ أَحَدُكُمْ أَنْ يَقْرَأَ بِثُلُثِ الْقُرْآنِ فِي لَيْلَة ؟ " فَشَقَّ ذَلِكَ عَلَيْهِمْ وَقَالُوا : أَيُّنَا يُطِيقُ ذَلِكَ يَا رَسُولَ اللَّه ؟ فَقَالَ : " قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ . اللَّهُ الصَّمَدُ ثُلُثُ الْقُرْآنِ " . رَوَاهُ الْبُخَارِيُّ.

**1010** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"குல்ஹுவல்லாஹு அஹது" (எனத் துவங்கும் 112-வது) அத்தியாயம் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறும் போது, "என் உயிரை தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக, நிச்சயமாக இந்த அத்தியாயம், குர்ஆனின் மூன்றில் ஒரு பங்குக்கு சமமானதாகும்" என்று கூறினார்கள். **(புகாரி:5013)**

மற்றொரு அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம், "ஓர் இரவில் குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதியை ஓதி முடிக்க உங்களில் ஒருவர் சக்தி பெறுவாரா?" என்று கேட்டார்கள். அவ்வாறு ஓதுவது அவர்களுக்குச் சிரமமாக இருந்ததால், "இறைத்தூதர் அவர்களே! எங்களில் எவர்தான் இதற்குச் சக்திபெறுவார்?" என்று நபித்தோழர்கள் கேட்டனர். உடனே நபி (ஸல்) அவர்கள், "குல்ஹுவல்லாஹு அஹது, அல்லாஹுஸ் ஸமது" என்ற அத்தியாயம் குர்ஆனில் மூன்றில் ஒரு பகுதியாகும்" என்று கூறினார்கள். **(புகாரி:5015)**

١٠٢٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : وَكَّلَنِي رَسُولُ اللَّهِ ﷺ بِحِفْظِ زَكَاةِ رَمَضَانَ فَأَتَانِي آتٍ فَجَعَلَ يَحْثُو مِنَ الطَّعَامِ فَأَخَذْتُهُ فَقُلْتُ : لَأَرْفَعَنَّكَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : إِنِّي مُحْتَاجٌ وَعَلَيَّ عِيَالٌ وَبِي حَاجَةٌ شَدِيدَةٌ . فَخَلَّيْتُ عَنْهُ فَأَصْبَحْتُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَا أَبَا هُرَيْرَةَ مَا فَعَلَ أَسِيرُكَ الْبَارِحَةَ ؟ " فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ شَكَا حَاجَةً وَعِيَالاً فَرَحِمْتُهُ فَخَلَّيْتُ سَبِيلَهُ . فَقَالَ : " أَمَا إِنَّهُ قَدْ كَذَبَكَ وَسَيَعُودُ " . فَعَرَفْتُ أَنَّهُ سَيَعُودُ لِقَوْلِ رَسُولِ اللَّهِ ﷺ . فَرَصَدْتُهُ فَجَاءَ يَحْثُو مِنَ الطَّعَامِ فَقُلْتُ : لَأَرْفَعَنَّكَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : دَعْنِي فَإِنِّي مُحْتَاجٌ وَعَلَيَّ عِيَالٌ لاَ أَعُودُ فَرَحِمْتُهُ وَخَلَّيْتُ سَبِيلَهُ فَأَصْبَحْتُ فَقَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " يَا أَبَا هُرَيْرَةَ مَا فَعَلَ أَسِيرُكَ الْبَارِحَةَ ؟ " قُلْتُ : يَا رَسُولَ اللَّهِ شَكَا حَاجَةً وَعِيَالاً فَرَحِمْتُهُ وَخَلَّيْتُ سَبِيلَهُ . فَقَالَ : " إِنَّهُ قَدْ كَذَبَكَ وَسَيَعُودُ " . فَرَصَدْتُهُ الثَّالِثَةَ . فَجَاءَ يَحْثُو مِنَ الطَّعَامِ فَأَخَذْتُهُ فَقُلْتُ : لَأَرْفَعَنَّكَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ وَهَذَا آخِرُ ثَلاَثِ مَرَّاتٍ . إِنَّكَ تَزْعُمُ أَنَّكَ لاَ تَعُودُ ثُمَّ تَعُودُ ! فَقَالَ : دَعْنِي فَإِنِّي أُعَلِّمُكَ كَلِمَاتٍ يَنْفَعُكَ اللَّهُ بِهَا قُلْتُ : مَا هُنَّ ؟ قَالَ : إِذَا أَوَيْتَ إِلَى فِرَاشِكَ فَاقْرَأْ آيَةَ الْكُرْسِيِّ فَإِنَّهُ لَنْ يَزَالَ عَلَيْكَ مِنَ اللَّهِ حَافِظٌ وَلاَ يَقْرَبُكَ شَيْطَانٌ حَتَّى تُصْبِحَ فَخَلَّيْتُ سَبِيلَهُ فَأَصْبَحْتُ فَقَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " مَا فَعَلَ أَسِيرُكَ الْبَارِحَةَ ؟ " فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ زَعَمَ أَنَّهُ يُعَلِّمُنِي كَلِمَاتٍ يَنْفَعُنِي اللَّهُ بِهَا فَخَلَّيْتُ سَبِيلَهُ . فَقَالَ : " مَا هِيَ ؟ " فَقُلْتُ : قَالَ لِي : إِذَا أَوَيْتَ إِلَى فِرَاشِكَ فَاقْرَأْ آيَةَ الْكُرْسِيِّ مِنْ أَوَّلِهَا حَتَّى تَخْتِمَ الآيَةَ : اللَّهُ لاَ إِلَهَ إِلاَّ هُوَ الْحَيُّ الْقَيُّومُ وَقَالَ لِي : لاَ يَزَالُ عَلَيْكَ مِنَ اللَّهِ حَافِظٌ وَلَنْ يَقْرَبَكَ شَيْطَانٌ حَتَّى تُصْبِحَ . فَقَالَ النَّبِيُّ ﷺ : " أَمَا إِنَّهُ قَدْ صَدَقَكَ وَهُوَ كَذُوبٌ ! تَعْلَمُ مَنْ تُخَاطِبُ مُنْذُ ثَلاَثٍ يَا أَبَا هُرَيْرَةَ ؟ " قُلْتُ : لاَ . قَالَ : " ذَلِكَ شَيْطَانٌ ! " رَوَاهُ الْبُخَارِيُّ .

**1020** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ரமளானில் "ஜகாத்" (கருவூலத்)தைப் பாதுகாக்க என்னை நபி (ஸல்) பொறுப்பாளியாக்கினார்கள். அப்போது ஒருநாள் இரவு ஒருவன் வந்து, உணவுப் பொருட்களை எடுத்தான். அவனை நான் பிடித்து, "உன்னை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு செல்வேன்" என்று கூறினேன். "நான் ஏழை. எனக்குக் குடும்பம் இருக்கிறது. ஆகவே எனக்கு அதிகத் தேவையாக உள்ளது" என்று கூறினான். எனவே அவனை நான் விட்டு விட்டேன். மறுநாள் காலையில் நான் (நபி (ஸல்) அவர்களிடம்) வந்தேன். அதற்கு அவர்கள், "அபூஹுரைராவே! நேற்று இரவு நீர் பிடித்த உம் கைதி என்ன ஆனான்?" என்று கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவன் ஏழ்மையையும், குடும்பத்தையும் கூறி முறையிட்டான். எனவே, நான் அவன் மீது இரக்கம் கொண்டு, அவனை அப்படியே விட்டு விட்டேன்" என்று கூறினேன். "அறிந்து கொள்! அவன் உம்மிடம் பொய் கூறிவிட்டான். மீண்டும் வருவான்" என நபி (ஸல்) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறியபடி, அவன் மீண்டும் வருவான் என விளங்கிக் கொண்டேன். அவனை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். அன்று இரவும் மீண்டும் வந்து உணவுப் பொருட்களை எடுத்தான். அவனிடம் நான், "நபி (ஸல்) அவர்களிடம் உன்னைக் கொண்டு செல்வேன்" என்று கூறினேன். அதற்கு அவன், "என்னை விட்டு விடுங்கள். நான் ஏழை. எனக்குன் குடும்பம் உண்டு. இனி வர மாட்டேன்" என்று கூறினான். அவன் மீது இரக்கம் கொண்ட நான், அவனை அப்படியே விட்டு விட்டேன். மறுநாள் காலையில் (நபி (ஸல்) அவர்களிடம்) வந்தேன். "அபூஹுரைராவே! நேற்று இரவு உம் கைதி என்ன ஆனான்?" என்று என்னிடம் நபி (ஸல்) கேட்டார்கள். அதற்கு நான், "இறைத்தூதர் அவர்களே! அவன் ஏழ்மை பற்றியும், குடும்பம் பற்றியும் என்னிடம் முறையிட்டான். அவன் மீது நான் இரக்கம் கொண்டு, அவனை அப்படியே விட்டு விட்டேன்" என்று கூறினேன். அதற்கு, "அவன் உம்மிடம் பொய் கூறிவிட்டான். மீண்டும் வருவான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மூன்றாம் நாள் அவனை எதிர்பார்த்திருந்தேன். அவன் வந்து, உணவுப் பொருட்களை எடுத்தான். அவனை நான் பிடித்தேன். "நபி (ஸல்) அவர்களிடம் உன்னைக் கொண்டு செல்வேன். இதுதான்

கடைசி. மூன்று தடவை ஆகிவிட்டது. இனி வரமாட்டேன் என்று ஒவ்வொரு தடவையும் கூறுகிறாய். ஆனால் திரும்ப வருகிறாய்'' என்று கூறினேன். அப்போது அவன், "என்னை விட்டு விடுங்கள். சில வார்த்தைகளை உங்களுக்குக் கற்றுத் தருகிறேன். இதன் மூலம் அல்லாஹ் உமக்குப் பயன் தருவான்'' என்று கூறினான். அவை என்ன? என்று கேட்டேன். "உம் படுக்கைக்கு நீர் வந்து விட்டால், ஆயத்துல் குர்ஸியை (2:255வது வசனம்) ஓதுவீராக! அல்லாஹ்விடமிருந்து உமக்கு ஒரு பாதுகாவலர் வருவார். நீர் காலையில் எழும் வரை ஷைத்தான் உம்மை நெருங்க மாட்டான்'' என்று கூறினான். அவனை அப்படியே நான் விட்டு விட்டேன். காலையில் (நபி (ஸல்) அவர்களிடம்) வந்தேன்.

"நேற்று இரவு (நீர் பிடித்த) உம் கைதி என்ன ஆனான்?'' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் எனக்கு பயன்தருகின்ற சில வார்த்தைகளை எனக்குக் கற்றுத் தருவதாகக் கூறினான். இதனால் அவனை அப்படியே விட்டு விட்டேன்'' என்று கூறினேன். "அவை என்ன?'' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "உம் படுக்கைக்கு நீர் வந்துவிட்டால், 'ஆயத்துல் குர்ஸி' எனும் அத்தியாயம் முழுவதையும் நீர் ஓதும். அதனால் அல்லாஹ்விடமிருந்து ஒரு பாதுகாவலர் வந்து உமக்கு காவலாக இருப்பார். நீர் காலையில் எழும் வரை ஷைத்தான் உம்மை நெருங்கமாட்டான்'' என்று அவன் கூறியதை (நபி (ஸல்) அவர்களிடம்) கூறினேன். "அறிந்து கொள்க! அவன் பொய்யனாக இருந்தாலும், உம்மிடம் உண்மையையே கூறி உள்ளான்.'' அபூஹுரைராவே! மூன்று தடவை நீர் சந்தித்த அவனை அறிவீரா?'' என்று நபி (ஸல்) கேட்டார்கள். நான், "இல்லை'' என்றேன். "அவன்தான் ஷைத்தான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5010)**

**١٠٢١** – وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ حَفِظَ عَشْرَ آيَاتٍ مِنْ أَوَّلِ سُورَةِ الْكَهْفِ عُصِمَ مِنْ الدَّجَّالِ " . وَفِي رِوَايَةٍ : " مِنْ آخِرِ سُورَةِ الْكَهْفِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1021** அபூதர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கஹ்ஃப் (எனும் 18வது) அத்தியாயத்தின் ஆரம்பத்தில் உள்ள பத்து வசனங்களை ஒருவர் மனனம் செய்தால், அவர் தஜ்ஜாலை (அவன் தீங்கை) விட்டும் பாதுகாக்கப்படுவார்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில், "கஹ்ஃப் அத்தியாயத்தின் கடைசியில் உள்ள பத்து வசனங்கள்'' என அறிவிக்கப்பட்டுள்ளது. **(முஸ்லிம்:809)**

**١٠٢٢** – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا : بَيْنَمَا جِبْرِيلُ عَلَيْهِ السَّلاَمُ قَاعِدٌ عِنْدَ النَّبِيِّ ﷺ سَمِعَ نَقِيضًا مِنْ فَوْقِهِ فَرَفَعَ رَأْسَهُ فَقَالَ : هَذَا بَابٌ مِنْ السَّمَاءِ فُتِحَ الْيَوْمَ وَلَمْ يُفْتَحْ قَطُّ إِلاَّ الْيَوْمَ فَنَزَلَ مِنْهُ مَلَكٌ فَقَالَ : هَذَا مَلَكٌ نَزَلَ إِلَى الأَرْضِ لَمْ يَنْزِلْ قَطُّ إِلاَّ الْيَوْمَ فَسَلَّمَ وَقَالَ : أَبْشِرْ بِنُورَيْنِ أُوتِيتَهُمَا لَمْ يُؤْتَهُمَا نَبِيٌّ قَبْلَكَ : فَاتِحَةُ الْكِتَابِ وَخَوَاتِيمُ سُورَةِ الْبَقَرَةِ لَنْ تَقْرَأَ بِحَرْفٍ مِنْهَا إِلاَّ أُعْطِيتَهُ . رَوَاهُ مُسْلِمٌ . "النَّقِيضُ" : الصَّوْتُ.

**1022** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு முறை ஜிப்ரீல் (அலை) அவர்கள், நபி (ஸல்) அவர்கள் முன் அமர்ந்திருந்த போது, தனக்கு மேலே ஒரு சப்தத்தைக் கேட்டார்கள். தம் தலையை உயர்த்திய ஜிப்ரீல் (அலை) அவர்கள், "இதோ! வானத்தின் வாசல் இன்று திறக்கப்படுகிறது. இதற்கு முன் எப்போதும் அது திறக்கப்படட்டதில்லை'' என்று கூறினார்கள். அப்போது அதிலிருந்து ஒரு வானவர் இறங்கி வந்தார். "இந்த வானவர் பூமிக்கு இறங்கி வருகிறார். இதற்கு முன் இவர் இறங்கி வந்ததில்லை'' என்று ஜிப்ரீல் (அலை) கூறினார்கள். (அந்த வானவர் வந்து) ஸலாம் கூறினார். "(நபியே!) தாங்கள் கொடுக்கப் பெற்ற இரண்டு ஒளிகள்

மூலம் நற்செய்தி பெறுவீராக! இதற்கு முன் எந்த நபிக்கும் அவ்விரண்டு ஒளிகளும் கொடுக்கப்படவில்லை. அவை 1. பாதிஹதுல் கிதாப் எனப்படும் அல்ஹம்து ஸூரா. 2.ஸூரத்துல் பகராவின் கடைசித் திருவசனங்கள். (ஆமனர் ரஸூலுவிலிருந்து தொடங்கி ஸூராவின் கடைசி வரை உள்ள ஆயத்துகள்) இவ்விரண்டில் எந்த எழுத்தை நீங்கள் ஓதினாலும், அதன் மாபெரும் நற்கூலியைக் கொடுக்கப்படுவீர்கள். **(முஸ்லிம்:806)**

## ١٨٤ – بابُ استحباب الاجتماع على القراءة

## பாடம் : 184 - குர்ஆனை கூட்டமாக சேர்ந்து ஓதுவது சிறப்பானது.

١٠٢٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " وَمَا اجْتَمَعَ قَوْمٌ فِي بَيْتٍ مِنْ بُيُوتِ اللَّهِ يَتْلُونَ كِتَابَ اللَّهِ وَيَتَدَارَسُونَهُ بَيْنَهُمْ إِلاَّ نَزَلَتْ عَلَيْهِمُ السَّكِينَةُ وَغَشِيَتْهُمُ الرَّحْمَةُ وَحَفَّتْهُمُ الْمَلاَئِكَةُ وَذَكَرَهُمُ اللَّهُ فِيمَنْ عِنْدَهُ " رَوَاهُ مُسْلِمٌ.

**1023** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வின் வீடுகளில் (பள்ளிவாசல்களில்) ஒரு வீட்டில் அல்லாஹ்வின் வேதத்தை ஓதவும், தங்களிடையே அதை (பொருள் பற்றி)க் கற்றுக் கொள்ளவும், ஒன்று கூடுகின்ற மக்கள் மீது அமைதி இறங்காமல் இருப்பதில்லை. மேலும் அவர்களை இறையருள் சூழும். மலக்குகள் அவர்களை சுற்றி இருப்பர். அவர்களைப் பற்றி தன்னிடம் உள்ள (வான)வர்களிடம் அல்லாஹ் புகழ்ந்து கூறுகிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2699)**

## ١٨٥ – بابُ فضل الوضوء

## பாடம் : 185 - உளூச் செய்வதின் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا إِذَا قُمْتُمْ إِلَى الصَّلاَةِ فَاغْسِلُوا وُجُوهَكُمْ إِلَى قَوْلِهِ تَعَالَى : مَا يُرِيدُ اللَّهُ لِيَجْعَلَ عَلَيْكُمْ مِنْ حَرَجٍ وَلَكِنْ يُرِيدُ لِيُطَهِّرَكُمْ وَلِيُتِمَّ نِعْمَتَهُ عَلَيْكُمْ لَعَلَّكُمْ تَشْكُرُونَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறை விசுவாசிகளே! தொழுகைக்கு நீங்கள் தயாரானால், உங்களின் முகத்தையும், உங்களின் இரு கைகளையும் (முழங்கை வரை) கழுவிக் கொள்ளுங்கள். உங்களின் தலையை மஸஹ் செய்யுங்கள். மேலும் உங்கள் கால்களை இரு கணுக்கால் வரை (கழுவுங்கள்). குளிப்புக் கடமையானவராக நீங்கள் இருந்தால், நீங்கள் சுத்தமாகிக் கொள்ளுங்கள். மேலும் நீங்கள் நோயாளிகளாகவோ, பயணத்திலோ இருந் தால் அல்லது உங்களில் ஒருவர், மலம் ஜலம் கழிக்கச் சென்றால், அல்லது பெண்களை நீங்கள் (உடல்உறவு மூலம்) தொட்டால், அப்போது நீங்கள் தண்ணீரைப் பெற்றுக் கொள்ளாவிட்டால், சுத்தமான மண் மூலம் தயம்மும் செய்து கொள்ளுங்கள். அதில் (இரு கைகளால் அடித்து) உங்களின் முகத்தையும், உங்களின் இரு கைகளையும் தடவிக் கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்குச் சிரமத்தை ஏற்படுத்துபவனாக இல்லை. எனினும் உங்களைத் தூய்மைப்படுத்திடவும், உங்கள் மீது தன் அருட்கொடையை முழுமைப்படுத்திடவும் விரும்புகிறான். (இதனால்) நீங்கள் நன்றி கூறுபவர்களாக இருக்க* வேண்டும். (5:6)

١٠٢٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ أُمَّتِي يُدْعَوْنَ يَوْمَ الْقِيَامَةِ غُرًّا مُحَجَّلِينَ مِنْ آثَارِ الْوُضُوءِ فَمَنِ اسْتَطَاعَ مِنْكُمْ أَنْ يُطِيلَ غُرَّتَهُ فَلْيَفْعَلْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1024** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உளூவின் காரணமாக (கை, கால், முகம் ஆகியவை) பிரகாசமானவர்களாக என் சமுதாயத்தினர் மறுமையில் கொண்டு வரப்படுவார்கள். அந்தப் பிரகாசத்தை தனக்கு அதிகமாக்கிக் கொள்ள உங்களில் ஒருவர் சக்தி பெற்றால், அவர் (அதை) செய்து கொள்ளட்டும்” என்று நபி (ஸல்) கூறியதை நான் கேட்டேன். **(புகாரி:136. முஸ்லிம்:246)**

١٠٢٥ - وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( قَالَ : سَمِعْت خَلِيلِي ﷺ يَقُولُ : " تَبْلُغُ الْحِلْيَةُ مِنَ الْمُؤْمِنِ حَيْثُ يَبْلُغُ الْوُضُوءُ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1025** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(மறுமையில்) முஃமினின் ஆபரணங்கள், அவர் உளூச் செய்த உறுப்புகள் முழுவதும் இருக்கும்” என்று என் நேசர் நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன். **(முஸ்லிம்:250)**

١٠٢٦ - وَعَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ خَرَجَتْ خَطَايَاهُ مِنْ جَسَدِهِ حَتَّى تَخْرُجَ مِنْ تَحْتِ أَظْفَارِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1026** உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் அழகிய முறையில் உளூச் செய்தால், அவரது பாவங்கள் அவரின் உடலை விட்டு நகங்கள் வழியாக வெளியேறி விடுகின்றன” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:245)**

١٠٢٧ - وَعَنْهُ ) عُثْمَانَ بْنِ عَفَّانَ ( قَالَ : رَأَيْت رَسُولَ اللَّهِ ﷺ تَوَضَّأَ مِثْلَ وُضُوئِي هَذَا ثُمَّ قَالَ : " مَنْ تَوَضَّأَ هَكَذَا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ وَكَانَتْ صَلَاتُهُ وَمَشْيُهُ إِلَى الْمَسْجِدِ نَافِلَةً " . رَوَاهُ مُسْلِمٌ .

**1027** உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(நீங்கள் பார்த்த) இப்போது எனது இந்த உளூ போலவே, நபி (ஸல்) அவர்கள் உளூச் செய்ததை நான் பார்த்தேன். பின்பு, “இவ்வாறு ஒருவர் உளூச் செய்தால், அவரின் முன் பாவங்கள் மன்னிக்கப்படும். அவரின் தொழுகையும், பள்ளிவாசல் பக்கம் அவர் நடந்து வருவதும் அவருக்கு அதிகமான நன்மைகளாக அமையும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:229)**

١٠٢٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا تَوَضَّأَ الْعَبْدُ الْمُسْلِمُ - أَوْ الْمُؤْمِنُ - فَغَسَلَ وَجْهَهُ خَرَجَ مِنْ وَجْهِهِ كُلُّ خَطِيئَةٍ نَظَرَ إِلَيْهَا بِعَيْنَيْهِ مَعَ الْمَاءِ - أَوْ مَعَ آخِرِ قَطْرِ الْمَاءِ - فَإِذَا غَسَلَ يَدَيْهِ خَرَجَ مِنْ يَدَيْهِ كُلُّ خَطِيئَةٍ كَانَ بَطَشَتْهَا يَدَاهُ مَعَ الْمَاءِ - أَوْ مَعَ آخِرِ قَطْرِ الْمَاءِ - فَإِذَا غَسَلَ رِجْلَيْهِ خَرَجَتْ كُلُّ خَطِيئَةٍ مَشَتْهَا رِجْلَاهُ مَعَ الْمَاءِ - أَوْ مَعَ آخِرِ قَطْرِ الْمَاءِ - حَتَّى يَخْرُجَ نَقِيًّا مِنْ الذُّنُوبِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1028** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு முஸ்லிம் (அல்லது முஃமின்) உளூச் செய்யும் போது, தன் முகத்தைக் கழுவினால் அவரின் இரு கண்கள் பார்த்த அனைத்துப் பாவங்களும் தண்ணீருடன் அல்லது தண்ணீரின் இறுதிச் சொட்டுடன் வெளியேறிவிடும். அவர் தன் கைகளைக் கழுவினால், அவரது கைகள் செய்த அனைத்து தவறுகளும் அவரின் கைகள் வழியாகத் தண்ணீருடன் அல்லது தண்ணீரின் இறுதிச் சொட்டுடன் வெளியேறி விடும். தன் கால்களை அவர் கழுவினால், அவரின் கால்கள் செய்த அனைத்துத் தவறுகளும் தண்ணீருடன் அல்லது தண்ணீரின் இறுதிச் சொட்டுடன் வெளியேறிவிடும். இறுதியாக அவர் (உளூ செய்து முடிக்கும்போது) பாவங்களை விட்டு தூய்மையானவராக வெளியேறுவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:244)**

١٠٢٩ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَتَى الْمَقْبَرَةَ فَقَالَ : " السَّلَامُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُؤْمِنِينَ وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لَاحِقُونَ وَدِدْتُ أَنَّا قَدْ رَأَيْنَا إِخْوَانَنَا " . قَالُوا . أَوَ لَسْنَا إِخْوَانَكَ يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " أَنْتُمْ أَصْحَابِي وَإِخْوَانُنَا الَّذِينَ لَمْ يَأْتُوا بَعْدُ " قَالُوا : كَيْفَ تَعْرِفُ مَنْ لَمْ يَأْتِ بَعْدُ مِنْ أُمَّتِكَ يَا رَسُولَ اللَّهِ ؟ فَقَالَ : " أَرَأَيْتَ لَوْ أَنَّ رَجُلاً لَهُ خَيْلٌ غُرٌّ مُحَجَّلَةٌ بَيْنَ ظَهْرَيْ خَيْلٍ دُهْمٍ بُهْمٍ أَلَا يَعْرِفُ خَيْلَهُ ؟ " قَالُوا : بَلَى يَا رَسُولَ اللَّهِ قَالَ : " فَإِنَّهُمْ يَأْتُونَ غُرًّا مُحَجَّلِينَ مِنَ الْوُضُوءِ وَأَنَا فَرَطُهُمْ عَلَى الْحَوْضِ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1029** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மண்ணறைக்கு வந்து, "அஸ்ஸலாமு அலைக்கும் தாரகவ்மின் முஃமினீன் வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன்" (இறை விசுவாசியான கூட்டத்தாரின் வீடுகளில் உள்ளவர்களே! உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்! நிச்சயமாக அல்லாஹ் நாடினால் உங்களை நாங்கள் வந்து சேருவோம்) என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், "நான் என் சகோதரர்களை பார்க்க ஆசைப்படுகிறேன்" என்றும் கூறினார்கள்.

அப்போது நபித்தோழர்கள்,"இறைத்தூதர் அவர்களே! நாங்கள் உங்களின் சகோதரர்களாக இல்லையா?" என்று கேட்டார்கள். "நீங்கள் என் தோழர்கள். நம் சகோதரர்கள் இதுவரை வரவில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! உங்கள் சமுதாயத்தில் இதுவரை வராதவர்களை எப்படி அறிந்து கொள்வீர்கள்?" என்று நபித்தோழர்கள் கேட்டனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "கருப்பு நிறமுடைய குதிரைகளுக்கு மத்தியில் கை, கால், முகம் வெளுத்த குதிரை ஒன்று ஒருவருக்கு இருந்தால் அதை அவர் (எளிதாக) அறிந்து கொள்வார் என்பதை அறிவீர்களா?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! ஆம்" என்று கூறினார்கள். "நிச்சயமாக (நம் சகோதரர்கள்) உளூவின் காரணமாக கை, கால், முகம் வெளுத்தவர்களாக (மறுமை நாளில்) வருவார்கள். நான் அவர்களுக்காக "ஹவ்ழ்" எனும் தடாகத்தின் அருகே காத்திருப்பேன்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:249)**

١٠٣٠ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَلَا أَدُلُّكُمْ عَلَى مَا يَمْحُو اللَّهُ بِهِ الْخَطَايَا وَيَرْفَعُ بِهِ الدَّرَجَاتِ ؟ " . قَالُوا : بَلَى يَا رَسُولَ اللَّهِ قَالَ : " إِسْبَاغُ الْوُضُوءِ عَلَى الْمَكَارِهِ وَكَثْرَةُ الْخُطَى إِلَى الْمَسَاجِدِ وَانْتِظَارُ الصَّلَاةِ بَعْدَ الصَّلَاةِ : فَذَلِكُمُ الرِّبَاطُ . فَذَلِكُمُ الرِّبَاطُ ! " . رَوَاهُ مُسْلِمٌ .

**1030** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் பாவங்களை அழிக்கக்கூடியதும், உங்கள் அந்தஸ்துகளை உயர்த்தக் கூடியதுமான அமல்களை உங்களுக்குத் தெரிவிக்கட்டுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். உடனே நபித்தோழர்கள், "இறைத்தூதர் அவர்களே! சரி" என்று கூறினார்கள். "சிரமமான (குளிர்) நேரத்திலும் உளூவை முழுமையாகச் செய்வது, மேலும் (நீண்ட தூரமானாலும்) பள்ளிவாசல் பக்கம் நடப்பதை அதிகப்படுத்துவது மற்றும் ஒரு தொழுகைக்குப் பின் மறு தொழுகையை எதிர்பார்த்திருப்பது ஆகியவைகளாகும். இவையே உங்களுக்கு (மனம் மற்றும் ஷைத்தானின் தீங்குகளை விட்டும்) பாதுகாப்பாகும். இவையே உங்களுக்கு பாதுகாப்பாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:251)**

١٠٣١ – وَعَنْ أَبِي مَالِكٍ الْأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الطُّهُورُ شَطْرُ الْإِيمَانِ " . رَوَاهُ مُسْلِمٌ . وَقَدْ سَبَقَ بِطُولِهِ فِي بَابِ الصَّبْرِ رَقْم : 1 - 25 . وَفِي الْبَابِ حَدِيثُ عَمْرِو بْنِ عَبَسَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ السَّابِقُ فِي آخِرِ بَابِ الرَّجَاءِ وَهُوَ حَدِيثٌ عَظِيمٌ مُشْتَمِلٌ عَلَى جُمَلٍ مِنَ الْخَيْرَاتِ رَقْمُ : 27 - 438.

**1031** அபூமாலிக் அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சுத்தமாக இருப்பது, ஈமானில் சரிபாதியாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:223)**

இந்த ஹதீஸ், "பொறுமை" என்ற பாடத்தின் கீழ் முழுமையாக இடம் பெற்றுள்ளது. இதே போன்றே, "உளூவின் சிறப்பு" பற்றி அம்ரு இப்னு அபஸா (ரழி) அறிவிக்கும் ஹதீஸ் "ஆதரவு வைத்தல்" என்ற பாடத்தின் கீழ் இடம் பெற்றுள்ளது. பல செய்திகளை உள்ளடக்கிய இது பெரிய ஹதீஸாகும்.

١٠٣٢ – وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّاب رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَا مِنْكُمْ مِنْ أَحَد يَتَوَضَّأُ فَيُبْلِغُ – أَوْ فَيُسْبِغُ الْوُضُوءَ – ثُمَّ يَقُولُ : أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ ؛ إِلاَّ فُتِحَتْ لَهُ أَبْوَابُ الْجَنَّة الثَّمَانِيَةُ يَدْخُلُ مِنْ أَيِّهَا شَاءَ " . رَوَاهُ مُسْلِمٌ وَزَادَ التِّرْمِذِيُّ : " اللَّهُمَّ اجْعَلْنِي مِنَ التَّوَّابِينَ وَاجْعَلْنِي مِنَ الْمُتَطَهِّرِينَ " .

**1032** உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உங்களில் ஒருவர் முழுமையாக உளூச் செய்த பின்பு, "அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு" என்று கூறினால், அவருக்கு சொர்க்கத்தின் எட்டு வாசல்களும் திறக்கப்பட்டு, அதில் தான் விரும்பிய வழியாக அவர் சுவனத்தில் நுழைவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:234)**

திர்மிதீயில், "அல்லாஹும்மஜ்அல்னீ மினத் தவ்வாபீன வஜ்அல்னீ மினல் முத்தஹ்ஹிரீன்" என்று அதிகமாக உள்ளது. **(திர்மிதீ:55)**

**முஸ்லிம் நூலில் உள்ள துஆவின் பொருள்: "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் இல்லை என்று சாட்சி கூறுகிறேன். மேலும் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாராகவும், அவனது தூதராகவும் உள்ளார்கள் என்றும் சாட்சி கூறுகின்றேன்.**

**திர்மிதீ நூலில் உள்ள துஆவின் பொருள்: இறைவா! என்னை பாவமன்னிப்பு கோருபவர்களில் ஒருவனாக ஆக்குவாயாக! மேலும் தூய்மையாளர்களில் ஒருவனாகவும் ஆக்குவாயாக!**

## ١٨٦ – بابُ فضل الأذان

## பாடம் : 186 - பாங்கு கூறுதலின் சிறப்பு

١٠٣٣ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ : " لَوْ يَعْلَمُ النَّاسُ مَا فِي النِّدَاءِ وَالصَّفِّ الأَوَّلِ ثُمَّ لَمْ يَجِدُوا إِلاَّ أَنْ يَسْتَهِمُوا عَلَيْهِ لاَسْتَهَمُوا عَلَيْه ؛ وَلَوْ يَعْلَمُونَ مَا فِي التَّهْجِيرِ لاَسْتَبَقُوا إِلَيْه ؛ وَلَوْ يَعْلَمُونَ مَا فِي الْعَتَمَةِ وَالصُّبْحِ لأَتَوْهُمَا وَلَوْ حَبْوًا ! " . مُتَّفَقٌ عَلَيْه . " الاسْتِهَامُ " . الاقْتِرَاعُ . " وَالتَّهْجِيرُ " : التَّبْكِيرُ إِلَى الصَّلاَة .

**1033** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாங்கு கூறுவதிலும், (தொழுகையின்) முதல் வரிசையிலும் உள்ள சிறப்பை மக்கள் அறிந்து, பின்பு அதற்கு சீட்டுக் குலுக்கிப் போடாமல் அவர்கள் அதை அடைந்து கொள்ள முடியாது என்று இருந்தால், அதற்காக சீட்டுக் குலுக்கிப் போட்டு அவ்விரண்டுக்கும் விரைந்து விடுவார்கள். மேலும், (தொழுகைக்கு) விரைந்து செல்வதில் உள்ள சிறப்பை அவர்கள் அறிந்து கொண்டால், அதன் பக்கம்

முந்திச் செல்வார்கள். இஷாத் தொழுகையிலும், சுப்ஹூத் தொழுகையிலும் உள்ள சிறப்பை அவர்கள் அறிந்து கொண்டால், தவழ்ந்தாவது அவ்விரண்டு தொழுகைக்கும் அவர்கள் வருவார்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:615. முஸ்லிம்:437)**

١٠٣٤ – وَعَنْ مُعَاوِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " الْمُؤَذِّنُونَ أَطْوَلُ النَّاسِ أَعْنَاقًا يَوْمَ الْقِيَامَةِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1034** முஆவியா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''முஅத்தின்கள் (பாங்கு கூறுபவர்கள்) மறுமை நாளில் (அவர்களைக் கண்ணியப்படுத்தும் பொருட்டு) மக்களிலேயே கழுத்து நீண்டவர்களாக இருப்பார்கள்'' என நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன். **(முஸ்லிம்:387)**

١٠٣٥ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَبْدِ الرَّحْمَنِ بْنِ أَبِي صَعْصَعَةَ أَنَّ أَبَا سَعِيدٍ الْخُدْرِيَّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ لَهُ : " إِنِّي أَرَاكَ تُحِبُّ الْغَنَمَ وَالْبَادِيَةَ فَإِذَا كُنْتَ فِي غَنَمِكَ – أَوْ بَادِيَتِكَ – فَأَذَّنْتَ لِلصَّلَاةِ فَارْفَعْ صَوْتَكَ بِالنِّدَاءِ فَإِنَّهُ لَا يَسْمَعُ مَدَى صَوْتِ الْمُؤَذِّنِ جِنٌّ وَلَا إِنْسٌ وَلَا شَيْءٌ إِلَّا شَهِدَ لَهُ يَوْمَ الْقِيَامَةِ " . قَالَ أَبُو سَعِيدٍ سَمِعْتُهُ مِنْ رَسُولِ اللَّهِ ﷺ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1035** அப்துல்லாஹ் இப்னு அப்துர்ரஹ்மான் இப்னு அபூ ஸஃஸஆ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''ஆட்டு மந்தையையும், காட்டில் வசிப்பதையும் விரும்புபவராக உம்மை நான் காண்கிறேன். உம் ஆட்டு மந்தைகளுடன் அல்லது காட்டில் நீர் இருந்து, தொழுகைக்கு பாங்கு கூறினால், பாங்கில் உம் சப்தத்தை உயர்த்துவீராக! பாங்கு கூறுபவரின் சப்தத்தைக் கேட்கும் ஜின், மனிதன் மற்றும் எந்தப் பிராணியும் மறுமை நாளில் அவருக்கு சாட்சி கூறாமல் இருப்பதில்லை'' என்று என்னிடம் அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) கூறினார்கள். மேலும் ''இதை நபி (ஸல்) அவர்கள் கூறவும் கேட்டிருக்கிறேன்'' என்றும் கூறினார்கள். **(புகாரி:609)**

١٠٣٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا نُودِيَ بِالصَّلَاةِ أَدْبَرَ الشَّيْطَانُ وَلَهُ ضُرَاطٌ حَتَّى لَا يَسْمَعَ التَّأْذِينَ فَإِذَا قُضِيَ النِّدَاءُ أَقْبَلَ حَتَّى إِذَا ثُوِّبَ بِالصَّلَاةِ أَدْبَرَ حَتَّى إِذَا قُضِيَ التَّثْوِيبُ أَقْبَلَ حَتَّى يَخْطِرَ بَيْنَ الْمَرْءِ وَنَفْسِهِ يَقُولُ : اذْكُرْ كَذَا وَاذْكُرْ كَذَا – لِمَا لَمْ يَذْكُرْ مِنْ قَبْلُ – حَتَّى يَظَلَّ الرَّجُلُ مَا يَدْرِي كَمْ صَلَّى " . مُتَّفَقٌ عَلَيْهِ " التَّثْوِيبُ " : الْأَقَامَةُ .

**1036** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''தொழுகைக்கு பாங்கு கூறப்பட்டால், பாங்கு கூறும் சப்தம் கேட்காத தூரம் வரை பின் துவாரத்தில் காற்றை வெளிப்படுத்தியவனாக ஷைத்தான் பின்னோக்கி ஓடுவான். பாங்கு கூறி முடித்து விட்டால் முன்னோக்கி வருவான். பின்பு தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டதும் மீண்டும் விரண்டோடுவான். பின்னர் தொழுகைக்கு இகாமத் கூறி முடிக்கப்பட்டு விட்டால் முன்னோக்கி வருவான். இறுதியாக தொழுது கொண்டிருக்கும் மனிதரின் உள்ளத்தில் ஊசலாட்டத்தை எழுப்புவான். இதற்கு முன் அவர் நினைத்திராதவற்றைக் கூறி, இதை நினை அதை நினை என்று அவரிடம் எடுத்துக் கூறிக் கொண்டிருப்பான். இதனால் அவர் எத்தனை ரக்அத் தொழுதார் என்பதை அந்த மனிதர் அறிய முடியாதவராக ஆகிவிடுகிறார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:608. முஸ்லிம்:389)**

١٠٣٧ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِذَا سَمِعْتُمُ النِّدَاءَ فَقُولُوا مِثْلَ مَا يَقُولُ ثُمَّ صَلُّوا عَلَيَّ فَإِنَّهُ مَنْ صَلَّى عَلَيَّ صَلَاةً صَلَّى اللَّهُ عَلَيْهِ بِهَا عَشْرًا ثُمَّ سَلُوا اللَّهَ لِيَ الْوَسِيلَةَ فَإِنَّهَا مَنْزِلَةٌ فِي الْجَنَّةِ لَا تَنْبَغِي إِلَّا لِعَبْدٍ مِنْ عِبَادِ اللَّهِ وَأَرْجُو أَنْ أَكُونَ أَنَا هُوَ فَمَنْ سَأَلَ لِيَ الْوَسِيلَةَ حَلَّتْ لَهُ الشَّفَاعَةُ " رَوَاهُ مُسْلِمٌ .

**1037** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாங்கு கூறுவதை நீங்கள் கேட்டால், அதுபோன்றதைநீங்களும் கூறுங்கள். பின்பு என் மீது ஸலவாத் கூறி (துஆச் செய்யுங்)கள். ஏனெனில் ஒருமுறை எனக்காக ஒருவர் ஸலவாத் கூறினால், அல்லாஹ் அவர் மீது பத்து முறை ஸலவாத் கூறுகிறான். பின்பு அல்லாஹ்விடம் எனக்காக "வஸீலா"வைக் கேளுங்கள். அது, சொர்க்கத்தில் உள்ள ஒரு பதவியாகும். அல்லாஹ்வின் அடியார்களில் எவருக்கும் அது கிடைக்காது. அது எனக்குக் கிடைக்கும் என ஆதரவு வைக்கிறேன். யார் எனக்காக "வஸீலா"வைக் கேட்டு துஆச் செய்கிறாரோ, அவருக்கு (மறுமையில்) என் பரிந்துரை (ஷஃபாஅத்) அவசியமாகிவிட்டது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(முஸ்லிம்:384)**

١٠٣٨ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا سَمِعْتُمْ النِّدَاءَ فَقُولُوا كَمَا يَقُولُ الْمُؤَذِّنُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1038** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாங்கை நீங்கள் கேட்டால், பாங்கு கூறுபவர் போல் நீங்களும் கூறுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:611, முஸ்லிம்:383)**

١٠٣٩ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ قَالَ حِينَ يَسْمَعُ النِّدَاءَ : اللَّهُمَّ رَبَّ هَذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلَاةِ الْقَائِمَةِ آتِ مُحَمَّدًا الْوَسِيلَةَ وَالْفَضِيلَةَ وَابْعَثْهُ مَقَامًا مَحْمُودًا الَّذِي وَعَدْتَهُ حَلَّتْ لَهُ شَفَاعَتِي يَوْمَ الْقِيَامَةِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1039** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாங்கு கூறுவதைக் கேட்ட ஒருவர், "அல்லாஹும்ம ரப்பஹாதிஹித் தஃவதித் தாம்மதி, வஸ்ஸலாதில் காஇமதி, ஆதி முஹம்மதனில் வஸீலத, வல்ஃபழீலத்த, வப்அஸ்ஹு மகாமன் மஹ்மூதன் அல்லஃதீ வஅத்தஹு" என்று கூறினால், மறுமை நாளில் என் பரிந்துரை அவருக்கு கடமையாகி விட்டது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**துஆவின் பொருள்: இறைவா! முழுமையான இந்த அழைப்பிற்கும் நிலையான தொழுகைக்கும் உரிய இறைவா! முஹம்மது (ஸல்) அவர்களுக்கு "வஸீலா" தகுதியையும், சிறப்பையும் வழங்குவாயாக! நீ வாக்குறுதி அளித்த "மகாமன் மஹ்மூத்" எனும் புகழுக்குரிய இடத்தை அவர்களுக்கு வழங்குவாயாக! (புகாரி:614)**

١٠٤٠ - وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ:"مَنْ قَالَ حِينَ يَسْمَعُ الْمُؤَذِّنَ : أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ رَضِيت بِاللَّهِ رَبًّا وَبِمُحَمَّدٍ رَسُولاً وَبِالأَسْلاَمِ دِينًا غُفِرَ لَهُ ذَنْبُهُ ".رَوَاهُ مُسْلِمٌ .

**1040** ஸஅத் இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாங்கு கூறுபவரின் பாங்கைக் கேட்டவர், 'அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு வஅன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு, ரழீத்து பில்லாஹி ரப்பன், வபி முஹம்மதின் ரஸூலன், வபில் இஸ்லாமி தீனன்' என்று கூறினால் அவரின் குற்றங்கள் அவருக்கு மன்னிக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:386)**

துஆவின் பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையாளன் எவரும் இல்லை என்று சாட்சி கூறுகிறேன். அல்லாஹ்வை இறைவனாகவும், முஹம்மது (ஸல்) அவர்களை தூதராகவும், இஸ்லாமை மார்க்கமாகவும் நான் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டேன்.

١٠٤١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الدُّعَاءُ لاَ يُرَدُّ بَيْنَ الأَذَانِ وَالأَقَامَةِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1041** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாங்குக்கும், இகாமத்திற்குமிடையே கேட்கப்படும் பிரார்த்தனை மறுக்கப்படமாட்டாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:521. திர்மிதீ:212. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٨٧ – بابُ فَضْلِ الصَّلوت

## பாடம் : 187 - தொழுகையின் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ الصَّلَاةَ تَنْهَى عَنِ الْفَحْشَاءِ وَالْمُنْكَرِ

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக தொழுகை, வெறுக்கத்தக்க செயல்கள் மற்றும் தவறான செயல்களை விட்டும் தடுத்து விடும். (29 : 45)*

١٠٤٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " أَرَأَيْتُمْ لَوْ أَنَّ نَهْرًا بِبَابِ أَحَدِكُمْ يَغْتَسِلُ مِنْهُ كُلَّ يَوْمٍ خَمْسَ مَرَّاتٍ هَلْ يَبْقَى مِنْ دَرَنِهِ شَيْءٌ ؟ " قَالُوا : لاَ يَبْقَى مِنْ دَرَنِهِ شَيْءٌ قَالَ : " فَذَلِكَ مِثْلُ الصَّلَوَاتِ الْخَمْسِ يَمْحُو اللَّهُ بِهِنَّ الْخَطَايَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1042** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவரின் (வீட்டு) வாசலில் ஆறு ஓடி, அதில் அவர் ஒவ்வொரு நாளும் ஐந்து முறை குளித்தால், அவர் (உடலில்) அழுக்கு சிறிதேனும் இருக்குமா? எனக் கூறுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு, "அவரிடம் அழுக்கு எதுவும் இருக்காது" என்று நபித்தோழர்கள் கூறினார்கள். "இதுதான், ஐந்து நேரத் தொழுகைகளுக்குரிய உதாரணமாகும். அதன் மூலம் அல்லாஹ் அவரின் பாவங்களை அழித்துவிடுகிறான். (அவரை பரிசுத்தப்படுத்துகிறான்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:528. முஸ்லிம்:667)**

١٠٤٣ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَثَلُ الصَّلَوَاتِ الْخَمْسِ كَمَثَلِ نَهْرٍ جَارٍ غَمْرٍ عَلَى بَابِ أَحَدِكُمْ يَغْتَسِلُ مِنْهُ كُلَّ يَوْمٍ خَمْسَ مَرَّاتٍ " . رَوَاهُ مُسْلِمٌ . " الْغَمْرُ " بِفَتْحِ الْغَيْنِ الْمُعْجَمَةِ : الْكَثِيرُ .

**1043** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஐந்து வேளை தொழுகைகளின் உதாரணம் – உங்களில் ஒருவரின் வீட்டு வாசலில் நிரம்பி ஓடும் ஆற்றில் ஒவ்வொரு நாளும் ஐந்து தடவை குளிப்பது போலாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:668)**

١٠٤٤ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً أَصَابَ مِنْ امْرَأَةٍ قُبْلَةً فَأَتَى النَّبِيَّ ﷺ فَأَخْبَرَهُ . فَأَنْزَلَ اللَّهُ تَعَالَى : وَأَقِمِ الصَّلَاةَ طَرَفَيِ النَّهَارِ وَزُلَفًا مِنَ اللَّيْلِ إِنَّ الْحَسَنَاتِ يُذْهِبْنَ السَّيِّئَاتِ ﷺ فَقَالَ الرَّجُلُ : أَلِي هَذَا ؟ قَالَ : " لِجَمِيعِ أُمَّتِي كُلِّهِمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1044** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பெண்ணை முத்தமிட்டுவிட்ட ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இது பற்றிக் கூறினார். அப்போது, "பகலில் இரு ஓரங்களிலும், இரவின் ஒரு பகுதியிலும் உள்ள தொழுகையைப் பேணுவீராக! நிச்சயமாக, நன்மையான செயல்கள் தீமைகளை அழித்து விடும்" (11:114) என்ற வசனத்தை அல்லாஹ் இறக்கினான். "இது எனக்கு மட்டும் தானா?" என அவர் கேட்டார். "இது என் சமுதாயத்தினர் அனைவருக்கும் தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:526. முஸ்லிம்:2763)**

١٠٤٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الصَّلَوَاتُ الْخَمْسُ وَالْجُمُعَةُ إِلَى الْجُمُعَةِ كَفَّارَةٌ لِمَا بَيْنَهُنَّ مَا لَمْ تُغْشَ الْكَبَائِرُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1045** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஐந்து நேரத் தொழுகைகள் மற்றும் ஒரு ஜும்ஆத் தொழுகையிலிருந்து மறு ஜும்ஆத் தொழுகை வரை, ஒருவர் அவைகளுக்கிடையே பெரும் பாவங்களை செய்யாதவரை, சிறுபாவங்களுக்கு அவையே பரிகாரம் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:233)**

١٠٤٦ – وَعَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ امْرِئٍ مُسْلِمٍ تَحْضُرُهُ صَلَاةٌ مَكْتُوبَةٌ فَيُحْسِنُ وُضُوءَهَا وَخُشُوعَهَا وَرُكُوعَهَا إِلاَّ كَانَتْ كَفَّارَةً لِمَا قَبْلَهَا مِنْ الذُّنُوبِ مَا لَمْ تُؤْتَ كَبِيرَةٌ وَذَلِكَ الدَّهْرَ كُلَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1046** உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமிடம் கடமையான தொழுகை நேரம் வந்து, அவர் தன் உளூவை அழகாகச் செய்து; அதில் பயபக்தியுடன் அதன் ருகூவையும் அழகாகச் செய்தால், பெரும் பாவம் செய்யப்படாத வரை அதற்கு முன் ஏற்பட்ட அனைத்துப் பாவங்களுக்கும் பரிகாரமாகும். அவரின் அந்த தொழுகை பெரும் பாவம் செய்யப்படாத காலம் முழுதும் நடப்பதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:228)**

## ١٨٨ – باب فضل صلاة الصبح والعصر

## பாடம் : 188 - சுப்ஹு மற்றும் அஸர் தொழுகைகளின் சிறப்பு

١٠٤٧ – عَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ صَلَّى الْبَرْدَيْنِ دَخَلَ الْجَنَّةَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْبَرْدَانِ " : الصُّبْحُ وَالْعَصْرُ .

**1047** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு குளிர்ந்த (நேரத்) தொழுகைகளை ஒருவர் தொழுதால், அவர் சொர்க்கத்தில் நுழைவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:574. முஸ்லிம்:635)**

இரண்டு குளிர்ந்த நேரத் தொழுகைகள் என்பது, சுப்ஹும், அஸருமாகும்.

١٠٤٨ – وَعَنْ أَبِي زُهَيْرٍ عُمَارَةَ بْنِ رُوَيْبَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " لَنْ يَلِجَ النَّارَ أَحَدٌ صَلَّى قَبْلَ طُلُوعِ الشَّمْسِ وَقَبْلَ غُرُوبِهَا " . يَعْنِي الْفَجْرَ وَالْعَصْرَ . رَوَاهُ مُسْلِمٌ .

**1048** அபூசுஹைர் உமாரா இப்னு ருவய்பா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சூரியன் உதயமாகும் முன் உள்ள தொழுகையையும், அது மறையும் முன் உள்ள தொழுகையையும் தொழக்கூடிய எவரும் நரகத்தில் நுழையமாட்டார். (அவ்விரண்டும் சுப்ஹு, அஸர் தொழுகைகளாகும்)” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:634)**

١٠٤٩ – وَعَنْ جُنْدُبِ بْنِ سُفْيَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ صَلَّى الصُّبْحَ فَهُوَ فِي ذِمَّةِ اللَّهِ فَانْظُرْ يَا ابْنَ آدَمَ لاَ يَطْلُبَنَّكَ اللَّهُ مِنْ ذِمَّتِهِ بِشَيْءٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1049** ஜுன்துப் இப்னு சுஃப்யான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சுப்ஹுத் தொழுகையை ஒருவர் தொழுதால், அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளார். ஆதமின் மகனே! கவனம் கொள்வாயாக! அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளவருக்கு ஏதேனும் (நீர் இடையூறு) செய்து, அதனால் உம்மை அல்லாஹ் தண்டித்து விட வேண்டாம்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:657)**

١٠٥٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَتَعَاقَبُونَ فِيكُمْ مَلاَئِكَةٌ بِاللَّيْلِ وَمَلاَئِكَةٌ بِالنَّهَارِ وَيَجْتَمِعُونَ فِي صَلاَةِ الصُّبْحِ وَصَلاَةِ الْعَصْرِ ثُمَّ يَعْرُجُ الَّذِينَ بَاتُوا فِيكُمْ فَيَسْأَلُهُمُ اللَّهُ – وَهُوَ أَعْلَمُ بِهِمْ – كَيْفَ تَرَكْتُمْ عِبَادِي ؟ فَيَقُولُونَ : تَرَكْنَاهُمْ وَهُمْ يُصَلُّونَ وَأَتَيْنَاهُمْ وَهُمْ يُصَلُّونَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1050** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரவிற்குரிய வானவர்களும், பகலுக்குரிய வானவர்களும் என உங்களிடையே (வானவர்கள்) பொறுப்பேற்கிறார்கள். சுப்ஹுத் தொழுகையிலும், அஸர் தொழுகையிலும் (அவர்கள் அனை வரும்) ஒன்று சேருகிறார்கள். பின்பு உங்களோடு இரவு தங்கி இருந்தவர்கள் (வானிற்கு) உயருகிறார்கள். மக்கள் பற்றி மிகவும் அறிந்தவனான அல்லாஹ் அவர்களிடம், “என் அடியார்களை எந்த நிலையில் விட்டு வந்தீர்கள்?” என்று கேட்பான். அப்போது அந்த வானவர்கள், “அவர்கள் தொழும் நிலையிலேயே அவர்களை விட்டு வந்தோம். மேலும் அவர்கள் தொழும் நிலையில் அவர்களிடம் சென்றோம்” என்று கூறுவார்கள்.” இதை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:555. முஸ்லிம்:632)**

١٠٥١ – وَعَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ الْبَجَلِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا عِنْدَ النَّبِيِّ ﷺ فَنَظَرَ إِلَى الْقَمَرِ لَيْلَةَ الْبَدْرِ فَقَالَ : " إِنَّكُمْ سَتَرَوْنَ رَبَّكُمْ كَمَا تَرَوْنَ هَذَا الْقَمَرَ لاَ تُضَامُونَ فِي رُؤْيَتِهِ فَإِنِ اسْتَطَعْتُمْ أَلاَّ تُغْلَبُوا عَلَى صَلاَةٍ قَبْلَ طُلُوعِ الشَّمْسِ وَقَبْلَ غُرُوبِهَا فَافْعَلُوا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " فَنَظَرَ إِلَى الْقَمَرِ لَيْلَةَ أَرْبَعَ عَشْرَةَ " .

**1051** ஜரீர் இப்னு அப்துல்லாஹ் அல்பஜலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் இருந்தோம். பவுர்ணமி அன்று நிலவை அவர்கள் பார்த்தார்கள். “நிச்சயமாக! நீங்கள் உங்கள் இறைவனை இந்த சந்திரனைப் பார்ப்பது போல் பார்ப்பீர்கள். அவனை பார்க்கும் விஷயத்தில் உங்களுக்கு எந்த இடையூறும் இருக்காது. சூரியன் உதயமாகும் முன் உள்ள சுப்ஹு தொழுகையையும், அது மறையும் முன் உள்ள (அஸர்) தொழுகையையும் நீங்கள் தொழுது கொண்டு வாருங்கள் (பேணி வாருங்கள்)” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:573. முஸ்லிம்:633)**

மற்றொரு அறிவிப்பில் “14 ஆம் நாள் இரவில் சந்திரனைப் பார்த்தார்கள்” என்று உள்ளது.

١٠٥٢ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ تَرَكَ صَلاَةَ الْعَصْرِ فَقَدْ حَبِطَ عَمَلُهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ

**1052** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அஸர் தொழுகையை ஒருவர் விட்டு விட்டால், அவரின் நல்ல அமல்கள் வீணாகி விடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:553)**

## ١٨٩ - بَابُ فضل المشي إِلَى الْمَسَاجِدِ

### பாடம் : 189 - பள்ளிவாசல்களுக்கு நடந்து செல்வதன் சிறப்பு

١٠٥٣ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ غَدَا إِلَى الْمَسْجِدِ أَوْ رَاحَ أَعَدَّ اللَّهُ لَهُ فِي الْجَنَّةِ نُزُلاً كُلَّمَا غَدَا أَوْ رَاحَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1053** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பள்ளிவாசலில் காலையில் அல்லது மாலையில் ஒருவர் இருந்தால், அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் காலையிலோ அல்லது மாலையிலோ விருந்தை தயார் செய்து அளிப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:662. முஸ்லிம்:669)**

١٠٥٤ - وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ تَطَهَّرَ فِي بَيْتِهِ ثُمَّ مَضَى إِلَى بَيْتٍ مِنْ بُيُوتِ اللَّهِ لِيَقْضِيَ فَرِيضَةً مِنْ فَرَائِضِ اللَّهِ كَانَتْ خُطُوَاتُهُ إِحْدَاهَا تَحُطُّ خَطِيئَةً وَالأُخْرَى تَرْفَعُ دَرَجَةً " . رَوَاهُ مُسْلِمٌ .

**1054** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"யார் தம் வீட்டில் உளூ செய்து, பிறகு அல்லாஹ்வின் பள்ளிகளில் ஒரு பள்ளிக்கு பர்லு தொழுகைகளில் ஒன்றை நிறைவேற்றச் செல்கிறாரோ, அவரின் கால் எட்டுகளில் ஒன்று அவரின் பாவத்தை அழிக்கும். மற்றொன்று அவரின் பதவியை உயர்த்தும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:666)**

١٠٥٥ - وَعَنْ أُبَيِّ بْنِ كَعْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَجُلٌ مِنَ الأَنْصَارِ لاَ أَعْلَمُ أَحَدًا أَبْعَدَ مِنَ الْمَسْجِدِ مِنْهُ وَكَانَتْ لاَ تُخْطِئُهُ صَلاَةٌ ! فَقِيلَ لَهُ : لَوْ اشْتَرَيْتَ حِمَارًا لِتَرْكَبَهُ فِي الظَّلْمَاءِ وَفِي الرَّمْضَاءِ . قَالَ : مَا يَسُرُّنِي أَنَّ مَنْزِلِي إِلَى جَنْبِ الْمَسْجِدِ إِنِّي أُرِيدُ أَنْ يُكْتَبَ لِي مَمْشَايَ إِلَى الْمَسْجِدِ وَرُجُوعِي إِذَا رَجَعْتُ إِلَى أَهْلِي . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ " قَدْ جَمَعَ اللَّهُ لَكَ ذَلِكَ كُلَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1055** உபை இப்னு கஅபு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(அன்சாரீகளான) மதீனாவாசிகளில் ஒருவர் இருந்தார். பள்ளிவாசலில் இருந்து வெகுதூரமான (இடத்தில் வாழ்ந்த) அவரைவிட ஒருவரை நான் அறிந்ததில்லை. (ஆனாலும்) தொழுகைக்கு (எப்போதும்) அவர் தவறியதில்லை. அப்போது அவரிடம், "இருளிலும், மேடான பகுதியிலும் ஏறிச் செல்வதற்காக கழுதை ஒன்றை நீங்கள் வாங்கலாம் தானே?" என்று கேட்கப்பட்டது. அப்போது அவர், "பள்ளிவாசல் அருகில் என் வீடு இருப்பது, எனக்கு மகிழ்ச்சி தரவில்லை. பள்ளிவாசலுக்கு நான் நடந்து செல்வதற்கும், என் குடும்பத்தாரிடம் நான் திரும்பிச் சென்றால் என் திரும்புதலுக்கும் எனக்கு நற்கூலி எழுதப்பட வேண்டும் என நான் விரும்புகிறேன்" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ் அவை அனைத்தையும் சேர்த்து உமக்கு வழங்குவானாக!" என்று துஆச் செய்தார்கள். **(முஸ்லிம்:663)**

١٠٥٦ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : خَلَتْ الْبِقَاعُ حَوْلَ الْمَسْجِدِ فَأَرَادَ بَنُو سَلَمَةَ أَنْ يَنْتَقِلُوا قُرْبَ الْمَسْجِدِ فَبَلَغَ ذَلِكَ النَّبِيَّ ﷺ فَقَالَ لَهُمْ : " بَلَغَنِي أَنَّكُمْ تُرِيدُونَ أَنْ تَنْتَقِلُوا قُرْبَ الْمَسْجِدِ ؟ " قَالُوا : نَعَمْ يَا رَسُولَ اللَّهِ قَدْ أَرَدْنَا ذَلِكَ . فَقَالَ : " بَنِي سَلَمَةَ دِيَارَكُمْ تُكْتَبْ آثَارُكُمْ دِيَارَكُمْ تُكْتَبْ آثَارُكُمْ " . فَقَالُوا : مَا يَسُرُّنَا أَنَّا كُنَّا تَحَوَّلْنَا . رَوَاهُ مُسْلِمٌ وَرَوَى الْبُخَارِيُّ مَعْنَاهُ مِنْ رِوَايَةِ أَنَسٍ .

**1056** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(மதீனா) பள்ளிவாசலைச் சுற்றிலும் சில இடங்கள் காலியாக இருந்தன. பனூ ஸலமா கூட்டத்தினர் பள்ளிவாசல் அருகே குடியேற விரும்பினார்கள். இது நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிய வந்தது. உடனே நபி (ஸல்) அவர்கள், "பள்ளிவாசல் அருகே நீங்கள் குடியேற விரும்புகிறீர்கள் என எனக்கு செய்தி கிடைத்ததே?" என்று அவர்களிடம் கேட்டார்கள். "ஆம், இறைத்தூதர் அவர்களே! அப்படியே விரும்புகிறோம்" என்று அவர்கள் கூறினார்கள். "பனூ ஸலமா கூட்டத்தாரே! உங்கள் வீடுகள் இருந்த இடத்திலேயே இருக்கட்டும். (தொழுகைக்காக நீங்கள் எடுத்து வைக்கும்) உங்களின் ஒவ்வொரு காலடிச் சுவடுகளுக்கும் (நன்மை) எழுதப்படும். உங்களின் வீடுகள் இருந்த இடத்திலேயே இருக்கட்டும். (தொழுகைக்காக நீங்கள் எடுத்து வைக்கும்) உங்களின் ஒவ்வொரு காலடிச் சுவடுகளுக்கும் (நன்மை) எழுதப்படும்" என்று (இருமுறை) நபி (ஸல்) கூறினார்கள். உடனே அவர்கள் "(எங்களின் வீடுகளை) நாங்கள் மாற்றிக் கொள்ள விரும்பவில்லை" என்று கூறினார்கள்.

**(முஸ்லிம்:665. அனஸ் (ரழி) அறிவித்து இதன் கருத்து புகாரியிலும் (656) உள்ளது)**

١٠٥٧ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ أَعْظَمَ النَّاسِ أَجْرًا فِي الصَّلَاةِ أَبْعَدُهُمْ إِلَيْهَا مَمْشًى فَأَبْعَدُهُمْ . وَالَّذِي يَنْتَظِرُ الصَّلَاةَ حَتَّى يُصَلِّيَهَا الإِمَامِ أَعْظَمُ أَجْرًا مِنَ الَّذِي يُصَلِّيهَا ثُمَّ يَنَامُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1057** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தொழுகைக்காக (பள்ளிவாசலுக்கு) வெகுதூரம் நடந்து வருபவர்தான், மக்களில் நற்கூலி அதிகம் பெறுபவர். பின்னர் அதற்கு அடுத்த தூரத்திலிருந்து வந்து தொழுபவராவார். தொழுகையை இமாமுடன் தொழுவதற்காக எதிர்பார்த்திருப்பவர், தனித்து தொழுதுவிட்டு, பின்னர் தூங்கி விடுபவரை விட நற்கூலி அதிகம் பெறுவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:651. முஸ்லிம்:662)**

١٠٥٨ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " بَشِّرُوا الْمَشَّائِينَ فِي الظُّلَمِ إِلَى الْمَسَاجِدِ بِالنُّورِ التَّامِّ يَوْمَ الْقِيَامَةِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ .

**1058** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பள்ளிவாசல்களுக்கு இருளில் நடந்து செல்பவர்கள், மறுமை நாளில் முழுமையான ஒளியை பெற்றவர்களாக இருப்பர் என அவர்களுக்கு சுபச் செய்தி கூறுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:561. திர்மிதீ:223)**

١٠٥٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَلَا أَدُلُّكُمْ عَلَى مَا يَمْحُو اللَّهُ بِهِ الْخَطَايَا وَيَرْفَعُ بِهِ الدَّرَجَاتِ ؟ " قَالُوا : بَلَى يَا رَسُولَ اللَّهِ . قَالَ : " إِسْبَاغُ الْوُضُوءِ عَلَى الْمَكَارِهِ وَكَثْرَةُ الْخُطَى إِلَى الْمَسَاجِدِ وَانْتِظَارُ الصَّلَاةِ بَعْدَ الصَّلَاةِ فَذَلِكُمْ الرِّبَاطُ فَذَلِكُمْ الرِّبَاطُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1059** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் பாவங்களை அழிக்கக்கூடியதும், உங்கள் அந்தஸ்துகளை உயர்த்தக் கூடியதுமான அமல்களை உங்களுக்குத் தெரிவிக்கட்டுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். உடனே

நபித்தோழர்கள், "இறைத்தூதர் அவர்களே! சரி" என்று கூறினார்கள். "சிரமமான (குளிர்) நேரத்திலும் உளூவை முழுமையாகச் செய்வது, மேலும் (நீண்ட தூரமானாலும்) பள்ளிவாசல் பக்கம் நடப்பதை அதிகப்படுத்துவது மற்றும் ஒரு தொழுகைக்குப் பின் மறு தொழுகையை எதிர்பார்த்திருப்பது ஆகியவைகளாகும். இவையே உங்களுக்கு (மனம் மற்றும் ஷைத்தானின் தீங்குகளை விட்டும்) பாதுகாப்பாகும். இவையே உங்களுக்கு பாதுகாப்பாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:251)**

١٠٦٠ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا رَأَيْتُمُ الرَّجُلَ يَعْتَادُ الْمَسَاجِدَ فَاشْهَدُوا لَهُ بِالْإِيمَانِ " . قَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ : إِنَّمَا يَعْمُرُ مَسَاجِدَ اللَّهِ مَنْ آمَنَ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ . الآيَةَ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1060** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பள்ளிவாசலுக்கு வழக்கமாக அதிகம் போய்வருபவராக ஒருவரை நீங்கள் கண்டால் அவருக்கு 'இறை நம்பிக்கை' உண்டு என சாட்சி கூறுங்கள். 'அல்லாஹ்வின் பள்ளிவாசல்களை நிர்வாகம் செய்பவர்கள் எல்லாம் (யாரெனில்) அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டு, தொழுகையைப் பேணி, ஜகாத் கொடுத்து, அல்லாஹ்வைத் தவிர எவரையும் பயப்படாத அவர்கள் தான். இவர்களே,நேர்வழி பெற்றவர்களில் உள்ளவர்களாவர்' என்று அல்லாஹ் (9:18) கூறி உள்ளான்" என நபி(ஸல்) கூறினார்கள். **(திர்மிதி:3093. இது "ஹஸன்" என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

## ١٩٠ – بَابُ فَضْلِ انْتِظَارِ الصَّلَاةِ

## பாடம் : 190 - தொழுகையை எதிர்பார்த்திருப்பதின் சிறப்பு!

١٠٦١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَزَالُ أَحَدُكُمْ فِي صَلاَةٍ مَا دَامَتِ الصَّلاَةُ تَحْبِسُهُ لاَ يَمْنَعُهُ أَنْ يَنْقَلِبَ إِلَى أَهْلِهِ إِلاَّ الصَّلاَةُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1061** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் தொழுகையை எதிர்பார்த்தவராக இருக்கும் காலம் எல்லாம் அவர் தொழுகையில் இருந்தவராவார். (பள்ளி வாசலை விட்டும்) தன் குடும்பத்தாரிடம் அவர் திரும்புவதை தொழுகையைத் தவிர வேறு எதுவும் அவரைத் தடுக்கவில்லை" என நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:659. முஸ்லிம்:649/275)**

١٠٦٢ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الْمَلاَئِكَةُ تُصَلِّي عَلَى أَحَدِكُمْ مَا دَامَ فِي مُصَلاَّهُ الَّذِي صَلَّى فِيهِ مَا لَمْ يُحْدِثْ تَقُولُ : اللَّهُمَّ اغْفِرْ لَهُ اللَّهُمَّ ارْحَمْهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ

**1062** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர், தான் தொழுத இடத்திலேயே உளூ முறியாதவராக இருக்கும் காலமெல்லாம் வானவர்கள் (அவருக்காக) பிரார்த்திக்கின்றனர். "இறைவா! அவரை மன்னிப்பாயாக! இறைவா! அவருக்கு அருள்புரிவாயாக!" என்று (வானவர்கள்) கூறுவர்" என நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:445, 659)**

١٠٦٣ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَخَّرَ لَيْلَةً صَلاَةَ الْعِشَاءِ إِلَى شَطْرِ اللَّيْلِ ثُمَّ أَقْبَلَ عَلَيْنَا بِوَجْهِهِ بَعْدَمَا صَلَّى فَقَالَ : " صَلَّى النَّاسُ وَرَقَدُوا وَلَمْ تَزَالُوا فِي صَلاَةٍ مُنْذُ انْتَظَرْتُمُوهَا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1063** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் இரவு இஷாத் தொழுகையை நடு இரவு வரை நபி (ஸல்) அவர்கள் தாமதப் படுத்தினார்கள். பின்பு தன் தொழுகையை முடித்த பின் எங்களை முன்னோக்கி நின்று, "மக்களில் சிலர் தொழுது விட்டு, உறங்கிவிட்டனர். ஆனால் நீங்கள் தொழுகையை எதிர்பார்த்திருந்ததால் தொழுகையிலேயே இருந்தவர்களாகிவிட்டீர்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:572)**

## ١٩١ – بَابُ فضل صَلاة الجماعة

## பாடம் : 191 - (ஜமாஅத்) கூட்டுத் தொழுகையின் சிறப்பு

١٠٦٤ – عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " صَلاَةُ الْجَمَاعَةِ أَفْضَلُ مِنْ صَلاَةِ الْفَذِّ بِسَبْعٍ وَعِشْرِينَ دَرَجَةً " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1064** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கூட்டுத் தொழுகை என்பது, தனித்துத் தொழுவதைவிட தகுதியால் 27 மடங்கு சிறந்ததாகும்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:645. முஸ்லிம்:650)**

١٠٦٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " صَلاَةُ الرَّجُلِ فِي جَمَاعَةٍ تَضْعُفُ عَلَى صَلاَتِه فِي بَيْتِه وَفِي سُوقِه خَمْسًا وَعِشْرِينَ ضِعْفًا وَذَلِكَ أَنَّهُ إِذَا تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ ثُمَّ خَرَجَ إِلَى الْمَسْجِد لاَ يُخْرِجُهُ إِلاَّ الصَّلاَةُ لَمْ يَخْطُ خُطْوَةً إِلاَّ رُفِعَتْ لَهُ بِهَا دَرَجَةٌ وَحُطَّتْ عَنْهُ بِهَا خَطِيئَةٌ . فَإِذَا صَلَّى لَمْ تَزَلِ الْمَلاَئِكَةُ تُصَلِّي عَلَيْهِ مَا دَامَ فِي مُصَلاَّهُ مَا لَمْ يُحْدِثْ تَقُولُ : اللَّهُمَّ صَلِّ عَلَيْهِ اللَّهُمَّ ارْحَمْهُ . وَلاَ يَزَالُ فِي صَلاَةٍ مَا انْتَظَرَ الصَّلاَةَ ! " مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ .

**1065** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர், மற்றவருடன் கூட்டாகத் தொழுவது, தன் வீட்டில், தன் கடையில் தனித்துத் தொழுவதைவிட 25 மடங்கு கூடுதல் நன்மையாகும். ஒருவர் அழகிய முறையில் உளூச்செய்து, பின்பு தொழுகைக்காக பள்ளிவாசலுக்கு வந்தால், அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடிக்கும் ஒரு பதவி உயர்த்தப்படும். அவர் தொழுது விட்டதும் தான் தொழுத இடத்தில், தன் உளூ முறியாமல் அவர் அமர்ந்திருந்தால், வானவர்கள் அவருக்காக, "இறைவா! இவரை மன்னிப்பாயாக! இறைவா! இவருக்கு அருள் புரிவாயாக" என்று கூறி பிரார்த்திப்பார்கள். அவர் தொழுகையை எதிர்பார்த்து பள்ளியில் இருக்கும் காலமெல்லாம், அவர் தொழுது கொண்டிருப்பவர் போன்றவராவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:647. முஸ்லிம்:649)**

١٠٦٦ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( قَالَ : أَتَى النَّبِيَّ ﷺ رَجُلٌ أَعْمَى فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ لَيْسَ لِي قَائِدٌ يَقُودُنِي إِلَى الْمَسْجِد فَسَأَلَ رَسُولَ اللَّهِ ﷺ أَنْ يُرَخِّصَ لَهُ فَيُصَلِّيَ فِي بَيْتِه فَرَخَّصَ لَهُ فَلَمَّا وَلَّى دَعَاهُ فَقَالَ لَهُ : " هَلْ تَسْمَعُ النِّدَاءَ بِالصَّلاَةِ ؟ " قَالَ : نَعَمْ . قَالَ : " فَأَجِبْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1066** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி(ஸல்) அவர்களிடம் பார்வையற்ற ஒரு மனிதர் வந்தார். அவர், "இறைத்தூதர் அவர்களே! பள்ளிவாசலுக்கு என்னை அழைத்து வருபவர் எவருமில்லை" என்று கூறிய அவர், தன் வீட்டிலேயே தொழுது கொள்ள தனக்கு அனுமதி அளிக்கும்படி நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். உடனே நபி

(ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதி அளித்தார்கள். அவர் திரும்பியபோது அவரை அழைத்த நபி(ஸல்) அவர்கள், "தொழுகைக்காக பாங்கு சப்தத்தைக் கேட்கிறீரா?" என்று கேட்டார்கள். "ஆம்" என்றார். "அப்படியானால் (பள்ளிக்கு வந்து ஜமாஅத்துடன் தொழுது) பதில் கூறுவீராக!" என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:653)**

١٠٦٧ – وَعَنْ عَبْدِ اللَّهِ – وَقِيلَ : عَمْرُو بْنُ قَيْسٍ الْمَعْرُوفُ بِابْنِ أُمِّ مَكْتُومٍ الْمُؤَذِّنُ – رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ قَالَ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ الْمَدِينَةَ كَثِيرَةُ الْهَوَامِّ وَالسِّبَاعِ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " تَسْمَعُ حَيَّ عَلَى الصَّلَاةِ حَيَّ عَلَى الْفَلَاحِ فَحَيَّهَلاً " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ . وَمَعْنَى " حَيَّهَلاً " : تَعَالَ .

**1067** நபி (ஸல்) அவர்களின் (பள்ளியில்) பாங்கு கூறுபவரும், இப்னு உம்மி மக்தூம் என்று அறியப்பட்ட நபி (ஸல்) அவர்களின் முஅத்தின் ஆவார். அம்ரு இப்னு கய்ஸ் என்று கூறப்படுகின்ற அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! மதீனாவில் நச்சு பிராணிகளும், காட்டு மிருகங்களும் அதிகமாக உள்ளது. (கண் தெரியாத எனக்கு வர இயலவில்லை)" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஹய்ய அலஸ் ஸலாத், ஹய்ய அலல் ஃபலாஹ் (தொழுகைக்கு விரைந்து வாருங்கள். வெற்றிக்கு விரைந்து வாருங்கள்) என்பதைக் கேட்கிறீர்கள்தானே. அப்படியானால் (தொழுகைக்காக) பள்ளிவாசலுக்கு வாருங்கள்" என்று கூறினார்கள். **(அபூதாவூது:553)**

١٠٦٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَقَدْ هَمَمْتُ أَنْ آمُرَ بِحَطَبٍ فَيُحْتَطَبَ ثُمَّ آمُرَ بِالصَّلَاةِ فَيُؤَذَّنَ لَهَا ثُمَّ آمُرَ رَجُلاً فَيَؤُمَّ النَّاسَ ثُمَّ أُخَالِفَ إِلَى رِجَالٍ فَأُحَرِّقَ عَلَيْهِمْ بُيُوتَهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1068** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக, விறகு கொண்டு வர நான் கட்டளையிட்டுவிட்டு, பின்பு தொழுவதற்காக பாங்கு கூறக் கட்டளையிட்டு, அதன்பின் ஒருவரை மக்களுக்கு இமாமத் செய்யவும் சொல்லிவிட்டு (தொழுகைக்கு வராத) ஆண்களிடம் நான் சென்று அவர்களை அவர்களின் வீட்டோடு எரித்து விட விரும்புகிறேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:644. முஸ்லிம்:651)**

١٠٦٩ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : : مَنْ سَرَّهُ أَنْ يَلْقَى اللَّهَ تَعَالَى غَدًا مُسْلِمًا فَلْيُحَافِظْ عَلَى هَؤُلَاءِ الصَّلَوَاتِ حَيْثُ يُنَادَى بِهِنَّ فَإِنَّ اللَّهَ شَرَعَ لِنَبِيِّكُمْ ﷺ سُنَنَ الْهُدَى وَإِنَّهُنَّ مِنْ سُنَنِ الْهُدَى وَلَوْ أَنَّكُمْ صَلَّيْتُمْ فِي بُيُوتِكُمْ كَمَا يُصَلِّي هَذَا الْمُتَخَلِّفُ فِي بَيْتِهِ لَتَرَكْتُمْ سُنَّةَ نَبِيِّكُمْ وَلَوْ تَرَكْتُمْ سُنَّةَ نَبِيِّكُمْ لَضَلَلْتُمْ . وَلَقَدْ رَأَيْتُنَا وَمَا يَتَخَلَّفُ عَنْهَا إِلَّا مُنَافِقٌ مَعْلُومُ النِّفَاقِ وَلَقَدْ كَانَ الرَّجُلُ يُؤْتَى بِهِ يُهَادَى بَيْنَ الرَّجُلَيْنِ حَتَّى يُقَامَ فِي الصَّفِّ . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ قَالَ : إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ عَلَّمَنَا سُنَنَ الْهُدَى ; وَإِنَّ مِنْ سُنَنِ الْهُدَى الصَّلَاةَ فِي الْمَسْجِدِ الَّذِي يُؤَذَّنُ فِيهِ .

**1069** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாளை (மறுமையில்) அல்லாஹ்வை முஸ்லிமாகவே இருந்து ஒருவன் சந்திக்க விரும்பினால், பாங்கு கூறி அழைக்கப்பட்டதும், ஐந்து நேரத் தொழுகைகளைப் பேணட்டும். நிச்சயமாக! அல்லாஹ் உங்களின் நபியவர்களுக்கு நேரான வழிமுறைகளை கடமையாக்கி உள்ளான். நிச்சயமாக! இவைகளும் நேரான வழிமுறைகளில் உள்ளவைகளே! தொழுகைக்கு வரப் பிந்தியவர் தன் வீட்டில் தொழுதவர் போல், உங்கள் வீடுகளிலேயே நீங்கள் தொழுதால், உங்கள் நபியவர்களின் வழிமுறையை விட்டவர்களாவீர்கள். உங்கள் நபியவர்களின் வழிமுறையை நீங்கள் விட்டுவிட்டால்,

நீங்கள் வழி தவறியவராவீர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். நயவஞ்சகத்தனம் தெளிவாக அறியப்பட்ட நயவஞ்சகரைத் தவிர வேறு எவரும் தொழுகைக்கு வராமல் இருந்ததில்லை. (எங்கள் காலத்தில் நடக்க இயலாத நிலையில் இருப்பவர் கூட) இரண்டு மனிதர்களின் தோள்களைப் பிடித்தவராக கொண்டு வரப்பட்டு முதல் வரிசையில் நிறுத்தப்படுவார் (என்ற நிலை இருந்தது). **(முஸ்லிம்:654)**

மற்றொரு அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள், நேரான வழிமுறைகளை எங்களுக்குக் கற்றுக் கொடுத்தார்கள். நேரான வழிமுறைகளில் ஒன்றாக, பாங்கு கூறப்படும் பள்ளிவாசலில் தொழுவதும் இருந்தது'' என்று உள்ளது.

١٠٧٠ - وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ ثَلاَثَةٍ فِي قَرْيَةٍ وَلاَ بَدْوٍ لاَ تُقَامُ فِيهِمْ الصَّلاَةُ إلاَّ قَدْ اسْتَحْوَذَ عَلَيْهِمْ الشَّيْطَانُ ! فَعَلَيْكُمْ بِالْجَمَاعَةِ , فَإِنَّمَا يَأْكُلُ الذِّئْبُ مِنَ الْغَنَمِ الْقَاصِيَةَ ! " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1070** அபூதர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு கிராமத்திலோ, ஒரு காட்டிலோ மூன்று (முஸ்லிம்) நபர்கள் இருந்து, அவர்களிடையே தொழுகை பேணப்படவில்லையானால், அவர்களை ஷைத்தான் சூழ்ந்து கொள்ளாமல் இருப்பதில்லை. எனவே, ஜமாஅத்தைப் பேணிக் கொள்ளுங்கள். ஏனெனில் பிரிந்து தூரமாக நிற்கும் ஆட்டைத்தான் ஓநாய் பிடித்து சாப்பிடும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:547)**

## ١٩٢ - باب الْحَثّ على حضور الجماعة في الصّبح والعشاء

## பாடம் : 192 - சுப்ஹு, இஷாத் தொழுகைகளில் ஜமாஅத்தில் கலந்து கொள்ள ஆர்வமூட்டுதல்!

١٠٧١ - عَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ صَلَّى الْعِشَاءَ فِي جَمَاعَةٍ فَكَأَنَّمَا قَامَ نِصْفَ اللَّيْلِ وَمَنْ صَلَّى الصُّبْحَ فِي جَمَاعَةٍ فَكَأَنَّمَا صَلَّى اللَّيْلَ كُلَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةِ التِّرْمِذِيِّ عَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ شَهِدَ الْعِشَاءَ فِي جَمَاعَةٍ كَانَ لَهُ قِيَامُ نِصْفِ لَيْلَةٍ ; وَمَنْ شَهِدَ الْعِشَاءَ وَالْفَجْرَ فِي جَمَاعَةٍ كَانَ لَهُ كَقِيَامِ لَيْلَةٍ " . قَالَ التِّرْمِذِيُّ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1071** உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஜமாஅத்துடன் இஷாவை ஒருவர் தொழுதால், பாதி இரவு வரை அவர் வணங்கியவர் போலாவார். ஜமாஅத்துடன் சுப்ஹுவைத் தொழுதால் அவர் இரவு முழுவதும் வணங்கியவர் போலாவார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:656)**

உஸ்மான் இப்னு அஃபான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஜமாஅத்தில் இஷாத் தொழுகைக்காக ஒருவர் கலந்து கொண்டால், அவருக்குப் பாதி இரவு வரை வணங்கிய நன்மை கிடைக்கும். ஜமாஅத்தில் இஷா, சுப்ஹு ஆகிய தொழுகைகளைத் தொழுதால், அவருக்கு இரவு முழுவதும் நின்று தொழுத நன்மை கிடைக்கும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:221. இது 'ஸஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٠٧٢ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " وَلَوْ يَعْلَمُونَ مَا فِي الْعَتَمَةِ وَالصُّبْحِ لأَتَوْهُمَا وَلَوْ حَبْوًا ! " مُتَّفَقٌ عَلَيْهِ . وَقَدْ سَبَقَ بِطُولِهِ 1 - 1033 .

**1072** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இஷா மற்றும் சுப்ஹுத் தொழுகையின் மாண்பை மக்கள் அறிந்து கொண்டால், அவர்கள் (நடக்க முடியாவிட்டால்) தவழ்ந்தேனும் அந்த இரண்டு தொழுகைகளுக்கும் வருவார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:615. முஸ்லிம்:437)**

١٠٧٣ – وَعَنْهُ ) أَبو هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " لَيْسَ صَلاَةٌ أَثْقَلَ عَلَى الْمُنَافِقِينَ مِنْ صَلاَةِ الْفَجْرِ وَالْعِشَاءِ وَلَوْ يَعْلَمُونَ مَا فِيهِمَا لأَتَوْهُمَا وَلَوْ حَبْوًا ! " . مُتَّفَقٌ عَلَيْه .

**1073** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நயவஞ்சகர்களுக்கு சுப்ஹு, இஷாத் தொழுகைகளை விட கடுமையானதாக வேறு எதுவும் இல்லை. அவ்விரண்டிலும் உள்ளதை (சிறப்பை) அவர்கள் அறிந்து கொண்டால், தவழ்ந்தேனும் அவ்விரண்டு (சுப்ஹு-இஷா) தொழுகைகளுக்கும் வருவார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:657. முஸ்லிம்:651)**

## ١٩٣ – باب الأمر بالمحافظة عَلَى الصّلوات المكتوبات والنهي الأكيد والوعيد الشديد في تركهن

## பாடம் : 193 - கடமையான தொழுகைகளைப் பேணுவதன் கட்டளை மற்றும் அவற்றை விடுவதன் மீதும் கடும் எச்சரிக்கை!

قَالَ اللَّهُ تَعَالَى : حَافِظُوا عَلَى الصَّلَوَاتِ وَالصَّلاَةِ الْوُسْطَى .وَقَالَ تَعَالَى : فَإِنْ تَابُوا وَأَقَامُوا الصَّلاَةَ وَآتَوُا الزَّكَاةَ فَخَلُّوا سَبِيلَهُمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *தொழுகைகளையும், நடுத்தொழுகையையும் (அஸர் தொழுகையையும்) பேணுங்கள். (2 : 238)*

*அவர்கள் பாவமன்னிப்புச் செய்து, தொழுகையைப் பேணி, ஜகாத் கொடுத்தும் விடுவார்களானால், அவர்களின் பாதையை அவர்களுக்கு நீங்கள் விட்டு விடுங்கள். (9:5)*

١٠٧٤ – وَعَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَأَلْت رَسُولَ اللَّه ﷺ : أَيُّ الأَعْمَالِ أَفْضَلُ ؟ قَالَ : " الصَّلاَةُ عَلَى وَقْتِهَا " . قُلْت : ثُمَّ أَيٌّ ؟ قَالَ : " بِرُّ الْوَالِدَيْنِ " . قُلْت : ثُمَّ أَيٌّ ؟ قَالَ : " الْجِهَادُ فِي سَبِيلِ اللَّه " . مُتَّفَقٌ عَلَيْه .

**1074** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"செயல்களில் மிகச் சிறந்தது எது?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். "உரிய நேரத்தில் தொழுவது" என்று நபி (ஸல்) கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்டேன். "பெற்றோருக்கு நன்மை செய்தல்" என்று கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்டேன். "அல்லாஹ்வின் வழியில் அறப்போர் (ஜிஹாத்) செய்தல்" என்று கூறினார்கள்.

**(புகாரி:527. முஸ்லிம்:85)**

١٠٧٥ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " بُنِيَ الأَسْلاَمُ عَلَى خَمْسٍ : شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ وَإِقَامِ الصَّلاَةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَحَجِّ الْبَيْتِ وَصَوْمِ رَمَضَانَ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1075** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஐந்து விஷயங்கள் மீது இஸ்லாம் எழுப்பப்பட்டுள்ளது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

1. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார் என்று சாட்சி கூறுவது.
2. ஐந்து நேரத் தொழுகையைப் பேணுவது.
3. ஜகாத் கொடுப்பது
4. ஹஜ் செய்வது
5. ரமளானில் நோன்பு வைப்பது'' **(புகாரி:8. முஸ்லிம்:16)**

١٠٧٦ – وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَشْهَدُوا أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ وَيُقِيمُوا الصَّلاَةَ وَيُؤْتُوا الزَّكَاةَ . فَإِذَا فَعَلُوا ذَلِكَ عَصَمُوا مِنِّي دِمَاءَهُمْ وَأَمْوَالَهُمْ إِلاَّ بِحَقِّ الأِسْلاَمِ وَحِسَابُهُمْ عَلَى اللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . انْظُرْ شَرْحَ الْحَدِيثِ وَتَخْرِيجَهُ فِي بَابِ إِجْرَاءِ الأَحْكَامِ عَلَى الظَّاهِرِ رَقْم : 1 – 390

**1076** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மது (ஸல்), அல்லாஹ்வின் தூதர் ஆவார்கள் என்று அவர்கள் சாட்சி கூறி, தொழுகையை பேணி, ஜகாத்தை அவர்கள் கொடுக்கும் வரையிலும் மக்களிடம் நான் போரிட கட்டளையிடப்பட்டுள்ளேன். இதை அவர்கள் செய்துவிட்டால், இஸ்லாம் கூறும் கடமையைத் தவிர தங்களின் இரத்தத்தையும், தங்களின் சொத்துக்களையும் பாதுகாத்துக் கொள்வார்கள். அவர்களின் கேள்வி கணக்கு, அல்லாஹ்விடமே உள்ளது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:25. முஸ்லிம்:22)**

١٠٧٧ – وَعَنْ مُعَاذ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَعَثَنِي رَسُولُ اللَّهِ ﷺ إِلَى الْيَمَنِ فَقَالَ : " إِنَّكَ تَأْتِي قَوْمًا مِنْ أَهْلِ الْكِتَابِ فَادْعُهُمْ إِلَى شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنِّي رَسُولُ اللَّهِ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذَلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللَّهَ تَعَالَى افْتَرَضَ عَلَيْهِمْ خَمْسَ صَلَوَاتٍ فِي كُلِّ يَوْمٍ وَلَيْلَةٍ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذَلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللَّهَ تَعَالَى افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً تُؤْخَذُ مِنْ أَغْنِيَائِهِمْ فَتُرَدُّ عَلَى فُقَرَائِهِمْ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذَلِكَ فَإِيَّاكَ وَكَرَائِمَ أَمْوَالِهِمْ . وَاتَّقِ دَعْوَةَ الْمَظْلُومِ فَإِنَّهُ لَيْسَ بَيْنَهَا وَبَيْنَ اللَّهِ حِجَابٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1077** முஆத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் என்னை ஏமன் நாட்டுக்கு அனுப்பினார்கள். அப்போது ''(முஆதே!) நீர் வேதம் அறிந்த மக்களிடம் செல்கிறீர். 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதர்' என்று சாட்சி கூறுமாறு அவர்களை நீர் அழைப்பீராக! இதற்கு அவர்கள் கட்டுப்பட்டால், ஒவ்வொரு நாளும் ஐந்து நேரத் தொழுகைகளை அவர்கள் மீது அல்லாஹ் கடமையாக்கி இருக்கிறான் என்பதை அவர்களுக்குக் கற்றுக்கொடுப்பீராக! இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால், நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது ஜகாத்தை கடமையாக்கியுள்ளான். அவர்களில் பணக்காரர்களிடம் எடுத்து, மக்களில் ஏழைகளிடம் கொடுப்பது என்று அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பீராக!இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால், அவர்களின் விலை உயர்ந்த பொருட்களை (எடுப்பது) குறித்து உம்மை எச்சரிக்கிறேன். அநீதம் செய்யப்பட்டவனின் பிரார்த்தனைக்கு நீர் பயப்படுவீராக! நிச்சயமாக அதற்கும் (அந்த துஆவுக்கும்), அல்லாஹ்வுக்கு மிடையே எந்தத் திரையும் (தடையும்) இல்லை'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1496. முஸ்லிம்:19)**

١٠٧٨ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ بَيْنَ الرَّجُلِ وَبَيْنَ الشِّرْكِ وَالْكُفْرِ تَرْكَ الصَّلاَةِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1078** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதனுக்கும் (ஒரு மனிதனின் ஈமானுக்கும்) - இணை வைத்தலுக்கும் இடையே வேறுபாடு, தொழுகையை விடுவதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:82)**

١٠٧٩ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " الْعَهْدُ الَّذِي بَيْنَنَا وَبَيْنَهُمْ الصَّلاَةُ فَمَنْ تَرَكَهَا فَقَدْ كَفَرَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1079** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நமக்கும் (முஸ்லிமல்லாத) அவர்களுக்குமிடையே உள்ள ஒப்பந்தம் தொழுகைதான். தொழுகையை விடுகிறவர், இறைமறுப்பாளர் ஆகிறார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2621. இது 'ஹஸன் ஸஹீஹ்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٠٨٠ – وَعَنْ شَقِيقِ بْنِ عَبْدِ اللَّهِ التَّابِعِيِّ الْمُتَّفَقِ عَلَى جَلاَلَتِهِ رَحِمَهُ اللَّهُ تَعَالَى قَالَ : كَانَ أَصْحَابُ مُحَمَّدٍ ﷺ لاَ يَرَوْنَ شَيْئًا مِنَ الأَعْمَالِ تَرْكُهُ كُفْرٌ غَيْرَ الصَّلاَةِ ! رَوَاهُ التِّرْمِذِيُّ فِي كِتَابِ الأَيْمَانِ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1080** ஷகீக் இப்னு அப்துல்லாஹ் (ரஹ்) கூறுகிறார்கள்:

நபி (ஸல்) அவர்களின் தோழர்கள், செயல்களில் தொழுகையை விட்டுவிடுவதைத் தவிர மற்ற எதையும் இறை மறுப்பாகக் கருத மாட்டார்கள்.

**(திர்மிதீயில் (2622) 'ஈமான்' எனும் அத்தியாயத்தில் உள்ளது)**

١٠٨١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ أَوَّلَ مَا يُحَاسَبُ بِهِ الْعَبْدُ يَوْمَ الْقِيَامَةِ مِنْ عَمَلِهِ صَلاَتُهُ فَإِنْ صَلَحَتْ فَقَدْ أَفْلَحَ وَأَنْجَحَ وَإِنْ فَسَدَتْ فَقَدْ خَابَ وَخَسِرَ فَإِنْ انْتَقَصَ مِنْ فَرِيضَتِهِ شَيْئًا قَالَ الرَّبُّ عَزَّ وَجَلَّ : انْظُرُوا هَلْ لِعَبْدِي مِنْ تَطَوُّعٍ فَيُكَمِّلُ بِهَا مَا انْتَقَصَ مِنَ الْفَرِيضَةِ ؟ ثُمَّ تَكُونُ سَائِرُ أَعْمَالِهِ عَلَى هَذَا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1081** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் ஓர் அடியான் அவனின் செயல் பற்றி கணக்குக் கேட்கப்படுவதில் முதன்மையானது, தொழுகைதான். அது சீராக இருந்தால் அவர் வெற்றி பெற்று, நல்லவராகிவிட்டார். அது கெட்டு விட்டால், அவர் கவலையும், துயரமும் அடைந்தவராவார். அவரது கடமையான தொழுகையில் ஏதும் குறை இருந்தால், "என் அடியானிடம் உபரியான நன்மை உண்டா? என்று பாருங்கள்" என அல்லாஹ் கூறுவான். கடமையான தொழுகையில் உள்ள குறைகள் அதன் மூலம் நிறைவு செய்யப்படும். பின்பு இது மாதிரியே மற்றச் செயல்களும் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:413. இது 'ஹஸன்' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٩٤ – بابُ فضل الصّفّ الأوّل والأمر بإتمام الصفوف الأُوَل وتسويتها والتراصّ فيها

## பாடம் : 194 - முதல் வரிசையின் சிறப்பு, முதல் வரிசைகளை முழுமைப்படுத்தி நெருங்கி, சமமாக நிற்கக் கட்டளை.

١٠٨٢ – عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : خَرَجَ عَلَيْنَا رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ : " أَلاَ تَصُفُّونَ كَمَا تَصُفُّ الْمَلاَئِكَةُ عِنْدَ رَبِّهَا ؟ " فَقُلْنَا : يَا رَسُولَ اللَّهِ وَكَيْفَ تَصُفُّ الْمَلاَئِكَةُ عِنْدَ رَبِّهَا ؟ قَالَ : " يُتِمُّونَ الصُّفُوفَ الأُوَلَ وَيَتَرَاصُّونَ فِي الصَّفِّ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1082** ஜாபிர் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து, "வானவர்கள் தங்களின் இறைவன் முன் அணிவகுப்பது போல் நீங்கள் அணிவகுக்கக் கூடாதா?" என்று கூறினார்கள். அப்போது, "இறைத்தூதர் அவர்களே! வானவர்கள் தங்கள் இறைவன் முன் எப்படி அணிவகுத்து நிற்பார்கள்?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "வானவர்கள் தங்களின் இறைவன் முன் முதல் வரிசைகளில் நிற்பார்கள். மேலும் வரிசையிலும் மிக நெருக்கமாக நிற்பார்கள்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:430)**

١٠٨٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لَوْ يَعْلَمُ النَّاسُ مَا فِي النِّدَاءِ وَالصَّفِّ الأَوَّلِ ثُمَّ لَمْ يَجِدُوا إِلاَّ أَنْ يَسْتَهِمُوا عَلَيْهِ لاَسْتَهَمُوا " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1083** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பாங்கு கூறுவதிலும், முதல் வரிசையில் உள்ள சிறப்பையும் மக்கள் அறிந்து, பிறகு அவ்விரண்டும் சீட்டுக் குலுக்கல் மூலம்தான் பெறமுடியும் என்றிருந்தால், (அவர்கள் அதற்கும் தயாராகி) சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:615, முஸ்லிம்:437)**

١٠٨٤ - وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " خَيْرُ صُفُوفِ الرِّجَالِ أَوَّلُهَا وَشَرُّهَا آخِرُهَا وَخَيْرُ صُفُوفِ النِّسَاءِ آخِرُهَا وَشَرُّهَا أَوَّلُهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1084** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தொழுகையில்) ஆண்களின் வரிசைகளில் சிறந்தது, அவற்றில் முதலாவதாகும். அதில் கெட்டது கடைசியாகும். பெண்களின் வரிசைகளில் சிறந்தது, அவற்றில் கடைசியாகும். அதில் கெட்டது முதலாவதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:440)**

١٠٨٥ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ رَأَى فِي أَصْحَابِهِ تَأَخُّرًا فَقَالَ لَهُمْ : " تَقَدَّمُوا فَائْتَمُّوا بِي وَلْيَأْتَمَّ بِكُمْ مَنْ بَعْدَكُمْ لاَ يَزَالُ قَوْمٌ يَتَأَخَّرُونَ حَتَّى يُؤَخِّرَهُمُ اللَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1085** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள், தங்களின் தோழர்களில் சிலரை (தொழுகைக்கு) பிந்தி வரக் கண்டார்கள். அப்போது அவர்களிடம், "நீங்கள் (ஜமாஅத்திற்கு) முந்துங்கள். என்னைப் பின்பற்றுங்கள். உங்களுக்குப் பின் வந்தோர் உங்களைப் பின் தொடரட்டும்! தொடர்ந்து (தொழுகைக்கு) பிந்தி வரக்கூடிய கூட்டத்தார்களை அல்லாஹ்வும் பிற்படுத்தி விடுவான்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:438)**

١٠٨٦ - وَعَنْ أَبِي مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَمْسَحُ مَنَاكِبَنَا فِي الصَّلاَةِ وَيَقُولُ : " اسْتَوُوا وَلاَ تَخْتَلِفُوا فَتَخْتَلِفَ قُلُوبُكُمْ لِيَلِنِي مِنْكُمْ أُولُو الأَحْلاَمِ وَالنُّهَى ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1086** அபூமஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் எங்களின் தோள்பட்டைகளைத் தடவியவர்களாக, "நீங்கள் வரிசையில் சமமாக நில்லுங்கள். நீங்கள் பிரிந்து நிற்காதீர்கள். உங்களின் இதயங்கள் பிரிந்து விடும். உங்களில் என்னை அடுத்து, அறிவுடையோர் நிற்கட்டும். பின்பு அவர்களுக்கு அடுத்த நிலையில் உள்ளோர் நிற்கட்டும். பின்பு அதற்கு அடுத்த நிலையில் உள்ளோர் நிற்கட்டும்" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:432)**

١٠٨٧ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " سَوُّوا صُفُوفَكُمْ فَإِنَّ تَسْوِيَةَ الصُّفُوفِ مِنْ تَمَامِ الصَّلَاةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ ; وَفِي رِوَايَةٍ لِلْبُخَارِيِّ : " فَإِنَّ تَسْوِيَةَ الصُّفُوفِ مِنْ إِقَامَةِ الصَّلَاةِ " .

**1087** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் (தொழுகை) வரிசைகளைச் சீர்படுத்துங்கள். வரிசையின் ஒழுங்கு, தொழுகையை முழுமைபடுத்துவதில் உள்ளது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:723. முஸ்லிம்:433)**

(புகாரியின் மற்றொரு அறிவிப்பில், "வரிசைகளை ஒழுங்குபடுத்துவது, தொழுகையைப் பேணுவதில் உள்ளதாகும்" என்று உள்ளது)

١٠٨٨ - وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ : أُقِيمَتِ الصَّلَاةُ فَأَقْبَلَ عَلَيْنَا رَسُولُ اللَّهِ بِوَجْهِهِ فَقَالَ : " أَقِيمُوا صُفُوفَكُمْ وَتَرَاصُّوا فَإِنِّي أَرَاكُمْ مِنْ وَرَاءِ ظَهْرِي " . رَوَاهُ الْبُخَارِيُّ بِلَفْظِهِ وَمُسْلِمٌ بِمَعْنَاهُ . وَفِي رِوَايَةٍ لِلْبُخَارِيِّ : " وَكَانَ أَحَدُنَا يُلْزِقُ مَنْكِبَهُ بِمَنْكِبِ صَاحِبِهِ وَقَدَمَهُ بِقَدَمِهِ "

**1088** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொழுகைக்கு இகாமத் கூறப்பட்டது. எங்களை நோக்கிய நபி (ஸல்) அவர்கள், "உங்கள் வரிசைகளைப் பேணுங்கள். நெருங்கி நில்லுங்கள். நான் என் முதுகுக்குப் பின்னாலிருந்து உங்களைப் பார்க்கிறேன்" என்று கூறினார்கள். **(புகாரி:719. முஸ்லிமில் (434) இதன் கருத்து உள்ளது)**

புகாரியின் மற்றொரு அறிவிப்பில் "எங்களில் ஒருவர் தன் தோள்பட்டை தன் அருகே நிற்பவரின் தோள்பட்டையுடனும், தன் பாதத்தை அவரின் பாதத்துடனும் சேர்த்து நிற்பார்" என்று உள்ளது. **(புகாரி:725)**

١٠٨٩ - وَعَنِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " لَتُسَوُّنَّ صُفُوفَكُمْ أَوْ لَيُخَالِفَنَّ اللَّهُ بَيْنَ وُجُوهِكُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يُسَوِّي صُفُوفَنَا حَتَّى كَأَنَّمَا يُسَوِّي بِهَا الْقِدَاحَ حَتَّى رَأَى أَنَّا قَدْ عَقَلْنَا عَنْهُ . ثُمَّ خَرَجَ يَوْمًا فَقَامَ حَتَّى كَادَ يُكَبِّرُ فَرَأَى رَجُلًا بَادِيًا صَدْرُهُ مِنَ الصَّفِّ فَقَالَ : " عِبَادَ اللَّهِ لَتُسَوُّنَّ صُفُوفَكُمْ أَوْ لَيُخَالِفَنَّ اللَّهُ بَيْنَ وُجُوهِكُمْ " .

**1089** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் (தொழுகை) வரிசைகளைச் சரி செய்யுங்கள். (இல்லையெனில்) உங்களின் முகத்தை அல்லாஹ் வேறுபடுத்தி விடுவான்" என்று நபி (ஸல்) கூறக்கேட்டேன். **(புகாரி:717. முஸ்லிம்:436)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "அம்புகளைச் சரியாக வைப்பது போல், எங்களின் வரிசைகளை நபி (ஸல்) அவர்கள் சரி செய்வார்கள். இறுதியில் அதை நாங்கள் விளங்கிக் கொண்டோமா என்பதையும் பார்ப்பார்கள். பின்பு அவர்கள் ஒருநாள் தொழுகைக்காக வீட்டிலிருந்து வந்து நின்று, தக்பீர் கூற முயன்றார்கள். அப்போது ஒருவர் தன் நெஞ்சை வரிசையை விட்டும் விலகியவராக இருக்கக் கண்டார்கள். "அல்லாஹ்வின் அடியார்களே! உங்களின் வரிசைகளைச் சரி செய்யுங்கள். (இல்லையெனில்) உங்களுக்கு மத்தியில் அல்லாஹ் வேறுபாட்டை உருவாக்குவான்" என்று கூறினார்கள்" என்று உள்ளது.

١٠٩٠ - وَعَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَتَخَلَّلُ الصَّفَّ مِنْ نَاحِيَةٍ إِلَى نَاحِيَةٍ يَمْسَحُ صُدُورَنَا وَمَنَاكِبَنَا وَيَقُولُ : " لَا تَخْتَلِفُوا فَتَخْتَلِفَ قُلُوبُكُمْ " . وَكَانَ يَقُولُ : " إِنَّ اللَّهَ وَمَلَائِكَتَهُ يُصَلُّونَ عَلَى الصُّفُوفِ الْأُوَلِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**1090** பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் வரிசையின் ஒரு பகுதியிலிருந்து மறுபகுதிக்குச் செல்வார்கள். எங்களின் நெஞ்சுகளையும், தோள்பட்டைகளையும் தடவுவார்கள். "நீங்கள் மாறுபட்டு நிற்காதீர்கள். உங்களின் இதயங்கள் மாறுபட்டு விடும்" என்று கூறிவிட்டு, "நிச்சயமாக அல்லாஹ் முதல் வரிசைகளில் உள்ளோருக்கு அருள்புரிகிறான். வானவர்கள் அவர்களுக்கு அருள்புரிய வேண்டுகிறார்கள்" என்றும் கூறினார்கள். **(அபூதாவூது:664)**

١٠٩١ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَقِيمُوا الصُّفُوفَ وَحَاذُوا بَيْنَ الْمَنَاكِبِ وَسُدُّوا الْخَلَلَ وَلِينُوا بِأَيْدِي إِخْوَانِكُمْ وَلاَ تَذَرُوا فُرُجَاتٍ لِلشَّيْطَانِ ; وَمَنْ وَصَلَ صَفًّا وَصَلَهُ اللَّهُ وَمَنْ قَطَعَ صَفًّا قَطَعَهُ اللَّهُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1091** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வரிசைகளை (சமமாக)ப் பேணுங்கள். தோள்பட்டைகளைச் சமமாக்குங்கள். இடைவெளிகளை நீக்குங்கள். உங்கள் சகோதரர்களின் கைகளை மென்மையாகப் பிடியுங்கள். இடைவெளியை ஏற்படுத்தி ஷைத்தான்களுக்கு (இடம் தந்து) விடாதீர்கள். வரிசையில் சேர்ந்து நிற்பவரை அல்லாஹ் சேர்த்துக் கொள்வான். வரிசையை விட்டும் பிரிந்து நிற்பவரை, அல்லாஹ் பிரித்துவிடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:666)**

١٠٩٢ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " رُصُّوا صُفُوفَكُمْ وَقَارِبُوا بَيْنَهَا وَحَاذُوا بِالأَعْنَاقِ ; فَوَالَّذِي نَفْسِي بِيَدِهِ إِنِّي لأَرَى الشَّيْطَانَ يَدْخُلُ مِنْ خَلَلِ الصَّفِّ كَأَنَّهَا الْحَذَفُ " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ عَلَى شَرْطِ مُسْلِمٍ . " الْحَذَفُ " : بِحَاءٍ مُهْمَلَةٍ وَذَالٍ مُعْجَمَةٍ مَفْتُوحَتَيْنِ ثُمَّ فَاءٍ وَهِيَ غَنَمٌ سُودٌ صِغَارٌ تَكُونُ بِالْيَمَنِ .

**1092** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் வரிசைகளைச் சமமாக நெருக்கமாக்குங்கள். கழுத்துகளுக்கு நேர்படுங்கள். என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! ஏமன் நாட்டு சிறிய ஆடு போல் வரிசையின் நடுவே ஷைத்தான் நுழைவதைப் பார்த்தேன்" என்று நபி(ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:667)**

١٠٩٣ – وَعَنْهُ ) أَنَسٍ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَتِمُّوا الصَّفَّ الْمُقَدَّمَ ثُمَّ الَّذِي يَلِيهِ ; فَمَا كَانَ مِنْ نَقْصٍ فَلْيَكُنْ فِي الصَّفِّ الْمُؤَخَّرِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**1093** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முதல் வரிசையை முழுமைப்படுத்துங்கள். பிறகு அடுத்த வரிசையை முழுமைப்படுத்துங்கள். குறை எதுவும் இருப்பின், அது கடைசி வரிசையில் இருக்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:671)**

١٠٩٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ اللَّهَ وَمَلاَئِكَتَهُ يُصَلُّونَ عَلَى مَيَامِنِ الصُّفُوفِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ عَلَى شَرْطِ مُسْلِمٍ وَفِيهِ رَجُلٌ مُخْتَلَفٌ فِي تَوْثِيقِهِ .

**1094** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! அல்லாஹ், வரிசைகளில் வலது பக்கத்தில் உள்ளவர்கள் மீது அருள்புரிகின்றான். வானவர்கள் அவர்களுக்கு அருள் புரிய பிரார்த்திக்கின்றனர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:676)**

١٠٩٥ – وَعَنْ الْبَرَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا إِذَا صَلَّيْنَا خَلْفَ رَسُولِ اللَّهِ ﷺ أَحْبَبْنَا أَنْ نَكُونَ عَنْ يَمِينِهِ يُقْبِلُ عَلَيْنَا بِوَجْهِهِ فَسَمِعْتُهُ يَقُولُ : " رَبِّ قِنِي عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ – أَوْ تَجْمَعُ – عِبَادَكَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1095** பராஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் பின்னால் நின்று நாங்கள் தொழுதால், அவர்களின் வலது பக்கம் இருப்பதையே நாங்கள் விரும்புவோம். அப்பொழுது அவர்கள் ஸலாம் கொடுக்கும் பொழுது முதலில் எங்கள் பக்கம் (வலது பக்கம்) திரும்புவார்கள். (தொழுகைக்குப் பின்) நபி (ஸல்) அவர்கள், "ரப்பீகினீ அதாபுக யவ்ம தப்அது அவ் தஜ்மவு இபாதக" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:709)**

**துஆவின் பொருள்: "இறைவா! உன் அடியார்களை நீ எழுப்பும் நாளில் உன் வேதனையை விட்டும் என்னைப் பாதுகாப்பாயாக!"**

١٠٩٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " وَسِّطُوا الإِمَامَ وَسُدُّوا الْخَلَلَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1096** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இமாமை நடுவில் நிற்கச் செய்யுங்கள். (வரிசைகளின்) இடைவெளிகளை அடையுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:681)**

## ١٩٥ – بابُ فضل السّنن الراتبة مع الفرائض وبيان أقلها وأكملها وما بينهما

## பாடம் : 195 - கடமையான தொழுகைகளுடன் வரும் உபரியான தொழுகைகளின் சிறப்பு மற்றும் குறைவு, முழுமை பற்றிய விளக்கம்.

١٠٩٧ – عَنْ أُمِّ الْمُؤْمِنِينَ أُمِّ حَبِيبَةَ رَمْلَةَ بِنْتِ أَبِي سُفْيَانَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَتْ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ عَبْدٍ مُسْلِمٍ يُصَلِّي لِلَّهِ تَعَالَى فِي كُلِّ يَوْمٍ ثِنْتَيْ عَشْرَةَ رَكْعَةً تَطَوُّعًا غَيْرَ الْفَرِيضَةِ إِلاَّ بَنَى اللَّهُ لَهُ بَيْتًا فِي الْجَنَّةِ ! – أَوْ إِلاَّ بُنِيَ لَهُ بَيْتٌ فِي الْجَنَّةِ ! " – رَوَاهُ مُسْلِمٌ .

**1097** நபி(ஸல்) அவர்களின் மனைவியும், அபூஸுஃப்யான் (ரழி) அவர்களின் மகளுமான ரம்லா உம்முஹபீபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கடமை இல்லாத உபரியான (நபிலான) பனிரெண்டு ரக்அத்துகளை ஒவ்வொரு நாளும் அல்லாஹ்வுக்காகத் தொழும் ஒரு முஸ்லிமான அடியானுக்கு, சொர்க்கத்தில் ஒரு வீட்டை அல்லாஹ் கட்டாமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:728)**

١٠٩٨ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : صَلَّيْتُ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ رَكْعَتَيْنِ قَبْلَ الظُّهْرِ وَرَكْعَتَيْنِ بَعْدَهَا وَرَكْعَتَيْنِ بَعْدَ الْجُمُعَةِ وَرَكْعَتَيْنِ بَعْدَ الْمَغْرِبِ وَرَكْعَتَيْنِ بَعْدَ الْعِشَاءِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1098** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் லுஹருக்கு முன் இரண்டு ரக்அத்துகள், அதற்குபின் இரண்டு ரத்அத்கள், ஜும்ஆவிற்குப்பின் இரண்டு ரத்அத்துகள், மஃரிபு தொழுகைக்குப்பின் இரண்டு ரக்அத்துகள், இஷாவுக்குப் பின் இரண்டு ரக்அத்துகள் என்றவாறு தொழுதேன். **(புகாரி:1165. முஸ்லிம்:729)**

١٠٩٩ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ مُغَفَّلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " بَيْنَ كُلِّ أَذَانَيْنِ صَلاَةٌ , بَيْنَ كُلِّ أَذَانَيْنِ صَلاَةٌ , بَيْنَ كُلِّ أَذَانَيْنِ صَلاَةٌ , قَالَ فِي الثَّالِثَةِ : لِمَنْ شَاءَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . الْمُرَادُ بِالأَذَانَيْنِ : الأَذَانُ وَالأَقَامَةُ .

**1099** அப்துல்லாஹ் இப்னு முகஃஃப்பல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(பாங்கு, இகாமத் அவசியம்) இரண்டு பாங்குகள் இடையே தொழுகை உண்டு. இரண்டு பாங்குகள் இடையே தொழுகை உண்டு. இரண்டு பாங்குகளிடையே தொழுகை உண்டு என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, மூன்றாம் தடவையில் "விரும்புபவருக்கு" என்ற வார்த்தையைச் சேர்த்து கூறினார்கள். **(புகாரி:627. முஸ்லிம்:838. இரண்டு பாங்குகள் என்பது, பாங்கு, இகாமத் ஆகும்)**

## ١٩٦ – بَابُ تَأْكِيد ر كعتي سُنَّةِ الصّبح

## பாடம் : 196 - சுப்ஹின் சுன்னத் இரண்டு ரக் அத்துகளின் அவசியம்

١١٠٠ – عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ لاَ يَدَعُ أَرْبَعًا قَبْلَ الظُّهْرِ وَرَكْعَتَيْنِ قَبْلَ الْغَدَاة . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1100** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் லுஹருக்கு முந்திய நான்கு ரக்அத்துகளையும், சுப்ஹுக்கு முந்திய இரண்டு ரக்அத்துகளையும் விடமாட்டார்கள்." **(புகாரி:1182)**

١١٠١ – وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : لَمْ يَكُنْ النَّبِيُّ ﷺ عَلَى شَيْءٍ مِنْ النَّوَافِلِ أَشَدَّ تَعَاهُدًا مِنْهُ عَلَى رَكْعَتَيْ الْفَجْرِ . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1101** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் உபரியான (நபிலான) தொழுகைகளில் சுப்ஹு தொழுகையின் (முன்) இரண்டு ரக்அத்துகளை மிக உறுதியாகக் கடைபிடிப்பவர்களாக இருந்தார்கள்.

**(புகாரி:1169. முஸ்லிம்:724)**

١١٠٢ – وَعَنْهَا ) عَائِشَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " رَكْعَتَا الْفَجْرِ خَيْرٌ مِنْ الدُّنْيَا وَمَا فِيهَا " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُمَا : " أَحَبُّ إِلَيَّ مِنْ الدُّنْيَا جَمِيعًا ! "

**1102** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சுப்ஹு தொழுகையின் (முன்) இரண்டு ரக்அத்துகள், இவ்வுலகம் மற்றும் அதில் உள்ளதை விட சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:725)**

மற்றொரு அறிவிப்பில், "அந்த இரு ரக்அத்துகளும், இவ்வுலகில் உள்ள அனைத்தையும் விட எனக்கு மிகவும் விருப்பமானதாகும்" என்று உள்ளது.

١١٠٣ – وَعَنْ أَبِي عَبْدِ اللَّهِ بِلاَلِ بْنِ رَبَاحٍ رَضِيَ اللَّهُ عَنْهُ مُؤَذِّنِ رَسُولِ اللَّهِ ﷺ أَنَّهُ أَتَى رَسُولَ اللَّهِ ﷺ لِيُؤْذِنَهُ بِصَلاَةِ الْغَدَاةِ فَشَغَلَتْ عَائِشَةُ بِلاَلاً بِأَمْرٍ سَأَلَتْهُ عَنْهُ حَتَّى أَصْبَحَ جِدًّا . فَقَامَ بِلاَلٌ فَآذَنَهُ بِالصَّلاَةِ وَتَابَعَ أَذَانَهُ فَلَمْ يَخْرُجْ رَسُولُ اللَّهِ ﷺ فَلَمَّا خَرَجَ صَلَّى بِالنَّاسِ فَأَخْبَرَهُ أَنَّ عَائِشَةَ شَغَلَتْهُ بِأَمْرٍ سَأَلَتْهُ عَنْهُ حَتَّى أَصْبَحَ جِدًّا وَأَنَّهُ أَبْطَأَ عَلَيْهِ بِالْخُرُوجِ فَقَالَ – يَعْنِي النَّبِيَّ ﷺ : " إِنِّي كُنْتُ رَكَعْتُ رَكْعَتَيْ الْفَجْرِ " . فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ إِنَّكَ أَصْبَحْتَ جِدًّا . فَقَالَ : " لَوْ أَصْبَحْتُ أَكْثَرَ مِمَّا أَصْبَحْتُ لَرَكَعْتُهُمَا وَأَحْسَنْتُهُمَا وَأَجْمَلْتُهُمَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**1103** அபூஅப்துல்லாஹ் எனும் பிலால் இப்னு ரபாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் காலைத் தொழுகைக்கு நபி (ஸல்) அவர்களை அழைக்க அவர்களிடம் வந்தேன். ஆயிஷா (ரழி) அவர்கள் என்னிடம் சில விஷயங்கள் கேட்பதில் ஈடுபட்டார்கள். அப்போது காலைப் பொழுது விடிந்தது. நான் எழுந்து நபி (ஸல்) அவர்களிடம் தொழுகைப் பற்றி கூறினேன். பிறகு பாங்கு கூறினேன். அப்போதும் நபி (ஸல்) அவர்கள் வரவில்லை. பின்பு வெளியே வந்து மக்களுக்கு தொழ வைத்தார்கள். ஆயிஷா (ரழி) அவர்கள் என்னிடம் சில விஷயங்கள் பற்றி கேட்டது பற்றியும், அதனால் பொழுது விடிந்து, நீங்கள் வர தாமதமாகிவிட்டது பற்றியும் நபி (ஸல்) அவர்களிடம் நான் கூறினேன். அப்போது அவர்கள், "நான் சுப்ஹின் இரண்டு ரக்அத்துகளை தொழுது கொண்டிருந்தேன்" என்று கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! நீங்கள் காலை நேரம் ஏற்பட்டு விட்ட (ப்பின்பும் தொழுதீ)ர்களா?" என்று கேட்டேன். "இதையும்விட அதிகமாக விடிந்திருந்தாலும் அந்த இரண்டையும் தொழுவேன். அந்த இரண்டையும் அழகியதாகவும் செய்வேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:1257)**

## ١٩٧ – بابُ تخفيف ركعتى الفجر وبيان ما يقرأ فيهما، وبيان وقتهما

## பாடம் : 197 - சுப்ஹின் இரண்டு ரக்அத்தை சுருக்கமாகத் தொழுவது, இரண்டிலும் ஓதப்படும் வசனம் மற்றும் நேரம் பற்றிய விளக்கம்!

١١٠٤ – عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يُصَلِّي رَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ بَيْنَ النِّدَاءِ وَالْأَقَامَةِ مِنْ صَلَاةِ الصُّبْحِ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لَهَا : يُصَلِّي رَكْعَتَيْ الْفَجْرِ فَيُخَفِّفُهُمَا حَتَّى أَقُولَ : هَلْ قَرَأَ فِيهِمَا بِأُمِّ الْقُرْآنِ ؟ ! وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : كَانَ يُصَلِّي رَكْعَتَيْ الْفَجْرِ إِذَا سَمِعَ الأَذَانَ وَيُخَفِّفُهُمَا . وَفِي رِوَايَةٍ : إِذَا طَلَعَ الْفَجْرُ .

**1104** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகையின் பாங்குக்கும், இகாமத்திற்கும் இடையே சிறிய அளவிலான இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். **(புகாரி:619,1171. முஸ்லிம்:724)**

மற்றொரு அறிவிப்பில், "சுப்ஹின் இரண்டு ரக்அத்தை நபி (ஸல்) அவர்கள் தொழுவார்கள். அந்த இரண்டு ரக்அத்துகளையும் இலகுவாக (சுருக்கமாகத்) தொழுவார்கள். எந்த அளவுக்கெனில், பாத்திஹா ஸூராவை இந்த இரண்டு ரக்அத்துகளிலும் அவர்கள் ஓதுவார்களா? என நான் எண்ணும் அளவுக்கு" என்று உள்ளது.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "பாங்கைக் கேட்டு விட்டால் சுப்ஹின் இரண்டு ரக்அத்தைத் தொழுவார்கள். அந்த இரண்டையும் இலகுவாக்குவார்கள்" என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில் "...சுப்ஹு நேரம் வந்ததும்.." என்று உள்ளது.

١١٠٥ – وَعَنْ حَفْصَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا أَذَّنَ الْمُؤَذِّنُ لِلصُّبْحِ وَبَدَا الصُّبْحُ صَلَّى رَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا طَلَعَ الْفَجْرُ لاَ يُصَلِّي إِلاَّ رَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ .

**1105** ஹஃப்ஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், சுப்ஹு தொழுகைக்காக பாங்கு கூறுபவர் பாங்கு கூறி, சுப்ஹு நேரம் ஏற்பட்டதும், சிறிய அளவில் இரண்டு ரக்அத் தொழுவார்கள். **(புகாரி:618. முஸ்லிம்:723)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "சுப்ஹு நேரம் ஏற்பட்டதும் நபி (ஸல்) அவர்கள் இலகுவான அளவில் இரண்டு ரக்அத்துகள் மட்டுமே தொழுவார்கள்" என்றுள்ளது.

١١٠٦ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ يُصَلِّي مِنْ اللَّيْلِ مَثْنَى مَثْنَى وَيُوتِرُ بِرَكْعَةٍ مِنْ آخِرِ اللَّيْلِ وَيُصَلِّي الرَّكْعَتَيْنِ قَبْلَ صَلَاةِ الْغَدَاةِ وَكَأَنَّ الأَذَانَ بِأُذُنَيْهِ ! مُتَّفَقٌ عَلَيْهِ .

**1106** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவில் இரண்டு இரண்டு (ரக்அத்துகள்) ஆக தொழுவார்கள். இரவின் இறுதியில் ஒரு ரக்அத் வித்ருத் தொழுவார்கள். (அடுத்து) சுப்ஹு தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். தன் காதுகளில் பாங்கு இருக்கும் போதே (அதாவது பாங்கு கூறியதுமே தொழுவார்கள்) **(புகாரி:995. முஸ்லிம்:749)**

١١٠٧ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَقْرَأُ فِي رَكْعَتَيْ الْفَجْرِ فِي الأُولَى مِنْهُمَا : قُولُوا آمَنَّا بِاللَّهِ وَمَا أُنْزِلَ إِلَيْنَا الآيَةَ الَّتِي فِي الْبَقَرَةِ وَفِي الأُخْرَةِ مِنْهُمَا : آمَنَّا بِاللَّهِ وَاشْهَدْ بِأَنَّا مُسْلِمُونَ . وَفِي رِوَايَةٍ : وَفِي الأُخْرَةِ الَّتِي فِي آلِ عِمْرَانَ : تَعَالَوْا إِلَى كَلِمَةٍ سَوَاءٍ بَيْنَنَا وَبَيْنَكُمْ رَوَاهُمَا مُسْلِمٌ .

**1107** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சுப்ஹுடைய இரண்டு ரக்அத்தில் முதல் ரக்அத்தில் "கூலூ அமன்னா பில்லாஹி வமா உன்ஜில இலய்னா" என்ற அல்பகரா அத்தியாயத்தில் உள்ள வசனத்தை ஓதுவார்கள். இரண்டாவது ரக்அத்தில் "ஆமன்னா பில்லாஹி வஷ்ஹத் பிஅன்னனா முஸ்லிமூன்" என்ற வசனத்தை ஓதுவார்கள்.

மற்றொரு அறிவிப்பில், "ஆலஇம்ரான் என்ற அத்தியாயத்தில் உள்ள "தஆலவ் இலா கலிமதின் ஸவாஇன் பய்னனா வபய்னகும்..." என்ற வசனத்தை இரண்டாவது ரக்அத்தில் ஓதுவார்கள்" என்று உள்ளது. **(முஸ்லிம்:727)**

١١٠٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَرَأَ فِي رَكْعَتَيْ الْفَجْرِ : قُلْ يَا أَيُّهَا الْكَافِرُونَ و قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ . رَوَاهُ مُسْلِمٌ .

**1108** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் சுப்ஹின் இரண்டு ரக்அத்தில், "குல் யாஅய்யுஹல் காஃபிரூன்" (109 வது அத்தியாயம்), மற்றும் "குல் ஹுவல்லாஹு அஹது" (112வது அத்தியாயம்) ஆகியவற்றை ஓதுவார்கள். **(முஸ்லிம்:726)**

١١٠٩ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : رَمَقْتُ النَّبِيَّ ﷺ شَهْرًا يَقْرَأُ فِي الرَّكْعَتَيْنِ قَبْلَ الْفَجْرِ : قُلْ يَا أَيُّهَا الْكَافِرُونَ و قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1109** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களை நான் ஒரு மாத காலம் கவனித்திருக்கிறேன். அவர்கள் சுப்ஹுவின் பர்லுக்கு முன் தொழும் இரண்டு ரக்அத்தில் (முதல் ரக்அத்தில்) "குல் யாஅய்யுஹல் காஃபிரூன்" அத்தியாயத்தையும், (இரண்டாவது ரக்அத்தில்) "குல் ஹுவல்லாஹு அஹது" அத்தியாயத்தை ஓதுவார்கள். **(திர்மிதீ:417. இது "ஹஸன்" என இமாம் திர்மிதீ கூறுகிறார்கள்)**

## ١٩٨ - باب استِحْبَاب الاضطِجاع بَعْدَ ركعتي الفجر على جنبه الأيمن والحث عليه سواء كان تهجّدَ بالليل أم لا

## பாடம் : 198 - சுப்ஹின் இரண்டு ரக்அத் (சுன்னத்)துக்குப் பின் வலது புறமாக திரும்பிப் படுத்தல் விரும்பத்தக்கது. அவர் தஹஜ்ஜுத் தொழுகையைத் தொழுதாலும், தொழுகாவிட்டாலும் இதைச் செய்யலாம்.

١١١٠ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ إِذَا صَلَّى رَكْعَتَيْ الْفَجْرِ اضْطَجَعَ عَلَى شِقِّهِ الأَيْمَنِ . رَوَاهُ الْبُخَارِيُّ.

**1110** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பஜ்ரின் (சுன்னத்) இரண்டு ரக்அத்துகளை தொழுதுவிட்டால், தன் வலது புறமாக திரும்பி ஒருக்கணித்துப் படுப்பார்கள். **(புகாரி:1160)**

١١١١ - وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ يُصَلِّي فِيمَا بَيْنَ أَنْ يَفْرَغَ مِنْ صَلَاةِ الْعِشَاءِ إِلَى الْفَجْرِ إِحْدَى عَشْرَةَ رَكْعَةً يُسَلِّمُ بَيْنَ كُلِّ رَكْعَتَيْنِ وَيُوتِرُ بِوَاحِدَةٍ . فَإِذَا سَكَتَ الْمُؤَذِّنُ مِنْ صَلَاةِ الْفَجْرِ وَتَبَيَّنَ لَهُ الْفَجْرُ وَجَاءَهُ الْمُؤَذِّنُ قَامَ فَرَكَعَ رَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ ثُمَّ اضْطَجَعَ عَلَى شِقِّهِ الأَيْمَنِ هَكَذَا حَتَّى يَأْتِيَهُ الْمُؤَذِّنُ لِلإِقَامَةِ . رَوَاهُ مُسْلِمٌ . قَوْلُهَا : " يُسَلِّمُ بَيْنَ كُلِّ رَكْعَتَيْنِ " هَكَذَا هُوَ فِي مُسْلِمٍ وَمَعْنَاهُ : بَعْدَ كُلِّ رَكْعَتَيْنِ .

**1111** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையைத் தொழுததில் இருந்து, சுப்ஹுக்குள் பதினொரு ரக்அத்துகள் தொழுவார்கள். இரண்டு ரக்அத்துகளுக்கு ஒரு முறை ஸலாம் கொடுப்பார்கள். ஒரு ரக்அத் வித்ருத் தொழுவார்கள். சுப்ஹு தொழுகைக்குப் பாங்கு கூறுபவர், பாங்கு கூறி முடித்து சுப்ஹு நேரம் வந்துவிட்டது என்பது தெளிவாகி, பாங்கு கூறியவர் அவர்களிடம் வந்தால், எழுந்து சுருக்கமாக இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். பின்பு வலது புறம் ஒருக்கணித்துப் படுப்பார்கள். இகாமத் கூற பாங்கு கூறுபவர் அவர்களிடம் வரும் வரை இவ்வாறே படுத்திருப்பார்கள். **(முஸ்லிம்:736)**

١١١٢ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا صَلَّى أَحَدُكُمْ رَكْعَتَيْ الْفَجْرِ فَلْيَضْطَجِعْ عَلَى يَمِينِهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ بِأَسَانِيدَ صَحِيحَةٍ . قَالَ التِّرْمِذِيُّ ; حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**1112** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சுப்ஹுவுடைய இரண்டு ரக்அத்தை உங்களில் ஒருவர் தொழுது விட்டால், அவர் தன் வலது புறமாக ஒருக்கணித்துப் படுக்கட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1261. திர்மிதி:420. இது “ஹஸன் ஸஹீஹ்” என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ١٩٩ - بابُ سُنَّة الظهر

## பாடம் : 199 - லுஹரின் சுன்னத் தொழுகை

١١١٣ - عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : صَلَّيْت مَعَ رَسُولِ اللَّهِ ﷺ رَكْعَتَيْنِ قَبْلَ الظُّهْرِ وَرَكْعَتَيْنِ بَعْدَهَا . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1113** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

லுஹருக்கு முன் இரண்டு ரக்அத்தையும், லுஹருக்குப் பின் இரண்டு ரக்அத்தையும் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன். **(புகாரி:1165. முஸ்லிம்:729)**

١١١٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ لاَ يَدَعُ أَرْبَعًا قَبْلَ الظُّهْرِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1114** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் லுஹருக்கு முன் நான்கு ரக்அத்தை விடாமல் தொழுபவர்களாக இருந்தார்கள். **(புகாரி:1182)**

١١١٥ – وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ يُصَلِّي فِي بَيْتِي قَبْلَ الظُّهْرِ أَرْبَعًا ثُمَّ يَخْرُجُ فَيُصَلِّي بِالنَّاسِ ثُمَّ يَدْخُلُ فَيُصَلِّي رَكْعَتَيْنِ ; وَكَانَ يُصَلِّي بِالنَّاسِ الْمَغْرِبَ ثُمَّ يَدْخُلُ بَيْتِي فَيُصَلِّي رَكْعَتَيْنِ ; وَيُصَلِّي بِالنَّاسِ الْعِشَاءَ وَيَدْخُلُ بَيْتِي فَيُصَلِّي رَكْعَتَيْنِ . رَوَاهُ مُسْلِمٌ .

**1115** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என் வீட்டில் லுஹருக்கு முன் நபி (ஸல்) அவர்கள் நான்கு ரக்அத்துகள் தொழுதார்கள். பின்பு வெளியே போய் மக்களுக்குத் தொழ வைத்தார்கள். பின்பு (வீட்டிற்கு) வந்து, இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். மேலும் மஹ்ரிபை மக்களுக்குத் தொழ வைத்தார்கள். பின்பு வந்து இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். மேலும் இஷாவை மக்களுக்குத் தொழவைத்தார்கள். என் வீட்டிற்கு வந்து இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். **(முஸ்லிம்:730)**

١١١٦ – وَعَنْ أُمِّ حَبِيبَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ حَافَظَ عَلَى أَرْبَعِ رَكَعَاتٍ قَبْلَ الظُّهْرِ وَأَرْبَعٍ بَعْدَهَا حَرَّمَهُ اللَّهُ عَلَى النَّارِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1116** உம்மு ஹபீபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“லுஹருக்கு முன் நான்கு ரக்அத்துகளையும், லுஹருக்குப்பின் நான்கு ரக்அத்துகளையும் ஒருவர் பேணி (தொழுது) வந்தால், அல்லாஹ் அவருக்கு நரகத்தை தடை செய்துவிட்டான்” என்று நபி(ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1269. திர்மிதீ:427,428. இது “ஹஸன் ஸஹீஹ்” என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١١١٧ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ السَّائِبِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يُصَلِّي أَرْبَعًا بَعْدَ أَنْ تَزُولَ الشَّمْسُ قَبْلَ الظُّهْرِ وَقَالَ : " إِنَّهَا سَاعَةٌ تُفْتَحُ فِيهَا أَبْوَابُ السَّمَاءِ فَأُحِبُّ أَنْ يَصْعَدَ لِي فِيهَا عَمَلٌ صَالِحٌ ! " رَوَاهُ التِّرْمِذِيُّ قَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1117** அப்துல்லாஹ் இப்னு ஸாயிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், லுஹருக்கு முன் சூரியன் (உச்சியிலிருந்து) சாய்ந்தபின், நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். அப்போது நபி (ஸல்), “இது, வானத்தின் வாசல்கள் திறக்கப்படும் நேரம் ஆகும். அந்த நேரத்தில் நற்செயல் செய்து, அது எனக்காக (அல்லாஹ்விடம்) உயருவதை விரும்புகிறேன்” என்றும் கூறினார்கள். **(திர்மிதீ:478. இது “ஹஸன்” என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١١١٨ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا لَمْ يُصَلِّ أَرْبَعًا قَبْلَ الظُّهْرِ صَلاَّهُنَّ بَعْدَهَا .

رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1118** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் லுஹருக்கு முன் நான்கு ரக்அத்துகளை தொழாவிட்டால், அவற்றை லுஹரின் பர்லுக்கு பின் தொழுவார்கள். **(திர்மிதீ:426. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٢٠٠ – بابُ سُنَّة الْعَصْر

## பாடம் : 200 - அஸரின் சுன்னத் தொழுகைகள்

١١١٩ – عَنْ عَلِيٍّ بْنِ أَبِي طَالِب رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ، يُصَلِّي قَبْلَ الْعَصْرِ أَرْبَعَ رَكَعَات يَفْصِلُ بَيْنَهُنَّ بِالتَّسْلِيمِ عَلَى الْمَلاَئِكَةِ الْمُقَرَّبِينَ وَمَنْ تَبِعَهُمْ مِنَ الْمُسْلِمِينَ وَالْمُؤْمِنِينَ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1119** அலீ இப்னு அபீதாலிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அஸர் தொழுகைக்கு முன் நபி (ஸல்) அவர்கள் நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். இதற்கிடையே (அந்த நான்கு ரக்அத்துகளில் இரண்டு ரக்அத்துகள் தொழுத பின்பு) இறைவனுக்கு நெருக்கமான வானவர் மீதும், அவர்களைப் பின்பற்றும் இறை விசுவாசிகளான முஸ்லிம்கள் (முஃமின்கள்) மீதும் இரண்டு ரக்அத்தில் ஸலாம் கூறுவது மூலம் பிரிப்பார்கள். (அந்த நான்கு ரக்அத்துகளை இரண்டு இரண்டு ரக்அத்துகளாகத் தொழுவார்கள்.)

**(திர்மிதீ:429. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١١٢٠ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " رَحِمَ اللَّهُ امْرَأً صَلَّى قَبْلَ الْعَصْرِ أَرْبَعًا " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1120** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அஸருக்கு முன் நான்கு ரக்அத் தொழும் மனிதருக்கு அல்லாஹ் அருள்புரிவானாக" என நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:1271. திர்மிதீ:430. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١١٢١ – وَعَنْ عَلِيٍّ بْنِ أَبِي طَالِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يُصَلِّي قَبْلَ الْعَصْرِ رَكْعَتَيْنِ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ.

**1121** அலீ இப்னு அபீதாலிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (சில வேளைகளில்) அஸருக்கு முன் இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். **(அபூதாவூது:1272)**

## ٢٠١ – باب سُنَّةِ الْمَغْرب بَعْدَها وقبلها

## பாடம் : 201 - மஹ்ரிபுக்கு முன் - பின் சுன்னத் தொழுகை

تَقَدَّمَ فِي هَذِهِ الأَبْوَابِ حَدِيثُ ابْنِ عُمَرَ وَحَدِيثُ عَائِشَةَ وَهُمَا صَحِيحَانِ : أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يُصَلِّي بَعْدَ الْمَغْرِبِ رَكْعَتَيْنِ.

நபி (ஸல்) அவர்கள் மஹ்ரிபுக்கு பின் இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி), ஆயிஷா (ரழி), ஆகியோர் அறிவித்த சரியான ஹதீஸ் இதே பாடங்களின் வரிசையில், (1098, 1115 ஆகிய ஹதீஸாக) இடம் பெற்றுள்ளது.

١١٢٢ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ مُغَفَّلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " صَلُّوا قَبْلَ الْمَغْرِبِ " . ثُمَّ قَالَ فِي الثَّالِثَةِ : " لِمَنْ شَاءَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1122** அப்துல்லாஹ் இப்னு முஃஹப்பல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மஹ்ரிபுக்கு முன் (சுன்னத்) தொழுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் மூன்று தடவை கூறினார்கள். மூன்றாவது தடவை கூறும்போது, "விரும்பியவர் இத்தொழுகையைத் தொழுது கொள்ளட்டும்" என்று கூறினார்கள். **(புகாரி:1183)**

١١٢٣ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَقَدْ رَأَيْت كِبَارَ أَصْحَابِ رَسُولِ اللَّهِ ﷺ يَبْتَدِرُونَ السَّوَارِيَ عِنْدَ الْمَغْرِبِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1123** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் முக்கியமான நபித்தோழர்களை, மஹ்ரிபு நேரத்தில் (சுன்னத் தொழுவதற்காக பள்ளியின்) தூண்களை நோக்கி விரைந்து செல்பவர்களாக நான் கண்டுள்ளேன். **(புகாரி:625)**

١١٢٤ – وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ : كُنَّا نُصَلِّي عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ رَكْعَتَيْنِ بَعْدَ غُرُوبِ الشَّمْسِ قَبْلَ الْمَغْرِبِ فَقِيلَ : أَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ صَلاَّهَا ؟ قَالَ : كَانَ يَرَانَا نُصَلِّيهِمَا فَلَمْ يَأْمُرْنَا وَلَمْ يَنْهَنَا . رَوَاهُ مُسْلِمٌ .

**1124** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சூரியன் மறைந்தபின் மஹ்ரிபுத் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்துகளை நபி (ஸல்) அவர்களின் காலத்தில் நாங்கள் தொழுவோம்" என்று நான் கூறியதும், "நபி (ஸல்) அவர்கள் அதைத் தொழுது உள்ளார்களா?" என்று என்னிடம் கேட்கப்பட்டது. "அந்த இரண்டு ரக்அத்துகளை நாங்கள் தொழுததை அவர்கள் பார்த்தார்கள். ஆனால் அவர்கள் கட்டளையிடவுமில்லை. எங்களுக்கு தடைவிதிக்கவுமில்லை" என்று நான் கூறினேன். **(முஸ்லிம்:836)**

١١٢٥ – وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ : كُنَّا بِالْمَدِينَةِ فَإِذَا أَذَّنَ الْمُؤَذِّنُ لِصَلاَةِ الْمَغْرِبِ ابْتَدَرُوا السَّوَارِيَ فَرَكَعُوا رَكْعَتَيْنِ حَتَّى إِنَّ الرَّجُلَ الْغَرِيبَ لَيَدْخُلُ الْمَسْجِدَ فَيَحْسِبُ أَنَّ الصَّلاَةَ قَدْ صُلِّيَتْ مِنْ كَثْرَةِ مَنْ يُصَلِّيهِمَا . رَوَاهُ مُسْلِمٌ .

**1125** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் மதீனாவில் இருந்தோம். அப்போது பாங்கு கூறுபவர், மஹ்ரிபு தொழுகைக்காக பாங்கு கூறினார். உடனே பள்ளியின் தூண்களை நோக்கி, மக்கள் விரைந்து சென்று இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். அந்த இரண்டு ரக்அத்துகளை தொழுபவரின் எண்ணிக்கை அதிகமாகிவிட்டதால் பள்ளிவாசலுக்கு வந்த புதிய நபர், "மஹ்ரிபு (பர்லுத்) தொழுகை முடிந்துவிட்டதோ" என்று எண்ணும் அளவுக்கு இது நடந்தது. **(முஸ்லிம்:837)**

## ٢٠٢ – بابُ سُنَّة الْعشاء بَعدها وقبلها

## பாடம் : 202 - இஷாவிற்குப் பின், முன் சுன்னத் தொழுகைகள்

فيه حَدِيثُ ابْنِ عُمَرَ السَّابِقُ : صَلَّيْت مَعَ النَّبِيِّ ﷺ رَكْعَتَيْنِ بَعْدَ الْعِشَاءِ وَحَدِيثُ عَبْدِ اللَّهِ بْنِ مُغَفَّلٍ : " بَيْنَ كُلِّ أَذَانَيْنِ صَلَاةٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ كَمَا سَبَقَ .

"இஷாவுக்குப் பின் நபி (ஸல்) அவர்களுடன் இரண்டு ரக்அத்துகள் தொழுதுள்ளேன்" என்று அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்களின் (1098-வது) ஹதீஸும், "பாங்கு இகாமத் இரண்டுக்குமிடையே தொழுகை உண்டு" என்று அப்துல்லாஹ் இப்னு முஃஹப்பல் (ரழி) அறிவிக்கும் (1099-வது) ஹதீஸும், இந்த தலைப்பின் கருத்துக்குப் பொருத்தமானதாகும்.

## ٢٠٣ - بابُ سُنَّة الجمعَة

### பாடம் : 203 - ஜும்ஆவின் சுன்னத் தொழுகை

فِيهِ حَدِيثُ ابْنِ عُمَرَ السَّابِقُ أَنَّهُ صَلَّى مَعَ النَّبِيِّ ﷺ رَكْعَتَيْنِ بَعْدَ الْجُمُعَةِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

"ஜும்ஆவிற்குப் பின் நபி (ஸல்) அவர்களுடன் நான் இரண்டு ரக்அத்துகள் தொழுதேன்" என்ற அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கும் (1098-வது) ஹதீஸ் இங்கு பொருத்தமானதாகும்.

١١٢٦ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا صَلَّى أَحَدُكُمُ الْجُمُعَةَ فَلْيُصَلِّ بَعْدَهَا أَرْبَعًا " . رَوَاهُ مُسْلِمٌ

**1126** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் ஜும்ஆத் தொழுகையைத் தொழுதுவிட்டால், அதன்பின் நான்கு ரக்அத்துகளை தொழட்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:881)**

١١٢٧ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ لاَ يُصَلِّي بَعْدَ الْجُمُعَةِ حَتَّى يَنْصَرِفَ فَيُصَلِّيَ رَكْعَتَيْنِ فِي بَيْتِهِ . رَوَاهُ مُسْلِمٌ .

**1127** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஜும்ஆத் தொழுகைக்குப்பின் (வீடு) திரும்பும் வரை எதுவும் தொழமாட்டார்கள். தங்கள் இல்லம் வந்ததும் இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். **(முஸ்லிம்:882)**

## ٢٠٤ - باب استحباب جَعل النوافل في البيت سواء الراتبة وغيرها والأمر بالتحول للنافلة من موضع الفريضة أو الفصل بينهما بكلام

### பாடம் : 204 - வீட்டில் நபில் தொழுகைகளைத் தொழுவது விரும்பத்தக்கது. அது வழமையானதாகவோ, அல்லாததாகவோ இருந்தாலும் சரியே! ஃபர்லுத் தொழுத இடத்திலிருந்து நஃபிலை வேறு இடத்தில் தொழுவது அல்லது அவ்விரண்டுக்குமிடையே பேசுவதன் மூலம் பிரிப்பது.

١١٢٨ - عَنْ زَيْدِ بْنِ ثَابِتٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " صَلُّوا أَيُّهَا النَّاسُ فِي بُيُوتِكُمْ فَإِنَّ أَفْضَلَ الصَّلاَةِ صَلاَةُ الْمَرْءِ فِي بَيْتِهِ إِلاَّ الْمَكْتُوبَةَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1128** ஜைத் இப்னு ஸாபித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதர்களே! உங்கள் வீடுகளில் தொழுங்கள். நிச்சயமாக தொழுகையில் மிகச் சிறந்தது, ஒருவர் கடமையான தொழுகையைத் தவிர, தன் வீட்டில் தொழும் தொழுகைதான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:731. முஸ்லிம்:781)**

١١٢٩ -وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:"اجْعَلُوا مِنْ صَلاَتِكُمْ فِي بُيُوتِكُمْ وَلاَ تَتَّخِذُوهَا قُبُورًا".مُتَّفَقٌ عَلَيْهِ.

**1129** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் வீடுகளிலும் தொழுகைகளில் ஒரு பகுதியை வைத்துக் கொள்ளுங்கள். அந்த வீடுகளை தொழுகை இல்லாத கப்ருகளாக (மண்ணறைகளாக) ஆக்கிவிடாதீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:432. முஸ்லிம்:777)**

١١٣٠ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ . قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا قَضَى أَحَدُكُمْ صَلاَتَهُ فِي الْمَسْجِدِ فَلْيَجْعَلْ لِبَيْتِهِ نَصِيبًا مِنْ صَلاَتِهِ ; فَإِنَّ اللَّهَ جَاعِلٌ فِي بَيْتِهِ مِنْ صَلاَتِهِ خَيْرًا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1130** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தன் (பர்லான) தொழுகையை பள்ளிவாசலில் நிறைவேற்றி விட்டால், தொழுகையின் ஒரு பகுதியை தன் வீட்டிலும் தொழுது கொள்ளட்டும்! நிச்சயமாக அல்லாஹ், அவரின் வீட்டில் அவரது தொழுகையின் காரணமாக நல்லதை ஏற்படுத்துகிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:778)**

١١٣١ - وَعَنْ عَمْرِو بْنِ عَطَاءٍ أَنَّ نَافِعَ بْنَ جُبَيْرٍ أَرْسَلَهُ إِلَى السَّائِبِ بْنِ أُخْتِ نَمِرٍ يَسْأَلُهُ عَنْ شَيْءٍ رَآهُ مِنْهُ مُعَاوِيَةُ فِي الصَّلاَةِ فَقَالَ : نَعَمْ صَلَّيْتُ مَعَهُ الْجُمُعَةَ فِي الْمَقْصُورَةِ ; فَلَمَّا سَلَّمَ الإِمَامُ قُمْتُ فِي مَقَامِي فَصَلَّيْتُ فَلَمَّا دَخَلَ أَرْسَلَ إِلَيَّ فَقَالَ : " لاَ تَعُدْ لِمَا فَعَلْتَ ; إِذَا صَلَّيْتَ الْجُمُعَةَ فَلاَ تَصِلْهَا بِصَلاَةٍ حَتَّى تَتَكَلَّمَ أَوْ تَخْرُجَ ; فَإِنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَمَرَنَا بِذَلِكَ أَلاَّ نُوصِلَ صَلاَةً بِصَلاَةٍ حَتَّى نَتَكَلَّمَ أَوْ نَخْرُجَ " رَوَاهُ مُسْلِمٌ .

**1131** உமர் இப்னு அதாஃ (ரஹ்) கூறுகின்றார்கள்:

நாபிஃ இப்னு ஜுபைர் (ரஹ்) அவர்கள் என்னை நமிர் அவர்களின் சகோதரி மகன் ஸாயிப் அவர்களிடம் அனுப்பி, அவரின் தொழுகை விஷயத்தில் முஆவியா (ரழி) அவர்கள் (கண்ட குறை பற்றி அவர்களிடம் கேட்கச் செய்தார்கள். (நான் அவரிடம் கேட்டபோது), “ஆம்! அவர்களுடன் ஒரு ஜும்ஆவை “மக்சூரா” எனும் இடத்தில் தொழுதேன். இமாம் ஸலாம் கொடுத்ததும், நான் இருந்த இடத்திலேயே எழுந்து, தொழுதேன். முஆவியா (ரழி) அவர்கள் தன் வீட்டிற்குச் சென்றதும், என்னிடம் ஓர் ஆளை அனுப்பினார்கள். “நீ இப்போது செய்தது போல் இனி செய்யாதே! ஜும்ஆவை நீ தொழுதால், நீ பேசும் வரை, அல்லது பள்ளிவாசலை விட்டும் வெளியேறும் வரை எதுவும் உடனே தொழாதே! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறே எங்களுக்கு ஏவினார்கள். நாங்கள் ஏதேனும் பேசும் வரை அல்லது நாங்கள் வெளியேறும் வரை ஜும்ஆவுடன் எதையும் சேர்த்துத் தொழ மாட்டோம்” என்று ஸாயிப் கூறினார்.” **(முஸ்லிம்:883)**

## ٢٠٥ - باب الحثّ على صَلاة الوتر وبيان أنه سُنه مؤكدة وبيان وقته

## பாடம் : 205 - வித்ருத் தொழுகை பற்றி ஆர்வ மூட்டுதல், மற்றும் அது உறுதியான சுன்னத் பற்றியும், அதன் நேரம் பற்றியும் விளக்குதல்!

١١٣٢ - عَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : الْوِتْرُ لَيْسَ بِحَتْمٍ كَصَلاَةِ الْمَكْتُوبَةِ وَلَكِنْ سَنَّ رَسُولُ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ اللَّهَ وِتْرٌ يُحِبُّ الْوِتْرَ فَأَوْتِرُوا يَا أَهْلَ الْقُرْآنِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1132** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

வித்ருத் தொழுகை, கடமையான தொழுகையைப் போன்று கட்டாயமானதல்ல! எனினும் நபி (ஸல்) அவர்கள் அதை முறையாக்கினார்கள். மேலும் “நிச்சயமாக அல்லாஹ் ஒருவன். அவன் ஒற்றைப் படையை (வித்ரை) விரும்புவான். எனவே குர்ஆனைப் பெற்றவர்களே! நீங்கள் வித்ருத் தொழுகையைத் தொழுங்கள்” என்று கூறினார்கள்.

**(அபூதாவூது:1416. திர்மிதீ:453. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١١٣٣ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : مِنْ كُلِّ اللَّيْلِ قَدْ أَوْتَرَ رَسُولُ اللَّهِ ﷺ : مِنْ أَوَّلِ اللَّيْلِ وَمِنْ أَوْسَطِهِ وَمِنْ آخِرِهِ . وَانْتَهَى وِتْرُهُ إِلَى السَّحَرِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1133** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒவ்வொரு இரவிலும் நபி(ஸல்) அவர்கள் வித்ருத் தொழுவார்கள். (சில சமயம்) இரவின் ஆரம்பத்திலும், நடு இரவிலும், இரவின் இறுதியிலும் தொழுவார்கள். அவர்களின் வித்ருத் தொழுகை ஸஹர் நேரத்தில் முடியும். **(புகாரி:996. முஸ்லிம்:745)**

١١٣٤ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " اجْعَلُوا آخِرَ صَلَاتِكُمْ بِاللَّيْلِ وِتْرًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1134** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்கள் இரவுத் தொழுகையில் இறுதியாக வித்ரை ஏற்படுத்துங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:998. முஸ்லிம்:751)**

١١٣٥ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " أَوْتِرُوا قَبْلَ أَنْ تُصْبِحُوا " . رَوَاهُ مُسْلِمٌ.

**1135** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் சுப்ஹு நேரம் வரும் முன் வித்ருத் தொழுகையைத் தொழுது விடுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:754)**

١١٣٦ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يُصَلِّي صَلَاتَهُ بِاللَّيْلِ وَهِيَ مُعْتَرِضَةٌ بَيْنَ يَدَيْهِ فَإِذَا بَقِيَ الْوِتْرُ أَيْقَظَهَا فَأَوْتَرَتْ . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ : فَإِذَا بَقِيَ الْوِتْرُ قَالَ : " قُومِي فَأَوْتِرِي يَا عَائِشَةُ " .

**1136** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் முன் குறுக்கே படுத்திருக்கும் போது இரவில் தொழுவார்கள். எனக்கு வித்ரு மட்டும் பாக்கி இருக்கும் போது என்னை எழுப்பிவிட்டு, வித்ருத் தொழுகை தொழுவார்கள். **(முஸ்லிம்:744)**

மற்றொரு அறிவிப்பில் “வித்ரு மட்டும் இருக்கும் போது, ஆயிஷாவே! நீ எழுந்து வித்ருத் தொழு!” என்று கூறியதாக உள்ளது.

١١٣٧ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " بَادِرُوا الصُّبْحَ بِالْوِتْرِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1137** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“வித்ருத் தொழுகையை சுப்ஹு நேரத்திற்கு முன் விரைந்து தொழுது கொள்ளுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1436. திர்மிதீ:467. இது “ஹஸன் ஸஹீஹ்” என்று திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١١٣٨ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ خَافَ أَلَّا يَقُومَ مِنْ آخِرِ اللَّيْلِ فَلْيُوتِرْ أَوَّلَهُ وَمَنْ طَمِعَ أَنْ يَقُومَ آخِرَهُ فَلْيُوتِرْ آخِرَ اللَّيْلِ فَإِنَّ صَلَاةَ آخِرِ اللَّيْلِ مَشْهُودَةٌ وَذَلِكَ أَفْضَلُ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1138** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரவின் கடைசி நேரத்தில் எழாமல் இருப்பதை ஒருவர் பயந்தால், அவர் இரவின் ஆரம்பத்திலேயே வித்ருத் தொழுது கொள்ளட்டும். இரவின் இறுதியில் எழுந்திடுவதை ஆசைப்பட்டவர் இரவின் இறுதியில் வித்ருத் தொழுது கொள்ளட்டும். இரவின் இறுதியில் தொழுவது, (மலக்குகளால்) சாட்சி கூறப்பட்டத்தக்கதாகும். மேலும் அதுவே மிகச் சிறந்தது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:755)**

## ٢٠٦ – بابُ فضل صَلاة الضحىَ وبيان أقلها وأكثرها وأوسطها، والحث على المحافظة عليها

## பாடம் : 206 - ளுஹாத் தொழுகையின் சிறப்பு, அதன் மிகக் குறைந்த அளவு, அதன் மிக அதிக அளவு, அதன் நடுத்தர அளவு, பற்றிய விளக்கமும், அதைத் தொடர்ந்து பேணி வருதல் பற்றிய ஆர்வ மூட்டுவதும்

١١٣٩ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَوْصَانِي خَلِيلِي ﷺ بِصِيَامِ ثَلاثَةِ أَيَّامٍ مِنْ كُلِّ شَهْرٍ وَرَكْعَتَيِ الضُّحَى وَأَنْ أُوتِرَ قَبْلَ أَنْ أَرْقُدَ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَالأَيتَارُ قَبْلَ النَّوْمِ إِنَّمَا يُسْتَحَبُّ لِمَنْ لاَ يَثِقُ بِالاسْتِيقَاظِ آخِرَ اللَّيْلِ فَإِنْ وَثِقَ فَآخِرُ اللَّيْلِ أَفْضَلُ.

**1139** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நஃபிலான நோன்பு நோற்குமாறும், ளுஹா நேரத்தில் இரண்டு ரக்அத் தொழுமாறும், தூங்கும் முன் வித்ருத் தொழுமாறும் என்னிடம் என் நேசர் நபி (ஸல்) அவர்கள் வலியுறுத்தினார்கள். **(புகாரி:1981. முஸ்லிம்:721)**

தூங்கும் முன் வித்ருத் தொழுவது என்பது, இரவின் இறுதியில் விழிக்க இயலாது என்பதில் உறுதியாக உள்ளவருக்குத்தான். விழித்து எழ முடியும் என்பதில் உறுதியாக உள்ளவருக்கு இரவின் இறுதி(நேரம்)தான் மிகச் சிறந்ததாகும்.

١١٤٠ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " يُصْبِحُ عَلَى كُلِّ سُلاَمَى مِنْ أَحَدِكُمْ صَدَقَةٌ : فَكُلُّ تَسْبِيحَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَحْمِيدَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَهْلِيلَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَكْبِيرَةٍ صَدَقَةٌ وَأَمْرٌ بِالْمَعْرُوفِ صَدَقَةٌ وَنَهْيٌ عَنِ الْمُنْكَرِ صَدَقَةٌ وَيُجْزِئُ مِنْ ذَلِكَ رَكْعَتَانِ يَرْكَعُهُمَا مِنَ الضُّحَى " . رَوَاهُ مُسْلِمٌ .

**1140** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தன் உடம்பிலுள்ள ஒவ்வொரு மூட்டுக்களுக்கும் காலையிலேயே தர்மம் செய்ய வேண்டும். ஒவ்வொரு தஸ்பீஹும் ‘(சுப்ஹானல்லாஹ்வும்)’ தர்மம் ஆகும். ஒவ்வொரு ‘அல்ஹம்துலில்லாஹ்’வும் தர்மமாகும். ஒவ்வொரு ‘லாயிலாஹ இல்லல்லாஹ்’ எனக் கூறுவதும் தர்மமாகும். ஒவ்வொரு ‘அல்லாஹு அக்பரும்’ தர்மமாகும். நல்லதை ஏவுவது தர்மமாகும். கெட்டதை தடுப்பதும் தர்மமாகும். இவை அனைத்துக்கும் பகரமாக ளுஹா நேரத்தில் இரண்டு ரக்அத் தொழுவது போதுமானதாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:720)**

١١٤١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُصَلِّي الضُّحَى أَرْبَعًا وَيَزِيدُ مَا شَاءَ اللَّهُ . رَوَاهُ مُسْلِمٌ .

**1141** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், ளுஹா தொழுகையை நான்கு ரக்அத்துகள் (இரண்டு இரண்டாக) தொழுவார்கள். அல்லாஹ் நாடிய அளவுக்கு (சில நேரம்) அதிகமாக்கிக் கொள்வார்கள். **(முஸ்லிம்:719)**

١١٤٢ – وَعَنْ أُمِّ هَانِئٍ فَاخِتَةَ بِنْتِ أَبِي طَالِبٍ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : ذَهَبْتُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ عَامَ الْفَتْحِ فَوَجَدْتُه يَغْتَسِلُ فَلَمَّا فَرَغَ مِنْ غُسْلِهِ صَلَّى ثَمَانِيَ رَكَعَاتٍ وَذَلِكَ ضُحًى . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا مُخْتَصَرُ لَفْظِ إِحْدَى رِوَايَاتِ مُسْلِمٍ .

**1142** உம்முஹானீ பின்த் அபூதாலிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மக்காவை வெற்றி கொண்ட வருடம் நபி (ஸல்) அவர்கள் குளிக்கும் போது, அவர்களிடம் நான் சென்றேன். அவர்கள் குளித்து முடித்ததும், எட்டு ரக்அத் (இரண்டு இரண்டு ரக்அத்துகளாக) தொழுதார்கள். இதுதான் லுஹா நேரத் தொழுகையாகும்.

**(புகாரி:1176. முஸ்லிம்:336. முஸ்லிம் அறிவிப்புகளில் ஒன்றின் சுருக்கமான வார்த்தையாகும்)**

## ٢٠٧ – باب تجوز صَلاة الضحىَ من ارتفاع الشمس إلى زوالها والأفضل أن تصلي عند اشتداد الحرّ وارتفاع الضحى

### பாடம் : 207 - சூரியன் உதயமாகி உயர்வதில் இருந்து சூரியன் உச்சியிலிருந்து சாயும் வரை "லுஹா" தொழுகையைத் தொழுவது கூடும். வெப்பம் அதிகமாகும் சமயமும், பகல் ஆரம்பமான நேரமும் தொழுவது மிகச் சிறந்ததாகும்.

١١٤٣ – عَنْ زَيْدِ بْنِ أَرْقَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ رَأَى قَوْمًا يُصَلُّونَ مِنَ الضُّحَى فَقَالَ : أَمَا لَقَدْ عَلِمُوا أَنَّ الصَّلاَةَ فِي غَيْرِ هَذِهِ السَّاعَةِ أَفْضَلُ . إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " صَلاَةُ الأَوَّابِينَ حِينَ تَرْمَضُ الْفِصَالُ " . رَوَاهُ مُسْلِمٌ . " تَرْمَضُ " بِفَتْحِ التَّاءِ وَالْمِيمِ وَبِالضَّادِ الْمُعْجَمَةِ يَعْنِي شِدَّةَ الْحَرِّ . " وَالْفِصَالُ " جَمْعُ فَصِيلٍ وَهُوَ الصَّغِيرُ مِنَ الأَبِلِ .

**1143** ஜைத் இப்னு அர்கம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சிலர் லுஹாத் தொழுகையைத் தொழக் கண்டேன். இந்த நேரம் அல்லாத வேறு நேரத்தில் லுஹாத் தொழுவது மிகச் சிறந்தது என்பதை அவர்கள் அறிந்து கொள்வது நல்லது. ஏனெனில், நபி (ஸல்) அவர்கள், "இறைவனிடம் மீளும் மக்கள் (லுஹாவை) தொழுவது; ஒட்டகக் குட்டிகள் சூடு தாங்காமல் கரிந்து விடும் (பகல்) நேரம் ஆகும்" என்று கூறினார்கள்" என நான் அவர்களிடம் கூறினேன். **(முஸ்லிம்:748)**

## ٢٠٨ – باب الحثّ عَلى صَلاة تحية المسجد وكراهة الجلوس قبل أن يصلي ركعتين في أي وقت دخل وسواء صلّى ركعتين بنية التحية أو صلاة فريضة أوسُنّة راتبة أو غيرها

### பாடம் : 208 - பள்ளிவாசலுக்குரிய காணிக்கைத் தொழுகை தொழுதிட ஆர்வமூட்டுதல்! மேலும் பள்ளிவாசலில் எப்போது நுழைந்தாலும் இரண்டு ரக்அத்துகள் தொழுவதற்கு முன் உட்காருவது கூடாது. அந்த இரண்டு ரக்அத்துகள், பள்ளிவாசல் காணிக்கைத் தொழுகையாகவோ அல்லது பர்லான தொழுகையாகவோ அல்லது வழமையான சுன்னத் மற்றும் நபிலான தொழுகையாகவோ இருந்தாலும் சரியே!

١١٤٤ – وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا دَخَلَ أَحَدُكُمُ الْمَسْجِدَ فَلاَ يَجْلِسْ حَتَّى يُصَلِّيَ رَكْعَتَيْنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1144** அபூ கதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் பள்ளிவாசலுக்குள் நுழைந்தால், இரண்டு ரக்அத்துகள் தொழும் வரை உட்கார வேண்டாம்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:444. முஸ்லிம்:714)**

١١٤٥ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَيْت النَّبِيَّ ﷺ وَهُوَ فِي الْمَسْجِدِ فَقَالَ : " صَلِّ رَكْعَتَيْنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1145** ஜாபிர் (ரழி)அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பள்ளியில் இருந்தபோது நான் அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள், “(ஜாபிரே!) இரண்டு ரக்அத்துகளைத் தொழுவீராக!” என்று அப்போது நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:443. முஸ்லிம்:715)**

## ٢٠٩ – بَابُ اسْتِحباب رَكعتين بَعْدَ الوضوء

## பாடம் : 209 - உளூ செய்தபின் இரண்டு ரக்அத்துகள் (தொழுவது) விரும்பத்தக்கது.

١١٤٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ لِبِلَالٍ : " يَا بِلَالُ حَدِّثْنِي بِأَرْجَى عَمَلٍ عَمِلْته فِي الْأَسْلَامِ فَإِنِّي سَمِعْت دُفَّ نَعْلَيْك بَيْنَ يَدَيَّ فِي الْجَنَّةِ " . فَقَالَ : مَا عَمِلْت عَمَلًا أَرْجَى عِنْدِي مِنْ أَنِّي لَمْ أَتَطَهَّرْ طَهُورًا فِي سَاعَةٍ مِنْ لَيْلٍ أَوْ نَهَارٍ إلَّا صَلَّيْت بِذَلِكَ الطُّهُورِ مَا كُتِبَ لِي أَنْ أُصَلِّيَ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ

**1146** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பிலாலே! இஸ்லாத்தில் நீர் செய்கின்ற சிறந்த செயல் பற்றி என்னிடம் கூறுவீராக! ஏனெனில், சொர்க்கத்தில் எனக்கு முன் உம் செருப்பு சப்தத்தைக் கேட்டேன்” என்று நபி (ஸல்) அவர்கள் பிலாலிடம் கூறினார்கள். “இரவிலோ, பகலிலோ எப்போது உளூ செய்தாலும், அந்த உளூவுக்குப் பின் இரண்டு ரத்அத்துகள் நபில் தொழாமல் நான் இருந்ததில்லை. இதைவிட வேறு எந்த சிறந்த செயலையும் செய்ததில்லை” என்று பிலால் (ரழி) கூறினார்கள்.

**(புகாரி:1149. முஸ்லிம்:2458. இது புகாரியில் உள்ள வார்த்தையாகும்)**

## ٢١٠ – بَابُ فَضْلِ يوم الجمعَة ووُجوبها والاغتسال لها والتطيب والتبكير إليها والدعاء يوم الجمعة والصلاة على النبيّ ﷺ فيه وبيان ساعة الإجابة واستحباب إكثار ذكر الله بعد الجمعة

## பாடம் : 210 - ஜும்ஆ நாளின் சிறப்பு, அதற்காகக் குளிப்பது, நறுமணம் பூசுவது, அதற்காக விரைந்து செல்வது, அன்று துஆ செய்வது, நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் கூறுவது, துஆ ஏற்கப்படும் நேரம் பற்றிய விளக்கம். ஜும்ஆவிற்குப் பின்னும் அல்லாஹ்வை நினைவுகூருவது விரும்பத்தக்கது!

قَالَ اللَّهُ تَعَالَى : فَإِذَا قُضِيَتِ الصَّلَاةُ فَانْتَشِرُوا فِي الْأَرْضِ وَابْتَغُوا مِنْ فَضْلِ اللَّهِ وَاذْكُرُوا اللَّهَ كَثِيرًا لَعَلَّكُمْ تُفْلِحُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *(ஜும்ஆ) தொழுகை நிறைவேற்றப்பட்டுவிட்டால், பூமியில் நீங்கள் பரவிச் சென்று, அல்லாஹ்வின் அருட்கொடையைத் தேடுங்கள். அல்லாஹ்வை நினைவுகூருங்கள். (இதனால்) நீங்கள் வெற்றி பெறலாம். (62 : 10)*

١١٤٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " خَيْرُ يَوْمٍ طَلَعَتْ عَلَيْهِ الشَّمْسُ يَوْمُ الْجُمُعَةِ : فِيهِ خُلِقَ آدَمُ وَفِيهِ أُدْخِلَ الْجَنَّةَ وَفِيهِ أُخْرِجَ مِنْهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1147** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சூரியன் உதயமாகும் நாட்களில் சிறந்தது, ஜும்ஆ (வெள்ளிக் கிழமை) நாளாகும். அன்றுதான் ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டார்கள். அன்றுதான் அவர்கள் சொர்க்கத்தில் அனுமதிக்கப் பட்டார்கள். அன்றுதான் அவர்கள் அதிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:854)**

١١٤٨ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ ثُمَّ أَتَى الْجُمُعَةَ فَاسْتَمَعَ وَأَنْصَتَ غُفِرَ لَهُ مَا بَيْنَهُ وَبَيْنَ الْجُمُعَةِ وَزِيَادَةُ ثَلاَثَةِ أَيَّامٍ وَمَنْ مَسَّ الْحَصَى فَقَدْ لَغَا " . رَوَاهُ مُسْلِمٌ.

**1148** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தம் வீட்டில் அழகிய முறையில் உளூச் செய்து விட்டு, பின்பு ஜும்ஆத்தொழுகைக்கு வந்து, அமைதியாக இருந்து, (உரையைக்) கேட்டால் அன்றும், அடுத்துவரும் (வெள்ளிக்கிழமை) ஜும்ஆவிற்குமிடையேயும் மேலும், அதற்கு அடுத்த மூன்று நாட்கள் வரையிலும் (பத்து நாட்களின்) குற்றங்கள் மன்னிக்கப்படும். (தரையில் உள்ள) பொடிகற்களை (உரை கேட்காமல்) எடுத்துக் கொண்டிருந்தால், அவர் (ஜும்ஆவின் நன்மையை) வீணடித்துவிட்டார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:857)**

١١٤٩ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " الصَّلَوَاتُ الْخَمْسُ وَالْجُمُعَةُ إِلَى الْجُمُعَةِ وَرَمَضَانُ إِلَى رَمَضَانَ مُكَفِّرَاتٌ مَا بَيْنَهُنَّ إِذَا اجْتُنِبَتِ الْكَبَائِرُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1149** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஐந்து நேரத் தொழுகைகளும், ஒரு ஜும்ஆத் தொழுகை முதல் மறுஜும்ஆ வரையிலும், ஒரு ரமளான் (நோன்பு) முதல் மறு ரமளான் வரையிலும், பெரும் பாவங்கள் தவிர்க்கப்பட்டிருக்குமானால், அவற்றிற்கிடையே உள்ள (சிறுபாவங்கள்) அழிக்கக்கூடியதாக அமையும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:233)**

١١٥٠ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمْ أَنَّهُمَا سَمِعَا رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ عَلَى أَعْوَادِ مِنْبَرِهِ : " لَيَنْتَهِيَنَّ أَقْوَامٌ عَنْ وَدْعِهِمُ الْجُمُعَاتِ أَوْ لَيَخْتِمَنَّ اللَّهُ عَلَى قُلُوبِهِمْ ثُمَّ لَيَكُونُنَّ مِنَ الْغَافِلِينَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1150** அபூஹுரைரா(ரழி), அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

“ஜும்ஆ தொழுகைகளை விட்டுவிடக்கூடிய கூட்டத்தார்கள் விலகிக் கொள்ளட்டும். இல்லையெனில், அவர்களின் இதயங்கள் மீது அல்லாஹ் முத்திரையிட்டுவிடுவான். பின்பு அவர்கள் பொடு போக்கானவர்களாக (தொடர்ந்து) ஆகி விடுவார்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் மிம்பரில் கூற நாங்கள் கேட்டிருக்கிறோம். **(முஸ்லிம்:865)**

١١٥١ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا جَاءَ أَحَدُكُمُ الْجُمُعَةَ فَلْيَغْتَسِلْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1151** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் ஜும்ஆவிற்கு வந்தால், (முதலில்) குளித்துக் கொள்ளட்டும்!” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:877. முஸ்லிம்:844)**

١١٥٢ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " غُسْلُ الْجُمُعَةِ وَاجِبٌ عَلَى كُلِّ مُحْتَلِمٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ. الْمُرَادُ بِالْمُحْتَلِمِ : الْبَالِغُ . وَالْمُرَادُ بِالْوَاجِبِ : وُجُوبُ اخْتِيَارٍ كَقَوْلِ الرَّجُلِ لِصَاحِبِهِ : حَقُّكَ وَاجِبٌ عَلَيَّ وَاللَّهُ أَعْلَمُ.

**1152** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஜும்ஆ நாளில் குளிப்பது, வயதுக்கு வந்த அனைவர் மீதும் அவசியமாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:879. முஸ்லிம்:846)**

١١٥٣ – وَعَنْ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ تَوَضَّأَ يَوْمَ الْجُمُعَةِ فَبِهَا وَنِعْمَتْ . وَمَنْ اغْتَسَلَ فَالْغُسْلُ أَفْضَلُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1153** ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஜும்ஆ நாளில் ஒருவர் உளுச் செய்து கொண்டால் அதுவே போதுமானதாகும். அது நல்லதாகவும் உள்ளது. ஜும்ஆ நாளில் ஒருவர் குளித்தால், அது மிகச் சிறந்ததாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:354.திர்மிதீ:497)**

١١٥٤ – وَعَنْ سَلْمَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَغْتَسِلُ رَجُلٌ يَوْمَ الْجُمُعَةِ وَيَتَطَهَّرُ مَا اسْتَطَاعَ مِنْ طُهْرٍ وَيَدَّهِنُ مِنْ دُهْنِهِ أَوْ يَمَسُّ مِنْ طِيبِ بَيْتِهِ ثُمَّ يَخْرُجُ فَلاَ يُفَرِّقُ بَيْنَ اثْنَيْنِ ثُمَّ يُصَلِّي مَا كُتِبَ لَهُ ثُمَّ يُنْصِتُ إِذَا تَكَلَّمَ الإِمَامُ إِلاَّ غُفِرَ لَهُ مَا بَيْنَهُ وَبَيْنَ الْجُمُعَةِ الأُخْرَى " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1154** ஸல்மான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஜும்ஆ நாளன்று ஒருவர் குளித்து, தன்னை இயன்ற அளவுக்கு தூய்மைப்படுத்தி, எண்ணெய் தேய்த்து, நறுமணம் பூசி, பள்ளிவாசல் சென்று, (அங்கு உட்கார்ந்திருப்போரில்) இரண்டு பேரை பிரிக்காமல், பின்பு தன் மீது கடமையாக உள்ள (சுன்னத்) தொழுகையை நிறைவேற்றி, பின்பு இமாம் உரை நிகழ்த்தும்போது வாய்மூடி இருந்தால், அந்த ஜும்ஆவிற்கும், அதை அடுத்து வருகின்ற ஜும்ஆவிற்கும் இடையே ஏற்பட்ட குற்றங்கள் மன்னிக்கப்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:883)**

١١٥٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ اغْتَسَلَ يَوْمَ الْجُمُعَةِ غُسْلَ الْجَنَابَةِ ثُمَّ رَاحَ فَكَأَنَّمَا قَرَّبَ بَدَنَةً وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الثَّانِيَةِ فَكَأَنَّمَا قَرَّبَ بَقَرَةً وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الثَّالِثَةِ فَكَأَنَّمَا قَرَّبَ كَبْشًا أَقْرَنَ وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الرَّابِعَةِ فَكَأَنَّمَا قَرَّبَ دَجَاجَةً وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الْخَامِسَةِ فَكَأَنَّمَا قَرَّبَ بَيْضَةً فَإِذَا خَرَجَ الإِمَامُ حَضَرَتْ الْمَلاَئِكَةُ يَسْتَمِعُونَ الذِّكْرَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَوْلُهُ " غُسْلَ الْجَنَابَةِ " : أَيْ غُسْلاً كَغُسْلِ الْجَنَابَةِ فِي الصِّفَةِ .

**1155** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஜும்ஆ நாளில் கடமையான குளிப்பை போன்று ஒருவர் குளித்துவிட்டு, பின்பு முதலில் பள்ளிக்குச் சென்றால், அவர் ஒட்டகத்தை குர்பானி கொடுத்தவர் போலாவார். இரண்டாவதாகச் சென்றவர், ஒரு மாட்டைக் குர்பானி கொடுத்தவர் போலாவார். மூன்றாவதாகச் சென்றவர், கொம்புள்ள ஆட்டைக் குர்பானி கொடுத்தவர் போலாவார். நான்காவதாகச் சென்றவர், கோழியை குர்பானி கொடுத்தவர் போலாவார். ஐந்தாவதாகச் சென்றவர், முட்டையை தர்மம் செய்தவர் போலாவார். இமாம் (உரை நிகழ்த்த) வந்து விட்டால், அந்த குத்பாவைக் கேட்க வானவர்கள் (தங்கள் பதிவேடுகளை மூடிவிட்டு) பள்ளிக்குள் வந்து அமர்ந்து விடுவார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:881. முஸ்லிம்:850)**

١١٥٦ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ ذَكَرَ يَوْمَ الْجُمُعَةِ فَقَالَ : " فِيهَا سَاعَةٌ لاَ يُوَافِقُهَا عَبْدٌ مُسْلِمٌ وَهُوَ قَائِمٌ يُصَلِّي يَسْأَلُ اللَّهَ شَيْئًا إِلاَّ أَعْطَاهُ إِيَّاهُ " . وَأَشَارَ بِيَدِهِ يُقَلِّلُهَا . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1156** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஜும்ஆ நாள் பற்றிக் கூறும் போது, "அதில் ஒரு நேரம் உள்ளது. ஒரு முஸ்லிமான அடியான், நின்று தொழுது விட்டு எதையேனும் அல்லாஹ்விடம் அவர் கேட்பது அந்த நேரத்திற்கு பொருத்தமாக அமைந்தால், அதை அவருக்கு அல்லாஹ் கொடுக்காமல் இருப்பதில்லை" என்று கூறிவிட்டு "அந்த நேரம் குறைவு" என்பதை தன் கையால் சமிக்ஞை செய்தார்கள்.

**(புகாரி:935. முஸ்லிம்:852)**

١١٥٧ – وَعَنْ أَبِي بُرْدَةَ بْنِ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ عَبْدُ اللَّهِ بْنُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا : أَسَمِعْتَ أَبَاكَ يُحَدِّثُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ فِي شَأْنِ سَاعَةِ الْجُمُعَةِ ؟ قَالَ : قُلْت : نَعَمْ سَمِعْته يَقُولُ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " هِيَ مَا بَيْنَ أَنْ يَجْلِسَ الإِمَامُ إِلَى أَنْ تُقْضَى الصَّلاَةُ " رَوَاهُ مُسْلِمٌ .

**1157** அபூதர்தா இப்னு அபூமூஸா அஷ்அரீ (ரஹ்) அறிவிக்கின்றார்கள்:

என்னிடம் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள், "ஜும்ஆ நாளில் உள்ள ஒரு நேரம் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறியதாக, உம் தந்தை ஏதும் கூறி நீர் கேட்டதுண்டா?" என்று கேட்டார்கள். "ஆம்! இமாம் (மின்பரில்) உட்கார்ந்ததிலிருந்து, தொழுகை முடிக்கப்படும் வரை உள்ள இடைப்பட்ட நேரத்தில் உள்ளதாகும்" என்று நபி (ஸல்) கூறியதாக என் தந்தை கூறக் கேட்டேன் என்று கூறினேன்.

**(முஸ்லிம்:853)**

١١٥٨ – وَعَنْ أَوْسِ بْنِ أَوْسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ مِنْ أَفْضَلِ أَيَّامِكُمْ يَوْمَ الْجُمُعَةِ فَأَكْثِرُوا عَلَيَّ مِنْ الصَّلاَةِ فِيهِ فَإِنَّ صَلاَتَكُمْ مَعْرُوضَةٌ عَلَيَّ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1158** அவ்ஸ் இப்னு அவ்ஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாட்களில் மிகவும் சிறந்தது, ஜும்ஆ நாளாகும். அன்று என் மீது அதிகமாக ஸலவாத் கூறுங்கள். நிச்சயமாக உங்களின் ஸலவாத் என்னிடம் எடுத்துக்காட்டப்படுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1047)**

## ٢١١ – باب استِحْبَابِ سُجُودِ الشكر عند حصول نعمة ظاهرة أو اندفاع بلية ظاهرة

## பாடம் : 211 - ஒரு அருட்கொடை கிடைக்கும்போதும், சோதனையிலிருந்து காப்பாற்றப்படும் போதும், நன்றிக்குரிய ஸஜ்தா செய்வது விரும்பத்தக்கதாகும்.

١١٥٩ – عَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : خَرَجْنَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ مِنْ مَكَّةَ نُرِيدُ الْمَدِينَةَ . فَلَمَّا كُنَّا قَرِيبًا مِنْ عَزْوَرَاءَ نَزَلَ ثُمَّ رَفَعَ يَدَيْهِ فَدَعَا اللَّهَ سَاعَةً ثُمَّ خَرَّ سَاجِدًا فَمَكَثَ طَوِيلاً ثُمَّ قَامَ فَرَفَعَ يَدَيْهِ سَاعَةً ثُمَّ خَرَّ سَاجِدًا – فَعَلَهُ ثَلاَثًا – وَقَالَ : " إِنِّي سَأَلْت رَبِّي وَشَفَعْت لِأُمَّتِي فَأَعْطَانِي ثُلُثَ أُمَّتِي فَخَرَرْت سَاجِدًا لِرَبِّي شُكْرًا ثُمَّ رَفَعْت رَأْسِي فَسَأَلْت رَبِّي لِأُمَّتِي فَأَعْطَانِي ثُلُثَ أُمَّتِي فَخَرَرْت سَاجِدًا لِرَبِّي شُكْرًا ثُمَّ رَفَعْت رَأْسِي فَسَأَلْت رَبِّي لِأُمَّتِي فَأَعْطَانِي الثُّلُثَ الآخَرَ فَخَرَرْت سَاجِدًا لِرَبِّي " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1159** ஸஃது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் மக்காவிலிருந்து மதீனாவை நோக்கி சென்றோம். "அஸ்வரா" என்ற இடத்தை நாங்கள் அடைந்த போது, நபி (ஸல்) அவர்கள் (வாகனத்திலிருந்து) இறங்கி, தன் கைகளை உயர்த்தி, சிறிது நேரம் துஆச் செய்தார்கள். பின்னர் நீண்ட நேரம் ஸஜ்தாவில் இருந்தார்கள். பிறகு எழுந்து, சிறிது நேரம் தன் கைகளை உயர்த்தி (துஆ செய்து), பிறகு ஸஜ்தா செய்தார்கள். இப்படி மூன்று தடவை செய்தார்கள். "என் இறைவனிடம் என் சமுதாயத்தினருக்கு பரிந்துரை (ஷபாஅத்) செய்ய துஆக் கேட்டேன். என் சமுதாயத்தில் மூன்றில் ஒரு பகுதியினருக்கு (பரிந்துரை) செய்ய எனக்கு அனுமதி வழங்கினான். உடனே என் இறைவனுக்கு நன்றி கூறுவதற்காக ஸஜ்தாவில் விழுந்தேன். பின்பு என் தலையை உயர்த்தினேன். என் இறைவனிடம் என் சமுதாயத்திற்காக துஆக் கேட்டேன். என் சமுதாயத்தில் மூன்றில் ஒரு பகுதியினருக்கு எனக்கு அனுமதி வழங்கினான். உடனே என் இறைவனுக்கு நன்றி கூற ஸஜ்தா செய்தேன். பின்பு என் தலையை உயர்த்தினேன். என் இறைவனிடம் என் சமுதாயத்திற்காக மீண்டும் துஆக் கேட்டேன். என் இறைவன் (என் சமுதாயத்தில்) மூன்றில் ஒரு பகுதியினருக்கு அனுமதி வழங்கினான். என் இறைவனுக்கு ஸஜ்தா செய்தேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(இது அபூதாவூதில் (2775) உள்ளது. இதன் அறிவிப்பாளர் வரிசையில் உள்ள மூஸா இப்னு யஃகூப் அஸ்ஸம் ஈ, மனன சக்தி குறைந்தவர் ஆவார். மேலும் அவரது ஆசிரியர் யஹ்யா இப்னு ஹஸன் இப்னு உஸ்மான் என்பவர் யாரென்றே அறியப்படாதவர் ஆவார்)**

## ٢١٢ – بابُ فضل قيام الليل

## பாடம் : 212 - இரவில் நின்று வணங்குதலின் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى : وَمِنَ اللَّيْلِ فَتَهَجَّدْ بِهِ نَافِلَةً لَكَ عَسَى أَنْ يَبْعَثَكَ رَبُّكَ مَقَامًا مَحْمُودًا . وَقَالَ تَعَالَى : تَتَجَافَى جُنُوبُهُمْ عَنِ الْمَضَاجِعِ الأيَةَ . وَقَالَ تَعَالَى : كَانُوا قَلِيلاً مِنَ اللَّيْلِ مَا يَهْجَعُونَ.

**அல்லாஹ் கூறுகிறான்:** *இரவில் தஹஜ்ஜுத் தொழுகை தொழுவீராக! அது உமக்கு நபிலாக உள்ளது. உமது இறைவன் உம்மை "மகாமன் மஹ்மூதா" எனும் புகழுக்குரிய இடத்தில் எழுப்புவான். (17:79)*

*அவர்களின் விலாப் பகுதி படுக்கைகளை விட்டும் ஒதுங்கி நிற்கும். (32:16)*

*இரவில் குறைவாகத் தூங்குகிறவர்களாக அவர்கள் இருந்தார்கள். (51:17)*

١١٦٠ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ يَقُومُ مِنْ اللَّيْلِ حَتَّى تَتَفَطَّرَ قَدَمَاهُ فَقُلْتُ لَهُ : لِمَ تَصْنَعُ هَذَا يَا رَسُولَ اللَّهِ وَقَدْ غُفِرَ لَكَ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِكَ وَمَا تَأَخَّرَ ؟ قَالَ : " أَفَلاَ أَكُونُ عَبْدًا شَكُورًا ؟ ! " مُتَّفَقٌ عَلَيْهِ . وَعَنْ الْمُغِيرَةِ نَحْوُهُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1160** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், தங்களின் பாதங்கள் வீங்கும் அளவுக்கு இரவில் நின்று வணங்கிக் கொண்டிருந்தார்கள். "இறைத்தூதர் அவர்களே! உங்கள் முன்-பின் பாவங்கள் உங்களுக்கு மன்னிக்கப்பட்டுள்ள நிலையில் இப்படி ஏன் வணங்குகிறீர்கள்?" என்று அவர்களிடம் கேட்டேன். "அல்லாஹ்வுக்கு நன்றி உள்ள அடியானாக நான் இருக்க வேண்டாமா?" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:4837. முஸ்லிம்:2820. முகீரா இப்னு ஷுஃபா (ரழி) அறிவிக்கும் இதே போன்ற ஹதீஸும் புகாரி (1130), முஸ்லிமில் (2819) உள்ளது)**

١١٦١ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ طَرَقَهُ وَفَاطِمَةَ لَيْلاً فَقَالَ:" أَلاَ تُصَلِّيَانِ ؟ " مُتَّفَقٌ عَلَيْهِ . " طَرَقَهُ " : أَتَاهُ لَيْلاً.

**1161** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு (நாள்) இரவு என்னிடமும், ஃபாத்திமாவிடமும் வந்து தங்கிய போது, "நீங்கள் இருவரும் நபிலான தொழுகைகளைத் தொழக்கூடாதா?" என்று கேட்டார்கள்.

**(புகாரி:1127. முஸ்லிம்:775)**

١١٦٢ – وَعَنْ سَالِمِ بْنِ عَبْدِ اللّٰهِ بْنِ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللّٰهُ عَنْهُمْ عَنْ أَبِيهِ ) عَبْدِ اللّٰهِ بْنِ عُمَرَ ( أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ: "نِعْمَ الرَّجُلُ عَبْدُ اللّٰهِ لَوْ كَانَ يُصَلِّي مِنَ اللَّيْلِ". قَالَ سَالِمٌ : فَكَانَ عَبْدُ اللّٰهِ بَعْدَ ذَلِكَ لاَ يَنَامُ مِنَ اللَّيْلِ إِلاَّ قَلِيلاً . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1162** ஸாலிம் இப்னு அப்துல்லாஹ் இப்னு உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரவில் நபிலான தொழுகைகளை தொழுதால் அப்துல்லாஹ் நல்ல மனிதர்தான்!" என, என் தந்தை பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அதன்பின் (என் தந்தை) அப்துல்லாஹ் அவர்கள் குறைந்த நேரமே இரவில் தூங்குவார்கள். (இரவில் அதிகமான நேரம் நபிலான தொழுகைகளில் ஈடுபடுவார்கள்.)

**(புகாரி:3739. முஸ்லிம்:2479)**

١١٦٣ – وَعَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " يَا عَبْدَ اللّٰهِ لاَ تَكُنْ مِثْلَ فُلاَنٍ : كَانَ يَقُومُ اللَّيْلَ فَتَرَكَ قِيَامَ اللَّيْلِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1163** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அப்துல்லாவே! இரவில் நின்று வணங்கி விட்டு, பின்பு இரவில் நின்று வணங்குவதை (அறவே) விட்டுவிட்ட இன்னார் போல் நீர் இருந்து விடாதே!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1152. முஸ்லிம்:1159)**

١١٦٤ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : ذُكِرَ عِنْدَ النَّبِيِّ ﷺ رَجُلٌ نَامَ لَيْلَةً حَتَّى أَصْبَحَ ! قَالَ : " ذَاكَ رَجُلٌ بَالَ الشَّيْطَانُ فِي أُذُنَيْهِ " أَوْ قَالَ " فِي أُذُنِهِ " – مُتَّفَقٌ عَلَيْهِ .

**1164** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

காலையில் எழும் வரை இரவில் தூங்கிவிட்ட ஒரு மனிதர் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவன் இரு காதுகளிலோ, அல்லது ஒரு காதிலோ ஷைத்தான் சிறுநீர் கழித்து விட்டான்" என்று கூறினார்கள்.

**(புகாரி:1144. முஸ்லிம்:774)**

١١٦٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " يَعْقِدُ الشَّيْطَانُ عَلَى قَافِيَةِ رَأْسِ أَحَدِكُمْ إِذَا هُوَ نَامَ ثَلاَثَ عُقَدٍ يَضْرِبُ عَلَى كُلِّ عُقْدَةٍ : عَلَيْكَ لَيْلٌ طَوِيلٌ فَارْقُدْ ; فَإِنِ اسْتَيْقَظَ فَذَكَرَ اللّٰهَ تَعَالَى انْحَلَّتْ عُقْدَةٌ ; فَإِنْ تَوَضَّأَ انْحَلَّتْ عُقْدَةٌ فَإِنْ صَلَّى انْحَلَّتْ عُقَدُهُ كُلُّهَا فَأَصْبَحَ نَشِيطًا طَيِّبَ النَّفْسِ وَإِلاَّ أَصْبَحَ خَبِيثَ النَّفْسِ كَسْلاَنَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَافِيَةُ الرَّأْسِ : آخِرُهُ .

**1165** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தூங்கினால் அவரின் பிடரியில் ஷைத்தான் மூன்று முடிச்சுகள் போடுவான். ஒவ்வொரு முடிச்சின் போது, "உனக்கு நீண்ட இரவு உள்ளது. நீ தூங்குவாயாக!" என்று கூறுவான். அவர் தூங்கி, எழுந்து அல்லாஹ்வை நினைவுகூர்ந்தால், ஒரு முடிச்சு அவிழ்ந்துவிடும். அவர் உளூச் செய்தால்,

ஒரு முடிச்சு அவிழ்ந்து விடும். அவர் தொழுதால் இறுதி முடிச்சும் அவிழ்ந்து விடும். உடனே அவர் சுறுசுறுப்பான, மகிழ்ச்சியான மனிதராக ஆகி விடுவார். அவர் தொழவில்லை என்றால், மனநிம்மதி இல்லாதவராக, சோம்பேறியாக ஆகிவிடுகிறார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1142. முஸ்லிம்:776)**

١١٦٦ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ سَلاَمٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " أَيُّهَا النَّاسُ أَفْشُوا السَّلاَمَ وَأَطْعِمُوا الطَّعَامَ وَصَلُّوا بِاللَّيْلِ وَالنَّاسُ نِيَامٌ تَدْخُلُوا الْجَنَّةَ بِسَلاَمٍ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1166** அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''மனிதர்களே! ஸலாம் கூறி (ஸலாமைப்) பரப்புங்கள். (பசித்தவருக்கு) உணவளியுங்கள். மக்கள் தூங்கிக் கொண்டிருக்கும் நிலையில் நள்ளிரவில் தொழுங்கள். (இதைச் செய்தால்) நல்லவிதமாக சொர்க்கத்தில் நுழைவீர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2485. இது ''ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١١٦٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَفْضَلُ الصِّيَامِ بَعْدَ رَمَضَانَ شَهْرُ اللَّهِ الْمُحَرَّمُ وَأَفْضَلُ الصَّلاَةِ بَعْدَ الْفَرِيضَةِ صَلاَةُ اللَّيْلِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1167** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''ரமளான் மாதத்திற்குப் பின் நோன்புகளில் மிகச்சிறந்தது, அல்லாஹ்வின் மாதமான ''முஹர்ரம்'' மாதமாகும். கடமையான தொழுகைக்குப் பின் (நபிலான) தொழுகையில் மிகச்சிறந்தது, இரவுத் தொழுகையாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1163)**

١١٦٨ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " صَلاَةُ اللَّيْلِ مَثْنَى مَثْنَى فَإِذَا خِفْتَ الصُّبْحَ فَأَوْتِرْ بِوَاحِدَةٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1168** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''இரவில் நபில் தொழுகை (ரக்அத்) என்பது இரண்டு, இரண்டு ரக்அத்துகளாகும். சுப்ஹூத் தொழுகையின் நேரம் வந்துவிடும் என பயந்தால், ஒரு ரக்அத் வித்ருத் தொழுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:990. முஸ்லிம்:749)**

١١٦٩ – وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ ( قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ يُصَلِّي مِنَ اللَّيْلِ مَثْنَى مَثْنَى وَيُوتِرُ بِرَكْعَةٍ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1169** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவில் இரண்டு, இரண்டு ரக்அத்துகளாக தொழுதுவிட்டு, ஒரு ரக்அத் வித்ருத் தொழுவார்கள். **(புகாரி:995. முஸ்லிம்:749)**

١١٧٠ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُفْطِرُ مِنَ الشَّهْرِ حَتَّى نَظُنَّ أَنْ لاَ يَصُومَ مِنْهُ وَيَصُومُ حَتَّى نَظُنَّ أَنْ لاَ يُفْطِرَ مِنْهُ شَيْئًا وَكَانَ لاَ تَشَاءُ أَنْ تَرَاهُ مِنَ اللَّيْلِ مُصَلِّيًا إِلاَّ رَأَيْتَهُ وَلاَ نَائِمًا إِلاَّ رَأَيْتَهُ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1170** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் நோன்பு வைக்கமாட்டார்களா? என்று நாங்கள் எண்ணும் அளவுக்கு ஒரு மாதம் நோன்பை விட்டு விடுவார்கள். எதையேனும் (சாப்பிடுவது) மூலம் நோன்பை விட்டு விடமாட்டார்களா? என்று நாங்கள் எண்ணும் அளவுக்கு நோன்பு வைப்பார்கள். இரவில் தொழுது

கொண்டிருப்பார்கள் என நினைத்து நீர் சென்றால், அப்பொழுது அவர்கள் தொழுது கொண்டிருப்பவர்களாக நீர் அவர்களைப் பார்ப்பீர். இரவில் தூங்கி கொண்டிருப்பார்கள் என நினைத்து நீர் சென்றால், அங்கு அவர்களை தூங்குபவர்களாக நீர் பார்ப்பீர். **(புகாரி:1441)**

١١٧١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يُصَلِّي إِحْدَى عَشْرَةَ رَكْعَةً – تَعْنِي فِي اللَّيْلِ – يَسْجُدُ السَّجْدَةَ مِنْ ذَلِكَ قَدْرَ مَا يَقْرَأُ أَحَدُكُمْ خَمْسِينَ آيَةً قَبْلَ أَنْ يَرْفَعَ رَأْسَهُ وَيَرْكَعَ رَكْعَتَيْنِ قَبْلَ صَلَاةِ الْفَجْرِ ثُمَّ يَضْطَجِعُ عَلَى شِقِّهِ الأَيْمَنِ حَتَّى يَأْتِيَهُ الْمُنَادِي لِلصَّلَاةِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1171** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவில் 11 ரக்அத்துகள் தொழுவார்கள். உங்களில் ஒருவர் ஐம்பது வசனங்களை ஓதும் அளவுக்கு (நீண்ட நேரம்) அவர்கள் ஸஜ்தாவில் செய்வார்கள். சுப்ஹு தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். பின்பு தொழுகைக்காக அழைப்பவர் (முஅத்தின்) அவர்களிடம் வரும் வரை தன் வலது பக்கமாக திரும்பிப் படுப்பார்கள். **(புகாரி:1123)**

١١٧٢ – وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : مَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَزِيدُ – فِي رَمَضَانَ وَلَا فِي غَيْرِهِ – عَلَى إِحْدَى عَشْرَةَ رَكْعَةً : يُصَلِّي أَرْبَعًا فَلَا تَسْأَلْ عَنْ حُسْنِهِنَّ وَطُولِهِنَّ ; ثُمَّ يُصَلِّي أَرْبَعًا فَلَا تَسْأَلْ عَنْ حُسْنِهِنَّ وَطُولِهِنَّ . ثُمَّ يُصَلِّي ثَلَاثًا . فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ أَتَنَامُ قَبْلَ أَنْ تُوتِرَ ؟ فَقَالَ : " يَا عَائِشَةُ إِنَّ عَيْنَيَّ تَنَامَانِ وَلَا يَنَامُ قَلْبِي " ! مُتَّفَقٌ عَلَيْهِ .

**1172** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ரமளானிலும், அது அல்லாத காலங்களிலும் பதினொரு ரக்அத்துகளை விட அதிகமாக்கியதில்லை. நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். அதன் அழகு, அதன் நீளம் பற்றி நீர் கேட்க வேண்டாம்! பின்பு நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். அவற்றின் அழகு, நீளம் பற்றி கேட்க வேண்டாம்! பின்பு மூன்று ரக்அத்துகள் தொழுவார்கள். அப்போது நான், "இறைத்தூதர் அவர்களே! வித்ருத் தொழும் முன் நீங்கள் தூங்குகிறீர்களே?" என்று கேட்டேன். "ஆயிஷாவே! என் கண்கள் தான் தூங்குகின்றன. என் இதயம் தூங்குவதில்லை" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1147. முஸ்லிம்:738)**

١١٧٣ – وَعَنْهَا ) عَائِشَةَ ( أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَنَامُ أَوَّلَ اللَّيْلِ وَيَقُومُ آخِرَهُ فَيُصَلِّي . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1173** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவின் ஆரம்பத்தில் தூங்குவார்கள். அதன் இறுதியில் எழுந்து, தொழுவார்கள். **(புகாரி:1146. முஸ்லிம்:739)**

١١٧٤ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : صَلَّيْتُ مَعَ النَّبِيِّ ﷺ لَيْلَةً فَلَمْ يَزَلْ قَائِمًا حَتَّى هَمَمْتُ بِأَمْرِ سُوءٍ . قِيلَ : وَمَا هَمَمْتَ ؟ قَالَ : هَمَمْتُ أَنْ أَجْلِسَ وَأَدَعَهُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1174** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் ஓர் இரவு தொழுதேன். ஒரு தீய சிந்தனையை நான் நாடும் அளவுக்கு தொடர்ந்து நின்று (தொழுது) கொண்டிருந்தார்கள். "என்ன நாடினீர்?" என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊதிடம் கேட்கப்பட்டது. "நான் (இடையில்) உட்கார்ந்துவிடவும், தொழுகையை விட்டுவிடவும் விரும்பினேன்" என்று இப்னு மஸ்ஊத் (ரழி) கூறினார்கள். **(புகாரி:1135. முஸ்லிம்:773)**

١١٧٥ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : صَلَّيْت مَعَ النَّبِيِّ ﷺ ذَاتَ لَيْلَة فَافْتَتَحَ الْبَقَرَةَ فَقُلْت : يَرْكَعُ عِنْدَ الْمائة ثُمَّ مَضَى فَقُلْت : يُصَلِّي بِهَا فِي رَكْعَة فَمَضَى فَقُلْت : يَرْكَعُ بِهَا ثُمَّ افْتَتَحَ النِّسَاءَ فَقَرَأَهَا ثُمَّ افْتَتَحَ آلَ عِمْرَانَ فَقَرَأَهَا يَقْرَأُ مُتَرَسِّلاً : إِذَا مَرَّ بِآيَة فِيهَا تَسْبِيحٌ سَبَّحَ وَإِذَا مَرَّ بِسُؤَال سَأَلَ وَإِذَا مَرَّ بِتَعَوُّذ تَعَوَّذَ . ثُمَّ رَكَعَ فَجَعَلَ يَقُولُ : سُبْحَانَ رَبِّيَ الْعَظِيمَ فَكَانَ رُكُوعُهُ نَحْوًا مِنْ قِيَامِه ثُمَّ قَالَ : سَمِعَ اللَّهُ لِمَنْ حَمِدَهُ رَبَّنَا لَكَ الْحَمْدُ . ثُمَّ قَامَ طَوِيلاً قَرِيبًا مِمَّا رَكَعَ . ثُمَّ سَجَدَ فَقَالَ : سُبْحَانَ رَبِّيَ الأَعْلَى فَكَانَ سُجُودُهُ قَرِيبًا مِنْ قِيَامِهِ . رَوَاهُ مُسْلِمٌ .

**1175** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் இரவு நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன். "சூராத்துல் பகரா" அத்தியாயத்தை ஓதினார்கள். நூறு வசனம் வரும் போது "ருகூஉ" செய்வார்கள் என எண்ணினேன். ஆனால் அதையும் கடந்தார்கள். பகரா சூராவை முடித்ததன் மூலம் ஒரு ரக்அத்தை தொழுவார்கள் என எண்ணினேன். பின்பு அதையும் கடந்தார்கள். ருகூஉ செய்வார்கள் என எண்ணினேன். பின்பு "அந்நிஸா" அத்தியாயத்தைத் துவக்கி ஓதினார்கள். பின்பு "ஆலஇம்ரான்" அத்தியாயத்தை துவக்கி, அதை ஓதினார்கள். நிறுத்தி, நிறுத்தி ஓதினார்கள். அதில் தஸ்பீஹ் கூறும் வசனத்தை முடித்தால் "தஸ்பீஹ்" செய்தார்கள். துஆ வசனத்தை முடித்தால் துஆச் செய்தார்கள். பாதுகாப்புத் தேடல் வசனத்தை முடித்தால் பாதுகாவல் தேடினார்கள். பின்பு ருகூஉ செய்தார்கள். "சுப்ஹான ரப்பியல் அளீம்" என்று கூறுபவர்களாக இருந்தார்கள். அவர்களின் ருகூஉ, அவர்கள் நிலையில் இருந்தது போன்று இருந்தது. பின்பு "ஸமிஅல்லாஹ் லிமின் ஹமிதா ரப்பனா லகல்ஹம்து" என்று கூறினார்கள். பின்பு ருகூஉவிலிருந்து எழுந்து நீண்ட நேரம் நின்றார்கள். பின்பு ஸஜ்தா செய்தார்கள். "சுப்ஹான ரப்பியல் அஃலா" என்று கூறினார்கள். அவர்களின் ஸஜ்தா அவர்களின் நிலைக்கு நெருக்கமாக இருந்தது. **(முஸ்லிம்:772)**

١١٧٦ – وَعَنْ جَابِر رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سُئِلَ رَسُولُ اللَّهِ ﷺ : أَيُّ الصَّلاَةِ أَفْضَلُ ؟ قَالَ : " طُولُ الْقُنُوت " . رَوَاهُ مُسْلِمٌ . الْمُرَادُ بِالْقُنُوتِ : الْقِيَامُ .

**1176** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தொழுகையில் மிகச் சிறந்தது எது?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது."நீளமான கிராஅத்துடைய தொழுகைதான்" என்று பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:756)**

١١٧٧ – وَعَنْ عَبْد اللَّه بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَحَبُّ الصَّلاَةِ إِلَى اللَّهِ صَلاَةُ دَاوُدَ وَأَحَبُّ الصِّيَامِ إِلَى اللَّهِ صِيَامُ دَاوُدَ كَانَ يَنَامُ نِصْفَ اللَّيْلِ وَيَقُومُ ثُلُثَهُ وَيَنَامُ سُدُسَهُ وَيَصُومُ يَوْمًا وَيُفْطِرُ يَوْمًا " . مُتَّفَقٌ عَلَيْه.

**1177** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வுக்கு தொழுகையில் மிக விருப்பமான தொழுகை, தாவூத் நபியின் தொழுகைதான். அல்லாஹ்வுக்கு நோன்புகளில் மிக விருப்பமானது, தாவூத் நபியின் நோன்புதான். அவர்கள் பாதி இரவு வரை தூங்குவார்கள். பிறகு மூன்றில் ஒரு பங்கு நேரம் வணங்குவார்கள். ஆறில் ஒரு பங்கு நேரம் தூங்குவார்கள். ஒருநாள் நோன்பு வைப்பார்கள். ஒருநாள் நோன்பை விட்டு விடுவார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1331. முஸ்லிம்:1159)**

١١٧٨ – وَعَنْ جَابِر رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ فِي اللَّيْلِ لَسَاعَةً لاَ يُوَافِقُهَا رَجُلٌ مُسْلِمٌ يَسْأَلُ اللَّهَ تَعَالَى خَيْرًا مِنْ أَمْرِ الدُّنْيَا وَالآخِرَةِ إِلاَّ أَعْطَاهُ إِيَّاهُ وَذَلِكَ كُلَّ لَيْلَة " . رَوَاهُ مُسْلِمٌ .

**1178** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரவில் ஒரு நேரம் உண்டு. அந்த நேரத்தில் இம்மை, மறுமை காரியங்களில் எந்த நல்லதையும் அல்லாஹ்விடம் ஒரு முஸ்லிம் கேட்டு, அந்த நேரத்துக்கு ஏற்ப அது இருந்தால், அதை அல்லாஹ் கொடுக்காமல் இருப்பதில்லை. அந்த நேரம் ஒவ்வொரு இரவிலும் உள்ளது” என்று நபி (ஸல்) கூறக் கேட்டேன். **(முஸ்லிம்:757)**

١١٧٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِذَا قَامَ أَحَدُكُمْ مِنَ اللَّيْلِ فَلْيَفْتَتِحْ الصَّلَاةَ بِرَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ " رَوَاهُ مُسْلِمٌ .

**1179** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் இரவில் வணங்கினால், இலகுவான அளவில் இரண்டு ரக்அத்துகளை தொழுது ஆரம்பிக்கட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:768)**

١١٨٠ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا قَامَ مِنَ اللَّيْلِ افْتَتَحَ صَلَاتَهُ بِرَكْعَتَيْنِ خَفِيفَتَيْنِ . رَوَاهُ مُسْلِمٌ .

**1180** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், இரவில் வணங்கினால் இலகுவான அளவில் இரண்டு ரக்அத்துகளை தொழுவதன் மூலம் தன் தொழுகையை ஆரம்பிப்பார்கள். **(முஸ்லிம்:767)**

١١٨١ – وَعَنْهَا ) عَائِشَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا فَاتَتْهُ الصَّلَاةُ مِنَ اللَّيْلِ مِنْ وَجَعٍ أَوْ غَيْرِهِ صَلَّى مِنَ النَّهَارِ ثِنْتَيْ عَشْرَةَ رَكْعَةً . رَوَاهُ مُسْلِمٌ .

**1181** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் உடல்வலி அல்லது வேறு காரணமாக இரவுத் தொழுகை அவர்களுக்குத் தவறிவிட்டால், அதற்கு பகரமாக பகலில் பனிரெண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். **(முஸ்லிம்:746)**

١١٨٢ – وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ نَامَ عَنْ حِزْبِهِ أَوْ عَنْ شَيْءٍ مِنْهُ فَقَرَأَهُ فِيمَا بَيْنَ صَلَاةِ الْفَجْرِ وَصَلَاةِ الظُّهْرِ كُتِبَ لَهُ كَأَنَّمَا قَرَأَهُ مِنَ اللَّيْلِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1182** உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தான் வழமையாக ஓதுவதையோ அல்லது அதில் சிலதையோ ஓதாமல் தூங்கி, அதை ‘சுப்ஹ்’ மற்றும் ‘லுஹர்’ தொழுகையில் ஓதினால், அவருக்கு இரவில் அதை ஓதியது போல் நன்மை எழுதப்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:747)**

١١٨٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " رَحِمَ اللَّهُ رَجُلاً قَامَ مِنَ اللَّيْلِ فَصَلَّى وَأَيْقَظَ امْرَأَتَهُ فَإِنْ أَبَتْ نَضَحَ فِي وَجْهِهَا الْمَاءَ رَحِمَ اللَّهُ امْرَأَةً قَامَتْ مِنَ اللَّيْلِ فَصَلَّتْ وَأَيْقَظَتْ زَوْجَهَا فَإِنْ أَبَى نَضَحَتْ فِي وَجْهِهِ الْمَاءَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1183** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரவில் எழுந்து, தானும் தொழுது, தன் மனைவியையும் தொழுவதற்காக விழிக்கச் செய்கிறார். அவள் மறுத்தால், அவளின் முகத்தில் தண்ணீரை தெளிக்கிறார். இவருக்கு அல்லாஹ் அருள்

புரிவானாக! மேலும் ஒரு பெண் இரவில் எழுந்து, தானும் தொழுது, தனது கணவனையும் தொழுவதற்காக எழுப்புகிறாள். அவன் மறுத்தால் அவனின் முகத்திலும் தண்ணீரை தெளிப்பாள். இவளுக்கும் அல்லாஹ் அருள் புரிவானாக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:1308)**

١١٨٤ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( وَعَنْ أَبِي سَعِيدٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالاَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا أَيْقَظَ الرَّجُلُ أَهْلَهُ مِنَ اللَّيْلِ فَصَلَّيَا – أَوْ صَلَّى – رَكْعَتَيْنِ جَمِيعًا كُتِبَا فِي الذَّاكِرِينَ وَالذَّاكِرَاتِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1184** அபூஹுரைரா (ரழி), அபூஸயீத் (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தன் மனைவியையும் இரவில் எழுப்பி, அவர்கள் இருவரும் சேர்ந்து இரண்டு ரக்அத்துகள் தொழுதால், அவ்விருவரும் அல்லாஹ்வை நினைவுகூரும் ஆண்கள், பெண்கள் கூட்டத்தில் பதிவு செய்யப்படுவார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:1309)**

١١٨٥ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِذَا نَعَسَ أَحَدُكُمْ فِي الصَّلاَةِ فَلْيَرْقُدْ حَتَّى يَذْهَبَ عَنْهُ النَّوْمُ فَإِنَّ أَحَدَكُمْ إِذَا صَلَّى وَهُوَ نَاعِسٌ لَعَلَّهُ يَذْهَبُ يَسْتَغْفِرُ فَيَسُبُّ نَفْسَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1185** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தொழுகையில் சிறு தூக்கம் தூங்கினால், அவர் தன்னை விட்டும் தூக்கம் நீங்கும் வரை தூங்கட்டும்! உங்களில் ஒருவர் தூங்கிய நிலையில் தொழுதால், அவர் அல்லாஹ்விடம் தனக்காக மன்னிப்புத் தேடக் கூடும். மேலும் தன்னையே திட்டிக் கொள்ளவும் கூடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:212. முஸ்லிம்:786)**

١١٨٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ . " إِذَا قَامَ أَحَدُكُمْ مِنَ اللَّيْلِ فَاسْتَعْجَمَ الْقُرْآنُ عَلَى لِسَانِهِ فَلَمْ يَدْرِ مَا يَقُولُ فَلْيَضْطَجِعْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1186** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் இரவில் வணங்கும்போது (தூக்கம் காரணமாக) குர்ஆன் வசனம் அவரது நாவில் சரியாக வராமல் தடுமாற்றம் ஏற்பட்டால், தான் கூறுவதையே அவர் அறியாத நிலையில் இருந்தால், அவர் படுத்துக்கொள்ளட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:787)**

## ٢١٣ – باب استحباب قيام رمضان وهو التراويح

## பாடம் : 213 - ரமளான் இரவில் வணங்குவது விரும்பத்தக்கது

١١٨٧ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ قَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1187** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறை நம்பிக்கையுடனும், நன்மையை நாடியும் ரமளானில் ஒருவர் வணங்கினால், அவரது முன் பாவங்கள் மன்னிக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2008. முஸ்லிம்:759/173)**

١١٨٨ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ : يُرَغِّبُ فِي قِيَامِ رَمَضَانَ مِنْ غَيْرِ أَنْ يَأْمُرَهُمْ فِيهِ بِعَزِيمَةٍ فَيَقُولُ : " مَنْ قَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1188** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ரமளானில் நின்று வணக்கம் செய்ய தன் தோழர்களுக்கு ஆர்வ மூட்டினார்கள். அப்போது அவர்கள், "இறைநம்பிக்கையுடனும், நன்மையை நாடியும் ரமளானில் நின்று வணங்கினால் அவரது முன் பாவங்கள் மன்னிக்கப்படும்" என்று கூறினார்கள்.

**(முஸ்லிம்:759/174)**

## ٢١٤ – باب فضل قيام ليلة القدْر وَبيان أرجىَ لياليها

## பாடம் : 214 - லைலத்துல் கத்ரில் நின்று வணங்குவதன் சிறப்பு! இதன் இரவுகளை விரும்புவதின் விளக்கம்!

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّا أَنْزَلْنَاهُ فِي لَيْلَةِ الْقَدْرِ إِلَى آخِرِ السُّورَةِ . وَقَالَ تَعَالَى إِنَّا أَنْزَلْنَاهُ فِي لَيْلَةٍ مُبَارَكَةٍ الأَيَات .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக! லைலத்துல் கத்ரில் இதனை (குர்ஆனை) நாம் இறக்கி வைத்தோம். அந்த கண்ணியமிக்க இரவு என்னவென்று உமக்குத் தெரியுமா? அந்த கண்ணிய மிக்க இரவு ஆயிரம் மாதங்களைவிடச் சிறந்ததாகும். மலக்குகளும், ஜிப்ரீல் (அலை) அவர்களும், தங்களின் இரட்சகனின் கட்டளையைக் கொண்டு சகல காரியங்களின் பொருட்டும் (பூமியில்) இறங்குகின்றனர். அந்த இரவு சாந்திமிக்கது. அது காலைப் பொழுது உதயமாகும் வரை (நீடிக்கும்). (97:1-5)*

*நிச்சயமாக இதனை (குர்ஆனை) அபிவிருத்திக்குரிய (சங்கையான) ஓர் இரவில் இறக்கி வைத்தோம். ஏனெனில், நாம் மக்களுக்கு முன்னெச்சரிக்கை செய்ய நாடியிருந்தோம்! (44:3)*

١١٨٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ قَامَ لَيْلَةَ الْقَدْرِ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1189** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைநம்பிக்கையுடனும், நன்மையை நாடியும் ஒருவர் லைலத்துல் கத்ரு இரவில் வணங்கினால், அவரின் முன் பாவங்கள் மன்னிக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2014. முஸ்லிம்:760)**

١١٩٠ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رِجَالاً مِنْ أَصْحَابِ النَّبِيِّ ﷺ أُرُوا لَيْلَةَ الْقَدْرِ فِي الْمَنَامِ فِي السَّبْعِ الأَوَاخِرِ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَرَى رُؤْيَاكُمْ قَدْ تَوَاطَأَتْ فِي السَّبْعِ الأَوَاخِرِ فَمَنْ كَانَ مُتَحَرِّيهَا فَلْيَتَحَرَّهَا فِي السَّبْعِ الأَوَاخِرِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1190** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி)அறிவிக்கின்றார்கள்:

நபித்தோழர்களில் சிலர், லைலத்துல் கத்ர் இரவு ரமளானில் கடைசி ஏழு இரவுகளுக்குள் அடங்கி யிருப்பதாக கனவில் அறிவித்துக் கொடுக்கப்பட்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "உங்கள் கனவில் பிந்திய கடைசி ஏழு இரவுகளில் லைலத்துல் கத்ர் இணைக்கப்பட்டுள்ளது. எனவே அதைத் தேடுபவர், அதன் கடைசி இரவுகளில் அதைத் தேடட்டும்" என்று கூறினார்கள்.

**(புகாரி:2015. முஸ்லிம்:1165)**

١١٩١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُجَاوِرُ فِي الْعَشْرِ الأَوَاخِرِ مِنْ رَمَضَانَ وَيَقُولُ : " تَحَرَّوْا لَيْلَةَ الْقَدْرِ فِي الْعَشْرِ الأَوَاخِرِ مِنْ رَمَضَانَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1191** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ரமளானில் கடைசிப் பத்து நாட்கள் பள்ளியில் இஃதிகாஃப் இருப்பார்கள். "ரமளானில் கடைசி பத்து நாட்களில் லைலதுல் கத்ரைத் தேடுங்கள்" என்று கூறுவார்கள்.

**(புகாரி:2020. முஸ்லிம்:1169)**

١١٩٢ – وَعَنْهَا ) عَائِشَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " تَحَرَّوْا لَيْلَةَ الْقَدْرِ فِي الْوِتْرِ مِنْ الْعَشْرِ الأَوَاخِرِ مِنْ رَمَضَانَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1192** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ரமளானில் கடைசிப் பத்து நாட்களில் ஒற்றைப்படை இரவுகளில் லைலத்துல் கத்ரைத் தேடுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2017)**

١١٩٣ – وَعَنْهَا ) عَائِشَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : " كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا دَخَلَ الْعَشْرُ الأَوَاخِرُ مِنْ رَمَضَانَ أَحْيَا اللَّيْلَ وَأَيْقَظَ أَهْلَهُ وَجَدَّ وَشَدَّ الْمِئْزَرَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1193** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ரமளானில் கடைசிப் பத்து நாட்கள் வந்துவிட்டால், இரவில் விழித்திருப்பார்கள். தம் குடும்பத்தாரையும் எழுப்புவார்கள். நல்வணக்கம் புரிய முயற்சிப்பார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் தம் இல்லறத் தொடர்பை நிறுத்திக்கொள்வார்கள். **(புகாரி:2024. முஸ்லிம்:1174)**

١١٩٤ – وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَجْتَهِدُ فِي رَمَضَانَ مَا لاَ يَجْتَهِدُ فِي غَيْرِهِ وَفِي الْعَشْرِ الأَوَاخِرِ مِنْهُ مَا لاَ يَجْتَهِدُ فِي غَيْرِهِ . رَوَاهُ مُسْلِمٌ .

**1194** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் வணக்கம் புரிய ரமளான் அல்லாத மற்ற காலங்களில் எடுக்காத முயற்சியை ரமளானில் முயற்சிப்பார்கள். மேலும் ரமளானின் மற்ற நாட்களில் எடுக்காத முயற்சியை விட கடைசிப் பத்து நாட்களில் முயற்சிப்பார்கள். **(முஸ்லிம்:1175)**

١١٩٥ – وَعَنْهَا ) عَائِشَةَ ( قَالَتْ : قُلْت : يَا رَسُولَ اللَّهِ أَرَأَيْت إنْ عَلِمْت أَيَّ لَيْلَة لَيْلَةُ الْقَدْرِ مَا أَقُولُ فِيهَا ؟ قَالَ : " قُولِي : اللَّهُمَّ إِنَّكَ عَفُوٌّ تُحِبُّ الْعَفْوَ فَاعْفُ عَنِّي " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

**1195** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! லைலத்துல் கத்ர், எந்த இரவு என்பதை நான் அறிந்து கொண்டால், அதில் நான் கூற வேண்டியது என்ன?" என்று கேட்டேன். "அல்லாஹும்ம இன்னக்க அஃபுவ்வன், துஹிப்புல் அஃப்வ, பஃபு அன்னீ" என்று நீ கூறுவாயாக! என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3513. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்: இறைவா! நீயே மன்னிப்பவன். நீ மன்னிப்பதையே விரும்புகிறாய். எனவே என்னை நீ மன்னிப்பாயாக!**

## ٢١٥ – بابُ فضل السّواك وخصال الفطرة

### பாடம் : 215 - பல் துலக்குவதின் சிறப்பு, மற்றும் இயற்கை நடைமுறைகள்

١١٩٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لَوْلاَ أَنْ أَشُقَّ عَلَى أُمَّتِي – أَوْ عَلَى النَّاسِ – لأَمَرْتُهُمْ بِالسِّوَاكِ مَعَ كُلِّ صَلاَةٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1196** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் சமுதாய - மக்களுக்குச் சிரமமாக இருக்கும் என நான் பயப்படவில்லையானால், ஒவ்வொரு தொழுகையின் போதும் பல்துலக்கும்படி அவர்களுக்கு நான் கட்டளையிட்டிருப்பேன்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:887. முஸ்லிம்:252)**

١١٩٧ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا قَامَ مِنَ النَّوْمِ يَشُوصُ فَاهُ بِالسِّوَاكِ . مُتَّفَقٌ عَلَيْهِ . " الشَّوْصُ " : الدَّلْكُ .

**1197** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தூக்கத்திலிருந்து எழுந்தால், பல்துலக்கும் குச்சியால் பல் துலக்குவார்கள். **(புகாரி:889. முஸ்லிம்:255)**

١١٩٨ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : " كُنَّا نُعِدُّ لِرَسُولِ اللَّهِ ﷺ سِوَاكَهُ وَطَهُورَهُ فَيَبْعَثُهُ اللَّهُ مَا شَاءَ أَنْ يَبْعَثَهُ مِنَ اللَّيْلِ فَيَتَسَوَّكُ وَيَتَوَضَّأُ وَيُصَلِّي " . رَوَاهُ مُسْلِمٌ .

**1198** ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுக்காக, அவர்கள் பல் துலக்கவும், அவர்கள் உளூச்செய்யவும் நாங்கள் தண்ணீரைத் தயாராக எடுத்து வைத்திருப்போம். இரவில் அவர்களை எழுப்பி நல்வணக்கம் புரிய, தான் நாடியபடி அல்லாஹ் அவர்களை எழுப்புவான் (எழுந்தவுடனே) நபி (ஸல்) அவர்கள் பல் துலக்குவார்கள். உளூச் செய்வார்கள். தொழுவார்கள். **(முஸ்லிம்:746)**

١١٩٩ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَكْثَرْتُ عَلَيْكُمْ فِي السِّوَاكِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1199** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பல்துலக்குவது பற்றி உங்களிடம் அதிகம் கூறிவிட்டேன்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:888)**

١٢٠٠ – وَعَنْ شُرَيْحِ بْنِ هَانِئٍ قَالَ : قُلْتُ لِعَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا : بِأَيِّ شَيْءٍ كَانَ يَبْدَأُ النَّبِيُّ ﷺ إِذَا دَخَلَ بَيْتَهُ ؟ . قَالَتْ : بِالسِّوَاكِ . رَوَاهُ مُسْلِمٌ .

**1200** ஷுரைஹ் இப்னு ஹானீ (ரஹ்) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்கள், வீட்டிற்கு வந்தால் முதலில் என்ன செய்வார்கள்?” என்று ஆயிஷா (ரழி) அவர்களிடம் நான் கேட்டேன். “பல்துலக்குவார்கள்” என்று அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:253)**

١٢٠١ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : دَخَلْتُ عَلَى النَّبِيِّ ﷺ وَطَرَفُ السِّوَاكِ عَلَى لِسَانِهِ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ مُسْلِمٍ .

**1201** அபூமூஸா அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், அவர்களின் நாவில் பல்துலக்கும் குச்சி இருந்த நிலையில் நான் சென்றேன். **(புகாரி:244. முஸ்லிம்:2254)**

١٢٠٢ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " السِّوَاكُ مَطْهَرَةٌ لِلْفَمِ مَرْضَاةٌ لِلرَّبِّ " . رَوَاهُ النَّسَائِيُّ وَابْنُ خُزَيْمَةَ فِي صَحِيحِهِ , بِأَسَانِيدَ صَحِيحَةٍ .

**1202** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பல் துலக்குவது வாயை சுத்தப்படுத்தும், இறைவனைத் திருப்திபடுத்தும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(நஸயீ:1/10. இப்னு குஸைமா:135)**

١٢٠٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " الْفِطْرَةُ خَمْسٌ – أَوْ خَمْسٌ مِنْ الْفِطْرَةِ : الْخِتَانُ وَالاسْتِحْدَادُ وَتَقْلِيمُ الأَظْفَارِ وَنَتْفُ الأَبِطِ وَقَصُّ الشَّارِبِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . الاسْتِحْدَادُ : حَلْقُ الْعَانَةِ وَهُوَ حَلْقُ الشَّعْرِ الَّذِي حَوْلَ الْفَرْجِ.

**1203** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இயற்கை நடைமுறைகள் ஐந்தாகும். (அல்லது ஐந்து விஷயங்கள் இயற்கையானதாகும்)

1. “கத்னா” செய்தல், 2. மர்மஸ்தான முடிகளை நீக்குதல், 3.நகங்களை வெட்டுவது, 4. அக்குள் முடிகளை நீக்குவது, 5. மீசையை குறைப்பது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5889. முஸ்லிம்:257)**

١٢٠٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " عَشْرٌ مِنْ الْفِطْرَةِ : قَصُّ الشَّارِبِ وَإِعْفَاءُ اللِّحْيَةِ وَالسِّوَاكُ وَاسْتِنْشَاقُ الْمَاءِ وَقَصُّ الأَظْفَارِ وَغَسْلُ الْبَرَاجِمِ وَنَتْفُ الأَبِطِ وَحَلْقُ الْعَانَةِ وَانْتِقَاصُ الْمَاءِ " . قَالَ الرَّاوِي : وَنَسِيتُ الْعَاشِرَةَ إِلاَّ أَنْ تَكُونَ الْمَضْمَضَةَ . قَالَ وَكِيعٌ – وَهُوَ أَحَدُ رُوَاتِهِ – انْتِقَاصُ الْمَاءِ : يَعْنِي الاسْتِنْجَاءَ . رَوَاهُ مُسْلِمٌ . " الْبَرَاجِمُ " بِالْبَاءِ الْمُوَحَّدَةِ وَالْجِيمِ وَهِيَ عُقَدُ الأَصَابِعِ . " وَإِعْفَاءُ اللِّحْيَةِ " : مَعْنَاهُ لاَ يَقُصُّ مِنْهَا شَيْئًا .

**1204** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பத்து விஷயங்கள், இயற்கைச் செயல்களாகும். (1) மீசையை கத்தரித்தல், (2) தாடியை வளர விடுதல் (3) பல்துலக்குதல் (4) தண்ணீரால் மூக்கைச் சுத்தம் செய்தல் (5) நகம் வெட்டுதல் (6) விரல்களின் இடுக்குகளில் கழுவுதல் (7) அக்குள் முடியை நீக்குதல் (8) மறைவுறுப்பு முடியை எடுத்தல் (9) மலம்-ஜலம் கழிக்கச் சென்றால் தண்ணீரால் சுத்தம் செய்தல்” என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர், “பத்தாவது செய்தியை நான் மறந்து விட்டேன். ஆனாலும் அது வாய் கொப்பளிப்பதே” என்று கூறுகிறார். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான வகீவு (ரஹ்) என்பார் “இன்திகாசுல் மாஇ” (தண்ணீர் கொண்டு செல்லுவது) என்பதன் பொருள் “இஸ்தின்ஜாஉ” (தண்ணீரால் சுத்தம் செய்வது) என்பதாகும்” என்று கூறுகிறார். **(முஸ்லிம்:261)**

١٢٠٥ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " أَحْفُوا الشَّوَارِبَ وَأَعْفُوا اللِّحَى " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1205** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மீசையைக் குறையுங்கள். தாடியை வளர விடுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5893. முஸ்லிம்:259)**

## ٢١٦ - بابُ تأكيد وجُوب الزكاة وبَيان فضلها ومَا يَتَعلّق بِهَا

## பாடம் : 216 - "ஜகாத்" தின் கட்டாயம். அதன் சிறப்பு மற்றும் விளக்கங்கள்

قَالَ اللَّهُ تَعَالَى : وَأَقِيمُوا الصَّلاَةَ وَآتُوا الزَّكَاةَ . وَقَالَ تَعَالَى : وَمَا أُمِرُوا إِلاَّ لِيَعْبُدُوا اللَّهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَاءَ وَيُقِيمُوا الصَّلاَةَ وَيُؤْتُوا الزَّكَاةَ وَذَلِكَ دِينُ الْقَيِّمَةِ . وَقَالَ تَعَالَى : خُذْ مِنْ أَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيهِمْ بِهَا

**அல்லாஹ் கூறுகிறான்:** *தொழுகையைப் பேணுங்கள். ஜகாத் கொடுங்கள். (2:43)*

*மேலும், அல்லாஹ்வை அவனுக்கு மட்டுமே வணக்கத்தை கலப்பற்றதாக்கி, அவனிடம் முற்றிலும் சாய்ந்தவர்களாக வணங்கும்படியே அவர்கள் கட்டளையிடப்பட்டுள்ளனர். மேலும் தொழுகையை பேணுவார்கள். "ஜகாத்"தைக் கொடுப்பார்கள். இதுவே முழுமையான மார்க்கமாகும். (98:5)*

*அவர்களைப் பரிசுத்தமாக்கிட, தூய்மைப்படுத்திட அவர்களின் செல்வத்திலிருந்து (ஜகாத் எனும்) தர்மத்தை எடுப்பீராக! (9:103)*

١٢٠٦ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " بُنِيَ الأَسْلاَمُ عَلَى خَمْسٍ : شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ وَإِقَامِ الصَّلاَةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَحَجِّ الْبَيْتِ وَصَوْمِ رَمَضَانَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1206** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இஸ்லாம், ஐந்தின் மீது எழுப்பப்பட்டுள்ளது. (1) வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மது (ஸல்) அவர்கள், அவனது அடியாரும், அவனது தூதருமாவார் என சான்று பகர்வது (2) தொழுகையைப் பேணுவது (3) ஜகாத் கொடுப்பது (4) ஹஜ் செய்வது (5)ரமளானில் நோன்பு நோற்பது ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:8. முஸ்லிம்:16)**

١٢٠٧ - وَعَنْ طَلْحَةَ بْنِ عُبَيْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ مِنْ أَهْلِ نَجْدٍ ثَائِرَ الرَّأْسِ نَسْمَعُ دَوِيَّ صَوْتِهِ وَلاَ نَفْقَهُ مَا يَقُولُ حَتَّى دَنَا مِنْ رَسُولِ اللَّهِ ﷺ فَإِذَا هُوَ يَسْأَلُ عَنْ الأَسْلاَمِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " خَمْسُ صَلَوَاتٍ فِي الْيَوْمِ وَاللَّيْلَةِ " . قَالَ : هَلْ عَلَيَّ غَيْرُهُنَّ ؟ قَالَ : " لاَ إِلاَّ أَنْ تَطَوَّعَ " فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " وَصِيَامُ شَهْرِ رَمَضَانَ " . قَالَ : هَلْ عَلَيَّ غَيْرُهُ ؟ قَالَ : " لاَ إِلاَّ أَنْ تَطَوَّعَ " . قَالَ وَذَكَرَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ الزَّكَاةَ فَقَالَ : هَلْ عَلَيَّ غَيْرُهَا ؟ قَالَ : " لاَ إِلاَّ أَنْ تَطَوَّعَ " . فَأَدْبَرَ الرَّجُلُ وَهُوَ يَقُولُ : وَاللَّهِ لاَ أَزِيدُ عَلَى هَذَا وَلاَ أَنْقُصُ مِنْهُ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَفْلَحَ إِنْ صَدَقَ " ! مُتَّفَقٌ عَلَيْهِ .

**1207** தல்ஹா இப்னு உபைதில்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பரட்டைத் தலையுடன் "நஜ்து" பகுதியில் இருந்து ஒரு மனிதர், நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவரின் சப்தத்தை குறைந்ததாக கேட்டோம். அவர் சொல்வது என்ன? என நாங்கள் விளங்க முடியவில்லை. நபி (ஸல்) அவர்களிடம் நெருங்கினார். உடனே இஸ்லாம் பற்றிக் கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "இஸ்லாம் என்பது ஒருநாளில் ஐந்து நேரத் தொழுகைகள் தொழுவது" என்று கூறினார்கள். "இவை அல்லாதவை என் மீது கடமையா?" என்று கேட்டார். "இல்லை, ஆனால் உபரியான (நபிலான) வணக்கங்கள் உண்டு" என்று பதில் கூறினார்கள். மேலும் "ரமளான் மாதம் நோன்பு வைப்பது" என்று நபி (ஸல்) கூறியதும், "இது அல்லாதவை என் மீது கடமையா?" என்று கேட்டார். "இல்லை, ஆனால் உபரியான (நபிலான) நோன்பு உண்டு" என்று நபி (ஸல்) கூறிவிட்டு, "ஜகாத் வழங்குவது கடமை" என அவரிடம் கூறினார்கள். "இது அல்லாதவை என் மீது கடமையா?" என்று வந்தவர் கேட்டார். "இல்லை, ஆனால் உபரியான (தர்மம்) உண்டு" என்று கூறினார்கள்.

“அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதைவிட நான் அதிகமாக்கவும் மாட்டேன். குறைக்கவும் மாட்டேன்” என்று கூறிக்கொண்டே அந்த மனிதர் திரும்பிச் சென்றார். உடனே நபி (ஸல்) அவர்கள் “இவர் உண்மையை கூறினால் வெற்றி பெற்றுவிட்டார்” என்று கூறினார்கள். **(புகாரி:46. முஸ்லிம்:11)**

١٢٠٨ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ بَعَثَ مُعَاذًا رَضِيَ اللَّهُ عَنْهُ إِلَى الْيَمَنِ فَقَالَ : " أُدْعُهُمْ إِلَى شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنِّي رَسُولُ اللَّهِ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذَلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللَّهَ تَعَالَى افْتَرَضَ عَلَيْهِمْ خَمْسَ صَلَوَاتٍ فِي كُلِّ يَوْمٍ وَلَيْلَةٍ فَإِنْ هُمْ أَطَاعُوا لِذَلِكَ فَأَعْلِمْهُمْ أَنَّ اللَّهَ افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً تُؤْخَذُ مِنْ أَغْنِيَائِهِمْ وَتُرَدُّ عَلَى فُقَرَائِهِمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1208** இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முஆத் (ரழி) அவர்களை யமன் நாட்டிற்கு நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். அப்போது அவர்கள், “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதராவார் என்ற கொள்கையின் பக்கம் மக்களை அழைப்பீராக! அதற்கு அவர்கள் கட்டுப்பட்டால், ஒரு நாளில் ஐந்து நேரத் தொழுகைகளை அவர்கள் மீது அல்லாஹ் கடமையாக்கி உள்ளான்” என அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பீராக! அதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால், அவர்களில் பணக்காரர்களிடமிருந்து எடுக்கப்பட்டு, அவர்களில் ஏழைகளுக்கு வழங்கப்படுகின்ற (ஜகாத் எனும்) தர்மத்தை அவர்கள் மீது அல்லாஹ் கடமையாக்கி உள்ளான் என்பதையும் அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பீராக!” என்று கூறினார்கள். **(புகாரி:1395. முஸ்லிம்:19)**

١٢٠٩ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ قَالَ : رَسُولُ اللَّهِ ﷺ " أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَشْهَدُوا أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ وَيُقِيمُوا الصَّلاَةَ وَيُؤْتُوا الزَّكَاةَ فَإِذَا فَعَلُوا ذَلِكَ عَصَمُوا مِنِّي دِمَاءَهُمْ وَأَمْوَالَهُمْ إِلاَّ بِحَقِّ الأِسْلاَمِ وَحِسَابُهُمْ عَلَى اللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1209** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதரவார்” என்று அவர்கள் சான்று பகர்தல் மற்றும் தொழுகையைப் பேணுதல், ஜகாத்தை கொடுத்தல் என மக்கள் ஆகும் வரை அவர்களிடம் போர் புரிய நான் ஆணையிடப்பட்டுள்ளேன். இவற்றை அவர்கள் (ஏற்றுச்) செயல்பட்டால், என்னிடமிருந்து தங்களின் உயிரையும் தங்களின் செல்வத்தையும் இஸ்லாமிய தண்டனையில் தவிர (மற்றவற்றில்) பாதுகாத்துக் கொண்டு விட்டார்கள். அவர்களின் கேள்வி கணக்கு அல்லாஹ்விடமே உள்ளது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:25. முஸ்லிம்:22)**

١٢١٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَمَّا تُوُفِّيَ رَسُولُ اللَّهِ ﷺ وَكَانَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ وَكَفَرَ مَنْ كَفَرَ مِنْ الْعَرَبِ فَقَالَ عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ : كَيْفَ تُقَاتِلُ النَّاسَ وَقَدْ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أُمِرْتُ أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَقُولُوا : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ فَمَنْ قَالَهَا فَقَدْ عَصَمَ مِنِّي مَالَهُ وَنَفْسَهُ إِلاَّ بِحَقِّهِ وَحِسَابُهُ عَلَى اللَّهِ ؟ " فَقَالَ أَبُو بَكْرٍ : وَاللَّهِ لأُقَاتِلَنَّ مَنْ فَرَّقَ بَيْنَ الصَّلاَةِ وَالزَّكَاةِ فَإِنَّ الزَّكَاةَ حَقُّ الْمَالِ ! وَاللَّهِ لَوْ مَنَعُونِي عِقَالاً كَانُوا يُؤَدُّونَهُ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ لَقَاتَلْتُهُمْ عَلَى مَنْعِهِ ! قَالَ عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ : فَوَاللَّهِ مَا هُوَ إِلاَّ أَنْ رَأَيْتُ اللَّهَ قَدْ شَرَحَ صَدْرَ أَبِي بَكْرٍ لِلْقِتَالِ فَعَرَفْتُ أَنَّهُ الْحَقُّ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1210** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்து, அதன்பின் அபூபக்கர் (ரழி) அவர்கள் (ஆட்சியில்) இருந்தபோது, அரபிகளில் சிலர் (இஸ்லாமிய சட்டங்களில்) மாறுபாடாக நடந்தனர். (இதனால்

அபூபக்கர் (ரழி) போர் செய்ய விரும்பினார்). அப்போது உமர் (ரழி) அவர்கள், "லாயிலாஹ இல்லல்லாஹ்" என மக்கள் கூறும் வரை அவர்களிடம் போர் புரிய நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். அதை ஒருவர் கூறிவிட்டால், அவர் என்னிடமிருந்து தன் சொத்தையும் தன் உயிரையும் இஸ்லாமிய குற்றவியல் தண்டனையில் தவிர (மற்றவற்றில்) காப்பாற்றிக் கொண்டார். அவரது கணக்கு அல்லாஹ்விடமே உள்ளது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறி இருக்க, நீங்கள் எப்படி மக்களிடம் போரிடுவீர்கள்?" என்று கேட்டார்கள். உடனே அபூபக்கர் (ரழி) அவர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! (தொழுவேன் ஜகாத் கொடுக்க மாட்டேன்) என தொழுகைக்கும், ஜகாத்திற்குமிடையே பிரிப்பவரிடம் நான் போர் செய்வேன். ஜகாத் என்பது, சொத்தில் உள்ள உரிமையாகும். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி (ஸல்) அவர்களிடம் ஜகாத்தைக் கொடுத்துக் கொண்டிருந்த அவர்கள், என்னிடம் ஒட்டகம் கட்டும் கயிற்றைக் கொடுக்காமல் இருந்தால்கூட அதைக் கொடுக்காமல் இருப்பதற்காக அவர்களிடம் போர் புரிவேன்" என்று கூறினார்கள். உடனே, "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! (ஜகாத் கொடுக்காமல் இருப்போரிடம்) போர் புரிய அபூபக்கர் (ரழி) அவர்களின் நெஞ்சை அல்லாஹ் திறந்துவிட்டான் என்றே நான் கருதுகிறேன். இதுதான் உண்மையானதும் என்றும் அறிந்து கொண்டேன்" என உமர் (ரழி) கூறினார்கள். **(புகாரி:1399. முஸ்லிம்:20)**

١٢١١ – وَعَنْ أَبِي أَيُّوبَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ لِلنَّبِيِّ ﷺ : أَخْبِرْنِي بِعَمَلٍ يُدْخِلُنِي الْجَنَّةَ . قَالَ : " تَعْبُدُ اللَّهَ لاَ تُشْرِكُ بِهِ شَيْئًا وَتُقِيمُ الصَّلاَةَ وَتُؤْتِي الزَّكَاةَ وَتَصِلُ الرَّحِمَ " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1211** அபூஅய்யூப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கத்தில் என்னை நுழையச் செய்யும் அமலை எனக்குக் கூறுங்கள்" என ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். "நீர் அல்லாஹ்வை வணங்குவீராக! அவனுக்கு எதையும் இணை வைக்காதீர்! ஐந்து நேரத் தொழுகையை நிறைவேற்றுவீராக! ஜகாத்தை கொடுப்பீராக! உறவினர்களை ஆதரிப்பீராக! (இதன் மூலம் நீர் சுவனம் செல்வீர்) " என்று நபி (ஸல்) பதில் அளித்தார்கள்.

**(புகாரி:1396. முஸ்லிம்:13)**

١٢١٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ أَعْرَابِيًّا أَتَى النَّبِيَّ ﷺ فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ دُلَّنِي عَلَى عَمَلٍ إِذَا عَمِلْتُه دَخَلْتُ الْجَنَّةَ . قَالَ : " تَعْبُدُ اللَّهَ لاَ تُشْرِكُ بِهِ شَيْئًا وَتُقِيمُ الصَّلاَةَ وَتُؤْتِي الزَّكَاةَ الْمَفْرُوضَةَ وَتَصُومُ رَمَضَانَ " . قَالَ : وَالَّذِي نَفْسِي بِيَدِه لاَ أَزِيدُ عَلَى هَذَا . فَلَمَّا وَلَّى قَالَ النَّبِيُّ ﷺ : " مَنْ سَرَّهُ أَنْ يَنْظُرَ إِلَى رَجُلٍ مِنْ أَهْلِ الْجَنَّةِ فَلْيَنْظُرْ إِلَى هَذَا " . مُتَّفَقٌ عَلَيْهِ

**1212** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு கிராமவாசி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "இறைத்தூதர் அவர்களே! சுவனத்திற்குச் செல்லத்தக்க ஒரு நற்செயலை எனக்கு அறிவித்து (கற்று)த் தாருங்கள்!" என்று கேட்டுக் கொண்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வை வணங்குவீராக! எதையும் அவனுக்கு இணைவைக்காதீர்! தொழுகையைப் பேணுவீராக, கடமையான ஜகாத்தைக் கொடுப்பீராக! ரமளானில் நோன்பு வைப்பீராக!" என்று கூறினார்கள். "என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! இதை விட நான் அதிகமாக்கமாட்டேன்!" என்று அவர் கூறினார். அவர் புறப்பட்டதும், "சொர்க்கத்தில் உள்ள ஒருவரைப் பார்க்க ஆசைப்படுபவர், இவரைப் பார்த்துக் கொள்ளட்டும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1397. முஸ்லிம்:14)**

١٢١٣ – وَعَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَايَعْتُ النَّبِيَّ ﷺ عَلَى إِقَامِ الصَّلاَةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالنُّصْحِ لِكُلِّ مُسْلِمٍ. مُتَّفَقٌ عَلَيْهِ .

## ٢١٧ - باب وُجُوب صَوم رَمَضَان وَبيان فَضل الصّيام وما يتعلّق به

## பாடம் : 217 - ரமளானில் நோன்பு கடமை. மேலும் நோன்பின் சிறப்பு, அதுசம்பந்தப்பட்டவை

قَالَ اللّهُ تَعَالَى : يَا أَيُّهَا الّذينَ آمَنُوا كُتبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتبَ عَلَى الّذينَ منْ قَبْلكُمْ إلَي قَوْله تَعَالَى : شَهْرُ رَمَضَانَ الّذي أُنْزِلَ فيه الْقُرْآنُ هُدًى للنّاسِ وَبَيِّنَات منَ الْهُدَى وَالْفُرْقَانِ فَمَنْ شَهِدَ منْكُمْ الشّهْرَ فَلْيَصُمْهُ وَمَنْ كَانَ مَرِيضًا أَوْ عَلَى سَفَرٍ فَعدَّةٌ منْ أَيّامٍ أُخَرَ الآيَةَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளே! உங்களுக்கு முன் இருந்தோர் மீது கடமையாக்கப் பட்டது போலவே, உங்கள் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டது. இதன் மூலம் நீங்கள் இறையச்சமுடையோர் ஆகலாம்.*

*எண்ணிக்கை குறிப்பிட்ட சில நாட்களில் (நோன்பு வைப்பது கடமையாகும்) எனினும் (அந்நாட்களில்) உங்களில் எவரேனும் நோயாளியாக அல்லது பிரயாணியாக இருந்தால், அதை வேறு நாட்களில் (நோன்பு) வைப்பது அவசியமாகும். ஆனால், அதற்கு சக்தி பெற்றவர் (ஆக இருந்தும் இயலாத நோய், முதுமை காரணமாக நோன்பு வைக்காமல் விட்டவர்) மீது ஒரு ஏழைக்கு உணவளிப்பது பரிகாரம் ஆகும். ஒருவர் நன்மையை மேலும் அதிகப்படுத்திக் கொள்வாரானால் அது அவருக்கு நன்மையாகும். மேலும், நீங்கள் அறிந்திருந்தால் (நோன்பை விட்டு பரிகாரம் செய்வதைவிட) நோன்பு வைப்பதே உங்களுக்குச் சிறந்ததாகும்.*

*ரமளான் மாதத்தில் மக்களுக்கு நேர்வழிகாட்டியாகவும், நேர் வழியை மற்றும் நன்மை,தீமையைப் பிரித்து தெளிவுபடுத்துவதாகவும் உள்ள குர்ஆன் இறக்கப்பட்டது. ஒருவர் அம்மாதத்தை அடைந்தால், அவர் அதில் நோன்பு நோற்கட்டும்! எவரேனும் நோயாளியாகவோ அல்லது பிரயாணியாகவோ இருந்தால் மற்ற நாட்களில் கணக்கிட்டு நோன்பு வைக்கட்டும்! (2:183-185)*

நோன்பு சம்மந்தப்பட்ட சில ஹதீஸ்கள் முந்தைய பாடங்களிலும் வந்துள்ளன.

**١٢١٥** - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضيَ اللّهُ عَنْهُ : قَالَ رَسُولُ اللّه ﷺ : " قَالَ اللّهُ عَزّ وَجَلّ : كُلُّ عَمَلِ ابْنِ آدَمَ لَهُ إلاّ الصِّيَامَ فَإنّهُ لي وَأَنَا أَجْزِي به . وَالصِّيَامُ جُنّةٌ فَإذَا كَانَ يَوْمُ صَوْمِ أَحَدكُمْ فَلاَ يَرْفُثْ وَلاَ يَصْخَبْ فَإنْ سَابّهُ أَحَدٌ أَوْ قَاتَلَهُ فَلْيَقُلْ : إنّي صَائمٌ . وَالّذي نَفْسُ مُحَمّد بيَده لَخُلُوفُ فَم الصّائم أَطْيَبُ عنْدَ اللّه منْ ريح الْمسْك . للصّائم فَرْحَتَان يَفْرَحُهُمَا : إذَا أَفْطَرَ فَرِحَ بفطْره وَإذَا لَقيَ رَبّهُ فَرِحَ بصَوْمه " . مُتّفَقٌ عَلَيْه . وَهَذَا لَفْظُ رِوَايَة الْبُخَارِيّ . وَفي رِوَايَة لَهُ : " يَتْرُكُ طَعَامَهُ وَشَرَابَهُ وَشَهْوَتَهُ منْ أَجْلي . الصّيَامُ لي وَأَنَا أَجْزِي به وَالْحَسَنَةُ بعَشْر أَمْثَالهَا " . وَفي رِوَايَة لمُسْلم : " كُلُّ عَمَلِ ابْنِ آدَمَ يُضَاعَفُ الْحَسَنَةُ بعَشْر أَمْثَالهَا إلَى سَبْعمائَة ضعْف . قَالَ اللّهُ تَعَالَى : إلاّ الصّوْمَ فَإنّهُ لي وَأَنَا أَجْزِي به : يَدَعُ شَهْوَتَهُ وَطَعَامَهُ منْ أَجْلي . للصّائمِ فَرْحَتَانِ : فَرْحَةٌ عنْدَ فطْرِه وَفَرْحَةٌ عنْدَ لقَاء رَبّه . وَلَخُلُوفُ فيه أَطْيَبُ عنْدَ اللّه منْ ريح الْمسْك"

**1215** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மனிதனின் அனைத்து செயல்களும் அவனுக்குரியதே. ஆனால் நோன்பைத் தவிர. இது எனக்குரியதாகும். இதற்கு நானே கூலி கொடுப்பேன் என்று அல்லாஹ் கூறுகிறான். மேலும், நோன்பு கேடயமாகும். உங்களில் ஒருவர் நோன்பு வைத்தால், அன்று அவர் தீயதைப் பேச வேண்டாம். மேலும் கூச்சல் போட வேண்டாம். ஒருவர் நோன்பு வைத்தவரைத் திட்டினால் அல்லது சண்டை போட்டால், “நான் நோன்பாளி” என்று அவர் (நோன்பு வைத்தவர்) கூறட்டும். முஹம்மதின் உயிரை தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நோன்பாளியின் வாயின் வாடை, அல்லாஹ்விடம்

கஸ்தூரியின் வாடையை விட நறுமணம் மிக்கதாகும். நோன்பாளிக்கு இரண்டு வகை சந்தோஷம் உண்டு. 1) நோன்பு திறக்கும் போது சந்தோசமடைகிறான். 2) அல்லாஹ்வை சந்திக்கும் போது நோன்பின் மூலம் கிடைக்கும் நன்மைகளால் மகிழ்ச்சியடைகிறான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1894, 1904. முஸ்லிம்:1151. இது புகாரியின் வாசகமாகும்)**

புகாரியின் மற்றொரு அறிவிப்பில், ''ஒருவன் தன் உணவை, பானத்தை, இச்சை உணர்வை எனக்காகவே விட்டு விடுகிறான். நோன்பு எனக்குரியதாகும். நான்தான் அதற்குக் கூலி கொடுப்பேன். ஒரு நற்செயல், அது பத்து மடங்காக ஆகிறது'' என்று உள்ளது.

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், ''ஆதமின் மகனது ஒவ்வொரு செயலும் இரட்டிப்பாக்கப் படும். ஒரு நற்செயல் பத்து மடங்கு முதல் 700 மடங்கு வரை ஆகும்.''

மேலும் அல்லாஹ் கூறுகிறான்... ''நோன்பு எனக்குரியதாகும். அதற்கு நானே கூலி கொடுப்பேன். எனக்காகவே தன் இச்சையை, தன் உணவை விட்டு விடுகிறான். நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சி உண்டு. அது, அவர் தன் நோன்பை விடும்போது ஒரு மகிழ்ச்சி. தன் இறைவனை சந்திக்கும் போது உள்ள மகிழ்ச்சி. நோன்பாளி வாயில் ஏற்படும் வாடை, கஸ்தூரி வாடையை விட அல்லாஹ்விடம் நறுமணம் மிக்கதாகும்'' என்று உள்ளது.

١٢١٦ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ أَنْفَقَ زَوْجَيْنِ فِي سَبِيلِ اللَّهِ نُودِيَ مِنْ أَبْوَابِ الْجَنَّةِ : يَا عَبْدَ اللَّهِ هَذَا خَيْرٌ فَمَنْ كَانَ مِنْ أَهْلِ الصَّلاَةِ دُعِيَ مِنْ بَابِ الصَّلاَةِ وَمَنْ كَانَ مِنْ أَهْلِ الْجِهَادِ دُعِيَ مِنْ بَابِ الْجِهَادِ وَمَنْ كَانَ مِنْ أَهْلِ الصِّيَامِ دُعِيَ مِنْ بَابِ الرَّيَّانِ وَمَنْ كَانَ مِنْ أَهْلِ الصَّدَقَةِ دُعِيَ مِنْ بَابِ الصَّدَقَةِ " . قَالَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ : بِأَبِي أَنْتَ وَأُمِّي يَا رَسُولَ اللَّهِ مَا عَلَى مَنْ دُعِيَ مِنْ تِلْكَ الأَبْوَابِ مِنْ ضَرُورَةٍ فَهَلْ يُدْعَى أَحَدٌ مِنْ تِلْكَ الأَبْوَابِ كُلِّهَا ؟ فَقَالَ : " نَعَمْ وَأَرْجُو أَنْ تَكُونَ مِنْهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1216** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அல்லாஹ்வின் வழியில் இரண்டு ஜோடி (உணவு-உடை) செலவு செய்தால் அவரைச் சொர்க்கத்தின் வாசலிலிருந்து ''அல்லாஹ்வின் அடியாரே! இது சிறந்ததாகும்'' என்று அழைக்கப் படுவார். தொழுகையாளியாக அவர் இருந்தால், ''பாபுஸ்ஸலா'' எனும் தொழுகைக்குரிய வாசலிலிருந்து அவர் அழைக்கப்படுவார். உயிரை தியாகம் செய்தவராக இருந்தால், ''பாபுல் ஜிஹாது'' எனும் ஜிஹாதின் வாசல் பக்கம் அழைக்கப்படுவார். நோன்பாளியாக அவர் இருந்தால், ''பாபுர் ரய்யான்'' எனும் நோன்பின் வாசலிலிருந்து அழைக்கப்படுவார். தர்மம் வழங்குபவராக இருந்தால் ''பாபுஸ்ஸதகா'' எனும் ஸதகாவின் வாசலிலிருந்து அழைக்கப்படுவார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

''இறைத்தூதர் அவர்களே! என் தாயும், என் தந்தையும் அர்ப்பணமாகட்டும். இந்த வாசல்களில் இருந்து அழைக்கப்படுபவருக்கு இடைஞ்சல் ஏற்படாது. ஒருவரே அந்த அனைத்து வாசல்களிலும் அழைக்கப்படுவாரா?'' என்று அபூபக்கர் (ரழி) கேட்டார்கள். ''ஆம். அவர்களில் ஒருவராக நீர் இருப்பீர் எனக் கருதுகிறேன்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1897. முஸ்லிம்:1027)**

١٢١٧ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِنَّ فِي الْجَنَّةِ بَابًا يُقَالُ لَهُ الرَّيَّانُ يَدْخُلُ مِنْهُ الصَّائِمُونَ يَوْمَ الْقِيَامَةِ لاَ يَدْخُلُ مِنْهُ أَحَدٌ غَيْرُهُمْ يُقَالُ : أَيْنَ الصَّائِمُونَ ؟ فَيَقُومُونَ لاَ يَدْخُلُ مِنْهُ أَحَدٌ غَيْرُهُمْ فَإِذَا دَخَلُوا أُغْلِقَ فَلَمْ يَدْخُلْ مِنْهُ أَحَدٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1217** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சொர்க்கத்தில் ஒரு வாசல் உண்டு. அதற்கு “ரய்யான்” என்று கூறப்படும். மறுமை நாளில் அதில் நோன்பாளிகள் மட்டுமே நுழைவார்கள்.வேறு யாரும் அதில் நுழையமாட்டார்கள். நோன்பாளிகள் எழுந்து அந்த “ரய்யான்” எனும் வாசல் வழியாக சொர்க்கத்தில் நுழைவார்கள். அவர்கள் நுழைந்ததும் அந்த வாசல் அடைக்கப்படும். அதில் வேறு யாரும் நுழைய முடியாது” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1896. முஸ்லிம்:1152)**

١٢١٨ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ عَبْدٍ يَصُومُ يَوْمًا فِي سَبِيلِ اللَّهِ إِلاَّ بَاعَدَ اللَّهُ بِذَلِكَ الْيَوْمِ وَجْهَهُ عَنْ النَّارِ سَبْعِينَ خَرِيفًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1218** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வின் பாதையில் செல்லும் ஒருவர், ஒரு நாள் நோன்பு வைத்தால், அந்த ஒரு நாள் நோன்பிற்கு பகரமாக அல்லாஹ் அவரின் முகத்தை, நரகத்தை விட்டும் எழுபது ஆண்டுகள் தூரமாக்குகிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2840. முஸ்லிம்:1153)**

١٢١٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ صَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1219** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறை நம்பிக்கையுடனும், நன்மையை நாடியும் ரமளானில் ஒருவர் நோன்பு வைத்தால், அவருக்கு முன் சென்ற (சிறு பாவங்கள்) மன்னிக்கப்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1901. முஸ்லிம்:760)**

١٢٢٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا جَاءَ رَمَضَانُ فُتِحَتْ أَبْوَابُ الْجَنَّةِ وَغُلِّقَتْ أَبْوَابُ النَّارِ وَصُفِّدَتْ الشَّيَاطِينُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1220** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ரமளான் மாதம் வந்துவிட்டால், சொர்க்கத்தின் வாசல்கள் திறக்கப்படும். நரகத்தின் வாசல்கள் மூடப்படும். ஷைத்தான்கள் விலங்கு போடப்படுவர்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1898. முஸ்லிம்:1079)**

١٢٢١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " صُومُوا لِرُؤْيَتِهِ وَأَفْطِرُوا لِرُؤْيَتِهِ فَإِنْ غُبِّيَ عَلَيْكُمْ فَأَكْمِلُوا عِدَّةَ شَعْبَانَ ثَلاَثِينَ " . مُتَّفَقٌ عَلَيْهِ وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ . وَفِي رِوَايَةِ مُسْلِمٍ : " فَإِنْ غُمَّ عَلَيْكُمْ فَصُومُوا ثَلاَثِينَ يَوْمًا " .

**1221** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ரமளான் பிறையைப் பார்த்து நோன்பு வையுங்கள். பிறையைப் பார்த்து நோன்பை விடுங்கள். உங்களுக்கு பிறை தெரியாவிட்டால், ஷஃபானை முப்பது நாட்களாக முழுமைப்படுத்துங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1900. முஸ்லிம்:1081. இது புகாரியின் வார்த்தையாகும்)**

முஸ்லிமின் அறிவிப்பில், “பிறை மேகத்தால் மூடப்பட்டால், (பிறை தென்படாவிட்டால்) முப்பது நாட்கள் நோன்பு வையுங்கள்” என்று உள்ளது.

## ٢١٨ – باب الجود وفعل المعروف والإكثار من الخير في شهر رمضان والز يادة من ذلك في العشر الأواخر منه

## பாடம் : 218 - ரமளானில் தர்மம் செய்தல், நல்லது செய்தல், நற்செயலை அதிகம் செய்தல், அதன் கடைசி பத்து நாட்களில் அதிகமாக செய்தல்

١٢٢٢ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ أَجْوَدَ النَّاسِ ؛ وَكَانَ أَجْوَدَ مَا يَكُونُ فِي رَمَضَانَ حِينَ يَلْقَاهُ جِبْرِيلُ وَكَانَ يَلْقَاهُ جِبْرِيلُ فِي كُلِّ لَيْلَةٍ مِنْ رَمَضَانَ فَيُدَارِسُهُ الْقُرْآنَ فَلَرَسُولُ اللَّهِ ﷺ حِينَ يَلْقَاهُ جِبْرِيلُ أَجْوَدُ بِالْخَيْرِ مِنْ الرِّيحِ الْمُرْسَلَةِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1222** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்களிலேயே அதிகமாக தர்மம் செய்பவர்களாக இருந்தார்கள். அவர்களை ஜிப்ரீல் (அலை) சந்திக்கும் வேளையில் ரமளானில் மிக அதிகமாக நன்கொடையளிப்பவர்களாக இருந்தார்கள். ரமளானின் ஒவ்வொரு இரவிலும் நபி (ஸல்) அவர்களை, ஜிப்ரீல் (அலை) அவர்கள் சந்தித்து, குர்ஆனை அவருக்கு கற்றுக் கொடுப்பார்கள். நபி (ஸல்) அவர்கள் தன்னை ஜிப்ரீல் (அலை) சந்திக்கும் வேளையில் (புனித ரமளான் மாதத்தில்) வேகமாக வீசும் காற்றைவிட அதிகமாக (விரைவாக) தர்மம் செய்பவர்களாக இருந்தார்கள். **(புகாரி:6. முஸ்லிம்:2307)**

١٢٢٣ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : " كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا دَخَلَ الْعَشْرُ أَحْيَا اللَّيْلَ وَأَيْقَظَ أَهْلَهُ وَشَدَّ الْمِئْزَرَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1223** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ரமளானின் கடைசிப்) பத்து நாட்கள் வந்துவிட்டால், நபி (ஸல்) அவர்கள் இரவில் விழித்திருப்பார்கள். தன் குடும்பத்தாரை விழிக்கச் செய்வார்கள். தன் கீழாடையை (இறுகக்) கட்டிக் கொள்வார்கள். **(புகாரி:2024. முஸ்லிம்:1174)**

## ٢١٩ – باب النّهي عَنْ تقدّم رَمضان بصَوْم بعد نصف شعبان إلا لمن وصله بما قبله أو وافق عادةً له، بأن كان عادته صوم الاثنين والخميس

## பாடம் : 219 - ஷஃபான் பிறை பதினைந்துக்குப்பின், ரமளானுக்கு முன் நோன்பு வைப்பது கூடாது. தொடர்ச்சியாக அல்லது திங்கள் - வியாழன் கிழமைகளில் நோன்பு வைப்பது போன்ற வழக்கம் இருந்தால், அந்த நாட்களில் நோன்பு வைக்கலாம்.

١٢٢٤ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ يَتَقَدَّمَنَّ أَحَدُكُمْ رَمَضَانَ بِصَوْمِ يَوْمٍ أَوْ يَوْمَيْنِ إِلاَّ أَنْ يَكُونَ رَجُلٌ كَانَ يَصُومُ صَوْمَهُ فَلْيَصُمْ ذَلِكَ الْيَوْمَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1224** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் ரமளானுக்கு ஒரு நாள் முன்போ அல்லது இரண்டு நாள் முன்போ நோன்பு வைக்க வேண்டாம். ஆனால் வழமையாக திங்கள் - வியாழன் நோன்பு வைப்பவரைத் தவிர. அவர் அந்நாளில் நோன்பு வைக்கட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1914. முஸ்லிம்:1082)**

١٢٢٥ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَصُومُوا قَبْلَ رَمَضَانَ صُومُوا لِرُؤْيَتِهِ وَأَفْطِرُوا لِرُؤْيَتِهِ فَإِنْ حَالَتْ دُونَهُ غَيَايَةٌ فَأَكْمِلُوا ثَلاَثِينَ يَوْمًا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . " الْغَيَايَةُ " : بِالْغَيْنِ الْمُعْجَمَةِ وَبِالْيَاءِ الْمُثَنَّاةِ مِنْ تَحْتِ الْمُكَرَّرَةِ وَهِيَ السَّحَابَةُ .

**1225** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ரமளானுக்கு முன் நோன்பு வைக்காதீர்கள். பிறை பார்த்து நோன்பு வையுங்கள். (ஷவ்வால்) பிறை பார்த்து நோன்பை விடுங்கள். மேகம் உங்களைக் குறுக்கிட்டால், (ரமலான்) முப்பது நாட்களாக அதை முழுமைப்படுத்துங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:688. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٢٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا بَقِيَ نِصْفٌ مِنْ شَعْبَانَ فَلاَ تَصُومُوا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1226** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஷஃபானின் பாதி நாட்களுக்குப் பின்னர் நோன்பு வைக்காதீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:738. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٢٧ – وَعَنْ أَبِي الْيَقْظَانِ عَمَّارِ بْنِ يَاسِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : مَنْ صَامَ الْيَوْمَ الَّذِي يُشَكُّ فِيهِ فَقَدْ عَصَى أَبَا الْقَاسِمِ ﷺ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1227** அபுல் யக்ளான் அம்மார் இப்னு யாஸிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(ரமளான் முதல் பிறையா? ஷஃபான் முப்பதா? எனத் தெரியாத) சந்தேகத்திற்குரிய நாளில் நோன்பு வைத்தால், அவர் அபுல் காஸிம் (ஸல்) (நபி (ஸல்)) அவர்களுக்கு மாறு செய்து விட்டார்”

**(அபூதாவூது:2334. திர்மிதீ:686. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٢٢٠ – بَابُ ما يقال عِنْدَ رؤية الْهِلاَل

## பாடம் : 220 - பிறை பார்க்கும் சமயம் கூற வேண்டியவை

١٢٢٨ – عَنْ طَلْحَةَ بْنِ عُبَيْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا رَأَى الْهِلاَلَ قَالَ : " اللَّهُمَّ أَهِلَّهُ عَلَيْنَا بِالأَمْنِ وَالإِيمَانِ وَالسَّلاَمَةِ وَالإِسْلاَمِ رَبِّي وَرَبُّكَ اللَّهُ هِلاَلُ رُشْدٍ وَخَيْرٍ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1228** தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பிறையைப் பார்த்து விட்டால், “அல்லாஹும்ம அஹில்லாஹு அலய்னா பில் அம்னி வல் ஈமானி வஸ்ஸலாமதி வல் இஸ்லாமி, ரப்பீ வரப்புக்கல்லாஹு ஹிலாலு ருஷ்தின் வகய்ரின்” என்று கூறுவார்கள். **(திர்மிதீ:3451. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்: இறைவனே! பாதுகாப்பு, இறை நம்பிக்கை, அமைதி, இஸ்லாம் ஆகியவை மூலம் இதை எங்கள் மீது தோன்றச் செய்வாயாக! பிறையே! என் இறைவனும், உன் இறைவனும் அல்லாஹ்தான். நீ நேர்வழி மற்றும் நன்மையின் பிறையாக உள்ளாய்.**

## ٢٢١ – بابُ فضل السَّحور وتأخيره ما لم يخش طلوع الفجر

## பாடம் : 221 - ஸஹர் செய்வதன் சிறப்பு, அதை சுப்ஹ் நேரம் ஏற்படாத வரை பிற்படுத்துவது.

١٢٢٩ – عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " تَسَحَّرُوا فَإِنَّ فِي السَّحُورِ بَرَكَةً " . مُتَّفَقٌ عَلَيْه .

**1229** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் ஸஹர்-செய்யுங்கள். ஏனெனில், ஸஹரில் பரக்கத் (அபிவிருத்தி) உள்ளது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1923. முஸ்லிம்:1095)**

١٢٣٠ – وَعَنْ زَيْدِ بْنِ ثَابِتٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : تَسَحَّرْنَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ ثُمَّ قُمْنَا إِلَى الصَّلاَةِ . قِيلَ : كَمْ كَانَ بَيْنَهُمَا ؟ قَالَ : قَدْرُ خَمْسِينَ آيَةً . مُتَّفَقٌ عَلَيْه .

**1230** ஜைத் இப்னு தாபித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஸஹர் செய்தோம். பின்பு தொழுகைக்காக நாங்கள் நின்றோம்” என்று ஜைத் (ரழி) கூறியதும், “அவ்விரண்டுக்கும் இடையே எவ்வளவு நேரம் இடைவெளி இருந்தது?” என்று கேட்கப்பட்டது. “ஐம்பது வசனங்கள் ஓதும் அளவுக்கு” என்று பதில் கூறினார்கள்.

**(புகாரி:1920. முஸ்லிம்:1097)**

١٢٣١ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ لِرَسُولِ اللَّهِ ﷺ مُؤَذِّنَانِ : بِلاَلٌ وَابْنُ أُمِّ مَكْتُومٍ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ بِلاَلاً يُؤَذِّنُ بِلَيْلٍ فَكُلُوا وَاشْرَبُوا حَتَّى يُؤَذِّنَ ابْنُ أُمِّ مَكْتُومٍ " . قَالَ : وَلَمْ يَكُنْ بَيْنَهُمَا إِلاَّ أَنْ يَنْزِلَ هَذَا وَيَرْقَى هَذَا . مُتَّفَقٌ عَلَيْه .

**1231** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் பாங்கு சொல்வதற்கு இரண்டு முஅத்தின்கள் இருந்தனர். (அவ்விருவர்) (1) பிலால் (ரழி) (2) இப்னு உம்மி மக்தூம் (ரழி). “பிலால் (ரழி) அவர்கள் இரவில் (தஹஜ்ஜுத் தொழுகைக்காக) பாங்கு கூறுவார். அப்போது நீங்கள் சாப்பிடுங்கள். குடியுங்கள். இப்னு உம்மி மக்தூம் பாங்கு கூறும் வரை (இதைச் செய்யலாம். அவர் பாங்கு கூறிவிட்டால் அது பஜ்ரின் பாங்காகும். அப்பொழுது உண்ணுவது, குடிப்பது கூடாது.)” என்று நபி (ஸல்) கூறினார்கள். அந்த இரண்டு பாங்குகளுக்கும் நடுவில் இவர் (இப்னு உம்மி மக்தூம்) பாங்கு மேடையில் ஏறுவதும், அவர் (பிலால்) அங்கிருந்து இறங்குவதுமே தவிர அதிக ரேநம் இல்லை. (அவ்விரண்டு பாங்குக்கும் இடையே சிறிது நேரமே இடைவெளி இருந்தது.) **(புகாரி:2716. முஸ்லிம்:1092)**

١٢٣٢ – وَعَنْ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " فَصْلُ مَا بَيْنَ صِيَامِنَا وَصِيَامِ أَهْلِ الْكِتَابِ أَكْلَةُ السَّحَرِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1232** அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நம் நோன்புகளுக்கும், வேதம் பெற்றோர்களின் நோன்புக்கும் இடையே வித்தியாசம், ஸஹர் உணவு உண்பது தான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1096)**

## ٢٢٢ - بابُ فضل تعجيل الفطر وما يفطر عليه وما يقوله بعد إفْطَاره

## பாடம் : 222 - நோன்பு திறக்க அவசரப்படுதலின் சிறப்பு. நோன்புஎதைக் கொண்டு திறப்பது? நோன்பு திறந்தபின் கூறவேண்டியவை.

١٢٣٣ - عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَزَالُ النَّاسُ بِخَيْرٍ مَا عَجَّلُوا الْفِطْرَ " . مُتَّفَقٌ عَلَيْه.

**1233** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நோன்பை துறக்க அவசரப்படுவது மூலம் மக்கள் நல்லதிலேயே தொடர்ந்து இருப்பார்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1957. முஸ்லிம்:1098)**

١٢٣٤ - وَعَنْ أَبِي عَطِيَّةَ قَالَ : دَخَلْتُ أَنَا وَمَسْرُوقٌ عَلَى عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا فَقَالَ لَهَا مَسْرُوقٌ : رَجُلاَنِ مِنْ أَصْحَابِ مُحَمَّدٍ ﷺ كِلاَهُمَا لاَ يَأْلُو عَنِ الْخَيْرِ : أَحَدُهُمَا يُعَجِّلُ الْمَغْرِبَ وَالأَفْطَارَ وَالآخَرُ يُؤَخِّرُ الْمَغْرِبَ وَالأَفْطَارَ . فَقَالَتْ : مَنْ يُعَجِّلُ الْمَغْرِبَ وَالأَفْطَارَ ؟ قَالَ : عَبْدُ اللَّهِ - يَعْنِي ابْنَ مَسْعُودٍ - فَقَالَتْ : هَكَذَا كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَصْنَعُ . رَوَاهُ مُسْلِمٌ . قَوْلُهُ " لاَ يَأْلُو " : أَيْ لاَ يُقَصِّرُ فِي الْخَيْرِ .

**1234** அபூ அதிய்யா கூறுகிறார்கள்:

நானும், மஸ்ரூக் அவர்களும், ஆயிஷா (ரழி) அவர்களிடம் வந்தோம். அவர்களிடம் மஸ்ரூக், "நபித்தோழர்களில் இருவர் உள்ளனர். அவ்விருவருமே நல்லவற்றில் குறைவு செய்வதில்லை. (இரண்டு பேருமே நன்மையைச் செய்கின்றனர்.) அவர்களில் ஒருவர், மஹ்ரிப் தொழுகையையும், நோன்பு திறப்பதையும் விரைந்து செய்கிறார். மற்றொருவர் மஹ்ரிபுத் தொழுகையையும், நோன்பு திறப்பதையும் தாமதம் செய்கிறாரே?" என்று கேட்டார். "மஹ்ரிபையும், நோன்பு திறப்பதையும் விரைந்து செய்பவர் யார்?" என்று ஆயிஷா (ரழி) அவர்கள் கேட்டார்கள். அதற்கு "அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி)" என்று மஸ்ரூக் பதில் கூறினார்கள். "இவ்வாறே நபி (ஸல்) அவர்களும் செய்தார்கள்" என ஆயிஷா (ரழி) கூறினார்கள். **(முஸ்லிம்:1099)**

١٢٣٥ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " قَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ : أَحَبُّ عِبَادِي إِلَيَّ أَعْجَلُهُمْ فِطْرًا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1235** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என்னிடம் என் அடியார்களில் மிக விருப்பமானவர், நோன்பு திறப்பதை விரைந்து செய்பவரே!" என்று அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:700. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٣٦ - وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا أَقْبَلَ اللَّيْلُ مِنْ هَهُنَا وَأَدْبَرَ النَّهَارُ مِنْ هَهُنَا وَغَرَبَتْ الشَّمْسُ فَقَدْ أَفْطَرَ الصَّائِمُ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1236** உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரவு இங்கிருந்து முன்னோக்கி வந்து, பகல் அங்கிருந்து திரும்பிச் சென்று, சூரியன் மறைந்து விட்டால், நோன்பாளி நோன்பு திறப்பார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1954. முஸ்லிம்:1100)**

١٢٣٧ - وَعَنْ أَبِي إِبْرَاهِيمَ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي أَوْفَى رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سِرْنَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ وَهُوَ صَائِمٌ فَلَمَّا غَرَبَتْ الشَّمْسُ قَالَ لِبَعْضِ الْقَوْمِ : " يَا فُلَانُ انْزِلْ فَاجْدَحْ لَنَا " . فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ : لَوْ أَمْسَيْتَ . قَالَ : " انْزِلْ فَاجْدَحْ لَنَا " . قَالَ : إِنَّ عَلَيْكَ نَهَارًا قَالَ : " انْزِلْ فَاجْدَحْ لَنَا " . قَالَ : فَنَزَلَ فَجَدَحَ لَهُمْ فَشَرِبَ رَسُولُ اللَّهِ ﷺ ثُمَّ قَالَ : " إِذَا رَأَيْتُمُ اللَّيْلَ قَدْ أَقْبَلَ مِنْ هَهُنَا فَقَدْ أَفْطَرَ الصَّائِمُ " . وَأَشَارَ بِيَدِهِ قِبَلَ الْمَشْرِقِ . مُتَّفَقٌ عَلَيْهِ . قَوْلُهُ : " اجْدَحْ " بِجِيمٍ ثُمَّ دَالٍ ثُمَّ حَاءٍ مُهْمَلَتَيْنِ : أَيْ اخْلِطْ السَّوِيقَ بِالْمَاءِ .

**1237** அபூ இப்ராஹீம் அப்துல்லாஹ் இப்னு அபீஅவ்ஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் நோன்பு வைத்திருந்த நிலையில் அவர்களோடு நாங்கள் பயணம் செய்தோம். சூரியன் மறைந்தபோது கூட்டத்தில் ஒருவரிடம், "இன்னாரே! நீர் இறங்கி (நோன்பை திறக்க) எங்களுக்கு தண்ணீரில் பொரித்த மாவைக் கலந்து தருவீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். அதற்கு, "இறைத்தூதர் அவர்களே! மாலை நேரம் செல்லட்டும்" என்று அவர் கூறினார். "நீர் இறங்கி எங்களுக்கு பொரித்த மாவை தண்ணீரில் கலந்து கொடுப்பீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இன்னும் பகலாக உள்ளதே?" என்று அவர் கூறினார். "நீர் இறங்குவீராக! எங்களுக்காக தண்ணீரில் பொரித்த மாவை கலப்பீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். அவர் இறங்கி, நபி (ஸல்) அவர்களுக்காகவும், தோழர்களுக்காகவும் தண்ணீரில் பொரித்த மாவைக் கலந்தார். நபி (ஸல்) அவர்கள் அதைக் குடித்துவிட்டு, பின்பு "இரவை இந்த பகுதியில் முன்னோக்கி வருவதை நீங்கள் கண்டால், நோன்பாளி நோன்பை விடட்டும்" என்று கூறினார்கள். அப்போது அவர்கள் தன் கையால் கிழக்கு திசையைச் சுட்டிக் காட்டினார்கள். **(புகாரி:1955. முஸ்லிம்:1101)**

١٢٣٨ - وَعَنْ سَلْمَانَ بْنِ عَامِرٍ الضَّبِّيِّ الصَّحَابِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا أَفْطَرَ أَحَدُكُمْ فَلْيُفْطِرْ عَلَى تَمْرٍ فَإِنْ لَمْ يَجِدْ فَلْيُفْطِرْ عَلَى مَاءٍ فَإِنَّهُ طَهُورٌ " رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1238** ஸல்மான் இப்னு ஆமிர் அள்ளபிய்யு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் நோன்பு திறந்தால், பேரீத்தம் பழத்தால் நோன்பை திறக்கட்டும்! அது கிடைக்கவில்லையானால், தண்ணீரால் நோன்பு திறக்கட்டும்! நிச்சயமாக! அது சுத்தமானதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:2355. திர்மிதீ:695. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٣٩ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُفْطِرُ قَبْلَ أَنْ يُصَلِّيَ عَلَى رُطَبَاتٍ فَإِنْ لَمْ تَكُنْ رُطَبَاتٌ فَتُمَيْرَاتٌ فَإِنْ لَمْ تَكُنْ تُمَيْرَاتٌ حَسَا حَسَوَاتٍ مِنْ مَاءٍ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1239** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (மஹ்ரிபு) தொழுகைக்கு முன் புதிய பேரீத்தம் பழங்களால் நோன்பு திறப்பார்கள். புதிய பேரீத்தம் பழங்கள் இல்லையென்றால், காய்ந்த பேரீத்தம் பழங்களால் திறப்பார்கள். காய்ந்த பழங்கள் இல்லையென்றால் தண்ணீரை சில முடக்குகள் குடித்து நோன்பை திறப்பார்கள்.

**(அபூதாவூது:2356. திர்மிதீ:694. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٢٢٣ – باب أمر الصائم بحفظ لسانه وجوارحه عن المخالفات والمشاتمة ونحوها

## பாடம் : 223 - நோன்பாளி தன் நாவு மற்றும் உறுப்புகளைத் தீயதை விட்டும் பாதுகாப்பது, பிறரைத் திட்டாமல் இருப்பது

١٢٤٠ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا كَانَ يَوْمُ صَوْمِ أَحَدِكُمْ فَلاَ يَرْفُثْ وَلاَ يَصْخَبْ فَإِنْ سَابَّهُ أَحَدٌ أَوْ قَاتَلَهُ فَلْيَقُلْ : إِنِّي صَائِمٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1240** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உங்களில் ஒருவர் நோன்பு வைத்தால், அவர் தீயப் பேச்சுகளைப் பேச வேண்டாம். கூச்சல் போட வேண்டாம். யாராவது ஒருவர் அவரைத் திட்டினால் அல்லது அவரிடம் சண்டை போட்டால், "நான் நோன்பாளி என அவர் (நோன்பு வைத்தவர்) கூறட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1904. முஸ்லிம்:1151)**

١٢٤١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " مَنْ لَمْ يَدَعْ قَوْلَ الزُّورِ وَالْعَمَلَ بِهِ فَلَيْسَ لِلَّهِ حَاجَةٌ فِي أَنْ يَدَعَ طَعَامَهُ وَشَرَابَهُ " ! رَوَاهُ الْبُخَارِيُّ .

**1241** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பொய் பேசுவதையும், பொய் கூறி செயல்படுவதையும் விடாத ஒருவர், தன் உணவையோ-பானத்தையோ விட்டுவிடுவதால் (நோன்பு வைப்பதால்) அல்லாஹ்வுக்கு எந்தத் தேவையும் இல்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1903)**

## ٢٢٤ – بابٌ في مَسَائِل من الصَّوم

## பாடம் : 224 - நோன்பின் சட்டதிட்டங்கள்

١٢٤٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا نَسِيَ أَحَدُكُمْ فَأَكَلَ أَوْ شَرِبَ فَلْيُتِمَّ صَوْمَهُ فَإِنَّمَا أَطْعَمَهُ اللَّهُ وَسَقَاهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1242** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் மறந்து சாப்பிட்டுவிட்டாலோ அல்லது ஏதாவதொரு பானத்தைக் குடித்து விட்டாலோ அவர் தன் நோன்பை முழுமைப்படுத்தட்டும். நிச்சயமாக! அல்லாஹ்தான் அவருக்கு உணவளித்தான். அவரை பருகச் செய்தான். (அவரின் நோன்பு முறியாது)" என்று நபி(ஸல்) கூறினார்கள். **(புகாரி:1933. முஸ்லிம்:1155)**

١٢٤٣ – وَعَنْ لَقِيطِ بْنِ صَبْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللَّهِ أَخْبِرْنِي عَنِ الْوُضُوءِ ؟ قَالَ : " أَسْبِغْ الْوُضُوءَ وَخَلِّلْ بَيْنَ الأَصَابِعِ وَبَالِغْ فِي الاسْتِنْشَاقِ إِلاَّ أَنْ تَكُونَ صَائِمًا " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1243** லகீத் இப்னு ஸபிரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! உளூ பற்றி எனக்குக் கூறுங்கள்!" என்று நான் கேட்டேன் "உளூவை முழுமையாகச் செய்வீராக! விரல்களுக்கிடையே கோதிக் கழுவுவீராக! மூக்குக்குத் தண்ணீரைச்

செலுத்துவீராக! நீர் நோன்பாளியாக இருந்தாலே தவிர. (அப்பொழுது மூக்கினுள் தண்ணீர் சென்று விடாமல் பார்த்துக் கொள்வீராக!" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள்.

**(அபூதாவூது:142. திர்மிதி:788. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதி இமாம் கூறுகின்றார்கள்).**

١٢٤٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يُدْرِكُهُ الْفَجْرُ وَهُوَ جُنُبٌ مِنْ أَهْلِه ثُمَّ يَغْتَسِلُ وَيَصُومُ . مُتَّفَقٌ عَلَيْه .

**1244** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரவில் தங்கள் மனைவியிடம் இல்லற உறவு கொண்டதால் குளிப்பு கடமையானவர்களாக இருப்பார்கள். பின்பு பஜ்ரின் நேரம் அவர்களை அடையும்போது, அவர்கள் குளித்துவிட்டு நோன்பு வைத்துக் கொள்வார்கள். **(புகாரி:1930. முஸ்லிம்:1109)**

١٢٤٥ –وَعَنْ عَائِشَةَ وَأُمِّ سَلَمَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَتَا : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يُصْبِحُ جُنُبًا مِنْ غَيْرِ حُلْمٍ ثُمَّ يَصُومُ . مُتَّفَقٌ عَلَيْه.

**1245** ஆயிஷா (ரழி), உம்மு ஸல்மா (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

இல்லற உறவு காரணத்தால் குளிக்க வேண்டியவர்களாக நபி (ஸல்) அவர்கள் பஜ்ரின் வேளையில் இருப்பார்கள். பின்னர் குளித்துவிட்டு நோன்பு வைத்துக் கொள்வார்கள். **(புகாரி:1931. முஸ்லிம்:1109)**

## ٢٢٥ – باب بَيان فضل صَوم المحرّم وشعبان والأشهُر الْحرُم

## பாடம் : 225 - முஹர்ரம், ஷஃபான் மற்றும் கண்ணியமான மாதங்களில் நோன்பு வைப்பதன் சிறப்பு!

١٢٤٦ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " أَفْضَلُ الصِّيَامِ بَعْدَ رَمَضَانَ شَهْرُ اللّٰهِ الْمُحَرَّمُ وَأَفْضَلُ الصَّلَاةِ بَعْدَ الْفَرِيضَةِ صَلَاةُ اللَّيْلِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1246** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ரமளானுக்குப் பின் நோன்புகளில் மிகச் சிறந்தது, அல்லாஹ்வின் மாதமான முஹர்ரம் மாதம் (நோன்பு)தான். கடமையான தொழுகைக்குப்பின் தொழுகையில் மிகச்சிறந்தது, இரவுத் (தஹஜ்ஜுத்)தொழுகைதான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1163)**

١٢٤٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ : لَمْ يَكُنْ النَّبِيُّ ﷺ يَصُومُ مِنْ شَهْرٍ أَكْثَرَ مِنْ شَعْبَانَ فَإِنَّهُ كَانَ يَصُومَ شَعْبَانَ كُلَّهُ . وَفِي رِوَايَةٍ : كَانَ يَصُومُ شَعْبَانَ إِلاَّ قَلِيلاً . مُتَّفَقٌ عَلَيْه .

**1247** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ரமளானுக்குப்பின்) ஷஃபான் மாதத்தை விட (வேறு மாதங்களில்) மிக அதிகமாக நபி (ஸல்) அவர்கள் நோன்பு வைக்கவில்லை. ஏனெனில், அவர்கள் ஷஃபான் மாதம் முழுதும் நோன்பு வைப்பார்கள். (மற்றொரு அறிவிப்பில் "சில நாட்களே தவிர ஷஃபானின் பெரும் பகுதி நாட்களில் நபி (ஸல்) அவர்கள் நோன்பு வைப்பார்கள்" என்று உள்ளது) **(புகாரி:1969. முஸ்லிம்:1156)**

١٢٤٨ – وَعَنْ مُجِيبَةَ الْبَاهِلِيَّةِ عَنْ أَبِيهَا – أَوْ عَمِّهَا – أَنَّهُ أَتَى رَسُولَ اللّٰهِ ﷺ ثُمَّ انْطَلَقَ فَأَتَاهُ بَعْدَ سَنَةٍ – وَقَدْ تَغَيَّرَتْ حَالُهُ وَهَيْئَتُهُ – فَقَالَ : يَا رَسُولَ اللّٰهِ ﷺ أَمَا تَعْرِفُنِي ؟ قَالَ : " وَمَنْ أَنْتَ ؟ " . قَالَ : أَنَا الْبَاهِلِيُّ الَّذِي جِئْتُكَ عَامَ الأَوَّلِ . قَالَ

: " فَمَا غَيَّرَكَ وَقَدْ كُنْتَ حَسَنَ الْهَيْئَةِ ؟ " قَالَ : مَا أَكَلْتُ طَعَامًا مُنْذُ فَارَقْتُكَ إِلاَّ بِلَيْلٍ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " عَذَّبْتَ نَفْسَكَ ! " ثُمَّ قَالَ : " صُمْ شَهْرَ الصَّبْرِ وَيَوْمًا مِنْ كُلِّ شَهْرٍ " . قَالَ : زِدْنِي فَإِنَّ بِي قُوَّةً . قَالَ : " صُمْ يَوْمَيْنِ " . قَالَ : زِدْنِي . قَالَ : " صُمْ ثَلاَثَةَ أَيَّامٍ " . قَالَ : زِدْنِي . قَالَ : " صُمْ مِنَ الْحُرُمِ وَاتْرُكْ , صُمْ مِنَ الْحُرُمِ وَاتْرُكْ , صُمْ مِنَ الْحُرُمِ وَاتْرُكْ , " . وَقَالَ بِأَصَابِعِهِ الثَّلاَثِ فَضَمَّهَا ثُمَّ أَرْسَلَهَا . رَوَاهُ أَبُو دَاوُدَ . وَ " شَهْرُ الصَّبْرِ " : رَمَضَانُ .

**1248** முஜீபா அல் பாஹிலிய்யா அவர்கள் தன் தந்தை அல்லது சிறிய தந்தை வழியாக அறிவிக்கின்றார்கள்:

(இந்த இருவரில் ஒருவர்) நபி (ஸல்) அவர்களிடம் ஒரு முறை வந்து விட்டுப்போய், மீண்டும் மறு வருடமும் வந்தார். அப்போது அவரின் நிலையும் தோற்றமும் மாறி இருந்தது. "இறைத்தூதர் அவர்களே! என்னை அறிவீர்களா?" என்று கேட்டார். "நீர் யார்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "நான், சென்ற வருடம் உங்களிடம் வந்திருந்தேன். "பாஹிலி" கூட்டத்தினரில் ஒருவன்" என்று கூறினார். "நீர் அழகானவராயிற்றே. உம்மை இப்படி மாற்றியது எது?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "உங்களிடமிருந்து நான் சென்றதிலிருந்து சில இரவுகள் தவிர எதையும் சாப்பிட்டதில்லை. (அதாவது தொடர்ந்து நோன்பு வைத்தேன்)" என்று கூறினார். "உம்மை வேதனைப்படுத்திக் கொண்டீரே?" என்று கூறினார். பின்பு, "பொறுமையின் மாதமான ரமளானில் நோன்பு வைப்பீராக! மேலும் ஒவ்வொரு மாதமும் ஒரு நாள் நோன்பு வைப்பீராக!" என்று கூறினார்கள். "எனக்கு சக்தி உண்டு. மேலும் எனக்கு அதிகமாகக் கூறுங்கள்" என்று கேட்டார். "(மாதத்தில்) இரண்டு நாட்கள் நோன்பு வைப்பீராக!" என்று கூறினார்கள். "எனக்கு மேலும் அதிக மாக்குங்கள்" என்றார். "மூன்று நாட்கள் நோன்பு வைப்பீராக!" என்றார்கள். "எனக்கு மேலும் அதிகமாக்குங்கள்" என்றார். "சங்கைக்குரிய மாதங்களில் (ரஜப், முஹர்ரம், துல்கஅதா, துல்ஹஜ் ஆகிய மாதங்களில் மூன்று) நோன்பு வைப்பீராக! பிறகு (சில தினங்கள்) விடுவீராக! சங்கைக்குரிய மாதங்களில் நோன்பு வைப்பீராக! பிறகு விடுவீராக! சங்கைக்குரிய மாதங்களில் நோன்பு வைப்பீராக! பிறகு விடுவீராக!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறும் போது தன் மூன்று விரல்களை இணைத்து, பின்பு விட்டு விட்டார்கள். **(அபூதாவூது:2428)**

குறிப்பு: ரஜப், துல்கஅதா, துல்ஹஜ், முஹர்ரம் ஆகிய மாதங்களில் மூன்று நாட்கள் நோன்பு வைத்து, மூன்று நாட்கள் விடுவது ஆகும். இதை அறிவிக்கும் முஜீபா என்பவர் பற்றிய அறிமுகம் சரியாக இல்லை என இமாம் ஃதஹபீ கூறுகிறார்.

## ٢٢٦ – باب فضل الصّوم وغيره في العشر الأول من ذي الحجّة

## பாடம் : 226 - துல்ஹஜ் மாதம் முதல் பத்து நாட்களில் நோன்பு வைத்தல், மற்ற நற்செயல் செய்தலின் சிறப்பு!

١٢٤٩ – عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ أَيَّامٍ الْعَمَلُ الصَّالِحُ فِيهَا أَحَبُّ إِلَى اللَّهِ مِنْ هَذِهِ الأَيَّامِ " يَعْنِي أَيَّامَ الْعَشْرِ . قَالُوا : يَا رَسُولَ اللَّهِ وَلاَ الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ ؟ قَالَ : " وَلاَ الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ إِلاَّ رَجُلٌ خَرَجَ بِنَفْسِهِ وَمَالِهِ فَلَمْ يَرْجِعْ مِنْ ذَلِكَ بِشَيْءٍ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1249** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(துல்ஹஜ் மாதம் முதல் 10 நாட்களான) இந்த நாட்களில் செய்கின்ற எந்தச் செயலும் மற்ற நாட்களில் செய்யும் செயல்களை விட அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் வழியில் தியாகம் செய்வதையும் விடவா?" என்று (நபித்தோழர்கள்) கேட்டார்கள். "(ஆம்) அல்லாஹ்வின் வழியில் தியாகம் செய்வதையும் விடவும் தான். எனினும், ஒரு மனிதர் தன்னையும், தன் பொருளையும் (இறைவழியில்) எடுத்துச் சென்று, பின்பு எதையும் அதில் திருப்பிக் கொண்டு வராத (அதாவது இறந்துபோன) மனிதரைத் தவிர" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:969)**

## ٢٢٧ - باب فضل صوم يوم عرفة وعاشوراء وتاسوعاء

## பாடம் : 227 - அரஃபாநாள் மற்றும் முஹர்ரம் 9,10 - ஆம் நாட்களில் நோன்பு வைப்பதன் சிறப்பு!

١٢٥٠ - عَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سُئِلَ رَسُولُ اللَّهِ ﷺ : عَنْ صَوْمِ عَرَفَةَ قَالَ : " يُكَفِّرُ السَّنَةَ الْمَاضِيَةَ وَالْبَاقِيَةَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1250** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(துல்ஹஜ் பிறை 9) அரஃபா நாளில் நோன்பு வைப்பது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. "அந்த நோன்பு அதற்கு முன் சென்ற ஓராண்டுப் பாவங்களையும், அதற்கு பின் வரும் ஓராண்டுப் பாவங்களையும் அழித்துவிடுகிறது" என பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:1162)**

١٢٥١ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ صَامَ يَوْمَ عَاشُورَاءَ وَأَمَرَ بِصِيَامِهِ . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1251** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஆஷூரா (முஹர்ரம் 10ஆம்) நாளில் நபி (ஸல்) அவர்கள் நோன்பு வைப்பார்கள். அந்த நோன்பு வைக்குமாறு தங்கள் தோழர்களுக்கு கட்டளையிட்டார்கள். **(புகாரி:2004. முஸ்லிம்:1130)**

١٢٥٢ - وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ سُئِلَ عَنْ صِيَامِ يَوْمِ عَاشُورَاءَ فَقَالَ : " يُكَفِّرُ السَّنَةَ الْمَاضِيَةَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1252** அபூ கதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஆஷூரா நாளில் நோன்பு வைப்பது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அப்போது அவர்கள், "அந்நாளில் (ஆஷூரா நாளில்) நோன்பு வைப்பது, அதற்கு முன் சென்ற வருடத்தின் பாவங்களை அழிக்கிறது" என்று பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:1162)**

١٢٥٣ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَئِنْ بَقِيتُ إِلَى قَابِلٍ لأَصُومَنَّ التَّاسِعَ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1253** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வரும் ஆண்டில் நான் இருந்தால், நிச்சயமாக! முஹர்ரம் 9-ஆம் நாளிலும் (தாஸூஆ) நோன்பு வைப்பேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1134)**

## ٢٢٨ – باب اسْتِحْبَابِ صَوم ستّة أيّام منْ شوال

## பாடம் : 228 - ஷவ்வால் மாதம் ஆறு நாட்களில் நோன்பு வைப்பது விரும்பத்தக்கதாகும்

١٢٥٤ – عَنْ أَبِي أَيُّوبَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " مَنْ صَامَ رَمَضَانَ ثُمَّ أَتْبَعَهُ سِتًّا مِنْ شَوَّالٍ كَانَ كَصِيَامِ الدَّهْرِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1254** அபூ அய்யூப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் ரமளானில் நோன்பு நோற்று, அடுத்து ஷவ்வாலின் ஆறு நாட்கள் தொடர்ந்து நோன்பு வைத்தால், காலம் முழுதும் நோன்பு வைத்தவர் போலாவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1164)**

## ٢٢٩ – باب استحباب صَوْم الاثنين والخميس

## பாடம் : 229 - திங்கள், வியாழக்கிழமைகளில் நோன்பு வைப்பது விரும்பத்தக்கதாகும்.

١٢٥٥ – عَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ سُئِلَ عَنْ صَوْمِ يَوْمِ الاثْنَيْنِ فَقَالَ : " ذَلِكَ يَوْمٌ وُلِدْتُ فِيهِ وَيَوْمٌ بُعِثْتُ أَوْ أُنْزِلَ عَلَيَّ فِيهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1255** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

திங்கள்கிழமை நோன்பு வைப்பது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், “இன்றுதான் நான் பிறந்தேன். இன்றுதான் நான் நபியாக அனுப்பப்பட்டேன். அல்லது இன்று தான் என் மீது (குர்ஆன்) இறக்கியருளப்பட்டது” என்று பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:1162)**

١٢٥٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنْ رَسُولِ اللّٰهِ ﷺ قَالَ : " تُعْرَضُ الأَعْمَالُ يَوْمَ الاثْنَيْنِ وَالْخَمِيسِ فَأُحِبُّ أَنْ يُعْرَضَ عَمَلِي وَأَنَا صَائِمٌ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ :حَدِيثٌ حَسَنٌ . وَرَوَاهُ مُسْلِمٌ بِغَيْرِ ذِكْرِ الصَّوْمِ.

**1256** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“திங்கள், வியாழக்கிழமைகளில் (மனிதர்களின்) செயல்கள் அல்லாஹ்விடம் எடுத்துச் சமர்ப்பிக்கப்படும். நான் நோன்பாளியாக இருக்கும் நிலையில் என் செயல்கள் (அல்லாஹ்விடம்) எடுத்து சமர்பிக்கப்படுவதை விரும்புகிறேன்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:747. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். “நோன்பு” பற்றிய குறிப்பீடு இன்றி முஸ்லிம் (2565) நூலில் உள்ளது)**

١٢٥٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يَتَحَرَّى صَوْمَ الاثْنَيْنِ وَالْخَمِيسِ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1257** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், திங்கள்-வியாழக்கிழமைகளில் முயற்சி செய்து நோன்பு வைப்பார்கள்.

**(திர்மிதீ:745. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

## ٢٣٠ - باب استحباب صوم ثلاثة أيام من كل شهر

## பாடம் : 230 - ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு வைப்பது விரும்பத்தக்கதாகும்.

(மாதம் மூன்று நோன்புகளில் மிகச்சிறந்தது, "அய்யாமுல்ஃபீழ்" நாட்களாகும். அது, பிறை 13,14,15 ஆகிய நாட்களாகும். 12,13,14-ஆம் நாட்கள் என்றும் கூறப்படுகிறது. பிரபலமான சரியான கருத்து, முதலாவதுதான்)

١٢٥٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَوْصَانِي خَلِيلِي ﷺ بِثَلاَثٍ : صِيَامِ ثَلاَثَةِ أَيَّامٍ مِنْ كُلِّ شَهْرٍ وَرَكْعَتَيْ الضُّحَى وَأَنْ أُوتِرَ قَبْلَ أَنْ أَنَامَ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1258** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் நெருங்கிய நண்பர் (முஹம்மது (ஸல்)) அவர்கள் மூன்று விஷயங்களை எனக்கு உபதேசம் செய்தார்கள். (1) ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு வைப்பது. (2) லுஹா நேரத்தில் இரண்டு ரக்அத்துகள் தொழுவது (3) நான் உறங்கும் முன் வித்ருத் தொழுவது." **(புகாரி:1981. முஸ்லிம்:721)**

١٢٥٩ - وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَوْصَانِي حَبِيبِي ﷺ بِثَلاَثٍ لَنْ أَدَعَهُنَّ مَا عِشْتُ : بِصِيَامِ ثَلاَثَةِ أَيَّامٍ مِنْ كُلِّ شَهْرٍ . وَصَلاَةِ الضُّحَى ؛ وَبِأَلاَّ أَنَامَ حَتَّى أُوتِرَ . رَوَاهُ مُسْلِمٌ .

**1259** அபுதர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் நேசர் எனக்கு மூன்று காரியங்களை உபதேசித்தார்கள். நான் வாழும் காலமெல்லாம் அவற்றை விடமாட்டேன். 1) ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு வைப்பது. 2) லுஹாத் தொழுகை தொழுவது. 3) வித்ருத் தொழும் வரை தூங்காமல் இருப்பது(வித்ரு தொழுது விட்டு தூங்குவது.) **(முஸ்லிம்:722)**

١٢٦٠ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : صَوْمُ ثَلاَثَةِ أَيَّامٍ مِنْ كُلِّ شَهْرٍ صَوْمُ الدَّهْرِ كُلِّهِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1260** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு வைப்பது, காலம் முழுதும் நோன்பு வைப்பது போலாகும்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1979. முஸ்லிம்:1159)**

١٢٦١ - وَعَنْ مُعَاذَةَ الْعَدَوِيَّةِ أَنَّهَا سَأَلَتْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا : أَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَصُومُ مِنْ كُلِّ شَهْرٍ ثَلاَثَةَ أَيَّامٍ ؟ قَالَتْ : نَعَمْ . فَقُلْتُ : مِنْ أَيِّ الشَّهْرِ كَانَ يَصُومُ ؟ قَالَتْ : لَمْ يَكُنْ يُبَالِي مِنْ أَيِّ الشَّهْرِ يَصُومُ . رَوَاهُ مُسْلِمٌ .

**1261** முஆதா அல் அதவிய்யா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு வைப்பார்களா?" என்று ஆயிஷா (ரழி) அவர்களிடம் கேட்டேன். "ஆம்" என்று கூறினார்கள். "மாதத்தில் எந்த நாட்களில் நோன்பு வைப்பார்கள்?" என்று கேட்டேன். "மாதத்தில் எந்த நாட்களில் நோன்பு வைப்பது என்பது பற்றி அவர்கள் பொருட்படுத்தியதில்லை" என்று ஆயிஷா (ரழி) பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:1160)**

١٢٦٢ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِذَا صُمْتَ مِنَ الشَّهْرِ ثَلاَثًا فَصُمْ ثَلاَثَ عَشْرَةَ وَأَرْبَعَ عَشْرَةَ وَخَمْسَ عَشْرَةَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1262** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மாதத்தில் மூன்று நாட்கள் நோன்பு வைத்தால், 13,14,15-ஆம் நாட்களில் நோன்பு வைப்பீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:761. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٦٣ – وَعَنْ قَتَادَةَ بْنِ مِلْحَانَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يَأْمُرُنَا بِصِيَامِ أَيَّامِ الْبِيضِ : ثَلاَثَ عَشْرَةَ وَأَرْبَعَ عَشْرَةَ وَخَمْسَ عَشْرَةَ . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1263** கதாதா இப்னு மில்ஹான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அய்யாமுல் ஃபீழ் எனும் 13,14,15-ஆம் நாட்களில் நோன்பு வைக்குமாறு எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். **(அபூதாவூது:2449)**

١٢٦٤ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ لاَ يُفْطِرُ أَيَّامَ الْبِيضِ فِي حَضَرٍ وَلاَ سَفَرٍ . رَوَاهُ النَّسَائِيُّ بِإِسْنَادٍ حَسَنٍ .

**1264** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பயணத்தில் இருந்தாலும், பயணத்தில் இல்லாவிட்டாலும், அய்யாமுல் ஃபீழ் நோன்புகளை விட மாட்டார்கள். **(நஸயீ:4/198–199)**

## ٢٣١ – بَابُ فضل مَن فطّر صَائمًا وفضل الصّائم الذي يُؤكل عنده ودعاء الآكل للمأكول عنده

## பாடம் : 231 - நோன்பாளியை நோன்பு திறக்க செய்வதன் சிறப்பு! பிறருக்கு உண்ணத் தரும் நோன்பாளியின் சிறப்பு! உணவு தந்தவருக்கு சாப்பிட்டவர் "துஆ" செய்வது.

١٢٦٥ – عَنْ زَيْدِ بْنِ خَالِدٍ الْجُهَنِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ فَطَّرَ صَائِمًا كَانَ لَهُ مِثْلُ أَجْرِهِ غَيْرَ أَنَّهُ لاَ يَنْقُصُ مِنْ أَجْرِ الصَّائِمِ شَيْءٌ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1265** ஜைத் இப்னு காலித் அல்ஜுஹ்னீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் நோன்பாளியை நோன்பு திறக்கச் செய்தால், அவருக்கு அந்த நோன்பாளியின் கூலி போன்று உண்டு. எனினும், அந்த நோன்பாளியின் நற்கூலியில் எதுவும் குறைந்து விடாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:807. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٦٦ – وَعَنْ أُمِّ عِمَارَةَ الأَنْصَارِيَّةِ رَضِيَ اللّٰهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ دَخَلَ عَلَيْهَا فَقَدَّمَتْ إِلَيْهِ طَعَامًا فَقَالَ : كُلِي . فَقَالَتْ : إِنِّي صَائِمَةٌ ; فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِنَّ الصَّائِمَ تُصَلِّي عَلَيْهِ الْمَلاَئِكَةُ إِذَا أُكِلَ عِنْدَهُ حَتَّى يَفْرَغُوا " . وَرُبَّمَا قَالَ : " حَتَّى يَشْبَعُوا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1266** உம்மு உமாரா அன்சாரிய்யா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என்னிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர்கள் முன் உணவை வைத்தேன். "நீயும் சாப்பிடுவாயாக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். "நான் நோன்பாளி" என்று கூறினேன். அதற்கு நபி

(ஸல்), “ஒரு நோன்பாளி (தான் நோன்பு வைத்திருக்கும் நிலையில்) ஒருவருக்குச் சாப்பிடக் கொடுத்தால், அவர்கள் (சாப்பிடுபவர்கள்) சாப்பிட்டு முடிக்கும் வரை, வானவர்கள் அவருக்காகப் பிரார்த்தனை செய்கின்றனர்” என்று கூறினார்கள்.

**(திர்மிதீ:785. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٦٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ جَاءَ إِلَى سَعْدِ بْنِ عُبَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ فَجَاءَ بِخُبْزٍ وَزَيْتٍ فَأَكَلَ ثُمَّ قَالَ : النَّبِيُّ ﷺ : " أَفْطَرَ عِنْدَكُمُ الصَّائِمُونَ وَأَكَلَ طَعَامَكُمُ الأَبْرَارُ وَصَلَّتْ عَلَيْكُمُ الْمَلاَئِكَةُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1267** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸஃது இப்னு உபாதா (ரழி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர் ரொட்டி மற்றும் ஜைத்தூன் எண்ணெயை கொண்டு வந்து வைத்தார். நபி (ஸல்) அவர்கள் சாப்பிட்டார்கள். பின்பு “அஃப்தர இன்தகும் அஸ்ஸாஇமூன். வஅகல தஆமகுமுல் அப்ராரு, வஸல்லத் அலய்குமுல் மலாயிகா” என்று நபி (ஸல்) துஆச் செய்தார்கள். **(அபூதாவூது:3854)**

**துஆவின் பொருள்: உங்களிடம் நோன்பாளிகள் நோன்பு திறப்பார்களாக! உங்களின் உணவை நல்லவர்கள் சாப்பிடுவார்களாக! உங்களுக்காக மலக்குகள் துஆச் செய்வார்களாக!**

# அத்தியாயம் 9

## இஹ்திகாஃப் (பள்ளியில் தங்குதல்)

## ٢٣٢ – بابٌ الاعتكاف في رمضان

## பாடம் : 232 - ரமளானில் இஹ்திகாஃப்

١٢٦٨ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَعْتَكِفُ الْعَشْرَ الأَوَاخِرَ مِنْ رَمَضَانَ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1268** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ரமளானின் கடைசிப் பத்து நாட்களில் இஹ்திகாஃப் இருப்பார்கள்.

**(புகாரி:2025. முஸ்லிம்:1171)**

١٢٦٩ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَعْتَكِفُ الْعَشْرَ الأَوَاخِرَ مِنْ رَمَضَانَ حَتَّى تَوَفَّاهُ اللَّهُ تَعَالَى ثُمَّ اعْتَكَفَ أَزْوَاجُهُ مِنْ بَعْدِهِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1269** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ் தன்னை மரணிக்கச் செய்யும் வரையில், ரமளானின் கடைசிப் பத்து நாட்களில் நபி (ஸல்) அவர்கள் ‘இஹ்திகஃப்’ இருந்தார்கள். அவருக்குப் பின்னர் அவர்களின் மனைவிமார்களும் ‘இஹ்திகாஃப்’ இருந்தார்கள். **(புகாரி:2026. முஸ்லிம்:1172)**

١٢٧٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ يَعْتَكِفُ فِي كُلِّ رَمَضَانَ عَشَرَةَ أَيَّامٍ فَلَمَّا كَانَ الْعَامُ الَّذِي قُبِضَ فِيهِ اعْتَكَفَ عِشْرِينَ يَوْمًا . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1270** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு ரமளானிலும் பத்து நாட்கள் 'இஃதிகாஃப்' இருந்தார்கள். அவர்களின் உயிர் கைப்பற்றப்பட்ட வருடத்தில் இருபது நாட்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.

**(புகாரி:2044)**

# அத்தியாயம் 10

## ஹஜ்

## ٢٣٣ - بَابُ وُجوب الحج وفضله

### பாடம் : 233 - ஹஜ் கடமையும், அதன் சிறப்புகளும்

قَالَ اللّٰهُ تَعَالَى : وَلِلّٰهِ عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلاً وَمَنْ كَفَرَ فَإِنَّ اللّٰهَ غَنِيٌّ عَنِ الْعَالَمِينَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *எவர்கள் அங்கு பிரயாணம் செல்ல சக்தி உடையவர்களாக இருக்கின்றார்களோ, அத்தகைய மனிதர்கள் மீது அல்லாஹ்வுக்காக (அங்குச் சென்று) அந்த ஆலயத்தை ஹஜ் செய்வது கடமையாகும். எவரேனும் (இதை) நிராகரித்தால் (அதனால் அல்லாஹ்வுக்கு ஒன்றும் குறைந்து விடுவதில்லை. ஏனென்றால்,) நிச்சயமாக அல்லாஹ் உலகத்தாரின் தேவையற்றவனாக இருக்கின்றான். (3:97)*

١٢٧١ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ " بُنِيَ الأَسْلاَمُ عَلَى خَمْسٍ : شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللّٰهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللّٰهِ وَإِقَامِ الصَّلاَةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَحَجِّ الْبَيْتِ وَصَوْمِ رَمَضَانَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1271** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இஸ்லாம் ஐந்து விஷயங்கள் மீது கட்டப்பட்டுள்ளது. (1) வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் அடியாரும், அவனது தூதருமாவார் என சாட்சி கூறுவது (2) தொழுகையைப் பேணுவது (3) ஜகாத் வழங்குவது (4) ஹஜ் செய்வது (5) ரமளானில் நோன்பு வைப்பது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:8 முஸ்லிம்:16)**

١٢٧٢ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : خَطَبَنَا رَسُولُ اللّٰهِ ﷺ فَقَالَ : " أَيُّهَا النَّاسُ قَدْ فَرَضَ اللّٰهُ عَلَيْكُمُ الْحَجَّ فَحُجُّوا " . فَقَالَ رَجُلٌ : أَكُلَّ عَامٍ يَا رَسُولَ اللّٰهِ ؟ فَسَكَتَ حَتَّى قَالَهَا ثَلاَثًا . فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لَوْ قُلْت نَعَمْ لَوَجَبَتْ وَلَمَا اسْتَطَعْتُمْ " ثُمَّ قَالَ : " ذَرُونِي مَا تَرَكْتُكُمْ فَإِنَّمَا هَلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ بِكَثْرَةِ سُؤَالِهِمْ وَاخْتِلاَفِهِمْ عَلَى أَنْبِيَائِهِمْ فَإِذَا أَمَرْتُكُمْ بِشَيْءٍ فَأْتُوا مِنْهُ مَا اسْتَطَعْتُمْ وَإِذَا نَهَيْتُكُمْ عَنْ شَيْءٍ فَدَعُوهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1272** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது "மனிதர்களே! ஹஜ் செய்வதை உங்கள் மீது அல்லாஹ் கடமையாக்கி உள்ளான். எனவே ஹஜ் செய்யுங்கள்" என்று கூறினார்கள். அப்போது ஒருவர், "இறைத்தூதர் அவர்களே! ஒவ்வொரு வருடமுமா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் மவுனமாக இருந்தார்கள். அந்த கேள்வியையே அவர் மூன்று தடவை கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நான் ஆம் என்று கூறினால் அது கடமையாகி விடும். நீங்கள் சக்தி பெறமாட்டீர்கள்" என்று கூறினார்கள். பின்பு, "உங்களுக்கு முன் இருந்தோர்,

தங்களின் அதிகமான கேள்விகளின் காரணமாகவும், தங்கள் நபிமார்களிடம் அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டதன் காரணமாகவும் அழிந்தனர். எதையேனும் உங்களிடம் நான் கட்டளையிட்டால், நீங்கள் இயன்ற அளவுக்கு அதை எடுத்துக் கொள்ளுங்கள். எதையேனும் விட்டு உங்களை நான் தடுத்துவிட்டால், அதை நீங்கள் விட்டு விடுங்கள்'' என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1337)**

١٢٧٣ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : سُئِلَ النَّبِيُّ ﷺ : أَيُّ الْعَمَلِ أَفْضَلُ ؟ قَالَ : " إِيمَانٌ بِاللَّهِ وَرَسُولِه " . قِيلَ : ثُمَّ مَاذَا ؟ قَالَ : " الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ " . قِيلَ : ثُمَّ مَاذَا ؟ قَالَ : " حَجٌّ مَبْرُورٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْمَبْرُورُ " : هُوَ الَّذِي لاَ يَرْتَكِبُ صَاحِبُهُ فِيهِ مَعْصِيَةً

**1273** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"செயல்களில் எது மிகச் சிறந்தது?'' என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்புவது'' என்று பதில் கூறினார்கள். "பின்னர் எது?'' என்று கேட்கப்பட்டது. "அல்லாஹ்வின் வழியில் போர் செய்வது'' என்று பதில் கூறினார்கள். "அடுத்து என்ன?'' என்று கேட்கப்பட்டது. "ஒப்புக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜாகும்'' என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(புகாரி:1519. முஸ்லிம்:83)**

١٢٧٤ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ حَجَّ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَيَوْمِ وَلَدَتْهُ أُمُّهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1274** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உடலுறவு கொள்ளாமல், தீயப் பேச்சு பேசாமல் ஒருவர் தூய்மையாக ஹஜ் செய்தால், தன் தாய் ஈன்றெடுத்த நாள் போல் (அன்று பிறந்த குழந்தை போல், பாவமற்றவராக) அவர் தன் ஊருக்குத் திரும்புவார்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(புகாரி:1521. முஸ்லிம்:1350)**

١٢٧٥ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الْعُمْرَةُ إِلَى الْعُمْرَةِ كَفَّارَةٌ لِمَا بَيْنَهُمَا وَالْحَجُّ الْمَبْرُورُ لَيْسَ لَهُ جَزَاءٌ إِلاَّ الْجَنَّةُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1275** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு உம்ரா, மற்றொரு உம்ராவுக்கு இடையில் ஏற்பட்ட பாவங்களை அழித்துவிடும். ஒப்புக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜுக்கு நற்கூலியாக, சொர்க்கத்தைத் தவிர வேறு இல்லை'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1773. முஸ்லிம்:1349)**

١٢٧٦ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قُلْت : يَا رَسُولَ اللَّهِ نَرَى الْجِهَادَ أَفْضَلَ الْعَمَلِ أَفَلاَ نُجَاهِدُ ؟ فَقَالَ : " لَكِنَّ أَفْضَلُ الْجِهَادِ : حَجٌّ مَبْرُورٌ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1276** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! செயல்களில் மிகச் சிறந்ததாக தியாகம் செய்வதை நாங்கள் கருதுகிறோம். நாங்கள் தியாகம் (ஜிஹாத்) செய்யலாமா?'' என்று கேட்டேன். "(உங்களுக்கு) மிக மேலான ஜிஹாத், ஒப்புக் கொள்ளப்பட்ட ஹஜ்தான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1520)**

١٢٧٧ – وَعَنْهَا ) عَائِشَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَا مِنْ يَوْمٍ أَكْثَرَ مِنْ أَنْ يُعْتِقَ اللَّهُ فِيهِ عَبْدًا مِنْ النَّارِ مِنْ يَوْمِ عَرَفَةَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1277** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(துல்ஹஜ் மாதம் 9 ஆம் நாளான) அரஃபா நாளில் நரகத்தில் இருந்து தன் அடியார்களை (விடுதலை செய்வது போல்)அல்லாஹ் வேறு எந்த நாட்களிலும் மிக அதிகமாக விடுதலை செய்வதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1348)**

١٢٧٨ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : "عُمْرَةٌ فِي رَمَضَانَ تَعْدِلُ حَجَّةً – أَوْ حَجَّةً مَعِي". مُتَّفَقٌ عَلَيْهِ.

**1278** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ரமளானில் உம்ராச் செய்வது, ஹஜ்ஜுக்கு சமமாகும். அல்லது என்னுடன் ஹஜ் செய்ததற்கு சமமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1782. முஸ்லிம்:1256)**

١٢٧٩ – وَعَنْهُ ) ابْنِ عَبَّاسٍ ( أَنَّ امْرَأَةً قَالَتْ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ فَرِيضَةَ اللَّهِ عَلَى عِبَادِهِ فِي الْحَجِّ أَدْرَكَتْ أَبِي شَيْخًا كَبِيرًا لاَ يَثْبُتُ عَلَى الرَّاحِلَةِ أَفَأَحُجُّ عَنْهُ ؟ قَالَ : " نَعَمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1279** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! தன் அடியார்கள் மீது அல்லாஹ் கடமையாக்கிய ஹஜ், வயது முதிர்ந்த என் தந்தைக்கு ஏற்பட்டு விட்டது. வாகனத்தில் கூட அவரால் உட்கார முடியாது. அவர் சார்பாக நான் ஹஜ் செய்யலாமா?" என்று (கத்அம் கூட்டத்தைச் சேர்ந்த) ஒரு பெண் கேட்டார். அதற்கு, "ஆம். (நீர் செய்யலாம்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1513. முஸ்லிம்:1334)**

١٢٨٠ – وَعَنْ لَقِيطِ بْنِ عَامِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ أَتَى النَّبِيَّ ﷺ فَقَالَ . إِنَّ أَبِي شَيْخٌ كَبِيرٌ لاَ يَسْتَطِيعُ الْحَجَّ وَلاَ الْعُمْرَةَ وَلاَ الظَّعَنَ . قَالَ : " حُجَّ عَنْ أَبِيكَ وَاعْتَمِرْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1280** லகீத் இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, "என் தந்தை வயது முதிர்ந்தவர். ஹஜ் செய்யவோ, உம்ரா செய்யவோ, பயணம் செய்யவோ இயலமாட்டார். (என்ன செய்வது?)" என்று கேட்டேன். அதற்கு, "உம் தந்தைக்காக நீர் ஹஜ் செய்வீராக! உம்ரா செய்வீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1810. திர்மிதீ:930. இதனை "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٢٨١ – وَعَنْ السَّائِبِ بْنِ يَزِيدَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ . حُجَّ بِي مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي حَجَّةِ الْوَدَاعِ وَأَنَا ابْنُ سَبْعِ سِنِينَ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1281** ஸாயிப் இப்னு யஸீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இறுதி ஹஜ்ஜின் போது, நபி (ஸல்) அவர்களுடன் எனக்கு ஹஜ் செய்யும் நிலை ஏற்பட்டது. (அப்போது) நான் ஏழு வயது சிறுவனாக இருந்தேன். **(புகாரி:1858)**

١٢٨٢ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ لَقِيَ رَكْبًا بِالرَّوْحَاءِ فَقَالَ : " مَنْ الْقَوْمُ ؟ " قَالُوا : الْمُسْلِمُونَ . قَالُوا : مَنْ أَنْتَ ؟ قَالَ : " رَسُولُ اللَّهِ " . فَرَفَعَتْ امْرَأَةٌ صَبِيًّا فَقَالَتْ : أَلِهَذَا حَجٌّ ؟ قَالَ : " نَعَمْ وَلَكِ أَجْرٌ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1282** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், "ரவ்ஹா" என்ற இடத்தில் பயணக் கூட்டத்தாரை சந்தித்து, "இவர்கள் யார்?" என்று கேட்டார்கள். "நாங்கள் முஸ்லிம்கள்" என்று அவர்கள் (அந்த கூட்டத்தினர்) கூறினார்கள். பிறகு, "நீங்கள் யார்?" என பயணக் கூட்டத்தார் கேட்டனர். அதற்கு, "நான் அல்லாஹ்வின் தூதர்"

என்று பதில் கூறினார்கள். அப்போது ஒரு பெண், சிறுவன் ஒருவனைத் தூக்கிக் காண்பித்து, "இவருக்கு ஹஜ் உள்ளதா?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஆம்! அதன் நற்கூலி உமக்கு உண்டு" என்று பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:1336)**

١٢٨٣ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ حَجَّ عَلَى رَحْلٍ وَكَانَتْ زَامِلَتَهُ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1283** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு ஒட்டகையின் மீது அமர்ந்து ஹஜ் செய்தார்கள். அவர்களின் பொருட்களையும் சுமக்கும் ஒட்டகையாகவும் அது இருந்தது. **(புகாரி:1517)**

١٢٨٤ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَتْ عُكَاظُ وَمِجَنَّةُ وَذُو الْمَجَازِ أَسْوَاقًا فِي الْجَاهِلِيَّةِ فَتَأَثَّمُوا أَنْ يَتَّجِرُوا فِي الْمَوَاسِمِ فَنَزَلَتْ : " لَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَبْتَغُوا فَضْلاً مِنْ رَبِّكُمْ " فِي مَوَاسِمِ الْحَجِّ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1284** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உக்காள், மஜின்னா, துல் மஜாஸ் ஆகிய இடங்கள் முன்னர் அறியாமை காலத்தில் கடைவீதிகளாக இருந்தன. நபித்தோழர்கள் இஸ்லாமிய காலத்தில் (ஹஜ் செய்யும் போது) அது குற்றமாக இருக்குமோ என பயந்தார்கள். அப்போது, "(ஹஜ் காலங்களில்) உங்களின் இறைவனிடமிருந்து அருளை வியாபாரத்தின் மூலம் நீங்கள் தேடுவது, உங்கள் மீது குற்றமில்லை" (2:198) என்ற வசனம் இறங்கியது. **(புகாரி:4519)**

# அத்தியாயம் 11

## ஜிஹாத்

## ٢٣٤ – بَابُ وجوب الجهاد

## பாடம் : 234 - ஜிஹாதின் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى : وَقَاتِلُوا الْمُشْرِكِينَ كَافَّةً كَمَا يُقَاتِلُونَكُمْ كَافَّةً وَاعْلَمُوا أَنَّ اللَّهَ مَعَ الْمُتَّقِينَ . وَقَالَ تَعَالَى : كُتِبَ عَلَيْكُمُ الْقِتَالُ وَهُوَ كُرْهٌ لَكُمْ وَعَسَى أَنْ تَكْرَهُوا شَيْئًا وَهُوَ خَيْرٌ لَكُمْ وَعَسَى أَنْ تُحِبُّوا شَيْئًا وَهُوَ شَرٌّ لَكُمْ وَاللَّهُ يَعْلَمُ وَأَنْتُمْ لاَ تَعْلَمُونَ . وَقَالَ تَعَالَى : انْفِرُوا خِفَافًا وَثِقَالاً وَجَاهِدُوا بِأَمْوَالِكُمْ وَأَنْفُسِكُمْ فِي سَبِيلِ اللَّهِ . وَقَالَ تَعَالَى : إِنَّ اللَّهَ اشْتَرَى مِنَ الْمُؤْمِنِينَ أَنْفُسَهُمْ وَأَمْوَالَهُمْ بِأَنَّ لَهُمُ الْجَنَّةَ يُقَاتِلُونَ فِي سَبِيلِ اللَّهِ فَيَقْتُلُونَ وَيُقْتَلُونَ وَعْدًا عَلَيْهِ حَقًّا فِي التَّوْرَاةِ وَالأَنْجِيلِ وَالْقُرْآنِ وَمَنْ أَوْفَى بِعَهْدِهِ مِنَ اللَّهِ فَاسْتَبْشِرُوا بِبَيْعِكُمُ الَّذِي بَايَعْتُمْ بِهِ وَذَلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيمُ . وَقَالَ اللَّهُ تَعَالَى : لاَ يَسْتَوِي الْقَاعِدُونَ مِنَ الْمُؤْمِنِينَ غَيْرُ أُولِي الضَّرَرِ وَالْمُجَاهِدُونَ فِي سَبِيلِ اللَّهِ بِأَمْوَالِهِمْ وَأَنْفُسِهِمْ فَضَّلَ اللَّهُ الْمُجَاهِدِينَ بِأَمْوَالِهِمْ وَأَنْفُسِهِمْ عَلَى الْقَاعِدِينَ دَرَجَةً وَكُلًّا وَعَدَ اللَّهُ الْحُسْنَى وَفَضَّلَ اللَّهُ الْمُجَاهِدِينَ عَلَى الْقَاعِدِينَ أَجْرًا عَظِيمًا دَرَجَاتٍ مِنْهُ وَمَغْفِرَةً وَرَحْمَةً وَكَانَ اللَّهُ غَفُورًا رَحِيمًا . وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا هَلْ أَدُلُّكُمْ عَلَى تِجَارَةٍ تُنْجِيكُمْ مِنْ عَذَابٍ أَلِيمٍ

تُؤْمِنُونَ بِاللَّهِ وَرَسُولِهِ وَتُجَاهِدُونَ فِي سَبِيلِ اللَّهِ بِأَمْوَالِكُمْ وَأَنْفُسِكُمْ ذَلِكُمْ خَيْرٌ لَكُمْ إِنْ كُنْتُمْ تَعْلَمُونَ يَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ وَيُدْخِلْكُمْ جَنَّاتٍ تَجْرِي مِنْ تَحْتِهَا الأَنْهَارُ وَمَسَاكِنَ طَيِّبَةً فِي جَنَّاتِ عَدْنٍ ذَلِكَ الْفَوْزُ الْعَظِيمُ وَأُخْرَى تُحِبُّونَهَا نَصْرٌ مِنَ اللَّهِ وَفَتْحٌ قَرِيبٌ وَبَشِّرِ الْمُؤْمِنِينَ . وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَشْهُورَةٌ .

وَأَمَّا الأَحَادِيثُ فِي فَضْلِ الْجِهَادِ فَأَكْثَرُ مِنْ أَنْ تُحْصَرَ . فَمِنْ ذَلِكَ :

அல்லாஹ் கூறுகிறான்: "....இணை வைப்போர் உங்களிடம் முழுமையாகப் போரிடுவது போல, முழுமையாக நீங்களும் போரிடுங்கள். மேலும் நிச்சயமாக அல்லாஹ், இறையச்சமுடையோருடன் உள்ளான்" என்பதை அறிந்து கொள்ளுங்கள். (9:36)

உங்களுக்கு வெறுப்பாக இருப்பினும், போர்புரிதல் உங்கள் மீது கடமை யாக்கப்பட்டுள்ளது. ஒன்றை நீங்கள் வெறுப்பது, அதுவே உங்களுக்குச் சிறப்பாக இருக்கக்கூடும். மேலும், நீங்கள் ஒன்றை விரும்புவது, அதுவே உங்களுக்குத் தீமையாகவும் இருக்கக்கூடும். மேலும் அல்லாஹ்வே அறிந்தவன். நீங்கள் அறிந்தவர்களில்லை. (2:216)

"(ஆயுதம்) இல்லாதவர்களாயினும் சரி, (ஆயுதம்) சுமந்தவர்களாயினும் சரி (போருக்கு) விரையுங்கள். உங்களின் சொத்துக்கள், உங்களின் உயிர்கள் மூலம் அல்லாஹ்வின் வழியில் போரிடுங்கள்...." (9:41)

நிச்சயமாக அல்லாஹ், இறைநம்பிக்கையாளர்களிடம் அவர்களின் உயிர்களையும், அவர்களின் சொத்துக்களையும் "அவர்களுக்கு நிச்சயம் சொர்க்கம் உண்டு" என்ற பெயரில் விலைக்கு வாங்கிக் கொண்டான். அல்லாஹ்வின் வழியில் அவர்கள் போரிடுவார்கள். அப்போது (பிறரை) கொல்வார்கள். (பிறரால்) கொல்லப்படுவார்கள். தவ்ராத், இன்ஜீல் மற்றும் குர்ஆனிலும் உள்ள கட்டாய வாக்குறுதியாக அவன் மீது இது உள்ளது. தன் வாக்குறுதியை நிறைவேற்றுபவர் அல்லாஹ்வைவிட யார் உள்ளார்? நீங்கள் எதன்மூலம் வியாபார ஒப்பந்தம் செய்தீர்களோ! அந்த வியாபாரம் மூலமே (சொர்க்கத்தை) நீங்கள் சுபச் செய்தியாக (லாபமாக)ப் பெறுங்கள். இதுதான் மகத்தான வெற்றியாகும். (9:111)

எந்தச் சங்கடமும் இன்றி இறை நம்பிக்கையாளர்களில் (போரிடாமல்) தங்கிவிட்டவர்களும், தங்களின் சொத்துக்களாலும், தங்களின் உயிர்களாலும் இறைவழியில் போரிடுபவர்களும் சமமாக மாட்டார்கள். தங்களின் சொத்துக்களின் மூலம் மற்றும் தங்களின் உயிர்கள் மூலமும் இறை வழியில் போரிடுவோரை, போரிடாமல் இருப்போரைவிட தகுதியால் அல்லாஹ் சிறப்பாக்கி உள்ளான். மேலும், அனைவருக்கும் அழகிய வாக்குறுதியை அல்லாஹ் அளித்துள்ளான். மேலும், அல்லாஹ் போரிடுவோரை போரிடாமல் இருப்போரை விட மகத்தான கூலியால் பல தகுதிகளால் மன்னிப்பு மற்றும் கருணையால் சிறப்பாக்கி உள்ளான். மேலும் அல்லாஹ் மன்னிப்பவனாக, கருணையாளனாக உள்ளான். (4:95,96)

இறைவிசுவாசிகளே! நோவினையான வேதனையை விட்டும் உங்களை காப்பாற்றும் வியாபாரத்தை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நீங்கள் நம்பிக்கை கொள்வதும், அல்லாஹ்வின் வழியில் உங்களின் சொத்துக்களையும், உயிரையும் நீங்கள் தியாகம் செய்வதும் ஆகும். நீங்கள் அறிந்து கொண்டால் இதுவே உங்களுக்கு சிறந்ததாகும். உங்களுக்காக உங்களின் குற்றத்தை அவன் மன்னிப்பான். மேலும், சொர்க்கத்தில் உங்களை நுழையச் செய்வான். அதன்கீழே ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். "அத்ன்" எனும் சொர்க்கத்தின் தூய்மையான குடியிருப்புகளில் நுழையச் செய்வான். இதுதான் மகத்தான பெரும் வெற்றி யாகும். மற்றொன்றும் உண்டு. அதை நீங்கள் விரும்புவீர்கள். அல்லாஹ்விடமிருந்து உதவியும், சமீபமான வெற்றியும் உண்டு. இறை நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறுவீராக!

(61:10-13)

இதே பாடத்தின் கீழ் சிறப்பான வசனங்கள் அதிகம் உண்டு. மேலும் இதில் ஏராளமான ஹதீஸ்கள் உண்டு. அவற்றில் சில :

١٢٨٥ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سُئِلَ رَسُولُ اللَّهِ ﷺ : أَيُّ الْعَمَلِ أَفْضَلُ ؟ قَالَ : " إِيمَانٌ بِاللَّهِ وَرَسُولِهِ " . قِيلَ : ثُمَّ مَاذَا ؟ قَالَ : " الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ " . قِيلَ : ثُمَّ مَاذَا ؟ قَالَ : " حَجٌّ مَبْرُورٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1285** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"செயல்களில் எது மிகச் சிறந்தது?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நம்புவது" என்று பதில் கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்கப்பட்டது. "அல்லாஹ்வின் வழியில் போர் செய்வது" என்று பதில் கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்கப்பட்டது. "ஒப்புக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜாகும்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(புகாரி:1519. முஸ்லிம்:83)**

١٢٨٦ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللَّهِ أَيُّ الْعَمَلِ أَحَبُّ إِلَى اللَّهِ تَعَالَى ؟ قَالَ : " الصَّلاَةُ عَلَى وَقْتِهَا " . قُلْت ثُمَّ أَيٌّ ؟ قَالَ : " بِرُّ الْوَالِدَيْنِ " . قُلْت : ثُمَّ أَيٌّ ؟ قَالَ : " الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ

**1286** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! செயகளில் அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமானது எது?" என்று நான் கேட்டேன். "உரிய நேரத்தில் தொழுவது" என்று பதில் கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்டேன். "பெற்றோர் நலம் பேணல்" என்று கூறினார்கள். "பின்பு எது?" என்று கேட்டேன். "அல்லாஹ்வின் வழியில் போரிடுவது" என்று பதில் கூறினார்கள். **(புகாரி:527. முஸ்லிம்:85)**

١٢٨٧ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللَّهِ أَيُّ الْعَمَلِ أَفْضَلُ ؟ قَالَ : " الأِيمَانُ بِاللَّهِ وَالْجِهَادُ فِي سَبِيلِهِ". مُتَّفَقٌ عَلَيْهِ .

**1287** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! மிகச்சிறந்த செயல் எது?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். "அல்லாஹ்வை நம்புவது. அவன் வழியில் போரிடுவது" என்று பதில் கூறினார்கள்.

**(புகாரி:2518. முஸ்லிம்:84)**

١٢٨٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لَغَدْوَةٌ فِي سَبِيلِ اللَّهِ أَو رَوْحَةٌ خَيْرٌ مِنْ الدُّنْيَا وَمَا فِيهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1288** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் வழியில் காலையிலோ அல்லது மாலையிலோ கலந்து கொள்வது, இவ்வுலகம் மற்றும் அதில் உள்ளவற்றை விடச் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2792. முஸ்லிம்:1880)**

١٢٨٩ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَى رَجُلٌ رَسُولَ اللَّهِ ﷺ فَقَالَ : أَيُّ النَّاسِ أَفْضَلُ ؟ قَالَ " مُؤْمِنٌ يُجَاهِدُ بِنَفْسِهِ وَمَالِهِ فِي سَبِيلِ اللَّهِ " . قَالَ : ثُمَّ مَنْ ؟ قَالَ : " مُؤْمِنٌ فِي شِعْبٍ مِنْ الشِّعَابِ يَعْبُدُ اللَّهَ وَيَدَعُ النَّاسَ مِنْ شَرِّهِ " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1289** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்தார். "மிகச்சிறந்த மனிதர் யார்?" என்று அவர்களிடம் கேட்டார். "தன் உயிரையும், தன் சொத்தையும் அல்லாஹ்வின் வழியில் தியாகம் செய்த இறை

நம்பிக்கையாளர்" என்று பதில் கூறினார்கள். "பின்பு யார்?" என்று கேட்டார். "மலைக் கணவாய்களில் ஒன்றில் (தனியே) அல்லாஹ்வை வணங்கிக் கொண்டு, மனிதர்களுக்கு தீமை செய்வதை விட்டும் ஒதுங்கி உள்ள இறைநம்பிக்கையாளர்" என்று பதில் கூறினார்கள். **(புகாரி:2786. முஸ்லிம்:1888)**

١٢٩٠ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " رِبَاطُ يَوْمٍ فِي سَبِيلِ اللَّهِ خَيْرٌ مِنَ الدُّنْيَا وَمَا عَلَيْهَا وَمَوْضِعُ سَوْطِ أَحَدِكُمْ مِنَ الْجَنَّةِ خَيْرٌ مِنَ الدُّنْيَا وَمَا عَلَيْهَا وَالرَّوْحَةُ يَرُوحُهَا الْعَبْدُ فِي سَبِيلِ اللَّهِ تَعَالَى أَوِ الْغَدْوَةُ خَيْرٌ مِنَ الدُّنْيَا وَمَا عَلَيْهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1290** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் வழியில் ஒரு நாள் தங்கி (போரி)டுவது, இவ்வுலகம் மற்றும் அவற்றில் உள்ளவற்றை விடச் சிறந்ததாகும். சொர்க்கத்தில் உங்களில் ஒருவரின் சாட்டையை வைக்குமிடம்; இவ்வுலகம் மற்றும் இவற்றில் உள்ளவற்றை விடச் சிறந்ததாகும். அல்லாஹ்வின் வழியில் ஒருவன் மாலையில் செல்வது அல்லது காலையில் செல்வது, இவ்வுலகம் மற்றும் இவற்றில் உள்ளதை விடவும் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2892. முஸ்லிம்:1881)**

١٢٩١ – وَعَنْ سَلْمَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " رِبَاطُ يَوْمٍ وَلَيْلَةٍ خَيْرٌ مِنْ صِيَامِ شَهْرٍ وَقِيَامِهِ . وَإِنْ مَاتَ فِيهِ جَرَى عَلَيْهِ عَمَلُهُ الَّذِي كَانَ يَعْمَلُ وَأُجْرِيَ عَلَيْهِ رِزْقُهُ وَأَمِنَ الْفَتَّانَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1291** ஸல்மான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் இரவு ஒரு பகல் இறைவழியில் செல்வது, ஒரு மாதம் நோன்பு வைப்பது மற்றும் அதில் வணங்குவதை விடச் சிறந்ததாகும். அவர் (அதில்) இறந்து விட்டால், அவர் செய்து கொண்டிருந்த அவரது செயலின் நன்மை அவருக்கு கிடைத்துக் கொண்டிருக்கும். அவருக்கு அவரின் உணவு கொடுக்கப்படும். கப்ரில் குழப்பம் ஏற்படுத்துவோரிடமிருந்து (முன்கர் நகீர் மலக்குகளின் குழப்பத்தை விட்டுப்) பாதுகாப்புப் பெறுவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1913)**

١٢٩٢ – وَعَنْ فَضَالَةَ بْنِ عُبَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " كُلُّ مَيِّتٍ يُخْتَمُ عَلَى عَمَلِهِ إِلاَّ الْمُرَابِطُ فِي سَبِيلِ اللَّهِ فَإِنَّهُ يُنَمَّى لَهُ عَمَلُهُ إِلَى يَوْمِ الْقِيَامَةِ وَيُؤَمَّنُ فِتْنَةَ الْقَبْرِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1292** ஃபழாலா இப்னு உபைது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைவழியில் போரிட்டவரைத் தவிர, மற்ற இறந்துவிட்ட அனைவரின் செயலும் முத்திரையிடப்படும். மறுமை நாள் வரை அவரின் (இறைவழியில் போரிட்டவர்) செயல் அவரிடம் சேர்ப்பிக்கப்படும். மேலும் கப்ரின் குழப்பத்தை விட்டும் பாதுகாக்கப்படுவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2500. திர்மிதீ:1621. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٩٣ – وَعَنْ عُثْمَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " رِبَاطُ يَوْمٍ فِي سَبِيلِ اللَّهِ خَيْرٌ مِنْ أَلْفِ يَوْمٍ فِيمَا سِوَاهُ مِنَ الْمَنَازِلِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1293** உஸ்மான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் வழியில் ஒரு நாள் தங்கியிருந்து போரிடுவது, மற்ற இடங்களில் ஆயிரம் நாட்கள் தங்கியிருப்பதை விடச் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1667. இது "ஹஸன் ஸஹீஹ்" என்று திர்மிதீ இமாம் கூறினார்கள்)**

١٢٩٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " تَضَمَّنَ اللَّهُ لِمَنْ خَرَجَ فِي سَبِيلِهِ لاَ يُخْرِجُهُ إِلاَّ جِهَادٌ فِي سَبِيلِي وَإِيمَانٌ بِي وَتَصْدِيقٌ بِرُسُلِي فَهُوَ ضَامِنٌ أَنْ أُدْخِلَهُ الْجَنَّةَ أَوْ أُرْجِعَهُ إِلَى مَنْزِلِهِ الَّذِي خَرَجَ مِنْهُ بِمَا نَالَ مِنْ أَجْرٍ أَوْ غَنِيمَةٍ . وَالَّذِي نَفْسُ مُحَمَّدٍ بِيَدِهِ مَا مِنْ كَلْمٍ يُكْلَمُ فِي سَبِيلِ اللَّهِ إِلاَّ جَاءَ يَوْمَ الْقِيَامَةِ كَهَيْئَتِهِ يَوْمَ كُلِمَ : لَوْنُهُ لَوْنُ دَمٍ وَرِيحُهُ رِيحُ مِسْكٍ . وَالَّذِي نَفْسُ مُحَمَّدٍ بِيَدِهِ لَوْلاَ أَنْ يَشُقَّ عَلَى الْمُسْلِمِينَ مَا قَعَدْتُ خِلاَفَ سَرِيَّةٍ تَغْزُو فِي سَبِيلِ اللَّهِ أَبَدًا وَلَكِنْ لاَ أَجِدُ سَعَةً فَأَحْمِلَهُمْ وَلاَ يَجِدُونَ سَعَةً وَيَشُقُّ عَلَيْهِمْ أَنْ يَتَخَلَّفُوا عَنِّي . وَالَّذِي نَفْسُ مُحَمَّدٍ بِيَدِهِ لَوَدِدْتُ أَنْ أَغْزُوَ فِي سَبِيلِ اللَّهِ فَأُقْتَلَ ثُمَّ أَغْزُوَ فَأُقْتَلَ ثُمَّ أَغْزُوَ فَأُقْتَلَ " . رَوَاهُ مُسْلِمٌ . وَرَوَى الْبُخَارِيُّ بَعْضَهُ . " الْكَلْمُ " : الْجُرْحُ

**1294** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வின் வழியில் (போரிடப்) புறப்பட்டவனுக்கு அல்லாஹ் பொறுப்பேற்கிறான்.

“என் வழியில் தியாகம் செய்வதும், என் மீது நம்பிக்கை கொண்டிருப்பதும், என் தூதர்களை உண்மைபடுத்தியிருப்பதுமே தவிர, அவரை புறப்படச் செய்யவில்லை. எனவே நான் அவரை சொர்க்கத்தில் நுழையச் செய்யவோ அல்லது போரில் கிட்டிய பொருட்களுடன் அவரை அவருடைய இடத்திற்கே (வீட்டிற்கே) திருப்பி அனுப்புவது என் மீதுள்ள கடமையாகும்” என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். பின்பு, “முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் வழியில் ஏற்பட்ட காயம், மறுமை நாளின் போதும் காயம் பட்ட நாளில் இருந்த தோற்றத்திலேயே இருக்கும். அதன் நிறம், ரத்தத்தின் நிறமாக இருக்கும். அதன் வாடையோ, கஸ்தூரியின் வாடை போலவே இருக்கும். முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! முஸ்லிம்களுக்கு சிரமமாக இருக்கும் என நான் அஞ்சவில்லை யென்றால், அல்லாஹ்வின் வழியில் போரிடச் செல்லும் அணியில் சேராமல் எப்போதும் இருக்க மாட்டேன். எனினும் அவர்களை அனுப்பி வைக்கும் வசதியை நான் அடையவில்லை. அவர்களும் வசதி பெறவில்லை. என்னை விடுத்து அவர்கள் வராமல் இருப்பது, அவர்களுக்கு துயரத்தை ஏற்படுத்தும். முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் வழியில் நான் போரிட்டுக் கொல்லப்படவும், மீண்டும் போரிட்டுக் கொல்லப்படவும், மீண்டும் போரிட்டுக் கொல்லப்படவும்தான் விரும்புகிறேன்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1876. புகாரியிலும் (2803) சில வாசகம் உள்ளது)**

١٢٩٥ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ مَكْلُومٍ يُكْلَمُ فِي سَبِيلِ اللَّهِ إِلاَّ جَاءَ يَوْمَ الْقِيَامَةِ وَكَلْمُهُ يَدْمِي : اللَّوْنُ لَوْنُ الدَّمِ وَالرِّيحُ رِيحُ مِسْكٍ " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1295** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வின் வழியில் காயம்பட்டவர் மறுமை நாளில் அவரது காயத்திலிருந்து இரத்தம் வடிந்ததாக வருவார். அதன் நிறம், இரத்தத்தின் நிறமாகும். அதன் வாடை, கஸ்தூரியின் வாடையாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5533. முஸ்லிம்:1876)**

١٢٩٦ – وَعَنْ مُعَاذٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ قَاتَلَ فِي سَبِيلِ اللَّهِ مِنْ رَجُلٍ مُسْلِمٍ فُوَاقَ نَاقَةٍ وَجَبَتْ لَهُ الْجَنَّةُ وَمَنْ جُرِحَ جُرْحًا فِي سَبِيلِ اللَّهِ أَوْ نُكِبَ نَكْبَةً فَإِنَّهَا تَجِيءُ يَوْمَ الْقِيَامَةِ كَأَغْزَرِ مَا كَانَتْ , لَوْنُهَا الزَّعْفَرَانُ وَرِيحُهَا كَالْمِسْكِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ

**1296** முஆத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருமுறை ஒட்டகத்தில் பால் கறந்து பின்னர் மறுமுறை பால் கறக்கும் நேர அளவுக்கு ஒரு முஸ்லிம் அல்லாஹ்வின் வழியில் போரிட்டால், அவருக்கு சொர்க்கம் கிடைக்கும். அல்லாஹ்வின் வழியில் ஒருவனுக்கு காயம் ஏற்பட்டால் அல்லது ஏதேனும் சிறுகாயம் ஏற்பட்டால், அத்தழும்பு, போரின்போது இருந்தது போலவே, மறுமையிலும் இருக்கும். அதன் நிறம், குங்குமப்பூ போல இருக்கும். அதன் வாடை, கஸ்தூரியை போல இருக்கும் என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:2541. திர்மிதீ:1656. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٩٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : مَرَّ رَجُلٌ مِنْ أَصْحَابِ رَسُولِ اللَّهِ ﷺ بِشِعْبٍ فِيهِ عُيَيْنَةٌ مِنْ مَاءٍ عَذْبَةٌ فَأَعْجَبَتْهُ فَقَالَ : لَوِ اعْتَزَلْتُ النَّاسَ فَأَقَمْتُ فِي هَذَا الشِّعْبِ وَلَنْ أَفْعَلَ حَتَّى أَسْتَأْذِنَ رَسُولَ اللَّهِ ﷺ فَذَكَرَ ذَلِكَ لِرَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : " لاَ تَفْعَلْ فَإِنَّ مُقَامَ أَحَدِكُمْ فِي سَبِيلِ اللَّهِ أَفْضَلُ مِنْ صَلاَتِهِ فِي بَيْتِهِ سَبْعِينَ عَامًا أَلاَ تُحِبُّونَ أَنْ يَغْفِرَ اللَّهُ لَكُمْ وَيُدْخِلَكُمُ الْجَنَّةَ ؟ اُغْزُوا فِي سَبِيلِ اللَّهِ . مَنْ قَاتَلَ فِي سَبِيلِ اللَّهِ فُوَاقَ نَاقَةٍ وَجَبَتْ لَهُ الْجَنَّةُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " وَالْفُوَاقُ " : مَا بَيْنَ الْحَلْبَتَيْنِ .

**1297** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபித்தோழர்களில் ஒருவர் கணவாய் பகுதிக்குச் சென்றார். அங்கு சுவையான தண்ணீர் உள்ள குளம் இருந்தது. அது அவருக்கு மகிழ்ச்சியாக இருந்தது. "மக்களை விட்டும் நான் விலகிவந்து, இந்த கணவாயில் குடியேறுவேன். இதனை நபி (ஸல்) அவர்களிடம் நான் அனுமதி கேட்காமல் செய்ய மாட்டேன்" என்று கூறிக் கொண்டார். பின்பு நபி (ஸல்) அவர்களிடம் இது பற்றிக் கூறினார். "அவ்வாறு நீர் செய்யாதீர்! அல்லாஹ்வின் வழியில் உங்களில் ஒருவர் செல்வது, அவர் தன் வீட்டில் எழுபது வருடம் தொழுவதை விட மிகச் சிறந்ததாகும். உங்களை அல்லாஹ் மன்னிக்கவும், உங்களை அவன் சொர்க்கத்தில் நுழையச் செய்யவும் விரும்புகிறீர்களா? (அப்படியெனில்) அல்லாஹ்வின் வழியில் போர் புரியுங்கள். அல்லாஹ்வின் வழியில், ஒட்டகையில் ஒருமுறை பால் கறந்து மறுமுறை பால் கறக்கும் நேர அளவுக்கு ஒருவர் போரிட்டால், அவருக்குச் சொர்க்கம் கிடைக்கும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(திர்மிதீ:1651. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٢٩٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قِيلَ : يَا رَسُولَ اللَّهِ مَا يَعْدِلُ الْجِهَادَ فِي سَبِيلِ اللَّهِ ؟ قَالَ : " لاَ تَسْتَطِيعُونَهُ " . فَأَعَادُوا عَلَيْهِ مَرَّتَيْنِ أَوْ ثَلاَثًا كُلُّ ذَلِكَ يَقُولُ : " لاَ تَسْتَطِيعُونَهُ " ! ثُمَّ قَالَ : " مَثَلُ الْمُجَاهِدِ فِي سَبِيلِ اللَّهِ كَمَثَلِ الصَّائِمِ الْقَائِمِ الْقَانِتِ بِآيَاتِ اللَّهِ لاَ يَفْتُرُ مِنْ صَلاَةٍ وَلاَ صِيَامٍ حَتَّى يَرْجِعَ الْمُجَاهِدُ فِي سَبِيلِ اللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ مُسْلِمٍ . وَفِي رِوَايَةِ الْبُخَارِيِّ : أَنَّ رَجُلاً قَالَ : يَا رَسُولَ اللَّهِ دُلَّنِي عَلَى عَمَلٍ يَعْدِلُ الْجِهَادَ ؟ قَالَ : " لاَ أَجِدُهُ " . ثُمَّ قَالَ : " هَلْ تَسْتَطِيعُ إِذَا خَرَجَ الْمُجَاهِدُ أَنْ تَدْخُلَ مَسْجِدَكَ فَتَقُومَ وَلاَ تَفْتُرَ وَتَصُومَ وَلاَ تُفْطِرَ ؟ " فَقَالَ : مَنْ يَسْتَطِيعُ ذَلِكَ ؟ .

**1298** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் வழியில் போரிடுவதற்கு ஈடான ஒரு செயல் எது?" என்று கேட்கப்பட்டதற்கு, "அதற்கு நீங்கள் இயலமாட்டீர்கள்" என்று பதில் கூறினார்கள். இது பற்றி இரண்டு அல்லது மூன்று முறை நபித்தோழர்கள் கேட்டனர். ஒவ்வொரு முறையும் "அதற்கு நீங்கள் இயல மாட்டீர்கள்" என்றே கூறினார்கள். பின்பு, "அல்லாஹ்வின் வழியில் போரிடுபவருக்கு உதாரணம், இடைவிடாது நோன்பு வைத்து, இடைவிடாது தொழுது, குர்ஆனை ஓதியவர் போலாவார். (இது) அல்லாஹ்வின் வழியிலிருந்து போரிட்டவர் திரும்பும் வரையில் தொடரும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1878)**

“இறைத்தூதர் அவர்களே! ஜிஹாத் செய்வதற்கு இணையான ஒரு செயலை எனக்குக் கூறுங்கள்” என்று ஒருவர் கேட்டார். “அப்படி ஒரு செயலை நான் அறிந்ததில்லை” என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், “ஒரு போராளி புறப்பட்டதிலிருந்து, நீர் உம் பள்ளி வாசலுக்குள் போய் இடைவிடாது தொழுது, நோன்பு விடாமல் வைக்க உமக்கு இயலுமா?” என்று கேட்டார்கள். “இது யாரால் இயலும்? என்று அவர் கூறினார். **(புகாரி:2785)**

١٢٩٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مِنْ خَيْرِ مَعَاشِ النَّاسِ لَهُمْ رَجُلٌ مُمْسِكٌ بِعِنَانِ فَرَسِهِ فِي سَبِيلِ اللَّهِ يَطِيرُ عَلَى مَتْنِهِ كُلَّمَا سَمِعَ هَيْعَةً – أَوْ فَزْعَةً – طَارَ عَلَى مَتْنِهِ يَبْتَغِي الْقَتْلَ أَوِ الْمَوْتَ مَظَانَّهُ ; أَوْ رَجُلٌ فِي غُنَيْمَةٍ أَوْ شَعَفَةٍ مِنْ هَذِهِ الشَّعَفِ أَوْ بَطْنِ وَادٍ مِنْ هَذِهِ الأَوْدِيَةِ يُقِيمُ الصَّلاَةَ وَيُؤْتِي الزَّكَاةَ وَيَعْبُدُ رَبَّهُ حَتَّى يَأْتِيَهُ الْيَقِينُ لَيْسَ مِنَ النَّاسِ إِلاَّ فِي خَيْرٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1299** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மனிதர்களில் சிறந்த வாழ்க்கையுடையவர்களில் ஒருவராக, அல்லாஹ்வின் வழியில் போராடத் தன் குதிரையின் முதுகில் ஏறி, அதன் கடிவாளத்தை பிடித்தவராக தயார் நிலையில் இருப்பார். எதிரியின் சப்தத்தை-திடுக்கத்தைக் கேட்கும் போது, போரிடவும், வீரமரணம் அடையவும் விரும்பி அதன்மீது பறந்து செல்வார்.

அல்லது சிறந்த வாழ்க்கையில் மற்றொருவரும் இருப்பார். அவர் இம்மலை உச்சிகளில் ஒன்றில் அல்லது இந்த ஓடைகளில் ஒரு ஓடைக்கோ தன் ஆடுகளை ஓட்டிச் சென்று, அங்கு தொழுது, ஜகாத்தும் கொடுத்து, தனக்கு மரணம் வரும் வரை தன் இறைவனை வணங்குவர். இவர்கள் மக்களில் நல்லதிலேயே உள்ளனர். (இருவரின் நிலைகளே மனிதர்களின் வாழ்க்கை நிலையில் மிகச் சிறந்ததாகும்)” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1889)**

١٣٠٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ فِي الْجَنَّةِ مِائَةَ دَرَجَةٍ أَعَدَّهَا اللَّهُ لِلْمُجَاهِدِينَ فِي سَبِيلِ اللَّهِ مَا بَيْنَ الدَّرَجَتَيْنِ كَمَا بَيْنَ السَّمَاءِ وَالأَرْضِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1300** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வின் வழியில் போரிடுபவர்களுக்கு அல்லாஹ் நூறு பதவிகளை சொர்க்கத்தில் தயார் செய்து வைத்துள்ளான். அவற்றில் இரண்டு பதவிகளுக்குமிடையே உள்ள தூரம் வானத்திற்கும், பூமிக்குமிடையே உள்ள தூரம் போன்றதாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2790)**

١٣٠١ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ رَضِيَ بِاللَّهِ رَبًّا وَبِالأِسْلاَمِ دِينًا وَبِمُحَمَّدٍ رَسُولاً وَجَبَتْ لَهُ الْجَنَّةُ " . فَعَجِبَ لَهَا أَبُو سَعِيدٍ فَقَالَ : أَعِدْهَا عَلَيَّ يَا رَسُولَ اللَّهِ فَأَعَادَهَا عَلَيْهِ ثُمَّ قَالَ : " وَأُخْرَى يَرْفَعُ اللَّهُ بِهَا الْعَبْدَ مِائَةَ دَرَجَةٍ فِي الْجَنَّةِ مَا بَيْنَ كُلِّ دَرَجَتَيْنِ كَمَا بَيْنَ السَّمَاءِ وَالأَرْضِ " . قَالَ : وَمَا هِيَ يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1301** அபூஸயீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வை தம் இறைவனாகவும், இஸ்லாமை தம் மார்க்கமாகவும், முஹம்மதை தம் இறைத்தூதராகவும் ஒருவர் ஏற்று (திருப்தி) கொண்டால், அவருக்குச் சொர்க்கம் கிடைக்கும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

(இதை அறிவிக்கும்) அபூஸயீத் (ரழி) அவர்கள் மகிழ்ச்சி அடைந்து, "இறைத்தூதர் அவர்களே! மீண்டும் என்னிடம் அதை கூறுங்கள்" என்று கேட்டார். அவரிடம் நபி (ஸல்) அவர்கள் அதை மீண்டும் கூறிவிட்டு, "மற்றொரு செயல் உண்டு. அதற்காக அல்லாஹ் தன் அடியாருக்கு சொர்க்கத்தில் நூறு பதவிகளை வழங்குவான். அதன் இரண்டு பதவிகளுக்கிடையே உள்ள தூரம், வானத்திற்கும் பூமிக்குமிடையே உள்ள தூரம் போலாகும்" என்றும் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அச்செயல் எது?" என்று கேட்டார். "அல்லாஹ்வின் வழியில் போரிடுவது, அல்லாஹ்வின் வழியில் போரிடுவது" என்று (இருமுறை) நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1884)**

١٣٠٢ – وَعَنْ أَبِي بَكْرِ بْنِ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ قَالَ : سَمِعْتُ أَبِي رَضِيَ اللَّهُ عَنْهُ وَهُوَ بِحَضْرَةِ الْعَدُوِّ يَقُولُ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ أَبْوَابَ الْجَنَّةِ تَحْتَ ظِلاَلِ السُّيُوفِ " . فَقَامَ رَجُلٌ رَثُّ الْهَيْئَةِ فَقَالَ : يَا أَبَا مُوسَى أَأَنْتَ سَمِعْتَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ هَذَا ؟ قَالَ : نَعَمْ . فَرَجَعَ إِلَى أَصْحَابِهِ فَقَالَ : أَقْرَأُ عَلَيْكُمُ السَّلاَمَ ثُمَّ كَسَرَ جَفْنَ سَيْفِهِ فَأَلْقَاهُ ثُمَّ مَشَى بِسَيْفِهِ إِلَى الْعَدُوِّ فَضَرَبَ بِهِ حَتَّى قُتِلَ . رَوَاهُ مُسْلِمٌ .

**1302** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அவர்களின் மகன் அபூபக்கர், தன் தந்தை போர்க்களத்தில் இருந்த போது கூறியதாக கூறுகின்றார்கள்:

"சொர்க்கத்தின் வாசல்கள், வாள்களின் நிழலுக்குக் கீழே உள்ளது" என்று நபி (ஸல்) கூறியதாக என் தந்தை கூறினார்கள். அப்போது எளிய தோற்றமுள்ள ஒரு மனிதர் எழுந்து, "அபூமூஸா அவர்களே! இதை நபி (ஸல்) அவர்கள் கூறும் போது நீர் கேட்டீரா?" என்று கேட்டார். "ஆம்" என்று என் தந்தை கூறினார்கள். பின்பு அவர் தோழர்களிடம் திரும்பிப் போய், "நான் உங்களுக்கு ஸலாம் கூறுகிறேன்" என்று கூறினார். பின்பு தன் வாளின் உறையைத் தூர எறிந்துவிட்டு தன் வாளுடன் எதிரிகளின் அணியின் பக்கம் சென்று, தான் கொல்லப்படும் வரை போரிட்டார். **(முஸ்லிம்:1902)**

١٣٠٣ – وَعَنْ أَبِي عَبْسٍ عَبْدِ الرَّحْمَنِ بْنِ جَبْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا اغْبَرَّتْ قَدَمَا عَبْدٍ فِي سَبِيلِ اللَّهِ فَتَمَسَّهُ النَّارُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1303** அபூஅபஸ் அப்துர் ரஹ்மான் இப்னு ஜப்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைவழியில் புழுதிபட்ட ஓர் அடியானின் இரு பாதங்களையும் நரக நெருப்பு தீண்டாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2811)**

١٣٠٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَلِجُ النَّارَ رَجُلٌ بَكَى مِنْ خَشْيَةِ اللَّهِ حَتَّى يَعُودَ اللَّبَنُ فِي الضَّرْعِ وَلاَ يَجْتَمِعُ عَلَى عَبْدٍ غُبَارٌ فِي سَبِيلِ اللَّهِ وَدُخَانُ جَهَنَّمَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1304** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கறந்த பால் மீண்டும் மடுவில் புகும் வரை அல்லாஹ்வின் பயத்தால் அழும் ஒருவர் நரகில் விழமாட்டார். (கறந்த பால் மடுவில் நுழைய முடியாதது போல, அவர் ஒருபொழுதும் நரகில் நுழையமாட்டார்.) அல்லாஹ்வின் வழியில் ஏற்பட்ட புழுதியும், நரக நெருப்பின் புகையும் ஓர் அடியானிடம் ஒன்று சேராது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1633. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٠٥ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " عَيْنَانِ لاَ تَمَسُّهُمَا النَّارُ : عَيْنٌ بَكَتْ مِنْ خَشْيَةِ اللَّهِ وَعَيْنٌ بَاتَتْ تَحْرُسُ فِي سَبِيلِ اللَّهِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1305** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு கண்களை நரகம் தீண்டாது. அவை (1) அல்லாஹ்வை பயந்து அழுத கண்கள். (2) அல்லாஹ்வின் வழியில் இரவெல்லாம் விழித்திருந்து பாதுகாத்த கண்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:1639. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٣٠٦ – وَعَنْ زَيْدِ بْنِ خَالِدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ جَهَّزَ غَازِيًا فِي سَبِيلِ اللَّهِ فَقَدْ غَزَا وَمَنْ خَلَّفَ غَازِيًا فِي أَهْلِهِ بِخَيْرٍ فَقَدْ غَزَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1306** ஜைத் இப்னு காலித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் வழியில் போர் புரிபவருக்குப் போர் தளவாடங்களை ஒருவர் வழங்கினால், அவரும் போர் செய்தவர் போலாவார். அல்லாஹ்வின் வழியில் போரிடும் குடும்பத்தாருக்கு நல்லவற்றில் ஒருவர் பொறுப்பேற்றால், அவரும் போர் செய்தவர் போலாவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2843. முஸ்லிம்:1895)**

١٣٠٧ – وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَفْضَلُ الصَّدَقَاتِ : ظِلُّ فُسْطَاطٍ فِي سَبِيلِ اللَّهِ وَمَنِيحَةُ خَادِمٍ فِي سَبِيلِ اللَّهِ أَوْ طَرُوقَةُ فَحْلٍ فِي سَبِيلِ اللَّهِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1307** அபூஉமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தர்மத்தில் மிகச் சிறந்தது, அல்லாஹ்வின் வழியில் (உள்ளவருக்கு) நிழல் தரும் கூடாரம் வழங்குவதாகும். மேலும் அல்லாஹ்வின் வழியில் உள்ளவருக்கு ஒரு ஊழியரையோ அல்லது அல்லாஹ்வின் வழியில் பெண் ஒட்டகை ஒன்றையோ வழங்குவதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:1627. இது "ஹஸன் ஸஹீஹ்" எனதிர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٠٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ فَتًى مِنْ أَسْلَمَ قَالَ : يَا رَسُولَ اللَّهِ إِنِّي أُرِيدُ الْغَزْوَ وَلَيْسَ مَعِي مَا أَتَجَهَّزُ بِهِ . قَالَ : " ائْتِ فُلاَنًا فَإِنَّهُ قَدْ تَجَهَّزَ فَمَرِضَ " . فَأَتَاهُ فَقَالَ : " إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ يُقْرِئُكَ السَّلاَمَ وَيَقُولُ : أَعْطِنِي الَّذِي تَجَهَّزْتَ بِهِ . قَالَ : يَا فُلاَنَةُ أَعْطِيهِ الَّذِي كُنْتُ تَجَهَّزْتُ بِهِ وَلاَ تَحْبِسِي مِنْهُ شَيْئًا فَوَاللَّهِ لاَ تَحْبِسِي مِنْهُ شَيْئًا فَيُبَارَكَ لَكِ فِيهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1308** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அஸ்லம்" கூட்டத்தைச் சேர்ந்த ஒரு வாலிபர் அல்லாஹ்வின் தூதரிடம், "இறைத்தூதர் அவர்களே! நான் போர் செய்ய விரும்புகிறேன். போருக்கான தளவாடங்கள் (ஆயுதங்கள்) என்னிடம் இல்லை" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இன்னாரிடம் செல்வீராக! அவரும் போருக்கு ஆயத்தமாகி இருந்தார். ஆனால் நோயாளியாகிவிட்டார்" என்று கூறினார்கள். அவரிடம் வந்த அவர், "நபி (ஸல்) அவர்கள் உமக்கு ஸலாம் கூறினார்கள்" என்று கூறிவிட்டு, "போருக்கு தயார் செய்து வைத்துள்ள ஆயுதங்களை எனக்கு நீர் கொடுப்பீராக" என்று கேட்டார். (உடனே தன் மனைவியை அழைத்து) "பெண்மணியே! நான் தயார் செய்து வைத்துள்ள ஆயுதங்களை அவருக்கு வழங்கும். அதில் எதையும் தடுத்து வைத்துக் கொள்ளாதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அதிலிருந்து எதையும் தடுத்து வைத்துக் கொள்ளாதே! அதில் உமக்கு "பரக்கத்" செய்யப்படும்" என்று கூறினார். **(முஸ்லிம்:1894)**

١٣٠٩ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ بَعَثَ إِلَى بَنِي لَحْيَانَ فَقَالَ : " لِيَنْبَعِثْ مِنْ كُلِّ رَجُلَيْنِ أَحَدُهُمَا وَالأَجْرُ بَيْنَهُمَا " رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ : " لِيَخْرُجْ مِنْ كُلِّ رَجُلَيْنِ رَجُلٌ " . ثُمَّ قَالَ لِلْقَاعِدِ : " أَيُّكُمْ خَلَفَ الْخَارِجَ فِي أَهْلِهِ وَمَالِهِ بِخَيْرٍ كَانَ لَهُ مِثْلُ نِصْفِ أَجْرِ الْخَارِجِ " .

**1309** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பனூ லஹ்யான் மக்களிடம் நபி (ஸல்) அவர்கள் (படை ஒன்றை) அனுப்பினார்கள். "(ஒவ்வொரு வீட்டில் இருந்தும்) இரண்டு பேரில் ஒருவர் மட்டும் அல்லாஹ்வின் பாதையில் (போருக்கு) புறப்படட்டும். அதன் நற்கூலி, இருவருக்கும் சமமாகவே கிடைக்கும்" என நபி(ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1896)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது.

"ஒவ்வொரு வீட்டிலிருந்தும், இரண்டு பேரில் ஒருவர் புறப்படட்டும்!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, போருக்குச் செல்லாமல் இருப்பவரிடம், "போருக்குச் சென்றவர் குடும்பத்திற்கும், அவரது சொத்துக்கும் நல்லதில் ஒருவர் பொறுப்பேற்றுக் கொண்டால், போருக்குச் சென்றவரின் நற்கூலியில் பாதி அவருக்கும் உண்டு" என்றும் கூறினார்கள்.

١٣١٠ – وَعَنْ الْبَرَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَى النَّبِيَّ ﷺ رَجُلٌ مُقَنَّعٌ بِالْحَدِيدِ فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ أُقَاتِلُ أَوْ أُسْلِمُ ؟ فَقَالَ : " أَسْلِمْ ثُمَّ قَاتِلْ " . فَأَسْلَمَ ثُمَّ قَاتَلَ فَقُتِلَ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " عَمِلَ قَلِيلاً وَأُجِرَ كَثِيرًا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ .

**1310** பராஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இரும்பு முகமூடி அணிந்த ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "இறைத்தூதர் அவர்களே! நான் முதலில் போர் புரியட்டுமா? அல்லது முதலில் இஸ்லாத்தைத் தழுவட்டுமா?" என்று கேட்டார். "(முதலில்) இஸ்லாத்தைத் தழுவுவீராக! பின் போருக்குச் செல்வீராக!" என்று கூறினார்கள். அவர் இஸ்லாத்தை ஏற்றார். பின்னர் எதிரிகளுடன் போரிட்டு, கொல்லப்பட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "குறைவாக நற்செயல் செய்தார். அதிகமாக நற்கூலி கொடுக்கப்பட்டுவிட்டார்" என்று கூறினார்கள். **(புகாரி:2808. முஸ்லிம். இது புகாரியின் வார்த்தையாகும்)**

١٣١١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَا أَحَدٌ يَدْخُلُ الْجَنَّةَ يُحِبُّ أَنْ يَرْجِعَ إِلَى الدُّنْيَا وَلَهُ مَا عَلَى الأَرْضِ مِنْ شَيْءٍ إِلاَّ الشَّهِيدُ يَتَمَنَّى أَنْ يَرْجِعَ إِلَى الدُّنْيَا فَيُقْتَلَ عَشْرَ مَرَّاتٍ لِمَا يَرَى مِنْ الْكَرَامَةِ " . وَفِي رِوَايَةٍ : " لِمَا يَرَى مِنْ فَضْلِ الشَّهَادَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1311** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கத்தில் நுழைந்த ஒருவருக்கு பூமி முழுதும் சொந்தமாக இருந்தாலும், அவர் உலகிற்குத் திரும்பிவர விரும்பமாட்டார். ஆனால் (போரில்) உயிரைத் தியாகம் செய்தவரைத் தவிர. இவரோ (சொர்க்கத்தில்) தனக்கு கிடைத்த தகுதியை பார்த்ததின் காரணமாக, உலகிற்கு மீண்டும் வந்து (அல்லாஹ்வின் பாதையில்) 10 முறை கொல்லப்படுவதை விரும்புவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2817. முஸ்லிம்:1877)**

١٣١٢ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " يَغْفِرُ اللَّهُ لِلشَّهِيدِ كُلَّ شَيْءٍ إِلاَّ الدَّيْنَ " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ : " الْقَتْلُ فِي سَبِيلِ اللَّهِ يُكَفِّرُ كُلَّ شَيْءٍ إِلاَّ الدَّيْنَ "

**1312** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறை வழியில் தம் உயிரை நீத்த தியாகிக்கு, கடனைத் தவிர மற்ற பாவங்கள் அனைத்தையும் அல்லாஹ் மன்னிப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1886)**

மற்றொரு அறிவிப்பில் கீழ்க்கண்டவாறு உள்ளது.

“அல்லாஹ்வின் வழியில் கொல்லப்படுவது, கடனைத்தவிர அனைத்துக் குற்றங்களையும் அழித்து விடச்செய்யும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

١٣١٣ – وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَامَ فِيهِمْ فَذَكَرَ : " أَنَّ الْجِهَادَ فِي سَبِيلِ اللَّهِ وَالأَيمَانَ بِاللَّهِ أَفْضَلُ الأَعْمَالِ " فَقَامَ رَجُلٌ فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ أَرَأَيْت إِنْ قُتِلْتُ فِي سَبِيلِ اللَّهِ أَتُكَفَّرُ عَنِّي خَطَايَايَ ؟ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ ﷺ : " نَعَمْ إِنْ قُتِلْتَ فِي سَبِيلِ اللَّهِ وَأَنْتَ صَابِرٌ مُحْتَسِبٌ مُقْبِلٌ غَيْرُ مُدْبِرٍ " . ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " كَيْفَ قُلْت ؟ " قَالَ : أَرَأَيْت إِنْ قُتِلْت فِي سَبِيلِ اللَّهِ أَتُكَفَّرُ عَنِّي خَطَايَايَ ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " نَعَمْ وَأَنْتَ صَابِرٌ مُحْتَسِبٌ مُقْبِلٌ غَيْرُ مُدْبِرٍ إِلاَّ الدَّيْنَ فَإِنَّ جِبْرِيلَ عَلَيْهِ السَّلاَمُ قَالَ لِي ذَلِكَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1313** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து, “அல்லாஹ்வின் வழியில் போர் புரிவதும், அல்லாஹ்வை நம்புவதும், செயல்களில் மிகவும் சிறந்ததாகும்” என கூறினார்கள். அப்போது ஒருவர் எழுந்து, “இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் வழியில் நான் கொல்லப்பட்டால் என்னை விட்டும் என் குற்றங்கள் மன்னிக்கப்படுமா? என்று கூறுங்கள்” என்று கேட்டார். “ஆம்! நீர் பொறுமையானவராகவும், நன்மையை நாடியவராகவும், முன்னோக்கி சென்று, (பயந்து) பின்னோக்கி செல்லாதவராகவும் இருக்கும் நிலையில் நீர் கொல்லப்பட்டால் (நீர் கூறுவது போல நடக்கும்)” என்று நபி (ஸல்) கூறினார்கள். பின்னர், “நீர் என்ன கேட்டீர்? (அதை மீண்டும் கூறுவீராக?)” என்று நபி (ஸல்) அவரைத் திருப்பிக் கேட்டார்கள். “அல்லாஹ்வின் வழியில் நான் கொல்லப்பட்டுவிட்டால் என் குற்றங்கள் என்னை விட்டும் மன்னிக்கப்படுமா? என்று கூறுங்கள்” என்று அவர் கூறினார். “ஆம்! நீர் பொறுமையாகவும், நன்மையை நாடியும், முன்னோக்கிச் சென்று, (பயந்து) பின்னோக்கிச் செல்லாதவராகவும் நீர் இருந்தால் உண்டு. ஆனால் உம் கடனைத் தவிர. இதை ஜிப்ரீல் (அலை) அவர்கள் இப்போதுதான் என்னிடம் கூறினார்கள்” என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1885)**

١٣١٤ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَجُلٌ : أَيْنَ أَنَا يَا رَسُولَ اللَّهِ إِنْ قُتِلْتُ ؟ قَالَ : " فِي الْجَنَّةِ " . فَأَلْقَى تَمَرَاتٍ كُنَّ فِي يَدِهِ ثُمَّ قَاتَلَ حَتَّى قُتِلَ . رَوَاهُ مُسْلِمٌ .

**1314** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர், “இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் பாதையில் நான் கொல்லப்பட்டால் எங்கே இருப்பேன்?” என்று கேட்டார். அதற்கு, “சொர்க்கத்தில்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அவர் தன் கையில் வைத்திருந்த பேரீத்தம் பழங்களைக் கீழே போட்டு, பின்பு போரில் கலந்து கொண்டார். இறுதியில் எதிரிகளால் கொல்லப்பட்டு, ஷஹீதானார். **(முஸ்லிம்:1899)**

١٣١٥ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : انْطَلَقَ رَسُولُ اللَّهِ ﷺ وَأَصْحَابُهُ حَتَّى سَبَقُوا الْمُشْرِكِينَ إِلَى بَدْرٍ وَجَاءَ الْمُشْرِكُونَ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَقْدَمَنَّ أَحَدٌ مِنْكُمْ إِلَى شَيْءٍ حَتَّى أَكُونَ أَنَا دُونَهُ " . فَدَنَا الْمُشْرِكُونَ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " قُومُوا إِلَى جَنَّةٍ عَرْضُهَا السَّمَوَاتُ وَالأَرْضُ " . قَالَ : يَقُولُ عُمَيْرُ بْنُ الْحُمَامِ الأَنْصَارِيُّ رَضِيَ اللَّهُ عَنْهُ : يَا رَسُولَ اللَّهِ جَنَّةٌ عَرْضُهَا السَّمَوَاتُ وَالأَرْضُ ؟ قَالَ : " نَعَمْ " . قَالَ : بَخٍ بَخٍ . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا يَحْمِلُكَ عَلَى قَوْلِكَ بَخٍ بَخٍ ؟ " . قَالَ : لاَ وَاللَّهِ يَا رَسُولَ اللَّهِ إِلاَّ رَجَاءَ أَنْ أَكُونَ مِنْ أَهْلِهَا . قَالَ : " فَإِنَّكَ مِنْ أَهْلِهَا " . فَأَخْرَجَ تَمَرَاتٍ مِنْ قَرَنِهِ فَجَعَلَ يَأْكُلُ مِنْهُنَّ ثُمَّ قَالَ : لَئِنْ أَنَا حَيِيتُ حَتَّى آكُلَ تَمَرَاتِي هَذِهِ إِنَّهَا لَحَيَاةٌ طَوِيلَةٌ ! فَرَمَى بِمَا كَانَ مَعَهُ مِنَ التَّمْرِ ثُمَّ قَاتَلَهُمْ حَتَّى قُتِلَ . رَوَاهُ مُسْلِمٌ . " الْقَرَنُ " بِفَتْحِ الْقَافِ وَالرَّاءِ : هُوَ جَعْبَةُ النُّشَّابِ .

**1315** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களும், அவர்களின் தோழர்களும் "பத்ரு" களத்திற்கு முன்னதாகவே வந்து வந்தார்கள். பின்பு இணை வைப்போர் வந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நான் அருகில் இருந்து கட்டளையிடும் வரை உங்களில் ஒருவர் எதிரியின் பக்கம் முன்னேற வேண்டாம்" என்று கூறினார்கள். இணை வைப்போர் மிக நெருக்கமாக வந்தபோது, "(தோழர்களே!) வானங்கள், பூமி அகலத்திற்கு உள்ள சொர்க்கத்தின் பக்கம் புறப்படுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்போது உமைர் இப்னு ஹுமாமுல் அல் அன்சாரீ (ரழி) அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! சொர்க்கத்தின் அளவு வானங்கள், பூமி அளவா?" என்று கேட்டார். "ஆம்" என்று பதில் கூறினார்கள். அதற்கவர், "மகிழ்ச்சி, மகிழ்ச்சி" என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள், "மகிழ்ச்சி, மகிழ்ச்சி என நீர் கூறுவதற்கு காரணம் என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு, "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! சொர்க்கவாசியாக நான் ஆகிட விரும்புவதைத் தவிர வேறில்லை" என்று கூறினார். "நிச்சயமாக! நீர் அதில் ஒருவராக இருப்பீர்" என்று நபி (ஸல்) அவர்கள் நல்வாழ்த்து கூறினார்கள். பின்பு அவர் தன் அம்பு பையில் இருந்து பேரீத்தம் பழங்களை எடுத்து சாப்பிட ஆரம்பித்தார். பின்பு,"நான் இந்த பேரீத்தம் பழங்கள் அனைத்தையும் சாப்பிடும் வரைகூட உயிரோடு இருந்தால், அதுவே நீளமான வாழ்க்கைதான்" கூறிவிட்டு, தன்னிடம் இருந்த பேரீத்தம் பழங்களை தூக்கி எறிந்து விட்டு, எதிகளுடன் போரிடச் சென்றார். இறுதியில் கொல்லப்பட்டார். **(முஸ்லிம்:1901)**

١٣١٦ – وَعَنْهُ ) أَنَسٍ ( قَالَ : جَاءَ نَاسٌ إِلَى النَّبِيِّ ﷺ : أَنْ ابْعَثْ مَعَنَا رِجَالاً يُعَلِّمُونَا الْقُرْآنَ وَالسُّنَّةَ فَبَعَثَ إِلَيْهِمْ سَبْعِينَ رَجُلاً مِنْ الأَنْصَارِ يُقَالُ لَهُمْ الْقُرَّاءُ فِيهِمْ خَالِي حَرَامٌ يَقْرَءُونَ الْقُرْآنَ وَيَتَدَارَسُونَهُ بِاللَّيْلِ : يَتَعَلَّمُونَ وَكَانُوا بِالنَّهَارِ يَجِيئُونَ بِالْمَاءِ فَيَضَعُونَهُ فِي الْمَسْجِدِ وَيَحْتَطِبُونَ فَيَبِيعُونَهُ وَيَشْتَرُونَ بِهِ الطَّعَامَ لأَهْلِ الصُّفَّةِ وَلِلْفُقَرَاءِ . فَبَعَثَهُمْ النَّبِيُّ ﷺ فَعَرَضُوا لَهُمْ فَقَتَلُوهُمْ قَبْلَ أَنْ يَبْلُغُوا الْمَكَانَ فَقَالُوا : اللَّهُمَّ بَلِّغْ عَنَّا نَبِيَّنَا أَنَّا قَدْ لَقِينَاكَ فَرَضِينَا عَنْكَ وَرَضِيتَ عَنَّا . وَأَتَى رَجُلٌ حَرَامًا خَالَ أَنَسٍ مِنْ خَلْفِهِ فَطَعَنَهُ بِرُمْحٍ حَتَّى أَنْفَذَهُ فَقَالَ حَرَامٌ : فُزْتُ وَرَبِّ الْكَعْبَةِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ إِخْوَانَكُمْ قَدْ قُتِلُوا وَإِنَّهُمْ قَالُوا : اللَّهُمَّ بَلِّغْ عَنَّا نَبِيَّنَا أَنَّا قَدْ لَقِينَاكَ فَرَضِينَا عَنْكَ وَرَضِيتَ عَنَّا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ مُسْلِمٍ .

**1316** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் சிலர் வந்து, "குர்ஆனையும், நபி வழியையும் கற்றுக் கொடுக்கும் சிலரை எங்களோடு அனுப்புங்கள்" என்று (வஞ்சகமாக) வேண்டினர். அன்ஸாரிகளான நபித்தோழர்கள் 70 நபர்களை (தேர்வு செய்து) அவர்களோடு நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். அவர்களை "(குர்ஆனைத் தெரிந்தவர்கள்) ஓதுபவர்கள்" என்று கூறப்படும். அவர்களில் "ஹராம்" என்ற என் மாமாவும் ஒருவர். இவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். இரவில் தாங்களும் கற்று, பிறருக்கும் கற்றுக் கொடுப்பார்கள். பகலில் தண்ணீர் கொண்டு வந்து பள்ளியில் வைப்பார்கள். விறகு சுமந்து வந்து, அதை விற்று, உணவு வாங்கி, திண்ணைத் தோழர்களுக்கும் ஏழைகளுக்கும் வழங்குவார்கள். இவர்களைத் தான் நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள்.

அழைத்துச் சென்றவர்கள் சதிசெய்து, அவர்கள் ஊரை அடையும் முன்பே அன்சாரீகளை கொன்று விட்டார்கள். (இறக்கும் முன்) அந்த அன்சாரிகள், "இறைவா! எங்கள் நிலைபற்றி எங்கள் நபிக்கு நீ எடுத்துக் காட்டுவாயாக! உன்னை நாங்கள் சந்திக்க வந்து விட்டோம். உன்னை நாங்கள் திருப்தியுற்றோம். எங்களை நீ திருப்தி கொள்வாயாக!" என்று கூறினார்கள். அனஸ் (ரழி) அவர்களின் மாமா ஹராமின் பின்னே ஒருவன் வந்து, ஈட்டியால் குத்தினான். ஈட்டி அவர் வயிற்றுக்கு முன்னே வந்தது. "கஃபாவின் இறைவன் மீது ஆணையாக! நான் வெற்றி பெற்று விட்டேன்" என்று அவர் கூறினார். அப்போது (மதீனாவில் தம் தோழர்களிடம்) நபி(ஸல்) அவர்கள், "(தோழர்களே!) உங்களின்

சகோதரர்கள் கொல்லப்பட்டு விட்டனர்.'' அப்போது அவர்கள், ''இறைவா! எங்களைப் பற்றி எங்கள் நபிக்கு எடுத்துக் காட்டுவாயாக! நிச்சயமாக, நாங்கள் உன்னை சந்திக்க வந்துவிட்டோம். உன்னை நாங்கள் பொருந்திக் கொண்டோம். எங்களை நீ பொருந்திக் கொள்வாயாக!'' என்று துஆச் செய்தார்கள். **(புகாரி:2801. முஸ்லிம்:677/147. இது முஸ்லிமின் வாசகமாகும்)**

١٣١٧ – وَعَنْهُ ) أَنَس ( قَالَ : غَابَ عَمِّي أَنَسُ بْنُ النَّضر رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ قتَال بَدْر فَقَالَ : يَا رَسُولَ اللّه غبْت عَنْ أَوَّل قتَال قَاتَلْت الْمُشْركينَ لَئن اللّهُ أَشْهَدَني قتَالَ الْمُشْركينَ لَيَرَيَنَّ اللّهُ مَا أَصْنَعُ . فَلَمَّا كَانَ يَوْمُ أُحُد انْكَشَفَ الْمُسْلمُونَ فَقَالَ : اللَّهُمَّ إنِّي أَعْتَذرُ إلَيْك ممَّا صَنَعَ هَؤُلاَء – يَعْني أَصْحَابَهُ – وَأَبْرَأُ إلَيْك ممَّا صَنَعَ هَؤُلاَء – يَعْني الْمُشْركينَ – ثُمَّ تَقَدَّمَ فَاسْتَقْبَلَهُ سَعْدُ بْنُ مُعَاذ فَقَالَ : يَا سَعْدُ بْنَ مُعَاذ الْجَنَّةَ وَرَبِّ النَّضر إنِّي أَجدُ ريحَهَا منْ دُون أُحُد ! فَقَالَ سَعْدٌ : فَمَا اسْتَطَعْت يَا رَسُولَ اللّه مَا صَنَعَ ! قَالَ أَنَسٌ : فَوَجَدْنَا به بضْعًا وَثَمَانينَ ضَرْبَةً بالسَّيْف أَوْ طَعْنَةً برُمْح أَوْ رَمْيَةً بسَهْم فَوَجَدْنَاهُ قَدْ قُتلَ وَمَثَّلَ به الْمُشْركُونَ فَمَا عَرَفَهُ أَحَدٌ إلاّ أُخْتُهُ ببَنَانه . قَالَ أَنَسٌ : كُنَّا نَرَى – أَوْ نَظُنُّ – أَنَّ هَذه الأيَةَ نَزَلَتْ فيه وَفي أَشْبَاهه : منَ الْمُؤْمنينَ رجَالٌ صَدَقُوا مَا عَاهَدُوا اللّهَ عَلَيْه فَمنْهُمْ مَنْ قَضَى نَحْبَهُ إلَى آخرهَا . مُتَّفَقٌ عَلَيْه . وَقَدْ سَبَقَ في بَاب الْمُجَاهَدَة .

**1317** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என் சிறிய தந்தை அனஸ் இப்னு நழ்ர் (ரழி) அவர்கள், ''பத்ர்''போருக்கு வராமல் இருந்து விட்டார். எனவே அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ''இறைத்தூதர் அவர்களே! இணை வைப்போருடன் நீங்கள் முதன்முதலில் போரிட்ட போருக்கு நான் வரத் தவறிவிட்டேன். எனினும், அல்லாஹ் இணைவைப்போருடன் மற்றொரு போரில் என்னைக் கலந்து கொள்ளச் செய்வான். நான் அப்போது எப்படி நடந்து கொள்வேன்? என்பதை அல்லாஹ் பார்ப்பான்'' என்று அவர் கூறினார். (அதுபோன்றே அடுத்து வந்த உஹதுப் போரில் கலந்துக் கொண்டார்.) உஹதுப் போர் வந்த போது, முஸ்லிம்கள் சிதற ஆரம்பித்தனர். அப்போது அனஸ் இப்னு நழ்ர் (ரழி) அவர்கள், ''இறைவா! இவர்கள் (என் தோழர்கள்) செய்தவற்றிலிருந்து நான் மன்னிப்பு வேண்டுகிறேன். இணை வைப்போர் செய்தவற்றிலிருந்து நான் நீங்கிக் கொள்கிறேன்'' என்று கூறி, போர்க்களத்தை நோக்கி முன்னேறினார். அப்போது வழியில் ஸஃது இப்னு முஆத் (ரழி) அவர்களை சந்தித்தார். ''ஸஃது இப்னு முஆதே! நழ்ரின் இறைவன் மீது ஆணையாக! இதோ உஹதின் மலையில் இருந்து சொர்க்கத்தின் நறுமணத்தை நான் காண்கிறேன்'' என்று அனஸ் இப்னு நழ்ர் (ரழி) அவர்கள் கூறினார். பின்னர் ஒரு சந்தர்ப்பத்தில் இது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் ஸஃது (ரழி) அவர்கள் கூறும்போது, ''இறைத்தூதர் அவர்களே! அவர் செய்தது போல் செய்திட நான் இயலமாட்டேன்'' என்று கூறினார்.

''அவரை வாளால் வெட்டியோ, ஈட்டியால் குத்தியோ, அம்பால் குத்தியோ என எண்பதுக்கும் மேற்பட்ட காயம் இருந்த நிலையில் அவரைக் கண்டோம். இணைவைப்போர் அவரைக் குதறிக் கொன்ற நிலையில் அவரைக் கண்டோம். அவரது சகோதரி அவரின் விரல் நுனிகளின் மூலமாக அடையாளம் கண்டார். இவர் (அனஸ் இப்னு நழ்ர் (ரழி) அவர்கள்) விஷயத்திலும், இவர் போன்றோர் விஷயத்திலும்தான், ''இறை நம்பிக்கையாளர்களில் சில ஆண்கள் உள்ளனர். அல்லாஹ்விடம் ஒப்பந்தம் செய்ததை அவர்கள் நிறைவேற்றினர். மேலும் (போரில் இறங்க வேண்டும் என்ற) தங்களின் நேர்ச்சையை நிறைவேற்றியவர்களும் அவர்களில் உண்டு. (அதை) எதிர்பார்த்து காத்திருப்போரும் உண்டு. (தங்களின் உறுதியில்) அவர்கள் சிறிதும் மாறவே இல்லை'' (அல்குர்ஆன் 33:23) என்ற வசனம் இறங்கியது என நாங்கள் எண்ணிக் கொண்டோம்'' என அனஸ் இப்னு மாலிக் (ரழி) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2805. முஸ்லிம்:1903. இது பாடம் 11–இல் ஹதீஸ் 109 ஆக உள்ளது)**

١٣١٨ – وَعَنْ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " رَأَيْتُ اللَّيْلَةَ رَجُلَيْنِ أَتَيَانِي فَصَعِدَا بِي الشَّجَرَةَ فَأَدْخَلاَنِي دَارًا هِيَ أَحْسَنُ وَأَفْضَلُ لَمْ أَرَ قَطُّ أَحْسَنَ مِنْهَا قَالاَ : أَمَّا هَذِهِ الدَّارُ فَدَارُ الشُّهَدَاءِ " . رَوَاهُ الْبُخَارِيُّ . وَهُوَ بَعْضٌ مِنْ حَدِيثٍ طَوِيلٍ فِيهِ أَنْوَاعُ الْعِلْمِ سَيَأْتِي فِي بَابِ تَحْرِيمِ الْكَذِبِ إِنْ شَاءَ اللَّهُ تَعَالَى .

**1318** ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(நேற்று) இரவு, இரண்டு மனிதர்கள் (கனவில்) என்னிடம் வந்தனர். இருவரும் என்னை மரத்தில் ஏற்றி விட்டனர். அதன் பின்னர் மிகவும் அழகான, மிகவும் சிறப்பான மாளிகைக்கு இருவரும் என்னை அழைத்துச் சென்றனர். அதைவிட அழகான மாளிகையை நான் பார்த்ததே இல்லை. "இந்த வீடுதான், இறைவழியில் உயிரைத் தியாகம் செய்தோரின் வீடாகும்" என்று அந்த இருவரும் கூறினர் என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2791)**

(இது நீண்ட ஹதீஸின் ஒரு பகுதியாகும். அறிந்து கொள்ள வேண்டிய செய்திகள் நிறையவே உள்ளன. இன்ஷா அல்லாஹ் "பொய் பேசுவது கூடாது" என்ற பாடத்தின் கீழ் இந்த ஹதீஸ் வரும்)

١٣١٩ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ أُمَّ الرُّبَيِّعِ بِنْتَ الْبَرَاءِ وَهِيَ أُمُّ حَارِثَةَ بْنِ سُرَاقَةَ أَتَتِ النَّبِيَّ ﷺ فَقَالَتْ : يَا رَسُولَ اللَّهِ أَلاَ تُحَدِّثُنِي عَنْ حَارِثَةَ ؟ – وَكَانَ قُتِلَ يَوْمَ بَدْرٍ – فَإِنْ كَانَ فِي الْجَنَّةِ صَبَرْتُ وَإِنْ كَانَ غَيْرَ ذَلِكَ اجْتَهَدْتُ عَلَيْهِ فِي الْبُكَاءِ . فَقَالَ : " يَا أُمَّ حَارِثَةَ إِنَّهَا جِنَانٌ فِي الْجَنَّةِ وَإِنَّ ابْنَكِ أَصَابَ الْفِرْدَوْسَ الأَعْلَى " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1319** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஹாரிதா இப்னு சுராகா (ரழி) அவர்களின் தாயார் உம்முர் ரபீவு பின்த் பராவு (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "இறைத்தூதர் அவர்களே! (என் மகன்) ஹாரிதா பற்றி எனக்குக் கூறுங்கள். பத்ருப் போரில் அவன் கொல்லப்பட்டு விட்டான். அவன் சொர்க்கத்தில் இருந்தால் நான் பொறுமையாக இருப்பேன். அவ்வாறு இல்லாவிட்டால், அவனுக்காக நான் அழுது கொண்டே இருப்பேன்" என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "ஹாரிதாவின் தாயாரே! சொர்க்கத்தில் பல சொர்க்கம் உண்டு. நிச்சயமாக உமது மகன் மிக உயர்ந்த "ஃபிர்தவ்ஸ்" எனும் சொர்க்கத்தில் உள்ளார்" என்று கூறினார்கள். **(புகாரி:2809)**

١٣٢٠ – وَعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : جِيءَ بِأَبِي إِلَى النَّبِيِّ ﷺ قَدْ مُثِّلَ بِهِ فَوُضِعَ بَيْنَ يَدَيْهِ ; فَذَهَبْتُ أَكْشِفُ عَنْ وَجْهِهِ فَنَهَانِي قَوْمٌ فَقَالَ النَّبِيُّ ﷺ : " مَا زَالَتِ الْمَلاَئِكَةُ تُظِلُّهُ بِأَجْنِحَتِهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1320** ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என் தந்தை அப்துல்லாஹ் (ரழி) அவர்கள் (போரில்) சின்னா பின்னமாக்கப்பட்டார். அவரின் உடல் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டு, அவர்கள் முன் வைக்கப்பட்டது. அப்பொழுது நான் (துணியால் மூடியிருந்த) அவரின் முகத்தைத் திறந்து பார்க்கச் சென்றேன். என் உறவினர் என்னைத் தடுத்து விட்டனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், "வானவர்கள் தங்களின் இறக்கைகளால் இவருக்கு நிழல் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:2816. முஸ்லிம்:2471)**

١٣٢١ – وَعَنْ سَهْلِ بْنِ حُنَيْفٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ سَأَلَ اللَّهَ تَعَالَى الشَّهَادَةَ بِصِدْقٍ بَلَّغَهُ اللَّهُ مَنَازِلَ الشُّهَدَاءِ وَإِنْ مَاتَ عَلَى فِرَاشِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1321** ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைவழியில் மரணம் அடைய வேண்டி அல்லாஹ்விடம் ஒருவர் உண்மையாகவே கேட்டால், அவர் தன் படுக்கையில் (சாதாரணமாக) இறந்துவிட்டாலும், இறைவழியில் மரணித்த தகுதியை அவருக்கு அல்லாஹ் வழங்குகிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1909)**

١٣٢٢ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ :"مَنْ طَلَبَ الشَّهَادَةَ صَادِقًا أُعْطِيَهَا وَلَوْ لَمْ تُصِبْهُ".رَوَاهُ مُسْلِمٌ.

**1322** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“யார் ஒருவர் உண்மையில் இறைவழியில் இறக்க விரும்பி (அம்மரணத்தை வேண்டி) அல்லாஹ்விடம் துஆச் செய்கிறாரோ, அவர் அதை (அம்மரணத்தை) அடையாவிட்டாலும், அந்த பதவி கொடுக்கப்படுவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1908)**

١٣٢٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا يَجِدُ الشَّهِيدُ مِنْ مَسِّ الْقَتْلِ إِلاَّ كَمَا يَجِدُ أَحَدُكُمْ مِنْ مَسِّ الْقَرْصَةِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1323** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர் எறும்புக் கடியின் காரணமாக அடையும் வேதனையைப் போன்றே, இறைவழியில் மரணத்தை அடைந்தவர், மரண வேதனையை அடைவார்!” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதி:1668. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

١٣٢٤ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي أَوْفَى رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ فِي بَعْضِ أَيَّامِهِ الَّتِي لَقِيَ فِيهَا الْعَدُوَّ انْتَظَرَ حَتَّى مَالَتِ الشَّمْسُ ثُمَّ قَامَ فِي النَّاسِ فَقَالَ : " أَيُّهَا النَّاسُ لاَ تَتَمَنَّوْا لِقَاءَ الْعَدُوِّ وَسَلُوا اللَّهَ الْعَافِيَةَ فَإِذَا لَقِيتُمُوهُمْ فَاصْبِرُوا ; وَاعْلَمُوا أَنَّ الْجَنَّةَ تَحْتَ ظِلاَلِ السُّيُوفِ " ثُمَّ قَالَ : " اللَّهُمَّ مُنْزِلَ الْكِتَابِ وَمُجْرِيَ السَّحَابِ وَهَازِمَ الأَحْزَابِ اهْزِمْهُمْ وَانْصُرْنَا عَلَيْهِمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1324** அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எதிரிகளைப் போர்க்களத்தில் சந்தித்த ஒருநாளில், சூரியன் நடு உச்சியிலிருந்து மேற்கே சாயும் வரை காத்திருந்தார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று உரையாற்றினார்கள். “மக்களே! எதிரிகளைச் சந்திக்க விருப்பம் கொள்ளாதீர்கள். அல்லாஹ்விடம் ஆரோக்கியத்தைக் கேளுங்கள். அவர்களை நீங்கள் சந்தித்தால் பொறுமை கொள்ளுங்கள். ‘நிச்சயமாக! சொர்க்கம், வாள்களின் நிழல்களுக்கு கீழே உள்ளது’ என்பதை அறிந்து கொள்ளுங்கள்” என்று கூறிவிட்டு பின்பு, “இறைவா! வேதத்தை இறக்கியவனே! மேகங்களை நடத்துபவனே! எதிரிகளைத் தோற்கடிப்பவனே! அவர்களைத் தோற்கடிப்பாயாக! அவர்களுக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்வாயாக!” என்றும் கூறினார்கள். **(புகாரி:3025. முஸ்லிம்:1742)**

١٣٢٥ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ثِنْتَانِ لاَ تُرَدَّانِ – أَوْ قَلَّمَا تُرَدَّانِ – : الدُّعَاءُ عِنْدَ النِّدَاءِ وَعِنْدَ الْبَأْسِ حِينَ يُلْحِمُ بَعْضُهُمْ بَعْضًا " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1325** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இரண்டு துஆக்கள், ஏற்கப்படாமல் இருப்பதில்லை. அல்லது மறுக்கப்படுவது மிக குறைவாக உள்ளது. (1) பாங்கு கூறும் நேரத்தில் (பாங்கு சொன்ன பிறகு) செய்யப்படும் துஆ, (2) எதிரிகளுடன் போரிடும் போது கேட்கப்படும் துஆ” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2540)**

١٣٢٦ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا غَزَا قَالَ : " اللَّهُمَّ أَنْتَ عَضُدِي وَنَصِيرِي بِكَ أَحُولُ وَبِكَ أَصُولُ وَبِكَ أُقَاتِلُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1326** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் போரின் பொழுது, "இறைவா! நீயே எனக்கு ஆதரவு தருபவன். நீயே எனக்கு உதவுபவன். உன் மூலமே நான் செல்கிறேன். உன் மூலமே நான் வருகிறேன். உன் உதவியைக் கொண்டே எதிரிகள் மீது தாக்குதல் தொடுக்கிறேன். உன் உதவியைக் கொண்டே நான் போர் செய்கிறேன்" என்று கூறுவார்கள்.

**(அபூதாவூது:2632. திர்மிதீ:3584. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٢٧ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا خَافَ قَوْمًا قَالَ : " اللَّهُمَّ إِنَّا نَجْعَلُكَ فِي نُحُورِهِمْ وَنَعُوذُ بِكَ مِنْ شُرُورِهِمْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1327** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் எதிரிகள் பற்றி அறி(பய)ந்தால், அல்லாஹும்ம இன்னா நஜ்அலுக ஃபீநூஹூரிஹிம் வநவூது பிக்க மின் ஷுரூரிஹிம் ("இறைவா! உன்னை அவர்களின் எதிரில் நாங்கள் நிறுத்துகிறோம். மேலும் அவர்களின் தீமைகளிலிருந்து உன்னிடம் நாங்கள் பாதுகாவல் தேடுகிறோம்") என்று கூறுவார்கள். **(அபூதாவூது:1537)**

١٣٢٨ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الْخَيْلُ مَعْقُودٌ فِي نَوَاصِيهَا الْخَيْرُ إِلَى يَوْمِ الْقِيَامَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1328** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாள் வரை குதிரையின் நெற்றியில் நன்மையை ஆக்கப்பட்டிருக்கிறது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2849. முஸ்லிம்:1871)**

١٣٢٩ – وَعَنْ عُرْوَةَ الْبَارِقِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " الْخَيْلُ مَعْقُودٌ فِي نَوَاصِيهَا الْخَيْرُ إِلَى يَوْمِ الْقِيَامَةِ : الأَجْرُ وَالْمَغْنَمُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1329** உர்வா அல்பாரிக்கீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாள் வரை குதிரையின் நெற்றியில் நன்மை ஆக்கப்பட்டு இருக்கிறது. அந்த நன்மை, நற்கூலி மற்றும் போரில் கிடைக்கும் தளவாட சாமான்கள் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2852. முஸ்லிம்:1873)**

١٣٣٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنِ احْتَبَسَ فَرَسًا فِي سَبِيلِ اللَّهِ إِيمَانًا بِاللَّهِ وَتَصْدِيقًا بِوَعْدِهِ فَإِنَّ شِبَعَهُ وَرِيَّهُ وَرَوْثَهُ وَبَوْلَهُ فِي مِيزَانِهِ يَوْمَ الْقِيَامَةِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1330** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டும், அவனது வாக்குறுதியை உண்மைபடுத்திடவும், அல்லாஹ்வின் வழியில் செல்ல குதிரையை (தயாராக) வைத்துக் கொண்டவருக்கு, அந்த குதிரை உண்ணும் உணவு, குடிக்கும் நீர் மற்றும் அதன் கழிவுப் பொருள்கள் அனைத்தும் மறுமை நாளில் அவரின் நன்மைகளாக அவரது தராசுத் தட்டில் வைக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2853)**

١٣٣١ – وَعَنْ أَبِي مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ بِنَاقَة مَخْطُومَة فَقَالَ : هَذه في سَبِيلِ اللَّه . فَقَالَ رَسُولُ اللَّه ﷺ : " لَكَ بِهَا يَوْمَ الْقِيَامَة سَبْعُمِائَة نَاقَة كُلُّهَا مَخْطُومَةٌ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1331** அபூமஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர், மூக்கணாங்கயிறு கட்டப்பட்ட ஓர் ஒட்டகையைக் கொண்டு வந்து, “இது அல்லாஹ்வின் வழியில் பயன்படுத்தப்பட வேண்டியதாகும்” என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், “மறுமை நாளில் இதற்காக உமக்கு 700 ஒட்டகைகள் உண்டு. அவை அனைத்தும் மூக்கணாங்கயிறு போடப்பட்டதாக இருக்கும்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1892)**

١٣٣٢ – وَعَنْ أَبِي حَمَّاد – وَيُقَالُ أَبُو سُعَاد وَيُقَالُ أَبُو أَسَد وَيُقَالُ أَبُو عَامِر وَيُقَالُ أَبُو عَمْرو وَيُقَالُ أَبُو الأَسْوَد وَيُقَالُ أَبُو عَبْس – عُقْبَةُ بْنُ عَامِر الْجُهَنِيُّ رَضِيَ اللَّهُ عَنْهُ – قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّه ﷺ وَهُوَ عَلَى الْمِنْبَرِ يَقُولُ : " وَأَعِدُّوا لَهُمْ مَا اسْتَطَعْتُمْ مِنْ قُوَّةٍ أَلاَ إِنَّ الْقُوَّةَ الرَّمْيُ أَلاَ إِنَّ الْقُوَّةَ الرَّمْيُ أَلاَ إِنَّ الْقُوَّةَ الرَّمْيُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1332** அபூஹம்மாத் உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் இயன்ற அளவுக்கு பலத்தை அதிகப்படுத்திக் கொள்ளுங்கள். அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக! பலம் என்பது, அம்பு எய்துவதாகும். அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக! பலம் என்பது, அம்பு எய்துவதாகும். அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக! பலம் என்பது, அம்பு எய்துவதாகும்” என்று நபி (ஸல்) அவர்கள் மிம்பரில் இருந்தவாறு கூறினார்கள். **(முஸ்லிம்:1917)**

١٣٣٣ – وَعَنْهُ ) عُقْبَةَ بْنِ عَامِرٍ الْجُهَنِيِّ ( قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ : " سَتُفْتَحُ عَلَيْكُمْ أَرَضُونَ وَيَكْفِيكُمْ اللَّهُ فَلاَ يَعْجِزْ أَحَدُكُمْ أَنْ يَلْهُوَ بِأَسْهُمِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1333** அபூஹம்மாத் உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களுக்குப் பல நாடுகள் வெற்றியாகக் கிட்டும். உங்களுக்கு அல்லாஹ் போதுமானவன். எனினும் அம்பு எய்தும் பயிற்சியில் உங்களில் ஒருவர் இயலாதவராகிட வேண்டாம்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1918)**

١٣٣٤ – وَعَنْهُ ) عُقْبَةَ بْنِ عَامِرٍ الْجُهَنِيِّ ( أَنَّهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " مَنْ عُلِّمَ الرَّمْيَ ثُمَّ تَرَكَهُ فَلَيْسَ مِنَّا " أَوْ فَقَدْ عَصَى . رَوَاهُ مُسْلِمٌ .

**1334** அபூ ஹம்மாத் உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அம்பு எய்துவதை கற்றுக் கொண்டு, பின்பு அதை எவர் விட்டு விடுகிறாரோ அவர் நம்மைச் சேர்ந்தவர் அல்லர். அல்லது அவர் (நமக்கு) மாறு செய்துவிட்டார்” என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1919)**

١٣٣٥ – وَعَنْهُ ) عُقْبَةَ بْنِ عَامِرٍ الْجُهَنِيِّ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ : " إِنَّ اللَّهَ يُدْخِلُ بِالسَّهْمِ الْوَاحِد ثَلاَثَةَ نَفَرٍ الْجَنَّةَ : صَانِعَهُ يَحْتَسِبُ فِي صَنْعَته الْخَيْرَ وَالرَّامِيَ بِه وَمُنْبِلَهُ . وَارْمُوا وَارْكَبُوا وَأَنْ تَرْمُوا أَحَبُّ إِلَيَّ مِنْ أَنْ تَرْكَبُوا . وَمَنْ تَرَكَ الرَّمْيَ بَعْدَ مَا عُلِّمَهُ رَغْبَةً عَنْهُ فَإِنَّهَا نِعْمَةٌ تَرَكَهَا " – أَوْ قَالَ كَفَرَهَا . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1335** அபூ ஹம்மாத் உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஓர் அம்பு மூலம் மூன்று பேரை சொர்க்கத்தில் அல்லாஹ் நுழையச் செய்கிறான். (1) நன்மை நாடி அம்பை செய்தவர் (2) அதனை எய்தவர் (3) அதனை எய்துபவருக்கு கற்றுத் தருபவர். மேலும், அம்பு எய்துங்கள். குதிரைச் சவாரி செய்யுங்கள். நீங்கள் அம்பெய்வது, நீங்கள் குதிரைச் சவாரி

செய்வதை விட மிக விருப்பமானதாகும். அம்பு எய்துவதை, விருப்பமாகக் கற்றுக் கொண்டு பின்னர் அம்பு எய்துவதை விட்டு விட்டால், அவர் ஓர் அருட்கொடையை விட்டு விட்டவராவார். அல்லது நன்றி மறந்தவராவார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2513)**

١٣٣٦ - وَعَنْ سَلَمَةَ بْنِ الأَكْوَعِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : مَرَّ النَّبِيُّ ﷺ عَلَى نَفَرٍ يَنْتَضِلُونَ فَقَالَ : " ارْمُوا بَنِي إِسْمَاعِيلَ فَإِنَّ أَبَاكُمْ كَانَ رَامِيًا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1336** ஸல்மா இப்னு அக்வஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அம்பு பயிற்சி செய்து கொண்டிருந்த மக்களைக் கடந்து சென்ற நபி (ஸல்) அவர்கள், ''இஸ்மாயில் நபியின் வாரிசுகளே! அம்பெய்துங்கள். நிச்சயமாக உங்களின் தந்தை (இஸ்மாயில் (அலை) அவர்கள்) அம்பெய்துபவராக இருந்தார்'' என்று கூறினார்கள். **(புகாரி:3373)**

١٣٣٧ - وَعَنْ عَمْرِو بْنِ عَبْسَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ رَمَى بِسَهْمٍ فِي سَبِيلِ اللَّهِ فَهُوَ لَهُ عِدْلُ مُحَرَّرَةٍ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالاَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1337** அம்ரு இப்னு அப்ஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அல்லாஹ்வின் வழியில் ஒருவர் அம்பு எய்தினால், அவருக்கு ஓர் அடிமையை உரிமை விட்ட நன்மை உண்டு என்று நபி (ஸல்) கூறினார்கள்.''

**(அபூதாவூது:3965. திர்மிதி:1638. இது ''ஹஸன் ஸஹீஹ்'' என்று திர்மிதி இமாம் கூறினார்கள்)**

١٣٣٨ - وَعَنْ أَبِي يَحْيَى خُرَيْمِ بْنِ فَاتِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ أَنْفَقَ نَفَقَةً فِي سَبِيلِ اللَّهِ كُتِبَ لَهُ سَبْعُمِائَةِ ضِعْفٍ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1338** அபூயஹ்யா என்ற ஹுரைம் இப்னு ஃபாதிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அல்லாஹ்வின் வழியில் ஒருவர் ஒரு செலவு செய்தால், அவருக்கு 700 மடங்கு நன்மை எழுதப்படும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதி:1625. இது ''ஹஸன்'' என இமாம் திர்மிதி கூறுகிறார்கள்)**

١٣٣٩ - وَعَنْ أَبِي سَعِيدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ عَبْدٍ يَصُومُ يَوْمًا فِي سَبِيلِ اللَّهِ إِلاَّ بَاعَدَ اللَّهُ بِذَلِكَ الْيَوْمِ وَجْهَهُ عَنِ النَّارِ سَبْعِينَ خَرِيفًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1339** அபூஸயீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அல்லாஹ்வின் வழியில் இருக்கும் பொழுது ஒரு நாள் நோன்பு வைக்கும் ஓர் அடியாரின் முகத்தை 70 ஆண்டுகளுக்கு நரகத்தை விட்டும் அல்லாஹ் தூரமாக்கி வைப்பான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2840. முஸ்லிம்:1153)**

١٣٤٠ - وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ صَامَ يَوْمًا فِي سَبِيلِ اللَّهِ جَعَلَ اللَّهُ بَيْنَهُ وَبَيْنَ النَّارِ خَنْدَقًا كَمَا بَيْنَ السَّمَاءِ وَالأَرْضِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1340** அபூ உமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அல்லாஹ்வின் பாதையில் உள்ளபொழுது ஒருவர் நோன்பு வைத்தால், வானம், பூமிக்கிடையே உள்ள தூரம் போல், அல்லாஹ் அவருக்கும், நரகத்திற்குமிடையே தூரமாக்கி வைப்பான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதி:1624. இது ''ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

١٣٤١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَنْ مَاتَ وَلَمْ يَغْزُ وَلَمْ يُحَدِّثْ نَفْسَهُ بِغَزْوٍ مَاتَ عَلَى شُعْبَةٍ مِنَ النِّفَاقِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1341** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் வழியில் போர் செய்யாமலும், தன் மனதில் போர் பற்றி எண்ணாமலும் ஒருவர் இறந்து விட்டால், அவர் நயவஞ்சகத்தின் ஒரு பிரிவின்படி இறந்தவர் ஆவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1910)**

١٣٤٢ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : كُنَّا مَعَ النَّبِيِّ ﷺ فِي غَزَاةٍ فَقَالَ : " إِنَّ بِالْمَدِينَةِ لَرِجَالاً مَا سِرْتُمْ مَسِيرًا وَلاَ قَطَعْتُمْ وَادِيًا إِلاَّ كَانُوا مَعَكُمْ : حَبَسَهُمُ الْمَرَضُ " . وَفِي رِوَايَةٍ : " حَبَسَهُمُ الْعُذْرُ " . وَفِي رِوَايَةٍ : " إِلاَّ شَرَكُوكُمْ فِي الأَجْرِ " . رَوَاهُ الْبُخَارِيُّ مِنْ رِوَايَةِ أَنَسٍ وَرَوَاهُ مُسْلِمٌ مِنْ رِوَايَةِ جَابِرٍ وَاللَّفْظُ لَهُ .

**1342** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் ஒரு போரில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் இப்படிக் கூறினார்கள். "நிச்சயமாக! மதீனாவில் சிலர் உள்ளனர். நீங்கள் எங்கு சென்றாலும் எந்த ஓடையைக் கடந்தாலும், அவர்களும் (மனதளவில்) உங்களோடு இருப்பார்கள். அவர்களை நோய்தான் (போருக்கு வரவிடாமல்) தடுத்துவிட்டது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

ஒரு அறிவிப்பில் "சங்கடம் அவர்களைத் தடுத்தது" என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில், "நீங்கள் எங்கு சென்றாலும் உங்களோடு அவர்களும் கூட்டாளிகளாக இருக்கின்றனர்...." என்று உள்ளது. **(முஸ்லிம்:1911. அனஸ் (ரழி) அறிவித்து புகாரியிலும் (2839) உள்ளது)**

١٣٤٣ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ أَعْرَابِيًّا أَتَى النَّبِيَّ ﷺ فَقَالَ : يَا رَسُولَ اللّٰهِ الرَّجُلُ يُقَاتِلُ لِلْمَغْنَمِ وَالرَّجُلُ يُقَاتِلُ لِيُذْكَرَ وَالرَّجُلُ يُقَاتِلُ لِيُرَى مَكَانُهُ ؟ وَفِي رِوَايَةٍ : يُقَاتِلُ شَجَاعَةً وَيُقَاتِلُ حَمِيَّةً وَفِي رِوَايَةٍ : وَيُقَاتِلُ غَضَبًا فَمَنْ فِي سَبِيلِ اللّٰهِ ؟ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَنْ قَاتَلَ لِتَكُونَ كَلِمَةُ اللّٰهِ هِيَ الْعُلْيَا فَهُوَ فِي سَبِيلِ اللّٰهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1343** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு கிராமவாசி நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். "இறைத்தூதர் அவர்களே! ஒருவர் போரில் கிடைக்கும் பொருள்களுக்காக போரிடுகிறார். இன்னுமொருவர், தம் பெயர் புகழப்பட வேண்டும் என்பதற்காக போரிடுகிறார். மற்றொருவர் தன் தகுதியைக் காட்டுவதற்காக போரிடுகிறார். (மற்றொரு அறிவிப்பில் ஒருவர் வீரத்தை வெளிக்காட்டப் போரிடுகின்றார், மற்றொருவர் ரோஷத்தை வெளிப் படுத்தப் போரிடுகின்றார்" என்று உள்ளது. மற்றொரு அறிவிப்பில் "ஒருவர் கோபத்திற்காகப் போராடு கின்றார்" என்று உள்ளது.) இவர்களில் அல்லாஹ்வின் வழியில் போரிடுபவர் யார்?" என்று அவர் கேட்டார். உடனே நபி (ஸல்) அவர்கள், "எவர் அல்லாஹ்வின் சொல் உயர்வதற்காகப் போரிடு கிறாரோ, அவரே அல்லாஹ்வின் வழியில் உள்ளவர் ஆவார்" என்று கூறினார்கள்.

**(புகாரி:2810. முஸ்லிம்:1904)**

١٣٤٤ - وَعَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَا مِنْ غَازِيَةٍ أَوْ سَرِيَّةٍ تَغْزُو فَتَغْنَمُ وَتَسْلَمُ إِلاَّ كَانُوا قَدْ تَعَجَّلُوا ثُلُثَيْ أُجُورِهِمْ وَمَا مِنْ غَازِيَةٍ أَوْ سَرِيَّةٍ تُخْفِقُ وَتُصَابُ إِلاَّ تَمَّ لَهُمْ أُجُورُهُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1344** அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு படையோ அல்லது ஒரு அணியோ போரில் கிடைத்த வெற்றிப்பொருட்களுடன் நலமுடன் வந்தால், அது தங்களின் நற்கூலிகளில் மூன்றில் இரண்டு பங்கை அடைந்தவர்களாவர்! ஒரு

படையோ அல்லது ஒரு அணியோ போரில் பொருட்களும் கிடைக்காமல், பல சிரமங்களும் அடைந்து வந்தால், அவர்களின் நற்கூலி முழுவதும் (மறுமையில்) அவர்களுக்கு கிடைத்துவிடும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1906)**

١٣٤٥ – وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ : يَا رَسُولَ اللَّهِ ائْذَنْ لِي فِي السِّيَاحَةِ فَقَالَ النَّبِيُّ ﷺ : " إِنَّ سِيَاحَةَ أُمَّتِي الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ عَزَّ وَجَلَّ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ .

**1345** அபூ உமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், ''இறைத்தூதர் அவர்களே! சுற்றுலா செல்ல எனக்கு அனுமதி தாருங்கள்'' என்று ஒருவர் கேட்டார். ''என் சமுதாயத்தில் சுற்றுலா என்பது, அல்லாஹ்வின் வழியில் அறப்போர் புரிவதாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2486)**

١٣٤٦ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " قَفْلَةٌ كَغَزْوَةٍ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ . " الْقَفْلَةُ " : الرُّجُوعُ ; وَالْمُرَادُ : الرُّجُوعُ مِنَ الْغَزْوِ بَعْدَ فَرَاغِهِ ; وَمَعْنَاهُ أَنَّهُ يُثَابُ فِي رُجُوعِهِ بَعْدَ فَرَاغِهِ مِنَ الْغَزْوِ.

**1346** அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ்(ரழி) அறிவிக்கின்றார்கள்:

''போரிலிருந்து வருவதும், போர் செய்வது போன்றேயாகும். (போர் செய்துவிட்டு வீடு திரும்பும் போது அவர், அல்லாஹ்வின் வழியிலேயே உள்ளார். அவருக்கு அதன் நற்கூலி உண்டு)'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2487)**

١٣٤٧ – وَعَنِ السَّائِبِ بْنِ يَزِيدَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَمَّا قَدِمَ النَّبِيُّ ﷺ مِنْ غَزْوَةِ تَبُوكَ تَلَقَّاهُ النَّاسُ فَتَلَقَّيْتُهُ مَعَ الصِّبْيَانِ عَلَى ثَنِيَّةِ الْوَدَاعِ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ بِهَذَا اللَّفْظِ وَرَوَاهُ الْبُخَارِيُّ قَالَ : ذَهَبْنَا نَتَلَقَّى رَسُولَ اللَّهِ ﷺ مَعَ الصِّبْيَانِ إِلَى ثَنِيَّةِ الْوَدَاعِ .

**1347** ஸாயிப் இப்னு யஸீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தபூக் போரிலிருந்து நபி (ஸல்) அவர்கள் (மதீனா நோக்கி) வந்த போது அவர்களை மக்கள் எதிர்கொண்டு வரவேற்றனர். ''தனிய்யதுல் வதாவு'' என்ற இடத்தில் சிறு குழந்தைகளுடன் சேர்ந்து நானும் அவர்களை வரவேற்றேன். **(அபூதாவூது:2779)**

''நபி (ஸல்) அவர்களை ''தனிய்யதுல் வதாவு'' என்ற இடத்தில் இருந்து, குழந்தைகளுடன் சேர்ந்து வரவேற்கச் சென்றோம்'' என்று புகாரியில் கூறப்பட்டு உள்ளது. **(புகாரி:3083)**

١٣٤٨ – وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ لَمْ يَغْزُ أَوْ يُجَهِّزْ غَازِيًا أَوْ يُخَلِّفْ غَازِيًا فِي أَهْلِهِ بِخَيْرٍ أَصَابَهُ اللَّهُ بِقَارِعَةٍ قَبْلَ يَوْمِ الْقِيَامَةِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1348** அபூஉமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''ஒருவர் போரில் கலந்து கொள்ளவில்லையானால் அல்லது போருக்குச் செல்பவருக்கு ஆதரவு தரவில்லையானால் அல்லது அவரின் குடும்பத்தாருக்கு நல்லவற்றிற்குப் பொறுப்பேற்கவில்லை யானால், அவரை அல்லாஹ் மறுமைநாள் வரும் முன்பே கடும் சோதனையால் பிடிப்பான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2503)**

١٣٤٩ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " جَاهِدُوا الْمُشْرِكِينَ بِأَمْوَالِكُمْ وَأَنْفُسِكُمْ وَأَلْسِنَتِكُمْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1349** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இணைவைப்போர்களிடம் உங்களின் உடல்-பொருள்-நாவின் மூலம் அறப்போர் புரியுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(அபூதாவூது:2504)**

١٣٥٠ – وَعَنْ أَبِي عَمْرٍو – وَيُقَالُ أَبُو حَكِيمٍ – النُّعْمَانُ بْنُ مُقَرِّنٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : شَهِدْتُ رَسُولَ اللَّهِ ﷺ إِذَا لَمْ يُقَاتِلْ مِنْ أَوَّلِ النَّهَارِ أَخَّرَ الْقِتَالَ حَتَّى تَزُولَ الشَّمْسُ وَتَهُبَّ الرِّيَاحُ وَيَنْزِلَ النَّصْرُ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1350** அபூஅம்ரு மற்றும் அபூஹகீம் நுஃமான் இப்னு முகர்ரின் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் நான் போரில் கலந்து கொண்டிருக்கிறேன். முற்பகலில் அவர்கள் போர் செய்யவில்லையானால், சூரியன் உச்சியில் இருந்து சாயும் வரை மற்றும் காற்று வீசும்வரை, (அல்லாஹ்வின்) உதவி வரும் வரை போரைப் பிற்படுத்துவார்கள்.

**(அபூதாவூது:1655. திர்மிதீ:1613. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்.)**

١٣٥١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَتَمَنَّوْا لِقَاءَ الْعَدُوِّ وَاسْأَلُوا اللَّهَ الْعَافِيَةَ فَإِذَا لَقِيتُمُوهُمْ فَاصْبِرُوا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1351** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"எதிரிகளைச் சந்திக்க விரும்பாதீர்கள். அல்லாஹ்விடம் ஆரோக்கியத்தைக் கேளுங்கள். ஒருவேளை நீங்கள் எதிரிகளைச் சந்தித்தால் பொறுமையுடன் நடந்து கொள்ளுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3026 முஸ்லிம்:1742)**

١٣٥٢ – وَعَنْهُ ( أَبِي هُرَيْرَةَ ) وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " الْحَرْبُ خُدْعَةٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1352** அபூஹுரைரா (ரழி), ஜாபிர் (ரழி) ஆகியோர் அறிவிக்கின்றார்கள்:

"போர் என்பது தந்திரமும், ஏமாற்றுதலும் உள்ளதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3029, 3030. முஸ்லிம்:1739, 1740)**

## ٢٣٥ – باب بَيان جماعة من الشهداء في ثواب الآخرة، ويغسلون ويصلى عليهم بخلاف القتيل في حرب الكفار

## பாடம் : 235 - நற்கூலி பெறுவதில் தியாகிகளின் தகுதியைப் பெறுபவர். இவர்கள் போரில் கொல்லப்படவில்லை என்றாலும் கூட குளிப்பாட்டி தொழவைக்கப்படுவர்.

١٣٥٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الشُّهَدَاءُ خَمْسَةٌ : الْمَطْعُونُ وَالْمَبْطُونُ وَالْغَرِيقُ وَصَاحِبُ الْهَدْمِ وَالشَّهِيدُ فِي سَبِيلِ اللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1353** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தியாகிகள் ஐவர். (1) பிளேக் நோயினால் இறப்பவர் (2) காலரா நோயினால் இறப்பவர் (3) நீரில் மூழ்கி இறப்பவர் (4) கட்டிடம் இடிந்து விழுந்து இறப்பவர் (5) அல்லாஹ்வின் பாதையில் உயிரை இழப்பவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2889. முஸ்லிம்:1914)**

١٣٥٤ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا تَعُدُّونَ الشُّهَدَاءَ فِيكُمْ ؟ " قَالُوا : يَا رَسُولَ اللَّهِ مَنْ قُتِلَ فِي سَبِيلِ اللَّهِ فَهُوَ شَهِيدٌ . قَالَ : " إِنَّ شُهَدَاءَ أُمَّتِي إِذًا لَقَلِيلٌ ! " قَالُوا : فَمَنْ يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " مَنْ قُتِلَ فِي سَبِيلِ اللَّهِ فَهُوَ شَهِيدٌ وَمَنْ مَاتَ فِي سَبِيلِ اللَّهِ فَهُوَ شَهِيدٌ وَمَنْ مَاتَ فِي الطَّاعُونِ فَهُوَ شَهِيدٌ وَمَنْ مَاتَ فِي الْبَطْنِ فَهُوَ شَهِيدٌ وَالْغَرِيقُ شَهِيدٌ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1354** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் தியாகிகள் என எவரைக் கருதுகிறீர்கள்?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் வழியில் கொல்லப்பட்டவரே தியாகி ஆவார்” என்று நபித்தோழர்கள் கூறினர் “(அப்படியெனில்) என் சமுதாயத்தில் உயிரை தியாகம் செய்தோர், மிகக் குறைவாகவே இருப்பர்” என நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! அப்படியானால் அவர்கள் யார்?” என்று கேட்டார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ்வின் வழியில் கொல்லப்பட்டவர், உயிரைத் தியாகம் செய்தவராவார். மேலும் அல்லாஹ்வின் வழியில் இறந்தவர், உயிரைத் தியாகம் செய்தவராவார். பிளேக் நோயில் இறந்தவரும் உயிரைத் தியாகம் செய்தவராவார். காலரா நோயினால் இறந்தவரும் உயிரைத் தியாகம் செய்தவராவார். நீரில் மூழ்கியவரும் உயிரைத் தியாகம் செய்தவராவார்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1915)**

١٣٥٥ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ قُتِلَ دُونَ مَالِهِ فَهُوَ شَهِيدٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1355** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தன் பொருட்களைப் பாதுகாப்பதில் கொல்லப்பட்டவர், இறை வழியில் தியாகம் செய்தவர் ஆவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2480. முஸ்லிம்:141)**

١٣٥٦ – وَعَنْ أَبِي الأَعْوَرِ سَعِيدِ بْنِ زَيْدِ بْنِ عَمْرِو بْنِ نُفَيْلٍ أَحَدِ الْعَشَرَةِ الْمَشْهُودِ لَهُمْ بِالْجَنَّةِ رَضِيَ اللَّهُ عَنْهُمْ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ قُتِلَ دُونَ مَالِهِ فَهُوَ شَهِيدٌ وَمَنْ قُتِلَ دُونَ دَمِهِ فَهُوَ شَهِيدٌ وَمَنْ قُتِلَ دُونَ دِينِهِ فَهُوَ شَهِيدٌ وَمَنْ قُتِلَ دُونَ أَهْلِهِ فَهُوَ شَهِيدٌ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1356** “சொர்க்கவாசி” எனக் கூறப்பட்ட பத்துப் பேர்களில் ஒருவரான அபுல் அஃவர் ஸயீது இப்னு ஸைது இப்னு அம்ரு இப்னு நுஃபய்ல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தன் சொத்தைப் பாதுகாப்பதில் கொல்லப்பட்டவர், இறைத்தியாகி ஆவார். தம் உயிரைப் பாதுகாக்கக் கொல்லப்பட்டவரும், தியாகி ஆவார். தன் மார்க்கத்தைப் பாதுகாக்கக் கொல்லப் பட்டவரும், தியாகி ஆவார். தன் குடும்பத்தைப் பாதுகாக்கக் கொல்லப்பட்டவரும், இறைத்தியாகி ஆவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4772. திர்மிதீ:1421. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٥٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ أَرَأَيْتَ إِنْ جَاءَ رَجُلٌ يُرِيدُ أَخْذَ مَالِي ؟ قَالَ : " فَلاَ تُعْطِهِ مَالَكَ " . قَالَ : أَرَأَيْتَ إِنْ قَاتَلَنِي ؟ قَالَ : " قَاتِلْهُ " . قَالَ : أَرَأَيْتَ إِنْ قَتَلَنِي ؟ قَالَ : " فَأَنْتَ شَهِيدٌ " . قَالَ : أَرَأَيْتَ إِنْ قَتَلْتُهُ ؟ قَالَ : " هُوَ فِي النَّارِ " .رَوَاهُ مُسْلِمٌ.

**1357** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, “இறைத்தூதர் அவர்களே! என் சொத்தை ஒருவர் எடுத்துக் கொள்ள வந்தால் என்ன செய்வது? என்று கூறுங்கள்” என்று கேட்டார். “உம் சொத்தை அவருக்கு கொடுத்து விடாதே! என்று கூறினார்கள். “என்னை அவர் தாக்கினால் என்ன செய்வது?” என்று கேட்டார். “நீரும் அவரைத் தாக்குவாயாக!” என்று கூறினார்கள். என்னை அவர் கொன்று விட்டால் என்ன செய்வது?” என்று கேட்டார். “நீர் தியாகி (ஷஹீத்) ஆவீர்” என்று கூறினார்கள். “அவரை நான் கொன்று விட்டால் என்ன செய்வது?” என்று கேட்டார். “அவர் நரகம் செல்வார்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:140)**

## ٢٣٦ – بابُ فضل العتق

## பாடம் : 236 - அடிமைக்கு உரிமை விடுவதன் சிறப்பு

قَالَ اللّٰهُ تَعَالَى : فَلاَ اقْتَحَمَ الْعَقَبَةَ وَمَا أَدْرَاكَ مَا الْعَقَبَةُ فَكُّ رَقَبَةٍ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அகபாவை (கணவாயை) அவன் கடக்கவில்லை. ‘அகபா’ என்றால் என்ன? என்பது (நபியே) உமக்கு தெரியுமா? அது அடிமையை விடுவித்தலாகும்....(90:11-13)*

١٣٥٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللّٰهِ ﷺ : " مَنْ أَعْتَقَ رَقَبَةً مُسْلِمَةً أَعْتَقَ اللّٰهُ بِكُلِّ عُضْوٍ مِنْهُ عُضْوًا مِنْهُ مِنَ النَّارِ حَتَّى فَرْجَهُ بِفَرْجِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1358** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“முஸ்லிமான ஓர் அடிமையை ஒருவர் உரிமை விட்டால், அந்த அடிமையின் ஒவ்வொரு உறுப்புக்கும் பகரமாக அவரின் ஒவ்வொரு உறுப்புகளையும் - அவரின் மறைவுறுப்புக்குப் பகரமாக இவரின் மறைவுறுப்பு வரை அனைத்து உறுப்புகளையும் நரகிலிருந்து அல்லாஹ் விடுதலை அளிப்பான்” என்று என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6715. முஸ்லிம்:1509)**

١٣٥٩ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللّٰهِ أَيُّ الأَعْمَالِ أَفْضَلُ ؟ قَالَ : " الأِيمَانُ بِاللّٰهِ وَالْجِهَادُ فِي سَبِيلِ اللّٰهِ " . قَالَ : قُلْت : أَيُّ الرِّقَابِ أَفْضَلُ ؟ قَالَ : " أَنْفَسُهَا عِنْدَ أَهْلِهَا وَأَكْثَرُهَا ثَمَنًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1359** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வின் தூதரிடம், “இறைத்தூதர் அவர்களே! செயல்களில் மிகச்சிறந்தது எது?” என்று நான் கேட்டேன். “அல்லாஹ்வை நம்புவது, இறைவழியில் போர் செய்வது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “எந்த அடிமையை உரிமை விடுவதில் சிறந்தது?” என்று கேட்டேன். “எவர் தன் எஜமானனிடம் மிகவும் மதிப்புள்ளவராக இருக்கிறாரோ, அவரை உரிமை விடுவதுதான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2518.முஸ்லிம்:84)**

## ٢٣٧ – بابُ فضل الإحْسَانِ إِلَى الْمملوك

## பாடம் : 237 - அடிமைகளுக்கு உபகாரம் செய்வதன் சிறப்பு!

قَالَ اللّٰهُ تَعَالَى : وَاعْبُدُوا اللّٰهَ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَبِالْوَالِدَيْنِ إِحْسَانًا وَبِذِي الْقُرْبَى وَالْيَتَامَى وَالْمَسَاكِينِ وَالْجَارِ ذِي الْقُرْبَى وَالْجَارِ الْجُنُبِ وَالصَّاحِبِ بِالْجَنْبِ وَابْنِ السَّبِيلِ وَمَا مَلَكَتْ أَيْمَانُكُمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள். பெற்றோரிகளிடமும், உறவினர்களிடமும், அனாதைகளிடமும், ஏழைகளிடமும் உறவினரான பக்கத்து வீட்டாரிடமும், நெருங்கிய வீட்டாரிடமும், நெருங்கிய நண்பர்களிடமும், வழிப்போக்கரிடமும், உங்கள் வலதுகரங்கள் உரிமை கொண்ட அடிமைகளிடமும் நீங்கள் நல்லவிதமாக (நடந்து கொள்ளுங்கள்) (4:36)*

١٣٦٠ - وَعَنْ الْمَعْرُورِ بْنِ سُوَيْدٍ قَالَ : رَأَيْتُ أَبَا ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ وَعَلَيْهِ حُلَّةٌ وَعَلَى غُلَامِهِ مِثْلُهَا فَسَأَلْتُهُ عَنْ ذَلِكَ فَذَكَرَ أَنَّهُ سَابَّ رَجُلاً عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ فَعَيَّرَهُ بِأُمِّهِ فَقَالَ النَّبِيُّ ﷺ : " إِنَّكَ امْرُؤٌ فِيكَ جَاهِلِيَّةٌ . هُمْ إِخْوَانُكُمْ وَخَوَلُكُمْ جَعَلَهُمْ اللَّهُ تَحْتَ أَيْدِيكُمْ فَمَنْ كَانَ أَخُوهُ تَحْتَ يَدِهِ فَلْيُطْعِمْهُ مِمَّا يَأْكُلُ وَلْيُلْبِسْهُ مِمَّا يَلْبَسُ وَلَا تُكَلِّفُوهُمْ مَا يَغْلِبُهُمْ . فَإِنْ كَلَّفْتُمُوهُمْ فَأَعِينُوهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1360** மஃரூர் இப்னு சுவைது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(ஒருமுறை) அபூதர் (ரழி) அவர்கள் அழகிய மேலாடை அணிந்திருக்கக் கண்டேன். அவரது ஊழியரும் அதேபோல் அழகிய மேலாடை அணிந்திருக்கக் கண்டேன். இதுபற்றி அவர்களிடம் கேட்டேன். அப்போது அவர்கள், நபி (ஸல்) அவர்கள் காலத்தில் தான் ஓர் அடிமையை ஏசியதாகவும், அவரின் தாயார் பற்றி பழித்துப் பேசியதாகவும் கூறிவிட்டு, அப்போது நபி (ஸல்) அவர்கள், "(அபூதர்ரே!) நீர் இன்னும் அறியாமைக் காலத்தவராகவே இருக்கின்றீர். அவர்கள் (அடிமைகள்) உங்களின் சகோதரர்கள் ஆவர். உங்களின் கைகளில் அல்லாஹ் அவர்களை ஒப்படைத்து உள்ளான். எனவே தனக்கு கீழ் அவருடைய சகோதரர் இருந்தால், தான் சாப்பிடுவதிலிருந்து அவருக்கு உண்ணக் கொடுக்கட்டும்! தான் உடுத்திய ஆடை போல் அவருக்கும் உடுத்தக் கொடுக்கட்டும்! அவர்களது சக்திக்கு மீறி அவர்களுக்கு வேலைகளைக் கொடுத்து அவர்களைச் சிரமப்படுத்த வேண்டாம். (ஒருவேளை) அவர்களுக்குச் சிரமமான வேலை தந்தால், அவர்களுக்குத் துணையாக நீங்களும் உதவுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூதர் (ரழி) சொன்னார்கள்.

**(புகாரி:2545. முஸ்லிம்:1661)**

١٣٦١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا أَتَى أَحَدَكُمْ خَادِمُهُ بِطَعَامِهِ فَإِنْ لَمْ يُجْلِسْهُ مَعَهُ فَلْيُنَاوِلْهُ لُقْمَةً أَوْ لُقْمَتَيْنِ أَوْ أُكْلَةً أَوْ أُكْلَتَيْنِ فَإِنَّهُ وَلِيَ عِلَاجَهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ . " الأُكْلَةُ " : بِضَمِّ الْهَمْزَةِ وَهِيَ اللُّقْمَةُ .

**1361** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவருக்கு, அவரது ஊழியர் உணவைக் கொண்டு வந்து கொடுத்ததும், அவரைத் தன்னோடு உட்கார வைக்க இயலவில்லையானால், (ஊழியரான) அவருக்கு அதில் ஒரு கவளமோ அல்லது இரண்டு கவளமோ உணவைக் கொடுத்து விடட்டும். ஏனெனில், அவர்தான் உங்களுடைய உணவைச் (சமைக்கச்) சிரமம் மேற்கொண்டார்" என்று நபி(ஸல்) கூறினார்கள். **(புகாரி:2557)**

## ٢٣٨ - باب فضل المملوك الّذي يؤدّي حقّ الله وحقّ مواليه

## பாடம் : 238 - அல்லாஹ்வின் கடமை மற்றும் தன் எஜமானின் கடமைகளை நிறைவேற்றும் அடிமையின் சிறப்பு!

١٣٦٢ - عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ الْعَبْدَ إِذَا نَصَحَ لِسَيِّدِهِ وَأَحْسَنَ عِبَادَةَ اللَّهِ فَلَهُ أَجْرُهُ مَرَّتَيْنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1362** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஓர் அடிமை தன் எஜமானுக்கு நல்லதை விரும்பி, அல்லாஹ்வை வணங்குவதிலும் அழகிய முறையில் நடந்தால், அவருக்கு இரண்டு வகை நற்கூலிகள் உண்டு” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2546. முஸ்லிம்:1664)**

١٣٦٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لِلْعَبْدِ الْمَمْلُوكِ الْمُصْلِحِ أَجْرَانِ " . وَالَّذِي نَفْسُ أَبِي هُرَيْرَةَ بِيَدِهِ لَوْلاَ الْجِهَادُ فِي سَبِيلِ اللَّهِ وَالْحَجُّ وَبِرُّ أُمِّي لأَحْبَبْتُ أَنْ أَمُوتَ وَأَنَا مَمْلُوكٌ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1363** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நல்லதை நாடும் அடிமை ஒருவருக்கு இரண்டு நற்கூலிகள் உண்டு” என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். “அபூஹுரைராவின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் வழியில் அறப்போர் செய்வதும், ஹஜ் செய்வதும், என் தாயாருக்கு பணிவிடை செய்வதும் இல்லையென்றால், நான் ஒரு அடிமையாக இருந்து இறப்பதையே விரும்புகிறேன்” என்று அபூஹுரைரா (ரழி) கூறினார்கள்.

**(புகாரி:2548. முஸ்லிம்:1665)**

١٣٦٤ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ : رَسُولُ اللَّهِ ﷺ : " الْمَمْلُوكُ الَّذِي يُحْسِنُ عِبَادَةَ رَبِّهِ وَيُؤَدِّي إِلَى سَيِّدِهِ الَّذِي عَلَيْهِ مِنَ الْحَقِّ وَالنَّصِيحَةِ وَالطَّاعَةِ لَهُ أَجْرَانِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1364** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தன் இறைவனை அழகான முறையில் வணங்கியும், நல்லது செய்து தன் எஜமானுக்கு உரிய கடமையை நிறைவேற்றியும் வருகின்ற அடிமைக்கு இரண்டு நற்கூலிகள் உண்டு” என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:2551)**

١٣٦٥ – وَعَنْهُ ) أَبِي مُوسَى الأَشْعَرِيِّ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ثَلاَثَةٌ لَهُمْ أَجْرَانِ : رَجُلٌ مِنْ أَهْلِ الْكِتَابِ آمَنَ بِنَبِيِّهِ وَآمَنَ بِمُحَمَّدٍ وَالْعَبْدُ الْمَمْلُوكُ إِذَا أَدَّى حَقَّ اللَّهِ وَحَقَّ مَوَالِيهِ وَرَجُلٌ كَانَتْ لَهُ أَمَةٌ فَأَدَّبَهَا فَأَحْسَنَ تَأْدِيبَهَا وَعَلَّمَهَا فَأَحْسَنَ تَعْلِيمَهَا ثُمَّ أَعْتَقَهَا فَتَزَوَّجَهَا فَلَهُ أَجْرَانِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1365** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மூன்று பேர்களுக்கு இரண்டு நற்கூலிகள் உண்டு. (1) தன் நபியையும், (இறுதி நபியாகிய) முஹம்மது நபி (ஸல்) அவர்களையும் நம்பிய வேதக்காரரான ஒருவர். (2)அல்லாஹ்வின் கடமைகளையும், தன் எஜமானரின் கடமைகளையும் சிறப்புற நிறைவேற்றுகின்ற ஓர் அடிமை. (3) தன் அடிமைப் பெண்ணுக்கு நல்லொழுக்கம் கற்பித்து, கல்வியையும் கற்றுத் தந்து, பின்பு அவளை உரிமைவிட்டு அவளையே திருமணம் செய்து கொள்கின்றவர்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:97. முஸ்லிம்:154)**

## ٢٣٩ – بابُ فَضْلِ الْعِبَادَةِ فِي الْهَرْجِ وهو الاختلاط والفتن ونحوها

## பாடம் : 239 - குழப்பம் நிறைந்த காலத்தில் வணக்கம் புரிவதின் சிறப்பு

١٣٦٦ – عَنْ مَعْقِلِ بْنِ يَسَارٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الْعِبَادَةُ فِي الْهَرْجِ كَهِجْرَةٍ إِلَيَّ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1366** மஃகில் இப்னு யஸார் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“குழப்பம் நிறைந்த காலத்தில் இறைவணக்கத்தில் ஈடுபடுவது, என்னிடம் (வேறு ஊர்களிலிருந்து) ஹிஜ்ரத் செய்து வருவது போலாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2948)**

## ٢٤. – بابُ فضل السّمَاحة فِي الْبَيْعِ والشراء والأخذ والعطاء، وحسن القضاء والتقاضي، وإرجاح المكيال والميزان والنّهي عن التطفيف، وفضل إنظار الموسر الْمُعْسرَ والوضع عنه

**பாடம் : 240 - விற்பது - வாங்குவது, கொடுக்கல் - வாங்கலில் மென்மையாக நடப்பதின் சிறப்பு! கடனை நிறைவேற்றுவது, கடனை அடைக்கக் கோருவது. அளவையிலும், நிறுத்தலிலும் கூடுதலாக வழங்குவது. இதில் குறைவு செய்யாதிருப்பது. வசதி உள்ளவர், வசதி இல்லாதவருக்கு அவகாசம் அளிப்பது. அவரது கடனை மன்னிப்பது.**

قَالَ اللّهُ تَعَالَى : وَمَا تَفْعَلُوا منْ خَيْرٍ فَإِنَّ اللّهَ به عَليمٌ . وَقَالَ تَعَالَى : وَيَا قَوْمِ أَوْفُوا الْمكْيَالَ وَالْميزَانَ بالْقسْط وَلاَ تَبْخَسُوا النَّاسَ أَشْيَاءَهُمْ . وَقَالَ تَعَالَى : وَيْلٌ للْمُطَفِّفينَ الّذينَ إذَا اكْتَالُوا عَلَى النَّاسِ يَسْتَوْفُونَ وَإِذَا كَالُوهُمْ أَوْ وَزَنُوهُمْ يُخْسرُونَ أَلاَ يَظُنُّ أُولَئكَ أَنَّهُمْ مَبْعُوثُونَ لِيَوْمٍ عَظِيمٍ يَوْمَ يَقُومُ النَّاسُ لِرَبِّ الْعَالَمينَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நல்லவற்றிலிருந்து எதை நீங்கள் செய்தாலும், நிச்சயமாக அல்லாஹ் அதனை நன்கு அறிந்தவனாக இருக்கிறான். (2:215)*

*(நபி ஷுஐபு (அலை) கூறினார்கள்:) " என் சமுகத்தார்களே! அளவையும், நிறுவையையும் நீதத்துடன் நிறைவு செய்யுங்கள். மக்களுக்கு அவர்களின் பொருட்களை நீங்கள் குறைக்காதீர்கள். (11:85)*

*(எடையிலும், அளவிலும்) குறைவு செய்கின்றவர்களுக்குக் கேடு உண்டாவதாக! அவர்கள் மனிதர்களிடமிருந்து அளந்து வாங்கும் போது நிறைவாக வாங்குவார்கள். அவர்களுக்குத் தாங்கள் அளந்து கொடுத்தாலும், நிறுத்துக் கொடுத்தாலும் குறைவு செய்து நட்டம் ஏற்படுத்துவார்கள். நிச்சயமாக மகத்தான (மறுமை) நாளில் எழுப்பப்படுவோம் என்பதை அவர்கள் நினைவு கொள்ளவில்லையா? அந்நாளில் அகில உலக இறைவன் முன் மனிதர்கள் நிற்பார்கள். (83:1-6)*

١٣٦٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَجُلاً أَتَى النَّبِيَّ ﷺ يَتَقَاضَاهُ فَأَغْلَظَ لَهُ فَهَمَّ به أَصْحَابُهُ فَقَالَ رَسُولُ اللّه ﷺ : " دَعُوهُ فَإِنَّ لِصَاحِبِ الْحَقِّ مَقَالاً " . ثُمَّ قَالَ : " أَعْطُوهُ سنًّا مثْلَ سنِّه " . قَالُوا : يَا رَسُولَ اللّهِ لاَ نَجدُ إلاَّ أَمْثَلَ منْ سنِّه . قَالَ : " أَعْطُوهُ فَإِنَّ خَيْرَكُمْ أَحْسَنُكُمْ قَضَاءً " . مُتَّفَقٌ عَلَيْه .

**1367** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, தன் கடனைத் திருப்பித் தரும்படிக் கேட்டு கடுமையாக நடந்து கொண்டார். நபித்தோழர்கள் அவரைத் தாக்க முயன்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள், "அவரை விட்டு விடுங்கள். (கடன் தந்த அவருக்கு) உரிமை காரணமாக ஏதாவது பேச அனுமதி உண்டு" என்று கூறிவிட்டு, பின்பு, "அவர் தந்த ஒட்டகை போன்ற ஒரு ஒட்டகையை அவருக்கு வழங்குங்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அந்த ஒட்டகையை விட மிக உயர்ந்த ஒட்டகையே எங்களிடம் உள்ளது" என்று நபித்தோழர்கள் கூறினர். "அதையே கொடுங்கள். நிச்சயமாக உங்களில் சிறந்தவர்; அழகிய முறையில் கடனை நிறைவேற்றுபவரே!" என்று கூறினார்கள்.

**(புகாரி:2306. முஸ்லிம்:1601)**

١٣٦٨ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّهِ ﷺ قَالَ : " رَحِمَ اللّهُ رَجُلاً سَمْحًا إذَا بَاعَ وَإِذَا اشْتَرَى وَإِذَا اقْتَضَى " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1368** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“விற்கும் போதும், வாங்கும் போதும், கடனை வசூலிக்கும் போதும் மென்மையாக நடக்கும் மனிதருக்கு அல்லாஹ் அருள் புரிவானாக!” என்று நபி (ஸல்) அவர்கள் துஆச் செய்தார்கள். **(புகாரி:2076)**

١٣٦٩ – وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ سَرَّهُ أَنْ يُنْجِيَهُ اللَّهُ مِنْ كَرْبِ يَوْمِ الْقِيَامَةِ فَلْيُنَفِّسْ عَنْ مُعْسِرٍ أَوْ يَضَعْ عَنْهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1369** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மறுமை நாளின் சிரமங்களை விட்டும் அல்லாஹ் தம்மைக் காப்பாற்றிட விரும்புகின்றவர், (தம்மிடம் கடன் பெற்ற) ஏழைக்கு கால அவகாசம் அளிக்கட்டும்! அல்லது அவருக்கு விட்டுக் கொடுத்து (அந்த கடனை தள்ளுபடி செய்து) விடட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1563)**

١٣٧٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ قَالَ : " كَانَ رَجُلٌ يُدَايِنُ النَّاسَ وَكَانَ يَقُولُ لِفَتَاهُ : إِذَا أَتَيْتَ مُعْسِرًا فَتَجَاوَزْ عَنْهُ لَعَلَّ اللَّهَ أَنْ يَتَجَاوَزَ عَنَّا فَلَقِيَ اللَّهَ فَتَجَاوَزَ عَنْهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1370** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் மக்களுக்குக் கடன் வழங்குபவராக இருந்தார். அவர் தன் ஊழியரிடம், “கடன் பெற்று திருப்பி செலுத்த முடியாமல் சிரமப்படுபவரிடம் நீர் சென்றால், அவருடைய கடனை தள்ளுபடி செய்து விடுவீராக! இதனால் அல்லாஹ் நம்மை விட்டும் நம் பாவங்களைத் தள்ளுபடி செய்துவிடக் கூடும்” என்று கூறினார். (மரணத்திற்குபின்) அவர் அல்லாஹ்வை சந்தித்தபோது, அவரை விட்டும் அவரின் பாவங்களை அல்லாஹ் தள்ளுபடி செய்துவிட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2078, முஸ்லிம்:1562)**

١٣٧١ – وَعَنْ أَبِي مَسْعُودٍ الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " حُوسِبَ رَجُلٌ مِمَّنْ كَانَ قَبْلَكُمْ فَلَمْ يُوجَدْ لَهُ مِنْ الْخَيْرِ شَيْءٌ إِلاَّ أَنَّهُ كَانَ يُخَالِطُ النَّاسَ وَكَانَ مُوسِرًا وَكَانَ يَأْمُرُ غِلْمَانَهُ أَنْ يَتَجَاوَزُوا عَنْ الْمُعْسِرِ . قَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ : نَحْنُ أَحَقُّ بِذَلِكَ مِنْهُ ; تَجَاوَزُوا عَنْهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1371** அபூமஸ்வூத் அல்பத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில் ஒருவரிடம் (மறுமை நாளில்) கேள்வி-கணக்கு கேட்கப்படும். அப்போது அவரிடம் நன்மை எதுவும் இருக்காது. ஆனால், அவர் மக்களிடம் கொடுக்கல் -வாங்கல் செய்து கொண்டு, வசதியாக வாழ்ந்து வந்தார். (அத்தோடு) துன்பப்படுவோருக்கு கடனை தள்ளுபடி செய்திட, தன் ஊழியர்களுக்கு கட்டளையிட்டு இருந்தார். (இதன் காரணமாக, மறுமை நாளில்) “தள்ளுபடி செய்வதில் இவரை விட நானே அதிகத் தகுதி வாய்ந்தவன். ஆகவே, (மலக்குகளே!) அவரின் பாவங்களை தள்ளுபடி செய்யுங்கள்” என அல்லாஹ் கூறுவான் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1561)**

١٣٧٢ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أُتِيَ اللَّهُ تَعَالَى بِعَبْدٍ مِنْ عِبَادِهِ آتَاهُ اللَّهُ مَالاً فَقَالَ لَهُ : مَاذَا عَمِلْت فِي الدُّنْيَا ؟ – قَالَ : وَلاَ يَكْتُمُونَ اللَّهَ حَدِيثًا – قَالَ : يَا رَبِّ آتَيْتَنِي مَالَكَ فَكُنْتُ أُبَايِعُ النَّاسَ وَكَانَ مِنْ خُلُقِي الْجَوَازُ فَكُنْت أَتَيَسَّرُ عَلَى الْمُوسِرِ وَأُنْظِرُ الْمُعْسِرَ . فَقَالَ اللَّهُ تَعَالَى : " أَنَا أَحَقُّ بِذَا مِنْك . تَجَاوَزُوا عَنْ عَبْدِي " . فَقَالَ عُقْبَةُ بْنُ عَامِرٍ وَأَبُو مَسْعُودٍ الأَنْصَارِيُّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا : هَكَذَا سَمِعْنَاهُ مِنْ فِي رَسُولِ اللَّهِ ﷺ . رَوَاهُ مُسْلِمٌ .

**1372** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ் தன் அடியார்களில் ஒரு அடியாருக்கு செல்வத்தை வழங்கி இருந்தான். அவரிடம் (மறுமையில்), "உலகில் என்ன அமல் செய்தாய்?" என்று கேட்பான். அல்லாஹ்விடம் எவரும் எதையும் மறைக்க மாட்டார்கள். அவன், "இறைவா! எனக்கு உன் செல்வத்தை வழங்கி இருந்தாய். அதன் மூலம் மக்களிடம் வியாபாரம் செய்து கொண்டிருந்தேன். கொடை (தர்மம்) வழங்குவது, என் குணத்தில் இருந்தது. வசதியானவர்களிடம் இலகுவாக நடந்து கொண்டேன். துன்பப்பட்டவனுக்கு கால அவகாசம் அளித்தேன்!" என்று கூறுவார். அப்போது அல்லாஹ், "உன்னை விட நான் கொடையளிப்பவன். ஆகவே (மலக்குகளே!) என் அடியாரின் (பாவங்களை) தள்ளுபடி செய்யுங்கள்" என்று கூறுவான்.

உக்பா இப்னு ஆமிர் (ரழி), அபூமஸ்வூத் அன்சாரீ (ரழி) இருவரும், "இவ்விதமாகவே நபி (ஸல்) அவர்கள் கூற நாங்கள் கேட்டோம்" என்று கூறினர். **(முஸ்லிம்:1560)**

١٣٧٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ أَنْظَرَ مُعْسِرًا أَوْ وَضَعَ لَهُ أَظَلَّهُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ تَحْتَ ظِلِّ عَرْشِهِ يَوْمَ لاَ ظِلَّ إِلاَّ ظِلُّهُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1373** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சிரமப்படும் கடனாளிக்கு அவகாசம் அளித்தால் அல்லது அவரது கடனைத் தள்ளுபடி செய்தால் அவருக்கு அல்லாஹ் மறுமை நாளில் தன் அர்ஷுக்குக் கீழே நிழல் அளிப்பான். அந்நாளில் அவனது நிழலைத் தவிர வேறு எந்த நிழலும் இருக்காது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1306. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٧٤ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ اشْتَرَى مِنْهُ بَعِيرًا فَوَزَنَ لَهُ فَأَرْجَحَ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1374** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஓர் ஆண் ஒட்டகையை என்னிடம் விலைக்கு வாங்கினார்கள். அதற்கான கிரயத்தை (காசுகளை) நிறுத்துக் கொடுத்தார்கள். அப்போது சற்றுக் கூடுதலாகவே நிறுத்துக் கொடுத்தார்கள். **(புகாரி:2604. முஸ்லிம்:715)**

١٣٧٥ - وَعَنْ أَبِي صَفْوَانَ سُوَيْدِ بْنِ قَيْسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَلَبْتُ أَنَا وَمَخْرَمَةُ الْعَبْدِيُّ بَزًّا مِنْ هَجَرَ فَجَاءَنَا النَّبِيُّ ﷺ فَسَاوَمَنَا بِسَرَاوِيلَ وَعِنْدِي وَزَّانٌ يَزِنُ بِالأَجْرِ فَقَالَ النَّبِيُّ ﷺ لِلْوَزَّانِ : " زِنْ وَأَرْجِحْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1375** அபூஸஃப்வான் சுவைத் இப்னு கைஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நானும், மக்ரமதுல் அப்தீ என்பவரும் "ஹஜர்" என்ற இடத்திலிருந்து துணிமணிகளை வாங்கி வந்து விற்பனை செய்து வந்தோம். அப்போது எங்களிடம் வந்த நபி (ஸல்) அவர்கள் ஒரு கால்சட்டையை எங்களிடம் வாங்கினார்கள். எங்களுக்கு அருகில் கூலிக்கு (தானியங்கள் மற்றும் பேரீத்தம் பழங்களை) எடை போடுபவர் நிறுத்துக் கொண்டிருந்தார். அப்போது அந்த எடை போடுபவரிடம் நபி (ஸல்) அவர்கள், "நீர் நிறுப்பீராக! (இதைக்) கூடுதலாக நிறுத்துத் தருவீராக!" என்று கூறினார்கள். **(அபூதாவூது:3336. திர்மிதீ:1305. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

# அத்தியாயம் 12

## கல்வி

## ٢٤١ - بابُ فضل العلم تعلمًا وتعليمًا الله تعالى

## பாடம் : 241 - கல்வியின் சிறப்பு

قَالَ اللّهُ تَعَالَى : وَقُلْ رَبِّ زِدْنِي عِلْمًا . وَقَالَ تَعَالَى : قُلْ هَلْ يَسْتَوِي الَّذِينَ يَعْلَمُونَ وَالَّذِينَ لاَ يَعْلَمُونَ . وَقَالَ تَعَالَى : يَرْفَعِ اللّهُ الَّذِينَ آمَنُوا مِنْكُمْ وَالَّذِينَ أُوتُوا الْعِلْمَ دَرَجَاتٍ . وَقَالَ تَعَالَى : إِنَّمَا يَخْشَى اللّهَ مِنْ عِبَادِهِ الْعُلَمَاءُ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவா! கல்வியை எனக்கு அதிகமாக்குவாயாக! என்று (நபியே) நீர் கூறுவீராக! (20:114)*

*அறிந்தவர்களும், அறியாதவர்களும் சமமாவார்களா? என (நபியே) நீர் கூறுவீராக! (39:9)*

*உங்களில் இறை நம்பிக்கையாளர்களுக்கும், அறிவுடையோருக்கும் பல பதவிகளை அல்லாஹ் வழங்குவான். (58:11)*

*அல்லாஹ்வை அவனது அடியார்களில் அஞ்சுவோர் அறிஞர்கள்தான். (35:28)*

١٣٧٦ - وَعَنْ مُعَاوِيَةَ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قَالَ : رَسُولُ اللّهِ ﷺ : " مَنْ يُرِدْ اللّهُ بِهِ خَيْرًا يُفَقِّهْهُ فِي الدِّينِ " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1376** முஆவியா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ் ஒருவருக்கு நல்லதை நாடிவிட்டால், மார்க்க விஷயத்தில் (தீனில்) அவரை அறிஞராக்குவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:71. முஸ்லிம்:1037)**

١٣٧٧ - وَعَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّهِ ﷺ : " لاَ حَسَدَ إِلاَّ فِي اثْنَتَيْنِ : رَجُلٌ آتَاهُ اللّهُ مَالاً فَسَلَّطَهُ عَلَى هَلَكَتِهِ فِي الْحَقِّ وَرَجُلٌ آتَاهُ اللّهُ الْحِكْمَةَ فَهُوَ يَقْضِي بِهَا وَيُعَلِّمُهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَالْمُرَادُ بِالْحَسَدِ الْغِبْطَةُ وَهُوَ أَنْ يَتَمَنَّى مِثْلَهُ .

**1377** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இருவர் விஷயத்திலே தவிர பொறாமை கூடாது. (1) அல்லாஹ் செல்வத்தை வழங்கி, அதை உரிய வழியில் செலவு செய்பவர். (2) அல்லாஹ் அறிவு ஞானத்தை வழங்கி, அதன் மூலம் தீர்ப்பளித்து, பிறருக்கும் கற்றுத் தருபவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:73. முஸ்லிம்:816)**

١٣٧٨ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " مَثَلُ مَا بَعَثَنِي اللّهُ بِهِ مِنْ الْهُدَى وَالْعِلْمِ كَمَثَلِ غَيْثٍ أَصَابَ أَرْضًا : فَكَانَتْ مِنْهَا طَائِفَةٌ طَيِّبَةٌ قَبِلَتْ الْمَاءَ فَأَنْبَتَتْ الْكَلأَ وَالْعُشْبَ الْكَثِيرَ وَكَانَ مِنْهَا أَجَادِبُ أَمْسَكَتْ الْمَاءَ فَنَفَعَ اللّهُ بِهَا النَّاسَ فَشَرِبُوا مِنْهَا وَسَقَوْا وَزَرَعُوا وَأَصَابَ طَائِفَةً مِنْهَا أُخْرَى إِنَّمَا هِيَ قِيعَانٌ : لاَ تُمْسِكُ مَاءً وَلاَ تُنْبِتُ كَلأً فَذَلِكَ مَثَلُ مَنْ فَقُهَ فِي دِينِ اللّهِ وَنَفَعَهُ مَا بَعَثَنِي اللّهُ بِهِ فَعَلِمَ وَعَلَّمَ ؛ وَمَثَلُ مَنْ لَمْ يَرْفَعْ بِذَلِكَ رَأْسًا ; وَلَمْ يَقْبَلْ هُدَى اللّهِ الَّذِي أُرْسِلْتُ بِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1378** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நேர்வழி மற்றும் கல்வி ஞானம் ஆகியவற்றுடன் என்னை அல்லாஹ் அனுப்பி வைத்ததற்கு உதாரணம், பூமியை வந்தடைந்த மழையின் உதாரணம் போலாகும். அதில் ஒரு பகுதித் தண்ணீரை ஏற்றுக் கொண்டு, செடி-கொடிகளை அதிக அளவில் விளையச் செய்கிறது. தண்ணீரை தேக்கி வைத்து,

அதன்மூலம் மக்களுக்கு பயனளித்த கெட்டியான பூமியாக உள்ளது. மக்களும் அதிலிருந்து குடித்தார்கள். (கால்நடைகளுக்கும்) குடிக்கக் கொடுத்தார்கள். விவசாயம் செய்தார்கள். அந்த பூமியின் மற்றொரு பகுதி, கட்டாந்தரையாகும். அது தண்ணீரையும் தேக்கி வைக்காது. செடிகளையும் முளைக்கச் செய்யாது. இதில் முதல் உதாரணம், அல்லாஹ்வின் மார்க்கத்தை விளங்கி, அல்லாஹ் என்னை அனுப்பி வைத்த மார்க்கம் மூலம் பயன் அளித்து, (அதாவது) தானும் கற்று, பிறருக்கும் கற்றுக் கொடுத்தவனுக்குரிய உதாரணமாகும். (கட்டாந்தரைக்கு உதாரணம்) மார்க்கத்தின் பக்கம் தன் தலையைக் கூட திருப்பாமல், அல்லாஹ் என்னை எதன் மூலம் அனுப்பினானோ, அந்த வழியை ஒப்புக் கொள்ளாமல் இருப்பவனுக்கு உதாரணமாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:79. முஸ்லிம்:2282)**

١٣٧٩ - وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ لِعَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ : " فَوَاللَّهِ لأَنْ يَهْدِيَ اللَّهُ بِكَ رَجُلاً وَاحِدًا خَيْرٌ لَكَ مِنْ حُمْرِ النَّعَمِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1379** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், அலீ (ரழி) அவர்களிடம், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ் உம் மூலம் ஒருவனுக்கு நேர்வழி காட்டுவது, சிவப்பு நிற ஒட்டகைகள் உம்மிடம் இருப்பதை விட சிறந்ததாகும்'' என்று கூறினார்கள். **(புகாரி:421. முஸ்லிம்:2406)**

١٣٨٠ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " بَلِّغُوا عَنِّي وَلَوْ آيَةً وَحَدِّثُوا عَنْ بَنِي إِسْرَائِيلَ وَلاَ حَرَجَ وَمَنْ كَذَبَ عَلَيَّ مُتَعَمِّدًا فَلْيَتَبَوَّأْ مَقْعَدَهُ مِنَ النَّارِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1380** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சிறிய செய்தியாயினும், என்னைப் பற்றி மக்களுக்கு எடுத்துக் கூறுங்கள். பனீ இஸ்ரவேலர்கள் பற்றி எடுத்துக் கூறுங்கள். குற்றமில்லை. என் மீது வேண்டுமென்றே பொய் கூறினால், அவர் தம் ஒதுங்குமிடத்தை நரகமாக ஆக்கிக் கொள்ளட்டும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3461)**

١٣٨١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " وَمَنْ سَلَكَ طَرِيقًا يَلْتَمِسُ فِيهِ عِلْمًا سَهَّلَ اللَّهُ لَهُ طَرِيقًا إِلَى الْجَنَّةِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1381** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கல்வியைத் தேடும் வழியில் ஒருவர் நடந்தால், அவருக்கு அல்லாஹ், சொர்க்கத்தின் பாதையை இலகுவாக்குகிறான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2699)**

١٣٨٢ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَيْضًا رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ دَعَا إِلَى هُدًى كَانَ لَهُ مِنَ الأَجْرِ مِثْلُ أُجُورِ مَنْ تَبِعَهُ لاَ يَنْقُصُ ذَلِكَ مِنْ أُجُورِهِمْ شَيْئًا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1382** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நேர்வழியின் பக்கம் ஒருவர் அழைத்தால், அதைப் பின்பற்றுவோருக்குக் கிடைப்பது போன்ற நற்கூலி, அழைத்தவருக்கும் கிடைக்கும். இது, அவர்களின் (பின்பற்றுவோரின்) நற்கூலிகளில் எதையும் குறைத்து விடாது'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2674)**

١٣٨٣ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا مَاتَ ابْنُ آدَمَ انْقَطَعَ عَمَلُهُ إِلاَّ مِنْ ثَلاَثٍ : صَدَقَةٍ جَارِيَةٍ أَوْ عِلْمٍ يُنْتَفَعُ بِهِ أَوْ وَلَدٍ صَالِحٍ يَدْعُو لَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1383** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதமின் மகன் (மனிதன்) இறந்துவிட்டால் மூன்றைத் தவிர மற்ற செயல்கள் எல்லாம் முடிந்து விடும். (1) தொடர்ந்து நன்மை தரும் ஜகாத் (2) இவர் மூலம் பயன் பெறப்படும் கல்வி (3) அவருக்காக துஆச் செய்யும் நல்ல குழந்தை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1631)**

١٣٨٤ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : سَمِعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ : " الدُّنْيَا مَلْعُونَةٌ مَلْعُونٌ مَا فِيهَا إلاَّ ذِكْرَ اللَّه تَعَالَى وَمَا وَالاَهُ وَعَالِمًا أَوْ مُتَعَلِّمًا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . قَوْلُهُ " وَمَا وَالاَهُ " : أَيْ طَاعَةُ اللَّه تَعَالَى .

**1384** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இவ்வுலகம் சபிக்கப்பட்டதாகும். அதில் உள்ளவைகளும் சபிக்கப்பட்டவைகளாகும். ஆனால் அல்லாஹ்வை நினைவு கூர்தல் மற்றும் அதைச் சார்ந்தவை, அறிஞர் அல்லது கற்றுக் கொள்பவர் ஆகியவற்றைத் தவிர" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2322. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٨٥ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ خَرَجَ فِي طَلَبِ الْعِلْمِ فَهُوَ فِي سَبِيلِ اللَّهِ حَتَّى يَرْجِعَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1385** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் கல்வியை தேடிச் சென்றால், அவர் திரும்பி வரும் வரை அல்லாஹ்வின் வழியில் உள்ளவராவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2647. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٨٦ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " لَنْ يَشْبَعَ مُؤْمِنٌ مِنْ خَيْرٍ حَتَّى يَكُونَ مُنْتَهَاهُ الْجَنَّةَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1386** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் இறைநம்பிக்கையாளர், சொர்க்கத்தை அடையும் வரை, அவர் நல்ல காரியங்களில் (நன்மை பெறுவதில்) திருப்தியடைய மாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2686. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٨٧ - وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " فَضْلُ الْعَالِمِ عَلَى الْعَابِدِ كَفَضْلِي عَلَى أَدْنَاكُمْ " . ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ اللَّهَ وَمَلاَئِكَتَهُ وَأَهْلَ السَّمَوَاتِ وَالأَرْضِ حَتَّى النَّمْلَةَ فِي جُحْرِهَا وَحَتَّى الْحُوتَ لَيُصَلُّونَ عَلَى مُعَلِّمِي النَّاسِ الْخَيْرَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1387** அபூ உமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு வணக்கசாலியை விட ஓர் அறிஞரின் சிறப்பு, உங்களில் சாதாரண தோழரை விட என் சிறப்பு போலாகும்" என்று நபி (ஸல்) கூறிவிட்டு, "நிச்சயமாக அல்லாஹ் மக்களுக்கு நல்லதை போதிக்கும் ஒருவருக்கு அருள் புரிகின்றான். மேலும் இவருக்காக அவனது வானவர்களும், வானம், பூமியில் உள்ளோரும், கூட்டில் உள்ள எறும்புகள் உட்பட, நீரில் உள்ள மீன்கள் உட்பட (அவருக்காக அருள்புரிய வேண்டி) பிரார்த்தனை செய்கின்றனர்" என்றும் கூறினார்கள்.

**(திர்மிதீ:2685. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٨٨ – وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ سَلَكَ طَرِيقًا يَبْتَغِي فِيهِ عِلْمًا سَهَّلَ اللَّهُ لَهُ طَرِيقًا إِلَى الْجَنَّةِ . وَإِنَّ الْمَلاَئِكَةَ لَتَضَعُ أَجْنِحَتَهَا لِطَالِبِ الْعِلْمِ رِضًى بِمَا صَنَعَ وَإِنَّ الْعَالِمَ لَيَسْتَغْفِرُ لَهُ مَنْ فِي السَّمٰوَاتِ وَمَنْ فِي الأَرْضِ حَتَّى الْحِيتَانُ فِي الْمَاءِ ! وَفَضْلُ الْعَالِمِ عَلَى الْعَابِدِ كَفَضْلِ الْقَمَرِ عَلَى سَائِرِ الْكَوَاكِبِ وَإِنَّ الْعُلَمَاءَ وَرَثَةُ الأَنْبِيَاءِ وَإِنَّ الأَنْبِيَاءَ لَمْ يُوَرِّثُوا دِينَارًا وَلاَ دِرْهَمًا وَإِنَّمَا وَرَّثُوا الْعِلْمَ فَمَنْ أَخَذَهُ أَخَذَ بِحَظٍّ وَافِرٍ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ.

**1388** அபூதர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“கல்வியைத் தேடும் வழியில் ஒருவர் நடந்தால், சொர்க்கத்தின் வழியை அவருக்கு அல்லாஹ் இலேசாக்குகிறான். நிச்சயமாக வானவர்கள், கல்வி கற்பவருக்காக அவரின் செயலை திருப்தி அடைந்து தன் இறக்கைகளை பூமியில் வைக்கின்றனர். நிச்சயமாக, ஓர் அறிஞனுக்காக வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்கள் மற்றும் தண்ணீரில் உள்ள மீன்கள் உட்பட பாவமன்னிப்புக் கேட்கின்றன. வணக்கசாலியை விட ஒரு அறிஞனின் சிறப்பு, மற்ற நட்சத்திரங்களை விட சந்திரனின் சிறப்பு போலாகும். மேலும் அறிஞர்கள் என்போர், நபிமார்களின் வாரிசுகளாவர். மேலும் நபிமார்கள், தங்ககாசுகளையோ, வெள்ளிக்காசுகளையோ வாரிசாக விட்டுச் செல்லவில்லை. அவர்கள் விட்டுச் சென்றதெல்லாம் அறிவு ஞானத்தையே! அதை எடுத்துக் கொண்டவர், பெரும் நற்பங்கை எடுத்துக் கொண்டவராவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:3641. திர்மிதீ:2682)**

١٣٨٩ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " نَضَّرَ اللَّهُ امْرَأً سَمِعَ مِنَّا شَيْئًا فَبَلَّغَهُ كَمَا سَمِعَهُ فَرُبَّ مُبَلَّغٍ أَوْعَى مِنْ سَامِعٍ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1389** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நம்மிடமிருந்து எதையேனும் கேட்டு, அதைக் கேட்டபடியே எடுத்துச் சொல்லுபவருக்கு அல்லாஹ் செழிப்பைத் தருவானாக! பிறரால் (செய்தி) கூறப்பட்டவர்கள், கேட்பவரை விட (பின்பற்றுவதில்) பேணுதல் மிக்கவர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2657. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٩٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ سُئِلَ عَنْ عِلْمٍ فَكَتَمَهُ أُلْجِمَ يَوْمَ الْقِيَامَةِ بِلِجَامٍ مِنْ نَارٍ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1390** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவரிடம் (கல்வியைப் பற்றி) கேள்வி கேட்கப்பட்டு, அதை அவர் (அறிந்த பின்பும்) மறைத்தால், மறுமை நாளில் அவருக்கு நெருப்பிலான கடிவாளம் போடப்படும்” என்று நபி (ஸல்) கூறி னார்கள். **(அபூதாவூது:3658. திர்மிதீ:2649. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٣٩١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ تَعَلَّمَ عِلْمًا مِمَّا يُبْتَغَى بِهِ وَجْهُ اللَّهِ عَزَّ وَجَلَّ لاَ يَتَعَلَّمُهُ إِلاَّ لِيُصِيبَ بِهِ عَرَضًا مِنَ الدُّنْيَا لَمْ يَجِدْ عَرْفَ الْجَنَّةِ يَوْمَ الْقِيَامَةِ – يَعْنِي رِيحَهَا – " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1391** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வின் திருப்தியைப் பெற்றுத் தருகின்ற கல்வியை, உலக ஆதாயத்தை அடைந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் ஒருவர் கற்றுக் கொண்டால், மறுமை நாளில் சொர்க்கத்தின் வாடையைக் கூட அவர் பெற்றுக் கொள்ளமாட்டார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:3664)**

١٣٩٢ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ اللَّهَ لاَ يَقْبِضُ الْعِلْمَ انْتِزَاعًا يَنْتَزِعُهُ مِنَ النَّاسِ وَلَكِنْ يَقْبِضُ الْعِلْمَ بِقَبْضِ الْعُلَمَاءِ . حَتَّى إِذَا لَمْ يُبْقِ عَالِمًا اتَّخَذَ النَّاسُ رُءُوسًا جُهَّالاً ; فَسُئِلُوا فَأَفْتَوْا بِغَيْرِ عِلْمٍ فَضَلُّوا وَأَضَلُّوا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1392** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக அல்லாஹ், மக்களிடமிருந்து முற்றிலுமாக கல்வி அறிவைக் கைப்பற்றி விட மாட்டான். எனினும், அறிஞர்களை கைப்பற்றுவதன் மூலம் (அவர்களை மரணிக்கச் செய்வதன் மூலம்) கல்வி அறிவைக் கைப்பற்றுவான். இறுதியாக எந்த அறிஞரும் இல்லை என்றாகிவிட்டால் மக்கள் மடையர்களைத் தலைவர்களாக எடுத்துக் கொள்வார்கள். அவர்களிடம் (நியாயம்) கேட்கப்பட்டால், அறிவின்றி (தங்கள் இஷ்டத்திற்கு) தீர்ப்புக் கூறுவார்கள். இதனால், அவர்களும் வழிகெட்டு, பிறரையும் வழி கெடுப்பார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:100. முஸ்லிம்:2673)**

# அத்தியாயம் : 13

## அல்லாஹ்வை புகழ்தல், அவனுக்கு நன்றி செலுத்துதல்

## ٢٤٢ - بابُ وجوب الشكر

### பாடம் : 242 - அல்லாஹ்வை புகழ்தல், அவனுக்கு நன்றி கூறுவதன் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى : فَاذْكُرُونِي أَذْكُرْكُمْ وَاشْكُرُوا لِي وَلاَ تَكْفُرُون . وَقَالَ تَعَالَى : لَئِنْ شَكَرْتُمْ لأَزِيدَنَّكُمْ . وَقَالَ تَعَالَى : وَقُلِ الْحَمْدُ لِلَّهِ . وَقَالَ تَعَالَى : وَآخِرُ دَعْوَاهُمْ أَنِ الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *என்னை நினைவு கூருங்கள். நான் உங்களை நினைவுகூருகிறேன். நீங்கள் எனக்கு நன்றி செலுத்துங்கள். எனக்கு மாறு செய்யாதீர்கள். (2:152)*

*நீங்கள் நன்றி செலுத்தினால், நான் உங்களுக்கு அதிகப்படுத்துவேன். (14:7)*

*‘அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்’ என (நபியே) நீர் கூறுவீராக! (17:111)*

*அவர்களின் பிரார்த்தனையின் கடைசிவார்த்தை, “அகில உலகத்தின் அதிபதியான அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!” என்ற வார்த்தையாகும். (10:10)*

١٣٩٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ أُتِيَ لَيْلَةَ أُسْرِيَ بِهِ بِقَدَحَيْنِ مِنْ خَمْرٍ وَلَبَنٍ فَنَظَرَ إِلَيْهِمَا فَأَخَذَ اللَّبَنَ . فَقَالَ جِبْرِيلُ : الْحَمْدُ لِلَّهِ الَّذِي هَدَاكَ لِلْفِطْرَةِ .لَوْ أَخَذْتَ الْخَمْرَ غَوَتْ أُمَّتُكَ ! رَوَاهُ مُسْلِمٌ.

**1393** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் “மிஃராஜ்”க்காக அழைத்துச் செல்லப்பட்டபோது மது, பால் ஆகியவை உள்ள இரண்டு கோப்பைகள் அவர்கள் முன் கொண்டு வரப்பட்டது. அவ்விரண்டையும் பார்த்த அவர்கள், பாலைத் தேர்ந்தெடுத்தார்கள். அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்கள், “இயற்கையான சூழலின் பக்கம் உமக்கு வழி காட்டிய அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்! நீர் மதுவைத் தேர்ந்தெடுத்து இருந்தால், உம் சமுதாயத்தினர் வழிகெட்டிருப்பர்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:168)**

١٣٩٤ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " كُلُّ أَمْرٍ ذِي بَالٍ لاَ يُبْدَأُ فِيهِ بِالْحَمْدِ لِلَّهِ فَهُوَ أَقْطَعُ " . حَدِيثٌ حَسَنٌ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَغَيْرُهُ .

**1394** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்ஹம்துலில்லாஹ்" என்று கூறப்படாமல் துவங்கப்பட்ட ஒவ்வொரு காரியமும், வீணானவையாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4840. இதில் குர்ரா இப்னு அப்துர் ரஹ்மான் அல்மஹாஃபிரி என்ற பலவீனர் இடம் பெறுவதால் பலவீனமானதாகும்)**

١٣٩٥ - وَعَنْ أَبِي مُوسَى الأشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:"إِذَا مَاتَ وَلَدُ الْعَبْدِ قَالَ اللَّهُ تَعَالَى لِمَلائِكَتِه : قَبَضْتُمْ وَلَدَ عَبْدِي ؟ فَيَقُولُونَ: نَعَمْ فَيَقُولُ : قَبَضْتُمْ ثَمَرَةَ فُؤَاده ؟ فَيَقُولُونَ: نَعَمْ. فَيَقُولُ:فَمَاذَا قَالَ عَبْدِي ؟ فَيَقُولُونَ : حَمِدَكَ وَاسْتَرْجَعَ. فَيَقُولُ اللَّهُ تَعَالَى: ابْنُوا لِعَبْدِي بَيْتًا فِي الْجَنَّةِ وَسَمُّوهُ بَيْتَ الْحَمْدِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ.

**1395** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு அடியானின் குழந்தை இறந்துவிட்டால், அல்லாஹ் தன் வானவர்களிடம், "என் அடியானின் குழந்தையைக் கைப்பற்றி விட்டீர்களா?" என்று கேட்பான். "ஆம்" என்று அவர்கள் கூறுவார்கள். "என் அடியானின் இதயக்கனியை கைப்பற்றி விட்டீர்களா?" என்று மீண்டும் கேட்பான். வானவர்கள், "ஆம்" என்பார்கள். "என் அடியான் என்ன கூறினான்?" என்று கேட்பான். "உன்னை அவர் புகழ்ந்தார். 'இஸ்திராஜ்' கூறினார்" என்று கூறுவார்கள். உடனே அல்லாஹ், "சொர்க்கத்தில் என் அடியானுக்காக ஒரு வீட்டைக் கட்டுங்கள். அதற்கு "பைத்துல் ஹம்த்" ('புகழுக்குரிய வீடு') என, பெயரிடுங்கள்" என்பான். **(திர்மிதீ:1021. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

**குறிப்பு : "இஸ்திராஜ்" என்பது "இன்னாலில்லாஹி வஇன்னா இலய்ஹி ராஜிஊன்" என்பதாகும்.**

**பொருள்: "நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். நாம் அவனிடமே திரும்புவோம்" என்பதாகும்.**

١٣٩٦ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ اللَّهَ رَضِيَ عَنْ الْعَبْدِ يَأْكُلُ الأَكْلَةَ فَيَحْمَدُهُ عَلَيْهَا وَيَشْرَبُ الشَّرْبَةَ فَيَحْمَدُهُ عَلَيْهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1396** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் அடியான் உணவைச் சாப்பிட்டு, அதற்காக அல்லாஹ்வைப் புகழ்கிறான். மேலும் தண்ணீர் குடித்துவிட்டு அதற்காக அல்லாஹ்வைப் புகழ்கிறான். இந்த அடியானைக் கண்டு அல்லாஹ் திருப்தியடைகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2734)**

# அத்தியாயம் - 14

## நபி (ஸல்) அவர்களுக்காக பிரார்த்திப்பது

## ٢٤٣ - بَابُ الأمر بالصلاة عليه وفضلها وبعض صيغها

## பாடம் : 243 - நபி (ஸல்) அவர்களுக்காக பிரார்த்திப்பதின் சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ اللَّهَ وَمَلائِكَتَهُ يُصَلُّونَ عَلَى النَّبِيِّ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوا تَسْلِيمًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக அல்லாஹ்வும், வானவர்களும் நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் கூறுகின்றார்கள். இறைவிசுவாசிகளே! நபி (ஸல்) அவர்கள் மீது நீங்களும் ஸலவாத் கூறுங்கள். ஸலாமும் கூறுங்கள். (33:56)*

(குறிப்பு: அல்லாஹ், ஸலவாத் கூறுவ்து என்பது, அவன் அவர்களுக்கு அருள் புரிகின்றான் என்பதாகும். வானவர்களும், முஃமின்களும் ஸலவாத் கூறுவது என்பது, அவர்களுக்காக பிரார்த்தனை செய்வதாகும்)

١٣٩٧ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ صَلَّى عَلَيَّ صَلاَةً صَلَّى اللَّهُ عَلَيْهِ بِهَا عَشْرًا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1397** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(நபியாகிய) என்மீது ஒருவர் ஒருமுறை "ஸலவாத்" கூறினால், அவர் மீது அல்லாஹ் பத்து முறை "ஸலவாத்" கூறுகின்றான். (தன் அருட்கொடைகளை பொழிகின்றான்)" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:384)**

١٣٩٨ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَوْلَى النَّاسِ بِي يَوْمَ الْقِيَامَةِ أَكْثَرُهُمْ عَلَيَّ صَلاَةً " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1398** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் என்னிடம் மக்களில் மிக நெருக்கமானவர்கள், என்மீது "ஸலவாத்" அதிகமாகக் கூறியவர்கள்தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:484. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٣٩٩ – وَعَنْ أَوْسِ بْنِ أَوْسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ مِنْ أَفْضَلِ أَيَّامِكُمْ يَوْمَ الْجُمُعَةِ فَأَكْثِرُوا عَلَيَّ مِنَ الصَّلاَةِ فِيهِ فَإِنَّ صَلاَتَكُمْ مَعْرُوضَةٌ عَلَيَّ " . قَالُوا : يَا رَسُولَ اللَّهِ وَكَيْفَ تُعْرَضُ صَلاَتُنَا عَلَيْكَ وَقَدْ أَرِمْتَ ؟ ) قَالَ يَقُولُ : بَلِيتَ ( قَالَ : " إِنَّ اللَّهَ حَرَّمَ عَلَى الأَرْضِ أَجْسَادَ الأَنْبِيَاءِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1399** அவ்ஸ் இப்னு அவ்ஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாட்களில் மிகச்சிறந்தது வெள்ளிக்கிழமையாகும். எனவே அன்று என்மீது ஸலவாத் அதிகமாகக் கூறுங்கள். நிச்சயமாக! உங்களின் ஸலவாத், என்னிடம் எடுத்துக் காண்பிக்கப்படுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! நீங்கள் மண்ணோடு மண்ணான நிலையில் எங்களின் ஸலவாத் எப்படி எடுத்துக் காண்பிக்கப்படும்" என்று நபித்தோழர்கள் கேட்டனர். "நிச்சயமாக நபிமார்களின் உடல்களை (சாப்பிட) பூமிக்கு அல்லாஹ் தடை செய்துவிட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:1047)**

١٤٠٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " رَغِمَ أَنْفُ رَجُلٍ ذُكِرْتُ عِنْدَهُ فَلَمْ يُصَلِّ عَلَيَّ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1400** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என்னைப் பற்றி ஒருவரிடம் கூறப்பட்டு, அப்போது என் மீது "ஸலவாத்" கூறாதவரின் மூக்கு உடைபடட்டுமாக! (நாசமாகட்டுமாக!)" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3545. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٤٠١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَجْعَلُوا قَبْرِي عِيدًا وَصَلُّوا عَلَيَّ فَإِنَّ صَلاَتَكُمْ تَبْلُغُنِي حَيْثُ كُنْتُمْ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1401** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் புதைகுழியை (கப்ரை) விழா கொண்டாடும் இடமாக ஆக்கிக் கொள்ளாதீர்கள். என் மீது ஸலவாத் கூறுங்கள். நிச்சயமாக! உங்களின் ஸலவாத், நீங்கள் எங்கு இருந்தாலும் என்னை வந்து சேரும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2042)**

١٤٠٢ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَا مِنْ أَحَدٍ يُسَلِّمُ عَلَيَّ إلاَّ رَدَّ اللَّهُ عَلَيَّ رُوحِي حَتَّى أَرُدَّ عَلَيْهِ السَّلاَمَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1402** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என்மீது எவர் ஸலாம் கூறினாலும், அவருக்கு நான் பதில் ஸலாம் கூறுவதற்காக என் உயிரை (பேச்சை) என்னிடம் அல்லாஹ் திருப்பித்தராமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2041)**

١٤٠٣ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الْبَخِيلُ مَنْ ذُكِرْتُ عِنْدَهُ فَلَمْ يُصَلِّ عَلَيَّ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1403** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"யாரிடம் என் பெயர் கூறப்பட்டும், அவர் என்மீது ஸலவாத் கூறவில்லையோ, அவர் கஞ்சன் ஆவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3546. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٤٠٤ – وَعَنْ فَضَالَةَ بْنِ عُبَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعَ رَسُولُ اللَّهِ ﷺ رَجُلاً يَدْعُو فِي صلاَتِه وَلَمْ يَحْمَدْ اللَّهَ تَعَالَى وَلَمْ يُصَلِّ عَلَى النَّبِيِّ ﷺ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " عَجِلَ هَذَا " . ثُمَّ دَعَاهُ فَقَالَ لَهُ – أَوَ لِغَيْرِهِ – : " إِذَا صَلَّى أَحَدُكُمْ فَلْيَبْدَأْ بِتَحْمِيدِ رَبِّهِ سُبْحَانَهُ وَالثَّنَاءِ عَلَيْهِ ثُمَّ يُصَلِّي عَلَى النَّبِيِّ ﷺ ثُمَّ يَدْعُو بَعْدُ بِمَا شَاءَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالاَ : حَدِيثٌ صَحِيحٌ .

**1404** ஃபழாலா இப்னு உபைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் தன் துஆவின் போது அல்லாஹ்வைப் புகழாமல், நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் கூறாமல் துஆச் செய்து கொண்டிருந்ததை நபி (ஸல்) அவர்கள் கேள்விப்பட்டார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் அவரை அழைத்து அவரிடமோ அல்லது மற்றவரிடமோ, "உங்களில் ஒருவர் துஆச் செய்தால் முதலில் தன் இறைவனைப் புகழ ஆரம்பிக்கட்டும். பின்பு என் மீது ஸலவாத் கூறட்டும்! பின்னர் தான் விரும்பியதை அல்லாஹ்விடம் துஆ கேட்கட்டும்" என்று கூறினார்கள்.

**(அபூதாவூது:1481. திர்மிதீ:3477. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٤٠٥ – وَعَنْ أَبِي مُحَمَّدٍ كَعْبِ بْنِ عُجْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : خَرَجَ عَلَيْنَا النَّبِيُّ ﷺ فَقُلْنَا : يَا رَسُولَ اللَّهِ قَدْ عَلِمْنَا كَيْفَ نُسَلِّمُ عَلَيْكَ فَكَيْفَ نُصَلِّي عَلَيْكَ ؟ قَالَ : " قُولُوا : اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ . اللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1405** அபூ முஹம்மத் கஅப் இப்னு உஜ்ரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது நாங்கள், "இறைத்தூதர் அவர்களே! உங்களுக்கு ஸலாம் எப்படிக் கூறுவது? என்பதை நாங்கள் அறிவோம். ஆனால் உங்கள் மீது எப்படி ஸலவாத் கூறுவது?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "அல்லாஹும்ம ஸல்லி அலா

முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின், கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்ராஹிம இன்னக்க ஹமீதுன் மஜீத் அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா ஆலி இப்ராஹிம இன்னக்க ஹமீதுன் மஜீத்'' என கூறுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:4797. முஸ்லிம்:406)**

**ஸலவாத்தின் பொருள் : இறைவா! இப்ராஹிம் நபியின் குடும்பத்தார் மீது நீ அருள் புரிந்தது போல், நபி(ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் குடும்பத்தார் மீதும் அருள் புரிவாயாக! நிச்சயமாக நீ புகழுக்குரியவன். தகுதிக்குரியவன் ஆவாய். மேலும் இறைவா! இப்ராஹிம் நபியின் குடும்பத்தார் மீது நீ பரக்கத் (அபிவிருத்தி) செய்தது போல, நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ பரக்கத் செய்வாயாக! நீயே புகழுக்குரியவன், தகுதிக்குரியவன் ஆவாய்.**

١٤٠٦ – وَعَنْ أَبِي مَسْعُود الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أَتَانَا رَسُولُ اللَّه ﷺ وَنَحْنُ فِي مَجْلِسِ سَعْد بْن عُبَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ فَقَالَ لَهُ بَشِيرُ بْنُ سَعْد : أَمَرَنَا اللَّهُ أَنْ نُصَلِّيَ عَلَيْكَ يَا رَسُولَ اللَّه فَكَيْفَ نُصَلِّي عَلَيْكَ ؟ فَسَكَتَ رَسُولُ اللَّه ﷺ حَتَّى تَمَنَّيْنَا أَنَّهُ لَمْ يَسْأَلْهُ ثُمَّ قَالَ رَسُولُ اللَّه ﷺ : " قُولُوا : اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّد وَعَلَى آل مُحَمَّد كَمَا صَلَّيْت عَلَى إِبْرَاهِيمَ وَبَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْت عَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّك حَمِيدٌ مَجِيدٌ وَالسَّلَامُ كَمَا قَدْ عَلِمْتُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1406** அபூ மஸ்ஊது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸஃது இப்னு உபாதா (ரழி) அவர்களின் அவையில் நாங்கள் இருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அவர்களிடம் பஷீர் இப்னு ஸஃது (ரழி) அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! உங்கள் மீது ஸலவாத் கூற எங்களுக்கு அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான். நாங்கள் எப்படி ஸலவாத் கூறுவது?'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் எந்த பதிலும் கூறாமல் அமைதியாக இருந்தார்கள். எந்த அளவிற்கெனில், அவர் இதை (இப்பொழுது) கேட்காமல் இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்குமே! என நாங்கள் எண்ணும் அளவிற்கு. பின்பு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்றாஹிம வபாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த அலாஆலி இப்ராஹிம இன்னக்க ஹமீதுன் மஜீத்'' என்று கூறுங்கள். ஸலாம் கூறுவது என்பது, நீங்கள் அறிந்தது போல்தான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:405)**

١٤٠٧ – وَعَنْ أَبِي حُمَيْد السَّاعِديِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالُوا : يَا رَسُولَ اللَّه كَيْفَ نُصَلِّي عَلَيْكَ ؟ قَالَ : " قُولُوا : اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّد وَعَلَى أَزْوَاجه وَذُرِّيَّته كَمَا صَلَّيْت عَلَى إِبْرَاهِيمَ وَبَارِكْ عَلَى مُحَمَّد وَعَلَى أَزْوَاجه وَذُرِّيَّته كَمَا بَارَكْت عَلَى إِبْرَاهِيمَ إِنَّك حَمِيدٌ مَجِيدٌ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1407** அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! உங்கள் மீது ஸலவாத் கூறுவது எப்படி?'' என்று நபித்தோழர்கள் கேட்டனர். "அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா அஸ்வாஜிஹி, வஃதுர்ரியதிஹி, கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்ராஹிம வபாரிக் அலா முஹம்மதின் வஅலா அஸ்வாஜிஹி வஃதுர்ரியத்திஹி கமா பாரக்த அலா ஆலி இப்ராஹிம இன்னக்க ஹமீதுன் மஜீத்'' என்று கூறுங்கள் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3369. முஸ்லிம்:407)**

**குறிப்பு : ஹதீஸ் எண் - 1406-இல் "அவர்களின் குடும்பத்தார் மீது" என்ற வாசகத்திற்கு பதிலாக மேற்கண்ட ஹதீஸில் "அவர்களின் மனைவியர் மற்றும் வாரிசுகள் மீது" என்று உள்ளது.**

# அத்தியாயம் : 15

## நினைவு கூர்தல் (ஃதிக்ரு)

## ٢٤٤ - بابُ فضل الذكر والحثّ عَلَيْه

## பாடம் : 244 - ஃதிக்ரின் சிறப்பு, அதற்காக ஆர்வ மூட்டுதல்!

قَالَ اللَّهُ تَعَالَى : وَلَذكْرُ اللَّه أَكْبَرُ . وَقَالَ تَعَالَى : فَاذْكُرُونِي أَذْكُرْكُمْ . وَقَالَ تَعَالَى : وَاذْكُرْ رَبَّكَ في نَفْسكَ تَضَرُّعًا وَخيفَةً وَدُونَ الْجَهْرِ منَ الْقَوْلِ بالْغُدُوِّ وَالأصَال وَلاَ تَكُنْ منَ الْغَافلينَ . وَقَالَ تَعَالَى : وَاذْكُرُوا اللَّهَ كَثيرًا لَعَلَّكُمْ تُفْلحُونَ . وَقَالَ تَعَالَى : إنَّ الْمُسْلمينَ وَالْمُسْلمَات إلَى قَوْله تَعَالَى : وَالذَّاكرينَ اللَّهَ كَثيرًا وَالذَّاكرَات أَعَدَّ اللَّهُ لَهُمْ مَغْفرَةً وَأَجْرًا عَظيمًا . وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الَّذينَ آمَنُوا اذْكُرُوا اللَّهَ ذكْرًا كَثيرًا وَسَبِّحُوهُ بُكْرَةً وَأَصيلاً الآيَةَ . وَالآيَاتُ في الْبَاب كَثيرَةٌ مَعْلُومَةٌ .

அல்லாஹ் கூறுகிறான்: *"அல்லாஹ்வை நினைவுகூர்தல், மிகப்பெரிய (நன்மை) ஆகும்" (29:45)*

*"என்னை நீங்கள் நினைவுகூருங்கள். நான் உங்களை நினைவுகூர்வேன்" (2:152)*

*"(நபியே!) காலையிலும் - மாலையிலும், பணிவாக, அமைதியாக, உரத்த சப்தமின்றி உம் மனதிற்குள்ளே உம் இறைவனை நினைவுகூர்வீராக! பொடுபோக்காளர்களில் ஒருவராக நீர் ஆகிவிடாதீர்" (7:205)*

*நீங்கள் வெற்றி பெறுவதற்காக, அதிகமாக அல்லாஹ்வை நினைவுகூருங்கள். (62:10)*

*நிச்சயமாக முஸ்லிமான ஆண்களும்-முஸ்லிமான பெண்களும், முஃமினான ஆண்களும்-முஃமினான பெண்களும், (அல்லாஹ்வுக்கு) கட்டுப்படும் ஆண்களும்-கட்டுப்படும் பெண்களும், உண்மை பேசும் ஆண்களும்-உண்மை பேசும் பெண்களும், பொறுமையான ஆண்களும்-பொறுமையான பெண்களும், (அல்லாஹ்வை) அஞ்சி நடக்கும் ஆண்களும்-அஞ்சி நடக்கும் பெண்களும், தர்மம் செய்யும் ஆண்களும்-தர்மம் செய்யும் பெண்களும், நோன்பு வைக்கும் ஆண்களும்-நோன்பு வைக்கும் பெண்களும், மறைவுறுப்பை (விபச்சாரத்தை விட்டும் கற்பை) பாதுகாக்கும் ஆண்களும்-மறைவுறுப்பை பாதுகாக்கும் பெண்களும், அல்லாஹ்வை நினைவுகூரும் ஆண்களும்-அல்லாஹ்வை நினைவுகூரும் பெண்களும் இவர்களுக்கு மன்னிப்பையும், பெரும் நற்கூலியையும் அல்லாஹ் தயார் செய்து வைத்துள்ளான். (33:35)*

*இறை விசுவாசிகளே! அல்லாஹ்வை அதிகமாக நினைவுகூருங்கள். காலையிலும், மாலையிலும் அவனைப் புகழுங்கள். (33:41-42)*

மேலும் இந்தப் பாடத்திற்குத் தகுந்த அறிமுகமான பல வசனங்கள் உள்ளன.

١٤٠٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " كَلمَتَان خَفيفَتَان عَلَى اللِّسَان ثَقيلَتَان في الْميزَان حَبيبَتَان إلَى الرَّحْمَنِ : سُبْحَانَ اللَّه وَبحَمْده سُبْحَانَ اللَّه الْعَظيم " . مُتَّفَقٌ عَلَيْه .

**1408** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு வார்த்தைகள் உண்டு. அவை நாவிற்கு (கூற) எளிதானது. ஆனால், மீஸான் தராசில் (நன்மையால்) கனமானதும், இறைவனுக்கு மிக விருப்பமானதும் ஆகும். அவை (1) சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி, (2) சுப்ஹானல்லாஹில் அளீம்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7563. முஸ்லிம்:2694)**

**துஆவின் பொருள்: 1) அல்லாஹ்வைப் புகழ்வதுடன் அவனைத் தூய்மையானவன் எனப் போற்றுகிறேன். 2) மகத்தான அல்லாஹ்வைத் தூய்மையானவன் எனப் போற்றுகிறேன்.**

١٤٠٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لأَنْ أَقُولَ : سُبْحَانَ اللَّهِ ; وَالْحَمْدُ لِلَّهِ ; وَلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَاللَّهُ أَكْبَرُ أَحَبُّ إِلَيَّ مِمَّا طَلَعَتْ عَلَيْهِ الشَّمْسُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1409** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சுப்ஹானல்லாஹி, வல்ஹம்து லில்லாஹி, வலாயிலாஹ இல்லல்லாஹு, வல்லாஹு அக்பர்" என்று நான் கூறுவது, சூரியன் எதன் மீது உதிக்கிறதோ (பூமி மற்றும் பூமியில் கிடைக்கும் பொருட்களைவிட) அதனைவிட எனக்கு மிக விருப்பமானதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(முஸ்லிம்:2695)**

**துஆவின் பொருள் : அல்லாஹ் தூய்மையானவன். அவனுக்கே புகழ் அனைத்தும். வணக்கத்திற் குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அல்லாஹ்வே மிகப் பெரியவன்!**

١٤١٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ فِي يَوْمٍ مِائَةَ مَرَّةٍ كَانَتْ لَهُ عَدْلَ عَشْرِ رِقَابٍ وَكُتِبَتْ لَهُ مِائَةُ حَسَنَةٍ وَمُحِيَتْ عَنْهُ مِائَةُ سَيِّئَةٍ وَكَانَتْ لَهُ حِرْزًا مِنْ الشَّيْطَانِ يَوْمَهُ ذَلِكَ حَتَّى يُمْسِيَ وَلَمْ يَأْتِ أَحَدٌ بِأَفْضَلَ مِمَّا جَاءَ بِهِ إِلاَّ رَجُلٌ عَمِلَ أَكْثَرَ مِنْهُ " . وَقَالَ مَنْ قَالَ : " سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ فِي يَوْمٍ مِائَةَ مَرَّةٍ حُطَّتْ خَطَايَاهُ وَإِنْ كَانَتْ مِثْلَ زَبَدِ الْبَحْرِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1410** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர், "லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷய்இன் கதீர்" என்று ஒரு நாளைக்கு நூறு தடவை கூறினால், பத்து அடிமைகளை உரிமை விட்ட நன்மை அவருக்கு உண்டு. அவருக்கு 100 நன்மைகள் எழுதப்படும். அவரை விட்டும் 100 தீமைகள் அழிக்கப்படும். அந்நாளில் மாலை வரை, ஷைத்தானை விட்டும் அவருக்குப் பாதுகாப்பு வழங்கப்படும். அவரை விட அதிகமாக நற்செயல் செய்தவரைத் தவிர, வேறு எவரும் இவர் கொண்டு வந்ததைவிட மிகச்சிறந்த ஒன்றை கொண்டு வந்தவராக இருக்கமாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். மேலும், "சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி" என்று ஒரு நாளில் நூறு தடவை கூறினால், அவரின் குற்றங்கள் கடல் நுரை அளவுக்கு இருந்தாலும் மன்னிக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:6403, 6405. முஸ்லிம்:2691)**

**துஆவின் பொருள்: "வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வை தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் எவரும் இல்லை. அவனுக்கே ஆட்சி அதிகாரம் உண்டு. அவனுக்கே புகழ் அனைத்தும். அவனே அனைத்தின் மீதும் ஆற்றல் உள்ளவன்"**

١٤١١ – وَعَنْ أَبِي أَيُّوبَ الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ قَالَ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ عَشْرَ مَرَّاتٍ كَانَ كَمَنْ أَعْتَقَ أَرْبَعَةَ أَنْفُسٍ مِنْ وَلَدِ إِسْمَاعِيلَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1411** அபூ அய்யூப் அல் அன்சாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷய்இன் கதீர்" என்று ஒருவர் 10 தடவை கூறினால், இஸ்மாயில் நபியின் வாரிசுகளைச் சேர்ந்த நான்கு அடிமைகளை விடுதலை செய்தவர் போலாவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி:6404. முஸ்லிம்:2693)**

١٤١٢ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ – قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " أَلاَ أُخْبِرُكَ بِأَحَبِّ الْكَلاَمِ إِلَى اللَّهِ ؟ إِنَّ أَحَبَّ الْكَلاَمِ إِلَى اللَّهِ : سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ " رَوَاهُ مُسْلِمٌ .

**1412** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்விற்கு மிக விருப்பமான சொல்லை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? நிச்சயமாக! அல்லாஹ்விற்கு மிகப் பிரியமான வார்த்தை, ‘சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி’ என்பதாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2731)**

١٤١٣ – وَعَنْ أَبِي مَالِكٍ الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الطُّهُورُ شَطْرُ الأِيمَانِ وَالْحَمْدُ لِلَّهِ تَمْلأُ الْمِيزَانَ وَسُبْحَانَ اللَّهِ وَالْحَمْدُ لِلَّهِ تَمْلآنِ – أَوْ تَمْلأُ – مَا بَيْنَ السَّمَوَاتِ وَالأَرْضِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1413** அபூமாலிக் அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சுத்தமாக இருப்பது, இறை நம்பிக்கையில் சரிபாதியாகும். “அல்ஹம்துலில்லாஹ்” கூறி அல்லாஹ்வைப் புகழ்வது, (மறுமை) தராசை நிரப்பும். “சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ்” கூறுவது, வானங்கள் மற்றும் பூமிக்கு நடுவில் உள்ள இடைவெளியை நிரப்பும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:223)**

١٤١٤ – وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ أَعْرَابِيٌّ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : عَلِّمْنِي كَلاَمًا أَقُولُهُ. قَالَ:" قُلْ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ اللَّهُ أَكْبَرُ كَبِيرًا وَالْحَمْدُ لِلَّهِ كَثِيرًا وَسُبْحَانَ اللَّهِ رَبِّ الْعَالَمِينَ وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ الْعَزِيزِ الْحَكِيمِ " . قَالَ : فَهَؤُلاَءِ لِرَبِّي فَمَا لِي ؟ قَالَ : " قُلْ : اللَّهُمَّ اغْفِرْ لِي وَارْحَمْنِي وَاهْدِنِي وَارْزُقْنِي " . رَوَاهُ مُسْلِمٌ.

**1414** ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு கிராமவாசி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, “நான் கூறிக் கொள்ள ஒரு வார்த்தையை எனக்குக் கற்றுத் தாருங்கள்” என்று கேட்டார். அதற்கு அவர்கள், “லாயிலாஹ இல்லல்லாஹ் வஹ்தஹு, லாஷரீகலஹு அல்லாஹு அக்பர் கபீரன், வல்ஹம்துலில்லாஹி கதீரன், வ சுப்ஹானல்லாஹி ரப்பில் ஆலமீன், வலாஹவ்ல வலாகுவ்வத்த இல்லாபில்லாஹில் அஸீஸில் ஹகீம் (1) என கூறு” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கு அவர், “இவை என் இறைவனுக்குரியதாகும். எனக்குரியது என்ன?” என்று கேட்டார். “அல்லாஹும்ம மஃபிர்லீ, வர்ஹம்னீ, வஹ்தினீ, வர்சுக்னீ (2) என கூறுவீராக!” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2696)**

**துஆவின் பொருள் (1) : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவனுக்கு இணையானவன் இல்லை. அல்லாஹ்வே மிகப் பெரியவன். புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே! அகிலத்தின் இறைவனாகிய அல்லாஹ்வையே தூய்மைப்படுத்துகிறேன். கண்ணியமானவனும், நுண்ணறிவாளனுமான அல்லாஹ்வைத் தவிர வேறு சக்தியோ, திரும்புதலோ இல்லை.**

**துஆவின் பொருள் (2) : இறைவா! என்னை மன்னிப்பாயாக! எனக்கு அருள் புரிவாயாக! எனக்கு நேர்வழி காட்டுவாயாக! எனக்கு செல்வமளிப்பாயாக!**

١٤١٥ – وَعَنْ ثَوْبَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا انْصَرَفَ مِنْ صَلاَتِهِ اسْتَغْفَرَ ثَلاَثًا وَقَالَ : " اللَّهُمَّ أَنْتَ السَّلاَمُ وَمِنْكَ السَّلاَمُ تَبَارَكْتَ يَا ذَا الْجَلاَلِ وَالأِكْرَامِ " . قِيلَ لِلأَوْزَاعِيِّ وَهُوَ أَحَدُ رُوَاةِ الْحَدِيثِ كَيْفَ الاسْتِغْفَارُ ؟ قَالَ : يَقُولُ : أَسْتَغْفِرُ اللَّهَ أَسْتَغْفِرُ اللَّهَ . رَوَاهُ مُسْلِمٌ .

**1415** ஸவ்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்ததும் மூன்று முறை “இஸ்திஃக்ஃபார்” கூறிவிட்டு, “அல்லாஹும்ம அன்தஸ் ஸலாம், வமின்கஸ் ஸலாம், தபாரக்த யாஃதல் ஜலாலி வல்இக்ராம்” என்றும் கூறுவார்கள்.

**துஆவின் பொருள் : இறைவா! நீயே அமைதி ஆவாய். உன்னிடமிருந்தே அமைதி ஏற்படுகிறது. மதிப்பும், கண்ணியமும் உள்ளவனே! நீ உயர்ந்து விட்டாய்.**

இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான அல்அவ்ஸாயீ அவர்களிடம், “இஸ்திஃக்ஃபார் என்பது எப்படி?” என்று கேட்கப்பட்டது. “அஸ்தஃக்ஃபிருல்லாஹ்’ ‘அஸ்தஃக்ஃபிருல்லாஹ்’ (நான் அல்லாஹ்விடம் பிழை பொறுக்கத் தேடுகிறேன். நான் அல்லாஹ்விடம் பிழை பொறுக்கத் தேடுகிறேன்) என கூறுவதாகும்” என்று அவர்கள் பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:591)**

١٤١٦ – وَعَنْ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا فَرَغَ مِنْ الصَّلَاةِ وَسَلَّمَ قَالَ : " لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ : اللَّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْت وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1416** முகீரா இப்னு ஷுஅபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தொழுகைகைய முடித்துக் கொண்டு விட்டால், “லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு, லஹுல் முல்கு வலஹுல் ஹம்து, வஹுவ அலாகுல்லி ஷய்இன்கதீர். அல்லாஹும்ம லாமானிஅ லிமா அஃதய்த்த வலா முஃதிய லிமா மனஃத, வலா யன்ஃபஉஃதல் ஜத்தி மின்கல் ஜத்து” என்று கூறுவார்கள். **(புகாரி:844. முஸ்லிம்:593)**

**துஆவின் பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை துணை இல்லை. அவனுக்கே ஆட்சி! அவனுக்கே புகழ் அனைத்தும். அவனே அனைத்தின் மீது ஆற்றல் உடையவன். இறைவா! நீ கொடுப்பதை தடுப்பவன் இல்லை. நீ தடுப்பதை கொடுக்கக் கூடியவன் இல்லை. உன்னிடமிருந்துள்ள பாக்கியத்தை (உன் மூலம் அன்றி) எந்த பாக்கியவானும் அடைந்திட இயலாது.**

١٤١٧ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ الزُّبَيْرِ أَنَّهُ كَانَ يَقُولُ دُبُرَ كُلِّ صَلَاةٍ حِينَ يُسَلِّمُ : " لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ . لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَلاَ نَعْبُدُ إِلاَّ إِيَّاهُ لَهُ النِّعْمَةُ وَلَهُ الْفَضْلُ وَلَهُ الثَّنَاءُ الْحَسَنُ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ مُخْلِصِينَ لَهُ الدِّينَ وَلَوْ كَرِهَ الْكَافِرُونَ " . قَالَ ابْنُ الزُّبَيْرِ : وَكَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُهَلِّلُ بِهِنَّ دُبُرَ كُلِّ صَلَاةٍ . رَوَاهُ مُسْلِمٌ .

**1417** அப்துல்லாஹ் இப்னு சுபைர் (ரழி) பற்றி அறிவிக்கப்படுகிறது:

ஸலாம் கொடுத்ததும் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் இப்னு சுபைர் (ரழி) அவர்கள் “லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷய்இன் கதீர் லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ், லாயிலாஹ இல்லல்லாஹு, வலா நஃபுது இல்லா இய்யாஹு லஹுன் நிஃமது வலஹுல் ஃபழ்லு, வலஹுத்தனாஉல் ஹஸன், லாயிலாஹ இல்லல்லாஹு முக்லிசீன லஹுத்தீன வலவ் கரிஹல் காஃபிரூன்” என்று கூறுவார்கள்.

“ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் நபி (ஸல்) அவர்கள் இவற்றை ஓதுவார்கள்” என்று இப்னு சுபைர் (ரழி) கூறுகின்றார்கள். **(முஸ்லிம்:594)**

துஆவின் பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு கடவுள் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு அனைத்தும் உண்டு. அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் மிக்கவன் ஆவான். அல்லாஹ்வின் மூலமே தவிர சக்தியோ, திரும்புதலோ இல்லை. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவனையின்றி எவரையும் நாம் வணங்க மாட்டோம். அருட்கொடைகளும் அல்லாஹ்வுக்கே உரியன. அவனுக்கே சிறப்பு உண்டு. அவனுக்கு அழகிய புகழ் உண்டு. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. இறைமறுப்பாளர்கள் வெறுத்தாலும், அவனுக்கு மட்டுமே வழிபடுதலை சொந்தமாக்குபவர்களாக நாம் உள்ளோம்.

١٤١٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ فُقَرَاءَ الْمُهَاجِرِينَ أَتَوْا رَسُولَ اللَّهِ ﷺ فَقَالُوا : ذَهَبَ أَهْلُ الدُّثُورِ بِالدَّرَجَاتِ الْعُلَى وَالنَّعِيمِ الْمُقِيمِ : يُصَلُّونَ كَمَا نُصَلِّي وَيَصُومُونَ كَمَا نَصُومُ ; وَلَهُمْ فَضْلٌ مِنْ أَمْوَالٍ . يَحُجُّونَ وَيَعْتَمِرُونَ وَيُجَاهِدُونَ وَيَتَصَدَّقُونَ . فَقَالَ : " أَلاَ أُعَلِّمُكُمْ شَيْئًا تُدْرِكُونَ بِهِ مَنْ سَبَقَكُمْ وَتَسْبِقُونَ بِهِ مَنْ بَعْدَكُمْ وَلاَ يَكُونُ أَحَدٌ أَفْضَلَ مِنْكُمْ إِلاَّ مَنْ صَنَعَ مِثْلَ مَا صَنَعْتُمْ ؟ " قَالُوا : بَلَى يَا رَسُولَ اللَّهِ قَالَ : " تُسَبِّحُونَ وَتَحْمَدُونَ وَتُكَبِّرُونَ خَلْفَ كُلِّ صَلاَةٍ ثَلاَثًا وَثَلاَثِينَ " . قَالَ أَبُو صَالِحٍ الرَّاوِي عَنْ أَبِي هُرَيْرَةَ : لَمَّا سُئِلَ عَنْ كَيْفِيَّتِهِ قَالَ : " يَقُولُ : سُبْحَانَ اللَّهِ وَالْحَمْدُ لِلَّهِ وَاللَّهُ أَكْبَرُ حَتَّى يَكُونَ مِنْهُنَّ كُلُّهُنَّ ثَلاَثًا وَثَلاَثِينَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَزَادَ مُسْلِمٌ فِي رِوَايَتِهِ : فَرَجَعَ فُقَرَاءُ الْمُهَاجِرِينَ إِلَى رَسُولِ اللَّهِ ﷺ فَقَالُوا : سَمِعَ إِخْوَانُنَا أَهْلُ الأَمْوَالِ بِمَا فَعَلْنَا فَفَعَلُوا مِثْلَهُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ذَلِكَ فَضْلُ اللَّهِ يُؤْتِيهِ مَنْ يَشَاءُ " . " الدُّثُورُ " جَمْعُ دَثْرٍ – بِفَتْحِ الدَّالِ وَإِسْكَانِ الثَّاءِ الْمُثَلَّثَةِ – وَهُوَ الْمَالُ الْكَثِيرُ .

**1418** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மக்காவாசிகளான ஏழைகள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். "வசதியானவர்கள் உயர்வான தகுதிகளையும், நிலையான அருட்கொடைகளையும் பெற்றுக் கொண்டனர். நாங்கள் தொழுவது போலவே அவர்களும் தொழுகிறார்கள். நாங்கள் நோன்பு வைப்பது போலவே அவர்களும் நோன்பு வைக்கிறார்கள். (ஆனால்) அவர்களுக்கு செல்வம் அதிகம் உண்டு. (இதனால்) ஹஜ் செய்கின்றனர், உம்ரா செய்கின்றனர், ஜிஹாத் செய்கின்றனர், தர்மம் கொடுக்கின்றனர் (எங்களுக்கு அவ்வாறு முடியவில்லையே?)" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உங்களுக்கு முந்திச் சென்றோரை ஒரு செயல் மூலம் நீங்கள் அடைவீர்கள். உங்களுக்கு பிந்தி விட்டவரை அதன் மூலம் முந்துவீர்கள். மேலும் நீங்கள் செய்வது போல் செய்கின்றவரைத் தவிர வேறு எவரும் உங்களை விடச் சிறந்தவராக ஆக முடியாது. அப்படிப்பட்ட செயலை உங்களுக்கு கூறட்டுமா?" என்று கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! கூறுங்கள்" என்றனர். "ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் நீங்கள், 33 தடவை 'சுப்ஹானல்லாஹ்' (தஸ்பீஹ்) கூறுங்கள். 33 தடவை 'அல்ஹம்துலில்லாஹ்' (தஸ்மீது) கூறுங்கள். 33 தடவை 'அல்லாஹு அக்பர்' (தக்பீர்) கூறுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளரில் ஒருவரான அபூஸாலிஹ் என்பார், அபூஹுரைரா (ரழி) அவர்களிடம், "அவற்றின் திக்ரு முறை எப்படி?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அபூஹுரைரா அவர்கள், "சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், அல்லாஹு அக்பர் என்று ஒவ்வொன்றையும் 33 தடவை கூறுவதாகும்" என்று கூறினார்கள். **(புகாரி:843. முஸ்லிம்:595)**

பிறகு மீண்டும் நபி (ஸல்) அவர்களிடம் மக்காவாசிகளான ஏழைகள் வந்தார்கள். "எங்களின் சகோதரர்களான பணக்காரர்கள் நாங்கள் செய்வது பற்றி கேள்விப்பட்டு, அதுபோலவே செய்கின்றார்கள்" என்று கூறினார்கள். "இது அல்லாஹ்வின் அருட்கொடை. அல்லாஹ், தான் விரும்பியோருக்கு அதை கொடுப்பான்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(முஸ்லிம்)**

١٤١٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ سَبَّحَ اللَّهَ فِي دُبُرِ كُلِّ صَلَاةٍ ثَلَاثًا وَثَلَاثِينَ وَحَمِدَ اللَّهَ ثَلَاثًا وَثَلَاثِينَ وَكَبَّرَ اللَّهَ ثَلَاثًا وَثَلَاثِينَ وَقَالَ تَمَامَ الْمِائَةِ : لَا إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ غُفِرَتْ خَطَايَاهُ وَإِنْ كَانَتْ مِثْلَ زَبَدِ الْبَحْرِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1419** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் 33 தடவை சுப்ஹானல்லாஹ், 33 தடவை அல்ஹம்துலில்லாஹ், 33 தடவை அல்லாஹு அக்பர் என்று ஒருவர் கூறிவிட்டு, 100-வது தடவையாக "லாயிலாஹ இல்லல்லாஹ் வஹ்தஹு லா ஷரீக லஹு லஹுல்முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலாகுல்லி ஷய்இன் கதீர்" என்று கூறினால், அவரின் குற்றங்கள் கடல் நுரை அளவுக்கு இருந்தாலும் மன்னிக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:597)**

١٤٢٠ – وَعَنْ كَعْبِ بْنِ عُجْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " مُعَقِّبَاتٌ لَا يَخِيبُ قَائِلُهُنَّ أَوْ فَاعِلُهُنَّ : دُبُرَ كُلِّ صَلَاةٍ مَكْتُوبَةٍ ثَلَاثًا وَثَلَاثِينَ تَسْبِيحَةً وَثَلَاثًا وَثَلَاثِينَ تَحْمِيدَةً وَأَرْبَعًا وَثَلَاثِينَ تَكْبِيرَةً " . رَوَاهُ مُسْلِمٌ .

**1420** கஅபு இப்னு உஜ்ரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கடமையான தொழுகைக்குப்பின் கூறப்படும் சில சொற்கள் உண்டு. அவற்றைக் கூறுபவர் நஷ்டமடைய மாட்டார். அவை 33 தடவை சுப்ஹானல்லாஹ், 33 தடவை அல்ஹம்துலில்லாஹ், 34 தடவை அல்லாஹு அக்பர் எனக் கூறுவதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:596)**

١٤٢١ – وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَتَعَوَّذُ دُبُرَ الصَّلَوَاتِ بِهَؤُلَاءِ الْكَلِمَاتِ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْجُبْنِ وَالْبُخْلِ وَأَعُوذُ بِكَ مِنْ أَنْ أُرَدَّ إِلَى أَرْذَلِ الْعُمُرِ وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الْقَبْرِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1421** ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் ஜுப்னி, வல்புக்லி, வஅஊது பிக மின் அன் உரத்த இலா அர்தலில் உமுரி, வஅஊஃது பிக மின் ஃபித்னதித்துன்யா, வஅஊதுபிக மின் ஃபித்னதில் கப்ரி" என்ற இந்த வார்த்தைகளால் நபி (ஸல்) அவர்கள் தொழுகைகளுக்குப் பின் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுவார்கள். **(புகாரி:6370)**

**துஆவின் பொருள்: இறைவா! கோழைத்தனத்தையும், கஞ்சத்தனத்தையும் விட்டு உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். நீண்ட தள்ளாத வயதின் பக்கம் நான் நீடிக்கப்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். உலக குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். கப்ரின் வேதனையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٢٢ – وَعَنْ مُعَاذٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَخَذَ بِيَدِهِ وَقَالَ : " يَا مُعَاذُ وَاللَّهِ إِنِّي لَأُحِبُّكَ " فَقَالَ : " أُوصِيكَ يَا مُعَاذُ لَا تَدَعَنَّ فِي دُبُرِ كُلِّ صَلَاةٍ تَقُولُ : اللَّهُمَّ أَعِنِّي عَلَى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ.

**1422** முஆத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஆதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம்மை நான் நேசிக்கிறேன். முஆதே! "அல்லாஹும்ம அஇன்னீ அலா திக்ரிக, வஷுக்ரிக, வஹுஸ்னி இபாததிக்க" என்று ஒவ்வொரு தொழுகைக்குப் பின் நீர் கூறுவதை விட்டு விட வேண்டாம் என உமக்கு உபதேசிக்கிறேன்" என்று என் கையைப் பிடித்துக் கொண்டு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(அபூதாவூது:1522)**

**துஆவின் பொருள் : இறைவா! உன்னை நினைவு கூரவும், உனக்கு நன்றி கூறவும், உனக்கு அழகிய முறையில் வணக்கம் புரியவும் எனக்கு உதவி செய்வாயாக!**

١٤٢٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنْ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا تَشَهَّدَ أَحَدُكُمْ فَلْيَسْتَعِذْ بِاللَّهِ مِنْ أَرْبَعٍ يَقُولُ : اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ عَذَابِ جَهَنَّمَ وَمِنْ عَذَابِ الْقَبْرِ وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ وَمِنْ شَرِّ فِتْنَةِ الْمَسِيحِ الدَّجَّالِ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1423** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் (கடைசி இருப்பில்) அத்தஹிய்யாத் ஓதினால் அல்லாஹ்விடம் நான்கை விஷயங்களை விட்டும் பாதுகாப்பு தேடட்டும். அப்போது “அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக்க மின் அதாபி ஜஹன்னம, வமின் அதாபில் கப்ரி, வமின் ஃபித்னதில் மஹ்யா, வல்மமாதி, வமின் ஷர்ரீ ஃபித்னதில் மஸீஹித் தஜ்ஜால்” என அவர் கூறட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:588)**

**துஆவின் பொருள் : இறைவா! நரக வேதனையை விட்டும், கப்ரு வேதனையை விட்டும், வாழ்வு மற்றும் மரணத்தின் குழப்பத்தை விட்டும், மேலும் தஜ்ஜால் குழப்பத்தின் தீமையை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٢٤ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا قَامَ إِلَى الصَّلَاةِ يَكُونُ مِنْ آخِرِ مَا يَقُولُ بَيْنَ التَّشَهُّدِ وَالتَّسْلِيمِ : " اللَّهُمَّ اغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ وَمَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ وَمَا أَسْرَفْتُ وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ لَا إِلَهَ إِلَّا أَنْتَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1424** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தொழுதால், கடைசி இருப்பில் அத்தஹிய்யாத் மற்றும் ஸலாம் கூறுவதற்கு இடையே கடைசி வார்த்தையாக, “அல்லாஹும்மஃஃபிர்லீ மாகத்தம்து வமா அக்கர்து, வமா அஸ்ரர்து வமா அஃலன்து, வமா அஸ்ரஃப்து, வமா அன்த அஃலமு பிஹி மின்னீ அன்தல் முகத்தமு, வஅன்தல் முஅக்கரு, லாயிலாஹ இல்லா அன்த” என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:1771)**

**துஆவின் பொருள் : இறைவா! நான் முன் செய்த பாவங்களையும், பின் செய்த பாவங்களையும், ரகசியமாக செய்த பாவங்களையும், வெளிப்படையாக செய்த பாவங்களையும், வீண் விரயம் செய்தவற்றையும் என்னைப் பற்றி என்னைவிட நீ மிக அறிந்துள்ளவற்றையும் எனக்கு நீ மன்னிப்பாயாக! நீயே முற்படுத்தி வைப்பவன். நீயே பிற்படுத்துபவன். வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை.**

١٤٢٥ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ يُكْثِرُ أَنْ يَقُولَ فِي رُكُوعِهِ وَسُجُودِهِ : " سُبْحَانَكَ اللَّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اللَّهُمَّ اغْفِرْ لِي " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1425** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் ருகூஉவிலும், தன் ஸஜ்தாவிலும், “சுப்ஹானக் கல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக, அல்லாஹும்மஃபிர்லீ” என்று அதிகமாக கூறுபவர்களாக இருந்தனர்.

**(புகாரி:817. முஸ்லிம்:484)**

**துஆவின் பொருள் : இறைவா! எங்கள் இரட்சகனே! உன்னைப் புகழ்ந்து, தூய்மையானவன் என போற்றுகிறேன். இறைவா! என்னை மன்னிப்பாயாக!**

١٤٢٦ – وَعَنْهَا ) عَائِشَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَقُولُ فِي رُكُوعِهِ وَسُجُودِهِ : " سُبُّوحٌ قُدُّوسٌ رَبُّ الْمَلَائِكَةِ وَالرُّوحِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1426** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் ருகூஉவிலும், ஸஜ்தாவிலும், "சுப்பூஹுன், குத்தூசுன் ரப்புல் மலாயிகதி வர்ரூஹ்" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:487)**

**துஆவின் பொருள்: அல்லாஹ் மிகத் தூய்மையானவன், மிகப் பரிசுத்தமானவன். மேலும் வானவர்கள், ஜிப்ரீல் (அலை) ஆகியோரின் இறைவன்.**

١٤٢٧ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " فَأَمَّا الرُّكُوعُ فَعَظِّمُوا فِيهِ الرَّبَّ . وَأَمَّا السُّجُودُ فَاجْتَهِدُوا فِي الدُّعَاءِ فَقَمِنٌ أَنْ يُسْتَجَابَ لَكُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1427** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தொழுகையின்) ருகூஉவில் இறைவனை கண்ணியப்படுத்துங்கள். ஸஜ்தாவில் துஆச் செய்வதில் ஈடுபடுங்கள். உங்களுக்கு துஆ ஏற்கப்படக் கூடும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:479)**

١٤٢٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَقْرَبُ مَا يَكُونُ الْعَبْدُ مِنْ رَبِّهِ وَهُوَ سَاجِدٌ : فَأَكْثِرُوا الدُّعَاءَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1428** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஸஜ்தா செய்யக்கூடிய அடியான்தான், தன் இறைவனுக்கு மிக நெருக்கமானவனாக உள்ளான். எனவே (அதில்) துஆவை அதிகமாக்குங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:482)**

١٤٢٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَقُولُ فِي سُجُودِهِ : " اللَّهُمَّ اغْفِرْ لِي ذَنْبِي كُلَّهُ : دِقَّهُ وَجُلَّهُ وَأَوَّلَهُ وَآخِرَهُ وَعَلاَنِيَتَهُ وَسِرَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1429** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் ஸஜ்தாவில், "அல்லாஹும்ம மஃபிர்லீ தன்பீ குல்லஹு, திக்கஹு, வஜில்லஹு, வஅவ்வலஹு, வஆகிரஹு, வ அலானிய்யதஹு, வசிர்ரஹு" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:483)**

**துஆவின் பொருள் : இறைவனே! என் பாவங்களில் சிறியவை, பெரியவை, முதன்மையானவை, இறுதியானவை, பகிரங்கமானவை, இரகசியமானவை என அனைத்தையும் நீ மன்னிப்பாயாக!**

١٤٣٠ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : افْتَقَدْتُ النَّبِيَّ ﷺ ذَاتَ لَيْلَةٍ فَتَحَسَّسْتُ فَإِذَا هُوَ رَاكِعٌ – أَوْ سَاجِدٌ – يَقُولُ : " سُبْحَانَكَ وَبِحَمْدِكَ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ " . وَفِي رِوَايَةٍ : فَوَقَعَتْ يَدِي عَلَى بَطْنِ قَدَمَيْهِ وَهُوَ فِي الْمَسْجِدِ وَهُمَا مَنْصُوبَتَانِ وَهُوَ يَقُولُ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِرِضَاكَ مِنْ سَخَطِكَ وَبِمُعَافَاتِكَ مِنْ عُقُوبَتِكَ وَأَعُوذُ بِكَ مِنْكَ لاَ أُحْصِي ثَنَاءً عَلَيْكَ أَنْتَ كَمَا أَثْنَيْتَ عَلَى نَفْسِكَ " ! رَوَاهُ مُسْلِمٌ .

**1430** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருநாள் இரவு நபி (ஸல்) அவர்களைக் காணவில்லை என்பதால் தேடினேன். அப்போது அவர்கள் ருகூஉ செய்தவர்களாக அல்லது ஸஜ்தா செய்தவர்களாக இருந்தார்கள். (அதில்) அவர்கள், "சுப்ஹானக்க, வபிஹம்திக்க, லாஇலாஹ இல்லா அன்த" என்று கூறிக் கொண்டிருந்தார்கள். **(முஸ்லிம்:486)**

**துஆவின் பொருள் : யா அல்லாஹ்! நீ தூய்மையானவன். உன்னைப் புகழ்கிறேன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை.**

"என் கைகள் அவர்களின் உள்ளங்கால்களைத் தொட்டது. அவர்கள் பள்ளியில் தொழுது கொண்டு இருந்தார்கள். கால்கள் இரண்டும் (ஸஜ்தாவில்) நட்டு வைத்த நிலையில் இருந்தது." அப்போது அவர்கள், "அல்லாஹும்ம இன்னீ அஊது பிரிழாக்க மின் ஸக்திக, வ பி முஆஃபாதிக மின் உகூபதிக, வஅஊது பிக மின்க, லா உஹ்ஸீ தனாஅன் அலய்க அன்த கமா அஸ்னய்த அலா நஃப்ஸிக" என்று கூறினார்கள்" என மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

**துஆவின் பொருள் : இறைவா! உன் திருப்தி மூலம் உன் கோபத்தை விட்டும், உன் ஆதரவு மூலம் உன் தண்டனையை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் உன் வேதனையை விட்டும், சோதனையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். உன்னை நீ புகழ்ந்தது போல் (எல்லையில்லா உன் புகழை) என்னால் முழுமையாக புகழ இயலாது.**

١٤٣١ – وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : " أَيَعْجِزُ أَحَدُكُمْ أَنْ يَكْسِبَ فِي كُلِّ يَوْمٍ أَلْفَ حَسَنَةٍ ؟ " فَسَأَلَهُ سَائِلٌ مِنْ جُلَسَائِهِ : كَيْفَ يَكْسِبُ أَلْفَ حَسَنَةٍ ؟ قَالَ : " يُسَبِّحُ مِائَةَ تَسْبِيحَةٍ فَيُكْتَبُ لَهُ أَلْفُ حَسَنَةٍ أَوْ يُحَطُّ عَنْهُ أَلْفُ خَطِيئَةٍ " . رَوَاهُ مُسْلِمٌ . قَالَ الْحُمَيْدِيُّ : كَذَا هُوَ فِي كِتَابِ مُسْلِمٍ : " أَوْ يُحَطُّ " . قَالَ الْبَرْقَانِيُّ : وَرَوَاهُ شُعْبَةُ وَأَبُو عَوَانَةَ وَيَحْيَى الْقَطَّانُ عَنْ مُوسَى الَّذِي رَوَاهُ مِنْ جِهَتِهِ فَقَالُوا : " وَيُحَطُّ " بِغَيْرِ أَلْفٍ .

**1431** ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள், "தினமும் ஆயிரம் நன்மைகள் சம்பாதிக்க உங்களில் ஒருவருக்கு இயலுமா?" என்று கேட்டார்கள். அப்போது அருகில் இருந்தோரில் ஒருவர், "ஆயிரம் நன்மைகள் எப்படிச் சம்பாதிப்பது?" என்று கேட்டார். "100 தஸ்பீஹ (சுப்ஹானல்லாஹ் என்று கூறினால்) ஒருவர் செய்தால், அவருக்கு ஆயிரம் நன்மைகள் எழுதப்படும். அல்லது ஆயிரம் தவறுகள் அழிக்கப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2698)**

١٤٣٢ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " يُصْبِحُ عَلَى كُلِّ سُلَامَى مِنْ أَحَدِكُمْ صَدَقَةٌ فَكُلُّ تَسْبِيحَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَحْمِيدَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَهْلِيلَةٍ صَدَقَةٌ وَكُلُّ تَكْبِيرَةٍ صَدَقَةٌ وَأَمْرٌ بِالْمَعْرُوفِ صَدَقَةٌ وَنَهْيٌ عَنِ الْمُنْكَرِ صَدَقَةٌ . وَيُجْزِئُ مِنْ ذَلِكَ رَكْعَتَانِ يَرْكَعُهُمَا مِنَ الضُّحَى " . رَوَاهُ مُسْلِمٌ .

**1432** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவரின் ஒவ்வொரு மூட்டுக்கும் தர்மம் செய்ய வேண்டி உள்ளது. ஒவ்வொரு தஸ்பீஹ சுப்ஹானல்லாஹ்) கூறுவதும், தர்மமாகும். ஒவ்வொரு "அல்ஹம்துலில்லாஹ்" கூறுவதும் தர்மமாகும். "லாயிலாஹா இல்லல்லாஹ்" எனக் கூறுவதும் தர்மமாகும். "அல்லாஹு அக்பர்" எனக் கூறுவதும் தர்மமாகும். நல்லதை ஏவுவதும் தர்மமாகும். தீயதை தடுப்பதும் தர்மமாகும். இவை அனைத்தும் லுஹா நேரத்தில் இரண்டு ரக்அத்துகள் தொழுவது ஈடாக அமையும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:720)**

١٤٣٣ – وَعَنْ أُمِّ الْمُؤْمِنِينَ جُوَيْرِيَةَ بِنْتِ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ خَرَجَ مِنْ عِنْدِهَا بُكْرَةً حِينَ صَلَّى الصُّبْحَ وَهِيَ فِي مَسْجِدِهَا ثُمَّ رَجَعَ بَعْدَ أَنْ أَضْحَى وَهِيَ جَالِسَةٌ فَقَالَ : " مَا زِلْتِ عَلَى الْحَالِ الَّتِي فَارَقْتُكِ عَلَيْهَا ؟ " . قَالَتْ : نَعَمْ . فَقَالَ النَّبِيُّ ﷺ : " لَقَدْ قُلْتُ بَعْدَكِ أَرْبَعَ كَلِمَاتٍ ثَلَاثَ مَرَّاتٍ لَوْ وُزِنَتْ بِمَا قُلْتِ مُنْذُ الْيَوْمِ لَوَزَنَتْهُنَّ : سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ عَدَدَ خَلْقِهِ وَرِضَى نَفْسِهِ وَزِنَةَ عَرْشِهِ وَمِدَادَ كَلِمَاتِهِ " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ : " سُبْحَانَ اللَّهِ عَدَدَ خَلْقِهِ

سُبْحَانَ اللَّه رِضَاءَ نَفْسه سُبْحَانَ اللَّه زِنَةَ عَرْشه سُبْحَانَ اللَّه مدَادَ كَلمَاته " . وَفي رِوَايَة التِّرْمذيِّ : " أَلاَ أُعَلِّمُكَ كَلمَات تَقُولينَهَا ؟ سُبْحَانَ اللَّه عَدَدَ خَلْقه سُبْحَانَ اللَّه عَدَدَ خَلْقه سُبْحَانَ اللَّه عَدَدَ خَلْقه ; سُبْحَانَ اللَّه رِضَى نَفْسه سُبْحَانَ اللَّه رِضَى نَفْسه سُبْحَانَ اللَّه رِضَى نَفْسه ; سُبْحَانَ اللَّه زِنَةَ عَرْشه سُبْحَانَ اللَّه زِنَةَ عَرْشه سُبْحَانَ اللَّه زِنَةَ عَرْشه ; سُبْحَانَ اللَّه مدَادَ كَلمَاته سُبْحَانَ اللَّه مدَادَ كَلمَاته سُبْحَانَ اللَّه مدَادَ كَلمَاته " .

**1433** ஜுவைரிய்யா பின்த் ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், சுப்ஹு தொழுவதற்காக வீட்டிலிருந்து வெளியே சென்றார்கள். நான் என் தொழுமிடத்தில் இருந்தேன். பின்பு காலை நேரம் ஏற்பட்டதும் திரும்பினார்கள். அப்போது நான் (திக்ரு செய்த நிலையில்) உட்கார்ந்திருந்தேன். “நான் உன்னிடமிருந்து சென்றதிலிருந்து இதே நிலையில்தான் இருக்கிறாயா? என்று கேட்டார்கள். “ஆம்” என்றேன். “நான் உன்னிடமிருந்து புறப்பட்டுச் சென்றபின், நான்கு வார்த்தைகளை மூன்று தடவை கூறி விட்டேன். இன்று நீ கூறிய (திக்ரு, தஸ்பீஹ் ஆகிய)வையுடன் இது நிறுக்கப்பட்டால் (நான் கூறிய) இவைதான் கனக்கும். அந்த வார்த்தைகள், ‘சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி அதத கல்கிஹி, வரிழா நஃப்ஸிஹி, வஜினத்த அர்ஷிஹி, வமிதாத கலிமாதிஹி’ ஆகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2726)**

**துஆவின் பொருள் : அல்லாஹ்வின் படைப்புகளின் எண்ணிக்கை அளவுக்கும், அவனது திருப்தியின் அளவுக்கும், அவனது அர்ஷின் எடை அளவுக்கும், அவனது சொற்களின் மை அளவுக்கும் அவனைப் புகழ்ந்து, அவனை தூய்மையானவன் எனப் போற்றுகிறேன்.**

“சுப்ஹானல்லாஹி அதத கல்கிஹி, சுப்ஹானல்லாஹி ரிழா நஃப்ஸிஹி சுப்ஹானல்லாஹி ஸினத அர்ஷிஹி, சுப்ஹானல்லாஹி மிதாத கலிமாதிஹி” என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

திர்மிதீயின் அறிவிப்பில், “நீ கூறுவதற்காக அந்த வார்த்தைகளை உமக்கு நான் கற்றுத் தரட்டுமா? சுப்ஹானல்லாஹி அதத கல்கிஹி, சுப்ஹானல்லாஹி அதத கல்கிஹி, சுப்ஹானல்லாஹி அதத கல்கிஹி (என மூன்று முறையும்), சுப்ஹானல்லாஹி ரிழா நஃப்ஸிஹி, சுப்ஹானல்லாஹி ரிழா நஃப்ஸிஹி, சுப்ஹானல்லாஹி ரிழா நஃப்ஸிஹி (என மூன்று முறையும்), சுப்ஹானல்லாஹி ஜினத்த அர்ஷிஹி, சுப்ஹானல்லாஹி ஜினத்த அர்ஷிஹி, சுப்ஹானல்லாஹி ஜினத்த அர்ஷிஹி (என மூன்று முறையும்), சுப்ஹானல்லாஹி மிதாத கலிமாதிஹி, சுப்ஹானல்லாஹி மிதாத கலிமாதிஹி, சுப்ஹானல்லாஹி மிதாத கலிமாதிஹி (என மூன்று முறையும்) கூறுவதாகும்” என்று உள்ளது. **(திர்மிதீ:3555)**

١٤٣٤ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَثَلُ الَّذي يَذْكُرُ رَبَّهُ وَالَّذي لاَ يَذْكُرُهُ مَثَلُ الْحَيِّ وَالْمَيِّت " . رَوَاهُ الْبُخَارِيُّ وَرَوَاهُ مُسْلمٌ فَقَالَ : " مَثَلُ الْبَيْت الَّذي يُذْكَرُ اللَّهُ فيه وَالْبَيْت الَّذي لاَ يُذْكَرُ اللَّهُ فيه مَثَلُ الْحَيِّ وَالْمَيِّت " .

**1434** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தன் இறைவனை நினைவு கூர்பவனுக்கும், அவனை நினைவுகூராதவனுக்கும் உதாரணம்– உயிருள்ளவர், மரணித்தவர் போன்றதாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6407)**

“அல்லாஹ்வை நினைவுகூரும் வீடு, அல்லாஹ்வை நினைவுகூராத வீடு ஆகியவற்றிற்கு உதாரணம் – உயிருள்ளது, மரணித்தது போன்ற உதாரணமாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:779)**

١٤٣٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " يَقُولُ اللَّهُ تَعَالَى : أَنَا عِنْدَ ظَنِّ عَبْدِي بِي وَأَنَا مَعَهُ إِذَا ذَكَرَنِي فَإِنْ ذَكَرَنِي فِي نَفْسِهِ ذَكَرْتُه فِي نَفْسِي وَإِنْ ذَكَرَنِي فِي مَلَأٍ ذَكَرْتُه فِي مَلَأٍ خَيْرٍ مِنْهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1435** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் அடியான் என்னை நினைவுகூரும் இடத்தில் நான் உள்ளேன். என்னை அவன் நினைவு கூர்ந்தால், நானும் அவனுடன் உள்ளேன். அவன் தன் மனதிற்குள் என்னை நினைவுகூர்ந்தால், என் மனதிற்குள் நான் அவனை நினைவுகூர்வேன். ஒரு கூட்டத்தில் என்னை அவன் நினைவுகூர்ந்தால் அவர்களையும்விடச் சிறந்த ஒரு கூட்டத்தில் (வானவர்களின் கூட்டத்தில்) அவனை நினைவு கூர்வேன் என்று அல்லாஹ் கூறினான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7405. முஸ்லிம்:2675)**

١٤٣٦ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " سَبَقَ الْمُفَرِّدُونَ " قَالُوا : وَمَا الْمُفَرِّدُونَ يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " الذَّاكِرُونَ اللَّهَ كَثِيرًا وَالذَّاكِرَاتُ " . رَوَاهُ مُسْلِمٌ . وَرُوِيَ : " الْمُفَرِّدُونَ " بِتَشْدِيدِ الرَّاءِ وَتَخْفِيفِهَا وَالْمَشْهُورُ الَّذِي قَالَهُ الْجُمْهُورُ : التَّشْدِيدُ .

**1436** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஃபர்ரிதூன்கள் வெற்றி பெற்றனர்" என நபி (ஸல் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! முஃபர்ரி தூன்கள் யார்?" என்று நபித்தோழர்கள் கேட்டனர். "அதிகமாக அல்லாஹ்வை நினைவு கூரும் ஆண்களும், பெண்களும் ஆவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2676)**

١٤٣٧ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ . يَقُولُ : " أَفْضَلُ الذِّكْرِ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1437** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"திக்ரில் சிறந்தது, 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்பதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(திர்மிதீ:3383. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٤٣٨ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ بُسْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ شَرَائِعَ الأَسْلاَمِ قَدْ كَثُرَتْ عَلَيَّ فَأَخْبِرْنِي بِشَيْءٍ أَتَشَبَّثُ بِهِ . قَالَ : " لاَ يَزَالُ لِسَانُكَ رَطْبًا مِنْ ذِكْرِ اللَّهِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1438** அப்துல்லாஹ் இப்னு புஸ்ரு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! இஸ்லாமியக் கடமைகள் என் மீது அதிகம் உள்ளன. ஆகவே தொடர்ந்து உறுதியாகப் பற்றிப்பிடித்துக் கொள்ளக்கூடிய ஒன்றை எனக்குக் கற்றுத் தாருங்கள்" என ஒருவர் கேட்டார். "அல்லாஹ்வை நினைவுகூர்வதில் (திக்ரு செய்வதில்) உமது நாக்கு தொடர்ந்து திளைத்து இருக்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3375. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٤٣٩ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ قَالَ : سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ غُرِسَتْ لَهُ نَخْلَةٌ فِي الْجَنَّةِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1439** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி" (அல்லாஹ்வைப் புகழ்வதுடன், அவனைத் தூய்மையானவன் எனப் போற்றுகின்றேன்) என்று ஒருவர் கூறினால், அவருக்கு சொர்க்கத்தில் ஒரு பேரீத்தம் பழ மரம் நடப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3464, 3465. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٤٤٠ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لَقِيتُ إِبْرَاهِيمَ ﷺ لَيْلَةَ أُسْرِيَ بِي فَقَالَ . يَا مُحَمَّدُ أَقْرِئْ أُمَّتَكَ مِنِّي السَّلاَمَ وَأَخْبِرْهُمْ أَنَّ الْجَنَّةَ طَيِّبَةُ التُّرْبَةِ عَذْبَةُ الْمَاءِ وَأَنَّهَا قِيعَانٌ وَأَنَّ غِرَاسَهَا . سُبْحَانَ اللّٰهِ وَالْحَمْدُ لِلّٰهِ وَلاَ إِلَهَ إِلاَّ اللّٰهُ وَاللّٰهُ أَكْبَرُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1440** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என்னை அழைத்துச் செல்லப்பட்ட (மிஹ்ராஜ்) இரவில் நபி இப்ராஹிம் (அலை) அவர்களை நான் சந்தித்தேன். அப்போது இப்ராஹிம் நபி அவர்கள், "முஹம்மதே! உமது சமுதாயத்தினருக்கு என் ஸலாமைக் கூறுவீராக! சொர்க்கம், மணமிக்க மண், சுவையான நீர் என அது விசாலமான சமவெளிப்பகுதியாகும். "சுப்ஹானல்லாஹி, வல்ஹம்துலில்லாஹி, வலா இலாஹ இல்லல்லாஹ், வல்லாஹு அக்பர்" என்பது அதன் மரக்கன்றுகளாகும்" என்று கூறினார்கள்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3462. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٤٤١ – وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " أَلاَ أُنَبِّئُكُمْ بِخَيْرِ أَعْمَالِكُمْ وَأَزْكَاهَا عِنْدَ مَلِيكِكُمْ وَأَرْفَعِهَا فِي دَرَجَاتِكُمْ وَخَيْرٌ لَكُمْ مِنْ إِنْفَاقِ الذَّهَبِ وَالْفِضَّةِ وَخَيْرٌ لَكُمْ مِنْ أَنْ تَلْقَوْا عَدُوَّكُمْ فَتَضْرِبُوا أَعْنَاقَهُمْ وَيَضْرِبُوا أَعْنَاقَكُمْ ؟ " قَالُوا : بَلَى قَالَ : " ذِكْرُ اللّٰهِ تَعَالَى " . رَوَاهُ التِّرْمِذِيُّ . قَالَ الْحَاكِمُ أَبُو عَبْدِ اللّٰهِ : إِسْنَادُهُ صَحِيحٌ .

**1441** அபூ தர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் செயல்களில் சிறந்ததும், உங்கள் எஜமானனிடம் மிக சுத்தமானதும், உங்களின் தகுதிகளில் மிக உயர்ந்ததுமான தங்கம், வெள்ளி ஆகியவற்றைச் செலவு செய்வதை விட உங்களுக்குச் சிறந்ததும், உங்களின் எதிரிகளைப் போரில் சந்தித்து அவர்களின் கழுத்தை நீங்கள் வெட்டி, உங்களின் கழுத்தை அவர்கள் வெட்டுவதில் உள்ளதை விட சிறந்த ஒன்றை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "சரி" என நபித்தோழர்கள் கூறினர். "அல்லாஹ்வை நினைவுகூரும் (திக்ரு) தான்" என்று நபி(ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3377. "இதன் அறிவிப்பாளர் வரிசை சரியானது என அபூஅப்துல்லாஹ் எனும் இமாம் ஹாகிம்" கூறுகின்றார்கள்)**

١٤٤٢ – وَعَنْ سَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّهُ دَخَلَ مَعَ رَسُولِ اللّٰهِ ﷺ عَلَى امْرَأَةٍ وَبَيْنَ يَدَيْهَا نَوًى – أَوْ حَصًى – تُسَبِّحُ بِهِ فَقَالَ : " أُخْبِرُكِ بِمَا هُوَ أَيْسَرُ عَلَيْكِ مِنْ هَذَا أَوْ أَفْضَلُ ؟ " فَقَالَ : " سُبْحَانَ اللّٰهِ عَدَدَ مَا خَلَقَ فِي السَّمَاءِ وَسُبْحَانَ اللّٰهِ عَدَدَ مَا خَلَقَ فِي الأَرْضِ وَسُبْحَانَ اللّٰهِ عَدَدَ مَا بَيْنَ ذَلِكَ وَسُبْحَانَ اللّٰهِ عَدَدَ مَا هُوَ خَالِقٌ وَاللّٰهُ أَكْبَرُ مِثْلَ ذَلِكَ وَالْحَمْدُ لِلّٰهِ مِثْلَ ذَلِكَ وَلاَ إِلَهَ إِلاَّ اللّٰهُ مِثْلَ ذَلِكَ وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللّٰهِ مِثْلَ ذَلِكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1442** ஸஃது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பேரீத்தம் பழக்கொட்டை அல்லது பொடிக் கற்களை தன் முன்னே வைத்து தஸ்பீஹ் செய்து கொண்டிருந்த ஒரு பெண்ணிடம், நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். "இதை விட உமக்கு மிக இலகுவான ஒன்றைக் கூறுகிறேன்" என்று கூறிய நபி (ஸல்) அவர்கள் "சுப்ஹானல்லாஹி அதத மா

கலக ஃபிஸ்ஸமாஇ, வ சுப்ஹா னல்லாஹி அதத மா கலக ஃபில் அர்ழி, வ சுப்ஹானல்லாஹி அதத மா பய்ன தாலிக, வ சுப்ஹானல்லாஹி அத்த மா ஹுவ காலிகுன். வல்லாஹு அக்பர் மித்ல தாலிக, வல்ஹம்துலில்லாஹி மித்லதாலிக, வலா இலாஹ இல்லல்லாஹு மித்ல தாலிக வலா ஹவ்ல வலாகுவ்வத இல்லாபில்லாஹி மித்ல தாலிக'' (என்று கூறுவது சிறந்தது) என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3568. இது ''ஹஸன்'' என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

**துஆவின் பொருள்: வானத்தில் அல்லாஹ் படைத்துள்ள அளவுக்கு அல்லாஹ்வைப் போற்று கின்றேன். பூமியில் அல்லாஹ் படைத்துள்ள அளவுக்கு அல்லாஹ்வைப் போற்றுகின்றேன். அவற்றிற்கிடையே உள்ள அளவுக்கு அல்லாஹ்வைப் போற்றுகின்றேன். அவன் படைக்க உள்ள அளவுக்கு அல்லாஹ்வைப் போற்றுகின்றேன். அல்லாஹ்வே மிகப் பெரியவன். அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அல்லாஹ்வைத் தவிர வேறு சக்தியோ வேறு திரும்புதலோ இல்லை.**

١٤٤٣ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَلاَ أَدُلُّكَ عَلَى كَنْزٍ مِنْ كُنُوزِ الْجَنَّةِ ؟ " فَقُلْتُ : بَلَى يَا رَسُولَ اللَّهِ قَالَ : " لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1443** அபூமூஸா அல் அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''சொர்க்கத்தின் பொக்கிஷங்களில் ஒரு பொக்கிஷம் பற்றி உமக்கு அறிவிக்கட்டுமா?'' என்று நபி (ஸல்) என்னிடம் கேட்டார்கள். ''இறைத்தூதர் அவர்களே! சரி'' என்றேன். ''(அது) லாஹவ்ல வலாகுவ்வத்த இல்லாபில்லாஹ்- (பாவங்களை விட்டுமீள்தலும், சக்தியும் அல்லாஹ்விடமே தவிர வேறில்லை)''என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6409. முஸ்லிம்:2704)**

## ٢٤٥ - باب ذكر اللّه تَعالى قَائِمًا وَقَاعِدًا ومضطجعًا وَمُحْدِثًا وَجُنُبًا وَحَائِضًا إِلاّ الْقُرْآنَ فَلا يحل لجنب ولا حائض

## பாடம் : 245 - நின்றவாறும், உட்கார்ந்தவாறும், படுத்தவாறும், உளூ இல்லாதவரும், குளிப்புக் கடமையானவரும், மாதவிடாய் உள்ள பெண்ணும் அல்லாஹ்வை நினைவுகூர்தல். ஆனால் குளிப்புக் கடமையானவரும், மாதவிடாய் உள்ள பெண்ணும் குர்ஆன் ஓதுவது கூடாது.

(குறிப்பு: மூல ஆசிரியர் இங்கே தலைப்பில் சுயமாக கூறி உள்ளார்கள். ஆதாரம் தரவில்லை. குளிப்புக் கடமையானவர், மாதவிடாய்ப் பெண் ஆகியோர் குர்ஆனைத் தொடலாம், ஓதலாம் என்பதே சரியாகும்!)

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ فِي خَلْقِ السَّمَوَاتِ وَالأَرْضِ وَاخْتِلاَفِ اللَّيْلِ وَالنَّهَارِ لَآيَاتٍ لِأُولِي الأَلْبَابِ الَّذِينَ يَذْكُرُونَ اللَّهَ قِيَامًا وَقُعُودًا وَعَلَى جُنُوبِهِمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *வானங்களை, பூமியைப் படைத்திருப்பதிலும், இரவு-பகல் மாறி மாறி வருவதிலும் சிந்திப்பவர்களுக்கு அத்தாட்சிகள் உண்டு. (அந்த சிந்திப்பவர்கள்) அல்லாஹ்வை நின்றவாறும், உட்கார்ந்தவாறும், தங்களின் படுக்கையிலும் நினைவுகூர்வார்கள். மேலும் வானங்கள், பூமியைப் படைத்திருப்பது பற்றியும் சிந்திப்பார்கள்... (3:190,191)*

١٤٤٤ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَذْكُرُ اللَّهَ عَلَى كُلِّ أَحْيَانِهِ . رَوَاهُ مُسْلِمٌ.

**1444** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், எல்லா நேரங்களிலும் அல்லாஹ்வை நினைவுகூர்பவர்களாகவே இருந்தார்கள். **(முஸ்லிம்:373)**

١٤٤٥ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " لَوْ أَنَّ أَحَدَكُمْ إِذَا أَتَى أَهْلَهُ قَالَ : بِسْمِ اللَّهِ اللَّهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ وَجَنِّبْ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا فَقُضِيَ بَيْنَهُمَا وَلَدٌ لَمْ يَضُرَّهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1445** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தன் மனைவியிடம் (உடலுறவில்) ஈடுபட வந்து, "பிஸ்மில்லாஹி, அல்லாஹும்ம ஜன்னிப்ன ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தான மாரஜக்தனா" என்று கூறினால், அதில் அவ்விருவரிடையே குழந்தை ஏற்பட விதிக்கப்பட்டிருந்தால், அக்குழந்தைக்கு ஷைத்தான் எவ்வித இடைஞ்சலும் செய்ய மாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3271. முஸ்லிம்:1434)**

**துஆவின் பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயரால் (இதில் ஈடுபடுகிறேன்). இறைவா! எங்களை விட்டும் ஷைத்தானை நீக்குவாயாக! மேலும் எங்களுக்கு நீ வழங்கும் குழந்தையை விட்டும் ஷைத்தானை நீக்குவாயாக!**

## ٢٤٦ – بابُ ما يقوله عند نومه واستيقاظه

## பாடம் : 246 - தூங்கும் போதும், தூக்கத்திலிருந்து எழும் போதும் கூற வேண்டியவை.

١٤٤٦ – عَنْ حُذَيْفَةَ وَأَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالاَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا أَوَى إِلَى فِرَاشِهِ قَالَ : " بِاسْمِكَ اللَّهُمَّ أَحْيَا وَأَمُوتُ " . وَإِذَا اسْتَيْقَظَ قَالَ : " الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُورُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1446** ஹுதைபா (ரழி), அபூதர் (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தூங்குவதற்காக தங்கள் படுக்கைக்கு வந்தால், "பிஸ்மிக்கல்லாஹும்ம அமூது வ அஹ்யா (1)" என்று கூறுவார்கள். தூக்கத்திலிருந்து விழித்தால், "அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஃத மா அமாதனா வ இலய்ஹின் னுஷூர் (2)" என்று கூறுவார்கள். **(புகாரி:6324, 6325)**

**துஆவின் பொருள் (1) : இறைவா! உன் பெயரால் தூங்குகிறேன், உன் பெயரால் விழிப்பேன்.**

**துஆவின் பொருள் (2) : எங்களை உறங்கச் செய்தபின் எங்களை விழிக்கச் செய்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். அவனிடமே திரும்புதல் உள்ளது.**

## ٢٤٧ – بابُ فضل حِلَق الذكر والندب إلى ملازمتها والنهي عن مفارقتها لغير عذر

## பாடம் : 247 - திக்ரு சபையின் சிறப்பு, தொடர்ந்து அதில் கலந்து கொள்வதன் சிறப்பு. காரணமின்றி அதில் கலந்து கொள்ளாதிருப்பது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : وَاصْبِرْ نَفْسَكَ مَعَ الَّذِينَ يَدْعُونَ رَبَّهُمْ بِالْغَدَاةِ وَالْعَشِيِّ يُرِيدُونَ وَجْهَهُ وَلاَ تَعْدُ عَيْنَاكَ عَنْهُمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) தங்கள் இறைவனின் திருப்தியை நாடி காலையிலும், மாலையிலும் அவனை அழைப்பவர்களுடன் நீர் அமர்ந்து பொறுமை காப்பீராக! அவர்களை விட்டும் உன் இரு கண்களைத் திருப்பி விடாதீர்! (18:28)*

١٤٤٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ لِلَّهِ تَعَالَى مَلاَئِكَةً يَطُوفُونَ فِي الطُّرُقِ يَلْتَمِسُونَ أَهْلَ الذِّكْرِ فَإِذَا وَجَدُوا قَوْمًا يَذْكُرُونَ اللَّهَ عَزَّ وَجَلَّ تَنَادَوْا : هَلُمُّوا إِلَى حَاجَتِكُمْ فَيَحُفُّونَهُمْ بِأَجْنِحَتِهِمْ إِلَى السَّمَاءِ الدُّنْيَا فَيَسْأَلُهُمْ رَبُّهُمْ – وَهُوَ أَعْلَمُ – : مَا يَقُولُ عِبَادِي ؟ قَالَ : يَقُولُونَ : يُسَبِّحُونَكَ وَيُكَبِّرُونَكَ وَيَحْمَدُونَكَ وَيُمَجِّدُونَكَ فَيَقُولُ : هَلْ رَأَوْنِي ؟ فَيَقُولُونَ . لاَ وَاللَّهِ مَا رَأَوْكَ . فَيَقُولُ : كَيْفَ لَوْ رَأَوْنِي ؟ قَالَ : يَقُولُونَ : لَوْ رَأَوْكَ كَانُوا أَشَدَّ لَكَ عِبَادَةً وَأَشَدَّ لَكَ تَمْجِيدًا وَأَكْثَرَ لَكَ تَسْبِيحًا . فَيَقُولُ : فَمَاذَا يَسْأَلُونَ ؟ قَالَ : يَقُولُونَ : يَسْأَلُونَكَ الْجَنَّةَ . قَالَ : يَقُولُ : وَهَلْ رَأَوْهَا ؟ قَالَ : يَقُولُونَ : لاَ وَاللَّهِ يَا رَبِّ مَا رَأَوْهَا . قَالَ : يَقُولُ : فَكَيْفَ لَوْ رَأَوْهَا ؟ قَالَ : يَقُولُونَ : لَوْ أَنَّهُمْ رَأَوْهَا كَانُوا أَشَدَّ عَلَيْهَا حِرْصًا وَأَشَدَّ لَهَا طَلَبًا وَأَعْظَمَ فِيهَا رَغْبَةً . قَالَ : فَمِمَّ يَتَعَوَّذُونَ ؟ قَالَ : يَقُولُونَ : يَتَعَوَّذُونَ مِنَ النَّارِ . قَالَ . فَيَقُولُ : وَهَلْ رَأَوْهَا ؟ قَالَ : يَقُولُونَ : لاَ وَاللَّهِ مَا رَأَوْهَا . فَيَقُولُ : فَكَيْفَ لَوْ رَأَوْهَا ؟ قَالَ : يَقُولُونَ : لَوْ رَأَوْهَا كَانُوا أَشَدَّ مِنْهَا فِرَارًا وَأَشَدَّ لَهَا مَخَافَةً . قَالَ : فَيَقُولُ : فَأُشْهِدُكُمْ أَنِّي قَدْ غَفَرْتُ لَهُمْ . قَالَ : يَقُولُ مَلَكٌ مِنَ الْمَلاَئِكَةِ : فِيهِمْ فُلاَنٌ لَيْسَ مِنْهُمْ إِنَّمَا جَاءَ لِحَاجَةٍ . قَالَ : هُمُ الْجُلَسَاءُ لاَ يَشْقَى بِهِمْ جَلِيسُهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِنَّ لِلَّهِ مَلاَئِكَةً سَيَّارَةً فُضُلاً يَتَتَبَّعُونَ مَجَالِسَ الذِّكْرِ فَإِذَا وَجَدُوا مَجْلِسًا فِيهِ ذِكْرٌ قَعَدُوا مَعَهُمْ وَحَفَّ بَعْضُهُمْ بَعْضًا بِأَجْنِحَتِهِمْ حَتَّى يَمْلَؤُوا مَا بَيْنَهُمْ وَبَيْنَ السَّمَاءِ الدُّنْيَا فَإِذَا تَفَرَّقُوا عَرَجُوا وَصَعِدُوا إِلَى السَّمَاءِ فَيَسْأَلُهُمُ اللَّهُ عَزَّ وَجَلَّ – وَهُوَ أَعْلَمُ – : مِنْ أَيْنَ جِئْتُمْ ؟ فَيَقُولُونَ : جِئْنَا مِنْ عِنْدِ عِبَادٍ لَكَ فِي الأَرْضِ : يُسَبِّحُونَكَ وَيُكَبِّرُونَكَ وَيُهَلِّلُونَكَ وَيَحْمَدُونَكَ وَيَسْأَلُونَكَ . قَالَ : وَمَاذَا يَسْأَلُونِي ؟ قَالُوا : يَسْأَلُونَكَ جَنَّتَكَ : قَالَ : وَهَلْ رَأَوْا جَنَّتِي ؟ قَالُوا : لاَ أَيْ رَبِّ . قَالَ : فَكَيْفَ لَوْ رَأَوْا جَنَّتِي ؟ قَالُوا : وَيَسْتَجِيرُونَكَ قَالَ : وَمِمَّ يَسْتَجِيرُونِي ؟ قَالُوا : مِنْ نَارِكَ يَا رَبِّ . قَالَ : وَهَلْ رَأَوْا نَارِي ؟ قَالُوا : لاَ قَالَ : فَكَيْفَ لَوْ رَأَوْا نَارِي قَالُوا وَيَسْتَغْفِرُونَكَ . فَيَقُولُ : قَدْ غَفَرْتُ لَهُمْ وَأَعْطَيْتُهُمْ مَا سَأَلُوا وَأَجَرْتُهُمْ مِمَّا اسْتَجَارُوا . قَالَ : يَقُولُونَ : رَبِّ فِيهِمْ فُلاَنٌ عَبْدٌ خَطَّاءٌ إِنَّمَا مَرَّ فَجَلَسَ مَعَهُمْ . فَيَقُولُ : وَلَهُ غَفَرْتُ هُمُ الْقَوْمُ لاَ يَشْقَى بِهِمْ جَلِيسُهُمْ ! " .

**1447** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக! அல்லாஹ்விடம் சில வானவர்கள் உண்டு. அவர்கள் திக்ரு செய்வோரைத் தேடியவர்களாக பாதைகளில் சுற்றி வருவார்கள். அல்லாஹ்வை நினைவுகூர்கின்ற கூட்டத்தாரை அவர்கள் கண்டால், “உங்களின் தேவைகளை அடைந்திட வாருங்கள்” என அழைப்பார்கள். தங்களின் இறக்கைகளால் முதல் வானம் வரை அவர்களைச் சூழ்ந்து நிற்பார்கள். மிக அறிந்தவனான அவர்களின் இறைவன் அவர்களிடம், “என் அடியார்கள் கூறுவது என்ன?” என்று கேட்பான். “உன்னை தஸ்பீஹ் செய்கிறார்கள். உன்னை “அல்லாஹு அக்பர்” என புகழ்கிறார்கள். உனக்கே புகழ் அனைத்தும் என்கிறார்கள். உன்னை மேன்மைபடுத்துகிறார்கள்” என்று கூறுகிறார்கள். “என்னை அவர்கள் பார்த்துள்ளார்களா?” என்று கேட்பான். “இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம்மை அவர்கள் பார்க்கவில்லை” என்று வானவர்கள் கூறுவர். “என்னை அவர்கள் பார்த்திருந்தால் எப்படி நடந்திருப்பர்?” என்று கேட்பான். “உன்னை அவர்கள் பார்த்திருந்தால், உன்னை வணங்குவதில் இன்னும் அதிகமாக, உன்னை புகழ்வதில் இன்னும் அதிகமாக, உன்னை தஸ்பீஹ் செய்வதில் இன்னும் அதிகமாக இருந்திருப்பார்கள்” என வானவர்கள் கூறுவர். “அவர்கள் என்ன கேட்கிறார்கள்?” என்று அல்லாஹ் கேட்பான். “சொர்க்கத்தை உன்னிடம் கேட்கிறார்கள்” என்று வானவர்கள் கூறுவர். “அதை அவர்கள் பார்த்துள்ளனரா?” என்று அல்லாஹ் கேட்பான். “இல்லை, அல்லாஹ்வின் மீது சத்தியமாக, இறைவா! அதை அவர்கள் பார்த்ததில்லை” என அவர்கள் கூறுவார்கள். “அதை அவர்கள் பார்த்திருந்தால் எப்படி நடந்து கொள்வர்?” என்று அல்லாஹ் கேட்பான். “அதை அவர்கள் பார்த்திருந்தால் அதைப் பேராசை கொள்வதில் கடுமையாக, அதைத் தேடுவதில் கூடுதலாக, அதில்

ஆர்வம் கொள்வதில் இன்னும் கூடுதலாக இருப்பார்கள்" என்று வானவர்கள் கூறுவர். "எதை விட்டும் அவர்கள் பாதுகாப்புக் கோருகிறார்கள்?" என்று அல்லாஹ் கேட்பான். "நரகத்திலிருந்து பாதுகாப்புக் கோருகிறார்கள்" என்று வானவர்கள் கூறுவர். "அதை அவர்கள் பார்த்துள்ளனரா?" என்று அல்லாஹ் கேட்பான். "இல்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் அதை பார்த்ததில்லை" என்று வானவர்கள் கூறுவர். "அதை அவர்கள் பார்த்திருந்தால் எப்படி நடந்து கொள்வர்?" என்று அல்லாஹ் கேட்பான். "அதை அவர்கள் பார்த்திருந்தால் அதிலிருந்து ஒதுங்குவதில் மிகக் கூடுதலாக, அதை பயப்படுவதில் மிகக் கடுமையாக இருப்பார்கள்" என்று வானவர்கள் கூறுவர். "நான் அவர்களை மன்னித்துவிட்டேன் என உங்களை சாட்சியாக்குகிறேன்" என்று அல்லாஹ் கூறுவான். அப்போது வானவர்களில் ஒரு வானவர், "அவர்களில் ஒருவர் திக்ரு செய்தவர்களின் கூட்டத்தில் உள்ளவரல்ல. அவர் வேறு ஒரு தேவைக்காகவே வந்துள்ளார்" என்று கூறுவார். அதற்கு அல்லாஹ், "(அவர்களுடன்) உட்கார்ந்திருப்பவர்களுடன் உள்ள எவரும் நன்மையை இழந்தவராகி விடமாட்டார்" என்று கூறுவான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6408. முஸ்லிம்:2689)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

"நிச்சயமாக அல்லாஹ்விடம், அல்லாஹ்வை நினைவுகூர்கின்ற (திக்ரு செய்கின்ற) கூட்டத்தாரைத் தேடி வரும் வானவர்கள் உண்டு. அல்லாஹ்வைத் திக்ரு செய்யும் ஒரு கூட்டத்தை அவர்கள் கண்டால், அவர்களுடன் அவர்கள் உட்காருவார்கள். தங்கள் இறக்கைகளுடன் அவர்களில் சிலர், சிலரைச் சூழ்ந்தவர்களாக, முதல் வானம் வரை நிறைந்திருப்பார்கள். பின்பு அவர்கள் (அக்கூட்டத்தார்) சபையை விட்டுப் பிரிந்துவிட்டால், (வானவர்கள்) வானத்தின் பக்கம் உயர்வார்கள். மிகவும் அறிந்தவனான அல்லாஹ், அவர்களிடம், "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்பான். "பூமியில் உள்ள உனது அடியார்களிடமிருந்து நாங்கள் வருகிறோம். உன்னை அவர்கள் தஸ்பீஹ் செய்கிறார்கள். உன்னை அவர்கள் தக்பீர் கூறுகிறார்கள். உன்னை அவர்கள் "லாயிலாஹ இல்லாஹ்" கூறி புகழ்கிறார்கள். உன்னையே அவர்கள் புகழ்கிறார்கள். உன்னிடம் அவர்கள் கேட்கிறார்கள்" என்று வானவர்கள் கூறுவர். "எதை என்னிடம் அவர்கள் கேட்கிறார்கள்?"என்று அல்லாஹ் கேட்பான். "உன் சொர்க்கத்தைக் கேட்கிறார்கள்" என்று அவர்கள் கூறுவர். "என் சொர்க்கத்தை அவர்கள் பார்த்துள்ளனரா?" என்று அல்லாஹ் கேட்பான். "இல்லை இறைவா!" என்று அவர்கள் கூறுவார்கள். "என் சொர்க்கத்தை அவர்கள் பார்த்திருந்தால் எப்படி நடந்து கொள்வர்?" என்று அல்லாஹ் கேட்பான். "உன்னிடம் அவர்கள் பாதுகாப்புத் தேடுவார்கள்" என்று வானவர்கள் கூறுவர். "எதிலிருந்து பாதுகாப்புத் தேடுகிறார்கள்?" என்று அல்லாஹ் கேட்பான். "இறைவா! உன் நரகத்தை விட்டும் ...." என்று அவர்கள் கூறுவர். "என் நரகத்தை அவர்கள் பார்த்துள்ளனரா?" என்று அல்லாஹ் கேட்பான். "இல்லை" என அவர்கள் கூறுவர். "என் நரகத்தை அவர்கள் பார்த்திருந்தால், எப்படி நடந்து கொள்வர்?" என்று அல்லாஹ் கேட்பான். "உன்னிடம் மன்னிப்புக் கோருவார்கள்" என்று வானவர்கள் கூறுவர். "அவர்களை நான் மன்னித்து விட்டேன். அவர்கள் கேட்டதை அவர்களுக்கு கொடுத்து விட்டேன். அவர்கள் பாதுகாப்புத் தேடியதிலிருந்து பாதுகாப்பும் கொடுத்து விட்டேன்" என்று அல்லாஹ் கூறுவான். "இறைவா! அவர்களில் ஒரு பாவி இருந்தார். அந்த வழியே வந்தவர், அவர்களிடம் உட்கார்ந்துவிட்டார்" என்று வானவர்கள் கூறுவர். "அவரையும் மன்னித்து விட்டேன். அவர்களுடன் உட்கார்ந்திருந்த எவரும் நன்மையை இழந்துவிடமாட்டார்" என்று அல்லாஹ் கூறுவான்" என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக, அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்.

١٤٤٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( وَعَنْ أَبِي سَعِيد رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالاَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَقْعُدُ قَوْمٌ يَذْكُرُونَ اللَّهَ إلاَّ حَفَّتْهُمُ الْمَلاَئِكَةُ وَغَشِيَتْهُمُ الرَّحْمَةُ وَنَزَلَتْ عَلَيْهِمُ السَّكِينَةُ وَذَكَرَهُمُ اللَّهُ فِيمَنْ عِنْدَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1448** அபூஹுரைரா (ரழி) அபூஸயீது (ரழி) இருவரும் அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வை (திக்ரு) நினைவுகூரும் கூட்டத்தாரை வானவர்கள் சூழ்ந்து கொள்கிறார்கள். அவர்களை (திக்ரு செய்பவர்களை) இறையருள் மூடி இருக்கும். அவர்கள் மீது அமைதி இறங்கும். அவர்களைப் பற்றி தன்னிடம் உள்ளவர்(வானவர்)களுடன் அல்லாஹ் நினைவுகூர்வான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2700)**

١٤٤٩ – وَعَنْ أَبِي وَاقِد الْحَارِث بْنِ عَوْف رَضِيَ اللَّهُ عَنْهُ : " أَنَّ رَسُولَ اللَّه ﷺ بَيْنَمَا هُوَ جَالِسٌ فِي الْمَسْجِد وَالنَّاسُ مَعَهُ إِذْ أَقْبَلَ ثَلاثَةُ نَفَر فَأَقْبَلَ اثْنَان إِلَى رَسُول اللَّه ﷺ وَذَهَبَ وَاحِدٌ فَوَقَفَا عَلَى رَسُول اللَّه ﷺ . فَأَمَّا أَحَدُهُمَا فَرَأَى فُرْجَةً فِي الْحَلْقَة فَجَلَسَ فِيهَا وَأَمَّا الآخَرُ فَجَلَسَ خَلْفَهُمْ وَأَمَّا الثَّالثُ فَأَدْبَرَ ذَاهبًا . فَلَمَّا فَرَغَ رَسُولُ اللَّه ﷺ قَالَ : أَلاَ أُخْبِرُكُمْ عَنْ النَّفَر الثَّلاثَة ؟ أَمَّا أَحَدُهُمْ فَأَوَى إِلَى اللَّه فَآوَاهُ اللَّهُ وَأَمَّا الآخَرُ فَاسْتَحْيَا فَاسْتَحْيَا اللَّهُ مِنْهُ ; وَأَمَّا الآخَرُ فَأَعْرَضَ فَأَعْرَضَ اللَّهُ عَنْهُ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1449** அபூவாகித் ஹாரிஸ் இப்னு அவ்ஃப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடன் மக்களும் இருந்தனர். அப்போது மூன்று நபர்கள் வந்தனர். நபி (ஸல்) அவர்களை நோக்கி இருவர் வந்தனர். ஒருவர் போய் விட்டார். நபி (ஸல்) அவர்களிடம் அந்த இருவரும் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர், சபையின் இடைவெளியைக் கண்டு, அதில் உட்கார்ந்தார். மற்றொருவர் அவர்களுக்குப் பின்னே அமர்ந்து கொண்டார். நபி (ஸல்) அவர்கள் உரையை முடித்த போது, "மூன்றுபேரை பற்றி உங்களுக்கு கூறட்டுமா? அவர்களில் ஒருவர் அல்லாஹ்வை நெருங்கினார். அவரை அல்லாஹ் நெருங்கினான். மற்றொருவரோ வெட்கப்பட்டார். அவரிடம் அல்லாஹ் வெட்கப்பட்டுக் கொண்டான். மற்றொருவரோ புறக்கணித்துச் சென்றார். அவரை அல்லாஹ்வும் புறக்கணித்து விட்டான்" என்று கூறினார்கள்.

**(புகாரி:66. முஸ்லிம்:2176)**

١٤٥٠ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : خَرَجَ مُعَاوِيَةُ رَضِيَ اللَّهُ عَنْهُ عَلَى حَلْقَة فِي الْمَسْجِد فَقَالَ : مَا أَجْلَسَكُمْ ؟ قَالُوا : جَلَسْنَا نَذْكُرُ اللَّهَ . قَالَ : آللَّهُ مَا أَجْلَسَكُمْ إِلاَّ ذَاكَ ؟ قَالُوا : مَا أَجْلَسَنَا إِلاَّ ذَاكَ قَالَ : أَمَا إِنِّي لَمْ أَسْتَحْلفْكُمْ تُهْمَةً لَكُمْ وَمَا كَانَ أَحَدٌ بِمَنْزِلَتِي مِنْ رَسُول اللَّه ﷺ أَقَلَّ عَنْهُ حَدِيثًا مِنِّي : إِنَّ رَسُولَ اللَّه ﷺ خَرَجَ عَلَى حَلْقَة مِنْ أَصْحَابه فَقَالَ : " مَا أَجْلَسَكُمْ ؟ " قَالُوا : جَلَسْنَا نَذْكُرُ اللَّهَ وَنَحْمَدُهُ عَلَى مَا هَدَانَا للإِسْلاَم وَمَنَّ بِه عَلَيْنَا . قَالَ . " آللَّهُ مَا أَجْلَسَكُمْ إِلاَّ ذَاكَ ؟ " قَالُوا : وَاللَّه مَا أَجْلَسَنَا إِلاَّ ذَاكَ . قَالَ : " أَمَا إِنِّي لَمْ أَسْتَحْلِفْكُمْ تُهْمَةً لَكُمْ وَلَكِنَّهُ أَتَانِي جِبْرِيلُ فَأَخْبَرَنِي أَنَّ اللَّهَ يُبَاهِي بِكُمْ الْمَلاَئِكَةَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1450** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

முஆவியா (ரழி) அவர்கள், பள்ளிவாசலில் இருந்த ஒரு சபைக்கு வந்தார்கள். "நீங்கள் உட்கார்ந்திருக்கும் காரணம் என்ன?" என்று கேட்டார்கள். "அல்லாஹ்வை நினைவுகூர்வதற்காக உட்கார்ந்திருக்கிறோம்" என்று கூறினர். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதைத்தவிர நீங்கள் உட்கார வேறு காரணமில்லையே?" என்று கேட்டார். "இதற்காகவே தவிர வேறு எதற்கும் உட்காரவில்லை" என்று அவர்கள் கூறினர். "அறிந்து கொள்ளுங்கள். உங்களைச் சந்தேகம் கொண்டு உங்களைச் சத்தியம் செய்ய நான் கேட்கவில்லை. நபி (ஸல்) அவர்களிடம் எனக்குரிய தொடர்பு வலுவாக இருந்தும், என்னைவிடக் குறைவாக அவர்கள் பற்றிய செய்தியை அறிவிப்பவர் எவருமில்லை" என்று கூறிய முஆவியா (ரழி) அவர்கள், "ஒருமுறை நபி (ஸல்) அவர்கள், தன் தோழர்களில் சிலர் இருந்த சபைக்கு வந்தார்கள். "நீங்கள் உட்கார்ந்திருக்கும் காரணம் என்ன?" என்று

கேட்டார்கள். "அல்லாஹ்வை நினைவுகூர்பவர்களாக உட்கார்ந்திருக்கிறோம். இஸ்லாத்தை எங்களுக்கு வழிகாட்டியாக தந்து எங்களுக்கு அருள்புரிந்த அல்லாஹ்வைப் புகழவும் செய்கிறோம்" என்று கூறினர். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதைத் தவிர வேறு எதற்கும் நீங்கள் உட்காரவில்லையே?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதைத் தவிர வேறு எதற்கும் உட்காரவில்லை" என்று கூறினர். "அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! உங்களைச் சந்தேகம் கொண்டு, நான் கேட்கவில்லை. எனினும் என்னிடம் ஜிப்ரீல் வந்தார். 'உங்களைப் பற்றி வானவர்களிடம் அல்லாஹ் புகழ்கிறான்' என என்னிடம் கூறினார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என முஆவியா (ரழி) கூறினார்கள். **(முஸ்லிம்:2701)**

## ٢٤٨ - باب الذكر عند الصّباح والمَسَاء

## பாடம் : 248 - காலையும், மாலையும் அல்லாஹ்வை நினைவு கொள்வது!

قَالَ اللّٰهُ تَعَالَى : وَاذْكُرْ رَبَّكَ فِي نَفْسِكَ تَضَرُّعًا وَخِيفَةً وَدُونَ الْجَهْرِ مِنَ الْقَوْلِ بِالْغُدُوِّ وَالأَصَالِ وَلاَ تَكُنْ مِنَ الْغَافِلِينَ . قَالَ أَهْلُ اللُّغَةِ : " الأَصَالُ " جَمْعُ أَصِيلٍ وَهُوَ مَا بَيْنَ الْعَصْرِ وَالْمَغْرِبِ . وَقَالَ تَعَالَى : وَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ قَبْلَ طُلُوعِ الشَّمْسِ وَقَبْلَ غُرُوبِهَا . وَقَالَ تَعَالَى : وَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ بِالْعَشِيِّ وَالأَبْكَارِ . قَالَ أَهْلُ اللُّغَةِ : " الْعَشِيُّ " مَا بَيْنَ زَوَالِ الشَّمْسِ وَغُرُوبِهَا . وَقَالَ تَعَالَى : فِي بُيُوتٍ أَذِنَ اللّٰهُ أَنْ تُرْفَعَ وَيُذْكَرَ فِيهَا اسْمُهُ يُسَبِّحُ لَهُ فِيهَا بِالْغُدُوِّ وَالأَصَالِ رِجَالٌ لاَ تُلْهِيهِمْ تِجَارَةٌ وَلاَ بَيْعٌ عَنْ ذِكْرِ اللّٰهِ . الآيَةَ . وَقَالَ تَعَالَى : إِنَّا سَخَّرْنَا الْجِبَالَ مَعَهُ يُسَبِّحْنَ بِالْعَشِيِّ وَالإِشْرَاقِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *(நபியே!) உம் மனதிற்குள் பணிவோடும், பயத்தோடும், சப்தமின்றியும், காலையிலும், மாலையிலும் இறைவனை நினைவுகூர்வீராக! மறதியாளர்களில் ஒருவராக நீர் ஆகிட வேண்டாம். (7:205)*

*சூரியன் உதயமாகும் முன்பும், அது மறையும் முன்பும் உமது இறைவனைப் புகழ்ந்து, தஸ்பீஹ் செய்வீராக! (20:130)*

*காலையிலும், மாலையிலும் உமது இறைவனை புகழ்ந்து தஸ்பீஹ் செய்வீராக!(40:55)*

*சில வீடுகளில், அவை உயர்த்தப்பட்டு அதிலே அவன் பெயரை நினைவு கூறப்படவும், அதிலே அவனை காலையிலும், மாலையிலும் தஸ்பீஹ் செய்யப்படவும் வேண்டும் என அல்லாஹ் அனுமதித்துள்ளான். சில மனிதர்கள் உள்ளனர். அல்லாஹ்வை நினைவு கூர்வதை விட்டும் வியாபாரமோ, தொழிலோ அவர்களைத் திசை திருப்பாது.... (24:36,37)*

*நிச்சயமாக நாம், காலையிலும், மாலையிலும் தஸ்பீஹ் செய்கின்ற மலைகளை நபி தாவூத் (அலை) அவர்களுக்கு வசப்படுத்தித் தந்திருந்தோம். (38:18)*

١٤٥١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَنْ قَالَ حِينَ يُصْبِحُ وَحِينَ يُمْسِي : سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهِ مِائَةَ مَرَّةٍ لَمْ يَأْتِ أَحَدٌ يَوْمَ الْقِيَامَةِ بِأَفْضَلَ مِمَّا جَاءَ بِهِ إِلاَّ أَحَدٌ قَالَ مِثْلَ مَا قَالَ أَوْ زَادَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1451** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"காலையிலும், மாலையிலும், "சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி" என 100 தடவை ஒருவர் கூறினால், இது போன்று கூறியவர் அல்லது இதைவிட அதிகம் கூறியவர் தவிர, மறுமைநாளில் எவரும் இவர் கொண்டு வந்ததைவிட, மிகச் சிறந்ததைக் கொண்டு வரமாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2692)**

**துஆவின் பொருள் : அல்லாஹ்வைப் புகழ்வதுடன், அவன் தூய்மையானவன் எனப் போற்றுகிறேன்.**

١٤٥٢ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : يَا رَسُولَ اللّٰه مَا لَقِيت مِنْ عَقْرَب لَدَغَتْنِي الْبَارِحَةَ ! قَالَ : أَمَا لَوْ قُلْت حِينَ أَمْسَيْت : " أَعُوذُ بِكَلِمَاتِ اللّٰه التَّامَّات مِنْ شَرِّ مَا خَلَقَ لَمْ تَضُرَّك " . رَوَاهُ مُسْلِمٌ .

**1452** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, "இறைத்தூதர் அவர்களே! நேற்று இரவு தேள் ஒன்று என்னைக் கொட்டி விட்டது" என்று கூறினார். அதற்கு அவர்கள், "அறிந்து கொள்! மாலை நேரம் வந்ததும், "அஊது பிகலிமாதில்லாஹித் தாம்மாத்தி மின்ஷர்ரி மா கலக" என்று கூறினால், அது உமக்கு இடையூறு தராது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2709)**

**துஆவின் பொருள் : அல்லாஹ்வின் முழுமையான சொற்களைக் கொண்டு, அவனின் படைப்புகளின் தீமைகளை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٥٣ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنْ النَّبِيِّ ﷺ أَنَّهُ كَانَ يَقُولُ إِذَا أَصْبَحَ : " اللَّهُمَّ بِك أَصْبَحْنَا وَبِك أَمْسَيْنَا وَبِك نَحْيَا وَبِك نَمُوتُ وَإِلَيْك النُّشُورُ " . وَإِذَا أَمْسَى قَالَ : " اللَّهُمَّ بِك أَمْسَيْنَا وَبِك نَحْيَا وَبِك نَمُوتُ وَإِلَيْك النُّشُورُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1453** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் காலை நேரத்தில், "அல்லாஹும்மா பிக அஸ்பஹ்னா வபிக அம்ஸய்னா, வபிக நஹ்யா, வபிக நமூத்து, வஇலய்கன்னுஷூர்" (1) என்று கூறுவார்கள். மாலை நேரத்தில் "அல்லாஹும்ம பிக அம்ஸய்னா, வபிக நஹ்யா, வபிக நமூது, வஇலய்கன்னுஷூர்" (2) என்று கூறுவார்கள். **(அபூதாவூது:5068. திர்மிதீ:3391. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள் (1) : இறைவா! உன் மூலமே காலையை அடைந்தோம். உன் மூலமே மாலையை அடைந்தோம். உன் மூலமே உயிர் வாழ்கிறோம். உன் மூலமே இறப்போம். உன்னிடமே மீளுதல் உள்ளது.**

**துஆவின் பொருள் (2) : இறைவா! உன் மூலமே மாலையை அடைந்தோம். உன் மூலமே உயிர் வாழ்கிறோம். உன் மூலமே இறப்போம். உன்னிடமே மீளுதல் உள்ளது.**

١٤٥٤ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ أَبَا بَكْرٍ الصِّدِّيقَ رَضِيَ اللّٰهُ عَنْهُ : قَالَ : يَا رَسُولَ اللّٰه مُرْنِي بِكَلِمَات أَقُولُهُنَّ إِذَا أَصْبَحْت وَإِذَا أَمْسَيْت . قَالَ : " قُلْ : اللَّهُمَّ فَاطِرَ السَّمَوَات وَالأَرْض عَالِمَ الْغَيْب وَالشَّهَادَة رَبَّ كُلِّ شَيْءٍ وَمَلِيكَهُ أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ . أَعُوذُ بِك مِنْ شَرِّ نَفْسِي وَشَرِّ الشَّيْطَان وَشِرْكه " . قَالَ : " قُلْهَا إِذَا أَصْبَحْت وَإِذَا أَمْسَيْت وَإِذَا أَخَذْت مَضْجَعَك " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1454** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! காலையிலும், மாலையிலும் நான் கூறக் கூடிய சில வார்த்தைகளை எனக்குக் கற்றுத் தாருங்கள்" என்று நபி (ஸல்) அவர்களிடம் அபூபக்கர் சித்தீக் (ரழி) கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம ஃபாதிரஸ் ஸமாவாதி, வல்அர்ழி, ஆலிமல் ஃகய்பி வஷ்ஷஹாததி, ரப்பி குல்லி ஷய்இன் வமலீகஹு, அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லா அன்த,

அஊது பிக மின்ஷர்ரி நஃப்ஸீ வஷர்ரீஷ் ஷய்தானி வஷிர்கிஹி" என்று கூறு!" என்று நபி (ஸல்) கூறிவிட்டு, "காலையிலும், மாலையிலும், நீர் படுக்கைக்கு செல்லும் போதும் இதைக் கூறுவீராக!" என்று கூறினார்கள்.

**(அபூதாவூது:5067. திர்மிதீ:3392. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்: இறைவா! வானங்களையும், பூமியையும் படைத்தவனே! மறைவான வற்றையும், முன்னிலையில் உள்ளதையும் அறிந்தவனே! அனைத்துப் பொருட்களின் இறைவனே! அதன் அரசனே! வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று சாட்சி கூறுகிறேன். என் உள்ளத்தின் தீங்கை விட்டும், ஷைத்தான் மற்றும் அவனது கூட்டாளிகளின் தீங்கை விட்டும், இணை வைப்பதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٥٥ - وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ نَبِيُّ اللَّهِ ﷺ إِذَا أَمْسَى قَالَ : " أَمْسَيْنَا وَأَمْسَى الْمُلْكُ لِلَّهِ وَالْحَمْدُ لِلَّهِ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ " . قَالَ الرَّاوِي : أَرَاهُ قَالَ فِيهِنَّ : " لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ . رَبِّ أَسْأَلُكَ خَيْرَ مَا فِي هَذِهِ اللَّيْلَةِ وَخَيْرَ مَا بَعْدَهَا وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا فِي هَذِهِ اللَّيْلَةِ وَشَرِّ مَا بَعْدَهَا . رَبِّ أَعُوذُ بِكَ مِنَ الْكَسَلِ وَسُوءِ الْكِبَرِ أَعُوذُ بِكَ مِنْ عَذَابٍ فِي النَّارِ وَعَذَابٍ فِي الْقَبْرِ " . وَإِذَا أَصْبَحَ قَالَ ذَلِكَ أَيْضًا : " أَصْبَحْنَا وَأَصْبَحَ الْمُلْكُ لِلَّهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1455** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அல்லாஹ்வின் நபி (ஸல்) அவர்கள் மாலை நேரத்தின் போது, "அம்ஸய்னா வஅம்ஸல் முல்கு லில்லாஹி, வல்ஹம்துலில்லாஹ், லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, லாஷரீக லஹு" (1) என்று கூறுவார்கள். (இதை அறிவிக்கும் அறிவிப்பாளர் கீழ்கண்ட வார்த்தைகளையும் சேர்த்துக் கூறுவார்கள் என்றும் கூறுகிறார்) "லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷய்இன் கதீர். ரப்பி அஸ்அலுக கைர, மாஃபீ ஹாதிஹில்லய்லதி வகய்ர மா பஃதஹா, வஅஊதுபிக மின்ஷர்ரி மாஃபீ ஹாஃதிஹில் லய்லதி வஷர்ரி மா பஹ்தஹா, ரப்பி அஊது பிக மினல் கஸ்லி, வசூஇல் கிபரி, ரப்பி அஊதுபிக மின் அஃதாபின் ஃபின்னாரி, வஅதாபின் ஃபில் கப்ரி" (2) என்று சேர்த்துக் கூறுவார்கள். காலை நேரம் வந்ததும், "அஸ்பஹ்னா வஅஸ்பஹல் முல்கு லில்லாஹ்" (3) என்று கூறுவார்கள்.

**(முஸ்லிம்:2723)**

**துஆவின் பொருள் (1) : நாம் மாலை நேரத்தை அடைந்தோம். மாலை நேரத்தின் ஆட்சியும், அல்லாஹ்வுக்கே உரியதாகும் அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் இல்லை.**

**துஆவின் பொருள் (2) : அவனுக்கே ஆட்சி அதிகாரம் உண்டு. அவனுக்கே புகழ் அனைத்தும். அவனே அனைத்திற்கும் சக்தியானவன். இறைவா! இந்த இரவில் உள்ள நன்மையையும், அதன்பின் வரும் நாட்களின் நன்மையையும் உன்னிடம் கேட்கிறேன். மேலும் இந்த இரவில் உள்ள தீமையை விட்டும், இதன்பின் வரும் நாட்களின் தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். இறைவா! சோம்பேறித்தனம், முதுமையின் தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இறைவா! நரகத்தின் வேதனையை விட்டும், கப்ரின் வேதனையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

**துஆவின் பொருள் (3) : காலை நேரத்தை நாம் அடைந்துவிட்டோம். காலை நேரத்தின் ஆட்சியும், அல்லாஹ்வுக்கே உரியதாகும்.**

١٤٥٦ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ خُبَيْبٍ " بِضَمِّ الْخَاءِ الْمُعْجَمَةِ " رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " اقْرَأْ قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ وَالْمُعَوِّذَتَيْنِ حِينَ تُمْسِي وَحِينَ تُصْبِحُ ثَلاَثَ مَرَّاتٍ تَكْفِيكَ مِنْ كُلِّ شَيْءٍ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1456** அப்துல்லாஹ் இப்னு ஹுபைப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"காலையிலும், மாலையிலும் "குல்ஹுவல்லாஹு அஹது" அத்தியாயம் மற்றும் (குல்அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்னாஸ் என்ற) இரண்டு முஅவ்விதய்ன் அத்தியாயத்தையும் மூன்று தடவை நீர் கூறுவீராக! அனைத்துப் பொருட்களின் தீமையை விட்டும் (உம்மை பாதுகாத்திட) உமக்கு அது போதும்" என்று என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:5082. திர்மிதி:3575. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

١٤٥٧ – وَعَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ عَبْدٍ يَقُولُ فِي صَبَاحِ كُلِّ يَوْمٍ وَمَسَاءِ كُلِّ لَيْلَةٍ : بِسْمِ اللَّهِ الَّذِي لاَ يَضُرُّ مَعَ اسْمِهِ شَيْءٌ فِي الأَرْضِ وَلاَ فِي السَّمَاءِ وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ ثَلاَثَ مَرَّاتٍ إِلاَّ لَمْ يَضُرَّهُ شَيْءٌ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1457** உஸ்மான் இப்னு அஃப்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒவ்வொரு நாள் காலையிலும், ஒவ்வொரு முன் இரவிலும் "பிஸ்மில்லாஹ்ஹில்லஃதீ லா யழுர்ரு மஅஸ்மிஹி ஷய் உன் ஃபில் அர்ழி வலா ஃபிஸ்ஸமாஇ வஹுவஸ் ஸமீஉல் அலீம்" என்று மூன்று தடவை கூறும், எந்த அடியாருக்கும் எந்தப் பொருளும் தீமையும் செய்து விடுவதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:5088. திர்மிதி:3388. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதி இமாம் கூறுகின்றார்கள்)**

**துஆவின் பொருள் : பூமியிலும், வானத்திலும் உள்ள எந்தப் பொருளும் எவன் பெயருடன் தீங்கு செய்யாதோ, அந்த அல்லாஹ்வின் பெயரால்... அவன் மிகக் கேட்பவன். மிக அறிந்தவன் ஆவான்.**

## ٢٤٩ – بَابُ ما يقوله عند النوم

## பாடம் : 249 - தூங்கும் போது கூற வேண்டியவை

**قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ فِي خَلْقِ السَّمَوَاتِ وَالأَرْضِ وَاخْتِلاَفِ اللَّيْلِ وَالنَّهَارِ لَآيَاتٍ لِأُولِي الأَلْبَابِ الَّذِينَ يَذْكُرُونَ اللَّهَ قِيَامًا وَقُعُودًا وَعَلَى جُنُوبِهِمْ وَيَتَفَكَّرُونَ فِي خَلْقِ السَّمَوَاتِ وَالأَرْضِ الأيَاتِ.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *வானங்களை, பூமியை படைத்திருப்பதிலும், இரவு-பகல் மாறி மாறி வருவதிலும் சிந்திப்பவர்களுக்கு அத்தாட்சிகள் உண்டு. (அவர்கள் எத்தகையோரென்றால்) நின்றவாறும், உட்கார்ந்தவாறும், தங்களின் படுக்கையிலும் அல்லாஹ்வை நினைவுகூர்கிறார்கள். மேலும் வானங்கள், பூமியை படைத்திருப்பது பற்றியும் சிந்திக்கிறார்கள். (பிறகு அவர்கள் உணர்ச்சி பொங்க இப்படிப் பிரார்த்திக்கின்றார்கள்:) "எங்கள் இறைவனே இவையனைத்தையும் நீ வீணாக (யாதொரு நோக்கமுமின்றிப்) படைக்கவில்லை. (வீணான செயல்களை விட்டு) நீ தூய்மையானவன். எனவே, நரக வேதனையிலிருந்து நீ எங்களைக் காப்பாற்றுவாயாக!"*

*(3:190,191)*

١٤٥٨ – وَعَنْ حُذَيْفَةَ وَأَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا أَوَى إِلَى فِرَاشِهِ قَالَ : " بِاسْمِكَ اللَّهُمَّ أَحْيَا وَأَمُوتُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1458** ஹுதைஃபா (ரழி), அபூதர் (ரழி) ஆகிய இருவரும் அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் படுக்கைக்கு வந்தால், "பிஸ்மிகல் லாஹும்ம அஹ்யா வஅமூது" என்று கூறுவார்கள். **(புகாரி:6324,6325)**

**துஆவின் பொருள் : இறைவா! உன் பெயரால் நான் (விழித்து) உயிர்த்தெழுகிறேன். உன் பெயரால் நான் உறங்குகிறேன்.**

١٤٥٩ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ لَهُ وَلِفَاطِمَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا : " إِذَا أَوَيْتُمَا إِلَى فِرَاشِكُمَا – أَوْ إِذَا أَخَذْتُمَا مَضَاجِعَكُمَا – فَكَبِّرَا ثَلاَثًا وَثَلاَثِينَ وَسَبِّحَا ثَلاَثًا وَثَلاَثِينَ وَاحْمَدَا ثَلاَثًا وَثَلاَثِينَ " . وَفِي رِوَايَةٍ : " التَّسْبِيحُ أَرْبَعًا وَثَلاَثِينَ " . وَفِي رِوَايَةٍ : " التَّكْبِيرُ أَرْبَعًا وَثَلاَثِينَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1459** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் இருவரும் உங்கள் படுக்கைக்கு வந்தால், 33 தடவை "அல்லாஹு அக்பர்" கூறுங்கள். 33 தடவை "சுப்ஹானல்லாஹ்" கூறுங்கள். 33 தடவை "அல்ஹம்துலில்லாஹ்" கூறுங்கள்" என்று நபி(ஸல்) அவர்கள் எனக்கும், (என் மனைவி) பாத்திமாவிற்கும் கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில், "34 தடவை சுப்ஹானல்லாஹ்" என்றும் மற்றொரு அறிவிப்பில் 34 தடவை "அல்லாஹு அக்பர்" என்றும் உள்ளது. **(புகாரி:3705,5361. முஸ்லிம்:2727)**

١٤٦٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِذَا أَوَى أَحَدُكُمْ إِلَى فِرَاشِهِ فَلْيَنْفُضْ فِرَاشَهُ بِدَاخِلَةِ إِزَارِهِ فَإِنَّهُ لاَ يَدْرِي مَا خَلَفَهُ عَلَيْهِ ثُمَّ يَقُولُ : بِاسْمِكَ رَبِّي وَضَعْتُ جَنْبِي وَبِكَ أَرْفَعُهُ إِنْ أَمْسَكْتَ نَفْسِي فَارْحَمْهَا وَإِنْ أَرْسَلْتَهَا فَاحْفَظْهَا بِمَا تَحْفَظُ بِهِ عِبَادَكَ الصَّالِحِينَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1460** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் தன் படுக்கைக்கு வந்தால், தன் வேட்டியின் ஓரத்தால் அந்தப் படுக்கையை உதறட்டும்! ஏன் எனில், அதன் உள்ளே என்ன உள்ளது என்பதை அறியமாட்டார். பின்பு, 'பிஸ்மிக ரப்பீ வழஃது ஜன்பீ, வபிக அர்ஃபஉஹு, இன் அம்ஸக்த நஃப்ஸீ, ஃபர்ஹம்ஹா, வஇன் அர்ஸல்தஹா, ஃபஹ்ஃபள்ஹா பிமா தஹ்ஃபளு பிஹி இபாதகஸ் ஸாலிஹீன்' என கூறட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6320. முஸ்லிம்:2714)**

**துஆவின் பொருள் : இறைவா! உன் பெயரால் என் விலாவை பூமியில் வைக்கிறேன். உன் மூலமே அதை உயர்த்துவேன். என் உயிரை நீ எடுத்துவிட்டால் அதற்கு அருள் புரிவாயாக! அதை நீ அனுப்பினால், நல்லவர்களான உன் அடியார்களை நீ பாதுகாப்பது மூலம் அந்த உயிரை (என்னை) நீ பாதுகாப்பாயாக!**

١٤٦١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ كَانَ إِذَا أَخَذَ مَضْجَعَهُ نَفَثَ فِي يَدَيْهِ وَقَرَأَ بِالْمُعَوِّذَاتِ ; وَمَسَحَ بِهِمَا جَسَدَهُ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لَهُمَا : أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا أَوَى إِلَى فِرَاشِهِ كُلَّ لَيْلَةٍ جَمَعَ كَفَّيْهِ ثُمَّ نَفَثَ فِيهِمَا فَقَرَأَ فِيهِمَا : قُلْ هُوَ اللّٰهُ أَحَدٌ وَقُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ وَقُلْ أَعُوذُ بِرَبِّ النَّاسِ ثُمَّ مَسَحَ بِهِمَا مَا اسْتَطَاعَ مِنْ جَسَدِهِ : يَبْدَأُ بِهِمَا عَلَى رَأْسِهِ وَوَجْهِهِ وَمَا أَقْبَلَ مِنْ جَسَدِهِ يَفْعَلُ ذَلِكَ ثَلاَثَ مَرَّاتٍ . مُتَّفَقٌ عَلَيْهِ . قَالَ أَهْلُ اللُّغَةِ : " النَّفْثُ " نَفْخٌ لَطِيفٌ بِلاَ رِيقٍ .

**1461** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் படுக்கைக்கு வந்தால், தன் இரு கைகளிலும் ஊதி, முஅவ்விதாத் (குல் ஹுவல்லாஹு அஹது, குல்அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்னாஸ்) ஆகிய அத்தியாயங்களை ஓதி, தன் உடலின் மீது இரண்டு கைகளையும் தடவிக் கொள்வார்கள்."

**(புகாரி:6319. முஸ்லிம்:2192)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

நபி (ஸல்) அவர்கள் தன் படுக்கைக்கு வந்தால், ஒவ்வொரு இரவும் தன் உள்ளங்கைகளை சேர்த்து, அதில் ஊதுவார்கள். அவ்விரண்டிலும், "குல் ஹுவல்லாஹு அஹது, குல் அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்னாஸ்" ஆகிய சூராக்களை ஓதுவார்கள். பின்பு தன் உடலில் தன்னால் முடிந்த அளவுக்கு தன் இரண்டு கைகளால் தடவுவார்கள். தன் தலை, முகத்திலிருந்து ஆரம்பித்து, தன் உடல் முழுவதும் தடவுவார்கள். இவ்வாறு மூன்று தடவை செய்வார்கள். **(புகாரி:6317 முஸ்லிம்:2192)**

١٤٦٢ - وَعَنْ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا أَتَيْتَ مَضْجَعَكَ فَتَوَضَّأْ وُضُوءَكَ لِلصَّلاَةِ ثُمَّ اضْطَجِعْ عَلَى شِقِّكَ الأَيْمَنِ وَقُلْ : اللَّهُمَّ أَسْلَمْتُ نَفْسِي إِلَيْكَ وَوَجَّهْتُ وَجْهِي إِلَيْكَ وَفَوَّضْتُ أَمْرِي إِلَيْكَ وَأَلْجَأْتُ ظَهْرِي إِلَيْكَ رَغْبَةً وَرَهْبَةً إِلَيْكَ لاَ مَلْجَأَ وَلاَ مَنْجَا مِنْكَ إِلاَّ إِلَيْكَ آمَنْتُ بِكِتَابِكَ الَّذِي أَنْزَلْتَ وَبِنَبِيِّكَ الَّذِي أَرْسَلْتَ فَإِنْ مِتَّ مِتَّ عَلَى الْفِطْرَةِ وَاجْعَلْهُنَّ آخِرَ مَا تَقُولُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1462** பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நீர் உம் படுக்கைக்கு வந்தால், தொழுகைக்கு உளுச் செய்வது போல் உளுச் செய்வீராக! பின்பு வலது புறமாக திரும்பிப் படுப்பீராக! 'அல்லாஹும்ம அஸ்லம்து நஃப்ஸீ இலய்க, வவஜ்ஜஹ்து வஜ்ஹீ இலய்க, வஃபவ்வழ்து அம்ரீ இலய்க, வஅஜஹ்து ளஹ்ரீ இலய்க, ரஹ்பதன், வரஹ்பதன் இலய்க, லா மல்ஜஅ வலா மன்ஜஅ மின்க இல்லா இலய்க, ஆமன்து பிகிதாபிக்கல்லஃதீ அன்ஸல்த, வபி நபிய்யிகல்லஃதீ அர்ஸல்த" என்று கூறுவீராக. நீர் (இவ்வாறு கூறிய நிலையில்) இறந்து விட்டால், இயற்கை (இஸ்லாத்தின்) மீது இறந்து விடுவீர். நீர் கூறுவதில் (இதையே) இந்த வார்த்தைகளையே இறுதியாக ஆக்குவீராக!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6311. முஸ்லிம்:2710)**

**துஆவின் பொருள் : இறைவா! என்னை உன்னிடம் ஒப்படைத்து விட்டேன். என் முகத்தை உன் பக்கமே முன்னோக்கி விட்டேன். என் காரியத்தை உன்னிடமே ஒப்படைத்து விட்டேன். என் முதுகை உன் பக்கமே ஒதுக்கி விட்டேன். உன்னிடம் ஆதரவு வைத்தும், உன்னை பயந்துமே (இவ்வாறு செய்தேன்). ஒதுங்குமிடமும், தப்பிச் செல்லும் இடமும் உன்னிடமே தவிர வேறில்லை. நீ இறக்கியருளிய வேதத்தையும், நீ அனுப்பிய நபியையும் நான் நம்பிக்கை கொண்டேன்.**

١٤٦٣ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا أَوَى إِلَى فِرَاشِهِ قَالَ : " الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَطْعَمَنَا وَسَقَانَا وَكَفَانَا وَآوَانَا فَكَمْ مِمَّنْ لاَ كَافِيَ لَهُ وَلاَ مُؤْوِيَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1463** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் படுக்கைக்கு வந்தால், "அல்ஹம்து லில்லாஹில்லஃதீ அத்அமனா வஸகானா, வகஃபானா, வஆவானா ஃபகம் மிம்மன் லா காஃபீயலஹு வலாமுஹ்விய" என்று கூறுவார்கள்.

**(முஸ்லிம்:2715)**

**துஆவின் பொருள் : எங்களுக்கு உணவு தந்து, எங்களுக்கு பானம் தந்து, எங்களுக்கு போதுமானவனாக இருந்து, எங்களை ஒதுங்கிடவும் (உறங்கவும்) இடமளித்த அல்லாஹ்வுக்கே புகழ்**

அனைத்தும். எத்தனையோ பேர், தங்களுக்கு போதுமானவையோ, தங்குமிடமோ இல்லாது (துன்பத்தில்) உள்ளனர்.

١٤٦٤ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ إِذَا أَرَادَ أَنْ يَرْقُدَ وَضَعَ يَدَهُ الْيُمْنَى تَحْتَ خَدِّهِ ثُمَّ يَقُولُ : " اللَّهُمَّ قِنِي عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . وَرَوَاهُ أَبُو دَاوُدَ مِنْ رِوَايَةِ حَفْصَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا وَفِيهِ : أَنَّهُ كَانَ يَقُولُهُ ثَلاَثَ مَرَّاتٍ .

**1464** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தூங்க விரும்பினால், தன் வலது கையை, தன் கன்னத்தின் கீழ் வைப்பார்கள். பின்பு "அல்லாஹும்மகினி அதாபக யவ்ம தப்அசு இபாதக" என்று கூறுவார்கள்.

**(திர்மிதீ:3398. இது "ஹஸன்" என திர்மிதீ கூறுகிறார்கள். ஹஃப்ஸா (ரழி) அறிவித்து அபூதாவூதில் (5045) உள்ள அறிவிப்பில் "மூன்று தடவை கூறுவார்கள்" என்று உள்ளது)**

துஆவின் பொருள் : இறைவா! உன் அடியார்களை நீ எழுப்பும் நாளில் உன் வேதனையை விட்டும் என்னைக் காப்பாற்றுவாயாக!

# அத்தியாயம் : 16

## பிரார்த்தனை

## ٢٥ – بابُ الأمر بالدعاء وفضله وبيان جمل من أدعيته ﷺ

## பாடம் : 250 - பிரார்த்தனையின் (துஆக்களின்) சிறப்பு

قَالَ اللَّهُ تَعَالَى : وَقَالَ رَبُّكُمُ ادْعُونِي أَسْتَجِبْ لَكُمْ . وَقَالَ تَعَالَى : ادْعُوا رَبَّكُمْ تَضَرُّعًا وَخُفْيَةً إِنَّهُ لاَ يُحِبُّ الْمُعْتَدِينَ . وَقَالَ تَعَالَى : وَإِذَا سَأَلَكَ عِبَادِي عَنِّي فَإِنِّي قَرِيبٌ أُجِيبُ دَعْوَةَ الدَّاعِ إِذَا دَعَانِ . الأيَةَ . وَقَالَ تَعَالَى : أَمَّنْ يُجِيبُ الْمُضْطَرَّ إِذَا دَعَاهُ وَيَكْشِفُ السُّوءَ الأيَةَ .

அல்லாஹ் கூறுகிறான்: *"என்னை அழையுங்கள். உங்களுக்கு நான் பதில் தருகிறேன்" என உங்கள் இறைவன் கூறுகின்றான். (40:60)*

*பணிவாகவும், மெதுவாகவும் உங்கள் இறைவனிடம் பிரார்த்தியுங்கள். நிச்சயமாக அவன் வரம்பு மீறுவோரை விரும்பமாட்டான். (7:55)*

*(நபியே) உம் அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்டால், நிச்சயமாக நான் நெருங்கி உள்ளேன். என்னிடம் பிரார்த்தித்தால் பிரார்த்தனை செய்பவரின் துஆவை நான் ஏற்கிறேன். (2:186)*

*துன்பத்திற்கு ஆளானவன் ஒருவனை அழைக்கும் போது, அவனுக்கு பதில் கூறி, தீமையை நீக்குபவன் யார்? (27:62)*

١٤٦٥ – وَعَنْ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " الدُّعَاءُ هُوَ الْعِبَادَةُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1465** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"துஆவும் வணக்கமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1479. திர்மிதி:3247,3372. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٤٦٦ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَسْتَحِبُّ الْجَوَامِعَ مِنْ الدُّعَاءِ وَيَدَعُ مَا سِوَى ذَلِكَ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ جَيِّدٍ .

**1466** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பல முக்கியமான கோரிக்கைகளை உள்ளடக்கி ஒன்று சேர்த்திருக்கும் (பொதுவான) துஆவையே விரும்புவார்கள். இதைத்தவிர மற்றதை விட்டு விடுவார்கள்.

**(அபூதாவூது:1482)**

١٤٦٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ أَكْثَرُ دُعَاءِ النَّبِيِّ ﷺ . " اللَّهُمَّ آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الأخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . زَادَ مُسْلِمٌ فِي رِوَايَتِهِ قَالَ : وَكَانَ أَنَسٌ إِذَا أَرَادَ أَنْ يَدْعُوَ بِدَعْوَةٍ دَعَا بِهَا وَإِذَا أَرَادَ أَنْ يَدْعُوَ بِدُعَاءٍ دَعَا بِهَا فِيهِ .

**1467** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்ம ஆதினா ஃபித்துன்யா ஹஸனதன், வஃபில் ஆகிரதி ஹஸனதன், வகினா அதாபன்னார்" என்பது நபி (ஸல்) அவர்களின் துஆவில் மிக அதிகமாக இருந்தது.

**(புகாரி:6389. முஸ்லிம்:2690)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "அனஸ் (ரழி) அவர்கள் தன் துஆவின் போது இந்த துஆவைக் கூறுவார்கள். மற்ற துஆச் செய்தாலும் இந்த துஆவையும் கூறுவார்கள்" என்று அதிகமாக உள்ளது.

**துஆவின் பொருள் : இறைவா! இவ்வுலகில் அழகிய வாழ்க்கையை அருள்வாயாக! மறுமையிலும் அழகிய வாழ்க்கையை அருள்வாயாக! நரக வேதனையை விட்டும் எங்களைக் காப்பாற்றுவாயாக!**

١٤٦٨ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَقُولُ : " اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْهُدَى وَالتُّقَى وَالْعَفَافَ وَالْغِنَى " . رَوَاهُ مُسْلِمٌ .

**1468** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுகல் ஹுதா வத்துகா, அல்அஃபாஃப, வல்ஃகினா" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:2721)**

**துஆவின் பொருள் : இறைவா! நேர்வழியையும், இறையச்சத்தையும், பேணுதலையும், பிறரிடம் தேவையாகாத நிலையையும் உன்னிடம் நான் கேட்கிறேன்.**

١٤٦٩ – وَعَنْ طَارِقِ بْنِ أَشْيَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ الرَّجُلُ إِذَا أَسْلَمَ عَلَّمَهُ النَّبِيُّ ﷺ الصَّلاَةَ ثُمَّ أَمَرَهُ أَنْ يَدْعُوَ بِهَؤُلاَءِ الْكَلِمَاتِ : " اللَّهُمَّ اغْفِرْ لِي وَارْحَمْنِي وَاهْدِنِي وَعَافِنِي وَارْزُقْنِي " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ عَنْ طَارِقٍ : أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ وَأَتَاهُ رَجُلٌ فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ كَيْفَ أَقُولُ حِينَ أَسْأَلُ رَبِّي ؟ قَالَ : " قُلْ : اللَّهُمَّ اغْفِرْ لِي وَارْحَمْنِي وَعَافِنِي وَارْزُقْنِي فَإِنَّ هَؤُلاَءِ تَجْمَعُ لَكَ دُنْيَاكَ وَآخِرَتَكَ " .

**1469** தாரிக் இப்னு அஷ்யம் (ரழி) கூறுகின்றார்கள்:

ஒரு மனிதர் முஸ்லிமாகிவிட்டால், அவருக்குத் தொழுகையை நபி (ஸல்) கற்றுக் கொடுப்பார்கள். பின்பு அவரிடம், "அல்லாஹும்ம**ஃ**பிர்லீ, வர்ஹம்னீ, வஹ்தினீ, வஆ**ஃ**பினீ, வர்சுக்னீ" என்று துஆச் செய்யுமாறு கட்டளையிடுவார்கள். **(முஸ்லிம்:2697)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, "இறைத்தூதர் அவர்களே! இறைவனிடம் துஆக் கேட்கும் போது நான் என்னக் கூறு வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்மஃபிர்லீ வர்ஹம்னீ, வஆஃபினீ, வர்சுக்னீ" என்று கூறுவீராக! இச்சொற்கள் உலகிற்கும், மறுமைக்கும் தேவையானதை உமக்கு ஒன்று சேர்த்துள்ளன" என்று கூறினார்கள் என உள்ளது.

**துஆவின் பொருள் : இறைவா! என்னை மன்னிப்பாயாக! எனக்கு அருள் புரிவாயாக! எனக்கு நேர்வழி காட்டு வாயாக! எனக்கு சுகமளிப்பாயாக! எனக்கு உணவளிப்பாயாக!**

١٤٧٠ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " اللَّهُمَّ مُصَرِّفَ الْقُلُوبِ صَرِّفْ قُلُوبَنَا عَلَى طَاعَتِكَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1470** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம முஸர்ரிஃபல் குலூபி ஸர்ரிஃப் குலூபனா அலா தாஅதிக" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:2654)**

**துஆவின் பொருள் : இறைவா! உள்ளங்களைத் திருப்புகின்றவனே! எங்களின் உள்ளங்களை உனக்கு கட்டுப்படுதலில் திருப்புவாயாக!**

١٤٧١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ " تَعَوَّذُوا بِاللَّهِ مِنْ جَهْدِ الْبَلَاءِ وَدَرَكِ الشَّقَاءِ وَسُوءِ الْقَضَاءِ وَشَمَاتَةِ الأَعْدَاءِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : قَالَ سُفْيَانُ : أَشُكُّ أَنِّي زِدْتُ وَاحِدَةً مِنْهَا .

**1471** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சோதனைகளின் சிரமங்களையும், அவலநிலை ஏற்படுவதையும், கெட்ட விதி, பகைவர்களின் மகிழ்ச்சி ஆகியவற்றை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6347,6616. முஸ்லிம்:2707)**

மற்றொரு அறிவிப்பில் (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுப்யான் "இதில் ஏதோ ஒன்றை நான் அதிகமாக கூறிவிட்டேனோ என்று சந்தேகிக்கிறேன்" என்று கூறினார்.

١٤٧٢ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَقُولُ : " اللَّهُمَّ أَصْلِحْ لِي دِينِي الَّذِي هُوَ عِصْمَةُ أَمْرِي وَأَصْلِحْ لِي دُنْيَايَ الَّتِي فِيهَا مَعَاشِي وَأَصْلِحْ لِي آخِرَتِي الَّتِي فِيهَا مَعَادِي وَاجْعَلْ الْحَيَاةَ زِيَادَةً لِي فِي كُلِّ خَيْرٍ وَاجْعَلْ الْمَوْتَ رَاحَةً لِي مِنْ كُلِّ شَرٍّ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1472** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம அஸ்லிஹ் லி தீனியல்லஃதீ ஹுவ இஸ்மது அம்ரீ வஅஸ்லிஹ் லீ துன்யாயல்லத்தீ ஃபீஹா மஆஷி வஅஸ்லிஹ் லீ ஆகிரதீல்லத்தீ ஃபீஹா மஆதி, வஜ்அலில் ஹயாத ஸியாதத்தன் லீ ஃபீகுல்லி கய்ரின், வஜ்அலில் மவ்த ராஹதன் லீ மின் குல்லி ஷர்ரின்" என்று கூறுவார்கள். **(முஸ்லிம்:2720)**

**துஆவின் பொருள் : இறைவா! என் காரியங்களின் பாதுகாப்பாக இருக்கும் என் மார்க்கத்தை எனக்கு சீராக்கித் தருவாயாக! என் வாழ்விடமாக உள்ள என் இவ்வுலகத்தை எனக்கு சீராக்கித் தருவாயாக! என் திரும்புமிடமாக உள்ள என் மறுமையை எனக்கு சீராக்கி வைப்பாயாக! என் வாழ்வை ஒவ்வொரு நல்லதிலும் எனக்கு அதிகரிப்பதாக ஆக்குவாயாக! என் மரணத்தை அனைத்துத் தீமைகளை விட்டும் எனக்கு ஆரோக்கியம் அளிப்பதாக ஆக்குவாயாக!**

١٤٧٣ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " قُلْ اللَّهُمَّ اهْدِنِي وَسَدِّدْنِي " . وَفِي رِوَايَةٍ : " اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْهُدَى وَالسَّدَادَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1473** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்மஹ்தினீ, வஸத்தித்னீ"[1] என்று கூறு" என என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் "அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்கல் ஹுதா வஸ்ஸதாத"[2] என்று உள்ளது. **(முஸ்லிம்:2725)**

**துஆவின் பொருள் (1) : இறைவா! எனக்கு நேர்வழி காட்டுவாயாக! என்னை சரிபடுத்துவாயாக!**

**துஆவின் பொருள் (2) : இறைவா! நேர்வழியையயும், சீர்படுத்துதலையும் உன்னிடம் நான் கேட்கிறேன்.**

١٤٧٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَقُولُ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ الْعَجْزِ وَالْكَسَلِ وَالْجُبْنِ وَالْهَرَمِ وَالْبُخْلِ وَأَعُوذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ ; وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ " . وَفِي رِوَايَةٍ : " وَضَلَعِ الدَّيْنِ وَغَلَبَةِ الرِّجَالِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1474** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்ம இன்னீ அவூது பிக, மினல் அஜ்ஸி வல்கஸலி, வல்ஜுபுனி வல்ஹரமி, வல்புஃக்லி, வஅவூது பிக மின் அதாபில் கப்ரி, வஅஊது பிக மின் ஃபித்னதில் மஹ்யா வல்மமாதி"[1] என்று நபி (ஸல்) கூறுவார்கள்.

மற்றொரு அறிவிப்பில் "வழலஇத்தய்னி, வஃகலபதிர் ரிஜால்"[2] என்றுள்ளது. **(முஸ்லிம்:2706)**

**துஆவின் பொருள் (1) : இறைவா! பலவீனம், சோம்பேறித்தனம், கோழைத்தனம், முதுமை, கஞ்சத்தனம் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு கோருகிறேன். மேலும் மரண (கப்ரு) வேதனையைவிட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். மேலும் வாழ்வில் மற்றும் மரணத்தின் குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

**துஆவின் பொருள் (2) : கடனின் தீங்குகளை விட்டும், மனிதர்களின் ஆதிக்கத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٧٥ – وَعَنْ أَبِي بَكْرٍ الصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ قَالَ لِرَسُولِ اللَّهِ ﷺ : عَلِّمْنِي دُعَاءً أَدْعُو بِهِ فِي صَلَاتِي . قَالَ : " قُلْ : اللَّهُمَّ إِنِّي ظَلَمْتُ نَفْسِي ظُلْمًا كَثِيرًا وَلَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ فَاغْفِرْ لِي مَغْفِرَةً مِنْ عِنْدِكَ وَارْحَمْنِي إِنَّكَ أَنْتَ الْغَفُورُ الرَّحِيمُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " وَفِي بَيْتِي " . وَرُوِيَ " ظُلْمًا كَثِيرًا " وَرُوِيَ " كَبِيرًا " بِالثَّاءِ الْمُثَلَّثَةِ وَبِالْبَاءِ الْمُوَحَّدَةِ ; فَيَنْبَغِي أَنْ يُجْمَعَ بَيْنَهُمَا فَيُقَالُ : " كَثِيرًا كَبِيرًا " .

**1475** அபூபக்கர் சித்தீக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் தொழுகையில் நான் ஓதிக் கொள்ளத்தக்க ஒரு துஆவை எனக்குக் கற்றுத் தாருங்கள்" என்று கேட்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம இன்னீ ளலம்து நஃப்ஸி ளுல்மன் கஸீரன். வலா யஃக்ஃபிரு தூனூப இல்லா அன்த. ஃபஃக்ஃபிர்லீ மஃக்ஃபிரதன் மின் இன்திக. வர்ஹம்னீ இன்னக்க அன்தல் ஃகஃபூருர் ரஹீம்" என்று கூறுவீராக எனக் கூறினார்கள். **(புகாரி:834. முஸ்லிம்:2705)**

மற்றொரு அறிவிப்பில் "எனது இல்லத்தில் தொழும் போது ஓதக் கூடிய ஒரு துஆவை எனக்குக் கற்றுத் தாருங்கள்" எனக் கேட்டதாக உள்ளது. "அதிகமான அநீதம்" என்றும், "பெரிய (அநீதம்)" என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. எனவே "ளுல்மன் கஸீரன் கபீரன்" (பெரிய அதிகமான அநீதம்) என்று இணைத்து வாசிப்பது சரியாகும்.

**துஆவின் பொருள் : இறைவா! நான் என் ஆன்மாவிற்கு அதிகம் அநீதம் இழைத்து விட்டேன். உன்னைத் தவிர பாவங்களை எவரும் மன்னிக்க மாட்டார்கள். எனவே, உன்னிடமுள்ள மன்னிப்பின் மூலமாக என்னை மன்னிப்பாயாக! எனக்கு அருள் புரிவாயாக! நிச்சயமாக நீ மன்னிப்பவன், கருணையாளன்.**

١٤٧٦ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ أَنَّهُ كَانَ يَدْعُو بِهَذَا الدُّعَاءِ : " اللَّهُمَّ اغْفِرْ لِي خَطِيئَتِي وَجَهْلِي وَإِسْرَافِي فِي أَمْرِي وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي : اللَّهُمَّ اغْفِرْ لِي جِدِّي وَهَزْلِي ; وَخَطَئِي وَعَمْدِي . وَكُلُّ ذَلِكَ عِنْدِي . اللَّهُمَّ اغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ وَمَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ وَأَنْتَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1476** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும் மஃக்ஃபிர்லீ கதீஅத்தீ வஜஹ்லீ, வஇஸ்ராஃபீ, ஃபீஅம்ரி, வமா அன்த அஃலமு பிஹி மின்னீ, அல்லாஹும்மஃபிர்லீ ஜித்தி வஹஸ்லீ வகதஈ வஅம்தீ, வகுல்லு, ஃதாலிக இன்தீ, அல்லாஹும்மஃபிர்லீ மா கத்தம்து வமா அக்கர்த்து, வமா அஸ்ரர்து, வமா அஃலன்து வமா அன்த அஃலமு பிஹி மின்னீ அன்தல் முகத்தமு, வஅன்தல் முஅக்கரு, வஅன்த அலாகுல்லி ஷய்இன் கதீர்" என்ற இந்த துஆவை நபி (ஸல்) அவர்கள் கேட்பார்கள். **(புகாரி:6398. முஸ்லிம்:2719)**

**துஆவின் பொருள் : இறைவா! என் தவறை, என் அறியாமையை, என் காரியத்தில் நான் செய்த வீண் விரயத்தை, என்னை விட எதை பற்றி நீ அறிந்துள்ளாயோ அதையும் (அப்பாவங்க ளையும்) நீ மன்னிப்பாயாக! இறைவா! எனது திட்டமிட்ட, எனது விளையாட்டுத்தனமான பாவத்தை, என் குற்றத்தை, என் விருப்பத்திலான பாவத்தை, என்னிடம் ஏற்பட்ட அனைத்தையும் எனக்கு நீ மன்னிப்பாயாக! இறைவா! நான் இரகசியமாகவும், பகிரங்கமாகவும் செய்தவற்றை என்னைப் பற்றி நீ மிக அறிந்துள்ளவற்றையும் நீ மன்னிப்பாயாக! நான் முந்தியும், பிந்தியும் செய்தவற்றை (பாவங்களை) எனக்கு மன்னிப்பாயாக! நீயே முற்படுத்துபவன். நீயே பிற்படுத்துபவன். நீயே அனைத்தின் மீதும் ஆற்றல் மிக்கவன்.**

١٤٧٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَقُولُ فِي دُعَائِهِ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا عَمِلْتُ وَمِنْ شَرِّ مَا لَمْ أَعْمَلْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1477** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மின்ஷர்ரி மாஅமில்து வமின் ஷர்ரி மா லம் அஃமல்" என்று தன் துஆவில் நபி (ஸல்) அவர்கள் கூறுவார்கள். **(முஸ்லிம்:2716)**

**துஆவின் பொருள் : இறைவா! நான் செய்துள்ளவற்றின் தீங்கை விட்டும் நான் செய்யாதவற்றின் தீங்கை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٧٨ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كَانَ مِنْ دُعَاءِ رَسُولِ اللَّهِ ﷺ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ زَوَالِ نِعْمَتِكَ وَتَحَوُّلِ عَافِيَتِكَ وَفُجَاءَةِ نِقْمَتِكَ وَجَمِيعِ سَخَطِكَ . " رَوَاهُ مُسْلِمٌ .

**1478** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்ம இன்னீ அவூது பிக மின் ஜவாலிநிஃமதிக, வதஹவ்வுலி ஆஃபியதிக்க, வஃபுஜாஅதி நிக்மதிக்க, வஜமீஇ ஸக்திக" என்பது நபி (ஸல்) அவர்களின் துஆக்களில் ஒன்றாக உள்ளது. **(முஸ்லிம்:2739)**

**துஆவின் பொருள் : இறைவா! உன் அருள் நீங்குவதிலிருந்தும், (நீ அளித்த) உன் ஆரோக்கியம் விலகுவதிலிருந்தும், உன் திடீர் வேதனையிலிருந்தும், உன் அனைத்து கோபத்திலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٧٩ – وَعَنْ زَيْدِ بْنِ أَرْقَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَقُولُ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ وَالْبُخْلِ وَالْهَرَمِ وَعَذَابِ الْقَبْرِ : اللَّهُمَّ آتِ نَفْسِي تَقْوَاهَا وَزَكِّهَا أَنْتَ خَيْرُ مَنْ زَكَّاهَا أَنْتَ وَلِيُّهَا وَمَوْلاَهَا . اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ عِلْمٍ لاَ يَنْفَعُ وَمِنْ قَلْبٍ لاَ يَخْشَعُ وَمِنْ نَفْسٍ لاَ تَشْبَعُ وَمِنْ دَعْوَةٍ لاَ يُسْتَجَابُ لَهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1479** ஸைத் இப்னு அர்கம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் அஜ்ஸி, வல்கஸலி, வல்புக்லி, வல்ஹரமி, வஅதாபில் கப்ரி, அல்லாஹும்ம ஆதி நஃப்ஸீ தக்வாஹா, வஜக்கிஹா அன்தஃகய்ரு மன் ஜக்காஹா, அன்த வலிய்யுஹா வமவ்லாஹா, அல்லாஹும்ம இன்னீ அவூது பிக மின்இல்மின் லா யன்ஃபஉ, வமின் கல்பின் லாயக்ஷஉ, வமின் நஃப்ஸின் லாதஷ்பஉ, வமின் தஃவதின் லாயுஸ்தஜாபு லஹா" என்று நபி (ஸல்) கூறுவார்கள். **(முஸ்லிம்:2722)**

**துஆவின் பொருள் : இறைவா! பலவீனம், சோம்பேறித்தனம், கஞ்சத்தனம், பெரும் முதுமை, மண்ணறை வேதனை ஆகியவற்றை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். இறைவா! என் ஆத்மாவிற்கு இறையச்சத்தை வழங்குவாயாக! மேலும் அதை சுத்தமாக்குவாயாக! நீயே சுத்தப்படுத்துபவர்களில் சிறந்தவன் ஆவாய். நீயே ஆத்மாவின் நேசனாகவும், எஜமானனாகவும் உள்ளாய். இறைவா! பயன் இல்லாத கல்வியை விட்டும், இறையச்சமில்லாத இதயத்தை விட்டும், பயப்படாத ஆத்மாவை விட்டும், ஏற்கப்படாத துஆவை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٨٠ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَقُولُ : " اللَّهُمَّ لَكَ أَسْلَمْتُ : وَبِكَ آمَنْتُ وَعَلَيْكَ تَوَكَّلْتُ وَإِلَيْكَ أَنَبْتُ وَبِكَ خَاصَمْتُ وَإِلَيْكَ حَاكَمْتُ ! فَاغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ وَمَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ " . زَادَ بَعْضُ الرُّوَاةِ : " وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1480** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம லகஅஸ்லம்து, வபிக ஆமன்து, வஅலய்க தவக்கல்து, வஇலய்க அனப்து, வபிக காஸம்து, வஇலய்க ஹாகம்து, ஃபஹ்ஃபிர்லீ மாகத்தம்து, வமாஅக்கர்து, வமா அஸ்ரர்த்து, வமா அஹ்லன்து, அன்தல் முகத்திமு வஅன்தல் முஅக்கரு, லா இலாஹ இல்லா அன்த" என்று கூறுவார்கள்.

சில அறிவிப்பாளர்கள் "வலா ஹவ்ல வலாகுவ்வத்த இல்லாபில்லாஹ்" (எந்த திரும்புதலும், சக்தியும் அல்லாஹ்விடமே தவிர வேறில்லை) என்று அதிகமாக நபி (ஸல்) துஆச் செய்ததாக அறிவிப்புச் செய்கின்றனர். **(புகாரி:1120. முஸ்லிம்:769)**

**துஆவின் பொருள் : இறைவா! உனக்கே கட்டுப்பட்டேன். உன் மீதே நம்பிக்கை கொண்டேன். உன்னிடம் பொறுப்பை ஏற்படுத்துகிறேன். உன்னிடமே திரும்புவேன். உன்னிடமே வாதாடுகிறேன். உன்னிடமே முறையிடுகிறேன். பாவங்களில் நான் முன் செய்ததையும், பின்பு செய்ய உள்ளதையும், இரகசியமாக நான் செய்ததையும், நான் வெளிப்படையாக செய்ததையும் நீ மன்னிப்பாயாக! நீயே முற்படுத்துபவன். நீயே பிற்படுத்துபவன். வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை.**

١٤٨١ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَدْعُو بِهَؤُلَاءِ الْكَلِمَاتِ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ النَّارِ وَعَذَابِ النَّارِ وَمِنْ شَرِّ الْغِنَى وَالْفَقْرِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ . وَهَذَا لَفْظُ أَبِي دَاوُدَ .

**1481** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹும்ம இன்னீ அவூது பிக மின் ஃபித்னதின்னாரி, வஅஃதாபின்னாரி, வமின் ஷர்ரில் ஃகினா, வல்ஃபக்ரி" என்ற இந்த சொற்களால் நபி (ஸல்) அவர்கள் துஆச் செய்வார்கள்.

**(அபூதாவூது:880. திர்மிதீ:3495. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள். இது அபூதாவூதின் வாசகமாகும்)**

**துஆவின் பொருள் : இறைவா! நரகத்தின் சோதனை, நரகத்தின் வேதனையை விட்டும், செல்வம் மற்றும் வறுமையின் தீங்கை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٨٢ – وَعَنْ زِيَادِ بْنِ عِلَاقَةَ عَنْ عَمِّهِ وَهُوَ قُطْبَةُ بْنُ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ النَّبِيُّ ﷺ يَقُولُ : " اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ مُنْكَرَاتِ الْأَخْلَاقِ وَالْأَعْمَالِ وَالْأَهْوَاءِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1482** தன் சிறிய தந்தை குத்பா இப்னு மாலிக் (ரழி) கூறியதாக ஸியாத் இப்னு அலாகா கூறுகின்றார்கள்:

"அல்லாஹும்ம இன்னீ அவூது பிக மின் முன்கராதில் அக்லாகி, வல்அஃமாலி, வல் அஹ்வாஇ" என்று நபி (ஸல்) கூறுவார்கள். **(திர்மிதீ:3591. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

**துஆவின் பொருள் : இறைவா! தீய குணங்கள், தீய செயல்கள், தீய ஆசைகள் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.**

١٤٨٣ – وَعَنْ شَكَلِ بْنِ حُمَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: قُلْت: يَا رَسُولَ اللَّهِ عَلِّمْنِي دُعَاءً. قَالَ : قُلْ :"اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ شَرِّ سَمْعِي وَمِنْ شَرِّ بَصَرِي وَمِنْ شَرِّ لِسَانِي وَمِنْ شَرِّ قَلْبِي وَمِنْ شَرِّ مَنِيِّي". رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ:حَدِيثٌ حَسَنٌ.

**1483** ஷகல் இப்னு ஹுமைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைத்தூதர் அவர்களே! எனக்கு ஒரு துஆவைக் கற்றுத் தாருங்கள்!" என்று கேட்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம இன்னீ அவூது பிக மின் ஷர்ரி ஸம்ஈ, வமின் ஷர்ரீ பஸரீ, வமின் ஷர்ரி லிஸானீ, வமின் ஷர்ரீ கல்பீ, வமின் ஷர்ரி மனிய்யீ" என்று கூறுவீராக!" எனக் கூறினார்கள். **(அபூதாவூது:1551. திர்மிதீ:3492. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள் : இறைவா! என் செவியின் தீங்கை விட்டும், என் பார்வையின் தீங்கைவிட்டும், என் நாவின் தீங்கை விட்டும், என் இதயத்தின் தீங்கை விட்டும், என் மறைவுறுப்பின் தீங்கை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.**

வஅஹ்லீ. வமினல் மாஇல் பாரிதி'' என்பது நபி தாவூத் (அலை) அவர்களின் துஆக்களில் ஒன்றாக இருந்தது'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3490. இது ''ஹஸன்'' என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

**துஆவின் பொருள் : இறைவா! உன் அன்பையும், உன் மீது அன்பு வைத்தோரின் அன்பையும், உன் அன்பை எனக்கு ஏற்படுத்தித்தரும் செயலையும் உன்னிடம் நான் கேட்கிறேன். இறைவா! உன் அன்பை என் உயிரை விட, என் குடும்பத்தாரை விட, குளிர்ந்த நீரை விட எனக்கு மிக விருப்பமானதாக நீ ஆக்குவாயாக!**

١٤٩١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَلِظُّوا بِيَا ذَا الْجَلاَلِ وَالأَكْرَامِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَرَوَاهُ النَّسَائِيُّ مِنْ رِوَايَةِ رَبِيعَةَ بْنِ عَامِرٍ الصَّحَابِيِّ . قَالَ الْحَاكِمُ : حَدِيثٌ صَحِيحُ الأَسْنَادِ . " أَلِظُّوا " بِكَسْرِ اللاَّمِ وَتَشْدِيدِ الظَّاءِ الْمُعْجَمَةِ مَعْنَاهُ : الْزَمُوا هَذِهِ الدَّعْوَةَ وَأَكْثِرُوا مِنْهَا .

**1491** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''யா ஃதல் ஜலாலி வல் இக்ராம்'' என்ற வார்த்தையைப் பற்றிக் கொள்ளுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:3525. ரபீஆ இப்னு ஆமிர் (ரழி) அறிவித்து நஸயீயிலும் உள்ளது. இது சரியான அறிவிப்பாளர் வரிசை உடையது என இமாம் ஹாகிம் கூறுகின்றார்கள்)**

**துஆவின் பொருள் : ''வல்லமையும், கண்ணியமும் மிக்கவனே!''**

١٤٩٢ – وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : دَعَا رَسُولُ اللَّهِ ﷺ بِدُعَاءٍ كَثِيرٍ لَمْ نَحْفَظْ مِنْهُ شَيْئًا . قُلْنَا : يَا رَسُولَ اللَّهِ دَعَوْتَ بِدُعَاءٍ كَثِيرٍ لَمْ نَحْفَظْ مِنْهُ شَيْئًا ; فَقَالَ : " أَلاَ أَدُلُّكُمْ عَلَى مَا يَجْمَعُ ذَلِكَ كُلَّهُ ؟ تَقُولُ : اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ ﷺ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا اسْتَعَاذَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ ﷺ وَأَنْتَ الْمُسْتَعَانُ وَعَلَيْكَ الْبَلاَغُ وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1492** அபூஉமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் அதிகமாக துஆச் செய்வார்கள். அதில் எதையும் நாங்கள் மனனம் செய்ததில்லை. (ஒருமுறை நபி (ஸல்) அவர்களிடம்), ''இறைத்தூதர் அவர்களே! அதிகமாக துஆ செய்கிறீர்கள். அதிலிருந்து எதையும் நாங்கள் மனனம் செய்யவில்லையே!'' என்று கூறினோம். அதற்கு அவர்கள், ''அவை அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொள்ளும் துஆவை உங்களுக்கு நான் கூறட்டுமா?'' என்று கூறிவிட்டு, ''அல்லாஹூம்ம இன்னீ அஸ்அலுக்க மின் கய்ரி மா ஸஅலக மின்ஹு நபிய்யுக முஹம்மது (ஸல்), வஅவூது பிக மின் ஷர்ரி மஸ்தஆத மின்ஹு நபிய்யுக முஹம்மது (ஸல்), வஅன்தல் முஸ்தஆனு, வஅலய்கல் பலாஃகு, வலா ஹவ்ல, வலாகுவ்வத்த இல்லாபில்லாஹ் என்று கூறுவீராக!'' எனக் கூறினார்கள்.

**(திர்மிதீ:3521. இது ''ஹஸன்'' என இமாம் திர்மிதீ கூறுகின்றார்கள்)**

**துஆவின் பொருள் : இறைவா! உன் நபி முஹம்மது (ஸல்) அவர்கள் உன்னிடம் கேட்ட நல்லவற்றை அனைத்தையும் உன்னிடம் நான் கேட்கிறேன். உன் நபி முஹம்மது (ஸல்) உன்னிடம் பாதுகாப்புத் தேடிய தீமையானவற்றை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நீதான் உதவி கோரப்படுபவன். நான் கேட்பவைகள் அனைத்தையும் அருள்வது உன்னிடமே உண்டு. எந்தத் திரும்புதலும், சக்தியும் உன்னிடமே தவிர வேறில்லை.**

١٤٩٣ – وَعَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ . قَالَ : كَانَ مِنْ دُعَاء رَسُول اللَّه ﷺ : " اللَّهُمَّ إِنِّي أَسْأَلُك مُوجِبَات رَحْمَتك وَعَزَائِمَ مَغْفِرَتك وَالسَّلَامَةَ مِنْ كُلِّ إِثْمٍ وَالْغَنِيمَةَ مِنْ كُلِّ بِرٍّ وَالْفَوْزَ بِالْجَنَّة وَالنَّجَاةَ مِنْ النَّار " . رَوَاهُ الْحَاكِمُ أَبُو عَبْدِ اللَّه وَقَالَ : حَدِيثٌ صَحِيحٌ عَلَى شَرْطِ مُسْلِمٍ .

**1493** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்க மூஜிபாத்தி ரஹ்மதிக்க, வஅஸாஇம மஃஃபிரதிக்க, வஸ்ஸலாமத மின் குல்லி இஸ்மின்,வல் ஃஹனிமத்த மின்குல்லி பிர்ரின், வல்ஃபவ்ஸ பில் ஜன்னத்தி வன்னஜாத மினன்னார்” என்பது நபி (ஸல்) அவர்களின் துஆக்களில் ஒன்றாக இருந்தது.

**(ஹாகிம்:1/525. முஸ்லிமின் நிபந்தனைப்படி இது “ஸஹீஹ்” என்று இமாம் ஹாகிம் அபூஅப்துல்லாஹ் கூறுகின்றார்கள்)**

துஆவின் பொருள் : இறைவா! உன் அருளைப் பெற்றுத் தருபவற்றையும், உன் மன்னிப்பை உறுதியாக்குபவற்றையும், அனைத்து பாவங்களை விட்டும் நீங்குவதையும், அனைத்து நன்மைகளையும் வெற்றிப் பொருளாக ஆக்குவதையும், சொர்க்கத்தின் மூலம் வெற்றியையும், நரகத்திலிருந்து விடுதலையையும் உன்னிடம் நான் கேட்கிறேன்.

## ٢٥١ – باب فضل الدّعاء بظهر الغيب

## பாடம் : 251 - முன்னே இல்லாதவருக்கும் துஆச் செய்வதின் சிறப்பு!

قَالَ اللَّهُ تَعَالَى : وَالَّذِينَ جَاءُوا مِنْ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالْإِيمَانِ . وَقَالَ تَعَالَى : وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ . وَقَالَ تَعَالَى : إِخْبَارًا عَنْ إِبْرَاهِيمَ ﷺ : رَبَّنَا اغْفِرْ لِي وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِينَ يَوْمَ يَقُومُ الْحِسَابُ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *“எங்கள் இறைவா! எங்களுக்கும், இறைநம்பிக்கை கொள்வதில் எங்களை முந்திவிட்ட எங்களின் சகோதரர்களுக்கும் மன்னிப்பு வழங்குவாயாக”! என்று அவர்களுக்குப் பின் வந்தவர்கள் கூறுகிறார்கள். (59:10)*

*(நபியே) உம் பாவத்தையும், இறை நம்பிக்கை கொண்ட ஆண்கள், இறை விசுவாசிகளான பெண்கள் (ஆகியோரின் பாவத்தை)யும் மன்னிக்கும்படி (உம் இறைவனிடம்) பிழைபொறுப்புத் தேடுவீராக! (47:19)*

*(இப்ராஹீம் நபி செய்த “துஆ” பற்றி...*

*“எங்கள் இறைவா! என்னையும், என் பெற்றோரையும், இறைவிசுவாசிகளையும் கேள்வி கேட்கப்படும் நாளில் மன்னிப்பாயாக!” (14:41)*

١٤٩٤ – وَعَنْ أَبِي الدَّرْدَاء رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا مِنْ عَبْدٍ مُسْلِمٍ يَدْعُو لِأَخِيهِ بِظَهْرِ الْغَيْبِ إِلَّا قَالَ الْمَلَكُ : وَلَك بِمِثْلٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1494** அபுதர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தம் சகோதரருக்காக மறைவாக துஆ செய்யும் ஒரு முஸ்லிம் அடியாரிடம், “நீர் அவருக்காகக் கேட்ட நல்ல விஷயங்கள் போன்று உமக்கும் உண்டு” என ஒரு மலக்கு கூறாமல் இருப்பதில்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2732)**

١٤٩٥ - . وَعَنْهُ ) أَبِي الدَّرْدَاءِ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَقُولُ : " دَعْوَةُ الْمَرْءِ الْمُسْلِمِ لأَخِيهِ بِظَهْرِ الْغَيْبِ مُسْتَجَابَةٌ : عِنْدَ رَأْسِهِ مَلَكٌ مُوَكَّلٌ كُلَّمَا دَعَا لأَخِيهِ بِخَيْرٍ قَالَ الْمَلَكُ الْمُوَكَّلُ بِهِ : آمِينَ وَلَكَ بِمِثْلٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1495** அபூதர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஸ்லிமான ஒருவர் தன் சகோதரருக்காக மறைவாகச் செய்யும் துஆ ஏற்கப்பட்டதாக அமையும். (துஆச் செய்கிற) அந்த மனிதரின் தலை அருகே, நியமிக்கப்பட்ட வானவர் ஒருவர் இருப்பார். அவர் (அம்மனிதர்), தன் சகோதருக்காக நல்லதைக் கேட்கும் போது, அந்த வானவர், "ஆமீன். (அப்படியே ஆகட்டும்!) உமக்கும் இதுபோலவே நல்ல விஷயங்கள் உண்டு" என்று கூறுவார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2733)**

## ٢٥٢ - بابٌ في مَسائل من الدّعاء

## பாடம் : 252 - துஆவின் சட்டங்கள்

١٤٩٦ - وَعَنْ أُسَامَةَ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ صُنِعَ إِلَيْهِ مَعْرُوفٌ فَقَالَ لِفَاعِلِهِ : جَزَاكَ اللَّهُ خَيْرًا فَقَدْ أَبْلَغَ فِي الثَّنَاءِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1496** உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவரால் நன்மை செய்யப்பட்டவர், அதை செய்தவருக்கு "ஜஸாக்கல்லாஹு கய்ரன்" (அல்லாஹ் உமக்கு நற்கூலி வழங்குவானாக!) என்று கூறினால், (நன்றி கூறி) அவரைப் புகழ்வதில் அவர் அதிகமாக நடந்து கொண்டவராவார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2035. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٤٩٧ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَدْعُوا عَلَى أَنْفُسِكُمْ ; وَلاَ تَدْعُوا عَلَى أَوْلاَدِكُمْ وَلاَ تَدْعُوا عَلَى أَمْوَالِكُمْ لاَ تُوَافِقُوا مِنَ اللَّهِ سَاعَةً يُسْأَلُ فِيهَا عَطَاءً فَيَسْتَجِيبَ لَكُمْ ". رَوَاهُ مُسْلِمٌ.

**1497** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களுக்கு எதிராக நீங்களே துஆச் செய்யாதீர்கள். உங்களின் குழந்தைகளுக்கு எதிராகவும் துஆச் செய்யாதீர்கள். உங்களின் சொத்துகளுக்கு எதிராகவும் துஆச் செய்யாதீர்கள். (இப்படி துஆச் செய்வது மூலம்) நீங்கள் அல்லாஹ்விடம் எதையேனும் கேட்டு, உங்களுக்கு அவன் துஆ ஏற்கின்ற அந்த நேரத்திற்கு உட்பட்டு விட வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:3009)**

١٤٩٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَقْرَبُ مَا يَكُونُ الْعَبْدُ مِنْ رَبِّهِ وَهُوَ سَاجِدٌ فَأَكْثِرُوا الدُّعَاءَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1498** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர்அடியான், தன் இறைவனிடம் மிக நெருக்கமாக இருப்பது அவன் ஸஜ்தா செய்த நிலையில் உள்ள போதுதான். எனவே (அது சமயத்தில்) துஆவை அதிகமாகக் கேளுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:482)**

١٤٩٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " يُسْتَجَابُ لأَحَدِكُمْ مَا لَمْ يَعْجَلْ يَقُولُ : قَدْ دَعَوْتُ رَبِّي فَلَمْ يُسْتَجَبْ لِي " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : " لاَ يَزَالُ يُسْتَجَابُ لِلْعَبْدِ مَا لَمْ يَدْعُ بِإِثْمٍ أَوْ قَطِيعَةِ رَحِمٍ مَا لَمْ يَسْتَعْجِلْ " . قِيلَ : يَا رَسُولَ اللَّهِ مَا الاسْتِعْجَالُ ؟ قَالَ : " يَقُولُ : قَدْ دَعَوْتُ وَقَدْ دَعَوْتُ فَلَمْ أَرَ يَسْتَجِيبُ لِي فَيَسْتَحْسِرُ عِنْدَ ذَلِكَ وَيَدَعُ الدُّعَاءَ " .

**1499** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் ஒருவர், ‘என் இறைவனிடம் துஆச் செய்தேன். (ஆனால் இதுவரை) அவன் ஏற்கவில்லை” என்று அவசரப்படாதவரை அந்த துஆ ஏற்கப்படும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6340. முஸ்லிம்:2735)**

முஸ்லிமின் அறிவிப்பில் கீழ்கண்டவாறு உள்ளது:

“பாவம் செய்யவோ அல்லது உறவை முறிக்கவோ வேண்டி துஆ செய்யாத வரையிலும், அவசரப்படாத வரையிலும் ஒரு அடியானின் துஆ ஏற்கப்பட்டே தீரும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! அவசரப்படுதல் என்றால் என்ன?” என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், “நான் துஆச் செய்தேன். நான் துஆச் செய்தேன். (ஆனால்) அது ஏற்றுக் கொள்ளப்படுவதாகத் தெரியவில்லை” என்று கருதி, அவன் இதற்காக கவலை கொண்டு, துஆச் செய்வதையே விட்டு விடுவதுதான் (அவசரப்படுவது)” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

١٥٠٠ – وَعَنْ أَبِي أُمَامَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قِيلَ لِرَسُولِ اللَّهِ ﷺ : أَيُّ الدُّعَاءِ أَسْمَعُ ؟ قَالَ : " جَوْفَ اللَّيْلِ الأَخِرِ وَدُبُرَ الصَّلَوَاتِ الْمَكْتُوبَاتِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1500** அபூஉமாமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்விடம் ஒப்புக் கொள்ளப்படும் துஆ எது?” என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், “இரவின் நடுப்பகுதியிலும், கடமையான தொழுகைகளுக்குப் பின்னர் கேட்கப்படும் துஆ ஆகியவை ஒப்புக் கொள்ளப்படும் துஆக்களாகும்” என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(திர்மிதி:3499. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٥٠١ – وَعَنْ عُبَادَةَ بْنِ الصَّامِتِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَا عَلَى الأَرْضِ مُسْلِمٌ يَدْعُو اللَّهَ تَعَالَى بِدَعْوَةٍ إِلاَّ آتَاهُ اللَّهُ إِيَّاهَا أَوْ صَرَفَ عَنْهُ مِنَ السُّوءِ مِثْلَهَا مَا لَمْ يَدْعُ بِإِثْمٍ أَوْ قَطِيعَةِ رَحِمٍ " . فَقَالَ رَجُلٌ مِنَ الْقَوْمِ : إِذَنْ نُكْثِرُ . قَالَ : " اللَّهُ أَكْثَرُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ وَرَوَاهُ الْحَاكِمُ مِنْ رِوَايَةِ أَبِي سَعِيدٍ وَزَادَ فِيهِ : " أَوْ يَدَّخِرُ لَهُ مِنَ الأَجْرِ مِثْلَهَا " .

**1501** உபாதா இப்னு ஸாமித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்விடம் துஆச் செய்யும் பூமியில் வசிக்கின்ற எந்த முஸ்லிமும், குற்றமிழைப்பதை அல்லது உறவை பிரிந்திருப்பதை கேட்காமல், வேறு எந்த துஆச் செய்தாலும் அவருக்கு அதை அல்லாஹ் வழங்காமலோ அல்லது அவரை விட்டும் அதற்கு பகரமாகத்தீமையை நீக்காமலோ இருப்பதில்லை” என,நபி (ஸல்) கூறினார்கள். அப்போது கூட்டத்தில் இருந்த ஒருவர், “இனி நாங்கள் அதிகமாக (துஆ)ச் செய்வோம்” என்று கூறினார். அதற்கு, “அல்லாஹ்வும் கேட்பதை அதிகமாக வழங்குபவன்தான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதி:3573. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

"அல்லது அவருக்கு அதற்குப் பகரமாக கூலியைச் சேகரித்து வைக்காமலோ இருப்பதில்லை" என்ற அதிக வாசகங்களுடன் அபூஸயீத் (ரழி) அவர்களால் அறிவிக்கப்பட்டு, ஹாகிமில் (1/493) உள்ளது.

١٥٠٢ - وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَقُولُ . عِنْدَ الْكَرْبِ : " لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ الْعَظِيمُ الْحَلِيمُ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ رَبُّ السَّمَوَاتِ وَرَبُّ الأَرْضِ وَرَبُّ الْعَرْشِ الْكَرِيمِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1502** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் துன்பம் ஏற்படும் போது "லாயிலாஹ இல்லல்லாஹுல் அளீமுல் ஹலீம். லாயிலாஹ இல்லல்லாஹு ரப்புல் அர்ஷில் அளீம். லாயிலாஹ இல்லல்லாஹு ரப்புஸ் ஸமாவாத்தி வரப்புல் அர்ழி, வரப்புல் அர்ஷில் கரீம்" என்று கூறுவார்கள். **(புகாரி:6345. முஸ்லிம்:2730)**

துஆவின் பொருள் : மகத்துவமிக்கவனும், இரக்கமுள்ளவனுமான வணக்கத்திற்குரிய அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. மகத்தான அர்ஷின் அதிபதியான வணக்கத்திற்குரிய அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. வானங்களின் இறைவனும், பூமியின் இறைவனும், கண்ணியமான அர்ஷின் இறைவனுமான வணக்கத் திற்குரிய அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை.

## ٢٥٣ - باب كرامات الأولياء وفضلهم

## பாடம் : 253 - இறைநேசச் செல்வர்களின் அதிசய நிகழ்வும், அவர்களின் சிறப்பும்

قَالَ اللَّهُ تَعَالَى : أَلاَ إِنَّ أَوْلِيَاءَ اللَّهِ لاَ خَوْفٌ عَلَيْهِمْ وَلاَ هُمْ يَحْزَنُونَ الَّذِينَ آمَنُوا وَكَانُوا يَتَّقُونَ لَهُمُ الْبُشْرَى فِي الْحَيَاةِ الدُّنْيَا وَفِي الأَخِرَةِ لاَ تَبْدِيلَ لِكَلِمَاتِ اللَّهِ ذَلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيمُ . وَقَالَ تَعَالَى : وَهُزِّي إِلَيْكِ بِجِذْعِ النَّخْلَةِ تُسَاقِطْ عَلَيْكِ رُطَبًا جَنِيًّا فَكُلِي وَاشْرَبِي الأيَةَ . وَقَالَ تَعَالَى : كُلَّمَا دَخَلَ عَلَيْهَا زَكَرِيَّا الْمِحْرَابَ وَجَدَ عِنْدَهَا رِزْقًا قَالَ يَا مَرْيَمُ أَنَّى لَكِ هَذَا قَالَتْ هُوَ مِنْ عِنْدِ اللَّهِ إِنَّ اللَّهَ يَرْزُقُ مَنْ يَشَاءُ بِغَيْرِ حِسَابٍ . وَقَالَ تَعَالَى : وَإِذِ اعْتَزَلْتُمُوهُمْ وَمَا يَعْبُدُونَ إِلاَّ اللَّهَ فَأْوُوا إِلَى الْكَهْفِ يَنْشُرْ لَكُمْ رَبُّكُمْ مِنْ رَحْمَتِهِ وَيُهَيِّئْ لَكُمْ مِنْ أَمْرِكُمْ مِرفَقًا وَتَرَى الشَّمْسَ إِذَا طَلَعَتْ تَزَاوَرُ عَنْ كَهْفِهِمْ ذَاتَ الْيَمِينِ وَإِذَا غَرَبَتْ تَقْرِضُهُمْ ذَاتَ الشِّمَالِ الأيَةَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அறிந்து கொள்ளுங்கள். அல்லாஹ்வின் நேசர்களுக்கு பயமில்லை. அவர்கள் கவலை அடையவும் மாட்டார்கள். (அவர்கள் யாரெனில்) அவர்கள்தாம், இறை நம்பிக்கையாளர்கள். மேலும், அல்லாஹ்வை பயப்படுபவர்களாகவும் உள்ளனர். அவர்களுக்கு இவ்வுலக வாழ்விலும், மறுமையிலும் சுபச்செய்தி உண்டு. அல்லாஹ்வின் வார்த்தைகளுக்கு மாற்று இல்லை. இதுவே மகத்தான வெற்றியாகும். (10:62-64)*

*(மர்யமே!) பேரீத்த பழ மரக்கிளையை உலுக்குவாயாக! உன்மீது பழுத்த பேரீத்தம் பழங்களை அது கொட்டும். அப்பழங்களை சாப்பிடுவாயாக! (ஊற்று நீரை) பருகுவாயாக! (19:25,26)*

*ஜகரிய்யா (அலை) மிஹ்ராபிற்குச் செல்லும் பொழுதெல்லாம் (மர்யம்) அவர்களிடம் உணவு இருப்பதைக் கண்டார். "மர்யமே! உனக்கு இது எப்படி கிடைத்தது?" என்று கேட்டார். "இது அல்லாஹ்விடமிருந்து வந்ததுதான். நிச்சயமாக! அல்லாஹ், தான் விரும்பியோருக்கு கணக்கின்றி உணவு அளிக்கிறான்" என (மர்யம்) கூறினார். (3:37)*

*அவர்களையும், அல்லாஹ்வைத் தவிர அவர்கள் வணங்குபவற்றையும் நீங்கள் விலகிவிட்ட பொழுது, குகையின் பக்கம் ஒதுங்குங்கள். உங்களின் இறைவன் தன் அருளை உங்களுக்குப் பரவலாக்குவான். உங்களின் காரியத்தில் உங்களுக்கு இலகுவை வழங்குவான். (என்று அவர்களில் ஒருவர் கூறினார்).*

*சூரியனை-அது உதயமாகும் போது அவர்களின் குகையை விட்டும் வலதுபக்கம் சாய்வதாகவும், அது மறையும்போது அது அவர்களின் இடதுபக்கம் கடந்து செல்வதாகவும் நீர் பார்ப்பீர்.*

*(18:16-17)*

١٥٠٣ – وَعَنْ أَبِي مُحَمَّد عَبْد الرَّحْمَن بْن أَبِي بَكْر الصِّدِّيق رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ أَصْحَابَ الصُّفَّة كَانُوا أُنَاسًا فُقَرَاءَ وَأَنَّ النَّبِيَّ ﷺ قَالَ مَرَّةً : " مَنْ كَانَ عِنْدَهُ طَعَامُ اثْنَيْنِ فَلْيَذْهَبْ بِثَالِث وَمَنْ كَانَ عِنْدَهُ طَعَامُ أَرْبَعَة فَلْيَذْهَبْ بِخَامِس بِسَادِس " أَوْ كَمَا قَالَ وَأَنَّ أَبَا بَكْر رَضِيَ اللَّهُ عَنْهُ جَاءَ بِثَلاَثَة وَانْطَلَقَ النَّبِيُّ ﷺ بِعَشَرَة وَأَنَّ أَبَا بَكْر تَعَشَّى عِنْدَ النَّبِيِّ ﷺ ثُمَّ لَبِثَ حَتَّى صَلَّى الْعِشَاءَ ثُمَّ رَجَعَ فَجَاءَ بَعْدَ مَا مَضَى مِنْ اللَّيْلِ مَا شَاءَ اللَّهُ . قَالَتْ امْرَأَتُهُ : مَا حَبَسَكَ عَنْ أَضْيَافك ؟ قَالَ : أَوَ مَا عَشَّيْتِهِمْ ؟ قَالَتْ : أَبَوْا حَتَّى تَجِيءَ وَقَدْ عَرَضُوا عَلَيْهِمْ . قَالَ : فَذَهَبْت أَنَا فَاخْتَبَأْت . فَقَالَ : يَا غُنْثَرُ ! فَجَدَّعَ وَسَبَّ وَقَالَ : كُلُوا لاَ هَنِيئًا وَاَللَّه لاَ أَطْعَمُهُ أَبَدًا . قَالَ : وَأَيْمُ اللَّه مَا كُنَّا نَأْخُذُ مِنْ لُقْمَة إلاَّ رَبَا مِنْ أَسْفَلِهَا أَكْثَرُ مِنْهَا حَتَّى شَبِعُوا وَصَارَتْ أَكْثَرَ مِمَّا كَانَتْ قَبْلَ ذَلِكَ فَنَظَرَ إِلَيْهَا أَبُو بَكْر فَقَالَ لاِمْرَأَته : يَا أُخْتَ بَنِي فِرَاس مَا هَذَا ؟ قَالَتْ : لاَ وَقُرَّةُ عَيْنِي لَهِيَ الأنَ أَكْثَرُ مِنْهَا قَبْلَ ذَلِكَ بِثَلاَث مَرَّات فَأَكَلَ مِنْهَا أَبُو بَكْر وَقَالَ : إنَّمَا كَانَ ذَلِكَ مِنْ الشَّيْطَان – يَعْنِي يَمِينَهُ – ثُمَّ أَكَلَ مِنْهَا لُقْمَةً ثُمَّ حَمَلَهَا إِلَى النَّبِيِّ ﷺ فَأَصْبَحَتْ عِنْدَهُ . وَكَانَ بَيْنَنَا وَبَيْنَ قَوْم عَهْدٌ فَمَضَى الأجَلُ فَتَفَرَّقْنَا اثْنَيْ عَشَرَ رَجُلاً مَعَ كُلِّ رَجُل مِنْهُمْ أُنَاسٌ اللَّهُ أَعْلَمُ كَمْ مَعَ كُلِّ رَجُل فَأَكَلُوا مِنْهَا أَجْمَعُونَ . وَفِي رِوَايَة : فَحَلَفَ أَبُو بَكْر : لاَ يَطْعَمُهُ فَحَلَفَتْ الْمَرْأَةُ : لاَ تَطْعَمُهُ فَحَلَفَ الضَّيْفُ – أَوْ الأضْيَافُ – أَلاَّ يَطْعَمَهُ أَوْ يَطْعَمُوهُ حَتَّى يَطْعَمَهُ . فَقَالَ أَبُو بَكْر : هَذِه مِنْ الشَّيْطَان ! فَدَعَا بِالطَّعَامِ فَأَكَلَ وَأَكَلُوا فَجَعَلُوا لاَ يَرْفَعُونَ لُقْمَةً إلاَّ رَبَتْ مِنْ أَسْفَلِهَا أَكْثَرَ مِنْهَا فَقَالَ : يَا أُخْتَ بَنِي فِرَاس مَا هَذَا ؟ فَقَالَتْ : وَقُرَّةُ عَيْنِي إنَّهَا الأنَ لأَكْثَرُ مِنْهَا قَبْلَ أَنْ نَأْكُلَ فَأَكَلُوا وَبَعَثَ بِهَا إِلَى النَّبِيِّ ﷺ فَذَكَرَ أَنَّهُ أَكَلَ مِنْهَا . وَفِي رِوَايَة : أَنَّ أَبَا بَكْر قَالَ لِعَبْد الرَّحْمَن : دُونَك أَضْيَافَك فَإِنِّي مُنْطَلِقٌ إِلَى النَّبِيِّ ﷺ فَافْرُغْ مِنْ قِرَاهُمْ قَبْلَ أَنْ أَجِيءَ فَانْطَلَقَ عَبْدُ الرَّحْمَن فَأَتَاهُمْ بِمَا عِنْدَهُ فَقَالَ : اطْعَمُوا ; فَقَالُوا : أَيْنَ رَبُّ مَنْزِلِنَا ؟ قَالَ : اطْعَمُوا ; قَالُوا : مَا نَحْنُ بِآكِلِينَ حَتَّى يَجِيءَ رَبُّ مَنْزِلِنَا . قَالَ : اقْبَلُوا عَنَّا قِرَاكُمْ فَإِنَّهُ إِنْ جَاءَ وَلَمْ تَطْعَمُوا لَنَلْقَيَنَّ مِنْهُ فَأَبَوْا فَعَرَفْت أَنَّهُ يَجِدُ عَلَيَّ فَلَمَّا جَاءَ تَنَحَّيْت عَنْهُ . فَقَالَ : مَا صَنَعْتُمْ ؟ فَأَخْبَرُوهُ فَقَالَ : يَا عَبْدَ الرَّحْمَن فَسَكَتَ . ثُمَّ قَالَ : يَا عَبْدَ الرَّحْمَن فَسَكَتَ فَقَالَ : يَا غُنْثَرُ ! أَقْسَمْت عَلَيْك إِنْ كُنْت تَسْمَعُ صَوْتِي لَمَا جِئْت ! فَخَرَجْت فَقُلْت : سَلْ أَضْيَافَك فَقَالُوا : صَدَقَ أَتَانَا بِهِ . فَقَالَ : إِنَّمَا انْتَظَرْتُمُونِي وَاَللَّه لاَ أَطْعَمُهُ اللَّيْلَةَ . فَقَالَ الأخَرُونَ : وَاَللَّه لاَ نَطْعَمُهُ حَتَّى تَطْعَمَهُ فَقَالَ : وَيْلَكُمْ مَا لَكُمْ لاَ تَقْبَلُونَ عَنَّا قِرَاكُمْ ؟ هَات طَعَامَك فَجَاءَ بِهِ فَوَضَعَ يَدَهُ فَقَالَ : بِسْمِ اللَّه الأولَى مِنْ الشَّيْطَان فَأَكَلَ وَأَكَلُوا . مُتَّفَقٌ عَلَيْه . قَوْلُهُ " غُنْثَرُ " بِغَيْن مُعْجَمَة مَضْمُومَة ثُمَّ نُونَ سَاكِنَة ثُمَّ ثَاء مُثَلَّثَة وَهُوَ : الْغَبِيُّ الْجَاهِلُ . وَقَوْلُهُ " فَجَدَّعَ " أَيْ شَتَمَهُ وَالْجَدْعُ الْقَطْعُ . قَوْلُهُ " يَجِدُ عَلَيَّ " هُوَ بِكَسْرِ الْجِيمِ : أَيْ يَغْضَبُ .

**1503** அபூமுஹம்மது அப்துர் ரஹ்மான் இப்னு அபூபக்கர் சித்தீக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

திண்ணைத் தோழர்கள், ஏழைகளாக இருந்தனர். ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் "ஒருவரிடம் இரண்டு பேர் உணவு இருந்தால் மூன்றாம் நபரை அழைத்துச் செல்லட்டும்! ஒருவரிடம் நான்கு பேர் உணவு இருந்தால், ஐந்து அல்லது ஆறு நபர்களை அழைத்துச் செல்லட்டும்!" என்று கூறினார்கள். அல்லது இதுபோல் கூறினார்கள். அபூபக்கர் (ரழி) அவர்கள் மூன்று பேர்களை அழைத்துச் சென்றார்கள். நபி (ஸல்) அவர்கள் பத்துப் பேர்களுடன் சென்றார்கள். பின்பு அபூபக்கர் (ரழி) அவர்கள்,

நபி (ஸல்) அவர்களிடம் இரவு உணவு சாப்பிட்டுவிட்டு, பின்பு நபி (ஸல்) அவர்களிடமே சிறிது நேரம் இருந்துவிட்டு, இஷாத் தொழுதார்கள். பின்னர் வீடு திரும்பினார்கள். இரவில் அல்லாஹ் நாடிய நேரம் சென்ற பின் வந்தார்கள். அவரின் மனைவி, "உங்கள் விருந்தினர்களை விட்டுப் போன காரணம் என்ன?" என்று கேட்டார்கள். "அவர்களுக்கு இரவு உணவளித்துவிட்டாயா?" என்று அபூபக்கர் (ரழி) கேட்டார்கள்." "நீங்கள் வரும் வரை சாப்பிட மறுத்துவிட்டார்கள்" என்று அவர்களின் மனைவி கூறினார்.

தகப்பனார் திட்டுவார் என நான் அவர்கள் முன் வர பயந்து ஒதுங்கினேன். "முட்டாளே!" என்று கூறி அழைத்த அவர்கள், என்னை திட்டினார்கள். பின் வந்தவர்களிடம், "நீங்கள் மகிழ்வாக அன்றி சாப்பிடுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் இதை ஒருபோதும் உண்ணமாட்டேன்" என்று அபூபக்கர் (ரழி) கூறினார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் அதில் ஒரு கைப்பிடி எடுத்தால், அதன் கீழ் அதையும் விடக் கூடுதலாக அது ஆகாமல் இருப்பதில்லை. இறுதியாக எல்லோரும் வயிறு நிரம்பச் சாப்பிட்டார்கள். இதற்கு முன் இருந்ததை விட மிக அதிகமாக அந்த உணவு இருந்தது. அந்த உணவைப் பார்த்த அபூபக்கர் (ரழி) அவர்கள் தன் மனைவியிடம், "பனூ ஃபிராஸ் கூட்டத்தின் பெண்ணே! இது என்ன?" என்று கேட்டார்கள். "என் கண்களின் குளிர்ச்சியே! இது முன்பை விட மூன்று மடங்கு கூடுதலாக உள்ளது" என்று கூறினார்கள். உடனே அபூபக்கர் (ரழி) அவர்கள் அதைச் சாப்பிட்டார்கள். "இந்த சத்தியம், ஷைத்தானால் ஏற்பட்டதாகும்" என்று கூறிவிட்டு, மீண்டும் அதில் ஒரு கைப்பிடி சாப்பிட்டார்கள். பின்பு அதை நபி (ஸல்) அவர்களிடம் எடுத்துச் சென்றார்கள். அவர்களிடம் அந்த உணவு இருந்தது. எங்களுக்கும், ஒரு கூட்டத்தாருக்குமிடையே ஒரு உடன்படிக்கை இருந்தது. அதன் தவணையும் முடிந்தது. எனவே நாங்கள் பனிரெண்டு நபர்களாகப் பிரிந்தோம். ஒவ்வொருவரிடமும் ஒரு குழுவினர் இருந்தனர். ஒவ்வொருவரிடமும் எத்தனை பேர் இருந்தனர் என்பதை அல்லாஹ்வே அறிவான். அந்த உணவை அவர்கள் அனைவரும் சாப்பிட்டார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு உள்ளது)

அதை உண்ணாமலிருக்க அபூபக்கர் (ரழி) சத்தியம் செய்தார்கள். அதைத் தானும் சாப்பிடாமலிருக்க அவர்களின் மனைவியும் சத்தியம் செய்தார்கள். இது போல் விருந்தினரும் "அவர் சாப்பிட்டால் தான் சாப்பிடுவோம்" என சத்தியம் செய்தார்கள். உடனே அபூபக்கர் (ரழி) அவர்கள், "இந்தச் சத்தியம், ஷைத்தானால் வந்ததாகும்" என்று கூறி, அந்த உணவைக் கொண்டு வரச் செய்து சாப்பிட்டார்கள். உடனே மற்ற அனைவரும் சாப்பிட்டார்கள். அவர்கள் ஒரு கைப்பிடி உணவை எடுத்ததும், அதன் கீழிலிருந்து அதைவிட மிகக் கூடுதலானது. உடனே அவர்கள், "பனூஃபிராஸ் சமூகத்தின் பெண்ணே! இது என்ன?" என்று கேட்டார்கள். "என் கண்களுக்கு ஏற்பட்ட குளிர்ச்சியே! நிச்சயமாக இது, இப்போது நாங்கள் சாப்பிடும் முன் இருந்ததைவிட மிகவும் கூடுதலாக உள்ளது" என்று கூறினார்கள். உடனே அனைவரும் சாப்பிட்டார்கள். அதை நபி (ஸல்) அவர்களிடமும் அனுப்பி வைத்தார்கள். அவர்களும் அதைச் சாப்பிட்டார்கள் என்று நினைவுகூர்ந்தார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

அபூபக்கர் (ரழி) அவர்கள் தன் மகன் அப்துர் ரஹ்மானிடம் "உம் விருந்தினரை உபசரிப்பீராக! நான் நபி (ஸல்) அவர்களிடம் செல்கிறேன். நான் வரும் முன் அவர்களுக்கு உணவளித்து ஒய்வெடுக்கச் செய்யும்!" என்று கூறினார்கள். அப்துர் ரஹ்மானும் (வீட்டினுள்) சென்றார். தன்னிடம் உள்ளதை அவர்களிடம் கொண்டு வந்து, "சாப்பிடுங்கள்" என்றார். "இந்த வீட்டின் உரிமையாளர் (அபூபக்கர்) எங்கே?" என்று கேட்டார்கள். "நீங்கள் சாப்பிடுங்கள்" என அப்துர் ரஹ்மான் கூறினார். "நம் வீட்டின் உரிமையாளர் வரும் வரை நாங்கள் சாப்பிட மாட்டோம்" என்று கூறினார்கள்.

“உங்களின் விருந்துணவை எங்களிடம் ஏற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் சாப்பிடாமல் இருக்கும் நிலையில் (என் தந்தை) வந்தால், இதற்காக நாங்கள் கோபத்திற்குள்ளாவோம்” என்று அப்துர் ரஹ்மான் கூறினார். ஆனாலும் அவர்கள் மறுத்து விட்டனர்.

தந்தை என் மீது கோபத்துடன் வருவார் என நான் அறிந்தேன். அவர் வந்தபோது, நான் அவரை விட்டும் மறைந்து கொண்டேன். “நீங்கள் என்ன செய்கிறீர்கள்?” என்று கேட்டார்கள். (நடந்ததை) அவரிடம் கூறினார்கள். “அப்துர் ரஹ்மானே!” என்று என் தந்தை அழைத்தார். நான் மௌனமாக இருந்தேன். மீண்டும் “அப்துர் ரஹ்மானே!” என்றுஅழைத்தார். நான் மவுனமாக இருந்தேன். “முட்டாளே! என் சப்தம் கேட்டதும் நீ வரவேண்டும் என உன்னிடம் சத்தியம் செய்கிறேன்” என்று என் தந்தை கூறினார். உடனே நான் வெளியேறி (முன்) வந்தேன். “(நடந்ததை) உங்கள் விருந்தினரிடம் கேளுங்கள்” என்று கூறினேன். “அவர் உணவு தந்தார். அவர் கூறுவது உண்மை” என அவர்கள் கூறினார்கள். “என்னைத்தானே எதிர்பார்த்திருந்தீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இரவு உணவைச் சாப்பிட மாட்டேன்” என்று அபூபக்கர் (ரழி) கூறினார்கள். “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் சாப்பிடும் வரை நாங்களும் சாப்பிட மாட்டோம்” என்று மற்றவர்கள் கூறினர். “உங்களுக்கு ஏற்பட்ட துயரமே! உங்களின் விருந்துணவை எங்களிடமிருந்து நீங்கள் ஏற்காமலிருக்கும் காரணம் என்ன?” என்று கூறிவிட்டு, அப்துர் ரஹ்மானை நோக்கி, “உணவைக் கொண்டு வா!” என்று அபூபக்கர் (ரழி) கூறினார்கள். உணவு வந்ததும் தன் கையை வைத்து, “பிஸ்மில்லாஹ்” என்று கூறி “முதலில் சத்தியம் செய்தது, ஷைத்தானால் வந்ததாகும்” என்று கூறிவிட்டு, சாப்பிட்டார்கள். மற்றவர்களும் சாப்பிட்டார்கள்.

**(புகாரி:602,6140. முஸ்லிம்:2057)**

١٥٠٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَقَدْ كَانَ فِيمَا قَبْلَكُمْ مِنَ الأُمَمِ نَاسٌ مُحَدَّثُونَ فَإِنْ يَكُ فِي أُمَّتِي أَحَدٌ فَإِنَّهُ عُمَرُ " . رَوَاهُ الْبُخَارِيُّ . وَرَوَاهُ مُسْلِمٌ مِنْ رِوَايَةِ عَائِشَةَ . وَفِي رِوَايَتِهِمَا قَالَ ابْنُ وَهْبٍ : " مُحَدَّثُونَ " أَيْ مُلْهَمُونَ

**1504** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களுக்கு முன் வாழ்ந்த சமுதாயத்தவர்களின் உள்ளத்தின் உதிப்பு ஏற்படுத்துவதின் மூலம் நல்லதை அறிவிக்கப்பட்டவர்கள் இருந்தார்கள். என் சமுதாயத்தில் ஒருவர் இருப்பாரானால், நிச்சயமாக! அது உமர் (ரழி) ஆகத்தான் இருப்பார்!” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:3689. ஆயிஷா (ரழி) அறிவித்து முஸ்லிமில் (2398) உள்ளது)**

١٥٠٥ – وَعَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : شَكَا أَهْلُ الْكُوفَةِ سَعْدًا يَعْنِي ابْنَ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ إِلَى عُمَرَ بْنَ الْخَطَّاب رَضِيَ اللَّهُ عَنْهُ فَعَزَلَهُ وَاسْتَعْمَلَ عَلَيْهِمْ عَمَّارًا فَشَكَوْا حَتَّى ذَكَرُوا أَنَّهُ لاَ يُحْسِنُ يُصَلِّي : فَأَرْسَلَ إِلَيْهِ فَقَالَ : يَا أَبَا إِسْحَاقَ إِنَّ هَؤُلاَءِ يَزْعُمُونَ أَنَّك لاَ تُحْسِنُ تُصَلِّي فَقَالَ : أَمَّا أَنَا وَاللَّهِ فَإِنِّي كُنْت أُصَلِّي بِهِمْ صَلاَةَ رَسُولِ اللَّهِ ﷺ لاَ أَخْرِمُ عَنْهَا أُصَلِّي صَلاَتَيْ الْعِشَاءِ فَأَرْكُدُ فِي الأُولَيَيْنِ وَأُخِفُّ فِي الأُخْرَيَيْنِ . قَالَ : ذَلِكَ الظَّنُّ بِك يَا أَبَا إِسْحَاقَ وَأَرْسَلَ مَعَهُ رَجُلاً – أَوْ رِجَالاً – إِلَى الْكُوفَةِ يَسْأَلُ عَنْهُ أَهْلَ الْكُوفَةِ فَلَمْ يَدَعْ مَسْجِدًا إِلاَّ سَأَلَ عَنْهُ وَيُثْنُونَ مَعْرُوفًا حَتَّى دَخَلَ مَسْجِدًا لِبَنِي عَبْسٍ فَقَامَ رَجُلٌ مِنْهُمْ يُقَالُ لَهُ أُسَامَةُ بْنُ قَتَادَةَ يُكَنَّى أَبَا سَعْدَةَ فَقَالَ : أَمَّا إِذْ نَشَدْتَنَا فَإِنَّ سَعْدًا كَانَ لاَ يَسِيرُ بِالسَّرِيَّةِ وَلاَ يُقْسِمُ بِالسَّوِيَّةِ وَلاَ يَعْدِلُ فِي الْقَضِيَّةِ . قَالَ سَعْدٌ : أَمَا وَاللَّهِ لأَدْعُوَن بِثَلاَث : اللَّهُمَّ إِنْ كَانَ عَبْدُك هَذَا كَاذِبًا قَامَ رِيَاءً وَسُمْعَةً فَأَطِلْ عُمْرَهُ وَأَطِلْ فَقْرَهُ وَعَرِّضْهُ لِلْفِتَنِ . وَكَانَ بَعْدَ ذَلِكَ إِذَا سُئِلَ يَقُولُ : شَيْخٌ كَبِيرٌ مَفْتُونٌ أَصَابَتْنِي دَعْوَةُ سَعْدٍ . قَالَ عَبْدُ الْمَلِكِ بْنُ عُمَيْرٍ الرَّاوِي عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ : فَأَنَا رَأَيْته بَعْدُ قَدْ سَقَطَ حَاجِبَاهُ عَلَى عَيْنَيْهِ مِنَ الْكِبَرِ وَإِنَّهُ لَيَتَعَرَّضُ لِلْجَوَارِي فِي الطُّرُقِ فَيَغْمِزُهُنَّ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1505** ஜாபிர் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(கூபாவின் கவர்னராக இருந்த) ஸஃது (இப்னு அபீவக்காஸ்) (ரழி) அவர்களை கூபாவாசிகள் (கலீஃபா) உமர் (ரழி) அவர்களிடம் குறை கூறினார்கள். உடனே உமர் (ரழி) அவர்கள் அவரை நீக்கிவிட்டு, அவர்களின் பொறுப்பாளராக அம்மார் (ரழி) அவர்களை நியமித்தார்கள். "அவர் சரியாக தொழ வைக்க மாட்டார்" என்றும் அவர்கள் ஸஃது (ரழி) பற்றி குறை கூறி இருந்தனர். அவருக்கு ஆளனுப்பிய உமர் (ரழி) அவர்கள், "அபூ இஸ்ஹாக்கே! நீங்கள் சரியாகத் தொழவைக்கவில்லை என்று இவர்கள் கருதுகிறார்களே?" என்றார்கள். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் இவர்களுக்கு நபி (ஸல்) அவர்களின் தொழுகை போலவே தொழ வைத்தேன். அதில் குறை ஏதும் செய்யமாட்டேன். இஷாவை நான் தொழ வைப்பேன். முதலிரண்டு ரக்அத்துகளை நீட்டுவேன். அதற்கு பிந்தைய இரண்டு ரக்அத்துகளை சுருக்குவேன்" என்று ஸஃது (ரழி) பதில் கூறினார். "அபூஇஸ்ஹாக்கே! உம் விஷயமாக இவ்வாறே கருதினேன்" என்று உமர் (ரழி) கூறினார்கள்.

ஸஃது (ரழி) அவர்களுடன் ஒருவரை அல்லது சிலரை "கூபா" பகுதிக்கு கூபாவாசிகளிடம் இவரைப் பற்றி கேட்க உமர் (ரழி) அனுப்பினார்கள். அவர் பற்றிக் கேட்காத எந்த பள்ளிவாசலும் இல்லை. எல்லோரும் புகழ்ந்தே கூறினார்கள். இறுதியாக பனு அபஸ் சமூகத்தின் பள்ளிவாசலுக்கு வந்தார்கள். அவர்களில் ஒருவர் எழுந்தார். அவருக்கு உஸாமா இப்னு கதாதா என்பது பெயராகும். "அபூஸஃது" என்று அவருக்கு பட்டப்பெயர் உண்டு. "இவர் பற்றி கேட்பதால் கூறுகிறேன். இந்த ஸஃது, படைக்குத் தலைமை ஏற்று நடத்திச் செல்லமாட்டார். சமமாகப் பங்கீடு செய்யமாட்டார். வழக்குகளில் நீதியாக நடக்க மாட்டார்" எனக் கூறினார். அப்போது ஸஃது (ரழி) அவர்கள் (மிகவும் சஞ்சலம் அடைந்தவர்களாக), "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! மூன்று விஷயங்களுக்கு நான் துஆச் செய்கிறேன். இறைவா! பிறர் பாராட்ட, மெச்ச நின்ற இந்த (உஸாமா இப்னு கதாதா என்ற) உன் அடியான் பொய்யராக இருந்தால், இவரின் வயதை நீ நீளமாக்குவாயாக! மேலும், அவரின் வறுமையை நீளமாக்குவாயாக! குழப்பங்களில் அவரைச் சிக்க வைப்பாயாக!"என்று கூறினார். அதன் பின்னர் யாராவது அவரைப் பற்றி அவரிடம் (உஸாமா இப்னு கதாதாவிடம்) கேட்டால், "நான் குழப்பத்திற்குட்பட்ட, வயது முதிர்ந்த கிழவன். ஸஃது (ரழி) அவர்களின் துஆ என்னை பிடித்து விட்டது" என்று கூறுபவராக இருந்தார்.

ஜாபிர் இப்னு ஸமுரா (ரழி) அவர்கள் கூறியதாகக் கூறும் அப்துல் மலிக் இப்னு உமைர் என்பார், "அவரின் முதுமை காரணமாக அவரின் இருபுருவங்களும் இரு கண்கள் மீது விழுந்து தொங்கியதை நான் கண்டேன். மேலும் அவர் வழிகளில் செல்லும் பெண்களைக் கிள்ளி, இடையூறு செய்பவராகவும் இருந்தார்" என்று கூறுகின்றார். **(புகாரி:755. முஸ்லிம்:453)**

١٥٠٦ - وَعَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ أَنَّ سَعِيدَ بْنَ زَيْدِ بْنِ عَمْرِو بْنِ نُفَيْلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ خَاصَمَتْهُ أَرْوَى بِنْتُ أَوْسٍ إِلَى مَرْوَانَ بْنِ الْحَكَمِ وَادَّعَتْ أَنَّهُ أَخَذَ شَيْئًا مِنْ أَرْضِهَا فَقَالَ سَعِيدٌ : أَنَا كُنْتُ آخُذُ مِنْ أَرْضِهَا شَيْئًا بَعْدَ الَّذِي سَمِعْتُ مِنْ رَسُولِ اللَّهِ ﷺ ؟ قَالَ : مَاذَا سَمِعْتَ مِنْ رَسُولِ اللَّهِ ﷺ ؟ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ أَخَذَ شِبْرًا مِنَ الأَرْضِ ظُلْمًا طُوِّقَهُ إِلَى سَبْعِ أَرَضِينَ " . فَقَالَ لَهُ مَرْوَانُ : لاَ أَسْأَلُكَ بَيِّنَةً بَعْدَ هَذَا فَقَالَ سَعِيدٌ : اللَّهُمَّ إِنْ كَانَتْ كَاذِبَةً فَأَعْمِ بَصَرَهَا وَاقْتُلْهَا فِي أَرْضِهَا . قَالَ : فَمَا مَاتَتْ حَتَّى ذَهَبَ بَصَرُهَا وَبَيْنَمَا هِيَ تَمْشِي فِي أَرْضِهَا إِذْ وَقَعَتْ فِي حُفْرَةٍ فَمَاتَتْ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ عَنْ مُحَمَّدِ بْنِ زَيْدِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ بِمَعْنَاهُ وَأَنَّهُ رَآهَا عَمْيَاءَ تَلْتَمِسُ الْجُدُرَ تَقُولُ : أَصَابَتْنِي دَعْوَةُ سَعِيدٍ ! وَأَنَّهَا مَرَّتْ عَلَى بِئْرٍ فِي الدَّارِ الَّتِي خَاصَمَتْهُ فِيهَا فَوَقَعَتْ فِيهَا وَكَانَتْ قَبْرَهَا ! . .

**1505** உர்வா இப்னு சுபைர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸயீத் இப்னு ஸைத் இப்னு அம்ரு இப்னு நுபைல் (ரழி) அவர்கள் பற்றிக் கவர்னர் மர்வான் இப்னு ஹகம் அவர்களிடம் அவ்ஸின் மகள் அர்வா வழக்குத் தொடுத்தார் "இவர் என் நிலத்தின் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டார்" என வாதாடினார். "இது குறித்து நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்ட செய்திக்குப்பின், இப்பெண்ணின் நிலத்தை நான் எடுப்பேனா?" என்று ஸயீத் (ரழி) கூறினார். "நபி (ஸல்) அவர்களிடம் என்ன கேட்டீர்?" என்று மர்வான் கேட்டார். "(பிறர்) நிலத்தில் ஒரு சாண் பகுதியை ஒருவர் அநீதமாக எடுத்தால், மறுமை நாளில் அவ்வருக்கு ஏழு பூமி கனத்தைக் கழுத்தில் மாலையிடப்படும் என்று நபி (ஸல்) கூற நான் கேட்டேன்" என்றார் ஸயீத் (ரழி). "இதன் பின் வேறு ஆதாரம் நான் கேட்க மாட்டேன்" என்று மர்வான் கூறினார். உடனே ஸயீத் (ரழி) அவர்கள், "இறைவா! இந்தப் பெண் பொய் கூறுபவளாக இருந்தால், இவளின் பார்வையை குருடாக்குவாயாக! அந்த நிலத்திலேயே இவளை இறக்கச் செய்வாயாக" என்று கூறினார். அதன்படி அந்தப் பெண் தன் பார்வையை இழந்து விட்டாள். ஒருநாள் அவள், தன் நிலத்தில் நடந்து சென்ற போது, ஒரு குழியில் (தடுக்கி) விழுந்து, இறந்துவிட்டாள். **(புகாரி:3198. முஸ்லிம்:1610)**

முஹம்மது இப்னு ஸைத் இப்னுஅப்துல்லாஹ் இப்னு உமர் என்பார் இதே கருத்துப்படிக் கூறியது முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் பின்வருமாறு உள்ளது:

"அந்தப் பெண்ணைச் சுவரைத் தேடும் குருடியாக நான் கண்டேன். "ஸயீதின் துஆ என்னைப் பிடித்து விட்டது" என்று கூறுவாள். இந்தப் பெண் வழக்குத் தொடர்ந்த இடத்தின் வீட்டுக் கிணற்றில் விழுந்த அவள், அதிலேயே இறந்தாள். அதுவே அவளின் மண்ணறையாக இருந்தது.

١٥٠٧ – وَعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : لَمَّا حَضَرَتْ أُحُدٌ دَعَانِي أَبِي مِنَ اللَّيْلِ فَقَالَ : مَا أُرَانِي إِلاَّ مَقْتُولاً فِي أَوَّلِ مَنْ يُقْتَلُ مِنْ أَصْحَابِ النَّبِيِّ ﷺ وَإِنِّي لاَ أَتْرُكُ بَعْدِي أَعَزَّ عَلَيَّ مِنْكَ غَيْرَ نَفْسِ رَسُولِ اللَّهِ ﷺ وَإِنَّ عَلَيَّ دَيْنًا فَاقْضِ وَاسْتَوْصِ بِأَخَوَاتِكَ خَيْرًا . فَأَصْبَحْنَا فَكَانَ أَوَّلُ قَتِيلٍ وَدَفَنْتُ مَعَهُ آخَرَ فِي قَبْرِهِ ثُمَّ لَمْ تَطِبْ نَفْسِي أَنْ أَتْرُكَهُ مَعَ آخَرَ فَاسْتَخْرَجْتُه بَعْدَ سِتَّةِ أَشْهُرٍ فَإِذَا هُوَ كَيَوْمِ وَضَعْتُه غَيْرَ أُذُنِه فَجَعَلْتُه فِي قَبْرٍ عَلَى حِدَةٍ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1507** ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உஹத் களத்தில் இருந்தபோது, இரவு என் தந்தை அப்துல்லாஹ் (ரழி) என்னை அழைத்து "(மகனே!) நபித்தோழர்களில் கொல்லப்படுவோரில் முதல் நபராக இருப்பேன் என நான் கருதுகிறேன். நபி (ஸல்) அவர்களைத் தவிர, மற்ற மக்களில் உன்னைவிட, என்னிடம் மிக கண்ணியமானவராக எவரையும் நான் எனக்குப்பின் விட்டுச் செல்லவில்லை. எனக்கு கடன் உள்ளது. அதை நல்லமுறையில் நிறைவேற்று! உன் சகோதரிகளிடம் நல்லவிதமாக நடந்து கொள்!" என்று கூறினார். காலையில் நாங்கள் எழுந்த போது, இறந்தோரில் முதல் நபராக அவர் இருந்தார். அவரின் கப்ரிலே அவருடனேயே மற்றொருவரையும் சேர்த்து அடக்கம் செய்தேன். பின்பு, "தனியாக அவரை அடக்கம் செய்யாமல், வேறொருவருடன் சேர்த்து அடக்கம் செய்து விட்டோமே?" என என் உள்ளம் நிம்மதி இழந்தது. (அவரை தனியாக அடக்கம் செய்ய) ஆறுமாதத்திற்குப்பின், அவர்களின் கப்ரை தோண்டினேன். அப்போது, அவர் அன்று அடக்கம் செய்யப்பட்டது போலவே இருந்தார். அவரின் காது மட்டும் சிதைந்திருந்தது. உடனே புதிய கப்ரில் அவரை தனியாக அடக்கம் செய்தேன்.

**(புகாரி:1351)**

١٥٠٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلَيْنِ مِنْ أَصْحَابِ النَّبِيِّ ﷺ خَرَجَا مِنْ عِنْدِ النَّبِيِّ ﷺ فِي لَيْلَةٍ مُظْلِمَةٍ وَمَعَهُمَا مِثْلُ الْمِصْبَاحَيْنِ بَيْنَ أَيْدِيهِمَا . فَلَمَّا افْتَرَقَا صَارَ مَعَ كُلِّ وَاحِدٍ مِنْهُمَا وَاحِدٌ حَتَّى أَتَى أَهْلَهُ . رَوَاهُ الْبُخَارِيُّ مِنْ طُرُقٍ وَفِي بَعْضِهَا : أَنَّ الرَّجُلَيْنِ أُسَيْدُ بْنُ حُضَيْرٍ وَعَبَّادُ بْنُ بِشْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا .

**1508** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபித்தோழர்களில் இருவர், கடினமான இருள் படர்ந்த ஓர் இரவில் நபி (ஸல்) அவர்களிடமிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். அப்போது அவ்விருவருடனும் அவர்களின் முன்னே இரண்டு விளக்குகள் போல் சென்று கொண்டு இருந்தது. அந்த இருவரும் ஓரிடத்தில் பிரிந்து சென்றபோது, அந்த இரு விளக்குகளும் ஒவ்வொருவருடன் ஒரு விளக்கு எனப் பிரிந்துவிட்டது. அவ்விருவரும் அவரவர் வீடு போய் சேரும் வரை அந்த வெளிச்சம் இருந்தது. **(புகாரி:3639,3805)**

புகாரியில் பல வழிகளில் இந்த ஹதீஸ் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றில் சிலவற்றில் “அவ்விருவரில் ஒருவர் உஸைத் இப்னு ஹுளைர், மற்றொருவர் அப்பாது இப்னு பிஷ்ர் ஆகியோர்” என்றுள்ளது.

١٥٠٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَعَثَ رَسُولُ اللَّهِ ﷺ عَشَرَةَ رَهْطٍ عَيْنًا سَرِيَّةً وَأَمَّرَ عَلَيْهِمْ عَاصِمَ بْنَ ثَابِتٍ الْأَنْصَارِيَّ رَضِيَ اللَّهُ عَنْهُ فَانْطَلَقُوا حَتَّى إِذَا كَانُوا بِالْهَدْأَةِ بَيْنَ عُسْفَانَ وَمَكَّةَ ذُكِرُوا لِحَيٍّ مِنْ هُذَيْلٍ يُقَالُ لَهُمْ بَنُو لَحْيَانَ فَنَفَرُوا لَهُمْ بِقَرِيبٍ مِنْ مِائَةِ رَجُلٍ رَامٍ فَاقْتَصُّوا آثَارَهُمْ فَلَمَّا أَحَسَّ بِهِمْ عَاصِمٌ وَأَصْحَابُهُ لَجَئُوا إِلَى مَوْضِعٍ فَأَحَاطَ بِهِمُ الْقَوْمُ فَقَالُوا : انْزِلُوا فَأَعْطُوا بِأَيْدِيكُمْ وَلَكُمُ الْعَهْدُ وَالْمِيثَاقُ أَلاَّ نَقْتُلَ مِنْكُمْ أَحَدًا . فَقَالَ عَاصِمُ بْنُ ثَابِتٍ : أَيُّهَا الْقَوْمُ أَمَّا أَنَا فَلاَ أَنْزِلُ عَلَى ذِمَّةِ كَافِرٍ . اللَّهُمَّ أَخْبِرْ عَنَّا نَبِيَّكَ ﷺ فَرَمَوْهُمْ بِالنَّبْلِ فَقَتَلُوا عَاصِمًا وَنَزَلَ إِلَيْهِمْ ثَلاَثَةُ نَفَرٍ عَلَى الْعَهْدِ وَالْمِيثَاقِ مِنْهُمْ خُبَيْبُ وَزَيْدُ بْنُ الدَّثِنَةِ وَرَجُلٌ آخَرُ . فَلَمَّا اسْتَمْكَنُوا مِنْهُمْ أَطْلَقُوا أَوْتَارَ قِسِيِّهِمْ فَرَبَطُوهُمْ بِهَا . قَالَ الرَّجُلُ الثَّالِثُ : هَذَا أَوَّلُ الْغَدْرِ وَاللَّهِ لاَ أَصْحَبُكُمْ إِنَّ لِي بِهَؤُلاَءِ أُسْوَةً ) يُرِيدُ الْقَتْلَى ( فَجَرُّوهُ وَعَالَجُوهُ فَأَبَى أَنْ يَصْحَبَهُمْ فَقَتَلُوهُ وَانْطَلَقُوا بِخُبَيْبٍ وَزَيْدِ بْنِ الدَّثِنَةِ حَتَّى بَاعُوهُمَا بِمَكَّةَ بَعْدَ وَقْعَةِ بَدْرٍ فَابْتَاعَ بَنُو الْحَارِثِ بْنِ عَامِرِ بْنِ نَوْفَلِ بْنِ عَبْدِ مَنَافٍ خُبَيْبًا وَكَانَ خُبَيْبٌ هُوَ قَتَلَ الْحَارِثَ يَوْمَ بَدْرٍ . فَلَبِثَ خُبَيْبٌ عِنْدَهُمْ أَسِيرًا حَتَّى أَجْمَعُوا عَلَى قَتْلِهِ فَاسْتَعَارَ مِنْ بَعْضِ بَنَاتِ الْحَارِثِ مُوسَى يَسْتَحِدُّ بِهَا فَأَعَارَتْهُ فَدَرَجَ بُنَيٌّ لَهَا وَهِيَ غَافِلَةٌ حَتَّى أَتَاهُ فَوَجَدَتْهُ مُجْلِسَهُ عَلَى فَخِذِهِ وَالْمُوسَى بِيَدِهِ فَفَزِعَتْ فَزْعَةً عَرَفَهَا خُبَيْبٌ فَقَالَ : أَتَخْشَيْنَ أَنْ أَقْتُلَهُ ؟ مَا كُنْتُ لأَفْعَلَ ذَلِكَ ! قَالَتْ : وَاللَّهِ مَا رَأَيْتُ أَسِيرًا خَيْرًا مِنْ خُبَيْبٍ فَوَاللَّهِ لَقَدْ وَجَدْتُهُ يَوْمًا يَأْكُلُ قِطْفًا مِنْ عِنَبٍ فِي يَدِهِ وَإِنَّهُ لَمُوثَقٌ بِالْحَدِيدِ وَمَا بِمَكَّةَ مِنْ ثَمَرَةٍ وَكَانَتْ تَقُولُ : إِنَّهُ لَرِزْقٌ رَزَقَهُ اللَّهُ خُبَيْبًا ! فَلَمَّا خَرَجُوا بِهِ مِنَ الْحَرَمِ لِيَقْتُلُوهُ فِي الْحِلِّ قَالَ لَهُمْ خُبَيْبٌ : دَعُونِي أُصَلِّي رَكْعَتَيْنِ فَتَرَكُوهُ فَرَكَعَ رَكْعَتَيْنِ فَقَالَ : وَاللَّهِ لَوْلاَ أَنْ تَحْسَبُوا أَنَّ مَا بِي جَزَعٌ لَزِدْتُ . اللَّهُمَّ أَحْصِهِمْ عَدَدًا وَاقْتُلْهُمْ بِدَدًا وَلاَ تُبْقِ مِنْهُمْ أَحَدًا . وَقَالَ : وَكَانَ خُبَيْبٌ هُوَ سَنَّ لِكُلِّ مُسْلِمٍ قُتِلَ صَبْرًا الصَّلاَةَ وَأَخْبَرَ – يَعْنِي النَّبِيُّ ﷺ – أَصْحَابَهُ يَوْمَ أُصِيبُوا خَبَرَهُمْ وَبَعَثَ نَاسٌ مِنْ قُرَيْشٍ إِلَى عَاصِمِ بْنِ ثَابِتٍ حِينَ حُدِّثُوا أَنَّهُ قُتِلَ أَنْ يُؤْتَوْا بِشَيْءٍ مِنْهُ يُعْرَفُ وَكَانَ قَتَلَ رَجُلاً مِنْ عُظَمَائِهِمْ فَبَعَثَ اللَّهُ لِعَاصِمٍ مِثْلَ الظُّلَّةِ مِنَ الدَّبْرِ فَحَمَتْهُ مِنْ رُسُلِهِمْ فَلَمْ يَقْدِرُوا أَنْ يَقْطَعُوا مِنْهُ شَيْئًا . رَوَاهُ الْبُخَارِيُّ . قَوْلُهُ " الْهَدْأَةُ " : مَوْضِعٌ . وَالظُّلَّةُ : السَّحَابُ . وَالدَّبْرُ : النَّحْلُ . وَقَوْلُهُ : " اقْتُلْهُمْ بِدَدًا " بِكَسْرِ الْبَاءِ وَفَتْحِهَا فَمَنْ كَسَرَ قَالَ : هُوَ جَمْعُ بِدَّةٍ بِكَسْرِ الْبَاءِ وَهِيَ النَّصِيبُ وَمَعْنَاهُ :

أَقْتُلُهُمْ حِصَصًا مُنْقَسِمَةً لِكُلِّ وَاحِدٍ مِنْهُمْ نَصِيبٌ وَمَنْ فَتَحَ قَالَ : مَعْنَاهُ مُتَفَرِّقِينَ فِي الْقَتْلِ وَاحِدًا بَعْدَ وَاحِدٍ مِنَ التَّبْدِيدِ . وَفِي الْبَابِ أَحَادِيثُ كَثِيرَةٌ صَحِيحَةٌ سَبَقَتْ فِي مَوَاضِعِهَا مِنْ هَذَا الْكِتَابِ : مِنْهَا حَدِيثُ الْغُلَامِ الَّذِي كَانَ يَأْتِي الرَّاهِبَ وَالسَّاحِرَ وَمِنْهَا حَدِيثُ جُرَيْجٍ وَحَدِيثُ أَصْحَابِ الْغَارِ الَّذِينَ أَطْبَقَتْ عَلَيْهِمُ الصَّخْرَةُ وَحَدِيثُ الرَّجُلِ الَّذِي سَمِعَ صَوْتًا فِي السَّحَابِ يَقُولُ : اسْقِ حَدِيقَةَ فُلَانٍ وَغَيْرُ ذَلِكَ . وَالدَّلَائِلُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَشْهُورَةٌ وَبِاللَّهِ التَّوْفِيقُ .

**1509** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் பத்துப் பேர் கொண்ட சிறிய படையை அனுப்பினார்கள். அதற்கு ஆஸிம் இப்னு ஸாபித் அன்ஸாரீ (ரழி) அவர்களைத் தலைவராக நியமித்தார்கள். உஸ்பான், மக்கா ஆகிய ஊர்களுக்கிடையே உள்ள "ஹத்ஆத்" என்ற பகுதி வரும் வரை நடந்தார்கள். ஹுதைல் கோத்திரத்தைச் சேர்ந்த ஹய்யி என்ற கூட்டத்தாருக்கு இவர்கள் பற்றிய செய்தி கூறப்பட்டது. இந்தக் கூட்டத்தாரை "பனூலிஹ்யான்" என்று கூறப்படும். உடனே அம்பெய்யும் 100 பேர் கொண்ட வீரர்கள் அவர்களை விரட்டினர். அவர்களின் பாதச் சுவடுகளைப் பின் தொடர்ந்தனர். ஆஸிமும், அவரின் கூட்டாளிகளும் இவர்களின் வருகையை உணர்ந்த போது, ஒரு (உயரமான) இடத்திற்கு ஏறினார்கள். அவர்களை அந்தக் கூட்டம் சூழ்ந்து கொண்டது. "இறங்கி வாருங்கள்" உங்களின் கைகளைக் கொடுங்கள். உங்களில் எவரையும் கொல்லமாட்டோம் என உங்களுக்கு உறுதி அளிக்கிறோம்" என்று கூறினார்கள். உடனே ஆஸிம் இப்னு ஸாபித் (ரழி) அவர்கள், "கூட்டத்தார்களே! நிச்சயமாக, இறைமறுப்பாளரின் பொறுப்பில் நான் இறங்க மாட்டேன்" என்று கூறிவிட்டு, "இறைவா! எங்களைப் பற்றிய இச்செய்தியை நபி (ஸல்) அவர்களிடம் தெரிவிப்பாயாக!" என்று துஆ செய்தார்கள். உடனே அம்பை அவர்கள் எறிந்து, ஆஸிம் (ரழி) அவர்களைக் கொன்றார்கள்.

நபித்தோழர்களில் மூவர், அவர்களின் உடன்படிக்கையை ஏற்றுக் கொண்டு மலையில் இருந்து கீழே இறங்கினர். அவர்களில் குபைப் (ரழி), ஸைத் இப்னு தஃதினா (ரழி) மற்றும் ஒருவர் (இவர் அப்துல்லாஹ் இப்னு தாரிக்) (ரழி) ஆகியோராவார். அவர்கள் இறங்கியதும், அவர்களின் வில் நாண்களை அவிழ்த்து, அதன் மூலம் அவர்களைக் கட்டிப் போட்டார்கள். (அவர்களில்) மூன்றாம் நபர், "இது முதல் மோசடியாகும். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களுடன் வரமாட்டேன். எனக்கு முன் இறந்த இவர்களிடம் எனக்கு முன் மாதிரி உள்ளது" என்று கூறினார். உடனே அவரைப் பிடித்து இழுத்தனர். ஆனால் அவர் அவர்களுடன் வர மறுத்து விட்டார். உடனே அவரையும் அவர்கள் கொன்றார்கள்.

குபைப் (ரழி), ஸைத் இப்னு தஃதினா (ரழி) இருவரையும் அழைத்துக் கொண்டு தாங்கள் வசிக்கும் இடத்திற்கு நடந்தார்கள். இறுதியில் பத்ரு போருக்குப் பின் மக்காவில் அந்த இருவரையும் விற்றார்கள். ஹாரிஸ் இப்னு ஆமிர் இப்னு நவ்ஃபல் இப்னு அப்து மனாஃப் என்பவரின் மக்கள் குபைப் அவர்களை விலைக்கு வாங்கினார்கள். (இவர்களின் தந்தை) ஹாரிஸை பத்ருப் போரில் குபைப் (ரழி) கொன்று விட்டார்கள். இவர்களிடம் கைதியாக குபைப் (ரழி) இருந்தார்கள். முடிவாக அவரைக் கொல்வது என்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

ஹாரிஸின் மகளிடம் முடி வெட்டிக் கொள்ள கத்தி ஒன்றை குபைப் (ரழி) இரவலாக கேட்டிருந்தார். அதை அவள் இரவலாகத் தந்தாள். ஒருமுறை அவள் கவனக் குறைவாக இருந்தபோது, அவளுடைய மகன் குபைப் (ரழி) அறைக்குள் வந்தான். அவரது கையில் கத்தி இருக்கும் நிலையில் அவரின் மடியில் அக்குழந்தை இருப்பதைக் கண்டு திடுக்குற்றாள். இதை அறிந்த குபைப் (ரழி) அவர்கள், "இந்தச் சிறுவனைக் கொலை செய்து விடுவேன் என பயப்படுகிறாயா? அவ்வாறு நான் செய்ய

மாட்டேன்'' என்று கூறினார். (பின்னர் இதுபற்றி அப்பெண் கூறும்போது), ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! குபைப் அவர்களை விட சிறந்த கைதி ஒருவரை நான் கண்டதில்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஒருநாள் அவரிடம் கையில் பேரீத்தம் பழக்குலை ஒன்றை வைத்துச் சாப்பிடுபவராக நான் கண்டேன். (ஆனால்) அவர் சங்கிலியால் கட்டப்பட்டிருந்தார். மேலும் இந்தப் பேரீத்தம் பழம் மதீனாவில் இருந்ததும் இல்லை'' என்று கூறிவிட்டு, ''நிச்சயமாக! குபைபுக்கு அல்லாஹ் அளித்த உணவு அது'' என்று அப்பெண் கூறினார்.

குபைப் (ரழி) அவர்களைக் கொலை செய்ய மக்காவின் ''ஹரம்'' பகுதியிலிருந்து அனுமதிக்கப் பட்ட ஒரு பகுதிக்கு அவர்கள் வெளியேறிய போது, அவர்களிடம் குபைப் (ரழி), ''இரண்டு ரக்அத்துகள் நான் தொழுவதவற்காக என்னை விடுங்கள்'' என்று கூறினார். அவர்களும் அவரை விட்டு விட்டனர். குபைப் (ரழி) அவர்கள் இரண்டு ரக்அத்துகள் தொழுதார். ''அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனக்கு (மரண) பயம் ஏற்பட்டு விட்டது என்று நீங்கள் எண்ணாமல் இருந்திருந்தால், நான் இன்னும் (தொழுகையைக்) கூடுதலாக்கி இருப்பேன்'' என்று கூறிவிட்டு, ''இறைவா! அவர்களின் எண்ணிக்கையை கணக்கிடுவாயாக! அவர்களைப் பிரித்துக் கொல்வாயாக! அவர்களில் எவரையும் விட்டு விடாதே'' என்று பிரார்த்தித்துவிட்டு பின்வரும் கவிதையைக் கூறினார்கள்.

''முஸ்லிமாக நான் கொல்லப்படுவதால் நான் கவலைப்படவில்லை. அல்லாஹ்வுக்காக என் இருப்பிடம் எந்த திசையில் இருந்தாலும், இது இறைவனின் முடிவில் உள்ளதாகும். அவன் நாடினால், வெட்டப்பட்ட என் உறுப்புகளின் மூட்டுக்களில் அவன் பரக்கத் செய்வான்.''

பொறுமையாக (திட்டமிடப்பட்டு) கொல்லப்படும் ஒவ்வொரு முஸ்லிமும் தொழுவது என்ற அழகிய நடைமுறையை ஏற்படுத்தியவராக குபைப் (ரழி) இருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்கு ஏற்பட்ட கதியை, மற்ற தோழர்களிடம் மதீனாவில் எடுத்துரைத்தார்கள். மக்கா குறைஷிகளில், சிலர், ''ஆஸிம் கொல்லப்பட்டுவிட்டார்'' என்று கேள்விப்பட்டதால், அவருடைய ஏதேனும் ஓர் உறுப்பை எடுத்து வந்து, உறுதிபடுத்திட வேண்டி ஆஸிம் இப்னு ஸாபித்தை நோக்கி ஒரு கூட்டத்தாரை அனுப்பினர். காரணம், இந்த ஆஸிம் (ரழி) அவர்கள், குறைஷியர்களின் தலைவர் களில் ஒருவரைக் கொலை செய்திருந்தார். உடனே அல்லாஹ் மேகம் போன்று தேனீக்களை அனுப்பினான். அவர்களின் படையினரை விட்டும் அவரை அவை பாதுகாத்தன. அவரிடமிருந்து எதையும் அவர்கள் வெட்டிச் செல்ல அவர்களால் இயலவில்லை. **(புகாரி:3045)**

இந்தப் பாடத்திற்கு ஏற்ற சரியான ஹதீஸ்கள் பல உண்டு, இந்த நூலில் பல இடங்களில் அவை இடம் பெற்றுள்ளன. ஒரு துறவியிடமும், சூனியக்காரரிடமும் சிறுவன் வந்தது பற்றிய (30-வது) ஹதீஸ் இவற்றில் ஒன்றாகும். மேலும் ஜுரைஜ் பற்றிய (259-வது) ஹதீஸும், குகை வாசல் மூடப்பட்ட குகை வாசிகள் பற்றிய (12-வது) ஹதீஸும், ''இன்னாரின் தோட்டத்தில் மழைபெய்'' என வானில் சப்தத்தைக் கேட்ட மனிதர் பற்றிய (562-வது) ஹதீஸும் மற்றும் இவை அல்லாதவையும் இவற்றில் உள்ளதாகும். இந்தப் பாடத்திற்குப் பிரபலமான அதிக ஆதாரங்கள் உண்டு. அல்லாஹ் போதுமானவன்.

١٥١٠ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : مَا سَمِعْتُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ يَقُولُ لِشَيْءٍ قَطُّ : إِنِّي لأَظُنُّهُ كَذَا إِلاَّ كَانَ كَمَا يَظُنُّ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1510** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உமர் (ரழி) அவர்கள், ''ஒரு விஷயத்தை இதை இவ்வாறே நான் எண்ணுகிறேன்'' என்று அவர் கூறினால், அது அவர் எண்ணியது போலவே அமைந்திருக்கும். **(புகாரி:3866)**

# அத்தியாயம் : 17

## விலக்கப்பட்ட செயல்கள்

## ٢٥٤ – باب تحريم الغيبة والأمر بحفظ اللّسان

## பாடம் : 254 - புறம் பேசுதல் கூடாது. நாவைப் பேணுதல்

قَالَ اللّهُ تَعَالَى : وَلاَ يَغْتَب بَّعْضُكُمْ بَعْضًا أَيُحِبُّ أَحَدُكُمْ أَنْ يَأْكُلَ لَحْمَ أَخِيه مَيْتًا فَكَرِهْتُمُوهُ وَاتَّقُوا اللّهَ إِنَّ اللّهَ تَوَّابٌ رَحِيمٌ . وَقَالَ تَعَالَى : وَلاَ تَقْفُ مَا لَيْسَ لَكَ بِه عِلْمٌ إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَئِكَ كَانَ عَنْهُ مَسْئُولاً . وَقَالَ تَعَالَى : مَا يَلْفِظُ مِنْ قَوْلٍ إِلاَّ لَدَيْه رَقِيبٌ عَتِيدٌ اعْلَمْ أَنَّهُ يَنْبَغِي لِكُلِّ مُكَلَّف أَنْ يَحْفَظَ لِسَانَهُ عَنْ جَمِيعِ الْكَلاَمِ إِلاَّ كَلاَمًا ظَهَرَتْ فِيه الْمَصْلَحَةُ وَمَتَى اسْتَوَى الْكَلاَمُ وَتَرْكُهُ فِي الْمَصْلَحَة فَالسُّنَّةُ الْأَمْسَاكُ عَنْهُ لأَنَّهُ قَدْ يَنْجَرُّ الْكَلاَمُ الْمُبَاحُ إِلَى حَرَامٍ أَوْ مَكْرُوهٍ وَذَلِكَ كَثِيرٌ فِي الْعَادَة وَالسَّلاَمَةُ لاَ يَعْدِلُهَا شَيْءٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** .... *உங்களில் சிலர், சிலரைப் புறம் பேச வேண்டாம். உங்களில் ஒருவர் இறந்த தன் சகோதரரின் இறைச்சியை உண்ண விரும்புவாரா? நீங்கள் அதை வெறுப்பீர்கள். அல்லாஹ்வை அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ், பாவமன்னிப்பு வழங்குபவன். இரக்கமுள்ளவன் ஆவான். (49:12)*

*உமக்கு (சரியான, விளக்கமான) அறிவில்லாத ஒன்றை நீர் பின்பற்றி நடக்காதீர். நிச்சயமாக கேள்விப்புலனும், பார்வையும், இதயமும் இவை அனைத்தும் (மறுமையில்) கேட்கப்படுபவைகளாக உள்ளன. (17:36)*

*எந்தச் சொல்லையும் அவன் சொல்வதில்லை; அதனைப் பாதுகாப்பதற்குத் தயாராக உள்ள ஒரு கண்காணிப்பாளர் அவனிடத்தில் இல்லாத நிலையில்! (50:18)*

அறிந்துகொள்க! வயதிற்கு வந்த ஒவ்வொருவர் மீதும், பயனுள்ள பேச்சைத் தவிர மற்ற பேச்சுக்களில் நாவை பாதுகாப்பது கடமையாகும். பயனுள்ளவற்றில் பேசுவது, பேசாமல் இருப்பது என்பது எப்போது சமமாகிறதோ, அப்போது அதைப் பேசாமல் இருப்பதே சரியானதாகும். காரணம், நல்ல சொல் கூட சில சமயம் தவறு செய்யவும், கெட்டதைச் செய்யவும் தூண்டிவிடும். இது வழக்கத்தில் அதிகமாக உள்ளது. அமைதி காப்பதற்கு ஈடாக எதுவும் இல்லை.

١٥١١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ كَانَ يُؤْمِنُ بِاللّه وَالْيَوْمِ الأخر فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَصْمُتْ " . مُتَّفَقٌ عَلَيْه . وَهَذَا صَرِيحٌ فِي أَنَّهُ يَنْبَغِي أَلاَ يَتَكَلَّمَ إِلاَّ إِذَا كَانَ الْكَلاَمُ خَيْرًا وَهُوَ الَّذِي ظَهَرَتْ مَصْلَحَتُهُ وَمَتَى شَكَّ فِي ظُهُورِ الْمَصْلَحَة فَلاَ يَتَكَلَّمُ .

**1511** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பிக்கை கொண்ட ஒருவர் நல்லதையே பேசட்டும்! அல்லது மவுனமாக இருக்கட்டும்!” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6018. முஸ்லிம்:47)**

பேசுவது நல்லதாக இருந்தாலே தவிர, பேசாமல் இருப்பது அவசியம் என்பது, இதன் கருத்தாகும். அதன் நன்மை தெளிவாகத் தெரிவதே பேச்சில் நல்லதாகும். நன்மை தெளிவாகத் தெரிவதில் சந்தேகம் ஏற்படும் போது, பேசாமல் இருக்க வேண்டும்.

١٥١٢ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللّه أَيُّ الْمُسْلِمِينَ أَفْضَلُ ؟ قَالَ : " مَنْ سَلِمَ الْمُسْلِمُونَ مِنْ لِسَانِه وَيَدِه " . مُتَّفَقٌ عَلَيْه .

**1512** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! முஸ்லிம்களில் மிகச் சிறந்தவர் யார்?" என்று நான் கேட்டேன். "எவரது நாவு, எவரது கை (ஆகியவற்றின் தீமை)களிலிருந்து முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றுள்ளார்களோ அவர்தான்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள்.

**(புகாரி:11. முஸ்லிம்:42)**

١٥١٣ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ . " مَنْ يَضْمَنْ لِي مَا بَيْنَ لَحْيَيْهِ وَمَا بَيْنَ رِجْلَيْهِ أَضْمَنْ لَهُ الْجَنَّةَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1513** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"யார் தன்னுடைய இரண்டு தாடைகளுக்கிடையே உள்ளதையும் (நாவும்), இரு கால்களுக் கிடையே உள்ளதையும் (மறைவுறுப்பு), (பாவம் செய்வதிலிருந்து) பாதுகாத்துக் கொள்கிறாரோ, அவருக்கு சொர்க்கம் கிடைக்க நான் பொறுப்பு ஏற்கிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6474)**

١٥١٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ يَقُولُ : " إِنَّ الْعَبْدَ لَيَتَكَلَّمُ بِالْكَلِمَةِ مَا يَتَبَيَّنُ فِيهَا يَزِلُّ بِهَا إِلَى النَّارِ أَبْعَدَ مِمَّا بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَمَعْنَى : " يَتَبَيَّنُ " يَتَفَكَّرُ أَنَّهَا خَيْرٌ أَمْ لاَ .

**1514** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் அடியான் (நல்லதா? கெட்டதா?) என சிந்திக்காமல் பேசிவிட்டால், அதன் காரணமாக அவன் கிழக்கிற்கும் மேற்கிற்குமிடையே உள்ள மிக தூரமான அளவுக்கு நரகில் வீழ்வான்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6477. முஸ்லிம்:2988)**

١٥١٥ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِنَّ الْعَبْدَ لَيَتَكَلَّمُ بِالْكَلِمَةِ مِنْ رِضْوَانِ اللَّهِ تَعَالَى مَا يُلْقِي لَهَا بَالاً يَرْفَعُهُ اللَّهُ بِهَا دَرَجَاتٍ وَإِنَّ الْعَبْدَ لَيَتَكَلَّمُ بِالْكَلِمَةِ مِنْ سَخَطِ اللَّهِ تَعَالَى لاَ يُلْقِي لَهَا بَالاً يَهْوِي بِهَا فِي جَهَنَّمَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1515** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் அடியான் அல்லாஹ்வின் திருப்தியைப் பெற்றுத்தரும் வார்த்தையை, அதன் முக்கியத்துவம் பற்றித் தெரியாமல் பேசுகிறான். எனினும், அதற்காக அல்லாஹ் அவனின் தகுதிகளைஉயர்த்துவான். ஓர் அடியான் அல்லாஹ்வின் கோபத்தைப் பெற்றுத் தரும் வார்த்தையை, அதன் முக்கியத்துவம் பற்றி உணராமலேயே பேசுகிறான். அதற்காக அவன் நரகில் வீழ்கிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6478)**

١٥١٦ – وَعَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ بِلاَلِ بْنِ الْحَارِثِ الْمُزَنِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ الرَّجُلَ لَيَتَكَلَّمُ بِالْكَلِمَةِ مِنْ رِضْوَانِ اللَّهِ تَعَالَى مَا كَانَ يَظُنُّ أَنْ تَبْلُغَ مَا بَلَغَتْ يَكْتُبُ اللَّهُ لَهُ بِهَا رِضْوَانَهُ إِلَى يَوْمِ يَلْقَاهُ . وَإِنَّ الرَّجُلَ لَيَتَكَلَّمُ بِالْكَلِمَةِ مِنْ سَخَطِ اللَّهِ مَا كَانَ يَظُنُّ أَنْ تَبْلُغَ مَا بَلَغَتْ يَكْتُبُ اللَّهُ لَهُ بِهَا سَخَطَهُ إِلَى يَوْمِ يَلْقَاهُ " . رَوَاهُ مَالِكٌ فِي " الْمُوَطَّإِ " وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1516** அபூ அப்துர் ரஹ்மான் பிலால் இப்னு ஹாரிஸ் அல் முஸன்னீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு மனிதன் அல்லாஹ்வுக்கு விருப்பமான பேச்சை - அதன் மூலம் கிடைக்கும் பயனை அறியாமலேயே பேசுகிறான். இதனால் அவனுக்கு அல்லாஹ் தன் திருப்தியை, அவனைச் சந்திக்கும் (மறுமை) நாள் வரை எழுதுகிறான். ஒரு மனிதன் அல்லாஹ்வின் கோபத்திற்குரிய வார்த்தையை -

அதன் மூலம் கிடைக்க இருக்கும் தீமை (தண்டனை) பற்றி அறியாமலேயே பேசுகிறான். இதற்காக அல்லாஹ் தன் கோபத்தை அவனைச் சந்திக்கும் (மறுமை) நாள் வரை எழுதுகிறான்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அல்முஅத்தா:1848. திர்மிதீ:2319. இது ''ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٥١٧ – وَعَنْ سُفْيَانَ بْنِ عَبْدِ اللّٰهِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللّٰهِ حَدِّثْنِي بِأَمْرٍ أَعْتَصِمُ بِه . قَالَ : " قُلْ رَبِّيَ اللّٰهُ ثُمَّ اسْتَقِمْ " . قُلْت : يَا رَسُولَ اللّٰهِ مَا أَخْوَفُ مَا تَخَافُ عَلَيَّ ؟ فَأَخَذَ بِلِسَانِ نَفْسِهِ ثُمَّ قَالَ : " هَذَا " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1517** சுஃப்யான் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், ''இறைத்தூதர் அவர்களே! நான் உறுதியாகச் செயல்படுத்த வேண்டிய ஒரு காரியத்தை எனக்குக் கூறுங்கள்'' என்றேன். ''என் இறைவன் அல்லாஹ்தான் என்று கூறுவீராக! (அதில்) உறுதியாக இருப்பீராக'' என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். ''இறைத்தூதர் அவர்களே! என்னிடம் நீங்கள் அதிகம் பயப்படுவது எது?'' என்று கேட்டேன். உடனே அவர்கள் தன் நாவைப் பிடித்து, ''இது தான்'' என்றார்கள்.

**(திர்மிதீ:2410. இது ''ஹஸன் ஸஹீஹ்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٥١٨ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لاَ تُكْثِرُوا الْكَلاَمَ بِغَيْرِ ذِكْرِ اللّٰهِ : فَإِنَّ كَثْرَةَ الْكَلاَمِ بِغَيْرِ ذِكْرِ اللّٰهِ تَعَالَى قَسْوَةٌ لِلْقَلْبِ ! وَإِنَّ أَبْعَدَ النَّاسِ مِنَ اللّٰهِ الْقَلْبُ الْقَاسِي " . رَوَاهُ التِّرْمِذِيُّ.

**1518** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அல்லாஹ்வை நினைவுகூரும் பேச்சை (திக்ரை) தவிர (மற்ற பேச்சை) அதிகம் பேசாதீர்கள். அல்லாஹ்வை நினைவு கூரும் பேச்சைத் தவிர்த்து (மற்ற பேச்சை) அதிகம் பேசுவது, இதயத்தை இறுக வைத்துவிடும். மக்களில் அல்லாஹ்வைவிட்டு மிக தூரமாக விலகி நிற்பவர், இறுகிப் போன இதயத்தவர்தான்'' என நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2411)**

١٥١٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَنْ وَقَاهُ اللّٰهُ شَرَّ مَا بَيْنَ لَحْيَيْهِ وَشَرَّ مَا بَيْنَ رِجْلَيْهِ دَخَلَ الْجَنَّةَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1519** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''இரு தாடைகளுக்குகிடையே உள்ள (நாவின்) தீங்கையும், ஒருவரது இரு கால்களுக்கிடையே உள்ள (மறைவுறுப்பின்) தீங்கையும் அல்லாஹ் பாதுகாத்து விட்டால், அவர் சொர்க்கத்தில் நுழைவார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2409. இது ''ஹஸன்'' என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٥٢٠ – وَعَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قُلْت يَا رَسُولَ اللّٰهِ مَا النَّجَاةُ ؟ قَالَ : " أَمْسِكْ عَلَيْكَ لِسَانَكَ وَلْيَسَعْكَ بَيْتُكَ وَابْكِ عَلَى خَطِيئَتِكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ

**1520** உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''இறைத்தூதர் அவர்களே! ஈடேற்றம் பெறுவது எப்படி?'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ''உமக்கு எதிராக உன் நாவு அமைவதை நீர் தடுத்துக் கொள்வீராக! உம் வீடு விசாலமாக இருக்கட்டும். உம் தவறுகளை நினைவுகூர்ந்து அழுவீராக!'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2406. இது ''ஹஸன்'' என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٥٢١ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا أَصْبَحَ ابْنُ آدَمَ فَإِنَّ الأَعْضَاءَ كُلَّهَا تُكَفِّرُ اللِّسَانَ تَقُولُ : اتَّقِ اللَّهَ فِينَا فَإِنَّمَا نَحْنُ بِكَ : فَإِنْ اسْتَقَمْتَ اسْتَقَمْنَا وَإِنْ اعْوَجَجْتَ اعْوَجَجْنَا " . رَوَاهُ التِّرْمِذِيُّ . مَعْنَى " تُكَفِّرُ اللِّسَانَ " : أَيْ تَذِلُّ وَتَخْضَعُ .

**1521** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஆதமின் மகன் (மனிதன்) காலையில் எழுந்தால், மற்ற உறுப்புகள் அனைத்தும் நாவைக் கண்டு பயப்படுகின்றன. அவை நாவிடம் கூறு(விவாதிக்)கின்றன: “(நாவே!) எங்கள் விஷயத்தில் அல்லாஹ்வை பயந்துகொள்! நாங்கள் உன்னைக் கொண்டு உள்ளோம். நீ நேராக இருந்தால் நாங்களும் நேராக இருப்போம். நீ கோணலாகி விட்டால் நாங்களும் கோணலாகி விடுவோம்” எனக் கூறுகின்றன” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:2407)**

١٥٢٢ – وَعَنْ مُعَاذ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللَّه أَخْبِرْنِي بِعَمَلٍ يُدْخِلُنِي الْجَنَّةَ وَيُبَاعِدُنِي مِنْ النَّارِ قَالَ : " لَقَدْ سَأَلْت عَنْ عَظِيمٍ وَإِنَّهُ لَيَسِيرٌ عَلَى مَنْ يَسَّرَهُ اللَّهُ تَعَالَى عَلَيْه : تَعْبُدُ اللَّهَ لاَ تُشْرِكُ بِه شَيْئًا وَتُقِيمُ الصَّلاَةَ وَتُؤْتِي الزَّكَاةَ وَتَصُومُ رَمَضَانَ وَتَحُجُّ الْبَيْتَ إِنْ اسْتَطَعْت إِلَيْه سَبِيلاً " . ثُمَّ قَالَ : " أَلاَ أَدُلُّك عَلَى أَبْوَابِ الْخَيْرِ ؟ الصَّوْمُ جُنَّةٌ وَالصَّدَقَةُ تُطْفِئُ الْخَطِيئَةَ كَمَا يُطْفِئُ الْمَاءُ النَّارَ وَصَلاَةُ الرَّجُلِ مِنْ جَوْفِ اللَّيْلِ " ثُمَّ تَلاَ " تَتَجَافَى جُنُوبُهُمْ عَنِ الْمَضَاجِعِ " حَتَّى بَلَغَ " يَعْمَلُونَ ". ثُمَّ قَالَ:أَلاَ أُخْبِرُك بِرَأْسِ الأَمْرِ وَعَمُودِه وَذُرْوَةِ سَنَامِه ؟ قُلْت: بَلَى يَا رَسُولَ اللَّه قَالَ:"رَأْسُ الأَمْرِ الإِسْلاَمُ وَعَمُودُهُ الصَّلاَةُ وَذُرْوَةُ سَنَامِه الْجِهَادُ" . ثُمَّ قَالَ : " أَلاَ أُخْبِرُك بِمَلاَكِ ذَلِكَ كُلِّه ؟ " . قُلْت : بَلَى يَا رَسُولَ اللَّه فَأَخَذَ بِلِسَانِه وَقَالَ : " كُفَّ عَلَيْك هَذَا " . قُلْت : يَا رَسُولَ اللَّه وَإِنَّا لَمُؤَاخَذُونَ بِمَا نَتَكَلَّمُ بِه ؟ فَقَالَ : " ثَكِلَتْك أُمُّك وَهَلْ يَكُبُّ النَّاسَ فِي النَّارِ عَلَى وُجُوهِهِمْ إِلاَّ حَصَائِدُ أَلْسِنَتِهِمْ" . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ وَقَدْ سَبَقَ شَرْحُهُ فِي بَابٍ قَبْلَ هَذَا.

**1522** முஆத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைத்தூதர் அவர்களே! என்னைச் சொர்க்கத்தில் நுழையச் செய்து, நரகிலிருந்து தூரமாக்கி வைக்கின்ற ஒரு செயலை எனக்குக் கூறுங்கள்” என்றேன். “நீர் பெரிய விஷயத்தைப் பற்றிக் கேட்டுள்ளீர். அல்லாஹ் லேசாக்கி வைப்பவனுக்கு அது லேசாக அமையும். அல்லாஹ்வை வணங்குவீராக! அவனுக்கு எதையும் இணைவைக்க வேண்டாம்! தொழுகையைப் பேணி, ஜகாத்தையும் வழங்குவீராக! ரமளானில் நோன்புவைப்பீராக! ஹஜ் செய்வீராக!” என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், “நல்லதின் வாசல்களை உமக்குக் கூறட்டுமா?” என்று கேட்டு விட்டு, “நோன்பு (பாவங்களைத் தடுக்கும்) கேடயமாகும். தண்ணீர் நெருப்பை அணைப்பது போல் அது பாவத்தைப் போக்கிவிடும். அத்துடன் ஒரு மனிதன் நடு இரவில் தொழுவதாகும்” என்று கூறினார்கள். பின்பு, “அவர்களின் விலாப் புறங்கள் படுக்கைகளை விட்டும் ஒதுங்கும். அச்சத்தோடும், ஆதரவோடும் தன் இறைவனிடம் துஆச் செய்வார்கள். அவர்களுக்கு நாம் வழங்கியவற்றிலிருந்து (நல்வழியில்) செலவு செய்வார்கள். எனவே, அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றிலிருந்து கூலியாக அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டுள்ள கண்களின் குளிர்ச்சியை எந்த ஆத்மாவும் அறிந்திடாது” (அல்குர்ஆன் 32:16,17) என்ற வசனத்தை ஓதினார்கள்.

பின்பு, “ஒரு செயலின் அடிப்படையையும், அதன் தூணையும், அதன் உச்சியையும் உமக்கு நான் கூறட்டுமா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “இறைத்தூதர் அவர்களே! சரி” என்றேன். “ஒரு செயலின் அடிப்படை, இஸ்லாமாகும். அதன் தூண் தொழுகையாகும். அதன் முகடு ஜிஹாத் ஆகும்” என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், “இவை அனைத்தையும் சேர்க்கும் ஒரு உறுதியானதை உனக்கு நான் அறிவிக்கட்டுமா?” என்று கேட்டார்கள். “சரி” என்றேன். உடனே நபி (ஸல்) அவர்கள் தன் நாவைப்

பிடித்துக் கொண்டு, "இதை உமக்கு எதிராக ஆகாமல் தடுத்துக் கொள்வீராக!" என்று கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! எதையேனும் நாங்கள் பேசினாலும் குற்றம் பிடிக்கப்படுவோமா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "உம் தாய் உம்மை இழக்கட்டுமாக! மக்கள் முகங்குப்புற நரகில் விழுவதற்கு, அவர்களது நாவின் விளைச்சலே காரணமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதி:2616. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

١٥٢٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَتَدْرُونَ مَا الْغِيبَةُ ؟ " . قَالُوا : اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ . قَالَ : " ذِكْرُكَ أَخَاكَ بِمَا يَكْرَهُ " . قِيلَ : أَفَرَأَيْتَ إِنْ كَانَ فِي أَخِي مَا أَقُولُ ؟ قَالَ : " إِنْ كَانَ فِيهِ مَا تَقُولُ فَقَدْ اغْتَبْتَهُ وَإِنْ لَمْ يَكُنْ فِيهِ مَا تَقُولُ فَقَدْ بَهَتَّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1523** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"புறம் என்றால் என்ன? என்பதை அறிவீர்களா?" என நபி (ஸல்) கேட்டார்கள். அதற்கு, "அல்லாஹ்வும், அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்" என நபித்தோழர்கள் கூறினர். "உம் சகோதரரைப் பற்றி அவர் வெறுக்கும் விஷயத்தை நீர் பேசுவதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "நான் கூறியது என் சகோதரரிடம் இருந்தால் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்கப்பட்டது. "நீர் பேசியது அவரிடம் இருந்தால், அவரைப் பற்றி நீர் புறம் பேசிவிட்டீர். நீர் பேசியது அவரிடம் இல்லையென்றால், அவரைப் பற்றி நீர் இட்டுக்கட்டியவராவீர்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2589)**

١٥٢٤ – وَعَنْ أَبِي بَكْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : فِي خُطْبَتِهِ يَوْمَ النَّحْرِ بِمِنًى فِي حَجَّةِ الْوَدَاعِ : " إِنَّ دِمَاءَكُمْ وَأَمْوَالَكُمْ وَأَعْرَاضَكُمْ حَرَامٌ عَلَيْكُمْ كَحُرْمَةِ يَوْمِكُمْ هَذَا فِي شَهْرِكُمْ هَذَا فِي بَلَدِكُمْ هَذَا أَلاَ هَلْ بَلَّغْتُ ؟ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1524** அபூபக்ரு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் துல்ஹஜ் பத்தாம் நாளன்று தனது இறுதி ஹஜ்ஜின் போது மினாவில் தம் சொற்பொழிவில், "உங்களின் இரத்தமும், உங்களின் செல்வங்களும், உங்களின் மானம், மரியாதையும், உங்களுடைய இந்த நாளின் புனிதத்தைப் போன்றும், இந்த மாதத்தின் புனிதத்தைப் போன்றும், இந்த நகரத்தின் புனிதத்தைப் போன்றும் புனிதமானவைகளாகும். அறிந்துக் கொள்ளுங்கள்! நான் (உங்களுக்கு இஸ்லாத்தை) எடுத்துக் கூறி விட்டேன்" என்று கூறினார்கள்.

**(புகாரி:105. முஸ்லிம்:1679)**

١٥٢٥ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قُلْتُ لِلنَّبِيِّ ﷺ : حَسْبُكَ مِنْ صَفِيَّةَ كَذَا وَكَذَا . قَالَ بَعْضُ الرُّوَاةِ : تَعْنِي قَصِيرَةً فَقَالَ :"لَقَدْ قُلْتِ كَلِمَةً لَوْ مُزِجَتْ بِمَاءِ الْبَحْرِ لَمَزَجَتْهُ " قَالَتْ . وَحَكَيْتُ لَهُ إِنْسَانًا فَقَالَ :"مَا أُحِبُّ أَنِّي حَكَيْتُ إِنْسَانًا وَأَنَّ لِي كَذَا وَكَذَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ وَمَعْنَى : " مَزَجَتْهُ " خَالَطَتْهُ مُخَالَطَةً يَتَغَيَّرُ بِهَا طَعْمُهُ أَوْ رِيحُهُ لِشِدَّةِ نَتْنِهَا وَقُبْحِهَا . وَهَذَا مِنْ أَبْلَغِ الزَّوَاجِرِ عَنِ الْغِيبَةِ . قَالَ اللَّهُ تَعَالَى : وَمَا يَنْطِقُ عَنِ الْهَوَى إِنْ هُوَ إِلاَّ وَحْيٌ يُوحَى .

**1525** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், "இவ்வாறு, இவ்வாறுள்ள உங்கள் மனைவி சபியா உங்களுக்கு போதும்" என்று கூறினேன். (ஸபிய்யா, குள்ளமானவர் என ஆயிஷா (ரழி) கூறியிருக்கலாம் என, அறிவிப்பாளர் கூறுகிறார்) உடனே நபி (ஸல்) அவர்கள், "ஆயிஷாவே! நீ ஒரு மிகப்பெரிய சொல்லைக் கூறிவிட்டாய். அந்தச் சொல் கடல் நீருடன் கலந்தால் கலந்து விடும் அளவுக்குள்ள வார்த்தையாகும்" என்று நபி

(ஸல்) கூறினார்கள். பிறகு நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதரைப் பற்றிக் கூறினேன். அப்போது அவர்கள், "ஒரு மனிதரைப் பற்றி பேசுவதையோ, என்னிடம் (சிறப்புகள்) இவ்வாறு இவ்வாறு உள்ளது என்று கூறுவதையோ நான் விரும்பமாட்டேன்" என்று கூறினார்கள்.

**(அபூதாவூது:4875. திர்மிதீ:2502. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

கடல் நீருடன் கலப்பது என்பது, கடல் நீருடன் அச்சொல் கலக்கும் போது அதன் ருசியையும், வாடையும் மாற்றிவிடும் அளவுக்குக் கடுமையாகும். புறம் பேசுதல் பற்றிய கடும் எச்சரிக்கை இது!

**அல்லாஹ் கூறுகிறான்:** *மேலும், அவர் தம் மனோ இச்சைப்படி பேசுவதில்லை. இது (அவர் மீது) இறக்கியருளப்பட்ட வஹியே (இறைச்செய்தியே) ஆகும். (53: 3-4)*

١٥٢٦ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَمَّا عُرِجَ بِي مَرَرْتُ بِقَوْمٍ لَهُمْ أَظْفَارٌ مِنْ نُحَاسٍ يَخْمِشُونَ وُجُوهَهُمْ وَصُدُورَهُمْ فَقُلْتُ : مَنْ هَؤُلَاءِ يَا جِبْرِيلُ ؟ قَالَ : هَؤُلَاءِ الَّذِينَ يَأْكُلُونَ لُحُومَ النَّاسِ وَيَقَعُونَ فِي أَعْرَاضِهِمْ ! " . رَوَاهُ أَبُو دَاوُد .

**1526** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என்னை ("மிஃராஜ்" பயணத்திற்கு) உயர்த்தப்பட்ட போது, நான் ஒரு கூட்டத்தார் அருகில் சென்றேன். அவர்களுக்குப் பித்தளை நகங்கள் இருந்தன. அவர்கள் தங்களின் முகங்களையும் தங்களின் நெஞ்சுகளையும் பிராண்டிக் கொள்கிறார்கள். "ஜிப்ரீலே இவர்கள் யார்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இவர்கள் மனிதர்களின் இறைச்சியைச் சாப்பிட்டவர்கள் (புறம் பேசியவர்கள்). அவர்களின் கண்ணியத்தை இவர்கள் குலைத்தார்கள்" என்று ஜிப்ரீல் (அலை) கூறினார்" என நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4878)**

١٥٢٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " كُلُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ حَرَامٌ : دَمُهُ وَعِرْضُهُ وَمَالُهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1527** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒவ்வொரு முஸ்லிமின் ரத்தம், அவரின் கண்ணியம், அவரின் பொருள் அனைத்தும் மற்றொரு முஸ்லிமிடம் புனிதமானவையாகும். (எனவே அவற்றில் உரிமையின்றி தலையிடுவது விலக்கப் பட்டதாகும்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2564)**

## ٢٥٥ – بابُ تحريم سَماع الغيبة وأمر من سمع غيبة محرّمة بردّها وَالإنكار على قائلها، فإن عجز أو لم يقبل منه فارق ذلك المجلس إن أمكنه

## பாடம் : 255 - புறம்பேசுவதைக் கேட்பது கூடாது. புறம் பேசியதைக் கேட்பவர், அதைப் பேசியவரிடம் மறுப்புத் தெரிவிப்பது அவசியம்! அதற்கு இயலாவிட்டால் அல்லது ஏற்கப்படாவிட்டால் இயலுமாயின் அந்த இடத்தை விட்டு வெளியேறுவது.

قَالَ اللَّهُ تَعَالَى : وَإِذَا سَمِعُوا اللَّغْوَ أَعْرَضُوا عَنْهُ . وَقَالَ تَعَالَى : وَالَّذِينَ هُمْ عَنِ اللَّغْوِ مُعْرِضُونَ . وَقَالَ تَعَالَى : إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَئِكَ كَانَ عَنْهُ مَسْئُولاً . وَقَالَ تَعَالَى : وَإِذَا رَأَيْتَ الَّذِينَ يَخُوضُونَ فِي آيَاتِنَا فَأَعْرِضْ عَنْهُمْ حَتَّى يَخُوضُوا فِي حَدِيثٍ غَيْرِهِ وَإِمَّا يُنْسِيَنَّكَ الشَّيْطَانُ فَلاَ تَقْعُدْ بَعْدَ الذِّكْرَى مَعَ الْقَوْمِ الظَّالِمِينَ

**அல்லாஹ் கூறுகிறான்:** *வீண் பேச்சை அவர்கள் கேட்டால், அதை அவர்கள் புறக்கணிப்பார்கள். (28:55)*

*(அந்த வெற்றியாளர்கள் எத்தகையவர்கள் என்றால்) வீணானவற்றைப் புறக்கணிப்பார்கள். (23:3)*

*நிச்சயமாக கேள்விப்புலன், பார்வை, உள்ளம் அனைத்தும் (அல்லாஹ்வினால்) விசாரிக்கப் படுபவைகளாக உள்ளன. (17:36)*

*(நபியே) நம் வசனங்கள் பற்றி தர்க்கம் செய்திடுவோரை நீர் கண்டால், அவர்கள் வேறு பேச்சில் ஈடுபடும் வரை அவர்களைப் புறக்கணிப்பீராக! ஷைத்தான் உம்மை மறக்கச் செய்து நீர் உட்கார்ந்துவிட்டால், நினைவு வந்த பின்னர் நீர் (அந்த) அநீதக்காரக் கூட்டத்தாருடன் அமர வேண்டாம்! (6:68)*

١٥٢٨ – وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ رَدَّ عَنْ عِرْضِ أَخِيهِ رَدَّ اللَّهُ عَنْ وَجْهِهِ النَّارَ يَوْمَ الْقِيَامَةِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1528** அபூதர்தாஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் சகோதரரின் கண்ணியம் குலைக்கப்படுவதை கண்டு யார் தடுக்கிறாரோ, அவரின் முகத்தை விட்டும் மறுமையில் நரகத்தை அல்லாஹ் திருப்பி விடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1931. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٥٢٩ – وَعَنْ عِتْبَانَ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثِهِ الطَّوِيلِ الْمَشْهُورِ الَّذِي تَقَدَّمَ فِي بَابِ الرَّجَاءِ قَالَ : قَامَ النَّبِيُّ ﷺ يُصَلِّي فَقَالَ : " أَيْنَ مَالِكُ بْنُ الدُّخْشُمِ ؟ " فَقَالَ رَجُلٌ : ذَلِكَ مُنَافِقٌ لاَ يُحِبُّ اللَّهَ وَلاَ رَسُولَهُ . فَقَالَ النَّبِيُّ ﷺ . " لاَ تَقُلْ ذَلِكَ أَلاَ تَرَاهُ قَدْ قَالَ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ ؟ يُرِيدُ بِذَلِكَ وَجْهَ اللَّهِ ; وَإِنَّ اللَّهَ قَدْ حَرَّمَ عَلَى النَّارِ مَنْ قَالَ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ يَبْتَغِي بِذَلِكَ وَجْهَ اللَّهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " وَعِتْبَانُ " بِكَسْرِ الْعَيْنِ عَلَى الْمَشْهُورِ وَحُكِيَ ضَمُّهَا وَبَعْدَهَا تَاءٌ مُثَنَّاةٌ مِنْ فَوْقُ ثُمَّ بَاءٌ مُوَحَّدَةٌ . و " الدُّخْشُمِ " بِضَمِّ الدَّالِ وَإِسْكَانِ الْخَاءِ وَضَمِّ الشِّينِ الْمُعْجَمَتَيْنِ .

**1529** "ஆதரவு வைத்தல்" என்ற பாடத்தின் கீழ் 415வது ஹதீஸாக இடம் பெற்றுள்ள முந்தைய நீண்ட ஹதீஸில் இத்பான் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(தபூக் போரின் போது) தொழ வைக்க நபி (ஸல்) அவர்கள் நிற்கும் போது, "மாலிக் இப்னு துக்ஷூம் எங்கே?" என்று கேட்டார்கள். அப்பொழுது ஒருவர், "அவர் முனாபிக். அல்லாஹ்வையும், அவனது தூதரையும் விரும்பமாட்டார்" என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறு கூறாதீர்! "லாயிலாஹ இல்லல்லாஹ்" என அல்லாஹ்வின் திருப்தியை நாடியவராக அவர் கூறியதை நீர் பார்க்கவில்லையா? நிச்சயமாக அல்லாஹ், அவனது திருப்தியை நாடி "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று கூறுபவரை நரகிலிருந்து தடை செய்து விட்டான்" என்று கூறினார்கள்.

**(புகாரி:425. முஸ்லிம்:33/263)**

١٥٣٠ – وَعَنْ كَعْبِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي حَدِيثِهِ الطَّوِيلِ فِي قِصَّةِ تَوْبَتِهِ – وَقَدْ سَبَقَ فِي بَابِ التَّوْبَةِ – قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ وَهُوَ جَالِسٌ فِي الْقَوْمِ بِتَبُوكَ : " مَا فَعَلَ كَعْبُ بْنُ مَالِكٍ ؟ " فَقَالَ رَجُلٌ مِنْ بَنِي سَلِمَةَ : يَا رَسُولَ اللَّهِ حَبَسَهُ بُرْدَاهُ وَالنَّظَرُ فِي عِطْفَيْهِ . فَقَالَ لَهُ مُعَاذُ بْنُ جَبَلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ : بِئْسَ مَا قُلْتَ . وَاللَّهِ يَا رَسُولَ اللَّهِ مَا عَلِمْنَا عَلَيْهِ إِلاَّ خَيْرًا . فَسَكَتَ رَسُولُ اللَّهِ ﷺ . مُتَّفَقٌ عَلَيْهِ . " عِطْفَاهُ " : جَانِبَاهُ وَهُوَ إِشَارَةٌ إِلَى إِعْجَابِهِ بِنَفْسِهِ .

**1530** கஅபு இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(பாவமன்னிப்பு! பாடத்தில் உள்ள 263 ஹதீஸாக உள்ள நீண்ட ஹதீஸின் ஒரு பகுதி இது)

தபூக் போரின்போது மக்களுடன் உட்கார்ந்திருந்த நபி (ஸல்) அவர்கள், "கஅபு இப்னு மாலிக் என்ன ஆனார்?" என்று கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவரின் செல்வமும், தற்பெருமையும் அவரைத் தடுத்து விட்டது" என்று பனுஸலமா கூட்டத்தைச் சார்ந்த ஒருவர் கூறினார். உடனே அவரிடம் முஆத் இப்னு ஜபல் (ரழி) அவர்கள், "நீர் கூறுவது சரியல்ல!" (என்று கூறிவிட்டு, நபி (ஸல்) அவர்களை நோக்கி), "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் பற்றி நாம் நல்லதைத் தவிர வேறெதையும்அறியவில்லை" என்று கூறினார். (இவை அனைத்தையும் கேட்டுவிட்டு) நபி (ஸல்) அவர்கள் மவுனமாக இருந்தார்கள். **(புகாரி:4418. முஸ்லிம்:2769)**

## ٢٥٦ - بابُ ما يُباح منَ الْغيْبَة

### பாடம் : 256 - புறம் பேசிட அனுமதி!

اعْلَمْ أَنَّ الْغيبَةَ تُبَاحُ لغَرَضٍ صَحيحٍ شَرْعيٍّ لاَ يُمْكنُ الْوُصُولُ إلَيْه إلاَّ بهَا وَهُوَ بستَّة أَسْبَاب :

الأَوّلُ : التَّظَلُّمُ فَيَجُوزُ للْمَظْلُوم أَنْ يَتَظَلَّمَ إلَى السُّلْطَان وَالْقَاضي وَغَيْرهمَا ممَّنْ لَهُ ولاَيَةٌ أَوْ قُدْرَةٌ عَلَى إنْصَافه منْ ظَالمه فَيَقُولُ : ظَلَمَني فُلاَنٌ بكَذَا .

الثَّاني : الاسْتعَانَةُ عَلَى تَغْيير الْمُنْكَر وَرَدِّ الْعَاصي إلَى الصَّوَاب فَيَقُولُ لمَنْ يَرْجُو قُدْرَتَهُ عَلَى إزَالَة الْمُنْكَر : فُلاَنٌ يَعْمَلُ كَذَا فَازْجُرْهُ عَنْهُ وَنَحْوَ ذَلكَ وَيَكُونُ مَقْصُودُهُ التَّوَصُّلَ إلَى إزَالَة الْمُنْكَر . فَإنْ لَمْ يَقْصدْ ذَلكَ كَانَ حَرَامًا .

الثَّالثُ : الاسْتفْتَاءُ فَيَقُولُ للْمُفْتي : ظَلَمَني أَبي أَوْ أَخي أَوْ زَوْجي أَوْ فُلاَنٌ بكَذَا فَهَلْ لَهُ ذَلكَ ؟ وَمَا طَريقي في الْخَلاَص منْهُ وَتَحْصيل حَقّي وَدَفْع الظُّلْم وَنَحْو ذَلكَ ؟ فَهَذَا جَائزٌ للْحَاجَة وَلَكنَّ الأَحْوَطَ وَالأَفْضَلَ . أَنْ يَقُولَ : مَا تَقُولُ في رَجُلٍ أَوْ شَخْصٍ أَوْ زَوْجٍ كَانَ منْ أَمْره كَذَا ؟ فَإنَّهُ يَحْصُلُ به الْغَرَضُ منْ غَيْر تَعْيينٍ . وَمَعَ ذَلكَ فَالتَّعْيينُ جَائزٌ كَمَا سَنَذْكُرُهُ في حَديث هنْد إنْ شَاءَ اللَّهُ تَعَالَى .

الرَّابعُ : تَحْذيرُ الْمُسْلمينَ منَ الشَّرِّ وَنَصيحَتُهُمْ وَذَلكَ منْ وُجُوه : منْهَا جَرْحُ الْمَجْرُوحينَ منَ الرُّوَاة وَالشُّهُود وَذَلكَ جَائزٌ بإجْمَاع الْمُسْلمينَ بَلْ وَاجبٌ للْحَاجَة . وَمنْهَا الْمُشَاوَرَةُ في مُصَاهَرَة إنْسَان أَوْ مُشَارَكَته أَوْ إيدَاعه أَوْ مُعَامَلَته أَوْ غَيْر ذَلكَ أَوْ مُجَاوَرَته . وَيَجبُ عَلَى الْمُشَاوِر أَلاَّ يُخْفيَ حَالَهُ بَلْ يَذْكُرُ الْمَسَاوِيَ الَّتي فيه بنيَّة النَّصيحَة . وَمنْهَا إذَا رَأَى مُتَفَقِّهًا يَتَرَدَّدُ إلَى مُبْتَدعٍ أَوْ فَاسقٍ يَأْخُذُ عَنْهُ الْعلْمَ وَخَافَ أَنْ يَتَضَرَّرَ الْمُتَفَقِّهُ بذَلكَ فَعَلَيْه نَصيحَتُهُ ببَيَان حَاله بشَرْط أَنْ يَقْصدَ النَّصيحَةَ وَهَذَا ممَّا يُغْلَطُ فيه . وَقَدْ يَحْملُ الْمُتَكَلِّمُ بذَلكَ الْحَسَدَ وَيَلْبسُ الشَّيْطَانُ عَلَيْه ذَلكَ وَيُخَيِّلُ إلَيْه أَنَّهُ نَصيحَةٌ فَلْيَتَفَطَّنْ لذَلكَ . وَمنْهَا أَنْ يَكُونَ لَهُ ولاَيَةٌ لاَ يَقُومُ بهَا عَلَى وَجْههَا : إمَّا بأَلاَّ يَكُونَ صَالحًا لَهَا وَإمَّا بأَنْ يَكُونَ فَاسقًا أَوْ مُغَفَّلاً وَنَحْوَ ذَلكَ فَيَجبُ ذكْرُ ذَلكَ لمَنْ لَهُ عَلَيْه ولاَيَةٌ عَامَّةٌ ليُزيلَهُ وَيُوَلِّيَ مَنْ يُصْلحُ أَوْ يَعْلَمَ ذَلكَ منْهُ ليُعَاملَهُ بمُقْتَضَى حَاله وَلاَ يَغْتَرَّ به وَأَنْ يَسْعَى في أَنْ يَحُثَّهُ عَلَى الاسْتقَامَة أَوْ يَسْتَبْدلَ به .

الْخَامسُ : أَنْ يَكُونَ مُجَاهرًا بفسْقه أَوْ بدْعَته كَالْمُجَاهر بشُرْب الْخَمْر وَمُصَادَرَة النَّاس وَأَخْذ الْمَكْس وَجبَايَة الأَمْوَال ظُلْمًا وَتَوَلِّي الأُمُور الْبَاطلَة فَيَجُوزُ ذكْرُهُ بمَا يُجَاهرُ به وَيَحْرُمُ ذكْرُهُ بغَيْره منَ الْعُيُوب إلاَّ أَنْ يَكُونَ لجَوَازه سَبَبٌ آخَرُ ممَّا ذَكَرْنَاهُ .

السَّادِسُ : التَّعْرِيفُ إِذَا كَانَ الأَنْسَانُ مَعْرُوفًا بِلَقَبٍ كَالأَعْمَشِ وَالأَعْرَجِ وَالأَصَمِّ وَالأَعْمَى وَالأَحْوَلِ وَغَيْرِهِمْ جَازَ تَعْرِيفُهُمْ بِذَلِكَ وَيَحْرُمُ إِطْلاَقُهُ عَلَى جِهَةِ التَّنْقِيصِ وَلَوْ أَمْكَنَ تَعْرِيفُهُ بِغَيْرِ ذَلِكَ كَانَ أَوْلَى .

فَهَذِهِ سِتَّةُ أَسْبَابٍ ذَكَرَهَا الْعُلَمَاءُ وَأَكْثَرُهَا مُجْمَعٌ عَلَيْهِ وَدَلاَئِلُهَا مِنَ الأَحَادِيثِ الصَّحِيحَةِ مَشْهُورَةٌ . فَمِنْ ذَلِكَ :

அறிந்து கொள்ளுங்கள். மார்க்கத்தில் நல்ல நோக்கத்திற்காக வேறு வழி இல்லாதபோது, புறம் பேசுதல் அனுமதிக்கப்படும். இவை, ஆறு காரணங்களின்போது கூடும்.

**(1) அநீதம் இழைக்கப்படும் போது**

அநீதி இழைக்கப்பட்டவர் தமக்கு ஏற்பட்ட அநீதத்தை அரசனிடம், நீதிபதியிடம் அல்லது தமக்கு நீதி வழங்கும் அதிகாரம், ஆற்றல் உள்ளவரிடம், "இன்னார் இப்படி எனக்கு, அநீதம் இழைத்து விட்டார்" என்று கூறுவது கூடும்.

**(2) தீமையைப் புறக்கணிப்பதற்கும், நல்லதின் பக்கம் கெட்டவனை கொண்டு வருவதற்கும்**

தீமையைத் தடுத்திடும் ஆற்றல் உள்ளவனிடம் "இன்னார் இப்படிச் செய்தார். அவரைக் கண்டிப்பீராக!" என்பது போன்ற வார்த்தைகளைக் கூறலாம். இதன் நோக்கம், தீமையை விட்டும் நீக்குவதற்காகவே இருக்க வேண்டும். இந்த நோக்கம் இல்லை எனில் அது "ஹராம்" ஆகும்.

**(3) மார்க்கத்தீர்ப்பு வேண்டும்போது...**

"என் தந்தை அல்லது என் சகோதரர் அல்லது என் கணவர் அல்லது இன்னார் இவ்வாறு எனக்கு அநீதம் செய்து விட்டார். அவருக்கு இது தகுமா? அதிலிருந்து நீங்கவும், என் உரிமையைப் பெறவும், அநீதம் நீக்கப்படவும் வழி என்ன?" என்று மார்க்கத் தீர்ப்பு கூறுபவரிடம் கேட்பது. தேவைக்காக இவ்வாறு கேட்பது கூடும். எனினும் மிகச் சரியானது, மிகச் சிறந்தது, இன்னார் அல்லது என் கணவர் ஒரு காரியத்தில் இவ்வாறு உள்ளார்? எனக் கூறுவதாகும். எனவே இன்னார் எனக் குறிப்பிடாமல் பொதுப்படையாகக் கேட்பது கூடும். இதனால் நோக்கமும் நிறைவேறும். ஆனால் அல்லாஹ் நாடினால் "ஹிந்த்" என்ற பெண்மணி பற்றி கூறும் ஹதீஸில் நாம் கூற உள்ளது போல் பெயர் குறிப்பிட்டுக் கூறுவதும் கூடும்.

**(4) தீமையைப் பற்றி முஸ்லிம்களை எச்சரிப்பதும், அவர்களுக்கு உபதேசிப்பதும், இன்னும் இது போன்ற பல நேரங்களின் போதும் ....**

அதில் ஒன்று; ஹதீஸில் வரும் அறிவிப்பாளர்களில் உள்ள குறைபாடுடையவர்கள் பற்றிக் குறை கூறுவது, இது, அவசியம் ஏற்படும் போது கடமையும் ஆகும்.

அதில் மற்றொன்று; ஒருவனது திருமணப் பேச்சு அல்லது ஒருவனது கூட்டு வியாபாரம் அல்லது அமானிதமாக ஒப்படைப்பது அல்லது அவனது கொடுக்கல் வாங்கல் அல்லது இது அல்லாதது அல்லது அவனருகில் வாழ்ந்தது பற்றி ஆலோசனை கேட்கப்பட்டால், ஆலோசனை கேட்கப்பட்டவர், அவனது நிலைபற்றி மறைக்காமல் ஆலோசனை கேட்பவரிடம் கூறுவது கடமையாகும். குறிப்பாக அம்மனிதரின் தீமைகளைப் பற்றிக் கூறிவிட வேண்டும். தீமையை எச்சரித்து, நலம் நாடும் நான்காவது வகையில் இதுவும் அடங்கும்.

இதில் இன்னுமொன்று; பித்அத்தான காரியங்களை செய்பவனிடம் அல்லது பாவம் செய்பவரிடம் கல்வி கற்கச் செல்லும் மாணவர், அவரிடம் கல்வி கற்றால் ஏற்படும் கஷ்டங்களைப் பயந்து; இதற்காக அந்த ஆசிரியரின் நிலை பற்றி மாணவரின் நலன் நாடி உபதேசம் செய்வது கூடும். இதில் பேணுதல் அவசியம். இது பற்றி பேசுபவனுக்கு பொறாமை ஏற்படலாம். அவனிடம் ஷைத்தான் சஞ்சலத்தை

ஏற்படுத்தலாம். "நலம் நாடுதல்" என்ற பெயரில் அவனிடம் மாற்றம் ஏற்படக் கூடும். இதை அவர் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

மேலும், இதில் மற்றொன்று; ஒருவரிடம் அதிகாரம் இருந்தும், அவர் அதை சரிவர பயன்படுத்தவில்லை. அதற்கு தகுதியற்றவராக அவர் உள்ளார். அல்லது பாவியாக உள்ளார். அல்லது கவனக் குறைவானவராக உள்ளார். மேலும் இது போன்ற பல குறையுடையவராக உள்ளார். இந்நிலையில் அவருக்கும் மேற்பட்ட அதிகாரம் உள்ளவரிடம், "அவரை நீக்கிடவும், தகுதியானவரை நியமித்திடவும் கூறுவது கடமையாகும். அல்லது அவரின் நிலை அறிந்து அதற்கேற்ப நடந்து, அவரிடம் ஏமாறாமல் நடந்து கொள்ளவும், அவரை உறுதியாகவும், சரியாகவும் செயல்படத் தூண்டவும் அல்லது மற்றொருவரை நியமிக்கவும் அவர் பற்றிய செய்திகளைத் தெரிவிப்பதாகும்."

**(5) பாவத்தையும், நவீன செயல்களையும் பகிரங்கமாகச் செய்வது**

மது குடிப்பது, மக்களைச் சுரண்டுவது, கொள்ளையடிப்பது, அநியாயமாகப் பிறர் சொத்துக்களை அபகரிப்பது, தவறான செயல்களுக்குத் தலைமை ஏற்பது போன்ற காரியங்களை பகிரங்கமாக செய்வது. இது போன்ற - பகிரங்க செயல்கள் இவரிடம் உள்ளது பற்றி கூறுவது கூடும். நாம் மேற்கூறிய காரணங்களைப் பற்றிக் கூறுவது கூடும் என்பதற்காக, இது அல்லாத மற்ற குறைகள் பற்றிக் கூறுவது கூடாது.

**(6) ஒருவர் பற்றி அறிமுகம் செய்தல்**

மாலைக் கண் உள்ளவர், நொண்டி, செவிடர், குருடர், மாறு கண் உடையவர் போன்ற பட்டப் பெயர்களுடன் அறிமுகமானவராக ஒருவர் இருந்தால், அதுபற்றியே அவர்களை அறிமுகம் செய்வது கூடும். குறைபடுத்திக் கூறவேண்டும் என்பதற்காக இதைக் கூறுவது கூடாது. இது அல்லாத பெயர்களில் அவரை அறிமுகம் செய்ய இயலுமானால் அதுவே மிக நல்லதாகும்.

இந்த ஆறு காரணங்களை அறிஞர்கள் கூறி உள்ளனர். இவற்றில் பெரும்பாலானவை அறிஞர்கள் ஏகோபித்து கூறியதாகும். பிரபல ஹதீஸ்களில் இதற்குரிய ஆதாரங்கள் உள்ளன. அவற்றில் சில:

١٥٣١ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَجُلاً اسْتَأْذَنَ عَلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : " ائْذَنُوا لَهُ . بِئْسَ أَخُو الْعَشِيرَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . احْتَجَّ بِهِ الْبُخَارِيُّ فِي جَوَازِ غِيبَةِ أَهْلِ الْفَسَادِ وَأَهْلِ الرِّيَبِ .

**1531** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களைச் சந்திக்க அனுமதி கேட்டார். அதற்கு, "அவருக்கு அனுமதி தாருங்கள். அவருடைய கூட்டத்தாரில் மிகக் கெட்டவர் அவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6054. முஸ்லிம்:2591)**

குழப்பவாதிகளையும், சந்தேகப்பேர்வழிகளையும், புறம் பேசுவது கூடும் என்பதற்கு புகாரி இமாம் இதை ஆதாரமாகக் கொள்கிறார்கள்.

١٥٣٢ - وَعَنْهَا ( عَائِشَةَ ( قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا أَظُنُّ فُلاَنًا وَفُلاَنًا يَعْرِفَانِ مِنْ دِينِنَا شَيْئًا " . رَوَاهُ الْبُخَارِيُّ قَالَ : قَالَ اللَّيْثُ بْنُ سَعْدٍ أَحَدُ رُوَاةِ هَذَا الْحَدِيثِ : هَذَانِ الرَّجُلاَنِ كَانَا مِنَ الْمُنَافِقِينَ .

**1532** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இன்னார், இன்னார் நம் மார்க்கம் பற்றி எதையும் அறிந்தவர்களாக இல்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6067)**

“அந்த இருவரும் நயவஞ்சகர்களாக உள்ளனர்” என்று இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான லய்ஸ் இப்னு ஸஃது கூறுகின்றார்.

١٥٣٣ – وَعَنْ فَاطِمَةَ بِنْت قَيْسٍ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : أَتَيْت النَّبِيَّ ﷺ فَقُلْت : إنَّ أَبَا الْجَهْمِ وَمُعَاوِيَةَ خَطَبَانِي ؟ فَقَالَ رَسُولُ اللَّه ﷺ : " أَمَّا مُعَاوِيَةُ فَصُعْلُوكٌ لاَ مَالَ لَهُ وَأَمَّا أَبُو الْجَهْمِ فَلاَ يَضَعُ الْعَصَا عَنْ عَاتِقِه " . مُتَّفَقٌ عَلَيْه . وَفي رِوَايَة لمُسْلم : " وَأَمَّا أَبُو الْجَهْمِ فَضَرَّابٌ لِلنِّسَاءِ " . وَهُوَ تَفْسِيرٌ لِرِوَايَة : " لاَ يَضَعُ الْعَصَا عَنْ عَاتِقِه " . وَقِيلَ : مَعْنَاهُ : كَثِيرُ الأَسْفَارِ .

**1533** ஃபாத்திமா பின்த் கய்ஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். “அபூஜஹ்ம், முஆவியா ஆகிய இருவரும் என்னைத் திருமணம் செய்ய விரும்புகிறார்கள்?” என்று கூறினேன். உடனே நபி (ஸல்) அவர்கள் “முஆவியா, மிகவும் ஏழை, அவரிடம் சொத்துக் கிடையாது. அபூஜஹ்மோ தன் தோள்பட்டையிலிருந்து கைத்தடியை கீழிறக்கமாட்டார்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:1480)**

“அபூஜஹ்ம் பெண்களை அடிப்பவர்” என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது. “தன் தோள் பட்டையிலிருந்து கைத்தடியை கீழிறக்க மாட்டார்” என்று அறிவிப்பதற்கு இதுவே விளக்க மாகும். “அதிகமாக பயணம் செய்வார்” என்பதும் இதன் கருத்தாகும் என்றும் கூறப்படுகிறது.

١٥٣٤ – وَعَنْ زَيْد بْنِ أَرْقَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : " خَرَجْنَا مَعَ رَسُول اللَّه ﷺ في سَفَرٍ أَصَابَ النَّاسَ فيه شدَّةٌ فَقَالَ عَبْدُ اللَّه ابْنُ أُبَيٍّ : لاَ تُنْفِقُوا عَلَى مَنْ عِنْدَ رَسُول اللَّه حَتَّى يَنْفَضُّوا وَقَالَ : لَئِنْ رَجَعْنَا إِلَى الْمَدينَة لَيُخْرِجَنَّ الأَعَزُّ مِنْهَا الأَذَلَّ فَأَتَيْت رَسُولَ اللَّه ﷺ فَأَخْبَرْته بِذَلِكَ فَأَرْسَلَ إِلَى عَبْد اللَّه بْن أُبَيٍّ فَاجْتَهَدَ يَمِينَهُ مَا فَعَلَ . فَقَالُوا : كَذَبَ زَيْدٌ رَسُولَ اللَّه ﷺ فَوَقَعَ فِي نَفْسِي مِمَّا قَالُوهُ شِدَّةٌ حَتَّى أَنْزَلَ اللَّهُ تَعَالَى تَصْدِيقِي : إِذَا جَاءَكَ الْمُنَافِقُونَ . ثُمَّ دَعَاهُمُ النَّبِيُّ ﷺ لِيَسْتَغْفِرَ لَهُمْ فَلَوَّوْا رُءُوسَهُمْ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1534** ஸைத் இப்னு அர்கம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஒரு பயணத்தில் சென்றோம். அதில் மக்களுக்கு சிரமம் ஏற்பட்டது. அப்போது அப்துல்லாஹ் இப்னு உபை (எனும் நயவஞ்சகன்), “நபி (ஸல்) அவர்களிடம் உள்ளவர்களுக்கு செலவு செய்யாதீர்கள். இதன் மூலம் அவர்கள் விரண்டோடுவார்கள்” என்று கூறிவிட்டு, “நாங்கள் மதீனா திரும்பி விட்டால், அங்குள்ள கண்ணியமிக்கவர், (முஸ்லிமான) மிக இழிவானவரை வெளியேற்றுவார்” என்றும் கூறினான். உடனே நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இது பற்றி கூறினேன். அப்துல்லாஹ் இப்னு உபையிடம் ஆள் அனுப்பினார்கள். அவன் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தான் ‘அவ்வாறு கூறவில்லை’ என சத்தியம் செய்தான். அப்பொழுது, “நபி (ஸல்) அவர்களிடம் ஸைத் (ரழி) பொய் கூறிவிட்டார்” என மக்கள் பேசினர். இவ்வாறு இவர்கள் கூறியதால், என் உள்ளத்தில் கவலை ஏற்பட்டது. இறுதியில் அல்லாஹ் என்னை உண்மைப்படுத்தும் வகையில், “உம்மிடம் நயவஞ்சகர்கள் வந்தால்... என்ற (63:1) வசனத்தை இறக்கினான். பின்பு என்னைக் குறைக் கூறிய அவர்களை மன்னித்திட வேண்டி நபி (ஸல்) அவர்கள் அவர்களுக்கு துஆ செய்தார்கள். அப்பொழுது அவர்கள் தங்களின் தலையைத் தொங்க விட்டுக் கொண்டனர்.”

**(புகாரி:4900, முஸ்லிம்:2772)**

١٥٣٥ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَتْ هِنْدٌ امْرَأَةُ أَبِي سُفْيَانَ لِلنَّبِيِّ ﷺ : إنَّ أَبَا سُفْيَانَ رَجُلٌ شَحِيحٌ وَلَيْسَ يُعْطِينِي مَا يَكْفِينِي وَوَلَدِي إلاَّ مَا أَخَذْت مِنْهُ وَهُوَ لاَ يَعْلَمُ . قَالَ : " خُذِي مَا يَكْفِيك وَوَلَدَك بِالْمَعْرُوف " . مُتَّفَقٌ عَلَيْه.

**1535** அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

அபூசுப்யான் (ரழி) அவர்களின் மனைவி ஹிந்த், நபி (ஸல்) அவர்களிடம், "அபூசுப்யான், கஞ்சனாக உள்ளார். எனக்கும், என் குழந்தைக்கும் போதுமான அளவுக்கு அவரிடம் அவருக்கு தெரியாமலேயே நான் எடுத்தாலே தவிர, அவர் எனக்குத் தருவதில்லை. (இது கூடுமா?)" என்று கேட்டார். "உனக்கும், உன் குழந்தைக்கும் போதுமான அளவுக்கு நியாயமாக எடுத்துக் கொள்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5359. முஸ்லிம்:1714)**

## ٢٥٧ – بابُ تحريم النَّميمة وهي نقل الكلام بين الناس على جهة الإفساد

## பாடம் : 257 - கோள் சொல்வது கூடாது

(மக்களிடையே குழப்பத்தை ஏற்படுத்துவதற்குத் திரித்துப் பேசுவதே கோளாகும்.)

قَالَ اللَّهُ تَعَالَى : هَمَّازٍ مَشَّاءٍ بِنَمِيمٍ . وَقَالَ تَعَالَى : مَا يَلْفِظُ مِنْ قَوْلٍ إِلاَّ لَدَيْهِ رَقِيبٌ عَتِيدٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *குத்திக் காட்டுபவன், கோள் சொல்லித் திரிபவன் .... (68:11)*

*எந்தச் சொல்லையும் அவன் சொல்வதில்லை; அதனைப் பாதுகாப்பதற்குத் தயாராக உள்ள கண்காணிப்பாளர் அவனிடத்தில் இல்லாத நிலையில்! (50:18)*

١٥٣٦ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَدْخُلُ الْجَنَّةَ نَمَّامٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1536** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கோள் சொல்பவன், சொர்க்கத்தில் நுழையமாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6055. முஸ்லிம்:105)**

١٥٣٧ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ مَرَّ بِقَبْرَيْنِ فَقَالَ : " إِنَّهُمَا يُعَذَّبَانِ وَمَا يُعَذَّبَانِ فِي كَبِيرٍ ! بَلَى إِنَّهُ كَبِيرٌ : أَمَّا أَحَدُهُمَا فَكَانَ يَمْشِي بِالنَّمِيمَةِ وَأَمَّا الأخَرُ فَكَانَ لاَ يَسْتَتِرُ مِنْ بَوْلِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ إِحْدَى رِوَايَاتِ الْبُخَارِيِّ . قَالَ الْعُلَمَاءُ : مَعْنَى : " وَمَا يُعَذَّبَانِ فِي كَبِيرٍ " أَيْ كَبِيرٍ فِي زَعْمِهِمَا وَقِيلَ : كَبِيرٌ تَرْكُهُ عَلَيْهِمَا .

**1537** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் இரண்டு கப்ருகளின் அருகே நடந்து சென்றார்கள். அப்போது "இவ்விருவரும் வேதனை செய்யப்படுகின்றனர். மிகப் பெரும்பாவம் காரணமாக இருவரும் வேதனை செய்யப்படவில்லை. எனினும் அது பாவம்தான். அவ்விருவரில் ஒருவர், கோள் சொல்பவராக இருந்தார். மற்றொருவர், சிறுநீரைக் கழித்தபின் சுத்தம் செய்யாதவராக இருந்தார்."

**(புகாரி:1378. முஸ்லிம்:292)**

١٥٣٨ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " أَلاَ أُنَبِّئُكُمْ مَا الْعَضْهُ ؟ هِيَ النَّمِيمَةُ : الْقَالَةُ بَيْنَ النَّاسِ " . رَوَاهُ مُسْلِمٌ . " الْعَضْهُ " بِفَتْحِ الْعَيْنِ الْمُهْمَلَةِ وَإِسْكَانِ الضَّادِ الْمُعْجَمَةِ وَبِالْهَاءِ عَلَى وَزْنِ الْوَجْهِ وَرُوِيَ " الْعِضَةُ " بِكَسْرِ الْعَيْنِ وَفَتْحِ الضَّادِ الْمُعْجَمَةِ عَلَى وَزْنِ الْعِدَةِ وَهِيَ الْكَذِبُ وَالْبُهْتَانُ . وَعَلَى الرِّوَايَةِ الأُولَى : الْعَضْهُ مَصْدَرٌ يُقَالُ : عَضَهَهُ عَضْهًا : أَيْ رَمَاهُ بِالْعَضْهِ .

**1538** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அள்ஹு" (பொய், அவதூறு) பற்றி உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அது, மக்களிடையே கோள் சொல்வதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2606)**

## ٢٥٨ – باب النهي عن نقل الحديث وكلام الناس إلى ولاة الأمور إذا لم تَدْعُ إِلَيْهِ حَاجة كخوف مفسدة ونحوها

### பாடம் : 258 - மக்களின் தேவையற்ற பேச்சை தலைவர்களிடம் கூறுவது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : وَلاَ تَعَاوَنُوا عَلَى الأَثْمِ وَالْعُدْوَان .

وَفِي الْبَابِ الأَحَادِيثُ السَّابِقَةُ فِي الْبَابِ قَبْلَهُ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *பாவத்திலும், பகைமையிலும் உதவி செய்து கொள்ளாதீர்கள். (5:2)*

இதற்கு முந்தைய பாடத்திலும், இடம்பெற்ற ஹதீஸ்கள் இந்த பாடத்திற்கும் பொருந்தும்.

١٥٣٩ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يُبَلِّغْنِي أَحَدٌ مِنْ أَصْحَابِي عَنْ أَحَدٍ شَيْئًا فَإِنِّي أُحِبُّ أَنْ أَخْرُجَ إِلَيْكُمْ وَأَنَا سَلِيمُ الصَّدْرِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ .

**1539** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் தோழர்களில் ஒருவர், மற்றொருவர் பற்றி (குறைகளைப் பற்றி) என்னிடம் கூற வேண்டாம். நிச்சயமாக, நான் அமைதியான இதயத்துடன் உங்களிடம் வரவே விரும்புகிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4860. திர்மிதி:3905)**

## ٢٥٩ – بابُ ذَمِّ ذي الْوَجهَيْن

### பாடம் : 259 - இரு முகமுடைய (நயவஞ்சக)வனுக்கு ஏற்படும் இழிவு!

قَالَ اللَّهُ تَعَالَى : يَسْتَخْفُونَ مِنَ النَّاسِ وَلاَ يَسْتَخْفُونَ مِنَ اللَّهِ وَهُوَ مَعَهُمْ إِذْ يُبَيِّتُونَ مَا لاَ يَرْضَى مِنَ الْقَوْلِ وَكَانَ اللَّهُ بِمَا يَعْمَلُونَ مُحِيطًا الأَيَتَيْن .

**அல்லாஹ் கூறுகிறான்:** *மனிதர்களிடம் அவர்கள் மறைத்து விடுகின்றனர். அல்லாஹ்விடம் அவர்கள் மறைத்துவிடமுடியாது. அவர்கள் இரவில் அவன் விரும்பாத பேச்சைப் பேசும் போது அவர் களுடன் உள்ளான். மேலும் அவர்கள் செய்யக் கூடியதைச் சூழ்ந்தறிபவனாக உள்ளான். (4:108)*

١٥٤٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " تَجِدُونَ النَّاسَ مَعَادِنَ خِيَارُهُمْ فِي الْجَاهِلِيَّةِ خِيَارُهُمْ فِي الأَسْلاَمِ إِذَا فَقِهُوا وَتَجِدُونَ خِيَارَ النَّاسِ فِي هَذَا الشَّأْنِ أَشَدَّهُمْ لَهُ كَرَاهِيَةً وَتَجِدُونَ شَرَّ النَّاسِ ذَا الْوَجْهَيْنِ : الَّذِي يَأْتِي هَؤُلاَءِ بِوَجْهٍ وَهَؤُلاَءِ بِوَجْهٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1540** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மக்களை நீங்கள் தங்கச்சுரங்கங்களாகக் காண்கிறீர்கள். அவர்களில் அறியாமைக் காலத்தில் சிறந்தவர்களாயிருந்தவர்கள் இஸ்லாத்திற்கு வந்த பின்பும் சிறந்தவர்களாயிருப்பார்கள், மார்க்க

அறிவைப் பெற்றுக் கொண்டால். இந்த (ஆட்சி அதிகாரத்தின்) விஷயத்தில் மக்களிடையே சிறந்தவர்கள் அவர்களில் அதிகமாக இதை வெறுப்பவர்கள்தாம்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3493. முஸ்லிம்:2526)**

١٥٤١ – وَعَنْ مُحَمَّد بْنِ زَيْد أَنَّ نَاسًا قَالُوا لِجَدِّه عَبْد اللَّه بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا : إِنَّا نَدْخُلُ عَلَى سَلاَطِينِنَا فَنَقُولُ لَهُمْ بِخِلاَفِ مَا نَتَكَلَّمُ إِذَا خَرَجْنَا مِنْ عِنْدِهِمْ . قَالَ : كُنَّا نَعُدُّ هَذَا نِفَاقًا عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1541** முஹம்மது இப்னு ஸைத் கூறுகின்றார்கள்:

"என் பாட்டனார் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்களிடம் மக்கள் வந்து, "நாங்கள் எங்கள் தலைவர்களிடம் செல்கிறோம். அப்பொழுது நாங்கள் அவர்களைப் பற்றி வெளியில் பேசியதற்கு மாற்றமாக(ப் புகழ்ந்து) அவர்களிடம் பேசுகிறோம். (இது கூடுமா?)'' என்று கேட்டனர். அதற்கு அவர்கள், "இதையே நாங்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் நயவஞ்சகச் செயலாகக் கருதினோம்'' என்று பதில் கூறினார்கள். **(புகாரி:7178)**

## ٢٦٠ – بَابُ تَحْرِيمِ الْكَذِبِ

### பாடம் : 260 - பொய் பேசுவது கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : وَلاَ تَقْفُ مَا لَيْسَ لَكَ بِهِ عِلْمٌ . وَقَالَ تَعَالَى : مَا يَلْفِظُ مِنْ قَوْلٍ إِلاَّ لَدَيْهِ رَقِيبٌ عَتِيدٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *உமக்கு எதில் தெளிவு இல்லையோ, அதில் கலந்து கொள்ளாதீர். (17:36)*

*எந்தச் சொல்லையும் அவன் சொல்வதில்லை; அதனைப் பாதுகாப்பதற்குத் தயாராக உள்ள கண்காணிப்பாளர் அவனிடத்தில் இல்லாத நிலையில்! (50:18)*

١٥٤٢ – وَعَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ الصِّدْقَ يَهْدِي إِلَى الْبِرِّ وَإِنَّ الْبِرَّ يَهْدِي إِلَى الْجَنَّةِ وَإِنَّ الرَّجُلَ لَيَصْدُقُ حَتَّى يُكْتَبَ عِنْدَ اللَّهِ صِدِّيقًا . وَإِنَّ الْكَذِبَ يَهْدِي إِلَى الْفُجُورِ وَإِنَّ الْفُجُورَ يَهْدِي إِلَى النَّارِ وَإِنَّ الرَّجُلَ لَيَكْذِبُ حَتَّى يُكْتَبَ عِنْدَ اللَّهِ كَذَّابًا . " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1542** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உண்மை, நல்லதின் பக்கம் அழைத்துச் செல்லும். நிச்சயமாக நல்ல செயல், சொர்க்கத்தின் பக்கம் அழைத்துச் செல்லும். ஒரு மனிதன் உண்மை பேசுவான். இறுதியில் அல்லாஹ்விடம், "உண்மையாளன்'' என எழுதப்படுவான். பொய், பாவச் செயல் பக்கம் அழைத்துச் செல்லும். பாவச்செயல் நரகின் பக்கம் அழைத்துச் செல்லும். ஒருவன் பொய் பேசுவான். இறுதியில் அல்லாஹ்விடம் "பொய்யன்'' என எழுதப்படுவான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6094. முஸ்லிம்:2607)**

١٥٤٣ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " أَرْبَعٌ مَنْ كُنَّ فِيهِ كَانَ مُنَافِقًا خَالِصًا وَمَنْ كَانَتْ فِيهِ خَصْلَةٌ مِنْهُنَّ كَانَتْ فِيهِ خَصْلَةٌ مِنَ النِّفَاقِ حَتَّى يَدَعَهَا : إِذَا اؤْتُمِنَ خَانَ وَإِذَا حَدَّثَ كَذَبَ وَإِذَا عَاهَدَ غَدَرَ إِذَا خَاصَمَ فَجَرَ . " مُتَّفَقٌ عَلَيْهِ . وَقَدْ سَبَقَ بَيَانُهُ مَعَ حَدِيثِ أَبِي هُرَيْرَةَ بِنَحْوِهِ فِي ) بَابُ الْوَفَاءِ بِالْعَهْدِ (

**1543** அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான்கு செயல் ஒருவனிடம் இருந்தால், அவன் தெளிவான நயவஞ்சகன் ஆவான். இவற்றில் ஒரு குணம் ஒருவனிடம் இருந்தால், அவன் அதை விடும் வரை நயவஞ்சகத்தின் குணம் அவனிடம் இருக்கும். அவை : (1) அவன் நம்பினால், மோசம் செய்வான். (2) பேசினால் பொய் பேசுவான் (3) ஒப்பந்தம் செய்தால், மீறுவான். (4) வழக்குரைத்தால் வரம்பு மீறுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:34. முஸ்லிம்:58)**

(இதே போன்ற ஹதீஸ் அபூஹுரைரா (ரழி) அவர்களால் அறிவிக்கப்பட்டு, "ஒப்பந்தத்தை நிறைவேற்றுதல்" எனும் பாடத்தில் 689, 690-வது ஹதீஸாக முன்பு இடம் பெற்றுள்ளது)

١٥٤٤ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ تَحَلَّمَ بِحُلْمٍ لَمْ يَرَهُ كُلِّفَ أَنْ يَعْقِدَ بَيْنَ شُعَيْرَتَيْنِ وَلَنْ يَفْعَلَ وَمَنْ اسْتَمَعَ إِلَى حَدِيثِ قَوْمٍ وَهُمْ لَهُ كَارِهُونَ صُبَّ فِي أُذُنَيْهِ الأنُكُ يَوْمَ الْقِيَامَةِ وَمَنْ صَوَّرَ صُورَةً عُذِّبَ وَكُلِّفَ أَنْ يَنْفُخَ فِيهَا الرُّوحَ وَلَيْسَ بِنَافِخٍ " . رَوَاهُ الْبُخَارِيُّ . " تَحَلَّمَ " : أَيْ قَالَ : إِنَّهُ حَلُمَ فِي نَوْمِهِ وَرَأَى كَذَا وَكَذَا وَهُوَ كَاذِبٌ . و " الأنُكُ " بِالْمَدِّ وَضَمِّ النُّونِ وَتَخْفِيفِ الْكَافِ : وَهُوَ الرَّصَاصُ الْمُذَابُ .

**1544** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தான் பார்த்திராத கனவைக் கண்டதாகக் கூறுபவர், இரண்டு மணிக் கோதுமைகளுக்கிடையே முடிச்சுப் போடும்படி நிர்ப்பந்திக்கப்படுவார். ஆனால், அவரால் (அதற்கு) இயலாது. ஒரு கூட்டத்தாரின் பேச்சை, அவர்கள் வெறுக்கும் நிலையில் ஒருவர் கேட்க முயற்சித்தால், மறுமை நாளில் அவரின் காதுகளில் ஈயத்தை ஊற்றப்படும். உருவத்தை ஒருவர் வரைந்தால், அவர் வேதனை செய்யப்படுவார். மேலும் அதில் உயிரை ஊதிட வற்புறுத்தப்படுவார். (ஆனால்) அவரால் அது முடியாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7042)**

١٥٤٥ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " أَفْرَى الْفِرَى أَنْ يُرِيَ الرَّجُلُ عَيْنَيْهِ مَا لَمْ تَرَيَا . " رَوَاهُ الْبُخَارِيُّ . وَمَعْنَاهُ يَقُولُ : " رَأَيْت " فِيمَا لَمْ يَرَهُ .

**1545** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் இரு கண்களும் பார்த்திராத ஒன்றைப் பார்த்ததாகக் கூறுவதே மிகப்பெரும் அவதூறாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3509)**

١٥٤٦ – وَعَنْ سَمُرَةَ بْنِ جُنْدُبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ مِمَّا يُكْثِرُ أَنْ يَقُولَ لأَصْحَابِهِ : " هَلْ رَأَى أَحَدٌ مِنْكُمْ مِنْ رُؤْيَا ؟ " فَيَقُصُّ عَلَيْهِ مَنْ شَاءَ أَنْ يَقُصَّ وَإِنَّهُ قَالَ لَنَا ذَاتَ غَدَاةٍ : " إِنَّهُ أَتَانِي اللَّيْلَةَ آتِيَانِ وَإِنَّهُمَا قَالاَ لِي : انْطَلِقْ وَإِنِّي انْطَلَقْت مَعَهُمَا وَإِنَّهُ أَتَيْنَا عَلَى رَجُلٍ مُضْطَجِعٍ وَإِذَا آخَرُ قَائِمٌ عَلَيْهِ بِصَخْرَةٍ إِذَا هُوَ يَهْوِي بِالصَّخْرَةِ لِرَأْسِهِ فَيَثْلَغُ رَأْسَهُ فَيَتَدَهْدَهُ الْحَجَرُ هَاهُنَا فَيَتْبَعُ الْحَجَرَ فَيَأْخُذُهُ فَلاَ يَرْجِعُ إِلَيْهِ حَتَّى يُصِحَّ رَأْسُهُ كَمَا كَانَ ثُمَّ يَعُودُ عَلَيْهِ فَيَفْعَلُ بِهِ مِثْلَ مَا فَعَلَ الْمَرَّةَ الأُولَى ! " . ) قَالَ ( : قُلْت لَهُمَا : سُبْحَانَ اللَّهِ ! مَا هَذَا ؟ ؟ قَالاَ لِي : انْطَلِقْ انْطَلِقْ فَانْطَلَقْنَا فَأَتَيْنَا عَلَى رَجُلٍ مُسْتَلْقٍ لِقَفَاهُ وَإِذَا آخَرُ قَائِمٌ عَلَيْهِ بِكَلُّوبٍ مِنْ حَدِيدٍ وَإِذَا هُوَ يَأْتِي أَحَدَ شِقَّيْ وَجْهِهِ فَيُشَرْشِرُ شِدْقَهُ إِلَى قَفَاهُ وَمَنْخِرَهُ إِلَى قَفَاهُ وَعَيْنَهُ إِلَى قَفَاهُ ; ثُمَّ يَتَحَوَّلُ إِلَى الْجَانِبِ الآخَرِ فَيَفْعَلُ بِهِ مِثْلَ مَا فَعَلَ بِالْجَانِبِ الأَوَّلِ فَمَا يَفْرَغُ مِنْ ذَلِكَ الْجَانِبِ حَتَّى يَصِحَّ ذَلِكَ الْجَانِبُ كَمَا كَانَ ; ثُمَّ يَعُودُ عَلَيْهِ فَيَفْعَلُ مِثْلَ مَا فَعَلَ فِي الْمَرَّةِ الأُولَى ! " . ) قَالَ ( : قُلْت : " سُبْحَانَ اللَّهِ ! مَا هَذَانِ ؟ قَالَ : قَالاَ لِي : انْطَلِقْ انْطَلِقْ فَانْطَلَقْنَا فَأَتَيْنَا عَلَى مِثْلِ التَّنُّورِ " . فَأَحْسَبُ أَنَّهُ قَالَ : " فَإِذَا فِيهِ لَغَطٌ وَأَصْوَاتٌ فَاطَّلَعْنَا فِيهِ فَإِذَا فِيهِ رِجَالٌ وَنِسَاءٌ عُرَاةٌ وَإِذَا هُمْ يَأْتِيهِمْ لَهَبٌ مِنْ أَسْفَلَ مِنْهُمْ فَإِذَا أَتَاهُمْ ذَلِكَ اللَّهَبُ ضَوْضَئُوا " . قُلْت : مَا هَؤُلاَءِ ؟ قَالاَ

لي : انْطَلقْ انْطَلقْ فَانْطَلَقْنَا فَأَتَيْنَا عَلَى نَهْر – حَسبْت أَنَّهُ كَانَ يَقُولُ : " أَحْمَرَ مثْلَ الدّمِ " – وَإِذَا في النَّهْر رَجُلٌ سَابحٌ يَسْبَحُ وَإِذَا عَلَى شَطِّ النَّهْر رَجُلٌ قَدْ جَمَعَ عنْدَهُ حجَارَةً كَثيرَةً ; وَإِذَا ذَلكَ السَّابحُ يَسْبَحُ مَا يَسْبَحُ ثُمّ يَأْتي ذَلكَ الَّذي قَدْ جَمَعَ عنْدَهُ الْحجَارَةَ فَيَفْغَرُ لَهُ فَاهُ فَيُلْقمُهُ حَجَرًا فَيَنْطَلقُ فَيَسْبَحُ ثُمّ يَرْجعُ إلَيْه كُلَّمَا رَجعَ إلَيْه فَغَرَ لَهُ فَاهُ فَأَلْقَمَهُ حَجَرًا . قُلْت لَهُمَا : مَا هَذَان ؟ قَالاَ لي : انْطَلقْ انْطَلقْ فَانطَلَقْنَا فَأَتَيْنَا عَلَى رَجُلٍ كَرِيه الْمَرْآة – أَوْ كَأَكْرَه مَا أَنْتَ رَاء رَجُلاً مُرْأًى . فَإذَا هُوَ عنْدَهُ نَارٌ يَحُشُّهَا وَيَسْعَى حَوْلَهَا . قُلْت لَهُمَا : مَا هَذَا ؟ قَالاَ لي . انْطَلقْ انطَلقْ فَانطَلَقْنَا فَأَتَيْنَا عَلَى رَوْضَة مُعْتَمّة فيهَا منْ كُلِّ نُورِ الرّبيعِ وَإذَا بَيْنَ ظَهْرَيْ الرّوْضَة رَجُلٌ طَويلٌ لاَ أَكَادُ أَرَى رَأْسَهُ طُولاً في السَّمَاء وَإذَا حَوْلَ الرَّجُلِ منْ أَكْثَرِ ولْدَان رَأَيْتهمْ قَطُّ ! . قُلْت : مَا هَذَا ؟ وَمَا هَؤُلاَء ؟ قَالاَ لي : انْطَلقْ انْطَلقْ فَانطَلَقْنَا فَأَتَيْنَا إلَى دَوْحَة عَظيمَة لَمْ أَرَ دَوْحَةً قَطُّ أَعْظَمَ منْهَا وَلاَ أَحْسَنَ ! قَالاَ لي : ارْقَ فيهَا فَارْتَقَيْنَا فيهَا إلَى مَدينَة مَبْنيّة بلَبنِ ذَهَب وَلَبن فضّة فَأَتَيْنَا بَابَ الْمَدينَة فَاسْتَفْتَحْنَا فَفُتحَ لَنَا فَدَخلْنَاهَا فَتَلَقّانَا رجَالٌ شَطْرٌ منْ خَلْقهمْ كَأَحْسَن مَا أَنْتَ رَاء ! وَشَطْرٌ منْهُمْ كَأَقْبَح مَا أَنْتَ رَاء ! قَالاَ لَهُمْ ! : اذْهَبُوا فَقَعُوا في ذَلكَ النّهْر ; وَإذَا هُوَ نَهْرٌ مُعْتَرض يَجْري كَأَنّ مَاءَهُ الْمَحْضُ في الْبَيَاض فَذَهَبُوا فَوَقَعُوا فيه . ثُمّ رَجَعُوا إلَيْنَا قَدْ ذَهَبَ ذَلكَ السُّوءُ عَنْهُمْ فَصَارُوا في أَحْسَن صُورَة . ) قَالَ ( قَالاَ لي : هَذه جَنّةُ عَدْن وَهَذَاك مَنْزلُكَ فَسَمَا بَصَري صُعُدًا فَإذَا قَصْرٌ مثْلُ الرّبَابَة الْبَيْضَاء . قَالاَ لي : هَذَاك مَنْزلُك ؟ قُلْت لَهُمَا : بَارَكَ اللّهُ فيكُمَا فَذَرَاني فَأَدْخُلُهُ . قَالاَ : أَمّا الآنَ فَلاَ وَأَنْتَ دَاخلُهُ ! . قُلْتَ لَهُمَا : فَإنّي رَأَيْت مُنْذُ اللّيْلَة عَجَبًا ؟ فَمَا هَذَا الّذي رَأَيْت ؟ قَالاَ لي : أَمَا إنّا سَنُخْبرُك : أَمّا الرّجُلُ الأوّلُ الّذي أَتَيْت عَلَيْه يَثْلَغُ رَأْسَهُ بالْحَجَر فَإنّهُ الرّجُلُ يَأْخُذُ الْقُرْآنَ فَيَرْفُضُهُ وَيَنَامُ عَنْ الصّلاَة الْمَكْتُوبَة . وَأَمّا الرّجُلُ الّذي أَتَيْت عَلَيْه يُشَرْشرُ شدْقَهُ إلَى قَفَاهُ وَمَنْخرَهُ إلَى قَفَاهُ وَعَيْنَهُ إلَى قَفَاهُ فَإنّهُ الرّجُلُ يَغْدُو منْ بَيْته فَيَكْذبُ الْكَذْبَةَ تَبْلُغُ الأفَاقَ . وَأَمّا الرّجَالُ وَالنّسَاءُ الْعُرَاةُ الّذينَ هُمْ في مثْل بنَاء التّنُّور فَإنّهُمْ الزّنَاةُ وَالزّوَاني وَأَمّا الرّجُلُ الّذي أَتَيْت عَلَيْه يَسْبَحُ في النّهْر وَيُلْقَمُ الْحجَارَةَ فَإنّهُ آكلُ الرّبَا وَأَمّا الرّجُلُ الْكَريهُ المرْآةُ الّذي عنْدَ النّار يَحُشُّهَا وَيَسْعَى حَوْلَهَا فَإنّهُ مَالكٌ خَازنُ جَهَنّمَ وَأَمّا الرّجُلُ الطّويلُ الّذي في الرّوْضَة فَإنّهُ إبْرَاهيمُ وَأَمّا الْوِلْدَانُ الّذينَ حَوْلَهُ فَكُلُّ مَوْلُود مَاتَ عَلَى الْفطْرَة وَفي روَايَة الْبَرْقَانيّ : " وُلدَ عَلَى الْفطْرَة " فَقَالَ بَعْضُ الْمُسْلمينَ : يَا رَسُولَ اللّه وَأَوْلاَدُ الْمُشْركينَ ؟ فَقَالَ رَسُولُ اللّه ﷺ : " وَأَوْلاَدُ الْمُشْركينَ " . وَأَمّا الْقَوْمُ الّذينَ كَانُوا شَطْرٌ منْهُمْ حَسَنٌ وَشَطْرٌ منْهُمْ قَبيحٌ فَإنّهُمْ قَوْمٌ خَلَطُوا عَمَلاً صَالحًا وَآخَرَ سَيّئًا تَجَاوَزَ اللّهُ عَنْهُمْ " . رَوَاهُ الْبُخَاريُّ . وَفي روَايَة لَهُ : " رَأَيْت اللّيْلَةَ رَجُلَيْن أَتَيَاني فَأَخْرَجَاني إلَى أَرْضٍ مُقَدّسَة " ثُمّ ذَكَرَهُ وَقَالَ : فَانْطَلَقْنَا إلَى نَقْب مثْل التّنُّور أَعْلاَهُ ضَيّقٌ وَأَسْفَلُهُ وَاسعٌ ; يَتَوَقّدُ تَحْتَهُ نَارًا فَإذَا ارْتَفَعَتْ ارْتَفَعُوا حَتّى كَادُوا أَنْ يَخْرُجُوا وَإذَا خَمَدَتْ رَجَعُوا فيهَا وَفيهَا رجَالٌ وَنسَاءٌ عُرَاةٌ " . وَفيهَا : " حَتّى أَتَيْنَا عَلَى نَهْر منْ دَم " وَلَمْ يَشُكّ " فيه رَجُلٌ قَائمٌ عَلَى وَسَط النّهْر وَعَلَى شَطّ النّهْر رَجُلٌ وَبَيْنَ يَدَيْه حجَارَةٌ فَأَقْبَلَ الرّجُلُ الّذي في النّهْر فَإذَا أَرَادَ أَنْ يَخْرُجَ رَمَى الرّجُلُ بحَجَر في فيه فَرَدّهُ حَيْثُ كَانَ فَجَعَلَ كُلّمَا جَاءَ ليَخْرُجَ جَعَلَ يَرْمي في فيه بحَجَر فَيَرْجعُ كَمَا كَانَ " . وَفيهَا : " فَصَعدَا بي الشّجَرَةَ فَأَدْخَلاَني دَارًا لَمْ أَرَ قَطُّ أَحْسَنَ منْهَا فيهَا رجَالٌ شُيُوخٌ وَشَبَابٌ " . وَفيهَا : الّذي رَأَيْته يَشُقّ شدْقَهُ فَكَذّابٌ يُحَدّثُ بالْكَذْبَة فَتُحْمَلُ عَنْهُ حَتّى تَبْلُغَ الأفَاقَ فَيُصْنَعُ به مَا رَأَيْت إلَى يَوْم الْقيَامَة " . وَفيهَا : " الّذي رَأَيْته يَشْدَخُ رَأْسَهُ فَرَجُلٌ عَلّمَهُ اللّهُ الْقُرْآنَ فَنَامَ عَنْهُ باللّيْل وَلَمْ يَعْمَلْ فيه بالنّهَار فَيُفْعَلُ به إلَى يَوْم الْقيَامَة . وَالدّارُ الأولَى الّتي دَخَلْت دَارُ عَامّة الْمُؤْمنينَ وَأَمّا هَذه الدّارُ فَدَارُ الشّهَدَاء وَأَنَا جبْريلُ وَهَذَا ميكَائيلُ فَارْفَعْ رَأْسَك فَرَفَعْت رَأْسي فَإذَا فَوْقي مثْلُ السّحَاب قَالاَ : ذَاكَ مَنْزلُك . قُلْت : دَعَاني أَدْخُلُ مَنْزلي قَالاَ : إنّهُ بَقيَ لَك عُمُرٌ لَمْ تَسْتَكْملْهُ فَلَوْ اسْتَكْمَلْته ! فَلَوْ أَتَيْت مَنْزلَك ! " . رَوَاهُ الْبُخَاريُّ . قَوْلُهُ : " يَثْلَغُ رَأْسَهُ " هُوَ بالثّاء الْمُثَلّثَة وَالْغَيْن الْمُعْجَمَة : أَيْ يَشْدَخُهُ وَيَشُقُّهُ . قَوْلُهُ : " يَتَدَهْدَهُ " أَيْ يَتَدَحْرَجُ . و " الْكَلّوبُ " بفَتْح الْكَاف وَضَمّ اللاّم الْمُشَدّدَة وَهُوَ مَعْرُوفٌ . قَوْلُهُ : " فَيُشَرْشرُ " أَيْ يَقْطَعُ . قَوْلُهُ : " ضَوْضَئُوا " وَهُوَ بضَادَيْن مُعْجَمَتَيْن : أَيْ صَاحُوا . قَوْلُهُ : " فَيَفْغَرُ " هُوَ بالْفَاء وَالْغَيْن الْمُعْجَمَة : أَيْ يَفْتَحُ . قَوْلُهُ : " الْمَرْآة " هُوَ بفَتْح الْميم : أَيْ الْمَنْظَرُ . قَوْلُهُ : " يَحُشُّهَا " هُوَ بفَتْح الْيَاء وَضَمّ الْحَاء الْمُهْمَلَة وَالشّين الْمُعْجَمَة : أَيْ يُوقدُهَا . قَوْلُهُ : " رَوْضَةٌ مُعْتَمّةٌ " هُوَ بضَمّ الْميم

وَإِسْكَان الْعَيْنِ وَفَتْحِ التَّاء وَتَشْدِيد الْمِيم : أَيْ وَافِيَةُ النَّبَات طَوِيلَتُهُ . قَوْلُهُ : " دَوْحَةٌ " وَهِيَ بِفَتْحِ الدَّال وَإِسْكَان الْوَاو وَبِالْحَاءِ الْمُهْمَلَة : وَهِيَ الشَّجَرَةُ الْكَبِيرَةُ . قَوْلُهُ : " الْمَحْضُ " هُوَ بِفَتْحِ الْمِيم وَإِسْكَان الْحَاءِ الْمُهْمَلَة وَبِالضَّاد الْمُعْجَمَة وَهُوَ اللَّبَنُ . قَوْلُهُ : " فَسَمَا بَصَرِي " أَيْ ارْتَفَعَ . " وَصُعُدًا " بِضَمِّ الصَّادِ وَالْعَيْنِ : أَيْ مُرْتَفِعًا . و " الرَّبَابَةُ " بِفَتْحِ الرَّاءِ وَبِالْبَاءِ الْمُوَحَّدَةِ مُكَرَّرَةٌ : وَهِيَ السَّحَابَةُ .

**1546** ஸமுரா இப்னு ஜுன்துப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் தோழர்களிடம் அடிக்கடி, "உங்களில் இன்று எவரும் கனவு கண்டவர் உண்டா?" என்று கேட்பார்கள். கனவு பற்றி அல்லாஹ் யாரை நாடினானோ, அவர் தான் கண்ட கனவைக் கூறுவார். ஒருநாள் காலை நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் (தாங்கள் கண்ட கனவைக்) கூறினார்கள்.

நேற்று இரவு என்னிடம் இரண்டு பேர் (வானவர்கள்) வந்தனர். "புறப்படுங்கள்!" என்று அவ்விருவரும் என்னிடம் கூறினர். அந்த இருவருடனும் நான் புறப்பட்டேன். ஒருக்களித்துப் படுத்திருந்த ஒருவர் அருகில் நாங்கள் வந்தோம். அப்போது அவரருகில் ஒருவர் கல்லை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார். அவரின் தலையில் அந்த கல்லைப் போட்டார். அவரின் தலை நொறுங்கியது. அந்த கல் சற்றுத்தள்ளி உருண்டோடி விட்டது. மீண்டும் அவர் கல்லை எடுத்து வந்தார். அவர் இவரிடம் திரும்பி வரும் முன், இவரது தலை முன்பு இருந்தது போலவே மாறிவிட்டது. மீண்டும் வந்த அவர், முந்தைய தடவை போலவே மீண்டும் கல்லைப் போட்டார். நான் அந்த இருவரிடமும், "அல்லாஹ்வே தூய்மையானவன். இந்த இருவரும் யார்?" என்று கேட்டேன். "புறப்படுங்கள்! புறப்படுங்கள்!!" என என்னிடம் இருவரும் கூறினர். எனவே அங்கிருந்து புறப்பட்டோம்.

பிறகு மல்லாந்து படுத்திருந்த ஒருவரின் அருகில் வந்தோம். அவரின் அருகில் ஒருவர் இரும்புத் தடியுடன் நின்று கொண்டிருந்தார். அவர் படுத்திருந்தவரின் முகத்தின் ஒரு பக்கமாக வந்து, அவரின் வாய், மூக்கு, கண் ஆகியவற்றை ஒவ்வொரு உறுப்பாக துண்டு துண்டாக்குகிறார். பின்பு மற்றொரு பகுதிக்கு வந்தார். மறுபுறத்திலும் அவ்வாறே செய்தார். ஒரு பகுதியில் வேதனை செய்து முடிந்து, மறுபகுதிக்கு வருவதற்குள் முதல் பக்கம் சரியாகி முன்பு போலவே ஆகிவிடும். பிறகு, மீண்டும் முதல் பக்கத்தில் வேதனை செய்வார். அப்பொழுது நான், "இறைவனே தூய்மையானவன். இந்த இருவரும் யார்?" என்று கேட்டேன். "புறப்படுங்கள்! புறப்படுங்கள்!!" என என்னிடம் (என்னை அழைத்து வந்த) இருவரும் கூறினர், புறப்பட்டோம்.

அடுப்பு போன்ற இடத்திற்கு நாங்கள் வந்தோம். அதில் சப்தமும், இரைச்சலும் வந்து கொண்டிருந்தது. அதில் எட்டிப் பார்த்தோம். அதில் நிர்வாணமாக ஆண்களும், பெண்களும் இருந்தனர். அப்போது அவர்களின் கீழ்புறத்திலிருந்து நெருப்பு ஜுவாலை அவர்களிடம் வந்தது. அந்த நெருப்பு ஜுவாலை அவர்களிடம் வந்து, அவர்களைத் தாக்கியது. அவர்கள் அலறினார்கள். "இவர்கள் யார்?" என்று கேட்டேன். "புறப்படுங்கள்! புறப்படுங்கள்!!" என என்னிடம் (என்னை அழைத்து வந்த) இருவரும் கூறினர், புறப்பட்டோம்.

அடுத்து ஓர் ஆற்றின் பக்கம் வந்தோம். ரத்தம் போன்ற சிவப்பு நிறத்தில் அது இருந்தது. ஆற்றில் ஒருவர் நீந்திக் கொண்டிருந்தார். ஆற்றின் கரையில் ஒருவர் இருந்தார். அவரருகே அதிகமான கற்கள் கிடந்தன. நீந்துபவர் நீந்திக்கொண்டே, கற்களை வைத்திருப்பவரின் அருகில் வந்து, தன் வாயை திறப்பார். அவரின் வாயில் கல்லை இவர் போடுவார். அவர் திரும்பிச் செல்வார். மீண்டும் நீந்திக் கொண்டே, இவரிடம் அவர் வருவார். தன் வாயை திறப்பார். இவரும் அவரின் வாயில் கல்லைப் போடுவார். "இவ்விருவரும் யார்?" என்று (என்னை அழைத்து வந்த) இருவரிடமும் கேட்டேன். "புறப்படுங்கள்! புறப்படுங்கள்!!" என என்னிடம் இருவரும் கூறினார்கள். நாங்கள் புறப்பட்டோம்.

அதன்பின் அசிங்கமான ஒரு மனிதரிடம் வந்தோம். அவரைப் போன்ற ஒரு அசிங்கமான ஒரு மனிதனை நீர் கண்டிருக்க மாட்டீர். அவரோ தன் அருகில் நெருப்பை மூட்டிக் கொண்டிருந்தார். அதைச் சுற்றி ஓடியும் வந்தார். “இவர் யார்?” என இருவரிடமும் கேட்டேன். “புறப்படுங்கள்! புறப்படுங்கள்!!” என இருவரும் என்னிடம் கூறினார்கள். புறப்பட்டோம்.

வசந்த காலத்தின் பூக்கள் அனைத்தும் நிறைந்த செழிப்பான ஒரு பூங்காவிற்குச் சென்றோம். பூங்காவின் நடுவில் வானத்தைத் தொடுகின்ற அளவுக்குரிய மிக உயரமான மனிதர் இருந்தார். அந்த மனிதரைச் சுற்றி இதுவரை நான் பார்த்திராத அதிகமான குழந்தைகள் நின்று கொண்டிருந்தன. “இவர் யார்? இவர்கள் யார்?” என்று கேட்டேன். “புறப்படுங்கள்! புறப்படுங்கள்!!” என என்னிடம் இருவரும் கூறினார்கள். புறப்பட்டோம்.

அடுத்து ஒரு பெரிய மரத்தின் கீழ் வந்தோம். இதுவரை இதை விட மிகப்பெரும் மரத்தை நான் கண்டதில்லை. “அதில் ஏறுவீராக!” என்று என்னிடம் இருவரும் கூறினார்கள். அதிலே ஏறி, தங்கம் - வெள்ளி செங்கல்களால் உருவான ஒரு நகரத்தை அடைந்தோம். நகரின் வாசலுக்கு வந்தோம். திறந்துவிடக் கோரினோம். எங்களுக்கு திறக்கப்பட்டது. அதனுள் நுழைந்தோம். சிலர் எங்களைச் சந்தித்தனர். அவர்களின் தோற்றத்தில் பாதி, மிக மிக அருவறுப்பானது. அதை நீர் பார்த்திருக்க மாட்டீர். (என்னை அழைத்து வந்த) இருவரும் அவர்களிடம், “நீங்கள் போய், அந்த ஆற்றில் குளியுங்கள்” என்று கூறினார்கள். அங்கே பால் போன்ற வெண்மையான தண்ணீர் நிறைந்த ஆறு ஒன்று குறுக்கே ஓடிக் கொண்டிருந்தது. அவர்கள் சென்று, அதில் குளித்தார்கள். பின்பு எங்களிடம் திரும்பி வந்தார்கள். அவர்களை விட்டும் அசிங்க-விகாரமான தோற்றம் போயிருந்தது. மேலும் மிக அழகியத் தோற்றத்துடன் மாறி இருந்தார்கள். “இது தான் ‘அத்னு’ எனும் சொர்க்கமாகும். இதுதான் உம் இருப்பிடம்” என்று கூறினர். உடனே என் பார்வை மேலே உயர்ந்தது. அங்கே வெண்மையான மேகம் போன்ற மாளிகை இருந்தது. “இதுவும் உம் இருப்பிடமே!” என்று என்னிடம் அந்த இருவரும் கூறினார்கள். “உங்கள் இருவருக்கும் அல்லாஹ் பரக்கத் செய்வானாக! என்னை விட்டுவிடுங்கள். அதில் நான் நுழைந்து கொள்கிறேன்” என்று இருவரிடமும் கூறினேன். “இப்போது இதில் நுழைய வேண்டாம். பின்னர் நீர்தான் இதில் நுழைவீர்” என்று இருவரும் கூறினார்கள்.

“இரவில் சில அதிசயமானவற்றை நான் கண்டேனே? நான் பார்த்தது எல்லாம் என்ன?” என்று இருவரிடமும் கேட்டேன். “இதுபற்றி உமக்குக் கூறுகிறோம். கல்லால் தன் தலை உடைபடும் நிலையில் உள்ள அந்த மனிதன் குர்ஆனை எடுப்பான். அதை உதாசீனப்படுத்துவான். ஐந்து நேரத் தொழுகைகளை விட்டு விட்டு தூங்குவான். மல்லாந்து படுத்திருந்து தன் காது, மூக்கு, கண் ஆகியவற்றை பிடரி வரை துண்டிக்கப்படுவனாக இருந்த அந்த மனிதன் தன் வீட்டிலிருந்து காலையில் புறப்பட்டு, பல இடங்களையும் சென்றடையும் விதமாக பொய் பேசுவான். அடுப்புக் கட்டிடம் போன்ற இடத்தில் நிர்வாணமாக இருந்த ஆண்களும், பெண்களும் விபச்சாரம் செய்தவர்களாவர். ஆற்றில் நீந்தி வந்து, தன் வாயில் கற்கள் போடப்பட்ட நிலையில் உள்ள அந்த மனிதன் வட்டியைச் சாப்பிட்டவன் ஆவான். நெருப்பை மூட்டி, அதைச் சுற்றி வந்த அருவெறுப்பான அந்த மனிதர், நரகத்தைப் பாதுகாக்கும் “மாலிக்” எனும் வானவர் ஆவார். பூங்காவில் மிக உயர்ந்த மனிதராக இருந்தவர், நபி இப்ராஹிம் (அலை) ஆவார். அவர்களை சுற்றி நின்ற குழந்தைகள், இயற்கையாக, (இளம் வயதில்) இறந்துவிட்ட குழந்தைகளாவர்” என்று இருவரும் கூறினர் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

“இறைத்தூதர் அவர்களே! இணை வைப்பவர்களின் குழந்தைகளுமா?” என்று நபித்தோழர்கள் கேட்டனர். “ஆம், இணைவைப்பவர்களின் குழந்தைகளும் தான்” என்று நபி (ஸல்) கூறிவிட்டு, அந்த

இருவரும் கூறியதாக மீண்டும் தொடர்ந்து) "அவர்களின் ஒருபகுதி அழகாகவும், மறு பகுதி விகார(அசிங்க)மாகவும் உள்ள அவர்கள், நற்செயலையும், பாவத்தையும் சேர்த்து செய்தவர்களாவர். அவர்களை அல்லாஹ் மன்னித்து விட்டான் என்று கூறினர்" என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7047)**

புகாரியின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

நான் நேற்றிரவு கனவு கண்டேன். இரண்டு பேர் என்னிடம் வந்தனர். தூய்மையான நிலப்பகுதிக்கு என்னைக் கொண்டு சென்றனர் என்று கூறிய நபி (ஸல்) அவர்கள் ...... (தொடர்ச்சியாக) அடுப்பு போன்ற குழிக்கு வந்தோம். அதன் மேல் பகுதி குறுகலாகவும், கீழ் பகுதி விசாலமானதாகவும் இருந்தது. அதன் கீழே நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. அப்போது (அதன் ஜுவாலை) உயரும்போது, அவர்கள் (அந்தக் குழியை விட்டு) வெளியே வரும் அளவுக்கு உயர்ந்தார்கள். (அந்த ஜுவாலை) தாழ்ந்தால் அவர்கள் (அதன் (கீழ் பகுதிக்கு) திருப்புவார்கள். அதிலே சில ஆண்களும், பெண்களும் நிர்வாணமாக இருந்தார்கள்.

மேலும் அதில் உள்ளது:

அடுத்து நாங்கள் ரத்தம் நிறைந்த ஆறுக்கு வந்தோம். ஆற்றின் நடுவே ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான். ஆற்றின் ஓரத்தில் ஒருவர் இருந்தார். அவர் முன்னே கல் இருந்தது. ஆற்றினுள் இருந்த மனிதன் முன்னோக்கி வந்தான். அவர் வெளியேற முயற்சித்தால், அவனின் வாயில் இந்த மனிதர் கல்லை எறிவார். அவன் முன் இருந்த இடத்திற்கே திரும்புவான். அவர் வெளியேற முயற்சித்த போதெல்லாம் இவர் அவனின் வாயில் கல்லால் எறிவதும், அவன் மீண்டும் அந்த இடத்திற்கே திரும்புவதுமாக இருந்தான்.

மேலும் அதில் உள்ளது:

என்னை ஒரு மரத்திற்கு இருவரும் உயர்த்திச் சென்றனர். இதுவரை நான் பார்த்திராத அழகிய வீட்டிற்குள் என்னை அழைத்துச் சென்றனர். அதில் முதியோரும், வாலிபர்களும் இருந்தனர்.

மேலும் அதில் உள்ளது:

வாய் கிழிக்கப்பட்டவனாக நீர் பார்த்தவன், பொய் கூறுபவனாவான். அவன் பொய் தகவலைக் கூற, அது பல பாகங்களுக்கு பரப்பப்படும். மேலும் நான் பார்த்தவை, கியாமத் நாள் வரை நிறைவேற்றப்படும்.

மேலும் அதில் உள்ளது:

தலை உடைக்கப்பட்டவன். அல்லாஹ்வினால் குர்ஆன் கற்றுக் கொடுக்கப்பட்ட மனிதன் ஆவான். இரவில் குர்ஆனைப் புறக்கணித்து விட்டுத் தூங்கினான். பகலில் அதை செயல்படுத்தவும் இல்லை. மறுமை நாள் வரை இவ்வாறே வேதனை செய்யப்படுவான். நீர் முதலில் நுழைந்த வீடு, இறை நம்பிக்கையாளர்களின் வீடுகளாகும். இந்த வீடோ, இறைவழியில் உயிரைத் தியாகம் செய்தோரின் வீடு களாகும். நான் ஜிப்ரீல். இவர் மீகாயில், உம் தலையை உயர்த்துவீராக! (உடனே) நான் என் தலையை உயர்த்தினேன். அப்போது எனக்கு மேலே மேகம் போன்று இருந்தது. உடனே அந்த இருவரும், "இதுதான் உம்முடைய இருப்பிடம்" என்றனர். "என்னை விடுங்கள். என் இருப்பிடத்திற்குள் நான் போகிறேன்" என்றேன். "உமக்கு இன்னும் வயது உள்ளது. அதை நீர் முழுமைப்படுத்தவில்லை. அதை நீர் முழுமைப்படுத்திவிட்டால் உம் இருப்பிடத்திற்கு வந்துவிடுவீர்!" என்று இருவரும் கூறினார்கள். **(புகாரி:1386)**

## ٢٦١ – باب بيان ما يجوز من الكذب

## பாடம் : 261 - பொய் கூற அனுமதிக்கப்படுவது

**அறிந்து கொள்ளுங்கள் :**

பொய் கூறுவது தடை செய்யப்பட்டது தான் என்றாலும் சில சமயங்களில் சில நிபந்தனைகளுடன் அது கூடும். இது குறித்து நான் “அல் அத்கார்” எனும் நூலில் விரிவாகக் கூறியுள்ளேன். அதன் சுருக்கம் மட்டும் இங்கே!

பேச்சு என்பது, நோக்கங்களை அடைய உரிய சாதனமாகும். மதிப்பிற்குரிய எந்த நோக்கமும் பொய் கூறாமல் அடைய முடியும் எனில், அதில் பொய் கூறுவது கூடாது. பொய் கூறாமல் அதை அடைய இயலாது என்றிருந்தால், பொய் கூறுவது கூடும். பின்பு அந்த நோக்கம் ஆகுமானதாக இருந்தால் பொய்யும் கட்டாயமாகும்.

தன்னைக் கொல்ல விரும்புகின்ற அல்லது பொருளை அபகரிக்கின்ற அநீதக்காரனிடமிருந்து ஒரு முஸ்லிம் மறைத்திருந்து, அவன் பற்றி ஒருவனிடம் கேட்கப்பட்டால் அவனை மறைப்பதற்காக பொய் கூறுவது கட்டாயமாகும்.

இது போலவே ஒருவனிடம் அமானிதப் பொருள் இருந்து, அதை எடுப்பதற்கு ஒரு அநீதக்காரன் விரும்பினால், அதையும் மறைத்திட பொய் கூறுவது கட்டாயமாகும். இதில் “தவ்ரியா” எனும் பேச்சைப் பயன்படுத்துவது மிகப் பேணுதலாகும்.

ஒருவனிடம் நல்ல நோக்கத்துடன் ஒரு பேச்சைச் கூறுவது, கேட்பவனை விளங்கச் செய்திட கூறுவதால், அவன் பொய்யனாக ஆகமாட்டான். வார்த்தையின் வெளிப்படையான நிலையில் அவன் பொய்யனாக இருந்தாலும், கேட்கப்படுபவன் விளங்க வேண்டும் என்பதற்காக கூறப்படுவதால் உள்ள இரட்டை வார்த்தை முறைக்கே “தவ்ரியா” என்று கூறப்படும். இந்த இரட்டைப் பேச்சு வழக்கை விட்டு, நேரடியாக பொய் வார்த்தைகளைப் பேசினாலும் இந்த நிலையில் அது குற்றமாகாது.

இந்த நிலையில் பொய் கூறிட அனுமதிக்க, “மக்களிடையே இணக்கம் கருதி ஒரு நல்ல செயலை கூடுதலாக செய்பவர் அல்லது நல்லதைக் கூறுபவர் பொய்யராக மாட்டார்” என்று நபி (ஸல்) கூறியதாக உம்மு குல்தூம் (ரழி) அவர்களால் அறிவிக்கப்படுகின்ற ஹதீஸையே ஆதாரமாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

“போரிலும், மக்களிடையே இணக்கத்தை (ஒற்றுமையை) ஏற்படுத்துவதிலும், ஒருவன் தன் மனைவியிடமும், மனைவி தன் கணவனிடமும் தங்களிடையே பிணக்கு ஏற்படுவதை தவிர்ப்பதற்காகவும் ஆகிய மூன்று நிலைகளிலே தவிர மக்கள் பேசுகின்ற ஒரு விஷயத்தில் பொய் பேசிட நபி (ஸல்) அவர்கள் அனுமதி அளிக்கவில்லை” என்று உம்மு குல்தூம் (ரழி) கூறியதாக முஸ்லிம் நூலில் உள்ளது.

## ٢٦٢ – باب الحث على التثبت فيما يقوله ويحكيه

## பாடம் : 262 - ஒரு பேச்சைக் கேட்டு, அதை உறுதிபடுத்துதல்

قَالَ اللَّهُ تَعَالَى : وَلَا تَقْفُ مَا لَيْسَ لَكَ بِهِ عِلْمٌ . وَقَالَ تَعَالَى : مَا يَلْفِظُ مِنْ قَوْلٍ إِلَّا لَدَيْهِ رَقِيبٌ عَتِيدٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *உமக்குத் தெளிவு இல்லாத ஒன்றில் நீர் பின் தொடராதீர். (17:36)*

*எந்தச் சொல்லையும் அவன் சொல்வதில்லை; அதனைப் பாதுகாப்பதற்குத் தயாராக உள்ள கண்காணிப்பாளர் அவனிடத்தில் இல்லாத நிலையில்! (50:18)*

١٥٤٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " كَفَى بِالْمَرْءِ كَذِبًا أَنْ يُحَدِّثَ بِكُلِّ مَا سَمِعَ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1547** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தான் கேட்ட அனைத்தையும் பிறரிடம் கூறுவது, ஒருவன் பொய்யன் என்பதற்கு போதுமானதாகும். (தான் கேட்டதைத் தீர விசாரித்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் அவற்றில் சில பொய்யும் இருக்கலாம்)” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:5)**

١٥٤٨ – وَعَنْ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ حَدَّثَ عَنِّي بِحَدِيثٍ يَرَى أَنَّهُ كَذِبٌ فَهُوَ أَحَدُ الْكَاذِبِينَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1548** ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நான் கூறாதவை என்று தெரிந்துக் கொண்டே, நான் கூறியதாக ஒருவர் ஒரு செய்தியை கூறினால், அவர் பொய்யர்களில் ஒருவராவார்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1)**

١٥٤٩ – وَعَنْ أَسْمَاءَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ امْرَأَةً قَالَتْ : يَا رَسُولَ اللَّهِ إِنَّ لِي ضَرَّةً فَهَلْ عَلَيَّ جُنَاحٌ إِنْ تَشَبَّعْتُ مِنْ زَوْجِي غَيْرَ الَّذِي يُعْطِينِي ؟ فَقَالَ النَّبِيُّ ﷺ : " الْمُتَشَبِّعُ بِمَا لَمْ يُعْطَ كَلَابِسِ ثَوْبَيْ زُورٍ ! " مُتَّفَقٌ عَلَيْهِ . " الْمُتَشَبِّعُ " هُوَ الَّذِي يُظْهِرُ الشِّبَعَ وَلَيْسَ بِشَبْعَانَ . وَمَعْنَاهُ هُنَا أَنْ يُظْهِرَ أَنَّهُ حَصَلَ لَهُ فَضِيلَةٌ وَلَيْسَتْ حَاصِلَةً . " وَلَابِسُ ثَوْبَيْ زُورًا " : أَيْ ذِي زُورٍ وَهُوَ الَّذِي يُزَوِّرُ عَلَى النَّاسِ : بِأَنْ يَتَزَيَّا بِزِيِّ أَهْلِ الزُّهْدِ أَوِ الْعِلْمِ أَوِ الثَّرْوَةِ لِيَغْتَرَّ بِهِ النَّاسُ وَلَيْسَ هُوَ بِتِلْكَ الصِّفَةِ . وَقِيلَ غَيْرُ ذَلِكَ وَاللَّهُ أَعْلَمُ .

**1549** அஸ்மா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம், “இறைத்தூதர் அவர்களே! எனக்கு ஒரு சக்களத்தி உண்டு. (அவளிடம்) நான் என் கணவர் எனக்குக் கொடுத்திராத ஒன்றைக் கொடுத்ததாக கூறிக் கொள்வது என் மீது குற்றமாகுமா?” என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “தனக்குக் கொடுக்கப் படாததைக் கொடுத்ததாகக் கூறும் ஒருவர், பொய்யான இரண்டு ஆடைகளை அணிந்தவர் போலாவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5219. முஸ்லிம்:2130)**

## ٢٦٣ – باب بيان غلظ تحريم شهادة الزور

## பாடம் : 263 - பொய் சாட்சி கூறுவது கடுமையாகத் தடுக்கப்பட்டதாகும்.

**قَالَ اللَّهُ تَعَالَى : وَاجْتَنِبُوا قَوْلَ الزُّورِ . وَقَالَ تَعَالَى : وَلَا تَقْفُ مَا لَيْسَ لَكَ بِهِ عِلْمٌ . وَقَالَ تَعَالَى : مَا يَلْفِظُ مِنْ قَوْلٍ إِلَّا لَدَيْهِ رَقِيبٌ عَتِيدٌ وَقَالَ تَعَالَى : إِنَّ رَبَّكَ لَبِالْمِرْصَادِ . وَقَالَ تَعَالَى : وَالَّذِينَ لَا يَشْهَدُونَ الزُّورَ .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *பொய் கூறுவதைத் தவிர்த்துக் கொள்ளுங்கள். (22:30)*

*உமக்குத் தெளிவு இல்லாத ஒன்றைப் பின்பற்றாதீர். (17:36)*

*எந்தச் சொல்லையும் அவன் சொல்வதில்லை; அதனைப் பாதுகாப்பதற்குத் தயாராக உள்ள கண்காணிப்பாளர் அவனிடத்தில் இல்லாத நிலையில்! (50:18)*

*நிச்சயமாக உமது இறைவன் கண்காணிக்கும் இடத்தில் உள்ளான். (89:14)*

*இன்னும் அவர்கள் எத்தகையோரென்றால், அவர்கள் பொய் சாட்சி கூற மாட்டார்கள். (25:72)*

١٥٥٠ – وَعَنْ أَبِي بَكْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ . قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَلاَ أُنَبِّئُكُمْ بِأَكْبَرِ الْكَبَائِرِ ؟ " قُلْنَا : بَلَى يَا رَسُولَ اللَّهِ . قَالَ : " الأَشْرَاكُ بِاللَّهِ وَعُقُوقُ الْوَالِدَيْنِ " وَكَانَ مُتَّكِئًا فَجَلَسَ فَقَالَ : " أَلاَ وَقَوْلُ الزُّورِ ! وَشَهَادَةُ الزُّورِ ! " فَمَا زَالَ يُكَرِّرُهَا حَتَّى قُلْنَا : لَيْتَهُ سَكَتَ ! . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1550** அபூபக்கர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெரிய பாவங்கள் பற்றி உங்களுக்கு நான் கூறட்டுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! சரி" என்று நாங்கள் கூறினோம். "அது, அல்லாஹ்வுக்கு இணைவைத்தல், பெற்றோரை நோவினை செய்தல்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு, "அறிந்து கொள்ளுங்கள். பொய் சாட்சி கூறுவதும் தான்" என்று கூறினார்கள். "அவர்கள் மவுனமாகி விட மாட்டார்களா?" என்று நாங்கள் கூறும் அளவுக்கு திரும்பத் திரும்ப அதையே கூறிக் கொண்டு இருந்தார்கள். **(புகாரி:2654. முஸ்லிம்:87)**

## ٢٦٤ – باب تحريم لَعْن إِنْسان بعَيْنه أَو دابة

## பாடம் : 264 - மனிதனையோ, கால்நடைகளையோ சபிப்பது கூடாது

١٥٥١ – عَنْ أَبِي زَيْدٍ ثَابِتِ بْنِ الضَّحَّاكِ الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ وَهُوَ مِنْ أَهْلِ بَيْعَةِ الرِّضْوَانِ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ حَلَفَ عَلَى يَمِينٍ بِمِلَّةٍ غَيْرِ الأَسْلاَمِ كَاذِبًا مُتَعَمِّدًا فَهُوَ كَمَا قَالَ وَمَنْ قَتَلَ نَفْسَهُ بِشَيْءٍ عُذِّبَ بِهِ يَوْمَ الْقِيَامَةِ وَلَيْسَ عَلَى رَجُلٍ نَذْرٌ فِيمَا لاَ يَمْلِكُهُ وَلَعْنُ الْمُؤْمِنِ كَقَتْلِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1551** ஹுதைபியாவில் "பய்அத்துர் ரிள்வானில்" கலந்து கொண்ட அபூஸைத் ஸாபித் இப்னு ளஹ்ஹாக் அல் அன்சாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் பெயரால் வேண்டுமென்றே பொய்யாக ஒருவன் சத்தியம் செய்தால், அவன் அது போலவே ஆவான். ஒருவன் எதன் மூலம் தற்கொலை செய்து கொள்கிறானோ, அதன் மூலமே மறுமையில் வேதனை செய்யப்படுவான். தான் சொந்தமாக்கிக் கொள்ளாத விஷயத்தில் நேர்ச்சை செய்வது ஒருவனுக்கு கூடாது. ஒரு முஃமினை சபிப்பது என்பது, அவனைக் கொல்வது போலாகும் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6044. முஸ்லிம்:110)**

١٥٥٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَنْبَغِي لِصِدِّيقٍ أَنْ يَكُونَ لَعَّانًا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1552** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மற்றவரை சாபம் விடுபவராக இருப்பது, ஓர் உண்மையாளருக்கு அழகல்ல" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2597)**

١٥٥٣ – وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ . " لاَ يَكُونُ اللَّعَّانُونَ شُفَعَاءَ وَلاَ شُهَدَاءَ يَوْمَ الْقِيَامَةِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1553** அபூதர்தா(ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(பிறரை) சாபமிடுபவர்கள் மறுமை நாளில் பரிந்துரை செய்பவர்களாகவோ, சாட்சி கூறுபவர்களாகவோ இருக்க மாட்டார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2589)**

١٥٥٤ – وَعَنْ سَمُرَةَ بْنِ جُنْدُبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَلاَعَنُوا بِلَعْنَةِ اللَّهِ وَلاَ بِغَضَبِهِ وَلاَ بِالنَّارِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1554** ஸமுரா இப்னு ஜுன்துப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் சாபத்தின் மூலமோ, அவனது கோபத்தின் மூலமோ, நரகத்தின் மூலமோ நீங்கள் ஒருவருக்கொருவர் சாபமிட்டுக் கொள்ளாதீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4906. திர்மிதீ:1976. இது "ஹஸன் ஸஹீஹ்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٥٥٥ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَيْسَ الْمُؤْمِنُ بِالطَّعَّانِ وَلاَ اللَّعَّانِ وَلاَ الْفَاحِشِ وَلاَ الْبَذِيِّ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1555** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஃமின் குத்திக்காட்டி பேசுபவனாக, சாபமிடுபவனாக, கெட்டவார்த்தை பேசுபவனாக, (அருவருப்பான) பேச்சு பேசுபவனாக இருக்க மாட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1977. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٥٥٦ – وَعَنْ أَبِي الدَّرْدَاءِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِنَّ الْعَبْدَ إِذَا لَعَنَ شَيْئًا صَعِدَتِ اللَّعْنَةُ إِلَى السَّمَاءِ فَتُغْلَقُ أَبْوَابُ السَّمَاءِ دُونَهَا ثُمَّ تَهْبِطُ إِلَى الأَرْضِ فَتُغْلَقُ أَبْوَابُهَا دُونَهَا ثُمَّ تَأْخُذُ يَمِينًا وَشِمَالاً فَإِذَا لَمْ تَجِدْ مَسَاغًا رَجَعَتْ إِلَى الَّذِي لُعِنَ فَإِنْ كَانَ أَهْلاً لِذَلِكَ وَإِلاَّ رَجَعَتْ إِلَى قَائِلِهَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1556** அபூதர்தா(ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் அடியான் ஒருவன் ஒன்றைச் சபித்தால், அந்தச் சாபம் வானத்தை நோக்கி உயரும். அங்கு வானத்தின் வாசல்கள் அடைக்கப்பட்டிருக்கும். பின்பு பூமியை - நோக்கித் தாழ்ந்து வரும். அங்கும் அதன் வாசல்கள் அடைக்கப்பட்டிருக்கும். பின்பு வலது பக்கமும், இடது பக்கமும் செல்லும். அங்கும் தான் அடையும் இடத்தைப் பெற்றுக் கொள்ளாவிட்டால், சபிக்கப்பட்டவரின் பக்கமே திரும்பிவிடும். அவன் அதற்குத் தகுதியானவனாக இருப்பின், அவனைச் சேரும். (தகுதி வாய்ந்தவனாக அவன்) இல்லையென்றால், அது சொன்னவரிடமே வந்து சேரும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4905)**

١٥٥٧ – وَعَنْ عِمْرَانَ بْنِ الْحُصَيْنِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ . بَيْنَمَا رَسُولُ اللَّهِ ﷺ فِي بَعْضِ أَسْفَارِهِ وَامْرَأَةٌ مِنَ الأَنْصَارِ عَلَى نَاقَةٍ فَضَجِرَتْ فَلَعَنَتْهَا فَسَمِعَ ذَلِكَ رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ : " خُذُوا مَا عَلَيْهَا وَدَعُوهَا فَإِنَّهَا مَلْعُونَةٌ " . قَالَ عِمْرَانُ : فَكَأَنِّي أَرَاهَا الآنَ تَمْشِي فِي النَّاسِ مَا يَعْرِضُ لَهَا أَحَدٌ . رَوَاهُ مُسْلِمٌ .

**1557** இம்ரான் இப்னு ஹுஸைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பயணத்தில் நபி (ஸல்) அவர்கள் இருந்தபோது, (மதீனாவாசியான) அன்சாரிப் பெண்மணி தம் ஒட்டகையில் வந்துக் கொண்டிருந்தார். அந்தப் பெண் சடைவடைந்து, அந்த ஒட்டகத்தை சபித்தார். அதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், "அந்த ஒட்டகையின் மீதுள்ள பொருட்களை எடுங்கள். அதைத் தனியே விடுங்கள். ஏனெனில், அது சபிக்கப்பட்டுவிட்டது" என்று கூறினார்கள்.

“சமீபத்தில் கூட அந்த ஒட்டகையை நான் பார்த்தது போல் உள்ளது. மக்களைச் சுற்றி வரும். அதை எவரும் பயன்படுத்தவில்லை” என, இம்ரான் இப்னு ஹுசைன் (ரழி) கூறுகின்றார்கள்.

**(முஸ்லிம்:2595)**

١٥٥٨ - وَعَنْ أَبِي بَرْزَةَ نَضْلَةَ بْنِ عُبَيْدٍ الأَسْلَمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَيْنَمَا جَارِيَةٌ عَلَى نَاقَةٍ عَلَيْهَا بَعْضُ مَتَاعِ الْقَوْمِ إِذْ بَصُرَتْ بِالنَّبِيِّ ﷺ وَتَضَايَقَ بِهِمُ الْجَبَلُ فَقَالَتْ : حَلْ اللَّهُمَّ الْعَنْهَا . فَقَالَ النَّبِيُّ ﷺ : " لاَ تُصَاحِبْنَا نَاقَةٌ عَلَيْهَا لَعْنَةٌ " . رَوَاهُ مُسْلِمٌ . قَوْلُهُ : " حَلْ " بِفَتْحِ الْحَاءِ الْمُهْمَلَةِ وَإِسْكَانِ اللاَّمِ : وَهِيَ كَلِمَةٌ لِزَجْرِ الإِبِلِ . وَاعْلَمْ أَنَّ هَذَا الْحَدِيثَ قَدْ يُسْتَشْكَلُ مَعْنَاهُ وَلاَ إِشْكَالَ فِيهِ بَلِ الْمُرَادُ النَّهْيُ أَنْ تُصَاحِبَهُمْ تِلْكَ النَّاقَةُ وَلَيْسَ فِيهِ نَهْيٌ عَنْ بَيْعِهَا وَذَبْحِهَا وَرُكُوبِهَا فِي غَيْرِ صُحْبَةِ النَّبِيِّ ﷺ بَلْ كُلُّ ذَلِكَ وَمَا سِوَاهُ مِنَ التَّصَرُّفَاتِ جَائِزٌ لاَ مَنْعَ مِنْهُ إِلاَّ مِنْ مُصَاحَبَةِ النَّبِيِّ ﷺ بِهَا لأَنَّ هَذِهِ التَّصَرُّفَاتِ كُلَّهَا كَانَتْ جَائِزَةً فَمُنِعَ بَعْضٌ مِنْهَا فَبَقِيَ الْبَاقِي عَلَى مَا كَانَ وَاللَّهُ أَعْلَمُ .

**1558** அபுபர்ஜா நள்லா இப்னு உபைதுல் அஸ்லமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு ஒட்டகையில் ஒரு பெண் பயணம் செய்தார். அந்த ஒட்டகை மீது பிற மக்களின் பொருட்களும் இருந்தன. அப்போது மலைப் பகுதி குறுக்கிட்டதால், நபித்தோழர்களுக்கு பயணம் செய்ய சிரமமானது. அப்பெண் “ஹல்” என தன் ஒட்டகையை கூறிவிட்டு, “இறைவா! இந்த ஒட்டகையை சபிப்பாயாக!” என்று கூறினார். அதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், “சாபமிடப்பட்ட இந்த ஒட்டகை நம்முடன் வரவேண்டாம்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2596)**

**குறிப்பு : “ஹல்” என்பது, ஒட்டகையை வேகமாக ஓட்டிச் செல்லக் கூறும் சொல்லாகும்.**

அறிந்து கொள்ளுங்கள்! இந்த ஹதீஸின் கருத்து, நோக்கம் “இந்த ஒட்டகை தங்களோடு இருக்க வேண்டாம்” என்பதேயாகும். அதை விற்க, அறுக்க, நபி (ஸல்) அவர்கள் இல்லாத போது பயணிக்கத் தடை ஏதுமில்லை. இதற்கும் இது அல்லாத மற்ற நல்லவற்றிக்கும் நபி (ஸல்) அவர்கள் இல்லாத போது பயன்படுத்துவது கூடும். தடை இல்லை. அல்லாஹ்வே மிக அறிந்தவன்!

## ٢٦٥ - باب جواز لَعْن [بعض] أَصْحاب المعَاصي، غير المعيَّنين

## பாடம் : 265 - பெயர் குறிப்பிடாமல் குற்றமிழைப்போரைச் சபிப்பது கூடும்

قَالَ اللَّهُ تَعَالَى : أَلَا لَعْنَةُ اللَّهِ عَلَى الظَّالِمِينَ . وَقَالَ تَعَالَى : فَأَذَّنَ مُؤَذِّنٌ بَيْنَهُمْ أَنْ لَعْنَةُ اللَّهِ عَلَى الظَّالِمِينَ . وَثَبَتَ فِي الصَّحِيحِ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ : " لَعَنَ اللَّهُ الْوَاصِلَةَ وَالْمُسْتَوْصِلَةَ " وَأَنَّهُ قَالَ : " لَعَنَ اللَّهُ آكِلَ الرِّبَا " وَأَنَّهُ : " لَعَنَ الْمُصَوِّرِينَ " وَأَنَّهُ قَالَ : " لَعَنَ اللَّهُ مَنْ غَيَّرَ مَنَارَ الأَرْضِ " أَيْ حُدُودَهَا وَأَنَّهُ قَالَ : " لَعَنَ اللَّهُ السَّارِقَ يَسْرِقُ الْبَيْضَةَ " وَأَنَّهُ قَالَ : " لَعَنَ اللَّهُ مَنْ لَعَنَ وَالِدَيْهِ " " وَلَعَنَ اللَّهُ مَنْ ذَبَحَ لِغَيْرِ اللَّهِ " وَأَنَّهُ قَالَ : " مَنْ أَحْدَثَ فِيهَا حَدَثًا أَوْ آوَى مُحْدِثًا فَعَلَيْهِ لَعْنَةُ اللَّهِ وَالْمَلَائِكَةِ وَالنَّاسِ أَجْمَعِينَ " وَأَنَّهُ قَالَ : " اللَّهُمَّ الْعَنْ رِعْلًا وَذَكْوَانَ وَعُصَيَّةَ : عَصَوُا اللَّهَ وَرَسُولَهُ " وَهَذِهِ ثَلَاثُ قَبَائِلَ مِنَ الْعَرَبِ وَأَنَّهُ قَالَ : " لَعَنَ اللَّهُ الْيَهُودَ اتَّخَذُوا قُبُورَ أَنْبِيَائِهِمْ مَسَاجِدَ " وَأَنَّهُ " لَعَنَ الْمُتَشَبِّهِينَ مِنَ الرِّجَالِ بِالنِّسَاءِ وَالمتشبهات مِنَ النِّسَاءِ بِالرِّجَالِ " . وَجَمِيعُ هَذِهِ الأَلْفَاظِ فِي الصَّحِيحِ : بَعْضُهَا فِي صَحِيحَيِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ وَبَعْضُهَا فِي أَحَدِهِمَا وَإِنَّمَا قَصَدْتُ الاخْتِصَارَ بِالأَشَارَةِ إِلَيْهِمَا وَسَأَذْكُرُ مُعْظَمَهَا فِي أَبْوَابِهَا مِنْ هَذَا الْكِتَابِ إِنْ شَاءَ اللَّهُ تَعَالَى .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அறிந்து கொள்ளுங்கள்! இந்த அநீதக்காரர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும். (11:18)*

*அநீதக்காரர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டு என அறிவிப்பாளர் அவர்களிடையே அறிவித்தார். (7:44)*

ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

“சவுரி முடியைப் பயன்படுத்துபவளையும், அந்த முடியை வாங்கும் பெண்ணையும் அல்லாஹ் சபித்துவிட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“வட்டியை சாப்பிடுவோரை அல்லாஹ் சபித்துவிட்டான்.”

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“உருவம் வரைவோரை அல்லாஹ் சபித்துவிட்டான்.”

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“நிலங்களின் எல்லைக் கற்களை மாற்றி அமைப்பவரை அல்லாஹ் சபித்து விட்டான்.”

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“முட்டையைத் திருடும் நபரை அல்லாஹ் சபித்துவிட்டான்.”

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“பெற்றோரைச் சபிப்பவரை அல்லாஹ் சபித்துவிட்டான்.”

“அல்லாஹ் அல்லாதவைகளின் பெயரால் அறுப்போரை அல்லாஹ் சபித்துவிட்டான்.”

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“இந்த தீனில் புதிய செயல்களை உருவாக்கினால் அல்லது அந்த புதிய செயலை ஆதரித்தால், அவர் மீது அல்லாஹ்வின் சாபம் மற்றும் வானவர்கள், அவனது தூதர் ஆகியோரின் சாபம் உண்டு.”

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“இறைவா! அல்லாஹ்வையும், அவனது தூதரையும் புறக்கணித்த அரேபிய வம்சமான ரிஃலு, ஃதக்வான், உஸய்யா ஆகிய கூட்டத்தாரைச் சபிப்பாயாக!”

மேலும் நபி (ஸல்) கூறினார்கள்:

“தங்களுடைய நபிமார்களின் மண்ணறைகளை வணங்குமிடமாக உருவாக்கிக் கொண்ட யூதர்களை அல்லாஹ் சபிப்பானாக!”

பெண்கள் போல் நடக்கும் ஆண்களையும், ஆண்கள் போல் நடக்கும் பெண்களையும் நபி (ஸல்) சபித்தார்கள்.

மேற்கண்ட அனைத்தும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களாகும். இவற்றில் சில புகாரி (2086, 6783, 1870, 4090, 435, 5886), முஸ்லிமிலும் (2122, 1597, 1978, 1687, 1366, 675, 529) சில இரண்டில் ஒன்றிலும் உள்ளது. சுருக்கமாக இவற்றைச் சுட்டிக் காட்டுவது போதுமானதாகும். அல்லாஹ் நாடினால், இதே நூலில் மற்ற பாடங்களில் இந்த ஹதீஸ்களை முழுமையாகக் கூறுவேன். **(மூலநூலாசிரியர்)**

## ٢٦٦ – بابُ تحريم سَبّ المسلم بغير حقّ

## பாடம் : 266 - காரணமின்றி முஸ்லிமை ஏசுவது கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசமுள்ள ஆண்களையும், இறை விசுவாசமுள்ள பெண்களையும் அவர்கள் செய்ததற்கன்றி நோவினை செய்தவர்கள் அவதூறையும், பகிரங்க பாவத்தையும் சுமந்து கொண்டார்கள். (33:58)*

١٥٥٩ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ " سِبَابُ الْمُسْلِمِ فُسُوقٌ وَقِتَالُهُ كُفْرٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ

**1559** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"முஸ்லிமை திட்டுவது குற்றமாகும். அவனைக் கொல்வது (குப்ர்) இறைமறுப்பாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6044. முஸ்லிம்:64)**

١٥٦٠ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " لاَ يَرْمِي رَجُلٌ رَجُلاً بِالْفِسْقِ أَوْ الْكُفْرِ إِلاَّ ارْتَدَّتْ عَلَيْهِ إِنْ لَمْ يَكُنْ صَاحِبُهُ كَذَلِكَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1560** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர், மற்றொருவரை பாவத்தின் பெயரால், இறை மறுப்பின் பெயரால் அதற்குரியவராக அவர் இருந்தாலே தவிர குற்றம் சாட்ட வேண்டாம். அதற்குரியவராக அவர் இல்லையென்றால், அது சொன்னவரின் மீதே திரும்பிவிடும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டேன். **(புகாரி:6045)**

١٥٦١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الْمُتَسَابَّانِ مَا قَالاَ فَعَلَى الْبَادِي مِنْهُمَا حَتَّى يَعْتَدِيَ الْمَظْلُومُ " . رَوَاهُ مُسْلِمٌ

**1561** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு பேர்கள் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டால், (அவ்விருவரில்) அநீதம் இழைக்கப்பட்டவர் வரம்பு மீறும் வரை, இருவர் கூறியவைகளும் முதலில் திட்ட ஆரம்பித்தவரையே சேரும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:3587)**

١٥٦٢ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : أُتِيَ النَّبِيُّ ﷺ بِرَجُلٍ قَدْ شَرِبَ قَالَ : " اضْرِبُوهُ " . قَالَ أَبُو هُرَيْرَةَ : فَمِنَّا الضَّارِبُ بِيَدِهِ وَالضَّارِبُ بِنَعْلِهِ وَالضَّارِبُ بِثَوْبِهِ . فَلَمَّا انْصَرَفَ قَالَ بَعْضُ الْقَوْمِ : أَخْزَاكَ اللَّهُ : قَالَ : " لاَ تَقُولُوا هَذَا لاَ تُعِينُوا عَلَيْهِ الشَّيْطَانَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1562** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மது குடித்த ஒருவன் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டான். "அவனை அடியுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். உடனே எங்களில் சிலர் தங்கள் கைகளால் அடித்தனர். சிலர் தங்கள் செருப்பால் அடித்தனர். சிலர் தங்கள் ஆடையால் அடித்தனர். அடித்து முடித்த பின்பு அங்கிருந்தோரில் சிலர், "அல்லாஹ் உம்மை இழிவுப்படுத்துவானாக!" என்று கூறினார். உடனே "இவ்வாறு கூறாதீர்கள். இதன் மூலம் ஷைத்தானுக்கு உதவாதீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6781)**

١٥٦٣ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ قَذَفَ مَمْلُوكَهُ بِالزِّنَا يُقَامُ عَلَيْهِ الْحَدُّ يَوْمَ الْقِيَامَةِ إِلاَّ أَنْ يَكُونَ كَمَا قَالَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1563** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தன் அடிமையைப் பற்றி விபச்சாரம் செய்ததாகக் கூறி ஒருவன் இட்டுக்கட்டினால், அவர் சொன்னது போல் அவர் இல்லாமல் இருந்தால், மறுமை நாளில் சொன்னவருக்கு (விபச்சாரத்திற்குரிய) தண்டனை வழங்கப்படும்” என்று நபி (ஸல்) கூறக் கேட்டேன். **(புகாரி:6858. முஸ்லிம்:1660)**

## ٢٦٧ – باب تحريم سَبّ الأموات بغير حَقّ وَمَصْلحة شَرعيّة:

## பாடம் : 267 - காரணமின்றியும், மார்க்க நலன் இன்றியும் இறந்தோரை திட்டுவது கூடாது.

وَهِيَ التَّحْذِيرُ مِنْ الاقْتِدَاءِ بِهِ فِي بِدْعَتِهِ وَفِسْقِهِ وَنَحْوِ ذَلِكَ وَفِيهِ الأيَةُ وَالأحَادِيثُ السَّابِقَةُ فِي الْبَابِ قَبْلَهُ .

இறந்த ஒருவர், மார்க்கத்தில் புதிதாக உருவாக்கியவை, அவர் செய்த பாவம் மற்றும் இது போன்றவற்றை மக்களுக்கு எச்சரிப்பது மார்க்க நலன் ஆகும். இது சம்பந்தமான வசனங்கள், ஹதீஸ்கள், முந்திய பாடங்களில் உள்ளன.

١٥٦٤ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ . " لاَ تَسُبُّوا الأمْوَاتَ فَإِنَّهُمْ قَدْ أَفْضَوْا إِلَى مَا قَدَّمُوا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1564** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறந்தோரை திட்டாதீர்கள். அவர்கள் செய்து, முன்பு அனுப்பிவிட்டதின் பக்கம் (செய்த செயல்களின் பக்கம்) அவர்கள் போய் சேர்ந்து விட்டார்கள்” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1393)**

## ٢٦٨ – باب النّهي عَن الإيذاء

## பாடம் : 268 - பிறரை நோவினை செய்வது கூடாது

**قَالَ اللَّهُ تَعَالَى : وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا**

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறை விசுவாசிகளான ஆண்களையும், பெண்களையும் அவர்கள் செய்தவற்றிக்காகவே அன்றி; நோவினை செய்தவர்கள், அவதூறையும் தெளிவான பாவத்தையும் சுமந்து கொண்டார்கள். (33:58)*

١٥٦٥ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " الْمُسْلِمُ مَنْ سَلِمَ الْمُسْلِمُونَ مِنْ لِسَانِهِ وَيَدِهِ وَالْمُهَاجِرُ مَنْ هَجَرَ مَا نَهَى اللَّهُ عَنْهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1565** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவரின் நாவால் அவரது கையால் பிற முஸ்லிம்கள் பாதுகாப்பு பெற்றால், அவரே முஸ்லிமாவார். அல்லாஹ் தடுத்துள்ளவற்றை வெறுத்து ஒதுக்கியவரே ஹிஜ்ரத் செய்தவர் ஆவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:10. முஸ்லிம்:40)**

١٥٦٦ – وَعَنْهُ ) عَبْد اللّه بْنِ عَمْرو ( قَالَ : قَالَ رَسُولُ اللّه ﷺ : " مَنْ أَحَبَّ أَنْ يُزَحْزَحَ عَنِ النَّارِ وَيَدْخُلَ الْجَنَّةَ فَلْتَأْته مَنِيَّتُهُ وَهُوَ يُؤْمِنُ بِاللّه وَالْيَوْمِ الأخرِ وَلْيَأْتِ إِلَى النَّاسِ الَّذي يُحِبُّ أَنْ يُؤْتَى إِلَيْه " . رَوَاهُ مُسْلِمٌ وَهُوَ بَعْضُ حَديثٍ طَوِيلٍ سَبَقَ في ) بَاب طَاعَة وُلاَة الأمُورِ ( .

**1566** அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தான் நரகத்திலிருந்து காப்பாற்றப்படவும், சொர்க்கத்தில் சேர்க்கப்படவும் ஒருவர் விரும்பினால், அவர் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பிய நிலையில் மரணம் அவரிடம் வரட்டும். மேலும் தன்னிடம் மக்கள் அன்புடன் நடந்து கொள்வதை விரும்புபவர், அவரும் மக்களிடமும் அவ்வாறே நடந்து கொள்ளட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1844)**

**குறிப்பு : “அதிகாரம் பெற்றோருக்குக் கட்டுப்படுதல்” என்ற பாடத்தின் கீழ் உள்ள 668-வது ஹதீஸின் நீண்டபகுதியில் ஒரு பகுதி இது.**

## ٢٦٩ – باب النّهي عَنْ التباغض والتّقاطع والتدابر

## பாடம் : 269 - ஒருவருக்கொருவர் பகைமை கொள்வது, உறவை முறிப்பது, புறக்கணிப்பது கூடாது

قَالَ اللّهُ تَعَالَى : إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ . وَقَالَ تَعَالَي : أَذلَّة عَلَى الْمُؤْمِنينَ أَعزَّةٍ عَلَى الْكَافرِينَ . وَقَالَ تَعَالَى : مُحَمَّدٌ رَسُولُ اللّهِ وَالَّذينَ مَعَهُ أَشدَّاءُ عَلَى الْكُفَّارِ رُحَمَاءُ بَيْنَهُمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக இறை விசுவாசிகள் சகோதரர்கள் ஆவர். (49:10)*

*....இறை விசுவாசிகளிடம் பணிவாகவும், இறை மறுப்பாளர்களிடம் கடுமையாகவும் அவர்கள் இருப்பார்கள். (5:54)*

*முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதராவார். மேலும் அவருடன் உள்ளவர்கள், இறைமறுப்பாளர்களிடம் மிகக் கடுமையாகவும், தங்களிடையே இரக்க உணர்வுடனும் நடப்பார்கள். (48:29)*

١٥٦٧ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ النَّبيَّ ﷺ قَالَ : " لاَ تَبَاغَضُوا وَلاَ تَحَاسَدُوا وَلاَ تَدَابَرُوا وَلاَ تَقَاطَعُوا وَكُونُوا عبَادَ اللّه إخْوَانًا . وَلاَ يَحلُّ لمُسْلمٍ أَنْ يَهْجُرَ أَخَاهُ فَوْقَ ثَلاَثٍ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1567** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் ஒருவருக்கொருவர் பகைமை கொள்ளாதீர்கள். பொறாமை கொள்ளாதீர்கள். புறக்கணிப்புச் செய்து கொள்ளாதீர்கள். உறவுகளைத் துண்டித்துக் கொள்ளாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வின் அடிமைகளாக - சகோதரர்களாக ஆகிவிடுங்கள். ஒரு முஸ்லிம், தன் மற்றொரு முஸ்லிம் சகோதரனை மூன்று நாட்களுக்கு மேல் வெறுத்திருப்பது கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6065. முஸ்லிம்:2559)**

١٥٦٨ – وَعَنْ أَبي هُرَيْرَةَ رَضيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّه ﷺ قَالَ : " تُفْتَحُ أَبْوَابُ الْجَنَّة يَوْمَ الاثْنَيْنِ وَيَوْمَ الْخَميسِ فَيُغْفَرُ لكُلِّ عَبْد لاَ يُشْرِكُ بِاللّه شَيْئًا إِلاَّ رَجُلاً كَانَتْ بَيْنَهُ وَبَيْنَ أَخيه شَحْنَاءُ فَيُقَالُ : أَنْظرُوا هَذَيْنِ حَتَّى يَصْطَلحَا ! أَنْظرُوا هَذَيْنِ حَتَّى يَصْطَلحَا ! " رَوَاهُ مُسْلمٌ . وَفي روَايَة لَهُ : " تُعْرَضُ الأعْمَالُ في كُلِّ يَوْمِ خَميسٍ وَيَوْمِ اثْنَيْنِ " . وَذَكَرَ نَحْوَهُ .

**1568** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“திங்கள்கிழமையும், வியாழக்கிழமையும் சொர்க்கத்தின் வாசல்கள் திறக்கப்படும். அல்லாஹ்வுக்கு எதையும் இணை வைக்காத அனைவருக்கும் மன்னிப்பு வழங்கப்படும். ஆனால் ஒருவருக்கும், அவரின் சகோதரருக்கும் பகைமை இருக்கும் மனிதனைத் தவிர. ‘அவ்விருவரும் (இணக்கமாக) ஆகும் வரை பொறுத்திருங்கள். அந்த இருவரும் ஒற்றுமை ஆகும் வரை பொறுத்திருங்கள்’ என்று அல்லாஹ் கூறுவான்” என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2565)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், “ஒவ்வொரு வியாழன், திங்கள் கிழமைகளிலும் செயல்கள் பற்றி (அல்லாஹ்விடம்) பரிசீலிக்கப்படும்” என்று உள்ளது.

## ٢٧٠ – باب تحريم الْحَسَد :

## பாடம் : 270 - பொறாமை கொள்வது கூடாது.

وَهُوَ تَمَنِّي زَوَالِ النِّعْمَة عَنْ صَاحِبِهَا سَوَاءٌ كَانَتْ نِعْمَةَ دِينٍ أَوْ دُنْيَا قَالَ اللّٰهُ تَعَالَى : أَمْ يَحْسُدُونَ النَّاسَ عَلَى مَا آتَاهُمُ اللّٰهُ مِنْ فَضْلِهِ وَفِيهِ حَدِيثُ أَنَسٍ السَّابِقُ فِي الْبَابِ قَبْلَهُ .

மார்க்கம் மற்றும் உலகத்தின் நன்மை எதுவாயினும், அது உள்ளவனிடமிருந்து அவை நீங்கிட விரும்புவதே பொறாமையாகும்.

**அல்லாஹ் கூறுகிறான்:** *அல்லாஹ் தன் அருளினால் அவர்களுக்கு வழங்கியது விஷயமாக மக்களை அவர்கள் பொறாமை கொள்கிறார்களா? (4:54)*

இதற்கு முன் உள்ள பாடத்தின் கீழ் இடம்பெற்றுள்ள, அனஸ் (ரழி) அறிவித்துள்ள ஹதீஸ் எண் 1567ம் இதற்குப் பொருத்தமாகும்.

١٥٦٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِيَّاكُمْ وَالْحَسَدَ : فَإِنَّ الْحَسَدَ يَأْكُلُ الْحَسَنَاتِ كَمَا تَأْكُلُ النَّارُ الْحَطَبَ " أَوْ قَالَ : الْعُشْبَ . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1569** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பொறாமை கொள்வது பற்றி உங்களை எச்சரிக்கிறேன். நெருப்பை விறகு சாப்பிடுவது போல் (அல்லது காய்ந்த வைக்கோலைத் தின்பது போல்) நன்மைகளை பொறாமை சாப்பிட்டு விடும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4903)**

## ٢٧١ – بابُ النَّهي عَن التجسُّس والتسمُّع لكلام من يكره استماعه

## பாடம் : 271 - பிறர் குறையைத் தேடி அலைவது கூடாது. மேலும் ஒட்டுக் கேட்பதும் கூடாது.

قَالَ اللّٰهُ تَعَالَى : وَلاَ تَجَسَّسُوا . وَقَالَ تَعَالَى : وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *பிறரின் குறைகளைத் துருவி ஆராயாதீர்கள். (49:12)*

*இறைவிசுவாசிகளாக ஆண்களையும், பெண்களையும் அவர்கள் செய்யாததைக் கூறி நோவினை செய்கின்றவர்கள், அவதூறையும் தெளிவான பாவத்தையும் சுமந்து கொண்டவர்களாவர். (33:58)*

١٥٧٠– وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِيَّاكُمْ وَالظَّنَّ فَإِنَّ الظَّنَّ أَكْذَبُ الْحَدِيثِ وَلاَ تَحَسَّسُوا وَلاَ تَجَسَّسُوا وَلاَ تَنَافَسُوا وَلاَ تَحَاسَدُوا وَلاَ تَبَاغَضُوا وَلاَ تَدَابَرُوا وَكُونُوا عِبَادَ اللَّهِ إِخْوَانًا كَمَا أَمَرَكُمْ الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ لاَ يَظْلِمُهُ وَلاَ يَخْذُلُهُ وَلاَ يَحْقِرُهُ التَّقْوَى هَاهُنَا التَّقْوَى هَاهُنَا " وَيُشِيرُ إِلَى صَدْرِهِ " بِحَسْبِ امْرِئٍ مِنَ الشَّرِّ أَنْ يَحْقِرَ أَخَاهُ الْمُسْلِمَ كُلُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ حَرَامٌ دَمُهُ وَعِرْضُهُ وَمَالُهُ إِنَّ اللَّهَ لاَ يَنْظُرُ إِلَى أَجْسَادِكُمْ وَلاَ إِلَى صُوَرِكُمْ وَلَكِنْ يَنْظُرُ إِلَى قُلُوبِكُمْ وَأَعْمَالِكُمْ " وَفِي رِوَايَةٍ : " لاَ تَحَاسَدُوا وَلاَ تَبَاغَضُوا وَلاَ تَجَسَّسُوا وَلاَ تَحَسَّسُوا وَلاَ تَنَاجَشُوا وَكُونُوا عِبَادَ اللَّهِ إِخْوَانًا " . وَفِي رِوَايَةٍ : " لاَ تَقَاطَعُوا وَلاَ تَدَابَرُوا وَلاَ تَبَاغَضُوا وَلاَ تَحَاسَدُوا وَكُونُوا عِبَادَ اللَّهِ إِخْوَانًا " وَفِي رِوَايَةٍ : " وَلاَ تَهَاجَرُوا وَلاَ يَبِعْ بَعْضُكُمْ عَلَى بَيْعِ بَعْضٍ " . رَوَاهُ مُسْلِمٌ بِكُلِّ هَذِهِ الرِّوَايَاتِ وَرَوَى الْبُخَارِيُّ أَكْثَرَهَا .

**1570** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சந்தேகம் கொள்வது பற்றி உங்களை எச்சரிக்கிறேன். சந்தேக எண்ணம் கொள்வது, பேச்சில் மிகப்பெரும் பொய்யாகும். நீங்கள் ஒட்டுக் கேட்காதீர்கள். பிறர் குறையை ஆராயாதீர்கள். ஒருவருக்கொருவர் பெருமை கொள்ளாதீர்கள்.ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள். ஒருவரையொருவர் புறக்கணித்துக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு கட்டளையிட்டபடி நீங்கள் அல்லாஹ்வின் அடிமைகளாக, சகோதரர்களாக ஆகி விடுங்கள். ஒரு முஸ்லிம், மற்றொரு முஸ்லிமின் சகோதரர் ஆவார். இவருக்கு அவர் அநீதம் செய்யமாட்டார். இவரை அவர் ஏமாற்ற மாட்டார். இவரை அவர் இழிவுபடுத்திடமாட்டார். இறையச்சம் இங்கே உள்ளது. இறையச்சம் இங்கே உள்ளது” என்று நபி (ஸல்) அவர்கள் கூறிக் கொண்டே தமது நெஞ்சை சுட்டிக் காட்டினார்கள். மேலும் தொடர்ந்து, “ஒருவன் தன் சகோதர முஸ்லிமை இழிவாக எண்ணுவது தீமையாகும். ஒவ்வொரு முஸ்லிமுக்கும் ஒரு முஸ்லிமின் ரத்தம், அவனது கண்ணியம், அவனது சொத்து ஆகியவை (சீர்குலைக்க) தடை செய்யப்பட்டதாகும். நிச்சயமாக அல்லாஹ் உங்கள் உடலையோ, உங்கள் தோற்றத்தையோ பார்க்கமாட்டான். எனினும் உங்களின் இதயம், உங்களின் செயல்களின் பக்கமே பார்க்கிறான்” என்றும் கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது:

“நீங்கள் பொறாமை கொள்ளாதீர்கள். நீங்கள் கோபம் கொள்ளாதீர்கள். நீங்கள் பிறர் குறையைத் தேடி அலையாதீர்கள். நீங்கள் ஒட்டுக் கேட்காதீர்கள். பிறர் வியாபாரத்தில் தலையிட்டு விலையை உயர்த்தாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வின் அடிமைகளாக, சகோதரர்களாக ஆகிவிடுங்கள்.”

மற்றொரு அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது:

“உறவுகளைத் துண்டித்துக் கொள்ளாதீர்கள். புறக்கணித்துக் கொள்ளாதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். பொறாமை கொள்ளாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வின் அடிமைகளாக, சகோதரர்களாக ஆகி விடுங்கள்.”

மற்றொரு அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது:

“நீங்கள் வெறுத்துக் கொள்ளாதீர்கள். ஒருவர், மற்றொருவரின் வியாபாரத்தில் தலையிடாதீர்கள்.”

**(இவை அனைத்தும் முஸ்லிமில் (2563,2564) உள்ளது. இவற்றில் அதிகமானவை புகாரியிலும் (6064,6065) உள்ளது)**

١٥٧١ – وَعَنْ مُعَاوِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّكَ إِنْ اتَّبَعْتَ عَوْرَاتِ الْمُسْلِمِينَ أَفْسَدْتَهُمْ أَوْ كِدْتَ أَنْ تُفْسِدَهُمْ " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1571** முஆவியா (ரலி) அறிவிக்கின்றார்கள்:

"நீர் முஸ்லிம்களின் குறைகளைத் துருவி ஆராய்ந்தால், அவர்களை நீர் கெடுத்தவராக ஆகிவிடுவீர். அல்லது அவர்களைக் கெடுக்க முயற்சித்தவராவீர்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4888. இது ஸஹீஹான ஹதீஸாகும்.)**

١٥٧٢ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ أُتِيَ بِرَجُلٍ فَقِيلَ لَهُ : هَذَا فُلاَنٌ تَقْطُرُ لِحْيَتُهُ خَمْرًا فَقَالَ : إِنَّا قَدْ نُهِينَا عَنْ التَّجَسُّسِ وَلَكِنْ إِنْ يَظْهَرْ لَنَا شَيْءٌ نَأْخُذْ بِهِ . حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ .

**1572** ஒரு மனிதர் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அவர்களிடம் அழைத்து வரப்பட்டு, "இந்த மனிதரின் தாடி, மதுவை சொட்டு சொட்டாக வடிக்கிறது (அதாவது இவர் குடிகாரராக உள்ளார்)" என்று கூறப்பட்டது. அதற்கு அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அவர்கள், "அடுத்தவரின் குறையைத் தேடி அலைவதை விட்டும் நாம் தடுக்கப்பட்டுள்ளோம். ஆனாலும், நம்மிடம் வெளிப்படையாக ஒன்று வெளியானால், அதை நாம் குற்றமாகப் பிடிப்போம்" என்று கூறினார்கள்.

**(புகாரி, முஸ்லிம் நிபந்தனைப்படி அபூதாவூதில் (4890) உள்ளது)**

## ٢٧٢ – باب النّهي عَنْ سُوء الظنّ بالْمُسلمين من غير ضرورة

## பாடம் : 272 - காரணமின்றி முஸ்லிம்களைத் தவறாக எண்ணுவது கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اجْتَنِبُوا كَثِيرًا مِنَ الظَّنِّ إِنَّ بَعْضَ الظَّنِّ إِثْمٌ

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளே! சந்தேகம் கொள்வதைத் தவிர்த்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக சந்தேகம் கொள்வதில் சில குற்றமாகிவிடும். (49:12)*

١٥٧٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِيَّاكُمْ وَالظَّنَّ فَإِنَّ الظَّنَّ أَكْذَبُ الْحَدِيثِ " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1573** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சந்தேகம் கொள்வது பற்றி உங்களை எச்சரிக்கிறேன். நிச்சயமாக! சந்தேகம், பேச்சில் மிகப் பொய்யாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6064. முஸ்லிம்:2563)**

## ٢٧٣ – باب تحريم احتقار المُسْلمين

## பாடம் : 273 - முஸ்லிம்களை இழிவாகக் கருதுவது கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لاَ يَسْخَرْ قَومٌ مِنْ قَوْمٍ عَسَى أَنْ يَكُونُوا خَيْرًا مِنْهُمْ وَلاَ نِسَاءٌ مِنْ نِسَاءٍ عَسَى أَنْ يَكُنَّ خَيْرًا مِنْهُنَّ وَلاَ تَلْمِزُوا أَنْفُسَكُمْ وَلاَ تَنَابَزُوا بِالأَلْقَابِ بِئْسَ الاسْمُ الْفُسُوقُ بَعْدَ الأِيمَانِ وَمَنْ لَمْ يَتُبْ فَأُولَئِكَ هُمُ الظَّالِمُونَ . وَقَالَ تَعَالَى: وَيْلٌ لِكُلِّ هُمَزَةٍ لُمَزَةٍ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறை விசுவாசிகளே! ஆண்கள் மற்ற ஆண்களைப் பரிகாசம் செய்ய வேண்டாம். அவர்கள் இவர்களை விட (அல்லாஹ்விடம்) சிறந்தவர்களாக இருக்கலாம். மேலும், பெண்கள் மற்ற பெண்களை பரிகாசம் செய்ய வேண்டாம். அவர்கள் இவர்களை விட (அல்லாஹ்விடம்) சிறந்தவர்களாக இருக்கலாம். ஒருவர் மற்றவரை இழிவாகப் பேசாதீர்கள்.*

*பட்டப்பெயர்களை ஒருவருக்கொருவர் சூட்டிக் கொள்ளாதீர்கள். பட்டப் பெயர் வைப்பது, இறை நம்பிக்கை கொண்டபின் பாவமாகும். இதிலிருந்து ஒருவர் விலகவில்லையானால் அவர்களே அநீதக்காரர்கள் ஆவர். (49:11)*

*புறம்பேசி, குறைக் கூறித் திரிவோர் அனைவருக்கும் கேடுதான். (104:1)*

١٥٧٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " بِحَسْبِ امْرِئٍ مِنَ الشَّرِّ أَنْ يَحْقِرَ أَخَاهُ الْمُسْلِمَ " . رَوَاهُ مُسْلِمٌ . وَقَدْ سَبَقَ قَرِيبًا بِطُولِهِ .

**1574** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முஸ்லிமான தன் சகோதரரை இழிவாக எண்ணுவதே, ஒரு மனிதனுக்கு தீமையாக அமைய போதுமானதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2564. 1570–வது ஹதீஸிலும் உள்ளது)**

١٥٧٥ –وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ:"لاَ يَدْخُلُ الْجَنَّةَ مَنْ فِي قَلْبِهِ مِثْقَالُ ذَرَّةٍ مِنْ كِبْرٍ !" . فَقَالَ رَجُلٌ: إِنَّ الرَّجُلَ يُحِبُّ أَنْ يَكُونَ ثَوْبُهُ حَسَنًا وَنَعْلُهُ حَسَنَةً . فَقَالَ:" إِنَّ اللَّهَ جَمِيلٌ يُحِبُّ الْجَمَالَ . الْكِبْرُ بَطَرُ الْحَقِّ وَغَمْطُ النَّاسِ". رَوَاهُ مُسْلِمٌ . وَمَعْنَى " بَطَرُ الْحَقِّ " : دَفْعُهُ . " وَغَمْطُهُمْ " : احْتِقَارُهُمْ . وَقَدْ سَبَقَ بَيَانُهُ أَوْضَحَ مِنْ هَذَا فِي بَابِ الْكِبْرِ.

**1575** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அணுவளவேனும் பெருமையை தன் உள்ளத்தில் வைத்திருப்பவர், சொர்க்கத்தில் நுழைய முடியாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். அப்போது ஒருவர், "தன் ஆடை அழகாக, தன் செருப்பு அழகாக இருக்கவேண்டும் என ஒருவர் விரும்புகிறார். (இது பெருமையா?)" என்று கேட்டார். "நிச்சயமாக அல்லாஹ், அழகானவன். அழகை விரும்புகிறான். பெருமை என்பது, சத்தியத்தை மறுப்பதும், மக்களைக் கேவலமாகக் கருதுவதுமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:91. "பெருமை" பாடத்தின் கீழ் விளக்கமாக உள்ளது)**

١٥٧٦ – وَعَنْ جُنْدُبِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " قَالَ رَجُلٌ : وَاللَّهِ لاَ يَغْفِرُ اللَّهُ لِفُلاَنٍ . فَقَالَ اللَّهُ عَزَّ وَجَلَّ : مَنْ ذَا الَّذِي يَتَأَلَّى عَلَيَّ أَلاَّ أَغْفِرَ لِفُلاَنٍ ؟ ! إِنِّي قَدْ غَفَرْتُ لَهُ وَأَحْبَطْتُ عَمَلَكَ ! " رَوَاهُ مُسْلِمٌ .

**1576** ஜுன்துப் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இன்ன மனிதரை அல்லாஹ் மன்னிக்க மாட்டான்" என்று ஒருவர் கூறினால், அப்போது அல்லாஹ், "இன்னாரை நான் மன்னிக்க மாட்டேன் என்று கூறி என்மீது அதிகாரம் செலுத்துபவன் யார்? இதோ! நான் அவரை மன்னித்து விட்டேன். மாறாக உன்னுடைய (சத்தியம் செய்தவரின்) நற்செயலை வீணாக்கி விட்டேன்" என்று கூறுவான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2621)**

## ٢٧٤ – باب النَّهي عَن إظْهَارِ الشماتة بالمسلم

## பாடம் : 274 - ஒரு முஸ்லிமின் துன்பம் கண்டு மகிழ்ச்சியை வெளிப்படுத்துவது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ . وَقَالَ تَعَالَى : إِنَّ الَّذِينَ يُحِبُّونَ أَنْ تَشِيعَ الْفَاحِشَةُ فِي الَّذِينَ آمَنُوا لَهُمْ عَذَابٌ أَلِيمٌ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக இறைவிசுவாசிகள், சகோதரர்கள் ஆவர். (49:10)*

*இறைவிசுவாசிகளிடம் கெட்ட செயல் பரவுவதை விரும்புகின்ற அவர்களுக்கு இவ்வுலகிலும், மறுமையிலும் நோவினை தரும் வேதனை உண்டு. (24:19)*

١٥٧٧ – وَعَنْ وَاثِلَةَ بْنِ الأَسْقَعِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تُظْهِرْ الشَّمَاتَةَ لأَخِيكَ فَيَرْحَمَهُ اللَّهُ وَيَبْتَلِيكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1577** வாஸிலா இப்னுல் அஸ்கஃ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உம் சகோதரரின் துன்பம் கண்டு மகிழ்ச்சியை வெளிப்படுத்தாதீர். (இதனால்) அல்லாஹ் அவர் மீது அருள் புரிவான். உம்மை சோதித்து விடுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2506. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

"பிறர் குறையைத் தேடி அலைதல்" என்ற பாடத்தின் கீழ் 1570-வது ஹதீஸில் உள்ள "ஒரு முஸ்லிமின் மீது மற்ற அனைத்து முஸ்லிமின் (சொத்து, உயிர், கண்ணியம்) ஆகியவை ஹராமாகும்" என்ற வாசகம் இந்த பாடத்திற்குப் பொருந்தும்.

## ٢٧٥ – باب تحريم الطَّعْن في الأنساب الثابتة في ظاهر الشرع

## பாடம் : 275 - பாரம்பரியத்தைக் குத்திக் காட்டிப் பேசுவது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளான ஆண்களையும், பெண்களையும் அவர்கள் செய்ததைத் தவிர மற்றவற்றிற்கு நோவினை செய்தவர்கள்; அவதூறையும், தெளிவான பாவத்தையும் சுமந்தவர்களாவர். (33:58)*

١٥٧٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " اثْنَتَانِ فِي النَّاسِ هُمَا بِهِمْ كُفْرٌ : الطَّعْنُ فِي النَّسَبِ وَالنِّيَاحَةُ عَلَى الْمَيِّتِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1578** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு விஷயங்கள், மக்களிடம் உள்ளன. அந்த இரண்டுமே இறை மறுப்புக் கொள்கையாகும். (1) பாரம்பரியத்தைக் குத்திக் காட்டிப் பேசுவது (2) இறந்தவருக்காக ஒப்பாரி வைத்து அழுவது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:67)**

## ٢٧٦ – بابُ النَّهي عَن الغشّ والخِدَاع

## பாடம் : 276 - ஏமாற்றுதல் செய்தல் கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறை விசுவாசிகளான ஆண்களையும், பெண்களையும் அவர்கள் செய்யாத செயலுக்காக நோவினை செய்கின்றவர்கள் அவதூறையும், தெளிவான பாவத்தையும் சுமந்தவர்களாவர். (33:58)*

١٥٧٩ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ حَمَلَ عَلَيْنَا السِّلاَحَ فَلَيْسَ مِنَّا وَمَنْ غَشَّنَا فَلَيْسَ مِنَّا" رَوَاهُ مُسْلِمٌ. وَفِي رِوَايَةٍ لَهُ : أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ مَرَّ عَلَى صُبْرَةِ طَعَامٍ فَأَدْخَلَ يَدَهُ فِيهَا فَنَالَتْ أَصَابِعُهُ بَلَلاً فَقَالَ :" مَا هَذَا يَا صَاحِبَ الطَّعَامِ ؟".قَالَ:أَصَابَتْهُ السَّمَاءُ يَا رَسُولَ اللَّهِ قَالَ: " أَفَلاَ جَعَلْتَه فَوْقَ الطَّعَامِ كَيْ يَرَاهُ النَّاسُ ؟! مَنْ غَشَّ فَلَيْسَ مِنِّي".

**1579** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நமக்கு எதிராக ஒருவர் ஆயுதத்தை ஏந்தினால், அவர் நம்மைச் சேர்ந்தவர் அல்லர். மேலும் எவர் நம்மை ஏமாற்றுகிறாரோ அவரும் நம்மைச் சேர்ந்தவர் அல்லர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:101)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

நபி (ஸல்) அவர்கள் தானியக் குவியல் அருகே சென்றார்கள். அதனுள் தன் கையைப் புகுத்தினார்கள். விரல்களில் ஈரப்பதம் பட்டது. "உணவுப் பொருள் விற்பவரே! இது என்ன?" என்று கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! மழை பெய்துவிட்டது" என்று அவர் கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள், "அந்த ஈரம் பட்ட தானியத்தை மக்கள் பார்க்கும் வகையில் மேற்பகுதியில்நீர் வைத்திருக்க வேண்டாமா? நம்மை ஏமாற்றுகிறவர், நம்மைச் சேர்ந்தவர் அல்லர்" என்று கூறினார்கள்.

١٥٨٠ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ تَنَاجَشُوا " . مُتَّفَقٌ عَلَيْه .

**1580** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பொருளின் விலையை ஏற்றி விடும் வகையில் (பிறரை ஏமாற்றுவதில்) நீங்கள் ஒருவருக் கொருவர் செயல்படாதீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2150. முஸ்லிம்:1515)**

١٥٨١ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ نَهَى عَنِ النَّجَشِ . مُتَّفَقٌ عَلَيْه .

**1581** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், வியாபாரத்தில் விலையைக் கூட்டும் வகையில் செயல்பட தடை செய்தார்கள். **(புகாரி:2142. முஸ்லிம்:1516)**

١٥٨٢ – وَعَنْهُ ) عَبْدُ اللَّهِ بْنُ عُمَرَ ( قَالَ : ذَكَرَ رَجُلٌ لِرَسُولِ اللَّهِ ﷺ أَنَّهُ يُخْدَعُ فِي الْبُيُوعِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ بَايَعْت فَقُلْ : لاَ خِلاَبَةَ " . مُتَّفَقٌ عَلَيْه . " الْخِلاَبَةُ " بِخَاءٍ مُعْجَمَةٍ مَكْسُورَةٍ وَبَاءٍ مُوَحَّدَةٍ وَهِيَ الْخَدِيعَةُ .

**1582** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் வியாபாரத்தில் தான் ஏமாற்றப்பட்டது குறித்து நபி (ஸல்) அவர்களிடம் புகார் கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நீர் வியாபாரம் செய்தால் ஏமாற்றுதல் கூடாது என்று கூறுவீராக!" என்று கூறினார்கள். **(புகாரி:2117. முஸ்லிம்:1533)**

١٥٨٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ خَبَّبَ زَوْجَةَ امْرِىٍٔ أَوْ مَمْلُوكَهُ فَلَيْسَ مِنَّا " . رَوَاهُ أَبُو دَاوُدَ خَبَّبَ : بِخَاءٍ مُعْجَمَةٍ ثُمَّ بَاءٍ مُوَحَّدَةٍ مُكَرَّرَةٍ : أَيْ أَفْسَدَهُ وَخَدَعَهُ .

**1583** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர், மற்றவரின் மனைவியை அல்லது அடிமையை ஏமாற்றி அவர்களில் குழப்பம் ஏற்படுத்தினால், அவர் நம்மைச் சேர்ந்தவர் அல்லர்" என நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:5170)**

## ٢٧٧ - بابُ تحريم الغَدر

## பாடம் : 277 - மோசடி செய்வது கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَوْفُوا بِالْعُقُودِ . وَقَالَ تَعَالَى : وَأَوْفُوا بِالْعَهْدِ إِنَّ الْعَهْدَ كَانَ مَسْئُولاً .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளே! உடன்படிக்கைகளை நிறைவேற்றுங்கள். (5:1)*

*ஒப்பந்தத்தை நிறைவேற்றுங்கள். ஒப்பந்தம் என்பது, (அல்லாஹ்விடம்) கேட்கப்படக் கூடியதாக உள்ளது. (17:34)*

١٥٨٤ - وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " أَرْبَعٌ مَنْ كُنَّ فِيهِ كَانَ مُنَافِقًا خَالِصًا وَمَنْ كَانَتْ فِيهِ خَصْلَةٌ مِنْهُنَّ كَانَتْ فِيهِ خَصْلَةٌ مِنَ النِّفَاقِ حَتَّى يَدَعَهَا : إِذَا اؤْتُمِنَ خَانَ وَإِذَا حَدَّثَ كَذَبَ وَإِذَا عَاهَدَ غَدَرَ وَإِذَا خَاصَمَ فَجَرَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1584** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான்கு குணங்கள், ஒருவனிடம் இருந்தால், அவன் தெளிவான நயவஞ்சகன் ஆவான். இவற்றில் ஒரு குணம் இருந்தால், அதை அவன் விடும் வரை, நயவஞ்சகத்தின் ஒரு பகுதி அவனிடம் தங்கி விடும். (1) அவனை நம்பினால், ஏமாற்றுவான் (2) பேசினால், பொய் பேசுவான் (3) ஒப்பந்தம் செய்தால், மீறுவான் (4) வழக்காடினால், குற்றமிழைப்பான்" என்று நான்கு குணங்களை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:34. முஸ்லிம்:58)**

١٥٨٥ - وَعَنِ ابْنِ مَسْعُودٍ وَابْنِ عُمَرَ وَأَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمْ قَالُوا : قَالَ النَّبِيُّ ﷺ : " لِكُلِّ غَادِرٍ لِوَاءٌ يَوْمَ الْقِيَامَةِ يُقَالُ : هَذِهِ غَدْرَةُ فُلاَنٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1585** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி), அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி), அனஸ் (ரழி) ஆகியோர் அறிவிக்கின்றார்கள்:

"மோசடி செய்யும் ஒவ்வொருவருக்கும் மறுமை நாளில் ஒரு கொடி இருக்கும். 'இது இன்னாரின் மோசடியாகும்' என்று கூறப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:3186,3188. முஸ்லிம்:1735,1738)**

١٥٨٦ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " لِكُلِّ غَادِرٍ لِوَاءٌ عِنْدَ اسْتِهِ يَوْمَ الْقِيَامَةِ يُرْفَعُ لَهُ بِقَدْرِ غَدْرِهِ أَلاَ وَلاَ غَادِرَ أَعْظَمُ غَدْرًا مِنْ أَمِيرِ عَامَّةٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1586** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மோசடிக்காரன் ஒவ்வொருவருக்கும் மறுமை நாளில் அவனது பித்தட்டுப்பகுதியில் கொடி இருக்கும். அவனது மோசடியின் அளவுக்கு ஏற்ப அது உயர்த்தப்பட்டிருக்கும். அறிந்து கொள்ளுங்கள். மக்களை (ஏமாற்றும்) தலைவனை விட, பெரும் மோசடிக்காரன் எவனுமில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1738)**

١٥٨٧ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " قَالَ اللَّهُ تَعَالَى : ثَلاَثَةٌ أَنَا خَصْمُهُمْ يَوْمَ الْقِيَامَةِ : رَجُلٌ أُعْطَى بِي ثُمَّ غَدَرَ وَرَجُلٌ بَاعَ حُرًّا فَأَكَلَ ثَمَنَهُ وَرَجُلٌ اسْتَأْجَرَ أَجِيرًا فَاسْتَوْفَى مِنْهُ وَلَمْ يُعْطِهِ أَجْرَهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1587** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மூன்று பேர்களின் விஷயத்தில் நானே மறுமையில் வழக்காடுவேன். (1) என் பெயரால் ஒன்றைத் தந்து விட்டு, அதில் மோசடி செய்தவன். (2) சுதந்திரமான மனிதனை (அடிமை எனக் கூறி) விற்று, அதன் பணத்தைச் சாப்பிட்டவன் (3) ஒருவனிடம் கூலி பேசி, வேலை வாங்கிவிட்டு, கூலியை அவனுக்குத் தராதவன் என்று அல்லாஹ் கூறுகிறான்" என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2227)**

## ٢٧٨ - باب النّهي عَن الْمَنّ بالعطية ونحوها

## பாடம் : 278 - நன்கொடை கொடுத்துவிட்டு, அதை சொல்லிக் காட்டுவது கூடாது

قَالَ اللّٰهُ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لاَ تُبْطِلُوا صَدَقَاتِكُمْ بِالْمَنِّ وَالأَذَى . وَقَالَ تَعَالَى : الَّذِينَ يُنْفِقُونَ أَمْوَالَهُمْ فِي سَبِيلِ اللّٰهِ ثُمَّ لاَ يُتْبِعُونَ مَا أَنْفَقُوا مَنًّا وَلاَ أَذًى .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறைவிசுவாசிகளே! சொல்லிக்காட்டுதல், நோவினை செய்தல் மூலம் உங்கள் தர்மங்களை வீணாக்கி விடாதீர்கள். (2:264)*

*எவர்கள் அல்லாஹ்வுடைய வழியில் தங்கள் பொருள்களைச் செலவு செய்த பின்னர், அதைத் தொடர்ந்து தாங்கள் செலவு செய்ததைச் சுட்டிக்காட்டிப் பேசாமலும், (மனம்) புண்படச் செய்யாமலும் இருக்கின்றார்களோ, அவர்களுக்கு உரிய நற்கூலி, அவர்களின் அதிபதியிடம் இருக்கின்றது. மேலும் அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை; அவர்கள் துயரப்படவும் மாட்டார்கள்! (2:262)*

١٥٨٨ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ " ثَلاَثَةٌ لاَ يُكَلِّمُهُمُ اللّٰهُ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ يَنْظُرُ إِلَيْهِمْ وَلاَ يُزَكِّيهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ " . قَالَ : فَقَرَأَهَا رَسُولُ اللّٰهِ ﷺ ثَلاَثَ مَرَّاتٍ قَالَ أَبُو ذَرٍّ : خَابُوا وَخَسِرُوا مَنْ هُمْ يَا رَسُولَ اللّٰهِ ؟ قَالَ : " الْمُسْبِلُ وَالْمَنَّانُ وَالْمُنْفِقُ سِلْعَتَهُ بِالْحَلِفِ الْكَاذِبِ " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لَهُ : " الْمُسْبِلُ إِزَارَهُ " يَعْنِي الْمُسْبِلَ إِزَارَهُ وَثَوْبَهُ أَسْفَلَ مِنَ الْكَعْبَيْنِ لِلْخُيَلاَءِ .

**1588** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மூன்று பேர்களிடம் அல்லாஹ் மறுமையில் பேச மாட்டான். அவர்களைப் பார்க்கவும் மாட்டான். அவர்களை (மன்னித்து) தூய்மைப்படுத்தவும்மாட்டான். அவர்களுக்கு நோவினையான வேதனை உண்டு" என்று மூன்று தடவை நபி (ஸல்) கூறினார்கள். "அவர்கள் அழிந்தனர். அவர்கள் கைசேதம் அடைந் தனர். இறைத்தூதர் அவர்களே! அவர்கள் யார்?" என்று நான் கேட்டேன். அதற்கு அவர்கள், "தன் கீழாடையை (தரையைக் கூட்டும் அளவுக்கு)க் கீழிறக்கிக் கட்டியவர்; தான் செய்த உதவியைச் சொல்லிக் காட்டுபவர், தன் பொருளைப் பொய் சத்தியம் செய்து, விற்பனை செய்தவர் ஆகிய மூவர் ஆவர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:106)**

"பெருமையாகத் தன் கீழாடையை, கரண்டைகளுக்கும் கீழிறக்கிக் கட்டியவர்" என மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

## ٢٧٩ – باب النّهي عَن الافتخَار وَالبغي

## பாடம் : 279 - பெருமையடித்தல், அநீதம் செய்தல் கூடாது

قَالَ اللّٰهُ تَعَالَى : فَلاَ تُزَكُّوا أَنْفُسَكُمْ هُوَ أَعْلَمُ بِمَنِ اتَّقَى . وَقَالَ تَعَالَى : إِنَّمَا السَّبِيلُ عَلَى الَّذِينَ يَظْلِمُونَ النَّاسَ وَيَبْغُونَ فِي الأَرْضِ بِغَيْرِ الْحَقِّ أُولَئِكَ لَهُمْ عَذَابٌ أَلِيمٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *"…. உங்களையே நீங்கள் பரிசுத்தவான்கள் என எண்ணிட வேண்டாம். இறையச்சமுடையோர் யார் என்பதை அவனே மிக அறிந்தவன்." (53:32)*

*மக்களுக்கு அநீதமிழைத்துக் கொண்டும், நியாயமின்றி பூமியில் அநீதம் செய்து கொண்டும் இருப்போருக்கு (பழிப்புக்குரிய) ஒரு வழி உண்டு. அவர்களுக்கு, நோவினை தரும் வேதனை உண்டு. (42:42)*

١٥٨٩ – وَعَنْ عِيَاضِ بْنِ حِمَارٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِنَّ اللّٰهَ تَعَالَى أَوْحَى إِلَيَّ : أَنْ تَوَاضَعُوا حَتَّى لاَ يَبْغِي أَحَدٌ عَلَى أَحَدٍ وَلاَ يَفْخَرَ أَحَدٌ عَلَى أَحَدٍ " . رَوَاهُ مُسْلِمٌ . قَالَ أَهْلُ اللُّغَةِ : الْبَغْيُ التَّعَدِّي وَالاسْتِطَالَةُ .

**1589** இயாழ் இப்னு ஹிமார் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் பணிவாக இருங்கள். ஒருவர், மற்றொருவருக்கு அநீதம் செய்திட வேண்டாம். ஒருவர், மற்றொருவரைப் பொறாமை கொள்ள வேண்டாம்" என அல்லாஹ் எனக்கு வஹீ (இறைச்செய்தி) அனுப்பியுள்ளான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2865)**

١٥٩٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " إِذَا قَالَ الرَّجُلُ : هَلَكَ النَّاسُ فَهُوَ أَهْلَكُهُمْ " . رَوَاهُ مُسْلِمٌ . وَالرِّوَايَةُ الْمَشْهُورَةُ : " أَهْلَكُهُمْ " بِرَفْعِ الْكَافِ ; وَرُوِيَ بِنَصْبِهَا . وَذَلِكَ النَّهْيُ لِمَنْ قَالَ ذَلِكَ عَجَبًا بِنَفْسِهِ وَتَصَاغُرًا لِلنَّاسِ وَارْتِفَاعًا عَلَيْهِمْ : فَهَذَا هُوَ الْحَرَامُ . وَأَمَّا مَنْ قَالَهُ لِمَا يَرَى فِي النَّاسِ مِنْ نَقْصٍ فِي أَمْرِ دِينِهِمْ وَقَالَهُ تَحَزُّنًا عَلَيْهِمْ وَعَلَى الدِّينِ فَلاَ بَأْسَ بِهِ : هَكَذَا فَسَّرَهُ الْعُلَمَاءُ وَفَصَّلُوهُ . وَمِمَّنْ قَالَهُ مِنَ الأَئِمَّةِ الأَعْلاَمِ : مَالِكُ بْنُ أَنَسٍ وَالْخَطَّابِيُّ وَالْحُمَيْدِيُّ وَآخَرُونَ وَقَدْ أَوْضَحْتُهُ فِي كِتَابِ: " الأَذْكَارِ ".

**1590** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவன் (பெருமையடித்தவனாக) 'மக்கள் அழிவார்களாக!' என்று கூறினால், அவன் அவர்களில் மிக அழிபவன் ஆவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2623)**

"அஹ்லகுஹும்" என்ற வார்த்தைக்குப் பதிலாக, "அஹ்லகஹும்" என்று (அவர்களை அவன் அழிவில் ஆழ்த்தி விட்டான்) ஒரு அறிவிப்பில் உள்ளது.

"தன்னை உயர்வாகவும், மக்களை இழிவாகவும், அவர்களைக் குறைவாகவும் எண்ணிக் கூறக்கூடியவனுக்கே இந்தத் தடையாகும். மக்கள் மார்க்க விஷயத்தில் குறைவாக இருப்பதைக் கண்ட ஒருவன் கவலை அடைந்தவனாக இவ்வாறு கூறலாம். இவ்வாறு கூறுவது, குற்றமல்ல."

இவ்வாறே அறிஞர் பெருமக்கள் இதற்கு விளக்கம் கூறுகின்றனர். இவ்வாறு கூறியவர்களில் மாலிக் இப்னு அனஸ், கத்தாபீ, ஹுமைதீ ஆகியோரும், மற்றவர்களும் ஆவர். இதை நான் "அல் அத்கார்" எனும் நூலில் விரிவாகக் கூறி உள்ளேன்.

## ٢٨. – باب تحريم الهجران بين المسلمين فوق ثلاثة أيام، إلاّ لبدعة في المهجور أو تظاهرٍ بفسقٍ أو نحو ذلك

**பாடம் : 280 - முஸ்லிம்களிடையே மூன்று நாட்களுக்கு மேல் வெறுப்புணர்வு கூடாது. ஆனால், புதிய செயலை மார்க்கத்தின் பெயரால் உருவாக்கினாலோ அல்லது பகிரங்கமாகப் பாவம் செய்தாலோ அல்லது அது போல இருந்தாலே தவிர.**

قَالَ اللّهُ تَعَالَى : إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ فَأَصْلِحُوا بَيْنَ أَخَوَيْكُمْ . وَقَالَ تَعَالَى : وَلاَ تَعَاوَنُوا عَلَى الأَثْمِ وَالْعُدْوَانِ .

அல்லாஹ் கூறுகிறான்: *நிச்சயமாக இறைவிசுவாசிகள், சகோதரர்களாவர். எனவே உங்களின் சகோதரர்களிடையே நீங்கள் சமாதானம் உண்டாக்குங்கள்.* (49:10)

*குற்றமிழைத்தல், பகைமை கொள்ளுதல் ஆகியவற்றில் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளாதீர்கள்.* (5:2)

١٥٩١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّهِ ﷺ : " لاَ تَقَاطَعُوا وَلاَ تَدَابَرُوا وَلاَ تَبَاغَضُوا وَلاَ تَحَاسَدُوا وَكُونُوا عِبَادَ اللّهِ إِخْوَانًا وَلاَ يَحِلُّ لِمُسْلِمٍ أَنْ يَهْجُرَ أَخَاهُ فَوْقَ ثَلاَثٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1591** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவருக்கொருவர் உறவைத் துண்டித்துக் கொள்ளாதீர்கள். ஒருவருக்கொருவர் பகைமை கொள்ளாதீர்கள். ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வின் அடிமைகளாக-சகோதரர்களாக இருங்கள். ஒரு முஸ்லிமுக்கு, தன் சகோதரரை மூன்று நாட்களுக்கு மேல் வெறுத்திருக்க அனுமதி இல்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6065. முஸ்லிம்:2559)**

١٥٩٢ – وَعَنْ أَبِي أَيُّوبَ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّهِ ﷺ قَالَ : " لاَ يَحِلُّ لِمُسْلِمٍ أَنْ يَهْجُرَ أَخَاهُ فَوْقَ ثَلاَثِ لَيَالٍ : يَلْتَقِيَانِ فَيُعْرِضُ هَذَا وَيُعْرِضُ هَذَا وَخَيْرُهُمَا الَّذِي يَبْدَأُ بِالسَّلاَمِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1592** அபூ அய்யூப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தன் சகோதரரை மூன்று இரவு (நாட்)களுக்கு மேல் வெறுத்திருப்பது ஒரு முஸ்லிமுக்கு அனுமதி இல்லை. இருவரும் சந்திக்கின்றனர். இவரை அவர் புறக்கணிக்கிறார். அவரை இவர் புறக்கணிக்கிறார். (இவ்வாறு நடப்பது கூடாது). இவ்விருவரில் சிறந்தவர், முதலில் ஸலாம் கூறுபவரே!” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6077. முஸ்லிம்:2560)**

١٥٩٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّهِ ﷺ : " تُعْرَضُ الأَعْمَالُ فِي كُلِّ اثْنَيْنِ وَخَمِيسٍ فَيَغْفِرُ اللّهُ لِكُلِّ امْرِئٍ لاَ يُشْرِكُ بِاللّهِ شَيْئًا إِلاَّ امْرَأً كَانَتْ بَيْنَهُ وَبَيْنَ أَخِيهِ شَحْنَاءُ فَيَقُولُ : أُتْرُكُوا هَذَيْنِ حَتَّى يَصْطَلِحَا " . رَوَاهُ مُسْلِمٌ.

**1593** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒவ்வொரு திங்கள்கிழமையும், வியாழக்கிழமையும் செயல்கள் அனைத்தும் அல்லாஹ்விடம் எடுத்துச் செல்லப்படுகின்றன. அப்போது அல்லாஹ்வுக்கு இணைவைக்காத அனைவரையும் அல்லாஹ் மன்னிக்கிறான். ஆனால் தனக்கும், தன் சகோதரனுக்கும் இடையே பகைமை கொண்டவனைத் தவிர. இவர்கள் விஷயமாக அல்லாஹ் (கூறும்போது) “இந்த இருவரும் சமாதானம் ஆகும் வரை, இருவரையும் விட்டு விடுங்கள்” என்று கூறுவான் என நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2565)**

١٥٩٤ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ الشَّيْطَانَ قَدْ يَئِسَ أَنْ يَعْبُدَهُ الْمُصَلُّونَ فِي جَزِيرَةِ الْعَرَبِ وَلَكِنْ فِي التَّحْرِيشِ بَيْنَهُمْ " . رَوَاهُ مُسْلِمٌ . " التَّحْرِيشُ " : الأَفْسَادُ وَتَغْيِيرُ قُلُوبِهِمْ وَتَقَاطُعُهُمْ .

**1594** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இந்த அரபுப் பகுதியில் தொழுபவர்கள், தன்னை வணங்குவார்கள் என்பதிலிருந்து ஷைத்தான் நிராசையாகிவிட்டான். எனினும், அவர்களிடையே குழப்பத்தை ஏற்படுத்தி, பிளவை ஏற்படுத்துவதில் நம்பிக்கை வைத்துவிட்டான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2812)**

١٥٩٥ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يَحِلُّ لِمُسْلِمٍ أَنْ يَهْجُرَ أَخَاهُ فَوْقَ ثَلاَثٍ فَمَنْ هَجَرَ فَوْقَ ثَلاَثٍ فَمَاتَ دَخَلَ النَّارَ " رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ .

**1595** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தன் சகோதரனை மூன்று நாட்களுக்கு மேல் வெறுப்பது, ஒரு முஸ்லிமுக்கு அனுமதி இல்லை. மூன்று நாட்களுக்கும் மேல் ஒருவர் வெறுத்து, அவர் இறந்து விட்டால், அவர் நரகில் நுழைவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி, முஸ்லிம் நூலின் நிபந்தனைப்படி அபூதாவூதில் (4914) உள்ளது)**

١٥٩٦ – وَعَنْ أَبِي خِرَاشٍ حَدْرَدِ بْنِ أَبِي حَدْرَدٍ الأَسْلَمِيِّ – وَيُقَالُ السُّلَمِيُّ – الصَّحَابِيُّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ النَّبِيَّ ﷺ يَقُولُ : " مَنْ هَجَرَ أَخَاهُ سَنَةً فَهُوَ كَسَفْكِ دَمِهِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1596** அபூஹிராஷ் ஹத்ரத் இப்னுஅபூஹத்ரத் அஸ்லமீ அல்லது அஸ்ஸுலமி (ரழி) என்ற நபித்தோழர் அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் தன் சகோதரரை ஒரு வருடம் வெறுத்தால் அவர் செயல், அவரின் ரத்தத்தை ஓட்டுவது (கொலை செய்வது) போலாகும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டேன்.

**(அபூதாவூது:4915)**

١٥٩٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَحِلُّ لِمُؤْمِنٍ أَنْ يَهْجُرَ مُؤْمِنًا فَوْقَ ثَلاَثٍ فَإِنْ مَرَّتْ بِهِ ثَلاَثٌ فَلْيَلْقَهُ وَلْيُسَلِّمْ عَلَيْهِ فَإِنْ رَدَّ عَلَيْهِ السَّلاَمَ فَقَدِ اشْتَرَكَا فِي الأَجْرِ وَإِنْ لَمْ يَرُدَّ عَلَيْهِ فَقَدْ بَاءَ بِالإِثْمِ وَخَرَجَ الْمُسْلِمُ مِنَ الْهِجْرَةِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ . قَالَ أَبُو دَاوُدَ : إِذَا كَانَتِ الْهِجْرَةُ لِلَّهِ تَعَالَى فَلَيْسَ مِنْ هَذَا فِي شَيْءٍ .

**1597** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மூன்று நாட்களுக்கு மேல் ஒரு முஃமினை வெறுப்பதற்கு, மற்றொரு முஃமினுக்கு அனுமதி இல்லை. மூன்று நாட்கள் கழிந்து விட்டால், அவரை அவர் சந்திக்கட்டும். அவருக்கு ஸலாம் கூறட்டும். அவரின் ஸலாமுக்கு பதில் கூறிவிட்டால் கூலி பெறுவதில் இருவரும் சமமாகி விடுவார்கள். அவருக்குப் பதில் ஸலாம் கூறாவிட்டால், அவர் பாவத்தைச் செய்தவராவார். ஸலாம் கூறியவரோ, வெறுத்தல் எனும் குற்றத்திலிருந்து நீங்கியவராவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4912)**

“அல்லாஹ்வுக்காக ஒருவரை வெறுத்து இருந்தால், அதனால் குற்றம் இல்லை” என இமாம் அபூதாவூத் (ரஹ்) கூறுகின்றார்கள்.

## ٢٨١ - باب النّهي عَن تناجي اثنين دونَ الثالث بغير إذنه إلاّ لحاجة: وهوأن يتحدثا شرّا بحيث لا يسمعهما، وفي معناه ما إذا تحدثا بلسان لا يفهمه

## பாடம் : 281 - மூன்றாம் நபரை விடுத்து இருவர் மட்டும் ரகசியம் பேசுவது கூடாது. ஆனால், அத்தியாவசியத் தேவை இருந்தாலே தவிர. மேலும் மூன்றாம் நபருக்குத் தெரியாத மொழியிலும் பேசக் கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّمَا النَّجْوَى مِنَ الشَّيْطَانِ .

அல்லாஹ் கூறுகிறான்: *(முறையற்ற) இரகசியப் பேச்சு, ஷைத்தானில் உள்ளதாகும். (58:10)*

١٥٩٨ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا كَانُوا ثَلاَثَةً فَلاَ يَتَنَاجَى اثْنَانِ دُونَ الثَّالِثِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَرَوَاهُ أَبُو دَاوُدَ ; وَزَادَ أَبُو صَالِحٍ : قُلْت لاِبْنِ عُمَرَ : فَأَرْبَعَةً ؟ قَالَ : لاَ يَضُرُّكَ . وَرَوَاهُ مَالِكٌ فِي الْمُوَطَّإِ : عَنْ عَبْدِ اللَّهِ بْنِ دِينَارٍ قَالَ : كُنْت أَنَا وَابْنُ عُمَرَ عِنْدَ دَارِ خَالِدِ بْنِ عُقْبَةَ الَّتِي فِي السُّوقِ فَجَاءَ رَجُلٌ يُرِيدُ أَنْ يُنَاجِيَهُ وَلَيْسَ مَعَ ابْنِ عُمَرَ أَحَدٌ غَيْرِي فَدَعَا ابْنُ عُمَرَ رَجُلاً آخَرَ حَتَّى كُنَّا أَرْبَعَةً فَقَالَ لِي وَلِلرَّجُلِ الثَّالِثِ الَّذِي دَعَا : اسْتَأْخِرَا شَيْئًا فَإِنِّي سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " لاَ يَتَنَاجَى اثْنَانِ دُونَ وَاحِدٍ " .

**1598** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மூன்று பேர்கள் இருந்தால், மூன்றாம் நபரை விடுத்து இரண்டு பேர்கள் இரகசியம் பேச வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6288. முஸ்லிம்:2183)**

"நான்கு பேர் இருந்தால் பேசலாமா?" என்று இப்னு உமர் (ரழி) அவர்களிடம் கேட்டேன். "அது உனக்கு இடைஞ்சல் தராது" என்று இப்னு உமர் (ரழி) பதில் கூறினார்கள் என, அபூ ஸாலிஹ் கூறினார்" என்று அபூதாவூதில் கூடுதலாக உள்ளது. **(அபூதாவூது:4852)**

நானும், இப்னு உமர் (ரழி) அவர்களும் கடைவீதியில் உள்ள காலித் இப்னு உக்பா (ரழி) அவர்களின் வீட்டருகே நின்று கொண்டிருந்தோம். ஒருவர் வந்து, அவரிடம் ரகசியம் பேச விரும்பினார். இப்னு உமர் (ரழி) அவர்களின் அருகே என்னைத் தவிர எவரும் இல்லை. அப்போது இப்னு உமர் (ரழி) அவர்கள் வேறொருவரை அழைத்தார்கள். நாங்கள் நான்கு பேர்களானோம். என்னிடமும், தான் அழைத்து வந்த மூன்றாம் நபரிடமும், "நீங்கள் இருவரும் சற்றுத் தள்ளி நில்லுங்கள்" என்று கூறிய இப்னு உமர் (ரழி) அவர்கள், "இரண்டு பேர் ஒருவரை மட்டும் தனியே விட்டு ரகசியம் பேச வேண்டாம் என்று நபி (ஸல்) கூறக் கேட்டேன்" என்று கூறினார்கள். இதை அப்துல்லாஹ் இப்னு தீனார் கூறியதாக இமாம் மாலிக்கின் "அல்முஅத்தா"வில் உள்ளது. **(அல்முஅத்தா:1856)**

١٥٩٩ - وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا كُنْتُمْ ثَلاَثَةً فَلاَ يَتَنَاجَى اثْنَانِ دُونَ الآخَرِ حَتَّى تَخْتَلِطُوا بِالنَّاسِ مِنْ أَجْلِ أَنَّ ذَلِكَ يُحْزِنُهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1599** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் மூவராக இருந்தால் ஒருவரை மட்டும் விட்டு விட்டு, இருவர் ரகசியம் பேச வேண்டாம். நீங்கள் மற்ற மக்களோடு சேரும்வரை. அது (அவரை விட்டு ரகசியம் பேசுவது) அவரை கவலைப்படச் செய்யும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:629. முஸ்லிம்:2184)**

## ٢٨٢ – باب النّهي عَن تعذيب الْعَبْد والدّبه والمرأة والولد بغير سبب شرعي أو زائد على قدر الأدب

## பாடம் : 282 - அடிமை, கால்நடை, மனைவி, மக்கள் ஆகியோரை மார்க்க மற்றும் ஒழுக்க அடிப்படையிலான காரணங்களின்றி தண்டிப்பது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : وَبِالْوَالِدَيْنِ إِحْسَانًا وَبِذِي الْقُرْبَى وَالْيَتَامَى وَالْمَسَاكِينِ وَالْجَارِ ذِي الْقُرْبَى وَالْجَارِ الْجُنُبِ وَالصَّاحِبِ بِالْجَنْبِ وَابْنِ السَّبِيلِ وَمَا مَلَكَتْ أَيْمَانُكُمْ إِنَّ اللَّهَ لاَ يُحِبُّ مَنْ كَانَ مُخْتَالاً فَخُورًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *"பெற்றோருக்கும், உறவினருக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், உறவுக்காரரான பக்கத்து வீட்டாருக்கும், உறவு அல்லாத பக்கத்து வீட்டாருக்கும், நண்பருக்கும், வழிப்போக்கருக்கும், உங்களின் அடிமைகளுக்கும் நல்லது செய்யுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பெருமை அடிப்போரை, கர்வம் கொள்வோரை விரும்ப மாட்டான்." (4:36)*

١٦٠٠ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " عُذِّبَتْ امْرَأَةٌ فِي هِرَّةٍ حَبَسَتْهَا حَتَّى مَاتَتْ فَدَخَلَتْ فِيهَا النَّارَ لاَ هِيَ أَطْعَمَتْهَا وَسَقَتْهَا إِذْ هِيَ حَبَسَتْهَا وَلاَ هِيَ تَرَكَتْهَا تَأْكُلُ مِنْ خَشَاشِ الأَرْضِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " خَشَاشُ الأَرْضِ " بِفَتْحِ الْخَاءِ الْمُعْجَمَةِ وَبِالشِّينِ الْمُعْجَمَةِ الْمُكَرَّرَةِ وَهِيَ هَوَامُّهَا وَحَشَرَاتُهَا.

**1600** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு பூனையை அது இறந்து போகும் வரை, சிறை வைத்த பெண்ணொருத்தி வேதனை செய்யப்படுகிறாள். இது விஷயமாக நரகிலும் வீழ்கிறாள். அதை அவள் அடைத்து வைத்திருந்த போது அவள் அதற்கு உணவளிக்கவும் இல்லை. அதை நீர் அருந்தச் செய்யவும் இல்லை. மேலும் அது,பூமியின் புழு பூச்சிகளை உண்பதற்கும் அவள் அதை வெளியே (அவிழ்த்து) விடவும் இல்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3482. முஸ்லிம்:2242)**

١٦٠١ – وَعَنْهُ ) عَبْد اللَّه بْنِ عُمَرَ ( أَنَّهُ مَرَّ بِفِتْيَانٍ مِنْ قُرَيْشٍ قَدْ نَصَبُوا طَيْرًا وَهُمْ يَرْمُونَهُ وَقَدْ جَعَلُوا لِصَاحِبِ الطَّيْرِ كُلَّ خَاطِئَةٍ مِنْ نَبْلِهِمْ فَلَمَّا رَأَوْا ابْنَ عُمَرَ تَفَرَّقُوا فَقَالَ ابْنُ عُمَرَ : مَنْ فَعَلَ هَذَا ؟ لَعَنَ اللَّهُ مَنْ فَعَلَ هَذَا إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ : " لَعَنَ مَنْ اتَّخَذَ شَيْئًا فِيهِ الرُّوحُ غَرَضًا " . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْغَرَضُ " بِفَتْحِ الْغَيْنِ الْمُعْجَمَةِ وَالرَّاءِ وَهُوَ الْهَدَفُ وَالشَّيْءُ الَّذِي يُرْمَى إِلَيْهِ .

**1601** அப்துல்லாஹ் இப்னு உமர்(ரழி) அவர்கள் குறைஷி வம்சத்தைச் சேர்ந்த இளைஞர்கள் அருகே சென்றார்கள். அவர்கள் ஒரு பறவையை வைத்து, அதை நோக்கி அம்பை எறிந்து கொண்டிருந்தனர். அவர்களால் குறிபார்த்துத் தவறும் அம்பை, பறவைக்குரியவன் வைத்துக் கொள்வது என்று பேசி வைத்திருந்தனர். இப்னு உமர் (ரழி) அவர்களை, அவர்கள் பார்த்ததும், பிரிந்து ஓடினார்கள். "இவ்வாறு செய்தவர் யார்? இவ்வாறு செய்தவனை அல்லாஹ் நாசமாக்குவானாக!" என்று கூறிய இப்னு உமர் (ரழி) அவர்கள், "உயிருள்ள ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அம்பு எறிந்து நோவினை செய்பவனை அல்லாஹ் சபித்து விட்டான்" என்று நபி (ஸல்) கூறினார்கள் எனவும் கூறினார்கள்.

**(புகாரி:5515. முஸ்லிம்:1958)**

١٦٠٢ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ أَنْ تُصْبَرَ الْبَهَائِمُ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَمَعْنَاهُ : تُحْبَسُ لِلْقَتْلِ .

**1602** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கால்நடைகளுக்கு எதுவும் கொடுக்காமல் கட்டிப் போடுவதை, நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். **(புகாரி:5513. முஸ்லிம்:1956)**

١٦٠٣ – وَعَنْ أَبِي عَلِيٍّ سُوَيْدِ بْنِ مُقَرِّنٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَقَدْ رَأَيْتُنِي سَابِعَ سَبْعَةٍ مِنْ مُقَرِّنٍ مَا لَنَا خَادِمٌ إِلاَّ وَاحِدَةٌ لَطَمَهَا أَصْغَرُنَا فَأَمَرَنَا رَسُولُ اللَّهِ ﷺ أَنْ نَعْتِقَهَا . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ :" سَابِعَ إِخْوَةٍ لِي ".

**1603** அபூஅலீ சுவைது இப்னு முகர்ரின் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பனூமுக்ர்ரின் அவர்களது மக்களில் ஏழு பேரில், ஏழாவது நபராக நான் இருந்தேன். ஒரு வேலைக்காரப் பெண்ணைத் தவிர, வேறு ஊழியர் எங்களுக்கு இல்லை. எங்களில் சிறியவர், அவள் கன்னத்தில் அறைந்து விட்டார். இதனையறிந்த நபி (ஸல்) அவர்கள், அவளை நாங்கள் விடுதலை செய்திட உத்தரவிட்டார்கள். **(முஸ்லிம்:1658)**

மற்றொரு அறிவிப்பில் "எனக்கு ஏழு சகோதரர்கள் உண்டு" என்று உள்ளது.

١٦٠٤ – وَعَنْ أَبِي مَسْعُودٍ الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنْتُ أَضْرِبُ غُلاَمًا لِي بِالسَّوْطِ فَسَمِعْتُ صَوْتًا مِنْ خَلْفِي : " اعْلَمْ أَبَا مَسْعُودٍ " فَلَمْ أَفْهَمِ الصَّوْتَ مِنَ الْغَضَبِ . فَلَمَّا دَنَا مِنِّي إِذَا هُوَ رَسُولُ اللَّهِ ﷺ فَإِذَا هُوَ يَقُولُ : " اعْلَمْ أَبَا مَسْعُودٍ أَنَّ اللَّهَ أَقْدَرُ عَلَيْكَ مِنْكَ عَلَى هَذَا الْغُلاَمِ " فَقُلْتُ : لاَ أَضْرِبُ مَمْلُوكًا بَعْدَهُ أَبَدًا وَفِي رِوَايَةٍ : فَسَقَطَ السَّوْطُ مِنْ يَدِي مِنْ هَيْبَتِهِ . وَفِي رِوَايَةٍ : فَقُلْتُ : يَا رَسُولَ اللَّهِ هُوَ حُرٌّ لِوَجْهِ اللَّهِ تَعَالَى فَقَالَ : " أَمَا لَوْ لَمْ تَفْعَلْ لَلَفَحَتْكَ النَّارُ أَوْ لَمَسَّتْكَ النَّارُ " . رَوَاهُ مُسْلِمٌ بِهَذِهِ الرِّوَايَاتِ .

**1604** அபூமஸ்ஊது அல்பத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் என் அடிமையைச் சாட்டையால் அடித்துக் கொண்டிருந்தேன். "அபூமஸ்ஊதே! அறிந்து கொள்!" என்ற சப்தத்தை என் பின்னாலிருந்து கேட்டேன். (எனது) கோபம் காரணமாக அது யாருடைய சப்தம் என்பதை நான் விளங்கவில்லை. என்னிடம் (சப்தமிட்டவர்) நெருங்கி வந்தபோது, அங்கே நபி (ஸல்) அவர்களைக் கண்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அபூமஸ்ஊதே! அறிந்து கொள்! இந்த அடிமை மீது உள்ள உன் ஆளுமையை விட, உன் மீது அல்லாஹ் அதிக ஆளுமை மிக்கவன் ஆவான்" என்று கூறினார்கள். அப்பொழுது நான், "இனிமேல் எந்த அடிமையையும் நான் அடிக்கமாட்டேன்" என்று கூறினேன்.

"நபி (ஸல்) அவர்கள் மீதுள்ள பயம் காரணமாக என் கையிலிருந்து சாட்டை கீழே விழுந்தது" என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

"இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் திருப்தியை நாடி இவரைச் சுதந்திரமாக்குகிறேன்" என்று கூறினேன். "நீர் இதைச் செய்யவில்லை என்றால், நரக நெருப்பு உம்மைத் தீண்டி இருக்கும்" என்று நபி (ஸல்) கூறியதாக மற்றொரு அறிவிப்பில் உள்ளது. **(முஸ்லிம்:1659)**

١٦٠٥ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ ضَرَبَ غُلاَمًا لَهُ حَدًّا لَمْ يَأْتِهِ أَوْ لَطَمَهُ فَإِنَّ كَفَّارَتَهُ أَنْ يَعْتِقَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1605** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"செய்யாத குற்றத்திற்காக தன் அடிமையை ஒருவர் சாட்டையால் அடித்தால் அல்லது அவரின் கன்னத்தில் அறைந்தால், அதற்குப் பரிகாரம் அவரை விடுதலை செய்வதுதான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1657)**

١٦٠٦ – وَعَنْ هِشَامِ بْنِ حَكِيمِ بْنِ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ مَرَّ بِالشَّامِ عَلَى أُنَاسٍ مِنَ الأَنْبَاطِ وَقَدْ أُقِيمُوا فِي الشَّمْسِ وَصُبَّ عَلَى رُؤُسِهِمُ الزَّيْتُ فَقَالَ : مَا هَذَا ؟ قِيلَ : يُعَذَّبُونَ فِي الْخَرَاجِ . وَفِي رِوَايَةٍ حُبِسُوا فِي الْجِزْيَةِ . فَقَالَ هِشَامٌ : أَشْهَدُ لَسَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ اللَّهَ يُعَذِّبُ الَّذِينَ يُعَذِّبُونَ النَّاسَ فِي الدُّنْيَا " فَدَخَلَ عَلَى الأَمِيرِ فَحَدَّثَهُ فَأَمَرَ بِهِمْ فَخُلُّوا . رَوَاهُ مُسْلِمٌ . " الأَنْبَاطُ " : الْفَلاَّحُونَ مِنَ الْعَجَمِ .

**1606** ஹிஷாம் இப்னு ஹகீம் இப்னு ஹிஜாம் (ரழி) அவர்கள் சிரியா நாட்டிற்குச் சென்றார்கள். விவசாயிகளில் சிலர் வெயிலில் நிறுத்தப்பட்டிருந்தனர். அவர்களின் தலைகளில் எண்ணெய் ஊற்றப்பட்டிருந்தது. “இது என்ன?” என்று கேட்டார்கள். “வரி கட்டாதது விஷயமாக இவர்கள் வேதனை செய்யப்படுகின்றார்கள்” என்று கூறப்பட்டது. மற்றொரு அறிவிப்பில், “ஜிஸ்யா வரி விஷயமாக வேதனை செய்யப்படுகின்றனர்” என்று உள்ளது. “நபி (ஸல்) அவர்களிடம் நான் கேட்டுள்ளேன் என்று சாட்சி கூறுகிறேன்” என்று கூறிய ஹிஷாம் (ரழி) அவர்கள், “நிச்சயமாக! இவ்வுலகில் மனிதர்களை வேதனை செய்வோரை, அல்லாஹ் வேதனை செய்வான்” என்று நபி (ஸல்) கூறியதாக கூறினார்கள். நகர் தலைவரிடம் சென்ற அவர்கள், இதுபற்றி பேசினார்கள். “அவர்களை விட்டுவிடுங்கள்!” என அவர்களுக்கு கட்டளையிட்டார். அவர்கள் விடுவிக்கப்பட்டார்கள்.

**(முஸ்லிம்:2613)**

١٦٠٧ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : رَأَى رَسُولُ اللَّهِ ﷺ حِمَارًا مَوْسُومَ الْوَجْهِ فَأَنْكَرَ ذَلِكَ فَقَالَ : " وَاللَّهِ لاَ أَسِمُهُ إِلاَّ أَقْصَى شَيْءٍ مِنَ الْوَجْهِ " وَأَمَرَ بِحِمَارِهِ فَكُوِيَ فِي جَاعِرَتَيْهِ فَهُوَ أَوَّلُ مَنْ كَوَى الْجَاعِرَتَيْنِ . رَوَاهُ مُسْلِمٌ . " الْجَاعِرَتَانِ " : نَاحِيَةُ الْوَرِكَيْنِ حَوْلَ الدُّبُرِ

**1607** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், முகத்தில் சூடுபோட்டு அடையாளமிடப்பட்ட கழுதையைக் கண்டு, அதைப் பார்க்க வெறுத்தார்கள். “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இனிமேல் நான் கழுதையின் முகத்தில் அடையாளமிடமாட்டேன். எனினும், முகத்தை விட்டும் தூரமான பகுதியில் (தேவைப்பட்டால்) அடையாளமிடுவேன்” என்று கூறிய அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள், தன் கழுதையின் பின் பகுதியில் இரு ஓரத்திலும் அடையாளமிட ஆணையிட்டார்கள். இரு ஓரங்களிலும் அடையாளமிட்டவர்களில் இவர்களே முதன்மையானவர்களாவர். **(முஸ்லிம்:2118)**

١٦٠٨ – وَعَنْهُ ) عَبْدِ اللَّهِ بْنِ عَبَّاسٍ ( أَنَّ النَّبِيَّ ﷺ مَرَّ عَلَيْهِ حِمَارٌ قَدْ وُسِمَ فِي وَجْهِهِ فَقَالَ : " لَعَنَ اللَّهُ الَّذِي وَسَمَهُ " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ أَيْضًا : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ عَنِ الضَّرْبِ فِي الْوَجْهِ وَعَنِ الْوَسْمِ فِي الْوَجْهِ .

**1608** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் அருகில் முகத்தில் (சூடு போட்டு) அடையாளமிடப்பட்ட கழுதை சென்றது. அப்போது நபி (ஸல்) அவர்கள், “கழுதையின் முகத்தில் அடையாளமிடுபவனை அல்லாஹ் சபிக்கிறான்” என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2117)**

“முகத்தில் அடிப்பதற்கும், முகத்தில் சூடு போடுவதற்கும் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்” என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

## ٢٨٣ - باب تحريم التعذيب بالنار في كل حيوان حتى النملة ونحوها

## பாடம் : 283 - எறும்பு மற்றும் அதுபோன்ற உயிரினம் அனைத்தையும் நெருப்பால் வேதனை செய்யக் கூடாது.

١٦٠٩ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : بَعَثَنَا رَسُولُ اللَّهِ ﷺ فِي بَعْثٍ فَقَالَ : " إِنْ وَجَدْتُمْ فُلاَنًا وَفُلاَنًا - لِرَجُلَيْنِ مِنْ قُرَيْشٍ سَمَّاهُمَا - فَأَحْرِقُوهُمَا بِالنَّارِ " . ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ حِينَ أَرَدْنَا الْخُرُوجَ : " إِنِّي كُنْتُ أَمَرْتُكُمْ أَنْ تَحْرُقُوا فُلاَنًا وَفُلاَنًا وَإِنَّ النَّارَ لاَ يُعَذِّبُ بِهَا إِلاَّ اللَّهُ فَإِنْ وَجَدْتُمُوهُمَا فَاقْتُلُوهُمَا " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1609** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு படையின் கீழ் எங்களை அனுப்பினார்கள். அப்போது அவர்கள், "குறைஷிகளில் (கொடுஞ்செயல் புரிந்த) இருவரின் பெயர் கூறி இன்னார், இன்னாரை நீங்கள் கண்டால், அந்த இருவரையும் நெருப்பில் எரித்து விடுங்கள்" என்று கூறினார்கள். பின்பு நாங்கள் புறப்பட நாடியபோது, "இன்னார், இன்னாரை, எரித்து விடுங்கள் என உங்களுக்கு நான் கட்டளை யிட்டிருந்தேன். நிச்சயமாக! நெருப்பின் மூலம் அல்லாஹ் மட்டுமே வேதனை செய்வான். எனவே, அந்த இருவரையும் நீங்கள் கண்டால், அவர்களை கொன்று விடுங்கள்" என்று கூறினார்கள்.

**(புகாரி:3016)**

١٦١٠ - وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ فِي سَفَرٍ فَانْطَلَقَ لِحَاجَتِهِ فَرَأَيْنَا حُمَّرَةً مَعَهَا فَرْخَانِ فَأَخَذْنَا فَرْخَيْهَا فَجَعَلَتِ الْحُمَّرَةُ تُعَرِّشُ فَجَاءَ النَّبِيُّ ﷺ فَقَالَ : " مَنْ فَجَعَ هَذِهِ بِوَلَدِهَا ؟ رُدُّوا وَلَدَهَا إِلَيْهَا " . وَرَأَى قَرْيَةَ نَمْلٍ قَدْ حَرَقْنَاهَا . فَقَالَ : " مَنْ حَرَقَ هَذِهِ ؟ " قُلْنَا : نَحْنُ . قَالَ : " إِنَّهُ لاَ يَنْبَغِي أَنْ يُعَذِّبَ بِالنَّارِ إِلاَّ رَبُّ النَّارِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ . قَوْلُهُ : " قَرْيَةُ نَمْلٍ " مَعْنَاهُ مَوْضِعُ النَّمْلِ مَعَ النَّمْلِ .

**1610** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். (மல-ஜல) தேவைக்காக அவர்கள் சென்றார்கள். அப்பொழுது நாங்கள் சிகப்புப் பறவை ஒன்றைக் கண்டோம். அதனுடன் இரு குஞ்சுகளும் இருந்தன. அதன் இரு குஞ்சுகளையும் எடுத்தோம். தாய்ப்பறவை வந்தது. (குஞ்சுகளைக் காணாததால்) தன் இறக்கையை தரையில் விரித்தது. அப்போது வந்த நபி (ஸல்) அவர்கள்,"இதன் குஞ்சுகளைப் பிரித்து இதை தவிக்கச் செய்தவர் யார்? இதன் குஞ்சுகளைத் தாய் பறவையிடம் விட்டு விடுங்கள்" என்று கூறினார்கள்.

(இதுபோல்) எறும்புப் புற்றை நாங்கள் எரித்து விட்டோம். "இதை எரித்தவர் யார்?" என்று கேட்டார்கள். "நாங்கள்தான்" என்றோம். "நெருப்பின் இறைவனைத் தவிர, வேறு யாரும் எந்த உயிருள்ளவைகளையும் நெருப்பின் மூலம் வேதனை செய்யக் கூடாது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:2675)**

## ٢٨٤ - باب تحريم مطل الغني بحقّ طلبه صاحبه

## பாடம் : 284 - உரிமையை வழங்க வேண்டியவர், வழங்குவதில் தாமதம் செய்வது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ اللَّهَ يَأْمُرُكُمْ أَنْ تُؤَدُّوا الأَمَانَاتِ إِلَى أَهْلِهَا . وَقَالَ تَعَالَى : فَإِنْ أَمِنَ بَعْضُكُمْ بَعْضًا فَلْيُؤَدِّ الَّذِي اؤْتُمِنَ أَمَانَتَهُ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நிச்சயமாக அல்லாஹ், "அமானிதப் பொருட்களை அதை உரியவர்களிடம் கொடுங்கள்" என உங்களுக்கு கட்டளையிட்டுள்ளான். (4:58)*

*உங்களில் சிலர், சிலரை நம்பினால், நம்பப்பட்டவர் தன் அமானிதத்தை நிறைவேற்றட்டும்! (2:283)*

١٦١١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " مَطْلُ الْغَنِيِّ ظُلْمٌ وَإِذَا أُتْبِعَ أَحَدُكُمْ عَلَى مَلِيءٍ فَلْيَتْبَعْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . مَعْنَى " أُتْبِعَ " : أُحِيلَ .

**1611** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வசதி உள்ளவர் (கடனைத் திருப்பி அளிப்பதில்) தாமதம் செய்வது அநீதமாகும். உங்களில் ஒருவர் கடனை நிறைவேற்றும் பொறுப்பை ஒப்படைக்கப்பட்டால், அவர் (அதை) நிறைவேற்றட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2287. முஸ்லிம்:1564)**

## ٢٨٥ – باب كراهة عودة الإنسان في هبَة لَم يُسلّمها إلى الموهوب له، وفي هبة وهبها لولده وسُلّمها أو لم يسلمها، وكراهة شرائه شيئًا تصدّق به من الذي تصدّق عليه، أو أخرجه عن زكاة أو كفارة ونحوها، ولا بأس بشرائه من شخص آخر قد انتقل إليه

## பாடம் : 285 - அன்பளிப்பை திரும்பப் பெறுவதோ, ஜகாத்தாக, தர்மமாக, குற்றத்தின் பரிகாரத் தொகையாக கொடுத்ததை திரும்ப விலைக்குப் பெறுவதோ கூடாது. இவற்றை அன்பளிப்பாகவோ அல்லது விலைக்கு வாங்கியோ வைத்திருந்தவரிடமிருந்து அதையே வாங்குவது குற்றமில்லை.

١٦١٢ – عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " الَّذِي يَعُودُ فِي هِبَتِهِ كَالْكَلْبِ يَرْجِعُ فِي قَيْئِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " مَثَلُ الَّذِي يَرْجِعُ فِي صَدَقَتِهِ كَمَثَلِ الْكَلْبِ يَقِيءُ ثُمَّ يَعُودُ فِي قَيْئِهِ فَيَأْكُلُهُ " . وَفِي رِوَايَةٍ : " الْعَائِدُ فِي هِبَتِهِ كَالْعَائِدِ فِي قَيْئِهِ " .

**1612** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் அன்பளிப்பைத் திரும்ப பெறுபவன், தன் வாந்தியை தானே உண்ணும் நாயைப் போன்றவன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:2622. முஸ்லிம்:1622)**

"தனது தர்மத்தை மீண்டும் பெறுபவனுக்கு உதாரணம், தான் எடுத்த வாந்தியை மீண்டும் தானே சாப்பிடும் நாயின் உதாரணம் போலாகும்" என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

"தன் அன்பளிப்பைத் திரும்ப பெறுபவர், தன் வாந்தியை மீண்டும் உண்பவர் போலாவார்" என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

١٦١٣ – وَعَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : حَمَلْتُ عَلَى فَرَسٍ فِي سَبِيلِ اللّٰهِ فَأَضَاعَهُ الَّذِي كَانَ عِنْدَهُ فَأَرَدْتُ أَنْ أَشْتَرِيَهُ وَظَنَنْتُ أَنَّهُ يَبِيعُهُ بِرُخْصٍ فَسَأَلْتُ النَّبِيَّ ﷺ فَقَالَ : " لاَ تَشْتَرِهِ وَلاَ تَعُدْ فِي صَدَقَتِكَ وَإِنْ أَعْطَاكَهُ بِدِرْهَمٍ فَإِنَّ الْعَائِدَ فِي صَدَقَتِهِ كَالْعَائِدِ فِي قَيْئِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَوْلُهُ : " حَمَلْتُ عَلَى فَرَسٍ فِي سَبِيلِ اللّٰهِ " مَعْنَاهُ : تَصَدَّقْتُ بِهِ عَلَى بَعْضِ الْمُجَاهِدِينَ .

**1613** உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இறைவழியில் பயன்படும் குதிரை ஒன்றை (ஒருவருக்கு) அன்பளிப்பாக வழங்கினேன். அவர் அதை சரிவரக் கவனிக்காமல், அதை வீணாக்கி விட்டார். எனவே, அதை நான் விலைக்கு வாங்க விரும்பினேன். அதை அவர் குறைவான விலைக்கு விற்பார் என எண்ணினேன். நபி (ஸல்) அவர்களிடம் (இதுபற்றி) கேட்டேன். அதற்கு, "அதை நீர் விலைக்கு வாங்க வேண்டாம். அவர் அதை உமக்கு ஒரு திர்ஹமிற்கு கொடுத்தாலும் உன் தர்மத்தை திரும்பப் பெற வேண்டாம். நிச்சயமாக! தன் தர்மத்தை திரும்பப் பெறுபவன், தன் வாந்தியை திரும்ப உண்பவன் போலாவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1489. முஸ்லிம்:1620)**

## ٢٨٦ - باب تأكيد تحريم مَال اليتيم

## பாடம் : 286 - அனாதைச் சொத்தை உண்பது கூடாது

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ الَّذِينَ يَأْكُلُونَ أَمْوَالَ الْيَتَامَى ظُلْمًا إِنَّمَا يَأْكُلُونَ فِي بُطُونِهِمْ نَارًا وَسَيَصْلَوْنَ سَعِيرًا . وَقَالَ تَعَالَى : وَلاَ تَقْرَبُوا مَالَ الْيَتِيمِ إِلاَّ بِالَّتِي هِيَ أَحْسَنُ . وَقَالَ تَعَالَى : وَيَسْأَلُونَكَ عَنِ الْيَتَامَى قُلْ إِصْلاَحٌ لَهُمْ خَيْرٌ وَإِنْ تُخَالِطُوهُمْ فَإِخْوَانُكُمْ وَاللَّهُ يَعْلَمُ الْمُفْسِدَ مِنَ الْمُصْلِحِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அநீதமாக அனாதைகளின் சொத்தை உண்பவர்கள்; தங்கள் வயிறுகளில் சாப்பிட்டு (நிரப்பு)வதெல்லாம் நெருப்பைத்தான். மேலும் நரகில் விரைவில் அவர்கள் சேர்வார்கள். (4:10)*

*அழகான (நியாயமான) வழியிலே தவிர அனாதையின் சொத்தின் பக்கம் நெருங்காதீர்கள். (6:152)*

*அனாதைகளைப் பற்றி உம்மிடம் அவர்கள் கேட்கிறார்கள். நீர் கூறுவீராக! "அவர்களிடம் நன்முறையில் இருப்பதே சிறந்தது. அவர்களுடன் சேர்ந்து (வாழ்வதாக) இருந்தால், அவர்கள் உங்களின் சகோதரர்கள் (என்பதைப் புரிந்துகொள்ளுங்கள்). அல்லாஹ் சீர்திருத்தவாதியிட மிருந்து குழப்பம் செய்பவரை அறிவான்" (2:220)*

١٦١٤ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " اجْتَنِبُوا السَّبْعَ الْمُوبِقَات " قَالُوا يَا رَسُولَ اللَّه وَمَا هُنَّ ؟ قَالَ : " الشِّرْكُ بِاللَّهِ وَالسِّحْرُ وَقَتْلُ النَّفْسِ الَّتِي حَرَّمَ اللَّهُ إِلاَّ بِالْحَقِّ وَأَكْلُ الرِّبَا وَأَكْلُ مَالِ الْيَتِيمِ وَالتَّوَلِّي يَوْمَ الزَّحْفِ وَقَذْفُ الْمُحْصَنَاتِ الْمُؤْمِنَاتِ الْغَافِلاَتِ " . مُتَّفَقٌ عَلَيْه . " الْمُوبِقَاتُ " الْمُهْلِكَاتُ .

**1614** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அழித்து விடும் ஏழு (குற்றங்)களைத் தவிர்ந்து கொள்ளுங்கள்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவை எவை?" என்று (நபித்தோழர்கள்) கேட்டார்கள். "(1)அல்லாஹ்விற்கு இணை வைத்தல் (2) சூன்யம் செய்தல் (3) நியாயமின்றி அல்லாஹ் தடை செய்துள்ள உயிரைக் கொலை செய்தல் (4) வட்டியை உண்ணுதல் (5) அனாதையின் சொத்தை உண்ணுதல் (6) போர் நாளில் புறமுதுகு காட்டி ஓடுதல் (7) அப்பாவியான, இறை நம்பிக்கை உள்ள பெண்கள் மீது அவதூறு கூறுவது (ஆகியவை தான்)" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள்.

**(புகாரி:2766. முஸ்லிம்:89)**

## ٢٨٧ - بابُ تغليظ تحريم الرِّبا

## பாடம் : 287 - வட்டி கூடாது என கடுமையாகக் கூறுதல்!

قَالَ اللَّهُ تَعَالَى : الَّذِينَ يَأْكُلُونَ الرِّبَا لاَ يَقُومُونَ إلاَّ كَمَا يَقُومُ الَّذِي يَتَخَبَّطُهُ الشَّيْطَانُ مِنَ الْمَسِّ ذَلِكَ بِأَنَّهُمْ قَالُوا إِنَّمَا الْبَيْعُ مِثْلُ الرِّبَا وَأَحَلَّ اللَّهُ الْبَيْعَ وَحَرَّمَ الرِّبَا فَمَنْ جَاءَهُ مَوْعِظَةٌ مِنْ رَبِّهِ فَانْتَهَى فَلَهُ مَا سَلَفَ وَأَمْرُهُ إِلَى اللَّهِ وَمَنْ عَادَ فَأُولَئِكَ أَصْحَابُ النَّارِ هُمْ فِيهَا خَالِدُونَ يَمْحَقُ اللَّهُ الرِّبَا وَيُرْبِي الصَّدَقَاتِ إِلَى قَوْلِهِ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَذَرُوا مَا بَقِيَ مِنَ الرِّبَا الأَيَةَ

**அல்லாஹ் கூறுகிறான்:** *வட்டி உண்பவர்கள் ஷைத்தானால் தீண்டப்பட்டு பைத்தியம் பிடித்தவன் எழுவது போலல்லாது எழமாட்டார்கள். அவர்களுக்கு இந்த நிலை ஏற்பட்டதற்குக் காரணம், வியாபாரமும் வட்டியைப் போன்றதுதான் என்று அவர்கள் கூறியதேயாகும். உண்மையில் அல்லாஹ் வியாபாரத்தை (ஹலால்) அனுமதிக்கப்பட்டதாகவும்; வட்டியை (ஹராம்) தடுக்கப் பட்டதாகவும் ஆக்கியுள்ளான். ஆகவே, எவர் தம் இறைவனிடமிருந்து இந்த அறிவுரை வந்த பிறகு (இனி வட்டி வாங்குவதை விட்டு) விலகிக் கொள்கின்றாரோ - அவர் முன்னர் வாங்கியது வாங்கியதுதான் - என்றாலும் அவருடைய விவகாரம் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது. ஆனால் (இந்தக் கட்டளை வந்த பிறகும்) யாரேனும் (இந்தக் குற்றத்தை) மீண்டும் செய்தால், அவர்கள் நரகவாசிகளே ஆவர். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். (2:275)*

*அல்லாஹ் வட்டியை அழித்து விடுகின்றான். இன்னும் தான தர்மங்களை வளரச் செய்கின்றான். மேலும் நன்றி கொன்று, தீயசெயல் புரிவோர் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை. (2:276)*

*எவர்கள் இறைநம்பிக்கை கொண்டு, நற்பணிகள் ஆற்றி, தொழுகையையும் நிலைநாட்டி, ஜகாத்தும் கொடுத்து வருகின்றார்களோ, அவர்களுக்கு உரிய கூலி நிச்சயமாக அவர்களுடைய அதிபதியிடம் உண்டு. அவர்களுக்கு எவ்வித அச்சமுமில்லை; அவர்கள் துயரப்படவும் மாட்டார்கள். (2:277)*

*இறைநம்பிக்கை கொண்டோரே! நீங்கள் உண்மையில் நம்பிக்கையாளராக இருப்பின், அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; (உங்களுக்கு வரவேண்டிய) வட்டிப் பாக்கிகளை விட்டு விடுங்கள். (2:278)*

இந்தப் பாடத்தின் கீழ் ஆதாரப்பூர்வமான பிரபலமான ஹதீஸ்கள் உண்டு. (1614-வது ஹதீஸாக) முன்பு இடம் பெற்றுள்ள அபூஹுரைரா (ரழி) அவர்களின் ஹதீஸும் இதில் ஒன்றாகும்.

١٦١٥ - وَأَمَّا الأَحَادِيثُ فَكَثِيرَةٌ فِي الصَّحِيحِ مَشْهُورَةٌ مِنْهَا حَدِيثُ أَبِي هُرَيْرَةَ السَّابِقِ فِي الْبَابِ قَبْلَهُ وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : " لَعَنَ رَسُولُ اللَّهِ ﷺ آكِلَ الرِّبَا وَمُوكِلَهُ " . رَوَاهُ مُسْلِمٌ . زَادَ التِّرْمِذِيُّ وَغَيْرُهُ : " وَشَاهِدَيْهِ وَكَاتِبَهُ " .

**1615** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“வட்டியை உண்பவனையும், உண்ணக் கொடுப்பவனையும் நபி (ஸல்) அவர்கள் சபித்து விட்டார்கள்.” **(முஸ்லிம்:1597)**

“அதற்கு (வட்டிக்காகச்) சாட்சி கூறும் இருவரையும், அதற்குப் பத்திரம் எழுதுபவரையும் நபி (ஸல்) சபித்துள்ளார்கள்” என்று திர்மிதீயிலும் மற்றும் இதர நூல்களிலும் அதிகமாக உள்ளது.

**(திர்மிதீ:1206)**

## ٢٨٨ – باب تحريم الرّياء

## பாடம் : 288 - "முகஸ்துதி" கூடாது

قَالَ اللّٰهُ تَعَالَى : وَمَا أُمِرُوا إِلاَّ لِيَعْبُدُوا اللّٰهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَاءَ الأيَةَ . وَقَالَ تَعَالَى : لاَ تُبْطِلُوا صَدَقَاتِكُمْ بِالْمَنِّ وَالأَذَى كَالَّذِي يُنْفِقُ مَالَهُ رِئَاءَ النَّاسِ الأيَةَ . وَقَالَ تَعَالَى : يُرَاءُونَ النَّاسَ وَلاَ يَذْكُرُونَ اللّٰهَ إِلاَّ قَلِيلاً .

**அல்லாஹ் கூறுகிறான்:** *மேலும், தங்கள் தீனை அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்கியவர்களாகவும், முற்றிலும் ஒருமனப்பட்டவர்களாக அல்லாஹ்வுக்கு அடிபணிய வேண்டும் என்பதையும், தொழுகையை நிலைநாட்ட வேண்டும், ஜகாத்தும் கொடுக்க வேண்டும் என்பதையும் தவிர வேறு எந்தக் கட்டளையும் அவர்களுக்கு இடப்படவில்லை. (98:5)*

*மக்களிடம் காண்பிக்க வேண்டும் என்பதற்காக (முகஸ்துதியாய்) தன் சொத்தைச் செலவு செய்பவன் போல், நீங்கள் உங்கள் தர்மங்களை சொல்லிக் காட்டுவது மற்றும் நோவினை செய்வதுமூலம் வீணாக்காதீர்கள். (2:264)*

*".... மக்களுக்கு காண்பிக்க வேண்டியே அவர்கள் சோம்பேறியாக (தொழ) நிற்கிறார்கள். மேலும் குறைவாகவே தவிர, அவர்கள் அல்லாஹ்வை நினைவு கூர்வதில்லை" (4:142)*

١٦١٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ : " قَالَ اللّٰهُ تَعَالَى : أَنَا أَغْنَى الشُّرَكَاءِ عَنِ الشِّرْكِ مَنْ عَمِلَ عَمَلاً أَشْرَكَ فِيهِ مَعِي غَيْرِي تَرَكْتُهُ وَشِرْكَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1616** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நான், இணைவைப்பவர்களின் இணை வைத்தலை விட்டு நீங்கியவன். என்னுடன் மற்றொருவனைச் சேர்த்து இணைவைத்தவனாக ஒரு செயலைச் செய்தால், அவனையும், அவனது இணை வைத்தலையும் விட்டு விடுவேன்" என்று அல்லாஹ் கூறினான் என நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(முஸ்லிம்:2985)**

١٦١٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ : " إِنَّ أَوَّلَ النَّاسِ يُقْضَى يَوْمَ الْقِيَامَةِ عَلَيْهِ : رَجُلٌ اُسْتُشْهِدَ فَأُتِيَ بِهِ فَعَرَّفَهُ نِعْمَتَهُ فَعَرَفَهَا قَالَ : فَمَا عَمِلْتَ فِيهَا ؟ قَالَ : قَاتَلْتُ فِيكَ حَتَّى اُسْتُشْهِدْتُ . قَالَ : كَذَبْتَ وَلَكِنَّكَ قَاتَلْتَ لِأَنْ يُقَالَ : جَرِيءٌ ! فَقَدْ قِيلَ . ثُمَّ أُمِرَ بِهِ فَسُحِبَ عَلَى وَجْهِهِ حَتَّى أُلْقِيَ فِي النَّارِ . وَرَجُلٌ تَعَلَّمَ الْعِلْمَ وَعَلَّمَهُ وَقَرَأَ الْقُرْآنَ فَأُتِيَ بِهِ فَعَرَّفَهُ نِعَمَهُ فَعَرَفَهَا قَالَ : فَمَا عَمِلْتَ فِيهَا ؟ قَالَ : تَعَلَّمْتُ الْعِلْمَ وَعَلَّمْتُهُ وَقَرَأْتُ فِيكَ الْقُرْآنَ قَالَ : كَذَبْتَ وَلَكِنَّكَ تَعَلَّمْتَ لِيُقَالَ : عَالِمٌ ! وَقَرَأْتَ الْقُرْآنَ لِيُقَالَ : قَارِئٌ ! فَقَدْ قِيلَ . ثُمَّ أُمِرَ بِهِ فَسُحِبَ عَلَى وَجْهِهِ حَتَّى أُلْقِيَ فِي النَّارِ . وَرَجُلٌ وَسَّعَ اللّٰهُ عَلَيْهِ وَأَعْطَاهُ مِنْ أَصْنَافِ الْمَالِ فَأُتِيَ بِهِ فَعَرَّفَهُ نِعَمَهُ فَعَرَفَهَا قَالَ : فَمَا عَمِلْتَ فِيهَا ؟ قَالَ : مَا تَرَكْتُ مِنْ سَبِيلٍ تُحِبُّ أَنْ يُنْفَقَ فِيهَا إِلاَّ أَنْفَقْتُ فِيهَا لَكَ . قَالَ : كَذَبْتَ وَلَكِنَّكَ فَعَلْتَ لِيُقَالَ : هُوَ جَوَادٌ ! فَقَدْ قِيلَ . ثُمَّ أُمِرَ بِهِ فَسُحِبَ عَلَى وَجْهِهِ ثُمَّ أُلْقِيَ فِي النَّارِ " . رَوَاهُ مُسْلِمٌ . " جَرِيءٌ " بِفَتْحِ الْجِيمِ وَكَسْرِ الرَّاءِ وَبِالْمَدِّ : أَيْ شُجَاعٌ حَاذِقٌ .

**1617** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் தீர்ப்பு கூறப்படும் மனிதர்களில் முதல் நபர், இறைவழியில் உயிரைத் தியாகம் செய்தவராவார். அவர் கொண்டு வரப்படுவார். தனது அருட்கொடையை அவரிடம் அல்லாஹ் எடுத்துக் கூறுவான். அவரும் அறிந்து கொள்வார். "இது விஷயமாக நீ (உலகில்) என்ன அமல் செய்தாய்?" என அல்லாஹ் கேட்பான். "உனக்காகவே போரிட்டேன். இறுதியில் கொல்லப்பட்டேன்"

என்று கூறுவார். "நீ பொய் கூறுகிறாய். "பெரும் வீரர்" என்று கூற(புகழ)ப்படவே நீ போரிட்டாய். அவ்வாறே (மக்களால்) கூறப்பட்டுவிட்டது" என்று அல்லாஹ் கூறுவான். பின்பு முகம் குப்புற அவரை நரகில் போடும்படி கட்டளையிடப்படும்.

அடுத்தவர், கல்வியைக் கற்று, பிறருக்கும் கற்றுக் கொடுத்து, குர்ஆனை ஓதியவருமாவார். அவர் கொண்டு வரப்படுவார். அவரிடம் தன் அருட்கொடையை அல்லாஹ் எடுத்துக் கூறுவான். அவரும் அறிந்து கொள்வார். "இது விஷயமாக (உலகில்) எப்படி நடந்து கொண்டாய்?" என்று கேட்பான். "நான் கல்வியைக் கற்றேன். பிறருக்கும் கற்றுக் கொடுத்தேன். உனக்காகவே குர்ஆனை ஓதினேன்" என்று கூறுவார். "நீ பொய் கூறுகிறாய். "அறிஞர்" என்று கூற(புகழ)ப்பட வேண்டும் என்பதற்காக நீ கற்றுக் கொடுத்தாய். "நன்கு ஓதுபவர்" என்று கூறப்பட வேண்டும் என்பதற்காகக் குர்ஆனை நீ ஓதினாய். அவ்வாறே (மக்களால்) கூறப்பட்டுவிட்டது" என்று அல்லாஹ் கூறுவான். பின்பு, "அவரை முகம் குப்புற நரகில் போடுங்கள்" என கட்டளையிடப்படும்.

அடுத்து, அல்லாஹ்வினால் அனைத்துச் செல்வங்கள் பெற்ற வசதியானவர் கொண்டு வரப்படுவார். தன் அருட்கொடைகளை அவருக்கு அல்லாஹ் அறிவிப்பான். அதை அவரும் அறிந்து கொள்வார். "இதிலே (உலகில்) எப்படி நடந்து கொண்டாய்?" என அல்லாஹ் கேட்பான். "எந்த வழியில் செலவு செய்யப்படுவதை நீ விரும்புவாயோ, அந்த வழியில் உனக்காக நான் செலவு செய்தேன்!" என்று கூறுவார். "நீ பொய் கூறுகிறாய். "கொடையாளி" என்று கூறப்பட வேண்டும் என்பதற்காக நீ இதைச் செய்தாய். இவ்வாறே (மக்களால்) கூறப்பட்டுவிட்டது" என்று அல்லாஹ் கூறுவான். பின்பு, "நரகில் முகம் குப்புற அவரைப் போடுங்கள்" என கட்டளையிடப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1905)**

١٦١٨ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ نَاسًا قَالُوا لَهُ : إِنَّا نَدْخُلُ عَلَى سَلاَطِينِنَا فَنَقُولُ لَهُمْ بِخِلاَفِ مَا نَتَكَلَّمُ إِذَا خَرَجْنَا مِنْ عِنْدِهِمْ . قَالَ ابْنُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا : كُنَّا نَعُدُّ هَذَا نِفَاقًا عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1618** சில மனிதர்கள் இப்னு உமர் (ரழி) அவர்களிடம், "எங்கள் தலைவர்களிடம் நாங்கள் செல்கிறோம். அவர்களிடம் நாங்கள் (புகழ்ந்து) பேசி விட்டு வெளியே வந்தால், அவர்களிடம் பேசியதற்கு மாற்றமாக (குறைகளைப்) பேசுகிறோம். (இது குற்றமாகுமா?)" என்று கேட்டனர். உடனே இப்னு உமர் (ரழி) அவர்கள், "இதையே நபி (ஸல்) அவர்களின் காலத்தில் நயவஞ்சகம் என நாங்கள் கருதினோம்" என்று பதில் கூறினார்கள்.

**(புகாரி:7178)**

١٦١٩ – وَعَنْ جُنْدُبِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ سُفْيَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " مَنْ سَمَّعَ سَمَّعَ اللَّهُ بِهِ وَمَنْ رَاءَى رَاءَى اللَّهُ بِهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَرَوَاهُ مُسْلِمٌ أَيْضًا مِنْ رِوَايَةِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا . سَمَّعَ بِتَشْدِيدِ الْمِيمِ وَمَعْنَاهُ : أَظْهَرَ عَمَلَهُ لِلنَّاسِ رِيَاءً . " سَمَّعَ اللَّهُ بِهِ " : أَيْ فَضَحَهُ يَوْمَ الْقِيَامَةِ . وَمَعْنَى : " مَنْ رَاءَى " : أَيْ مَنْ أَظْهَرَ لِلنَّاسِ الْعَمَلَ الصَّالِحَ لِيَعْظُمَ عِنْدَهُمْ . " رَاءَى اللَّهُ بِهِ " أَيْ أَظْهَرَ سَرِيرَتَهُ عَلَى رُءُوسِ الْخَلاَئِقِ .

**1619** ஜுன்துப் இப்னு அப்துல்லாஹ் இப்னு சுஃப்யான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பிறர் புகழ ஒருவர் ஒரு செயலை செய்தால், மறுமைநாளில் அவரை அல்லாஹ் கேவலப்படுத்துவான். பிறருக்கு காண்பிக்க வேண்டி ஒருவர் ஓர் செயலை செய்தால், (மறுமை நாளில்) அல்லாஹ் அவரின் ரகசியங்களை வெளிப்படுத்துவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6499. முஸ்லிம்:2987. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவித்து முஸ்லிமில் (2986) உள்ளது)**

١٦٢٠ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ تَعَلَّمَ عِلْمًا مِمَّا يُبْتَغَى بِهِ وَجْهُ اللَّهِ عَزَّ وَجَلَّ لاَ يَتَعَلَّمُهُ إِلاَّ لِيُصِيبَ بِهِ عَرَضًا مِنَ الدُّنْيَا لَمْ يَجِدْ عَرْفَ الْجَنَّةِ يَوْمَ الْقِيَامَةِ " . يَعْنِي : رِيحَهَا . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ . وَالأَحَادِيثُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَشْهُورَةٌ .

**1620** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் திருப்தியை பெற்றுத் தரும் கல்வியை, உலகின் பொருள்களை அடைந்து கொள்வதற்காக மட்டுமே அவர் கற்றால், மறுமை நாளில் அவர் சொர்க்கத்தின் வாடையைக் கூட நுகர மாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3664. மேலும் இந்த பாடத்திற்குத் தகுந்த பிரபல்யமான ஹதீஸ்கள் நிறைய உண்டு)**

## ٢٨٩ - بَابُ مَا يتوهم أنّه رياء وليس هو رياء

## பாடம் : 289 - "முகஸ்துதி"யாக இல்லாத ஒன்றை "முகஸ்துதி" என எண்ணுவது

١٦٢١ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قِيلَ لِرَسُولِ اللَّهِ ﷺ : أَرَأَيْتَ الرَّجُلَ الَّذِي يَعْمَلُ الْعَمَلَ مِنَ الْخَيْرِ وَيَحْمَدُهُ النَّاسُ عَلَيْهِ ؟ قَالَ : " تِلْكَ عَاجِلُ بُشْرَى الْمُؤْمِنِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1621** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் நற்செயல்களைச் செய்கிறார். அதற்காக மக்கள் (தாங்களாகவே) அவரைப் புகழ்கின்றனர் (இது குற்றமா?)" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "இது ஒரு முஃமினுக்கு முன்கூட்டியே கிடைத்த வாழ்த்துகளாகும். (இது முகஸ்துதி அல்ல)" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2642)**

## ٢٩٠ - باب تحريم النّظر إلى المرأة الأجنبيّة والأمرد الحسن لغير حاجة شرعية

## பாடம் : 290 - மார்க்கம் அனுமதித்த தேவையின்றி அன்னியப் பெண்ணையோ, அழகிய சிறுவனையோ (தவறான எண்ணத்துடன்) பார்ப்பது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : قُلْ لِلْمُؤْمِنِينَ يَغُضُّوا مِنْ أَبْصَارِهِمْ . وَقَالَ تَعَالَى : إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَئِكَ كَانَ عَنْهُ مَسْئُولاً . وَقَالَ تَعَالَى : يَعْلَمُ خَائِنَةَ الأَعْيُنِ وَمَا تُخْفِي الصُّدُورُ . وَقَالَ تَعَالَى : إِنَّ رَبَّكَ لَبِالْمِرْصَادِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *தங்களின் பார்வைகளைத் தாழ்த்துமாறு இறை நம்பிக்கையாளர்களிடம் நீர் கூறுவீராக! (24:30)*

*நிச்சயமாக! கேள்விப்புலனும், பார்வையும், இதயமும் ஆகியவை அனைத்தும் அவனிடம் கேள்வி கேட்கப்படுபவைகளாக உள்ளன. (17:36)*

*கண்களில் உள்ள ஏமாற்றுதலையும், உள்ளங்களில் மறைத்துள்ளவற்றையும் அவன் அறிவான். (40:19)*

*நிச்சயமாக! உன் இறைவன் (ஒவ்வொன்றையும்) கண்காணிக்கிறான். (89:14)*

١٦٢٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " كُتِبَ عَلَى ابْنِ آدَمَ نَصِيبُهُ مِنَ الزِّنَى مُدْرِكٌ ذَلِكَ لاَ مَحَالَةَ : الْعَيْنَانِ زِنَاهُمَا النَّظَرُ وَالأُذُنَانِ زِنَاهُمَا الاسْتِمَاعُ وَاللِّسَانُ زِنَاهُ الْكَلاَمُ وَالْيَدُ زِنَاهَا الْبَطْشُ وَالرِّجْلُ زِنَاهَا الْخُطَى وَالْقَلْبُ يَهْوَى وَيَتَمَنَّى وَيُصَدِّقُ ذَلِكَ الْفَرْجُ أَوْ يُكَذِّبُهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . هَذَا لَفْظُ مُسْلِمٍ وَرِوَايَةُ الْبُخَارِيِّ مُخْتَصَرَةٌ .

**1622** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஆதமின் மகன் மீது விபச்சாரத்தின் குற்றத்தில் ஒரு பங்கு எழுதப்படும். சந்தேகமின்றி அதை அவன் அடைவான். கண்களின் விபச்சாரம் அதை (தீயதை)ப் பார்ப்பதாகும். காதுகளின் விபச்சாரம் அதை (தீயதை)க் கேட்பதாகும். நாவின் விபச்சாரம் அதை (தீயதை)ப் பேசுவதாகும். கையின் விபச்சாரம் (தவறான எண்ணத்தில்) பிடிப்பதாகும். காலின் விபச்சாரம் அதற்காக (தீயவற்றின் பக்கம்) நடப்பதாகும். இதயம் அதை விரும்புகிறது. ஆசை கொள்கிறது. அதை மறைவுறுப்பு (விபச்சாரம் செய்து) உறுதிபடுத்துகிறது அல்லது (விபச்சாரம் செய்யாமல்) விட்டு விடுகிறது'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6343. முஸ்லிம்:2657. முஸ்லிமின் வாசகம் இது. புகாரியில் சுருக்கமாக உள்ளது)**

١٦٢٣ – وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِيَّاكُمْ وَالْجُلُوسَ فِي الطُّرُقَاتِ ! " قَالُوا : يَا رَسُولَ اللَّهِ مَا لَنَا مِنْ مَجَالِسِنَا بُدٌّ نَتَحَدَّثُ فِيهَا . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " فَإِذَا أَبَيْتُمْ إِلاَّ الْمَجْلِسَ فَأَعْطُوا الطَّرِيقَ حَقَّهُ " . قَالُوا : وَمَا حَقُّ الطَّرِيقِ يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " غَضُّ الْبَصَرِ وَكَفُّ الأَذَى وَرَدُّ السَّلاَمِ وَالأَمْرُ بِالْمَعْرُوفِ وَالنَّهْيُ عَنِ الْمُنْكَرِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1623** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பாதைகளில் உட்காருவதை உங்களிடம் எச்சரிக்கிறேன்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! எங்களின் பேச்சுக்களை நாங்கள் அங்கே பேசிடும் அவசியம் எங்களுக்கு ஏற்படுகிறதே?'' என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். அதற்கு அவர்கள், “அந்த இடத்தில் நீங்கள் உட்கார வேண்டியது ஏற்பட்டால், பாதைக்குரிய உரிமையை கொடுங்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! பாதையின் உரிமை என்ன?'' என்று நபித்தோழர்கள் கேட்டார்கள். “பார்வையைத் தாழ்த்துவது, நோவினையை கைவிடுவது, ஸலாமுக்கு பதில் கூறுவது, நல்லதை ஏவுவது, தீயதைத் தடுப்பது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:2465. முஸ்லிம்:2121)**

١٦٢٤ – وَعَنْ أَبِي طَلْحَةَ زَيْدِ بْنِ سَهْلٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنَّا قُعُودًا بِالأَفْنِيَةِ نَتَحَدَّثُ فِيهَا فَجَاءَ رَسُولُ اللَّهِ ﷺ فَقَامَ عَلَيْنَا فَقَالَ : " مَا لَكُمْ وَلِمَجَالِسِ الصُّعُدَاتِ ؟ " اجْتَنِبُوا مَجَالِسَ الصُّعُدَاتِ . فَقُلْنَا : إِنَّمَا قَعَدْنَا لِغَيْرِ مَا بَأْسٍ : قَعَدْنَا نَتَذَاكَرُ وَنَتَحَدَّثُ . قَالَ : " إِمَّا لاَ فَأَدُّوا حَقَّهَا : غَضُّ الْبَصَرِ وَرَدُّ السَّلاَمِ وَحُسْنُ الْكَلاَمِ " . رَوَاهُ مُسْلِمٌ " الصُّعُدَاتِ " بِضَمِّ الصَّادِ وَالْعَيْنِ : أَيِ الطُّرُقَاتُ .

**1624** அபூதல்ஹா ஸைத் இப்னு ஸஹ்ல் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் வீடுகளின் முன் பகுதியில் (வீதியில்) உட்கார்ந்தவர்களாக அங்கே பேசிக் கொண்டிருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். எங்கள்அருகே அவர்கள் நின்று, “பாதைகளில் உட்கார்ந்திருக்க உங்களுக்கு என்ன அவசியம் ஏற்பட்டது. பாதைகளில் உட்காருவதைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள். “இடையூறு தராமல் நாங்கள் உட்கார்ந்திருக்கிறோம். சில நல்ல விஷயங்களை நாங்கள் பேசி நினைவுகூரவே (உட்கார்ந்து)

இருக்கிறோம்" என்று கூறினோம். "அப்படியானால், அதன் உரிமையை நிறைவேற்றுங்கள். பார்வையைத் தாழ்த்துவது, பதில் ஸலாம் கூறுவது, நல்லவிதமாகப் பேசுவது அதன் உரிமைகளாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2161)**

١٦٢٥ – وَعَنْ جَرِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَأَلْت رَسُولَ اللَّهِ ﷺ عَنْ نَظَرِ الْفَجْأَةِ فَقَالَ : " اصْرِفْ بَصَرَك " . رَوَاهُ مُسْلِمٌ.

**1625** ஜரீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(அந்நியப் பெண்கள் மீது) திடீரென பார்வை படுவது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். "உம் பார்வையைத் திருப்பிக் கொள்வீராக!" என்று பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:2159)**

١٦٢٦ – وَعَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كُنْت عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ وَعِنْدَهُ مَيْمُونَةُ فَأَقْبَلَ ابْنُ أُمِّ مَكْتُومٍ وَذَلِكَ بَعْدَ أَنْ أُمِرْنَا بِالْحِجَابِ فَقَالَ النَّبِيُّ ﷺ : " احْتَجِبَا مِنْهُ " . فَقُلْنَا : يَا رَسُولَ اللَّهِ أَلَيْسَ هُوَ أَعْمَى لاَ يُبْصِرُنَا وَلاَ يَعْرِفُنَا ؟ فَقَالَ النَّبِيُّ ﷺ : " أَفَعَمْيَاوَانِ أَنْتُمَا ؟ أَلَسْتُمَا تُبْصِرَانِهِ ! ؟ " رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1626** உம்முஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் இருந்தேன். அவர்களின் அருகே மைமூனா (ரழி) இருந்தார்கள். அப்போது இப்னு உம்மி மக்தூம் (ரழி) அவர்கள் எங்களை நோக்கி வந்தார்கள். (இவர் பார்வையற்றவர்). "ஹிஜாப்" பற்றி எங்களுக்கு கட்டளையிடப்பட்ட பின் நடந்த சம்பவம் இது. "இவர் வருவதால் இருவரும் மறைந்து கொள்ளுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! எங்களைப் பார்க்கவோ, எங்களை அறிந்து கொள்ளவோ இயலாத குருடராக அவர் இல்லையா?" என்று கேட்டோம். "அவரை நீங்கள் இருவரும் பார்க்காமல் இருக்க, நீங்கள் இருவரும் பார்வையற்றவர்களா?" என்று நபி (ஸல்) கேட்டார்கள். **(அபூதாவூது:4112. திர்மிதி:2778)**

١٦٢٧ – وَعَنْ أَبِي سَعِيدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَنْظُرُ الرَّجُلُ إِلَى عَوْرَةِ الرَّجُلِ وَلاَ الْمَرْأَةُ إِلَى عَوْرَةِ الْمَرْأَةِ وَلاَ يُفْضِي الرَّجُلُ إِلَى الرَّجُلِ فِي ثَوْبٍ وَاحِدٍ وَلاَ تُفْضِي الْمَرْأَةُ إِلَى الْمَرْأَةِ فِي الثَّوْبِ الْوَاحِدِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1627** அபூஸயீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு ஆண், மற்றொரு ஆணின் மறைவுறுப்பைப் பார்க்க வேண்டாம். ஒரு பெண், மற்றொரு பெண்ணின் மறைவுப் பகுதிகளைப் பார்க்க வேண்டாம். ஓர் ஆண், மற்றொரு ஆணுடன் ஒரே ஆடையில் சேர்ந்திருக்க வேண்டாம். ஒரு பெண் மற்றொரு பெண்ணுடன் ஒரே ஆடையில் சேர்ந்திருக்க வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:338)**

## ٢٩١ – باب تحريم الخلوة بالأجنبيّة

## பாடம் : 291 - அன்னியப் பெண்ணுடன் தனிமையில் இருப்பது கூடாது

**قَالَ اللَّهُ تَعَالَى : وَإِذَا سَأَلْتُمُوهُنَّ مَتَاعًا فَاسْأَلُوهُنَّ مِنْ وَرَاءِ حِجَابٍ .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *"அந்தப் பெண்களிடம் ஏதேனும் பொருளை நீங்கள் கேட்டால், திரை மறைவிலிருந்து அவர்களிடம் கேளுங்கள்" (33:53)*

١٦٢٨ – وَعَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِيَّاكُمْ وَالدُّخُولَ عَلَى النِّسَاءِ ! " فَقَالَ رَجُلٌ مِنَ الأَنْصَارِ : أَفَرَأَيْت الْحَمْوَ ؟ قَالَ : " الْحَمْوُ الْمَوْتُ ! " مُتَّفَقٌ عَلَيْهِ . " الْحَمْوُ " قَرِيبُ الزَّوْجِ : كَأَخِيهِ وَابْنِ أَخِيهِ وَابْنِ عَمِّهِ.

**1628** உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெண்களிடம் நீங்கள் செல்வதற்கு உங்களை நான் எச்சரிக்கிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "கணவனின் சகோதரர் செல்லலாமா?" என்று மதீனாவாசிகளில் ஒருவர் கேட்டார். "கணவனின் சகோதரரும் மரணம் போன்றுதான்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5232. முஸ்லிம்:2172)**

١٦٢٩ – وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ:"لاَ يَخْلُوَن أَحَدُكُمْ بِامْرَأَةٍ إِلاَّ مَعَ ذِي مَحْرَمٍ". مُتَّفَقٌ عَلَيْهِ.

**1629** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர், ஒரு அந்நியப் பெண்ணிடம் (அவளுடன்) அவளுடைய (தந்தை, சகோதரர், மகன் போன்ற) உறவினர்கள் உடன் இல்லாமல் தனித்திருக்க வேண்டாம்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1862. முஸ்லிம்:1341)**

١٦٣٠ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " حُرْمَةُ نِسَاءِ الْمُجَاهِدِينَ عَلَى الْقَاعِدِينَ كَحُرْمَةِ أُمَّهَاتِهِمْ ! مَا مِنْ رَجُلٍ مِنَ الْقَاعِدِينَ يَخْلُفُ رَجُلاً مِنَ الْمُجَاهِدِينَ فِي أَهْلِهِ فَيَخُونُهُ فِيهِمْ إِلاَّ وَقَفَ لَهُ يَوْمَ الْقِيَامَةِ فَيَأْخُذُ مِنْ حَسَنَاتِهِ مَا شَاءَ حَتَّى يَرْضَى " . ثُمَّ الْتَفَتَ إِلَيْنَا رَسُولُ اللَّهِ ﷺ فَقَالَ : " مَا ظَنُّكُمْ ؟ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1630** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறைவழியில் போராடச் சென்றவர்களின் மனைவியரின் கண்ணியம், இறைவழியில் போராடச் செல்லாதவர்களிடம் அவர்களின் தாய்மார்களின் கண்ணியம் போலாகும். போருக்குச் செல்லாதவர் எவரேனும் போருக்குச் சென்ற ஒருவரின் குடும்ப விஷயத்தில் பொறுப்பேற்று அவர்கள் விஷயத்தில் அவருக்கு அவர் மோசடி செய்தால், மறுமை நாளில் (போருக்குச் சென்றவர்) மோசடி செய்தவரை நிறுத்தி, தான் திருப்தியுறும் வரை, அவரின் நன்மைகளில் தான் விரும்பியதை எடுத்துக் கொள்வார்" என்று கூறிய நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் திரும்பி, "(இது பற்றி) உங்கள் கருத்து என்ன?" என்று கேட்டார்கள். **(முஸ்லிம்:1897)**

## ٢٩٢ – باب تحريم تشبة الرّ جال بالنّساء وتشبّه النّساء بالرّجال، في لباسٍ وحر كة وغير ذلك

## பாடம் : 292 - நடை, உடையில் ஆண்கள், பெண்கள் போல் நடப்பதும், பெண்கள் ஆண்கள் போல் நடப்பதும் கூடாது.

١٦٣١ – عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : لَعَنَ رَسُولُ اللَّهِ ﷺ الْمُخَنَّثِينَ مِنَ الرِّجَالِ وَالْمُتَرَجِّلاَتِ مِنَ النِّسَاءِ . وَفِي رِوَايَةٍ : لَعَنَ رَسُولُ اللَّهِ ﷺ الْمُتَشَبِّهِينَ مِنَ الرِّجَالِ بِالنِّسَاءِ وَالْمُتَشَبِّهَاتِ مِنَ النِّسَاءِ بِالرِّجَالِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1631** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஆண்களில் பெண்களைப் போல் நடப்பவர்களையும், பெண்களில் ஆண்களைப் போல் நடப்பவர்களையும் நபி (ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

மற்றொரு அறிவிப்பில், "ஆண்களில் பெண்கள் போல பாவனை செய்பவர்களையும், பெண்களில் ஆண்கள் போல பாவனை செய்பவர்களையும் நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்" என்று உள்ளது. **(புகாரி:5885, 5886)**

١٦٣٢ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَعَنَ رَسُولُ اللَّهِ ﷺ الرَّجُلَ يَلْبَسُ لُبْسَةَ الْمَرْأَةِ وَالْمَرْأَةُ تَلْبَسُ لُبْسَةَ الرَّجُلِ . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1632** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பெண்களின் ஆடைகளை அணிந்து கொள்ளும் ஆண்களையும், ஆண்களின் ஆடைகளை அணிந்து கொள்ளும் பெண்களையும் நபி (ஸல்) அவர்கள் சபித்தார்கள். **(அபூதாவூது:4098)**

١٦٣٣ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " صِنْفَانِ مِنْ أَهْلِ النَّارِ لَمْ أَرَهُمَا : قَوْمٌ مَعَهُمْ سِيَاطٌ كَأَذْنَابِ الْبَقَرِ يَضْرِبُونَ بِهَا النَّاسَ وَنِسَاءٌ كَاسِيَاتٌ عَارِيَاتٌ مُمِيلاَتٌ مَائِلاَتٌ رُءُوسُهُنَّ كَأَسْنِمَةِ الْبُخْتِ الْمَائِلَةِ لاَ يَدْخُلْنَ الْجَنَّةَ وَلاَ يَجِدْنَ رِيحَهَا وَإِنَّ رِيحَهَا لَيُوجَدُ مِنْ مَسِيرَةِ كَذَا وَكَذَا " . رَوَاهُ مُسْلِمٌ . مَعْنَى " كَاسِيَاتٍ " : أَيْ مِنْ نِعْمَةِ اللَّهِ " عَارِيَاتٌ " مِنْ شُكْرِهَا . وَقِيلَ : مَعْنَاهُ : تَسْتُرُ بَعْضَ بَدَنِهَا وَتَكْشِفُ بَعْضَهُ إِظْهَارًا لِجَمَالِهَا وَنَحْوِهِ . وَقِيلَ : تَلْبَسُ ثَوْبًا رَقِيقًا يَصِفُ لَوْنَ بَدَنِهَا . وَمَعْنَى " مَائِلاَت " : قِيلَ عَنْ طَاعَةِ اللَّهِ وَمَا يَلْزَمُهُنَّ حِفْظُهُ " مُمِيلاَت " : أَيْ يُعَلِّمْنَ غَيْرَهُنَّ فِعْلَهُنَّ الْمَذْمُومَ . وَقِيلَ : " مَائِلاَت " : يَمْشِينَ مُتَبَخْتِرَات " مُمِيلاَت " لأَكْتَافِهِنَّ . وَقِيلَ : مَائِلاَتٌ يَمْتَشِطْنَ الْمِشْطَةَ الْمَيْلاَءَ : وَهِيَ مِشْطَةُ الْبَغَايَا " وَمُمِيلاَتٌ " يُمَشِّطْنَ غَيْرَهُنَّ تِلْكَ الْمِشْطَةَ . " رُءُوسُهُنَّ كَأَسْنِمَةِ الْبُخْتِ " : أَيْ يُكَبِّرْنَهَا وَيُعَظِّمْنَهَا بِلَفِّ عِمَامَةٍ أَوْ عِصَابَةٍ أَوْ نَحْوِهَا .

**1633** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இரண்டு கூட்டத்தினர், நரகவாசிகளாவர். அவர்களை நான் பார்த்ததில்லை. (பிற்காலத்தில் வருவார்கள்). (1) ஒரு கூட்டத்தினரிடம் பசுமாட்டின் வால்கள் போல் சாட்டைகள் இருக்கும். அதன் மூலம் மக்களை அடித்துத் துன்புறுத்துவார்கள். (2) ஆடைகள் திறந்து (அரைகுறை) நிர்வாணமாக உள்ள பெண்கள். இவர்கள் பிறரைக் கவர்ந்திழுப்பர், பிறரிடம் சாய்வர். அவர்களின் கூந்தல் ஒட்டகத்தின் சாய்ந்த திமில்கள் போல் இருக்கும். இவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள். அதன் வாடையைக் கூட நுகர மாட்டார்கள். அதன் வாடை, இன்ன தூரத்திலிருந்தும் பெற்றுக் கொள்ளப்படும். (ஆனால் அவர்கள் அந்த வாடையை நுகரமாட்டார்கள்) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2128)**

## ٢٩٣ – باب النَّهي عَن التشبّه بالشَّيطان وَالكفّار

## பாடம் : 293 - ஷைத்தானுக்கும், இறை மறுப்பாளர்களுக்கும் ஒப்பாக நடப்பது கூடாது

١٦٣٤ – عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَأْكُلُوا بِالشِّمَالِ فَإِنَّ الشَّيْطَانَ يَأْكُلُ وَيَشْرَبُ بِشِمَالِهِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1634** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இடது கையால் சாப்பிடாதீர்கள். நிச்சயமாக ஷைத்தான், இடது கையால் தான் சாப்பிடுவான். குடிப்பான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2019)**

١٦٣٥ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَأْكُلَنَّ أَحَدُكُمْ بِشِمَالِهِ وَلاَ يَشْرَبَنَّ بِهَا : فَإِنَّ الشَّيْطَانَ يَأْكُلُ بِشِمَالِهِ وَيَشْرَبُ بِهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1635** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் தனது இடது கையால் சாப்பிட வேண்டாம். குடிக்க வேண்டாம். நிச்சயமாக! ஷைத்தான்தான், தனது இடது கையால் சாப்பிடுவான். குடிப்பான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2020)**

١٦٣٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ الْيَهُودَ وَالنَّصَارَى لاَ يَصْبُغُونَ فَخَالِفُوهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . الْمُرَادُ : خِضَابُ شَعْرِ اللِّحْيَةِ وَالرَّأْسِ الأَبْيَضِ بِصُفْرَةٍ أَوْ حُمْرَةٍ ; وَأَمَّا السَّوَادُ فَمَنْهِيٌّ عَنْهُ كَمَا سَنَذْكُرُهُ فِي الْبَابِ بَعْدَهُ إِنْ شَاءَ اللَّهُ تَعَالَى .

**1636** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! யூதர்கள், கிறிஸ்துவர்கள் (தங்களின்) முடிகளுக்கு சாயம் பூசுவதில்லை. எனவே, அவர்களுக்கு நீங்கள் மாறு செய்யுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5899. முஸ்லிம்:2103)**

சாயம் பூசுவதன் கருத்து, வெள்ளையான (நரைவிழுந்த) தாடி, தலை முடியை மஞ்சளாக அல்லது சிவப்பாக நிறம் மாற்றுவதாகும். ஆனால் கறுப்பு நிறம் பூசுவது கூடாது. இது பற்றி இன்ஷா அல்லாஹ் பின்வரும் பாடத்தில் கூறுவேன். **(மூல நூல்ஆசிரியர்)**

## ٢٩٤ – بابُ نَهي الرّجل وَالمرأة عَن خضاب شعرهما بسَواد

## பாடம் : 294 - ஆணும், பெண்ணும் தங்களின் முடிக்கு கருப்புச் சாயம் பூசுவது கூடாது

١٦٣٧ – عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : أُتِيَ بِأَبِي قُحَافَةَ وَالِدِ أَبِي بَكْرٍ الصِّدِّيقِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا يَوْمَ فَتْحِ مَكَّةَ وَرَأْسُهُ وَلِحْيَتُهُ كَالثَّغَامَةِ بَيَاضًا . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " غَيِّرُوا هَذَا وَاجْتَنِبُوا السَّوَادَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1637** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூபக்கர் (ரழி) அவர்களின் தந்தை அபூகுஹாஃபா மக்கா வெற்றியின் போது நபி (ஸல்) அவர்கள் முன் அழைத்து வரப்பட்டார். அவரின் தலையும், தாடியும் "ஸஙாமா" (தும்பைப் பூ போல) செடிபோல் வெள்ளையாக இருந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள், "இவருடைய முடியை நிறம் மாற்றுங்கள். கருப்பு நிறத்தை தவிர்த்திடுங்கள்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:2102)**

## ٢٩٥ – بابُ النّهي عَنْ القزع: وهو حلق بعض الرأس دون بعض، وَإباحة حلقه كله للرجل دون المرأة

## பாடம் : 295 - தலையின் ஒரு பகுதியை விட்டு மறுபகுதியை மட்டும் சிரைப்பது கூடாது. பெண்ணைத் தவிர, ஆண் மட்டும் தலை முழுவதும் சிரைப்பது கூடும்.

١٦٣٨ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ عَنِ الْقَزَعِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1638** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தலைமுடியில் ஒரு பகுதியை விட்டு விட்டு, மறு பகுதியை மட்டும் சிரைப்பதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். **(புகாரி:5920. முஸ்லிம்:2120)**

١٦٣٩ – وَعَنْهُ ( عَبْد اللَّه بْن عُمَرَ ) قَالَ : رَأَى رَسُولُ اللَّه ﷺ صَبِيًّا قَدْ حَلَقَ بَعْضَ شَعْرِ رَأْسِه وَتَرَكَ بَعْضَهُ فَنَهَاهُمْ عَنْ ذَلِكَ وَقَالَ : " احْلِقُوهُ كُلَّهُ أَوْ اتْرُكُوهُ كُلَّهُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ .

**1639** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தலையின் ஒரு பகுதி விடப்பட்டு, மறு பகுதி மட்டும் சிரைக்கப்பட்ட ஒரு சிறுவனைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், அவ்வாறு செய்வதை விட்டும் மக்களைத் தடுத்தார்கள். “தலை முழுவதையும் சிரையுங்கள். அல்லது அதை முழுவதுமாக (சிரைக்காமல்) விட்டு விடுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.
**(புகாரி, முஸ்லிமின் நிபந்தனைப்படி அபூதாவூதில் (4195) உள்ளது)**

١٦٤٠ – وَعَنْ عَبْد اللَّه بْن جَعْفَر رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ أَمْهَلَ آلَ جَعْفَرٍ ثَلاَثًا ثُمَّ أَتَاهُمْ فَقَالَ : " لاَ تَبْكُوا عَلَى أَخِي بَعْدَ الْيَوْمِ " ثُمَّ قَالَ : " ادْعُوا لِي بَنِي أَخِي " . فَجِيءَ بِنَا كَأَنَّا أَفْرُخٌ فَقَالَ : " ادْعُوا لِي الْحَلاَّقَ " . فَأَمَرَهُ فَحَلَقَ رُءُوسَنَا . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ .

**1640** அப்துல்லாஹ் இப்னு ஜஃபர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜஃபர் (ரழி) (இறந்த பின்) அவர்களின் குடும்பத்தாரிடம் மூன்று நாட்கள் கழித்து வந்த நபி (ஸல்) அவர்கள், “இனி, இன்றிலிருந்து என் சகோதரருக்காக நீங்கள் அழாதீர்கள்” என்று கூறி விட்டு, “என் சகோதரரின் இரண்டு மகன்களையும் என்னிடம் அழைத்து வாருங்கள்” என்று கூறினார்கள். கோழிக்குஞ்சுகள் போன்றிருந்த எங்களை அவர்களின் முன் கொண்டு வரப்பட்டோம். “முடி சிரைப்பவரை என்னிடம் அழைத்து வாருங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். அவரிடம் கூறி எங்களின் தலையைச் சிரைக்கச் செய்தார்கள்.

**(புகாரி, முஸ்லிமின் நிபந்தனைபடி அபூதாவூதில் (4192) உள்ளது)**

١٦٤١ – وَعَنْ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّه ﷺ أَنْ تَحْلِقَ الْمَرْأَةُ رَأْسَهَا . رَوَاهُ النَّسَائِيُّ .

**1641** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பெண்கள், தங்களின் தலைமுடியை சிரைத்திடக் கூடாது” என நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
**(நஸயீ:8/130)**

## ٢٩٦ – باب تحريم وَصل الشعْر والوشم، وَالوَشر: وهو تحديد الأسنان

## பாடம் : 296 - சவுரி முடி வைப்பதும், பச்சை குத்துவதும், பற்களை இரும்பால் சிதைப்பதும் கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : إِنْ يَدْعُونَ مِنْ دُونِه إِلاَّ إِنَاثًا وَإِنْ يَدْعُونَ إِلاَّ شَيْطَانًا مَرِيدًا لَعَنَهُ اللَّهُ وَقَالَ لأَتَّخِذَنَّ مِنْ عِبَادِكَ نَصِيبًا مَفْرُوضًا وَلأُضِلَّنَّهُمْ وَلأُمَنِّيَنَّهُمْ وَلآمُرَنَّهُمْ فَلَيُبَتِّكُنَّ آذَانَ الأَنْعَامِ وَلآمُرَنَّهُمْ فَلَيُغَيِّرُنَّ خَلْقَ اللَّه الآيَةَ

**அல்லாஹ் கூறுகிறான்:** *அவனல்லாத பெண்(தெய்வங்)களையே தவிர அவர்கள் வணங்கவில்லை. மோசக்காரனான ஷைத்தானைத் தவிர அவர்கள் வணங்கவில்லை. அல்லாஹ் அவனைச் சபித்தான். அப்போது அவன், “உன் அடியார்களில் குறிப்பிட்ட சாராரை நான் தேர்ந்தெடுத்து, அவர்களை வழி கெடுப்பேன். அவர்களுக்கு (உலக) ஆசைகளை ஏற்படுத்துவேன். அவர்களுக்கு*

*(நான் விரும்பியதை)க் கட்டளையிடுவேன். கால்நடைகளின் காதுகளை அவர்கள் அறுப்பார்கள். மேலும் அவர்களிடம் ஏவுவேன். அல்லாஹ்வின் படைப்பையே அவர்கள் மாற்றிவிடுவார்கள்." என்று கூறினான். (4:117-119)*

١٦٤٢ - وَعَنْ أَسْمَاءَ رَضِيَ اللّٰهُ عَنْهَا أَنَّ امْرَأَةً سَأَلَتْ النَّبِيَّ ﷺ فَقَالَتْ : يَا رَسُولَ اللّٰهِ إِنَّ ابْنَتِي أَصَابَتْهَا الْحَصْبَةُ فَتَمَرَّقَ شَعْرُهَا وَإِنِّي زَوَّجْتُهَا أَفَأَصِلُ فِيهِ ؟ فَقَالَ : " لَعَنَ اللّٰهُ الْوَاصِلَةَ وَالْمَوْصُولَةَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " الْوَاصِلَةَ وَالْمُسْتَوْصِلَةَ " . قَوْلُهَا " فَتَمَرَّقَ " : هُوَ بِالرَّاءِ وَمَعْنَاهُ : انْتَثَرَ وَسَقَطَ . وَالْوَاصِلَةُ : الَّتِي تَصِلُ شَعْرَهَا أَوْ شَعْرَ غَيْرِهَا بِشَعْرٍ آخَرَ . " وَالْمَوْصُولَةُ " الَّتِي يُوصَلُ شَعْرُهَا . " وَالْمُسْتَوْصِلَةُ " : الَّتِي تَسْأَلُ مَنْ يَفْعَلُ لَهَا ذَلِكَ . وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللّٰهُ عَنْهَا نَحْوُهُ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1642** அஸ்மா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம், "இறைத்தூதர் அவர்களே! என் மகளுக்கு பொடுகு ஏற்பட்டு, (அதனால்) அவளின் தலைமுடி உதிர்ந்துவிட்டது. நான் அவளுக்குத் திருமணம் செய்து வைத்துள்ளேன். எனவே அவளின் முடியுடன் பிறர் (சவுரி) முடியை வைக்கலாமா?" என்று கேட்டாள். உடனே நபி (ஸல்) அவர்கள் "சவுரி முடி வைப்பவளையும், வைக்கத்தந்தவளையும் அல்லாஹ் சபித்து விட்டான்" என்று கூறினார்கள். **(புகாரி:5941. முஸ்லிம்:2122)**

"சவுரி முடி வைக்கும் பெண்ணையும், சவுரி முடி வைக்கக் கூறும் பெண்ணையும் அல்லாஹ் சபித்து விட்டான்" என்று புகாரியின் (5936) மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவித்த இதே மாதிரியான ஹதீஸ் புகாரி (5934), முஸ்லிமில் (2123) உள்ளது.

١٦٤٣ - وَعَنْ حُمَيْدِ بْنِ عَبْدِ الرَّحْمَنِ أَنَّهُ سَمِعَ مُعَاوِيَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَامَ حَجَّ عَلَى الْمِنْبَرِ وَتَنَاوَلَ قُصَّةً مِنْ شَعْرٍ كَانَتْ فِي يَدِ حَرَسِيٍّ فَقَالَ : يَا أَهْلَ الْمَدِينَةِ أَيْنَ عُلَمَاؤُكُمْ ؟ ! سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَنْهَى عَنْ مِثْلِ هَذِهِ وَيَقُولُ : " إِنَّمَا هَلَكَتْ بَنُو إِسْرَائِيلَ حِينَ اتَّخَذَهَا نِسَاؤُهُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1643** ஹுமைது இப்னு அப்துர் ரஹ்மான் அறிவிக்கின்றார்கள்:

முஆவியா (ரழி)அவர்கள் ஒரு காவலரின் கையில் இருந்த முடியின் ஒரு பிடியை எடுத்துக் கொண்டு மிம்பரில் ஏறி நின்றவர்களாக, "மதீனாவாசிகளே! உங்களிடையே உள்ள அறிஞர்கள் எங்கே?" இது மாதிரி(யான சவுரி முடியை) உபயோகிப்பதை விட்டும் தடை செய்யும் வகையில், "பனூ இஸ்ரவேலர்கள் அழிந்ததன் காரணம், அவர்களின் பெண்கள் இதை (சவுரிமுடியை) தலையில் வைத்துக் கொண்டதுதான்" என்று நபி (ஸல்) கூறியதை நான் கேட்டேன்" என முஆவியா (ரழி) சொற்பொழிவாற்றினார்கள். **(புகாரி:5932. முஸ்லிம்:2127)**

١٦٤٤ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ " لَعَنَ الْوَاصِلَةَ وَالْمُسْتَوْصِلَةَ وَالْوَاشِمَةَ وَالْمُسْتَوْشِمَةَ " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1644** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சவுரிமுடி வைக்கும் பெண்ணையும், சவுரிமுடியை வைக்கக் கேட்கும் பெண்ணையும், பச்சை குத்தும் பெண்ணையும், பச்சை குத்தச் சொல்லும் பெண்ணையும் நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள். **(புகாரி:5937. முஸ்லிம்:2124)**

١٦٤٥ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَعَنَ اللَّهُ الْوَاشِمَاتِ وَالْمُسْتَوْشِمَاتِ وَالْمُتَنَمِّصَاتِ وَالْمُتَفَلِّجَاتِ لِلْحُسْنِ الْمُغَيِّرَاتِ خَلْقَ اللَّهِ . فَقَالَتْ لَهُ امْرَأَةٌ فِي ذَلِكَ فَقَالَ : وَمَالِي لاَ أَلْعَنُ مَنْ لَعَنَهُ رَسُولُ اللَّهِ ﷺ وَهُوَ فِي كِتَابِ اللَّهِ ؟ قَالَ اللَّهُ تَعَالَى : وَمَا آتَاكُمُ الرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَاكُمْ عَنْهُ فَانْتَهُوا . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْمُتَفَلِّجَةُ " : هِيَ الَّتِي تُبَرِّدُ مِنْ أَسْنَانِهَا لِيَتَبَاعَدَ بَعْضُهَا عَنْ بَعْضٍ قَلِيلاً وَتُحَسِّنُهَا وَهُوَ الْوَشْرُ . " وَالنَّامِصَةُ " : الَّتِي تَأْخُذُ مِنْ شَعْرِ حَاجِبِ غَيْرِهَا وَتُرَقِّقُهُ لِيَصِيرَ حَسَنًا . " وَالْمُتَنَمِّصَةُ " : الَّتِي تَأْمُرُ مَنْ يَفْعَلُ بِهَا ذَلِكَ .

**1645** "பச்சை குத்தும் பெண்களையும், பச்சை குத்த வேண்டும் எனக் கேட்கும் பெண்களையும், சவுரிமுடி வைத்த பெண்களையும், பல்லை அழகாக்க இரும்பால் தேய்க்கும் பெண்களையும், அல்லாஹ்வின் படைப்பை மாற்றியமைக்கும் பெண்களையும் அல்லாஹ் சபித்துவிட்டான்" என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) கூறினார்கள்.

அப்போது, இது பற்றி ஒரு பெண், அவர்களிடம் கேட்டார். அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள்ள ஒருவரை, நான் சபிக்காமல் இருக்க எனக்கு என்ன வந்தது? அல்லாஹ்வின் வேதத்தில் கூட இது உள்ளது. "அல்லாஹ்வின் தூதர் உங்களிடம் கொண்டு வந்ததைப் பின்பற்றுங்கள். உங்களை எதை விட்டும் தடுத்தாரோ, அதிலிருந்து விலகி இருங்கள்." (அல்குர்ஆன்-59:7) என்று அல்லாஹ் கூறுகிறான்" என இப்னு மஸ்வூது (ரழி) கூறினார்கள். **(புகாரி:5931. முஸ்லிம்:2125)**

## ٢٩٧ – باب النّهي عَن نتف الشيْب من اللحية والرأس وغير هما وعَن نَتف الأمرد شعر لحيته عند أول طلوعه

### பாடம் : 297 - தாடியிலிருந்து நரை முடியை பிடுங்குவது கூடாது.

١٦٤٦ – عَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ ( عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ تَنْتِفُوا الشَّيْبَ فَإِنَّهُ نُورُ الْمُسْلِمِ يَوْمَ الْقِيَامَةِ " . حَدِيثٌ حَسَنٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَالنَّسَائِيُّ بِأَسَانِيدَ حَسَنَةٍ . قَالَ التِّرْمِذِيُّ : هُوَ حَدِيثٌ حَسَنٌ .

**1646** அம்ரு இப்னு ஷுஐபு அவர்கள் தம் தந்தை மூலமாக தம் பாட்டனார் கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

"நரையைப் பிடுங்காதீர்கள். நிச்சயமாக! அது மறுமை நாளில் முஸ்லிமின் ஒளியாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:4202. திர்மிதீ:2821. நஸயீ:8/136. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٦٤٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ عَمِلَ عَمَلاً لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1647** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நம் கட்டளை இல்லாத (மார்க்கத்தில் இல்லாத) ஒன்றை ஒருவன் செயல்படுத்தினால், அது நிராகரிக்கப்பட வேண்டியதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1718)**

## ٢٩٨ – بابُ كَرَاهية الاستنجاء باليَمين، ومسّ الفرج باليمين من غير عذر

**பாடம் : 298 - வலது கையால் சுத்தம் செய்வதும், காரணமின்றி வலது கையால் மறைவுறுப்பைத் தொடுவதும் வெறுக்கத்தக்கது.**

١٦٤٨ – وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا بَالَ أَحَدُكُمْ فَلاَ يَأْخُذَنَ ذَكَرَهُ بِيَمِينِهِ وَلاَ يَسْتَنْجِ بِيَمِينِهِ وَلاَ يَتَنَفَّسْ فِي الأَنَاءِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي الْبَابِ أَحَادِيثُ كَثِيرَةٌ صَحِيحَةٌ .

**1648** அபூ கதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்.

“ஒருவர் சிறுநீர் கழித்தால், தன் மறைவுறுப்பை தனது வலது கையால் பிடிக்க வேண்டாம். தனது வலது கையால் சுத்தம் செய்ய வேண்டாம். பாத்திரத்தில் மூச்சு விட வேண்டாம்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:154. முஸ்லிம்:267. இந்த பாடத்தில் ஆதாரப்பூர்வமான நிறைய ஹதீஸ்கள் உண்டு)**

## ٢٩٩ – باب كراهة المشي في نعلٍ وَحدَةَ أو خفّ وَاحد لغير عذر، وكراهة لبس النعل والخف قَائمًا لغير عذر

**பாடம் : 299 - காரணமின்றி ஒரு செருப்புடன் அல்லது ஒரு காலுறையுடன் நடப்பது வெறுக்கத்தக்கது. மேலும், காரணமின்றி நின்று கொண்டே செருப்பணிவதோ, காலுறை அணிவதோ வெறுக்கத்தக்கது.**

١٦٤٩ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَمْشِ أَحَدُكُمْ فِي نَعْلٍ وَاحِدَةٍ لِيَنْعَلْهُمَا جَمِيعًا أَوْ لِيَخْلَعْهُمَا جَمِيعًا " . وَفِي رِوَايَةٍ : " أَوْ لِيَحْفُهُمَا جَمِيعًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1649** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் ஒரு செருப்பில் நடக்க வேண்டாம். இரண்டையும் சேர்த்தே அணியட்டும்! அல்லது இரண்டையும் சேர்த்தே கழட்டி விடட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5855. முஸ்லிம்:2097)**

١٦٥٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِذَا انْقَطَعَ شِسْعُ نَعْلِ أَحَدِكُمْ فَلاَ يَمْشِ فِي الأُخْرَى حَتَّى يُصْلِحَهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1650** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவரின் செருப்பு வார் அறுந்துவிட்டால், அதைச் சரி செய்யும் வரை, ஒரு செருப்புடன் நடக்க வேண்டாம்” என்று நபி (ஸல்) கூற நான் கேட்டேன். **(முஸ்லிம்:2098)**

١٦٥١ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى أَنْ يَنْتَعِلَ الرَّجُلُ قَائِمًا . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**1651** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருவர் நின்று கொண்டே செருப்பு அணிய நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

**(அபூதாவூது:4135)**

## ٣٠٠ – باب النّهي عَن ترك النّار في البيت عند النوم ونحوه، سواء كانت في سراج أو غيره

## பாடம் : 300 - தூங்கும் போது வீட்டில் நெருப்பை (அணைக்காமல்) விடக்கூடாது. விளக்கு மற்றும் அதுபோன்றவையாக இருந்தாலும் சரியே!

١٦٥٢ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ تَتْرُكُوا النَّارَ فِي بُيُوتِكُمْ حِينَ تَنَامُونَ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1652** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் தூங்கும் போது உங்களின் வீடுகளில் நெருப்பை (அணைக்காமல்) விட்டு விடாதீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6293. முஸ்லிம்:2015)**

١٦٥٣ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : احْتَرَقَ بَيْتٌ بِالْمَدِينَة عَلَى أَهْلِهِ مِنَ اللَّيْلِ فَلَمَّا حُدِّثَ رَسُولُ اللَّهِ ﷺ بِشَأْنِهِمْ قَالَ : " إِنَّ هَذِهِ النَّارَ عَدُوٌّ لَكُمْ فَإِذَا نِمْتُمْ فَأَطْفِئُوهَا " . مُتَّفَقٌ عَلَيْه .

**1653** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒருநாள் இரவு, மதீனாவாசியின் வீடு தீப்பிடித்தது. இவர்களின் நிலை குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கூறப்பட்டபோது, “நிச்சயமாக! இந்த நெருப்பு, உங்களுக்கு விரோதியாகும். நீங்கள் தூங்கினால் அதை அணைத்துவிடுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6294. முஸ்லிம்:2016)**

١٦٥٤ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " غَطُّوا الأَنَاءَ وَأَوْكُوا السِّقَاءَ وَأَغْلِقُوا الأَبْوَابَ وَأَطْفِئُوا السِّرَاجَ فَإِنَّ الشَّيْطَانَ لاَ يَحُلُّ سِقَاءً وَلاَ يَفْتَحُ بَابًا وَلاَ يَكْشِفُ إِنَاءً فَإِنْ لَمْ يَجِدْ أَحَدُكُمْ إِلاَّ أَنْ يَعْرِضَ عَلَى إِنَائِه عُودًا وَيَذْكُرَ اسْمَ اللَّهِ فَلْيَفْعَلْ فَإِنَّ الْفُوَيْسِقَةَ تُضْرِمُ عَلَى أَهْلِ الْبَيْتِ بَيْتَهُمْ " . رَوَاهُ مُسْلِمٌ . " الْفُوَيْسِقَةُ " : الْفَأْرَةُ " وَتُضْرِمُ " : تُحْرِقُ.

**1654** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீங்கள் (இரவில்) தூங்கச் சென்றால், பாத்திரத்தை மூடுங்கள். தண்ணீர் உள்ள தோல் பைகளைக் கட்டுங்கள். வாசல்களை அடையுங்கள். விளக்கை அணையுங்கள். நீங்கள் அவ்வாறு செய்தால், நிச்சயமாக! ஷைத்தான், தோல் பையை அவிழ்க்க மாட்டான். வாசலைத் திறக்க மாட்டான். பாத்திரத்தை திறக்க மாட்டான். உங்களில் ஒருவரிடம் தனது பாத்திரத்திற்கு மூடி இல்லையென்றால், அந்த பாத்திரத்தின் மீது ஒரு குச்சியை குறுக்கே வைக்கட்டும். அதன் மீது அல்லாஹ்வின் பெயரை (பிஸ்மில்லாஹ்) கூறட்டும். (நெருப்பை அணைப்பது எதற்கென்றால்) எலி, அவரின் வீட்டிற்கு (திரியை இழுத்துச் சென்று) தீ மூட்டி விடும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2012)**

## ٣٠١ – باب النّهي عَن التكلف: وهو فعلٌ وقول لا مصلحة فيه، بمشقة

## பாடம் : 301 - நன்மையற்ற சொல், செயலை சிரமத்துடன் செய்வது கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : قُلْ مَا أَسْأَلُكُمْ عَلَيْهِ مِنْ أَجْرٍ وَمَا أَنَا مِنَ الْمُتَكَلِّفِينَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *உங்களிடம் இதற்காக (அழைப்புப் பணிக்காக) கூலி எதையும் நான் கேட்கவில்லை. மேலும் நான் சிரமத்தினை ஏற்படுத்திக் கொள்பவனும் இல்லை என்று (நபியே) நீர் கூறுவீராக! (38:86)*

١٦٥٥ – وَعَنْ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نُهِينَا عَنِ التَّكَلُّفِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1655** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(நன்மையில்லாத சொல், செயல்களில்) சிரமம் ஏற்படுத்திக் கொள்வதற்கு நாங்கள் தடுக்கப் பட்டோம். **(புகாரி:7293)**

١٦٥٦ – وَعَنْ مَسْرُوق قَالَ : دَخَلْنَا عَلَى عَبْد اللَّه بْن مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ فَقَالَ : يَا أَيُّهَا النَّاسُ مَنْ عَلِمَ شَيْئًا فَلْيَقُلْ به وَمَنْ لَمْ يَعْلَمْ فَلْيَقُلْ اللَّهُ أَعْلَمُ فَإِنَّ منَ الْعلْمِ أَنْ يَقُولَ لِمَا لاَ يَعْلَمُ اللَّهُ أَعْلَمُ . قَالَ اللَّهُ تَعَالَى لِنَبِيِّه ﷺ : قُلْ مَا أَسْأَلُكُمْ عَلَيْه منْ أَجْرٍ وَمَا أَنَا منَ الْمُتَكَلِّفِينَ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1656** மஸ்ரூக் அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரழி) அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்கள், "மனிதர்களே! ஒரு விஷயத்தைத் தெரிந்தவர், அது பற்றி அவர் கூறட்டும்! தெரியவில்லையானால் "அல்லாஹ்வே மிக அறிந்தவன்" என்று அவர் கூறட்டும்! அல்லாஹ்வே மிக அறிந்தவன்" என்று தெரியாத ஒன்றின் போது கூறுவது, அறிவைச் சேர்ந்ததாகும். ஏனெனில், அல்லாஹ் தன் நபியை, "உங்களிடம் கூலி எதையும் இதற்காகக் கேட்கவில்லை. மேலும் நான் சிரமத்தினை ஏற்படுத்துபவ னாகவும் இல்லை என்று (நபியே!) நீர் கூறுவீராக!" (அல்குர்ஆன் 38:86) என்று கூறச் சொல்கிறான். **(புகாரி:4809)**

## ٣٠٢ – باب تحريم النياحة على الميّت، وشقّ الجيب، ونتف الشعر، وحلقه، والدعاء بالويل والثبور

## பாடம் : 302 - இறந்தவருக்காக ஒப்பாரி வைப்பது, கன்னத்தில் அறைந்து கொள்வது, சட்டையைக் கிழித்துக் கொள்வது, முடியைப் பிடுங்குவது, தலையை சிரைப்பது, நாசமாகட்டும் போன்ற வார்த்தைகளால் பிரார்த்திப்பது கூடாது.

١٦٥٧ – عَنْ عُمَرَ بْنِ الْخَطَّاب رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " الْمَيِّتُ يُعَذَّبُ فِي قَبْرِهِ بِمَا نِيحَ عَلَيْه " . وَفِي رِوَايَةٍ : " مَا نِيحَ عَلَيْه " . مُتَّفَقٌ عَلَيْه

**1657** உமர் இப்னு கத்தாப் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறந்தவருக்காக ஒப்பாரி வைத்து அழப்படுவதால், கப்ரில் அவர் (இறந்தவர்) வேதனை செய்யப்படுகிறார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1292. முஸ்லிம்:927)**

١٦٥٨ – وَعَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " لَيْسَ مِنَّا مَنْ ضَرَبَ الْخُدُودَ وَشَقَّ الْجُيُوبَ وَدَعَا بِدَعْوَى الْجَاهِلِيَّة " . مُتَّفَقٌ عَلَيْه .

**1658** அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கன்னங்களில் அடித்துக் கொள்பவரும், சட்டைகளைக் கிழித்துக் கொள்பவரும், அறியாமைக் காலச் செயல்களின் பக்கம் மக்களை அழைப்பவரும் நம்மைச் சேர்ந்தவர் அல்லர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1294. முஸ்லிம்:103)**

١٦٥٩ – وَعَنْ أَبِي بُرْدَةَ قَالَ : وَجِعَ أَبُو مُوسَى فَغُشِيَ عَلَيْهِ وَرَأْسُهُ فِي حِجْرِ امْرَأَةٍ مِنْ أَهْلِهِ فَأَقْبَلَتْ تَصِيحُ بِرَنَّةٍ فَلَمْ يَسْتَطِعْ أَنْ يَرُدَّ عَلَيْهَا شَيْئًا . فَلَمَّا أَفَاقَ قَالَ : أَنَا بَرِيءٌ مِمَّنْ بَرِأَ مِنْهُ رَسُولُ اللَّهِ ﷺ : إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ بَرِأَ مِنَ الصَّالِقَةِ وَالْحَالِقَةِ وَالشَّاقَّةِ مُتَّفَقٌ عَلَيْهِ . " الصَّالِقَةُ " الَّتِي تَرْفَعُ صَوْتَهَا بِالنِّيَاحَةِ وَالنَّدْبِ " وَالْحَالِقَةُ " : الَّتِي تَحْلِقُ رَأْسَهَا عِنْدَ الْمُصِيبَةِ " وَالشَّاقَّةُ " : الَّتِي تَشُقُّ ثَوْبَهَا .

**1659** அபூபுர்தா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அபூமூஸா (ரழி) அவர்கள், நோயுற்றார்கள். அவருக்கு மயக்கம் ஏற்பட்டது. அவரின் தலை, அவரது குடும்பத்துப் பெண்ணின் மடியில் இருந்தது. அப்போது அந்த பெண் ஒப்பாரி வைத்துக் கொண்டு அழுதார். இதற்காக அவளைத் தடுக்கும் நிலையில் அவர் இல்லை. அவர் மயக்கம் தெளிந்ததும், “நபி (ஸல்) அவர்கள் எதிலிருந்து விலகினார்களோ, அதிலிருந்து நானும் விலகி விட்டேன். நிச்சயமாக! நபி (ஸல்) அவர்கள், ஒப்பாரி வைக்கும் பெண்ணை விட்டும், தலையை மொட்டையடிக்கும் பெண்ணை விட்டும், ஆடைகளைக் கிழித்துக் கொள்ளும் பெண்ணை விட்டும் விலகி இருந்தார்கள்” என்று கூறினார். **(புகாரி:1296. முஸ்லிம்:104)**

١٦٦٠ – وَعَنِ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ نِيحَ عَلَيْهِ فَإِنَّهُ يُعَذَّبُ بِمَا نِيحَ عَلَيْهِ يَوْمَ الْقِيَامَةِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1660** முகீரா இப்னு ஷுஃஅபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவருக்காக ஒப்பாரி வைத்து அழப்படுமானால், மறுமை நாளில் ஒப்பாரி வைத்து இவருக்கு அழப்பட்டதற்காக, இவர் வேதனை செய்யப்படுவார்” என நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:1291. முஸ்லிம்:933)**

١٦٦١ – وَعَنْ أُمِّ عَطِيَّةَ نُسَيْبَةَ " بِضَمِّ النُّونِ وَفَتْحِهَا " رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : " أَخَذَ عَلَيْنَا رَسُولُ اللَّهِ ﷺ عِنْدَ الْبَيْعَةِ أَلاَّ نَنُوحَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1661** உம்மு அதிய்யா நுஸைபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நாங்கள் ஒப்பாரி வைத்து அழமாட்டோம்” என்ற உறுதி மொழியை எங்களிடம் சத்தியப் பிரமாணம் வாங்கிய போது நபி (ஸல்) அவர்கள் பெற்றுக் கொண்டார்கள். **(புகாரி:1306. முஸ்லிம்:936)**

١٦٦٢ – وَعَنِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : أُغْمِيَ عَلَى عَبْدِ اللَّهِ بْنِ رَوَاحَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ فَجَعَلَتْ أُخْتُهُ تَبْكِي وَتَقُولُ : وَاجَبَلاَهْ وَاكَذَا وَاكَذَا : تُعَدِّدُ عَلَيْهِ . فَقَالَ حِينَ أَفَاقَ : مَا قُلْتِ شَيْئًا إِلاَّ قِيلَ لِي : أَنْتَ كَذَلِكَ ؟ ! . رَوَاهُ الْبُخَارِيُّ.

**1662** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரழி) அவர்களுக்கு மயக்கம் ஏற்பட்டது. அப்போது அவரின் சகோதரி அழ ஆரம்பித்து விட்டார். “இந்த மலைக்கு ஏற்பட்ட கதியே! இன்ன, இன்ன நாசமே!” என்று திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தார். மயக்கம் தெளிந்த அப்துல்லாஹ் (ரழி) அவர்கள், “நீர் இவ்வாறெல்லாம் கூறியது பற்றி என்னிடம் கேள்வி கேட்கப்பட்டது! எனவே இவ்வாறு நீர் கூற வேண்டாம்” என்று கூறினார்கள். **(புகாரி:4267)**

١٦٦٣ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : اشْتَكَى سَعْدُ بْنُ عُبَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ شَكْوَى فَأَتَاهُ رَسُولُ اللَّهِ ﷺ يَعُودُهُ مَعَ عَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ وَسَعْدِ بْنِ أَبِي وَقَّاصٍ وَعَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُمْ . فَلَمَّا دَخَلَ عَلَيْهِ وَجَدَهُ فِي غَشْيَةٍ

فَقَالَ : " أَقَضَى ؟ " قَالُوا : لاَ يَا رَسُولَ اللَّه فَبَكَى رَسُولُ اللَّه فَلَمَّا رَأَى الْقَوْمُ بُكَاءَ النَّبِيِّ ﷺ بَكَوْا قَالَ : " أَلاَ تَسْمَعُونَ ؟ إِنَّ اللَّهَ لاَ يُعَذِّبُ بِدَمْعِ الْعَيْنِ وَلاَ بِحُزْنِ الْقَلْبِ وَلَكِنْ يُعَذِّبُ بِهَذَا " وَأَشَارَ إِلَى لِسَانِهِ " أَوْ يَرْحَمُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1663** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஸஃது இப்னு உபாதா (ரழி) அவர்கள் உடல்நிலை பாதிக்கப்பட்டிருந்தார்கள். அப்போது அவரிடம் நலம் விசாரிக்க, நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர்களுடன் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரழி), ஸஃது இப்னுஅபீவக்காஸ் (ரழி), அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) ஆகியோர் உடன் இருந்தனர். அவரிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தபோது, அவர் மயக்கத்தில் இருந்தார். “அவர் இறந்து விட்டாரா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “இறைத்தூதர் அவர்களே! இல்லை” என்று கூறினார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் (அவரின் நிலையைக் கண்டு) அழுதார்கள். நபி (ஸல்) அவர்கள் அழுவதைக் கண்ட மக்களும் அழுதார்கள். “நீங்கள் கேட்டுக் கொண்டீர்களா? நிச்சயமாக! அல்லாஹ் கண்களின் கண்ணீருக்காக வேதனை செய்ய மாட்டான். இதயம் கவலைப்படுவதற்கும் வேதனை செய்ய மாட்டான். எனினும், புலம்பி அழுவதால்தான் வேதனை செய்வான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறி தன் நாவைச் சுட்டிக் காட்டி விட்டு, “அல்லது இரக்கம் காட்டுவான்” என்றும் கூறினார்கள். **(புகாரி:1304. முஸ்லிம்:924)**

١٦٦٤ – وَعَنْ أَبِي مَالِكٍ الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " النَّائِحَةُ إِذَا لَمْ تَتُبْ قَبْلَ مَوْتِهَا تُقَامُ يَوْمَ الْقِيَامَةِ وَعَلَيْهَا سِرْبَالٌ مِنْ قَطِرَانٍ وَدِرْعٌ مِنْ جَرَبٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1664** அபூமாலிக் அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒப்பாரி வைத்து அழும் பெண், அவள் இறப்பதற்கு முன், அந்தச் செயலுக்காக பாவ மன்னிப்புக் கேட்காவிட்டால், (அவள் இறந்தபின்) மறுமை நாளில், கெட்டவாடை கொண்ட கருப்பு நிறமான “தார்” சட்டையும், சொரியை ஏற்படுத்தும் சட்டையும் அணிவிக்கப்பட்டவளாக நிறுத்தப்படுவாள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:934)**

١٦٦٥ – وَعَنْ أُسَيْدِ بْنِ أَبِي أُسَيْدٍ التَّابِعِيِّ عَنِ امْرَأَةٍ مِنَ الْمُبَايِعَاتِ قَالَتْ : كَانَ فِيمَا أَخَذَ عَلَيْنَا رَسُولُ اللَّهِ ﷺ فِي الْمَعْرُوفِ الَّذِي أَخَذَ عَلَيْنَا أَلاَّ نَعْصِيَهُ فِيهِ أَلاَّ نَخْمُشَ وَجْهًا وَلاَ نَدْعُوَ وَيْلاً وَلاَ نَشُقَّ جَيْبًا وَأَنْ لاَ نَنْشُرَ شَعْرًا . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ .

**1665** உஸைத் இப்னு அபீ உஸைத் கூறுகின்றார்கள்:

“நாங்கள் மாறு செய்யமாட்டோம்” என்ற அடிப்படையில் எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் பெற்றுக் கொண்ட உறுதி மொழிகளில் சில, “(எவரேனும் இறந்து விட்டால்) நாங்கள் முகத்தில் அடித்துக் கொள்ள மாட்டோம். சாபமிடும் வார்த்தையால் பிரார்த்திக்க மாட்டோம். சட்டையைக் கிழித்திடமாட்டோம். முடியை அவிழ்த்து விட மாட்டோம்” என்பதும் இருந்தது” என நபி (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி எடுத்த ஒரு பெண் கூறினார். **(அபூதாவூது:3131)**

١٦٦٦ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَا مِنْ مَيِّتٍ يَمُوتُ فَيَقُومُ بَاكِيهِمْ فَيَقُولُ : وَاجَبَلاَهُ وَاسَيِّدَاهُ أَوْ نَحْوَ ذَلِكَ إِلاَّ وُكِلَ بِهِ مَلَكَانِ يَلْهَزَانِهِ : أَهَكَذَا كُنْتَ ؟ ! " رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " اللَّهْزُ " : الدَّفْعُ بِجَمْعِ الْيَدِ فِي الصَّدْرِ .

**1666** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறந்து போனவர் அருகில் அவர்களில் அழுகின்ற ஒருவர் "மலைக்கு வந்த நாசமே! தலைவருக்கு வந்த கதியே!" என்றோ அல்லது இதுபோன்ற வார்த்தைகளையோ கூறினால், அந்த இறந்தவரிடம் இரண்டு வானவர்கள் நியமிக்கப்படுவர். "நீர் இவ்வாறுதான் இருந்தீரோ!" என்று அவரின் நெஞ்சில் அடித்தவர்களாகக் கேட்பார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1003. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٦٦٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " اثْنَتَانِ فِي النَّاسِ هُمَا بِهِمْ كُفْرٌ الطَّعْنُ فِي النَّسَبِ وَالنِّيَاحَةُ عَلَى الْمَيِّتِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1667** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மக்களிடம் இரண்டு காரியங்கள் உள்ளன. அந்த இரண்டுமே அவர்களிடம் இறைமறுப்பை ஏற்படுத்தக் கூடியதாகும். (1) பாரம்பரியத்தைக் குறைகூறிக் குத்திக் காட்டுவது (2) இறந்தவருக்காக ஒப்பாரி வைப்பது" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:67)**

## ٣٠٣ – باب النَّهي عَن إتْيَانِ الكُهّانِ والمُنَجّمين والعُرّاف، وأصحاب الرمل، والطوارق بالحصى وبالشعير ونحو ذلك

## பாடம் : 303 - குறி சொல்பவர், நட்சத்திரக் கணக்குப் பார்த்து சொல்பவர், மணலில் கோடு போட்டு குறி சொல்பவர், பொடிக் கற்களாலும்-தொலிக் கோதுமையாலும், அது போன்றவற்றாலும் அடித்துக் குறி சொல்பவர் ஆகியோரிடம் செல்வது கூடாது.

١٦٦٨ – عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : سَأَلَ رَسُولَ اللَّهِ ﷺ أُنَاسٌ عَنِ الْكُهَّانِ فَقَالَ : لَيْسُوا بِشَيْءٍ . فَقَالُوا : يَا رَسُولَ اللَّهِ إِنَّهُمْ يُحَدِّثُونَا أَحْيَانًا بِشَيْءٍ فَيَكُونُ حَقًّا . فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : تِلْكَ الْكَلِمَةُ مِنَ الْحَقِّ يَخْطَفُهَا الْجِنِّيُّ فَيَقُرُّهَا فِي أُذُنِ وَلِيِّهِ فَيَخْلِطُونَ مَعَهَا مِائَةَ كَذْبَةٍ . مُتَّفَقٌ عَلَيْهِ وَفِي رِوَايَةٍ لِلْبُخَارِيِّ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا سَمِعَتْ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : إِنَّ الْمَلَائِكَةَ تَنْزِلُ فِي الْعَنَانِ وَهُوَ السَّحَابُ فَتَذْكُرُ الأَمْرَ قُضِيَ فِي السَّمَاءِ فَيَسْتَرِقُ الشَّيْطَانُ السَّمْعَ فَيَسْمَعُهُ فَيُوحِيهِ إِلَى الْكُهَّانِ فَيَكْذِبُونَ مَعَهَا مِائَةَ كَذْبَةٍ مِنْ عِنْدِ أَنْفُسِهِمْ . قَوْلُهُ : فَيَقُرُّهَا هُوَ بِفَتْحِ الْيَاءِ وَضَمِّ الْقَافِ وَالرَّاءِ : أَيْ يُلْقِيهَا . وَالْعَنَانِ بِفَتْحِ الْعَيْنِ .

**1668** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சில மனிதர்கள் நபி (ஸல்) அவர்களிடம் குறி சொல்பவர் பற்றிக் கேட்டார்கள். "அவர்கள் ஒரு பொருட்டே இல்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! அவர்கள் சில சமயம் ஒரு செய்தியை எங்களிடம் கூறுகிறார்கள். அது உண்மையாகவும் ஆகி விடுகிறதே?" என்று மக்கள் கூறினர். உடனே நபி (ஸல்) அவர்கள், "ஜின்கள் இதை (வானவர்களிடம்) ஒட்டுக் கேட்டு, தங்கள் நேசர்களின் காதில் அதைக் கூறுவர். இவர்கள் அத்துடன் நூறு பொய்களைக் கலந்து விடுகிறார்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:3210, 6213. முஸ்லிம்:2228)**

"நிச்சயமாக! ஒரு வானவர் மேகத்தில் இறங்கி, வானத்தில் எடுக்கப்பட்ட செய்தியை (மற்ற மலக்குகளிடம்) கூறுவார். அதை ஒட்டுக் கேட்கும் ஷைத்தான்கள், அதைக் குறி சொல்பவரிடம்

கூறுவர். அதனுடன் இவர்கள் தங்களிடம் உள்ள 100 பொய்களையும் கலந்து கூறுவர்'' என நபி (ஸல்) கூறக் கேட்டேன் என ஆயிஷா (ரழி) அறிவிப்பதாக புகாரியின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

١٦٦٩ – وَعَنْ صَفِيَّةَ بِنْت أَبِي عُبَيْد عَنْ بَعْضِ أَزْوَاجِ النَّبِيِّ ﷺ و رَضِيَ اللَّهُ عَنْهَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ أَتَى عَرَّافًا فَسَأَلَهُ عَنْ شَيْءٍ فَصَدَّقَهُ لَمْ تُقْبَلْ لَهُ صَلاَةٌ أَرْبَعِينَ يَوْمًا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1669** ஸஃபிய்யா பின்த் அபீ உபைத் என்ற பெண்மணி கூறுகின்றார்கள்:

"ஒருவர் குறி சொல்பவனிடம் வந்து, எதையேனும் அவனிடம் கேட்டு, அவன் கூறியதை உண்மையென நம்புவாரோ, அவனது நாற்பது நாள் தொழுகை ஏற்கப்பட மாட்டாது'' என்று நபி (ஸல்) கூறியதாக, நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் ஒருவர் கூறினார். **(முஸ்லிம்:2230)**

١٦٧٠ – وَعَنْ قَبِيصَةَ بْنِ الْمُخَارِق رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " الْعِيَافَةُ وَالطِّيَرَةُ وَالطَّرْقُ مِنْ الْجِبْت " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَاد حَسَنٍ وَقَالَ : الطَّرْقُ هُوَ الزَّجْرُ : أَيْ زَجْرُ الطَّيْرِ وَهُوَ أَنْ يَتَيَمَّنَ أَوْ يَتَشَاءَمَ بِطَيَرَانه فَإِنْ طَارَ إِلَى جِهَةِ الْيَمِينِ تَيَمَّنَ وَإِنْ طَارَ إِلَى جِهَةِ الْيَسَارِ تَشَاءَمَ . قَالَ أَبُو دَاوُدَ " وَالْعِيَافَةُ " : الْخَطُّ . قَالَ الْجَوْهَرِيُّ فِي الصِّحَاحِ : الْجِبْتُ كَلِمَةٌ تَقَعُ عَلَى الصَّنَمِ وَالْكَاهِنِ وَالسَّاحِرِ وَنَحْوِ ذَلِكَ .

**1670** கபீஸா இப்னுல் முகாரிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கோடுகள் மூலம் குறிபார்ப்பதும், பறவைச் சகுனம் பார்ப்பதும், பறக்கும் பறவையின் திசை வைத்துச் சகுனம் பார்ப்பதும், குறிகாரனின் செயலில் உள்ளதாகும்'' என்று நபி (ஸல்) கூறக் கேட்டேன்.

**(அபூதாவூது:3907)**

"பறவையை பறக்க விடுவது என்பது, அது பறக்கும் திசை மூலம் நல்ல அல்லது கெட்ட அறிகுறிகளை முடிவு செய்வதாகும். அது வலது பக்கம் பறந்தால் அது நல்ல அறிகுறி, இடது பக்கம் பறந்தால் கெட்ட அறிகுறி என்று கூறுவதாகும்'' என, இமாம் அபூதாவூத் கூறுகின்றார்கள்.

١٦٧١ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنِ اقْتَبَسَ عِلْمًا مِنَ النُّجُومِ اقْتَبَسَ شُعْبَةً مِنَ السِّحْرِ زَادَ مَا زَادَ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1671** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நட்சத்திரக்கலை அறிவை வளர்த்துக் கொண்டவர், சூன்யத்தின் ஒரு பிரிவை வளர்த்துக் கொண்டவராவார். தான் அதிகமாக்க விரும்புவதை அதில் அதிகமாக்குவார்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3905. இதன் அறிவிப்பாளர் வரிசையில் ஹய்யான் இப்னுல் அலாஉ என்ற பலவீனர் இடம் பெறுகின்றார்)**

١٦٧٢ – وَعَنْ مُعَاوِيَةَ بْنِ الْحَكَمِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قُلْت : يَا رَسُولَ اللَّهِ إِنِّي حَدِيثُ عَهْد بِالْجَاهِلِيَّة وَقَدْ جَاءَ اللَّهُ تَعَالَى بِالْإِسْلاَمِ وَإِنَّ مِنَّا رِجَالاً يَأْتُونَ الْكُهَّانَ قَالَ : " فَلاَ تَأْتِهِمْ " قُلْت : وَمِنَّا رِجَالٌ يَتَطَيَّرُونَ قَالَ : " ذَلِكَ شَيْءٌ يَجِدُونَهُ فِي صُدُورِهِمْ فَلاَ يَصُدَّهُمْ " . قُلْت : وَمِنَّا رِجَالٌ يَخُطُّونَ قَالَ : " كَانَ نَبِيٌّ مِنَ الأَنْبِيَاء يَخُطُّ فَمَنْ وَافَقَ خَطَّهُ فَذَاكَ " رَوَاهُ مُسْلِمٌ.

**1672** முஆவியா இப்னு ஹகம் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைத்தூதர் அவர்களே! நான் அறியாமைக் காலத்திலிருந்து விலகி, இஸ்லாத்தில் புதிதாக இணைந்தவன். அல்லாஹ் எங்களுக்கு இஸ்லாமைக் கொண்டு வந்துவிட்டான். இருப்பினும், எங்களில் சிலர், ஜோசியக்காரர்களிடம் செல்கின்றனர். (இது சரியா?)” என்று கேட்டேன். அதற்கு அவர்கள், “அவர்களிடம் நீர் செல்லாதீர்!” என்று கூறினார்கள். “எங்களில் சிலர் உள்ளனர். அவர்கள் சகுனம் பார்க்கின்றனர்?” என்று கூறினேன். அதற்கு அவர்கள், “அது அவர்களின் நெஞ்சில் ஏற்படும் ஓர் உணர்வுதான். அவர்களுக்கு அது எதையும் தடுத்து விடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். “எங்களில் சிலர் உள்ளனர். கோடு போட்டுக் குறி பார்க்கின்றனரே?” என்று கூறினேன். “நபிமார்களில் ஒரு நபி கோடு போடுபவராக இருந்தார். அவரின் கோட்டுக்கு யார் நேர்படுகிறாரோ, அது சரியாக இருக்கும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:537)**

١٦٧٣ – وَعَنْ أَبِي مَسْعُودٍ الْبَدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى عَنْ ثَمَنِ الْكَلْبِ وَمَهْرِ الْبَغِيِّ وَحُلْوَانِ الْكَاهِنِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1673** அபூமஸ்ஊது அல்பத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாய் விற்பனை செய்த பணம், விபச்சாரிக்குத் தந்த பணம், குறிகாரனுக்குத் தந்த கூலி ஆகியவற்றை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். **(புகாரி:2237. முஸ்லிம்:1567)**

## ٣٠٤ – باب النّهي عَن التطيّر

### பாடம் : 304 - சகுனம் பார்த்தல் கூடாது

فِيهِ الأَحَادِيثُ السَّابِقَةُ فِي الْبَابِ قَبْلَهُ .

இந்தப் பாடத்தின் கீழ், முந்திய பாடத்தில் சென்ற ஹதீஸ்களும் பொருந்தும்.

١٦٧٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ عَدْوَى وَلاَ طِيرَةَ وَيُعْجِبُنِي الْفَأْلُ " . قَالُوا : وَمَا الْفَأْلُ ؟ قَالَ . " كَلِمَةٌ طَيِّبَةٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1674** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தொற்று நோய் என்பதும் இல்லை. சகுனம் என்பதும் இல்லை. ஆனால், “ஃபால்” என்பது எனக்குப் பிடிக்கும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “ஃபால் என்றால் என்ன?” என்று நபித்தோழர்கள் கேட்டனர். “அது நல்ல சொல்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5756. முஸ்லிம்:2224)**

١٦٧٥ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمْ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ عَدْوَى وَلاَ طِيرَةَ . وَإِنْ كَانَ الشُّؤْمُ فِي شَيْءٍ فَفِي الدَّارِ وَالْمَرْأَةِ وَالْفَرَسِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1675** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொற்று நோய் என்பதும் கிடையாது. சகுனம் பார்த்தலும் கிடையாது. ஏதேனும் ஒன்றில் சகுனம் இருப்பதாக இருப்பின், “அது வீட்டிலும், பெண்ணிலும், குதிரையிலுமே இருக்கும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:5753. முஸ்லிம்:2225)**

١٦٧٦ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ لاَ يَتَطَيَّرُ . رَوَاهُ أَبو دَاوُدَ بإِسْنَادٍ صَحِيحٍ .

**1676** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நபி (ஸல்) அவர்கள் சகுனம் பார்க்கவே மாட்டார்கள்." **(அபூதாவூது:3920)**

١٦٧٧ – وَعَنْ عُرْوَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : ذُكِرَتْ الطِّيَرَةُ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : " أَحْسَنُهَا الْفَأْلُ وَلاَ تَرُدُّ مُسْلِمًا . فَإِذَا رَأَى أَحَدُكُمْ مَا يَكْرَهُ فَلْيَقُلْ : اللَّهُمَّ لاَ يَأْتِي بِالْحَسَنَاتِ إِلاَّ أَنْتَ وَلاَ يَدْفَعُ السَّيِّئَاتِ إِلاَّ أَنْتَ وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِكَ " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبو دَاوُدَ بإِسْنَادٍ صَحِيحٍ .

**1677** உர்வா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் சகுனம் பார்த்தல் பற்றிக் கூறப்பட்டது. அப்போது அவர்கள், "ஃபால் எனும் நற்சொல்தான் அதில் அழகியதாகும். இந்தச் சகுனம் முஸ்லிமுக்கு எதையும் ஏற்படுத்தி விடாது. உங்களில் ஒருவர் தான் விரும்பாத ஒன்றைப் பார்த்தால், 'அல்லாஹும்ம லாயஃதித்தீபில் ஹஸனாத்தி இல்லா அன்த, வலா யத்ஃபஉஸ் ஸய்யிஆத்தி இல்லா அன்த, வலாஹவ்ல வலாகுவ்வத்த இல்லாபிக' என அவர் கூறட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:3919)**

குறிப்பு: உர்வா இப்னு ஆமிர் (ரழி) அவர்களை, அடுத்த அறிவிப்பாளர் ஹபீப் இப்னு அபூஸாபித் என்பவர் சந்தித்ததில்லை.

**துஆவின் பொருள் : இறைவா! நன்மைகளை வழங்குபவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. தீயவற்றைத் தடுப்பவன் உன்னைத் தவிர வேறுயாருமில்லை. உன் மூலமே தவிர எந்தச் சக்தியும், திரும்புதலும் இல்லை.**

## ٣٠٥ – باب تحريم تصوير الحيوان في بساط أو حجر أو ثوب أو درهم أو مخدّة أو دينار أو وسادة وغير ذلك، وتحريم التّخاذ اصورة في حائط وستر وعمامة وثوب ونحوها، والأمر بإتْلاف اصور

## பாடம் : 305 - சுவர், கல், ஆடை, பணம், தலையணை மற்றும் இதுபோன்றவற்றில் உயிருள்ளவற்றின் உருவம் வரைதல் கூடாது. சுவர், விரிப்பு, தலைப்பாகை, ஆடை போன்றவற்றில் உருவப்படத்தை ஏற்படுத்துவது கூடாது. அதை அழிப்பது அவசியமாகும்.

١٦٧٨ – عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ الَّذِينَ يَصْنَعُونَ هَذِهِ الصُّوَرَ يُعَذَّبُونَ يَوْمَ الْقِيَامَةِ يُقَالُ لَهُمْ : أَحْيُوا مَا خَلَقْتُمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1678** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இந்த உருவங்களை வரைந்தவர்கள் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார்கள். 'நீங்கள் படைத்த இவற்றிற்கு உயிர் கொடுங்கள்' என்று அவர்களிடம் கூறப்படும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:4951. முஸ்லிம்:2108)**

١٦٧٩ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَدِمَ رَسُولُ اللَّهِ ﷺ مِنْ سَفَرٍ وَقَدْ سَتَرْتُ سَهْوَةً لِي بِقِرَامٍ فِيهِ تَمَاثِيلُ . فَلَمَّا رَآهُ رَسُولُ اللَّهِ ﷺ تَلَوَّنَ وَجْهُهُ وَقَالَ : " يَا عَائِشَةُ أَشَدُّ النَّاسِ عَذَابًا عِنْدَ اللَّهِ يَوْمَ الْقِيَامَةِ الَّذِينَ يُضَاهُونَ بِخَلْقِ اللَّهِ ! " قَالَتْ : فَقَطَّعْنَاهُ فَجَعَلْنَا مِنْهُ وِسَادَةً أَوْ وِسَادَتَيْنِ . مُتَّفَقٌ عَلَيْهِ . " الْقِرَامُ " بِكَسْرِ الْقَافِ هُوَ : السِّتْرُ . " وَالسَّهْوَةُ " بِفَتْحِ السِّينِ الْمُهْمَلَةِ وَهِيَ الصُّفَّةُ تَكُونُ بَيْنَ يَدَيِ الْبَيْتِ وَقِيلَ : هِيَ الطَّاقُ النَّافِذُ فِي الْحَائِطِ .

**1679** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்து வந்தார்கள். உருவப்படங்கள் உள்ள திரையை என் வீட்டின் வாசலில் தொங்கவிட்டிருந்தேன். அதை நபி (ஸல்) அவர்கள் பார்த்ததும், அவர்களின் முகம் மாறிவிட்டது. "ஆயிஷாவே! மறுமை நாளில் அல்லாஹ்விடம் மக்களில் மிகக் கடுமையாக வேதனை பெறுபவர்கள், அல்லாஹ்வின் படைப்பிற்குத் தங்களின் படத்தை ஒப்பாக்குபவர்களாவர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அதை நாங்கள் துண்டு, துண்டாகக் கிழித்தோம். அதிலிருந்து ஒன்று அல்லது இரண்டு தலையணைகளை உண்டாக்கினோம்.

**(புகாரி:5954. முஸ்லிம்:2107)**

١٦٨٠ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ . سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " كُلُّ مُصَوِّرٍ فِي النَّارِ يُجْعَلُ لَهُ بِكُلِّ صُورَةٍ صَوَّرَهَا نَفْسٌ فَيُعَذِّبُهُ فِي جَهَنَّمَ " . قَالَ ابْنُ عَبَّاسٍ : فَإِنْ كُنْتَ لاَ بُدَّ فَاعِلاً فَاصْنَعِ الشَّجَرَ وَمَا لاَ رُوحَ فِيهِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1680** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"படம் வரையும் அனைவரும் நரகில் புகுவர். அவர் வரைந்த அனைத்துப் படத்திற்கும் உயிர் தரப்படும். அவரை அது நரகில் வேதனை செய்யும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக்கேட்டேன். நீ அவசியம் வரைந்தாக வேண்டும் என்றிருந்தால், மரத்தையோ, உயிரற்றவையோ வரைந்திடு!" (என்று அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) கூறினார்கள்) **(புகாரி:2225. முஸ்லிம்:2110/99)**

١٦٨١ – وَعَنْهُ ) ابْنِ عَبَّاسٍ ( قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ صَوَّرَ صُورَةً فِي الدُّنْيَا كُلِّفَ أَنْ يَنْفُخَ فِيهَا الرُّوحَ يَوْمَ الْقِيَامَةِ وَلَيْسَ بِنَافِخٍ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1681** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உலகில் ஒருவர் உருவத்தை உருவாக்கினால், மறுமை நாளில் அதற்கு உயிரூட்டும்படி அவரை வற்புறுத்தப்படும். ஆனால் அவரால் அதற்கு (உயிர் தர) முடியாது" என்று நபி (ஸல்) கூறக்கேட்டேன்.

**(புகாரி:5963. முஸ்லிம்:2110/100)**

١٦٨٢ – وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِنَّ أَشَدَّ النَّاسِ عَذَابًا يَوْمَ الْقِيَامَةِ الْمُصَوِّرُونَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1682** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் மக்களில் மிகக் கடுமையாக வேதனை பெறுபவர்கள், உருவம் வரைபவர்களாவர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக்கேட்டேன். **(புகாரி:5950. முஸ்லிம்:2109)**

١٦٨٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " قَالَ اللَّهُ تَعَالَى : وَمَنْ أَظْلَمُ مِمَّنْ ذَهَبَ يَخْلُقُ كَخَلْقِي ؟ فَلْيَخْلُقُوا ذَرَّةً أَوْ لِيَخْلُقُوا حَبَّةً أَوْ لِيَخْلُقُوا شَعِيرَةً " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1683** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் படைப்பைப் போல் படைக்க முயற்சிப்பவனை விட அநீதக்காரன் யார்? அவர்கள் ஒரு எறும்பைப் படைக்கட்டும்! அல்லது அவர்கள் ஒரு விதையைப் படைக்கட்டும்! அல்லது அவர்கள் ஒரு தொலிக்கோதுமையை படைக்கட்டும்!” என்று அல்லாஹ் கூறுவான் என, நபி (ஸல்) கூறக் கேட்டேன்.

**(புகாரி:5953. முஸ்லிம்:2111)**

١٦٨٤ – وَعَنْ أَبِي طَلْحَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ تَدْخُلُ الْمَلاَئِكَةُ بَيْتًا فِيهِ كَلْبٌ وَلاَ صُورَةٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1684** அபூதல்ஹா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“எந்த வீட்டில் நாயும், உருவப்படமும் உள்ளதோ, அந்த வீட்டில் வானவர்கள் நுழைய மாட்டார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5958. முஸ்லிம்:2106)**

١٦٨٥ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : وَعَدَ رَسُولَ اللَّهِ ﷺ جِبْرِيلُ أَنْ يَأْتِيَهُ فَرَاثَ عَلَيْهِ حَتَّى اشْتَدَّ عَلَى رَسُولِ اللَّهِ ﷺ فَخَرَجَ فَلَقِيَهُ جِبْرِيلُ فَشَكَا إِلَيْهِ فَقَالَ : إِنَّا لاَ نَدْخُلُ بَيْتًا فِيهِ كَلْبٌ وَلاَ صُورَةٌ . رَوَاهُ الْبُخَارِيُّ . " رَاثَ " أَبْطَأَ وَهُوَ بِالثَّاءِ الْمُثَلَّثَةِ .

**1685** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(இன்று) தான் வருவதாக ஜிப்ரீல் (அலை) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் வாக்குறுதி அளித்தார்கள். அவர்களிடம் வரத் தாமதம் ஏற்பட்டது. இதனால் நபி (ஸல்) அவர்களுக்கு (மனதில்) கவலை ஏற்பட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள் (வீட்டிலிருந்து) வெளியேறினார்கள். அப்போது அவர்களை ஜிப்ரீல் (அலை) சந்தித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் வருகை தாமதமானது பற்றி காரணம் கேட்டார்கள். அப்போது ஜிப்ரீல் (அலை), “நிச்சயமாக! எந்த வீட்டில் நாயும், உருவச்சிலையும் உள்ளதோ அங்கு நாங்கள் நுழைய மாட்டோம்” என்று கூறினார்கள்.

**(புகாரி:5960)**

١٦٨٦ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : وَاعَدَ رَسُولَ اللَّهِ ﷺ جِبْرِيلُ عَلَيْهِ السَّلاَمُ أَنْ يَأْتِيَهُ فِي سَاعَةٍ . فَجَاءَتْ تِلْكَ السَّاعَةُ وَلَمْ يَأْتِهِ ! قَالَتْ : وَكَانَ بِيَدِهِ عَصًا فَطَرَحَهَا مِنْ يَدِهِ وَهُوَ يَقُولُ : " مَا يُخْلِفُ اللَّهُ وَعْدَهُ وَلاَ رُسُلُهُ " ثُمَّ الْتَفَتَ فَإِذَا جِرْوُ كَلْبٍ تَحْتَ سَرِيرِهِ فَقَالَ : " مَتَى دَخَلَ هَذَا الْكَلْبُ ؟ " . فَقُلْتُ : وَاللَّهِ مَا دَرَيْتُ بِهِ فَأَمَرَ بِهِ فَأُخْرِجَ فَجَاءَهُ جِبْرِيلُ عَلَيْهِ السَّلاَمُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " وَعَدْتَنِي فَجَلَسْتُ لَكَ وَلَمْ تَأْتِنِي " فَقَالَ : مَنَعَنِي الْكَلْبُ الَّذِي كَانَ فِي بَيْتِكَ إِنَّا لاَ نَدْخُلُ بَيْتًا فِيهِ كَلْبٌ وَلاَ صُورَةٌ .رَوَاهُ مُسْلِمٌ.

**1686** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் குறிப்பிட்ட நேரத்தில் வருவதாக ஜிப்ரீல் (அலை) அவர்கள் வாக்குறுதி அளித்திருந்தார்கள். அந்த நேரமும் வந்தது. ஆனால் அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வரவில்லை. நபி (ஸல்) அவர்களின் கையில் ஒரு தடி இருந்தது. அதைத் தூக்கி எறிந்தார்கள். அப்போது, “அல்லாஹ்வும், அவனது (வானவத்) தூதர்களும் தங்கள் வாக்குறுதியை மீற மாட்டார்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு, திரும்பினார்கள். அங்கே அவர்களின் கட்டிலின் கீழே இருந்து ஒரு நாய்க்குட்டியின் சப்தம் வந்தது. “இந்த நாய் எப்போது வந்தது?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதை நான் பார்க்கவில்லை” என்று கூறினேன். அதை வெளியேற்றக் கட்டளையிட்டார்கள். அது வெளியேற்றப்பட்டது. உடனே, ஜிப்ரீல் (அலை) வந்தார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "எனக்கு வாக்களித்தீர். உங்களுக்காகக் உட்கார்ந்திருந்தேன். என்னிடம் நீங்கள் வரவில்லையே?" என்று கேட்டார்கள். "உங்கள் வீட்டில் இருந்த நாய்தான் என் வருகையைத் தடுத்தது. நாயும், உருவச்சிலையும் உள்ள வீட்டில் நாங்கள் நுழைய மாட்டோம்" என்று ஜிப்ரீல் கூறினார்கள். **(முஸ்லிம்:2104)**

١٦٨٧ – وَعَنْ أَبِي الْهَيَّاجِ حَيَّان بْنِ حُصَيْنٍ قَالَ : قَالَ لِي عَلِيُّ بْنُ أَبِي طَالِب رَضِيَ اللَّهُ عَنْهُ : أَلاَ أَبْعَثُكَ عَلَى مَا بَعَثَنِي عَلَيْهِ رَسُولُ اللَّهِ ﷺ ؟ أَنْ لاَ تَدَعَ صُورَةً إِلاَّ طَمَسْتَهَا وَلاَ قَبْرًا مُشْرِفًا إِلاَّ سَوَّيْتَه. رَوَاهُ مُسْلِمٌ.

**1687** அபுல் ஹய்ஜாஜ் ஹய்யான் இப்னு ஹுஸைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என்னிடம் அலீ (ரழி) அவர்கள், "அறிந்து கொள்க! நபி (ஸல்) அவர்கள் என்னை அனுப்பிய பணிக்கே உம்மையும் அனுப்புகிறேன். எந்த உருவச்சிலையையும், அழிக்காமல் விட்டு விடக் கூடாது. அத்துடன், உயரமாகக் கட்டப்பட்ட கப்ரையும் சமப்படுத்தாமல் விட்டு விடக்கூடாது என்பதே அப்பணியாகும்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:969)**

## ٣٠٦ – باب تحريم اتخاذ الكلب إلاَّ لصَيْد أو ماشية أو زرع

## பாடம் : 306 - வேட்டைக்காக அல்லது கால்நடைகளை பாதுகாக்க அல்லது விவசாயப் பாதுகாப்பிற்காக அன்றி நாய் வளர்க்கக் கூடாது

١٦٨٨ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ اقْتَنَى كَلْبًا إِلاَّ كَلْبَ صَيْدٍ أَوْ مَاشِيَةٍ فَإِنَّهُ يَنْقُصُ مِنْ أَجْرِهِ كُلَّ يَوْمٍ قِيرَاطَانِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " قِيرَاطٌ " .

**1688** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வேட்டைக்காக அல்லது கால்நடை பாதுகாப்பிற்காக தவிர நாயை ஒருவர் வளர்த்தால், ஒவ்வொரு நாளும் அவரது நற்கூலியில் இரண்டு 'கீராத்துகள்' குறைந்துவிடும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன்.

மற்றொரு அறிவிப்பில் "ஒரு கீராத்" என்று உள்ளது.

**குறிப்பு : ஒரு "கீராத்" என்பது, ஒரு மலையளவு நன்மையாகும். (புகாரி:5480. முஸ்லிம்:1574)**

١٦٨٩ – عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ اقْتَنَى كَلْبًا إِلاَّ كَلْبَ صَيْدٍ أَوْ مَاشِيَةٍ فَإِنَّهُ يَنْقُصُ مِنْ أَجْرِهِ كُلَّ يَوْمٍ قِيرَاطَانِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " قِيرَاطٌ " .

**1689** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"விவசாயம் அல்லது கால்நடை பாதுகாப்பிற்கு அன்றி ஒருவரிடம் நாய் இருந்தால், ஒவ்வொரு நாளும் அவரின் நன்மைகளிலிருந்து ஒரு "கீராத்" குறைந்து விடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2322. முஸ்லிம்:1575)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் கீழ்கண்டவாறு உள்ளது.

"வேட்டை, கால்நடை, நிலம் ஆகியவற்றின் பாதுகாப்பிற்காக அன்றி நாயை வளர்த்தால், ஒவ்வொரு நாளும் அவனது நன்மையில் இரண்டு கீராத் அளவு குறையும்" என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக உள்ளது.

## ٣٠٧ - باب كراهية تعليق الجرس في البَعير وغيره من الدواب، وكراهية استصحاب الكلب والجرس في السفر

## பாடம் : 307 - ஒட்டகை மற்றும் இதரப் பிராணிகளின் கழுத்தில் "சலங்கை" கட்டுவது கூடாது. நாய், சலங்கை ஆகியவற்றுடன் பயணம் செல்வது வெறுக்கத்தக்கது.

١٦٩٠ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَصْحَبُ الْمَلاَئِكَةُ رُفْقَةً فِيهَا كَلْبٌ أَوْ جَرَسٌ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1690** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நாயையும், சலங்கையையும் வைத்துள்ள பயணத்தில் மலக்குகள் தோழமை கொள்ள மாட்டார்கள்" என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2113)**

١٦٩١ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " الْجَرَسُ مَزَامِيرُ الشَّيْطَانِ " رَوَاهُ مُسْلِمٌ .

**1691** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சலங்கை, ஷைத்தானின் இசைக் கருவியாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:2556)**

## ٣٠٨ - باب كراهة ركوب الجلاّلة وهي البعير أو الناقة التي تأكل العَذِرة فإن أكلت علفًا طاهرًا فطاب لحمها، زالت الكراهة

## பாடம் : 308 - காய்ந்த மலத்தைச் சாப்பிடும் ஆண் - பெண் ஒட்டகைகளில் சவாரி செய்வது வெறுக்கத்தக்கது. அது சுத்தமான உணவை சாப்பிட்டு, அதன் கறி தூய்மையானால் வெறுக்கத்தக்க நிலை ஏற்படாது.

١٦٩٢ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ عَنِ الْجَلاَّلَةِ فِي الأَبِلِ أَنْ يُرْكَبَ عَلَيْهَا . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1692** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

விட்டையை (காய்ந்த மலத்தை) சாப்பிடும் ஒட்டகத்தில் சவாரி செய்வதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். **(அபூதாவூது:2558)**

## ٣٠٩ - باب النّهي عن البصاق في المسجد والأمر بإزالته منه إذا وجد فيه، والأمر بتنزيه المسجد عن الأقذار

## பாடம் : 309 - பள்ளிவாசலில் எச்சில் துப்புவது கூடாது. எச்சில் இருந்தால் அதை நீக்குவது அவசியமாகும். அதை நீக்கி விட்டு பள்ளிவாசலை சுத்தம் செய்வது அவசியமாகும்.

١٦٩٣ - عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الْبُصَاقُ فِي الْمَسْجِدِ خَطِيئَةٌ وَكَفَّارَتُهَا دَفْنُهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَالْمُرَادُ بِدَفْنِهَا إِذَا كَانَ الْمَسْجِدُ تُرَابًا أَوْ رَمْلاً وَنَحْوَهُ فَيُوَارِيهَا تَحْتَ تُرَابِهِ . قَالَ أَبُو الْمَحَاسِنِ الرُّويَانِيُّ مِنْ أَصْحَابِنَا فِي

كتابه " الْبَحْرِ " : وَقِيلَ : الْمُرَادُ بِدَفْنِهَا إِخْرَاجُهَا مِنَ الْمَسْجِدِ أَمَّا إِذَا كَانَ الْمَسْجِدُ مُبَلَّطًا أَوْ مُجَصَّصًا فَدَلَكَهَا عَلَيْهِ بِمَدَاسِهِ أَوْ بِغَيْرِهِ كَمَا يَفْعَلُهُ كَثِيرٌ مِنَ الْجُهَّالِ فَلَيْسَ ذَلِكَ بِدَفْنٍ بَلْ زِيَادَةٌ فِي الْخَطِيئَةِ وَتَكْثِيرٌ لِلْقَذَرِ فِي الْمَسْجِدِ ; وَعَلَى مَنْ فَعَلَ ذَلِكَ أَنْ يَمْسَحَهُ بَعْدَ ذَلِكَ بِثَوْبِهِ أَوْ بِيَدِهِ أَوْ غَيْرِهِ أَوْ يَغْسِلَهُ .

**1693** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பள்ளிவாசலில் எச்சில் துப்புவது, தவறாகும். அதற்குப் பரிகாரம், அதைப் புதைத்து விடுவதாகும் என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:415. முஸ்லிம்:552)**

எச்சிலை புதைப்பது என்பதன் நோக்கம், பள்ளிவாசல், (தரை) மண்ணாக அல்லது மணலாக இருந்தால், அதை மண்ணுக்கு கீழ் மறைப்பதாகும்.

அபுல் மஹாஸின் ரூயானி அவர்கள் தன் "பஹ்ரு" எனும் நூலில், "எச்சிலை மறைப்பது என்பது, பள்ளிவாசலை விட்டும் அதை நீக்குவதாகும்" என கூறுகிறார்கள்.

பள்ளிவாசல் (தரை) சிமெண்ட் அல்லது பளபளப்பான கல்லாக இருந்து, அறிவிலிகளில் பலர் செய்வது போல் தன் செருப்பால் அல்லது இதரப் பொருட்களால் தேய்த்து விட்டால், அது புதைப்பதாக ஆகாது. எனினும், அது குற்றத்தை அதிகம் செய்ததாகும். பள்ளிவாசலில் அசுத்தத்தை அதிகமாக்கியதுமாகும். இவ்வாறு செய்தவர், தன் ஆடை அல்லது தன் கை அல்லது மற்ற பொருட்களால் அதைத் தடவி எடுக்க வேண்டும். அல்லது கழுவிட வேண்டும்.

١٦٩٤ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ رَأَى فِي جِدَارِ الْقِبْلَةِ مُخَاطًا أَوْ بُزَاقًا أَوْ نُخَامَةً فَحَكَّهُ . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1694** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை "கிப்லா" திசை உள்ள சுவரில் காய்ந்த மூக்குச் சளியை அல்லது எச்சிலை அல்லது காரல் சளியைப் பார்த்து விட்டு, உடனே அதைச் சுரண்டினார்கள். **(புகாரி:407. முஸ்லிம்:549)**

١٦٩٥ - وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ هَذِهِ الْمَسَاجِدَ لاَ تَصْلُحُ لِشَيْءٍ مِنْ هَذَا الْبَوْلِ وَلاَ الْقَذَرِ إِنَّمَا هِيَ لِذِكْرِ اللَّهِ تَعَالَى وَقِرَاءَةِ الْقُرْآنِ " أَوْ كَمَا قَالَ رَسُولُ اللَّهِ ﷺ . رَوَاهُ مُسْلِمٌ .

**1695** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! அல்லாஹ்வின் பள்ளிவாசல்களில், சிறுநீர் கழிப்பது, அசுத்தம் போன்ற எதையும் செய்வது பொருத்தமாகாது. நிச்சயமாக! பள்ளிவாசல்கள் அல்லாஹ்வை நினைவுகூரவும், குர்ஆனை ஓதவும் உள்ளதாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அல்லது இதுபோன்ற (வார்த்தைகளால்) கூறினார்கள். **(முஸ்லிம்:285)**

## ٣١٠ - باب كراهية الخصومة في المسجد ورفع الصوت فيه، ونشد الضالة والبيع والشراء والإجارة ونحوها من المعاملات

## பாடம் : 310 - பள்ளிவாசலில் வீண் வழக்காடுவது, சப்தமிட்டுப் பேசுவது, காணாமல் போன பொருளைத் தேடுவது, விற்பது, வாங்குவது, வாடகைக்கு விடுவது மற்றும் இது போன்ற கொடுக்கல் வாங்கல் செய்வது வெறுக்கத்தக்கதாகும்.

١٦٩٦ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَنْ سَمِعَ رَجُلاً يَنْشُدُ ضَالَّةً فِي الْمَسْجِدِ فَلْيَقُلْ : لاَ رَدَّهَا اللَّهُ عَلَيْكَ فَإِنَّ الْمَسَاجِدَ لَمْ تُبْنَ لِهَذَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1696** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"காணாமல் போன பொருளைப் பள்ளிவாசலில் தேடுபவரின் சப்தத்தை ஒருவர் கேட்டால், 'உமக்கு அல்லாஹ் அதைத் திருப்பித் தராமல் இருப்பானாக!' என்று கூறவும். நிச்சயமாக! பள்ளிவாசல்கள் இதற்காகக் கட்டப்படவில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:568)**

١٦٩٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا رَأَيْتُمْ مَنْ يَبِيعُ أَوْ يَبْتَاعُ فِي الْمَسْجِدِ فَقُولُوا : لاَ أَرْبَحَ اللَّهُ تِجَارَتَكَ وَإِذَا رَأَيْتُم مَنْ يَنْشُدُ ضَالَّةً فَقُولُوا : لاَ رَدَّهَا اللَّهُ عَلَيْكَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1697** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பள்ளிவாசலில் பொருளை விற்பவரையோ அல்லது வாங்குபவரையோ நீங்கள் கண்டால், "உம் வியாபாரத்தில் அல்லாஹ் இலாபம் அளிக்காதிருப்பானாக!" என்று கூறுங்கள். மேலும், காணாமல் போன பொருளை (பள்ளிவாசலில்) சப்தமிட்டுத் தேடுவோரை நீங்கள் கண்டால், "அல்லாஹ் உமக்கு அதைத் திருப்பி தராமல் இருப்பானாக!" என்று கூறுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1321. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٦٩٨ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً نَشَدَ فِي الْمَسْجِدِ فَقَالَ : مَنْ دَعَا إِلَى الْجَمَلِ الأَحْمَرِ ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ وَجَدْتَ ; إِنَّمَا بُنِيَتْ الْمَسَاجِدُ لِمَا بُنِيَتْ لَهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1698** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர் பள்ளிவாசலில் காணாமல் போனப் பொருளைத் தேடியவராக, "சிவப்பு ஒட்டகையைக் கண்டவர் யார்?" என்று கேட்டார். உடனே நபி (ஸல்) அவர்கள், "நீர் (அதை) பெற்றுக் கொள்ளமாட்டீர்! பள்ளிவாசல்கள் கட்டபட்டதெல்லாம், எதற்குக் கட்டப்பட்டதோ, அதற்காகத்தான். (அதாவது வணங்கி வழிப்படத்தான்!)" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:569)**

١٦٩٩ – وَعَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ ) عَبْدِ اللَّهِ بْنِ عَمْرٍو ( رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى عَنْ الشِّرَاءِ وَالْبَيْعِ فِي الْمَسْجِدِ وَأَنْ تُنْشَدَ فِيهِ ضَالَّةٌ أَوْ يُنْشَدَ فِيهِ شِعْرٌ . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1699** அம்ரு இப்னு ஷுஐபு (ரழி) அவர்கள் தம் தந்தையின் தந்தை கூறியதாக அறிவிக்கின்றார்கள்:

பள்ளிவாசலில் விற்பதற்கும், வாங்குவதற்கும் அதில் காணாமல் போன பொருளைச் சப்தமிட்டுத் தேடுவதற்கும், அதில் பாடல் படிப்பதற்கும் நபி (ஸல்) தடை செய்தார்கள்.

**(அபூதாவூது:1079. திர்மிதீ:322. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

١٧٠٠ – وَعَنْ السَّائِبِ بْنِ يَزِيدَ الصَّحَابِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كُنْت فِي الْمَسْجِدِ فَحَصَبَنِي رَجُلٌ فَنَظَرْت فَإِذَا عُمَرُ بْنُ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ فَقَالَ : اذْهَبْ فَأْتِنِي بِهَذَيْنِ فَجِئْته بِهِمَا فَقَالَ : مِنْ أَيْنَ أَنْتُمَا ؟ فَقَالاَ : مِنْ أَهْلِ الطَّائِفِ فَقَالَ : لَوْ كُنْتُمَا مِنْ أَهْلِ الْبَلَدِ لأَوْجَعْتُكُمَا تَرْفَعَانِ أَصْوَاتَكُمَا فِي مَسْجِدِ رَسُولِ اللَّهِ ﷺ رَوَاهُ الْبُخَارِيُّ .

**1700** நபித்தோழர் ஸாயிப் இப்னு யஸீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நான் பள்ளிவாசலில் இருந்தேன். அப்போது ஒருவர் என்னைப் பொடிக்கல்லால் அடித்தார். நான் (யார் என்று) கவனித்தேன். அங்கே உமர் இப்னு கத்தாப் (ரழி) அவர்கள் இருந்தார்கள். "நீர் சென்று, (அங்கே உள்ள) அந்த இருவரையும் என்னிடம் அழைத்து வருவீராக! "என்று கூறினார்கள். நான் அவர்களிடம் அந்த இருவரையும் அழைத்து வந்தேன். "நீங்கள் இருவரும் எங்கிருந்து

**1706** உம்மு ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவரிடம் குர்பானி கொடுக்கத்தக்க பிராணி இருந்து, துல்ஹஜ் பிறை வந்துவிட்டால், அவர் குர்பானி கொடுக்கும் வரை தன் முடி, நகங்கள் எதையும் எடுக்கக்கூடாது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1977)**

## ٣١٤ – باب النّهي عَن الْحلف بمخلوق كالنبيّ والْكعبة والملائكة والسماء والآباء والحياة والروح والرأس وحياة السلطان ونعمة السلطان وتُرْبة فلان والأمانة، وهي من أشدها نهيًا

## பாடம் : 314 - நபி, கஃபா, வானவர், வானம், பெற்றோர், வாழ்க்கை, உயிர், தலை, அரசனின் உதவி, நிலம், அமானிதம் போன்ற படைப்பினங்களின் பெயரால் சத்தியம் செய்வது கண்டிப்பாக கூடாது.

١٧٠٧ – عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إنَّ اللَّهَ تَعَالَى يَنْهَاكُمْ أَنْ تَحْلِفُوا بآبَائِكُمْ فَمَنْ كَانَ حَالِفًا فَلْيَحْلِفْ بِاللَّهِ أَوْ لِيَصْمُتْ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ فِي الصَّحِيحِ : " فَمَنْ كَانَ حَالِفًا فَلاَ يَحْلِفْ إلاَّ بِاللَّهِ أَوْ لِيَسْكُتْ " .

**1707** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்கள் பெற்றோர்களின் பெயரால் நீங்கள் சத்தியம் செய்திட, அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துவிட்டான். ஒருவர் சத்தியம் செய்தால், அல்லாஹ்வின் பெயரால் சத்தியம் செய்யட்டும்! அல்லது மவுனமாக இருக்கட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6646. முஸ்லிம்:1646)**

"ஒருவர் சத்தியம் செய்பவராக இருந்தால், அவர் அல்லாஹ்வின் பெயராலேயே தவிர சத்தியம் செய்ய வேண்டாம். அல்லது அமைதியாக இருக்கட்டும்" என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

١٧٠٨ – وَعَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَحْلِفُوا بالطَّوَاغِي وَلاَ بآبَائِكُمْ " . رَوَاهُ مُسْلِمٌ . " الطَّوَاغِي " : جَمْعُ طَاغِيَة وَهِيَ الأَصْنَامُ . وَمِنْهُ الْحَدِيثُ : " هَذه طَاغِيَةُ دَوْسٍ " : أَيْ صَنَمُهُمْ وَمَعْبُودُهُمْ . وَرُوِيَ فِي غَيْرِ مُسْلِمٍ : " بِالطَّوَاغِيتِ " جَمْعُ طَاغُوت وَهُوَ الشَّيْطَانُ وَالصَّنَمُ .

**1708** அப்துர் ரஹ்மான் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சிலைகளைக் கொண்டோ, உங்களின் பெற்றோரைக் கொண்டோ நீங்கள் சத்தியம் செய்யாதீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1648)**

١٧٠٩ – وَعَنْ بُرَيْدَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ حَلَفَ بِالأَمَانَةِ فَلَيْسَ مِنَّا " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1709** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அமானிதத்தின் பெயரால் ஒருவர் சத்தியம் செய்தால், அவர் நம்மைச் சேர்ந்தவர் அல்லர்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:3258)**

١٧١٠ – وَعَنْهُ ) بُرَيْدَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ حَلَفَ فَقَالَ : إنِّي بَرِيءٌ مِنَ الأسْلاَمِ فَإِنْ كَانَ كَاذِبًا فَهُوَ كَمَا قَالَ وَإِنْ كَانَ صَادِقًا فَلَنْ يَرْجِعَ إِلَى الأسْلاَمِ سَالِمًا " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1710** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(ஒருவர் ஒரு செயலைக் குறிப்பிட்டு) நான் இதைச் செய்தால் இஸ்லாத்தை விட்டும் நீங்கி விடுவேன்" என்று கூறிச் சத்தியம் செய்து, (அந்த செயலை அவர் செய்து) பொய்யராக இருந்தால், அவர் கூறியபடியே இஸ்லாத்தை விட்டு வெளியேறியவராக) ஆகிவிடுவார். (அச்செயலைச் செய்யாது) அவர் உண்மையாளராக இருந்தால், (இஸ்லாமில் இருந்து வெளியே மாட்டார். எனினும் அவர் கூறிய காரணத்தால்) இஸ்லாத்தின் பக்கம் வெற்றியாளராகத் திரும்பமாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:3257)**

١٧١١ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ سَمِعَ رَجُلاً يَقُولُ : لاَ وَالْكَعْبَةِ فَقَالَ ابْنُ عُمَرَ : لاَ تَحْلِفْ بِغَيْرِ اللَّهِ فَإِنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : مَنْ حَلَفَ بِغَيْرِ اللَّهِ فَقَدْ كَفَرَ أَوْ أَشْرَكَ . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . وَفَسَّرَ بَعْضُ الْعُلَمَاءِ قَوْلَهُ : كَفَرَ أَوْ أَشْرَكَ عَلَى التَّغْلِيظِ كَمَا رُوِيَ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " الرِّيَاءُ شِرْكٌ " .

**1711** "கஅபாவின் மீது சத்தியமாக! அவ்வாறில்லை" என்று ஒரு மனிதர் கூறுவதைக் கேட்ட இப்னு உமர் (ரழி) அவர்கள், "அல்லாஹ் அல்லாதவற்றின் பெயரால் நீர் சத்தியம் செய்ய வேண்டாம்!" ஏனெனில், "அல்லாஹ் அல்லாதவற்றின் பெயரால் ஒருவர் சத்தியம் செய்தால், நிச்சயமாக! அவர் இறைமறுப்பாளராகிவிட்டார். அல்லது இணை வைப்பவராகிவிட்டார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன்" என்று கூறினார்கள்.

**(திர்மிதீ:1535. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகின்றார்கள்)**

"இறை மறுப்பாளராகிவிட்டார், இணைவைத்துவிட்டார்" என்ற வார்த்தை, கடுமைக்காகச் சொல்லப்பட்டதாகும். "முகஸ்துதி, இணைவைத்தலாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது போல இதுவும் என்று அறிஞர்களில் சிலர் விளக்கம் அளித்துள்ளனர்.

## ٣١٥ – باب تغليظ اليمين الكاذبة عمدًا

## பாடம் : 315 - வேண்டுமென்றே பொய் சத்தியம் செய்வது கடுமையானதாகும்.

١٧١٢ – عَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ حَلَفَ عَلَى مَالِ امْرِئٍ مُسْلِمٍ بِغَيْرِ حَقِّهِ لَقِيَ اللَّهَ وَهُوَ عَلَيْهِ غَضْبَانُ " . قَالَ : ثُمَّ قَرَأَ عَلَيْنَا رَسُولُ اللَّهِ ﷺ مِصْدَاقَهُ مِنْ كِتَابِ اللَّهِ عَزَّ وَجَلَّ : إِنَّ الَّذِينَ يَشْتَرُونَ بِعَهْدِ اللَّهِ وَأَيْمَانِهِمْ ثَمَنًا قَلِيلاً . إِلَى آخِرِ الآيَةِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1712** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நியாயமின்றி ஒரு முஸ்லிமின் சொத்தை அபகரிக்க, ஒருவர் சத்தியம் செய்தால், அவர் மீது கோபம் உள்ள நிலையில், அவர் அல்லாஹ்வைச் சந்திப்பார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். பின்பு அல்லாஹ்வின் வேதத்திலிருந்து இதற்குச் சான்றாக எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் (பின்வரும்) வசனத்தை ஓதினார்கள்.

"நிச்சயமாக! அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதிக்கும், தங்களின் சத்தியங்களுக்கும் பதிலாக (உலகில்) அற்பப்பொருளை வாங்குகின்றவர்களுக்கு மறுமையில் எவ்வித பங்கும் கிடையாது. மேலும் அவர்களிடம் அல்லாஹ் பேசவும் மாட்டான். மறுமை நாளில் அவர்களைப் பார்க்கவும் மாட்டான். (பாவங்களை விட்டும்) அவர்களைப் பரிசுத்தப்படுத்தவும் மாட்டான். அவர்களுக்கு நோவினை தரும் வேதனை உண்டு." (3:77) **(புகாரி:6676. முஸ்லிம்:138)**

١٧١٣ – وَعَنْ أَبِي أُمَامَةَ إِيَاسِ بْنِ ثَعْلَبَةَ الْحَارِثِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ اقْتَطَعَ حَقَّ امْرِئٍ مُسْلِمٍ بِيَمِينِهِ فَقَدْ أَوْجَبَ اللَّهُ لَهُ النَّارَ وَحَرَّمَ عَلَيْهِ الْجَنَّةَ " . فَقَالَ لَهُ رَجُلٌ : وَإِنْ كَانَ شَيْئًا يَسِيرًا يَا رَسُولَ اللَّهِ ؟ قَالَ : " وَإِنْ كَانَ قَضِيبًا مِنْ أَرَاكٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1713** அபூஉமாமா இயாஸ் இப்னு தஃலபா அல் ஹாரிஸி (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

“தன் சத்தியத்தின் மூலம் ஒருவர் ஒரு முஸ்லிமின் உரிமையைப் பறித்தால், அல்லாஹ் அவருக்கு நரகத்தை அவசியமாக்கி விட்டான். மேலும் அவருக்கு சொர்க்கத்தைத் தடை செய்து விட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! (அந்த உரிமை) சிறிய அளவிலாக இருந்தால்...?” என்று ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். “அராக்” எனும் கருவேலமரத்தின் ஒரு குச்சியாக இருந்தாலும் தான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:137)**

١٧١٤ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " الْكَبَائِرُ : الْأَشْرَاكُ بِاللَّهِ وَعُقُوقُ الْوَالِدَيْنِ وَقَتْلُ النَّفْسِ وَالْيَمِينُ الْغَمُوسُ " . رَوَاهُ الْبُخَارِيُّ . وَفِي رِوَايَةٍ لَهُ : أَنَّ أَعْرَابِيًّا جَاءَ إِلَى النَّبِيِّ ﷺ فَقَالَ : يَا رَسُولَ اللَّهِ مَا الْكَبَائِرُ ؟ قَالَ : " الأَشْرَاكُ بِاللَّهِ " . قَالَ : ثُمَّ مَاذَا ؟ قَالَ : " الْيَمِينُ الْغَمُوسُ " . قُلْت : وَمَا الْيَمِينُ الْغَمُوسُ ؟ قَالَ : الَّذِي يَقْتَطِعُ مَالَ امْرِئٍ مُسْلِمٍ ! يَعْنِي : بِيَمِينٍ هُوَ فِيهَا كَاذِبٌ .

**1714** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பெரும் பாவங்கள் என்பது, அல்லாஹ்வுக்கு இணை வைத்தல், பெற்றோரை நோவினை செய்தல், கொலை செய்தல், பொய் சத்தியம் செய்தல் ஆகியவையாகும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6675)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

ஒரு கிராமவாசி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, “இறைத்தூதர் அவர்களே! பெரும் பாவங்கள் எவை?” என்று கேட்டார். “அல்லாஹ்வுக்கு இணைவைத்தல்” என்று நபி (ஸல்) கூறினார்கள். “பின்பு எது?” என்று கேட்டார். “பொய் சத்தியம் செய்தல்” என்று நபி (ஸல்) கூறினார்கள். உடனே நான், “பொய் சத்தியம் செய்வது என்றால் என்ன?” என்று கேட்டேன். “ஒரு முஸ்லிமின் சொத்தை பொய் சத்தியம் செய்து அபகரிப்பதாகும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6920)**

## ٣١٦ – بابُ ندب مَن حلف على يمين فرأى غيرها خيرًا منها أن يفعل ذلك المحلوف عليه ثم يكفّر عن يمينه

## பாடம் : 316 – சத்தியம் செய்துள்ள ஒருவர், அதைவிடச் சிறந்ததைக் கண்டால், தன் சத்தியத்தை முறித்து, பரிகாரம் செய்வது கூடும்!

١٧١٥ – عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ سَمُرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " وَإِذَا حَلَفْت عَلَى يَمِينٍ فَرَأَيْت غَيْرَهَا خَيْرًا مِنْهَا فَأْتِ الَّذِي هُوَ خَيْرٌ وَكَفِّرْ عَنْ يَمِينِكَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1715** அப்துர் ரஹ்மான் இப்னு ஸமுரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நீர் சத்தியம் செய்திருந்து, அதைவிடச் சிறந்ததாக மற்றொன்றைக் கண்டால், அந்தச் சிறந்ததை நீர் செய்வீராக! உங்கள் சத்தியத்திற்கு (முறித்ததற்காக) பரிகாரம் செய்வீராக!” என்று என்னிடம் நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7146. முஸ்லிம்:1652)**

١٧١٦ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " مَنْ حَلَفَ عَلَى يَمِينٍ فَرَأَى غَيْرَهَا خَيْرًا مِنْهَا فَلْيُكَفِّرْ عَنْ يَمِينِهِ وَلْيَفْعَلِ الَّذِي هُوَ خَيْرٌ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1716** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் சத்தியம் செய்திருந்து, அது அல்லாத ஒன்றை அதைவிடச் சிறந்ததாகக் கண்டால், அவர் தன் சத்தியத்தை முறிக்கட்டும்! அந்தச் சிறந்ததையே அவர் செய்யட்டும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1650)**

١٧١٧ - وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنِّي وَاللَّهِ إِنْ شَاءَ اللَّهُ - لاَ أَحْلِفُ عَلَى يَمِينٍ ثُمَّ أَرَى خَيْرًا مِنْهَا إِلاَّ كَفَّرْتُ عَنْ يَمِينِي وَأَتَيْتُ الَّذِي هُوَ خَيْرٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1717** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நிச்சயமாக நான், அல்லாஹ் நாடினால் ஓர் விஷயத்தின் மீது சத்தியம் செய்து, பின்பு அதைவிடச் சிறந்ததைக் கண்டால், என் சத்தியத்தை நான் முறித்துப் பரிகாரம் செய்துவிட்டு, அதைவிடச் சிறந்ததைச் செய்யாமல் இருக்க மாட்டேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6623. முஸ்லிம்:1649)**

١٧١٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لأَنْ يَلَجَّ أَحَدُكُمْ فِي يَمِينِهِ فِي أَهْلِهِ آثَمُ لَهُ عِنْدَ اللَّهِ تَعَالَى مِنْ أَنْ يُعْطِيَ كَفَّارَتَهُ الَّتِي فَرَضَ اللَّهُ عَلَيْهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَوْلُهُ : " يَلَجَّ " بِفَتْحِ اللاَّمِ وَتَشْدِيدِ الْجِيمِ : أَيْ يَتَمَادَى فِيهَا وَلاَ يُكَفِّرُ . وَقَوْلُهُ " آثَمُ " هُوَ بِالثَّاءِ الْمُثَلَّثَةِ : أَيْ أَكْثَرُ إِثْمًا .

**1718** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தன் குடும்பத்தினர் விஷயமாக சத்தியம் செய்து, அதில் உறுதியாக இருப்பது; அந்தச் சத்தியத்தை (முறித்து) அல்லாஹ் கடமையாக்கி உள்ள பரிகாரம் செய்து விடுவதை விட (பிடிவாதமாக இருப்பது) அல்லாஹ்விடம் பெரும் பாவமாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6625. முஸ்லிம்:1655)**

## ٣١٧ - باب العفو عن لغو اليمين وأنّه لا كفّارة فيه، وهو ما يجري على اللسان بغير قصد اليمين كقوله على العادة: لا والله، وبلى والله، ونحو ذلك

## பாடம் :317 - "அல்லாஹ்வின் மீது சத்தியமாக இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக ஆம்!" என்றும் அல்லது இது போன்றும் சத்தியம் செய்தல் நோக்கமின்றி, வெறுமனே நாவால் கூறுகின்ற வீண் சத்தியங்களுக்கு குற்றமில்லை. அதற்கு பரிகாரமும் இல்லை.

قَالَ اللَّهُ تَعَالَى : لاَ يُؤَاخِذُكُمُ اللَّهُ بِاللَّغْوِ فِي أَيْمَانِكُمْ وَلَكِنْ يُؤَاخِذُكُمْ بِمَا عَقَّدْتُمُ الأَيْمَانَ فَكَفَّارَتُهُ إِطْعَامُ عَشَرَةِ مَسَاكِينَ مِنْ أَوْسَطِ مَا تُطْعِمُونَ أَهْلِيكُمْ أَوْ كِسْوَتُهُمْ أَوْ تَحْرِيرُ رَقَبَةٍ فَمَنْ لَمْ يَجِدْ فَصِيَامُ ثَلاَثَةِ أَيَّامٍ ذَلِكَ كَفَّارَةُ أَيْمَانِكُمْ إِذَا حَلَفْتُمْ وَاحْفَظُوا أَيْمَانَكُمْ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *நீங்கள் செய்த வீணான சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களைக் குற்றம் பிடிப்பதில்லை. ஆயினும் நீங்கள் உறுதிப்படுத்திச் செய்த சத்தியங்களுக்காக (அவற்றை நீங்கள்*

முறித்துவிட்டால்) உங்களை அவன் நிச்சயம் தண்டிப்பான். (முறித்துவிட்ட) சத்தியத்திற்கான குற்றப்பரிகாரம் (இதுதான்) : நீங்கள் உங்கள் குடும்பத்தாருக்கு அளிக்கின்ற உணவுகளில் நடுத்தரமான வகையிலிருந்து பத்து ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். அல்லது அவர்களுக்கு ஆடைகள் வழங்க வேண்டும். அல்லது ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும். ஆனால் (இவற்றில்) எதற்கும் சக்தி பெறாதவர்கள் மூன்று நாட்களுக்கு நோன்பு நோற்க வேண்டும். நீங்கள் செய்த சத்தியங்களை முறித்துவிட்டால், இதுதான் அவற்றுக்குரிய குற்றப்பரிகாரமாகும். எனவே உங்கள் சத்தியங்களை (முறித்துவிடாமல்) பேணுங்கள்! நீங்கள் நன்றி செலுத்துபவராகத் திகழக்கூடும் என்பதற்காக! இவ்வாறு தன்னுடைய சட்ட திட்டங்களை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவாக்குகிறான். (5:89)

١٧١٩ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : أُنْزِلَتْ هَذِهِ الآيَةُ : لاَ يُؤَاخِذُكُمُ اللَّهُ بِاللَّغْوِ فِي أَيْمَانِكُمْ فِي قَوْلِ الرَّجُلِ : لاَ وَاللَّهِ وَبَلَى وَاللَّهِ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1719** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இல்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஆம்" என்று ஒருவர் (சத்தியம் செய்தல் எண்ணமின்றி) கூறும் விஷயத்திலே தான் இந்த 5:89 வசனம் இறக்கி வைக்கப்பட்டது. **(புகாரி:1663)**

## ٣١٨ – باب كراهة الحلف في الْبَيْع وإِنْ كَان صَادقًا

## பாடம் : 318 - உண்மையே கூறினாலும், வியாபாரத்தில் சத்தியம் செய்வது வெறுக்கத்தக்கதாகும்.

١٧٢٠ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " الْحَلِفُ مَنْفَقَةٌ لِلسِّلْعَةِ مَمْحَقَةٌ لِلْكَسْبِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1720** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சத்தியம் செய்வது பொருளை விற்கச் செய்துவிடும். (ஆனால்) வருமானத்தை (பரக்கத்தை) அழித்துவிடும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(புகாரி:2087. முஸ்லிம்:1606)**

١٧٢١ – وَعَنْ أَبِي قَتَادَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِيَّاكُمْ وَكَثْرَةَ الْحَلِفِ فِي الْبَيْعِ : فَإِنَّهُ يُنَفِّقُ ثُمَّ يَمْحَقُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1721** அபூகதாதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"வியாபாரத்தில் அதிக அளவில் சத்தியம் செய்வதை உங்களுக்கு எச்சரிக்கிறேன். ஏன் எனில், பொருளை (விற்பனை) செல்லுபடியாக்கும். பின்பு அதனை (அபிவிருத்தியை) அழித்து விடும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(முஸ்லிம்:1607)**

## ٣١٩ - باب كراهة أن يَسأَل الإنسان بوَجْه الله عز وجل غير الجنة، وكراهة منع من سأل بالله تعالى وتشفّعَ به

## பாடம் : 319 - அல்லாஹ்வின் கண்ணியத்தின் பெயரால் சொர்க்கத்தைத் தவிர மற்றதை ஒருவர் கேட்பது வெறுக்கத்தக்கதாகும். அல்லாஹ்வின் பெயரால் ஒருவர் கேட்டால், பரிந்துரை செய்தால், அதை மறுப்பது வெறுக்கத்தக்கதாகும்.

١٧٢٢ – عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ . قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ يُسْأَلُ بِوَجْهِ اللَّهِ إِلاَّ الْجَنَّةُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1722** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் கண்ணியத்தின் பெயரால், சொர்க்கத்தைத் தவிர வேறெதையும் கேட்கப்படக்கூடாது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1671. இதன் அறிவிப்பாளர் வரிசையில் சுலைமான் இப்னு முஆத் அத்தமீமி என்பவர் இடம் பெறுகிறார். எனவே இது பலவீனமானதாகும்)**

١٧٢٣ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ اسْتَعَاذَ بِاللَّهِ فَأَعِيذُوهُ وَمَنْ سَأَلَ بِاللَّهِ فَأَعْطُوهُ وَمَنْ دَعَاكُمْ فَأَجِيبُوهُ وَمَنْ صَنَعَ إِلَيْكُمْ مَعْرُوفًا فَكَافِئُوهُ فَإِنْ لَمْ تَجِدُوا مَا تُكَافِئُونَهُ فَادْعُوا لَهُ حَتَّى تَرَوْا أَنَّكُمْ قَدْ كَافَأْتُمُوهُ " . حَدِيثٌ صَحِيحٌ رَوَاهُ أَبُو دَاوُدَ وَالنَّسَائِيُّ بِأَسَانِيدِ الصَّحِيحَيْنِ .

**1723** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் பெயரால் ஒருவர் பாதுகாப்புக் கோரினால், அவருக்கு பாதுகாப்புக் கொடுங்கள். அல்லாஹ்வின் பெயரால் ஒருவர் கேட்டால், அவருக்குக் கொடுங்கள். உங்களை ஒருவர் அழைத்தால், அவருக்குப் பதில் கூறுங்கள். உங்களுக்கு நல்லதை ஒருவர் செய்தால், அவருக்கு (நன்றி கூறும் முகமாக) பகரம் செய்து விடுங்கள். அவருக்கு நீங்கள் பகரம் செய்வதற்கு எதையும் நீங்கள் பெற்றுக் கொள்ளாவிட்டால், அவருக்குப் பரிகாரம் செய்து விட்டோம் என நீங்கள் கருதும் வரை அவருக்காக துஆச் செய்யுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(அபூதாவூது:1672. நஸயீ:5/82)**

## ٣٢. – بابُ تحريم قول شاهنشاه للسلطان وغيره، لأن معناه ملك الملوك، ولا يوصف بذلك غير الله سبحانه وتعالى

## பாடம் : 320 - அரசரையோ, அது போன்றவரையோ "ஷாஹின்ஷாஹ்" என்று கூறுவது கூடாது. காரணம், "அரசனுக்கு அரசன்" என்பது அதன் பொருளாகும். அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் இப்படி வர்ணிப்பது கூடாது.

١٧٢٤ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِنَّ أَخْنَعَ اسْمٍ عِنْدَ اللَّهِ عَزَّ وَجَلَّ رَجُلٌ تَسَمَّى مَلِكَ الأَمْلاَكِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَالَ سُفْيَانُ بْنُ عُيَيْنَةَ : " مَلِكُ الأَمْلاَكِ " مِثْلُ شَاهِنْشَاهَ .

**1724** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்விடம் மிகக் கெட்ட பெயர், 'மலிக்குல் அம்லாக்' (அரசருக்கு அரசர்) என்று ஒருவருக்கு வைத்த பெயர் தான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6205. முஸ்லிம்:2143)**

"மலிக்குல் அம்லாக் என்பது, 'ஷாஹின்ஷாஹ்' என்பது போல்தான்" என்று சுப்யான் இப்னு உயைனா கூறுகின்றார்கள்.

## ٣٢١ – باب النّهي عَنْ مخاطبة الفاسق والمبتدع ونحوهما بسيّدي ونحوه

## பாடம் : 321 - பாவியை, மார்க்கத்தில் புதிய செயலைச் செய்பவரை "தலைவர்" என்ற வார்த்தையால் அழைப்பது கூடாது.

١٧٢٥ – عَنْ بُرَيْدَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لاَ تَقُولُوا لِلْمُنَافِقِ سَيِّدٌ فَإِنَّهُ إِنْ يَكُنْ سَيِّدًا فَقَدْ أَسْخَطْتُمْ رَبَّكُمْ عَزَّ وَجَلَّ " رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1725** புரைதா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு நயவஞ்சகனை "தலைவன்" என்று கூறாதீர்கள். அவன் தலைவனாக இருந்தால், உங்களின் இறைவனை நீங்கள் கோபப்படுத்திவிட்டீர்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4977)**

## ٣٢٢ – بابُ كراهة سَبّ الحمّى

## பாடம் : 322 - காய்ச்சலைத் திட்டுவது வெறுக்கத்தக்கது

١٧٢٦ – عَنْ جَابِرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ دَخَلَ عَلَى أُمِّ السَّائِبِ – أَوْ أُمِّ الْمُسَيَّبِ – فَقَالَ : " مَا لَكِ يَا أُمَّ السَّائِبِ – أَوْ يَا أُمَّ الْمُسَيَّبِ – تُزَفْزِفِينَ ؟ " قَالَتْ : الْحُمَّى لاَ بَارَكَ اللّٰهُ فِيهَا ! فَقَالَ : " لاَ تَسُبِّي الْحُمَّى فَإِنَّهَا تُذْهِبُ خَطَايَا بَنِي آدَمَ كَمَا يُذْهِبُ الْكِيرُ خَبَثَ الْحَدِيدِ " . رَوَاهُ مُسْلِمٌ . " تُزَفْزِفِينَ " : أَيْ تَتَحَرَّكِينَ حَرَكَةً سَرِيعَةً وَمَعْنَاهُ : تَرْتَعِدُ . وَهُوَ بِضَمِّ التَّاءِ وَبِالزَّايِ الْمُكَرَّرَةِ وَالْفَاءِ الْمُكَرَّرَةِ وَرُوِيَ أَيْضًا بِالرَّاءِ الْمُكَرَّرَةِ وَالْقَافَيْنِ .

**1726** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உம்மு ஸாயிப் (ரழி) (அல்லது உம்முல் முஸய்யிப் (ரழி)) அவர்களின் வீட்டிற்கு வந்த நபி (ஸல்) அவர்கள், "உம்மு ஸாயிபே! உமக்கு என்ன? ஏன் துடிக்கிறீர்" என்று கேட்டார்கள். "காய்ச்சல்தான். அதிலே அல்லாஹ் பரக்கத் செய்யாதிருப்பானாக!" என்று உம்மு ஸாயிப் (ரழி) கூறினார். "காய்ச்சலைத் திட்டாதீர்! நெருப்பு உலை, இரும்பின் துருவை நீக்குவது போல், காய்ச்சல் மனிதனின் குற்றங்களை நீக்கி விடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2575)**

## ٣٢٣ – باب النّهي عَن سَبّ الريح وبَيان مَا يقال عند هبوبها

## பாடம் : 323 - காற்றை ஏசுவது கூடாது. காற்று வீசும் போது கூற வேண்டியவை.

١٧٢٧ – عَنْ أَبِي الْمُنْذِرِ أُبَيِّ بْنِ كَعْبٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لاَ تَسُبُّوا الرِّيحَ فَإِذَا رَأَيْتُمْ مَا تَكْرَهُونَ فَقُولُوا : اللّٰهُمَّ إِنَّا نَسْأَلُكَ مِنْ خَيْرِ هَذِهِ الرِّيحِ وَخَيْرِ مَا فِيهَا وَخَيْرِ مَا أُمِرَتْ بِهِ . وَنَعُوذُ بِكَ مِنْ شَرِّ هَذِهِ الرِّيحِ وَشَرِّ مَا فِيهَا وَشَرِّ مَا أُمِرَتْ بِهِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1727** அபூ முன்திர் உபை இப்னு கஅபு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“காற்றை ஏசாதீர்கள். நீங்கள் (அதன் மூலம்) சிரமம் ஏற்படுவதைக் கண்டால், “அல்லாஹும்ம இன்னா நஸ்அலுக்க மின்ஃகய்ரி ஹாதிஹிர்ரீஹி, வஃகய்ரி மாஃபீஹா வஃகய்ரி மா உமிரத் பிஹி, வநஊது பிக மின் ஷர்ரி ஹாதிஹிர் ரீஹி, வ ஷர்ரி மா ஃபீஹா வஷர்ரி மா உமிரத் பிஹி” என்று கூறுங்கள்” என நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2252. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள் : இறைவா! இந்தக் காற்றில் நல்லதையும், இதன் மூலம் ஏற்படும் நல்லதையும் அதற்குக் கட்டளையிடப்பட்டதில் நல்லதையும் உன்னிடம் நாங்கள் கேட்கிறோம். இந்தக் காற்றில் தீயதையும், இதன் மூலம் ஏற்படும் தீயதையும், அதற்குக் கட்டளை யிடப்பட்டதிலுள்ள தீயதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம்.**

١٧٢٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّه ﷺ يَقُولُ : " الرِّيحُ مِنْ رُوحِ اللَّه تَأْتِي بِالرَّحْمَة وَتَأْتِي بِالْعَذَاب فَإِذَا رَأَيْتُمُوهَا فَلاَ تَسُبُّوهَا وَسَلُوا اللَّهَ خَيْرَهَا وَاسْتَعِيذُوا بِاللَّه مِنْ شَرِّهَا " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ . قَوْلُهُ ﷺ : " مِنْ رُوحِ اللَّه " هُوَ بِفَتْحِ الرَّاءِ : أَيْ رَحْمَته بِعِبَاده .

**1728** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“காற்று, அல்லாஹ்வின் கருணையில் உள்ளதாகும். அது நல்லதையும் தரும். (சிலசமயம்) வேதனையையும் தரும். அதை (காற்று வீசுவதை) நீங்கள் கண்டால் அதை ஏசாதீர்கள். அல்லாஹ்விடம் அதில் நல்லதைக் கேளுங்கள். அதன் தீயதிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுங்கள்” என்று நபி (ஸல்) கூறக் கேட்டேன். **(அபூதாவூது:5097)**

١٧٢٩ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ إِذَا عَصَفَتْ الرِّيحُ قَالَ : " اللَّهُمَّ إِنِّي أَسْأَلُك خَيْرَهَا وَخَيْرَ مَا فِيهَا وَخَيْرَ مَا أُرْسِلَتْ بِه . وَأَعُوذُ بِك مِنْ شَرِّهَا وَشَرِّ مَا فِيهَا وَشَرِّ مَا أُرْسِلَتْ بِه " . رَوَاهُ مُسْلِمٌ .

**1729** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

காற்று வீசினால், “அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்க கய்ரஹா வகய்ரமா ஃபீஹா, வகய்ர மா உர்ஸிலத் பிஹி, வஅவூது பிக மின் ஷர்ரிஹா, வஷர்ரி மா ஃபீஹா, வஷர்ரி மா உர்ஸிலத் பிஹி” என்று நபி (ஸல்) கூறுவார்கள். **(முஸ்லிம்:899)**

**துஆவின் பொருள் : இறைவா! இதில் நல்லதையும், இதில் ஏற்படும் நல்லதையும், இது அனுப்பப்பட்டதின் நல்லதையும் உன்னிடம் நான் கேட்கிறேன். மேலும் இதில் தீயதையும், இதில் ஏற்படும் தீயதையும், இது அனுப்பப்பட்டதின் தீயதையும் விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.**

## ٣٢٤ – باب كراهة سَبّ الدّيك

## பாடம் : 324 - சேவலைத் திட்டுவது வெறுக்கத்தக்கது.

١٧٣٠ – عَنْ زَيْد بْنِ خَالِدٍ الْجُهَنِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " لاَ تَسُبُّوا الدِّيكَ فَإِنَّهُ يُوقِظُ لِلصَّلاَة " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1730** ஸைத் இப்னு காலித் அல்ஜுஹ்னீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சேவலைத் திட்டாதீர்கள். நிச்சயமாக! அது உங்களை (அதிகாலையில்) தொழுகைக்கு எழுப்பி விடுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:5101)**

## ٣٢٥ - باب النّهي عن قول الإنسان: مُطِرنا بنَوْء كذا

## பாடம் : 325 - "இந்த நட்சத்திரம் மூலம் மழை தரப்பட்டோம்" என்று ஒருவர் கூறுவது கூடாது!

١٧٣١ - عَنْ زَيْد بْنِ خَالد رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : صَلَّى بنَا رَسُولُ اللَّه ﷺ صَلاَةَ الصُّبْحِ بالْحُدَيْبِيَة في إِثْرِ سَمَاءٍ كَانَتْ منَ اللَّيْلِ . فَلَمَّا انْصَرَفَ أَقْبَلَ عَلَى النَّاسِ فَقَالَ : " هَلْ تَدْرُونَ مَاذَا قَالَ رَبُّكُمْ ؟ " . قَالُوا : اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ . قَالَ : " قَالَ : أَصْبَحَ مِنْ عِبَادِي مُؤْمِنٌ بِي وَكَافِرٌ بِي فَأَمَّا مَنْ قَالَ : مُطِرْنَا بِفَضْلِ اللَّه وَرَحْمَته فَذَلكَ مُؤْمِنٌ بِي كَافِرٌ بِالْكَوَاكِبِ ; وَأَمَّا مَنْ قَالَ : مُطِرْنَا بِنَوْءِ كَذَا وَكَذَا فَذَلِكَ كَافِرٌ بِي مُؤْمِنٌ بِالْكَوَاكِبِ " . مُتَّفَقٌ عَلَيْه . وَالسَّمَاءُ هُنَا : الْمَطَرُ .

**1731** ஸைத் இப்னு காலித் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஹுதைபிய்யா என்ற இடத்தில் எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் சுப்ஹு தொழவைத்தார்கள். அன்றிரவு மழை பெய்திருந்தது. தொழுகையை அவர்கள் முடித்த போது நபி (ஸல்) அவர்கள் மக்களை முன்னோக்கியவர்களாக, "உங்கள் இறைவன் கூறுவது பற்றி நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்டார்கள். "அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள்" என நபித்தோழர்கள் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "என் அடியார்களில் சிலர் என்னை நம்பிக்கை கொண்டவர்களாகவும் என்னை மறுத்தவர்களாகவும் காலையில் எழுகிறார்கள். "அல்லாஹ்வின் அருளாலும், அவனது கிருபையாலும் நாங்கள் மழை கொடுக்கப்பட்டோம்" என்று ஒருவன் கூறுகிறான். இதனால் அவன் என்னை நம்பியவனாக, நட்சத்திரத்தை மறுத்தவனாகிறான். "இன்ன, இன்ன நட்சத்திரங்களால் நாங்கள் மழையினைப் பெற்றோம்" என்று சிலர் கூறுவர். இதனால் அவன் என்னை மறுத்தவனாக, நட்சத்திரத்தை நம்பிக்கை கொண்டவனாக ஆகிறான்" என்று அல்லாஹ் கூறியதாக கூறினார்கள். **(புகாரி:846. முஸ்லிம்:71)**

## ٣٢٦ - باب تحريم قوله لمُسلم: ياكافر

## பாடம் : 326 - 'காஃபிரே!' என்று ஒரு முஸ்லிமை அழைப்பது கூடாது

١٧٣٢ - عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " إِذَا قَالَ الرَّجُلُ لأَخِيه : يَا كَافِرُ فَقَدْ بَاءَ بِهَا أَحَدُهُمَا ; فَإِنْ كَانَ كَمَا قَالَ وَإِلاَّ رَجَعَتْ عَلَيْه " . مُتَّفَقٌ عَلَيْه .

**1732** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"காஃபிரே!" என ஒருவர் தன் சகோதரனைக் கூறினால், அது அவர்களில் ஒருவரிடம் வந்து சேரும். அவர் கூறியது போல் இவர் (காஃபிராக) இருந்தால் (அவரிடம் போய் சேரும்). இல்லையென்றால், கூறியவரிடமே திரும்பி விடும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6103. முஸ்லிம்:60)**

١٧٣٣ - وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّه ﷺ يَقُولُ : " مَنْ دَعَا رَجُلاً بِالْكُفْرِ أَوْ قَالَ : عَدُوَّ اللَّه وَلَيْسَ كَذَلكَ إِلاَّ حَارَ عَلَيْه " . مُتَّفَقٌ عَلَيْه . " حَارَ " : رَجَعَ .

**1733** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“காஃபிரே! என ஒருவரை அழைத்தால் அல்லது ‘அல்லாஹ்வின் பகைவரே!’ என்று கூறினால், (கூறப்பட்டவர் அவ்வாறு இல்லை எனில்) கூறியவரிடமே அது திரும்பாமல் இருப்பதில்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(புகாரி:6045. முஸ்லிம்:61)**

## ٣٢٧ – باب النّهي عن الفحش وبذاء اللّسان

### பாடம் : 327 - கெட்ட வார்த்தை, தீயச் சொல் கூறுவது கூடாது.

١٧٣٤ – عَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّهِ ﷺ : " لَيْسَ الْمُؤْمِنُ بِالطَّعَّانِ وَلاَ اللَّعَّانِ وَلاَ الْفَاحِشِ وَلاَ الْبَذِيءِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1734** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“குத்திக் காட்டுபவனாக, சபிப்பவனாக, கெட்ட வார்த்தை பேசுபவனாக, தீய சொல் கூறுபவனாக ஒரு முஃமின் இருக்க மாட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:1977. இது “ஹஸன்” என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

١٧٣٥ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّهِ ﷺ : " مَا كَانَ الْفُحْشُ فِي شَيْءٍ إلاَّ شَانَهُ وَمَا كَانَ الْحَيَاءُ فِي شَيْءٍ إلاَّ زَانَهُ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1735** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு விஷயத்தில் கெட்டப்பேச்சு இருப்பின், அது அச்செயலைக் கெடுக்காமல் இருப்பதில்லை. மேலும் ஒரு விஷயத்தில் வெட்கம் கொள்வது இருப்பின், அச்செயலை அது மெருகூட்டாமல் இருப்பதில்லை” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(திர்மிதீ:1974. இது “ஹஸன்” என திர்மிதி இமாம் கூறுகிறார்கள்)**

## ٣٢٨ – باب كراهة التقعيرفي الكلام بالتشدّق وتكلف الفصاحة واستعمال وَحشيّ اللغة ودقائق الإعراب في مخاطبة العوامّ ونحوهم

### பாடம் : 328 - அடித் தொண்டையில் பேசுவது, விகார தொனியில் பேசுவது, நல்லவிதமாகப் பேச சிரமம் எடுப்பது, உபயோகத்தில் இல்லாத சொற்களைக் கூறுவது, பொது மக்களிடம் பேசும் போது, குறியீட்டுச் சொற்களை உபயோகிப்பது ஆகியவை கூடாது.

١٧٣٦ – عَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " هَلَكَ الْمُتَنَطِّعُونَ ": قَالَهَا ثَلاَثًا . رَوَاهُ مُسْلِمٌ.

**1736** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(சொல், செயலில்) வரம்பு மீறுவோர் அழிந்துவிடுவர்” என்று மூன்று தடவை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2670)**

١٧٣٧ – وَعَنْ عَبْدِ اللّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللّهِ ﷺ قَالَ : " إنَّ اللّهَ يَبْغَضُ الْبَلِيغَ مِنْ الرِّجَالِ الَّذِي يَتَخَلَّلُ بِلِسَانِهِ كَمَا تَتَخَلَّلُ الْبَقَرَةُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ :حَدِيثٌ حَسَنٌ.

**1737** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னுல் ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பசுமாடு (சாப்பிடும் போது) தன் நாவைச் சுற்றி வளைப்பது போல, தன் நாவைச் சுழற்றிச் சுழற்றி நாகரீகமாக (புதுமையாக)ப் பேசுபவரைக் கண்டு அல்லாஹ் கோபமுறுகிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:5005. திர்மிதீ:2853. இது ஹஸன் என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٧٣٨ – وَعَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ مِنْ أَحَبِّكُمْ إِلَيَّ وَأَقْرَبِكُمْ مِنِّي مَجْلِسًا يَوْمَ الْقِيَامَةِ أَحَاسِنَكُمْ أَخْلَاقًا وَإِنَّ أَبْغَضَكُمْ إِلَيَّ وَأَبْعَدَكُمْ مِنِّي يَوْمَ الْقِيَامَةِ الثَّرْثَارُونَ وَالْمُتَشَدِّقُونَ وَالْمُتَفَيْهِقُونَ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . وَقَدْ سَبَقَ شَرْحُهُ فِي بَابِ حُسْنِ الْخُلُقِ .

**1738** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என்னிடம் உங்களில் மிக விருப்பமானவரும், மறுமையில் என்னுடன் நெருக்கமாக அமர்ந்திருப்பவரும் யார் எனில், உங்களில் குணத்தால் மிக நல்லவரே ஆவார். மேலும், என்னிடம் உங்களில் மிகப் பெரும் கோபத்திற்குரியவரும், மறுமை நாளில் என்னை விட்டும் உங்களில் மிகவும் தூரமாக இருப்பவரும் யார் எனில், அதிகமாகப் பேசுவோர், நாவை சுழற்றிப் பேசுவோர், அதிகமாகப் பெருமை பேசுவோர் ஆவார்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(திர்மிதீ:2018. இது “ஹஸன்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள். இது 631-வது ஹதீஸாக “நற்குணம்” என்ற பாடத்தின் கீழ் உள்ளது)**

## ٣٢٩ – باب كراهة قوله: خبثت نفسي

## பாடம் : 329 - “என் மனம் கெட்டு விட்டது” என்று கூறுவது வெறுக்கத்தக்கது.

١٧٣٩ – عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لَا يَقُولَنَّ أَحَدُكُمْ خَبُثَتْ نَفْسِي وَلَكِنْ لِيَقُلْ لَقِسَتْ نَفْسِي " . مُتَّفَقٌ عَلَيْهِ . قَالَ الْعُلَمَاءُ : مَعْنَى خَبُثَتْ غَثِيَتْ وَهُوَ مَعْنَى " لَقِسَتْ " وَلَكِنْ كُرِهَ لَفْظُ الْخُبْثِ .

**1739** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் மனம் கெட்டு விட்டது -(கபுஸத் நஃப்ஸீ) என்று உங்களில் ஒருவர் கூற வேண்டாம். எனினும், “என் மனம் இறுகி விட்டது-(லகிஸத் நஃப்ஸீ) என்று அவர் கூறட்டும்!” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6179. முஸ்லிம்:2250)**

இதில் வரும் “கபுஸத்”, “லகிஸத்” என்ற வார்த்தைகளின் பொருள்கள் இரண்டும் ஒன்றுதான். எனினும், “குபுஸ்” என்ற வார்த்தையை நபி (ஸல்) வெறுத்தார்கள் என அறிஞர்கள் கூறுகிறார்கள்.

## ٣٣٠ – باب كراهة تسمية العنب كرمًا

## பாடம் : 330 - திராட்சைக்கு “மதிப்பு மிகு” என்று பெயரிடுவது வெறுக்கத்தக்கது.

١٧٤٠ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَا تُسَمُّوا الْعِنَبَ الْكَرْمَ فَإِنَّ الْكَرْمَ الْمُسْلِمُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ مُسْلِمٍ . وَفِي رِوَايَةٍ : " فَإِنَّمَا الْكَرْمُ قَلْبُ الْمُؤْمِنِ " . وَفِي رِوَايَةِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ : " يَقُولُونَ : الْكَرْمُ إِنَّمَا الْكَرْمُ قَلْبُ الْمُؤْمِنِ "

**1740** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“திராட்சைக்கு “மதிப்புமிகு” என்று பெயர் சூட்டாதீர்கள். ஏன் எனில், மதிப்புமிகு என்பது, முஸ்லிமுக்காக (உரியது) ஆகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6182, 6183. முஸ்லிம்:2247)**

மற்றொரு அறிவிப்பில், “நிச்சயமாக! மதிப்புமிகு என்பது, முஃமினின் இதயமாகும்” என்று உள்ளது.

புகாரி, முஸ்லிமில் மற்றொரு அறிவிப்பில்,“(திராட்சையை) மதிப்புமிகு என்று கூறுகின்றனர். நிச்சயமாக மதிப்புமிகு என்பது, முஃமினின் இதயமாகும்” என்று உள்ளது.

١٧٤١ – وَعَنْ وَائِلِ بْنِ حُجْرٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ تَقُولُوا : الْكَرْمَ وَلَكِنْ قُولُوا : الْعِنَبَ وَالْحَبَلَةَ " . رَوَاهُ مُسْلِمٌ . " الْحَبَلَةُ " بِفَتْحِ الْحَاءِ وَالْبَاءِ وَيُقَالُ أَيْضًا : بِإِسْكَانِ الْبَاءِ .

**1741** வாயில் இப்னு ஹுஜ்ர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(திராட்சையை) மதிப்புமிகு என்று கூறாதீர்கள். எனினும், ‘திராட்சை, கொடி முந்திரி’ என்று கூறுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2248)**

## ٣٣١ – باب النّهي عَنْ وَصف مَحَاسن المرأة لرجل إلاّ أن يحتاج إِلى ذَلك لغرض شرعي كنكاحها ونحوه

## பாடம் : 331 - ஒரு பெண்ணின் அழகை மற்றொரு ஆணிடம் வர்ணிப்பது கூடாது. ஆனால், திருமணம் செய்தல் போன்ற மார்க்கம் அனுமதித்த தேவை இருந்தால் கூடும்.

١٧٤٢ – عَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " لاَ تُبَاشِرْ الْمَرْأَةُ الْمَرْأَةَ فَتَصِفُهَا لِزَوْجِهَا كَأَنَّهُ يَنْظُرُ إِلَيْهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1742** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு பெண், மற்றொரு பெண்ணை (நிர்வாணமாக) கட்டியணைக்க வேண்டாம். அவளைப் பற்றித் தன் கணவனிடம் அவளை அவன் நேரில் பார்ப்பது போல, வர்ணனை செய்திட வேண்டாம்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5240)**

## ٣٣٢ – باب كراهة قول الإنسان في الدعاء: اللّهم اغفر لي إن شئت. بل يجزم بالطلب

## பாடம் : 332 - “இறைவா! நீ நாடினால் என்னை மன்னிப்பாயாக!” என்று ஒரு மனிதர் கூறுவது, வெறுக்கத்தக்கதாகும். கேட்பதில் உறுதி இருக்க வேண்டும்.

١٧٤٣ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ : " لاَ يَقُولَن أَحَدُكُمْ : اللّٰهُمَّ اغْفِرْ لِي إِنْ شِئْتَ اللّٰهُمَّ ارْحَمْنِي إِنْ شِئْتَ . لِيَعْزِمْ الْمَسْأَلَةَ فَإِنَّهُ لاَ مُكْرِهَ لَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ : " وَلَكِنْ لِيَعْزِمْ وَلْيُعْظِمْ الرَّغْبَةَ فَإِنَّ اللّٰهَ تَعَالَى لاَ يَتَعَاظَمُهُ شَيْءٌ أَعْطَاهُ "

**1743** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“இறைவா! நீ நாடினால் என்னை மன்னிப்பாயாக! இறைவா நீ நாடினால் எனக்கு அருள் புரிவாயாக!” என்று உங்களில் ஒருவர் கேட்க வேண்டாம். கேட்பதில் உறுதியாக இருக்கட்டும். ஏனெனில், நிச்சயமாக! எவரும் அவனை நிர்பந்தம் செய்ய முடியாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6339. முஸ்லிம்:2679)**

முஸ்லிமின் அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

“எனினும், உறுதியாகக் கேட்கட்டும். ஆசையைப் பெரிதாக்கிக் கொள்ளட்டும்! ஏனெனில், அவனுக்குக் கொடுக்கும் எதுவும் அல்லாஹ்வுக்கு பெரிதல்ல.”

١٧٤٤ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا دَعَا أَحَدُكُمْ فَلْيَعْزِمْ الْمَسْأَلَةَ وَلاَ يَقُولَنَّ : اللَّهُمَّ إِنْ شِئْتَ فَأَعْطِنِي فَإِنَّهُ لاَ مُسْتَكْرِهَ لَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1744** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் பிரார்த்தனை செய்தால், கேட்பதை உறுதியாக கேட்கட்டும். ‘இறைவா! நீ நாடினால் எனக்குக் கொடுப்பாயாக!’ என்று கூற வேண்டாம். நிச்சயமாக! அவனை நிர்பந்தம் செய்பவர் எவருமில்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6338. முஸ்லிம்:2678)**

## ٣٣٣ – باب كراهة قول: ما شاء الله وشاء فلان

## பாடம் : 333 - “அல்லாஹ் நாடியதும், இன்னார் நாடியது நடக்கும்” என்று கூறுவது வெறுக்கத்தக்கது.

١٧٤٥ – عَنْ حُذَيْفَةَ بْنِ الْيَمَانِ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ تَقُولُوا : مَا شَاءَ اللَّهُ وَشَاءَ فُلاَنٌ وَلَكِنْ قُولُوا : مَا شَاءَ اللَّهُ ثُمَّ شَاءَ فُلاَنٌ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ صَحِيحٍ .

**1745** ஹுதைஃபா இப்னுல் யமானீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ் நாடியபடியும், இன்னார் நாடியபடியும் நடக்கும்” என்று கூறாதீர்கள். எனினும், “அல்லாஹ் நாடியபடியும் பின்னர் இன்னார் நாடியபடியும் நடக்கும்” என்று கூறுங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(அபூதாவூது:4980)**

## ٣٣٤ – باب كراهة الحديث بعد العشاء الآخرة

## பாடம் : 334 - இஷாவுக்குப் பின் பேசுவது வெறுக்கத்தக்கது

وَالْمُرَادُ بِهِ الْحَدِيثُ الَّذِي يَكُونُ مُبَاحًا فِي غَيْرِ هَذَا الْوَقْتِ وَفِعْلُهُ وَتَرْكُهُ سَوَاءٌ . فَأَمَّا الْحَدِيثُ الْمُحَرَّمُ أَوِ الْمَكْرُوهُ فِي غَيْرِ هَذَا الْوَقْتِ فَهُوَ فِي هَذَا الْوَقْتِ أَشَدُّ تَحْرِيمًا وَكَرَاهَةً . وَأَمَّا الْحَدِيثُ فِي الْخَيْرِ كَمُذَاكَرَةِ الْعِلْمِ وَحِكَايَاتِ الصَّالِحِينَ . وَمَكَارِمِ الأَخْلاَقِ وَالْحَدِيثِ مَعَ الضَّيْفِ وَمَعَ طَالِبِ حَاجَةٍ وَنَحْوِ ذَلِكَ فَلاَ كَرَاهَةَ فِيهِ بَلْ هُوَ مُسْتَحَبٌّ وَكَذَا الْحَدِيثُ لِعُذْرٍ وَعَارِضٍ لاَ كَرَاهَةَ فِيهِ . وَقَدْ تَظَاهَرَتْ الأَحَادِيثُ الصَّحِيحَةُ عَلَى كُلِّ مَا ذَكَرْتُه .

இஷா நேரம் அல்லாத நேரத்தில் பேச அனுமதிக்கப்பட்டதை மற்ற நேரத்தில் பேசுவது கூடாது என்பதே இதன் கருத்தாகும். இதைப் பேசுவதோ, பேசாதிருப்பதோ சமமாகும்.

இஷா நேரம் அல்லாத சமயம் தடை செய்யப்பட்ட அல்லது வெறுக்கத்தக்க பேச்சைப் பேசுவது என்பது, இந்த நேரத்தில் பேசுவது கடுமையாகத் தடை செய்யப்பட்டதாகவும், வெறுக்கத்தக்கதாகவும் உள்ளது.

பாடம் நடத்துதல், நல்லோர்களின் வரலாற்றை எடுத்துரைத்தல், நற்குணங்களைப் போதித்தல், விருந்தினருடன் பேசுதல், தேவைப்படுவோருடன் பேசுதல் போன்ற நல்லவற்றைப் பேசுவது வெறுக்கத்தக்கதல்ல. அது விரும்பத்தக்கதாகும். இவ்வாறே, சங்கடம் மற்றும் சிரமம் பற்றிப் பேசுவதும், வெறுக்கத்தக்கதல்ல. நான் கூறுகின்ற அனைத்துக்கும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் உள்ளன.

١٧٤٦ – عَنْ أَبِي بَرْزَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ يَكْرَهُ النَّوْمَ قَبْلَ الْعِشَاءِ وَالْحَدِيثَ بَعْدَهَا . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1746** அபூபர்ஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இஷாவுக்கு முன் தூங்குவதையும், அதன்பின் பேசுவதையும் நபி (ஸல்) அவர்கள் வெறுத்தார்கள்.

**(புகாரி:568. முஸ்லிம்:647)**

١٧٤٧ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ صَلَّى الْعِشَاءَ فِي آخِرِ حَيَاتِهِ فَلَمَّا سَلَّمَ قَالَ : " أَرَأَيْتُكُمْ لَيْلَتَكُمْ هَذِهِ ؟ فَإِنَّ عَلَى رَأْسِ مِائَةِ سَنَةٍ لاَ يَبْقَى مِمَّنْ هُوَ عَلَى ظَهْرِ الأَرْضِ الْيَوْمَ أَحَدٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1747** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் தன் வாழ்வின் இறுதியில் (இறுதி நாட்களில் ஒரு நாள்) இஷாவைத் தொழுதார்கள். ஸலாம் கொடுத்ததும், "இன்றைய இந்த இரவு பற்றி உங்களுக்கு நான் கூறுகிறேன். இன்று பூமியில் வசிக்கும் எவரும் (வரும்) நூறாவது வருஷத்தின் ஆரம்பத்தில் (உயிருடன்) இருக்கமாட்டார்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:116. முஸ்லிம்:2537)**

١٧٤٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُمُ انْتَظَرُوا النَّبِيَّ ﷺ فَجَاءَهُمْ قَرِيبًا مِنْ شَطْرِ اللَّيْلِ فَصَلَّى بِهِمْ – يَعْنِي الْعِشَاءَ – ) قَالَ : ثُمَّ خَطَبَنَا فَقَالَ : " أَلاَ إِنَّ النَّاسَ قَدْ صَلَّوْا ثُمَّ رَقَدُوا وَإِنَّكُمْ لَنْ تَزَالُوا فِي صَلاَةٍ مَا انْتَظَرْتُمُ الصَّلاَةَ " رَوَاهُ الْبُخَارِيُّ .

**1748** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபித்தோழர்கள் (இஷாத் தொழுகைக்காக) நபி (ஸல்) அவர்களை எதிர்பார்த்திருந்தார்கள். நடுநிசிக்கு முன் அவர்களிடம் வந்த நபி (ஸல்) அவர்கள், அவர்களுக்கு (இஷாவை) தொழ வைத்தார்கள். பின்பு எங்களிடம் உரையாற்றினார்கள். "அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக! மக்கள் தொழுகிறார்கள். பின்பு தூங்குகிறார்கள். நிச்சயமாக! நீங்கள் தொழுகையை எதிர்பார்த்திருக்கும் நேரத்திலும் கூட தொழுகையில் இருப்பது போலாவீர்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:572)**

## ٣٣٥ – باب تحريم امتناع المرأة من فراش زوجها إذا دعاها ولم يكن لما عذر شرعي

## பாடம் : 335 - மார்க்கத் தடை இல்லாத நிலையில் கணவன், தன் மனைவியை படுக்கைக்கு அழைத்தால் வர மறுப்பது கூடாது.

١٧٤٩ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا دَعَا الرَّجُلُ امْرَأَتَهُ إِلَى فِرَاشِهِ فَأَبَتْ فَبَاتَ غَضْبَانَ عَلَيْهَا لَعَنَتْهَا الْمَلاَئِكَةُ حَتَّى تُصْبِحَ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : " حَتَّى تَرْجِعَ " .

**1749** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தன் மனைவியைப் படுக்கைக்கு அழைக்கிறார். அவள் வர மறுக்கிறாள். அவர் கோபத்துடன் இரவைக் கழிக்கிறார். இதனைக் கண்ட வானவர்கள் அவளை விடியும் வரை சபிக்கின்றார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3237. முஸ்லிம்:1436)**

"அவள் திரும்ப அழைப்பை ஏற்கும் வரை....." என்று மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

## ٣٣٦ - باب تحريم صَوم المرأة وزوجها حاضر إلاّ بإذنه

## பாடம் : 336 - கணவன் வீட்டில் இருக்கும் போது, அவனின் அனுமதியின்றி மனைவி நபில் நோன்பு வைப்பது கூடாது.

١٧٥٠ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَحِلُّ لِلْمَرْأَةِ أَنْ تَصُومَ وَزَوْجُهَا شَاهِدٌ إِلاَّ بِإِذْنِهِ وَلاَ تَأْذَنَ فِي بَيْتِهِ إِلاَّ بِإِذْنِهِ " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1750** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு பெண், தன் கணவன் வீட்டில் இருக்கும்போது அவன் அனுமதியின்றி நோன்பு வைப்பது கூடாது. மேலும் அவன் அனுமதியின்றி அவனது வீட்டில் எவரையும் அனுமதிக்கவும் கூடாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5195. முஸ்லிம்:1026)**

## ٣٣٧ - باب تحريم رَفع المأموم رأسَه من الركوع أو السجود قبل الإمام

## பாடம் : 337 - ருகூஉ, ஸஜ்தா செய்யும்போது இமாமுக்கு முந்தி, பின் நின்று தொழுபவர் தலையை உயர்த்துவது கூடாது.

١٧٥١ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " أَمَا يَخْشَى أَحَدُكُمْ إِذَا رَفَعَ رَأْسَهُ قَبْلَ الإِمَامِ أَنْ يَجْعَلَ اللَّهُ رَأْسَهُ رَأْسَ حِمَارٍ أَوْ يَجْعَلَ اللَّهُ صُورَتَهُ صُورَةَ حِمَارٍ ؟ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1751** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இமாமுக்கு முந்தி தன் தலையை உங்களில் ஒருவர் உயர்த்தினால், (மறுமையில்) அவரின் தலையை கழுதையின் தலை போல அல்லாஹ் ஆக்கிவிடுவதை அல்லது கழுதையின் உருவமாக அவர் உருவத்தை அல்லாஹ் ஆக்கிவிடுவதை, அவர் பயப்பட வேண்டாமா?" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:691. முஸ்லிம்:427)**

## ٣٣٨ - باب كراهة وضع اليد على الخاصرة في الصلاة

## பாடம் : 338 - தொழுகையில் இடுப்பில் கை வைத்து நிற்பது வெறுக்கத்தக்கது.

١٧٥٢ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى عَنِ الْخَصْرِ فِي الصَّلاَةِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1752** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொழுகையில் இடுப்பில் கை வைத்து நிற்க, (நபி(ஸல்) அவர்களால்) தடை செய்யப்பட்டிருந்தது. **(புகாரி:1219. முஸ்லிம்:545)**

## ٣٣٩ - باب كراهة الصّلاة بحضرة الطعام ونفسُه تتوق إليه أو مع مدافعة الأخجثين: وهما البول والغائط

### பாடம் : 339 - உணவு தயாராக இருந்து, பசி உள்ள நிலையிலும் அல்லது மல-ஜலம் கழிக்கும் நிலை இருந்தும், தொழுவது வெறுக்கத்தக்கது.

١٧٥٣ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ . سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " لاَ صَلاَةَ بِحَضْرَةِ طَعَامٍ وَلاَ وَهُوَ يُدَافِعُهُ الأَخْبَثَانِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1753** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உணவு தயாராக இருக்கும் போதும், மல ஜலத்தை அடக்கிக் கொண்டும் தொழுவது கூடாது" என்று நபி (ஸல்) கூற நான் கேட்டேன். **(முஸ்லிம்:560)**.

## ٣٤٠ - باب النّهي عَنْ رَفع الْبَصَر إلى السّمَاء في الصّلاة

### பாடம் : 340 - தொழுகையில் வானத்தை நோக்கி பார்வையை உயர்த்துவது கூடாது.

١٧٥٤ - عَنْ أَنَسِ بْنِ مَالِك رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا بَالُ أَقْوَامٍ يَرْفَعُونَ أَبْصَارَهُمْ إِلَى السَّمَاءِ فِي صَلاَتِهِمْ ؟ " فَاشْتَدَّ قَوْلُهُ فِي ذَلِكَ حَتَّى قَالَ : " لَيَنْتَهُنَّ عَنْ ذَلِكَ أَوْ لَتُخْطَفَنَّ أَبْصَارُهُمْ " رَوَاهُ الْبُخَارِيُّ .

**1754** அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சில மக்களின் நிலை என்ன? தங்களின் தொழுகையில் வானத்தை நோக்கி தங்களின் பார்வையை உயர்த்துகிறார்கள்" என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், "இதை அவர்கள் தவிர்த்துக் கொள்ளட்டும்! அல்லது அவர்களின் பார்வை பறிக்கப்படட்டும்!" என்று கூறியதுதான் கடுமையானதாகும். **(புகாரி:750)**

## ٣٤١ - باب كراهة الالتفات في الصّلاة لغير عذر

### பாடம் : 341 - காரணமின்றி தொழுகையில் திரும்பிப் பார்ப்பது வெறுக்கத்தக்கது.

١٧٥٥ - عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : سَأَلْت رَسُولَ اللَّهِ ﷺ عَنْ الالْتِفَاتِ فِي الصَّلاَةِ فَقَالَ : " هُوَ اخْتِلاَسٌ يَخْتَلِسُهُ الشَّيْطَانُ مِنْ صَلاَةِ الْعَبْدِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1755** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொழுகையில் திரும்பிப் பார்த்தல் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் நான் கேட்டேன். உடனே நபி (ஸல்) அவர்கள், "அது, ஓர் அடியானின் தொழுகையில் இருந்து, ஷைத்தான் அவனைப் பிரிக்கும் செயலாகும்" என்று பதில் கூறினார்கள். **(புகாரி:751)**

١٧٥٦ - عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ لِي رَسُولُ اللَّهِ ﷺ : " إِيَّاكَ وَالالْتِفَاتَ فِي الصَّلاَةِ فَإِنَّ الالْتِفَاتَ فِي الصَّلاَةِ هَلَكَةٌ . فَإِنْ كَانَ لاَ بُدَّ فَفِي التَّطَوُّعِ لاَ فِي الْفَرِيضَةِ " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1756** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தொழுகையில் திரும்பிப் பார்த்தல் விஷயத்தில் உம்மை எச்சரிக்கிறேன். நிச்சயமாக! தொழுகையில் திரும்பிப் பார்த்தல் என்பது, அழிவாகும். அவசியம் என்றிருப்பின், அது நபில் (உபரி) தொழுகையில் மட்டும்தான். கடமையான (பர்லுத்) தொழுகையில் அல்ல” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(திர்மிதீ:589. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

(இதன் அறிவிப்பாளர் வரிசையில் “அலீ இப்னு ஸைத் இப்னு ஜத்ஆன்” என்ற பலவீனர் இடம் பெறுவதால் பலவீனமானதாகும்)

## ٣٤٢ - باب النّهي عَن الصّلاة إلى القبور

## பாடம் : 342 - கப்ருகளை நோக்கித் தொழுவது கூடாது

١٧٥٧ - عَنْ أَبِي مَرْثَد كَنَّازِ بْنِ الْحُصَيْنِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " لاَ تُصَلُّوا إِلَى الْقُبُورِ وَلاَ تَجْلِسُوا عَلَيْهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1757** அபூமர்ஸத் கன்னாஸ் இப்னு ஹுஸைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“கப்ருகளை நோக்கித் தொழாதீர்கள். அதன் மீது உட்காராதீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:972)**

## ٣٤٣ - باب تحريم المُرور بَيْنَ يَدَى المصَلّي

## பாடம் : 343 - தொழுபவரின் முன்னே நடப்பது கூடாது

١٧٥٨ - عَنْ أَبِي الْجُهَيْمِ عَبْدِ اللَّهِ بْنِ الْحَارِث بْنِ الصِّمَّةِ الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَوْ يَعْلَمُ الْمَارُّ بَيْنَ يَدَيْ الْمُصَلِّي مَاذَا عَلَيْهِ لَكَانَ أَنْ يَقِفَ أَرْبَعِينَ خَيْرًا لَهُ مِنْ أَنْ يَمُرَّ بَيْنَ يَدَيْهِ " . قَالَ الرَّاوِي . لاَ أَدْرِي قَالَ : أَرْبَعِينَ يَوْمًا أَوْ أَرْبَعِينَ شَهْرًا أَوْ أَرْبَعِينَ سَنَةً ! مُتَّفَقٌ عَلَيْهِ .

**1758** அபூஜுஹைம் அப்துல்லாஹ் இப்னு ஹாரிஸ் ஸிம்மத்தில் அன்சாரி (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தொழுபவரின் முன்னே நடப்பவர், அதில் (நடப்பதில்) உள்ள தீங்கை அவர் அறிந்தால், அவர் (தொழுபவரின்) முன்னே நடப்பதை விட, நாற்பது காலம் நிற்பது (காத்திருப்பது) அவருக்குச் சிறந்ததாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் ஒருவர் “நாற்பது நாள் அல்லது நாற்பது மாதம் அல்லது நாற்பது வருடம் என்று எதை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அறியமாட்டேன்” என்று கூறுகிறார்.

**(புகாரி:510. முஸ்லிம்:507)**

## ٣٤٤ – باب كرهاة شرُوع المأمُوم في نافلة بعد شروع المؤذّن في إقامة الصلاة سواء كانت النافلة سنّةً تلك الصلاةِ أو غَيْرَهَا

## பாடம் : 344 - பர்ள் தொழுகையின் இகாமத்தை முஅத்தின் ஆரம்பம் செய்த பின்னர் அந்த நேரத்துத் தொழுகையின் சுன்னத் அல்லது வேறு நபிலான தொழுகை எதையும் பிறர் தொழுவது வெறுக்கத்தக்கது.

١٧٥٩ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا أُقِيمَتْ الصَّلاَةُ فَلاَ صَلاَةَ إِلاَّ الْمَكْتُوبَةَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1759** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தொழுகைக்கு இகாமத் கூறப்பட்டுவிட்டால், கடமையான தொழுகையைத் தவிர, வேறு தொழுகை கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:710)**

## ٣٤٥ – باب كراهة تخصيص يَوم الجمعَة بصيام أو ليلته بصلاة من بين الليالي

## பாடம் : 345 - ஜும்ஆ நாளில் மட்டும் நோன்பு வைப்பதோ அல்லது அதன் இரவில் மட்டும் தொழுவதோ வெறுக்கத்தக்கது.

١٧٦٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ تَخُصُّوا لَيْلَةَ الْجُمُعَةِ بِقِيَامٍ مِنْ بَيْنِ اللَّيَالِي وَلاَ تَخُصُّوا يَوْمَ الْجُمُعَةِ بِصِيَامٍ مِنْ بَيْنِ الأَيَّامِ إِلاَّ أَنْ يَكُونَ فِي صَوْمٍ يَصُومُهُ أَحَدُكُمْ " . رَوَاهُ مُسْلِمٌ

**1760** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“(வாரம் முழுதும் உள்ள) இரவுகளில் ஜும்ஆ இரவை மட்டும் வணங்கிடத் தேர்ந்தெடுக்காதீர்கள். மேலும், மற்ற நாட்கள் இருக்க வெள்ளிக்கிழமை மட்டும் நோன்பு வைக்கத் தேர்ந்தெடுக்காதீர்கள். ஆனால், உங்களில் ஒருவர் தொடர்ந்து நோன்பு வைத்திருக்கும் போது அந்த நாள் (ஜும்ஆ நாள்) வந்தால் குற்றமில்லை” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1144/148)**

١٧٦١ – وَعَنْهُ ) أَبُو هُرَيْرَةَ ( قَالَ : سَمِعْت رَسُولَ اللّهِ ﷺ يَقُولُ : " لاَ يَصُومَنَّ أَحَدُكُمْ يَوْمَ الْجُمُعَةِ إِلاَّ يَوْمًا قَبْلَهُ أَوْ بَعْدَهُ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1761** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் ஜும்ஆ நாளில் மட்டும் நோன்பு வைக்க வேண்டாம். ஆனால், அதற்கு முன் அல்லது அதற்கு பின் ஒரு நாள் (நோன்பு வைத்தாலே) தவிர” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1985. முஸ்லிம்:1144/147)**

١٧٦٢ – وَعَنْ مُحَمَّدِ بْنِ عَبَّادٍ قَالَ : سَأَلْت جَابِرًا رَضِيَ اللّهُ عَنْهُ : أَنَهَى النَّبِيُّ ﷺ عَنْ صَوْمِ الْجُمُعَةِ ؟ قَالَ : نَعَمْ . مُتَّفَقٌ عَلَيْه .

**1762** முஹம்மது இப்னு அப்பாத் கூறுகின்றார்கள்:

“வெள்ளிக்கிழமை (ஜும்ஆ நாள்) அன்று நோன்பு வைப்பதை விட்டும் நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்களா?” என ஜாபிர் (ரழி) அவர்களிடம் கேட்டேன். அவர்கள் “ஆம்” என்று கூறினார்கள். **(புகாரி:1984. முஸ்லிம்:1143)**

١٧٦٣ - وَعَنْ أُمِّ الْمُؤْمِنِينَ جُوَيْرِيَّةَ بِنْتِ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ دَخَلَ عَلَيْهَا يَوْمَ الْجُمُعَةِ وَهِيَ صَائِمَةٌ فَقَالَ : " أَصُمْتِ أَمْسِ ؟ " قَالَتْ : لاَ قَالَ : تُرِيدِينَ أَنْ تَصُومِي غَدًا ؟ قَالَتْ : لاَ قَالَ : " أَفْطِرِي " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1763** ஜுவைரிய்யா பின்த் ஹாரிஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஜும்ஆ நாளன்று நான் நோன்பு வைத்துள்ள நிலையில் என்னிடம் நபி (ஸல்) வந்தார்கள். "நேற்று நோன்பு வைத்தாயா?" என்று கேட்டார்கள். "இல்லை" என்றேன். "நாளை நோன்பு வைக்க நினைத்துள்ளாயா?" என்று கேட்டார்கள். "இல்லை" என்றேன். "அப்படியெனில் இன்று (வெள்ளிக்கிழமை) நோன்பை முறித்துவிடு" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1986)**

## ٣٤٦ - باب تحريم الوصَال في الصّوم وهو أن يصوم يومين أوأكثر، ولا يأكل ولا يشرب بينهما

## பாடம் : 346 - இரண்டு நாட்கள் அல்லது அதையும் விட அதிக நாட்கள் எதையும் சாப்பிடாமல், குடிக்காமல் (அதாவது நோன்பை முறிக்காமல்) தொடர் நோன்பு வைப்பது கூடாது

١٧٦٤ - عَنْ أَبِي هُرَيْرَةَ وَعَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ نَهَى عَنِ الْوِصَالِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1764** அபூஹுரைரா (ரழி), அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொடர்ந்து (முறிக்காமல்) நோன்பு வைக்க நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.
**(புகாரி:1964,1965. முஸ்லிம்:1103,1105)**

١٧٦٥ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ عَنِ الْوِصَالِ . قَالُوا : إِنَّكَ تُوَاصِلُ ؟ قَالَ : " إِنِّي لَسْتُ مِثْلَكُمْ إِنِّي أُطْعَمُ وَأُسْقَى " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ الْبُخَارِيِّ .

**1765** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தொடர்ந்து நோன்பு வைக்க நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். அப்போது நபித்தோழர்கள், "நீங்கள் தொடர்ந்து வைக்கிறீர்களே?" என்று கேட்டார்கள். "நான் உங்களைப் போன்றவனல்ல. நான் உணவும், நீரும் (அல்லாஹ்வினால்) வழங்கப்படுகிறேன்" என்று நபி (ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள். **(புகாரி:1962. முஸ்லிம்:1102. இது புகாரியின் வார்த்தையாகும்)**

## ٣٤٧ - باب تحريم الجلوس على قبر

## பாடம் : 347 - மண்ணறை (கப்ரு)களில் உட்காருவது கூடாது

١٧٦٦ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لأَنْ يَجْلِسَ أَحَدُكُمْ عَلَى جَمْرَةٍ فَتَحْرِقَ ثِيَابَهُ فَتَخْلُصَ إِلَى جِلْدِهِ خَيْرٌ لَهُ مِنْ أَنْ يَجْلِسَ عَلَى قَبْرٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1766** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவர் நெருப்புக் கங்கின் மீது உட்கார்ந்து, அவரின் ஆடையை அது எரித்து, அவரின் தோலையும் உரித்து விடுகிறது என்பது, அவர் கப்ரின் மீது உட்காருவதைவிடச் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:971)**

## ٣٤٨ – باب النهي عن تجصيص القبور والبناء عليها

## பாடம் : 348 - கப்ருகளைப் பூசுவதும், அதை கட்டடமாகக் கட்டுவதும் கூடாது.

١٧٦٧ – عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ أَنْ يُجَصَّصَ الْقَبْرُ وَأَنْ يُقْعَدَ عَلَيْهِ وَأَنْ يُبْنَى عَلَيْهِ . رَوَاهُ مُسْلِمٌ.

**1767** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

கப்ரு பூசப்படுவதையும், அதன் மீது உட்காருவதற்கும், அதில் கட்டிடம் கட்டுவதற்கும் நபி (ஸல்) தடை செய்தார்கள். **(முஸ்லிம்:970)**

## ٣٤٩ – باب تغليظ تحريم إباق العبد من سيّده

## பாடம் : 349 - ஓர் அடிமை, தன் எஜமானனை விட்டு ஓடுவது கடும் குற்றம்

١٧٦٨ – عَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَيُّمَا عَبْدٍ أَبَقَ فَقَدْ بَرِئَتْ مِنْهُ الذِّمَّةُ " . رَوَاهُ مُسْلِمٌ

**1768** ஜரீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தன் எஜமானனை விட்டு) ஓடிவிட்ட ஓர் அடிமையிடமிருந்து (அல்லாஹ்வின்) பொறுப்பு நீங்கி விடுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:69)**

١٧٦٩ – وَعَنْهُ ) جَرِيرِ بْنِ عَبْدِ اللَّهِ ( عَنِ النَّبِيِّ ﷺ : " إِذَا أَبَقَ الْعَبْدُ لَمْ تُقْبَلْ لَهُ صَلَاةٌ " . رَوَاهُ مُسْلِمٌ . وَفِي رِوَايَةٍ : " فَقَدْ كَفَرَ ! " .

**1769** ஜரீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஓர் அடிமை ஓடிவிட்டால், அவரின் தொழுகை ஏற்கப்பட மாட்டாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:70)**

மற்றொரு அறிவிப்பில், "அவர் நிராகரிப்பவராகிவிட்டார்" என்று உள்ளது.

## ٣٥٠ – باب تحريم الشفاعة في الحدود

## பாடம் : 350 - குற்றத்தண்டனைகளில் பரிந்துரை கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : الزَّانِيَةُ وَالزَّانِي فَاجْلِدُوا كُلَّ وَاحِدٍ مِنْهُمَا مِائَةَ جَلْدَةٍ وَلَا تَأْخُذْكُمْ بِهِمَا رَأْفَةٌ فِي دِينِ اللَّهِ إِنْ كُنْتُمْ تُؤْمِنُونَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *விபச்சாரி, விபச்சாரகர்கள் இந்த இருவரில் ஒவ்வொருவருக்கும் நூறு கசையடி கொடுங்கள். அல்லாஹ்வையும், இறுதிநாளையும் நீங்கள் நம்பிக்கை கொள்வதாக இருந்தால், அல்லாஹ்வின் மார்க்கத்தில் (தண்டனை தருவதில்) அந்த இருவருக்காகவும் இரக்க உணர்வு உங்களிடம் ஏற்பட்டு விட வேண்டாம். (24:2)*

١٧٧٠ - وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ قُرَيْشًا أَهَمَّهُمْ شَأْنُ الْمَرْأَةِ الْمَخْزُومِيَّةِ الَّتِي سَرَقَتْ فَقَالُوا : مَنْ يُكَلِّمُ فِيهَا رَسُولَ اللَّهِ ﷺ ؟ فَقَالُوا : وَمَنْ يَجْتَرِئُ عَلَيْهِ إِلاَّ أُسَامَةُ بْنُ زَيْدٍ حِبُّ رَسُولِ اللَّهِ ﷺ ؟ فَكَلَّمَهُ أُسَامَةُ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَتَشْفَعُ فِي حَدٍّ مِنْ حُدُودِ اللَّهِ تَعَالَى ؟ " ثُمَّ قَامَ فَاخْتَطَبَ ثُمَّ قَالَ : " إِنَّمَا أَهْلَكَ الَّذِينَ قَبْلَكُمْ أَنَّهُمْ كَانُوا إِذَا سَرَقَ فِيهِمُ الشَّرِيفُ تَرَكُوهُ وَإِذَا سَرَقَ فِيهِمُ الضَّعِيفُ أَقَامُوا عَلَيْهِ الْحَدَّ . وَايْمُ اللَّهِ لَوْ أَنَّ فَاطِمَةَ بِنْتَ مُحَمَّدٍ ﷺ سَرَقَتْ لَقَطَعْتُ يَدَهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ : فَتَلَوَّنَ وَجْهُ رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ : " أَتَشْفَعُ فِي حَدٍّ مِنْ حُدُودِ اللَّهِ ! ؟ " . فَقَالَ أُسَامَةُ : اسْتَغْفِرْ لِي يَا رَسُولَ اللَّهِ . قَالَ : ثُمَّ أَمَرَ بِتِلْكَ الْمَرْأَةِ فَقُطِعَتْ يَدُهَا .

**1770** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

திருடிவிட்ட மக்ஸூமிய்யா குடும்பத்துப் பெண்ணொருத்தியின் விஷயம் குறைஷிகளுக்குக் கவலையை ஏற்படுத்தியது. "இது விஷயமாக நபி (ஸல்) அவர்களிடம் பேசுவது யார்?" என்று கேட்டார்கள். "நபி (ஸல்) அவர்களின் நேசரான உஸாமா இப்னு ஸைத் (ரழி) அவர்களைத் தவிர அவர்களிடம் எவர் துணிவர்?" என்று பேசிக் கொண்டனர். (அந்தப் பெண் விஷயமாக) நபி (ஸல்) அவர்களிடம் உஸாமா பேசினார். உடனே நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வின் குற்றவியல் தண்டனைகளில் ஒரு தண்டனையில் நீர் பரிந்துரை செய்கிறீரா?" என்று கேட்டு விட்டு, பின்னர் எழுந்து உரை நிகழ்த்தினார்கள்: "உங்களுக்கு முன் இருந்தோர் அழிந்ததன் காரணம், அவர்களில் செல்வாக்கு உள்ள ஒருவர் திருடிவிட்டால், அவரை அவர்கள் (தண்டிக்காமல்) விட்டு விடுவார்கள். அவர்களில் ஒரு (ஏழை) பலவீனர் திருடிவிட்டால், அவரிடம் தண்டனையை நிறைவேற்றுவார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹம்மதின் மகள் பாத்திமா திருடிவிட்டாலும் அவளின் கையை நான் துண்டிப்பேன்" என்று கூறினார்கள். **(புகாரி:6788. முஸ்லிம்:1688)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

அப்போது நபி (ஸல்) அவர்களின் முகம் மாறியது. "அல்லாஹ்வின் தண்டனைகளில் ஒரு தண்டனைச் செயலில் நீர் பரிந்துரை செய்கிறீரா?" என கேட்டார்கள். அப்போது உஸாமா அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! எனக்காக அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேளுங்கள்" என்று கூறினார். பின்னர் நபி (ஸல்) அவர்கள், அந்தப் பெண்ணின் கையை வெட்ட கட்டளையிட்டார்கள். அவளின் கை துண்டிக்கப்பட்டது.

## ٣٥١ - باب النّهي عن التغوّط في طريق الناس وظلّهم وموارد الماء ونحوها

## பாடம் : 351 - மக்கள் நடக்கும் பாதை, அவர்கள் ஓய்வு எடுக்க நிழல் தரும் மரம், தண்ணீர் ஓடும் வாய்க்கால் போன்ற பகுதிகளில் மல - ஜலம் கழித்தல் கூடாது.

قَالَ اللَّهُ تَعَالَى : وَالَّذِينَ يُؤْذُونَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِ مَا اكْتَسَبُوا فَقَدِ احْتَمَلُوا بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا .

**அல்லாஹ் கூறுகிறான்:** *அவர்கள் செய்யாத ஒன்றிற்காக இறைநம்பிக்கை கொண்ட ஆண்களையும், இறைநம்பிக்கை கொண்ட பெண்களையும் நோவினை செய்யும் அவர்கள், இட்டுக் கட்டுதலையும், தெளிவான பாவத்தையும் செய்தவர்களாவர். (33:58)*

١٧٧١ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " اتَّقُوا اللاَّعِنَيْنِ " . قَالُوا : وَمَا اللاَّعِنَانِ ؟ قَالَ : " الَّذِي يَتَخَلَّى فِي طَرِيقِ النَّاسِ أَوْ فِي ظِلِّهِمْ " . رَوَاهُ مُسْلِمٌ

**1771** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சாபத்தைத் தரும் இரண்டு காரியங்களைப் பயப்படுங்கள்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “சாபத்தை ஏற்படுத்தும் அந்த இரண்டு காரியங்கள் எது?” என்று மக்கள் கேட்டனர். “மக்கள் நடக்கும் பாதையில் மல - ஜலம் கழித்தல் மற்றும் மக்களுக்கு நிழல் தரும் மரங்களின் கீழ் மல - ஜலம் கழித்தல்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:269)**

## ٣٥٢ – باب النهي عَن الْبَول ونحوه في الماء الراكد

### பாடம் : 352 - தேங்கிக் கிடக்கும் தண்ணீரில் சிறுநீர் கழித்தல் கூடாது

١٧٧٢ – عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ : أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ نَهَى أَنْ يُبَالَ فِي الْمَاءِ الرَّاكِدِ . رَوَاهُ مُسْلِمٌ .

**1772** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

தேங்கிக் கிடக்கும் தண்ணீரில் (குளத்தில்) சிறுநீர் கழிக்கப்படுவதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். **(முஸ்லிம்:281)**

## ٣٥٣ – بابُ كَراهة تفضيل الوَالد بَعض أولاده على بعض في الهبَة

### பாடம் : 353 - தன் குழந்தைகளுக்கு அன்பளிப்பு வழங்குவதில் சிலரைவிட சிலரை முக்கியமாக்குவது வெறுக்கத்தக்கது

١٧٧٣ – عَنْ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ أَبَاهُ أَتَى بِهِ رَسُولَ اللَّهِ ﷺ فَقَالَ : إِنِّي نَحَلْتُ ابْنِي هَذَا غُلَامًا كَانَ لِي فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَكُلَّ وَلَدِكَ نَحَلْتَهُ مِثْلَ هَذَا ؟ " فَقَالَ : لاَ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : فَارْجِعْهُ . وَفِي رِوَايَةٍ : فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : أَفَعَلْتَ هَذَا بِوَلَدِكَ كُلِّهِمْ ؟ قَالَ : لاَ . قَالَ : " اتَّقُوا اللَّهَ وَاعْدِلُوا فِي أَوْلاَدِكُمْ " . فَرَجَعَ أَبِي فَرَدَّ تِلْكَ الصَّدَقَةَ . وَفِي رِوَايَةٍ : فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَا بَشِيرُ أَلَكَ وَلَدٌ سِوَى هَذَا ؟ " فَقَالَ : نَعَمْ . قَالَ : " أَكُلَّهُمْ وَهَبْتَ لَهُ مِثْلَ هَذَا ؟ " قَالَ : لاَ . قَالَ : " فَلاَ تُشْهِدْنِي إِذًا فَإِنِّي لاَ أَشْهَدُ عَلَى جَوْرٍ " . وَفِي رِوَايَةٍ : " لاَ تُشْهِدْنِي عَلَى جَوْرٍ " . وَفِي رِوَايَةٍ : " أَشْهِدْ عَلَى هَذَا غَيْرِي " ثُمَّ قَالَ : " أَيَسُرُّكَ أَنْ يَكُونُوا إِلَيْكَ فِي الْبِرِّ سَوَاءً ؟ " قَالَ : بَلَى. قَالَ : " فَلاَ إِذًا " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1773** நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

என் தந்தை என்னை நபி (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்றார். “என்னிடம் இருந்த அடிமையை இந்த மகனுக்கு அன்பளிப்பாக கொடுத்து விட்டேன்” என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள், “இதே போல் உம் மகன்கள் அனைவருக்கும் அன்பளிப்புச் செய்தீரா?” என்று கேட்டார்கள். அதற்கு, “இல்லை” என என் தந்தை கூறினார். “உம் அன்பளிப்பை திரும்பப் பெற்றுக் கொள்வீராக!” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

“உம் குழந்தைகள் அனைவருக்கும் இதேபோல் செய்துள்ளீரா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “இல்லை” என்று கூறினார். “அல்லாஹ்வை பயப்படுங்கள். உங்கள் குழந்தைகள் விஷயத்தில் நீதமாக இருங்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். என் தந்தை அந்த அன்பளிப்பைத் திரும்பப் பெற்றுக் கொண்டார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

“பஷீரே! இவர் அல்லாத வேறு குழந்தைகள் உமக்கு உண்டா?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். “ஆம்” என (என் தந்தை) கூறினார். அதற்கு, “அவர்கள் அனைவருக்கும் இதே போல் அன்பளிப்புச் செய்தீரா?” என்று நபி (ஸல்) கேட்டார்கள். “இல்லை” என்றார் என் தந்தை. அதற்கு, “இதில் என்னை நீர் சாட்சியாக்காதீர். நிச்சயமாக! நான் வரம்பு மீறுதலில் சாட்சியாக இருக்க மாட்டேன்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

“அநீதத்திற்கு என்னை நீர் சாட்சியாக்க வேண்டாம்”

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

“என்னைத் தவிர வேறு யாரையாவது இதில் சாட்சியாக்குவீராக!” என்று கூறிய பின்னர், “உம்மிடம் நல்லவிதமாக நடப்பதில் உமது பிள்ளைகள் சமமாக இருப்பது உமக்கு திருப்தி அளிக்கிறதா?” என்று கேட்டார்கள். “ஆம்” என்றார் என் தந்தை. “அப்படியானால் இந்த மாதிரி ஒருவருக்கு மட்டும் அன்பளிப்புத் தர வேண்டாம்” என்று கூறினார்கள்.

**(புகாரி:2586,2587,2650. முஸ்லிம்:1623)**

## ٣٥٤ – باب تحريم إحداد المرأة على ميت فوق ثلاثة أيام إلا عَلَى زوجها أربعة أشهر وعشرة أيام

## பாடம் : 354 - ஒரு பெண், இறந்த ஒருவருக்காக மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைபிடிப்பது கூடாது. ஆனால் (இறந்த) தன் கணவனுக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் துக்கம் கடைபிடிக்க வேண்டும்.

١٧٧٤ – عَنْ زَيْنَبَ بِنْتِ أَبِي سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَتْ : دَخَلْتُ عَلَى أُمِّ حَبِيبَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا زَوْجِ النَّبِيِّ ﷺ حِينَ تُوُفِّيَ أَبُوهَا أَبُو سُفْيَانَ بْنُ حَرْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ فَدَعَتْ بِطِيبٍ فِيهِ صُفْرَةُ خَلُوقٍ أَوْ غَيْرِهِ فَدَهَنَتْ مِنْهُ جَارِيَةً ثُمَّ مَسَّتْ بِعَارِضَيْهَا ثُمَّ قَالَتْ : وَاللَّهِ مَا لِي بِالطِّيبِ مِنْ حَاجَةٍ غَيْرَ أَنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ عَلَى الْمِنْبَرِ : " لاَ يَحِلُّ لاِمْرَأَةٍ تُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الأخِرِ أَنْ تُحِدَّ عَلَى مَيِّتٍ فَوْقَ ثَلاَثِ لَيَالٍ إِلاَّ عَلَى زَوْجٍ أَرْبَعَةَ أَشْهُرٍ وَعَشْرًا " قَالَتْ زَيْنَبُ : ثُمَّ دَخَلْتُ عَلَى زَيْنَبَ بِنْتِ جَحْشٍ رَضِيَ اللَّهُ عَنْهَا حِينَ تُوُفِّيَ أَخُوهَا فَدَعَتْ بِطِيبٍ فَمَسَّتْ مِنْهُ ثُمَّ قَالَتْ : أَمَا وَاللَّهِ مَا لِي بِالطِّيبِ مِنْ حَاجَةٍ غَيْرَ أَنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ عَلَى الْمِنْبَرِ : " لاَ يَحِلُّ لاِمْرَأَةٍ تُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الأخِرِ أَنْ تُحِدَّ عَلَى مَيِّتٍ فَوْقَ ثَلاَثٍ إِلاَّ عَلَى زَوْجٍ أَرْبَعَةَ أَشْهُرٍ وَعَشْرًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1774** ஜைனப் பின்த் அபீ ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் மனைவி உம்மு ஹபீபா (ரழி) அவர்களிடம் சென்றேன். அவர்களின் தந்தை அபூசுஃப்யான் இப்னு ஹர்பு (ரழி) இறந்திருந்த காலம் அது. மஞ்சள் நிறத்திலான அல்லது அது அல்லாத ஒரு நறுமணப் பொருளை அவர்கள் வரவழைத்தார்கள். (தன் அருகே இருந்த) சிறுமிக்கு அதைத் தேய்த்தார்கள். பின்பு தன் கன்னங்களில் தடவினார்கள். பின்னர், ‘அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்த நறுமணத்தை பூசும் தேவை எனக்கில்லை. எனினும், மிம்பரில் நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பியுள்ள ஒரு பெண், மூன்று இரவுகளுக்கு மேல்

இறந்தவருக்காகத் துக்கம் கடைபிடிப்பது கூடாது. எனினும் தன் கணவன் இறந்ததற்காக நான்கு மாதம் பத்து நாட்கள் வரை துக்கம் கடைபிடிக்கலாம்' என்று கூறக் கேட்டேன். அதனால்தான் இதை பூசினேன்'' என்று கூறினார்கள்.

பின்பு, நான் ஜஹ்ஷ் அவர்களின் மகள் ஜைனப் (ரழி) அவர்களிடம் சென்றேன். அவர்களின் சகோதரர் இறந்திருந்த சமயம் அது. அப்போது நறுமணப் பொருளை அவர்கள் கொண்டு வரச்செய்து, அதைப் பூசிக் கொண்டார்கள். பின்னர், ''அறிந்து கொள்க! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இந்த நறுமணத்தின் மீது எந்த தேவையும் எனக்கில்லை. எனினும் நபி (ஸல்) அவர்கள் மிம்பரில் இருந்தவாறு, ''அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்பியுள்ள ஒரு பெண், மூன்று நாட்களுக்கு மேலாக இறந்த ஒருவருக்காகத் துக்கம் கடைபிடிக்க அவளுக்கு அனுமதி இல்லை. எனினும், இறந்த தன் கணவனுக்காக நான்கு மாதம் பத்து நாட்கள் துக்கம் கடைபிடிப்பாள்' என்று கூறக் கேட்டேன்'' என்று கூறினார்கள். **(புகாரி:5334,5335. முஸ்லிம்:1486,1487)**

## ٣٥٥ - باب تحريم بَيع الحاضِر للبَادي وتلقي الرّكبان والبيع على بيع أخيه والخِطبة على خِطبته إلا أن يأذن أو يرد

## பாடம் : 355 - ஒரு நகரவாசி, கிராமவாசியிடம் இடைமறித்து வியாபாரம் செய்வது கூடாது. மேலும் தன் சகோதரன் பேசிய வியாபாரத்தில் தான் வியாபாரம் பேசுவதும், அவர் பேசிய பெண்ணை தான் புகுந்து பெண் பேசுவதும் கூடாது. ஆனால் அவன் அனுமதி தந்தால் அல்லது அதை விட்டு விட்டால் குற்றமில்லை.

١٧٧٥ - عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ أَنْ يَبِيعَ حَاضِرٌ لِبَادٍ وَإِنْ كَانَ أَخَاهُ لأَبِيهِ وَأُمِّهِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1775** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

சொந்த (உடன்பிறந்த) சகோதரராக இருந்தாலும் கிராமவாசியிடம், நகரவாசி (இடைத்தரகராக இருந்து) வியாபாரம் செய்வதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். **(புகாரி:2161. முஸ்லிம்:1523)**

١٧٧٦ - . وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَتَلَقَّوْا السِّلَعَ حَتَّى يُهْبَطَ بِهَا إِلَى الأَسْوَاقِ " : مُتَّفَقٌ عَلَيْهِ .

**1776** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''வியாபாரச் சரக்குகளைக் கடை (வீதி)களுக்கு கொண்டு வரும் முன், அதை இடைமறித்து வழியிலேயே வாங்காதீர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2165. முஸ்லிம்:1518)**

١٧٧٧ - وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ . " لاَ تَتَلَقَّوْا الرُّكْبَانَ وَلاَ يَبِعْ حَاضِرٌ لِبَادٍ " . فَقَالَ لَهُ طَاوُوسٌ : مَا لاَ يَبِعْ حَاضِرٌ لِبَادٍ ؟ قَالَ : " لاَ يَكُونُ لَهُ سِمْسَارًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1777** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''சரக்குகளைக் கொண்டு வரும் வாகனக்காரர்களை இடைமறிக்காதீர்கள். (வழியிலேயே சந்தித்து சரக்குகளை விலைக்கு வாங்காதீர்கள்). நகரவாசி, கிராமவாசியிடம் வியாபாரம் செய்ய வேண்டாம்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

“கிராமவாசியிடம் நகரவாசி வியாபாரம் செய்ய வேண்டாம் என்று நபி (ஸல்) கூறியதன் கருத்து என்ன?” என இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களிடம் தாவூஸ் கேட்டார்கள். அதற்கு, “நகரவாசி, கிராமவாசிக்காக இடைத்தரகராக இருக்க வேண்டாம் என்பதே இதன் பொருள்” என்று இப்னு அப்பாஸ் (ரழி) பதில் கூறினார்கள். **(புகாரி:2158. முஸ்லிம்:1521)**

١٧٧٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ أَنْ يَبِيعَ حَاضِرٌ لِبَادٍ " وَلاَ تَنَاجَشُوا وَلاَ يَبِعْ الرَّجُلُ عَلَى بَيْعِ أَخِيهِ وَلاَ يَخْطُبْ عَلَى خِطْبَةِ أَخِيهِ وَلاَ تَسْأَلْ الْمَرْأَةُ طَلاَقَ أُخْتِهَا لِتَكْفَأَ مَا فِي إِنَائِهَا " . وَفِي رِوَايَةٍ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ عَنْ التَّلَقِّي وَأَنْ يَبْتَاعَ الْمُهَاجِرُ لِلْأَعْرَابِيِّ وَأَنْ تَشْتَرِطَ الْمَرْأَةُ طَلاَقَ أُخْتِهَا وَأَنْ يَسْتَامَ الرَّجُلُ عَلَى سَوْمِ أَخِيهِ وَنَهَى عَنْ النَّجْشِ وَالتَّصْرِيَةِ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1778** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நகரவாசி, கிராமவாசியிடம் (இடைத்தரகராக) வியாபாரம் செய்ய வேண்டாம்” என நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்கள். “(வாங்கும் நோக்கமின்றி) விலையை ஏற்றி விடாதீர்கள். ஒருவர், தன் சகோதரன் பேசிய வியாபாரத்தில் தலையிட்டு (தம்முடைய பொருட்களை) வியாபாரம் செய்ய வேண்டாம். தன் சகோதரன் பேசிய பெண்ணை தான் பெண் பேச வேண்டாம். ஒரு பெண் தன் சகோதரியின் பாத்திரத்தில் உள்ளதை புரட்டுவதற்காக (அதாவது அவளின் கணவனைத் திருமணம் செய்வதற்காக) அவளின் விவாகரத்தைக் கேட்க வேண்டாம்” என்றும் நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

இடை மறித்து சரக்கு வாங்குவதையும், கிராமவாசிக்காக நகரவாசி (இடைத்தரகராக) வியாபாரம் செய்வதையும், ஒரு பெண் தன் சகோதரியின் விவாகரத்தை (தான் திருமணம் செய்து கொள்ள) நிபந்தனை போடுவதையும், தம் சகோதரர் விலை பேசிக் கொண்டிருப்பதின் மீது (விழுந்து) விலை பேசுவதையும் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். மேலும் போட்டி மூலம் விலையை ஏற்றி விடுவதையும், ஆட்டு மடுவை (கனமாகக் காண்பிக்க பால் கறக்காமல்) கனமாக்கி வைப்பதையும் தடுத்தார்கள். **(புகாரி:2140. முஸ்லிம்:1515)**

١٧٧٩ – وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يَبِعْ بَعْضُكُمْ عَلَى بَيْعِ بَعْضٍ وَلاَ يَخْطُبْ عَلَى خِطْبَةِ أَخِيهِ إِلاَّ أَنْ يَأْذَنَ لَهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ وَهَذَا لَفْظُ مُسْلِمٍ .

**1779** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“உங்களில் சிலர், மற்றவரின் வியாபாரத்தில் தலையிட்டு வியாபாரம் செய்ய வேண்டாம். தன் சகோதரன் பேசிய பெண்ணின் மீது தலையிட்டு பெண் பேச வேண்டாம். ஆனால் அவருக்கு அனுமதி அளித்தாலே தவிர” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2139. முஸ்லிம்:1412)**

١٧٨٠ – وَعَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ . " الْمُؤْمِنُ أَخُو الْمُؤْمِنِ فَلاَ يَحِلُّ لِمُؤْمِنٍ أَنْ يَبْتَاعَ عَلَى بَيْعِ أَخِيهِ وَلاَ يَخْطُبَ عَلَى خِطْبَةِ أَخِيهِ حَتَّى يَذَرَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1780** உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒரு முஃமின், மற்றொரு முஃமினுக்கு சகோதரர் ஆவார். ஒரு முஃமினுக்கு, தன் சகோதரனின் வியாபாரத்தில் தலையிட்டு வியாபாரம் செய்திடவோ, தன் சகோதரன் பேசிய பெண்ணை தலையிட்டு பெண் பேசிடவோ அந்த சகோதரன் விட்டுத் தரும் வரை கூடாது” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:1414)**

## ٣٥٦ – باب النّهي عن إضاعة المال في غير جوهه التي أذن الشرع فيها

## பாடம் : 356 - மார்க்கம் அனுமதிக்காதவற்றில் செல்வத்தை செலவழிப்பது கூடாது.

١٧٨١ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ " إِنَّ اللَّهَ تَعَالَى يَرْضَى لَكُمْ ثَلاَثًا وَيَكْرَهُ لَكُمْ ثَلاَثًا : فَيَرْضَى لَكُمْ أَنْ تَعْبُدُوهُ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَأَنْ تَعْتَصِمُوا بِحَبْلِ اللَّهِ جَمِيعًا وَلاَ تَفَرَّقُوا وَيَكْرَهُ لَكُمْ قِيلَ وَقَالَ وَكَثْرَةَ السُّؤَالِ وَإِضَاعَةَ الْمَالِ " رَوَاهُ مُسْلِمٌ وَتَقَدَّمَ شَرْحُهُ .

**1781** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக அல்லாஹ் மூன்று காரியங்களை உங்களிடம் விரும்புகிறான். மூன்று காரியங்களை உங்களிடம் வெறுக்கிறான். அவனை நீங்கள் வணங்குவதையும், எதையும் அவனுக்கு நீங்கள் இணை வைக்காமல் இருப்பதையும், அல்லாஹ்வின் கயிற்றை நீங்கள் அனைவரும் சேர்ந்து பற்றிக் கொண்டு, நீங்கள் பிரிந்து விடாமல் இருப்பதையும் உங்களிடம் விரும்புகிறான். இவரால் கூறப்பட்டது, இவர் கூறினார் என்பதையும், அதிகக் கேள்விகள் கேட்பதையும், செல்வத்தை வீணாக்குவதையும் உங்களிடம் வெறுக்கிறான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:1715)**

١٧٨٢ – وَعَنْ وَرَّادٍ كَاتِبِ الْمُغِيرَةِ قَالَ : أَمْلَى عَلَيَّ الْمُغِيرَةُ بْنُ شُعْبَةَ فِي كِتَابٍ إِلَى مُعَاوِيَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَقُولُ فِي دُبُرِ كُلِّ صَلاَةٍ مَكْتُوبَةٍ . " لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ . اللَّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ " . وَكَتَبَ إِلَيْهِ أَنَّهُ كَانَ يَنْهَى عَنْ قِيلَ وَقَالَ وَإِضَاعَةِ الْمَالِ وَكَثْرَةِ السُّؤَالِ ; وَكَانَ يَنْهَى عَنْ عُقُوقِ الأُمَّهَاتِ وَوَأْدِ الْبَنَاتِ وَمَنْعٍ وَهَاتِ . مُتَّفَقٌ عَلَيْهِ . وَسَبَقَ شَرْحُهُ

**1782** முகீரா (ரழி) அவர்களின் எழுத்தாளர் வர்ராது கூறுகின்றார்கள்:

கடமையான தொழுகைக்குப் பின் நபி (ஸல்) அவர்கள், “லாஇலாஹ இல்லல்லாஹ் வஹ்தஹூ லாஷரீக லஹூ,லஹூல் முல்கு வலஹூல் ஹம்து, வஹூவ அலாகுல்லி ஷையின் கதீர். அல்லாஹூம்ம லாமானிஅ லிமா அஹ்தய்த வலா முஹ்திய லிமாமனஹ்த வலாயன்ஃபஉஃதல் ஜத்தி மின்கல் ஜத்து” என்று கூறுவார்கள் என முகீரா (ரழி) அவர்கள், முஆவியா (ரழி) அவர்களுக்கு என்னிடம் எழுதச் சொன்ன கடிதத்தில் இருந்தது.

மேலும், “அவரால் கூறப்பட்டது, இவர் கூறினார் என்று கூறுவதை விட்டும்; செல்வத்தை வீணாக்குவது, அதிகமாகக் கேள்வி கேட்பது ஆகியவற்றை விட்டும் நபி (ஸல்) தடை செய்தார்கள். மேலும் தாய்மார்களை நோவினை செய்தல், பெண் குழந்தைகளை உயிருடன் புதைத்தல், அடுத்தவரின் பொருளை அபகரித்தல் ஆகியவற்றை விட்டும் நபி (ஸல்) அவர்கள் தடுப்பவர்களாக இருந்தார்கள்” என்றும் அந்த கடிதத்தில் எழுதி இருந்தார்கள். **(புகாரி:6473. முஸ்லிம்:593)**

**துஆவின் பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் இல்லை. அவனுக்கே ஆட்சி அதிகாரம் உண்டு. அவனுக்கே புகழ் அனைத்தும். அவன் அனைத்தின் மீதும் சக்தி பெற்றவன். இறைவா! நீ கொடுப்பதை தடுப்பவர் எவரும் இல்லை. நீ தர மறுத்ததைக் கொடுப்பவர் எவரும் இல்லை. எந்தவொரு பாக்கியசாலியின் பாக்கியமும் உன் நாட்டமின்றி அவருக்கு எந்த பயனையும் தராது.**

## ٣٥٧ - باب النّهي عن الإشارة إلى مُسلم بسلاح ونحوه سواء كَان جَادًّا أَو مَازِحًا، والنهي عن تعاطي السيف مسلولاً

## பாடம் : 357 - வேண்டுமென்றோ அல்லது விளையாட்டாகவோ ஆயுதம் போன்றவற்றால் ஒரு முஸ்லிமை நோக்கி மிரட்டுவது கூடாது. (உறையை விட்டு) உருவிய வாளைக் கையில் வைத்திருப்பதும் கூடாது.

١٧٨٣ - عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " لاَ يُشِرْ أَحَدُكُمْ إِلَى أَخِيهِ بِالسِّلاَحِ فَإِنَّهُ لاَ يَدْرِي لَعَلَّ الشَّيْطَانَ يَنْزِعُ فِي يَدِهِ فَيَقَعَ فِي حُفْرَةٍ مِنْ النَّارِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ قَالَ : قَالَ أَبُو الْقَاسِمِ ﷺ : " مَنْ أَشَارَ إِلَى أَخِيهِ بِحَدِيدَةٍ فَإِنَّ الْمَلاَئِكَةَ تَلْعَنُهُ حَتَّى وَإِنْ كَانَ أَخَاهُ لأَبِيهِ وَأُمِّهِ " . قَوْلُهُ ﷺ : " يَنْزِعُ " ضُبِطَ بِالْعَيْنِ الْمُهْمَلَةِ مَعَ كَسْرِ الزَّايِ وَبِالْغَيْنِ الْمُعْجَمَةِ مَعَ فَتْحِهَا وَمَعْنَاهُمَا مُتَقَارِبٌ وَمَعْنَاهُ بِالْمُهْمَلَةِ يَرْمِي وَبِالْمُعْجَمَةِ أَيْضًا يَرْمِي وَيُفْسِدُ . وَأَصْلُ النَّزْغِ : الطَّعْنُ وَالْفَسَادُ .

**1783** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் தன் சகோதரரை ஆயுதத்தின் மூலம் (மிரட்டிக்) காட்ட வேண்டாம். ஏன் எனில், ஷைத்தான் அவரின் கையை விட்டு நழுவி (அந்த சகோதரரை வெட்டி) விடக் கூடும். இதனால் நரகின் படுகுழியில் அவர் விழ நேரிடும் என்பதை அவர் அறிய மாட்டார்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:7072. முஸ்லிம்:2617)**

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது.

"ஒருவர் தன் சகோதரரை இரும்புத் தடியால் (மிரட்டிட) காட்டினால், நிச்சயமாக வானவர்கள், அதை அவர் கீழே போடும் வரை அவரைச் சாபமிடுவர். அந்த சகோதரர் தன் சொந்த (உடன் பிறந்த) சகோதரராக இருந்தாலும் சரியே!" என்று அபுல் காஸிம் (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள்.

١٧٨٤ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : نَهَى رَسُولُ اللَّهِ ﷺ أَنْ يُتَعَاطَى السَّيْفُ مَسْلُولاً . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ .

**1784** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உருவிய வாளைப் பயன்படுத்துவதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

**(அபூதாவூது:2588. திர்மிதீ:2163. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

## ٣٥٨ - باب كراهة الخروج من المسجد بَعد الأذان إلا بعذر حتى يصلّي المكتوبة

## பாடம் : 358 - நிர்பந்தம் எதுவும் இருந்தாலே தவிர, கடமையான தொழுகையை நிறைவேற்றும் வரை பாங்கு கூறிய பின் பள்ளிவாசலை விட்டும் வெளியே செல்வது வெறுக்கத்தக்கது.

١٧٨٥ - عَنْ أَبِي الشَّعْثَاءِ قَالَ : كُنَّا قُعُودًا مَعَ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي الْمَسْجِدِ فَأَذَّنَ الْمُؤَذِّنُ فَقَامَ رَجُلٌ مِنَ الْمَسْجِدِ يَمْشِي فَأَتْبَعَهُ أَبُو هُرَيْرَةَ بَصَرَهُ حَتَّى خَرَجَ مِنَ الْمَسْجِدِ فَقَالَ أَبُو هُرَيْرَةَ : أَمَّا هَذَا فَقَدْ عَصَى أَبَا الْقَاسِمِ ﷺ . رَوَاهُ مُسْلِمٌ.

**1785** அபுஸ் ஷஃஸாஃ அறிவிக்கின்றார்கள்:

அபூஹுரைரா (ரழி) அவர்களுடன் பள்ளிவாசலில் உட்கார்ந்திருந்தோம். அப்போது பாங்கு கூறுபவர் பாங்கு கூறினார். உடனே ஒருவர் எழுந்து பள்ளிவாசலை விட்டு (வெளியே) நடக்க ஆரம்பித்தார். அவர் பள்ளிவாசலை விட்டும் வெளியேறும் வரை தன் பார்வையை அவரிடம் செலுத்திய அபூஹுரைரா (ரழி) அவர்கள், "இந்த மனிதர், நம் அபுல்காஸிம் (ஸல்)அவர்களுக்கு மாறு செய்து விட்டார்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:655)**

## ٣٥٩ – باب كراهة ردّ الريحان لغير عُذر

## பாடம் : 359 - காரணமின்றி நறுமணப் பூக்களை மறுப்பது வெறுக்கத்தக்கது

١٧٨٦ – عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " مَنْ عُرِضَ عَلَيْهِ رَيْحَانٌ فَلاَ يَرُدَّهُ فَإِنَّهُ خَفِيفُ الْمَحْمِلِ طَيِّبُ الرِّيحِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1786** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவரிடம் நறுமணப் பூக்கள் கொடுக்கப்பட்டால், அவர் அதை மறுக்க வேண்டாம். ஏனெனில், நிச்சயமாக! அது சுமப்பதற்கு இலகுவாகவும், நல்ல மணமுள்ளதாகவும் இருக்கிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2253)**

١٧٨٧ – وَعَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ لاَ يَرُدُّ الطِّيبَ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1787** அனஸ் இப்னு மாலிக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் நறுமணப் பொருட்களைப் பெற்றுக் கொள்ள மறுக்கமாட்டார்கள். **(புகாரி:2582)**

## ٣٦. – باب كراهة المدح في الوجه لمن خيف عليه مفسدةٌ من إعْجَابٍ ونَحْوِه، وجوازه لمن أُمِنَ ذَلِكَ في حقّه

## பாடம் : 360 - பெருமையை ஏற்படுத்திக் கொள்வார் என்ற அச்சம் கொள்ளத்தக்க மனிதரை நேருக்கு நேர் புகழ்வது வெறுக்கத்தக்கது. இது போன்ற பயம் இல்லையெனில் புகழலாம்.

١٧٨٨ – وَعَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : سَمِعَ النَّبِيُّ ﷺ رَجُلاً يُثْنِي عَلَى رَجُلٍ وَيُطْرِيهِ فِي الْمِدْحَةِ فَقَالَ : " أَهْلَكْتُمْ – أَوْ قَطَعْتُمْ ظَهْرَ الرَّجُلِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . " وَالأَطْرَاءُ " : الْمُبَالَغَةُ فِي الْمَدْحِ .

**1788** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு மனிதர், இன்னொரு மனிதரைப் புகழ்வதையும், புகழ்வதில் அவர் வரம்பு மீறுவதையும் கேட்ட நபி (ஸல்) அவர்கள், "(அவரை) நீங்கள் அழித்து விட்டீர்கள் அல்லது அந்த மனிதரின் முதுகை ஒடித்து விட்டீர்கள்" என்று கூறினார்கள். **(புகாரி:2663. முஸ்லிம்:3001)**

١٧٨٩ – وَعَنْ أَبِي بَكْرَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ رَجُلاً ذُكِرَ عِنْدَ النَّبِيِّ ﷺ فَأَثْنَى عَلَيْهِ رَجُلٌ خَيْرًا فَقَالَ النَّبِيُّ ﷺ : " وَيْحَكَ قَطَعْتَ عُنُقَ صَاحِبِكَ " – يَقُولُهُ مِرَارًا – " إِنْ كَانَ أَحَدُكُمْ مَادِحًا لاَ مَحَالَةَ فَلْيَقُلْ : أَحْسَبُ كَذَا وَكَذَا إِنْ كَانَ يَرَى أَنَّهُ كَذَلِكَ وَحَسِيبُهُ اللّٰهُ . وَلاَ يُزَكَّى عَلَى اللّٰهِ أَحَدٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1789** அபூபக்ரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் முன் ஒரு மனிதர் பற்றிக் கூறப்பட்டது. அப்போது அவரை ஒருவர் புகழ்ந்து கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள், "உமக்குக் கேடு உண்டாகட்டும்! உம் நண்பரின் கழுத்தை முறித்து விட்டீரே! என்று பலமுறை கூறிவிட்டு, "ஒருவர், ஒருவரைப் புகழத்தான் வேண்டும் என்றிருந்தால், 'இவ்வாறு, இவ்வாறு அவரை நான் கருதுகிறேன்' என்று கூறட்டும். அவர் அவ்விதம் இருப்பதாகக் கருதினால், அவரை அல்லாஹ் கேள்வி கேட்பான். அல்லாஹ்விடம் எவரையும் தூய்மைப்படுத்திப் பேச வேண்டிய அவசியம் இல்லை. (அவர் பற்றி அல்லாஹ் அறிவான்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2662. முஸ்லிம்:3000)**

١٧٩. – وَعَنْ هَمَّامِ بْنِ الْحَارِث عَنْ . الْمِقْدَاد رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلاً جَعَلَ يَمْدَحُ عُثْمَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ فَعَمَدَ الْمِقْدَادُ فَجَثَا عَلَى رُكْبَتَيْهِ فَجَعَلَ يَحْثُو فِي وَجْهِهِ الْحَصْبَاءَ . فَقَالَ لَهُ عُثْمَانُ : مَا شَأْنُكَ ؟ فَقَالَ : إِنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِذَا رَأَيْتُمْ الْمَدَّاحِينَ فَاحْثُوا فِي وُجُوهِهِمْ التُّرَابَ " . رَوَاهُ مُسْلِمٌ

**1790** ஹம்மாம் இப்னுல் ஹாரிஸ் கூறுகின்றார்கள்:

ஒரு மனிதர், உஸ்மான் (ரழி) அவர்களைப் புகழ ஆரம்பித்தார். அப்போது மிக்தாத் (ரழி) அவர்கள் முழங்காலிட்டு அமர்ந்து, பொடிக்கற்களை (எடுத்து) அவரின் முகத்தில் வீச ஆரம்பித்தார்கள். "என்ன காரியம் செய்கிறாய்?" என்று உஸ்மான் (ரழி) கேட்டார்கள். அப்போது மிக்தாத் (ரழி) அவர்கள், "(நேருக்கு நேர்) புகழ்பவர்களை நீங்கள் கண்டால் அவர்களின் முகங்களில் மண்ணை அள்ளி வீசுங்கள் என நபி (ஸல்) கூறினார்கள்" என்று கூறினார்கள். **(முஸ்லிம்:3002)**

மேற்கண்ட ஹதீஸ், புகழ்வதற்குத் தடை பற்றியதாகும். புகழ்வது கூடும் என்ற ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் நிறைய உள்ளன.

புகழப்பட்டவரிடம் முழுமையான ஈமான், மன உறுதி, மனப்பயிற்சி, குழப்பமே இல்லாத பூரணமான அறிவுஞானம், இதன் மூலம் ஏமாற்றம் மற்றும் விளையாட்டு இல்லாத நிலை இருக்குமானால், அவரைப் புகழ்வதற்கு தடை ஏதுமில்லை. வெறுக்கத்தக்க நிலையும் இல்லை. இவற்றில் ஏதேனும் ஒன்று அவரிடம் வரும் எனப் பயந்தால், அவரை நேரில் புகழ்வது கடுமையான, வெறுக்கத்தக்கதாகும். இந்த (இரண்டு விதமான கருத்தைத் தரும்) ஹதீஸ்களிடையே ஒருங்கிணைக்கும் வழி இதுதான். இந்த விளக்கப்படியேதான், இதில் உள்ள மாறுபட்ட ஹதீஸ்களை நாம் வகைப்படுத்துவோம் என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள்.

நேரில் புகழ்வது பற்றி வந்துள்ள ஹதீஸ்களில் சில :

"சொர்க்கத்தின் அனைத்து வாசல்களிலிருந்தும் வருமாறு அழைக்கப்படுபவர்களில் ஒருவராக நீரும் இருப்பீர்" என்று நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரழி)அவர்களிடம் கூறினார்கள்.

"தங்களின் வேட்டிகளைத் தரையில் படும்படி இழுத்துச் செல்பவர்களில் நீர் இல்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள் என ஒரு ஹதீஸில் உள்ளது.

"ஒரு தெருவில் நீர் நடப்பதை ஷைத்தான் பார்த்தால், அந்த தெருவை விட்டு வேறு ஒரு தெருவில் நடப்பான்" என்று உமர் (ரழி) பற்றி நபி (ஸல்) கூறினார்கள்.

புகழ்வது கூடும் என்பது பற்றி ஹதீஸ்கள் (புகாரி:3666, 3665, 3683. முஸ்லிம்:1027, 2382, 2396) நிறைய உள்ளன. "அல் அத்கார்" எனும் நூலில் சிலவற்றை நான் கூறி உள்ளேன். **(மூலநூலாசிரியர்)**

## ٣٦١ - باب كراهة الخروج من بلد وقع فيها الوباء فرارًا منه وكراهة القدوم عليه

## பாடம் : 361 - சோதனைக்குள்ளான ஊரை விட்டும் உடனே வெளியேறுவது வெறுக்கத்தக்கது. மேலும் அங்கு செல்வதும் வெறுக்கத்தக்கது.

**قَالَ اللَّهُ تَعَالَى : أَيْنَمَا تَكُونُوا يُدْرِكُّمُ الْمَوْتُ وَلَوْ كُنْتُمْ فِي بُرُوجٍ مُشَيَّدَةٍ . وَقَالَ تَـعَالَى : وَلاَ تُلْقُوا بِأَيْدِيكُمْ إِلَى التَّهْلُكَةِ.**

**அல்லாஹ் கூறுகிறான்:** *நீங்கள் எங்கிருந்தாலும், உறுதியாக எழுப்பப்பட்ட கோட்டையில் நீங்கள் இருந்தாலும் மரணம் உங்களை வந்து சேரும். (4:78)*

*உங்களின் கைகளை அழிவின் பக்கம் போட்டுவிடாதீர்கள். (2:195)*

١٧٩١ - وَعَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ عُمَرَ بْنَ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ خَرَجَ إِلَى الشَّامِ حَتَّى إِذَا كَانَ بِسَرْغٍ لَقِيَهُ أُمَرَاءُ الأَجْنَادِ أَبُو عُبَيْدَةَ بْنُ الْجَرَّاحِ وَأَصْحَابُهُ - فَأَخْبَرُوهُ أَنَّ الْوَبَاءَ قَدْ وَقَعَ بِالشَّامِ . قَالَ ابْنُ عَبَّاسٍ : فَقَالَ لِي عُمَرُ : اُدْعُ لِي الْمُهَاجِرِينَ الأَوَّلِينَ فَدَعَوْتهمْ فَاسْتَشَارَهُمْ وَأَخْبَرَهُمْ أَنَّ الْوَبَاءَ قَدْ وَقَعَ بِالشَّامِ فَاخْتَلَفُوا فَقَالَ بَعْضُهُمْ : خَرَجْت لأَمْرٍ وَلاَ نَرَى أَنْ تَرْجِعَ عَنْهُ ؟ وَقَالَ بَعْضُهُمْ : مَعَك بَقِيَّةُ النَّاسِ وَأَصْحَابُ رَسُولِ اللَّهِ ﷺ وَلاَ نَرَى أَنْ تُقْدِمَهُمْ عَلَى هَذَا الْوَبَاءِ . فَقَالَ : ارْتَفِعُوا عَنِّي . ثُمَّ قَالَ : اُدْعُ لِي الأَنْصَارَ فَدَعَوْتهمْ فَاسْتَشَارَهُمْ فَسَلَكُوا سَبِيلَ الْمُهَاجِرِينَ وَاخْتَلَفُوا كَاخْتِلاَفِهِمْ فَقَالَ : ارْتَفِعُوا عَنِّي . ثُمَّ قَالَ : اُدْعُ لِي مَنْ كَانَ هَهُنَا مِنْ مَشْيَخَةِ قُرَيْشٍ مِنْ مُهَاجِرَةِ الْفَتْحِ فَدَعَوْتهمْ فَلَمْ يَخْتَلِفْ عَلَيْهِ مِنْهُمْ رَجُلاَنِ فَقَالُوا : نَرَى أَنْ تَرْجِعَ بِالنَّاسِ وَلاَ تُقْدِمَهُمْ عَلَى هَذَا الْوَبَاءِ . فَنَادَى عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ فِي النَّاسِ : إِنِّي مُصَبِّحٌ عَلَى ظَهْرٍ فَأَصْبِحُوا عَلَيْهِ فَقَالَ أَبُو عُبَيْدَةَ بْنُ الْجَرَّاحِ رَضِيَ اللَّهُ عَنْهُ : أَفِرَارًا مِنْ قَدَرِ اللَّهِ ؟ فَقَالَ عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ : لَوْ غَيْرُك قَالَهَا يَا أَبَا عُبَيْدَةَ ! ) وَكَانَ عُمَرُ يَكْرَهُ خِلاَفَهُ ( نَعَمْ نَفِرُّ مِنْ قَدَرِ اللَّهِ إِلَى قَدَرِ اللَّهِ أَرَأَيْت لَوْ كَانَ لَك إِبِلٌ فَهَبَطَتْ وَادِيًا لَهُ عُدْوَتَانِ إِحْدَاهُمَا خَصِبَةٌ وَالأُخْرَى جَدْبَةٌ أَلَيْسَ إِنْ رَعَيْت الْخَصِبَةَ رَعَيْتهَا بِقَدَرِ اللَّهِ وَإِنْ رَعَيْت الْجَدْبَةَ رَعَيْتهَا بِقَدَرِ اللَّهِ ؟ قَالَ : فَجَاءَ عَبْدُ الرَّحْمَنِ بْنُ عَوْفٍ رَضِيَ اللَّهُ عَنْهُ وَكَانَ مُتَغَيِّبًا فِي بَعْضِ حَاجَتِهِ فَقَالَ : إِنَّ عِنْدِي مِنْ هَذَا عِلْمًا سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِذَا سَمِعْتُمْ بِهِ بِأَرْضٍ فَلاَ تَقْدَمُوا عَلَيْهِ وَإِذَا وَقَعَ بِأَرْضٍ وَأَنْتُمْ بِهَا فَلاَ تَخْرُجُوا فِرَارًا مِنْهُ " . فَحَمِدَ اللَّهَ تَعَالَى عُمَرُ رَضِيَ اللَّهُ عَنْهُ وَانْصَرَفَ . مُتَّفَقٌ عَلَيْهِ . " وَالْعُدْوَةُ " : جَانِبُ الْوَادِي .

**1791** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

உமர் இப்னு கத்தாப் (ரழி) அவர்கள் சிரியா நாட்டிற்கு சென்றார்கள். அவர்கள் வழியில் "ஸர்ஃஹ்" என்ற இடத்தில் இருந்தபோது சிரியா (நாட்டில் உள்ள பலஸ்தீனம், ஜோர்டான், ஹிம்மஸ், கின்ஸிரீன், திமிஷ்க் ஆகிய) நகரங்களின் தலைவர்களான அபூஉபைதா இப்னு ஜர்ராஹ் (ரழி) அவர்களும், அவர்களின் தோழர்களும் உமர் (ரழி) அவர்களைச் சந்தித்தார்கள். சிரியாவில் தொற்றுநோய் பரவி உள்ளது என்ற செய்தியை அவர்களிடம் கூறினார்கள்.

அப்போது உமர் (ரழி) அவர்கள் என்னிடம், "ஆரம்பகால முஹாஜிரீன்களை என்னிடம் அழைத்து வாருங்கள்!" என்று கூறினார்கள். அவர்களை நான் அழைத்து வந்தேன். அவர்களிடம் ஆலோசனை செய்தார்கள். சிரியாவில் தொற்றுநோய் உள்ளது பற்றி அவர்களிடம் கூறினார்கள். அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டனர். அவர்களில் சிலர், "ஒரு காரியத்திற்காக நீங்கள் வந்துள்ளீர்கள். அதிலிருந்து நீங்கள் திரும்பிச் செல்வதை நாங்கள் விரும்பவில்லை" என்று கூறினார்கள். அவர்களில் மற்ற சிலர், "உங்களுடன் மற்ற சிலரும், நபித்தோழர்களும் உள்ளனர்.

தொற்று நோய் உள்ள அந்த பகுதிக்கு அவர்களை நீங்கள் அழைத்துச் செல்வதை நாங்கள் விரும்பவில்லை'' என்று கூறினார்கள். ''என்னிடமிருந்து நீங்கள் புறப்படுங்கள்'' என உமர் (ரழி) கூறினார்கள்.

பின்பு என்னிடம், ''மதீனாவாசிகளான அன்சாரீகளை அழைத்து வாருங்கள்!'' என்று உமர் (ரழி) கூறினார்கள். அவர்களை அழைத்து வந்தேன். அவர்களிடம் அவர்கள் ஆலோசனை செய்தார்கள். அவர்கள், முஹாஜிரீன்கள் வழியையே கடைபிடித்தார்கள். அவர்கள் கருத்து வேறுபாடு கொண்டது போலவே, இவர்களும் கருத்து வேறுபாடு கொண்டார்கள். ''என்னிடமிருந்து நீங்கள் புறப்படுங்கள்'' என உமர் (ரழி) கூறினார்கள்.

பின்னர், ''மக்கா வெற்றியின் போது இஸ்லாத்தைத் தழுவிய குறைஷித் தலைவர்களில் சிலர் இங்கிருந்தால் என்னிடம் அழைத்து வாருங்கள்!'' என்று கூறினார்கள். உடனே அவர்களை அழைத்து வந்தேன். இது விஷயத்தில் அவர்களில் எந்த இரண்டு நபர்களும் கருத்து வேறுபாடு கொள்ளவில்லை. ''மக்களோடு நீங்கள் திரும்பிச் செல்வதையே நாங்கள் விரும்புகிறோம். இந்த தொற்றுநோய் உள்ள பகுதிக்கு அவர்களை நீங்கள் அழைத்துச் செல்ல வேண்டாம்'' என்று அவர்கள் கூறினார்கள்.

உடனே மக்களை அழைத்த உமர் (ரழி) அவர்கள், ''நான் நாளை காலையில் பயணத்திற்குத் தயார். எனவே நீங்களும் பயணம் புறப்படுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது அபூஉபைதா இப்னு ஜர்ராஹ் (ரழி) அவர்கள், ''அல்லாஹ்வின் விதியை விட்டும் நீங்கள் ஓடுகிறீர்களா?'' என்று கேட்டார்கள். உடனே உமர் (ரழி)அவர்கள், ''அபூஉபைதாவே! இதை உம்மைத் தவிர வேறு யாரேனும் கூறி இருந்தால் ....'' என எச்சரித்தார்கள். தனக்கு மாற்றமாக ஒருவர் கூறியதை வெறுத்த உமர் (ரழி) அவர்கள், ''ஆம், அல்லாஹ்வின் ஒரு விதியிலிருந்து அல்லாஹ்வின் மற்றொரு விதிக்கு நான் ஓடுகிறேன். நீரே கூறும்! உம்மிடம் ஒரு ஒட்டகம் இருந்து, அது இரண்டு பகுதிகளாக உள்ள ஒரு ஓடையில் இறங்குகிறது. அவற்றில் ஒன்று பசுமையாக உள்ளது. மற்றொன்று வறட்சியாக உள்ளது. இந்த சமயத்தில் பசுமைப் பகுதியில் (ஒட்டகையை) நீர் மேய்த்தால் அல்லாஹ்வின் விதிப்படியே அதை மேய்த்தீர். வறட்சிப்பகுதியில் நீர் மேய்த்தால் அதுவும் அல்லாஹ்வின் விதிப்படியே மேய்த்தவராவீர். அப்படித்தானே?'' என்று கேட்டார்கள்.

அப்போதுதான் தேவைக்கு வெளியூர் சென்றிருந்த அப்துர் ரஹ்மான் இப்னு அவ்பு (ரழி) வந்ததும், ''என்னிடம் இது பற்றித் தெளிவு உண்டு. ''தொற்றுநோய் உள்ள ஊர் பற்றி நீங்கள் கேட்டால், அங்கு செல்லாதீர்கள். அந்த ஊரில் நீங்கள் இருக்கும் போது அது ஏற்பட்டால், அதிலிருந்து உடனே வெளியேறாதீர்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன்'' என்று அப்துர் ரஹ்மான் இப்னு அவ்பு (ரழி) கூறினார்கள். உடனே உமர் (ரழி) அவர்கள் அல்லாஹ்வை புகழ்ந்துவிட்டு, ஊர் திரும்பினார்கள்.

**(புகாரி:5729. முஸ்லிம்:2219)**

١٧٩٢ – وَعَنْ أُسَامَةَ بْنِ زَيْدٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إِذَا سَمِعْتُمُ الطَّاعُونَ بِأَرْضٍ فَلاَ تَدْخُلُوهَا وَإِذَا وَقَعَ بِأَرْضٍ وَأَنْتُمْ فِيهَا فَلاَ تَخْرُجُوا مِنْهَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1792** உஸாமா இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''ஒரு ஊரில் பிளேக் நோய் உள்ளது பற்றி நீங்கள் கேள்விப்பட்டால், அதில் நுழையாதீர்கள். நீங்கள் அந்த ஊரில் இருக்கும் போது அது ஏற்பட்டால், அங்கிருந்து வெளியேறாதீர்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5728. முஸ்லிம்:2218)**

## ٣٦٢ – باب التغليظ في تحريم السّحر

## பாடம் : 362 - "சூனியம்" கடும் குற்றமாகும்.

قَالَ اللَّهُ تَعَالَى : وَمَا كَفَرَ سُلَيْمَانُ وَلَكِنَّ الشَّيَاطِينَ كَفَرُوا يُعَلِّمُونَ النَّاسَ السِّحْرَ الأيَةَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *சுலைமான் நிராகரிப்பவராக இருக்கவில்லை. ஆயினும், மக்களுக்குச் சூனியத்தைக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்த ஷைத்தான்கள்தாம் நிராகரித்தார்கள். (2:102)*

١٧٩٣ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " اجْتَنِبُوا السَّبْعَ الْمُوبِقَاتِ " . قَالُوا : يَا رَسُولَ اللَّهِ وَمَا هُنَّ ؟ قَالَ : " الشِّرْكُ بِاللَّهِ وَالسِّحْرُ وَقَتْلُ النَّفْسِ الَّتِي حَرَّمَ اللَّهُ إِلاَّ بِالْحَقِّ وَأَكْلُ الرِّبَا وَأَكْلُ مَالِ الْيَتِيمِ وَالتَّوَلِّي يَوْمَ الزَّحْفِ وَقَذْفُ الْمُحْصَنَاتِ الْمُؤْمِنَاتِ الْغَافِلاَتِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1793** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அழிவைத் தரும் ஏழு விஷயங்களைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்!" என்று நபி (ஸல்) கூறினார்கள். அதற்கு, "இறைத்தூதர் அவர்களே! அவை என்ன?" என்று மக்கள் கேட்டனர். "அல்லாஹ்வுக்கு இணை வைத்தல், சூன்யம் செய்தல், அல்லாஹ் தடை செய்துள்ள ஓர் உயிரை நியாயமின்றி கொலைச் செய்தல், வட்டியை உண்ணுதல், அனாதையின் செல்வத்தை உண்ணுதல், போரில் புறமுதுகிட்டு ஓடுதல், முஃமினான பத்தினிப் பெண்களை அவதூறு கூறுதல் (ஆகியவைகளாகும்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2766 முஸ்லிம்:89)**

## ٣٦٣ – باب النّهي عن المسافرة بالمصحف إلى بلاد الكفار إذا خيفَ وقوعُه بأيْدي العدو

## பாடம் : 363 - எதிரிகளால் அவமரியாதை ஏற்படும் என்று பயந்தால், இறை மறுப்பாளர்களின் பகுதிக்கு குர்ஆனுடன் பயணம் செல்வது கூடாது.

١٧٩٤ – عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : " نَهَى رَسُولُ اللَّهِ ﷺ أَنْ يُسَافَرَ بِالْقُرْآنِ إِلَى أَرْضِ الْعَدُوِّ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1794** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

எதிரிகளின் ஊருக்குக் குர்ஆனுடன் பயணம் மேற்கொள்வதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். **(புகாரி:2990. முஸ்லிம்:1869)**

## ٣٦٤ – بابُ تحريم استعمَال إناء الذّهب وَإناء الفضّة في الأكل والشرب والطهارة وسائر وجوه الاستعمال

## பாடம் : 364 - உண்ணுவது, பருகுவது, சுத்தம் செய்வது போன்ற தேவைக்காக தங்கம், வெள்ளியினாலான பாத்திரங்களைப் பயன்படுத்துவது கூடாது.

١٧٩٥ – عَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " الَّذِي يَشْرَبُ فِي آنِيَةِ الْفِضَّةِ إِنَّمَا يُجَرْجِرُ فِي بَطْنِهِ نَارَ جَهَنَّمَ " . مُتَّفَقٌ عَلَيْهِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ: "إِنَّ الَّذِي يَأْكُلُ أَوْ يَشْرَبُ فِي آنِيَةِ الْفِضَّةِ وَالذَّهَبِ".

**1795** உம்மு ஸலமா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“வெள்ளிப் பாத்திரத்தில் பருகுபவர், தன் வயிற்றில் நிரப்பிக் கொள்வது நரக நெருப்பைத்தான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5634. முஸ்லிம்:2065)**

“தங்கம், வெள்ளிப் பாத்திரத்தில் உண்பவர் அல்லது குடிப்பவர் (நரக நெருப்பையே நிரப்பிக் கொள்கிறான்)” என்று முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

١٧٩٦ – وَعَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : إنَّ النَّبِيَّ ﷺ نَهَانَا عَنِ الْحَرِيرِ وَالدِّيبَاجِ وَالشُّرْبِ فِي آنِيَةِ الذَّهَبِ وَالْفِضَّةِ ؟ وَقَالَ : "هُنَّ لَهُمْ فِي الدُّنْيَا وَهِيَ لَكُمْ فِي الآخِرَةِ ". مُتَّفَقٌ عَلَيْهِ . وَفِي رِوَايَةٍ فِي الصَّحِيحَيْنِ عَنْ حُذَيْفَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " لاَ تَلْبَسُوا الْحَرِيرَ وَلاَ الدِّيبَاجَ وَلاَ تَشْرَبُوا فِي آنِيَةِ الذَّهَبِ وَالْفِضَّةِ وَلاَ تَأْكُلُوا فِي صِحَافِهَا".

**1796** ஹுதைஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பட்டு ஆடையையும், பட்டுக் கலந்த ஆடையையும் (அணிவதற்கும்), தங்கம், வெள்ளிப் பாத்திரத்தில் குடிப்பதற்கும் நபி (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை செய்தார்கள். “(இறைமறுப்பாளர்களான) அவர்களுக்கு இவை உலகில் அனுமதிக்கப்பட்டதாகும், மறுமையில் இவை உங்களுக்கு அனுமதி” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5632.முஸ்லிம்:2067)**

ஹுதைபா (ரழி) அறிவிப்பதாக புகாரி, முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

“பட்டையும், பட்டுக் கலந்த ஆடையையும் அணியாதீர்கள். தங்கம், வெள்ளிப் பாத்திரங்களில் குடிக்காதீர்கள். சாப்பிடாதீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5426. முஸ்லிம்:2067/5)**

١٧٩٧ – وَعَنْ أَنَسِ بْنِ سِيرِينَ قَالَ : كُنْتُ مَعَ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عِنْدَ نَفَرٍ مِنَ الْمَجُوسِ فَجِيءَ بِفَالُوذَجٍ عَلَى إِنَاءٍ مِنْ فِضَّةٍ فَلَمْ يَأْكُلْهُ فَقِيلَ لَهُ : حَوِّلْهُ فَحَوَّلَهُ عَلَى إِنَاءٍ مِنْ خَلَنْجٍ وَجِيءَ بِهِ فَأَكَلَهُ . رَوَاهُ الْبَيْهَقِيُّ بِإِسْنَادٍ حَسَنٍ . " الْخَلَنْجُ " : الْجَفْنَةُ .

**1797** அனஸ் இப்னு ஸீரீன் அறிவிக்கின்றார்கள்:

நான் அனஸ் இப்னு மாலிக் (ரழி) அவர்களுடன் இருந்தேன். அவர்கள் அருகில் நெருப்பை வணங்கும் மஜூஸிகள் இருந்தனர். அப்போது வெள்ளிப் பாத்திரத்தில் (தேனும், மாவும் கலந்து தயாரிக்கப்பட்ட இனிப்புப் பொருளான) ‘பாலுதஜ்’ எனும் உணவு கொண்டு வரப்பட்டது. அனஸ் (ரழி) அவர்கள் அதைச் சாப்பிடவில்லை. (உணவு தந்தவரிடம்), “இதை வேறு பாத்திரத்தில் மாற்றுவீராக!” என்று கூறப்பட்டது. உடனே மரத்திலான ‘கலன்ஜ்’ என்ற பாத்திரத்தில் மாற்றி அந்த உணவு கொண்டு வரப்பட்டது. அதன் பின்பு அதை (அந்த உணவை) அனஸ் (ரழி) அவர்கள் சாப்பிட்டார்கள். **(பைஹகி:1/28)**

## ٣٦٥ – باب تحريم لبس الرّجل ثوبًا مزعفرًا

## பாடம் : 365 - குங்குமப்பூ நிற ஆடையை ஓர் ஆண் அணிவது கூடாது

١٧٩٨ – عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : " نَهَى النَّبِيُّ ﷺ أَنْ يَتَزَعْفَرَ الرَّجُلُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1798** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஓர் ஆண் குங்குமப்பூ நிற ஆடை அணிவதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். **(புகாரி:5846. முஸ்லிம்:2101)**

١٧٩٩ - وَعَنْ عَبْدِ اللهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللّهُ عَنْهُمَا قَالَ : رَأَى النَّبِيُّ ﷺ عَلَيَّ ثَوْبَيْنِ مُعَصْفَرَيْنِ فَقَالَ : " أُمُّكَ أَمَرَتْكَ بِهَذَا ؟ " قُلْتُ : أَغْسِلُهُمَا ؟ قَالَ : " بَلْ أَحْرِقْهُمَا " . وَفِي رِوَايَةٍ فَقَالَ : " إِنَّ هَذَا مِنْ ثِيَابِ الْكُفَّارِ فَلاَ تَلْبَسْهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1799** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள், என்னை மஞ்சள் நிற ஆடை இரண்டை (அணிந்திருக்க)க் கண்டார்கள். "உம் தாய், இதை அணிய உமக்கு ஏவினாரா?" என்று கேட்டார்கள். அதற்கு நான், "இதை நான் (சாயம் மாற்றிட) துவைத்து விடுகிறேன்?" என்று கூறினேன். அதற்கு அவர்கள், "இல்லை! இந்த இரண்டு ஆடைகளையும் எரித்துவிடு!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில், "நிச்சயமாக! இது, இறைமறுப்பாளர்களின் ஆடையாகும். ஆகவே இதை நீர் அணிய வேண்டாம்" என்று கூறினார்கள் என உள்ளது. **(முஸ்லிம்:2077)**

## ٣٦٦ - باب النّهي عَن صَمت يَوم إلى اللّيل

## பாடம் : 366 - பகல் முழுதும் "மௌன விரதம்" இருப்பது கூடாது.

١٨٠٠ - عَنْ عَلِيٍّ رَضِيَ اللّهُ عَنْهُ قَالَ : حَفِظْتُ عَنْ رَسُولِ اللّهِ ﷺ : " لاَ يُتْمَ بَعْدَ احْتِلاَمٍ وَلاَ صُمَاتَ يَوْمٍ إِلَى اللَّيْلِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ بِإِسْنَادٍ حَسَنٍ . قَالَ الْخَطَّابِيُّ فِي تَفْسِيرِ هَذَا الْحَدِيثِ : كَانَ مِنْ نُسُكِ الْجَاهِلِيَّةِ الصُّمَاتُ فَنُهُوا فِي الأَسْلاَمِ عَنْ ذَلِكَ وَأُمِرُوا بِالذِّكْرِ وَالْحَدِيثِ بِالْخَيْرِ .

**1800** அலீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பருவ வயதை அடைந்தபின் அனாதை என்பதில்லை. மேலும் காலை முதல் இரவு வரை மௌன விரதம் என்பது இஸ்லாத்தில் இல்லை" என்ற செய்தியை நபி (ஸல்) அவர்களின் மூலமாக நான் மனனம் செய்துள்ளேன். **(அபூதாவூது:2873)**

இந்த ஹதீஸிற்கு விளக்கம் கூறும் வகையில், கத்தாபி அவர்கள் (பின்வருமாறு) கூறுகிறார்கள்:

"அறியாமைக் காலத்தின் செயல்பாடுகளில் ஒன்றாக, இந்த மௌனவிரதமும் இருந்தது. இஸ்லாத்தில் இதைச் செய்ய மக்கள் தடுக்கப்பட்டனர். பகல் பொழுதில் அல்லாஹ்வை நினைவு கூரவும், நல்லதைப் பேசவும் வலியுறுத்தப்பட்டார்கள்."

١٨٠١ - وَعَنْ قَيْسِ بْنِ أَبِي حَازِمٍ قَالَ : دَخَلَ أَبُو بَكْرٍ الصِّدِّيقُ رَضِيَ اللّهُ عَنْهُ عَلَى امْرَأَةٍ مِنْ أَحْمَسَ يُقَالُ لَهَا زَيْنَبُ فَرَآهَا لاَ تَتَكَلَّمُ فَقَالَ : مَا لَهَا لاَ تَتَكَلَّمُ ؟ فَقَالُوا : حَجَّتْ مُصْمِتَةً . فَقَالَ لَهَا : تَكَلَّمِي فَإِنَّ هَذَا لاَ يَحِلُّ ; هَذَا مِنْ عَمَلِ الْجَاهِلِيَّةِ . فَتَكَلَّمَتْ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1801** கய்ஸ் இப்னு அபீஹாஸிம் கூறுகின்றார்கள்:

அபூபக்கர் சித்தீக் (ரழி) அவர்கள், "அஹ்மஸ்" எனும் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணிடம் சென்றார்கள். அந்தப் பெண்ணிற்கு "ஜைனப்" என்று பெயர். அந்தப் பெண் எதையும் பேசாதிருக்க அபூபக்கர் (ரழி) கண்டார்கள். "அவள் பேசாமல் இருக்கும் காரணம் என்ன?" என்று கேட்டார்கள். "அந்தப் பெண் பேசாமல் இருக்க சத்தியம் செய்துள்ளாள்" என்று மக்கள் கூறினார்கள். உடனே அந்தப் பெண்ணிடம் "நீர் பேசுவீராக! இந்தச் செயலுக்கு அனுமதி இல்லை. இது அறியாமைக் காலச்செயல்" என்று கூறினார்கள். உடனே அந்தப் பெண் பேசினார். **(புகாரி:3834)**

## ٣٦٧ - بابُ تحريم انتِسَاب الإنسان إلى غير أبيه وتولّيه إلى غير مَواليه

## பாடம் : 367 - தன் தந்தை அல்லாதவரை தந்தை என்றும், தன் எஜமான் அல்லாதவரை எஜமான் என்றும் கூறுவது கூடாது.

١٨٠٢ - عَنْ سَعْد بْنِ أَبِي وَقَّاصٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " مَنْ ادَّعَى إِلَى غَيْرِ أَبِيه - وَهُوَ يَعْلَمُ أَنَّهُ غَيْرُ أَبِيهِ - فَالْجَنَّةُ عَلَيْهِ حَرَامٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1802** ஸஃது இப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் தந்தை இல்லை என்பதை அறிந்தே ஒருவர், தன் தந்தை அல்லாதவரை தந்தை என வாதாடினால், சொர்க்கம் அவருக்குத் தடையாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6766. முஸ்லிம்:63)**

١٨٠٣ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " لاَ تَرْغَبُوا عَنْ آبَائِكُمْ فَمَنْ رَغِبَ عَنْ أَبِيهِ فَهُوَ كُفْرٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1803** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நீங்கள் உங்கள் தந்தையை வெறுக்காதீர்கள். தன் தந்தையை ஒருவர் வெறுத்தால், அவரின் செயல் இறைமறுப்பு (குஃப்ரு) செயல் ஆகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6768. முஸ்லிம்:62)**

١٨٠٤ - وَعَنْ يَزِيدَ بْنِ شَرِيكِ بْنِ طَارِقٍ قَالَ : رَأَيْتُ عَلِيًّا رَضِيَ اللَّهُ عَنْهُ عَلَى الْمِنْبَرِ يَخْطُبُ فَسَمِعْتُه يَقُولُ : لاَ وَاللَّهِ مَا عِنْدَنَا مِنْ كِتَابٍ نَقْرَؤُهُ إِلاَّ كِتَابَ اللَّهِ وَمَا فِي هَذِهِ الصَّحِيفَةِ . فَنَشَرَهَا فَإِذَا فِيهَا أَسْنَانُ الأبِلِ وَأَشْيَاءُ مِنَ الْجِرَاحَاتِ . وَفِيهَا : قَالَ : رَسُولُ اللَّهِ ﷺ : " الْمَدِينَةُ حَرَمٌ مَا بَيْنَ عَيْرٍ إِلَى ثَوْرٍ فَمَنْ أَحْدَثَ فِيهَا حَدَثًا أَوْ آوَى مُحْدِثًا فَعَلَيْهِ لَعْنَةُ اللَّهِ وَالْمَلاَئِكَةِ وَالنَّاسِ أَجْمَعِينَ لاَ يَقْبَلُ اللَّهُ مِنْهُ يَوْمَ الْقِيَامَةِ صَرْفًا وَلاَ عَدْلاً ! ذِمَّةُ الْمُسْلِمِينَ وَاحِدَةٌ يَسْعَى بِهَا أَدْنَاهُمْ فَمَنْ أَخْفَرَ مُسْلِمًا فَعَلَيْهِ لَعْنَةُ اللَّهِ وَالْمَلاَئِكَةِ وَالنَّاسِ أَجْمَعِينَ لاَ يَقْبَلُ اللَّهُ مِنْهُ يَوْمَ الْقِيَامَةِ صَرْفًا وَلاَ عَدْلاً ! وَمَنْ ادَّعَى إِلَى غَيْرِ أَبِيهِ أَوْ انْتَمَى إِلَى غَيْرِ مَوَالِيهِ فَعَلَيْهِ لَعْنَةُ اللَّهِ وَالْمَلاَئِكَةِ وَالنَّاسِ أَجْمَعِينَ لاَ يَقْبَلُ اللَّهُ مِنْهُ يَوْمَ الْقِيَامَةِ صَرْفًا وَلاَ عَدْلاً ! " مُتَّفَقٌ عَلَيْهِ . " ذِمَّةُ الْمُسْلِمِينَ " : أَيْ عَهْدُهُمْ وَأَمَانَتُهُمْ . " وَأَخْفَرَهُ " : نَقَضَ عَهْدَهُ . " وَالصَّرْفُ " : التَّوْبَةُ وَقِيلَ : الْحِيلَةُ . " وَالْعَدْلُ " : الْفِدَاءُ.

**1804** யஸீத் இப்னு ஷரீக் இப்னு தாரிக் கூறுகின்றார்கள்:

அலீ (ரழி) அவர்கள், மிம்பரில் உரை நிகழ்த்துவதை நான் பார்த்தேன். அப்போது அவர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் வேதத்தைத் தவிர நாம் படித்திட வேறு நூல் இல்லை. மேலும் இந்த ஏட்டில் உள்ளதைத் தவிர வேறு இல்லை" என்று கூறக்கேட்டேன். அந்த ஏட்டை அவர்கள் விரித்தார்கள். அதில் (ஜகாத் கடமையாகும்) ஒட்டகத்தின் வயது பற்றியும், காயங்களுக்குரிய தீர்வுகளும் இருந்தன. அதில் (பின்வருமாறு) இருந்தது.

"அய்ர்" பகுதியிலிருந்து "ஸவ்ர்" மலைப்பகுதி வரை மதீனாவின் புனிதப் பகுதிகளாகும். இங்கே ஒருவர் புதிய செயலை (மார்க்கத்தின் பெயரால்) உருவாக்கினால் அல்லது புதிய செயல் உருவாக்குபவரை ஆதரித்தால், அவர் மீது அல்லாஹ்வின் சாபமும், வானவர்கள் மற்றும் அனைத்து மனிதர்களின் சாபமும் உண்டு. மறுமை நாளில் அவரிடமிருந்து எந்த பாவமன்னிப்பையும், பகரத்தையும் அல்லாஹ் ஏற்கமாட்டான். முஸ்லிம்களின் பொறுப்பு என்பது ஒன்றுதான். அவர்களில்

சாதாரண நபரும் அதையே வழங்க முயற்சிப்பார். ஒரு முஸ்லிமிடம் செய்த ஒப்பந்தத்தை ஒருவர் முறித்தால், அவர் மீது அல்லாஹ்வின் சாபமும், வானவர்கள் மற்றும் அனைத்து மனிதர்களின் சாபமும் உண்டு. அவரிடமிருந்து மறுமையில் பாவமன்னிப்பையோ, பகரத்தையோ அல்லாஹ் ஏற்கமாட்டான். தன் தந்தை அல்லாத ஒருவரை தந்தை என ஒருவர் வாதாடினால் அல்லது தன் எஜமான் அல்லாதவரை எஜமான் என்று வாதாடினால் அவரின் மீது அல்லாஹ், வானவர்கள் மற்றும் அனைத்து மனிதர்களின் சாபமும் ஏற்படும். அவரிடமிருந்து மறுமையில் பாவமன்னிப்பையோ, பகரத்தையோ அல்லாஹ் ஏற்கமாட்டான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6755. முஸ்லிம்:1370)**

١٨٠٥ – وَعَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " لَيْسَ مِنْ رَجُلٍ ادَّعَى لِغَيْرِ أَبِيهِ وَهُوَ يَعْلَمُهُ إِلاَّ كَفَرَ . وَمَنْ ادَّعَى مَا لَيْسَ لَهُ فَلَيْسَ مِنَّا وَلْيَتَبَوَّأْ مَقْعَدَهُ مِنْ النَّارِ وَمَنْ دَعَا رَجُلاً بِالْكُفْرِ أَوْ قَالَ : عَدُوُّ اللَّهِ – وَلَيْسَ كَذَلِكَ – إِلاَّ حَارَ عَلَيْهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَهَذَا لَفْظُ رِوَايَةِ مُسْلِمٍ .

**1805** அபூதர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தன் தந்தை அல்லாத ஒருவரை, நன்கு தெரிந்து கொண்டே தந்தை என ஒருவர் வாதாடினால், அவர் இறைமறுப்பாளராக ஆகாமல் இருப்பதில்லை. தனக்குரியதாக இல்லாத ஒன்றைத் தனது என்று வாதாடினால், அவர் நம்மைச் சேர்ந்தவர் இல்லை. அவர் தன் இருப்பிடத்தை நரகத்தில் ஏற்படுத்திக் கொள்ளட்டும். ஒருவர், மற்றொருவரை காஃபிர் என்று அழைத்து அல்லது அல்லாஹ்வின் விரோதி எனக்கூறி, அவ்வாறு அவர் இல்லையானால், அது கூறியவரிடமே திரும்பாமல் இருப்பதில்லை'' என்று நபி (ஸல்) கூறக் கேட்டேன். **(புகாரி:3508,6045. முஸ்லிம்:61. இது முஸ்லிமின் வாசகமாகும்)**

## ٣٦٨ – باب التحذير من ارتكاب ما نهى الله عزّ وجلّ أو رسوله صلّى الله عليه وسلّم عنه

## பாடம் : 368 - அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் தடுத்துள்ள செயல்களைப் பற்றிய எச்சரிக்கை!

**قَالَ اللَّهُ تَعَالَى : فَلْيَحْذَرِ الَّذِينَ يُخَالِفُونَ عَنْ أَمْرِهِ أَنْ تُصِيبَهُمْ فِتْنَةٌ أَوْ يُصِيبَهُمْ عَذَابٌ أَلِيمٌ . وَقَالَ تَعَالَى : وَيُحَذِّرُكُمُ اللَّهُ نَفْسَهُ . وَقَالَ تَعَالَى : إِنَّ بَطْشَ رَبِّكَ لَشَدِيدٌ . وَقَالَ تَعَالَى : وَكَذَلِكَ أَخْذُ رَبِّكَ إِذَا أَخَذَ الْقُرَى وَهِيَ ظَالِمَةٌ إِنَّ أَخْذَهُ أَلِيمٌ شَدِيدٌ .**

**அல்லாஹ் கூறுகிறான்:** *(இறைத்தூதரான) அவரின் கட்டளைக்கு மாறு செய்யும் அவர்கள் தங்களுக்கு பெரும் துன்பம் ஏற்படுவதையும் அல்லது நோவினை தரும் வேதனை அவர்களுக்கு ஏற்படுவதையும் அவர்கள் பயந்து கொள்ளட்டும்! (24:63)*

*அல்லாஹ், தன்னைப்பற்றி (நினைவுகூருமாறு) உங்களுக்கு எச்சரிக்கிறான்... (3:30)*

*நிச்சயமாக! உமது இறைவனின் பிடி கடுமையானதாகும். (85:12)*

*அநீதம் செய்யும் ஊர்வாசிகளை இறைவன் பிடித்தால், உமது இறைவனின் பிடி இவ்வாறு தான் இருக்கும். அந்தப் பிடி கடுமையான நோவினை தரக்கூடியதாக இருக்கும். (11:102)*

١٨٠٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِنَّ اللَّهَ تَعَالَى يَغَارُ وَغَيْرَةُ اللَّهِ أَنْ يَأْتِيَ الْمَرْءُ مَا حَرَّمَ اللَّهُ عَلَيْهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1806** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! அல்லாஹ் ரோஷம் கொள்வான். அல்லாஹ்வின் ரோஷம் என்பது, அல்லாஹ் தடுத்துள்ள ஒன்றை மனிதன் செய்யும் போது ஏற்படுகிறது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:5223. முஸ்லிம்:2761)**

## ٣٦٩ – بابُ ما يقوله ويفعله مَن ارتكَبَ منهيًّا عَنه

## பாடம் : 369 - தடுக்கப்பட்டதை ஒருவர் செய்து விட்டால் அவர் கூற வேண்டியதும், செய்ய வேண்டியதும்

قَالَ اللَّهُ تَعَالَى : وَإِمَّا يَنْزَغَنَّكَ مِنَ الشَّيْطَانِ نَزْغٌ فَاسْتَعِذْ بِاللَّهِ وَقَالَ تَعَالَى : إِنَّ الَّذِينَ اتَّقَوْا إِذَا مَسَّهُمْ طَـائِفٌ مِنَ الشَّيْطَانِ تَذَكَّرُوا فَإِذَا هُمْ مُبْصِرُونَ . وَقَالَ تَعَالَى : وَالَّذِينَ إِذَا فَعَلُوا فَاحِشَةً أَوْ ظَلَمُوا أَنْفُسَهُمْ ذَكَرُوا اللَّهَ فَاسْتَغْفَرُوا لِذُنُوبِهِمْ وَمَنْ يَغْفِرُ الذُّنُوبَ إِلاَّ اللَّهُ وَلَمْ يُصِرُّوا عَلَى مَا فَعَلُوا وَهُمْ يَعْلَمُونَ أُولَئِكَ جَزَاؤُهُمْ مَغْفِرَةٌ مِنْ رَبِّهِمْ وَجَنَّاتٌ تَجْرِي مِنْ تَحْتِهَا الأَنْهَارُ خَالِدِينَ فِيهَا وَنِعْمَ أَجْرُ الْعَامِلِينَ . وَقَالَ تَعَالَى : وَتُوبُوا إِلَى اللَّهِ جَمِيعًا أَيُّهَا الْمُؤْمِنُونَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *ஷைத்தானிடமிருந்து உமக்கு தீங்கு ஏற்பட்டால், அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவீராக! (41:36)*

*அல்லாஹ்வை அஞ்சுகின்ற அவர்களுக்கு, ஷைத்தானின் தீங்கு ஏற்பட்டு விட்டால், அவர்கள் அல்லாஹ்வை நினைவுகூர்வார்கள். அப்போது அவர்கள் தெளிவு பெற்றவர்களாவார்கள். (7:201)*

*இன்னும் அவர்கள் தவறான செயலைச் செய்துவிட்டால் அல்லது தங்க ளுக்கு அநீதம் செய்து கொண்டால், அல்லாஹ்வை நினைவுகூர்வார்கள். தங்களின் குற்றத்திற்காக பாவமன்னிப்பு கோருவார்கள். அல்லாஹ்வைத் தவிர அவர்களின் குற்றங்களை மன்னிப்பவன் யார் என்பதை அவர்கள் அறிந்து கொண்டே, தாங்கள் செய்பவற்றில் தொடர்ந்து இருக்கமாட்டார்கள். அவர்களுக்கு கூலி அவர்களின் இறைவனிடமிருந்து உள்ள மன்னிப்பாகும். மேலும் சொர்க்கம் உண்டு. அதனூடே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அதிலே அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள். (நல்லது) செய்வோரின் கூலியில் இது நல்லதாக உள்ளது. (3:135,136)*

*இறை நம்பிக்கையாளர்களே! நீங்கள் வெற்றி பெறுவதற்காக, நீங்கள் அனைவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள். (24:31)*

١٨٠٧ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ حَلَفَ فَقَالَ فِي حَلِفِهِ بِاللاَّتِ وَالْعُزَّى فَلْيَقُلْ : لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَمَنْ قَالَ لِصَاحِبِهِ : تَعَالَ أُقَامِرْكَ فَلْيَتَصَدَّقْ " . مُتَّفَقٌ عَلَيْهِ

**1807** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒருவர் சத்தியம் செய்யும் போது தன் சத்தியத்தில், "லாத் - உஸ்ஸாவின் மீது சத்தியமாக!" என்று கூறிவிட்டால், உடனே அவர் (அதனை விட்டு நீங்கும் வகையில்), "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று கூறட்டும்! ஒருவர் தன் தோழரிடம், "வா! உன்னுடன் சூதாட்டம் விளையாடுகிறேன்" என்று கூறினால், அவர் (இப்படிக் கூறியதற்காக) தர்மம் செய்யட்டும்!" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:4860. முஸ்லிம்:1647)**

## பல்வேறு சுவையான செய்திகள்

## ٣٧. - باب أحاديث الدّجال وأشراط الساعة وغيرها

**பாடம் : 370 - தஜ்ஜால் பற்றிய ஹதீஸ்கள், மறுமை நாளின் அடையாளங்கள் மற்றும் இதர செய்திகள்.**

١٨٠٨ - عَنْ النَّوَّاسِ بْنِ سَمْعَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : ذَكَرَ رَسُولُ اللَّه ﷺ الدَّجَّالَ ذَاتَ غَدَاة فَخَفَّضَ فيه وَرَفَّعَ حَتَّى ظَنَنَّاهُ فِي طَائِفَةِ النَّخْلِ فَلَمَّا رُحْنَا إِلَيْه عَرَفَ ذَلكَ فينَا فَقَالَ : " مَا شَأْنُكُمْ ؟ " قُلْنَا : يَا رَسُولَ اللَّه ذَكَرْتَ الدَّجَّالَ الْغَدَاةَ فَخَفَّضْتَ فيه وَرَفَّعْتَ حَتَّى ظَنَنَّاهُ فِي طَائِفَةِ النَّخْلِ . فَقَالَ : " غَيْرُ الدَّجَّالِ أَخْوَفُنِي عَلَيْكُمْ : إِنْ يَخْرُجْ وَأَنَا فيكُمْ فَأَنَا حَجِيجُهُ دُونَكُمْ وَإِنْ يَخْرُجْ وَلَسْتُ فيكُمْ فَامْرُؤٌ حَجِيجُ نَفْسه وَاللَّهُ خَليفَتِي عَلَى كُلِّ مُسْلِمٍ . إِنَّهُ شَابٌّ قَطَطٌ عَيْنُهُ طَافيَةٌ كَأَنِّي أُشَبِّهُهُ بِعَبْدِ الْعُزَّى بْنِ قَطَنٍ فَمَنْ أَدْرَكَهُ منْكُمْ فَلْيَقْرَأْ عَلَيْه فَوَاتِحَ سُورَةِ الْكَهْفِ : إِنَّهُ خَارِجٌ خَلَّةً بَيْنَ الشَّامِ وَالْعِرَاقِ فَعَاثَ يَمِينًا وَعَاثَ شِمَالاً ! يَا عبَادَ اللَّه فَاثْبُتُوا " قُلْنَا : يَا رَسُولَ اللَّه وَمَا لُبْثُهُ فِي الأَرْضِ ؟ قَالَ : " أَرْبَعُونَ يَوْمًا : يَوْمٌ كَسَنَةٍ وَيَوْمٌ كَشَهْرٍ وَيَوْمٌ كَجُمُعَةٍ وَسَائِرُ أَيَّامه كَأَيَّامكُمْ " . قُلْنَا : يَا رَسُولَ اللَّه فَذَلكَ الْيَوْمُ الَّذي كَسَنَةٍ أَتَكْفِينَا فيه صَلاَةُ يَوْمٍ ؟ قَالَ : " لاَ اقْدُرُوا لَهُ قَدْرَهُ " . قُلْنَا : يَا رَسُولَ اللَّه وَمَا إِسْرَاعُهُ فِي الأَرْضِ ؟ قَالَ : " كَالْغَيْثِ اسْتَدْبَرَتْهُ الرِّيحُ فَيَأْتِي عَلَى الْقَوْمِ فَيَدْعُوهُمْ فَيُؤْمِنُونَ بِه وَيَسْتَجِيبُونَ لَهُ فَيَأْمُرُ السَّمَاءَ فَتُمْطِرُ وَالأَرْضَ فَتُنْبِتُ فَتَرُوحُ عَلَيْهِمْ سَارِحَتُهُمْ أَطْوَلَ مَا كَانَتْ ذُرًى وَأَسْبَغَهُ ضُرُوعًا وَأَمَدَّهُ خَوَاصِرَ ثُمَّ يَأْتِي الْقَوْمَ فَيَدْعُوهُمْ فَيَرُدُّونَ عَلَيْه قَوْلَهُ فَيَنْصَرِفُ عَنْهُمْ فَيُصْبِحُونَ مُمْحِلِينَ لَيْسَ بِأَيْدِيهِمْ شَيْءٌ مِنْ أَمْوَالِهِمْ ! وَيَمُرُّ بِالْخَرِبَةِ فَيَقُولُ لَهَا : أَخْرِجِي كُنُوزَك فَتَتْبَعُهُ كُنُوزُهَا كَيَعَاسِيبِ النَّحْلِ ! ثُمَّ يَدْعُو رَجُلاً مُمْتَلئًا شَبَابًا فَيَضْرِبُهُ بِالسَّيْفِ فَيَقْطَعُهُ جَزْلَتَيْنِ رَمْيَةَ الْغَرَضِ ثُمَّ يَدْعُوهُ فَيُقْبِلُ وَيَتَهَلَّلُ وَجْهُهُ يَضْحَكُ فَبَيْنَمَا هُوَ كَذَلكَ إِذْ بَعَثَ اللَّهُ تَعَالَى الْمَسِيحَ ابْنَ مَرْيَمَ ﷺ فَيَنْزِلُ عنْدَ الْمَنَارَةِ الْبَيْضَاءِ شَرْقِيَّ دمَشْقَ بَيْنَ مَهْرُودَتَيْنِ وَاضِعًا كَفَّيْه عَلَى أَجْنِحَةِ مَلَكَيْنِ إِذَا طَأْطَأَ رَأْسَهُ قَطَرَ وَإِذَا رَفَعَهُ تَحَدَّرَ منْهُ جُمَانٌ كَاللُّؤْلُؤِ فَلاَ يَحِلُّ لكَافِرٍ يَجِدُ رِيحَ نَفَسه إِلاَّ مَاتَ وَنَفَسُهُ يَنْتَهِي إِلَى حَيْثُ يَنْتَهِي طَرْفُهُ فَيَطْلُبُهُ حَتَّى يُدْرِكَهُ بِبَابِ لُدٍّ فَيَقْتُلُهُ ثُمَّ يَأْتِي عِيسَى ﷺ قَوْمًا قَدْ عَصَمَهُمُ اللَّهُ منْهُ فَيَمْسَحُ عَنْ وُجُوههِمْ وَيُحَدِّثُهُمْ بِدَرَجَاتِهِمْ فِي الْجَنَّة فَبَيْنَمَا هُوَ كَذَلكَ إِذْ أَوْحَى اللَّهُ تَعَالَى إِلَى عِيسَى ﷺ : أَنِّي قَدْ أَخْرَجْتُ عبَادًا لِي لاَ يَدَانِ لأَحَدٍ بِقِتَالِهِمْ فَحَرِّزْ عبَادِي إِلَى الطُّورِ . وَيَبْعَثُ اللَّهُ يَأْجُوجَ وَمَأْجُوجَ وَهُمْ مِنْ كُلِّ حَدَبٍ يَنْسِلُونَ فَيَمُرُّ أَوَائِلُهُمْ عَلَى بُحَيْرَةِ طَبَرِيَّةَ فَيَشْرَبُونَ مَا فِيهَا وَيَمُرُّ آخِرُهُمْ فَيَقُولُونَ : لَقَدْ كَانَ بِهَذه مَرَّةً مَاءٌ وَيُحْصَرُ نَبِيُّ اللَّه عِيسَى ﷺ وَأَصْحَابُهُ حَتَّى يَكُونَ رَأْسُ الثَّوْرِ لأَحَدِهِمْ خَيْرًا منْ مِائَةِ دِينَارٍ لأَحَدِكُمُ الْيَوْمَ فَيَرْغَبُ نَبِيُّ اللَّه عِيسَى ﷺ وَأَصْحَابُهُ رَضِيَ اللَّهُ عَنْهُمَا إِلَى اللَّه تَعَالَى فَيُرْسِلُ اللَّهُ تَعَالَى عَلَيْهِمُ النَّغَفَ فِي رِقَابِهِمْ فَيُصْبِحُونَ فَرْسَى كَمَوْتِ نَفْسٍ وَاحدَةٍ ثُمَّ يَهْبِطُ نَبِيُّ اللَّه عِيسَى ﷺ وَأَصْحَابُهُ رَضِيَ اللَّهُ عَنْهُمَا إِلَى الأَرْضِ فَلاَ يَجِدُونَ فِي الأَرْضِ مَوْضِعَ شِبْرٍ إِلاَّ مَلأَهُ زَهَمُهُمْ وَنَتْنُهُمْ فَيَرْغَبُ نَبِيُّ اللَّه عِيسَى ﷺ وَأَصْحَابُهُ رَضِيَ اللَّهُ عَنْهُمَا إِلَى اللَّه تَعَالَى فَيُرْسِلُ اللَّهُ تَعَالَى طَيْرًا كَأَعْنَاقِ الْبُخْتِ فَتَحْمِلُهُمْ فَتَطْرَحُهُمْ حَيْثُ شَاءَ اللَّهُ ثُمَّ يُرْسِلُ اللَّهُ عَزَّ وَجَلَّ مَطَرًا لاَ يَكُنُّ منْهُ بَيْتُ مَدَرٍ وَلاَ وَبَرٍ فَيَغْسِلُ الأَرْضَ حَتَّى يَتْرُكَهَا كَالزَّلَقَةِ ثُمَّ يُقَالُ للأَرْضِ : أَنْبِتِي ثَمَرَتَكِ وَرُدِّي بَرَكَتَكِ فَيَوْمَئِذٍ تَأْكُلُ الْعِصَابَةُ منَ الرُّمَّانَة وَيَسْتَظِلُّونَ بِقِحْفِهَا وَيُبَارَكُ فِي الرِّسْلِ حَتَّى إِنَّ اللِّقْحَةَ منَ الإِبِلِ لَتَكْفِي الْفِئَامَ منَ النَّاسِ وَاللِّقْحَةَ منَ الْبَقَرِ لَتَكْفِي الْقَبِيلَةَ منَ النَّاسِ وَاللِّقْحَةَ منَ الْغَنَمِ لَتَكْفِي الْفَخِذَ منَ النَّاسِ : فَبَيْنَمَا هُمْ كَذَلكَ إِذْ بَعَثَ اللَّهُ تَعَالَى رِيحًا طَيِّبَةً فَتَأْخُذُهُمْ تَحْتَ آبَاطِهِمْ فَتَقْبِضُ رُوحَ كُلِّ مُؤْمِنٍ وَكُلِّ مُسْلِمٍ وَيَبْقَى شِرَارُ النَّاسِ يَتَهَارَجُونَ فيهَا تَهَارُجَ الْحُمُرِ فَعَلَيْهِمْ تَقُومُ السَّاعَةُ " . رَوَاهُ مُسْلِمٌ . قَوْلُهُ : " خَلَّةً بَيْنَ الشَّامِ وَالْعِرَاقِ " أَيْ طَرِيقًا بَيْنَهُمَا . وَقَوْلُهُ : " عَاثَ " بِالْعَيْنِ الْمُهْمَلَةِ وَالثَّاءِ الْمُثَلَّثَةِ وَالْعَيْثُ : أَشَدُّ الْفَسَادِ . " وَالذُّرَى " : بِضَمِّ الذَّالِ الْمُعْجَمَةِ وَهُوَ أَعَالِي الأَسْنِمَةِ وَهُوَ جَمْعُ ذُرْوَةٍ بِضَمِّ الذَّالِ وَكَسْرِهَا . " وَالْيَعَاسِيبُ " : ذُكُورُ النَّحْلِ . " وَجَزْلَتَيْنِ " : أَيْ قِطْعَتَيْنِ . " وَالْغَرَضُ " : الْهَدَفُ الَّذِي يُرْمَى إِلَيْهِ بِالنُّشَّابِ

: أَيْ يَرْمِيه رَمْيَةً كَرَمْيَة النُّشَّاب إلَى الْهَدَف . " وَالْمَهْرُودَةُ " بالدَّال الْمُهْمَلَة وَالْمُعْجَمَة وَهيَ الثَّوْبُ الْمَصْبُوغُ . قَوْلُهُ : " لاَ يَدَانَ " : أَيْ لاَ طَاقَةَ . " وَالنَّغَفُ " : دُودٌ . " وَفَرْسَى " : جَمْعُ فَرِيس وَهُوَ الْقَتيلُ . " وَالزَّلَقَةُ " : بفَتْح الزَّاي وَاللاَّم وَالْقَاف . وَرُوِيَ الزُّلْفَةُ بضَمّ الزَّاي وَإسْكَان اللاَّم وَبالْفَاء وَهيَ الْمرْآةُ . " وَالْعصَابَةُ " : الْجَمَاعَةُ . " وَالرِّسْلُ " بكَسْر الرَّاء : اللَّبَنُ . " وَاللِّقْحَةُ " : اللَّبُونُ . " وَالْفِئَامُ " بِكَسْرِ الْفَاءِ وَبَعْدَهَا هَمْزَةٌ : الْجَمَاعَةُ . " وَالْفَخذُ " منْ النَّاسِ : دُونَ الْقَبيلَة.

**1808** நவாஸ் இப்னு ஸம்ஆன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஒரு நாள் காலை தஜ்ஜால் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். பேரீத்தம் மரத்தின் கீற்றில் அவன் ஒளிந்து இருக்கலாம் என நாங்கள் எண்ணும் அளவுக்கு அவனைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் தெளிவாகக் கூறினார்கள். அவர்களிடம் நாங்கள் மாலை நேரத்தில் சென்ற போது, எங்களைப்பற்றி அவர்கள் புரிந்து கொண்டு, "உங்கள் விஷயம் என்ன?" என்று கேட்டார்கள். "இறைத்தூதர் அவர்களே! காலையில் தஜ்ஜாலைப் பற்றி நீங்கள் கூறினீர்கள். அவன் பேரீத்தம் மரக்கீற்றில் மறைந்து இருப்பானோ என அவனை நாங்கள் எண்ணும் அளவுக்கு நீங்கள் தெளிவாகக் கூறினீர்கள்" என்று கூறினோம்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், "தஜ்ஜாலை விட மற்ற விஷயங்களே, உங்களிடம் என்னை மிகவும் பயப்படச் செய்கிறது. உங்களிடையே நான் இருக்கும் போது, அவன் வெளியேறினால் உங்களுக்காக நான் அவனிடம் போரிடுவேன். உங்களிடையே நான் இல்லாத போது அவன் வந்தால், ஒவ்வொருவரும் அவனுக்கு எதிரியே! அல்லாஹ் அனைத்து முஸ்லிம்களுக்கும் எனக்குப் பின் பாதுகாப்பாளனாக உள்ளான்.

நிச்சயமாக! அவன் குட்டை முடியை உடைய வாலிபன். அவனது கண் பிதுங்கி நிற்கும். அப்துல் உஸ்ஸா இப்னு கதன் என்பவர் போல் அவன் இருப்பான். உங்களில் ஒருவர் அவனைச் சந்தித்தால், "கஹ்பு" அத்தியாயத்தின் ஆரம்ப வசனங்களை அவர் ஓதட்டும்!

அவன் சிரியா மற்றும் ஈராக் நாடுகளுக்கிடையே உள்ள பகுதியிலிருந்து வெளியேறுவான். வலது புறத்திலும் குழப்பத்தை ஏற்படுத்துவான். இடது புறத்திலும் குழப்பத்தை ஏற்படுத்துவான். அல்லாஹ்வின் அடியார்களே! நீங்கள் அப்போது உறுதியாக இருங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

"இறைத்தூதர் அவர்களே! பூமியில் அவன் தங்கி இருக்கும் காலம் எவ்வளவு?" என்று கேட்டோம். "நாற்பது நாள். ஒருநாள் ஒரு வருடம் போல் இருக்கும். மற்றொரு நாள் ஒரு மாதம் போல் இருக்கும். மற்றொரு நாள் ஒரு வாரம் போல் இருக்கும் மற்றவை, உங்களின் சாதாரண நாட்கள் போன்றுதான்" என்று கூறினார்கள்.

"இறைத்தூதர் அவர்களே! ஒரு வருடம் போல் உள்ள அந்த நாளில், ஒரு நாளுக்குரிய தொழுகை (தொழுதால்) நமக்குப் போதுமா?" என்று கேட்டோம். "இல்லை. அந்த நாளில் அதன் நேரத்தை நீங்கள் கணக்கிட்டு (த் தொழுது) கொள்ளுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

"இறைத்தூதர் அவர்களே! பூமியில் அவனின் வேகம் எவ்வளவு?" என்று கேட்டோம். "காற்றுத் தள்ளிச் செல்லும் மேகம் போல் (வேகம்) இருக்கும்" என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், "அவன் மக்களிடம் வருவான். அவர்களை (அவன் வழிக்கு) அழைப்பான். அவனை நம்புவார்கள். அவன் கூறுவதை ஏற்பார்கள். வானத்திற்கு அவன் கட்டளையிடுவான். அது மழை பொழியும். பூமிக்குக் கட்டளையிடுவான். அது தாவரங்களை முளைக்கச் செய்யும். அவர்களின் கால்நடைகள் நீண்ட கொம்புகளுடன் பால் மடு கனத்து, வயிறு நிறைந்து கொழுத்து, மாலையில் அவர்களிடம் திரும்பும்.

பின்பு மற்றொரு கூட்டத்தாரிடம் வருவான். அவர்களையும் (தன் வழிக்கு) அழைப்பான். அவனது கருத்தை ஏற்க மாட்டார்கள். அவர்களை விட்டும் அவன் சென்று விடுவான். அவர்கள் தங்கள் சொத்துக்கள் எதுவும் தங்கள் கையில் இல்லாத அளவுக்குப் பஞ்சத்தில் தவிப்பவர்களாக ஆகி விடுவார்கள்.

பின்பு வறண்ட காட்டுக்குச் செல்வான். அதனிடம் "உன் புதையல்களை நீ வெளிப்படுத்து" என்று கூறுவான். பெரிய தேனீயை சிறிய தேனீக்கள் சூழ்ந்து கொள்வது போல, புதையல்கள் அவனைச் சூழ்ந்து கொள்ளும். பின்பு ஒரு வலிமையான வாலிபனை அவன் அழைப்பான். அவனைத் தன் வாளால் வெட்டுவான். ஒரே வெட்டில் இரண்டு துண்டாக அவனைப் பிளப்பான். பின்பு (இறந்த) இளைஞனை அழைப்பான். உடனே அவன் சிரித்த முகத்துடன் எழுந்து வருவான்.

இந்த நிலையில்தான் அல்லாஹ் ஈஸா நபியை அனுப்புவான். திமிஷ்க் நாட்டின் கிழக்குப் பகுதியில் உள்ள வெள்ளை மினாராவில் வண்ண ஆடை அணிந்தவர்களாக, இரண்டு வானவர்களின் இறக்கைகளில் தங்கள் கைகளை வைத்தவர்களாக இறங்குவார்கள். தன் தலையை அவர்கள் சாய்த்தால், வியர்வை கொட்டும். அதை அவர்கள் உயர்த்தினால், முத்துக்கள் போல் அந்த வியர்வை பிரகாசிக்கும். அவர்களின் மூச்சுக் காற்றை நுகரும் எந்த இறை மறுப்பாளரும் இறக்காமல் இருப்பதில்லை. அவர்களின் மூச்சுக்காற்று, அவர்களின் பார்வை படும் தூர அளவுக்கு சென்றடையும்.

ஈஸா நபி, தஜ்ஜாலைத் தேடுவார்கள். இறுதியில் பைத்துல் முகத்தஸ் அருகில் உள்ள "லூத்" என்ற இடத்தில் பிடித்து, அவனைக் கொல்வார்கள்.

தஜ்ஜாலை விட்டும் அல்லாஹ் காப்பாற்றிவிட்ட ஒரு கூட்டத்தாரிடம் அடுத்து ஈஸா நபி வருவார்கள். அவர்களின் முகங்களை தடவி விடுவார்கள். அவர்களிடம் சொர்க்கத்தில் உள்ள அவர்களுக்குரிய தகுதிகளைப் பற்றி ஈஸா நபி கூறுவார்கள். அந்த சமயத்தில் ஈஸாவிடம் அல்லாஹ், "நான் என் அடியார்கள் சிலரை வெளியாக்கி உள்ளேன். அவர்களிடம் யாரும் சண்டை செய்ய முடியாது. எனவே என் அடியார்களை தூர் மலைப்பக்கம் ஒன்று சேர்ப்பீராக!" என்று கூறுவான்.

பின்பு யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரை அல்லாஹ் வெளிப்படுத்துவான். அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் விரைந்து வருவார்கள். அவர்களில் முதல் கூட்டத்தார், "தப்ரிஸ்தான்" எனும் சிறு கடலைக் கடந்து செல்வார்கள். அதில் உள்ள தண்ணீர் முழுவதையும் குடித்து விடுவார்கள். அவர்களின் அடுத்தக் கூட்டத்தினர் வருவர், "இங்கு ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது!" என்று கூறுவார்கள். (அந்த அளவுக்கு வறண்டு போய் கிடக்கும்)

அல்லாஹ்வின் நபியான ஈஸா(அலை) அவர்களும், அவர்களின் தோழர்களும் (ஒரு மலையில்) தடுத்து வைக்கப்பட்டிருப்பார்கள். இன்று உங்களிடம் 100 தீனார் (பொற்காசு) இருப்பதைவிட, அவர்களிடம் ஒருவருக்கு ஒரு மாட்டின் தலை இருப்பது சிறந்ததாக இருக்கும். ஈஸா நபி அவர்களும், அவர்களின் தோழர்களும் அல்லாஹ்விடம் துஆ செய்வார்கள். உடனே அல்லாஹ் அவர்களின் கழுத்துகளில் அமர்ந்து கொத்தும் பறவைகளை அனுப்புவான். அப்போது அவர்கள் ஓர் உயிர் இறப்பது போன்று ஒரே சமயத்தில் அனைவரும் இறந்து விடுவார்கள்.

பின்பு ஈஸா நபியும், அவர்களின் தோழர்களும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள். பூமியில் ஒரு சாண் இடம் கூட மீதமில்லாமல் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தினரின் சடலங்களும், துர்நாற்றமும், பிணவாடையுமே இருக்கும். உடனே ஈஸா நபியும், அவர்களின் தோழர்களும் அல்லாஹ்விடம் துஆச் செய்வார்கள். ஒட்டகத்தின் கழுத்துக்களைப் போல் உள்ள பறவைகளை அல்லாஹ் அனுப்புவான். அவை அவர்களின் உடல்களைச் சுமந்து சென்று, அல்லாஹ் நாடிய இடத்தில் தூக்கி எறிந்து விடும்.

பின்பு அல்லாஹ் மழையைப் பொழியச் செய்வான். எந்த ஒரு வீடும், கூடாரமும் அதிலிருந்து தப்பித்து விட முடியாது. இதனால் கண்ணாடி போல் பூமி ஆகும் வரை மழை சுத்தமாக்கிவிடும். பின்பு பூமியிடம், "உன் விளைச்சல் பொருட்களை வெளிப்படுத்து! உன் பரக்கத்தை மீண்டும் வெளியாக்கு!" என்று கூறப்படும். அன்றைய நாளில் ஒரு கூட்டம் ஒரு மாதுளம் பழத்தை சாப்பிடும். அதன் தோலின் கீழ் மக்கள் இளைப்பாறுவார்கள்.

(அவர்களின்) கால்நடைகளிலும் பரக்கத் செய்யப்படும். ஒரு ஒட்டகத்தின் பால், மனிதர்களில் பெரும் கூட்டம் குடிக்கும் அளவுக்கு இருக்கும். மேலும் ஒரு பசுமாட்டின் பால், மக்களில் ஒரு பிரிவினர் குடிக்கும் அளவுக்கு இருக்கும். ஓர் ஆட்டின் பால் ஒரு குடும்பமே குடிக்கும் அளவுக்கு இருக்கும்.

இது மாதிரியான நிலையில் அல்லாஹ் குளிர்ந்த காற்றை வீசச் செய்வான். அக்காற்று அவர்களின் அக்குள்களுக்குக் கீழ் போய்ச் சேரும். அனைத்து முஸ்லிமான, முஃமினான அடியார்களின் உயிர்கள் அப்போது கைப்பற்றப்படும். மக்களில் கெட்டவர்கள் மட்டுமே இருப்பார்கள். அவர்கள், கழுதைகளைப் போன்று வெட்கமின்றி, தங்களுக்கிடையே சண்டை, சச்சரவு செய்து கொள்வார்கள். (அப்போதுதான்) அவர்களிடம் மறுமை நாள் ஏற்படும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2937)**

١٨٠٩ – وَعَنْ رِبْعِيِّ بْنِ حِرَاشٍ قَالَ : انْطَلَقْت مَعَ أَبِي مَسْعُود الأَنْصَارِيِّ إِلَى حُذَيْفَةَ بْنِ الْيَمَان رَضِيَ اللَّهُ عَنْهُمَا فَقَالَ لَهُ أَبُو مَسْعُود : حَدِّثْنِي مَا سَمِعْت مِنْ رَسُول اللَّه ﷺ فِي الدَّجَّالِ قَالَ : " إِنَّ الدَّجَّالَ يَخْرُجُ وَإِنَّ مَعَهُ مَاءً وَنَارًا . فَأَمَّا الَّذِي يَرَاهُ النَّاسُ مَاءً فَنَارٌ تُحْرِقُ . وَأَمَّا الَّذِي يَرَاهُ النَّاسُ نَارًا فَمَاءٌ بَارِدٌ عَذْبٌ . فَمَنْ أَدْرَكَهُ مِنْكُمْ فَلْيَقَعْ فِي الَّذِي يَرَاهُ نَارًا فَإِنَّهُ مَاءٌ عَذْبٌ طَيِّبٌ " . فَقَالَ أَبُو مَسْعُودٍ : وَأَنَا قَدْ سَمِعْته . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1809** ரிப்ஈ இப்னு ஹிராஷ் கூறுகின்றார்கள்:

அபூமஸ்வூது அன்சாரீ (ரழி) அவர்களுடன் நான், ஹுதைபா இப்னுல்யமான் (ரழி) அவர்களிடம் சென்றேன். அவர்களிடம் அபூமஸ்வூது (ரழி) அவர்கள், "தஜ்ஜால் பற்றி நபி (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் கேட்டது பற்றி எனக்குக் கூறுங்கள்" என்று கேட்டார்கள்.

அப்போது, "நிச்சயமாக தஜ்ஜால் வருவான். அவனிடம் தண்ணீரும் நெருப்பும் இருக்கும். அவனிடம் தண்ணீராக மக்கள் காண்பது, சுட்டெரிக்கும் நெருப்பாக இருக்கும். மேலும் அவனிடம் நெருப்பாக மக்கள் காண்பது, சுவையான குளிர்ந்த நீராக இருக்கும். யார் அவனை அடைகிறாரோ, அவனிடம் நெருப்பாக காண்பதையே தேர்ந்தெடுக்கட்டும். ஏனெனில், அது தூய்மையான சுவையான நீராகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன்" என்று ஹுதைபா (ரழி) கூறினார்கள். (இதைக் கேட்ட) அபூமஸ்வூது (ரழி) அவர்கள், "நானும், நபி (ஸல்) அவர்களிடம் இதையே கேட்டேன்" என்று கூறினார்கள். **(புகாரி:3450. முஸ்லிம்:2934,2935)**

١٨١٠ – وَعَنْ عَبْد اللَّه بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّه ﷺ : " يَخْرُجُ الدَّجَّالُ فِي أُمَّتِي فَيَمْكُثُ أَرْبَعِينَ لاَ أَدْرِي : أَرْبَعِينَ يَوْمًا أَوْ أَرْبَعِينَ شَهْرًا أَوْ أَرْبَعِينَ عَامًا فَيَبْعَثُ اللَّهُ تَعَالَى عِيسَى ابْنَ مَرْيَمَ ﷺ فَيَطْلُبُهُ فَيُهْلِكُهُ ثُمَّ يَمْكُثُ النَّاسُ سَبْعَ سِنِينَ لَيْسَ بَيْنَ اثْنَيْنِ عَدَاوَةٌ ثُمَّ يُرْسِلُ اللَّهُ عَزَّ وَجَلَّ رِيحًا بَارِدَةً مِنْ قِبَلِ الشَّامِ فَلاَ يَبْقَى عَلَى وَجْهِ الأَرْضِ أَحَدٌ فِي قَلْبِهِ مِثْقَالُ ذَرَّةٍ مِنْ خَيْرٍ أَوْ إِيمَانٍ إِلاَّ قَبَضَتْهُ حَتَّى لَوْ أَنَّ أَحَدَكُمْ دَخَلَ فِي كَبِدِ جَبَلٍ لَدَخَلَتْهُ عَلَيْهِ حَتَّى تَقْبِضَهُ فَيَبْقَى شِرَارُ النَّاسِ فِي خِفَّةِ الطَّيْرِ وَأَحْلاَمِ السِّبَاعِ لاَ يَعْرِفُونَ مَعْرُوفًا وَلاَ يُنْكِرُونَ مُنْكَرًا فَيَتَمَثَّلُ لَهُمُ الشَّيْطَانُ فَيَقُولُ : أَلاَ تَسْتَجِيبُونَ ؟ فَيَقُولُونَ : فَمَا تَأْمُرُنَا ؟ فَيَأْمُرُهُمْ بِعِبَادَةِ الأَوْثَانِ وَهُمْ فِي ذَلِكَ دَارٌّ رِزْقُهُمْ حَسَنٌ عَيْشُهُمْ ثُمَّ يُنْفَخُ فِي الصُّورِ فَلاَ يَسْمَعُهُ

أَحَدٌ إِلاَّ أَصْغَى لِيتًا وَرَفَعَ لِيتًا وَأَوَّلُ مَنْ يَسْمَعُهُ رَجُلٌ يَلُوطُ حَوْضَ إِبِلِهِ فَيُصْعَقُ وَيُصْعَقُ النَّاسُ حَوْلَهُ ثُمَّ يُرْسِلُ اللَّهُ – أَوْ قَالَ : يُنْزِلُ اللَّهُ – مَطَرًا كَأَنَّهُ الطَّلُّ – أَوْ الظِّلُّ – فَتَنْبُتُ مِنْهُ أَجْسَادُ النَّاسِ ) ثُمَّ يُنْفَخُ فِيهِ أُخْرَى فَإِذَا هُمْ قِيَامٌ يَنْظُرُونَ ( ثُمَّ يُقَالُ : يَا أَيُّهَا النَّاسُ هَلُمَّ إِلَى رَبِّكُمْ ) وَقِفُوهُمْ إِنَّهُمْ مَسْئُولُونَ ( ثُمَّ يُقَالُ : أَخْرِجُوا بَعْثَ النَّارِ فَيُقَالُ : مِنْ كَمْ ؟ فَيُقَالُ : مِنْ كُلِّ أَلْفٍ تِسْعَ مِائَةٍ وَتِسْعَةً وَتِسْعِينَ ؟ فَذَلِكَ يَوْمَ يَجْعَلُ الْوِلْدَانَ شِيبًا وَذَلِكَ يَوْمَ يُكْشَفُ عَنْ سَاقٍ " ! رَوَاهُ مُسْلِمٌ . " اللِّيتُ " : صَفْحَةُ الْعُنُقِ . وَمَعْنَاهُ يَضَعُ صَفْحَةَ عُنُقِهِ وَيَرْفَعُ صَفْحَتَهُ الأُخْرَى .

**1810** அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என்னுடைய சமுதாயத்தில் தஜ்ஜால் தோன்றுவான். நாற்பது காலம் தங்கி இருப்பான். அது நாற்பது நாளா? அல்லது நாற்பது மாதமா? அல்லது நாற்பது வருடமா? என்பதை அறியமாட்டேன். அப்போது அல்லாஹ், நபி ஈஸா இப்னு மர்யம் (அலை) அவர்களை அனுப்புவான். ஈஸா நபி அவர்கள் அவனைத் தேடி அழிப்பார்கள். பின்பு மக்களிடம் ஏழு வருடங்கள் நிம்மதியாக வாழ்வார்கள். இரண்டு பேர்களிடையே பகைமை என்பதே ஏற்படாது.

பின்பு, அல்லாஹ் சிரியா நாட்டிலிருந்து குளிர்ந்த காற்றை அனுப்புவான். அணுவளவு நற்செயலோ அல்லது இறை விசுவாசமோ என தன் உள்ளத்தில் வைத்துள்ள பூமியில் உள்ள எவரையும் அந்தக் காற்று கைப்பற்றாமல் இருக்காது. உங்களில் ஒருவர் மலைப் பொந்துகளினுள் போய் நுழைந்து கொண்டாலும், அவரின் உயிரைக் கைப்பற்ற அந்தக்காற்று அங்கும் நுழையும்.

மக்களில் கெட்டவர்கள் மட்டுமே இருப்பார்கள். பறவைகள் பறந்து திரிவது போலவும், மிருகங்களின் செயல் போலவும் (அவர்களின் செயல்கள்) இருக்கும். நல்லதை அவர்கள் அறிய மாட்டார்கள். கெட்டதை விலக்கவும் மாட்டார்கள். அப்போது அவர்களிடம் ஷைத்தான் தோன்றி, “(நான் கூறுவதை) நீங்கள் ஏற்பீர்களா?” என்று கேட்பான். “நீ எங்களுக்கு ஏவுவது என்ன?” என்று கேட்பார்கள். உடனே அவர்களுக்கு சிலைகளை வணங்கும்படி கட்டளையிடுவான்.

அந்த நேரத்தில் அவர்களுக்கு அவர்களின் உணவு பெருகும். அவர்களின் வாழ்க்கை வளமாக இருக்கும். பின்பு (முதல்) “ஸூர்” ஊதப்படும். தம் தலையை ஒரு பக்கமாகச் சாய்த்து, பின்பு உயர்த்தி அதனைக் கேட்பார்கள். அவர்களில் இதைக் கேட்கும் முதல்நபர் தன் ஒட்டகத்தின் குடிநீர் தொட்டியைச் சுத்தம் செய்பவர்தான். உடனே அவர் இறப்பார். மக்களும் (அவரவர் வேலை செய்து கொண்டிருக்கும் நிலையிலேயே) இறப்பார்கள்.

பின்பு அல்லாஹ் சிறு தூரலை (மழையாக) பொழியச் செய்வான். உடனே அதன்மூலம் மக்களின் உடல்கள் உயிர் பெறும். பின்பு மற்றொரு இரண்டாவது “ஸூர்” ஊதப்படும். அப்போது அவர்கள் எழுந்து நின்று பார்ப்பார்கள். “மனிதர்களே! உங்கள் இறைவனிடம் வாருங்கள்” என்று கூறப்படும். கேள்விகள் கேட்கப்படுபவர்களாக அவர்கள் நிற்பார்கள். பின்பு, “நரகத்திற்குச் செல்ல உள்ள சிலரை வெளியேற்றுங்கள்” என்று கூறப்படும். “எவ்வளவு பேர் வரை” என்று கேட்கப்படும். “ஆயிரத்து தொள்ளாயிரத்து தொண்ணூற்றி ஒன்பது பேர் வரை” என்று கூறப்படும். அந்நாளில் சிறுவர்களும் நரைத்தவர்களாக இருப்பார்கள். அந்நாளில் கெண்டைக் கால்களும் திறக்கப்பட்டிருக்கும் (அந்த அளவுக்கு பயந்து, நடுங்கி நிற்பார்கள்)” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2940)**

١٨١١ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لَيْسَ مِنْ بَلَدٍ إِلاَّ سَيَطَؤُهُ الدَّجَّالُ إِلاَّ مَكَّةَ وَالْمَدِينَةَ . وَلَيْسَ نَقْبٌ مِنْ أَنْقَابِهِمَا إِلاَّ عَلَيْهِ الْمَلاَئِكَةُ صَافِّينَ تَحْرُسُهُمَا فَيَنْزِلُ بِالسَّبْخَةِ فَتَرْجُفُ الْمَدِينَةُ ثَلاَثَ رَجَفَاتٍ يُخْرِجُ اللَّهُ مِنْهَا كُلَّ كَافِرٍ وَمُنَافِقٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1811** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மக்காவையும், மதீனாவையும் தவிர மற்ற ஊர்கள் அனைத்திலும் தஜ்ஜால் நுழையாமல் இருப்பதில்லை. மக்கா, மதீனாவின் வாசல்கள் அனைத்திலும் அவ்வூரைப் பாதுகாக்கும் வானவர்கள் அணிவகுத்து நிற்பார்கள். எனவே அவன் மதீனாவுக்கு அருகில் ஒரு மேட்டுப் பகுதியில் இறங்குவான். பின்னர் மதீனாவில் மூன்று பூகம்பங்கள் ஏற்படும். அதன் மூலமாக அந்த இடத்திலிருந்து இறைமறுப்பாளர், நயவஞ்சகர் என அனைவரையும் அல்லாஹ் வெளியேற்றுவான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ' **(முஸ்லிம்:2943)**

١٨١٢ – وَعَنْهُ ) أَنس ( رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " يَتْبَعُ الدَّجَّالَ مِنْ يَهُودِ أَصْبَهَانَ سَبْعُونَ أَلْفًا عَلَيْهِمُ الطَّيَالِسَةُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1812** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(ஈரானில் உள்ள) இஸ்ஃபஹான் என்ற பகுதியைச் சேர்ந்த 70 ஆயிரம் யூதர்கள், தஜ்ஜாலைப் பின்பற்று வார்கள். அவர்கள் "தய்லஸான்" எனும் பச்சை நிறத்திலான நீண்ட ஆடையை அணிந்திருப்பர்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2944)**

١٨١٣ – وَعَنْ أُمِّ شَرِيكٍ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّهَا سَمِعَتْ النَّبِيَّ ﷺ يَقُولُ : " لَيَنْفِرَنَّ النَّاسُ مِنَ الدَّجَّالِ فِي الْجِبَالِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1813** உம்மு ஷரீக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(தஜ்ஜாலைக் காணும்) மக்கள் அவனை விட்டு மலைகளின் பக்கம் ஓடி ஒளிவார்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(முஸ்லிம்:2945)**

١٨١٤ – وَعَنْ عِمْرَانَ بْنِ حُصَيْنٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " مَا بَيْنَ خَلْقِ آدَمَ إِلَى قِيَامِ السَّاعَةِ أَمْرٌ أَكْبَرُ مِنْ الدَّجَّالِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1814** இம்ரான் இப்னு ஹுஸைன் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதம் (அலை) அவர்களைப் படைத்ததிலிருந்து, மறுமை நாள் ஏற்படுவதற்கும் இடைப்பட்ட நாளில் தஜ்ஜாலின் குழப்பத்தை விட பெரிய குழப்பம் ஏதுமில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(முஸ்லிம்:2946)**

١٨١٥ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ : " يَخْرُجُ الدَّجَّالُ فَيَتَوَجَّهُ قِبَلَهُ رَجُلٌ مِنَ الْمُؤْمِنِينَ فَيَتَلَقَّاهُ الْمَسَالِحُ : مَسَالِحُ الدَّجَّالِ فَيَقُولُونَ لَهُ : إِلَى أَيْنَ تَعْمِدُ ؟ فَيَقُولُ : أَعْمِدُ إِلَى هَذَا الَّذِي خَرَجَ فَيَقُولُونَ لَهُ : أَوَ مَا تُؤْمِنُ بِرَبِّنَا ؟ فَيَقُولُ : مَا بِرَبِّنَا خَفَاءٌ ! فَيَقُولُونَ . اُقْتُلُوهُ . فَيَقُولُ بَعْضُهُمْ لِبَعْضٍ : أَلَيْسَ قَدْ نَهَاكُمْ رَبُّكُمْ أَنْ تَقْتُلُوا أَحَدًا دُونَهُ ؟ فَيَنْطَلِقُونَ بِهِ إِلَى الدَّجَّالِ فَإِذَا رَآهُ الْمُؤْمِنُ قَالَ : يَا أَيُّهَا النَّاسُ إِنَّ هَذَا الدَّجَّالُ الَّذِي ذَكَرَ رَسُولُ اللَّهِ ﷺ ؟ فَيَأْمُرُ الدَّجَّالُ بِهِ فَيُشَبَّحُ فَيَقُولُ : خُذُوهُ وَشُجُّوهُ . فَيُوسَعُ ظَهْرُهُ وَبَطْنُهُ ضَرْبًا ; فَيَقُولُ : أَوَ مَا تُؤْمِنُ بِي ؟ فَيَقُولُ : أَنْتَ الْمَسِيحُ الْكَذَّابُ ! فَيُؤْمَرُ بِهِ فَيُؤْشَرُ بِالْمِنْشَارِ مِنْ مَفْرِقِهِ حَتَّى يُفَرِّقَ بَيْنَ رِجْلَيْهِ . ثُمَّ يَمْشِي الدَّجَّالُ بَيْنَ الْقِطْعَتَيْنِ ثُمَّ يَقُولُ لَهُ : قُمْ فَيَسْتَوِي قَائِمًا ! ثُمَّ يَقُولُ لَهُ : أَتُؤْمِنُ بِي ؟ فَيَقُولُ : مَا ازْدَدْت فِيك إِلَّا بَصِيرَةً . ثُمَّ يَقُولُ : يَا أَيُّهَا النَّاسُ إِنَّهُ لَا يَفْعَلُ بَعْدِي بِأَحَدٍ مِنَ النَّاسِ ! فَيَأْخُذُهُ الدَّجَّالُ لِيَذْبَحَهُ فَيَجْعَلُ اللَّهُ مَا بَيْنَ رَقَبَتِهِ إِلَى تَرْقُوَتِهِ نُحَاسًا فَلَا يَسْتَطِيعُ إِلَيْهِ سَبِيلًا فَيَأْخُذُهُ بِيَدَيْهِ وَرِجْلَيْهِ فَيَقْذِفُ بِهِ فَيَحْسَبُ النَّاسُ أَنَّهُ قَذَفَهُ إِلَى النَّارِ وَإِنَّمَا أُلْقِيَ فِي الْجَنَّةِ ! " فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " هَذَا أَعْظَمُ النَّاسِ شَهَادَةً عِنْدَ رَبِّ الْعَالَمِينَ " . رَوَاهُ مُسْلِمٌ ; وَرَوَى الْبُخَارِيُّ بَعْضَهُ بِمَعْنَاهُ . " الْمَسَالِحُ " : هُمُ الْخُفَرَاءُ وَالطَّلَائِعُ .

**1815** அபூஸயீத் அல் குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"தஜ்ஜால் வருவான். இறைநம்பிக்கையாளர்களில் ஒருவர் அவனை முன்னோக்கி வருவார். அவரை தஜ்ஜாலின் ஆயுதம் தாங்கிய படையினர் இடைமறித்து, "எங்கே வருகிறீர்கள்?" என்று அவரிடம் கேட்பார்கள். "இங்கே வந்துள்ளவனிடம் வந்துள்ளேன்" என அவர் கூறுவார். "எங்களின் இறைவனை (தஜ்ஜாலை) நீ நம்புகிறாயா?" என அவரிடம் கேட்பார்கள். "எங்கள் இறைவன் மறைந்திருப்பவன் அல்லன்" என அவர் கூறுவார். "இவரைக் கொல்லுங்கள்" என அவர்கள் கூறுவார்கள். "உங்களின் இறைவன் (தஜ்ஜால்), தன் அனுமதியின்றி எவரையும் நீங்கள் கொல்லக்கூடாது என உங்களை அவன் தடுக்கவில்லையா?" என அவர்களில் ஒருவர் மற்றவரிடம் கூறுவார். உடனே அவரைத் தஜ்ஜாலிடம் அழைத்துச் செல்வார்கள். அவனைக் கண்டதும் அந்த இறைநம்பிக்கையாளர், "மனிதர்களே! இவன்தான் நபி (ஸல்) அவர்கள் கூறிய தஜ்ஜால்" என்று கூறுவார். அவரை முகங்குப்புற படுக்கவைக்கும்படி தஜ்ஜால் கட்டளையிடுவான்.

"அவரைப் பிடித்து, அவர் தலையில் அடியுங்கள்" என்று தஜ்ஜால் கூறுவான். அவரின் முதுகும் வயிறும் ஒன்றாகும் அளவுக்கு கடுமையாக அடிப்பார்கள். "என்னை (ஈமான்) நம்பிக்கை கொள்கிறாயா?" எனத் தஜ்ஜால் கேட்பான். "நீ ஒரு பொய்யன்" என்று அவர் கூறுவார். ரம்பம் மூலம் அவரை இரு கூறாகப் பிளக்கக் கட்டளையிடப்படும். அவ்வாறே செய்யப்படும். இறுதியில் இரு கால்களையும் பிளக்கப்படும். (அவரின்) இரு துண்டுகளுக்கிடையே தஜ்ஜால் நடப்பான். பின்பு, "நீ எழு!" என்று அவரிடம் கூறுவான். நல்ல நிலையில் எழுந்து நிற்பார். பின்பு, "என்னை நீ நம்புகிறாயா?" என்று அவரிடம் கேட்பான். அதற்கு அவர், "நீ பொய்யன் என்ற என் கருத்து மேலும் வலுவாகி விட்டது" என்று கூறுவார்.

பின்பு அவர், "மனிதர்களே! மனிதர்களில் எவரையும் (இவனால்) எனக்குப்பின் வேதனை செய்யமுடியாது" என்றும் கூறுவார். உடனே தஜ்ஜால் மீண்டும் அவரை அறுப்பதற்காகப் பிடிப்பான். அப்போது அல்லாஹ் அவரின் தலையிலிருந்து, நெஞ்சின் மேற்பகுதியில் உள்ள காரை எலும்புவரை கெட்டியாக ஆக்குவான். அவரிடம் எந்த சக்தியும் பெறாதவனாக தஜ்ஜால் ஆவான். உடனே தஜ்ஜால் அவரின் இருகை, இருகால்களையும் பிடித்து, தூக்கி வீசுவான். அவரை அவன் நரகில் போட்டுவிட்டான் என்று மக்கள் நினைப்பார்கள். (ஆனால்) அவர் போடப்பட்டது, சொர்க்கத்தில் தான்" என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், "அவர்தான், இறைவனிடம் தஜ்ஜால் பற்றிக் கூறும் மக்களில் மிகப் பெரும் சாட்சியாளராக இருப்பார்" என்றும் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2938. இதே கருத்தில் சில புகாரியிலும் (7132) உள்ளது)**

١٨١٦ – وَعَنْ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : مَا سَأَلَ أَحَدٌ رَسُولَ اللَّهِ ﷺ عَنْ الدَّجَّال أَكْثَرَ ممَّا سَأَلْته : وَإِنَّهُ قَالَ لِي : مَا يَضُرُّكَ . قُلْتَ : إِنَّهُمْ يَقُولُونَ : إنَّ مَعَهُ جَبَلَ خُبْزٍ وَنَهْرَ مَاءٍ . قَالَ : هُوَ أَهْوَنُ عَلَى اللَّهِ مِنْ ذَلِكَ . مُتَّفَقٌ عَلَيْه

**1816** முகீரா இப்னு ஷுஅபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் தஜ்ஜால் பற்றி என்னை விட எவரும் அதிகம் கேட்கவில்லை. "அவன் விஷயத்தில் உமக்கு ஏன் இவ்வளவு பாதிப்பு?" என்று என்னிடம் நபி (ஸல்) கேட்டார்கள். "நிச்சயமாக! அவனிடம் ரொட்டி மலையும், ஆற்றுத் தண்ணீரும் இருக்கும்" என மக்கள் பேசிக் கொள் கிறார்களே?" என்று நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். "இவற்றை விட, அவன் அல்லாஹ்விடம் அற்பமானவன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7122. முஸ்லிம்:2939)**

١٨١٧ – وَعَنْ أَنَس رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَا مِنْ نَبِيٍّ إلاَّ وَقَدْ أَنْذَرَ أُمَّتَهُ الأَعْوَرَ الْكَذَّابَ أَلاَ إِنَّهُ أَعْوَرُ وَإِنَّ رَبَّكُمْ عَزَّ وَجَلَّ لَيْسَ بِأَعْوَرَ مَكْتُوبٌ بَيْنَ عَيْنَيْهِ كَ فَ رَ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1817** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“எந்த நபியும் தன் சமுதாயத்தினரிடம் பொய்யனும், ஒற்றைக் கண் உடையவனுமான (தஜ்ஜால்) அவனைப் பற்றி எச்சரிக்காமல் இருந்ததில்லை. அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக! அவன் ஒற்றைக் கண் உடையவன் ஆவான். நிச்சயமாக! உங்களின் இறைவன், ஒற்றைக் கண் உடையவன் இல்லை. தஜ்ஜாலின் இரு கண்களுக்கிடையே ‘காஃபிர்’ என்று எழுதப்பட்டிருக்கும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7131. முஸ்லிம்:2933)**

١٨١٨ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَلاَ أُحَدِّثُكُمْ حَدِيثًا عَنْ الدَّجَّالِ مَا حَدَّثَ بِهِ نَبِيٌّ قَوْمَهُ ؟ إِنَّهُ أَعْوَرُ وَإِنَّهُ يَجِيءُ مَعَهُ بِمِثَالِ الْجَنَّةِ وَالنَّارِ فَالَّتِي يَقُولُ : إِنَّهَا الْجَنَّةُ هِيَ النَّارُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1818** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“தஜ்ஜாலைப் பற்றித் தன் சமுதாயத்தினரிடம் எந்த நபியும் கூறாத ஒரு செய்தியை உங்களுக்கு நான் கூறட்டுமா? அவன் ஒற்றைக் கண் உடையவன். நிச்சயமாக! அவன் தன்னுடன் சொர்க்கம் போன்றதையும், நரகம் போன்றதையும் கொண்டு வருவான். ஆனால், அவன் சொர்க்கம் என்று கூறுவதுதான், நரகமாக இருக்கும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3338. முஸ்லிம்:2936)**

١٨١٩ - وَعَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ ذَكَرَ الدَّجَّالَ بَيْنَ ظَهْرَانَيْ النَّاسِ فَقَالَ : " إِنَّ اللَّهَ لَيْسَ بِأَعْوَرَ أَلاَ إِنَّ الْمَسِيحَ الدَّجَّالَ أَعْوَرُ الْعَيْنِ الْيُمْنَى كَأَنَّ عَيْنَهُ عِنَبَةٌ طَافِيَةٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1819** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்களிடம் தஜ்ஜால் பற்றிக் கூறினார்கள். அப்போது அவர்கள், “நிச்சயமாக! அல்லாஹ் ஒற்றைக் கண் உடையவன் அல்லன். அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக! தஜ்ஜால்தான் வலது கண் பொட்டைக் கண் உடையவன் ஆவான். அவனது கண், திராட்சைப் பழம் போன்று, வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் ” என்று கூறினார்கள். **(புகாரி:7127. முஸ்லிம்:169/100)**

١٨٢٠ - وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " لاَ تَقُومُ السَّاعَةُ حَتَّى يُقَاتِلَ الْمُسْلِمُونَ الْيَهُودَ حَتَّى يَخْتَبِئَ الْيَهُودِيُّ مِنْ وَرَاءِ الْحَجَرِ وَالشَّجَرِ فَيَقُولُ الْحَجَرُ وَالشَّجَرُ : يَا مُسْلِمُ هَذَا يَهُودِيٌّ خَلْفِي تَعَالَ فَاقْتُلْهُ إِلاَّ الْغَرْقَدَ فَإِنَّهُ مِنْ شَجَرِ الْيَهُودِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1820** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“யூதர்களிடம் முஸ்லிம்கள் போர் புரியும் வரை மறுமை நாள் ஏற்படாது. அப்போது யூதர்கள் பாறை, மரங்களின் பின்னே ஒளிந்து கொள்வார்கள். அப்போது பாறைகளும், மரங்களும், “முஸ்லிமே! இதோ! என் பின்னே ஒரு யூதன் ஒளிந்து உள்ளான். இங்கு வருவீராக! அவனைக் கொல்வீராக!” என்று கூறும். ஆனால் “ஹர்கத்” என்ற (முள்) மரத்தைத் தவிர. அந்த (முள்) மரம், யூதர் மரமாகும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2926. முஸ்லிம்:2922)**

١٨٢١ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لاَ تَذْهَبُ الدُّنْيَا حَتَّى يَمُرَّ الرَّجُلُ بِالْقَبْرِ فَيَتَمَرَّغَ عَلَيْهِ فَيَقُولَ : يَا لَيْتَنِي مَكَانَ صَاحِبِ هَذَا الْقَبْرِ وَلَيْسَ بِهِ الدِّينُ مَا بِهِ إِلاَّ الْبَلاَءُ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1821** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! ஒரு மனிதன் ஒரு கப்ரு அருகே செல்வான். அதன் மீது படுத்துப் புரள்வான். “இந்தக் ‘கப்ரு’ வாசியாக நான் ஆகி இருக்கக் கூடாதா?”

என்று கூறுவான். இவன் இவ்வாறு கூறுவது (இவனுக்கு ஏற்பட்ட) துன்பம்தானே தவிர, மார்க்கத்திற்காக இல்லை. இந்த நிலை ஏற்படும் வரை உலகம் அழியாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7115. முஸ்லிம்:157/54)**

١٨٢٢ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " لاَ تَقُومُ السَّاعَةُ حَتَّى يَحْسِرَ الْفُرَاتُ عَنْ جَبَلٍ مِنْ ذَهَبٍ يُقْتَتَلُ عَلَيْهِ فَيُقْتَلُ مِنْ كُلِّ مِائَةٍ تِسْعَةٌ وَتِسْعُونَ فَيَقُولُ كُلُّ رَجُلٍ مِنْهُمْ : لَعَلِّي أَنْ أَكُونَ أَنَا أَنْجُو " . وَفِي رِوَايَةٍ : " يُوشِكُ أَنْ يَحْسِرَ الْفُرَاتُ عَنْ كَنْزٍ مِنْ ذَهَبٍ فَمَنْ حَضَرَهُ فَلاَ يَأْخُذْ مِنْهُ شَيْئًا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1822** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(ஈராக்கில் ஓடும் யூப்ரடீஸ் எனும்) ஃபுராத் நதி, தங்கத்திலான மலை ஒன்றை வெளிப்படுத்தும். அதற்காக மக்கள் சண்டையிடுவர். அதில் நூற்றுக்கு தொண்ணூற்றி ஒன்பது பேர் இறப்பார்கள். அவர்களில் ஒவ்வொருவரும், "நான் இதில் ஈடேற்றம் பெற வேண்டுமே?" என்று கூறுவர் என்ற நிலை வரும் வரை மறுமை நாள் ஏற்படாது" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

"தங்கத்திலான புதையலை ஃபுராத் நதி வெளிப்படுத்தும். அப்போது அங்கே இருப்பவர்கள், அதிலிருந்து எதையும் எடுக்க வேண்டாம்" என, மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

**(புகாரி:7119. முஸ்லிம்:2894)**

١٨٢٣ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ ( : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " يَتْرُكُونَ الْمَدِينَةَ عَلَى خَيْرِ مَا كَانَتْ لاَ يَغْشَاهَا إِلاَّ الْعَوَافِي - يُرِيدُ عَوَافِيَ السِّبَاعِ وَالطَّيْرِ - وَآخِرُ مَنْ يُحْشَرُ رَاعِيَانِ مِنْ مُزَيْنَةَ يُرِيدَانِ الْمَدِينَةَ يَنْعِقَانِ بِغَنَمِهِمَا فَيَجِدَانِهَا وُحُوشًا حَتَّى إِذَا بَلَغَا ثَنِيَّةَ الْوَدَاعِ خَرَّا عَلَى وُجُوهِهِمَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1823** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"கியாமத் நாளின் நெருக்கத்தில் மக்கள் நல்ல நிலையில் மதீனாவை விட்டு சென்று விடுவார்கள். விலங்குகளும், பறவைகளுமே தவிர அதில் வேறு யாரும் வசிக்க மாட்டார்கள். இறுதியாக, மதீனாவை நோக்கி, "முஸைனா" கூட்டத்தைச் சேர்ந்த ஆடு மேய்ப்பாளர்களான இருவர் தங்களின் ஆடுகளை மேய்த்தவர்களாக வருவர். அவர்கள் மதீனாவை நெருங்கியதும் தங்களின் ஆடுகளை இருவரும் அழைப்பார்கள். அவைகள் வனவிலங்குகளுடன் சேர்ந்ததாகக் காண்பார்கள். (மதீனாவின் அருகில்) "தனியத்துல் விதாவு" என்ற இடத்தை அடைந்தும் இருவரும் முகங்குப்புற கீழே விழுந்து மரணிப்பார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1874. முஸ்லிம்:1389)**

١٨٢٤ - وَعَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " يَكُونُ خَلِيفَةٌ مِنْ خُلَفَائِكُمْ فِي آخِرِ الزَّمَانِ يَحْثُو الْمَالَ وَلاَ يَعُدُّهُ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1824** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இறுதிக் காலத்தில் உங்களின் அரசர்களில், ஒரு அரசர் செல்வங்களை வாரி வாரி வழங்குபவராக இருப்பார். அவர் அதை எண்ணிப் பார்க்கவும் மாட்டார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2914)**

١٨٢٥ - عَنْ أَبِي مُوسَى الأَشْعَرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " لَيَأْتِيَنَّ عَلَى النَّاسِ زَمَانٌ يَطُوفُ الرَّجُلُ فِيهِ بِالصَّدَقَةِ مِنَ الذَّهَبِ فَلاَ يَجِدُ أَحَدًا يَأْخُذُهَا مِنْهُ ; وَيُرَى الرَّجُلُ الْوَاحِدُ يَتْبَعُهُ أَرْبَعُونَ امْرَأَةً يَلُذْنَ بِهِ مِنْ قِلَّةِ الرِّجَالِ وَكَثْرَةِ النِّسَاءِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1825** அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக! மக்களின் மீது ஒரு காலம் வரும். அப்பொழுது ஒரு மனிதர் தங்கத்திலான தர்மப்பொருளை எடுத்துக் கொண்டு வருவார். ஆனால் தர்மத்தை வாங்கிக் கொள்ள ஒருவரும் முன் வரமாட்டார்கள். (அந்த அளவுக்கு அனைவரிடமும் செல்வம் இருக்கும்) ஆண்கள் குறைந்து, பெண்கள் அதிகமாக இருக்கும் காரணத்தால் ஒரு ஆணை 40 பெண்கள் (இன்ப வெறியுடன்) பின் தொடர்வார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:1012)**

١٨٢٦ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " اشْتَرَى رَجُلٌ مِنْ رَجُلٍ عَقَارًا فَوَجَدَ الَّذِي اشْتَرَى الْعَقَارَ فِي عَقَارِهِ جَرَّةً فِيهَا ذَهَبٌ فَقَالَ لَهُ الَّذِي اشْتَرَى الْعَقَارَ : خُذْ ذَهَبَكَ إِنَّمَا اشْتَرَيْتُ مِنْكَ الأَرْضَ وَلَمْ أَشْتَرِ الذَّهَبَ ; وَقَالَ الَّذِي لَهُ الأَرْضُ : إِنَّمَا بِعْتُكَ الأَرْضَ وَمَا فِيهَا ; فَتَحَاكَمَا إِلَى رَجُلٍ فَقَالَ الَّذِي تَحَاكَمَا إِلَيْهِ : أَلَكُمَا وَلَدٌ ؟ قَالَ أَحَدُهُمَا : لِي غُلاَمٌ وَقَالَ الآخَرُ : لِي جَارِيَةٌ . قَالَ : أَنْكِحَا الْغُلاَمَ الْجَارِيَةَ وَأَنْفِقَا عَلَى أَنْفُسِهِمَا مِنْهُ وَتَصَدَّقَا " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1826** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(முன் காலத்தில்) ஒருவர், மற்றொருவரிடம் நிலத்தை விலைக்கு வாங்கினார். நிலத்தை வாங்கியவர் தன் நிலத்தில் தங்கப் புதையலைக் கண்டார். உடனே நிலத்தை வாங்கியவர் (விற்றவரிடம்), “உம் தங்கத்தை எடுத்துக்கொள்! உம்மிடம் நிலத்தைத் தான் வாங்கினேன். தங்கத்தை அல்ல!” என்று கூறினார். நிலத்தை விற்பனை செய்தவர், “நான் உம்மிடம் நிலத்தையும், அதில் உள்ளதையும் சேர்த்தே விற்றேன்!” என்று கூறினார். இருவரும் ஒருவரிடம் வழக்குரைத்தனர். அவர், “உங்கள் இருவருக்கும் பிள்ளைகள் உண்டா?” என்று கேட்டார். ஒருவர், “எனக்கு ஆண் குழந்தை ஒன்று உண்டு” என்றார். மற்றொருவரோ, “எனக்கு ஒரு பெண் குழந்தை உண்டு” என்றார். உடனே நடுவர், “இருவருக்கும் திருமணம் செய்து வையுங்கள். இருவரும் சேர்ந்து செலவு செய்யட்டும்” என்று தீர்ப்பு கூறினார்” என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3472. முஸ்லிம்:1721)**

١٨٢٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " كَانَتْ امْرَأَتَانِ مَعَهُمَا ابْنَاهُمَا جَاءَ الذِّئْبُ فَذَهَبَ بِابْنِ إِحْدَاهُمَا . فَقَالَتْ لِصَاحِبَتِهَا : إِنَّمَا ذَهَبَ بِابْنِكِ وَقَالَتْ الأُخْرَى : إِنَّمَا ذَهَبَ بِابْنِكِ فَتَحَاكَمَا إِلَى دَاوُدَ ﷺ فَقَضَى بِهِ لِلْكُبْرَى فَخَرَجَتَا عَلَى سُلَيْمَانَ بْنِ دَاوُدَ ﷺ فَأَخْبَرَتَاهُ . فَقَالَ : ائْتُونِي بِالسِّكِّينِ أَشُقُّهُ بَيْنَهُمَا . فَقَالَتْ الصُّغْرَى: لاَ تَفْعَلْ رَحِمَكَ اللَّهُ هُوَ ابْنُهَا فَقَضَى بِهِ لِلصُّغْرَى " . مُتَّفَقٌ عَلَيْهِ.

**1827** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(முன் காலத்தில்) இரண்டு பெண்கள் இருந்தனர். அவர்கள் இருவருக்கும் ஆண் குழந்தை இருந்தன. ஓநாய் ஒன்று வந்து, அந்த இரண்டு பெண்களில் ஒருத்தியின் மகனைத் தூக்கிச் சென்று விட்டது. இரண்டு பேரில் ஒருத்தி, “ஓநாய் உன் மகனைத்தான் தூக்கிச் சென்றது” என்றாள். மற்றொரு பெண்ணோ, “உன் மகனைத்தான் தூக்கிச் சென்றது” என்றாள். இருவரும் தாவூத் (அலை) அவர்களிடம் வந்து வழக்குரைத்தார்கள். அந்த வழக்கை விசாரித்த தாவூத் நபி அவர்கள், “அந்த குழந்தை பெரியவளுக்கே உரியது!” என்று தீர்ப்புக் கூறினார்கள்.

பின்னர் இருவரும் தாவூத் (அலை) அவர்களின் மகன் சுலைமான் (அலை) அவர்களிடம் வந்து, இதுபற்றிக் கூறினார்கள். சுலைமான் நபியோ, “ஒரு வாளை என்னிடம் கொண்டு வாருங்கள். (இந்தக் குழந்தையை வெட்டி) இரண்டு பங்காக்கி இவர்களுக்கு பிரித்து கொடுத்து விடுகிறேன்!” என்று கூறினார்கள். உடனே அதில் சிறியவள், “அப்படிச் செய்து விடாதீர்கள். அல்லாஹ் உங்களுக்கு

அருள் புரிவானாக! அவன் அவளின் மகன்தான்'' என்று கூறினாள். அப்போது சுலைமான் (அலை) அவர்கள், "அந்தக் குழந்தை இவ்வாறு கூறிய சிறியவளுக்கே உரியது!'' என்று தீர்ப்பளித்தார்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3427. முஸ்லிம்:1720)**

١٨٢٨ - وَعَنْ مِرْدَاسٍ الأَسْلَمِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " يَذْهَبُ الصَّالِحُونَ الأَوَّلُ فَالأَوَّلُ وَتَبْقَى حُثَالَةٌ كَحُثَالَةِ الشَّعِيرِ - أَوْ التَّمْرِ - لاَ يُبَالِيهِمْ اللَّهُ بَالَةً " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1828** மிர்தாஸ் அல் அஸ்லமீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நல்லவர்களில் ஒருவர் பின் ஒருவராகப் போய்விடுவார்கள் (மரணிப்பார்கள்). தொலிக்கோதுமை, அல்லது பேரீத்தம் பழத்தின் கசடுகள் போல் சிலர் இருப்பார்கள். அல்லாஹ், அவர்களைப் பொருட்படுத்தவே மாட்டான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6434)**

١٨٢٩ - وَعَنْ رِفَاعَةَ بْنِ رَافِعٍ الزُّرَقِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : جَاءَ جِبْرِيلُ إِلَى النَّبِيِّ ﷺ قَالَ : مَا تَعُدُّونَ أَهْلَ بَدْرٍ فِيكُمْ ؟ قَالَ : " مِنْ أَفْضَلِ الْمُسْلِمِينَ " أَوْ كَلِمَةً نَحْوَهَا . قَالَ : " وَكَذَلِكَ مَنْ شَهِدَ بَدْرًا مِنَ الْمَلاَئِكَةِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1829** ரிஃபாஆ இப்னு ராஃபிஃ அஜ்ஜுரகீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம் வந்த ஜிப்ரீல் (அலை) அவர்கள், "உங்களுடன் பத்ருப் போரில் கலந்து கொண்டவர்களைப் பற்றி நீங்கள் கருதுவது என்ன?'' என்று கேட்டார்கள். "முஸ்லிம்களிலேயே மிகச் சிறந்தவர்கள்'' என்றோ அல்லது அது போன்ற வார்த்தையையோ நபி (ஸல்) கூறினார்கள். "இவ்வாறு தான் பத்ருப் போரில் கலந்து கொண்ட வானவர்களும் (சிறப்புப் பெற்றவர்களாவர்)'' என்று ஜிப்ரீல் (அலை) கூறினார்கள். **(புகாரி:3992)**

١٨٣٠ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " إِذَا أَنْزَلَ اللَّهُ تَعَالَى بِقَوْمٍ عَذَابًا أَصَابَ الْعَذَابُ مَنْ كَانَ فِيهِمْ ثُمَّ بُعِثُوا عَلَى أَعْمَالِهِمْ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1830** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ், ஒரு கூட்டத்தாரிடம் வேதனையை இறக்கினால், அவர்களில் உள்ள நல்லோர் உள்பட அனைவரையும் அந்த வேதனை அடையும். பின்பு அவரவர் செயல்களின்படி (மறுமையில்) எழுப்பப்படுவார்கள்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:7108. முஸ்லிம்:2878)**

١٨٣١ - وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ جِذْعٌ يَقُومُ إِلَيْهِ النَّبِيُّ ﷺ يَعْنِي فِي الْخُطْبَةِ ; فَلَمَّا وُضِعَ الْمِنْبَرُ سَمِعْنَا لِلْجِذْعِ مِثْلَ صَوْتِ الْعِشَارِ حَتَّى نَزَلَ النَّبِيُّ ﷺ فَوَضَعَ يَدَهُ عَلَيْهِ فَسَكَنَ ! وَفِي رِوَايَةٍ : فَلَمَّا كَانَ يَوْمُ الْجُمُعَةِ قَعَدَ النَّبِيُّ ﷺ عَلَى الْمِنْبَرِ فَصَاحَتْ النَّخْلَةُ الَّتِي كَانَ يَخْطُبُ عِنْدَهَا حَتَّى كَادَتْ أَنْ تَنْشَقَّ . وَفِي رِوَايَةٍ : فَصَاحَتْ صِيَاحَ الصَّبِيِّ فَنَزَلَ النَّبِيُّ ﷺ حَتَّى أَخَذَهَا فَضَمَّهَا إِلَيْهِ فَجَعَلَتْ تَئِنُّ أَنِينَ الصَّبِيِّ الَّذِي يَسْكُتُ حَتَّى اسْتَقَرَّتْ . قَالَ : " بَكَتْ عَلَى مَا كَانَتْ تَسْمَعُ مِنْ الذِّكْرِ!" رَوَاهُ الْبُخَارِيُّ .

**1831** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உரை நிகழ்த்திட நபி (ஸல்) அவர்கள் ஏறி நிற்க பேரீத்தம் மரப்பலகை இருந்தது. அதை மிம்பரில் வைக்கப்பட்டபோது, பேரீத்தம் மரக்கட்டையிலிருந்து நிறை மாத சினை ஒட்டகையின் சத்தம் போல் கேட்டோம். நபி (ஸல்) அவர்கள் இறங்கி, அதன்மீது கையை வைத்தார்கள். அது அமைதியானது.''

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

“நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று ‘குத்பா’ உரை நிகழ்த்துவதற்காக மிம்பரில் உட்கார்ந்தபோது, அந்தப் பேரீத்தம் மரக்கட்டை முறிந்து விழுவது போல் சப்தமிட்டது”

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

அந்தப் பேரீத்தம் மரக்கட்டை ஒரு குழந்தை சப்தமிடுவது போல் சப்தமிட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள் இறங்கி, அதை எடுத்து, அதை அணைத்துக் கொண்டார்கள். அழுகையை நிறுத்திட நினைக்கும் குழந்தை போன்று அமைதியாக அழுது, பிறகு அப்படியே அமைதியாகி விட்டது. “குத்பா உரையை (திக்ரை)க் கேட்பதற்காக அது அழுதது” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:918, 2095, 3584)**

١٨٣٢ – وَعَنْ أَبِي ثَعْلَبَةَ الْخُشَنِيِّ جُرْثُومِ بْنِ نَاشِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ اللَّهَ تَعَالَى فَرَضَ فَرَائِضَ فَلاَ تُضَيِّعُوهَا وَحَدَّ حُدُودًا فَلاَ تَعْتَدُوهَا وَحَرَّمَ أَشْيَاءَ فَلاَ تَنْتَهِكُوهَا وَسَكَتَ عَنْ أَشْيَاءَ رَحْمَةً لَكُمْ غَيْرَ نِسْيَانٍ فَلاَ تَبْحَثُوا عَنْهَا " . حَدِيثٌ حَسَنٌ . رَوَاهُ الدَّارَقُطْنِيُّ وَغَيْرُهُ .

**1832** அபூதஃலபா அல்ஹுஷனீ ஜுர்சூம் இப்னு நாஷிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ் சில கடமைகளை ஏற்படுத்தி உள்ளான். அதை வீணாக்காதீர்கள். சில சட்டங்களை வகுத்துள்ளான். அதை மீறாதீர்கள். சில செயல்களைத் தடை செய்துள்ளான். அதை நெருங்காதீர்கள். சில விஷயங்கள் பற்றி (எதுவும் கூறாமல்) அமைதியாக உள்ளான். அது, உங்களுக்கு அவனது அருளாக உள்ளது. மாறாக, அவனது மறதியால் அல்ல. எனவே அதைப் பற்றி தர்க்கம் செய்யாதீர்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(தாரகுத்னீ:1/502)**

١٨٣٣ – وَعَنْ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي أَوْفَى رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : غَزَوْنَا مَعَ رَسُولِ اللَّهِ ﷺ سَبْعَ غَزَوَاتٍ نَأْكُلُ الْجَرَادَ . وَفِي رِوَايَةٍ : نَأْكُلُ مَعَهُ الْجَرَادَ . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1833** அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஏழு போர்களில் கலந்து கொண்டோம். அவை அனைத்திலும் நாங்கள் வெட்டுக் கிளியைச் சாப்பிட்டோம்.”

“நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் வெட்டுக்கிளியைச் சாப்பிட்டோம்” என மற்றொரு அறிவிப்பில் உள்ளது.

**(புகாரி:5495. முஸ்லிம்:1952)**

١٨٣٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " لاَ يُلْدَغُ الْمُؤْمِنُ مِنْ جُحْرٍ وَاحِدٍ مَرَّتَيْنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1834** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஓர் இறைநம்பிக்கையாளன், ஒரே பொந்தில் (விஷப்பிராணிகளால்) இரண்டு தடவை தீண்டப்படமாட்டான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6133. முஸ்லிம்:2998)**

١٨٣٥ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ثَلاَثَةٌ لاَ يُكَلِّمُهُمُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ يَنْظُرُ إِلَيْهِمْ وَلاَ يُزَكِّيهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ : رَجُلٌ عَلَى فَضْلِ مَاءٍ بِالْفَلاَةِ يَمْنَعُهُ مِنِ ابْنِ السَّبِيلِ وَرَجُلٌ بَايَعَ رَجُلاً سِلْعَةً بَعْدَ الْعَصْرِ فَحَلَفَ بِاللَّهِ لأَخَذَهَا بِكَذَا وَكَذَا فَصَدَّقَهُ وَهُوَ عَلَى غَيْرِ ذَلِكَ وَرَجُلٌ بَايَعَ إِمَامًا لاَ يُبَايِعُهُ إِلاَّ لِدُنْيَا فَإِنْ أَعْطَاهُ مِنْهَا وَفَى وَإِنْ لَمْ يُعْطِهِ مِنْهَا لَمْ يَفِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1835** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

மூன்று பேர்களிடம் அல்லாஹ் மறுமை நாளில் பேசமாட்டான். அவர்களைப் பார்க்கவும் மாட்டான். அவர்களைத் தூய்மைபடுத்தவும் மாட்டான். அவர்களுக்கு நோவினை தரும் வேதனையும் உண்டு. (மூவரில் ஒருவன்), பாலைவனப்பகுதியில் உள்ளவன். அதிக அளவில் தண்ணீர் வைத்திருந்தும், வழிப்போக்கருக்கு அதை தர மறுத்தவன்.

(இரண்டாமவன்), மாலையில் அஸர் நேரத்திற்குப் பின் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து, இதை இன்ன இன்ன விலைக்கு வாங்கினேன் என்று கூறி, வாங்குவோரை நம்பச் செய்து விற்கிறவன். ஆனால், அவன் அப்படி ஒரு விலைக்கு வாங்கவே இல்லை.

(மூன்றாமவன்), ஒரு தலைவரிடம் (பைஅத்) ஒப்பந்தம் செய்கிறான். உலகத் தேவையைத் தவிர (வேறு நோக்கத்திற்கு) அவன் அவரிடம் ஒப்பந்தம் செய்யவில்லை. அவனுக்கு அவர் எதையேனும் தந்தால், ஒப்பந்தத்தை நிறைவேற்றுகிறான். எதையும் அவர் கொடுக்கவில்லையென்றால், அவன் வாக்குறுதியை நிறைவேற்ற மாட்டான்'' என நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:2369. முஸ்லிம்:108)**

١٨٣٦ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " بَيْنَ النَّفْخَتَيْنِ أَرْبَعُونَ " . قَالُوا : يَا أَبَا هُرَيْرَةَ أَرْبَعُونَ يَوْمًا ؟ قَالَ : أَبَيْت قَالُوا : أَرْبَعُونَ سَنَةً ؟ قَالَ : أَبَيْت . قَالُوا : أَرْبَعُونَ شَهْرًا ؟ قَالَ : أَبَيْت . " وَيَبْلَى كُلُّ شَيْءٍ مِنَ الأنْسَانِ إلاَّ عَجْبُ ذَنَبِه فِيهِ يُرَكَّبُ الْخَلْقُ ثُمَّ يُنْزِلُ اللَّهُ مِنْ السَّمَاءِ مَاءً فَيَنْبُتُونَ كَمَا يَنْبُتُ الْبَقْلُ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1836** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"இரண்டு சூர் ஊதப்படுவதற்கு இடைவெளி, நாற்பது காலமாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். (இதை நான் கூறியதும் என்னிடம், "அபூஹுரைராவே! நாற்பது நாட்களா?'' என்று மக்கள் கேட்டார்கள். "(தெரியாது) அதை மறுக்கிறேன்'' என்று நான் கூறினேன். "நாற்பது வருடங்கள்தானே!'' என்று கேட்டனர். "மறுக்கிறேன்'' என்று கூறினேன். "நாற்பது மாதங்கள் தானே!'' என்று கேட்டனர். "மறுக்கிறேன்'' என்று கூறினேன்.

"மரணித்து விடும் மனிதனின் அனைத்து எலும்புகளும் அழிந்துவிடும். ஆனால் முதுகு தண்டைத் தவிர. அதிலேயே (புதிய) படைப்பை உருவாக்கப்படும். பின்பு அல்லாஹ் வானிலிருந்து மழையை இறக்குவான். அப்போது பூமியில் கீரை முளைப்பதுப் போல் மனிதர்கள் அனைவரும் முளைப்பார்கள்.'' **(புகாரி:4814. முஸ்லிம்:2955)**

١٨٣٧ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : بَيْنَمَا النَّبِيُّ ﷺ فِي مَجْلِسٍ يُحَدِّثُ الْقَوْمَ جَاءَ أَعْرَابِيٌّ فَقَالَ : مَتَى السَّاعَةُ ؟ فَمَضَى رَسُولُ اللَّهِ ﷺ يُحَدِّثُ فَقَالَ بَعْضُ الْقَوْمِ : سَمِعَ مَا قَالَ فَكَرِهَ مَا قَالَ وَقَالَ بَعْضُهُمْ : بَلْ لَمْ يَسْمَعْ حَتَّى إِذَا قَضَى حَدِيثَهُ قَالَ : " أَيْنَ السَّائِلُ عَنْ السَّاعَةِ ؟ " قَالَ : هَا أَنَا يَا رَسُولَ اللَّهِ . قَالَ : " إِذَا ضُيِّعَتْ الأمَانَةُ فَانْتَظِرْ السَّاعَةَ " . قَالَ : كَيْفَ إِضَاعَتُهَا ؟ قَالَ : " إِذَا وُسِّدَ الأمْرُ إِلَى غَيْرِ أَهْلِهِ فَانْتَظِرْ السَّاعَةَ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1837** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மக்களிடம் ஒரு சபையில் பேசிக் கொண்டி ருந்தபோது, ஒரு கிராமவாசி வந்து, "மறுமை நாள் எப்போது வரும்?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் பொருட்படுத்தாமல் பேசிக்கொண்டே இருந்தார்கள். மக்களில் சிலர், "அவர் கூறியதை நபி (ஸல்) அவர்கள் வெறுக்கிறார்கள்'' என்று கூறினர். வேறு சிலரோ, "இவர் கூறியதை அவர்கள் கேட்கவே இல்லை'' என்று கூறினார்கள். இறுதியாகத் தன் பேச்சை முடித்துக் கொண்டு, "மறுமை நாள் பற்றிக் கேட்டவர்

எங்கே?'' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். ''இறைத்தூதர் அவர்களே! அது நான் தான்'' என அவர் கூறினார். ''நம்பிக்கை மோசடி செய்யப்படும்போது, மறுமை நாளை நீர் எதிர்பார்ப்பீராக!'' என்று நபி (ஸல்) கூறினார்கள். ''நம்பிக்கை மோசடி என்பது எப்படி?'' என்று கேட்டார். ''தகுதி இல்லாதவர் களிடம் பொறுப்பு வழங்கப்பட்டால் மறுமை நாளை எதிர்பார்ப்பீராக!'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:59)**

١٨٣٨ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " يُصَلُّونَ لَكُمْ فَإِنْ أَصَابُوا فَلَكُمْ وَإِنْ أَخْطَئُوا فَلَكُمْ وَعَلَيْهِمْ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1838** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''உங்களுக்கு அவர்கள் (தொழுகை நடத்துபவர்) தொழ வைக்கிறார்கள். அதை அவர்கள் சரியாகச் செய்தால் உங்களுக்கும், அவர்களுக்கும் பயன் உண்டு. அவர்கள் தவறாக தொழ வைத்துவிட்டால் உங்களுக்கு பயன் உண்டு. அவர்களுக்கு அது பாதகமாக அமையும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:694)**

١٨٣٩ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ : كُنْتُمْ خَيْرَ أُمَّةٍ أُخْرِجَتْ لِلنَّاسِ قَالَ : خَيْرُ النَّاسِ لِلنَّاسِ يَأْتُونَ بِهِمْ فِي السَّلاَسِلِ فِي أَعْنَاقِهِمْ حَتَّى يَدْخُلُوا فِي الأَسْلاَمِ .

**1839** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''மனிதர்களுக்கு (முன் மாதிரியாக இருக்க) படைக்கப்பட்ட சிறந்த சமுதாயமாக உள்ளீர்கள்'' (அல்குர்ஆன் 3:110) என்ற வசனத்திற்கு விளக்கம், ''போர்க்களத்திலிருந்து (கைது செய்து) கழுத்துகளில் சங்கிலிகள் மாட்டப்பட்ட நிலையில் கைதிகளாக கொண்டு வரப்பட்ட சிலர், அல்லாஹ்வின் அருளால் அவர்கள் இஸ்லாத்தைத் தழுவிடக் காரணமாக உள்ளவர்களே, மனிதர்களில் சிறந்தவர்களாவர்'' என்பதாகும். **(புகாரி:4557)**

١٨٤٠ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " عَجِبَ اللَّهُ عَزَّ وَجَلَّ مِنْ قَوْمٍ يَدْخُلُونَ الْجَنَّةَ فِي السَّلاَسِلِ " . رَوَاهُمَا الْبُخَارِيُّ . مَعْنَاهُ : يُؤْسَرُونَ وَيُقَيَّدُونَ ثُمَّ يُسْلِمُونَ فَيَدْخُلُونَ الْجَنَّةَ .

**1840** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''(போரிலிருந்து) விலங்கிடப்பட்ட நிலையில் இஸ்லாத்தைத் தழுவி, பின்பு இறந்து சொர்க்கத்தில் நுழைந்துவிட்ட சமுதாயத்தினரைக் கண்டு அல்லாஹ் ஆச்சரியமுறுகிறான்'' என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3010)**

١٨٤١ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " أَحَبُّ الْبِلاَدِ إِلَى اللَّهِ مَسَاجِدُهَا . وَأَبْغَضُ الْبِلاَدِ إِلَى اللَّهِ أَسْوَاقُهَا " . رَوَاهُ مُسْلِمٌ .

**1841** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

''அல்லாஹ்விடம் பூமியில் மிகப் பிரியமான இடம், பள்ளிவாசல்களாகும். அல்லாஹ்விடம் பூமியில் மிகவும் கோபத்திற்குரிய இடம் கடைவீதிகளாகும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:671)**

١٨٤٢ – وَعَنْ سَلْمَانَ الْفَارِسِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ – مِنْ قَوْلِه – قَالَ لاَ تَكُونَنَّ – إِنْ اسْتَطَعْت – أَوَّلَ مَنْ يَدْخُلُ السُّوقَ وَلاَ آخرَ مَنْ يَخْرُجُ مِنْهَا فَإِنَّهَا مَعْرَكَةُ الشَّيْطَان وَبِهَا يَنْصِبُ رَايَتَهُ ! رَوَاهُ مُسْلِمٌ . وَرَوَاهُ الْبُرْقَانِيُّ فِي صَحِيحه عَنْ سَلْمَانَ قَالَ : قَالَ رَسُولَ اللَّهِ ﷺ : " لاَ تَكُنْ أَوَّلَ مَنْ يَدْخُلُ السُّوقَ وَلاَ آخرَ مَنْ يَخْرُجُ مِنْهَا : فِيهَا بَاضَ الشَّيْطَانُ وَفَرَّخَ ! " .

**1842** ஸல்மான் ஃபார்ஸீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“கடை(வீதி)யில் நுழையும் முதல் நபராகவும், அதிலிருந்து வெளியேறுவோரில் கடைசி நபராகவும் இருக்க வேண்டாம். நிச்சயமாக! அது ஷைத்தானின் களமாகும். அவன் தன் கொடியை அங்கு நட்டு வைக்கிறான்” **(முஸ்லிம்:2451)**

“கடை(வீதி)யில் நுழையும் முதல் நபராக, அதிலிருந்து வெளியேறும் நபர்களில் கடைசி நபராக நீர் ஆகிவிட வேண்டாம்! ஏனெனில் அங்குதான் ஷைத்தான், முட்டையிட்டு குஞ்சு பொறிக்கிறான்” என்று நபி (ஸல்) கூறினார்கள் என ஸல்மான் பார்ஸி (ரழி) அறிவிக்கின்றார்கள். **(ஸஹீஹ் பர்கானீ)**

١٨٤٣ – وَعَنْ عَاصِمِ الأَحْوَلِ عَنْ عَبْد اللَّه بْنِ سَرْجَس رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَلْتُ لِرَسُول اللَّه ﷺ : يَا رَسُولَ اللَّه غَفَرَ اللَّهُ لَكَ قَالَ : " وَلَكَ " قَالَ عَاصِمٌ : فَقُلْت لَهُ : اسْتَغْفَرَ لَكَ رَسُولُ اللَّه ﷺ ؟ قَالَ : نَعَمْ وَلَكَ ثُمَّ تَلاَ هَذه الآيَةَ : وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَات سُورَةُ مُحَمَّد : الآيَةُ 19 . رَوَاهُ مُسْلِمٌ .

**1843** ஆஸிம் அல்அஹ்வல் கூறுகின்றார்கள்:

“இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!” என்று நபி (ஸல்) அவர்களிடம் அப்துல்லாஹ் இப்னு ஸர்ஜிஸ் (ரழி) அவர்கள் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “உம்மையும் மன்னிப்பானாக!” என்று கூறினார்கள். நான், “நபி (ஸல்) அவர்கள் உங்களுக்கு பாவமன்னிப்புக் கோரினார்களா?” என்று அப்துல்லாஹ் இப்னு ஸர்ஜிஸ் (ரழி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அப்துல்லாஹ் இப்னு ஸர்ஜிஸ் (ரழி) அவர்கள், “ஆமாம்! எனக்கு மட்டுமல்ல. உமக்கும் தான்” என்று கூறிவிட்டு பின்பு, “நபியே! உமது தவறுக்காகவும், இறை நம்பிக்கையுள்ள ஆண்கள், இறை நம்பிக்கையுள்ள பெண்களுக்காகவும் பாவமன்னிப்புக் கோருவீராக! (அல்குர்ஆன்- 47:19)” என்ற வசனத்தை ஓதினார்கள். **(முஸ்லிம்:2346)**

١٨٤٤ – وَعَنْ أَبِي مَسْعُود الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " إِنَّ مِمَّا أَدْرَكَ النَّاسُ مِنْ كَلاَمِ النُّبُوَّة الأُولَى : إِذَا لَمْ تَسْتَحِ فَاصْنَعْ مَا شِئْت " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1844** அபூமஸ்வூது அல்அன்சாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நிச்சயமாக! முந்திய நபிமார்களின் அறிவுரைகளில் ஒன்றாக, “நீ வெட்கம் கொள்வதை விட்டுவிட்டால், விரும்பியதைச் செய்து கொள்!” என்ற அறிவுரை மக்களுக்கு கிடைத்தது” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:5769)**

١٨٤٥ – وَعَنْ ابْنِ مَسْعُود رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ ﷺ : " أَوَّلُ مَا يُقْضَى بَيْنَ النَّاسِ يَوْمَ الْقِيَامَة فِي الدِّمَاء " . مُتَّفَقٌ عَلَيْه .

**1845** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“மறுமை நாளில் மக்களிடையே தீர்ப்புக் கூறப்படும் விஷயங்களில் முதன்மையானது, இரத்தங்களின் விஷயத்தைப் பற்றித்தான்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6884. முஸ்லிம்:1678)**

١٨٤٦ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " خُلِقَتْ الْمَلَائِكَةُ مِنْ نُورٍ وَخُلِقَ الْجَانُّ مِنْ مَارِجٍ مِنْ نَارٍ وَخُلِقَ آدَمُ مِمَّا وُصِفَ لَكُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1846** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“வானவர்கள் ஒளியினால் படைக்கப்பட்டார்கள். நெருப்பின் ஜுுவாலையால் ஜின்கள் படைக்கப் பட்டனர். உங்களிடம் வர்ணிக்கப்பட்ட (மண்) மூலம் ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டார்கள்” என்ற நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2996)**

١٨٤٧ – وَعَنْهَا ( عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ خُلُقُ نَبِيِّ اللَّهِ ﷺ الْقُرْآنَ . رَوَاهُ مُسْلِمٌ فِي جُمْلَةِ حَدِيثٍ طَوِيلٍ.

**1847** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்களின் குணம், குர்ஆனாக இருந்தது.”

**(நீண்ட ஹதீஸில் உள்ள இப்பகுதி முஸ்லிமில் (746) உள்ளது)**

١٨٤٨ – وَعَنْهَا ( عَائِشَةَ ( قَالَتْ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ أَحَبَّ لِقَاءَ اللَّهِ أَحَبَّ اللَّهُ لِقَاءَهُ وَمَنْ كَرِهَ لِقَاءَ اللَّهِ كَرِهَ اللَّهُ لِقَاءَهُ " . قُلْت : يَا رَسُولَ اللَّهِ أَ كَرَاهِيَةُ الْمَوْتِ ؟ فَكُلُّنَا نَكْرَهُ الْمَوْتَ ؛ قَالَ : " لَيْسَ كَذَلِكَ وَلَكِنَّ الْمُؤْمِنَ إِذَا بُشِّرَ بِرَحْمَةِ اللَّهِ وَرِضْوَانِهِ وَجَنَّتِهِ أَحَبَّ لِقَاءَ اللَّهِ فَأَحَبَّ اللَّهُ لِقَاءَهُ ! وَإِنَّ الْكَافِرَ إِذَا بُشِّرَ بِعَذَابِ اللَّهِ وَسُخْطِهِ كَرِهَ لِقَاءَ اللَّهِ وَكَرِهَ اللَّهُ لِقَاءَهُ ! " رَوَاهُ مُسْلِمٌ .

**1848** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அல்லாஹ்வைச் சந்திப்பதை ஒருவன் விரும்பினால், அவனைச் சந்திப்பதற்கு அல்லாஹ்வும் விரும்புகிறான். அல்லாஹ்வைச் சந்திப்பதை ஒருவன் வெறுத்தால், அவனைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்” என்று நபி(ஸல்) கூறினார்கள். “இறைத்தூதர் அவர்களே! மரணத்தை வெறுக்கலாமா? நாங்கள் மரணத்தை வெறுக்கிறோமே!” என்று கேட்டேன். “அது அப்படி அல்ல! எனினும், ஒரு முஃமின் அல்லாஹ்வின் அருள், அவனது திருப்தி அவனது சொர்க்கம் பற்றிச் சுபச் செய்தி கூறப்பட்டால், அல்லாஹ்வின் சந்திப்பை விரும்புகிறான். உடனே அல்லாஹ்வும் அவனைச் சந்திக்க விரும்புகிறான். ஓர் இறை மறுப்பாளன், அல்லாஹ்வின் வேதனை, அவனது கோபம் பற்றி செய்தி கூறப்பட்டால், அல்லாஹ்வைச் சந்திக்க வெறுக்கிறான். அல்லாஹ்வும் அவனைச் சந்திக்க வெறுக்கிறான்” என நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2684)**

١٨٤٩ – وَعَنْ أُمِّ الْمُؤْمِنِينَ صَفِيَّةَ بِنْتِ حُيَيٍّ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ النَّبِيُّ ﷺ مُعْتَكِفًا فَأَتَيْته أَزُورُهُ لَيْلاً فَحَدَّثْته ثُمَّ قُمْت لأَنْقَلِبَ فَقَامَ مَعِي لِيَقْلِبَنِي فَمَرَّ رَجُلاَنِ مِنَ الأَنْصَارِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا فَلَمَّا رَأَيَا النَّبِيَّ ﷺ أَسْرَعَا فَقَالَ ﷺ : " عَلَى رِسْلِكُمَا إِنَّهَا صَفِيَّةُ بِنْتُ حُيَيٍّ " فَقَالاَ : سُبْحَانَ اللَّهِ يَا رَسُولَ اللَّهِ ! فَقَالَ : " إِنَّ الشَّيْطَانَ يَجْرِي مِنْ ابْنِ آدَمَ مَجْرَى الدَّمِ وَإِنِّي خَشِيت أَنْ يَقْذِفَ فِي قُلُوبِكُمْ شَرًّا – أَوْ قَالَ شَيْئًا – " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1849** ஸஃபிய்யா பின்த் ஹுயய் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில்) இஃதிகாஃப் இருந்தார்கள். அவர்களைச் சந்திக்க ஒருநாள் இரவு வந்தேன். அவர்களிடம் பேசிவிட்டு, வீட்டிற்குச் செல்ல எழுந்தேன். என்னை வழி அனுப்பி வைக்க என்னுடன் நபி (ஸல்) அவர்களும் எழுந்தார்கள். அப்போது (மதீனாவாசிகளான) அன்சாரித் தோழர்கள் இருவர் நடந்து சென்றனர். அந்த இருவரும் நபி (ஸல்) அவர்களைப் பார்த்ததும் வேகமாக

நடந்து சென்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் இருவரும் நில்லுங்கள். இவள், (என் மனைவி) ஸபிய்யா பின்த் ஹுயய் தான்" என்று கூறினார்கள். "சுப்ஹானல்லாஹ்! (இறைத்தூதர் அவர்களே! நாங்கள் சந்தேகப்படவில்லையே)" என்று இருவரும் கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், "நிச்சயமாக! ஷைத்தான் ஆதமின் மகனின் (மனிதனின்) ரத்த நரம்புகளில் ஓடுகிறான். உங்கள் இருவரின் உள்ளங்களில் தீய எண்ணத்தை அவன் போட்டு விடக்கூடும் என்று பயப்படுகிறேன்" என்று கூறினார்கள். அல்லது இதே போல் கூறினார்கள். **(புகாரி:2035. முஸ்லிம்:2175)**

١٨٥. - وَعَنْ أَبِي الْفَضْلِ الْعَبَّاسِ بْنِ عَبْدِ الْمُطَّلِبِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : شَهِدْتُ مَعَ رَسُولِ اللَّهِ ﷺ يَوْمَ حُنَيْنٍ فَلَزِمْتُ أَنَا وَأَبُو سُفْيَانَ بْنُ الْحَارِثِ بْنِ عَبْدِ الْمُطَّلِبِ رَسُولَ اللَّهِ ﷺ فَلَمْ نُفَارِقْهُ وَرَسُولُ اللَّهِ ﷺ عَلَى بَغْلَةٍ لَهُ بَيْضَاءَ فَلَمَّا الْتَقَى الْمُسْلِمُونَ وَالْمُشْرِكُونَ وَلَّى الْمُسْلِمُونَ مُدْبِرِينَ فَطَفِقَ رَسُولُ اللَّهِ ﷺ يَرْكُضُ بَغْلَتَهُ قِبَلَ الْكُفَّارِ وَأَنَا آخِذٌ بِلِجَامِ بَغْلَةِ رَسُولِ اللَّهِ ﷺ أَكُفُّهَا إِرَادَةَ أَلاَّ تُسْرِعَ وَأَبُو سُفْيَانَ آخِذٌ بِرِكَابِ رَسُولِ اللَّهِ ﷺ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَيْ عَبَّاسُ نَادِ أَصْحَابَ السَّمُرَةِ " . قَالَ الْعَبَّاسُ : وَكَانَ رَجُلاً صَيِّتًا : فَقُلْتُ بِأَعْلَى صَوْتِي : أَيْنَ أَصْحَابُ السَّمُرَةِ ؟ فَوَاللَّهِ لَكَأَنَّ عَطْفَتَهُمْ حِينَ سَمِعُوا صَوْتِي عَطْفَةُ الْبَقَرِ عَلَى أَوْلاَدِهَا ! فَقَالُوا : يَا لَبَّيْكَ يَا لَبَّيْكَ . فَاقْتَتَلُوا هُمْ وَالْكُفَّارُ وَالدَّعْوَةُ فِي الأَنْصَارِ يَقُولُونَ : يَا مَعْشَرَ الأَنْصَارِ يَا مَعْشَرَ الأَنْصَارِ ثُمَّ قُصِرَتْ الدَّعْوَةُ عَلَى بَنِي الْحَارِثِ بْنِ الْخَزْرَجِ ; فَنَظَرَ رَسُولُ اللَّهِ ﷺ وَهُوَ عَلَى بَغْلَتِهِ كَالْمُتَطَاوِلِ عَلَيْهَا إِلَى قِتَالِهِمْ فَقَالَ : " هَذَا حِينَ حَمِيَ الْوَطِيسُ " . ثُمَّ أَخَذَ رَسُولُ اللَّهِ ﷺ حَصَيَاتٍ فَرَمَى بِهِنَّ وُجُوهَ الْكُفَّارِ ثُمَّ قَالَ : " انْهَزَمُوا وَرَبِّ مُحَمَّدٍ " فَذَهَبْتُ أَنْظُرُ فَإِذَا الْقِتَالُ عَلَى هَيْئَتِهِ فِيمَا أَرَى فَوَاللَّهِ مَا هُوَ إِلاَّ أَنْ رَمَاهُمْ بِحَصَيَاتِهِ فَمَا زِلْتُ أَرَى حَدَّهُمْ كَلِيلاً وَأَمْرَهُمْ مُدْبِرًا . رَوَاهُ مُسْلِمٌ . " الْوَطِيسُ " : التَّنُّورُ . وَمَعْنَاهُ : اشْتَدَّتْ الْحَرْبُ . وَقَوْلُهُ : " حَدَّهُمْ " هُوَ بِالْحَاءِ الْمُهْمَلَةِ : أَيْ بَأْسَهُمْ .

**1850** அபுல் பள்ல் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபு (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஹுனைன் போரில் நபி(ஸல்) அவர்களுடன் நான் கலந்து கொண்டேன். அப்போது நானும், அபூசுப்யான் இப்னு ஹாரிஸ் இப்னு அப்துல் முத்தலிபு அவர்களும் நபி (ஸல்) அவர்களின் அருகில் இருந்தோம். அவர்களை நாங்கள் பிரியவே இல்லை. நபி (ஸல்) அவர்கள் வெள்ளை நிறக் கோவேறு கழுதையின் மீது அமர்ந்திருந்தார்கள்.

முஸ்லிம்களும், இணைவைப்போரும் (போரில்) சந்தித்தபோது, முஸ்லிம்கள் புறமுதுகிட்டு ஓடினார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் தன் கோவேறு கழுதையைத் தட்டி (எதிரிகளான) இறைமறுப்பாளர்களை நோக்கி ஓடினார்கள். நான், நபி (ஸல்) அவர்களின் கோவேறு கழுதையின் கடிவாளத்தைப் பிடித்து அது வேகமாகச் செல்வதைத் தடுத்துக் கொண்டிருந்தேன். அபூசுஃப்யான் அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு(ப்பின்னே அமர்ந்து) சேணையைப் பிடித்து இருந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "அப்பாஸ் அவர்களே! ஸமுரா மரத்தின் கீழ் ஒப்பந்தம் செய்தவர்களை அழைப்பீராக!" என்று கூறினார்கள். நான் பெரும் சப்தம் எழுப்புபவனாக இருந்தேன். உடனே நான் என் உரத்த குரலில், "ஸமுரா ஒப்பந்தக்காரர்கள் எங்கே?" என்று கேட்டேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என் சப்தத்தைக் கேட்டவர்களின் வருகை, பசு தன் கன்றுகளின் சப்தத்தைக் கேட்டதும் ஓடி வருவது போன்றே இருந்தது. "இதோ வந்து விட்டோம். வந்து விட்டோம்" என்று கூறினார்கள்.

அவர்களும், இறை மறுப்பாளர்களும் போரிட்டார்கள். "அன்சாரீக் கூட்டத்தார்களே! அன்சாரீக் கூட்டத்தார்களே!" என்று அன்சாரித் தோழர்களை அழைத்தார்கள். பின்பு ஹாரிஸ் இப்னு கஸ்ரஜ் கூட்டத்தாரை அழைக்கும் நிலை கடைசியாக வந்தது. தன் கோவேறு கழுதையின் மீது அமர்ந்தவர்களாக நபி (ஸல்) அவர்கள், அவர்களின் போரைக் கண்காணித்தார்கள். "போர் உச்சக் கட்டத்திற்கு வந்துவிட்டநேரம் இது!" என்று கூறினார்கள். பின்பு நபி (ஸல்) அவர்கள் பொடிக்கற்களை

எடுத்து, இறை மறுப்பாளர்களின் முகத்தை நோக்கி எறிந்தார்கள். பின்பு, "முஹம்மதின் இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தோற்று விட்டனர்" என்று கூறினார்கள். போர் நிலையை அறிந்து வர நான் சென்றேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக, நபி (ஸல்) அவர்கள் பொடிக்கற்களால் எறிந்தபின், அவர்களின் நிலையில் பலவீனத்தையும், அவர்களின் காரியத்தில் பின்னடைவையும் (போரில் தோல்வி ஏற்பட்டுக் கொண்டிருந்ததையும்) நான் கண்டேன். **(முஸ்லிம்:1775)**

١٨٥١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَيُّهَا النَّاسُ إِنَّ اللَّهَ طَيِّبٌ لاَ يَقْبَلُ إِلاَّ طَيِّبًا وَإِنَّ اللَّهَ أَمَرَ الْمُؤْمِنِينَ بِمَا أَمَرَ بِهِ الْمُرْسَلِينَ فَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الرُّسُلُ كُلُوا مِنَ الطَّيِّبَاتِ وَاعْمَلُوا صَالِحًا وَقَالَ تَعَالَى : يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُلُوا مِنْ طَيِّبَاتِ مَا رَزَقْنَاكُمْ . ثُمَّ ذَكَرَ الرَّجُلُ يُطِيلُ السَّفَرَ أَشْعَثَ أَغْبَرَ يَمُدُّ يَدَيْهِ إِلَى السَّمَاءِ : يَا رَبِّ يَا رَبِّ وَمَطْعَمُهُ حَرَامٌ وَمَشْرَبُهُ حَرَامٌ وَمَلْبَسُهُ حَرَامٌ وَغُذِّيَ بِالْحَرَامِ فَأَنَّى يُسْتَجَابُ لِذَلِكَ " ! رَوَاهُ مُسْلِمٌ .

**1851** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மனிதர்களே! நிச்சயமாக அல்லாஹ் தூய்மையானவன், தூய்மையானதையே அவன் ஒப்புக் கொள்வான். மேலும் அல்லாஹ் தன் தூதர்களுக்கு கட்டளையிட்டதையே முஃமின்களுக்கும் கட்டளையிடுகிறான்" என்று நபி (ஸல்) கூறிவிட்டு (பின்வரும்) வசனங்களை ஓதினார்கள்.

**அல்லாஹ் கூறுகிறான்:** ***தூதர்களே! தூய்மையானவற்றிலிருந்து உண்ணுங்கள். நற்செயல் செய்யுங்கள். (23:51)***

***"இறைவிசுவாசிகளே! உங்களுக்கு நாம் அளித்தவற்றிலிருந்து தூய்மையானவற்றை உண்ணுங்கள்." (2:172)***

பின்பு நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதர் பற்றி கூறினார்கள்:

"ஒருவர் நீண்ட பயணம் மேற்கொள்கிறார். அதனால் புழுதி படிந்தவராகவும், பரட்டைத் தலையுடையவராகவும் உள்ளார். தன் கைகளை வானத்தின் பக்கம் உயர்த்தி, "இறைவா! இறைவா!" என்று கூறுகிறார். அவரது உணவு ஹராமாக உள்ளது. அவரது பானமும் ஹராமாக உள்ளது. ஹராமானதையே ஆடையாகவும் அணிகிறார். பிறகு எப்படி துஆ அவரது ஏற்கப்படும்?" என்று கேட்டார்கள். **(முஸ்லிம்:1015)**

١٨٥٢ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " ثَلاَثَةٌ لاَ يُكَلِّمُهُمْ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ يُزَكِّيهِمْ وَلاَ يَنْظُرُ إِلَيْهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ : شَيْخٌ زَانٍ وَمَلِكٌ كَذَّابٌ وَعَائِلٌ مُسْتَكْبِرٌ " . رَوَاهُ مُسْلِمٌ . " الْعَائِلُ " : الْفَقِيرُ

**1852** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மறுமை நாளில் மூன்று பேர்களிடம் அல்லாஹ் பேசமாட்டான். அவர்களைத் தூய்மைபடுத்தவும் மாட்டான். அவர்களைப் பார்க்கவும் மாட்டான். அவர்களுக்கு நோவினைதரும் வேதனையும் உண்டு. அவர்கள் யாரென்றால், (1) விபச்சாரம் செய்யும் வயோதிகன் (2) பொய் கூறும் அரசன் (3) தற்பெருமை கொள்ளும் ஏழை" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:107)**

١٨٥٣ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " سَيْحَانُ وَجَيْحَانُ وَالْفُرَاتُ وَالنِّيلُ : كُلٌّ مِنْ أَنْهَارِ الْجَنَّةِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1853** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"(சிரியாவில் ஓடும்) 'ஸைஹான்' 'ஜைஹான்' ஆகிய இரு நதிகள், (ஈராக்கில் ஓடும்) 'ஃபுராத்' (யூப்ரடீஸ்) நதி, (எகிப்தில் ஓடும்) 'நைல்' நதி ஆகிய நதிகள் சொர்க்கத்தின் நதிகளாகும்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2839)**

١٨٥٤ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : أَخَذَ رَسُولُ اللَّهِ ﷺ بِيَدِي فَقَالَ : " خَلَقَ اللَّهُ التُّرْبَةَ يَوْمَ السَّبْتِ وَخَلَقَ فِيهَا الْجِبَالَ يَوْمَ الأَحَدِ وَخَلَقَ الشَّجَرَ يَوْمَ الاثْنَيْنِ وَخَلَقَ الْمَكْرُوهَ يَوْمَ الثُّلاثَاءِ وَخَلَقَ النُّورَ يَوْمَ الأَرْبعَاءِ وَبَثَّ فِيهَا الدَّوَابَّ يَوْمَ الْخَمِيسِ وَخَلَقَ آدَمَ ﷺ بَعْدَ الْعَصْرِ مِنْ يَوْمِ الْجُمُعَةِ فِي آخِرِ الْخَلْقِ فِي آخِرِ سَاعَةٍ مِنَ النَّهَارِ فِيمَا بَيْنَ الْعَصْرِ إِلَى اللَّيْلِ " . رَوَاهُ مُسْلِمٌ.

**1854** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ் மண்ணை சனிக்கிழமை படைத்தான். அதில் மலைகளை ஞாயிற்றுக்கிழமை படைத்தான். திங்கள்கிழமை மரத்தைப் படைத்தான். செவ்வாய்க் கிழமை வெறுப்புக்குரியவைகளைப் படைத்தான். புதன்கிழமை ஒளியைப் படைத்தான். வியாழக்கிழமை மிருகங்களை பரவச் செய்தான். வெள்ளிக்கிழமை பகல் நேரத்தின் இறுதியில், அஸர்- மஃரிப் நேரத்தின் இடையே அஸருக்குப்பின் ஆதம் (அலை) அவர்களைப் படைத்தான்" என என் கையைப் பிடித்துக் கொண்டு நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2789)**

١٨٥٥ – وَعَنْ أَبِي سُلَيْمَانَ خَالِدِ بْنِ الْوَلِيدِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : لَقَدْ انْقَطَعَتْ فِي يَدِي يَوْمَ مُؤْتَةَ تِسْعَةُ أَسْيَافٍ فَمَا بَقِيَ فِي يَدِي إلاَّ صَفِيحَةٌ يَمَانِيَّةٌ . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1855** அபூசுலைமான் காலித் இப்னு வலீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"மூத்தா போரில் என் கையில் இருந்த ஒன்பது வாள்களும் உடைந்துவிட்டன. யமன் நாட்டின் ஒரு வாளே தவிர என் கையில் (வேறுவாள்) தங்கவில்லை" **(புகாரி:4265)**

١٨٥٦ – وَعَنْ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " إِذَا حَكَمَ الْحَاكِمُ فَاجْتَهَدَ ثُمَّ أَصَابَ فَلَهُ أَجْرَانِ وَإِذَا حَكَمَ وَاجْتَهَدَ فَأَخْطَأَ فَلَهُ أَجْرٌ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1856** அம்ரு இப்னு ஆஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரு நீதிபதி (தன் முன் உள்ள வழக்கை) ஆராய்ந்து, சரியாக தீர்ப்புக் கூறினால், அவருக்கு இரண்டு நன்மைகள் உண்டு. அவர் உண்மை அறிவதில் நன்கு ஆராய்ந்தும், தவறுதலாகத் தீர்ப்புக் கூறிவிட்டால், அவருக்கு ஒரு நன்மை உண்டு" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன்.

**(புகாரி:7352. முஸ்லிம்:1716)**

١٨٥٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " الْحُمَّى مِنْ فَيْحِ جَهَنَّمَ فَأَبْرِدُوهَا بِالْمَاءِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1857** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"காய்ச்சல் '(ஜஹன்னம்)' நரக நெருப்பின் ஜுவாலையாகும். எனவே, அதை தண்ணீர் மூலம் குளிரச் செய்யுங்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3263. முஸ்லிம்:2210)**

١٨٥٨ – وَعَنْهَا ) عَائِشَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهَا عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " مَنْ مَاتَ وَعَلَيْهِ صَوْمٌ صَامَ عَنْهُ وَلِيُّهُ " . مُتَّفَقٌ عَلَيْهِ . وَالْمُخْتَارُ جَوَازُ الصَّوْمِ عَمَّنْ مَاتَ وَعَلَيْهِ صَوْمٌ لِهَذَا الْحَدِيثِ . وَالْمُرَادُ بِالْوَلِيِّ : الْقَرِيبُ وَارِثًا كَانَ أَوْ غَيْرَ وَارِثٍ .

**1858** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“ஒருவர் மீது நோன்பு கடமையாக உள்ள நிலையில் அவர் இறந்துவிட்டால், அவருக்காக அவரது பொறுப்பாளர் நோன்பு வைக்கட்டும்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:1965. முஸ்லிம்:1147)**

இறந்து விட்டவருக்காக அவர் மீதுள்ள நோன்பின் கடமையை இந்த ஹதீஸ்படி, இவர் நோன்பு வைப்பது கூடும். “பொறுப்பாளர் என்பதன் நோக்கம், “சொத்துக்கு வாரிசாக அல்லது வாரிசு ஆக இயலாத நெருங்கிய உறவினர்” என்பதாகும்.

١٨٥٩ – وَعَنْ عَوْف بْنِ مَالك بْنِ الطُّفَيْلِ أَنَّ عَائشَةَ رَضيَ اللّٰهُ عَنْهَا حَدَّثَتْ أَنَّ عَبْدَ اللّٰه بْنَ الزُّبَيْر رَضيَ اللّٰهُ عَنْهُمَا قَالَ في بَيْع أَوْ عَطَاء أَعْطَتْهُ عَائشَةُ : وَاللّٰه لَتَنْتَهيَنَّ عَائشَةُ أَوْ لأَحْجُرَن عَلَيْهَا . قَالَتْ : أَهُوَ قَالَ هَذَا ؟ قَالُوا : نَعَمْ . قَالَتْ : هُوَ للّٰه عَلَيَّ نَذْرٌ أَلاَّ أُكَلِّمَ ابْنَ الزُّبَيْر أَبَدًا . فَاسْتَشْفَعَ ابْنُ الزُّبَيْر إلَيْهَا حينَ طَالَتْ الْهجْرَةُ فَقَالَتْ : لاَ وَاللّٰه لاَ أَشْفَعُ فيه أَبَدًا وَلاَ أَتَحَنَّثُ إلَى نَذْري . فَلَمَّا طَالَ ذَلكَ عَلَى ابْنِ الزُّبَيْر كَلَّمَ الْمسْوَرَ بْن مَخْرَمَةَ وَعَبْدَ الرَّحْمَنِ بْنَ الأَسْوَد بْنِ عَبْد يَغُوث وَقَالَ لَهُمَا : أُنْشدُكُمَا اللّٰهَ لَمَا أَدْخَلْتُمَاني عَلَى عَائشَةَ رَضيَ اللّٰهُ عَنْهَا فَإنَّهَا لاَ يَحلُّ لَهَا أَنْ تُنْذرَ قَطيعَتي فَأَقْبَلَ به الْمسْوَرُ وَعَبْدُ الرَّحْمَنِ حَتَّى اسْتَأْذَنَا عَلَى عَائشَةَ فَقَالاَ : السَّلاَمُ عَلَيْك وَرَحْمَةُ اللّٰه وَبَرَكَاتُهُ أَنَدْخُلُ ؟ قَالَتْ عَائشَةُ : أُدْخُلُوا . قَالُوا : كُلُّنَا ؟ قَالَتْ : نَعَمْ أُدْخُلُوا كُلُّكُمْ – وَلاَ تَعْلَمُ أَنَّ مَعَهُمَا ابْنَ الزُّبَيْر – فَلَمَّا دَخَلُوا دَخَلَ ابْنُ الزُّبَيْر الْحجَابَ فَاعْتَنَقَ عَائشَةَ رَضيَ اللّٰهُ عَنْهَا وَطَفقَ يُنَاشدُهَا وَيَبْكي وَطَفقَ الْمسْوَرُ وَعَبْدُ الرَّحْمَنِ يُنَاشدَانهَا إلاَّ كَلَّمَتْهُ وَقَبلَتْ منْهُ وَيَقُولاَن : إنَّ النَّبيَّ ﷺ نَهَى عَمَّا قَدْ عَلمْتَ منَ الْهجْرَة ; وَلاَ يَحلُّ لمُسْلم أَنْ يَهْجُرَ أَخَاهُ فَوْقَ ثَلاَث لَيَال فَلَمَّا أَكْثَرُوا عَلَى عَائشَةَ منَ التَّذْكرَة وَالتَّحْريج طَفقَتْ تَذْكُرُهُمَا وَتَبْكي وَتَقُولُ : إنِّي نَذَرْت وَالنَّذْرُ شَديدٌ فَلَمْ يَزَالاَ بهَا حَتَّى كَلَّمَتْ ابْنَ الزُّبَيْر وَأَعْتَقَتْ في نَذْرهَا ذَلكَ أَرْبَعينَ رَقَبَةً وَكَانَتْ تَذْكُرُ نَذْرَهَا بَعْدَ ذَلكَ فَتَبْكي حَتَّى تَبُلَّ دُمُوعُهَا خمَارَهَا . رَوَاهُ الْبُخَاريُّ .

**1859** அவ்ஃபு இப்னு மாலிக் இப்னு துஃபய்ல் (ரஹ்) கூறுகின்றார்கள்:

ஆயிஷா (ரழி) அவர்களின் வியாபாரத்திலோ, கொடுக்கல் வாங்கலிலோ, ஏழைகளுக்கு வழங்குவதிலோ அப்துல்லாஹ் இப்னு சுபைர் (ரழி) அவர்கள் தலையிட்டு, “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஆயிஷா (ரழி) அவர்கள் இவ்வாறு செய்வதை விடட்டும்! அல்லது நானே தடுப்பேன்” என்று கூறினார் என்ற செய்தி ஆயிஷா (ரழி) அவர்களிடம் கூறப்பட்டது. “அவர் இவ்வாறு கூறினாரா?” என்று ஆயிஷா (ரழி) கேட்டார்கள். மக்கள் “ஆம்” என்றனர். “இனி எக்காலமும் இப்னு சுபைருடன் நான் பேச மாட்டேன் என்று அல்லாஹ்வுக்காக நேர்ச்சை செய்து கொள்கிறேன்” என்றும் ஆயிஷா (ரழி) கூறினார்கள்.

அவர்கள் பேசாமல் இருப்பது தொடர்ந்து கொண்டே இருந்தது. (கவலையடைந்த) இப்னு சுபைர் (ரழி) அவர்கள், ஆயிஷா (ரழி) அவர்களிடம் பலரை சிபாரிசு செய்ய அனுப்பினார்கள். ஆனால் ஆயிஷா (ரழி) அவர்கள், “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவர் விஷயத்தில் எக்காலமும் எந்த சிபாரிசையும் நான் ஏற்க மாட்டேன். என் நேர்ச்சையையும் நான் முறிக்க மாட்டேன்” என்று கூறினார்கள்.

இப்னு சுபைர் (ரழி) அவர்கள் மீது இந்த நிலை நீடித்ததால், இப்னு சுபைர் (ரழி) அவர்கள், மிஸ்வர் இப்னு மக்ரமா (ரழி), அப்துர்ரஹ்மான் இப்னு அஸ்வத் இப்னு அப்து யஹூஸ் (ரழி) இருவரிடமும் (இது குறித்து) பேசினார். “ஆயிஷா (ரழி) அவர்களிடம் என்னை நீங்கள் இருவரும் அழைத்துச் செல்ல அல்லாஹ்வை முன்னிலைப்படுத்துகிறேன். என்னைப் புறக்கணித்து அவர்கள் நேர்ச்சை செய்திருப்பது அவர்களுக்குக் கூடாது” என்று கூறினார். உடனே மிஸ்வர் அவர்களும், அப்துர்ரஹ்மான் அவர்களும் அவரை அழைத்துச் சென்று, ஆயிஷா (ரழி) அவர்களிடம் இருவரும்

அனுமதி கேட்டனர். "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு. நாங்கள் உள்ளே வரலாமா?" என்று இருவரும் கேட்டனர். "வாருங்கள்" என்று ஆயிஷா (ரழி) கூறினார்கள். "நாங்கள் அனைவரும் தானே" என்று கேட்டார்கள். "ஆம்! அனைவரும் வாருங்கள்" என்று ஆயிஷா (ரழி) கூறினார்கள். அந்த இருவருடனும் இப்னு சுபைர் இருந்ததை ஆயிஷா (ரழி) அவர்கள் அறியவில்லை.

அவர்கள் உள்ளே நுழைந்தபோது, இப்னு சுபைர் (ரழி) அவர்கள் (ஆயிஷா (ரழி) அவர்கள் இருந்த) மறைவுப் பகுதிக்கு சென்றார்கள். (ஆயிஷா (ரழி) அவர்கள் இப்னு சுபைர் அவர்களுக்கு சிறிய தாயார் ஆவார்கள்)* எனவே, ஆயிஷா (ரழி) அவர்களைக் கட்டி அணைத்து, தான் அவர்களை குறைவாக பேசியது குறித்துக் கூறி அழுதார்கள். இப்னு சுபைரிடம் பேசும்படியும், அவருடைய மன்னிப்பை ஏற்கும்படியும் மிஸ்வர் (ரழி) அவர்களும், அப்துர் ரஹ்மான் (ரழி)அவர்களும் சத்தியம் செய்து ஆயிஷா (ரழி) அவர்களிடம் கூறினார்கள்.

"மூன்று இரவுகளுக்கு (நாட்களுக்கு) மேல் தன் சகோதரனை வெறுத்திருப்பது ஒரு முஸ்லிமுக்கு கூடாதது என்று நபி (ஸல்) அவர்கள் தடை செய்து கூறியதை நீங்கள் அறிந்தது தானே?" என்று இருவரும் கூறினார்கள். நினைவூட்டலையும், குறை கூறுவதையும் ஆயிஷா (ரழி) அவர்களும் (பல விஷயங்களை) இருவரிடம் நினைவுகூர்ந்து அழுதவர்களாக, "நான் இப்னு சுபைருடன் பேசுவதில்லை என நேர்ச்சை செய்துள்ளேன். நேர்ச்சை கடுமையானது" என்று கூறினார்கள். அவர்களிடம் இருவரும் தொடர்ந்து கூறியதும், இறுதியில் ஆயிஷா (ரழி) அவர்கள், இப்னு சுபைரிடம் பேசினார்கள். தன் நேர்ச்சையை முறித்ததற்காக 40 அடிமைகளை விடுதலை செய்தார்கள். அதன் பின் தன் நேர்ச்சையை நினைக்கும் போதெல்லாம், தன் தலை முக்காடு துணி நனையும் அளவுக்கு அழுவார்கள்.

**(புகாரி:6073, 6075)**

١٨٦. – وَعَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ خَرَجَ إِلَى قَتْلَى أُحُد فَصَلَّى عَلَيْهِمْ بَعْدَ ثَمَانِ سِنِينَ كَالْمُوَدِّعِ لِلْأَحْيَاءِ وَالأَمْوَاتِ ثُمَّ طَلَعَ إِلَى الْمِنْبَرِ فَقَالَ : " إِنِّي بَيْنَ أَيْدِيكُمْ فَرَطٌ وَأَنَا شَهِيدٌ عَلَيْكُمْ وَإِنَّ مَوْعِدَكُمْ الْحَوْضُ وَإِنِّي لأَنْظُرُ إِلَيْهِ مِنْ مَقَامِي هَذَا أَلاَ وَإِنِّي لَسْتُ أَخْشَى عَلَيْكُمْ أَنْ تُشْرِكُوا وَلَكِنْ أَخْشَى عَلَيْكُمْ الدُّنْيَا أَنْ تُنَافِسُوهَا " . قَالَ : فَكَانَتْ آخِرَ نَظْرَةٍ نَظَرْتُهَا إِلَى رَسُولِ اللَّه ﷺ . مُتَّفَقٌ عَلَيْه . وَفِي رِوَايَة : " وَلَكِنِّي أَخْشَى عَلَيْكُمْ الدُّنْيَا أَنْ تَنَافَسُوا فِيهَا وَتَقْتَتِلُوا فَتَهْلَكُوا كَمَا هَلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ " . قَالَ عُقْبَة : فَكَانَ آخِرَ مَا رَأَيْت رَسُولَ اللَّه ﷺ عَلَى الْمِنْبَرِ . وَفِي رِوَايَة قَالَ : " إِنِّي فَرَطٌ لَكُمْ وَأَنَا شَهِيدٌ عَلَيْكُمْ وَإِنِّي وَاللَّه لأَنْظُر إِلَى حَوْضِي الآنَ : وَإِنِّي أُعْطِيْت مَفَاتِيح خَزَائِنِ الأَرْضِ . أَوْ مَفَاتِيح الأَرْض وَإِنِّي وَاللَّه مَا أَخَافُ عَلَيْكُمْ أَنْ تُشْرِكُوا بَعْدِي وَلَكِنْ أَخَافَ عَلَيْكُمْ أَنْ تُنَافِسُوا فِيهَا " . وَالْمُرَادُ بِالصَّلاَةِ عَلَى قَتْلَى أُحُد : الدُّعَاءُ لَهُمْ لاَ الصَّلاَةُ الْمَعْرُوفَةُ .

**1860** உக்பா இப்னு ஆமிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் உஹுதுப் போரில் இறந்தோரின் (மண்ணறை) பக்கம் வந்து, எட்டு வருடங்களுக்குப் பின் அவர்களுக்காக துஆச் செய்தார்கள். இது, உயிருடன் இருப்போரையும், இறந்தோரையும் வழியனுப்புவது போன்று இருந்தது. பின்பு மிம்பரில் ஏறிய நபி (ஸல்) அவர்கள், "நான் உங்களுக்கு முன்பு செல்கிறேன். நான் உங்களுக்கு சாட்சியாகவும் உள்ளேன். நிச்சயமாக உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட இடம், "ஹவ்லுல் கவ்தர்" எனும் தண்ணீர்த் தடாகம் ஆகும். இந்த இடத்திலிருந்து நான் அதைப் பார்க்கிறேன். அறிந்து கொள்ளுங்கள்! நீங்கள் இணை வைத்து விடுவீர்கள் என உங்களை நான் பயப்படவில்லை. ஆனால் நீங்கள் உலகில் (பதவி-பணத்திற்கு)

ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொள்வதையே உங்களிடம் நான் பயப்படுகிறேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நபி (ஸல்) அவர்களை நான் பார்த்ததில் (அதுதான்) கடைசிப் பார்வையாக இருந்தது. **(புகாரி:4042, 6426. முஸ்லிம்:2296)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

".... எனினும், உலகில் ஒருவருக்கொருவர் போட்டி போட்டு, போரிட்டு உங்களுக்கு முன் இருந்தோர் அழிந்தது போன்று, நீங்கள் அழிவதையே உங்களிடம் நான் பயப்படுகிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். "மிம்பரில் வைத்து நபி (ஸல்) அவர்களை நான் பார்த்தது அதுதான் கடைசியாகப் பார்த்த பார்வை" என உக்பா கூறுகின்றார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

"நான் உங்களுக்கு முன் செல்கிறேன். நான் உங்களுக்கு சாட்சியாக உள்ளேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் இப்போதும் என் "ஹவ்லுல் கவ்தரை" பார்க்கிறேன். மேலும் நான் பூமியில் உள்ள பொக்கிஷங்களின் சாவிகளை (அல்லது பூமியின் சாவிகளை) கொடுக்கப்பட்டேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனக்குப் பின் நீங்கள் இணைவைத்து விடுவதை உங்களிடம் நான் பயப்படவில்லை. எனினும், அதில் நீங்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொள்வதையே நான் உங்களிடம் பயப்படுகிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**குறிப்பு : உஹுத் போரில் இறந்தோருக்குத் துஆச் செய்தல் என்ற வார்த்தைக்கு "ஸலாத்" என்ற வார்த்தை இடம் பெற்றுள்ளது. இதற்கு "தொழுகை" என்று பொருள் உள்ளது போல், பிரார்த்தனை (துஆ) என்ற பொருளும் உண்டு.**

١٨٦١ – وَعَنْ أَبِي زَيْدٍ عَمْرِو بْنِ أَخْطَبَ الأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : صَلَّى بِنَا رَسُولُ اللَّهِ ﷺ الْفَجْرَ وَصَعِدَ الْمِنْبَرَ فَخَطَبَنَا حَتَّى حَضَرَتِ الظُّهْرُ فَنَزَلَ فَصَلَّى ثُمَّ صَعِدَ الْمِنْبَرَ فَخَطَبَ حَتَّى حَضَرَتِ الْعَصْرُ ثُمَّ نَزَلَ فَصَلَّى ثُمَّ صَعِدَ الْمِنْبَرَ حَتَّى غَرَبَتِ الشَّمْسُ فَأَخْبَرَنَا مَا كَانَ وَمَا هُوَ كَائِنٌ فَأَعْلَمُنَا أَحْفَظُنَا. رَوَاهُ مُسْلِمٌ.

**1861** அபூஸைத் அம்ரு இப்னு அக்தப் அன்ஸாரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் பஜ்ருத்தொழுகை தொழவைத்தார்கள். மிம்பரில் ஏறினார்கள். லுஹர் நேரம் வரும்வரை எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். உடனே இறங்கி, தொழவைத்தார்கள். பின்பு மிம்பரில் ஏறி, அஸர் நேரம் வரும் வரை எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். பின்பு இறங்கி, தொழ வைத்தார்கள். பின்பு மிம்பரில் ஏறி, சூரியன் மறையும் வரை எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். நடந்துவிட்ட, நடக்க உள்ளவற்றை எங்களுக்கு எடுத்துரைத்தார்கள். "எங்களில் பெரும் அறிஞர், எங்களில் இதை மனனம் செய்தவர்தான்" **(முஸ்லிம்:2892)**

١٨٦٢ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : قَالَ النَّبِيُّ ﷺ : " مَنْ نَذَرَ أَنْ يُطِيعَ اللَّهَ فَلْيُطِعْهُ وَمَنْ نَذَرَ أَنْ يَعْصِيَ اللَّهَ فَلاَ يَعْصِهِ " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1862** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுதல் விஷயத்தில் நேர்ச்சை செய்தவர், அவனுக்கு அதை (நிறைவேற்றி)க் கட்டுப்படட்டும்! அல்லாஹ்வுக்கு மாறு செய்வதில் ஒருவர் நேர்ச்சை செய்தால், அவனுக்கு மாறு செய்ய வேண்டாம். (நேர்ச்சையை நிறைவேற்ற வேண்டாம்)" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:6696)**

١٨٦٣ – وَعَنْ أُمِّ شَرِيكٍ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ أَمَرَهَا بِقَتْلِ الأَوْزَاغِ وَقَالَ : " كَانَ يَنْفُخُ عَلَى إِبْرَاهِيمَ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1863** உம்மு ஷரீக் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பல்லிகளைக் கொல்லும்படி நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். பின்பு, "இப்ராஹீம் நபி நெருப்புக் குண்டத்தில் போடப்பட்டபோது, அது தன் வாயால் (அந்த நெருப்பை) ஊதிவிட்டது" என்றும் கூறினார்கள். **(புகாரி:3307. முஸ்லிம்:2237)**

١٨٦٤ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ قَتَلَ وَزَغَةً فِي أَوَّلِ ضَرْبَةٍ فَلَهُ كَذَا وَكَذَا حَسَنَةً وَمَنْ قَتَلَهَا فِي الضَّرْبَةِ الثَّانِيَةِ فَلَهُ كَذَا وَكَذَا حَسَنَةً دُونَ الأُولَى وَإِنْ قَتَلَهَا فِي الضَّرْبَةِ الثَّالِثَةِ فَلَهُ كَذَا وَكَذَا حَسَنَةً " . وَفِي رِوَايَةٍ : " مَنْ قَتَلَ وَزَغًا فِي أَوَّلِ ضَرْبَةٍ كُتِبَ لَهُ مِئَةُ حَسَنَةٍ وَفِي الثَّانِيَةِ دُونَ ذَلِكَ وَفِي الثَّالِثَةِ دُونَ ذَلِكَ " . رَوَاهُ مُسْلِمٌ . قَالَ أَهْلُ اللُّغَةِ : الْوَزَغُ : الْعِظَامُ مِنْ سَامٍّ أَبْرَصَ .

**1864** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஒரே அடியில் பல்லியை ஒருவர் கொன்றால், அவருக்கு இன்ன, இன்ன நன்மை உண்டு. இரண்டாவது அடியில் அதை ஒருவர் கொன்றால், அவருக்கு இன்ன இன்ன நன்மைகள் முன்பை விடக் குறைவாக உண்டு. மூன்றாவது அடியில் அதைக் கொன்றால் அவருக்கு இன்ன இன்ன நன்மைகள் உண்டு" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

"முதல் அடியில் பல்லியை ஒருவர் கொன்றால், அவருக்கு 100 நன்மை எழுதப்படும். இரண்டாவது அடியில் கொன்றால், அதற்கும் குறைவான நன்மையும், மூன்றாவது அடியில் கொன்றால் அதற்கும் குறைவாகவும் எழுதப்படும்." **(முஸ்லிம்:2240)**

١٨٦٥ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " قَالَ رَجُلٌ : لأَتَصَدَّقَنَّ بِصَدَقَةٍ فَخَرَجَ بِصَدَقَتِهِ فَوَضَعَهَا فِي يَدِ سَارِقٍ فَأَصْبَحُوا يَتَحَدَّثُونَ : تُصُدِّقَ اللَّيْلَةَ عَلَى سَارِقٍ ! فَقَالَ : اللَّهُمَّ لَكَ الْحَمْدُ لأَتَصَدَّقَنَّ بِصَدَقَةٍ فَخَرَجَ بِصَدَقَتِهِ فَوَضَعَهَا فِي يَدِ زَانِيَةٍ ; فَأَصْبَحُوا يَتَحَدَّثُونَ : تُصُدِّقَ اللَّيْلَةَ عَلَى زَانِيَةٍ ! فَقَالَ : اللَّهُمَّ لَكَ الْحَمْدُ عَلَى زَانِيَةٍ ! لأَتَصَدَّقَنَّ بِصَدَقَةٍ فَخَرَجَ بِصَدَقَتِهِ فَوَضَعَهَا فِي يَدِ غَنِيٍّ فَأَصْبَحُوا يَتَحَدَّثُونَ : تُصُدِّقَ اللَّيْلَةَ عَلَى غَنِيٍّ ؟ فَقَالَ : اللَّهُمَّ لَكَ الْحَمْدُ عَلَى سَارِقٍ وَعَلَى زَانِيَةٍ وَعَلَى غَنِيٍّ ! ! فَأُتِيَ فَقِيلَ لَهُ : أَمَّا صَدَقَتُكَ عَلَى سَارِقٍ فَلَعَلَّهُ أَنْ يَسْتَعِفَّ عَنْ سَرِقَتِهِ وَأَمَّا الزَّانِيَةُ فَلَعَلَّهَا تَسْتَعِفُّ عَنْ زِنَاهَا وَأَمَّا الْغَنِيُّ فَلَعَلَّهُ أَنْ يَعْتَبِرَ فَيُنْفِقَ مِمَّا آتَاهُ اللَّهُ " . رَوَاهُ الْبُخَارِيُّ بِلَفْظِهِ وَمُسْلِمٌ بِمَعْنَاهُ .

**1865** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

(முன் காலத்தில்) ஒருவர், "நான் தர்மம் செய்வேன்" என்று கூறி, தர்மப் பொருளுடன் இரவில் வெளியே சென்றார். (தெரியாமல்) அதை ஒரு திருடனின் கையில் கொடுத்து விட்டார். காலையில் எழுந்த மக்கள், "திருடனுக்கு தர்மம் செய்யப்பட்டுள்ளது" என்று பேசிக் கொண்டார்கள். உடனே அவர், "இறைவா! உனக்கே புகழ் அனைத்தும். இன்றும் நான் தர்மம் செய்வேன்" என்று கூறினார்.

அடுத்த நாள் இரவில் தர்மப் பொருளுடன் வெளியே சென்றார். (தெரியாமல்) அதை விபச்சாரியின் கையில் கொடுத்து விட்டார். காலையில் மக்கள், "இரவு விபச்சாரிக்கு தர்மம் வழங்கப்பட்டிருக்கிறது!" என்று பேசிக் கொண்டார்கள். உடனே அவர், "இறைவா! உனக்கே புகழ் அனைத்தும். நான் மீண்டும் தர்மம் செய்வேன்" என்று கூறினார்.

மூன்றாம் நாள் அன்று இரவும் தன் தர்மப் பொருளுடன் வெளியேறினார். (தெரியாமல்) அதை ஒரு பணக்காரனின் கையில் கொடுத்துவிட்டார். காலையில் எழுந்ததும் "பணக்காரருக்கு தர்மம் வழங்கப்பட்டுள்ளது" என்று மக்கள் பேசிக் கொண்டார்கள். உடனே அவர், "இறைவா! உனக்கே புகழ் அனைத்தும். திருடனுக்கும், விபச்சாரிக்கும், பணக்காரனுக்கும் தர்மத்தைக் கொடுத்து விட்டேனே?" என்று கவலையுடன் கூறினார்.

பின்பு (அன்றிரவு) அவர் கனவு கண்டார். அதில், "உம்முடைய தர்மம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருடனுக்கு நீர் தந்த உம் தர்மம், அவன் திருட்டை விட்டும் திருந்திவிடக்கூடும். விபச்சாரியோ, தன் விபச்சாரத்தை விட்டும் திருந்தக்கூடும். பணக்காரரோ, உம்மால் படிப்பினை பெற்று, தனக்கு அல்லாஹ் வழங்கியவற்றிலிருந்து செலவு செய்பவராகக் கூடும்" என்று கூறப்பட்டது.

**(இது புகாரியின் (1421) வாசகமாகும். முஸ்லிமில் (1022) இதன் கருத்து உள்ளது)**

١٨٦٦ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : كُنَّا مَعَ رَسُول اللّه ﷺ فِي دَعْوَة فَرُفِعَ إِلَيْه الذِّرَاعُ وَكَانَتْ تُعْجِبُهُ فَنَهَسَ مِنْهَا نَهْسَةً وَقَالَ : " أَنَا سَيِّدُ النَّاسِ يَوْمَ الْقِيَامَة ! هَلْ تَدْرُونَ ممَّ ذَاكَ ؟ يَجْمَعُ اللّهُ الأَوَّلِينَ وَالآخرِينَ فِي صَعِيد وَاحد فَيَنْظُرُهُمُ النَّاظرُ وَيُسْمِعُهُمْ الدَّاعِي وَتَدْنُو مِنْهُمْ الشَّمْسُ فَيَبْلُغُ النَّاسَ منَ الْغَمِّ وَالْكَرْب مَا لاَ يُطِيقُونَ وَلاَ يَحْتَمِلُونَ فَيَقُولُ النَّاسُ : أَلاَ تَرَوْنَ مَا أَنْتُمْ فيه إِلَى مَا بَلَغَكُمْ ؟ أَلاَ تَنْظُرُونَ مَنْ يَشْفَعُ لَكُمْ إِلَى رَبِّكُمْ ؟ فَيَقُولُ بَعْضُ النَّاسِ لبَعْض : أَبُوكُمْ آدَمُ ; فَيَأْتُونَهُ فَيَقُولُونَ : يَا آدَمُ أَنْتَ أَبُو الْبَشَرِ خَلَقَكَ اللّهُ بيَده وَنَفَخَ فيكَ منْ رُوحه وَأَمَرَ الْمَلاَئكَةَ فَسَجَدُوا لَكَ وَأَسْكَنَكَ الْجَنَّةَ أَلاَ تَشْفَعُ لَنَا إِلَى رَبِّك ؟ أَلاَ تَرَى إِلَى مَا نَحْنُ فيه وَمَا بَلَغَنَا ؟ فَقَالَ : إِنَّ رَبِّي غَضبَ الْيَوْمَ غَضَبًا لَمْ يَغْضَبْ قَبْلَهُ مثْلَهُ وَلاَ يَغْضَبُ بَعْدَهُ مثْلَهُ وَإِنَّهُ نَهَانِي عَنْ الشَّجَرَة فَعَصَيْت : نَفْسِي نَفْسِي نَفْسِي ! اذْهَبُوا إِلَى غَيْرِي : اذْهَبُوا إِلَى نُوح فَيَأْتُونَ نُوحًا فَيَقُولُونَ : يَا نُوحُ أَنْتَ أَوَّلُ الرُّسُلِ إِلَى أَهْلِ الأَرْض وَقَدْ سَمَّاكَ اللّهُ عَبْدًا شَكُورًا أَلاَ تَرَى إِلَى مَا نَحْنُ فيه ؟ أَلاَ تَرَى إِلَى مَا بَلَغَنَا ؟ أَلاَ تَشْفَعُ لَنَا إِلَى رَبِّك ؟ فَيَقُولُ : إِنَّ رَبِّي غَضبَ الْيَوْمَ غَضَبًا لَمْ يَغْضَبْ قَبْلَهُ مثْلَهُ وَلَنْ يَغْضَبَ بَعْدَهُ مثْلَهُ . وَإِنَّهُ قَدْ كَانَتْ لِي دَعْوَةٌ دَعَوْت بِهَا عَلَى قَوْمِي نَفْسِي نَفْسِي نَفْسِي ! اذْهَبُوا إِلَى غَيْرِي اذْهَبُوا إِلَى إِبْرَاهِيمَ فَيَأْتُونَ إِبْرَاهِيمَ فَيَقُولُونَ : يَا إِبْرَاهِيمُ أَنْتَ نَبِيُّ اللّه وَخَليلُهُ منْ أَهْلِ الأَرْضِ اشْفَعْ لَنَا إِلَى رَبِّك أَلاَ تَرَى إِلَى مَا نَحْنُ فيه ؟ فَيَقُولُ لَهُمْ : إِنَّ رَبِّي قَدْ غَضبَ الْيَوْمَ غَضَبًا لَمْ يَغْضَبْ قَبْلَهُ مثْلَهُ وَلَنْ يَغْضَبَ بَعْدَهُ مثْلَهُ وَإِنِّي كُنْت كَذَبْت ثَلاَثَ كَذَبَات ; نَفْسِي نَفْسِي نَفْسِي ! اذْهَبُوا إِلَى غَيْرِي اذْهَبُوا إِلَى مُوسَى فَيَأْتُونَ مُوسَى فَيَقُولُونَ : يَا مُوسَى أَنْتَ رَسُولُ اللّه فَضَّلَكَ اللّهُ برِسَالاَته وَبكَلاَمه عَلَى النَّاسِ اشْفَعْ لَنَا إِلَى رَبِّك أَلاَ تَرَى إِلَى مَا نَحْنُ فيه ؟ فَيَقُولُ : إِنَّ رَبِّي قَدْ غَضبَ الْيَوْمَ غَضَبًا لَمْ يَغْضَبْ قَبْلَهُ مثْلَهُ وَلَنْ يَغْضَبَ بَعْدَهُ مثْلَهُ وَإِنِّي قَدْ قَتَلْت نَفْسًا لَمْ أُومَرْ بقَتْلهَا نَفْسِي نَفْسِي نَفْسِي ! اذْهَبُوا إِلَى غَيْرِي اذْهَبُوا إِلَى عيسَى . فَيَأْتُونَ عيسَى فَيَقُولُونَ : يَا عيسَى أَنْتَ رَسُولُ اللّه وَكَلمَتُهُ أَلْقَاهَا إِلَى مَرْيَمَ وَرُوحٌ منْهُ وَكَلَّمْتَ النَّاسَ فِي الْمَهْد اشْفَعْ لَنَا إِلَى رَبِّك أَلاَ تَرَى إِلَى مَا نَحْنُ فيه ؟ فَيَقُولُ عيسَى : إِنَّ رَبِّي قَدْ غَضبَ الْيَوْمَ غَضَبًا لَمْ يَغْضَبْ قَبْلَهُ مثْلَهُ وَلَنْ يَغْضَبَ بَعْدَهُ مثْلَهُ وَلَمْ يَذْكُرْ ذَنْبًا نَفْسِي نَفْسِي نَفْسِي ! اذْهَبُوا إِلَى غَيْرِي : اذْهَبُوا إِلَى مُحَمَّد ﷺ . وَفِي رِوَايَة : فَيَأْتُونِي فَيَقُولُونَ : يَا مُحَمَّدُ أَنْتَ رَسُولُ اللّه وَخَاتَمُ الأَنْبِيَاء وَقَدْ غَفَرَ اللّهُ لَكَ مَا تَقَدَّمَ منْ ذَنْبك وَمَا تَأَخَّرَ . اشْفَعْ لَنَا إِلَى رَبِّك . أَلاَ تَرَى إِلَى مَا نَحْنُ فيه ؟ فَأَنْطَلقُ فَآتي تَحْتَ الْعَرْشِ فَأَقَعُ سَاجدًا لرَبِّي ثُمَّ يَفْتَحُ اللّهُ عَلَيَّ منْ مَحَامده وَحُسْنِ الثَّنَاء عَلَيْه شَيْئًا لَمْ يَفْتَحْهُ عَلَى أَحَد قَبْلِي . ثُمَّ يُقَالُ : يَا مُحَمَّدُ ارْفَعْ رَأْسَك . سَلْ تُعْطَهْ وَاشْفَعْ تُشَفَّعْ فَأَرْفَعُ رَأْسِي فَأَقُولُ : أُمَّتِي يَا رَبِّ أُمَّتِي يَا رَبِّ أُمَّتِي يَا رَبِّ فَيُقَالُ : يَا مُحَمَّدُ أَدْخلْ منْ أُمَّتك مَنْ لاَ حسَابَ عَلَيْهمْ منَ الْبَاب الأَيْمَنِ منْ أَبْوَاب الْجَنَّة وَهُمْ شُرَكَاءُ النَّاسِ فيمَا سوَى ذَلكَ منَ الأَبْوَاب " . ثُمَّ قَالَ : " وَالَّذِي نَفْسِي بيَده إِنَّ مَا بَيْنَ الْمصْرَاعَيْنِ منْ مَصَارِيعِ الْجَنَّة كَمَا بَيْنَ مَكَّةَ وَهَجَرَ أَوْ كَمَا بَيْنَ مَكَّةَ وَبُصْرَى " . مُتَّفَقٌ عَلَيْه .

**1866** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு விருந்தில் இருந்தோம். அவர்களுக்கு ஆட்டின் முன் சப்பை இறைச்சி தரப்பட்டது. அது அவர்களுக்கு மிகவும் விருப்பமானதாகும். அதை பல்லால் கடித்து சுவைத்துச் சாப்பிட்டார்கள். பின்பு, "மறுமை நாளில் நான் மக்களின் தலைவனாக இருப்பேன். இது எதனால் என்பதை நீங்கள் அறிவீர்களா? முன்பு இறந்தோரையும், இனி இறப்போரையும் ஒரே திடலில் அல்லாஹ் ஒன்று சேர்ப்பான். அவர்களைப் பார்க்க நினைப்பவர் (ஒரே நேரத்தில்) பார்ப்பார். அழைப்பாளர் ஒருவர், அவருடைய அழைப்பின் ஓசையை அனைவருக்கும் கேட்கச் செய்வார். அவர்களை சூரியன் நெருங்கி இருக்கும். மக்கள் தங்களில் இயலாத, தாங்காத கவலையுடனும், சுமையுடனும் இருப்பர்.

அப்போது மக்கள், "உங்களுக்கு ஏற்பட்ட இந்த நிலையை நீங்கள் பார்க்கக்கூடாதா? உங்கள் இறைவனிடம் உங்களுக்காக சிபாரிசு செய்வோர் யார் என்பதை சிந்திக்க மாட்டீர்களா?" என்று கூறுவார்கள். அப்போது மக்களில் சிலர், மற்றவர்களிடம், "உங்களின் தந்தை ஆதம் அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார். ஆதம் (அலை) அவர்களிடம் வருவார்கள். "ஆதம் அவர்களே! நீங்கள்தான், மனித குலத்தின் தந்தை. உங்களை அல்லாஹ் தன் கையால் படைத்தான். உங்களில் தன் ரூஹை (உயிரை) ஊதினான். வானவர்களை (உங்களுக்கு) ஸஜ்தா செய்யக் கட்டளையிட்டான். அவர்களும் உங்களுக்கு "ஸஜ்தா"செய்தார்கள். உங்களைச் சொர்க்கத்தில் குடியிருக்கவைத்தான். உங்கள் இறைவனிடம் எங்களுக்கு சிபாரிசு செய்யக் கூடாதா? எங்களின் நிலையையும், எங்களுக்கு ஏற்பட்டுள்ள (துயரத்)தையும் நீங்கள் பார்க்கவில்லையா?" என்று கூறுவார்கள். அப்போது, "நிச்சயமாக என் இறைவன், இதற்கு முன் இது போல் கோபப்படாத அளவுக்கு கோபம் கொண்டிருக்கிறான். இதன் பின்னும் இப்படிக் கோபம் கொள்ள மாட்டான். ஒரு மரத்திலிருந்து கனியை (உண்ண) எனக்குத் தடை செய்திருந்தான். நான் அதை மீறிவிட்டேன். என் நிலை என்னவோ, என் நிலை என்னவோ, என் நிலை என்னவோ? எனவே என்னை விட்டு வேறு நபரிடம் செல்லுங்கள். (வேண்டுமானால்) நூஹ் நபியிடம் செல்லுங்கள்!" என்று ஆதம் (அலை) கூறுவார்கள்.

உடனே, நூஹ் (அலை) அவர்களிடம் மக்கள் வருவார்கள். "நூஹ் அவர்களே! பூமியில் வசிப்போருக்கு வந்த இறைத்தூதர்களில் முதல் நபர் நீங்கள்தான். அல்லாஹ் உங்களுக்கு "நன்றியுள்ள அடியார்"என்று பெயர் சூட்டி உள்ளான். நாங்கள் எந்த நிலையில் இருக்கிறோம் என்பதை நீங்கள் அறியவில்லையா? எங்களுக்கு ஏற்பட்டுள்ளது பற்றி நீங்கள் அறியவில்லையா? உங்கள் இறைவனிடம் எங்களுக்காக நீங்கள் சிபாரிசு செய்யக்கூடாதா?" என்று கூறுவார்கள். "என் இறைவன் இன்று கடும் கோபத்தில் உள்ளான். இதற்கு முன் இதுபோல் அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பின்னும் இதுபோல் அவன் கோபம் கொள்ளமாட்டான். எனக்கு என ஒரு (ஏற்கப்பட்ட) துஆ இருந்தது. அதை (வரம்பு மீறிய) என் சமுதாயத்திற்கு எதிராக துஆச் செய்து விட்டேன். என் நிலை எப்படியோ. என் நிலை எப்படியோ? என் நிலை எப்படியோ? வேறு நபரிடம் செல்லுங்கள். (வேண்டுமானால்) இப்ராஹீம் நபியிடம் செல்லுங்கள்!" என்று நூஹ் நபி கூறுவார்கள்.

மக்கள் இப்ராஹீம் நபியிடம் வருவார்கள். "இப்ராஹீம் நபி அவர்களே! நீங்கள் அல்லாஹ்வின் நபியாக உள்ளீர்கள். பூமியில் வசிப்போரில் அல்லாஹ்வுக்கு நெருங்கிய நேசராக உள்ளீர்கள். உங்கள் இறைவனிடம் எங்களுக்காக சிபாரிசு செய்யுங்கள். நாங்கள் தற்போது உள்ள நிலையை நீங்கள் அறியவில்லையா?" என்று கூறுவார்கள். அதற்கு அவர், "என் இறைவன் இன்று கடும் கோபத்தில் உள்ளான். இதற்கு முன் இதுபோல் அவன் கோபம் கொண்டதில்லை. இனியும் இதுபோல் கோபம் கொள்ள மாட்டான். நிச்சயமாக! நான் மூன்று பொய்கள் கூறி உள்ளேன். என் நிலை என்னவோ? என்

நிலை என்னவோ? என் நிலை என்னவோ? எனவே, மற்றவர்களிடம் செல்லுங்கள். (வேண்டுமானால்) மூஸா நபியிடம் செல்லுங்கள்!'' என இப்ராஹீம் நபி கூறுவார்கள்.

மூஸா நபியிடம் மக்கள் வருவார்கள். "மூஸா நபி அவர்களே! நீங்கள் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறீர்கள். அல்லாஹ் தன் தூதுத்துவம், தங்களிடம் நேரில் பேசியது ஆகியவை மூலம் மனிதர்களில் உங்களை சிறப்பாக்கி உள்ளான். எங்களுக்காக உங்கள் இறைவனிடம் பரிந்துரை செய்யுங்கள். நாங்கள் இருக்கின்ற நிலையை நீங்கள் அறியவில்லையா?'' என்று கூறுவார்கள். அதற்கு மூஸா நபி அவர்கள், "என் இறைவன் இன்று கடும் கோபத்தில் உள்ளான். இதுபோல் இதற்கு முன் அவன் கோபம் கொண்டதில்லை. இனியும் இதுபோல் கோபம் கொள்ள மாட்டான். நான் ஒருவரைக் கொன்றுவிட்டேன். அவரை கொல்லும்படி நான் கட்டளையிடப்படவில்லை. என் நிலைமை எப்படியோ? என் நிலைமை எப்படியோ? என் நிலைமை எப்படியோ? வேறு நபரிடம் நீங்கள் செல்லுங்கள். (வேண்டுமானால்) ஈஸா நபியிடம் செல்லுங்கள்'' என்று கூறுவார்கள்.

மக்கள் ஈஸா நபியிடம் வருவார்கள். "ஈஸா நபி அவர்களே! நீங்கள் அல்லாஹ்வின் தூதராகவும், அவனது கலிமாவாகவும் இருக்கின்றீர்கள். மர்யம் அவர்களிடம் அந்த கலிமாவை அவன் போட்டான். அவனிடம் உள்ள ரூஹு ஆகவும் இருக்கின்றீர்கள். மக்களிடம் தொட்டிலில் உள்ள போதே பேசினீர்கள். எங்களுக்காக உங்கள் இறைவனிடம் சிபாரிசு செய்யுங்கள். எங்கள் நிலையைப் பற்றி நீங்கள் அறிய வேண்டாமா?'' என்று கூறுவார்கள். உடனே ஈஸா நபி அவர்கள், "என் இறைவன் இன்று கடும் கோபத்தில் உள்ளான். இதற்கு முன் இதுபோல் அவன் கோபம் கொண்டதில்லை. இனியும் இதுபோல் கோபம் கொள்ளமாட்டான். (எந்தப் பாவத்தையும் அவர்கள் கூறாமல்), "எனக்கு ஏற்பட்ட நிலை என்னவோ? என் நிலை என்னவோ? என் நிலை என்னவோ? நீங்கள் மற்றவர்களிடம் செல்லுங்கள்! (வேண்டுமானால்) முஹம்மது நபி (ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்'' என்று கூறுவார்கள்.''

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

உடனே என்னிடம் மக்கள் வருவார்கள். "முஹம்மத் நபி அவர்களே! நீங்கள்தான் அல்லாஹ்வின் தூதர். நபிமார்களில் இறுதியானவர். அல்லாஹ் உங்களுக்கு உங்களின் முன் செய்த - பின் செய்த குற்றங்களை மன்னித்து விட்டான். உங்கள் இறைவனிடம் எங்களுக்காக சிபாரிசு செய்யுங்கள். நாங்கள் உள்ள நிலையைப் பற்றி நீங்கள் அறிய வேண்டாமா? என்று கூறுவார்கள். உடனே நான் நடப்பேன். அர்ஷின் கீழ் வருவேன். என் இறைவனுக்கு ஸஜ்தா செய்தவனாக வீழ்வேன். பின்பு அல்லாஹ் எனக்கு முன் எவருக்கும் திறந்திராத அளவிற்குப் புகழ் மற்றும் பெருமைகளை எனக்காகத் திறப்பான். பின்பு, "முஹம்மதே! உம் தலையை உயர்த்துவீராக! நீர் கேட்பது கொடுக்கப்படும். சிபாரிசு செய்தால், அது ஏற்கப்படும்!'' என்று கூறப்படும்.

உடனே, என் தலையை உயர்த்துவேன், "இறைவா! என் சமுதாயத்தின் நிலை என்னவோ? இறைவா! என் சமுதாயத்தின் நிலை என்னவோ?'' என்று கூறுவேன். அப்போது, "முஹம்மதே! சொர்க்கத்தின் வாசல்களில் வலதுபுற வாசலில் உம் சமுதாயத்தவர்களில் கணக்கற்றவர்களை அழைத்துச் செல்வீராக! அவர்கள் மற்ற வழிகளில் வரும் மக்களுக்கு இணையாக இருப்பார்கள்'' என்று கூறப்படும். பின்பு "என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! சொர்க்கத்தின் வாசல்களில் இரண்டு வாசல்களுக்கிடையே உள்ள அளவு, மக்காவிற்கும், ஹஜர் என்ற பகுதிக்கும் அல்லது மக்காவிற்கும், புஸ்ராவிற்கும் இடையே உள்ள தொலை தூர அளவு இருக்கும்'' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:4712. முஸ்லிம்:194)**

١٨٦٧ – وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : جَاءَ إِبْرَاهِيمُ ﷺ بِأُمِّ إِسْمَاعِيلَ وَبِابْنِهَا إِسْمَاعِيلَ وَهِيَ تُرْضِعُهُ حَتَّى وَضَعَهَا عِنْدَ الْبَيْتِ عِنْدَ دَوْحَةٍ فَوْقَ زَمْزَمَ فِي أَعْلَى الْمَسْجِدِ وَلَيْسَ بِمَكَّةَ يَوْمَئِذٍ أَحَدٌ وَلَيْسَ بِهَا مَاءٌ فَوَضَعَهُمَا هُنَاكَ وَوَضَعَ عِنْدَهُمَا جِرَابًا فِيهِ تَمْرٌ وَسِقَاءً فِيهِ مَاءٌ ثُمَّ قَفَّى إِبْرَاهِيمُ مُنْطَلِقًا فَتَبِعَتْهُ أُمُّ إِسْمَاعِيلَ فَقَالَتْ : يَا إِبْرَاهِيمُ أَيْنَ تَذْهَبُ وَتَتْرُكُنَا بِهَذَا الْوَادِي الَّذِي لَيْسَ فِيهِ أَنِيسٌ وَلاَ شَيْءٌ ؟ فَقَالَتْ لَهُ ذَلِكَ مِرَارًا وَجَعَلَ لاَ يَلْتَفِتُ إِلَيْهَا . قَالَتْ لَهُ : آللَّهُ أَمَرَكَ بِهَذَا ؟ قَالَ : نَعَمْ . قَالَتْ : إِذَنْ لاَ يُضَيِّعُنَا ; ثُمَّ رَجَعَتْ فَانْطَلَقَ إِبْرَاهِيمُ ﷺ حَتَّى إِذَا كَانَ عِنْدَ الثَّنِيَّةِ حَيْثُ لاَ يَرَوْنَهُ اسْتَقْبَلَ بِوَجْهِهِ الْبَيْتَ ثُمَّ دَعَا بِهَؤُلاَءِ الدَّعَوَاتِ فَرَفَعَ يَدَيْهِ فَقَالَ : رَبَّنَا إِنِّي أَسْكَنْتُ مِنْ ذُرِّيَّتِي بِوَادٍ غَيْرِ ذِي زَرْعٍ عِنْدَ بَيْتِكَ الْمُحَرَّمِ رَبَّنَا لِيُقِيمُوا الصَّلاَةَ فَاجْعَلْ أَفْئِدَةً مِنَ النَّاسِ تَهْوِي إِلَيْهِمْ وَارْزُقْهُمْ مِنَ الثَّمَرَاتِ لَعَلَّهُمْ يَشْكُرُونَ وَجَعَلَتْ أُمُّ إِسْمَاعِيلَ تُرْضِعُ إِسْمَاعِيلَ وَتَشْرَبُ مِنْ ذَلِكَ الْمَاءِ حَتَّى إِذَا نَفِدَ مَا فِي السِّقَاءِ عَطِشَتْ وَعَطِشَ ابْنُهَا وَجَعَلَتْ تَنْظُرُ إِلَيْهِ يَتَلَوَّى – أَوْ قَالَ يَتَلَبَّطُ – فَانْطَلَقَتْ كَرَاهِيَةَ أَنْ تَنْظُرَ إِلَيْهِ فَوَجَدَتِ الصَّفَا أَقْرَبَ جَبَلٍ فِي الأَرْضِ يَلِيهَا فَقَامَتْ عَلَيْهِ ثُمَّ اسْتَقْبَلَتِ الْوَادِيَ تَنْظُرُ : هَلْ تَرَى أَحَدًا ؟ فَلَمْ تَرَ أَحَدًا . فَهَبَطَتْ مِنَ الصَّفَا حَتَّى إِذَا بَلَغَتِ الْوَادِيَ رَفَعَتْ طَرَفَ دِرْعِهَا ثُمَّ سَعَتْ سَعْيَ الإِنْسَانِ الْمَجْهُودِ حَتَّى جَاوَزَتِ الْوَادِيَ ثُمَّ أَتَتِ الْمَرْوَةَ فَقَامَتْ عَلَيْهَا فَنَظَرَتْ هَلْ تَرَى أَحَدًا ؟ فَلَمْ تَرَ أَحَدًا فَفَعَلَتْ ذَلِكَ سَبْعَ مَرَّاتٍ . قَالَ ابْنُ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا : قَالَ النَّبِيُّ ﷺ : فَلِذَلِكَ سَعَى النَّاسُ بَيْنَهُمَا فَلَمَّا أَشْرَفَتْ عَلَى الْمَرْوَةِ سَمِعَتْ صَوْتًا فَقَالَتْ : صَهٍ – تُرِيدُ نَفْسَهَا – ثُمَّ تَسَمَّعَتْ فَسَمِعَتْ أَيْضًا فَقَالَتْ : قَدْ أَسْمَعْتَ إِنْ كَانَ عِنْدَكَ غِوَاثٌ فَإِذَا هِيَ بِالْمَلَكِ عِنْدَ مَوْضِعِ زَمْزَمَ فَبَحَثَ بِعَقِبِهِ – أَوْ قَالَ بِجَنَاحِهِ – حَتَّى ظَهَرَ الْمَاءُ فَجَعَلَتْ تُحَوِّضُهُ وَتَقُولُ بِيَدِهَا هَكَذَا وَجَعَلَتْ تَغْرِفُ الْمَاءَ فِي سِقَائِهَا وَهُوَ يَفُورُ بَعْدَ مَا تَغْرِفُ ! وَفِي رِوَايَةٍ : بِقَدْرِ مَا تَغْرِفُ . قَالَ ابْنُ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا : قَالَ النَّبِيُّ ﷺ : رَحِمَ اللَّهُ أُمَّ إِسْمَاعِيلَ لَوْ تَرَكَتْ زَمْزَمَ – أَوْ قَالَ : لَوْ لَمْ تَغْرِفْ مِنَ الْمَاءِ – لَكَانَتْ زَمْزَمُ عَيْنًا مَعِينًا ! قَالَ : فَشَرِبَتْ وَأَرْضَعَتْ وَلَدَهَا فَقَالَ لَهَا الْمَلَكُ : لاَ تَخَافُوا الضَّيْعَةَ فَإِنَّ هَاهُنَا بَيْتًا لِلَّهِ يَبْنِيهِ هَذَا الْغُلاَمُ وَأَبُوهُ وَإِنَّ اللَّهَ لاَ يُضَيِّعُ أَهْلَهُ . وَكَانَ الْبَيْتُ مُرْتَفِعًا مِنَ الأَرْضِ كَالرَّابِيَةِ تَأْتِيهِ السُّيُولُ فَتَأْخُذُ عَنْ يَمِينِهِ وَعَنْ شِمَالِهِ فَكَانَتْ كَذَلِكَ حَتَّى مَرَّتْ بِهِمْ رُفْقَةٌ مِنْ جُرْهُمَ أَوْ أَهْلُ بَيْتٍ مِنْ جُرْهُمَ مُقْبِلِينَ مِنْ طَرِيقِ كَدَاءٍ فَنَزَلُوا فِي أَسْفَلِ مَكَّةَ ; فَرَأَوْا طَائِرًا عَائِفًا فَقَالُوا : إِنَّ هَذَا الطَّائِرَ لَيَدُورُ عَلَى مَاءٍ لَعَهْدُنَا بِهَذَا الْوَادِي وَمَا فِيهِ مَاءٌ ; فَأَرْسَلُوا جَرِيًّا أَوْ جَرِيَّيْنِ فَإِذَا هُمْ بِالْمَاءِ ; فَرَجَعُوا فَأَخْبَرُوهُمْ ; فَأَقْبَلُوا وَأُمُّ إِسْمَاعِيلَ عِنْدَ الْمَاءِ فَقَالُوا : أَتَأْذَنِينَ لَنَا أَنْ نَنْزِلَ عِنْدَكِ ؟ قَالَتْ : نَعَمْ ; وَلَكِنْ لاَ حَقَّ لَكُمْ فِي الْمَاءِ . قَالُوا : نَعَمْ . قَالَ ابْنُ عَبَّاسٍ : قَالَ النَّبِيُّ ﷺ : فَأَلْفَى ذَلِكَ أُمَّ إِسْمَاعِيلَ وَهِيَ تُحِبُّ الأُنْسَ ; فَنَزَلُوا فَأَرْسَلُوا إِلَى أَهْلِهِمْ فَنَزَلُوا مَعَهُمْ حَتَّى إِذَا كَانُوا بِهَا أَهْلَ أَبْيَاتٍ وَشَبَّ الْغُلاَمُ وَتَعَلَّمَ الْعَرَبِيَّةَ مِنْهُمْ وَأَنْفَسَهُمْ وَأَعْجَبَهُمْ حِينَ شَبَّ فَلَمَّا أَدْرَكَ زَوَّجُوهُ امْرَأَةً مِنْهُمْ . وَمَاتَتْ أُمُّ إِسْمَاعِيلَ فَجَاءَ إِبْرَاهِيمُ بَعْدَ مَا تَزَوَّجَ إِسْمَاعِيلُ يُطَالِعُ تَرِكَتَهُ فَلَمْ يَجِدْ إِسْمَاعِيلَ فَسَأَلَ امْرَأَتَهُ عَنْهُ فَقَالَتْ : خَرَجَ يَبْتَغِي لَنَا – وَفِي رِوَايَةٍ : يَصِيدُ لَنَا – ثُمَّ سَأَلَهَا عَنْ عَيْشِهِمْ وَهَيْئَتِهِمْ فَقَالَتْ : نَحْنُ بِشَرٍّ نَحْنُ فِي ضِيقٍ وَشِدَّةٍ ; وَشَكَتْ إِلَيْهِ . قَالَ : فَإِذَا جَاءَ زَوْجُكِ اقْرَئِي عَلَيْهِ السَّلاَمَ وَقُولِي لَهُ : يُغَيِّرْ عَتَبَةَ بَابِهِ . فَلَمَّا جَاءَ إِسْمَاعِيلُ كَأَنَّهُ آنَسَ شَيْئًا فَقَالَ : هَلْ جَاءَكُمْ مِنْ أَحَدٍ ؟ قَالَتْ : نَعَمْ جَاءَنَا شَيْخٌ كَذَا وَكَذَا فَسَأَلَنَا عَنْكَ فَأَخْبَرْتُهُ : فَسَأَلَنِي : كَيْفَ عَيْشُنَا ؟ فَأَخْبَرْتُهُ أَنَّا فِي جَهْدٍ وَشِدَّةٍ . قَالَ : فَهَلْ أَوْصَاكِ بِشَيْءٍ ؟ قَالَتْ : نَعَمْ أَمَرَنِي أَنْ أَقْرَأَ عَلَيْكَ السَّلاَمَ وَيَقُولُ : غَيِّرْ عَتَبَةَ بَابِكَ . قَالَ : ذَاكِ أَبِي وَقَدْ أَمَرَنِي أَنْ أُفَارِقَكِ . الْحَقِي بِأَهْلِكِ فَطَلَّقَهَا وَتَزَوَّجَ مِنْهُمْ أُخْرَى فَلَبِثَ عَنْهُمْ إِبْرَاهِيمُ مَا شَاءَ اللَّهُ ثُمَّ أَتَاهُمْ بَعْدُ فَلَمْ يَجِدْهُ فَدَخَلَ عَلَى امْرَأَتِهِ فَسَأَلَ عَنْهُ . قَالَتْ : خَرَجَ يَبْتَغِي لَنَا . قَالَ : كَيْفَ أَنْتُمْ ؟ وَسَأَلَهَا عَنْ عَيْشِهِمْ وَهَيْئَتِهِمْ . فَقَالَتْ : نَحْنُ بِخَيْرٍ وَسَعَةٍ وَأَثْنَتْ عَلَى اللَّهِ . فَقَالَ : مَا طَعَامُكُمْ ؟ قَالَتْ : اللَّحْمُ . قَالَ : فَمَا شَرَابُكُمْ ؟ قَالَتْ : الْمَاءُ . قَالَ : اللَّهُمَّ بَارِكْ لَهُمْ فِي اللَّحْمِ وَالْمَاءِ . قَالَ النَّبِيُّ ﷺ : وَلَمْ يَكُنْ لَهُمْ يَوْمَئِذٍ حَبٌّ وَلَوْ كَانَ لَهُمْ دَعَا لَهُمْ فِيهِ . قَالَ : فَهُمَا لاَ يَخْلُو عَلَيْهِمَا أَحَدٌ بِغَيْرِ مَكَّةَ إِلاَّ لَمْ يُوَافِقَاهُ ; وَفِي رِوَايَةٍ : فَجَاءَ فَقَالَ : أَيْنَ إِسْمَاعِيلُ ؟ فَقَالَتِ امْرَأَتُهُ : ذَهَبَ يَصِيدُ فَقَالَتِ امْرَأَتُهُ : أَلاَ تَنْزِلُ فَتَطْعَمَ وَتَشْرَبَ ؟ قَالَ : وَمَا طَعَامُكُمْ وَمَا شَرَابُكُمْ ؟ قَالَتْ : طَعَامُنَا اللَّحْمُ وَشَرَابُنَا الْمَاءُ . قَالَ : اللَّهُمَّ بَارِكْ لَهُمْ فِي طَعَامِهِمْ وَشَرَابِهِمْ . قَالَ : فَقَالَ

أَبُو الْقَاسِمِ ﷺ : بَرَكَةُ دَعْوَةِ إِبْرَاهِيمَ ! قَالَ : فَإِذَا جَاءَ زَوْجُكِ فَاقْرَئِي عَلَيْهِ السَّلاَمَ وَمُرِيهِ يُثَبِّتْ عَتَبَةَ بَابِهِ . فَلَمَّا جَاءَ إِسْمَاعِيلُ قَالَ : هَلْ أَتَاكُمْ مِنْ أَحَدٍ ؟ قَالَتْ : نَعَمْ أَتَانَا شَيْخٌ حَسَنُ الْهَيْئَةِ وَأَثْنَتْ عَلَيْهِ فَسَأَلَنِي عَنْكَ فَأَخْبَرْتُهُ فَسَأَلَنِي : كَيْفَ عَيْشُنَا ؟ فَأَخْبَرْتُهُ أَنَّا بِخَيْرٍ . قَالَ : فَأَوْصَاكِ بِشَيْءٍ ؟ قَالَتْ : نَعَمْ يَقْرَأُ عَلَيْكَ السَّلاَمَ وَيَأْمُرُكَ أَنْ تُثَبِّتَ عَتَبَةَ بَابِكَ . قَالَ : ذَاكِ أَبِي وَأَنْتِ الْعَتَبَةُ أَمَرَنِي أَنْ أُمْسِكَكِ . ثُمَّ لَبِثَ عَنْهُمْ مَا شَاءَ اللَّهُ ثُمَّ جَاءَ بَعْدَ ذَلِكَ وَإِسْمَاعِيلُ يَبْرِي نَبْلاً لَهُ تَحْتَ دَوْحَةٍ قَرِيبًا مِنْ زَمْزَمَ فَلَمَّا رَآهُ قَامَ إِلَيْهِ فَصَنَعَ كَمَا يَصْنَعُ الْوَالِدُ بِالْوَلَدِ وَالْوَلَدُ بِالْوَالِدِ . قَالَ : يَا إِسْمَاعِيلُ إِنَّ اللَّهَ أَمَرَنِي بِأَمْرٍ . قَالَ : فَاصْنَعْ مَا أَمَرَكَ رَبُّكَ . قَالَ : وَتُعِينُنِي . قَالَ : وَأُعِينُكَ . قَالَ : فَإِنَّ اللَّهَ أَمَرَنِي أَنْ أَبْنِيَ بَيْتًا هَاهُنَا وَأَشَارَ إِلَى أَكَمَةٍ مُرْتَفِعَةٍ عَلَى مَا حَوْلَهَا فَعِنْدَ ذَلِكَ رَفَعَ الْقَوَاعِدَ مِنَ الْبَيْتِ فَجَعَلَ إِسْمَاعِيلُ يَأْتِي بِالْحِجَارَةِ وَإِبْرَاهِيمُ يَبْنِي حَتَّى إِذَا ارْتَفَعَ الْبِنَاءُ جَاءَ بِهَذَا الْحَجَرِ فَوَضَعَهُ لَهُ فَقَامَ عَلَيْهِ وَهُوَ يَبْنِي وَإِسْمَاعِيلُ يُنَاوِلُهُ الْحِجَارَةَ وَهُمَا يَقُولاَنِ : رَبَّنَا تَقَبَّلْ مِنَّا إِنَّكَ أَنْتَ السَّمِيعُ الْعَلِيمُ – وَفِي رِوَايَةٍ : إِنَّ إِبْرَاهِيمَ خَرَجَ بِإِسْمَاعِيلَ وَأُمِّ إِسْمَاعِيلَ مَعَهُمْ شَنَّةٌ فِيهَا مَاءٌ فَجَعَلَتْ أُمُّ إِسْمَاعِيلَ تَشْرَبُ مِنَ الشَّنَّةِ فَيَدِرُّ لَبَنُهَا عَلَى صَبِيِّهَا حَتَّى قَدِمَ مَكَّةَ فَوَضَعَهَا تَحْتَ دَوْحَةٍ ثُمَّ رَجَعَ إِبْرَاهِيمُ إِلَى أَهْلِهِ فَاتَّبَعَتْهُ أُمُّ إِسْمَاعِيلَ حَتَّى لَمَّا بَلَغُوا كَدَاءَ نَادَتْهُ مِنْ وَرَائِهِ : يَا إِبْرَاهِيمُ إِلَى مَنْ تَتْرُكُنَا ؟ قَالَ : إِلَى اللَّهِ . قَالَتْ : رَضِيتُ بِاللَّهِ فَرَجَعَتْ وَجَعَلَتْ تَشْرَبُ مِنَ الشَّنَّةِ وَيَدِرُّ لَبَنُهَا عَلَى صَبِيِّهَا حَتَّى لَمَّا فَنِيَ الْمَاءُ قَالَتْ : لَوْ ذَهَبْتُ فَنَظَرْتُ لَعَلِّي أُحِسُّ أَحَدًا . قَالَ : فَذَهَبَتْ فَصَعِدَتِ الصَّفَا فَنَظَرَتْ وَنَظَرَتْ : هَلْ تُحِسُّ أَحَدًا ؟ فَلَمْ تُحِسَّ أَحَدًا . فَلَمَّا بَلَغَتِ الْوَادِيَ سَعَتْ وَأَتَتِ الْمَرْوَةَ وَفَعَلَتْ ذَلِكَ أَشْوَاطًا ثُمَّ قَالَتْ : لَوْ ذَهَبْتُ فَنَظَرْتُ مَا فَعَلَ الصَّبِيُّ فَذَهَبَتْ فَنَظَرَتْ فَإِذَا هُوَ عَلَى حَالِهِ كَأَنَّهُ يَنْشَغُ لِلْمَوْتِ فَلَمْ تُقِرَّهَا نَفْسُهَا فَقَالَتْ : لَوْ ذَهَبْتُ فَنَظَرْتُ لَعَلِّي أُحِسُّ أَحَدًا فَذَهَبَتْ فَصَعِدَتِ الصَّفَا فَنَظَرَتْ وَنَظَرَتْ فَلَمْ تُحِسَّ أَحَدًا حَتَّى أَتَمَّتْ سَبْعًا ثُمَّ قَالَتْ : لَوْ ذَهَبْتُ فَنَظَرْتُ مَا فَعَلَ فَإِذَا هِيَ بِصَوْتٍ فَقَالَتْ : أَغِثْ إِنْ كَانَ عِنْدَكَ خَيْرٌ فَإِذَا جِبْرِيلُ ﷺ فَقَالَ بِعَقِبِهِ هَكَذَا وَغَمَزَ بِعَقِبِهِ عَلَى الأَرْضِ فَانْبَثَقَ الْمَاءُ فَدَهَشَتْ أُمُّ إِسْمَاعِيلَ فَجَعَلَتْ تَحْفِنُ ; وَذَكَرَ الْحَدِيثَ بِطُولِهِ . رَوَاهُ الْبُخَارِيُّ بِهَذِهِ الرِّوَايَاتِ كُلِّهَا .
" الدَّوْحَةُ " : الشَّجَرَةُ الْكَبِيرَةُ . قَوْلُهُ " قَفَّى " أَيْ : وَلَّى . " وَالْجَرِيُّ " : الرَّسُولُ . " وَأَلْفَى " مَعْنَاهُ : وَجَدَ . قَوْلُهُ " يَنْشَغُ " : أَيْ يَشْهَقُ .

**1867** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

இப்ராஹீம் நபி அவர்கள் (தன் மனைவியான) இஸ்மாயீல் (அலை) அவர்களின் தாயாரையும், பால்குடிப் பருவத்தில் இருந்த தன் மகனையும் இன்றைக்கு "கஅபா" உள்ள இடத்தின் அருகே, ஜம்ஜம் கிணற்றின் மேல் புறத்திலே, ஒரு மரத்தின் அடியில் விட்டு விட்டு வந்தார்கள். அன்று மக்காவில் எவரும் (குடியிருக்க)வில்லை. அங்கு தண்ணீரும் இல்லை. அப்படிப்பட்ட இடத்தில் இருவரையும் விட்டு விட்டார்கள்.

அவர்களிருவரிடமும் பேப் பழப் பையும், தண்ணீர் உள்ள தோல்பையும் கொடுத்தார்கள். பின்பு இப்ராஹீம் நபி அவர்கள் நடக்க ஆரம்பித்தார்கள். இஸ்மாயில் அவர்களின் தாயார் அவர்களைப் பின் தொடர்ந்து வந்து, "இப்ராஹீம் அவர்களே! எங்கு செல்கிறீர்கள்? மனிதர்களோ, வேறு உயிரினங்களோ எதுவுமே இல்லாத இந்த பாலைவனப் பள்ளத்தாக்கில் எங்களை விட்டு விட்டுச் செல்கிறீர்களே?" என்று கூறினார்கள். அவர்களிடம் இப்படிப் பலமுறை கேட்டார்கள். ஆனாலும் அவர்களை இப்ராஹீம் நபி திரும்பி பார்க்கவே இல்லை. "இவ்வாறு நடந்து கொள்ள அல்லாஹ்தான் உங்களுக்கு ஏவினானா?" என்றும் அவர்களிடம் அவர்களின் மனைவி கேட்டார்கள். "ஆம்" என இப்ராஹீம் நபி கூறினார்கள். "அப்படியானால், எங்களை அவன் சிரமப்படுத்திவிட மாட்டான்" என்று கூறினார்கள். பின்பு திரும்பி விட்டார்கள். ஆனால் இப்ராஹீம் நபி (திரும்பி பார்க்காமல்) நடந்தார்கள். இறுதியாக, அவர்களை அவர்கள் பார்க்க இயலாத ஒரு மேட்டிற்கு வந்ததும், தங்கள் முகத்தைக்

கஅபாவை நோக்கித் திருப்பி தன் கைகளை உயர்த்தி, "ரப்பீ இன்னீ அஸ்கன்து மின்துர்ரியத்தீ பிவாதின் ஙைரி தீ ஜர்இன் என்பதிலிருந்து - யஷ்குரூன் வரை உள்ள அல்குர்ஆன் வசனத்தில் கூறப்பட்டது போல் பிரார்த்தித்தார்கள்."

**இதன் பொருள்:**

***இறைவா! என் சந்ததியை கண்ணியத்திற்குரிய உன் வீட்டருகே விவசாயம் இல்லாத ஒரு பள்ளதாக்கில் விட்டுச் செல்கிறேன். எங்கள் இறைவா! தொழுகையை அவர்கள் நிலை நிறுத்துவதற்காக (விட்டுச் செல்கிறேன்). எனவே, மனிதர்களின் இதயங்களை அவர்களிடம் சாய்ந்ததாக நீ ஆக்குவாயாக! அவர்கள் நன்றி செலுத்திட கனி வகைகளிலிருந்து அவர்களுக்கு உண்ணத் தருவாயாக! (14:37)***

இஸ்மாயில் அவர்களின் தாயார், இஸ்மாயில் அவர்களுக்கு பால் புகட்டுபவராக இருந்ததால், அவர்களுக்குப் பால் கொடுத்து வந்தார்கள். தோல் பையில் கொண்டு வந்த அந்தத் தண்ணீரையும் அவர் குடித்து வந்தார்கள். இறுதியில் தோல் பையில் இருந்த தண்ணீரும் காலியாகிவிட்டதால், அவர்களுக்குத் தாகம் ஏற்பட்டது. அவர்களின் மகனும் தாகித்தார். தன் மகன் தாகத்தால் பூமியில் சுருண்டு படுத்திருப்பதைக் கண்டார். அதைப் பார்க்க சகிக்காத அவர் நடந்தார். தான் இருந்த இடத்தின் அருகே "ஸபா" மலை இருந்தது. எனவே தண்ணீரைத் தேடி அம்மலையில் ஏறி, அந்தப் பள்ளத்தாக்கில் மனிதர்கள் எவரேனும் உள்ளார்களா? என்று சுற்றிலும் பார்த்தார். எவரையும் அவரால் பார்க்க இயலவில்லை.

பின்னர் ஸபாவிலிருந்து இறங்கி, பள்ளத்தாக்கிற்கு வந்தார். தனது சட்டையின் ஓரத்தை உயர்த்தினார். பின்பு மனித முயற்சியில் பெரும் முயற்சியாக ஓடையைக் கடந்து வந்தார். பின்பு "மர்வா" விற்கு வந்தார். அதன் மீதும் நின்று, "எவரேனும் உள்ளார்களா?" என்று பார்த்தார். எவரையும் அவர் காணவில்லை. இவ்வாறு ஏழு தடவை செய்தார்.

இவ்வாறு 7 முறை செய்ததுதான் அந்த (ஸபா - மர்வா) இரண்டுக்குமிடையே ஹஜ் செய்வோர் ஓடும் "ஸயீ" (தொங்கோட்டம்) ஆகும் என்று நபி (ஸல்) கூறினார்கள் எனவும் இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள்.

மர்வா பகுதியை (ஏழாவது தடவை) போய் அடைந்ததும், ஒரு சப்தம் வந்ததைக் கேட்டார்கள். உடனே தனக்குள் "பொறு" என்று கூறிக் கொண்டார். பின்பு அந்த சப்தத்தை மீண்டும், மீண்டும் கேட்டார்கள். அந்த சப்தம் வந்த திசையை நோக்கி, "சப்தத்தை கேட்டேன். உன்னிடம் உதவும் நிலை உள்ளதா?" என்று கேட்டார். அங்கே ஜம்ஜம் இடத்தின் அருகே ஒரு மலக்கு (ஜிப்ரீல் (அலை) அவர்கள்) இருந்தார். அவர் தன் குதிங்காலால் அல்லது தன் இறக்கையால் கிளறினார், அப்போது தண்ணீர் வெளிவந்தது. உடனே இஸ்மாயில் நபியின் தாயார் தன் கரத்தால் தடாகம் போல் அமைத்தார். தன் தோல் பையில் தண்ணீரை அள்ளி நிரப்பினார்கள். அவர்கள் நிரப்பிக் கொண்ட பின்னும் தண்ணீர் பீறிட்டது. மற்றொரு அறிவிப்பில் "தோல் பையில் நிரப்பிய அளவுக்கு மீண்டும் பீறிட்டது" என்று உள்ளது.

"இஸ்மாயில் அவர்களின் தாயாருக்கு அல்லாஹ் அருள் புரிவானாக! அவர்கள் 'ஜம்ஜம்' தண்ணீரை அள்ளாமல் விட்டிருந்தால், அந்த ஜம்ஜம் பெருக்கடுத்து ஓடும் நீரூற்றாக ஆகி இருக்கும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகின்றார்கள்.

(இஸ்மாயில் அவர்களின் தாயார்) தானும் குடித்து, தன் மகனுக்கும் புகட்டினார். அப்போது அவரிடம் வானவர், "அழிவு ஏற்படும் எனப் பயப்படாதீர்கள். இந்த இடத்தில் அல்லாஹ்விற்குரிய

வீடு உண்டு. அதை இந்தச் சிறுவரும், அவரது தந்தையும் கட்டுவார்கள். இவ்வூர்வாசிகளை அல்லாஹ் வீணாக்கிவிட மாட்டான்'' என்று கூறினார்.

இறை இல்லம், பூமியில் உயரமாக ஒரு மேடை போல் இருந்தது. வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு, அதன் வலது – இடது பக்கங்களை அரித்துச் சென்று விட்டது. இந்நிலையில் "ஜுர்ஹும்" கூட்டம் அல்லது "ஜுர்ஹும்" வம்சத்தைச் சேர்ந்த ஒரு குடும்பம் அவர்களை நோக்கி "கதாவு" என்ற வழியாக வந்து, மக்காவின் கீழ் பகுதியில் தங்கினார்கள். அப்போது அங்கு வட்டமிடும் பறவையைக் கண்டார்கள். "இந்தப் பறவை தண்ணீருக்காக, சுற்றி வருகிறது. இந்த ஓடைப் பகுதி நமக்குத் தெரியும். இங்கு தண்ணீர் இல்லையே?'' என்று கூறினார்கள். பின்னர், அவர்கள் தண்ணீர் இருக்கிறதா? என்று பார்த்து வர ஒருவர் அல்லது இரண்டு பேரை அனுப்பினார்கள். அவர்கள் தண்ணீர் இருப்பது கண்டு, திரும்பி வந்து, அவர்களிடம் கூறினார்கள்.

உடனே, அவர்கள் வந்தார்கள். தண்ணீர் அருகே இஸ்மாயில் நபியின் தாயார் இருந்தார். "உங்கள் அருகில் நாங்கள் தங்கிட எங்களுக்கு அனுமதி தருகிறீர்களா?'' என்று அவர்கள் கேட்டனர். "சரி, ஆனால் உங்களுக்குத் தண்ணீரில் உரிமை எதுவும் கிடையாது'' என்று இஸ்மாயில் நபியின் தாயார் கூற, "சரி'' என்று அவர்கள் கூறினர்.

(இஸ்மாயில் நபியின் தாயாரிடம் அந்தக் கூட்டம் வந்தது. அவர்களும் மக்கள் (தம் அருகில்) வாழ்வதை விரும்பினார்கள் என்று நபி (ஸல்) கூறியதாக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் கூறுகின்றார்கள்.)

உடனே அவர்கள் வந்து, தங்கி தங்களின் குடும்பத்தார்களையும், மற்றவர்களையும் வரச்செய்து, அவர்களுடன் தங்கினார்கள். இறுதியில் அந்த இடத்தில் பல குடும்பத்தார் உருவானார்கள். சிறுவர் (இஸ்மாயில் நபி) வாலிபரானார். அந்த (ஜுர்ஹும்) கூட்டத்தாரிடமே அரபி மொழியை அவர்கள் கற்றார்கள். அவர்களின் வாலிப வயதில் அவர்களிடையே மிக விரும்பமானவராக, பிரியமானவராக ஆனார்கள். உரிய வயதை அவர்கள் அடைந்ததும், தங்களிலிருந்தே ஒரு பெண்ணை அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்தார்கள்.

இந்த நிலையில் இஸ்மாயில் நபியின் தாயார் இறந்து விட்டார்கள். இஸ்மாயில் நபியின் திருமணத்திற்குப் பிறகு இப்ராஹிம் நபி, தான் விட்டுச் சென்ற (குடும்பத்த)வர்களைக் காண வந்தார்கள். அங்கே இஸ்மாயில் நபி இருக்கவில்லை. அவர்களைப் பற்றி அவர்களின் மனைவியிடம் கேட்டார்கள். "எங்களுக்கு உணவு தேடிச் சென்றுள்ளார்'' என்று இஸ்மாயில் நபியின் மனைவி பதில் கூறினார். (மற்றொரு அறிவிப்பில் "எங்களுக்காக வேட்டையாடச் சென்றுள்ளார்'' என்று உள்ளது) பின்பு அவர்களிடம் அவர்களின் வாழ்க்கை நிலை, அவர்களின் சூழ்நிலை பற்றி இப்ராஹிம் நபி கேட்டார்கள். "நாங்கள் சிரமத்தில் இருக்கிறோம். நாங்கள் துயரத்திலும், துன்பத்திலும் இருக்கிறோம்'' என்று கூறி, குறைகளை முறையிட ஆரம்பித்தார் இஸ்மாயில் நபியின் மனைவி. அதைக் கேட்டு, "உன் கணவர் வந்தால் அவருக்கு ஸலாம் கூறு. அவரின் வீட்டு வாசல்படியை மாற்றும்படியும் அவரிடம் கூறு!'' என்று இப்ராஹிம் நபி கூறினார்கள்.

இஸ்மாயில் (அலை)அவர்கள் வந்ததும், அங்கு மாறுதலான சூழ்நிலையைக் கண்டார்கள். "உன்னிடம் யாரேனும் வந்தார்களா?'' என்று கேட்டார்கள். "ஆமாம். இங்கு இந்த-இந்த அடையாளமுள்ள ஒரு முதியவர் வந்தார். உங்களைப் பற்றிக் கேட்டார். அவரிடம் கூறினேன். உங்கள் வாழ்க்கை நிலை எப்படி உள்ளது? என்று என்னிடம் கேட்டார். "சிரமத்திலும், துயரத்திலும் உள்ளோம்''என்று அவரிடம் கூறினேன் என்று இஸ்மாயில் நபியின் மனைவி கூறினார். "உனக்கு

ஏதேனும் உபதேசம் கூறினாரா?'' என்று கேட்டார்கள். "ஆமாம்! உங்களுக்கு ஸலாம் கூறும்படி எனக்கு கட்டளையிட்டார். மேலும் "உங்களின் வீட்டின் வாசல்படியை மாற்றுங்கள்'' என்றும் கூறினார் என இஸ்மாயில் நபியின் மனைவி கூறினார். அதற்கு இஸ்மாயில் நபி, "அவர்தான் என் தந்தை. உன்னிடமிருந்து நான் பிரிந்திட எனக்குக் கட்டளையிட்டுள்ளார். நீ உன் குடும்பத்தாரிடம் போய் சேர்ந்துக் கொள்'' என்று கூறி, அவளை விவாகரத்துச் செய்தார்கள். அவர்களில் மற்றொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்கள்.

அல்லாஹ் நாடிய அளவுக்கு அவர்களை விட்டும் பிரிந்திருந்த இப்ராஹீம் நபி அவர்கள், சிறிது காலத்திற்குப் பின் அவர்களிடம் வந்தார்கள். அப்போதும் இஸ்மாயில் நபியை அவர்கள் காணவில்லை. உடனே அவர்களின் மனைவியிடம் சென்றார்கள். இஸ்மாயில் நபி பற்றிக் கேட்டார்கள். "எங்களுக்கு உணவு கொண்டு வர வெளியே சென்றுள்ளார்கள்'' என்று அவர் கூறினார். "நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டு, அவர்களின் வாழ்க்கை, அவர்களின் சூழல் பற்றியும் அவர்களிடம் கேட்டார்கள். "நாங்கள் வசதியாக, நல்ல விதமாக இருக்கிறோம்'' என்று அவர்கூறி, அல்லாஹ்வைப் புகழ்ந்தார். "உங்களின் உணவு முறை என்ன? என்ன?'' என்று கேட்டார்கள். "இறைச்சி'' என்று கூறினார். "உங்களின் பானம் என்ன?'' என்று கேட்டார்கள். "தண்ணீர்'' என்று கூறினார். "இறைவா! இவர்களுக்கு இறைச்சியிலும், தண்ணீரிலும் பரக்கத் செய்வாயாக!'' என்று இப்ராஹீம் நபி துஆச் செய்தார்கள்.

"அன்றைய நேரத்தில் தானிய உணவு அவர்களிடம் இருந்ததில்லை. அது அவர்களிடம் இருந்திருந்தால், அதற்கும் அவர்களுக்காக இப்ராஹீம் நபி துஆச் செய்து இருப்பார்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"மக்கா அல்லாத இடங்களில் உள்ள எவரும் இந்த இறைச்சி, தண்ணீர் இரண்டை மட்டும் போதுமாக்கிக் கொள்ள முடியாது'' என்று அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

இப்ராஹீம் நபி வந்து, "இஸ்மாயில் எங்கே?'' என்று கேட்டார்கள். உடனே அவர்களின் மனைவி, "அவர் வேட்டைக்குச் சென்றுள்ளார்'' என்று கூறிவிட்டு, "இறங்கி வாருங்கள், சாப்பிட்டு, பருகி விட்டுச் செல்லலாமே?'' என்றும் கூறினார்கள். "உங்களின் உணவும், உங்களின் பானமும் என்ன?'' என்று இப்ராஹீம் நபி கேட்டார்கள். "எங்களின் உணவு இறைச்சி, எங்களின் பானம் தண்ணீர்'' என்று அவர் கூறினார். "இறைவா! இவர்களுக்கு உணவிலும், பானத்திலும் பரக்கத் செய்வாயாக!'' என்று இப்ராஹீம் நபி கூறினார்கள்.

"இப்ராஹீம் நபியின் துஆவின் பரக்கத் இது!'' என்று அபுல் காஸிம் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்.

"உன் கணவர் வந்தால், அவருக்கு என் ஸலாம் கூறு. அவர் வீட்டு வாசல்படியை நிலையாக வைத்துக் கொள்ளும்படி அவரிடம் கூறு!'' என்று இப்ராஹீம் நபி கூறினார்கள். பின்பு அவர் சென்றுவிட்டார். இஸ்மாயில் நபி வந்ததும், "உன்னிடம் யாரேனும் வந்தார்களா?'' என்று கேட்டார்கள். "ஆம். அழகிய தோற்றம் நிறைந்த ஒரு முதியவர் வந்தார்கள். உங்களைப் பற்றி என்னிடம் கேட்டார்கள். அவரிடம் கூறினேன். உங்கள் வாழ்க்கை எப்படி உள்ளது? என்று என்னிடம் கேட்டார்கள். "நாங்கள் நல்லவிதமாக இருக்கிறோம்'' என்று கூறினேன் என்று இஸ்மாயில் நபியின் மனைவி கூறினார். அவர் உனக்கு ஏதேனும் செய்தி சொன்னார்களா?'' என்று கேட்டார்கள். "ஆம்! உங்களுக்கு ஸலாம் கூறச் சொன்னார்கள். உங்கள் வீட்டு வாசலை நிலையாக வைத்துக் கொள்ள

உங்களுக்குக் கட்டளையிட்டார்கள்'' என்று கூறினார். ''அவர்தான் என் தந்தை. நீதான் அந்த வாசல்படி. உன்னை (நிரந்தரமாக) வைத்துக் கொள்ள என்னிடம் கட்டளையிட்டுள்ளார்கள்'' என்று இஸ்மாயில் நபி கூறினார்கள்.

பின்பு அல்லாஹ் நாடிய அளவுக்கு அவர்களைப் பிரிந்திருந்த இப்ராஹிம் நபி அவர்கள், சிறிது காலத்திற்குப் பின் வந்தார்கள். இஸ்மாயில் நபி அவர்கள், 'ஜம்ஜம்' கிணற்று அருகே உள்ள மரத்தின்கீழ் அம்பு தயாரிக்கும் பணியில் இருந்தார். தன் தந்தையைப் பார்த்ததும், அவர்களிடம் எழுந்து வந்து, ஒரு தந்தை மகனிடம், ஒரு மகன் தந்தையிடம் நடப்பதுபோல் நடந்து கொண்டார்கள். ''இஸ்மாயிலே! எனக்கு அல்லாஹ் ஒரு கட்டளை பிறப்பித்துள்ளான்'' என்று கூறினார்கள். ''உங்களின் இறைவன், உங்களுக்கு என்ன கட்டளையிட்டுள்ளான்?'' என்று இஸ்மாயில் நபி கேட்டார்கள். ''எனக்கு நீ உதவுவாயா?'' என்று தந்தை கேட்க, ''உங்களுக்கு உதவுவேன்'' என்று மகன் கூறினார். ''இந்த இடத்தில் ஒரு வீட்டை (பள்ளிவாசலை) நான் கட்டிட வேண்டும் என அல்லாஹ் எனக்குக் கட்டளையிட்டுள்ளான்'' என்று இப்ராஹிம் நபி கூறினார்கள். சுற்றிலும் மேடாக இருந்த ஒரு மேட்டை அவர்கள் காண்பித்தார்கள். அப்போதே வீட்டிற்கான அடித்தளத்தை எழுப்பினார்கள். இஸ்மாயில் நபி கற்களை சுமந்து வந்தார்கள். இப்ராஹிம் நபி, கட்டிடம் கட்டினார்கள். இறுதியாக கட்டிடம் உயர எழுந்ததும், (மகாமே இப்ராஹிம் அருகில் இப்போது உள்ள) அந்தக் கல்லை எடுத்து வந்து, அதைக் கீழே வைத்து, அதில் ஏறி நின்று, இப்ராஹிம் நபி கட்டிடம் கட்டினார்கள். இஸ்மாயில் நபி கற்களை எடுத்துத் தந்து கொண்டிருந்தார்கள். ''ரப்பனா தகப்பல் மின்னா இன்னக்க அன்தஸ் ஸமீஉல் அலீம்'' என்று இருவரும் கூறினார்கள்.

**பொருள்: எங்கள் இறைவா! எங்களிடமிருந்து இதை ஏற்பாயாக! நிச்சயமாக நீயே கேட்பவன், அறிபவன். (2:127)**

மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

இப்ராஹிம் நபி அவர்கள், இஸ்மாயில் நபி, அவர்களின் தாயார் ஆகியோருடன் புறப்பட்டார்கள். அவர்களிடம் தண்ணீர் தோல்பை இருந்தது. இஸ்மாயில் நபியின் தாயார், தோல் பையிலிருந்து தண்ணீர் குடித்துக் கொள்வார். தன் குழந்தைக்கு தன் பாலைக் கொடுத்துக் கொள்வார். இறுதியில் மக்கா வந்தடைந்தார்கள். அங்கிருந்த ஒரு பெரிய மரத்தின் அருகில் அவர்களை தனித்து விட்டதும் இப்ராஹிம் நபி அவர்கள் தன் ஊருக்கு திரும்பினார்கள். அவர்களைப் பின் தொடர்ந்து வந்த இஸ்மாயில் நபியின் தாயார் ''கதாவு'' என்ற இடத்தை வந்ததும், ''இப்ராஹிம் அவர்களே! எங்களை விட்டு விட்டு யாரிடம் செல்கிறீர்கள்?'' என்று பின்னாலிருந்து கேட்டார்கள். ''அல்லாஹ்விடம் செல்கிறேன்'' என்று இப்ராஹிம் நபி அவர்கள் கூறியதும், ''நான் அல்லாஹ்வை பொருந்திக் கொள்கிறேன்'' என்று இஸ்மாயில் நபியின் தாயார் கூறிவிட்டு, திரும்பினார்.

தோல்பையிலிருந்து தண்ணீர் குடித்து, தன் மகனுக்குத் தன் பாலை குடிக்கத் தந்தார்கள். தண்ணீரும் காலியானது. ''நான் சென்று, (மலை மீதிருந்து) பார்த்தால் யாரேனும் தென்படக்கூடும்'' என்று கூறிய இஸ்மாயில் நபியின் தாயார், சென்று மலையில் ஏறினார். யாரேனும் தென்படுகிறார்களா? என பார்த்துக் கொண்டே இருந்தார். எவரையும் அவர் காணவில்லை. பிறகு அங்கிருந்து பள்ளத்தாக்கிற்கு வந்து, மீண்டும் ஓடி மர்வா குன்றில் ஏறினார்கள். இவ்வாறு பலமுறை செய்தார்கள். பின்பு, ''குழந்தை என்ன செய்கிறான் என்பதை நான் சென்று பார்க்க வேண்டும்'' என்று கூறியவாறு, வந்து தன் மகன் நிலையைப் பார்த்தார்கள். குழந்தை (பசியால் துடித்து அழுது) மரணத்தை நெருங்கியது போல் இருந்தது. இதைக் கண்டு அவர்களின் மனம் பொறுக்கவில்லை. ''எவரேனும் தென்படக்கூடும் என்பதால் நான் போய் பார்க்க வேண்டும்'' என்று கூறிய அவர்கள், சென்று ''ஸபா''

குன்றில் ஏறினார்கள், பார்த்தார்கள் எவரையும் காணவில்லை. இவ்வாறு ஏழு தடவை செய்தார்கள். பின்பு, "(என் குழந்தை) என்ன செய்கிறான் என பார்க்க வேண்டும்" என்று கூறி வந்தபோது, "அங்கு ஒரு சப்தத்தைக் கேட்டார்கள். "உம்மிடம் நன்மை இருந்தால் எனக்குத் தண்ணீர் தா" என்று சப்தம் வந்த திசையை நோக்கிக் கேட்டார்கள். அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்கள், தன் குதிங்காலால் இப்படிச் செய்தார்கள் என்று கூறிய நபி (ஸல்) அவர்கள், பூமியில் தன் குதிங்காலால் தட்டிக் காண்பித்தார்கள். தண்ணீர் பீறிட்டு வந்தது. அப்போது இஸ்மாயில் நபியின் தாயார் திடுக்குற்று, பூமியிலிருந்து வந்த தண்ணீரைக் கைகளால் அள்ளித் தன் தோல்பையில் நிரப்பினார்கள்."

நீண்ட ஹதீஸின் தொடர்ச்சியை அறிவிப்பாளர் கூறுகின்றார். **(புகாரி:3364, 3365)**

١٨٦٨ – وَعَنْ سَعِيدِ بْنِ زَيْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " الْكَمْأَةُ مِنَ الْمَنِّ وَمَاؤُهَا شِفَاءٌ لِلْعَيْنِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1868** ஸயீத் இப்னு ஸைத் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"காளான் பனூ இஸ்ரவேலர்களுக்கு அல்லாஹ் சொர்க்கத்திலிருந்து இறக்கிய) "மன்னு" எனும் உணவு வகையைச் சேர்ந்ததாகும். இதன் தண்ணீர் கண்களுக்கு 'ஷிஃபா' குணமளிக்கக் கூடிய மருந்தாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். **(புகாரி:5708, முஸ்லிம்:2049)**

# அத்தியாயம் : 18

## பாவமன்னிப்புக் கோரல்

## ٣٧١ – بابُ الأمر بالاستغفار وفضله

### பாடம் : 371 – பாமன்னிப்புக் கோர ஏவுவதும், அதன் சிறப்பும்

قَالَ اللَّهُ تَعَالَى : وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ . وَقَالَ تَعَالَى : وَاسْتَغْفِرِ اللَّهَ إِنَّ اللَّهَ كَانَ غَفُورًا رَحِيمًا . وَقَالَ تَعَالَى : فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ وَاسْتَغْفِرْهُ إِنَّهُ كَانَ تَوَّابًا . وَقَالَ تَعَالَى : لِلَّذِينَ اتَّقَوْا عِنْدَ رَبِّهِمْ جَنَّاتٌ إِلَى قَوْلِهِ عَزَّ وَجَلَّ : وَالْمُسْتَغْفِرِينَ بِالأَسْحَارِ . وَقَالَ تَعَالَى : وَمَنْ يَعْمَلْ سُوءًا أَوْ يَظْلِمْ نَفْسَهُ ثُمَّ يَسْتَغْفِرِ اللَّهَ يَجِدِ اللَّهَ غَفُورًا رَحِيمًا . وَقَالَ تَعَالَى : وَمَا كَانَ اللَّهُ لِيُعَذِّبَهُمْ وَأَنْتَ فِيهِمْ وَمَا كَانَ اللَّهُ مُعَذِّبَهُمْ وَهُمْ يَسْتَغْفِرُونَ . وَقَالَ تَعَالَى : وَالَّذِينَ إِذَا فَعَلُوا فَاحِشَةً أَوْ ظَلَمُوا أَنْفُسَهُمْ ذَكَرُوا اللَّهَ فَاسْتَغْفَرُوا لِذُنُوبِهِمْ وَمَنْ يَغْفِرُ الذُّنُوبَ إِلاَّ اللَّهُ وَلَمْ يُصِرُّوا عَلَى مَا فَعَلُوا وَهُمْ يَعْلَمُونَ . وَالأَيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *உம் தவறுக்காக மன்னிப்புக் கோருவீராக! (47:19)*

*அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருவீராக! நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பவனாக, இரக்கமுள்ளவனாக இருக்கிறான். (4:106)*

*உமது இறைவனைப் புகழ்ந்து தஸ்பீஹ் செய்வீராக! அவனிடம் மன்னிப்புக் கோருவீராக! நிச்சயமாக அவன், மன்னிப்பு வழங்குபவனாக இருக்கிறான். (110:3)*

*(நபியே!) நீர் கூறும்: "இவற்றைவிடச் சிறந்தது எது என்று உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? யார் இறையச்சத்துடன் வாழ்கின்றார்களோ, அவர்களுக்கு அவர்களின் இறைவனிடத்தில்*

சுவனங்கள் உண்டு. அவற்றின் கீழே ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அவர்கள் அங்கேயே நிலையாகத் தங்கி வாழ்வார்கள். தூய்மையான மனைவியரும் உடனிருப்பர். அல்லாஹ்வின் உவப்பையும் பெறுவார்கள். அல்லாஹ் தன்னுடைய அடியார்களின் நடத்தையை ஆழ்ந்து கவனிப்பவனாக இருக்கிறான்.

இவர்கள் துஆச் செய்த வண்ணம் இருப்பார்கள்: "எங்களுடைய இறைவனே! திண்ணமாக நாங்கள் நம்பிக்கை கொண்டோம். எனவே எங்களுடைய பாவங்களை நீ மன்னித்தருள். இன்னும் நரக வேதனையிலிருந்து எங்களைக் காத்தருள்!"

இவர்கள் பொறுமையாளர்களாகவும், உண்மையாளர்களாகவும், கீழ்ப்படிபவர்களாகவும் மற்றும் (இறைவழியில் தாராளமாகச்) செலவழிப்பவர்களாகவும் இருப்பதுடன், பின்னிரவு நேரங்களில் அல்லாஹ்விடம் பாவமன்னிப்பிற்காக இறைஞ்சுபவர்களாகவும் இருப்பார்கள்.(3: 15-17)

மேலும் ஒருவர் தீய செயல் புரிந்து அல்லது தனக்குத்தானே அநீதி இழைத்துக் கொண்டு பின்னர் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரினால், அல்லாஹ் மன்னிப்பு வழங்குபவனாகவும், கருணையாளனாகவும் இருப்பதை அவர் காண்பார். (4:110)

ஆனால், நீர் அவர்களுக்கிடையே இருக்கும்போது அல்லாஹ் அவர்கள் மீது வேதனையை இறக்குபவனாக இல்லை. மேலும், மக்கள் பாவ மன்னிப்பை வேண்டிக் கொண்டிருக்கும் நிலையில், அவர்களின் மீது வேதனையை இறக்கி விடுவது அல்லாஹ்வின் நியதி அல்ல. (8:33)

மேலும் அவர்கள் எத்தகையோர் எனில், மானக்கேடான செயலைச் செய்துவிட்டால் அல்லது (ஏதேனும் பாவங்கள் செய்து) தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டால், உடனே அவர்கள் அல்லாஹ்வை நினைத்து, தம் பாவங்களுக்காக அவனிடம் மன்னிப்புக் கோருவார்கள். (ஏனெனில்) அல்லாஹ்வைத் தவிர பாவங்களை மன்னித்தருள்பவன் வேறு யார்? மேலும் தாம் செய்தவற்றில் அறிந்து கொண்டே பிடிவாதமாக இருக்கமாட்டார்கள். (3:135)

மேலும் இந்தப் பாடத்தின் கீழ், இடம் பெற அதிக வசனங்கள் உள்ளன.

١٨٦٩ – وَعَنْ الأَغَرِّ الْمُزَنِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّهُ لَيُغَانُ عَلَى قَلْبِي وَإِنِّي لأَسْتَغْفِرُ اللَّهَ فِي الْيَوْمِ مِئَةَ مَرَّةٍ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1869** அகர் அல் முஜ்னீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"என் உள்ளத்தின் மீது ஒரு திரையிடப்பட்டுள்ளது. நிச்சயமாக நான் தினமும் நூறு தடவை அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கேட்கின்றேன்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(முஸ்லிம்:2702)**

١٨٧٠ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " وَاللَّهِ إِنِّي لأَسْتَغْفِرُ اللَّهَ وَأَتُوبُ إِلَيْهِ فِي الْيَوْمِ أَكْثَرَ مِنْ سَبْعِينَ مَرَّةً " . رَوَاهُ الْبُخَارِيُّ .

**1870** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நிச்சயமாக நான் அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருகிறேன். தினமும் 70 தடவைக்கும் மேலாக பாவமன்னிப்பு கேட்கிறேன்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்.

**(புகாரி:6307)**

١٨٧١ - وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَوْ لَمْ تُذْنِبُوا لَذَهَبَ اللَّهُ تَعَالَى بِكُمْ وَلَجَاءَ بِقَوْمٍ يُذْنِبُونَ فَيَسْتَغْفِرُونَ اللَّهَ تَعَالَى فَيَغْفِرُ لَهُمْ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1871** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நீங்கள் பாவம் செய்ய வில்லையானால், அல்லாஹ் உங்களை போக்கிவிடுவான். அதற்கு பதிலாக பாவம் செய்கின்ற மக்களை அவன் கொண்டு வருவான். அவர்கள் (பாவம் செய்தபின்) அல்லாஹ்விடம் பாவ மன்னிப்பும் கேட்பார்கள். அவனும் அவர்களை மன்னிப்பான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(முஸ்லிம்:2749)**

١٨٧٢ - وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : كُنَّا نَعُدُّ لِرَسُولِ اللَّهِ ﷺ فِي الْمَجْلِسِ الْوَاحِدِ مِئَةَ مَرَّةٍ : " رَبِّ اغْفِرْ لِي وَتُبْ عَلَيَّ إِنَّكَ أَنْتَ التَّوَّابُ الرَّحِيمُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ .

**1872** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

ஓர் அவையில் நபி (ஸல்) அவர்கள் “ரப்பிஃஹ்ஃபிர் லீ வதுப் அலய்ய, இன்னக்க அன்தத் தவ்வாபுர் ரஹீம்” என்று கூறியதை நாங்கள் நூறு தடவை எண்ணினோம்.

**(அபூதாவூது:1516. திர்மிதீ:3434. இது “ஹஸன் ஸஹீஹ்” என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

**துஆவின் பொருள்: இறைவா! என்னை மன்னிப்பாயாக! என் பாவமன்னிப்பை ஏற்பாயாக! நீயே பாவமன்னிப்பை ஏற்பவன். இரக்கமுள்ளவன்.**

١٨٧٣ - وَعَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ لَزِمَ الاسْتِغْفَارَ جَعَلَ اللَّهُ لَهُ مِنْ كُلِّ ضِيقٍ مَخْرَجًا وَمِنْ كُلِّ هَمٍّ فَرَجًا وَرَزَقَهُ مِنْ حَيْثُ لاَ يَحْتَسِبُ " . رَوَاهُ أَبُو دَاوُدَ .

**1873** அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“பாவமன்னிப்புக் கோருவதை ஒருவர் வழக்கமாக்கிக் கொண்டால், அல்லாஹ் அவருக்கு அனைத்துத் துன்பங்களிலிருந்தும் நிம்மதியை வழங்குவான். மேலும் கவலைகள் அனைத்தை விட்டும் மகிழ்ச்சியை வழங்குவான். மேலும் அவர் எதிர்பாராத வகையில் அவருக்குச் செல்வத்தை வழங்குவான்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1518. இதில் அல்ஹகம் இப்னு முஸ்அப் என்பவர் இடம் பெறுகிறார். இவர் யாரென்றே அறியப்படாதவர் என்பதால் இது பலவீனமான ஹதீஸாகும்)**

١٨٧٤ - وَعَنِ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " مَنْ قَالَ : أَسْتَغْفِرُ اللَّهَ الَّذِي لاَ إِلَهَ إِلاَّ هُوَ الْحَيُّ الْقَيُّومُ وَأَتُوبُ إِلَيْهِ غُفِرَتْ ذُنُوبُهُ وَإِنْ كَانَ قَدْ فَرَّ مِنَ الزَّحْفِ " . رَوَاهُ أَبُو دَاوُدَ وَالتِّرْمِذِيُّ وَالْحَاكِمُ وَقَالَ : حَدِيثٌ صَحِيحٌ عَلَى شَرْطِ الْبُخَارِيِّ وَمُسْلِمٍ .

**1874** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“அஸ்தஃஹ்ஃபிருல்லாஹல்லதீ லாயிலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூம் வஅதூபு இலய்ஹி’ என்று ஒருவர் கூறினால், அவரின் பாவங்கள் மன்னிக்கப்படும். அவர் போரில் புறமுதுகிட்டு ஓடி இருந்தாலும் சரியே!” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(அபூதாவூது:1517. திர்மிதீ:3577. ஹாகிம்:1/511. இது புகாரி, முஸ்லிம் நூலின் நிபந்தனைப்படி உள்ள ஹதீஸ் என இமாம் ஹாகிம் கூறுகின்றார். இதன் அறிவிப்பாளர் வரிசையில் பலவீனம் உள்ளது)**

**துஆவின் பொருள்: நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறேன். அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் நிலையானவன். நித்திய ஜீவன். அவனிடமே நான் பாவமன்னிப்பு கோருகிறேன்.**

١٨٧٥ - وَعَنْ شَدَّاد بْنِ أَوْسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " سَيِّدُ الاسْتِغْفَارِ أَنْ يَقُولَ الْعَبْدُ : اللَّهُمَّ أَنْتَ رَبِّي لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ خَلَقْتَنِي وَأَنَا عَبْدُكَ وَأَنَا عَلَى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ . أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ أَبُوءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَأَبُوءُ بِذَنْبِي فَاغْفِرْ لِي فَإِنَّهُ لاَ يَغْفِرُ الذُّنُوبَ إِلاَّ أَنْتَ . مَنْ قَالَهَا فِي النَّهَارِ مُوقِنًا بِهَا فَمَاتَ مِنْ يَوْمِهِ قَبْلَ أَنْ يُمْسِيَ فَهُوَ مِنْ أَهْلِ الْجَنَّةِ ; وَمَنْ قَالَهَا مِنَ اللَّيْلِ وَهُوَ مُوقِنٌ بِهَا فَمَاتَ قَبْلَ أَنْ يُصْبِحَ فَهُوَ مِنْ أَهْلِ الْجَنَّةِ " . رَوَاهُ الْبُخَارِيُّ . " أَبُوءُ " بِبَاءٍ مَضْمُومَةٍ ثُمَّ وَاوٍ وَهَمْزَةٍ مَمْدُودَةٍ : وَمَعْنَاهُ : أُقِرُّ وَأَعْتَرِفُ .

**1875** ஷத்தாத் இப்னு அவ்ஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

பாவமன்னிப்புக் கோருதலில் தலைமையானது, (கீழ்கண்டவாறு) ஒருவர் கூறுவதுதான்.

“அல்லாஹும்ம அன்த ரப்பீ லாஇலாஹ இல்லா அன்த கலக்தனீ வஅன அப்துக, வஅன அலா அஹ்திக, வவஹ்திக மஸ்ததஃது, அவூது பிக மின் ஷர்ரி மா ஸனஃது, அபூஉலக பிநிஃமதிக்க அலய்ய வஅபூஉ பிதன்பீ, ஃபஹ்ஃபிர்லீ, ஃபஇன்னஹு லா யஹ்ஃபிருத்ஃதுனூப இல்லா அன்த”

“இதை உறுதியுடன் காலையில் ஒருவர் கூறி, அன்று மாலை வரும் முன் அவர் இறந்து விட்டால், அவர் சொர்க்கவாசியாவார். மேலும் இதை இரவில் ஒருவர் உறுதியுடன் கூறி, காலை வரும் முன் இறந்துவிட்டால், அவர் சொர்க்கவாசியாக இருப்பார்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:6306)**

**துஆவின் பொருள்: இறைவா! நீயே என் இறைவன். உன்னைத்தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லை. என்னை நீ படைத்தாய். நான் உன் அடியான். நான் இயன்ற அளவுக்கு உனக்குத் தந்த வாக்குறுதி மற்றும் ஒப்பந்தப்படி இருப்பேன். நான் செய்கின்ற அனைத்து தீமையை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன். எனக்கு நீ செய்துள்ள உன் அருட்கொடை மூலம் உன்னிடம் சமர்ப்பிக்கிறேன். என் பாவத்தையும் உன்னிடம் சமர்ப்பிக்கிறேன். நிச்சயமாக பாவங்களை மன்னிப்பவர் உன்னைத் தவிர வேறு யாரும் கிடையாது.**

١٨٧٦ - وَعَنْ ثَوْبَانَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا انْصَرَفَ مِنْ صَلاَتِهِ اسْتَغْفَرَ ثَلاَثًا وَقَالَ : " اللَّهُمَّ أَنْتَ السَّلاَمُ وَمِنْكَ السَّلاَمُ تَبَارَكْتَ يَا ذَا الْجَلاَلِ وَالأِكْرَامِ " . قِيلَ لِلأَوْزَاعِيِّ - وَهُوَ أَحَدُ رُوَاتِهِ - كَيْفَ الاسْتِغْفَارُ ؟ قَالَ : يَقُولُ : أَسْتَغْفِرُ اللَّهَ أَسْتَغْفِرُ اللَّهَ . رَوَاهُ مُسْلِمٌ .

**1876** தவ்பான் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“நபி (ஸல்) அவர்கள் தன் தொழுகையை முடித்துவிட்டால், மூன்று முறை அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி, ‘அல்லாஹும்ம அன்தஸ் ஸலாம். வமின்கஸ் ஸலாம், தபாரக்த யாஃதல் ஜலாலி வல் இக்ராம்’ என்று கூறுவார்கள்.”

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அவ்ஸாயீ (ரஹ்) அவர்களிடம், “பாவமன்னிப்புக் கோருதல் எப்படி?” என்று கேட்கப்பட்டது. “அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்கிறேன். அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்கிறேன் என்றுகூறுவதுதான்” என்று பதில் கூறினார்கள்.

**(முஸ்லிம்:591)**

**துஆவின் பொருள்: இறைவா! நீயே அமைதியானவன். உன்னிடமே அமைதி உண்டு. வலிமையும், கண்ணியமும் மிக்கவனே! நீ பரக்கத் உடையவனாக இருக்கிறாய்.**

١٨٧٧ – وَعَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ : كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يُكْثِرُ أَنْ يَقُولَ قَبْلَ مَوْتِهِ : " سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ أَسْتَغْفِرُ اللَّهَ وَأَتُوبُ إِلَيْهِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1877** அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் மரணத்தறுவாயில், "சுப்ஹானல்லாஹி, வபிஹம்திஹி, அஸ்தஃபிருல் லாஹ், வஅதூபு இலய்ஹி" என்று அதிகம் கூறுபவர்களாக இருந்தார்கள். **(புகாரி:817. முஸ்லிம்:484)**

**துஆவின் பொருள்: அல்லாஹ்வை "தஸ்பீஹ்" செய்கிறேன். அவனைப் புகழ்கிறேன். அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறேன். மேலும் அவனிடமே பாவமீட்சித் தேடுகிறேன்.**

١٨٧٨ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ : " قَالَ اللَّهُ تَعَالَى : يَا ابْنَ آدَمَ إِنَّكَ مَا دَعَوْتَنِي وَرَجَوْتَنِي غَفَرْتُ لَكَ عَلَى مَا كَانَ مِنْكَ وَلاَ أُبَالِي يَا ابْنَ آدَمَ لَوْ بَلَغَتْ ذُنُوبُكَ عَنَانَ السَّمَاءِ ثُمَّ اسْتَغْفَرْتَنِي غَفَرْتُ لَكَ وَلاَ أُبَالِي يَا ابْنَ آدَمَ إِنَّكَ لَوْ أَتَيْتَنِي بِقُرَابِ الأَرْضِ خَطَايَا ثُمَّ لَقِيتَنِي لاَ تُشْرِكُ بِي شَيْئًا لأَتَيْتُكَ بِقُرَابِهَا مَغْفِرَةً " . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ : حَدِيثٌ حَسَنٌ . " عَنَانُ السَّمَاءِ " بِفَتْحِ الْعَيْنِ : قِيلَ : هُوَ السَّحَابُ وَقِيلَ : هُوَ مَا عَنَّ لَكَ مِنْهَا : أَيْ ظَهَرَ . " وَقُرَابُ الأَرْضِ " بِضَمِّ الْقَافِ وَرُوِيَ بِكَسْرِهَا وَالضَّمُّ أَشْهَرُ : وَهُوَ مَا يُقَارِبُ مَلأَهَا .

**1878** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"ஆதமின் மகனே! நிச்சயமாக நீ என்னிடம் துஆச் செய்யும் காலமெல்லாம், என்னை நீ நம்பும் காலமெல்லாம் உன்னில் ஏற்படும் குற்றத்தை நான் மன்னிப்பேன். எதையும் நான் பொருட்படுத்த மாட்டேன். ஆதமின் மகனே! வானத்தின் முகட்டை உன் பாவங்கள் அடைந்து, பின்பு என்னிடம் நீ பாவமன்னிப்புக் கோரினால் உன்னை மன்னிப்பேன். எதையும் நான் பொருட்படுத்தமாட்டேன். ஆதமின் மகனே! நீ பூமி நிரம்ப என்னிடம் பாவத்தைக் கொண்டு வந்து, பின்பு எனக்கு எதையும் நீ இணை வைக்காதவனாக என்னை நீ சந்தித்தால், அது நிரம்ப உனக்கு நான் மன்னிப்பைத் தருவேன்" என்று அல்லாஹ் கூறினான்" என நபி (ஸல்) கூற நான் கேட்டேன்.

**(திர்மிதீ:3540. இது "ஹஸன்" என திர்மிதீ இமாம் கூறுகிறார்கள்)**

١٨٧٩ – وَعَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " يَا مَعْشَرَ النِّسَاءِ تَصَدَّقْنَ وَأَكْثِرْنَ الاسْتِغْفَارَ ; فَإِنِّي رَأَيْتُكُنَّ أَكْثَرَ أَهْلِ النَّارِ " . فَقَالَتِ امْرَأَةٌ مِنْهُنَّ جَزْلَةٌ وَمَا لَنَا يَا رَسُولَ اللَّهِ أَكْثَرَ أَهْلِ النَّارِ ؟ قَالَ : " تُكْثِرْنَ اللَّعْنَ وَتَكْفُرْنَ الْعَشِيرَ وَمَا رَأَيْتُ مِنْ نَاقِصَاتِ عَقْلٍ وَدِينٍ أَغْلَبَ لِذِي لُبٍّ مِنْكُنَّ " . قَالَتْ يَا رَسُولَ اللَّهِ وَمَا نُقْصَانُ الْعَقْلِ وَالدِّينِ ؟ قَالَ : " أَمَّا نُقْصَانُ الْعَقْلِ فَشَهَادَةُ امْرَأَتَيْنِ تَعْدِلُ شَهَادَةَ رَجُلٍ فَهَذَا نُقْصَانُ الْعَقْلِ وَتَمْكُثُ اللَّيَالِيَ مَا تُصَلِّي وَتُفْطِرُ فِي رَمَضَانَ فَهَذَا نُقْصَانُ الدِّينِ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1879** அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"பெண்களே! நீங்கள் தர்மம் செய்யுங்கள். பாவமன்னிப்புக் கோருவதை அதிகம் செய்யுங்கள். நிச்சயமாக! நான் நரகவாசிகளில் மிக அதிகமாக உங்களைக் கண்டேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். அவர்களில் ஒரு பெண், "நரகவாசிகளில் மிக அதிகமாக நாங்கள் இருக்கக் காரணம் என்ன?" என்று கேட்டார். "அதிகமாக நீங்கள் சாபமிடுகிறீர்கள். கணவனுக்கு மாறு செய்கிறீர்கள். அறிவிலும் மார்க் கத்திலும் நீங்கள் குறைவுடையவராக இருந்தும், மிகப்பெரும் அறிவாளியையும் மிகைப்பவர்களாக

உங்களைவிட வேறு யாரையும் நான் கண்டதில்லை" என்று நபி (ஸல்) கூறினார்கள். "அறிவிலும் மார்க்கத்திலும் குறைபாடு என்றால் என்ன?" என்று அப்பெண் கேட்டார். "ஓர்ஆணின் சாட்சிக்குப் பகரமாக இரண்டு பெண்கள் சாட்சிகளாக இருப்பது. மேலும், குறிப்பிட்ட (மாதவிடாய்) நாட்களில் தொழாமல் இருந்து விடுகிறீர்கள்" என்று நபி (ஸல்) பதில் கூறினார்கள். **(முஸ்லிம்:79)**

## ٣٧٢ - باب بَيان مَا أَعدّ اللّه للمؤمنين في الجنة

## பாடம் : 372 - சொர்க்கத்தில் இறை நம்பிக்கையாளர்களுக்காக அல்லாஹ் தயார் செய்து வைத்துள்ளவை பற்றிய விளக்கம்.

قَالَ اللَّهُ تَعَالَى : إِنَّ الْمُتَّقِينَ فِي جَنَّاتٍ وَعُيُونٍ ادْخُلُوهَا بِسَلَامٍ آمِنِينَ وَنَزَعْنَا مَا فِي صُدُورِهِمْ مِنْ غِلٍّ إِخْوَانًا عَلَى سُرُرٍ مُتَقَابِلِينَ

لاَ يَمَسُّهُمْ فِيهَا نَصَبٌ وَمَا هُمْ مِنْهَا بِمُخْرَجِينَ . وَقَالَ تَعَالَى : يَا عِبَادِ لاَ خَوْفٌ عَلَيْكُمُ الْيَوْمَ وَلاَ أَنْتُمْ تَحْزَنُونَ الَّذِينَ آمَنُوا بِآيَاتِنَا وَكَانُوا مُسْلِمِينَ ادْخُلُوا الْجَنَّةَ أَنْتُمْ وَأَزْوَاجُكُمْ تُحْبَرُونَ يُطَافُ عَلَيْهِمْ بِصِحَافٍ مِنْ ذَهَبٍ وَأَكْوَابٍ وَفِيهَا مَا تَشْتَهِيهِ الأَنْفُسُ وَتَلَذُّ الأَعْيُنُ وَأَنْتُمْ فِيهَا خَالِدُونَ وَتِلْكَ الْجَنَّةُ الَّتِي أُورِثْتُمُوهَا بِمَا كُنْتُمْ تَعْمَلُونَ لَكُمْ فِيهَا فَاكِهَةٌ كَثِيرَةٌ مِنْهَا تَأْكُلُونَ . وَقَالَ تَعَالَى : إِنَّ الْمُتَّقِينَ فِي مَقَامٍ أَمِينٍ فِي جَنَّاتٍ وَعُيُونٍ يَلْبَسُونَ مِنْ سُنْدُسٍ وَإِسْتَبْرَقٍ مُتَقَابِلِينَ كَذَلِكَ وَزَوَّجْنَاهُمْ بِحُورٍ عِينٍ يَدْعُونَ فِيهَا بِكُلِّ فَاكِهَةٍ آمِنِينَ لاَ يَذُوقُونَ فِيهَا الْمَوْتَ إِلاَّ الْمَوْتَةَ الأُولَى وَوَقَاهُمْ عَذَابَ الْجَحِيمِ فَضْلاً مِنْ رَبِّكَ ذَلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيمُ . وَقَالَ تَعَالَى : إِنَّ الأَبْرَارَ لَفِي نَعِيمٍ عَلَى الأَرَائِكِ يَنْظُرُونَ

تَعْرِفُ فِي وُجُوهِهِمْ نَضْرَةَ النَّعِيمِ يُسْقَوْنَ مِنْ رَحِيقٍ مَخْتُومٍ خِتَامُهُ مِسْكٌ وَفِي ذَلِكَ فَلْيَتَنَافَسِ الْمُتَنَافِسُونَ وَمِزَاجُهُ مِنْ تَسْنِيمٍ عَيْنًا يَشْرَبُ بِهَا الْمُقَرَّبُونَ . وَالآيَاتُ فِي الْبَابِ كَثِيرَةٌ مَعْلُومَةٌ .

**அல்லாஹ் கூறுகிறான்:** *இறையச்சமுள்ளவர்கள் சுவனங்களிலும், (அங்குள்ள) நீரூற்றுகளிலும் இருப்பார்கள்.மேலும், அவர்களிடம் கூறப்படும்: "எவ்வித அச்சமுமின்றி சாந்தியுடன் அவற்றினுள் நுழையுங்கள்!"*

*அவர்களின் உள்ளங்களில் படிந்திருக்கும் குரோதங்களை நாம் அகற்றிவிடுவோம். ஒருவருக்கொருவர் சகோதரர்களாகக் கட்டில்களில் எதிரெதிரே அமர்ந்திருப்பார்கள்; அங்கு அவர்களுக்கு யாதொரு சிரமமும் ஏற்படாது; அங்கிருந்து அவர்கள் வெளியேற்றப்படவும் மாட்டார்கள். (15 : 47 - 48)*

*அந்நாளில் கூறப்படும்: "என் அடியார்களே! இன்று உங்களுக்கு எந்த அச்சமும் இல்லை. உங்களுக்கு எவ்விதத் துயரமும் ஏற்படாது. இவர்கள்தாம் நம் வசனங்கள் மீது நம்பிக்கை கொண்டவர்களாகவும், கீழ்ப்படிந்தவர்களாகவும் விளங்கினர். நுழைந்துவிடுங்கள் சுவனத்தில் நீங்களும் உங்கள் மனைவியரும்! அங்கு நீங்கள் மகிழ்விக்கப்படுவீர்கள்."*

*தங்கத் தட்டுகளும், கோப்பைகளும் அவர்களுக்கிடையே சுற்றி வந்து கொண்டிருக்கும். மனம் விரும்பக்கூடிய - கண்களுக்கு இன்பம் அளிக்கக் கூடிய அனைத்துப் பொருட்களும் அங்கு இருக்கும். (அவர்களிடம் கூறப்படும்:) "இங்கு நீங்கள் நிரந்தரமாகத் தங்கியிருப்பீர்கள். நீங்கள் உலகில் செய்து கொண்டிருந்த செயல்களின் காரணத்தால், இந்தச் சுவனத்திற்கு வாரிசுகளாக ஆக்கப்பட்டிருக்கின்றீர்கள். உங்களுக்காக இங்கு ஏராளமான கனிகள் உள்ளன. அவற்றை நீங்கள் உண்பீர்கள். (43:68-73)*

*இறையச்சமுடையவர்கள் அமைதியான இடத்தில் இருப்பார்கள். தோட்டங்களிலும், நீரூற்றுகளிலும் இருப்பார்கள். தடித்த மற்றும் மெல்லிய பட்டாடைகளை அணிந்து கொண்டு எதிரெதிரே அமர்ந்திருப்பார்கள். இதுதான் அவர்களின் நிலைமையாகும். மேலும், நாம் அழகிய தோற்றமுள்ள எழில்விழி மங்கையரை அவர்களுக்கு ஜோடிகளாக்கிக் கொடுப்போம். அங்கு அவர்கள் மனநிம்மதியுடன், எல்லாவிதமான சுவைமிகு பொருட்களையும் கேட்பார்கள். ஏற்கனவே உலகில் அடைந்த மரணம் தவிர, மறு மரணத்தை அவர்கள் அனுபவிக்கமாட்டார்கள். மேலும், உம் இறைவன் தன்னுடைய கருணையினால் அவர்களை நரக வேதனையிலிருந்து காப்பாற்றிவிடுவான். இதுவே மாபெரும் வெற்றியாகும். (44:51-57)*

*திண்ணமாக! நல்லவர்கள் பேரின்பத்தில் இருப்பார்கள். உயர்தரமான சாய்வு இருக்கைகளில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருப்பார்கள். அவர்களின் முகங்களில் சுகவாழ்வின் பொலிவை நீர் கண்டறிவீர். முத்திரையிடப்பட்ட மிகச்சிறந்த மதுபானம் அவர்களுக்குப் புகட்டப்படும். அதன் மீது கஸ்தூரி முத்திரை பதிந்திருக்கும். போட்டியிட்டு முந்திக் கொள்ள முயல்பவர்கள், இதனை அடைந்து கொள்வதில் முந்திக் கொள்ள முயலட்டும்! மேலும், அந்த பானத்தில் "தஸ்னீம்" கலந்திருக்கும். அது ஒரு நீரூற்று. (இறைவனுக்கு) நெருக்கமானவர்கள் அதன் நீருடன் மது அருந்துவார்கள். (83:22-28)*

இப்பாடத்தின் கீழ் இடம் பெறத்தக்க வசனங்கள் அதிகம் உள்ளன.

١٨٨٠ – وَعَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " يَأْكُلُ أَهْلُ الْجَنَّةِ فِيهَا وَيَشْرَبُونَ وَلاَ يَتَغَوَّطُونَ وَلاَ يَمْتَخِطُونَ وَلاَ يَبُولُونَ ; وَلَكِنَّ طَعَامَهُمْ ذَلِكَ جُشَاءٌ كَرَشْحِ الْمِسْكِ ! يُلْهَمُونَ التَّسْبِيحَ وَالتَّكْبِيرَ ; كَمَا يُلْهَمُونَ النَّفَسَ " . رَوَاهُ مُسْلِمٌ .

**1880** ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் சாப்பிடுவார்கள். பருகுவார்கள். ஆனால் மல-ஜலம் கழிக்க மாட்டார்கள். சளி சிந்தமாட்டார்கள். எனினும், அவர்களின் உணவு, அது ஒரு ஏப்பமாகி விடும். (அதன் வாடை), கஸ்தூரியின் வாடைபோல் இருக்கும். மூச்சை இலகுவாக விடுபவர்கள் போல், தஸ்பீஹ், தக்பீர்களை இலகுவாகக் கூறுவார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:2835)**

١٨٨١ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " قَالَ اللَّهُ تَعَالَى : أَعْدَدْتُ لِعِبَادِي الصَّالِحِينَ مَا لاَ عَيْنٌ رَأَتْ وَلاَ أُذُنٌ سَمِعَتْ وَلاَ خَطَرَ عَلَى قَلْبِ بَشَرٍ . وَاقْرَءُوا إِنْ شِئْتُمْ : فَلاَ تَعْلَمُ نَفْسٌ مَا أُخْفِيَ لَهُمْ مِنْ قُرَّةِ أَعْيُنٍ جَزَاءً بِمَا كَانُوا يَعْمَلُونَ " مُتَّفَقٌ عَلَيْهِ .

**1881** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனித உள்ளமும் சிந்தித்திராத ஒன்றை எனது அடியார்களில் நல்லவர்களுக்கு நான் தயார் செய்து வைத்துள்ளேன்" என்று அல்லாஹ் கூறினான் எனக் கூறிய நபி (ஸல்) அவர்கள், "கண்களுக்கு குளிர்ச்சி தரும் ஒன்றை அவர்களுக்காக நான் மறைத்திருப்பதை எந்த ஆத்மாவும் அறியமுடியாது" 32:17 என்ற அல்குர்ஆன் வசனத்தை நீங்கள் விரும்பினால் ஓதிக் கொள்ளுங்கள்" என்றும் கூறினார்கள்.

**(புகாரி:3244. முஸ்லிம்:2824)**

١٨٨٢ – وَعَنْهُ ) أَبِي هُرَيْرَةَ ( قَالَ : قَالَ رَسُولُ اللَّهِ ﷺ : " أَوَّلُ زُمْرَةٍ يَدْخُلُونَ الْجَنَّةَ عَلَى صُورَةِ الْقَمَرِ لَيْلَةَ الْبَدْرِ ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ عَلَى أَشَدِّ كَوْكَبٍ دُرِّيٍّ فِي السَّمَاءِ إِضَاءَةً : لاَ يَبُولُونَ وَلاَ يَتَغَوَّطُونَ وَلاَ يَتْفُلُونَ وَلاَ يَمْتَخِطُونَ . أَمْشَاطُهُمُ الذَّهَبُ

وَرَشْحُهُمْ الْمِسْكُ وَمَجَامِرُهُمْ الأَلُوَّةُ – عُودُ الطِّيب – أَزْوَاجُهُمْ الْحُورُ الْعِينُ عَلَى خَلْقِ رَجُلٍ وَاحِد عَلَى صُورَة أَبِيهِمْ آدَمَ : سِتُّونَ ذِرَاعًا فِي السَّمَاءِ " . مُتَّفَقٌ عَلَيْه . وَفِي رِوَايَة لِلْبُخَارِيِّ وَمُسْلِمٍ : آنِيَتُهُمْ فِيهَا الذَّهَبُ وَرَشْحُهُمْ فِيهَا الْمِسْكُ . وَلِكُلِّ وَاحِد مِنْهُمْ زَوْجَتَانِ يُرَى مُخُّ سُوقِهِمَا مِنْ وَرَاءِ اللَّحْمِ مِنَ الْحُسْنِ ! لاَ اخْتِلاَفَ بَيْنَهُمْ وَلاَ تَبَاغُضَ : قُلُوبُهُمْ قَلْبُ رَجُلٍ وَاحِد يُسَبِّحُونَ اللَّهَ بُكْرَةً وَعَشِيًّا . قَوْلُهُ : " عَلَى خَلْقِ رَجُلٍ وَاحِدٍ " رَوَاهُ بَعْضُهُمْ بِفَتْحِ الْخَاءِ وَإِسْكَانِ اللاَّمِ وَبَعْضُهُمْ بِضَمِّهِمَا وَكِلاَهُمَا صَحِيحٌ .

**1882** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

“சொர்க்கத்தில் நுழைகின்றவர்களில் முதல் கூட்டம், பவுர்ணமி நிலவு போல் தோற்றமளிப்பார்கள். பின்பு அவர்களை அடுத்து நுழைபவர்கள், வானில் பிரகாசிக்கும் நட்சத்திரம் போன்று இருப்பார்கள். அவர்கள் சிறுநீர் கழிக்க மாட்டார்கள். மலம் கழிக்க மாட்டார்கள். எச்சில் துப்பமாட்டார்கள். சளி சிந்தமாட்டார்கள். அவர்களின் (தலைவாறும்) சீப்புகள் தங்கத்தில் இருக்கும். அவர்களின் வியர்வை கஸ்தூரி மணம் போலிருக்கும். அவர்களின் அறைகளில் மணக்கும் குச்சிகளின் புகை போடப்படும். அவர்களின் துணைவியர்களாக (“ஹூருல் ஈன்” எனும்) அழகிய கண்களுடைய பெண்கள் இருப்பர். சுவனவாசிகள் அனைவரும் ஒரே தோற்றத்தில் இருப்பர். அதாவது, அவர்களின் தந்தையின் (ஆதம் நபியின்) உருவ அமைப்புப்படி வானை நோக்கி அறுபது அடி இருப்பார்கள்” என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3245,3327. முஸ்லிம்:2834)**

புகாரி, முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

அவர்களின் பாத்திரம், தங்கத்தில் இருக்கும். அவர்களின் வியர்வை கஸ்தூரி மணம் போலிருக்கும். அவர்களில் ஒவ்வொருவருக்கு இரண்டு மனைவியர் உண்டு. அவர்களின் கெண்டைக்கால்களின் (எலும்புகளின்) ‘மஜ்ஜை’ சதைக்கு வெளியே அழகாகத் தெரியும். அவர்களிடையே கருத்து வேறுபாடு இருக்காது. அவர்கள் கோபம் கொள்ள மாட்டார்கள். அவர்களின் இதயம் ஒரே மாதிரியாக இருக்கும். அல்லாஹுவைக் காலையிலும், மாலையிலும் அவர்கள் புகழ்வார்கள்.

١٨٨٣ – وَعَنْ الْمُغِيرَة بْنِ شُعْبَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُول اللَّه ﷺ قَالَ : " سَأَلَ مُوسَى ﷺ رَبَّهُ : مَا أَدْنَى أَهْلِ الْجَنَّة مَنْزِلَةً ؟ قَالَ : هُوَ رَجُلٌ يَجِيءُ بَعْدَ مَا أُدْخِلَ أَهْلُ الْجَنَّة الْجَنَّةَ فَيُقَالُ لَهُ : ادْخُلْ الْجَنَّةَ فَيَقُولُ : أَيْ رَبِّ كَيْفَ وَقَدْ نَزَلَ النَّاسُ مَنَازِلَهُمْ وَأَخَذُوا أَخَذَاتِهِمْ ؟ فَيُقَالُ لَهُ : أَتَرْضَى أَنْ يَكُونَ لَكَ مِثْلُ مُلْكِ مَلِك مِنْ مُلُوك الدُّنْيَا ؟ فَيَقُولُ : رَضِيت رَبِّ فَيَقُولُ : لَكَ ذَلِكَ وَمِثْلُهُ وَمِثْلُهُ وَمِثْلُهُ وَمِثْلُهُ فَيَقُولُ فِي الْخَامِسَة : رَضِيت رَبِّ فَيَقُولُ : هَذَا لَكَ وَعَشَرَةُ أَمْثَاله وَلَكَ مَا اشْتَهَتْ نَفْسُكَ وَلَذَّتْ عَيْنُكَ ! فَيَقُولُ : رَضِيت رَبِّ . قَالَ : رَبِّ فَأَعْلاَهُمْ مَنْزِلَةً ؟ قَالَ : أُولَئِكَ الَّذِينَ أَرَدْت : غَرَسْت كَرَامَتَهُمْ بِيَدِي وَخَتَمْت عَلَيْهَا فَلَمْ تَرَ عَيْنٌ وَلَمْ تَسْمَعْ أُذُنٌ وَلَمْ يَخْطُرْ عَلَى قَلْبِ بَشَرٍ ! " رَوَاهُ مُسْلِمٌ .

**1883** முகீரா இப்னு ஷுஅபா (ரழி)அறிவிக்கின்றார்கள்:

“சொர்க்கவாசிகளில் மிகவும் தாழ்ந்த தகுதி உள்ளவனின் நிலை எப்படி?” என மூஸா நபி (அலை) அவர்கள் தன் இறைவனிடம் கேட்டார்கள். “அந்த மனிதன் சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்குள் நுழைந்தபின் ஒருவர் வருவார். அந்த மனிதரிடம் “நீயும் சொர்க்கத்திற்குள் செல்” என்று கூறப்படும். அப்போது அவர், “இறைவா! அது எப்படி முடியும்?” மக்கள் தங்களின் இடங்களுக்குச் சென்று தங்களுக்கு என (சொர்க்கத்தில்) இடம் பிடித்துக் கொண்டனர்” என்று கூறுவார்.

“உலக அரசர்களில் ஒரு அரசனுக்குரிய ஆட்சியைப் போன்று உனக்கு இருந்தால் நீ திருப்தி கொள்வாயா?” என்று அவரிடம் கேட்கப்படும். “இறைவா! திருப்தி அடைவேன்” என்று அவர்

கூறுவார். "உனக்கு அதுவும், அது போன்றதும், அது போன்றதும், அது போன்றதும், அது போன்றதும் உண்டு" என்று அவரிடம் கூறப்படும். ஐந்தாவது தடவையில் அவர், "இறைவா! திருப்தியுற்றேன்" என்று கூறுவார். உடனே அல்லாஹ், "இதுவும் உனக்கு உண்டு. இதுபோன்று பத்து மடங்கும் உண்டு. மேலும் உனக்கு உன் மனம் விரும்புகின்றவை உண்டு. உன் கண்கள் விரும்பும் இடமும் உண்டு" என்று கூறுவான். "இறைவா! பொருந்திக் கொண்டேன்" என்று அவர் கூறுவார் என அல்லாஹ் கூறுவான்.

"இறைவா! சொர்க்கவாசிகளில் தகுதியில் உயர்வானவரின் நிலை என்ன?" என்று மூஸா நபி (அலை) கேட்டார்கள். "அவர்கள் என் விருப்பத்திற்குரியவர்கள். என் கையால் அவர்களின் கண்ணியத்தைக் காத்துள்ளேன். அதன் மீது நான் முத்திரையிட்டு உள்ளேன். எந்தக் கண்ணும் அதைப் பார்த்ததில்லை. எந்தக் காதும் அதைக் கேட்டதில்லை. மனித இதயத்திலும் அது போன்ற சிந்தனை ஏற்பட்டதில்லை" என அல்லாஹ் கூறுவான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(முஸ்லிம்:189)**

١٨٨٤ – وَعَنْ ابْنِ مَسْعُودٍ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ : " إِنِّي لَأَعْلَمُ آخِرَ أَهْلِ النَّارِ خُرُوجًا مِنْهَا – وَآخِرَ أَهْلِ الْجَنَّةِ دُخُولاً الْجَنَّةَ – رَجُلٌ يَخْرُجُ مِنَ النَّارِ حَبْوًا ; فَيَقُولُ اللّٰهُ عَزَّ وَجَلَّ لَهُ : اذْهَبْ فَادْخُلِ الْجَنَّةَ فَيَأْتِيهَا فَيُخَيَّلُ إِلَيْهِ أَنَّهَا مَلْأَى فَيَرْجِعُ فَيَقُولُ : يَا رَبِّ وَجَدْتُهَا مَلْأَى ! فَيَقُولُ اللّٰهُ عَزَّ وَجَلَّ لَهُ : اذْهَبْ فَادْخُلِ الْجَنَّةَ فَيَأْتِيهَا فَيُخَيَّلُ إِلَيْهِ أَنَّهَا مَلْأَى فَيَرْجِعُ فَيَقُولُ : يَا رَبِّ وَجَدْتُهَا مَلْأَى ! فَيَقُولُ اللّٰهُ عَزَّ وَجَلَّ لَهُ : اذْهَبْ فَادْخُلِ الْجَنَّةَ فَإِنَّ لَكَ مِثْلَ الدُّنْيَا وَعَشَرَةَ أَمْثَالِهَا – أَوْ إِنَّ لَكَ مِثْلَ عَشَرَةِ أَمْثَالِ الدُّنْيَا ! فَيَقُولُ : أَتَسْخَرُ بِي ؟ أَوْ تَضْحَكُ بِي – وَأَنْتَ الْمَلِكُ ؟ " قَالَ : فَلَقَدْ رَأَيْتُ رَسُولَ اللّٰهِ ﷺ ضَحِكَ حَتَّى بَدَتْ نَوَاجِذُهُ فَكَانَ يَقُولُ : " ذَلِكَ أَدْنَى أَهْلِ الْجَنَّةِ مَنْزِلَةً " ! مُتَّفَقٌ عَلَيْهِ .

**1884** அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நரகவாசிகளில் நரகத்தை விட்டு கடைசி நபராக வெளியேறி, சொர்க்கவாசிகளில் சொர்க்கத்தில் கடைசியாக நுழைகின்றவரை நான் அறிவேன். அவர் கை, கால்களால் தவழ்ந்தவராக வருவார். அப்போது அல்லாஹ் அவரிடம், "நீ சொர்க்கத்திற்கு செல்" என்று கூறுவான். சொர்க்கத்திற்கு அவர் வருவார். "அது நிரம்பி விட்டதாக அவருக்குத் தோன்றும். உடனே அவர் மீண்டும் வந்து, "இறைவா! சொர்க்கம் நிரம்பி உள்ளதாக காண்கிறேனே?" என்று கூறுவார். அப்போது அல்லாஹ் அவரிடம், "நீ சொர்க்கத்திற்குள் செல்" என்று கூறுவான்.

சொர்க்கத்திற்கு அவர் வருவார். அது நிரம்பி உள்ளதாக அவர் உணர்வார். உடனே அவர் திரும்ப வந்து, "இறைவா! அதை நிரம்பி உள்ளதாகக் கண்டேன்" என்று கூறுவார். அப்போது அல்லாஹ் அவரிடம், "நீ செல், சொர்க்கத்தினுள் நுழை! நிச்சயமாக உனக்கு உலக அளவிற்கும், அது போன்று பத்து மடங்குகளும் உண்டு. அல்லது உலகம் போன்று பத்து மடங்கு உனக்குண்டு" என அல்லாஹ் கூறுவான். உடனே அம்மனிதர், "நீ அரசனாக இருந்தும் என்னை நீ கேலி செய்கிறாயா? அல்லது என்னைக் கண்டு சிரிக்கிறாயா?" என்று கேட்பார்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இதைக் கூறும்போது, தன் கடவாய் பற்கள் தெரியும் அளவுக்கு சிரித்ததை நான் கண்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், "இவர்தான் சொர்க்கவாசிகளில் தகுதியால் மிகவும் கடைசி நிலையில் உள்ளவர்" என்று கூறினார்கள். **(புகாரி:6581. முஸ்லிம்:186)**

١٨٨٥ – وَعَنْ أَبِي مُوسَى رَضِيَ اللّٰهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ : " إِنَّ لِلْمُؤْمِنِ فِي الْجَنَّةِ لَخَيْمَةً مِنْ لُؤْلُؤَةٍ وَاحِدَةٍ مُجَوَّفَةٍ طُولُهَا فِي السَّمَاءِ سِتُّونَ مِيلاً ! لِلْمُؤْمِنِ فِيهَا أَهْلُونَ يَطُوفُ عَلَيْهِمُ الْمُؤْمِنُ فَلاَ يَرَى بَعْضُهُمْ بَعْضًا ! " مُتَّفَقٌ عَلَيْهِ " الْمِيلُ " : سِتَّةُ آلاَفِ ذِرَاعٍ .

**1885** அபூமூஸா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! ஓர் இறை நம்பிக்கையாளனுக்குச் சொர்க்கத்தின் நடுவில் துளை போடப்பட்ட ஒரே முத்திலான கூடாரம் உண்டு. வானை நோக்கிய அதன் உயரம், அறுபது மைல்களாகும். இறை நம்பிக்கையாளனின் குடும்பத்தினர் அங்கு இருப்பார்கள். அவர்களை அந்த இறை நம்பிக்கையாளர் சுற்றி வந்து பார்ப்பார். (பெரிய கூடாரம் என்பதால்) அவர்களில் ஒருவர், மற்றவரைப் பார்க்க முடியாது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(புகாரி:3243. முஸ்லிம்:2838)**

குறிப்பு : ஒரு மைல் என்பது, ஆறு ஆயிரம் முழம் ஆகும்.

١٨٨٦ – وَعَنْ أَبِي سَعِيد الْخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إنَّ فِي الْجَنَّة شَجَرَةً يَسيرُ الرَّاكبُ الْجَوَادُ الْمُضْمَّرُ السَّرِيعُ مِئَةَ سَنَة مَا يَقْطَعُهَا ! " مُتَّفَقٌ عَلَيْه . وَرَوَيَاهُ فِي الصَّحيحَيْنِ أَيْضًا مِنْ رِوَايَة أَبِي هُرَيْرَة رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : " يَسِيرُ الرَّاكِبُ فِي ظلِّهَا مِئَةَ سَنَةٍ مَا يَقْطَعُهَا " .

**1886** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! சொர்க்கத்தில் ஒரு மரம் உண்டு. வலிமையும், விரைந்து செல்லும் ஆற்றலுமுடைய குதிரையில் சவாரி செய்யும் ஒரு மனிதர் நூறு ஆண்டுகள் சவாரி செய்தாலும், அதை (அதன் நிழலை) அவரால் கடந்து விட முடியாது" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:6553. முஸ்லிம்:2828)**

அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவித்து புகாரி, முஸ்லிமில் உள்ள மற்றொரு அறிவிப்பில் (கீழ்கண்டவாறு) உள்ளது:

அந்த மரத்தின் நிழலில் ஒருவர் தன் வாகனத்தை நூறு வருடம் ஓட்டிச் செல்வார். (ஆனால்) அதை அவர் கடந்து செல்ல மாட்டார். **(புகாரி:4881. முஸ்லிம்:2826)**

١٨٨٧ – : وَعَنْهُ ) أَبِي سَعِيد الْخُدْرِيِّ ( عَنِ النَّبِيِّ ﷺ قَالَ : " إنَّ أَهْلَ الْجَنَّة لَيَتَرَاءَوْنَ أَهْلَ الْغُرَف مِنْ فَوْقِهِمْ كَمَا تُرَاءُونَ الْكَوْكَبَ الدُّرِّيَّ الْغَابِرَ فِي الأُفُقِ مِنَ الْمَشْرِق أَوْ الْمَغْرِب لتَفَاضُلِ مَا بَيْنَهُمْ " . قَالُوا : يَا رَسُولَ اللَّه تلْكَ مَنَازِلُ الأَنْبِيَاءِ لاَ يَبْلُغُهَا غَيْرُهُمْ ؟ قَالَ : " بَلَى وَالَّذِي نَفْسِي بِيَدِه رِجَالٌ آمَنُوا بِاللَّه وَصَدَّقُوا الْمُرْسَلِينَ " . مُتَّفَقٌ عَلَيْه .

**1887** அபூஸயீத் அல்குத்ரீ (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கவாசிகள், தங்களுக்கும் மேலாக உள்ள அறைகளில் உள்ளவர்களைப் பார்ப்பார்கள். (இப்படிப் பார்ப்பது) கிழக்கு அல்லது மேற்குத் திசையிலிருந்து செல்லும் - பிரகாசமான மின்னும் நட்சத்திரத்தை நீங்கள் காண்பது போலாகும் இது, அவர்களிடையே உள்ள தகுதியின் காரணமாக உள்ளதாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "இறைத்தூதர் அவர்களே! இது நபிமார்களின் இடமாகும். இதை மற்றவர் எவரும் அடைந்து கொள்ளமாட்டார்கள்" என்று நபித்தோழர்கள் கூறினார்கள். "ஆம்! என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டு, இறைத்தூதர்களை உண்மைப்படுத்திய நல்ல மனிதர்களும் (அவர்களுடன் இருப்பார்கள்)" என்று நபி (ஸல்) கூறினார்கள். **(புகாரி:3256. முஸ்லிம்:2831)**

١٨٨٨ – وَعَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّه ﷺ قَالَ : " لَقَابُ قَوْسٍ فِي الْجَنَّة خَيْرٌ مِمَّا تَطْلُعُ عَلَيْه الشَّمْسُ أَوْ تَغْرُبُ ! " مُتَّفَقٌ عَلَيْه .

**1888** அபூஹுரைரா (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"உங்களில் ஒருவருக்கு சொர்க்கத்தில் ஒரு வில்லின் அளவு இடம் கிடைப்பது, சூரியன் உதயமாகி அல்லது மறைந்து விடும் இடத்தைவிடச் சிறந்ததாகும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**(புகாரி:3253. முஸ்லிம்)**

١٨٨٩ – وَعَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ فِي الْجَنَّةِ سُوقًا يَأْتُونَهَا كُلَّ جُمُعَةٍ فَتَهُبُّ رِيحُ الشَّمَالِ فَتَحْثُو فِي وُجُوهِهِمْ وَثِيَابِهِمْ فَيَزْدَادُونَ حُسْنًا وَجَمَالاً فَيَرْجِعُونَ إِلَى أَهْلِيهِمْ وَقَدِ ازْدَادُوا حُسْنًا وَجَمَالاً فَيَقُولُ لَهُمْ أَهْلُوهُمْ : وَاللَّهِ لَقَدِ ازْدَدْتُمْ حُسْنًا وَجَمَالاً ! فَيَقُولُونَ : وَأَنْتُمْ وَاللَّهِ لَقَدِ ازْدَدْتُمْ بَعْدَنَا حُسْنًا وَجَمَالاً ! " رَوَاهُ مُسْلِمٌ .

**1889** அனஸ் (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"சொர்க்கத்தில் ஒரு கடைவீதி உண்டு. வெள்ளிக்கிழமை தோறும் அங்கு சொர்க்கவாசிகள் வருவார்கள். வடக்குப் பகுதியிலிருந்து காற்று வீசும். அப்போது அவர்களின் முகங்கள், அவர்களின் ஆடைகளில் பட்டு, அது மணம் தரும். இதனால் அவர்கள் அழகும், பொலிவும் அதிகம் ஏற்பட்டவர்களாக, தங்களின் குடும்பத்தாரிடம் வருவார்கள். அழகும், பொலிவும் என அவர்களின் வீட்டினரும் ஆகி விடுவார்கள். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அழகும் பொலிவும் என நீங்கள் அதிகமாகிவிட்டீர்களே?" என்று அவர்களிடம் அவர்களின் குடும்பத்தார் கேட்பார்கள். உடனே அவர்களும் (தங்களின் குடும்பத்தாரிடம்) "நீங்களும்தான். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எங்களைத் தொடர்ந்து அழகிலும், பொலிவிலும் அதிகமாகிவிட்டீர்களே?" என்று கூறுவார்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **(முஸ்லிம்:2833)**

١٨٩٠ – وَعَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ : " إِنَّ أَهْلَ الْجَنَّةِ لَيَتَرَاءَوْنَ الْغُرَفَ فِي الْجَنَّةِ كَمَا تُرَاءُونَ الْكَوْكَبَ فِي السَّمَاءِ " . مُتَّفَقٌ عَلَيْهِ .

**1890** ஸஹ்ல் இப்னு ஸஃது (ரழி) அறிவிக்கின்றார்கள்:

"நிச்சயமாக! வானில் உள்ள நட்சத்திரத்தை நீங்கள் பார்ப்பது போல, சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் உள்ள அறையைப் பார்ப்பார்கள்" என்று நபி (ஸல்) கூறினார்கள்.

**(புகாரி:6555. முஸ்லிம்:2830)**

١٨٩١ – وَعَنْهُ ) سَهْلِ بْنِ سَعْدٍ ( رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ : شَهِدْتُ مِنَ النَّبِيِّ ﷺ مَجْلِسًا وَصَفَ فِيهِ الْجَنَّةَ حَتَّى انْتَهَى ثُمَّ قَالَ فِي آخِرِ حَدِيثِهِ : " فِيهَا مَا لاَ عَيْنٌ رَأَتْ وَلاَ أُذُنٌ سَمِعَتْ وَلاَ خَطَرَ عَلَى قَلْبِ بَشَرٍ " . ثُمَّ قَرَأَ تَتَجَافَى جُنُوبُهُمْ عَنِ الْمَضَاجِعِ إِلَى قَوْلِهِ تَعَالَى : فَلاَ تَعْلَمُ نَفْسٌ مَا أُخْفِيَ لَهُمْ مِنْ قُرَّةِ أَعْيُنٍ. رَوَاهُ الْبُخَارِيُّ.

**1891** ஸஹ்ல் இப்னு ஸஹ்து (ரழி) அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களுடன் ஒரு சபையில் இருந்தேன். அந்த நேரம் சொர்க்கத்தைப் பற்றிக் கூறி முடித்தார்கள். பின்பு தன் உரையின் கடைசியில், "அதில் உள்ளவை, எந்தக் கண்ணும் பார்த்திராத ஒன்றாகும். எந்தக காதும் கேட்டிராது. எந்த மனித இதயமும் சிந்தித்திராது" என்று கூறினார்கள். பின்பு கீழ்காணும் வசனத்தை ஓதினார்கள்.

***மேலும், அவர்களுடைய விலாப்புறங்கள் படுக்கைகளை விட்டும் உயர்ந்துவிடுகின்றன. அச்சத்துடனும், ஆவலுடனும் தங்கள் இறைவனைப் பிரார்த்திக்கின்றார்கள்! மேலும், நாம் அவர்களுக்கு வழங்கியிருப்பதிலிருந்து செலவும் செய்கின்றார்கள். அவர்களுடைய செயல்களின்***

இருப்பினும், சில அரபிச் சொற்கள் நடைமுறையில் இருந்தாலும், அதன் பொருள் பலருக்கும் புரிந்ததாக இல்லை. எனவே அந்த அரபிச் சொல்லிற்கு பெரிய பொருளை இங்கே தனியாகத் தந்துள்ளோம்.

**அல்லாஹ் :** இது இறைவனின் பெயராகும். 'வணக்கத்திற்குரியவன்' என்ற பொருள் கொண்ட இச்சொல்லை, பெரும்பாலும் அப்படியே பயன்படுத்தி உள்ளோம்.

**அன்சாரீ :** மதீனாவாசிகளான நபித்தோழர்களை இப்படிக் கூறுவதுண்டு. 'உதவியவர்கள்' என்று இதன் பொருள். மக்காவை விட்டு ஊர் துறந்து மதீனா வந்த பல நபித்தோழர்களை தங்களின் சகோதரர்களாக ஏற்றுக் கொண்டு அரவணைத்துக் கொண்டதால் இந்தப் பெயர் வந்தது.

**(அலை) :** "அலைஹிஸ்ஸலாத் வஸ்ஸலாம்" என்ற முழு வார்த்தையின் சுருக்கம் இது! "அல்லாஹ்வின் கருணையும், அருளும் அவர் மீது உண்டாகட்டும்!" என்பது இதன் பொருள். இந்த வார்த்தை நபிமார்களின் பெயர்களைக் குறிப்பிடும் போது, அவர்களின் பெயருக்குப் பின்னே இடம் பெறும். (அலை) என்று வாசிக்காமல், அந்த இடத்தில் அதன் முழு வார்த்தையை வாசிப்பதே சரியாகும்.

**ஆமீன் :** "அப்படியே ஆகட்டுமாக!" என்பது இதன் பொருள். பிரார்த்தனையின் முடிவில் கூறும் சொல் இது. ஃபாத்திஹா சூராவின் இறுதியில் இதைக் கூறுவது நபிவழி.

**இமாம் :** "அறிஞர்" என்பது இதன் பொருளாகும். தொழுகையில் கலந்து கொள்வோருக்கு முன்னே நின்று தொழுகை நடத்துபவருக்கு "இமாம்" என்று கூறப்படும்.

**இமாமத் :** தொழுவோருக்கு முன்னே நின்று தொழுகை நடத்தப்படும் செயலுக்கு "இமாமத்" என்று கூறப்படும்.

**இஹ்ராம் :** மக்காவிற்கு ஹஜ் செய்யப் புறப்படும் போது, குறிப்பிட்ட எல்லையில் ஹஜ் செய்ய எண்ணி, உடை அணிந்து கொள்ளும் நிலைக்கே "இஹ்ராம்" என்று கூறப்படும். இதற்கு "தவிர்த்துக் கொள்தல்" என்று பொருளாகும். அந்த உடை அணிந்தால், அப்பகுதியில் குறிப்பிட்ட நாளில் மட்டும் வேட்டையாடுதல், துன்புறுத்தல் மற்றும் உடலுறவைக் கைவிடுதல், கெட்டப் பேச்சு, கெட்டச் செயல்களைக் கைவிடுதல் போன்றவற்றிக்கே "இஹ்ராம்" என்பதாகும்.

**உளூ :** தொழுகைக்கு முன் முகம், கை, கால்களைக் கழுவும் செயலுக்குப் பெயர்தான் இது.

**உம்ரா :** ஹஜ் அல்லாத காலங்களில் மக்காவில் நிறைவேற்றப்படும் சில சடங்குகளுக்கே "உம்ரா" என்ற கூறப்படும்.

**கஃப்ன் :** இறந்துவிட்டவரின் மேல் அணியப்படும் ஆடைக்கே "கஃபன்" என்று கூறப்படும்.

**கத்னா :** ஆணின் மறைவுறுப்பின் முன் தோலை வெட்டி நீக்குவதற்கு "கத்னா" என்று கூறப்படும்.

**கலீஃபா :** அடுத்தடுத்து, ஒருவர் பின் ஒருவராக என நிகழும் எந்தச் செயலுக்கும், அமைப்புக்கும் தனி நபருக்கும் "கலீஃபா" என்று கூறப்படும். "கலீஃபா" என்றால், அடுத்து வந்தவர் என்பதாகும்.

**பரக்கத் :** "அபிவிருத்தி" என்பது இதன் பொருள். ஒன்று இருந்தும் இல்லாதது போல் இருக்கும். ஆனால் ஒன்று இருந்து குறைந்தாலும், குறையாதது போல் இருக்கும். இந்த இரண்டாம் நிலைக்கே "பரக்கத் (அபிவிருத்தி)" என்று கூறப்படும்.

**மஸஹ் :** "தடவுதல்" என்பது இதன் பொருள். உளுச் செய்யும் போது தலைக்குத் தண்ணீரைத் தொட்டு தடவுவதற்கும், கால்களைக் கழுவி, அதன் பின் அணிந்த காலுறைகள் மீது தண்ணீரைத் தொட்டு தடவுவதற்கும் "மஸஹ்" என்று கூறப்படும்.

**தக்பீர் :** "அல்லாஹு அக்பர்" (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்ற வார்த்தையைக் கூறும் செயலுக்குத்தான் "தக்பீர்" என்று கூறப்படும்.

**வஸிய்யத் :** இறக்கும் நிலையில் உள்ள ஒருவர், தன் சொத்துக்களை மனமுவந்து தானமாக கொடுத்திடக் கூறும் செயலுக்கே "வஸிய்யத்" என்பதாகும். சில இடங்களில் "உபதேசம் செய்தல்" என்ற பொருளிலும் இடம் பெறும்.

**வஹீ :** "இறைச் செய்தி" என்பது பொருள். நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் செய்திகளை வழங்கும் நிலைக்கே "வஹீ" என்று கூறப்படும்.

**ரக்அத் :** தொழுகையில் நின்று ஓதி, பின்பு ருகூஉ செய்து, பின்பு இரண்டு ஸஜ்தாக்கள் செய்து முடிக்கப்பட்ட நிலைக்கே ஒரு "ரக்அத்" என்று கூறப்படும்.

**கிப்லா :** தொழும் போது மக்காவில் உள்ள கஅபாவை நோக்கித் தொழும் பகுதிக்கே "கிப்லா" என்று கூறப்படும்.

**திர்ஹம் :** நாம் பணத்தை "ரூபாய்" என்பது போல், தற்போதும் சில அரேபியப் பகுதிகளில் பணத்தை திர்ஹம் என்றே அழைக்கின்றனர். வெள்ளிக் காசுகளை அன்றைய அரபிகள் "திர்ஹம்" என்றே அழைப்பர்.

**(ரழி) :** நபித்தோழர்களை நாம் குறிப்பிடும் போது, "ரழியல்லாஹு அன்ஹு, அன்ஹா" என நாம் கூறுகிறோம். இதன் சுருக்கமே (ரழி) எனக் குறிப்பிடுகிறோம். "அவர்களை அல்லாஹ் திருப்தியுறுவானாக!" என்பது இதன் பொருள்.

**(ரஹ்) :** "ரஹ்மதுல்லாஹி அலைஹி" என இமாம்களை குறிப்பிடும் போது நாம் கூறுகிறோம். அதையே (ரஹ்) என சுருக்கமாகக் குறிப்பிடுகிறோம். "அல்லாஹ்வின் அருள் அவருக்குக் கிடைக்கட்டுமாக!" என்பது இதன் பொருள்.

**தாபியீன் :** நபித்தோழர்களைச் சந்தித்து, அவர்களின் காலத்தில் வாழ்ந்தவர்கள்.

**துஆ :** "பிரார்த்தனை" என்பது இதன் பொருள்.

**மிம்பர் :** பள்ளிவாசல்களில் அமைந்துள்ள மேடை ஆகும். இதில் நின்றுதான் இமாம்கள் உரை நிகழ்த்துவர்.

**ருகூஉ :** தொழுகையில் இரு கைகளையும் முழங்கால் மீது வைத்தவாறு குனியும் நிலைக்கே "ருகூஉ" என்று கூறப்படும்.

**முஸ்லிம் :** அல்லாஹ்விற்கு கட்டுப்பட்டு வாழ்பவன்

**முஹாஜிர் :** இஸ்லாத்தின் காரணமாக ஊர்விட்டு ஊர் வந்தவர்கள். குறிப்பாக மக்காவில் இருந்து மதீனாவிற்கு வந்தவர்கள்.

**முஜாஹித் :** இறை வழியில் போரிடுபவர்

**தீனார் :** திர்ஹம் போல்தான் இதுவும். தங்கக்காசுகளை அன்றைய காலத்தில் அரபியர் இப்படித்தான் கூறினர்.

**முஃமின் :** இறைவிசுவாசி

**ஹஜ் :** இஸ்லாமிய ஆண்டில் குறிப்பிட்ட மாதத்தில் மக்காவில் கூடி முஸ்லிம்கள் செய்யும் சில கிரியைகளுக்கே "ஹஜ்" எனப்படும்.

**ஹதீஸ் :** நபி (ஸல்) அவர்களின் சொல், செயல், ஒப்புதல் அனைத்திற்கும் ஹதீஸ் எனப்படும். பொதுவாக "செய்தி" என்பது இதன் பொருள்.

**ஹிஜ்ரத் :** இஸ்லாத்திற்காக நாடு துறந்து செல்வதற்கே "ஹிஜ்ரத்" எனப்படும்.

**ஜகாத் :** பொருள் வரியாக இஸ்லாம் கட்டாயமாக்கிய சட்டமாகும்.

**ஜிஹாத் :** இறைவழிப் போராட்டம்.

**ஜிஸ்யா :** இஸ்லாமிய நாட்டில் முஸ்லிம் அல்லாதவர் கட்டும் வரி.

**ஸலாம் :** முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் போது, "அஸ்ஸலாமு அலைக்கும்" எனக் கூறும் முகமன் வார்த்தையாகும். "உங்கள் மீது அருள் உண்டாகட்டும்!" என்பது இதன் பொருள்.

**ஸாஉ :** இரு உள்ளங்கைகளையும் இணைத்து, ஒரு பொருளை நான்கு முறை அள்ளினால் வரும் அளவுக்கே ஒரு "ஸாஉ" என்று கூறப்படும்.

**ஸியாரத் :** கப்ருகள் (மண்ணறைக்குள்) உள்ள பகுதிக்குச் சென்று, இறந்தவர்களுக்கு பிரார்த்திக்கும் நிலைக்கே "ஸியாரத்" என்று கூறப்படும்.

**ஷைத்தான் :** "மனிதனுக்கு விரோதி" என்று அல்லாஹ்வினால் அடையாளம் காட்டப்பட்டவன்.

**ஸஜ்தா :** தொழுகையில் உள்ளங்கையை, நெற்றியை, மூக்கை, முழங்காலை தரையில் படுமாறு (இரண்டு முறை) செய்யும் செயலுக்கே "ஸஜ்தா" என்று கூறப்படும்.